வியக்தமாம், எதனுலெனின், அவனினின்று = அவ்வறியப் பெருத ஈசுரனினின்று, அடல் = பந்தம் ஆம், அறியப்பெற்ற ஈசுரனினின்று விடலாமே = கட்டினும் மாறுயவீடு என்னும் மோக்ஷமாதல் திண்ணம், " தரிசித்திறைவனைச் சர்வபாசாபஹானி, கிலேசங் கெடவே ஜன்மம்ருத்யுப் பிரஹாணி" எனமறையு மறையும்; " நல்லமாந்தர் நல்லறிவு நன்கிலாப், புல்லர் தங்கள் புல்லறிவும்போர் திகழ், வில்லமைந்ததோன் வீரர்வீரயா, னல்ல தில்லை யென்றறிய வேண்டுமே" எனக்கீதையுமோதும்.

(ச.) உள்ளே மேயதாமவத்தை, எதற்கோவது, ஒருபானின்று = யாதாமொரு காரணத் தினுல், மெல்லெனத் தேய்விலதாகித் தோன்றும், செறியு மவ்வவத்தையாலே, விருத்தி யான அந்த வாசனையாலே, அங்கமே யிருக்கில் = தேகமுளதெனில், ஆயிரவருடஞ் சென் றும், தூயநற்சீவன் முத்தருணர்ச்சியைத் தொடர்வ ரென்றுன். (72)

## பிரகலாதன் கதை முற்றிற்று.

## காதி கதை.

——(*)——

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தின்கண் ஆசையின்மை நன்றுக உண்டாதற் பொருட்டுத் திருசியமியாவும் துக்கசொரூப மெனவும் அத்தியந்தம் மித்தையெனவும் தோற்றுவிப்பார் காதிகதையை ஸ்ரீ வசிட்டபகவான் தொடங்குகின்றுர்:—பிறப்பென்பது.

(ச - அ - கை.) முன்பு ஈசுவரானுக் கிரகத்திஞலே யுதித்தஆன்மதத்துவ ஞானத்தாற் சம்சாரோப சாந்தி சொல்லப்பட்டது, இப்போது சித்தஜயத்தைத் தவிர ஜகன்மயமான மாயை உபசாந்தியாகா தென்றறி வித்தற்காக மாயாவைசித்திரியத்தைப் பிரதிபாதனஞ் செய்ய இலவண விருத்தாந்தம் போற் காதி விருத்தாந்தமும் நிரூபிக்கப் படுகின்றது:— பிறப்பென்பது.

பிறப்பிறப்பாம் பெயருடைய விந்தமாயைப் பெருமையினை முடிவுபெறப் பேசவொண்ணு, வறப்பெரிய தன்மனத்தை வென்றுன்மாளு மல்லதொரு வகை யாலு மகற்றலாகாச், சிறப்புடைய வன்மாயை விரிவிலுள்ள சித்திரந்தோன் றிட வுனக்குச் செப்புங்காதை, மறப்பறுசிந் தையனுகிக் கேட்டியென்று மனுகுலநா யகனுக்கு வசிட்டன்சொல்வான்.

(ப - ரை.) பிறப்பு இறப்பாம் பெயருடைய = ஜனனமரண சம்சாரமென்னும் நாம தேயம் பொருந்திய, இந்தமாயைப் பெருமையினை = இம்மகாமாயையினது மாகாத்மி யத்தை, முடிவுபெற = இவ்வளவுதா னென்று, பேசவொண்ணு = கூறமுடியாது, அறப் பெரிய தன்மனத்தை வென்றுன் = மெத்தப் பெருத்த தனது சித்தத்தைச் சயித்தால் மாத் திரம், மாளும் = க்ஷயமெய்தும், அல்ல தொருவகையாலும் அகற்றலாகா = வேறெருவ கையினுலும் விநாசமடையாதாம், சிறப்புடைய = அநேக விசேடங்களையுடைய, வன் மாயை = வலியசம்சார, விரிவிலுள்ள = விஸ்தாரத்தில் இராநின்ற, சித்திரந்தோன்றிட = வைசித்திரியம் விளங்கும் பொருட்டு, உனக்கு = நின்றனக்கு, செப்புங்காதை = உபதே சிக்குங்கதையை, மறப்பறு சிந்தையனுகி = ஒருமையோடுங் கூடிய சித்தத்தை யுடையவ

ஞகி, கேட்டியென்ஞ = கேட்பாயாக வென்று, மனுகுல நாயகனுக்கு = மனுவம்சத்தை விளக்க அவதரித்த வள்ளலுக்கு, வசிட்டன் சொல்வான் = ஸ்ரீ வசிட்டபகவான் உபதேசிக்கத் தொடங்கிஞர்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராமச்சந்திர ! சம்சாரமென்னும் நாமத்தையுடைய இம்மாயையானது அபரிமிதப்பிராந்தி ஹேதுவாம், தன் சித்தசயத்திஞலேயே க்ஷயமேயாகிற்கும் மாருன எவ்வாற்ருனும் மாயாதாம்; ஜகன்மாயாப் பிரபஞ்சத்தின் வைசித்திரியந் தெரிதற் பொருட்டு, இவ்விதிகாசத்தை யியம்புவேம், ஹே அநகனே சாவதான சித்தமுடையவஞகக்கேட்டி ! (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உபதேசிக்க விரும்பியகதையைத் தொடங்கல்:—மண்ணெனபது.

மண்ணுலகிற் கோசலமா மண்டலத்தின் மறையவர்கோன் காதியெனவழங் கும்பேரோ, னுண்ணினந்தோர் கருமத்தைக் கிளையைநீங்கி யொருவனம்புக் கொருவாவி யுதகத்தூடே, நண்ணியணி கழுத்தளவா யமிழநின்று நற்றவஞ் செய் தெண்டிங்க ணடந்தவெல்லை. கண்ணருளான் மாயவன்வந் தவன்முன்ரேன் றிக் கருத்தென்கொ லளித்துமெனக் கழறலோடும்.

(ப - ரை.) மண்ணுலகில் = இவ்வசுதாபீடத்தில், கோசலமாமண்டலத்தில் = கோசலமென்னும் தேசத்தில், மறையவர்கோன் = பிராஹ்மண சிரேஷ்டன், காதியெனவழங்கும் பேரோன் = காதியென்று விவகரிக்கும் நாமதேயத்தை யுடையவன், உண்ணினந்தோர் கருமத்தை = உள்ளத்தில் ஒரு காரியத்தை யுத்தேசித்து, கிளையைநீங்கி = பந்து விருந்தத்தைவிட்டு, ஒருவனம்புக்கு = ஒருவனத்தின் கண்ணே பிரவேசித்து, ஒருவாவி யுதகத்தூடே = ஆங்குற்ற ஒப்பற்ற ஒரு தாமரைத்தடாக நீரில், நண்ணி = இறங்கி, அணிகழுத்தளவாய் அமிழநின்று = மணியணி கண்ட பரிமிதமாய் நிமக்கினஞகி நின்று, நற்றவஞ்செய்து = நல்லதவத்தினை நடாத்தி, எண்டிங்கள் = மாசாஷ்டகம், நடந்த எல்லை = கடந்தபின்னர், கண்ணருளால் = மிகுந்த பேரருளால், மாயவன் = ஸ்ரீமந்நாராயணர், வந்தவன்முன்ரேன்றி = எழுந்தருளி வந்து அந்தக்காதி மறையன் எதிரில் பிரசன்னமாகி, கருத்தென்கொல் அளித்தும் எனக்கழறலோடும் = எண்ணியதுயாது விப்பிரேந்திர அதனைத்தருதும் என்று திருவாய் மலர்ந்தருளவே,

(ஸ்ரீ - வீர.) இந்தப் பெரிய பூமண்டலத்தின் கண் கோசலமெனப் பெயரிய தேசமொன்றுண்டு, மேருவின்மாட்டுக் கற்ப விருக்ஷவனம் நந்தஞதிபோலும் இரத்னகரமாம்; அம்மண்டலத்தில், குணமுடையவஞகக் காதியெனப் பெயர்வாய்ந்த ஒரு பிராமணனிருந்தான்; அவன், பரமசுரோத்திரியன் மதிமான் தருமமூர்த்தி போன்றவன்; அவன்பாலியத்திலிருந்தே மகாவைராக்கியத்தோடு கூடி நிட்களங்க சுத்தசித்தத்தால், களங்கங்கழன்று கவின்வாய்ந்து தூய்தின் இலங்குங்ககனத்தானே புவனம்போலும், நன் கலங்கரிக்கப் பெற்றவஞயிலங்கினன்; அம்மறையவன் றனதுமனதில் யாதோ ஒருவாஞ்சித தவப்பயனையெண்ணிக்கொண்டு, உறவினர் குழாங்களை யொருவி விடுத்து, தவம்புரியான் வனநோக்கிச்சென்றனன், அவ்வனத்தில் அம்மறையவு விறையவன், மலர்ந்ததாமரைக ணிறைந்த தடாகத்தை, பிரசன்ன விமலமாயும், தரிசித்தற்கு மிகமிகவும் கவின்வாய்ந் திலங்கும் அசுவினியாதி யுடுக்கணங்களால் வியாபிக்கப்பெற்ற வியோமத்தைச் சந்திரன் அடைந்ததேபோல அடைந்தனன்; அத்துவிஜன் அத்தடாகத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் றரிசனபரியந்தம் தவஞ்செய்தற் பொருட்டு, மழைமரைமாஞும், கண்டத்தளவு நீரின்மூழ்கினவஞகி, நின்றனன்; தனது

நிவாசஸ்தானத் துள்ளனவாய பங்கஜங்களின் சங்கோசம் சூரியவியோகத்தானே யெய்திய வழி அவ்விடத்திய நேயத்தானே சிறிதுவதனகாந்தி குன்றியவன்போன்ற அத்தடாக நீரின்மூழ்கிய மறையவன் இங்ஙன் தவத்தில் எட்டுமாதங்கள் கழித்தபின்னர் ஒருபோது தவத்தினாலே தபித்துக்கொண்டிருக்கும் அம்மறையவன் முன்பு கார்முகில் வண்ணராகிய ஸ்ரீஹரியானவர், வெய்யிலினாலே வெம்பிய தராதலத்தைக் கார்முகில் மழைப்போதடைவுற்றதேபோல எழுந்தருளியாயினர். தரிசனந்தந்தருளிய ஸ்ரீ பகவான்:—ஹே விப்பிர! நீரிடை நின்றும் எழும்பிவருதி வாஞ்சித்தவரத்தை வாங்கிக்கொள்ளுதி, நினதுநியம அனுஷ்டானதப விருக்ஷமானது விரும்பிய பலத்தோடு கூடியதாயிற்று, என்று கூறி யருளினார். (2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நீரினின்று மேறியமறையவன் அன்பாற் போற்றி வரம்வேட்டல்:—சலமென்பது.

சலநின்றுங் கரையேறிக் காதியென்னுந் தவமறையோன் கைதொழுது சக மண்டத்தி, லலகிலுயிர் மனக்கமலத் தகலாவண்டே யச்சுதனே யநந்தாவென் றன்பாற்போற்றிச், சலனமறு தற்பரத்திற் சம்பந்தித்துச் சநநமர ணத்துருவாற் சகங்களாகி, யலமருநீ டாச்சரியஞ் செய்வதாய்நீ யளித்தமா யையைக்காண் வருடியென்றான்.

(ப - ரை.) சலநின்றும் கரையேறி = தாமரைத் தடாகத்தினின்றும் கரையின்கண் ணேறிவந்து, காதியென்னுந் தவமறையோன் = காதியெனப் பெயர்வாய்ந்த தவம்புரிந்த பிராஹ்மண சிரேஷ்டன், கைதொழுது = நமஸ்கரித்து, சகமண்டத்தில் அலகில் உயிர் மனக்கமலத்து = இச்சகத்திலுள்ள சகல அண்டங்களிலும் வாழும் அளவில்லாத உயிர்களின் உள்ளமாகிய தாமரையின்கண், அகலாவண்டே = எப்போதும் வீற்றிருந்துவிட்டு நீங்காத காரளியே, அச்சுதனே = கெடாதவனே, அநந்தா = தேசகாலவத்து பரிச்சேதரகிதனே, என்று = என இவ்வண்ணம்; அன்பால் போற்றி = பக்தியினாலே தோத்தரித்து, சலனமறுதற்பரத்தில் = அசலமான பரமபதத்தில், சம்பந்தித்து = பற்றுக்கோடுடையதாய், சனனமரணத் துருவாற்சகங்களாகி = பிற பிறப்பு வடிவத்தால் உலகங்களாகி, அலமருநீள் ஆச்சரியஞ் செய்வதாய் = அஞரச்சாதி யடையுமாறு வெகு அற்புதமியற்றுவதாய், நீயளித்த = தேவரீர் உண்டாக்கிய, மாயையைக் காண = மாயாசக்தியையான் காணும் பொருட்டு, அருடி என்றான் = அனுக்கிரகஞ் செய்தருளுவாய் என்று பிரார்த்தித்தான்.

(ஸ்ரீ - வீர.) சங்கையற்ற சகற்பூத இத்யபதுமப் பொந்தினுறைபவரே நமஸ்காரம், ஜகத்திரய ஏககமலசரசாம் ஸ்ரீ மகாவிஷ்ணுவே உமது திருவடிகட்கு நமஸ்காரம் நமஸ்காரம். சகல பிராணிகளின் இருதயதாமரையில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ பகவானை சியர் மத்தன்மை பற்றி வண்டென வருணித்ததாம்; ஹேபகவந்! அவிவேகத்திற்கு முக்கியகாரண மாயும்; சம்சாரமெனப் பெயரியதாயும், பரமான்மாவின் கண் அத்தியஸ்தமாயும், தேவரீராற்கற்பிக்கப் பெற்றதாயும், உள்ள இத்தகைய மாயைக்காணும் வாஞ்சையை யடைந்தனேன், திருவருள் செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தனன்.

(ச.) வண்டே = சர்வாந்தரியாமியும், அநந்தா = சர்வஜக வதிட்டானனும், ஆகிய, அச்சுதனே = விஷ்ணுவே, உனக்கு நமஸ்காரமென்பது பொருள். தற்பரத்தில் = பரமான்மாவில், சம்பந்தித்திருந்து கொண்டு வெகு ஆச்சரியஞ்செய்யும் மாயையைக் காணவிரும்பினேன் என்பதாம். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மறையவன் வேண்டிய வண்ணமே ஸ்ரீபகவான் திருவருள் புரிந்தருளி மறைதலும், அதைச் சிந்தித்து நீர் மூழ்கச்செல்லுதலும் திரட்டல்:—அந்தண னென்பது.

அந்தணன் வேண் டலுமா யை காண்டிகண்டா லகற்றுதியே லகற்றுகென வருளிமாயன், கந்தருவ நகரம்போன் மறைதலோடுங் கருணைமூர்த் தியைக்கண்ட களிப்பினாலே, சந்ததமுட் குளிர்காதி யந்தக்கானிற் றவத்தொடுசின் னாளிருந்து தானேயோர்நாட், சிந்தனையி லரியுரைத்த வுரையைநாடித் தேமலரோ டையின் மூழ்கச் சென்றானன்றே.

(ப - ரை.) அந்தணன் வேண்டலும்=மறையவன் பிரார்த்தித்தலும், மாயைகாண்டி= எமது மாயையைக் காண்பாய், கண்டால் = தரிசித்தால், அகற்றுதியேல் = விலக்கமுடியு மாயின், அகற்றுக என = விலக்கிக் கொள்ளுவாய் என்று, அருளிமாயன் = மாயவன் திரு வருள்செய்து, கந்தருவநகரம்போல் = கந்தர்வ பட்டணம்போல, மறைதலோடும்=அந்தர்த் தானமாகி யருளியபின், கருணைமூர்த்தியைக் கண்ட களிப்பினாலே=கிருபாமூர்த்தியைத் தரி சித்த சந்தோடத்தினாலே, சந்ததம் உட்குளிர்காதி = எப்போதும் உள்ளே தண்மையுற் றிருந்த மறையவன், அந்தக்கானில் = அவ்வனத்தில், தவத்தொடு சின்னாளிருந்து = சில போது தவஞ்செய்து கொண்டிருந்து, தானேயோர் நாள் = சுயமாகவே ஒருதினம், சிந்த னையில் = சித்தத்தில், அரியுரைத்த உரையைநாடி = ஸ்ரீபகவான் அருளிச்செய்த திரு வார்த்தையை எண்ணி, தேமலர் ஓடையின் மூழ்கச்சென்றான் அன்றே = மதுவாசனைகள் நிறைந்த புஷ்பங்கணிறைந்த சரசில் ஸ்நானஞ் செய்யப்போனான்; அன்று ஏ அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர.) இவ்வெமது மாயையைப் பார்ப்பாய், பார்த்தபின் தியாகஞ் செய்யமுடியு மாயின் தியாகிப்பாய், மாயாதரிசன மாத்திரத்தானே பரமபுருடார்த்த பலத்தையுடைய தம தாராதன தவத்திற்குப் பயனுடைமை போதாமையின், பின்பு தியாகிக்கமுடியு மாயிற் றியாகியெனப் பிரார்த்தியாதிருந்தும் ஸ்ரீபகவானால் இரண்டாவது வரங்கொடுத்தருளப்பெற் றது. உரைத்தவண்ணம் உரைத்தருளிக் கந்தர்வபட்டணம் தோற்றி மறைதல்போல் அந் தர்த்தானத்தை ஸ்ரீ பகவான் அடைந்தருளினார். ஸ்ரீபகவான் எழுந்தருளிய பின்னர் அந்தப் பிராஹ்மணேசுவரன் சீதள அமலமூர்த்தித் தன்மையானே க்ஷீரோதகத்தினின்றும் இந்து வைப்போலச் சலத்தினின்றும் நன்கெழுந்தனன். சந்திரனுடைய தரிசனத்தினாலும் பரி சனத்தினாலும் கைரவபுஷ்பம் மலர்தலேய்ப்ப, ஜகத்பதியின் றரிசனத்தினாலே மிகமிகவுஞ் சந்தோஷசித்த முடையவனாயினன்; தரிசன பரிசனங்களால் எனக்கூறினமையின் ஸ்தாவ ரங்கட்கும் சாக்ஷாத்மோக்ஷாதிஞானம் உளதாமெனத் தெரிகின்றது. பின்னர் ஸ்ரீ ஹரிசந்தரிசன ஆனந்தவானாய அவ்விப்பிரனுக்கு அவ்வனத்தில் மறையவர் தொழில்கள் எனவகுக்கப்பெற்ற தவஞ் சுவாத்தியாய அதிதிபூஜனாதிகளானே சில திவசங்கள் சென்றன; மற்றொருபோது அம்மறையவன் விரிந்ததாமரை பரந்ததடத்தில், பேரிருடி யோகபலத்தால் அதீத அநாக தங்களைக் காணும்பொருட்டு மானசத்திற் சிந்திப்பதேபோல, வைஷ்ணவத் திருமொழி களைச் சிந்தித்துக்கொண்டே ஸ்நானஞ்செய்யத் தொடங்கினான்.

(ச.) மூலம்:—மாநசே = மானசமெனப் பெயரியசரசில் மஹர்ஷிமானும். (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நீரின்மூழ்கிய நேரின்மறையவன் பாரிலிறந்திடப் பதைபதைத் திருவினர் வாரியென்றழுதிட வயங்கக்காணல்:—வனமென்பது.

வனம்படிந்தங் கத்தனுட்செய் விதிக்கேவேத மந்திரமுந் தியானமுந்தான் மறந்துகாதி, யினம்பயிறன் மனைக்கேதான் றன்னைநோயா லிறந்தவனைக்கண்டா னினத்தோரெல்லாங், கனம்படமொய்த் திருபுறத்து மலறத்தேவி காற்கடைக்கே வீழ்ந்தலறக் காதன்மாதா, தனம்பருகத் தருவனபோ லணைத்துக்கொண்டு தழன்மிதித்தாள் போற்பதைத்துத் தளரக்கண்டான்.

(ப - ரை.) வனம்படிந்து அங்கதனுட்செய் = தடாகநீரில் ஸ்நாநஞ்செய்து அத்தடாகநீரிற் செய்யத்தக்கதாய, விதிக்கே = விதானத்திற் குரித்தான, வேதமந்திரமும் தியானமுந்தான் = ஜபிக்கத்தக்க மறைமந்திரத்தையும் தான் கருதத்தக்க தியானத்தையுமே, மறந்துகாதி = காதிப்பிராஹ்மணன் விஸ்மிருத முடையவனாய், இனம்பயில் தன்மனைக்கேதான் = தனதுறவினர் வாழும் தனது இல்லத்திலேயே; தன்னைநோயால் இறந்தவனைக் கண்டான் = வியாதியினால் தன்னை மிருதனாகப் பார்த்தான், இனத்தோர் எல்லாம் = பந்துக்கள்யாவரும், கனம்படமொய்த்து = கூட்டமாகக்கூடி, இருபுறத்தும் அலற = இரண்டு பக்கத்தும் கூகாவெனக்கதற, தேவி = மனைவி, காற்கடைக்கே வீழ்ந்தலற = பாதங்களின் பக்கத்தில் வீழ்ந்து புலம்ப, காதல்மாதா = மிகுந்த அன்புடைய தாயானவள், தனம்பருகத்தருவனபோல் அணைத்துக்கொண்டு = ஸ்தன்யங்கள் மாந்தக் கொடுப்பனபோலக் கட்டித்தழுவிக்கொண்டு, தழன்மிதித்தாள்போல் = அக்கினியை மிதித்தனள்போலும், பதைத்து = துடிதுடித்து, தளரக்கண்டான் = ரோதனஞ்செய்து தேம்புதலைப் பார்த்தான்.

(ஸ்ரீ - வீர.) பின் ஸ்நானவிதியில் எல்லாப் பாவங்களையும் துவம்சஞ் செய்தற்பொருட்டு உண்ணீரை ஆவர்த்தம்போலும் குசத்தோடு கூடியகரத்தானே செய்தனன், அம்மறையவன் உண்ணீரில் மூழ்கிப் பிரணவாதி மந்திரஸ்மரண லக்ஷணபாவம் போக்கும் அவ்விதியிற் செய்யத்தக்கனவான தியானமந்திர வுணர்ச்சிகளை யிழந்து, விபரீதக்கிரகண முன்னிலைப் பட்டவ் வுணர்ச்சிகளை விரிவாயுடையவனாகி, நீரிடையே இங்ஙனங்கண்டான்; தனது வீட்டில் தன்னைச் சோச்சியத் தன்மையுற்றவனையும், மரணமுற்றவனையும், வாயுவேகத்தால் கந்தரத்தினுள் = தரீகர்ப்பத்தில் வீழ்ந்ததருமம்போல வீழ்வுற்றவனையு மிருக்கக்கண்டனன். பிராண அபானப்பிரவாகம் விடுபட்டவனாகவும், அந்தத்தை யடைந்தவனாகவும், அவயவ அசைவுகள் எல்லாம் மிகவும் சாந்தியுற்றவனாகவும், நிர்வாதபதிதமாய கதலியாதி கண்டகம் போலப்பதிதனாகவும் இருக்கக்கண்டனன்; இத்துணையும் மரணமுற்றவனையும் என்பதன் விவரணமெனவறிக. கண்ணீரால் நனைக்கப்பெற்ற வதனமுடையவர்களும், தீனர்களும், கருணையினாலே ரோதனஞ் செய்பவர்களும், துக்கிகளும் ஆகியபந்துக்களானே, அழும் அன்றிற் பக்ஷிகளானே சூழப்பெற்ற பாதபம்போலச் சூழப்பெற்றவனாய்த் தன்னைக்கண்டனன். சேதுபங்கத்தானே பிரவகிக்கும் வாரியானே அரிக்கப்பெற்ற முகம்போன்ற அப்ஜமுற்றகமலினியோடு சமதருமிணியாய பாரியாள் பாதங்கள் பற்றப்பெற்றவனாகவுந் தன்னைக் கண்டனன். உச்சதர மாயரோதனத்தானே சப்தியாநின்ற பிரமரம்போல, அநர்த்தகவியக்த வாக்கியப் பிரலாபத்தோடும், தீர்க்கசுர ஆலாபத்தோடும், மிகவுங்கூடிய மாதாவினாலே, நவவியஞ்சன மீசைதாடிகளானே லாஞ்சிதமாய=சின்னிதமாய, முகமுன்பாகம் மேல்விழுந்து கவரப்பெற் றிருப்பதாகத் தன்னைக் கண்டனன்.

(ச.) மூலம்:—தஸ்மின்விதௌ = ஸ்நாநவிதியில். நவ்வ்யஜநலாஞ்சிதே = நவவ்யஞ்ஜநத்தானே பிரத்தியக்கிரம சுருசிந்நிதசிபுகம் = வக்திரத்தின் அதோபாகம், வாத்சல்யத்தானே மாதாவாற் கவரப்பெற்ற தென்பதாம், (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அழுதுகொண்டிருந்த உறவினர்கள் காதியைக் கொளுத்தலும் பிறவுங்கூறல்:—ஆமென்பது.

ஆமளவி லடுத்தனசெய் தழுஞ்சுற்றத்தா ரனல்கொளுத்தச் சாம்பரா யங்க மெல்லா, மீமுறக் கண்டானச் சலத்தினூடே யிருக்கின்ற காதிதன திதயத் துள்ளே, தோமுறுமா குலமிகுந்த புந்தியாலே துகளறத்தன் பாற்றன்னாற் றோன்றக்கண்ட, வேமுறுசெய்கை கண்மேலு முள்ள வெல்லா மிராகவகே ளென முனிவ னிசைப்பதானான்.

(ப - ரை.) ஆமளவில் = இவ்வண்ணம் யாவருமொருங்குகூடி யோலமிட்டபின்னர், அழுஞ்சுற்றத்தார் = ரோதனஞ்செய்த பந்துக்கள், அடுத்தனசெய்து=உரியனவாய பிரேத சமஸ்காரங்களைச் செய்து, அனல்கொளுத்த = தகனஞ்செய்ய, அங்கமெல்லாஞ் சாம்பராய் ஈமம் உறக்கண்டான் = சரீரமுழுவதும் பஸ்மமாய்ச் சுடுகாட்டிற் பொருந்தக் கண்டனன், அச்சலத்தினூடே = மூழ்கிய அத்தடாக நீரினுள்ளே, இருக்கின்றகாதி = திதிபெற்றுள்ள அந்தக்காதி மறையவன், தனதிதயத்துள்ளே =தனது மனதின்கண்ணே, தோமுறும் ஆகுல மிகுந்த = குற்றமுற்றுக் கவலையதிகரித்த, புந்தியாலே = மதியினாலே, துகளறத்தன்பாற் றன்னாற்றோன்ற = தடையில்லாமல் தன்னிடத்தில தன்னானே பிரதீதியாக, கண்ட = தரிசித்த, ஏமுறுசெய்கைகள் = ஆச்சரியப்படத்தக்க மோகித காரியங்கள், மேலும் =பின்னரும், உள்ளவெல்லாம் = நடந்தேறிய யாவற்றையும், இராகவகேள் = ஹே இரகுகுலதிலகனே கேட்பாயாக, எனமுனிவன் இசைப்பதானான் = என்று ஸ்ரீ வசிட்டபகவான் கூறத்தொடங்கினார்.

(ஸ்ரீ - வீர.) அதன்பின் றற்காலகல்லோலப் பிரலாப ஆகுலமிகுத்தமும் சொந்தபந்துக்களானே அந்த அமங்கல்யமானது வீட்டிற்குவெளியே மீளப்பாராதபடி கொண்டு செலுத்தப்பட்டது, தசைகுடல் வசையாதி பங்ககளங்கிதமாய், கங்காளசத சங்குலமாயுள்ள மயானத்திற் சேர்ந்தவச்சவத்தை, வடவாக்கினியின் கண் சமுத்திரங்கண் எங்ஙனந் தற்சலிலப் பிரவாகத்தைப் பஸ்மமாகப் பண்ணுகின்றனவோ, அங்ஙனம் பந்துக்கள் சொலித்துத்தீப் தமாயெரியாநின்ற தீயில் பஸ்மமாகச் செய்தார்கள். பின்னுண்ணீரில் நின்று கொண்டே நிருமலமாய தனக்குள்ளே தானே தன்னானே, தன்னுடைய மானசதுக்கங்களானே விருத்தியடைந்துள்ள உள்ளத்தாற் காதிப்பிராஹ்மணன் கண்டவற்றை யெல்லாம் கூறக் கேட்டி!

(ச.) கண்டே = கண்டவனாகி, மேலுமுள்ளது =மேலுமவன் கண்டுள்ளதான, ஏமுறு செய்கைகள் எல்லாம் என்பது சம்பந்தம் மூலம்:—ஸ்வாதிபீவரயா = தன் மனோதுக்கத் தூலமான மதியினானே. (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) காதிப்பிராஹ்மணன் கடையர் குலத்துதித்துக் கல்யாணஞ் செய்தல்:—இப்பாரிலென்பது.

இப்பாரினூண நாட்டோரூரி னெல்லையிருக்கின்ற நீசநாய்க் கறிப்போர்தங் கண், மைப்பாவை யொருத்திவயிற் றொருசூலாகி வருந்திவளர்ந் துறுகாலம் வந்தவெல்லை, கைப்பால னய்ப்பிறந்து வளர்ந்துவெந்த கரிக்கட்டை போனிறத் தங் காளையாகி, யொப்பாகி னய்க்கறிப்போர் குலத்தில்வந்த வொரு கடைச்சி தனை மணஞ்செய் தொருமையானான்.

(ப - ரை.) இப்பாரில் = இந்தப் பூமண்டலத்தில், ஊணநாட்டோ ரூரின் எல்லை = ஹூணதேசத்திலுள்ள ஒரு கிராமத்தின் தெற்குக்கோடியில், இருக்கின்ற நீசநாய்க்கறிப் போர் தங்கள் = நிவாசஞ்செய்யும் நீசர்களாகிய சுவபசர்களுடைய, மைப்பாவையொருத்தி வயிற்று = நீலப்பதுமைபோன்ற ஒருபெண்ணின் உதரத்தில், ஒரு சூலாகி = ஒப்பற்ற கர்ப்பத்தையடைந்து, வருந்தி = துக்கத்தோடும், வளர்ந்து = கருவிருத்தியெய்தி, உறு காலம்வந்த வெல்லை = பிரசவசமயம் வந்தபோது, கைப்பாலனாய்ப் பிறந்து = வெளியே வந்து கைக்குழந்தையாய், வளர்ந்து = பெரியகுழந்தையாகி, வெந்தகரிக்கட்டைபோல் = கரிந்தணைத்த கொள்ளிக்கட்டைக் கொப்பான, நிறத்துக்காளையாகி = வர்ணத்தை யுடைய தருணனாய், ஒப்பாகி = தனக்குச் சமானமாகி, நாய்க்கறிப்போர் = சுவபசர்தங்கள், குலத்தில் வந்த = வம்சத்தில் உதித்த, ஒருகடைச்சிதனை = ஒரு நீசஸ்திரீயை, மணஞ்செய்து = விவாகஞ்செய்து, ஒருமையானன் = மனமொத்து வாழ்ந்து வந்தான்.

(ஸ்ரீ - வீர.) பூதமண்டலமெனப் பெயரிய தேசபேதத்தின் சீமாவிலுள்ள கிராமசமீப பூமியில் வசிப்பவர்களாய கடையவர்களுடைய மங்கையின் கர்ப்பத்தில் ஆகுலத்தோடு கூடியதனது ஸ்திதியைக் கண்டனன்; கருப்பவாசஞ் செய்துகொண்டு ஆங்குப்படும்பெருந் துன்பங்களை யதிகஷ்டத்துடன் அநுபவித்து, கோமளாங்கங்கொண்டு வெகுபீடையடைந்து அக்கடைச்சியின் அகட்டிற்கிடக்கும் மலப்புழுவேபோல மலமத்தியில் மூழ்கி மலக்கிருமிகளாற் கடிபட்டு அதனால் ஆகுலமிருத்துக் கிடப்பதாகத் தன்னைக்கண்டான். மெதுவாகப் பக்குவமுறவே பத்துமாதம் முற்றியதும் கடைச்சியினால், மழைப்போதினாலே மலங்களாற் சூழப்பெற்றதாய் கார்மேகம்போல, மிகக்கறுத்த நிறத்த குழந்தை பிரசவிக்கப் பெற்றது, பெறவே கடையர்தம்மனையில், கடையர்கட் கிறைவனாங் குழந்தை பிறந்ததைப்பற்றி உற்சவ வங்கொண்டாடப் பெற்றது: யமுனைப் பிரவாகபதிதமா யலங்காரத்துடன் சிறந்திலங்கும் உற்பலம்போல், இதனினின்றும் இதனினின்றும் சென்றுபோய்ப் பன்னிருவருட தசையையடைந்தனன், பின்பதினாறு வயதுடையவனாக விருக்கத்தன்னைக் கண்டனன்; நீர்பருத்திரண்டுருண்டு பருத்தமேகமே யென்னக் கருங்காந்தி மூந்திப்பருத்த வங்கிச உதாராங்கமுடையவனாகித் திகழ்வுற்றனன், வேட்டையின் பொருட்டு நாய்களையே பரிவாரமாகக் கொண்டு வனத்தினின்று வனத்திற் சஞ்சரிப்பவனாகி, லக்ஷக்கணக்கான மிருகங்களைக் கொன்று கிராதசம்பந்த ஸ்திதியையடைந்தவனாயினன்; பின்னர், தமாலக்கொடியேயென்ன வடிவுடையளாய், தனங்களாம் பூங்கொத்துகளைத் தார்மார்பிற்றாங்கி, நவபல்லவ ஹஸ்தங்களை வீசிப் பெண்யானைபோல் நடந்து விளையாடி, கறுத்த நிறத்தளாய்க் கார்மின்னென நுடங்கிதந்ததாவன மில்லாமையின் மலினாகாரமாய், இயற்கைத் தாயவெண்மை கொண்டு அமலமாய், இலங்கும் தந்தபந்திகளை யுடையவளாய், வனபல்லவங்களைப் பின்றொடர்பவளாய், அவ்வகையாய வெகுவிலாசங்களோடு கூடிய அங்கமுடையவளாய், ஒளிரா நின்ற சுவபசகன்னியை மணந்து கொண்டான். மணந்தபின் அப்புதுமணமகளொனும் இட்டமாம் புத்தமுதொடும் மகிழ்ந்து, நித்திய அபிநவம்வாய்ந்த நிகரிலாப் பிரியையோடும் புணர்ந்து, புஷ்ப ஐசுவரியம் நிறைந்தவனாந்தங்களில், சியாமளமாய பிருங்கம் சியாமையாகிய பிருங்கியோடும் கூடி விலாசஞ் செய்வதேபோல விலாசஞ் செய்துகொண் டிருப்பதாகத் தன்னைக் கண்டான்.

(ச.) காளை = பதினாறுவயதுள்ளவன். (7)

((ஸ்ரீ-வீர - அ-கை.) ஐக்கியமுறுதலும் பயன் பெறுதலும் ஐரைவருதலும் கூறல்:— வரையென்பது.

வரைகளினும் வனங்களினு முதலாயெங்கு மனமுமுயி ரும்போல வாழு நாளிற், றரைமிசைதன் குலம்விளங்க மைந்தர்தம்மைச் சனிப்பித்தான் சில நாளிற் சரைவந்தெய்தி, நரைபெருக வருதலுமே தழைடாற் செய்யு நன்மனை தா ரத்தியற்றி நண்ணலுற்றான், புரையறுமா தவர்போலங் குறையுநாளிற் புத்திரர்க் குஞ் சரைவந்து புகுந்ததன்றே.

(ப.-ரை.) வரைகளினும் = பர்வதங்களிலும், வனங்களினும்=மாசிரம்பிய பிரதேசங் களிலும், முதலாயெங்கும் = ஆதியாயபல இடங்களிலும், மனமுமுயிரும் போலவாழும் நாளில் = சித்தமுஞ் சீவனும்போல ஒன்றுபட்டு ரமித்து இல்லறம் நடத்துங்காலத்தில் தரைமிசை = இப்பூமண்டலத்தில், தன்குலம் விளங்க = தனதுவம்சம் விருத்தியடைந் தோங்கும் படியாக, மைந்தர்தம்மைச் சனிப்பித்தான் = குமாரர்தங்களை யுண்டாக்கினன், சிலநாளில் = சொற்பதினத்தில், சரைவந்தெய்தி = சரைவந்தடைந்து, நரைபெருகவருத லுமே = நரைவிருத்தியாகவுந் துறுதலுமே, தழையாற்செய்யும் நன்மனை தாரத்தியற்றி= பர்ணங்களாற் பண்ணப்படும் நல்ல சாலையைச் சேய்மையிற் செய்துகொண்டு, நண்ணல் உற்றான் = வசிக்கலானான், புரையறு மாதவர்போல் அங்கு உறையுநாளில் = குற்றமற்ற பெருந் தபசிகள்போல அச்சாலையில் வசிக்கும்போது, புத்திரர்க்கும் = மைந்தர்கட்கும், சரைவந்து புகுந்தது அன்றே = அக்காலத்திலேயே சரைப்பருவமானது வந்து நேர்ந்தது; அல்லது அன்று ஏ என்பன அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) அந்த நாயகியோடும் வனகுஞ்சங்களில் விசிராந்தியடைந்தும், கிரிதரிகளில் துயின்றும், பத்திரபுஞ்சங்களில் நிலீனம்பற்றியும், கொடிவீடுகளை யாலயமாகக் கொண்டும், விளையாடிவரும்போது, சைலங்களில் தன்குல அங்குரங்களாகிய புத்திரர்களை, அத்தியந்தம் விடமமாய்க் கேட்பதற்கும் முடியாதவாறாய சரித்திரங்களை யுடையவர்களாக, கதிரவிரு க்ஷம் கண்டகங்களை யுண்டாக்கிய வாறேபோல, ஈன்றெடுத்தான், கதிரம் = கருங்காலி, கண்டகம் = முள், பெண்டுபிள்ளை பண்டுபதார்த் தங்களோடுகூடிப் பெரிய சமுசாரியாகி யவ்வனமானது கழிந்தவாறாகத் திதிபெறவே, மெதுவாக ஜர்ஜரத் தன்மையானது மழை பெர்ழியாத் தலத்தைப்போல அடைவுற்றது, பின்னர்ப் பூதமண்டலமெனப் பெயரியதேச சம்பந்தமான அக்கிராமசம்பந்தி ஜன்மபூமியை யடைவுற்று, தாரத்தில் தாலாதிபர்ணங்க ளானே குடிசெய்து கொண்டு முனீந்திரர்போல வாழ்ந்து வந்தான். தனதுதேக சமப்பிர மாண புத்திரர்களை யுடையவனாகி, ஜீர்ணப்பிராய ரசமுடையதாய், படுகுழியிலுண்டாயத மாலதருவுக் கொப்பாக, ஜராஜர்டத் தன்மையை யடைந்தனன்.

(ச.) இவ்விரண்டு கவியாலுங் காதியினது கர்ப்பப்பிரவேச முதன் மேன்மேல் வந்த அவஸ்தை தெரிவிக்கப் பட்டது, (8)

(ஸ்ரீ-வீர.-அ-கை.) யாவருமிறந்து பட்டபின்னர்த் தேசாந்தர சஞ்சாரியாய அந்தக்குரு ஙன் அதிஷ்டவசத்தாற் கீரமண்டலம் அடைதல்:—மனையென்பது.

மனையவட்கும் புத்திரர்க்குந் தனக்குஞ்சேர வார்த்திகம்வந் ததுநோக்கி வருந்துநாளிற், றனையொழிய வனைவரையுங் காலன்மாய்ப்பச் சந்ததம்வாய் விட் டலறித் தனியாற்றாது, நினைவழிந்தோ ராசையுமற் றநேகதேச நெடிதுழல்வான் கீரமெனு நீதிநாட்டிற், புனைமுடிமன் னவனகரிற் புகுந்துவானிற் பொற்றெருப் போ லொருதெருவிற் போகும்போதில்.

(ப - ரை.) மனையவட்கும் = பிரிய நாயகிக்கும், புத்திரர்க்கும் =மைந்தர் கட்கும், தனக்கும் = குரூரனுகிய தனக்கும், சேர = ஒருங்கே, வார்த்திகம் = கிழப்பருவம், வந்தது = வந்துசேர்ந்தது, நோக்கி =பார்த்து, வருந்துநாளில் = துயருற்றிருக்கும்போது தனையொழிய =குரூரனைவிட்டு, அனைவரையும் = பிறயாவரையும், காலன்மாய்ப்ப=யமன் கொண்டுசெல்ல, சந்ததம் வாய்விட்டலறி= எப்போதும் கோவென வாய்திறந்துகதறி, தனியாற்ருது = ஏகனுக விருக்கவியலாதவனுகி, நினைவழிந்து = எண்ணமிழந்து, ஓராசையுமற்று = சகல ஆசைகளுஞ் சாம்பி, அநேகதேசம் நெடிதுழல்வான்= அநேக தேசங்களில் நெடுங்காலமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்த அவன் கீரமெனும் நீதிநாட்டில்= கீரமண்டலம் என்னும் நீதிநிறைந்த தேசத்தில், புனைமுடி மன்னவன் நகரில் =கிரீடாதிபதியாய அரசனது பட்டணத்தில், புகுந்து = பிரவேசித்து, வானில் = சொர்க்கத்தில்; பொற்றெருப்போல் = சொர்ணவீதிபோன்ற, ஒரு தெருவில் = ஒரு ஒப்பற்ற வீதியில், போகும்போதில்= செல்லுங்கால்.

(ஸ்ரீ - வீர.) அன்னியர்களாகிய சுவபசர்களி னின்றும் ஜாடனுகிய அக்காதியானவன் பின்னர் மயக்கத்தையே பின்ருெடர்ந்தவனுகிப் பெருங்குடும்பியாய்விளங்கிய தன்னுடைய சகல குடும்பத்தையும் மிருத்தியு வந்துபற்றி அணுவும் விடாமல், விரைவில் மழைச்சலப் பிரவாகமானது வனத்தில் வீழ்ந்து காய்ந்த பர்ணகணங்களையிழுத்துக்கொண்டு போவதே போல இழுத்துக்கொண்டு போவதாகக் கண்டான். அதன்பின், இச்சாடன் ஒருவனுகவே அவ்வடவியில் மிகுந்த துயரத்தால் வாட்டமடைந்தவனுகிச் சமுசாரப்பற்றற்றவனுகி, கண்ணீர் ததும்பிய கண்ணனுய், கூட்டத்தினின்றும் பிரிந்த சாரங்கம்போல ரோதனஞ்செய்து கொண்டிருந்தான். சிலதினபரியந்தம் ஆண்டுச் சோகத்தினுலே தபிக்கப்பெற்று வாடிய சித்தத்தனு யுழன்றுதிரிந்து, நன்ருகவுலர்ந்த தாமரைத்தடாதத்தை விடுத்துச் செல்லும் ஹம்சப்பக்ஷிபோன்று தன்றேயத்தை விடுத்துச் சென்ருன். ஒன்றிலும் வாஞ்சையொன்ருதவனுய் வெகுசிந்தாகுல முற்றவனுய், அநேகதேசங்களைச் சுற்றிச்சுற்றி, காற்றினுல் அலைவுறுங் கமலமேபோல் அன்னியரானே யேவப்பெற்றவனே போற் பராதீனனுய் அலைந்து கொண்டுவந்தான். கீரஜன பதங்கணிறைந்த வெகுஜன சமுதாயவாச பூதமண்டலத்தில், உள்ள ஸ்ரீமந்நகரத்தை யொருகால், சூனிய அம்பரத்திற் சஞ்சரித்துக் கொண்டிருந்த கேசரன் நல்லவிமானத்தை யடைவுற்றதேபோல அடைவுற்றனன். நடனமாடாநின்ற இரத்தினங்களாலும் ஆடைகளாலும் மறைபட்ட மார்க்கத்துற்ற மரங்களாலும் கொடிகளாலும் மங்கையராலும் நிறையப்பெற்றும், குதியளவு மிதிபடப்பரப்பிய குசுமங்கள் நிறையப்பெற்றும், சந்தனமுதலிய சுகந்தங்கள் தெளிக்கப்பெற்றுச் சுந்தரமணம் வீசப்பெற்றும், சாமந்தர்களானும் அதிசுந்தரிகளானும் பிரபுக்களானும் இடையின்றிநெருங்கப்பெற்றும், அதனுனே இந்திரபுரி நெறியையுவமை யிடப்பெற்றும், இலங்காநின்ற இராஜமார்க்க மத்தியை அக்காடையன் அடையலானுன்.

(ச.) உழல்வான் = தன்றேசத்தை விட்டுழன்றவனுகி.

(9)

(ஸ்ரீ-வீர - அ - கை.) கரியின் றிருவருளால் கடையவன் முடியவனுதல்: —இறையென்பது.

இறையவன்மாண் டனனுலகங் காக்கவேறுெ ரிறைவனைக்கொண் டேகுதியென் றேவிச்செம்பொ, னிறைமணியா லலங்கரித்து விடுத்ததந்தி நிருபதியாரெனத்தேடி நேரேபோதக், கறைவடிவோ டிவன்கண்டா னிவனையந்தக் கறையடிகா ணலுங்கரத்தாற் கழுத்திலேற்ற,வுறைதருபா னுவினுடன்செல் லுதயநாகமொத்ததுபல் லியஞ்சூழ்ந்த துவரியொத்த.

(ப - ரை.) இறையவன் மாண்டனன் = மன்னவன்சாம்பினன், உலகங்காக்க = இராஜ்ய பரிபாலனஞ்செய்ய, வேறு ஓர் இறைவனை = மற்றொரு மன்னனை, கொண்டேகுதி = கொண்டு வருவாயாக, என்று ஏவி = எனப்பிரேரித்து, செம்பொன் நிறைமணியால் அலங்கரித்து = நவரத்நகசிதமான சிறந்தசொர்ண ஆபரணங்களால் அலங்காரஞ் செய்யப்பெற்று, விடுத்ததந்தி = விடப்பெற்ற பெருங் கோட்டானையானது, நிருபதியாரெனத் தேடி = அரசன்யாவன் என்றுதேடி, நேரேபோத = நேராகவந்து சேர, கறைவடிவோடிவன் கண்டான் = பேராபாச உருவத்தையுடைய இக்கடையவன் பார்த்தான், இவனையர்தக் கறையடிகாணலும் = இக்கடையனை அவ்வுரற்கால் யானைகண்டதும், கரத்தால் கழுத்தில் ஏற்ற = துதிக்கையால் பிருஷ்டபாகத்தில் ஆரோகணிப்பிக்க, உறைதருபானுவினுடன்செல் = நிதிபெற்ற சூரியனுடன் செல்லாநின்ற, உதயநாகம் ஒத்தது = உதயாசலசமமாயது, உவரியொத்த பல்லியஞ் சூழ்ந்தது = சமுத்திர ஓசைக்குச் சமமாகவாத்திய விசேடங்கள் கோஷித்தன.

(ஸ்ரீ - வீர.) மணிசிரேஷ்டங்களானே செய்யப்பெற்ற ஜாலகங்களையுடையதாகிய மங்களமாதங்கம் ஆண்கூ, சஞ்சாரசஞ்சலஞ் சார்ந்த, செய்யப்பெற்ற தேவசதனத்தோடு கூடிய அமரசைலேந்திர மென்னும் சுமேருபர்வதமே யென்ன, அக்கடையவன், அரசன் இறந்து போனதினாலே, வேறொரு வேந்தனைத்தேடி, இரத்தினப் பொருட்டுச் சிந்தாமணியைக் காணவேண்டு மென்னும் வேட்கையினாலேதிரியும் இரத்திநபரீக்ஷா குசலனைப்போல, இங்கு மங்குமாய்ச் சஞ்சரித்துக்கொண் டிருப்பதைக் கண்டான். அசைவோடு கூடிய அசல உபமமேய அந்நாகத்தை,இச்சுவபசன் கௌதுகத்தால் விழித்தது விழித்தபடியாய விழிகளானே சிரகாலஞ் செறிந்து நோக்கினான். நன்குநோக்கிக் கொண்டிருந்த அவனைத்துதிக்கரத்தால் எடுத்து அவ்வாரணம் தனதுகண்டஸ்தலத்தில் மேருவின்றடத்தில் அருக்கனைப்போல ஆதரவோடும், வீற்றிருக்குமாறு செய்தது. அவனை யானை தன்மேற் கொண்டு வருதலைக்கண்டதும், கற்பாந்த மேகங்கள் கனமடைந்து கர்ச்சித்தது போலவும் கடல்கள் ஒருங்கு சேர்ந்து ஆரவாரம் செய்ததுபோலவும், எப்பக்கங்களிலும் ஜயதுந்துபிகள் முழங்கின. (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கிரீடஞ் சூடிச்சிங்காதனத் திருத்தல்:—எண்ணென்பது.

எண்டிசையுஞ் சயசயவென் றிறைஞ்சவந்தா னிவனிறையென் றலங்கரித் தா ரெழில்கொண்மாஞர், பண்டையமைச் சருஞ்சேனைத் தலைவர்தாமும் பணி தலைக்கொண் டார்தரணி பாலனாகி, மண்டலமெங் கணுஞ்செங்கோன் முறையி னோச்சி மரபினாற் கவலனெனும் வண்பேர்பெற்றுத், தொண்டையித ழார்விரும் பக் கிரநாட்டிற் சுடர்மணிச்சிங் காதனமேற் றோற்றமிக்கான்.

(ப - ரை.) எண்டிசையும் = எட்டுத்திக்கி லுள்ளவர்களும், சயசய என்றிறைஞ்ச = வெல்கவெல்க என்றுபோற்ற, வந்தான் = மாதங்கமீது இவர்ந்து வந்தனன், இவனிறையென் றலங்கரித்தார் = இவன் மன்னவன் என்று அலங்காரஞ்செய்தனர், எழில்கொள் மாஞர் = கவின்மிகுந்திலங்கும் காரியராம் மானேக்கியர், பண்டை அமைச்சரும் = பழைய மந்திரிமாரும், சேனைத்தலைவர்தாமும் = சேனாதிபதிகளும், பணிதலைக் கொண்டார் = அவனது ஆணையைச் சிரந்தாங்கிச் செய்தனர், தரணிபாலனாகி = பூரக்ஷகனாகி, மண்டலம் எங்கணும் = சகலதேசங்களிலும், செங்கோல் முறையின் ஓச்சி = தர்ம இராஜ்யபரிபாலனத்தை மனுநீதிமுறைப்படி நடாத்தி, மரபினால் கவலன் எனும் வண்பேர் பெற்று = வங்கிசத்தால்

கவலன் என்னும்வளப்பம் பொருந்திய நாமத்தையடைந்து, தொண்டை யிதழார்விரும்ப= கோவைக் கனிபோலும் அதரமுடையார் விழைய, சேநாட்டில்=சேரதேசத்தில், சுடர்மணிச் சிங்காதனமேல் = பிரகாசம் வீசும் இரத்தின சிம்மாசனத்தின் மீது; தோற்றமிக்கான் = யாவரும்போற்றக் கெம்பீரமாய் வீற்றிருந்தான்.

(ஸ்ரீ - வீர.) வெல்கவேந்தன் என்னும்,மநோரதம் நிறையப்பெற்ற ஜனங்களின்ஶ்ரேணி யானது, எத்திசையிலும் நிறைந்தது, நற்பேருணர்வோர்தம் அரவம் பறவைகளின் ஒலிபோலும் எழுந்து பரவியது, அதன்பின் வந்திவிருந்தர்தம் கனகோலாகலம் கிளம்பியது, எழுகடலும் கலங்கியெழுந்த தொனியொத்தது; க்ஷீரோதத்தின் மதனமாற்றிய கலக்கத்தால் விப்பிராந்தங்களாய லகரிகள் மந்தரமடைந்த தேய்ப்ப, ஆண்டு வராங்கனைகள் மண்டனப் பொருட்டு அம்மன்னனைச் சூழ்ந்து கொண்டனர்; அத்தகைய அவ்வரசனைப் பரிவாரசமன் விதர்களாய சகலபிரஜைகளும் பட்டணப் பிரவேசஞ் செய்வித்தனர்; இங்ஙனம் அச்சுவபசன்கீர புராந்தரத்தில் இராஜ்ஜியத்தை, மிகவுங்கொழுத் துயிரில்லாதமான ஆரண்யத்தில் வாயசம் பெற்றதேபோலப் பெற்றனன். சேமண்டலத்துள்ள நாரிமண்டலங்களின் கரதலாம்போஜம்பற்றிய விருசரனும்புஜனுயினன். எப்புறத்தும் பரவப்பெற்ற இராஜசக்தியை யுடையவனும் சகல சிற்றரசர்களாலும் சூழப்பெற்றவனும், அதனுனேயே சகல திசைகளிலும் நிறுவப்பெற்ற ஆணையை யுடையவனும், சிலதினங்களிலேயே தனதிச்சைப்படியே இராஜ்ய விவஸ்தை சித்திக்கப்பெற்றவனும், பிரகிருதிகளானே அசேஷ்ராஜ்ய பாரமத்தியந்தம்வசிக்கப்பெற்றவனும், ஆகிய அக்காதிகவலன் என்னும்பெயரானே ஆண்டு அரசனுகியாண்டான், விலாசினிகளானே சூழப்பெற்றவனுய், மந்திரிமண்டல பூஜிதனுய், சருவசாமந்தரானே வந்திதனுய், சத்திரசாமரலாலிதனுய், மற்றும்பல ஆடம்பரங்களாலும் தோத்திர மங்களங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவனுய்த் தன்னை மறந்தாநந்தித்து வாழ்ந்தான்.

(ச.) மூலம்:—பரிவிஸ்ருதந்ரு பௌஜா: = எப்பக்கங்களினும் பரவிய இராஜதேஜசை யுடையவனுகி யெல்லாராஜாக்களாலும் எங்கும் பூசிக்கப்பெற்றவனுகி, கதிபயதிவசேஹா சித்ததே சவ்யவஸ்த: = சொற்ப தினங்களானேயே சுவ இச்சைமாத்திரத்தானே சித்தமாய தேசமரியாதையை யுடையவனுகி, பிரகிருதிபி: = ஆமாத்தி யாதிகளானே வகிக்கப்பெற்ற அசேஷராஜ்ய பாரத்தை யுடையவனுகி, அவன் அரசனுய் வாழ்ந்தான் எனப்பிறவற்றையும் கூட்டிமுடித்துக் கொள்க. (11)

(ஸ்ரீ-வீர - அ-கை,) எட்டுவருடங்கள் அரசாக்ஷி செய்தபின்னர்த் தனதுறவினரைச் சந்தித்தல்,—நாலென்பது.

நாலிரண்டு வருடமுயர் கவலனென்னு நாய்க்கறிக்குங் கடையனர பதியாய் வாழ்ந்து, மேலதற்பின் ஞெருநாளிற் றனியனுகி மெய்யலங்கா ரங்களெல்லாம் விட்டுத்தானே. காலினடந் துயர்மனையின் புறமுற்றத்திற் கடைவேடத் துடனுலவு காலையாங்கே, நீலிமையா நிறத்தோர்நாய்க் கறிக்குநீசர் நேர்வந்தார் வீணையிசை நிரப்புங்கையார்.

(ப - ரை.) நாலிரண்டு வருடம் = எட்டுவருடங்கள், உயர்கவலன் என்னும் = மேன்மைமிக்க கவலன் என்று பெயர்பெற்ற, நாய்க்கறிக்குங் கடையன் =சுவபசனுகிய நீசன், நரபதியாய் வாழ்ந்து = பூபதியாகி வாழ்ந்து, மேலதற்பின் ஞெருநாளில் = அதன்பின்பு மற்றொரு சமயத்தில், தனியனுகி = ஏகாந்தத்திருப்பவனுகி, மெய்யலங்காரங்கள் எல்லாம் விட்டு=சரீரத்துற்ற ஆடையாபரணுதி யலங்காரங்கள்யாவற்றையும் அகற்றி, தானேகாலில்

நடந்து = சுயம்பாதத்துலாவி, உயர்மனையின் புறமுற்றத்தில் = உயர்ந்த அரண்மனையின் பாகிய அஜாபூமியில், கடைவேடத்துட னுலவுகாலே = நீசவேஷத்தோடுஞ் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் போது, ஆங்கே = அவ்விடத்தே; நீலிமையாம் நிறத்தோர் = கறுப்பு வர்ணமுடையவராய், வீணையிசை நிரப்புங்கையார் = வீணையின் சுரத்தை மீட்டுங்கரத்தின ராயுள்ள, நாய்க்கறிக்கும் நீசர் = சுவபசர் ஆகியகடையர் = நேர்வந்தார் = கண்காணவந் துற்றனர்.

(ஸ்ரீ - வீர.) கீரதேசத்தில் நாய்க்கறிப்போன் எட்டு வருடங்கள் இராஜ்யபரிபாலனஞ் செய்துகொண்டு தயைதாக்ஷிண்ய சௌசாதி ஆரியவிருத்தங்கள் யாவற்றையும் அவ்வளவு காலம் வரையும் அநுட்டித்துக் கொண்டு மிருந்தனன். மற்றொருசமயம், இட்டப்படி அவ் வரசன் பூடணங்கள் யாவற்றையும்போக்கி, இருளுடு இந்து அருக்கன் ஒளியெழிலியொன்று மில்லாத அம்பரம்போல எங்கும் நீலனு யுருக்கொண் டிருந்தனன்; அத்தகைய வேடத்து டன் ஒருவனுகவே, முக்கியஜன ஆசிரித ஆந்தர அங்கணத்தினும் பாகியமாகிய கீழோர் பொதுவாய்ச் சரிக்கும் அஜிர அங்கணமென்னும் முற்றத்தில், அத்தத்தை யடையாநிற்கும் அம்சுமான் முக்கியமாகியகன அங்கணத்தி னின்றுஞ்சென்று பிராந்த நபோபாகத்திற் சரிப்பதேய்ப்ப, சரிப்பதாயினன்; ஆண்டு மிகக் கறுத்துப் பருத்துள்ள நாய்க்கறிப்போர் கூட்டத்தைக் கண்டனன்: அக்கூட்டம் வசந்தத்திற் கிளம்பிய குயிற்கூட்டம் என்ன மாது ரியமாகக் கானஞ் செய்துகொண்டு வந்தது, வீணையின் குணத்தைக் கரபல்லவலீலையானே மீட்டிக்கொண்டு வந்தது, தருமத்தைக் கம்பிக்கச் செய்யும் படபடத்த சிறையளிக்கூட் டமே யென்ன மிருது சுவரத்தைக் கொண்டுவந்தது.

(ச.) மூலம்:—சுவபசயேடகம்= நாய்க்கறிப்போர் சமூகம். (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அக்கூட்டத்துற்ற கிழவனொருவன் கடையரசன் இயல் பெல் லாங் கட்டுரைத்தல்:—யாழ் என்பது.

யாழுடைய காளைக்குண் மேலாமற்றோ ரிருண்டநிறச் சிவந்தவிழி விருத்த னெய்திக்,காழுடைய நற்கீரமகிபன் றன்னைக் காண்டலுமே காதலுடன் கடைஞ் சனென்னு, மூழுறுதொல் பெயர்வினவி நெடுங்காலத்தி னுறவாநீ,யெங்ககன்று யுறைவதெங்ஙன், சூழுறுநல் விதியாலே கண்டேனென்னுத் தொடர்பெல்லா முள்ளபடி தோன்றச் சொன்னுன்.

(ப - ரை.) யாழுடைய காளைக்குள் = வீணையையுடைய கடையர் கூட்டத்துள், மேலாம்மற்றோர்= நாயகமாக விளங்கும் மற்றொரு, இருண்டநிறச் சிவந்தவிழி விருத்தன் எய்தி = கருமேனிச் செங்கண் வெண்டலைக் கிழவன் முன்னிட்டு, காழுடைய= ஒளியை யுடைய, நற்கீரமகிபன்றன்னை=மேன்மைமிக்க கீரதேச மன்னவன்றன்னை, காண்டலுமே= பார்த்தலுமே, காதலுடன் = அன்புடன், கடைஞ்ச னென்னும் =கடஞ்சனென்று கூறப் பெற்ற, ஊழுறு = பழவினையினுல் வந்தடைந்த, தொல்பெயர் = பழைய நாமத்தை, வினவி =கொண்டுவிளித்து, நெடுங்காலத்தின் உறவாம் நீ = வெகுகாலத்திய நேயனும் நீ, எங்ககன்றுய் = எவ்விடத்துச் சென்றுய், உறைவது எங்ஙன் = இப்போது எங்கேயிருக் கின்றுய், சூழுறுநல் விதியாலே = வந்துபொருந்திய நல்ல அதிர்ஷ்டவயத்தாலே, கண் டேன் என்னு = பார்த்தேன் என்று, தொடர்பெல்லாம் = முன்சம்பந்தம் யாவற்றையும், உள்ளபடி = இருந்த வகையாகவே, தோன்றச் சொன்னுன்= விளங்க விளம்பினுன்.

(ஸ்ரீ - வீர.) அக்கூட்டத்தினின்றும், சுவபசநாயகனுய், பனியினுல் நிரப்பப்பட்டகாச மய்மான கிரியின் சிருங்கமேபோல இருப்பவனுய், கறுப்பனுய், தூளிபடிந்த மேனியனுய்,

ஜராவானும், இரக்தலோசனனும், உள்ள ஒருவன்கிளம்பி, ஐய்கடஞ்சனே! என்று சகச மாகப் பூர்வநாமமாகிய கடஞ்சனென்னும் பெயர்கொண்டு அக்குரூரனை கிரமகிபதியை விளித்து, இங்கு நீயரசனோ இனிதின் வாழ்கின்றனையோ, எங்குறைந்தாயித்துணை நாள், இலமாடை கிடைத்தனவோ, சங்குகன்னன், நீயலையோ சாகாமல் வாழ்ந்தனையோ, பங்க மறவந்தனையே பந்தெமக்கு நீயலையோ, கங்குலறக்கண்டேனே, கதிமோக்ஷமடைந்தேனே அசேட ஆநந்தங்கட்கும், மகத்தாயுள்ள இலாபங்கட்கும், அநந்த விசிராமங்கட்கும், பரம அவதியாயுள்ளது பந்துதரிசனமல்லவோ ! ஆகவின் சூரிய உதயத்தானே பதுமம்போலவும் சந்திர உதயத்தானே ஒளஷதி போன்றும், நினது தரிசனத்தானே யின்றுயான் பரமானந் தத்தையே யடைந்தேன் எனக்கூறினன். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை,) அனைத்தையும் வாதாயனத்திருந்து கண்டமங்கையர் முதலி னோர் வாடலும் இவன் மறைத்திருந்தும் பயனறுதலும் இற்றெனல்:—அது அறியென்பன.

அதுபுகன்ற வவன்றன்னைக் கவலனை வரசனிகழ்ந் ததிர்ந்துரப்பி யவணின் றுங்கே, கதுமெனவுள் ளேகுதலு மிவற்றையெல்லாங் கனங்குழையார் சாளரத் திற் கண்ணிற்கண்டார்,புதுமையினு னின்றார்நின் றுழியேகண்டு பூபதியா மிவன் கடைஞ்சப் புலையனுமே,லெதுசெயப்பாற் றினியென்றே துணுக்குற்றேங்கி யிட ருற்றா ரிவன்கலங்கா திதயத்தெண்ணி.

அறியான்போ லவற்றையெல்லா மறைத்துமுன்போ லாதனத்தி லிருக்கவு மங் கவனைமுன்னஞ், செறிவான வஞ்சியர்மந் திரியர்யாருந் தீண்டாத சவத்தைப் போற் றெரிசியாராய்ப், பிறியாது நின்றனரச் சனத்துட்சேர்ந்தும் பேதமாயி வன்றனித்த பெற்றிகூறிற், பொறியாருங் கல்விதன மியாதுமின்றிப் புறநாட்டி லுறும்பதிகன் போலுமன்றே.

(ப - ரை.) அதுபுகன்ற அவன்றன்னை = அப்பழைய சரிதங்களைக்கூறிய அக்கிழவனை, கவலனை வரசன் = கவலனெனப் பட்டப்பெயர் வாய்ந்த அம்மன்னவன், இகழ்ந்து அதிர்ந்து உரப்பி = பழித்துக்குமுறி யதட்டி, அவணின்றுங்கே = அவ்விடத்தினின்றும் அப்படியே, கதுமென உள் ஏகுதலும் = திடுக்கென்று அரண்மனையுள்ளே செல்லுதலும், இவற்றையெல்லாம் = இவ்வரலாறு யாவற்றையும், கனங்குழையார் =நவரத்னகசித காதா பரணமணிந்த மடந்தையர், சாளரத்தில் = பலகணிவாயிலாக, கண்ணிற்கண்டார் =பிர த்தியக்ஷமாகப் பார்த்தனர், புதுமையினுல் நின்றார் = அதிசயத்தால் நின்றார், நின்றுழியே கண்டு= நின்றவிடத்திலேயே பார்த்து, பூபதியாம் இவன்=மேதினிகாவலனை இவன், கடைஞ்சப் புலையனுமேல் = கடஞ்சன் என்னும் சுவ்பசனுவனேல், எதுசெயப்பாற்று = யாது இயற்றற்பாலது, இனிஎன்னே=இனிமேல் என்பதாகத்தானே, துணுக்குற்றேங்கி= திடுக்கிட்டு இரங்கிவாடி, இடர் உற்றார் = துயரத்தை யடைந்தனர், இவன் கலங்காது இதயத்து எண்ணி = இவன் சஞ்சலமுறாது தெரிந்தும் மனத்துட்டிட மடைந்து.

அறியான்போல் = தெரியாதவனைப்போல, அவற்றையெல்லாம்= அச்சரிதைகள் அனைத்தையும், மறைத்து = ஒளித்து, முன்போல்= பூர்வம்போல, ஆதனத்தில் இருக்க வும் = சிங்காதனத்தில் வீற்றிருக்கவும், அங்கு அவனை = அவ்விடத்தில் அம்மன்னனை; முன்னஞ் செறிவானவஞ்சியர் = பூர்வம் பொருந்திவாழ்ந்த இலங்குழையாரும், மந்தி ரியர் = ஆமாத்தியரும், யாரும் = மற்றைய பிரஜைகளும், சேவகர்களும், தீண்டாத சவத்தைப்போல் = தொடக்கூடாத பிணத்தைப்போல, தெரிசியாராய் = பாராதவராய்,

பிறியாது நின்றனர் = பங்குபடாது பக்கத்திருந்தனர், அச்சனத்துட் சேர்ந்தும் = அச்சன மத்தியகதஞகி யிருந்தும், பேதமாய் = வேறுபட்டு, இவன்றனித்த பெற்றிகூறில் = இவ்வரசன் பிரிந்ததன்மையைத் திருட்டாந்தப்படுத்தி யுரைக்கின், பொறியாரும் கல்விதனமியாதும் இன்றி = அறிவுதரும் சொற்றொடர்மேய வித்தைசெல்வம் மற்றெது ஒரு உதவியும் இல்லாமல், புறநாட்டில் = பரதேசத்தில், உறும் = சென்றடைந்த, பதிகன்போலும் அன்றே = வழிப்போக்கன் போலவே ஆயினன் எவ்வாம், அன்று ஏ அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர.) இவ்வாறு நாய்க்கறிப்போன் இசைத்தலுமே இராஜாவானவன் செவி கொண்டவுடன், தற்கால ஜயசேஷ்டையிஞலே திரஸ்கரித்துச் சென்றனன்; அதன்வாயிலாய்த்தன் சரிதையை மறைக்கலாமென்ப தபிப்பிராயம். அத்துணைப்போது வாதாயனத்திருந்த மங்கைமாரும் மந்திரிமாரும், இவன் நீசன் என்றுணர்ந்து அத்தியர்தம் மகிழ்வற்று வாட்டமுற்றவ ராயினர்; மன்னவனே அதிவிரைவாக அம்லானமானவனுய் அந்தப்புரத்துள், மழையிலாப்போது வாடிய வாரிதவாவியுள் இராஜஹம்சம்போல, பிரவேசித்தனன்; அம்மகீபதியை மந்திரிமாரும் நாகாரும் நாரியரும் பிறரும், அரண்மனையினுள்ளேயே யிருந்தபோதினும் சவத்தைப்போலத் தீண்டாதவராகவே யிருந்தனர்; ஜனமத்தியகதனுயினும் இவன் ஒருவனகவே, தனம் தன்சனம் சுகிருத்து முதலிய குணமில்லாதவனுகிய வழிப்போக்கன் பரதேசத்திற்போல இருப்பவனுயினன். (14-15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்பெண் ணடங்கலும் அக்கினிபாய்தலும், அதனைக்கண்ட இவனும் அக்கினியிற் பிரவேசஞ் செய்யவே பதைப்புற்றுன் எனல்:—ஆயிழை, நல்லினம் என்பன.

ஆயிழையா வரும்புலைநாய்க் கறிப்போனலே யநேகநாட் பாதகமே யடைதலானேம், போயினியோர் சாந்தியினு முய்யமாட்டோம் புனிதமாம் படிதீயிற் புகுதுமென்னுத், தீயில்விழ நிச்சயித்தந் நகரோரெல்லாஞ் சிசுக்கண்முதல் விருத்தர்கடை சேரக்கூடி, வீயிலுறை வண்டுகள்போ லெரியில்வீழ்ந்தார் வேந்தனும் புலைக்கடைஞ்சன் மிகவுநொந்தான்.

நல்லினஞ்சேர் தலிற்சித்தந் தெளிந்துநன்று நாய்க்கறிக்கும் புலைநிருப னுடிற்பான், புல்லியநந் தொடர்பாலித் தேசத்துள்ளோர் பூரியரா யனல்புகுந்து பொன்றிப்போன, ரல்லனுட னினியமைபு மென்னநாடி யாவிவிடத் துணிந்தனலில் வீழும்போதிற், பல்லவம்போ லெரிகடைஞ்ச னுடலிற்றுக்கப் படிபுனலுட் காதியுடல் பதைத்ததன்றே.

(ப - ரை.) ஆயிழையாவரும் = மங்கையர் முதலியயாவரும், புலைநாய்க் கறிப்போனலே = புலையனுகிய சுவபசநீசனலே, அநேகநாள் = வெகுகாலம், பாதகமே = பாவ தோஷமே, அடைதலானேம் = பொருந்தி விட்டோம், போயினியோர் சாந்தியினும் உய்யமாட்டோம் = எத்தீர்த்தத்திற்கும் எத்தலத்திற்கும் சென்றும் இனிமேல் எச்சாந்தி செய்தும் கடைத்தேற மாட்டோம், புனிதமாம்படி = பவித்திரமாகும் வண்ணம், தீயில் = அக்கினியில், புகுதுமென்னு = பிரவேசிப்போம் என்று, தீயில்விழ நிச்சயித்து = செந்தழலிற் பிரவேசிக்கத் துணிந்து, சிசுக்கண்முதல் = பாலராதியாய், விருத்தர்கடை = கிழவரீருக, அந்நகரோர் எல்லாம் = அப்பட்டணத் துள்ளயாவரும், சேரக்கூடி = ஒருங்கு சேர்ந்து, வீயிலுறை வண்டுகள்போல் = பூவிலுறையும் விட்டில்கள்போல, எரியில் = செந்தழலில், வீழ்ந்தார் = பாய்ந்தார், வேந்தனும் புலைக்கடைஞ்சன் மிகவும்நொந்தான் = மன்னவனும் புலையனுகிய கடைஞ்சன் அத்தியர்தம் துயரத்தை யடைந்தனன்.

நல்லினஞ்சேர்தலில் = சஜ்ஜன சங்கத்தை யிதுகாறும் மருவிவாழ்தலின், சித்தந் தெளிந்து = மனந்தூய்தாகி, நன்றுநாய்க் கறிக்கும் புலைநிருபன் = நற்குணம் வாய்ந்துள்ள சுவபசனாகிய நீசவரசன், நாடுகிற்பான் = எண்ணுகிற்பான், புல்லிய நந்தொடர்பால் = சேர்ந்த நமது சம்பந்தத்தால், இத்தேசத்துள்ளோர் = இக்கிரமண்டலத்துற்றோர், பூரியராய் அனல்புகுந்து பொன்றிப்போனார் = பாவியராகி யக்கினியிற் பிரவேசித்தழிந்து போயினார், அல்லலுட னினியமையும் = துக்கத்தோடு கூடிவாழுதல் இனிப்போதும், என்னநாடி = என்று எண்ணி, ஆவிவிடத் துணிந்து = உயிர்விட நிச்சயித்து, அனலில் = எரிதழலில், வீழும்போதில் = பாய்ந்தவுடனே, பல்லவம்போ லெரிகடைஞ்சன் உடலிற்றாக்க = தளிரென்னத்தழல் கடைஞ்சன் காயத்தில் வீச, படிபுனலுள் = மூழ்கிய நீரினுண்ணின்ற, காதியுடல் = அம்மறையவன்மேனி, பதைத்ததன்றே = அப்போதே நடுநடுங்கியது.

(ஸ்ரீ - வீர,) இனியாம் யாவருமே தீர்க்ககாலம் சுவபசதூஷிதராயினேம், பிராயச்சித்தங்களாலுங் கூடத் தூயோராகேம், ஹுதாசனத்திற் (அவியுணியிற்) பிரவேசிப்பேம், என நிச்சயித்து நகரத்தில் நாகரர்களும் மந்திரி முதலியோர்களும் மங்கையர்களும் பாலர்களும், எப்புறங்களினும், காய்ந்த இந்தனங்களானே சிதாக்கினியை விருத்திசெய்து, சுவாலைவிட்டெரியுமாறு செய்வித்து, ஆகாயத்தில் தாரகைகள்போலச் சொலித்துக் கொண்டிருக்கும் அச்செந்தழற்பரப்பில் அப்போது ஒருங்குகூடிப் பாய்ந்தனர். இராஜ்ஜிய சற்சனசம்பந்தத்தானே பவித்திரம் ஆக்கப்பெற்ற இராஜாவாகிய நீரநீக்கவலனும், சோகத்தானே யாகுல சித்த முடையவனாகிச் சிந்திப்பானாயினன். எம்பொருட்டாக வன்றோ இப்பேரநர்த்தம் இத்தேசத்தேயெய்தி நிலவியது: அகால கற்பாந்தமயமாய்ச் சர்வநாயக நாசமுண்டாயது, என்னெனது ஜீவிததுக்கத்தானே, மரணமெனக்கு மகோற்சவமாகும், லோகநிந்திய மாயதுர்ஜந்துவிற்கு ஜீவிதத்தினும் மரணமே மேலானதாம். இங்ஙன்றுணிந்து கவலன் கவலையுடன் சொலிதமாய சொலனத்தில், தன்னையும், அனலத்தில்வீழும் பதங்கம்போல ஆகுதியாக அநுத்வேகத்துடன் அர்ப்பணஞ் செய்தனன். அக்கவலனெனப்பெயரியதேகம் வைராக்கியவலுவானே ஹுதாசராசியின் கண் வீழ்ந்துபதைபதைத்தபோது, அவயவாகுல மடைந்தபோது, தனது அங்கங்களாகிய ஹஸ்தபாதாதி தகனத்திற்பட்டு மிகவும் வெந்தபொழுது, எப்பிராணங்களாகிய சஞ்சலங்களுண்டாயினவோ அவற்றின் அநுசரிப்பால், பாபத்தைச் சினந்துகாதி உண்ணீரிற்சடிதியாகப் போதத்தையடைந்தனன்.

(ச.) ஆயிழை = ஆயிழையும், யாவரும் = மந்திரி முதலானவரும், சிசுக்கண்முதல் விருத்தர்கடை அந்நகரோ ரெல்லாந்தீயில்விழ நிச்சயித்து வீயிலுறை வண்டுகள்போலின்னோர் சேரவெரியில் வீழ்ந்தார் என்பதந்நுவயம்.

(16-17)

## பன்னிரண்டாவது தினம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) காதிதெளிந் தெழுந்து உலகமோகத்தை நினைந்து சாந்தியுறுதல்,—மாமாவென்பது.

மாமாயை நின்றகன்று தெளிந்தகாதி யெருமுகுர்த்த மோரிரண்டின்மயக்க நீங்கி, யாமாரென் காண்கின்றோ மென்செய்தோமென் றெல்லாமுண்ணினைந்து சலத் திடைநின்றேறி, யாமாவிப் படியன்றோ வுயிர்களெல்லா மரணியத்துட் சினப்புலிபோ லவாவியோடித், தோமாரு நெடுமயக்கின் மனமோகித்துத் துவள்கின்றோ ரெனக்கருதித் துயரந்தீர்ந்தான்.

(ப - ரை.) மாமாயை நின்றகன்று= மாக்ஷிமைதங்கிய மாயையினின்றும் வெளியேறி, தெளிந்தகாதி = தெளிவையுற்ற காதிப்பிராமணன், வருமுகூர்த்தம் ஓரிரண்டில்=வாரா நின்ற இரண்டு முகூர்த்தங்களில், மயக்கநீங்கி = பிரமமகன்று, யாமார் = அகமியாவன், என்காண்கின்றேம் = என்னபார்க்கின்றேன், என்செய்தோம் = என்னகாரியஞ் செய்தேன், என்று = என்பதாக, எல்லாம் உண்ணினைந்து = யாவற்றையும் உள்ளேயுள்ளி, சலத்திடை நின்றேறி=நீரினின்றுங் கரையேறி, ஆமாவிப்படியன்றே வுயிர்களெல்லாம்= ஆமாம் இவ்வாறல்லவோஜீவர்களியாவரும், அரணியத்துள் சினப்புலிபோல் = பெருங் காட்டிடைவெங்கோப நிறைந்த சார்த்தூலம்போல, அவாவியோடி = ஆசைப்பட்டோடி, தோமாரு நெடுமயக்கின் மனமோகித்து = குற்றம்பொருந்திய நீண்டமோகத்தில் மனமானது மயங்கி, துவள்கின்றார் = சஞ்சலப்பட் டுழல்கின்றார், எனக்கருதித் துயரந்தீர்ந்தான் = என்றெண்ணித் துக்கம்நீங்கப் பெற்றான்.

(ஸ்ரீ - வீர.) முகூர்த்த மிரண்டு கழிந்தபின்னர், அக்காதி மறையவன் ஆதிரூபமாக (ஆதி = மனோவியாதி) முன்மொழிந்த பவப்பிரமத்தினின்றும் ஆகுலீபாவத்தின் பரமசாந்தியை யடைந்தான், அம்புதியினின்றும் வேலைநெருங்கிய சுழலேபோலும், கற்பாந்தசமயத்திற் பிரஹ்மாஜகத் விரசனத்தினின்றும் இளைப்பாறுதலை யடைந்ததேபோல அம்மனோ நிர்மாண சம்மோகத்தினின்றும் அம்மறையவன் ஆறுதலையடைந்தனன். யான்யார்? என்னபோலும் பார்க்கின்றேன், யான் என்னதான் இயற்றினேன், என்பதாக இவ்விசித்திரத்தைச் சற்றுய்ந்துள்ளே, புருவமேற் செருகினான் கணம், ஆ! அச்சிராந்திவயத்தாற் கணமாத்திரத்தானே மகாபிரமத்தை யான் கண்டவனாயினேன், என்றுணர்ந்து சலிலத்தினின்றும் உதயார்க்கன் ஒக்க எழுந்தான்; உதயகிரியிலேனும் உதயகாலத்திலேனும் எழுந்த சூரியனை உவமையாகக் கொள்க. உதஸ்தாத், லுங்கில் " காதிஸ்தாகு பாபூப்யஸ்லிச: பரஸ்மைபதேஷு" (2-4-77) என்பதால் சிச்சுக்குலுக்காம். இதன் உரையை ஸ்ரீ வீரசேகர கௌமுதியின் கண்ணே கண்டுகொள்க. தடத்தில் தாயெங்கே, பிரியையெங்கே, யானிறந்ததெங்கே யான்பிறந்த தெங்கே விவாகமே கிடையாதெனக்குப் பெண்ணின் உருவமும் இன்னதென்று தெரியாது, விப்பிரனுக்குக் கள்ளின்வடிவமே தெரியாததுபோலக் கலக்கத்தையே தருந்துஷ்டக் காரிகையார் சொரூபம் எனக்கேன் றெரியும்? இஃதென்னே யிவ்வாறு கண்டேன்? மாயாமோகமாகிய இதிலொரு சிறிதுமே யுண்மையாகக் கிடையவே கிடையாதாம். நித்திய மிங்ஙனன்றே அநந்த பிராந்தி திருஷ்டிகளில் தேகிகளின் சித்தம் வநாந்தரங்களில் உள்ளம் வெருண்டுதிரியும் சார்த்தூலம் போல உழல்கின்றது; எனவிவ்வகை சிந்தித்துத் துயரந்தீர்ந்தான்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) காதிவேதியன் றனதாநந்த ஆசிரமத்திருமை கடந்திருந்துழி ஒரு அதிதிவருதலும் அவனோடே வளவளாதலும் கூறல்:—அக்கருத்தென்பது.

அக்கருத்தி னுடன்சிலநா ளகற்றிநின்று ளச்சிரமத் தவ்வயினோ ரதிதி யெய்த, மிக்கமகிழ் வுடன்றேன்காய் விரும்பியூட்டி வெய்யவன்போஞ் சந்தியிற்றம் விதிகள்செய்து, தக்கசய னங்கள்பயின் றிருவர்தாமுந் தத்துவநூற் கதைகண்மொழி சமயந்தன்னி, லொக்கவுறை யதிதிதனைக் காதிநோக்கி யுத்தமநின் னுடலுணங்கி யோய்ந்ததென்னோ.

(ப - ரை:) அக்கருத்தினுடன் = அம்மோகத்துடன், சிலநாளகற்றி நின்றுளச்சிரமத்து = சிலதினங்களைக் கழித்து ஆசிரமத்து வசித்தான், அவ்வயின் =அத்தன்னுடைய

ஆசிரமத்தைநோக்கி, ஓரதிதியெய்த = ஒரு அதிதிவந்துசேர, மிக்கமகிழ்வுடன் = அதி சந்தோஷத்துடன், தேன்காய் விரும்பியூட்டி = நறவுகாய் நற்கனி முதலியவை யுண்ணு மாறளித்து, வெய்யவன்போஞ் சந்தியில் = சூரியன் அஸ்தமனமாகும் சந்தியாகாலத்தில், தம்விதிகள் செய்து = தங்களுடைய கடமைகளை முடித்து, தக்கசயனங்கள் பயின்று = தகுந்தசயனங்களைச் செய்துகொண்டு, இருவர்தாமும் = இந்தவந்த இருமறையவரும், அவற்றில் வீற்றிருந்து, தத்துவநூற்கதைகள் மொழிசமயந் தன்னில் = தத்துவசாஸ்திரத் துள்ள கதைகளைப்பற்றிச் சம்பாஷித்துக்கொண்டிருந்த சமயத்தில், ஒக்கவுறையதிதிதனைக் காதிநோக்கி = தன்னோடு கூடச்சமமாக உறைந்து உரைத்துக் கொண்டிருக்கும் அதிதி யாகிய மறையவனைப் பார்த்துக் காதிவேதியவன் ஒதுவான், உத்தம = ஹே பிராஹ்மண சிரேஷ்டனே ! நின்னுடல் = உனதுதேகம், உணங்கி = இளைத்து, ஓய்ந்ததென்னே = ஆயாசமடைந் திருக்குங்காரண மியாதுகொல்லோ !

(ஸ்ரீ - வீர.) அக்காதி வேதியன் அம்மோகத்தைச் சித்தத்தின் கண் வைத்துக் கொண்டே அத்தன்னுடைய ஆசிரமத்திலேயே சிலதினங்களைக் கழித்து வாழ்ந்தான், அப் போது ஒருநாள் அங்கு, ஒருபிரியமாய அதிதி காதி மறையவனை, பிராஹ்மாவை துர்வாசா அடைந்ததேபோல அடைந்தான், அவ்வதிதி இளைத்திருத்தலின் சிரமமுடையவனாய் அந்த ஆசிரமத்திற்குனே விசிராந்தியுடன் அவ்விரவைக் கழிக்கலாயினன். வசந்தத்தி னாலே திருப்தியைப் பாதபமடைந்ததேபோல, அக்காதி வேதியனால் அளிக்கப்பெற்ற பல புஷ்பரசா சனங்களினாலே பரமதிருப்தியை அவ்வதிதி யடைந்தவனாயினன். இருவரும் சந்தியாவந்தனத்தை முடித்துக்கொண்டு ஜபங்களைச் செய்துவிட்டு ஒருவருக்கொருவர் வந்தனஞ் செய்துகொண்டு மிருதுவான பல்லவத்தானே சயனங்களைச்செய்து முறையே யவற்றில் வீற்றிருந்தனர். பின் அத்தபசிகளிருவரும் தத்தந்தபோத்தியானுதி வியாபார அநுரூபமான கதைகளையும், சாந்திரசப் பிரதானமான கதைகளையும், வசந்தகாலத்திற்புட் பலக்ஷ்மிபோற் பேசத்தொடங்கினர்கள். அவர்கடஞ் சம்பாடணைப் பிரசங்கத்தில் வீழ்ந்த மொழிகளைக்கொண்டு, காதிமறையவன் அவ்வதிதியை, நோக்கி, ஹேபிராஹ்மன் ! நீயேன் மிகவுமிளைத்த அங்கமுடையவனாக இருக்கின்றாய் ? ஏன் சிரமவானாகப் புலப்படுகின்றாய் ? என்றுசாவினன்.

(ச.) தேங்காய் = தித்திப்புள்ள கனிகள். (19)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதிதி தன்னுடலிளைத்த காரண முழுதையுங் கூறல்:—கூறு, அனையென்பன.

கூறுவா யெனுங்காதிக் கதிதிசொல்வான் குவலயத்துத் தரதிசையிற் குலவு செல்வந், தேறுபுகழ் கீரமெனுந் தேசந்தன்னி லியான்மாத மொன்றிருந்தே னினியோர்வேண்ட, வாறுபயா னுறைநகரி லொருவனென்பா னனுகியுரைப் பானிந்நாட் டரசாயிவ்வூர், மாறுபடா தெட்டாண்டிங் கொருவன்வாழ்ந்து மற்றவனைக் கறிப்பவனு மரபுதோன்ற.

அனையவன் கனல்புக் கிறந்தன னங்கே யந்தண ரனல்புகுந் தவிந்தா ரனையரென் றிசைக்கே னென்றனு மதுகேட் டியும்பிய தேசம்விட் டேகிக் கனதிரைக் கடவுட் புனற்பிர யாகைக் கரையிலப் பாதகங் கழிப்பா னனிகர் மறையாற் சாந்திகள் செய்து சாந்திரா யணஞ்சரித் திளைத்தேன்.

(ப - ரை.) கூறுவாயெனும் கா்திக்கு = சொல்வாயென்று சொல்லியகாதி வேதியனை நோக்கி, அதிதிசொல்வான் = வந்தமறையவனறைவான், குவலயத் துத்தரதிசையில் = இப்பூமண்டலத்தின் வடக்குதிசையில். குலவுசெல்வம் தேறுபுகழ் கீரமெனுந் தேசந்தன்னில்=வளப்பமும் திருவும் அளப்பருங் கீர்த்தியும் விழுத்தகவாய்ந்த கீரமண்டலமென்னுந் தேயத்தில், இனியோர் வேண்ட மாதமொன்று யானிருந்தேன் = அன்பர்கள் பிரார்த்தனைக் கிணங்கி யொருமாதப்போது யான்வசித்தேன், வாறுறயானுறை நகரில் = அவ்வாறிருப்பயான் வசிக்கும் பட்டணத்தில், ஒருவன் என்பால் நணுகி உரைப்பான் =ஓரன்பன் ஒருதினம் என்னிடத்து வந்து சம்பாஷித்துக் கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் கூறுவான், இந்நாட்டரசாய் = இத்தேசத்திராஜனாகி, இவ்வூர் = இந்நகரில், மாறுபடாது = வேறுபாடின்றி, எட்டாண்டு = எட்டு வருடங்கள், இங்கொருவன் = இவ்விடத் தொருவன், வாழ்ந்து = இராஜசம்பத்தோடு கூடியிருந்து, மற்றவன்=இவ்வாறிருந்தவன், நாய்க்கறிப் பவனும் = சுவபசனும், மரபுதோன்ற = வங்கிசந்தோன்றிய அளவே.

அனையவன் கனல் புக்கிறந்தனன் = அச்சுவபசன் அக்கினியில் வீழ்ந்து துஞ்சினன், ஆங்கே = அவ்வாறே, அந்தணர் அனல்புகுந்து அவிந்தார் = செந்தழலிற் பிரவேசித்துத் தீய்ந்தார், எரியோம்பும் மறையவர்; எனையரென் றிசைக்கேன் = இவ்வளவுபே ரென்று அடியேனாற் கூறவேமுடியாது, என்றலும் = எனவியம்பலும், அதுகேட்டு = அதனைச் செவியுற்று, இயம்பிய தேசம்விட்டேகி = கூறியதேசத்தை விட்டுச்சென்று, கனதிரைக் கடவுள் புனல் பிரயாகைக்கரையில் = பேரலைகள் வீசும்தெய்வகங்கையில் யமுனையும் சரசுவதியும் கலக்கும் இராஜதீர்த்தமாகிய பிரயாகையின் தீரத்தில், அப்பாதகங்கழிப்பான் = அந்நீசசம்பந்தமான பாதகத்தை யகற்றுவான், தனைநிகர் மறையால் = தனக்குத் தானே நிகரானமந்திரத்தால், சாந்திகள்செய்து = பிராயச்சித்தங்கள் ஆற்றி, சாந்திராயணஞ் சரித்தினைத்தேன் = சாந்திராயண விரதமநுட்டித்துக் கிருசனுயினேன்.

(ஸ்ரீ - வீ.) அதிதிகூறல்:—ஹேபகவன், என்னுடைய மிகமெலிவு சிரமங்களின் காரணத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக, நாமிருவரும் அசத்தியவாதிகள் அல்லரன்றோ, ஆகையால் உள்ளபடியே சொல்லுவேன். இவ்வசுதாபீடத்தின் கண்ணே, வடதிசை நிகுஞ்சகத்தில் கீரமெனப் பெயரிய அதிவிக்கியாத மகாந்ஸ்ரீமான் ஜனபத மொன்றுளது; அப்புரத்தில் ஜனங்களாற் பூஜ்யமானனுகி ஒருமாதகாலம் யான்வசித்தேன், நானுவகையாயெனக்கு ருசிகரமான போச்சிய பேதங்களில் அதிக ஆசையுற்று அவற்றையே பிரதானமெனக் கொண்டிருந்தேன், எனீயப்படி யாயினுயெனின்? சித்தவேதாளமோகிதனுயினேன். ஒருகால் ஒருவனுல் ஆண்டுக்கதைப் பிரஸ்தாவத்தினின்றும் ஒருபால் ஒரு சிறிது கூறப்பெற்றது, ஹேதுவிஜோத்தம! ஈண்டுச் சுவபசன் எட்டுவருடங்கள் அரசனுகியிருந்தனன் என அதன்பின், கிராமங்களில், ஈண்டு எட்டுவருடங்கள் சுவபசன் இராஜாவாக விருந்தனன் என்பதாக அவனைத் தீண்டி விவகரித்த அச்சகல ஜந்துக்களானும் அறையப்பெற்றது, அந்நாய்க்கறிப்போன் அஷ்டம வருஷாந்தத்தில் இவ்விடயத்தை நன்குதெரிந்தவனுகி விரைவில் அக்கினிப் பிரவேசஞ் செய்தனன்; பின்னர் நூற்றுக்கணக்கான துவிஜர்கள் ஹூதாசனத்தீண்டு புகுவாராயினர். என்பதாக அவர்களுடைய முகத்தினின்றும் கேள்விப்பட்டு அந்த மண்டலத்தினின்றும் புறப்பட்டு, ஹே முனீந்திர! அத்தேசவாசதோஷசாந்தியின் பொருட்டுப் பிரயாகையில் யான் பிராயச்சித்தஞ் செய்துகொண்டேன், இயற்றிச் சாந்திராயணத்தி னீற்றிலின்று மூன்றுவதன் பாரணமீண்டியான் வந்தேன் அதனுலாயாசமும் மெலிவும் அதிகமாக வடைந்துளேன்.

(ச.) ஆறுற = ஒழுக்கமாக. பிராயச்சித்தம் = ஸ்நானஜபாதிகள். (20-21)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதிதி கூறியபடி யனைத்தையுங் காணல்:—என்று, முந்து என்பன.

என்றுகொண்டதிதி யியம்பலுங் காதியென்னுடைச் சரிதையீ தென்னுத்
தன்றனியுளத்தி லதிசயமிக்குத் தன்னுடைப் புலைச்சரித்திரமாய்
முன்றிகழியற்கை காண்பது விரும்பிமுந்துள நாடுகளகன்று
சென்றுபுக்கூண மண்டலந்தனிற்றன் செனித்துறை யிடமெலாங் கண்டான்.

முந்துதான்கண்ட படியெலாங்கண்டு மொய்சடை முடிமிகத்துளக்கிச்
சிந்தையில்வியந்து நான்முகன்விதிதச் செய்கையை நோக்கிமேற்சென்று
னந்தநல்லூண மண்டலநீங்கி யணிதிகழ்கீர நாடணுகி
வந்துதான்முன்னஞ் செய்தனவெல்லா வழுவறக்கண்டு கேட்டறிந்தான்.

(ப - ரை.) என்றுதொண்ட திதியியம்பலும் = என இவ்வண்ணம் வந்த வந்தணன் இந்தவந்தணனுக் குரைத்தலும், காதி = காதி வேதியன், என்னுடைச் சரிதையீதென்ன = எனது சரித்திரமல்லவோ இது என்று, தன்றனியுளத்தில் அதிசயமிக்கு = தன்னுடைய மனத்திற்றேனெழுந்த ஆச்சரியத்தை யடைந்து, தன்னுடைப் புலைச்சரித்திரமாய் = தனது நீசசரிதையாக, முன்றிகழ் இயற்கை = பூர்வமிலங்கிய சுபாவத்தை, காண்பதுவிரும்பி = பார்க்கும் பொருட்டிச்சைசெய்து, முந்துள நாடுகளகன்று = எதிர்ப்பட்ட தேசங்களை விட்டுநீங்கி, சென்றுபுக் கூணமண்டலம் தனில் = நடந்துபுகுந்து ஊணமண்டலமதனில், தான்சனித்து உறை இடம் எலாம் = தான் பிறந்திருந்து ஆடிய பிரதேசங்கள் யாவற்றையும், கண்டான் = பார்த்தான்.

முந்து = முன்னர், தான்கண்ட = தான்பார்த்த, படி எலாம்கண்டு = வகையாவற்றையும் பார்த்து, மொய்சடைமுடி மிகத்துளக்கி = நிறைந்த சடாமுடியை யசைத்து, சிந்தையில் வியந்து = மனதில் ஆச்சரியத்தையடைந்து, நான்முகன் விதிதச் செய்கையை நோக்கி மேல்சென்றான் = சதுர்முகனது நானாவிதமான காரியங்களைக் கண்டுமேலே போனான், அந்த நல்லூணமண்டல நீங்கி = அவ்வெழில் வாய்ந்த ஊணமண்டலத்தை விட்டகன்று, அணிதிகழ்கீர நாடணுகி = அலங்காரம் பொருந்திய கீரமண்டலமடைந்து, வந்துதான் முன்னஞ்செய்தன = தான் பூர்வம்வந்து முடித்தனவாகிய, எல்லாம் = யாவற்றையும், வழுவறக்கண்டு = குறைவறப்பார்த்து, கேட்டு = பிறர்சொல்லக் காதுகொண்டு, அறிந்தான் = உணர்ந்தான்.

(ஸ்ரீ - வீர.) இந்தவண்ணம் கேட்ட அந்தக்காதியினாலே அந்தப்போது அந்தவந்தணன் மீளவும் வினவப்பெற்றும் புகன்றவதனையே புகன்றனன், மாறாக எதுவுமேகூறவில்லை; கேட்டு விஸ்மயவானாகிய காதி அவ்விரவையாண்டு கழித்து, ஜகத்கேக மகாதீபமாகிய ஆதபன் உதயமாகவே, காலைஸ்நானவிதி முடித்ததும், தனது அதிதி உத்திரவுவாங்கிக்கொண்டு சென்றபின் விஸ்மயத்தானே பருமையுற்ற மதியினனே இனியியம்பும் பிரகாரமாக இனிது சிந்தைசெய்தான்:—என்னால் யாது பிராந்திதசையினாலே காணப்பெற்றதோ அது அதிதி மறையவனால் உண்மைவடிவமாகவே கூறப்பெற்றது என்றனக்கு இவ்வடிவத்தாயவிது என்னைகொன்மாயா இலக்ஷணம் சம்பராசுரனுடைய இரசனையின் முறைதானோ ஆயது! எப்பந்துமத்தியில் எனது மரணம் என்னால் நோக்கப்பெற்றதோ அது மித்தையேயாம் என்பதில் ஐயமே கிடையாது, அதன்கட் சம்வாதம் காண்பான் முடியாதகாரியம்; எஞ்சிய அவ்

வதிதியின் சாந்திராயண நிமித்தமாகிய அவ்வெனது சுவபசசரிதத்தைக் காண்பேன். அத்தகைத்தாய, வெனது நாய்க்கறிப்போனுந் தன்மையதாக நடந்த விருத்தாந்தத்தைக் காணும்வரை இளையாத மதியினனாகி விரைவாகப் பூதமண்டல பரியந்த கிராமமடைவேன் என்று நன்கு சிந்தித்துக் காதிமண்டலாந்தரங் காண்பான், பாஸ்கரன் மேருவின் பக்கத்தைக் காண்பான் எழுதற்கு முயன்றதேபோலும் எழுந்தனன். ஆண்டிருந்தகன்று அக்காதி பெருமழைப்போதில் ஜலப்பிரவாகம் போன்ற வேகமதாக விரைந்து மார்க்கத்திற் சென்றனன், காற்றையே வாகனமாகவுடைய மேகம்போலும், வெகுதேசங்களைக் கடந்து நடந்தான், முன் கண்டபிரகாரமாகத் தனதாசாரமுடைய பூதமண்டலத்தை முதலி லடைவுற்றனன்; அவன் வெகுவேகமதாகத் தனது அந்த வீட்டைச் சிரகாலம், தத்துவவித்தானவன் காய்ந்த சவம்போன்ற தன்மையை யடைந்துள்ள தனது பழையதேகத்தைப் பார்ப்பதேபோல நன்கு பார்த்தான். அவ்விடத்தக்கம் பக்கம் யாவற்றையும் நோக்கியபின்னர் ஆண்டிருப்பானை விளித்து, ஓ சாதுவே ! இவ்விடத்திய விருத்தாந்தம் நினைவில் உளதோ ! உத்தம விருத்தனாகிய ஒரு நாய்க்கறிப்போன் ஏகாந்தத் திருந்தனனன்றோ ! உணர்தியேல் ஒன்றும் ஒழியாமல் உரைப்பாயாக வெனக்கேட்டவன் கூறுவான்:—கடஞ்சனெனப் பெயரிய ஒருவன்பெரிய ஆகிருதி யுடையவனாய்ப் புத்திராதி சம்பத்துட னிருந்துபின்னர் மிருத்தியுவயத்தியாவுந் தீர்ந்தனன், அதன்பின் றனியனாகிக் கீரமண்டலம் சென்று அதிர்ஷ்டவயத்தால் அஷ்டவருடங்கள் அரசனாகி, ஜனங்கட்குத் தெரிந்து எரிபுகவேதானு மனலிற் புகுந்திறந்தான்; ஏன் இவ்வாறு வினவுகின்றீர் உமக்கு அவன் பந்துவாவென் ? வேதியர் போன்றீரே யென்றிடினும் மேலும்மேலும் நானாவகையில் வினவி ஒருமாதம் அங்கேயிருந்தனன். இங்கும் அங்கும் சுற்றிநோக்கிக் கேட்டுச் சரிதமெவையும், நாய்க்கறிப்பவனாய்த் தானிருந்து உண்டது தின்றது கடித்தது குடித்தது எவற்றையும் நினைந்துபார்த்தான். விஸ்மயத்தானே சடைநிறை சிரகம்பனஞ்செய்து தாதாவின் சேஷ்டையை வியந்து தருக்கித்தான். அங்கிருந்து பிரயாணப்பட்டு அநேகதேசங்கள் கடந்துபோய், கீரமண்டலமடைந்து எங்குஞ் சுற்றிநோக்கி அங்கிருப்பவரை அங்குற்ற விருத்தாந்தம் வினவ அவரும், எட்டுவருடம் நீசன் அரசுபுரிந்ததையும், உணர்ந்தபின் னுதாசனம் புக்கதையும் பிறவற்றையும் பின்பன்னிருவருடஞ் சென்றதையும் ஓதக்கேட்டு அற்புதம் அடைந்தனன். (22-23)

(ஸ்ரீ-வீர.- அ-கை.) மாயையின் செய்கையை மனதினில் வியந்து, மேயதையறிய விரும்பியே தவஞ்செயல்:—இது என்பது.

> இதுகொலோ முன்ன மியம்பிய மாயோ னெனக்கறி வித்தமா மாயை
> புதுமையா மிதனை நன்குற வறிந்தேன் புந்தியா லென்பது கருதிக்
> கதுமெ னவ்வந்தத் தேசநின் றகன்று கனவரைச் சாரலி னணுகி
> யதுலமா தவனோ ரங்கைநீ ருணவா யரிமகி ழுருந்தவம் புரிந்தான்.

(ப - ரை.) இதுகொலோ முன்னம் இயம்பியமாயோன் = இதுதானோபூர்வம் என்னாற் பிரார்த்திக்கப் பெற்ற ஸ்ரீபகவான், எனக்கறிவித்த மாமாயை = என்றனக் குணர்த்திவைத்த மாக்ஷிமைமருவிய மாயையென்பது, புதுமையா மிதனை = அற்புதமாகிய இதுதன்னை, நன்குற அறிந்தேன் = நலன்றிகழத் தெரிந்தேன், புந்தியால் என்பது கருதி = மதியினால் என்பதாக எண்ணி, கதுமென அந்தத்தேசம் நின்றகன்று = சடுதியில் அத்தேசத்தைவிட்டுச் சென்று, கனவரைச் சாரலின் அணுகி = மேகம் நிறைந்துள்ள பர்வதத்தின் சூழ்வரையையடைந்து, அதுலமாதவன் = உவமையில்லாத காதிவேதிய மாதவன், ஓர்

அங்கைநீர் உண்வாய் = ஒரு உள்ளங்கை யறலையே யாகாரமாகக் குடித்து, அரிமகிழ் அருந் தவம் புரிந்தான் = ஸ்ரீமந் நாராயணர் திருவுள்ளஞ் சந்தோஷமடையுமாறு அரியதவத் தினை யியற்றினன்.

(ஸ்ரீ - வீர.) முன்னர்த் திருவருள்செய்த சங்குசக்கிர பீதாம்பரதாரியாகிய ஸ்ரீமந்நாரா யணரால் இம்மகத்தாகிய மாயையன்றே தரிசிப்பிக்கப் பெற்றது, என்பது இப்போது நன்முக என்முனல் அகண்டிதமாய் ஸ்மரிக்கப்பெற்றது. ஆகலின் இஞ்ஞான்று, குசம்பிர மத்தையுடைய இதனது பிறப்பையும் இருப்பையும் அறிந்துகொள்ளும் வண்ணம் கிரிகந் தரத்திலிருந்து தவம்புரிந்து முயல்வேன்; பிறப்பிருப்புப் பதங்களானே அதன் நிமித்தம் குறிப்பிடப் படுகின்றது, என்று நன்குசிந்தித்து அந்நகரத்தினின்றும் காதிமறையவன் திரும்பிவந்து, சைலத்தின் கந்தரமடைந்து விசிராந்த சிங்கமே யென்னத்தவத்தில் வீற்றி ருந்தான். ஆண்டோராண்டு நீர்ச்சுளுக பானத்துடன் நிலைத்து மகாதேஜஸையுடையவ ஞகி ஸ்ரீ சாரங்கமென்னும் தனுதாரியாகிய ஸ்ரீபகவானது திருவுள்ளமகிழ்ச்சியின் பொருட் டுத் தவந்தனைப் புரிந்தான். மூலம்:—சார்ங்க தன்வ: (5-4-132) ததனுஷச்ச = தநராந்த பகுவ்ரீகிக்கு அநங்காதேசமாம், த்விதந்வா சார்ங்கதந்வா என்பன உதாரணங்களாம். சிவ மகிமையில் த்ருததநுஷ மென்றது ஆர்ஷமாம். (24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ பகவான் தவேந்திரனுக்குப் பிரசன்னமாகி விரும்பியது யாதென வினவியருளல்,—ஆண்டென்பது.

> ஆண்டுசென் றளவே யம்மலைச்சார லருந்தவ னச்சிர மத்தி
> னீண்டமா னீல முகிலெனத் தோன்றி நிறைதவக் காதியை நோக்கி
> யீண்டிய வெமது மாயையின் பெருமை யியல்புறக் காண்டனை யினிமேல்
> வேண்டிய தென்னை கிரித்தடத் தியற்று மெய்த்தவ மெதுபொருட் டென்ன

(பு - ரை.) ஆண்டு சென்றளவே = ஒருவருடஞ் சென்றபின்னர், அம்மலைச்சாரல் அருந்தவன் ஆச்சிரமத்தில் = அந்தப்பர்வதத்தின் தாழ்வரைச் சோலையில் உள்ள அரியதவ முனிவனது ஆனந்தாச் சிரமத்தில், நீண்டமால் = நீட்சியையடைந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவா னவர், நீலமுகில் எனத்தோன்றி = நீருண்டு கருக்கொண்ட எழிலியே யென்னப்பிரசன்ன மாகி, நிறைதவக்காதியை நோக்கி = பூர்ணதவத்தினை யுடையகாதி வேதியனைப்பார்த் தருளி, ஈண்டிய எமதுமாயையின் பெருமை இயல்புறக் கண்டனை = சகலலோகங்களையும் எமதிட்டப்படி யுண்டாக்கிய எமது மாயாசக்தியின் மகிமையை இத்தன்மைத்தெனத்தெரிந் தனை, இனிமேல் வேண்டியதென்னை = இனி வேறென்னுனக்கு வேண்டும்? கிரித்தடத் தியற்றும் மெய்த்தவம் எதுபொருட்டென்ன = இப்பர்வதச் சாரலின் கண்ணே நீ செய் யும் உண்மையான இக்கடுந்தவம் எப்பயனைப் பெறும்பொருட்டோ என்று வினவியருள.

(ஸ்ரீ - வீர.) தவத்தின் முதிர்ச்சியில் வருடந்தணரவே இவன்பாற் புண்டரீகாக்ஷரும் சக்ரகதாதரரும் உற்பலஸ்யாமரும், பயம்போலும் பிரசாத வியற்கைவாய்ந்த திருமூர்த்திய ரும் ஆகிய ஸ்ரீ பகவான் நீரேசொரூபமாய மகாமடுவானது சரத்காலத்திற்போலத் திருவுள மகிழ்ந்து, காதிவேதியன்றன் நிவாசஸ்தானமாகிய சைலேந்திர கந்தரத்தை, பயோதரம் போலும் சொச்சத்தினும் சொச்சமாய் நிர்மலதரமான காந்தியோடு கூடியெழுந்தருளி வந்து ஆகாயத்தின் கண்ணே பயோதரம்போலும் புலப்பட்டருளினர். ஸ்ரீபகவானருளல்:— ஹேகாதிவேதிய! எமது பெருமைவாய்ந்த மாயையை இன்னதெனக் கண்டனையன்றோ, தெய்வத்தையே மதிப்பிரதீதி நிமித்தமாகவுடைய (அன்றுவஸ்து அதன்வடிவாவது) ஜகத்

ஜாலசேஷ்டிதத்தையும் பார்த்தனையன்றோ; சித்தத்தின்கண் அபிவாஞ்சிதமாய இவ்வெமத்மாயா தரிசனம் நலமுற அடைவுற்றிடவே, மீளவும் கிரிதடத்தில் நற்றவம் புரிந்து தூயோனாகிய நீவேறென்ன பயன்பெற விரும்புகின்றனை. (25)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ பகவானைப் பூசித்து மாயையின் மருமத்தை வினவுதல்:— துதியென்பது.

துதித்தன னிறைஞ்சித் தொழுதனன் கரிய துங்கமா முகிலினைக் கண்டு
கதித்தசா தகம்போற் களிப்புறு காதி கருணையங் கண்ணனை நோக்கி
விதித்துநீ காட்டும் வினையிருண் மாயை விளங்குற விதுவெனக் கண்டேன்
மதித்தவம் மாயை மருமநா னறியேன் மயக்கமெய் யானதென் னென்றான்.

(ப - ரை.) துதித்தனன் இறைஞ்சி தொழுதனன் = ஸ்ரீபகவானைத் தரிசித்ததும் வாக்காற் றோத்தரித்து மனத்தால் தியானித்துக் காயத்தால் நமஸ்கரித்தனன், கரியதுங்கமாமுகிலினைக்கண்டு = கறுத்துப் பரிசுத்தமாய் மாக்ஷிமைதங்கிய கார்மேகம்போன்ற ஸ்ரீ பகவானைத் தரிசித்து, கதித்தசாதகம்போல் களிப்புறுகாதி =பெருமகிழ்வுற்ற சாதகப்பக்ஷி போலப் பரமசந்தோஷத்தை யடைந்துநின்ற காதி வேதியன், கருணையங் கண்ணனை நோக்கி = தயைவடிவமாய அழகிய கண்ணபிரானைப் பார்த்து, விதித்து = இவ்வண்ணம் ஆருகவென விதானஞ்செய்து, நீ=தேவரீர், காட்டு = தரிசிப்பித்தருளும், வினையிருள் மாயை = விக்ஷேபத்தையும் ஆவரணத்தையும் செய்விக்கும் மகமாயை, விளங்குற = தெரியும் படியாக, இது எனக்கண்டேன் = இத்தகையது இது எனும்படி உணர்ந்துகொண்டேன், மதித்த அம்மாயை=இன்னணந்துணிந்த அந்தமாயையினது, மருமநானறியேன்= இரகசியத்தை யடியேன் றெரிந்து கொண்டிலேன், மயக்கம்மெய்யானது என் என்றான்= பிரமமாத்திர மாயுற்றது சத்தியமாயது யாங்ஙனம் என வினவினன்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ வசிஷ்டபகவான்:—இவ்வாறருளிய ஸ்ரீ ஹரியைத் தரிசித்துத் துவிஜ உத்தமனாகிய காதிமுனிவன், நித்தியம் பூஜித்துக்கொண் டிருந்த ஸ்ரீ பகவத் பிரதிமையின் திருவடிகளின் பூஜையைக் குசுமபூரத்தாற் செய்தனன், தூவியபுட்பப் பிரவாகத்தால் பயப் பூரம்போலும் பூரணமாய் முடித்தனன் என்றபடி, இதனானே பூஜாகாலத்தில் ஸ்ரீ பகவான் பிரசன்னமாயினர் எனப் புலப்படுகின்றது; உத்தர அருக்கியம் கொடுத்து மலர்தூவிப் பிரதக்ஷணங்களோடு கூட நமஸ்காரம் ஈறுயபூஜையை முடித்து விரைவில், அம்போதத்தை நோக்கிச் சாதகம்போல, ஸ்ரீ மகாவிஷ்ணுவை நோக்கித் துவிஜேந்திரன் இவ்விண்ணப்பத்தைச் செய்யத்தொடங்கினன். ஹே தேவதேவ ! எவ்விவ்வுதிதமோ மயீயாய மாயையானது, மகியைக்காலையில் மார்த்தாண்டன் மானத்தேவரீரால் தரிசிப்பிக்கப் பெற்றதோ அதனை நன்குகண்டனன் எனினும் அதனது மருமமறிந்திலேன் அதனைப் பிரகடனஞ்செய்தருளுவீராக. அதன்கண் ணறியத்தக்கது யாதெனின், மித்தியாவிடயக் கூட்டமெதனைக் கனுப்போல வாசனுமல மாவிதமாய மனமானது கண்டதோ, அஃதெங்ஙனம் நனவின் கண்ணும் காணப்பெறுதல் கூடும் ? முகூர்த்தமாத்திரம் நீரினுள்ளே தோற்றிய சொப்பன விப்பிரமமானது. நீள்போது சக்ஷுராதி கோசரத்தன்மையை, ஹே எனது அவித்யாமல ரகிதபதப் பிரதிஷ்டையாகியவரே ! யாங்ஙனம் அடைவுற்றதோ எனது சுவபசப்பிரமங்களினாலே ஆக்கப்பெற்ற இக்காலத்தினது நீட்சி நீட்சியின்மைகளும், அங்ஙனமே சுவபச சரீரத்தினது உற்பத்தி நாசங்களும் உண்மனத்தின் கண்ணே யிருப்பனவாக வுளவாமேலாயின் யாங்ஙனம் இலவாதல், வெளியிலவை யெங்ஙன மிருக்கலாம் என்பதுபொருள். (26)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்ரீபகவான் அதற்குத் திருஷ்டாந்த பூர்வகமாக விடையரு ளல்:—மாலென்பது.

மாலதற் குரைப்பா னந்தண விந்த மண்முத லியாவையு மனத்தின்
பாலுற விருப்ப தன்றியே புறத்திற் பயில்வதோர் காலமு மில்தா
மூலமில் கனவு மயக்கமு மதமு முதலிய நெறிகளி லியாருஞ்
சீலமாய் நோக்கி யனுபவிக் கின்றார் சிந்தையுட் சகமிருப் பதுவே.

(ப - ரை.) மால் = ஸ்ரீபகவான், அதற்கு = அக்காதியின் வினவிற்கு, உரைப்பான் = விடைபகர்ந் தருளுவார், அந்தண = ஹே விப்பிரவா ! இந்தமண் முதல் இயாவையும் = இப்பிருதிவி முதலிய வெல்லாம், மனத்தின்பால் உற இருப்பது அன்றியே = உள்ளத் திடத்தே வாசனுமாத்திரமாக இருப்பனவே யல்லாமல் ஒரு சிறிதும், புறத்தில் = பாகியத் தில், பயில்வது ஓர் காலமு மிலதாம் = எக்காலத்திலுமே தோற்றுவதே கிடையாதாம், மூலமில் = வாசனையைத் தவிரவேறொருகாரண மில்லாத, கனவுமயக்கமு மதமுமுதலிய நெறிகளில் = சொப்பனப் பிரமமதாதிகளின் றோற்றங்களில், யாரும் = எவரும், சீலமாய் நோக்கி அநுபவிக்கின்றார் = நன்றாக நாடிப்பார்த்து அநுபவித்துக் கொண்டிருக்கின்றார்; சிந்தையுட் சகமிருப்பதுவே = மனத்தின் கண்ணுலக மிருப்பதாகவே.

(ஸ்ரீ - வீர.) ஹேகாதிவேதிய! நீ எம்மகத்தாய ஜகத்விப்பிரமம் காண்கின்றனையோ! அது தத்துவத்தைக்காணமையினாலேயே தன்பாலுற்றவாசனாரோகங்களானே கவரப்பெற்ற சித்தபாவத்தை யடைவுற்ற ஆத்மசொரூபத்தினது இவ்வடிவினதான ரூபமாக இலங்குகின் றது; அது உண்மையாக உள்ளிலுமில்லை புறனிலுமில்லை, அற்பமும் அல்ல தீர்க்கமும் அல்ல வென்பதாம். உளதாமென வுன்னுகின்றனையே லாயின் உனது உள்ளத்தின் கண்ணே யுளதாம், ஆகாசம் அசலங்கள் அர்ணவங்கள் பிருதிவி திசைகள் என்பனவாதியவாய ஜகத் தானது ஒருசிறிதும் பாகியத்திற் கிடையவே கிடையாது. அங்குரத்திற் பத்திரபுஞ்சம்போ லும் இது உனது உள்ளத்தின் கண்ணேயுளதாம்; இதுவே யுண்மை வெளித்தோற்றம் மயக்கமாத்திரமேயாம். சர்வாநுபவ சித்தமேயாமிது என்றருளல்:—மூலமில் என்பதாதி, இது பாலியத்திலிருந்தே சர்வபுருடரானுமே சொப்பனப் பிரமமதா வேகாரகரோகாதி திருஷ்டிகளில், அநுபவிக்கப் பெறுகின்றது பிரசித்தம். வேரற்ற விருக்ஷத்திற்கு இலையாதி மறித்து முண்டாகாத்தே போல வாசனை யற்ற ஜீவனுக்கும் புநர்ஜந்மாதி யுண்டாக மாட்டாதாம்.

(ச) மண் முதலி யாவையும் = பிருதிவியாதி ரூபமான ஜகத்தனைத்தும், மனத்தின் பாலுற விருப்பது, சித்தமே ஜகத்திற்கு நிதானமாதலின், அதனிடத்தே யிருக்கின்றதன்றி உண்மையாகப் புறத்திலதாமென்பது பொருள், சிந்தையுட் சக மிருப்பது, சொப்பனாதி யவத்தைகளிற் சகலராலும் அநுபவிக்கவே படுகின்றது; சொப்பனாதிகளிற் சித்தத்திருக் கும் பிரபஞ்சமே காணப்படுதலி னென்க. நிதானம் = காரணம். (27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வாறாகவே இச்சுவபசத் தன்மையானது மனத்திருக்கும் அநந்தவாசனா ஜாலத்துள் ஏகதேசப் பிரகடனமாமெனல்:—அனந்த மென்பது.

அனந்தமாய் விரிந்த சகத்திர ளெல்லா மயர்வற வமர்வதற் கிடமா
மனந்தனை யிந்த நாய்ப்புலைத் தன்மை வெளிசெயின் மற்றிதில் வியப்பென்
கனந்தரு பத்திப் பாச்சலின் வயத்தாற் கடைப்புலை திறந்தெரிந் துளதா
முனந்தொட ரதிதி தானுமப் படியே மோகங்கண் முழுவதுங் கண்டான்.

(ப - ரை.) அனந்தமாய் விரிந்த சகத்திரள் எல்லாம்=அந்தமில்லாமற் பரவியிலங்கும் ஜகத்ஜாலமுழுவதும், அயர்வற அமர்வதற் கிடமாம் மனந்தனில் = யாதொருதடையுமின்றி இஷ்டப்படி இருப்பதற்கு ஸ்தானமாம் சித்தத்திலே, இந்த நாய்ப்புலைத்தன்மை = புலப் பட்ட இச்சுவபசத் தகைமை, வெளிசெயின் = வெளிப்படுத்தப் பெறின், மற்றிதில் = அங்ஙன் வெளியாய இதன்கண், வியப்பென் = ஆச்சரியப்படல் என்கொண்டோ, கனந் தருபத்திப்ராச்சலின் வயத்தால் = பந்தத்தைக் கொடுக்கும் பிரதிபாசவசத்தினாலே, கடைப் புலைத்திறந் தெரிந்துளதாம் = நீசநாய்க் கறிப்போனுந் தன்மை அறியப்பெற்றதாம், முனந் தொடர் அதிதிதானும் = பூர்வம்சந்தித்த அதிதியும், அப்படியே மோகங்கண் முழுவதும் கண்டான் = அவ்வாறே மயக்கங்கள் யாவற்றையும் பார்த்தான்.

(ஸ்ரீ - வீர.) யாண்டநந்த ஜகத்ஜாலம் நன்குதிதி பெறுதலாமோ அத்தேஜசானே அல்லது அச்சித்தத்தானே சுவபசத்தன்மை பிரகடிதமாயின் அதன் விடயத்திலீண்டாச் சரியமென்னே ! சத்தியத் தன்மையானே நினது அபிமதமாய அதிதியாக மறுதிப்பிரபஞ் சஜாதமதூஉம் சுவபசத்தன்மைபோல மனத்தி லிருப்பதேயாம் என்றருளல்:—கனந்தரு மென்பதாதி, பிரதிபாச வசத்தினாலே உன்னுற் சுவபசத்தன்மையானது உணரப்பெற்றது விசித்திரமாய் அதிவிகாரங்களைத் தருவதாக வெகுவெகுவான உபத்திரவங்களை யெல்லாம் கண்டதுபோலவே, அதிதிவந்ததாகவும் உண்டதாகவும் துயின்றதாகவும், கதை கூறியதாக வும் பிறவும் அநேகசாம்பிரமம் உற்றதாகவும் கண்டனை. அவ்வாறே யெழுந்து செல்வேன் எனவும், பூதமண்டலத்தை யடைந்தேன் எனவும், இவை பூதங்கள் எனவும் இவைகிராமங் கள் எனவும் வெகுசம்பிரமத்தைக் கண்டாய்; அங்ஙனமே இதுகடஞ்சனது பழைமையான புராண்டுருண்ட கிருகம் எனச்சனங்களானே கூறப்பெற்றதென்று கடஞ்சனது சம்பிரமங் களியாவற்றையும் பார்த்தாய்: அங்ஙனமே கீரங்கத்தை யடைந்தேன் எனவும் கீரர்களானே சுவபசராஜத்தன்மை எனக்கியம்பப் பெற்றதெனவும் வெகுசம்பிரமங்களைக் கண்டாய். இந் தப் பிரகாரம் மோகஜாலமெல்லாம் உண்மையென்றே கண்டாய், வாசனையோடு கூடிய மனம் எதைத்தான் தோற்றுவியாது எல்லாம் பொய்யே இன்புருமெய்யே,

(ச.) தனில்=சர்வப்பிரபஞ்ச ஆதாரமான அந்தமனதினில், இந்த நாய்ப்புலைத்தன்மை, ஒன்றை, வெளிசெயி னென்னிதின் வியப்பு, ஒன்று மின்றென்பது பொருள். பத்திப்பாச் சலின்வயத்தால் = பிராந்திவசத்தினால், கடைப்புலைத்திறம், எப்படித் தெரிந்துளதோ அப்படியே, முனந்தொடரதிதி = அதிதிவந்தான் என்பதும், நான், மோகங்கண்முழுவ தும் = அகிலப்பிரமையும், கண்டான் = கண்டவன் என்பதும், பிராந்திவசத்தினாலே, தெரிந்துளதென்பது பொருள். (28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கண்டன வெவையும் கனவிலவாம் விண்டன வெவையும் வெறுமயலேயாம் என்பதாதி ஸ்ரீ பகவானது திருவாக்கியத்தின் பொருளை அசம்பாவனை விபரீதபாவனைகளின் தார்ட்டியத்தானே தெரிந்து கொள்ளாதவனும் காதிவேதியன் ஜகத்தின் அதிஷ்டான ஆத்துமதத்துவ சாக்ஷாத்காரம் இல்லாமலே முன்கண்ட தேசாதிக ளின் யாதமுளதா இலதாவெனப் பரீக்ஷித்து அநுபவிக்கும் வேட்கையனுகி மீண்டும் பூத மண்டலாதி தேசம்போய்ப் பிறுண்டுஞ் சுழன்று திரிந்துவந்து ஸ்ரீ ஹரியை யாராதித்துப் பிரசன்னமாகவே, ஆறுமாத மாண்டுழன்று திரிந்தும் அடியேன் சரிதைபிறழக்காணேன் தேவரீர் மாயையாற் றெரியக்கண்டனை யுண்மையில் இல்லையிவை யெலாமெனவே உரைத் தருள் செய்தது யாங்ஙனமொவ்வும் என்றேவினவ, மாயிகந்தனக்கும் கதைகளிற் பிறழ்ச்சி மருவமாட்டா தென்றே மருவுறும் உக்தியைப் பகவான் உரைத்தருள் செய்தல்:—கண்ட வென்பதி.

கண்டவப்படியே நாய்ப்புலைத்தன்மை காகதாலீய யோகத்தால்
வண்டுறைப்பூண கிரமண்டலத்தோர் மனத்தினும் பத்திபாய்ந் துளதா
லெண்டருபத்திப் பாச்சலொன் றொருகா லெண்ணறு பெயர்க்குமுன் றோன்றும்
விண்டநெஞ்சியற்கை காகதாலீய நிலைமைபோல் விசித்திரகதியாம்.

(ப - ரை.) கண்ட அப்படியே = பார்த்த அவ்வாறே, நாய்ப்புலைத்தன்மை = சுவபா சத்தகைமையானது, காகதாலீய யோகத்தால் = காகதாலீய நியாயத்தானே, வண்டுறை ஊண கிரமண்டலத்தோர் = ஞிமிறினங்கள் வீற்றிருந்து ரீங்காரம்பாடுஞ் சோலைகள் சூழ்ந்த ஊண்மண்டல கிரமண்டலத்தில் உள்ளவர்தம், மனத்தினும் உள்ளத்தின் மாட்டும், பத்திபாய்ந்துளது = பிரதிபிம்பித் துளதாம், எண்டருபத்திப் பாச்சல் ஒன்று = ஒன்றென் றுள்ளதாய பிரதிபிம்பமே, ஒருகால் = ஒருபோது, எண்ணறுபெயர்க்கு = அளவில்லாத வர்கட்கும், முன்றோன்றும் = உண்டாகிப் பிரதீதியாம், விண்டநெஞ் சியற்கை = மகான் களால் விடப்பட்ட மனத்தினது சுபாவமானது, காகதாலீய நிலைமைபோல = காகதாலீயத் திதியை யனுசரித்து, விசித்திரகதியாம் = நானாவிதவிசித்திர நடையுடையதாம் ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) காகதாலீயயோகத்தானே பிரசித்த பூதமண்டலத் துள்ளவர்களினுடைய சித்தத்திலும், கிராதேசத் துள்ளவர்களினுடைய சித்தத்திலும், உன்னுடைய சித்தத்திற் போலக்கடஞ்சக சுவபசனுடைய ஸ்திதியானது அபரோக்ஷமாகப் பிராந்தியாற் பிரதிபிம் பிக்கின்றது. ஆகலின் அவர்களும் தம் பிராந்தியினாலேயே அவ்வாறு கூறுகின்றார்கள், என் ஆர்த்தசமாஜக் கிரஸ்தமாம் அவ்வசன சம்வாதம், சத்தியத் தன்மையைச் சம்பாதிப்பதன் றும்; அதனால் வேதிய நினது விருத்தாந்தத்தை உள்ளபடியேயவர்கள் உரையாடாநிற்பர் கள், பிரதிபாசமானது மறுபடியும் அப்பிரதிபாசத் தன்மையைப் பாதமின்றி யடையமாட் டாது.. ஆயின் பிரத்தியபிஞ்ஞா சம்வாதத்திற்கு ஆங்கதியாதோ வெனின் ? இதுவாம், எவனோ ஒரு சுவபசனால் கிராமத்தினது அந்தத்தில் ஒரு வீடுகட்டப்பட்டது, அதனை நீகண் டாய், என்னலிது முன்னாற் கட்டப்பட்ட தெனப் பிராந்தியினாலே உண்டாய அபிநிவேச விடயம் அது ஆக்கப்பெற்றது, பெண்டுபிள்ளை பண்டு பதார்த்தங்களோடுகூடி இஷ்டப் பட்டு அகண்ட சம்பத்துடன் அதில்வாழ்ந்து வந்தாய். ஒவ்வொருபோது பிராந்திரூபமாய பிரதிபாசமொரு வடிவினதே பகுபேர்கட்கு முண்டாகின்றது, துரோணகாகமென்னும் காகஜாதி விசேடமானது பக்குவ தாலபலத்திலாதல் தால மூலத்திலாதல் உட்காருதல் போலும் விசித்திரமேயாம் மநோகதியென் றுணர்க.

(ச.) கண்டவப்படியே = நான் எழுந்திருந்து செல்கின்றேன், ஊணமண்டலத்தை யடைந்தேன், முன்புள்ள கடைஞ்சனது கிருகத்தைக் கண்டேன், கிராமகாத்தை யடைந் தேன், நாய்ப்புலை ராஜத்துவங்கண்டேன், அவரால் கேள்வியுற்றேன் பிரமமுற்றேன் பிரம மற்றேன் என்பனயாவையும், கண்ட = பிரமத்தினாலேயே காணப்பட்டனவா மென்பது பொருள். எப்படி உன்மனதில் நாய்ப்புலைத்தன்மை, அப்படியே, இச்சையின்றியே சகல மானவூண கிருடைய மனத்தினும் நாய்ப்புலைத் தன்மை, பத்திபாய்ந்துளதால் = பிரதி விம்பித்தது, பிராந்தி விசித்திரகதியாதலி னென்பது கருத்து, பத்திபாய்ச்ச லொன்று = பிரமமொன்றே, ஒருகாலெண்ணறு பெயர்க்கு முன்றோன்றும் = வெகுபேர்க்கு முண்டா கும், காகதாலீய நிலைமைபோல் விண்ட நெஞ்சியற்கை விசித்திரகதியாம் என்ப தந்றுவயம், (29)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஒன்றைப் பலர்காண உதாகரணமருளி மீண்டு நடந்ததொன்று பிறங்கியது நினதுள்ளத்தே யென்ல்:—அப்படி, அத்திறம் என்பன.

அப்படியன்றே சொற்பன்மொன்றை யநேகமா னிடர்தனி காண்பர்
கைப்படுவிநோத மொன்றிலேமகிழ்வர் காதல ரநேகமா னவர்கள்
செப்பியகடைஞ்ச னைவப்புலையன் றிருமனை யூணமண் டலத்தே
தப்பறவந்தக் குறியினன்முன்னே சனித்துள னப்படித் தானே.

அத்திறந்தானே தமரெலா மிறப்ப வன்னியதேசத்தை யடைந்தான்
சத்திரநிழற்றக் கீரதேசத்திற் றலைவனாய்ப் பின்கனல் புக்கா
னுத்தமமாநின் னுளத்திலே வெறிதே யுன்னுசம் பந்தமா யதனாற்
பத்திபாய்ந்துளதா லப்படியாகப் பகர்புலைக் கடைஞ்ச னதியற்கை.

(ப - ரை.) அப்படியன்றே = அவ்வாறல்லவோ, சொற்பன மொன்றை = கனவு ஒன்றை, அநேகமானிடர் = அநேகமனுடர், தனிகாண்பர் = பிருத்தக்காகப் பார்ப்பர், கைப்படுவிநோதம் ஒன்றிலேமகிழ்வர் காதலர் அநேகமானவர்கள் = கூட்டப்பட்ட ஒரு விளையாட்டிலே பகுபாலகர்கள் இரமிப்பார்கள், செப்பிய கடைஞ்சனை = கூறியகடைஞ்சன் என்னும், அப்புலையன்றிருமனை = அந்நீசனது அழகியவீடு, ஊணமண்டலத்தே = பூதமண்டலத்தில், முன்னே தப்பற அந்தக்குறியினால் = பூர்வம் நீபார்த்தபடியே யாதொரு குறைவுமின்றி யுளது, அப்படித்தானே = அதேபிரகாரம், சனித்துளன் = கடைஞ்சன் பிறந்திருந்தான், அத்திறந்தானே = நீ கண்டபடியே, தமரெலாமிறப்ப = பந்துக்கள் யாவரும் அழிந்தொழியவே, அன்னிய தேசத்தை யடைந்தான் = வேறு தேயத்திற்குச் சென்றான், சத்திரம் நிழற்ற = வெண்கொற்றக்கொடை நிழல்பாலிப்ப, கீரதேசத்தில் தலைவனாய் = கீரமண்டலத் ததிபனாகிய மன்னவனாய், பின் = யாவருந்தெரிந்து கொண்ட பின்னர், கனல்புக்கான் = அக்கினியிற் பிரவேசித்தான், உத்தமமாநின் = மேன்மைவாய்ந்த நினது, உளத்திலே = மனத்திலே, வெறிதே = கேவலம், உன்னுசம் பந்தமாயதனால் = எண்ணுறுமாறு சம்சர்க்கமானதனால், பத்திபாய்ந்துளதால் = பிரதிபலித்துளது, அப்படியாக = நீபார்த்தபடியே, பகர் = இயம்பிய. புலைக்கடைஞ்சன தியற்கை = கடைஞ்ச ஆசாரமற்றிது; ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) அவ்வாறே வெகுமானவர்கள் ஏகசொப்பனத்தை பார்க்கின்றார்கள், நித்திரையைப்போலும் மயலைத்தருவதான வெண்ணறைபருகியதன் மதத்தானே மந்தமடைந்த சித்தத்தையுடைய வெகுபேர் சமவடிவினராய் உறங்குபவர்போன்றவராய் மாறுபாடுடன் திசை முதலியவற்றைக் காண்குவரெனல் போலும். மணல்மண்ணாதி சந்நிவேச சங்கேத கற்பித மாடமாளிகை கூடகோபுர துர்க்காதி பிரமவிநோத லீலையொன்றன் கண்ணே வெகுபாலகர்கள் இரமிப்பதேபோலும்; ஒரே இளம்பசும் புன்னிறைந்த தரைவாய்ந்த சியாமளவனஸ் தலத்தில் மானினங்கள் போலும்; உணரலாம். ஜகத்தானது மானசகற்பனையே ஆயின் ஹே மந்தாதிகாலம் னென்முதலிய அங்குர உதயத்தின் றடையாதலும், யவைமுதலியவற்றின் கொடையாதலும் ஆகியலோகப் பிரசித்தியின் பாதமன்றோவாம், மாநசகற்பனையிற் பாகியகாலத்திக்கு வியவஸ்தாபகத் தன்மைகூடாமையின் என ஆசங்கை நிகழின் பரிகாரம் பகருதும் கேட்டிஃ—தடையையும் கொடையையும் தருவதாம்காலம் என எவ்விலௌகிகப் பிரவாத சிரவணமுளதோ அது முரணுறுது; ஹே விப்பிரசிரேஷ்ட! தடை கொடைகட்குக் காரணமாய இக்காலமும் சங்கற்பமாத்திரமே யாதலின், திக்குவிசேடாவச்சின்ன சூரியக்கிரியைக் கண்டு மனத்தினாலேயே சாஸ்திரமுறையே மாதம் இருது முதலிய பேதகற்பனை யாதலின் என்பது கருத்து. ஆயின் அகற்பிதகால மியாதோவெனின்,

அகற்பித அகண்டகாலமாகிய பரமாத்மாயாதோ அது தனதுவடிவமாகவேயிருக்கின்றது, அது எதற்கும் தடைகொடை தருவதில்லை என்பதாம். எனவித்தரித்தருளி ஸ்ரீஹரிமறைந் தருளவே, சிலகாலங்கழித்து மீளவும் ஸ்ரீயப்பதியை ஆராதித்த அளவேகருணாநிதி பிரசன்னமாக, எந்தையே இம்மாமோக என்மனத் திருந்துகொண்டே வந்ததென் சொபசத்தன்மை வலிதினில் எனவாதிக்கும், சிந்தையை யருளல் வேண்டுமென்றிடத் திருமால்கூறும்; நிந்தித சொபசத்தன்மை நிவசாகமுளவா கேட்டி:—எவ்விக் கடஞ்சகனெனப் பெயரிய சுவபசன் பூதமண்டலத்தில் விவகரிக்கப் பெற்றனனோ அவன், நீ கண்டதற் கொப்பாகவே சரீரக் கிராமகிருகதாராதி யாகாரத்தோடும் அவ்வாறே பொருத்தமாக முன் உண்டாகியிருந்தான். அவ்வாறே களத்திராதி கழிந்தவனாகித் தேசாந்தரஞ் சென்றனன், கீரகிருபாதியாயினன், அதன்பின்பு அக்கினியிற் புகுந்தனன். அத்தகையனாக அன்னியன் ஆவனேலாயின் அடியேனுக் கெங்ஙனம் அவ்வநுபவ நெறியடைவுற்றதெனின், அருளல்:—சம்பந்தமா யென்பதாதி. நீரினுள் நின்றுசெபித்த நினதுமனதில் அக்கால் அக்கடஞ்சனது ஆசாரநன்னிலைமையானது, மயக்கமாத்திரத்தாற்கேவலம் எமது சங்கற்பவயத்தால் அவ்வாறே புலப்படத் தோற்றியது, எப்போதுமே காணாததாய்த் தேசாந்தரத் திருப்பதற்கும், சென்றவற்றிற்கும் எங்ஙனம் முன்னிருத்தற்றன்மையானே தரிசனங் கூடலெனின், கேட்டி:—கண்ட அநுபவித்தபொருளும் ஒருபோது முற்றினுமே மறக்கப்பெறுகின்றது, ஒரு சமயத்தினுமேகாணாத்துங் கூடக் கண்டதுபோலச் சித்தத்தானே காணப்பெறுகின்றது; அநுபவித்ததும் மறப்பதேபோலக் காணாததும் காணப்பெறுகின்றதென்பது பொருள். (30-31)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் கடஞ்சகனாகிய அநான்மாவின் கண்ணும், அவனது கிருக களத்திராதிகளாகிய அநாத்மீயத்தின் கண்ணும், எனக்கு அவனேயான் எனவும் அவனதேயாய அது எனக்கு என்றனதெனவும், எங்ஙனம் மூழ்குதல் கூடுமெனின், அதியற்பமாகவிது கூறினே எல்லா அநாத்ம வித்துக்களுக்குமே அநாத்மாவாய ஆகத்தின்மாட்டும், அநாத்மீயமாய கிருக களத்திராதிகளிலும், யான் எனது என்னும் அபிமான தரிசனத்தால், கேவலம் ஆத்மவித்திற்கே அதில் மூழ்காமை யுண்மையின் என்னுந் திருக்கருத்தானுரைத் தருளல்:—இவனென்பது.

இவனவ னானீ ததுவென தென்றே யிடரின்மூழ் குவரறி வில்லா
ரவனியா முழுது நாமெனு முண்மை யறிந்தவ ரழிங்கிநின் றயரார்
பவனமார் பொருளிற் பகிர்வுறு மனர்த்த பாவனை புந்தியிற் பொருந்திக்
கவருறா ரதனா லிவர்கண்மோ கத்திற் கவல்வுறார் தத்துவங் கண்டோர்.

(ப - ரை.) இவன் அவன் நான் ஈது அது எனது என்றே = தன்மைமுன்னிலை படர்க்கையிற்றவித்தும் சுட்டுப் பொருள்களில் மட்டுப்பட்டும் எவற்றையுந் தன்றாயேநிகியோங்கியும், என்றிவ்வாறாகவே, இடரில் மூழ்குவர் அறிவில்லார் = துயரத்தழுந்துவர் உணர்வற்றவர், அவனியாமுழுதும் = சகலஜகத்தும் பிரஹ்மரூபமே, நாமெனும் உண்மையறிந்தவர் = அதுவேநாம் என்றமெய்ம்மையை உணர்ந்தவர், அழுங்கி நின்றயரார் = முற்கூறிய அத்தியாசவகைகளில் மூழ்கித்துயருறார், பவனமார் பொருளில் = உண்டாகி மகாசஞ்சலமாயுள்ள வஸ்துக்களில், பகிர்வுறு மனர்த்தபாவனை = வேற்றுமைவடிவ அநர்த்தபாவனையை, புந்தியிற்பொருந்தி = மதியின்கண் மருவி, கவருறார் = கிரகிக்கமாட்டார், அதனால் = கவர்ச்சி யின்மையினானே, இவர்கள் மோகத்திற் கவல்வுறார் தத்துவங்கண்டோர் = தம்மை யறிவாகக்கண்ட மெய்ஞ்ஞானிகளாகிய இவர்கள் இன்பதுன்ப விலாசமயல்களில் மூழ்கிக் கவலைப்படமாட்டார்கள்.

(ஸ்ரீ - வீர.) அயம், ஸ, அகம், இதம், தத், மம என ஆத்மவான் முழுகான், அநாத்மவான் முழுகுவான். சர்வமும்யான் என்னும் பாவனையினாலும் தத்துவவித்துக்கு ஆண்டு முழுகுதலின்றாம், பரிச்சின்ன அகம்பாவத்திற்கே மஜ்ஜனஹேதுத் தன்மையுண்மையின் என்றருளல்:—அவனி யென்பதாதி, சர்வமுமே யானேயாவேன் என்னுந் தத்துவஞ்ஞன் மூழ்கித் துயரெய்தான், பதார்த்தங்களில் விபாக அநர்த்த பாவனையைக் கிரகியான் அதனாலிவன் சுகதுக்க விலாசங்களாய பிரமயோகங்களில் மூழ்குதலையடையான்; சர்வாகம் பாவத்திலும் அகங்கார மிருத்தலின் மக்கினப் பிராயமாயினும் அம்பசின் கண்ணே தும்பி பாத்திரமென்ன விருப்பன்: ஆயின்யான் எத்தகையனோ வென்னின், நீ யிடைப்பட்டவனேயாவாய், ஆண்டு வாசனாஜாலக் கிரஸ்தசித்தனாய் விவேகம் நிறையாதவனாயுள்ள நீ சிறிது சேடித்த மகாவியாதியை யுடையவனைப்போலச் சொஸ்தமடைந்தாயில்லை, சொரூபாவஸ்திதமாய ஆன்மாவை யடைந்தாயில்லை.

(சு.) இவனான் அவனான் ஈது எனது அது எனது என்றே = என்னும் பேதத்தைப் பாவிப்பவராய், அறிவில்லோர் = அநான்மஞ்ஞானவர், இடரின் = சம்சாரசாகரத்தில், மூழ்குவர் = மக்கினராவர், உண்மையறிந்தவர் = தத்துவஞ்ஞர்; அவனியாமுழுதும் நாமெனும் = நாமேயனைத்து மென்று அத்வைதத்தைப் பாவிப்பவராய், சம்சாரத்தில், அயரார், தத்துவங் கண்டோர், பொருளில் பகிர்வுறும் அனர்த்தபாவனை = விடயபோகங்களில் வேறுபடும் அனர்த்த ஹேதுவான பாவனையை, புந்தியிற்பொருந்திக்கவர்வுறார், அதனால்= அவ்வேதுவினால், இவர்களே = இந்தத்தத்துவஞ்ஞரே, மோகத்தில் = பிரம ஏதுவான அஞ்ஞானங்களில், கவல்வுறார். (32)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானம் பூரணமாகாமையின் இப்பிராந்தி நலிவுறுத்துகின்றது, அஃதாதற்பொருட்டுத் தவம்புரிதி யென்றருளி மறைந்தருள அவ்வாறே தவம்புரிதல்:— ஞான, எழுதியென்பன.

௩௩. ஞானபூ ரணமெய் தாமையான் மனத்தி னண்ணிய மோகத்தை நாடி
யீனமென் றகற்ற வறிகிலை யிதனா லிந்தமோ கத்திலே கணத்தி
னீநனி யமிழ லுற்றனை யிந்த நெடியமோ கத்திகி ரிக்கு
மாநதந் தானே யச்சதா மதனை வலிந்தடர் வுறிலது நலியா.

எழுதிநீ கிரியின் முழையிடை வருட மீரைந்து தவநனி யியற்றின்
முழுதுமாய் முடிவொன் றிலாதமெய்ஞ் ஞான முற்றுதி யென்றுபின் முகுந்தன்
றொழுதகு தோற்ற மெழுந்துழி மறையத் துயருறு மோகங்க ணீங்கிப்
பழுதறு காதி கற்பனை யெல்லாம் பற்றறுத் தருந்தவம் புரிந்தான்.

(ப - ரை.) ஞானபூரணம் எய்தாமையான் = ஞானமானது பரிபூரணமாகத் தடையின்றிக் கிடையாமையின், மனத்தின் நண்ணியமோகத்தை நாடி = மனத்தின்கண் மருவியமயலை ஆராய்ந்து, ஈனம் என்றகற்ற அறிகிலை = தீயது என்று விலக்கவுணர்ந்தாயில்லை, இதனால் = இக்காரணத்தினால், இந்தமோகத்திலே கணத்தில் நீநனி அமிழல் உற்றனை = இம்மயக்கத்திலே க்ஷணத்தில் நீ நன்றாக மக்கினமடைந்தாய், இந்த நெடியமோகத்திகிரிக்கு = இந்நீண்ட மயக்கமாகிய சக்கிரத்திற்கு மானதந்தானே யச்சதாம் = மனமே நாபியாம், அதனை = அந்நாபியை, வலிந்தடர்வுறில் = மிகமுயன்று அதையசையாமற் செய்யில், அது நலியா = அது சிறிதும் பாதிக்கமாட்டாது.

எழுதிநீ = எழுந்திருநீ, கிரியின் முழையிடை = கிரிகுஞ்சத்தில், வருடமீரைந்து = பத்துச் சம்வத்சரங்கள், தவம் நனியியற்றின் = நன்றாகத் தவஞ்செய்தியேலாயின், முழுதுமாய் = சர்வான்மகமாய், முடிவொன்றிலாத = அநந்தமான, மெய்ஞ்ஞான முற்றுதி = தத்துவஞானத்தை நன்றாக அடைவாய், என்றபின் = என்றிவ்வாறருளிய பின்பு, முகுந்தன் = ஸ்ரீமந்நாராயணர்தம், தொழுதகுதோற்றம் = யாவரும் போற்றத்தக்கதிருவடிவும், எழுந்தழிமறைய = கிளம்பிய அவ்விடத்திலேயே அந்தர்த்தானமாக, துயருறுமோகங்கணீங்கி = துக்கத்தைத் தருவனவாய் மயக்கங்கள் எவையும் அகன்றவனாகி, பழுதறுகாதி = எம்பெருமான் தரிசனவிசேடத்தால் நிர்த்தோஷமயமாய காதிவேதியன், கற்பனையெல்லாம் பற்றறுத்து = சகல சங்கற்பங்களையு மகற்றி வாசனையையும் கெடுத்து, அருந்தவம்புரிந்தான் = அரியபெரியதவத்தைச் செய்தான்.

(ஸ்ரீ - வீர.) கிருகரசன பரக்கிருகப் பிரவேசமுதலிய நன்முயற்சியற்ற புருடன் விருஷ்டியைக் கடக்க முடியாததேபோல, ஞானமானது பரிபூர்ணமாக எய்தாமையின் மனோமயிலே நல்மாக விலக்கற்கு ஆற்றலற்றவனாயினை, எங்குஞ் சுழன்றுகொண் டிருக்கும் இம்மாயா சக்கிரத்திற் கீண்டுரனைச் சித்தம். நயாயாம் = மத்யமாம், அச்சித்தத்தை வலிந்து ஆன்மாவின் கண்ணே பிரவிலாபனத்தாற் பிரஸ்கரித்து கிறுத்திவிடில், அம்மாயா சக்கிரம் இறையளவும் இடர்ப்படுத்த மாட்டாதாம். நீயெழுந்திரு கிரியினது குஞ்சத்தில் தச வருஷங்கள் கவலையற்ற மனத்தினனாய், தவம் = சித்தநிரோத அப்பியாசம் = மனம் பொறிகட் கொருமையாகிய தவத்தைச்செய்தி, அதனால் அநந்தஞானத்தை யாநந்தத்துடன் நன்கடைந்திடுவாய், என்றருளி ஸ்ரீ புண்டரீகாக்ஷன் ஆண்டே மறைந்தருளினார், வாதலீன அப்பிரம்போலும் நிர்வாண தீபகம்போலும், யமுனாதரங்கம் போலும் எனவாம் என்பது மாலோபமையாம். சரத்சமய பரியந்தத்திற்பாதபம் வைரசியத்தை = சிதிக்தமின்மையை யடைந்ததேபோல, காதிவேதியன் விவேகவசஜன்னிய வைராக்கிய பதத்தை அடைந்தனன். கருணார்த்ராத்மாவாகிய காதிமுனிவன் சித்தநியமன அப்பியாசப்பொருட்டு உத்தம ஸ்ரீயின்பொருட்டு, பயோதரம் பர்வதத்தை யடைந்ததேபோல, விசிராந்தியின் பொருட்டு இருஷ்யமூக மென்னும் மதங்காசிரமத் திருக்கும் அசலத்தை யடைந்தனன். சங்கற்பங்கள் சிறிதுமில்லாமற் றடுத்தொடுக்கி வாதனையொருவி ஆண்டுப்பெருந்தவத்தைச் செய்தனன்; மனத்தையு மிந்திரியங்களையும் ஒருமையுற நிறுவல் மாதவமென்பது மிகவும் வெளியாகுமென்ப.

(ச.) ஞானபூரண மெய்தாமையால், = ஆன்மதத்துவஞானம் பரிச்சின்ன விடயமாயிருத்தலின், இந்த நெடியமோகத் திகிரிக்கு = சக்கரம்போற் சுழலுமியல்புள்ள இச்சகத்துருபமாகிய மாயாவிலாசத்திற்கு, மானதந்தானே யச்சதாம், சக்கரப்பிரவிருத்திக்கு ஏதுவாதலின் என்க; அதனை = அத்தன்மையுள்ள மாயாசக்கரத்துக் கச்சான சித்தத்தை, வலிந்தடர்வுறில் = எவ்விதமு நிரோதஞ்செய்து நிர்விகாரனா யிருக்கின், அது = அம்மாயா சக்கரம், நலியா = அற்பமும் வாதியாது, (33-34)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பெருந்தவத்துடன் பத்துவருடங்கழித்து மகாஞாதாவாய்ச் சீவன்முக்தனாகிக் காதிவாழ்ந்தா னெனல்:—

வருடமோர் பத்தின் ஞானபூரணனாய் வாழ்ந்தனன் பின்னரே தன்றாம்
பொருவில் சற்பாவ மடைந்துயர்ந் தோனாய்ப் பொருந்திய பயந்துயர் நழுவிப்
பருகுறு போகத் திச்சையற் றுள்ள படியிலே சந்ததஞ் சுகமே
யுருவமாஞ் சீவன் முத்தனா யாறி யுவாமதி யெனவுள நிறைந்தான்.

(ப - ரை.) வருடமோர் பத்தின் = பத்துவருடங்களில், ஞானபூரணனாய் = உண்மை ஞானம் நிறைந்தவனாய், வாழ்ந்தனன் = கவலையற்றிருந்தனன், பின்னரே = அதன்பின்பு, தனதாம் = தன்னுடைய, பொருவில் சற்பாவம் அடைந்து உயர்ந்தோனாய் = உவமையற்ற சத்தையை அடையப்பெற்று மகாத்மாவாய், பொருந்தியபயம் துயர் நழுவி = முன்னருண்டாகியிருந்த அச்சஞ்சோகமற்று, பருகுறுபோகத் திச்சையற்று = போகிக்கத்தக்க போக்கியங்களில் ஆசையகன்று, உள்ளபடியிலே = வஸ்துஸ்திதிப்படியே, சந்ததம் = எப்போதும், சுகமேயுருவமாம் = இன்பமே வடிவமாம், சீவன் முக்தனாய் = ஜீவித்துக் கொண்டே சகலபந்தமும் விடுபட்டவனாய், ஆறி = பிரசாந்தனாய், உவாமதியென=சசாங்கனைப்போல, உளம் நிறைந்தான் = மனம்பரிபூர்ணமாயினன்.

(ஸ்ரீ - வீ ) பத்து வருடங்கள் மெய்த்தவம்புரிந்து பவித்திரமுற்றவதனால் ஆத்மஞானத்தை யடைந்தனன், ஆத்மஞானப் பிராப்தியின் அநந்தரம் மகாத்மாவாகிய காதிவேதியன் தனது பாரமார்த்திக மாயசத்தையை யெய்திப் பயசோக மகற்றினோனாய், உலகத்திலிருந்தும் போகங்கள் நிறைந்த அவனிகளில் நிராசையுடையவனாய், சந்ததம் ஆனந்தவடிவனாய் திருப்தனாய் ஜீவிக்கும் போதே முக்தரூபனாய், அதனானே அபரிச்சின்ன சுவானந்தமத்தனானே உறங்கி = இனிது நிறைந்த சித்தமுடையவனாய், பிரசாந்தனாய், கலாபூர்ண சசாங்கனைப்போல அபரிச்சின்னப் பிரஹ்மாகாசத்தில் விசிராந்தியை யடைந்திருந்தான்.

(ச.) பொருவில் சற்பாவம் = பரிபூரணமகா சத்தையை, அடைவுற்று ஆத்மாவின் கண்ணே இரமித்திருந்தான், அப்பிராந்த பரிபூரண சித்தமுடையவனாயினன் என்பதாம்.

காதி கதை முற்றிற்று.



## உத்தாலகன் கதை.

——(*)——

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தத்தை வெல்லும் உபாயமுரையாடவும், உத்தமஞானமாகாத்மியத்தை மலரவும், சித்தம்பருக்கும் பான்மைத்தோட ஹேதுக்களைப் பகரவும் உத்தேசித்த ஸ்ரீ வசிஷ்டபகவான் வருணித்த காதியுபாக்கியானத்தைப் பிரகிருதத்திற் பொருத்திக்காட்டல்:—இவ்வகையே என்பது.

(ச - அ - கை.) முன்பு சித்தோபசாந்தி நிமித்த மாயாவைசித்திரியஞ் சொல்லப்பட்டது, இப்போது திடபூமி யோகாப்பியாசத்தினாற் சித்தஞ் சஞ்சலமாயினும் உபசாந்தியாமென்று உத்தாலகர் கதையால் நிரூபிக்கின்றார்:—இவ்வகையே என்றது.

இவ்வகையே யிம்மாயை யறநெடிதாய் வெலற்கரிதா யேறித்தாழ்ந்து
வெவ்வியமா மோகங்கள் விளைவித்துப் பரமத்தின் மேவிநிற்கு
மவ்வகையா லுரைக்கின்றே னநவரதஞ் சொரூபத்தை யடையாதாரைப்
பவ்வமென வருந்துயரின் மூழ்குவிக்கு மிம்மாயைப் பண்புதானே.

(ப - ரை.) இவ்வகையே = கூறிய பிரகாரமே, இம்மாயை = இந்தமாயையானது, அறநெடிதாய் = அதிவிஸ்தாரமாய், வெலற்கரிதாய் = வெற்றிகொள்ளற் கரிதாய், = அறியமுடியாததாய், ஏறித்தாழ்ந்து = விடமமாய், வெவ்வியமா மோகங்கள் = கொடிய பெரிய மயக்கங்களை, விளைவித்து = உண்டாக்கிக் கொண்டு, பரமத்தின் மேவிநிற்கும் =

பரமாத்மாவை யாசிரயித்து விடயஞ்செய்து இருக்கும்; அவ்வகையால்=அக்காரணத்தால், உரைக்கின்றேன் = கூறுகின்றேன், அநவரதம் = எப்போதும், சொருபத்தை = நிஜவத்துவை, அடையாதாரை = சேராதாரை, பவ்வமெனகடலேபோல, அருந்துயரின்மூழ்குவிக்கும் = பெரியதுக்கத்தில் அமிழ்த்திவைக்கும், இம்மாயைப் பண்புதானே = இந்த மாயைக்கு இஃதியற்கையேயாய குணமாம்.

(ஸ்ரீ - வீர.) இன்னணம் இம்மாயையானது மிக விஸ்தாரத்தை யுடையதாம், அசிந்தியமாம், ஹே இரகுநந்தன ! மகாமோகமயியாம், தாரதம்மியத்தைச் செய்துகொண்டேயிருந்து வருவதாம், பரமாத்மமாத்திர ஆசிரயவிடயமுடையதாம். அசிந்தியத்தன்மையைக் கண்டாமன்றே முகூர்த்தத்வய மெங்கே அநேகவருட அநுபவமெங்கே, மறைபவனெங்கே பறையவனெங்கே, மயக்கமாத்திரமெங்கே பிரத்தியக்க மியக்குநேத்திர மெங்கே, பொய்ம்மையெங்கே மெய்ம்மையெங்கே, ஆகலின் அறைகின்றேம் ஹே மகாபாகோ ! இரவும் பகலும் விடமமேயாய விம்மாயை சாவதானமனசில்லாதவரை சங்கடத்தின் கண்ணன் குசேர்க்கும் மாயைபாரமாத்மிகீ யென்பது தோன்ற ஸ்ரீ முற்றறிமுனிவரு மொழிவர்: = பிரிபடாதமெய்ப்பே ரறிவொன்றுமே, யொருவிடம் விடயம்மென வொன்றுமே, மருவுமுன்னரே மன்னுதமக்குப்பின், னருவிடம் விடயம் மெனலாகுமோ. பொருள்:—அற்றேல், அகம் அஞ்ஞன் எனச் சீவாசிரயமாகவே அஃதநுபவிக்கப் பெறுகின்றது, இன்னணம் விடயமும் பிரஹ்மத்தை யறிந்திலேன் என்னும் அநுபவத்தானே அதற்குப் பிரஹ்மமேயாம் ஆகலின் யாங்ஙனம் சித்துவத்துவின் சித்திலாம் என்றியம்பலாயதோ வெனின், ஆண்டுரைத்தல்:—பிரிபடாத வென்பது, அஞ்ஞானத்தினது என எஞ்சி நின்றது. அஞ்ஞானத்தினது ஆசிரயத் தன்மையையும் விடயத்தன்மையையும் பஜிக்கின்றதென இடம்விடயம் மென ஒன்றுமே யென்றதாம். ஒன்றுமே = அத்விதீயமே, அதனானே பிரிபடாதது = ஜீவேசுரவிபாக ரகிதமாம்; இங்ஙனம் இனிது காட்டப்பட்ட அநுபவவிரோதமென வியம்பற்க; அதற்கு அயலாற்றுலமையப் பெறுதலுண்மையின், அன்றாயினோ அன்னியோன்னியாசிரயம் அணுகலின் என்னுங்கருத்தா லுரைத்தல்:—முன்னரே யென் து. தற்சத்தைப் பிரயோஜக அஞ்ஞானத்திற்கு என்பது பொருள். எ=எதுவிலாம், எதனால் ஜீவேசுர விபாகசத்வப் பிரயோஜகம் அஞ்ஞானமாமோ அதனால், பின் = அதன் பிரயோஜ்ஜியமாய் பிரஹ்மத்தினும் வேறாயஜீவனும், ஜீவனினும் வேறாய பிரஹ்மமும் முறைப்படியே இடமுமாகாதாம் விடயமுமாகாதாம், ஜீவேசுரவிபாகாதி அநாதியெனினும், அது வாஸ்தவமன்றாம், மாயிகமாயவதுவோ அத்வயப் பிரஹ்மம் அவிராத் தசையிலேயேயாம், என்வது அஞ்ஞான அதீனசத்தையை யுடையதேயாம், அஞ்ஞானமோ தற்சத்தையில் விபாகாதி சத்துவத்தை விழையாதாம், ஆகவே அதன் பிரயோச்சியமாகாதாம்; இன்னணமாகவே, அநாதிவடிவமேயாயினும் ஜீவப்பிரஹ்ம விபாகம் அஞ்ஞான விகாரமேயாம்: இதுகருதியே முன்னரேமன்னு என்பதாதி யியம்பப்பெற்றது. அதனானே, ஆன்மாவின்கண் அஞ்ஞான சத்துவஞ் சித்தமாகவே ஜீவேசுரவிபாக சத்துவமாம், அஞ்ஞானத்திற்கு விபக்த ஜீவசைதன்ய ஆசிரயத்வ முளதாகவே அதனதீனம் சத்துவமாம் என அன்னியோன்னிய ஆசிரயமாம், அகம் அஞ்ஞன் என்பதாதித் தோற்றமோ, அஞ்ஞானாசிரய பூர்ணசைதன்யத்திற்கே அகங்காராதி யுபகிதத் தகைமையானே ஆண்டும் அது சம்பவித்தலின் பொருத்த முடைத்தாம். அதனானே இது அநுபவத்தால் அகங்காராசிரயம் பிரஹ்மவிஷயம் அஃதென்பது மறுக்கப் பெற்றது, அஞ்ஞானத்திற்குக் கேவலஜடவிருத்தித்தன்மை பொருந்தாமையானும்; இங்ஙனம் விடயமும் பூர்ணமாகிய பிரஹ்மமே யாமெனக் கூறப்பெறும், பெறவே சித்துவத்துவின் சித்திலாம் என்றது பொருத்தமுடையதே என்பது கருத்து.

(ச.) ஸ்ரீவசிட்டர்;—பிரமத்தின் மேவிநிற்கும் = பரமான்ம சம்பந்தியா யிருக்கும், சிற்சத்தி ரூபமாதலி னென்க. தற்சத்தி யென்றும் பாடமுளது. (1)

(ஸ்ரீ - வீர - அ - கை,) சகல சமுசார துக்கங்களும் நீங்கவேண்டுமாயின் சித்த நிரோத வடிவ உபாயமின்றி வேறு உபாயம் கிடையாதெனல்:—சித்தவென்பது.

சித்தசய மாத்திரமாந் தெய்வமருந் தாலன்றிச் சென்மவெந்நோய்
சத்தியமே பிறமுயற்சி யானவையினுந் தீராது தகைமைமிக்கோய்
வைத்தநிகழ் காலத்துக் கணத்தில்வரு மியல்புறவா கியத்தாற்பற்றி
யொத்துவரு மெதிர்கால மிறந்தகா லங்கருதா ருளமிலாதார்.

(ப - ரை.) சித்தசய மாத்திரமாம் தெய்வ மருந்தாலன்றி = மனத்தைவெல்லன் மாத்திரமாம் பரம ஔஷதத்தாலல்லாமல், சென்மவெந்நோய் = சம்சாரமாகா ரோகமானது, சத்தியமே = உண்மையாகவே, பிறமுயற்சி யானவையினும் = வேறெவ்விதப் பிரயத்தினத்தினலும், தீராது = நீங்காது, தகைமைமிக்கோய்! = சித்தத்தை யடக்குந்தன்மையில் மிகுந்த வல்லமையையுடைய இராகவனே! வைத்தநிகழ்காலத்து = வர்த்தமான காலத்தில், வரும் = நுகர்வினைவயத்தால் வருவதை, கணத்தில் = கணகாலம், இயல்புற = அநாயாசமாக, வாகியத்தாற்பற்றி = பாகியமதியா லநுபவித்து, ஒத்துவரும் எதிர்காலம் = நிகழ்வைப்போலவே போகத்தைக் கொடுக்கவாராநின்ற பவிஷ்யத் காலத்தையும், இறந்த காலம் = சென்றபோதையும், கருதார் உளமிலாதார் = சிந்தியார் சித்தமில்லாதவர் ஆவர்.

(ஸ்ரீ - வீர.) சித்தத்தை இலயப்படுத்தன்மாத்திரமேயாய பரம ஔஷதமில்லாமல், சம்சாரமகா ரோகமானது எத்தனை யெத்தன மியற்றியபோதினும் சாந்தியையடையமாட்டாது. ஹே இராகாந்தன! பரமசிரேயசை யடைவான் பிறயாவற்றையும் விடுத்துச் சித்த நாசமேசெய்தி, சித்தத்துள்ளேயே சம்சாரம் இருக்கின்றமையின்; ஆயின் சித்தநாசத்தில் யாது கொலாமாலோ உபாயமெனக் கடாயின் விடைதால்:—வைத்த என்பதாதி, நுகர் வினைவயத்தால் வந்தவற்றை மாத்திரம் நிகழ்காலத்தே விருப்புவெறுப் பின்றிப்பற்றற்ற பாகியமதியாற் கணமநுபவித்து, சென்றதையும் வருவதையும் சிந்தைசெயா திருப்பின் சித்தம் சித்தத்தன்மையை யடைந்துவிடும்; பூதபவிஷ்யத் விஷயாநுசந்தானத் தியாகத் தானே கிரமமாகச்சித்தம் க்ஷீணத்தையடையும் என்பதுபொருள், மகான்கள் அநுட்டித்தது மிவ்வகையேயாம்: = ஆத்மவித்யா விலாசம்: சென்றவெவைதமையுமொரு சிறிதேனு நினையானுய்ச் செறிபவாகி, நன்றுவருபவைவினையுஞ் சிறிது முளத்தெண்ணுய் நயன நோக்க, நின்றவிவை யெவைதமையு நோக்கலொடு நினைத்தலின்றி நிமலனகி, வென்ற சமத்தார்த்த சமரசனவோரொருவன் விளங்குவானே.

வைராக்கிய சதகம்:—வாய்மையீ துணர்ந்திடுதி நன்னெஞ்சமே வருகணத்தேதேனு, நீநினைந்திடே லவ்வளவுடலுற நிச்சயிப்பரிதத்தாற், போயதோர் கணச்செயலுனேல் பயனிலை புகனிகழ்கணத்தேனும், தீமைநன்மை நீ நினைவதென் வினைவழிச் சிவன்றருகுதலாலே.

கைவல்ய நவநீதம்,—சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார்கண்முன், நின்றது புசிப்பார்.

(ச.) நிகழ்காலத்தில், இயல்புறவரும் = வருணச்சிரமக் கிரமவசத்தால் வாராநின்ற காரியத்தை, வாகியத்தால் = அநுதாபுத்தியால், கணத்தில் = க்ஷணமாத்திரம், பற்றி = அநுசந்தித்து, எதிர்கால மிறந்தகாலத்து மொத்துவரும் காரியத்தைக்கருதார் உளமிலாதார்,

அநுசந்தானஞ் செய்யாதசித்தம், அசித்தத்துவமென்னும் நிர்விகற்பத்தை யடையுமென்றதாயிற்று. (2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனோவிகற்பமின்றிப் போதற்கு உபாயாந்தரம் உரைத்தல்:—

சங்கற்பம் வேட்கையனு சந்தானங் கணந்தோறுந் தவிர்த்தியென்னின்
மங்குற்ற மனோலயந்தா னதுவாகு மனோலயத்தை மருவுபோதம்
பங்கற்ற பிரத்தியக்சே தனமாகு மதற்குமனோ பாவமென்ப
தங்குத்தா னிலாவியல்பா மாதலினான் மனோவிகற்ப மின்றிப்போமே.

(ப - ரை.) சங்கற்பம் வேட்கை அநுசந்தானம் = எண்ணம் இச்சை இனிது சிந்தித்தல், கணந்தோறும் = ஒவ்வொருகணமும், தவிர்த்தியென்னின் = அகற்றுதியேலாயின், மங்குற்றமனோலயந்தான் அதுவாகும் = அடங்கிவருமனத்தின் இலயமானது அஃதேயாகும், மனோலயத்தை மருவுபோதம் = சித்தமற்ற சேதனமே, பிரத்தியக்=சேதனமாகும், தனது வடிவமாம் அறிவென்பதாகும், பங்கற்றவதற்கு = பிரஹ்மத்தோடு பிரிவற்ற அத்தனக்கு, மனோபாவமென்பது = மனமாந்தன்மை யென்பது, இலாவியல்பாம் = சுபாவமாயில்லாததேயாம், ஆதலினால் = ஆகையால், அங்குத்தான் = அவ்விடத்திற்றான், மனோவிகற்பமின்றிப் போமே = விகற்பமலமொன்று மில்லாமலேபோம், தேற்ற ஏகாரம் பிரித்துக்கூட்டப் பெற்றது.

(ஸ்ரீ - வீர.) பாவிவிடய சங்கற்பத்தினாலும், அதனம்சபூத அர்த்தானு சந்தானத்தினாலும், வர்ஜனத்தைப் பிரதிக்ஷணமும் சாவதானமாக செய்து வருவாயாயின் அத்தனாற் பாவனமான அசித்தத்தன்மையை அடையவே செய்வாய், சங்கற்பமிருக்கும்வரை சித்தந் தீராது, சித்தமிருக்குங்காறும் சங்கற்பமுந் தீராது, சித்தத்தினின்றுந் தனித்திடப்பட்ட கூடஸ்த சைதன்யத்தை அகம்பாவனை செய்துவரின், அக்கால் தனது சம்சாரத்தின் மூலங்களாய காமகரும வாசனையாதிகள் மூலாஞ்ஞானத்தோடேயுந் தக்தங்களேயாயினவென்று முடிந்துவிட்டதாகவே யறியலாம், மகாசித்தசாமியமாகவும் உணரலாம். அற்றேல் உளதாகுகதாகம், ஆயினும் சேதனத்தில் மீளவும் கலனுமலவசத்தானே சித்தாதிசமுற்பவம் எனுக்மாட்டாது என் ஆசங்கிக்கின் விடைதரல்:— மனோலயத்தை யென்பதாதி சித்தமில்லாதபோதாய சேதனமே, பிரத்தியக்குச் சேதனமெனப் பெறும், நிர்மனஸ்க சுபாவமுடையதாமது, அதன்கண்ணே கலனுமலமே கதுவாதாமென்றுணர்க.

(ச.) இவ்வுகை இவ்வகைசெய்வேன் என்னும் மனதின்கருமம், சங்கற்பம், ஈதெனக்காகவென வேண்டுவது, வேட்கை, சென்றதைப்பின் சிந்திப்பது, அநுசந்தானம், ஆகிய இவற்றை, மனோலயத்தை மருவும்போதம் = விகற்பமற்ற சைதன்யம், பிரத்தியக்சேதனம் = பிரத்தியக்சைதந்யம், பிரத்தியக்கான்ம சொரூபமாகும், அதற்குமனோபாவ மென்பதிலா தியல்பாமாதலின் = நிர்மனஸ்க சுபாவமியல்பாதலின், மனோவிகற்பம் = அவித்தையால் வருங்களங்கம், அன்றிப்போம் = இன்றென்பதாயிற்று. (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரத்தியச் சேதனத்தின் பரியாயங்களை யியம்பி இவ்வாறு இயற்றவேண்டுமென இதத்தை யுபதேசித்தல்:— அற்றமென்பது,

அற்றமறு சத்தியமு முயர்சிவமுந் தற்பரம வவத்தைதானு
முற்றறிவு நிறைசுகமு மலமறனு மனப்பந்த முழுதுந்தீர்த
லுற்றவவி வேகத்தை யொழித்துறுதி யூகத்தா னுறுதியாகக்
குற்றமறு சற்புருடர் கோதறு நூல்களின்மனத்தைக் கூட்டியென்றும்.

(பத-உரை) அற்றமறு சத்தியமும் = புரைதீர்ந்த நன்மைபயக்கும் மெய்ம்மையும், உயர்சிவமும் = மேன்மையான சிவதையும், தற்பரம வவத்தைதானும் = பாரமாத்மிக அவத்தையும், முற்றறிவும் = சர்வஞ்ஞத் தன்மையும், நிறைசுகமும் = பூர்ணனந்தமும், மலமறலும் = களங்கமின்மையும், ஆகிய அனைத்தும், மனப்பந்தமுழுதுந் தீர்தல் = மனக் கட்டு முழுவது மகலுவதாம்; உற்ற அவிவேகத்தை யொழித்து = இயல்பின்றியாரோபித மாயுற்ற அறியாமைமயக்கற்றி, உறுதியூகத்தால் = அறிவுக்குரிய அதிதிட உபாயத்தனத் தால், உறுதியாக = ஒரேபிடிவாதமாக, குற்றமறு சற்புருடர் = நிர்த்தோஷ நடையை யுடைய மகான்களுடனும், கோதறு நூல்களில் = சகல தோடங்களையும் அகற்றும் அத்தி யாத்ம சாஸ்திரங்களிலும், மனத்தை = சித்தத்தை, என்றும் = எப்போதும், கூட்டி = சேர்த்துவாழ்க.

(ஸ்ரீ-வீர.) சித்தரகித சேதனசொரூபம் யாதுள்ளதோ அதுவே பரமார்த்த சத்தியத் தன்மையாம், சிவதையென்னும் நிரதிசய ஆனந்தரூபத் தன்மையாம், அதுவே பரமாத்ம சுப்ரவபூத அவத்தையாம், சர்வஞ்ஞதை யென்னும் சர்வ அவபாசக சித்துரூபத் தன்மை யாம், திருப்திவடிவமாம், பரமாத்த திருக்குருவமாம், யாண்டுக்ஷதமாகிய மனமில்லாமற் போமோக்ஷமென்பது இகழ்தற்பொருட்டுற்றசிறப்பாம், நிந்தியத்தன்மையின் பீஜங்கள் தாம்யாவைகொலோ வெனின் யாண்டுத்தான் மனமுளதோ ஆண்டாசையு முண்டு, ஆண் டுத்துக்க சுகங்களும் சந்ததம், மயானத்தில் வாயசங்கள்போலச் சந்நிதிப்பட்டுக் கொண்டே யிருக்கும். அற்றேல் அறிஞர்கட்கும் உளமுளதாம் ஆண்டும் ஆசையாதிகள் உண்டாகாத தென்னைகொலோ வெனின், உண்மையே, உளமுளதா மெனினும், அவர்கள் தம்மானச சங்கற்பத்தில் ஆசாதிசர்வ பாவவிவர்த்தாபகமாய சமுசாரவல்லியின் வாசனாத்மக பீஜமே யுண்டாவதில்லை, வத்துதத்துவ அவபோதத்தானே பாதிதத் தன்மையுண்மையின் என் றுணர்க. வஸ்துத்தன்மையானே உணரப்பெற்றவைகட்கு எவ்வுபாயத்தானே அவஸ்துத் தன்மை யுணர்ச்சி வடிவபாதம் போதுமென்றிடின், சாஸ்திரசற்சன சம்பந்த சந்ததாப்பி யாசச் சார்பினால் சகத்சம்பந்த பாவங்கட்கு அவஸ்துத் தகைமையறியப் பெறுமென்க. அவிவேகத்தினின்றும் சித்தத்தை யகற்றிப் புருடப் பிரயத்தினத்தோடு கூடிய, அவசியம் இச்சன்மத்தில் ஞானத்தை யடையவேண்டும் என்னுந்திட நிச்சயத்துடன், பலாத்காரமாக சாஸ்திர சற்புருடக் கிரமங்களோடு இனிது கூட்டுக.

(ச.) மனப்பந்த முழுதுந்தீர்தலுற்ற = மனது நஷ்டமான தசையெதுவோ அத்த சையே, அற்றமறு சத்தியமும் = நிர்விகாரமான ஜீவன் முக்தியென்பதாம், உயர்சிவமும் = விதேகமுக்தியும், நிறைசுகமும் = ஆநந்தரூபமுமாம் என்பது பொருள். உறுதியூகத்தால் = உச்சாக சகிதங்களான நிச்சயங்களால், ஆன்மானன்ம விவேக ஏதுக்களான பிரமாணதர்க் கங்களால், மனத்தை, அவிவேகத்தை யொழித்து = நானென்னுந் தேகாபிமானத்தி னின்றும் விடுவித்து, உறுதியாக = புருடப் பிரயத்தனத்தால், சற்புருடர் = ஆத்தும வித்துக்களது ஆசாரக் கிரமங்களிலும், கோதறு நூல்களின் = அத்தியான்ம சாஸ்திரங் களிலும், என்றுங்கூட்டி, கூட்டவேண்டு மென்பதாம். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) எம் முக்கிய காரணத்தைப் பற்றிக்கொண்டு சாஸ்திராதியானும் ஆன்மா தேடத்தக்கதோ வெனின் ? சுயஞ்சோதிரூபமாய பிரத்தியக் காத்மாவையேயாம், தத்வேத்திய வைலக்ஷண்யத்தானே அதற்கே, தானே வெளிப்படுந் தன்மை யுண்மையின், ஆகலின் பரமாத்மாவலோகனத்தில் முக்கியமாய காரணம் ஆத்மாவேயாம், உலகிலும் அகாதத்தில் வீழ்ந்த இரத்தினத்தை பிரகாசமானமாயாத்தினமாந் தன்னானே யன்றே

பார்க்கின்றார்கள்; மேலும் அம்முக்கிய காரணத்தன்மையைப் புடப்படுத்திடில், தன்னானே யநுபூதங்களாய திருசியஜாதங்கள் துக்கங்களேயாம் என்னும் விவேகத்தானே எவ்வேது வானே தியாகிக்க இச்சிக்கின்றனையோ அவ்வேதுவானே சுவாத்மாவலோகனத்திற் றற்பிரதிகூல சுபாவமேய சுயம் முக்கியஹேதுவாம், தானும் அசுகஜட சுபாவத்தன்மையதாயின் தற்பிரதிகூலமாகாதன்றோ, ஆகலின் நீ யெப்போதும் அதன் இலாபப்பொருட்டு அதேயொருவேலையாய் அதனிலேயே முக்கிய தாற்பரிய முடையவனாய் ஆவாய் என்றருளல்:—அனவரதம், நலன், எனது, என்பன.

(சு-அ-கை.) இனி மூன்றுகவிகளால் ஆன்மானுசந்தானத்தை உபதேசிக்கின்றார்:—

அனவரத முரைத்தல்விடல் பற்றலிமைப் புறல்விழித்த லனைத்துஞ்செய்து
மனனமறு சுகவானாய்ச் சற்சின்மாத் திரபரனாய் வாழ்திமைந்தா
கனமலமாங் காண்பவைதீர்ந் துள்ளத்தின் மலமறுத்துக் காதற்பாச
மெனவுயர்கோ ரையையறுத்து நின்னறிவிற் றற்பரனா யிருத்தியன்றே.

நலனிழிவாஞ் சங்கேதத் தாசையெனும் விடூசிகையை நண்ணாயாகிச்
சலனமுறு விருப்புவெறுப் பறவுணர்வின் சாரபரந் தானாய்வாழ்வா
யலகறநா னிவனவனீ ததுவெனதாம் வாதனைக ளறுத்தொன் றென்றே
நிலவியநிட் டையிலாறிச் சற்சின்மாத் திரபரனாய் நின்றுவாழ்வாய்.

எனதுபிற ரதுவென்னு மெண்ணமறச் சகநிலையி லிரண்டற்றொன்றாய்க்
கனவயிரத் தம்பமென வுணர்வுருவைப் பற்றிநிலை கண்டுநிற்பா
யனகமுட னமலமா யகண்டமாந் தன்னறிவி லமைவென்றுண்டாஞ்
சனனமயக் கத்துக்குக் காரணமாம் பிரிவன்று தவிர்ந்துபோமே.

(ப - ரை.) அனவரதம் = எப்போதும், உரைத்தல் விடல்பற்றல் இமைப்புறல் விழித்தல் அனைத்துஞ் செய்தும் = உச்சரித்தல் விசர்ச்சனித்தல் கிரகித்தல் கண்திறத்தல் மூடல் முதலிய யாவற்றையு மியற்றியும், மனனமறு சுகவானாய் = அவற்றைப்பற்றி முன்பின் எண்ணாதவனாய் ஆநந்ததற்பரனாய், சற்சின்மாத்திர பரனாய் = மெய்யறிவு மாத்திரமான வடிவினையுடையவனாய், வாழ்திமைந்தா = குழந்தையே நீ இளைப்பாறி வாழ்வாயாக; கனமலமாங் காண்பவைதீர்ந்து = பெருமலமாம் திருசியங்களை யொழித்து, உள்ளத்தின் மலமறுத்து = மனத்தை நிர்மலமாக்கி, காதற்பாசம் எனவுயர் கோரையையறுத்து = ஆசாபாசம் என்று சொல்லப்பட்ட வானோங்கிவளரும் கோரையைச் சேதித்து, நின்னறிவில் தற்பரனாயிருத்தியன்றே = நினது அறிவுவடிவத்தின் கண்ணே நிர்விகற்பமாய் இருந்து வாழ்வாய்; அன்று ஏ அசை நிலைகள்.

நலன் இழிவாம் = சுபம் அசுபமாம், சங்கேதத்து = என்று நியமித்துக்கொண்டதில், ஆசையெனும் விடூசிகையை = உண்டாம் இச்சையென்னும் விடவியாதியை, நண்ணாயாகி = பொருந்தாதவனாகி, சலனமுறு விருப்புவெறுப்பு அற = சித்தசஞ்சல ஹேதுவாய இஷ்டாநிஷ்டங்களை நஷ்டப்படுத்தி, உணர்வின் சாரபரம் தானாய் வாழ்வாய் = சம்வித்சாரபரம் நினது வடிவமாக நினைந்து சுகிப்பாய்; அலகற நான் இவன் அவன் ஈது அது எனதாம் வாதனைகள் = அவித்யாந்தகாரம் நீங்கிடுமாறு அகம் அயம்ச: இதம் தத்மம எனவத்திய சித்துண்டாம் வாசனைகளை, அறுத்தொன்று என்றே நிலவியநிட்டையில் ஆறி = சேதித்து ஓரேபரம் விளங்கும் உபசாந்தி நிஷ்டையுற்று விசிராந்தியடைந்து, சற்சின்மாத்திரபரனாய் நின்றுவாழ்வாய் = சச்சிதாநந்தமயமாய் நிலைபெற்றுச் சுகிப்பாய்.

என்து பிறாது என்னும் எண்ணம் அற = தன்னுடையது அன்னியனது எனவுண் டாம் நினைவுகளை நீக்கி, சகிலையில் = சகத்தின்றியில், இரண்டற்ருென்ருய் = நிர்வி பாகமாய், கனவயிரத் தம்பமென் = பலமான வச்சிரத்தம்பம்போல, உணர்வுருவைப்பற்றி = அறிவுருவை யநுசந்தித்து, நிலைகண்டு நிற்பாய் = அதிதிடமான நிலையிலிருப்பாய்; அனக மூடன் அமலமாய் அகண்டமாம் = நிர்த்தோஷமாய் நிர்மலமாய்க் கண்டிதமின்றிய தன் னறிவில் = சுவாத்ம சித்ரூபத்தில், அமைவு என்று உண்டாம் = நிலைபெற்றிருத்தல் எப் போதுண்டாமோ, அன்று எ = அப்போதே, சன்மமயக்கத்துக்குக் காரணமாம் பிரிவு = சம்சாரப் பிரமகாரணமாய மோகம், தவிர்ந்துபோம் = அத்தியந்தம் அழிந்தொழியும்.

(ஸ்ரீ - வீர.) உரைத்திடினும் விடுத்திடினும் உட்கொண்டாலும் கண்மூடித் திறந்திட் டாலும், மனனமகன்றவனுய் அநந்தசம்வின்மாத்திர பரனுகவாழ்தி; சனித்திடினும் மரித் திடினும் வினைப்படினும் வாழ்ந்திடினும் சோதனையா னின்மலமாம் தன்வடிவாம் அறிவுரு வில் அதிதிடமாய் நின்றிடுநீ; ஈண்டுச் சன்மமரணக் கிரகணம், தற்சமமாய சுகதுக்கதுர்த்த சாந்தரங்களிலும் ஆன்மானு சந்தான தற்பரத்தன்மையின் மறவாமையை விதித்தற்பொ ருட்டாம் என்றறிக. முன்நிற்கும் இது என்னுடையது தூரத்திருக்கும் அது என்னுடை யது, இது அதுவெனப் பிரத்தியபிஞ்ஞாயமானம் தேகம் அகம் எனவுண்டாம் வாதனை களை நன்குதியாகித்து ஏகநிஷ்டையுடையவனுய் உள்ளிருக்கும் உணர்வுமாத்திர வடிவின னுய்ச் சுகிப்பாய். வாகிய விடயவடிவ சம்வேத்திய மலத்தை நன்ருகக்கழுவி, ஆந்தரமனத் தில் வாசனுமலம் சிறிதுமில்லாமல் கழுவி, இருமலங்கட்கு மேதுவாய் ஆசாபாச மலத்தை யடியோடும் போக்கித் தன்னறிவிற் றற்பரனுய்த் தட்பமுடன்வாழ்தி; சுப அசுபவடிவமாகத் தனது சங்கற்பத்தானே யாக்கப்பெற்ற சங்கேதங்களில் ஆசாவிஷூசிகை அடியோடு மற்றவனுய், அதனுனே இஷ்ட அநிஷ்டதிருஷ்டி நஷ்டமானவனுய், நீ சம்வித்சாரபரனுய் வாழ்தி; சாக்கிரத்திலேயே மிகத்திரமான நற்சுழுத்தித்திதியைப் பாவித்து, யாவும் யானு கவே இருக்கின்றேன் என்றினிது சிந்தித்து, சத்தையொன்றையே வபுவாகவுடையவ னுய்த் துயின்ருன் போன்றே நிர்விகற்பமா யிருந்து வாழ்வாய். சுவத்துவத்தையும் அதனி னும் அன்னியப் பான்மையையும் தியாகித்து விசுவநிலையில் விபாகமற்றிருத்தி, வச்சிரத் தம்பம்போல் ஆத்மாவை யவலம்பித்து அதிதிரமாக நிலைத்துவாழ்தி; நிர்மலநிரம்ச சம்வித் தியின் மறதி அறியாமை எப்போதாமோ அப்போதே சம்சாரபிரம காரணமாயமகாமோக முதயமாம்; நிர்மலநிரம்சமாய தன்னறிவில் திதியெப்போதாமோ அப்போதே உரைத்தமா மோகம் நன்குக்ஷீணித்துப்போம். சொரூபத்தை நன்குசாக்ஷாத் கரித்தவனுய் ஆசாமகார் ணவத்தைக் கடந்தவனுய் இலங்கும் பெரியோனது அறிவு எங்கும் சூரியாம் சுவேபோல விரியாநிற்கும்; சொரூபப் பிராப்தியினுனே யாசைப்பெருங் கடல்கடத்தல் கூடலின் "ஆசையும் இவற்குப்பரத்தை யறிந்தே, மோசனமாகும்" என்னும் ஸ்ரீ பகவத்வசனத் தால் என்பது பாவமாம்.

(ச.) உரைத்தன் முதலியவற்றிற் சந்நிதிமாத்திரத்தால் அஃதது பிரவிருத்திக்கின்றது, அத்தகைய சர்வசாக்ஷியாய் நிர்விகற்பமாய் அநந்தமான சம்வின்மாத்திரத்திலே தாற்பரிய முள்ளவனுய் வாழ்வாய்; சாண்பவைதீர்ந்து = திருசியத்தைவிட்டு, உள்ளத்தின் மல மறுத்து = மனதை மிகவும் நிர்மலஞ்செய்து.

நலனிழிவாஞ் சங்கேதத்து = உள்ளதிலதென்னும் பேதக்குழாத்தையும், ஆசையென் னும் விடூசிகையையும், விருப்பு = இஷ்டதிருஷ்டி, வெறுப்பு = அநிஷ்ட திருஷ்டியும், அற = இன்றி, அத்தன்மையானநீ நான் என்பது முதலியபேத வாதனைகளையறுத்து ஒன்

றென்றே நிலவியநிட்டையில் = சர்வாதிட்டானம் ஏகமே பிரமமென்னு நிச்சயத்தால் ஆறி உள்ளுள்ள சம்வின் மாத்திரத்திற்குற்பரிய முள்ளவனாய் வாழ்வாய்.

சேதனாசேதனான்மகமான பிரபஞ்சத்திற் பேதபாவனையை யறவிட்டு ஆன்மாவையே கேவல மநுசந்திப்பவனாய் வச்சிரத்தம்பமென நிர்விகற்பனாவாய், சன்னிமியக்கத்துக்கு = சம்சாரப் பிரமத்திற்கு, பிரிவு = மோகம். (5-6-7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முக்தனுக்குப் பிறுண்டாசைச் சம்பாவனை செய்கையிலாம், மாறாக அமிருதாதிரசாயன ஆசுவாதத்திலும் ஆத்மாநந்த ஆசுவாத விக்கினத்வசம்பாவனை யால் விடம்போலும் தள்ளத்தக்கதாமதி யுதயமாதலின் என்னுங் கருத்தாலுரைத்தல்:— பேராநந்த மென்பது.

பேராநந் தத்தின்ப நிலையினியல் பினைநோக்காய் பின்னைநிற்கும்
வாராத நல்லமுதம் வந்தாலு முயிர்தொலைக்க வருநஞ்சொக்குஞ்
சோராமெய் யுணர்வுடைமை தூரிதா மனந்தடித்துத் துன்றுமாகிற்
காரான முகில்சூழ மறைத்தாலுண் டோமதியங் கண்ணின்காட்சி.

(ப. - ரை.) பேராநந்தத் தின்பநிலையின் இயல்பினை = பிரஹ்மாநந்தாத்வய நற்றிதியின் சுபாவத்தை, நோக்காய் = இனிது நாடிப்பார்ப்பாய், பின்னை நிற்கும் வாராத நல்லமுதம் வந்தாலும் = இலக்குமிதேவி யெழுந்தருளி யிருக்கும் க்ஷீராப்தியிற் கடைந்தெடுத்து மேரு வில் மறைத்து க்ஷேமித்து வைத்திருக்கும் கிடைக்கக்கூடாத சுவாதாய கற்பாந்தஜீவித அமிருதம் கிடைப்பதேயாயினும், உயிர்தொலைக்கவரும் நஞ்சொக்கும் = பிராணனைய கற்றிவைக்க வாராநின்ற ஹாலாகலவிடத்திற் கொப்பாம்; சோராமெய் யுணர்வுடைமை தூரிதாம் = கெடாததத்துவ ஞானத் தகைமையானது சேய்மையிற் சென்றுவிடும், மனந் தடித்துத் துன்றுமாகில் = சித்தத்திற் பருமையானது வளர்ந்துவரின், காரான்முகில் சூழ மறைத்தாலுண்டோ = நீருண்டு சூல்கொண்டு கறுத்த மேகமண்டலம் ஆச்சாதித்தால் உளதாமோ, மதியம் = சந்திரன், கண்ணின் காட்சி = நேத்திரேந்திரியத்திற்குப் புலப்படு தல்; ஆகாதென்தாம்.

(ஸ்ரீ - வீர.) அத்வைதாநந்த இனியநிலைமையின் இயற்கையை நன்காலோசித்துப்பார், ஹே இராகவ ! சுவாதாய இரசாயனமும் பிரதிகூலமாய விடம்போலுந் தள்ளத்தக்கதேயாய் விடும்; ஆகலின் நம்மனோரது சுபாவமாகிய பிரத்தியக்காத்ம பாவத்தை எச்சீவன்முத்தர் அடைந்துளாரோ, புருடஜன்மத்தைச் சபலமாக்கலின் புருடார்த்தத்தைச் சாதித்தலின், சபலமுயற்சி யுடைமையின் மேலும் நலம்பலபயத்தலினானும், அப்புருடோத்தம சிகாமணி களோடும், எப்போதும் மைத்திரியைப் பஜிப்பேமாக; மற்றையர்களோ புருஷார்த்த உப யோகியாய் பௌருஷ மின்மையின் பெயர்மாத்திரையானே புருடர்கள் ஆவர்கள் அருத்த லேசத்தாலும் அல்லர்கள், ஆகலின் கர்த்தபம் போலும் உபேக்ஷிக்கத் தக்கவர்களே யாவர்களல்லாமல் தரிசனாதி யோக்கியர்களும் ஆகார்கள், ஆனாற்சேடர்கள் புருடப்பெய்ரு டைய நீண்ட பாகுக்களையுடைய நீள்செவியர்க ளாவர்கள் என்றபடி சித்தத்தின் கண்ணே தூலத்தன்மை மிக்வும் உண்டாகிவிடின் ஆன்ம உணர்வுடைமை சிறிது சம்பாதித்திருந்த போதினும் வெகுதூரத்தி லோடிப்போம், உதயமாயினும் மதியம், எப்புறத்தும் மகாமேகம் அதிகரிக்கின் ஆலோக இலக்குமியை விரித்து கண்காட்சி செய்வியாததேபோலும். ஆக லின், அடைவுற்ற போகவிடயங்களின் சேவன திரஸ்காரசிர அப்பியாசங்களானும், அடை வுறாதவற்றின் இரச அபிலாஷையின் அபகாரசிர அப்பியாசங்களானும், பையப்பைய, காலக்கிரமமாக, சாய்ந்து பட்டுப்போம் சருகுபோல அஃதுணர்ந்தவன் மனத்திற்குக் குறைவைச் சம்பாதித்துக் கொண்டே வரவேண்டு மென்பது கருத்தாம்.

(சஃ) இயல்பினை நோக்காய் = சுபாவத்தைச் சாக்ஷாத் கரிப்பவனுய், அதனலே, பேராநந்தத் தின்பநிலையின் = ஆநந்த மயத்திதியுடையற்கு, நல்லமுதம் = இரசவஸ்து மதுரமாயினும், நஞ்சொக்கும் = அநுகூலமற்ற விஷத்தைப்போலாம், "இவனது ஆநந்தத்தினது மாத்திரையையே அன்னியங்களான பூதங்கள் அநுசரித்துச் சீவிக்கின்றன" வென்னுஞ் சுருதியினலென்க. மனம் = சித்தம், சம்சார வாசனைகளாற் றூலீகரிக்கின், மெய்யுணர்வுடைமை = ஆன்மஞானம், தூரிதாம், காரானமுகில் சூழ = எவ்விடத்தும் மறைத்தால், பிரகாசசம்பத்துத் தூரிதாவதுபோல் என்ப தந்நுவயம். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனப்பீனத்தன்மையேதுக்கள் யாவைகொலாம், எவற்றை விலக்கலானே அதனது கிருசத்தன்மை யுண்டாமோ வெனின், அவற்றைப் பகரல்:— சரீர, ஆதி, என்பன.

(ச-அ-கை.) சித்தம் எப்படித்தூலிக்கும் என்று ஆகாங்க்ஷைவர இரண்டரைக் கவிகளாற் றூலிப்பதைக் கூறல்:—

சரீரமாத் திரத்தாசைப் புந்தியாற் றனல்லா தன தானென்றே
பரிவுறலான் மக்கண்மனை குடும்பமெனும் பாவனையாற் பருக்குமுள்ளம்
விரியுமகங் காரவிகா ரத்தினன் மமதைமல விநோதந்தன்
னுரியவென திதுவென்னும் பாவனையான் மிகப்பருக்கு முள்ளந்தானே.

ஆதிவியா தியின்விரிவா லவைமாறித் தேறுதலா லகற்றல்பற்ற
லூதியமா முயற்சியினற் பிறவிதொறு மிகப்பருக்கு முள்ளமைந்தா
மாதர்மணி தனமுதலா நேயத்தா லிலாபத்தால் வருலோபத்தால்
போதுபொழு திவைநன்று நலத்தினற் பருத்துள்ளம் பூரிப்பாமே.

(ப - ரை.) சரீரமாத்திரத் தாசைப்புந்தியால் = தேகமாத்திரத்தில் ஆஸ்தையையுடைய மதியினல், தான் அல்லாதன தானென்றே = அநாத்மாக்களை யாத்மாவென்றே, பரிவுறலால் = பாவனைசெய்தலால், மக்கள்மனை குடும்பம் எனும் பாவனையால் = புத்திர தாரகுடும்ப மென்னும் வாஞ்சையால், பருக்கும் உள்ளம் = மனந் தூலீகரிக்கும்; விரியுமகங் கார விகாரத்தினல் = விஸ்தரிக்கும் அகங்காரத்தினது விகைகளினல், மமதைமல விநோதந்தன்னல் = எனதென்னும் அசுத்த விளையாட்டாடலால், உரிய எனது இது என்னும் பாவனையால் = சொந்தமான இது என்னுடையது என்றுண்டாம் எண்ணத்தால், மிகப் பருக்கும் உள்ளந்தானே = சுயமாகவே சித்தம் அத்தியர்தம் தூலீகரிக்கும்.

ஆதிவியாதியின் விரிவால் = குரோதாதி குன்மாதி நோய்களின் முதிர்ச்சியாலும், அவைமாறித் தேறுதலால் = எந்நோயுமில்லாமல் எய்தும் இரம்மியமதியாலும், அகற்றல் பற்றல் ஊதியமா முயற்சியினல் = தள்ளல் கொள்ளல் இலாபகர யத்தினங்களாலும், பிறவிதொறும் = ஜன்மந்தோறும், மைந்தா = குழந்தாய்! மிகப்பருக்கும் உள்ளம் = மனமானது அத்தியந்தந் தூலீகரிக்கும்; மாதர்மணி தனமுதலா நேயத்தால் இலாபத்தால் வருலோபத்தால் = அங்கனையாதன தங்கமே முதலியவற்றின் சிநேகத்தாலும் லாபத்தாலும் கண்டபின்னுண்டாம் லோபத்தாலும், போதுபொழுதிவை நன்றும் நலத்தினல் = கிடையாதது கிடைத்தபோ துண்டாம் இரம்மிய மதியினலும், பருத்துள்ளம் பூரிப்பாமே = தூலிகரித்து மனமானது பருமையை யடையாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) அன்மா வின்கண்ணே ஆன்மபாவத்தானும், தேகமாத்திரத் துண்டாம் அபிநிவேசத்தாலும், அதனலுண்டாம் புத்திரதார குடும்பவாஞ்சையானும் சித்தம் பீனத்

தன்மையைச்சேரும். அகங்கார விகாசத்தானும், மமதைவடிவ மலத்தில் விளையாடும் ஆசத்தியாலும், சர்வமமதை மூலமாகும் இத்தேகம் என்னுடையது ஆத்மாபோகாயதனம் என்னும் பாவனையானும், சித்தப் பருமையைச் சேராநிற்கும். அப்பாவனையையேமேலும் சிறப்பித்துரைப்பில், ஜராமரண துக்கத்தாலும், வீணுகவே மேன்மையைக் கருதிவாடலாலும், தோஷசர்ப்ப விடகோசத்தாலும், மனம்பருமையை மருவாநிற்கும். இருசீரங்களினுண்டாம் வியாதி விலாசத்தாலும், சமுசாரத்தினது இரம்மியத்தன்மை நீள்போதுள்தூரத் தன்மை முதலியவற்றின் விசுவாசத்தாலும், ஹேய ஆதேயப் பிரயத்தினத்தினுலும், உள்ளங்கொள்ளும் தூலதையை, நேயத்தாலும் தனலோபத்தாலும், மணிமங்கையரின் இலாபத்தாலும், ஆயதரமணீயத்தாலும், சித்தஞ்சேரும் பருமையை.

(ச.) தானல்லாதன = அஞன்மாவென்னுந் தேகாதியில், தானென்றே பரிவுறலால் = ஆன்மபாவனை பண்ணும் ஏதுவினுல் வராநின்ற, சரீரமாத்திரத்து ஆசைபுத்தியால் = ஆதரமுடைய புந்தியாலும், ஆதரித்தற் குரியவர்க்கங்களாலும், உள்ளம் பருக்கும், அகங்காரரூப விகாரமாகிய, இது வெனதென்னும் இவ்வகைரூப முள்ளபாவனையால், விரியும், மமதை வடிவான மலத்தினது, விநோதந்தன்னுல் = லீலையால், உள்ளம் மிகப்பருக்கும்.

பதார்த்த சுபநிச்சயத்தால் புத்திரதாராதி நேயத்தால், போதுபொழுதினை நன்றும் நலத்தினுல் = அவிசாரிதரம்மியத்தால் மாதர்மணிலாபத்தால், வரு = அதிகரித்த, தனலோபத்தால், உள்ளம் பருக்கும். (9-10)

(ஸ்ரீ-வீர - அ - கை.) உள்ளம் பருத்தலுரைத்தலை யுபசங்கரித்து, அதனையொழித்தற்கு உத்தாலகனைப்போன் முயலவேண்டு மெனல்:—தூராசையென்பது.

தூராசையெனும் பால்பருகித் தொல்போக மெனுங்காற்றூற் றொடர்மொய்ம்புண்டா, யிராகமுறு வழியுலவி மனப்பாம்பு மிகப்பருக்கு மிராமகேளாய், புராதனவுத் தாலகன்போ லைம்பூதத் தையும்பொடியாப் போகப்பண்ணி, நிராகுலமாம் புந்தியினு லிதயத்தே நினைத்தியென நிகழ்த்தலோடும்.

(ப - ரை.) தூராசையெனும் பால்பருகி = தூராசாக்ஷீர பானத்தானும், தொல்போகம் எனுங்காற்றூல் = வெகுகாலமா யநுபவிக்கும் போகம் என்னும் வாயுவினுல், தொடர்மொய்ம்புண்டாய் = பற்றியே பலமுண்டா யிருத்தலினுலும், இராகமுறு வழியுலவி = இட்டப்பட்ட துன்மார்க்கத்தில் சஞ்சரித்தலினுலும், மனப்பாம்பு மிகப்பருக்கும் = சித்த அகியானது அதிகமாகத் தூலத்தையடைந்து கொண்டேபோகும், இராமகேளாய் = ஹே இராகவனே இதற் குபாயங்கூறக் கேட்பாயாக ! புராதன உத்தாலகன்போல் = பிராசீன உத்தாலக முனிவனைப்போல, ஐம்பூதத்தையும் பொடியாப் போகப்பண்ணி = பஞ்சபூதத்தையும் தூளிபறக்கும் படிசெய்து, நிராகுலமாம் புந்தியினுல் = கவலையற்ற அதிதீரமாகிய மதியினுலே, இதயத்தே = அந்தக்கரணத்தின் கண்ணே, நினைத்தியென நிகழ்த்தலோடும் = ஆராய்வாயாக வென்று உபதேசித்தபோது.

(ஸ்ரீ - வீர.) தூராசாக்ஷீர பானத்தானும் போக அநிலபலத்தானும், ஆஸ்தாதானத்தானும் நாஞவிஷசஞ்சாரத்தானும், சித்தப்பாம் பானது பீனத்தன்மையைப் பெறும். சிரவண மனனங்களினுனே ஆத்மதத்துவந் துணியப் பெற்றபோதினும், சித்தவிசிராந்தியில்லாமல் விக்ஷேப மொழியாதாக, நிர்விகற்பத்தில் நிலைத்துண்டாம் ஜீவன்முக்தி சுக அடைவின்மையாமென வதன்பொருட்டுச் சமாதி யப்பியாசங்களில் அப்பிரமாதமாகப் போதவர்த்

தனும் ஆவசியகமாம் என்பதாக உத்தாலக சரித்திரவர்ணன வாயிலாக உபதேசிக்கும் வேட்கையுற்ற ஸ்ரீ வசிஷ்டபகவான், அவ்வாக்கியராயினைக்யயே அவதாரித்து அதனர்த்த விசாரகர்த்தவ்வியத் தன்மையைக்கூறல்:— புராதன என்பதாதி, தேகாதியாரம்பகமும் ப்ராகியப் பிரபஞ்ச ஆரம்பகமும் ஆகிய பூதபஞ்சகத்தின் தத்துவம் பதார்த்தசோதனபரமாய மதியினாலே "அன்னமென்னுங் காரியத்தானே ஆபேர் மூலமதனைத்தேடே" என்னுஞ் சுருதி தரிசித்யுக்தியினானே காரணவியதிரிக்த காரியாங்குர அபலாபத்தால் அடியோடு கெடுதலையும், மூலாவித்யையைத் தூளிபடுத்தலாற் றூளிபடுதலையும், செய்துசெய்து அதன் திஷ்டான சன்மாத்திரத்தைத் தேடுவதில் தீரங்களுக்குள்ளெல்லாம் தீரதரமாகிய மதியினானே உன்னை விசாரஞ்செய்வாயாக.

(ச.) பாம்பானது பால்பருகலாலும் அநிலபலத்தாலும் இச்சைப்படி சஞ்சரித்தலாலும் மிகப்பருக்கும். அதுபோல் மனந் துராசை யாதிகளால் என்பது பொருள். இராமகேளாய்! இத்தன்மையான சித்தத்தடிப்பை நிவாரித்தற்கு, நினைத்தி = விசாரிப்பாய். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்முனிவர் யாவர் எவ்வாறு சாமியெய்தினார் என ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் அதற்கு விடைதரல்:—அருளியவென்பது.

அருளியவுத் தாலகனா லெந்நெறியா லைம்பூத மறுத்துத்தன்னுட்
கருதியதென் னென்றிரா கவன்கேட்ப வசிட்டமுனி கருணைவள்ளால்
பெருகியவைம் பூதத்தை விசாரத்தாற் பேதித்துப் பிரமமெய்தி
யொருமைபெறு நிலையுடைய வுத்தால கன்கதையா முரைப்பக்கேட்பாய்.

(ப - ரை.) அருளிய உத்தாலகனால் = தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய உத்தாலக முனிவரால், எந்நெறியால் = எக்கிரமத்தால், ஐம்பூதம் = பூதபஞ்சகம், அறுத்து = அடப்பட்டு, தன்னுள் = தம்அந்தக்கரணத்தில், கருதியது என் = ஆராயப்பெற்றது யாது, என்றிராகவன் கேட்ப = என்பதாக ஸ்ரீ இராகவர் வினவ, வசிட்டமுனி கருணைவள்ளால் = ஸ்ரீவசிட்டபகவான் தயைநிறைந்த தலைவள்ளலாகிய இரகுநந்தன! பெருகிய ஐம்பூதத்தை விசாரத்தாற் பேதித்து = நானாவிதமாக விஸ்தரித்துள்ள பஞ்சபூதங்களை ஆராய்ச்சியினாலே இல்லையென்று போம்படிசெய்து, பிரமமெய்தி = பிரஹ்மதிருஷ்டியை யடைந்து, ஒருமை பெறு நிலையுடைய உத்தாலகன் = சந்ததம் நிர்விகற்ப சமாதியிற் சுகித்திருந்த உத்தாலக முனிவனது, கதையாம் உரைப்பக் கேட்பாய் = உபாக்கியானத்தையாம் உபதேசிப்பச் சிரவணஞ் செய்வாயாக வென்றனர்.

(ஸ்ரீ - வீர.) ஹே பகவன்! உத்தாலக முனிவரானே எம்முறையானே பூதபஞ்சகம் பொடியாக்கப்பட்டு அந்தக்கரணத்தில் அப்பொருள் நன்காராயப் பெற்றதோ அதனைக் கருணையினாலே திருவருள் செய்யவேண்டுமென்று ஸ்ரீ இராமச்சந்திரர் பிரார்த்திப்ப அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான், ஹே இராகவ! பூர்வம் பூதவிருந்த விசாரத்தானே உத்தாலகமுனிவனால் கெடாத பரமதிருஷ்டி யடைந்தபடி உரைப்பக் கேட்குதியென உபதேசிக்கத்தொடங்கினார் (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உத்தாலக முனிவரது உறைவிடத்தையும் பூர்வ இயற்கையையும் கூறல்:—கந்தவென்பது.

கந்தமா தனமென்னுங் கனவரையிற் கற்பூரங் கமழாநின்ற
கொந்தலர்சோ லைச்சார லுறைபவனுத் தாலகப்பேர்க் கோதிலாதோ
னந்தமுனி வரன்முன்னே சிற்றறிவன் விசாரத்தோ னகண்டவாழ்விற்
சிந்தையிடர் தீரவிளைப் பாறுதோன் புந்திநலந் திருந்தப் பெற்றோன்.

(ப - ரை.) கந்தமாதன மென்னும் = கந்தமாதன மென்று சொல்லப்பட்ட, கன்வரையில் = பெரியபர்வதத்தில், இலங்கும், கற்பூரங் கமழாநின்ற கொந்தலர் சோலைச்சாரல் = கற்பூரம் பரிமளியாநின்ற மதுநிறைந்து மலர்ந்த பூங்கொத்துக ணிறைந்த மதுகரம்பாடுஞ் சோலைசூழ்ந்த தாழ்வரையில், உறைபவன் = தவம்புரிபவன், உத்தாலகப் பேர்க்கோதிலாதோன் = உத்தாலகமுனிவன் என்னும் நாமதேயம் வாய்ந்த குற்றமுற்று மற்றவன், அந்த முனிவரன் = அம்முனி சிரேஷ்டன், முன்னே = பூர்வம், சிற்றறிவன் = அற்பப்பிரஞ்ஞன், விசாரத்தோன் = விசாரவான் அகண்டவாழ்விற் சிந்தையிடர்தீர விளைப்பாறுதோன் = கண்டிதமில்லாத சிவபதத்தைத் தரிசித்து அதன்கண் விசிராந்தியை யடையாதவன், புந்தி நலந்திருந்தப் பெற்றோன் = சுபாசயன் = நற்கருத்துடையோன்.

(ஸ்ரீ - வீர.) பூதலத்தின் வாயுதிசையில், கந்தமாதன சைலேந்திரமெனப் பெயரிய ஒரு நற்றலமுளது, அத்தலம் எங்கும்பரவிய புஷ்பங்களையே யுடையதாம், புஷ்பித்துள்ளவைகளே கற்பூரசதிருச பராகங்களாலும் கேசரங்களாலும் எங்கும் வியாபிக்கப் பெற்றிருத்தலின் கற்பூரகேசர அலங்கார முடையதாம். அவ்விடத்தில் ஒருபாலுள்ள, வெகுவித விசித்திர விருக்ஷங்க ணிறைந்து, குதிவரைபரவிய குசுமங்கணிறைந்து, நெருங்கிய சாயையிநீண்மாநிறைந்து, பார்ப்பவர் கண்களை யீர்ப்பதேயான சோலை நிறைந்திலங்குந் தாழ்வரையில், சாநுவில் = பிரஸ்தப் பிரதேசத்தில், பூர்வம் உத்தாலகன் எனப்பெயரிய ஒரு மகாமுனிவனிருந்தனன், அம்முனிவன் மௌனி, மனனசீலன், அவ்வியம் முயற்சிபலவற்றாலும் புருடார்த்தத்தைச் சாதிப்பேன் என்னும் அபிமானவான், ஆத்ம அனுமானத்திமான குசலன், மகாமதியை யுடையவன், அக்ஷுத்திர மனத்தினன், அடைவுறு யவ்வனன், பெருந்தவம் பெருக்கினோன், அம்முனிவன் பிரதமத்திலோ அற்பப் பிரஞ்ஞனும், ஆராய்ச்சி மிக்கவனையும், அகண்டபத விசிராந்தியை யடையாதவனும், அப்பிரபுத்தனும், சுபாசயனும் = பிரயோத்தத்திற்கு அநுகூலமாய சுகிருதம் நிறைந்த அந்தக்கரணத்தை யுடையவனும் இருந்தனன்.

(சு.) சிற்றறிவன் விசாரத்தோன் = அற்பப்பிரஞ்ஞனும் விசாரமுள்ளவனுமாம், பின்பு சுபாசய புத்தியை யடைந்தான் என்றதாயிற்று. (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தவத்தினாற் சித்தஞ்சத்துவ முறவே சிவத்திளைப்பாறுத லென்றெனதேர்தல்:—பூதமென்புது.

பூதநெறி யாற்றவத்தா னூற்பொருளால் யமநியமம் பொருந்துநீராற்
றீதறுநல் விவேகந்தான் சேர்தலுமே யவனினைய சிந்தைசெய்தான்
கேதமற விளைப்பாறும் பதமேது மறுபிறவிக் கேடிலாத
மேதகைய பதமேதிங் கிதுவன்றோ முதல்விரைவின் மேவற்பாற்றே.

(ப - ரை.) பூதநெறியால் =படிப்படியான கிரமத்தால், தவத்தால்=மனம்பொறிகளையொருமைப் படுத்தலால், நூற்பொருளால் = சாஸ்திரார்த்த விசாரத்தால், யமநியமம் பொருந்து நீரால் = அஷ்டாங்க யோகத்தை யப்பசிக்குந் தன்மையால், தீதறுநல் விவேகந்தான் சேர்தலுமே = களங்கந ளியாவுங்கழிந்து உளந்தனில் தூயவிவேகந் தோன்றுதலுமே, அவன் இனைய சிந்தைசெய்தான் = அம்முனிவன் வருமாறு ஆராய்வானாயினன், கேதமற = சகலதுயரங்களும் நீங்கிடுமாறு, இளைப்பாறும் = விசிராந்தியடையும், பதமேது = இடமியாதாம், மறுபிறவிக் கேடிலாத மேதகைய பதமேது = எப்பதத்தை யடைந்தாற்புனர்ஜன்மம் உண்டாகமாட்டாதோ அத்தகையபதமேது, இங்குஇதுவன்றோ=

இவ்விடத்துற்ற அதிகாரிப் பிறவியில் அத்தகைய இப்பதமல்லவோ, முதல் விரைவின்மே வற்பாற்றே = பிறிதொன்றையும் நாடுதல்விட்டு ஆரம்பத்திலேயே அதிவேகமாக அடைய முயலற் பாலதேயாம்.

(ஸ்ரீ - வீர.) அதன்பின் முறையாக அப்பியாச பரிபாகக் கிரமங்களானும் பெருந்தவத் தானும் சாஸ்திரார்த்த நியமங்களானும், பூதலமானது நவஇருதுவாகிய வசந்த இருதுவை யடைவுற்றதென்ன அவ்விம் முனிவனை விவேகம் அடைவுற்றது. அதன்பின் னொருசமயம் ஏகாந்தத்திலே யிருந்துகொண்டு, காந்தமானசனும் சம்சார ஆமயபயமதியனும் ஆகிய அம் முனிவன்கூறும் வகையாகச் சிந்தைசெய்வானாயினன்; காந்தமானசன் = சுபசித்தன், க்லாந்தமானசன் எனவிருப்பிற் பட்டமாம். அடையத்தக்கனவாகிய புருடார்த்தங்களின் மத்தியில் முக்கியமா யடையத்தக்கதாக உள்ளது மோக்ஷமெனப் பெறுவதாம், அஃதென் னும்? எதன்கண்ணே விசிராந்தி யடைந்து விட்டான் மீண்டுஞ் சோகமெய்தாருதோ? எதனையடைவுற்றான் மீண்டுஞ் சன்மசம்பந்தம் அடைவுறாதோ. (14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிந்தையின் பிரகாரம் இங்ஙனமெனத் தெரிவித்தல்:—உள, மனன, கருது, என்பன.

உளநினைவி லாவிமல பரபதத்தே நெடுங்கால மொன்றி யொன்றாய்க்
கிளர்கனக வரைச்சிகரத் துறைமுகிற்போ லிளைப்பாறக் கிடைப்பதெந்நாட்
டளர்வறவீ தியற்றினமே லெவையியற்றத் தக்கவெனச் சலித்துச்செல்லு
மளவறுபோ கச்செல்வ மெனதுளநின் றெக்கால மவிழ்ந்துபோமே.

மனனமெனுந் திரைமோதி மதத்தெழுந்த பேராசை வாரிதன்னிற்
புனிதமுறும் புந்தியினு லழுந்தாமற் கரையேறிப் போவதெந்நா
ளனவரதந் தொழிற்றெழிலி லாமைகள்போய்ப் பற்றுவீ டின்றியுள்ளே
தனதொளியாம் பதமேவி யெக்கால மகிழ்வுறுவேன் றளராநின்றேன்.

கருதுநினை வொழித்தொடுங்கிக் கார்வரையின் முழையிடத்திற் கருங்கற்போல
நிருவிகற்ப சமாதியினு லெக்கால மசைவற்ற நிலையினிற்பே
னொருமைபெறு தியானத்தா லிளைப்பாறு மென்னுடைய வுச்சிமீதே
குருவியினங் கூடமைத்துக் குடியிருப்ப தெக்காலங் குஞ்சியாலே.

(ப - ரை.) உளநினை விலாவிமலபரபதத்தே = மன்னம் விடுபட்ட பரமபாவன பதத் தில், நெடுங்கால மொன்று யொன்றி = வெகுகாலம் ஏகைகபாவத்தை யடைந்து, கிளர் கனகவரைச்சிகரத் துறைமுகிற்போல் இளைப்பாறக் கிடைப்பது எந்நாள் = பிரகாசம் பொருந்திய மேருசிருங்கத்தில் வீற்றிருக்கும் மேகமேயென்ன விசிராந்தியடைவது எக்கா லம்; தளர்வற ஈதியற்றினம் மேலெவை யிற்றத்தக்க வெனச் சலித்துச்செல்லும் = கவலை, யற இதனைச் செய்தோம் இனியாவை செய்யத்தக்கன எனச்சஞ்சலித்து விவகரிக்கும், அளவறுபோகச் செல்வம் = அளவில்லாத போகசம்பந்தமான எண்ணங்களாகிய ஐசுவரி யம், எனது உளம் நின்றெக்காலம் அவிழ்ந்துபோமே = என்னுடைய மனத்திலிருந்து எப் போதுதான் கழிந்து தொலைந்தோடிப் போமோ!

மனனமெனுந் திரைமோதி = சிந்தைகள் என்னும் தரங்கங்களடித்து, மதத்தெழுந்த பேராசை வாரிதன்னில் = மதோன் மத்தமாகக் கிளம்பும் பெரிய அவாக்கடலினில், புனிதமுறு புந்தியினல் = பவித்திரமான விசாரதிருஷ்டியினல், அழுந்தாமல் = மூழ்கிப்

போகாமல், கரையேறிப் போவதெந்நாள் = முத்தியங்கரையிலேறி உய்ந்துபோவது எக்காலமோ, அனவரதம் = எப்போதும், தொழில் தொழிலிலாமைகள்போய் = வினைசெய்தல் வினைசெய்யாமை போய், பற்றுவீடின்றி = கொள்ளல் தள்ளலில்லாமல், உள்ளே தனது ஒளியாம்பதமேவி = தன்னுடைய பிரகாசமயமாம் பதத்தை யடைந்து, எக்காலம் மகிழ்வுறுவேன் தளராநின்றேன் = சமுசாரத்தில் அத்தியாச வகைகளால் என்றுங் கவலையுற்று நின்றயான் எப்போதுதான் சந்ததம் சந்தோஷமடையா நிற்பேன்.

கருது நினைவொழித் தொடுங்கி = சிந்தியாநின்ற சிந்தைகள் யாவுமெழாமற் செய்து செய்தயானு மடங்கி, கார்வரையின் முழையிடத்திற் கருங்கற்போல = மேகஞ்சூழ்ந்த பர்வதக்குகையின் கட்கரும்பெரும் பாறைபோல, நிருவிகற்ப சமாதியினால் = அசம்பிரஞ்ஞாத சமாதியினாலே, எக்காலம் = எப்போதுதான், அசைவற்ற நிலையில் = சலனமின்றியநிதியில், நிற்பேன் = மாறாமலிருப்பேன், ஒருமை பெறுதியானத்தா விளைப்பாறு மென்னுடைய உச்சிமீதே = அவ்வாறு நிருவிகற்ப சமாதியிலிருந்து விசிராந்தி யடைந்திருக்கும் எனது சிகைமேலே, குருவியினங் கூடமைத்துக் குடியிருப்ப தெக்காலம் குஞ்சியாலே = பறவை வகைகள் என்றலைமயிராலே திருணங்களைப் பின்னிக் குலாயம்செய்து வாசஞ்செய்வது எப்போதோ.

(ஸ்ரீ - வீர.) எப்போது யான் சகல மனோவியாபாரங்களு மற்றுப் பரமபவித்திரமாகிய பதத்தில் ஒடும்போது சுமேருசிருங்கத் திளைப்பாறும் அம்புதம்போல விசிராந்தியை யடையாநிற்பேன்; ஆலோல கல்லோல சப்தங்கள் செய்யும் ஊர்மிகள் அம்புநிதியி லடங்குவனபோல, என்றன்னே ஆரவாரஞ் செய்துகொண் டிருக்கும் போகதிருஷ்ணைகளியாவும் பரமசாந்தத்தை எப்போ தடையுமோ; இது செய்தாய்விட்டது மேலிதனைச்செய்து வேறு இதுவும் செய்யத்தக்கது என்றுண்டாங் கற்பனையைச் சிவபதத்தில் விசிராந்தியடைந்த சிந்தையானே யுள்ளேயே சிதைத்து எப்போது சுகிப்பேனோ; எப்போது விகற்பஜாலம் என்னுடைய சித்தத்திற் பற்றாமற் றொலைந்துபோம், ஆபாசமாத்திரமாக இருந்தபோதினும் உபேக்ஷியமாணத் தன்மையானே, பயப்பதும தளம்போலப் பற்றற்றென் றிருப்பேன்; கவலைகளாகியவெகு கல்லோலங்க ணிறைந்து அவிவேகம் வளர்ந்து மதோன்மத்தமான திருஷ்ணைப் பெருங்கடலில் மூழ்கிவிடாமல் உத்தமமான புத்தியினாலே எப்போது நன்கு கடந்து கரையேறாநிற்பேன்; ஜகத்திலுள்ளவர்களானே செய்யப் பெறுவதாய், அசன்மயமாய், பாலலீலையைப்போலச் சித்தவிக்ஷேபந்தருவதாய், உள்ள இப்பாகியப் பிரவிருத்தியை என்று தொலைப்பேன்: ஆசாசதாத்மகமா யிருப்பதும் அசைக்க முடியாததும் ஆகிய இத்திருசிய இலக்ஷ்மி முழுவதையும் துயில்வோனைப் போலச் சன்மாத்திரமாகப் பார்த்துக் கொண்டு உண்முகமாகவே யென்றிருப்பேன்; வெளியில் உள்ளில் இருக்குமியாவற்றையுமே கற்பனை சாந்தமான மதியினாலே, கண்டுகொண்டு, சகலத்தையும் சின்மாத்திரமாகப் பாவித்து அந்தப் பாவனையினாலே திரமாக என்று யானிருப்பேன்; சேஷ்டிதாசேஷ்டிதங்களினின்றும் விடுபட்டவனாய் ஹேய உபாதேயவர்ஜிதனாய், சுவப்பிரகாச பதத்தில் வீற்றிருப்பவனாய் எப்போதுள்ளே பரமசந்தோஷத்தை யடைவேன்; நிருவிகற்ப சமாதியினாலே மனன முபசாந்தியானவனாய் சித்தேகாசத்தில் நழுவியமனோ விருத்தியை யுடையவனாய், தாணீதாகந்தரத்திற் சிலாசாமியமாக எப்போது நன்குறுவேன்; தன்னங்கிச பூதமாம் அபிமான விருத்திகளேயாய மகாந்தமதப் பிரவாகங்களையுடைய அகங்காரவடிவ எனது மாதங்கமானது, பரமார்த்த சன்மாத்திர அவபோதவடிவ சிங்கத்தானே ஹதஞ்செய்யப் பட்டதாய் நாசத்தை யெப்போது தானடையும்; நிர்விகற்ப சமாதியின் கண்ணே இளைப்பாறிக்கொண்டிருக்கும் மௌனவிரதத்தையுடைய எனது சிரசில் திருணமயமாய குலா

யத்தை = நீடத்தைப் பக்ஷிவிசேடங்கள் செய்துகொண்டு வாழ்வதெப்போதோ; நிருவிகற்பசமாதியிற் றிரமடைந்துள்ள மதியை யுடையவனும், அதனுனே சைலம்போலும் ஸ்தாணுவைப்போலும் அசலஸ்திதி வுடையவனுய், இலங்கும் என்னுடைய மார்பிற்றெங்கும் ஜடைறனிகளிற் கட்டிய கூண்டில் அச்சமற்றனவாகக் ககங்கள் எஞ்ஞான்று இளைப்பாறுதலை யெய்தாநிற்கும்.

ஸ்ரீ பர்த்ருஹரியாரும் இந்நிலையை வியந்து வேண்டினர் இம்முறையே:—மலையுறு குகைக்கண் வசித்துயரொளியை மனந்தனினினைந்த தன்னியரின், பொலிவுறு சுகக்கட் புன்றகண மடிமேற்புட் குலமேமறமாந்து, மலமுறுமனனமாளிகை வாயிமலர்த் தடமாடல் கார்க்களினு, டலைவதினினிமை யழுந்துறு நமக்கோ வாயுளேயற வழிந்திடுமோல்.

கங்கையின்றீர விமகிரிச்சிலையிற் கட்டுறுபதும வாதனனுய், மங்கலச்சிவ த்யானம் பயின்முறையான் மருவியயோக வின்றுயிலெ, யங்கெனக்கென்னேயச் சுபதினத்தா லாவதோவறக் கிழவரிணஞ், சங்கையற்றெனை தொண்ணங்க மேற்றனது சடலமதுராய்தல் யாண்டாமோ.

(ச.) ஒருமை பெருதியானம் = நிரம்சத்தியானம் = நிர்விகற்பகசமாதி, தாரணம் = திருணமயமாய, குலயம் = நீடம் = கூண்டு, வனபுத்ரிகா = வனபதங்கிகா, செய்யப்பெற்றதுயர்தோ அது மது பௌத்ரிகம் எனப்பெறும். (15-16-17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறியவண்ணஞ் சிந்தித்த உத்தாலக முனிவன் பன்முறை தியானத்தின் முயன்றும் நிர்விகற்பத்தை நேர்ந்திலன் எனல்:—ஊகவென்பது:

ஊகத்திவ்வா றுன்னிமிக வுத்தாலகனுட் பரவசனு
யேகத்தியானஞ் சாதிப்பா னிருந்தவிருந்த விடந்தோறும்
வேகத்துகளு மனக்குரங்கு விடயக்கொம்பு களிற்பாயச்
சோகத்திறந்தீர் மகிழ்ச்சிபெறுஞ் சொரூபசமாதி பெற்றிலனல்.

(ப - ரை.) ஊகத்திவ்வா றுன்னிமிக = யூகத்தோடும் தனதுமனதில் இயம்பியபடியே மிகச் சிந்தித்து, உத்தாலகன் = உத்தாலகமுனிவன், உட்பரவசனுய் = சிந்தாபரவசனுய், ஏகத்தியானஞ் சாதிப்பான் = ஒருமைத்தியானத்தைச் சாதிக்கும்பொருட்டு, இருந்த இருந்த இடந்தோறும் = முயன்ற முயன்ற இடந்தனிலும், வேகத்துகளும் மனக்குரங்கு விடயக் கொம்புகளிற்பாய = அதிவேகமாகக் குதித்தோடு மனமாகிய மர்க்கடமானது சப்தாதிகளாகிய சாகைகளிற்பாய்ந்து தாவிவிளையாட, மகிழ்ச்சிபெறும் சோகத்திறந்தீர் = சகல சோகங்களையுஞ் சாடிச் சந்தோஷம் பயக்கும், சொரூபசமாதி பெற்றிலன் = தற்சொரூபமயமாய நிர்விகற்ப சமாதியை யடைந்திலன், ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் அவ்வனத்தில் உத்தாலகத்துவிஜன் சிந்தாபரவசனுய் மீள மீளவும் ஆசனத்திருந்து தியானுப்பியாசத்தைச் செய்யலாயினன், மர்க்கடம் மானச் சஞ்சலமேய் மனமானது விடயங்களானே ஈர்க்கப்பெற்றதாகவே பிரீதிதாயினியாய சமாதானப் பிரதிஷ்டையை யவனடைந்திலன். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின்னரும் சமாதியின் பொருட்டுப் பெரிது வாடியலமரல்:—திறனுரென்பது.

நிறனார்கானி லிவ்வகையே நிலையற்றலைவோன் பின்னொருகாற்
புறனார்காட்சி மொழிந்திடலாற் பொல்லாமனமாம் வன்குரங்கு
திறனாரிருண்மூ டியதென்னத் தியானங்களிலே யுள்ளழியா
வறனார்கிரியி லுலைந்துழல்வுற் றறவேவாடி யலமந்தான்.

(ப - ரை.) நிறனார் கானில் = சூலைசூழ்ந்த அவ்வனத்தில், இவ்வகையே = கூறியபிரகாரமே, நிலையற்றலைவோன் = நிலையில்லாமல் அலைந்து கொண்டிருந்த அம்முனிவன், பின்னொருகால் = மற்றொருபோது, புறனார்காட்சி யொழிந்திடலால் = பாகியதரிசனம் பற்றுமையால், பொல்லாமனமாம் வன்குரங்கு = கொடியமனமாகிய கடியவானரம், திறனாரிருண் மூடியதென்னத் தியானங்களிலே யுள்ளழியா = மிகுந்த அந்தகாரம் ஆச்சாதிப்பதே போன்றும் பிரகாசந்தோன்றுவதே போன்றும், செய்துகொண்டு, செய்யுந்தியானங்களை இடையூறுபடுத்தி ஆந்தரத்திற் கெடாமலே யிருந்தது. அதனை லம்முனிவன், அறனார் கிரியில் = தருமமயமாய் அப்பர்வதச் சாரலில், உலைந்து = சங்கடப்பட்டு, உழல்வுற்று = சஞ்சலப்பட்டு, அறவேவாடி = அத்தியந்தம் பரியாகுலப்பட்டு, அலமந்தான் = துயரமாயினன்.

(ஸ்ரீ - வீர.) ஒருகால், பிரத்தியாகாரத்தானே வெளிவிடயத் தீண்டல்களை விட்டபின்னர், சத்துவகுணப் பிரதானமான சமாதியின் நல்லநிதியடைவுறவே இராஜசினாலே கலங்குவதாய் அச்சஞ்சோகமி ராகந்துவேட மாலசியாதிருப்ப பெருங்கிளர்ச்சியை அவன் மனக்கபி யடைவுற்றது, பின்னர் அம்மனக்கபி, சாத்விகதேவாதி போக்கிய விடயத்திலும், சாத்விக விருத்தி சுகா சுவாதத்திலும் முற்பட்டு மனோரதங்களானே சலனத்தை யடைவுற்றது. ஒருபோது அம்மனக்கபியானது உட்சமாதி சுகஸ்பரிசங்களைப் பரித்தியாகஞ்செய்து லோலத் தன்மையானே, விஷத்தானே, தக்தமாய் மிருதமானவன் லோகாந்தரத்தை யடைவதேபோல் விடயத்தை யடைவுற்றது, அப்பக்ஷத்தில் ஆந்தர ஜாடராக்கினி சம்பந்தியாய தேகோஷ்ணத்தை விடுத்தெனக்கொள்க. ஹேமமரையிதழ் விழியோய்! ஆந்தரத்திருதய சம்பந்தப் பிரஹ்மத்தின் கண்ணுதித அருக்கப் பிரபையாம் தேஜசைக்கண்டு மனம் விடயோன்முகத்தன்மையை யடைவுற்றது, அவ்வாறே மறையும் அறைகின்றது:— “ அனபனிப் புகையர்க்கா நலாநில, மினிமினற்படி கஞ்சசிமேயவை, முனமுரூபங்கண் முன்னுவயோகினிற், கனிசிவத்தபி வியத்திகாங்களே ” உள்ளேயிருக்கும் அஞ்ஞான அந்தகாரத்தைச் சிறிது பிரஹ்ம அபிவியக்தியினானே சிறிது பிரசாந்திசெய்து அப்போதே விஷயவாசனை உற்போதத்தானே விடய லம்படத்தன்மையை யடைந்து அவனுடைய மனமானது கிளம்பிப் பயந்தபறவையே போலும் ஒருபோது செல்லலுற்றது, வெளியுள் விடயங்களை விடுத்தொருபோது அஞ்ஞான ஆத்மஜோதிகளின் அந்தாள மென்னுஞ் சந்தியில் லீனமாகியவன் மனமானது நித்திரையையே நெடும்போதுதொடர்ந்து நின்றநிலையை யடைந்தது; உக்கிரமாய குகைகளில் தியானசம்ரூட மனனாகிய அவன் பரியாகுலமனத்தையுடையவனாகி இடையிடையே காற்றினால் சமீபித்துள்ள நீரில்மூழ்கிய மரமானது எங்ஙனமோ அங்ஙனம் துச்சமான திருஷ்ணைவடிவ தீரதரங்கங்களினாலே அலைவுற்றவபுவையுடையவனாய், மேன்மையானதியான விருத்திகளில் நாடோறு முரணைப் பெருஞ் சங்கடப்பட்டு நின்றான். இவ்வாறு பரியாகுலத்தையுடைய முனிவன் அம்மலையிற்றானே ஒண்டியாய், தினந்தோறும் திவசாதீசன் மகாமேருவிற்போலச் சுழன்று திரிந்துகொண் டிருந்தான். மகாமேருவின் மாட்டு எஞ்ஞான்றுமே அருக்கபாத சம்பந்த தரிசனத்தான் ஆண்டு அருக்க விகரண கற்பனையானே உபமோக்தி யென்றுணர்க.

(ச.) காட்சி = காண்ப்படுதலிற் காட்சி விடயங்கள், அர்தபாகிய விடயபரித்தியாகத்தினால் மனோத பரிகற்பிதங்களான விடயங்களையடைந்து, ஒருகாலமாந்தரங்களைவிட்டு வாகிய விஷயத்தைக் கிரகித்து, ஒருகாற் றெறிபட்ட பக்ஷிபோல் மனதோடியதனை யடையும்; இராஜசு அதிகரிக்கின் உதிதமாய சூரியப்பிரபைபோல் விரிந்த தேஜசையும், சத்துவமதிகரிக்கின் கேவலம் வியோமத்தையும், தமசு அதிகரிக்கின் நிபிடமான இருளையும், கண்டான் என்பது விவேகம், தியானங்களிலே = தியானவிருத்திகளில், உள்ளழியா = தனது சித்தத்தில் அதிபரியாகுலனாய். (19)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிருவிகற்ப சமாதியை யடையும் பொருட்டு மீண்டுந் தனியிடமடைந்து ஆசனஞ்செய்து பதுமாசனமிட் டதிலிருந்து விவேகித்து மனத்தையடக்க முயலல்:—யாரும், புண்டரீக என்பன,

யாருமின் றி யாரா லு மெய்தற்கரிதா கியமுழைதான்
சாருமுத்திப் பதமெனலாந் தன்னிலொருகாற் றனிமேவி
யாருமலைக்குன் றியின்றழை மேலருணச்சருமம் விரித்ததன்மே
லோருமனத்தின் செயல்குறுக்கி யுணர்வான்புத்தன் போலாகி.

புண்டரீக வாதனத்திற் புத்தன்போ லுத்தரமுகனா
யண்டமிரண்டு மிருகுதிமே லாக்கிப்பிரமாஞ் சலிபண்ணி
மண்டுகின்ற வாதனையின் மருளுமனத்தை மீள்வித்துத்
தண்டலில்லா நிருவிகற்ப சமாதிப்பொருட்டிவ் வகைநினைந்தான்.

(ப - ரை.) யாருமின்றி = சர்வசஞ்சார மற்றதாய், யாராலும் எய்தற்கரிதாகிய = எப்பிராணிக்கும் அப்பிராப்தமாய், உள்ளது, முழைதான் = ஒருகந்தரம், சாருமுத்திப் பதமெனலாம் = அடையத்தக்க மோக்ஷபதமென்றே சொல்லலாம் இடரொன்று மின்மையின், தன்னில் = அக்குகையின் கண், ஒருகாற்றனிமேவி = ஒருபோது ஏகாங்கியாய் அடைவுற்று, ஆருமலைக் குன்றியின் றழைமேல் = அவ்விடத்துற்ற மலைக்குன்றி யிலைகளைப் பரப்பி, அதன்மேலே, அருணச் சருமம்விரித்து = மான்றோலை விரித்து, அதன்மேல் = அவ்வாசனத்தின் மீது அமர்ந்து, ஒருமனத்தின் செயல்குறுக்கி = பலவற்றை நினைந்து கொண்டிருக்கும் சித்தத்தின் செயலையொடுக்கி, உணர்வான் புத்தன்போலாகி = புத்தன் போல ஆகி ஆலோசிக்கத் தொடங்கினான்.

புத்தன்போல் உத்தரமுகனாய்ப் புண்டரீக ஆதனத்தில் = பிரபுத்த கபிலாதிபோலும் வடக்கு நோக்கினனாய் பதும ஆசனத்தின் கண்ணிருந்து, அண்டமிரண்டும் இருகுதிமேலாக்கி = விருஷணங்க ளிரண்டையும் இரண்டு குதியின் மேலாகச்செய்து, பிரமாஞ்சலி பண்ணி = பிரஹ்ம சம்பந்தியாய அஞ்சலியைச்செய்து, மண்டுகின்ற வாதனையின் = நெருங்கியுள்ள வாதனையினின்றும், மருளுமனத்தை மீள்வித்து = மயங்கும் மனத்தினைத் தன் வசப்படுத்தி, தண்டலில்லா = யாதொருதடையும் துயருமில்லாத, நிருவிகற்ப சமாதிப்பொருட்டு = அசம்பிரஞ்ஞாத சமாதியின் பொருட்டு, இவ்வகை நினைந்தான் = இந்தப் பிரகாரம் ஆலோசிக்கத் தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர.) சமஸ்த பிராணிகளாலும் அடைய முடியாததலினாலே சருவசஞ்சாரமும் சம்சாந்தமானதும், மோக்ஷதசை போன்றிருப்பதும், ஆகியகந்தரத்தை யம்முனிவன் ஒருபோது அடைந்தனன்; கூறிய இரண்டு விசேடணங்களையும் மோக்ஷதசையினும் பொருத்திக் கொள்ளலாம். காற்றினாலே பரியாகுலமற்றதும், மிருகபக்ஷிகள் அடைவுறா

ததும், தேவகந்தருவர்களானே காணப்பெறுததும், பரமாகாசமாகிய பிரஹ்மமே போலச் சோபமான மாயதும் ஆகியது அக்கந்தரம்; துவாரத்தில் மிகுந்த நெருக்கமான சீதளச் சாயையை யுடையது, இரத்தின தீபங்களானே வெளிப்படுத்தப் பெறுவது, வனதேவிகளின் அந்தப்புரக் குடிசையைப்போல மிகவும் இரகசியமாயது அது; சீதநிவாரணமாத்திர க்ஷம ஆலோகத்தை யுடையது ஆகலினுனே அதி உஷ்ணமும் அதி சீதளமும் அற்றது, கிழக்குமுகமா யிருப்பது; நிர்ச்சப்தமாய் மந்தமாருதத்தை யுடையது, சுகந்தம் வீசுவது, சுயம்வரம் முயன்று நின்று மாலையேந்திய பாலையாகிய இராஜகன்னிகையைப்போல எல்லா அலங்காரமும் பெற்றிருந்தது, கமலஜவாச யோக்கியவுபசம பதவிபோன்ற அந்தக்கந்தரத்தையடைந்தனன் முனிவன்: நானாவிதமாய்த் தேடுதலின் பயனாக பதுமக்குடியை அனியடைந்ததேபோல அந்தக் கந்தமாதன கந்தரத்தை யத்தருமாத்மா வடைந்தனன், பதுமக் குடியைப்போல வென்றதனானே புகுந்த அம்முனிவனுக்கு ஆண்டு நிரதிசயாநந்த ரசபூரண விசிராந்தி பவிக்கும் என உணரப்பெறலாம். சர்க்கவியாபாரத்தில் விரதியையுற்றுழி அப்ஜஜன், தனது புரியாகிய சத்தியலோகத் திருக்கும் அபராஜிதமென்னும் புரியையாதல், ஸ்ரீ பகவந் நாபிக்கமலத்தை யாதல் அடைந்ததேபோல அம்முனிவன் அக்குகையைச் சமாதான உன்முகத் தன்மையானே யடைந்து வீற்றிருந்தான், மத்தியத்திற் றனதாகிருதி குச்சம்போல இலங்குவதும், அந்தங்களில் அவ்வப்பத்திரசம்பத்தங்களாய புஷ்பகுச்சங்களையுடையதுமாக, அவ்வகையாசனத்தைச் சுத்தமான கோமள பத்திரங்களானேசெய்து, அவ்வாசனத்தின்மேலே தனது கக்கத்திலிருந்த அழகிய மிருகாஜினத்தை விரித்தனன். சித்தத்தினது விருத்தியை ஜடவிடயத்தை விடலானே லகுப்படுத்திக்கொண்டு அவ்வாசனத்தமர்ந்தனன். புத்தவத் = மெய்யுணர்வை நன்கடைந்த கபிலாதிபோலும், புதவத்தென்றும் பாடமுளது அதற்கும் இதேபொருள். அதிதிடமாகப் பத்தபத்மாசனத்திருந்து உத்தரமுகனாகி, பத்மாசனக்கிரகணம் சித்தாசன உபலக்ஷணம்; இருகுதிகளின்மேல் விருஷணங்களைவைத்து, என்பதனால் ஆண்டே பொருந்துகின்றமையின், பிராஹ்மம் அஞ்சலியை = பிரஹ்மாதி குருபரம்பரைப் பிரணமாஞ்சலியைச் செய்தனன், பின்வாசனைகளினாலே சமீபத்தில் விடயங்களிலோடும் மனோமிருகத்தைத் தகைந்து நிறுவிநிருவிகற்பசமாதியின் பொருட்டு இவ்விசாரணையைச் செய்வானாயினன்.

பெருந்திரட்டு:—பாங்குபட விருந்தப்பத்மாதனம்பகரி, னேங்கியிருந்தடியை யுருவிலே மாறுடி; வாங்கிமனமொன்றி வலக்கையிடக்கைமேற், றுங்கிவிழிநாசி யினைநோக்குந் தகைமைத்தே.

குறுந்திரட்டு:—தடித்தவூரு விரண்டின் மேற்சாரவைத், தடித்தலங்க ளிரண்டுந் தன்கையினுற், பிடித்துக்காலிற்பெருவிரல் பின்புபோய்ப், படுத்துவைத்தல் பதுமாசனமிதே.

(ச.) புத்தன்போலப் பிரமாஞ்சலிபண்ணி; இவ்விடத்துப் பத்மாசனம் இது வெனப்பட்டது; அதற்கு, உ-ம்:—அக்த்திய சங்கிதையில், அது கூறப்பெற்றிருக்கின்றது; பாதத்துவயத்தை யன்றுயங்கமூலத் துவயங்களின்மேற் சமமாய்வைப்பது, சகலருமங்களிலும் பிரசித்தியுள்ள பத்மாசன மென்பதாம், அதனாலே. இருகுதி = பாதப்பிருஷ்ட பாகங்களால், அண்டமிரண்டும் = அண்டத்துவயத்தையும், மேலாக்கி = நியமஞ்செய்து = நெருக்கி, என்னுமீதொக்கும் பிரமாஞ்சலி யென்பது பிரஹ்மானு சந்தான சமயத்தில், ஒன்றற்கொன் றெதிர்ப் பார்வைகளாயும், மேற்பட்டனவாயும் இருக்கின்ற கரங்களினுடைய இருப்பு, அது பத்மாசனத்தினது அங்கமாம். அஃதாகமாந்தரத்துஞ் சொல்லப்பட்டிருக்கின்றது; வாமசரணத்தைத் தக்ஷிண ஊருவினும் வலதுசரணத்தை வாமஊருவினும்,

வைத்து அதன்மத்தியில் ஊர்த்துவ உத்தானங்களாக வாமேதர கரங்களைவைத்து நிச்சல திருஷ்டிகளா யிருந்து நாசாக்கிரத்தைப் பார்க்கவேண்டும்; இது தியானநிகருமங்களின் முக்கியமான பத்மாசனமென்று சொல்வர். அப்படியே காளிதாசருஞ் சொல்லியிருக்கின் றார்:—பரியங்க பந்தத்திர பூருவபான காயஞ், சரியங்குற நீளுறச் சந்நமிதோபயாஞ்ச, மிரு வங்கரமேற்ற லவைப்பினி யல்பிஞனே, விரியுங்கமலங் கமழங்கவிளங்க நாப்பண். இது குமாரசம்பவ 3-வது சர்க்கத்துள் 45-வது சுலோக மொழிபெயர்ப்பு, இதன் பொருளிது:- மன்மதன் சென்று தரிசித்தபோது இருந்த பரசிவ திருக்கோலத்தை வருணித்தல்:— பரியங்கபந்தத்திர பூருவபானகாயம் = பரியங்கபந்த மென்னும் வீராசனத்தால் நிச்சல உத்தாரார்த்தத்தினரும், சரியங்குறநீளுற = நேராகநிமிர்ந்து நீண்டிருப்பவரும், சந்நமித உபய அம்சம் = நன்னமித உபய அம்சங்களை யுடையவரும், இருவங்கர மேற்றலவைப் பின் இயல்பிஞனே = ஊர்த்வதலப் பாணித்துவயத்தின் சந்நிவேசத்தை = சம்ஸ்தா னத்தை யுடைமையர்னே, விரியுங்கமலங்கமழங்க விளங்கநாப்பண் = அங்கமத்தியில் விரி வுற்ற பங்கஜமெதற்கோ அஃதொத்திருப்பவரும், ஆகியபரமேசுரரை மன்மதன் றரிசித் தான். குன்றியின்றழை = நாணப்புல், மனத்தின்செயல் = சித்தத்தின் விருத்தியை பெருந்திரட்டு:— ஈர்வியலாகம் நன்ஞன் மறைப்பொருளாம், யாவையு மாமுனிவர்க் கின்புற்றிட வுரைத்துச், சேவுயரீசனுர் தென்றிசை நோக்கியே, மேவியிருப்பது வீரா தனமாமே.

திருந்திடப்பதம் வலப்,பெருந்தொடைக் கண்வைத்துநா, லருந்தவர்க்கறஞ்சொனுன், விரும்பிருப்பு வீரமே, குறுந்திரட்டு. வாதனையின் = வாசனைகளினின்றும், மிருகம்போல, மருளும், நினைந்தான் = விசாரணை செய்தான். (20 - 21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்திற்கு விவேகமுறுத்த விரும்பியமுனிவர் பிரான் சாந்தி யின் உயர்வையும் பிராந்தியின் இழிவையும் உபமானபூர்வக முணர்த்தல்:—வாராயென்பது

வாராய்மூட மனமேநின் மாயவாழ்க்கை களிற்பயனென்
றீராவிடரே முடிவில்வருஞ் செயலிற் பெரியோர் சேருவரோ
வாராவமுதாஞ் சாந்தியைவிட் டழியும்போக மாதரிப்போ
ரேரார்மலர்க்கற் பகக்கான்விட் டெரிகூர்விடவெங் கானுறுவார்.

(ப - ரை.) வாராய் மூடமனமே=அயிமூர்க்கமனதே ! நின்மாயவாழ்க்கைகளிற் பய னென் = உன்னுடைய சம்சார விருத்திகளானே பிரயோஜன மென்னே ! தீராவிடரே முடிவில் வருஞ்செயலில் = கெடாததுயரமே பரியந்தத்தில் கிடைக்குங்கிரியையில், பெரி யோர் சேருவரோ = தீமான்கள் பொருந்துவார்களோ, ஆராவமுதாஞ் சாந்தியைவிட்டு= பருகப்பருக ஆர்வமாறாத அமிர்தமயமாஞ் சாந்தியைவிடுத்து, அழியும் போகமாதரிப் போர் = கெட்டுப்போகும் போகங்களைக் கிட்டவோடுவோர், ஏரார்மலர்க் கற்பகக்கான் விட்டு = கவின்வாய்ந்த மணமலர் நிறைந்த மந்தாரவனத்தைத் தியாகித்து, எரிகூர்விட வெங்கானுறுவார் = வெம்மைமிகுந்த விடஜங்கலத்தை யடைவாராவர்.

(ஸ்ரீ - வீர.) அயிமூர்க்கமாமனமே யென்னபயன் நின்னுடைய சமுசார அலைவிஞலே, அயியென்பது கோமள ஆமந்திரணமாம், வாழிநெஞ்சமே என்றதேபோலும். முடிவுபேரு கத்துயரமே பெறலாம் வினைகளை மதிமான்கள் சேவிப்பார்களா ! சேவியார்களன்றோ, சமரசாயனத்தை விட்டு யாவன் போகங்களையே பெரிதாக மதித்து அவற்றின் பின்னே யோடியுழல் கின்றனனே, அவன் தேவதரு விசேடங்களாகிய மந்தாரங்கள் நிறைந்து

தேன்றுளிசிதறிப் பூந்துணர்துருமி வாலுக்ங்கிடந்த வனத்தைவிடுத்து, வெப்பமிகுந்த விடக் காடெய்தி வருந்துவன்.

(ச.) கற்பக்கான் = மந்தாரவனம், விடவெங்கான் = விடவிருக்ஷம் நிறைந்த வாரணியம். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை ) எவ்விடத்திற்குச் சென்றபோதினும் பயனில்லையெனல்:— அயனென்பது.

அயனுடற்றாய் பாதலத்தி லணுகினுயா கினுஞ்சாந்தி
வியனரமுதை யொழிந்தந்த மிக்கநிருவா ணம்பயிலாய்
பயனுயதுபோல் விசித்திரமாய்ப் பாவாபாவ மயவடிவே
யியல்பாமிந்தச் செயல்கள்பெரி திடராமென்று மினிதாகா.

(ப - ரை.) அயனுடற்றாய் = சத்தியலோகத்தை யடைந்தாயேனும், பாதலத்தில் அணுகினுயாகிலும் = பாதாளலோகத்தை யடைந்தாயேனும், சாந்திவியனமுதை யொழிந்து = உபசமனுமிருதமின்றி, அந்த மிக்க நிருவாணம் பயிலாய் = அந்த மேன்மையான ஆநந்தத்தை யடையமாட்டாய், பயனுய் = சிறிதுமாத்திரம் பிரயோஜனம் போன்றனவாய், அதுபோல் = அஃதொப்பவே, விசித்திரமாய் = நானுவகையாய் மயலாற்பிரதீதியாவனவாய், பாவாபவமய வடிவேயியல்பாம் = உண்மையின்மை யுருவமே யியல்பினவாம், இந்தச் செயல்கள் = இவ்வினைகள், பெரிதிடராம் = உக்கிரமானதுக்கப் பொருட்டவாம், என்று மினிதாகா = ஒருபோது மின்பம் பயவாவாம்.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மலோகத்தை யடைந்தபோதினும், மஹீரந்திரமாகிய பாதாளலோகத்தையடைந்த போதினும், உபசாந்தியாகிய அமுதத்தை யொழித்து, நிரதிசயசுக விசிராந்தியை யடையமாட்டாய். நீநெஞ்சே போகாசாசதத்தானே மிகமிகவும் நிறைவுற்று முன்மொழிந்த முறையே சகலதுக்கங்களையும் தந்திடும்படியாகின்றாய், இனிமேற்போக ஆசையைவிட்டு, நிர்த்துக்க நிரதிசய ஆனந்தரூபத் தன்மையுண்மையின் ஏகாந்த சுந்தரமாய்ப் பரமசிரேயசாய நிர்வாணத்தை யடைதி, இஷ்டசம்பாதன வடிவபாவம், அநிஷ்ட நிவாரணவடிவ அபாவம், என்பவற்றின் மயமாய இவ்விசித்திர விஷயங்கள் உனக்கு உக்கிரமாய துக்கங்களையே கொடுப்பனவாகும், ஒருகாலும் சுகத்தையே கொடாவாம்.

ஸ்ரீ பர்த்ருஹரியார்:—பாதலத்திற் புகுகின்றாய் மனமே நீ நபங்கடந்து பறக்கின்றாயால், சாதமுற வட்டதிசை மண்டலங்கள் சுழலுதி சஞ்சலத்தினனே, மாதிரமாமான்ம விதவிமலமத்தாம் பிரமமதை மயலினுனுந், தீதற்வே யென்னேநீ சிந்தியாயெதனுனே திரவீடுண்டாம்.

ஆதலினனந்த மா யஜாமாய்ப் பரமாகியமர்ந்தே யாண்டுஞ், சோதியதா மப்பிரமஞ் சிந்தனைசெ யிவ்வசத்தின் விகற்பத்தாற் றுதைவதென்னே, யாதினனுஷங்கி நினக்கிப்புவனவதிபதித்வ யசசுபோன்ற, தீதுபயில் போகமெலா நிட்டைபெறார்க் குடன்படலாய்ச் செறிவவன்றே.

(ச.) பாவாபாவ மயவடிவாய் = சதசத்வஸ்து விடயத்தன்மையாற் பாவமயமும் அபாவமயமும் தனது சொரூபமாய், பெரிதிடராம் = உக்கிரமான்பய துக்கங்களைத் தருவனவாம்; என்றும், இனிதாகா; சுகத்தைத்தரா, மூலம்: கல்ஞ = கற்பஞ.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சத்தாதி விடயங்களில் நீமயலுறுவதென்னே; என்னபயனை எதினுற்பெற்றாயிடான்றி அதில் இன்புறுமலிருப்பதேன் எனல்:—சத்தமென்பது.

சத்தாதிகளா மித்தொழில்க டம்மான்மண்டு கம்போலப்
பித்தாய்மூர்க்க மனமேயேன் பிரமிக்கின்றாய் விடாதவமே
யெத்தாற்சிறிது தனையடைந்தா யெதிலேயின்ப முறுகின்றாய்
நித்தாரமுதாய்ச் சமமாகு மதினீசேரா நெறியென்.

(ப - ரை.) சத்தாதிகளாம் இத்தொழில் கடம்மால் = சப்தமுதலிய விடயங்களிற் செல்லும் இந்திரிய விருத்திகளானே, மண்டுகம்போல = மழைப்போதுறும் தவளைபோல, பித்தாய் = மயலாய், மூர்க்கமனமே = விடயங்களின் முன்பின்பாராது மௌட்டியமாகச் செல்லுஞ் சித்தமே, விடாதவமே = நிரந்தரம்வாளாவே, என் பிரமிக்கின்றாய் = சுழலுறுவதென்னே, எத்தாற்சிறிது தனையடைந்தாய் = எதனினின்றும் கிஞ்சித்து அடைவுறுவாய்; எதிலேயின்ப முறுகின்றாய் = எதன்கண்ணே சுகத்தையநுபவிப்பாய், நித்தாரமுதாய்ச் சமமாகுமதில் = அனவரதம் தெவிட்டாத அமிருதமாய்ச் சமவடிவமாகும், அப்பதத்தின்கண், நீ நிலைசேரா நெறியென் = நீ நெஞ்சே! நிதிபெறாத காரணம் என்னே!

(ஸ்ரீ - வீர.) சப்தாதிகளைவிடயஞ் செய்வனவாகிய இந்திரிய ஹதவிருத்திகளானே, மூர்க்கமனமே! மழைப்போது சப்தாதிகளாகிய வியர்த்த விருத்திகளானே மண்டூகங்கள் சுழல்வுறுவனபோல, எப்போதும் வீணாக என் சுழல்வுறுகின்றாய்! எதனினின்றும் கிஞ்சித்து = அவாங்மாநசகம்மியம் விதேககைவல்லிய சுகம் அடைவுறுவாய், எதன்பால் நிர்வ்ருதியென்னும் ஜீவன்முக்தி விசிராந்தி சுகமநுபவிப்பாய், அத்தகைய சமசருவ விருத்தியுபரமலக்ஷண சமாதியின்கண் ஹே மூர்க்கசித்தமே! விவசாயத்தை நன்குபெறுத்திலாய் இஃதென்னே நினது மௌட்யம் என்றதாம்.

(ச.) சத்தாதிகளாம் = சத்தாதிகளிற் செல்லுவனவாகிய, இத்தொழில் கடம்மால், இவ்விருத்திகளால், விடாதவமே = அவிரதம் = எப்பொழுதும் வியர்த்தமாக, எத்தால் = எந்தச் சாந்தியினால், சிறுமைதனை = பிரயோஜனமான கைவல்லியரூபத்தை, அடைந்தாய் = அடைவாயோ, எதிலே = எந்தச்சாந்திவரின், இன்பமுறுகின்றாய் = சொரூப சுகத்தைப் பெறுவாயோ, சமமாகுமதில் = அச்சமத்தில், நீ நிலைசேரா நெறியென். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஒவ்வொரு இந்திரியங்களாலுங் கெட்ட ஒவ்வொரு ஜந்துவையுங்காட்டி மனத்திற் கறிவுறுத்திப் பின்னைந்தாலுங் கட்டுறின் கடைத்தேறல் எங்ஙன்கூடும் என்று வற்புறுத்திக் கூறல்:—படர், ஒளி, உரை. என்பன.

படர்மூர்க்க மாமனமே வீணாய்த்தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்றுசத்தந், தொடர்கின்ற புந்தியினான் மிருகமேபோற் றுஞ்சுறவேண்டாதோர்வின் றெழிலைமேவி, யடர்பரி சோன்முக்மா மதனுற்றுன்ப மடியாகப் பிடிக்கன்பா மியானைபோல, மடமைமிகு மூர்க்கமா மனமேயென்று மாறாத வாபத்தை மருவவேண்டாம்,

ஒளியுருவத் திரளுக்கு விழியின்செய்கை யுற்றுநீவெவ் விளக்கையுணராதாகி, விளிதலுறும் விட்டில்போல் வேகவேண்டா வெய்யமனமே நாவின்விருத்திமேவி, யெளிதருந்தி யுணவுகளி னிரதத்தாலே யிரைத்தூண்டிற் கவர்மீன்போலிறக்க வேண்டா, நளினவிதயத்து ளுயிர்நெறிபோய்க் கந்தநாட்டத்தாற் கட்டுண்ணோ னளிவண்டேபோல்.

உரைத்தமிரு கங்களிறு விட்டின்மீன்றே னோசையூ றொளியிரத நாற்ற மென்ன, நிரைத்தவிவற் றொன்றொன்றன் மாய்ந்துபோகு நிலையழிக்கு மவை யைந்து நேரேகூடிக், கரைத்தலுறு பவர்க்கின்ப மெங்கேயுன்றன் கட்டுக்குவா தனையே கயிற்றுச்சாலம், புரைத்தெழுநெஞ் சேயதுவே போகுமாகிற் பொரு வில்சய மஃதுனக்குப் புகலுங்காலே.

(ப - ரை.) படர் மூர்க்கமாமனமே = மூர்க்கத்தன்மை மிகவும்மூடி மௌட்டியமாகுதி மையுற்ற சித்தமே! வீணுய்த்தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்று=வியர்த்த மாயுத்திதமாய்த் தூலிக்கின்ற சுரோத்திரதையை நாடி, சத்தந்தொடர்கின்ற புந்தியினால்= சத்தாநுசாரியாய மதியினாலே, மிருகமே போற் றுஞ்சுறவேண்டா = மான்போலக்கெட் டுப்போக வேண்டாம், தோலின்றொழிலேமேவி = துவக்குத் தகைமையைத் தொடர் வுற்று, அடர்பரிசோன்முக மாமதனால் = நெருங்கியபரிச உன்முகத்தன்மை மதியானே, துன்பமடியாகப் பிடிக்கன்பாமி யானைபோல = துக்கத்திற்கே காரணமாகப் பெண்யானை யினிடத்துக் காதலுற்ற கஜேந்திரன்போல, மடமைமிகு மூர்க்கமாமனமே = அறியாமை மிகுந்த் வதனானே மிகமூர்க்கத்தன்மையை யடைவுற்ற சித்தமே, என்றும்மாறாத வாபத்தை மருவவேண்டாம் = எப்போதும் தீராதவிபத்தை விரவவேண்டாம்.

ஒளியுருவத்திர ணேக்குவிழியின் செய்கையுற்று = பிரபைரூபவகைகளின் உன்முகத் தன்மையினாலே சாக்ஷுஷ விருத்தியையடைந்து, நீ = சித்தமேநீ, வெவ்விளக்கை = வெம்மைத்தீபத்தை, உணராதாகி = அறியாததாகி, விளிதலுறும் = விழுந்துமாயும், விட்டில்போல் வேகவேண்டா= பதங்கம்போலச் சாம்பராகவேண்டாம், வெய்யமனமே= கொடியவுள்ளமே! நாவின் விருத்திமேவி =இரசனுபாவத்தை யடைவுற்று, எளிதருந்தி= சுலபமாகவயின்று, உணவுகளி னிரதத்தாலே = அருந்தும் வத்துக்களின் இரதசுவாதின் ஆசையினாலே, இரைத்தூண்டிற் கவர்மீன்போல் இறக்கவேண்டாம் = படிசபிண்டலம் படமத்சியமான நாசமாகவேண்டாம், நளின இதயத்து ளுயிர்நெறிபோய் = அம்போஜ கோடரத்தில் கிராணமார்க்கம் பற்றிப்போய், கந்தநாட்டத்தால் = கந்த உன்முகத்தன்மை யானே கட்டுண்ணேல் = பந்தத்தை யடையவேண்டாம், நனைவண்டேபோல் = தேன் பிருங்கமேபோல.

உரைத்த மிருகங்களிறு விட்டில் மீன்றேன் = கூறியமான் மாதங்கம் பதங்கம் மீனம் வண்டு என்பவை, ஓசை ஊறு ஒளியிரதம் நாற்றம் = சப்தம் பரிசம் உருவம் இரசம்கந்தம், என்ன நிரைத்த இவற்று ஒன்றொன்றன் மாய்ந்துபோகும் = எனப்பெற்ற கிரமமான இவ் வைந்தனுள் ஒவ்வொரு விடயங்களானும் நாசமாய்ப் போகும், நிலையழிக்கும் = சொரூப நிலைக்குச் செல்லவொட்டாமல் தடைப்படுத்தும், அவை ஐந்தும் நேரேகூடி = நுதலிய பஞ்ச விடயங்களும் ஒன்றாகக்கூடி, கரைத்தல் உறுபவர்க்கு = துன்பப்படுத்தப் பெறுப வர்க்கு, இன்பம் எங்கே = சுகமியாங்ஙனமாம், கட்டுக்குவாதனையே கயிற்றுச்சாலம் = வாதனையாகிய இரஜ்ஜு சமுதாயமானது நினது பந்தனத்துக்கே பயனும், புரைத்தெழு நெஞ்சே = தீயவழியில் எழுந்துதிரியும் மனமே! அதுவே போகுமாகிற் பொருவில்சயம் அஃதுனக்குப் புகலுங்கால் = உண்மையை யுரையாடு மிடத்து நெஞ்சேநினக்கு அவ்வாச னையே யகலுமானால் உவமையற்ற வெற்றியாமது. ஏ அசை.

(ஸ்ரீ - வீர.) விடயங்கள் துயரப்பொருட்டே யாமென யாதுஒத்தப்பெற்றதோ அது தனித்தனி திருஷ்டாந்த உதாரணங்களானே வித்தரிக்கப் பெறுகின்றது;—ஹே மூர்க்க

மனமே ! வீணைகப் பகிர்முகத் தன்மைவடிவ எழுச்சியானே வளர்வுற்று விருத்தியாகிச் சுரோத்திரேந்திரிய தாதாத்மிய அடைவுவடிவச் சுரோத்திரத் தகைமையை யடைவுற்று, "உயிர்த்தலான் உயிர்ப்பாம், பேசலால் வாக்காம், காண்டலாற் கண்ணும், கேட்டலாற் செவியாம்" என்னும் லிங்கத்தானே ஆன்மாவிற்குச் சிரவணுதிகாலத்தில், சுரோத்திராதி பாவ சுருதியிருத்தலின் என்பது கருத்தாம். சப்தானுசாரிணியாய மதிப்ணுலே மிருகம்= மான், போலக்ஷயத்தை யடைந்திட வேண்டாம்; வேடனதுகீத கண்டாத்தொனி மோகித மிருகம்போலு மென்பதாம். பரிச உன்முகத் தன்மையானே யுறுமதிவன் முகத்தன்மையா னே துயரப்பொருட்டே துவக்கிந்திரியத் தகைமையையடைந்து, பெண்யானையின் கண் ணேவைத்த பரிசசுகவாசையாற் கஜேந்திரன் என்ன மூர்க்கமனமே கட்டுப்பட்டுக் கட்டப் படுதலையடைய வேண்டாம், நன்ருகப் பழக்கப்பெற்ற பிடியைப் படுகுழிக்கயல்வைத்து அத ணுல் மயக்கப்பட்டு ஆசையால் நயக்கப்பட்டு பக்கத்திழுக்கப்பட்டுப் படுகுழிக்கண் விழுக் கப்பட்டு ஏமாந்து விழிக்கப்பட்ட வனகஜேந்திரனை யானைக்காரர் சங்கிலியால் ஆலானத் தகப்படுத்தித் துயரமிகப்படுத்தல் வெட்டவெளியாம். ஹே குருட்டுமனமே ! தூன்னங் களின் பேராசையினுலே இரசனைத் தன்மையை யடைவுற்று, தூண்டிற் பிண்டத்தாசை துதைந்த மீனம்மானும், நாசத்தை நண்ணவேண்டாம். பொருந்தலை யொட்டியருந்தலைக் காட்டுவார் இரசனையை மாற்றிக்கொண்டார்போலு மூலத்தில். காந்திசம்பந்தியாய நாணு ரூபபேத உன்முகத் தன்மையைத் தற்பரத்தன்மையை மேவி விழிச் சம்பந்தவிருத்திகளைப் பற்றி மூடமனமே ! காந்தியிற் காதல்வைத்த பதங்கங்கடுப்ப, தக்தத்தன்மையை யடைய வேண்டாம். சரீர அம்போஜகோடரத்திற் கிராணமார்க்கத்தை யினிதாசிரித்துக் கந்தோன் முகத் தன்மையானே பிருங்கம்போலும் பந்தத்தை நீ சிந்தாய் நொந்தடைய வேண்டாம்; கஜத்தினுலே தாள்ப்படுத்தப்பட்ட பதுமகருப்பத் துறையும் வண்டேபோலு மென்பதாம். ஒவ்வொன்றிற் பற்றுற்றதற்கும் இன்னணம் அநர்த்தமெய்தின் இனிச்சர்வப் பற்றுற்ற நினக்கு நிரதிசயதுக்கம் தடுக்க முடியாததேயாம் விடுக்க முடியாததேயாம் எனல்:— உரைத்த மிருகமென்பதாதி; ஹே அறியாமையையுடைய மனமே ! குரங்கம் அளிபதங்கம் இபம் மீனம் என்பவையோ ஒவ்வொன்றை விரும்பியே ஹதமாயின, அநர்த்த சாத னங்களாகிய சப்தாதி மிலிதங்களான யாவற்ருனுமே வியாப்தமாய நினக்குச் சுக மென்றசொற்ரு னெங்கே, மதியில்லாக் கிருமியாகிய கோசகார கீடத்தானே சுவாபா விகமான தனது வாய்நீர்நுரை தனது பந்தப்பொருட்டு எங்ஙனங் கோசவடிவமாய் விஸ்தரிக்கப் பெற்றதோ, அங்ஙனம், ஹே பித்துப்பிடித்த சித்தமே ! வாசனுஜாலம் நின்னுடைய பந்தப்பொருட்டேகு விதர்க்க நிர்மிதமாம், நினக்கஹிதமாகவே விஸ்தா ரிதமாம். ஆயின்யாங்ஙனம் பிரமாதத்தா லாக்கப்பெற்ற இப்பந்தத்தினது வெற்றி யாதலெனின் உரைத்தல்:—அதுவே யென்பதாதி, முதலிற் கரும உபாசனுதிகளானே சரற்கால மேகம்போலப் பவநோயைவிடுத்துத் தூய்மையையடுத்து, அதன்பின் சிரவணுதி பரிபாகத்தாற் சாட்டியங்கடந்து ஞானேயத்தால் நிர்மூலமாக்கப் பொன்றிச் சாந்தியை யடைவையேயாயின் அக்கால் அநந்தமான ஜயமாமுனக்கே.

ஸ்ரீமத் பாகவதத்தும் இஃதியம்பப்பெற்றது ஞாபகமாகலாம்:—மடந்தையர் மொழி யுங்கானமுன்கேட்டு மன்னவன் மகன்முலை மணந்தான், கடந்திரிகலையின் கோடுபெற் றுயர்ந்த கருதருந்தவனெனல் கேட்டும், படர்ந்திளமறிமான் வேட்டுவன் கானம்பகர்செவி மடுத்தவன் வலைவாய்க், கிடந்ததுகண்டும் வெவ்விசைகேளேன் கேட்டன்மா ணுமகீர்த்த னமே. துதிதருவயவர் படுகுழிச் செலுத்துந் துகளுறு பிடியையுள்ளுவந்து, மதகரிதழுவி

வயவர்கைவசமாய் வயங்குதல் கண்டுமட்டொழுகுர், ததைமலர்க்குழலார் தனகிரிதழுவிற் றணப்பரிதாய் மதன்வசமாய், விதலையின் மனமாய் மயக்குறுமென்ன விடுத்தனன்புணர்ச்சி மற்றன்றே.

ஒளிகொளும் விளக்கினழலுருக் கண்டதுணவுகொ லெனவதிற் சுழன்று
விளிவுறும்பசிய பதங்கமுன்கண்டு வெய்யதீத் தொழிலெனக் கருதித்
தெளிவுகொண் முனிவராயினுங் காணிற்சிந்தை கொண்டனுதினம் வருந்திக்
களிகொளுங் கருங்கண்மடர் தையருருவங் கருத்தொடுங் காண்கிலனம்மா.

வஞ்சநெஞ்சினராய்த் தூண்டிலின் வளைந்தவண் சுவையூண் பெறவடைந்து
துஞ்சுதலடைந்த மீன்குழுக்கண்டு துன்னுமை வகையெனும் வாயுப்
பஞ்சரமொன்றுற் றுடலுறைவதற் காய்ப்பசிக் கனறணிப் பதற்கன்றி
யஞ்சுவையிவை யென்றாசையின்லம் வந்தருந்துத லொழிந்தன னடிசில்.

ஒருமரைமலரே யுவந்துமென் முருகுண்டுறை தருமொரு சுரும்பிரவில்
விரியிதழ்குவியு மலரகப்பட்டு விளிந்ததுகண் டொருநாளும்
கருதியகரி லொருமனையுறைந்து கவின்பெறு முணவுவந் தருந்தேன்
மருவலர்மகுட கோடிகளிடறு மலர்புரை தருபதயுகத்தோய்,

முந்தவேயொலி யாதியிலொரு குணமுன்னிப்
பந்தமோடிட ருற்றிறந்தன பலவென்று
லைந்துசேர் குணங்களு மொருங்காசை யினடைந்தோ
ருய்ந்துபோ நெறியுண்டுகொலோ மதித்துரைக்கின்.

ஸ்ரீ பர்த்ருஹரியார்:—வெம்மையை யுணராதொரு பெரும்விளக்கில் விட்டில் வீழுகத வக்கயலு, மம்மயில்வுறுக மூட்டெப்றுபிசித மறிவிலாமையி னறிந்தேயு, மெம்மனோரவரும் வணஞரக்குழுவே யியைந்துறுங் காமமாமிவற்றை, யம்மவோவீட விலமடன் மகிமையாழ்ந் ததேயாமதிசயமே,

துயர்மயமாமிப் பொறிப்புல வனத்தின் றொடர்விடு கணந்தனிசெல்லாத்
துயர்துடைதொழிலில் வலியதாமோக்கத் தூநெறிதொட ருதிதனதின்
னுயருருத்தகைமை யடைதிறக்குதி யுன்னூர்மியொப் புறுசலகதியைக்
கயபவாதியைச் சேவியன்மறித்துங் களிமதிதெளிதி யிப்பொழுதே.

(ச.) அசுணமாப்போல்=கேகயப் புட்போல், சத்தந்தொடர்கின்ற=சிரவண இச்சையினலே சத்தத்தை யனுசரிக்கும், புந்தியினல், வீணய் = நிஷ்பிரயோஜனமான வெத்தனத்தாலே, தோன்றிப்பருக்கின்ற, செவித்தொழில் = சுரோத்திர விருத்தியை, நீப யின்று, உலுத்தகனது கீதத்தில் ஆசக்தியுள்ள மிருகம்போல், துஞ்சுறவேண்டாம், பரிச மூகமாமதனல் = பரிசோன் முகமானவதனல், பரிசசுகாநுபவ இச்சையால், துன்பமடியாக = துக்கநிமித்தம்.

ஒளியுருவத் திறநோக்கு = பேரழகுள்ள ரூபத்தினது கிரகணத்திற் சாவதானமான, உணவுகளின் மணத்தினலே = இரத சுகானுபவ இச்சையால், இரை = மச்சபந்தனத் துக்குரிய சொற்பமாமிச பிண்டம், நளினவிதயத்துள் = சரீராம்போஜ கோடரத்தில், உயிர்நெறிபோய் = கிராணமார்க்கத்தை மேவி.

பொருவில்சயம் = நிரவதிகமான விஜயமாம். மூலம்:—லுப்தகன் = வேடன், துரந்தசாம் = கெட்ட அன்னங்களின், கர்த்தேன =ஆசுவாதன ஆகாங்க்ஷையாலே, படிசம் =

மனமே ! வீணைப் பகிர்முகத் தன்மைவடிவ எழுச்சியானே வளர்வுற்று விருத்தியாகிச் சுரோத்திரேந்திரிய தாதாத்மிய அடைவுவடிவச் சுரோத்திரத் தகைமையை யடைவுற்று, "உயிர்த்தலான் உயிர்ப்பாம், பேசலால் வாக்காம், காண்டலாற் கண்ணும், கேட்டலாற் செவியாம்" என்னும் லிங்கத்தானே ஆன்மாவிற்குச் சிரவணாதிகாலத்தில், சுரோத்திராதி பாவ சுருதியிருத்தலின் என்பது கருத்தாம். சப்தானுசாரிணியாய மதியினாலே மிருகம்= மான், போலக்ஷயத்தை யடைந்திட வேண்டாம்; வேடனதுகீத கண்டாத்தொனி மோகித மிருகம்போலு மென்பதாம். பரிச உன்முகத் தன்மையானே யுறுமதிவன் முகத்தன்மையானே துயரப்பொருட்டே துவக்கிந்திரியத் தகைமையையடைந்து, பெண்யானையின் கண்ணேவைத்த பரிசசுகவாசையாற் கஜேந்திரன் என்ன மூர்க்கமனமே கட்டுப்பட்டுக் கட்டப்படுதலையடைய வேண்டாம், நன்குகப் பழக்கப்பெற்ற பிடியைப் படுகுழிக்கயல்வைத்து அதனால் மயக்கப்பட்டு ஆசையால் நயக்கப்பட்டு பக்கத்திழுக்கப்பட்டுப் படுகுழிக்கண் விழுக்கப்பட்டு ஏமாந்து விழிக்கப்பட்ட வனகஜேந்திரனை யானைக்காரர் சங்கிலியால் ஆலானத் தகப்படுத்தித் துயரமிகப்படுத்தல் வெட்டவெளியாம். ஹே குருட்டுமனமே ! தூன்னங்களின் பேராசையினாலே இரசனைத் தன்மையை யடைவுற்று, தூண்டிற் பிண்டத்தாசை துதைந்த மீனம்மானும், நாசத்தை நண்ணவேண்டாம். பொருந்தலை யொட்டியருந்தலைக் காட்டுவார் இரசனையை மாற்றிக்கொண்டார்போலு மூலத்தில். காந்திசம்பந்தியாய நானுருபபேத உன்முகத் தன்மையைத் தற்பரத்தன்மையை மேவி விழிச் சம்பந்தவிருத்திகளைப் பற்றி மூடமனமே ! காந்தியிற் காதல்வைத்த பதங்கங்கடுப்ப, தக்கத்தன்மையை யடைய வேண்டாம். சரீர அம்போஜகோடரத்திற் கிராணமார்க்கத்தை யினிதாசிரித்துக் கந்தோன் முகத் தன்மையானே பிருங்கம்போலும் பந்தத்தை நீ சிந்தாய் நொந்தடைய வேண்டாம்; கஜத்தினாலே தூள்ப்படுத்தப்பட்ட பதுமகருப்பத் துறையும் வண்டேபோலு மென்பதாம். ஒவ்வொன்றிற் பற்றுற்றதற்கும் இன்னணம் அநர்த்தமெய்தின் இனிச்சர்வப் பற்றுற்ற நினக்கு நிரதிசயதுக்கம் தடுக்க முடியாததேயாம் விடுக்க முடியாததேயாம் எனல்:— குரங்கம் அளிபதங்கம் உரைத்த மிருகமென்பதாதி; ஹே அறியாமையையுடைய மனமே ! இபம் மீனம் என்பவையோ ஒவ்வொன்றை விரும்பியே ஹதமாயின, அநர்த்த சாதனங்களாகிய சப்தாதி மிலிதங்களான யாவற்றானுமே வியாப்தமாய நினக்குச் சுகமென்றசொற்று னெங்கே, மதியில்லாக் கிருமியாகிய கோசகார கீடத்தானே சுவாபாவிகமான தனது வாய்நீர்நுரை தனது பந்தப்பொருட்டு எங்ஙனங் கோசவடிவமாய் விஸ்தரிக்கப் பெற்றதோ, அங்ஙனம், ஹே பித்துப்பிடித்த சித்தமே ! வாசனாஜாலம் நின்னுடைய பந்தப்பொருட்டேகு விதர்க்க நிர்மிதமாம், நினக்கஹிதமாகவே விஸ்தாரிதமாம். ஆயின்யாங்ஙனம் பிரமாதத்தா லாக்கப்பெற்ற இப்பந்தத்தினது வெற்றியாதலெனின் உரைத்தல்:—அதுவே யென்பதாதி, முதலிற் கரும உபாசனாதிகளானே சரற்கால மேகம்போலப் பவநோயைவிடுத்துத் தூய்மையையடுத்து, அதன்பின் சிரவணாதி பரிபாகத்தாற் சாட்டியங்கடந்து ஞானோதயத்தால் நிர்மூலமாக்கப் பொன்றிச் சாந்தியை யடைவையேயாயின் அக்கால் அநந்தமான ஜயமாமுனக்கே.

ஸ்ரீமத் பாகவதத்தும் இஃதியம்பப்பெற்றது ஞாபகமாகலாம்:—மடந்தையர் மொழி கேட்டு மன்னவன் மகன்முலை மணந்தான், கடந்திரிகலையின் கோடுபெறுங்கானமுன்கேட்டு யுயர்ந்த கருதருந்தவனெனல் கேட்டும், படர்ந்திளமறிமான் வேட்டுவன் கானம்பகர்செவி மடுத்தவன் வலைவாய்க், கிடந்ததுகண்டும் வெவ்விசைகேளேன் கேட்டன்மா னுமகீர்த்தனமே. துதிதருவயவர் படுகுழிச் செலுத்துந் துசளுறு பிடியையுள்ளுவத்து, மதகரிதழுவி

வயவர்கைவசமாய் வயங்குதல் கண்டுமட்டொழுகுந், ததைமலர்க்குழலார் தனகிரிதழுவிற் றணப்பரிதாய் மதன்வசமாய், விதலையின் மனமாய் மயக்குறுமென்ன விடுத்தனன்புணர்ச்சி மற்றன்றே.

ஒளிகொளும் விளக்கினழலுருக் கண்டதுணவுகொ லெனவதிற் சுழன்று
விளிவுறும்பசிய பதங்கமுன்கண்டு வெய்யதீத் தொழிலெனக் கருதித்
தெளிவுகொண் முனிவராயினுங் காணிற்சிந்தை கொண்டனுதினம் வருந்திக்
களிகொளுங் கருங்கண்மடந் தையருருவங் கருத்தொடுங் காண்கிலனம்மா.

வஞ்சநெஞ்சினராய்த் தூண்டிலின் விளைந்தவண் சுவையூண் பெறவடைந்து
துஞ்சுதலடைந்த மீன்குழுக்கண்டு துன்னுமை வகையெனும் வாய்ப்
பஞ்சரமொன்றுற் றுடலுறைவதற் காய்ப்பசிக் கனறணிப் பதற்கன்றி
யஞ்சுவையிவை யென்றுசையினலம் வந்தருந்துத லொழிந்தன னடிசில்.

ஒருமரைமலரே யுவந்துமென் முருகுண்டுறை தருமொரு சுரும்பிரவில்
விரியிதழ்குவியு மலரகப்பட்டு விளிந்ததுகண் டொருநாளுங்
கருதியகரி லொருமணையுறைந்து கவின்பெறு முணவுவந் தருந்தேன்
மருவலர்மகுட கோடிகளிடறு மலர்புரை தருபதயுகத்தோய்,

முந்தவேயொலி யாதியிலொரு குணமுன்னிப்
பந்தமோடிட ருற்றிறந்தன பலவென்று
லைந்துசேர் குணங்களு மொருங்காசை யினடைந்தோ
ருய்ந்துபோ நெறியுண்டுகொலோ மதித்துரைக்கின்.

ஸ்ரீ பர்த்ருஹரியார்:—வெம்மையை யுணராதொரு பெரும்விளக்கில் விட்டில் வீழுகத வக்கயலு, மம்மயில்வுறுக மூட்பெறுபிசித மறிவிலாமையி னறிந்தேயு, மெம்மனோரெவருமீ வணஞாக்குழுவே யியைந்துறுங் காமமாமிவற்றை, யம்மவோவீட விலமடன் மகிமையாழ்ந் ததேயாமதிசயமே,

துயர்மயமாமிப் பொறிப்புல வனத்தின் றொடர்விடு கணந்தனிலெல்லாத்
துயர்துடைதொழிலில் வலியதாமோக்கத் தூநெறிதொட ருதிதன்றின்
னுயருருத்தகைமை யடைதிநூக்குதி யுன்னூர்மியொப் புறுசலகதியைக்
கயபவரதியைச் சேவியன்மறித்துங் களிமதிதெளிதி யிப்பொழுதே.

(ச.) அசுணமாப்போல்=கேகயப் புட்போல், சத்தந்தொடர்கின்ற=சிரவண இச்சையினாலே சத்தத்தை யனுசரிக்கும், புந்தியினால், வீணாய் = நிஷ்பிரயோஜனமான வெத்தனத்தாலே, தோன்றிப்பருக்கின்ற, செவித்தொழில் = சுரோத்திர விருத்தியை, நீப யின்று, உலுத்தகனது கீதத்தில் ஆசக்தியுள்ள மிருகம்போல், துஞ்சுறவேண்டாம், பரிச மூகமாமதனால் = பரிசோன் முகமானவதனால், பரிசசுகாநுபவ இச்சையால், துன்பமடி யாக = துக்கநிமித்தம்.

ஒளியுருவத் திறநோக்கு = பேரழகுள்ள ரூபத்தினது கிரகணத்திற் தூரவதானமான, உணவுகளின் மணத்தினாலே = இரத சுகாநுபவ இச்சையால், இரை = மச்சபந்தனத் துக்குரிய சொற்பமாமிச பிண்டம், நளினவிதயத்துள் = சரீராம்போஜ கோடரத்தில், உயிர்நெறிபோய் = கிராணமார்க்கத்தை மேவி.

பொருவில்சயம் = நிரவதிகமான விஜயமாம். மூலம்:—லுப்தகன் = வேடன், துரந் தசாம் = கெட்ட அன்னங்களின், கர்த்தேன =ஆசுவாதன ஆகாங்க்ஷையாலே, படிசம்=

தூண்டில் = மீன்பிடிக்குங் கொக்கி, ௭௯௬௬௪:—ஒவ்வொரு சப்தாதி விடயத்தானே நின் கட்டின் பொருட்டே வாசனுஜாலம் முயல்கின்ற தாகலின் அவ்வாசனுஜாலத்தை விட்டுச் சாந்தி யடைதியேலாயின் அஃதுனக்கு எல்லையற்ற வெற்றியாம். (25-26-27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அல்லது இத்துணை யுபசாரமென், அகிதமாய சித்தத்திற்கு அநுசாசன மியற்றத்தகாதாம், மற்றே, வலிதில் நிக்கிரகஞ்செய்து விசாரத்தானே உச்சேதமே செய்யத்தக்கது என்னுங் கருத்தாலுரைத்தல்:—எது என்பது.

எதுபய ணுகநிற்கிங் கித்தண்ட மியான்செய்கின்றேன்
முதுவிசா ரத்தின்மிக்க முதன்மையோர்க் குளமொன் றில்லை
யதிகமா முடிவில்சித்துக் கற்பமா நிலையென்னெஞ்சில்
விதியதா யுளதோயானை வில்வக்காய் புகுதலுண்டோ.

(ப - ரை.) எதுபயனுக = என்ன பிரயோஜனத்தைக் கருதி, நிற்கு = மனமே நினக்கு, இங்கு = இவ்விடத்து, இத்தண்டம் = இவ்வநுசாசனத்தை, யான் = நிருவி கற்ப சமாதிக்கு முயலுமியான், செய்கின்றேன் = இயற்றுகின்றேன், முதுவிசாரத்தின் மிக்க = பேராராய்ச்சியின் மிகுந்த, முதன்மையோர்க்கு = அறிவாளிகட்கு, உளமொன் றில்லை = மனமென்றே யொன்று கிடையாது, அதிகமா முடிவில் சித்துக்கு = விபுவாய் அநந்தமாயுள்ள ஆத்மதத்துவத்திற்கு, அற்பமா நிலையென்னெஞ்சில் விதியதாயுளதோ = குறுகியவுளத்தில் ஸ்திதி உண்மையா யுளதாமோவென், யானை வில்வக்காய் புகுதலுண்டோ = வில்வத்தினந்தர் தந்தியிருக்குமோ பிரவேசித்து.

(ஸ்ரீ - வீர.) அல்லதுதான் என்னருமை நெஞ்சே! நினக்கிவ்வநுசா சனமாகிய இதோபதேசத்தை யாதின் பொருட்டோ செய்கின்றேன்? விசாரவானுய புருடனுக்குச் சித்தமென்பதே ஒன்றின்றன்றே அநக! அல்லது சித்த உச்சேதமும் தனிமுயல்வாலாவ தொன்றன்றும், மற்றே அதற்கு மூலாஞ்ஞான அன்வயவியதிரேக அநுவிதாயித் தன்மை யுண்மையானே அதனுச்சேதத்தானே உச்சேதமாத லெளிதாம். வாதனைகெடினும் மான சந்தானவமாதல் கூடுமன்றே, அவிவேகிகட்குள்ளம் அநுசாசன யோக்கியமே யாயினும், விவேகிகட்கோ உள்ளம் சாகுந்தருவாயில் உளதாகவேனும் அத்தியந்தம் செத்ததென்றே யேனும் கோடலாம், ஆயின் அதனைத்தியாகித்த லென்பதென்னுமாலோ வெனின், ஆன் மாவிற்கதன் சம்பந்தமின்மைத் தரிசனமே அதன்றியாக மென்பதாமென்க. நிருவிகற்பன் யான் சித்தீபன்யான் நிரகங்காரன் வாசனாயிலன்யான், அகங்காரபீஜமாம் நின்றன்னோடும் அசன்மய சம்பந்தமணுவு மிலனியான், அசன்மயநினக்கும் சன்மயவெனக்கும் சம்பந்தமி யாதுகொ லென்றதாம். எனது அபராதம் யாதாம் எதனுலென்னை விநாசப்பொருட்டுப் பரித்தியாகஞ் செய்கின்றீரெனின்? தேகாதியின் கண்ணகந்தைத் துர்திருஷ்டியவலம் பனமே பேரபராதமாமென்றுணர்தி, அயம்சோகமென வியர்த்தமாகமூட விநாசப்பொருட் டுச் சங்காவிஷ விஷசிகையாய துர்திருஷ்டியானது உன்னல் அவலம்பிக்கப்பட்டது: அத்துர்திருஷ்டியானது சங்கைவிடப் பிரயுக்த விடுசிகைபோல மித்தையேதுகையாயினும் மூடர்களுடைய விநாசப்பொருட்டே பொருந்துகின்றது என அபராதமாம் என்பது கருத்து, மித்தியாத்தன்மை யாங்ஙனமாங்கொல்லெனின், பொருந்தாமையானே யென வறைதல்:—அதிகமா மென்பதாதி. அநந்த ஆத்மதத்துவத்தினது இவ்வண்ண வடிவின தாய பரிச்சின்ன மனதிற் பரிச்சின்னத்திதி தேகாதி யகம்பாவத்தாற் றிதிபொருந்துறு தாம்; வாசிதா = கரிணீதந்தீச, ஆனை என்பவற்றின் வில்வவுட்டிதி எங்ஙனஞ் சம்பவி யாதோ அங்ஙனமென்றுணர்க.

(ச.) விசாரத்தின் மிக்க = ஆன்மாவுக் கன்னியமாகச் சித்தமென்பது யாதெனவிசாரிக்கு முதன்மையோர்க்கு, உளமொன்றில்லை = சித்தமேயின்று, அவிசாரித சித்தமாதலின் இதுவென விளங்குகின்ற தென்பது, பொருள் யானை வில்வக்காய்புகுவ துண்டோ= தந்திக்கு வில்வக்காய்க்குள் வசிக்குந்தன்மை சம்பவியாததுபோல், தேசகாலாதிகளால் அபரிச்சின்னமான ஆன்மதத்துவத்திற்குச் சூக்ஷுமமான நெஞ்சிற்றிதி சம்பவியாதென்பது பொருள்மூலம்:—சித்தமேயில்லை, அவிசாரசித்தத் தன்மையான் இது வென்பதாகப் புலப்படுவதில்லை என்பது பொருள். (28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் இதுதேகம் அவன் ஆன்மா அகம் என்பதான பிராந்திதான் யாதுன்னுல் அகந்தாபரி கற்பிதமாமோ, இது, பாலனதேபோல அவிசாரி தனது வீணனமோகமாம், விசாரியாய எனக்குயாது கொலாம், ஒன்றுமின்றும், என இல்லவே யில்லை, என்ற அந்நாஸ்தித் தன்மையையே பகுத்துத் தெளிவித்தல்:—தசையென்பது.

தசைபயில் பாதாங்குட்டத் தலைமட்டும் வெவ்வேறாய்ந்து
மிசைவுற யானங்கில்லை யானெனு நிலையெங்குண்டோ
திசையெலாம் விழுங்கிமேலாஞ் சித்ததாய்க் காண்பதின்றி
யசைவற வெங்குந்தானு மென்றுல கனைத்துங் காண்கேன்.

(ப - ரை.) தசைபயில் பாதாங்குட்டத் தலைமட்டும் வெவ்வேறாய்ந்தும் = மாமிசமும் என்பும் மலிந்த பாதாங்குட்டமே முதற்சிரபரியந்தம் உள்ளசகல அவயவங்களையும் அணுவணுவாய் பிரித்துவிசாரித்து நோக்கியும், இசைவுற யானங்கில்லை = கிடைத்திடுமாறு அகம் ஆண்டு இல்லை, யானெனுநிலை யெங்குண்டோ = அகமெனுந் திதியாதோ எங்குளதோ! திசையெலாம் விழுங்கி = சகல திசைகளையும் வியாபித்து, மேலாம் = அதீதமாகிய, சித்ததாய் = அறிவாய், காண்பதின்றி = அசம்வேத்தியமாய், அசைவற = சலனமில்லாமல், எங்குந்தானும்=எவ்விடத்தும் யானே ஆம், என்றுலகனைத்துங் காண்கேன்= என்பதாகச் சகத்திரயத்தையும் எனது வடிவமாகவே காண்பேன்,

(ஸ்ரீ - வீர.) பாதாங்குஷ்டத்தினின்றும் சிரம்வரையும் உள்ள எல்லாப்பாகங்களையும் அணுவணுவாய்ப் பிரித்தாய்ந்து நோக்கியும், இர் யானென்பது கிடைக்கவேயில்லை, அகமென நின்ற நிலையாதாமோ! அகம்பதார்த்தமாயது இலதேயாயின் நீயாரெனக்கூறல்:—திசையென்பதாதி, சகலதிசைகளிலும் நிறைந்து திசையினுலாக்கப்பெற்ற பரிச்சேதாகிதமாய், ஏகமாய், வஸ்துவாலாக்கப் பெற்றபரிச்சேத ரகிதமாய், அசம்வேத்தியமாய், கிரமசம்வேத்திய அவஸ்தாத்திரய வடிவகாலத்தா லாக்கப்பெற்ற பரிச்சேத சூனியமாய், அதனுனே யாண்டும் சர்வப்பிரகாரங்களிலும் விடுபட்டவஸ்துவந்தர ஆத்மாவையுடையதுமாய்,இலங்குமித்தகையவத்து இச்சகத்திரயத்தில் யாதுளதோ அச்சம்வேதனவத்துவேயானுவேன்.

(ச.) பாதந்தொட்டுத் தலைமட்டும் வெவ்வேறு, என்னுல் ஆய்ந்தும் = விசாரிக்கப்பட்டும், அங்கு = அப்பாதாதிகேசாந்தமான தேகத்தில், யான் = அகஞ்சத்தார்த்தம், இசையுறவில்லை, யானெனும் நிலை, பதார்த்தம், எங்குண்டோ = எதுவாமெனச் சித்தத்தைக்குறித்து விசாரம். (29)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆன்மாவிற்கொரு கற்பனையில்லா திருந்தும் நீதுயரப்பொருட்டேதோன்றிணு யெனல்:—உயரென்பது.

உயர்வுறு மதற்குநாம கற்பனை யொருமை பன்மை
வியன்மகத் தணுவென்றோதும் விதமுறு குறிகள் காணேன்
இயலறி வாதலாலே யான்காணு மென்பாலீயே
துயர்தரு மேதுவாகத் தோன்றினை பேதைநெஞ்சே.

(ப - ரை.) உயர்வுறுமதற்கு = மேன்மைதங்கிய அவ்வகஞ் சப்தார்த்தத்திற்கு, நாம கற்பனை = பெயர்க்கற்பனையும், ஒருமைபன்மை = ஏகதை அநேகதை, வியன்மகத்து அணு = அற்புதமிகுந்த பெருமை சிறுமை, என்றோதும் = என்பதாகக்கூறும், விதமுறு = சாஜாதியான, குறிகள்காணேன் = சின்னங்கள் கண்டிலேன், இயலறிவாதலாலே = இயற்கையாகவே சித்ருபமாதலாலே, யான்காணும் = அகம் உணர்வேன், என்பால் = அறிவாகிய என்னிடத்தில், நீயே = அறியாமையால் நீதானே, பேதைநெஞ்சே = அறியாமைமையாய மனமே, துயர்தருமேதுவாகத் தோன்றினை = துக்கத்தை யீயுங்காரணமாகப் பிரதீதியாயினை.

(ஸ்ரீ - வீர.) அதற்குப் பரிச்சின்னரூபமேனும், நாமபரிகற்பனையேனும், ஏகத்வசங்க்யையேனும், அதனயற் சங்க்யையேனும், மகத்வபரிமாணமேனும் அணுத்வ பரிமாணமேனும் ஈண்டுக்காணப் பெறுவதே கிடையாது. யான் சம்வேதன வடிவனாகலின் சாக்ஷிபூதமாகிய என்னால் விளங்குஞ் சித்தமாகிய வுன்னைக்காண்பேன், காணவேவிபுலதுக்ககாரணத் தன்மையானே இனிக்கூறப்பெறும் விவேகஜன்னிய போகங்கொண்ட என்னாற்கொல்லப் பெறுவாய் நீ.

(ச.) எந்தவஸ்துவுக்கு நாமாதிகள் காணேனோ அத்தன்மையானவஸ்து, காண்பதின்றி = பிரகாசாந்தரத்தாற் பிரகாசியாததாய், சித்தாய் = சமவேதனமாகியவொன்றே, உலகனைத்துங் காண்கேன் என்று முற்கவியுடன் அந்நுவயங்கூட்டுக. மகத்து = மகத்பரிமாணம், இயலறிவாதலாலே = வேதனரூப சுபாவத்தினாலே, யான்காணும் என்பால் = சுயம்பிரகாசமான என்னிடத்தில், நீயே = சித்தமேநீ, துயர்தருமேதுவாகத் தோன்றினை, ஆதலால், இந்தநீ விவேகஜந்யமான போதமுள்ள வென்னால் நாசமுறுவாய் என்பது கருத்து. மூலம்:—நானாதை = பேதம், தூலத்தன்மை மகத்தன்மை பரிமாணபேதமாம்(30)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விவேசனப் பிரகாரத்தையே காட்டல்:—முதுவென்பது:

முதுவிவே கத்தாற்போத மொய்ம்பினு லிந்தவுன்னைக்
கதுமெனக் கொல்லாநின்றேன் காணுதி கவலைநெஞ்சே
யிதுதசை யிதுபுண்ணீர் தென்பிவை யுளவுயிர்ப்பாய்ப்
பொதுளிய வாதமிங்கே யகமெனல் பொருந்திற்றெங்கே.

(ப - ரை.) முதுவிவேகத்தாற் போதமொய்ம்பினால் = முதிர்ந்த விவேகத்தினாலே ஜனித்த மெய்ஞ்ஞான சாமர்த்தியத்தால், இந்தவுன்னை = சேட்டை செய்யும் இவ்வுன்னை, கதுமெனக் கொல்லாநின்றேன் காணுதி கவலைநெஞ்சே = சஞ்சலமிஞ்சிய நெஞ்சகமே பார் உம் உன்னைவிட்டேனு கதுக்கென்று செதுக்கிக் கொல்லுகின்றேன் ஜாக்கிரதை! இதுதசை = இதுமாம்சம், இது புண்ணீர் = இது இரகதம், இது என்பு = இது எலும்பு, இவை உயிர்ப்பாயுள = இவை பிராணன்கள் யுள்ளன, என, பொதுளியவாகம் = இதம் விடயங்கள் பொருந்தியுள்ளது தேகமாம், இங்கே = இதங்களிற் றனித்தேனுஞ் சேர்ந்தேனும், அகமெனல் பொருந்திற்றெங்கே = அகமென்று நின்றதுயாதோ! என்று மின்றும்.

(ஸ்ரீ - வீர.) முதுவிவேகம் முன்னே சொன்னேம், இதுமாம்சம், இது இரத்தம் இவையென்புகள், இவை சுவாசக்காற்றுகள், எனவாக நிறைந்த தேகத்தில் யானென்று நின்றதுயாதுகொல். ஸ்பந்த அம்சங்கள் யாவுமே வாதசக்திகள் என்னும் பிராணன்களுடையவாம், அவபோதத்தின் அம்சமானதோ பேரறிவான பரம்பொருளுடையதாம், ஜரையும் மிருதியும் என்பனதா மிக்காய கோடியிற் கலந்தனவாகும், எனின் இவ்வகமென்றே நின்றதுயாதோ!

(ச.) இதுவெனக் கிரகிக்கப்படும் மாம்சாதிகளில், அகமெனல் பொருந்திற்றெங்கே = அகஞ்சத்தார்த்த மொன்றுமன்று, இதுவென்னுந் தன்மைக்கும் அகமென்னுந் தன்மைக்கும் விரோதமாதலின் என்க. (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேலும்பிரித்து வினுதல்:—தசையென்பது.

தசைகள்வே றுதிரம்வேறு தடியென்பு வேறுமெய்யி
லசைவுவே றறிவுவேறு வகமெனல் பொருந்திற்றெங்கே
விசைவிழி யிதுதோலீது வியன்செவி யிதுமூக்கீது
பசையுறு நாவிதிங்கே யகமெனல் பயின்றதெங்கே.

(ப - ரை.) தசைகள்வேறு = மாம்சம் அயல், உதிரம்வேறு = இரத்தம் அன்னியம், தடியென்புவேறு = தண்டாகாரமான எலும்பு இதரம், மெய்யில் = பொய்யாகிய தேகத்தில், அசைவுவேறு = ஸ்பந்தம்பின்னம், அறிவுவேறு = சேதனமதிரிக்தம், அகமெனல் = யான் என்று கூறுதல், பொருந்திற்றெங்கே = சம்பந்தித்தது யாண்டையோ; விசைவிழியிது = வேகமாகவுருவக் கிரகணஞ் செய்யுஞ்சக்ஷு இது, தோலீது = ஊறுவைக்கவரும் துவக்கிது, வியன்செவியிது = அற்புத சப்தங்களைக் கவரும்காதிது, மூக்கிது = கந்தங்கவருங்கிராணமிது, பசையுறுநாவிது = இரசவஸ்துக்களைக் கண்டவுடனே நீரூற்றெடுத்தயிலும் = ஜிஹ்வேந்திரியமிது, இங்கே = இக்கூட்டத்துள், அகமெனல் பயின்றதெங்கே = யான் என்று நின்றதெதுவோ.

(ஸ்ரீ - வீர.) ஹே சித்தமே! மாம்சம் அகம்பதார்த்தத்தினும் வியதிரிக்தமாம், இரத்தமயல், என்புகளும் பின்னங்கள், மோதமயல், அசைவுமன்னியம், அகமென்று நின்றது யாதோ! இது கிராணம், இது ஜிஹ்வை, துவக்கிது. இவைசெவிகள், இதுநேத்திரம், இதுபரிசம், எனப்பெறும் இவற்றுள் அகமென்று நின்றதுயாதுதான்?

(ச.) மாமிசாதிகள் ஆன்மாவுக் கன்னியமாகத் தோன்றுகின்றமையின் நானெனுந் தன்மைகூடா தென்பதுபொருள்; அவற்றில் அசைவு கன்மேந்திரிய வியாபாரம், அறிவு ஞானேந்திரிய வியாபாரம், நேத்திராதிகளும் இதுவெனத் தோற்றுகின்றமையின் அகஞ்சத்தார்த்தமன்று, அவற்றில் விசை வியன் பசையென்பது கிரியைக்கேதுவான கர்மேந்திரியகுணம். (32)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரமார்த்தமாக விசாரித்து நோக்கின்மனமும் யானன்று, சித்தமாகியநீயும் நானன்று, வாசனையும் யானன்று, ஆன்மாவோ எல்லாவற்றுனுமே அகமென்பதாகத் தீண்டப்பெறுதாம், ஆத்மாசுத்த சிதாபாசமாம் கேவலமாயிது விஜ்ரும்பணமாம் என்றான்மாவின் பெருமையைக் கூறல்:—அக மென்பது.

அகமென லெங்குமாகு மற்பமிங் ககமன்றுகு
நிகழுமிந் நல்லநோக்கே நோக்கயல் நெறிவேறில்லைப்
புகரில்சின் மயனுமென்னைப் போதமி றார்த்தநெஞ்சே
நிகவருத் தினையான்றன்னை வசைசெந்நாய் வெருட்டுமாபோல்,

(ப - ரை.) அகமென லெங்குமாகும் = யானெனக்கூறுவது எங்குமிருக்கப்பட்ட வத்துவேயாகும், அற்பமிங் ககமன்றாகும் = பரிச்சின்னவத்து அகஞ்சப்தார்த்தமே யாகமாட்டாது, நிகழும் = விளங்காநின்ற, இந்நல்லநோக்கே = இந்தச் சன்மயதிருஷ்டியே, நோக்கு = உண்மைத் திருஷ்டியாம், அயல் நெறிவேறில்லை = இதரக்கிரம மில்லதேயாகும்; புகரில் சின்மயனுமென்னை = களங்கமில்லாத அறிவுமயமாகிய என்னை, போதமில் தூர்த்தநெஞ்சே = அறியாமையிற் பிறந்த கெட்டசித்தமே, ஆன்கன்றை வனச்செந்நாய் வெருட்டுமாபோல் = பசுப்போதகத்தை வனத்திலுள்ள பலமான குள்ளநரி, அச்சப்படுத்துவதேபோல, மிகவருத்தினை = அதிகந்துயரப் படுத்தினாய்.

(ஸ்ரீ - வீர.) யானே யிங்கெங்குமுள்ளேன், அவ்வான்மாவின்கண் ணத்தியாரோப திருஷ்டியாயின் யானேயாண்டும் அதிஷ்டானமாவேன் எனயாண்டுமியான் என்னு மிதுவே சன்மயீதிருஷ்டியாம், அபவாத திருஷ்டியாயின், சிறிதும் நானல்லவாம் என வக தேகமாத்திர பரிச்சின்ன அகம்பாவலக்ஷண இதர அகங்காரக்கிரமம் உளதாவதில்லையாம். அஞ்ஞானவடிவ தூர்த்தனாகிய சூதுக்காரனால், அகந்தையாகிய வஞ்சனையினால் நெடும்போது மிகக்கிலேசப் படுத்தப்பட்டேன். வஞ்சகமும் கருவமும் பலமும்வாய்ந்த நரியினாலே அடவியில் பசுபோதகமானது, வெருட்டப் பெறுவதேபோலும், லப்தோ என்பது பாவத்தில் க்த: விகுதியாம், விப்ரலம்பேன என்பது பொருளாம்; லப்த்வா என்னும்பாடம் சாதுவாம். ஆறுயிரத்திற் பாடபேதமுளது. போதகம் = கன்று, அற்பமுமகமன்றாகும் என்ற பாடமே மூலத்திற்கியைந்த தெனவுணர்க. நரி = செந்நாய், தூர்த்தன் = கேதவன் = சூதன், கேதவஸ்ய பாவங்கைதவமென்பது கைவல்யநவநீதம்.

(ச.) இச்சகத்தில் எங்குந் தோற்றுகின்றவன் அகமேயென்றாவது, இங்குவிளங்குகின்ற தொன்றும், அகமன்றென்றாவது நிகழும் நோக்கியாதோ அதுவேவாஸ்தவமாகவுள்ள திருஷ்டி; அயல்நெறி = பரிச்சின்ன விஷயமாய் அகமெனத்தோன்று ரூபமில்லை; வாஸ்தவமன்றென்பது பொருள். போதமில் தூர்த்தநெஞ்சே = வெகுகாலம் அகந்தையென்னும் பரிச்சின்ன அகங்காரமாய் அதனால் மிகவருத்தினை, இந்தப்பிரகாரம் அஞ்ஞானமெனப் பெயரிய தூர்த்தவத்துவால் சிரம்பரிச்சின்ன அகங்காரத்தானே; பலமுடைய நரியினால் = செந்நாயால், அடவியில் கோவின்சிசு துன்புறுத்தப் பெறுவதேபோல ஹிம்சிதனாயினேன் என்பது திரண்டபொருள். (33)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீமுகன் கருணையினாலே கள்வனைக்கண்டேன் இனிச்சேரேன் என்றும் இவ்வாறு விவகரிக்கலா மென்றும் கூறல்:—தெய்வ, வாதனை யென்பன.

தெய்வயோகத்தாலின்று தேறினன் சொரூபச் செம்பொன்
கைவழி கவரஞ் ஞானக் கள்வன்மீண் டிவனைச்சேரே
னைவகைப் புலன்களொன்ற வாதனை யற்றிருந்துந்
தைவரு புறனிற்றத்தம் பொறிகளிற் றாவாநின்ற.

வாதனைபுலன் கட்கெல்லா மன்னுகா ரணமன்றாகு
மாதலான் மூர்க்கமான வைம்புல நீவிர்நெஞ்சி
னேதவாதனை கண்மாற்றிக் கருமங்க ளெல்லாஞ் செய்வீர்
வேதனைத் துன்பமொன்றுங் கிஞ்சிலுமே வாதென்றும்.

(ப - ரை.) தெய்வயோகத்தால் = பரமேசுரரது திருவருளினால், இன்று = இப்போது, தேறினன் = தெளிந்தனன், சொரூபச்செம்பொன் = ஆத்மசொரூபமாகிய பத்

தரைமாற்றுத் தங்கத்தை கை = என்கரத்திலிருந்து, வழிகவர் = வழிப்பறிசெய்து எடுத்துக்கொண்ட, அஞ்ஞானக்கள்வன்=அறியாமையாகிய திருடன் இவன் என, மீண்டு இவனைச்சேரேன் = மறுபடி இக்கள்வனைப் பற்றேன், வாதனை யற்றிருந்தும் = வாசனை ஹீனமாயினும், ஐவகைப் புலன்களொன்று =ஐந்து இந்திரியங்களும் சுயமாகவே, தைவரு புறனில் = தாங்கள் கோசரிப்பனவா யிராநின்ற வெளியிலுள்ள, தத்தம் பொறிகளில்= தத்தமக்குரிய சப்தாதிகளில், தாவாநின்ற = ஓடிவிளையாடுகின்றன.

வாதனை புலன்கட்கெல்லாம் மன்னுகாரணம் அன்றாகும்=இந்திரியங்கள் யாவற்றிற்குமே விடயங்களை யடைவதற்கு வாசனை காரணமாகாதாம்; ஆதலால் = ஆகையினால் மூர்க்கமான வைம்புலனீவிர் = விடயங்களில் முரட்டுத் தனமாகச்செல்லும் இந்திரியங்களாகிய நீங்கள், நெஞ்சின் ஏதவாதனைகண் மாற்றி = குற்றம்பொருந்திய வுள்வாதனைகள் ஒன்றுமின்றி, கருமங்களெல்லாம் செய்வீர் = வினைகள் யாவற்றையுமே விளைவிக்கலாம், வேதனைத்துன்ப மொன்றும், கிஞ்சிலும் மேவாதென்றும் = எத்துயரமுமே ஒரு சிறிதும் வந்து வருத்தாதாம்.

(ஸ்ரீ - வீர.) பாக்கியவசத்தினாலே இப்போது அஞ்ஞான தஸ்கரனுனவன் என்னாலே இனிது அறியப் பெற்றவனுயினன், பாரமார்த்திகமாக எவ்வுருவமுளதோ அவ்விலக்கண தனத்தின் அபஹாரியாய இச்சோரனை மீண்டும் நன்காசிரயஞ் செய்யமாட்டேன். ஒன்றற்கொன்று முரணுய இயற்கையுடைய வற்றிற்கு ஒற்றுமையே கிடையாதாம் ஒருமைப்பெ பது வெகுசேய்மையதன்றோ எவ்வாற்றானு மகங்காராதிகளின்றாமாயின் யாங்ஙனம் வசனு தியால் விவகரித்தல் கூடுமெனின், நடனைப்போல வேண்டியவற்றைக்காலத்திற் கேற்ற படி கற்பித்து விவகரிக்கலாம். இவ்வாற்றைத் தெரியாமற் வெகுகாலமன்றோ வீணுயது, தேகாதிகளில் யான் என்னும் பாவனை அத்தியந்தம் பிராந்தியே யாமென எல்லாவாற்றானும் தேக அகம்பாவவாசனையைத் தியாகிக்கவேண்டும்; அற்றேல் வாசனையிலதாயின் வெளிப் பிரவிருத்திகட்கு எல்லாவகையானும் உபரமம் உண்டாம், உண்டாகவே புருடனுக்கு வாழ்க்கையே பொருந்தாதாம் எனின் ஆண்டறைதல்:—வாதனையற்றிருந்து மென்பதாதி, இத்தேகமானது ஜீவனஹேதுவான கருமத்தில் வாசனையில்லா திருந்தும் பிரவிருத்தியா நிற்கும், சக்ஷுவாதி இந்திரியங்கட்கும் சுயமாகவே வெளியில் தமது விடயங்களிற் பிரவிருத்தியுண்டாம், வாதனையீண்டுக் காரணமன்றாம்; தாமவியாலகடர்களின் முன்யுத்தாதிப் பிரவிருத்தி வருணித்திருத்தலின், என்பது பாவமாம். பிரவிருத்திக்கும் பக்ஷத்தில் அதனாலுண்டாம் துக்கமும் உண்டாகவே செய்யும், எனவே வாசனுத்தியாகத்தால் யாதுகொலோ குணமெனின், ஹே சித்தமே! வாசனுரகிதமாய கருமத்தைச் செய்தியேலாயின், வருவனவாய சுகதுக்கதிருஷ்டிகளை யனுபவிக்காய் கேவலம், தாற்காலிக போகாபாசத்தில் யானுக்கியென அபிமானமிலதாம், வருவனவாய சுகதுக்க திருஷ்டிகளோ அநுபவிக்கவராவாம், ஆகவே அவற்றாலுளவாம் சோகமோகபய விஷாதசிந்தை உத்வேகாதி சர்வசந்தாப சாந்தியே இதனது குணமாம் என்பதுகருத்து. இப்போதிந்திரியங்களைச் சம்போதித்து இப்பொருளையே பகுத்துபதேசித்தல்:—ஆதலான் என்பதாதி. ஆகலின் மூர்க்கமான இந்திரியங்களாகிய ஹேசிசுக்காள்! நிஜ வுள்வாதனையை விட்டு எல்லாக்காரியங்களையும் செய்ம்மின், செய்யின்வாதனை யின்மையின் வாதனையெதனையும் எய்தீர்.

(ச.) இன்றிவ் வஞ்ஞானக்கள்வன், தெய்வயோகத்தால்=பாக்கியத்தால், தேறினன்= அறியப்பட்டான். சொரூபமே யர்த்தம் அதனபகாரியாய இவ்வஞ்ஞானக் கள்வனைமீண்டும் ஒருபோதும் ஆசிரயஞ்செய்யேன். (34-35)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானிக்கே வாசனையாதிகளிலவாம் ஆத்மசொரூபமே யாக வின், அன்னிய அஞ்ஞனுக்கோ அங்ஙனமாகாதாம், இதனுனே அஞ்ஞர்களாற் றிருஷ்ணை யானே இந்திரியங்கள் நாசப்படும் என்றறைந்து மனத்தைநோக்கி இதத்தையுரைத்தல்:—கூடு என்பது.

கூடுசெயுந் தம்வாயி னூலாற்பொன் றுங் கோசகா ரக்கிருமிக் கூட்டம்போல, வோடுபுலனெனுஞ் சிசுக்காள் மயலால்வீணே யுலர்ந்திடுவீர் புலனெல்லாமுறை யுளான, நீடுமனனே யொடுங்கிப் புலன்களோடு நீவேறற் ருத்துமதத் துவத்தை நேரே, நாடுதிபற் றற்றொன்ருய் முத்தியான ஞானவடி வினைநிலையாய் நண் ணுவாயே.

(ப - ரை.) கூடுசெயும் தம்வாயின் நூலால்=கூண்டுண்டாக்கும் தமது வாய்நீர்த் தந்துவினுலே, பொன்றும் = நாசமாம், கோசகாரக் கிருமிக் கூட்டம்போல= கோசகாரக் கிருமிகளின் குழுவையொத்து, ஓடு புலனெனுஞ் சிசுக்காள் = விடயங்களை நாடியோடித் திரியும் குழந்தைகாள் ! மயலால் வீணேயுலர்ந்திடுவீர் = திருஷ்ணையினுனே வியர்த்தமாக விநட்டமாவீர், புலனெல்லா முறையுளான நீடுமனனே = சர்வேந்திரிய கோசமாகிய ஹே சித்தமே ! ஒடுங்கிப் புலன்களோடு நீவேறற்று = அடங்கிச் சர்வேந்திரியங்களோடு ஐக்கிய பாவத்தை யடைந்து, ஆத்துமதத்துவத்தை நேரேநாடுதி பற்றற்று = தன்னுடையவடி வத்தை அசத்சொரூபமென நன்ருகக்கண்டு, ஒன்ருய் முத்தியான ஞானவடிவினை நிலையாய் நண்ணுவாயே = ஏகமாய் நிரிவாணமா யிலங்கும் அமலபோதத்தைத் திரமாக அடைவாய்.

(ஸ்ரீ - வீர.) கோசகாரக் கிருமிகள் தங்கள் வாயினுலே யியற்றப் பெருநின்றதந்து வினுலேபோல இந்திரியங்களாகிய பாலகர்காள் ஆசையினுலேயே நீங்கள் வீணுகக்கெட்டுப் போகின்றீர்கள் ஆசையினுலேயே ஜராமரண சங்கடத்திற் புரளுகின்றீர்கள், வாசனையே உங்களுடைய பந்தத்திற் கேதுவாம். துக்கஹேதுவினுலே, சர்வேந்திரியங்கட்கும் கோசம் போல ஆதாரமாகிய ஹே உள்ளமே ! நீ, எல்லா இந்திரியங்களோடும் ஐக்கியத்தை நன்ருக அடைந்து ஒருமதியுடைமையையுற்று, நிச்சயமாகத் தன்னுடைய மித்தியாவடிவத்தை நன்கு நாடித்தான் அசத்தெனக்கண்டு, தற்சாக்ஷியாய நிர்வாண அமலபோத மாத்திரமாய் உண்மையினுற்று இளைப்பாறி யிருப்பாய் மறுபடியும் சித்தரூபத்தை யடையவேண்டாம்.

(ச.) பொறியெனுஞ் சிசுக்காள் = இந்திரியபாலகரே ! தன் வாயினூலால் = தன் வாயாலுண்டாகிய தந்துவினுலே, கோசகாரக் கிருமிகள்போல், மயலால் = தம்மாலுண் டாகிய திருஷ்ணையாலே, உலந்திடுவீர் = நஷ்டமாகிறீர்கள், நீடுமனனே = பொறிக் கெல்லாமுறையுள் = சட்சுராதி சர்வேந்திரியங்களாலும் உறையுட்போல் உவஜீவிப்பவனுன வேதுவினுல், சர்வேந்திரியங்களோடு ஐக்கியமடைந்து தனது ரூபத்தையும், அவித்திய மான சுபாவத்தையும், நாடுதி = விசாரித்து, ஏகமாய்க் கேவலமாய் அமலமானபோதம் எப்படியாகுமோ அப்படி முத்தியுபாத வியாபாரத்தை யடைந்து இருப்பாய் ! (36)

(ஸ்ரீ- வீர - அ - கை.) அகமெனும் வாதனையை யடியோடகற்றி யாசையைவேறுத்து விநோதிப்பேன் எனல்:—ஆசு என்பது.

ஆசகலா விடயவிட விடுசேியாகி யனந்தமா நானெனும்வா தனையைத்தீர, மாசறவிட் டிச்சையெலா மொழிப்பதென்னு மந்திரயுத் தியினுலே மறுசென்மம் போய்த், தேசமுறு பகவானு யச்சமெல்லாந் தீர்விடமாவாய்மனமே திரள்சங் கற்பம், வீசுதரு மயல்கொடியாய் நீயாங்காட்டை வெட்டிநெடும் பூமியிலே விநோ தஞ் செய்வேன்.

(ப - வை.) ஆசகலா = குற்றத்தை விட்டுமீளாத, விடயவிட விடூசியாகி = விடயங்களென்றும் விஷநோயாகி, அநந்தமாம் = அந்தமில்லாத, நானெனும் வாதனையை = அகமென்றெழும்பும் வாசனையை, நீரமாசறவிட்டு = அடியோடு யாதொருகளங்கமுமில்லாமல் தொலைத்து, இச்சையெலாம் ஒழிப்பதென்னும் = ஆசையாவற்றையும் அகற்றுவதென்று சொல்லப்பட்ட! மந்திர யுத்தியினுலே = மந்திரயூகத்தினுலே, மறுஜன்மம்போய் = மீண்டும் வருதன்மாண்டு, தேசமுறுபகவானுய் = வியாபகமாகிய பகவத்வடிவமாய், அச்சம் எல்லாம் = பயம்யாவும், தீர்விடமாவாய் = சிறிது மில்லாத இடமாகி, மனமே ! = சித்தமே ! திரள் சங்கற்பம் = திரண்டசங்கற்பமே, வீசுதருசாகை யுபசாகைகளோடு கூடிய விருக்ஷமாகி, மயல்கொடியாய் = ஆசையேலதையாகி, இலங்கும் நீயாம் காட்டைவெட்டி = நினது வடிவமாகிய மனோவனத்தைச் சேதித்து, நெடும்பூமியிலே விநோதஞ் செய்வேன் = அதனுலே கிடைக்கப்பெற்ற விசால பூமியிலே சஞ்சரித்து விளையாடுவேன்.

(ஸ்ரீ - வீர.) சர்வசாஸ்திர தத்துவஞ்ஞ அபிமதமாய எத்துவைத வாசனுபரிகாரங்கள் உளவோ அவ்வடிவமாய வாஞ்சிதவிடயத் தியாகமந்திர யுக்தியானே, எண்ணில்லாததுக்கமய அகங்கார வாசனையாகிய, விடயவிடம விடங்கடுத்த அறியாமையாலாய விடூசிகையை, நன்ருக அணுவுமின்றி யொழித்து, சமுசாரமின்றி மாணுகி சர்வபயங்களின் அநாஸ்பதமாய பூர்ணுனந்தாத்மா வாகவே சுகித்திருத்தி, உற்றுநோக்கின், தேகாசம்பாவனையானது அகங்காரத்திற்கா, அல்லது மனத்திற்கா, அல்லது பதார்த்த வருக்கத்திற்கா ? அவற்றுள் ஆதிய இரண்டும் பிரமாண வேத்தியங்கள் அல்லனவென அசத்துருவங்களாம், பதார்த்தங்களோ அத்தியந்தஞ் சடங்களாம், ஆகவே அபிமான யோக்கியங்களாகாவாம்; எனவே அதுவிடய மற்றதும் ஆசிரயமற்றதும் ஆம் என்க. அகங்காரம்வாளாமயல்; மனமோகானனீர், பொருட்குழுவோஜடம் எதற்ககங்கார பாவனையாதலோ, ஹே சித்தமே ! யீதெல்லாம் நின்மயலே; நீயசத்தாக இருந்தும் உன்னையான் சத்தாக நினைந்ததே பேரபராதம் அன்றோ, அதனை யகற்றிக் கொள்வான் மனமாகிய நின்னையேயழிப்பேன் எனல்:—மனமே யென்பதாதி, சங்கற்பபாத பத்தையும் திருஷ்ணைலதையையும் உடைய மனோவனத்தைச் சேதித்து விஸ்தாரமாகிய பூமியைப்பெற்று இட்டப்படி விளையாடி விநோதிப்பேன்.

(சு.) விடயஜந்நிய விடரூபமான விடூசிகையினையும், நானென்னும் வாதனையினையும், இஷ்டவஸ்துத் தியாகரூபமான மந்திரயோகத்தால், மாசறவிட்டு மறுஜன்மம்போய், சம்சாரநீங்கி, அச்சமெல்லாந் தீர்விடமாய், பகவானுவாய், ஸ்ரீஉத்தாலகர்:—நெடும்பூமியிலே = சிதாகாச ரூபத்திலே, சுகமாய் விநோதஞ் செய்கிறேன். (37)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தோலிரத்தம் எலும் பிறைச்சி சுக்கிலமேதை மச்சையொன்ருய்த் தூலிகரித்திவ் வுடம்பாகும்பொருள், மனங்கழிந்தவழிகழிகசெழிக யாதொருகோது மோதாதாம், தேகமுளதாமாயின் துக்கமும் ஏனுண்டாக மாட்டாதெனின், தற்சம்பந்த ஹேதுவாய மனத்தின் நாசத்தானே சம்பந்தமேயிலதாம், ஆகவே சேய்மையதாந் துக்க அடைவு, அறியாமை முதலிய எவையுமேயிலவாம், ஆன்மாவின்மாட்டுமனம் புலன் வாதனைகட்கு வேலையேயிலதாம், ஆகலின்யான் கிருதகிருத்தியன், உத்தமகுணங்களாகிய பாங்கிமார்களே பணியாளர் எனல்:—வேண்டி, ஆவரணம் என்பன.

வேண்டியவா விளையாடித் தற்பதத்தை மேவினன்கே வலமானேன் வெற்றியுற்றே, னீண்டுஉயர் நிருவாண மானேன்செய்வ திலதானேன் பிறிவற்றேனிடப்வேறற்றே, னீண்டதெளி யுடைமையொளியுடைமையுண்மை நிகழ்வுடைமை யறிவுடைமை நீங்காமெய்ம்மை, மாண்டசுக முடைமையுப சாந்தநீர்மை மகிழ்வுடைமை நிறைவுடைமை மகிமைபான்மை.

ஆவரண மில்லாமை யுதாரத்தன்மை யழியாத தேசுடைமை யகண்டநீர்மை, யாவதுந்தா னுமுறைமை யச்சமின்மை யேகமாந்தன்மைமன மெழுந்தோடமை, யோவலிலா துடனுறையிக் குணங்க ளென்னு முத்தமிகள் சுமங்கலிக ளொப்பிலாதார், பாவனையொன் றுஞ்சொரூப மடைந்தேற்கென் றும் பன்னியரா யுளங்கவரும் பாவைமாரே.

(ப - ரை.) வேண்டியவா விளையாடி = இஷ்டப்படி விநோதித்து, தற்பதத்தைமேவினன் = பரமபதத்தை யடைந்தனன், கேவலமானேன் = தூயவனுயினேன், வெற்றியுற்றேன் = ஜயமுள்ளவனுயினேன், ஈண்டு உயர்நிருவாண மானேன் = இங்குமேன்மைதங்கிய சுகரூபமாயினேன், செய்வதிலதானேன் = கிருதகிருத்தியனுனேன், பிறிவற்றேன் = அங்கிசமற்றேன், இடம் வேறற்றேன் = இச்சையொன்று மின்மையின் நிராஸ்பதமாயினேன், நீண்ட தெளிவுடைமை = நல்ல சொச்சத்தன்மை, ஒளியுடைமை = ஊர்ஜிதத்தன்மை, உண்மை = சத்தை, நிகழ்வுடைமை = ஹிருத்யதை, அறிவுடைமை = ஞதை, நீங்காமெய்ம்மை = சத்தியத்தகைமை, மாண்ட சுகமுடைமை = பேராநந்தித் தன்மை, உபசாந்த நீர்மை = உபசமமுடைமை, மகிழ்வுடைமை = சந்தோஷமுடைமை, நிறைவுடைமை = பூரணதை, மகிமை = பெருமை, பான்மை = ஒருபடித்தா யிருக்குந்தன்மை.

ஆவரணமில்லாமை = மறைப்பின்மை, உதாரத்தன்மை = லோபமில்லாமை, அழியாததேசுடைமை = கெடாத பிரகாச முடைமை, அகண்டநீர்மை = கண்டிதமில்லாத தகைமை; இயாவதுந்தானு முறைமை=எல்லாந் தானுயிருக்குந் தன்மை, அச்சமின்மை= பயமில்லாமை, ஏகமாந்தன்மை = ஏகதை = ஒருமை, மனமெழுந்தோடாமை =உள்ளம் ஒருப்பட்டிருத்தல், ஓவலிலாது = மாறுபடாமல், உடனுறை = கூடவேநிகழும், இக்குணங்கள் என்னும் = இந்தக் கல்யாணகுணங்கள் என்று சொல்லப்பட்ட, உத்தமிகள் சுமங்கலிகள் = மேன்மை யுடையவர்கள் மங்களத்தோடு கூடியவர்கள், ஒப்பிலாதார் = உவமையற்றவர்கள், பாவனையொன்றுஞ் சொரூபம் அடைந்தேற்கு = ஏகான்மாவின் கண்ணே சித்தத்தை நிறுவிய எனக்கு, என்றும் = எப்போதும், பன்னியராய் = காந்தைகளாய், உளங்கவரும் பாவைமாரே = ஹிருதய வல்லபைகள் ஆவர்கள்.

(ஸ்ரீ - வீர.) தற்பதத்தை யடைந்தவனுயினேன், தூயவனுய்க் கேவலமாயிருக்கின்றேன், எதனினும் வெற்றிபெற்றேன், நிர்வாண மாகியுள்ளேன், நிரம்சமாயிருக்கின்றேன், சேட்டையற்றவ னுயினேன். வேட்கையற்றவ னுயினேன்; தனிப்படுத்திய என்னைய்க்கு எட்டிப்பிகளுடன் இணக்கமில்லாத தேய்ப்ப, இப்போது மனேதேகேந்திரியாதிகளுடன் அசம்பத்தனுயினேன்; மேலும், பிராரப்த சேஷபோக லீலையானே இச்சுவாத்மரூப பதவாத்தினின்றும் விவகாராபாசத்தில். அசைபவனுய்ப் பூர்வவாசனையாற்ற னிக்கப்பெற்ற மதியினனுய எனக்கு இத்தேகேந்திரியாதி சுபபரிவாரமாம்; பரிஜனம்போல விநோத ஏதுவாம் என்றபடி. அந்தலீலையின் கண்ணே சொச்சதை முதலிய குணசம்பத்துக்கள் தனது ஹிருதய வல்லபைகளாகிய காந்தைகளாவார்கள் என்று நிரூபித்தல்:—தெளிவுடைமை முதலன மிகத்தெளிவுடைமை, பூர்ணகாமதை, சத்தை, ஹிருத்யதை, சத்தியதை, விதிதாத்மதை, ஆநந்திதை, உபசமிதை, எப்போதுமேமிருதுபாஷிதை, பூர்ணதை, உதாரதை = நிர்லோபதை, பாதிக்கப்படாத வியற்கையுடைமை, காந்திமத்தகைமை, ஏகதானதை, சர்வைகதை, நிர்ப்பயத்தன்மை, க்ஷீணவிருமை விகற்பதை, என்னுமிவர்கள் யாவர்களுமே, ஏகாத்மமதியையுடைய எனது, அப்யுதய சாலினிகளாய் எப்போதுஞ் சமை

களாய் சுவஸ்தைகளாய், சுந்தரிகளாய் சுபகைகளாய்; மங்கலைகளாய், திருப்திகாரணிக ளாய், ஹிருதய வல்லபைகளாயுள்ள காந்தைகளாவர்கள் நித்தியம்.

(ச.) யாதினாற் கேவலமானேன். நிர்மநஸ்க மாதலினென்க, அதனால் தற்பதத்தை = பிரமபாவத்தை, மேவினன், அதனாலுந் தாபத்திரய சாந்தியால் நிர்வாணமானேன்; பரி பூரணமாதலின் பிரிவற்றேன்; நிரம்சமானேன் அதனாலும் ஆப்தகாமனாதலின் இஷ்டமற் றேன், நிரீப்சிதனானேன், அதனாற்செய்வ திலதானேன், நிஷ்கிரியனானேனதனால் வெற்றி யுற்றேன் என்பது சம்பந்தம். தெளிவுடைமை = மநோமலராகித்யம், ஒளியுடைமை = தைஜஸியாபாவம், உண்மை = சத்ரூபத்துவம், நிகழுடைமை = சர்வப்பிரியத்துவம், அறிவுடைமை = ஞானித்துவம், நீங்காமெய்ம்மை = அபாத்தியத்துவம், மாண்டசுக முடைமை = ஆனந்தரூபத்துவம், உபசாந்த நீர்மை = நிர்விகாரதை, மகிழுடைமை = புண்ணிய கருமங்களிற் பிரீதி, நிறைவுடைமை = வியாபகத்துவம், மகிமைபான்மை என் பதுமது. ஆவரணமில்லாமை = வாஸ்தவமுடைமை, உதாரத்தன்மை = உற்கிருஷ்டதை அழியாத தேசுடைமை = பிரமசிந்தையைத் தெரிவிக்கும் முககாந்தி, அகண்டநேர்மை = சமதை, யாவதுந்தானாமுறைமை = சர்வான்மகத்துவம், அச்சமின்மை; விசிரம்பம், ஏக மாந்தகைமை = பேதாபாவம், மனமெழுந்தோடாமை = துவிதவிகற்பாபாவம், தெளி வுடைமை சதோதிதை முதலியகாந்தைகள், உளங்கவரும் பாவைமார் = எனது இருதய வல்லபைகளாம், சமாதியின் றெழுந்திசையில் இருதயத்தை விநோதஞ் செய்வாரென்பது பொருள். (38-39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாறு நிர்ணயித்து நிர்விகற்ப சமாதியின்பொருட்டு ஓங் காரத்தை யுச்சரித்தல்:—தேங்காதென்பது.

தேங்காது தன்வசமாய் விரிந்தபுந்திச் செயலாலே யிவ்வாறு திறத்திலெண் ணிப், பூங்காவி சிறிதலர்ந்தாற் போலப்பாதிப் புரைவிழியோன் புண்டரீகா தனத்திற்புல்கி, யோங்கார மேனோக்குந் தொனியதான வுத்தமனீண் முழக்கா லேயுச்சரித்தான், பாங்காக நாவறையு மணியினூடு பயின்றுதடை யற்றோசை படர்வதேபோல்.

(ப - ரை.) தேங்காது = நிலைபெறாது, தன்வசமாய் = முன்னரிஷ்டப்படி, விரிந்த = விசாலித்த, புந்திச்செயலாலே = விசுத்தபுத்தியின் விருத்திகளாலே, இவ்வாறு திறத்தி லெண்ணி = கூறியவகையே கிரமாக நிச்சயித்து, பூங்காவி சிறிதலர்ந்தாற்போல = குவளை மலர் கொஞ்சம் விரிந்தாற்போல, பாதிப் புரைவிழியோன் = அர்த்தந்திறந்த கண்களை யுடையவனாகி, புண்டரீகாதனத்திற் புல்கி = பதுமாசனத்தின்மாட்டுத் திரம்பெற்றவனாகி, ஓங்காரம் மேல்நோக்கும் தொனியதான உத்தமன் = பிரணவத்தை மேலே செல்லும்படி யாகத் தொனிக்கும் உத்தமமாகிய அம்முனிவன், நீள்முழக்காலே = உச்சசுரத்தாலே, உச்சரித்தான் = தொனித்தான், பாங்காக நாவறையுமணியின் ஊடுபயின்று = நலமுடைத் தாகநாவடிக்கும் கண்டாமணியின் சப்தமானது அதன்கண்ணேயே முழங்கி, தடையற்று = பிரதிபந்தகமின்றி, ஓசை = அச்சப்தமானது, படர்வதேபோல் = விசாலிப்பதேபோலும்.

(ஸ்ரீ - வீர.) அம்முனிவன், விசுத்தமாய் அக்ஷுத்திரமா யிராநின்ற மதியினாலே வழங் கியவண்ணம் நிண்ணயித்து, பத்தபதுமாசனனாகி அர்த்தோன்மீலித லோசனனாகி யமர்ந் தனன். அவ்வுத்தாலக முனிவன் எதனாலோங்காரத்தை யுச்சரித்தனனோ அதனால் பரம புதத்தை யடைந்தவனே யாயினன், அப்போது ஓம் என்னும் இவ்வக்ஷரம் பரப்பிரஹ்மத்தி

னது அபிதானத் தன்மையானும் பிரதீகத் தன்மையானும் பரப்பிரஹ்மமே எனத்துணிந்து உரத்தசுரத்தினலே, மேலோங்கிவளருந் தொனியினலே, ஓங்காரத்தை யுச்சரித்தவனாயி னன்; திருஷ்டாந்தம்:—நன்ருக அடிக்கும் நீண்டுதொங்கும் நாவாகாரலோகத்தையுடைய கண்டையின் குண்டத்தின் = மூகாகாசத்தின், நாதம்போலு மென்பதாம்.

(ச.) மணியைப்போல் = ஓங்காரத்தை மேனேக்குந் தொனியதான = பிரமாந்திர வியாப்தநாதமாக, உச்சரித்தான். மூலம்:—நன்ருகத் தாடனம்புரியும் மத்தியிற்றொங் கும் தண்டத்தையுடையதாய், அதனுனே எங்கும்பரவும் அரவத்தை யுடையதாய், இலங் கும் அத்தகைய கண்டாகுண்டம் போலும் = குண்டம்போல மண்டலாகார கண்டா வென்னத்தாரசுரமேய ஓங்காரத்தை மேற்செல்லுந் தொனியுடையதாகப் பிரஹ்மரந்திர வியாப்த நாதமதாக உச்சாரணஞ் செய்தான். (40)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எத்துணைக்காலம்வரை யோங்காரத்தை யுச்சரித்தான் எனின் உரைத்தல்:—சான்றவென்பது.

சான்றபிர ணவமோது மவன்றன்சித்துத் தற்பதத்தை நோக்குதலுந் தனியோங்கார, மூன்றறவெவ் வளவுமே லுற்றுநின்ற துயர்ந்தகன்று விமலமா முணர்வின் கண்ணே, மூன்றரைமாத் திரையுடைய பிரணவத்தின் முற்கூறு வெளியாக முழங்கியெங்கு, மான்றபிரா ணங்கடொனி கிளப்புமெய்யி லழகி தாய்க் கிளர்ந்தோங்கி யதிருமெல்லை.

(ப - ரை.) சான்ற பிரணவம் ஓதும் = மந்திரராஜாவாகிய ஓங்காரத்தை யுச்சரிக்கும், அவன்றன் சித்து = அவனுடைய அறிவானது, தற்பதத்தை நோக்குதலும் = பரமபத தத்துவத்தை நாடிநிற்றலும், தனியோங்காரம் = ஒப்பில்லாத பிரணவம், ஊன்றறவெவ் வளவு மேலுற்று = ஊன்றுதலின்றி மேலோங்கிய அளவே, உயர்ந்து அகன்று விமலமாம் உணர்வின் கண்ணே =உன்னதமாய் விசாலமாய் நிருமல ஆத்மாவின்கண்ணே, நின்றது= நிலவியது, மூன்றரைமாத்திரை யுடைய = மூன்றரை மாத்திரையுடன் கூடிநிகழும் பிரண வத்தின் = ஓங்காரத்தின், முற்கூறு = பிரதமாம்சம், வெளியாக முழங்கி = ஸ்புடமாகத் தொனித்து, எங்கும் =எவ்விடத்தும், ஆன்றபிராணன்கள் = மேம்பட்ட பிராணன்கள், தொனிகிளப்பும் மெய்யில் = ஓசையெழுப்பும் தேகத்தில், அழகிதாய்க் கிளர்ந்தோங்கிய திருமெல்லை = கவின்பெறவிரிந்து வியாபித்து அதிரும்போது.

(ஸ்ரீ - வீர.) ஓங்காரத்தை மீளமீளவும் உச்சரியாநின்ற அவ்வுத்தாலகனது மூலாதாரந் தொடங்கிப் பிரமரந்திர பரியந்தம், பிரசித்தமான இவ்வோங்காரத்தினது மூர்த்தத்திருந்து அர்த்தமாத்திரை யுபரமமேலபிவியக்தமாய விஸ்தார அமல ஆன்மாவாய பிரஹ்மத்தின் கண், ஓங்காராகார விருத்தியுபகிதஞ் சைதன்யமும், தத்துவமாய கூடஸ்த ஜீவசைதன்ய மும் எதுகாலபரியந்தம் அகண்டப் பிரஹ்மசைதன்ய உன்முகமாக நிகழலுறுவவாமோ அதுகால பரியந்தம் ஓங்காரத்தை யுச்சரித்தான். ஆண்டு நிர்விகற்ப சமாதிப்பிரதிஷ்டை யின் யோக்கியதைச் சித்தியின்பொருட்டு முதலில் அந்தப் பிரணவத்தானே தூலதேகத் திற்கு காய்தல் தீய்தல் கடுஞ்சல் வாடலாடல் திவ்யதேகாந்தர நிர்மாணுதியும் சாம்பராதல் ஓட முதலிலதன் பாவனையானே, நிகழ்ந்து உளதாமெனல்:—மூன்றரை யென்பதாதி. அர்த்தமாத்திரையோடு கூடிய அகார உகார மகாரப்பெயரிய ஆத்மமாத்திரைகளைத் தன் னவயவங்களாகவுடைய ஓங்காரத்தினது பிரதம அங்கிச உதாத்த அகாரபாகம் புடாரவ மாய், உச்சைசுவரத்தானே அபிவியக்ததார பாவமுறவே, அதனுனே நன்ருகவெளியே

கினம்பும் முயல்வுடையனவாய பிராணன்களானே மூலாதாரந் தொடங்கி ஓட்டப்புடம் வரைச்சப்தித தேகமுடையவ னுகியபோது; ரேசகப்பெயரிய பிராண நிட்கிரமணக் கிரமம் காயமுழுவதையும் ரேசனத்தானே காயவைத்தது; ஸ்ரீ அகத்தியர் குடித்தநீர் முடித் தகடல்போல். (41)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ரேசகமுறை தெரித்துவா, ரேசித அந்தப் பிராணபவனன் யாண்டு இருப்பதாகுமென, உரைத்து, அஞ்ஞான்று பாவனையானே யாதுநிகழ்ந்தது அத னையோதல்:—இன்னென்பது.

இன்னுயிரைப் புறத்தகற்ற வல்லதான விரேசகப்பேர்க் கிரமந்தா னியாக் கைமுற்றுங், கொன்னுறுபா ழாக்கினதா னிறைந்துயர்ந்த கும்பமுனி குரை கடலைக் குறைத்ததேபோற், பின்னமில்சிற் சுவைநிறைந்த வாகாசத்திற் பிராண னிறைந்துளவிதயப் பெருந்தீமண்டி, யன்னவுடன் முழுதுமெரித் துளதோங் காரத் தாதியாங் கிரமத்தி லவத்தையீதே.

(ப - ரை.) இன்னுயிரைப் புறத்தகற்ற = இனியபிராணனைப் பாகியத்தகற்ற, வல்ல தான் = ஆற்றலையுடைய, இரேசகப்பேர்க் கிரமந்தான்=இரேசகமெனப் பெயரிய பிராண நிஷ்கிரணக் கிரமமானது, இயாக்கைமுற்றும் கொன்னுறு பாழாக்கினது = சரீரமுழுவதை யும் வாயுவில்லாம லுறையுமாறு சோஷணஞ்செய்தது, நிறைந்துயர்ந்த கும்பமுனி = சகல சத்தியும் பூரணமாய்ப் பெருந்தவத்தினலே மேம்பட்ட ஸ்ரீ அகத்தியமுனிவர், குரைகட லைக் குறைத்ததேபோல் = சப்தியாநின்ற சமுத்திரத்தை ஆசமன மாத்திரத்தானே சலமே யில்லாததாகச் செய்ததேபோல, பின்னமில் = பேதமில்லாத, சிற்சுவை நிறைந்த ஆகாசத் தில் = சித்தாகசம் வியாபித்த அம்பரத்தில், பிராணன் நிறைந்துள = பிராணபவனன் நிலைபெற்றது, இதயப் பெருந்தீமண்டி = இருதய அக்கினியானது மிகுந்தசுவாலை வீசுவ தாகி, அன்ன உடன் முழுதுமெரித்துளது = அன்னமயமாய அந்தத்தேக முழுவதையும் தகித்தது, ஓங்காரத்தாதியாம் கிரமத்தில் அவத்தையீதே = பிரணவப் பிரதமமுறையில் இவ்வவத்தை யித்தகையதேயாம். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) முற்பாதியுரை தொடர்புபற்றி முன்சேர்க்கப் பெற்றது. பிரஹ்மபாவனுபி வியக்த ஹார்த்தரசத்தானே ஆபூரிதமாய பாகிய ஆகாயத்தில், பிராணவாயுவானது நிலை பெற்றது; தேகத்தைத் தியாகஞ்செய்ததாய் நீடத்தைப் பரித்தியாகஞ் செய்தககம் ககனத் திலேபோலு மிருந்தது. பிராணன்களின் நிஷ்கிரமண சங்கர்ஷணத்தானே இருதயத்தில் பாவனையாலுண்டாய வன்னியானது, சொலிக்காநின்ற பெருஞ்சுவாலை யுடையதாய், உற் பாதபவன உற்பூதமாய் அரண்யத்திலெழுந்த அக்கினியானது காய்ந்ததுருமத்தைத் தகிப் பதேபோல வபுமுழுவதையும் தீய்த்தது. பிரணவத்தினது முன்மொழிந்த பிரதம அம்சத் தில் இவ்வவத்தை இத்தகைத்தாய் வேண்டிய அளவு நிகழ்ந்தது.

(ச.) இக்கவிக்கு முற்கவியோடு அந்நுவயம், பிரணவமோதும் = ஓமென்றுச்சரிக்கும், அவன்றன் = அவ்வுத்தாலகனது, சித்துத்தற் பதத்தை =சொரூபசைதன்யத்தை, நோக்கு தலும், ஓங்காராநுசாரியாக, ஓங்காரமெவ்வளவு, ஓங்கா ராநுவிருத்திபரியந்தம், மேலுற்று= ஊர்த்துவமுகமாய், விமலமாமுணர்வின் கண்ணே, நிர்மலான்மாவில், உயர்ந்தகன்று = வியாபதமாய், நின்றது, ஆயின் மூன்றரை மாத்திரையுடைய பிரணவத்தின் = ஓங்காரத்தி னது, எங்குமான்ற = ஏகப்பிரகாரமாய்ச் சலியாத, பிராணங்கள் = பிராணவாயுவினை யுடைய, முற்கூறு = அகாரரூபமான பிரதமபாகம், வெளியாகமுழங்கி = வியத்தத்தொ னியாய், மெய்யில் = சரீரத்தில், அதிருமெல்லை, ரேசகப்பேர், உயிரைப் புறத்தகற்றவல்ல

தான் கிரமந்தான் = பிராணநிஷ்கிரமணக் கிரமந்தான், ஜலத்தைப் பானஞ்செய்த அகஸ்தியர் சாகரத்தைப்போல், யாக்கைமுற்றும் பாழாக்கினது, பிரணவத்தினது, இம்மூன்றமை மாத்திரையினியல்பும் அதர்வண சிகையென்னும் உபநிடதத்திற் சதுஷ்பாதிதம் அக்ஷரம் பரம்பிரமமென்பன முதலியவற்றால் விரித்துரைக்கப் பட்டிருக்கின்றது. வர்ணத்திரயான்மகங்களான இவையே ரேசகபூரக கும்பகமென்னும் யாக்ஞவற்கிய வசனத்தினால் ரேசகாதிகளுக்கு இப்பிரணவாம்சமான அகார உகாரமகார ரூபமாகப் பிரவிர்த்தி சொல்லப்பட்டிருக்கிறதென்று அநுசந்தானஞ்செய்க; சிற்சுவை = சைதந்நியத்தால், நிறைந்தவாகாசத்திற் பிராணனுறைந்துளது. இகரேசகத்தா விரேசிக்கப்பட்ட பிராணன் அம்பரத்தில் நிருத்தமாய் அப்படியே இருந்ததென்பது பொருள்; இதயப்பெருந்தீ = இருதயாக்கினியும், ரேசகத்தால், மண்டி = சொலிக்குஞ் சுவாலையுள்ளதாய், அன்னவுடல் = பாவரூபமான அவ்வபுவினை, எரித்துளது, ஈது ஓங்காரத்து பிராணாயாமத்தினது ஆதியாங்கிரமத்தினவத்தை இரேசகரூபமாம். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இஃதடயோகத்தால் நிகழ்ந்ததன்று என்றுரைத்துக் கும்பகத்தைக்கூறல்:—அவ்வவத்தை யென்பது.

அவ்வவத்தை வேண்டளவு நிகழ்ந்ததன்றே யடையோகத் தாலல்ல வடையோகந்தான் வெவ்விடர்நல் குவதன்றோ வதற்குப்பின்பு வியனோங்கா ரத்தினது வேற்றுக்கூறு, தவ்வலறச் சமநிலையா மவசரத்திற் சலனமிலாக் கும்பகப்பேர் தரிக்கப்பட்ட, வெவ்வமறு கிரமமுள தானதன்றே யியம்பியவிப் பிராணங்க ளெல்லாற்றிற்கும்.

(பு - ரை.) அவ்வவத்தை வேண்டளவு நிகழ்ந்ததன்றே = மேற்புகன்ற அவஸ்தையானது வேண்டிய அளவும் உண்டாயது அப்போதே. அடயோகத்தாலல்ல = அது ஹடயோகப்பயிற்சியினாலல்லவாம், அடயோகந்தான் = ஹடயோகமோ, வெவ்விடர் நல்குவதன்றோ = குரூரமான துக்கத்தைக் கொடுப்பதன்றோ, அதற்குப்பின்பு வியனோங்காரத்தினது = அதன்பின்னர் அற்புதமான பிரணவத்தினது, வேற்றுக்கூறு = அயலங்கிசம், தவ்வலறச் சமநிலையாம் அவசரத்தில் = தாவுதலின்றிச் சமஸ்திதியாம் அவசரத்தில் = சமயத்தில், சலனமிலாக்கும் பகப்பேர் தரிக்கப்பட்ட = நிட்கம்ப கும்பகமெனப் பெயரிய, எவ்வமறுகிரமம் = குற்றமற்ற முறையானது, இயம்பிய இப்பிராணன்கள் எல்லாற்றிற்கும் = கூறியபிராணன்கள் யாவற்றிற்கும், உளதானதன்றே = உண்டாய தப்போதே; அல்லது அன்று ஏ அசைகள்.

(ஸ்ரீ - வீர.) ஆனால் இவ்வியாவுமே பாவனையானே நிகழ்ந்ததாம் ஹடத்தினாலே யல்லவாம், அஃதென்னைகொலோ வெனின், ஆண்டுக்கூறல்: — அடயோகந்தான் என்பது ஹடயோகமோ துயரந்தருவதாம். அடத்தாற் பிராணன்களினது நிர்க்கமனமாயின் மூர்ச்சைமரணாதி வழக்காதலின் என்பது கருத்தாம். அதன்பின்னர், இதராம்சமாகிய உகாரபாகத்தினது அநுதாத்த மந்திரோச்சாரண அவசரத்தில், ஓங்காரத்தின் ஒப்பாயநிலை நிகழ்வுற்றிடவே, அசைவற்ற கும்பகமெனப் பெயரியகிரமம் பிராணன்கட் குண்டாயது, கும்பம்பும் அம்புபோல நிச்சலபூர்ணத் தன்மையானே கும்பகநாமக்கிரமமாம்.

(ச.) அவ்வவத்தை = அந்தரேசக ரூபமான வவஸ்தை, வேண்டளவும் = இச்சையினது தொடர்ச்சி எவ்வளவவ்வளவே. நிகழ்ந்தது, அன்று ஏ இரண்டுமசை; அடயோகத்தால் = புலாத்காரத்தினாலே, அல்ல, என்னெனில், அடயோகந்தான் வெவ்விடர் நல்குவ

தன்றே = அடயோகம் என்பது, மகாமுத்திராதிகளால் பெலத்தினுல் பிராணநிரோத த்துவாரமாக மனோநிரோதமாம்: அதற்குப்பின்பு = பிராணனுக்குச் சிற்சுவை நிறைந்த வாகாசத்தில் நிரோதமான பின்பு, சமநிலையாம் = சமமான சித்தத்திநியைத் தராநின்ற, ஓங்காரத்தினது வேற்றுக் கூற்றவசரத்தில், = உகாரரூபமான துவிதீயாம் சத்தினது மூர்த்தித்தியாணு வசரத்தில், ஒமென்றுச்சரிக்கும் அவ்வுத்தாலகனுக்குச் சலனமிலா = நிட்கம்பமான, கும்பகம் = கும்பகரூபமான, பிராணங்களெல்லாத்திற்குங் கிரமமூளதானது, முன்பு சிற்சுவை நிறைந்த ஆகாயத்தி னிருத்தமான பிராணவாயுவிற்கு அவ்வம்பரத்திலே, அந்தப் பிரயத்தின வசத்தினுற் கும்பகரூபக்கிரம மாயிற்றென்பது பொருள். இவ்விடத்தும் பிரணவத்திற்கு அகாராதி வர்ணத்திரயான்மகமூளதாதலின் அவைகளுக்கும் பிரஹ்மாவிஷ்ணுருத்திரரூப மூளதாதலின் அவ்வம் மூர்த்தித்தியானம் முன்பியற்றிப் பின்பு பிரணவஜபத்தா விரேசகாதிப் பிராணுயாமப் பிரகாரஞ் சொல்லப்பட்டதென் றனுசந்தானஞ் செய்க. (43)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறிய கும்பகமெனப் பெயரியதைத் தெளிவித்தல்:—புறத்தென்பது.

(ச-அ-கை.) அக்கும்பகத்தினது சலனமின்மை யினையே சாற்றல்:—புறத்தென்பது.

புறத்தகத்துங் கீழ்மேறிக் காகாசத்திற் புரிந்தசையாப் பிராணங்கள் பூரணமாகித், துறத்துருத்தி யிடைதடைப்பட் டன்போனின்று தோன்றிமுத லேயுடலைச் சுட்டவங்கி, நிறத்தவிடி போற்கணத்தி லவிந்ததன்றே நீகாரவெளி றெனவெ ண்ணீறுயங்க, முறத்தெரிந்த தாலதற்கே யுடலென்பெல்லா மொழுங் காகத் தோன்றிநரம் புடனேநின்ற.

(ப - ரை.) புறத்து அகத்தும் கீழ்மேல்திக்கு ஆகாசத்தில் = வெளியில் உள்ளில் கீழில்மேலில் திசைகளோடு கூடிய ஆகாயத்தில், புரிந்தசையாப் பிராணன்கள் பூரணமாகி = கும்பிக்கப்பெற்றுச் சலனமில்லாமற் பிராணன்கள் நிரம்பிநின்று, துறத்துருத்தி யிடைதடைப் பட்டனபோல் நின்றுதோன்றி = பொருத்தித் தோற்பையின் கண்ணே யடைக்கப்பெற்ற காற்றுனது பிரதிபந்தகப்பட்டு நிற்பதேபோலத் திதியாகிப்பிரதீதியாய், முதலேயுடலைச் சுட்டவங்கி = நின்றபோதே தேகமாகிய புரத்தைத்தகஞ் செய்தவன்னியானது, நிறத்தவிடிபோற் கணத்திலவிந்ததன்றே = கனத்த அசனியேயென்னக் கணப்போதில் உபசாந்தியை யடைந்ததப்போதே, நீகாரவெளிறென வெண்ணீறுய் = பனிப் பாண்டுரம்போல வெள்ளியபஸ்மமாய், அங்கம் உறத்தெரிந்ததால் = தேகம் அடைந்ததாகக்காணப் பெற்றதனுல், அதற்கே = அப்பஸ்ம சம்பந்தமாகவே, உடலென்பெல்லாம் ஒழுங்காகத்தோன்றி நரம்புடனே நின்ற = சரீர அத்திகளியாவும் கிரமமாகப் பிரதீதியாகி நாடியோடு கூடநின்றன.

(ஸ்ரீ - வீர,) வெளியிலும் உள்ளிலும் கீழிலும் மேலிலும் விரிவுற்ற திசைதம்மிலும், அந்தப் பிராணன்கள் நனிகலங்காமனண்ணி நின்று, நீரானது நிரம்பித் தேங்கியசையாமல் நின்றதேபோலும், ஆருயிரப் பாடப்படிச் செய்யுண் மொழிபெயர்ப்பு, தேகபுரத்தைத் தக்தஞ்செய்த தீயானது, நொடிப்போதில் அசனிபோலும் = வித்யுத் சம்பந்தமான அக்கினிபோலும், சாந்தியை யடைந்தது: பனியென வெளுத்துச் சரீரசம்பந்தமான நீறு வெள்ளையாகக் காணப்பெற்றது.

(ச.) புறத்து = சரீரத்திற்புறத்து, அகத்து = சரீரத்தினகத்து, கீழ்மேலென்பது, எந்தவாகாச தேசத்திற் பிராணநிரோதமோ அதன் கீழ்மேலென்பது பொருள். புரண மாகி = கும்பகமாய், முதலேயுடலைச் சுட்டவங்கி கணத்தினிடிபோ லவிந்தது, அதற்கே, அவ்வெண்ணீற்றில், கர்ப்பூரப் பாயறன்னிற் சுகமாய்த் துயில்வனபோலுட லென்பெல்லாந் தோன்றி, திருசியமாய், அத்தன்மையான அங்கம் = சரீரம் வெண்ணீருய்த் தெரிந்த தென்று பிற்கவியோ டந்நுவயஞ்செய்க. கும்பகத்தில் நின்ற நிலையானது தோற்பையிற் காற்றுக் கட்டுண்டதேபோலு மென்றறிக. (44)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரணவத்தின் அபரக்கிரமத்தில் வாயுநிகழ்ந்ததை நிகழ்த்தல்:— சுகவென்பது.

சுகமாய கருப்பூரப் பாயறன்னிற் றுயில்வதுபோ லெலும்புநிரை தோன் றிற்றன்றே, மிகமோது பவனத்தா லந்தநீறு மிசைந்தெழுந்து கணப் போதில் விசும்பைச் சுற்றித், திகழ்வான சரற்காலந் தன்னின்மேகஞ் செறிபனிபோ லோரிடத்திற் சென்றுசேர்ந்த, விகலாத விவ்வவத்தை வேண்டுமட்டு மியலோங் காரத்திரண்டாங் கிரமத்தெய்த.

(ப - ரை.) சுகமாய = சுகோசிதமாய, கருப்பூரப் பாயல்தன்னில் = கருப்பூரச்சய் யையில், துயில்வதுபோல் = நித்திரை செய்வதுபோல, எலும்புநிரை = என்பின்பந்தி, தோன்றிற்றன்றே = குறிக்கப் பெற்றதேயாம், மிகமோது பவனத்தால் = அதிகமாகச் சரிக்குங் காற்றினலே, அந்தநீறு = அப்பஸ்மமானது, மிசைந்தெழுந்து = விரைவில்மேற் கிளம்பி, கணப்போதில் = நொடிப்போதில், விசும்பைச்சுற்றி = விண்ணைச்சுற்றி, திகழ் வான = விளங்காநின்ற, சரற்காலந்தன்னில் = சரதிருதுவில், மேகம் செறிபனிபோல்= மேகஞ்சேர்ந்த பனியைப்போல, ஓரிடத்திற்சென்று சேர்ந்த = ஒருபக்கத்திற் போயுற் றது, இகலாத இவ்வவத்தை = பகையாத இந்த அவஸ்தை, வேண்டுமட்டும் = அவாவிய அளவும், இயல் ஓங்காரத் திரண்டாங் கிரமத்தெய்த = பிரணவத்தின் அங்கமானது விதீயக்கிரமத் துற்றிடவே.

(ஸ்ரீ - வீர.) எவ்வவத்தையின் கண்ணே சரீர அஸ்திகள் சுகோசிதமாகக் கர்ப்பூர தூளிகளினலே செய்யப்பெற்ற சய்யையின்பாற் றூங்குகின்றனவே போலும் அசைவற்றன வாய் வெண்மையனவாய்ப் பாவனுதிருஷ்டியால் இலக்ஷிக்கப் பெறுகின்றன வாமோ; வீசாநின்ற காற்றினலே மேலேகொணரப் பெற்ற என்புசகிதமாய அந்தப் பஸ்மத்தை மேலேகாலுஞ் சண்டபவனன், முக்கண்ணுடைய உருத்திரனது விரதமாகிய அஸ்திபஸ்ம தாரணம் உடையவன்போல, அத்தியந்தம் தவத்தால் இளைத்தவனைப்போல் அலக்ஷியமா கிய தனது தேகத்தில் உத்தூளனஞ் செய்து கொண்டனன். அச்சண்ட பவனனலே பூசிவீசப்பெற்றுக் கணத்தே விண்ணின் மறைக்கப்பெற்றுற்ற அந்த அஸ்திமத்பஸ்மமானது சரத்காலத்தில் அப்பிரப்பனி போலும் எங்கேயோ போய்விட்டது. இவ்வகையாக இவ்வ வத்தையானது வேண்டிய அளவு பிரணவத்தினது மத்தியமபாக சாத்தியகும்பகப் பெய ரிய கிரமத்தில் நிகழ்ந்தது.

(ச.) அந்தநீறு = அவ்வெலும்புடைய நீறு, மிக மோதுபவனத்தால் மிசைந்தெழுந்து, சரற்காலந் தன்னின் மேகஞ்செறி பனிப்போல் = உறைந்த பனிரூபமான மேகம்போல், விசும்பைச் சுற்றி, கணப்போதி லோரிடத்தே சென்றுசேர்ந்த = எங்கோசென்று சேர்ந் தது, ஓங்காரத்து = பிரணவரூபமான பிராணுயாமத்தினது, இரண்டாங் கிரமத்து = இரண்டாவதான கும்பகரூபக்கிரமத்தில், எய்த = இவ்வவஸ்தை வேண்டுமட்டுமேயாம். (45)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மூன்ருவதாய பூரகக்கிரமத்தைப் புகலல்:—அவத்தை யென்பது.

அவத்தையிது நிகழ்ந்ததட யோகத்தன்ரு லடயோகம் பேரிடரை யளிப் பதன்ரே, வவற்றினிற்பின் பிரணவத்தின் மூன்ருங்கூரு யமையுமுப சாந்திதரு மவசரத்தி, லுவப்புறுபூ ரணத்தாலே பூரகப்பே ருளகிரமம் பிராணங்கட் குண் டாயிற்றன்றே, யுவத்திரமி லாவந்த வவதரத்தி லுயிரெல்லா முணர்வினமு தத் துட்புக்க.

(ப - ரை:) அவத்தையிது நிகழ்ந்தது = இந்த அவத்தையானது பயிலப்பெற்றது, அடயோகத்தன்ருல் = ஹடயோகத்தினு லல்லவாம், அடயோகம் = ஹடயோகமானது, பேரிடரை யளிப்பதன்ரே = பெரியதுக்கத்தைத் தருவதல்லவோ, அவற்றினிற்பின் = இவையாவு நடந்த பின்னர், பிரணவத்தின் மூன்ருங் கூருயமையும் = ஓங்காரத்தினது திருதீய அம்சமாகப் பொருந்தி, உபசாந்திதரும் அவசரத்தில் = உபசாந்தியைக்கொடுக் கும் அவசரத்தில், உவப்புறு பூரணத்தாலே = மகிழ்வுறு நிறைவினுலே, பூரகப்பேருளகிர மம் பிராணங்கட்கு உண்டாயிற்று அன்றே = அப்போதே பிராணன்கட்குப் பூரகமெனப் பெயரிய கிரமம் உளதாயது, உவத்திரமிலா வந்தவவசரத்தி லுயிரெல்லாம் = யாதொரு இடருமில்லாத அச்சமயத்தில் பிராணன்களியாவும், உணர்வின் அமுதத்துட் புக்க = சேஞ மிருதமத்தியி லிருப்பன வாயின.

(ஸ்ரீ - வீர.) இவ்வவஸ்தையானது நிகழ்வுற்றதும் ஹடத்தினுலோ அல்லவாம், மற்ரே பாவனையினுலேயாம், ஹடயோகமோ துக்கத்தையே தருவதாதலின் பின்பு உபசாந்தியைத் தரத்தக்க ஓங்காரத்தினது மூன்ருவது பாக உச்சாரண அவசரத்தில், பூரணத்தானே பூரக மெனப் பெயரிய பிராணன்களின் கிரமம் உண்டாயது; ரேசக பூரககும்பகங்களில் பிரண வம் முழுவதற்குமே சாதனத்தன்மை வெளியாமெனினும், ரேசகத்தில் ஆதிபாகமே, கும்ப கத்தில் மத்தியமபாகமே, பூரகத்திற் சரமபாகமே, கண்டத்தினின்றும் வெளிப்போந்த பிராணனல் கண்டய பாகத்திற்கே அபிவியத்தியாதலின், குறுக்கிய உதடுகளினுலே உகார பாகத்திற்கே விளக்கம் எய்தலின், ஓட்டசம்புடிதமுறவே மகாரபாக அபிவியத்தி மலர்ந்த வழிமீண்டும் புகுதலுறினும் பிராணனிடத்தில் அதனது சமஸ்காரத்திற்கே அனுவர்த்தன முண்மையின் என அவ்வப்பாக அவசரவிபாகக் கூற்ருமென் றுணரத்தக்கது, இவ்வவசரத் தில் பிராணன்கள் ஜீவசித்தின் கண்ணே பாவிக்கப்பெற்ற எவ்வமிருத முளதோ அதன் மத்தியில் இருப்பனவாயினவாம்.

(ச.) அவற்றினிற்பின் = அக்கும்பகாநந்தரம், உபசாந்திதரும் = சித்தத்தினது உப சாந்தியேதுவான, பிரணவத்தின் = ஓங்காரத்தினது, மூன்ருயமையு மவதரத்தில் = மகா ரான்மகமான திரிதீயாம் சத்தினது மூர்த்தித்தியானுவசரத்தில், ஓமென் றுச்சரிக்கும் அவ்வுத்தாலகற்கு, பூரணத்தாலே ஏதுவினுலே, பூரகப் பேருளகிரமம் பிராணன்கட்குண் டாயிற்று, அந்த வவதரத்தில் = அப்பூரகா வசரத்தில், உயிரெல்லாம் = பிராணன்கள், சேதனு வமிர்தத்தினது மத்தியிலிருப்பனவாய். (46)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அமுததாரை தேகபஸ்மத்திற் சேர்ந்ததெனல்:-உகு என்பது,

உகுபனிதோய்ந் தாலொப்ப வதிசீதத்தை யுற்றபிரா ணங்களெலா மொ ழுங்கினுலே, ககனமுறு புகைதண்கா ராகுமாபோற் ககனநடு வுறமதியாய்க் கலை யின்கூட்ட, மிகவுநிறைந் தந்தமதி மண்டலத்தில் வியன்சுதைதா ரையையுயிர் கண்மேவப் பெற்ற, திகழ்விசும்பி னின்றிழிந்த வமுததாரை சேடமா முடனிற் றிற் சென்றுவீழ்ந்த.

(ப - ரை.) உகுபனிதோய்ந்தால் ஒப்ப = பெய்யாநின்ற பனியில் மூழ்கினுலென்ன, அதிசீதத்தையுற்ற பிராணங்களெலாம் = மிகத்தண்மையை யடைந்த பிராணவாயுக்கள் யாவும், ஒழுங்கினுலே = கிரமமாக, ககனமுறுபுகை = ஆகாயத்தையடைந்த தூபமானது தண்கார் ஆகுமாபோல் = குளிர்ச்சி பொருந்திய மேகம் ஆகுமாறென்ன, ககனநடுவுற மதியாய் = ஆகாயத்தின் மத்தியிலடையவே சந்திரமண்டலமாகி, கலையின் கூட்டமிகவு நிறைந்த தமதி மண்டலத்தில் = கலையின் கலாபத்தானே சம்பூரணமாகிய அந்தச் சந்திரமண்டலத்தில், வியன்சுதை தாரையை உயிர்கள் மேவப்பெற்ற = அற்புதமாகிய அமுததாரையைப் பிராணன்கள் அடையப்பெற்றன, திகழ்விசும்பின் நின்றிழிந்த அமுததாரை=விளங்காநின்ற விண்ணின் நின்றும்வீழ்ந்த அமுததாரையானது, சேடமாம் உடல்நீற்றில் சென்று வீழ்ந்த = எஞ்சியவாகிய சாரீரபஸ்மத்தில் வந்து சொரிந்தது.

(ஸ்ரீ - வீர.) பாகிய ஆகாயத்தில் ஹிமசம்ஸ்பரிசசுந்தரமாய சீதளத்தன்மையையடைந்தன அவ்வாயுக்கள், முறையாகக் ககனமத்தியி லிருப்பனவாகிய அவை சந்திரமண்டலத்தன்மையை, ககனகோசஸ்திதமாய தூமங்கள் = நீஹாரபாகங்கள், சீதள அம்புகத்தன்மையை யடைவுற்றனபோல அடைவுற்றன, அமிருதமயமாய கலைகளின் சங்காதங்களானே சம்பூர்ணமாய், அதனுனே இரசாயன மகார்ணவமாய அச்சந்திரமண்டலத்தில், புண்ணியராசியாகிய தருமமேகமெனப் பெயரிய சமாதியிற்போல, மகிழ்ச்சியா னிறைவுற்றனவாய அந்தப் பிராணவாயுக்கள், அமிருதமயமாய கிரணதாரைகளை யடைவுற்றன. ஜாலங்களில் இந்துவின் அம்சங்கள்போலப் படிகதண்டசமான ஆகாரத்தை யடைவுற்றன; காற்றுத் தூற்றியதுபோக எஞ்சிநின்ற சரீரசம்பந்த பஸ்மத்தில் அம்பரத்தினின்றும் அத்தாரை வீழ்ந்தது.

(சு.) உகுபனிதோய்ந்தா லொப்ப, பிராணன்களெல்லா மதிசீதத்தையுற்ற = அடைந்தனவென்பது பொருள், ககன நடுவுற = ககனமத்தியமுற்ற, அந்தப் பிராணன்கள், மதியாய் = சந்திரமண்டலத்தை யடைந்தனவாய், உயிர்கள் = பிராணன்கள், சுதை =அமிர்தத்தினது வியன் தாரையை மேவப்பெற்ற = சுதைத்தாரை ரூபத்தை யடைந்தன வென்பது பொருள். அமுததாரை = ரசாயனமயமான தாரை, விசும்பினின்று, இழிந்த = இழிந்தனவாய்; முன்பரன் சிரநின்றிழி யமுதகங்கையைப்போற் சேடமானவுடனீற்றிற் சென்று வீழ்ந்த. தாரையானது ஒருமையை யொன்றினும் பிரகிருதி பூதபிராணப் பிராதான்யக் கூற்றின் விழைவானே சங்கீபவந்தி பிராஹ்மணு என்பதுபோலும் சம்பன்னு என்னும் பன்மையா மென்றுணர்க. (47)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அமுததாரையானே யமலமாகியாகிருதியையடைந்த வாற்றையறைதல்:—அரன் என்பது.

அரன்சிரநின் றிழியமுத கங்கைபோன்ற வமுததா ரையினுலே யமலமாகிக்,
கரங்களொரு நான்குடன்வெண் மதித்தேசாகிக் கருணைமால் வடிவென்னக்
காணலாகி, யுரங்கிளருந் தால்கன்மெய் தோன்றிற்றன்றே யுயரமுத மயமான
வுயிர்களெல்லாங், குரம்பையது தனைநிறைத்துச் சூழ்ந்துள்ளான குண்டலினி
தனைப்பூனூ குயிற்றிநின்ற.

(ப - ரை.) அரன்சிரநின்றிழி யமுதகங்கைபோன்ற = பரமேசுரனது சிரநின்று பொழியமுதமயமாய சுராபகை போலுள்ள, அமுததாரையினுலே யமலமாகிய வீழ்ந்த = அமுததாரையினுலே நிர்மலமாகிகரங்களொரு நான்குடன்=ஒப்பற்ற சதுர்ப்புஜங்களுடன், வெண்மதித்தேசாகி = வெள்ளிய சந்திரதேஜசை யடைந்து, கருணைமால் வடிவென்னக்

காணலாகி=காருண்ய ஸ்ரீநாராயணரது மூர்த்தம்போற் காணப்பெற்று, உரங்கிளருத்தால கன்மெய்=மகாதிடயோகியாகிய உத்தாலக முனிவனதுசரீரம், தோன்றிற்றன்றே=புலப்பட்டு நின்றது, அப்போதே உயர் அமுதமயமான உயிர்கள் எல்லாம் = மேலான இரசாயனமயமாய பிராணன்கள்யாவும், குரம்பையது தனைநிறைத்துச் சூழ்ந்து = அச்சரீரத்தை நிரப்பி வியாபித்து, உள்ளான குண்டலினிதனைப் பூரைகுயிற்றிற்று உள்ளேயுள்ள குண்டலினி பூரித்து விளங்கின.

(ஸ்ரீ - வீர.) ஹாசிரப்பதிதமான ஸ்ரீ பாகீரதிபோன்ற இரசங்களின் பிரவாகத்தாரையானேயமலமாகி இந்த பிம்பமென்னவே யிலங்கி, நாற்புயவ்வுடன் நன்ருகவிளங்கியது; மதனத்தானே மிகவுமலர்ந்த மந்தரம்பொருந்திய பாற்கடனின்றும் பாரிஜாதத்தருமம் போலும் இருந்தது. அவ்வுத்தாலக சரீரம் ஸ்ரீமந்நாராயணர் திருமேனியைப்போல விலங்கியது, இலங்கிய நேத்திர இதழ்த்தாமரையும், திருந்திய வதனமாந் திருத்தாமரையும் தீப்தி சுந்தரமாய்த் திகழ்ந்திலங்கியவே, இரசாயனமயப் பிராணன்கள் அச்சரீரத்தைநிறைவித்தன, சலிலககூட்டம் சரத்தைப்போலும், வசந்தமதனிற் பல்லவங்கிளம்ப இசைந்த வேதுத்ளாம்பவும விரசங்கள், விருக்ஷத்தைப் போலும் விளங்கியதென்பது பரம உபமையாம் உட்குண்டலினியை உயிர்களாதரவுடன் பூரணஞ்செய்தன, சக்கிராகாரமாய்ச் சுழலும் சுழிகளான் மிக்கவே வகிக்கும் மேலாங்கங்கையின் நீர்களேபோல நிகழ்ந்தனவவையே.

(ச.) முற்பாடப்படி மற்று அசை, குண்டலியினைச் சூழ்ந்து பூசைகுயிற்றி நின்ற = நிறைத்து நின்றன வென்பது பொருள். (48)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் பதுமாதனத்திருந்த முனிவன் இயற்றிமனம் பொறிபுலன்களை மறுத்தல்:—இத்திறத்தென்பது.

இத்திறத்திற் பங்கயவா தனத்திருந்தோ னியாக்கைநிலை யழியாம லியற்றிப் பின்னர், மத்தமுறு பிரமரம்போற் சுழலுநெஞ்சை வன்பிணுற் றகைவுற்றுன் மவுனியாகி, மெத்துபிரா ணுபான வேகநோக்கி மெல்லெனவுண் டாக்கினன் வல் விடயநின்று, தத்துபுலன் களைவருந்தி வேறுசெய்தான் சற்றுமறப் புறப் பரிசந் தள்ளினனே.

(ப - ரை.) இத்திறத்தில் = இந்தப் பிரகாரமாக, பங்கயவாதனத் திருந்தோன் = பதும ஆசனத்தின்கட் பதிந்தவன், இயாக்கை நிலையழியாமல் = தேகஸ்திதிகெடாமல், இயற்றிப்பின்னர் = செய்துபின்பு, மத்தமுறு பிரமரம்போற் சுழலுநெஞ்சை = மதம் பிடித்த வண்டைப்போலச் சுற்றிதிரியும் மனத்தை, வன்பிணுல் = மிகுந்த முயற்சியால், தகைவுற்றுன் = தடைப்படுத்தினன், மவுனியாகி = மவுனவிரத முடையவனுய், மெத்து பிராணுபான வேகநோக்கி = மிதந்தோடும் பிராண அபானன்களுடைய வேகத்தைப் பார்த்து, மெல்லென வுண்டாக்கினன் = மெதுவாக அசைக்கினன், வல்விடய நின்று = பலமான சப்தாதிகளினின்று, தத்துபுலன்களை வருந்தி வேறுசெய்தான் = தடுமாறித்திரியும் இந்திரியங்களைப் பிரயாசத்துடன் அயற்படுத்தினன், சற்றுமறப்புறப் பரிசந்தள்ளினன் = அசேஷமாகப் பாகியப் பரிசங்களை விட்டொழுத்தான்.

(ஸ்ரீ - வீர.) அநந்தரம் பதுமாசன பந்தத்தானே ஸ்திதியைச் செய்துகொண்டு ஆலானத்தில் மாதங்கத்தைக் கட்டுவதேபோலத் தேகத்தில் இந்திரிய பஞ்சகத்தை அதிதிடமாகப் பந்தித்து நிருவிகற்ப சமாதியின் பொருட்டு விவசாயஞ் செய்யத்தொடங்கினன், செய்ததுயாது கொல்லெனின்? அம்முனிவனது மனம்முன்னரநுபவித்த க்ஷேத்திர புத்திர மித்திராதி சிந்தையானே, அதிடமாகப் பதிக்கப்பெற்ற அசுவாதி பந்தன முனியா

னது அதிற் சுற்றியகயற்றினுலே பிடுங்கிக்கொண் டிழுபடுவதேபோல, இழுபட்டலைந்தது
வெகுதூரம், அப்போது அம்முனிவன் செய்ததிதுவாம்:—கீழேயோடாநின்ற ஆகுலமான
மத்த சித்தத்தை அதிவேகமாக விவேகபலங் கொண்டு விமலமாக்கி வேகமாகப் பிரவகித்
தோடுஞ் சலத்தைத் அணையானது தடுப்பதேபோல நன்குதடுத்து நிறுத்தினன். அதன்
பின் அவன் என்னசெய்தான் எனின், கூறல்:—பரஸ்பரம் மேலே சேர்ந்திருத்தலானே
இருபாலும் கிஞ்சல்கங்களை யுடையனபோன்று உரோமகுங்களை உடையனவாகி அசை
யாத கருவிழிகளானே அதிசுந்தரம்வாய்ந்த விழிகளைப் பாதிமூடினன், அவை அசையாத
கருவிழிகள் போன்று மதுமாந்தும் பிரமரங்களையுடைய சந்தியாகால அம்புஜங்கள்போன்
றன்வாயின. முதலில் இராஜயோக அநுகூலமான அவனது வாக்குப்பிராண அபானநிரோ
தத்தைக்கூறல்:— மவுனியென்பதாதி, மவுனியாகிப் பிராண அபானவேகத்தை முகத்தில்
அழகியதாக அமைத்தனன்; அது சக்கிரவர்த்தியினது ஜன்மாதி நிமித்த பூதப்புகழ்மிகுசமய
மானது ஜகத்சிரேயசின் பொருட்டு சுபசூசனப் பொருட்டுத் தண்மை மென்மையாதிகு
ணம் வாய்ந்தவாயுவை அவன் பிறந்ததேயத்தில் அமைதியாயொப்பாய் நனைவாய் வீசச்
செய்வதே போன்றுயது. அவ்வாறே ஸ்ரீபகவானும் அருளிச்செய்துளார்: — காவல்செய்
தைந்து புலன்கணிரண்டு, மேவவிரும் புருவத்திடை விட்டிட், டாவகை நின்றவபான
பிராண, னேவலினின்றி யியக்கமறுத்தே. அவனது பிரத்தியாகாரக் கிரமத்தைக்கூறல்:-
புலன்களையென்பது, திலங்களினின்றும் தைலங்களைத் தனித்தெடுப்பதேபோல' இந்திரி
யுங்களை இந்திரிய விடயங்களினின்றும் மிகமுயன்று தனிப்படுத்தினன், கூர்மமானது
தனது அங்கங்களை மறைத்துக் கொள்வதேபோல இந்திரியங்களைத் த்தமது கோளகங்க
ளில் மறைத்துக் கொண்டனன். இதுவும் ஸ்ரீபகவானுல் அருளப்பெற்றுளது: — ஆமை
தன்னுறுப்போரைந்துந் தன்னுளேயடக்குமாபோற்,றீமைசெய் புலன்களைந்துந் தன்னுளே
செறியச்சேர்த்தி, வாய்மையு ணிகழுமின்னே வழுத்தவும் படுகின்றுனற், றூய்மைசெய்
தேவையு நாளுஞ்சொல்லுவ சவன்றன் சொல்லாம். சகசமாகக் குண்டாச்சட்டிகொண்டு
மறைத்த அரதனமணியின் சேய்மையில் விரிந்த இரஸ்மிகளைப்போல, வெளித்தொடர்
புகளை சிறிதுமில்லாமல் வெகுதூரத்தில் அத்தீரதீயாகிய மகாமுனிவன் விட்டொழித்
தனன்.

(ச.) மௌனியாகி, மெத்து பிராணுபானவேகம் = முகத்தில் உசுவாச நிசுவாசரூ
பத்தை, மெல்லென வுண்டாக்கினன் = உபசாந்தமாகச் செய்தான்; புலன்களை = இந்திரி
யங்களை, வேறு செய்தான் = திருப்பினுன் என்பதுபொருள். வருந்தி = பிரயத்தனத்தி
னுல், பரிசம் = விடயங்களை. (49)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனேலயஞ் செய்ததைமலர்தல்:—பற்றது என்பது.

பற்றறுதிண் ணியமதியோ னுள்ளேதோன்றும் பரிசமெலாந் தள்ளுகின்ற
பார்வையாலே, யற்றனவாக்கினன்மூல வாயில்செம்மி யங்கத்தொன் பதுவாயி
லனில மெல்லாங், குற்றமற டுக்கமடைத்தாற் புறத்துவாரங் கும்பத்துக் கடை
படல்போற் குறித்தடைத்தா, னற்றலய மெனுங்குணத்தைச் சேர்ந்தநெஞ்சை
யுயரிதய வாகாயத் தொடுக்கினுனே.

(ப- ரை.) பற்றறு திண்ணிய மதியோன் = யாதொருவிதமான சங்கமுமில்லாத திட
மான சித்தத்தையுடைய அவ்வுத்தாலக முனிவன், உள்ளேதோன்றும் பரிசமெலாந் தள்ளு
கின்ற பார்வையாலே = ஆந்தரத்திற் பிரதீதியாகும் மானசவிடயங்கள் யாவற்றையும்,
தள்ளுகின்ற பார்வையாலே = அகற்றுகின்ற தரிசனத்தினுலே: அற்றனவாக்கினன் =

விலயஞ்செய்தனன், மூலவாயில் செம்மி = குதத்துவார சங்கோசத்தானே, அங்கத் தொன்பதுவாயில் அநிலமெல்லாம் = தேகநவத்துவாரக் காற்றை எல்லாம், குற்றமறுமுக மடைத்தால் = மாசறமுகந்தகைந்தால், புறத்துவாரம் கும்பத்துக் கடைபடல்போல், பாகியவாயில் குடத்திற்குப் பந்தனமாதல் போலும், குறித்தடைத்தான் = பார்த்து ந்ன் குரோதனஞ் செய்தான், உற்றலயமெனுங் குணத்தைச் சேர்ந்த நெஞ்சை = பொருந்திய சம்சயம்மடைந்த மனத்தினை, உயரிதய வாகாயத் தொடுக்கினன் = மேலான இருதய ஆகாயத்தின் கண்ணே தர்த்துக்கொண்டனன்.

(ஸ்ரீ - வீர.) வர்ஜித தரிசனத்தானே, மனோவாசனாரூபங்களாய விடயங்களை அதிஷ்டானதத்துவத்தில் இழுத்து இழுத்துப் பாதித்தலானே, விலீனங்களாமாறு செய்தனன். விடபகோசத் திருக்கும் இரசங்களை மார்கழிமாதத்தில் தருமம்போலும், அதன்பின்னர் குதியினாலே மூலாதாரத்தைப் பற்றலானே குதசங்கோசத்தால் நவத்வார அநிலங்களையும் இருதயத்தில் ரோதனஞ்செய்தனன் கிழ்முகப் பூரணகும்பம் முகத்தில் திடமாக அடைக்கப்பெற்றதாகி உள்வாயுப் புகுதலில்லாமல் வேறு துவாரங்களி னின்றும் நீரொழுகுதல் கூடாமையானே இதாரந்திர கோசங்களையும் அடைக்கின்றது அது போன்றிதுவுமாம், சுமேருபர்வதமானது தனது மயமாய இரத்தினங்களினாலே மிகவு மிலங்கிப் பெருந்தூய்மை வாய்ந்து, கற்பக விருக்ஷக் கவினமலர்களானே யலங்கரிக்கப்பெற்று, தனது சிருங்கவடிவச் சிகையோடு கூடி யிலங்குவதேபோல, தனது வடிவமாய இரத்னப் பிரகாசத்தினாலே இலங்கி இரஜசு தமசுகளானே மறைக்கப்பெறாமல் ஸ்பஷ்டமாய், மிகத்தெளிந்து கம்பீரமான முகபதும குசுமத்தானே யலங்கரிக்கப்பெற்று விளங்கும் கந்தரசிகையோடு கூடின்வ் ஞகி அத்திரமாமுனிவன் இருந்தான், தாரணைசாற்றல்: — உற்றலய மென்பதாதி, ஒரு விடயத்தில் தாரணையான சமாதிகள் உண்டாவது சம்யமம் எனப்பெறும், அதன் பொருட்டுத் திரும்பிவந்த மனத்தை இருதய ஆகாசத்தில் நன்குவைத்துக் கொண்டனன்.

(ச.) பார்வையாலே = விருத்தி ஞானத்தோடு, மூலவாயிற்செம்மி = வஜ்சிர ஆசனாதிகளானே மூலாதார நிரோதஞ்செய்ததினால், ஒன்பதுவாயி லனிலமெல்லாம் = நவத்துவார அநிலங்களை, குறித்தடைத்தான் = நிரோதஞ்செய்தான், முகமடைபடின் கும்பத்தினது சூக்ஷ்மத் துவாரங்களில் வாயுவெப்படி நிரோதமாமோ அதுபோலென்பதுபொருள். லயமெனுங் குணத்தை = சிஷ்க்ஷயை, இதயவாகாசத்து = தகராகாசத்தில். (50)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சகல விகற்பங்களையும் ஒழித்தமையை யுரைத்தல்: — உரத்த வென்பது.

உரத்தமதகரியையுபா யத்தால்விந்தத் துட்குழியிற் சேர்ப்பதுபோ லொடுக்கி நெஞ்சைச், சரற்ககனம் போனிமல தெளிவைச்சேர்ந்து தள்ளினன்பற்றி பாய் தன்மையாலே, வரத்துடைய விகற்பமெலா மீளமீள வருவனவேண்டிய படியே வந்துதோன்ற, பரப்புறுதோற் றங்களைவன் னெஞ்சான்மாய்த் தான் பகைவரைவா ளாற்சூரன் படுப்பதேபோல்.

(ப - ரை.) உரத்தமதகரியை = பலமான மத்தகஜத்தை விந்தத்துட்குழியில் உபாயத்தாற் சேர்ப்பதுபோல் = விந்தியத்தண்டாக்கிச் சாகையாதியால் மறைக்கப்பெற்ற படுகுழியில் பெண்யானையைக் காட்டன் முதலிய வுபாயத்தால் அடைவிப்பதேபோல, ஒடுக்கி நெஞ்சை = மனத்தையூகத்தினால் இலயஞ்செய்து, சரற்ககனம்போல் = சரத்கால ஆகாயம்போல், நிமலதெளிவைச் சேர்ந்து = நிருமலமாகிய தூய்மையையடைந்து, தள்ளினன் =

விகற்பத்தை யகற்றினன், பற்றியாய் தன்மையாலே = பிரதிபாசத் தகைமையானே, வரத் துடைய விகற்பமெலாம் = வாதனையானே வாராநின்ற விகற்பமியாவும், மீளமீள = ஓயாமல் இடைவிட்டு இடைவிட்டு வருவன வேண்டியபடியே வந்துதோன்ற = வருவனவாகி இஷ்டப்படி வந்துவந்து முந்தவும், பரப்புறு தோற்றங்களை = விஸ்தாரமான அவ்விருத்திகளை வன்னெஞ்சான் = விசாரபலம்பெற்ற மனத்தினலே, பகைவரை வாளால் சூரன் படுப்பதேபோல் மாய்த்தான் = சத்துருக்களைச் சூரனனவன் கட்கத்தால் வெட்டித்தள்ளுவதேபோல, நயுமாறு ஒடுக்கினன்,

(ஸ்ரீ - வீர.) மதோன்மத்தமாய கயத்தை விந்தியச்சாரற் படுகுழியில் வீழ்த்துமாறு, பிரத்தியாகார உபாய ஊகங்களானே வயஞ்செய்த மனத்தையடக்கி, தாரணையானே மனத்தெளிவு மருவியவழி பரிபூர்ண ஆத்மத்தியான விசிராந்தியை யறைதல்: — சரத்தென்பது. நிர்மலமான அதிசௌமியத் தகைமையை சரத்கால விண்போன்றடைந்து, காற்றற்ற மிக நிறைகடலின் நிச்சலமான பேரழகைக் கவர்ந்திருந்தான். பிரஹ்மாகார சிலசித்தவிருத்தி தாரையின் விச்சேதமுற்று இடையிடையேத் தோற்றமுற்றவனுகி விபரீதபாவனு விகற்பக்குழுமுழுதையும் நிராகரித்தனன்; முன்புவிளங்கித் தோன்றுநின்ற அற்பரூபங்களை யுடைய மசகங்களை மாருதம் விலக்கலேபோலும். அடிக்கடி யநேகதோற்றங்கள் இஷ்டப்படியே வந்து வந்து தோன்றவும் விவேகமனத்தானே, சூரன் கட்கத்தினலே ரிபுக்களைரணத்தில் வெட்டித் தள்ளுவதேபோல விலக்கிவிடுத்தான். (51)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விகற்பம் போனபின் வந்தபல இடையூறுகளைக் கூறல்: = விகற்ப, போகாத என்பன.

விகற்பமெலா மிறத்தலுமே யிதயவிண்ணில் விவேகபா னுவைமறைத்து
விரிந்தகங்குல், சகத்தினினு ளஞ்சனத்தின் பார்த்தப்போதே தன்னுள்விவே
கத்தாலே தவிர்த்தானத்தை, யகத்திருணன் றுய்க்கெடலுஞ் சுடர்வந்தெய்த
வம்முனிவ னதனையுங்கண் டகற்றிமாய்த்தான், நிகழ்ச்சியொளி யகலுதலுஞ்
சுழன்றுநெஞ்ச நிசியினடுப் போலுறக்க நேர்ந்ததன்றே.

போகாத துயிலினையு மறுத்தான்றாக்கம் போகுதலு மாகாச போதம்வந்த
தாகாச போதமழிந் திடலும்வல்லே யவன்மனமோ கஞ்சேர்ந்த வந்தமோக
நோகாமன் மனத்தினைவிட் டேகுமாறு நூக்கினன்பேரிதய நோக்குமிக்கோ
னேகாத விரவுதரு மந்தகார மிவ்வுலகி னின்றகற்று மிரவிபோல.

(ப - ரை.) விகற்பமெலா மிறத்தலுமே = சகலவிகற்பங்களும் போனவுடனே, இதயவிண்ணில் = இருதயாம் பரத்தில், விவேகபானுவை = விவேகமாகிய அருக்கனை, மறைத்து = ஆச்சாதித்து, விரிந்தகங்குல் = விஸ்தரித்த தமமானது தோன்றியது, சகத்தினினுளஞ்சனத்தை பார்த்தப்போதே = அவ்வாறுதோற்றிய அவ்வந்தகாரத்தை உடனே நோக்கி, தன்னுள் விவேகத்தாலே = தனதுள்ளேயுதித்த விவேகப் பிரகாசத்தினலே, தவிர்த்தான் அத்தை = அகற்றினனதனை, அகத்திருள் நன்றுய்க்கெடலும் = உள்ளே தோன்றிய அந்தகாரம் நன்றாகப் போகுதலும், சுடர்வந்தெய்த=பிரகாசம்வந்து பொருந்த அம்முனிவன் அதனையுங்கண் டகற்றி மாய்த்தான் = அவ்வுத்தாலக மாமுனிவன் அவ்வொளியையும் பார்த்து விலக்கித்தொலைத்தான், நிகழ்ச்சி யொளியகலுதலும் =விளங்கிய பிரகாசம் போதலும், சுழன்றுசெஞ்சம் = சுழற்சியையடைந்து மனமானது, நிசியினடுப்போல் = அர்த்த இராத்திரியிற்போல, உறக்கம் நேர்ந்தது = நித்திரைவந்து சேர்ந்தது அன்று எ அசைகள்.

போகாத துயிலினையு மறுத்தான் = நீக்கமுடியாத நித்திரையையும்நீக்கினன், தூக்கம் போகுதலும் = நித்திரை நீங்கியவுடனே, ஆகாசபோதம் வந்தது = விண்ணினைவுண்டாயது, ஆகாசபோத மழிந்திடலும் = விண்ணெண்ணம் வீழ்ந்ததும், வல்லே = விரைவில், அவன்மனம் மோகஞ்சேர்ந்த = அவனுடைய உள்ளமானது மோகத்தையடைந்தது, அந்த மோகம்=அம்மயல், நோகாமல் மனத்தினை விட்டேகுமாறு=துன்புறுத்தாமல் உள்ளத்தை விடுத்து ஓடிப்போம்வண்ணம், நூக்கினன் = விலக்கினன், பேரிதயநோக்குமிக்கோன்= மகா அந்தர திருஷ்டியையுடைய அம்மகாமுனிவன், ஏகாத இரவுதரும் அந்தகாரம் = போகாத இராத்திரியீன்ற இருட்டை, இவ்வுலகினின் றகற்றும் இரவிபோல = இச்சகத்தினின்றும் நீக்கும் சூரியனேபோலும்,

(ஸ்ரீ - வீர.) விகற்பக்கூட்ட மொழிந்தபோது அம்முனிவன் இருதயாம் பரத்தில் சஞ்சலமைச் சியாமளமான தமோகுண மிகுதியாலாய அந்தகாரத்தை விவேக அருக்கனை மறைத்துக்கொண்டு வந்ததாகக் கண்டனன். அதனையும் அதிவேகமாகச் சத்துவகுண எழுச்சியானே மிகவும் விளக்கமுற்ற நன்ஞான உதிரமாய தனது மனவடிவச் சூரியனாலே நன்றாகப் பவனாலே புகையாதிபோலும் முற்றினும் போக்கினன், சத்துவகுண உற்பானவன ஆகுலமுற்ற அம்முனிவனுக்கு அதன் அனுரூபமாயதே யுப்புஞ்சமயல் உண்டாயிற்றெனல்:—அகத்திருள் என்பதாதி, இரவினது இருளானது சாந்தமுற்றபோது உதய அருக்க உபலட்சிதமாய காலைச்சந்தியைகமலங்கண்டதேய்ப்ப,தமமானது உபரதியடைந்தபோது பிரகாசியாநின்ற தேயுக்கூட்டத்தை அம்முனிவன் கண்டனன். தலத்தாமரைகளின் வனத்தை பாலகஜம்போல அதனைக்கெடுத்தனன் அதனை அதற்கு விரோதியாய இரஜோகுணாதி வுற்பவத்தானே கெடுத்தனனெனக்கடாவி இல்லையெனல்:—வேதாளமானது வேகமாக இரத்தப் பிரவாகத்தைக் குடிப்பதேபோல அதிஷ்டான தத்துவதரிசனத்தானே பாதமாதமாதலின் விழுங்கினன்; தேயுவானது லோகிதவர்ண மாதலின் இரக்த உவமையாமென வுணர்க. இரஜசாற் சமாதானியாமையின் சலிப்பித்த சித்தத்திற்கு விடயங்கிடையாமையானே விலயமெய்தலின் நித்திரையில் மூழ்கியதெனல்:—உறக்கமென்பது தேஜசானது உபரதியாகவே அம்முனிவனது சுழலாநின்ற மனமானது இராத்ரதாமரையேபோல நித்திரையை யடைந்தது, வெண்ணறை மாந்தினவன் போலவே தரங்கங்களானே நித்திரைக் கனுகூலமாகத் தள்ளாடி நின்றது. அதனையும் விரைவில் விவேகப்பிரபோதத்தானே அகற்றினன். நித்திரையானது நீங்கியவுடனே அவனுடைய மனமானது வியோம சியாமளத்தைப் பார்ப்பதாகப் பாவித்தது, சூரிய ஆதபசந்நிதியில் வியோமத்தில் விரியச்செய்த திருஷ்டியை யுடையவன் மயிர்ச்சுருள் கயறுமயூரசிகை முதலவற்றை பாவிப்பதேபோல, நானுவாசனை பரிகற்பிதரூப முடையதாக வியோமத்தைப் பாவிப்பானுயினன். வியோம வுணர்ச்சி விலகியவுடனே அவனது மனமானது கஸ்மலத்தோடு கூடியதாயது, நித்திரை விலீனமானபோது மத்தியமதவான் போலும்; அம்மோகத்தையும் அம்மகா இருதயத்தையுடைய முனிவன் சோதித்து மனத்திலிருந்து விலகுமாறு செய்தான், இரவிற் சனித்த ஜாட்டியத்தை புவனத்தினின்றும் புறம்போக்கும் பாஸ்கரனேபோலும்,

சத்துவாதி குணங்கட் குதாகரணம்:—சாங்கியகாரிகை: பிரீதி யப்பிரீதி விஷாதாத்மகங்கள், பிரகாசப்பிரவிருத்தி நியமார்த்தங்கள், அன்னியோன்னிய அபிபவாசிரய, ஜன்னமிதுன விருத்திகளுங் குணங்கள். என்பதாம். இதன்பொருளிதுவாம்:—முக்குணமென் மொழியப்பெற்றது, ஆண்டு அம்முக்குணங்கள் யாவை ? அவற்றி னிலக்கணந்தான் யாதாம் ? எனக்கடாவி விடைதரல்:—பிரீதியென்பதாதி. குணங்கள் என்பது பரார்த்தங்

கள், சத்வம்லகுப் பிரகாசகம் (கா 13) என்பதிலோ சத்துவாதிகள் முறையாக வுபதேசிக்கப் பெறுவனவாம்; அவற்றின் முன்னுலோசனையாற்றுனுதல் சந்திரயுக்தியினுற்றுனுதல் பிரீதியாதிகட்கு எண்ணிக்கைப்படி யுணரத்தக்கது, இஃது இயம்பப் பெற்றதாயது:— பிரீதி = சுகம், பிரீதிவடிவம் சத்துவகுணம், அப்பிரீதி: = துக்கம். அப்பிரீதிவடிவம் இரஜோகுணம், விஷாதம் = மோகம், விஷாதவடிவம் தமோகுண மென்பது பொருள்.

பிரீதி துக்காபாவத்தினும் வேறுகாது, இங்ஙனம் துக்கமும் பிரீதியபாவத்தினும் அயலாகாது என்று யாவர்தா மெண்ணுகின்றுர்களோ அவர்தம் பொருட்டு ஆத்மக்கிரகணமாம், சுகமுதலன இதரேதரா பாவங்களாகாவாம், மற்றேபாவங்களாம், ஆத்மசப்தத்திற்குப்பாவவசனத் தன்மையுண்மையின், பிரீதி ஆத்மா = பாவம் எவற்றிற்கோ அவைபிரீதியாத்மாக்களாம், இவ்வண்ணம் பிறிதையும் உரைசெய்து கொள்ளலாம், பாவரூபத்தன்மையும் இவற்றிற்கு அநுபவசித்தமாம், பரஸ்பர அபாவ ஆன்மகத் தன்மையேலோ, அன்னியோன்னியாசிரய அடைவுவருதலின் ஒன்றற்கு அசித்தியுறுவதனுனும் இரண்டிற்கும் அசித்தியாம் என்பது கருத்தாம் இவற்றின் சொரூபத்தை யியம்பிப் பிரயோஜனங்கூறல்:— பிரகாசப் பிரவிருத்தி நியமார்த்தங்கள் என்பது. ஈண்டு மெண்ணிக்கைப் படியேயாம். இராஜசானது பிரவர்த்தகத் தன்மையானே யாண்டும் இலகுசத்துவத்தைப் பிரவிருத்திப்பிக்கும், தமமாகிய குருவானே நியமிக்கப்பெறுவிடின், தமோநியதமாயதோ சிலபாலே பிரவிருத்திக்கின்றது எனத்தமம் நியமார்த்தமாம்.

பிரயோஜனம் புகன்று கிரியையைக் கிளத்தல்:—அன்னியோன்னிய அபிபவாசிரய ஜனனமிதுன விருத்திகளும் என்பது, விருத்தி:=கிரியை, அதுவுந் தனித்தனியே நன்குசேரும், அன்னியோன்னிய அபிபவவிருத்திகளாம், இவற்றுள், பயன்வயத்தானே எழுந்துவந்த ஒன்றனுலே பிறிதொன்றடங்கும். அங்ஙனமன்றே:—சத்துவம் இராஜதமங்களை அமிழ்த்திச் சாந்தமான தனது விருத்தியை யடைவிக்கும், இங்ஙனம் இராஜசுசத்துவதமங்களையமிழ்த்திக் கோரத்தை, இன்னணம் தமசு சத்துவராஜசுகளை யமிழ்த்தி மூடத்தையென்பதாம். அன்னியோன்னியாசிரய விருத்திகள், ஆதார ஆதேயபாவத்தானே இப்பொருள் பொருந்துவ திலதாகுமென்றுலும், எதனபேக்ஷையால் எதனது கிரியை அது அதற்காசிரயமாம். அங்ஙனமன்றே:—சத்துவம், பிரவிருத்தி நியமங்களை யாசிரயித்து இராஜஸ்தமசு கட்குப்பிரகாசத்தானே யுபகரிக்கின்றது, இராஜசு, பிரகாச நியமங்களையாசிரயித்துப் பிரவிருத்தியானே இதரங்கட்கு, தமசு பிரகாசப் பிரவிருத்திகளை யாசிரயித்து நியமத்தானே இரங்கட்கு என்பதாம். அன்னியோன்னிய ஜனனவிருத்திகள், அன்னியதமம் அன்னியதமத்தை யுண்டாக்குகின்றது, ஜனனமோ பரிணுமமாம், அதுவும் குணங்களின் ஒப்பானவடிவமாம், இதனுனே ஹேறவுடைமையில்லையாம், வேறு தத்துவத்திற்கு ஹேதுவாத லின்மையின், அநித்தியத் தகைமையு மிலதாம், வேறுதத்துவத்தில் இலயமாகாமையின் அன்னியோன்னிய மிதுனவிருத்திகளாம், அன்னியோன்னியம் உடனிகழ்வனவாம், அவினுபாவ விருத்திகள் என்பது துணிபாம், உம்மை சமுச்சயத்தாம். உண்டாமிதன்கண்ணுச்சமும்:—அன்னியோன்னியமிதுன மியாவும், யாவும்யாண்டும் செல்வனவாகும், இராஜசின் மிதுனஞ் சத்துவமாகும், சத்துவமிதுன மிராஜசும்மாகும், தமசாமதற்கோ மிதுனஞ்சாற்றின், சத்துவராஜசுக ளிரண்டும்மாகும், சத்துவராஜசுகள் இரண்டாமவைக்குந், தமமது மிதுனந்தானுகும்மே, இவற்றினுளாதி யிலையாஞ்சம்பர, யோகவியோக மேனுந்தோற்றலே, என்பதாம் (தே, பா. 3-8.).

ஸ்ரீ பகவானும் இக்குணங்களை யருளுவர்:— சத்துவம் ரசசோடு தமசென வுய்த்து வந்தபெயரை யுடையன, வெத்துவந்துவ மூந்தருகிற்பன, மெத்துவந்த வற்றின்செயல் வேறுகேள்,

பற்றுமாசின்மையாற் பளிங்கொப்பது, உற்றநல்லறி வானதுண்டாக்குவ
தெற்றுமின்ப மல்லாற்றுன்ப மென்பது, சற்றுமில்லது சத்துவமாவதே.

ஓதுராகவுருவ முடையது, தாதுகற்புரை யுண்ணிறஞ் சார்ந்தது
பேதுசெய் வினையோடறிவைப் பின்னற்கேதுவாய திராசதமென்பதே.

குறியுநிலை மயக்கமுங் கோதிலா, நெறிகடம்மை யிகழ்தலு நித்திரை
செறிதலானது பற்றிவற்றூற் றிண்ணென், றறிவை மாய்க்குமது தம்மாவதே,

உரைசெயுஞ் சத்துவமின்பத் துய்த்திடும்
இரசதம்வினைக ளோடறிவையார்த்திடும்
புரைசெய்திவ் வழுக்கையே பொருந்திப் போர்த்திடும்
தரைசெறி புகழினுய் தமமென்கின்றதே.

வாழுஞ்சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத்
தாழுமற்றைய விரண்டுமத்தமோ குணந்தழைப்பின்
வீழுஞ்சத்துவ தமங்களவ் விரசதம்விளைவி
னுழின்மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தொன்றுமிக்குளதாம்.

ஒத்துநல்லறிவு மிக்கதியாதொரு போதப்போது
சத்துவந்தழைத்த தாகுந்தாங்கரும் வினைகளேகொண்
டுய்த்துவந்தாசை கூரலோபம் வந்துற்றபோது
மத்திமகுணமே சாலவளர்ந்த தென்றறிநீமன்னு.

தக்கதுதகா தென்றொன்றைத் தானறியாதபோது
மெக்கருமங்கண் மாட்டுமிகழ்ச்சியோ டிருக்கும்போது
மொக்கமெய் மயக்கத்தோடு முறக்கம்வந் துற்றபோது
மிக்கதுதமமே யென்றுவிசய நீயறியவேண்டும், என்பனவாதியாம்.

(ச.) கங்குல் விகற்பஹேதுவான அஞ்ஞானத்தை, அஞ்சனத்தின் = மர்த்திதம சிபோன்மலினவர்ணமாக, அத்தை = அத்தமத்தையும், தன்னுள் விவேகத்தாலே தனது அந்தக்கரணத்துற்ற விவேகத்தினுல், தவிர்த்தான், சுடர் = பிரகாசரூபமான சத்துவகுண விருத்தி, வந்தெய்தக்கண்டு, அதனையும் = அச்சுடரையும், மாய்த்தான்; ஒளி = சத்துவ விருத்தி, அகலுதலும், அம்முனிவனது நெஞ்சம், சுழன்று = விசிராந்தி பெறுததாய், மீண்டும், உறக்கம் = தமோகுண விருத்தியை, நேர்ந்தது; சத்துவாதி குணங்கள் ஒன்றை யொன்று கீழ்ப்படுத்தலாற் பரிணமிக்கின்றன வாதலினென்க. சாங்கியத்தில் அது கூறப் பெற்றது:—பிரிதி யப்பிரீதிவிஷாதான்மகங்களும் பிரகாசப் பிரவிருத்தி நியமார்த்தங்களும், அன்னியோன்னியா பிபவாசிரய ஜனனமிதுன விருத்திகளுங் குணங்களென்று.

ஆகாசபோதம் = சூனியபோதம், மோகம் = அறிவின்மை வடிவானஜடம். (52-53)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பாக்கியவயத்தானே சுவாநுபூதி நிலைமையடைந்ததை யுரைத்தல்:—அன்னவென்பது.

அன்னகாலையி லிருள்சுடர் துயில்மயக் கனைத்தையு மறுத்தோட்டி
மன்னுமோரவத் தையையடைந் தொருகணம் வருத்தமா றியதுள்ளம்
இன்னதீர்ந்துட னேயனைத் துருவமா மறிவையெய் யதியதன்றே
நன்னெடுங்கரை தடுக்கநின் றெதிர்த்து முற்றலநிறைந் திடுநீர்போல்.

(ப - ரை.) அன்னகாலையில் = வந்த இடையூறுகள் யாவும் நீங்கியபின்னர், இருள் சுடர் துயில் மயக்கு அனைத்தையும் அறுத்தோட்டி = தேஜசுதமசு நித்திரைமோக முதலிய யாவு மின்றியதாகி, மன்னும் = பொருந்தா நின்ற, ஓரவத்தையை = ஒருஸ்திதியை. அடைந்தொருதணம் = அடைவுற்று ஒருகணகாலம், வருத்தமாறிய துள்ளம் = மனமானது விசிராந்தியை யடைந்தது, இன்னல் தீர்ந்து உடனே அனைத்துருவமாம் அறிவை எய்தியது அன்றே = இளைப்பாறி விரைவில் விசுவரூபமாயிராநின்ற சம்வித்தை அடைந்தது அப்போதே, நல்நெடுங்கரை தடுக்க = நல்லநீண்ட அணையானது பிரதிபந்திக்க, நின்றெதிர்த்து முற்றலம் நிறைந்திடு நீர்போல் = தடைபட்டு எதிர்முகமாய்த் தேங்கிமுன்னிடம் வியாபித்த ஜலம்போலும்.

(ஸ்ரீ - வீர.) பின்னர்த்தேஜஸ்தமோ நித்ராமோகாதி வர்ஜிதமாய் வாசாமகோசரமாய நிர்விகற்ப சமாதியவத்தையை யடைந்து அற்பகாலம் மனம் விசிராந்தியுற்றது; விக்ஷேப சமஸ்காரப் பிரபலத் தகைமையானே ஆண்டு ஸ்தைரியத்தை அடையவில்லையெனல்:— இன்னதீர்ந் தென்பதாதி. குழந்தாய் ! விசிராந்தியுற்று விரைவில் வெளிப்பிரபஞ்ச சமாகாரமாய விருத்தி சம்வித்தையடைந்தது; முன்னர் வெளியாகாரத்தினின்று இழுத்துப் பூர்ணாத்மாவில் நிருத்தஞ்செய்ததற்கு, திரும்பிமீளவும்பாகிய ஆகார அடைவில் அனுரூபமான திருஷ்டாந்தத்தை யறைதல்: — நன்னெடுங் கரையென்பதாதி. சரோவாரியானது கால்வாய் வாயிலாகக் கேதாரத்தை யடைந்தது வயலைநிரப்பிய பின்னர், வயல்வாரப்பினாலே தடைபட்டுக் கால்வாய் வாயிலாகவே திரும்பிப் பிரதிகூலப் பிரவாகமாய் மீளவும் தனது இடமாய சரத்திலேயே பிரவேசிக்கின்றது அதுபோலவாம்.

(ச.) இருளாதிகள் தாமதாதிகுண பரிணாமரூபமாதலின் அவைகளை நாசஞ்செய்து, ஓரவத்தையை = நிருவிகற்பசமாதி யவஸ்தையையடைந்து, உள்ளம், வருத்தமாறியது = சொச்சொரூபத்தி லிருந்தது, அனைத்துருவமாம் = சர்வான்மகமான, அறிவை=சொரூப சைதன்யத்தை, பூரணமான பிரஹ்மான்மைக்கிய போதத்தை யென்பதுபொருள். கரையாற்றடுக்க நின்று சரநீரெதிர்த்து, முற்றலம் = மூலத்தானமான சரசையடைவதுபோ லென்பதாம். (54)

(ஸ்ரீ-வீர - அ-கை.) திருப்பிமீளவும் தன்னறிவை நோக்கிக்கொணர்ந்த வெளியறிவுக்கு அந்தராளத்தில் சவிகற்பக சமாதியடைவை யுரைத்தல்:—விஞ்சென்பது.

விஞ்சு நீள்பகற் பரிசயத் தாலுந்தன் மெய்யறி வுணர்வாலும்
நெஞ்சு சின்மய மடைந்ததாலிரணிய நிகழ்சிலம் பாமாபோல்
வஞ்ச வன்மனத் தன்மைபோய்ச் சின்மய மருவிய மனந்தீரச்
செஞ்செவ் வேவல்லை வேற்றுமை யானதாற் சேற்றினுட் குடமென்ன.

(ப - ரை.) விஞ்சுநீள்பகற் பரிசயத்தாலும் = சிர அனுசந்தான வசத்தாலும், தன் மெய்யறி வுணர்வாலும் = தனது வடிவமாய சைதன்ய ஆசுவாதனத்தாலும், நெஞ்சுசின்மயமடைந்தது = மனமானது அறிவுருமேயாயது, இரணியம் நிகழ்சிலம்பாமாபோல் = ஹேமம் நூபுரத் தன்மையை யடைந்ததேபோலும், வஞ்சவன் மனத்தன்மைபோய் = கரவுடைக்கொடிய சித்தத்தன்மை யகன்று, சின்மயமருவியமனம்=சித்தத்துவத் தகைமையையடைந்த உள்ளமானது, தீரச்செஞ் செவ்வேவல்லை வேற்றுமையானது = அதிவிரைவில் அத்தியந்தம் அயலாயது, குடத்தினுட்சேறு என்ன = கும்பத்திற் றிதமானபங்கம் போலும், ஆல் இரண்டு மசைகள்.

(ஸ்ரீ - வீர.) முன்னர்த் தியானநியானே சிரானுச்ந்தான வயத்தானும், சமாதியில் ஆநந்தானு பவத்தானே தன்சம்வித்தின் ஆசுவாதனத்தானும், என்னும் ஹேதுவால் அதன் சமஸ்காரத்தால், மீண்டும் ஆண்டு இழுக்கப்பெற்ற மனமானது, அதன் அந்தாாளத்தில் சின்மயத்தன்மையை = சிற்பிரகா சவிகற்பசமாதி ரூபத்தன்மையை யடைந்தது; சுவர்ண மானது சரணவலய தாநரூபமாய நூபுரத்தன்மையை அடைவுற்றதேபோலும் என்பதாம். இவ்வண்ணம் சவிகற்பக சமாதியினானே முறையாக இந்தனமற்ற எரியேபோல மிகக்ஷீண முற்றதாய் க்ஷீர உதகமென்ன சித்தைக இரசியத்தை யடைந்தது எனல்:—வஞ்சவன்ப தாதி சித்தமானது பின்தன்னுடைய சித்தத்தன்மையை நன்றாக விட்டுச் சித்தேயாய எத் தத்துவ முண்டோ அத்தன்மையை அடைந்ததாய், விரைவிற்பூர்வ அவஸ்தையினின்றும் அயலேயாயது; கும்பத்திருக்கும் சேற்றுப்பூமிச் சலபங்கம் ஜலங்காய்ந்தபோது கும்பத் தேய்வுற்றுக் கும்பபாவத்தையே அடையாநிற்கும் அதுபோலு மென்பதாம்.

(ச.) விஞ்சுநீள்பகற் பரிசயத்தாலும் = வெகுகாலஞ் சொரூபானு சந்தான வசத்தி லும், தன்மெய்யறி வொன்றாலும் = சொரூபானந்த போதாநுபவத்தினாலும், மனம் = சித்தமானது, மனத்தன்மை = சித்தரூபத்தை, போய் = விட்டு, சின்மயம் = பாரமார்த் திகரூபத்தை, மருவிய = அடைந்ததாய், வேற்றுமையானது = சித்தேயாயிற் றென்பது பொருள். சேற்றினிற் குடமென்ன = கும்பத்திருக்கும் பங்கமெப்படிச் சிலகாலஞ்சேற விற் சலவிலயமாயின் பங்கரூபத்தை விட்டுக் கும்பாகாரமான ஓட்டுருவை யுறுமதுபோ லென்பதுபொருள். (55)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தத்தினது சித்தபாவஞ் சென்றபின் அதன் பிரதிபிம்ப சைதன்யத்திற்குப் பிம்பசிற் சாமானிய ஐக்கியம் உண்டாகியது எனல்:—தங்குஎன்பது.

தங்குகாட்சிவிட் டமலமாய் ஞானத்தின் சமமடைந் ததுபோதம்
பொங்குவாரிதி திரைமுதற் பகிர்ச்சி போய்ப் புனல்சம மடைந்தென்ன
வெங்குமோர்மதி யாயறிவுற்றவ னீறில்போகத் தெண்ண
மங்கி யாண்டண்டம் பரித்துயர்ந் தமலசின் மயவிசும் புருவானான்.

(ப - ரை.) தங்குகாட்சி விட்டு = வாதனையால் வந்திருந்த திருசியத்தைவிடுத்து, அமலமாய் = தூயதாய், ஞானத்தின்சமம் அடைந்தது போதம் = சித்தானது சிற்சா மானியத்தை யடைவுற்றது, பொங்குவாரிதி = வழியுமாழியானது, திரைமுதற் பகிர்ச்சி போய் = அலைமுதலிய வேறுபாடுநீங்கி, புனல்சமம் அடைந்தென்ன = நீரானது ஒப்பாய வாறு, எங்குமோர் மதியாயறிவுற்றவன் = எவ்விடத்தும் ஒரேயறிவாகப் போத மடைந்தவன், ஈறில் போகத்தெண்ண மங்கி = அளவில்லாத போகங்களின் நினைவொ ருவி, ஆண்டு = அவ்விடத்து, அண்டம்பரித்து = திருசியங்கட் காதாரமாய், உயர்ந்து= மகத்தாய், அமல = நிருமலமாய், சின்மயவிசும் புருவானான் =சித்தாகாச வடிவமேயானான்.

(ஸ்ரீ - வீர.) தன்னால் விளக்கப்பெறுவதாய விருத்தியாகாரமான திருசியத்தை விட் டுப் பிரதிபிம்ப சித்தானது தூயதாய்ச் சருவவிருத்தி சாதாரண சாக்ஷி சிற்சாமானிய பாவத்தைப் பின்னரடைவுற்றது; வீசியாதிபேதம் விட்டகடல் நீர்ப்பொதுமையை நேர்ந் ததேமானும், அது ஏகதீயாதலின், ஏகாசீபூத தனதுபாதிபுத்தி எதற்கோ அத்தகைய தென்பதுபொருள். இவ்வண்ணம் நிர்விகற்பசமாதிப் பிரதிஷ்டையை யடைந்த வுத்தாலக முனிவனுக்கு அதன் பரிபாகத்தால் தத்துவசாக்ஷாத் காரத்தையும் அதன்பலமாய்ப் பிரஹ்ம மத்தை யுணர்ந்தவன் பிரஹ்மமேயாவன்" என்னும் மறையாலுணர்த்தப் பெற்ற பிரஹ்ம

பாவத்தையும் காட்டல்:—ஈறிலென்பதாதி, அதன்பின்னர் அவ்வுத்தாலக முனிவன் அத்த கைய சமாதியினது மகிமையினுலே மெய்யுணர்வாகிய தத்துவசாக்ஷாத்காரம் அடையப் பெற்றவனுகிச் சர்வஜகததிஷ்டானமும், துவைதத்தோற்ற மற்றதும் தூயதும் மகத்தும் ஆயிலங்கும் சிதாகாசமே யாயினன். போகத்தெண்ணம் 6000 ப்பாடம், பூதத்தெண்ணம் 32000 ப்பாடம், பதவுரைமுன்னது ஸ்ரீவீரசேகரம் பின்னதென்னவுணர்க.

(ச.) போதம் = அறிவானது, தங்குகாட்சி = திருசியத்தை, விட்டு; அமலமாய், ஞானத்தின் சமம் =சிற்சாமானியமென்னும் எங்குநிறைந்த சின்மாத்திரரூபத்தை, அடைந் தது, திரைமுதற் பகிர்ச்சிபோய் = வீசியாதிபேதத்தை விட்டதனுல், எங்குமோர்மதி யாய் = ஏகாகாரபுத்தி கோசரமாய், பொங்குவாரிதியானது, புனற்சம மடைந்தென்ன = சுத்தஜல பாவமானதுபோல், அறிவுற்றவன் சொரூபசாக்ஷாத் காரத்தை யடைந்தவன். ஈறில்போகத் தெண்ணம் மங்கி = வாகியாந்தரிந்திரிய விருத்தியின்றி = ஆழ்ந்தண்டம்= விசுவாதாரமாய், பரித்து உயர்ந்த, அமலசின்மய விசும்புருவானுன் = சுத்தமாய் வியாபக மான சிதாகாசமானுன். (56)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்தன்மையடைந்ததே நிரதிசய ஆநந்த அடைவாம் எனக் காட்டல்:—அவ்வென்பது.

அவ்விடத்தினிற் காண்பது காட்சியற் றனந்தமா நல்லின்பஞ்
செவ்வியாநந்த முற்றன னமுதமார் தெண்கடற் குளித்தென்ன
மெய்விடக் கழன்றதீதனு யொருதல மேவினன் சதாநந்தப்
பௌவமாயின னெங்கணு மொத்தசற் பாவமே வடிவானுன்.

(ப - ரை.) அவ்விடத்தினில் = ஆண்டு, காண்பது காட்சியற்று = திருசியதரிசன வர்ஜிதமாய், அனந்தமா நல்லின்பம் = முடிபற்றுத் துயரற்ற பேராநந்தம் அடைந்தனன், செவ்வியானந்த முற்றனன்=உத்தமமான ஆசுவாதத்தை யடைந்தனன், அமுதமார் தெண் கடற் குளித்தென்ன=அமிருதமயமாய தெளிந்த சமுத்திரத்தில் மூழ்கியதேபோலும், மெய் விடக் கழன்றதீதனுய் = சரீரத்தினின்றும் நன்கு அதீதனுகி, ஒருதலமேவினன்=யாதோ ஓரிடத்தை யடைந்தனன், சதாநந்தப் பௌவமாயினன் = சதாநந்த சாகரமேயாயினன், எங்கணுமொத்த = எவ்விடத்தினு ஒரேபடித்தான, சற்பாவமே வடிவானுன் = சத்தாசா மான்ய ரூபாத்மாவாயினுன்.

(ஸ்ரீ - வீர.) ஆண்டு பின்னர்த்திருசியதரிசனக் கற்பனையில்லாத ஆனந்தத்தை யடைந்தனன், அநந்தமாய், பிரஹ்மாதிகளானே ஆசுவதனஞ் செய்யப் பெறுவதானே யுத் தமமாய் இலங்கும் ஆசுவாதனத்தை யடைந்தனன், சர்வவிடய சுககணங்கட்கு ஆதாரபூத மர்ணவம்போலா யிருந்தனன். அத்தசையையே வருணித்தல்: — மெய்யென்பதாதி, சரீ ரத்தை நன்ருக அவமதித்து இதினின்றுங் கிளம்பியவன்போலச் சோதித்து அத்தியந்தம் தேகத்தை யானென்பது மறந்து கிட்டைபுரிந்தவனுகி. யாதோ ஓரவனியையடைந்தவனுகி ஆனந்த சாகரனுய், சத்தாசாமான்ய ரூபாத்மாவா யிருந்திலங்கினன்.

(ச.) அவ்விடத்தினில் = அச் சிதாகாசத்தில், அமுதமார் = ரசாயன ரூபமான, தெண்கடல் குளித்தென்ன = அர்ணவம்போல், காண்பது காட்சியற்று = திருசிய தரி சனவர்ஜிதமாய், நல்லின்பச் செவ்வி=உத்தமாநுபோகமாய், அநந்தமா மாநந்தமுற்றனன், மெய்விடக் கழன்றதீதனுய் = ஜீவபாவத்தினின்று விடுபட்டவனுய், ஒருதலமேவினன் = சிதாகாசரூபத்தை யடைந்தவன், சற்பாவம் = சத்தாசாமான்யம். (57)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிருவிகற்பமாகி நின்றதையே திருஷ்டாந்த முகமாக வியந்தோதல்:—அந்தணனென்பது.

அந்தணன்றன தறிவெனு மன்னமா நந்தமா நிலேயோடை
வந்தமர்ந்தது சரற்கக னத்திலே வயங்குமா மதியென்ன
வுந்துகாற்றிலா விளக்கென வோவியத் துருவென திரையில்லாச்
சிந்துவென்னநீர் கருக்கொண்டு பொழியலாச் சேண்முகி லெனநின்றான்.

(ப - ரை.) அந்தணன் றனதறிவெனுமன்னம் = துவிஜசேதன ஹம்சமானது ஆநந்தமாம் நிலேயோடை வந்தமர்ந்தது = ஆனந்த சரசின்கண்ணே வந்து நிலைத்தது, சரற்ககனத்திலே வயங்கு மாமதியென்ன = சரத்காலத்தில் நிருமல ஆகாயத்தில் விளங்காநின்ற பூர்ண சந்திரனைப்போலும்; உந்துகாற்றிலா விளக்கென = நிர்வாதஸ்தலத்தில் வைத்த தீபம்போலும்; ஓவியத்துருவென = பித்தியிலமைத்த சித்திரபிம்பம்போலும், திரையில்லாச் சிந்துவென்ன = நிஸ்தரங்க சமுத்திரம்போலும், நீர்கருக்கொண்டு பொழியலாச் சேண்முகிலென் = சலம்பருகிக் கார்நிறம்வாய்ந்து பொழியாத ஆகாய மேகம்போலும், விருஷ்டமூக அப்புதஸ்திதிபோலும், நின்றான் = நிருவிகற்பமா யிருந்தான்.

(ஸ்ரீ - வீர.) விப்பிரசிரேஷ்டனாகிய உத்தாலகமுனிவனது அறிவம்சமானது ஆனந்த சரசின்கண்ணே ஸ்திதமாயது, சரத்காலத்திய சொச்ச ஆகாயத்திற் கலாபூர்ணநக்ஷத்ர ஈசனாகிய சந்திரன்போல வீற்றிருந்தான், அவாததீப மென்னவாயினன், லிபிகரும அர்ப்பித உவமையுற்றனன், விலீனவீசியம் புதியென்ன விளங்கினன், விருஷ்டமூக அம்புஸ்திதியை யடைந்தனன் = முன்னர்ப்பெய்தது பின்னர் சத்போது, மூகம் = ஜலமற்றதுமாயது, இத்தகைய மேகசதிருசஸ்திதியை யடைந்தனன் என்பதாம்.

(ச.) அந்தணன்றனதறிவெனு மன்னம் = பரமான்மரூப அம்சபாவத்தையடைந்த உத்தாலக னென்னும் அந்தணரூபமானவறிவு என்பதுபொருள், மாமதியென்ன = கலைநிறைந்த சந்திரன்போல், முகிலென = சத்தியாத மேகம்போல், நின்றான் = ஸ்திதியுற்றான். மூலம்:—வ்ருஷ்ட = பெய்ததும், மூக:= சத்தஞ்செய்யாததும், ஆகிய, அம்புதம் = மேகம், அதற்கொப்பான ஸ்திதியையுடையவன். (58)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தற்பத ஆரூட அம்முனிவன் பிரஹ்மலோகாந்த சித்திகணங்களைப் பாதத்தில் வீழ்ந்து வேண்டிக்கொண்ட போதினும் கடைக்கண்ணாலும் நோக்கிலன் என்பதைக்காட்டல்:—இந்த, அலங்கல், என்பன;

இந்தமிக்கபே ருலகினிற் றற்பதத்திருக்கு மம்முனியைக்கண்
டந்தரஞ்செறி சித்தர்விண் ணவர்குழு வற்புதப் பலபேரும்
வந்துசுற்றின ரரம்பையர் நிரம்பினர் வாசவன் றனிமூதூர்
தந்தளிப்பவ னங்கவை யனைத்தையுந் தள்ளினன் விருப்பின்றி.

அலங்கன் மாதரிங்கிதங் களைச்சைசவத் தறிகிலானென னச்சற்றுங்
கலங்கலாத கெம்பீரமா மதியினன் கடவுள்வான் பேற்றெண்ணம்
விலங்கியன்ன தன்னனந்த வீட்டிலே மேவின்ன்மதியாறு
துலங்கியோங்கிய வுத்தராயணத் திலேசுடர் விடுகதிரென்ன.

(ப - ரை.) இந்தமிக்க பேருலகினில் = இவ்வரிய மகாலோகத்தில், தற்பதத்திருக்கும் = பரமபதத்தில் வீற்றிருக்கும்; அம்முனியைக்கண்டு = அந்த உத்தாலகமகாமுனிவனைக்கண்டு, அந்தாஞ் செறி=வியோமத்தில் வாழ்பவர்களாய, சித்தர் = சித்தர்கள், விண்ணவர்=தேவதைகளின், குழு=கூட்டம், அற்புதப்பல பேரும்=அற்புதம்வாய்ந்த மற்றையர் பலரும், வந்து சுற்றினர்=அம்முனிவனது ஆசிரமத்திற்கு வந்து சூழ்ந்தனர், அரம்பையா நிரம்பினர் = தேவாங்கனைகள் நிறைந்தனர், வாசவன்றனிமூதூர் = இந்திரனது ஒப்பற்ற தேவ்நகர ஐசுவரியங்களை, தந்தளிப்ப = அன்போடு மீந்திடவும், அவனங்கவை யனைத்தையும் = அம்முனிவன் அவ்விடத்திலேயே அவ்வியாவற்றையும், தள்ளினன் விருப்பின்றி= அகற்றினன் ஆசையற்று.

அலங்கன் மாதரிங்கிதங்களை = கற்பகப்பூமாலை யணிந்த மங்கையர் அபிநயங்களை, சைசவத்தறிகிலான் என = சிசு அவத்தையில் அறியாதவன்போல, சற்றுங்கலங்கலாத கெம்பீரமா மதியினன் = சிறிதும் க்ஷோபத்தை யடையாத தீரபுத்தியை யுடையவன், கடவுள்வான்பேற் றெண்ணம் விலங்கி = தேவலோக போகங்களிற்சிறிதும் ஆசையேயில்லாமல் அவற்றை யநாதரவுசெய்து, அன்னதன் ஞானதவீட்டிலே மேவினன் மதியாறு= முன்னந்தானிருந்த ஆநந்தமந்திரமாகிய தன்னிடத்திற்றானே ஆறுமாதபரியந்தம் இளைப்பாறி யிருந்தான், துலங்கியோங்கிய வுத்தராயணத்திலே=மேகாவரண மில்லாமல்விளங்கி விரிந்த உத்தராயண காலத்திலே, சுடர்விடுகதிரென்ன = பிரகாசியாநின்ற சூரியனைப் போல.

(ஸ்ரீ - வீர.) பின்னர் இம்மகாலோகத்தில் நெடுநாளிவ்வண்ண மிருந்த வுத்தாலக முனிவன் வியோமத்திற்செல்லும் சித்தர்களும் அமரர்களும் மற்றைய தேவஜாதிகளும் ஆகிய அளவில்லாதவர்கள் வரக்கண்டான், எப்புறமும் சக்கிர அருக்கபததாதாக்களாய், அப்சரஸ்கணங்களானே இடையீடின்றியனவாய், உள்ளவிசித்திரமாய சித்திஜாலங்கள் வந்தன. அத்துவிஜ உத்தமனனவன் அந்தச் சித்திவிருந்தங்களை ஆதரவு செய்யவேயில்லை கம்பீரமதி யுடையவனுய்க் கலக்கமொன்று மின்றியவனுய்ச் சைசவ விலாசங்களைப்போல இருந்தனன். சித்திசமூகத்தை அநாதரவுசெய்து, ஆநந்தமந்திரமாகிய அத்தகைய நிற் விகற்பசமாதியின் கண்ணே உத்தராயண ஆதாரதிக்குத் தடத்தில் ஆதித்தியனைப்போல ஆறுமாதபரியந்தம் வீற்றிருந்தான். (59-60)

(ஸ்ரீ - வீர-அ - கை) இருந்த நிலைமையின் பெருமைமையை எடுத்துரைத்தல்:— மூவரொன்பது.

மூவராகிய முதல்வரு மமரரு மொய்த்தசித் தரும்வாழுஞ்
சீவன்முத்தியாம் பதமடைந் தருந்தவன் செறியுமா நந்தத்தி
னேவலின்றிய நிறைவினு லாநந்த முதிர்ச்சியாம் பதமுற்று
ஞவதானபே ரானந்த மதுவிலவ் வறிவினுற் றிகழ்வுற்றுன்.

(ப - ரை.) மூவராகிய முதல்வரும் = முதன்மைவாய்ந்த, மும்மூர்த்திகளும், அமரரும் = சுரர்களும், மொய்த்த சித்தரும் வாழும் = நெருங்கிய சித்தசாத்தியர்களும் எழுந்தருளியிருக்கும், சீவன்முத்தியாம் பதமடைந்து, சீவன் முத்தியென்று சொல்லப்பட்ட பதத்தினையண்மி, அருந்தவன் = அரியதவத்தினையுடைய உத்தாலகமுனிவன், செறியுமாநந்தத்தின் = பொருந்து ஆநந்தத்தின், ஓவலின்றிய நிறைவினால் = இடைவிடாத பரிணம பூர்த்தியால் ஆநந்தமுதிர்ச்சியாம் பதமுற்றுன் =பேரானந்த பதத்தினை யடைந்தனன், ஆவதானபேரானந்த மதுவில் = உண்டாகாநின்ற இன்பமேனும் துன்பமேனு மில்லாத,

அவ்வறிவினால் நிகழ்வுற்றான் = அத்தகைய சொப்பிரகாச சைதன்ய வடிவமாகத் திதி பெற்று விளங்கினன்.

(ஸ்ரீ - வீர.) துவிஜோத்தமனாகிய முனிவனானவன், அவ்வவ்வுத்தர உற்கிருஷ்டமாய் ஏழாவது பூமிகை நிலைமை வரையுள்ள ஜீவன்முக்தபதத்தை நன்கடைந்தவனாயினன்; ஆண்டன்றோ, தேவதைகளும், தேவயோனி பேதங்களாய சித்தர்களும், கணதேவதைகளாகிய சாத்தியர்களும், சுரர்களினும் அவர் தந்தனிக்கவர்ச்சி கோபலீவர்த்த வியாயத்தானும், பிரஹ்மாவிஷ்ணு ஹராதிகளும் வீற்றிருக்கின்றார்கள். ஆனந்தத்திற் பரிணமித் தன்மையால், அவ்வானந்தத்தின் கண் இரச ஆசுவாதலக்ஷண சித்தபரிணாம சூனியத்தன்மையாலே இருப்பதில்லையானந்தம் இவனுக்கென் விற்பன்னமாய அனானந்த பதத்தை யடைந்தனன், அவ்வேதுவினாலே அவனது ஆத்மசைதன்யம் விஷயிகட்கேபோலும் க்ஷேத்திர ஆனந்தத்தில் ஓளிரவில்லை, நிரானந்த துக்கத்திலும் இல்லை, மற்றோ சொப்பிரகாச ஏகரசபூர்ணத்தை யடைந்து நிலைபெற்றது. பலீவர்த்தம் = எருது.

(ச.) யாதொரு காரணத்தினால் அவ்வுத்தாலகன் ஆனந்தத்தின் ஓவலின்றிய நிறைவினால் = ஆனந்தரூபமாகப் பரிணதமாதலின், ஆனந்த முறுநிலாப்பதம் = தன்கண்ணின்றியானந்த மற்றபதத்தை, உற்றான், ஆவதான, அக்காரணத்தினால். பேராநந்தம் = ஆநந்தத்தை, விஷயீகரிப்பது இல் = இன்றிய, அறிவினால், நிகழ்வுற்றான், சொச்சொரூபத்துக்கன்னியமான ஆனந்தமின்மையினானே யென்க, அது நிரானந்தவஸ்துவை விஷயீகரிப்பதுமில் = இன்றிய, அறிவினாற் நிகழ்வுற்றான். சொரூபம் ஆனந்தரூபமாக எவ்விடத்தும் பிரகாசிக்கின்றமையி னென்க. (61)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அஃதடைவுறவே மீளத்துச்ச இன்பவிழைவு விளைவுறாதாம் எனக்கூறி, அத்தகைய பதத்தை யுத்தாலகமுனிவன் ஆறுமாத பரியந்தம் வீற்றிருந்தான் என்று விளம்பல்:—ஒரு என்பது.

ஒருகணஞ்செறி வருடநூ றென்னினு முயர்ந்தவப் பதமுற்றோர்
வருபவந்தரு மேதுவாய்க் காண்பன மருவுமிவ் விழிமேவார்
பெருமையானவிப் பதத்திலுத் தாலகன் பிறைகளோ ரா்றாலே
யருகுறுவகை சித்திபூ மியைக்கடிந் தமைந்திருந் துணர்வுற்றான்.

(ப - ரை.) ஒருகணம் செறிவருடம் நூறென்னினும் =ஏகக்ஷணமேனும் ஆயிரக்கணக்கான வருடமேனும், உயர்ந்தவப் பதமுற்றோர் = மேலுக்குமேலான அச்சுகஸ்தானத்தை யடைந்தவர், வருபவந்தருமேது வாய்க்காண்பன மருவுமிவ் விழிமேவார் = ஓயாமல் வந்து கொண்டேயிருக்கும் ஜனனமரணத்தைக் கொடுக்கும் காரணமாய்த் திருசியங்கள் பொருந்தும். இந்ததிருஷ்டியை யடையமாட்டார், பெருமையான இப்பதத்தில் = மகிமைவாய்ந்த இந்தப்பதத்தினில், உத்தாலகன் = அம்முனீந்திரன், பிறைகளோர் ஆறாலே = ஆறுமாதம்வரை, அருகுறுவகை சித்திபூமியைக் கடிந்து =சமீபியாதபடி தூரத்தே சித்தி பூமியை யோட்டி, அமைந்திருந் துணர்வுற்றான் = நிருவிகற்பமாக இருந்து அறிவுற்றனன்.

(ஸ்ரீ - வீர.) கணமேனும் வருடசகத்திரமேனும் ஆண்டடைந் திருந்தமன்மானது மறித்தும் போகக்கூட்டத்தில் இரதியையடைய மாட்டாது, சுவர்க்க ஐசுவரியத்தை யநுபவித்தபுருடன் பூலோக சுகத்திற்போலும், அதுவேசர்வ உற்கிருஷ்டமென வருணித்தல்:— பெருமையான வென்பது. அதுவே தற்பதமாகிய பிரஹ்மமாம், அதுவே சாந்தமானகதியாம், அதுவே மேன்மைமிக்கதாம், அதுவே சாசுவதமான சிவமாம், ஆண்டு இளைப்பாறு

தல் அடையப்பெற்றவனை மயலானது மீண்டும் பாதைசெய்யமாட்டாது, அப்பதத்தைச் சாதுக்களடைந்து இத்திருசிய திருஷ்டியை மீளவும் அடைவதே கிடையாது கதிரோத்யானத்தை யடைந்த சைத்திரதர்களேபோலும், அம்மகாநந்த பதவியை அதிகாரியானவனடைந்து = சிரவணமனன சமாதி பரிஷ்கிருதமாய சித்தத்தானே சாஸ்திர ஆராய்ச்சியானே அடைந்து = அபரோக்ஷமாக அடைவுற்று, திருசியத்தை வெகுவாக வெண்ணுர் அரசன் றீனத்தன்மையை யென்ன. தற்பதவிசிராந்தியை யடைந்து தெளிந்துணர்ந்த சித்தமானது திருசியதசையாகிய சமாதிவியுத்தான தசையைநோக்கி, பிறர்தமதுமகத்தான பிரயத்தனத்தினுலே ஆருவது பூமியில் உணர்ச்சியை யடையாநிற்கும்; ஏழாவது பூமியிலே வருவதே கிடையாது; ஹே அநகனே இதுபயிற்சிக்குத் தக்கபடிநிற்கும்; உத்தாலகமுனிவன் அத்திரியின்கண் ஞறுமாதம் வரை, சித்திபூமிகளின் நினைவை வெகுதூரத்தில் விட்டவனுகி, இளைப்பாறியிருந்து, பனிப்படலத்தி னின்றும் சித்திரைமாதத்தில் அருக்கன் போல விழித்துப் பார்த்தான்.

பிரஹ்மபதத்தே வீற்றிருப்பவனுக்குப் பிற ஐசுவரியங்கள் துரும்புக்குச் சமானமாய்த் தோற்றுமென ஸ்ரீபர்த்ருஹரியாரு மியம்புவர்;—

பிரமனுமி மிந்திரனே முதலனவானவராம் பெருங்கணங் கடமைத்திரண கணமென வெங்கிருந்தே, திரமெனுமோ வெதன்சுவையாற் றிரிலோகவரசாதி யவிபவம் விரசமதாய்த் திகழ்வுறுமோயாதோ, பரமவனவரத மிளிரொன்றதுவே யாகப்பனு போகமிலங்கனுறுமையவருந்தவரே, யுரமறவே யொருகணமங் குரமானவதின் வேறுளபோகங்களிற் களிப்பையுறு திருமினிருமின்,

கோவணநூறு கூறுபுற்பீறற் கொளுங்கந்தை மற்றுமத்தகைத்தே
யாவலில்பயிக்க வுணவெண மிலதாமருந்துயில் வனமயானத்தே
தாவிறன்வயனுய்த் தடையறத்திரிதல் சந்ததஞ்சிந்தை தண்மையதா
மூவுறில்யோக மகோற்சவத் திறமைமூ வுலகாளலாலென்னே.

(௪.) உயர்ந்தவப்பதம் ஜீவன்முத்தி ரூபத்தை, உற்றோர் = உற்றசாதுக்கள், வருபவந்தருமேதுவாய் = சம்சாரவேதுவாகிய, காண்பனமருவு மிவ்விழி = பிரபஞ்சத் தோற்றத்தை, மேவார், இப்பதத்தில் = இச்சமாதியில், பிறைகள் = மாதங்கள், சித்திபூமியை = சுவர்க்காதி. (62)

(ஸ்ரீ - வீர - அ - கை. பார்த்தமுனிவரனைப் பார்த்துத் தேவதைகள் பலவாறு பிரார்த்தித்தலும்; முனீந்திரன் பூசித்துத்தேவதைகளைப் போமாறு விடைதந்தனுப்புதலும்:— விழித்து, பகவ, என்பன.

விழித்து நோக்கினன் சித்தரை யவர்களு மிக்குய ரிவன்றனைப்
பழிச்சியன் பொடுபகவநீ காண்டியெம் பணிதல்பொன் னுலகத்தி
லிழிச்சுமிவ் விமா னத்தவந் தேறுதி யிந்திரபதத்தின்பம்
கழித்தபூமிக ளனைத்தினு மில்லதோர் கற்பமப் பயன்றுய்ப்பாய்.

பகவசெய்தன தவமெலா மிந்திர பதமுறற் பொருட் டேயென்
றகமலர்ந்துரை பன்னிய சித்தரை யதிதிய ரெனநோக்கி
முகமலர்ந்துந் சித்தனன் மயங்கலன் முந்துறு பெருஞ்செல்வ
மிக்விரும்பலன் வெறுக்கலன் றிண்ணியோன் விபுதரே குதிரென்றுன்.

(ப - ரை.) விழித்து நோக்கினன் சித்தரை = நேத்திரத்தை விழித்துச் சித்தர் முதலிய தேவர்களைப் பார்த்தான், அவர்களும் = அச்சித்தர் முதலியவர்களும், மிக்குயர் இவன் றன்னை = தவத்தினாலே மிகுந்து மேன்மையடைந் திருக்கும் இம்முனீந்திரனை, பழிச்சியன் போடு = மிகுந்தபக்தியுடனே பூசித்து, பகவநீகாண்டி = ஹேபகவானே நீநோக்குதி! எம்பணிதல் = எமது நமஸ்காராதிகளை, பொன்னுலகத்தில் = சுவர்க்கலோகத்தில், இழிச்சும் = கொண்டுபோய்ச் சேர்க்கும், இவ்விமானத்து வந்தேறுதி = இந்த விமானத்தின் கண்வந்து ஆரோகணஞ்செய்தி, இந்திரபதத் தின்பம் = இந்திரபதவியினது ஆநந்தம், கழித்த பூமிகளனைத்தினு மில்லது = தள்ளத்தக்க மற்றையலோகங்கள் எவற்றினுமே கிடையாதது, எனவே இவ்வின்பமே இன்பத்தின் சீமாவென்றதாயிற்று, ஓர்கற்பம் அப்பயன்றுய்ப்பாய் = ஒருகற்பபரியந்தம் அந்தப் பிரயோஜனத்தை யினிதனுபவிப்பாயாக.

பகவசெய்தன தவமெலாம் = ஹேபகவந்! உலகத்திற் செய்யப்பெற்ற தவங்களியாவுமே, இந்திரபத முறற்பொருட்டே = சுவர்க்காதி பலபோகப் பொருட்டேயாம், என்ற கமலர்ந்துரைபன்னிய சித்தரை = என்பதாக இருதயதாமரைமலர்ந்து அன்புடனே இனிய வசனங்களை யுரைத்து வேண்டிக்கொண்ட சித்தர் முதலியவரை, அதிதியரென நோக்கி = அதிதிகள் என்பதாகவே பார்த்து, முகமலர்ந்து = பிரசன்ன கம்பீரமுகத்துடனே, பூசித்தனன் = முறைப்படி பூஜைசெய்தான், மயங்கலன் = சம்பிரம மற்றவனாயினன், மூந்துறு பெருஞ்செல்வம் = எதிர்ப்பட்ட பெரிய ஐசுவரியத்தை, மிகவிரும்பலன் வெறுக்கலன் = எண்ணி இராகப்படவு மில்லை துவேஷப் படவுமில்லை, திண்ணியோன் = அதிதீர்மதியனாகிய அம்முனீந்திரன், விபுதரேகுதிர் என்றான் = தேவதைகளே நீங்கள் செல்லுங்களென்று விடைதந் தனுப்பினான்.

(ஸ்ரீ - வீர.) நன்குணர்ச்சி பெற்ற அந்தப் பரமதேஜசு வாய்ந்த முனீந்திரனானவன், முன்காணப் பெற்றவர்களாயும், நமஸ்கார லாலசர்களாயும் அன்புடையவர்களாயும் சந்திர பிம்பவபுதாரிகளாயும், வெண்சிவப்பு மந்தார ரேணுக்களானே பூசப்பெற்ற வண்டினங்களாகிய சாமரங்களை யுடையவர்களாயு மிருந்த இரமணிகளையும், விளங்காநின்ற பதாகைப்படலங்கள் வாய்ந்த விண் விமானபரம்பரைகளையும், இதுசாதாரண விசேஷணம், இருபாலுமாம், தர்ப்ப பவித்திர அங்க கராம்புஜர்களாகிய எம்மனோராதிய முனிவர்களையும், வித்யாதர மங்கையர்களானே சூழப்பெற்ற வித்யாதர பதிகளையும், மீளவும் பார்த்தான். அந்த வைமானிகர்களும் முனிவர்களும், அந்த மகாத்மாவாகிய உத்தாலக முனிவனை நோக்கிக் கூறுவதாவது:—ஹேபகவன்! எங்களுடைய நமஸ்காராதிகளானே திருவுளமிரங்கி அனுக்கிரக திருஷ்டியானே நோக்குதி! இந்த விமானத்தின் கண்ணே யெழுந்தருளுவாயாக, நீ சுவர்க்கலோகத் திருக்கும் அமராவதி நகரத்திற்கு வந்தருளுவாயாக; சுவர்க்கத்தை யுபேக்ஷைசெய்யாம விருப்பதிற் காரணம் கூறல்:—இந்திரவென்பதாதி ஜகத்சம்போக சம்பத்துக்களுக்குச் சுவர்க்கமேதான் எல்லையாக வுடையது, ஹே விபுவே! துவிபரார்த்த அவசானாந்த காலம், வரை உசிதமா யிஷ்டமாகவிருக்கும் போகங்களை யனுபவிக்கலாம்; இதனானேயே தபக்கிலேசாதிகள் சபலமுடையன வாகின்றனவெனல்:—பகவவென்பதாதி, சுவர்க்காதி பலபோகப் பொருட்டேயன்றோ சகல தபக்கிரியைகளு மியற்றல். இந்த வித்யாதரவராங்கனைகளாகிய ஹாரசாமர தாரிணிகளைக் கண்குளிர நோக்குதி இவர்கள் யானையை யானைப்பேடுகள் உபசரிப்பதே போலும் உன்னையுபசரிப்பார்கள், தருமார்த்தங்களின் சாரம் பலப்பான்மையானே காமமாம், அக்காமசாரங்கள் நன்மங்கையர்களாம், வசந்தத்தில் மலர்க்கொத்துகள்போல அவர்கள் சுவர்க்கத்திலேயே யிருப்பார்கள். இந்தப்பிரகாரம்

வேண்டிக்கொண்ட அவர்கள் யாவரையும் அதிதிகளாகப் பாவித்து அம்முனிசிரேஷ்டன் முறைப்படி நன்கு பூசித்து, பொய்ம்மையாதி நிச்சயத்தானே குதுகலத்தை யடையாதவனாய் எழுந்தருளி யிருந்தான், அந்தத்திரதீயாகிய முனீந்திரன் அவ்வைசுவரியத்தை விரும்பவுமில்லை வெறுக்கவுமில்லை, ஹே அன்புடைய சித்தர்களே! நீங்கள் உங்களிடத்திற்கு ஏகுவீர்களாக என்று விடைதந்து விட்டு, தனது வியாபாரமாகிய சமாதிதற்பரனாகவிருந்தனன்.

(சு.) களித்தவென்பது கழித்த எனத்தொடை நோக்கி விகாரமாயிற்று. (63-64)

(ஸ்ரீ-வீர - அ - கை.) சித்தர்கள் சில நாட்கள்த்திருந்து தாமேசெல்ல மாதவனும் மாதவர்பாலுலவிமாதாதிகள்ாக நிருவிகற்பமாக விருந்தனனெனல்:—மொய்த்த, ஒரு, என்பன.

மொய்த்த கூட்டத்தை விடுத்தனன் றன்செயன் முயன்றிருந் தனன்போக
பெத்தநீங்கிய வவனையச் சுத்தரும் பின்புசின் னாட்பேணி
சித்தம்விட்டனர் தாங்களேயகன்றனர் சீவன்முத் தனுங்கானின்
மெய்த்தமாதவ ரிடங்களிற் சுகத்திலே வேண்டள வுலாவுற்றான்.

ஒருதினத்தெல்லை யொருமதி யெல்லைமற்றோர் வருடத்தெல்லை
பெருகுமாண் டெல்லை யெல்லையோ ரோர்காற் பேதமிற் றியானத்தின்
மருவியொன்றிடும் விழிக்குமந் நான்முதல் வருந்தொழில் களிற்சேர்ந்து
நிருவிகற்பமே யாயின னொருமையாய் நின்றனன் சித்தோடும்.

(ப - ரை.) மொய்த்த கூட்டத்தை = சூழ்ந்திருந்த கூட்டத்திற்கு, விடுத்தனன் = விடைதந்தனன்; தன்செயன் முயன்றிருந்தனன் = சமாதியாகிய தனது வியாபாரத்தைச் செய்துகொண் டிருந்தனன், போகபெத்த நீங்கிய அவனை = போகங்களில் வைராக்கியமடைந்துள்ள அம்முனி நாயகனை, அச்சித்தரும் = கூறிய சித்தகணங்களும், பின்பு=பின்னரும், சின்னாட்பேணி = சிலநாளுபாசித்துக் கொண்டிருந்து, சித்தம்விட்டனர் தாங்களே யகன்றனர்=மனம்விட்டுச் சுயமேவந்த வழியேயேகினர், சீவன்முத்தனும்கானில்= ஜீவன்முக்தனாகிய அம்முனிநாயகனும், அவ்வனத்திலும், மெய்த்த மாதவரிடங்களில் = உண்மையை யுணர்ந்த முனிவர்களது ஆனந்த ஆசிரமங்களிலும், வேண்டளவு சுகத்திலே யுலாவுற்றான் = இச்சையளவு ஆனந்தமாகச் சஞ்சாரஞ் செய்தான்.

ஒருதினத்தெல்லை ஒருமதியெல்லை மற்றோர் வருடத்தெல்லை = ஒருபோது ஒருதினபரியந்தம், ஒருபோது ஒரு மாதபரியந்தம், மற்றொருபோது ஒருவருடபரியந்தம், பெருகுமாண்டெல்லை = ஒருபோது அநேக வருடங்கள்வரை, எல்லையோ ரோர்கால் = என்பதாக ஒவ்வொருகாலத்தை யெல்லையாகக் கொண்டு, பேதமில்தியானத்தில் மருவியொன்றிடும் = நிருவிகற்ப சமாதியிற்சேர்ந்து விசிராந்தி யடைந்திடும், விழிக்கும் அந்நாண் முதல்வருந் தொழில்களிற் சேர்ந்து = விசேடவுணர்வை யடையும்போது துடங்கிநுகர் வினையத்தால் வாரா நின்ற கிரியைகளிற் சார்ந்தபோதினும், நிருவிகற்பமே யாயினன் ஒருமையாய் நின்றனன் சித்தோடும் = நிருவிகற்ப சமாதியையேயடைந்தனன் சித்தத்துவத்தோடும் ஏகைகபாவமாக நிலைபெற்றனன்,

(ஸ்ரீ - வீர.) பின்னர்த் தனது சமாதிதருமத்திற் றற்பரனாகி, போகங்களிற் பரவைராக்கியமுற்ற அவ்வுத்தாலக முனிவனை உபாசித்துப் பார்த்துச் சித்தாதியர் சிலதினங்கள் சென்றபின்னுமே சென்றனர், ஜீவன்முக்தனாகிய அந்த முனீந்திரனும் சுகப்படி சஞ்சாரஞ்

செய்துகொண்டு இச்சைப்படி வனாந்தரங்களிலும் முனிவர்களது ஆசிரமங்களினும் உலாவினன். மேருமந்தர கைலாச ஹிமாசல விந்தியச் சாரல்களிலும் த்வீப உபவனதிக்குஞ் சஜங்கலாரண்ய பூமிகளிலும் உலாவினன். அதுமுதலாகத் தற்பதமடையப் பெற்றவனாகி உத்தாலகனாகிய அந்தணர் சிரேஷ்டன் கிரிகுக்ஷிகளின் குகைகளில் தியானலீலையாற் காலங்கழித்தான்; தியானலீலையால் என்றதனானே தியானமும் அவனுக்கு லீலையேயாயது அசனனும் அவனுக்குச் சாதிக்கத்தக்க தொன்றின்மையின் என்பது குறிப்பிக்கப் பெற்றது. ஒருகால் தினத்தாலும், ஒருகால் மாசத்தாலும், ஒருகால் வருடத்தாலும், மற்றொருகால் அநேகவருடங்களாலும்சமாதியாரூடனாகியே இருந்து உணர்வன். உத்தாலகமுனிவன் விழித்தபோது தொடங்கி விவகாரபரனாயினும் சுசமாகிதனாகவே சித்தத்வத்தோடு ஏகத்வத்தை யடைந்திருந்தான்; விவகாரகாலத்திலும் பரபரப்பில்லாதவனாகவே பரமசாந்தனாகியிருந்தான் அறியாரைப்போல விக்ஷேபவானாக வில்லையென்பதாம்.

ஜீவன்முத்தனது சஞ்சாரமகிமை ஸ்ரீ ஆத்ம வித்யாவிலாசத்திலும் இங்ஙன் காணப்பெறும்:—

இவ்வுலகமியாவு மொருசாரமற்ற தன்றியுமா யிகமேயென்னாத்
தவ்வின்மனந் தனிற்றேறி யாசையினை வேரறுத்த சதுரனாகித்
தெவ்வெனும் புன்மதமானமற் சரத்தையறுத் தெறிந்ததெளிஞனை
வல்வியமில்லோ ரொருவனனு தினமுஞ்சஞ் சரித்திங் கமர்வானன்றே,

கருமமதன் சாலமதைத் தணர்தவன யந்தகனாய்க் காதிலான.
யருமைசெறி சடனாகியான்மாவில் ரமிப்பவன யமலமான
பெருமைமிகுந் துறவிறைவனே ரொருவனனவரதம் பிறங்கலான
தருமிகுதியுறு வனத்தின்கோண மவைதமின் மிகச் சஞ்சரிப்பானன்றே.

தனதுசுகந் தனைப்பருகு பரவசனாயோ ரொருவன் றனிவீடெய்தித்
தனதுமனஞ் சென்றவணஞ் சிலவிடத்திற் றியானமே சரிப்போனாகி
யுனவரிய சிலவிடத்திற் கான்மிகப் புரிபவன யொருவனாகி
ந்னியினமுஞ் சிலவிடத்தி னடனம்தைத் தடையதற நவிற்றுவானே
இவைபோன்றன பலவுங் குணரலாம். (65-66)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிற்சாமானிய சிராப்யாசத்தானே சற்சாமானிய மானமையை விரித்துரைத்தல்:—பரந்த, தெரிவதாம் என்பன.

பரந்தசித்தின தொருமையின் செறிவினைப் பழகலாற் பெருஞ்சித்து
நிரந்தரித்தெங்குஞ் சமமதா யினன்புவி நிறைவுறும் வெயிலென்னத்
திரந்தருஞ்சித்தி னொருமையை நெடும்பகற் செறிபரி சயஞ்செய்ய
வரந்தைதீர்ந்தசற் பாவசாமானிய மடைந்தன னதனாலே.
தெரிவதாமிவற் றுதயமத் தமமுருன்சித்திர ரவிபோலப்
பெரியதாய்ச்சமவின்பமாம் பதவியின்பேற்றினா லுபசாந்தி
புரியுநெஞ்சினன் பிறவியுமையமும் போய்ச்சரற் ககனம்போல்
விரியுநின்மல சாந்தமெய் யொளிநிறை வேதன வடிவானான்.

(ப - ரை.) பரந்த சித்தினதொருமையின் செறிவினைப்பழகலால் = சித்தத்வ ஏககன அப்பியாசத்தானே, பெருஞ்சித்து நிரந்தரித்தெங்குஞ் சமமதாயினன் = மகாசித்துவத்தை

யடைந்து அம்முனிவன் யாண்டும் சமதேஜசுடையவனாயினன், புவிநிறைவுறும் வெயி லென்ன = அவனியின் கண்ணே நிறைந்திடும் சூரியசம்பந்த தேஜசேபோலும்; திரந்தருஞ் சித்தின் ஒருமையை = எப்போது மாறுதசித்தின் சாமானியத்தை, நெடும்பகல் = வெகு காலம், செறிபரிசயஞ் செய்ய = இடைவிடாம லப்யசித்தலால், அரந்தைதீர்ந்த = சகல துயரமுமில்லாத, சற்பாவ சாமானியம் அடைந்தனன் அதனாலே = சத்தாசாமானியத்தை அடைவுற்றனன் அவ்வப்பியாச பலத்தினாலே.

தெரிவதாமிவற் றுதயமத்தமமுறான் சித்திரரவிபோல = இக்கிருசியத்தில் சித்திர சூரியனைப்போல, அஸ்தமும் அடையவில்லை உதயமுமுறவில்லை யம்முனிவன்; பெரிய தாய்ச் சமவின்பமாம் பதவியின்பேற்றினால் = பிருகத்தாய சமபரபதலாப அடைவினால், உபசாந்திபுரியு நெஞ்சினன் = பரமவுபசாந்தியைப் பற்றியமனத்தினன், பிறவியுமையமும் போய் = ஜனனபாசமறு பட்டவனாய், சந்தேக ஊஞ்சல் க்ஷீணமானவனாய், சாற்ககனம் போல் = சரத்கால ஆகாயம்போல, விரியுநின்மல சாந்தமெய்யொளி நிறைவே தனவடிவா னான் = விரிந்த அமல உபசாந்த சத்தியபிரகாச பூரணமேதனது வடிவமாக இருந்திலங் கினான்.

(ஸ்ரீ - வீர.) அந்தக்கரண அதன் விருத்தியநுகத வதன்சாக்ஷீ சைதன்யத்திற்கே, பகுத் துத்தரிசன தாரைவடிவ சமாதிரூட அப்யாசத்தால் அபரிச்சின்ன சிற்பாவம் அடைவித்தவ் வுத்தாலகமுனிவன், அவனியின் கண்ணே செரதேஜசிருப்பதேபோல, எல்லாப்பிராணி களிடத்தினும் நேயத் துவேடவர்ஜனத்தானும் காருண்யத்தானும், விடம்மில்லாத பிரஹ்ம பாவதரிசனத்தானும், சமமுற்றவனாயினன்; இதனானே அம்முனிவனுக்கு முறையேஐந்தா வது பூமியினின்றும் ஆறும்பூமிகையடைவு அறையப் பெற்றதாயிற்று, இனியவனுக்குச் சப்தமபூமி விசிராந்தியைக் தெரிவித்தல்:—திரந்தருமென்பதாதி, சிற்சாமானிய சிராப்யா சத்தானே எல்லாவற்றானும் திருசியததினதூஉம் அதனது சமஸ்காரத்தனதூஉம் உச்சே தமாகியவழி, அதனைவெளிப் படுத்தும் ரூபத்வலக்ஷண சித்வவிவகாரத்திற்கும் உபரமமுள தாகவே, சொப்பிரகாச நிரதிசய ஆனந்த சன்மாத்திர பரிசேடத்தானே சத்தாசாமானியத் தையடைவுற்று, சித்திரரவிபோல, இத்திருசியத்தின் கண்ணே "இப்பூதங்களினின்று மெழுந்தே செப்பனவையே சிதைவுற்றிடலாகும், பிற்பிறவிப் பெயரு மிலையேயாம்" என்ப தாதி சுருதிதரிசிதமாய ஆவிர்ப்பாவ திரோபாவலக்ஷணம் வாயந்த உதயமும் அஸ்தமயமும் அடைந்தில னம்முனீந்திர வரியன். அதன்விரையாய அவித்தைகாம கருமவாசனைகள் மூற் றினுமே அற்றுப்போனமையின் என்பது கருத்தாம். இத்திதியையே விரித்துரைத்து முடி வுறுத்தல்:—பெரியதாய் என்பதாதி, சர்வவிக்ஷேப உபசமனத்தானும் நிரதிசய ஆனந்தரூப பரபதலாப அடைவினானும் நன்குசாந்தமாய்க் கழிந்த மனத்தினனானான், அதனானே சருவ கரும பீஜக்ஷயத்தாற் சிதைந்தஜனன பாசத்தனானான், க்ஷீணசந்தேக தோலாவஸ்தையனு மாயினான், சரத்காலத்திற் ககனமேபோல அவித்யாமேகாடம்பரம் அணுவுமில்லாததும், அபரிச்சின்னமும், அதனானே நிரங்குச பிருகத்தன்மையான் நிரதிசய சத்தாஸ்பூர்த்தி சுகோற் கர்ஷத்தான் ஊர்ஜிதமும், நிராவரணத் தன்மையானே ஸ்புடமும், பழைய தசையினை முற்றினுமே மறந்திருத்தலின் அசேதமும் நிர்மலமும் ஆகிய அந்தப் பிரஹ் மசுபாவப் பிராப்தவிடிவத்தைத் தாங்கினவனாகி யிலங்கினான்; முன்போல உத்தாலகவபுவுட னிலங்கவில்லை யென்பதாம்,

(ச.) பரந்தவுள்ஸத்தின் = சித்தத்துவமே யென்னும், ஒருமையின் = ஒன்றினது செறிவினைப் பழகலாய், சிரானுசந்தானத்தினால், பெருஞ்சித்து = பரிபூரண சிற்பர்வத்தை,

நிரந்தரித்து = நிரந்தரம் பெற்றவனாய், சித்தத்தினொருமையை = சிற்சாமானியத்தை, பரிசயஞ்செய்ய. சற்பாவ சாமானியத்தை ஸ்ரீ இராமரது வினாவின்பின்பு தாமேசொல்வர். சமவின்பமாம் பதவி = சீவன் முத்திப்பதம். (67-68)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானாசிரியரை நற்றுழியானே மகிழ்வித்து ஸ்ரீ இராகவர் சரம பரியாயமாகக் கூறப்பெற்ற சத்தாசாமானியத்தை இலக்கணங்களானே அறியும் வேட்கையராகி வினாதலும். ஸ்ரீ வசிஷ்டபகவான் விடைதருதலும்:—என்றவென்பது.

என்றவசிட்டன் றனைவள்ள லெதுசத்தாசா மானியமென்
றன்றுவினவ வவனுரைப்பா னகல்சிற்சாமா னியவடிவா
யொன்று மொன்று மில்லாமை யுறுபாவனையி னுறைப்பாலே
தன்றனுள்ளங் கரைந்தேகிற் சத்தாசா மானியமதுவே.

(ப - ரை.) என்ற வசிட்டன்றனை = இன்னணம் அருளிய ஸ்ரீ வசிட்டபகவானை, வள்ளல் = ஸ்ரீ இராகவர், எதுசத்தா சாமானியம் என்று = யாது சத்தாசாமானியம் என்பது தாக, அன்றுவினவ = அப்போதுகேட்ப, அவனுரைப்பான் = ஸ்ரீ வசிட்டபகவான் அருளுவதாவது, அகல்சிற் சாமானியவடிவாய் = விஸ்தாரமான சிற்சாமானிய வடிவமாகி, ஒன்றும் ஒன்று இல்லாமை யுறுபாவனையின் உறைப்பாலே = ஒருதிருசியமும் சம்பந்தியாத அபாவத்தின் அத்தியந்த பாவனையின் றிடத்தினாலே, தன்றன் உள்ளங்கரைந்தேகில் = தன்னுடைய மனமானது நன்குக்ஷீணித்துப் போகுமானால், அதுவே = அந்நிலைமையே, சத்தாசாமானியம் = சத்தாசாமானியத் தகைமையாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே பரமேசனே ! ஆத்மஞானதினகர அருக்கனே ! எனதையத்திருணக் கெரியே ! அஞ்ஞானத்தாலாய தாபத்திரய வடிவ தாகமோகசந்தாபத்திற்குச் சீதாம்சுவாகிய பூரணசந்திரனே ! அஞ்ஞான அந்தகாரத்தை யழிப்பதிலும், அதனாலாய ஐயந்திரிபுகளையும் மோகாதிகளையும் அழிப்பதிலும், அவற்றாலாய அகிலதுக்கங்களையும் அழிப்பதிலும், தேவரீரே சமர்த்தர் என்பது சிறப்பு மூன்றன் ஹற்பரியப்பொருளாம். பரமேசனெனச் சம்போதித்தது குருவின்பால் ஈசுவரதிருஷ்டியே எப்போது மியற்றற்பாலது சாதாரணபுத்தி செய்யலாகாது என்பதை விளக்குதற் பொருட்டாம். ஆறாவதுபூமியிற் சித்தவாந்தர பேதங்களை யடியோடுமாய்த்துச் சிற்சாமன்ய சொரூபபூதமாய திருசிய அபாவத்தின் அத்தியந்த பாவனையால், சேக்திய சமஸ்காரங்களின் ஆத்யந்திக அழிவுபாடெய்தவே சித்தம்நன்கு நாசமாம்; நாசமாகவே தன்மாத்திர சத்தையானே தானே சித்தித்துள்ள பரிசிட்ட சித்தசித்திரண்டன் மாட்டும் அனுகதமான சத்தே சத்தாசாமான்யம் என்பதாம்.

ஈசனுஞானி யிருந்துளவிடத்தே யிருப்பது முத்திதானந்தக், தேசிகனேவல் செய்யுவன் காலென் சென்னியி லிருப்பதுமன்னி, மாசிலாப் பரமஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன்மதிக்கி, லாசிலாவரியு மொப்பலனனு மொப்பலனேவ ரொப்பாரே. என்புன போன்ற பலதிருவாக்கியங்களை ஈண்டுதாகரித்துக் கொள்க. என்னை, ஆசான் ஈசனே யென்னும் அறிவும் அன்பும் உதியாதேல் அருமறைப்பொருளும் அறிதல் இடர்ப்படுமலது நன்குபுலனாறதாம்; என்பதுதோன்றவே வேதசாரசமுத்தாணத்திலும் சுருதியுதாகரித்திதுகாட்டப்பெற்றது:—குருபான்றனக் கன்புடையமா புருடர் தமக் கருங்குருவினாலருளு, மொருபொரு ளொளிருமென மறையதுவு மோதிய தெவற்கெனமுதலா, யருமதுதனினு லருளிறை யடியையகம் புறந்தொழுதிடுமவராற், றெரிதரவிதனைக் குருபரனருளாற் றெரிந்துகற்றிட்டற குந்திடுமே என்பதாம்.

அறிவினையறிந்தபின்னரும் ஆண்டநாயகனது அரும்பணியே எம்முறையினும் இயன்றவ்வு இயற்றுதல் வேண்டுமென்பதே ஈசாஞ்ஞை, இதுவுமாண்டே யறிவுறுத்தப் பெற்றது:—ஐயத்தாலுடலின் முரணையடைந்தம் மாறெனும் பகமடைந்தவனே, மெய்யைத்தான் விழுந்தும் வரையினும் நினதுமெய்யடிக் கேவலே நிதமுஞ், செய்யச்தான் முயல்வவென்றனுலிதனைச் செயநிடக்கூடு நின்றனக்குச், செய்யததான் வேறொன்றென்றனுன் முடியா சிற்பர வீரசேகரனே, என்பதாம்.

(ச.) ஒன்று மொன்று வில்லாமையுறு பாவனையி னுறைப்பாலே = திருசியப்பிரபஞ்ச அபாவத்தின் உறைப்பான அனுசந்தானத்தினால் காலத்திரயத்திலுந் திருசிய முண்மையாக வின்றெனச் சுருதியுத்தி யநுபவங்களால் நிரந்தரம் அநுசந்தானஞ் செய்யுமேதுவினால், உள்ளங்கரைந்தேகில் = எப்போது சித்தம், நசிக்குமோ அப்போது, சிற்சாமானிய வடிவம் = சிற்சாமானிய சொரூபமான, தன்றன் = ஆன்மாவினது, சத்தாசாமானியம், சம்பவிக்கும், விக்ஷேப ஏதுவான சித்தம் அபாவமாதலின், ஆன்மாவினது சொரூபசத்தையே சேடிக்குமென்பது பொருள். (69)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலுமதனையே வருணித்தல்:—தேற்றமென்பது.

தேற்றமாங்காண் பனநீங்கிச் சித்தினிடையே சித்திறக்கிற்
சாற்றுமுயற்கொம் பெனநொய்தாஞ் சத்தாசாமா னியமதுவே
தோற்றும்புறனுள் ளாய்ப்பலவாய்த் துவக்கமாகு மிவையனைத்து
மாற்றியகன்று மனநிற்கி லதுசத்தாசா மானியமே.

(ப - ரை.) தேற்றமாங் காண்பன நீங்கி = அத்தியந்தம் திருசியமேயில்லாம லகன்றேகவே, சித்தினிடையே சித்திறக்கில் = பிரதிபிம்ப சித்தானது பிம்பசித்தினோடு முற்றினும் ஐக்கியமுறில், சாற்றும் முயற்கொம்பென நொய்தாம் = அதுவே = சொல்லாநின்ற அசத்துருவம்போல் அதிசொச்சமாகிய அதுதானே, சத்தாசாமானியம் = சத்தாசாமானியமெனப்பெறும், தோற்றும் புறனுள்ளாய்ப் பலவாய் = பிரதீதியாம் பாகியமாகியும் ஆந்தரமாகியும் நானாவாகியும், துவக்கமாகும் இவையனைத்தும் = உதயமாகும் இவ்வியாவுமே, மாற்றியகன்று = உதயமாகாமல் ஒழித்து, மனம் நிற்கில் = சித்தமானது நிதிபெறில், அதுவே = அந்நிலைமையே, சத்தாசாமானியம் = சத்தாசாமானிய மெனபபெறும். ஏகாரம் பிரித்துக்கூட்டப் பெற்றது.

(ஸ்ரீ - வீர.) சருவவிருத்திப் பிரதிபிம்பிதமான சித்தானது சருவதிருசிய பாதமாகவே சேத்திய அங்கிசங்களாய விருத்தியதன்விடயங்களற்றதாய் எஞ்ஞான்று பிம்பசைதன்யமாகியதன்னிடத்தே அத்தியந்தம் விலயமாமோ, அஞ்ஞான்று, அந்தபிம்பத்தின் அசத்துரூபம் எதன்கண் அது அசத்துரூபம் ஆகாசம், அதுபோல மிகத்தெளிவாயதாகிய நிலைமையாம், அதுசத்தா சாமான்யதை யெனவுணரத்தக்கது. பாகிய ஆந்தர ஆன்மகமாய இவ்வியாவுமாம் எச்சிறிதுளதோ, அந்த இச்சிறிதையு மகன்று மனமானது = சித்தவிருத்தியபிவியக்த அகண்ட சைதன்யமானது, வசிக்கும்போது சத்தாசாமான்யதை யெனச்சாற்றப்பெறும்.

(ச.) மனோலயமாயின், சித்து = சித்தவிருத்திப் பிரதிபலித சைதந்யம், காண்பன நீங்கி = சம்பந்தத்திற் குட்பட்ட சித்தமின்மையின் திருசியசம்பந்தரகிதமாய், நொய்தாம், சாற்று முயற்கொம்பென = ரூபமின்மையதுபோல், சித்தினிடை = ஆன்மாவில், இறக்கில் = இலயமாகுமப்போது, ஆன்மாவென்னும் பூரணமான சித்துக்கு சத்தாசாமானிய

மது, சம்பவிக்கும்; புறனுள்ளாய் = வாஸியாந்தர சகிதமாகிய வீதனைத்தும் அற்பமுமாற்றியகன்று, இல்லையென்று நிச்சயித்து என்பது பொருள். மனம் = சித்தமானது, ஆன்மாவில், நிற்கின் = லயிக்கும்போது, அது சத்தாசாமானியம். (70)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சத்தாசாமானிய இலக்கணத்தை முடித்து இதுவேதுரியாதீத பதமெனல்:—உன்னுவென்பது.

உன்னுவெதிர்காண் பனவொன்று மொழியா தியாமையுறுப் பென்னத்
தன்னுற்றன்பா லிறக்குமெனிற் சத்தாசாமா னியமதுவே
முன்னுமுடல்சேர் முத்தருட லிலதாமுத்த ரிருவர்க்கு
மென்னுளினுஞ்சேர் பெருங்கண்ணீ திதன்பேர் துரியா தீதபதம்.

(ப - ரை.) எதிர்காண்பன ஒன்றுமொழியாது = திருசியங்கள் யாவையுமே, உன்னு = அபாவிதங்களேயாகி, இயாமையுறுப் பென்ன = கூர்ம அங்கங்கள்போல, தன்னுல் = சுயமாகவே, தன்பால் = ஆன்மாவினிடத்தே, இறக்குமெனில் = இலயமாகுமாயின், அதுவே சத்தாசாமானியமாம் = இனிமையான அந்நிலைமையே சத்தசாமானிய மெனப்பெறும்; முன்னும் = யாவருந்தரிசித்து ஆனந்தமெய்தத் தகுதியாய; உடல்சேர் முத்தர் = ஜீவன்முக்தர், உடலிலதா முக்தர்=விதேகமுக்தர், இருவர்க்கும் = என்னும் இரண்டு பெயர்கட்கும், என்னுளினுஞ்சேர் பெருங்கண்ணீது = இம்மேலான திருஷ்டியானது எப்போதுமே, சம்பவிக்கத்தக்கது, இதன்பேர் துரியாதீதபதம் = இதன்பெயர் துரியாதீதபதமெனவும் சொல்வர்.

(ஸ்ரீ - வீர.) எப்போது ஆமைதன்து அவயவங்களை அடக்கிக்கொள்வதேபோல, சகல திருசியங்களும் பாவன யத்தினமில்லாமலே சகஜதிருஷ்டியானே சுயமாகவே தன்னுன்மாவில், அடங்கிடுமோ, அப்போது சத்தாசாமான்யதையாம். இத்திருஷ்டியே மிகவும் மேன்மைமிக்கதாம் இத்துரியாதீதபத வுவமைமேயது, சதேக அதேகமுக்தர்கட்கு எப்போதுமே சம்பவிக்கவே செய்யும். இச்சப்தம பூமிகாரூட திருஷ்டியானது எதனுற்றுரியாதீத பத உபமமதாமோ அதனுல் ஆகமுற்ற ஆகமற்ற முக்தர்கட்குச் சமானசொரூப ஸ்திதியில் விசேடமுள தென்பதாம்.

(சு.) எதிர்காண்பன = திருசியங்கள் சித்த முண்ணுட்டமெய்தலின் நினைவில் நெருங்காதனவாய் ஒன்று மொழியாதுன்னு = அபாவிதங்களேயாய், எப்போது, ஆமையுறுப் பென்ன, தன்னுற்றன்பால், பிரயத்தனமின்றியே, இறக்குமெனில் = நசிக்கும்போது, சத்தா சாமானியமதுவே; பெருங்கண்ணீது = துரியாதீத பதமென்னும் இந்தமேலான ஞானவஸ்தை, உடல் சேர்முத்தர் உடலிலாமுத்தர் = தேகாதேக சகிதரான ஜீவன்முக்த விதேகமுக்தர்க்கே, என்னுளினுஞ்சேர் முன்னும் = சம்பவிக்கும், சாக்கிராதி அவஸ்தாத்திரயத்தினு நிறை சாக்ஷிசைதந்யந் துரியமாம், அது விசுவதைஜசப் பிராஞ்ஞரூபமான சாக்கிராதி அபிமான சைதந்யத்தைக் குறித்துச் சதுர்த்தமா மென்பது பொருள். இந்தஞானதசையானதோ சதுட்டயாதீத மாதலின் துரியாதீத சத்தவாச்சியமாம். (71)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இத்திருஷ்டியானது அறிஞர்க் கெளிதெனவும் அறியார்க் கரிதெனவும் உரைத்தல்:—அறிந்தென்பது.

அறிந்துசமாதி யடைந்தோர்க்கு மனுபூதியினின் றெழுந் தோர்க்குஞ்
செறிந்துதோன்று மூடர்க்குத் தெரியாதாமிப் பெருங்கண்ணு
முறிந்துபிறவி யறுஞ்சீவன் முத்தரான சித்தரெலாம்
பிறிந்திடார்விண் பயில்காற்றும் பெரிதாமண்ணி லிரதமும்போல்.

(ப - ரை.) அறிந்து சமாதியடைந் தோர்க்கும் = சொரூபத்தை யுணர்ந்து சமாதி யடைந்தவர்க்கும், அனுபூதியி னின்றெழுந் தோர்க்கும் = சுவானுபூதியினின்றும் எழுந்தாகிய திருஷ்டி யடைந்தவர்க்கும், இப்பெருங்கண்ணு = இம்மகா திருஷ்டியானது, செறிந்து தோன்றும் = இடைவிடாதுண்டாம், மூடர்க்குத் தெரியாதாம் = உணர்விலாதவர்க்குண்டாகாதாம், முறிந்து = அறியாமைகெட்டு, பிறவியறும் = ஜனனமற்ற, சீவன் முத்தரான சித்தரெலாம் = ஜீவன் முக்தர்களாகிய சித்தர்கள் யாவர்களும், பிறிந்திடார் = இத்திருஷ்டியின் கண்ணே யிருப்பார்கள், விண்பயில் காற்றும் பெரிதாமண்ணில் இரதமும் போல் = வியோமவீதியிற் காலேபோலவும், பெரியபுவியினி லிரசமேபோலவுமென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே அநகனே! அவ்வித்திருஷ்டியானது பஞ்சமாதி பூமிகைகளிலும் சமாதிஸ்தனுக் குண்டாம், ஏழாவது பூமிகையிலேறியவனுக்கோ எழுந்தவனாயினும் உண்டாம், அறிஞனுக்கே இஃதாம், கேவலம் அஞ்ஞனுக் குண்டாகவே மாட்டாதாம், என்னை, இது போதசன்னியமன்றே! பேரிருதயமுற்ற ஜீவன்முக்தர்களி யாவர்களுமே இத்திருஷ்டியின் கண்ணே வீற்றிருப்பவர்களாகி, புவியின் கட்சித்தமாய இரசாதிகள் = பிரதாதிகள் போலவும், வியோமவீதியில் அநிலம்போலவும், இகலோக பரலோகபோக நசைராஜசுகளானே நீண்டப் பெறுதவர்களாகி இருந்து வாழ்வார்கள்.

(சு.) இப்பெருங்கண் = முற்கூறிய சொரூபஞான ஜந்தமான திருஷ்டியானது ஞானிகளாய்ச் சமாதியி லிருப்பவர்க்கும், உத்திதர்க்குங் கேவலமுதிக்கும், மூடர்க்கு = அஞ்ஞர்க்கு, தெரியாதாம் = உதியாததேயாம், மண்ணில் = புவியில், இரதமும்போல் = அறுசுவையும் போல். (72)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவரையே யுதாகரித்தல்:—மூவர் என்பது.

மூவர்முதல்வா னவரென்னை முதனாரதனை முதன்முனிவர்
மேவலுற்ற திப்பெருங்கண் வேற்றுப்பயமெல் லாநசிப்பித்
தோவலில்லா விப்பதத்தி லுத்தாலகனுற் றிருந்தனனு
லாவநீர்வ தெவ்வளவவ் வளவுஞ்சகமா மகத்திடையே.

(ப - ரை.) மூவர்முதல் வானவர் = பிரஹ்மா விஷ்ணு ஈஸ்வராதிதேவர்கள், என்னை முதல் = யான் முதலானவர்கள், நாரதனை முதன்முனிவர் = நாரதாதி முனீந்திரர்கள், என்பவர்கள் யாவர்களுமே, மேவலுற்றது இப்பெருங்கண் = இம்மகாதிருஷ்டியின்கண்ணிருந்து வாழ்கின்றார்கள், வேற்றுப் பயமெல்லாம் நசிப்பித்தோவலில்லா இப்பதத்தில் = பேத அச்சங்கள்யாவு மகன்று அகலுதலற்ற வாநந்தவடிவ இம்மகாபதவியில், உத்தாலகன் உற்றிருந்தனன் = உத்தாலக மகாமுனிவன் வாழ்ந்திருந்தான், ஆவல் தீர்வது எவ்வளவு அவ்வளவும் = இச்சையுள்ள காலமெலாம், சகமாம் அகத்திடையே = உலகமாகிய வீட்டின்கண்ணே. ஆல், அசை.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! புவியில் என்னைப் போன்றவர்கள் யாவர்களும், வியோமவீதியில், நாரதாதிகளும், அதற்குமேலான லோகங்களில் பிரஹ்மா விஷ்ணு ஈசுவராதிகளும், இத்திருஷ்டியின் கண் விசேடமான நிலையை யடைந்துள்ளார்கள். சமஸ்தபயநாசினியாய இம்மகா பதவியைப்பற்றி உத்தாலக மகாமுனிவன் ஜகத்கிருகத்தில் பிராரப்தக்ஷய பரியந்தம் வாழ்ந்திருந்தான். (73)

(ஸ்ரீ-வீர - அ-கை.) காலாந்தரத்தில் விதேகமுக்தியடைய ஆலோசித்து முயலுதல்:— காலமென்பது.

காலமநேகஞ் சென்றதற்பின் கந்தமாத னக்கிரியிற்
கோலமுழையி லம்முனிவன் குரம்பைவிட்டுக் குரம்பையிலாச்
சீலமுத்த னயிருப்பேன் றீர்வென்றென்றே சிந்தித்துச்
சால்நல்ல தளிர்த்தவிசிற் றனைத்தபதுமா சனத்திருந்தான்.

(ப - ரை.) காலம் அநேகம் சென்றதற்பின் = அநேககாலம் இவ்வண்ணங் கழிந்த தன்பின்பு, கந்தமாதனக்கிரியில் = கந்தமாதன பர்வதத்தில், கோலமுழையில் = அழகிய குகையில், அம்முனிவன் = அவ்வுத்தாலக முனீசுரன், குரம்பைவிட்டு = சரீரத்தைத்தியாகித்து, குரம்பையிலா = சரீரமில்லாத, சீலமுத்தனு யிருப்பேன் = விதேகமுக்தனு யிருப்பேன், தீர்வென்றென்றே சிந்தித்து = என்பது அதிதிட நிச்சயம் என்பதாகச் சிந்தனஞ் செய்து, சால நல்லதளிர்த் தவிசில் தனைத்தபதுமாசனத் திருந்தான்=மெல்லிய நல்லபல்லவாசனத்தில் பத்தபதுமாசனத்தின் கண்ணினிது வீற்றிருந்தான்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் வெகுகாலங்கழித்து அவனது மதியானது தேகத்தை விடுத்து விதேகமுக்தனாக விருப்பேன் என்று திடமாகவுதயமாயது. இவ்வண்ணம் சிந்திதார்த்த திட நிச்சயவானுகிப் பருவதக்குகையிற் பல்லவாதனத்திற் பத்தபதுமாதனனய் அர்த்த உன்மீலித லோசனனய், வீற்றிருந்தான். (74)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அம்முனிவன் முயன்று சமாதியடைந் தாகந்தித்த பிரகாரத்தை நன்றாக வருணித்தல்:—அரை, நாவின், அங்கத் தென்பன.

அரைநோக்காக நோக்கியிருந் தபானவாயி லடைத்ததனற்
புரையொன்பதுவா யடைத்துளத்தாற் பொறியும்புலனு மொன்றாக்கி
திரையில்கடல்போற் றன்சித்தின் செறிவைப்பாவித் தாருயிரின்
விரைவைநிறுத்தி வணங்காமன் மேனேக்கியகந் தரத்தினனய்.

நாவினடிச்சென் றுறச்செறியுண் ணுவினடியை யுடையோனு
யோவின்முகக்காந் தியனுகி யுள்ளிற்புறனின் மேற்கீழில்
வாவும்விடயத் தினிப்பாழின் மனமுங்கண்ணு முறாகி
வீவதான வெயிற்றினிரை யெயிற்றினிரையை மேவானய்.

அங்கத்துயிரின் மிகுதிதகைந் ததனுனெய்தா யவிர்முகத்தோ
னங்கத்துருவுள் ளுணர்வுருவே யாகியெழலாற் புளகிப்போ
னங்கத்துருவுள் ளுணர்வுருவே யாகிப்பழகி யறிவொன்று
யங்கப்பொழுதப் பழக்கத்தா லகத்துத்தமமாஞ் சுகமடைந்தான்.

(ப - ரை.) அரைநோக்காக நோக்கியிருந்து = பாதிவிழிப்பாகப் பார்த்திருந்து, அபானவாயி லடைத்து = குதசம்ரோதனஞ் செய்து. அதனுல் = ஆற்றுமதனுலே, புரையொன்பது வாயடைத்து = நவத்துவாரங்களையும் அடக்கி, உளத்தால் = மனத்தினுல். பொறியும் புலனும் ஒன்றாக்கி = விடயங்களினின்றும் இந்திரியங்களை விலக்கி ஏகமாகச் செய்து, திரையில் கடல்போல் = நிஸ்தரங்க சமுத்திரமென்ன, தன்சித்தின் செறிவைப் பாவித்து = தனது சிற்கனத்தை, இனிது பாவனைசெய்து, ஆருயிரின்விரைவை நிறுத்தி= பிராணனது வேகத்தையடக்கி, வணங்காமன் மேனேக்கியகந்தரத்தினனய் = நேரே நிறுத்திய களத்தினனகி.

நாவினடிச்சென்று றச்செறி = நாவின்மூலத்தேபோய் நன்குபொருந்திய உண்ணாவினடியையுடையோனாய் = உள்நாவின்மூலத்தை யுடையவனாய், ஓவின்முகக்காந்தியனாகி = கெடாத வதனகாந்தியை யுடையவனாகி, உள்ளிற்புறனில் மேல்கீழில் = ஆந்தரத்தும் பாகியத்தும் ஊர்த்தபாகத்திலும் அதோபாகத்திலும், வாவும் விடயத்தினில் = இழுக்கும் அர்த்தத்திலும், பாழில் = சூனியத்திலும், மனமும் கண்ணும் உறானாகி = மனோதிருஷ்டியைச் செலுத்தாதவனாகி, வீவதான வெயிற்றினிரை எயிற்றினிரையை மேவானாய் = விழத்தகுந்த தந்தபந்தி தந்தபந்தியைச் சந்தியாதவனாய்,

அங்கத்துயிரின் மிகுதிதகைந்து = பிராணப் பிரவாகத்தைத் தடைசெய்து, அதனால் நொய்தாய் அவிர்முகத்தோன் = அத்தன்மையினால் சொச்சமாய் விளங்கும் ஆனனத்தினன், அங்கத்துரு வுள்ளுணர் வுருவேயாகி யெழலாற்புளகிப்போன் = தேகத்துள்ளே பிரஹ்மானந்த சின்மயமானதினாலே எழாநின்ற நிமிர்மயிர்ப் போர்வையன், அங்கத்துருவுள் உணர்வுருவேயாகிப் பழகி = விருத்திகளுள்ளிருக்கும் பிரதிபிம்ப சைதன்ய அப்பியாசத்தினால், அறிவொன்றாய் = சிற்சாமானியமாகி, அங்கப்பொழுதப் பழக்கத்தால் = ஆண்டப்போழ் தவ்வப்பியாசத்தினால், அகத்துத்தமமாஞ் சுகமடைந்தான் = அந்தரத்தே மிகமேன்மையான ஆனந்தத்தை யடைந்தனன்.

(ஸ்ரீ - வீர.) குதசம்ரோதத்தானே நவத்துவாரங்களையு மடக்கி, சப்தப்பரிசாதிகோசரவிருத்திகளை இலந்தப் பழங்களைப்போல ஒவ்வொன்றாக வுபசங்கரித்து இருதயத்தின் கண்ணே பிரவேசிக்கச்செய்து, இதயத்தே பிரவேசிப்பித்த அவைகட்குப் பரமார்த்தரூபத்தைப் பாவித்து, தன்னங்கமென்னத் தன்வடிவமாக வொன்றாக்கி அறிவுருவமாக்கி, சைந்தவகனம்போல ஏகரசமாக்கி; பிராணபவனத்தை யடக்கிச் சமமாக நிலைபெறுத்தி நிறுத்திய கண்டத்தை யுடைத்தாகி, இருந்தபின்னர், தாலுமூலதலத்தில் நன்குபற்றிய, கண்டசித்திரத்திற் கவாடம்போல நிவேசிப்பித்த, ஜிஹ்வாமூலத்தானே உன்னதமென்னப் பிரகாசிக்கும் வதனத்தினன் ஆயினன். பாகியத்திலும் ஆந்தரத்திலும் கீழிலும் மேலிலும் ரூபாதிவிடயத்திலும் சூனியத்திலும் மனோதிருஷ்டியை விடாமலடக்கினவனாகித் தந்தங்களாற் றந்தங்களைத் தீண்டாதவனாயினான். பிராணாதிப் பிரவாகங்களின் சம்ரோதனத்தானே சமஸ்தகிரியை யாலாக்கப்பெற்ற தேகமனக்கரண சாஞ்சல்ய சூனியனாய்ப் பிரசன்னவதனப் பிரகாசனாய், ஹே குழந்தாய்! அம்முனிவனாயினன். சித்ரூப பிரஹ்மாநந்த அநுபவத்தானே மேனோக்கி யெழுந்தனவாய ரோமங்களான் உண்டாய கண்டகங்கள் நிறைந்த அங்கபூமியையுடையவனாயினான். அம்முனிவனது ஆநந்த ஆவிர்ப்பாவத்தில் மூன்மொழிந்ததேயாய முறையை மொழிதல்:—அங்கத்தென்பதாதி. அந்தக்கரண ஏகதேச பூதவிருத்திபேதங்களின் பிரதிபிம்பிதமான சித்தையும் அவச்சின்ன சம்வித்தையும், தம்முபாதிபூதவிருத்தி பேதங்களின் விலயாப்யாசத்தாற் பிம்பபூத. சிற்சாமான்யத்தே பிரவேசிப்பித்தனன், பிம்பபூத சின்மாத்திர அநுசந்தான அப்யாசத்தானே உள்ளிதயத்தில் உத்தமோத்தமமாய்ச் சர்வ உற்கிருஷ்டமான ஆநந்த நெகிழ்ச்சியைத் தொடர்ந்தடைந்தான்.

(ச.) பொறியும் = இந்திரியங்களையும், புலனும் = விடயங்களையும், ஒன்றாக்கி = பிரத்தியாகாரஞ் செய்தவனாய், தன்சித்தின் செறிவை = சொச்சரூபமான சிற்கனத்தைப் பாவித்து, அளக்கப்பெறுகின்றன இவற்றால் விடயங்கள் எனமாத்திரைகள் இந்திரியங்கள், தீண்டப் பெறுகின்றன வெனப்பரிசங்கள் விடயங்கள், மாத்திரைகளும் பரிசங்களும் ஆகிய இந்திரியங்களையும் விடயங்களையும் பிரத்தியாகாரஞ்செய்து, என்று பகுத்துப்பொருள் செய்துகொள்க.

அகுடிலமான சந்நிவேசக் கிரீவமுடையவனாய், நாவினடியுள் = காகுதமூலதேசங்களின் ஆந்தரத்தில் சென்றுறச்செறி நாவினடியை = ஜிஹ்வாமூலத்தை, உடையோனாய்: இதனால் நபோமுத்திரை தெரிவிக்கப்பட்டது, இதுவே கேசரியெனச் சொல்லப்படும். அது கூறப்பட்டிருக்கின்றது விவேகமார்த்தாண்டத்தில்:—சித்திக்கேதுவான மகாமுத்திரையையும், நபோமுத்திரையையும், உட்டியானத்தையும், ஜலந்தரத்தையும், மூலபந்தத்தையும், எவன் அறிகிறானோ அவன் யோகியாவன். கபாலகுகரத்தில் ஜிஹ்வை விபரீதகதியாய்ச் சென்றதாய்த் திருட்டி புருவங்களின் மத்தியிற் பொருந்துவது கேசரிமுத்திரையென்பதாம். விஷயாந்தரத்தில் மனமும்கண்ணு மூன்றுமையனுகி, அர்த்தமென்னும் பாவரூபத்திலும் சூனியமென்னும் அபாவரூபத்திலும், எயிற்றுநிரை எயிற்று நிரையைமேவானாய் என்றதனாலும் கேசரிக்கானுகுண்யம் சொல்லப்பட்டது.

அங்கத்துரு = சொரூபசைதந்யம், அதனது, உள்ளுணர் வுருவேயாகி = சாக்ஷாத்காரமாய், அதனது எழலால் = உதயத்தினால், புளகிற்போன் = சொரூபசாக்ஷாத் காரத்தாற் சனித்த சந்தோஷத்தால் ரோமாஞ்சித காத்திரனானானென்பது பொருள். அங்கத்துருவுள்ளுணர் வுருவேயாகிப் பழகி = சொரூபசைதந்யத்தினது நிரந்த ரானுசந்தானத்தினால், அறிவொன்றுப் = சிற்சாமானிய மென்னும் எங்குநிறைந்த சித்ரூபமாய்; அப்பழக்கத்தால் = சிற்சாமிய அநுசந்தானத்தால். (75-76-77)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்முனிவனுக்கு முன்போலச் சத்தாசாமான்ய அநுப்பிரவேசத்தையுரைத்தல்:—ஆநந்தமென்பது.

ஆநந்தத்தின் பெருக்கைநுகர்ந் ததனாற்சிற்சா மானியம்போய்த்
தானந்தமற வெலாம்பரிக்குஞ் சத்தாசாமா னியமடைந்தான்
றீனந்தவிர்சம னாயிருந்தான் சிந்தாகுலமெல் லாந்தீர்ந்தான்
மானந்தருமா நந்தமிலா மகாநந்தத்தான் முகமலர்ந்தான்.

(ப - ரை.) ஆநந்தத்தின் பெருக்கைநுகர்ந்து அதனால் = சுகப்பிரவாகத்தை யனுபவித்ததனால், சிற்சாமானியம் போய் = சிற்சாமானியமகன்று, தானந்தமற எலாம்பரிக்கும் சத்தாசாமானிய மடைந்தான் = தான் அந்தமொன்று மின்றிய சகலத்தையுந் தாங்கும் சத்தாசாமானியத்தை யடைந்தனன், றீனந்தவிர் சமனாயிருந்தான் = தீனத்தைத் தவிர்க்கும் சமதையை யடைந்திருந்தனன், சிந்தாகுலமெல்லாந் தீர்ந்தான் = பரமவிசிராந்தியை யடைந்தான், மானந்தருமானந்தமிலா = உபமானமீயு மானந்த மில்லாதவகையான, மகாநந்தத்தான் = பேரானந்தத்தினாலே, முகமலர்ந்தான் = பிரசன்ன வதனனாயினான்.

(ஸ்ரீ - வீர.) அதனதா சுவாதனத்தான் சிற்சாமான்ய தசாக்கிரமம் லீனமாகி, விசுவம் பரமாய் அநந்தாத்மாவாய சத்தாசாமானியத்தை யடைந்தனன்; எத்துணை நிரதிசயாநந்த ஆசுவாதனம் இல்லையோ அத்துணையேசித்தம் நிரோதக் கிலேசத்தைப் பொறுமையானே பாகியத்திற் பிரவிருத்திக்கும், ஆனந்தத்தை யாசுவாதிக்கினோ ஆண்டேவெல்ல வெறும்பு நியாயத்தானே பற்றுற்றதாகிச் சொரூபத்தையும் மறந்து தன் மேலுற்ற சிற்சாமானியத்தை நிரதிசய சுவப்பிரகாச சத்தாசாமான்யபாவம் அடையுமாறு செய்விக்கும், அதுவே சிற்சாமான்யதசைக் கிரமத்தின் இலயமும் அம்முனிவனுக்குச் சத்தாசாமான்ய வடைவும் ஆம் என்பதுகருத்து. ஆண்டே அம்முனிவனுக்குப் புனராவிருத்தியில்லாத நிலைமையை நிகழ்த்தல்:—தீனமென்பதாதி. சமங்களினுஞ் சமமான ஆத்தியந்திக விக்ஷேபவைஷம்மிய சூனிய சொரூபமுள்ளவனாயிருந்தான், பரமவிசிராந்தியை யதனானே யடைந்திலங்கினான், எதற்

குச்சமானமான ஆநந்தங்களே யிலவாமோ அத்தகைய பேராநந்தத்தானே பிரசன்ன தமத்தனமையாற் சுந்தரங்களினுஞ் சுந்தரமாய வதனகாந்தியை யுடைத்தானவனுகி விளங்கினன்.

(ச.) ஆனந்தத்தின் பெருக்கை நுகர்ந்ததனுல் = பராநந்தானு பவத்தினுல், சிற்சாமானியம்போய் = சித்தவிருத்தித் தோற்றமற்று, அந்தமற = அபரிச்சின்னமாய், எலாம் பரிக்கும் = பரிபூரணமான, சத்தாசாமானிய மடைந்தான், தீனந்தவிரமிக = ஏகாகாரமாய் மனேலயமிக, ஆனந்தமிலா மானந்தரும் = அனுனந்தமான வஸ்துவுக் குசிதமான, மகானந்தத்தால் ஆனந்தமயமாய் மனேகரமாகிய முககாந்தியை யடைந்தான், ஆனந்தஜன்னிய முககாந்தியும் ரோமஹர்ஷாதி ஆனந்தவிகார மின்மையின் ஆனந்தஜன்னிய மெனவறியப்படா தென்பதுபொருள். முகம் ஆனந்தத்தோடு கூடினும் நிர்விகாரமாதலால் இவ்விடத்து நிராநந்தமாயிற் றென்பதாம். (78)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆநந்த ஆவிர்ப்பாவ லிங்கரோமாஞ்சாதிகட்கும் முறையே உபசம முரைத்தல்:—அனகவென்பது.

அனகபதமுற் றுடல்புளக மாறிநெடுநா ளிற்கரைந்து
மனமும்பிறப்பின் மயக்கமும்போய் மகாசத்துவமா யோவியம்போற்
கனமில்ககனத் துவாமதிபோற் கதியிற்சின்னு ளினிற்சுவறி
யினன்றொளியின் மரப்பசைக ளிறப்புப்போலா யிறப்புற்ருன்.

(ப - வை.) அனகபதமுற்று = அமலமாகிய பதத்தையடைந்து, உடல் புளகமாறி = ஆனந்தபுளகமானது நன்குசாந்தமாகிச் சரீரம், நெடுநாளிற் கரைந்து = சிரகாலத்திற் கரைந்து, மனமும் பிறப்பின் மயக்கமும்போய் = மனதும் பவப்பிரமும் ஏகி, மகாசத்துவமாய் = மகத்தான சத்துவத்தையடைந்து, ஓவியம்போல் = லிபிகர்மார்ப்பித உபமமாய், கனமில் ககனத்துவாமதிபோல் = சரற்போது தெளிந்துள்ள ஆகாயத்திற் சகலகலைகளோடு கூடியபூரண சந்திரசமமாகி, கதியிற்சின்னுளினிற் சுவறி = விமலவடிவமாய தற்பத்தில் சிலதிவசங்களிற்ருனே உபசமமுற்று, இனனொளியில் மரப்பசைகள் = இரவிகரப்பிரகாசத்தில் தருரசங்கள், இறப்புப்போலா யிறப்புற்ருன் = உபசமமடைவனபோல, மோக்ஷமடைந்தான்.

(ஸ்ரீ - வீர.) ஆநந்தபுளகம் அதிசாந்த முற்றவனுகிச் சீவித்தே பதத்தினையடைந்து, பிராரப்தபோக ஹேதுமலசேட க்ஷயத்தானே அமலமாகி, நெடும்போதில் மனனுதிபவப்பிரமம் நன்குநீங்கப் பெற்றவனுயினன்; அம்மகாமுனிவன் மகத்தான சத்துவமடைந்து, பித்தியிற்றீட்டிய சித்திரம்போன்றவனுகி, கலைகளினுலே நிறைவுற்றதாய சரதிற்றெளிந்த வம்பர சந்திரனேடு சமானமாயினன். "அவனது பிராணன்கள் அகன்றுபோயிடா, அவையெலா மீண்டேமாண்டு போவனவாம்" என்னும் மறையறைந்த நெறியே அவ்விடத்தே அந்தப் பிராணன்கட்குத் தப்தோதக வெம்மையேபோல முறையே உபசமமொனக்கருதி யுரைத்தல்:—கதியி லென்பதாதி. அந்த உத்தாலக முனிசிரேஷ்டன் பிறப்பிறப்பென்பவெல்லா மொழிந்து போனவனுகிச் சுவபதமாகிய விமலாத்மாவின் கண்ணே, நிருமலமாகிய ஹேமந்தகாலத்தில் விருக்ஷங்களின் இரதமானது இரவிகர ஒஜசிற்போல சில தினங்களாற் ருனே மெதுவாக உபசமமடைந்தனன். பிராணுதியுபசம மெய்தவே பரிசிட்ட தற்சொருபத்தை வருணித்தல்:—சகல விகற்பங்களையுங் கடந்தவனுய், நிர்விகாரனுய், அபிராமனுய், சகலமலவிலாச வுபாதிவிடுபட்ட மூர்த்தியாய் விளங்கினன்; அக்கினி விஸ்புலிங்கங்களைப்போல முன்னுபாதிகளோடு அகன்றுபோயின ஹைரண்ய கர்ப்மாந்த

விடய சுகங்கள் எதனினின்றும் அத்தகைய முதன்மையதாம் அவ்வாசா மகோசா சுகத்தை அம்முனிவனடைந்தான்; எச்சுகத்தின்கண் இந்திரனது ஐசுவரியமும் கடலிற்றுரும்பு போலப் பிரவகிக்கப்பெறுமோதருக்கிக்கலாமோ, அதனைத் தரிசித்துக்கொண் டிருப்பவர் களான். இந்தப் பிராஹ்மண சிரேஷ்டனாகிய வுத்தாலக மகாமுனிவன் பரமானந்தத்தை யடைந்தனன், அஃதெத்தகைய தெனின், பிரஹ்மாண்டந்தோறும் வேற்றுமையான் அநந்தரூபங்களை தனதுதரத்தில் வைத்துக்கொண் டிருப்பதாய எத்திசையுளதோ அத் திசையையும் வியாபித்து நிற்கும் சீலமுடையது, இதனானே தேசத்தாலாக்கப் பெற்றபரிச் சேத நிராசமாம்; என்ஞான்றும் யாவற்றினுள்ளும் நிறைந்து நிற்பது: சகலவஸ்துக்களின் ஆதாரமாய புவனங்களைத் தாங்கியோங்குமாறு காத்துவளர்க்குஞ் சீலமுடையது, இத னானே சர்வாதிஷ்டானத் தன்மைக்கூற்றால் வஸ்துவா லாக்கப்பெற்ற வேற்றுமை மாற்றம் ஆற்றப்பெற்றது; மிகுந்த பாக்கியவான்களாய வுத்தம அதிகாரிகளானே யினிதுசேவிக்கத் தக்கது; வாக்குப்பிரவிருத்தி நிமித்த தருமங்களைக் கடந்துநிற்பது; ஆதியந்த மற்றிருப்பது, காலத்தாலாக்கப்பெற்ற பரிச்சேத ஹீனமாயதென்பதாம், அதனானேசத்தியஞான ஆனந்த வடிவமா யிருப்பது, சுக ஏகரசமுடையதாக அகிலத்தையும் செய்யுந்தன்மையானே பூமா வெனப்பெயரியதாம், இத்தகைய வத்துவேயாயினன். பின்னர் அந்தஜீவன் சொச்சத் தன்மையையுடைய நிருமலவடிவ முதன்மையாம் பதத்தை அடைவுற்றுழி அவ்வந்தணமுனி வனதுகாயம் ஆண்டிருந்தபடியே ஆறுமாதங்களில் இரவியின் கிரணங்களினாலே மிகத் தபிக்கப் பெற்றதாகிக் காய்ந்தவழி, வீசுங்காற்றி னாற்றலாலேற்ற விசித்திர ஓசைகளானே இரம்மியமாகி, பாலவிருக்ஷலக்ஷண புஜங்களின் மீட்டயோக்கியமாய நரம்புத்தந்திகளாற் பர்வதத்தினது வீணையேபோல விலாசவேதுவாயது. பின்வெகுகாலங்கழித்து வ்அதாது ஆறுமாதங்கழித்து இவ்விருத்தமாயது, என்னெனின், ஆகாயதலத்தினின்றும் அககன்யா சம்யுதர்களாய் பரஸ்பரம் சகசாரிதர்களாய் நியமமாகயாவரும் எப்போதும் ஒருங்கே சேர்ந்தே யிருப்பவர்களாய யிராஹியாதிய மாதாக்கள், யாதோ ஒருபக்தனுடைய அபி மதபல சித்தியின்பொருட்டுப் பிங்கேச முடையவர்களாய், ஜுவாலையின் பந்திகள் அநலத்தைப்போல அம்மலையின் பூப்பிரதேசத்தை யடைந்தார்கள். அம்மாத்ருகணங்க ளின் மத்தியில் இரவின்கண்ணே அற்புத அற்புதமான அலங்காரங்களைச்செய்துகொண்டு நவநவமான நர்த்தனங்களைச் செய்பவளும், மேலும் அநேகம் விளையாட்டுகளோடு கூடி விளங்குபவளும், பிரஹ்மாதி சகலதேவதைகளாலும் வந்திக்கப்பெறுபவளும், சகலதேவதை களினும் பூஜ்யையும் ஆகியசாமுண்டா தேவியானவள், தினகரனது கரங்களினாலே காயந்திருந்த அந்த மறையவ ரிறையவனாகிய வுத்தாலகமுனிவனது கங்காளகத்தைச் சடு தியில் எடுத்து மிக ஆதரவுடனே மேற்கோப்பிய கட்ககட்வாங்க மத்தியில் = அந்தராளத் தில் இலங்கும் தனது கிரீடகோடியில் பூஷணமாக அலங்கரித்துக் கொண்டனள். எவனு டைய மூடதிருஷ்டி கற்பிதமலமாம் சாதிமயத்தாலதேகமும் மூவுலகவந்தியையாய மகா தேவியினது சிரோபூஷணமாகச் சர்வோத்கர்ஷத்தை யடைவுற்றதோ, அவனால் சர்வோத் கிருஷ்டம்பதம் அடையப்பெற்றது எனவிளம்புவ தென்னே.

(௪.) ஓவியம்போ லென்பது நிர்விகாரத்திற்குத் திருஷ்டாந்தம், சாற்சந்திரன்போ லென்பது பிரகாசானந்த மயத்திற்குத் திருஷ்டாந்தம், இவ்வுத்தாலகன் சம்சாரதசையைத் தாண்டினவனாய், கதியில் = சொச்சரூபத்தின் கண்ணே, சுவறி=உபசாந்தியையடைந்து, சாற்காலாந்தத்தில் மாப்பசை = தருர்சம், இனனதொளியில் = சூரியதேசுவில், இறப்ப போல், ஆதித்தனி னுண்டாகின்றது விருட்டியென்னும் ஸ்மரணமிருத்தலின் தருரசத்

துக்காதித்த தேசுவென்னும் தற்காரணத்தில் இலயங்கூடுமென்பதாம். எச்சுகத்திற் சக்கிர இலக்குமியும் ஜலராசியிற்றிருணமென்னத்துச்சத் தன்மையானே உற்பிரேக்ஷை செய்யப் பெறுமோ அத்தகைய முதன்மையான சுகத்தையடைந்தான் என்பதாம். முன்னர்ச் சுகத்தையடைந்தான் என்று வேற்றுமை தோற்றலின் மகிழாராய் இச்சுலோகத்தில் அம்முனிவன் பிரஹ்மசொரூபமாகிய பூர்ண சுகமாயினுன் எனவபேதம் பிரதிபாதித்தார் (79)

உத்தாலகன் கதை முற்றிற்று.

---*---

## சு ர கு க தை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மாயா திமிரத்தைக்கெடுத்துத் தன்னை யுணர்ந்தவன் வாசனுக்ஷயம் வந்தவனேயாதலின் விவகாரபரனுயினும் சமாதிஸ்தனே யாவன் எனவுணர்த்தும் பொருட்டு இதமுபதேசிக்கத்தொடங்கி ஆதியில் ஆசார்யாதிகளைக்கொண்டு ஆராய்ச்சியே செய்யவேண்டு மெனல்;—இந்த வென்பது.

(ச - அ - கை.) முன்பு யோகாப்யாச தார்ட்டியத்தாற் சித்த விசிராந்தியாம், அதுவே சமாதியுத்தம வவஸ்தையென்று கூறப்பட்டது; இப்போது அச்சித்த விசிராந்தி ஜீவன் முக்தி சீமாவென்று சுருகதையாற் சொல்லப்படுகின்றது; அதில் முன்பு இதமுபதேசித்தல்:—இந்த என்பது.

இந்தவொழுங் கானுணர்வை யுணர்வினு லுணர்ந்துலகி லியங்காநின்றே
யந்தமறும் பெரும்பதத்தே யாறுதியாற் காண்கின்ற வனைத்துமாளச்
சந்ததஞ்சா தித்ததனைப் பெறுமளவும் நூல்குரவன் றனிநெஞ்சாலே
பந்தமறு தத்துவத்தை விசாரித்தே பெறவேண்டும் பதுமக்கண்ணுய்.

(ப - ரை.) இந்த ஒழுங்கால் = இக்கிரமத்தால், பதுமக்கண்ணுய் = ஹேபத்மதலேக்ஷணனே! உணர்வை யுணர்வினுலுணர்ந்து = ஆன்மாவை ஆன்மாவினுலே விசாரித்து, உலகிலியங்காநின்றே = ஜகத்தில் விவகரித்துக் கொண்டே, அந்தமறும் பெரும்பதத்தே ஆறுதியால் = முடிவில்லாத விஸ்தாரபதத்தினில் இளைப்பாறுதலையடைதி, காண்கின்ற வனைத்தும் மாள = சர்வதிருசியமும் க்ஷயமாக, சந்ததஞ்சாதித்து = இடைவிடாமலப் பயசித்து, அதனைப் பெறுமளவும் = அந்தப்பதத்தை யடையுங்காறும், நூல்குரவன்றனி நெஞ்சாலே=சாஸ்திரார்த்த ஆசார்ய சித்தங்களானே, பந்தமறு தத்துவத்தை விசாரித்தே பெறவேண்டும்=சர்வோபாதி ரகிதமான தத்துவவத்துவை யாராய்ந்தே யடையவேண்டும்,

(ஸ்ரீ - வீர.) கூறியவகையாய விசாரவைராக்கிய சமாதியப்பியாசக்கிரமத்தானே விவகரித்துக்கொண்டே ஆன்மாவை யான்மாவினுலே விசாரித்து விததபதத்தில் விசிராந்தியை யடைவாய் தாமரையிதழ்போலும் ஈக்ஷணமுற்ற இராகவனே! சாஸ்திரார்த் தகுரு சித்தங்களானே அத்துணையத்துணை விசாரிக்கவேண்டும், சருவதிருசிய க்ஷயாப்பியாசத்தானே எத்துணை பதமடையப் பெறலாமோ. சாஸ்திர சிரவணத்தானும், அர்த்ததத்துவ பரீக்ஷணத்தானும், குருவசன விசுவாசத்தானும், தனது சித்தசோதனத்தானும் சருவதிருசிய பாதத்தாற் பரமபத விசிராந்தி பரியந்தம் அவசியம் விசாரம் செய்யத்தக்கதாம் என்பது தாற்பரியம்.

(ச.) இந்த ஒழுங்கால் = முற்கூறிய உத்தாலக சமாசாரப் பிரகாரத்தால், காண்கின்ற தனைத்து மாளச்சந்ததஞ் சாதித்து = சருவகிருசிய நாசாப்பியாசத்தினால். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சாதனகலாபங்கள் நிறைந்திருப்பினும் இல்லாமல் விசேஷப் பிரஞ்ஞையிருப்பினும் வீடுகூடுமெனல்:—மயலென்பது.

மயலின்மை சாதனைநூற் பொருட்போதங் குருயமமாம் வழிகளாலே
யுயர்பதவி பெறலாகு மன்றியுணர் வொன்றினா லுறுதற்காமா
லியலுபதே சம்பெற்றுக் கூரியதாய்க் களங்கமிலா திருக்குமாகில்
வியனுறுசா தனமுழுது மிலதேனும் புந்தியினால் வீடுகூடும்.

(ப - ரை.) மயலின்மை = வைராக்கியம், சாதனை = அப்பியாசம், நூற்பொருள் = சாஸ்திரார்த்தம், போதம் = பிரஞ்ஞை, குரு = ஞானாசிரியர், யமம் = மனோநிக்கிரகம் ஆம்வழிகளாலே = ஆகிய மார்க்கங்களாலே, உயர்பதவி பெறலாகும் = மேலான புண்ய பதம் அடையப்பெறும், அன்றி = அல்லது, உணர்வு ஒன்றினால் = உறுதற்காம் = ஒரு பிரஞ்ஞையினாலேயே அடைதல் கூடும், இயலுபதேசம் பெற்று = மகாவாக்கிய அனுக் கிரகத்தைப்பெற்று, கூரியதாய் = தீக்ஷணமாய், களங்கமில்லா திருக்குமாகில் = மதியா னது மாசற்றிலங்குமாயின், வியனுறு சாதனமுழுது மிலதேனும் = வேண்டற்பாலனவாய சாமக்கிரியாவு மிலவேனும், புந்தியினால் =புகன்றபுத்தியினாலே, வீடுகூடும்=முத்திகிட்டும்.

(ஸ்ரீ - வீர.) வைராக்கிய அப்பியாச சாஸ்திரார்த்த பிரஞ்ஞாகுரு யமக்கிரமங்களாலே புண்யபதம் அடையப்பெறலாம் அல்லது, ஒரேபிரஞ்ஞையினாலேயே யடையலாம். பிரஞ் ஞையின் சொருபத்தைக் கூறல்:—இயலென்பதாதி. நலமாகவினிது போதிக்கப் பெற்ற தாய்த் தீக்ஷணமான களங்கரகித மதியானது சர்வசாமக்கிரி யில்லாதபோதினும் சாசுவத மான பதத்தை யடைவிக்கும்.

(ச.) மயலின்மை = திருஷ்ணையின்மை யென்னும் வைராக்கியமும், சாதனம் = சருவ கிருசியக்ஷயானு சந்தானமும், நூற்பொருள் = அத்தியான்ம சாஸ்திர தத்துவஞானமும், போதம் = திரிகாலத்துமுள்ள பிரஞ்ஞையும், குரு = குருபதேசமும், யமமாம்வழிகளா லும் = இயமாதி அஷ்டாங்கயோகக் கிரமமுமாகிய இவற்றால், உணர்வொன்றாலும் =பரி பக்குவமான அந்தக்கரணத்தால் வந்த ஏகப்பிரஞ்ஞையாலே பரமபதம் உறுதற்காம் என் பதுபொருள். பிரஞ்ஞையாலே யுறுதற்காமென்ற விதனையே திடப்படக்கூறல்:—கூரிய தாய் = வஸ்துசொருபத்தை வேறுபடுத்துவதாய், சாதனமுழுதும் = வைராக்கியாதிகள். போதம் = திரைகாலிகவஸ்த தத்வப்பரீக்ஷை யென்பதாம். (2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமாதியிலிருக்கும் ஞானியுயர்ந்தவனா, விவகரிக்கும் ஞானி யுயர்ந்தவனா ? என ஸ்ரீ இராகவர் வினாதல்:—என்றனை யென்பது.

என்றனை முகநோக்கி யிகத்தொழிலோ டிருந்தேயுஞ் சமாதியெய்தி
யொன்றான வுணர்வுற்றான் போலிடர்தீர்ந் தானொருவ னொருவன்செய்கை
யின்றாயத் தனியிடத்திற் சமாதியடைந் தானிவரின் மிக்கோனேவ
னன்றாக வருள்கென விராகவன்கேட் டனும்வசிட்ட னவில்வதானான்.

(ப - ரை.) என்றனை = என இவ்வண்ணம் அருளிய ஸ்ரீ வசிட்டபகவானது, முக நோக்கி = வதனத்தைப்பார்த்து, இகத்தொழிலோ டிருந்தேயும் = லௌகிக விவகாரத் தோடு கூடியிருந்தும், சமாதியெய்தி = சமாதியையடைந்து, ஒன்றானவுணர் வுற்றான்

போல் = ஏகமாகிய ஞானத்தை யடைந்தவனைப்போல, இடர்தீர்ந்தான் ஒருவன், துன்பந்தீர்ந்தான் ஏகன், ஒருவன் = பிறன் ஒருவன், செய்கையின்றானுய் = தொழிலிலாதவனுய், தனியிடத்திற் சமாதியடைந்தான் = ஏகாந்தத்திற் சமாதியைமேவுற்றான், இவரில்= இவ்விருவருள்ளேயும், மிக்கோன் எவன் = எவன் சிறந்திலங்குபவன், நன்றாக = சமுசயந் தீருமாறு, அருளுகென = அனுக்கிரகிக்க வேண்டுமேன்று, இராகவன் கேட்டலும் = ஸ்ரீ இராமச்சந்திரர் வினுதலும், வசிட்டன் நவில்வதானுன் = ஸ்ரீ வசிட்டபகவான் அனுக்கிரகிக்கத் தொடங்கினுர்.

(ஸ்ரீ - வீர.) ஹேபகவன் பூதபவ்யேசரே ! இனிதுணர்ந்தவ னொருவன் விவகாரபரனுக விருந்தபோதினும் சமாதியடைந்தவனைப்போல விசிராந்தி யடைந்துளான் பிறனொருவன் ஏகாந்தத்தையடைந்து சமாதிநியதனுக விருந்தான், இவ்விருவருள்ளும் யாவன்மேன்மையன் என்பதை யடியேனுக்கு அனுக்கிரகிக்க வேண்டும் பகவனேயென்று ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீவசிட்டர் அருளத் தொடங்கல்.

(ச.) ஸ்ரீ இராமர்:—ஒருவன் = ஒருமுமுக்ஷு, சமாதியெய்தி = ஒருபோது சமாதிச் சுகத்தையடைந்தவனுய், உணர்வுற்றான்போல் =சுழுத்தியினின் றெழுந்திருந்தவன்போல், இகத்தொழிலோ டிருந்தேயும், அபிமதமான சுவான்மாவிலே, இடர்தீர்ந்தான்=விசிராந்தனுன், மற்றொருவன், தனியிடத்தில் = ஏகாந்தத்திலிருந்து, சமாதியடைந்தான் = சமாதியில் நியமமாக விருந்தான் இவரின்மிக்கோனேவன். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமாதியிலக்கணங்கூறி இருவர் செயலையு மெடுத்துக் காட்டல்:—ஆற்றுமவென்பது.

ஆற்றுமதத் துவமன்றான் முக்குணத்தால் வருஞ்சகமென் றறிந்தோர்க்குள்ளே
தோற்றுகின்ற சீதளமே யததனையே சமாதியெனச் சொல்லுமன்றே
யூற்றமறக் காண்பவற்றோ டுறவுநமக் கிலதென்றே யுரத்துத்தண்ணென்
றேற்றசமா தியிலிருப்ப னொருவனொரு வன்றொழிலோ டிருப்பனன்றே.

(ப - ரை.) ஆற்றுமதீ தத்துவமன்றால் = அநாத்மாவாகலின், முக்குணத்தால் வரும் சகம் = குணங்களின் சேர்க்கையினுல் உண்டாகும் இவ்வுலகம், என்றறிந்தோர்க்கு= என இவ்வண்ணம் தெரிந்தவர்கட்கு, உள்ளே தோற்றுகின்ற சீதளம் = ஆந்தரத்திற் பிரதீதியாகுந்தண்மை, யததனையே = யாதோ அது தன்னையே, சமாதியெனச் சொல்லும்= சமாதியென்றுரைப்பர், ஊற்றமறக் காண்பவற்றோடு = பற்றறத் திருசியங்களோடு, உறவு நமக்கிலதென்றே = நேயநமக்கு இல்லையென்றுதானே, உரத்துத் தண்ணென்று = அதிதிடமாகவும் சீதளமாகவும் இருந்து, ஒருவன் தொழிலோடிருப்பன் = ஒரு ஞானி விவகாரபரனுகியிருப்பன், ஒருவன் = மற்றொருஞானி, ஏற்றசமாதியி லிருப்பன் அன்றே=அப்பியசித்துவந்து சமாதியின் கண்ணே அவ்வாறே வீற்றிருப்பன். அன்று ஏ அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர.) குணச் சேர்க்கையோடுகூடிய இவ்வையத்தை அநாத்மாவாகப் பார்ப்பவர்க்கு, உட்சீதளத் தன்மையாகிய பூர்ணகாமத் தன்மைஞானப் பிரதிஷ்டையின் பலமாக வுளதாம், அஃதுளதாகவே விக்ஷேப அடைவின்மையின் அதுவே சமாதியென்று சாற்றப்பெறும்; மனமிருக்குமாயின் திருசியங்களோடு விக்ஷேபஹேதுவாய சம்பந்தமுண்டாம், எனக்கோ அஃதிலதாம் எனத்துணிந்து தண்மையுற்றவன் ஒருவன் நன்குவிவகார நாட்டமுற்றிருப்பன், மற்றொருவன் தியானமதனிற் றிதிமிகப்பெறுவன். திருசியங்களோடு மனன சம்பந்தம் என்பது பாட்டாயினே வெளியேயாம்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்:—முக்குணத்தால் வருஞ்சகம் = சத்துவாதிகுண சமுதாயரூப மான இப்பிரபஞ்சத்தை ஆற்றுமதத்வ மன்றென்று = அனான்மாவென்று, அறிந் தோர்க்கு = அறிந்தபுருடனுக்கு, உள்ளே தோன்றுகின்ற சீதளமேது = அமிர்தசா கரத்தின் மூழ்கினவனுக்கெனச் சந்தாப நிவிர்த்தியாதோ அதுதனையே சமாதியெனச் சொல்லும் = இது சமாதியெனச் சொல்லப்படும், உரைத்து நிச்சயித்து. (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இருஞானிகளும் சமானர்கள் என்றும், மாறுபடின் மாறுபடவே ரெனவும், ஒருவர்க் கொருவர் மிகாரெனவும் உரைத்தல்:—இவ், வருத்தமென்பன.

இவ்விருவ ரிதயமுந்தண் ணென்றிருக்கில் வேற்றுமையோ ரிறையுமில்லை
யவ்விதயசீ தளமேய நந்ததவப் பயனுமவ் வனுபூதிக்கே
கவ்வியிருப் போனுள்ளங் காரியத்தா லலையுமெனிற் கவலையாகுஞ்
செவ்வியவச் சமாதான முன்மத்த நடனம்போற் சிறப்பின்றாகும்.

வருத்தமிலா வுன்மத்த நடத்தினன்வா தனைமாய்ந்த மனத்தோனாகிற்
றிருத்தமுற வவன்கூத்துத் தெளிவுற்றோன் சமாதிக்குத் தீரநேராம்
பெருத்ததொழிற் சேரறிஞர் பெரியவனஞ் சேரறிஞர் பேதநாடி
லொருத்தரொருத் தரைவிஞ்சா ரிருவருமொத் தையமில்வீ டுற்றாரன்றே.

(ப - ரை.) இவ்விருவ ரிதயமுந் தண்ணென்றிருக்கில் = இந்த இரண்டு ஞானிக ளுடையமனமும் சீதளமுற் றிருப்பதானால், வேற்றுமையோ ரிறையுமில்லை = பேதமோரற் பமும் கிடையாது, அவ்விதய சீதளமே = இருதயத்துற்ற அத்தண்மையே, அநந்த தவப் பயனும் = அநேகஜன்மங்க ளிலாற்றியதவத்தின் பிரயோஜனமாம், அவ்வனுபூதிக்கே கவ்வியிருப்போன் = அச்சமாதியையே மேலாகக்கொண்டு அதன்கண்ணே நிலைபெற் றிருப்பவனது, உள்ளம் = மனமானது, காரியத்தால் அலையுமெனில் = விருத்திகளை மேவுதலாற் சஞ்சலம் பெறுவதாமேல், கவலையாகும் = விக்ஷேபமேவும், செவ்வியவச் சமா தானம் = சிறந்த அந்தச் சமாதியானது, உன்மத்த நடனம்போல் = பைத்தியகாரனது நர்த்தனம்போல, சிறப்பின்றாகும் = விசேடமுடைய தாகாதாம்; துக்கஹேதுவாம் என்றபடி.

வருத்தமிலா வுன்மத்த நடத்தினன் = கஷ்டமில்லாத பைத்தியகார நர்த்தனத்தை யுடையவன், வாதனைமாய்ந்த மனத்தோனாகில் = வாசனாக்ஷயம் வந்தமனத்தினன் ஆவ னேல், திருத்தமுற அவன்கூத்து = சீர்திருந்தியுள்ள அம்மகானது நடனம், தெளிவுற் றோன் சமாதிக்குத் தீரநேராம் = விவேகியினது நிருவிகற்பசமாதிக்கு அத்தியந்தம் துல் லியமாம், பெருத்ததொழிற்சேரறிஞர் = பெரியவிவகாரத்திற் பொருந்திய ஞானிகள், பெரியவனஞ் சேரறிஞர் = பேராரண்யத்தில்வசிக்கும் ஞானிகள், பேதம் நாடில் = வேற்றுமையை யுற்றுநோக்கில், ஒருத்தர் ஒருத்தரைவிஞ்சார் = ஒருவர் ஒருவரின்மேற் போகார், இருவரும் = இரண்டு மெய்ஞ்ஞானிகளும், ஒத்து = சமமாகவே, ஐயமில்வீடுற் றார் அன்றே = சந்தேகமில்லாத பதமடைந்தவரேயாவர் அக்கணமே யென்பதுண் மையேயாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ ! இவ்விருஞானிகளும் அந்தக்கரணத்தின் மிகச்சீதளத்தை யடைந்திருப்பார்களாயின் சுகசம்பன்னர்களே யாவர்கள், உட்சீதளத் தன்மையாதொன் றுளதோ அதுவே அநந்தஜன்ம தபோபலமாம், சமாதிஸ்தானத்தை யடைந்து, நிலைபெற் றவனுடைய மனமானது எண்ணங்களின் மிகுதியானே திண்ணிதாகாமற் சஞ்சலப்படில்

அவ்வறிஞனது அச்சமாதானமானது உன்மத்த தாண்டவத்தை யொக்கும். உன்மத்த தாண்டவத்தில் இருக்கும்படியானவனுடைய சித்தமானது க்ஷீணவாசனையதாகுமாயின், அவ்வறிஞனது பைத்தியகார ஒழுக்கமாமது அறிஞனது சமாதியோடு ஒக்கும். வியவகாரியாய்ப் பிரபுத்தனும் எவனிருப்பனோ, பிரபுத்தனாய் வனத்தில் யாவன்வசிப்பனோ, இவ்விருவருமே நன்கொத்தவரேயாவர், சர்வதேச உச்சேதசர்வ சந்தேகமற்றபதத்தின் கண்ணே பிரதிஷ்டை செய்யப்பெற்றவரேயாவர்.

(ச.) எந்தக்காரணத்தால் அந்தச் சீதளத்துவமே அநந்தமான தவசினது பலமாமோ அதனால் இருதயஞ் சீதளமாயிருக்கின் இருவருக்குஞ் சாமியமாமென்பது முன்னோடந்துவயம்; சீதன்ரூபமான சித்தவிசிராந்திக்கே பிராதான்யம் அந்நுவய வியதிரேகங்களாற் கூறல்:—இவ்வநுபூதிக்கே கவ்வியிருப்போன் =சமாதித்தானத் திருப்போனது, உள்ளம்= சித்தமானது, காரியத்தால் = சந்தோஷக் கிலேசாதிகளால், அலையுமெனில் = சஞ்சலமாமெனில், ஸ்ரீபகவானால் அது கூறப்பட்டிருக்கின்றது:—ஒருவருமொரு பொழுதினுமோர் காலமு மிருவகைவினை செயாதவர்க ளில்லையால், அருமயலவா வுான்வினை யடக்குவான் பருவரலொடுபொய்யே பாவிப்பானரோ. எத்தகையரும் ஓரவஸ்தையிலும் ஒருகணமாத்திரமும், அறமறமென்னும், இருவிதவினைகளைச் செய்யாதவர்களாக இருப்பதில்லை வாதனையானே வழங்கிக்கொண்டே யிருப்பர் என்பதாம்; ஆகலின் விடுதற்கரிய மலினமான ஆசையறாத அந்தக்கரண முடையவனாய்'வாக்காதி கருமேந்திரியங்களை நிக்கிரகஞ்செய்பவன் துன்பத்தோடுகூட சப்தாதி விடயங்களையே மனத்தினால் ஸ்மரித்துக்கொண்டிருப்பன் இம்மூடாத்மா பொய்யொழுக்கினன் என்று புகலப்படுவன் என்பதுபொருள்.

அறிஞர் = ஆன்மதத்துவமானோர் ஐயமில்வீடு = அசந்தேகமான ஆன்மரூபத்தை சருவசமுசயமும் நசிக்குமென்னுஞ் சுருதியினால் என்க. அம்மறைவிதுவாம்:—இதயமே திகழுமிதனை மெய்கண்டவிடத்தின் மற்றிதய நோயெல்லாஞ், சிதையுமையுறவுந் தீருமெவ் வினையுஞ் செய்யினுஞ் செய்திலனுமால். (5-6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வியவகாரிக்கு, கருத்தருத் தன்மையாலேற்பட்ட பந்தமானதேனுண்டாக மாட்டாது எனின் ஆண்டுக்கூறல்:—சாலவுமென்பது.

சாலவும்வா தனைபோகி லிம்மனஞ்செய் தொழில்புரிந்துந் தான்செய்யா தாஞ்
சீலமன் நெடிதகலி லருகிருந்தார் செப்புமொழி தெரியா தாப்போற்
றாலமனந் தொழில்விடினுஞ் செய்ததாம் வாதனையே துன்னுமாகிற்
கோலவுட லசைவறினுங் கனவிலே வரைநின்றுங் குழிவீழ்வார்போல்.

(ப - ரை.) சாலவும் = அத்தியந்தம், வாதனைபோகில்= வாசனாக்ஷய முண்டாயின், இம்மனஞ் செய்தொழில் புரிந்தும் = இந்தமனமானது சிந்தனைசெய்யினும், தன்செய்யாதாம் = தான் ஒன்றுஞ் செய்யாததேயாகும், சீலமனம் நெடிதகலில் = கருவியாய மனமானது அதிதூரத்தில் ஏகில், அருகிருந்தோர் செப்புமொழி தெரியாதாப்போல் =சமீபத்திருந்தோர் சொல்லுமொழி யுணரப் பெறாததேபோல, தாலமனந்தொழில் விடினும் = வாதனையாற் பருத்தமனமானது ஒன்றுஞ் செய்யாம லிருப்பினும், செய்ததாம்=கருத்தாவேயாம், வாதனையே துன்னுமாகில் = வாசனையே பொருந்துமாகில், கோலவுடல் = அழகியசரீரம், அசைவறினும் = சலனமில்லா திருப்பினும், கனவிலே =சொப்பனத்திலே, வரைநின்றும் = பர்வதத்திலிருந்து, குழிவீழ்வார்போல் = படுகுழியின் கண்ணே பதனமாவார் போலும்.

(ஸ்ரீ - வீர.) நிர்வாசனையையுடைய இம்மனமானது செய்தபோதினும் ஒன்றுஞ்செய்யாததேயாம், காந்தாதிகதை நற்சிரவணத்திற் பிறுண்டடைவுற்ற மனமானது செய்தபோதினும் இராகாதி விகாரமுதய மாகாமையின், அதனுலேற்பட்ட தோடங்களானே பந்தப்படுவதில்லை யதுபோலும். மிக்ககணவாசனை வாய்ந்த மனமானது செய்யாதபோதினும் செய்ததேயாம், அசையாத தேகாவயவங்களாகிய அங்கங்களையுடைய தூங்குவோன் மனமானது குழியில் விழுவதற்கும் ஆண்டிருப்பதற்கும் எங்ஙனம் கருத்தாவாமோ அங்ஙனமென்பதாம்.

(ச.) மனஞ்சாலவும் வாதனைபோகில்; தேகேந்திரியங்கள் பிரவிர்த்திப்பினும் அகர்த்தாவேயாம், எங்ஙனமெனில், செப்புமொழி = புராணகதையை மகாசமீபத்தி விருந்து கேள்ப்பினுங் கேளாதவ னுவதேபோல், மனம்வாதனையே துன்னுமாகில் தொழில்விடினும் செய்ததாம் = கர்த்தாவேயாம், எங்ஙனமெனில், கனவிலே, குழி = புராண கூபாதியில், வீழாததான் வீழ்ந்தேனெனத் தோற்றுவதில், உடலசைவறினும் = சரீரத்திற்கிரியையைச் சனிப்பியாதேனும் சித்தம் கர்த்தாவேயாம், பயகம்பாதி யேதுவாகலின் என்க, அதுபோலென்பதாம். (7)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சித்தசேஷ்டையின் பிரதான காரணமாய வாதனையை யடியோடுங்கெடுக்கவேண்டு மெனல்:—தொலைவி லென்பது.

தொலைவிறொழிற் செய்யுமனந் தொழினீங்கி லதுதானே சுகசமாதி
யலைவறுகை வல்லியமும் பரமாநந் தமுமென்றே யறிவாய்நெஞ்சி
னுலைவுதிர மெனுமிரண்டு மத்தியானந் தியானமெனு முபயத்துக்கு
நிலையுறுகா ரணங்களா மாதலினிம் மனமுளைக்கு நீர்மைதீர்ப்பாய்.

(ப - ரை:) தொலைவில் தொழில் செய்யும்மனம் = அளவில்லாத வினைகளையாற்றுஞ் சித்தம், தொழில் நீங்கில் அதுதானே சுகசமாதி = வினையறில் அதுவேதான் இன்பமயச் சமாதியாம், அலைவறு கைவல்லியமும் பரமாநந்தமு மென்றேயறிவாய் = சலனமிலாத கேவலீபாவமும், பேராநந்தமும் என்பதாகவே தெரிந்துகொள்வாய், நெஞ்சின் உலைவுதிரமெனும் இரண்டும் = சித்தத்தின் சலபாவம் அசலபாவம் என்னும் இரண்டுமே, அத்தியானம் தியானம் எனும் உபயத்துக்கும் நிலையுறு காரணங்களாம் = தியானமின்மைதியானம் என்னுமிரண்டினுக்கும் திரமான ஹேதுக்களாம், ஆதலில் = ஆகலின், இம்மனமுளைக்கு நீர்மைதீர்ப்பாய் = அம்மனதினைய நங்குரமாகச் செய்வாய்.

(ஸ்ரீ - வீர.) சித்தத்தினது எவ்வகர்த்துருத் தகைமையுளதோ அதுவே யுத்தமமான சமாதானமாம். அதனைக் கேவலீபாவமெனவுணர்தி, அது சுபமான மேலான சுகவிசிராந்தியாகும். தியானுத்தியான மென்னும் சமாதியசமாதி திருஷ்டிகட்குச் சித்தம் சலாசலத் தன்மையானே பரமகாரணமெனப் பகரப்பெறும், ஆதலால் அதனையே அங்குரபீஜவாசனை சூனியமதாகச் செய்தி.

(ச.) நெஞ்சின் = சித்தத்திற்கே, உலைவால், அத்தியான திருஷ்டிக்குக் காரணத்துவமும் திரத்தாற்றியான திருஷ்டிக்குக் காரணத்வமும் ஆமென்பது பொருள். முளைக்கு நீர்மை தீர்ப்பாய் = நிர்வாதனையாக்குவாய், மூலத்தில்:—பாடமுறையினும் அருத்தமுறைமைதான் பலீயான் என்னும் நியாயத்தானே யென்றுணர்க. (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாசனாக்ஷயத்தையே வற்புறுத்திவழங்கல்:—சித்தனை நெருக்க வென்பது.

சிந்தனைவா தனையின்றித் திரமான மனத்தினையே தியானமென்ப
ரந்தவுப சாந்தமுமக் கேவலத்தன் மையுமென்று மதுவேயாகு
மிந்தவுயர் பதப்பொருட்டு வாதனைசா லவுநேர்மை யெய்தவேண்டுஞ்
சந்ததம்வா தனையில்லா மனந்தொழிலில் லாப்பதத்தைச் சாருமத்தால்.

நெருக்கமுறு வாசனையே நெஞ்சினது தொழிற்றிரமா நீங்காத்துன்பம்
பெருக்கவிடு மாதலினால் வாதனையை மிகநேர்மை பிறக்கச்செய்வாய்
வருக்கமுறு பலபொருளி னானெனும்பா வனைமனத்தான் மாற்றியெங்ஙன
னிருக்குதியங் ஙனமிருப்பாய் வரையிலே மனையிலே யெங்கேயேனும்.

(ப -ரை.) சிந்தனை வாதனையின்றித் திரமானமனத்தினையே தியானமென்பர்=எண்ணங்களை யெழுப்பும் வாசனையில்லாமல் திடமுற்ற மனந்தனையே தியானமென்று சொல்லுவர், அந்த உபசாந்தமும் = அவ்வுபசாந்தத் தகைமையும், அக்கேவலத்தன்மையும் அக் கேவலீபாவமும், என்றும் = சந்ததம், அதுவேயாகும் = அதுதானேயாம், இந்த உயர் பதப்பொருட்டு = இம்மேன்மையான பதத்தையடைதற் பொருட்டு, வாதனை சாலவுநேர் மையெய்த வேண்டும் = வாசனையத்தியந்தம் சுருக்கத்தை யடையவேண்டும், சந்ததம்= எப்போதும், வாதனையில்லாமனம் = வாசனாக்ஷய மடைந்தமனமானது, தொழிலில்லாப் பதத்தைச் சாருமத்தால் = வினையில்லாப் பதத்தையடையும், அதனால் = அதனால் அகர்த் ருபதத்தையடையும்.

நெருக்கமுறு வாசனையே = கனமானவாதனையே, நெஞ்சினது தொழிற்றிரமா நீங் காத்துன்பம் பெருக்கவிடும் = மனத்தினது கர்த்ருத் தகைமையைச் சேவிப்பதாம், எல் லாத்துன்பத்தையும் மிகமிக விளைவிப்பதாம், ஆதலினால் வாதனையை மிகநேர்மை பிறக்கச் செய்வாய் = ஆகையினால் வாசனையை அத்தியந்தம் சுருங்கச்செய்வாய். வருக்கமுறு பல பொருளில் நானெனும் பாவனைமனத்தான் மாற்றி = வருக்கவருக்க மாகியமைந்த சகல வஸ்துக்களிலும் அகந்தை மமதைகளைச் சித்தத்திலே யகற்றி, வரையிலே மனையிலே யெங்கேயெனும் = சைலத்திலே கிருகத்திலே பிறவெவ்விடத்திலேனும், எங்ஙன் இருக் குதி அங்ஙனமிருப்பாய் = எவ்வாறிருப்பாயோ அவ்வாறே இருப்பாய்.

(ஸ்ரீ - வீர.) அவாசனம் திரமெனப் பெற்றது, அதுவே மனோத்தியானம், அதுவே கேவலீபாவம், சதா அது சாந்ததையுமேயாம், நான்காவதாதி பூமிகைகளில் க்ஷீயமாணவா சனம் மிகவுச் சபதப்பொருட்டு முயன்றதெனப் படுகின்றது, க்ஷீணவாசனைப் பதமாகிய ஏழாவது பூமிகைப் பிரதிஷ்டையை வாதனையற்ற அகர்த்ருமனமானது அதனால் அடை கின்றது, கனவாசனையையுடைய இச்சித்தமோ கருத்ருத்தகைமையைப் பஜிப்பதாம்; சர்வதுக்கத்தையும் கொடுப்பதாம், ஆகவின் வாதனையைக் குறைத்தே வரவேண்டும்; தேகாதிதிருசியஜகத்தில் அகம்மமதை யபிநிவேச ஆஸ்தைமுற்றினு மில்லாதவனும், உள்ளே சோகம்பயம் இச்சைமுதலியவை யில்லாதவனும் ஆகியமுனிவன்,சொரூபப்பிரதிஷ் டையை எத்துணையடைவனோ, அவ்வுபாயமே சமாதியெனப்பெறும் சர்வபாவங்களிலும் அகம் மமதையத்தியாசரூப ஆத்மபாவனையைச் சித்தத்தால் நன்ககற்றிச் சைலத்திற் சமா திதனாயேனும் கிருகத்தில் விவகரிப்பவனாயேனும், எவ்வாறிருப்பாயோ அவ்வாறேயிருத்தி.

(ச.) அதுவே = திரமனமான தேசாந்ததையுமாம். மூலசமபந்தி:—உத்திசியமான பிரதி நிர்த்திருசிய யானங்களின் ஐக்கியத்தைச் சம்பாதிப்பனவாகிய சருவ நாமங்களும்

பரியாயமாக அவ்விலிங்கம் பழிப்பனவாகின்றன வென்னும் நியாயத்தானே, ச எவகேவலீ பாவ என்பதன்கண் விதேயலிங்கம் கோடப்பெற்றது, ததேவசாந்ததா என்பதன்கண்ணே உத்தேசியலிங்கம் கோடப்பெற்றதா மெனக்கண்டு கொள்க. வாதனுக்ஷயத்தைவிதித்தல்:— நெருக்கமென்பது, நாவெனும் பாவனை = வாதனையை. (9-10)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாதனை வென்றவர் நாட்டிலுறையினும் காட்டிலுறைவதை யொக்குமெனத் திருஷ்டாந்த பூர்வகமாக வுரைத்தல்:—இல்லென்பது.

இல்லுறைவோர் சமாதான விதயத்தோ ரகங்கரமா மேதந்தீர்ந்தோர்
புல்லுமனை யேகாந்த வனமாகுங் கடைவீதி புக்கிக்காண்போர்
செல்லவர வுலாவியும்பற் றுமையினற் கடைவழிச்செல் லாதார்போல்வார்
நல்லறிவு நிறைந்தோர்க்கு மப்படியே காடொக்கு நாடுதானே.

(ப - ரை.) இல் உறைவோர்=வீட்டில் வசிப்பவர், சமாதான இதயத்தோர்=சமாகித சித்த முடையவர், அகங்கரமாம் ஏதம் தீர்ந்தோர்=அகந்தையாகிய குற்றமகன்றவர், இத்தகையர்க்கு, புல்லுமனை யேகாந்தவனமாகும் = வசிக்கும் இல்லமே நிர்ஜனப்பிரதேசமாகிய ஆரண்யமாகும், கடைவீதி புக்கிக்காண்போர் =பண்யவீதியிற் பிரவேசித்துப் பார்ப்பவர், செல்லவரவுலாவியும் = போக்குவரவாகச் சுற்றியும், பற்றுமையினல்=சங்கமுறுமையினல், கடைவழிச் செல்லாதார் போல்வார் = பண்யவீதியிற் போகாதவரே போன்றவராவர், நல்லறிவு நிறைந்தோர்க்கும் = மெய்ஞ்ஞானம் பூர்ணமானவர்க்கும், அப்படியே காடொக்கும் நாடுதானே = அவ்வாறே நகரமே சுகவனம்போலாம்,

(ஸ்ரீ - வீர.). அகங்கிருதி தோஷஞ் சாந்தமாக்கப்பெற்று மிகவும் நேர்மைவாய்ந்த சித்த முள்ளவர்களாகிய கிருகஸ்தர்கட்குக் கிருகமே நிர்ஜனவன பூமியாம். அவர்கட்கு நகரங்களும் சூனியங்களேயாம் எங்ஙனெனின் இயம்பல்:—கடைவீதி யென்பதாதி. கடைவீதியிற் சமவேதராயினும் வெகுபேர் தத்தங்காரியத்தில் விவகரிப்பவராயினும் உதாசீனனுக்கு அனுபகாரித் தன்மையானே அசத்தொப்பாவார் அவ்வாறே அறிஞனுக்கு அசம்பந்தரே கிராமத்தோர், கிராமமும் விபின உபமமாம்.

(ச.) அங்காடி புக்கிக்காண்போர் = கடைவீதிபுகுந்து நோக்கும் ஜனங்கள், செல்லவரவுலாவியும் = தேசாந்தரத்தினின்றும் வந்தவழிப்போக்கனுக்கு, கடைவழிச் செல்லாதார்போல்வார் = இல்லாதவர்போல் உபகரியார்கள், யாதினலெனில், பற்றுமையினல் = அவர்களோடு சம்பந்தமின்மையின், அப்படியே நல்லறிவு நிறைந்தோர்க்கும் =ஞானிக்கும், நாடுதானும், காடொக்கும் = அரணியம்போல் விக்ஷேப ஏதுவன்றென்பது பொருள். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சீதளம் வந்துறு நெறியை யறிவித்தல்:—துயிலென்பது.

துயில்விழிப்புச்சொலல்செலவு தொடர்ந்தாலுமகமுகமாந் தொடர்பாலென்றும்
பயின்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற் காண்பவரே பரமசீலர்
செயிரிலா வகமுகத்தாலெல்லாமா காசமாய்த் தீருஞ்சித்த
முயிரனையாய் சீதளம்வந் துண்ணிறையிற் சீதளமா முலகமெல்லாம்.

(ப - ரை.) துயில் விழிப்புசொலல் செலவு தொடர்ந்தாலும் = துயின்றிடினும் விழித்திடினும் சொல்லிடினும் நல்லவழிபயின்றிடினும், அகமுகமாந் தொடர்பால் என்றும் = உண்முகமே யெப்போதும் பற்றுதலால், பயின்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற்காண்பு

வீரே பரமசீலர் = விவகாரயோக்கியமாய இல்லம்புரம் ஜனபதம் கிராமம் என்பவெல்லாம் அரண்யம்போல் நோக்கும் பெரியோரே பேரொழுக்க முடையவர், செயிரிலா வகமுகத்தால் = சஞ்சலமில்லாத வுண்முகத்தால், எல்லாமாகாசமாய் = சர்வமும் ஆகாசத்தன்ம்மை, தீரும் சித்தம் = மருவும் மனமானது, உயிரனையாய் = பிராணசமமான குழந்தாய்! சீதளம்வந்துள் நிறையில் = தண்மையானது தானேவந்துண்மிளிருமாயின், சீதளமாம் உலகம் எல்லாம் = சர்வஜகத்துமே குளிர்ந்து தோன்றும்.

(ஸ்ரீ - வீர.) நித்தியம் அந்தர்முகத் தன்மையானே சுத்தனுய்ப் புத்தனுய் சுற்றியே திரிந்திடினும் வீடு நாடுநகரம் பட்டணம் கிராமம்யாவும் அரண்யம் எனவேகாண்பன் பிராணிகளானும் பிருதிவியாதிகளானும் ஆகுலமிகுத்த இச்சகத்தானது யாதிதத்தன்மையான் எல்லாவாற்றானும் அநுபயோக்கியத் தன்மையான், நித்தியம் உண்முகத்திலேயே யிருப்பவனுக்கு முழுதுமே ஒன்றும் இல்லாததாகவே அமைந்து தோன்றும். உள்ளே சீதளத்தன்மையை யடைந்திடில் உலகமெலாம் சீதளமேயாய் விடும்.

(ச.) உண்முக முடையவருக்கு யாவும் ஆகாசமாய்த்தீரும் = அவிக்ஷேபத்துவத்தை யடையும், ஆதலின் மனையாதி யனைத்தையும் பழுவம்போற் காண்பர் என்பதாறுவயம். சித்தஞ்சீதளமாகச் சகமேசீதளமாகும். (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆந்தரத்திருப்பதே பாகியத்தும் ஆமெனல்: — இதைய மென்பது.

இதையமய லாலெரியி லுலகெலாங் காட்டெரிபோ லெரிந்துதோன் று
முதையமுறு முயிர்க்கெல்லா முள்ளிருப்ப தேபுறத்து முண்டாநிற்குஞ்
சுதைபயிலூர் புவிகால்விண் டொருவரைநீ ணதிதிக்குச் சூழ்ந்தவெல்லாம்
புதைதலுறு முட்கரண தத்துவத்தின் பங்குகளாய்ப் புறத்தினிற்ப.

(ப - ரை.) இதையமயலால் எரியில்=உள்ளாசையினுனே தாகமுறுவதாயின், உலகெலாம் காட்டெரிபோல் எரிந்துதொன்றும் = ஜகமுழுவதும் பேரழல் பெற்றுப்போலத் தாகமாய்ப் புலப்படும், உதையமுறு முயிர்க்கெல்லாம் = உற்பன்னமாகும் பிராணிகட்கெல்லாம்; உள்ளிருப்பதே = ஆந்தரத்துள்ளதே, புறத்தும் = பாகியத்தும், உண்டாய் நிற்கும் = உதிதமாகித் திதிபெறும், சுதைபயில் ஊர்புவிகால் விண்டொருவரை நீணதிக்குச் சூழ்ந்த வெல்லாம் = சுவர்க்கம் பூமி வாயு ஆகாசம் பர்வதம் நதிதிசை முதலனயாவுமே, புதைதலுறும் உட்கரண தத்துவத்தின்பங்குகளாய்ப் புறத்தினிற்ப = உள்ளேயுள்ள அந்தக்கரண தத்துவத்தின் பாகங்களாகி வெளியிலிருப்பன போன்றனவாம்.

(ஸ்ரீ - வீர.) உட்டிருஷ்ணையானே யுபதப்தர்கட்குத் தாவதாகமயமாம் ஜகத்து; சகல ஜந்துக்கட்குமே யாதுள்ளேயாமோ அதுவெளியிலு முளதாம். எதனுல்:உள்ளேயாது = எத்தகையதாகத் தப்தமாகவோ சீதளமாகவோ சித்தம் ஆமோ அதுவேவெளியில் ஜகதாகாரமாக இருக்குமென்பதாம். அதனையே யுரைத்தல்:—சுதையாதி என்பன சுவர்க்கம்பூமி வாயுவாகாசம் பர்வதங்கள் சரித்துக்கள் திசைகள், அந்தக்கரண தத்துவத்தின் பாகங்களாக வெளியிலிருப்பனபோல ஆவனவாம்.

(ச.) மயலால் = திருஷ்ணையால், சித்தஞ்சீதளமாயின் ஜகத்துச் சீதளமும், தப்தமாயிற்றப்தமுமா மென்பதுபொருள். அதனையே விரித்துரைத்தல்:—எதனுல், உயிர்க்கெலலாம் உள்ளிருப்பதெதுவோ அதுவே வெளியிலிருப்பதாம்: சுதைபயிலூராதிகளு முட்கர

ணதத்துவத்தின் பங்குகளாகவே புறத்துநிற்பவோ அதனால், அந்தக்கரண விருத்தியே பிர தானமென்பது பொருள், சுதைபயிலூர் = சுவர்லோகம், விண்=அந்தரிக்ஷம். (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சன்மாத்திர ஆத்மதரிசனமாயினோ கன்மேந்திரியங்களானே விவ கரிப்பினும் அபிமானமின்மையின் மகிழ்ச்சிவாட்டாதி விக்ஷேபலேசமும் அடைவுறாதாம் எனவெப்போதும் சமாதியிலிருப்பவனோடு துல்லியமாதலே பயனுடைத்தாம் என்னும் கருத்தாலுரைத்தல்:—உள்ளென்பது.

உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்க ளுய்ப்போனுயுந்
தள்ளுசுக துக்கவசஞ் சாராதோ னநவரதஞ் சமாதியுற்றோ
னுள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெனப் பிறர்பொருள்க ளோடேயென்ன
வெள்ளுபயத் தாலன்றி யியல்பாலே கண்டானே யெல்லாங்கண்டோன்.

(ப - ரை.) உள்ளுணர்வி லின்புறுவோன் = அந்தரான்மாவின் கண்ணே இரமிப்ப வன், பொறிகளாற் கருமங்களுய்ப் போனும் = கருமேந்திரியங்களால் வினைகளைச்செய் பவனாகியும், தள்ளுசுகதுக்க வசஞ்சாராதோன் = தள்ளத்தகுந்த இன்பதுன்ப வயமாகா தோன், அனவரதஞ் சமாதியுற்றோன்=எப்போதும் சமாகிதனேயாவன்; உள்ளுகின்ற தனைப்போல் எவ்வுயிருமென =எண்ணுகின்ற தன்னைப்போல எல்லாவுயிருமெனவும், பிறர்பொருள்கள் ஓடேயென்ன=அன்னியர்தமது திரவியங்கள் லோஷ்டமே யெனவும், என்னுபயத்தாலன்றி=இகழத்தக்க அச்சத்தாலல்லாமல், இயல்பாலே கண்டானே=சுபா வமாகவே பார்த்தவனே. எல்லாம் கண்டோன்=யாவற்றையும் கண்டவனாவன்.

(ஸ்ரீ - வீர.) யாவன் உள்ளே ஆத்மரதியேயாவனோ, கருமேந்திரியங்களானே வினை களையியற்றிய போதினும், ஹர்ஷசோகங்களால் வயப்படமாட்டானோ அவன் சமாகித னெனப்படுவன்; எங்கும் நிறைந்த ஆன்மாவையாவன்றரிசித்து மன்னிய வுபசாந்த மன முடையவனாவனோ சோகியானோ சிந்தியானோ, அவன் சமாகிதன் எனப்படுவன், அவனது இலக்கண மியாதெனின்? உரைத்தல்:—ஆகாயம் போலுந்தெளிந்தவனாகிப் பாகிய விவ காரத்தை, நூல் ஆன்றோரொழுக்க முரண்பாடின்றி நன்றாக ஒழுகுபவனா யீண்டு யாவனு ளனோ; ஹர்ஷாமர்ஷ விகாரங்களில் காஷ்டலோஷ்ட சமனாக யாவனிருப்பனோ; சாந்தி யியற்கையன் யாவனோ; அவனேயறிஞனாவன். தன்னைப்போலவே மன்னுயி ரெவற்றையும், அன்னியர் பொருளினைப் புன்னியலோடெடன, துன்னியபயமிலா தியற்கையானே யாவன் காண்பன் அவனே கண்டவன்.

(சு.) எவன் பொறிகளாற் கருமங்கள் செய்பவனாயினும், உள்ளுணர்வி லின்புறு வோன் = ஆன்மநிஷ்டனே, சுகதுக்கங்கள் என்னும் ஹேதுக்களால் வசஞ்சாராதோன்= அதன் சாதனங்களைப் பொருந்தாதவனோ அவன் அநவரதஞ் சமாதியுற்றோன், என்ப தந்நுவயம். (14)

(ஸ்ரீ - வீர - அ - கை ) ஞானியினது கலங்காவியற்கையும் கவின்பெறு நிலைமையும் இஃதெனல்:—இன்றென்பது.

இன்றிறவு வந்தாலுங் கற்பாந்தத் தெய்துகினு மிலங்குஞானி
கன்றியசேற் றுறுபொன்போற் களங்கமுறா னெல்லாமாய்க்கண்ணுயாறிப்
பொன்றலடி முடிவின்றி யொன்றாயின் பத்தள்வாய்ப் பொலிதேசாகித்
துன்றியகாட் சிகளில்லாக் குறியுடைத்தா மெனச்சுருதி சொல்லுமன்றே.

(ப - ரை.) இன்றிறவு வந்தாலும் = இப்போதே மரணமானதெய்துகினும், கற்பாந்தத்தெய்துகினும் = கற்பமுடிவி லுற்றபோதினும், இலங்குஞானி = சர்வான்மகமாய் விளங்கும் ஞானியானவன், கன்றியசேற் றுறுபொன்போல் = வற்றியபங்கத்துற்ற தங்கம் போல, களங்கமுறான் = வாட்டமகிழ்வுகளை மருவான், எல்லாமாய்க் கண்ணுயாறி = அனைத்துமாய் அறிவாய் இளைப்பாறி, பொன்றல் அடிமுடியின்றி =நித்தியமாய் ஆதிமத்தியாந்த ரகிதமாய், ஒன்றாய் = ஏகமாய், இன்பத்தளவாய் = ஆசுவாதன மாத்திரமாய், பொலிதேசாகி = அதிதேஜோமயமாய், துன்றியகாட்சிக ளில்லாக்குறியுடைத்தாம் = நெருங்கிய திருசியமாகாத சின்னமுடையதாய், என = இருக்கும் என்று, சுருதிசொல்லுமன்றே = அநாதியே மறையறையும்.

(ஸ்ரீ - வீர.) மிகமகத்தாய பாவமேசெய்யினும், வெகுவெகுவாய புண்ணியமே புரியினும், இப்போதே மரணமானதெய்தினும், அல்லது கற்பத்தின் முழுவின் ஈற்றில் காலகதியடையினும், இச்சமதரிசியானவன், மரணதுக்காதி விகாரியாகவேனும், தேகமனமாதியகந்தையாசிரய னுகவேனும், ஆவதில்லை, அதனுனே அம்மகாத்மாவினுலே அஃதொரு சிறிதும் செய்யப்பெறவேயில்லை; பங்கத்திற்பதிந்த பொன்போல, அம்முனிவன் களங்கத்தைச் சிறிது மடையமாட்டான். நிஷ்கிருஷ்ட அருத்தத்தை யநுவதித்து உபசங்கரித்தல்:- எல்லாமா யென்பதாதி. சர்வமாயும் மகாசாந்தமாயும், பிறப்பற்றதாயும், ஒன்றாயும், ஆதியும் மத்தியமும் இல்லாததாயும், எல்லாவுலகையும் எவ்விடத்திலும் இலக்கிவைக்கும் பூர்ணசுவப்பிரகாச ரூபமாயும், ஆசுவதனஞ் செய்யத்தக்கதேயாய ஆனந்தைகரசமாயும், விடயங்களானும் தனது வியாவர்த்தக தருமத்தானும் பற்றற்றதாயும் இருக்கின்ற வத்துவாகவே அம்முனிவனிருப்பன்.

(ச.) பொலிதேசாகி = எங்கும் பிரகாசிக்கின்றதாய், இன்பத்தளவாகி = சர்வரசானுபவவேதுவாய். (15)

(ஸ்ரீ - வீர - அ-கை.) நுதலியதிவ்யதிருஷ்டியை உபசங்கரித்து, அதன்பொருட்டாக இதிகாசமொன் றெடுத்துபதேசிக்கத் தொடங்கல்:—எல்லாமென்பது.

(ச-அ-கை.) முற்கூறிய வெகுவிசேடங்களாற் சம்பந்தமாதலின் அத்துவிதபங்கமென ஆசங்கித்துரைத்தல்:—எல்லாமென்பது.

எல்லாமென் றுரைத்ததெலா மறிவித்தற் பொருட்டேயா மிசையச்சொன்ன
சொல்லாலென் வீணன்றே யாதலினு லோமென்று துணிகவித்தை
நல்லாயிங் கிதற்குமுத னுளதோ ரிதிகாச நவிலக்கேட்பாய்
புல்லாரென் வேடர்குலச் சுரகுவப்பே ரோன்சரிதை புதுமைத்தன்றே.

(ப - ரை.) எல்லாம் என்றுரைத்ததெலாம் = யாவுமென்று கூறியவெவையும், அறிவித்தற் பொருட்டேயாம் = உணர்த்திவைத்தற் பொருட்டேயாம், இசையச் சொன்ன சொல்லாலென் = பொருந்தப் புகன்றமொழியால் என்னே, வீணன்றே = வீணல்லவோ, ஆதலினல் = ஆகையினுல், ஓமென்று துணிகவித்தை = ஓமெனவே நிச்சயித்துக் கொள்ளுகவிதனை, நல்லாய் = நல்லகுழந்தாய் ! இங்கிதற்கு = இதன்பொருட் டிவ்விடத்தே, முதனுள் = பூர்வகாலத்தே, உளதோரிதிகாசம் = நடந்த தொருசரிதம், நவிலக்கேட்பாய் = கூறக்கேட்பாயாக, புல்லாரென் = அசங்கதரென்று சொல்லும், வேடர்குலச்சுரகுவப்பேரோன் சரிதை=கிராதர்குலேசனுகிய சுரகுவென்பவன் விருத்தாந்தம், புதுமைத்தன்றே = அதியற்புதமாம்; அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) அந்தப் பிரஹ்மமேயாவும் பிரசாந்தமு மாமெனத் தாற்காலிகசப்தமயிபத வாச்சியார்த்த அபேதசம்சர்க்க கோசர ஆஹார்ய பேததிருஷ்டியானது சாக்ஷாத் பிரயோஜன சூனியத் தன்மையானே வீணேயாம், எக்காரணத்தானே விரோதப் பிரதிசந்தானத் திற் பாகத்தியாக லக்ஷணுசிரய வாயிலாய் இலக்ஷியார்த்த அகண்டபோதார்த்தமேயாமோ, அவ்வாக்கிய போத்தியமாய் அகண்டார்த்தரூபமோ ஓமென ஓங்காரம் ஜகத்பிரஹ்மத்தை யும் ஒன்றாக்கிவிராட் ஹிரண்யகர்ப்ப அவ்வியாகிருத தூரியான்மகங்களாய அகார உகார மகார அர்த்தமாத்திரைப் பாதங்களை நான்காகப்பகுத்துப் பூர்வபூர்வ பாதங்களை யுத்தர உத்தரங்களில் இலயஞ்செய்து அர்த்தமாத்திரையானே எவ்வத்வயம் பூர்ணனந்த ஏகரசம் நித்திய அபரோக்ஷப் பிரத்தியக்குச் சின்மாத்திரூபம் குறிப்பிக்கப் பெறுகின்றதோ, இதுவே சம்சர்க்கரூபமன்றும். இச்சப்தமயி திருஷ்டிபோதப் பொருட்டே யெனவுரைத்த அருத்தத்தில், கிராத இராஜாவாய சுரகுவின் விஸ்மயா ஸ்பதமாம் விருத்தாந்தமென்னும் இப்புராதனமான இதிகாசத்தை யுதாகரிப்பர்.

(ச.) எல்லாமென் றுரைத்ததெலாம் = எல்லாமாய்க் கண்ணுய் என்பதுமுதலிய விசேடணங்களாற் பேதத்தைக் குறிப்பிக்குஞ் சத்தமயமான திருஷ்டியாது அது, அறிவித்தற்பொருட்டேயாம், கற்பிதமன்றோ அவ்வேதுவினால், வீண் = வியர்த்தமே, 'ஆதலி னுல், இத்தை = ஈதனைத்தையும், ஓமென்றுதுணிக = ஓமென்றே சொல்லவேண்டியது, ஓங்காரத்திற்கே பரப்பிரமப் பிரதிபாதகத் தன்மையாதலின் என்க. (16)

(ஸ்ரீ- வீர - அ - கை.) சுரகுவின் நிவாசதேசத்தைக் கூறும்பொருட்டு அதற்குச்சமீபித் துள்ள ஹிமவத் சிருங்கத்தை வருணித்துச் சுரகுவின் பெருமையைக்கூறி அரசாட்சியாற் றளர் தலையும் மாண்டவ்யமுனிவன் வருதலையும்; உரைத்தல்:—இம, அல்லாது என்பன.

இமகிரியின் கோடான கைலைவரை யினிலேம சடர்களென்னு
மமர்வரிவில் வேடருள ரவர்க்கரசன் சுரகுவெனு மசையாவீரன்
சமநிலையாற் கோமுறையா லருண்முனிவா லுலகநெறி சமைக்குநாளி
னமதுவலியா லுலகை நலிகுதுமே லவர்சோக நமக்கேயன்றோ.

அல்லாது தண்டமுறை யியற்றேமே லுயிர்காப்பற் றவத்தின்மாயும்
பொல்லாதிவ் வரசென்றே யூசலாடுளத்தினனுய்ப் புந்திநைந்தான்
மல்லாரும் புயத்தவன்பான் மாண்டவிய முனிவரலும் வணங்கிப்போற்றி
நல்லாயுன் வரவினன் மிகவாழ்ந்தே னல்லோரினுட்டப் பட்டேன்.

(ப - ரை.) இமகிரியின் கோடான கைலைவரையினில் = ஹிமபர்வதத்தின்சிருங்கமான கைலாசபர்வதத்தில், ஹேமசடர்க ளென்னும் = ஹேமஜடர்கள் என்று சொல்லப்பட்ட, அமர்வரிவில் வேடருளர் = நாரியமைந்த வரித்தனுசைக் கரங்கொண்டகிராதர்கள் உளர், அவர்க்கரசன் சுரகுவெனும் அசையாவீரன் = அவ்வேடர்கட்கு மன்னவன் சுரகுவென்று சொல்லப்பட்ட அதிதிடவீரன், சமநிலையால் = சமதிருஷ்டியினுலும், கோமுறையால் = மனுநீதி முறைமையாலும். அருண்முனிவால் = அநுக்கிரக நிக்கிரகங்களாலும், உலகநெறி சமைக்குநாளில் = அரசாக்ஷிசெய்து வருங்காலத்தில், நமதுவலியால் உலகைநலிகுது மேல் = நம்முடைய புயபலத்தால் உலகத்தாரைத் தண்டிப்போமேல், அவர்சோகம் நமக் கேயன்றோ = அவர்தந்துயரம் நமக்கேயல்லவோ.

அல்லாது = அல்லது, தண்டமுறை யியற்றேமேல் = நிக்கிரகத்தைச் செய்யாமல் விட்டு விட்டால், உயிர்காப்பற் றவத்தின்மாயும் = பிரஜைகள் இரக்ஷிப்பில்லாமல் வீணே மடியும், பொல்லாதிவ்வரசென்றே = இவ்விராஜ்ய பரிபாலனம் கொடியது என்னவே, ஊசலாளைத்தினனய் = ஊஞ்சலைப்போலச் சலிக்கும் மனத்தினனாய், புந்திநைந்தான் = மதியில் வேதனையை யடைந்தான், மல்லாரும் புயத்தவன்பால் = உலத்தினிற் பலத்த தோள்களையுடைய அவனிடத்தே, மாண்டவியமுனிவரலும் = மாண்டவ்ய மகரிஷிவருதலும், வணங்கிப்போற்றி =நமஸ்கரித்துத் தோத்தரித்து, நல்லாய் உன்வரவினால்= பரம சாந்தமூர்த்தியே தேவரீரது ஆகமத்தால், மிகவாழ்ந்தேன் = பெருவாழ்வுற்றேன், நல்லோரின் நாட்டப்பட்டேன் = சாதுக்களுக்குள் ஒருவனாய்த் தாபிக்கப்பெற்றேன்.

(ஸ்ரீ - வீர.) வடதிசையின் சாரபூதமாய், பூமியினின்றும் கர்ப்பூரபடலமாகிய ராசி யெழுந்ததே போன்றும், சார்வம் ஞசனம்போன்றும், சாந்திர ஆதபம்போன்றும் சுக்கில மயமாயிலக்கும் ஹிமாசல சிருங்கமொன்றுளது; ஈண்டு கைலாசமெனப் பெயரியபர்வத மதுவாம். அல்லது திசையின் சாரமேனும், சார்வம் ஞசனமேனும், சாந்திர ஆதபமேனும் பூமியையடைந்து கர்ப்பூரபடலமா யெழுந்தது என்று உற்பிரேக்ஷை சம்பந்தமாய விகற்ப மாயதுமேய நானுஹேதுக்களானே உபபாத்தியமான ஒரேவிசிட்ட வுற்பிரேக்ஷையாம். ஹிமபர்வதத்தின் சிருங்கம் என்று சிறப்பித்தலானே மேருவிற்குச் சமீபித்த பிரசித்தமான வெள்ளியங்கிரியினது இது அன்னியமென்னத் தோற்றுகின்றது. அவ்விமவத் சிருங்கத்தினது மூலதேசத்தில் ஹேமஜடர் எனப்பெயரிய கிராதரிருந்தனர். கைலாசசிருங்கத்தின் பாதபர்வதங்களின் காடுகளிலுள்ள உருத்திராக்ஷாதி பலபுஷ்பகாஷ்ட மூலாதிகளைக் கொண்டு ஜீவனஞ்செய்பவரா யிருந்தனர். அவர்கட்கு அரசனுக சுரகு என்னும் அவ்வுதாரான்மா விருந்தான், ஜயலக்ஷ்மியாற் புஜம்படைத்தான் போலப் பரபுரஞ்சயன் அவன், பிரஜைகளை யிரக்ஷிப்பதில் மகாசமர்த்தன், அம்மன்னன், கூறப்பெறுஞ் சிறப்புகளானே பிரஹ்மவித்யாதிகார தரிசனத்தானும் அம்மன்னன் க்ஷத்திரியன் எனக்காணப் பெறுவன். சுரகுவெனப் பெயரிய அப்பலவான் சுரகோர அரிதர்ப்பகனுவன், பராக்கிரமத்தில் அருக்கன்போன்றவன், மாருதமூர்த்திமான் எனவே மலர்வன், இராஜ்ய விபவங்களானும் தனங்களானும், இராஜராஜனுகிய அவன் தனேசுவரனையும் வெற்றிகொண்டவனுவன், இந்திரனுப்பான், வித்தையில் உணர்விற்குருவை யொப்பான், இரசாலங்காராதி சாலிப்பிரபந்தங்கள் செய்வதில் அசுரதேசிகனுகிய சுக்கிராசாரியர்க் கொப்பானவன், இத்தகையமன்னவன் யாதொருவருத்தமு மில்லாதவனுய் அடைவுற்றபடியாம் அரசகாரியங்களைத் தினங்களைத் திவாகரன்போல நிக்கிரக அநுக்கிரகங்களானே நடத்திவந்தனன். நடாத்துமதனுளவாய சுகதுக்கங்களானே, வலையிலகப்பட்டுக் கட்டுற்றுத் தன்கதியடங்கித் துன்புற்றுவாடும் பறவையேபோலும் பெருக்துயருழன்று மயங்கினன். துக்கவசத்தாற் சிந்தை சோகாதி யுற்பவத்தைக் காட்டல்:—நமது வலியாலென்பதாதி, என் பீடைவாய்ந்த பிரஜா ஜனத்தைத் திலங்களையந்திரம்போல வலுவினாலே துன்புறுத்து கின்றேன் ? எனக்கேபோலும் எல்லாவுயிர்களுக்குமே துயரமுண்டாகிக் கொண்டே யிருக்கின்றது! கர்த்தவ்யசம்சயத்தில் பிரதமகோடியைக் காட்டல்: தனத்தினாலே ஜனம் ஆனந்த மடைகின்றபடியினாலே, ஆர்த்தர்களாகிய இச்சனங்களின் பொருட்டுத் தனத்தை வெகுவாகக்கொடுப்பேன், என்னைப்போலவே யாவருமிருக்கின்றபடியால், என்னுடைய கொடூர நிக்கிரகங்களால் எடுத்தபயன்போதும். இரண்டாவதைக் காட்டல்:—அல்லது தகுந்ததண்டனையைச் செய்கின்றேன் இத்தண்டனையினாலன்றிப் பிரஜைகள் தத்தம்மரியாதையில் நிகழ்வதேயில்லை, அணையினாலன்றி வாரிசரித்தேபோலும். ஹாகஷ்டம் இவன் வதபந்தாதியானே என்னு

டைய தண்டனைக் குட்பட வேண்டியவனுகின்றான், இவன்கித்திய அனுக்கிரக விடயனே, யாவன். அதிர்ஷ்டவயத்தாலின்று சுகியாயுள்ளேன், கஷ்டமின்று துக்கியாயுள்ளேன் என்பதாகச் சஞ்சலத்தையடைந்த பூபதியின் மனமானது ஓரிடத்தில் விசிராந்தியை யடையவில்லை. இவ்வாறுறையுங் காலத்தில் அம்மன்னவனது அரண்மனையை நோக்கி மாண்டவ்ய முனிவர் வந்தனர், அநந்த திக்கு மண்டலங்களை யலங்கரித்து வந்த ஸ்ரீநாரதர் இந்திரனது அரண்மனையை யடைவுற்றதே போலும்; யாவற்றையு முணர்ந்து இலங்குபவரும் சந்தேகமாகிய தூர்த்துருமஸ்தம்ப பரசுவானவரும் ஆகிய வம்மகாமுனிவரை நன்றாகப்பூசைசெய்து வினவுவாராயினர்;—சுரகுகூறல்:—ஹேமுனீந்திரரே ! தங்களுடைய நல்வரவானே, வசுதாபீடமானது மாதவனுடைய வரவையேனும் வசந்தகால வரவையேனும் பெற்றுப்பரமானந்தமுற்றதேபோலப் பேரானந்தத்தை யடைந்தேன்; ஹே நாதரே ! இன்றுதேவரீரால் கிருபாகடாக்ஷம் அருளப்பெற்று, பிரகாசியாநின்ற சூரியபகவானுலே தாமரையேபோல, தருமத்தால் தன்னியர்களுள் அக்கிரகண்ணியனாக அடியேன் இருந்து இலங்குகின்றேன்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்:—உலகநெறி = நிக்கிரகா நிக்கிரகக்கிரமங்கள், சமைக்குநாளில் = அதனுற் சனிக்குஞ் சுகதுக்கங்களால் அவனதுமதி இவ்வாறாயிற்று.

தண்டமுறை = எவனுக்கு எத்தண்டந் தர்ம்சாஸ்திர யோக்கியமாக நிரூபிக்கப்பட்டதோவதை, அவத்தின்மாயும் = சுவமார்க்கத்திற் பிரவிர்த்தியாது வாரியில்லாமலேசரித்தே போலும் காமக்குரோதாதிகளால் அந்நியோந்நிய வாதை நிமித்தம் பிரவிர்த்திப்பதாதலினென்க. இதற்கு உ-ம், காமந்தகன்:—இச்சகத்துக் காமலோபாதிகளால் பலமாகக் கிரஹிக்கப்பட்டு நிராநந்தமாம், நிரயத்தில் மூழ்கியிருக்கும் இராஜதண்டத்தாற் கரையேறுமென்பதாம் மூலம்:—இவ்வண்ணம் லோகத்தில் தைல ஆகர்ஷணப் பொருட்டுக் கற்பிக்கப்பெற்ற திலயந்திரம்போல. (17-18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகாமுனிவரிடத்திற்றனது குறைகளைத் தெரிவித்துச் சாந்தியெய்த உபாயம் வினுதலும்; சுரகுக்கவர் உபதேசிக்கத் தொடங்கலும்: — தரும, அருணன், என்பன.

தருமமுழு தையுமுணர்ந்த பகவநீ நெடுங்காலந் தளர்வுதீர்ந்தா
யருவினையே னையப்பா டறுத்தியா லையம்போ லரந்தையுண்டோ
விருநிலத்தென் கோற்கீழோ ரென்கருணை முனிவுகளா லின்பதுன்ப
மருவுகின்ற கவலையைக்கண் டரியேற்றின் முன்கரிபோன் மறுகுகின்றேன்.

அருணன்வெயில் போலெங்கு நிறைசமமென் மதியிலே யணுகுமாறு
கருணையினு லுணர்த்தியெனுங் காவலற்கு மாண்டவியன் கழறுகிற்பான்
பொருவறுதன் விசாரத்தா லிமைப்போதின் மனவழுக்குப்போகாநிற்கும்
வருசரற்கா லந்தோன்று மாத்திரத்து மூடுபனி மாய்வதேபோல்.

(ப - ரை.) தருமம் முழுதையு முணர்ந்த பகவநீ = சர்வதர்மஞ்ஞராகிய தேவரீர் ஸ்ரீபகவானுகிய தாங்கள், நெடுங்காலம் தளர்வுதீர்ந்தாய் = சிரகாலம் விசிராந்தவானு யிருக்கின்றீர், அருவினையேன் ஐயப்பாடறுத்தி = விவகரிப்பதில் சம்சயப்பட்டுக்கொண்டிருக்கும் அடியேனுடைய சம்சயத்தை யகற்றியருள்வாய், ஐயம்போல் அரந்தையுண்டோ = சம்சயத்தைப் போலவுந் துன்பமயலொன்றுளதோ, இருநிலத்து = பெரிய இப்பூமண்டலத்தில், என்கோற்கீழோர் = எனது ஆட்சிக்குட்பட்டோர், என்கருணை முனிவுகளால் =

எனது அநுக்கிரக நிக்கிரகங்களால், இன்பதுன்ப மருவுகின்ற = சுகதுக்கம் பொருந்து கின்ற, கலையைக்கண்டு = சஞ்சலத்தைப்பார்த்து, அரியேற்றின் முன்கரிபோல் மறுகு கின்றேன் =ஆண்சிங்கத்தின் முன்னர் ஆனையைப்போல் வாட்டமுறுகின்றேன்.

அருணன் வெயில்போல் = சூரியகிரணமென்ன, எங்குநிறைசமம் = எவ்விடத்தும் பூரணமாம் சமத்தன்மை; என்மதியிலே யணுகுமாறு = என்றன் புந்தியின்கண்ணே பொருந்திடும் வண்ணம், கருணையினால் உணர்த்தியெனும் = தயையினாலே அருள்செய்ய வேண்டும் என்று பிரார்த்தித்த, காவலற்கு = மன்னவனுக்கு, மாண்டவியன் = மாண்டவ்விய மகாமுனிவரானவர், கழறுகிற்பான் =உபதேசிப்பான், பொருவறுதன் விசாரத்தால்= உவமையில்லாத தன்னுடைய ஆராய்ச்சியினாலே, இமைப்போதில் = க்ஷணமாத்திரையில், மனவழுக்கு = சித்தமலினம், போகாநிற்கும் = ஒழிப்போகும், வருசரற்காலந் தோன்று மாத்திரத்து = சரற்போதுவந்து தோன்றிய அளவே, மூடுபனி மாய்வதேபோல்= மூடிக் கொண்டிருந்த பனியானது முறிந்தோடுவதே போலும்.

(ஸ்ரீ - வீர.) ஹேபகவன் ! சர்வதர்மஞ்ஞரே ! நீர்போத சிரமம் நீங்கினவர் நீர் ஆதி ரேல் ஆயின், அல்லது பரமபதத்தில் சிரகாலம் இளைப்பாறினவராக இருக்கின்றீராகலின், அருக்கன்றி மிர்மகற்றுவதேபோல, அடியேனுடைய இச்சமுசயத்தை யகற்றியருளுவீராக ! மகத்துக்களுடைய சங்கமம் உண்டாயின் யாவருக்குத்தான் பீடைகள் நீங்கமாட்டா; சந் தேகமே பரமபீடையென்பர், பீடையையுணர்ந்த பெரியோர், எனது நிக்கிரக அநுக்கிரக ஜன்னியங்களாய என்னுடைய தாசர்கள் சத்துருக்கள் மித்துருக்கள் விடயத்தில் உள்ளன வாய்ப் பொருந்திய சிந்தைகள், கஜத்தை ஹரிநகங்கள்போலும் என்னையத்தியந்தம் பீடை செய்கின்றன, ஆதலினால் ஹே முனிநாயகரே ! எங்ஙனம் எப்போதும் சூரியாம்சுவைப் போல வெனது மதியிற் சமதிருஷ்டியானது உதயமாமோ, விஷமதிருஷ்டியானது உதய மாகாதோ அங்ஙனம் கருணையாற்செய்திர். மாண்டவ்யமாமுனிவர் கூறல்:—வைராக்கியத் தியாகாதிரூபமாய தனது முயற்சியினாலும், சிரவணமனனாதியாய சுவவியஞ்சக வுபாயத்தா னும், சுவாத்மபோத பரியவசிதத்தானும், ஹே பூபதியாய சூரகுவே ! இம்மனோமிருதுத் தன்மையானது அதாவது ஹர்ஷவிஷாதஸ்தான கண்டக சகத்திரங்களைப்பதற் குத்தக் தவாறு இருக்கும் பேலவத்தன்மையானது, இமம்போல மிகவிலீனப்பட்டுப்போம். தனது ஆராய்ச்சியினாலேயே விரைவில் உள்ளேமனச்சுரம் உபசாந்தியடையும், சாத்தாகம மாத்தி ரத்தானே மகத்தாய பனியானது உபசாந்தி யுறுதலேபோலும். (19-20)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விசாரத்தின் உருவத்தை யறிவித்தல்:—யானாரென்பது.

யானாரிச் சகமெங்ஙன் பிறப்பிறப்பெங் ஙனமென்றே யிதயத்துள்ளே
யானமலிப்படியே யாராயின் மகத்துவமே யடைதிசாலத்
தானனசுபாவனா யிருந்தனைநின் விசாரத்தாற் றானேநெஞ்ச
நீறாடும் படிதோன்றித் தன்னுருவிட் டிளைப்பாறித் துன்பநீங்கும்.

(ப - ரை.) யானார் = அகமென்பது யாது ? இச்சகம் எங்ஙன் = இவ்வுலகம் எவ்வா றுண்டாயது, பிறப்பிறப் பெங்ஙனம் = ஜன்மமரணங்கள் எங்ஙனம்வருகின்றன, என்றே= என்பதாகவே, இதயத்துள்ளே = மனத்தின்மாட்டே, ஆனமல் = இடைவிடாமல், இப் படியேயாராயின் = இவ்வாறே விசாரணைசெய்யின், மகத்துவமேயடைதி சால = முற்றி னும் பெருமையையே அடைவாய், தானனசுபாவனாய் இருந்தனைநின் = அறியப்பெற்ற இயற்கையனா யிராநின்ற நின்றனது, விசாரத்தாற்றானே = ஆராய்ச்சியினாலேயே, நெஞ்சம்

நீ நாடும்படிதோன்றி = மனமானது நீகருதியவாறே தோற்றி, தன்னுருவிட்டிளைப்பாறி = தனது வடிவத்தை விடுத்து விசிராந்தியையடைந்து, துன்பநீங்கும் = சுரமற்றதாகும்.

(ஸ்ரீ - வீர.) தன்னுடைய மனத்தினாலேயே தன்னுடையனவேயாய புத்திரமித்திராதி களையும், தற்சரீரகதங்களாய இந்திரியாதிகளையும், பிறவற்றையும், உள்ளேயே, தத்துவமாக யாவையெனவும், யுக்தியாக எத்தகையன வெனவும் ஆராய்ந்து பார்ப்பாயாக. யான் யார்? எங்ஙனமிதுதான் =? யாதுதானிது? மரணஜன்மங்கள் எங்ஙனம்? என்பதாக உள்ளேயே விசாரஞ்செய்தி, நீ, அவிசார அத்தியஸ்த பரிச்சின்னப் பான்மையகன்று போதவின் மகத்தாந்தன்மையை அத்தியந்தம் அடைந்திடுவாய். விசாரணையினாலே பரிஞாதசுபாவத்தையுடைய பரமார்த்தவஸ்துபூத நினது அசல்மாயசித்தம் ஹர்ஷ அமர்ஷதசைகளை துலையிற்போல மேல்கீழதாகக் கிளம்பித்தாழ்தலானே அநித்தஸ்திதியைச் செய்யமாட்டாது சுரமற்ற நினதுமனது தனதுமனது சொரூபத்தை விடுத்துப் பூர்வஞ்சித்தமாய் பிரஹ்ம சுபாவத்தைத் தொடுத்து, நிர்விக்ஷேபத் தன்மையை யடையும்; அலைநீராதலேபோலும் (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் என்னே மனத்திற்கிருப்பே போய்விடுகின்றதா வெனின், இல்லை, மனமிருப்பவே களங்கங்கண் மாத்திரமே களையவேண்டும், அதுவும் உனக்கெளிதாம் பிறர்க்கரிதாமெனத் திருட்டாந்த பூர்வகமாக வுணர்த்தல்:—வெம்புதலென்பது.

வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மனதுக் கிவ்வுலகின் வியாபாரங்கள்
செம்புகர்வே ழத்தினுக்கான் குளப்படிபோற் றோன்றுமா றீனநெஞ்சுக்
கம்புவியிற் றொழில்சிறிதே யாகினுநீந் திடவரிதா மாவின்பாதப்
பைம்புனலுங் கிழக்கொதுகுக் கெல்லைகரை காணாத பரவையன்றே.

(ப - ரை.) வேம்புதல்போய்த் தண்ணென்ற = சகலதாபங்களும் நீங்கிக்குளிர்ச்சி பொருந்தி யிலதாகின்ற, உன்மனதுக்கு = உன்னுடைய நல்லமனத்தினுக்கு, இவ்வுலகின் வியாபாரங்கள் = இந்தவுலகத்திற் செய்யத்தக்கனவாய இராஜகாரியங்கள், செம்புகர் வேழத்தினுக்கு = சிறந்த புள்ளிகளையுடைய மத்தகஜத்திற்கு, ஆன்குளப்படிபோல் = கோவின் பாதத்திடம்போல, அற்பமாக, தோன்றும் = பிரதீதியாம், தீனநெஞ்சுக்கு = கிருபணமனத்தினுக்கு, அம்புவியில் = அழகிய பூமண்டலத்தில், தொழிம் சிறிதேயாகினும் = காரியம் அற்பமேயானாலும், நீந்திடவரிதாம் = தாண்டுவதற்கு முடியாதாம், ஆவின்பாதப் பைம்புனலும் = கோக்குளப்படிச் சிறுநீரும், கிழக்கொதுகுக்கு = இறகொடிந்த விருத்த மசகத்திற்கு, எல்லைகரைகாணாத பரவையன்றே = மரியாதையாயிராநின்ற கரைதெரியாத கடலேயல்லவோ.

(ஸ்ரீ - வீர.) ஹே அநகனே! இருப்பவே மனோரூபத்தை யெடுத்தெறிந்து விடுவர், நீயும் அவ்வாறுசெய்தி, மநுவந்தரம் வந்தால் களங்கவிகல காலம்போலும், எங்ஙனம் பூர்வ மநுவின் அந்தத்தில் கலிகாலமுற்றுக் களங்கமயமாய பாவங்களால் விகலமானபுவனமானது மறித்தும் மநுவந்தரம் வந்தபோது இருப்பதாகவே களங்கத்தை யெள்ளுகின்றதோ, அங்ஙனம், மனமும் ஜீவன்முக்த வியவகாரத்தைக்கொண்டு முடிப்பதாக, இருப்பதாயே பழைய மனோரூபத்தைத் தியாகிக்கின்றதென்பதாம். கேவலம் துக்கநீக்கமே ஞானபலமல்லவாம், மற்றோ, நிரதிசய ஆனந்தசாம்ராஜ்யமும் ஆம்யாண்டுப் பிரஹ்மாதிகளும் அநுக்கிரகஞ் செய்யப் பெறுவார்களோ. ஹே சாதுவே உன்னுடைய மனமானது மகத்தாந்தன்மையை யடைந்தவழி சம்சாரவிருத்திகளில் மூழ்கமாட்டாது, கோவின்பதங்களில் வாரணமே

போலும்: கர்மகார்ப்பண்யாதி தோஷதூஷிதமனமோ அற்பகாரியத்திலும் மூழ்காநிற்கும், மோகியாநிற்கும், கோக்காற்றேயத்திலும் ஜீர்ணங்கமசகம்போலும், ஹே அரச ! சித்த மானது திருசியமாத்திரத்தைப் பற்றுவதாய தனது பிரசித்தமான தீனத்தன்மையாம் வாசனையானே பங்கத்திற் கீடம்போலும் மிகமூழ்காநிற்கும். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் எத்துணை விடயங்களில் எத்துணைப்போதுதான்வை ராக்கியம் செய்யத்தக்கதோ வெனின், ஆண்டுரைத்தல்:—எத்தனையென்பது.

எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பரஞ்சுடரா யெறிக்குஞ்சோதி
யத்தனையத் தனைதோன்று மெந்நாண்மட் டனைத்தும்விடா யந்நாண்மட்டுந்
தத்துவமாம் பொருளெய்தாச் சகலமும்போ னாற்சேடந் தானுஞ்சித்தந்
தொத்தறவேற் றுமையெல்லாம் போகாதேற் சமமான சோதிதோன்று.

(ப - ரை.) எத்தனையெத்தனை நீத்தாய் = எவ்வளவு எவ்வள்வுவிட்டாயோ, அகிலத் தைப் பரஞ்சுடராய் எறிக்குஞ்சோதி = விடயங்களைப் பராலோகமா யிலக்குஞ்சோதியா னது, அத்தனையத்தனை தோன்றும் = அவ்வளவு அவ்வளவு பிரதீதியாம், எந்நாண்மட்டு அனைத்தும்விடாய் அந்நாண்மட்டும் = எவ்வளவுகாலபரியந்தம் யாவற்றையும் விடமாட் டாயோ அவ்வளவுகால பரியந்தம், தத்துவமாம் பொருள் எய்தா = உண்மையாய ஆத்மா லபிப்பதில்லை, சகலமும் போனாற்சேடந்தானும் = யாவுமொழிந்தாற் சேடித்து நிற்பது தனது ஆன்மவடிவமேயாம், சித்தந்தொத்தற வேற்றுமையெல்லாம் போகாதேற்சமமான சோதிதோன்று = மனத்திலுள் பேதபாவனையாவும் தொடக்கற முற்றினும் அகலாதேல் எங்கும் நிறைந்தசாந்தப் பிரகாசம் அகமெனச்சாக்ஷாத் கரிக்கவரமாட்டாது என்பது துணிபாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாபாகுவே ! அவ்வள்வுக் கவ்வளவு தானேயாவும், நன்குதியாகிக் கப்படவேண்டும், எவ்வள்வுக் கெவ்வள்வு பரப்பிரகாசமாய பரமாத்மாவே சேடிக்கலாமோ; சுயஞ்சோதியா ய ஆத்மமாத்திர பரிசேட அனுபவபரியந்தம் விடவேண்டு மென்பதாம்; நாஞ்சுருதி சாஸ்திர பரியாலோசனமும் ஆன்மதரிசன பரியந்தமேயாம், எவ்வளவில் ஹே மமே சேடிக்கலாமோ, அவ்வளவுபோது நன்கலம்பப்பெறுவதாம் சுவர்ணகரதாது; அவ்வ ளவுகாலமே நன்காராயப் பெறுவவாம் சர்வ அத்தியாத்ம சாஸ்திரங்களும், எவ்வளவுபோ தில் ஆத்மாவே அகமாகச்சாக்ஷாத்கரிக்கப் பெறுவதாமோ சர்வவஸ்து பூதபுத்தியினாலே எப் போதும் எல்லாவிடங்களிலும் சர்வதிருசியங்களையும் எல்லாவற்றானும் நன்றாக விடுத்துச் சர்வமுமாயிராநின்ற பூர்ணாத்மாவானது தன் முயல்வினாலேயே தானாகவே அடையப்பெறு வதாம், அலது எப்போதேனும் எங்கேயேனும் எங்ஙனமேனும் எவையேனுஞ் சிலவிடயங் களை விடுதன் மாத்திரத்தாலேனும் அடையப்பெறுவதன்றாம் கூறியபொருளையே வியதி ரேகமுகத்தானும் திடப்படுத்தல்:—எந்நாள் என்பதாதி. எத்துணையாவும் விட்டொழித் திலேயோ அத்துணையான்மா வக்கப்படமாட்டா, அஃதெதனாலெனின் ஆண்டுரைத்தல்:— சகலமுமென்பதாதி, சர்வ அவஸ்தா பரித்தியாகமாயினே சேடமான்மாவெனச் செப் பிடலாகும்.

(ச.) அகிலத்தை = திருசியத்தை, எத்தனையெத்தனை = அற்பமனற்பமாவது, நீத் தாய் = அநான்ம புத்தியாற்றானே உபேக்ஷிக்கின்றனையோ, அத்தனையத்தனை = திருசிய மூலவே, தோன்றும் = பரஞ்சுடரா யெறிக்குஞ்சோதி = பரமப்பிரகாசமான பரமான் றுயம் விடுபட்டமட்டும், திருசிய பரித்தியாகமாயிற் றிருக்கேசேஷிக்கு மென்பது கருத்து.

தத்துவமாம்பொருள் = ஆன்மா, தானும் = ஆன்மாவெனப்படும். சித்திற்றெருத்தற என வும் பாடமுளது, ஆன்மதாதான்மிய நீங்கவென்பது பொருள். (23)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தன்னைப் பெறுதற்பொருட்டாக அன்னியமெவையு மகற்ற வேண்டுமெனல்:—பேதமென்பது.

பேதமுறு பொருளொருமை தோன்றுதேற் றன்னைத்தான் பெறுவதெங்கே
யாதலினாற் றனைப்பெறுதற் பொருட்டாக வனைத்தினையு மகற்றல்வேண்டும்
ஏதமற வனைத்தையும்விட் டாயென்னிற் சேடித்த திறவாவீடா
மேதகைய பதமதுவாஞ் சுரகுவெனும் பெயர்கீர்த்தி வேடர்வேந்தே.

(ப - ரை.) பேதமுறு பொருளொருமை தோன்றுதேல் = பிறவற்றை விடாதவரை யும் சாமான்யமேயாய பொருளுங்கூட அடைவுறுதெனின், தன்னைத்தான் பெறுவ தெங்கே = சுவாத்மலாப விடயத்தில் என்னேகதை, ஆதலினால் = ஆகையினால், தனைப் பெறுதற் பொருட்டாக = ஆன்மலாப நிமித்தம், அனைத்தினையும் அகற்றல் வேண்டும் = சர்வத்தையும் நன்குபரித்தியாகிக்க வேண்டும்; ஏதமறவனைத்தையும் விட்டாய் என்னில் = குற்றமற யாவற்றையும் தியாகித்தாய் என்னின், சேடித்தது இறவாவீடாம் = எஞ்சியது கெடாத மோக்ஷமாம், மேதகைய பதமதுவாம் = மேன்மையாகியபதம் அஃதேயாம்; சுரகு வெனும்பெயர் கீர்த்திவேடர் வேந்தே = சுரகுவென்னும் நாமம்வாய்ந்த புகழ்பெற்ற கிரா தர் மன்னவனே.

(ஸ்ரீ - வீர.) எத்துணையயலை இனிது விடவில்லையோ, அத்துணை லோகவியவகார ஸாதாரணமாய கோதனுதியும் கூடக்கிடைப்பதில்லை, எத்துணை அன்னியமாய அதன் விரோதிவஸ்து நன்கு விடப்படவில்லையோ அத்துணை வாஞ்சிதம் அகப்படமாட்டாதென் பதாம், ஹே சாதுவே ! என்றால் தனது வடிவலாபத்திலோ யாதுகதை கூறத்தக்கதுளது, கிடைக்கவே மாட்டாதென்பதாம், ஆகையினால் தனதான்மாவை யினிதாகக் காணுதற் பொருட்டோ யாவற்றையுமே விடுதல்வேண்டும், சர்வகிருசியங்களையும் பரித்தியாகஞ் செய்து எஃதொன்று எல்லாவாற்றானுமே விடுவதற்கு முடியாததாகக் காணப்பெறுவ தாமோ அதுவே பரமபதமாம்.

(ச.) சமமான சோதிதோன்றுது என்றதனையே விரித்துரைத்தல்: வேற்றுமையெல் லாம் = சொர்ணரசதாதி எதுவரையும் விடபடாதோ அதுவரையும், பேதமுறு பொருளொ ருமை = சாதாரணமாயினும் இரத்தினாதி வஸ்து, தோன்றுது = அடைதற்கரிதாம், ஆதலி னால் = அவ்வேதுவினால், தன்னைத்தான் பெறுவதெங்கே = ஆன்மலாப மாவதெங்கே, அன்னியவஸ்துவை விடவேண்டு மெனச்சொல்லுவ தென்னென்பது பொருள். இதுவிட படாதெனிற் சாதிக்க விச்சித்தவஸ்து அற்பமும் சித்தியாதென்பது கருத்து. சொர்ண விரசதாதியென்றது திரவியத்தின்மேனின்றது. (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சகலத்தையும் மனத்தையும் விட்டுச் சுகபதத்தே யிருத்தி யென வுபதேசித்துத் தவ மாமுனிவர் செல்லுதல்:—சகலவென்பது.

சகலகாரண காரிய பரம்பரைத் தன்மையாஞ் சகமேவி
மிகவளர்ந்தவத் துவின்மல வாதனை மனத்தினை மிகநீக்கித்
திகழுமங்கமா மதையுமேல் விடுதியேற் றீதறு நலனுண்டாம்
புகழ்நராதிப வென்றுதன்னிட முறப்போயினன் றவப்பாலன்,

(ப - ரை.) சகலகாரண காரியபரம்பரைத் தன்மையாம் = சருவகாரண காரியபரம் பராமயமாம், சகமேவி மிகவளர்ந்த = உலகத்துற்று அதிகமாக விருத்தியடைந்துள்ள, வத்துவில் = பொருளின்கண், மலவாதனை = அசுத்தவாதனை, மனத்தினை = உள்ளத்தை மிகநீக்கி = அத்தியந்தமகற்றி, திகழுமங்கமாமதையும் = விளங்காநின்ற வபுவாமதனையும் மேல்விடுதியேல் = அதன்பின் விடுவாயானால், தீதறு நலனுண்டாம் = துயரமற்ற பரமானந்த முண்டாம், புகழ்நராதிப != யாவரும்புகழும் நரேந்திரனே, என்று = என்பதாக வுபதேசம்புரிந்து, தன் னிடமுறப்போயினன = தனது ஆசிரமத்தைச் சேரச்சென்றனன், தவப்பாலன் = ஞானதேசிகேந்திர சிகாமணியாகிய ஸ்ரீமாண்டவ்யமுனிவர்.

(ஸ்ரீ - வீர.) மனமானது, சகல காரணகாரிய பரம்பராமயமாய ஜகத்தில் மணிகளிற் சூத்திரம்போல் அநுகத சன்மாத்திரத்தில் தனது கற்பனையினலே விஜிரும்பிதமாயசத் வியதிரிக்த சர்வரூபத்தையும் அடியோடு அகற்றி அதன்பின்பு தனதுவபுவாய மனோரூபத்தையும் மூலாஞ்ஞான நாசத்தாற் யிதத்தாற் பரிவிலாபித்து எச்சச்சின்மாத்திர ஏகரசமான வஸ்துவையடைவாயோ அதுவே அந்தப் பிரஹ்மரூபமாம். சத்வியதிரிக்த மென்றது உண்மையினின்றும் பிரிவெய்தலாம் பொய்ம்மையென்க, எனவே அவ்வுண்மையும் அளவையாற் றுணியப் பெறுவ்தாதலாம், அளவைப்பான்மையும், தோடத்தோடுங் கூடாத அறிவின் கருவியாம், அதனனே கனவாதிகடுப்ப அளவையாற் றுணியப்பெற்றதன் அயன்மையானே பொய்ம்மை துணியப்பெறுவதாம். இதன் விரிவையாமுரைத்த அத்வைத சித்தியின் ஐந்தாவது பொய்ம்மை யிலக்கணத்துட் கண்டமைக. ஸ்ரீவசிஷ்டபகவான்:—இந்தப் பிரகாரமுபதேசித்து இச்சூரமன்னனை யாசீர்வதித்து ஸ்ரீ பகவானுகிய மாண்டவ்யமுனிவர் தமக்குப் பிரியமாய தமது மௌனமண்டல முனியாவாச தேசத்தைநோக்கி ஹேரகுநந்தன! தாமேசென்றனர்.

(ச.) காரியகாரண ரூபசகமேவியபொருள் வாசனையுடைய மனத்தினை அனன்மாவாதலால்விட்டு = நிரசனஞ்செய்து, மேற்றனது மேனியையும் அநான்மாவாதலால் விடுதியாயின், எது சுபவஸ்துவா யிருக்கின்றது அதுவே வஸ்துவாம். ஸ்ரீவசிஷ்டர்: புகழ்நராதிப, இரகுநந்தன, தவப்பாலன் = மாண்டவியமுனிவர், என்று = சூரனைநோக்கி இங்ஙனம் அநுக்கிரகித்து, தன்னிடம் = மௌனிமண்டலம், உற = தானே எழுந்தருளினர், என்பது பொருள். (25)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ மாண்டவ்யர் ஏகியபின்னர் மன்னர் ஏகாந்தத்துறைந்து ஆன்டாதியில்பாகிய திருசியத்தில் தானுந்தன்மையையும் தனதாந் தன்மையையும் விசாரித்தகற்றுவாராயினரெனல்:—முனியென்பது.

முனியகன்றபின் னெயினர்கோன் றனியிட முந்திநன் மதியாலே
யனிசநானென்ப தாரென நாடின னடிமுதன் முடியீறுந்
தனியுடம்பைநா னென்பது புதுமையாஞ் சடவுடல் காண்கேனுன்
றுனிசெயிவ்வுட லசேதனந் தசைமுதற் றுன்னுமா தலினன்றே.

(ப - ரை.) முனியகன்றபின் = ஸ்ரீமாண்டவ்ய முனிவர் உபதேசித்துப் போனபின்னர், எயினர்கோன் = வேடர்மன்னர், தனியிடமுந்தி = ஏகாந்தஸ்தலத்தை யடைந்து, நன்மதியாலே = ஏகாக்கிரமான தெளிந்தபுந்தியாலே, அனிசம் = நிரந்தரம், நானென்பது = அகமென்று பிரதீதியாவது, ஆரென நாடினன் = யாது என்று ஆலோசித்துப் பார்த்தான், அடிமுதல் முடியீறும் தனிஉடம்பை = பாதமுதல் சிரசமீறுயுள்ள கேவலமிவ்

வட்லே, நானென்பது = அகமெனவிடுவது, புதுமையாம் = அதிக ஆச்சரியமாம், சடவுடல் காண்கேனுன் = ஜடமாகிய இத்தேகத்தை யானுணர்கின்றேன், துனிசெயிவ்வுடல் = துன்பமாற்றும் இந்தத்தேகம், அசேதனம் = அறிவற்றது, தசைமுதற் றன்னுமாதலின் அன்றோ = தோலிரத்த எலும்பிறைச்சியாதி நிறைந்திருத்தலின் அல்லவோ.

(ஸ்ரீ - வீர.) வரமுனிவர் எகியபின்னர் இராஜாவானவர் அநிந்திதமாய ஏகாந்தத்தை யடைந்து, மதியினுலே, சுயம் அகமென்பது யாதுகொலோவென நன்கு சிந்திப்பாராயினர். மேருவேமுதலாக எவையுமே நானுமல்ல என்னுடையனவுமல்ல. சங்கேதமாத்திரத்தியாக உபாயத்தால் வெளிப்பொருள்களோடு சம்பந்தம் விலக்கி அசேதனத்தன்மை யேதுவினுனே தேகேந்திரியாதிகளோடும் அதனை நீக்கும்பொருட்டுத் தொடங்கல்:— அடிமுதலென்பதாதி. ஹஸ்தபாதாதி சம்யுதமாய தேகமாத்திரத்தையான் என்பேன், அவ்விதையாண்டுள்ளே விரைவில் அத்தியந்தம் யான் நாடிப்பார்ப்பேன். அஃதீண்டு கேவலம் மாம்சம் அஸ்தியென்பனவே யாமன்றோ, இந்த அறிவில்லாததோற்பையா னல்லவேயல்ல, இஃதென்னுடையதுமல்ல, சம்பந்தமாத்திரத்தையு மிஃதடைவதே கிடையாது, அசங்கத்தன்மையான், பதுமத்தின் நீர்போலுமென்பதாம். மாம்சம்ஜடம், அது அகமாகாதாம், இரத்தமும் அகமென அத்தியந்தம் ஆகாதாம், என்புகள் ஜடங்கள் அகமாகானே, இவைகள் என்னுடையனவெனவும் எங்கும் எதுவும் எப்போதுமாகாவே.

(ச.) தனியுடம்பை = தேகமாத்திரத்தை. (26)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சூக்குமசரீர நியதிசெய்தல்:—கரணமென்பது.

கரணமீரைந்து மன்னியஞ் சடமெனுங் கணக்கினு னான்றித்
திரளெனக்கில வுடன்முத னனலன் சேடமே தெனநோக்கில்
விரவுசீவனே சேடமா மின்னதும் வேறென்றூற் றெரிகின்ற
துரவிதானவே றொன்றினுற் றெரியுமீ துயர்ந்ததத் துவமாகா.

(ப - ரை.) கரணமீரைந்தும் = கருமேந்திரிய பஞ்சகமும் ஞானேந்திரிய பஞ்சகமும், அன்னியம் = அயல், சடம் = அசேதனம், எனுங்கணக்கினுல் = என்னும் யூகத்தால், நானன்று = அகமல்ல, இத்திரள் எனக்கில = இக்கூட்டம் என்சம்பந்தியுமல்ல, உடன்முதல், நானலன் = தேகமேமுதலாக யானல்லன், சேடமேதென நோக்கில் = எஞ்சுவதேதெனப்பார்க்கில், விரவுசீவனே = இவற்றோடுங் கலந்தவுயிரே, சேடமாம் = எஞ்சுவதாம், இன்னதும் = இவ்வுயிரும், வேறொன்றூற் றெரிகின்றது = அயலொன்றினுலே யறியப்பெறுகின்றது, உரவிதான வேறொன்றினுற் றெரியுமீது = திரவறிவான அயலொன்றினுலே அறியப்பெறுமிது, உயர்ந்த தத்துவமாகா = மேலானவத்துவாக மாட்டாது.

(ஸ்ரீ - வீர.) கருமேந்திரியங்கள் யானல்ல, கருமேந்திரியங்கள் என்னுடையனவுமல்ல, இத்தேகத்தில் எக்காரணத்தாலவை ஜடமாமோ ஜடமாமவை சேதனநானல்ல; போகங்கள் யானல்ல, போகங்கள் என்னுடையனவுமல்ல. ஞானேந்திரியங்களும் என்னுடையனவல்ல, அந்த ஞானேந்திரியங்கள் ஜடங்களாய்; அசத்சொரூபங்களா யிருத்தலின் யானுமல்ல, சம்சாரதோஷத்திற்கு மூலமாகியமனமும் யானல்ல அதுஜடமன்றோ, இனிப்புத்தி யகங்காரமென்று யாதுகாணப் பெறுகின்றது என்னுந் திருஷ்டியுள்ளதோ அதுவும், யானுமல்ல என்னுடையதுமல்ல, எதனுலது மனுமையமாமோ, அந்தக்கரண அவஸ்தாபேதரூப மென்பது துணிபாம். சரீராதிமனே புத்தீந்திரியாதி யந்தமாகவுள்ளதால சூக்ஷ்ம பூதசங்காதம்

கூறியமுறையே யானல்ல, அநித்தியங்களாகலின், பரிச்சின்னங்களாகலின்; ஆவசிட்டத்தைப்பார்த்து ஆராய்வேனுகவும்; சேடமோ சேதனமாகிய ஜீவனுவன், அச்சேதனமாகிய பிரமாதாவும் சேத்தியமாகிய பிரமேயத்துடன் நிகழ்கின்றது, நிகழ்ந்தவழி யானிதையறி கின்றேன் நிகழ்த்துகின்றேன். என்னும் திரிபுடிசாக்ஷியினுலே யறியப்பெறுகின்ற இந்தப் பிரமாதா தன்னுடைய தத்துவவபுவல்லவாம், தாத்விகம் ரூபமெனச்சம்பவிக்கமாட்டாதாம்.

(ச.) உரவிதான் = திருசியசம்பந்தமான, ஈது உயர்ந்ததத்துவமாகா = ஆன்மதத்துவ வடிவமாகாது. (27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சேடித்த தன்னைத்தெரிந்து கூறுதல்:—தெரிவதென்பது.

தெரிவதாகிய விதனையு மகற்றுவன் றெரிபொரு ளனுமோ
பெரிதுசேடமாய் விகற்பமற் றமலமாம் பேரறி வியானுகு
மரியயன்சிவ னிந்திரனந்தக னுதியா மிடந் தோறுஞ்
சுரிகொண் முத்தினுண் ணூலென நிற்குமாற் றோன்றுமிவ் வுயர்போதம்.

(ப - ரை.) தெரிவதாகிய இதனையும் அகற்றுவன் = அறியப் பெறுவதாகிய இவ்வுயிரையும் யானல்லவென்று விலக்குவன், தெரிபொருள் நானுமோ = தெரியப்பட்ட வஸ்து யான் ஆவேனோ, பெரிதுசேடமாய் விகற்பமற்று அமலமாம் பேரறிவுயானுகும் = அத்தியுந்தம் சேடித்துநின்ற நிருவிகற்ப நிர்மலவியாபக சித்துருபமே யானுவேன், அரியயன் சிவனிந்திரன் அந்தகனுதியா மிடந்தோறும் = ஸ்ரீவிஷ்ணு பிரஹ்மாருத்திரன் தேவேந்திரன் யமன் முதலியவரது தேகந்தோறும், சுரிகொள்முத்தினுள் நூலெனநிற்கும் = துவாரத்தோடுகூடிய தரளத்துள்ளே தந்துவென ஊடுருவிநிற்கும்; தோன்றுமிவ் வுயர்போதம் = பிரகாசியாநின்ற பகவானுகிய இந்தமேலான சேதனம்.

(ஸ்ரீ - வீர.) இவ்வகையாய யுக்தியினுலேயே சாக்ஷிசம்வேத்தியங்களாய பிரமிதியையும் பிரமேயத்தையும் தியாகிப்பேன், எக்காரணத்தாற் சேத்தியம் அகமன்றென்பது பிரசித்தமாமோ, சேடமாய் விகற்பமின்றியதாய் இலங்குஞ் சுத்தசாக்ஷியேயானுகிய ஆன்மாவாய் நிலைத்தது, நிச்சயமாக நிலைபெற்றது. அதனைத் தரிசித்தமாத்திரையானே கண்டசாமீகரம் போலும் அந்தலாபத்தை யாச்சரியபூதமாகக் காட்டுவோர் பெரிது என்றூர். இது ஒரு பெரிய ஆச்சரியமல்லவோ! என்னை யானுகவே யடைந்தேனே, அநாதிகாலந் தொடங்கி முயன்றுகொண்டே யிருந்தவனுயினும், இன்று பரம்புருஷார்த்த பல்வான் ஆயினேனன்றே! அந்த இந்த அநந்தாத்மா யான்ஆயினேன், இந்தப் பரமான்மாவிற்கு அந்தமின்றன்றே! இது பிரமாவும் இது இந்திரனும் என்பதாதி சுருதிகணங்களை யனுபவத்தாற் சம்வாதித்தல்:—அரியென்பதாதி பிரமாவிடத்தும் இந்திரன்பாலும், யமனிடத்தும் வாயுவின் கண்ணும், சர்வபூதகணங்களின் மாட்டும், அந்தப்பகவானுகிய இந்த ஆன்மாவேதந்து முத்துக்களிற்போல முந்தியிருந்திலங்குவன். (28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரம்பொருளின் பெருமையை நன்குசிந்தித்து அதுவேதானுகிச் சர்வசமுசயமுந்தீர்ந்து விசிராந்தி யடைந்தமையைத் திருட்டாந்த பூர்வகமாகத் தெரிவித்தல்:—பகவன், சத்தி, சுழுத்தியென்பன.

பகவனுகுமிவ் வாத்தும தத்துவம் பரமமாஞ் சிற்சத்தி
சகநிகழ்ச்சியா நோயின்றி வெருவுறுந் தனிவடிவுடைத் தாகிக்
சுகுப்பமுற்றையும் விழுங்கியெப் பொருளினுங் கலந்து நுண்ணியதாகி
நிருமபூரவுபாவங்களற் றயனுறை வீடளவுளதாகி

சத்தியாவுக்கு முறைவிட மாமிதுதனித்தனிச் சத்தாகிப்
பத்தியாகியிச் சகத்தினிற் காண்பன யாவையும் பலவாகச்
சித்தசைந்துள விசாலமா மல்லது சிறிதும்வே றிலதாகும்
தொத்துபற்றின்றிக் காண்பதற் றெழுபவந் தொடர்மயக் கமுமற்றே.

சுழுத்தியிற்றிர முற்றவன் றெழிலெனத் துகளறு சமனுகி
யழுத்தமாகிய வாத்தும தத்துவத் தமர்ந்தன னெனத்தீர்ந்து
விழுத்தகும்பத மெய்தினன் விவேகத்தின் மெய்மைநிச் சயத்தாலே
வழுத்தருந்தவக் கவுசிகன் விப்பிர மரபினை யடைந்தென்ன.

(ப - ரை.) பகவனுகு மிவ்வாத்துமதத்துவம் = ஸ்ரீபகவானுகிய இந்த ஆன்மதத்துவமானது, பரமமாஞ் சிற்சத்தி = நிர்மலமாகிய சிற்சத்தியாம், சகிகழ்ச்சியாம் நோயின்றி = திருசிய ஆமயவிவர்ஜிதமாய், வெருவுறுந் தனிவடிவுடைத்தாகி = பைரவாகாரந் தரித்து, கருபம் முற்றையும் விழுங்கி = திசைகண் முழுவதையும் வியாபித்து, எப்பொருளினும் கலந்து = சகலவஸ்துக்களிலும் விரவி, நுண்ணியதாகி = சூக்குமமாகி, மிகும் அபாவ பாவங்கள் அற்று = பாவாபாவ விவர்ஜிதமாய், அயனுறை வீடளவுளதாகி = பிரஹ்மாவின் வாசஸ்தான பரியந்தம் இருப்பதாகி.

சத்தியாவுக்கும் உறைவிடமாமிது = சர்வசக்திகட்கு மிருப்பிடமாயிது, தனித்தனிச் சத்தாகி = வேறுவேறு யிருப்பதாகி, பத்தியாகி = வரிசையாகி, இச்சகத்தினில் = இவ்வுலகத்தின்கண், காண்பனயாவையும் = திருசியமானமாகிய எவையும், பலவாக = நானாவாக, சித்தசைந்துள விசாலமாமல்லது = சித்தின் சலனமாத்திர விஸ்தாரமே யல்லாமல், சிறிதும் வேறிலதாகும் = கிஞ்சித்தும் அயலொன்றில்லையாகும், தொத்துபற்றின்றி = தொடர்கின்ற பற்றிலதாகி, காண்பதற்று = விடயமுமற்று, எழுபவந்தொடர் மயக்கமுமற்று = எழுவகைத் தோற்றமேற்றும் மோகமுமற்று.

சுழுத்தியிற் றிரமுற்றவன் றெழிலென = திடமாகத் துயிலுற்றவன் நிஷ்கிரியனுகியிருப்பதுபோலாய், துகளறுசமனுகி = குற்றமற்ற சமமுடைத்தாய், அழுத்தமாகிய வாத்துமதத்துவத் தமர்ந்தன னெனத்தீர்ந்து = அதிதிடமாகவே யான்மதத்துவத்தில் நிவாசஞ் செய்கின்றேன் என்று தீர்மானித்து, விழுத்தகும் பதமெய்தினன் = பரிபூரணமா யுசிதமாயபதத்தை யடைந்தனன், விவேகத்தின் மெய்மை நிச்சயத்தாலே = விவேகத்தின் உண்மைத்துணிபானே, வழுத்து = யாவரும் பூசிக்கும், அருந்தவக்கவுசிகன் = அரியதவத்தினையுடைய ஸ்ரீ விசுவாமித்திரர், விப்பிரமரபினை யடைந்தென்ன = பிராஹ்மணவம் சத்தையடைந்ததேபோல.

(ஸ்ரீ - வீர.) அவ்விதுசிற்சத்தியாம் அமலமாம், திருசிய வியாதியற்றதாம், அசேடதிக்குக்குஞ்சங்களையும் வியாபித்துத் தாங்குவதாம், அறியாதவர்க்குப் பயவேதுவாதலின் பைரவாகாரத்தைத் தரித்திருப்பதாம், சர்வபாவகதமாம் = சர்வபாவமனே விருத்திகளில் இருப்பதாம் "பிரதிபோத விதிதம்மதம்" எனமறை யறைதலின். பிரஹ்மபுவனமே முதலாகச் சகலபுவனங்களிலும் உள்ளுள்ளிருப்பதாம், சர்வசக்திகட்கும் சிமிழ்சம்புடம் ஆவதாம்; நிரதிசயாநந்த பூர்ணமாம், சர்வப்பிரகாசிய தீபிகையாம், சர்வசம்சாரமுக்தா பலங்கட்குத்தந்துவாய் நீண்டவடிவதாம். கஷ்டம் வீணேயேயாம் என்று சிந்தைநிக்ரக அநுக்கிரகஸ்திதியின்கண், ஈண்டுத்தேக நிஷ்டமாயிஃதுண்டாம், தேகசாக்ஷிக் கிஃதற்பமும் கிடையவே கிடையாதாம், அகோ ஆச்சரியம் அகம்பிரபுத்தனுயினேன் என்னுண்டயர் துர்த்

தரிசனம் எங்கேசென்றதோ அறிகிலேன், என்றற் காணத்தக்கவாயாவுமே காணப்பெற்றனவாம், அடையத்தக்கதாமிது அடையப்பெற்றதாம். எச்சகத்திருப்பவாய்க் காணவும் பெறுமோ அச்சிறிதித் திருசியமே யெவையும், தற்சின்மாத்திர வுருவதேயாமே, சுவாநுபவத்திருவாக்கு:—

சுவருறையுமோ வியங்கள் சுவரேயென்றல் சுபாவமதிபோற் பரத்திற்றோன்று நின்ற, பவமுதலாஞ் சங்கற்பவிகற்ப மெல்லாம் பரவடிவாய்க்கண்டு பரவடிவமான, தவருறையுங் கழனிநகர்க்கொற்ற நாதன்றனதருளாற் பேதமதிநாயினேனுக், கிவனவனெனது வென்னும் பேதமின்றி யெவ்வுருவுஞ் சின்மயமா விருந்தவாறே. சித்தினது எந்நிஷ்பந்தமாமோ, மாயையாற் சிவபாவப் பிரமமாமோ, அதனம்சம், பதினேழு கலிங்கமயல், அதனதுமாத்திரை, பாகிய அந்தக்கரண வேற்றுமைமயக்கம், அதனம்சம்; நனுக்கனுத் திருசியப்பிரமம், அதனினும் அன்னியமாகச் சிறிதுசாசுவதம், காலத்திரயத்திலும் பாதிக்கப்படாதது, ஆகிய திருசியம் உளதாவதே கிடையாது. இவ்வண்ணம் உலகிற்கு முக்காலத்திய கிடேதப்பிரதியோகித் தன்மைவடிவ மிருஷாத்தன்மை யுளதாயவழி நிக்கிரகாநுக்கிரகக் கிரமங்களுந் தற்பிரயோஜக ஹர்ஷாமர்ஷக் கிரமங்களும் பற்றுக்கோடற்றனவாம் வகையற்றனவாம், விடயமற்றனவாம் வடிவமற்றனவாம் என்று உணரத்தக்கனவாம். அகோ அகோ சம்பிரபுத்தனுயினேன், என்னுலத்தியந்தம் நன்கறியப் பெற்றது. அகந்தமாய அவ்வென்பொருட்டு நமஸ்காரம், சம்யக்ஞானத்தில் ஆவர்ப்பாடமாயதன் பொருட்டு வந்தனம், நன் ஞானவடிவுடைய தன்பொருட்டு நமஸ்காரம், அப்புகயத்தின் பொருட்டு வந்தனம். விடுபட்டாஞ்சனத் தன்மையானே அவஸ்தாத்திரய விடயங்களை விட்டொழித்தவ னுயினேன், என்னுமிது சோதிததுவம் பதார்த்த நிர்த்தேசமாம்; பவப்பிரமத்தன்மை சென்றமையானே வியதாதி, அத்தியாரோபரஞ்சித வர்ஜிதமாயினேன், என்னுமிது சோதிததற்பதார்த்த நிர்த்தேசமாம்; பாவத்தில் க்தவிருதியாயது. திரமாய சுழுப்திகலேயால், துயிலுமூகத்தாற் போலும், உபாதிவிடுபடுதலின், ஏகிபூதனுயினேன் என்னுமிது அகண்டஐக்கிய நிர்த்தேசமாம்; ஆகலின் பிரத்தியக்காத்மப் பிரஹ்மத்தின்கண் ஆத்யந்திக அபேதலக்ஷணபரமசாமியமாக யான் நிவாசஞ்செய்வேன், ஒருபோதும் எனக்கும் மறித்தும் வைஷம்மியப் பிராப்தியாகாதாம் எனப்பலாவஸ்தா நிர்த்தேசமாம். ஸ்ரீ வசிஷ்டபகவான்: — இந்தப்பிரகாரம் ஹேமஜடாதீசனுகிய சுரகுவென்பான் அநுத்தமமான பதத்தையடைந்தான் விவேக அத்யவசாயத்தானே காதிஜாகிய ஸ்ரீ விசுவாமித்திரர் பிராஹ்மண்யம் பெற்றதேபோலும்.

(௪.) அவ்வமலமான விந்தசிற்சத்தி சகநிகழ்ச்சியா நோயின்றி = திருசியாமய விவர்ச்சிதையாய், வெருவுறுந் தனிவடிவுடைத்தாகி = பைரவாகார தாரிணியாய், கருபமுற்றையும் விழுங்கி = திசைகளனைத்தையும் வியாபித்தவளாய்.

ஜகத்தினிற் றிருசியமானவனைத்துஞ் சித்தின் பொலிவினது அம்சமேயாம், வேறு சாசுவதமான வஸ்து சிறிதுமிலதாகும்

தொத்துபற்றின்றி = வாதனுஜாலத்தை விட்டு, அதனுலே, காண்பதற்று, விடயங்களினின்றும் விடுபட்டு, சுழுத்தியிற்றிர முற்றவன் றெழிலென = காடசுழுத்ததசையை யடைந்தவனுய், சமையாற், சமனுய், ஆன்ம சொரூபத்தில் அமர்ந்தனன்; ஸ்ரீவசிட்டர்:—என = இத்தன்மையாய். ஸ்ரீவிசுவாமித்திரர் ஸ்ரீ வசிட்டரோடும் பொருமை யுற்றவராய்த் தவங்கணாற் பிரஹ்ம இருஷித்தன்மையையே யடைவுற்றவராயினுர் என்பது இராமாயணுதிகளிற் பிரசித்தமாம். (29-30-31)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதுமுதலாகச் சுரகுதாபமற்றவனுய்த் தங்காரியத்தே மகிழ்ச்சி வாட்டமில்லாமல் வெகுசாந்தனுக விவகரித்து வந்தானெனல்:—வரவென்பது.

வரகுணங்களா மனைத்துமிற் றுயில்பவன் மனத்தொழி னிகராகி
சுரகுவென்பவ னசைவறு சிகையினற் றுலங்குறு சுடரொத்தான்
விரவுநல்லரு ளருளின்மை விருப்பொடு வெறுப்புமச் சரந்தொந்தம்
பரவுநன்மதி மூடமென் றினையவும் பயில்வற நிகழ்வுற்ருன்.

(ப - ரை.) வரகுணங்களா மனைத்துமில்=மேலானகுணங்களாம் யாவுமில்லாத, துயில் பவன் = நித்திரைசெய்பவன், மனத்தொழில் நிகராகி = மனோவியாபாரசமமாகி, சுரகு வென்பவன் = சுரகுவென்னும் அம்மன்னவன், அசைவறு சிகையினல் = சலனமில்லாத சுடரினல், துலங்குறு சுடரொத்தான் = விளங்காநின்ற தீபத்தையொத்திருந்தான், விரவு நல்லருள் அருளின்மை = கலக்கும் நல்லதயை தயையின்மை, விருப்பொடு வெறுப்புமச் சரந்தொந்தம் = இராகம் த்வேஷம் மற்சரம் துவந்துவம், பரவுநன்மதி மூடம் =விசாலிக் கும் நல்லபுத்திகுமதி, என்றினையவும் = என்னப்பெற்ற இன்னோரன்ன எவையும், பயில் வற நிகழ்வுற்றுன் = தோற்ருமல் விவகரித்தான்.

(ஸ்ரீ - வீர.) சுழுப்தபத தர்மிணியாய சித்தவிருத்தியோடும், நிச்சலமாகத் துயில்பவன் போல, நன்கிலங்கினன்; அசைவின்றிப் பிரகாசியாநிற்கும் தனதுசிகையோடுகூடிய தீபமே போலும். கருணையில்லாதவனு மல்லாமல் கருணையுள்ளவனு மாகாமல். துவந்துவாயு மிரா மல், மற்சரியுமாகாமல். அத்தியந்த நிர்மற்சாமுற்றுப் பரதோஷ உபேக்ஷகனுமாகாமல், சுதீயுமாகாமல் அசுதீயுமாகாமல் அர்த்தியுமாகாமல் அநர்த்தியுமாகாமல், அம்மன்னவ னிருந் திலங்கினன். அசாபலதீரமாய்ச் சமதரிசனமான விருத்தியானித்தியம், பரிபூர்ண அர்ண வம்போலும் இந்துபோலும், உட்சீதளமிகுந் துலவியொளிர்ந்தான்.

(சு.) சுடரொத்தான் = தீபம்போற் றுலங்கினன், சுழுத்ததசைபோல் நிர்விகாரமான சித்தவிருத்தியால் விளங்கினனெனச் சொல்லப்பட்டது. அந்த நிர்விகாரத்துவத்தையே கூறல்: அச்சுரகு, அருள் பயில்வறத் திகழ்வுற்றுன், தயை = பரதுக்கத்தைப் போக்கும் இச்சாரூப மாதலினனும், அவன் இராகாதிரகித னாதலினனுமென்க. அதனாலே, மச்சரம் பயில்வற = துவேடரகிதனய், நன்மதிமூடம் பயில்வற=சுமதி அசுமதியு மில்லாதவனய்= சுபாசுபசர்வ யுத்திரகிதனுதலி னென்க. மதிமூடம்= புத்தியபுத்தியும், பயில்வற=இராகத் துவேடங்க ளின்மையினலென்க. அதனல், தொந்தம் பயில்வற = துவந்துவரகிதனய். திகழுற்றுன் எனக்கூட்டுக. மூலம்:—நிர்க்கிருண=குரூர:. (32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஹே முனீசுரரே ! வாயுவினலே ஒய்விலாதுழலும் மயின்மயிர் போலும் லோலுப்பட்டுழலும் மனமானது எவ்வகையானே ஏகசமாதானத்தை யடையும், அதுதான் எத்தகைத்தாம் ? என்று ஸ்ரீ இராகவர்வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரமரு ளல்:—ஒன்றுயென்பது.

ஒன்ருயுணர்ந்த சுரகுப்பெய ருத்தமற்கும்
பன்னுதனெ னும்பெயர்ப் பார்த்திப மாமுனிக்கு
நன்றானவன் பால்வருநன்மை நயந்துகேட்பாய்
குன்ருர்புயத் தாயெனமாதவன் கூறலுற்றான்.

(ப - ரை.) ஒன்றுயுணர்ந்த சுரகுப்பெயர் உத்தமற்கும்=ஏகமாயறிவுற்ற சுரகுவென்னு முன்தை மன்னவனுக்கும், பன்ஞதன் எனும்பெயர்ப் பார்த்திபமாமுனிக்கும் = பர்ணுதன் என்னும் பெயர்வாய்ந்த பெரிய இராஜ இருஷிக்கும், நன்றுனவன்பால் = மிருந்தபேரன் பிஞலே, வரும்நன்மை நயந்துகேட்பாய் = வாராநின்ற அற்புத சம்வாதத்தை அன்புடன் சிரவணிப்பாய், குன்றூர்புயத்தாய் எனமாதவன் கூறலுற்றான் = மலைபோலும் வலுத்த புயங்களையுடைய இராகவனே என்று பெருந்தவர் பெருமான் பேசத்தொடங்கினன்.

(ஸ்ரீ - வீர.) சத்தைத் தனது வடிவமாகவுணர்ந்த அதேசுரகுவென்னும் மன்னவனுக்கும் பர்ணுதனெனப் பெயர்படைத்த இராஜ இருஷிக்கும், அக்கால் நடந்ததாய இந்த அற்புதசம்வாதத்தை யுபதேசிக்கக் கேட்பாயாக ! ஹே குழந்தாய் ! ஏகசமாதானத்தில் உணர்த்தப்பெற்றுச் சேர்க்கப்பெற்று வாழும் ஆன்மாவை யுடையவர்களாய அவ்விருவருக்கும் பரஸ்பரம் நன்கு நடைபெற்ற இனிய விச்சம்பாஷணையை உனக்குவிசேடித்து விளம்புகின்றேன் கேட்குதி ! (33)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பன்ஞத இருடியினது சரிதையைப் பகுத்துரைத்தல்:—பாரக்கர்; இன்னுவென்பன.

பாரக்கர் குலப்பரிகப் பெயர்பாரின் வேந்தாம்
வீரக்கழலோன் சுரகுப்பெயர் வேந்தனண்ப
னீரக்கன மாரிமறுத் தலிலியாருந் துஞ்சக்
கோரக்கனன் மண்டுதல் கண்டுகுலைந்து நொந்தான்.

இன்னுதன நாடுவிட்டேகி வனத்திலெய்தி
யன்னுதரம் போய்த்தவஞ் செய்தவிழ் பன்னமூணுய்ப்
பன்ஞதநாமம் படைத்துத் தவப்பான் மையாலே
நன்ஞதலும் பெற்றனனற் றவமொப்ப துண்டோ.

(ப - ரை.) பாரக்கர் குலப்பரிகப் பெயர்பாரின் வேந்தாம் = இவ்வுலகின்கண் பாரசீகத்தாருக்கு அரசனுகப்பரிகன் என்னும் ஒரு மன்னவனிருந்தான், வீரக்கழலோன் = வீரகண்டையை யணிந்தவன், சுரகுப்பெயர் வேந்தன் நண்பன் = சுரகுவென்னும் முன்னுரைத்த வம் மன்னவனது பிரியநேயன், ஈரக்கனமாரி மறுத்தலில் இயாருந்துஞ்ச = நீனதலுறு மேகங்கள் பெய்யவெறுத்தலின் எவருமே மரணமாக, கோரக்கனல் மண்டுதல்கண்டு குலைந்து நொந்தான் =கொடிய அழல் நெருங்குதலைப் பார்த்துச் சிதைந்துதுன்புற்றான்;

இன்னுதன நாடுவிட்டேகி = துயர்மயமாய வத்தனது இராஜ்யத்தை விடுத்துச் சென்று, வனத்திலெய்தி = சேய்மை யாரணியத்தையண்மி, அன்னுதரம்போய் = அன்னுகாரம்யாவும் விட்டு, அவிழ்பன்னமூணுய் = உதிர்ந்த சருகையே யாகாரமாகக்கொண்டு, பன்ஞதநாமம் படைத்து = பர்ணுதமகரிஷி யென்னும் காரணப்பெயர் செறிந்து, தவஞ்செய்து = அருந்தவம்புரிந்து, தவப்பான்மையாலே = அத்தவத்தின் பெருமையாலே, நன்ஞதலும் பெற்றனன் நற்றவமொப்பதுண்டோ = ஞானியாதலையு மடைந்தனன், நல்ல தவத்துக்குச் சமானமானது ஒருபொருளு முண்டுகொல் !

(ஸ்ரீ - வீர.) பாரசீக தேசவிசேடத்தாருக் கரசனுகவும் பகைவர்களாகிய வீரர்களைக் கொல்லவல்லவனுகவும், தேரில் அக்ஷதண்டம்போல எல்லாப் பிரஜைகளையுந் தாங்கும் ஆதாரபூதனுகவும், பரிகன் எனப்பெயர் பெற்றவனுகவும் பிரசித்திபெற்ற ஓரரசனிருந்தான்.

ஹே இரகுநந்தன! நந்தனோத்யானத்தே நன்குவீற்றிருந்த மதனனுக்கு வசந்தன் நண்புற்றிருப்பதொப்ப, அவ்வரசன் சுரகுவிற்குப் பரமமித்திரனாக விருந்தான். அப்பரிகமன்னவன்து மண்டலத்தில் ஒருபோது மகத்தான மழையின்மையான துண்டாயது, சம்சாரத்திற் கற்பாந்தம்போ விருந்தது, ஆயின் என் அரசதோஷத்தாலாயதோ அஃதெனின்? இன்றும், மற்றோ பிரஜைகளினது குகாரியதோடத்தாற் சனித்ததா மதுவென்க. ஆண்டு ஈடாத் க்ஷாமஜீவிதராய வெகுபேர்களாகிய ஜனங்கள் மடிந்தேகினர், சொலிதமாய விபினத்திற்றீயிற் பூதபரம்பரை மடிவதேபோலும் அத்துயரத்தைப் பரிகமன்னவன் கண்டு ஒப்பற்ற பெரும் விஷாதத்தை யடைந்தனன், அவ்வகில ஐசுவர்ய சகிதராஜ்யத்தையும் வழிப்போக்கன் எரிந்த கிராமத்தை யெள்ளிப் போவதேபோல விரைவில் விட்டுத்தொலைத்துப்போனன். பிரஜைகளின் நாசத்தை மாற்றுவதில் ஆற்றல் அற்றவனுகி விராகவானுய், தவம்புரிதற்பொருட்டு அஜினப்பிரதான முனீந்திரரைப்போல விபினத்தை நோக்கியேகினன். புரவாசிகளெவருமே அறியக்கூடாததாய யாதோ ஒரு தூரகானனத்தில் விரக்தாத்மாவாய அம்மன்னவன், துவிதீயமாய பரலோகத்திற்போல இனிது வீற்றிருந்தான். மனத்தை வென்றவனுய்ப் புலன்களை வென்றவனுய்க் கந்தரமந்திரத்திலிருந்துதவஞ் செய்துகொண்டு, சுயஞ்சீரணங்களாகிச் சுஷ்கங்களாய பர்ணங்களை ஆண்டு உணவாகக்கொண்டு அம்மன்னவனிருந்தான். அதிவிரக்தத் தன்மையானே பர்ணகுட்டியாதிப் பரிக்கிரகமும் இவ்வரசனுக்குண்டாக வில்லையென்பதைக் குறிப்பிப்பார் கந்தரமந்திரத்தில் என்றார். பின்வெகுகாலம் ஹாதாசவன லென்னக்காய்ந்த சருகுகளையே பக்ஷித்துக்கொண்டு அப்பரிகமன்னவன் பர்ணதன் என்னும் நாமதேயத்தை தவத்தினர்மத்தியில் அடைவுற்றிருந்தான். அது முதலாகப் பர்ணதனெனப் பெயரிய இராஜருஷி சத்தமன் ஜம்புத்தீவில் மிகவும் விக்கியாதியுடையவனுய் முனிவரது ஆசிரமங்களிலிருந்தான். அதன்பின் ஆயிரம்வருடம் தாருணவடிவமான தவத்தினைப்புரிந்து அப்பியாச வசத்தினுலே, மனத்தூய்மை கடவுள் திருவருள் முதலிய ஆத்மப் பிரசாதத்தினுலே யுண்டாகிய தத்துவஞானத்தை யடைவுற்றனன். துவந்துவமற்றவனுய் நிராசனுய், சாந்தமனத்தனுய், நீராகனுய் நிரனுக்குரோசனுய்ப் பிரபுத்ததீயாய்ச் சீவன்முக்தனுய் வாழ்ந்து வந்தனன்.

(ச.) தவப்பான்மையாலே, அதன்பின் ஆயிரம்வருட மியற்றியதாருணரூபமான தபசாலெழுமப்யாச வசத்தினுலே, நன்றுதலும் = சாந்தமதியினனுய் ஆன்மப்பிரசாதந்தரு ஞானத்தைப்பெற்றுத் துவந்துவாதீதனும் நீரசனும் சமதரிசனனும் ஆனன் என்பது பொருள். மூலம்:—பரிக: ஸ்யந்தநேயதா = பரகமென்பது ஆயுதவிசேடமாம் இருப்புக்கட்டுத்தடியாம். எப்புறத்தும் கொல்லப்பெறுகின்றது இதனுல் என்னும் விற்பத்தியானே! எங்ஙனந்தேரிற் பரவீரர்களைக் கொல்கின்றனன் என்று விக்கியாதனுவனே அங்ஙனம் இம்மன்னவனும் ஆவன் என்பதுபொருள்.

(84-85)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சுரகுமன்னவனும் பர்ணத இராஜ இருஷியும் சந்தித்துச் சம்பாஷிக்கத்தொடங்கல்:—ஒரு என்பது.

ஒருமூவுல கென்னுமடத் தொருமித் திருந்தான்
பொருண் மேவுகின்ற சுரகுப்பெயர் பூபன்றன்பால்
வருவானெதிர் தோன்றது மற்றவனன் போடெய்தி
யிருவோருமன் புற்றிருந்தின் னனபேச லுற்றார்.

(ப - ரை.) ஒருமூவுலகு என்னும் மடத்து ஒருமித்து இருந்தான்=ஒப்பற்றதிரிலோகம் என்னும் மடத்தில் இட்டப்படி சஞ்சரித்துக் கொண்டிருந்தனன், பொருண்மேவுகின்ற

சுரகுப்பெயர் பூபன்றன்பால் = சகல ஐசுவரியங்களும் பொருந்தா நின்ற சுரகுவென்னும் மன்னவன்றன்னது அரண்மனையைநோக்கி, வருவான் = வாராநின்ற பர்ணாத இருஷி, எதிர்தோன்றலும் = சந்நிதி பெறுதலும், மற்றவன் அன்போடு எய்தி = சுரகுமன்னவன் பிரியத்தோடு எதிர்கொண் டழைத்துவந்து, இருவோரும் அன்புற்றிருந்து = இரண்டுபேர்களும் பரஸ்பரம் பேரன்புடன் பூசித்து ஆசனத்தமர்ந்து, இன்னன பேசலுற்றார் = இவ்வாறு சம்பாஷிக்கத் தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) ஹேசாதுவாகிய இராமச்சந்திர ! அந்தப்பர்ணாத இருஷி இம்மூவுலகமாகிய மடத்தின்மாட்டே இட்டப்படி, சித்தர்களாகிய ஆரூடர்களோடும், சாத்தியர்களாகிய ஆருருக்ஷுக்களோடும், ஒவ்வொருகாற் கூடினவனாகியும் தனியேயும், சஞ்சரித்துக் கொண்டிருந்தான்; ஹம்சங்களோடு கூடியபிரமரம் கமலினியிற்போலும், ஒருபோது ஹேமகூட சுவர்ணஜடமெனப் பெயரியதேசத்தின் மகீபதியாய அச்சுரகுவினுடைய, சுமேருசிருங்க மிஃதொன்றெனை விலங்கும், இரத்தினங்களானே விசேஷமாக நிர்மாணம் பண்ணப்பெற்ற அரண்மனையை அந்த இராஜ இருஷியடைவுற்றனன். ஆண்டு அப்பழைய மித்திரர் இருவரும், ஒருவருக்கொருவர் பூசைசெய்து கொண்டனர், அவர் பூரணர், அறிய வேண்டியதை யறிந்தவர், மௌர்க்கிய கர்ப்பமாகிய சம்சாரத்தினின்றும் வெளிப்போந்த ஜீவன் முத்தர். அகோ ஆச்சரியம் ! என்னுடைய பவித்திரமாய சுகிருதங்களானே இது பலிதமாயது, பாவத்தில் க்ஷவிருதியாம், யான் எதனுற்றங்களை இனிது தரிசிக்கப்பெற்றேனே, என்பதாக அன்னியோன்னியம் உபசரித்துக் கொண்டனர். ஆலிங்கித சரீரமுடையவர்களாய அவர்கள், அன்னியோன்னிய ஆனந்தித ஆகிருதிகளை யுடையவர்களானார்கள் பூதரத்திற் சந்திர அருக்கர்களைப்போல ஏகாசனத்தில் வீற்றிருந்தார்கள்.

(சு.) ஒரு மூவுலகென்னு மடத்தொருமித் திருந்தான் = திரிலோகமென்னும் இம் (மடம்) மடிகையைக் குறித்துச் சுவேச்சைப்படி யிருந்தான், ஒருகாலத்து அவனதுசதனத்தைக்குறித் தேமகூடபதி வந்தான், அவ்விடத்திற் புராதன மித்திரரான அவ்விருவரும் அன்னியோன்னியம் இது சொன்னாரென்பது பொருள். இப்பாட மழகியதாகாது. (36)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரஸ்பர மின்புறல்:—நினையென்பது.

நினையிப்பொழு தெய்தலினீங்கரு மின்பமுற்று
வினையற்றதென்ற சுரகுப்பெயர் வேந்தைநோக்கி
யுனையுற்று மாண்டவ்விய னோதியஞான மொப்பத்
தனையுய்க்கு மெய்ம்மைப் பதஞ்சார்ந்தன னியானுமென்னா.

(ப - ரை.) நினை இப்பொழுது எய்தலின் = தங்களை இப்போழ்து அடைதலின், நீங்கரும் இன்பமுற்று = அகலுதற்கரிய ஆனந்தம் அடைந்து, வினையற்றது = பாவமுமற்றது, என்ற = எனக்கூறிய, சுரகுப்பெயர் வேந்தைநோக்கி = சுரகுவென்னும் மன்னவனைப் பார்த்து, உனையுற்று = தங்களையடைந்து, மாண்டவ்வியன் = ஸ்ரீ மாண்டவ்வியமுனிவர், ஓதிய = உபதேசித்த, ஞானமொப்ப = பிரஹ்ம வித்தையையொக்க, தனை உய்க்கும் = தன்னைக்காக்கும், மெய்ம்மைப்பதம் = உண்மைப்பதத்தை, சார்ந்தனன் = அடைந்தனன், யானும் என்னா = யானும் என்றான்.

(ஸ்ரீ - வீர.) எனதுசித்தம் தங்களுடைய தரிசனத்தானே பரமானந்தத்தை யடைந்தது, இந்து பிம்பத்திற்போல உன்மக்கினமனமானது சீதளத்தன்மையை யடைவுற்றது;

சிதிசக்திப் பிரதானத்தில் ஆனந்த ஆவிர்ப்பாவமாம், மனனசக்திப் பிரதானத்தில் தாப உப சமமாம் என்னும் விசேஷத்தை விளக்கற் பொருட்டுச் சித்தம்மனம் எனவேற்றுமைக் கூற்றும். ஹே அனகரே ! தங்களாலெங்ஙனம் ஸ்ரீ மாண்டவ்ய மகா முனிவரது திருவருளானே பரம்பொருளறியப் பெற்றதோ அங்ஙனமே யென்னாலுமே, தவத்தினாலே யாராதிக்கப் பெற்ற பரமேசுரனுடைய திருவருளினாலே யுண்டாய இந்த ஞானமானது அடையப் பெற்றது. (37)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரிகர் சுரகுவினது ஞானநிடத்தை நானுவகையாக வினுதல்:—மிகவென்பது.

மிகத்தெ ளிந்துகெம் பீரமாய்ச் சம்மதாம் விழியா
லிகத்து றுந்தொழின் மன்னவ வியற்றுதி கொல்லோ
பகுத்த காலத்தை யறிவுறு நினதுபா வனைதான்
றொகுத்த வாதியும் வியாதியுந் தொடர்கிலை கொல்லோ.

(ப - ரை.) மிகத்தெளிந்து = அத்தியந்தம் சொச்சமாய், கெம்பீரமாய் = அசையாத வீரத்தன்மையுடன், சமமாய் = சமமதாம் = சமத்தன்மையை யுடைத்தாகிய, விழியால் = திருஷ்டியுடனிருந்து, இகத்துறுந்தொழில் = இவ்வுலோக இராஜ்ஜிய வியவகாரங்களைச் செவ்வனே, மன்னவ! = ஹே அரசரே! இயற்றுதி கொல்லோ! = செய்கின்றீரோ வென்? பகுத்தகாலத்தை யறிவுறுநினது பாவனைதான் = விதித்தகாலத்திற் செய்யவேண்டிய காரியங்களிற் றலைப்பட்டு நின்றதங்களுடைய பாவனையானது, தொகுத்த ஆதியும் வியாதியும் தொடர்கிலை கொல்லோ = அதனாலேற்பட்ட மனோவியாதியையும் தூலவியாதியையும் அடையாம விருக்கின்றதா ?

(ஸ்ரீ - வீர.) நீர் துக்கந் தொடராதவரா யிருக்கின்றீரா, ஹே பூமண்டலாதிபரே நீர் சுமேருபர்வதம்போல, விவர்த்த உபாதானத்வ உபலக்ஷிதமாய பரமகாரணப் பிரஹ்மத்தில் உத்தரோத்தர பூமிகைப் பரிபாகமாக விசிராந்தியை யடைந்துள்ளீரோ; பரமகல்யாண மடைந்தீரா, ஆன்மாவில் இளைப்பாறியிருக்கும் உமது சித்தத்தில், சரத்போதிற் சரசீரிற் போல, இரஜதமங்களின் ஆவரணமின்மை யுண்டாகியிருக்கின்றதா ? ஹே நன்மைகட்கு நிலயமாகிய நராதிபரே ! ஆழ்ந்தகன்று அதிதெளிவுடனிலங்கும் சமமாய திருஷ்டியானே, சர்வஜன ஹிதத்தன்மையானே அவசியஞ் செய்யத்தக்கனவேயாய கருமங்களைச் செய்கின்றீரா ? அடைந்தும் விவகாரத்தை ஆதிவியாதிகள் அற்றவரானீரோ, அத்தகைய தீர வீரர்நும்பாற் கூடியுள்ளாரா, ஆலய சாலை அக்கிரகாரம் நந்தனவனங்கள் நன்கு இலங்குகின்றனவோ ? தங்களுடைய பிரஜாசமூகங்கள் தேசங்களில் நோயற்றவாழ்வுடன் தருமாத்மாக்களாய் வாழ்கின்றார்களா ? உம்முடைய தனதானிய விபவங்களிலும் பிருத்திய களத்திரபுத்திர நகரங்களிடத்தும் குசலம் அதி குதூகலமாய் நிகழ்கின்றதா? உமதுள்ளத்தில் யாதொரு விக்ஷேபமுமின்றி உமதுமேனி நடுங்காமல் நோயற்றதாகத் திகழ்கின்றதா ? என்று வினவினார் இராஜ இருஷி.

(ச.) இகத்துறுந்தொழில் = சுபமுள்ள காரியங்களை, காருண்ணியத்தால், நின்து பாவனைதான் = நினது இக்காயலதை. (38)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது விசிராந்தி யடைந்த தகைமையையும் சமாதியடைந்த தகைமையையும் விசேடித்து வினுதல்:—அடையும் என்பது.

அடையும் போதினி தாகிய போகத்தி லழுந்தா
திடைநிலாய் கொலோ சங்கற்ப மற்றிளைப்பாறித்
தடையில் சாந்தமாய் முத்தியாய்ச் சலனமொன்றில்லா
நடைபயின்றுயர் சமாதியை நண்ணினை கொல்லோ.

(ப - ரை.) அடையும் போது = கிடைத்தகாலத்தில், இனிதாகிய போகத்தில் = இன்பமயமா யழுத்திவைக்கும் போகங்களில், அழுந்தாது = மூழ்காமல், இடைநிலாய் கொலோ = அவற்றாடு மருவிநில்லாம லிருந்து விவகரிக்கின்றீரா, சங்கற்பமற்று = எண்ணங்களியாவு மோய்ந்து, இளைப்பாறி = விசிராந்தியடைந்து, தடையில் சாந்தமாய் = பிரதிபந்தக மில்லாம லுபசாந்தமாய், முத்தியாய் = மோக்ஷமாய் சலனமொன்றில்லா = அசைவொன்று மில்லாத, நடைபயின்று = பயிற்சியைப் பழகி, உயர்சமாதியை=மேலான அசம் பிரஞ்ஞாத சமாதியை, நண்ணினை கொல்லோ = அடைந்து சுகித்தீரோ.

(ஸ்ரீ-வீர.) இகலோக பலத்தை யுத்தேசித்துச் செய்யப்பெற்ற காரீரியாகாதிகளும், பரலோகபலத்தை யுத்தேசித்துச் செய்யப்பெற்ற ஜோதிஷ்டோ மாதிகளும், புண்ணிய பலத்தைப் பயக்கின்றனவா ? ஆபாத இரமணீயங்களால் அத்தியந்த வைரிகளாயுலவும் விடய விடசர்ப்பங்களில் தங்களுடைய மனமானது வைராக்கியத்துடன் நிகழ்கின்றதா ? தத்துவவித்திற்கு விவகார சமாதிகளில் இன்ப ஏற்றத்தாழ்வு கூறுகிறீரா இல்லையா எனப் பரீக்ஷித்தற் பொருட்டு முதலிற்றமது அநுபவத்தை விளக்கல்:—ஹேபூமிபரே ! ஹே அனகரே ! இச்சம்சார ஜாலத்தில் எவ்வெக்கருமம் செய்யப் பெறுகின்றதோ அது சமாகிதசித்தனுக்குச் சுகத்தின் பொருட்டேயாம், அன்னிய அஞ்ஞனுக்கன்றாம். இங்ஙனம் தமதநுபவத்தை வெளிப்படுத்தி அது சம்வாதியா அசம்வாதியா வெனப் பாராநுபவத்தை யறியும் வேட்கையராய்ச் சமாதியில் விசிராந்தி ஆதிக்கியம்போலக் காண்பித்துக்கொண்டு வினவுதல்;—சங்கற்ப மற்றென்பதாதி, சங்கற்பரகிதமாயும் மேலுக்குமேலாயும் இளைப்பாறுதற்கிடமாயும், விக்ஷேப துக்கங்களின் பரம உபசமமாயும், சாம்சாரிக சுகங்களினின்றும் மிகவும் உயர்ந்ததாயும் இருக்கும் சமாதியை யநுட்டிக்கின்றீரா; சாமானியத் தேவியத்யயத்தராதல் நபும்சகத் தகைமையாம். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அறிவை யறிந்தவற் கெப்போதும் சமாதியே யாமெனச் சுரகு கூறல்:—வெறிதென்பது.

வெறிதி ருக்கினுந் தொழிலினை மேவினும் விடாம
லறிஞ னென்றுதான் சமாதிவிட் டகலவ னுதைந்
செறியு ஞானஞ்சேர் மனத்தினர் சகத்தொழிலில் செயினும்
பிறிவி றத்துவ நிட்டராய்ச் சமாதியிற் பெயரார்.

(ப - ரை.) வெறிதிருக்கினும் = சும்மாவிருந்த போதினும், விடாமல் தொழிலினை மேவினும் = இடைவிடாமல் விவகாரத்தைச் செய்யினும், அறிஞன் என்றுதான் சமாதி விட்டகன்றவனுகும் = சொரூபத்தை யுணர்ந்தவன் எப்போதுதான் சமாதியைவிட்டொழித்தவனவன். செறியும் ஞானம்சேர் மனத்தினர் = பூர்ணஞானத்தினை யுடைய மனத்தோர், சகத்தொழிலில் செயினும் = உலகவிவகாரத்தை யுஞற்றினும், பிறிவில்தத்துவ நிட்டராய் = பேதமுறாத தத்துவத்தினது நிஷ்டை யுடையவராகி, சமாதியிற்பெயரார் = சமாதியினின்றும் அகலார்.

(ஸ்ரீ - வீர.) சமாகித சித்தனுக்குச் சர்வகருமமும் சுகப்பொருட்டாம்எனப் பார்க்கும் தங்கட்கு சமாதியில் விசிராந்தியாதிக்கிய தரிசனமும், விவகாரசமாதிபேத அங்கீகாரத்தால் விளைதலும்; பொருத்தமற்றதேயாம் என்த்தங்களுடைய அநுப்வசம்வாதியே எனதநுபவமு மாம், என்னுங்கருத்தால் சுரகு, சங்கற்பரகிதம் பரமோபசமம்மேன்மையது, என்று அவர் கூறிய கூற்றிற்கு ஆன்மசொரூபத்திலும் சம்பவமுண்மையின் அத்துணையை யங்கீகரித்துக் கொண்டு, விசிரமனுஸ்பதமாய சமாதியை யநுஷ்டிக்கின்றீரா என்னுங்கூற்றை, சமாதா னிக்கத்தக்க அவிசிரமஹேதுவாய மனத்தினுக்குப் பாதிதத்தன்மை யுண்மையினுனே அசம்பவமாக வெண்ணி ஆக்ஷேபித்தல்:—ஹே பகவன்! சர்வசகற்பவர்ஜிதம் பரமோப சமம் ஆகிய சிரேயசு என்னுமிது என்பொருட்டுப் பொருத்த முடைத்தாதலின் கூறுவீ ராக! சமாதி யனுஷ்டிக்கத்தக்கது எனயாதின் பொருட்டுத் தங்களால் விளம்பப்பெறு கின்றதோ, ஹேமகாத்மாவே! தத்துவத்தையுணர்ந்த அவன் எப்போதும் சமாதியிலிருப் பவனும் விவகரிப்பவனுயுந்தான் என்வடிவினனுவன்முன்? எப்போதுமே மறைவுபடாத அத்வயசித் சுபாவனுகியோனவனுக்லின், எப்போதுதான் அசமாகித சித்தனவனுவன் ஒரு போது மாவதேயில்லை, நிச்சல ஆத்மசொரூப அவத்திதியே சமாதியெனத் தங்களுடைய திருக்கருத்தேலாயின் அவன் எப்போதுமே அவ்வாறே யிருக்கின்முன், இருக்கவே; அநு ஷ்டிக்கத்தக்கது ஒரு சிறிதுமே உன்தாவதாகக் காணேமெனல்:—செறியுமென்றது. நித்தி யம் பிரபுத்த சித்தரானவர் தாம் ஜகத் கிரியைகளை இயற்றியபோதினும் ஆத்மைகதத்வ நன்னிஷ்டராய் எஞ்ஞான்றுமே நல்ல சமாதியிலிருப்பவரேயாவர்.

(ச.) அறிஞனன்றுதான் = ஆன்மஞ்ஞன் அல்லாதவன், வேறிதிருக்கினும், தொழி லினை = விவகாராதியை, மேவினும், ஒருபோதும் சமாகிதசித்தன் அன்றும் என்பது பொருள். அஞ்ஞனுக்குச் சமாதியே சம்பவியாதென்பது கருத்து. அறிஞனெனப்பதம் பிரிக்கின், சமாதிவிட்டகன்றவன்றாகும் என அந்நுவயஞ்செய்க, அச்மாகிதசித்தன் ஒரு போதும் ஆகான் என்பதுபொருள். ஞானிக்கனவாதஞ் சமாதியே யென்பது கருத்து. அதனையே அன்னுவய வியதிரேகங்களால் விரித்துரைத்தல்:—பிறிவிறத்துவ நிட்டராய் = சுவான்மா வோடைக்கிய தத்துவமான தத்தென்னுஞ் சத்தம்பிரதிபாதிக்கும் பிரஹ்மத்தில் நிட்டையுடையராய், ஓம்தத்சத்தென நிர்த்தேசம் பிரஹ்மத்திற்குத் திரிவிதம் நினைக்கப்படும் என்னும் மிருதியினுலென்க, ஸ்ரீமத்பகவத்கீதை:—ஓமென்கின்ற தனியெழுத்து முரைத் தற்கரிய தற்பதமுந், தாமங்கமழுந் தார்மார்பாசத்தென்கின்ற தனிப்பதமு, மாமென்கின்ற விவைமூன்று மறிவின்பெயர் மற்றிவற்றாலே, யாமுன்புணரு மறைமறையோர் யாகந்தோன் றிற்றென வறிவாய். மூலம்:—அச்மாகித சித்தமென்னும் பாடத்தில் யோஜ்ஞ என்பதில் ஜ்ஞ என்ப பதப்பிரிவாம். (10)

(ஸ்ரீ - வீர - அ-கை.) தாங்கள் என்னையஞ்ஞன் எனவெண்ணின், அக்காலும், சமாதி யுபதேசம் பொருத்த மற்றதேயாம், என்னுங்கருத்தா லுரைத்தல்:—பிரமவென்பது.

பிரம வஞ்சலி யுடன்பது மாதனம் பெறினும்
விரவ சாந்தர்கள் சமாதியின் மேவல ராசைத்
திரண பாவக ளுகிய சித்துணர் வொன்றே
வரசமாதியாம் வெறிதிருக் குமதன்று வள்ளால்.

(ப - ரை.) பிரமவஞ்சலியுடன் பதுமாதனம் பெறினும் = பிரஹ்மாஞ்சலி யோடுகூடப் பத்தபத்மாசனத்தைப் பெற்றிடினும், விரவு அசாந்தர்கள் = அவிசிராந்த சுபாவமுடைய

வர்கள், சமாதியின் மேவலர் = சமாதியை யடையமாட்டார், ஆசைத்திரண பாவகனுகிய சித்துணர்வொன்றே = நசைத்துரும் பெரியாகிய தத்துவபோத மொன்றே, வரசமாதியாம் = மேலான சமாதியாம் வெறிதிருக்கும் அதன்று வள்ளால் =ஹேவள்ளலே ! சும்மாவிருக்கும் அஃதல்லவே.

(ஸ்ரீ - வீர.) கட்டியகமலாசனனேனும் இயற்றிய பிரஹ்மாஞ்சலியனேனும், விசிராந்தி மேவாத வியற்கையனுயின் சமாதியாதாம் எவ்வுபாயத்தாற்ருனும், யாண்டு சித்தம் சமாதானிக்கத்தக்கதோ, அதனது பழக்கமே யின்மையின் என்பதாம். ஹேபகவன் ! சர்வாசாதிருணபாவகன் என்னும் தத்துவஞானம் சமாதியெனப் பெறும் சும்மாவிருப்ப தல்லவாம்; நன்ருக மூலத்தோடு கூடச் சர்வாசாவிடய பாதத்தால் ஆத்மாவைப் பரமார்த்த சொரூபத்திற் சேர்ப்பித்தல் சமாதியாம் என்னும் விற்பத்தியினு லென்பது கருத்து.

(ச.) பத்த பத்மாசனஸ்யாமி = கட்டப்பெற்றது கமலாசனம் எவனுல் அவனுக்கும்; பத்தபத்மாசன ஸ்தஸ்ய என்னும் பாடத்தில் இருதபிரஹ்மாஞ்சலோபி என்பதுபொருந்தாதாம், பத்தபத்மாதனத்திற்குக் கரங்கள் அங்குஷ்டங் கவர்வதில் விநியோகிக்கப் பெறுதலின்; இதற்குப் பிரமாணம் ஸ்ரீயாஞ்ஞவற்கியர் சொல்லி யிருக்கின்ருர்:—ஹேபிராஹ்மண சிரேட்டனே ! துடைகளின்மேல் பாததலமிரண்டையும் வைத்து அங்குட்டங்களைக் கைகளினுற்றிரிபுக் கிரமமாகக் கட்டவேண்டும், இப்பதுமாசனஞ் சகலர்க்கும் பூஜிதமாம் கேவலம் பதுமாதனத்திற்கும் பிரஹ்மாஞ் சலிக்கும் இலக்கணம் முன்னர் சொல்லப்பெற்றது. வள்ளால் = பகவனே ! (41)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமாதியினுயர்ந்த இலக்கணத்தையும் உவமையையும் உரைத்தல்:—ஒருமை யென்பது.

ஒருமை யாயென்று மனமிறந் துண்மையை யுணரில்
வரசமாதியாஞ் சொல்லினுர் மனத்தினி னிறைந்தோர்
மருளின் மெய்ம்மையோர் மதிதம்மை மறக்கிலா சிறிதுந்
தருந்தொ ழிற்றிற மறக்கிலாக் காலமே சமமாம்.

(ப - ரை.) ஒருமையாய் என்றும் மனமிறந்து = சமாகிதமாய் நித்தியதிருப்தமாய், உண்மையையுணரில் = உள்ளபொருளை யுள்ளபடி உணரில், இதனையே, வரசமாதியாம் சொல்லினுர் மனத்தினினிறைந்தோர் = உயர்ந்தசமாதி சப்தத்தினுலே சொன்னுர்பூரணப் பிரஞ்ஞையை சந்ததமுற்ற பெரியோர், மருளில் மெய்ம்மையோர்மதி = மயக்கமில்லாத வுண்மை யுணர்வினை யுடையவரது புத்தியானது, தம்மைமறக்கிலா சிறிதும் = ஆன்மவடிவத்தை யொருபோதும் அற்பமும் மறக்கவேமாட்டாது, தருந்தொழிற்றிறம் மறக்கிலாக் காலமே சமமாம் = தான்றரும் கலாகதியை ஒருபோதும் மறவாதகால தத்துவமே போலவாம்,

(ஸ்ரீ - வீர.) ஹேசாதுவே ! ஒருமையுற்றதாய், நித்தியதிருப்தமாய், உள்ளபொருளை உள்ளபடியே காண்பதாய், அபாதித ஆத்மதரிசன ருபமாய், இலங்கும் மேலாகிய பிரஞ்ஞையே உணர்வுடையவரானே சமாதிசப்தத்தாற் சொல்லப்பெறும். அதனையே பலத்ததாக வருணித்தல்:—கலக்கமற் றகங்காரமற் றிருமையிற் கவிழா, தலக்கணற்றது மேருவிற் றிரதராகிருதி, இலக்கிகிற்பது சமாதியென் பெயரினுலியம்பும், விலக்கியுற்றதைக் கருதிய தளித்து மேவியதாய். தள்ளலாவதுங் கொள்ளுவதாவதுந் தவிர்ந்தே, உள்ளலாவதா யுள்ளத்தின்கதி நிறைவுறலே, வீள்ளலாவது சமாதிமெய்ப்பெயரினுல் விளம்பில், உள்ளதேயது

முன்னெனக்குறமுயல் வேண்டா. அற்றேல், பிரஹ்மாகார விருத்தி விச்சேதமாகியவழி எழுச்சிகூடலின் சமாதி விச்சேதமாம் அவனுக்கெனின், ஆகாதாம். பிரஹ்மாகார விருத்தி வடிவப் பிரஞ்ஞையும் விதேகமுக்தி பரியந்தம் தத்துவ அவலோகனத்தினின்றும் விராமத்தை யடையாமையின்; திடசமஸ்கார பலத்தால் அநுவர்த்தித்துக் கொண்டே யிருக்கும். சொரூபத்தை மறைக்கும் அஞ்ஞானத்தினது நாசம், ஒருதரம் உதிதமாகிய விருத்தியினாலேயே சேடமின்றியுறவே, மறித்தும் மறைப்பதின்மையினாலாதல், அவனுக்குச் சொரூப நிரோதவடிவச் சமாதிபங்க அடைவிலதாம் என்றுணர்க; பரமப்பிரேமாஸ்பதத் தன்மையினாதல் ஒருமுறை யடையப்பெற்ற வனுக்கு மறைதியி னடைவுண்டாகாதாம் எனவுமறிக; என்னுங் கருத்தாலியம்பல்:—மருளில் என்பதாதி காலமானது கலைக்கதியை எங்ஙனம் அனவரதம் மறக்கமாட்டாதோ, அங்ஙனம், பிராஞ்ஞநீயானது தனது ஆன்மாவை எஞ்ஞான்றும் மறக்கவே மாட்டாது.

(ச.) ஒருமையாய் = சமாகிதமாய், மலமிறந்து = கலக்கவகங்காரத் துவந்துவங்களற்று, உண்மையையுணரும் என்றும் = இன்வரும், நித்தியநிருத்தியுள்ள, மேருவினும் அதிதிரமான சைதந்யஸ்திதி யுடைய பிரஞ்ஞையே, சமாதியாஞ் சொல்லினால் = சமாதி சத்தத்தால் புதர்களாற் சொல்லப்படுவதா மென்பதுபொருள். மனத்தின் எந்தமனோகதி, மருளில் = இதுகொள்ளத்தக்கது இது விடத்தக்கது என்னும் பேதபாவனை யற்றதனாலே அபிஷ்டம்போய் அதனாற் சிந்தையறுமோ, அதுவே நிறைந்தே, =அந்தப் பரிபூரணமான மனோகதியே, சமாதியாம். காலமே = காலமானது, தருதொழிற் றிறமறக்கலா = கலை காட்டையாதி ரூபமானதொழிலை, மறக்கிலாச்சமம் = மறவாததுபோல்; மெய்ம்மையோர் மதி = பிராஞ்ஞர்மதியும், தம்மை = சொச்சொரூபத்தை, சிறிதுமறக்கிலா = என்றுமறவாததா மென்பது பொருள். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பெரியோர் பிரஞ்ஞையையே பலவிதமாக விதந்தோதி யுபசங்கரித்தலும் பன்னுதர் புகழத்தொடங்கலும்:—நெறி, ஆதலால், என்பன.

நெறிகொள் காற்றுத்தன் கதியினைமறப் பிலாநெறிபோ
லறிஞர்புந்திவே றறிவதில் லறிவையே யயரா
பிறிவில்புந்தியி லொருமையோர் சமத்துவப் பெரியோர்
செறிதொழிற்பிறி வகற்றினோர் தற்பதம் பெற்றோர்.

ஆதலாற்பன்மை பொருமையா முடற்றொழி லனைத்திற்
போதுசெய்கிலா வுத்தம வாக்கினாற் பொலிந்த
சேதனத்தவ ரெங்குளர் சித்திர மாகப்
பேதமற்றறி வறிந்தனை தற்பதம் பெற்றாய்.

(ப - ரை.) நெறிகொள் காற்றுத்தன்= சதாகதியாகிய வாயுவானது தனது, கதியினை மறப்பிலா நெறிபோல் = நடையை மறக்கமாட்டாத மார்க்கமேயென்ன, அறிஞர்புந்தி வேறறிவதில் = பிராஞ்ஞரது தீயானது பேதமொருபோதும் நாடாத, அறிவையே யயரா=சின்மாத்திரத்தை மறக்கவேமாட்டாது, பிறிவில்புந்தியில் ஒருமையோர் = நித்தியும் சமாகித சித்தமுடையவர், சமத்துவப் பெரியோர்=சமபாவனையுடைய மகாத்மாக்கள், செறிதொழிற் பிறிவகற்றினோர் = பொருந்தாநின்ற காரியபரிணாம விபாகமுக்தர், தற்பதம் பெற்றோர்=தத்பதத்தை யடைந்தவர் ஆவர்; ஆதலால்=அதனால், பன்மை யொருமையாம்

உடற்றெழிலனைத்தில்=அசமாகித சமாகித மென்பவற்றின், போதுசெய்கிலா உத்தமவாக்கி ஞற் பொலிந்த = பேதபங்கியானே பிரவிருத்திக்கப்பெற்ற தங்களுடைய வாக்கியப்பிரபஞ் சம் விடயஞ்செய்யும், சேதனத்தவ ரெங்குளர் = அறிவாளிகள் = எவ்விடத்துள்ளார்கள், சித்திரமாக = அற்புதமாக, பேதமற்று = வேற்றுமையற்று, அறிவறிந்தனை=உணர்வையே உமது வடிவமாக வுணர்ந்தீர், தற்பதம்பெற்றாய் = பரமபதத்தை யடைந்தீர்.

(ஸ்ரீ - வீர.) எப்போதும் சரித்துக்கொண்டே யிருக்கும் வாயுவானது யாண்டுமே தனதுகதியை மறந்திடாத வாறுபோலப் பிராஞ்ஞரது மதியானது தற்சொரூபமாகச் சாக்ஷாத்கரித்துள்ள சின்மாத்திரத்தை மறக்கவேமாட்டாது. மனம் உளதாமென வெண் ணிஞே எப்போதுமே சமாகிதமேயாம், இலதாமெனத்தான் எண்ணிஞே, அக்காற் சமாதி யும் உளதாக வேண்டாம் விக்ஷேப ஹேதுவிற்கே யடைவின்மையின் என்பதாம். எப்போ தும் நன்றாகப் பிருத்தக்குத்தன்மைப் பாதத்தானே அடக்கப்பெற்ற மதியையுடையவர், மிகவும் சமமான திருஷ்டியை யுடையவர், மகத்துவமுடைய பெரியோர் காரியபரிணம விபாகமுக்தராக வாழ்ந்து சுகிப்பர்; அவ்வேதுவிஞலே அசமாகித சமாகிதவேற்றுமை வகை யானே முயன்ற நித்திய உதிதமாய தங்களுடைய உத்தமவாக்கியப் பிரபஞ்சமானது எவ் வர்த்தத்திற்றான் நிலைபெற்றுலவுமோ, ஆகலின் மித்தையாகவே உதிதமாயதாம். பரிகர் பகரல்:—ஹே அரசரே! நிச்சயமாகவே யுணர்ந்த தத்துவத்தை யுடையவரானீர், நீருணர் வுற்றிருக்கின்றீர் என்பதைப் பரீக்ஷித்தறிந்துகொண்டேன், தற்பதமாகிய மெய்ப்பதமதனை அடைந்தவராகியே இலங்குகின்றீர்.

(ச.) பெரியோர் = பரிபூரண ஞானரூபர், செறிதொழில் = காரியங்களினுடைய, பிறிவு = சுகதுக்காதிரூப விகாரத்தால் வரும் பேதபாவனையை, அகற்றிஞேர், அதனல் சமத்துவர் = எவ்விடத்தும் சமதிருஷ்டியுள்ளவர், அதனல், பிறிவில்புந்தியி லொருமை யோர் = நித்தஞ்சமாகித புந்தியுள்ளவர், மகிழ்ச்சியிற்றீரார். சததகோ = வாயு.

ஆதலால் = அவ்வேதுவால், பன்மை யொருமையாம் = அசமாகிதர் சமாகிதரா மென்பது, உட்டொழிலனைத்தின், பேதகற்பனை யாதலால், நரோத்தம நினது, வாக்குப் பொலிவு மித்தையாகவே யுதித்ததொருபோது எவ்விடத்தும் மன்றென்பது பொருள், பரிகன்: பேதமற் றறிவறிந்தனை = இராஜனே நிச்சயமாகவே பிரபுத்தஞனாய், தற் பதம்பெற்றாய். (43-44)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரிகர் சுரகுவைப் புகழுதல்:—உள்ளென்பது.

உள்ளுறக் குளிர்ந்தனையுவா மதியென வுள்ளத்
துள்ளகங்கரத் துயரறத் துரிசற நிறைந்தாய்
தள்ளலாநிலை பெற்றெங்கும் விளங்குதிதானே
தெள்ளியோ யென்றபரிகற்குச் சுரகுமேற் செப்பும்.

(ப - ரை.) உள்ளுறக் குளிர்ந்தனை = நற்சீதள அந்தக்கரணஞகி, உவாமதியென = பூர்ணேந்துவைப்போல ஒளிர்கின்றீர்? உள்ளத்துள் அகங்காரத் துயரறத்துரிசற நிறைந் தாய் = ஆந்தரத்தில் அகங்காரத்தின் துன்பம்நீங்கி நிருமலமாய்ப் பூரணரானீர், தள்ளலா நிலைபெற்று = நீக்கமுடியாத நிலைமையையடைந்து, எங்கும் = எவ்விடத்தும், விளங்குதி தானே = சுயம் இலங்காநின்றீர், தெள்ளியோய் = தெளிந்த அரசரே, என்ற = என இவ்வாறியம்பிய பரிகற்குச் சுரகுமேற் செப்பும் = பர்ணுதருக்குச் சுரகுமன்னவன், மேலே சொல்லுவதாவது.

(ஸ்ரீ - வீர.) சம்சீதளாநந்தக்காரணத்தினுஜி கலைகள் முழுவதும் நிறைந்த சந்திரன் போல விளங்குகின்றீர், நிருமலமாய் விசாலமாய், பூர்ணமாய் கம்பீரமாய் ஒளிர்கின்றீர், நிருமலத் தன்மையானே வெளிப்படையாகக் காணப்பெற்ற அந்தர்ப் பிரதேசத்தையும் மனத்தையும் உடையவராக உள்ளீர்; வேலாநிலவிலாசத்தானே விடுபட்ட கடற்போல விளங்காநின்றீர். சொச்சமாயானந்த சம்பூர்ணமாய் அகங்காரமேக மழியப்பெற்று, புடமாய் விஸ்தீர்ண கம்பீரமாய் சாதாகாசமே யென்னவிளங்குகின்றீர். இஷ்ட அநிஷ்ட விடயங்கள் யாவற்றிலுமே சொஸ்தமாகக் குறிப்பிடப்பெறுகின்றீர். யாண்டுமே பசமசந்தோஷ மனைச் திருக்கின்றீர், யாண்டுமே இராகாதியற் றிருக்கின்றீர், ஹே அரசரே! எங்கணுமே விளங்குகின்றீர்.

(ச.) உள்ளுறக் குளிர்ந்தனை = மிகுசீதளாநந்தக் காரணனாய்; உவாமதியென = பூரணேந்துபோற் பொலிகின்றாய், தூசற = நிர்மலனாய், நிறைந்தாய் = பரிபூரணமானாய், தன்னலா நிலைபெற்று = சுவத்தனாய், எங்கும் இலக்கியார்த்தனாய், தானே விளங்குகி, தெள்ளியோய் = அரசனே. (45)

(ஸ்ரீ-வீர - அ - கை.) இவ்வுலகத்திலுள்ள யாவுமே சாரமற்றனவாம் எனவுபேக்ஷிக்கத் தக்கனவாம், யாவுமே யசாரமாயின் எச்சாரபூதமாயது சேவிப்பதற் குசிதமாயது எனின், அதனையுரைத்தல்:—பரந்தவென்பது.

பரந்தசொற்களாற் பயனென்கொல் பயனெலாம் பாறி
நிரந்தரஞ்சம மாய்மனந் தன்னுளே நிகழ்ந்து
சுரந்தவின்பமாய் நிகரிலா வொருவிழி தோன்றித்
திரந்தனிற்றெரி கின்றதா லென்றனன் றெளிந்தோன்.

(ப - ரை.) பரந்தசொற்களால் = வாக்கிய விஸ்தாரங்களால், பயன் என்கொல் = பிரயோஜனமியாது தானுளது, பயனெலாம்பாறி = பயன்யாவற்றையும் விடுத்து, நிரந்தரம் சமமாய் = எப்போதும் ஒப்பாய், மனம் = உள்ளம், தன்னுளே நிகழ்ந்து = ஆன்மாவி னுள்ளேயே யிலங்கி, சுரந்தவின்பமாய் = ஆனந்தப் பெருக்கெடுத்துக்கொண்டு, நிகரிலா ஒருவிழிதோன்றி = ஒப்பற்ற ஏகதிருஷ்டியானது உதயமாகி, திரந்தனிற் றெரிகின்றதால் = அதிதிடமாக விளங்குகின்றதால் இது ஒன்றே போற்றத்தக்கதாம், என்றனன் தெளிந் தோன் = என்று கூறினர் தெளிந்த அரசர்.

(ஸ்ரீ - வீர.) அதிவிததவாக்கியப் பிரபஞ்சங்களானே யென்னேபயன், விரித்தன சாலுமவை, மனமானது உபசமித்த ரசத்ததாய், எதனினும் நசையற்றதாய், ஒப்பாய் விக்ஷேப வைஷம்ய ரகிதமாய், உள்ளே தனதான்மாவின் கண்ணேயே முதிதமடையுமாயின் அதுவே உத்தமமான பிரதிஷ்டையாகிய விசிராந்தியாம், இவ்வொரு திருஷ்டியே சுகப் பொருட்டெப்போதும் சேவிக்கத்தக்கதாம்.

(ச.) மனம் = கர்த்தா, பயனெலாம்பாறி = விஷயாராக நிவிர்த்தியாய், அதனாலே, சும்மாய் = சமாசமாய், தன்னுளே நிகழ்ந்து சுரந்த இன்பமாய், சுவான்ம சுகத்திற்றிருத்தி யடைந்ததாயின், நிகரிலாவொருவிழி = இவ்வந்தர்முக திருஷ்டியொன்று, சுகப்பொருட்டு தோன்றி = உதித்ததெனலாம், இந்ததிருஷ்டியே ஜீவன்முத்தியுமா மென்பது பொருள். சுகமாக என்வும், திரந்தனித் தெரிகின்றதால் எனவும், பாடபேதமுளது. (46)

சு ர கு க தை மு ற் றி ற் று.

———*———

## பாசவிலாசர் கதை.



(ஸ்ரீ-வீர - அ-கை.) சகல அநர்த்தங்கட்கும் காரணம் அறியாமையுடன் வாழுதல், அவ்வறியாமை யகலுதலே பரமானந்த மெய்தற்குக் காரணமாம் எனப்பாசவிலாசர் கதையை உதாகரணமாகத் தொடங்கும் ஸ்ரீவசிஷ்டபகவான் ஆதியில் சுரகுபரிகர் சம்பாஷணையை யுபசங்கரித்து ஆகுலமடையா நெறியினை யறிவித்தல்:—இத்திறமென்பது.

(ச - அ - கை.) முன்பு சித்தவிசிராந்தியே ஜீவன்முக்தசீமை (எல்லை) யெனப்பட்டது இப்போது சித்த விசிராந்தியின்றுயின் வெகுவிதப் பிரயாசமாமென்று பாசவிபாசசம்வாத நிரூபிக்கப் படுகின்றது:—இத்திறமென்பது.

இத்திறஞ் சுரகுபரிகனென் றிசைத்த விருவருஞ் சகத்தொழுங் கெண்ணிப்
பத்திசெய் தொருவர்க் கொருவர்பூ சித்துப் பரிந்துதம் பணிதலை நின்று
ரத்தியாத்துமமே நித்தமும் வடிவா யகமுக மாய்மகிழ் வெய்திச்
சித்தினை விடாம லனுபவிப் பவர்க்குச் சிறிதுமோ ராகுலஞ்சேரா.

(ப - ரை.) இத்திறம் = இவ்வண்ணம், சுரகுபரிகன் என்றிசைத்த இருவரும் = பிர
சித்த நாமங்களால் இயம்பப்பெற்ற மன்னவனும் இராஜ இருஷியும், சகத்தொழுங்
கெண்ணி = ஜகத்துப் பிரமத்தை விசாரித்து, பத்திசெய்து ஒருவர்க்கொருவர் பூசித்து =
அன்புசெய்து பரஸ்பரம் பூசனைகொண்டு, பரிந்துதம்பணிதலைநின்றார் = அரிதிற் பிரிந்து
போய் மகிழ்வுடன் தத்தமது வியாபாரபரர் ஆயினர், அத்தியாத்துமமே நித்தமும் வடி
வாய் = நித்தியம் அத்தியாத்மமயமாய், அகமுகமாய் = நித்தியம் அந்தர்முகமாய், மகிழ்
வெய்தி = சுகியாய், சித்தினைவிடாமல் அனுபவிப்பவர்க்கு = நித்தியம் சித்தனுசந்தானம்
செய்பவர்க்கு, சிறிதுமோ ராகுலஞ்சேரா = மனச்சோகங்க ளற்பமும் மருவமாட்டா.

(ஸ்ரீ - வீர.) சுரகுவும் பரிகரும் வர்ணித்தப் பிரகாரமாக உலகமயலை ஓர்ந்துபார்த்து,
பரஸ்பரம் நன்குபூஜித்து கொண்டவர்களாகி மகிழ்வினராகி, தம்வியாபாரபரர் ஆயினர்.
யாவன் ஆன்மைக விசாரப்பிரசுரன் நித்தியமாவனோ, உண்முகனாகி வெளிநாட்டமற்றவ
னவனோ, சுகியோ. எப்போதுஞ் சித்திலேயே அநுசந்தான முடையவனாகி மறித்தும்
மறித்தும் ஆதரவோடும், ஆசுவாதனஞ் செய்வனோ, அகச்சோகங்களானே யவன்பாதிக்
கப்படான்.

(ச.) ஸ்ரீவசிஷ்டர்: எண்ணி = விசாரித்து, தம்பணிதலை நின்றார் = சுவவியாபார
பரரானார், அத்தியாத்துமமே நித்தலும் வடிவாய் = அத்தியான்ம மென்பது ஆன்மாவின்
கண்ணதிவர்த்திப்பது அத்தியான்ம சாஸ்திரம், அதன்வடிவாய் = அவ்வனுசந்தான பர
னாய் சித்தினைவிடாமல் அநுபவிப்பவர்க்கு, சிதனுசந்தானம் செய்பவர்க்கு நித்தலுமென்
பதனை யெல்லாவற்றோடுங்கூட்டுக.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜீவனையெருதாக வருணித்து அவதிப்படும் விதத்தைக் காட்
டல்:—ஆசையென்பது.

ஆசைவன் பாசத் திரளினாற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கணுங்கி
யேசுறுபோகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினாலூன்றுந்து
காசுறுகருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே சுழன்று
வீசுமாமோகத் தளிர்நிழற் றுயிலும் வீரனேசீவனா மெருது.

(ப - ரை.) வீரனே ! = ஹே மகாவீர்ய சௌர்ய பராக்கிரமத்தையுடைய இராக வனே ! சீவனுமெருது = சீவனுகிய எருதானது, ஆசை வன்பாசத்திரளினுற் கட்டுண்டு= ஆசைகளாகிய வலியபாசக் கூட்டங்களானே கட்டப்பட்டு, அரும்பிணி ஈக்கடிக்கு அணுங்கி = மகாடிய நோய்களாகிய ஈக்களின் கடிகளுக்குட்பட்டுத் துக்கப்பட்டு, எசுறு போகக்கதைகளான் மொத்துண்டு = நிந்திக்கத்தக்க போகங்களாகிய தடிகளானே அடி பட்டு, இச்சைமுட்கோலினுல் உலைந்து = இச்சையாகிய முண்முனை மூங்கிற்கம்பினுல் இடிபட்டு, காசுறுகருமச் சேற்றிலேயழுந்தி = குகர்மங்களாகிய கர்த்தமத்திலே மூழ்கி, கடுஞ்சகக் காட்டிலே சுழன்று = கொடியசகமாகிய ஆரண்யத்திலே பிரமித்து, வீசுமா மோகத்தளிர் நிழல்துயிலும் = விசாலமாம் மகாமோகத் தளிரின் சாயையிலே தூங்கும்.

(ஸ்ரீ - வீர.) ஜீவனுகிய எருதானது ஆசாபாசங்களானே பத்தப்பட்டதாய், போகங்க ளாகிய மலம்புற்களாந் திருணவிசேடங்களிற் பெரும் பேராசையுடையதாய், ஜராஜர்ஜரிதா காரமுற்றதாய், சோக உசுவாச தூஷிதமாய், துயரமாகிய பெருஞ்சுமையை திருக்குத்திருக் கென்று மிகவுஞ் சுமப்பதாய், ஜன்மஜங்கல ஜீவிதமாய், கொடுவினைச் சேற்ருற்பூசப் பெற்ற தாய், மோகபல் வலசாயியாய், இராகரோகங்களாகிய ஈக்கள் கொதுகுகள் உணிகள் முதல வற்ருனே கடிக்கப்பெற்றதாய், திருஷ்ணையாகிய தோன்மய மூக்குக்கயற்றினுலே கோர்க் கப்பெற்றதாய், மனோவடிவ வணிஜனது ஆஞ்ஞைலக்ஷண சங்கேதத்திற் கட்டுப்பட்டதாய், அவனது வாசஸ்தலத்திற் கட்டுப்பெற்றதாய், பந்துஜன லக்ஷண பந்தனங்களானே அசைய முடியாததாய், உழலும். கவிநாயகர்க்குப் பல்லவமெனப் பாடங்கிடைத்ததே போலும்.

(ச.) பிணி = ரோகங்கள் என்னும், ஈ = வனமக்ஷிகங்கள், கதைகளால் =திருணங்க ளால், மொத்துண்டு = பெருத்தெனினும் ஒக்கும், போகங்கள் என்பது, புஜிக்கப்படுவன, விடயங்கள், இச்சை = திருஷ்ணை, சகக்காட்டில் = சம்சாராரண்ணியம், சீதளச்சாயை யையடையாததாய், துயிலும். விடயங்களேயாய பரவிய புல்லுகளில் சமுற்சுகமுடைய தாய், திருஷ்ணையேயாய, தோன்மயிராஜ்ஜு அதோடுகூடியதாய், குகர்மம் = பாவம் அதேபங்கம், அதனுல் லிப்தமாய், மோகிக்கின்றது இதன்கண்ணென மோகம்=சம்சாரம், அதுவேபல்வலம் = அற்பசரம், அதன்கட் டுயில்வதாம். (2)

(ஸ்ரீ - வீர - அ-கை.) பேரறிவாளர்களாகிய ஞானிகளுறவுகொண்டு அவர்தஞ்சகாயத் தானே கூறி சீவ எருத்தின் பரமகஷ்டத்தை நிவிர்த்திப்பாய் எனல்:—மேவுறென்பது.

மேவுறுதுன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்சிபோக் கிவையுடற் புண்ணு  
யீவறுபிறவிக் குழியில்வீழ்சீவ வெருத்தினை யிக்குழிநின்று  
மோவலின் முயல்வா லெடுப்பதே வலியாமுயர்ந்தஞா னிகளுறவுளதே  
லவிகர்நாவாய் தருவபோ லூக நல்குவர் பவக்கடல் கடக்க.

(ப - ரை.) மேவுறுதுன்பப் பெருஞ்சுமை சுமந்து = தன்பேரிற் பொருந்தாநின்ற துயர்மயமாய பெரும்பாரந்தாங்கி, மீட்சிபோக் கிவையுடற் புண்ணுய் = போதல் வருதன் முதலியவற்ருலே உடம்புநொந்து, ஈவறுபிறவிக்குழியில் வீழ்சீவ எருத்தினை = ஏறமுடி யாத சனனசம்சாரப் படுகுழியில் வீழ்ந்திருக்கும் ஜீவனுகிய எருதினை, இக்குழிநின்றும் = இப்படுகுழியி லிருந்தும், ஓவலில் முயல்வால் = விடாதமுயற்சியினுல், எடுப்பதேவலி யாம் = கரையேற்றுவதே வல்லமையாம், உயர்ந்த ஞானிகள் உறவுளதேல் = மேம்பட்ட தத்துவ ஞானிகளினுடைய நேயமிருக்குமானுல். நாவிகர், நாவாய் தருவபோல் = ஓட

மூழ்ப்பவர் ஓடமீவதேபோல, பவக்கடல் கடக்க = சம்சார சாகரத்தினின்றும் கரையேற, ஊகம் நல்குவர் = யூகமுபதேசித் தருள்வர்.

(ஸ்ரீ - வீர.) கமாகம பரிக்ஷீணமாய், சம்சார ஆரண்யத்துட் சரிப்பதாய், சீதளநீழல் அகப்படாததாய், தீவிரமானதாபத்தினாலே மிகவுந்தபிக்கப் பெற்றதாய் அவதிப்படும் இந்த ஜீவபலீவர்த்தத்தை இச்சம்சாரமாகிய சேற்றுக் குட்டையினின்றும் ஹே இராகவ! நீன்போது மிகமிகவும் முயன்று ஞானவல்லமையானே கரையேறுமாறு செய்வாய். கரை யேற்றிவைப்பினும் அது மறுபடியும் அப்படுகுழியில் வீழின் என்செய்வதோ எனின்? வீழா தாம், தத்துவ அவலோகனத்தானே க்ஷீணமாய சித்தத்தில் மீண்டொருபோதும் ஜீவன் உண்டாவதேயில்லை, அக்கால் சம்சார ஆர்ணவத்தைக் கடந்ததாகவேகூறலாம். உத்தாரண யுபாய ஞானலாபமோ சற்குருவின்பாற் சென்றடைதலா லுண்டாம் என்னுங்கருத்தா லுரைத்தல்:—உயர்ந்த என்பதாதி, மகாநுபாவரது சம்பந்தத்தினாலே சம்சாரார்ணவத் தைத் தாண்டுவதில் ஸ்புடமான யுக்தியானது, ஓடக்காரரினின்றும் ஓடங்கிடைப்பதே போல நன்கடையப் பெறும்.

(ச.) சீவவெருத்தினை, மௌட்டியாதி குணயோகத்தினா லென்க; ஓவலின் முயல் வால் = முற்கூறிய பரமயத்தனத்தைச் சுவீகரித்து, சமுசாரக்குழியினின்றுங் கரையேற்ற வேண்டுமென்பதாம், இளைப்பாறு மிடத்தையடையப்பெறாத இச்சீவரூப அநட்வாகத்தை= பலீவர்த்தத்தை = எருத்தை, ஒகாதிகுண யோகத்தால் என்பது பாடபேதம். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை) பெரியோரிலாத விடத்தே தண்மையே யிராதென்றும், அவர் சங்கத்தே மனமேயுதவி யென்றும் கூறல்:—எவ்விடத்தென்பது.

எவ்விடத் தில்லைநல்லஞா னிகளா மீர்ங்கனி மலர்குளிர் சோலை
யவ்விடங் கானன் மேடதா மாங்கே யமர்பவ ரறிவிலாரன்றே
கவ்விய செல்வ நட்புநூல் சுற்றங் கருமமா திகளெலா முதவாச்
செவ்வியமனமே யுதவுறல்வேண்டுஞ் சீவனைச்செல்கதி யேற்ற.

(ப - ரை.) எவ்விடத்தில்லை, நல்ஞானிகளாம் ஈர்ங்கனிமலர் குளிர்சோலை = எந்த இடத்தில் சத்தாய ஞானிகளாம் இரசமுறுங்கனி கந்தமுறும் புஷ்பம், தண்ணியசோலை, இல்லையோ, அவ்விடங்கானன் மேடதாம்=அந்தப் பிரதேசம் கானல் மேட்டுப்பூமியேயாம், ஆங்கேயமர்பவர் = அவ்விடத்தில் இருக்கப் பட்டவர், அறிவிலார் அன்றே=விவேகமில் லாதவர் அல்லவோ, கவ்வியசெல்வம் = பொருந்திய ஐசுவரியம், நட்புநூல் = நேயன் சாஸ்திரம், சுற்றம் கருமம் ஆதிகளெலாம் = பந்துதொழின் முதலனயாவும், உதவா= உதவிசெய்யமாட்டா, செவ்வியமனமே = திருந்தியவுள்ளமே, உதவுறல் வேண்டும் சீவ னைச் செல்கதியேற்ற = உயிரை அடையத்தக்க கதியில் அடைவிப்பதற்கு உதவிசெய்ய வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) எம்மருப்பூமியில் சீதளச்சாயையும், நல்லகனியும் வாய்ந்த சஜ்ஜனபாதப மாயதஞ்ஞன் இலையோ, ஆண்டுப்புதன் வாசஞ்செய்யாதொழிக; யாது இது, எங்ஙனமுற் றது, இதனது மூலமியாது, எதனாலே க்ஷயமாகின்றது என்று தேகாதீனதுக்கத்தைத் தனதுமதியினாலும் சாஸ்திரசஜ்ஜன சகாயத்தினாலும் ஆராய்ந்து பார்க்கவேண்டும்; பலவகை விசாரங்கள் பகுவாயிருக்கவேண்டும்; தனங்களேனும், மித்திரர்களேனும், அநாத்ம சாஸ்தி ரங்களேனும், பந்துக்களேனும், மக்கினமான தன்னையெடுப்பதில் மனுடருக் குதவிசெய்வ தில்லை.

(ச.) நல்ல ஞானிகள் = பலத்தோடுகூடிய சீதளச் சாயையையுடைய சற்சனபாதப மான பிரஹ்மக்ஞானி எவ்விடத்திலில்லை அம்மருப் பிரதேசத்தில் அறிஞர்வசித்தலாகா தென்பதாம். சீவனைச் செல்கதியேற்ற = சமுசாரசாகரத்தின் மூழ்கிக்கிடக்கும் சுவான் மாவைக் கரையேற்ற, தேகேந்திரியாதியிற் றாதான்மிய மடைந்த சுவரூபத்தை விலக்ஷண மாக நிச்சயித்தற்குத் தனுதிகள் உபகரியாவாம் உபகாரஞ்செய்வது, மற்றென்னெனிற் கூறல்:—செவ்விய வென்பதாதி. (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரம்பொருளை யடைதற்குப்பரம உபாயத்தைத் தெரிவித்தல்:— நெறியென்பது.

நெறியுறவிடாம லுடனுறை நட்பா நெஞ்சமாத் திரத்தினைக் கூடிச்
சிறிதுநா டுதலுஞ் சீவனுய் வுறுமாற் சிங்கியா மிந்தவூனுடலை
முறிதரு காட்ட மோட்டினே ராக முற்றுறு கருத்தினுேக்கி
யறியிலிவ் வளவா லறிந்துசேர்ந் திடலா மண்டரு மிறைஞ்சுபே ரறிவை.

(ப - ரை.) வீடாமல் = எப்போதுமே, உடனுறை நட்பாம் = கூடவேயிருக்கும் சுகிருத்தாம், நெஞ்சமாத்திரத்தினை = மனோமாத்திரத்தினை, கூடி = சேர்ந்து, நெறியுற = சாஸ்திரமார்க்கமாக, சிறிது நாடுதலும் = கிஞ்சித்து ஆராய்ந்து பார்த்தலும். சீவன் உய்வு றும் = ஆத்மாநன் குத்தரிக்கப்பெறும், சிங்கியாம் = நோய்மயத் துச்சமாம், இந்த ஊன் உடலை = இத்தசைமயச் சரீரத்தை, முறிதருகாட்டம் ஓட்டின்நேராக = பட்டுப்போன இரும்பு ஓடு முதலியவற்றிற்குச் சமானமாக, முற்றுறு கருத்தினால் நோக்கி அறியில் = ஆராய்ச்சி முதிர்ந்தசிந்தையாற் சிந்தித்து உணரவேண்டிய உணர்வை யுணர்ந்தால், இவ்வ ளவால் = இத்துணை மாத்திரையானே, அறிந்து சேர்ந்திடலாம் = சாக்ஷாத்கரித்து அடைந் திடலாம்; அண்டரும் இறைஞ்சுபேரறிவை = தேவதைகளும் போற்றும் வியாபக சிதான்ம வத்துவை.

(ஸ்ரீ - வீர.) ஆயின் என்னை யுபகரிப்பது என்றிடின்கேட்டி ! எப்போதுமே சகவா சியா யிருக்கும் பரிசுத்தமான சுகிருத்தாகிய மனோமாத்திரத்தோடு கூடிச்சிறிது ஆராய்ந்து நாடில் ஆன்மா பஞ்ச கோசங்களினின்றும் விடுபட்டுக் காப்பாற்றப் பெறும், வைராக்கிய அப்பியாச யத்தினங்களினுலே தனது ஆராய்ச்சி யெழுதலான், தத்வாலோகன வோடத் தால் தாண்டப்பெறும் பெரும்பவசாகரம்; இத்துணையானே பரமாத்மாவின் போதபரியந்த மாய விசாரமுளதாகி, அத்தியந்தம் புடமாகப் பார்க்கும் பான்மையுண்டாம், எம்மனோ ரசிதமாய பாகிய அத்தியாத்மிக ஆசக்திஜாலமானது அகற்றப்பெற்று அகம்பாவமானது வேரோடுங்களைந் தெறியப்பெறுமோ. ஆண்டும் தியாகிக்கமுடியாத தேகாபிமானத்தி யாகமே முக்கியமாம் என்று கருதிக்கூறுதல்:—சிங்கியா மென்பதாதி. தேவேசராகிய பர மாத்மாவானவர் இத்துணையானே யறியப்பெறுவர், காஷ்டலோஷ்ட சமத்தன்மையானே தேகமானது எவ்வவலோகனத்திற்கு விடயமாமோ.

(ச.) சிறிது நாடுதலும், சோகமென்பதாதியை விசாரிக்கவும், சீவனுய்வுறும்; உடலை = தேகத்தை, காட்டாதிபோல் அநான்மத்துவ நிச்சயத்தாலே, தன்னுல் ஆன்மாவோடு பர மான்ம தத்துவத்தைச் சேர்ந்திடலா மென்பதுபொருள். உடலகமொழியி லான்மாவிற் குப் பரமான்மத் தகைமையுணரப் பெறும், சோகம் = யான்யார். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதனையே வருணித்தல்:—நிறையென்பது.

மூய்ப்பவர் ஓடமீவதேபோல, பவக்கடல் கடக்க = சம்சார சாகரத்தினின்றும் கரையேற, ஊகம் நல்குவர் = யூகமுபதேசித் தருள்வர்.

(ஸ்ரீ - வீர.) கமாகம பரிக்ஷீணமாய், சம்சார ஆரண்யத்துட் சரிப்பதாய், சீதளநீழல் அகப்படாததாய், தீவிரமானதாபத்தினாலே மிகவுந்தபிக்கப் பெற்றதாய் அவதிப்படும் இந்த ஜீவபலீவர்த்தத்தை இச்சம்சாரமாகிய சேற்றுக் குட்டையினின்றும் ஹே இராகவ! நீன்போது மிகமிகவும் முயன்று ஞானவல்லமையானே கரையேறுமாறு செய்வாய். கரையேற்றிவைப்பினும் அது மறுபடியும் அப்படுகுழியில் வீழின் என்செய்வதோ எனின்? வீழாதாம், தத்துவ அவலோகனத்தானே க்ஷீணமாய சித்தத்தில் மீண்டொருபோதும் ஜீவன் உண்டாவதேயில்லை, அக்கால் சம்சார ஆர்ணவத்தைக் கடந்ததாகவேகூறலாம். உத்தாரண யுபாய ஞானலாபமோ சற்குருவின்பாற் சென்றடைதலா லுண்டாம் என்னுங்கருத்தா லுரைத்தல்:—உயர்ந்த என்பதாதி, மகாநுபாவரது சம்பந்தத்தினாலே சம்சாரார்ணவத்தைத் தாண்வேதில் ஸ்புடமான யுக்தியானது, ஓடக்காரரினின்றும் ஓடங்கிடைப்பதே போல நன்கடையப் பெறும்.

(ச.) சீவவெருத்தினை, மௌட்டியாதி குணயோகத்தினா லென்க; ஓவலின் முயல்வால் = முற்கூறிய பரமயத்தனத்தைச் சுவீகரித்து, சமுசாரக்குழியினின்றுங் கரையேற்ற வேண்டுமென்பதாம், இளைப்பாறு மிடத்தையடையப்பெறாத இச்சீவரூப அநட்வாகத்தை= பலீவர்த்தத்தை = எருத்தை, ஓகாதிகுண யோகத்தால் என்பது பாடபேதம். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை) பெரியோரிலாத விடத்தே தண்மையே யிராதென்றும், அவர் சங்கத்தே மனமேயுதவி யென்றும் கூறல்:—எவ்விடத்தென்பது.

எவ்விடத் தில்லைநல்லஞா னிகளா மீர்ங்கனி மலர்குளிர் சோலை
யவ்விடங் கானன் மேடதா மாங்கே யமர்பவ ரறிவிலாரன்றே
கவ்விய செல்வ நட்புநூல் சுற்றங் கருமமா திகளெலா முதவாச்
செவ்வியமனமே யுதவுறல்வேண்டுஞ் சீவனைச்செல்கதி யேற்ற.

(ப - ரை.) எவ்விடத்தில்லை, நல்லஞானிகளாம் ஈர்ங்கனிமலர் குளிர்சோலை = எந்த இடத்தில் சத்தாய ஞானிகளாம் இரசமுறுங்கனி கந்தமுறும் புஷ்பம், தண்ணியசோலை, இல்லையோ, அவ்விடங்கானன் மேடதாம்=அந்தப் பிரதேசம் கானல் மேட்டுப்பூமியேயாம், ஆங்கேயமர்பவர் = அவ்விடத்தில் இருக்கப் பட்டவர், அறிவிலார் அன்றோ=விவேகமில்லாதவர் அல்லவோ, கவ்வியசெல்வம் = பொருந்திய ஐசுவரியம், நட்புநூல் = நேயன் சாஸ்திரம், சுற்றம் கருமம் ஆதிகளெலாம் = பந்துதொழின் முதலனயாவும், உதவா= உதவிசெய்யமாட்டா, செவ்வியமனமே = திருந்தியவுள்ளமே, உதவுறல் வேண்டும் சீவனைச் செல்கதியேற்ற = உயிரை அடையத்தக்க கதியில் அடைவிப்பதற்கு உதவிசெய்ய வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) எம்மருப்பூமியில் சீதளச்சாயையும், நல்லகனியும் வாய்ந்த சஜ்ஜனபாதபமாயதஞ்ஞன் இலையோ, ஆண்டுப்புதன் வாசஞ்செய்யாதொழிக; யாது இது, எங்ஙனமுற்றது, இதனது மூலமியாது, எதனாலே க்ஷயமாகின்றது என்று தேகாதீனதுக்கத்தைத் தனதுமதியினாலும் சாஸ்திரசஜ்ஜன சகாயத்தினாலும் ஆராய்ந்து பார்க்கவேண்டும்; பலவகை விசாரங்கள் பகுவாயிருக்கவேண்டும்; தனங்களேனும், மித்திரர்களேனும், அநாத்ம சாஸ்திரங்களேனும், பந்துக்களேனும், மக்கினமான தன்னையெடுப்பதில் மனுடருக் குதவிசெய்வதில்லை.

(ச.) நல்ல ஞானிகள் = பலத்தோடுகூடிய சீதளச் சாயையையுடைய சற்சனபாதபமான பிரஹ்மக்ஞானி எவ்விடத்தில்லை அம்மருப் பிரதேசத்தில் அறிஞர்வசித்தலாகாதென்பதாம். சீவனைச் செல்கதியேற்ற = சமுசாரசாகரத்தின் மூழ்கிக்கிடக்கும் சுவான்மாவைக் கரையேற்ற, தேகேந்திரியாதியிற் ருதான்மிய மடைந்த சுவரூபத்தை விலக்ஷணமாக நிச்சயித்தற்குத் தனுதிகள் உபகரியாவாம் உபகாரஞ்செய்வது, மற்றென்னெனிற் கூறல்:—செவ்விய வென்பதாதி. (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரம்பொருளை யடைதற்குப்பரம உபாயத்தைத் தெரிவித்தல்:—நெறியென்பது.

நெறியுறவிடாம லுடனுறை நட்பா நெஞ்சமாத் திரத்தினைக் கூடிச்
சிறிதுநா டுதலுஞ் சீவனுய் வுறுமாற் சிங்கியா மிந்தவூனுடலை
முறிதரு காட்ட மோட்டினே ராக முற்றுறு கருத்தினுனோக்கி
யறியிலிவ் வளவா லறிந்துசேர்ந் திடலா மண்டரு மிறைஞ்சுபே ரறிவை.

(ப - ரை.) வீடாமல் = எப்போதுமே, உடனுறை நட்பாம் = கூடவேயிருக்கும் சுகிருத்தாம், நெஞ்சமாத்திரத்தினை = மனோமாத்திரத்தினை, கூடி = சேர்ந்து, நெறியுற = சாஸ்திரமார்க்கமாக, சிறிது நாடுதலும் = கிஞ்சித்து ஆராய்ந்து பார்த்தலும். சீவன் உய்வுறும் = ஆத்மாநன் குத்தரிக்கப்பெறும், சிங்கியாம் = நோய்மயத் துச்சமாம், இந்த ஊன் உடலை = இத்தசைமயச் சரீரத்தை, முறிதருகாட்டம் ஓட்டின்நேராக = பட்டுப்போன துரும்பு ஓடு முதலியவற்றிற்குச் சமானமாக, முற்றுறு கருத்தினுல் நோக்கி அறியில் = ஆராய்ச்சி முதிர்ந்தசிந்தையாற் சிந்தித்து உணரவேண்டிய உணர்வை யுணர்ந்தால், இவ்வளவால் = இத்துணை மாத்திரையானே, அறிந்து சேர்ந்திடலாம் = சாக்ஷாத்கரித்து அடைந்திடலாம், அண்டரும் இறைஞ்சுபேரறிவை = தேவதைகளும் போற்றும் வியாபக சிதான்ம வத்துவை.

(ஸ்ரீ - வீர.) ஆயின் என்னை யுபகரிப்பது என்றிடின்கேட்டி ! எப்போதுமே சகவாசியா யிருக்கும் பரிசுத்தமான சுகிருத்தாகிய மனோமாத்திரத்தோடு கூடிச்சிறிது ஆராய்ந்து நாடில் ஆன்மா பஞ்ச கோசங்களினின்றும் விடுபட்டுக் காப்பாற்றப் பெறும், வைராக்கிய அப்பியாச யத்தினங்களினுலே தனது ஆராய்ச்சி யெழுதலான், தத்வாலோகன வோட்டத்தால் தாண்டப்பெறும் பெரும்பவசாகரம்; இத்துணையானே பரமாத்மாவின் போதபரியந்தமாய விசாரமுளதாகி, அத்தியந்தம் புடமாகப் பார்க்கும் பான்மையுண்டாம், எம்மனோரசிதமாய பாகிய அத்தியாத்மிக ஆசக்திஜாலமானது அகற்றப்பெற்று அகம்பாவமானது வேரோடுங்களைந் தெறியப்பெறுமோ. ஆண்டும் தியாகிக்கமுடியாத தேகாபிமானத்தியாகமே முக்கியமாம் என்று கருதிக்கூறுதல்:—சிங்கியா மென்பதாதி. தேவேசராகிய பரமாத்மாவானவர் இத்துணையானே யறியப்பெறுவர், காஷ்டலோஷ்ட சமத்தன்மையானே தேகமானது எவ்வவலோகனத்திற்கு விடயமாமோ.

(ச.) சிறிது நாடுதலும், சோகமென்பதாதியை விசாரிக்கவும், சீவனுய்வுறும்; உடலை = தேகத்தை, காட்டாதிபோல் அநான்மத்துவ நிச்சயத்தாலே, தன்னுல் ஆன்மாவோடு பரமான்ம தத்துவத்தைச் சேர்ந்திடலா மென்பதுபொருள். உடல்கமொழியி லான்மாவிற்குப் பரமான்மத் தகைமையுணரப் பெறும், சோகம் = யான்யார். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதனையே வருணித்தல்:—நிறையென்பது.

நிறைபெருங் கடலொத் துரையெலாங் கடந்து நிகரறப் பற்றற வெறிதாய்க்
குறைவில்சிற் சுடரின் கொழுந்துடன் கூடிக்கோதற வசைவறக்குலாவு
மறைவறுதுரிய விழிவெளிப் படுமேன் மற்றத னுடனது நிகரா [றே.
முறைமையிற் றுயில்வோர்க் கண்ணிதாவுவமை மொழியலாய்த் தோன்றிடுமன்

(ப - ரை.) நிறைபெருங் கடலொத்து = பரிபூர்ண சமுத்திரம்போன்று, உரையெலாங்கடந்து = வாக்கு விகாரமெல்லாம் நீங்கி, நிகரற = உவமித்தலொருவி, பற்றற = இரஞ்சனமகன்று, வெறிதாய் = கேவலமாகி, குறைவில் சிற்சுடரின் கொழுந்துடன்கூடி = நிறைவாயிராநின்ற சிற்பிரகாசத்தினது அம்சத்துடன்கூடி, கோதற அசைவற = குற்றமற்றுத்திரமாக, குலாவும் = விலங்கும், மறைவறு துரியவிழி = ஆச்சாதிக்கப் பெறாத துரியதிருஷ்டி, வெளிப்படுமேல் = கிடைத்திடுமாயின், மற்றதனுடனது நிகராம் = அதனோடேகூட உவமிக்கப்பெறும், முறைமையில் = ஒத்திருக்குந் தன்மையில், துயில்வோர்க் கண்ணிதாவுவமை மொழியலாய்த் தோன்றிடும் = நித்திரை செய்வோர்க்குச் சமீபமாய் உவமை கூறத்தக்கவாறு பிரதீதியாம், மற்று அன்று ஏ அசை நிலைகள்.

(ஸ்ரீ-வீர.) அகங்காரமானது பரிக்ஷீணமாகவே எவ்வவத்தை சுகமோதனையாமோ = நிரதிசயாநந்த விசிராந்தி ஜன்னியமாமோ, அவ்வடிவமாகவே ஆவிர்ப்பூத நிர்விகற்ப அவஸ்தையாமோ; அவ்வவத்தையே தனது வடிவமாக நிலைபெறுத்தத் தக்கதாம், அதுவே வெகு முயல்வுகளினாலே சேவிக்கத்தக்கதாம். அதனையே வருணித்தல்:—பரிபூர்ண அர்ணவமெனப் புகழப்பெறுவது, வாங்மனங்கட்குக் கோசர மாகாதது, உபமான மொன்றையும் ஒன்றி நில்லாதது, திருசியப்பற்றுதல் செறிவுறாதது. கேவலம் சிற்பிரகாச அம்சகலிதையாய், திரத்தகைமையை யடைவுற்றதாய துரியதிருஷ்டி மருவப்பெறுமேல் ஆயின் அது அதனோடு உபமிக்கப்பெறும்; அது அதனோடுதானே யுவமிக்கப்பெறும், அயலொன்று அதனுபமான மாதற்குத் தக்கதாகாதாம் என்பது கருத்து. ஆயின் எத்திருஷ்டாந்தத்தானே அதன் சம்பாவனையாம் எனின் உரைத்தல்:—முறைமையில் என்பதாதி, வெகுதூரமோடி விக்ஷேப மடையாமல் சமீபத்திற் சாதிருசியமாகச் சுழுப்தனை யுபலக்ஷிக்கலாம், உப=சமீபத்திற் குறிப்பிடலாம், நிர்விக்ஷேபத்வாம்சத்தில் துயில்வோனையே குறிக்கலாம், அஞ்ஞானாவரணமே லக்கால் ஆகாதாம் ஆயின் துரியாவஸ்தையேயாம் என்னும் இம்முறையானே யென்பதாம்.

(ச.) பற்றற = சமஸ்கார ஏதுவான வஸ்துவை அபேக்ஷியாது, நிகரற = அற்பஞ்சாதிருசியத்தினால் உபமானமுஞ் சம்பவியா தென்பதாயிற்று. அது = எந்தச்சொரூபம் எப்போதும் உதயமா யிருக்கின்றதோ அந்தச்சொரூபம், சிற்சுடரின் கொழுந்துடன் கூடி, = சைதந்நியத்தினது பிரகாசரூபமே யென்னும் அம்சத்துடன்கூடி, கோதற = பிரகாசியலக்ஷணமான அம்சாந்தரத்துடன் கூடாததாய்; அசைவறக்குலவும் துரியவிழி வெளிப்படுமேல், அதனுடன் = அத்திருஷ்டியுடன், நிகராம், வெறிதாய் = கேவலமாய், குறைவில், சர்வபாவத்துக்குள்ளு மிருப்பதாய்ப் பராநந்தமாய்ப் பரமேசுவர சம்பந்தமான அத்துரிய திருஷ்டி மனோவகங்கார விலயமாயின் அடையப்படு மென்பதாயிற்று. துயில்வோர்க்கு = சுழுத்தி யவஸ்தையோடு, அண்ணிதா முவமைமொழியலாய், நிர்விகார சின்மாத்திரத்துடன் கொஞ்சஞ் சாதிருசியத்தினாற் குறிக்கப்படு மென்பதாம். பாடபேதங்கள்:—"அதனுக் கிணையாயேனு மதிகமாய்க் கதியுறலேனும் காணப்பெறுவதில்" எனமறை யுண்மையின். சிறிது சாதிருசியத்தினால் உபமானமும் சம்பவிக்கும் எனல்:—குறைவில் என்பதாதிமனோ

கங்காரவிலயமாகவே சர்வபாவாந்தரத் திருப்பதாய், பராநந்திமாய் பரமேசுர சம்பந்தியாய, எச்சொரூபம் நன்குதயமாமோ அச்சொரூபம் சைதன்யத்தினது பிரகாசரூபமேயாய அம் சத்துடன் கூடியதாய், பிரகாசியத்தினது இலக்கண அம்சாந்தரத்துடன் கூடாததாய், திரத்தன்மையை அடைவுற்ற துரியதிருஷ்டி அடைவுறுமாயின் அத்திருஷ்டியோடு உவமிக் கப்பெறும் ககன ஸ்ரீபோலும் விரிந்து பூர்ணாகாரமாய அந்தப் பரமாத்ம பாவதசை சுழுப் தாவஸ்தையோடு நிர்விகார சின்மாத்திரத் தன்மையால் அற்பசா த்திருசியங்கொண்டு உப லக்ஷிக்கப்பெறும் இதுவருஞ் சுலோகத்தை யநுசரித்தபாடம்;

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்வவத்தையை உவமித்துப்பின், குடம்விலயமாகவே குடாகா சத்திற்கு மகாகாசத்தன்மை மருவலேபோலும்மனோகங்கார உபாதிவிலயமாகவே துவம்பத லக்ஷியத்திற்குத் தற்பதலக்ஷியாத்ம சுபாவதை சித்திக்கும் எனக்கூறல்:—ஆன என்பது.

ஆனவவ்வவத்தை வடிவெலாம் பரிக்கு மம்பரம் போலகன்றுள தா
மீனநெஞ்சுடன்சே ரகங்கரமிறந்தா லெப்பொரு ளிடத்தினு மிருக்குந்
தீனமில்பரமா நந்தமாய்த் தோன்றுந் திகழ்பரமாத்தும வடிவாந்
தானனி முயலிற் கிடைத்திடுந் துயில்வோர் தன்மைபோற் றம்மினுறுவதாம்

(ப - ரை.) ஆன அவ்வவத்தை வடிவெலாம் பரிக்கும் அம்பரம்போ லகன்றுளதாம் = உண்டான அந்த அவஸ்தையானது சகல ஆகாரங்களையுந் தாங்கும் ஆகாசம்போல விஸ் தாரமா யிருக்கும், ஈனநெஞ்சுடன் சேரகங்காமிறந்தால் = கீழான மனதுடனே சேர்ந்து திரியு மகந்தை அழிந்தால், எப்பொருளிடத்தினும் இருக்கும் = சகல பாவங்களினுள்ளும் திதியாம், தீனமில் பரமாநந்தமாய்த் தோன்றும் = ஏங்கிமயங்காத பரமாநந்தமாக விலங் கும், திகழ்பரமாத்தும வடிவாம் = அது பரமேசுர சம்பந்தவடிவமாம், தானனிமுயலிற் கிடைத்திடும் = அதிகாரி நன்றாகமுயன்று பயிலில் அவசியம் அடையப் பெறுவதாம், துயில்வோர் தன்மைபோல் தம்மினுறுவதாம் = நித்திரைசெய்பவர் தகைமையே போலும் தமக்குள்ளேயே தேர்ந்து தெளிவதாம்.

(ஸ்ரீ - வீர.) அவ்வவத்தை பரிதாகாரமாம், ஆகாசஸ்ரீயேபோலும் அகன்றதாம், மனோ கங்காரவிலய மெய்தவே சர்வபாவாந்தர ஸ்திதமாய பரமானந்தம் நன்குதிக்கும், எத்தனு வைப் பரமேசுவரியென் றியம்பலாமோ, அதுதானேயோகசம்சித்தமாம், சுழுப்தனுக்குச் சமீபத் திருதயத்திலேயே அநுபவிக்கப் பெறும், சுவாநுபவ அதிரிக்தமாக அதனதுவடிவங் கிடையாதாம்.

(ச.) முற்கூறிய அப்பரமான்மதசை நனிமுயலில் சமாதியால் கிடைத்திடும், துயில் வோர்தன்மைபோற் றம்மினுறுவதாம் = சுழுத்தியவஸ்தையோடு அண்ணிதாஞ் சாதிருசி யத்தாற் பாவிப்பதாய் இருதயத்திலே யநுபவிப்பதாம். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பாகியதிருஷ்டியை விட்டு, ஆந்தரதிருஷ்டியை அவலம்பனஞ் செய்யின் மகாதேவர் அகப்படுவர் எனல்:—உரையென்பது.

உரைகளுக்கெட்டா துளத்தனு பவிக்கி லுறுவதாமுனைத்தவத் துரியு
கரையறு மிவைகண் முழுதுமப் பொருளாங் கனபரி ணமியா முள்ளம்
வரைவற வொடுங்கிலுட்புறமெங்கு மன்னிய சராசரவடிவாம்
புரையறுதேவ தேவனும் பரம்ப் பொருளனு பவப்படுந் தானே.

(ப - ரை.) உரைகளுக் கெட்டாது = வாக்குகளுக்குக் கோசரமாகாததாம், உளத் தனுபவிக்கில் உறுவதாம் உரைத்த அத்துரியம்=கூறிய அந்தத் துரிய நிலைமை ஆந்தரத் தனுபவஞ் செய்யில் தனது வடிவமாகவே வருவதாம், கரையறும் இவைகள்முழுதும் அப் பொருளாம் = எல்லையில்லாத இவையாவுமே ஆன்மதத்துவமாம், கனபரிணமியாம் உள் ளம் = திடபரிணமியாகிய சித்தம், வரைவற ஒடுங்கில் = சங்கற்ப விகற்பங்களை விட்டு உள்ளே நிலைபெறில், உட்புறம் எங்கும் மன்னியசராசர வடிவாம் = ஆந்தரத்தும் பாகியத் தும் எழுந்தருளி யிருக்கும் சராசரவடிவமாய் சர்வான்மகமா யென்றபடி, புரையறுதேவ தேவனும் = உள்ள நித்திய நிர்த்தோஷ வியாபகமாகிய தேவதேவனென்னும், பரம் பொருள் = பரமாத்மவஸ்து, தானே அனுபவப்படும் = சுயமாகவே சுவசொரூபமாகவே சாக்ஷாத்கரிக்கப் பெறும்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! வசனங்களுக்குக் கம்மியமாகாதாம், இருதயத்தின் கண் ணே யீண்டனுபவிக்கப் பெறும்; எங்ஙனங்கண்டாதி அசாதாரண கோவாதிசொரூப இலக் கணத்தில் அநுபவத்தினும் அயலாய அளவை இல்லையோ, அங்ஙனம், ஆன்மாவின்கண்ணு மென வுணரத்தக்கது; அனுபூதியை விடுத்துத்தத்துவம் கண்டாதிக் கனுபவிப்பதில்லையா மாறு, அனுபூதியை யகற்றியாத்மாவினுடைய ரூபமாகிய பரமாத்ம சொரூபத்தையும் அநு பவிக்க முடியாதாம் இவ்வியாவுமே அநந்தமாகிய ஆன்மதத்துவமாம், இவ்வகிலமும் ஆன்ம தத்துவமேயாயின் அஃதெங்ஙனம் அநுபவிக்கப் பெறுதலாம் எனின், உரைத்தல்:—கன வென்பதாதி. சித்தமானது பாகியவிடயங்களில் உபசாந்தியடைந்து, உட்பிரத்தியக்கான் மாவின்கண் க்ஷீரோதகம்போல ஏகரசபாவமாகத் திடதரமாய்ப் பரிணமித்துச்சேர்ந்திருந்து சலனமில்லாததாகவே, சராசரங்களின் ஆத்மாவாய்ப் பிரத்தியக்குப் பூதமாய், தேவர்களா கியசக்ஷு முதலியவற்றிற்கும் தேவனாகிய சாக்ஷியாகிப் பிரகாசிப்பதாய், இலங்கும் தான் தானாகவே நேராக அனுபவிக்கப் பெறுவதேயாகும், இநிலையமடையவே கூடாதாம். இப் பொருளையப்பட்டோர் என்பதாதி திருவாக்கை யீண்டகத் தோர்ந்துகொள்க.

(ச.) கரையறு மிவைகண்முழுதும் = இவ்வகில ஜகத்தும், அப்பொருளாம் = ஆன்ம சொரூபமேயாம், எந்தக்காரணத்தினால், கனபரிணமியாம் = வாதனையின் மிகுதியானே மிகுகாட விசித்திர விகாரமான, உள்ளம், சமாதிவசத்தினால் வரைவறவொடுங்கில், உள்மன் னிய = சர்வாந்தரியாமியா யிருக்கும், தேவதேவனும் பரமப்பொருள், புறமெங்கும், சராசர வடிவாம் = சராசரவடிவமாகி, தானேயநுபவப்படும் = சுயமாகவே பிரகாசிக்கும், வேறு படுத்துஞ் சித்தம் விலயமாதலி னென்க. (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதன்பின் முறையேவாதனையற்று, அறிவிலங்கி, சமதிருஷ்டி யுண்டாமெனல்:—அதற்பின்னென்பது.

அதற்பின் விடய வாதனைக ளறுவதாகு மதற்பின்னர்
விதப்பிலாத பொருளினுடை விளக்கமாகு மதற்பின்னர்
சுதப்பண்பில்லாச் சமத்துவத்தாற் சொரூபந்தன்னிற் பரிணமி
மிதத்திலுளதா முயர்ந்தோர்க்கு மெண்ணவொண்ணு வடிவிதுவே.

(ப - ரை.) அதற்பின் விடயவாதனைக ளறுவதாகும் = அவ்வனுபவத்தின் பின்னர் விடயவாசனைகள் விநாசமாம், அதற்பின்னர் = அவையற்றபின்னர், விதப்பிலாத பொருளி னுடை விளக்கமாகும் = சுயமான பரம்பொருளின் ஸ்புடமான பிரகாசமாம், அதற்பின் னர் = விளங்கியபின்னர், சுதப்பண்பில்லாச் சமத்துவத்தால் = ஒன்றினுடனும் பற்றில்

லாத சமதையின் வயத்தால், சொரூபந்தன்னிற் பரிணமம் = சொரூபத்திற் பரிணமனம், இதத்திலுளதாம் = அநாயாசமாக வுண்டாம், உயர்ந்தோர்க்கும் எண்ணவொண்ணு வடிவிதுவே = மகத்துக்களுக்கும் அசிந்தியரூப மிதுவேயாம்.

(ஸ்ரீ - வீர.) இங்ஙனம் நான்காவது பூமியில் ஆன்மானுபவ முனதாகவே, அதன்பின்னர் ஐந்தாவது பூமியில் ஆத்யந்திக விஷயவாசனு விநாசமாம், அதன்பின்பு, ஆறுவது பூமியின்கண் முயல்வில்லாமலே, சுபமாய், பரமபுருடார்த்த ரூபமாய், உள்ளதனது புடப்பிரகாசமென்னும் எப்போதுமே நிகழும் பூர்ணபாவாநுபவம் சித்தியாநிற்கும், அதன்பின்னர் ஏழாவதுபூமியில் சமாதியசமாதிகளின் சமதையின் வயத்தால் ஆத்யந்திக வைஷம்ய நிவிருத்தியாகலின், சமுத்திரத்தினுள்ளே விலீனமான சைந்தவகனம் போலும் சுகைகரசமதாகப் பரணமனம் சித்திக்கும், அதுவோ மகான்கட்கும் பிரஹ்மாதிகட்கும், இவ்வளவினது என சிந்திக்கவொண்ணாத ரூபமாம், " எதனினும் வாக்குத்திரும்புறு மனத்தோடும், விதமதுவாக விரவுதலிலதாய் " என்னுஞ் சுருதியினுல் உணர்க.

(ச) அதற்பின் = உட்புறமும் பரமான்ம திருஷ்டியானபின், விடயசமஸ்காரங்களினுடைய நாசமாம், அதற்பின்னர், சுபமான பரமான்மாவினது பிரகாசமாம், சமத்துவத்தாற் சொரூபந்தன்னில். எண்ணவொண்ணு வடிவு = அசிந்தியரூபமான பரிணமம், தனக்கே பரமான்ம பாவமாதலின் சொரூபநிஷ்டத்துவமே யுளதாமென்பது பொருள். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆன்மதரிசன உபாயத்தை உபேக்ஷைசெய்யில் சோகமோகாதி துக்கபரம்பரை யகற்ற முடியாததாம், என்னும் பொருளில், பாசவிலாச ஆக்கியாயிகையை அவதரிப்பித்துக் கொண்டுரைத்தல்:—மனத்தையென்பது.

மனத்தைமனத்தான் மாய்வித்து மாசில்பொருணேக் காரேலோர்
தினத்துமுலகின் றுயர்மாயாச் சித்தமிறக்கிற் செறிசுகத்தாற்
கனத்தவுணர்வின் மதிநிகழுங் கழறுமிதற்கோ ரிதிகாச
மினத்திலினியாய் கேட்டியென விசைத்தான்வசிட்ட னிராமனுக்கே.

(ப - ரை.) மனத்தை மனத்தான் மாய்வித்து = மனத்தினுலேயே மனத்தினைச் சேதித்து, மாசில்பொருள் நோக்காரேல் = குற்றமற்ற ஆன்மாவைத் தரிசியாரேல், ஓர் தினத்தும் = ஒருபோதும், உலகின்றுயர் மாயா = ஜகத்சம்பந்தமான துன்பம் நீங்கமாட்டாது, சித்தமிறக்கிற் செறிசுகத்தாற் கனத்த உணர்வின் மதிநிகழும் = உள்ளமானது ஒழிந்தால் உறைதரு சுகத்தினுல் வியாபக அறிவின் ஞானமானது விளங்கும், கழறுமிதற்கு = கூறிய இதனுக்கு, ஓரிதிகாசம்=ஒருகதையை, இனத்திலினியாய் = அதிகாரிகளுக்குள் மிகவும் சிரேஷ்டமான இராகவனே, கேட்டியென = ஒருமையுடன் சிரவணிப்பாயாக வென்று, இராமனுக்கு = இராமச்சந்திரரைநோக்கி, வசிட்டன் இசைத்தான்=ஸ்ரீவசிஷ்ட பகவான் கூறியருளினுர்.

(ஸ்ரீ - வீர.) ஹே தாமரசலோசன ! மனத்தினுலேயே மனத்தைவென்று, எனதுயான் என்பதையடியோடும் விடுத்து ஆன்மாவானது தரிசிக்கப் பெருதேலாயின், ஜகத்துக்கமானது, சித்திரத்தமைந்த சூரியன் அத்தமடையாததேபோல அஸ்தமடைய மாட்டாதாம். பெருங்கடல்போல விஸ்தாரமாக அநந்த ஆபத்துக்கள் ஓயாமல் வந்துகொண்டே யிருக்கும்; இது விடயத்திற்றுனே இப்புராதனமான இதிகாசத்தை உதாகரித்துள்ளார்கள்; அது சஹ்யாசலத்திருந்த பாசவிலாசர்களாம் சுகிருத்துக்களின் சம்வாதமாம்.

(சு.) மனத்தால் = சாஸ்திர சம்ஸ்காரமான விவேகமுள்ளசித்தத்தினாலே, மனத்தை = சமுசாரா சக்தமான சித்தத்தை, மாய்வித்து, மாசில்பொருள் = ஆன்மாவை. (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆக்கியாயிகையை விரித்துரைக்கத் தொடங்கல்:—சைய மென்பது.

சையமென்னு நெடுங்கிரிமேற் றவவத்திரிமா முனியுறையு
ளுய்யவதன்பா லிருமுனிவர் சூழலொன்றி னுறைகிற்போர்
மெய்யராகு மவ்விருவர்க் கிருவர்பிறந்தார் வியன்புதல்வர்
செய்யவிலாசன் பாசனெனச் செப்பும்பெயரோர் செறிநண்போர்.

(ப - ரை.) சையமென்னும் நெடுங்கிரிமேல் = சஹ்யமெனக் கியாதிவாய்ந்த மகாபர்வதமீது, தவ அத்திரிமாமுனி யுறையுள் = பெருந்தவ அத்திரியென்னும் மாஷிமைதங்கிய முனிவரது ஆசிரமம் ஒன்றுண்டு, உய்யவதன்பால் = தவஞ்செய்து நன்மையையடைய அவ்விடத்தில், இருமுனிவர் = இரண்டுதபசிகள், சூழல் ஒன்றின் உறைகிற்போர் = ஏகாஸ் பதத்தே வாழ்ந்துகொண்டு வருபவரா யிருந்தனர். மெய்யராகும் அவ்விருவர்க்கு = சத்தியாதி விரதங்களையுடைய அந்த இரண்டு தபசிகட்கும், இருவர் வியன்புதல்வர் பிறந்தார் = இரண்டு அற்புதகுமாரர் அவதரித்தனர், செய்யவிலாசன் பாசன் எனச்செப்பும் பெயரோர் செறிநண்போர் = சிறந்தவிலாசன் என்றும் பாசன் என்றும் சொல்லப்பெற்ற நாமதேயம் வாய்ந்தவர் அதிகாடசி நேகிதமுடையவர்.

(ஸ்ரீ - வீர.) அவ்விருமித்திரர்களும் தூய இருதயமுடையவர்களாய் சம்பாஷித்துக் கொண்ட இதிகாச மிதுவாயின், அவர்தம் பிறப்புவளர்ப் பெங்ஙனமென்னும் ஆகாங்க்ஷை யுண்டாக முதலில் அதையறிவிக்கத் தொடங்கல்:—சையமென்பதாதி. உயரமாக மேற்கிளம்பலால் ஆகாயத்தை வியாபித்து வெற்றிகொண்டும், பீடத்தானே மலைக்கீழருவிபாகத்தானே பூதலத்தை வியாபித்து வெற்றிகொண்டு பரவியதாயும், தலத்தாலோ பூமியுட்பிரவிட்ட மூலபாகத்தாலோ பாதாலத்தை வியாபித்து வெற்றிகொண்டும், இலங்கும் மூவுலக விஜயசஹ்யபர்வதம் ஒன்றுளது. அது சகல வளப்பங்களாலு நிறையப்பெற்று வனப்புமிகுந்தது, அநேகம் இரத்ந புஷ்கரணிகளும் அநேகம்பர்யும் அருவிகளும் வியாபித்துப் பல பாரத்தானே சாய்ந்த கொம்புகளையுடைய அநேகபாதபங்கள் சூழ்ந்து தலத்திற்குவேண்டிய யாவும் பயக்கும் செல்வம்வாய்ந்து, அநேகங் கொடிவீடுகளால் அலங்கரிக்கப் பெற்றிலங்கும் அதனது உத்தரதடசானுவில் அத்திரி இருஷியினுடைய ஆசிரமம் ஒன்றுண்டு. அம்மகரிஷியினுடைய அந்த ஆசிரமமானது சுவர்க்க இரம்மியமாயும் பிரஹ்மலோக சமமாயும் சிவபுரோபமமாயும், ஸ்ரீமானயும் சகல சித்திகளையும் முக்தியையும் உதவுவதாயும் சகல சிரமங்களையும் போக்குவதாயும் மகானயும் விளங்கிக்கொண் டிருந்தது. விஸ்தீர்ணமாய அந்த மகரிஷியின் ஆசிரமத்தின்கண் இரண்டு தபோதனர்கள் தவம்புரிந்து வந்தார்கள் அவர்கள் நல்லவித்வான்கள், விண்மார்க்கத் துற்ற சுக்கிர பிருகஸ்பதிகள் போன்றபெருமையையும் நாமதேயத்தையும் உடையவர்கள்; ஒரிடத்துற்ற அவ்விருவர்களுக்கும்; ஆண்டிரண்டு சுதர்களுண்டானர்கள், தூயதனுவினை யுடையவர்கள், சரிசிலுள்ள பதுமகுல்மங்கட்குப் புல்லாங்குரங்களாகிய புஷ்பப்பிரகிருதி பூதகலிகைகள் உண்டாகியிருந்தனவென்ன இருந்தார்கள்; விலாசபாச நாமமுடையவர்கள், முறையே அவ்விருவரும் விருத்தியடைந்து வந்தார்கள் தந்தைதாயரிடத்தில், லதாபாதபங்களிடத்தில் தீர்க்க பல்லவங்களேபோலும்.

(ச.) சையமென்பது குலாசலம், அது கூறப்பெற் றிருக்கின்றது விஷ்ணுபுராணத்தில்:—மகேந்திரம் மலயம்சையம் சுத்திமான் இருக்ஷபர்வதம், விந்தியம் பாரியாத்திரம்;

என்றும் இவ்விடத்து எழுகுலாசலங்கள் உளவென்பதாம், மூலம்:—உத்சேத: = உன்னதி யுடைமை, ஜிதம் = வியாபித்தது, பீடமென்பது பூமியின் உபரிதன விஸ்தீர்ணபர்வதப் பிரதேசமாம், எதனுற்பூதலம் வியாபிக்கப் பெறுமோ. தலம் என்பதுபூமியில் நிமக்கின மாயபர்வத மூலபாகமாம், சஹ்யமென்பது குலபாகம் சஹ்யமென்பது குலாசலம். (11)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்விருவருக்கும் உற்றதையோதல்:—ஒழுங்கால் என்பது.

ஒழுங்கால் விருத்தி பெற்றிருந்தோ ரொன்றே யிரண்டா யினவென்ன
வழுங்கா வுளத்தோ ரவர்தந்தை யன்னையென்போ ருயிரிறப்ப
விழுங்கா நின்றபொருமலோடு மேற்செய் பிதுர்க்கள் விதிகண்முடித்
தெழுங்கா தலினு னொந்திரங்கி யிருபா லகன்று ரிருவருமே.

(ப - ரை.) ஒழுங்கால் விருத்திபெற் றிருந்தோர் = கிரமமாக விருத்தியையடைந்து வளர்ந்து வந்தவர்கள். ஒன்றேயிரண் டாயினவென்ன = ஏகமேதுவித்வம் அடைந்துளதா மென்று சொல்லும் வண்ணம், அழுங்காவுளத்தோர் = வாடாதமனத்தினர், அவர்தந்தை யன்னையென்போர் உயிர் இறப்ப = அவர்களுடைய பிதாமாதாக்கள் மேலுலகடைந்த அளவில், விழுங்கா நின்ற பொருமலோடும் = வெகுவாய வெய்யதுயருடனே, மேற்செய் = மேலே செய்யத்தக்கனவாய், பிதுர்க்கள் விதிகள் முடித்து = மாதா பிதாக்களுடைய உத்தரக்கிரிமைகளைச் செய்துமுடித்து, எழுங்காதலினுல் நொந்திரங்கி = கிளம்பாநின்ற அன் பினுல் துயரடைந்து வாடி, இருவருமே = இரண்டுபேருமே, இருபாலகன்றார் = இரண்டு இடத்துக்குச் சென்றார்கள் ?

(ஸ்ரீ - வீர.) அவ்விருவர்களும் அந்நியோந்நியம் அதிநேயர்களாய், பரஸ்பரம் சுகிருத் துக்களாய் வல்லபர்களாய், திலதைலங்கள் போலத்தழுவினவர்களாய், புஷ்ப ஆமோதங்கள் போலப் பொருந்தி யிருந்தார்கள். புத்திரப்பொருட்டுக் கூடியவர்களாய்ப் பரஸ்பரமும் சுரக்தர்களாயுள்ள தம்பதிகளைப்போலப் பிரியாமலே யிருந்து வந்தார்கள், அவர்கள் மன மானது ஒன்றே இருபிரிவுற்றதே போலும், சமமாகவே யிருந்தது. இவ்வாறு அவர்கள் நேயர்களாய்ப் பாலியங்கடந்து யவ்வனமடைந்து, ஆசிரமத்துறையும் போது, அவர்களு டைய பிதுர்க்கள் ஜராபீடிதர்களாகிச் சுவர்க்கத்தை நோக்கித்தேகத்தை விடுத்து, நீடத்தி னின்றும் வெளிப்போந்து பறந்துபோம் விகங்கங்கள் போலச் சென்றார்கள். பிதாமாதாக் கள் மரணமடைந்ததன் பின்னர், நீரினின்று மேலேகொணர்ந்த தாமரைகள்போலத் தீன வதன முடையவர்களாயும் தப்தாங்க முற்றவர்களாயும் உற்சாக மற்றவர்களாயும் ஆயினார் கள்; ஆண்டுமேல் நடக்கவேண்டிய உத்தரக்கிரியைகளை நடத்தி விலாபஞ்செய்தார்கள்; பின்னரிருவரும் பிரிந்து வனஞ்சென்றார்கள். மூலம்:—ஔர்த்வதைகிக மென்பது அநு சதிகாதித் தன்மையானே உபயபத விருத்தியாம், அநுசதிகாதீ நாஞ்ச (7-3-20) இவற் றிற்கு உபயபதவிருத்தியாம் ஞித்ணித்கித்தும் பரமாம்போது, ஆதிதைவிகம், ஆதிபௌதி கம், ஐஹலௌகிகம் பாரலௌகிகம் என்பதாதி. (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வெகுகாலங் காட்டிற் றவம்புரிந்து பின்வந்து இருவரும் சந் தித்தல்:—அளவில் என்பது.

அளவில்காலம் வனத்துறைந்தா ரரியதவத்தா லுடல்வாட்டிக்
கிளருமாசை விட்டகன்றார் கிட்டப்பெற்றார் கேண்மையினு
லுளமுங்கண்ணும் களிப்பெய்தி யுயர்ந்தவிலாச னுரைசெய்வான்
வளருமுலகி னல்லுறவேமன்னு முயிர்போல் வந்தனையால்.

(ப - ரை.) அளவில்காலம் = அநேககாலம், வனத்துறைந்தார் = காட்டிலேயே வாசஞ்செய்தார், அரியதவத்தா லுடல்வாட்டி = அரும்பெரும் தவத்தினாலே சரீரத்தை இளைப்பித்து, கிளரும் ஆசைவிட்டகன்றார் = மேற்கிளம்பிவந்த துன்புறுத்தும் ஆசைகளை அடியோடு மொழித்தார், கிட்டப்பெற்றார் = ஒருசமயத்தில் இருவரும் சந்தித்தார்கள், கேண்மையினால் = நேயமிகுதியினால், உளமும் கண்ணும் களிப்பெய்தி = மனமும் விழியும் மகிழ்வடைந்து, உயர்ந்த விலாசன் உரைசெய்வான் = மேலானவிலாசன் செப்புகிறபான், வளருமுலகில் நல்லுறவே = விருத்தி யடையாநின்ற இச்சகத்தில் மகாபந்துவே, மன்னு முயிர்போல் வந்தனையால் = சரீரத்தே இருக்கும் பிராணன்போல, சென்றது மீண்டதென்ன, இப்போதுவந் ததிர்ப்பட்டனை. ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) அவ்விருமறையவர் குமாரரும் வனத்தில் விரக்தர்களாய், வெகுகாலம் கழித்தார்கள், தங்கள் இனக்கூட்டத்தை விட்டிருந்த சாரங்கங்கள்போலக் கிருகக்ஷேத்திர தனாதிகளில் அத்தியந்தம் ஆசையற்றவர்களாய்ப் பற்றின்றி யவற்றையு மொழித்துத் தனித்திருந்தார்கள். அநேகதினங்களும் மாசங்களும் வருடங்களும் அவர்கட்கு முறையேகழிந்தன, கழியவே அவ்விருவர்களும் ஜரையைப், படுமூழியிலிருந்த விருக்ஷங்கள்போல அடைவுற்றார்கள். விமலஞானத்தை யடையாதவர்களும், நெடுங்காலம் தவம்புரிந்து சர்ச்சரிததாபதர்களும், ஆகிய அவர்கள் ஒருபோது, சிறிது அரிதாயபோது தெய்வத்தாலே பிரிந்திருந்து மீண்டும் சேர்ந்தவர்களாகி, அன்யோன்யம் இதனைச் சம்பாஷித்தார்கள்; விலாசன் விளம்பல்:—சிரேஷ்ட ஜீவனவடிவத் துருமபலபூதனே, ஹிருதயத்திலாவாச அமிருதாப்தியே! மைத்திரியதிசய உத்தீபனங்களாம் இவ்விசேஷணங்கள், இவ்வுலகின் கண்ணே மகாபந்துவே! பாசாபிதானனே உனதுவரவு நல்வரவாகுக, உனக்கு ஆயுள் விருத்தியும் ஆரோக்கியமும் உண்டாகுக. (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விலாசன் பாசனைநோக்கி உன்னை யுன்னாலே யுணர்ந்து சகல அநர்த்த நிவிருத்திபரமானந்தப் பிராப்தியடைந்தனையோ எனவினாதலும், அதற்குப்பாசன் விடையளிக்கத் தொடங்கல்:—இது என்பது.

இதுநீள்கால மெங்குறைந்தா யிதயவிடர்தீர்ந் தனைகொல்லோ
பொதுவாயுனை நீ யறிந்தனையோ போதவிஞ்சை பலித்தனவோ
சதுராநலனுண் டாயினையோ சாற்றுமென்ற மொழிகேட்டு
முதுவாய்மையினாற் பாசனிவை மொழிந்தான் விலாசன்முகநோக்கி,

(ப - ரை.) இது நீள்காலம் எங்குறைந்தாய் = இதுவரை அநேகவருடங்களாய் எவ்விடத்தில் தவம்புரிந்து கொண்டிருந்தாய்! இதய இடர்தீர்ந்தனை கொல்லோ = மனோதுக்கங்கள் யாவற்றையும் மருவாதகற்றினாயோ, பொதுவாயுனை நீயறிந்தனையோ = எங்குஞ் சமமாய உனது சொருபத்தை நீசாக்ஷாத் கரித்தாயோ, போதவிஞ்சை பலித்தனவோ = ஞானவித்தை ஞானசாதனங்கள் பயன்பெற வந்தனவோ, சதுராநலனுண்டா யினையோ = குசலவானாய் நலனுற இருக்கின்றாயோ, சாற்றுமென்ற மொழிகேட்டு=கூறவேண்டுமென்று கூறிய வசனத்தைச் செவிகொண்டு, முதுவாய்மையினாற் பாசன் = முதிர்ந்த உண்மைவாக்கியங்களால் பாசனென்பவன், இவைமொழிந்தான் விலாசன் முகநோக்கி=விலாசனுடைய விகசிதவதனத்தை நோக்கி இவற்றைக் கூறத்தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர.) என்னை வெகுகாலமாக விடுத்து நீ இதுகாறும் எங்குறைந்தாய், ஹே ஏாதுவே நினது தவம் சபலமாயதோ, நினது பத்தியான்து இராகத்துவேஷாதி தாபமற்ற

தாயதோ, பிரபோதலப்தாத்மா வாகவாயினையோ, தத்துவத்தை யுணர்ந்தவதனுனே நினது வித்தை பலிதமாயதோ, நீ இனிதாகக்குசலவானு யிருக்கின்றாயா, ஸ்ரீவசிஷ்ட பகவான் கூறல் = இவ்வண்ண மியம்பிய சம்சாரசமுத் வின்னனுகிய பேருணர் வெய்தாத சுகிருத்தாகிய விலாசனைநோக்கி யாதரவுடன் சுகிருத்தாகிய பாசன் ஸ்பஷ்டமாகக் கூறியதாவது.

(ச.) முன்னொருடார்பு, இவ்வுலகின்கண் மகாவிசிராம சகாயனே ! வெகுதினங்களாக = இத்துணை வருடங்கள் எங்கிருந்தாய். சென்றனதினங்கள் திங்கள் வருடங்களென்னவே அளவிலா வற்சரபரியந்த காலத்திற்குப் பிரசங்கமுண்மையின், வினுவிற்குத் தினவிடயத் தன்மையேலோ, வெகுதினங்களாக வென்பது பொருந்துறுதாம், தினசப்தத்திற்கு நபும்சகத் தன்மையான், பும்ஸ்த்வம் அங்கீகரித்தபோதினும் சம்ஹிதைக்குச் சேர்க்கையின்மையின், ()

(ஸ்ரீ - வீர - அ - கை.) நன்மைக்கும் நமக்கும் வெகுதூரமெனத் தனது குறையைப் பல்லாற்றானுஞ் சொல்லல்:—

உயிர்போலுறவே விதிவயத்தா லுன்னைக்கண்டே னுளங்குளிர்ந்தேன்
செயிர்சேர் பிறப்பி லுழல்வேற்குச் சிறந்தநலனுந் திறனெங்கே
பயில்வதறிவ தறிவளவும் பாயுமுள்ளங் கெடாதளவும்
வெயில்வெம்பவநீங் காதளவு மிக்கநன்மைத் திறமெங்கே.

(ப - ரை.) உயிர்போல் உறவே = பிராணனுக்குச் சமானமான நேயனே ! விதிவயத்தால் = தெய்வவயத்தால், உன்னைக்கண்டேன் = உன்னைத் தரிசிக்கப்பெற்றேன், உளங்குளிர்ந்தேன் = மனமகிழ்ந்து தண்மையுற்றேன், செயிர்சேர் பிறப்பில் உழல்வேற்கு = துயரமயமாய சமுசாரத்திற் சுழன்று திரிவேனுக்கு, சிறந்தநலனுந் திறனெங்கே = விசேடநன்மைவாய்ந்த குசலமென்பது எவ்வளவு தூரத்தது ; பயில்வதறிவதறிவளவும் = அறியத்தக்கவத்துவை அப்பியாச முறைகளானே அறியும் பரியந்தம், பாயுமுள்ளங்கெடாதளவும் = விடயங்களிற்றாவும் மனம் க்ஷீணமாகாத அளவும், வெயில்வெம்பவம் நீங்காதளவும் = ஐம்பெருந்துயரும் தாபத்திரயமும் எண்மடங்கதிகமும் உற்றஜன்மத்திதி பங்கம்பங்கமாகாத பரியந்தம், மிக்க நன்மைத்திறமெங்கே = விசேடகுசலம் மேவுவதெங்ஙன் !

(ஸ்ரீ - வீர.) நல்லோய் ! நினது வரவெனக்கு நல்லவரவே யாகுக்தான், நீடூழிநீவாழ்க்கடவாய், தெய்வயோகத்தா லின்று தெரிசனம் நினதுபெற்றேன், ஈண்டு சம்சாரத்தின்கண் ணிருந்திடும் எம்மனோர்க்கு, மாண்டுழலுவதே யல்லான் மருவுறு குசலமெங்கே. தெரியத்தக்கதைத் தெரிந்திடாவளவும், சித்தத்துண்டாம் காமசங்கற்பாதி சிதைந்து க்ஷீணமாயிடாவளவும். சமுசாரக்கடல் தாண்டாவளவும் குசலமென்றுதான் கூறலுமெங்ஙன் (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தன்குறையைத் தானேவேறு வகையானே விளம்புதல்:—மனத்தின் என்பது.

மனத்தின்முளைக்கு மாசையெலாம் வடித்தகுடாரத் தான்மரம்போற்
கனத்தவேரோ டறுமளவுங் கண்ணுஞானம் பெறுமளவு
மனத்தபேதம் போய்ச்சமமா மளவும்போத முறுமளவுஞ்
செனித்துமரிக்குந் துயரல்லாற் சிறந்தநன்மைத் திறமெங்கே.

(ப - ரை.) மனத்தின் முளைக்கும் = உள்ளத்தின்கண்ணே எழாநின்ற, ஆசையெலாம் = அவாமுழுவதும், வடித்தகுடாரத்தால் மரம்போல் = கூர்மைபொருந்திய கோடாரி

யானே விருக்ஷத்தைப்போல, கனத்தவேரோ டறுமளவும் = பெரியசிறிய வேர்களுடனே அற்றுப்போம் பரியந்தம், கண்ணுஞானம் பெறுமளவும் = அறிவுமயமாய்ப் பார்க்கும் பிரஹ்மவித்தையைப் பெறும்பரியந்தம், அனத்தபேதம் போய்ச் சம்மாமளவும் = அசர்த்தத்தையேயும் வேற்றுமைமாற்றிச் சமதிருஷ்டி வரும்பரியந்தம், போதமுறுமளவும்=அகண்டார்த்தபோதம் வரும்பரியந்தம், செனித்துமரிக்குந் துயரல்லால் = பிறந்து இறக்குந் துக்கமேயல்லாமல், சிறந்த நன்மைத்திறமெங்கே =விசேடமான குசலமானது உண்டாவதெங்ஙனம்!

(ஸ்ரீ - வீர.) சித்தத்திற் சம்பவியாநின்ற ஆசைகள்யாவும் அடியோடு, லதாபாசமானது அரிவாளாற்போலும் கெடாதவரை, நம்மனோர்க்குக் குசலமென்பது யாங்ஙனம்? சோதித தத்துவம் பதார்த்த ஞானத்தை யடையாதவரை, சமதையானது உதியாதவரை, அகண்டவாக்கியார்த்தபோத முதியாதவரை, நம்மனோர்க்குக் குசலமென்பது யாங்ஙனம்?

(ச.) கண்ணுஞானம் = சாஸ்திரஜன்னியமான பரோக்ஷவிஞ்ஞானம், போதம் = சாக்ஷாத்காரம். (16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறிவந்த நன்மைத்திற மின்மையைச் சிறிதுரைத் துபசங்கரித்தல்:—மடமையென்பது.

மடமைநோய்க்கு மாமருந்தாய் வருமாத்துமதத் துவப்பேற்றை
விடகின்றவர்க்கு வன்பிறப்பாம் விடுசிமேன்மேல் வந்திடுமா
விடரின்பத்தி னிடைப்பட்டு மிறப்புப்பிறப்பில் வீழ்ந்தலைந்துந்
தடமாருலகி னுழலுயிர்கள்சருகி னுலர்வரென் றிசைத்தான்.

(ப - ரை.) மடமை நோய்க்கு=அறியாமையாகிய வியாதிக்கு, மாமருந்தாய்=பெரிய ஔடதமாய், வருமாத்து மதத்துவப்பேற்றை = வாராநின்ற ஆன்மதத்துவ லாபத்தை, விடகின்றவர்க்கு = அடையாம விருப்பவர்க்கு, வன்பிறப்பாம் விடுசிகை = கொடியஜனனமாம் விடுசிகை, வியாதி மேல்மேல் வந்திடும்=மறித்தும் மறித்தும் வந்துகொண்டே யிருக்கும், இடரின்பத்தி னிடைப்பட்டும் = துக்கசுகங்களின் மத்தியில் வீழ்ந்தும், இறப்புப் பிறப்பில் வீழ்ந்தலைந்தும் = மரணபவங்களில் விழுந்தவதிப்பட்டும், தடமார் உலகில் = விஸ்தாரமாகிய உலகின்கண், உழல் = வருந்தாநின்ற, உயிர்கள் = பிராணிகள், சருகின் உலர்வர் என்று இசைத்தான் = சருகெனக்காய்வர் எனக்கூறினன்,

(ஸ்ரீ - வீர.) ஆன்மலாபமிலது, சாதுவே, ஞானமாம் பெருமருந்திலது, உண்டாகும் மீண்டுமே யிந்த துர்ச்சம்சார விடுசிகை; சர்வஜன்மங்களிலும் துக்கத்தானங்கட்கு அநந்தத்தகைமை யுண்மையைக்காட்டி யுபசங்கரித்தல்:—இடரென்பதாதி, வெகுவித சுகதுக்க மத்தியில் விழுந்தும், விஸ்தாரமாகிய ஜராமரணவடிவச் சண்டவாயுவினாலே மீண்டுமீண்டும் சுழற்றப்பட்டும், ஜகத்துருவ உதய (உதர) கிரியில் உருண்டும், இச்சனம் பட்டுப்போன சருகுபோல் ஜர்ஜரத் தன்மையை அடைகின்றது.

(ச.) விஸ்தாரமாகிய ஜராமரண துக்கங்களேயாய நெட்டுக்குத்து மலைகளிற் பங்கமடைந்து, ஜகத்துதரமேயாய கிரியின்கண் ணுருண்டுருண்டு புரண்டு சுழன்று காய்ந்த பர்ணம்போல வருந்துவர். (17)

பாசவிலாசர் கதை முற்றிற்று.

---

## வீதகவ்வியன் கதை.



(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறிய இருவருக்கும் காலபாகத்தானே நன்மையுற்றமையின், ஞானத்தானே கைவல்யமென நாட்டல்:—இன்னண மென்பது.

(ச - அ - கை.) முன்பு சித்தவிசிராந்தியின்றெனில் வெகுவிதப் பிரயாசமெனப்பட்டது; இப்போது சித்தவிசிராந்தி சித்தித்தற்குச் சங்கத்தியாகமும், பிராண நிரோதமும், சமாதியப்பியாசமுஞ் செய்யவேண்டுமென வீதகவ்வியன் கதையால் நிரூபிக்கப் படுகின்றது; இன்னணமே யென்பது:

இன்னணமே நன்மைவினாத் தம்மிற்று மியம்பியுறை யிருவருக்கு
முன்னியநற் காலத்தான் முத்திதரு மெய்ஞ்ஞான முந்திற்றன்றே
யன்னதினு லுரைக்கின்றேன் வெம்பவத்தை ஞானத்தா லன்றிமாய்க்கப்
பின்னையொரு நெறியில்லைப் பாசத்தாற் பிணிப்புண்ட பிணிநெஞ்சுக்கே.

(ப-ரை.) இன்னணமே = இங்ஙனமே, நன்மைவினா = குசலப்பிரசினங்களை, தம்மிற்றும் = பரஸ்பரம், இயம்பியுறை = சம்பாஷித்துக் கொண்டிருக்கும், இருவருக்கும் = பாசவிலாசருக்கு, முன்னிய நற்காலத்தால் = இருவருஞ் சுரந்தசற்போதால், முத்திதரு மெய்ஞ்ஞான முந்திற்று = மோக்ஷத்தைப் பயக்கும் தத்துவஞானம் உண்டாயது, அன்னதினால் = அக்காரணத்தால், உரைக்கின்றேன் = கூறுகின்றேன், வெம்பவத்தை = கொடிய சம்சாரத்தை, ஞானத்தாலன்றி மாய்க்க = தத்துவஞானத்தினால் அல்லாமல் தொம்சஞ்செய்ய, பின்னையொரு நெறியில்லை = மற்றொருமார்க்கமுமே கிடையாது, பாசத்தாற் பிணிப்புண்ட பிணிநெஞ்சுக்கே = பாசத்தினாலே கட்டுண்ட நோய்மய மனத்துக்கே.

(ஸ்ரீ - வீர.) கூறியபிரகாரமாய சம்சார அசாரத்தன்மை விசாரவெகு குசலப்பிரசினங்களை அவ்விருவர்களும் பரஸ்பரம்செய்து கொண்டவராய், காலபாகத்தால் விமலமாய மெய்ஞ்ஞானத்தை யடைந்தவராய், அதனானே முத்தியை யடைந்தனர். ஆகையினால் ஹே மகாபாகுவே! கூறுகின்றேம் கேட்டி! பாசங்களைப்போலப் பந்தனவேதுக்களை யுடைய சித்தத்திற்குச் சனனமரண சமுசாரத்தைத் தாண்டுவதில் உபாயம் ஞானத்திற் கயலாக ஒன்றுமில்லவே யில்லை.

(ச.) நன்மைவினா = குசலப்பிரசினம், பாசத்தால் = சங்கத்தால் (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சங்கமற்றமனமே மோக்ஷசாதகமா மெனல்:—பற்றிலதென்பது.

(ச-அ-கை.) அவற்றிற் சங்கத்தியாகத்தை வியந்துரைத்தல்:—பற்றிலதென்பது.

பற்றிலதாய் நின்மலமா மனம்விவகா ரம்பயின்றும் பந்தமேவாப்
பற்றுளநெஞ் சளவிறவம் படைத்தாலும் பந்தமே பயிலுமுள்ளிற்
பற்றிலதா யினியதொழில் பயில்சீவன் புறத்தொழில்கள் பண்ணினாலும்
பற்றறப்பண் ணுவிடினும் பண்ணுவோன் புசிப்போனும் பான்மைமேவா.

(ப - ரை.) பற்றிலதாய் நின்மலமாம் மனம் = நசையற்று அமலமான மனமானது, விவகாரம் பயின்றும் = தொழில் செய்யினும், பந்தம்மேவா = கட்டுப்படாது, பற்றுள

நெஞ்சு = நசையை உடையமனமானது, அளவில் தவம்படைத்தாலும் = அளவற்ற தவங்களைப் புரிந்தபோதினும், பந்தமேபயிலும் = கட்டுப்பட்டேயிற்கும், உள்ளில் பற்றிலதாய் இனியதொழில் பயில்சீவன் = அந்தரத்தே சங்கமின்றி மதுரவிருத்திமானும் உலவும்சீவன், புறத்தொழில்கள் பண்ணினும் = பாகியவிவகாரங்களைச் செய்தபோதினும், பற்றறப் பண்ணுவிடினும் = சங்கமற்றுச் செய்யாவிடினும் பண்ணுவோன் புசிப்போனும் பான்மை மேவா = கருத்தாத் தன்மையையும் போக்தாத் தன்மையையும் அடையமாட்டான்.

(ஸ்ரீ - வீர.) அசக்தமாய நிருமலசித்தம் சமுசாரியாயினும் புடம்முக்தமேயாம், சக்தமாயதோ, தீர்க்கதபத்தோடு சேருமாயினும் அதிபந்த முடையதேயாம்; உட்பற்றுடைய வுள்ளமே பத்தமாம், முத்தமோ பற்றை விட்டதேயாகும், உட்பற்றதுதானே யொருகாரணமாம் பந்தமோக்ஷங்கட்கு; உட்பற்றது தன்னுனே அகர்த்தாவாகிய ஜந்துவிற்கும் கர்த்துருத்தகைமையாம், சுகதுக்கவதியாய சொப்பனத்தில் எங்ஙனம் சம்பிரம உன்முகத்தன்மையாமோ = வியாக்கிராதிபய பலாயனாதி = ஓடலாதி வியாகுலத்தன்மையாமோ, அகர்த்தாவாய மனத்தினுள்ளே அகர்த்துருத் தகைமை புடமாய்ப் பலிக்கும்; சூனியசித்தத்தையுடையபுருடனோ, செய்தபோதினும் அபிமானிப்பதில்லை; காணுங்கேட்கு முறுமோக்கும் காலானடக்குங் கண்வளரும், பேணுந்துறக்கு மூச்சுவிடும் பேசும்விழிக்குஞ் சிம்பிளிக்கும், பூணுமின்னும் பலவெனினும் புலன்சேர் பொறியின் புணர்ப்பென்றே, தாணுங்கிரியுமெனவொன்றுந் துளங்கான் விளங்குந் துணிவுடையோன், என்னும் ஸ்ரீமத்பகவத் திருவசனங்களை நினைந்துகொள்க. ஞானேந்திரிய வியாபாரம், கருமேந்திரிய வியாபாரம், புத்தியின் வியாபாரம், வாயுக்களின் வியாபாரம், என்னும் சர்வவியாபாரங்களிலும் ஞானிதன்னை அகர்த்தாவாகவே காண்கின்றான், ஆகலின் யாவற்றையு மியற்றியபோதினும் அவற்றாற் பந்தப்படுவதில்லை யென்றறிக. உட்பற்றகன்றோளிர் உத்தமஞானி நிர்விக்ஷேப சௌக்கியவானாய் மதுரமாம் விருத்தி மருவினோனாகி வெளியிலே விவகரித்திடினு மலதுவிவகரியாமலிருந்தபோதினும், கருத்தனாய்ப் போத்தனு யெங்குமிலனே. சம்சக்தித் தியாகமாத்திரத்தானே சர்வ ஜீவன்முக்தகுணங்களும் மனத்தின் மாட்டுறுவன வாமாகலின் சர்வதுக்கங்களையுமீயும் குரூரமாய உட்பற்றதனை ஒழித்திடவேண்டும்.

(ச.) பந்தமேபயிலும் =அதிபந்த முடையதாம், சங்காசங்கங்கண் மேற்கூறுமிலக்கணமுடையன, இனிய = மதுரமுள்ளது, மது = பூவிரதம், ர என்பது அநுபவிப்பது, இரசிப்பது, மதுரம் மதுகரமென்பதாம், அதனது தொழில்பயில், அதுமலர்களிற் கிட்டியமட்டும் மதுவைக்கிரகித்துப் பற்றின்றியே சுகமாகச் சஞ்சரிக்கும், அதுபோன்ற தொழிலையுடைய வென்பதுபொருள். இதற்குதாரணம் ஸ்ரீமத் பாகவதம்:—வண்டினஞ் சிறிதுசிறிதென வலருமலர் தொறுவருமுருகுவப்பா லுண்டனதிரிதல் கண்டனன் யானுமுறைக்கிவித் தொழிலழகென்ன, எண்டருநகரின் மனைதொறுந்துறுகி யெனதொருகர மிசையையங்கொண்டனன் சிறிது சிறிதெனவுவந்து கொள்கலத் தேற்றிடாதன்றே (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சங்கமேசம்சாரகாரணம் என்றருளிய ஸ்ரீவசிஷ்டபகவானைநோக்கி ஸ்ரீ இராகவர் சங்கமென்பதுயாது எதனால் வீடாம். எதனால் இடராம் அதனையகற்றும் நெறிதான் யாதோவெனச் சங்கித்திட அதற்குப் பகவான் அருள்புரிதல்:—என்னலுமே யென்பது.

என்னலுமே பற்றுவ தெத்தன்மை யெப்பற்று லெய்தும்பந்தந்
துன்னரும்வீ டெப்பற்றுலெய்தலாந் தொடர்பற்றைத் துடைக்குமாறென்
பன்னுகெனு மிராமனுக்கு முனிபகர்வா னுடலுயிரைப் பகுப்பதொன்று
முன்னுகிலா துடலினைநம் புதல்பற்று மதனாலே யுளதாம்பந்தம்.

(ப - ரை.) என்னலுமே = சங்கமே பந்தகாரண மென்றருளலுமே, பற்றுவதெத் தன்மை = சங்கமென்ப தெத்தகையது, எப்பற்றால் எய்தும் பந்தம் = எச்சங்கத்தாற் பந்தமுண்டாம், துன்னரும் வீடெப்பற்று லெய்தலாந் தொடர்பற்றைத் துடைக்குமா றென் = கிடைத்தற்கரிய மோக்ஷம் எச்சங்கத்தா லடையலாம் பந்தத்திற்குச் சாதகமாகப் பற்றியபற்றை யகற்றுவதெவ் வுபாயத்தான், பன்னுக எனும் இராமனுக்கு = அருளவேண் டும் எனறுபிரார்த்தித்த ஸ்ரீ இராகவருக்கு, முனிபகர்வான் = ஸ்ரீவசிட்டமுனிவர் விடை பகருமாறு இதுவாம், உடலுயிரைப் பகுப்பதொன்றும் உன்னுகிலாது = தேகதேகி விபாக மொன்று நாடாது, உடலின் = தேகத்தை, நம்புதல் = விசுவசித்தல், பற்றும்=சங்கமாம். அதனாலேயுளதாம் பந்தம் = அதனாற்றான் பந்தமான துண்டாகின்றது.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ இராகவர், ஹேபகவன் ! சங்கம் எத்தகையதாம், எவ்வகையானேமுய வில் நரர்கட்குப் பந்தமுண்டாகின்றது, எத்தகைத்தானே சிகிச்சைசெய்யின் மோக்ஷமான துண்டாம், எனவே சங்கத்தி னிருவகையையும் வினவியதாம். ஸ்ரீ வசிஷ்டபகவான்: ஹே குழந்தாய் ! தேகமாகிய க்ஷேத்திரத்திற்கும், தேகியாகிய க்ஷேத்திரஞ்ஞனுக்கும் எச் சாட்டிய சிற்சுபாவதை வடிவவிபாகம் = விருத்த சுபாவதையுண்டோ, அதனது, வகபரித் தியாகத்தான் = அத்தியந்த பரியாலோசனை யின்மையினானே, அன்னியோன்னிய் தாதாத் மியதன்ம விநிமயபாவனையாற் றேகமாத்திரத்தில் ஆன்மத்தன்மை விசுவாசம் யாதுளதோ அதுவே பந்தஹேதுவாய சங்கமாம். இலக்கணாந் தரங்களிவையாம்:—அநந்தமாய ஆன்ம தத்துவத்திற்கு ஶூவிதபரிச்சேத சகிதத்தன்மை நிச்சயம் உளதாகவே; தனது அபரிச்சின்ன சுகசுபாவ மறதியால் எவ்விடயங்களினின்றும் சுகார்த்தித் தன்மையுளதோ உள்ளே, அதுவே பந்தஹேதுவாய சங்கமாம். இதன்கண் ஸ்ரீமத் பகவத்திருவசனமும் காணலாம்:—போவன நிற்பவாமியாக்கை பூண்டுகொண், டியாவருந் துயர்ப்படுகின்ற வீதெலா, மேவருமுடலுயிர் வேறுபாட்டினை, யாவகண்டறிவதோ ரறிவிலாமையே. அவித்தை, அதன் காரிய சகலதிரு சியப் பிரபஞ்சமும் க்ஷேத்திர மென்றும், இதனினு மிதரமாய், இதனை யொளிர்விப்பதாய், சொப்பிரகாச பரமார்த்தாய், அசங்க உதாசீனமாய், சர்வதர்மங்களும் விடுபட்டதாய், இலங் கும் அத்விதீய சைதந்யவத்துவே க்ஷேத்திரஞ்ஞ னென்றும், உணர்க.

(ச.) முனி = ஸ்ரீ வசிஷ்டர், உடல் = எதுதேகம், உயிர் = எவன்றேகி, என்னும் விவேகமொன்றைப் பரித்தியாகஞ் செய்தென்பது பொருள். தேகமே நானெனதென்னும் அபிமானமானது சங்கமும் பந்தவேதுவுமா மெனப்படும்; தேசகாலாதி அநந்தான்ம தத்து வத்தைச் சிந்தியாது, தேகபரிமிதத்துவ நிச்சயமாயின் அந்தக் காணத்தில் விடயசுகேச்சை யுண்டாம் அச்சங்கம் பந்தவேது வெனப்படும், என்றும் யூகித்துணர்க. (3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதன் விரோதியாய அசங்கஸ்திதி குறிப்பிக்கப் பெறுகின்றது:— ஈதென்பது.

ஈதனைத்துஞ் சொரூபமே யானிங்கெத்தை யிச்சிப்பே னெதையிகழ்வே னெ னல் பற்றின்மை, மாதுயர்தீ ரிதுசிவன் முத்தர்மெய்யின் மன்னுமா லியானில் லைப் பிறருமில்லை, மேதகுமின் பங்களெலா மேவின்மேவ மேவாதேன் மேவா தா யிடுகவென்றே, யோதியவர் றுள்ளேபற் றின்மையுண்டே லுயர்வீட்டுக் கிது நெறியென் றுணர் தியன்றே.

(ப - ரை.) ஈதனைத்தும் சொரூபமே = இவ்வியாவும் ஆன்மாவேயாம், யான் இங்கு எத்தை இச்சிப்பேன் எதை இகழ்வேன் எனல் பற்றின்மை = ஈண்டகம் எதைவாஞ்சிப்

பேன், எதைத்தியஜிப்பேன் என்பது அசங்கஸ்திதியாம், மாதுயர்தீரிது = பெருந்துயரைத் தீர்க்குமிது, சீவன்முத்தர் மெய்யில்மன்னும் = ஜீவன்முக்த தனுவிலிருப்பதாம், யானில்லை பிறருமில்லை = அகமென்பேனுமில்லை அந்நியமென்போனுமில்லை, மேதகுமின்பங்களெலாம் மேவின்மேவ மேவாதேல் மேவாதாயிடுக = மதிக்கத்தக்க மேன்மைபொருந்திய சுகங்களியாவும் உண்டாமேலுண்டாகுக, வாராதேல் வாராதொழிக, என்றே=என்பதாகவே, ஓதியவாறு = கூறியவாறு, உள்ளே பற்றின்மை யுண்டேல்=ஆந்தரத்தில் அசக்தி வருமானால், உயர்வீட்டுக்கிது நெறியென்று உணர்தி = உயர்ந்த மோக்ஷத்திற்கு இதுவே மார்க்கமென்று அறிந்துகொள்வாய், ஆல் அன்று ஏ என்பன அசைநிலைகள். மாலியான் எனினும் அமையும்.

(ஸ்ரீ - வீர.) இவ்வகிலம் முழுவதும் ஆன்மாவேயாம், எதைக்கொள்ளுவேன் எதைத் தள்ளுவேன் வெறுப்பு விருப்பு என்று வேறுபொருள் கொள்ளில் இறையுறுப்பிற் குறையாதோ, என்னும் இதுவே அசங்கஸ்திதி யென்றறிதி, ஜீவன்முக்தர் திருமேனியிலுறைவதாமிது. அகங்கார பரிச்சின்னனுகேன் என்னினும் அன்னியமெதுவு மில்லையே, ஆகலின் மித்தியா பூததேகாதிகளில், விடயசுகங்கள், ஆகாதொழிக, ஆகுகவேதான், யானேதேகாதிய சங்கசுபாவன் என்றிவ்வண்ணம் உண்டாம் திடநிச்சயத்தா லசக்தனுவேன், எனவுள்ளெண்ணமுள்ள நரன்முக்தியை யடைந்து முதமுறுவன் என்பர்.

(ச.) ஈது = ஜகமும், யான் = யானும், அனைத்தும், சொரூபமே =ஆன்மாவேயாம், இங்கு = இங்ஙனமாயின், எத்தையிச்சிப்பேன் எதையிகழ்வேன் எனல் = எனவிவ்வண்ணம், ஹேயோபாதேயம் விடுபட்டதிதி, பற்றின்மை =அசங்கத்திதியாம், இது ஜீவன்முக்தரிடத் திருக்கு மென்பதந்வயம். யானில்லை = அகஞ்சத்தவாச்சியமான பொருளில்லை, ஆன்மா அபரிச்சின்னனுதலினும், அகந்தை பரிச்சின்ன விஷயமாதலினும், என்க; பிறருமில்லை = ஆன்மாவினும் இதரப்பொருளின்மையின் என்க; அக்காரணத்தினுல், சுகங்கண்மேவ அன்றி மேவாதாய் விடுக, என்றிங்ஙனம் உள்ளே அசத்தன் முத்தியடைந்தவன் எனப்படுவன். (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கருமபலத்தைக் கருத்திற்கருதாமற் காரியமாற்றிய போதினும் பற்றுக்கழன்றவரே யாவர் மோக்ஷகதியையும் பெறுவரெனல்:—கருமமென்பது.

கருமமிலாமையை விரும்பார் கருமம்பற்றுர் கருதுபலன் விட்டிரண்டுங் கண்டாலொப்போர், மருவியபற் றிலாதவரென் றுரைப்பர்மேலோர் வருகருமபலாதிகளைக் கருமத்தாலே, யொருவலற மனத்தாலே நிபுணமாக வொருவுதல்பற் றின்மையென வுணர்தியித்தாற், பெருகவளர் தொழிலனைத்துங் குற்றந்தீர்ந்து பெறலரிய முத்தியையும் பேறுநல்கும்.

(ப - ரை.) கருமமிலாமையை விரும்பார் = நைஷ்கர்மியத்தை வாஞ்சியார், கருமம் பற்றுர்=தொழில்களிற் றொடக்குமுறுர், கருதுபலன் விட்டிரண்டுங்கண்டால் ஒப்போர்= விரும்பத்தக்க பிரயோஜனத்தை விடுத்து இரண்டினையும் பார்த்தாற் சமமானவர், மருவிய பற்றிலாதவர் என்றுரைப்பர் மேலோர் = பொருந்திய பற்றில்லாதவர் என்பதாகச் சொல்லுவர் சான்றோர், வருகருமபலாதிகளைக் கருமத்தாலே = வாராநின்ற தொழிற்பயன்களை வினையினாலே, ஒருவலற = அகற்றுதலின்றி, மனத்தாலே = சித்தத்தாலே, நிபுணமாக = சாமர்த்தியமாக, ஒருவுதல் = விலக்குதல், பற்றின்மையென உணர்தி = அசக்தியென்று தெரிந்துகொள்ளுதி, இத்தால்=இதனாலே, பெருகவளர்தொழிலனைத்துங் குற்றந்தீர்ந்து=

விஸ்தாரமாக விருத்தியாகும் வினைகள்யாவும் மாசகன்று, பெறலரிய முத்தியையும் பேரு நல்கும் = அடைதற்குத் துர்லபமான மோக்ஷத்தையும் பெரும்பயனாக அடைவித்திடும்.

(ஸ்ரீ - வீர.) சர்வகர்மத்தியாகத்தை வாஞ்சியானாய், பலத்தை விரும்பாமையிற் கருமங்களினின்றும் கதுவுற்றுழலானாய், பலத்தைக் குறித்தன்றோ அபிநிவேசப்படுதல், சித்தியசித்திகளில் நற்சமனாய், பலத்தியாகியா யுள்ளவனியாவனோ அவன் அசம்சத்தன் என எண்ணப் பெறுவன்; எவ்வான்மதத்துவ ஏகநிஷ்டனுக் குடைய மனமானது, தனக்கிட்டலாப முற்றுழி மயிர்க்குச்செறிதல் கண்ணீர் சொரிதல் ஆதியேது ஆநந்த அபிவியஞ்சக விருத்தி விசேடத்தையும், பிறரது உற்கர்ஷ அசகனரூப விருத்தி விசேடத்தையும், அடையமாட்டாதோ அவன் பற்றில்லாதவனாவன், அவன் ஜீவன்முக்தன் எனப்பெறுவன்; சருவகரும பலன்களையும் கருமத்தாலன்றி மனத்தினாலேயே நிபுணமாகயாவன் பரித்தியாகம்புரிவனோ அவன் அசம்சக்தன் எனப்பெறுவன்; உலகத்தாரை நல்வழிப்படுத்தல் ஒருதலையாய் வேண்டற்பாலதை விளக்குதற் பொருட்டுக் கருமத்தாலன்றி யென்றதாம். மூன்றுவினாக்கட்கு விடையளித்து, இப்போது நான்காவது வினாவுக்கு விடையளித்தல்:—இத்தால் என்பதாதி. நானாவிதமான பலராகங்களானே விரிந்துள்ள துர்ச்சேட்டைகள் யாவுமே அசம்சங்கனாற் சிகிச்சிக்கப் பெறுவனவாம், ஈண்டுச் சிரவணாதி சேஷ்டைகளோ விக்கினமில்லாதனவாய் மோக்ஷத்தைச் சம்பாதிப்பனவாம்.

ஈண்டு ஸ்ரீமத்பகவத் திருவசனங்களிவை யெண்ணற் பாலனவாம்:—அறிவினையறிகிற்பாயகிலமுமடைவுற்றே, பிறிபொழுதினி லொத்தே பெருவினை தனினிற்பாய், நெறிதரு மறிவொட்டா வகைவினை தனினிற்பார், சிறியவரெனைமிக்கோர் தெளிபவர் செயலைக்கேள்.

விடலரும் வகையிற்றும் வினைப்பய னதுவிட்டே
கடவிய வினைமுட்டா வகைசெய்து கழிவுற்றோ
னுடலொடிவ் வுலகத்தே யுளனென நிகழ்பெற்றே
யிடரினை யறவிட்டா னெனையறி வகைபெற்றான்.

தருபயனது விட்டேதகும் வினைசெய லுற்று
லருமய லறுமற்று லறிவுறு மறிவுற்று
லிருவினை விடும்விட்டா விழவொடு பெறுதற்பா
லொருமனம் வருமத்தா லெனையுணர் வுணர்வப்பால்.

பேதமை யடைகுற்றே பிறிதுறு மனமற்றே
யேதமி றெளிவுற்று னியாதொரு பொழுதப்போ
தோதலெ லுலகத்தோ ருரைகளினுளம் விட்டா
னுதலினெ னை மெய்ப்பா டடைதரு நெறியைக்கேள்.

(ச.) கருமமிலாமை = கருமத்தியாகம், பலம்விட்டு = கருமபலேச்சையின்றி, ஒப்போர் = சித்தி யசித்திகளிற் சமத்துவர், கருமம் =ஜோதிஷ்டோமாதிகள், பலம்=சுவர்க்காதிகள், ஆதிசத்தத்தால் உபாசனா பலங்களும், இயமாதி யஷ்டாங்க அவாந்தரபலங்களும், அவனது சந்நிதியில் வைரத்தியாக மென்பதாதியும் கொள்க, அச்சகல கருமபலாதிகளையும், கருமத்தாலொருவலற = பரித்தியாகஞ் செய்யாது, மனத்தாலே நிபுணமாகவொருவுதல், பற்றின்மை = அசம்சத்தி, எனவுணர்தி, இவற்றில் மனத்தாலே ஒருவுதலாவது பலவாஞ்சை நிவிர்த்தி, கருமத்தாற் பரித்தியாகஞ் செய்வது, பலபரித்தியாக மன்றும், பலசாதனமான கருமத்தினது அநுட்டானமாதலின் எனக்காண்க. பெருகினர் = நானாப்

பிரகாரமாய், விசாலமான, தொழிலனைத்தும், ஈதால் = முற்கூறிய வசஞ்சங்கத்தால், குற்றந்தீர்ந்து = சிகிற்சிதமாய், கைவல்லியத்தை நல்கும். பரித்தியாகம் பாடமாயின், நன்றாகத் தியாகஞ்செய்துள்ள பரித்தியாகி புருடன் என்றே பொருள்கொள்க, கொள்ளாக்கால் அசம்சக்த சப்தத்தோடு சாமானுதி காண்ய அசம்பவம் வரும் என்றுணர்க. (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பற்றினுல் வரும் இடரைப் பகர்ந்து பற்றிருவகையெனப் பகர்தல்:—புழுவென்பது.

(ச - அ - கை.) சங்கத்துக்குப் பந்தஹேதுத்துவம் உதாகரணஞ்செய்து தெரிவித்தல்:—புழுவென்பது.

புழுமுதலாம் பல்பிறப்பிற் றோன்றிப்பல்காற் பூதமெலாங் கடற்றிரைபோற் பொன்றுந்தன்மை, பழுதுதரும் பற்றினது படர்ச்சியாகும் பற்றுத்தானிருவகையா மவற்றினென்று, நழுவுபய னிலியொன்று வணங்கற்பாற்று நவின்றபய னிலிமூடர் நண்ணற்பாற்றும், வழுவறுதத் துவமுணர்ந்தோர்க் குடைமையாக வணங்கற்பாற் றும்பற்று மருவுந்தானே.

(ப - ரை.) புழுமுதலாம் பல்பிறப்பிற் றோன்றி = கிருமியாதி அநேக ஜன்மங்களிலுதித்து, பல்கால் = அடிக்கடி, பூதமெலாம் = பிராணிகளியாவும், கடல்திரைபோல் = சமுத்திர தரங்கம்போல, பொன்றுந்தன்மை = நாசமாந் தகைமையானது, பழுதுதரும் பற்றினது படர்ச்சியாகும் = கெடுதலேயேயீயும் சங்கத்தினது விஜிரும்பிதமாம், பற்றுத்தான் இருவகையாம் = சம்சக்தியானது இரண்டு பிரகாரமாகும், அவற்றின் ஒன்று = அவ்விரண்டனுள் ஏகம், நழுவுபயனிலி = தள்ளத்தக்க பயனற்றதாம், ஒன்று வணங்கற்பாற்றும் = அன்னியம் பூஜிக்கத்தக்கதாம், நவின்றபயனிலி = கூறியபயனற்றது, மூடர் நண்ணற்பாற்றும்=மூர்க்கர் பொருந்துவதற் குரியதாம், வழுவறு தத்துவமுணர்ந்தோர்க்கு உடைமையாக= கெடாத உண்மைப் பிரஹ்மத்தை யுணர்ந்தவர்க்குச் சொந்தமாக, வணங்கற்பாற்றும் பற்றுமருவுந்தானே = பூசிக்கத்தக்க சங்கம் பொருந்தியிடும் சுயமாகவே.

(ஸ்ரீ - வீர.) இப்புண்ணியபாவ அதிகாரிஜன சமூகங்கள் மீண்டுமீண்டும் ஜனிப்பவராய் ஜீர்ணராய், கிருமிகீடத் தன்மையை அடைந்துகொண்டே யிருக்கின்றார்கள் என்பது அந்தப் பற்றுதலினது விலாசமேயாம். தரங்கமுற்ற ஜலாசயத்திற் றரங்கம்போல அநந்தம் பிராணிகள் உண்டாகி யுண்டாகி யொடுங்குகின்றார்கள், என்பது அச்சங்கத்தினது அற்புத விளையாட்டேயாம். சம்சக்தி யிருவகையாம், வந்தியா = புகழத்தக்கது, வந்தியா = புருடார்த்த பலசூனியமாயது, என்றுகூறப்பெறும், வந்தியாயாண்டுமே மூடருக்காம், நிஜமான வந்தியாகத்துவ வித்துக்கட்காம்.

(ச.) பூதமெலாம் = ஜனசமூகங்கள், பற்றினது = சங்கத்தினது, படர்ச்சியாகும் = விலாசமாம், முன்பு பந்தவேதுவேயான சங்கம் நிருபிக்கப்பட்டது இப்போது மோக்ஷவேதுவான சங்கத்தை நிருபித்தல்:—பயனிலி = வந்தியா, வணங்கற்பாற்றும் = வந்தியா என்னுமிது முத்திக்கேதுவாதலின் வணங்கற்பாற்றும், அவற்றில் முற்கூறிய பந்தவேதுவான சங்கமேவந்திப் பற்றெனப்படும். தரங்கிணி = சமுத்திரத்தில். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பயனிலி பிறப்பையாக்கு மென்றும் புகழுனிபிறப்பைநீக்குமென்றுங் கூறல்:—ஆத்துமவென்பது.

(ச-அ-கை.) அதனது சொரூபத்தை நிரூபித்திருந்த போதினும் பிரகாராந்தரத்தாற் கூறல்:—ஆத்தும வென்பது.

ஆத்துமதத் துவவுணர்வால் விவேகந்தன்னு லடைவாக வுண்டாம்பின் பணுகாச்சென்ம, மேற்றமுள தொழுதகைய பற்றீதாகு மீதன்றிப் பயனிலியாம் பற்றேதென்னி, லூற்றமுறு முணர்வின்றி யுடலமுன்னு முறுபொருளி னுலுண்டா முலகந்தன்னிற், றோற்றமுறு பிறவிமீண் டுள்ளதாக்குந் தோன்றலே யிவ்வி யிரண்டுந் துணிந்துகொள்ளே.

(ப - ரை.) ஆத்துமதத்துவ வுணர்வால் = ஆன்மதத்வ ஞானத்தால், விவேகந்தன்னுல் = பகுத்துணர்வால், அடைவாக = கிரமமாக உண்டாம் = வந்தியாவுண்டாம், பின்பு அணுகாசென்மம் = பின்னர்ச்சன்மம் பின்னுதாம், ஏற்றமுள = மேன்மைமிக்க, தொழுதகைய பற்றீதாகும் = வணங்கற்பாலதாம் சங்கமிதுவாகும், ஈதன்றிப்பயனிலியாம் பற்றேதென்னில் = இது அல்லாமல் பயனில்லாததாம்பற்று யாதென்றால், ஊற்றம் உறும் உணர்வின்றி = ஊன்றிநின்ற விவேகமில்லாமல், உடலம் முன்னும் உறுபொருளினுல் = தேகமுதலாகி யுற்றவஸ்துவினுல், உண்டாம் = ஜன்னியமாம், நிந்தியவந்தியா, உலகந்தன்னில் = ஜகத்தில், தோற்றமுறு பிறவி = பிரதீதியாகும் ஜன்மத்தை, மீண்டுள்ளதாக்கும் = மறுபடியும் உண்டாவதாகச் செய்யும், தோன்றலே = இராகவனே, இரண்டுந்துணிந்து கொள்ளே = இவ்வண்ணம் இவ்விரண்டினையும் நிச்சயித்துக் கொள்ளுவாய்.

(ஸ்ரீ - வீர.) ஆன்மதத்துவ அவபோதமில்லாமல் தேகாதிவஸ்து ஜன்னியமானயாது மீளவும் சம்சாரத்திற் றிடமாயபற்றுமோ, அது வந்தியாவெனப் பெறும், பயனிலியாம்; ஆன்மதத்துவ அவபோதத்தானே சத்திய பூதவிவேக ஜன்னியமாயது வந்தியாவெனப் பெறும், போற்றுவதாம், இச்சக்தியானது மீளவும் சம்சாரவர்ஜிதமாம்.

(ச.) ஆத்துமதத்துவ உணர்வால் = ஆன்மசொரூப நிச்சயமான வேதுவினுல், விவேகந்தன்னுல் = ஆன்மானுன்ம விவேகத்தால், அடைவாக்வுண்டாம், ஏற்றமுள = ஆன்மதத்துவரூபமான, ஈது = இவ்விதமாய், பின்பணுகாச் சென்மம்: சமுசாரவர்ச்சிதமாகிய, பற்று தொழுதகையவாகும், வந்தியா வெனப்படும், தேகத்தில் இரமிப்பது வந்திப்பற்று, ஆன்மாவில் இரமிப்பது வந்தியா என்பது விவேகம். மூலம்! பூபிராப்தியில் என்பதன் உருவம். (7)

(ஸ்ரீ-வீர - அ-கை.) போற்றப்பாலதாய பற்றினுக்குள்ள ஜீவன்முத்த விவகாராதி சர்வோற்கர்ஷ நிர்வாககத்தன்மையை விரித்துரைத்தல்:—வளையென்பது.

(ச-அ-கை.) பிரத்தியாசத்தியால் (வாஞ்சையால்) வந்தியாப் பற்றைமீட்டு முதாகரித்தல்:—வளையென்பது.

வளையாழி கதைகரத்த செங்கண்மேனி வணங்கப்பாற் றும்பற்றின் வசத்தினுலே யிளையாமல் விவிதமாந் தொழிலினுலே யெவ்வுலகு நன்றுக விரங்கிக்காக்கு முளையாத விஞ்ஞானக் கதிசேர்சித்த ருலகபா லகராதி யுரைத்தவாறே [ருர்.
விளையாடி வணங்கப்பாற் றென்னும்பற்றுல் விரிந்தசக மூர்த்தத்தின் மேவிநின்

(ப - ரை.) வளையாழி கதைகரத்த = சங்கசக்ர கதாஹஸ்த, செங்கண்மேனி = செந்தாமரைவிழிக் கார்மேனியனுய தேவதேவன், வணங்கப்பாற்றும் பற்றின் வசத்தினுலே = வந்தியா சம்சக்திவசத்தினுலே, இளையாமல் = ஓயாமல், விவிதமாம் = நானுவகையாய, தொழிலினுலே = இருத்தியங்களாலே, எவ்வுலகும் = எல்லாவுலகங்களையும், நன்றுக = முறைதவறுமல், இரங்கிக்காக்கும் = கருணையோடுங் காப்பாற்றும், முளையாத விஞ்ஞானக்

கதிசேர் = ஜனியாத விஞ்ஞான சொரூபத்திற்றிதி யடைந்த, சித்தர் உலகபாலராதி = சித்தர்கள் உலகபாலகர்கள் முதலியவர்களும், உரைத்தவாறே = கூறியவண்ணமே, விளையாடி = கிரீடைபுரிந்து, வணங்கப்பாற் றென்னும்பற்றால் = வந்தியாசம்சக்தியால், விரிந்தசக மூர்த்தத்தின் மேவிநின்றார் = விஸ்தாரமாய ஜகத்தின் அங்கணத்தில் நிலைத்து வாழ்ந்தனர்.

(ஸ்ரீ - வீர.) சங்குசக்கிரம் கதையென்பவற்றைத் திருக்கரங்களிற் றரித்துள்ள ஸ்ரீநாராயணதேவர், வந்தியாப்பற்றின் வயத்தினாலே பலவகைத் தொழில்கள் கொண்டு ஜகத்திரயத்தையும் காப்பாற்றுகின்றார். சூரியப்பிரஹ்மா சங்கராதிகளும் இவ்வந்தியாப்பற்றின் வயத்தினாலேயே விவகரித்து வாழ்வார்கள். பிரஹ்மதத்வபோதத்தில் அதிதிடமான பிரதிஷ்டையையுடைய, சித்தர்கள் உலகபாலகர்கள் முதலாயினோர்கள், மற்றும்பிறபெரியோர்கள், வந்தியா சம்சக்திவசத்தினாலே, ஜகன்மண்டபத்தில் வாழ்ந்து வருகின்றார்கள்.

(ச.) வளையாழி கதைதரித்த செங்கண்மேனி, என்னும் ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி, விவிதமாந்தொழிலினாலே = மச்சாதியவதாரப் பிரவர்த்தியான சேட்டையால், விஞ்ஞான=விஞ்ஞானன்மகமான பிரஹ்மமே யென்னும், கதி = நிட்டை விசிராந்திபதத்தை சகமூர்த்தத்தின்மேவிநின்றார் என்றதனாற் சர்வசகங்களிலும் அழிவற்றகதியை அடைந்தார் என்பதாம். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பயனிலிப் பற்றினுக்குப் பயனிலிப் பான்மையைப்பகர்தல்:—கேடென்பது.

(ச-அ-கை.) இனிவந்திப்பற்றை யுதாகரித்தல்:—கேடென்பது.

கேடான நல்லதெனு நினைவினாலே கிளர்போக வசத்தாலே கிட்டிநெஞ்சம்
வீடாத பயனிலியாம் பற்றினாலே வெறும்பிணத்துக் கழுகுபோல் வீழுமன்றே,
பாடான பயனிலியாம் பற்றுளோர்க்குப் பன்னரகங் களும்வீடாய்ப் பண்ணப்
பட்ட, வீடான பயனிலிப்பற் றுள்ளோரென்னு மிளவிறகா னரகவெரி யெரியு
மன்றே.

(ப - ரை.) கேடான நல்லதெனும் நினைவினாலே = துயர்மயமான அனுகூலமென்னும் எண்ணத்தினாலே, கிளர்போக வசத்தாலே கிட்டிநெஞ்சம் = பார்வைமாத்திரத்தானே மயக்கஞ்செய்யும் போகங்களின் வயத்தானே ஈடுபட்டுமனமானது, வீடாத = விடமுடியாத, பயனிலியாம் பற்றினாலே = பிரயோஜனமின்மைச் சம்சக்தியானே, வெறும்பிணத்துக்கழுகுபோல் = கேவலம் பிணமாமிசலேசத்தில் வீழாநின்ற கழுகுபோல, வீழும்=வீழாநிற்கும், பாடான = பெருந்துயரமயமான, பயனிலியாம் பற்றுளோர்க்கு = வந்திப்பற்றையுடையவர்க்கு, பன்னரகங்களும் வீடாய்ப்பண்ணப்பட்ட = பலநரகங்களும் வீடாகச்செய்யப்பெற்றனவாம், வீடானபயனிலிப் பற்றுள்ளோரென்னும் = தன்னுதற் குரித்தான பயனற்ற பற்றுடையவர் எனப்பெறும், இளவிறகால் = கோமளகாஷ்டத்தால், நரகவெரி = நராக்கினி, எரியும் =சொலிக்கும். அன்று ஏ என்பவைகள் அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர.) வந்தியப்பற்றின் வயத்தினாலே வியர்த்தமான இரம்மிய சங்கையால் போகங்களில் மாம்சலவங்களிற் கழுகுபோல மனம்வீழும். சம்சக்த மனமுடையவர்க்கு, அக்கினி சஸ்திராதி பிரதீப்தத் தன்மையானே இரம்மியங்களான, யாதனாசரீரங்கள் கொண்டு அநுபவிக்கத் தக்கனவாகலின் யாதனைப்பெயர் வாய்ந்த நாயகிகளின் சம்போகஸ்தானத் தன்மையுற்ற, இந்த அந்தப்புரபந்திகளாக, இரௌரவ அவீசிகால சூத்திரமுத

விய பெயர்வாய்ந்த நரகங்கள், கருமசிற்பிகளாலே செய்யப் பெற்றனவாம். ஓங்கியெரியா நின்றநரக அக்கினிகட்கு, சக்தசித்த முடைய ஜனங்கள் துக்கசுட்க (காய்ந்த) இந்தனக் கூட்டமாம், அவற்றாலவை மேலுமோங்கி யெரியுமென்றுணர்க.

(ச.) கிளர்யோக வசத்திலே = விடயங்களில், நல்லதென்று நினைவினால் = இரம்மி யத்துவ கற்பனையால் என்பதாம், கேடான = வியர்த்தமான, என்பது நினைவின்விசேஷ ணம், தேகத்தில் இரமிப்பவர்க்கு ரௌரவாதி நரகங்களே விசிராந்தித்தான மென்பது பொருள். ஆதலின் அவரை நரகாக்கினிகளுக்கு இந்தனசமூகமென வறியென்பதாம் எதனானே அந்நரகாக்கினிகள் அவ்விந்தனத்தானே சொலியாநிற்குமோ. (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அசக்தமான மனமானது யாண்டுமே சுகத்தின் பொருட்டே யாம், சகல ஆசைகளும் அற்றிருத்தலின் பரமசாந்தமாய் அநந்தமான ஆகாசம்போல நன்கு நிலைபெற்று நிலவும், அசத்கற்பமாயும் சதாபாசமாயும் இலங்கும் என்று புகன்று அசத்கற்ப தையையும் சதாபாசதையையும் விடயவிபாகத்தானே விவரணித்துக்கொண்டு உபசங் கரித்தல்:—விச்சையென்பது.

விச்சையெனும் விழிநன்றாய் விளங்கப்பட்டு வெம்மாய விடயத்தின் மீட்சி யெய்தி, யிச்சையுறு பற்றென்ப தெங்குமில்லா வியன்மனத்தோ டிருப்பவரே யிறவாமுத்தர், நிச்சயமா யெப்போது மெவற்றின்பாலு நிற்பவனா யனைத்து டனு நிற்போனாகி, யெச்செயலுஞ் செய்வோனுஞ் சீவன்முத்த னியற்றியவிம் மனத்தின்ற னியல்புகேளாய்,

(ப - ரை.) விச்சையெனும் விழிநன்றாய் விளங்கப்பட்டு = வித்தையென்னுந் திருஷ்டி நலமாக விலங்கப்பெற்று, வெம்மாய விடயத்தின் மீட்சியெய்தி = கொடியமாயா விடயங் களினின்றும் திரும்புதலையடைந்து, இச்சையுறு பற்றென்பது எங்குமில்லா = ஆசையுடைய சம்சக்தியானது எவ்விடத்தும் இல்லா, இயன்மனத்தோ டிருப்பவரே இறவாமுத்தர் = இயல்பையுடைய உள்ளத்துடன் வாழ்பவரே கெடாதமுத்தராவர்; நிச்சயமாய் = துணி பாக, எப்போதும் = எக்காலத்தும், எவற்றின்பாலும் = எல்லாப் பொருள்களிடத்தும், நிற்பவனாய் = இருப்பவனாய், அனைத்துடனும் நிற்போனாகி = எல்லாவற்றோடும், கூடி நிகழ்பவனாய், எச்செயலுஞ் செய்வோனும் = எவ்விவகாரமும் இயற்றுவோனும், சீவன் முத்தன் = சீவிக்கும் முத்தன், இயற்றிய இம்மனத்தின்றன் இயல்புகேளாய் = செய்த இவ்வுள்ளத்தினது சுபாவத்தைக் கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) வித்தியாதிருஷ்டியில், சூர்யாதிபோலும் ஆவர்ப்பாவம் அடைந்தவனாய், அவ்விடயங்களிலிடயத்தில் க்ஷயமடைந்தவனாய், யாண்டுமே பற்றற்றவனாய், தன்மனத்தாலே இருந்துபயின்றாய், யாவனிலங்குவானோ அவனே முத்தனெனப் பெறுவன்; உணர்ந்தோனாகிய வன்வகி, எப்போதும் அவ்வக்காலத்துக்குத்தக்க சர்வ வியவகாரங்களோடு கூடியவனாய், அவ்வவ்விவகார உசித இஷ்டமித்திர பிருத்தியபுத்திர தாராதியோடும் மற்றியாவரோடுங் கூடியிருப்பவனாய், நிஷித்தமல்லாத இலௌகிக சாஸ்திரீய சருவகருமாதி யுடையவனாயும் இருந்தபோதினும் மனத்தை யினிக்கூறு மிலக்கண முடையதாய்ச் செய்துகொள்ள வேண் டும்; அல்லது, ஏக ஏககாலதேசமித்திர பிருத்தியாதி சகவர்த்தமானனாய், சிலசில கருமாதத் வசம்பாதக பரிச்சின்ன சம்சக்தி நிவாரணப் பொருட்டுப் பிரதமம் சர்வதேசகாலாதி சர்வ உபகரணசம் பத்தியினானே சர்வஜகத் விவகாரகருமரதனாயும் தானிருந்து பின்னர் கூறும் பிரகாரமாக மனத்தைச் செய்துகொள்ள வேண்டும்.

(சு.) விச்சையெனும் விழி = பிரஹ்மவித்தை விடயத்தில், நன்ருய் விளங்கப்பட்டு = பிரபுத்தமாய், வெம்மாய விடயத்தில் = பிரபஞ்சத்தில், மீட்சியெய்தி = அனுசந்தான ரகிதமாய், அதனாலே, எங்கும் = திருசியவஸ்துவில், பற்றென்பதில்லா, இயல்மனத்தோடு = தன்மனதால், இருப்பவரே = இத்தன்மையரா யிருப்பவர் முத்தராம். அது ஸ்ரீபகவானாற் சொல்லியருளப்பட் டிருக்கின்றது:—சர்வபூதங்களுக்கு நிசியேதகில் ஞானிசாக்கிரனுவன் எதிற்பூதங்கள் சாக்கிரமாமோ அது முனியான வறிஞனுக்கு நிசியாமென்பது. யாதொரு பொருளை யெல்லாவுயிர்களு மிருள்போற்காணு, வோதருஞானியத்தை யுளங்கையிற் கனி போற்காணும், யாதொருபொருளை யெல்லாவுயிர்களு மென்றுங்காணுங், காதலின் ஞானி யத்தைக் கண்ணினுற் றெரியக்காணன், என்பதாம். நிச்சயமாயென்பது முதலிய இரண் டன்ரீத்துவியும் ஒருவாக்கியம். எண்ணுவோ ஞகுமவன் = ஞானியான புருடன், எவற்றின் னாலும் நிற்பிலனுய் = சகலசய்ஞசஞ்ஞி யவஸ்தைகளை யுடையனுய், அனைத்துடனும் = சகல ஞானியோடுமன்றி மூர்க்கரோடு நிற்போனுகி, எச்செயலுஞ் செய்வோனுய் = நித்திய நைமித்திகாதி சகல கருமங்களையுஞ் செய்துகொண் டிருப்பவனுயினும், (10)

(ஸ்ரீ-வீர - அ-கை.) எவ்வாறெனில் இவ்வாரும் எனல்:—தொழில், சலன மென்பன.

தொழிலினினை விற்பொருளில் விண்ணின்மேல்கீழ் சூழ்திசையிற் புறப் போகத்தொகுதிதம்மில், இழிதருமைம் பொறிநடையி லுள்ளினிற்கு மின்னுயி ரிற்சென்னியிலா நநத்தினுவி, லழியுமுழி களின்மூக்கிற் புருவந்தன்னி லகங் கரத்திற் சிவனினுள் ளாகாசத்தில், விழிநனவிற் சொப்பனத்திற் சுழுத்திதன் னில் வெள்ளைமுத னிறமைந்தின் வியன்வண்ணத்தில்.

சலனத்திற் றிரத்திலடி நடுவிலீற்றிற் சமீபத்திற் றூரத்திற் சரீராங்கத்திற், பலபண்டந் தன்னிற்சே தனத்திற்சத்த பரிசாதி களின்மகிமை பயிலின்பத்தி, லுலவுவரத் திற்போக்கிற் காலப்பண்பி லொருசிறிதும் பற்றும லுணர்விலாறி, நிலவியகாண் பனசிறிது பயின்றுமெங்கு நிராசையாய்ப் பரசுகத்தி னிற்கு நெஞ்சே.

(ப - ரை.) தொழிலில் = சேஷ்டையில், நினைவில் = சிந்தையில், பொருளில் = வஸ்துவில், விண்ணில் = ஆகாசத்தில், மேல்கீழ் சூழ்திசையில் = அக்கிர அதோபு... ளில் திக்குகளிற் கொடிதிக்குகளில், புறபோகத் தொகுதிதம்மில் = பாகியபோக கூட் டங்களில், இழிதரும் ஐம்பொறி நடையில் = நிந்திதமாய ஐந்து புலன்களின் விடய... த்தி களில், உள்ளினிற்கு மின்னுயிரில் = அந்தரத்தில், இருக்குமினிய பிராணனில், ...ன்னி யிலாநநத்தில் நாவில் = மூர்த்தனத்தில் முகத்தில் ஜிஹ்வையில், அழியும் வி...ாகச்செமூக் கில் புருவந்தன்னில் = நசுவரமான நேத்திரங்களில் நாசியில் புருவத்திடையில், ...ங்க ரத்தில் சிவனினுள் ளாகாசத்தில் = அகங்காரத்தில் சிவனிடத்தில் விண்ணில், விழிநன வில் சொப்பனத்தில் சுழுத்திதன்னில் = ஜாக்கிரத்தில் கனவில் நித்திரையில், வெள்ளை முதல் நிறமைந்தில் = சுவேதமுதலிய ஐந்துவர்ணத்தில், வியன்வண்ணத்தில் = குணச முதாயத்தில் !

சலனத்தில் திரத்தில் அடிநடுவில் ஈற்றில் = அசைவில் அசைவின்மையில் ஆதியில் மத்தியில் கடையில், சமீபத்தில் தூரத்தில் சரீராங்கத்தில் = அண்மையிற் சேய்மையிற் றேகாவயவத்தில், பலபண்டம் தன்னில் சேதனத்தில் சத்தபரிசாதிகளில் = பதார்த்தத் தில் ஆன்மாவில் சப்தஸ்பரிச ரூபாதிகளில், மகிமையில் இன்பத்தில் = பெருமைசெறிந்த

ஆனந்தத்தில், உலவுவாத்தில் போக்கில் = உலவிவாரா நின்றகமன ஆகமனங்களில் = காலப் பண்பில் = காலகலைகளில், ஒருசிறிதும் பற்றுமல் = அற்பமும் சம்பந்தியாமல், உணர் வில் ஆறி = சித்தில் விசிராந்தியை யடைந்து, நிலவியகாண்பன சிறிதுபயின்றும் = புலப் படாநின்ற திருசியங்கள் அற்பம்பற்றியும், எங்கும் நிராசையாய்ப் பாசுகத்தில் நிற்கும் நெஞ்சே = எவ்விடத்திலும் நீரசமென்ன ஆத்மரசத்தில் அமைந்திருக்கும் மனம். ஏ-அசை.

(ஸ்ரீ - வீர.) கூறப்பெறும் சேஷ்டையே முதலாய்க்கால கலனையீறு யுள்ளவற்றில் மனத்தைப் பற்றுடையதாகச் செய்யத்தக்கதன்றாம்:—கண்டுச் சாத்தியவிடயங்களாய சேட் டைகளிலும், முடியக்கூடியவாய என்றபடி, சென்றவிடயங்களின் சிந்தைகளிலும், வர்த்த மான வஸ்துக்களிலும், ஆகாயத்திலும், கீழிலும் மேலிலும் இடையிலும், திக்குகளிலும் விதிக்குகளிலும்; ஆதிபௌதிகத்திலும், விஸ்தாரமா யநுபவிக்கப்பெற்ற களத்திர பிருத்தி யாதி விடயங்களிலும், அவற்றின் போகவடிவமாய இந்திரிய விருத்திகளிலும், ஆதியாத் மிகங்களிலும், பிராணனிலும் மூர்த்தன்யத்திலும் தாலுவிலும் யோகசாஸ்திரங்களிற் கூறப் பெற்ற, அவ்வக்காமிய சித்தி யனுகூல, தாரணை ஸ்தானங்களாய, பிராணமூர்த்தாதிகள் என்னும் அவற்றிலும் என்றபடி , புருவமத்தியிலும், நாசியின் ஈற்றிலும், முகத்திலும், தக்ஷிண அக்ஷிக்கருமணியிலும், அந்தகாரத்திலும், ஆபாசத்திலும், இவ்விருதயாம் பரத் திலும், ஜாக்கிரத்திலும் சுவப்பனத்திலும் சுழுப்தியிலும், சுத்தசத்துவ குணத்திலும் கறுப்பிலும் மஞ்சள் சிவப்பாதியிலும், குணசமாஹாரத்திலும், காரியவர்க்கத்திலும் காரண மாய அவ்வியக்தத்திலும், ஆதிமத்திய இதரங்களாய சர்க்காதி காலங்களிலும், தூரத்திலும் சமீபத்திலும் மேலிலும், என்னும் திக்குப்பரிச் சேதங்களிலும், நாமரூப சமாஹாரத்திலும், ஜீவனிடத்திலும், சப்தஸ்பரிச ரூபரசகந்தங்களிலும், விடயாபிலாஷைப் பரவசத்திலும், விஷய உபபோக பலங்களிலும், ஆகாசகமனாதி சித்திகளிலும், சென்றதையும் வருவதையும் உணர்வதிலும், சிரஞ்சீவியா யிருப்பதாதி சித்திகளிலும், மனம்பற்றிடாவாறு பயிலுக, நிச் சலமாகியமதியின் கண்ணே சாக்ஷியா யிருக்கின்ற கேவலசித்ரூபத்தே இளைப்பாறுதலை யடைந்து, பூமானந்தத்தே முழுகுவதாய், அதனுனேயாண்டுமே நீரசமுற்றதுபோல நிகழுக மனமே. போல என்றது அத்தகைய மனத்திதிக்கும் பொய்ம்மையை விளக்குதற் பொருட் டாம், இதன் கண்ணே ஸ்ரீ பகவத்திருவசனமு முளதாம்:—குறையுமாப் பிணிப்புற்றுலுங் கொண்டவிப் புலன்களெண்ணி, லறைகடலனைய நெஞ்சத்தவாவறு னறிவினில்லான் மறைமொழி பலவுமோர்தி யடக்குவான் மனத்தைவாங்கிப், பொறைகெடப் புலன்களாந்தும் பொறியிலே புகட்டுங் கண்டாய். என்பது.

(ச.) பலதொழில் = விவிதமான சேட்டைகளிலும், பலபொருளில் = விவிதமான விடயங்களிலும், நினைவில், மனம்பற்றுவது காரியமன்று, மற்றென்னெனில் ? காண்பன சிறிதுபயின்றும் = சிறிது திடசியா வலம்பியாயினும், உணர்விலாறி = சின்மாத்திரத்தில் விசிராந்தியுற்று, எங்கும் பரசுகத்தினிற்கும் = சொரூபானந்தானுபவ திருப்தியுள்ளதா யிருப்பது காரியமென்ப தந்நுவயம்; அவற்றில் = பலபொருளி லென்னும் இதனது விவர ணம் விவரணமென்பது பிரபஞ்சமென்பது விரித்துரைத்தல், விண்ணி லென்பதாதி, உள் = சரீரத்துக்குள், அதனது பிரபஞ்சமே வுயிரென்பதாதியால், மூக்கில் = நாசிநுனி யில், புருவந்தன்னில் = புருவங்களின் மத்தியில், சீவனில் = சிற்பிரதிவிம்பத்தில் உள்ளா காசத்தில் = இவ்விருதயாம் பரத்தில். மகிமைபயி லின்பத்தில் = மோகானந்த விருத்தி களில், ஒருசிறிதும்பற்றும லென்பதை விண்ணாதி யெவ்விடத்துங் கூட்டுக. மற்றிதற்கு முன்மே யுரையாயிற்று. மூலம்:—தாரகே = விழியில், தாரகா = கநீநிகா, இதற்குள்தா

மென் = கருமணிழை யுடையதாமெனத் தாரகசப்தம் அக்ஷிபரியாயமாம், உடைமைப் பொருளை யுணர்த்துஞ் சூத்திரமிதுவாம் " அர்ச ஆதிப்யோ அச் " (5-2-127) அர்சஸ் ஆதிசப்தங்களின் பரத்தில் அச்விகுதியாம், அர்சஸ் = குதவியாதி இவனுக்குளதாம் என அர்சஸ் + அ = அர்சச: ஆகிருதி கணமாமிது; மத்வர்த்தத்தில், அன்றுயினுேதகாரீ நிலையில் தாரக சப்தத்திற்கு ஸ்திரீலிங்கத்தன்மை யுண்மையின் தாரகே என்பது பொருந் துருதாம். (11-12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாறுய பற்றின்றிய சீவன்முக்தர் செய்யினும் செய்யா விடினும் தாக்கப்பெறுர் எனத்திருஷ்டாந்த பூர்வகம் அறிவித்தல்,—செப்பியவென்பது.

செப்பியவத் திறநின்று பற்றென்றின்றிச் சீவத்தன் மையைச்சேராச் சீவன் முத்த, ரிப்புவியிற் றெழிலெல்லாஞ் செய்கதீர்க வின்பவுணர் வன்செய்கை யியற்றினுலுந், தப்பறவே விட்டாலுந் தொழில்க டம்மாற் றருபயன்க ளொரு சிறிதுந் தாக்கமாட்டா, மைப்புயல்கள் பலவிதமா யெழுந்தபோதும் வானகத் திற் பற்றுத வகையேபோல.

(ப - ரை.) செப்பிய அத்திறம் நின்று=கூறிய அத்தன்மையுட னிருந்து, பற்றென்று இன்றி = யாதொருசங்கமு மில்லாமல், சீவத்தன்மையைச் சேராச் சீவன்முத்தர்=அஜீவத் தன்மையை அடைந்தவராய ஜீவன்முக்தர், இப்புவியிற்றெழில் எல்லாம் = இவ்வுலகின் கண்ணே சகல காரியங்களையும், செய்கதீர்க = இயற்றுக, அல்லது இயற்றுதொழிக, இன்ப உணர்வன் = ஆனந்த ஞானவடிவன், செய்கையியற்றினுலும் = காரியங்களைச் செய்தபோதினும், தப்பறவே விட்டாலும் = தப்பின்றி விட்டபோதினும், தொழில்கள் தம்மால் = வினைகளினுலே, தருபயன்கள் =ஈயாநின்ற பிரயோஜனங்கள், ஒருசிறிதும்= அற்பமேனும், தாக்கமாட்டா = சம்பந்தியா, மைப்புயல்கள் = கார்மேகங்கள், பலவித மாய் = நானுவிதமாகக் கர்ஜித்து, எழுந்தபோதும் = விரிந்து பெய்தபோதினும், வான கத்திற் பற்றுத வகையேபோல = ஆகாயத்திடத்தே சம்பந்தியாத தன்மையேபோலவாம்.

(ஸ்ரீ - வீர.) ஆண்டுறைபவனுய், சங்கமெலாந் தணந்தோனுய், பிரஹ்மத் தன்மையை அடைந்துள்ள ஜீவன்முக்தன், இவ்வெல்லா விவகாரத்தையும் பண்ணுதொழிக பண்ணுக தான்; தனதான்மாவிலேயே பிரியமுள்ள அச்சீவன்முக்தன் கிரியைகளைச் செய்தபோதி னும் செய்யாதபோதினும், கிரியாபலன்களோடு சம்பந்தமே யடைவதில்லை. அம்புதங்க ளோடு சம்பந்தமுறுத வாகாயமேபோல.

(ச.) அத்திறநின்று = ஆன்மநிட்டனுய், சீவத்தன்மையைச் சேரா = ஜீவன்முக்தத் தன்மையை யடைந்த, சீவன், தொழிலெல்லாஞ் செய்கதீர்க = செயலிலாமைகளில் விசேஷமின்றென்பது பொருள். விசேடாபாவத்தைக் கூறல், இன்ப உணர்வினில் = ஆன்மரதியுள்ளஜீவனில், தொழில்கள் = விகிதநிடேத காரியங்கள், பயன்கள் = சுவர்க் காதிகள். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அறிவே வடிவமதாகிய பெரியோன், செறிவான் எனினும் சிறிதுங்கலங்கான் எனல்:—அன்றியே யென்பது.

அன்றியே யதுதனையுந் தீரநீக்கி யறிபொருளின் முடிவான வறிவாற்றுன்னி யொன்றுமுப சாந்தனுய்ப் பளிங்குபோலுள் ளொளிமேவிச் சீவனெரு மித்து நிற்ப, னுன்றுணர்சிற் சுகராகிப் பெரியோராகி ஞானபர ராய்ப்பரம நன்றுய்ப் பெற்றோர், நின்றசைவார் புறத்தின்மயிற் பீலிபோல நிலைகலங்கார் மேருவைப் போ லனுஞ்சினுள்ளே.

(ப - ரை.) அன்றியே = அல்லது, அதுதனையும் = அதனையும், நீக்கி = அடியோடகற்றி, அறிபொருளின் முடிவான அறிவாற்றன்னி = திருசியத்தின் அந்தமான சித்துவடிவமேயாகி, ஒன்றும் உபசாந்தனாய் = பொருந்தாநின்ற பரமசாந்தியை யுடையவனாய், பளிங்குபோல் = ஸ்படிக மணியைப்போல, உள்ளொளிமேவி = ஆந்தரப் பிரகாசத்தையடைந்து, சீவனொருமித்து நிற்பன் = சீவன் ஒருமைபெற்று நிலைப்பன், நன்றுணர் சிற்சுகராகிப் பெரியோராகி = உண்மையை யுணர்ந்த ஆன்மராமராய், மகாத்மாக்களாய், ஞானபராராய் = ஞானதற்பராராய், பரமம் நன்றாய்ப் பெற்றோர் = பரம்பொருளை ஐயந்திரிபற அடைந்தவர், நின்றசைவார் புறத்தில் மயிற்பீலிபோல = சொரூபநிலையில் இருந்துகொண்டே பாகியத்தில் மயிலின் றேகைபோல, விவகரியாநிற்பர், நெஞ்சினுள்ளே = மனத்தின் கண்ணே, மேருவைப்போல் நிலைகலங்கார் = சுமேருபர்வதம்போல தங்களுடைய ஸ்திதியைவிட்டுச் சலனமுறார்.

(ஸ்ரீ - வீர.) அல்லது முன்மொழிந்த புத்திசாக்ஷித் தன்மையாகிய அதனையும் விடுத்துச் சாந்த சிற்கனனாகி, அதிசாந்தனாய்ச் சீவன்முக்தன் தன்பான்மாத்திரம் ஒளிராநின்ற மணியேபோல இருந்துவாழ்வன். ஹே இராமபத்திர ! ஆன்மாவின் கண்ணே பரமானந்த பதவியையடைந்தவனாகி, சததோதித ஆன்மாவாகி, இலங்கும் ஜீவன்முக்தன் விவகரித்த போதினும் விவகாரபலேச்சா சூனியனாகி, சங்கநிமித்த அவித்யாகாம கர்மவாசனைச் சூனியத்தன்மை யேதுவானே, கரும உற்பவமான பலத்தோடு சங்கத்தை யடையமாட்டான், மற்றே, பிராரப்த க்ஷயபரியந்தம் தேகபாரமாத்திரத்தைச் சகிப்பவன்போலாவன் "அவனுக்கத்துணையே நெடும்போதாம், இவண் எத்துணைநகர் வெறியுகிலானே, சிவனுற்றிடும் பினஞ்சென்மமுமிலையே" என்பதாதி சுருதியுண்மையின். தேகப்பாரம் சகித்தற்குதாகரணம் ஸ்ரீ கணேசகீதை:—உடன்மாத்திரம் பூபவொன்றே யுறுவார், மடமோடு மணிச்சம மாழையர்காண், டிடமாவிவர் பாக்கியர்தே வெனக்கும்; உடையார் விழிகாணவுவப்புடையோய்" உடன்மாத்திரத்தைத் தாங்கியவர் என்றருளியதானே கந்தைகமண்டலம் தண்டம் பாதுகை முதலியவற்றையும் தரிக்கமாட்டார் என்றருளியதா மென்க. இக்கருத்து அஞ்ஞவதைப் பரணியின் கண்ணும் காணலாம்:—அலைபொரும லொருகாறலையெடாதமைவரே, யருள்பொரும லொருகாவருவிபாய் நயனரே, கலைபொரும லொருகோவணவராய் விடுவரே, கவலைதீர்பலிகொணின் கரகபாலியர்களே. பெரியோர், ஆன்மாராமராய், மகாத்மாக்களாய், மிக்குணர்ந்தோராய், பரமோதயராய் இலங்கிவெளியே மயிலிறகின் அக்கிரமென்னத் தரளரேயாயினும், உள்ளே மேருகிரியென்ன அசலரேயாவர்.

(ச.) அறிபொருளில் அதுதனையும் = காண்பன சிறிதுபயின்றும் என்று முற்கூறிய அத்திருசிய சம்பந்தத்தையு மென்பதுபொருள் = முடிவான அறிவாற்றன்னி = சம்சாந்த சிற்கனனாய், நிர்விகார சித்ரூபனாய், உள் = ஆன்மாவில், சிற்சுகராகி = ஆன்மாவின் கண்ணே விசிராந்தியடைந்தவராய், பெரியோராகி = மகான்மாக்களாய், புறத்தின் = வாகியேந்திரிய வியாபாரத்தில், மயிற்பீலிபோல் = மஞ்ஞையிறகு நுனிபோல், நின்றசைவார் (நின்றசையா)= அசைபவராய்க் காணப்படுவர், நெஞ்சினுள்ளே = அந்தக்கரணத்தில், மேருவைப்போல் நிலைகலங்கார் ஆன்ம நிஷ்டையினாலென்க. (14)

(ஸ்ரீ-வீர - அ-கை.) எத்துணையு மிவன்தன்பால் உட்பற்றுறாதவனாவனோ அத்துணையும் வெளிகளில் அசம்சக்தியானது துர்லபமேயாம், ஞானபரிபாக உத்கர்ஷத்தானே ஆத்மசக்தியுத்கர்ஷக்கிரமமாக சம்சங்கம் க்ஷீணமாம், ஆகவேயிவன் சாக்கிரத்திலேயே சுழுப்தியுற்றவனாக இருப்பன்; எப்போது இவன் பரமாத்மாவின் பிரபோதமுற்றுக் கலனாஹேற்றுக்

ளாய மில்லானே, விடுபட்டவனாய்த் தியானமில்லாவிடினும் நிரதிசயானந்த ஆன்மாவின் சுவதஸ்புரணத்தானே நிர்விகற்ப சமாதியிற்போல எப்போதுமே ஆன்மத்தியான மயனைப்போலச் சங்கமத்தினனாவனே, அப்போது சுவசக்தனாவனெனப்பெறுவன், என்னுமிலக்கணம் வாய்ந்த இவனது சுவசம் சக்திருஷ்டியில், பரிணதனாகிப் பிரியாப் பிரியத்துவந்துவமற்றவனாய் நித்தியமத்தமய உதயமற்றவனாய் வாழ்வன் என்பதில் ஜாக்கிரத்திலேயே சுழுப்தியிலிருப்பவனாவன் என யாதோதப்பெற்றதோ அதனைத் தெளிவிக்கின்றார்:— அறிவென்பது:

அறிபொருளை விட்டகன்றா லழியுஞ்சித்த மந்தநிலை வியாபார மனைத்துமில்லாச், செறிநனவிற் சுழுத்தியா மிதனை நாளுந் தீராத பரிசயமே செய்யச்செய்யப் பிறிவின்முதி துரியமா மென்பர்மேலோர் பிழையிலா விதனிலே நிலைமைபெற்றுக், குறியறுமா நந்தவேகாந்தசீலக் கொள்கையா லனாநந்தங் கூடுமன்றே.

(பு. - ரை.) அறிபொருளை விட்டகன்றால் = திருசியத்தை விட்டுவிலகினால், அழியும் சித்தம் = மனமானதுகெடும், அந்தநிலை = அந்தஸ்திதி, வியாபாரம் அனைத்துமில்லாச் செறிநனவிற் சுழுத்தியாம் = விகற்பங்களியாவு மிறந்தபொருந்திய நனவிற்றுயி லாதலாம்; இதனைநாளும் தீராதபரிசயமே செய்யச்செய்ய = இந்நிலையை யகர்நிசமும் அப்யாசமே இடைவிடாமல் நன்குசெய்து கொண்டேவரவர, பிறிவின்முதி துரியமா மென்பர் மேலோர் = மாறாது முதிர்ந்துள்ள துரியமாம் என்று அறிஞர்கூறுவர், பிழையிலா விதனிலே = குற்றமற்ற இது தன்னிலேயே, நிலைமைபெற்று = ஸ்திதியையடைந்து, குறியறுமாநந்தவேகாந்த சீலக்கொள்கையினால் = அபரிச்சின்ன ஆனந்த ஏகாந்த சீலத்தன்மையினால், அனாநந்தங்கூடும் = அநாநந்த பதங்கூடும்; அன்றே = அப்போதே, அல்லது அசை நிலைகள்:

(ஸ்ரீ. - வீர.) க்ஷீணசித்தம் உடையவர்கட்குச் சித்ததசாஹீனசித்தத்தில் எத்திதியுளதாகின்றதோ அது ஜாக்கிரத்தின் கண்ணே சாந்தகலனைமேய சுழுப்தத்தன்மையாம் எனப்பெறும்; அற்றேல் அறிஞர்கட்கு எப்போதுமே துரியஸ்திதி பொருத்தமுடையதாம், சுழுப்தியுடையவராயின் அஃதெங்ஙன மேலுமெனக் கடாவ விடையளித்தல்:—இதனையென்பதாதி இச்சௌஷுப்தியேயாயஸ்திதியே அப்பியாச யோகத்தானே பிரௌடமெய்தவே துரியமெனத்தத்துவ முணர்ந்த பெரியோரால் உரைக்கப்பெறும், ஆயின் சௌழுப்தி ஸ்திதியென்று கூறியதற்கு யாதுகொலோ அபிப்பிராயமெனின்? கேட்டி! ஆநந்தமயனாகவேயுள்ளே சகல ஆமயங்களும் அத்தமிக்கப் பெற்றவனாகி, அத்தியந்தம் அத்தமித்த சித்தத்தனாகி, ஞானியானவன் மகோதயத்தை யுறுவன்; நிர்த்துக்கத் தன்மையோடுகூட நிரதிசய சுக ஐச்வரியமுடைமை சௌழுப்த ஆனந்தமயத்தி லிருத்தலின் அதனைக்கூறும் விழைவினால் அவ்வாறு கூறியதாம் என்க. இத்துரிய அவஸ்தையின் கண்ணே அவிநாசினியாய ஸ்திதியையடைந்து ஆநந்த ஏகாந்தலீனத் தன்மையால் அநாநந்தபதம் அடைந்தவனே யாவன்.

(ச.) சித்தம், அறிபொருளை விட்டகன்றால் = திருசிய சம்பந்தமுள்ள விருத்திகளோடு விடுபடுமாயின், அழியுஞ் சித்தமென்றுங் கூட்டுக, க்ஷீணவிருத்திச் சித்தத்திதி, வியாபாரமனைத்துமில்லா, வாசனை யுபசாந்தமாம், அந்தநிலை = அத்திதியே, நனவிற் சுழுத்தியாம், முதி = முதிர்ந்ததாய், துரியமென்பர், = துரிய அவஸ்தையென்பர், சாக்கிரத்தாதி விலக்ஷணமாதலால் அம்மூன்றைக் குறித்துத் துரியமாதலின் என்க. பிழையிலா நிரபாயமான, ஆநந்த = ஆநந்தமென்னும், ஏகாந்தம் = நியதமான, சீலம் = சுபாவமுடைய, அன்றி,

ஆனந்த = ஆநந்தத்தையே, ஏகாந்தமாய்ச் சேவிக்கும் அப்பியாசிக்குங் கொள்கையால், நிரந்தரமா நந்தான்மகமாதலின், அநாநந்தம், சொரூபாதிரிக்த ஆநந்தரகிதமான பிரம்பா வத்தை யடைந்தவனாய் என்பது பொருள். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் ஜீவிக்குங்காறும், அவனுக்குத் துரியத்திதியைக்கூறி ஈற்றில் விதேகனுக்குத் துரியாதீதத் திதியைக்கூறல்:—அத்வென்பது.

அந்தவனா நந்தமா நந்தமென்னு மறிவினதீ தந்தன்னை யடைந்துளோனைத், தொந்தமிலா யோகியெனச் சொல்லலாகுந் துரியாதீதந்தனையுந் துன்னினோனும் பந்தமுறு பவம்போய்த்தா மதத்தால்வந்த பலவபிமானங்கள்போய்ப் பரம வின்ப, நந்தலிற்றன் மயமாஞ்சற் பரவந்தன்னி னன்னீரி லுப்புப்போ னன்று யொன்றும்;

(ப - ரை.) அந்த அனானந்தம்மாஆநந்தம் என்னும் அறிவின் அதீதந்தன்னை = அவ்வனாநந்த மகாநந்தம் என்று சொல்லப்பெற்ற உணர்வின் அதீதத்தகைமையை, அடைந்துளோனை = பெற்றுள்ள பெரியோனை, தொந்தமிலா யோகியெனச் சொல்லலாகும் = துவந்துவங் கடந்தமகா யோகியென்க் கூறலாம், துரியாதீதந் தனையுந்துன்னினோனும் = துரியாதீத நிலைமையையும் அடைந்தவனாவன், பந்தமுறு பவம்போய் = பந்தந்தந்து வந்தஜன்ம பாசமகன்று, தாமதத்தால்வந்தபல அபிமானங்கள்போய் = தமோமயத்தினின்றும் எழுந்துவந்த பலவித அபிமானங்களும்போய், பரம இன்யநந்த விற்றன்மயமாஞ் சற்பாவந்தன்னில் நன்றுயொன்றும் = மகாத்மாவானவன் பரமரசம்யமான சத்தையை நன்றாக அடைந்திடுவன், நன்னீரில் உப்புப்போல் = ஜலத்திலிட்ட சைந்தவ கண்டங்கஸரைந்து ஜலமாகியே யிருத்தல்போலவாம்;

(ஸ்ரீ - வீர.) அநாநந்தம் அவஸ்தாத்திரயபதம் அதனைக்குறித்துத் துரியபதம் மகாநந்தம் எனமலரப்பெறும், அது ஜீவன்முக்தனுக் கெப்போதுமே உளதாம்; விதேகமுக்தியிலோ அநாநந்தஸ்மரணங்கூடாமையின் அதனைக்குறித்து மகத்துவகலனை கூடாமையின் அதைக் கடந்தவனாவன், அதனானேயே முந்தன் துரியாதீத பதமடைந்தவனென்று கூறப் பெறுவன். அந்தஸ்திதியையே வருணித்துக்கொண் டுபசங்கரித்தல்:—பந்தமென்பதாதி. சகலதமோமய அபிமானங்களும் சாம்பினோ ஞகவினனே, விட்டு விலகிய சமஸ்தஜன்மஹேதுவாகிய காமகர்ம வாசனாபாச முகாத்மா, ஜலமுற்ற சைந்தவ கண்டமானது பேருருவற்றுக்கரைந்து இரசனைக வேத்தியாம் சம் ஆகிநிற்றலேபோல, பரமானந்த இரசமயமாகிய பரசத்தை மாத்திரமே யென்னும் பாமார்த்தஸ்திதியை நன்கு அடையாநிற்பன்;

(ச.) அதன்பின், அநானந்தம் = பிரஹ்மானந் தானுபவரகிதன், மகாநந்தம் = மகாநந்தானுபவி, என்னுமறிவினதீதந்தன்னை யடைந்துளோனை = என்னும்முபய கக்ஷியினும் அப்பாற்பட்டவனை, நிர்விகற்பமதாகப் பிரஹ்மநந்தத்திற் சமரசபாவத்தினை லென்க. ஆகலின் அத்தகையயோகி துரியாதீத பதமடைந்த முக்தன் எனப்பெறுவன், துரியாதீதன் முக்தன் என்றுசொல்லப் பெறுவன்: துரியன் துரியாதீதன் என்பதும் சவிகற்பக நிர்விகற்பக சமாதிகளையுடைய ஜீவன்முக்தர்களது நாமங்களாம், அவற்றிற் சாக்கிராதாதியவஸ்தாத் திரயத்தையும், அவைகளி னபிமானிகளான விசுவதைஜச பிராஞ்ஞரூபாகிய ஜீவரையும் தனக்குவேறாகக்கண்டு அவைகளின் சாக்ஷியான சித்தத்துவத்தையே ஆன்மசொரூபமென்று அனுசந்தானஞ் செய்பவன் துரியன் எனப்பெறுவன். அவ் விகற்பரகிதனான சின்மாத்திரரூபன் துரியாதீதன் எனப்பெறுவன், பவமுற்று சகலஜன்ம வேதுக்களான, பந்தம்போய் = மலகருமாதி பாசங்கணீங்கினவனாய், தாம

தத்தில் வந்த = அஞ்ஞான ஜந்யமான, பலவபிமானம்போய் = தேகேந்திரியாதியில் யானென்னதென்னும் அபிமானமற்ற மகான்மா, பரமவின்பமயமாம் = பரமானந்தரூபமான சற்பாவந்தன்னினன்று யொன்றும் உப்பு = இலவணகண்டம், நீரில் = ஜலத்துக்குளிடப் பட்டதாய், பரம் = மேலான, இன்பமயமாம் = இரதமயமாகிய, திரவரூபமான, சற்பாவந் தன்னில் = சொரூபசத்தையில், நன்றுயொன்றும், அதுபோலென்பதாம். (16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜடாஜடாதீத பிரஹ்மத்தைப் பிருகதாரண்யாதி சுருதிகளே பிரத்தியக்-குவட்டிவமெனப் பிரதிபாதிக்கின்றன வெனல்:—சடமென்பது.

சடமசட மெனுநோக்க மிரண்டினூடே தனியாகி நின்றபர தத்துவத்தை, யிட்டியபோர்தாரண்ய முதலாம்வேத மிராமனே பலகாலு மியம்புமன்றே, படரு காண் பனகாட்சி மேவும்போதிற் பரம்பொருளின் பற்றுகிப் பயின்ற வின்பந், திட்டவநுபூதியின்வடிவமாதலாலே திகழ்பிரம சாரமெனச் செப்புந்தானே.

(ப - ரை.) சடம் அசடம் எனும் நோக்கம் = ஜடாஜடமென்னும் நாட்டம், இரண்டினூடே தனியாகி = இரண்டின் மத்தியிற் கேவலமாகி, நின்ற பரதத்துவத்தை = நிதி பெற்ற பாரமாத்மிக தத்துவத்தை, இட்டியபோதாரண்ய முதலாம் வேதம் = ஞானதானப் பிருஹதாரண்யாதி யுபநிடதங்கள், இராமனே = இராகவனே, பலகாலும் = அநேகமுறை யாகவும், இயம்பும் = பிரதிபாதிக்கும், படருறுகாண்பன காட்சிமேவும்போதில் = விசால மாகிவாராநின்ற திருசியதரிசன சம்பந்தம்விரவுங்கால், பரம்பொருளின் பற்றுகி = பரமாத்ம வஸ்துவின் சம்பந்தமாகி, பயின்ற இன்பம் = உண்டாகிய சுகம், திட அநுபூதியின்வடிவாம் ஆதலாலே = திரமாய அநுபூதியின் மயமாம் ஆகையினுலே, திகழ்பிரம சாரமெனச் செப் புந்தானே = தன்னுடைய சொரூபமேயாகி விலங்காநின்ற பிரஹ்மம் சாரமெனச் சாற் றப்பெறும்.

(ஸ்ரீ-வீர.) அஞ்ஞானவதன் சாக்ஷிகளின் ஆந்தராளிகமா யிராநின்ற சாபாசமான மன மான்துயாதனதோ, பாரமாத்மிகமாய அவ்விதுவே நானுத்தன்மையை யடைந்து, ஜீவ புத்திமன சித்த அகங்காராதி நானுநாமங்களானே விரிந்துனதாம். பரமான்மாவிற்கே யுபா திப் பிரவேசத்தானே ஔபாதிக நானுநாமங்களின் இலாபத்தில் அருமறையை யளவை யிடல்:—இட்டிய என்பதாதி. யாதின்பொருட்டுச் சர்வசாஸ்திர ஆரம்பமாமோ, எதன் கண்ணே இயல்பதாய் அவித்தையானே கர்த்தாகிரிபை பல அத்தியாரோப மாக்கப்பெற்ற தாமோ, எல்லாவுலகிற்கும் யாதுகாரணமாமோ, எதன்வடிவமாய நாமரூபங்கள் சொச்ச மாய சலிலத்தினின்று மென்ன பேனமாய மலமென்ன, அவ்வியாகிருதங்களாய் வியாகிரு தங்களாமோ, யாதுதான் அந்நாமரூபங்களி னின்றும் விலக்ஷணமாமோ, தானுகவேநித்திய சுத்தபுத்தமுத்த இயற்கையதாமோ அவ்விதுவே அவ்வியாகிருத ஆத்மபூத நாமரூபங்களை வெளிப்படுத்தி, பிரஹ்மாதி ஸ்தம்பபரியந்தமாய தேகங்களில் ஈண்டுக்கருமபல ஆசிரயங்க ளாய்ப் புசிதாகமுடைய அவற்றிற் புகுந்ததாம். அற்றேல், பரனுகிய வியாகர்த்தாவால் வியா கிருதமாகிய உலகமெல்லாம் எப்போதுமே எவ்விடத்திலுமே வியாபிக்கப் பெற்றுளதாம், யாங்ஙனம் ஈண்டு பிரவேசிக்கப் பெற்றதென்பது கற்பிக்கப்பெறுதல் கூடும்? அப்பிர விட்டமான இடமன்றே பரிச்சின்னத்தானே புகுதற்குக் கூடியதாகும், புருடனுற் கிரா மாதிபோலும், ஆகாசத்தானே சிறிது இல்லையன்றே, நித்தியப் பிரவிட்டத்தன்மை யுண் மையின், பாடாண சர்ப்பாதிபோலும் தருமாந்தரத்தானே யெனின்? ஆயினும், பரஆத்மா தன்னுருவத்தானே புகுதலாகாதாம், ஆயின் என், காரியத்திலிருந்தே தருமாந்தரத் ஜீவப்

பெயரிய) தானே உண்டாம், அதனுற்புகுந்ததென் றுபசரிக்கப்பெறும், பாஷாணத்தில் சகஜமாகவே யுள்ளிருக்கும் சர்ப்பம்போலேனும், தேங்காயிற் றேங்குந் தோயம்போலேனு மாம்; எனின் ? கூடாதாம், அது சிருட்டித்து அதுவேபுகுந்தது என்னுஞ் சுருதியான், எவன் சிருஷ்டித்தான் அவன்வேறு வடிவமடையாமலே காரியஞ் சிருஷ்டித்துப் பின் புகுந்தனன் எனவன்றோ கேட்கப் பெறுகின்றது, எவ்வாறு உண்டு செல்கின்றான் என்புழி உண்ணல் செல்லல் வினைகட்கு முற்பிற்போதுகளில் இதரேதர விச்சேதனும் அவிசிஷ்டனும் ஆயகருத்தாவாவனே, அவ்வாறே ஈண்டுமாம், காரியத்தி லிருப்பதற்கே பாவாந்தர உபஜனனமாகியவழி இது சம்பவியாதன்றோ ! ஸ்தானாந்தரத்தோடு வியோகமாகிஸ்தானாந்தர சையோக வடிவப்பிரவேசம் நிரவயவமாய் அபரிச்சின்னமானதற்குக் கண்டதில்லையாம்; சாவயவத்திலேயே பிரவேச சிரவணத்தான் எனின், அன்றும், "திவ்வியமேயா மமூர்த்த மெய்ப்புருடன் (அமூர்த்தத்வம் = நிரவயவத்வம், புருஷத்வம் = பூர்ணத்வம்) நிஷ்கலம் நிஷ்கிரியம்" என்பதாதி சுருதிகளான்; சர்வவியபதேசிய தர்மவிசேஷப் பிரதிஷேத சுருதிகளானும்; பிரதிபிம்பப் பிரவேசம்போலும் எனின், வேறுபொருளோடும் விலகியிருத்தல் கூடாமையின்; பொருளின் மாட்டுப் பண்பு புகுதலேபோலும் எனின் ? பொருந்தாதாம், பற்றியிருத்தல் படராமையின்; நித்தியபாதந்திரமேயாய் ஆசிரிதமாய குணத்திற்குத் திரவியத்திற் பிரவேச முபசரிக்கப்பெறும், பிரஹ்மத்திற்குச் சுதந்திரமா யிருத்தல் சிரவணிக்க வருதலின் அவ்வாறு பிரவேசம் அமையாமையின். கனியில் விரைகடுப்ப வெனின்? சாவயவத்வ விருத்திக்ஷய உத்பத்தி விநாசாதிதர்ம வத்துவ வழக்காதலின். இவ்வாறுய தருமமுடைமை பிரஹ்மத்திற் கிலதேயாம்; அஜன் அஜரன் என்பதாதி சுருதி நியாயவிரோதத்தான். ஜன்மாதி தருமங்கட்குத் தருமியினும் பின்னத்வ அபின்னத்வ அசம்பவாதி நியாயம், பீஜபலங்கட்கு அவயவ அவயவித்வம், பாஷாணசர்ப்பங்கட்கு ஆதார ஆதேயத்தன்மை யெனக் கூறியது கூறவில்லையாம். அயலேயாய பரிச்சின்ன சம்சாரி ஈண்டுப்புகுந்தனன் எனின் ? ஆகாதாம், அவ்வித்தேவதை நோக்கிற்றெனத்தொடங்கி நாமரூபங்களை வியாகரணிப்பேன் என்பதாக வதற்கே பிரவேசவியாகரண கருத்துருத்துவ சுருதியிருத்தலின்; அவ்வாறே அது சிருஷ்டித்து அதுவேபுகுந்தது, அது இதேயெல்லையைப் பிளந்துகொண்டு இத்துவாரத்தால் அடைவுற்றது; எல்லாருபங்களையுமே தீரன் இயைத்து நாமங்களையுமே யியற்றி, நல்லாவுரைத்து நனியிருப்பானே" நீகுமாரன் அலது நீகுமாரி நீஜீரணன் வஞ்சிப்பை தண்டத்தால்;" புரமியற்றியது துவிபதம், ரூபம்ரூபம்" எனவும்மந்திர வருணத்தான். பரத்தினும் அயலானதற்குப் பிரவேசம் கூடாதாம். ஜகத்திற்கோ பரனேசிருட்டா என்பது வேதாந்த மரியாதையாம், சிருஷ்டாவேதான் பிரவிஷ்டா, பிரவேசித்து வியாகரிப்பேன் என்று பிரவேச வியாகரணங்கட்கு ஏககருத்துருத்துவ சுருதியுண்மையின், ஆகையால் பரத்தினும் அயலாயதற்குப் பிரவேசம் யுக்தியுடையதாக வாகாதாம் என்பதுகருத்து. புகுந்தவைகட்கு இதரேதரபேத முண்மையின்பர அநேகப்பான்மையாம் எனின் ? ஆகாதாம். ஒருதேவன் வெகுவகையாகப் புகுந்தனன், ஒருவனுகியே வெகுவாக விவகரித்தலைவன், பலவற்றிற் புகுந்தவன் நீயொருவனுவாய், சர்வ பூதங்களிற் கூடனுமேகதேவன், சர்வவியாபி சர்வபூதாந்தராத்மா, என்பதாதி சுருதிகளானே என்க. புகுதல் பொருந்துமோ பொருந்ததோ என்பதுநிற்க, முதலிற் புகுந்தவைகட்குச் சம்சாரித்தன்மை யுண்மையின், அதன் அனன்யத்தன்மை யுண்மையினனே பரனுக்குச் சம்சாரித் தன்மையாம், எனின், ஆகாதாம், புசிபானுதிவிழைவுகடந்த சுருதியுண்மையின். சுகித்வதுக்கித்வாதி தரிசனத்தானேகூடாதாமெனிற் கூடாதாம், பாகியன் பற்றுறுன் லோகதுக்கத்தால் எனமறையறைதலின்; காக்ஷியாதி மூரணுற் பொருத்தமுருதாம் எனின், பொருந்தாதாம், உபாதியாசிரய ஜனிதவிசே-

விடயத்தன்மை யுண்மையின் காக்ஷியாதிகட்கு, உபாதி = அந்தக்கரணம், அதனுசிரயத்
தன்மையானே ஜனித்த விசேடம் சிதாபாசன், அவன்பாலுற்ற துக்காதி விடயத்தன்மை
யாற் பிரத்தியக்ஷாதிகட்கு ஆபாசத்தன்மையான், அதனால் ஆன்மாவின்கண் ணசம்சாரித்
தன்மை யாகமத்திற்கு விரோதமில்லையாம் என்பதுகருத்து. திருஷ்டிக்குத் திருஷ்டா
வைக் காணாய், அறிபவன் றன்னையரே யெதனாற்றான் அறிதலாம், என்பதாதி சுருதிக
ளானே, ஆன்மவிடயம் விஞ்ஞானம் ஆகாதாம், ஆயின் என், புத்தியாதியுபாதி ஆத்மப்பிர
திச்சாயை விடயமே, சுகிதனியான் துக்கிதனியான் என்பது போன்றதாதி பிரத்தியக்ஷ
விஞ்ஞானம்; இதுயான் என்னும் விடயத்தோடு விடயிக்குச் சாமானாதிகரண்ய உபசாரத்
தானே, அதனினும் அயலாயக் காண்போனில்லை என்றன்னியாத்மப் பிரதிஷேதத்தானே
யும், தேகாவயவ விசேஷ்யத் தன்மையானும், சுகதுக்கங்களின் விடயதர்மத்வமாம். ஆன்
மாவினுடைய காமப்பொருட்டே, யென்னும் ஆன்மார்த்தத்வ சுருதியின் அயுக்தமாமெ
னின், ஆகாதாம், யாண்டுதான் அன்னியம்போலாமோ வென அவித்யாவிடய ஆன்மார்த்
தத்வ அங்கீகாரத்தான், ஆண்டெதனானே யெதனைக்காண்பன், ஈண்டற்பமும் நானாவில்லை
யாம், ஆண்டென்மோகம் சோகந்தானென், ஈண்டேகத்வ மினிது காண்பவற்கே, என்ப
தாதியானே வித்யாவிடயத்தில் அதன் பிரதிஷேதத்தானும், ஆன்ம தன்மத்தன்மையாகா
தாம், தார்க்கிகசமய விரோதத்தானே பொருத்தமின்றா மெனிற் பொருத்தமின்றாம்,
ஊகத்தானும் ஆன்மாவிற்குத் துக்கித்தன்மை பொருந்தாமையின், துக்கமாகிய பிரத்தியக்ஷ
விடயத்தானே ஆன்மாவிற்கு விசேடியத் தன்மையாகாதாம், பிரத்தியக்ஷ அவிடயத்தன்
மையான்; ஆகாசத்திற்குச் சத்தகுண முடைமைபோலவே ஆன்மாவிற்குத் துக்கித்தன்மை
யாம் எனின், ஆகாதாம், ஏகவுணர்வின் விடயத்தன்மை கூடாமையின். சுகக்கிராககப்
பிரத்தியக்ஷ விடயப்பிரத்தியயத்தானே நித்திய அநுமேய (ஜரந்நையாயிக மதம்பற்றி)
மாய ஆன்மாவிற்கு விடயீகாணம் பொருந்துறாதாம். அதற்கும் விடயீகரணமேல் ஆன்மா
விற்கு ஏகத்தன்மை யுண்மையின் விடயி அபாவவழக்காம்; சுகாதிபோலும் ஆன்மாவிற்கும்
காக்ஷியானே விடயீகரணமாவதுடன், ஒருடம்பில் அதனைக்கிய சம்மதியாயின், வேறான்
மாவிற் காண்டுப் பொருத்தமின்மையின், ஓரிடத்தில் இரண்டு போக்தாக்கள் இட்டமுறா
மையின் புருடாந்தரனுக்கும் அன்னியன் பொருட்டு அப்பிரத்தியக்ஷத் தன்மையுண்மை
யின், காண்போன் இன்மையின் ஆன்மதிருசியத்வ அசித்தியென்பதாம். ஒன்றினுக்கே
விஷயவிஷயித் தன்மையாம் தீபம்போலு மெனின்? ஆகாதாம், ஒரேபோத சம்பவத்தான்,
ஆன்மாவின் கண்ணே அம்சம் பொருந்தாமையினானும் என்றுணர்க. இதனானே விஞ்ஞா
னத்திற்குக் கிராகிய கிராககத்தன்மை மறுக்கப்பட்டதாம். பிரத்தியக்ஷ அனுமானவிடயங்
களேயாய துக்க ஆன்மாக்கட்குக் குணகுணித் தன்மையில் அனுமான மிலதாம், துக்கத்
திற்கு நித்தியமுமே பிரத்தியக்ஷ விஷயத்தன்மையின் ரூபாதிசாமானாதி காண்யத்தானும்
என்க. துக்கத்திற்கு ஆன்மாவின் கண்ணே மனச்சையோகஜத்வ மங்கீகரிக்கப் பெறினும்,
ஆன்மாவிற்குச் சாவயவத்தன்மை விக்கிரியையுடைமை அநித்தியத் தன்மை வழக்காதலின்,
விகாரப்படுத்தாமற் சையோகியாத விலதாம், எக்குணமேனும், திரவியத்தை விகாரப்படுத்
தாமல் ஆதலேனும் போதலேனும் எங்கேனும் கண்டதுண்டுகொல்? இலையாம். யாண்
டும் நிரவயவம் விக்கிரியமாணமெனக் கண்டதிலையே யாம், அநித்திய குணாசிரயர்தானாதல்
நித்தியம் பார்த்திலேம்; ஆன்மா பரிணாமியல்ல, நிரவயவத் தன்மையான், நபம்போலும்
என்றும், ஆன்மாகுணியல்ல, நித்தியத்தன்மையான், சாமானியம்போலும் என்றும்தெரிந்து
கொள்க. ஆகமவாதியர்களானே ஆகாசம் நித்தியமதாக அறியப்பெறுவ தாகாதாம், அன்
னியதிருஷ்டாந்தமோ அமைவது மாகாதாம், மும்மையணுக்கள் ஒழிந்து அணுக்கள் இல

வாம், திக்குக்ககனத்தடக்கம், காலத்திற் குற்பத்தி சுருதியுளதாம், உற்பன்னமாய மனமோ
அன்னமயமாம். விக்கிரியமாணமாயினும் அவ்வுணர் வகலாமையின் நித்தியமேயாம் எனின்?
ஆகாதாம், திரவியத்திற்கு அவயவ அயலாருதல் இல்லாமல் விக்கிரியை கூடாமையின்
சாவயவத்தன்மை யிருப்பினும் நித்தியத்தன்மையாம் எனின் ? ஆகாதாம், சாவயவத்திற்கு
அவயவசையோக பூர்வகத்வ முளதாகவே விபாகங்கூடலின்; ஆடையாதிபோலும் அழியு
மென்றறிக. வஜ்ஜிராதிகளிற் காணுமையின் கூடாதாமெனிற் கூடாதாம், சம்யோக பூர்
வத்தன்மைக்கனுமேயத்தன்மை யுண்மையின்:—விமதம், அவயவசம்யோக பூர்வகம்; சாவ
யவத் தன்மையான், ஆடைபோலும் என்பதாம். ஆகலின் ஆன்மாவிற்குத் துக்காதியநித்
தியகுண ஆசிரயத் தன்மைப்பொருத்தம் இலதாம். பரத்திற்குத் துக்கித்தன்மை யிலதா
யின் அன்னியதுக்கிக்கும் அபாவமாகியவழி துக்க உபசாந்தியின் பொருட்டுச் சாஸ்திராரம்
பம் பயனற்று வாளாபோமெனின் ? போகாதாம், அவித்யாத்தியாரோபித துக்கித்வப்
பிரமத்தை யகற்றும் பயனுதலுண்மையின்; தன்னிடத்திற் பிரகிருதசங்கியா பூரணமயலகற்
றலேபோலும், கற்பிததுக்கியாத்மா அங்கீகாரத்தானும், ஜலசூர்யாதிப் பிரதிபிம்பம்போலும்
ஆன்மப்பிரவேசமுமாம், பிரதிபிம்பம்போலும் வியாகிருதஞ் செய்யப்பெற்ற காரியத்தில்
புலப்படுதலாதலும் பொருந்தும்; உற்பத்திக்கு முன்பு புலப்படாத ஆன்மா பின்பு காரியஞ்
சிருஷ்டியாகவே வியாகிருதமாய புத்தியினுள்ளே, புலப்படுவதாய், ஜலாதியிற் சூரியாதிப்
பிரதிபிம்பம்போலும், காரியஞ் சிருட்டித்துப் புகுந்ததேபோலும் குறிக்கப்பெறுவதா
யுணர்த்தப்பெறும்;—அவ்விது ஈண்டுப்புகுந்தது, அது சிருஷ்டித்து அதுவே புகுந்தது,
என்பதாதி முன்புரைத்த சுருதிகளானே. சர்வகதமாய் நிரவயவமானதற்குத் திசையினின்
றும் தேசத்தினின்றும் காலத்தினின்றும் கடந்து, திகந்தரத்தில் தேசாந்தரத்தில் காலாந்
தரத்தில் அடைவுவடிவப் பிரவேசம் ஒருகாலத்திலுமே பொருந்துறுதாம். பரமான்மாவி
னும் அன்னியங் காண்பானில்லை, இதனினுமயலாய்க் காண்பானில்லை இதனினும் அய
லாய்க்கேட்பானில்லை என்பதாதி மறைகளான் எனக்கூறினேம்; உபலப்தி யர்த்தத்தன்மை
யானும் சிருஷ்டி பிரவேசஸ்திதி அப்யயவாக்கியங்கட்கு, உபலப்திக்குப் புருடார்த்தத்தன்
மைச் சிரவணத்தான், தன்னையே யுணர்ந்தது. ஆகலின் அதுயாவுமாயது, பிரஹ்மமுணர்ந்
தோன் பெரும்பரம் பெறுவன் யாவனப் பரம்பொருள் அறிந்தவனுவனே, ஆவவன் பிரஹ்
மமேயடைந்து வாழ்ந்திடுவன், குருவுறுபுருடனே குறைவிலாதறிவன், அவனுக்கத்துணையே
ஆந்தாமதமே, என்பதாதி சுருதிகளான்; அதன்பின் னென்னையறிந்து தத்துவமாய், அதன்
பின்புகுவன் ஆநந்தமுதலே; அதுவே மேன்மைய தெலாவித்தைகட்கும், அதனாலமிருத
மடையவே பெறுமால்; என்பதாதி ஸ்மிருதிகளானும்; பேததரிசன அபவாதத்தானும்
சிருஷ்டியாதி வாக்கியங்கட்கு ஆன்மைகத்வ தரிசனார்த்த பாத்வங்கூடுதலாம். ஆகலின்,
காரியத்தி லிருப்பதற்கு உபலப்யத்தன்மையே பிரவேசமாமென உபசரிக்கப் பெறும்.
"நகாக்கிரம்வரை ஆன்மாவிற்குச் சைதன்யம் புலப்படாநிற்கும்" எனத்தொடங்கிக் கூறப்
பெற்றது:—பிராண னக்கிரியையையேசெய்து பிராணப் பெயரைப்பெறும், வசனக்கிரி
யையை இயற்றி வாக்கெனப்பெறும், காண்பதாற் கண்ணும், கேட்பதாற் செவியாம், மன
னித்தலான் மனமாம், அவ்விப்பிராணுதிகள் இவ்வான்மாவிற்குக் கருமஜன்னிய நாமங்க
ளாம், கருமநாமங்களேயலது வஸ்துமாத்திர விடயங்கள் அலவாம், ஆகலின் விழுப்பொரு
ளாம் ஆன்மவஸ்துவை விளக்குபவை யாகாவாம். அவ்வாறே:—தானே ஜோதியாய ஆன்
மாவாம் புருடன் ஒப்பானவனுய் இரண்டு லோகங்களையுந் தொடர்ந்து சஞ்சரிக்கின்றான்,
தீசாதிருசியமே யுபயலோக சஞ்சரணஹேது, தானுயிலதாம். தியாயதீவ = தியானவியா
பாரம் செய்வதேபோலும், சிந்தனைசெய்வதேபோலும், தியானவியாபார விதியாயபுத்தியை

அவன் அதன் கண்ணிருக்கும் சிற்சுபாவ ஜோதிரூபத்தானே யிலக்கிக்கொண்டு அதனுக் கொப்பானவனுகித் தியாயதீவ ஆலோகம்போலும் ஆகலின் உலகுக்குச் சிந்திக்கின்றனன் என்னும் பிராந்தி யுண்டாகின்றது, உண்மையாகவோ சிந்திப்பதில்லையாம். அவ்வாறேலே லாயதீவ = மிகச்சலிப்பதே போலும், கரணங்களாகிய மதியாதிகளும் வாயுக்களும் சலன முறவே, அவற்றை யிலக்கலின் அத்தகையது போலுமவன் என அமையும், உண்மையாக அவ்வான்மச்சோதியானது சலனதருமமுடைய தாகாதாம். யாங்ஙனந்தா னிதுணரப் பெறும்; தற்சமானத்தன்மைப் பிராந்தியே உபயலோக சஞ்சாரணதி ஹேதுவாம் சுயமக வோ இலையாம் என்பது, இப்பொருளைக் காட்டற்பொருட்டு ஹேது உபதேசிக்கப் பெறு கின்றது:—அவ்வான்மா எதனுற் சொப்பனமடைந்து = அது எம்மதியோடு சமானமாமோ அம்மதி எது எது ஆமோ அது அது இதுவும் ஆவதுபோன்ம், அதனுல் எப்போது இது சொப்பனமாமோ சுவாபவிருத்தியை யடையாநிற்குமோதீ, அப்போது அதுவும் சொப்பன விருத்தியை யடையா நிற்கும், எஞ்ஞான்று தீநனுவுற வாஞ்சிக்கின்றதோ அஞ்ஞான்றிதுவு மாகலின் உரைப்பதாம்:—சொப்பன முற்று = சொப்பன விருத்தியை யிலக்கிக்கொண்டு, மதியினுடைய சுவாப விருத்தியாகாரமாகி, இவ்வுலகத்தை =ஜாகரித விவகாரவடிவகாரிய கரண சங்காதான்மக, லௌகிக சாஸ்திரீய விவகாராஸ்பதத்தை, கடந்து சென்றிலங்கும், த்னித்த தனது ஆன்மச் சோதியினுலே சொப்பன வடிவமாய தீவிருத்தியை யிலக்கிக் கொண்டு இனிதிருக்கும்; எதனுலதனுல், சுயஞ்சோதி சுபாவமேயாய இது விசுத்தமாம், கர்த்ருகிரியாகாரக பல சூனியமாயது, உண்மையாக, தீசாதிருபியமே உபயலோக சஞ்சா ராதி சம்வியவகாரப் பிராந்திஹேது; மிருத்தியுரூபங்கள் = மிருத்திய கரும அவித்யாதி, அதற்கு வேறுரூபம் சுயமாக இலதாம், காரியகரணங்களே இதனதுரூபங்களாம், ஆகலின் கிரியாபல ஆசிரயங்களாய அம்மிருத்தியு ரூபங்களைக் கடந்திலங்கும், பிருகதாரண்யம்:— அவ்வாறே சுருதியந்தரத்தில்:- ஜரையாதியோடும் காமக்குரோதாதி பரிச்சின்னத் தன்மைக ளோடும் சிற்பிரகாசத்தோடுங்கூடி விவகரிப்பதாய், இருப்பூசியின் நுனிமாத்திர அதிசூக் குமமாய், அவரமாயும் காணப்பெற்றது. அங்குஷ்டமாத்திரம் ரவதுல்யரூபம் சங்கற்ப அகங்கார சமன்விதமாயது ஆத்மாவென முற்பாதியிற் கூறிய அங்குஷ்ட மாத்திரத்தன்மை சூக்குமசரீர உபாதித் தன்மையானேயாம், பிற்பாதியிலுரைத்த ஆராக்கிரமாத்திரத் தன் மையும் புத்தியுபாதித் தன்மையானேயாம் என்று உசிதத்தன்மையானே யங்கீகரிக்கத்தக்க தாம், ஆராக்கிரமாத்திரத் தன்மையும் அதிசூக்குமத் தன்மையானேயாம் உண்மையாக வதன் பரிமாணத்தானே யல்லவாம், எனக்காட்டற்குக் கூறப்பெறுகின்றது: — கேசத்தி னுடைய அக்கிரதேசத்தினுடைய நூறுகூறினதூஉம் நூருகக் கற்பிதத்தினது பாகம்ஜீவ னும், கேசசதாம்ச சதாம்சம் செய்வான் முடியாதாம், எனினும் அதனைமனத்தானே நன்கு கற்பித்து அப்பரிமாணன் ஜீவன் என உணரத்தக்கதாம், அதிசூக்குமம் என்பது பொருள். பாகம் = அம்சம், ஜீவன் = பிராணதாரணை செய்பவன், அவன் கேசசதாம்ச சதாம்ச கற் பிதபாகசமன் என விசேடமாயறிக. அற்றேல் யாதின்பொருட்டிவன் அதிசூக்குமமே யாதல், அதிசூக்குமனுயிருந்தபோதினும், பரமான்மாவினும் பின்னனேயாவன்; ஆகாயத்தி னின் றுந் திரிசரேணுவே போலும் என ஆசங்கித்துரைத்தல்:—அவன் அதிசூக்குமனே யாவன், காரியசகித அவித்தையானது அகன்றவழி யுபாதியின்மையின், அநந்தத்தன்மை யின்பொருட்டு = தற்பதார்த்த தாதாத்மியப் பொருட்டு, சமர்த்தனுவன். ஆராவென்பது அயமுன்முனைக்கோல்; சுவேதாசுவதரம், அது சிருஷ்டித்து அதுவேபுகுந்தது, அதுபுகுந்து மூர்த்தமும் அமூர்த்தமும் ஆயது, தைத்திரீயம். அச்சிருஷ்டாவாய பரம ஈசுரன், மூர்த்த சீமானடாய கேசவிபாக அவசானமாம் இதனையே = மூர்த்தமத்திய பாகமாய்க் கபால

சந்திரூப ஸ்தானவிசேடமாம் இதனையே, சித்திரஞ்செய்து அச்சித்திரரூபமாயிலாய், ஞான சக்திசகிதனும், காரியகாரண சங்காதத்தில் தேகமத்தியிற் புகுந்தனன். ஞானோபாதிக னுக்கு மூர்த்தமத்தியில் பிரவேசமாதலினனே, மூர்த்தனத்தில் ஞானேந்திரிய பாகுல்யம் புலப்படு கின்றது, கிரியாசக்தி யுபாதிகனுக்குப் பாதாக்கிரப் பிரவேசத்தால் கண்டத்தி னின்றுங் கீழ்ப்பாகத்தில் கருமேந்திரிய பாகுல்யம் புலப்படுகின்றது. பாகுல்யம் = மிகு திப்பாடு. ஹிருதயம் = புத்தி, அதுவும் ஆன்மாவின்மாட்டுக் கர்த்துருத்துவாதி தர்மாரோப சாதனத்தன்மையான் அந்தக்கரணமென வறையப்பெறும்; அந்தப்புத்தி விசிஷ்ட மாய்க்கர்த் தாவாய ஆன்மாவின், ரூபாதிவிடய சங்கற்பவிகற்பாதி சாதனம் மனமெனப்பெறும் அந் தக்கரண விசேடங்களாய புத்திமனங்கள் இரண்டிற்கும் சமுச்சயப் பொருட்டாம் உம்மை. இதேயந்தக்கரண த்ருவகையைக் கருதியே தைத்திரீயகத்தில்:— "அவ்விம்மனோமயனி னின்றும் அன்னிய அந்தராத்மா விஞ்ஞானமயமாம்" எனக்கோசமிரண்டாக உபந்ய சிக்கப்பெற்றது. அம்மனத்தின் விருத்தி விசேடமே இச்சம்ஞானம் என்பதாதியானே விரிக்கப்பெறுகிறது, சம்யக் = நல்லது, இவ்வஸ்து என்னும் உணர்வு சம்ஞானமாம்; ஆஞ்ஞானம் ஆந்ஞப்தி ஈசுவரபாவமாம், விஞ்ஞானம், இது இதனினும் விசிஷ்டம் என்ப தாதி விவேகமும், கிரந்த அர்த்தாதியில் விழிப்பாதல் பிரஞ்ஞானமாம். எதனால் இது இத் தகையது எது சாக்ஷாத் அபரோக்ஷப் பிரஹ்மமாமோ சர்வாந்தரமுமாமோ, எது தனது வடிவமாக அபரோக்ஷமாய்க் கண்டதாமோ அதனால், இதனைப் பார்க்கின்றதென இதந் திரோநாம பரமாத்மாவாம்; ஐதரேயம். நீயொருவனேயாதி வெகுவிற்புகுந்தனை, ஒரே தேவன் வெகுவகை விரிந்தனன், ஒன்றுயிருந்தே பலவகைபகுத்து நன்றுயாடி நலம்பெற வமரும்; என்பதாதி சுருதிசதங்கள் உள்ளனவாம். இவ்வண்ணம், ஹே அனகனே! ஜீவ னுடைய சொரூம் பிருகதாரண்யகாதி வெகு வேதாந்தங்களில் வெகுவகையாகவெளியாய், விளம்பப்பெற்றதாம். இதனானே அவைதிக குதார்க்கிகர்களின் அயல்வகை அயல்வகை யாய ஜீவசொரூ கற்பனை யாதரிக்கத் தக்கதன்றும். மேலும் போகசுகப்பொருட்டு யாவ ரானுமே திருசிதரிசனங்களின் விடய இந்திரியங்களின் சம்பந்தம் அங்கீகரிக்கப் பெறுவ தாகும், ஆண்டுலங்குவதாகும் பாரமாத்மிகமே சொப்பிரகாசத் தன்மையான் அநுபூதிய பின்னமாய் விருத்தியுபாதியினு லாக்கப்பெற்ற பேததாரதம்மியாதி நிராசத்தால் அகண்ட ஐக்கியத்தில் ப்ரஹ்மமேயதுவெனல்:—படருறு என்பதாதி. திருசியதரிசன சம்பந்தவிஸ் தாரங்களானே யது விஜிரும்பணத்தை யடையாநிற்கும் திருசியதரிசன சம்பந்தம் உளதா கவே எச்சுகம் பாரமார்த்திகம் அநுபூதிமயம் உளதாமோ அதனுல் சாரம் பிரஹ்மமெனச் சாற்றப்பெறும்.

(ச.) இதுவன்னுந் திருசிய விஷயமான சம்வித்து ஜடதிருஷ்டி நான் என்னுந் திருஷ்டா விவமான சம்பவித்து அஜடதிருஷ்டியாம், அவைகளின் மத்தியில், தனி யாகின்ற, இவாகவும் அதுவாகவும் தோற்றுமல் இரண்டோடுங் கூடிய சின்மாத் திரூபப் பெளாகப் பிரகாசிக்கும் பரதத்துவத்தை =பரமான்ம சம்பந்தமுள்ள சொரூபத்தை( பேராரணியம் முதலாம்வேதம் = பிருஹதாரணியாதி யுபநிடதங்கள் பலகாலுமியம்ப= காண்பன = இரம்மியவஸ்த்துக்களுக்கு, காட்சி = விருத்திஞானத் தால், மேவும்திில் = சம்பந்தமாயின், பரம்பொருளில் = சுவான்மாவில், பற்றுகிப் பயின்ற = உமான, திடவநுபூதியின் வடிவாம் = தானேயநுபவிக்கின்ற, சாரம் இன் பம் சாரமானம் பிரஹ்மமெனச் செப்பும், யாதினுலெனில்? ஆதலாலே = முற்கூறிய வேதுவினுலேயன்பு ஆனந்தான்மகமான சின்மாத்திரத்துக்கே பரமான்ம சொரூபமியல் பாகச் சொன்மயி னென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருக்குருவமாகி யிருப்பதே மேன்மை, திருசிய நாட்டம் கட்டாம் இன்மையே வீடாம்; அநுபூதியே அஞரற்ற நிலையாம், அந்நிலையே நிலையாக நிற்பாயெனல்:—தெரியென்பது.

(ச-அ-கை.) விஷய சுகத்திற்கும் ஆன்ம சொரூபத்துவமாயின் பந்தமோக்ஷ விபாகமின்று மெனின் அதற்குத்தரம்:—தெரியெனபது.

தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதிற்சேர்ந்தசுக வறிவுமிகச் சிறந்த தாகுந், தெரிபொருளால் வளைப்புண்டாற் பந்தமாகுந் தெரிபொருளை விட்ட கன்றூற் றிடங்கொள்வீடாந், தெரிபொருளுந் தரிசனமுந் சேரும்போதிற் சேர்ந்தவ நுபூதியிடர் தீர்ந்ததாகுந், தெரிவுறவாங் கதுபற்றிநிற்பாய்நீநின் றிர நிலையாஞ் சுழுத்திதனைச் சேருவாயே.

(ப - ரை.) தெரிபொருளும் தரிசனமும் சேரும்போதில் = திருசிய தரிசனசம்பந்தமாங்கால், சேர்ந்தசுக அறிவு மிகச் சிறந்ததாகும் = கூடியஇன்ப உணர்வு அநுத்தமமாம், தெரிபொருளால் வளைப்புண்டால் பந்தமாகும் = திருசியத்தோடு கூடினால் பந்தமுண்டாம், தெரிபொருளை விட்டகன்றால் திடங்கொள்வீடாம்= திருசியத்தை விட்டுத்தொலைத்தால் அதிதிடமான மோக்ஷமாம், தெரிபொருளும் தரிசனமும் சேரும்போதில்= திருசிய தரிசனசம்பந்த மாங்கால், சேர்ந்த அநுபூதி யிடர்தீர்ந்ததாகும் = உண்டாம் சுகசம்வித்தானது ஆமயமற்றதாம், தெரிவுற ஆங்கதுபற்றி நிற்பாய் = நின்வடிவமாக அதனைச்சாக்ஷாத் கரித்து விசிராந்தியடைவாய், நீ நின்றிரநிலையாம் சுழுத்திதனைச் சேருவாயே = நீயுனது திடஸ்திதியாம் துயிலிருப்பை யடைந்து விளங்குதி. ஏ = தேற்றம் அலது அசை.

(ஸ்ரீ - வீர.) திருசிய தரிசனசம்பந்த முறவே உண்டாம் அநுத்தமான சுகவுணர் வானது அஞ்ஞன்பொருட்டுச் சம்சாரத்தைக் கொடுக்கும் அறிஞன்பொருட்டுச் சர்வோதயமான மோக்ஷத்தைக் கொடுக்கும்; அதாவது விடயாகார விருத்தியானே வாதுகொள்ளும் பக்ஷத்தில் விடயத்தில் இராகாதிதோஷ ஜனனத்தால் சமுசாரத்தை யுண்டாக்கும், அவ் விவேகத்தால் அகண்ட ஏகாத்மபாவமாகக் கோடினே மோக்ஷங்கொடுக்கும் என்பதாம். திருசியதரிசன சம்பந்தசுகம் ஆன்மவபு வெனவறிவர், அது திருசியம்பற்றப்பெற்றதாய்ப் பந்தப்படுத்தும், அதனினின்றும் விடுபட்டால் முத்தியெனப்பெறும். திருசியதரிசன சம் பந்த சுகசம்வித்தானது ஆமயமற்றதாம். புண்ணிய தாரதம்மியப் பிரதிவிருத்தி நாச தெளிவுமேன்மைப் பிரயுக்தங்களான கூடிய அதிசயங்கள் என்பவை விடுமாயின் முத்தி யென்பர் அறிஞர்; திருசியதரிசன சம்பந்தத்தில் எவ்வநுபூதியானது நிகின்றதோ அது அகண்ட பூர்ணானந்த விளக்கவடிவினை யுடையதாம், திருசியதரிசனம் விட்டதான வத னைப் பற்றிப் பவமற்றவனாகுதி, இவ்வண்ண மியம்பிய சொரூபம் பற்றற்சொரூப ஆவரண திருஷ்டிசெல்கின்றது, இச்சொரூப திருஷ்டியானது நன்கு விளங்கற்கும்; இவ்வண் ணமே துரியத்தன்மையை யடைந்து முத்தியையும் அடையலாமாகலில் திருசியதரிசனம் விட்டு பரமமதியுடன் வாழவேண்டு மென்பதாம்.

(ச.) திருசிய தரிசனங்களுக்குச் சம்பந்தமாகும்போது, மிகச்சிறந்ததாகும் = சர்வோத் தமமான, சுக அறிவு = சுகாநுபவம், யாதச்சுகவறிவு, தெரிபொருளால் வளைப்புண்டால், அது, பந்தமாகும், தெரிபொருளை விட்டகன்றால், சுகவறிவு, வீடாம் = முத்தியெனப் படும், இடர்தீர்ந்ததாகும் = நிருபத்திரபமான சுகமயமாகிய அநுபூதி அது அவ்வநு பூதியினையே, பற்றி = அவலம்பித்து, நீ நிற்பாய் = இவ்வநுபூதியில் விசிராந்தனாவாய், சுழுத்தியாம் = முற்கூறிய திரநிலையினைச், சேருவாய். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருசியதரிசன சம்பந்த சம்வித்தானது இவ்வண்ணம் துரியத் தன்மையையடையும். அடையவே அதனையும் அகற்றுக, அகற்றியபோது எத்தகைய ஆத்மா எஞ்சிநிற்குமோ அதனைக் காட்டல்:—அது என்பது.

அது துரிய நிலையடையு மடைந்தபோதி லான்மாத்தான் றூலமல வணுவு மல்ல, திதமுறுமுன் னிலையல்லப் படர்க்கையல்லச் சித்தசித்துண் டில்லையெனுந் திறங்களல்ல, வுதிதமுறு நானல்லப் பிறனுமல்ல வொருவனல வநேகனல வுலக மென்றே, யிதுவெனக்காண் பனவாகிச் சித்தமாதி யிருமூன்றிந் திரியத்துக் கிடமாய் நிற்கும்.

(ப - ரை.) அது துரியநிலையடையும் = அதுவே துரியத்தன்மையை யடையாநிற்கும், அடைந்தபோதில் = அடைவுற்ற அவ்வவத்தை யின்மாட்டு, ஆன்மாத்தான் = ஆன்மாவானது, தூலமல அணுவுமல்ல = பெரிதுமல்ல சிறிதுமல்ல, திதமுறு முன்னிலையல்ல = திடமான பிரத்தியக்ஷமல்ல, படர்க்கையல்ல = இதரமுமல்ல, சித்து அசித்து உண்டு இல்லையென்னும் திறங்களல்ல = சேதனமும் ஜடமும் அசன்மயமும் சன்மயமும் அல்ல, உதிதமுறு நானல்லப் பிறனுமல்ல = அகமும் அன்னியமும் அல்ல, ஒருவனல அநேகனல = ஏகமும் அநேகமும் அல்ல, உலகமென்றே இது எனக்காண்பனவாகிச் சித்தமாதி யிருமூன் றிந்திரியத்துக்கிட மாய்நிற்கும் = ஜகத்தெனவே இது என்று திருசியமாகி மனமாதி ஆறுபுலன்கட்கு ஆஸ்பதமாய் இருக்கும்.

(ஸ்ரீ - வீர.) ஆன்மாத் தூலமுமன்று, அணுவுமன்று, பிரத்தியக்ஷமுமன்று, இதரமு மன்று, சைதன்யவானுமன்று, ஜடமுமன்று, அசத்ருதியாக இருப்புத்தன்மை வடிவப்பெய ரியதுவிதீய பாவவிகாரப் பிரசரமுமன்று, அகமுமையைச் சம்பாதிப்பதுமன்று, ஏகத்வசங்கியா குணாசிரயமு மன்று, அநேகமு மன்று, அநேகமே இவனுக்கு ஸமீபத்திலிருப்பது மன்று, தூரத்தி லிருப்பது மன்று, சத்தாசிரயமுமன்று, அல்ல எனவுமன்று, அடையத்தக்கது மன்று, அத்தியர்தம் அடையத் தகாததுமன்று சர்வமுமன்று, சர்வகமுமன்று, வாச் சியத்தன்மை கூடாமையின் பதார்த்தமுமன்று, துரியாதிபதலக்ஷியத் தன்மையானே அப தார்த்தமுமன்று, பஞ்சபூதங்களின் ஆன்மா அன்று, அல்லவென்பதுமன்று, பஞ்சபூத இயற்கையுடையது மன்று; கூறியபொருளில் பொருத்தமுரைத்தல்:—மனமுதலிய ஆறு இந்திரியங்கட்கும் இடமாகி யாது இத்திருசியத் தன்மையை யடைந்துளதோ, அதனினும் அதீதபதமாகி யிருக்கும் யாதுளதோ அது சிறிதுபோன்று இங்குள்ள தல்லவாம், உண்மை யாக நோக்கின் இத்திருசியாவுமே இல்லாதனவேயாம். இருக்கின்றபடியாய இதனை நன்குண் மையாய்க் காண்பவனுக்கு இவையெலாம் ஆன்மமயமாகவே தோற்றும், அநான்மமயமாக எங்குமேயுலகம் தோற்றுவதில்லையாம், சத்தேயுள்ளதாம் அதுவே ஞானம் என்று சிந்திக் குக, இதுவேயுண்மையாம்.

(ச.) அது = அச்சுழுத்திஸ்திதியே, துரியநிலையடையும், துரியாவஸ்தையாம், அத் துரியான்மிகையான திருஷ்டியில், ஆன்மா அமூர்த்தமாதலின் தூலமல்ல, பரிபூரணமாத லின் அணுவுமல்ல, இந்திரிய அகோசரமாதலின், முன்னிலை = பிரத்தியக்ஷமுமல்ல, அப ரோக்ஷமாகப் பிரகாசிக்கின்றமையின், படர்க்கை = பரோக்ஷமுமல்ல, சித்தல்ல = சேதன னல்ல, சைதன்யாசிரயத்வ மின்மையினானும், தானே சைதன்யரூப மாதலினானும் என்க; சைதந்யா சிரயனன்றோ சேதனனெனப்படும்; சௌக்கில்லியாசிரயஞ் சுக்கிலமென்பது போல் வேதாந்திகளுடைய மதத்திற் சைதந்யத்திற்குப் பின்னமாக ஆன்மாவுக்குச் சொரூபமில்லை, சர்வப்பிரகாசகமாதலின், அசித்தல்ல = ஜடமுமல்ல, உண்டல்ல, உண்

டென்னும் பிரதீதிக் கவிடயமாதலின், சன்மயனல்ல, இல்லையல்ல. சத்துரூபமாதலின், அசத்தல்ல, நானல்ல, தேகேந்திரியாதிகளால் அபரிச்சின்ன மாதலின் அகஞ்சப்தவாச்சிய மல்ல, பிறனல்ல, சர்வான்மக மாதலின், ஒருவனல்ல, நிர்க்குணமாதலினும், எண்ணுக் குக்குணரூபத்துவ முளதாதலினும் ஏகத்துவ வெண்ணுக் காசிரயனல, அத்துவிதீயனாக லின் அநேகனுமலன், சித்தமிருமூன்று, எந்தச் சக்ஷுராதிகளுக்கோ அவைகளுக்கு இடமாய் = விடயமாய், காண்பனவாகி திருசியத்தை யடைந்ததாய் யாதிதுவெனவுலகென் றேநிற்கும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆன்மாவின் யதார்த்த ஸ்திதியை அருளிப் பரமதாற்பரிய மருளல்:—ஆங்கென்பது.

ஆங்கதுவேயதீத பதமாதலாலே யதுகிஞ்சிலன் றெங்குமதுவேயாகும்
பாங்குறுவீடென்றும் பருலகிலில்லைப் பாதலத்திற் பூதலத்திற்பார்க்கிலில்லை
வீங்கியவாசைக ளெல்லாமிறந்தகாலை விரிந்தமன மிறப்பதுவே வீடென்றோது
மோங்கியவீடெனக் குளதென் றுள்ளே யெண்ணமுண்டாகின் மீண்டுமன முற்ப
விக்கும்.

(ப - ரை.) ஆங்கதுவேயதீதபதம் = ஆண்டு அப்பொருளே சகலத்தையுங் கடந்தவத்து, ஆதலாலே = ஆகையினாலே, அது = அப்பொருள், கிஞ்சிலன்று = சிறிது அல்ல, எங்கும் அதுவேயாகும் = எவ்விடத்தும் அவ்வத்துவே இருக்கும், பாங்குறு வீடென்று = நன்மையைப்பயக்கும் மோக்ஷமென்று, ...ம்பர் உலகிலில்லை = மேலவர் உலகத்தில் இல்லை, பாதலத்தில் பூதலத்தில் பார்க்கில் ... கீழுலகத்தில் இவ்வுலகத்தில் நாடில் இலதாம், ...பை யடைந்து... வீங்கிய ஆசைகள் எல்லாம் ...வாக்கள்யாவும், இறந்தகாலை = சென்றபோது, விரிந்தமனம் இறப்பதுவே = விரிய தரிசனசம்பாக்ச் சென்றமனமானது இலயம் ஆவதுவே, வீடென்றோதும் = மோக்ஷமென்று கூறுவர், ஓங்கியவீடு = பேரானந்தமயமாய மோக்ஷம், எனக்குளது என்று உள்ளே எண்ணம் உண்டாகின் மீண்டும் மனம் உற்பவிக்கும் = என்றனுக்கு உண்டாகுக என்பதாக உள்ளே சிந்தைசெய்வதாயின் மீளவும் மனதானது எழுவதேயாகும்.

(ஸ்ரீ - வீர.) துறக்கத்திலேனும் பாதாலத்திலேனும் பூதலத்திலேனும் மோக்ஷமென்பது கிடையாது, நல்லுணர்வாலே போதாத்ம மாத்திரத் தன்மையை யடைவுறும்படி ஆற்றியநிருமல சித்தமே மோக்ஷமெனப்பெறும். ஆசைப்படுஞ் சகல விடயங்களிலும் பற்றொன்றின்றிச் சுவபரிணாம போதவிருத்தியினாலே சித்தத்தினது க்ஷயமியாதோ அதுவேமோக்ஷமெனத் தத்துவமுணர்ந்த ஆன்மதரிசிகளானே யருளப்பெறும், தனது வைராக்கிய விவேகங்களினாலே, கேவலம்மனத்தை க்ஷயஞ்செய்ய வேண்டும், மோக்ஷ இச்சையுங்கூடாதாம், மோக்ஷ இச்சையையும் ஏன் விடவேண்டும் எனின் கூறல்:—வீடென்பது. மோக்ஷமெனக் குளதாகு வென்னுஞ் சிந்தையுள்ளே, யுளதாகுமானால் மனம் எழுந்ததேயாகும்.

(ச.) அதுவே, அதீதபதம், அதற்கு விலக்ஷணமான ஆன்மதத்துவம், ஆதலாலே, அது = அவ்வான்ம தத்துவம், ஆங்கு = அந்த விச்சகத்தில், கிஞ்சிலன்று, ஒன்றாலும் உவமிக்கப்படாததா மென்பதுபொருள். பந்தநிவிர்த்தியன்றோ மோக்ஷமென்பது அதுவு மனத்துக்குப் பந்தரூபமாதலின் அதன் நிவிர்த்திரூபமே யென்பது கருத்து. வீடு = மோக்ஷம், எனக்கு, உளது = உண்டாகவேண்டும், என்றெண்ணமுள்ளே உண்டாயின், மனம் உற்பவிக்கும். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிராசையையுடைய மனத்தவரையே கனத்தவ ரென்பது:— நினைப்பு என்பது.

நினைப்புமிகி லிவனுக்குப் பிறப்பிறப்பு நீங்காது வன்பந்த நிலையதாகு மனைத்தினுக்கு மதீதமா யுருவமெல்லா மாகியகன் றாத்துமதத் துவமேநிற்கில் வினைத்தொடராம் பந்தமெது முத்தியேது வேரறச்சிந் தையைக்கெடுப்பாய் மேலதாகத், தனைத்தெளிந்து நிறைந்தமல நெஞ்சாய்நல்ல சாந்தியையுற் றோர் விரும்பார் சற்றுமொன்றும்.

(ப - ரை.) நினைப்புமிகில் இவனுக்குப் பிறப்பு இறப்பு நீங்காது = சங்கற்பங்கள் அதிகமாகுமானல் இவ்வதிகாரிக்கு ஜனனமரணம் அகலாது, வன்பந்தம் நிலையதாகும் = கொடியபந்தமானது திரமாகும், அனைத்தினுக்கும் = சர்வத்திற்கும், அதீதமாய் = அப் பாற்பட்டதாய், உருவமெல்லாமாகி = சகலமுமாகி, அகன்று = விஸ்தரித்து, ஆத்துமதத் துவமே = ஆன்மசொரூபமே, நிற்கில் = நிலைத்திருப்பதாகில், வினைத்தொடராம் பந்தம் எது = கருமத்தொடர்புமேய பந்தமியாது, முத்தியேது = வீடேது, வேரறச் சிந்தையைக் கெடுப்பாய் = நிர்மூலமாக எண்ணங்களைக் களைவாய், மேலதாகத்தனைத் தெளிந்து = சர்வ சாக்ஷியாகத் தன்னுடைய வடிவத்தைச் சாக்ஷாத்கரித்து, நிறைந்து = வியாபித்து, அமல நெஞ்சாய் = பாவனமனமாய், நல்ல சாந்தியை = இயற்கையாய பரமசாந்தத்தை, உற் றோர் = அடைந்த பெரியோர், விரும்பார் சற்றும் ஒன்றும் = அற்பம் ஒன்றினையும் இச்சியார்.

(ஸ்ரீ - வீர.) மனத்தின்கண் மனனமானது மிகுதியாக உண்டாகவே, அதுவேசரீர ஆகார மாகும், அதுவும்மீளமீள வெளிமுகத் தசைமையைச் சம்பாதித்தலால் பெருந்தோடப் பொருட்டே கேவலம் ஆம். பரிச்சின்ன தேகபாவமே இவனுக்குத்தோடமாம் அலது கத் தாத்ம பாவமேனும் ஜகதாத்மபாவமேனும், தோடமன்றாம் என்னுங்கருத்தாலுரைத்தல்:— அனைத்தினுக்கு மென்பது. எல்லாவற்றினும் அதீதமாய் எல்லாவடிவமுமாய் உள்ள ஆன் மாவாகவே நிலைத்து விரிந்து நிற்பின்பந்தமேது முத்திதானேது ? ஆதலால், பரிச்சேத= மனனமே நிர்மூலஞ்செய்கி யென்பதாம். விஷயிஜன சங்கத்தினும் விடயாநு ரஞ்சனத்தி னும் வாஞ்சையுறாமற் றூண்டினவனும், மனத்தாபமியாவும் இல்லாதவனும் எப்போதும் ஆன்மாவிலேயே இரமித்துக்கொண் டிருப்பவனும், எங்கும் நிறைந்தவனும், பவித்திரமனத் தனும், பரமசாந்தனும், ஆசையாஞ்சேற்றை யடியோடலம்பினவனும், கட்டுத்தன்மயல் யாவற்றையும் வெட்டியெறிந்தவனும், சீதோஷ்ண சுகதுக்காதி துவந்துவங்கள் ஆந்தோ டங்கள் பயங்கள் அற்றவனும், சமுசாரசாகரத்தைத் தாண்டினவனும், உத்தமோத்தம விதி ராந்தியடைந்தவனும், அடையமுடியாத மேலானதானத்தை யடைந்தவனும், மீண்டுந் திரும்பாத சாம்ராஜ்யபதத்தை யடைந்தவனும், மனத்தாற் றெழிலால் வாக்கதனல், சர்வ ஜனங்களாலும் கொள்ளப் பெறுவதாக நன்குவாஞ்சிக்கப் பெற்ற சரித்திரத்தை யுடையவ னும், ஒரு சிறிதையுமே வாஞ்சியாதவனும், யாவரானும் விரும்பி மகிழத்தக்க ஆனந்தத் தைச் சரித்திரசம்பந்தப் பயனையுடையவனும், மற்றெவற்றினுமே மகிழாதவனும் ஆகிச் சீவன் முத்தனிருப்பன்.

(ச.) நினைப்புமிகில் = மனது சங்கற்பத்தாற் றடிக்கின் சமுசாரவேதுவான பந்தத் திடமாமென்பது பொருள் ஆத்துமதத்துவம், அனைத்தினுக்கு மதீதமாய் = விசுவவில க்ஷணமாய், நிற்கில், அன்றி, உருவம் எல்லாமாகி = சர்வான்மகமாய், அகன்று நிற்கில்,

வியாப்தமா யிருப்பினும், பந்தமெது முத்தியேது, பிரபஞ்சாதீதமாயினும் அன்றிப்பிரபஞ்சான்மகமாயினும் பந்தமோக்ஷங்களுக்கு அபாவமாதலின் அதனால், சிந்தையை = சங்கற்பத்தை, வேரறக்கெடுப்பாய், சிந்தையின்றுவேர் ஆசையாதலின், அகனது நியாசத்தை விய்ந்துரைத்தல், மறுகவியாலும், மேலதாகத் தனைத்தெளிந்து = அத்தியாத்துமமதியாய், நிறைந்து = பரிபூரண திருட்டியாய், அமலம் = ஆன்மஞானத்தால், பாவநாசமாதலின் விசுத்தமான நெஞ்சுடையராய், நல்ல, ஆன்மாவின்கண், சாந்தியையுற்றோர் = விசிராந்தியடைந்தவர், சற்றுமொன்றும் விரும்பார். (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிராசையே பரமசுகமாம், மூப்புவனத்திருவும் வேண்டாமையாம் விழுச்செல்வம் வாய்ந்தவர்க் குபகரிக்கக்காணும் துரும்பென, அத்தகைய பரமமோக்ஷம் நிராசையானே யாகலின் அதனைவியந் துபதேசித்தல்:—வெந்தென்பது.

வெந்தோடு மாபத்தாங் கருவேற்காட்டை வெட்டுமழுப் பரமசுக மேவுந் தானஞ், சந்தோடஞ் சாந்தியெனு மரப்பூங்கொத்துச் சாற்றுறுமிந் நிராசையுறிற் றளர்வுதீரு, மந்தோபார் குளப்படியா முளையாமேரு வாசைகுரு விக்கூடா மவனிமூன்றும், வந்தோர்புன் றுரும்பாகு நிராசைபூண்ட மாறுதவலங்கார வடிவுளோர்க்கே.

(ப - ரை.) வெந்தோடும் ஆபத்தாம் கருவேற்காட்டை = தாபத்தாற்றபித்து இங்குமங்கும் அலையும்படிசெய்யும் ஆபத்துக்களாகிய கருவேல்கள் நிறைந்த ஆரண்யத்தை, வெட்டுமழு = துவம்சஞ்செய்யும் பரசு, பரமசுகம்மேவும் தானம் = பேரானந்தம் அடையும் பதம், சந்தோடஞ்சாந்தி யெனும் மரப்பூங்கொத்து = பெற்றது கொண்டலம் பேணும் மகிழ்ச்சியாலெய்தும் சமமென்னும் தருவின் புஷ்பகுச்சம், சாற்றுறும் = என்று சொல்லப்பெறும், இந்நிராசையுறில் = இந்த நிராசையை அடையில், தளர்வுதீரும் = விசிராந்தியுண்டாம் அடைதி, அந்தோ = அகோ ஆச்சரியம் ! பார்குளப்படியாம் = பிருதிவி கோவின்பதமாம், முளையாம்மேரு = தாணுவாம் சுவர்ணபர்வதம், ஆசைகுருவிக்கூடாம் = திசைசிறுசம்புடமாம், அவனிமூன்றும் = முப்புவனமுமே, வந்தோர் புன்றுரும்பாகும் = வலிதிலகப்படினும் ஒரு சிறியதிருணமேயாம், நிராசைபூண்ட மாறுதவலங்கார வடிவுளோர்க்கே = நிராசையை யடைந்துள்ள திரிபுறுத அலங்கார ஆகிருதியை யுள்ளவர்களுக்கு மாத்திரம், அல்லது ஏ அசை நிலை.

(ஸ்ரீ - வீர.) ஆபத்துக்கரஞ்சக் காட்டுக்குப் பரசுவாய், பரமநிர்வாணபதமாய், சமதருவின் பூங்கொத்தா யிருக்கும் நிராசையைப்பற்றி மகிழ்தி. ஹே இராகவ ! மண்ணொரு மாட்டின் காரீராம், மேருவெட்டியெஞ்சிய கட்டையாம், திசைக்ஷுத்திரமாய சம்புடிகையாம், திரிபுவனமும் திருணமாம், நிராசையினால் அலங்கரிக்கப்பெற்ற ஆகிருதி யுடையவர்கட்கு.

(ச.) வெந்தோடும் = இளைவளர்ந்த, வெப்பம் மிகுந்தெனினு மொக்கும், குளப்படி = ஆவின்பாதம், முளை = தாணு, ஆசை = திக்குகள். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உட்சங்கத்தியாகஞ் செய்யின் தேகதுக்காதிகளும் அடைவுறுவாமெனல்:—காயமென்பது.

(ச-அ-கை.) நிராசைக்கும் ஆன்மானு சந்தானமே யேதுவெனல்:—காயமென்பது.

காயத்தின் வேறுகத் தன்னைக்கண்டோன் காயமீ றினுமறியான் கன்னற்கட்டி, தீயிற்கா யினுமரிந்த போதுமின்பந்திராத வாறுபோற் றெளிந்தஞானி, மாயத்தின் மோகத்தாற் பேதமாகான் மணந்தபர புருடன்மேன் மனஞ்சேர் மங்கை, நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யுமாப்போ னிகழ்தொழிற் செய்யினும்பாத்தி னிலைமை நீங்கான்.

(ப - ரை.) காயத்தின் வேறாகத் தன்னைக் கண்டோன் = தேகத்திரயத்தினும் வியதிரிக்தமாகச் சாக்ஷியாகிய தன்னைச் சாக்ஷாத்கரித்தவன், காயமீரினுமறியான் = தேகத்தைச் சேதித்தபோதினும் உணரான், கன்னற்கட்டி தீயிற்காயினும் அரிந்தபோதும் = வெல்லத்தைக் காய்ச்சிய போதினும் துண்டந்துண்டமாக வெட்டியபோதினும், இன்பந்தீராதவாறு போல் = மாதுர்ய சுபாவத்தை விடாததன்மை போலும், தெளிந்தஞானி = அப்பிரதிபந்த அபரோக்ஷப் பிரஹ்மஞானியானவன், மாயத்தின் மோகத்தாற் பேதமாகான் = மாயாவஸ்துக்களின் மயக்கத்தால் மாறுபாடாக மாட்டான், மணந்த பரபுருடன்மேல்மனஞ் சேர்மங்கை = அநுபவித்த சோரநாயகன்மீது மதிபதிந்த நாரியானவள், நேயத்தால் = அன்போடும், மனைத்தொழில்கள் = கிருககிருத்தியங்களை, செய்யுமாப்போல் = செய்வதொப்ப, நிகழ்தொழில் செய்யினும் = நுகர்வினை வயத்தாலெய்திய வினைகளைச் செய்தபோதினும், பரத்தின் நிலைமை நீங்கான் = சொச்சொரூபானு சந்தானத்தை விட்டகலான்.

(ஸ்ரீ - வீர.) சரீரத்தினும் வேறாகத்தன் வடிவசாக்ஷியைத் தரிசித்தபெருத்த விவேகியானவன், உடம்பைத்துண்டாக வெட்டியபோதினும், ஒரு சிறிதும் வெட்டுப்பட்டதாக வேதனையடையான்; தேகாதிரிக்த ஆத்மமறதியுண்டாயின் மீண்டுந் துயரமாமேயெனின்? ஆகாதாம், ஒரேபடித்தாய் ஒளிராநின்ற நிருமலமாய தத்துவம்தானாக அறியப்பெற்றதாயின் ஒருமுறையேனும் அது அறியப்பெற்றதேயாகும்; மறதியின் அடைவே மருவுறாதாம், நன்றாக அறியப்பெற்ற பந்துமீண்டும் அறியப்பெறாமையை யடைவதுமுண்டுகொல்! இலையாம்; தட்டினாலும் போகாது தானா யறிந்தது என்றபடி. மறதியடைவுறாமையில் திருஷ்டாந்தசகித யுக்தியோடுகூடிய காரணமிவையாம், பாம்பின்மயல் சாம்பின்தாம்பின்மாட்டுப் பாம்புப் பாவனையுண்டாகாதாம், கிரிதடத்தினின்றும் வீழ்ந்த மழைப்பிரவாக நதியானது மீளவும் ஆங்கடையாதாம். அற்றேல், மங்கையர் முதலிய விடயங்கள் எங்ஙனம் அநுபவிக்கப்பெற்ற வடிவத்தினின்றும் உண்மையாக மாறுபாடாகவே நிகழுமோ அங்ஙனம் தனதாத்மாநுபவமும் பரமப்பிரேமாஸ்பதத் தன்மையானே பிரசித்தமான ஆனந்தரூபத்தினின்றும் மாறுபாடாகவே ஏன் ஆகமாட்டாது எனின்? இயம்பல்:—கன்னலென்பதாதி அநுபவித்த வெல்லத்தின் மாதுர்யமும், பாகத்தாலாதல் துண்டித்தலாலாதல் வேறொரு விதமாகச் செய்வான் முடியாததேபோலத் தன்னுடைய தத்துவதரிசனமும் ஆம்; எங்ஙனம், வெல்லத்தின் மதுரரசம், அநுபவிக்கப்பெற்ற வெல்லத்தின் அநுபவ காரணமாய ஜிஹ்வாதியின், அநுபவிக்கப் பட்டவர்களாய தேவதத்தாதிகளின், தாகவிகர்த்தனாதியத்னசதங்களானும், இதுமாதுர்ய அநுபவமல்லவாம் மற்றே, கசப்பாதி யனுபவம் என்பதாக மாறுபாடு செய்வான் முடியாதாமோ அங்ஙனமே, தன்னுடையதாத்விக ஆநந்த அநுபவமும் மாறுபடுத்த முடியாததாம் என்றபடி. எக்கால் ஒருமுறை யநுபவித்ததும், வேறுவிதமாகச் செய்யமுடியாதாயின், அக்கால், அதேகவலையாய் எந்த ஞான்றுமே அநுபவிக்கப்பெற்றதோ முற்றினுமே மாறுபடாதாம், என்னுங்கருத்தா லுரைத்தல்:—மணந்த என்பதாதி. பரவியசனிநாரி வீட்டுக்காரியங்களில் கவலையுடையவளே யாயினும், உள்ளே பரசங்கரசாயனமாய அதனையே ஆசுவாதனம் செய்துகொண் டிருப்பள். இவ்வாறு, சுத்த பரதத்துவத்தில் விசிராந்தியை யடைந்தமா தீரனானவன், இந்திராதியோடு கூடிய தேவதைகளானும் சலித்திடுமாறு செய்விக்க முடியாதவனாவன். பரவியசனிநாரி, தற்சங்கற்பகாந்த சங்கமகோற்சவத்தை, மறந்திடச் செய்விக்க எவ்வளவுவுறு நாயகனற்றான் முடிந்திடுவன்; மறவாள் என்பதாம். உலகசம்பந்தமான எல்லா விடயாநந்தங்களும், நானாபுஷ்பரசங்களும் மதுபாவத்தை யடைவதேபோல யாண்டு சமரசமாமோ, அத்தகைய

சுவாத்மாநந்த சிதாலோகத்தின் நிரந்தர ஆசுவாததாரையை அடைவுற்ற மகான்மாவாகிய தத்துவஞ்ஞனது புத்தியானது எவரான் மறந்திடச் செய்விக்கக்கூடும். அவ்வாறே சிவகீதாமோத்திரத்தும் கூறப்பெற்றுள்ளது: — திருமறையுணர் வமுதிரதத்தேறலே, ஒருமுறையநுபவித்துள்ளனுயினும், ஒருவியெவ்வினைகளு முள்ளமாங்கவன், றருமதுவதனையே நாடித்தாவுமே. அறியாமையழிந்துள்ள மகான் ஆனவன் மகத்தாகிய வெளிவிவகாரத்தோடு நன்குகூடியபோதினும், நல்லுணர்வு நாட்டனும் நல்லொழுக்கினனும் ஆகிய அவன் உள்ளேயுள்ளத்தால் மகிழ்ந்தேயிருப்பன்.

(ச.) சின்ன அவயவனுக்குச் சரீர அதிரிக்தமான சுகரூபமாகிய சுவான்மா அறியப்படின் சரீரத்திலும் அனுதரமாம்; வாகியார்த்தங்களில் என்சொல்லவேண்டு மென்பது கருத்தாம். இன்பங்கன்னற் கட்டி, அநுபூதமாய், தீயிற்காயினும் அரிந்தபோதும்=தேக சந்தாப சேதனுதிகளாகிய துக்கசாதனங்களால், தீராதவாறுபோல், பேதமாகாது, அநுபூத கன்னரகட்டிதித்திப்பாகவே அறியப்படுதலின், அதுபோல் தெளிந்தஞானி= ஆன்ம தத்துவ அநுபூதனும், மாயத்தின் மோகத்தால் = அஞ்ஞான அன்யதா ஞானங்களால், பேதமாகான், சொச்சொரூபமான சுகமறக்கப் படாமையனும், அதிசயமான சுகாந்தரமின்மையினும் என்க, இதற்கு. (உ-ம்.) சர்வக்ஞயோகி; — பகரெதன்சங்கி சங்கதியதன்றன் பரம்பரையானுமேயுலகர், தருபிரியத்துக் கிடமதாயிருப்பர் சாதிசயோபயோகத்தான், இகழுறுமேதுவின்றியே யவதியெழிலதிசய மெதுமிலதாய், நிகழ்தனதாமமென்னெனலெனது நிசவாந்தவகண்டசௌக் கியமே. இதனையே திருஷ்டார்த்தத்தோடு தெரிவித்தல்: — பரபுருடன்மேன் மனஞ்சேர்மங்கை = பரபுருடாசக்தியுள்ள தன்னிச்சைப்படி சஞ்சரிக்கு நாரி, மனைத்தொழில்கள் = தனது கிருககாரியங்களில் மிகுந்த ஆசக்தியுள்ளவளாயினும், மணந்த = பூர்வம் அநுபவித்த நூதன சம்போக சௌக்கியத்தையே விடாது சிந்திப்பள் அதுபோலென்பது பொருள். பரத்தின் = பரதத்துவத்தில், நிலைமை நீங்கான் = விசிராந்ததீரன், தொழிற்செய்யினும் = தேகாதியில் விவகாரத்தோடு கூடினவனுயினும், சித்தத்தில், அப்பாதத்துவத்தையே அநுபவிப்பன். தத்துவ நிஷ்டனுக்கு வாகிய விவகாரஞ் சமாதிபங்கத்தைத் தாராதென்பது கருத்து. (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எதன் சம்பந்தி சம்பந்த பரம்பரையானும் உலகர்பிரேமைக்கிடமாயுடையவராவர், அதிசயத்தோடு கூடியதனுய யோகத்தால், ஏதுவின்றியதாய் அதிசயமற்றதாய் எல்லையில்லாததாயுள்ள தனது ஜோதிவடிவை யென்னென்றுதான் வர்ணிப்பது, அதுவன்றே எனது உண்மைவடிவம் அதுவன்றே வெனது அகண்ட சௌக்கியம் அதுவன்றேயாவரும் விரும்பத்தக்கது, கேவலமாநந்தம், என்பதே ஜீவன்முக்தனது அருமைவாய்ந்த அநுபூதியாம், ஆகையால், நீயும் வைராக்கிய விவேகத்தால் உதித்தமாயதீரதீயை யுடையவனுகி, ஓட்டையும் கல்லையும் பொன்னையும் ஒக்கக்காண்பவனுகி, குழந்தையே ஜீவன்முக்தனுய்ச் சஞ்சாரஞ்செய்தி! என்றருளி இப்போது ஜீவன்முக்திவிதேக முக்திகளின் பேதநிமித்தம், கூறத்தொடங்குவார், தேகதாரிகட்கு உலகத்தில் இருவகை முக்தத்தன்மைகள் உளவாம், சதேகம் ஒன்றும், விதேகம் மற்றையதாம், அவற்றிலுள்ள இவ்விபாகத்தைக் கேட்குதியெனல்:—பண்டத்தென்பது.

பண்டத்திற் பற்றின்மை யாலேசித்தம் பயில்சாந்தி முத்திதரும் பகர்ந்த முத்தி, பிண்டத்தோ டிருந்தாலு மிராவிட்டாலும் பேருரும் பற்றறுத்த பெரியோர்க்கென்பர், மண்டுற்ற நேயமற வாழ்வோரின்பம் வருஞ்சீவன் முத்தராம் வளர்நேயத்தாற், றெண்டுற்று வாழுமவர் பந்தமுற்றோர் சொன்னமூன் றுமவனே துரியமுத்தன்.

(ப - ரை.) பண்டத்திற் பற்றின்மையாலே = பதார்த்தங்களின் சம்சங்கமின்மையி னாலே, சித்தம் = மனமானது, பயில்சாந்தி முத்திதரும் = முயன்று பரமசாந்தியையும் விமுக்தத் தன்மையையும் அடையும், பகர்ந்த முத்தி = கூறியமோக்ஷமானது, பிண்டத் தோடிருந்தாலும் இராவிட்டாலும் = தேகத்தோடு கூடியிருப்பினும், இராவிடினும் பேறுகும் பற்றறுத்த பெரியோர்க் கென்பர் = பாவமற்ற மகான்கட்குப் பிரயோஜனமாகச் சம்பவிக்கும் என்றுகூறுவர், மண்டுற்ற நேயமறவாழ்வோர் = நெருங்கிச் சம்பந்தித்துள்ள சிநேகத்தை யத்தியந்தம் அகற்றிவாழும் அறிஞர், இன்பம்வரும் சீவன்முத்தராம் = இன்ப வடிவமாக இருக்கும் ஜீவன்முத்தராவர், வளர்நேயத்தால் = மேலும்மேலும் விருத்தியா கும் சிநேகத்தால், தொண்டுற்று = அடிமைப்பட்டு, வாழும் அவர் = உழன்று ஜீவிக்கும் அவர், பந்தம் உற்றோர் = கட்குற்றவரேயாவர், சொன்ன மூன்றும் அவனே = கூறிய மூன்றுவதாகிய அவனே, தூயமுத்தன் = பரிசுத்த முத்தன்.

(ஸ்ரீ-வீர.) ஆண்டாதியில் உபயசாதாரணம் ஆகியமுக்தி சப்தார்த்தத்தைக் காட்டல்:- பண்டத்தில் என்பது. பதார்த்தங்களின் முற்றினும் பற்றின்மையால், மனச்சாந்தி விமுக்தத் தன்மையாம், தேகமிருப்பினும் இராவிடினும், அது அநக ஆகிருதியுடையவர்க்கு அவசியம் சம்பவிக்கும். ஆண்டுப்பொருத்தம் உரைத்தல்:—ஹே மைந்த, சிநேகம் = ஆன்மத்தன் மையலால் பிரீதி, அதனது மிகுதியாயக்ஷயமே, உத்தமமான கைவல்ய மென்றுணர்வர் அது தேகமிருந்தாலுமே இராவிட்டாலுமே சம்பவிக்கும்; நேயமற்றவனுகியாவன் வாழ் கின்றானோ அவனே ஜீவன்முக்தன் எனப்பெறுவன்; சிநேகத்தோடு ஜீவிக்கப்பட்டவன் பத்தனுவன், முத்தனேயாவன் மூன்றுமவன். ஆகவின், யத்தினம் யத்தினத்தானே செய் யத்தக்கதாம், மோக்ஷப்பொருட்டு யுக்திபூர்வகம் = பிரமாண தாற்பரிய பிரமேய தத்துவ அவதாரண அநுகூலமாய் தருக்கங்களின் வாயிலாக வென்பதாம்; யத்தினயுக்தி வினை னுக்கோ கோவின் குளப்படியும் தாண்டுதற்கு முடியாததேயாம்.

(ச.) பண்டத்தின் = பதார்த்தங்களினுடைய, பற்றின்மையாகிய ஹேதுவினுல் சித்தம் ஆன்மாவின்கண் விலயமாவதே முக்தியாம், அது தேகமிருப்பினும் அன்றியிரா விடினும், பற்றறுத்த பெரியோர்க்கு = பாவரகிதர்க்கு, பேறுகும், நேயமற = வாகிய வத்துவில் அநாசக்தராய், சுவான்மாநுபவராகியே, வாழ்வோர் ஜீவன் முக்தராவர்; நேயத் தாற் றொண்டுற்று வாழுமவர் = வாகியவஸ்து நிட்டர், பந்தமுற்றோர் என்பர்; மூன்று மவனே = நேயமின்மையினுனும் விதேகத்தினுனும் எவன் நேயமறவாழ்வோனும், நேயத் தாற்றொண்டுற்று வாழ்பவனும் ஆகானோ அவன் முத்தனேயாவன்; நிருபபதமாகிய முத்த சத்தத்தாலே சொல்லப்படுகிறுன் என்பது பொருள். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே முனீந்திரரே ! ஆண்டாண்டு நுதலியவற்றின் பொருள் களை ஒரிடத்திற் சங்கிரகித்து, மறுபடியும், தத்துவத்தைத் தரிசித்துச் சமத்காரம் அடைந்த பெரியவர்தம் உதாரமான சரித்திரத்தை = இலக்கண பூதமான குணங்களை உரைத்தருள வேண்டும், தங்களுடைய திருவாக்கியத்தில் யாவர்க்குத்தான் திருப்தியுண்டாம் என்று ஸ்ரீ இராகவர் இயம்ப, அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் ஹேமைந்த ! ஜீவன்முக்தனுடைய இலக்கணம் எம்மால் வெகுவிதமாக இயம்பப்பெற்றது மறுபடியும் ஹே மகாபாகுவாகிய வீர ! நீ சுருக்கமாகக் கூறப்பெறு மிதனைக்கேட்குதி ! என்றியம்பத் தொடங்கல்:— வரு என்பது.

வருதொழிலின் விருப்புருன் வத்தமான வழிநிற்பன் சென்றவற்றை மனத்தி னெண்ணுன், கருமமுழு வதுமியற்றுந் தொடர்பந்தத்திற் கலந்தவர்பான் மனம் பற்ருன் கவலைகூரான், மருவியவோர் பத்தர்பாற் பத்தனுகும் வஞ்சகர்பால் வஞ்சகனும் வாலர்தம்பாற், பருவமுரு வாலனும் விருத்தராஞேர் பால்விருத்த ஞந்தீரர் பாலுமாங்கே.

(ப - ரை.) வருதொழிலின் விருப்புருன் = வாராநின்ற கார்யத்தில் இச்சையை அடையான், வத்தமானவழி நிற்பன் = நிகழ்தொழின் மார்க்கத்தே நின்றுவாழ்வன், சென்றவற்றை மனத்தின் எண்ணுன் = அதீதகாரியங்களை உள்ளத்தில் உன்ஞன், கரும முழுவதும் இயற்றும்= சகலகாரியங்களையுமே செய்யாநிற்பன், தொடர்பந்தத்திற் கலந்த வர்பால் மனம்பற்ருன் = தொன்றுதொட்டுவரும் கட்டிற்பட்டவர் தம்மிடத்தே யுள்ளங் கலவான், கவலைகூரான் = சிறிதுங் கவலையையடையான், மருவியவோர் பத்தர்பாற் பத்த ஞகும் = பொருந்திய ஒப்பற்ற அன்பர்களிடத்தே அன்பனுயிருப்பன், வஞ்சகர்பால் வஞ்சகனும் =சடர்களிடத்திற் சடனுகியேயிருப்பன், வாலர்தம்பால் பருவமுருவாலனும்= குழந்தைகளிடத்திற் குழந்தைப் பருவத்தனுகவே குலவுவன், விருத்தர் ஆனேர்பால் விருத் தனும் = வயது சென்றவர்பால் வயது சென்றவனுகவே வாழ்வன், தீரர்பாலுமாங்கே = தீரரிடத்தே தைரியவானுகவே திகழ்வன்.

(ஸ்ரீ - வீர.) பவிஷ்யத் விவகாரத்தைப்பற்றி வாஞ்சியான், நிகழ்ந்திடுந் தொழிலிற் பற்றின்றி நிற்பன், சென்றவை யெண்ணிச் சிறிதும் வருந்துருன், எலாவற்றையுமே இயற்றி வாழ்ந்திடுவன்; உறங்கினேன் ஆகியும் உறங்காமலிருப்பன் விழித்தேயிருப்பன் என்றபடி விழித்திருந்திடினும் துயின்றேயிருப்பன்; வியவகார விடயத்திற்றுயின் மிகவுறினும் தன் ஞன்மாவில் விழித்தேயிருப்பன், "யாதொரு பொருளையெல்லா வுயிர்களு மிருள்போற் காணு, வோதருஞானியத்தை யுளங்கையிற் கனிபோற்காணும், யாதொருபொருளையெல்லா வுயிர்களு மென்றுங்காணுங், காதலின் ஞானியத்தைக் கண்ணினுற் றெரியக்காணன்" என்னும் ஸ்ரீ பகவத்கீதையின் திருமொழியான். வியவகாரத்திற்கு சலதமனே யாயினும் துயின்றவனுகவே இருப்பன், அக்கௌசலபலத்தால் ஆசைப்பட்டலையான்; இதனுனே அவனுக்கெப்போதுமே யொப்பான நிலைமையாம், உள்ளே சர்வபரித்தியாகியாய் நித்திய முள்ளே நிராசையுடையவனுய், வெளிக்காரியம் செய்தபோதினும், சமமாகவே நிலைத் திருப்பன். அநுகூல பிரதிகூல சம்பந்தமான ஆசரண தற்பரமாய ஜந்துக்களிடத்தில் பற்றற்ற சித்தமுடையவனுய், பத்தர்பாற்பத்த நல்லொழுக்கினனுய், சுடர்பாற்சடனெனக் கல்விழுக்கினனுய், பாலர்பாற் பாலன் எனப்பாலிப்பாய், விருத்திர்பால் விருத்தன்என விளங்குவனுய், தீரர்பாற் றைரியவானு யிலங்குவன். /25)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன் மொழிந்தபடியே பாலாதிசமவிருத்தம் மேவிடினும் எச் சிறப்புளதோ அதனை யறைதல்:—விடலை யென்பது.

விடலைபால் விடலையாந் துயருற்ருேர்பால் வெந்துயர முறுநிலைமை விடாத புந்தி, திடமுளதாமாநந்த நிறைந்துதோன்றுஞ் செவ்வியனும் புண்ணியர்தஞ் சிறப்பே செய்யு, மடமையிலா வறிஞனுந் தெளிந்தோனுகு மதுரமுள ஞந்தீன மனமில்லோனுஞ்,சுடர்குளிரின் மதிகருகி லெரிகீழ்நோக்கிற் றுளங்கிவிய வான் சீவன் முத்தன்றுயோன்.

(ப - ரை.) விடலைபால் விடலையாம் = யவ்வன வொழுக்கர்பால் யவ்வனமுடையவனாகி, துயருற்றோர்பால் வெந்துயாமுறும்=துன்பம் அடைந்தவரிடம் கொடியதுக்கமடைந்தவனாகி, நிலைமைவிடாத புந்திதிடமுன்தாம் = தன் நன்னிலைமைமாறாத தீரமதியையுடையவனாகி, ஆநந்த நிறைந்து தோன்றும் = பரிபூரண ஆனந்த முடையவனாகி, செவ்வியனும் = அதிகோமளனாகி, புண்ணியர்தஞ் சிறப்பேசெய்யும் = புண்ணிய கீர்த்தனனாகி, மடமையிலா அறிஞனும் = மிகுந்தபிரஞ்ஞை யுடையவனாகி, தெளிந்தோனாகும் = பிரசன்னமுடையவனாகி, மதுரமுளனும் = இனிமையான இயற்கையுடையவனாகி, தீனமனமில்லோனும் = தைனியமற்ற உள்ளமுடையவனாகி, இலங்காநின்ற, சீவன்முத்தனாயோன் = பரிசுத்தமாகிய ஜீவன்முத்தனானவன், சுடர்குளிரில் = அருக்கன் தண்மையையடைந்தபோதினும், மதிகருகில் = இந்துமண்டலஞ் சந்தப்தம் மாயினும். எரிகீழ்நோக்கில் = அக்கினி கீழேயடைந்து நாடினும், துளங்கிவியவான் = விஸ்மயமடைந்து விரிந்திடமாட்டான்.

(ஸ்ரீ - வீர.) தாருண்ய சீலர்பாற் றருண்யனாகியும், துக்கிதரிடத்தே மிகத்துக்கிதனாகியும், இருப்பன்; வாக்கின் பிரவிருத்தியை யுடையவனாகிப் புண்ணியகதைகளைப் புகலுவன், பாலாதிபோலும் வீணான பிரலாபஞ்செய்யான், இங்ஙனம் பிறவற்றையும் ஊகித்தல் வேண்டும். தைன்யத்தினின்றும் விலகிய உள்ளமுடையவன் ஆவன், தீரமதியை யுடையவனும் சதா உதித ஆனந்தமுடையவனும் அதிகோமளனும் அவன் உலகில் புண்ணியமாய் சரித்திர வர்ணனங்கள் உடையவனுவன், பிராஞ்ஞனும் பிரசன்னமதுரனும் ஆவன், தனதுபேரொளியுதயத்திற் பூர்ணனும், துயாங்களும் துர்க்கதியின் றொடர்புகளும் இல்லாதவனு மாவன், எல்லா ஜனங்களிடத்திலும் அதிநேயமுற்ற பந்துவாவன், வெய்யவனிடத்திற் சீதளமேவினும், சந்திரமண்டலத்திற் றூபமிகச்சாரினும், அனலவனிடத்தில் அதோமுகச் சுவாலையமையினும், இம்மகான்மாவிற்கு ஆச்சரிய புத்தியானது உண்டாகமாட்டாது.

(ச.) வருநிகழ் செல்காலங்களிலுள்ள காரியங்களிலும் ஆசக்தியின்றிவிவகரிப்போனாய், பத்தவஞ்சக பாலவிருத்த ராதியர்பால் அவரவர் சேட்டையைத் தொடர்ந்து செய்பவனாய்த் தைரியாதி குணயுக்தனான ஜீவன்முக்தன் அருக்காதிகள் விபரீதபாவங்களாயினும் அதிசயாதி விகாரமடையான். (26)

(ஸ்ரீ - வீர - அ - கை.) யாதுகாரணத்தால் விஸ்மயம் உண்டாவதில்லை யெனின் உரைத்தல்:—இது வென்பது.

(ச-அ-கை.) யாது காரணத்தால் எனின்:—

இதுவெனத்தோன் றியவெல்லாஞ் சிற்சொரூப மிவ்வண்ணம் பலசத்தி
யிலங்குமென்றே, புதுமைகளின் வியப்புறர் சீவன்மூத்தர் புனலசைவால் வேற்
றுமையே போலத்தோன் று, முதுசுழிபோ லவும்விண்ணின் மையிலின்றோகை
முன்புகடி தசைத்தலுமே மூத்தின்கூட்டங், கதுமெனமெய் போற்றோன் றல்
போலவுந்தான் கனத்தசக மனத்தசைவாற் கடிதுதோன் றும்.

(ப - ரை.) இது எனத்தோன்றிய எல்லாம் சிற்சொரூபம் = இது இது என்று புலப்படும்யாவுமே அறிவுருபம் ஆகும், இவ்வண்ணம் பலசக்தியிலங்கும் = இந்தப் பிரகாரம் பலசக்திகள் நிகழும், என்றே = என்பதாகத்தானே, புதுமைகளின் வியப்புறர் = ஆச்சரியக்கூட்டங்களில் விஸ்மயத்தை யடையார், சீவன்முத்தர் = ஜீவன்முத்தர், புனல் அசைவால் வேற்றுமையே போலத்தோன்று முது சுழிபோலவும் = நீரின் அசைவினாலே அயற்

போற்றோற்றும் வலிய சுழலேபோலவும், விண்ணின் மயிலின்றேகை முன்பு கடிதசைத்த லுமே = ஆகாயத்தில் மயிற்றேகையை முன்னர்க்கணம் அசைத்தமாத்திரத்தே, முத்தின் கூட்டம் = முத்துமண்டலம், கதுமென மெய்போற் றேன்றல்போலவும் = திடீரென்று உண்மைபோற் பிரதீதியாதல் போலவும், தான் = சுயம், கனத்தசகம் மனத்தசைவாற் கடிதுதோன்றும் = இப்பெரிய வுலகமானது சித்தத்தினது சஞ்சலத்தினுலே விரைவிற் பிரதீதியாகும்.

(ஸ்ரீ - வீர.) இந்தவண்ண மிவைகள் ஈண்டுச் சிதாத்மாவினுடைய மாயாசக்திகளின் தோற்றங்கண் மாத்திரமேயாகும், என்று இவனுக்கு ஆச்சரிய ஜாலங்களில் குதூகலம் உண்டாகமாட்டாது. இரம்மியாரம்மிய திருஷ்டியின் அழிவினுல் போகமிகு வாஞ்சையா னதுபோனுல் நிராசையுடைமை நிரூடமானுல் இவனது மனமானது பனிபோலுங்கரைந்து போம், இருந்தசையினன்றே இவைதோற்றும், ஜலத்தினது அசைவினுலே நீரினும் வேறு போல நீர்தானே வர்த்துல நாபியாகாரமாய சுழற்சியாய்த் தோற்றுவதேபோலச் சித்த அசைவினுலே ஜகந்தோன்றும்; விண்ணிற் கண்ணசைதலினுலே நேத்திரங்களின் ஆதபத் தின் முக்கயத்தினுல் அசைவினுலே மயிற்றேகை யாகாரமாகியும், மற்றொருவகையால் உண்டாம் அசைவினுல், முத்தின், சம்பந்த மண்டலம்போன் ருகாரமாகியும் தோற்றும், இவ்வாறு சித்தத்தின் அசைவினுலே ஜகத்தானது அசத்தியமாயினும் சத்தியம்போற் றேற்றும்.

(ச.) இச்சிதான்மாவினது சக்திகள், இவ்வண்ணம் வெகுவிதங்களாய், இலங்கு மென்றே சிற்சத்திவிலாசத்தை யநுசந்தானஞ்செய்யுஞ் சீவன்முக்தர் புதுமைகளில் வியப் புருரென்பது சம்பந்தம். புனலினது அசைவாகிய ஏதுவினுலே, முதுசுழி ஜலத்துக்கு வேற்றுமையேபோலத் தோன்றும் அதுபோலவும், முன்பு கடிதசைத்தலுமே = திருஷ்டி சலனரூபமான விளக்கத்தினுல், விண்ணின் = வியோமந்தமத்தோடு கூடின், மயிலின்றே கைக் கூட்டமும், பிரகாசத்துடன் கூடின், முத்தின் கூட்டமும், பொய்யாயினும் மெய் போற்றேன்றல் போலவும், மனத்தசைவால், சிதாகாயத்தில் சகம் பொய்யாயினும் மெய் போல் தோன்றும் = காணப்படும். (27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ இராகவர் சித்தத்தின் அசைவையும் அதையகற்றும் நெறி யையும் வினுதலும் அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரமருளலும்:—என்னவென்பது.

என்ன வோதலு மியாதினு லசைந்திடு மியாதினு லசையாது
சொன்னநெஞ்சகந் திருத்தலா நெறியெது சொல்லெனு மிராமற்குப்
பன்னு மாதவ னுரைசெய்வா னெள்ளிலே யெண்ணெயும் பனிதன்னின்
மன்னுவெண்மையும் போன்மனத் தசைவுதான் மருவியே மிகத்தோன்றும்.

(ப - ரை.) என்னவோதலும் = என்றிந்தப் பிரகாரம் உபதேசித்தலும், இயாதினுல் அசைந்திடும் இயாதினுல் அசையாது = எதனுற்சலித்திடும் எதனுற்சலியாது, சொன்ன நெஞ்சகம் = உபதேசித்தமனம், இதனை, திருத்தல் ஆம் நெறியெது = சீர்படுத்தும்மார்க்க மியாது? சொல் = கிருபையோ டருளவேண்டும், எனுமிராமற்கு = என்று வினவிய ஸ்ரீ இராகவர்க்கு, பன்னும்மாதவன் உரைசெய்வான் = உபதேசிக்கும் பெருந்த வசிரேஷ்ட ராகிய ஸ்ரீ வசிஷ்டர் அருள்செய்கின்றார், எள்ளிலே எண்ணெயு = திலத்திலே தைலமும், பனிதன்னின் மன்னுவெண்மையும் = இமத்திலே பொருந்தும் சுக்கிலசம்பந்தமும், போல் = போல, மனத்தசைவுதான் = மனேசலனமானது, மருவியே மிகத்தோன்றும் = பொருந் தியே மிகமிகவும் பிரதீதியாம்.

(ஸ்ரீ - வீர.) எவ்வியற்கையானே சித்தம் அசைந்தாடுகின்றது, அங்ஙனமே எவ்வுபாயத்தானே அசையாமல் நிற்கும், அதனை ஹே பிரஹ்மன் அருளவேண்டும், எதனானே இது சிகிச்சைசெய்யப் பெற்று நலமுறுவதாமோ அதனையே உரைத்தருளவேண்டு கின்றேன் என்று ஸ்ரீ இராகவர் வினவ, அசையும் இயற்கையானது சித்தத்தினின்றும் வேறுபிரித்துக் கூறமுடியாதாம் என்று திருஷ்டாந்தங்களினாலேயே அதனை ஸ்ரீ வசிஷ்டபகவான் தரிசிப்பித்தல்:—உரைசெய்வான் என்பதாதி. பனிவெளுப்புகள் எனவும், திலதைலலேசங்க ளெனவும், பூமணங்கள்போலவும், தீச்சூடுகள்போலவும், உள்ள அசைவுகள் சேர்ந்து நிற்பனவேயாம், அவ்வாறே அபின்னங்களேயாம் இவற்றின் வேற்றுமை கேவலம் பொய்யேயாம் கற்பிதமேயாம். எவ்விடத்திலுமே குணகுணியாதிகளில் அவிசாரத்தால் பேதமிருப்பது போன்றும் அபேதமே சேர்க்கையாம், ஆண்டு ஆராய்ச்சியில் பேதாங்கிசம் மித்தையாம் அபேதாங்கிசம் வாஸ்தவம் ஆம் என்றுணர்க.

(ச.) ஸ்ரீ இராமர்:—நெஞ்சகம் = சித்தம், யாதினால் = எந்தக்காரணத்தால், அசைந்திடும், யாதினாலசையாது, அச்சலன காரணத்தையும், அசலன காரணதனையும், எனக்குச் சொல், சொன்ன நெறியெது = நீர்கூறிய பிரகாரத்தால் அச்சித்தமே திருத்தலாம்—சலனரகிதமாக்குவேன் எனுமிராமர்க்கு, சித்தசலன நிவிர்த்தியுபாயத்தை உபதேசிக்கு மிச்சையினராய்ச் சித்தசலன நிவிர்த்தியே சித்தநாசமெனத் தெரிவித்தற்காகச், சித்தத்திற்கும் சலனத்திற்கும் பேதமென்னல்: — பன்னுமாதவன் = ஸ்ரீ வசிஷ்டர், என்னெண்ணெய்களுக்கும், பனிவெண்மை களுக்கும்போற் சித்தச்சலனங்களுக்கும் விபாகங்காணப் படாதென்பது பொருள். ௬. (28)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அபேதாங்கிசமே கற்பிதம் ஆயின் ஆகமாட்டாதென்னும் ஆசங்கையைப் பரிகரித்துக்கொண்டு எதனால் அசையாதென்னுஞ் சங்கையங்கிசத்திற் குத்தரம் உரைப்பவராய், யாதுசயம் காரணத்மா குணம்குணியெனவும் விகற்பிதம் ஆமோ, அது அவ்வடிவமாக இருந்தே குணகுணி விகற்பங்கள் இரண்டும் நசிக்கும் நிரன்வயமாக வல்லவாம், அங்ஙனமாகவே ஏககாரணவடிவமாக இருந்தே குணகுணிபேத நாசதரிசனத்தால் பேத அங்கிசமே கற்பிதமாம் அபேத அங்கிசம் அல்லவாம், என்பதாகவும், உள்ள அசைவுகளின் இரண்டில் ஒன்றன் நாச அதீன ஆத்தியந்திக உபசமநிவிருத்தியானே சித்தம் அசையாதாம், மனம் ஜீவித்திருப்ப அதன் அசைவையகற்ற முடியவே முடியாதாம், என்பதாகவும், சித்தமாம், இதனானே அசைவின் நிரோதத்தால் உபயநாசப்பொருட்டு ஞானக்கிரமமும் சாஸ்திரத்திற் காண்பிக்கப் பெற்றதாமென் றுரைக்கின்றார்:—சித்த வென்பது.

சித்தநாசத்தி னெறியிரண் டியோகமுந் தெளிந்தஞா னமுமாகு
மொத்தயோகந்தான் மனத்துறு தொழிலினை யொருவழிப் படமாற்றல்
சுத்தஞானந்தா னலம்பெறக் காண்பதாந் தொடர்மன மேதென்னின்
மெத்துமாகம பூடண் றுரைத்தது விசையுயி ரசைவாகும்.

(ப - ரை.) சித்தநாசத்தின் நெறி இரண்டு =மனோ நாசத்தின் மார்க்கம் இரண்டாம், இயோகமும் தெளிந்த ஞானமும் ஆகும் = யோகமென்பதும் ஐயந்திரிபற்ற அறிவு என்பதும் ஆம், ஒத்தயோகந்தான் மனத்துறு தொழிலினை ஒருவழிப்பட மாற்றல் = யாவருக்கும் பொருத்தமான யோகமானது சித்தத்தின் விருத்திகளைத் தடைப்படுத்தலாம், சுத்தஞானந்தான் = தூய உணர்வானது, நலம்பெறக் காண்பதாம் = நன்றாகத் தரிசித்தலாம்,

தொடர்மனம் எதென்னில் = தொன்றுதொட்டு வாராநின்ற மனமானது யாதென்றால், மெத்துமாகம பூடணர் உரைத்தது = மேலான வேதங்களையே ஆபரணமாகக் கொண்டவர் கூறியது, விசையுயிர் அசைவாகும் = விரைவான பிராணனின் சலனமாகும்.

(ஸ்ரீ-வீர.) ஹே இராகவ ! சித்த நாசத்தினது முறை இருவிதமாம், ஒன்று யோகமாம் மற்றொன்று ஞானமாம், யோகமென்பது சித்த விருத்திகளைத் தடைசெய்தலாம். ஞானமென்பது, நன்றாகத்தன்னைக் காணுதலாம், யோகத்தின் இலக்கணம்: — யோகம் சித்த விருத்தி நிரோதமாம், சர்வசப்தங் கவராமையின் சவிகற்பமும் யோகம் என்றே கூறப்பெறும், சித்தமானது தான் ஒளிதெளிவு மகிழ்வாதி, முயல்கை தாபசோகாதி, திதிகௌரவ ஆவரணாதி சீலத்தன்மையானே திரிகுணமாம்;இதன்கண் ஐசுவரியவிடயப்பிரியமும், அதர்ம அஞ்ஞான அவைராக்கிய அநைசுவர்யமும், தர்மஞான வைராக்கிய ஐசுவர்யமும் உண்டாம்; சுத்தசத்துவமாயின், சொரூபப் பிரதிஷ்டையைப் யடைந்து பகுத்துணர்வற்று, தருமமேகத் தியானத்தோடு கூடியதாகும். சத்துபுருஷ அன்யதாக்கியாதி மாத்திரம் சித்தம் தர்மமேகபர்யந்தம்பரம் பிரசங்கியானம் என்பர் பெரியர். பரவைராக்கிய மடைந்த சித்தமானது விவேகக்கியாதியையும் விட்டுவிடும், அவ்வவத்தையோடு கூடியதாய சித்தம் சமஸ்காரத்தோடு கூடியதாம் நிர்ப்பீஜ சமாதியாம், அசம்பிரஞ்ஞாத மௌனவுமாம். விரிவைப்பிற விடத்தே காண்க. சித்தமானது பிராணாதீன மிக்கசைவுடையதாம். என்பர் ஆகம்பூடணர்; பிராணபக்தனமே சோமியமனமாம்; பிராணனினின்றுந்தா னிஃதுதித்திடுமே, பிராணனில் அத்தம் அதனையடையும், பிராணனையாயின் வாக்கடைந்திடுமே பிராணனை விழிதான் பிரா[illegible]னைச் செவிதான்; என்பனவாதிய திருமறைகளின் இரகசியம் உணர்ந்த பெரியோர் [illegible]ப[illegible]ர் என்பதாம்.

(ச.) [illegible]போல = உபாயம், மனத்துறு தொழிலினை யொருவழிப்பட மாற்றல் = சித்த விருத்தி நிரோதம், அப்படியே பாதஞ்சல சூத்திரம்:—யோகஞ் சித்தவிருத்தி நிரோதமென்பது. மனம் = சித்தம், விசையுயிர் = பிராணனால், அசைவாகும் = அசைவுடையதாம், பிராணாதீன அசைவென்பது பொருள். (29)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாயு அசைவறில் மனமும் அசைவறும் மனமசைவறில் பிறப்பகலும் என்றருள ஸ்ரீ இராகவர் பிராணனது நிரோதம் வினாதல்:—உரையென்பது.

உரைசெய் யாருயிர் தடைப்படி னுள்ளமு மொழியுநெஞ் சசைவற்றாற்
புரைசெய் சென்மம்போ மாதித்தன் போய்விழிற் புவித்தொழில் போமாபோல்
வரைசெய் மார்பனே யென்றனு முடலெனு மனையின்விண் ணிடைநாளும்
விரைவி லோய்வற வுழல்பிரா ணாதியை விலக்குமா றெதுவென்றான்.

(ப - ரை.) உரைசெய் ஆருயிர் தடைப்படில் = கூறியபிராணனானது தடுக்கப்படில், உள்ளமும் ஒழியும் = மனமும் இலயமாம் நெஞ்சசைவற்றால் = மனமானது சலியாவிடின் புரைசெய் சென்மம்போம் = குற்றமுற்ற பிறவியானது அகன்றுபோம், ஆதித்தன்போய் விழில் = சூரியன் அஸ்தமனம் அடையின் புவித்தொழில் போமாபோல் = உலகவிவகாரம் ஒய்ந்து விடுவதுபோலும், வரைசெ[illegible] [illegible]ரை[illegible] = வேகமாக[illegible]லும் = மலைபோலும் மார்பையுடையமைந்தா என்றுபதேசித்தலும், பிராணாதிகளை, விலக்[illegible] ஓய்வற = இடைவிடாமல், விண்ணிடை = தேககே கசனத்தில், நாளும் = எப்போதும், வ[illegible] உழல் = சஞ்சரிக்கும், பிராணாதியை = [illegible]றெது வென்றான் = தடைசெய்யும் வகையாதென்று வினவினான்.

(ஸ்ரீ - வீர.) வாயுவானது நன்றாகத் தடைப்படில் மனமானது அத்தியந்தம் உபசாந்தியை யடையும்; ஆகுகதானிவ் வண்ணம் அதனால் என்னேயெனின் உரைத்தல்: — நெஞ்சென்பது. மனத்தின் அசைவானது உபசாந்தியடையவே இச்சம்சாரமானது முற்றினும் நீங்கும் சூரிய ஆலோக நல்லசைவின் சாந்தியுளதாகவே, விவகாரம் சாந்தியடைவதேபோலும். தேகலக்ஷணத் தமது கிருகத்தில், இருதயாதி ஸ்தானங்களிலும் எழுபத்தீராயிரம் நாடிபேதங்களிலும் நிரந்தரம் சஞ்சரிப்பனவும், முகநாசிகாதி சித்திரங்களிலும் பாகிய ஆகாயத்திலும், கமனசீலங்களும் ஆகிய பிராணாதி வாயுக்களின் விசையசை வைத் தடைசெய்வது யாங்ஙனம் ?

(ச.) உயிர் தடைப்படின் = பிராணவாயுவினது நிருத்தமாயின், உள்ளமும் ஒழியும் = மனமும் உபசாந்தமாம், வரைசெய்மார்பன் = ஸ்ரீ ராமன், விண்ணிடையுழல் = அறிதற்கரிய நடையுடைய, ஆதிசத்தத்தால், அபாநாதி கிரகணங் குறிப்பிக்கப் பட்டது. (30)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிராணனது அசைவின் றடையில், நிராலம்பன சாலம்பனாதி ராஜயோக உபாயங்களை யுபதேசிக்கத் தொடங்கல்:—முனிவன் ஏக, பிரணவ, நாடு, புருவ, என்பன.

(ச-அ-கை.) இனி ஐந்துகவிகளாற் பிராணசலன நிரோதநெறி நிருபிக்கப்படுகின்றது:—

முனிவனேதுவா னூலொடு மறிஞரை முன்னியே விராகத்தை
நனிமுயன் றுகற் றிதனினாற் குடும்பமா நடைவிலங் கதுவிட்டுத்
தனிநிராசைதா னிறைந்திடில் விரும்பிய தற்பொருட் டியானத்தா
லனிசநீள்பக லொருமையே விளங்கிட வடுத்தசா தனை தன்னால்.

ஏகதத்துவக் கனபரி சயத்தினா லிவ்வுயிர் தடையெய்துந்
தேகபூரகா தியினுயி ரினைப்பறத் திடமுறு பழக்கத்தா
லூகமாகவே காந்தமுற் றுள்ளுணர் யோகபா வனைதன்னான்
மேகமேனியாய் பிராணனி லசைவுதான் விலக்கிடப் படுமன்றே.

பிரணவத்தினுச் சாரண முடிவினிற் பிறந்தசொல் லுறுமுண்மை
விரவுநாட்டத்தாற் றுயில்பவ னுணர்வுதான் வெளிப்படினுயிர் நிற்கும்
பரவுதானுமூ லஞ்செறி யிதழினைப் படருநா வாற்றள்ளி
யுரவினாலுயர் புரையிலே பிராணனை யோட்டினா லுயிர்நிற்கும்.

நாடுமங்குலி பன்னிரண் டெல்லையினா சியி னுனிதன்னி
னீடுவாகாயத்தி லறிவுக ளிறந்திடி னிலைபெற வுயிர்நிற்கும்
தேடுசாதனை யாலுயர் புரைவழி சிங்குவைமேல் விரலீரா
றாடுபோயுயி ரெல்லையி னின்று ணர் வொளிக்குமே லுயிர்நிற்கும்.

புருவநாப்பணே கண்மணிப் பி வைதான் பொருவில்சாந் தியின்மாய்ந்து
தெருளுங்கேதன வறிவங்கு தெரிவறிற் றிரிவுறா துயிர்நிற்கும்
கருதுகின்றவிந் நெறிகளா லநேகசங் கற்பகற் பிதபேதத்
தருள்செயும்பல தேசிகர் சொற்களா லசைவற வுயிர்நிற்கும்.

(ப - ரை.) முனிவன் ஓதுவான் = ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுகின்றார், நூலொடும் அறிஞரை முன்னியே = சாஸ்திரங்களுடன் சாதுக்களைச் சரணடைந்து, விராகத்தை நனிமுயன்று கற்று = வைராக்கிய அப்பியாசங்களை நன்றாக நண்ணி, இதனினால் = இவற்றால், குடும்பமாம் நடைவிலங்கது விட்டு = பூர்வசம்சார விருத்திகளில் அநாஸ்தையை யடைந்து, தனி நிராசைதான் நிறைந்திடில் = ஒப்பில்லாத ஆசையின்மையானது பூர்ணமாயிடில், விரும்பிய தற்பொருள் தியானத்தால் = அபிவாஞ்சிதமாய தற்பொருளின்றியானத்தினால், அனிசநீள் பகல் ஒருமையே விளங்கிட அடுத்த சாதனை தன்னால் = இரவும் பகலும் எப்போதும் வெகுகாலம் ஏகாக்கிரமே துலங்கிடச்செய்துவரும் அப்பியாச பலத்தினால்.

ஏகதத்துவக்கன பரிசயத்தினால் = ஏகதத்துவக்கன அப்பியாசத்தினால், இவ்வுயிர்த்தடை எய்தும் = பிராணனது அசைவானது தடைப்பட்டுவிடும், தேகபூரகாதியில் உயிர் இளைப்பறத் திடமுறு பழக்கத்தால் = பூரகாதிநிஜ ஆயாமத்தால் துயரமின்றியே யுண்டாம் திட அப்பியாசத்தினால், ஊகமாகவே காந்தமுற்று உள்ளுணர் யோகபாவனை தன்னால் = யுக்தியுடன் ஏகாந்தத்தியான சம்யோகத்தால், மேகமேனியாய் = நவகன சியாமதேக காந்தியாய், பிராணனிலசைவுதான் விலக்கிடப்படும் = பிராணஸ்பந்தம் அகற்றப்பெறும், அன்று வ அசை நிலைகள்.

பிரணவத்தி னுச்சாரண முடிவினில் = ஓங்காரத்தின் உச்சாரண முடிவில், பிறந்த சொல்லுறும் உண்மைவிரவு நாட்டத்தால் = உண்டாம் சப்ததத்துவ அநுபாவனத்தால், துயில்பவன் உணர்வுதான் வெளிப்படில் உயிர்நிற்கும் = தூங்குபவன் அறிவுதான் வெளியாயில் பிராணஸ்பந்தமானது அடங்கும்; பரவுதாலு மூலஞ்செறி யிசழினைப்படரு நாவாற்றன்ளி யுரவினால் உயர்பிராணனை யோட்டினால் உயிர்நிற்கும் = தோற்றுகின்றதாலு மூலத்துற்ற கண்டிகையை முயல்வுடன் ஜிஹ்வையால் கீழ்தள்ளி அதிதீவிர அப்பியாச பலத்தினாலே மேலாய பிராணவாயுவை மேற்றுவாரத்தில் புகுத்தினால் பிராணனது அசைவு நிற்கும்.

நாடும் அங்குலி பன்னிரண் டெல்லையினுச்சி யினுனிதன்னில் = கருதும் துவாதச அங்குல பரியந்தமாய் நாசாக்கிரமாய் உள்ள, நீடுவானத்தில் = விமல அம்பரத்தில், அறிவுகளிறந்திடில் = உணர்வுகள் உபசாந்தியாயிடில், நிலைபெறவுயிர் நிற்கும் = நிலையாகப் பிராணன் அசையாமலிருக்கும், தேடுசாதனையால் உயர்புரைவழி சிங்குவை = முயலும்பழக்கத்தால் ஊர்த்வ ரந்திரமார்க்கம் சாவானது, மேல்விரல் ஈராறு ஊடுபோய் உயிரெல்லையினின்றுணர் வொளிக்குமேல் உயிர் நிற்கும் = மேலேதுவாதசாந்தத்துட்போய் விலயமாயடங்குமாயிற் பிராணன் தன்னசைவு நீத்து நிற்கும்.

புருவநாப்பணே கண்மணிப் பார்வைதான் = புருவமத்தியில் தாரகாலோகமானது, பொருவில் சாந்தியின் மாய்ந்து = சாந்தியாகியந்தத்தை யடையுமாயின், தெருளுங் கேதன அறிவங்குதெரிவுறில் திரிவுறாது உயிர்நிற்கும் = புருவமத்தியில் சின்மாத்திர வத்துவே தன் மாத்திரதத்துவமென உணர்ந்துகொள்ளில் அசையாமற் பிராணவாயுவானது நிற்கும், கருதுகின்ற இந்நெறிகளால் அநேக சங்கற்ப கற்பிதபேதத் தருள்செயும்பல்தேசிகர் சொற்களால் அசைவற உயிர்நிற்கும் = எண்ணுகின்ற இம்மார்க்கங்களால் நானாசங்கற்ப கற்பிதங்களால் நானாதேசிக வுபதேசங்களால் சலனமறப் பிராணன் அடங்கும்.

(ஸ்ரீ - வீர.) சாஸ்திர சற்சனசக்வாச வைராக்கிய அப்பியாசயோகத்தினாலே, முன்னர்ப்பழகியதாய சம்சாரசம்பந்த விவகாரங்களில், முற்றிலும் விட்டொழித் திருத்தலி

ளுலும், இயமநியம சமதமாதி விரோதி அப்பியாசத்தினுலும் அத்தியந்தம் பற்றின்மை யானது இருதயத்தின் கண்ணே நிலைபெற்றவழி, பயிற்சி முதிர்ச்சியால் வாயு நிற்கும். முதலில் தாலமாய சிகரத்தில் சந்திரபிம்பத்தில் மணிதேவதா மூர்த்தியாதியிலாதல், யாண்டு தான் மனமிவனுக்கு இரமிக்குமோ ஆண்டே நிரோதம் பயிலவேண்டு மெனல்:—விரும்பிய என்பதாதி. காதலித்தபடியாய பொருட்டியானத்தினுலும், நீள்போது ஒருமையானது உதயமாதலினுலும், ஏகாக்கிரதை வடிவப்பரிணமத்தை யடைந்து என்பதாம், அதன்பின் யாது செய்யத்தக்கதெனின்? உரைத்தல் ஏகவென்பதாதி. ஏகதத்துவத்தின் கனமான அப்பியாசத்தினலே பிராணனது அசைவுநிற்கும். பூரககும்பகரேசக முறையானே பிராண நிரோத சகிதத்தாலாதல் அடக்கமுடியாத சித்தஸ்பந்த நிரோதஞ் செய்யத்தக்கதாம் எனல்:- பூரகாதியென்பதாதி. பூரகாதிகளானே தனது பிராணனது ஆயாமத்தான் இடர்ப்படா திடைவிடாது செய்யும்தி- அப்பியாசத்தினுன், ஏகாந்தத்தியான சம்யோகத்தான் வாயுவின் இயக்கம் நிற்கும். தீர்க்கமாக உச்சரிக்கப்பெற்ற பிரணவ துரியமாத்திரை யாலம்பன யோகத்தாலாதல், பாகியார்த்த சம்வேதனத்தின் ஆத்தயந்திக உபரமம் உண்டாகிய வழியாதல் வாயுவின் இயக்கம் மடங்கும். இப்போது ரேசகபூரகங்களில் ஒன்றொன்றனைதேனும் சுவாசப்பிரசுவாச சிதிலீகரணமாகியவழி காலநீட்சி வளர்ந்துகொண்டு போவதுடன் செய்யும்தியான அப்பியாசத்தானும் அதன் நிரோதமாம் என்றருளல்:—ரேசகமானது அத்தியந்தம் பயினறுவரவே, விபுலமான அந்தப்பிராணனுனது சிதறியமேகம்போல முறையாகச் சூனியபாவத்தையாதல் பாகிய ஆகாயத்தை யாதல் அடைந்துவந்தவழி நாசியின் பொந்துகளை நாடித்தீண்டா திருப்பவாயுவின் அசைவு தடைப்படும். பூரகத்தைப் பூர்த்தியாக அப்பசித்துவரவே, உள்ளே பூரணமாதலால், கிரியில் மேகங்கள் இருத்தலேபோல, பூர்த்தியாகும் பரியந்தம், மந்தமாக விருத்தியாகிப் பரமசாந்த சஞ்சாரம்பற்றி நிச்சலமாகவே வாயுவினியக்கம் வயங்காதாம். பூர்த்தியான பின்னர் கும்பகஞ் செய்யவே, பூர்ணகும்பம்போலும், அநந்தங்காலம், அப்யாசத்தால். ஸ்தம்பித்த பிராணன் நன்னிலை பெற்றவழி வாயுவினியக்கம் வயங்காதாம். மொழிந்த மூவிதப்பிராணுயாமக் கிரமமும் பதஞ்சலி பகவானதுயோக சூத்திரத்தில் விரிக்கப் பெற்றுளதாம்:—அஃதுளதாகவே சுவாசப் பிரசுவாசங்களின் கதிவிச்சேதம் பிராணுயாமமாம் = அம்முன்மொழிந்த ஆசனஞ்சயமுறவே, வெளி வாயுவின் ஆசமனம் சுவாசமாம், குடித்தவாயுவை வெளிப்போக்கல், பிரசுவாசமாம், அவற்றின் கதிவிச்சேதம் = உபயாபாவ இலக்கணத்ததாய பிராணுயாமஞ் செய்யத்தக்கதாம் என்பதுபொருள்; அஃதோவெளியுட் டம்பவிருத்தி தேசகால சங்கியைகளாற் பரிதிருட்டம் தீர்க்க சூக்குமம் = யாண்டுப் பிரசுவாச பூர்வகமாகக் கதிநிரோதமாமோ அது பாகியமாம், யாண்டுச் சுவாசபூர்வகமாகக் கதியின்மையாமோ அது ஆட்யந்தரமாம், மூன்ருவது ஸ்தம்ப விருத்தியாண்டு இரண்டு மின்மை ஓரேமுயற்சியா லுண்டாமோ, எங்ஙனம் தபித்தகல்லில் தெளித்த நீரானது எல்லாவகையானுமே சுருங்கியொளியுமோ அங்ஙனம், இரண்டன் ஓரோ காலத்துற்ற கதியின் அபாவம் ஆமென்பதாம். இம்மூன்றுமே தேசபரிதிருஷ்டங்களாம்; வெளியே சிறியபஞ்சின் அசைவாதிகளானே அறியலாம், உள்ளே நாபியாதி யசைவாதிகளானே அறியலாம், கால்தொட்டுத் தலையீருய தலத்தே பிபீலிகைப்பரிச சதிருசத்தானே அநுமிக்கப் பெறுமென்பதாம்; காலத்தாற் பரிதிருஷ்டங்களாம்:—கணங்களின் இத்துணையாம் நிச்சயத்தால், நிமேஷக்கிரியாவச்சின்ன காலத்தின் நான்காவது பாகம்கணமாம்; எண்ணிக்கைகளாற் பரிதிருஷ்டங்களாம்:—இத்துணை யெண்ணிக்கைச் சுவாசப்பிரசுவாச காலங்களால் முதலாவது இரண்டாவது மூன்ருவது உணர்த்தப்பெறும்,இவ்வண்ணம்மிருதி இவ்வண்ணம்மத்தியம், இவ்வண்ணம் தீவிரம் எனவுமாம். அந்தப்பிராணுயாமமானது நிச்சித

மாகப்பயின்றதாகி மலர்ந்தபஞ்சின் பிண்டம்போலாதல், மந்தம்பற்றிய தாமரைநூல் போலா
தல், நீட்சியையும் சூக்கமத்தையும் அடைவுற்ற பிராணன்களால் தீர்க்கமும் சூக்குமமும் ஆம்
என்பதுபொருள். பயிற்யாற் பிராணன் ஸ்தம்பிதமாகியவழி என்பதினாலும், அதனைப்
பரிபாலகஞ் செய்பவரானே நான்காவதும் ஒருவகை குறிப்பிக்கப் பெற்றது. அதுவும்
ஸ்ரீபதஞ்சலிபகவானால் காண்பிக்கப் பெற்றுளது:—வாகியாப் யந்தரவிஷயாக்ஷேபீ சதுர்த்த
மாம் = முன்மொழிந்த உபயஜயத்தால் அதனாக்ஷேப பூர்வகம் பிராணகதிய பாவம்ஸ்திரம்
நான்காவது பிராணாயாமமாம் என்பதுபொருள். தேசகால சங்க்யைகளால் வெளிவிடயம்
நன்குகாணப்பெறும், ஆக்ஷிப்தமாம், அவ்வாறே ஆப்யந்தரவிடயம் நன்குகாணப்பெறும்
ஆக்ஷிப்தமாம், இருவகையானும் தீர்க்கம்சூக்குமம் அதன்வாயிலாய பூமிஜயத்தால்முறையாக
இரண்டன் கதியின்மை நான்காவது பிராணாயாமமாம்; மூன்றுவதோ விஷய அநாலோசித
மாய்க் கதியபாவமாம், ஒருமுறை தொடங்கியதாயே தேசகால சங்கியைகளானே நன்கு
காணப்பெற்றது தீர்க்கசூக்குமமாம்; நான்காவதோ சுவாசப்பிரசுவாசங்களின் விஷய அவ
தாரணத்தானே முறையாகப் பூமிஜயத்தால் உபய ஆக்ஷேப பூர்வகமாகக் கதியபாவம் நான்
காவது பிராணாயாமமாம் என்னுமிது சிறப்பாம். ஆக்ஷிப்தம் = அப்யாச வசீகிருதரூபத்
தானே அவரோபிதம். பரிதிருஷ்டமாய் = பரீக்ஷிக்கப் பெற்றதாய். அநபேக்ஷசதுர்த்த
மாம் எனவும் பாடமாம் = முடிந்த அளவுவாயுவை விடுத்துப் பின்னியற்றும் அதுவெளிக்
கும்பகமாம், முடிந்த அளவுவாயுவைப் பூரித்துப் பின்னியற்றும் அது உட்கும்பகமாம்,
ரேசகபூரகங்களை யநாதரவுசெய்து கேவலகும்பகம் பழகிவரவே முன்மூன்றன் அபேக்ஷை
யால் நான்காவதாம் நித்திரையாலசியாதி தோஷத்தோடு கூடியவர்க்கு ரேசகாதித்திரய
மாம் அவையில்லவர்க்கு நான்காவது எனப்பகுத்துனர்க. பிராணாயாமப் பிரதிஷ்டையின்
பிரயோஜனமும் ஸ்ரீ பதஞ்சலிபகவானால் உரைக்கப் பெற்றுளது:—பின்னவற் கிலயமாம்
பிரகாசாவரணம் = பிராணாயாமங்களை அப்யசிக்கும் இத்தயோகிக்கு க்ஷீணமாம் விவேக
ஞான ஆவரணீயம் கர்மம், மகாமோகமயமாம் இராகமாம் இந்திரஜாலத்தால் பிரகாசசீல
மாய சத்துவம் மறைக்கப்பெற்று அதுவே அகாரியத்தில் ஏவும் என்பதாயறைவர்; அஃதா
மிவனது பிரகாச ஆவரணம் கர்மம், சம்சார நிபந்தனமாய் நிற்பது பிராணாயாம அப்யாசத்
தால் துர்ப்பலமாம், கணந்தோறுமே கழிந்துபோம், அவ்வாறே அறையவும் பெற்றுள்
ளது:—தபம்பரமன்று பிராணாயாமத்தினும் அதனான் மலங்களின் விசுத்தியாம் ஞானத்
தின் விளக்கமும் என்பதாம். இது பாடியத்துள்ளது. தாரணைகளிலே யோக்யதைமனக்
காம் = மேலும் பிராணயாமமானது மனத்தைத் திரப்படுத்தித் தாரணைகளில் யோக்கிய
மாக்கும். ஆதார நாபிசக்கிரஹிருதய புருவமத்திய பிரஹ்மரந்திராதி தேசவிசேஷத்தில்
சித்தத்தின் நிலைப்புதாரணையாம், ஆண்டுப் பிராணாயாமத்தானே இரஜோகுணகாரிய சாஞ்
சல்லியத்தினின்றும் தமோகுணகாரிய ஆலசியாதியினின்றும் நீக்கப்பெற்ற மனம்தக்க
தாம் என்பதுபொருள். தாலுமூலத்திற் சேர்ந்துள்ள தாயகண்டிகை = திறந்தமுகத்தின்
ஜிஹ்வாமூலத்தில் தனம்போலும் தொங்குவதாகக் காணப்பெறும் இந்திரயோனி, "அந்தர
மதாகத்தாலு வொட்டியாதித் தனமெனத் தொங்கியுள்ளதோ அது இந்திரயோனி" எனச்
சுருதியுண்மையின், அதனை, சுழற்றிப்பலவிதமாக வர்த்தன அப்யாசாதிப் பிரயத்தினத்
தானே உள்ளே பிராணசஞ்சார மார்க்கத்தில் மூர்த்தரந்திரத்தில் புகுத்தப்பெற்றதாய
நாவினாலே அழுத்திக் கீழ்ப்படுத்திப் பிராணனது ஊர்த்வரந்திரமாகிய பிரஹ்மரந்திரத்
திற் புகுந்து தரித்துநிற்கவே பிராணனது அசைவு நிற்கும். இதனாலே லம்பிகையோகத்
தோடு சேர்ந்ததாய ஆகாசதாரணை காட்டப்பெற்றதாம். அதன்பிரகாரமும் ஸ்ரீ பகவானா
கிய கந்தசுவாமியால் உரைத்தருளப் பெற்றுளது:—மாரசனையைத் தாலுவின் விவரத்தின்

மாட்டி, மேன்முகவமுதத்தினை நிறுவியேமேலாம், மாக நிர்ச்சரத்தன்மையை மன்னி
வாழ்ந்திடுக, ஆகுந்திங்க ளைக்தொன்றினிலைய மொன்றிலேயே. மேனுக்கினன் மேற்றிரமே
வினஞய்ப், பானந்திருச்சோமம் பயின்றவனுய், ஆனுவரை மாதத்திலையமின்றே, தானு
மரிதாண்டுவன் யோகவித்தே. எது பிரமரந்தரத்திற் றிதமாகுமாகாயமெரி நீரொக்கும்,
எது நாதன் சதாசிவனேடுறுஞ் சாந்தஹகாரமெனு மெழுத்சதாகும், அதில் வாயுத்தனைப்
புகுத்தி யைங்கடிகையுளஞ் சேர்த்திய மைந்துகாக்க, விதவீட்டின் வாயிறெறும் படுவாம்
விண்டாரணையா யியம்பலாமே. சகல விகாரங்களும் விடுபட்டு அதனுனே சூக்குமமாகிய
இருதய ஆகாயத்தில் நாமாதியாவுமே விடுபட்டு உள்வெளியுணர்வு விருத்திகளெவையுமே
நிருவிகற்ப சமாதியானே யொளிந்து போமாயின் பிராணனது அசைவுநீங்கும். நாசியின்
நுனியைக் குறிப்பிட்டுப் பன்னிரண்டங்குல அளவற்றவெளி ஆகாயத்தில் விழியுளத்தடை
யாலாதல் அதன்றடை யாமெனல்:—நாமென்பதாதி பன்னிரண்டங்குல பரியந்த மூக்கின்
நுனிநின்மல ஆகாயத்தில் உணர்வு திருஷ்டிகள் ஒளியுமாயின் வாயுவினியக்கம் வயங்கா
தாம். லம்பிகாயோக அசமுச்சிதமாசத்தானுதல் அயலுபாயங்கொண்டு பயின்றமுன்மொ
ழிந்தக் ககனதாரணையால் அத்தகைச் சித்தியாமெனல்:—தேடு சாதனையா லென்பதாதி.
பயிற்சிகொண்டு ஊர்த்வரந்திரத்தால் நாமேல் துவாதசாந்தமாம் பிரஹ்மரந்திரத்தில் மேவிய
பிராணன் கழிந்து தேய்ந்து ஒய்ந்துபோமாயின் வாயுவினியக்கம் வயங்காதாம். இவ்வண்
ணம் கேசரீமுத்திரையும் வாயுவினியக்கம் வயங்காதிருக்குங் காரணம் எனல்: — புருவ
மென்பதாதி புருவத்திடையில் கண்ணின் கருமணிகளின் ஒளிகள், அதாவது சக்ஷு இந்திரி
யம் நீண்ட நிரோதத்தாற் சாந்தியடையுமாயின், உபரதியடைந்தது போலவே, நானுனி
யாதல் பிராணனுதல் முன்மொழிந்த வண்ணம், கபாலத்துவாரப் பிரவேசத்தானே துவாத
சாந்தத்தை யடையுமாயின் வாயுவின் இயக்கம் வயங்காதாம். புருவமத்தியாகிய அவிமுக்த
ஸ்தானத்தில் " எவ்விவ்வக்ஷரம் அநந்தம் என்னும் ஜாபால சுருதியாதிப் பிரசித்தசேத
னத்தை = சின்மாத்திர சுபாவமாய பரமேசுரனைத் தனதுவடிவமாக வுணர்ந்தவழி வாயுவி
னியக்கம் மலராதாம். கேசரிமுத்திரையானது ஸ்ரீ கந்தசுவாமியானும் கூறப்பெற்றுள
தாம்:—நற்கபாலக்குகைதனி னுவுதான், புக்குமாறுறப்போய்ப் புருவத்திடைச், சிக்குமாயிற்
றிருட்டியிதுதனைச், சொக்குகேசரி யென்னவே சொல்லுவார்; இந்தக்கேசரி முத்திரை
யேய்ந்தவர், நொந்துவாடில ரேபலநோய்களால், வெந்துயற்றிலர் வெய்யவினைகளால்,
நைந்துசோர்ந்திலர் காலத்தைநாடியே. குருவின் றிருவருளாலேனும் பரமேசுரரின் றிரு
வருளாலேனும்; காகதாலீய நியாயத்தால் திடீரென்றுதான் ஞானம் வெளிப்பட்டு விடின்
ஆதல் அல்லது விரைவிற்றுனே சித்தவிகற்ப உபசமம் உண்டாயின் ஆதல் வாயுவின்
றடைவயங்கு மெனல்:—சடுதியிற்றுனே எந்த ஞானமானது உண்டாகாநிற்குமோ அதில்
அதிதிடப்பற்றுனது உளதாகியவழி விகற்பாம்சம் விரவாதொழிந்தவழி வாயுவினியக்கம்
வயங்காதாம், புகல நின்றிடு பிரமபுரமெனும் பதியதனிற், றகரபுண்டரிகமெனு மகமிலங்
கியதகர, ககனமுண்டது மறைகள் கருதநின்றுளபிரம, மிகவிரும்புவர் பிறவிவிட விரைந்
துளவிமலர். என்பதாதி சுருதிப்பிரசித்ததகர ஆகாயத்திலாதல் நீள்போது சித்தம் புகுத்த
லால் அதன் சாக்ஷாத்கார முளதாகவே அதன் சித்தியாம் எனல்:—நீள்காலம் இருதயத்தில்
ஒருமையுடன் தகராகாச வுணர்வுடனிருந்து வாதனையற்று மனமானது தியானஞ்செய்த
லானே வாயுவின் இயக்கம் வயங்காதாம். அவ்வாறே ஸ்ரீ பதஞ்சலிபகவானும் கூறியுள்
ளார்:—இருதயத்திற் சித்தசம்வத்தாம் = இப்பிரமபுரத்தில் எவ்வித் தகரபுண்டரீகமன்
முளதோ ஆண்டுவிஞ்ஞான் அதிற்சம்யமத்தால் சித்தசம்வித்து, அதோமுகமாய இருதய
பதுமசித்த ஸ்தானத்தில் ஒருமைப்படுத்தலானே வாசனைசகித சித்தத்தின் உணர

யுண்டாமென்பது பொருள். பரார்த்தந்தன்னினும் சுவார்த்த சம்யமத்தாற் புருடஞான
மாம் = பரார்த்தமாய போகஜடத்தினும் அன்னிசித்தியற்கையன், சுவார்த்தம் = அனன்
னியசேட மாயபுருடன், ஆண்டொருமைப் படுத்தலானே புருடனது சாக்ஷாத்காரம் உண்
டாம், அச்சாக்ஷாத் காரத்தையும் புருடன் அறிவன், இல்லைமறித்து ஞாதாஞேயம், ஞாதுரு
ஞேயத்தன்மைகட்கு அத்தியந்தம் விரோதமாதலின் என்பது கருத்தாம்; "விஞ்ஞாதா
வையரே யெதனாலே விளக்க வறிந்திடலாகும்" எனமறையுமறைதலின். ஆகலின் சம்வின்
மயமாய்த் தூயதாய் உள்ள இருதயத்தில் வாசனையை க்ஷயஞ்செய்து வலிதில் உள்ளத்தை
யேவியழுத்தின் வாயுவினியக்கம் வயங்காதாம். இம்மூறைகளானும் பிறவற்றானும் நாஞ
சங்கற்ப கற்பிதங்களானும், நாஞதேசிகர் உபதேசங்களானும் வாயுவினியக்கம் வயங்
காதாம்.

(௪.) நூலொடு = அத்தியான்ம சாஸ்திரத்தோடு, அறிஞரை = பிரஹ்மவித்துக்களை,
முன்னியே = அடைந்து, விராகத்தை = விடயங்களில் வெறுப்பை, நனிமுயன்று, கற்
றதனினால் = சமாதியப்பியாசஞ் செய்வதாகிய இவ்வுபாயங்களான ஏதுக்களால், அத்தி
யான்மசாஸ்திரம், பிரஹ்மவித்துக்களின் சங்கம், விஷயங்களில் வெறுப்பு, சமாதியப்யாசம்
இவைகளே அவ்வுபாயங்களாம், அவ்வேதுக்களினால் என்பது பொருள்.

முன்பு குடும்பமாநடை = சம்சாரசம்பந்த விவகாரங்களில், நிராசை நிறைந்திடில் =
அனுதரம் திடமாயின், அனிசநீள்பக லொருமையே விளங்கிடவுதித்த = ஏகப்பிரகாரமாக
உதித்த, விரும்பியதற்பொருட் டியானத்தாற் சாதனைதன்னால், அபிவாஞ்சையை மீறுத
தியானத்தினால், எங்கெங்குந் தன்னிரதசத்தை யபிமானிக்கப்படுவது அபிவாஞ்சை அதனை
தன்றியானமாகிய ஏதுவினால், ஏகதத்துவ கனபரிசயத்தினால் = ஏகமே என்றும் வஸ்து
சொரூபத்தினது நிரந்தரமாறிமாறி இயற்றும், அனுசந்தானமியாது அவ்வுபாயத்தினால்,
உயிர் தடையெய்தும்=பிராணவாயுவினது சாஞ்சல்யம் நிருத்தமாமென்று மேற்கவியோடு
அந்நுவயஞ்செய்க.

திடமுறுபழக்கத்தால் =திடமாக மாறிமாறிப் பரிசீலனஞ் செய்யுமேதுவினால், இளைப்
பற = அப்பிரயாசஜந்நியமான கேவலகும்பக சித்திபரியந்தம், பூரகாதீயுயிரில் = பூரக
ரேசககும்பகப் பிரகாரமான பிராணாயாமம்யாது அவ்வேதுவினால், ஏகாந்தமுற்றுள்ளுணர்
யோகபாவனை தன்னால் = விவிக்ததேசப் பிரவிர்த்திதத் தியானோபாயத்தினால், பிராண
னில் அசைவுதான் விலக்கிடப்படும் = பிராணசலனம் நிரோதிக்கப்படும். அப்படியே
யாக்ஞவற்கருங் கேவலகும்பகப் பிரகாரத்தைக் கூறியிருக்கின்றார்:—இப்பிராண ஜயோ
பாயஞ் சர்வவிருத்தி யுபசாந்தக மென்பதாம். பாடபேதம்:—கேவலகும்பகந் தொடங்கி
யாஞ்ஞவற்கியர் கூறுவதாவது:— இப்பிராணஜயம் அபாபமாம் சர்வமிருத்தியு உப
காதகமாம்.

பிரணவத்தின் = ஓங்காரத்தின், உச்சாரணஞ்செய்யின், முடிவினில் = பரியந்தத்
தில், சொல்லுறு முண்மை = சத்ததத்துவ மென்னும் நாதரூபம்யாது அதனது விரவு
நாட்டத்தால் = அநுசந்தானமாகிய ஏதுவினால், துயில்பவனுணர்வுதான் வெளிப்படில்=
பகிர்முகமான சித்தவிருத்திக்கு நிமீரணம் = மரணம் = நிமீலனம் = நிலீனம், வரின்,
பிரணவாநு சந்தானத்திற்கு, மனோலயவேதுத் தன்மையினதன்வசத்தாற் பிராணலயவே
துத்துவஞ் சொல்லப்பட்டது. ஹடப்பிரதீபிகையில் அது சொல்லப்பட் டிருக்கின்றது:—
ஆசனஞ்சித்தி யொப்பொன்றில்லை, இல்லை கும்பகம்கேவலோபமம், கேசரியொப்பாம்
முத்திரையில்லை, நாதசமான விலயமில்லை; என்றும், காட்டத்திற் பிரவர்த்தித வன்னி
காட்டத்தோடு சமிக்கும், நாதத்திற் பிரவர்த்தித்த சித்தம் நாதத்தோடுலயிக்கும்; சகல
வாகியத்தையுமறந்து நாதத்திற் பாலினீர்போன் மனது மேன்மேலும் ஒருமையுற்று. பின்பு

சக்கிரஞ் சிதாகாயத்தில் விலயமாமென்றும், நாவின்மூலத்தினது மேலிருப்பனவாம் வத்திரத்தின் அந்தர்ப் பாகங்களான தாலுகள் அவைகளின்மூலம் மத்தியபாகம்செறி = அதிலிருப்பதான், இதழினை = லம்பிகையை, சூக்குமஜிகுவை வடிவாக ஞாலாநின்று மாமிச கண்டத்தை உரவினல் = எத்தன விசேடத்தினல், நாவால் =சாதனரூபத்தால், தள்ளி= ஆக்கிரமித்து, பிராணன், உயர்புரை = ஊர்த்துவரந்திர மென்னும் மேற்றுவாரம், கபால குகரம், யாதுதான் சுழும்னையின் மேலானதாய துவாரமெனப் பெறுமோ, அப்படியே சொல்லுகின்றது சுருதி:—அந்தரமாகத் தாலுவின்கண்யாதிது தனம்போற்ளூங்கா நிற்குமோ அது இந்திரயோனியாம். அத்தன்மையான ஊர்த்துவரந்திரமென்னும் கபால குகரத்தை, ஒட்டினல் = அடையின், உயிர்நிற்கும், பிராணசலன நிருத்தமாம். இதனாலும் லம்பிகாயோகம் வெளிப்படுத்தப்பட்டது. எது கேசரியென்றும் நபோமுத்திரை யென்றுஞ் சொல்லப்படும், அது விவேகமார்த் தாண்டத்திற் சொல்லப்பட் டிருக்கின்றது:— கபாலகுகரத்திற் சிகுவை விபரீதகதியாய்ப் பிரவேசிக்கப்பட்டுத் திருஷ்டி புருவமத்தியிற் பொருந்துவது கேசரிமுத்திரையாம்; உரவினல் என்றதனற் சிகுவையின் வளர்ச்சி சித்தித் தற்குச் சேதனசாலன தோகனதிரூபமான யத்தனவிசேடஞ் சொல்லப்பட்டது. அஃதட தீபிகையிற் கூறப்பட் டிருக்கின்றது:—சேதனசாலன தோகனங்களாற் கலையை முறையாக அத்துணை வளர்த்தவேண்டும், அஃதெத்துணை புருவமத்தியத்தைப் பரிசிக்கலாமோ, அப்போதன்றோ கேசரிசித்தி யென்பதாம். கலை = ஜிகுவை, அதனது சேதனமாவது, ஊர்த்துவகமனப் பிரதிபந்தகமாய் அதோபாகத்திருக்குஞ் சர்மத்தினது சேதம், சாலனம்; பின்பு ஈரவஸ்திர கண்டத்தாற் சுற்றப்பட்ட ஜிஹ்வையைக் கைகளாற்றிடமாகப் பிடித்து இடவலமாகச் சுழற்றுவது தோகனமென்பது கைகளால் ஒழுங்காக மெல்லமெல்ல இழுத்தலாம்.

நாசிநுனிதன்னில் = நாசியின் அக்கிரபாகத்தில், அங்குலி பன்னிரண் டெல்லையின் = நாசிநுனி முதற்றுவாதசாங்குல பரிமிதமான, நீடுவானத்தில் = நிர்மலநபோபாக மென்னுந் திருக்கில் ஐக்கியரூபத்தில், அறிவுகள் = விருத்திஞானம், இறந்திடில் = விலயமுறும்போதில், நிலைபெறவுயிர் நிற்கும் = பிராணசலனம் நிருத்தமாம், அப்படியேயாஞ்ஞவற்கரும்:—நாசாக்கிரத்திற் பிராணங்களர்க்கியே! வாயுவினது விஜயங்காரண மென்பதாம் சாதனையால் = யோகசாஸ்திரங்களிற் கூறப்பட்ட பவனநிரோத அப்பியாசத்தினல், உயர் புரைவழி=சுழுமுனை மார்க்கத்தால், உயிர் = பிராணவாயுவு, சிகுவைமேல் விரலீராறுடு= ஜிகுவைசத்தத்தாற் சோடசாரம் விசுத்தமென்னுஞ் சக்கிரஞ்சொல்லப்பட்டது. மேல் என்னும் ஊர்த்துவசத்தத்தாற் பிரமரந்திர துவாதசாந்த மென்னும் அநாகதநாமமுள்ள துவாதசாரஞ்சக்கிரஞ் சொல்லப்பட்டது. தாலுவில் ஊர்த்துவத்திற் றுவாதசாந்தத்திலாவது சென்று நின்றதாயின், உணர்வு = பகிர்முக விருத்திஞானம், ஒளிக்குமேல் = நழுவுமாமாயின், உயிர் நிற்கும் = பிராணசலனம் நிருத்தமாம், இவ்விடத்தும்; உயர்புரைவழி = கபாலகுகரத்தாற் பிராணவாய்வு சிங்குவைமேல் விரலீராறுடுபோய், ஜிகுவைத்தானத்தின் மேற்றுவாதசாங்குல பரியந்தமான பிரமரந்திரத்தை யடைந்ததாயின் என்று பொருள் கொள்க. தாலுமூலஞ்செறி, என்பதாதியால், முற்கூறிய கேசரியோகத்தாற் கூறியது கூற லென்பது உபேக்ஷிக்கப்பட்டது. இவ்விடத்துஞ் சிகுவையாதிகளுக்குப் பிராணமிருந்தானமாதலின் அப்பிராணனுக்கு அவற்றில் விலயங்கூடுமென்று அநுசந்தானஞ் செய்க. அப்படியே யாஞ்ஞவற்கர் சொல்லியிருக்கின்றார்:—பாதங்குட்டத்திலும், குற்பத்திலும், ஜங்

காமத்தியிலும், இடையின், உன்னதப்பிரதேச மூலத்திலும், ஜானுமத்தியிலும், ஊருத்து வயத்தின்துபாயு மூலமும் அதனது பின்பும் மத்தியிலும், தேகத்தினது மேட்ரகம், நாபி, இருதயமும், கார்க்கியே ! அப்படியே கண்டகூபமும் தாலுமூலமும், நாசியின்மூலம், கண்களின் மண்டலத்தும், புருவங்களின் மத்தியிலும், நெற்றியிலும், சிரசிலும், முனிசிரேட்டையே ! மருமத்தானங்கள் என்பதாம். அங்குஷ்டம், குற்பம், ஜங்கா, ஊரு, ஜானு மேட்ரகம், = கட்டைவிரல், குதி, கணுக்கால், துடை, முளங்கால், சிசுனம் என்பன முறையே பொருளாம். இவ்விடத்தும், சாதனைசத்தத்தால் ஜிதேந்திரியனாய், விவிக்த = ஏகாந்த, தேசத்திலிருப்பவனாய், இதமித சுத்த ஆகாரஞ் செய்பவனாய், குரு உபதேசமார்க்கத்தால், தௌதி, பஸ்தி, முதலானமேல் கீழ்சோதிக்கும் காணங்களால் விசுத்ததேகனாய் ஆசனப் பிராணாயாமங்களாற் சோதிக்கப்பட்ட நாடியுடையவனுக்குச் சுழுமுனையிற் பிராண சஞ்சாரவேதுவான மகாமுத்திராப்பியாசஞ் சொல்லப்பட்டது. தௌதியாவது ஆறுகர்மங்களில் ஒன்றும் அதாவது:—நான்கங்குல அகலமும் பதினைந்துமுழ நீளமும் உள்ள ஈரவஸ்திரத்தைக் குருவானுபதேசிக்கப்பட்ட மார்க்கமாக் மெல்லமெல்லக் கொஞ்சங் கொஞ்சமாய் விழுங்கவேண்டும் என்பதாம். பஸ்தியும் அத்தகையதே அதாவது:—நாபியளவுள்ள ஜலத்திலிருந்து குதத்தில் நாளத்தைச்செலுத்தி உத்கடாசனமாக உட்கார்ந்து கொண்டு ஜலம் உள்ளே பிரவேசிக்கும் வண்ணம் ஆதாரத்தைச் சுருக்கவேண்டும்; பின் உட்சென்ற நீரை நவுலிகருமத்தால் அலம்பி வெளியே விடவேண்டு மென்பதாம். அம்முத்திரைகள் பத்துள வென் ஹடதீபிகையிற் சொல்லப்பட் டிருக்கின்றன:—மகாமுத்திரை மகாபந்தகம், மகா வேதம், கேசரி உட்டியானம், மூலபந்தம், ஜாலந்தரபந்தம், விபரீதப் பெயரியகரணீ, வஜ்ஜிரோலி, சக்திசாதனம், இம்முத்திரைகள் பத்தும் எத்தனத்தாற் கோப்பியஞ் செய்யத்தக்கனவாம். இங்ஙனம் மத்தியம நாடிதிடாப்பியாசத்தால் யோகிகளுக்கு ஆசனப் பிராணசம்யாம முத்திரைகளாற் சரளமாம். மகாமுத்திராதி லக்ஷணமோ நூல்விரியுமென்னும் பயத்தினுல் இவ்விடத்து எழுதப்படவில்லை, அதனைப் பிறநூலிற் காண்க. புருவ நாப்பண் = புருவமத்தியில், அத்துவிய சிரமென்னும் வியோமசக்கிரம், அதுவே சின்மயத்தினது இச்சோதி வெளிப்படுந்தானம், அது கூறப்பட்டிருக்கின்றது:—புருவ்யுகமத்தியம் பொருந்தியதாக மின்னல்போற் சர்வஜகத் பிரகாசமாயிருக்கும், ஒவ்வொருபுண்ணிய திருஷ்டியுடையவர்க்கே வெளிப்படும், சின்மயமான ஜோதியென்பதாம். கண்மணி = கண்மணிகளின், பார்வைதான் = தரிசன வியாபாரமானது, பொருந்து சாந்தியின் மாய்ந்து = உபரதியடைந்ததாயின், கேதனம்=சங்கேதம், இச்சத்தத்திற்கு இதுபொருளெனப் புருடகற்பிதமான வாச்சிய வாசகபாவம்; அங்குதெருளும் = அதையநுசரிப்பது, அறிவு = யாதது சவிகற்பஞான மென்பதாம், அது, தெரிவறில் = அந்தமடையின், திரிவுறுதுயிர் நிற்கும்; அன்றி கேதனம் = சத்தார்த்த சம்பந்தத்தில், தெருளும் பிரபுத்தமுள்ள வறிவு சத்தார்த்தம்யாது அது சம்பந்தத்தின் பின்சம்பந்தமுறுஞ் சவிகற்பமென்னுஞானம் அதுதெரிவறில் என்றும் பொருள்கொள்க. புத்தமென்னும் பாடம் ஆயினோ, கேதனம்= சப்தார்த்த சம்பந்தத்தை, பிரபுத்தம் எச்சேதனம் = சப்தார்த்த சம்பந்தங்களை யநுசந்தானஞ்செய்யும் விகற்பக விஞ்ஞானம் யாதுளதோ, அஃதந்தத்தை யடையுமாயின் வாயுவினியக்கம் வயங்காதாம் என்பது பாடபேதம்.

ஈண்டுஞானம் விரைவாகவேயுண்டாம் = அறிதற்கு இச்சையே இன்றாயினும் வலியவே உற்பன்னமாயதாம், வாதனைவசத்தினுல் அன்றிவிடய சன்னிதானத்தினுல் என்க.

அந்த ஞானந்திடமாகப் பாவிக்கப்பட்டு விகற்பபரகத்தை விடிற் பிராணசலனநிரோதமாம் எப்போது உற்பன்னமான விருத்திஞானமே திடமாகப் பாவிக்கப்பட்டதாய் விடயாமிச மற்ற சன்மாத்திரத்தைச் சேருமோ அப்போது பிராண சலன நிரோதமுமா மென்பது கருத்து.

நீள்போது முனியென்னும் மௌனவிரத நிட்டனை யோகிக்குச் சித்தத்தானியத மான ஆகாசபாவனமியாது அதினுலுதிக்கும் விஷயவாசனை யின்றிச் சித்தநிவிர்த்தி செய்யுந் தியானமியாது அதினும் பிராணசலன நிரோதமாம். இவ்விடத்தில் அடயோகத்தைத் தவிர இராஜயோகமும், இராஜயோகத்தைத் தவிர அடயோகமும் சித்தியாதாதலின் இரண்டுஞ் சலனமறுத்தற்கு அப்பியசிக்கவேண்டும் என்னும் நியாயத்தினுலும், மாருத்தி னது விதியை நல்ஞான சகிதமாய்த் திடாப்பியாசஞ் செய்யவேண்டும். மனேயுக்தமாய் என்றும் பாடம். இதரத்தில் மனிதனுல் மனேவிருத்தி சேர்ப்பிக்கலாகாது என்னும் வசனத்தினுனும், மனேநிரோதத்தோடு கூடவே பிராணநிரோதம் அப்யசிக்கவேண்டும் என்று அங்கங்கு துயில்பவன் உணர்வுதான் வெளிப்படின், அறிவுகள் என்பதாதியால், இறந்திடின் என்னும் அந்தத்தாற் சொல்லப்பட்ட தென்று அநுசந்தானஞ்செய்க.

இந்நெறிகளால் = முற்கூறிய உபாயங்களாலும், இங்ஙனம், அநேகசங்கற்ப = நாநா விதங்களான சங்கற்பங்களால், கற்பிதம் = கற்பிதங்களான, பேதத்தருள் செய்யும், பலதேசிகர் சொற்களால் = நாநாவித ஆசாரியர் சொல்லிய இதரக்கிரமங்களாலும், அசை வற உயிர்நிற்கும் = பிராணசலனம் நிரோதமாம். இவ்விடத்தும், பேதத்து, என்றதனுல் தானுந்தரா வலம்பிகளான பிராணநிரோத உபாயங்களெவை, சித்தலய உபாயங்களெவை, பூர்வாசாரியர்களாற் றெரிவிக்கப் பட்டனவோ அவையனைத்துஞ் சங்கிரகிக்கப்பட்டன. சித்தலய உபாயங்களுக்குப் பிராணலய உபாயம் இயல்பாதலின் என்க. அஃதட்டதீபி கையிற் கூறப்பட்டிருக்கின்றது:—எவனுற்பவனம் பந்திக்கப்படும் மனம் அவனுலே பந்திக் கப்படும், மனதும் பந்திக்கப்படும் எவனுல் பவனனும் அவனுற் பந்திக்கப்படும், என்ப தாம்; அச்சித்தலய உபாயங்களும் அநந்தமாதலின் மிகத் தெரிவித்தற்கரியனவாம்; அதுவுங் கூறப்பட்டிருக்கின்றது. அவைகளும் ஆதிநாதனுல் ஒன்றேகாற்கோடி லயப்பிரகாரங்கள் சொல்லப் பெற்றனவாளு மென்பதாம். 31—32—33—34—35.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விரைந்து அடயோகத்திற் பிரவிர்த்தித்தலே விலக்கியுரைத் தல்:—இந்தவென்பது.

இந்தயோகங்க ளறிவெலா மிளேப்பற வியற்றுசா தனேயாலே
வந்துமேற்பிற வாதவர்க் குபாயமாய் வந்துறும் பழக்கத்தா
லுந்துமாருயி ரசைவுதான் கெடுமெனி லுள்ளமுஞ் சமித்தாறுஞ்
சிந்தைதான்சமித் தாறுமேற் செல்கதி சேடமாய் விடுந்தானே.

(பு-ரை.) இந்த யோகங்கள் = இந்தயோக யுக்திகள், அறிவெலாம் இளேப்பற = உணர்வுகளியாவும் இளேப்பற்றிருப்ப, இயற்று சாதனேயாலே = செய்யாநின்ற அப்பியாசத் தினுலே, வந்துமேற் பிறவாதவர்க்கு = இனிச்சன்மம் எடாதவர்க்கு, உபாயமாய் வந்து றும் = உபாயமாக வந்தடைந்திடும், பழக்கத்தாலுந்து மாருயிர்கெடுமெனில் = அப்பியா சத்தால் கிளம்பும் பிராணவாயுவானது அடங்குமாயின், உள்ளமும் சமித்தாறும் = மன மும் சலனம் விடுத்துச் சாந்தியை அடையும், சிந்தைதான் சமித்தாறுமேல் = சித்தமானது

சஞ்சலம் விட்டுச் சாந்தியையடையுமாயின், செல்கதிசேடமாய் விடும்தானே = சுயம்மோக்ஷ பதம் சேடித்து விடுமென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) இந்தயோகயுக்திகள் அப்பியாசத்தானே பாதமற்றனவாம், ஹடத்தால் நிரோதஞ்செய்யினோ ரோகாதிய பாதங்கள் உண்டாகவே செய்யும், என்பதுகருத்து; பவித்திர அதிகாரிக்குப் பவபேதன விஷயத்தில் உபாயத்தன்மையை இது இயைகின்றது. ஆன்மராமனும் சோகங்கடந்தவனும் உள்ளின்பனும், அதிகாரி யப்பியாசத்தானே ஆவன் அயலொன்றாலாகான் ஆகலின் அப்யாசமுடையவனுதி யென்பதாம். அப்பியாசத்தானே பிராணன்களின் அசைவானது க்ஷயமாகியவழி, மனமானது மிகச் சாந்தியையடையும், அடையவே நிர்வாணபதமானது எஞ்சாநிற்கும்.

(ச.) யோக நுண்ணறிவெலாம் = யோகயுக்திக ளனைத்தும், சாதனையால் = அப்பியாசத்தால், பழக்கத்தால் = அப்பியாசத்தால். மூலம்: பவ்வியனுக்கு = பாக்கியவானுகிய யோகிக்கு, நிர்வாணம் = கைவல்யரூபம் ஆன்மதத்துவம். (36)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இதுவரையோக் நெறியானது இயம்பப்பெற்றது இனித்தத் துவஞானத்தை இயம்பவேண்டு மென்று ஸ்ரீ இராகவர் வினுதல்:—விகற்ப என்பது.

விகற்ப வாக்கெலா மெப்பத நோக்கியே மீளுமப் பதந்தானே
விகற்பமற்றிடிற் சேடிக்கு மெனமுனி விளம்பலும் விறல்வீர
னிகழ்த்தியோகத்தை யுறுமனம் பொறிகளி னெறிசெலாச் சமந்தன்னை
நிகழ்த்தினுயினி யுண்மைஞானத்தையு நிகழ்த்தென முனிசொல்வான்.

(ப-ரை.) விகற்பவாக்கெலாம் = நானுவிதமாய வாக்குகள் யாவையும், எப்பதம்நோக்கியேமீளும் = எந்தப்பரமபதத்தினை கோசரிக்க முடியாமல் திரும்பிவிடுமோ, அப்பதந்தானே = அந்தப்பரமபதமே, விகற்பமற்றிடில் சேடிக்கும் = யாதொரு விகற்பமுஞ் செய்யாதொழியின் எஞ்சிநிற்கும், எனமுனி = என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுதலும், விறல்வீரன் = வலுமைபொருந்திய அதிவீரராகிய ஸ்ரீ இராகவர், நிகழ்த்தியோகத்தை = யோகத்தைக்கூறி, உறுமனம் = அதனோடு கூடியமனமானது, பொறிகளின் நெறிசெலாச் சமந்தன்னை = இந்திரிய விடயங்களின் மார்க்கத்திற் போகாதசாந்தியை, நிகழ்த்தினுய் = கூறினீர்; இனி உண்மைஞானத்தையும் நிகழ்த்தென முனிசொல்வான் = இப்போது த்துவஞானத்தையும் கூறவேண்டு மென்று பிரார்த்திப்ப ஸ்ரீ வசிட்டபகவான் கூறத் தொடங்குகின்றார்.

(ஸ்ரீ - வீர.) விகற்பமாம் சக்ஷயத்தானே அதிகாரிக்குப்பதமது எஞ்சிநிற்கும், எதனினின்றும் சமஸ்தகலனுன் விதங்களாய வாக்குகள் திரும்பாநிற்குமோ; ஸ்ரீ இராகவர் வினுவுதல்:—யோகத்தோடு கூடிய சித்தத்திற்குச் சமமே நிரூபிக்கப்பெற்றது, நல்லஞானமிப்போது அடியேனுக்கு ஹேபிரபுவே! மிகக்கிருபையினுல் அருளவேண்டும்! என்ன ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுதல். சித்தநாசத்தின் நெறியிரண்டியோகமுந் தெளிந்த ஞானமுமாகும், என்றுரைத்த கிரமங்களின் மத்தியில், முதலாவது சித்தத்தின் சமம் = நாசப்பிகாரம் நிரூபிக்கப்பெற்றது தங்களால் என்பது வினுவின் பொருளாம்.

(ச.) விறல்வீரன் = ஸ்ரீ இராகவர், சித்தநாசத்தினெறி யிரண்டியோகமுந் தெளிந்த ஞானமும் என்றயோக ஞானங்களின் மத்தியில் யோகலக்ஷணே பாயமுடைய புருடனுக்கு

இங்ஙனம் முற்கூறிய பிரகாரமாக மனத்தினது, சமம் = நாசம், தெரிவிக்கப்பட்டதென்பது பொருள். (37)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இலக்கண சொரூபசாதனாதிகளானே சம்யக்ஞானத்தைவிரித்துரைப்பவராய், முதலில் ஆன்மாவை யிவ்வாறிருக்கின்றதெனத்துணிந்து அதனாலே ஜகத்பாதாத்மதா லக்ஷணம்யாதுளதோ அவ்விலக்கணத்தைக் கூறல்:—ஆதியந்தமென்பது.

ஆதியந்தமி றோற்றமே தன்வடி வாகிய பரமிங்குச்
சோதியாய்நின்ற தென்னுமிவ் வுறுதியே துகளறு மெய்ஞ்ஞானம்
பேதியாநின்ற கடபட வடிவமாம் பெரும்பொருட் பலசத்தி
தீதிறற்பரம் வேறில தென்றுணர் திண்மையே நற்காட்சி.

(ப-ரை.) ஆதியந்தமில் தோற்றமே தன்வடிவாகியபரம் = முதலும் முடிவுமின்றிய பிரதீதியே தனதுவடிவமாகிய பரமாத்மா, இங்குச்சோதியாய் நின்றதென்னும் இவ்வுறுதியேதுகளறு மெய்ஞ்ஞானம் = இவ்விடத்திற் பிரகாசமயமாய் நிலைபெற்றிருக்கின்றதென்னும் சிறந்த இந்நிச்சயமே குற்றமற்ற அபரிச்சின்னாகார உண்மைஞானமாம்; பேதியாநின்ற கடபடவடிவமாம் பெரும்பொருட் பலசத்தி = வேறுவேறாகத் தோன்றாநின்ற இக்கடபடவடிவங்களாம் பெருத்தபதார்த்த சதபந்திகள், தீதில்தற்பரம் வேறிலதென்றுணர் திண்மையே நற்காட்சி = கோதில்லாத பரமான்மாவே யல்லாமல் அயலல்லவென்று அறியும் அறுதியே சம்யக்தரிசனமாம்.

(ஸ்ரீ - வீர.) உத்தரம் அருளல்:—ஆதியந்தமில்லாது விளங்காநின்றவடிவம் பரமாத்மா வீண்டுளதா யிருக்கின்றது, என்னும் அசாதாரண நிச்சயம் தேசகாலவஸ்து அதீத ஆகாரமாய நன்ஞானம் என அறிஞர் அறிவர். இவ்வண்ணம் ஜகத்பாதத்தானே ஆன்மநிச்சயவடிவத்தன்மையாதல் அதனிலக்கணமெனல்:—பேதியாவென்பதாதி. இக்கடபட ஆகாரங்களாய் நிகழும் நூற்றுக்கணக்கான பதார்த்தசத்திகள் ஆன்மாவேயாம், அயலல்லவாம், என்னும் இந்நிச்சயம், சம்யக்கீக்ஷணமாம்.

(ச.) ஸ்ரீ வசிஷ்டர்: = கடபடவடிவமாம் = கடபடாதி ஆகாரங்களாகிய, பெரும்பொருள் = பதார்த்த சமூகங்களும், அவைகளின், பலசக்திகளும் ஆகிய அனைத்தும், தீதிறற்பதம் = ஆன்மாவேயாம், வேறுபொருள் அல்லவென்னும் நிச்சயமே, நற்காட்சி—ஞானமென்பது பொருள். (38)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலாயிராநின்ற சம்யக்குஞான சொரூபத்தைக் கூறல்:—செகமென்பது.

செகங்கண் மூன்றினு முண்மையாம் பொருளறி திறமெது வெனச்செப்பில்
செகங்க ளியாவையுந்தற்பொருள் வடிவெனத் திரமுறு நிறைவாகுஞ்
செகங்க ளியாவையுஞ் சொரூபமே யிதிற்றிக முபாவபா வனையெங்கே
செகங்களிற்செறி பெத்தமுத் திகளெனத் தியங்குவேற் றுமையெங்கே.

(ப-ரை.) செகங்கள் மூன்றினும் = புவனத்திரயத்தினும், உண்மையாம் பொருளறி திறமெதுவெனச் செப்பில் = தத்துவ யதார்த்தத்தை யுணரும் தன்மையாதென வோதில், செகங்களியாவையும் தற்பொருள் வடிவு = சகலஜகத்தும் சைதன்ய பரமான்ம வடிவமேயாம், எனத்திரமுறு நிறைவாகும் = என்பதாகத் திடமுறு பரிபூர்ணமாகும், செகங்களி

யாவையுஞ் சொரூபமே யிநிற்றிகழ் அபாவபாவனை யெங்கே = உலகங்கள் எல்லாம் அறிவு வடிவமே யென்னுமிதன்கண் விளங்கும் இன்மையுண்மைகள் ஆங்கற்பனை யெவ்விடத்த தாம், செகங்களிற் செறிபெத்த முத்திகள் எனத்தியங்கு வேற்றுமை யெங்கே = உலகங்களிற் பொருந்தாநின்ற பந்தமுத்திகள் என்று திக்குமுக்காடும் பேதமதி யெவ்விடத்ததாம்.

(ஸ்ரீ - வீர.) உள்ளபடியேயாய ஆன்மதரிசித் தன்மையானது இத்துணையேயாம் புவனத்திரயத்தில், ஆன்மாவே ஜகத்தியாவும் என்று நிச்சயித்துப் பூர்ணத்தன்மை யடைதல் யாதுளதோ அதுவேயாம், யாவும் ஆன்மாவேயாம், என்றால் எங்கேகுறிப்பிக்கப் பெறுவனவாம், பாவாபாவங்கள், எங்குதாமிருப்பனவாமவை, நிர்ணயித்து நிரூபிப்பன தாமெவை, எங்கு? பந்தமோக்ஷ விவகாரந்தாமெங்கே ? அன்னியந் தான்யாதுளது ? யாதின்பொருட்டு மூடர்களானே சோகப்படுவதாமோ, என்பது எஞ்சிநின்றது.

(ச.) செகங்களி யாவையும், தற்பொருள் வடிவென, ஆன்மாவேயென்று, திரமுறு = நிச்சயித்து, நிறைவாகும் = பரிபூரணத்துவ மென்பதெது இம்மாத்திரமே, உண்மையாம் பொருளறிதிறம் = பரமார்த்த தரிசனமாம், செகங்களியாவையும் = திருசியமனைத்தும், சொரூபமே = ஆன்மாவேயாம், இதில், திகழிகபரம், என்னும் பாவமும் அபாவமும் எங்கே ? சேரில், அனைத்தும் ஆன்மசொரூபமாயின் இதுபாவம் ஈதபாவமென்னும் பேத நிரூபித்தற் கரிதாமென்பது பொருள். எங்கேயென்றமையாற் பாவாபாவங்களுக் காசிரயமு நிரூபித்தற் கரிதாமெனல்: தியங்கு வேற்றுமை யெங்கே பந்தமோக்ஷங்களுக்கும பாவமாதலின்சோக அவசரமின்றென்பது பொருள். தேரில் எனின் நலம்போலும். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எல்லாத் தோற்றங்களும் பிரஹ்ம விவர்த்தமாகலின் பிரஹ்மத்தைத்தவிர்த்து இல்லையென்றும் யாவும் பிரஹ்மசொரூபமே யென்றும் நிரூபித்தல்:— பிறிதென்பது.

பிறிதுகாண்பன வில்லைநெஞ் சில்லைமெய்ப் பிரமமே யவையாகிச்
செறியுமாலிவை யாவுமொன் றாகிய சிற்பர விசும்பாகு
நெறிகொள் பந்தம்வீ டெங்குள விதுவென நிகழ்பெருவடிவாகிக்
குறியறும்பெரும் பிரமமே நின்றது குறைந்திறந் ததுநெஞ்சே.

(பு-ரை) பிறிது காண்பனவில்லை = வேறாகத் திருசியங்க ளொன்றுமில்லை, நெஞ்சில்லை = சித்தமில்லை, மெய்ப்பிரமமே யவையாகி = சத்தியஞானப் பிரஹ்மமே அவ்வியாவுமாகி, செறியும் = இருக்கும், மால் இவையாவும் = மயக்கமாத்திர மாகத்தோற்றும் இத்திருசிய மியாவுமே, ஒன்றாகிய சிற்பரவிசும்பாகும் = ஏகமாகிய சிதாகாசப் பரம்பொருள் வடிவமேயாகும், நெறிகொள் பந்தம் வீடெங்குள = உபயமார்க்கத்தானு முண்டாம் கட்டும் விட்டொழிதலும் எங்கேயுள்ளனவாம், இதுவென நிகழ்பெருவடிவாகி=இது வென்று விளங்கும் பெரியவடிவமாகி, குறியறும் = சின்னமில்லாததாகிய, பெரும்=பெரிதிற்கெல்லாம் பெரிதான, பிரமமே = பிரஹ்மமே, நின்றது = நிலைபெற்றிருப்பது, குறைந்திறந்தது நெஞ்சே =அதில் விலயமாகிப் போனதேயாம் மனதே. ஆல் அசையெனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) அன்னியதிருசியமணுவும் இலதாம், சென்னியமனமது மிலதென்றேதோ, பிரஹ்மமே யிவ்வாறு பிறங்குகின்றது, சருவமும் ஏகமாம்பரம வியோமமாம், ஆகவே மோக்ஷமென்பதியாது பந்தப்பான்மை யாருக்காம். பிரஹ்மமே யிவையாய்ப் பெரிது தோன்றும், பெரிதினும் பெரிதாய்து பிரமம் அது தன்னிடத்திலேயே மாயையால் நட

னைப்போல மாறுவேடம் போட்டுக்கொண்டு விரிந்ததே இத்திருசியம், நிலைபெற்றிருப்பது போலிலங்கும்.

(ச.) குறியறும்பெரும் என்றது, மதிமதீதராதிரூபத்தாற் றூலமிகுதூலமாக, நின்றது, அக்காரணத்தினால், நீ தன்னாலேதானே பரிபூரணமான பரமான்மாவாவாய் எனப்பிற்கவியோடு அந்நுவயஞ் செய்க. (40)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நன்றாக ஆலோசனைசெய்து நோக்கின் காரணத்தினும் காரியம் அயலாகாமையின் அதிஷ்டானசத்தையினும் அதிரிக்தசத்தை யாரோபத்திற் கிலாமையின், எல்லாம் பரமசாந்த வடிவமேயெனல்:—ஒருமையென்பது.

ஒருமையாகவே யுணர்வினா லுணர்தி யாதுருவை நன்குறநோக்கிற்
றருவுங்கற்களும் படங்களு முதலிய சற்றும்வேற் றுமையில்லை
மருவுசங்கற்ப மெங்குள் சீவனும் வையகப் பொருளியாவு
மருகலின்றிய சாந்தரூ பம்பெறு மடிமுடி வுறநோக்கில்.

(ப - ரை.) ஒருமையாகவே யுணர்வினா லுணர்தியா= ஏகாக்கிரமாகவே அறிவினால் ஆராய்ந்து நோக்குதி,உருவை நன்குறநோக்கில் = வடிவத்தை நன்றாக ஊன்றிப்பார்க்கில், தருவும் கற்களும் படங்களும் முதலிய =காஷ்டபாஷாண வஸ்திரங்கள் முதலன, சற்றும் வேற்றுமையில்லை = அற்பமும் பேதமாகவே இரா; கேவலம் காரணவடிவுமாகவே யிருக்கும் என்றபடி, மருவுசங்கற்பம் எங்குள = பொருந்திய சங்கற்பவிகற்பம் எங்கேயுள்ளதாம், ஜீவனும் வையகப்பொருள் யாவும் = உயிரும் உலகவஸ்துக்கள் எல்லாம், அருகலின்றிய சாந்தரூபம்பெறும் அடிமுடிவுற நோக்கில் = அவிநாசியாய சாந்தவடிவத்தை யடையும் ஆதியந்தங்களை உற்றுப்பார்க்கில்.

(ஸ்ரீ - வீர.) ஞானத்தால் இருமை இறந்து போயதாதலின் நின்முயல்வினாலே எல்லாம் நீயேயாகுதி, அம்முயல்வும் ஆராய்ச்சி வடிவமேயாம், நன்றாக ஆராய்ந்து பார்ப்போமானால், வடிவங்களை, காஷ்டபாஷாண வஸ்திரங்கட்கு அற்பமும் பேதமேகிடையாது, அதிஷ்டான சன்மாத்திர ரூபமாக நாடிப்பார்த்தால் சங்கற்ப உன்முகனாக எங்கேயிருத்தி, ஒருவடிவத்தில் தள்ளுதல் கொள்ளுதலாதல் சங்கற்பனம் விகற்பனமாதல் சம்பவியாவாம் என்பதுபொருள். ஆதியிலும் அந்தத்திலும் நற்சாந்தமாய் அவிநாசியாய் எச்சொரூபமுளதோ அதுவே வஸ்துவாம்.

(ச.) நன்குறநோக்கில் = விசாரிக்கில், சற்றும் வேற்றுமையில்லை = பேதமில்லை, திருசியபேதந்திருக்கில் அத்தியாச மாகலின்றிருக்கு, சொரூபத்தால் அபின்னமாதலின் என்க. ஆதலின், ஆன்மாவுக் கந்நியமான பொருளின்மையின், சங்கற்பமெங்குள, பொருளிற் சங்கற்போன் முகனாகா யென்பதாயிற்று. அடி = உற்பத்திக்கு முன்னும், முடிவு = விநாசத்துக்குப் பின்னும், அகந்தைக் கிருப்பிடமான, சீவனும், இதுவெனத்தோற்றுகின்ற, வையகப் பொருளியாவும், எந்த, அருகலின்றிய = அவிநாசியும், சாந்தரூபம் பெறும் = உபசாந்தரூபமும், ஆனசின்மாத்திரமாம், நீ யதன்மயமாவா யெனப் பிற்கவியோடொட்டுக. (41)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அந்தப் பிரஹ்மரூபமே நீயாவாயென்றும், அத்தகைய நினதிடத்தே இலையாவும் நீரிற்பேதம்போற் றோற்றுகின்றன வென்றும் உரைத்தல்:—அந்தவென்பது.

அந்தரூபமெப் போதுநீ யாகுவை யண்ணலே யிரண்டொன்றென்
றுந்துபேதத்தாற் சரைமரணங்களென் றுன்னுறு மயக்கத்தாற்
றொந்தவுள்ளத்தாற் றான்றனிப் பிரமமேதோன்றுகின் றதுதன்னாற்
சிந்துகின்றநீ டிரையினாற் பன்மையாற் றெரிதருஞ் சலம்போல.

(ப-ரை.) அந்தரூபம் எப்போதும் நீயாகுவை யண்ணலே = ஹே இராகவ ! அந்தப் பிரஹ்மவடிவம் எக்காலத்திலும் நீ யாவாய், இரண்டு ஒன்றென்று உந்துபேதத்தால், சரை மரணங்களென் றுன்னுறு மயக்கத்தால் = துவைத அத்வைதத் தெழுந்த தோற்றங்களாலும், ஜராமரண விப்பிரமங்களாலும், தொந்த உள்ளத்தால் = த்வந்துவம் வாய்ந்தமனத்தினாலும், தான்றனிப்பிரமமே = ஆன்மாவாகிய கேவலம் ஒப்பற்றபிரமமே, தோன்றுகின்றது = பிரதீதியாகின்றது, தன்னால் சிந்துகின்ற நீள்திரையினால் பன்மையால் தெரிதரும் சலம்போல = வீசியெறியாநின்ற வீசிகளானே சுயம் நீரின்கண்ணே நானாவித விகற்பம் பிரதீதியாதல் போலும்.

(ஸ்ரீ - வீர.) பிரசித்தமாக ஆன்மாவின் சொரூபம், இந்தப்பிரகார மிருத்தலின், ஹே இராகவ ! அதன்மயமாக நீயாவாய் ! ஸ்தாவரஜங்கம வடிவமான இந்த ஜகத்தனைத்தும் பரம ஆகாசமயமேயாம், சுகதுக்கக்கிரமம் யாண்டையதாம், ஆகலின் சுரம் அற்றவனாக வாழ்தி; நிரதிசயானந்தப் பிரஹ்மரூபமே நீயாவாயென்றதாம். துவைத அத்வைத சமுற்பூதங்களானும், ஜராமரண விப்பிரமங்களானும், தன்னுடையமற்று மநேக விகற்பங்களானும், விசித்திரங்களாய தரங்கங்களானே தண்ணீரேபோலும், ஆன்மாவே தோற்று மநேகமா யறிவிலானுக்கு என்பது எஞ்சிநின்றது.

(ச.) சரைமரணங்களென் றுன்னுறு மயக்கங்கள் = சராமரணாதி விலாசங்களால், இரண்டொன்றென்றுந்து பேதங்கள் பேதாபேதக் குழாங்களவை, அவைகளாற் குறிக்கப்படுவனவான, தொந்தவுள்ளத்தால் = சித்தங்களவை அவைகளேயாகி, தன்னால் = சொரூபங்களால், தனிப்பிரமமே = ஆன்மாவே, அலைகளாற் சலம்போல் வெகுவிதமாய் விளங்குகின்ற தென்பதாம். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆன்மாவையேபற்றி யந்தர்முகமா யிருப்பவரை எப்பொய்ப் போகம் என்னேசெய்யும், ஆராய்ச்சி மிகுந்திருத்தலான் எனத்திருட்டாந்த பூர்வகம் தெளிவித்தல்:—சுத்தமென்பது.

சுத்தமானதற் பரத்தினைத் தழுவியே தொடர்ந்தவுன் மதியாலே
யொத்துநிற்பவர் தம்மையெப் போகம்வந் துறுபிணி செயவற்று
மெத்துபோகத்தை முதலிய பகையெலாம் விசாரமே மிகுந்தோர்தம்
புத்தியைச்சிறி தசைத்திடா வசந்தனுற் பொருப்பசை வதுமுண்டோ.

(ப - ரை.) சுத்தமான தற்பரத்தினைத் தழுவியே = பரமதூய்தான பரமான்மவத்துவைத்தானாக அநுசந்தித்துக் கொண்டே, தொடர்ந்த உன்மதியாலே = இடைவிடா திருக்கும் அந்தரதிருஷ்டியினாலே, ஒத்துநிற்பவர் தம்மை = சமதிருஷ்டியோடு மிருப்பவரை, எப்போகம் வந்துறு பிணிசெயவற்றும் = எந்தப்போகந்தான் வலிதின்வந்து தன்னில் உற்றதுக்கத்தைக் கொடுக்க முடிந்ததாகும், மெத்துபோகத்தை முதலிய பகையெலாம் = மிகுந்து வந்தடையும் போகமே முதலிய சத்துருக்கள் எல்லாம், விசாரமேமிகுந்தோர்தம் =

பிராணசந்தியுள்ளேயே முறையாய்ச் சாந்தியடைந்தது, சுவாலைச் சாலங்களுடனசைந்து கொண்டிருந்த தக்தேந்தன அனலம்போலும்; நாசாக்கிரத்தில் பரவிய அற்பத்தினும் அற்பமாய் இரண்டினும் சமமாய் உள்ளபிரகாசத்தை யுடையனபோலக் குறிப்பிக்கப் பெற்ற விழிகள் உடையவனுயினன், பாதிவிரிந்த தாமரைமொட்டுக்களால் உளதாய அழகுக்குச் சமானமான அழகையடைய விருந்தனன் என்றபடி.

(ச.) எனவொருப்பட்டு = இங்ஙனம் நிர்ணயித்து, முனி = அவ்வீதகவ்விய முனி, உயிர் = பிராணசந்தி, புருவமத்தியிற் சேர்த்தலின் நாசிநுனியடைந்து அதிநுட்பமான பார்வை எவைகளுக்கு அந்நோக்கங்கள். (54)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வெகுகாலம் அம்முனிவன் சமாதியிலிருந்து விழித்ததையோதல்:—சிரமென்பது.

சிரங்கழுத்துட முனங்கள் சமமுறச் சிலையிலே வகுத்தென்ன
நிரந்தசித்திர மென்னமுன் னூறியாண் டிருந்தன னிமிடம்போற்
பரந்தகாருநாள் வெள்ளத்தி னெக்கரிற் படிந்ததிங் கிவன்மேனி
யுரங்கொண்மாமுனி யுணர்ந்தனன் மண்ணினு ளுடலசைந் திலதென்றே.

(ப - ரை.) சிரம் கழுத்து உடல் தானங்கள் சமமுற = தலைகண்டம் உடம்பு முதலிய இடங்கள் ஒரேபடித்தாகியிருப்ப, சிலையிலே வகுத்தென்ன = பாறையிலே பிரித்துவைத்ததேபோல, நிரந்தசித்திர மென்ன = சித்திரத்தி லமைத்த பதுமைபோல, நிமிடம் போல் முன்னூறு இயாண்டிருந்தனன் = சொற்பகாலம்போல மூன்று சதவருஷம் சமாதியில் இளைப்பாறினன், பரந்தகாருநாள் = விஸ்தரித்த மழைகாலத்தில், உண்டான, வெள்ளத்தின் எக்கரில் = பிரவாகத்தின் சேற்றில், படிந்தது இங்கிவன்மேனி = மூடப்பட்டிருந்தது பூமண்டலத்தில் இம்முனிவனது திருமேனி, உரங்கொண் மாமுனி = தவத்தில் வலுமைகொண்ட மாக்ஷிமைதங்கிய அம்முனிவன், மண்ணினுள் உடல் அசைந்திலதென்றே உணர்ந்தனன் = பூமியினுள்ளே தேகம் சலனமற்றிருக்கின்றதென்றேயறிந்தனன். ஏ - அசை யெனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) அந்த மகாமதிவாய்ந்த முனிவன் காயசிரக்கிரீவாதி ஸ்தானங்கள் யாவும் ஒப்பானவனுய், சைலத்தில் வகுத்த பிம்பம்போலவும், சித்திரத்திலமைத்த ஆகிருதிபோலவும், சமாதியிலிருந்தான்; அவ்வாறு இருந்த அம்முனிவனுக்கு, விந்தியமலையருவி யருகிலுள்ள தேசத்தின் குகையில், அர்த்தமுகூர்த்தம் போலச் சம்வற்சரசதத்திரயங் கழிந்தது; அருவியின் ஒலியினுலும் மேககர்ஜனைகளாலும், வேட்டைக்குதூகுலங்களானும் பக்ஷிவானரசேஷ்டைகளாலும் மாதங்க மதகர்ஜனையாலும் சிங்கங்களின் நாதங்களாலும் ஜனகோலாகலங்களாலும் மற்றும் பிறவற்றாலும் விழியாமற் சமாதியிலிருக்கும்போது, மிகுந்த மழைகாலத் தொருபோதுண்டாய பிரவாகத்தாற் சேற்றுள் அழுத்தப்பெற்று உர்வீதலத்தில் விழுந்து கிடந்தது, சங்கட உதரகோடரத்தில் பூமியில் ஆண்டிஃதழுந்திக் கிடந்தது, என்றாலும் சமாதிச் சுகத்தில் மூழ்கியிருந்தமையின் இவையாவுந் தெரிந்ததில்லை; இவ்வண்ணம் சங்கடத்தோடு கூடியிருந்த அந்த மகாமுனிவனுக்குச் சீவனம் எங்ஙனமுண்டாயதென்னக்கூறல்:—உரங்கொளென்பதாதி, ஜீவனுதிர்ஷ்ட லிங்கதேகப் பிரதிபிம்பிதமாயசம்வித்தே அம்முனிவனுடைய பூமியிலமுழுந்திக்கிடந்த அத்தேகத்தைக் காப்பாற்றிக் கொண்டிருந்தது.

(ச.) தானம் = எந்த ஆசனபந்தத்தில், சிரங்கழுத்துடல்கள், சமமுற = சமமாக விருக்கும் அவ்வாசனத்தை யுடையவனு யென்பது பொருள். விந்தபருவதத்தின் குகையிலிருந்தனன். (55)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்முனிவனுக் குணர்ச்சியுண்டாக முன்னடந்தவற்றைக் காணத் தொடங்கல்:—தரையென்பது.

தரைமறைத்தலா லறிவிலே தோன்றிய சரீரத்தி னுயிர்முற்றும்
புரைகளியாவையு மடைதலா லசைந்தில போதமுற் பவித்துள்ளே
விரையுந்தன் மனவடிவமா யிதயத்தில் விரிந்தறிந் ததுயாவு
நிரைகொள் சொப்பனம் போலவனவ்வயி னெஞ்சுற விவைகண்டான்.

(ப - ரை.) தரைமறைத்தலால் = பூமிமறைத்தலால், அறிவிலேதோன்றிய = உணர்விலே பிரதீதியாய், சரீரத்தில் = தேகத்தில், உயிர்முற்றும் = பிராணன் முழுவதும், புரைகளியாவையும் அடைத்தலால் = துவாரங்களியாவையும் சுக்குப்பட்டிருத்தலால், அசைந்தில = சலனம் பெற்றில, போதம் உற்பவித்துள்ளே = உணர்ச்சியுண்டாகியுள்ளே, விரையுந்தன் மனவடிவமாய் =வேகமாம் தனது மனவடிவமாய், இதயத்தில் = இருதயத்தில், விரிந்தறிந்ததுயாவும்=விஸ்தாரமாய் உணர்ந்தது எவற்றையும், நிரைகொள் =வரிசையாக, சொப்பனம்போல் = கனவென்ன, அவன் = அம்முனிவன், அவ்வயின்= அவ்விடத்தில், நெஞ்சுற இவைகண்டான்=மனமுற இவற்றை நோக்கினன்.

(ஸ்ரீ-வீர.) பிராண விருத்திரூப அசைவோ கொள்ளாமல் விடப்பட்டதாம், சூக்கும மாதலின், பிராணசம்சாரணபாவத்தான் என்பது பொருள். வருஷசதத் திரயத்தின்பின், அம்முனிவனுக்கு எவ்விருத்தம் உளதாயதோ அதனைக் கூறுதல்:—போதமென்பதாதி, அம்முனிவனுடைய கலனையாகிய ஜீவசம்வித்தானது, பிராரப்தசேடபோகப் பொருட்டு இருதயாந்தரத்தில், உற்பத்தியால் விழிக்கும் முறைமைபற்றித் தூலபாவத்தை யடைந்து, தன்மனோ ரூபிணியாய், இனிக்கூறப்பெறும் யாவற்றையும் கற்பனையால் இருதயத்திலேயே, அநுபவித்தது.

(ச.) அறிவிலே தோன்றிய = அறிவினுற் காணப்பட்ட, எவனுடைய, தன்மனவடிவமாய், விரையும்போதம், கற்பனை, உள்ளே=இருதய புண்டரீகமத்தியில், விரிந்து = ஜன்மாந்தரங்களின் விடயவிலாசத்தை யடைந்து, இதயத்தில்= அவ்விருதயத்தின் கண்ணே, நிரைகொளியாவும் = ஜன்மாந்தர விருத்தாந்த மனைத்தும், அறிந்தது. (56)

(ஸ்ரீ-வீர - அ-கை.) எதனை யனுபவித்தனனோ அதனையே கூறல்:—ஈசன் என்பது.

ஈசன்வெற்பயன் முனிவனாய் நூறியாண் டிருந்தது நூறுண்டு
காசிலின்பவிச் சாதரனதுங் கடவுளர் தொழ விண்ணில்
வாசவன்னென வைந்துகமிருந்தது மதிச்சடை யிறைவற்கு
நேசமாங்கண மாயொரு கற்பகா ணின்றது மவன்கண்டான்.

(ப - ரை.) ஈசன்வெற்பயன் முனிவனாய் = கைலாசகானனச் சார்பில் மனனசீலனாய், நூறியாண்டிருந்தது = சதவருடஞ் சீவித்ததும், நூறுண்டு காசிலின்ப விச்சாதரனதும் = சதவருடம் களங்கமில்லாத ஆனந்த வித்யாதரத் தன்மையை யடைந்ததும், கடவுளர் தொழவிண்ணில் = தேவதைகள்போற்ற வானுலகில், வாசவன் என ஐந்துக மிருந்த

-தும் = தேவேந்திரனென யுகமஞ்சக முற்றதும், மதிச்சடை யிறைவற்கு = சந்திரசூடாதரனாகிய பரமசிவனுக்கு, நேசமாங்கணமாய் = அன்புடைய சிவகணமாய், ஒருகற்ப நாள் நின்றதும் = ஒரு கற்பபரியந்தம் சேவைசெய்துகொண் டிருந்ததும், அவன்கண்டான் = அம்முனிவன் பார்த்தான்.

(ஸ்ரீ - வீர.) வெள்ளிவெற்பினயற் சாரலில் மிகவும் ஒளிபொருந்திய ஏகாந்த கதம்ப தருத்தலத்தில், ஜீவன்முக்தாத்ம நிர்மலமாய முனித்தன்மையை நூறியாண்டடைந் திருந்ததையும், ஆதிவிவர்ஜிதமாய வித்யாதரத் தன்மையையடைந்து நூறுவருட மிருந்ததையும், சுரசாரணர்களானே போற்றப்பெற்ற தேவராஜத் தன்மையை ஐந்துயுகம் அடைந்திருந்ததையும், கண்டனன், எனவே ஸ்ரீ இராகவர்:—கைலாச கானனத்தில் என்பதாதிதிக்கு நியமம், யுகபஞ்சக மென்பதாதி காலநியமம், அற்பகாலத்திலேயே இருதயப் பிரதேசத்திலேயே அஃதநுபவிக்கப் பெறுதலின் அநியமமுந்தான் எங்ஙனம் பொருந்தும் ? இக்கால நியதிக்குவேறோ ராற்றாற்செய்வான் முடியாமையுண்மையின் என்றுவினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவதாவது:—சித்தைச் சார்வான்மியமின்றி யுணரின், அற்பங்களாய தேசகாலங்களிலும் விஸ்திருதமாய தேசகாலாந்தர கற்பனைச் சாமர்த்தியத்தில் உண்டாகவேசெய்யும் நியதிவிரோதம், சர்வான்மிகமாய்ச் சர்வசக்தி சம்பன்னமாக வினிதுணர்ந் தாக்காலோ அவ்வாறு முரண்பாடுறாதாம் என்பது உத்தரம்: சங்கையைச் சமர்த்தானித்து கூறிவந்ததையே வருணித்தல்:—மதியென்பதாதி, ஏககற்பம், சமஸ்தவித்யா நிபுணமாயதும்; திரிகால அகில தரிசனமாயதும், ஆங்கானபத்தியத்தை அம்முனிவன் சிரநிலவணிந்த சிவற்கு அடைந்து சேவித்ததும், கண்டான். (57)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஜீவன்முக்தனாயினும் அவனுக்குப்போஜகப் பிராரப்தகர்ம ஊற்போதிதிட சமஸ்காரமே தேகபோகாதி வைசித்திரிய விளக்கத்தில் ஹேதுவாம் என்றுரைத்தல்:—விரவு என்பது.

விரவுதோற்றா வாலிவை யனைத்தையும் வீதகவ்விய னோக்கிப்
பரனுக்காட்செய்த பலத்தினா லிறந்தன வறிந்துகாண் வலியுண்டாய்ப்
புரணமாகமுற் பவங்களிற் பொன்றிமுன் போயதன் னுடன்முற்றுங்
காவறக்கண்டு வீதகவ் வியப்பெயர் காயமாய் வரக்கண்டான்.

(ப - ரை.) விரவுதோற்றவால் = கலந்தபிரதீதியால், இவையனைத்தையும் = கூறிய யாவற்றையும், வீதகவ்வியன் நோக்கி = வீதகவ்விய முனிவன் பார்த்து, பரனுக்காட்செய்தபலத்தினால் = பரமசிவனுக்குக் கணமாகவிருந்து சேவித்தவலுமையால், இறந்தன அறிந்து காண்வலியுண்டாய் = சென்றனவுணர்ந்து பார்க்கும் வல்லமையுண்டாகி, புரணமாக முற்பவங்களிற் பொன்றிமுன்போய தன்னுடன்முற்றும் = விளக்கமாகப் பூர்வஜன்மங்களிற் பொன்றுத லடைந்துபோன தன்னுடைய முற்சரீரங்கள் யாவற்றையும், காவறக் கண்டு = களங்கமின்றிப் பார்த்து, வீதகவ்வியப்பெயர் = வீதஹவ்யமுனிவன் என்னும் பெயரோடு கூடிய, காயமாய் வரக்கண்டான் = சரீரமாய் வந்திருப்பதையும் பார்த்தான்.

(ஸ்ரீ - வீர.) யாவன் எத்தகைய திடசமஸ்காரமுடையவனாவனோ அவன் அதனை அத்தகையதாகவே காண்பன், ஜீவன்முக்தத் தன்மையினானே இதனை வீதகவ்வியமுனிவன் அநுபவித்தனன். (58)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பின்னென் வீதகவ்வியன், அக்குகை யுதரத்திலிருந்த தன்னை யியற்றினன், எங்ஙனம் எடுத்தனன் தேகத்தை, அடைந்ததும் என்னே யெங்ஙனந்தான் ?

சமுத்திரத்தின் அதன்பிரகாரத்தின், அதனுத்தர சரியையின் விதேகமுக்தபரிசிஷ்ட அதன் ரூபத்தினதாஉம் ஆகியநாலுவித சிலங்களால் முறையே ஸ்ரீ இராகவர்வினவ ஸ்ரீவசிஷ்ட பகவான் உத்தரங்கூறல்:—மறையும், முன்னம், மாநிலமென்பன.

மறையுமிவ்வுட லெடுத்துமென் றெண்ணிநன் வான்கதி ரவன்பாற்போய்
முறைசெய்பிங்கலன் றனைக்கொணர்ந் தெடுப்பது முடியுமென் றொருப்பட்டா
னறையுங்காற்றுரு வாய்ப்புரி யட்டக வங்கமாய்க் கதிரோன்பாற்
பொறைகொண்மாமுனி சேர்தலு மிதயத்திற் புகுந்தவா றினன் கண்டு.

முன்னநின்றபிங் கலன்றனைக் கதிரவன் முழுதுணர்ந் துடனேவ
வன்னவீதகவ் வியப்பெய ருள்ளமு மாதித்த னுண்ணின்று
தன்னதாக்கையில் விந்தவெற் பருகுபோய்ச் சார்தரக் கதிரோனாற்
சொன்னபிங்கலன் வந்துகை நகத்தினாற் றொன்னில முறக்கீறி.

மாநிலத்தினை யகழ்ந்துபிங் கலன்றர வருங்களே பரந்தன்னின்
மோனமாம்புரி யட்டகம் புகுந்தது மொழிந்தபிங் கலன்போனா
னனமாதவன் மூழ்கினன் சபித்தன னருச்சித்தான் கதிரோனை
ஞானநெஞ்சின னிறையுடன் முன்புபோ னலந்திகழ்ந் ததுமீண்டும்.

(ப-ரை.) மறையுமிவ் வுடலெடுத்தும் என்றெண்ணி = சேற்றில் மறைந்துகிடந்த இந்ததேகத்தை யெடுப்போமாவென்று உத்தேசித்து, நன்வான் கதிரவன்பால் = நல்ல ஆகாயத்திற் பிரகாசிக்கும் சூரியபகவானிடத்தில், போய் = சென்று, முறைசெய் பிங்கலன் றனைக் கொணர்ந்தெடுப்பது முடியுமென்று = தெரியப்படுத்திச் சாமர்த்தியத்தோடு கூடிய பிங்கலனைப் பானுபகவா னுஞ்ஞையாற் கூடிக்கொண்டுவந்து இத்தேகத்தை யெடுப்பது கூடுமென்று, ஒருப்பட்டான் = நிச்சயித்தான், அறையுங்காற்றுருவமாய் = வீசாநின்றவாயு வடிவமாய், புரியட்டக அங்கமாய் = லிங்கசரீரமாய், கதிரோன்பால் = சூரியனிடத்தே, பொறைகொள்மாமுனி = பொறுமையையே பூஷணமாய்க் கொண்ட மாக்ஷிமைதங்கிய முனிவன், சேர்தலும் = அடைதலும், இதயத்திற் புகுந்தவாறு இனன்கண்டு = இருதயத்தின் கண்ணே பிரவேசித்ததன்மையை சூரியபகவான் பார்த்து.

முன்னம் நின்ற பிங்கலன்றனை = சந்நிதியி னின்றுகொண்டிருந்த பிங்கலனை, கதிரவன் = பானுபகவான், முழுதுணர்ந்து = யாவற்றையுந்தெரிந்து, உடனேவ = முனிவனோடுகூட அனுப்ப, அன்ன வீதகவ்வியப்பெயர் உள்ளமும் = அந்த வீதகவ்வியமுனிவன் என்னும் மனமும், ஆதித்தன் உண்ணின்று=சூரியபகவானுடைய உள்ளினின்றும், தன்ன தாக்கையில் விந்தவெற்பருகுபோய்ச் சார்தர = தனது சரீரத்தில் விந்தியபர்வத சமீபத்தேபோயடைதர, கதிரோனால் சொன்ன பிங்கலன் = சூரியபகவானது ஆணையால் வந்த பிங்கலனும், வந்து கைநகத்தினால் தொன்னிலமுறக்கீறி = அவ்விடத்தையடைந்து கரவுகிரால் மூடியிருந்த பூமியைப்பிளந்து.

மாநிலத்தினை = மாக்ஷிமைதங்கிய குகைப்பிரதேசத்தில் மூடியிருந்த பாகத்தை, அகழ்ந்து=பேதித்து, பிங்கலன்றர = பிங்கலன்கொடுக்க, வரும் = கிடைத்த, களேபரந்தன்னின் மோனமாம் புரியட்டகம் புகுந்தது = சரீரத்தில் மௌனமாய லிங்கதேகம் பிரவேசித்தது, மொழிந்த பிங்கலன் போனான் = அழைத்துவந்த பிங்கலன் ஆதித்திய

மண்டலத்தை யடைந்தான், ஆனமாதவன் = உயிர்த்தெழுந்த மாமுனிவன் மூழ்கினன் செபித்தனன் அருச்சித்தான் கதிரோனை = ஸ்நானஞ்செய்து செபஞ்செய்து சூரியபக வானை யருச்சனைபுரிந்தான், ஞானநெஞ்சினுல் நிறையுடல் முன்புபோல் நலந்திகழ்ந்தது மீண்டும் = ஞானமனத்தினுல் பூரணமாயதேகம் பூர்வம்போல நன்மையுடன் விவகரித்து விளங்கியது மறுபடியும்.

(ஸ்ரீ - வீர.) பின்னர், வீதகவ்விய முனிவனெனப் பெயரியமனம், ஆன்மசமற்கார மாத்திரமாய் அபரிச்சின்ன பிரஹ்மாகாரமா யிலங்குந்தன்னையே சமாதியில் நன்குணர்ந் தது பரமசிவனுடைய கணமாயிருந்த அம்முனிவனுக்குப் பழைமையான சோதியாகிய சிதான்மாவினது ஸ்மரணரூபத் தியானகாலத்தில் தானே ஒருபோது சகல முற்பிறப்பையும் பார்க்க எதிர்நோக்கி நின்ற இச்சையான துண்டாயது. அம்முனிவன் பின் நஷ்டங்களும் அநஷ்டங்களும் ஆகிய தன் அசேஷதேகங்களைப் பார்த்தான், அதன்பின் நஷ்டமாகாத வற்றின் மத்தியினின்றும் அவ்வக்கோடர நற்றிதிபெற்றதையுங் கண்டான், அவ்வவ்வநஷ்ட தேக இருதயகோடரத்தில் ஜீவடோபாக்கியானத்திற் கூறும் நியாயத்தானே தற்கற்பனை யானே நன்னிலைமைபெற்ற வீதகவ்விய தேகத்தையென்பது பொருள். எடுத்ததேகங்களிற் சில இல்லனவாம் சிலவுள்ளனவா மெனவுணர்க. யதிருச்சையாகவே அம்முனிவனுக்குத் தேகத்தை நன்ருக வுத்தரிக்கவேண்டு மென்று மதியுண்டாயது, ஆண்டுச்சேற்றி லழுந்திக் கிடம்போல இருப்பதும், தராகோடர பீடிதமும், மழைப்பிரவாகத்தானே யிருந்த இடத்திலிருந்து சிறிதுதூரம் இழுக்கப்பெற்றதும், பின்பாகத்திற்சேற்று மண்டலமியைந்த கீழ்முகமாய்க் கிடப்பதும் ஆகிய வீதகவ்வியப் பெயர்வாய்ந்த தேகத்தைக்கண்டனன். பிங்கலன்வாயிலாக இவ்வெனது சரீரத்தையுத்தரிப்பான் விண்ணுற்ற சூரியசம்பந்த மேனி யிற் பிரவேசிப்பேன்; கண்ணுடியிற் பிரதிபிம்பம்போல வென்றெண்ணி; அம்முனிவன் காற்றுரூபந்தரித்து அதிசூக்குமனுகி, ஆதித்தியனை யடைவுற்றனன்; மனனசீலனுகிய அம் முனிவன் முன்மொழிந்த லிங்கசரீரத்தை யடைந்து புகுந்ததுதோற்பை யாகாயத்திற் காற் றுப் பிரவேசித்ததுபோலவாம், சூரியபகவானும், இருதயத்தின் கண்ணே புகுந்த அவ்விம் முனிநாயகனைக் கண்டு, உதாரதீயாகிய அப்பகவான் அம்முனிவனுடைய காரியத்தையும் பூர்வாபரியத்தையும் சிந்தித்துப்பார்த்து விந்தியாசலபூமிக் கோசத்துள்ளிருப்பதும், திருண உபலபரிச்சின்னமும், இறந்துபோனதுக் கொப்பும்; ஆகிய அம்முனிவனது மேனியைக் கண்டனன். பின்னிரவி யென்னசெய்தான் எனின் ?:—முன்னமென்பதாதி. ககனமத்தியி லுள்ள பானுபகவான் இருஷியினுடைய செய்யுமிச்சையை யுணர்ந்து, குகையினின்றும் முனிவனது மேனியை யெடுப்பதற்காக, எதிரினின்ற பிங்கலனெனப் பெயரியகணத்திற் குத்தரவிட்டான்; சூரியபகவானுடைய இருதயத்திற் பிரவேசித்த வீதகவ்விய முனிவ னுடைய உணர்வு என்னசெய்ததெனக் கூறல்:—அன்ன வென்பதாதி, வீதகவ்விய முனிவ னுடைய லிங்கசரீரரூபமாய அந்த காற்றுமயமாய அறிவு, பூஜ்யனுய பகவான்பானுவை மனத்தினுலே நன்கு நமஸ்கரித்தது, அம்முனிவனும், சூரியபகவானுலும் இருதயத்தி லேயே வெகுமானவாயிலாக இனிது ஆசீர்வதிக்கப் பெற்றபின் முன்னேநின்று தன்காரி யத்தின்பொருட்டுப் புறப்பட்டு விந்தியகந்தர நோக்கிச் செல்பவனுய பிங்கலனுடைய தேகத்திற் புகுந்தனன். அந்தப்பிங்கலன் விண்ணைவிட்டுக் கொடிவீடுகளாலும் குஞ்சரங்க ளாலும் சுந்தரம்வாய்ந்தும் மழைகாலத்திய மதத்தமேகம் நிறைந்த ஆகாயம்போன்றும், குஞ்சங்களாலும் குஞ்சரங்களாலும் போலச் சுந்தரம்வாய்ந்தும், உள்ள விந்தியவனத்தை யடைந்தனன்; குகைக்கோசத்தினின்றும் நகங்கொண்டு பூதலத்தையகழ்ந்த பிங்கலன்

முனிவனுடைய மேனியைப் பங்கத்தினின்றுந் தாமரைக்கிழங்கைச் சாரசப்புள்ளெடுப்ப தேபோல எடுத்துவைத்தனன். முனியின் சம்பந்தியாய மௌனமான புரியஷ்டகம், பிங் கலதேகத்தினின்றும் தனது சரீரத்தைப் பின்னடைந்தது, விண்டலத்திற் சுழன்றுதிரிந்த பக்ஷியானது தனது நீடத்திற் புகுந்ததேபோலும். பின்பரஸ்பரம் மூர்த்தியாகிய வீதகவ் வியமுனிவனும், விண்ணடப்போனும் பிங்கலனும் நமஸ்காரம் செய்துகொண்டார்கள். தேஜசின் நிதிகளாய அவ்விருவரும் தத்தங்காரியதற்பரராய் முயன்று நின்றனர், பிங்கலன் வியோமத்தை யடைந்தான், முனிவனும் ஸ்நானஞ்செய்யும்பொருட்டு விமலமான சரத்தை யடைந்தனன்; தாரகைகளின் ஆகாரம்வாய்ந்த குமுதம் நிறைந்த, சூரியனால் அம்சுகவதி யாய = மஞ்சளிரக்த ஆடையலங்கிருதம் போன்ற, ஆகிருதியையுடைய, பால அருக்க இராக இரஞ்சித உதகம்பூரித்த, பங்கஜங்கள் எழுந்து நிறைந்த, அத்தடாகத்தில் விரை வில் வீதகவ்வியமுனிவன் மூழ்கினன்; சேற்றேடுகூடிய சிறுகுட்டையில், விளையாட்டின் அவசானத்தில் வனத்தில் யானைக்குட்டியே போலும். ஆண்டு மூழ்கிச் செபமுடித்து, திவாகர பகவானைப்பூஜித்து, மனனுதிவிவகாரவானைய தனுவோடுகூடி முன்போன்று மீண்டும் விளங்கினன்.

(ச.) முறைசெய்=சூரியனது பக்கத்திருந்து ஏவல்செய்யும், பொறைகொண்மாமுனி புரியட்டகவங்கமாய் = அகங்காரகலையோடு கூடியதென்பதாதியால் முற்கூறப்பட்ட சூக் குமதேகத்தை யவலம்பித்து, காற்றுருவாய் = பிராணவாயுவிற் சர்வேந்திரிய சத்தியையு முட்பாவித்து அவ்வுருவனுய், தோல்துருத்தியில் அநிலம்போல், கதிரோன்பாற் சேர்தலு மென்பதந்நுவயம்.

உடன்=சீக்கிரம், வீதகவ்வியப்பெயர்=வீதகவ்வியனென விவகரிக்கத்தகுந்த, அன்ன வுள்ளமும் = புரியட்டகமும், வீதகவ்வியனது புரியட்டகஞ் சேர்ந்ததாதலின் அப்புரியட் டகத்திற்கும், மனது பிரதானமாதலின் அத்தன்மையான மனது கதிரவனுற்செல்லென் றேவப்பட்டு அவன் உண்ணின்றும் பிங்கலன் றேகத்தில், வந்து பிரவேசித்து வெற்பருகு போய்ச் சார்ந்ததென்பது அந்வயம், மோனமாம் = முனிசம்பந்தமுள்ள. (59-60-61)

(ஸ்ரீ-வீர - அ-கை,) வெகுகாலம் நற்குணங்களோடு கூடிப்பற்றற இருந்துபின்னேர் தல்:—சமமென்பது.

சமமயித்திரி சாந்திசேரறி வருண்முதிதை
யமர்குணங்க ளாயனைத்தினு நெஞ்சுபற்றின்றிக்
கமர்கொள் விந்தநீர்த் தடக்கரைநாள் பலகழித்து
நிமலநெஞ்சினுற் பராபரமுணர் முனிநினைப்பான்.

(௰ - கை.) சமமயித்திரி சாந்தி = சமமாயிருத்தல், மித்திரபாவம் உபசாந்தி, சேரறிவு அருள்முதிதை = நல்லபிரஞ்ஞை கிருபை புண்ணியர்பான்மகிழ்வு, அமர்குணங்களாய் = முதலனவாக வமர்ந்த நல்லகுணங்களை யுடையவனுகி, அனைத்தினு நெஞ்சுபற்றின்றி = சகலத்திலும் மனமானது பற்றில்லாமலிருந்து, கமர்கொள் விந்த நீர்த்தடக்கரை=எங்கும் பரவிவாசனை வீசும் உதகம் நிறைந்த விந்தியாசல நதிக்கரையில், நாள்பலகழித்து=வெகு காலம் நீத்து, நிமலநெஞ்சினுற் பராபரமுணர்முனி நினைப்பான் = தெளிந்தவுள்ளத்தி னுலே பராபரவஸ்துவைச் சாக்ஷாத்கரித்த முனிவன் எண்ணுவான்.

(ஸ்ரீ - வீர.) மைத்திரியினுலும் சமதையினுலும் பரமசாந்தியினுலும், சற்பிரஞ்ஞையி னுலும் முதிதையினுலும் கிருபையினுலும் ஸ்ரீயினுலும் அலங்கரிக்கப்பெற்ற அம்முனிவன்

சகலசங்கமும் விடுபட்ட சித்தனாகி விந்தியத்திற் சரித்தடைகதனாகி தின்மாத்திரமே ரமித்தான் வெகுநாளல்லவாம், சமாதியினின்றும் விழித்துக் கொண்டான் என்பதாம். உலகத்திற் சாராசாரத்தைப் பகுத்துணர்ந்த அம்முனிவன் பின்னர் உள்ளத்தினால் நாடுவதாவது.

(ச.) மீண்டுமனது நிர்சமாதி யடைதற்குச் சிந்தித்தா னென்பதாம். (62)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மீண்டுமே சமாதியில் மனதைச்செலுத்த ஆலோசித்த பிரகாரத்தை யுரைத்தல்:—பொறியென்பது.

பொறிகளின் றிரண்முன்னமே நிறுத்தினம் புரிந்து
நெறிகொள் சேடத்தைக் கூடியேமலை யெனநிற்போ
மறியத்தோன்றியு மறைந்த போலாகுது மறைந்துஞ்
செறியத்தோன் றினமொத்து நிற்குதுநொய்மைசேர்ந்து.

(ப - ரை.) பொறிகளின்றிரன் முன்னமே நிறுத்தினம் = இந்திரியக் கூட்டங்களைப் பூர்வமே தடைசெய்துள்ளோம், புரிந்துநெறிகொள் = இப்போது எனது விஸ்தாரமான மீண்டுண்டாஞ் சிந்தையானே யாதொருபயனுமில்லை, சேடத்தைக் கூடியே மலை யென நிற்போம் = சத்தாசேஷத்தைச் சேர்ந்தே அசலமென அசையாதிருப்பேம், அறியத்தோன்றியும் மறைந்த போலாகுதும் = புலப்படப் பிரகாசித்தும் பிரகாசியாததுபோலவே யிருப்பேம், மறைந்தும் செறியத்தோன்றினம் = தோன்றுதிருந்தும் பொருந்தத்தோன்றி நிற்பேம், ஒத்துநிற்குதம் = சமமாயிருப்பேம், நொய்ம்மை சேர்ந்து = சொச்சதன்மையையடைந்து.

(ஸ்ரீ - வீர.) முன்னரேயிந்திரியகணம் என்னால் நன்றாகப் பரிகரிக்கப்பெற்றது, இப்போது மீண்டும் விரிந்த சிந்தையானே எனக்குயாதொரு பிரயோஜனமுமில்லை, உண்டில்லை யென்னும் உபத்திரவத்தை மிருதுவாய முந்திரிக்கொடிப்போல அறுத்தெறிந்து எஞ்சியதாய அவ்விரண்டன் சாக்ஷியாய சின்மாத்திரத்தைப் பற்றிச்சமகாய சிரக்கிரீவனாகியும் அதிதிட ஆசனத்தமர்ந்தவனாகியும் இருப்பேன். ஜீவித்துக்கொண் டிருப்பினும் அறியாதவர் திருஷ்டியானே மரித்தவன் போன்றே யிருப்பேன், தத்துவதிருஷ்டியானே அதற்கும் றாக இறந்தவன் போன்றிருந்த போதினும் எழுந்தவன்போன்றே யிருப்பேன், சமனாகி ஏகரசசின்மாத்திர ரூபனாகவே யிருப்பேன்; தெளிவாகிய அதிசூக்குமத் தகைமையை யடைந்தவனாகியே யிருப்பேன்.

(ச.) புரிந்து நெறிகொள் = இனிமீட்டும் எனது விரிவான சிந்தையோடு சத்தியா சத்தியக்குறிப்புள்ள பேததிருஷ்டியை, முந்திரிக் கொடியைப்போற் சேதித்தென்பது பொருள். சேடத்தை =செப்புதற்கரிய சின்மாத்திரத்தை, கூடியே, அசலசிருங்கம் போன்றிருப்பே னென்றதாயிற்று, அறியத்தோன்றியும் மறைந்தபோலாகும் = பிரகாசமுள்ளதாயினும் நிஷ்கிரியம் இயல்பாதலின் என்க. மறைந்துஞ் செறியத்தோன்றினது போலாகுதும் எனச்சேர்க்க. இந்திரிய அகோசரத்துவ முளதாயினும் சர்வசாக்ஷித் தன்மையாதலி னென்க, ஒத்து = ஏகரூபனாய், இட்டாநிட்டாதிகளிற் சமரசனென்னும் ஏகப்பிரகாரானுபவியாய்ப் பிரகாசிக்கின்றவனாய், நொய்ம்மைசேர்ந்து = களங்கரகிதனா யிருக்கின்றே னென்றதாயிற்று. (63)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்முனிவனது ஜீவன்முக்திச் சுகத்தையே மீண்டும் வருணித்தல்;—உணர்வு, என்று என்பன.

முனிவனுடைய மேனியைப் பங்கத்தினின்றுந் தாமரைக்கிழங்கைச் சாரசப்புள்ளெடுப்ப தேபோல எடுத்துவைத்தனன். முனியின் சம்பந்தியாய மௌனமான புரியஷ்டகம், பிங் கலதேகத்தினின்றும் தனது சரீரத்தைப் பின்னடைந்தது, விண்டலத்திற் சுழன்றுதிரிந்த பக்ஷியானது தனது நீடத்திற் புகுந்ததேபோலும். பின்பரஸ்பரம் மூர்த்தியாகிய வீதகவ் வியமுனிவனும், விண்ணடப்போனும் பிங்கலனும் நமஸ்காரம் செய்துகொண்டார்கள். தேஜசின் நிதிகளாய அவ்விருவரும் தத்தங்காரியதற்பரராய் முயன்று நின்றனர், பிங்கலன் வியோமத்தை யடைந்தான், முனிவனும் ஸ்நானஞ்செய்யும்பொருட்டு விமலமான சரத்தை யடைந்தனன்; தாரகைகளின் ஆகாரம்வாய்ந்த குமுதம் நிறைந்த, சூரியனால் அம்சுகவதி யாய = மஞ்சளிரக்த ஆடையலங்கிருதம் போன்ற, ஆகிருதியையுடைய, பால அருக்க இராக இரஞ்சித உதகம்பூரித்த, பங்கஜங்கள் எழுந்து நிறைந்த, அத்தடாகத்தில் விரை வில் வீதகவ்வியமுனிவன் மூழ்கினன்; சேற்றோடுகூடிய சிறுகுட்டையில், விளையாட்டின் அவசானத்தில் வனத்தில் யானைக்குட்டியே போலும். ஆண்டு மூழ்கிச் செபமுடித்து, திவாகர பகவானைப்பூஜித்து, மனனாதிவிவகாரவானாய தனுவோடுகூடி முன்போன்று மீண்டும் விளங்கினன்.

(ச.) முறைசெய்=சூரியனது பக்கத்திருந்து ஏவல்செய்யும், பொறைகொண்மாமுனி புரியட்டகவங்கமாய் = அகங்காரகலையோடு கூடியதென்பதாதியால் முற்கூறப்பட்ட சூக் குமதேகத்தை யவலம்பித்து, காற்றுருவாய் = பிராணவாயுவிற் சர்வேந்திரிய சத்தியையு முட்பாவித்து அவ்வுருவனாய், தோல்துருத்தியில் அநிலம்போல், கதிரோன்பாற் சேர்தலு மென்பதந்வயம்.

உடன்=சீக்கிரம், வீதகவ்வியப்பெயர்=வீதகவ்வியனென விவகரிக்கத்தகுந்த, அன்ன வுள்ளமும் = புரியட்டகமும், வீதகவ்வியனது புரியட்டகஞ் சேர்ந்ததாதலின் அப்புரியட் டகத்திற்கும், மனது பிரதானமாதலின் அத்தன்மையான மனது கதிரவனாற்செல்லென் றேவப்பட்டு அவன் உண்ணின்றும் பிங்கலன் றேகத்தில், வந்து பிரவேசித்து வெற்பருகு போய்ச் சார்ந்ததென்பது அந்வயம், மோனமாம் = முனிசம்பந்தமுள்ள. (59-60-61)

(ஸ்ரீ-வீர - அ-கை,) வெகுகாலம் நற்குணங்களோடு கூடிப்பற்றற இருந்துபின்னோர் தல்:—சமமென்பது.

சமமயித்திரி சாந்திசீரறி வருண்முதிதை
யமர்குணங்க ளாயனைத்தினு நெஞ்சுபற்றின்றிக்
கமர்கொள் விந்தநீர்த் தடக்கரைநாள் பலகழித்து
நிமலநெஞ்சினாற் பராபரமுணர் முனிநினைப்பான்.

(௰ - வை.) சமமயித்திரி சாந்தி = சமமாயிருத்தல், மித்திரபாவம் உபசாந்தி, சீரறிவு அருள்முதிதை = நல்லபிரஞ்ஞை கிருபை புண்ணியர்பான்மகிழ்வு, அமர்குணங்களாய் = முதலனவாக வமர்ந்த நல்லகுணங்களை யுடையவனாகி, அனைத்தினு நெஞ்சுபற்றின்றி = சகலத்திலும் மனமானது பற்றில்லாமலிருந்து, கமர்கொள் விந்த நீர்த்தடக்கரை=எங்கும் பரவிவாசனை வீசும் உதகம் நிறைந்த விந்தியாசல நதிக்கரையில், நாள்பலகழித்து=வெகு காலம் நீத்து, நிமலநெஞ்சினாற் பராபரமுணர்முனி நினைப்பான் = தெளிந்தவுள்ளத்தி னாலே பராபரவஸ்துவைச் சாக்ஷாத்கரித்த முனிவன் எண்ணுவான்.

(ஸ்ரீ - வீர.) மைத்திரியினாலும் சமதையினாலும் பரமசாந்தியினாலும், சற்பிரஞ்ஞையி னாலும் முதிதையினாலும் கிருபையினாலும் ஸ்ரீயினாலும் அலங்கரிக்கப்பெற்ற அம்முனிவன்

சகலசங்கமும் விடுபட்ட சித்தனுகி விந்தியத்திற் சரித்தடகதனுகி தின்மாத்திரமே ரமித்தான் வெகுநாளல்லவாம், சமாதியினின்றும் விழித்துக் கொண்டான் என்பதாம். உலகத்திற் சாராசாரத்தைப் பகுத்துணர்ந்த அம்முனிவன் பின்னர் உள்ளத்தினுல் நாடுவதாவது.

(ச.) மீண்டுமனது நிர்சமாதி யடைதற்குச் சிந்தித்தா னென்பதாம். (62)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மீண்டுமே சமாதியில் மனதைச்செலுத்த ஆலோசித்த பிரகாரத்தை யுரைத்தல்:—பொறியென்பது.

பொறிகளின் றிரண்முன்னமே நிறுத்தினம் புரிந்து
நெறிகொள் சேட்டத்தைக் கூடியேமலை யெனநிற்போ
மறியத்தோன் றியு மறைந்த போலாகுது மறைந்துஞ்
செறியத்தோன் றினமொத்து நிற்குதுநொய்மைசேர்ந்து.

(ப - ரை.) பொறிகளின்றிரன் முன்னமே நிறுத்தினம் = இந்திரியக் கூட்டங்களைப் பூர்வமே தடைசெய்துள்ளோம், புரிந்துநெறிகொள் = இப்போது எனது விஸ்தாரமான மீண்டுண்டாஞ் சிந்தையானே யாதொருபயனுமில்லை, சேட்டத்தைக் கூடியே மலை யென நிற்போம் = சத்தாசேஷத்தைச் சேர்ந்தே அசலமென அசையாதிருப்பேம், அறியத் தோன்றியும் மறைந்த போலாகுதும் = புலப்படப் பிரகாசித்தும் பிரகாசியாததுபோலவே யிருப்பேம், மறைந்தும் செறியத்தோன்றினம் = தோன்ருதிருந்தும் பொருந்தத்தோன்றி நிற்பேம், ஒத்துநிற்குதும் = சமமாயிருப்பேம், நொய்ம்மை சேர்ந்து = சொச்சத்தன்மையையடைந்து.

(ஸ்ரீ - வீர.) முன்னரேயிந்திரியகணம் என்னுல் நன்ருகப் பரிகரிக்கப்பெற்றது, இப்போது மீண்டும் விரிந்த சிந்தையானே எனக்குயாதொரு பிரயோஜனமுமில்லை, உண்டில்லை யென்னும் உபத்திரவத்தை மிருதுவாய முந்திரிக்கொடிப்போல அறுத்தெறிந்து எஞ்சியதாய அவ்விரண்டன் சாக்ஷியாய சின்மாத்திரத்தைப் பற்றிச்சமகாய சிரக்கிரீவனுகியும் அதிதிட ஆசனத்தமர்ந்தவனுகியும் இருப்பேன். ஜீவித்துக்கொண் டிருப்பினும் அறியாதவர் திருஷ்டியானே மரித்தவன் போன்றே யிருப்பேன், தத்துவதிருஷ்டியானே அதற்குமாருக இறந்தவன் போன்றிருந்த போதினும் எழுந்தவன்போன்றே யிருப்பேன், சமனுகி ஏகரசசின்மாத்திர ரூபனுகவே யிருப்பேன்; தெளிவாகிய அதிசூக்குமத் தகைமையை யடைந்தவனுகியே யிருப்பேன்.

(ச.) புரிந்து நெறிகொள் = இனிமீட்டும் எனது விரிவான சிந்தையோடு சத்தியாசத்தியக்குறிப்புள்ள பேததிருஷ்டியை, முந்திரிக் கொடியைப்போற் சேதித்தென்பது பொருள். சேட்டத்தை =செப்புதற்கரிய சின்மாத்திரத்தை, கூடியே, அசலசிருங்கம் போன்றிருப்பே னென்றதாயிற்று, அறியத்தோன்றியும் மறைந்தபோலாகும் = பிரகாசமுள்ளதாயினும் நிஷ்கிரியம் இயல்பாதலின் என்க. மறைந்துஞ் செறியத்தோன்றினது போலாகுதும் எனச்சேர்க்க. இந்திரிய அகோசரத்துவ முளதாயினும் சர்வசாக்ஷித் தன்மையாதலி னென்க, ஒத்து = ஏகரூபனுய், இட்டாநிட்டார்திகளிற் சமரசனென்னும் ஏகப்பிரகாராநுபவியாய்ப் பிரகாசிக்கின்றவனுய், நொய்ம்மைசேர்ந்து = களங்கரகிதனு யிருக்கின்றே னென்றதாயிற்று. (63)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்முனிவன்து சீவன்முக்திச் சுகத்தையே மீண்டும் வருணித்தல்:—உணர்வு, என்று என்பன.

உணர்வு விஞ்சியு முறங்கின னெக்குதுஞ் சுழுத்தி
தணிவறப்பெற்று முணர்ந்தவ னெக்குதுஞ் சமனுய்க்
கணமும்வேறறத் துரியமே பற்றியிக்காயத்
தணவிநின் றுமோரசைவறு சோதிநாமாவேம்.

என்றுநாடிநற் றியானத்தி லாறுநா ளிருந்து
சென்றுணர்ந்தனன் கண்டுயில் சேர்பதி கனைப்போ
லொன்றுசித்தனாய் வீதகவ்வியப் பெய ருயர்ந்தோன்
றுன்று சீவன்முத் தியிலடைந் தநேகநாட்சுகித்தான்.

(ப - ரை.) உணர்வு விஞ்சியும் உறங்கினனெக்குதும் = பிரபுத்தனாகி யிருந்தபோதி னும் துயின்றவனுக்குச் சமானனாகவே யிருக்கின்றேன், சுழுத்திதணிவறப் பெற்றும் உணர்ந்தவனெக்குதும் = மிகத்துயின்றோனாயினும் நனவுற்றவன் போன்றவனே யாவன், சமனுய்க்கணமும் வேறறத் துரியமேபற்றி = ஒப்பானவனாய் க்ஷணமும் திருசியநாட்ட மில்லாமல் துரிய அவத்தையையேபற்றி, இக்காயத்தணவி நின்றுமோர் அசைவறு சோதி நாமாவேம் = இத்தேகத்தோடு கூடியிருந்த போதினும் சலனமில்லாத பரஞ்சோதிசொரூ பமே நானாவேன்.

என்று நாடி = என்னவுத்தேசித்து, நற்றியானத்தில் = நல்லசமாதியில், ஆறுநாளி ருந்து = ஷட்தினங்களிருந்து, சென்றுணர்ந்தனன் = பின்பிரபோதத்தை யடைந்தனன், கண்டுயில் சேர்பதிகனைப்போல் = நித்திரைசெறிந்த வழிப்போக்கனைப்போல, ஒன்று சித் தனும் = அத்விதீயசித்தனாய், வீதகவ்வியப்பெயர் உயர்ந்தோன் = வீதகவ்விய முனிவ னென்னும் மேலானமுனிவன், துன்று சீவன்முத்தியி லடைந் தநேகநாட் சுகித்தான் = பொருந்தமாக வழுந்திய ஜீவன்முக்தியில் அடைந்திருந்து நெடுங்காலம் ஆனந்தித்தான்.

(ஸ்ரீ - வீ ர.) நனவுற்றிருப்பினும் துவைதஜாலங்களைக் காணாமையின் துயின்றவனே யாயினன், இவ்வண்ணம் துயின்றவனே யாயினும், தனது சொரூபப்புட அநுபவத்தானே நனவுற்றவன் போன்றேயிருந்தனன், தூலசூக்கும காரணங்கள் விடுபட்டுள்ள பதத்தைப் பற்றிக்காயாந்தம் ஸ்தம்பிதஸ்திதியை யுடையவனாயிருப்பேன்; என்று இனிதுசிந்தித்து, அம்முனிவன் மீண்டும் தியானத்தி லாறுதினங்கள் அமர்ந்திருந்தான்; அதன்பின் பிரபோ தத்தையடைந்தான் கணந்துயின்ற வழிப்போக்கனைப்போல. அதன்பின் சித்தனாய் அந்தப் பகவானாகியமுனிவன் வீதகவ்வியன் என்னும் மகாதவத்தினன் சிரகாலபரியந்தம் ஜீவன் முக்தத்தன்மையோடும் சஞ்சரித்தனன்; வியுத்தானன் ஆயினும் சமாகிதனாகவே யிருத்தல் பற்றிச்சித்தன் எனப்பெற்றான்.

(ச.) உணர்வு விஞ்சியும் = இந்திரியங்களால் அருத்தங்களை யணுகின்றவனாயினும், உறங்கினனெக்குதும் சந்தோஷக்கிலேசாதி விகாரரகிதன், சுழுத்திதணிவறப் பெற்றும் = சமாதிநிஷ்டையால் வாசனாநு சந்தானமின்மையின் சுழுத்தினிலை யடைந்தவனேனும், உணர்ந்தவனெக்குதும் = சொச்சொரூபத்தின் நித்தியஞ்சாக்கிர முடையனாதலி னென்க; துரியமே = அவஸ்தாத்திரயத்திலும் அநுசூதமா யிருக்குஞ் சின்மாத்திரத்தையே, பற்றி = ஆலம்பித்து, இக்காயத்தணவி நின்றும், இருதயத்தி னியமிக்கப்பட்ட சித்தவிருத்தியனா யிருக்கிறே னென்றதாயிற்று. (64-65)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்முனிவன் எவ்வத்துவையும் குண திருஷ்டியானே வாஞ்சித்து ரமிக்காமலும், தோஷதிருஷ்டியானே வெறுத்து விட்டோட்டாமலும், மகிழ்ச்சிவாட்டங்களை யடையாமல், சுகித்திருந்தனன் சுவாத்மாராமனுயெனவே, அம்முனிவனுக்குப் பிராரப்தசேஷக்ஷயமுறவே எத்தகைய மனமிருந்தது என்ருசங்கிப்ப உரைத்தல்:—தீது என்பது.

தீது நன்மையின் வீடுபற் றுஞ்சிதைந் தேக
வீதகவ்வியன் விருப்பொடு வெறுப்புநெஞ் சிலனாய்ப்
போதன் மீளலும் பிறவியுங் கருமமும் போக்கி
யோது தேகந்தீர் கேவல வீடுற வுணர்ந்தான்,

(ப - ரை.) தீதுநன்மையின் = தள்ளத்தக்கது கொள்ளத்தக்கது, இல்லாமல், வீடு பற்றும் சிதைந்தேக = விடுகையும் கட்டும் விட்டோட, வீதகவ்வியன் விருப்பொடு வெறுப்பு நெஞ்சிலனாய் = வீதகவ்வியன் என்னும் அம்முனிவன் இராகத்துவேஷ மனமில்லாதவனாய், போதன்மீளலும் பிறவியும் கருமமும்போக்கி = செல்லுதலும் திரும்புதலும் ஜனனமும் கருமமும் முடித்து, ஓதுதேகந்தீர் = சாஸ்திரங்களிற் பிரதிபாதிக்கப்பட்ட விதேகமாகிய, கேவல வீடுறவுணர்ந்தான் = சுத்தமாகிய மோக்ஷத்தை யடைய வெண்ணினான்.

(ஸ்ரீ - வீர.) தள்ளத்தக்க விடயங்களும் கொள்ளத்தக்க விடயங்களும், அடைவுற்றினும், விடுதல் பற்றுதல் நாட்டமழிவுறவே, வீதகவ்வியமுனிவனது மனது இச்சை யநிச்சைகளைக்கடந்து நின்றது; ஜன்மகருமங்களின் எல்லையாய விதேக கேவலீபாவத்தில், தோற்றமாத்திரமாகவும் இராநின்றதேகாதி சம்சாரசங்கத்தின் நற்றியாகமாகவே, இனிதாக எஞ்சிநின்ற பிரஹ்மரச மகரந்தத்தில் அதிக ஆவலுண்டாக, பேராநந்தமயமாக இருக்கவே பேராசை யுண்டாகப் புகுந்தான் என்பதாம்.

(ச.) தீது = விடத்தகுந்தது, நன்மை = கொளத்தகுந்தது, என்னும் அபிமானத்தினது, வீடுபற்றும் = தள்ளுகின்றேன், கொள்ளுகின்றேன் எனும் இரண்டு திருஷ்டிகளும், சிதைந்தேக = நாசம்வந்தபோது, வீதகவ்வியனது, மனம், இச்சை யநிச்சையின்றிய நிர்விகற்பத்தை யடைந்த தென்றதாயிற்று. பிறவியுங்கருமமும் = ஜன்மகருமங்களினுடைய, போக்கி = சீமாந்தமென்னும் பரமாவதியாய், போதன் மீள்தலும் = போதன் மீள்தலுமென்னுஞ் சமுசாரசங்கங்களின்து திடத்தியாகரூபமாக, ஓது தேகந்தீர் கேவலவீடு = விதேக கைவல்லியத்தில், உறவுணர்வுற்றான் = அதிகவாஞ்சை யடைந்தான் என்றதாயிற்று.

(66)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விதேகமுத்தியையடைய விரும்பிய அம்முனிவன் மலைக்குகையிற் புகுந்து ஆதனத்திருந்து சகஜசத்துருக்களாய இராகத்துவேஷாதி களிடத்தும் நீத்துவேடத் தன்மையையும் மைத்திரியையும் பாவித்து, செல்லவிரும்பியவன் போன்று ஹிதத்தை யுபதேசித்துக்கொண்டு நமஸ்கரித்துக்கொண்டு அவற்றை வேண்டியழைத்தல்:—சித்தன், போகம், என்பன.

சித்தனாமுனி யொருபகற் கிரிமுழை சேர்ந்து,
பெத்தபங்கயா சனத்தினன் றன்றன்னிற் பேசு
மெத்துமாசையே நிராசையை மேவுதி முனிவே
யொத்துளாயிடு விநோதித்தே னுடம்பக லும்மால்.

போகங்கா ளுமைத்தொழுதே னெடுநாளும் மாற்புவியில்விளை யாடியவா போதும்போதுஞ், சோகந்தி ரிவ்வீடு மறக்கச்செய்த சுகங்காளுங் களைத்தொழு தேன் றுயர்காளும்மா, லாகந்தான் வேகலினு லன்றேவன்பா லாத்தும தத்துவ முணர்ந்தே னுதலாலே, யோகஞ்சேர் முத்தியெனக் குதவினீர்நீ ருபகரித்த வுமைத்தொழுத லுரிமையன்றே.

(ப - ரை.) சித்தனுமுனி = அத்விதீய சுபாவசித்தனுகிய மனனசீலன், ஒருபகல் = ஒருபோது, கிரிமுழை = பர்வதக்குகை, சேர்ந்து = அடைந்து, பெத்தபங்கயாசனத்தி னன் = பத்தபங்கஜாசனத்தினனுகி, தான்தன்னில் = தானேதனக்குள், பேசும் = சொல்லிக்கொள்வான், மெத்துமாசையே = மிகவும் எழுந்து குமுறுகின்ற ஆசையே, நிரா சையைமேவுதி = ஆசையின்மையை அடைவாய், முனிவே = கோபமே, யொத்துள் ஆறுதி = சமமடைந்து அந்தரத்திலேயே சாந்தியடைதி, விளேயாடினேன் நெடும்பகல் உம்மால் = வெகுகிரீடை செய்தேன் வெகுகாலம் உங்களால்.

போகங்காள் உமைத்தொழுதேன் = போகங்களே உங்களைப் போற்றினேன், நெடு நாள் உம்மால் புவியில் விளையாடியவா போதும்போதும் = வெகுகாலம் உங்களால் இவ்வுல கத்தில் கிரீடித்தவாறு போதும் போதும், சோகந்தீரிவ்வீடு மறக்கச்செய்த சுகங்காள் = அநர்த்தத்தையழிக்கும் இந்த இன்பமோக்ஷத்தை மறக்கும்படியாகச்செய்த சிற்றின்பங் களே, உங்களைத்தொழுதேன் = உம்மைப் போற்றினேன், துயர்காளும்மால் = துக்கங் களே யுங்களால், ஆகந்தான்=தேகந்தான், வேகலினல் = தபித்தலினல், அன்றே = அல்லவோ, அன்பால் = பிரியத்தால், ஆத்துமதத்துவ முணர்ந்தேன்=ஆன்மதத்துவத்தை யறிந்தேன், ஆதலாலே = ஆகையினல், யோகஞ்சேர் முத்தி = ஞானத்தா லடையத்தக்க மோக்ஷத்தை, எனக்குதவினீர் = அடியேனுக் கருளுனீர்கள், உபகரித்த உமைத்தொழு தல் உரிமையன்றே = உபகாரஞ்செய்த உங்களைப் போற்றுதல் கடனல்லவோ.

(ஸ்ரீ - வீர.) அம்முனிவன் அவ்வாஞ்சையானே, முடிவில் விரைவில் சகியபர்வதத்தில் உள்ள ஹேமகந்தரத்துள் ளடைந்தனன், ஜகத்து ஜாலத்தை நாடிமறுபடியும் வந்துசோராத படி; பத்த பதுமாசனனுக இருந்து, தனக்குட்டானே ஆண்டுரைத்ததாவது, இராகமே, நீராகத்தன்மையை நீயடைதி, துவேஷமே நீ நிர்த்துவேஷத் தன்மையை அடைதி, தங்க ளோடுகூடி வெகுகாலம் இங்கு என்னுல் விளையாடப்பட்டது, போகங்களே யுங்களுக்கு நமஸ்காரம், நூறுகோடி ஜன்மங்கள்யான் தங்களாற் ருலாட்டப்பெற்றேன் கொஞ்சி வளர்க் கப்பெற்றேன், உலகில்லாலகர்களால் பாலகனேபோலும். இந்தப் பரமபுண்ணியத்தானே யெய்தற் பாலதாய நிர்வாணபதவியையும் யான் எதனுலே மறந்தனனே, அவ்விடய சுகல வத்தின்பொருட்டு நமஸ்காரம் நமஸ்காரம். ஹேதுக்கமே ! உன்னுல் மிகவுந்தபிக்கப்பெற்ற என்னுல், ஆதரத்தோடும் ஆன்மாத்தேடி யடையப்பெற்றது; ஆகையினுல் ஆசாரியனுற் போல, உன்னுல் உபதேசிக்கப் பெற்றது இவ்விவேகமார்க்கம், அடியேனுக்கு, அதனுலுன்னை நமஸ்கரிக்கின்றேன்; உன்னுடைய திருவருளானே என்னுல் இந்தச் சீதளமானபதவி யடையப்பெற்றது, ஹே துக்கத்தின் தத்துவபூதமாய சுகவடிவமே ! துக்கப்பெயரிய உனக்கு நமஸ்காரம்.

(சு.) "மெத்துமாசையே" என்பது முதலிய மூன்றுகவிகளால் இராகாதிக ளென் னும் பூர்வசம்பந்திகளை மிகப் பிரார்த்தித்து விசர்ச்சனஞ்செய்தல்; ஆசையே, என்னிடத்தில்

வைத்த ஆசையை விடுவாயென்பது பொருள். மோக்ஷமடையு மென்னைவிட்டு விடுவாயென்பதாம். முனிவே நின்னை விடுத்துச்செல்லும் என்னைக் குறித்துத் துவேடத்தைப்பொருந்தா திருத்தி யென்பது பொருள்.

நெடுநாள் = ஜன்மகோடி சதங்கள் நான் உம்மால் லாலகராற் பாலகன்போல், விளையாடினேன். எந்தவிடய சுகத்தால், சோகந்தீரிவ்வீடு = அதிநிரதிசயானந்த ரூபமானபரம நிர்வாணபதவியையு மறந்தேனே, அத்தன்மையான சுகத்தைத்தொழுதேன், துயர்கள் = துன்பமே ! உம்மால் ஆகந்தான் வேகவினுல், என்னுற்றுக்க சாந்தநிமித்தம் ஆன்மா அன்பானேடப்பட்டான் என்பதாயிற்று. கடப்பன் சோகத்தை ஆன்மவித்தென்னுஞ் சுருதியினுலென்க. ஆதலாலே = அக்காரணத்தினுல், இம்மோக்ஷமார்க்கம், எனக்குதவினீர் நீர், உம்மால் உபதேசிக்கப்பட்டது உங்களாலே வைராக்கிய ஹேதுவாற் போதிக்கப்பட்டது, ஆதலால் உபகரித்தவுமை = குருதுல்லியராகியவும்மை, மீட்டுந் தொழுதேன் றெழுதேன் என்றதாயிற்று. தொழுத லுரிமையன்றே என்றது, மாறிமாறித்தொழுவது வஞ்சகத்து வாதி சயத்தை வெளிப்பண்ணற்கு. (67-68)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்போது ஞானஜனன உபகாரியாய தேகத்தையும் பிறவற்றையும் பிரார்த்தித்து வேண்டல்:—நெடு என்பது.

நெடுநாளை நண்பனு முடலேயுன்னை நீக்குகின்றேன் மெய்ஞ்ஞான நிரம்பக் கற்றுக், கெடுங்கேடுன் னுனக்குத் தேடிக்கொண்டாய் கிளராசை யெனுந்தாயே கேளாயென்சொற், றடுமாறி நனிவாடித் தளரவேண்டாஞ் சாந்தனு யானகன்றேன் றருமமேநீ, யடுங்கோர நரகந்தீர் துறக்கத்தேமுன் னுக்கினையால் வாழியுனைத் தொழுவேனன்பால்.

(ப - ரை.) நெடுநாளை நண்பனும் உடலே! = வெகுகால சிநேகிதனுகிய தேகமே ! உன்னை நீக்குகின்றேன் = உன்னைவிட்டு விடுகின்றேன், மெய்ஞ்ஞானம் நிரம்பக்கற்றுக் கெடுங்கேடு உன்னுல் உனக்குத்தேடிக் கொண்டாய் = உண்மைஞானத்தை மெத்தப் படித்து உன்னைக்கெடுக்குங் கெடுதலைத்தானே உன்னுலேயே அந்தோபாவம் உனக்கே சம்பாதித்துக் கொண்டாய், கிளராசை யெனுந்தாயே = விளங்காநின்ற திருஷ்ணையென்னும் மாதாவே ! கேளாய் என்சொல் = என்வார்த்தையைக் கேட்பாயாக, தடுமாறி நனிவாடித் தளரவேண்டாம் = தட்டுக்கெட்டுப் பதைபதைத்து மிகவும் வாட்டமுற்று ஒப்பாரிவைக்க வேண்டாம், சாந்தனுயானகன்றேன் = பரமசாந்தியை யுடையவனுகி யான்விலகுகின்றேன், தருமமே நீ = சுகிருதமேநீ, அடும்கோரநரகந்தீர் துறக்கத்தே முன் ஆக்கினை = துன்புறுத்தும் உக்கிரநரக மொழித்துச் சுவர்க்கத்தில் முன்னர் இருத்திவாழ்த்தினுய், வாழியுனைத்தொழுவேன் அன்பால் = நீநீடூழி வாழக்கடவாய் உன்னை நமஸ்கரித்தேன் பக்தியோடும்.

(ஸ்ரீ - வீர.) ஹே காயநேயனே உனக்குமங்களம் உண்டாகுக ! சம்சார அசாரத்தில் வாழுந்தயாநிதியே, சிரபந்துவே ! என்னுன் மித்திரனுகிய நீ விடப்படுகின்றுய், இது என்னுடைய அபராதம் அல்லவே, உன்னுல் உனது நாசப்பொருட்டே யெனதுபகாரஞ்செய்யப் பெற்றது, என்று சோகிப்பதுபோலக் கூறல்:—மெய்யென்பதாதி ; அன்னியனுற் பக்கின னல்லதேக ! உன்னுலேயேயிது உபாசிக்கப்பெற்றது, உன்னுலேயுன்னில் ஆன்மஞானவயத்தானே யந்தக்ஷியானது சம்பாதிக்கப்பெற்றது, உன்னுல் ஆன்மவிஞ்ஞானம் உணரய்

பெற்று உன்னழிவே செய்யப்பட்டது, இப்போது திருஷ்ணையைப் பிரார்த்தித்தல்:— ஹே மாதாவாகிய திருஷ்ணையே நான்போகின்றேன் ஒண்டியா யிருப்பவளாயினும் வாடிச் சோகிப்பவளாயினும் பிரசாந்தமாய என்விடயத்தில் தீனையாகிய உன்னால் துக்கப்படத் தக்கதாகாதாம். ஹே காமமாகிய பகவானே! விபரீத அபராதஜன்னிய தோடங்கள் அதாவது உன்னை வெற்றிகொள்ளும் பொருட்டு உனக்குமாறான வைராக்கிய சேவனுதி அபராதஜன்னிய எனது தோடங்கள்யாவும் உன்னாற்பொறுக்கத் தக்கனவேயாம் முற்றினும் உபசம ஏகாந்தத்தை யினிதடைகின்றேன், மங்கள ஆசீர்வாதஞ்செய்தி. புண்ணிய தேவதையின் பொருட்டு நமஸ்காரம் தங்களால் முன்னர் நரகங்களினின்றும் எடுக்கப்பெற்றுச் சுவர்க்கத்தில் யான்வைக்கப் பெற்றேனல்லவா! தங்களை மறக்கலாமா!

(ச.)நண்பனுமுடலே, தர்மாதி சாதனத்தன்மையின், காயமென்னு மித்திரனே, மெய்ஞ்ஞான நிரம்பக்கற்று = யான் ஆன்ம விஞ்ஞானத்தைத் திடமாகவடைந்து உன்னை நீக்குகின்றேன். இப்போது என்னாலே விடப்படுகிறாய், உன்னாலே உனக்குக்கெடுங்கேடு தேடிக்கொண்டாய், மோக்ஷநிமித்த முயற்சிக்கப்பட்ட வுன்னாலே இவ்வபராதஞ் செய்யப்பட்டதென்பது பொருள். தாயேயென வியோகதுக்கத்தை தாயைப்போ லாற்றுபவனாய்க் கூறினதாம். தருமமே, தேவனென்னு முன்னைத்தொழுதே னென்பது அந்வயம்; நரகத்தில் = நரகங்களினின்றும் கரையேற்றி, பாடபேதம்:—வியோக துக்கிதையாயமகளைப் போல் உபசாந்திப் படுத்திக்கொண் டுரைத்தல்: நம என்பது, மூலம். (69)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்போது பிராணனே முதலாகயாவற்றையு மகற்றல்:— உடன் என்பது.

உடன்பிறந்த நண்பரா முயிர்காளும்மை யொழுங்கிலே யொழிக்கின்றே னுய்ந்துவாழ்திர், நடந்தகல்கே னனென்ன விவ்வாறுள்ளே நாடுமன மேடணைக ணன்றுயாறி, யிடம்பெறநின் றோங்கார மெல்லவோதி யிகப்பொருள்கள் புறத்துள்ள விதயத்துள்ள, தடம்பெரிய நுண்ணியமூ வுலகிலுள்ள சங்கற்பத்தமைந்த வெலாந் தள்ளினனே.

(ப - ரை) உடன்பிறந்த நண்பராமுயிர்காள் = சகோதரர்களாகச் சனித்தநேயர்களாகிய பிராணன்களே! உம்மை = உங்களை, ஒழுங்கிலே = முறையே, ஒழிக்கின்றேன் = விடுகின்றேன், உய்ந்துவாழ்திர் = ஜீவித்துவாழுங்கள், நடந்தகல்கேன் நான் = நான்செல்கின்றேன், என்ன = என்று, இவ்வா றுள்ளேநாடு மனமேடணைகள் நன்றுயாறி = இந்தப் பிரகாரம் உள்ளே எண்ணியமனன மூவேடணைகள் சம்யக்குபசாந்தியாகி, இடம்பெறநின் றோங்காரமெல்லவோதி = பூமியையுற்றவனாய்ப் பிரணவத்தைப் பையவுச்சரித்து, இகப்பொருள்கள் புறத்துள்ள இதயத்துள்ளதடம் பெரிய நுண்ணிய மூவுலகிலுள்ள சங்கற்பத்தமைந்தவெலாந் தள்ளினனே = இகத்திலுள்ள வஸ்துக்கள் பாகியத்திலுள்ளவை ஆந்தரத்திலுள்ளவை, ஸ்தூல சூக்ஷ்ம அதிசூக்ஷ்மப் பொருள்கள் மூன்றுலகிலுமுள்ள சங்கற்பகற்பிதங்களாய யாவற்றையும் அகற்றினன்.

(ஸ்ரீ - வீர.) ஹே பிராணன்களே! சகஜன்மர்களே! சுகிருத்துக்களே! என்னால் இன்றுபழையோர்களே இத்தாங்களும் சுகிருத்துக்களின் நமஸ்காரமுறையானே உற்கிருஷ்டமாய்க் கருதப்பெற்று நமஸ்கரிக்கப் பெற்றீர்கள், உங்களுக்கு சுவஸ்தியுண்டாகுக யான் செல்கின்றேன். இனி எம்முறையானே வீதகவ்வியமுனிவன் பிரணவார்த்தம் நன்று

கப்பற்றி விதேகத்தன்மையை யினிதடைந்தனனே அம்முறை கூறப்பெறல்:—இவ்வா றென்பதாதி. இவ்வண்ணம் இனிக்கூறும் முறையானே உச்சசுரத்துடன் பிரணவத்தைப் பயநீட்சி சம்பாதிக்கும் வாயிலானே யுச்சரித்துக்கொண்டு மனன எட்டுணைப் பிரசாந்தி முறையானே அடைந்த ஆறேழுபூமிகளுஞ்சித் தன்னுடைய இருதயத்தில் பிரஹ்மசொரூபத்தையடைந்தனன். சந்யாசியாகிய வீதகவ்வியமுனிவன், ஓ மென்னும் இவ்வக்ஷரம் இவ்வியாவும் அதனது உபவியாக்கியானம் சென்றது இருப்பது வருவது என்று சர்வமும் ஓங்காரமேயாம் யாதுதானன்னியம் திரிகாலாதீதம் அதுவும் ஓங்காரமேயாம் எனமாண்டூக்கியசுருதி தரிசித்த முறையானே அகார உகார மகாரப் பெயரிய மாத்திரைகளானும் அர்த்த மாத்திரையாலும், கற்பிக்கப்பெற்ற தூலசூக்கும அவ்யாகிருத துரீயலக்ஷண பாதபேதத்தானே பிரணவத்தை னக்குஸ்மரித்துக்கொண்டு; பஞ்சீகரணக் கூற்றுப்படி விராட்டு ஹிரணியகர்ப்ப அவ்வியாகிருத இலக்கணபாதங்களின் றுரியத்தில் முதல், நனவின்றுனன் வெளிப்பிரஞ்ஞன் என்பதாதி சுருதிகூறிய முறையாய் அத்தியாரோபத்தான், “உட்பிரஞ்ஞன்னிலை வெளிப்பிரஞ்ஞன்னிலை உபயப்பிரஞ்ஞனுமிலையே, பிரஞ்ஞனுமிலை அப்பிரஞ்ஞனுமிலை பிரஞ்ஞானகனனும்மிலை” என்பதாதி யபவாதத்தானும், தூலசூக்கும காரண ரூபங்களுமாயபாகிய அப்யந்தர பாகங்களையும் தியாகஞ்செய்து, சுத்தமாய் அவ்யயமாயிருக்கும் சொரூபத்தைக் கண்டு பிரபஞ்ச உபசமஞ் சிவம் சாந்தம் அத்வைதம் ஆகிய நான்காவதைத் தியானிக்கின்றனர், அது ஆன்மா அது அறியத்தக்கது என்ச்சுருதி கூறிய துரியத்தில் ஆண்டான்மாவில் இருந்துகொண்டு பிரணவபரியந்தம் தீர்க்கசப்தத் தந்துவோடுகூட இந்திரிய தன்மாத்திரஜாலத்தை விட்டனன்; சங்கற்பத்தானே வெகுவாகக் கற்பிக்கப்பெற்ற மூவுலகத்துற்றவைகளையும் விட்டனன்.

(ச.) ஒழுங்கிலே யொழிக்கின்றேன், இப்போது பரியாயத்தால் ஒழிக்கப்பட்டீர் என்பது பொருள், ஸ்ரீ வசிட்டர்:—மனனேட்டுணைகள் = புத்திர எடணைகளும் சங்கற்பமென்னுமேட்டுணைகளும், ஓங்காரமோதி, சுருதியை; இடம்பெறநின்று = யோகபூமியை யடைந்து, ஓங்காரமுடிவாகத் தீர்க்கமான வோசையெனு நூலுடனே பொறிகள் இந்திரியங்களும், புலனெல்லாம் = சத்தாதிகளுமாகிய, இவற்றின் சாலத்தைத் தீர்ந்தனன் என்று பிறகவியோடந்துவயிக்க. பிரணவத்தினது பரியந்தமான நாதத்துடனே இந்திரிய விஷயஜாலத்தை யொடுக்கின னென்பது பொருள். தாரம் = உச்சதரம். (70)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் பலபலவாக வந்துற்ற ஆந்தர இடர்களையும் நீக்கினன் என்ல்:—ஓங்காரவென்பது.

ஓங்கார முடிவாகத் தீர்க்கமான வோசையெனு நூலுடனே பொறிகளுற்ற,
தேங்காதபுலனெல்லா மணத்தைக்காற்றுத் தீர்வதுபோற் றீர்ந்தனன்சே ணிடை
யேகங்கு, னீங்காது போலிருண்மாத் திரமுன்றேன்றி நிகழ்த லுந் கள்ளினன்
சோதிநேர் முன்றேன்றப், பாங்காகக் கணமதனைப் பார்த்துத்தீர்ந்தான் பயிலிரு
டேசிரண்டுமறப் பாறிப்போன.

(ப - ரை ). ஓங்காரமுடிவாகத் தீர்க்கமான = பிரணவ பரியந்தமான நீட்சிபெற்ற, ஓசையெனும் = சப்தமென்னும், நூலுடனே = தந்துவோடுகூட, பொறிகளுற்ற தேங்காத புலனெல்லாம் மணத்தைக் காற்றுத்தீர்வதுபோல் தீர்ந்தனன் = கந்தத்தையநிலங் கழிப்பதேகடுப்ப இந்திரிய தன்மாத்திர ஜாலமெல்லாம் விட்டனன், சேணிடையே கங்குல்

நீங்காதுபோலிருள் மாத்திரம் முன்றோன்றி நிகழ்தலுந் தள்ளினன் = அம்பரத்திடையே தமமானது அகலாததுபோல் அந்தகாரமாத்திரம் எதிரேபிரதீதியாகி யிருத்தலும் அகற்றினன்; சோதிநேர் முன்றோன்ற = பிரகாசம்நேரே முன்னே பிரதீதியாக, பாங்காகக்கணமதனைப்பார்த்துத் தீர்த்தான் = பக்குவமர்கக் கணநேரத்திலதனை நோக்கியகற்றினன், பயில் இருள்தேசு இரண்டும் அறப்பாறிப்போன = தோற்றிய இருளும் பிரகாசமும் ஆகிய இரண்டும் அத்தியந்தங் காணமற்போயின.

(ஸ்ரீ - வீர.) பிரணவபரியந்த மென்னு மக்ரபாகவடிவத் தீர்க்கத்தொனித்தந்துவோடு கூட, கந்தத்தை யநிலம்போலும் இந்திரிய தன்மாத்திர ஜாலத்தை நீக்கினன், எனவே சர்வஸ்தூல சூக்ஷ்ம இதரங்களேயும் நீக்கினன் எனவிரித்ததாம்; அம்பரத்திற் றோன்றியதேபோலத் தமோமாத்திரந் தோற்றப் பின் சாக்ஷியினலே தோன்றிய இருளேயும் தொலேத்தான் பிராஞ்ஞன் கோபலவம்போலும்; பின்றேஜசானது தோற்றவே அரைநிமிஷத்திலாராய்ந்து அதனேயும் அகற்றினன், அப்போது தமமும்தோற்றவில்லே பிரகாசமும் தோற்றவில்லே.

(ச.) இருண்மாத்திரம் = குணத்திரயான்மிகையென்னும் அவித்தையின் தாமத விருத்தி விசேடம், சேணிடை = சிதாகாயத்தில், சோதி = சத்துவான்மகமான விருத்தி விசேடம், இருடேசிவை யிரண்டும் பாறிப்போன = குணத்திரயாதீதன் ஆனன் என்பது பொருள். (71)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாறுய அவத்தையை அடைந்து சகல விக்கினங்களேயும் போக்கிச் சின்மாத்திரமா யிலங்கினனெனல்:—அவத்தை யென்பது.

அவத்தையிது தனேமனத்தாற் பற்றிமேலோ னங்குதித்த மனந்திரண மென்னமுற்றுந், தவிர்த்தனனே ரிமைப்பிலதற் பின்னப்போதே சனித்தசிசு வறிவொத்துச் சால நொய்தாய், நிவக்குமொளி பெறுமறிவைப் பெற்றுப்பாதி நிமிடம்பாதியி லெண்ண நீக்கி நின்றான், றுவக்குறுகாற் றசைவுவிடல் போலச்சித்தின் றொடர் காட்சி மாற்றினன் றுகளிலாதோன்.

(பு-ரை.) அவத்தையிது தனேமனத்தாற் பற்றி = இந்த அவத்தையை மனத்தினலே யடைந்து, மேலோன் = உயர்ந்த அம்முனிவன், அங்குதித்த மனந்திரணமென முற்றுந் தவிர்த்தனன் = ஆண்டுதயமாய மனத்தைத் துரும்பொப்ப அத்தியந்தம் அகற்றினன், ஓரிமைப்பில் = ஒருகணத்தில், அதற்பின்னப்போதே சனித்த சிசுவறிவொத்துச் சாலநொய்தாய்=அதன்பின்பு அக்காலத்திலேயே யுண்டாகிய சிசுஞான சமானமாய் அத்தியந்தம் சூக்குமமாய், நிவக்குமொளிபெறுமறிவைப் பெற்று=சொஸ்தமாய்ப் பிரகாசிக்குஞ் சம்வித்தை யடைந்து, பாதிநிமிடம் பாதியில் எண்ணம் நீக்கிநின்றான் = அரைநிமிடத்தினு மரையில் அவ்வெண்ணத்தையும் அகற்றிவிட்டான், துவக்குறுகாற்று அசைவுவிடல்போல=தோலாலறியப்பெறும்வாயு சலனத்தை விடுவதேபோலும், சித்தின்றொடர் காட்சிமாற்றினன் றுகளிலாதோன் = குற்றமற்ற அம்முனிவன் திருக்கின் றிருசியதசையை யகற்றினன்.

(ஸ்ரீ - வீர.) அந்தத் தமப்பிரகாச சூன்யமான அவஸ்தையை யடைந்து மனத்தால், அக்கற்பனேக்குங் காரணமாகிய மன்மாந்திருணத்தையும் அற்பமாக அங்குரிப்பதாயினும் அரைநிமிடத்தில் அறுத்தெறிந்தான்; அதன்பின் ஹேர குழந்தாய் பிறந்தபோதிருந்த சிசுஞானசமான கலனேயென்னும் அத்தியந்தம், அமலமானபிரதிபாசத்தை யடைவுற்றசொஸ்த

மான அறிவுண்டாயது அப்போதே, அந்தப் பிரபுவானவன் நிமிட அர்த்த அர்த்தபாககாலத் தானே அக்கலனையையும் விட்டான், அநிலம் ஸ்பந்த சக்தியை விட்டதேபோலச் சித்தின் சேத்தியதசையையும் விட்டான், காற்றிலாவிடத்தே வைத்ததீபமொப்பப் புடமானபிரகா சத்தைப்பற்றி அக்கலனையையும் அஃதுண்டாதற்கு முன்னரே அதிவிரைவில் அரைநிமிடத் தினும் அரைப்பாகப் போதிலகற்றினன், அதுவே சித்திற்குச் சேத்திய தசையின் நியாசமாம் என்பது பொருள்.

(ச.) அவத்தையிதுதனை = திரிகுணாதீத அவஸ்தையை, அப்போது சனித்த சிசுவறிவொத்து = நிர்வாசனையாய், அறிவு = சொரூபசைதன்யத்தை யென்பது பொருள். திருசியத்தைவிட்டு நிருவிகற்ப சின்மாத்திர தசையை யடைந்தனன் என்பதுகருத்து, (72)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிருவிகற்பமா யிருந்தானென நிகழ்த்தல்:—வரு என்பது.

வருசிற்சா மானியத்தை யடைந்தான்சத்தா மாத்திரமே வடிவானன் சுழுத் திமேவி, யிருபொற்குன் றெனநின்றான் சுழுத்தியூற்ற மெய்தியபின் றுரியவடி வெளிதினுற்றா, னருகுற்ற நிராநந்த மாயுமாயா வாநந்த மாயசத்தா கியுஞ்சத்தாகி, யொருவுற்ற வசனங்கட் கெட்டாதான வொருபொருடா னய்நின்றா னொப் பிலாதான்.

(ப - ரை.) வருசிற்சாமானியத்தை யடைந்தான் = வாராநின்ற சிற்சாமானிய அவத்தையை யடைந்து, சத்தாமாத்திரமே வடிவானன் = சத்தை மாத்திரமாகவே சொரூபமானன், சுழுத்திமேவி = துயிலையுற்று, இருபொற்குன்றென நின்றான் = பெருமைபொருந்திய மேருவைப்போலச் சலனமின்றி யிருந்தான், சுழுத்தியூற்ற மெய்தியபின்=துயிலில் அதிதிரபாவத்தை யடைந்தபின், துரியவடிவு எளிதில் உற்றான் = துரியரூபத்தைச் சுலபமாகவடைந்தான், அருகுற்ற நிராநந்தமாயும் = அதிசூக்கமமாய்த் தக்கபடியாய நிராநந்தமாகியும், மாயாவாநந்தமாய்=கெடாத ஆநந்தத்தோடு கூடினன், அசத்தாகியும் சத்தாகி= அசத்துப்போன் றிருந்தபோதினும் சன்மாத்திர வடிவமேயாகி, ஒருவுற்ற வசனங்கட்கு எட்டாதான = நிர்விசேடமாதலால் விலகிய வாக்குகளுக்குக் கோசரிக்கமுடியாதான, ஒரு பொருள் = ஒப்பற்ற பிரஹ்மவஸ்து, தானாய் நின்றான் ஒப்பிலாதான் = தனதுவடிவமாய் நிலைத்தான் உவமையில்லாத அம்முனிவன்.

(ஸ்ரீ - வீர.) இம்முறைமையானே சாக்ஷிமாத்திர பரிசேடலக்ஷணமாய காணும்பதத்தைப்பற்றி அதன்பின் சத்தாமாத்திரான்மகத்தையடைந்து, அவ்வறிவே வியதாதிபாத பரிசிட்ட சத்தாமாத்தி ரான்மக காரணதத்துவம் என்த்தற்பாவத்திதிவடிவ பதத்தை நன்குபற்றிக் கிரியேயென வசலமாயிருந்தனன். பின்சுழுப்த சம்ஸ்தானத்தே யிருந்திருந்து விபுவாகிய அம்முனிவன் சிறிதே சுழுத்தியில் திரபாவத்தை யடைந்து, இவைகளே ஆறாவது ஏழாவது பூமிகைகள் சதேக அவஸ்தைகளாம்; அதன்பின் சாக்ஷிசதைகர சியத்தில் நிரதிசய அகண்டாநந்த ஆவிர்ப்பாவத்தானே பிராரப்த சேடத்தோடு ஆத்தியந்திகத்தோற்றம் நாசமாகவே விதேககைவல்லிய வடைவைக் காட்டல்:—துரியவடிவென்பது. துரியரூபத்தை யடைந்தனன் அதன்பின் என்னுயிற்றென்னும் நான்காவது வினவிற்கு விடையிறுத்தல்:—நிராநந்தமாயும் என்பதாதி. நிராநந்தமாயும் சாநந்தன், அசத்தாயினும் ஆண்டம் முனிவன் சத்தாயினன், விடயாநந்த சூனியனாயினும், சொரூபத்தானே சாநந்தனாயினன், தன்னினும் அன்னியமாய சத்தை யிலனேனும் சத்துரூபனே யாயினன்

என இவ்வண்ணம் யாவற்றையும் பொருத்துக. சிறிதுமிலதேனும் சிறிதகோதாயினன் உலூகங்கட்கு இருளே பிரகாசமான வாறுபோலும் என்றுணர்க. சேத்தியமின்மையின் அசின்மயம் எனினும் தானே சித்தேயாகலின் சின்மயமேயாயினன். இதுவுமன்று, இதுவு மன்று என்று யாது ஓதப்பெறுமோ அதுவாயினன்பின், யாதுவாணிகட்கும் எட்டாத தாமோ அதுவேயாயினன் அம்மாமுனிச் சிரேட்டன்.

(ச.) சிற்சாமானியத்தை = நிர்விகற்பமான சின்மாத்திரத்தை = பசியந்தி சத்தவாச் சியத்தை, பசியந்தி = அதிசயக் குறிப்புள்ளது. அதன்பின்பு, சத்தாசாமானிய மென்னும், சத்தாமாத்திரமே வடிவு, சுழுத்தி = சுழுத்தியை, நின்றான் = அசலனாயிருந்தான், சுழுத்தி = நிர்விகற்ப சமாதியில், ஊற்றமெய்தி = தைரியத்தையடைந்து, துரியவடிவு = அவஸ்தாத்திரய அதீதரூபத்தை, எளிதினுற்றான், அந்நிசையிலம்முனி, நிரானந்தனும் ஆனந்த சகிதனுமானான், உம் என்னுஞ்சத்தம் சமுச்சயத்தில் வந்தது அவற்றில் நிராநந் தத்துவம், சொரூப அதிரிக்தமான ஆனந்தத்துக்கு அபாவமாதலினென், ஆநந்தசகிதத்து வமும், ஆநந்தாநுபவத்தினாலென்க. அங்ஙனம், சத்துரூபமாதலின் சத்துமானான், சர்வ விவகார நிவிர்த்தியின் அசத்துமானான், அதன்பின் இம்முனி, ஏவ்வத்து வாணிகட்ககோ சரமாமோ = அபிதா விருத்தியானே பிரதிபாதிப்பான் முடியாததாமோ அவ்வத்து வானான். (73)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சர்வவாதிகளானே நானாவிகற்பங்களால் தத்தம் சித்தாந்தம தாக விகற்பித்தபோதினும், பரமபாவனமும் அதிவிசாலமும் மிகச்சமமும் சர்வபுருவார்த ரகதமும் சர்வவிவர்ஜிதமும் ஆய அதேபதமாயின னம்முனிவன் அக்காலெனல்:— சூனியமென்பது.

சூனியமென் பார்க்கதுவாய்ப் பிரமமென்று சொல்லுவார்க் கதுவாய்விஞ் ஞானமென்று, தானியம்பு வோர்க்கதுவாய்ப் புருடனாகிச் சாங்கியர்க்கு மியோ கியர்க் கீசன்றாகி, யீனமில்லை வாகமர்க்குச் சிவனாய்க்கால மென்பாருக் கது வாய்மத் தியர்கட்கெல்லா, மான்முறு மத்தியமாய்ச் சமமாய்க்காணு மனத்தினர்க் கெல்லாமானபொருடானானன்.

(ப-ரை.) சூனியமென்பார்க் கதுவாய் = சூனியமே பொருள் என்பவருக்கு அப்பொ ருளாய், பிரமமென்று சொல்லுவார்க்கதுவாய் = பிரஹ்மமே பரமார்த்தம் என்பவருக்குப் பிரஹ்மமாய், விஞ்ஞான மென்றுதான் இயம்புவோர்க் கதுவாய் = க்ஷணிக விஞ்ஞானமே புருடார்த்தமென்னும் வாதியர்க்கு அப்பொருளாய், புருடனாகிச் சாங்கியர்க்கு = சாங்கிய சாஸ்திர முடையவர்க்குப் புருடதத்துவமாய், யோகியர்க்கு ஈசன்றாகி = பாதஞ்சலர் கட்கு ஈசுரதத்துவமாய், ஈனமில் வாகமர்க்கு = உயர்வோடுகூடிய சிவசம்பந்தமாய ஆகமங்களைப் பிரமாணமாகக் கொண்டவர்க்கு, சிவனாய் = பரமசிவனாகி ! காலமென்பா ருக்கதுவாய் = காலதத்துவமே யுண்மையென்னும் வாதியர்க்கு அக்காலதத்துவமாய், மத்தியர் கட்கெல்லாம் = மாத்யமிர்கள் யாவருக்கும், மான்முறு மத்தியமாய் = சிரத்தை யோடு கொள்ளத்தக்க மத்தியமாய், சமமாய்க் காணுமனத்தினர்க்கு = ஒப்பாகக்காணும் உள்ளத்தினர்க்கு, எல்லாம் ஆனபொருள் தானானன் = சருவமும் ஆகியவத்துத்தானே யாயினான்.

(ஸ்ரீ - வீர.) யாது சூனியவாதிகளாய பௌத்தர்கட்குச் சூனியமாகியுளதோ அதுவா யும், பிரஹ்மவித்துக்கட்கு எப்பரப்பிரஹ்மமுளதோ அதுவாயும், விஞ்ஞான வித்துக்கட்கு

விஞ்ஞான மாத்திரமாய் எவ்வமலபத முளதோ அதுவாயும், சாங்கியதிருஷ்டி யுடையவர்கட்கு எப்புருடனுளதோ அதுவாயும், யோகவாதியர்க்கு எவ்வீசுரதத்துவ முளதோ அதுவாயும், சசிகலாங்கர்களாகிய சைவர்கட்குச் சிவமதஸ்தர்கட்கு, எச்சிவமுளதோ அதுவாயும், கால ஏகவாதியர்க்கு எக்காலதத்துவ முள்தோ அதுவாயும், அம்முனிவனுயினன். அந்த ஆன்மாவை யுணர்ந்தவர்கட்குள்ள ஆன்மாவாயும், நலோகமென நிடேதவிடயத்தில் ஆரும் வேற்றுமை சாந்த சாதலின் என்று மூலம் பற்றியுணர்க. நைராத்மியமாயும் = க்ஷணிகவிஞ்ஞான சந்தானமாயும், அதுவே ஸ்தாயித் தன்மையானே விளங்குவதாயில்லையேயாமென் நைராத்மியமாம், சௌத்திராந்திக வைபாஷிகர்கட்கு, மாத்யமிர்கட்கோர் மத்தியமாயும் ஆயினன் அம்முனிவன் என்று எங்குங்கூட்டுக; மாத்யமிகர்கட்கு சித்து அசித்து மத்தியம சூனியமாத்திரம் தத்துவமென்னும் வாதியர்க்கு, நல்ல சமசித்தமுடைய ஜீவன்முக்தர்கட்குச் சர்வமென்னும் நிரவசேட பூர்ணமாயும் ஆயினன், சூனியவாதிகளாற் றொடங்கி சர்வவாதிகளால் முடிவு, அவர்களுடைய பரிச்சேத அபரிச்சேதவாதத்தில் பரம அவதித்தன்மையாம், இதரங்களாய் இடையீடுபட்ட மதங்கட்கோர் இரண்டின் கலப்பு ஏற்றத்தாழ்வை சித்திரியத்தானே எழுச்சியென்பதைக் காட்டும்பொருட்டென் றுணரத்தக்கது.

(ச.) அசின்மயனும் சின்மயனும் அன்றன்றெனச் சொல்லப்படும் எப்பொருள், வசனங்கட்கெட்டாது, பெயரியல்பாற் பிரதிபாதித்தற்கரிதோ அன்றியும், சகலவாதிகளாலும் தந்தம் மதாநுசாரத்தாற் சூனியாதி சத்தங்களால் விவகரிக்கப் படுகின்றதோ அப்பரமான்மரூபமானனென்பது அந்நுவயம். (74)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் அம்முனிவன் ஆனதன்மையையே நானாவிதமாக வருணித்தல்:—நூல் என்பது.

நூலினத்தின் சித்தாந்த மேதெல்லோர்க்கு நோக்கியதே தோர்ந்ததே தெல்லாமேது, ஞாலமெலா முறைவதே தசைவொன்றில்லா நல்லதே தொளிக்குமொளி தருவதேது, பாலுறுதன் னனுபூதி யொன்றாய்க்காணப் பட்டதே தொன்றாயும் பலவாமேது, சாலுகளங் கம்படைத்தும் படையாதேது சகலமுமா யலாததே ததுகானனன்.

(ப-ரை) நூலினத்தின் சித்தாந்தம் ஏது = சகல சாஸ்திரங்களின் றுணிவாவது யாதோ, எல்லார்க்கும் நோக்கியதேது = சர்வ இருதய அநுகமாயிருப்பது யாதோ, ஓர்ந்ததேது = ஆராய்ந்து தெளிந்ததுயாதோ, எல்லாமேது = சர்வமும் யாதோ, ஞாலமெலாம் உறைவதேது = உலகமெல்லா மிருப்பதுயாதோ, அசைவொன்றில்லா நல்லது ஏது = சலனமொன்று மில்லாத நன்மையது யாதோ, ஒளிக்குமொளி தருவதேது = பிரகாசத்திற்கும் பிரகாசம் கொடுப்பது யாதோ, பாலுறுதன்னனுபூதி யொன்றாய்க் காணப்பட்டதேது = தன்னிடத்துண்டாகா நின்ற அநுபூதி யேகமாத்திரமாகவே யிருப்பதுயாதோ, ஒன்றாயும் பலவாமேது = உண்மையில் ஏகமாயும் = இன்மையிற் பலவாயும் இருப்பது யாதோ, சாலுகளங்கம் படைத்தும் படையாதேது = மெத்த அஞ்சனத்தோடு கூடியதாயும் நிரஞ்சனமாயிருப்பது யாதோ, சகலமுமாயலாததேததுதானனன் = சர்வமுமாகியும் உண்மையில் ஒன்றுமாகாதது யாதோ அதுவாக அம்முனிவனுயினன்.

(ஸ்ரீ - வீர.) யாது சர்வசாஸ்திர சித்தாந்தமோ யாது சர்வஹிருதயத் துள்ளிருப்பதோ யாதுச்ருவமோ, யாதுசர்வத்து மிருப்பதோ யாதுயாவற்றிற்குந் தத்துவமாமோ இத்தகை

யதா யிருப்பதுயாதோ அதுவேயாயிருந்தான் அம்முனிவன். யாது அநுத்தம நிஸ்பந்தமாமோ = அத்தியந்தம் நிட்கிரியமாமோ, விண்ணின் கண்ணும் ஜன்மாதி நண்ணுதலான் கிரியை யுண்மையான் அதனினும் கூடஸ்தமாமென்பது பொருள்; ஒளிகட்கெல்லாம் ஒளிர்விக்குந்தன்மையானே ஒளி தருவதாமோ, யாது சுவாநுபூதி யேகமாத்திர வடிவமாமோ இன்னும் யாதுயாதோ அதுவதுவாய்ப் பிரசித்தமாய சத்தாய் அம்முனிவன் ஆனான். யாது ஏகமாயும் அநேகமாயுமுளதோ, யாதுமையோடு கூடியதாயும் மையற்றதாமோ, யாது சர்வமுமாயும் அசர்வமும் ஆமோ இன்னும் யாதுயாது உளதோ அதுவதுவாய்ப் பிரசித்தமாய்ச் சத்தா யம்முனிவனாகி யிருந்தான்.

(சு.) எப்பொருள், நூலனைத்தும் = சகலமான சாஸ்திரங்களுக்கும், சித்தாந்தம், ஆங்ஙனம் முன்பு புகலப்பட்டதாதலின் என்க. எல்லார்க்கு நோக்கியது = சர்வவிருதயாநுசூதம் அந்தரியாமியாதலின், எல்லாம் = சர்வான்மகமாதலின், ஞாலமெலா முறைவது, வியாபகமாதலின் ஏதது எனுஞ் சத்தவாச்சியம் அத்தன்மையான சத்துரூபமாகிய பொருளாய் இவனிருந்தான், அசைவொன்றில்லா நல்லதேது = எப்பொருள் அத்தியந்த நிச்சலம், ஒளிக்கும் = சூரியாதிகளுக்கும், ஒளி = சோதி. ஜோதிகளுடைய ஜோதியென்னுஞ் சுருதியினாலென்க, “இதயமாமிந்த விமலகோசத்தே விரசமாய் விளங்குநற்பிரமந், துதயமே விடுமச்சோதியே யெல்லாச் சோதிக்குஞ் சோதியாவதுவு, மிதயமே நிகழுமிதனைமெய்கண்ட விடத்தின் மற்றிதய நோயெல்லாஞ், சிதையுமையுறவுந் தீருமெவ்வினையுஞ் செய்யினுஞ் செய்திலனாமால்” என்னும் பிரஹ்மகீதையையும் ஈண்டுஸ்மரித்துக்கொள்க. தன்னனுபூதி = சுவாநுபூதியே, ஒன்றாற் காணப்பட்டது = முக்கியமான பிரமாணமாகவுடையது, எப்பொருள், ஒன்றாயும், உண்மையாக அத்துவிதீயமாதலின், பலவாம், மாயாவசத்தினால், சாலுகளங்கம் படைத்தும், சுருதி ஆசாரிய வாக்கியங்களினால் அறியப்படுகின்றமையின், களங்கம் படையாது, சுயம்பிரகாசமாதலின் களங்கம் = அஞ்சனம் வியஞ்சகம் பிரகாசகமென்பது பரியாயம், சகலமுமாய், சர்வான்மக மாதலின், சகலமுமலாதது, சர்வப்பிரபஞ்ச அதீதமாதலின். சார்வம் = சர்வசம்பந்தி அந்தர்யாமித்தன்மையான். (75)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்முனிவன் பரமேசுரசொரூபமாகி விளங்கிய தன்மையையும் பின் வெகுகாலம் நகர்வினை வயத்தால் இருந்ததன்மையையும் வருணித்தல்:—அடர் என்பது.

அடர்பிறப்போ டிறப்பின்றி யாதியன்றி யாதியா யொன்றாகி யநேகமாகித்,
தொடர்சகள நிட்களமாய் விண்ணினொய்தாய்த் தூய்தான நிலையீசனாகியொல்லைத்,
திடமுறவே முப்பதினா யிரமாண்டெல்லைச் செருக்குறவேண் டியபடியே சகத்துலாவிப்,
படர்மனமீண் டெழாதவகை சமித்தொன்றானான் பகர்வீத கவ்வியனாம் பரமயோகி.

(ப-ரை.) அடர்பிறப்போடு இறப்பின்றி = நெருங்கிவரும் ஜனனமரண மில்லாமல், ஆதியன்றி = அநாதியாகி, ஆதியாய் = முதன்மையதாய், ஒன்றாகியநேகமாகி = ஏகமாய நேகமாகி, தொடர்சகள நிட்களமாய் = உபாதியோடுகூடிய சகலமாயும் நிஷ்கலமாயும், விண்ணின் நொய்தாய் = ஆகாயத்தினும் அதிசூக்குமமாய் நிருமலமாய், தூய்தான = பரிசுத்தமான, நிலை = ஸ்திரமான, ஈசனாகி = பரமேசுவர சொரூபமாய், ஒல்லை = விரைவில், விளங்கி இவ்வண்ணம், திடமுறவே = அதிதிரமாக இருந்து, முப்பதினாயிரம் ஆண்டெல்லை = முப்பதினாயிரம் வருடபரியந்தம், செருக்குற = கம்பீரமாய், வேண்டிய

படியே — இஷ்டப்பிரகாரம், சகத்துலாவி = இவ்வுலகிற் சஞ்சரித்து, படர்மனம் = விரியு மியற்கைத்தாய மனமானது, மீண்டெழாதவகை சமித்து = மறுபடியும் கிளம்பாதபடி லயப்படுத்தி, ஒன்றுனன் = ஒரு பிரமமேயாயினன், பகர்வீதகவ்வியனும் = பிரமயோகி = இதுவரையு மியம்பிவந்த வீதகவ்விய முனிவனென்னும் மேலான மகாயோகசிரேட்டன்.

(ஸ்ரீ - வீர.) அந்த வீதகவ்வியமுனிவன் இவ்வண்ணம் கூறியமுறையே முக்தர்களுடைய திருஷ்டியால், விண்வடிவத்தினும் விமலமேதிதியாகி யிருந்து அஜமாயும் அஜராமாயும் அநாதியாயும் ஏகமாயும் அமலமாயும் நிட்கலமாயும் விளங்கும் பதத்தையடைந்து அவ்வடிவமாகவேயப்போது இருந்தனன்; பக்ததிருஷ்டியாலோ, கணமாத்திரையில் ஈசுவரனுகித் தனது காரியபேதங்களானே அநேகமாயும் சகலமாயும் ஆகி இருந்தனன் என்பதுபொருள் ஹே இராகவ! வீதகவ்விய மகாமுனிவனைப்போல அறியவேண்டியதை யறிந்து இருக்கவேண்டிய நிலையிலிருந்துகொண்டு, இராகபய உத்வேக மில்லாதவனாய் எப்போதும் மகிழ்ந்து வாழ்வாயாக, அந்த வீதகவ்விய முனிவன் சோகமற்றவனாய் முப்பதினாயிரம் வருடபரியந்தம், சுகப்படி விவகரித்ததேபோல நீயும் இஷ்டப்படி விவகரிப்பாயாக.

(ச) இத்தன்மையான வம்முனி, அஜம் அமரம் ஆய் ஆதியின்றி யாதியிலிருப்பதாய், தொடர் சகள நிட்களமாய் = சகளமும் நிஷ்களமுமாகிய இருவடிவத்தாலு மிருப்பதாய் அமலமான பரம்பொருளா யிருந்தான், (விண்ணின் = ஆகாசம்போற் கதியின்மை) என்னும் ஏதுவினுல் விண்வடிவத்தினும் விமலஸ்திதியுள்ள வீசுவரனுனெனன்பது அந்நுவயம். மனமீண்டெழாதவகை = மீட்டு மனச்சம்பந்தாபாவமாகச சன்மாந்தராபாவமிமித்தமென்பது அந்நுவயம். புனர்மனச் சத்துவபாவப்பொருட்டு = ஜன்மாந்தராபாவப்பொருட்டு என்பது பாடபேதம். (76)

வீதகவ்வியன் கதை முற்றிற்று.

# உபசாந்திப் பிரகரணம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இந்தப் பிரசங்கத்தானேயே இவ்வையமெனக் குதயமாயது சாற்காலம் மேகத்தைத் தணர்வதேபோல அடியேனுடைய அவ்வையத்தைத் தேவரீர் தீர்த்தருளவேண்டுமென்று ஐயத்தைத் தெரியப்படுத்திப் பிரார்த்தித்தல் ஸ்ரீ இராகவர்:—என்ன என்பது.

(ச - அ - கை.) முன்பு சித்தவிசிராந்தி சித்தித்தற்குச் சங்கத்தியாகப் பிராண நிரோத சமாதி அப்பியாசங்கள் தெரிவிக்கப்பட்டன இப்போது ஜீவன் முக்தனுக்கு ஆகாசகமனுபாவாதி நிரூபணமுகத்தாற் சித்தத்திற்கு உபசமப்பிராப்தியை உபசம்மரிக்கின்றார்; என்னவென்பது.

என்னவுரைத்த முனிதன்னை யிராமனேக்கி யுரைசெய்வா
னுன்னுசீவன் முத்தியினே ருடல்கட்கெல்லா மாகாயந்
தன்னினடத்தன் முதலான சத்திகாணே மென்னென்ன
வன்னவினவுக் குத்தரங்க ளறியவுரைத்தா னருள்வசிட்டன்.

(ப-ரை.) என்னவுரைத்த முனிதன்னை = என்று இந்தப்பிரகாரம் உபதேசித்தருளிய ஸ்ரீ வசிஷ்டபகவானை, இராமன் நோக்கி = ஸ்ரீ இராகவர் பார்த்து, உரை செய்வான் =

கூறுவதாவது, உன்னு சீவன் முக்தியினே ருடல்கட்கெல்லாம் = போற்றத்தக்க ஜீவன் முக்த சரீரங்கட்கெல்லாம், ஆகாயந்தன்னினடத்தன் முதலான சத்திகாணேம் என் என்ன = ஆகாய கமனுதி ஆற்றல் கண்டிலமே அஃதென்னே என்று கேட்ப, அன்ன வினுவுக்குத் தரங்கள் = அந்தச் சங்கைக்கு உத்தரங்களே, அறியவுரைத்தான் அருள் வசிட்டன் = தெரியும்படியாக அநுக்கிரகித்தார் கிருபையே வடிவமாகவுள்ள ஸ்ரீ வசிட்டபகவான்.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்ம வித்வரே! ஜீவன் முக்தசரீரங்கட்கு ஆகாசகமனுதிகளாய சக்திகள் ஈண்டு காணப்பெறுவதில்லையே அஃதெங்ஙனம்? என்று ஸ்ரீ இராகவர் வினவ அதற்குத்தரம் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்.

(ச) சக்தி = சித்திருபமான சக்திகள். ஆகாசகமனுதிகா: = ஆகாயத்திற் செல்லுதல் எவ்வாற்றலினுல் அது ஆகாசகமனமாம், அது ஆதி எவைகட்கோ அவையென்பது மூலம். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அக்கினிக்கு மேனேக்கி யெரிதல் இயல்பேபோல நபோகமனுதிகிரியாஜாலம் வஸ்து சுபாவமாம் அந்த அந்த யோனி தேக வியற்கையாம், மசகாதிகட்கும் ஆகாசகமனசக்தி காணப்பெறுதலின்என வாயின் மநுடர்கட்கு யோகசித்தியால் நபோகமனுதி யடைவு யாங்ஙனமாமென வெழ ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—பெரிய வென்பது.

பெரியவுணர்வில் பெத்தர்களும் பேணுமருந்தான் மந்திரத்தாற்
கிரியைதன்னுற் காலத்தாற் கிளர்ந்தவூகத் தாலியற்றின்
விரியும்விண்போக் காதிகளே மேவாநிற்பர் மெய்யுணர்வோர்க்
குரியவல்ல வினைவயவர்க ளுண்மைநோக்கே விடா துறுவார்.

(ப-ரை) பெரியவுணர்வில் பெத்தர்களும் = அநாத்ம வித்துக்களாய அமுக்தர்களும், பேணும் மருந்தால் மந்திரத்தால் = விரும்பத்தக்க ஔடதங்களால் மந்திரங்களால், கிரியை தன்னுல் = தொழில் விசேடங்களால், காலத்தால்=காலசக்தியால், கிளர்ந்த வூகத்தால் = விளங்காநின்ற யூகத்தால், இயற்றின் = செய்யின், விரியும் விண்போக்காதிகளே = விஸ்தாரமாய ஆகாசகமனுதிகளே, மேவா நிற்பர் = அடைந்திடுவர், மெய்யுணர்வோர்க்குரிய வல்லவினை = இவை உண்மைஞானம் வாய்ந்தவர்க்குத் தக்கவல்லவாம், அவர்கள் உண்மை நோக்கே விடாதுறுவார் = அவ்வறிஞர்கள் யதார்த்ததிருஷ்டியையே விடாமல் உற்றிடுவார்.

(ஸ்ரீ - வீர.) ஆன்மாவையுணராத தன்மையானே முக்தர் அல்லாதவர்களும், ஆகாயத்தில் உலாவுதல் முதலியவற்றை, மணியவுடதாதிதிரவியசக்தியினுனும், மந்திரசக்தியினுனும், யோக அப்பியாசாதி கிரியாசக்தியினுனும், அதன் பரிபாக காலசக்தியினுனும் ஒவ்வொருவரே யுடைவர்; திருஷ்டாந்தப்பொருட்டேனுங்கொள்க காலக்கிரகணம், அதாவது:—எறும்பு கிரீஷ்மாந்தகாலசக்தியால் இறகு முளைத்தலால் ஆகாசகதியை யடைவதேபோலவாம் என்றபடி இக்ககனகதியாதி ஆன்மாவை யறிந்தவனுக்கு, விடயமாகாவாம், அபிலாஷை யோக்கியமல்லவாம், துச்சமாகத் தோற்றலின்; ஆன்மாவை யறிந்தவனே சுயம் ஆன்மாவை யுற்றவனுகவே யிருப்பன்.

(ச) ஸ்ரீ வசிட்டர்: மருந்து = இரசாயனுதி, மந்திரம் = சாத்திரபுராணுதி, கிரியை = அடாப்பியாசாதி, காலம் = சிராப்பியாசகாலம், அவைகளின்து ஊகத்தால் = சக்தியால், மெய்யுணர்வோர்க்கு = ஆன்மஞானிக்கு, இவை = ஆகாசகமனுதிகள், உரியவல்ல = சாதிக்கத்தகுந்த புத்திகோசரமன்றும், யாதுகாரணத்தினுல், உண்மைவிடாதுறுவார் = ஆன்மாவையே அநுசந்தானஞ் செய்பவராவார். மந்திரம் = திலைபுராதி. (2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தெரிந்தவர்கள் சாந்தியாகவே யிருப்பார்கள் அல்லாமல் அவா வுறுர்கள், மோகம் போனபின் மூழ்குவதுமுண்டோ, ஒருவேளை ஏதேனுங் காரியார்த்தமாய் விரும்புறில் அடைதலுங் கூடுமெனல்:—அறிந்தோரென்பது.

அறிந்தோரறிவா லறிவினிடத் தமைவதல்லா லாசையின்பின்
பிறிந்தோடார்கள் சகப்பொருளின் பேதமெல்லா மாயைகளே
மறிந்தேமாயை கெடவென்றோர் மறித்துமதனின் மூழ்குவரோ
செறிந்தேயறிஞர் களும் விரும்பிற் சித்தியுறுமுன் பகரொழுங்கால்.

(ப - ரை.) அறிந்தோர் = ஆன்மாவை யுணர்ந்தவர், அறிவால் = மெய்யுணர்வால், அறிவினிடத்து = சச்சிதாநந்த வத்துவின்கண், அமைவதல்லால் = சாந்தியடைந்திருப் பதேயல்லாமல், ஆசையின்பின் = அவாப்பொருள்களின் பின்னே, பிறிந்தோடார்கள் = தம்மை மறந்துதொடர்ந்து செல்லமாட்டார்கள், ஏனெனின், சகப்பொருளின் பேதமெல் லாம் மாயைகளே = உலக வத்துக்களின் வேற்றுமைகள் யாவும் மாயாகாரியங்களேயென வுணர்ந்தவர்களாகலின், மறிந்தே = இடைவிடா விசாரத்தால், மாயைகெடவென்றோர் = அநிர்வசநீயமாயையின் அத்தியந்தநிவர்த்தியாமாறு வெற்றிகொண்ட பெரியோர், மறித் தும் = மீளவும், அதனின் மூழ்குவரோ=அம்மாயை மாயாகாரியங்களை யுண்மையென்று கொண்டு ஆழ்ந்து கிடப்பார்களோ, கிடக்கமாட்டார்கள், செறிந்தே = பிராரப்தவசத்தால் ஏதேனும் ஒரு நிமித்தங்கொண்டுதான், அறிஞர்களும் = விவேகிகளும், விரும்பில் = சித்திகளை யவாவில், முன்பகர் ஒழுங்காற் சித்தியுறும் = முன்னர்க் கூறிய முறையே சித்தி களை யடைதலுமாம்.

(ஸ்ரீ - வீர.) தம்மையறிந்த பெரியோர் தம்மாலே தம்மிடத்தின் இனிது மகிழ்ந் திருப்பதல்லாமல், அவித்தையாலாய துச்சபலத்தைக்குறித்து அதன்பின் ருெடர்ந்தோடார் கள்; எவைதாஞ்சிலபலஜகற்பாவங்கள் உளவோ அவற்றை அவித்தை மயங்களாகவே யறி வார்கள்; அவற்றின்கண்ணே அவித்தை யகன்ற ஆன்மஞ அறிஞர்சிகாமணிகள் ஆராய்ந்து நோக்கில் எங்ஙனந்தான் மூழ்குவார்கள்; ஆன்மஞானலேசமுனியர் எவர்தாமாயி னும் சித்திஜாலங்களை வாஞ்சிப்பரேல், அவர் சித்திசாதகதிரவியங்களினுனே அவற்றை முறையே சாதித்துக்கொள்வர். ஈண்டு மூலத்தில் ஆருயிரத்திற் கேற்பப் பாவிதாத்மா வெனப் பிரிப்பதே நலனும்; அல்லக்கால் விகற்பம் பயனற்றதாம் என்றுணர்க.

(ச.) ஆன்மாவையே யநுசந்தித்துச் சுவான்மாநந்த திருத்தியால் ஆசையென்னும் அவித்தை மயமான ஆகாசகமனுதி சித்தியின்பின் பிறிந்தோடார்கள். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எங்ஙனம் ஆன்மஞானத்திற்குக் கிரியாபலத்தில் அநுபயோக மாமோ அங்ஙனம், ஞானபலத்தில் திரவிய தேசக்கிரியை முதலியவற்றிற்கும் அநுபயோகம் ஆமெனவறைதல்:—கேட்டவென்பது.

கேட்டமருந்து மந்திரங்கள் கிரியைகால மூகமெலா
நாட்டுஞ் சித்தி களைநல்கு நல்லமுத்தி தரமாட்டா
தேட்டமுளதே லொருத்தற்கொன் றதுதானியற்றிற் சித்திக்கும்
பூட்டுமாசை வந்தணுகா புரணபோத முடையோர்க்கே.

(ப - ரை.) கேட்ட மருந்து மந்திரங்கள் கிரியைகாலம் ஊகமெலாம் = நூல்களிற் கேள்வியுற்ற ஔடதம் மனுக்கள் தொழில் போது யுக்தியென்னும் யாவும், நாட்டுஞ் சித்தி

களை நல்கும் = கீர்த்தியை யுலகில் நிலைநாட்டும் சித்தியணிமாதிகளைத் தரும், நல்ல முத்தி தரமாட்டா = சர்வ அநர்த்தநிவிர்த்தி பரமாநந்தப் பிராப்திவடிவ மோக்ஷத்தைக் கொடுக்க மாட்டா, தேட்டமுளதேல் ஒருத்தற்கு ஒன்று = யாவருக்கேனும் யாதேனும் பிரியமாக விருக்குமாயின், அதுதானியற்றிற் சித்திக்கும் = அப்பொருடான் அதற்குரிய சாதனங்கள் கொண்டு சாதிக்கின் அடைதல் கூடும், பூட்டும் ஆசைவந்தணுகா பூரணபோதமுடையோர்க்கே = பந்தப்படுத்தும் அவாவந்து சாராது பூரணஞானமுடைய மகான்களுக்கே. ஏ = மாத்திரம்.

(ஸ்ரீ - வீர.) தத்துவஞானபலமாய பரமாத்மபதப்பிராப்தியில் திரவியதேசக் கிரியை காலயுக்திகள் எவையுமே யுபகாரஞ் செய்யமாட்டா. எவனுக்கு எச்சித்தி யிச்சையுளதாம், அவன் அச்சித்தியைச் சாதிப்பன் அதற்குரியனகொண்டு நலம்; பூர்ணமான ஆன்மஞான முடையவனுக்கோ எதன்கண்ணும் இச்சையே யுண்டாகமாட்டாது; ஈண்டு யாவற்றையுங் கடந்தவனுகிச் சகல ஆசைகளையு மற்றவனுகியுள்ள ஆன்ம சாக்ஷாத்காரமுடையவன், ஆன்மாவின்கண்ணே சந்துஷ்டனுயிருப்பன் அன்றி யாதொன்றையும் செய்யான் சேட்டியான், அவனுக் காகாசகமனுதியானும், சித்திகளானும் போகங்களானும், யாதொரு பயனுமே கிடையாதாம், சர்வாதிபத்திய நிக்கிரக அநுக்கிரகசாமர்த்தியப் பிரபாவத்தானும், தனது மேன்மையை மிளிர்த்தும் கருவத்தானும், சாதல்வாழ்தல் அவாக்களானும் யாதொரு பயனுமே கிடையாதாம்; அவன் நித்தியதிருப்தனுய்ப் பிரசாந்த ஆன்மனுய் இராகமற்றவனுய் வாசனையற்றவனுய், ஆகாசம்போன்ற ஆகாரனுய் அறியவேண்டியதை யறிந்தவனுய் ஆன்மாவின்கண்ணே சுகமாக விருப்பன். (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இச்சை யவனுக்கேன் உண்டாகமாட்டாது எனின் உரைத்தல்:—காதலென்பது.

காதலெல்லா மிறந்தொழிந்தாற் கலங்காஞானே தயமுண்டா
மாதரஞ்செய் சித்திகளி னமிழ்வோர்க்கப்பே றடையாதென்
றோதுமுனியை யோகிகடா மூழிகால முயிர்வாழ்தற்
கேதுமூல மெனக்கேட்டா னிராமன்மீட்டு முனிசொல்வான்.

(ப - ரை.) காதல் எல்லா மிறந்தொழிந்தாற் கலங்காஞானோதய முண்டாம் = சகல ஆசைகளும் நசித்தேகுமாயின் சம்சயவிபரீதமில்லாத பிரஹ்மவித்தையின் உற்பத்தியுண்டாகும், ஆதரஞ்செய் சித்திகளின் அமிழ்வோர்க்கு அப்பேறடையாது = உலகத்தவர் கொண்டாடும் மகிமாதிசித்திகளில் அழுந்துவோர்கட்கு அப்பரமாநந்தப் பிரயோஜனம் அடைவுறாது, என்றோதும் முனியை = என்று கூறிய ஸ்ரீ வசிஷ்டபகவானை நோக்கி, யோகிகள் தாம் = பெருத்த யோகியர்கள், ஊழிகாலம் = கற்பகாலம், உயிர்வாழ்தற்கு = பிராணனோடுகூடியிருத்தற்கு, ஏதுமூலம் = யாதுகாரணம், எனக் கேட்டா னிராமன் மீட்டும் முனி சொல்வான் = என்று ஸ்ரீ இராகவர் கேட்ப மறித்தும் ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரங் கூறல்.

(ஸ்ரீ - வீர.) சர்வேச்சாக்குழுக்களும் அடியோடு இல்லாமற்போகவே, ஆன்மலாப உதயமானதுண்டாம், அக்கால் அதற்கு விருத்தமான இச்சை எங்ஙனம் எவ்வேதுவினுலுளதாம், ஹே அநகனே! சித்திவாஞ்சையில் மக்கின சித்தமுடையவனுல் எங்ஙனம் அஃதடையப்பெறும்? பெறுதென்பதாம். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ இராகவர் யோகிகள் வெகுகாலம் இருத்தற்குக் காரணம் யாதென ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரங்கூறத் தொடங்கல்:—பிராணன் என்பது.

பிராணனசையி லசைந்திடுவர் பிராணனடங்கிற் கற்போல்வர்
பிராணன்றன்னைத் தரித்தலினுற் பெருநாணசியார் யோகிகடாம்
பிராணன்றன்னி னெஞ்சத்திற் பிறக்குமசைவுட் புறனடங்கிற்
பிராணுஞச மூப்பிரண்டும் பெருந்தூரத்தி லேகிடுமால்.

(ப - ரை.) பிராணன் அசையில் = உயிர் சலனமுறில், அசைந்திடுவர் = சலனமுறுவர், பிராணனடங்கிற் கற்போல்வர் = உயிர்ப்படங்குமாயிற் பாஷாணம்போலிருப்பர், பிராணன்றன்னைத் தரித்தலினுல் = பிராணவாயுவைத் தாரணஞ்செய்தலினுல், பெருநாள் நசியார் யோகிகள் தாம் = வெகுகாலபரியந்தம் க்ஷயமாகாமலிருப்பர்கள் யோகிகள், பிராணன் றன்னில் நெஞ்சத்தில் = வாயுவிலும் மனத்திலும், பிறக்கும் = உண்டாம், அசைவு = சலனம், உட்புறனடங்கில் = உள்ளிலும் வெளியிலும் ஓயில், பிராணுஞச மூப்பிரண்டும் பெருந்தூரத்தி லேகிடும் = பிராணனுடைய நாசமும் கிழத்தகைமையும் ஆகிய இரண்டும் வெகுதூரத்தி லோடிவிடும். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) பிராணன்களின் பிராணனம் ஸ்பந்தமாம் அது சாந்தியுறவே அப்பிராணன்கள் உடலிற் கல்லொப்பனவாம் திடவ்டிவங்களாய் எவ்வேதுவால் நிலைபெறுமோ அவ்வேதுவால் தாரணையால் அவனதத்தேகம் நஷ்டமடையாதாம். ஹஸ்தபாதாதி ஆந்தரப் பிராண்ன்களோடுகூடிய தேகத்தில் அசைவு சித்தஜன்னியமாம் அல்லது வாதஜன்னியமாம், எவனுக் கவையிருப்பதில்லையோ அவனுக்கு விருத்திடாதிகளும் அபக்ஷயாதிகளும் வெகுதூரத்தனவாம்.

(ச.) பிராணன் = பிராணுதிவாயுக்கள், அசையில் = சலிக்கின், அசைந்திடுவர் = தேகஞ்சலனமுறும், அத்திரத்துவமா மென்பதாம், பிராணனடங்கில் = பிராணசலனநிவிர்த்திக்கின் நிருத்தப்பிராணயோகிகள், கற்போல்வர் = சிலைபோற் சிரகாலமிருக்குமியோகிகளாம், பிராணன்றன்னைத் தரித்தலினுல் = பிராணநிரோதாப்பியாசத்திருத்தலினுல், பெருநாள்நசியார், உட்புறன் = வாகியத்தும் அந்தரத்தும், பிராணன்றன்னில் = பிராணனிலாவது, நெஞ்சத்து = சித்தத்திலாவது, பிறக்குமசைவடங்கில், பிராணன், நிருத்தசித்தப் பிராணனை யுடையவனது, நாசமூப்பிரண்டும் பெருந்தூரத்தி லெய்திடுமால். (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உயிருமனமும் ஒடுங்கில் தேகம் நிலைபெறும் எனவும் உண்மையுணர்ந்தோர் இன்னுரெனவும் உரைத்தல்:—உள்ளுமென்பது.

உள்ளும்புறம்பு மசைவின்றி யுயிருமனனு மொடுங்குமெனில்
தள்ளுருமலொருக்காலுந் தாதுவெல்லாஞ் சடத்துறையுந்
தெள்ளியறிவ தறிந்தாசை தீர்ந்துபுந்தி தெளிந்திதயங்
கொள்ளும்பந்த மெலாமறுத்தோ ரன்றேவுண்மை குறித்தறிந்தோர்

(ப - ரை.) உள்ளும் புறம்பும் அசைவின்றி = ஆந்தரத்தும் பாகியத்தும், சலனமில்லாமல், உயிரு மனனும் ஒடுங்குமெனில் = பிராணனும் மனதும் அடங்கும் ஆயின், தள்ளுருமல் ஒருக்காலும் தாதுவெல்லாம் சடத்துறையும் = தியாகஞ்செய்யாமல் ஒருபோதும் தாதுக்களியாவும் தேகத்தில் இருக்கும், தெள்ளியறிவதறிந்து = தெளிவாகத் தெரிய

வேண்டியவைத் தெரிந்து, ஆசைதீர்ந்து, புத்திதெளிந்து = இராகமற்று, உள்ள மகாமதிய ராகி, இதயங்கொள்ளும் பந்தமெலா மறுத்தோர் = இருதயத்திற்கொண்ட கிரந்திகள் யாவற்றையும் கெடுத்தவரே, அன்றே = அல்லவோ, உண்மைகுறித்தறிந்தோர் = மெய்ம்மையைக் குறித்துத் தெரிந்தவராவர்.

(ஸ்ரீ - வீர.) ஹேதத்துவ வித்துக்களுள் மேன்மையாய குழந்தாய்? உள்ளும் புறம்பும் ஸ்பர்தம் சாந்தமாயின், துவக்குமுதலிய தாதுக்கள் தேகத்தில் பூர்வஸ்திதியவஸ்தையை ஒருகாலும் விடமாட்டாவாம். யாவர்தாம் அறியவேண்டியதை யறிந்தவராவரோ, விருப்பற்றவராவரோ, மகாதீயுடையவராவரோ, கிரந்தியற்றவராவரோ அவர் யாவருமே பராதீனமில்லாத சுதந்திரரேயாவர் தனுவிற் றிதிபெற்றவரேயாவர். அவனுக் கமரர் இடர்தனை யடுக்கார், ஆன்மாவேயிவர்க்கும் அவன்றானுருவன், எனச்சுருதியுண்மையின்.

(ச.) பந்தமெலாம் = கிரந்திகளனைத்தும், அறுத்தோர், பிராணநிரோதத்தினாற் சுழுமுனைமுகஞ் சேதிக்கப்படின் பிரம விஷ்ணு ருத்திரக்கிரந்திகள் சின்னமாம், பிராண தாரணையின் இயலாதலின் அச்சல யோகிகளும், தனுவின் = தேகத்தின், சுதந்தரத்தைக் கொள்வார், சுவேச்சையாலே இதை விடுபவரும் கிரகிப்பவரும் ஆமென்பது பொருள். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எப்போதுதான் விசாரத்தினாலே சித்தமானது அஸ்தங்கப் பிராயமாயதோ = வறுத்த விதைபோல் அங்குரசக்தியால் அஸ்தமாயது, தோற்றுதலினாலே அஸ்தமாகாதது ஆமோ, அப்போதுதான் வீதகவ்விய முனிவனுக்கு மைத்திரியாதி குணங்கள் உண்டாயினவாம் என்று ஸ்ரீ வசிஷ்டபகவானருள ஸ்ரீ இராகவர் அதுவிடயத்திற் சங்கித்தல்:—என்ற என்பது.

என்றமுனியை விவேகத்தி னெழுச்சியாலே மனமிறக்கிற்
றுன்றுகின்ற மயித்திரியை முதலாங்குணமெவ் விடத்தொன்றுங்
குன்றமனையா யுரையென்ற விராகவற்கு முனிகூறு
மொன்றுமருவு முருவுமென வுளத்திறைச மோரிரண்டே.

(ப - ரை.) என்றமுனியை = இவ்வண்ண மியம்பிய ஸ்ரீவசிஷ்டபகவானை, விவேகத்தின் எழுச்சியாலே = விவேகத்தினது முதிர்ச்சியினாலே, மனமிறக்கில் = சித்தமிலயமானால், துன்றுகின்ற = பொருந்துகின்ற, மைத்திரியை முதலாங்குணம் = மைத்திரி முதிதை கருணை யுபேக்ஷை முதலிய கல்யாணகுணங்கள்: எவ்விடத்தொன்றும் = எங்கேயிருக்கும், குன்றமனையாய் = மேருவிற்குச் சமானமானோய்! உரையென்ற விராகவற்கு = அருள்வாயாகவென்று பிரார்த்தித்த ஸ்ரீ இராமச்சந்திரர்க்கு, முனிகூறும் = ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவார், ஒன்று மருவுமுருவுமென வுளத்திறைசமோரிரண்டே = இலயமாகும் அருபம் சுரூபம் என்பதாக மனோநாசம் இருவகையேயாகும்.

(ஸ்ரீ - வீர.) ஹே பிரபுவே! விசார அப்யுதயத்தானே சித்தசொரூபமானது அம்முனிவனுக்குக் காந்தநின்றகாலத்து, மைத்திரிமுதலிய குணங்கள் உண்டாயினவெனத் தேவரீரால் என்ன அபிப்பிராயங்கொண்டு அருளப்பெற்றனவோ? பிரஹ்மத்தின்கண் பாதிதமாகவே எதற்குமைத்திரியாதிகுணங்கள்? பாதிதத்திற்கா அல்லது அதிஷ்டானத்திற்கா? யாண்டுதான் அவை யினிதிலங்கும்? ஆபாசமென்னு மதிலா அல்லது பிம்பசித்திலா? இலங்குகின்றன? ஹே திருவருள் செய்பவருண் மேன்மைமிக்கவரே! அடியேனுக் கருளல் வேண்டும். பாதிதமாயமிருகதிருஷ்ணையாய நதிக்குத் தானுதல் மருப் பூமிக்குத்தானுதல்

சைத்தியமாதுரியபாவனத்தன்மை முதலிய குணங்கள் உளவாகாவன்றே? அவற்றை விளக்குவதேனும் எதுவும் உளதாகாததானன்றே? என்பது கருத்தாம். என்று ஸ்ரீ இராகவர் சங்கிப்ப அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவதாவது இருவகையாகச் சித்தநாசமுளவாம் ஒன்று சரூபமாம், மற்றொன்றே அரூபமேயாம், படிகச்சுவருற்ற தற்பிரதிபிம்பத்திற் புருடாந்தரப் பிரமஆபாசம்போலத் தோற்றுகின்ற அவ்வுருவசகிதமும் அதனிரகிதமும் ஆமென்றறிக.

(ச.) மயித்திரியை முதலாங்குணமெவ்விடத்தொன்றும் ஆன்மா நிர்க்குணமாதலினும் சித்தவிலீன மாதலினுமென்க. (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நாசமிரண்டு மிருக்குமிடங்கூறி அதில் முயலவேண்டுமெனல்:— சீவனென்பது.

சீவன்முத்தி தனிலுருவ நாசஞ்சித்தந் தனக்குளதாந்
தாவிலுடறீர் முத்திதனிற் சாற்றுமருவ நாசமுறு
மேவுசித்த முண்டாகி லிடராமிறக்கின் மிகுமின்பம்
பாவியுள்ள மெழாதபடி பண்ணியதைநா சப்பயில்வாய்.

(ப - ரை.) சீவன் முத்திதனில் உருவநாசம் சித்தந்தனக்குளதாம் = ஜீவன் முக்தியவஸ்தையில் சரூபநாசம் மனந்தனக்குண்டாம், தாவிலுடல்தீர் முத்திதனில் சாற்றும் அருவநாசமுறும் = இனித்தேகமேவராமல் உடலிடர்தீர்ந்த விதேகமுத்தியில் முன்மொழிந்த அரூபநாசமானதுண்டாம், மேவுசித்தமுண்டாகில் இடராம் = விடயங்களையே சிந்திக்கும் மனது உண்டாகியிருக்குமானால் துக்கமேயாம், இறக்கின்மிகுமின்பம் = அவ்வுளமிலயமாயினோ பேரானந்தமுண்டாம், பாவியுள்ள மெழாதபடி பண்ணியதை நாசம்பயில்வாய் = பாவகாரணமான மனது மீண்டு முதியாதபடிசெய்து அம்மனத்தினது அழிவையே யப்பியசிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) ஜீவன்முக்தன் சரூபனுவன் அரூபன் விதேகமுக்தனுவன், சித்தத்தினிருப்பீண்டு துக்கத்தின் பொருட்டேயாம், சித்தநாசமோ சுகப்பொருட்டேயாம், ஆதலின் சித்தசத்தையை க்ஷயமாக்கிச் சித்தத்தின் நாசத்தையே சம்பாதிக்க வேண்டும். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தமிருப்பதாயின் அவ்விருப்பு எத்தகையது என, அபாதித அஞ்ஞானப் பிரபவங்களாய தாமசவாசனுஜாலங்களால் வியாப்தமாய் எது ஜன்ம காரணமாயிருக்கின்றதோ அதை மனமெனவறிதி அது கேவலம் துக்கம்பொருட்டேயாமெனக் கூறி அதுவே அநேக அபிமானமியற்றிச் சீவனுகவுமிருக்கும் மாயைக்கு மூளையுமாமெனல்:— பகுதியென்பது.

பகுதிவழியின் குணபார மெனதென் றபிமா னம்பண்ணற்
றகுதியுண்மை யறியாது தளர் நெஞ்சாஞ்சீ வனுமதுவே
தொகுதியான சுகாசுகத்தைத் தொடர்ந்துநிற்குஞ் சுசாதிகளின்
மிகுதியசையா திம்மனமே மிகுமாயைக்கு விளைமூளையே.

(ப - ரை.) பகுதிவழியின் குணபாரம் = பிராகிருதமாய குணசம்பாரத்தை, எனதென்றபிமானம்பண்ணல் = எனதென்று அபிமானஞ்செய்தலும், தகுதியுண்மையறியாது தளர் நெஞ்சாஞ் சீவனுமதுவே = தக்கதத்துவத்தை யுணராமல் மிகத்துயரடையும் நெஞ்சாகிய சீவனும் அதுவேயாம், தொகுதியான சுகாசுகத்தைத் தொடர்ந்துநிற்குஞ் = கூட்டங்கூட்ட

மான இன்பத் துன்பங்களைப்பற்றி நிலைக்கும், சுகாதிகளின்மிகுதி = மிகுந்த இன்பாதிகளி லேயே மூழ்கி, அசையாது = நிச்சலமாயிருக்கும், இம்மனமே மிகுமாயைக்கு விளை மூளையே = இந்த மனந்தானே பெரியமாயைக்கு விளையுமங்குரமாம்.

(ஸ்ரீ - வீர.) அநாதியத்தியாச சித்தமாய தேகேந்திரிய விஷயாதியின்குண சம் பாரத்தை = தருமத்தின் சமுதாயத்தை ஆத்மசம்சர்க்க அத்தியாசத்தால் எனதென்றபி மானிக்கும்; மனமானது எதுவரையுமிருக்குமோ அதுவரையும் துக்கக்ஷயமெங்ஙனமுண் டாம், மனமானது விலீனமானவுடனே ஜந்துக்களின் சம்சாரமும் அஸ்தத்தை யடையும்; இவ்வறியாத ஜந்துக்களினிடத்திலேயே பலவிதமாக வுண்டாம் வாசனைச் சமுதாயங்களாலே துக்கங்கொடுக்கவே அசையாதபடி திடமாகப் பிரதிஷ்டை செய்யப்பெற்று இருந்து வாழ் கின்ற மனமானது துக்கவிருக்ஷவன அங்குரமென்று உணர்தல் வேண்டும், துக்கவிருக்ஷத்தி னீட்டமுற்ற வனத்தின் கிளைமூளைகள் எதனால் அத்தகையதாம் என்றபடி.

(ச.) பகுதிவழியின் குணபாரம் = சத்துவாதிகுணசமுதாயத்தை, எனதென்றெந்த நெஞ்சு தகுதியுண்மையறியாது ஆதலின், அபிமானம்பண்ணல் = செய்யுமோ, தளர் நெஞ்சு = சமுசாரதுக்கபாத்திரமான துக்கமியாது அதுவே, சீவனுமாம், எந்த மனம் தொகுதியான சுகாசுகத்தைத் தொடர்ந்து நிற்கும், ஆசரித்திருப்பதும், சுகாதிகளின் மிகுதி யசையாது நான்சுகி நான் துக்கியாயிருக்கின்றேனென்று இங்ஙனந் திடஅபிமானமுள்ள தும், மிகுமாயைக்கு = சம்சாரவிருக்ஷத்துக்கு, விளைமூளை = பல்லவகுசுமபலங்களை யுண் டாக்குவதும் இம்மனமேயாம். (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹேபிரஹ்மந்! எவனது மனம் நஷ்டமாயது நஷ்டமானது தான் எத்தகையதாகவிருக்கும், இதனது நாசந்தான் எத்தகையது, அபாவத்தன்மை யடைந்ததற்கு இருப்பும் விவகார ஆற்றலும் எவ்விலக்கணத்தது என்றிராகவர் கேட்ப ஸ்ரீ வசிஷ்டபகவானருளல்:—மனத்தின் என்பது.

மனத்தினுண்மை யுரைத்தனமேன் மனத்தினாசஞ் சொலக்கேட்பாய்
கனத்தகிரியை யுயிர்ப்பசையா வகைபோற் சமமாங் காட்சிதனி
லினத்தவின்ப துன்பங்க ளிறையுமசையா திருப்பவர்க்கே
யனத்தமான வுள்ளந்தா னழிந்ததென்ப ரறிந்தோரே.

(ப - ரை.) மனத்தினுண்மை யுரைத்தனம் = மனத்தின் இருப்பை யுரைத்தேம், மேல்மனத்தின் நாசஞ்சொலக் கேட்பாய் = மனத்தினுடைய அழிவைக் கூறக் கேட்குதி, கனத்தகிரியை யுயிர்ப்பசையா வகைபோல் = பெரிய பர்வதத்தை மூச்சசைவியாதது போல, சமமாங் காட்சிதனில் = சமதிருஷ்டியில், இனத்த இன்பதுன்பங்கள் = பல வகையான சுகதுக்கங்கள், இறையுமசையா திருப்பவர்க்கே = அணுவுஞ்சலியா திருப்ப வர்க்கே, அனத்தமானவுள்ளந்தான் அழிந்ததென்பர் அறிந்தோர் = இடரைப் பெரிது மியற்றும் மனமானது க்ஷயமாயது என்று பெரியோர் சொல்வர்.

(ஸ்ரீ - வீர.) ஹே இரகுகுலதிலகமே! எம்மாற் சித்தத்தின் இருப்பு, தாமசவாசனா ஜாலங்களால் என்பதாதி கிரந்தத்தாற் செப்பலாயது; இதனது நாசத்தை யிப்போது நீ கேட்பாயாக, விஞ்ஞவ வுணர்ந்தவரில் மேன்மையனே! எந்த தீரனை உள்ளிலும் வெளி யிலுமுண்டாம் சுகதசைகள் சமசுபாவபூர்ணனந்த ஏகரச சுவாத்மப் பிரதிஷ்டையின் சம் பந்தத்தானே சலிப்பிக்கமாட்டாவோ, சைலேந்திரனை நிசுவாசம்போல, அவனது சித்தம் நஷ்டமாயது என்று அறிந்துகொள்ளுதி.

(ச.) எந்தத்தீரனே, இனத்த வின்பதுன்பங்கள் சமமாங் காட்சியின் விறையும்ஸ்யாது. இருப்பவர்க்கு = அத்தீரர்க்கு உள்ள மழிந்ததென்பதாம். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனமிறந்தகுறி மறித்துங்கூறி மனமிறக்கும் உபாயமும் வேற றைதல்;—மாவுச்சென்பது.

(ச - அ - கை.) இதனையே விரிந்துரைத்தல்:—

மாவுச்சவமா பத்தூக்க மந்தங்கார்ப்பண் ணியமதங்கண்
மேவுற்றனபே தியாதெவரை யவர்க்கேயுள்ளம் வீந்துளதாந்
தாவுற்றெழுந்த பேதமையே மனமாமதுவே தவிர்ந்தொழியி
லோவுற்றுள்ள நாசமெனு முறுபேருண்மை யுதித்திடுமால்.

(ப-ரை.) மாவுச்சவம் = மகோற்சவம், ஆபத்து = விபத்து, ஊக்கம் = உற்சாகம், மந்தம் = மாந்தியம், கார்ப்பண்ணியம் = கிருபணபாவம், மதங்கள் = மத்தபாவங்கள், மேவுற்றன = அடைவுற்றனவாயும், பேதியாதெவரை = விரூபபாவத்தை யடையா வெவர்தமை, அவர்க்கே = அப்பெரியவர்க்கே, உள்ளம் = மனமானது, வீந்துளதாம் = இறந்துபோயதாம், தாவுற்றெழுந்த பேதமையே = தாவியெழுந்த அறியாமையே, மன மாம் = சித்தமாம், அதுவே தவிர்ந்தொழியில் = அதுதான் போயொழியில், ஓவுற்றுள்ள நாசமெனு முறுபேருண்மை யுதித்திடும் = எப்போது மனோநாசமெனுந் தக்கபெயரைப் பெறும் சத்துவ உதயமுண்டாம் அத்தியந்தம்.

(ஸ்ரீ - வீர.) பெரியகஷ்டம், மிகலோபம், குதூகலம், மதம், மந்தபாவம், மகா உற்ச வம், உற்றனவாகி யெவனை முகவைவர்ண்யம் செய்யாவோ, அவனுக்கு மனம் அழிந்துபோய தென்றறிதி. இலக்கண உக்தியின் உபசங்காரம்:—ஹே சாதுவே! இது மனோநாசமாம், ஈண்டு மனம் நஷ்டமுமாம், சித்தநாசதசையு மிதுவாம் ஜீவன் முக்தனுக்குளதாகுமிது. மனத்தன்மையைப் பரமார்த்தத்தன்மைப் பிராந்தியினலே திருசியமனன யோக்கியத்தகை மையை மூடத்தன்மையென வறிதி, எக்காலது அனகனே நசிக்குமோ, சித்தநாச அபிதான மேயாம், அக்கால் அத்தியந்தம் சுத்தசற்சுபாவத்தன்மை யுதயமாம்.

(ச.) மாவுச்சவம் = விவாகாதி; ஆபத்து = புத்திராவிபத்தி, ஊக்கம் = புத்திரோற் பத்தியாற் சனிக்குஞ் சந்தோடம், மந்தம் = அபாடவம், கார்ப்பண்ணியம் = தாரித்திரி யம், மதம், பிரசித்தம், உள்ளநாசமெனும் = சித்தநாசரூபமென்னும், உறுபேருண்மை = சத்துவமான ஞானம், உதித்திடும் = குணத்திரயான்மகமானமனதில் இராஜ தமோமயமான பேதமை எப்போது நசிக்கும் அப்போது ஞானியினது மனது சுத்தசத்துவான்மகமாமென் பது பொருள். மனத்தின் இருப்பே மூடத்தன்மையாம், வைரூப்பியம் = விகாரத் தகைமை. (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தினது உருவநாசமானது ஜீவன் முக்தர்பாலிருப்பதை யலங்கரித் துபசங்கரித்தல்:—ஆயவென்பது.

ஆயகுணமா மயித்திரியா திகள்சேர்நல்வா தனையடைந்து
தீயமறுசென் மமுமிலதாஞ் சீவன்முத்தர்க் கந்தமன
மோயமனதுக் கிதுவாகு முருவநாச மிதுகனிலே
வேயகுணங்கள் வசந்தத்தின் விரிபூங்கொத்தா மெனவிளங்கும்.

(ப - ரை.) ஆயகுணமாம் மயித்திரியாதிகள் = சம்பாதித்த மயித்திரி முதலிய கல்யாணகுணங்கள், சேர்சல் வாசனையடைந்து=சேர்ந்து உத்தமவாசனையைப் பெற்று, தீய= கொடிய, மறுசென்மமும் இலதாஞ் சீவன் முக்தருக்கு = மறுபிறப்பும் இல்லையாகும் சீவன் முக்தர்கட்கு, அந்த மனமோய = அம்மன மோய்வை யடையவே, மனதுக்கிதுவாகும் உருவநாசம்=மனத்தினுக்கு இது சரூபநாசமெனப்படும், இதுதனிலே = இதன்கண்ணே, மேயகுணங்கள் = பொருந்திய கல்யாணகுணங்கள், வசந்தத்தின் விரிபூங்கொத்தாமென விளங்கும் = வசந்தகாலத்தின்கண் மஞ்சரிகளைப்போல இலங்காநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) அவ்விவகார ஆபாசதரிசிளானே அந்தச் சத்துவவிலாசமாய்ச் சித்தநாசமாயிராநின்ற ஜீவன் முக்தசுபாவம் சித்தநாசமெனப் பெயரிடப்பெற்றது, அதேசத்துவமாகிய ஜீவன் முக்தமனமானது, மைத்திரியாதி குணங்களோடு கூடியதாகி உத்தமவாசனை யுடையதாகின்றது மறுபடி பிறப்பொன்று மற்றதாம், அனகனே = பாவமற்றவனே ! மறுபிறப்பற்ற பிரஹ்மாகாரவாசனையாலே வியாபிக்கப் பெற்றதாய், ஜீவன்முக்தமனச்சத்தை யாதுளதோ அது சத்துவப்பெயரானே விவகரிக்கப்பெறும்; வியுத்தானகாலத்திலேயே தோற்றலால் அநுபூதத்தன்மையுண்மையின், சாகாரம்போலச் சன்மாத்திரசுபாவத்தின் அடைவினும், தேகாதிபரிச்சேதந்தீண்டாமல் மனனீய மின்மையின் இம்மனோநாசமானது ஜீவன் முக்தனுக்குளதாம், இதனானே நாசமானதின் இருப்பு எவ்விலக்கணத்ததாம் ? என்னும் வினாவின் அங்கிசம் சமாகிதமாயதாம் என்றுணர்க. இதனானே மைத்திரியாதி குணங்களும் புலப்படுதலின் ஆண்டுப்பொருந்தும், வசந்தத்தில் மஞ்சரிகளேபோலக் குணசம்பத்துக்கள் இலங்கா நிற்கும்.

(ச.) அந்தச் சத்துவமே, மைத்திரியாதி குணஞ்சேர் = விசுத்த வாசனையையடைந்து, ஜீவன் முக்தனது மனமாமென்றதாயிற்று, மேயமனத்துக்கு = ஜீவன் முக்தனுக்கு, எது சத்துவமாத்திரான்மகமான மனதோ இதுவே உருவநாசமாகும், இராஜ தமோபாகங்கள் நஷ்டமாதலினும் சத்துவான்மகமாக மனோரூபமிருத்தலினு மென்க, இதுதனிலே அத்தன்மையான சத்துவான்மகமாகிய ஜீவன் முக்தனது மனதில் வசந்தத்தில் விரிபூங்கொத்தாமென மயித்திரியாதிகள் விளங்கும். சரூபம்=சமானரூபம், ஆன்மசொரூபம் மனத்தினும் வேறாக விளங்குகின்றதென்பது பொருள். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை) இரண்டாவது மனோநாசத்தைக் காட்டல் :—தத்தென்பது.

தத்துற்ற வுள்ளத்தி னருவநாசஞ் சரீரமிலா முத்தியினிட் களமாய்ச்சாரு
மெத்துற்ற நற்குணங்க டரிக்குமுண்மை வீந்துளதாய் மேனியிலா விமலவீடாய்ச்,
சுத்தத்தா யுடறீர்ந்த முத்தர்க்கெய்துந் தொடர்பாய்ச்சத் துவநாசஞ் சொரூப
மாகிச், சித்தத்தி னருவநா சப்பேர்பெற்ற திகழ்பதத்தி லொன்றுமிலைச் செப்புதற்கே.

(ப - ரை ) தத்துற்ற உள்ளத்தின் = தாவிப்பாயும் மனத்தின், அருவநாசம் = அரூபநாசமானது, சரீரமிலாமுக்தியின் = விதேகமுக்தனிடத்திலேயே, நிட்களமாய்ச்சாரும் = நிஷ்களவடிவமாகச் சேரும், மெத்துற்ற நற்குணங்கள் தரிக்கும் உண்மைவீந்துளதாய் = மிகமிகவும் மேன்மையான நல்லகுணங்களையெல்லாந் தாங்கும் சத்துவம் விலீனமாய், மேனியிலா விமலவீடாய் = தேகமின்றிய நின்மலமானபதமாய், சுத்தத்தாய் = பரமபாவனமாய், உடல்தீர்ந்த முத்தர்க்கெய்தும் தொடர்பாய் = தேகந்தீர்ந்த முத்தர்கட்குப்

பிராப்தியாஞ் சம்பந்தமாய், சத்துவநாசஞ் சொரூபமாகி = சத்துவக்ஷயவடிவமாகி, சித்தத்தின் அருவ்நாசப்பேற்பெற்ற திகழ்பதத்தில் ஒன்றுமிலைச் செப்புதற்கு = மனத்தினது அரூபநாசப் பெயரடைந்த விளங்கும்பதத்தில் உரைப்பதற்கொரு சிறிது கிடையாது.

(ஸ்ரீ - வீர) ஹே இரகுவங்கிசகேதுவே ! அரூபமெனத்தான் எம்மனோநாசம் எம்மால் உரையாடப்பெற்றதோ அது விதேகமுக்தனிடத்திலேயே நிட்களவடிவமாக இருக்கும். முழுவதுமேயான குண ஆதாரமுமாய பிராதிபாசிகமனமும் மிகலீனத்தை யடையும், விதேக முக்தவிமல பரமபவித்திரபதத்தில், விதேகமுக்த விஷயமாய் சத்துவக்ஷயாத்மகமாய் விரூபப் பெயரியதாய் உள்ள அச்சித்தநாசத்தில் ஒரு திருசியமுமே இராதாம்.

அருளினுஙியாவன் றங்கணிவையில் வேறென்றுகாணு
தருளினால் வேறுகேளா தறிந்திடாதிருக்கி லக்தே
யருளதாம் பெருமைதானு மழிந்திடாச் சுகமுமெல்லா
விருளிலாவீடுதானு மென்றனனிமையோர்க்கெல்லாம்.

என்னுஞ் சுருதியுண்மையின்.

(ச.) நிட்களமாய் = நிரங்கிச சொரூபமாய், சத்துவாம்சமும் நசித்ததாதலி னென்க, எந்தக் காரணத்தினால் மேனியிலா விமலவீடாஞ் சுத்தத்தால் = விதேக முக்தரூபமாய்ப் பரமபாவனமான பதத்தில், நற்குணங்கடரிக்கும் மயித்திரியாதி சிரேட்ட குணங்களுக் காதாரமான உண்மை = சத்துவமும், வீய்ந்துளதாம், அதனால் உடநீர்ந்த முத்தர்க்கெய்துங் தொடர்பாய் = விதேக முக்தவிஷயமாய், சத்துவநாசஞ் சொரூபமாகி சித்தத்தின் அருவநாசப் பேர்பெற்ற திகழ்பதத்தில், குணதோஷாதி ஒன்றுமில்லை. (14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறியதையே விஸ்தரித்தல்:—குணமென்பது.

குணங்குணமி லாமைசீர் சீரிலாமை குலவுதய மத்தமன மகிழ்வரூயை, யிணங்கொளிவல் லிருளிரவு பகன்முச்சந்தி யியலுண்மையில்லாமை யிடையொன்றில்லைப், புணர்ந்துளதற் பதமதுதான் மாயக்கூத்தும் புந்தியும்வென் றகன்றவர்க்குப் புகலேயாகு, மணங்கவருங் காற்றுமுத லனைத்தினுக்கு மருவிடமாய் நிற்கின்ற வானம்போல.

(ப - ரை.) குணம் குணமிலாமை=குணம் குணமின்மை, சீர் சீரிலாமை=ஸ்ரீ அஸ்ரீ, குலவு உதயம் அத்தமனம் = லோலதை உதயம் அஸ்தமயம், மகிழ்வரூயை = ஹர்ஷ அமர்ஷங்கள், இணங்கொளி வல்லிருள் இரவுபகல் = தேஜஸ்தமம், தினராத்திரிகள், முச்சந்தியியலுண்மை யில்லாமை = சந்தியை சத்தை அசத்தை, இடையொன்றில்லை = சாத்தியம் என்பன யாவுமே கிடையாது, புணர்ந்துளதற்பதமதுதான் = அடைந்துள்ள தற்பதமென்னு மதன்கண்ணே, மாயக்கூத்தும் புந்தியும் வென்றகன்றவர்க்குப் புகலேயாகும் = சம்சார ஆடம்பரத்தையும் சஞ்சலமதியையும் தாண்டின மகான்கட்கே சரணகதி ஸ்தானமது, மணங்கவரும் = நறுநாற்றங் கவர்ந்தேகும், காற்றுமுதலனைத்தினுக்கும் மருவிடமாய் நிற்கின்ற வானம்போல = வாயுமுதலிய யாவற்றிற்கும் புகலிடமா யிருக்கின்ற ஆகாயமே போலும்.

(ஸ்ரீ - வீர.) தற்பதமானது ஒன்றுமேயல்லவாம், ஆண்டுக் குணமுமில்லை அகுணமுமில்லை, ஸ்ரீயுமில்லை ஸ்ரீயினபாவமுமில்லை, சஞ்சலத்தன்மையுமில்லை, உதயமுமில்லை அஸ்தமயமுமேயில்லை, மகிழ்ச்சியும் வாட்டமும் முதலிய எவையுமேயிலையாம், எவ்வுணர்ச்சியுமேயில்லை, தேஜசுமில்லை தமசுமில்லை எதுவும் சந்தியு மிலவேயில்லை, தினமுமில்லை இராத்திரி

யில்லை திசையுமில்லை திகழ்வதொன்றில்லை, சத்தையுமில்லை யசத்தையுமில்லை சாத்தியமில்லை சீருவமுமில்லை ; யாவர்தாம், புத்தியினாலும் சம்சார ஆடம்பர ஆசாரணத்தினாலும் கரையைக் கடந்தவர்கள் ஆவர்களோ அவர்களுக்கு விசாலமாக அதனது பிரதிஷ்டையான தண்டாம், காற்றுமுதலியவற்றிற்கு விசால அம்பரம் இடமாவதேபோலும். சத்தை= பாவம், அசத்தை = அபாவம்.

(ச) குணம் = மயித்திரியாதிகள், குணமிலாமை = மனோதோடங்கள், சீர்=குணங்க ணிறைவு, சீரிலாமை = தோடங்களின் மிகுதி, உளதிலதென்னும் விவகாரங்களின்மை யின், உண்மையு மில்லாமையுமின்று, தற்பதம் = விதேகமுத்திரூபம், இடை = சதசதான் மகமான உபயரூபமு மன்றும், சத்துவாசத்துவம் விருத்தமாதலின் என்க, அது = விதேக கைவல்லியம், புகலேயாகும் = விசிராந்தித்தானமாம். (15)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விதேகமுத்தரது அரூபமனத்தைக் கூறிமுடிக்கவும் ஸ்ரீ இராக வர் விரைக்கு விரை விரைக்கு விரை விரைக்கு விரை விரைக்கு விரையாதென வினுதல்:— துன்பமென்பது.

துன்பமெலா மிறந்தறிவே வடிவாயேகச் சுழுத்தியாய்த் தாமதா சதந் தோன்றும, வின்பமிகுந் தழகாமப் பதத்தேவிண்ணி னியாக்கையாய்ப் பெரியோ ரா யிலங்குமேலோர், வன்படர்நெஞ் சறவுறைவ ரென்றலோடும் வளர்கொடி முந் திரிகைநிகர் மாயைக்கேது, முன்பயில்வித் ததற்கெதுவித் ததற் கென்வித்து மொழிந்தவதற் கெதுவித்து மொழிவாய் நாலும்.

(ப - ரை.) துன்பமெலா மிறந்தறிவே = துயரங்களியாவும் இலயமாகி சைதன் யமே, வடிவாய் = சொரூபமாய், ஏகச்சுழுத்தியாய் = ஒரே நித்திரையாய், தாமதம் இரா சதம் தோன்றுமல் = இராஜஸ்தாமதங்க ணீங்கியதாய், இன்பமிகுந்து = பேரானந்தமய மாய், அழகாம் = நித்தியமாம், அப்பதத்தே = அந்தப்பதத்தில், விண்ணினியாக்கை யாய் = ஆகாசகோசசரீரமாய், பெரியோராய் = மகான்களாய், இலங்குமேலோர்=விளங்கா நின்ற அறிஞர்கள், வன்படர் நெஞ்சற உறைவர் = உபத்திரவங்க ணிறைந்த மனமற விருப் பர்; என்றலோடும்=என வுரைத்தபோது, வளர்கொடி முந்திரிகை நிகர்மாயைக்கேதுமுன் பயில்வித்து = விஸ்தரியாநின்ற முந்திரிக்கொடிபோன்ற சம்சாரத்திற்கு யாது முன்னுள்ள பீஜம், அதற்கெது வித்து = அதற்குயாது பீஜம், அதற்கென் வித்து = அதற்குயாதுபீஜம், மொழிந்த = கூறிய, அதற்கு எதுவித்து = அதனுக்கு யாதுபீஜம், மொழிவாய் நாலும் = இந்த நான்கையும் கூறவேண்டும் ?

(ஸ்ரீ - வீர.) எப்பதம் துக்கமெல்லாம் அகன்றுள்ளதோ, வெறுமறிவாகவே விளங் குமோ, அஜடான்மகமாவேயிருந்து துயின்றானைப்போலக் கண்டிறத்தலாதிக் கிரியையற்ற தாமோ, பேரானந்தமயமாமோ, அதிகநித்தியாதி யழகுவாய்ந்ததாமோ, இராஜசுதமசு நீங்கிய தாமோ, அவ்வுயர்ந்தபதத்தில், ஆகாசகோசதனுவினையுடைய பெரியோராகிய விதேகமுக் தர் தோற்றமாத்திரமாய சித்தலேசமும் அற்றவராய், வசிப்பர்; புனராவிருத்தியின்றித் திரமா யுறைவ ரென்பதாம். பிரஹ்மத்தின் கண்ணத்தியஸ்தமாய சதுர்த்தசபுவனாகாரஜகத்தில் விரிந்த ஜீவவிவகாரக்கொடியின் விரைப்பரம்பரையவதி மூலோச்சேத உபாயமுணரும் வேட்கையால் ஸ்ரீ இராகவர் வினுதல் :—உலககானனத்தை யொன்றி வாசனைக்கொடிக ளானே எங்கும் சுழற்றி வலையெனப் பின்னிக்கொண்டு இராநின்ற விஸ்தார ஆகிருதியை

யுடைய ஜீவசம்சாரவடிவத் திராக்ஷைக் கொடியினது பீஜ மியாது பீஜமாய அதற்கும் பீஜமென்னே பிறங்கப்பெறும், அதற்குமென்னே பீஜம், அதற்கும் பீஜமென்னவாம்? விரைப் பரம்பரை நான்கன் வினாவாம்.

(ச.) ஏகசுழுத்தியாய், எப்போதுஞ் சித்தம் விலீனமாதலின் சுழுத்தியேயாய், இன்பமிருந்து = பிரஹ்மாநந்த நிறைவாய், இவ்விதமான அப்பதத்தில் = விதேகமுக்திரூபமாகிய அப்பதத்தில், விண்ணின் = ஆகாசகோசம்போல், ஆக்கையாய் = தேகமுடையராய், அதனாலே, தனுவிலதாய் = தூலசூக்குமகாரணன்மகமான தேகத்திரய மின்மையின் சூக்குமராய், வன்படர் நெஞ்சற = சத்துவரூபசித்தமின்றி, இலங்குமேலோர், உறைவர் = விசிராந்தி யடைவர், மூலம் மிருத்வீகை=திராக்ஷைக்கொடி. (16)

(ஸ்ரீ - வீர - அ -கை.) இப்போது ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரமருளல்:—என்று என்பது,

என்றிரா கவன்கேட்ப வசிட்டன்சொல்வா னெழுந்துளவா ரம்பசுபா சுபங்களென்னுந், துன்றுமுளை தந்தருளு மேனிவித்தாஞ்சொன்னபெரு மாயையெனுஞ் சூழ்கொடிக்கு, நின்றவுட லெனும்வித்துக் கெதுவித்தென்னி னீண்டபாவாபாவ நிறைந்துநாளுங், கன்றுதுய ரெனுமணிக்கு வைப்பாஞ்செப்பாங் காதலின்பின் னோடுகின்ற கவலைநெஞ்சே.

(ப - ரை.) என்று இராகவன் கேட்ப வசிட்டன் சொல்லுவான் = என இவ்வண்ணம் ஸ்ரீ இராகவர் வினவ் அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் விடையளிப்பதாவது:—எழுந்துள = கிளம்பியுள்ளதாய், ஆரம்ப சுபாசுபங்கள் என்னும் துன்றுமுளை தந்தருளுமேனி வித்தாம் = தொடங்கும் நலந்தீங்கென்னும் நெருங்கிய அங்குரம் கொடுத்தருளாநின்ற, சரீரம் பீஜமாம், சொன்ன பெருமாயையெனும்=கூறிய பெரியமாயையென்னும், சூழ்கொடிக்கு= விஸ்தரித்த லதையினுக்கு, நின்ற உடல் எனும் வித்துக்கு = காரணமாய்நின்ற சரீரம் என்னும் பீஜத்திற்கு, எதுவித்தென்னில் = யாது பீஜமென்று வினவில், நீண்ட பாவாபாவம் நிறைந்து நாளும் கன்றுதுயரெனு மணிக்குவைப்பாம் செப்பாம் காதலின் பின்னோடுகின்ற கவலைநெஞ்சே = நீட்சியடைந்தபாவ அபாவங்கள் பூரணமாய் எப்போதும் துன்புறுத்தாநின்ற துக்கமென்னும் இரத்தினத்திற்கு வைப்பிடமாகிய சிமிழாம் ஆசையின் பின்னரேயோடுகின்ற சஞ்சலமனமேயாம்,

(ஸ்ரீ - வீர) லிங்கதேகத்தில் மறைபெற்றிருக்கும், விசித்திர அநந்தகாரிய ஆரம்பகங்களாகிய நல்வினை தீவினைகளையே பெரிய அங்குரங்களாகவுடைய சரீரம்சம்சாரக்கொடிக்குப் பீஜமாமென நீ யறிந்துகொள். அதற்கென்ன பீஜம் கூறப்பெறும் என்னும் இரண்டாவது வினாவிற்கு விடையளித்தல்:—நீண்டவென்பதாதி. ஐசுவரியவிருத்தியத ஞசம் என்னுந் தசைகட்குக் கோசமும் துக்கரத்தினைப் பாணியாயும், ஆசையின்வசமாய் வேலைக்காரன் போல ஓடுவதாயுள்ள உள்ளமே இச்சரீரத்தின் பீஜமாம்.

(ச.) உன்ளே யெழுந்துவளர், அந்தர்க்கத உத்தியம புண்ணியபாவரூபமகாங்குரம்தரும் சரீரமே, மாயையெனுஞ் சூழ்கொடிக்கு வித்தாம், சம்சாரஞ்சரீரரந்நுவய வியதிரேக அநுசாரியாதலின் என்க, பாவாபாவநிறைந்து = ஜன்மமரணாதி யவஸ்தைகளுக்குக் கோசம் போலும். ஆசிரயமாய். (17)

(ஸ்ரீ - வீர - அகை.) பிறவற்றையும் தெரியக்கூறல் :—இல்லதென்பது.

(ச - அ - கை.) சித்தஞ்சரீரபீஜமென்பதை விரித்துரைத்தல்:—

இல்லதுள தெனுமிந்தத் திரணெஞ்சாலே யெல்லையறப்பிறக்குமா லிதனைத் தானே, புல்லுகின்ற கனவிலநு பவிப்பரன்றே புவித்தொழிலாங் கொடிகளே பொருந்திச்சுற்று, மல்லன்மன மெனுமரத்துக் கிரண்டுவித்தா மாவியசை வொன் றும்வா தனையழுத்தஞ், சொல்லுமிரண்டாவதா மென்று கொள்வாய் சூரியன் றொல் குலம்விளங்கத்தோன் றுந்தோன்றல்.

(ப - ரை.) இல்லதுளதெனும் = நாஸ்தியஸ்தியென்னும், இந்தத் திரள்நெஞ்சாலே = இக்கூட்டம் மனத்தினாலே, எல்லையறப்பிறக்கும் = மிகமிகவுமேயுண்டாம், இதனைத் தானே = இதுதன்னையே, புல்லுகின்ற கனவில் = அடைகின்ற சொப்பனத்தில், அநுபவிப் பர் = தெரிந்துகொள்ளுவர், அன்றே = அல்லவோ, புவித்தொழிலாங் கொடிகளே = உலகவிவகாரமாம் லதைகளே, பொருந்திச் சுற்றும் = நெருங்கிச் சூழ்ந்துகொண்டிருக்கும், அல்லல் மனமெனும் மரத்துக்கு = துன்பமயமாய சித்தமென்னும் விருக்ஷத்திற்கு, இரண்டு வித்தாம் = இருவிரையாம், ஆவிய சைவு ஒன்றும் = பிராணனது அசைவு ஒன்றும், வாதனை யழுத்தம் சொல்லுமிரண்டாவதாம் = திடபாவனை கூறிய இரண்டாவதாம், என்று கொள் வாய் = என நினது மனதிற்கொள்ளுதி, சூரியன் றொல்குலம்விளங்கத் தோன்றும் தோன் றல் = சூரியபகவானது பிராசீனவம்சம் துலங்க அவதரித்த குழந்தையே!

(ஸ்ரீ - வீர.) சித்தத்தினின் றும் இந்த நிகழ்வதும் சென்றதும் வருவதும் ஆயசரீரஜாத முண்டா மேலுமேலும், சித்தத்தினின்றும் சரீரஉற்பவத்தில கனவநுபவத்தைப் பிரமா ணித்தல்:—புல்லுகின்ற என்பதாதி. அவ்வாறேதா னிதுசயம் சொப்பனசம்பிரமங்களில் அநுபவிக்கப்பெறுகின்றது. அதற்குமென்னபீஜம் என்னும் மூன்றாவது வினாவின் உத்தரங் கூறல்:—புவியென்பதாதி. விருத்தியாங் கொடிகளை மேன்மேலுடைய சித்தமாந்தருவிற்கு இரண்டு பீஜங்கள் உளவாம், ஒன்றுபிராணனது இனியசலனமாம், மற்றொன்று திடவாசனை யாம்.

(ச) இல்லதுளதேனும் = இராததன்றி இருப்பதேனும், இந்தத்தனு = இச்சரீரம், நெஞ்சாலே, எல்லையற = அவயவசமட்டிரூபமாய், பிறக்கும், இதனை = இவ்வர்த்தசொரு பத்தை, புல்லுகின்ற கனவிற்றானே யநுபவிப்பர், சித்தஞ்சரீரபரிகற்பனைக் கேது வென்பது சொப்பனங்களிற் சுவாநுபவசித்தமென்பது பொருள். புவித்தொழிலாம் = சத்துவாதி குண பரிணமரூபங்கள் என்னும் கோடுகள் = சாகைகளே, பொருந்திநிற்கும், தரித்திருக் கின்ற. (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆதியதை விரித்துரைத்தல் :—உண்டாகியென்பது.

(ச - அ - கை.) பிராணசலனமும் வாசனையுஞ் சித்தத்துக்குப் பீஜமெனப்பட்டது அவற்றில் பிராணசலனத்திற்குப் பீஜத்தன்மையுரைத்தல் :—

உண்டாகி யெவ்விடத்து முற்றபோத முயிரசைவா லுணர்வுறுமப் போதந் தன்னை, மண்டாமற் றடுக்கைபெரு நன்மையாகும் வளர்போதங் காண்பவற்றை மருவுமாலாற், றண்டாத காண்பவையே மனத்துக்கென்றுந் தவிராத துயாமத் தனிப்போதந்தான், மிண்டாத சுழுத்தியிற்போதம்போனிற்கில் வீடதுவே றது விமல பதம்வேறில்லை.

(ப - ரை.) உண்டாகி யெவ்விடத்தும் உற்றபோதம் = இருப்பதா யெங்குமுள்ள உணர்வானது, உயிரசைவால் = பிராணனது சலனத்தானே, உணர்வுறும் = போதிக்கப்

பெறும், அப்போதந்தன்னை = அவ்வுணர்ச்சியை, மண்டாமற் றடுக்கை பெருநன்மை யாகும் = ஆகாரமாயெழாமல் தடுத்தலே பெரிய நலத்தைப் பயப்பதாம், வளர்போதங் காண்பவற்றை மருவுமாலால் = வளர்கின்ற வுணர்வு திருசியங்களைப் பொருந்தும் மயக்கத்தால், தண்டாத காண்பவையே மனத்துக்கென்றும் தவிராததுயராம் = தடையில்லாமற் காணப்பெற்றவையே சித்தத்திற்கு எப்போதும் அகலாத அல்கிலாத்துக்கமாம், அத்தனிப் போதந்தான் = அவ்வொப்பற்ற வுணர்வானது, மிண்டாத சுழுத்தியிற் போதம்போல் நிற்கில் = கேவலமான துயிலிற் சம்வித்தேபோன்றிருக்குமாயின், வீடதுபேறது விமல பதம் வேறில்லை = அதுவே மோக்ஷமாம் அதுவே பிரயோஜனமாம் அமலபதமு மதுவே அன்னியமில்லை.

(ஸ்ரீ - வீர.) எப்போது இனிதசையாதிற்றமோ பிராணன் நாடியைத் தீண்டிக் கிளம்பலால் அப்போது சித்துவி காரப்பிராயமாய்ச் சித்தம்விரைந்து சிறந்துண்டாம், எங்கு மிருப்பதாயுள்ள வுணர்வானது பிராணனது அசைவாலுணர்த்தப் பெறுகின்றது. சம்வித்தினது சம்ரோதனத்தில் மேலான மேன்மை யிருக்கின்றதென்று ஹே இராகவ நீ தெரிந்துகொள்ளல் வேண்டும்; சம்ரோதனம் = விக்ஷிப்தத்தன்மையின்மை, மேன்மை = மோக்ஷம், கலக்க காரணமாய பிராணஸ்பந்தத்தின் பிராணாய ம அப்பியாசத்தாலே நாசம் யாண்டு ஆண்டே கலக்கமுண்டாக மாட்டாதாம் யாதின்பொருட்டு சம்ரோதம் வேண்டும் சம்வித்திற்குச் சித்தாகாரமாக உற்பவமாவதில் யாது தோஷம் எனில் கூறல்:—வளர் என்பதாதி, விரைவில் உணர்வானது நன்றுதயமாகவே பாகியவிடயத்தை ஆதரவாமிராகத்தால் நாடியடையும், அடையவே அதனுபபோக அறிவால் அநந்த துக்கங்களுண்டாஞ் சித்தத்திற்கு; எப்போது தான் பாகிய விடயத்தில் நன்றாகத் துயின்றதுபோன்றுமோ நனவிற் சுழுத்தியிலேயாமோ ஆவதோடும் உள்ளிருக்கும் ஆன்மாவின் உணர்வின்பொருட்டு நன்னிலைபெற்று முயலலாகுமோ சம்வித்து, அப்போது அடையவேண்டியது அடைந்ததாகும், அதுவே அமலமாய பதமாம்.

(ச) பிராணனெப்போது நூறுமொன்று மிருதயத்தினது நாடிகளென்னுஞ் சுருதியின் எந்த நாடிகள் மனதைத் தரிப்பனவாம் அவைகளிற் செல்லு முயற்சியுள்ளதாய்ச் சலிக்குமோ அப்போது சித்தம் சீக்கிரம் விருத்தி ஞானமிகுதியாய்ச் சனிக்குமென்னும் ஓர் அரிய சுலோகார்த்தம் இவ்விடத்தே விட்டிருக்கின்றது. எவ்விடத்து முண்டாகி யுற்றபோதமுயிர்சைவால், உணர்வறும் = கலக்கமுறும் ஆதலின், அப்போதந்தன்னை, மண்டாமல் = பகிர்முகமாகாமல், தடுக்கையே, பரமசிரேயசாம், வளர்போதம், மாலால் கலக்கமுற்றதேயாய்ச் சீக்கிரம், காண்பவற்றை மருவும், அதன்பின் தண்டாத காண்பவையே, திருசியாநுசந்தானத்தினால், மனத்துக்கென்றுந் தவிராததுயராம், எப்போதாவது தனிப்போதந்தான், மிண்டாத = மீட்டநுசந்தானமற, சுழுத்தியிற் போதம்போல், சொரூபமாகியே, நிற்கில், விசிரமிக்குமப்போது, வீடது, அடையத்தகுந்த, அதுவிமலபதம், பேறுமென்பதாயிற்று. (19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அறிவொடுங்கிற் பிறப்பறும், மனத்தானே சமுசாரம் ஆம் மனோலயப்பொருட்டே வாயுநிரோதஞ் செய்தலாமெனல்:—ஆதலால் என்பது.

**ஆதலா லுயிர்சைவால் வாதனைப்பா லழுந்தத்தா லறிவைவிரி வாக்காயென்னி, லோதுபிறப் பறும்றின் விரிவேயுள்ள முள்ளத்தா லிவ்வனந்த வுயிர்கள் வாழ்வாஞ், சேதனயோ கிகளெல்லாம் பிராணாயாமந் தியானமருந் தூக்கத்தின் றிறங்களாலே, பேதமனை யொடுங்குவது பொருட்டாயன்றோ பிராணவா யுவை நிறுத்திப் பிடிக்கின்றாரே.**

(ப - ரை.) ஆதலால் = ஆகையினால், உயிர்சைவால் = பிராணனது சலனத்தினாலும், வாதனைப்பால் அழுத்தத்தால் = வாசனையினிடத்தே யூற்ற முண்மையினாலும், அறிவை விரிவாக்காயென்னில் = உணர்வை யுப்பும்படி செய்யாயென்னின், ஒதுபிறப்பறும் = கூறும் ஜனனம் நீங்கும், அறிவின் விரிவே யுள்ளம் = சம்வித்தின் பொருமலே மனமாம், உள்ளத்தா லிவ்வநந்த வுயிர்கள் வாழ்வாம் = அதனால் இவையாவுமே விரிந்தவாம், சேதன யோகிகள் எல்லாம் = அறிவையுடைய யோகிகள் யாவருமே, பிராணுயாமந்தியான மருந்தாகத்தின் றிறங்களாலே = பிராணத்தடை தியானம் ஔஷதம் யூகம் முதலிய தமைகளாலே, பேதமன மொடுங்குவது பொருட்டாயன்றோ = வேற்றுமை மிகுந்த சித்தமொடுங்கிச் சாந்தியடையவல்லவோ, பிராணவாயுவை நிறுத்திப் பிடிக்கின்றாரே = வாயுவின் சலனத்தை நிரோதித்துப் பந்திக்கின்றார்.

(ஸ்ரீ - வீர.) ஆகையினால், பிராணனுக்கு ஏற்பட்ட நல்லசைவுகளாலும், வாசனைகளின் சோதனங்களாலும் அதாவது இராக அதிசயத்தானே யுற்பாவனங்களாலும், உணர்வின் உச்சூனயை மூடர்கள் எவ்வாறு செய்கின்றாரோ அவ்வாறு செய்யாயேல், நீ யஜனேயாவாய்; அல்லது, பரியீண்டுவர்ஜனப்பொருளாம், பிராணன்களது ஸ்பந்தமின்மையினாலும், வாசனைகளினது நீக்கத்தாலும், சம்வித்தை உச்சூனதையாலாய மனத்தன்மை யடைவு இன்மையைச் செய்வாயேல், ஆயின் நீயஜன் = ஜன்மாதி சர்வவிக்கிரியா சூனியனாகிய முக்தனேயாவாய் என்பதாம். சம்வித்தின் உச்சூனதையே சித்தமென்றறிதி, அதனால், இந்த விஸ்தாரமாய அநர்த்தஜாலம் கண்டிதங்களாய்ச் சர்ச்சரிதங்களாய ஜனஜீவகம் உண்டாயது. பிராணுயாமங்களாலும் தியானங்களாலும் யோகசாஸ்திரங்களிற்கூறிய சற்குருசம்பிரதாயாதி சித்தயுக்தி கற்பிதங்களாலும் அதனுபாய அப்பியாசப்பிரயோகங்களாலும் யோகிகள் சித்த சாந்தியின்பொருட்டுப் பிராணரோதனத்தைச் செய்கின்றார்கள்.

(ச.) ஆதலால் = முற்கூறிய வேதுவினால், உயிரசைவால் = பிராணசலனங்களாலும், வாதனைப்பாலழுத்தத்தால் = வாதனைகளங்கங்களாலும், அறிவை, விரிவு = திருசியத்தையுட்கொள்ளுந்தூலமாக, ஆக்காயெனில், ஓதுபிறப்பறும், அப்போது நீ ஜன்மாதி ரகிதனாவாயென்பதாம், வாழ்வாம் = அனர்த்தஜால சமுசாரத்தில் வாழ்வதாம், ஊகத்தின் றிறங்களால் = யோகசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட மகாமுத்திராதிகளால். மூ:—சம்வித்தின் உச்சூனதை = விக்ஷேபத்தையே, சித்தமாம், அச்சித்தத்தானே இந்த ஆலூனவிசீர்ண ஜனஜீவகம் ஆம், ஆலூனம் = எப்பக்கத்தினும் பேதிக்கப்பட்டு, விசீர்ணம் = க்ஷயம், அடைவுற்றன ஜனங்களின் பிராணன்கள் எதனால், அத்தகைய இவ்வநர்த்தஜாலம் சம்சாரரூபம், ஆத்தம் = விஸ்தரிக்கப் பெற்றதாம், என்னு மிதனை உள்ளத்தால் இவ்வனந்தவுயிர்கள் வாழ்வாம் என்பதன் பொருளாகக்கொள்க. (20)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிராணசம்ரோதனத்தையே பலாபேதரூபத்தானே புகழ்ந்து, சித்தத்தின் பீஜாந்தரத்தை வர்ணிக்கும்பொருட்டுப் பதிஞ்ஞை செய்தல்:—உள்ளத்தையென்பது.

உள்ளத்தை யொடுங்குவிக்குஞ் சமத்துவத்துக் குயர்ந்தகா ரணமாகுஞ் சுக
...ண்டாக்கு நள்ளுற்ற வறிவையெழ வொட்டாதாக்கு நல்லுயிரின் றடை
...ன்று நல்லோர் சொல்வர், தெள்ளியபல் பொருளறிவை விளக்குவித்துச்
...தவா தனையாலே செனிப்பதாகி, விள்ளக்கண் டனுபவிப்ப தாநெஞ்சிக்கு
...டா முற்பத்தி விளம்பக் கேட்பாய்.

ரு௯. மூல யெ(ப- சேர் வா மேலிரட

(ப - ரை.) உள்ளத்தை யொடுங்குவிக்கும் = சித்தத்தை யொடுங்கும்படியாகச்செய்யும், சமத்துவத்துக்கு உயர்ந்த காரணமாகும் = சாமியத்தையடைய மேலான காரணமாகும், சுகமுண்டாக்கும் = இன்பத்தை விளைவிக்கும், நன்ளுற்றவறிவை யெழவொட்டாதாக்கும் = மிகநாட்டத்தோடுகூடிய சம்வித்தை எழுந்திராதபடி யியற்றும், நல்லுயிரின்றடையென்று நல்லோர் சொல்வர் = நல்ல பிராணனினது சம்ரோதனமென்று சாதுக்களோதுவர், தெள்ளிய பல்பொருளறிவை விளக்குவித்து = தெளிந்த பல வஸ்துக்களின் உணர்வை யிலக்குவித்து, சேர்ந்த வாதனையாலே = உற்றவாசனையினுலே, செனிப்பதாகி = உதிப்பதாகி, விள்ளக்கண்டனுபவிப்பதா னெஞ்சுக்கு = வெட்டவெளியாகப் பார்த்து அநுபவிப்பதான மனத்துக்கு, மேலிரண்டா முற்பத்தி விளம்பக்கேட்பாய் = மேல்வேறு உற்பத்தியைக் கூறக்கேட்குதி.

(ஸ்ரீ - வீர.) சித்த உபசாந்திபலந்தருவதும் சமபாவமெய்தப் பரமகாரணமும், சுபந்தருவதும், சம்வித்திற்குச் சொஸ்தந்தருவதும், பிராணசம்ரோதனமெனப் பெரியோருணர்வர். ஞானவான்களால் நன்ருக வுபதேசிக்கப்பெற்றதும், சுயம் அநுபவித்ததும், வாசனைகளினுலே வாழ்நாளெல்லாம் ஜீவிப்பதும், ஆகிய வேறு சித்தத்தின் உற்பத்தியைக் கூறக்கேட்குதி இராகவ.

(ச.) முன்பு பிராணசலன கற்பிதமான சித்தத்தினது உற்பத்தி சொல்லப்பட்டது; இப்போது வாதனு கற்பிதமான இரண்டாவதாகிய சித்தத்தினது உற்பத்தியைக் கேட்பாய். பிராணசம்ரோதனமே சித்தஉபசாந்தி பலந்தருவது, சாமிய அவஸ்தையின் காரணமாவது சம்வித்தின் ஸ்வாஸ்திய மாவது, என்றறிவர். (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆண்டாதியில் வாசனையின் சொரூபத்தைப் பகரல்:—திடமென்பது.

திடமான பாவனையான் முன்பினெண்ணந் தீர்ந்துபதார்த் தந்தனைச்சேர் வுறக்கைக்கொள்கை, மடமான வாதனையாங் கடுவேகத்தால் வல்லையிற்ருனே யொன்றை மதித்துநாடி, யுடனேயவ் வுருவாய்வேற் றெண்ணமெல்லா மொழிந்திடுமிவ் வாதனையின் வசத்திலோடித், தொடர்பான புருடனுமாங் கதன் மெய்யாகித் தோன்றுபொரு ணன்றென்றே துவண்டுமாலாம்.

(ப - ரை.) திடமான பாவனையால் = திடபாவனையினுலே, முன்பின்னெண்ணந் தீர்ந்து = முன்பின் ஆராய்ச்சியின்றி, பதார்த்தந்தனைச் சேர்வுறக் கைக்கொள்கை = பொருளை யடையும்படி கொள்ளுதலே, மடமான வாதனையாம் = அறியாமை மிகுந்த வாசனையாம், கடுவேகத்தால் வல்லையிற்ருனே = மிகுந்த வேகத்தால் விரைவிற்ருனே, ஒன்றை மதித்துநாடி = ஒருபொருளைத் துணிந்துநாடி, உடனே யவ்வுருவாய் = அக்கணமே யந்தவடிவமாய், வேற்றெண்ணமெல்லாம் = இதரநினைவுகளையெல்லாம், ஒழிந்திடும் = அகற்றிடும், இவ்வாதனையின் வசத்திலோடி = இந்த வாதனைவயமாகத்தானே யோட்டமெடுத்து, தொடர்பான புருடனும் = சம்பந்தித்த புருஷனும், ஆங்கு அதன் மெய் ஆகி = ஆண் டதனது வடிவமேயாகி, தோன்றுபொருள் நன்றென்றே = பிரத்தியாகப்பட்டவத்து நல்லதென்றே, துவண்டுமாலாம் = துவட்சியை யடைந்து மோகமடையும்.

(ஸ்ரீ - வீர.) தேகாதி பதார்த்தங்களின் யான் என தென்பதாதிரூப சமஸ்காரவடிவமாய பழையதிடபாவனையினலே எப்போது பதார்த்தத்தின் ஆதானமாமோ, அது பூர்வாபர விசாரணத்தைவிட்டிருக்குமாயின், அப்போது அது வாசனையென நன்குரைக்கப்பெறும், வாசயதி = வாசிப்பிக்கின்றது, தேகாதிபாவத்தானே தன்னைப் பாவிப்பிக்கின்றது, என்னும் விற்பத்தியானே வாசனையெனப் பிரகீர்த்திக்கப்பெறும், பெறவே பூர்வாபரவிசாரவான்களாகிய ஜீவன் முத்தர்கட்குத் தேகாதி சமஸ்காரம் வாசனையாகாதாம், விரோதி விசாரம் பற்றுதலானே, அவர்களைத் தேகாதிபாவத்தானே வாசிப்பான் முடியாமையின் என்பது கருத்தாம். அஞ்ஞ ஆன்மாவையோ விரோதமின்மையின் தீவிரமிகுவேகப்பாவனைத் தார்ட்டியத்தானே தேகாதிபாவத்தில் வாசிப்பான் முடியவேகூடும் என்னுங் கருத்தானுரைத்தல்:—கடுவென்பதாதி. ஹே மகாபாகுவே! தன்னலே எதனைத் தீவிரசம்வேகத்தினலே பாவித்தவன் ஆவனே அவன் விரைவில் இதரசம்சிருதிகளையெல்லா மொழிந்து அதுவேயாவன். அது தேகாதிகளில் ஆன்மத்தன்மையைப்போலப் பாகிய அருத்தத்தில் சத்தையையும் காட்டுகின்றது எனல்:—வாசனையினலே பரவசப்படுத்தப்பட்ட புருடன் அதே வடிவினனகி, எதனைக் காண்கின்றனனே, அதனையே, இவ்வது சத்துவத்து வென்று மிகுமோகத்தையே யடைகின்ருன், வசதியென வஸ்துவாம், அது தற்சத்தையானே வாசிப்பிக்கின்றதென்று வாசனையாம் என்னும் உற்பத்தியானது ஆண்டும் சம்பவிக்கின்றது என்பது கருத்து.

(ச.) முன் = நியதமாய் முன்வருவது காரணம், பின் = நியதமாய்ப்பின் வருவது காரியம், முன்பின்னென்னும் இவைகளினது, எண்ணந்தீர்ந்து = இதனது காரணமியாது காரியம் யாதென்று விசாரமின்றியே, பதார்த்தந்தனைச் சேர்வுறக் கைக்கொள்கை = பதார்த்தத்தினது உபாதானம், எவ்விடத்து எக்காரணத்தினலே, திடமான பாவனையால், தீர்க்ககால நிரந்தரபரிசீலனையாலேயாம், அதனல், அத்திடபாவனையே வாதனையாம் இப்போது உதித்தவனுக்கன்றிச் சுழுத்தியினின்றெழுந்தவனுக்காவது சீக்கிரம் பிராவிர்த்தியில் ஏதுவாசனையென்பது பொருள். இஃதன்றி வெகுகாலப்பழக்கத்தான், முன்பின்னெண்ணஞ் செவ்வையாகத்தீர்ந்து பழகப்பட்ட சஜாதீயப்பதார்த்தக்கிரகணம் எந்தச் சமஸ்காரத்தாலாம் அது வாசனையெனப்படும் சமஸ்காரம் வாதனையென்பது பொருள். ஒன்றை = ஒருபொருளை, கடுவேகத்தால் = திடாப்பியாசத்தினல், தானே = சித்தத்தால், மதித்து நாடி வாசிக்கப்பட்டதாய், மதித்து நாடினபுருடன் வேறெண்ணமெல்லா மொழித்திடும் = மற்றொருபொருளைச் சிந்தியாதவனய், வல்லையிலுடனே யவ்வுருவாய், அப்பொருளேயாவன் என்றதாயிற்று. வாதனையின் வசத்திலோடி = வாதனவிவசீகிருதனகி, புருடன், தோன்றுபொருள் = எப்பொருளைப் பாவிக்கிருனே அப்பொருளையே, நன்றென்று பிரமாணிகமான பொருளென்று, விமோகிப்பன் என்றதாயிற்று. (22)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாதனையினலேயே தன்னை மறந்து மயங்குகின்ருரென்றும், மனமென்ப தின்னதென்றும் அதனல் உண்டாவ தின்னதென்றுங்கூறல்:—வாதனையென்பது.

வாதனையின் வேகத்தின் விவசத்தாற்றன் வடிவினைவிட் டனைத்தினையு மயக்கமாகத், திதமைபுந் தியிற்காணு மதவசத்தாற் றியங்குதல்போ லிம்மனத்தைத் தெரியக்கூறி, லேதமுறு காட்சியெது தானல்லாத தியானெனும்பா வனையேது பொருளல்லாத, தோதுபொரு ளெனுங்கருத்தே ததுவேசித்த முறுபிறவி சராமரண முண்டாமித்தால்.

(ப - ரை.) வாதனையின் வேகத்தின் விவசத்தால் = வாசனவேக பரவசத்தால், தன் வடிவினைவிட் டனைத்தினையும் = தனது வடிவத்தைமறந்து சர்வத்தையும், மயக்கமாகத் தீதமைபுந்தியிற்காணும் = பிராந்தியாகக் கெட்டபுத்தியின்கட் காண்பன், மதவசத்தால் தியங்குதல்போல் = மதவயத்தானே மயங்கிக் கண்டதெல்லாங் காண்பதேபோல, இம் மனத்தைத் தெரியக்கூறில் = இம்மனதின் வடிவத்தை நன்ருக அறிந்துகொள்ள உரைக் கில், ஏதமுறுகாட்சியெது = குற்றமுற்ற தரிசனமுடையதெது, தானல்லாததியானெனும் பாவனையேது = அனன்மாவின்கண்ணே ஆன்மாவென்னும் பாவனையேது, பொருளல்லாத தோது பொருளெனும் கருத்தேது = அவஸ்துவிலே வஸ்துவென்னும் பாவனையேது, அதுவே சித்தம் = அதுவேமனமாம், உறுபிறவிசரை மரணமுண்டாமித்தால் = வராநின்ற ஜனனஜரா மரணங்கள் யாவும் இதனுனே யுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) வாசனவேக பரவசத்தானே வாசனேபஸ்தாபித்மாய வுலகரூபமியாவற் றையும் சொரூபத்தைப் பெரிதும் விடுகின்றவனுகிக் கெட்ட திருஷ்டியுடையவன் மயலாற் காண்கின்ருன், மதவசத்தாற் போலும். அதுவே சித்திற்குச் சித்தபாவத்தானே வாச னைப் பிரயுக்தமாம் உற்பத்தியென்னுங் கருத்தாற்கூறல்:—இம்மனத்தை யென்பதாதி. ஏத னுல் அசம்யக்குத் தரிசனமாமோ, ஆத்மாவல்லாததில் ஆன்மபாவனமாமோ, ஏதனுல் வஸ்துவல்லாததன்கண்ணே வஸ்துவென்னும் மதியாமோ, அதுவே சித்தமெனவறிதி இராகவ! திடாப்பியாச பதார்த்த ஏகவாசனையால் அதிசஞ்சலமாம், சித்தமானது ஜன்மஜரா மரண காரணமாகப் பெரிதுளதாம்.

(ச.) தீதுறுபுந்தி = துர்வாசனையால் நிந்திக்கப்பட்ட திருஷ்டியையுடைய புருடன், வாதனையின் வேகத்தின் விவசத்தால், தன்வடிவினை = அவ்விடத்திற் சித்தமான பொருளி னது சொரூபத்தை, விட்டு, கிரகியானென்பது பொருள். மதவசத்தால் = மதப்ரவசத்தி னுல், தியங்குதல்போல், அனைத்தினையும் = பொருண் முழுதையும், மயக்கமாக = வேறுருவ மாகவே, காணும் = பார்ப்பன் என்றதாயிற்று, ஏதென்பது மூன்றும் அடைமொழி ஏதும் பொருளில் வந்தது. ஏதமுறுகாட்சி = அசமியக் தரிசனத்திலும், தானல்லாததியா னெனும்பாவனை, அநான்மாவில் ஆன்மபாவனையிலும், பொருளல்லாத தோதுபொரு ளெனுங் கருத்து = அவஸ்துவில் வஸ்துத்துவ கற்பனையிலும், ஏதுகாரணம், அதுவே, அந்நிதாக்ஞான நிமித்தமான சித்தமென்பது பொருள். (23)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மிகப் பழக்கவயத்தானே சித்தசஞ்சலமாம், பாவனைநீங்கிற் சித் தமு மெழாதாதலின் வாதனையை யொழிக்கவேண்டுமெனல்:—மெத்துறுவென்றது.

மெத்துறுவன் பரிசயத்தாற் பதார்த்தந்தன்னின் மேவுமொரு பாவனையான் மிகச்சலிக்குஞ், சித்தமுள தாற்பிறப்பா திகளுமுண்டாந் தீர்வதுகொள்வதுவடி வாந் திரளிலொன்று, மித்தனையும் பாவியா தனைத்துநீங்கி யெப்போது நின்றதப் போதெழாதுசித்த, மொத்துளவா தனையொழிவா னினைவுதீரி லுயர்ந்தவுப சாந்தி தரு முளமாய்வுண்டாம்.

(ப - ரை.) மெத்துறுவன் பரிசயத்தால் = மிகமிகவு முண்டாம் பழக்கத்தினுல், பதார்த்தந்தன்னில் = பொருள்களில், மேவுமொரு பாவனையால் = பொருந்தாநின்ற மிக்க பாவனையால், மிகச் சலிக்குஞ்சித்தம் = மிகவுஞ் சஞ்சலிக்கும் மனமானதுண்டாம், உளதால் = உளதாகவே, பிறப்பாதிகளுமுண்டாம் = ஜன்மஜராமரணதியுமாம், தீர்வது கொள்வது வடிவாம் திரளில் = ஹேயோபாதேயரூபக்கூட்டத்துள், ஒன்று மித்தனையும்

பாவியாதனைத்து நீங்கி = ஒன்றையும் அணுவளவேனும் நினையாமல் யாவற்றையும் நீங்கி, எப்போது நின்றது அப்போது எழாதுசித்தம் = எக்கால் நிலைத்ததோ அக்கால் உதியாது மனம், ஒத்துள வாதனை யொழிவால் நினைவுதீரில் = சேர்ந்துள்ள வாசனையின் நீக்கத்தால் எண்ணமோயில், உயர்ந்த உபசாந்திதரும் உளமாய்வுண்டாம் = மேலான வுபசமத்தைத் தரும் மனோநாசமுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) முன்னுரை முன்னுரைத்தாம், இதனானே வாசனாநாசத்தானே சித்தத்திற்கு ஸ்வாஸ்த்யவடிவ முக்தியாமெனல்:—தீர்வதென்பதாதி. தள்ளல் கொள்ளல் வடிவமொன்றேனும் எப்போது இருப்பை யடைவதிலதாமோ சகலத்தையும் விட்டிருப்பதாமோ அப்போது சித்தமானது ஜனியாதாம். அவாசனைத்தன்மையானே சந்ததம் எப்போது மனம் மனனியாதோ, அப்போது பரமஉபசாந்தியைக் கொடுக்கும்படியான அமனத் தன்மையானதுண்டாம்.

(ச.) பதார்த்தந்தன்னில் மேவுமொரு பாவனையால், திடாப்பியாசத்தோடு அதிசஞ்சலமுள்ளசித்தஞ் சன்மாதிகாரணமாகச் சநிக்கின்றதென்றதாயிற்று. தீர்வது கொள்வது வடிவாந்திரளில் = ஏயோபாதேயரூபமுள்ள பொருளில், இத்தனையும், எப்போது பாவியாது, மற்றென்னெனில்? அனைத்துநீங்கி, வெறிது, நின்றதப்போது சித்தமெழாது, நினைவு தீரில் = மனது சங்கற்பமறில். (24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஒருநினைவு மெழாதேலாயின் மனமெங்ஙனுண்டாம், இவ்வளவே மனமெனல், வெட்டவெளியானவர்க்கு மனோதயமாகாதாமெனல்:—சகவென்பது.

சகப்பொருளி லோரிடத்தோர் நினைவுமின்றேற் றனியிதய சூனியவிண் டன்னிலுள்ள, நிகழ்ச்சியுறத் தோன்றுவதெப் படியேவள்ளா நெஞ்சுக்கிம் மட்டுருவமெனநினைப்பே, னுகப்புறுமின் பத்தாலும் பொருண்மெய்யா லு முள்ளூறுபல் பொருணினைவே யுளத்தின்மேனி, மிகப்படர்காண் பவைதொழிற்கா காதென் றெண் ணும் விண்ணினுநொய் யவர்க்கெங்ஙன் வினையுமுள்ளம்.

(ப - ரை.) சகப்பொருளில் = உலகவத்துவில், ஓரிடத்து = எவ்விடத்தும், ஓர் நினைவும் இன்றேல் = ஓரெண்ணமுமிலதாயின், தனியிதய சூனியவிண்டன்னில் உள்ளம் = கேவலசூனிய இருதய அம்பரத்தில் இருக்குமனம், நிகழ்ச்சியுறத் தோன்றுவதெப் படியேவள்ளால் = தலைவள்ளாலாகிய இராகவனே சலனமுறுமாறு உதயமாவது எங்ஙனந்தான்? நெஞ்சுக்கிம்மட்டுருவமென நினைப்பேன் = மனத்திற்கு இவ்வளவுமாத்திரமே வடிவமென்று எண்ணுகின்றேம், உகப்புறு மின்பத்தாலும் பொருண்மெய்யாலும் = மகிழ்வுறு மிரசத்தாலும் வஸ்துவாஸ்தவ்யத்தாலும், உள்ளூறு பல்பொருணினைவே யுளத்தின் மேனி = உள்ளேயுண்டாம் பலவத்துகளின் பாவனையே மனத்தினது திருமேனியாம், மிகப்படர்காண்பவை தொழிற்காகாதென்றெண்ணும் விண்ணினும் நொய்யவர்க்கு எங்ஙன் வினையுமுள்ளம் = மிகவிரியும் திரிசியங்கள் ஒன்றிற்கும் போக்கியமாகாவென நினையும், வியோமத்தினும் சூக்குமமானவர்க்கு எவ்வண்ண முதயமாம் மனம்.

(ஸ்ரீ - வீர.) உலகவத்துவில் எவ்விடத்திலுமே எப்பாவமுமே பாவிக்கப்படாதாயின் அக்கால் சூனியமாய ஹிருதயாம்பரத்தில் எங்ஙனஞ் சித்தமினிதாயுண்டாம்; ஹே இராகவ! இத்துணைமாத்திரமதேரூபஞ் சித்தத்திற்கு என எண்ணுகின்றேம், வஸ்துத்தன்மையினும், இராகத்தினும், உள்ளே வஸ்துக்களின் எப்பாவனை யுண்டாகின்றதோ. திருசியமானது யுக்திகளினாலே சமர்த்தனஞ்செய்தற்கு அயோக்கியமாம் ஆகையினாலே சித்தனஞ்

செய்தற்கு ஒரு சிறிதும் தகாதாம், ஆன்மசொரூபத்தையே எப்போதும் அநுசந்தானஞ் செய்துகொண்டிருக்கும் ஆகாசகோசசொச்சனுக்குச் சித்தோதயம் எங்ஙனமுண்டாம்.

(ச.) சகத்திற் பொருளிலாவது, ஓரிடத்தும் ஓர் நினைவுமின்றேல், அப்போது நிர் வாசனையாதலின் சூனியமான இதயாம்பரத்தில் எப்படிச் சித்தஞ் சனிக்குமென்றதாயிற்று; பல்பொருள் = பதார்த்தத்தினது, உன் = அந்தக்கரணத்தில், இன்பத்தாலும் = ஆதரத் தாலும், பொருண்மையாலும் = பொருட்சொரூபத்தாலும், உறுநினைவேது, அம்மட்டே, நெஞ்சக்குருவமென நினைப்பேன், மிகப்படர் சங்கற்பங்களுக்கு விடயமான, காண்பவை = திருசியத்தை, சிறிதுங் காணேனென்றும், இயல்பாய்ப்பாவியாதவனாய், அதனாலே, விண்ணி னும் = ஆகாசகோசம்போலும், நொய்யவர்க்குள்ள மெங்ஙன் விளையும். (25)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது அசித்தத்தன்மையைக் கூறிச் சீவன் முத்தரிடத்தே யஃதிருக்குந் தன்மையை யுரைத்தல்:—அபாவமேயென்பது.

அபாவமே பற்றலபா வம்பாவித்த லாய்ந்துண்மைப் பொருள்காண்டன் மன மாய்வென்பர், சுபாவமா மனத்தையுமுள் ளகற்றிச்சீதச் சுதைபோலு மிவ்விதய நடக்குமென்னிற், றவாததொழி லுற்றுலு மந்தச்சித்தந் தன்வடிவி லாததெனச் சாற்றுங்கண்டாய், குவான்மறுசன் மந்தருவா தனைதுன்றோர் குலாலவட்டம் போற்றிரிவர் குறைவின் முத்தர்.

(ப-ரை.) அபாவமேபற்றல் அபாவம் பாவித்தல் = அபாவத்தையே பிடித்து அபாவத் தையே பாவனஞ்செய்தல், ஆய்ந்துண்மைப் பொருள்காண்டல் = ஆராய்ந்து சற்பொரு ளைத் தரிசித்தல், மனமாய் வென்பர் = மனோநாசமென மொழிவர், சுபாவமாமனத்தையும் உள்ளகற்றி = இயற்கையாய் யாவற்றையும் உள்ளேநீக்கி, சீதச்சுதைபோலும் = சீதளாமிர் தம்போல, இவ்விதய நடக்குமென்னில் = இம்மனமானது விவகரிக்குமாயின், தவாத தொழிலுற்றுலும் = இடைவிடாமல் விருத்திகளோடு கூடியபோதினும், அந்தச்சித்தம் = அம்மனமானது, தன்வடிவிலாததெனச் சாற்றுங்கண்டாய் = தனதுருவமில்லாததாமெனக் கூறப்பெறுமென் றுணர்தி, குவால் மறுசன்மந்தரு வாதனைதுன்றோர் = குவதலராய புனர்ச்சனன மீவதாகிய வாதனை யடையாதோர், குலாலவட்டம்போல் திரிவர் குறைவில் முத்தர் = குயவனது சக்கரம்போலச் சஞ்சரிப்பர் குறைவில்லாத சீவன்முத்தர்.

(ஸ்ரீ - வீர.) அபாவனமென்று சொல்லப்பெற்ற பாகிய அர்த்த அஸ்மரணமென்னும் நிரோதயோகத்தைப்பற்றி, சர்வதிருசிய மார்ஜனவடிவ அபாவத்தினது எச் சம்பாதகமாகிய பரமார்த்த ஆத்மதரிசன ஆவிர்ப்பூத சொரூபமுளதோ, வஸ்துவிலுள்ளபடியாய தரிசனமியா துளதோ அதுவே அசித்தத்தன்மை யென்பர். ஆயின் ஜீவன்முக்தர்கட்கு விருத்தியோடு கூடிய சித்தமுளதாக எங்ஙனம் அசித்தத்தன்மையாதல் எனின் ஆண்டுரைத்தல்:—சுபாவ மாம் என்பதாதி. உள்ளே யாவற்றையும் பரித்தியாகித்துச் சீதளாசிரயமாய கருத்துடன் நிக ழும் உள்ள மெதுவோ அச்சித்தம் விருத்தியோடுகூடி யிருந்தபோதினும் அசத்துருபமென அறையப்பெறும்; தக்தபட ஆபாசத்தானேபடத்தன்மையது அதுவெனக் கூறமுடியா தன்றே, தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம்போல்வதல்லாற் பரந்தசகங் காரியத் திற் பயன்படாதன்றே. ஆயின் ஜீவன்முக்தன் எங்ஙனம் விவகாரத்தோடு கூடியிருப்பன் எனின் ? குடம் வனைந்த பின்னரும் ஆடிக்கொண்டிருக்கும் குலாலசக்கரச் சுழற்சிபோலும் எனல்;—குவால் என்பதாதி. புனர்ச்சனனகாரிணியாகிய கனமான வாசனை யெவனுக்கில்

லேயோ அவன் ஜீவன்முக்தன் சத்துவத்திலேயே யிருப்பவன், கடமுதித்துஞ் சுழலும் திகிரி போல விளையாடிக்கொண்டிருப்பன்.

(ச.) அபாவமேபற்றல் = திருசியத்தை யனுதாவுசெய்து பார்ப்பதும், அபாவம் பாவித்தல் = திருசியமின்றெனப் பாவிப்பதும், பிரஹ்மமே யீதனைத்தும் என, உண்மைப்பொருளைத் தரிசிப்பதும், யாது அஃதனைத்தும் மனமாய் வென்பர். மூவகையுஞ் சித்தத்திற்கு நிர்வாசனையாதலி னென்க. சீதச்சுதைபோலுஞ் சுபாவமாய் = இராகத்துவேஷ நிவிர்த்தியாற் சீதளமாய், தொழிலுற்றாலும் = தொழிலுடையதேனும், தன்வடிவிலாததென = அசத்துரூபமாமென்று, குலாலவட்டம்போற் றிரிவர் = குலாலசக்கரத்தினது சுழற்சி குலால வியாபார நிவிர்த்தியாயினுஞ் சமஸ்காரபரியந்தந் துடர்ந்து பிரவிர்த்திப்பதுபோற் சீவன் முக்த சரீரம் அவித்தை நிவிர்த்தியாயினும் அதன் சம்ஸ்காரசேடத்தினுற் பிராரத்தபோகபரியந்த மிருக்குமென்பது பொருள். குவால் மறுசென்மவாதனையென்று பாடமுளது. சர்வான்மக திருஷ்டியுடைமையின் விருத்தியோடுகூடி நிகழ்ந்தபோதினும் பாதகம் யாதொன்று மில்லை யென்பது கருத்து. (26)

(ஸ்ரீ-வீர - அ-தை.) பாதகமாகாத வாதனையினர் ஜீவன்முக்தராவர் மனமிருந்து மில்லாதவர் ஆகாசம்போன்றவரெனல்:—வறுத்தவென்பது.

வறுத்தவித்தை யொப்பாகி யின்பமின்றி மறுசநந மற்றவா தனைசேர்ந்துள்ளோ, ரொறுத்தவிடர்தீர்சீவன் முத்தராகு முண்மையுரு வடைந்தமன முடையோரன்னுர், நிறுத்துணர்ஞா னக்கரையுற் றவருமன்னுர் நெஞ்சமிலா தவ ரன்னுர் நிமலமாகப், பொறுத்தவுட னீங்கிலா காசரூபம் பொருந்தினரன் ஞரென்று புகல்வரன்றே.

(ப-ரை.) வறுத்தவிதை யொப்பாகி = பிரட்டபீஜ உபமமாய், இன்பமின்றி = இரசஹீனமாய், மறுசனனமற்ற = புனர்ஜனனவர்ஜிதமாய, வாதனைசேர்ந்துள்ளோர் ஒறுத்த இடர்தீர் சீவன்முத்தராகும் = வாசனையை யடைந்துள்ளவர் துன்புறுத்திய துன்பங்கணீங்கிய ஜீவன்முக்தராவர், உண்மையுருவடைந்த மனமுடையோரன்னுர் = சத்வரூபத்தை யினிதாகவடைந்த மனத்தவரவர், நிறுத்துணர் ஞானக்கரையுற்றவருமன்னுர் = கருவிகரணுதிகளை யொடுக்கிச் சாக்ஷாத்கரிக்கும் ஞானபாரகரும் அவர், நெஞ்சமிலாதவர் அன்னுர் = அசித்தமுடையவர் அவர், நிமலமாகப் பொறுத்தவுட னீங்கில் ஆகாசரூபம் பொருந்தின ரன்ஞர் என்று புகல்வர் = நிருமலமாகத்தாங்கிய தேகாந்தத்தில் விண்ணுருவமாகவு மிருப்பர் அவர் எனப் புகலப்பெறுவர். அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) வறுத்த பீஜம்போலத் தீனிக்குமாத்திர முதவுவதாய் மறுபிறப்பை யடையியாததாய், இரசமொன்று மில்லாததாய் எவர் தமது வாசனையாமோ அவர்தாமே ஜீவன்முக்தராகி யிருப்பர். அவர், சத்வரூபத்தை நன்றாயடைந்த சித்தத்தையுடையவர், ஞானபாரகர், அசித்தர் எனக் கூறப்பெறுவர், பிராரப்தம் க்ஷயமாகவே சித்வியோமரூபமாகவேயிருப்பர், "அவனுக் கத்துணைதானே தாமதம், இவணெத்துணை தானுகர் வினைவீட்டிலை, பின்னர்ப் பேசறும் பிரமமாயிருப்பன்" என்னுஞ் சுருதியினுலென்பது கருத்தாம்.

(ச.) இன்பம் = விடயங்களில் ஆதாரதிசயம் இன்றி, அஃதின்மையராய், இராஜதமோபாகங்கள் நிவிர்த்தித்தலின், உண்மையுரு = சத்துவரூபத்தையே, அடைந்த மனமுடையோர், அன்னுர் = ஜீவன்முக்தர் = நெஞ்சமிலாதவர், சித்தமொழிந்தமையாலே, உடனீங்கில் = தேகாந்தத்தில், ஆகாசரூபம் பொருந்தினர் = சிதாகாசரூபராவர். (27)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அற்றேல், வாசனுபீஜநாசமாயினும், வேறுவிரையால்உள முதய மேன் ஆகமாட்டாதெனிற் கூறல்:—உயிரின் என்பது.

உயிரினசை வொன்றுவா தனையொன்றாக வுபயமா மனத்தின்விதை யிவற்றி னொன்று, பயில்வுறமாய்ந் தாலிரண்டு முடனேமாயும் பகருறுவா தனைவசத்தாற் பிராணனோட்ட, முயிரசைவால் வாதனையு முண்டாமத்தா லுள்ளமெனும் விதைக்கு விதை முளையொழுங்காம், பயில்வுறுவா தனையுயிரி னசைவிரண்டும் பலவிதங்காண் பவைவித்தாய்ப் படரு மன்றே.

(ப - ரை.) உயிரின் அசை வொன்று = பிராணனது சலன மொன்று, வாதனை யொன்று = வாசனை யொன்று, ஆக உபயமாம் = ஆகவிரண்டுமாம், மனத்தின் விதை = மனத்தினது பீஜம், இவற்றின் ஒன்று = இவற்றுள் ஏகம், பயில்வுறமாய்ந்தால் = அப்பி யாசத்தாட்டியத்தால் க்ஷயமாயின், இரண்டுமுடனேமாயும் = இரண்டும் அந்தக்கணமே க்ஷீணமாம், பகருறுவாதனைவசத்தால் = கூறிவந்த வாசனையின் வயத்தினாலே, பிராண னோட்டம் = உயிரினசைவாம், உயிரசைவால் = பிராணனது சலனத்தினாலே, வாதனையு முண்டாம் = வாசனையு முற்பவிக்கும், அத்தால் உள்ளமெனும் விதைக்குவிதை முளை யொழுங்காம் = மனமென்னும் பீஜத்திற்குப் பீஜாங்குரக்கிரமமாம், பயில்வுறுவாதனை யுயிரினசைவிரண்டும் = பழகிவந்தவாதனை பிராணனது சலனமிரண்டும், பலவிதங்காண் பவை வித்தாய்ப்படரும் = பல்வகையாகக் காணப்பெற்றவை விரையாய் விஸ்தாரமாம். அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! பிராணஸ்பந்தன வாசனைகளெனச் சித்தத்திற்கு இரண்டு பீஜங்கள் உள்ளனவாம், அவற்றுள் ஒன்றுபட்டழியுமாயின் விரைவாகவே இரண்டும் நசிக் கும்; பீஜமதற்கும் என்னேபவிக்கும்? என்னும் நான்காவது வினவிற்கு முத்தரம் அந வஸ்தையைப் பரிகரித்துக்கொண்டுகூறல்:—விதை முளை யொழுங்காம் என்பது. இந்தப் பிராணஸ்பந்தன வாசனைகள் திலங்களிற் றைலம்போலப் பரஸ்பரம் உள்ளுள்ளிருப்பனவாம் அவ்வாறே பீஜாங்குரநியாயத்தானே காலாகாங்க்ஷிக்கிரமத்தில் நித்தியம் அவிநாபாவிநிக ளாம் பரஸ்பரங் காரணங்களாம். ஆகலின் பரஸ்பர ஆசிரயத்தன்மையும், பரஸ்பர ஏதுத் தன்மையும், இவற்றிற்குப் பொருந்தும் என்பதாக அநவஸ்தாதோஷ அடைவு இல்தாம், என்பது கருத்து. வாசனை வசத்தாற் பிராணஸ்பந்தம் அதனாலே வாசனையாம் சித்தபீஜத் திற்கு அதனாற் பீஜாங்குரக்கிரமமாம். பீஜாந்தரமும் உரைத்தல்:—பயில் என்பதாதி வாசனை பிராணபவனஸ்பந்தங்கள் என்னும் இவ்விரண்டிற்கும் சம்வேத்தியம்பீஜம் எனப் பெறும், எதனால் இவை விடயங்கொண்டிலங்குமோ வதனாலென்க, இருதயத்திற் பிரியாப் பிரியங்களாய சப்தாதிகளை யடைவுற்றே ஸ்மரித்தே, பிராணனது அசைவும் வாசனை யும் ஆம்.

(ச.) வாதனை பிராணசலனங்களுக்குச் சித்தபீஜத்துவங்கூறி இப்போது பீஜாங்குரங்க ளாய அவைகள் ஒன்றையொன்று றற்பன்னஞ்செய்வதாதலின் ஒன்று நாசமாகின் இரண்டு நாசமாமெனச் சொல்லப்படுகின்றது. மனத்தின் = சித்தபீஜத்தினது, இவற்றின் = பீஜ ரூபமானவாசனை, பிராணசலனங்களிலென்பது பொருள். பலவிதங்காண்பவை = திருசி யம், எந்தக்காரணத்தினால் வாதனை பிராணசலனங்கள் திருசியத்தினாற்படரும் = பிரவிர்த் திக்கும். (28)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சம்வித்தின் அபேதபாவனமே சம்வேத்ய பரித்தியாகமென வதனையே விரித்துரைத்துப் பொருத்திக்காட்டல்:—ஆதலினுலென்பது.

ஆதலினுற் காண்பவற்றை விடுதலாலே யாருயிரி னசைவுவா தனையிரண்டும், பாதவம்வே ரற்ருப்போல் வேரற்றேகும் படரறிவே காண்பவற்றின் பயில்வித் தாகுஞ், சேதனந்தோன் ருதெனிற்காண் பனவுமில்லைச் செறிதயிலமில்லாமற் றில முண்டாமோ, பேதமுற வுட்புறங்காண் பனவொன்றில்லைப் பிறம்போற்சங் கற்பிக்கும் பிறக்கும்போதம்.

(ப - ரை.) ஆதலினல் = ஆகையினல், காண்பவற்றை விடுதலாலே = சம்வேத்தியத்தைத் தியாகஞ் செய்தலாலே, ஆருயிரினசைவு வாதனையிரண்டும் = பிராணஸ்பந்தனம் வாசனையென்னு மிரண்டும், பாதவம் வேரற்ருப்போல் = மரம் வேரற்றதேபோல, வேரற்றேகும் = வேரில்லாமற்போம், படரறிவே காண்பவற்றின் பயில்வித்தாகும் = விரியும் அறிவே சம்வேத்தியத்தின் உதயபீஜமாகும், சேதனந் தோன்ருதெனில் காண்பனவுமில்லை = உணர்ச்சி கிளம்பாதாயின் சம்வேத்தியமும் இலதாம், செறிதயிலமில்லாமல் திலமுண்டாமோ = பொருந்துந் தயிலமில்லாமல் எள்ளுண்டாமோ, பேதமுற உட்புறங் காண்பனவொன்றில்லை = வேற்றுமையுண்டாமாறு உள்ளினும் வெளியிலும் திருசியம் யாதொன்றுமே கிடையாது, பிறம்போல் சங்கற்பிக்கும் பிறக்கும்போதம் = உணர்ச்சியினெழுச்சியால் உண்டாம் நினைவால் திருசியந்தோற்றுவதுபோ லிருக்கும்.

(ஸ்ரீ - வீர.) ஆகலின் இவற்றிற்குச் சம்வேத்தியம் பீஜமாயுண்டாமெனக் கூறப்பெறும், விடயங்களை நன்குபரித்தியாகம் செய்தலானே, பிராண அசைவு வாசனைகள் அடியோடும் அற்றுப்போம், அதிவேகமாக வேரற்றதுருமம் வீழ்வதேபோலவாம். அறிவு தானே தனது தீரத்தன்மையை விடுத்துத் திருசியம்போல அடைவுற்று, சித்தபீஜமாமென வறிதி, அறிவு இல்லாமல் அறிபொருளொன்றும் என்றும் உண்டாகவேமாட்டாது, தைலஹீனத்திலம் போலுமாம், அறிவுக்கயலாக உள்ளிலேனும் வெளியிலேனும் ஒருபொருளும், உளதாவதேயிலதாம்.

(ச.) அறிவினது சங்கற்பிதமாதலின் அறி பொளுக்கு அறிவே பீஜ மென்பது பொருள். (29)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அறிவைத்தவிர்த்து வேறறிபொருளிலதாம், என்பதைக் கனுத் திருட்டாந்தத்தாற் காண்பித்து அதனைத் தீர்த்தலே மாயையை யழித்தலாமெனல்:—சங்கற்பத்தென்பது.

(ச - அ - கை.) இதனை திருஷ்டாந்தமுகமாகத் தெரிவித்தல்:—

சங்கற்பத் தறிபொருளை யறிவுதன்பாற் ருனேநோக்கி டுங்கனவிற் றனது சாவு, மங்குத்தே சாந்தரமுந் தன்வசத்தா லடைவதுபோ லறிபொருளை யறிவு காணும், பங்கிட்டு முன்னறிந்த தறியாதேனும் பகரறிவுக் கெதுபத்தி பாய்ந்ததத் தைத், துங்கத்தம் வருத்தத்தால் விசாரமுள்ளோர் துடைப்பதுவே வெம்மாயை துடைத்ததாகும்.

(ப - ரை.) சங்கற்பத்தறிபொருளை யறிவுதன்பாற்ருனே நோக்கிடும் = சங்கற்பத்தினுலே திருசியத்தை யறிவு தன்னிடத்திற் சுயம்பார்த்திடும், கனவிற்றனது சாவும் அங்குத்தேசாந்தரமும் தன்வசத்தால் அடைவதுபோல் = சொப்பனத்திற் றன்னுடைய மரணமும்

அவ்விடத்தில் வேறு தேயத்தில் வாழ்தலும் சுயமாகவே அடைவுறுதலேபோல. அறி பொருளை யறிவுஈாணும் = திருசியத்தைத்திருக்குக்காணும், பங்கிட்டு முன்னறிந்தது அறியாதேனும் பகாறிவுக் கெதுபத்திபாய்ந்தது அத்தை = பகுத்துப் பூர்வம் தெரிந்ததே யாயினும் தெரியாததேயாயினும் கூறிய உணர்விற்கு யாதுயாது பிரதிபலித்துத் தோற்றுமோ அவை யாவற்றையினையும், துங்கத்தம் வருத்தத்தால் = நன்றான தனது முயற்சியிலலே, விசாரமுள்ளோர் = ஆராய்ச்சியுடையவர், துடைப்பதுவே = மார்ஜனம் செய்வதுவே, வெம்மாயை துடைத்ததாகும் = கொடிய மாயையை அகற்றியதாகும்.

(ஸ்ரீ - வீர.) சம்வித்தானது இலங்குவதாய், சங்கற்பத்தானே சம்வேத்தியத்தைத் தானாகவே காண்கின்றது, சொப்பனத்திற் றனது மரணத்தையும் தேசாந்தரத்திதியையும், காண்பதேபோலத் தனது சமத்காரயோகத்தானே சம்வேத்தியம் சம்வித்திற் குண்டாகிக் காணப்பெறும்; இதுபாலவேதாலம் போலுமாம். கூறிய இரண்டுங் கனவில் தனது சமத்கார யோகத்தானே யாவதேபோல, நனவிலும் ஞானத்திற்கு விடயந்தோற்றும்; அதனாற் சம் மார்ஜநீயமாயது யாதோ அதனைக் காட்டல்:—முன்னென்பதாதி. முன்றிருட்டமேனும் அதிருட்டமேனும் யாது இதற்குத் தோற்றுமோ அதனை யறிவாகவேபார்த்து மிகமுயன்று அறிவாளிகள் துடைத்து அறிவாகவே யிருக்கவேண்டும்.

(ச.) கனவில், தன்வசத்தால் = தனது பாவனை வசத்தினாலே, அசத்துருபமாயினும், தனது சாவுந் தேசாந்தரமும் அடைவதுபோல் = காணப்படுவதுபோல், அறிவின் வசத்தினால் அறிபொருள் காணப்படுமென்பது பொருள். எது = எப்பொருள், முன்னறிந்ததறியாதேனும், பகாறிவுக்கு = இவ்வறிவின் வசத்தினால், பத்திபாய்ந்தது = வேறெனவிளங்கும், அத்தை = இத்திருசியப்பொருளை, விசாரமுள்ளபுருடர், தம் வருத்தத்தால் = தமது பிரயத்தனத்தால், நிரசனஞ்செய்யவேண்டு மென்றதாயிற்று. (30)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதை யகற்றுமை யறியாமையாகும், அகற்றுதலானே வீடெனவாகும், அகற்றியறிவா யாநந்தியாவாயெனல்:—அது என்பது.

அதுதுடையா மாத்திரமே மாமோகத்தை யடைந்ததா மதுதுடைத்த மாத்திரந்தான், முதுகதியென் றுரைப்பரறி கின்றதன்றே முடிவில்பிறப் பரந்தைதான் முளரிக்கண்ணா, கதுவுறுசாட் டியமில்லா வறிவிலாமை கடும்பவமில் லாதசுகங் காட்டுமன்றே, சதுரனா யசடனா யாநந்தத்தைத் தவிர்ந்தொன்று மறிவதறச் சலனந்தீர்வாய்.

(ப - ரை.) அதுதுடையாமாத்திரமே மாமோகத்தை யடைந்ததாம் = அதனை யகற்றாத மாத்திரையானே மகாமயக்கத்தைப்பற்றியதாம், அது துடைத்தமாத்திரந்தான் = அதனை மார்ஜனஞ்செய்த மாத்திரையானே, முதுகதியென்றுரைப்பர் = மோக்ஷகதியென்று கூறுவர், அறிகின்றதன்றே முடிவில் பிறப்பரந்தைதான் முளரிக்கண்ணா = கமல இதழ்போலும் நேத்திரம் வாய்ந்த இராகவ! சம்வேதனந்தானே அநந்தமாய ஜனன துக்கத்தைத் தருவதாம், கதுவுறு சாட்டியமில்லா வறிவிலாமை = பொருந்தாநின்ற அசாட்டிய வுணர்வின்மையானது, கடும்பவமில்லாத சுகங்காட்டுமன்றே = கொடிய ஜனனமில்லாத ஆனந்தத்தை யுண்டாக்கும் அக்கணமே, சதுரனா யசடனாயாநந்தத்தைத் தவிர்ந்து = சாமர்த்தியவானாய்ச் சாட்டிய மில்லாதவனாய்ச் சுகத்தைத் தவிர்ந்து, ஒன்று மறிவதறச் சலனந்தீர்வாய் = யாதொன்றையு முணராமற் சஞ்சலந்தீர்ந்துய்வாய்.

(ஸ்ரீ - வீர.) அதன் அமார்ஜனமாத்திரமே மகத்தான சம்சாரத்தோடு ஆன்மாவிற்குச் சம்பந்தமாம்,அதனை யினிது மார்ஜனஞ்செய்தன் மாத்திரமே மோக்ஷமென்பதாக அனுபவிக்கப் பெறும்; வேத்தியதரிசனமே அந்தமில்லாததான ஜன்மாதிரூப துக்கப்பொருட்டாம்; வேத்திய அதரிசனமும், சிதேகரச சுபாவத்தில் நிலைத்த இருப்பும், நித்தியாத்ம சொரூபப் பொருட்டும் பேராநந்தப்பொருட்டும் எதனால் ஆமோ அதனால், நீயும் விருத்திகள் யாவற்றையும் விடுத்துச் சிதேகரசவடிமாய்க் கரைந்து, பூர்ணாநந்தனாய் வாழ்தி; யாவன் அசம்வேத்தியனேயாயினும் சுயமாகவே பிரபுத்த ஆத்மாவாவனோ, அவனே நீ யாவாய் அன்னியனாகாய்.

(சு.) அது துடையா மாத்திரமே = அத்திருசியத்தினது அவிஸ்மரணமே, மாமோகம் = மகாசம்சாரமாம், அது துடைத்தமாத்திரந்தான் = திருசியவிஸ்மரணம், மோக்ஷமாம், அறிகின்றது = திருசியாநுசந்தானம், முடிவில் பிறப்பாந்தை = அநந்தமான சம்சாரரூபமாகிய துக்கநிமித்தமாம், சாட்டியமில்லா = சாட்டியசம்பந்தரகிதமான, அறிவில்லாமை = திருசியாநுசந்தானமின்மை, கடும்பவமில்லாத = மோக்ஷரூபமான, சுகங்காட்டும் = சுகநிமித்தமாம், என்றே = என்றுபதேசித்து, ஸ்ரீ இராமா நீ, அச..னாய் = சாட்டியரகிதனாய், ஆநந்தத்தைத் தவிர்ந்து = ஆநந்தரூபசித்த பரிணாமமற்றவனாய், ஒன்றுமறிவதற = திருசியாநுசந்தான மொழிந்தவனாயும், சலனந்தீர்வாய். (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அறிவே நீயென ஆசீர்வதித்தலும், ஸ்ரீ இராமர் மேல்வினாதலும் ஸ்ரீ வசிஷ்டபகவான் விடை தருதலும் ஆம்:—அறியென்பது.

அறிபொருளை யறியாத வறிவேமெய்யா மவனீசத் தியமாமென் றறைதலோடுஞ், செறிசடமற் றறிவின்மை யெங்கனுண்டாஞ் சித்தின்மை சடமாவ தெங்ஙன்றீரு, நெறியிலுரை யென்றவிரா மனுக்குமீட்டு நிறைதவன்சொல் வானெங்கு நிகழ்பற்றின்றி, வெறிதொரிடத் தாறுதலொன் றறிதலில்லா வியன்சீவன் சடமில்லா வறிவிலாமை.

(ப - ரை.) அறிபொருளை யறியாதவறிவே மெய்யாம் அவனீசத்தியமாம் = வேத்தியமொன்று மில்லாவெறுமறிவதுவேயுண்மை, சாத்தியமற்றவந்த வத்துநீ சத்தியந்தான், என்றறைதலோடும் = என விவ்வண்ணம் ஆசீர்வதித்துபதேசித்ததும், செறிசடமற்றறிவின்மை எங்ஙனுண்டாம் = பொருந்திய அஜாட்டியமாய் அசம்வித்தி யெவ்வாறுளதாகும், சித்தின்மை சடமாவதெங்ஙன்றீரும் = அசம்வித்தியில் ஜாட்டியமானது எவ்வாறு நிவிருத்தியாகும், நெறியிலுரையென்ற விராமனுக்கு = முறையாக அருளிச்செய்வாய் என்று பிரார்த்தித்த ஸ்ரீ இராகவருக்கு, மீட்டுநிறைதவன் சொல்வான் = மறுபடியும் பூர்ணதவத்தினையுடைய ஸ்ரீ வசிட்டபகவான் திருவாய்மலர்ந்தருளுவார், எங்குநிகழ் பற்றின்றி = எவ்விடத்திலும் விளங்கும் பற்றொன்றுமில்லாமல், வெறிதொரிடத்தாறுதல் ஒன்றறிதல் இல்லா = வாளா ஒருபக்கல் இளைப்பாறுதல் ஒன்றுணர்தல் இல்லா, வியன்சீவன் சடமில்லா வறிவிலாமை = அற்புதசீவன் சடமற்ற அறிவின்மையாம்.

(ஸ்ரீ - வீர.) முதற்பாதவுரை தொடர்புபற்றி முன்புரைத்தாம். ஸ்ரீ இராகவர் சங்கித்தல்:—அஜடமாயினும் அசம்வித்தி எத்தகையதாம் ஹே பிரபுவே! ஜாட்டியத்தியாகமேல் சம்வேதனபரிசேடமாம், சம்வேதனத்தியாகமேல் ஜாட்டியபரிசேடமேனுமாம், ஒருதலையாய்; இவ்வாறாக்வே அஜடமும் அசம்வித்தியும் என முரண்பட்ட வியற்கையன ஒன்றுதலெங்ஙனமென்பது வினாவாம்? விரோதத்தையே வெளிப்படுத்திக்காட்டல்:—அசம்வித்தின்

கண்ணுந்தான் ஜாட்டியமாமது எங்ஙனந்தான் நிவிருத்தியாதல்கூடும்? ஸ்ரீ வசிஷ்டபகவான் விடையருளல்:—சத்தியமாகப் பாகியார்த்தத்தை யுணர்தல் சம்வித்தாம் என்னும் விற்பத்தியானே பாதிதார்த்த ஆபாசங்களானே விவகார ஆபாசத்தைக் காட்டிக்கொண்டும் ஜீவன் முக்தஜீவன் எக்கும் நிகழும் விடயத்திலும் பற்றுதலின்றியவனாய், சென்ற வருவனவாய விடயங்களிலும் வாசனையின்மையின் இளைப்பாறுதலின்றியவனாய், இருப்பன்னன, ஒரு சிறிதும் திருசியம் உணரப்பெறுமைகொண்டு அவ்வங்கிசத்தே காஷ்டலோஷ்டம்போல அசம்வித்தெனக் கூறப்பெறுவன், சுயமாகவோர் சொப்பிரகாசசிதேகரச பூர்ணத்தன்மையர்னே அஜடனுமாவன் என்பதாம்.

(ச.) எவன், அறிபொருளை யணுகாமல் திருசியத்தை யநுசந்தானஞ் செய்யாது, அறிவே மெய்யாம் = பிரகாசிக்கின்ற சொரூபனும், அவன் = அப்பரமான்மாவே, நீ சத்தியமாம், இதிற் சந்தேகமின்றென்பது பொருள், ஸ்ரீ இராமர்:—செறிசடமற்று = அஜாட்டியத்திருக்கும், அறிவின்மை யெங்ஙனுண்டாம் = எத்தன்மையதாம், சித்தின்மை = அறிவபாவமாயின், செடமாவது = அச்சாட்டியம் எங்ஙன்றீரும் சித்தின்மையென்னுஞ் சாட்டியாபேதமானது அசேதனங்களிற் காணப்படுதலி னென்க. நிறைத்தவன் = ஸ்ரீ வசிட்டர், எந்தச்சீவன், எங்கும் = சகல திருசியங்களிலும், பற்றின்றி = அத்திராதரனாய், ஓரிடத்து = திருசியமொன்றிலும், ஆறுதல் = விசிராந்தியும், இன்றி = இன்மையனாய், அதனாலும், ஒன்று = ஒரு திருசியத்தையும், சித்தத்தில், அறிதலில்லா = அறியான்; அச்சீவன், சேதனமாதலின், சடமில்லா = அஜடனும், திருசிய அநுசந்தானத்தினால், திருசியத்தை யநுசந்தியாமை யென்றபடி, அறிவில்லாமையுமாவன். (32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சம்வித்சப்தத்திற்குக் கூறிய வியுத்பத்தியைக் காட்டிக்கொண்டு கூறியதையே பொருத்தியுரைத்தல்:—அறியென்பது.

அறிபொருளைப்பற்றாத வறிவுபெற்றா லாயிரங்கா ரியஞ்செயினுஞ் சடமிலாத,
வறிவின்மை யதுவாகுமறிபவற்றை யற்பமுமுள் ளாகாச மணுகாதென்னி, லறிஞ
னவ னசடமா மறிவிலாமை யவன்சீவன் முத்தனவ னாகுந்தன்பா, லறிதருவா சனை
யொழிவா லொன்றுமுன்னா தருங்குழவி யூமனறி வொத்துநிற்கும்.

(ப - ரை.) அறிபொருளைப் பற்றாத வறிவுபெற்றால் = திரிசியத்தை நாடாத வுணர்வு அடைந்தால், ஆயிரங்காரியஞ்செயினும் = நூறுநூறு காரியங்களைச் செய்தபோதினும், சடமிலாத வறிவின்மை யதுவாகும் = அஜட அசம்வித்ததுவாம், அறிபவற்றை யற்பமும் உள்ளாகாசமணுகாதென்னில் = திருசியங்களை அணுவுங்கூட இருதயாகாசம் அடையாதாயின், அறிஞனவன் அசடமாமறிவிலாமை = விவேகியான வவன் அஜட அசம்வித்தாவன், அவன் சீவன் முத்தனவனாகும் = அன்னான் ஜீவிக்குங் காலத்திலேயே முக்தனாவன், தன்பாலறிதருவாசனை யொழிவால் = தன்னிடத்தில் விடயங்களைநாடும் வாசனை யின்மையினால், ஒன்றுமுன்னாது = ஒருபொருளையும் பாவியாமல், அருங்குழவியூமனறிவொத்துநிற்கும் = அரியசிசு ஊமன் உணர்வு ஒப்பாகித்திரம்பெறும்.

(ஸ்ரீ - வீர.) சம்வித்துவஸ்து திருஷ்டியானே பற்றுதல் யாவனுக்கு இலதாமோ ஈண்டு அவன், சத்தியத்வமதியினானே சித்திற்குப் பாகி யார்த்தப்பற்றுதலே சம்வித்தெனப்பெறும், அஃதிலாதவன், அசம்வித்தஜடன்எனப் பெறுவன் நூற்றுக்கணக்கான காரியங்கள் இயற்றியபோதினும்; இதனானேயாண்டும் பற்றிலாதவன் என்னும் பதத்தின் றாற்பரியம் வெளிப்படுத்தப்பட்டது. எங்கும் இளைப்பாறுதல் இல்லாதவன் என்பதற்கும் அதீதவிடயத்திற் றாற்

பரியத்தை வெளிப்படுத்திக்கொண்டு அதனையே யியம்பல்:—அறிபவற்றை யென்பதாதி. சம்வேத்தியத்தானே இருதயாகாசமென்னும் புத்தியானது ஒரு சிறிதும் பற்றுமலிருக்கும் யாவனுக் கவன் அஜட அசம்வித்தாவன், ஜீவன் முக்தனுமாவன் எனப் பெறுவன். இனி வரும் விடயத்திலும் அவனுக் கதனை வெளிப்படுத்தல்:—தன்பா லென்பதாதி. ஆன்மாவி னிடத்தில் நிர்வாசனைத் தன்மையானே ஒருபொருளையும் உன்னிடமாட்டான், பாலமூகாதி விஞ்ஞானம்போலத் திரமாகவும் திதியும் பெறுவன் எட்போது அப்போது ஜாட்டிய விநிர் முக்தமாய் அசம்வேதனமாயாவன்விஸ்தாரசொச்சவேதனமுமாவன் ; அவ்விரு தகைமை யையும் பற்றிய பிராஞ்ஞனவன், மறுபடியும் எதனினுமே பற்றை யடையமாட்டான்.

(ச.) சைதந்நியத்தினது அநுவிது வென்னும் பூசாதிப்பொருளின் அவஸ்தையின் அநு சந்தான மறிவெனப்படும் ; அத்தன்மையான அறிவு எவனுக்கின்றே அவன் ஆயிரங்காரியஞ் செயினும், அசெடன், அறிவின்மையனெனப்படுவன், உள்ளாகாசம் = சித்தாகாசம், அனு காது = நிர்வாசனையாயிருத்தலின், சேராதாயின், எப்போது, வாதனையொழிவால் = நிர் வாசனையால், ஒன்றுந் தன்பாலுன்னுது = அநுசந்தானஞ் செய்யாமல், அருங்குழவி யூமை= வாலமூகாதிகளுடைய, அறிவொத்து = விஞ்ஞானம்போல் நிருவிகற்பமாய், நிற்ச = சொரூபமாக ஸ்திரமாயிருப்பாய், பாலாதிபோல் நிருவிகற்பஞான சொரூபமாயிருப்பாய் என்பது பொருள். (33)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சங்கையைச் சமாதானித்துப் பிரகிருதத்தைப் பொருத்தியுரைத் தல்:—அன்றென்பது.

அன்றுசடபா வனைநீங்கி யகண்டவறிவின் மையைப்பெறலா
மொன்றுமதனுன் மீளவறி வொன்றிற்பற்று தொருவகையாய்
நின்றபலவா தனைநீங்கி நிருவிகற்ப சமாதியினுற்
றுன்றுவிண்ணிற் கருநிறம்போற் றொடராநந்தந் துன்னுறுமால்.

(ப - ரை.) அன்று = அப்போது, சடபாவனைநீங்கி = ஜாட்டிய விநிர்முக்தமாய், அகண்டவறிவின்மையைப் பெறலாம் = கண்டிதமில்லாத அசம்வேதனத்தை யடையலாம், ஒன்றுமதனுல்மீள அறிவொன்றிற் பற்றுது = அவ்வாறடையப் பெறுதலால் மறுபடியும் உணர்வு ஒரு பொருளினும் சம்பந்தியாது, ஒருவகையாய் = ஒருபிரகாரமாய், நின்ற பல வாதனைநீங்கி = நிலைத்துள்ள சருவவாதனைகளு மகன்று, நிருவிகற்ப சமாதியினுல் = அசம் பிரஞ்ஞாத சமாதியினுல், துன்றுவிண்ணிற் கருநிறம்போல் = பொய்யாக ஆகாயத்திற் றோற்றிய நீலவர்ணம்போல, தொடராநந்தந்துன்னுறுமால் = சம்பந்தித்த இன்பம் பொருந்துறும், ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) உரைத்தாம். சமஸ்தவாசனுத்தியாகி நிருவிகற்ப சமாதியினுலே, கம்மி னின்றும் நீலத்தன்மைபேபோலப் பேராநந்தமானது இனிது பிரதீதியாகும்.

(ச.) அன்று = அப்போது, அதனுல் = அவ்வறிவின்மையைப் பெற்றவதனுல், ஒன் றில் = புண்ணிய பாப வாசனை யொன்றேடும், பற்றுது = சம்பந்தியாது, இந்த வேது வினுல், விண்ணிற் கருநிறம்போல், கற்பிதமாய், தொடராநந்தந் துன்னுறுமே. அப்போது ஜாட்டிய விநிர்முக்தம் அசம்வேதனம் ஆசிரிதமாம் எனக் கூட்டுக. (34)

(ஸ்ரீ-வீர - அ-கை). அற்றேல் அன்னிய ஆகாரசம்வேதனமிலதேனும் பிரஹ்மாகார விருத்திரூபம் சம்வேதனம் சமாதியின்கண்ணும் தடுக்கமுடியாதாம், என யாங்ஙனம் அசம்வித்தகைமையெனின் ஆண்டுரைத்தல்:—நன்மையென்பது.

நன்மையான வதிற்பற்றி நாடாவறிவா மியோகிக்குத்
தன்மயந்தா ளுதலினுற் றனியாநந்த மதனுடன்போந்
துன்னுநிலேபோக் கொலிபரிசந் தொடர்ந்துமவற்றிற் பற்ருதோன்
வன்மைச்சடனன் ருனந்த மிலனென்றறியான் மகாசுகத்தன்.

(ப - ரை.) நன்மையான வதிற்பற்றி = நலமிக்கதான வதன்கண்ணே பற்றுதலே யடைந்து, நாடாவறிவா மியோகிக்கு = எண்ணுவுணர்வா மியோகிக்கு, தன்மயந்தா ளுதலினுல் = தன்மயத்தன்மையினுலே, தனியாநந்த மதனுடன்போம் = ஒப்பற்ற ஆனந்தம் அதனேடுபோம், துன்னுநிலே போக்கொலி பரிசம் தொடர்ந்தும் = பொருந்திய நிற்றல் நடையோடல் கேட்டல் தொடல் முதலியவற்றைச் செய்தபோதினும், அவற்றில் பற்ரு தோன் = அவைகளிற் சம்பந்தியாதவன், வன்மைச்சடனன்று = வலிமைபொருந்திய சடனல்லன், ஆநந்தமிலன் = இன்பமில்லோன், ஒன்றறியான் = சம்வேதனமற்றவன், மகா சுகத்தன் = பேராநந்த வடிவினன்.

(ஸ்ரீ - வீர.) அசம்வித்தாம் யோகிகள் ஆண்டிருப்பர், தன்மயத்தன்மையானே, ஆதி யந்தமில்லாமலபரிச்சின்னப் பிரஹ்மாகாரமாய அச்சம்வேதனமும் தற்சம்பந்தமான பிரஹ்ம ஜோதியினுலே பாத்தியமானமாய் அதனுள்ளேயே விலீனமாம்; சென்றும், நின்றும், தொட்டும், முகர்ந்தும், அதனுனே, அஜடன் கழிந்த ஆநந்தன் சம்வேதனமற்றவன் சுகியெனக் கூறப்பெறுவன்.

(ச.) அதில் = நிர்விகற்பசமாதியில், பற்றி லீனமாய், நாடா = திருசியாநு சந்தான ரகிதமான, அறிவாம் = அறிவினையுடைய, யோகிக்கு, தன்மயந்தாளுதலினுல், எந்த வஸ்து வோடுஞ் சமரச பாவவேதுவினுல், அதனுள் = ஆன்மசொரூபத்தில், ஆநந்தம் = ஆநந்த மும், போம்=லீனமாம். தியேயமாயவத்துவோடு சமரசபாவவேதுவினுலென்றும் பாடம். பதவுரையும் இவ்வுரையை யநுசரித்தே யென்றுணர்க; செய்யுளன்னணமமைதலின். (35)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இந்த திருஷ்டியோடுகூடி விவகரித்தபோதினும் துன்பின்றி யின் புற்றிருக்கலாம், என்று கூறி அவ்வறிவுக்கும் பீஜத்தை யறைதல்:—இந்த என்பது.

இந்தநோக்கந் தனைப்பற்றி யீனத்தொழிலோ டிசைந்தாலும்
வெந்ததுயரின் கரையேறி விஞ்சுகுணத்தின் கடலாவா
யந்தவுயர்சன் மாத்திரமிவ் வறிவின்வித்தா மவ்வறிவு
முந்துசன்மாத் திரநின்று முளேக்குந்தேசி லொளிபோல.

(ப-ரை.) இந்தநோக்கந்தனைப்பற்றி = இம்மேலான திருஷ்டியை யுடையவனுகி, ஈனத்தொழிலோ டிசைந்தாலும் = கீழான காரியங்களோடு கூடினுலும், வெந்ததுயரின் கரையேறி = இதுவரை தபித்துக்கொண்டிருந்த துக்கத்தின் கரைகடந்து, விஞ்சுகுணத் தின் கடலாவாய் = அபாரகுண சாகரமாகலாம், அந்த உயர் சன்மாத்திரம் இவ்வறிவின் வித் தாம் = அம்மேலான சன்மாத்திரவத்து இந்த வுணர்வின் பீஜமாம், அவ்வறிவுமுந்து சன் மாத்திர நின்று = அந்த வுணர்வானது முன்னுள்ள சன்மாத்திரத்திருந்து, முளேக்குந் தேசிலொளிபோல = உற்பத்தியாம் தேஜசிற்பிரகாசம்போலும்.

(ஸ்ரீ - வீர.) இத்திருஷ்டியை யவலம்பித்து, பிராணுயாமாதி சிரமசாத்தியமான யத் தன சேஷ்டையானே துக்காம்புதியின் பாரங்கடப்பாய், ஹே அபார்குணசாகரனே!

சிதாத்மாவானது தனக்குத்தானே தான்றானே பொய்யேயாய கட்டுவீடுகளைக் கற்பிக்கும், எண்ணியெண்ணித்தானே யித்தனை துயரமும் வந்தது, இவ்வண்ணம் பரிசோதித்துப் பரிசேடித்த சம்வித்து அந்தக்கரணப் பிரதிபிம்பசம்வித்தேயாமெனக் கேட்பவர்களின் மயலையகற்றிக்கொண்டு அக்கினிவிஸ்புலிங்க நியாயத்தானே அதன்பீஜபூதமாய சன்மாத்திரரூபப் பிரஹ்மசம்வித்தைக் காட்டல்:—அந்த என்பதாதி. இனி அச்சம்வித்திற்கு இராகவனே! சன்மாத்திரம் பீஜமெனப்பெறும், இந்தப்பிரதிபிம்பசம்வித்தானது, பிம்பபூதமாய சம்வின்மாத்திரரூபப் பிரஹ்மத்தினின்று முண்டாகின்றது, எங்ஙனம் சூரியாதிதேஜசினின்றும், பிரகாசமேயாய பிராகாசியம் பிரபையுண்டாகின்றதோ அங்ஙனம்.

(ச.) இந்தநோக்கந்தனை = ஜாட்டியரகிதமாய் அறிவுருவமான திருஷ்டியை நான் பற்றி, துயரின் = துக்காம்புதியின், எவ்வறிவு நிருசியபீஜமோ இவ்வறிவின்வித்து, சன்மாத்திரமாம், விக்ஷேபரகிதமான சிற்சொரூபமாம், எந்தக் காரணத்தினால், இவ்வறிவு, தேசில் = தேசின்றிரவியமான பெரிய தீபாதியில், ஒளிபோல் = ஒளியுறுவதுபோல், சன்மாத்திரநின்று = சன்மாத்திரத்தினாலே, முளைக்கும் = உதிக்கும். விச்சின்னரகிதமான, என்றும் பாடம். (36)

(ஸ்ரீ-வீர-அ-கை.) சன்மாத்திரமெனக் கூறில் அர்த்தக் கிரியாசாமர்த்திய லக்ஷண கடபடாதியி லிருக்கும் வியாவகாரிகசத்துவமே அதன்பீஜமாகக் காண்பிக்கப்பெற்றதெனமயல் உண்டாகாதொழிகவென்று அதனினும் விலக்ஷணத்தைக் காட்டும்பொருட்டுச் சத்தையின் இருவகையைக் காட்டல்:—இடமென்பது.

இடமார்சத்துக் கிருவடிவா மேகநாநா விதவடிவாந்
தடமாரேக மொருவடிவாஞ் சாற்றுமிவற்றைப் பிரித்திடக்கேள்
கடமேபடமே யுள்ளதெனக் கதுவக்காணும் பாவனைகள்
படருஞ்சத்தாம் ரூபத்தின் பிரிவாற்பலவா மது வொன்றே.

(ப-ரை.) இடமார்சத்துக் கிருவடிவாம் = விசாலமாகிய சத்திற்கு இரண்டு வடிவங்களுண்டு, ஏகநாநாவிதவடிவாம் = ஓராகிருதி பல்லாகிருதியென்னு முருவமாம், தடமாரேகம் ஒருவடிவாம் = வியாபகமாய மற்றொன்றே ஏகரூவமாம், சாற்றும் இவற்றைப் பிரித்திடக்கேள் = கூறிய இவ்விரண்டையும் பகுத்திடக் கேட்குதி, கடமே படமே யுள்ளதெனக்கதுவக்காணும் பாவனைகள் = கடமிருக்கின்றது படமிருக்கின்றது என்று பொருந்தக்காணும் பாவனைகள், படருஞ்சத்தாம் ரூபத்தின் பிரிவாற்பலவாம் அதுவொன்றே = விரவாநின்ற சத்தாம் வடிவத்தின் பகுப்பாற் பலவடிவமாம் அது ஒரு பிரிவெனவுணர்க.

(ஸ்ரீ-வீர.) ஆண்டுச் சத்தைக் கிருவடிவங்களுண்டு, ஏகம் நானாகிருதியாயிருக்கும், இரண்டாவது ஏகரூபமாயிருக்கும், அவற்றின் இவ்விபாகத்தைக் கூறக் கேட்பாயாக; கடதையென்றும் படதையென்றும், துவத்தையென்றும் மத்தையென்றும், கூறப்பெறும் சத்தாரூப விபாகத்தானேயாதது நானாகிருதியாயிருக்கும், கடத்வபடத்வாதிகளும் துவத்தைமத்தையாதியுபாதிகளும் அர்த்தகிரியாபேதங்களில், சொரூபயோக்யதை யிலக்கண வியாவகாரிகசத்தா விசேடங்களே என்பது கருத்தாம்.

(ச.) இடமார்சத்தைக்கு = சொரூபசத்தைக்கு, இருவடிவாம், அவற்றில், ஏகம் வடிவு, நானாவித முடையதாம், ஏகம் வடிவு, விக்ஷேபரகிதமான ரூபம், ஒரு வடிவமாம் = துவிதீயரூபமாம், எந்தச்சத்தாரூபங் கடத்துவம் படத்துவம், தத்தை = தன்மை, த்வத்தை =

மூன்னிலை மத்தையென்னும் விபாகத்தாற் சொல்லப்படும் அச்சத்தாரூபம் காநாவித வடிவா மென்றதாயிற்று. அவ்விசேடம் அரியாற் கூறப்பட்டிருக்கின்றது, சம்பந்திபேதத்தினுற் சத்தையே பின்னமாய்ப் பசுவாதிகளிற் சாதியெனச் சாற்றப்படுகின்றது, அதிற் சகல சத்தங்களு மிருக்கின்றனவென்பதாம். (37)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சத்தையின் இரண்டாவது வகையைக்கூறி மேலும் பல சத்தை விபாகமுரைத்தல்:—சற்றுமென்பது.

சற்றும்விசேட மறவிட்டுச் சன்மாத்திரமாய்ப் பற்றின்றி
யொற்றைவடிவா மகாவடிவா மதுவேசத்தைக் குறும்பதமா
மற்றுங்கால சத்தைகலா சத்தைவத்து சத்தையென
வுற்றசத்தை மூன்றுமொழித் தொன்றுஞ் சன்மாத் திரத்துறுவாய்.

(ப - ரை.) சற்றும் விசேடமறவிட்டு = ஒரு சிறிதும் விசேடமெல்லா மில்லாமல் விடுத்து, சன்மாத்திரமாய் = சத்தாம்மாத்திரமாய், பற்றின்றி = சம்பந்தமின்றி, ஒற்றை வடிவா மகாவடிவாம் = ஏகரூபம் மகாரூபம், அதுவேசத்தைக் குறும்பதமாம் = சத்தைக் கப்பதமறிவர், மற்றும் = அன்றியும், காலசத்தை கலாசத்தைவத்துசத்தையென = போதுச் சத்தை, கலைச்சத்தை, பொருட்சத்தை யென்பதாக, உற்றசத்தை = விவகாரத்தில் வந்த சத்தை, மூன்றும் = திரயத்தையும், ஒழித்து = விடுத்து, ஒன்றுஞ் சன்மாத்திரத்துறுவாய் = ஏகமாகிய சத்தாமாத்திரத்திருப்பாய்.

(ஸ்ரீ - வீர.) விசேடத்தை யடியோடும் விடுத்து யாது அலேபகமாய்ச் சன்மாத்திரமாயிருக்கின்றதோ ஒரு ரூபம் பெரியரூபமாமோ அது சத்தைக்கு வஸ்துதத்துவம் என்றுரைப்பர். செல்வரும்போதுகளில் இருக்கின்றதென விவகாரங்காணுமையின் நிகழ்காலமே எல்லா வத்துக்கட்கும் சத்தையென்பர் சிலர், அவயவங்கட்கே ஒருங்குசேர்ந்து அவயவியாகாமாகப் புலப்பாடுண்மையின், கலைகள் = அவயவங்களே, பரமாணுரூபங்களே ஜகத்சத்தையென்பர் மற்றையர், அவயவிகளிலும் தொடர்ந்து நின்றசத்தை ஜாதியயலாயுளதென்பர் பிறர், இவ்வண்ணம் மற்றுஞ் சிலரும் மாறுகமாறுக தத்தம்புத்தியநுசாரமாகக் கற்பிப்பர், அக்கற்பிதமாய விபாககலனையை அடியோடு விடுத்து சன்மாத்திர ஏகபரமாவாய்.

(ச.) விசேடம் = நாமஜாதியாதிபேதத்தை, விட்டு, எது, சன்மாத்திரமாய்ப் பற்றின்றி = நிர்த்தோடரூபமாயிருக்கும், அதுவேசத்தைக்கு மகாவடிவாமூறுபதமா மொற்றை வடிவ மேகரூபமெனவறி யென்பதாயிற்று. காலசத்தை = காலத்தா லியற்றப்பட்ட செல்காலம் வருகால முதலிய பேதபின்னமான சத்தை, கலா = அங்கிசம், அதன் பேதத்தா லியற்றப்பட்ட தூலசூக்குமதீர்க்கம் குறில் முதலிய ரூபமான சத்தை, வத்து சத்தை = சொரூப சம்பந்தத்தா லியற்றப்பட்ட கடபடாதிரூபமான சத்தை, சத்தை மூன்றும் = இது காலசத்தை இது கலாசத்தை இதுவத்துசத்தையென்னும் பேதபாவனையை யொழித்து, சன்மாத்திரத்துறுவாய் = சன்மாத்திரத்து ஏகநிஷ்டனுவாய். நாம = என்பது. வஸ்து சத்தை = வஸ்து சொரூபபேதத்தானே யாக்கப்பெற்ற கடபடாதி ரூபசத்தை யென்பது பாடபேதம். (38)

(ஸ்ரீ-வீர - அ-கை.) காலசத்தையானது உத்தமமெனினும் வாஸ்தவமாகாதாம் பாவனர்தான் எங்ஙனம் ஆமெனல்:—கால என்பது.

காலசத்தைத் தன்சத்தை வேருய்க்கருது தொழில்விடினோர்
சிலநன்ரு கியசத்து ரூபியெனினும் பொருள்சேரா
கோலவிவிதப் பதநல்குங் கொள்கைபலபா வனையுண்டா
மூலங்கண்ட தநேகத்துக் கதுநன்ருகு முறையெங்கே.

(ப - ரை.) காலசத்தை தன்சத்தை = காலசத்தையும் தன்சத்தையும், வேருய்க்கருது தொழில்விடின் = பேதமாக வெண்ணும் கலனையைவிடுமாயின், ஓர்சில நன்ருகிய சத்து ரூபியெனினும் = உத்தமசத்துரூபமே யெனினும், பொருள்சேரா = இது வாஸ்தவமாகாதாம், கோலவிவிதப்பத நல்கும் கொள்கை பல பாவனை யுண்டாம் = விசித்திர நானுவகையாய பதந்தருவதாய விபாககலனையான துண்டாம், மூலங்கண்டது அநேகத்துக் கதுநன்ருகு முறையெங்கே = நானுத்தன்மைக்குக் காரணமாகக் கண்டதுவாகிய அது யாங்ஙனம் பவித்திரமாகும்; ஆகாதாம்.

(ஸ்ரீ - வீர.) காலசத்தையும் தன்சத்தையும் கலனையை அத்தியந்தம் நனிவிடுமாயின், மேன்மைதங்கிய சத்துவடிவமேயாம் என்றபோதினும் இது உண்மையாகமாட்டாதாம்; சர்வஞ்சகத்தேபோலக் காலாதிசத்தையும் அத்தியஸ்தபேத கலனையகற்றலானே, சன்மாத்திர பரிசேடத்தால் உத்தம சத்தையேயாம், என்றபோதினும், விபக்தரூபத்தாற் பாதார்கத் தன்மையுண்மையின் உண்மையாகாதாமென்பது பொருள். விபாககலனையானது யாண்டுவிபின்னபததாயினியாமோ, நானுத்தகைமைக்குக் காரணமாகக்கண்ட அது எங்ஙனம் பாவனமாம்?

(ச.) காலசத்தை, தன்சத்தை, சொரூபசத்தை யெனினுமென்றவும்மையால் வஸ்துசத்தையும், கருதுதொழில் விடினும் = விகற்பாங்கிசம் விடுபடினும், சால நன்ருகினுஞ் சத்துரூபியெனினும், இக்காலாதிசத்தை, பொருள் சாரா = அவிகற்பித மாகாதென்றதாயிற்று, எந்தக்காலாதிசத்தைகள், அநேகத்துக்கு மூலம் = பேதவேதுவான வுபாதியாக, கண்டது = காணப்பட்டு, விவிதப்பத நல்கும் பலபாவனை யுண்டாம் = வஸ்துச் சொரூப பேத போதினியாம், அது = அக்காலசத்தாதியான சத்துரூபம், எங்கே = எப்படித்தான், நன்ருகும் = சுத்தமாம், உபாதியுடையதாதலின் என்பது கருத்து. (39)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சத்தை யொன்றையே நன்ருகத் தியானஞ்செய்து பேரானந்தத்தைப் பெறுவாய் என்றருளி வித்தையுங்காட்டல்:—சத்தா வென்பது.

சத்தாசாமா னியமொன்றுந் தனிப்பாவித்துப் பரிபூர்ணச்
சுத்தாநந்த னுய்த்திசைக ளெல்லாந்துன்னி நின்றிடுவாய்
சத்தாசாமா னியமட்டின் கோடியேதங் கதுதானே
சுத்தாகார மிதன்வித்தா மதினின்றிதுதான் ருேன்றிடுமே.

(ப - ரை.) சத்தா சாமானியமொன்றும் = சத்தா சாமானிய மொன்றினையே, தனிப்பாவித்து = கேவலம் பாவனைசெய்து, பரிபூர்ண = பரிபூரணமாய, சுத்தாநந்தனுய் = தூயவின்பமுடையவனுய், திசைகளெல்லாந் துன்னிநின்றிடுவாய் = சகல திசைகளிலும் நிறைந்து நிலைத்திடுவாய், சத்தாசாமானியமட்டின் கோடியேது அங்கதுதானே = சத்தா சாமானியமாத்திரத்தின் எக்கோடியுளதோ அதுவே, சுத்தாகாரம் = தூயவடிவமாம், இதன் வித்தாம் = இதனது பீஜமாம், அதினின்றிதுதான் ருேன்றிடுமே = அதினின்றிதுவானது பிரவிர்த்திக்கும்.

(ஸ்ரீ - வீர.) சகல வடிவமுமாயிருக்கின்ற சத்தா சாமானியமொன்றையே நன்கு பாவித்து எல்லாத்திசைகளிலும் நிறைந்தவனும் ஆங்காங்குள்ள எல்லாப் பொருள்களிலும் நிறைந்தவனும், சகலமும் அதுவாயிருத்தலின் அதுவே நீயாயிருத்தலின், பரிபூர்ணபரமா நந்தியாய் வாழ்ந்துகொண்டிருப்பாய். அறிஞர் சிகாமணியே! சத்தா சமானியமாத்திரத்தின் எக்கோடி யுளதோ அதுவே = சாமானியமாத்திரத்தின்கோடி = பரம அவதி பூதமாய எச் சத்தையுளதோ அதுவே, இச்சகத்திற்கும் பிரதிபிம்பித்த சித்திற்கும் பீஜத்தன்மையை அடைந்திடும் அதினின்றுமே யாவும் பிரவிர்த்திக்கின்றனவாம்.

(ச.) சத்தா சாமானியமட்டின் = சத்தாசாமானியமாத்திரத்தினது, கோடி = உற் கருடம், அவிகிர்தமானரூபம், அதுதானே, இதன் = இச்சகத்தினது, வித்தாம், அதினின்று, இதுதான் = இச்சகத்து, முற்கூறிய கிரமமாக, தோன்றிடும், இக்கிரமம் சத்தா சாமானி யத்தினின்றும் அறிவுதோன்றிடும், அறிவினின்றுந் திருசியந்தோன்றிடும், திருசியத்தினின் றும், பிராணசலன வாசனைகள், அவைகளினூற் சித்தம், அதினூற் றேகம், அதினூற் சமுசாரம் என்பதாம். (40)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனோவிருத்திகள் யாவு மோய்ந்து சத்தையின் முழுகின் அதுவே உயர்ந்தபதமாம், அஃதுறிற்றுயரம் அனைத்தும் போமெனல்:—மொழியென்பது.

மொழிசத்தாசா மானியத்தின் முடிவிலெண்ண மெல்லாம்போ
யொழிவதேதங் கதுதானல் லுணர்வின்பதமா முதலதுவா
மழிவிலதற்கு வித்தில்லை யாங்கேயிறந்து விகாரமறத்
தழியவுணர்வு நிலைபெறுமப் பதஞ்சார்ந்தவர்மீண் டிடர்சாரார்.

(ப - ரை.) மொழிசத்தா சமானியத்தின் முடிவில் = கூறிய சத்தா சமானியத்தின் பரியந்தத்தில், எண்ணம் எல்லாம்போய் = அளவில்லாத எண்ணங்களியாவும் தீர்ந்து, ஒழிவ தேது அங்கதுதான் = விசிராமத்தை யடைவதேது, அங்கதுவே, நல்லுணர்வின்பதமாம் = நல்ல சைதன்யத்தின்பதமாம், முதலதுவாம் = ஆதியதாம், அழிவிலதற்கு = நித்தியமாய வதற்கு, வித்தில்லை = பீஜமில்லை, ஆங்கேயிறந்து = ஆண்டே இலயமாகி, விகாரமற = நிர்விகாரமாய், தழியவுணர்வு நிலைபெறும் = அதைத் தழுவிய அறிவு நிலைத்துநிற்கும், அப் பதஞ்சார்ந்தவர் மீண்டிடர் சாரார் = அந்தப்பதத்தை யடைந்தவர் மறுபடியும் துயரத்தை யடையார்.

(ஸ்ரீ - வீர.) சத்தாசாமானியத்தின் = சர்வசத்தைகளின், பரியந்தத்தில் = பர அவதி யில், யாது கலனையால் வர்ஜிதமாமோ அது முதன்மையானபதமாம், ஆதியும் அந்தமும் இல்லாததாம், அதனது பீஜம் கிடையாதாம். சத்தர்மதையும் யாண்டு தர்மதர்மி விபாகவில யத்தானே இலயமாமோ, நிர்விகாரத்தன்மையே நிலைத்திருக்குமோ, ஆண்டிருக்கக் கிடைக் கப்பெற்றவன், புமானவன், அவன் மறுபடியும் துக்கத்தில் ஆழ்ந்திடமாட்டான், ஆண் டுலப்தபதன் யாவனுவனோ அவனே புருஷார்த்தசாதன சமர்த்தத் தன்மையானே புமான் எனப்படுவன், பிறரோ பெண்களேயாமென்பது கருத்து.

(ச.) சத்தா சாமானியத்தின் முடிவில் = கோடியில், ஏதது = பிரசித்தமாய், எண்ண முற்றும் போயொழிவது முதலதுவா மழிவில் = ஆத்தியம் அநாத்தியந்தமுமாகிய, நல் லுணர்வின்பதமாம், அதற்கு = அப்பொருளுக்கு; வித்தில்லை, ஆங்கே சர்வபீஜமாய் முற் கூறிய பதத்தில், தழியவுணர்வு, விகார = மற = நிர்விகாரமாய், இறந்து இலயமாவதும், நிலைபெறும் = இருப்பதுமாம். (41)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதுதான் பரமபுருடார்த்தமெனக் காட்டும்பொருட்டுப் புகழுதல்:—அதுவேயென்பது.

அதுவேயேது வனைத்திற்கு மேதுவதனுக் கேதுவிலை
யதுவேசார மனைத்திற்குஞ் சாரமதனிற் சாரமிலை
யதுவாம்பெரிய தர்ப்பணத்தி லனைத்துப்பொருளின் பார்வைகளா
யதுவிதென்ப தெலாந்தோன்று மருகின்மரங்கள் வாவியிற்போல்.

(ப - ரை.) அதுவே யேது வனைத்திற்கும் ஏது = அதுவே காரணம் காரண மியாவற்றிற்கும், அதனுக்கேதுவிலை = அதற்கொரு காரண மடைந்திடவில்லை, அதுவே சாரமனைத்திற்குஞ்சாரம் = அதுவேசாரம் சாரமியாவற்றிற்கும், அதனிற்சாரமிலை = அதனினும் சாரமெதுவுமேயில்லை, அதுவாம் பெரிய தர்ப்பணத்தில் = அதுவாகிய பெரிய கண்ணுடியில், அனைத்துப்பொருளின் பார்வைகளாய் = சமஸ்தவஸ்து திருஷ்டிகளுமாய், அதுவிதென்பதெலாம் = அது இது என்பவையாவும், தோன்றும் = புலப்படும், அருகின்மரங்கள் வாவியிற்போல் = சரசின்கண்ணே தடத்துருமங்கள்போல.

(ஸ்ரீ - வீர.) சர்வஹேதுக்கட்கும் அதுவே யேதுவாம், அதன்கண்ணே யாவும் அத்தியஸ்தமாதலின், அதனுக் கேதுவொன்றுமின்றும் அதுதானே சித்தமாயிருத்தலின், சர்வசாரங்கட்கும் அதுவே இனிய சாரமாம் யாவற்றிற்கும் சத்தாஸ்பூர்த்தியைத் தருதலின், அதனினும் சாரம் அயலொன்றின்றும், அசவஸ்தை வருதலின் அநுபூதியின்மையின் அப்பெரிய சிற்கண்ணுடியில் எல்லாப்பொரு ளெண்ணங்களும் இதுவது வென்பனவாகத் தடத்தருக்கள் தடாகத்திற்போலப் பிரதிபிம்பிக்கின்றனவாம், அவ்விவையாவும் வானாநினைவுகளேயன்றி வத்துக்களல்லவாம், வத்துக்களாயின் அத்விதீய சுருதிக்குப் பாதகமன்றேவரும். எப்பொருளும் மாயையினு லென்பதையும் பெருமையினிற் சங்கோசம் பிறவாதென்பதையும் ஈண்டுச் சிந்தித்துக்கொள்க, பிரஹ்மதேவர் திருவாக்காதலின்,

(ச.) அதுவே, ஏதுவனைத்திற்கும் = சர்வவேதுக்களுக்கும்; சாரமனைத்திற்கும் = சர்வசாரங்களுக்கும், பெரிய ஞானத்தர்ப்பணத்தில், தோன்றும் = பிரதிபிம்பிக்கும். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆனந்தத்திருந்தேயா மிவையெவையும், ஆனந்தத்தானே யளிக்கப்பெறுமவை, ஆனந்தம்புகுந்தே யமைதியடையும் என்னுஞ் சுருதியானே அப்பதத்திலேயே ஜகத்ஜன்மாதிகாரணத்தன்மை யிலக்கணசமன்வயங் காணப்பெறுதலின், அதுதான் எல்லாமாயிருப்பது அதையறிந்து உபசாந்தி யடைதலேதகும், சகல பயங்களும் தீரும் பொருட்டு அதனையே யடைவாயாக வென்றருளல்:—அதுவேயென்பது.

அதுவேயமலஞ் சரையற்ற தஃதாத்துமதத் துவமதுவே
சதுராவதுவந் துறிவுள்ளஞ் சாற்றுமுபசாந் தியையடையுந்
திதமாயறிந்தவ் வடிவாவாய் சென்மமற்ற பதம்பெறுதி
முதல்வாவென்ன விராமனும்அம் முனியைநோக்கி மொழிகின்றான்.

(ப - ரை.) அதுமே யமலம்சரையற்றது = அப்பொருளே நிர்மலமாயிருப்பது சரையில்லாதது, அஃதாத்துமதத்துவம் = அதுவே யான்மதத்துவம், அதுவே சதுராவதுவந்துறிவுள்ளஞ் சாற்றுமுபசாந்தியையடையும் = அற்புதமாகிய வதனை நன்கு சாக்ஷாத்கரிக்கின் மனமானது பரமவுபசாந்தியை யடையும், திதமாயறிந்தவ் வடிவாவாய் = அதிதிடமாக வதனை நின்மயமாயறிந்து சேதனவடிவமாகவே யிருப்பாய், சென்மமற்ற பதம் பெறுதி = 

அநாதியான பதத்தை யடைவாய், முதல்வாவென்ன = க்ஷத்திரியகுலத்தைக் காக்கவந்த தலைவா, நால்வர்க்கு முதல்வா, மூவர்க்குஞ் சத்துவகுணத்தான் முதல்வாவென்றுகூற, இராமனும் = ஸ்ரீ இராகவரும், = அதிகாரிகட்குண்முதல்வரும், அம்முனியைநோக்கி மொழிகின்றான் = அவ்வாறருளிய ஸ்ரீ வசிஷ்டபகவானை நோக்கி யுரைப்பதானார்.

(ஸ்ரீ - வீர.) அதுவே மலமற்றது சரையற்றது, அதுவே யான்மதத்துவமென்னும் பாரமார்த்திகரூபமாம், அதனது சாக்ஷாத்தநுபவமாயினே அதனாலுபசாந்தியையடைந்து சோகம் போம், உள்ளங்குளிரும், ஆகலின் நீ யெப்போது உணரப்பெற்ற வியாபகவகதற்சொரூபமாவாயோ அப்போதே யெப்போதும் புனராவிருத்தியின்மையின் பொருட்டுப் பவபயம் விடுபட்ட பரமசிவபத சொரூபமேயாவாய்.

(ச.) அதுவே = முற்கூறிய சத்தாசாமானியக்கோடியாயிருக்கும் பதமே, அவ்வடிவு = வியாபகமா யொன்றான வச்சொரூபம், செனனமற்ற பதம்பெறுதி = சம்சாரபயமற்ற சொரூபமுடையவனாவாய்; நலமிக்கதேயாயவது சம்வின்மாத்திரம் ஆன்மதத்துவமாம். (43)

(ஸ்ரீ-வீர - அ-கை.) என்று கூறிய ஸ்ரீ வசிஷ்டபகவானை நோக்கி ஸ்ரீ இராகவர், அவ்வருமையான பதமானது அதிசீக்கிரமாக என்னவுபாயத்தானே யடையலாகும் என்று வினவலும் அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் விடையருளத் தொடங்கலும் அன்னவென்பது.

அன்னவிதைக ளின்னதென வனைத்துமுரைத்தா யநந்தமெனச்
சொன்ன பதமெம் முயற்சியினாற் றுன்னலாகும் விரைவிலென
மன்னுமுனிசொல் வான் றுன்ப விதையாமிவற்றின் வகைமேன்மே
லென்னென் றுரைத்தே னவற்றவற்றின் முயல்வால் விரைவிற் பதமெய்தும்.

(ப - ரை.) அன்னவிதைக ளின்னதென வனைத்து முரைத்தாய் = கேட்டபீஜங்கள் இன்னின்னவை யென்பதாக யாவற்றையுமே கூறியருளினீர், அநந்தமெனச் சொன்ன பதம் = அநந்தமென்று கூறிய பதம், எம்முயற்சியினால் = எப்பிரயத்தினத்தினால், துன்னலாகும் = அடையலாகும், விரைவில் சீக்கிரத்தில், என = என்று ஸ்ரீ இராகவர் வினவ, மன்னுமுனி சொல்வான் = தவம்பொருந்திய ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவார், துன்ப விதையா மிவற்றின்வகை மேன்மேல் என்னென்றுரைத்தானு = துக்கபீஜமா மிவற்றின் பிரகாரம் உத்தரோத்தரமாக என்னென்னவென முன்னர்ச் சொன்னேன், அவற்றவற்றின் முயல்வால் விரைவிற்பதமெய்தும் = அதனதன் பிரயோகத்தானே சீக்கிரம்பதமடையப் பெறும்.

(ஸ்ரீ - வீர.) இச்சம்சாரக் கொடியின் தேகாதிபீஜங்கள்யாவை தங்களாற் கூறப்பெற்றனவோ அவற்றுள், எவ்வுபாயத்தினது பிரயோகத்தானே நிவிருத்தியினானே பரமபதமானது சீக்கிரம் அடையப்பெறும், ஹே பிரஹ்மன்! அல்லது இச்சம்வித்திற்குப் பீஜம் சன்மாத்திரம் எனப் பெறுமெனவாதியாய்ச் சமீபத்தே தங்களாற் கூறப்பெற்றனவாய பூமிகைப் பேதரூபங்களாய் மோக்ஷபீஜங்களாய் உள்ள அவற்றுள், எதனது பிரயோகத்தானே ஆசிரயத்தானே விரைவாக அப்பரமபதம் அடையப்பெறும் என்று ஸ்ரீ இராகவர் வினவ அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் அவற்றுள் முதல் வியாக்கியான அனுசாரமாக உத்தரங்கூறல்:—முனி சொல்வான் என்பதாதி, இத்துக்கபீஜங்கட்குள் யாதுயாது எம்மால் உத்தரமாகுமுன்னர் மொழியப்பெற்றதோ அதன் அதன் பிரயோகத்தானே விரைவில் அடையப்படும் பதம் என்பதாம்.

(ச:) அவற்றவற்றின் உத்தரோத்தரபீஜத்தினது முயல்வால் = பாவனையால். (44)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இரண்டாவதன் அனுசாரத்தானும் கூறல்:—சத்தா வென்பது.

சத்தாசாமா னியக்கோடி பதத்தேசார்வுற் றொருக்காலே
கொத்தாகியவா தனைபுருட வருத்தத்தாற்கோ ளறவிட்டுச்
சொத்தாகியதத் துவமுணர்ந்து தொலையா வடிவா நிலையமிழ்ந்த
வுற்றாய்கணப்போ தென்னினுமக் கணத்தேயுறுமப் பதமடைவாய்.

(ப - ரை.) சத்தாசாமானியக் கோடிபதத்தே = சத்தாசாமானியகோடிஸ்தமாயபதத்தில், சார்வுற்று ஒருக்காலே = அடைவுற்று விரைவிலேயே, கொத்தாகிய வாதனைபுருட வருத்தத்தாற் கோளறவிட்டு = கூட்டமாகிய வாதனையைப் புருடப்பிரயத்தனத்தினாலே வலிதில் நன்றாகத் தியாகஞ்செய்து, சொத்தாகிய தத்துவமுணர்ந்து = தன்னுடையதாகிய உண்மைவடிவத்தை யுணர்ந்து, தொலையாவடிவாம் நிலையமிழ்ந்தவுற்றாய் = கெடாதவடிவமாம் நிலைமையில் மூழ்கலுற்றாய், கணப்போதென்னினும் = ஒருகணமேனும், அக்கணத்தே யுறுமப்பதமடைவாய் = அந்தக்கணத்தே யுறுமந்தப்பதமடைவாய்.

(ஸ்ரீ - வீர.) சத்தாசாமானியம் = சோதிதபதார்த்தம், அதனதுகோடி = பராகாஷ்டை அதன்கண்ணிருக்கும், சித்ரூபசோதிததுவம் பதார்த்தஐக்கியத்தானே அகண்டைகரசபதத்தில், அதிவிரைவிலேயே புருடமுயற்சியானே பலாத்காரமாக வாசனை யாவற்றையும் முற்றினு மொழித்து, ஹே தத்துவஞ்ஞனே! ஒருக்ஷணமேனும் அக்ஷயான்மிகமான ஸ்திதியை நிச்சலத்தன்மையைச் சித்தத்திற்குப் பெறுத்துதியேலாயின் இக்கணத்திலேயே அத்தியந்தம் சாதுவாய அப்பதத்தை நன்கடைந்திடுவாய். பாவனையினாலேயா இஃதாவது எனின் அல்லவாம் எனற்பொருட்டே ததுவஞ்ஞன் என்றதாம், உண்மையாகத்தத்துவத்தைச் சாக்ஷாத்கரித்து என்பதாம்.

(ச.) சத்தாசாமானியக்கோடிப்பதத்தே, கணப்போதென்னினும், நிலை = சமாதியை, அழுந்தவுற்றாய், ஆயின், அக்கணத்தே, அப்பதமமைவாயென்ப தந்நுவயம். (45)

(ஸ்ரீவீர - அ-கை.) அதன்கண்ணுற்றலின்றேனும் உரைத்தல்:—நிகழ் என்பது.

நிகழ்சத்தாசா மா[illegible]த்தே [illegible]த்தி னுருவாநிலைய நேர்தியெனிற்
பகருமதனிற் சற்ற[illegible]வருத்தத்தாலப் பதம்பெறுதி
திகழுஞ்சித்தத் துவத்திலுறு தியானஞ்செய்யி லதற்கதிக
மிகவும்வருத்த முறுதலினா லந்தப்பதத்தை மேவுதியால்.

(ப - ரை.) நிகழ் சத்தாசாமானியத்தின் = விளங்காநின்ற சத்தா சாமானியத்தின், உருவாநிலைய நேர்தியெனில் = வடிவமாம் ஸ்திதியை அடைதியெனில், பகருமதனில் = கூறுநின்ற அதனினும், சற்றதிகவருத்தத்தால் = சிறிது அதிகப்பிரயாசையால், அப்பதம் பெறுதி = அப்பதமடைதி, திகழும் = விளங்காநின்ற, சித்தத்துவத்தில் = அறிவாந்தத்துவத்தில், உறு தியானம்செய்யில் = பொருந்தி யழுத்தமாகத் தியானஞ் செய்யில், அதற்கதிக மிகவும் வருத்தமுறுதலினால் = அதனினும் அதிகமாக மிக்க துக்க மடைதலினால், அந்தப் பதத்தை மேவுதியால் = அந்தப்பதத்தை அடைவாயாக, ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) சத்தா சாமானியரூபத்திலாதல் = சோதித ஜகத்காரணத் தத்துவத்திலாதல், ஹே குழந்தாய்! ஸ்திதியைச் செய்தியேலாயின், அதனினும் சிறிது அதிகமான யத்தனத்தினாலே தற்பதத்தையீண்டு அடைவாய்; அகண்டைக்கிய போதத்தே யத்நாபேக்ஷ

ணத்திலும் என்பது கருத்து. சம்வித்தத்துவமாகிய சோதித்துவம்பதார்த்தத்தில் தியானஞ் செய்துகொண்டு இருப்பவனுகியேல் ஹே அனகனே! அதனினும் அதிகமான யத்தனத்தினுலே மிக மேலான அந்தத்தற்பதத்தை யடைந்துவிடலாம்.

(ச.) சத்தா சாமானியநிட்டையிலோ அதனினும் பிரயத்தன விசேடஞ் செய்யவேண்டுமென்பது பொருள். சித்தத்துவசமாதியிலாயின் அதனினும் அதிகமாக எத்தன விசேடஞ் செய்யவேண்டுமென்பது பொருள். (46)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல், சோதனையினுலே சம்விதங்கிசத்திற்கு ஹானமாகச் சம்வேத்திய அங்கிசத்திற்கே தியானமும் உபாயம் ஏன் ஆகமாட்டாதெனின்? அசக்கியத் தன்மையாலெனக்கூறல்:—முந்தென்பது.

முந்துவெறிதே யறிபொருளிற் றியானந்தோன்று முகில்வண்ண
விந்தவறிவின் சம்பவத்தா லென்றுமெங்கு மெய்தாதாற்
றொந்தமான வாதனையை வருந்தித் துடைத்தாயெனி லதனல்
வெந்தவாதி வியாதியெலாம் விரைவிற்றுகளா யகன்றிடுமே.

(ப - ரை.) முந்துவெறிதே யறிபொருளிற் றியானம் தோன்று முகில்வண்ண = நவகனசியாமமேனியாய்! முன்னர்க்கேவலம் சம்வேத்தியத்திற்றியானம் சம்பவிக்கமாட்டாது, இந்த அறிவின் சம்பவத்தால் = இந்தச்சம்வித்தியின் சம்பவத்தால், என்றுமெங்கு மெய்தாதால் = எப்பொழுதும் எவ்விடத்தும் கிடைக்கமாட்டாது, தொந்தமான வாதனையை வருந்தித் துடைத்தாயெனில் = துவந்துவமான வாசனையைப் பிரயாசப்பட்டுப் போக்கினையானல், அதனல் வெந்த ஆதி வியாதியெல்லாம் = அதனுலே துன்புறுத்திய உண்ணோய் வெளிநோய்கள் யாவும், விரைவிற்றுகளா யகன்றிடுமே = அதிசீக்கிரத்திற் பொடிப்பொடியாய் விலகியேபோம். ஆல் அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) கேவலந் திருசியத்தின் கண்ணே கேவலந் தியானம் ஹே இராகவனே சம்பவிக்கமாட்டாதாம். இவ்வறிவிற்கு எத்தேயத்திலும் எக்காலத்திலும் சம்பவ முண்மையினனே. திருசியங்களினு முன்னிலங்குந் திருக்கைமறைத்தல் கூடாமையின், அதனை மறைக்கில் திருச்சியத்திகழ்வே கூடாமையின் அத்தியானுயோகத்தானும் என்பது பாவம், சிந்தன சிந்தனீயாதிகட்குச் சம்வித்தநீனசித்தியுடைமையைக் காட்டல்:—தொந்தமென்றது சிந்திக்கின்றதும் செல்கின்றதும், செறிகின்றதும் செய்கின்றதும், எது எதுவோ, அதன்பால் அதன்பால், இருப்பது அறிவு அறிவே அதுவேயஃதாம்! யாது சிந்திக்கின்றனை நீ அது அறிவேயாம், யாதுசிந்தை யதுவும் அறிவேயாம், யாவற்றிற்குமே சம்வித்தத்வகத்தன்மை வுண்மையின் என்பது பொருள். உபாயாந்தர முறைத்தல்:—வாசனையென்பது. வாசனையை நன்ருக அகற்றுவதிலும் மனேநாசத்திலும் பெருமுயற்சிசெய்தியேலாயின், அதனல் எல்லா ஆதிவியாதிகளும் கணத்திற் சிதிலத்தன்மையை யடைந்தோடிப்போம். ஆல் என்பதை யேதுவாகத் தோன்றுவென்பதற் கமைப்பினும் அமையும், அமையுமாறும், திருக்குவையன்றித் திருசியம் லப்தமாகாமையின் என்பதாம், தொந்தமானதும் அதனையே காட்டும், விவகாரத் திருட்டிபற்றித் தொந்தமெனலாம். பதவுரையில் வாதனைக்கு விசேடணமாக்கியது அச்சுலோகத்தை யெடாமைபற்றியாம்.

(ச.) வெறிது = கேவலமான அறிபொருளிற் றியானமே, தோன்றுது = சம்பவியாது, இந்த அறிவின் = இவ்வறிவுக்கே, என்றுமெங்குஞ் சம்பவத்தால், எய்தாதால் = கேவலமான அறிபொருளினது அசம்பவத்தாலென்பது பாவப்பொருள். (47)

(ஸ்ரீ-வீர - அகை.) இஃதென்னே முன்னர்ச் சொன்னவற்றினின் றும் சுகமமோ எனின் அன்றெனல்:—முன்னமென் பது.

முன்னஞ்சொன்ன வருத்தங்கண் முழுதுஞ்செயினும் வேரோடே
சொன்னமலேயைப் பிடுங்கிடினுந் தொடர்வாதனையை விடலரிதா
லுன்னுமன மெம்மட்டொழியா துறுவாதனை யம்மட்டழியா
தன்னபடி வாதனையெம்மட் டழியாதுள மம்மட்டொழியா.

(ப - ரை.) முன்னஞ்சொன்ன வருத்தங்கள் = முற்கூறிய முயற்சிக் கஷ்டங்கள், முழுதுஞ்செயினும் = யாவும் நிறைவேறினும், வேரோடே சொன்னமலேயைப் பிடுங்கிடினும் = மூலத்தோடும் சுமேருபர்வதத்தைப் பெயர்த்தெறியினும், தொடர்வாதனையைவிடலரிதாம் = வெகு ஜன்மங்களிற் சம்பாதித்த வாசனையைவிடுவது முடியாத காரியமாம், உன்னுமனமெம்மட்டொழியாது = எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணும் மனம் எத்துணை யகலமாட்டாதோ, உறுவாதனை யம்மட்டழியாது = பொருந்தியவாசனை யத்துணை யகலமாட்டாதாம், அன்னபடி = அவ்வாறு, வாதனை யெம்மட்டழியாது = வாசனையானது எத்துணையகலமாட்டாது, உளமம்மட்டொழியா = உளமானது அத்துணை யழியமாட்டாது.

(ஸ்ரீ - வீர.) பூர்வம்புகன்ற பிரயத்தனங்க ளியாவற்றினும், இதுதான் விடமமாமென வெண்ணப்பெறும், நல்லதங்கமலேயைக் கெல்லியெறிவதினும், வாசனையை விடுவதானது மிகவும் முடியாத காரியமாம். சுலபமாக முடியாதென்பதைப் பொருத்தி யுரைத்தற்பொருட்டுப் பரஸ்பராதீனத்தன்மையை யுரைத்தல்:—மனமென்பதாகி. எத்துணை மனம் விலீனமாகமாட்டாதோ, அத்துணை வாசனுக்ஷயமாகமாட்டாதாம், எத்துணை வாசனைக்ஷீணமாக மாட்டாதோ அத்துணையுஞ் சித்தம் அழியமாட்டாதாம். (48)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் தத்துவஞானத்தோடுங்கூடவும், பரஸ்பராசிரயத்தன்மை யிவற்றிற்குளதாமெனக்கூறல்:—உண்மையென்பது.

உண்மைஞான மெம்மட்டும் வாராதம்மட் டுளமழியா
திண்மையுள மெம்மட்டழியா திகழ்தத்துவ மம்மட்டெய்தா
தண்மையுறு வாதனையெம்மட் டழியாதம்மட் டுணர்வணுகா
வண்மையுணர் வெம்மட்டணுகா வருவாதனை யம்மட்டழியா.

(ப - ரை.) உண்மைஞானம் = தத்துவஞானம், எம்மட்டும் வாராது = எத்துணையும் வரமாட்டாதோ, அம்மட்டுளமழியா = அத்துணையும் மனமாளியாகமாட்டாது, திண்மையுளமெம்மட்டழியா திகழ்தத்துவ மம்மட்டெய்தாது = திடமான மனம் எதுபரியந்தங் கெடாதோ விளங்காநின்ற ஆன்மவஸ்து அதுபரியந்தம் அடையமுடியாதாம், அண்மையுறு வாதனை யெம்மட்டழியா தம்மட்டுணர்வணுகா = சமீபித்துற்ற வாசனை யெதுகாறும் கெடாதோ அதுகாறும் ஆன்மஞானம் உண்டாகமாட்டாதாம், வண்மையுணர் வெம்மட்டணுகா வருவாதனை யம்மட்டழியா = ஆனந்தத்தைத்தரும் ஞானம் எதுகாறும் அடைவுறுதோ மனமானதும் அதுகாறும் அழியமாட்டாது.

(ஸ்ரீ - வீர.) எவ்வளவும் தத்துவவிஞ்ஞானமிலதோ அவ்வளவும் சித்தசாந்தி யெங்ஙன முளதாம், எவ்வளவும் சித்தவுபசமமிலதாமோ அவ்வளவும் தத்வவேதனமு மிலதேயாம், எதுகாறும் வாசனையின் நாசமிலதாமோ அதுகாறும் தத்துவஅவகமம் எங்ஙனமுண்டாம், எத்துணைதான் றத்துவசம்பிராப்தியிலதாமோ அத்துணையும் வாசனுக்ஷயமிலதாம். (49)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மொழிவுற்ற மூன்றும் பரஸ்பரம் ஏதுவையுற்றுக் கடினமாம், ஆயின் அதன்சித்தியில் யாதுதானுபாயம் என்றிடின் வைராக்கியபூர்வகம் ஒருமித்தே மூன்றனப்பியாசமாமெனல்:—செறிவா என்பது.

செறிவா ஞானமனமாய்வு திரள்வாதனைமாய் விம்மூன்றும்
பிறிதாங்கார ணங்கடமைப் பெறுசாதித்தற் கரிதாகும்
நெறியாமதனால் விவேகிகளா னிலைகூர்புருட வருத்தத்தாற்
பொறியார்போக மயல்தூரப் போக்கிலிவைதாம் பொருந்துவதாம்.

(ப - ரை.) செறிவாஞானம் = தத்துவஞானம், மனமாய்வு = மனோநாசம், திரள்வாதனை = திரண்டவாதனைகளின், மாய்வு = நாசம், இம்மூன்றும் = இந்தமூன்றும், பிறிதாங்காரணங்க டமைப்பெறு = பரஸ்பரம் காரணத்தகைமையைப்பெற்று, சாதித்தற்கு அரிதாகும் = துர்ச்சாத்தியங்களா யிருப்பனவாம், நெறியாமதனால் = இம்முறைமையால், விவேகிகளால் = விசாரவான்களால், நிலைகூர்புருடவருத்தத்தால் = ஒரேமுகமாய்ச் செய்யும் மாறாத புருடயத்தனத்தினாலே, பொறியார் போகமயல்தூரப் போக்கில் = போக்கியங்களை யநுபவிக்கும் போக இச்சையை வெகுதூரத்தில் விடுத்துவிட்டால், இவைதாம் பொருந்துவதாம் = இம்மூன்றும் இயைவதாம்.

(ஸ்ரீ - வீர.) ஆன்மஞானம் உளத்தொழிவு வாசனாக்ஷயம் என்பவையே ஒன்றற்கொன்று ஹேதுத்தன்மையை யடைவுற்று, சாதிக்கமுடியாதனவா யிருப்பனவாகும் ஆகலின், ஹே! இராகவ! பௌருஷ யத்தனத்தினனே, விவேகியானே, போகேச்சையானது அதிதூரத்தில் விடுக்கப்பெற்று இத்திரயமும் நன்குபற்றப்படுதல்வேண்டும்.

(ச.) முன்னஞ் சொன்ன என்பது முதலிய மூன்றுகவியும் ஒருவாக்கியம், வாசனையை விடவரிதாம், வாசனாக்ஷய மனோநாச தத்துவஞானங்கள் அந்நியோந்நிய மநுசரித்தலின் ஒன்றொன்றாகச் சாதித்தற்கு அரிதாகும் , அதனால் மூன்றுஞ் சமமாகவே யப்பியாசிக்கவேண்டுமென்பது பொருள். விவேகத்தினால். (50)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இம்மூன்றையும் சமமாக அநுஷ்டிக்கவேண்டுமென்றும் தனித்தனி யநுஷ்டிக்கிற் பயனில்லையென்றும் கூறல்:—இனையவென்பது.

இனையமூன்றுஞ் சமமாக வியற்றாரெம்மட் டம்மட்டு
மனையபதமெய் தாவருட மாயிரங்கள் சென்றாலும்
வினையில் காலஞ் சமமாக மிகுநாளியற்றின் மிகப்பலிக்கு
நினைவி லொன்றொன் றாவியற்றி னிலைகூடா நிட்பலமாகும்.

(ப - ரை.) இனையமூன்றும் = இயம்பிய மூன்றையும், சமமாக = ஒப்பாக, இயற்றாரெம்மட்டம்மட்டும் = அப்யாசியார் எத்துணை அத்துணையும், அனையபதமெய்தா = அவ்வரியபதம் அடைய முடியாதாம், வருடமாயிரங்கள் சென்றாலும் = ஆயிரம் வருடங்களானபோதினும், வினையில் காலம் சமமாக மிகுநாளியற்றின் மிகப்பலிக்கும் = யாதொரு தடையுமில்லாமல் ஒரேகாலமாக நீள்போது பயிற்சி செய்யின் பெரும்பிரயோஜனத்தைக் கொடுக்கும், நினைவில் ஒன்றொன்றாவியற்றில் நிலைகூடாநிட்பலமாகும் = மிகுந்த சிரத்தையோடும் ஒவ்வொன்றாக வெகுகாலம் பயின்றபோதினும் சொரூபசித்தியைத் தரமாட்டாது பிரயோஜனமில்லாமலே போய்விடும்.

(ஸ்ரீ - வீர.) எல்லாவகையானுமே யவையுகபத்தாக, எவ்வளவுகாலபரியந்தம், அடிக்

கடி நன்கு அப்பயசிக்கப்படவில்லையோ அவ்வளவுகாலபரியந்தம், வருடசதங்களாலும் பத சம்பிராப்தியானதுண்டாகமாட்டாதாம். வாசனக்ஷய விஞ்ஞானமநோநாசங்களே, ஹே மகா மதியையுடையோய்! ஹே மனனசீலனே! சமகாலமாகவே நீள்போதப்யசிக்கின், அவை பெரும்பலனைத் தருவனவாம். ஒவ்வொன்றாக இவை வெகுகாலம் நன்றாக அப்யசிக்கப் பெறுவவாயினும், அப்பயிற்சியாற் சித்தியை நல்கமாட்டாவாம், மூர்ச்சைமரணாதி மந்திர சாஸ்திரத்திற்கூறிய தோடங்களானே தடையுண்டனவாய மந்திரங்கள்போலவாம்.

(ச.) வினையில்காலம், மந்திரங்கள் ஜபிக்கப்படுவதுபோலெனக் கொள்க, சிவசக்திமந்தி ரங்கள் அந்நியோந்நிய மநுசரித்தலின் ஒன்றொன்றாகச் செபிக்கின் நிட்பலமாகும் அதுபோ லென்பது பொருள். (51)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஒன்றாக வியற்றின் சபலமாமென்று திருஷ்டாந்தபூர்வகங்கூறிச் சிரகாலமப்யசிக்கவேண்டுமென வற்புறுத்தல்:—ஒக்கவென்பது.

ஒக்கவியற்றி லிம்மூன்று முளத்தின்கட்டெல் லாமொழிக்குஞ்
சிக்கலாது தாமரைநூல் வளையஞ்சிதைவிற் சிதையாதோ
தொக்கபிறவித் திரள்தொறுந் தொடர்ந்துவந்த வாதனைதான்
மிக்ககால யோகத்தின் பழக்கத்தல்லால் விடாதெங்கும்.

(ப - ரை.) ஒக்கவியற்றி லிம்மூன்றும் = இந்தமூன்றும் சமமாக அப்யசிக்கப்பெறின், உளத்தின்கட்டெல்லாமொழிக்கும் = மனோபந்தமியாவற்றையும் மடித்திடும், சிக்கலாது தாமரைநூல் = துர்லபமான தாமரைநூலானது, வளையம்சிதைவிற் சிதையாதோ = தாம ரையே கெடிற் கெடாதிருக்குமோ, தொக்கப்பிறவித் திரள்தொறும் = தொடர்ந்து வந்த வெகுஜன்மங்களிலும், தொடர்ந்துவந்தவாதனைதான் = பின்பற்றிவந்துகொண்டிருக் கும் வாசனையானது, மிக்க காலயோகத்தின் பழக்கத்தல்லால் விடாதெங்கும் = வெகுகால அப்யாசயோகத்தாலன்றி எவ்விடத்திலும் க்ஷீணமாகவே மாட்டாது.

(ஸ்ரீ - வீர.) நீள்போது பயிலப்பெற்ற இம்மூன்றுகளானே இருதயக்கிரந்திகளாய அந்தக்கரண அதன்றரும தாதாத்மிய சம்சர்க்க அத்தியாசங்கள், தூள்தூளாம், ஒருசிறிதுஞ் சேடமாகாதாம், தாமரைகெட்டவளவே அதன்தந்துக்கள் போலும். அந்நேல் திரயங்கட் குஞ் சிராப்பியாசம், யாதின்பொருட்டோவெனிற் கூறல்:—தொக்கவென்பதாதி. ஜன்மாந் தர அநந்தங்களானே பயின்றுவந்த சம்சாரசம்ஸ்திதியின் சந்ததியாகிய துவைத வாசனை யானது, சிராப்யாசயோகத்தாலன்றி யாண்டும் க்ஷீணமாகமாட்டாதாம். ஆகலின் மேலான சிரேயசின்பொருட்டு, செல்லினும், சொல்லினும் முகரினும் நுகரினும் தீண்டினும் காண்டினும், நிற்பினும் கற்பினும், நனவினும் கனவினும் இம்மூன்றனது அப்யாசவானே யாவாய். (52)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இம்மூன்றோடுங்கூட நான்காவதாகப் பிராணாயாமமும் அப்யசிக் கத்தக்கதாம், என்றுகூறல்:—பிறவாதனை யென்பது.

பிறவாதனையை விடலொக்கும் பிராணவாயுத் தடையென்று
திறமாயறிஞ ரியம்புவாற் றிடமாயதுவுஞ் செயவேண்டு
முறுவாதனையை விடிஅுள்ள முள்ளமல்லா மையையடையு
நிறையாருயிரைத் தடுக்கிலுமா நினக்கேதிச்சையது செய்வாய்.

(ப-ரை.) பிறவாதனையைவிடலொக்கும் = மலினவாதனையை விடுவதற்குச் சமான மாம், பிராணவாயுத்தடை = பிராணநிரோதனம், என்று = என்பதாக, திறமா யறிஞர் = நற்றன்மையதாகத் தத்துவவித்துக்கள், இயம்புவர் = கூறுவர், திடமாயதுவுஞ் செயவேண்டும் = மிகத்திரமாக அதனையும் இயற்றவேண்டும், உறுவாதனையைவிடி லுள்ளமுள்ளமல்லாமையை யடையும் = பொருந்திய வாசனையைத் தியாகஞ்செய்யின் சித்தம் அசித்தத்தன்மையை யடையும், நிறையாருயிரைத் தடுக்கிலுமா நினக்கேதிச்சை யதுசெய்வாய் = உடம்பைப் பூரித்துள்ள பிராணனைத்தடைசெய்தபோதினும் ஆகும், உனக்கெது சுலபமென்று தோன்றுகின்றதோ அதனையே யப்யசிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) வாசனசம்பரித்தியாகசமம்பிராணநிரோதனம், என்று, அறிவர்தத்துவவித்துக்கள், ஆகலின், அதனையு மிங்ஙனம் அப்யசிக்கலாம். வாசனை நன்முயகற்றப்பெறுவதால் மனது மனதின்மையை யடைகின்றது, பிராணனசைவின்றடையானும் ஆகின்றது, நினக்கெதையியற்ற அவாவோ அதையே இயற்றுவாய். எவ்வாறிட்டமோ அவ்வாறு செய்யலாமென்றது சுகமம்பற்றியாம்; ஒவ்வொருவர்க்கொவ்வொன்றெளிதாம்.

(சு.) வாசனை பிராணஸ்பர்தங்கட்கு ஒருங்குசேர்ந்து சித்தபீஜத்தன்மை யுண்மையின் வாசனத்தியாகத்தோடு ஒப்பாகவே பிராண நிரோதனத்தையுமறிவர்; ஆகலின் பிராண நிரோதனத்தையும் வாசனத்தியாகாதிமூன்றோ டொப்பாகவே அப்யசிக்கவேண்டும், சித்த நாசத்தில், வாதனத்தியாகம் அலது பிராணநிரோதம் ஏதுவென்பது பொருள். (53)

(ஸ்ரீ - வீர - அகை.) உயிரொடுங்கற்கும் வாதனைபோதற்கும் உபாயமறிவித்தல் :— பிராணவென்பது.

பிராணயாம வன்பழக்கம் பேணுங்குருச்சொல் லுபாயங்கள்
விராவாசனம்போ சனமியோகம் விளம்புமிவற்றா லுயிரொடுங்கு
மிராமாசங்கவிவகார மின்மைபவபா வனையின்மை
யோராகந்தி ரிடநோக்க லுரைத்தவிவற்றால் வாதனைபோம்.

(ப-ரை.) பிராணயாம வன்பழக்கம் = நீள்போதியற்றும் பிராணத்தடைப்பயிற்சி, பேணுங்குருச்சொல்லுபாயங்கள் = சேவிக்கும் ஆசிரியர் உபதேசித்தலூகங்கள், விராவாசனம் போசனம் = அங்க அமைப்பாலாற்றும் ஆசனம், நியமமாய நெய்சேர்ந்த போசனம், இயோகம் = அங்கயோகம், விளம்புமிவற்றால் = என்றியம்பும் இவைகளினாலே, உயிரொடுங்கும் = பிராணனது தடையாம், இராம = இராகவனே, சங்கவிவகாரமின்மை = சங்கவிவகாரமில்லாமை, பவபாவனையின்மை = சம்சாரபாவனையில்லாமை, ஓராகந்திரிடநோக்கல் = ஒப்பற்ற தேகந்தீர்ந்த இடத்தை நோக்குதல், உரைத்த இவற்றால் = கூறிய இவைகளினாலே, வாதனைபோம் = வாசனைக்ஷயமாம்.

(ஸ்ரீ - வீர.) பிராணயாம சிராப்பியாசங்களாலும், யோகாப்பியாச குசல குரு உபதிஷ்ட யுக்திகளாலும், சுவஸ்திகாதியாசனஜயங்களாலும் ஹிதமிதமேத்ய ஆகாரங்களாலும், இயம நியமாதியோகங்களாலும், பிராணஸ்பந்தமானது நிரோதமாம். எல்லாவஸ்துக்களினுடைய ஆதியிலும் அந்தத்திலும் மத்தியிலும், அவிப்பிரலம்பியாய் எச்சன்மாத்திரரூபமிருக்கின்றதோ அதுவே உள்ளபடியாய பொருளாம், அதனைக்கண்டுகொண்டிருத்தலானே வாசனையானது பிரவிர்த்திக்கமாட்டாது, ஞாதாஞானஞேயமென்பவை யிறந்தால் வாசனையிறக்கும், பகிர்முக ஜனசங்கரகித்தும் நிர்ச்சங்கற்பமுமாகி உற்றவாறு கொண்டவிவகாரசீலத்தன்மையி

ஞனும், சாம்சாரிக மனோரதங்களின்வர்ஜனத்தானும் வாசனைக்ஷயமாம்; சரீரநாசதரிசித் தன்மையானே வாசனை பிரவிர்த்திக்கமாட்டாது.

(ச.) அவற்றிற் பிராணநிரோதோபாயங்கூறல்:—உபாயங்கள் = முற்கூறிய யோகம், ஆசனம் = பதுமாதி, போசனம் = க்ஷீராதி, அதுவே, யோகம் = உபாயம், வாதனைக்ஷய வுபாயங்கூறல்:—இராமா, பவபாவனை = சம்சாரவேதுக்களான மலினவாசனை, இன்மை= அது விடுபடல்.

(54)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாசனைமாய்வான் மனோமாய்வைத் திருட்டாந்தமுகத்தாற் காட்டிப் பிராணாயாமம் அவசியமெனல்:—பகையென்பது.

பகைவாதனைமாய்ந் திடிற்சித்தந் தோன்றாப்பவன மொடுங்கிவிடிற்
றொகைதீர்துகளந் தரத்துண்டோ சொன்னபிராண னசைவேது
மிகையாருள்ளத் தசைவதுவே யதனாற்பிராண விசைத்தடைதான்
றகைசேர்மதிமான் களுக் கியல்பாய்த் தப்பாதியற்றத் தக்கதுவே.

(ப - ரை.) பகைவாதனை மாய்ந்திடில் = சத்துருவாகிய வாசனையானது க்ஷயமாகுமானால், சித்தந்தோன்றா = மனமானது தோன்றமாட்டாது, பவனமொடுங்கிவிடில் = காற்றுவிலயமாகிவிடில், தொகைதீர்துகள் = அளவற்றதூளிகள், அந்தரத்துண்டோ = ஆகாயத்துளவோ, சொன்னபிராணனசைவேது = கூறிய உயிரினது அசைவுயாதோ, மிகையாருள்ளத் தசைவதுவே = மிகுந்த மனச்சலனமதுவேயாம், அதனால் = அக்காரணத்தினால், பிராணவிசைத்தடைதான் = பிராணநிரோதமானது, தகைசேர் மதிமான்களுக்கு = தகைமை மிகுந்த புத்திமான்கட்கு, இயல்பாய் = சுபாவமாய், தப்பாது = விடாது, இயற்றத்தக்கதுவே = செய்யயோக்கியமேயாம்.

(ஸ்ரீ - வீர.) வாசனை வடிவத்தனசஞ்சயம் நஷ்டமாயின் இலஜ்ஜை யடைந்ததுபோலச் சித்தம் நன்கு பிரவிருத்திக்கமாட்டாது, பவனஸ்பந்தம் சம்சாந்தமாயின் பாம்சுக்கள் நபஸ்தலத்தில் என்ன வுணர்க. தூளிகட்கேபோலச் சித்தத்திற்கும் காற்றதீன அசைதலுண்மையின், என்பது கருத்தாம். யாதுபிராணபவனனது அசைவாமோ அதுவேதான் மனத்தினதுமசைவாம், ஆகலின் தூளிகளின் ராசிக்கேபோல வுலகிலுண்டாம், ஆகவே மதிமான்களால் உயிரசைவின் வெற்றியில் யத்தினம் செய்யத்தக்கதாம், அம்முயற்சியும் இருந்திருந்து ஒருமையாய மனத்தினாலே அடிக்கடி யாவிர்த்தியுடன் ஆற்றவேண்டும்; இதைக் காட்டற்கே யியல்பாய்த் தப்பாதென்றதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அடங்காத சித்தத்தை யடங்கச்செய்தல் அற்பகால அப்யாசத்தாலாதல், ஊகமில்லாமலாதல் முடியாதகாரியமாமெனவெண்ணி யூகங்கூறி யன்வயவியதிரேக திருஷ்டாந்தங்களாற் றிரப்படுத்தல்:—ஊக, உரை, யென்பன.

ஊகநன்மையா லல்லது வெலப்படா துள்ளம்
வேகமத்தமா வங்குசத் தலால்வெலப் படுமோ
வேகபோதத்தை யறிகனல் லவருடனெய்தல்
சோகவாதனை விடலுயிர் தோன்றுறு தொடுக்கல்.

உரைசெய்நால் வகையுநெஞ்சை யொடுக்குமூ கங்களாகும்
புரையிலா விவற்றுக்குள்ள மொடுங்குதல் புயன்மழைக்குத்
தரையுறு தூளிபோலாஞ் சாற்றுமூகங்களன்றி
விரைவினெஞ் சடர்ப்பார்தீபம் விட்டிரு ளிருளாற்றீர்ப்பார்.

(ப - ரை.) ஊகநன்மையால் அல்லது = யூகநலத்தினுல் அலாது, வெலப்படாதுள்ளம் = ஜயங்கொள்ள முடியாதுள்ளம், வேகமத்தமா அங்குசத்தலால் வெலப்படுமோ = உக்கிரமாகிய மதம்பொருந்திய யானையானது அங்குசமென்னும் ஆயுதவிசேடத்தாலன்றி வென்றிடலாமோ, ஏகபோகத்தையறிதல் = ஏகமாகிய சிற்சொரூபத்தை யுணர்தல், நல்லவருடன் எய்தல் = சாதுக்களுடன் சேர்தல், சோகவாதனைவிடல் = துயர்மயமாய வாசனையைத் தியாகஞ்செய்தல், உயிர்தோன்றுரு தொடுக்கல் = பிராணனை யசையாது நிறுத்துதல்.

உரைசெய் நால்வகையும் = கூறிய நான்குபிரகாரங்களும், நெஞ்சையொடுக்கு மூகங்களாகும் = மனத்தையடக்கும் யூகங்களாம், புரையிலா விவற்றுக்குள்ளம் ஒடுங்குதல் = குற்றமற்ற இவ்வுபாயங்கட்கு மனமடங்குதல், புயன்மழைக்குத்தரையுறு தூளிபோலாம் = கார் மேகம்பொழியும் நீர்த்தாரைக்குப் பூமியிலுள்ள தூளிகள் அடங்குதல் போல்வாம், சாற்றும் ஊகங்களன்றி = கூறிய யூகங்களில்லாமல், விரைவில் = வேகமாக, நெஞ்சை = மனத்தை, அடர்ப்பார் = வெல்ல இடர்ப்படுத்துவார், தீபம்விட்டு இருளிருளாற் றீர்ப்பார் = விளக்கை யணைத்துவிட்டு, அந்தகாரத்தை யந்தகாரத்தால் விலக்குவார் ஒப்பார்.

(ஸ்ரீ - வீர.) அஙிந்திதமாயயுக்தி அத்தியாத்மவித்தை சாதுசங்க சஙிதமாய்க் காட்டிய இருவகை யோகமென்னு மிவையில்லாமல் உள்ளத்தை வெற்றிகொள்ள முடியாதாம், அங்குசமில்லாமல் துஷ்டமதோன்மத்தமாதங்கத்தை யடக்கமுயல்வது போலவாம்; அத்தியாத்மவித்தையையறிதல், சாதுசங்கஞ்செய்தல், வாசனை யடியோடு மழித்தல், உயிரசைவை யொழித்தல், என்பவைகளே, யுத்திகளாம்; இவைகள் மனோஜயத்தில் மிகவும் வலுவுடையவைகளாம் என்பது திண்ணம். இவற்றுனே வேகமாய் அதனை ஜெயித்தல் பூத்தூளிகளை மழைத்தாரைகளால் அடக்கல்போலவாம்; இந்தயுக்திகளிருந்தும் சித்தத்தை ஹடமாக நியமஞ்செய்ய வாஞ்சிப்பவர், தீபத்தைவிட்டு அஞ்சனங்களானே தமத்தைக் கெடுப்பவரே யாவர்.

(ச.) சித்தசாசோபாயங்கூறல்:—விரைவில் = அடத்தினுல். (57)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விவேகத்தாலன்றி வலிதிற் சித்தத்தை யடக்கல் அசாத்தியமெனத் திருஷ்டாந்தபூர்வகம், கூறி, அடஞ்செய்யின் மனம் அஞ்சுறுமெனல்:—வலியினு லென்பது.

வலியினுல் விரைந்தூகங்க ளன்றியே மனத்தைவெல்வா
ரொலிமதக் களிற்றைக்கஞ்ச வளையநூ லொன்றுற்சேர்ப்பார்
மெலியுமம் மூர்க்கருள்ளம் வெருவிநொந் தறநொய்தாகி
நலியுமென் றென்றுநம்பா நகருற்று வெருளுமான்போல்.

(ப - ரை.) வலியினுல் விரைந்து = அடத்தினு லவசரப்பட்டு, ஊகங்களன்றியே = யூகங்களில்லாமலே, மனத்தைவெல்வார் = சித்தத்தைச் சயங்கொள்ள முயல்பவர், ஒலி மதக்களிற்றை = கர்ச்சியாநின்ற மதம்பொருந்திய யானையை, கஞ்சவளையநூல் ஒன்றுற் சேர்ப்பார் = தாமரைத்தண்டின் தந்துவொன்றுல் கட்டவெண்ணுமவரேயாவர், மெலியும்அம் மூர்க்கருள்ளம் = வாடாநின்ற அந்த மௌட்டியரது மனம், வெருவி = பயந்து, நொந்து = துக்கித்து, அறநொய்தாகி = அத்தியந்தம் க்ஷீணமாகி யற்பமாய், நலியுமென்று = கெட்டு விடுமென்று, ஒன்று நம்பா = யாதொன்றினையும் விசுவசிக்கமாட்டாது, நகருற்று வெருளும் மான்போல் = கிராமத்தையடைந்து பயப்படும் மானேமாணும்.

(ஸ்ரீ - வீர.) எந்நல்ல மூடர்கள் அடமாகச் சித்தத்தினது ஜயத்தைச் செய்ய முயல்கின்றார்களோ, அவர்கள் உன்மத்தமாய நாகேந்திரத்தைத் தாமரைநூல்களினாலே கட்டியுருட்ட உத்தேசித்தவர்களே யாவர்கள். கூறிய இலக்கணநால்வகை யுக்தியை அத்தியந்தம் விடுத்து வேறுபாயத்தால் உள்ளத்தையும் உள்ளத்தருகுள்ள சரீரத்தையும், யாவர் நிலைபெறுத்த முயல்கின்றார்களோ, அவ்வடஞ்செய்யும் புருடர்களைச் சாம்பிரதாயிகர்கள் வீண் சிரமத்தை யுடையவர்கள் என்றெண்ணுவார்கள் அவர்கள் பயத்தின் மேற்பயத்தையே கிலேசத்தின் மேற்கிலேசத்தையே யடைவார்கள். மேலு மவர்கட்குச் சற்சாஸ்திர சன்மார்க்கந் தவறிப்போனதால் அனர்த்த பரம்பரையே பலமாம் அன்றிச் சித்தாதி செயமாகமாட்டாதென்பதாம். பிராணசம்ரோதனமானது அடக்க முடியாததை யடக்கு முபாயமாதலின் அடமேயாம், என்றாலும், சற்சாஸ்திரகுரு உபதிட்டமார்க்கரகித மற்றவையேயாய உபவேசன சயன காயசோஷண மந்திரயந்திர மசானசாதனாதி சாஹசரூப பிடிவாத அடங்கள் ஈண்டு விலக்கப்பெறுகின்றனவாம் என்றுணரத்தக்கது. அவர்களுடைய மதியானது மிகவுங் கலங்கிச் சீரணமாகிக் கோமளமாகி யற்பமாய் எவ்விடத்திலுமே விசுவாசமற்று, கிராமஞ்சேர்ந்த பெண்மானேபோல வெருண்டலையும்.

(ச.) வலியினால் = அடயோக சம்பந்தத்தினால். (58)

(ஸ்ரீ-வீர - அ-கை.) நிச்சிதமாய மோக்ஷபலத்தையுடைய தருமமேகமெனப் பெயரிய சமாதியப்பியாசத்தை விடுத்து, வெகு கிலேச அற்பபலமுடைய, சந்தித்த மோக்ஷபலகயாகதானாதியநுஷ்டானமும் கிலேசமாத்திரமெனப் பிரகிருதப்பிரசம்சையின்பொருட் டுரைத்தல்:—தவமென்பது.

தவமகந் தீர்த்தந்தேவ வருச்சனை தானமாதி
யவமயக் கத்தானீணாள் விலங்குபோ லவத்தர்வாழ்வர்
பவமுறு மிவற்றைவிட்டுப் பரிசுத்த பரமபோதங்
கவரறப் பற்றியெல்லாக் காதலு நீக்கிநிற்பாய்.

(ப - ரை.) தவம் = கிருச்சிரசாந்திராயணாதிதபம், மகம் = சோமாதியாகம், தீர்த்தம் = ஸ்ரீ கங்கையாதிதீர்த்தம், தேவவருச்சனை = தெய்வார்ச்சனை, தானமாதி = தன்னைப் பிறர்தாக்குதலாந் தானமுதலிய, அவமயக்கத்தால் = வீணான்பிராந்தியினாலே, நீணாள் = வெகுகாலம், விலங்குபோல் = மிருகம்போல, அவத்தர்வாழ்வர் = பௌருஷமில்லாதவர் காலங்கழிப்பர், பவமுறுமிவற்றைவிட்டு = சனனந்தரும் இவற்றைத் தியாகஞ்செய்து, பரிசுத்த பரமபோதம் = பரமதாய்தான உயர்ந்த சேதனத்தை, கவரறப்பற்றி = தன் சொரூபமாகவே யுணர்ந்து, எல்லாக்காதலும் = சகலஆசைகளும், நீக்கிநிற்பாய் = அகற்றிவாழ்வாய்.

(ஸ்ரீ - வீர.) ஆராய்வில்லாதவர் மனக்கவலை யொருகோடி யுடையவராய், யஞ்ஞதபோதான தீர்த்ததேவ அர்ச்சனப்பிரமங்களானே வெகுகாலத்தை மிருகங்கள்போலக் கழிப்பர். ஆகையால் வருணித்த ஹடாதிலக்ஷண இவற்றை நன்றாகப் பரித்தியாகஞ்செய்து, கெட்டதிருட்டியையும்விட்டு, ஹே இரகுநந்தனனே! சுத்தமாயசம்வித்தை யுணர்ந்து வீதராகனாய்த் திடமுடையவனாய் வாழ்தி. (59)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஏகத்திலேயே நாட்டமுற்றுக் கவலையற்றிருப்பாய் என்றிதங் கூறல்:—நோக்கென்பது.

நோக்கும்பொருளற் றறநன்ருய் முதலாய் நுணிக்குங் கருத்தற்றுத்
தாக்குமறிவின் பதமான வொன்றைநாடிச் சான்ருேனே
வீக்கும்விசார மறவிதயத் துறைவாய்தொழிலை மேவுகினு
மாக்கஞ் செய்வா னலாதபத மடைநி சமமாஞ் சீர்விளங்க.

(ப - ரை.) நோக்கும் பொருளற்று = திருசியமின்றி, அறநன்ருய் = அத்தியந்தம் உத்தமமாய், முதலாய் = முதன்மையதாய், நுணிக்குங் கருத்தற்று = நிருவிகற்பமாய், தாக்கும் அறிவின்பதமான = அறியும் சேதனபதமாய், இலங்கும், ஒன்றை = ஏகமாய வஸ்துவை, நாடி = அநுசந்தானஞ் செய்துகொண்டு, சான்ருேனே = விவேகியாகிய இராகவனே! வீக்கும் விசாரமற விதயத்துறைவாய் = வீழ்த்தும்படியான கவலையொன்று மின்றி யிருதயத்தின்கண்ணே யிருப்பாய், தொழிலைமேவுகினும் = நுகர்வினைவயத்தானே விவகரித்தபோதினும், ஆக்கஞ்செய்வானலாதபதம் அடைநிசமமாம் சீர்விளங்க = கருத்தா வல்லாத பதத்தை அடைந்து சமமுடையவனுக்வே விளங்குதி.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாத்மாவே! சம்வேத்ய வர்ஜிதமாய், அநுத்தமமாய், ஆத்யமாய், ஏகமாய், சம்வித்பதமாய், நிர்விகற்பமாய் நிர்வாசனமாய் நிர்விகாரமாய், உள்ளபதத்தை யநுசந்தித்து, கலனுகிதனுய் = கலனை = சித்தத்தின்பாகிய உன்முகத்தகைமை, அதன் நிரோதசீலனுய், இருதயத்திலிருக்கும் பிரஹ்மத்தின்கண்ணே யிருப்பாயாக, எழுந்த காலத்திலோ தக்கபடியாய கிரியையைச் செய்தபோதினும்; சொரூபத்திலுற்ற பரம உபசாந்தியினுனே ஒன்றையும் நாடாமல் முன்மொழிந்த ஜீவன்முக்தகுணசம்பத்தை யுடையவனுய், அகர்த்துருபதத்தை யடைந்து சுகமாயிருந்து வாழ்தி. (60)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டாதியில் அற்பதரமாய விசாரத்தினதூஉம், சித்தநிக்கிரகத்தினதூஉம், ருசியுற்பாதன பிரவர்த்தனவாயிலாய் முறையாக மோக்ஷத்திற் பரியவசானம் ஆமென்றுரைதல்:—தனதென்பது.

தனதுமனத்தை யொருக்காலே விசாரத்தாலே சமிப்பித்த
வனகன்பிறவிப் பயன்பெற்ருே னற்பமெனினும் மிதயத்தே
வினவுவிசார மெழிலதுதான் விடாதுபழகு மியோகத்தாற்
கனமதாகிப் பல்விதமாங் கப்பாயிரமாய்ப் பலவாகும்.

(ப - ரை.) தனதுமனத்தை யொருக்காலே விசாரத்தாலே சமிப்பித்த வனகன் பிறவிப்பயன்பெற்ருேன் = தன்னுடைய மனதை யற்பகாலமேனும் ஆராய்ச்சியானே நிக்கிரகித்த தூயோன் ஜன்மமெடுத்த பிரயோஜனத்தை யடைந்தவனுவன், அற்பமெனினும் இதயத்தே = அணுவாயினும் மனத்தில், வினவு விசாரமெழில் = உசாவும் ஆராய்ச்சியுதயமாயில், அதுதான் = அவ்வுதயமாயது, விடாதுபழகு மியோகத்தால் = இடைவிடாது அப்யாசிக்கும் யோகசாதனையால், கனமதாகி = பெரியதாகி, பல்விதமாம் = நானுவிதமாம், கப்பாயிரமாய்ப் பலவாகும் = ஆயிரஞ்சாகைகளாய் விரியாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) சிறிது விசாரத்தானும் தனது மனதின் நிக்கிரகம் சிறிது செய்தபோதினும், அவ்வறினுனல் ஜன்மத்தினது பியோஜனம் அடையப்பெற்றதேயாம். ஜன்மத்தின் பலம் என்னு மிதனுனே விசாரசூனியனது ஜன்மமே நிட்பலம் எனத் தொனித்ததாயிற்று. அவனது ஜன்மசாபல்ய உபயோகித்தன்மையானது உபாதிக்கப் பெறுகின்றது:—அற்பமென்பதாதி. எவ்விவ்விசாரகணிகை இருதயத்தின்கண்ணே கோமளமாக வுண்டாகின்

றதோ. விசாரகற்பவிருக்ஷத்தின் கணிகையென்னும் அங்குரமானதிலங்குகின்றதோ, அவ் விதுதானே அப்பியாசயோகத்தால், சதசாகத்தன்மையை யடைகின்றது. (61)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விசாரமே பாலிக்கத்தக்கதென்றும் விசாரமிலதேன் மிருதசமான மென்றும் கூறல்:—தக்கவென்பது.

தக்கவிசார மெனும்பூத்த தருப்பூவட்டத் தொருதாளாய்த்
துக்கவிசாரச் சூறைக்காற் றசைத்தற் கரிதாய்த் துவட்சியிலா
மிக்கநிலையா நிலைபோக்கு விழித்தலுறங்க லுளோர்மனத்திற்
புக்கவிசார மில்லாரேற் பொன்றினோரமெனப் புகல்வர்.

(ப - ரை.) தக்கவிசாரமெனும் பூத்ததரு = தகுந்த ஆராய்ச்சியென்னும் புஷ்பித்த விருக்ஷம், பூவட்டத்தொருதாளாய் = மகற்பீடத்தே வேரூன்றியதாய், துக்கவிசாரச் சூறைக் காற்றசைத்தற்கரிதாய் = துயரமயச் சிந்தையாஞ் சூறவளி சலிப்பித்தற்கு முடியாததாய், துவட்சியிலா மிக்கநிலையாம் = அசையாத அதிதிரநிலைபேறும், நிலைபோக்கு விழித்தல் உறங்கல் உளோர் மனத்தில் = நிற்றல் நடையோடல் நனவு கனவுள்ளவருள்ளத்தில், புக்கவிசாரம் இல்லாரேல் = புகுந்த ஆராய்ச்சியற்றவரேலாயின், அவர், பொன்றினோரமெனப் புகல்வர் = மிருதமாயினர் என்றே புகலப்பெறுவர்.

(ஸ்ரீ - வீர.) அக்ருஹீதமஹீபீடமும் = கவரப்பெறாத மகத்பீடம் மூலபந்தனம் எத னால் அதனை, ஏகதேச விசாரமென்னும் ருதுசம்பந்தமான புஷ்பமயமேயாய்ப் பலிதமாகாத தாய், உள்ள விருக்ஷம்போன்றதை, சிந்தாகுலக்காற்றானது குலுக்கும், அது அத்திரத்திதி யுடையதாம் நிலைநலமுடையதல்லவாம்; இதனானே விசாரவித்திகாலத்தில், பிரமாதத்தானே யிராகாதிமிருத்தியுவினாலே இது விழுங்கப்பெறும் என்னுங் கருத்தாலுரைத்தல்:—நிலை யென்பதாதி. இருந்தபோதேனும் நடந்தபோதேனும் கனவிலேனும் நனவிலேனும், எவ னதுசித்தம் எக்கால் விசாரமயமாகவில்லையோ, அக்கால் அவன் மரித்தவனென்றே யுரைக் கப்பெறும். அவ்வாறே லைங்கமும்:—அது தானனியாமதுமகற்சித்திரம், அது அந்தத் தன்மையாம் அது மூகத்தன்மையாம், எது கணமேனும் மனுமுகூர்த்தம், சிது சிவமொன் றைச் சிந்தைசெயாமையே என்பதாகக்கூறும். இது அக்கிருஹீதமென்னும் பாடம்பற்றியாம், பதவுரையோ ஆக்கிருகீதம் என்னும் பாடம்பற்றியாம், பிற்பாடம்பற்றியே கவியாகலின்.

(ச.) பீடத்துறுதாளாய் = எவ்விடத்துங் கிரகிக்கப்படும், ரூடமூலமாய், அதனாலே, மிக்கநிலையாம் = ஸ்திரப்பிரதிஷ்டையாம், ஆதலின், துவட்சியிலா=,அசலமான, விசாரரூப மெனும் பூத்தருவசைத்தற் கரிதாம். (62)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விசாரமே மிகவும் மேலானதென விளம்பல்:—கெடாதவென்பது.

கெடாதசிற் கண்ணனீதான் கிளர்மேலவர்க ளுடனேதான்
விடாதிவ் வுலகே தியாமாரென் றுறைக்கமெல்ல விசாரிப்பாய்
தடாதுட் பொருட்டோர் வித்தைக்கு விசாரந்தானே் தனிஞானங்
கடாவி யறியத்தக்கததிற் காணும்பாலின் மதுரம்போல்.

(ப-ரை.) கெடாதசிற்கண்ணால் = மறைபடாத்தாய அத்தியாத்ம திருஷ்டியால், நீதான் நீ சுயமேயாதல், கிளர்மேலவர்களுடனேதான் = நிராசையையுடைய சற்சனர்களுடனுதல், விடாது = இடைவிடாமல், இவ்வுலகேது = இந்த ஜகத்தானது எவ்வாறுண்டாயது, இயாமார் = இத்தச்சகத்தாடம்பரத்தில் விளையாடித்திரியும் நாமியார், என்று = என்பதாக,

உறைக்க = அழுத்தமாக, மெல்ல = சாவதானமாக, விசாரிப்பாய் = ஆராய்வாய், தடா துட்பொருடேர் வித்தைக்கு விசாரந்தானே தனி = தடையில்லாமல் அத்தியாத்மவித்தைக்கு ஆராய்ச்சிதானே யொப்பற்ற காரணம், ஞானம் கடாவி = ஆராய்ந்தெழுந்த அந்த ஞானமாம், அதில் = அதன்கண், அறியத்தக்கது = ஞேயமானது, காணும் = தோற்றும், பாலில் மதுரம்போல் = க்ஷீரத்தின்கண்ணே மாதுர்யம்போல.

(ஸ்ரீ - வீர.) இஃதென்னே, இவ்வுலக மெங்கிருந்து வந்தது பின்னெங்கே போம் இப்போ தெதன்கண்ணிருக்கின்றது என்பதாகவும், இத்தேகமென்யானு எனக்கயலா? இவையாவு மறிவா ஜடமா? என்பதாக இரவும் பகலும் மெதுவாக அதிவலிதாக, அத்தியாத்மதிருஷ்டியினுனே, நீயேதான் ஏகனுக ஏகாந்தத்தினுதல், சற்புருடர்களோடாதல், ஆசாரியனேடாதல், சகாபாடிகளுடனுதல், ஆராய்ந்து பார்த்தி. விசாரத்தினுலேயே பரம பதமுண்டாம் விரைவில் பிரமாத அந்தகாரத்தை யகற்றலால், மிக்கொளிரும் சோதி விளக்காலேபோல விமலமானவஸ்து விளங்காநிற்கும், விசாரத்தினுலே பலம் அவசியமாகவே யுண்டாம். ஞானபலமிரண்டுண்டாம், ஆலோகவிலாசஞ்செய்துகொண்டெழுந்த பானுவினுற் றமங்கட்கேபோல ஞானத்தினுலே சர்வதுக்கங்களின் விநாசம் நன்குண்டாகின்றது; ஞானமானது பிரகடத்தன்மையை யடையவே, ஞேயமானது சுயமாகவே யத்தியந்தம் உதயமாம், இரவியானது இனிது உதித்த அளவே பூமியின்கண்ணிர்மலமான ஆலோகம்போல. எச்சான்திரவிசாரத்தானே பிரஹ்மதத்துவம் நன்குணரப்பெறுமோ அதுபானமெனப்பெறும், ஞேயத்தினும் = பிரஹ்மத்தினும், ஞேயப்பிரஹ்மாகாரத்தன்மையானும் பேதபாதரூபத்தன்மையானும், அபின்னம்போலத் திடப்பிரதிஷ்டிதமாம்; இது ஞான இலக்ஷணமாம். விசாரத்தாலெழுந்த ஆன்மவிஞ்ஞானமே ஞானமெனப் பெரியோர் அறிவர் குழந்தாய்! ஞேயமானது அதனத்துள்ளேயே யிருக்கின்றது, பயசின்பால் மாதுர்யமென்ன.

(ச.) சிற்கண்ணுல் = அத்தியான்ம திருஷ்டியால், நீதான் = சுயமாவது, தனி ஞானம் = ஞானங்கமாம், அறியத்தக்கது = ஞேயமாம், அதில் = அவ்விசாரத்தினுள்ளே, காணுவிருக்கின்றது. (63)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமநோக்குடையவனது பிரயோஜனத்தைக் கூறல்:—நன்று வென்பது.

நன்றுஞானச் சமநோக்கா னுடும்பொருட்குச் சமந்தானே
யொன்றுத்தரித்தோன் றீனமுறு னுள்ளமஞ்சான் விவசமுறு
னன்றுஞ்சுத்த மபத்தியநஞ் சடுத்ததேனு மவனருந்தி
லின்றுயிமைப்பி லிறுநொந்த திறந்ததனங்கண் டதுபோலாம்.

(ப - ரை.) நன்றுஞானச் சமநோக்கால் = நல்லஞானமயமான சமதிருஷ்டியால், நாடும்பொருட்கு = நாடாநின்ற பொருள்களுக்கு, சமந்தானே = சமமே, ஒன்றுத்தரித்தோன் = ஏகமாகத்தரித்தவன், தீனமுறுன் = தைனியமடையான், உள்ளமஞ்சான் = மனம் வெருவான், விவசமுறுன் = பரவசமாகான், நன்றும் = நலமுடைத்தாம், சுத்தம் = தூயது, அபத்தியம் = ஆகாதது, நஞ்சடுத்ததேனும் = விடத்தோடுகூடியதேனும், அவனருந்தில், அவன் புசிக்கில், இன்றுயிமைப்பில் = இல்லாததாய்க்கணத்தில், இறும் = ஜீரணிக்கும், நொந்தது இறந்தது = தண்ணிவிட்ட பழையது இரசமில்லாமற் காய்ந்தது, அனங்கண்டதுபோலாம் = நல்ல அன்னத்தைக்கண்டதுபோலவேயாம்.

(ஸ்ரீ - வீர.) நல்ல ஞானசமாலோகனுனவன், சுயம்ஞேயமயமாய புமான்ஆவன், எப்போதும் வெண்ணறைமாாந்தினவன்போன்று மதமயனாகவே யிருப்பன், அநுபூயமான பிரஹ்மாநந்தப் பிரசுரனாகவேயிருப்பன். சமசொரூபமாய் அமலமாய்ப் பரமாயுள்ள ஞேயப் பிரஹ்மத்தைத் தன்வடிவமாகவே யுணர்ந்தவனுவன், ஞானத்தை யடைந்தமாத்திரையானே அப்பொருளேயாய்ச்சுயம் அவித்தை பரதன்காரியபங்கமற்றவனுவன். அபவித்திரமாயினும் அபத்தியமாயினும், விஷசிக்தமாயினும், கோமயாதிகளாயினும், பழையதாயினும், இரசமில்லதாயினும், புசித்திடில் விரைவில், பரிஷ்கிருதமன்னம்போலும் ஜீரணித்துவிடும்.

(ச.) நன்றுஞானத்தால், ஒளியுடையோன்=சமதிருஷ்டியுள்ளவன், நாடும்பொருட்கு=ஞேயவஸ்துக்கு, சமம் = சமமானவன், மிருஷ்டம்போலும் அபவித்திராதிகளைப் புசித்துச் சீக்கிரமே ஜீரணமாம்; சமதிருஷ்டியால் நிர்ச்சங்கனுதலின், என்பது கருத்து. அவற்றில், ஒன்றுதரித்தோன் = ஒருபொருளை யாதரித்தவனுய், அசுத்தம் = உச்சிட்டாதி, அபத்தியம் = வயித்தியசாஸ்திரவிருத்தம், நொந்தது = வெகுகாலப் பழையதாதலின் கசிவுள்ளது, இறந்தது = சொரூபமாகப் பார்க்கப்படாதது, ரூபாந்தரமடைந்ததென்பது பொருள், பக்குவநஷ்டமாயது, நன்றது=நிர்த்தோடமும் குணமுள்ளதும். ம்ருஜதாது சௌச அலங்காரங்களில். (64)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் அச்சமதிருஷ்டியின் மகிமையையே புலப்படுத்தல்:—காளவென்பது.

காளகாள மொப்பனபாற் கருப்பஞ்சாறோ தன நுகரில்
விரவுபுந்தி பற்றுமன் மெய்ம்மையுணர்ந்தோர் சமமாவார்
சிரமங்கரிந்தோர் சிரந்தந்தோர் செறுனரென்னு றுறவென்னு
றுரவுஞானத் தொருநோக்கா லொக்கக்காண்ப ருட்குளிர்ந்து.

(ப - ரை.) காளகாள மொப்பன = கொடூரமான ஆலகாலவிடத்திற்குச் சமானமாவன எட்டியாதிகள், பால்கருப்பஞ்சாறோதன நுகரில் = க்ஷீரம் இக்ஷுரசமன்னம் அயிலில், விரவுபுந்திபற்றுமல் மெய்ம்மையுணர்ந்தோர் சமமாவார் = கலந்தமதி காதல் வெறுப்படையாமலசங்கமா யுண்மையறிந்தவர் ஒப்பாவார், சிரமங்கரிந்தோர் சிரந்தந்தோர் = தலையையறிந்தவர் தலையைத்தந்தவர், செறுனரென்னுர் உறவென்னுர் = பகையாகவும் நேயமெனவுமெண்ணுர், உரவுஞானத்தொருநோக்கால் = திடஞானத்தினுலே யுளதாய ஏகதிருஷ்டியால், ஒக்கக்காண்பர் உட்குளிர்ந்து = உள்ளே தண்மையையடைந்து சமமமாகவே பார்ப்பார்.

(ஸ்ரீ - வீர.) உடனே மதியைக் கெடுப்பதெனப் பிரசித்தமாய விம்பபலத்தின் விடம் போன்றனவாய் எல்லாங் கஷாயமாய ஆகறங்களின், பாலின், கரும்பினிரசத்தின், ஓதனத்தின், ஆசுவாதனஞ் செய்தபோதினும் விஷயசமதுல்லிய சித்தன் ஆவன், அசக்தபுத்தியனுவன் தத்துவஞ்ஞனுகிய பெரியோன். அவனுக்குச் சத்துரு மித்துருக்களிடத்திலும் சமதிருஷ்டியைக் கூறல்:—சிரமாதி என்பது. ஜீவிதத்தைக் கெடுத்தவனையும் கொடுத்தவனையும், பிரசாதமாதுர்யசாலினியாய ஏகரூபதிருஷ்டியினுனே இனிதாகவே காண்பன்.

(ச.) காளம் = பிரசித்தமானவிடம், காளம் = விடத்தை நிவர்த்திசெய்வதாய்ப் பிரதிவிடாதிகாரத்திற் சொல்லப்பட்ட திரவியாந்தரம், ஒப்பன = பரிசுத்தமான், அதற்கம் = அகல்மஷமான, பாற்கருப்பஞ்சாறோதனம் = அன்னம், ஆகிய இவைகளில், சமமாவர் = சமதிருஷ்டியை யுடையராம், அந்தஸ் = அன்னம். (65)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அறிஞர் சமதமத்தோடு கூடியிருப்பரெனவும் அறியாரவை யின்றி யிடர்ப்படுவரெனவும் இயம்பல்:—மூடவென்பது.

மூடவிந்தி யங்கடமை மோகவிடய நிலைதன்னி
லோடவொட்டா தூனரெவ்வ மொழிந்தபுந்தி யாற்றடுப்பர்
கேடிலுண்மை யறிந்திளைப்பற் றுணர்வாந்தன்னைக் கிட்டாரை
நீடிந்தியங்கள் கெடவருந்து நிலச்சிற்றளிரை மானினம்போல்.

(ப - ரை.) மூடவிந்தியாங் கடமை = மௌட்யமான இந்திரியங்களை, மோகவிடய நிலைதன்னில் = மயல்விடயநிலையில், ஓடவொட்டாது = தாவிழவிடாமல், ஊனர் எவ்வ மொழிந்த புந்தியாற் றடுப்பர் = சாதுக்கள் கவலையில்லாத மதியாற் றடுத்திடுவர், கேடிலுண்மையறிந் திளைப்பற்றுணர்வாந்தன்னைக் கிட்டாரை = கெடுதலில்லாத தத்துவத்தை யுணர்ந்து விசிராந்தியடைந்து அறிவாகிய ஆன்மசொரூபமாகாதவரை, நீடிந்தியங்கள் கெடவருந்து நிலச்சிற்றளிரைமானினம்போல் = சாஞ்சல்யமான புலன்கள் ஹானிமேவும்படியாக உண்ணும், இளந்தளிரை இளமானினம்போல.

(ஸ்ரீ - வீர.) சாதுக்கள் எந்தவிடயத் திதியிலுமே எந்த இந்திரியங்களையுமே எப் போதுமே இரமிக்க ஆதியெடுபட்ட சோதிமதியதனாலே விடுவதே கிடையாது. ஆயின் எவற்றை விழுங்குகின்றன இந்திரியங்கள் எனின் திருஷ்டாந்தபூர்வகம் உரைத்தல்:—கேடில் என்பதாதி, தத்துவஞ்ஞரல்லாராய் அவிசிராந்தராய் அஞ்ஞமஞ்ஞராயுள்ள மூடரை விரை வில் இந்திரியங்கள் இனிதுதின்னுகின்றன, பல்லவத்தையரிணம்போலும்.

(ச.) அச்சமதிருஷ்டியையுடையவன், அக்ஷத்திற்கு = இந்திரியத்திற்கு, பிரசரம் = ஆசக்தியை, நிகிரந்தி = விழுங்குகின்றன. (66)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்பொருள்களைப் பார்த்துக்கொண்டிருந்தபோதினும் அதரிச ஞதி தேசாந்தரத்திருக்கும் சித்தமுடையவர்களாலும், தங்களுடைய வீட்டிலிருந்தபோதி னும் பிறவிடத்தே மன்ம்போன பாமரர்களாலும் மிகுந்த மதிமான்க ளல்லாதவர்களாலும், பாலபசுவாதிகளாலும், சாதுக்களாலும், பந்தாபாவம் நன்றாக அநுபவிக்கப்பெறுகின்றது, இதன்கண் ஐயம்சிறிதும் இலையாம் விவாதமும் சிறிதுமிலையாம்; இலதாகவே, பற்றுதல் வாயிலாகப் பதார்த்த தரிசனமே பந்தஹேதுவாம், பற்றில்லாத சித்தத்திற்குப் பந்தமுறா தாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—சங்கமென்பது.

சங்கமடியாப் பொருளுண்டாஞ் சங்கமடியா வாபத்தாஞ்
சங்கமடியா வாசைவருஞ் சங்கமடியாப் பிறப்புண்டாஞ்
சங்கமறுத்தல் வீடென்பர் சங்கமறுத்தல் பிறப்பறுத்தல்
சங்கமறுத்துப் பொருள்களினீ தனிச்சீவனின்முத் தியைப்பெறுவாய்.

(ப - ரை.) சங்கமடியாப் பொருளுண்டாம் = சங்கமேதுவாகப் பதார்த்தங்களாம், சங்கமடியாவாபத்தாம் = சங்கமேதுவாக ஆபத்துக்களாம், சங்கமடியாவாசைவரும் = சங்கமேதுவாக நசைகளெல்லாம் ஆம், சங்கமடியாய்ப் பிறப்புண்டாம் = சங்கமேதுவாகச் சனனமாம், சங்கமறுத்தல் வீடென்பர் = சங்கத்தைவிடுதல் முத்தியென்பர், சங்கமறுத் தல் பிறப்பறுத்தல் = சங்கத்தைவிடுதல் ஜனனமறுத்தலாம்; சங்கமறுத்து = சங்கத்தை விட்டு, பொருள்களில் = சகல பதார்த்தங்களிலும், நீ = இராகவனே, தனி = ஒப்பில் லாத, சீவனின் முத்தியைப் பெறுவாய் = ஜீவிக்குங்காலத்திலேயே யடைவாய்.

(ஸ்ரீ - வீர.) சங்கமர்த்தங்கட்குக் காரணமாம், சங்கஞ் சம்சாரகாரணம், சங்கமாசைகட்குக்காரணம், சங்கமாபத்துக்கட்குக் காரணம்; சங்கத்தியாகத்தை மோக்ஷமென்று = வர்த்தமானதேகாதி சம்பந்தநிவிருத்தியென்று, அறிவாறிஞர், சங்கத்தியாகத்தால் அஜன்மத்தன்மையாம் = வருந்தேகாதிபந்த நிவாரணமாம், என்பதே வேற்றுமையாம்; நீ பாவங்களின் சங்கத்தை விட்டிடுதி ஹே அனகனே ஜீவன்முக்தனுதி.

(ச.) "சங்கவிகாரமின்மை" என்பது முதலியவைகூறும் இயலாதலின் சங்கமின்மை நிரூபித்தற்கு அச்சங்கத்தை யவசிய ஏயமாக நிரூபித்தல்:—சங்கமென்பது. (67)

(ஸ்ரீ-வீர - அ.கை.) சங்கத்தின்வடிவத்தை ஸ்ரீ இராகவர் வினுதலும் அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் விடைகூறத் தொடங்கலும்:—என்ற வென்பது.

என்றமுனியை யனைத்தைய மென்னும்பனிக்குச் சாற்காலந்
துன்றுகடுங்காற் றொப்பாயிச் சங்கமேது சொல்லென்ற
வென்றியிராமற் கவனுரைப்பான் மிகுபல்பொருள்பா வாபாவத்
தொன்றுமகிழ்வு பொறுமைகளை யுறுதன்மலின வாதனையே

(ப - ரை.) என்ற முனியை = எனக்கூறிய ஸ்ரீ வசிஷ்டபகவானே, அனைத்தையம் என்னும் பனிக்கு = சர்வசம்சய நீகாரத்திற்கு, சாற்காலந்துன்று கடுங்காற்றொப்பாய் = சாற்போதுற்ற வேகவாயுவுக்கு ஒப்பானவரே! இச்சங்கமேதுசொல் = இச்சங்கத்தின் வடிவமியாது கூறுதி, என்ற = என வினவிய, வென்றியிராமற்கு = இராகத்துவேடாதி வெற்றியையுடைய ஸ்ரீ இராமருக்கு, அவனுரைப்பான் = அந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரங்கூறுவார், மிகுபல்பொருள் பாவாபாவத்து = மிகுந்த பல பதார்த்தங்களின் பாவ அபாவத்தில், ஒன்றுமகிழ்வு பொறுமைகளையுறுதல் மலினவாதனையே = பொருந்தாநின்ற சந்தோடம் பொறுமைகளையடைதல் மலின வாதனையேயாம்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ இராகவர்:—சர்வசம்சய நீசாரசரன்மாருதமாகிய ஹே முனிவரே ஹே பிரபுவே! சங்கம் என்னெனப்பெறும் என்பதைச் சுருக்கமாக அடியேனுக் குரைத்தருள வேண்டும்; என ஸ்ரீ வசிஷ்டபகவானுரைத்தல்:—ஹே குழந்தாய்! இஷ்ட அநிஷ்டபதார்த்தங்களின், பாவாபாவத்தில் = சையோக வியோகத்தில் ஹர்ஷ அமர்ஷ விகாரதையே மலின வாசனையாம், எவ்விம்மலினமென்னும் இராகாதிவாசனையுளதோ அதுவே சங்கமென்று கூறம்பெறும். மூலம்:—கிமென்பது சாமான்யத்தில் நபும்சகமாம். (68)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அறிவுடையார் நிற்ப அறிவில்லாரது வாசனையே சங்கமெனல்:—சாற்றுமென்பது.

சாற்றுமலின வாதனையே சங்கமாஞ்சீ வனின்முத்தி
தோற்றுமுடற்கு மறுபிறவி யின்றியின்ப துன்பங்கண்
மாற்றிவிசுத்த வாதனைதான் மருவுஞ்சீவன் முத்தரலா
லூற்றமுடம்பெஞ் சினர்பிறவி யுறுவாதனையின் பெயர்சங்கம்.

(ப - ரை.) சாற்றுமலினவாதனையே சங்கம்ஆம் = கூறிய அசுத்தவாதனையே சங்கமாம், ஆம், சீவனின் முக்தி தோற்றுமுடற்கு, = ஜீவன்முக்தியானது பிரதீதியாம் சரீரத்திற்கு, மறுபிறவியின்றி = புனர்ஜன்மத்தை யுண்டாக்காததாய், இன்பதுன்பங்கள் = சுகதுக்கங்கள், மாற்றி = விட்டு, விசுத்தவாசனைதான்மருவும் = அத்தியந்தஞ் சுத்தவாசனை

யானது பொருந்தும், சீவன் முத்தரலால் = ஜீவன் முக்தர்களல்லாமல், ஊற்றமடநெஞ்சி னர் = விடயங்களிலழுந்தும் மூடசித்தத்தினர், பிறவியுறுவாதனையின்பெயர் சங்கம் = ஜனனமுறுவாதனையின் நாமம் சங்கமாம்.

(ஸ்ரீ - வீர.) ஜீவன் முக்தசரீரங்கட்கு மறுஜன்மகாரிணியல்லாததாய், மகிழ்ச்சிவாட்டங்களினின்றும் விடுபட்ட சுத்தவாசனையானதுண்டாம். அஜீவன் முக்தரூபர்களாய்த் தீனர்களாயுள்ள மூடசித்தர்கட்கு ஹர்ஷவிஷாதங்களோடுகூடிய பந்தனிவாசனையானதுண்டாம். அதுவே சங்கசப்தத்தானே சாற்றப்பெறும் மறுஜனன காரிணியாம், அதனோடுகூடிக் கருமஞ்செய்வது யாதோ அதுகேவலம் பந்தப்பொருட்டேயாம்.

(ச.) மடநெஞ்சினர் = மூடசித்தத்தினர்க்கு, பிறவியுறு = பவத்தைக் கொடுக்கும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சங்கமற்றிருக்குஞ் சாதனத்தைக்காட்டல்:—பிரியமென்பது.

பிரியமருவை யிடராதி பீடியாம னிற்றியெனில்
விரியுமாசை பயங்கோப மிலனாய்ச்சங்கம் விட்டவனீ
கரியதுயரா லிளையாது கலந்தசுகத்தான் மகிழாது
புரியுமாசை வசம்போகா திருக்கிற்சங்கம் போக்கினனீ.

(ப - ரை.) பிரியம் அருவை இடராதி = ஹர்ஷ அமர்ஷ விஷாதங்களினாலே, பீடியாமல் நிற்றியெனில் = இடர்ப்படாமலிருப்பையேயாயின், விரியுமாசை பயம் கோபம் இலனாய் = விரிந்த அவா அச்சம் சினம் இல்லாதவனாய், சங்கம்விட்டவனீ = நீ அசங்கனே யாவாய், கரியதுயரால் இளையாது = தகிக்கும் துக்கத்தால் வாடாது, கலந்தசுகத்தால் மகிழாது = வந்த இன்பத்தாற் பூரியாது, புரியுமாசைவசம் போகாது = பரவசமாக்கும் அவா மயமாய் மாயாது, இருக்கில் = சொஸ்தனாயிருப்பாயேல், சங்கம்போக்கினனீ = நீ யசங்கனே யாவாய்.

(ஸ்ரீ - வீர.) சந்தோஷம் பொறாமை மாற்சரியம் வாட்டம் என்பவற்றானே வேற்றுமையை வைரூப்பியத்தை, அடையாதிருப்பையேலாயின், இராகபயக் குரோதங்களை யடையாதிருப்பையேலாயின் அக்கானீயசங்கனேயாவாய். ஹே இராகவ! துக்கங்களாற் கிலானியடையாமலும், சுகங்களால் பூரிப்பை யடைந்திடாமலும் இருப்பையேயாயின் ஆசையினாற் பரவசத்தகைமையை அடையாமலிருப்பையேயாயின் அக்கானீயசங்கனேயாவாய். விவகாரங்களிலும் சுகதுக்கதசைகளிலும் விவகரித்தபோதிலும் பிரஹ்மைகரசத்தை விடாதிருக்கும்பக்ஷத்தில் நீ யக்கால் அசங்கனாகவேயிருப்பாய். (70)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேலும் அவ்வசங்கத்தன்மையையே வற்புறுத்தல்:—சம்பத்தென்பது.

சம்பத்தாபத் திரண்டினுநீ சமமாய்வந்த தனுசரிக்கி
னம்பற்சங்க மகன்றவனீ நாளுந்திரள்வத் துவிற்சமமாய்
விம்பத்திதயச் சத்துவனாய் மேவும்பகுதித் திறமயற்றி
யிம்பர்சங்க மறுத்தின்ப மிசைவாயிராம வெனச்சொன்னான்.

(ப - ரை.) சம்பத்து ஆபத்து இரண்டினும் நீ = ஹே இராகவ! நீ சம்பத்தடைந்தபோதினும் ஆபத்தடைந்தபோதினும், சமமாய்=ஒப்பாய், வந்ததனுசரிக்கில்=கிடைத்தபடி கொண்டு விவகரிக்கில், நம்பற்சங்கமகன்றவனீ = இருண்மயமாயசங்கம்விலகினவனீயென விசுவசிக்கலாம், நாளுந்திரள்வத்துவிற்சமமாய் = எப்போதும் எல்லாவத்துக்களிடத்திலும்

ஒப்பாய், விம்பத்திதயச்சத்துவனாய் = விம்பம்போல இருதயஞ்சத்துவனாய், மேவும்பகுதித் திறமியற்றி = நுகர்வினைவயத்தாற்றுனேவந்ததினியல்பினின்று விலகரித்து, ஓம்பர்ச்சங்க மறுத்து இன்பமிசைவாயிராமவெனச் சொன்னன் = இங்குள்ள சங்கமெல்லா மெடுத் தெறிந்து ஆனந்தமடைவாய் என்றுபதேசித்தருளினர்.

(ஸ்ரீ - வீர.) ஆபத்துவந்தபோதினும் சம்பந்துவந்தபோதினும் மகாமதியையுடைய நீ, உன்னுடைய பூர்வசித்தமாய சாந்திதாந்திதெளிவு சமதரிசனாதி யியற்கையைவிடாதிருக்தி யேல், மந்தரபர்வதத்தானே கடைந்தபோதினும் க்ஷீரமயமான பாற்கடல் இயற்கையான வெண்மையை விடாததேபோல, அப்போதசங்கனேயாவாய். சம்பத்து = சாம்ராஜ்யம், ஆபத்து = தரித்திராதி. சந்ததம், சமக்கிரவஸ்துஜாலங்களிலும்=போகவிக்ஷேபாதி தோறதுக் களிலும், அவைகணிறைந்த கூட்டத்திலு மிருந்தபோதினும், சமஆசயமுடையவனாய், உள்ளி லும் வெளியிலும் அதீனமான ஆசையாசகாதிதைன்னியமற்ற சத்துவமுடையவனாய், தனது வருணாசிரமஉசித சகஜக்கிரமத்திலுள்ள வியாபாரமாத்திரத்தினும் அயலாக வொரு சிறிதும் செய்யாதவனாய்ச் சுகமாய் வாழ்தியென்ற சங்கத்தன்மையை ஸ்ரீ வசிஷ்டபகவா னருளிச் செய்தார்.

(ச.) இங்ஙனம் ஆகாசகமனுபாவாதி, ஸ்ரீ இராமரதுவிஞ்ஞானபின் மலினவாசனையே சங்கமென அதனது சொரூபத்தையும் நிரூபித்ததாம்.

உபசாந்திப்பிரகரணத்தில் ஆகாசகமனுபாவாதி நிரூபண முற்றிற்று.

உபசாந்திப் பிரகரணம் சம்பூர்ணம்.

---

# நிர்வாணப் பிரகரணம்.

---

(ஸ்ரீ-வீர - அ-கை.) மங்களம்:—

முன்னுறு சிவமஞ்சா முதலிடை முடிபிலாதா
யின்னுருப் பரமவின்ப விரண்டிலா வறிவேயாகிப்
பன்னுப ரதமாயெல்லா மயல்களும் பரமதாய்தா
யென்னுரு வொளியாம்வீர விபமுகன் பொற்றாள் போற்றி.

உற்பத்திதிதி யுபசமப்பெயரிய மூன்று பிரகரணங்களால், உலகுதயதிதிலயபோதகங்க ளாய் "இயம்பிடலாகு மிதுவல விதுவல" என்பதாதி யெல்லாவுலக நிடேதங்களாய வேதாந்த வாக்கியங்கட்கு, அத்தியாரோப அபவாதநியாத்தானே யான்மதத்துவ வியுத்பாத கத்தன்மையானே, வாசனாக்ஷயமனோநாசபரியந்த ஞானத்தானே பரபுருடார்த்தத்திற்றாற் பரிய பரியவசானங் காட்டப்பெற்றது. இனி யிப்போது "யாண்டயலொன்றையுங் காணேனே, அயலொன்றையுங் கேளானே, அயலொன்றையு மறிந்திலானே, அதுபூமாவாம், யாதுபூமாவாமோ அதுவே சுகமாம் "எதினின்றும் வாக்குகண் மனத்துடனடையாவித முறத்திரும்பும்" ஆநந்தரூபப்பிரமத்தை யறிந்தே யச்சமெதனினும் எங்குமே யடையான்" அந்தவிந்தப்பிரமமபூர்வம், அநபரமநந்தர மபாஹ்யமிதுதான், ஆன்மாட்பிரமம் எலாவநு பவியாம்" நிஷ்களம் நிஷ்கிரியஞ்சாந்தங்கோதில்லது, நிரஞ்சனம், அமிருதத்தின் பரமாஞ் சேதுவைத்தக்த விந்தனம்போலுமனலத்தை, என்பதாதி சுருதிதாற்பரிய சித்தம் ஆகிய

முன்மொழிந்த சர்வசாதனசாத்திய சாக்ஷாத்கார ஞானபலத்தையுடைய நிர்வாணத்தை விற்பாதனஞ்செய்ய நிர்வாணமெனப் பெயரிய இந்தப் பிரகணத்தைக் கேட்பிக்கும் பொருட்டு ஸ்ரீ வான்மீகிபகவான் றொடங்குபவராய் ஸ்ரீ வசிஷ்டபகவானது திருவாக்கைக் கொண்டு இதோபதேசமியம்பல்: மீட்டுமென்பது.

(ச - அ - கை.) நிர்வாணப் பிரகரணம் நிரூபிக்கப்படுகின்றது. அதில், பதினைந்து கதைகளுள; புசுண்டன், தேவபூசை, வில்வபலம், சிலே, அருச்சுனன், சதவுருத்திரன், வேதாளம், பகீரதன், கிராதன் சிந்தாமணிகஜமென்னுங் கதைத்திரய கருப்பமுள்ள சிகித்துவசன், கசன், மித்தியாபுருடன், பிருங்கி, இக்ஷுவாகு, வியாதன்பூமிகைகளு மென்பனவாம்; அவற்றில், பிராணவிருத்தியநுசந்தானத்தினுல். சித்தவிசிராந்தியால், நிருவாணம் என புசுண்டர் கதையால் நிருபிக்கப்படுகின்றது; அதில் இதமுபதேசிக்கிறார்:—மீட்டு மென்பது.

## புசுண்டன் கதை.

மீட்டுமுரைப்பான் றிசைகால மறவான்மறைத லறவிளங்கி
யோட்டமிறத்த லடிமுடிவற் றொன்றாயறிவு மாத்திரமா
நாட்டுபிரம முளவேறொன் றில்லையென்றுள் ளேநாடிக்
காட்டுநானென் பதுவிட்டுக் காயமில்லாப் பெரியோனாய்.

(ப - ரை.) மீட்டுமுரைப்பான் = மறுபடியுங் கூறுவான்; திசைகாலம் = திக்குக்காலம், அறலால் = அற்றிருத்தலால், மறைதலறவிளங்கி = மறைப்பின்றி யிலங்கி, ஓட்டமிறத்த லடிமுடிவற்றொன்றாய் = அசாலமாய் அனைசுவரமாய், ஆதிமத்யாந்தரகிதமாய், ஏகமாய், அறிவுமாத்திரமாய் = சேதனமாத்திரமாய், நாட்டு = பிரதிபாதிக்கப்பட்ட, பிரமமுள் = பிரஹ்மமாத்திரமிருக்கின்றது, வேறொன்றில்லை = அயலொன்றுங்கிடையாது, என்றுள்ளே நாடி = என்பதாக ஆந்தரத்தில் நாட்டமுற்று, காட்டுநானென்பதுவிட்டு = தெரிவிக்கும் அகமென்பதுவிடுத்து, காயமில்லாப் பெரியோனாய் = சரீரமில்லாத பெரியவனாய்.

(ஸ்ரீ - வீர.) நிர்விதபரிச்சேதசூனியமாய், ஆகவே தேசத்தாலும் காலத்தாலும் தெரியாதனவாய, உபயகோடிகளாகிய பூர்வாபராவதிகளற்றதாய், துவைதமில்லாததாய், (உபசப்தத்திற்குச் சமாசத்தில் துவிவசனலுக்கில் உபயம் பிறவிடத்தே, யென அயச்சாம்) இலங்கும் ஒரு பிரமமே யுலகிலுள்ளதாம், உலகாயுமுள்ளதாம் உலகமென்னு மிருமையோ ஆரோபிதமேயாம், யாண்டும்உள்ள எல்லாபாவாகவச்சின்னமாய்ச் சாந்தமாய், சமமாய் சமாபாசமாய், சாதாரணங்களாய கோத்தன்மையாதிகளிலும் தொடர்ந்திருக்குந் தன்மையானே சமசமாசத்தையாய், அதன்பரிசேடமாக இலங்குவதாய், யாண்டுதான் உள்ள பிரஹ்மமே இருக்கின்றதோ ஆண்டு அன்னியத்தன்மை யெங்ஙனம் ஆம்? என்பதாகத்தானே எண்ணிக் கூறிய பிரஹ்மசுபாவத்தையே யநுசந்தித்துத் துணிந்து, யானென்று தேகாதிகளில் வருமபிமானத்தைவிட்டுள்ளே, தேகத்தையு மறந்து மகானாய்,

(ச.) திசைகாலாதிகளால் அநவச்சின்னமாய் ஆதியந்தரகிதமாய், சின்மாத்திரமான பிரஹ்மமேயுளது, வேறொன்று = தேகாதி, இலையென்று மிக நாடியுள்ளே, காட்டும், நானென்பது = அகந்தையை, விட்டு, பிராரத்தவசத்தாற் சீவித்திருப்பினும் அபிமான பரித்தியாகத்தினுல், காயமில்லாப் பெரியோனாய், சுவான்மாநுபவ சுகியாவாயெனப்பிற் கவியோ டொட்டுக. மூ:—அஸ்திமுக்த்வா என்னும் பாடத்திலோ, ஒரு பிரமமேயுளதாம்,

அயலொன்று மில்லையென்று எண்ணி உள்ளே யானென்றவரு மகந்தையைவிட்டு அமுக்த வபுவினனாகிச் சீவித்துக்கொண்டே சுவாத்மசுகனாவாய் என்று சேர்க்கவேண்டும். (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இதத்தையே தொடர்ந்து கூறி யறியாமையுமயலும் போக்கத் தக்கனவெனல்:—ஏகவென்பது.

(சு - அ - கை.) இதனைத்தவிரச் சம்சாரநிவிர்த்தி யாகாதெனல்:—

ஏகவுருவா யுபசாந்த மோனமெய்தி நின்னுணர்விற்
சோகமற்ற சுகியாவாய் தொடாஞ்ஞான நினைவெம்மட்
டாகும்பிரம பாவனைமே வாதம்மட்டும் புவிவலையிற்
போகமயலெம் மட்டம்மட் டுளமாதியின்கற் பனைபொருந்தும்.

(ப - ரை.) ஏகவுருவா யுபசாந்தமோன மெய்தி = ஒரேயுருவமாய் மிகுசாந்தமாய் மௌனத்தையடைந்து, நின்னுணர்வில் சோகமற்ற சுகியாவாய் = உன்னுடைய அறிவிலே சோகமில்லாத ஆநந்தியாவாய், தொடாஞ்ஞான நினை வெம்மட்டாகும் = தொடர்ந்து கொண்டிருக்கும் அறியாமையின் எண்ணம் எதுபரியந்தம் உண்டாம், பிரமபாவனைமே வாதம்மட்டும் = பிரஹ்மபாவனையானது பொருந்தாது அதுபரியந்தம், புவிவலையிற் போக மயலெம்மட்டம்மட்டுளமாதியின் கற்பனை பொருந்தும் = பூஜாலத்திற் போகமயக்கம் எதுவரையுளதோ அதுவரை மனமாதியின் கற்பனையுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) ஏகரூபனாய்ப் பிரசாந்தாத்மாவாய், சாக்ஷாத் சுவாத்ம சுகனாக ஆவாய், சித்தமுமில்லை அவித்தையுமில்லை மனமுமில்லை ஜீவனுமில்லை. சுசோபனமாய்ச் சிதாகாசமாய் ஆனந்தவடிவாயாவாய். இவையெல்லாந் தனது கற்பனைகளாகப் பிரஹ்மத்தே யாரோபிக் கப்பெற்றனவாம். பொதுவாகவுள்ள ஹேயங்களையும் உபாதேயங்களையு முபேக்ஷித்து, அதிலும் உத்தரோத்தரம் உபாதேயதமங்களாய பர்துக்களையும் ஐசுவரியங்களையும் தேகாதிகளையும் இவைபோன்றவற்றையும் உபேக்ஷித்து, ஆதிமத்தியாந்தரகிதமாய பிரஹ்மமே யுளதாமென = கடல்போலத்தரங்கபேனபுற்புதாதியற் றிலங்குகின்றதென ஒரேபடித்தா யிருப்பாய். எத்துணை அஞ்ஞான கற்பனையோ எத்துணை அப்பிரஹ்மபாவனையோ, எத்துணை ஜகத்ஜாலத்திலாஸ்தையோ அத்துணையுமே சித்தாதி கற்பனையாம், எப்போதுமே யிப்படிப் பிரதீதியாவதில்லையாம் அறியாமைகாலத்தின்மாத்திரமாம் என்பது கருத்து.

(ச.) பிரமபாவனை மேவாது = பிரமமேயீதனைத்துமென்னும் பாவனையின்மை, எம்மட்டுத் தொடரும், அதனாலே, அஞ்ஞானநினைவு = அஞ்ஞானமயமானபந்தம் எம்மட்டுந் தொடர்வதாமோ அதனால் உளமாதியின் கற்பனை, சித்தம் சீவன் அவித்தை யென்பன முதலிய பேதகற்பனை பொருந்தும். (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) திருஷ்டாந்தபூர்வகமதிட்டானமே யிருக்கின்றதென்றும் யான் எனது என்னு மபிமானமறில் மயக்கமறுமென்றும் உலகைமறந்தால் மயக்கமு மிலாதாமென்றும் உரைத்தல்:—சித்த, என தென்பன.

(ச - அ - கை.) உண்மையாகப் பேதகற்பனையின்றெனல்:—

சித்தமாயை மனஞ்சீவ னென்றுமில்லைத் திகழ்பிரம
மொத்தவொன்றாய்ப் பெருங்கடல்போ லுகண்டுவளரு முத்தமனே
பொத்தவுடலை நானெனவெம் மட்டுக்காணு மிப்பொருளில்
வத்துவெனும்பா வனையெம்மட் டம்மட்டுள்மா தியின்மயக்கம்,

எனதிதென்னு மாவெம்மட் டம்மட்டுளமா தியின்மயக்கம்
அனகவுள்ளே முகமாகி யதனான்மும்மை யுலகென்னுந்
கனமிறுரும்பை யறிவனலி லோமஞ்செய்யிற் கார்வண்ணா
மனனைமுதலா மயக்கங்க ளவனுளென்றும் வாராதே.

(ப - ரை.) சித்தம் மாயை மனம் சீவன் ஒன்றுமில்லை = சிந்தனைக்கரணம் பிரதானமும் சங்கற்பகரணம் உயிர் என்பன எவையுமே கிடையா, திகழ்பிரமமொத்த வொன்றாய் = சச்சிதானந்தமாக விளங்கும் பிரஹ்மவத்து ஏகமாய்ச் சமமாய் விகற்பாகிதமாய், பெருங் கடல்போலுகண்டுவ்வளரு முத்தமனே = உத்தமோத்தமகுணங்கணிறைந்த, இராகவனே! நித்தரங்கசமுத்திரம்போலப் பெருகி விருத்தியாய் விலங்கும், பொத்தவுடலை = பொத்தை யூன் சுவர்புழுப்பொதிந்துளுத் தசும்பொழுகிய பொய்க்கூரையாமித்தை, நானெனல் = அகமென்பது, எம்மட்டுக்காணும் = எத்துணை தோன்றும், இப்பொருளில் = இவ்வத்துக் களில், வத்துவெனும்பாவனை = உண்மையென்னும் பாவனை, யெம்மட்டு = எத்துணையாம், அம்மட்டுளமாதியின் மயக்கம் = அதுபரியந்தம் சித்தாதிமயக்கமாம்.

எனதிதென்னுமா வெம்மட்டம்மட் டுளமாதியின் மயக்கம் = இஃதென்னுடையது என்னும் மயக்கம் எதுவரையுளதாமோ அதுவரை மனமாதியின் மயக்கமிருக்கும், அனக = பாவனப்படிவனே! உள்ளேமுகமாகி = ஆந்தரநாட்டமுடையவனாகி, அதனால் = அக்கார ணத்தினால், மும்மையுலகென்னும் = திரிலோகமென்னும், கனமில் துரும்பை = அற்றமான திருணத்தை, அறிவனலில் = சித்தீயில், ஓமஞ்செய்யில் = ஆகுதிசெய்யில், கார்வண்ணா = சியாமளசொரூபா! மனனைமுதலா மயக்கங்களவனுளென்றும் வாராதே = சித்தாதி கற் பனைகள் அவனிடத்தெப்போதும் வரவேமாட்டாவாம்.

(ஸ்ரீ - வீர.) முன்மொழிந்தாம்; தேகத்திலெதுவரை யகம்பாவம், திருசியமிதனில் எதுவரை யான்மமாமதி தன்னால் எதுவரையெனது யான் என்னுமாஸ்தை செய்யப்படுமோ, அதுவரைச் சித்தாதிவிப்பிரமமாம். மகான்கள் அத்வயச்சோதியை யிங்ஙுங்காண்டலால் வாசனை யவர்கட்கிலதாமென நன்கோதல்:—அனகவென்பதாதி. சம்போதனமும் அதன் பொருட்டே. அந்தர்முகத்தன்மையானே மூவுலகதிருணமியாவற்றையும் சித்துவன்னியின் கண்ணே, ஆகுதிசெய்யும் முனிவனுக் குள்ளேசித்தாதிவிப்பிரமங்களெல்லாம் நீங்கிப் போகின்றனவாம்.

(சு.) சித்தம் = சுத்தசத்துவப் பிரதானமான அந்தக்கரணம், மனம் = இராஜோகுண மிகுதியாய்ச் சங்கற்பவிகற்பான்மகமான அந்தக்கரணம், காணுமிப்பொருளில் = அந்நியர்து தேகாதியில், வத்துவெனும் பாவனை = சேதனத்துவயுக்தி, அன்றிப்பிரதிமையாதியிற் பர மான்மபாவனை = தேவதையென்னும் புத்தியென்பது பொருள். பொத்தவுடலை யென்பது முற்கூறியதற்கே விவரணம்.

சித்தாதி கற்பனையின் நிவிர்த்தியுபாயுங் கூறல். அனக, உள்ளேமுகமாகி யதனால் = சீவான்மகன் நானென்னும் பரிபூரணத்துவபாவனையால், திரணம்போல் உபேட்சிக்கத்தக்க மூவுலகதிருசியத்தை, சர்வப்பிரபஞ்சாதிட்டான சுவான்மசைதந்நியத்தில், ஓமஞ்செய்யில் = திருக்குக்கந்நியமாகத் திருசியமின்மையின் அடக்கிக்காணில், அம்முனிக்குச் சித்தாதி விப் பிரமைகள் நிவிர்த்திப்பனவாமென்றதாயிற்று. ஆன்மபாவனையால் என்றும் பாடம். (3-4)

(ஸ்ரீ-வீர. - அவ்கை.) இங்ஙனம் சுதசத்விகற்பத்தியாகத்தானே சின்மாத்திர தரிசன மாகவே, தேகாதியான்மத்தன்மைப் பிரமத்துண்டாய ஜனனமரணாதியநர்த்தவல்ட்டவாளாய

ரோதனத்திற்கும் பிராப்தியைக்காணேம், நீயென விவகரிக்கப்பெறும் ஸ்ரீராமப் பெயரிய சதசற்சுபாவம் சரீரம் ஆத்மாச்சுயமாகாய், அசின்மயத்தன்மையான், எல்லாவுலகமும் அசின் மயமாகவே ஒன்றுமிலதென வுணர்ந்தவழி தேசாதிகற்பனேயேதான் நினக்கெங்கே? சித்து வியாவிருத்தி லக்ஷணஜாட்டியமாத்திர பரித்தியாகத்தானே எப்போதுஞ் சின்மயமே ஜகத் தென எண்ணுதியேலாயின் அக்காலம் சித்துச் சுபாவத்தை நன்காராய்ந்துபார், அதுவும் நன்கு விசாரிக்கப்பெறுவதாய்த் திரிவிதபரிச்சேதசூனியமாய்த்தூய்தாய் ஏகரசமாய், சத்துவமாய், அநாதியந்தமாய் இலங்கும் பிரஹ்மமாயேயிருக்கும்; ஆண்டுத் தேசாதியநர்த்த கற்பனே யாண்டையதாம், ஆகையால் நீசித்சொரூபனுகவே யிருக்கின்றுயென்றுபதேசித்தல்:—பட ரென்பது.

(ச.) இவ்வந்தரமுகத்துவ மியாதெனச் சங்கைவரில் அதன் சொரூபத்தைக் கூறல்:—

படர்சித்துருவாய்ப் பிரிவிலனுய்ப் பாராவாரப் பற்றிலனுய்த்
திடமுற்றுனது கனவடிவை நினேசங்கற்பஞ் சேராதே
கடனுவுயிர்கொல் லுறுபகைவன் கருத்தில்வஞ்ச மிலா நட்பிற்
ருெடர்பானவனே யெனக்காணு மவனேகண்டோன் றூய்தாக.

(பு - ரை.) படர்சித்துருவாய் = வியாபகமான சித்துருபமாய், பிரிவிலனுய் = பிரி வற்றவனுய், பாராவாரப்பற்றிலனுய் = முன்பின் சம்பந்தமில்லாதவனுய், திடமுற்றுனது கனவடிவை நினேசங்கற்பஞ்சேராதே = திரமுற்றுன்னுடைய ஏகரசவடிவத்தையெண்ணுதி சங்கற்பத்தை யடையவேண்டாம், கடனுவுயிர்கொல்லுறுபகைவன் = மகாபாதகமாக வுயி ரைக் கெடுக்காநின்ற சத்துருவையே, கருத்தில் = இருதயத்தில், வஞ்சமிலாநட்பிற்ருெடர் பானவனே = அகிருத்திரமமித்துருவாகச் சம்பந்தமுற்றவனே, எனக்காணும் = என்று பார்க்கும், அவனே கண்டோன்றூய்தாக = அம்மேலோனே தரிசித்தவனுயர்ந்த பரி சுத்தமாக.

(ஸ்ரீ - வீர.) சிதாத்மாவாகவேயுள்ளாய், நிரஞ்சனுகவேயுள்ளாய், கரையற்றதாய்க் கலக்க மற்றதாய் உள்ள உனது விஸ்தாரமானவடிவத்தை ஸ்மரித்துப்பார், சிற்சொரூபத்தைமறந்து பரிச்சின்ன பாவத்தை யடையவேண்டாம். சத்துரு சரீரத்தின்கண்ணும் தன்னுடையதே யான்மத்தன்மையால் தனது சரீரத்திற்போல அதன்கண்ணும் வஞ்சனேயில்லாதபிரீதி ஆன்ம தரிசிக்குண்டாம் எனல்:—கடனுவென்பதாதி. யாவன்றுன் அதிதரமாய சத்துருவாய் விரை வாக மரணமாற்ற முயல்கின்றனனே, அவனேயே அகிருத்திரம்மான மித்திரனென = பிரிய தமனென, யாவன் காண்கின்றனனே அவனே கண்டவனுவன்.

(ச.) பாராவாரப் பற்றிலனுய் = பூர்வோத்தராவதிரகிதனுய், பிறிவிலனுய் = நிரங்கிச னுய், சித்துருவாயுனது கனவடிவை = வியாபகமான ரூபத்தை, திடமுற்றுநினே = அநு சந்தானஞ் செய்வாய், இதுவே யந்தர்முகத்துவமென்பது கருத்து. சங்கற்பஞ்சேராதே = உனது சொரூபமறப்பாற் பரிச்சின்னனுகாதே யென்றதாயிற்று, கடனுயுயிர்கொல் பகை வனேயே, எவன் இராகத்துவேஷாதியின்மையால் வஞ்சமிலா நட்பினனென்க்காணும், அவனே பகையுறவிற் சமதிருஷ்டியுள்ள புருடன், ஆன்மதத்துவத்தை யறிந்தவனென்பது பொருள். மூ: அசியென்னும் பாடத்தில், எதனுற் சிதாத்மாவாகின்றுயோ வதனுல் நின் னுடைய வியாபகரூபத்தை நினேதியென யோஜனேயாம். (5)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதனுனே யர்ஷ அமர்ஷ தோஷ நிவிர்த்தியெனல்:—வேரிறே டென்பது.

வேரினோடு கரையின்மரம் வீழ்க்குநதியைப் போனண்புஞ்
சீரிலாத மச்சாமுஞ் சிதைத்தோர்மகிழ்வு பொருமைகளாற்
சாருமேத மறுத்தவராந் தனித்தத்துவநூ லுட்பாவித்
தோருவார்கா தலைக் கடித லுதித்தகதிர்கங் குலையொழித்தல்.

(ப - ரை.) வேரினோடு கரையின் மரம்வீழ்க்கு நதியைப்போல் = வேரோடுகூடக் கரையிலிருக்குந் தரங்களை வீழ்த்தும் யாறுபோல், நண்பும் சீரிலாத மச்சாமும் = சுகிருத் பாவத்தையும் கெடுதலான மற்சாத்தையும், சிதைத்தோர் = கெடுத்தவர்கள், மகிழ்வு பொருமைகளால் = மகிழ்ச்சிபொருமைகளினாலே, சாரும் = பொருந்தாநின்ற, ஏதம் அறுத்தவராம் = குற்றந்தீர்த்தவராம், தனி = ஒப்பற்ற, தத்துவநூல் உட்பாவித்து = அத்தியாத்மசாஸ்திரத்தை யுள்ளேயுணர்ந்து, ஒருவார் = ஆராய்பவர், காதலைக்கடிதல் = அவாவை யகற்றல், உதித்தகதிர் = உதயமாகிய சர்சாலமானது, கங்குலையொழித்தல் = பனியை யகற்றுவதுபோலவாம்.

(ஸ்ரீ - வீர.) நதியானது தன்கரையுற்ற துருமத்தைப்போல, யாவன் சௌஹ்ருதத்தையும் மற்சரத்தையும் மூலத்தோடுகூடக் கெல்லியெறிகின்றானோ அவனே, ஹர்ஷ அமர்ஷ தோஷங்களின் ஹந்தாவாம். சமூல உபபதத்தாற் கஷிக்குணமுமுளதாகக் கஷாதிகளில் விதிப்படி யனுப்பிரயோகமாம். அத்தியாத்மசாஸ்திரமந்திரத்தானே திருஷ்ணையாகிய விஷ விஷூசிகைவியாதியானது நல்ல ஆராய்ச்சியினால், சரத்போதால் இமமேயென்ன, க்ஷீணமாம்.

(ச.) நண்பும் = இராகத்தையும், மச்சாமும் = துவேடத்தையும், வேரினோடும் = வாதனையோடும் விடுத்தபுருடரே, மகிழ்வாதிதோஷங்களை யறுத்தவராம், உட்பாவித்து = அந்தக்கரணத்தில் வெகுகாலம் வாசஞ்செய்திருக்கும் தனித்தத்துவநூலோருவார் = அத்தியான்மசாஸ்திரமந்திரத்தால், காதல்வடிவான விடஜன்ய விடூசிகை நசிக்கும். சரற்காலத்தாற் பனிப்போ லென்பதாயிற்று. (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உண்மையையுணர்ந்தவரே தண்மையையடைவர், அல்லாதாரலைவரெனல்:—பற்றவென்பது.

(ச.) அத்தியான்மசாஸ்திரம் அத்தியான்மவித்துக்கள் முகத்தினாலே சிரவணஞ்செய்யிற் சித்தத்துறும் இன்றெனில் உறாதெனல்.

பற்றத்தகுவாக் கியப்பொருளைப் பயிறன்னெஞ்சாற் பாவித்தோர்க்
குற்றுப்புகல்சொற் றிரளுள்ளே யொடுங்கும்வெந்த நிலநீர்போற்
கற்றுப்பரமப் பொருணோக்கார் கண்ணுமறிவைக் கண்டறியார்
வற்றத்திரணம் போல்வாளாத் திரிவர்மனச்செய் கையிலெவரும்.

(ப - ரை.) பற்றத்தகு வாக்கியப்பொருளைப்பயில் = உபாதேயமாய வாக்கியத்தின் அருத்தத்தை யப்யசிக்குந், தன்னெஞ்சால் = தனது மனத்தினால், பாவித்தோர்க்கு = பாவித்தவர்கட்கு, உற்றுப்புகல் = அநுபவித்துக்கூறும், சொற்றிரளுள்ளே யொடுங்கும் = எமது வாக்கியம் உள்ளேபுகும், வெந்தநிலநீர்போல் = உஷ்ணித்தபூமியி லப்பொடுங்கல் போல, கற்றுப்பரமப்பொருணோக்கார் = சாஸ்திரங்களைக்கற்று மேலாயபொருளை நோக்காதவர், கண்ணுமறிவைக் கண்டறியார் = அருமையாயசேதனத்தைச் சாக்ஷாத்கரியார், வற்றத்திரணம்போல் = காய்ந்ததுரும்புபோல, வாளா = வீணாக, திரிவர் மனச்செய்கையிலெவரும் = யாவரும் சித்தசலனத்தே திடுக்கிட்டுத் திரிவர்.

(ஸ்ரீ - வீர.) யான்டெம்மிடத்தேயுன்னால் உபாதேயவாக்கியத்தன்மை = ஆப்ததமத்தன்மை உளதாள்ளத்தாற் சித்திதமாமதனால், மேலான வமதாவிசன்மையன் திருதயத்தினே, புகும்; தப்தமானக்ஷேத்திரத்திற் பயம் போலும். ஆன்மார்த்தத்தைப் பரியாலோசனை செய்யாதவர், சேதனவத்துவை யுணராதவரேயாவர், அம்மூடபுத்தியுடையவர் சித்தசஞ்சலமேயுற்றுத் திரிவர், பூர்வத்திற் களுந்தமான சித்தின் மத்வர்த்தத்தில் இசிப்பின்றல்லாம், அசேதன தேகாத்மபூதங்கள் சேதனங்களெனக்கூறத் தகாதாம் என்பது கருத்து.

(ச.) பற்றத்தகுவாக்கியப் பொருளை = பெரியோர்வாய்ச்சொல்லை, தன்னெஞ்சால், பூரவித்தோர்க்கு = நிச்சயித்தவருக்கே, உற்றுப்பரல் சொற்றிரள் = ஆப்தவாக்கியம், உள்ளே = மேலான அந்தக்கரணத்தில், வெந்த நிலநீர்போலொடுங்கும். குருமுகத்தாலும் சுவாநுபவத்தாலும் விசாரஞ்செய்யாவிடின் சமுசயமே சேடிக்குமெனல்:—பரடிப்பொருள் = ஆன்மாவென்னும் பொருளைக் கூறுகின்ற அந்தியூன்மசாஸ்திரத்தை, கற்றுநோக்கார் = விசாரியாதவர், கண்ணுமறிவை = சொரூபாநாதந்மியத்தை, கண்டறியார், மனச்செய்கையில், மூடபுத்தியினால், எவரும் திருணம்போல், திரிவர் = இங்குமங்குஞ் சரிப்பர், சந்தேகமுறுவரென்பது பொருள். (7)

(ஸ்ரீ-வீர - அ-கை.) எங்ஙனம் நதியாதிப் பெருங்கூட்டங்கள் அசேதனங்களேயாயினும் விகாரவரவுபோக்கு முதலிய சேஷ்டைகளோடு கூடினவாமோ, அங்ஙனம், தன்மதிகளாயினும் என்னே, இவர்கட்கு ஆன்மசித்திலையே யென்பதாகவில்லை, மற்றே, இருந்தபோதினும் போதமின்மையின் வியர்த்தமாம் அசம்பன்னமாமெனல்:—இனையவென்பது.

(ச.) சகலஜீவருஞ் சித்ருபமாயிருத்தலின் எப்படிச் சிலர்கட்குச் சந்தேகமெனில் உத்தரம்:—

இனையயாரு மிந்தவறி விறவாதிருக்க வீதறிய
வினையமின்றி மிகச்சோர்ந்தார் வீணர்செருக்கு மிகுமுரப்பு
முனையில்வின்னு ணைசையைப்போன் மூடர்கேட்ப திறப்பதற்கே
யனையர்வீணுட்கழிப்பதலா லறியாவறிவை யறியாரே.

(பா - ரை.) இனையயாரு மிந்தவறிவிறவாதிருக்க = இந்தயாவருமே இந்தச்சேதனமானது நாசமாகாதிருக்கவும், ஈதறியவினையமின்றி = இதனைத்தெரிந்துகொள்ளச் சூக்கும மதியில்லாமல், மிகச்சோர்ந்தார் = அதிகமாகவாட்டமுற்றார், வீணர்செருக்கு மிகுமுரப்பு = மூடர்தங்கருவமும் முறுக்கும், முனையில் வின்னுணைசையைப்போல் = போர்முனையில் வில்லிற்பூட்டிய நாணினது சப்தத்தைப்போலவாம், மூடர்கேட்பதிறப்பதற்கே = மூடர் சிரவணிப்பது மரணத்தின்பொருட்டே, அனையர் = அம்மூடர், வீணுட்கழிப்பது அலால் = வீண்போது தீர்ப்பதேயல்லாமல், அறியா அறிவையறியாரே = அறியமுடியாததான துர்விஞ்ஞேய வஸ்துவைப் பிரயாசப்பட்டுச் சாக்ஷாத்கரிக்கமாட்டார்கள்.

(ஸ்ரீ - வீர.) இவ்வெல்லா மூடர்களுக்குமே இவ்வவ்யயமாகிய சித்து இருந்தேயும், என்னபிரயோஜனம் தந்தது. மற்றே அபோதவாத்தால் இதற்குயர்வாய கிருபணத்தன்மையேயுண்டாயது. அறியானுகிய மூர்க்கனினின்று முண்டாகும் சுவாசப்பரம்பரைகளே கொல்லனது துருத்தியினின்று முண்டாவனபோலவாம்; உயிர்ப்பதெண்ணில் ஊதுலைக்குருகுமற்றூங்குயிர்ப்பதுபோலும் என்பதும் இனை; ஸ்பந்தம் த்திரார்த்தமே விரைந்து நாணப்லெறுகின்றனவன்றி யர்த்தகாரிகளல்லவாம்; ஜாடராக்கினி ஸ்பந்திமாத்திரார்த்தம். இவ்வண்ணம் மூடர்களிடத்தினின்றும் உண்டாவதான ப்ரபயஜனன்மும் காஜன்னமும்;

சேதனதையின் குறியல்லவாம், மாணுதிய்ளர்த்தமாத்திர ஹேதுத்தன்மையானே சதுவின் குணத்தொனியேபோலும் எனல்:—வீணறென்பதாதி. மூடனிடத்தினின்றும் பிரட்டலும் கூக்குரலும் தனுத்தண்டகுணத்தினின்றும் போலவாம்; கேட்பதோ மாணப்பொருட்டே யாம் சிற்போதபரிவர்ஜிதமாம்; பலலாபமும் யாதுமூடனினின்றே அது அரண்யதருவினின் றும் போலவாம்.

(ச.) இனையயாரும் = சகலஜீவர்க்கும், இந்தவறிவிறவாதிருக்க = சத்தியமாய்ச் சொரூபமாகவே யிருக்கவும், ஈது = சொரூபமாகவேயிருக்கும் இச்சித்தை, அறிய வினைய மின்றி = அனுதியவித்தையா மகிமையால் அநுசந்தானஞ்செய்யாமல், அதன்வசத்தினுல், மிகச்சோர்ந்தார் = அவதியற்ற சோர்வையடைந்தார், அச்சோர்வினையே நிந்தித்துரைத் தல்:—வின்ஞெண்ஓசையைப்போல் = வில்லின்கண்ணேற்றப்பட்ட நாணினின்றும் சப்தம் உண்டாவதுபோன்று, இனி மூலப்படி:—சிற்போதபரிவர்ஜிதம் = சொரூபசித்தின் அவ போதரகிதமாய, தர்ஜு = பர்த்சனம் = அதட்டுதல், கர்ஜனம் = கண்ட கோலாஹல மும்; மரணம்பொருட்டே = பூதத்துரோகப்பொருட்டே கேட்கப்பெறுகின்றன. தனு வின்குணம்போலும் மூடனே கத்திக்கொண்டு அன்னியர்களுடைய அழிவின்பொருட்டே கற்பிக்கப்பெறுகின்ருன், ஆதலால் அவனிடத்தினின்றும் சிறிதுங்கூடக் கேட்கக்கூடா தென்பதுகருத்து. கேட்பது = மொழிவது, பிறவுய்த்துணர்க. (8)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மூடர்க்குதவியது பயனிலதென்வும், அவர்க்கு எல்லா வாபத்தும் வருமெனவும் உரைத்தல்:—ஆயவென்பது.

(ச.) அம்மூடர்கள் சன்மான தானுதிகளைக்குறித்து அற்பமும் அருகரன்றெனல்:—

ஆயமூடர்க் களித்தபொரு ளளற்றில்வீழ்ந்த பொருளொக்குந்
தீயவவரோ டுரைத்தவுரை சேணைநோக்கி நாய்குரைத்தன்
மேயமடமா பத்தினிட மெய்ம்மையுணரார்க் கெவ்வாபத்
தேயவணுகா திம்மாயை யெழுவதறிவி லோர்க்கருளால்.

(ப - ரை.) ஆயமூடர்க்களித்தபொருள் = அத்தகைய மூர்க்கர்கட் குதவிய பொருள், அளற்றில் = சேற்றில், வீழ்ந்தபொருளொக்கும் = போட்டபொருளுக்குச் சமானமாம், தீயவவரோ டுரைத்தவுரை = கொடிய அவரோடு சம்பாஷித்த வசனம், சேணைநோக்கி நாய் குரைத்தல் = ஆகாயத்தைநோக்கிச் சுவானம் குலைத்தலாம், மேயமடமாபத்தினிட மெய்ம்மை யுணரார்க்கு = பொருந்திய அஞ்ஞானம் ஆபத்துக்கிடமாம், உண்மையையுண ராதவர்க்கு, எவ்வாபத்துவய அணுகாது = எந்த ஆபத்துதான்பொருந்தவந்தமையாது, இம்மாயை எழுவது = இந்தச் சம்சாரம் விருத்தியாவது, அறிவிலோர்க்கருளால் = அறிவில் லாதவர்க்குற்ற திருவருளால்.

(ஸ்ரீ - வீர.) அதமனுயிருக்கும் அவன்பாற்றந்தது யாதோ அதுசேற்றிவிட்டதல்லாமல் வேறென்? பயனின்மைபற்றியாமென்க; அவனேடுகூடச் சம்பாஷணைசெய்தல் யாதோ அது அம்பரத்திற்கௌலேயவரவழைப்பாம், கௌலேயம் = ஞாளி, குலகுக்ஷியென்பதாதி யானே விதானஞ்செய்தடகனின்கலோபம் சாந்தசாம். இவ்வறியானை யிகழ்ந்தது, அஞ் ஞானத்தின் ஹேயத்தன்மையைக் காட்டும்பொருட்டாம், தயையாலுரைத்ததாம் அன்றி யறியார்பால்வைத்த வெறுப்பினுலல்லவாம்; என்னுங் கருத்தாலுரைத்தல்:—மடமென்ப தாதி. அஞ்ஞானம் ஆபத்துக்கட்கு நிஷ்டையாம், அறியானுக்கு யாதுதான் ஆபத்தாக முடிய

வில்லை, எல்லாம் ஆபத்தேயாம். இந்தச் சம்சாரபரம்பரையானது அஞ்ஞனுடைய பிரமாதத்தாலும், பிரசாதத்தாலும் விருத்தியாம், அஞ்ஞனுக்குக் கிரமாயதுக்கங்களும் திடமான சுகங்களும் உண்டாகிக்கொண்டேயிருக்கும்.

(ச.) ஆய்மூடர்க்கு = ஆன்மஞானமற்ற அதன்மர்க்கு, அளித்தபொருள், அளற்றில் = மிகுந்த சேற்றில், வீழ்ந்தபொருளொக்கும் உவர்மண்ணில் விதைத்ததாம், தீயவரோடுரைத்தவுரை, திகழும் வெளியில் = நிராவரணமானபிரதேசத்தில், நாய் = ஞானியினது, அழைத்தல் = கூப்பிடல்போல், கலகநிமித்தமேயாம், வெளியில் என்பதனுல், சுவர்முதலிய மறைவின்மையினுல் நாயினது வார்த்தை நீக்கக்கூடாமை தெரிவிக்கப்பட்டது. ஆதலால் சகல ஆபத்துக்களுக்கும், சம்சாரநெறிக்கும் அஞ்ஞானமே மூலமாமெனல்:—மேயமடம்= அஞ்ஞானமும், ஆபத்தின் = ஜரைமரணுதிகளின், இடம் = உற்பத்திக்கேதுவாம், யாதினுலெனில், மெய்ம்மையுணரார்க் கெவ்வாபத்தேயவனுகாது, சகலவாபத்து மணுகுவதேயாம், இம்மாயை = இவ்வஞ்ஞானமே, அருளாலெழுவது, பிரவிர்த்திப்பதாம், சம்சாரப்பிரவிர்த்தி = அஞ்ஞப்பிரவிர்த்திமூலமாதலின் என்க. (9)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உலகம் அறிவுளோர்க்கும் அறிவில்லோர்க்கும் இருக்கும் வகையைக்காட்டி யிரகசியத்தையதிஷ்டானமாகக்காட்டல்:—மெல்லியென்பது.

மெல்லிதாகிக் குளப்படியாம் விவேகபுந்திக் காமுலக
மல்லலாகிக் கரைகாணு வாழமாகு மறிவில்லோர்க்
கெல்லையிலதா யறிபொருளா லெண்ணப்படாதாய்ச் சாந்தமுமாய்ச்
சொல்லுமெல்லா மாய்நினைவு தோன்ருச்சற்சிற் சுகமுண்டாம்.

(ப-ரை.) மெல்லிதாகிக் குளப்படியாம் உலகம் = கோமளமாகிக் கோப்பதம் போலாம் ஜகத்து, விவேகபுந்திக்காம் = விவேகமதியினர்க்கு ஆம், அல்லலாகிக் கரைகாணுவாழமாகும் அறிவில்லோர்க்கு = துன்பமயமாகி யெல்லையில்லாத ஆழமுடையதாகும் விவேகமில்லாதவர்க்கு, எல்லையிலதாயறிபொருளால் = சீமாவின்றியதாய்ச் சம்வேத்தியத்தானே, எண்ணப்படாதாய் = கோசரிக்க முடியாததாய், சாந்தமுமாய் = உபசாந்தவடிவதாய், சொல்லுமெல்லாமாய் = கூறும் யாவுமாய், நினைவுதோன்ரு = எண்ணமெழா, சற்சிற்சுகமுண்டாம் = சச்சிதானந்தமுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) கோவின் குளம்புபட்டதேயத்தில் நிறைந்த அற்பஜலத்தைத் தாண்டுதல் அநாயாசமேபோல அறிவுமிகுந்த பெரியவர்க்கு, இவ்வுலக விவகாரங்கடத்தல் அருமைத்தன்ரும், மிகவெளிதாம், பிரஹ்மாண்டம் மண்டலீமாத்திரமாம் மிக மிருதுவாயதாம்; இதுதானே மகாத்மக்களல்லாதவர்க்குக் கரையற்று விசாலமான ஆழமறியமுடியாத பெருங்கருங்கடலாம் தாண்டமுடியாததாம், பரிச்சின்னதேகான்மதரிசிகளாதலின் அவர்கள்; ஆகலின் கண்ணில்லாதவனுக்கேபோலும், அறியானது மதிக்கும், ஜடரகோடாரத்தால் அதாவது உதரபரண ஆசக்திபந்தனவசத்தால் ஒரு பெரிய நீண்டகன்ற சமுசாரக் கடலின்கரையடைய முடியாததேயாம், என் அடைய முடியாததாமெனின், வெளிமுகமாகவேதிரிதலின் என்க. திருசியமிலங்கிணந்தோ சிவன்முதலவரிடத்தும் ஒரு சிதையவித்தைகாணும் ஒழித்திடவுணர்திமைந்தா எனத் தங்களால் யாதுபுகலப் பெற்றது பூர்வம், ஆண்ஹோராதிதிருமேனிக்குருதஞ்சத்தியம் பாம்பிரஹ்மம் புருஷம் கிருஷ்ணபிங்கலம், ஊர்த்தரேதம் விருபாக்ஷம்ஆகியொளிரும் விசுவரூபன்பொருட்டுக் கோடி நமஸ்காரம் நமஸ்காரம். நெடுமுறை திண்ணிதாய சச்சிதானந்த விக்கிரகம், என்புதாதி சுருதிமிருதிகளில், பரப்பிரஹ்மத்து

சச்சிதானந்தரூபத்வப் பிரசித்தியாதலின் வித்தைகட்கெல்லா மீசானன்விசுவபூதங்கட்கு மீசுவரன், என்பதாதி சுருதிப்பிரசித்த சர்வவித்தையாதிபத்திய விரோதத்தால், வாசுதேவ மூர்த்திக்குப் புராணங்களில் துரீயத்வ பரப்பிரஹ்மத்வாதிப் பிரசித்தியினுலும் அவித்யாத்வம் கூடாதாம் என்றுகொண்டு பிரசங்கத்தானே அந்த இரகசியத்தையும் அறிந்துகொள்ள வேண்டுமென் றிச்சித்த ஸ்ரீ இராகவர், ஆகாரஜாதம்புகலப்பெற்றது தங்களாற் சுத்தம் ஹரிஹாரிதியும் அவித்தையேயென்பதைக்கேட்டடியேன் ஹே பிரஹ்மந்! மித்தியாப் பிராந்தியடைந்தவன்போன்றுயினேன் அதனைத் தேவரீர் அகற்றிடவேண்டுமென்று பிரார்த்திப்ப; ஆண்டுநிர்விகார சுத்தசித்தினுக்கு நெய்போலத் தானுகக்கனீபாவத்திற்கும் மூர்த்தாகாரத்திற்கும், கூடாமையுண்மையின், மாயாதீனவிவர்த்தத்தெழுச்சிதுணிபாக, கேட்டபரப்பிரஹ்மத்வத்திற்கு அவிரோதப்பொருட்டு அதன் பிரயோஜகமாக மாயாங்கிசம் சொச்சதமசொரூபத்தை மறையாததாகக் கற்பிக்கலாம்; அதுவே சுத்தசத்துவமெனப்பெறும், அதற்கும் சொச்சதமத்தன்மையுண்மையின் சிற்பிரதிபிம்பங் கவருந்தகைமையானே, சர்வவித்யாவத்தீபகத் தன்மையானும், சொரூப அநாவரகத்தன்மையானும், சர்வவித்தியாதிபத்திய விரோதமாகாதாம், "யாண்டுதானிவனுக்கு யாவுமான்மாவே ஆமாண்டெதனுலே யெதனைக் காண்பன்; முடிவினில் விசுவமாயையும் போமே," என்பதாதி சுருதியினுனே நம்மனேரது தத்துவஞான பாத்தியத்தன்மையானே, அவித்தைத் தன்மையாமென இதில் அசம்பாவனை யொன்று மின்றும் என்னுங்கருத்தால் உத்தரங்கூற விழைந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் அக்கற்பனைக் கிரமத்தைத் தொடங்குபவராய் அதிஷ்டானத்தை முதலிற் றெறிவிக்கின்றார்:—அறிபொருளால் என்பதாதி. சம்வேத்யமாகிய ஜகத்தாகாரத்தானே தொடர்ந்திருப்பது, சர்வஜகத்துச் சமஸ்காரத்தோடுகூடியிருக்கும் மாயாசபலத்தன்மையானே சர்வான்மகம் அதனுனே சத்துசித்துப் பிரகாச வெளிப்பாடுடையதாய் சாந்தமாய் நிர்க்குணமாய் நிட்கிரியமாய்க் கேவலஞ் சன்மாத்திரமாயுள்ள பொருளொன்று சிருட்டிக்குமுன்புளதாம். இதுபுராமிருஷ்டம் என்று பிரிவாம்.

(ச.) விவேகபுந்திக்கு = ஞானியினது புத்திக்கு, எந்தவுலகம், குளப்படியாய் = ஆன்குளப்படிபோல், மெல்லிதாகி = அற்பமாய், ஆம் = பிரகாசிப்பதாம், அவ்வுலகமே, அறிவிலோர்க்கு = அஞ்ஞனுக்கு, அல்லலாகிக் கரைகாணுவாழமாகும், கடத்தற்கரிதாமென்பது பொருள். இங்ஙனம் ஆன்மஞானியான குருவினிடமாகச் சிரவணஞ்செய்யவேண்டுமெனக்கூறித் தத்துவத்தைப் போதித்தற்குச் சாற்றல். அறிபொருளால் = விஷயத்தால், எண்ணப்படாதாய் = சம்பந்த முறாததாய், சாந்தமுமாய், எல்லாமாய்ச்சொல்லும் பொருளியாது, சற்சிற்சுகம் = சச்சிதாநந்தமயமும், நினைவுதோன்றா = நிட்களமுமான, அப்பொருளே, உண்டு = உண்மையாகவிருக்கின்றது. இது அபராமிருஷ்டம் என்று பிரிவாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதினின்றுந் தோன்றுமுறையை யறிவித்தல்:—சான்றவென்பது.

சான்றவதினின் றேரறிவு தானேவிகார வுருவாகித்
தோன்றிநுண்மை மத்தியமே தூலமென்றுங் கற்பிக்க
மூன்றுவகையாய்ச் சாத்விகரா சுததாமதமுக் குணமாகு
மூன்றுவகையாம் பகுதிபல வுயிர்க்கும்பிறவிக் கருமிதுவே.

(ப - ரை.) சான்றவதினின்றேரறிவு = சாக்ஷிமாத்திரமாயிருக்கும் அதனினின்றும் ஒருகலையானது, தானே விகாரவுருவாகி = சுயமாகவே கலனரூபமாய், தோன்றி = உதயமாகி, நுண்மைமத்தியமே தூலம் என்றுங் கற்பிக்க = சூக்குமம் மத்தியம் தூலம் என்று

மூவகையாகக் கற்பிக்கப்படுமது, மூன்றுவகையாய் = மும்பிரகாரத்தானே, சாத்விகராசத தாமதமுக்குணமர்கும் = சத்தவராஜதமோகுணமூன்ருகும், மூன்றுவகையாம்பகுதி = திரிகுணான்மிகையாகிய பிரகிருதி, என்னும், இதுவே = இதுதானே, பலவுயிர்க்கும் பிறவி தரும் = எல்லா ஜீவர்கட்கும் ஜன்மத்தை யீவதாம்.

(ஸ்ரீ - வீர.) கலனம் என்னும் ஜநத்சம்ஸ்கார உற்போத வடிவமாயகலையாஞ் சிதாபாச விலக்கமானது சர்க்காதிகாலத்தில்தானே தான் அதனினின்றும், நன்குண்டாம், தற்சத்தையாலிருப்பதாயே சிறிது தனித்ததுபோன்று குணிகுணபேத வியவகாரயோச்கியமதாக ஆவிர்ப்பவிக்கும்; அதனுனே அதையொத்த வடிவினதாகத் திருஷ்டாந்தம் இதுவாம், நீர் முதலியவற்றின் சுழற்சிரேகை யுதயமாகி இலங்குவதாகி யந்நீராகவே யிருப்பதுபோலுமாம். அக்கலையானது சூரியனினும் அயலாய் மிகுந்த ஆதபமந்தஆதபச்சாயை வேற்றுமைகளில் தேஜஜின்மேன்மைபோலச் சூக்குமம் மத்தியமம், தூலம் எனவும் மூன்ருக்க் கற்பிக்கப்பெறும், சூக்குமகற்பனையின்பின்னர், அக்கற்பிப்பவனுல், மனம்தாக ஹிரண்யகர்ப்பனுக, மத்தியமாயறியப்பெறும், மீண்டுமதன்பின்னர் தூலவிராட்டாக்காரமாக அறியப்பெறும், அவ்வாறேயிருக்கவுமாம். இருக்கவே யிந்தஅவஸ்தைகளில் மூவகைப்பேதமதாகக் கற்பிக்கப்பெறும், சத்வம்ரஜஸ்தமசென என்னுமிதுவே பிரகிருதியெனப்பெறும்; எதனுல் இந்த அவ்யாகிருத உபாதிப்பிரகிருதியே மூவகையாக இருக்குமோ, அதனுனே இந்தச் சூக்குமாதியவஸ்தைகளிலும் மூவகை கற்பிக்கப்பெறும் என்பதாம். விஞ்விடைகளின் அநுகுணத்தின் பொருட்டுப் பிரகிருதிக்கு அவித்யாத்தன்மையைக்கூறல் பகுதியென்பது அவித்தையை பகுதியென்றேயறிதி, முக்குணமதன்றன்றர்மிணிதானுமாம், இதுதானே சம்சாரம் இங்குயிர்தமக்கெலாம்.

(ச.) அதினின்று = அப்பரப்பிரமத்தினின்று, விகாரவுருவாகி = பந்தச்சுபாவமாய், ஓரறிவு, = அவித்தை, தானே, பரேச்சையின்றி, தோன்றி, சூக்குமாதிபேதத்தால் மூன்றுவகையாய், சத்துவாதிக்குணத்திரயான்மிகையாம், இதுவே = சத்துவாதிக் குணத்திரயமான, இவ்வறிவே, பகுதி, = பிரகிருதியெனப்படும். இதுவே = இவ்வறிவே, பலவுயிர்க்கும், பிறவிதரும், பந்தஹேதுவாம். (11)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இதனது பெருக்கையே யினிதினுரைத்தல்:—இதனின் என்பது.

இதனின்முடிவே பரமபத மியன்முக்குணமு மும்மூன்று
விதமதாயொன் பதுகூறும் விரிந்தவவிஞ்சைக் குணவடிவே
சிதறுமிதிற்சத் துவக்கூறு திரண்டவிருடி முனிசித்த
ரதிகநாகர் விஞ்சையர்க ளண்டர்முதலா நல்லுயிர்கள்.

(ப - ரை.) இதனின்முடிவே பரமபதம் = இதனதுபாரமே மேலானபதமாம், இயன்முக்குணமும் மும்மூன்றுவிதம்தா யொன்பதுகூறும் = இயல்பாய மூன்றுகுணமும் மூன்றுமூன்றுவகையதாகி யொன்பது அங்கிசமாம், விரிந்த அவிஞ்சைக்குணவடிவே = விஸ்தரித்த அவித்தைக்குண வடிவமேயாம், சிதறுமிதிற் சத்துவக்கூறு = பிரிந்தவிதனுட் சத்துவாம்சம், திரண்டவிருடிமுனி சித்தர் = கூட்டமான இருடிகள் முனிவர்கள் சித்தர்கள் ஆவர்கள், அதிகநாகர்விஞ்சையர்கள் அண்டர்முதலா நல்லுயிர்கள் = மிகுந்தநாகர்கள் வித்தியாதரர்கள் தேவர்கள் முதலாகிய நல்லுயிர்களாம்.

(ஸ்ரீ - வீர.) இதனது பாரம்பரமபதமாம், காரியகாரண அவித்யாசாதாரண்யமாக ஒவ்வொரு குணத்திற்கு உள்ளடங்கிய மூவகையைக்கூறல்:—இயலென்பதாதி. ஈண்டுனக்கு

எம்மூன்றுகுணங்கள் கூறப்பெற்றனவோ அவையும் மூவகையாகக் கூறப்பெற்றனவாம்; சத்வம் ரஜஸ் தமசெனத் தனித்தனியாகக் குணம் வேறுபடும்; இந்த அவித்தையானது குணபேதத்தினாலே இவ்வண்ணம் ஒன்பதுவகையாக வேறுபடுத்தப்படும்; எத்துணைச் சிறிது திருசியமுளவோ இவையாவுமே இதனுனே அதனைப்பற்றி நிற்கும்; அதனுள் முதல்விபாகத்தில் உள்ள சத்துவாம்சம் உதாகரிக்கப் பெறுகின்றது:—இருடியென்பதாதி, இருடிகள் முனிவர்கள், சித்தர்கள், நாகர்கள், வித்யாதரர்கள், சுரர்கள், என்பதாக அவித்தையின் சாத்விகப்பாகம் உணர்தி ராகவ!

(ச.) இதனின் முடிவே = இவ்வவித்தையின் நிவிர்த்தியே, பரமபதம் = கைவல்லியபதமாம், இயல் = அப்பகுதியின், சத்துவாதிமுக்குணமும், ஒன்று = ஒன்றொன்று, மும்மூன்றுவிதமாய், சத்துவாதிகள் குணாந்தரங்களோடு கலந்திருப்பனவாதலின் என்க. அஃதெங்ஙனமெனில்:—சத்துவஞ்சுத்தம் இரசோமிசிரம் தமோமிசிரம் என்றும் மூவிதம் இங்ஙனம் இராஜத்தமசிலும் மும்மூன்றும், குணவடிவே = இங்ஙனங் குணத்திரயான் மிகையான, அவிஞ்சை = இவ்வவித்தையாகிய அறிவென்னுஞ் சொற்பொருள். ஒன்பது கூறுவிரிந்த, இதில், மந்திரதிருஷ்டாக்களென்னும் வசிட்டவிசுவாமித்திராதிகள் இருடிகள், மனனநிஷ்டர் முனிவர்கள், இருடிகளும் முனிகளும் சேர்ந்து அவித்தையினது சாத்துவிகபாகமாமென்பது பொருள். மௌனநிஷ்டரென்றும் பாடம். (12)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதன் அவாந்தரவிபாகத்தில் மூன்றையு முதாகரித்தல்:—ஒதுமென்பது.

(ச.) அதனுள்ளிட்ட அவாந்தரவிபாகத்தைக்கூறல்:—

ஓதுமிச்சாத் திகக்கூற்றி னுறுதாமதம்விஞ் சையர்நாகர்
பேதமுறாரா சதமாகும் பிறந்தமுனிவர் சித்தரெலாந்
தீதிலாத சத்துவமாந் தேவர்சிவனே முதலோரா
மீதவிஞ்சைப் பயில்கூற்றி னிடையேவிஞ்சைத் திறமடைந்த.

(ப - ரை) ஓதுமிச்சாத்திகக் கூற்றினுறுதாமதம் = கூறிய இந்தச்சாத்விக அங்கிசத்தின் உற்றதாமசம், விஞ்சையர்நாகர் = வித்தியாதரர் நாகர் என்பவர் ஆவர், பேதமுறுராசதமாகும் பிறந்தமுனிவர் சித்தரெலாம் = மற்றொரு அங்கிசமாகப்பேதித்த இராஜசாகும் உற்பன்னமான முனிவர்கள் சித்தர்கள் யாவர்களும், தீதிலாதசத்துவமாம் = குற்றமற்ற சத்துவமாகும், தேவர் சிவனே முதலோராம் = தேவதைகள் ஹரிஹராதிகள் முதலியவர்கள், ஈதவிஞ்சைப்பயில் கூற்றினிடையே விஞ்சைத்திறமடைந்த = இது அவித்தையிலேற்ற அங்கிசமத்தியில் வித்தைத்தன்மையை யடைவுற்றதாம்.

(ஸ்ரீ - வீர.) இந்தச் சாத்விகபாகத்தினது தமம், நாகவித்யாதராதிகளாம்; இராஜசோ முனிவர்களும் சித்தர்களுமாம், சத்வம் தேவர்களும் ஹராதிகளுமாம். ஹராதிகட்குச் சத்துவகுணத்துள்ளடங்கிய சுத்தசத்துவதேகத்தன்மையிற் பொருத்தமுரைத்தல்:—எப்போதுமே அவித்யா ஆவரணசூனியமாய நிர்மலசுவான்மபதத்தை, இயல்பதாயேயுள்ள வித்தையினால் எப்போதுமே ஹரிஹராதிகள் அடைந்துள்ளவர்களாவர்கள், ஆதலினவர்கள் சுத்தசத்துவமாகவே யிருப்பார்கள் இதனுனே விதிஹரர்கட்கு ராஜசதாமச சரீரத்தன்மையானே மூடஜனப்பிரசித்தி நீக்கப்பெற்றதாம்; "சத்துவம்ரஜசுதமசேயென்னப் பகுதியின் குணங்கள் அவற்றாலணிகொளும், பரமபுருடன் ஒருவனேயீண்டு, திதியாதியின்பொருட்டரிவிரிஞ்சியரன் என்னும் பெயர்களும் அவனுக்காகும், மேன்மைகள் சத்துவத்தனுவின் னரர்க்காம்

ஆண்டோனுகவறிக விங்கிதையே. என்பனபாகவதாதி வாக்கியங்களாம். "அங்ஙனமெவற்குதமந்திருமேனிநேர், அங்ஙனஞ்சாத்விககுணந் திரிமூர்த்தியுள், காக்கப்பொருட்டவன் விண்டயலலவாம்." என்னும் ஸ்காந்தவசனமும் சிருஷ்டியாதியுபகரணத்தில் சரீரத்வ உபசாரத்தானே இரண்டினும் ஒன்றனது வரகோஷ்டீ நியாயத்தானே புகழும் பொருட்டனவாம், அன்றி யிதரங்களின் றூழ்த்துபவையல்லவாம்; சர்வஞ்ஞத்வசத்யசங்கற்பதை, தற்பக்தப்பிரபோதகத்வ, நிச்சிரேயசஹேதுத்வங்கட்குத் திரிமூர்த்திகளிலும் சுருதி ஸ்மிருதி புராணங்களில், பிரசித்ததமத்தன்மையுண்மையின். "இதுமேலதுவலவென்று பிடித்தே அதியாக்கிரகஞ்செயு மபிமானிகள், வதையாக்ட்ருமாயலகையுமாவர் இதிலொருவையமுமிலையாமன்றே" என்பதாக அபகர்ஷதரிசனத்திற்கு நிந்திதத்தன்மையுண்மையின் திரிமூர்த்திகட்கு மீசுரகோடித்தன்மையானே யொருமையால் அபகர்ஷ அயோக்கியத்தன்மையாற் சர்வோத்கர்ஷப்பிரயோஜக சுத்தசத்துவசரீரத்துவமே யுசிதமென்பது கருத்து. இதனுனே அவ்வுபர்சகர்கட்கும், ஞானவடைவானே மறுபிறப்பின் நீக்கம் பிரசித்தமாமெனல்:— திரிமூர்த்தியான்மகமாய பிராகிருதபாகம், சாத்விகமாம், அதனுல், அவ்வுபாசகன்றூன் யாவனுவனோ, அவன் மறுபடியும் சனித்திடமாட்டான், இதனுனே திரிமூர்த்திகட்கு மறைப்பின்மையின், இயல்பாகவேயுள்ளதாம் ஜீவன் முக்தத்தன்மையெனல்: அதனுலிவ்வரிகாதிகள் முக்தர்கள் எனப் பெறுவார்கள். அதனுனே யிவ்வுருத்திராதிகள்தாம் சத்துவபாகர்களாம், ஹே மகாமதியோய்! ஜகத்திதியின்கண்ணே திருமேனியுள்ளளவும், முக்தர்களாகவே யிருப்பார்கள். திருமேனியுள்ளளவும் மகான்மாக்களாய் ஜீவன்முக்தர்களாய் வியவஸ்திதியடைந்திருப்பார்கள், திருமேனியின் முடிவில் விதேகமுக்தர்களாய், தூயப்பிரஹ்மசுபாவத்தில் அமர்ந்திருப்பார்கள். பிரசினசமாதானத்தை யுபசங்கரித்து, எடுத்துக்கொண்டதையே வியக்துரைத்தல்:—ஈதவிஞ்சையென்பதாதி. அவித்தையின் இப்பாகமே இவ்வண்ணம் வித்தியாத்தன்மையை யகூடவுற்றதாம்.

(ச.) இச்சாத்திகக்கூற்றின் மத்தியில், நாகர் = வாசுகி தக்ஷகன் முதலிய பணீந்திரரும், விஞ்சையர் = கட்கலாகுளிகாஞ்சனத்வாதி வித்தியாதாரிகளென்னும் சீமூதகேதுமுதலியரும், தாமதம் = தமோமிசிரசத்துவாங்கிசராம், மோகமிகுதியாயிருத்தலினென்க; முனிவருஞ் சித்தரும், இராசதமாகும் = இராஜோமிசிரசத்துவாங்கிசராம், தபோநிஷ்டையாற் பிரவிர்த்திமிகுதியாயிருத்தலினென்க, சிவனே முதலோர்கள், தேவர்சத்துவமாம் = சாத்துவிகபாகத்திற் சத்துவாங்கிசராம், ஞானமிகுதியாயிருத்தலினென்க, அவிஞ்சைப்பயில் கூற்றினிடையே = அவித்தையின் பேதங்களான ஒன்பது கூற்றின், மத்தியில், இச்சாத்துவிகக்கூற்றின் சத்துவாங்கிசம், விஞ்சைத்திறம் = வித்தையென்னுஞ் சொற்பொருள், அடைந்த, யாதுகாரணமென்னின்?. சுத்தசத்துவமாம், = சுத்தசத்துவரூபமான, அவிஞ்சைக்கூறு, அவித்தையாபாகமே, விஞ்சையெனப் பேசுமதுவாம், எனப்பிற்கவியோடொட்டுக. அஞ்சனுதியென்றும் பாடம். (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மற்றவற்றின் பாகுபாட்டையு முரைத்தல்:—ஆசிலென்பது.

(ச.) கூறிய நியாயம் மற்றையவற்றுங் கூறப்படுகின்றது:—

ஆசில்சுத்த சத்துவமா மவிஞ்சைக்கூறு விஞ்சையெனப்
பேசுமதுவா மிராசதமும் பிறிதாமதமு மும்மூன்றாய்
வீசுசிருட்டி யுடைத்தென்பர் மிகுதாமதஞ்சேர் புந்தியர்க்கு
நீசமாந்தா பராமாதி நிறையஞ்ஞான வுடல்பெறுமே.

(ப - ரை.) ஆசில் சுத்தசத்துவமாம் அவிஞ்சைக்கூறு = குற்றமற்றதூயசத்துவமாம் அவித்தையின் அங்கிசம், விஞ்சையெனப்பேசுமதுவாம் = வித்தையென்று சொல்லப்பட்டதுவாம், இராசதமும் பிறிதாமதமும் மும்மூன்றாய் வீசுசிருஷ்டியுடைத்தென்பர் = இராஜசும் வேறாயதமசும் மூன்றுமூன்றுவிதமாய்ப் பிரிவாஞ்சிருஷ்டியுடையன வென்பர், மிகு தாமதஞ்சேர்புந்தியர்க்கு = மிகுந்ததாமதஞ்சேர்ந்த மதியினர்க்கு, நீசமாந்தாபரமாதி = கீழானதாவரமாதி, நிறையஞ்ஞானவுடல் பெறுமே = அதிக அஞ்ஞானத்தோடு கூடிய தேகத்தை யடையுமாறு நேரும்.

(ஸ்ரீ - வீர.) சுத்தசத்துவ அவித்தையே வித்தையென்னுந் தத்துவமாம், மற்றைய இரண்டு குணங்களும் முன்முறையே மும்மூன்றுவகையாம், மிகுந்த தாமதஞ் சேர்ந்தவையே தருவாதிதேகங்களைப் பெறுமென்ப.

(ச.) இங்ஙனம் கூறிய பிரகாரத்தால் இராஜதமும் தாமசமும் மும்மூன்றாய்ச் சிருஷ்டியுடைத்தென்பர்: அஃதெங்ஙனமெனில், மனிதரனைவர்க்குள்ளும் இராஜதத்தில் ஞானப்பிரதானரான பிராஹ்மணர் சத்துவாங்கிசராம், யுத்தாதிப் பிரவிருத்திப் பிரதானரான க்ஷத்திரியாதியர் இராஜதாங்கிசராம், மோகமிகுந்தவரான சூத்திராதியர் தமோங்கிசராம், இங்ஙனந் தாமதங்களான திரியக்குகளிலும் பிரகாசப்பிரவிர்த்தி மோகமிகுதியினால் பசுவாதிகளின் மூவிதமறியத்தக்கது ; 'நீசமாந்தாபரமாதி = அஞ்ஞானரூபதாவரமாதி சருக்கவிசேடமுதலியது தாமதசிருட்டியைப் பரமாவதியாக அடையுமென்றதாயிற்று. (14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கோசகாரக்கிருமியேபோலத் தன்னைத்தானே வாசனையாந் தனுதந்துக்களானே பின்னிக்கொண்டு தானேகட்டுற்றமனமானது உள்ளே பாலத்தன்மையானே தெரிந்துகொள்வதே கிடையாது, வாசனையாற் கட்டுண்டமையானே விவேகசூனியமாகவேயிருக்கும் என்னப் பர்லபதத்தாலுரைத்த அவிவேகப் பிரசங்கத்தானே அவிவேகப்பரம அவதியையுடைய தாவரங்கட்குள்ள சித்தத்தினது திதியை அறியும் வேட்கையராய ஸ்ரீ இராகவர் வினாதல்:—எனவென்பது.

எனவோதலுந்தா பரமாதியாக்கை மேவியஞ்ஞானங்
கனமாயிருப்ப தெங்ஙனெனக் கரியோன்கேட்ப முனிசொல்வான்
மனனமின்மை தானற்று மனனமற்றுண் டில்லையென
வினவுதடத்த மெனுமுருவை மேவிநிற்கு மிவ்வறிவே.

(ப - ரை.) எனவோதலும் = என்றுரைத்தலும், தாபரமாதி = தாவரமுதலன, யாக்கைமேவி = சரீரத்தையடைந்து, அஞ்ஞானம் கனமாயிருப்பது = அஞ்ஞானமானது நிபிடமாயிருப்பது, எங்ஙனென = எவ்வாறென்று, கரியோன் கேட்ப = சியாமளவடிவ ஸ்ரீ இராகவர் கேட்ப, முனிசொல்வான் = ஸ்ரீ வசிஷ்டபகவானுரைப்பார், மனனமின்மை தானற்று = அமனனமில்லாமையை யடைவுற்று, மனனமற்று = மனனத்தையுமடையாமல், உண்டில்லையெனவினவு தடத்தமெனுமுருவைமேவி = இப்படியப்படியென்றில்லாத பொதுமை யுருவத்தையடைந்து, நிற்குமிவ்வறிவே = இருக்குமிந்த வுணர்வே.

(ஸ்ரீ - வீர.) ஹே பிரபுவே ! அத்தியந்தம் கனத்தன்மையை யடைவுற்ற மூர்க்கத்தன்மையை மிகவும்பற்றியவாகித் தாவராதிதனுவையுற்றவை யெங்ஙனமிருக்கும் என்று ஸ்ரீ இராகவர் வினவ, அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவதாவது:—அமனஸ்துவமென்னும் துயிலிற்போலச் சுகதுக்கசம்வேதன அயோக்கியதையைச் சம்பாதிக்கும் மனோலயத்தை யடையாத

தாய், பூர்வாபரவாராய்ச்சி செய்தற்குரியமனன யோக்கியதைவடிவ மனஸ்தன்மையினின் றும் நழுவியதாய், தடஸ்தமென்னும் மௌட்டியமானரூபத்தைப்பற்றி, தாவரங்களில் இந்த ஜீவசித்தானது இருக்குமென்றுணர்தி.

(ச.) ஸ்ரீ இராமர்: கனமாய் மிகுநெருக்கமாகிய, அஞ்ஞானம், தாபரமாதியாக்கை, = தாவராதிசரீரவை, மேவி = அடைந்ததாய், எங்ஙன் = எந்தப்பிரகாரத்தால், இருப்பதாம்' முனி = ஸ்ரீ வசிஷ்டர், மனனமின்மை = பாஷாணாதிபோல் நிர்மனனத்தை, அற்று = அடையாததாய், இதாகிதமுறுதலே நீக்குகிமித்தமான பிரகிருதியிருத்தலினென்க. மனன மற்று = மனோவியாபாரத்தினின்று நழுவினதாய், நினைவாதியின்மையினென்க. உண்டில்லே யென வினவுதடத்தமெனும் = இத்தன்மையாய் மனனமனன மத்தியத்திருப்பதெனு மௌர்க்கியமியாது அத்தன்மையான உருவைமேவி = இவ்வறிவு தாவரங்களினிற்கும். அடையாததாய், ஹிதாஹிதப்பிராப்தி பரிஹாரார்த்தமான பிரவிருத்திகூடாமையின் என்றும் பாடம். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதனையே விரித்துரைத்த ஸ்ரீ வசிஷ்டமுனிவரை ஸ்ரீ இராகவர் வினுதல்:—சொன்னவென்பது.

(ச.) இதனையே வெளிப்படுத்தல்:—

சொன்னவறிவு தாவரத்திற் றுயில்செய்புரியட் டகமுளதா
யின்னலின்றி யூமைகுரு டென்னலாகிச் சடம்போலாய்
முன்னுசத்தா மாத்திரத்தி னிற்குமென்ற முனிவரனைப்
பின்னுமிராம னன்பினொடும் பேணியிதுதான் வினவிடுவான்.

(ப - ரை.) சொன்ன அறிவு தாவரத்தில் = கூறிய உணர்வானது தாவரங்களில், துயில்செய் புரியட்டகமுளதாய் = நித்திரையுற்ற புரியஷ்டகமுண்டாய், இன்னலின்றி = துயரின்றி, ஊமைகுருடென்னலாகிச் சடம்போலாய் = பேசான் கண்ணிலான் அறிவிலான் போலாகி, முன்னுசத்தாமாத்திரத்தி னிற்குமென்ற = எப்போதுமிருக்குஞ் சத்தாமாத்தி ரமாயிருக்குமெனவுரைத்த, முனிவரனை = ஸ்ரீ வசிஷ்டபகவானை, பின்னுமிராமன் அன்பி னொடும்பேணி யிதுதான் வினவிடுவான் = பின்னரும் ஸ்ரீ இராகவர் மிகுந்த பக்தியோடும் வேண்டிக்கொண்டு இதனை வினவத் தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) ஹேவேத்திய வித்துக்களுள்ளே சிரேஷ்டராகிய இராகவரே! ஆண்டு முத்தி தூரத்திலிருப்பதாமென வெண்ணுகின்றேன், யாண்டு விவேகம்போதாத புரியஷ்டகமும் அதனுள்ளடங்கிய பாகிய அந்தக்கரணஜாதமுமுளதோ, இதனுனே துக்கத்தை மாற்று மாற்றலின்மையின் வெகுதுக்கதாயினியாய சித்துளதாமோ, ஆண்டுமூக அந்தஜடம்போன்று சத்தாமாத்திரமாக விருக்கும். மூகபதத்தானே கருமேந்திரியசூனியத்தன்மையும், அந்த பதத்தானே ஞானேந்திரியபிரசாரசூனியத்தன்மையும், ஜடபதத்தானே மானசப்பிரசாரண சூனியத்தன்மையுங் குறிப்பிக்கப்பெறும்.

(ச.) தாவரங்களிற் கசதன்னியம் = துயில்செய்புரியட்டகமுளதாய் = அகங்காரங் களைமேவியென்பதாதியாய்க் கூறப்பட்டது புரியட்டகம், இந்திரியசமட்டிரூபம், துயில் செய் = லீனமாய், எதனிடத்திருக்கும் அஃததத்தகையதாயுள்ளதாய், இன்னலன்றி = சுழுத்தியைப்போற் சுகோதயவேதுவாய், ஊமைகுருடு செடங்களிற்போற் சிற்சத்தாமாத்தி ரத்தானிற்குமன்றி வெளிப்படப்பிரகாசியாது. மூலம் கூறிய இடம் அகங்காரகலாயுக்தம்

புத்திபீஜசமன்விதம் என்பதாம். சைவாகமத்திலும் ஆம்புரியட்டகம் அந்தக்கரணம் நீகர் மகரனுநீயென்பதாகக் கூறப்பெற்றுள்ளதாம். (16)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஞானகருமேந்திரிய வியாபாரசூனியமாகச் சத்தாமாத்திரமாய்ச் சித்திருக்குமானல், அத்தகைய நிலைமையில் யோகிகட்கேபோல விரைவிலேயே வாசனக்ஷய மனோநாசசம்பவத்தால் அதுாரத்திதமாம் முக்திஉசிதமாம், ஆகவேதுாரத்திதமாம் முக்தியென்றுபுகன்ற தங்களுடைய அபிப்பிராய மியாதோவென்னுங் கருத்தால் ஸ்ரீ இராகவர் வினுதலும் விடையும்:—சத்தையென்பது.

சத்தையொருமை யாய்ப்போதந் தாபரங்க டமினிற்கி
லித்தைமுத்தி யெனநினைகே னென்னமுனிவ னிதற்கிசைப்பான்
புத்தியாலே யிதுநாடிப் பொய்யில்பொருளின் காட்சியினு
லொத்தசத்தா சாமானியத்தை யுணர்தலுறுத லுயர்முத்தி.

(ப - ரை.) சத்தையொருமையாய்ப் போதம் தாபரங்கள்தமில் = சத்தையானது அத்வைதமாய்ச் சித்தானது தாவரங்களில், நிற்கில் = இருக்குமானல், இத்தை முத்தியென நினைகேன் என்ன = இதனையே மோக்ஷம் என்பதாக எண்ணுகின்றேன் என்பதாக, ஸ்ரீ இராகவர்கூற, இதற்கு முனிவனிசைப்பான் = இவ்வினுவிற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் விடை கூறுவார், புத்தியாலே யிதுநாடி = புத்திபூர்வகமாக இதனையாராய்ந்து, பொய்யில் பொருளின் காட்சியினுல் = சத்தியவஸ்துவினது தரிசனத்தினுல், ஒத்தசத்தாசாமானியத்தையுணர்தல் உறுதல் உயர்முத்தி = எங்குமொத்துள்ள சத்தாசாமானியத்தை யுணர்ந்து கோடலே மேலான முத்தியாம்.

(ஸ்ரீ - வீர.) ஹேவேத்திய வித்துக்களுக்குள்ளே சிறந்தவராகிய முனீசுரரே! சத்தை யத்வைதமாக யாண்டு தாவரங்களிற் சித்துநன்குநிலைபெறுமோ ஆண்டு அதுார்த்திதமாம் முக்தியென்றெண்ணுகின்றேன் என்று ஸ்ரீ இராகவரியம்ப; சாஸ்திரவிதிதமான கர்மானுஷ்டானத்தானேயாக்கப்பெற்ற சித்தசுத்திசாதனசதுட்டய சம்பத்தியோடுகூடிய சிரவண மனன நிதித்தியாசசன்னியதத்துவ சாக்ஷாத்காரத்தா லாக்கப்பெற்றமூலத்தோடுகூடிய வாசனக்ஷயமனோநாசங்களால் உண்டாஞ்சத்தாசாமான்யஸ்திதியே மோக்ஷமாம்; அதுவும் அநந்தங் கெடுதலினுலுளவாய துர்வாசனை விரைகளைத் தாங்கிநிற்கும் நாரகியேயென்னும் ஸ்தாவரங் கட்குச் சாஸ்திர அதிகாரிஜன்மதுர்லபத்தன்மையானே துர்லபதரமாம் என்று ஸ்ரீ வசிஷ்ட பகவான் தமது கூற்றினபிப்பிராயத்தை வருணித்தல்:—புத்தியாலே யென்பதாதி. புத்தி பூர்வமாகவிதனையே யாராய்ந்து உள்ளபடியாய வஸ்துவைநோக்கலால், எச்சத்தா சாமான்ய போதமுளதோ அதுமோக்ஷமாம் அநந்தகமுமாம்.

(ச.) ஸ்ரீ இராமர்! தாவரங்கடமிற்போதஞ் சத்தை யொருமையாய், சங்கற்ப விகற்பம்பெறவாமையின், சத்தாமாத்திரரூபமாய் நிற்கின், இத்தைத் தாவரங்களிற் சமீபித்திருக்கும் இத்திதியை முத்தியென நினைகேன், சமாதியவஸ்தைக் கொப்பாதலி னென்பது கருத்து. முனிவன் = ஸ்ரீ வசிட்டர், இது = இச்சகத்தை, நாடி = சுருதி யுத்தி ஞானியி னனுபவங்களாற் பரியாலோசித்து, பொய்யில் பொருளின் காட்சியினுல் = பரமார்த்தநிச்சயத்தினுல், புத்தியாலே, ஞானத்தை முன்னிட்டு, சத்தாசாமானியத்தை யுணர்தலுறுதல் = சத்தாமாத்திரமாகச் சேடிக்கும்போதமியாது அதுவே, உயர்முத்தி = மறுஜன்மமற்ற மோக்ஷமாம், இஃதன்றேற்காயஜன்னியமான மகாபாதகங்களாற் றுவாத்துவஞ்சித்தித்த

வின் மோக்ஷஞ் சுலபமாமாதலின், மோக்ஷசாஸ்திரங்களுக்கு வியர்த்தமாமென்பது கருத்து. சத்தையொருமையாய் சத்தாமாத்திரரூபத்தன்மையானே யென்றபடி. (17)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாசனக்ஷயஞ்செய்து சத்தாசாமானியமாதலே வீடெனல்:—கொத் தென்பது.

கொத்தாகியவா தனைமுற்றுங் குறிக்கொண்டறிந்து கைவிட்டுச்
சத்தாசாமா னியவடிவ மானாற்றனிவீ டதுவென்ப
ரொத்தாரியரோ டுசாவியுநூ லுணர்ந்துமுணர்வொன் றையும்பாவித்
தத்தாற்சத்தா சாமானியந்தா னகுமாகு மதுவீடே.

(ப - ரை.) கொத்தாகிய வாதனைமுற்றும் = கூட்டமாகிய வாசனைகளனைத்தினையும், குறிக்கொண்டறிந்து = வரும் நினைவுகளைக்கொண்டுதெரிந்து, கைவிட்டு = அடியோடும் விடுத்து, சத்தாசாமானிய வடிவமானால் = சத்தாசாமானியரூபமாயின், தனிவீடதுவென்பர் = ஒப்பற்றகைவல்யபதம் அதுவென்றுரைசெய்வர், ஒத்தாரியரோடுசாவியும் நூலுணர்ந்தும் = பெரியோரோடுசேர்ந்து ஆராய்ந்தும் சாஸ்திரங்களைத்தெரிந்தும், உணர்வொன்றையும் பாவித்து = சைதன்னியம் ஒன்றையுமே தனதுவடிவமாய்த் தியானித்து, அத்தால் = அதனால், சத்தாசாமானியந்தானகும் = சத்தாசாமானியம் தனதுவடிவமாகும், அது வீடேயாகும் = அது மோக்ஷமேயாகும்,

(ஸ்ரீ - வீர.) ஆன்மதத்துவத்தை யுணர்ந்து வாசனைகளினுடைய பரித்தியாக மியாதுளதோ மேலாய அதுவே, சத்தாசாமானியரூபத்தன்மைவடிவ கைவல்யபதமாமென்பர். சாஸ்திரங்களைக் குருவினோடும் சகாபாடிகளுடனும் விசாரித்து, அத்தியாத்மபாவனையென்னும் மனனபூர்வகநிதித்தியாசனத்தானே தத்துவத்தைக்கண்டு சத்தாசாமானிய நிஷ்டைத் தன்மையாதுளதோ அதுவே பரப்பிரஹ்மம் என்றறிவர்.

(ச.) குறிக்கொண்டறிந்து = விசாரித்து. தள்ளற்குரியதாதலின் சம்சாரஹேதுவான, வாதனைமுற்றுங் கைவிட்டு, திரும்பச்சம்சாரமணுகாதிருக்கும்படி பரித்தியாகஞ்செய்து, எதனாலென்னில், சத்தாசாமானிய வடிவமானாற் சைதன்னியஞ் சர்வோபாதியினின்றும் விடுபடுதலின், தனிவீடது அதுவே கைவல்யரூபமான பதமென்பர். முற்கூறிய பொருளையே விரித்துரைத்தல்: நூல் = அத்தியான்மசாஸ்திரங்களை, உணர்ந்தும் = குருமுகத்தினின்று மவதானஞ்செய்து, ஆரியரோடு = பிரஹ்மவாதிகளோடு, உசாவியும் = யுக்திகளால் அநுசிந்தித்து = உணர்வொன்றையும் பாவித்து, தனது சித்தத்தில் அநுசந்தானஞ்செய்து அத்தால் எது சத்தாசாமானியந்தானகும், அது வீடேயாகும் = அதுவே பரப்பிரஹ்மமாமென்பர் என்பதை யிவ்விடத்துங் கூட்டுக, (18)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தாவரங்களி லதுதூரதரமென்பதைப் பொருத்திக்காட்டல்:—துயிலையென்பது.

துயிலையுள்ளே யுறுமந்த மாகும்விதையு டுறுமுளைபோற்
பயில்வாதனைகள் சுழுத்தியதாம் படருஞ்சென்மம் பலகொடுக்குஞ்
செயிர்செய்மனன முள்ளிறந்துசெறிவாதனைக டுயில்சுழுத்தி
குயிலுஞ்சடமாந் திறத்தாலே கொடியபிறவித் துயரளிக்கும்.

(ப - ரை.) துயிலையுள்ளேயுறும் = நித்திரையை யுள்ளேயுள்ள, மந்தமாகும் = மந்தமாயிருக்கும், விதையுடுறுமுளைபோல் = பீஜத்துள்ளுற்ற அங்குரம்போல, பயில்வாதனை

கள் சுழுத்தியதாம் = பழகியவாசனைகள் துயிற்றன்மையை யடைந்துளவாம், படரும் செனமம் பலகொடுக்கும் = தொடர்பான ஜனனம் அனேகந்தரும், செயிர்செய்மனனமுள்ளிறந்து = துயர்செய்யும் மனனம் உள்ளே லயமாகி, செறிவாதனைகள் துயில்சுழுத்தி = பொருந்திய வாசனைகள் அடங்கும்சுழுத்தி, குயிலுஞ்சடமாந்திறத்தாலே = உரித்தாம் சடமாம் தருமத்தினாலே, கொடியபிறவித்துயரளிக்கும் = கொடூரமான ஜனனதுக்கத்தைக் கொடுக்கும்.

(ஸ்ரீ - வீர.) உள்ளே சுப்தமாயிருக்கும் மந்தமுமாம் யாண்டுபீஜத்தி லங்குரம்போல வாமோவாசனை ஆண்டுச் சுழுப்தத்தன்மைபோன்ற சுழுப்தத்தன்மையாம். மீண்டு மீண்டுஞ் சன்மத்தைக் கொடுத்துக்கொண்டேயிருக்குமென்றறிதி. உள்ளே விலீனமான மனனத்தையுடையது, எங்குந்துயின்ற வாதனையையுடையது, நித்திராவஸ்தையையுடையது, ஜடதர்மத்தையுடையதாயினும் அதாவது பாஷாணதிபாவம்போல விருத்திசூனியமாயிருந்தபோதினும் அநேகங்கோடி துக்கங்களைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும் ஜன்மங்கள் உண்டாக்கிக்கொண்டேயிருக்கும்.

(ச.) எந்தத்தாவரதிசையில், பயில்வாதனைகள், விதையூடுறுமுளைபோலுள்ளே, துயிலையுறும், விலீனமாய், மந்தமாகும் = மந்தமாயிருக்கும் அதுகாடநித்திரைக்கொப்பாதலின், சுழுத்தியதாய்ப்படரும், அஃதன்றியும் செனனம்பலகொடுக்கும், வாசனை புதைத்துவைத்த தனம்போன் மிகமறைவுற்றிருத்தலினென்க. உள் = அந்தரத்தில், மனனம் = மனோவியாபாரம், இறந்து, செறிதுயில் வாதனைகள் யாது சுழுத்திகுயிலும் = சுழுத்திக்கொப்பான திசைபோல், சடமாந்திரத்தாலே, ஜடதர்மமுடையதாதலின், கொடியபிறவித்துயரளிக்கும், = வெகுஜென்மங்களுக்கும், துக்கங்களுக்கு மேதுவாம். (19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தாவரங்கள் வாதனைகளுடன் கூடியிருத்தலின் ஜன்மமே யடையுமென்றும் வாசனாக்ஷயமே மோக்ஷந்தருமென்றுந் திருட்டாந்தபூர்வகம் கூறித் தீயவை வேண்டாமென்றுரைத்தல்:—தாவா, அகல், என்பன.

தாவரங்க ளிவையெல்லாஞ் சடமாந்திறமாஞ் சுழுத்தியினை
மேவலுற்று மேன்மேலும் பிறத்தற்குரித்தாம் விதைகளிலே
பூவுமண்ணி னுட்கடமும் பொருந்துமதுபோ லங்கவற்றி
லோவலில்லா வாதனைக ளுறுதாவரங்க ளிடைநிற்கும்.

அகல்வாதனையின் வித்தான வந்தச்சுழுத்தி வீடளியாப்
புகல்வித்தல்லா வாதனையே துரியம்பொன்று வீடளிக்கு
மிகல்வாதனைதீ கடனேய்நஞ் சிறைஞ்சார்கோப நேயமிவை
மிகவேண்டாஞ் சற்றுனலு மிக்கவருத்தஞ் செய்திடுமே.

(ப - ரை.) தாவரங்கள் இவையெல்லாம் = இத்தாவரங்க ளியாவுமே, சடமாந்திறமாம் = ஜடதர்மிகளாம், சுழுத்தியினைமேவலுற்று = நித்திரையையடைந்தனவாகி, மேன்மேலும் பிறத்தற்குரித்தாம் = அடிக்கடி பிறக்கத்தக்கனவாம், விதைகளிலே பூவும் = பீஜங்களிலே புஷ்பங்களும், மண்ணினுட்கடமும் = மண்ணின்கண்ணே குடமும், பொருந்துமதுபோல் = பொருந்தியிருப்பதேபோல, அங்கவற்றில் = ஆண்டவைகளில், ஓவலில்லா வாதனைகள் = அளவில்லாத வாசனைகள், உறுதாவரங்களிடைநிற்கும் = ஜன்மித்ததாவரங்களுக்குள்ளேயிருக்கும். ஆகையால்,

அகல்வாதனையின் வித்தான அந்தச்சுழுத்தி வீடளியா = விஸ்தாரமான வாசனையின் பீஜமான அந்த நித்திரை மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாது, புகல்வித்தல்லாவாதனையே துரியம் பொன்றுவீடளிக்கும் = கூறும் நிர்ப்பீஜமானவாசனையே துரியமாம் கெடாதவீடுதவுவதுமாம், இகல்வாதனை = பகையாயவாசனை, தீ = வன்னி, கடன் = ருணம், நோய் = வியாதி, நஞ்சு = விடம், இறைஞ்சார் = பகைவர், கோபம் = சினம், நேயம்= சிநேகம், இவை = இவையாவையுமே, மிகவேண்டாம் = அத்தியந்தம் விரும்பத்தகாதனவாம், சற்றானும் மிக்கவருத்தஞ்செய்திடுமே = அற்பமானபோதிலும் பெரிய துயரத்தையே செய்துகொண்டிருக்கும்.

(ஸ்ரீ - வீர.) இத்தாவராதிகளோ யாவுமே ஜடதர்மிகளாம், சுழுப்தபதத்தையடைந்தனவாம், மேலும் மேலும் ஜன்மயோக்கியங்களாம்; ஸ்தாவரங்களில் வாசனையேயில்லையென்னும் மந்தாசங்கையைப் பரிகரித்தல்:—விதைகளிலே யென்பதாதி. பீஜங்களிற் புஷ்பாதி போலும், புஷ்பாதியென்றது முறைமாறியகூற்றும், அங்குராதிபுஷ்பாந்த மென்பதுபொருள், மண்ணிராசியிற்குடம்போலும், ஸ்தாவரங்களிற் றமதுவாசனை ஹே நல்லோய்! உள்ளே நன்னிலைமைபெற்றுள்ளனவாம், யாண்டுளது வாசனுபீஜம் அதுசுழுப்தமாம் சித்தியின் பொருட்டாகாதாம், நிர்ப்பீஜ = ஞானக்கினிவறுத்தபீஜசக்தியான வாசனையாண்டு அது துரியம் சித்திதருமென்ப; இதனனே அற்பமாயினும் வாசனையெஞ்சுமானல், வன்னியாதி சேடம்போலும், முறையே மிகவளர்ந்து அதனல் பெரிய அநர்த்தகாரணம் உண்டாம் ஆகலின் சேடமில்லாமல் அதன்க்ஷயம் செய்யத்தக்கது என்னுங் கருத்தாலுரைத்தல்:—இகலென்பதாதி. வாசனைவன்னி இருணம்வியாதி துவேஷிகள், சிநேகவைரவிடங்கள் முதலியவற்றின்சேடம் சொற்பமாயினும் பாதிக்கும்.

(ச.) அக்காரணத்தினல், தாவரங்களிவையெல்லாம் = இத்தாவராதிகளனைத்தும், சடமாந்திரமாம் = ஜடதர்மமுடையனவாம், சுழுத்தியினை மேவலுற்று இருப்பதால், மேன்மேலும் பிறத்தற்குரித்தாம் சுழுத்தியடைந்தவனன்றே மேன்மேலுஞ் சஞ்சரிக்கின்றன், விரைகளில் = சூதாதிபீஜங்களினுள்ளில், பூவும் பலாதிகளும், மண்ணினுள் = மிருத்திகைச் சமூகங்களினுள் கடமும் = சட்டிபானை முதலியவும் பொருந்துமதுபோல் தாவரங்களிடை, ஓவலில்லாவாசனைகள் = தனது புண்ணியாபுண்ணிய சம்ஸ்காரரூபங்களான ஜன்மாந்தரவேதுக்கள், நிற்கும் = அகத்திருப்பனவாம்.

எந்தத் தாவரதிசையில், வாதனையின் வித்தான = வாசனையும் அதன் வித்தான அஞ்ஞானமும், சமுசாரகாரணமாயிருக்கும். அந்தச்சுழுத்தி = அதுசுழுத்தியேயாம், துரியாவஸ்தையன்று, அதுவீடளியா = கைவல்யநிமித்தமாகாது, எந்தச்சீவன் முத்திபதத்தில், வித்தல்லா = அஞ்ஞானரூபமல்லாத, வாதனையே சுத்தவாசனை பிரவிர்த்திக்கும், அதுவே துரியபதமான வீடளிக்கும், வந்நியாதிகள்போல் வாசனையின்சேடஞ் சற்றானுலு மிக்கவருத்தஞ் செய்திடுமென்பது பொருள். (20-21)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாசனுக்ஷயங்கைவரின் உடலிருந்தும் உடலிறந்தும் ஒரேமாதிரியாம் எனல்:—தடையென்பது.

தடைவாதனையின் விதைசுட்டுச் சத்தாசாமானியரூப
முடையோரானோர்க் குடலிருந்து மொழிந்தும்பின்னைத் துயரணுகா
வடைசிற்சத்தி வாதனைவித் துருவாந்துயிலே யதற்கியல்பாந்
தடையிலறிவைக் காணுமை யவிஞ்சையென்பர் கவலைவல்லோர்.

(ப - ரை.) தடைவாதனையின் விதைசுட்டு = பிரதிபந்தகமாகிய வாசனையின் பீஜத்தைத் தகித்து, சத்தாசாமானியரூபமுடையோரானோர்க்கு=சற்சாமான்யவடிவமாக விளங்கும் மகான்கட்கு, உடலிருந்தும் ஒழிந்தும் பின்னைத்துயரணுகா = தேகமிருந்து மிறந்தும், பின்னர்த்துன்பமடைவுறாதாம், அடைசிற்சத்திவாதனை வித்துருவாம் = அடைந்துள்ள சிற்சத்தி வாசனாபீஜரூபமாம், துயிலேயதர்கியல்பாம் = சுழுப்தியே அதற்குத் தருமமாம், கடையிலறிவைக்காணாமை=உயர்வான சித்துவத்துவைத் தரிசியாமையே, அவிஞ்சையென்பர் கலைவல்லோர் = சாஸ்திரமுணர்ந்த பெரியோர், அவித்தையென்று கூறுவர்.

(ஸ்ரீ - வீர.) அத்தியர்தம் தகிக்கப்பெற்ற வாசனைப்பீஜமுடையவன், சத்தாசாமான்யரூபவர்ன், சதேகனாயினும் விதேகனாயினும் மறுபடியும் துக்கத்தைச் சேவிப்பவனாகான், சிற்சக்தியானது வாசனாபீஜரூபிணியாம் சுழுப்திதர்மிணியாம், இரசமயமாகத் தாவராதிவஸ்துக்களில் நித்தியமிருக்கும்; இவ்வான்ம திருஷ்டியினுடைய அதரிசனம் அதாவது தரிசன விரோதியாவரணரூபம் யாதோ அது அவித்தையென்பர் அறிஞர்.

(ச.) வாதனையின்விதை = வாசனையையும் அதன்விதையான அஞ்ஞானத்தையும், சுட்டு = சுட்டவராய், சத்தாசாமானிய நிஷ்டையினால் அந்தரூபமுடையோரான புருடர்க்கு, உடலிருந்தும் ஒழிந்தும் பின்னைத்துயரணுகா, யாதுபிரசித்தமானசிற்சத்தி, வாதனை வித்துருவாம், வாதனாரூபமும், அதன்வித்தான அஞ்ஞானரூபமுமுடையதாம், அதற்கே துயிலே யியல்பாம், நித்திரைக்கேதுவுமான அவித்தையெனப்படும்; அறிவை = எந்தச் சிற்சத்திக்கேதுவான சிற்சொரூபத்தை காணாமை = அறியாமை என்னும் இவ்வாரணசத்தி அவிஞ்சையென்பர், யத்ததவித்யா என்னும் பாடத்தில் ததர்சனகாரணம் அவித்தை யென்னும் உத்தேசியத்திருக்கும் லிங்கங்கோடலால் நபும்சகத்தன்மையாம். (22)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவித்தை வித்தையா லழிந்துபோயின் வித்தையும்போய்ச் சிவம் விமலமொன்றுவாய் என்றுசீர்வதித்து அவிஞ்சை விஞ்சைகளின் இலக்கணமோதல்:— அவிஞ்சையென்பது.

> அவிஞ்சைதன்னின் முதற்கூற்று லயற்கூற்றிரண்டு மோருணர்வாற்
> றவிர்ந்துபோமட் டுஞ்சுட்டுச் சலனமின்றி யொன்றுவாய்
> நிவந்தபிரம மிதுவல்ல வென்னுமறுதி நீடவிஞ்சை
> யுவந்தபிரம மிதுவென்னு மறுதியவிஞ்சை யொழிந்ததுவே.

(ப - ரை.) அவிஞ்சைதன்னின் முதற்கூற்றால் = அவித்தையினது பிரதானமானபாகத்தால், அயற்கூற்று = இதரபாகத்தைக்சுட்டு, இரண்டும் = கூறிய இரண்டங்கிசங்களும், ஒருணர்வால் தவிர்ந்துபோமட்டுஞ்சுட்டு = பரஸ்பரம் கெடும்பரியந்தஞ்சுட்டு, சலனமின்றி யொன்றுவாய் = நிச்சலமாய் அத்விதீயசிவமேயாவாய், நிவந்தபிரமமிதுவல்ல = வியாபகமான பிரஹ்மம் இதுவல்ல, என்னுமறுதிநீடவிஞ்சை = என்னுந் துணிபேபெரிய அவித்தையாம், உவந்தபிரமமிதுவென்னு மறுதியவிஞ்சையொழிந்ததுவே = பேராநந்தத்தைப் பயக்கும் பிரஹ்மம் இது என்னுந் துணிபே அவித்தையழிந்துபோனதாம் என்பது நிச்சயம்.

(ஸ்ரீ - வீர.) அவித்தையே ஜகத்தேதுவாம் அதனானே யாவும் பிரவிர்த்திக்கின்றது, அவித்தை சொரூபசூனியத்ததாம், என்று எத்துணைமாத்திரம் பார்க்கப்பெறுமோ அத்துணையே விரைவிலதுகழிந்தோடும், ஆதபனைக்கண்ட பனியினனுவேபோலும். எங்ஙனமாராய்ந்து ஆலோகனஞ் செய்யத்தக்கது எனின் உரைத்தல்:—இரக்தமாம்ச அஸ்தியந்திர

மாகிய விதனில் யாதுயானுவேன் எனச்சயம், எத்துணை விசாரிக்கப்பெறுமோ அத்துணை யாவும் விரைவில் விலீனமாம், அவித்தையென்பது யாண்டுமே ஒரு சிறிதுமேகிடையாது அகண்டிதமாய பிரஹ்மமே இவையாம், சத்தசத்விகாரவித்தாரமுழுவதுமே எதனுல் நிறைவுற்றிருக்குமோ, இவ்வாறாகவே பலிதமுடிவுற்ற அவித்தையதன் க்ஷயங்களின் சொரூபத்தையியம்பல்:—நிவர்த என்பதாதி. இதுபிரஹ்மம் அல்லவென்னும் நிச்சயமியாதுளதோ அவித்துணையே அவித்தையின் வடிவமாம், பிரஹ்மமே யிவையாவுமென்னும் நிச்சயம் யாதுளதோ அவ்வதுவே அவித்தையின்க்ஷயவடிவமாம், அதனையே விரித்துரைத்துபசங்கரித்தல்: கடபடசகடாவபாசஜாலம் சரிசிவமலவென லவித்தையாகும், கடபடசகடா வபாசஜாலம் சரிசிவமிவையெனிலவித்தையேகும்; கடம்படம் சகடமெனத்தோற்றும் ஜகத்ஜாலம் முழுவதும் விபுவாகிய அபரிச்சின்ன சச்சிதானந்த ஆன்மா அல்ல மற்றோ அயல் என்பதாதியாரோப திருஷ்டியே அவித்தையாம், அதனையபவாதித்து அபரிச்சின்னசிற்சன்மாத்திர திருஷ்டிகோடலே அதன் க்ஷயமாம்.

(ச.) அவிஞ்சைதன்னின் = கூறிய விலக்கணமுடைய அவித்தை குணத்திரயான்மகமாதலின் குணங்களும் ஒன்று மூவிதமாதலின் ஒன்பதுகூறான அவித்தையினது, முதல் = முதலாவதான கூற்றால் = சுத்தசத்துரூபமாகிய வித்தையென்னும் பாகத்தால், அயல் = இதரமான அவித்தையின்பாகத்தைத் தவிர்ந்துபோமட்டுஞ் சுட்டு எதுவரையும் அதுவரையுஞ் சுடவேண்டும், கூறிரண்டும் = அவிஞ்சைரூபமும் விஞ்சைரூபமும், ஒருணர்வால் = ஒன்றற்கொன்று அழிவுநிமித்தமாதலின் நன்றாய்விஞ்சையால் அவிஞ்சைநிவிர்த்தியாய் விஞ்சையையும் நிவிர்த்திசெய்யும் அந்தியசத்தத்தால் உபாந்தியசத்தம்போ லென்பது கருத்து. இதனையூகித்துணர்க. இது = இச்சகம், பிரமம் = பிரமான்மகம், அல்ல, மற்றென்னெனில், வியோமாதிரூபமேயென்னும், அறுதி = நிச்சயமே, நீடவிஞ்சை = அவிஞ்சை வியாபாரமாம், ஈதுபிரமமென்னும் அறுதியே அவித்தையின் நாசமென்பது சங்கிரகம். (23)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பெரியோரது அநுபவம் உனக்குண்டாகுகவென ஆசீர்வதித்தலும் அவரது அநுபவத்தை ஸ்ரீ இராகவர் வினுதலும் ஸ்ரீ வசிஷ்டபகவானதற்கு விடைபகரத் தொடங்கலும்:—நக்கன் என்பது.

நக்கன்முதலாந் தேவர்க்கு நாரதாதி யிருடிகட்கு
மிக்கநிமல விதயத்தின் மேவுமறுதி யுனக்குறுகத்
தக்ககுமரா வெனுமுனியைச் சங்காரதி யென்றவிவர்
துக்கமேவா நிச்சயமென் சொல்வாயென்ன முனிசொல்வான்.

(ப - ரை.) நக்கன் முதலாம் தேவர்க்கும் = சிவன்முதலிய தேவதைகட்கும், நாரதாதி யிருடிகட்கும் = நாரதாதிமகரிஷிகட்கும், மிக்க நிமலவிதயத்தின் = மிகுந்த நிர்மல இருதயத்தின், மேவுமறுதியுனக்குறுக = பொருந்திய நிச்சயம் உனக்கு உண்டாகுக, தக்ககுமரா = தகுந்தகுழந்தாய், என்னுமுனியை = என்ற ஸ்ரீ வசிஷ்டபகவானை, சங்கராதியென்ற விவர் துக்கமேவா நிச்சயமென் = மகாதேவராதியென்றியம்பிய இம்மகான்கள் துன்பமணுகாத திணிவதென்னே, சொல்வாயென்ன முனிசொல்வான் = கூறுவீராகவென ஸ்ரீ இராகவர் கேட்ப ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறத்தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) விவிதாசாரகாரியாய எந்நிச்சயத்தானே ஸ்ரீ விஷ்ணுபூமியில் கர்ப்பவாசாதி திருச்சிரங்களில் அவதரிக்கின்றார், அவதரித்தபோதினும், அதனுலேற்பட்ட துக்கங்களானே,

நீண்டப்பெறுவதில்லை, அவ்வியாவற்றையு முணர்ந்துகொண்டு அறிவாகவே யிருப்பர். இவ் வண்ணம் வருபவற்றிலும் ஊகிக்கத்தக்கது. அந்நிச்சயமுனக்குண்டாகுக; முக்கண்ணிறை உமாதேவியாரோடுமிருந்து எந்நிச்சயத்துடனிருக்கின்றாரோ, அந்நிச்சயமுனக்குளதாகுக, நிராசையையுடைய பிரஹ்மாவிற்கு எந்நிச்சயமுளதோ அஃதுனக்குண்டாகுக, சுரகுருவாகிய வாக்பதிக்கும் அசுரகுருவாகிய பார்க்கவற்கும் எந்நிச்சயமுளதோ அஃதுனக்குண்டாகுக; திவாகரனுக்கும் சந்திரனுக்கும், பவனனுக்கும் அநலனுக்கும், நாரதனுக்கும் புலஸ்தியனுக்கும் எனக்கும் ஆங்கிரசனுக்கும் பிருகுவுக்கும் சுகனுக்கும் அத்திரிக்கும் மற்றையர்க்கும் விமுக்தஜீவிதரேயாய விப்பிரேந்திரர்கட்கும் இராஜ இருஷிகட்கும் எந்நிச்சயமுளதோ அந்நிச்சயம் உனக்குண்டாகுக; என்றருளிய ஸ்ரீ வசிஷ்டபகவானை நோக்கி ஸ்ரீ இராகவர்:— ஹே பகவந்! இத்தீரர்கள் மகாமதிமான்கள் எந்நிச்சயத்தானே விசோகர்களாய் இனிதிருந்தார்களோ அதனை யடியேனுக்கு உண்மையாக ஹே பிரஹ்மந்! அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்திப்ப.

(ச.) இவ்விடத்துக்கூறு மியல்பை யநுசரித்தல், அராதிதேவர்க்கும், நாரதாதிவிருடிகட்கும், இதயத்தில் மிக்க நிமலமேவுமுறுதியாதிருக்கின்றது அந்நிச்சயமுறுக, நீயும் அச்சீவன் முக்திமார்க்கத்தையே அவலம்பிப்பாயென்பது பொருள், ஸ்ரீ இராமர்:—இவ்வராதிகள் எந்நிச்சயத்தாற் சோகமற்ற சீவன்முக்தராயிருக்கின்றார் அந்நிச்சயத்தை யுண்மையாய் எனக்குச் சொல்வாயென்றதாயிற்று. (24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரங்கூறல்:—கிஞ்சில் என்பது.

கிஞ்சிலாகி விரிந்துசகத் திரளாய்க்கிளைத்த விவையெல்லாம்
விஞ்சுபிரம மேயறிவு பிரமமேதி னிபிரமம்
பஞ்சபூதம் பிரமநாம் பிரமநமது பகைபிரமந்
தஞ்சநட்புக் கிளைபிரமஞ் சங்கராதி நிச்சயமே.

(ப - ரை.) கிஞ்சிலாகிவிரிந்து = அற்பமாகி வித்தரித்து, சகத்திரளாய்க் கிளைத்த விவையெல்லாம் = உலகக்கூட்டமாய் விளைந்தெழுந்த இவையாவும், விஞ்சுபிரமமே = வியாபகமான பிரஹ்மமே, அறிவு பிரமம் = சித்துப்பிரஹ்மம், மேதினிபிரமம் = பிரபஞ்சம் பிரஹ்மமாம், பஞ்சபூதம் பிரமம் = ஐந்துபூதங்களும் பிரஹ்மம், நாம்பிரமம் = நாமியாவரும் பிரஹ்மமே, நமது பகைபிரமம் = நமது பகைவரும் பிரஹ்மமே, தஞ்சநட்புக்கிளை பிரமஞ் சங்கராதி நிச்சயமே = நம்பாற்புகுந்தவர்நேயர் உறவினர் பிரஹ்மம் என்பது சங்கராதி தேவதைகளின் துணிபாம்,

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்: ஹே இராஜபுத்திரமகாதோளோய் அறிய வேண்டியயாவற்றையு மறிந்தோய்! நீ கேட்டபடியாக வெட்டவெளியாய்க்கேள், இவர்கட்கும் நிச்சயந்தான் இதுவேயாகும்; இயம்பும் பிரகாரம், அதனையேகூறல்: எவ்விச் சிறிது வித்தாரம்போல ஜகத்ஜாலம் காணப்பெறுகின்றதோ, அவ்வெல்லாம் அமலமான பிரஹ்மமேயாம், இவை விவத்திதமாம் = மாயிகாவிவத்திதரூபத் தியாகத்தானே பாரமார்த்திக சொரூபத்தில் திதமாம். சுருக்கிக்கூறியதையே விஸ்தாரமாகச் சிறப்பித்துரைத்தல்:—பிரஹ்மஞ் சித்து, பிரஹ்மம்புவனம், பிரஹ்மம்பூதபரம்பரைகள், பிரஹ்மம்யான், பிரஹ்மம் எனது சத்துரு பிரஹம்நன்மித்திரபந்துக்களாம்.

(ச.) ஸ்ரீ வசிஷ்டர்: தோற்றுகின்ற திருசியமகிலமும் பிரமமேயென அராதிகளுடைய நிச்சயமென்பது பொருள். இதனையே விரித்துரைத்தல்: அறிவு பிரகாசிப்பது, மேதினி =

பிரகாசியமான புவனம், சேதனுசேதனுன்மகம் பிரமமென்பது பொருள். பஞ்சபூதம் = வியோமாதிமகாபூதசமூகம், நாம் நமது பகை நட்புக்களை பிரமமென்பது அராதிகளுடைய நிச்சய சொரூபாபிநயம். (25)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதற்கே அதத்தென்னப் பாவனை யெதனலாமோ அத்தகைய பகுதி மாயிகஇயற்கையாம், அதன்வயத்தானே ஜீவஜடரூபப்பேத கற்பனையாம், இதுவே ஜீவபூதாத்மாவென்றும், இது ஜடரூபமென்றும், அறியாதவர்க்கே மோகமான துண்டாம், அறிந்தவர்தமக்கோ யாண்டுமமங்கனுண்டாகாதாம். இதனுனே தத்துவவித்துக்கு எல்லா வுலகமும் ஆனந்தவகரசமேயாம் எனல்:—அறிஞர்க்கென்பது.

(ச.) இச்சகத்தொன்றே யெவனுக்குத்துக்கநிமித்தம் எவனுக்குச் சுகநிமித்தமாமெனச் சங்கித்துத் திருஷ்டாந்தத்தாற் றெரிவிப்பவராய்க் கூறல்:—

அறிஞர்க்குலகா நந்தமய மறியாதவருக் கிடர்மயமாஞ்
செறிந்தவிருளா மந்தகர்க்குச் செங்கணுள்ளோர்க் கொளியாகும்
பிறிவில்பிரம மனைத்துமென் நாடிற்பிரம மவனேயா
நறியவமுதுண் டவனமுத மயத்தைநண்ணு திரானன்றே.

(ப - ரை.) அறிஞர்க்கு உலகு ஆனந்தமயம் = அறிவுடையவர்க்கு ஜகத்தானது இன்பமயமேயாம், அறியாதவருக் கிடர்மயமாம் = அறிவில்லாதவர்கட்குத் துக்கமயமாம், செறிந்தவிருளா மந்தகர்க்கு நெருங்கிய அந்தகாரமாம் குருடருக்கு, செங்கண் உள்ளோர்க்கு = செந்தாமரைபோன்ற நேத்திரமுடையவருக்கு அல்லது நல்லநேத்திர முடையவருக்கு, ஒளியாகும் = பிரகாசமாகும், பிறிவில்பிரமம் அனைத்துமெனநாடில் = பேதமில்லாதபிரமம்யாவுமென்று கருதில், பிரமம் அவனேயாம் = அவன் பிரஹ்மசொரூபமேயாம், நறிய அமுதுண்டவன் அமுதமயத்தை நண்ணுதிரான் அன்றே = நல்ல அமிர்தத்தை அயின்றவன் அவ்வமிர்தசுபாவத்தையடையாமல் இருக்கமாட்டான் அப்போதே. அன்று ஏ அசைகளெனினும் ஆம்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் அஞ்ஞானுன்மாவிற்கே மோகமாம் அன்றி ஞானுன்மாவிற்கு யாண்டுமே மோகமிலதாம், ஜகத்தானது அஞ்ஞனுக்குத் துக்கக்கூட்டமயமாம், அறிஞனுக்கோ ஆனந்தமயமாம், அந்தமாம்புவனம் அந்தனுக்கு, பிரகாசமேயாம் கண்ணுடையவனுக்கு, ஜகத்தேகான்மகம் அறிஞனுக்கு, மூர்க்கனுக்கோ அத்தியந்தம் துயாந்தருவதாம்; பிரஹ்மத்தினும் அயலாகச்சரீராதியுளதாவதிலதாம், பெருங்கடலில் நீர்க்கயலாகத்தரங்காதியில்லதேபோலும், பிரஹ்மம் பிரஹ்மமாகவேயறியப்பெறின் பிரஹ்மமேயாம் கணத்தில், பொன்பொன்னுக வுணரப்பெறின் பொன்னேயாங்கணத்தில்; பிரஹ்மமுணர்ந்தவன் பிரஹ்மமேயாவன்.

(ச.) ஞானவஞ்ஞானத்தால் வந்தவிசேடமென்பது பொருள், ஞானப்பிரகாரத்தையே திருஷ்டாந்தத்தோடு தெரிவித்தல்:—நாடில் = நிச்சயிக்கில். அவதாரிகைப் பாடபேதம்:— அற்றேல், ஒன்றேயாய இவ்வுலகமானது எங்ஙனம் ஒருவனுக்குத் துக்கப்பொருட்டும் மற்றொருவனுக்குச் சுகப்பொருட்டுங்கூடும்? என்றுசங்கித்துத் திருஷ்டாந்தத்தானேபொருத்தியுரைத்தல்:—அறிஞர்க்கென்பது. (26)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சொரூபமே யெங்கணுமுளதெனக்கூறி வடிவமுங்கூறி அதுவேயாமெனக்கூறல்:—எறியென்பது.

எறிபேரொளிமாத் திரமமல மெவர்க்குமுணர்வெங் கணுமுளது
பிறியாவுபசாந் தச்சித்துப் பிரமமென்ப தனுபவமா
நெறிபோமறியா வொருவனெஞ் சன்றிநோக்கி லெத்தோற்றஞ்
செறிவாமஃதெங் கணுமுளதாஞ் சித்தாம்பிரம மாகின்றேம்.

(ப - ரை.) எறிபேரொளிமாத்திரம் = எங்குமொளிரும் பெரியபிரகாசமாத்திரம், அமலம் = நிர்மலம், எவர்க்குமுணர்வு எங்கணுமுளது = யாவருக்குமறிவு எங்குமிருக்கின்றது, பிறியாவுபசாந்தச்சித்து = பிரிவுபடாதவுபசாந்தமாகிய அறிவு, பிரமமென்பதனுபவமாம் = பிரஹ்மம் என்பது அநுபவிக்கப்பெறும், நெறிபோமறியாவொருவனை = மார்க்கத்திற் செல்லும் தெரியாத வொருவனை, நெஞ்சன்றிநோக்கில் = மனமிலது காணில், எத்தோற்றம் = எப்பிரதீதி, செறிவாம் = பொருந்தும், அஃதெங்கணும் உளதாம் = அது எங்குமிருக்கின்றதாம், அந்தகைய, சித்தாம்பிரமமாகின்றேம் = அறிவுவடிவமாகிய பிரஹ்ம சொரூபமே யாமாகின்றோம்.

(ஸ்ரீ - வீர.) ஆபாசமாத்திரமமலம் சர்வபூதாத்மபோதகம், யாண்டுமே நிறைந்திருப்பது சாந்தம் சித்து ஆகிய பிரஹ்மம் பிரஹ்மவித்துக்களானே யநுபவிக்கப்பெறும். அற்றேல், புருஷன்றோறும், மநோபுத்தி இந்திரியவிருத்திபேதத்தானே சித்திற்பேதாநுபவ முண்மையின் யாங்ஙனமது பிரஹ்மமாம் எனின் ஆண்டுரைத்தல்:—மநோபுத்தீந்திரியக்கூட்ட சமஸ்தமான விருத்திகளிலும் தொடர்ந்து நிற்பதாம்; சேத்தியவர்ஜிதம் சின்மாத்திரம் தத்துவம் எங்குமிருப்பது என்றிடப்பெறும். சத்திய அநுபவரூபாத்மசிற்பிரஹ்மாத்மாவாகிய சாசுவதன் யானாகின்றேன், இங்ஙனம் இங்கிருக்கும் புருடனுக்கு, பிறண்டுதூரத்திருக்கும் விடயமாவதில், சம்பாதித்திராத அந்தராளமார்க்கத்திருப்பனவாய பதார்த்தங்களின் ஆலோகம் எதனால் அவ்விதமாயமனமானது நிலைபெற்றுளதாயபோது, அந்தராளதேசத்தில் விடய நற்பரிச அபாராத சூனியமாய எப்பிரதீதி சற்சின்மாத்திரமுளதோ அவ்வெங்குமிருக்கும் பிரமஹ்மமேயானாகின்றேன்.

(ச.) எறிபேரொளிமாத்திரம் = விடயசம்பந்தமற்றஞானரூபம், எப்பொருளது, சித்துப்பிரமம் = சித்ரூபமான பரமப்பிரமமென்பது, அனுபவமாம், சித்துக்கிரகணஞ் சத்தப்பிரமத்தின் நிவிர்த்தி நிமித்தம், இதனையேயுதாகரணமுகத்தால் வெளிப்படக்கூறல்:— அறியா = முன்பு பழக்கமற்ற, நெறிபோமொருவனை, நோக்கின் = காணின், நெஞ்சின்றி, மனது தனக்கிஷ்டமுள்ள மற்றோர்பொருளிலிருக்கும்போது நிகிலவிகற்ப நிர்முக்தமாய், எத்தோற்றஞ் செறிவாமதுவெங்கணுமுளதச்சித்தாம் பிரமமாகின்றேம், இவ்விடத்தறியாவென்றதனால் பூர்வாநுபவஜந்நியமான சம்ஸ்காரமகிமையால் விகற்பமுதியாதெனப்பட்டது. நெறிபோமென்றதனால், காலதாமதமின்மையின் விகற்போதயத்துக் கவகாசமின்றென்பது தெரிவிக்கப்பட்டது. நெஞ்சின்றி என்றதனால், நிகழ்கால விகற்பமுமின்றுமென்பது குறிப்பிக்கப்பட்டது என்றுணர்க. இவ்விடத்துத் தோற்றமே யுதித்ததின்றெனச் சொலற்கரிதாம், வாகியேந்திரியத்துவாரத்தாற் பகிர்முகமாகப் போதம்பிரகாசித்துக்கொண்டிருத்தலின் அன்றெனின், நிருவிகற்பகாபாவமாயின் அதன்மூலமான சவிகற்பத்துக்கும் அனுதாபப்பிரசங்கத்தினானுங் காலாந்தரத்தில் யாது இவ்விடத்தொன்றுவந்ததெனக் கேட்பவனுக்கு அதன்விடயநினைவு வாராமையினானுமென்க. ஆகலால் நிர்விகற்பமாய் விஷயதோஷம் விடுபட்ட நிர்மலமானதோற்றம் உண்டென நன்று யுணர்க. (27)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சந்தோஷமகிழ்விஞலே சொரூபத்தைத் துதித்துக்கொண்டிருக்கு மவரே, உபசாந்திச் சுகத்தைப் பெறுவாரெனல்:—சகல, என்னுமென்பன.

சகலசங்கற் பப்பலனுய்ச் சகலவொளிக்கு மொளியாகிச்
சகலமான கொள்கையுந்தீர் தனிச்சிற்பரத்தை யேத்துகிற்பாஞ்
சகலசங்கற் பமுமற்றுச் சகலசந்தோ டமுமற்றுச்
சகலவாரம் பமுமற்ற தனிச்சிற்பரத்தை யேத்துகிற்பாம்.

என்னுமறுதி யுடையோரா யெல்லாநினைவு களுமின்றி
முன்னுமுண்மைய ராயன்னுர் முழுமெய்சாந்தஞ் சமமென்னுந்
துன்னுபதத்தே சுகித்திருப்பர் சமமாநிராசை தொடர்மனத்தோர்
மன்னுபுந்தி நிறைதீரர் வாழ்விற்சாவின் மகிழ்ந்தயரார்.

(ப - ரை.) சகல சங்கற்பப்பலனுய் = எல்லாவெண்ணங்களின் பயனுய், சகல வொளிக்கு மொளியாகி = எல்லாப்பிரகாசங்களுக்கும் பிரகாசமாகி, சகலமானகொள்கையுந் தீர் = எல்லாக்கோடலுந் தீர்ந்த, தனிச்சிற்பரத்தையேத்துகிற்பாம் = ஒப்பற்ற சிதான்ம வத்துவைத் தியானிப்பாம். சகல சங்கற்பமுமற்றுச் சகல சந்தோடமுமற்று = எல்லா எண்ணமுமேகி யெல்லாமகிழ்ச்சியுந்தீர்ந்து, சகல வாரம்பமுமற்ற = எல்லா விக்ஷேபங்களு மற்ற, தனிச்சிற்பரத்தையேத்துகிற்பாம் = ஒப்பற்ற சிதான்மவத்துவைப் போற்றுவாம்.

என்னு மறுதியுடையோராய் = என்னுந் துணிபையுடையவர்களாய், எல்லா நினைவு களுமின்றி = எச்சங்கற்பமுமேயில்லாமல், முன்னுமுண்மையராய் = பேணுஞ்சத்தியராய், அன்னுர் = அம்மேலோர், முழுமெய் சாந்தம் சமம் என்னும் துன்னுபதத்தே = அத்தியந் தஞ் சத்தியமாய்ச் சாந்தமாய்ச் சமமாயபதத்தில், சுகித்திருப்பர் = இன்புற்றிருப்பர், சமமா நிராசை தொடர்மனத்தோர் = ஒப்பாகிய நிராசையைப்பற்றிய வுளத்தினர், மன்னுபுந்தி நிறைதீரர் = பொருந்திய பூர்ணமதியினர் மகாதீரமுடையவர், வாழ்வில் சாவில் மகிழ்ந்து அயரார் = வாழ்ந்திடல் தாழ்ந்திடல்களிற் சந்தோஷத்தையேனும் வாட்டத்தையேனு மடையாதவர்.

(ஸ்ரீ - வீர.) சர்வசங்கற்பபலந்தருவதும், சர்வதேஜசுகளையும் ஒளிர்விப்பதும், சர்வ உபாதேயசீமாந்தமும், ஆகிய சிதாத்மாவை யுபாசிப்பாம்; எல்லாவுபாதேயங்களின் உபா தானத்திற்கு ஆன்மார்த்தத்தன்மையுண்மையின், அதன் சீமாந்தமெனப்பெற்றது. சாக்கி ரத்துசொப்பனம் சுழுப்திதுரியம் துரியாதீதம் என்னும் பதங்களிலும் எல்லா விடங்களி லும், எப்போதுமே யொப்பாகி யொளிரும் சிதாத்மாவையுபாசிப்பாம்; சர்வசங்கற்பமும் பிர சாந்தமாய், அகிலகாமமும் அழிவுற்றதாய், அசேஷகோபதாபாதிகளும் அழிவுற்றதாயிலங் கும் சிதாத்மாவை யுபாசிப்பாம்; மோகஉற்கண்டைகள் யாவும்போனதாய், எல்லா முயற்சி களும் ஓய்ந்ததாய், எல்லாச்சேஷ்டைகளுமில்லாததாய், சர்வாம்சமுமேயில்லாததாய்; எல்லா வகங்காரமுமே யேகியதாய், சர்வமும் = எஞ்சலின்றி யாவுமின்றியிலங்கும் சிதாத்மாவை யுபாசிப்பாம். இப்போது, வெளியே இராகமின்றிச் சங்கமின்றி, உள்ளேசொச்ச ஆன்மப் பேரொளிவீச வீற்றிருந்த ஜனகாதிகளின்றிதியை, ஆசிரியாருளியவாறே கொண்டு வாழ்தி யென ஆசீர்வதித்தல்:—என்னுமென்பது. என்னும் நிச்சயவான்களாய்ச் சனகாதிசேவன் முத் தர்கள், மகான்மாக்கள், ஆசையும் பாவமும் அற்றவர்களாய், மெய்யர்களாய், சாந்தசமசத்திய ரூதமாகிய சோதிதற்பதார்த்தத்தில், பேரானந்தமயமாயுள்ளே வாழ்ந்துகொண்டிருந்தார்

கள். வெளியிலோ பூரணமதியராய்ச் சோதிதத்துவம்பதார்த்தமுடையவராய், பெருந்தீரர்களாய் வாழ்ந்திருந்தார்கள், இதனானே யுள்ளிலும் வெளியிலும் ஒருப்படித்தாகி இராகமற்ற சித்தராய்ச் சீவிதத்தையும் மரணத்தையும் புகழாமலும் இகழாமலும் பூரணமாய் வாழ்ந்தார்களாகலின் நீயும் மங்ஙனம் வாழ்தி.

(ச.) சகலநினைவின் = சர்வசங்கற்பங்களின், பலனாய் = பலத்தைத்தருவதாய், ஜகச்சுவாமியாதலின், சகலவொளிக்கும் = சூரியசந்திராதிகளுக்கும், ஒளியாகி = சோதிகளுக்குஞ் சோதியென்னுஞ் சுருதியின், சகல கொள்கைகளுக்கும் = சகலமான கொள்ளத்தகுந்த பொருள்களுக்கும், ஈறும் = அவதியானதாம், பரமப்பிரேமைக் கிருப்பிடமாதலின் இத்தன்மையான தனிற்சிற்பரத்தை எற்றுகிப்பாம் = பாவிப்பாம். சகலசங்கற்பமுமற்று = கிருதகிருத்தியமாயிருத்தலின், சகலசந்தோடமும் = வாஞ்சாவிசேடமும், அற்று, அவாப்தகாமமாயிருத்தலின், சகலமான ஆரம்பமும் = விகாரங்களும், அற்ற, கூடஸ்தமாயிருத்தலின், அத்தன்மையான சித்துரூபமாகிய ஆன்மாவை யேற்றுகிற்பாம்.

என்னு மறுதியுடையோராய் = முற்கூறியபிரகார நிச்சயமுள்ளவராய், அதனாலே, எல்லா நினைவுகளுமின்றி, நிஷ்பாவராய், உண்மையராய் = சத்துரூபமான பிரமத்திற்சாதுக்களாகிய, அன்னார் = அன்னாரதாதி மகான்கள், முழு = ஏகரூபமும், மெய் = அபாத்தியரூபசத்தியமும், சாந்தம் = நிர்விகாரமும், சமம் = சமசொரூபமுமென்னும், துன்னுபதத்தில் = பிரமத்தில், சுகித்திருப்பர்; இப்பிரகாரத்தால், புந்திநிறைதீரர் = பிரமநிஷ்டையினாற் பூரணபுத்தியுடையதீரராய், அதனாலே, சமமாநிராசைதொடர்மனத்தோர் வாழ்வின் மகிழார் சாவினயரார் ஆன்மாவில் இரமித்திருத்தலினென்பது பொருள். சத்தியாசத்தியவென்னும் பாடத்தில், திருக்குரூபத்தன்மையானே சத்தியமும், திருசியரூபத்தன்மையானே அசத்தியமும், என வியாக்கியானிக்கத்தக்கதாம். (28-29)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஹே பகவந்! அகோ ஆச்சர்யம் நன்றாகச் சகலமலங்களுந் தீர்ந்தவனாயினேன், தேவரீரது திருவருளானே அறியவேண்டியதை யறிந்தவனாயினேன், சூர்யசங்கத்தாலம்புஜம்போலத் தெளிந்தேன், சரற்போதில் இமமேபோல என்னுடைய பிராந்தியத்தியந்தம் அத்தமாயது, அகிலசந்தேகங்களு மழிந்துபோயின, தேவரீர் அருளியபடியே செய்வேன், ஆயினும் யோகத்தினாலே உயர்பதமெய்திச் சீவன்முத்தர் வாழ்ந்ததை யுரைத்தருளவேண்டும் என்று ஸ்ரீ இராகவர் பிரார்த்தித்தல்:—என்றவென்பது.

என்றமுனியை மெய்ஞ்ஞான விநோதத்தாத லிதுவன்றி
நின்றவுயிரின் றடையாலே யாதனிகழ்வா தனைநீங்கி
யொன்றுதுயர்தீர்ந் துயர்சீவன் முத்தரிருந்த துரையென்று
வென்றிவடிவே லவன்கேட்ப வேதவசிட்டன் விளம்புற்றான்.

(ப - ரை.) என்றமுனியை = என்றுகூறிய ஸ்ரீ வசிஷ்டபகவானை, மெய்ஞானவிநோதத்தாதல் இது = உண்மையுணர்வின் விநோதத்தாதல் இதுவாம். அன்றி = இதுவல்லாமல், நின்றவுயிரின் றடையாலே = நிறுத்திய பிராணனினது நிரோதனத்தாலே, ஆதல் = உண்டாதலாகிய, நிகழ்வாதனை நீங்கி = பொருந்தியவாதனையின் நீக்கத்தையடைந்து, ஒன்று துயர்தீர்ந்து = வந்ததுக்கம் நீங்கப்பெற்று, உயர் = மேலான, சீவன்முத்தர் = ஜீவன்முத்தர்களாகிய மகான்கள், இருந்த துரையென்று = வாழ்ந்த தன்மையைக்கூறி யருளுவாயாகவென்று, வென்றிவடிவேலவன் கேட்ப = வெற்றியையும் அழகையும் பொருந்திய வேலா

யுதத்தையுடைய ஸ்ரீ இராகவர் வினவ, அதற்கு, வேதவசிட்டன் விளம்புற்றான் = வேதங்களெவற்றையுமுணர்ந்த ! ஸ்ரீ வசிட்டபகவான் விடைகூறத் தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) உபசமப்பிரகரணத்திற் காட்டிய வாசனக்ஷயஹேதுக்களாய ஞானயோகக் கிரமங்களின் மத்தியில், உத்தமாதிகாரிவிஷயமாய ஞானவிலாசத்தானே வாசனவிலய பலத்தையடைந்து கிருதார்த்தர் ஆயினும் ஸ்ரீ இராகவர், மந்தமத்யம அதிகாரிகளின் உபகாரப்பொருட்டு, யோகக்கிரமத்தானும் வாசனநாசப்பிரகாரம் அறியும் வேட்கையராய்வினாதல்:—மெய்ஞ்ஞான மென்பதாதி. சம்யக்ஞானவிலாசத்தானே வாசனவிலய உதயமாகவே, ஜீவன்முக்தபதத்தில் அத்தியந்தம் ஹே பிரஹ்மந் ! விசிராந்தவான் யானாயினேன். பிராணஸ்பந்தநிரோதத்தானே வாசனவிலய உதயமாகவே, ஜீவன்முத்தபதத்தில் எங்ஙனம் விசிராந்தியை அடையலாமென்பதைத் தயவுசெய்தருளவேண்டும்.

(ச.) ஸ்ரீ இராமர், மெய்ஞ்ஞானத்தினது, விரோதத்தாதல் = மகிமையாலாவது, உயிரின் றடையாலேயாதல் = பிராணசலனநிரோதத்தாலாவது வாதனை நீங்கின் ஜீவன் முக்தியில் எந்தப்பிரகாரத்தால் விசிராந்தியுறப்படுமென்றதாயிற்று. (30)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கேட்டதற்கு விடைபகரும்பொருட்டு, ஸ்ரீ வசிஷ்டபகவானும் உபசமப்பிரகரணத்துரைத்ததேயாய இராஜயோகஹடயோகப்பிரகார மிரண்டையும் நினைப்பித்துக்கொண்டு பதிஞ்ஞைசெய்துணர்த்துகின்றார்:—உருகுமென்பது.

உருகும்பிறவித் துயராறுக்க யோகப்பெயரா மியூகந்தா
னிருமையுண்டா மெய்ஞ்ஞான மேகமுயிரின் றடையேகம்
வருமிவ்விரண்டு மியோகப்பேர் மருவுமெனினு முயிர்த்தடைக்கே
பெருகவுரித்தா மியோகப்பேர் பிணகபாணி யுரைத்ததுவே.

(ப - ரை.) உருகும் பிறவித்துயராறுக்க = கருகும் ஜனனதுக்கநீக்க, யோகப்பெயராம் இயூகந்தான் = யோகப்பெயரிய யுக்தியானது, இருமையுண்டாம் = இருவகையாம், மெய்ஞ்ஞானமேகம் உயிரின்றடையேகம் = தத்துவஞானம் ஒன்றும் பிராணநிரோதனம் மற்றொன்றும், வருமிவ்விரண்டும் = சாதகமாக வாராநின்ற இந்த இரண்டும், இயோகப்பேர் மருவுமெனினும் = யோகமென்னும் பெயரைப்பொருந்துமென்றாலும், உயிர்த்தடைக்கே = பிராணநிரோதத்திற்கே, பெருகவுரித்தாமியோகப்பேர் = பெரும்பான்மையும் உரியதாம் யோகநாமம், பிணகபாணியுரைத்ததுவே = சிவபெருமான் றிருவாய்மலர்ந்தருளியதேயாம்.

(ஸ்ரீ - வீர.) சம்சார உத்தாரணத்தில் யுக்தியாதுளதோ அதுயோகசப்தத்தானே கூறப்பெறும், சித்தஉபசமதர்மிணியாய அதனை யிருவகையாக நீயுணர்தி, இதனது ஒருபிரகாரம் உலகிற்பிரசித்தமாய ஆன்மஞானமாம், ஆம், இரண்டாவதோ பிராணசம்ரோதமாம், எம்மாவிது இனியியம்பப்பெறும் கேட்டி.

(ச.) ஸ்ரீ வசிட்டர்:—பிறவித்துயராறுக்கும் = சம்சாரநிவிர்த்திசெய்யும், ஊகமுந்தான் = உபாயமே, யோகப்பெயராம் = யோகமெனப்படும், அதுவும், மெய்ஞ்ஞானமேகம், உயிரின்றடையேகமுமென இருவகையாம் இவ்விருவகைச் சாதாரணமாயினும் யோகப்பெயர் உயிர்த்தடைக்கே யுரித்தாமென்பதுபொருள். (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டுமுதலில் அவற்றுள் எதற்குச்சுகரத்தன்மையுளது, சுலபத்தன்மையால், அதுக்கத்தன்மையால், இவற்றுள் யாதுதான்சோபனமாம், எதனையுணர்ந்த

மாத்திரையானே மறுபடி கலக்கம் வாதிக்காதோவென ஸ்ரீ இராகவர் சங்கிப்பவதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரங்கூறல்:—யோகமென்பது.

யோகமொருவற் கரிதாகுமொருவற் குண்மையறி வரிதா
மாகவிவற்றின் மெய்ஞ்ஞான மறைந்தேன்யோக வடைவினிக்கே
ளாகவமுத நிகருமொரு சரிதையுரைக்கே னொருகான்
மேகவூர்தி யவையத்தே விண்ணோர்முனிவ ருடனிருந்தேன்.

(ப-ரை.) யோகமொருவற்கு அரிதாகும் = ஓரொருவற்கு யோகமானது அடைவதற்கு அரியதாம், ஒருவற்கு உண்மையறிவரிதாம் = ஒவ்வொருவற்குத் தத்துவஞானம் அடைய வரியதாகும், ஆகவிவற்றின் = என்னும் இவற்றினுள், மெய்ஞ்ஞான மறைந்தேன் = தத்துவஞானத்தைப்பற்றியுரைத்தேன், யோகஅடைவு இனிக்கேள் = யோகமுறையை இனிக் கூறக்கேட்குதி, நாகவமுதநிகருமொரு சரிதையுரைக்கேன் = தேவாமிர்தம்போன்ற வொரு வொப்பற்ற சரித்திரமுரைக்கின்றேன், நான் ஒருகால் = யானொருசமயம், மேகவூர்தியவை யத்தே = தேவேந்திரசபையில், விண்ணோர் முனிவருடனிருந்தேன் = தேவதைகள் முனி வர்களுடன் வீற்றிருந்தேன்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ வசிஷ்டபகவானுரைத்தல்:—யோகசப்தத்தானே இருபிரகாரங்களுமே கூறப்பெற்றனவாம், என்றபோதிலும், இந்த யோகசப்தமானது, அத்தியந்தம் பிராணநிரோ தத்திலேயே ரூடியாக நிலைபெறும்; இவ்விரண்டனுள் சிலர்க்கு யோகம் அசாத்தியமாம், சிலர்க்கு ஞானநிச்சயம் அசாத்தியமாம், ஹே சாதுவே எம்முடைய அபிமதமோ ஞானநிச்சய மானது சுசாத்தியமென்பதே. ஒவ்வொரு சுகுமாரசித்தத்திற்குப் பிராணசம்ரோதத்துக்கஞ் சகிக்கமுடியாமையின் ஹடயோகம் அசாத்தியமாம், விசாரஅகுசலமாய்கடோரசித்தத்திற்கு ஞானநிச்சயம் அசாத்தியமாம், விசாரகுசலமாய்ச் சுத்தசித்தமுடைய வெமக்கோ ஞானநிச்ச யம் சுசாத்தியமாம் என்பது அபிப்பிராயம். இவ்வண்ணம் அவாந்தரவினாவை யகற்றி முன் வினாவிடையைக் கூறத்தொடங்கல்:—யோகவடைவென்பது. ஹே இரகுகுலதிலகமே! ஞானயோகங்களிரண்டுமே, சாஸ்திரங்களிற் கூறப்பெற்றனவாம், அவற்றுள் உனக்கு நிர்மல ஞேயத்தை யுடைய வுள்ளிருக்கும் ஞானமானது கூறப்பெற்றது. பிராண அபானங்களின் சமத்வசம்பத்திரூபத்தானே பிரசித்தமாம், திடதேகக் குகையிலிருப்பதாம், சித்தியை வாஞ் சிப்பவர்க்கு ஆகாசகமனாதி அனந்தசித்தியைத்தருவதாம், ஞானம்விரும்பியவர்க்கோ, சாக்ஷாத் காரஹேதுவாம், யோகம் ஆகலின் அதனைக்கூறக்கேட்குதி; அதன்பொருட்டாக.

(ச.) உண்மையறிவு = ஞானநிச்சயம், அரிதாம் = அசாத்தியமாம், மெய்ஞ்ஞானம் = சம்சாரநிவிர்த்தி சாதனமானஞானத்தை, நினக்கு, அறைந்தேம் = முன்னமே கூறினேம், இனியோகவடைவு = பிராணநிரோதத்தினது உபாயவியல்பைக் கேள். (32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உரைத்தபிராணயாமாதியோகக்கிரமம் புசுண்டர்கூற்றை விரித்த லானே விஸ்தாரமாக வருணிப்பவராய்ப் புசுண்டஆக்கியாயிகையைத் தொடங்குதல்:—நிறக்கு மென்பது.

நிறக்குநார தாதிகளா நெடுநாள்வாழ்வோர கதைகேட்டேன்
சிறக்குமாமே ருவின்வடகீழ்த் திக்கிற்பதும ராகவொளி
பிறக்குங்கோட்டிற் கற்பகத்தின் றென்பாற்பணையிற் பெருங்கூட்டிற்
புறக்குன் றிருந்த தெனவிருக்கும்புசுண்டநாமத் தொருகாகம்.

(ப - ரை.) திறக்கும் நாரதாதிகளால் = எங்குஞ்சஞ்சரிக்கும் நாரதாதிமகான்களால், நெடுநாள் வாழ்வோர் கதைகேட்டேன் = வெகுகாலம் ஜீவிப்பவரது சரித்திரங்கேட்டேன், சிறக்கும் = சர்வவிசேடங்களும்பொருந்திய, மாமேருவின் = மகாமேருபர்வதத்தின், வடகீழ்த்திக்கில் = ஈசானியதிசையில், பதுமராகவொளி = பத்மராகப்பிரகாசம், பிறக்கும் = வீசும், கோட்டில் = சிகரத்தில், உள்ள, கற்பகத்தின் தென்பாற்பணையில் = கற்பகவிருக்ஷத்தினது தெற்குநோக்கிப்போம் கொம்பில், பெருங்கூட்டில் = பெரியகூண்டில், ஒரு காகம் = ஒருவாயசமானது, புசுண்டநாமத்து = புசுண்டரிஷியெனப் பெயர்படைத்து, புறக்குன்றிருந்தது எனஇருக்கும் = ஒருமலை வந்திருந்ததேபோல வீற்றிருக்கும்.

(ஸ்ரீ - வீர.) "அன்பரிலக்கிங்கமுதனைய அரியகதையொன்றியம்புவேன், இன்பம்பெருகும் கேட்பதிலே யினிய பிரமாவென்பவற்கு, முன்பணுகயானுதித்தேன் முளரிபுளத்தின் சுதனாகத், துன்பமில்லா வசிட்டனெனத் துருவகிலக்குமடுத்தபடி," இராநின்ற நக்ஷத்திரசக்கிரமென்னும் சப்தஇருஷிமண்டலமாமூலகில், யுகசமூகமாம் வைவசுவத மந்வந்தரத்தில் வெகுகாலமாக இனிதுவாழ்கின்றேன். அத்தகைய யான் ஒருகாலத்தில், சுவர்க்கத்தில், சதமகனென்னுந் தேவேந்திரனுடைய கொலுமண்டபமாஞ் சபையில், இருந்துகொண்டு நாரதாதி மகரிஷிகளின் திருவாக்கினின்றும் வெகுகாலஞ் சீவிப்பவர்தங் கதைகளைக் கேட்டேன்; ஒருகதைப்பிரசங்கத்தில், ஆண்டு இனிது சிறிது கூறுமியற்கைவாய்ந்து யாவராலும் பூசிக்கத்தக்க, பிரமாணகுசலரான மகாமதியையுடைய சாதாதபர் எனப் பெயரியமுனிவர் நலமிகுத்த சிலமொழிகள் கூறினர். அக்கூற்றென்னெனில்:—சுமேருபர்வதத்தின் ஈசானகோணத்திருக்கும் பதுமராகமயசிருங்கத்தில் திவ்யகபோதேசத்தில், சூதமெனப்பிரக்யாதிபெற்ற ஸ்ரீமான் கற்பதருவொன்றுளது; அக்கற்பதருவினுடைய சிரத்தில், தங்கமயமாய கொடிகளின் மண்டபந்தங்கும் தெற்குக்கிளையின்கோடரத்தில், அழகியவிககஆலயமொன்றுளது, அதன்கண் ஸ்ரீமாந்புசுண்டர் என்னும் ஒருவாயசம் நன்குவசிக்கின்றது.

(ச.) சாதாதபனென்னு முனிகூறல், பதுமராகவொளிபிறக்கும் = பதுமராகமணிமயமான, தருகுல்மாதி யெதன்கண்ணும் அத்தகையமேருசிருங்கத்தில் கற்பதருவுளது என்பது சம்பந்தம், பத்மராகமயேதிவியென்னும்பாடத்தில், பத்மராகமயமான மேருவினது சிருங்கத்தில், உள்ள எச்சொர்க்கமோ அதன்கண்ணே கற்பதருஉளதாமென்பது யோஜனையாம், இச்சொர்க்கங்களிருபத்தொன்றுய்ச் சொச்சமேருவின்சிரத்தே துதைந்தவாம் என்று சுவர்க்கங்களின் வெகுவாதல் கேட்கப்பெறுதலின் இதைமூலங்கொண்டுணர்க. அந்தப்பறவையாலயத்தில், புசுண்டரெனப்பிரசித்தமான காகமுளது. புவனங்கள் யாவற்றினும் சஞ்சரிக்கும் சீலம்வாய்ந்தது புசுண்டன் என்பது வெளியாம். (33)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அந்தச் சாதாதபர்வசனங்கொண்டே ஸ்ரீமான் புசுண்டர்பெருமையைக்கேட்டுப் போய்க்காணல்:—விதி, என்றென்பன.

விதியைநிகரா யிருந்ததுபோல் வெகுநாளியோகி விருந்தவரார்
முதியசொர்க்க லோகத்து முன்னும்பின்னு மிலதாகு
மதிகவாணு ளதுகாத லற்றதுயர்சீ ருடையதுமா
மதியுள்ளதுசாந் தியதிடர்தீர் மனத்தாற்கால மதித்துணரும்.

என்றுதேவ ரவையத்தி லெவருங்கேட்ப விருகாலா
வன்றுபுசுண்ட னியல்புண்மை யாகவுரைத்த படிகேட்டுச்
சென்றுகாண்டு மெனவிரும்பி மேருவெற்பிற் சிகரத்தின்
மன்றல்கமழ்கற் பகத்திருப்பக் கண்டேன் மற்றோர் கற்பகம்போல்.

(ப - ரை.) விதியைநிகராயிருந்ததுபோல் = பிரஹ்மாவிற்குச்சமானமா யிப்புசுண்டர் இருந்தாரேயல்லாமல், இவர்போல, வெகுநாள் யோகில் இருந்தவாரர் = நெடுங்காலம் யோகத்தில் இருந்தவர் யாவர்தாம், முதியசொர்க்கலோகத்து முன்னும்பின்னு மிலதாகும் = பழைய சுவர்க்கலோகத்தில் பூர்வமும் இப்படியொருவரிருந்ததில்லை இனிமேலும் ஒருவர் இப்படியிருக்க வுண்டாகவுமாட்டார், அதிகவாணாளது = வெகுகால்மாக இருப்பது அக் காகம், காதலற்றது = ஆசையற்றது, உயர்சீருடையது = மேலான சிறப்பையுடையது, மாமதியுள்ளது = மகத்தான புத்தியையுடையது, சாந்தியது = பரமசாந்தியையுடையது, இடர்தீர்மனத்தாற் காலமதித்துணரும் = கவலையற்றமனத்தினாலே காலமூன்றையுங் கணித் துத் தெரிந்துகொள்வது அது.

என்றுதேவர் அவையத்தில் = என இவ்வண்ணம் அமரர்களது சபையின்கண், எவ ருங் கேட்ப = யாவருஞ் செவிகொள்ள, இருகாலா அன்றுபுசுண்டன் இயல்பு உண்மையாக உரைத்தபடி கேட்டு = அக்கால் புசுண்டகாகத்தின் சுபாவசரித்திரத்தைச் சத்தியமாக சாதாதபமுனிவர் கூறியபடி ஒருமுறைக் கிருமுறையாக வினவிக்கேட்டு, சென்றுகாண்டு மென = போய்க்காணவேண்டுமென்பதாக, விரும்பி = இச்சித்து, மேருவெற்பிற் சிகரத் தின் மன்றல்கமழ் கற்பகத்திருப்பக்கண்டேன் = சுமேருபர்வதத்தினது சிருங்கத்திலுள்ள வாசனைவீசுஞ் சகலமும் பயக்கும் கற்பகவிருக்ஷத்தில் இருக்கக்கண்டேன், மற்றோர் கற்பகம் போல் = வேண்டிய யாவற்றையுமீயும் பிறிதொரு கற்பதருவைப்போல.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மலோகத்தில் தமது பங்கஜத்தில், இராகமற்றவராகப் பிரஹ்மா விருப்பதேபோல, ஹே தேவதைகளே அப்புசுண்டரும் இந்தச்சகத்கோசத்தில் எப்பொழும் போது ஜீவிக்கின்றார், இவரைப்போலச் சொர்க்கத்திற் சிரஞ்சீவி முன்னருமில்லை, இனி மேலும் வரப்போவதில்லை, அவர் தீர்க்க ஆயுளையுடையவர், அவர் இச்சையொன்றுமில்லாத வர், அவர் ஸ்ரீமாந், அவர் மகாமதியையுடையவர், அவர் விசிராந்தமதியையுடையவர், அத ஞனேயவர் பரமசாந்தமுடையவர், அவர் காந்தியையுடையவர், முக்காலமும் உணர்ந்த வர் அவர், என்றிந்தப்பிரகாரம் அந்தச் சாதாதபமுனிவரானே அப்புசுண்டமுனிவர் மறுபடி யும் வினவப்பெற்றும் வருணிக்கப்பெற்றார். உள்ளபடியேயாகத் தேவர்தம்சபையில் சத்தி யமே யம்முனிவர் கூறினர். மறுபடி மறுபடியும் என்னால் வினவப்பெற்றவராகிய அந்தச் சாதாதபமுனிவரானே, கூறியபிரகாரமாகவே அப்புசுண்டர் வருணிக்கப்பெற்றார்; சத்தி யமேயென்றது அவர் வார்த்தை புகழ்ச்சிமாத்திரம்பற்றியோவென்னுஞ் சங்கையகற்றவாம். கதையினது அவசரம் மிகவுஞ் சாந்தமானபின்னர், சகலதேவதைகளும் தமது வாசஸ்தானஞ் சென்றபின்னர், புசுண்டப்பறவையைக் காணும்பொருட்டு யான் மிகவுங் குதூகலத்தை யடைந்தேன், எந்தஇடத்தில் அந்தப்புசுண்டகாகமானது வீற்றிருக்கின்றதோ அத்தகைய சுமேருவின் சிறந்த சிருங்கத்தைக் கணகாலத்தில் யான் நன்கடைந்தேன் அதுபெரிதாயும் பதுமராகமயமாயுமிருந்தது. புட்பங்கள்நிறைந்த கற்பமேகங்களேயாய கேசங்களையுடைய அச்சிருங்கத்தினது சிரோதேசத்தில், சாகாசக்கிரம்போலிருக்கும் கற்பாங்கத்தை யான் கண் டேன்; பிராணிகளினுடைய ஆசைக்கு விஷயீபூதப்பொருள்களை நிறைவிக்கும் பொருட்டுக் கற்பிக்கின்றனவெனக் கற்பங்கள் அங்கங்கள் சாகாதியவயவங்கள் உடையதாகக்கண்டேன், அத்தகையதாய் எப்புறத்தும் ஒரேபடித்தாய் விரிந்துநெருங்கிய சாகாபங்கித்தன்மை உண் மையானே சாகாசக்கிரம்போல இருந்ததையுங்கண்டேன், அச்சாதாதபர் கூறியபடியே அநேகவித விசேஷண விசிட்டமாய சூததருவை யான்கண்டேன்.

(ச.) புவனங்களியாவையினுஞ் சுகமாகச் சீவிப்பவனுதலிற் புசுண்டனெனப் பிர சித்தம். (34-35.)

(ஸ்ரீ-வீர.- அ-கை.) தாங்கண்ட ஸ்தானத்தை வருணித்துப் புசுண்டனிருந்த நிலையை வருணித்தல்:—அங்கு, குயில் என்பன.

அங்குமலையின் சாரறொறு முழைகடோறு மளவின்மலர்
தங்குகொடிக டொறும்பணைக டோறுமுறையுந் தடம்பறவை
திங்கணிறத்த வாய்விரிஞ்சன் றேரோதிமத்தின் றிரள்பார்ப்புத்
துங்கமறைகண் மந்திரங்கள் சுவாகாகார முடன்சொல்வ.

குயில்கள் கிளிகள் பலபுட்கள் குகன்போதித்த சிவஞானம்
பயிலுமயில்கள் பலகண்டேன் பாரவுடற்கா கத்திரளுட்
சயிலம்போலு முயர்வடிவஞ் சாலநிறைந்த மனமோன
முயிரினசைவு பிறவாம லுண்ணோக்கொழியாச் சுகமுளதாய்.

(ப - ரை.) அங்குமலையின் சாரல்தொறும் = அவ்விடத்தில் அப்பர்வதத்தின் பொழில்கள் யாவற்றிலும், முழைகள்தோறும் = குகைகள் யாவற்றிலும், அளவின்மலர்தங்கு கொடிகள்தொறும் = அநந்தபுஷ்பங்கணிறைந்தலதைகள் யாவற்றிலும், பணைகள்தோறும் = கொம்புகள் யாவற்றிலும், உறையும் = வசிக்கும், தடம்பறவை திங்கள் நிறத்தவாய்=விசாலமான பக்ஷிகள் சந்திரன்போன்ற வர்ணத்தினவாகி, விரிஞ்சன்றேர்ஓதிமங்கள் = பிரஹ்மாவினுடைய தேரிழுக்கும் அன்னங்கள், பார்ப்பு = குஞ்சுகள், துங்கமறைகள் மந்திரங்கள் சுவாகாகாரமுடன் சொல்வ = பரமப்பிரமாணமாய் பிரமப்பிரமாதாதிதோடமற்றதாய்த் தர்மப்பிரஹ்மப்பிரதிபாதக அபௌருஷேயப் பிரமாணவாக்கியமா யிலங்கும் வேதங்களையும் மந்திரங்களையும் ஸ்வாஹாகாரத்துடனே ஓதுவனவாயிருந்தன.

குயில்கள் = கோகிலங்கள், கிளிகள் = சுகங்கள், பலபுட்கள் = இன்னும் அநேகம் பக்ஷிகள், குகன்போதித்த ஸ்ரீ முருகக்கடவுள் உபதேசித்தருளிய, சிவஞானம் = சைவவிஞ்ஞானம், பயிலும் = அப்யசித்தறிந்த, மயில்கள் = சிகிகள், பலகண்டேன் = அநேகம்பார்த்தேன், பாரவுடற்காகத்திரளுள் = பெரியதேகவாயசக்கூட்டத்துள், சயிலம்போலும் = மலையேபோலும், உயர்வடிவம் = மேலான வடிவத்தினையும், சாலநிறைந்த மனமோனம் = மிகவும் பூர்ணமடைந்த மனமும் மௌனமும், உயிரினசைவுபிறவாமல் = பிராணனுடைய சலனம் உண்டாகாமல், உண்ணோக்கொழியாச் சுகவடிவாய் = அந்தரதிருஷ்டி நீங்காத ஆனந்தவடிவமாய். இருந்தவெனப்பின் அன்வயம்.

(ஸ்ரீ - வீர.) ஆண்டுயாண்டுமே புஷ்பநிறைவுகளாலும், யாண்டும்பலபல்லவங்களாலும், எங்குமணக்கும் மகரந்தக்கூட்டங்களாலும், மேலான வைசித்திரியத்தை யடைந்திருந்ததைத் தரிசித்தேன். அதனது ஸ்கந்தசாகைச் சந்திகளிலும், கொடிகள்மூடிய சாகைநுனிகளிலும், லதாபத்திரங்களிலும், கணுக்களிலும், புஷ்பங்களிலும் ஆலயங்கொண்டு விளையாடித் தூங்கிச்சொக்கும் பிறவைகளைக்கண்டேன். பக்ஷிகளில் விசேடமுரைத்தல்:—திங்கள் என்பனவாதி. சந்திரனது கலைக்கண்டங்களையும், தாமரைத்தண்டின் கண்டங்களைப் போலும் அவற்றானே, விருத்தியடைந்துள்ளனவும், சுப்பிரமாய தாமரைக்கிழங்கின் கவளங்களையுடையனவும் ஆகிய பிரஹ்மவாகனபூதஹம்சங்களைக்கண்டேன், விரிஞ்சியின்றேர் அன்னங்களின் குஞ்சுகளைச் சாமகானம்பண்ணிக்கொண்டிருக்கக்கண்டேன், ஓங்காரத்தினாலும்

வேதங்களினதும் இரகசியார்த்த ஆலோசன சகாயத்தன்மையானே மித்திரபூதங்களாய், பரா பரப்பிரஹ்மவித்தைகளில் அநுசாசனமுடையனவாய் அதாவது ஆசார்யமுகத்தினின்றும் விதிப்பிரகாரம் அத்தியயனம் புரிவனவாயிருப்ப அவற்றைக்கண்டேன். இனியக்கினிவாகன சுகங்களை யாண்டுவருணித்தல்:—மந்திரசமுதாயங்களை யுரைப்பனவாகவும், சுவாகாகாரம் போன்று சொல்வனவாகவும், உள்ளசுகங்களைச் சங்குபோலவெண்ணிறத்தனவாகவும், மின் னற்கூட்டமும் நீலமேகங்களும் வர்ணத்தினலே யொப்பான வுவமையெவைக்கோ அத் தகையனவாகவும், விளையாடக்கண்டேன்; மேலும் தேவர்களானே நித்தியம் நோக்கப்பெறு வனவும், யாகவேதிகளிலே விரிக்கப்பெற்ற பச்சைக்குசலதைகளின் தளங்களைப்போலப் பச்சைப்பசேலென்றிருப்பனவும், ஆகிய சுகங்களை யக்கினிவாகனமுடையனவாகக் கண் டேன். கிளிகளை வர்ணித்திப்போது மயிற்குஞ்சுகளை வருணித்தல்:—அக்கினியின் சிகை யைப்போல மிகவும் ஒளிபொருந்திய சிகைகளையுடைய மயூரக்குஞ்சுகளையுங் கண்டேன்; கௌரியினலே காப்பாற்றப்பெறும் மயூரக்கூட்டங்களையும், குமாரசுவாமியினுடைய மேலான மயிற்கூட்டங்களையும், கந்தசுவாமியினலே யுபந்யசிக்கப்பெற்ற சகல சைவவிஞ்ஞானங்களை யும் உணர்ந்திருக்கும் மயிற்கூட்டங்களையும் கண்குளிரக்கண்டேன்; ஆண்டுயான் நோக்கிய போது நானுவிதமணம்பொருந்திய விசித்திரபுஷ்பங்கள் பரப்பிய கந்தப்பொந்தில் ஏகாந் தத்தில், சாந்தியாதிகுணசாலித்தன்மையானே கலக்கஞ்சிறிதுமின்றிய ஆகாரத்தனவாய வாயசங்கள் அச்சபையில் இருந்தன. மேகங்கள் வாயுவினலே சமபாகமாகப் பகுக்கப்பெற் றனவாய்க் கோடரத்திற் பிரவேசிக்கப் பெறுவித்தனபோலும் இருந்த அவற்றின் மத்தியில், உயர்ந்த ஆகிருதியுடையவராய் ஸ்ரீமாந் புசுண்டரிருந்தார். நீலமணிகளின் மத்தியில் இந் திரநீலம் உன்னதமாக இருந்ததேபோலும், பரிபூரணமனத்தராய், பூஜிக்கத்தக்கவராய், சம திருஷ்டியுடையவராய், சர்வாங்கசுந்தரராய், பிராணனது அசைவை யொடுக்கினவராய், எப் போது முண்முகராய், சுகியாய், சிரஞ்சீவித்தன்மையானே பிரசித்ததமமாய சிரஞ்சீவி யெனப் பிரக்யாதியுடையவராய், வீற்றிருந்தனர். முக்காலத்தையு முணர்பவராயும், சுரா சுரநரதிரியக்காதியாவற்றையு மறிபவராயும், பிரசன்னகம்பீர மனத்தினராயும், மிகச்சதுர ராயும், இளகியமனத்தினராயும், இனிமையும் நேயமும் நிறைந்தவாக்குடையவராயும் வீற் றிருந்தனர்.

(ச.) துங்கமறைகள் = சாமவேதம், மூலம்:—கச்சா = நீர்ப்பிரதானம், கோடரப்பிர தேசங்கள் = பொந்திடங்கள், குஞ்சங்கள் = கொடிமுதலியவற்றானே மூடப்பெற்ற இடங்கள், லதைகள் = சாகைகள், பத்திரங்கள் = பலாசங்கள், பருவங்கள் = கிரந்திகள், அவைகளில் ஆலயம் விதித்து, ஆண்டு அமைந்துவாழும் பறவைகளைக்கண்டேன் புசுண்ட ரைத்தேடும்பொருட்டு என்பதுபொருள். விரிஞ்சிரதஹம்சக்குஞ்சுகள் வேறுபக்ஷிகள் முத லியவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது ஒரு கந்தகோடரத்தில் அவையில் வாயசங் கள் கலக்கமில்லாதனவாக விருந்தனவென்பது அந்வயம். கலக்கமில்லாமலிருத்தற் றலைமை யும், ஆசார்யசந்நிதியில் சபலத்தன்மை கூடாதாகலின், உண்முகத்தன்மையானுதல் என்றுண ரத்தக்கது. ஹம்சாதிகட்குச் சாமகானமும் மந்திரஉச்சாரணமும், சைவாகமவிஞ்ஞானதிக மும், பிரஹ்மலோகாதியின்கண் மகர்ஷிகளோடு சாமகானதிகளில் உடன்வாசத்தால் என்று காணத்தக்கது. (36-37)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ வசிட்டர் புசுண்டரைச் சந்தித்தலும் அவர் பூசித்தலும் இரு வரும் சம்பாஷித்தலும்:—இருந்த, இருக்க, உனது என்பன.

இருந்தவதன்முன் ஞனெய்த வெண்ணமறவந் தெதிர்ந்தென்னைப்
பொருந்துமளவில் வசிட்டனெனப் புந்திபண்ணிப் பொருக்கென்னத்
திருந்தவந்த நல்வரத்து முனியேயென்று நித்நிக்கத்
தருஞ்சங்கற்பத் தான்முளைத்த தடக்கையாலே மலர்தூவி.

இருக்கவென்ன வாசனந்தந் திருந்தபின்ன ரினிமையுட
னருக்கியத்தை முதலனைத்து மளித்தன்பான நல்லுரைகள்
பெருக்கவோதிப் பெரியோய்நின் காட்சியமுதப் பெருமழையால்
வருக்கமுடனு னகங்குளிர்ந்தேன் வழிவந்துடலம் வருந்தினையே.

உனதுபாத தரிசனத்தா லுணர்ந்தேனெல்லா நெடுவாணு
ளனகருடனென் னையுநினைந்தீ ரதுபோனீவந் ததுமறிந்தே
னெனினுநின்சொ லமுதுண்ண நயந்தேனென்ன வதுகேட்டுப்
புனிதமான நன்னெஞ்சப் புசுண்டன்றனக்கிவ் வுரைபுகன்றேன்.

(ப - ரை.) இருந்தவதன்முன்ஞனெய்த = அவ்வாறு சாந்தமாயிருந்த அந்தப் புசுண்ட முனிவர்முன் ஞன் அடைந்தவுடன், எண்ணமற = நினைவற, வந்தெதிர்ந்தென்னை = வந்தடைவுற்றவென்னை, பொருந்துமளவில் = தரிசித்தபோது, வசிட்டனெனப் புந்திபண்ணி = வசிஷ்டமுனிவர் வந்துளாரென்று நிச்சயித்து, பொருக்கென்ன = திடுக்கென்ன, திருந்த வந்த நல்வரத்துமுனியே! = ஹே வசிஷ்டமுனிவரே! தாங்களிவண் கருணையோடும் வந்தது நல்வரத்தாகுக, என்றுதித்திக்க = என்று மாதுர்யமாகவுரைத்து, தருஞ்சங்கற்பத் தான்முளைத்த = யாவற்றையு மீயும் எண்ணத்தினுலுண்டாகிய, தடக்கையாலே மலர் தூவி = விசாலமானகைகளினுலே, புஷ்பமாரிபெய்து.

இருக்கவென்ன = உட்கார்ந்தருளவேண்டுமென்று, ஆசனந்தந்து இருந்தபின்னர் = ஆசனங்கொடுத்து உட்கார்ந்தபின்னர், இனிமையுடன் = மதுரத்துடன் அன்பினுடன், அருக்கியத்தைமுதலனைத்து மளித்து = அருக்கியமுதலிய யாவற்றையுமீந்து, அன்பான நல்லுரைகள் பெருக்கவோதி = நேயமிகுந்த ஆனந்தவசனங்களை மிகமிகவுங்கூறி, பெரியோய் = பிரஹ்மபுத்திரராய்ப் பிரஹ்மாண்டத்தின் மிக்கோய்! நின்காட்சியமுதப் பெருமழையால் = தேவரீருடைய தரிசனமென்னும் அமிர்தமாகிய பெரிய விருஷ்டியினுல், வருக்கமுடனுன் அகங்குளிர்ந்தேன் = எனது சிடச்கூட்டங்களுடன் அடியேன் உள்ளம் பூரித்துத்தண்மையயுற்றேன், வழிவந்துடலம் வருந்தினையே = எங்கட்காக வந்துவில் வந்து திருமேனித்துக்கத்தை மிகவும் மேவினையே.

உனதுபாததரிசனத்தால் உணர்ந்தேன் எல்லாம் = தேவரீருடைய திருவடித்திவ்ய தரிசனத்தாலேயாவற்றையு மறிந்தேன், நெடுவாணுள் அனகருடனென்னையும் நினைந்தீர் = நீண்டகாலம்வாழும் பெரியோருடனே என்னையும் எண்ணினீர், அதுபோல் = எண்ணியதுபோலவே, நீ வந்ததும் அறிந்தேன் = நீர் இவணுற்றது முணர்ந்தேன், எனினும் = என்றபோதினும், நின்சொல்லமுதுண்ணநயந்தேன் என்ன = தேவரீருடைய திருமொழியமிர்தமயில விரும்பினேன் என்றுகூற, அதுகேட்டு = அந்த இனியசொற்களைச் செவிகுளிர்க்கொண்டு, புனிதமான நல்நெஞ்சப்புசுண்டன் = பவித்திரமான அதிசாத்விகமனத்துப் புசுண்டமுனிவர், தனக்கிவ்வுரைபுகன்றேன் = தமக்கிந்த மொழிகளைக் கூறினேன்.

(ஸ்ரீ - வீர.) அதன்பின்யான் அந்தத்தீப்யமானதிருமேனிப் புசுண்டரது முன்னிலையில் ஆகாயத்தினின்றும், அச்சபை சிறிதுகலங்க நக்ஷத்திரம்போல வசலத்தில், மெதுவாக இறங்கினேன். சபைசிறிதுகலங்கியதை வருணித்தல்:-வாயசங்களினுடைய நீலோற்பலசரத்திற்கொப்பான அச்சபையானது, எனது இறங்குதலாலேற்பட்ட மந்தமாருதத்தால், பூகம்பத்தாற் சாகரம்போலக் கலங்கியது சிறிது. அசம்பாவித ஆகமனத்தினையும் அடைவுற்ற என்னைக் கண்டவுடனே, புசுண்டர்தாம் இதோ வசிட்டமுனிவர் அடைவுற்றனர் என்று முக்காலமும் உணருந்தன்மையானே தெரிந்துகொண்டனர். அசலத்தினின்றும் சிறியமேகங்கிளம்பியதேபோல, பத்திரசமுதாயத்தினின்றும் சூக்குமக் குழந்தைமேகம்போன்ற புசுண்டமுனிவர் இனிது கிளம்பினர், ஹே முனிவரே! தங்களுடையவரவு நல்வரவாகுகவென்று மதுராக்ஷரங்களினாலே யினிதுகூறி, சங்கற்பமாத்திரத்தினாலேயுண்டாகிய கோமளக்கரங்களினாலே குசுமாஞ்சலியைச் சுவாகதங்கூறியகாலத்திலேயே விரைவில், மேகமானது குளிர்காலத்தே மழைத்துளிகள் கொடுப்பதேபோலும் என்பொருட்டுப் பெய்தனர், அவ்வாயசநாயகர், இவ்வாசனத்தில் உட்கார்ந்தருளலாம் என்று புகன்று தாசரின்றித்தாமே அதிநவமான கற்பதருவின் இலையைக்கொணர்ந்து விரித்தனர்; பிருத்தியவாயிலாக ஆசனவரத்தைச் செய்யாமல் தாமே ஆசனத்தை ஆதரவோடுங்கொணர்ந்து தந்தனர் என்பதாம்; முனிவர் உட்புகுந்ததைக்கண்டு புசுண்டர் எழுந்திட்டவே தம்மாசன உண்முகதிருஷ்டிகளையுடைய, தங்களுடைய காந்தியைப்போல மிகவும் அழகுபரப்பிய பக்ஷங்களுற்ற அச்சபையிலிருந்த வாயசப்பக்ஷிகள் யாவும் எழுந்துவணங்கின. அதன்பின்னர் எப்பக்கமும் நிறைந்த பறவைக்கூட்டங்களுடன் புசுண்டரோடும் அக்கற்பலதாபுஞ்சஆசனத்திற்றானே யான் உட்கார்ந்தேன். அர்க்கியபாத்தியாதிசமர்ப்பித்துப் புசுண்டர் மிக மகிழ்வடைந்த மனத்தினராய் பெருந்தேஜசோடுகூடியவராய் மிகுந்த நேயத்தோடுகூடிய மதுராக்ஷரம் நிறைந்தவார்த்தைகொண்டு என்னைநோக்கிக் கூறத்தொடங்கினர். அகோ ஆச்சர்யம், பகவானாகிய தங்களால் நெடும்போதின்பின் எங்களுக்கநுக்கிரகம் காட்டப்பெற்றது, தங்களுடைய தரிசனமிருதத்தெளிப்பால், நற்றுருமங்களாகிய = புண்ணியவிருக்ஷவடிவினவாய = கற்பவிருக்ஷசகிதமாகிய, யாங்கள் தெளிக்கப்பெற்றோம், மூலம்:—வயமென்பது தாழ்ந்தஜாதியை விளக்கற்பொருட்டு, ஜாதியாக்யாவில் எனப்பன்மை வசனமாம். வெகுகாலமீயற்றிய எங்களுடைய புண்ணியக்கூட்டங்களினாலே பிரேரிக்கப்பெற்ற, மானியர்களாலும் பூசிக்கப்பெற்ற முக்கியமானியராய, தங்களால் இப்போது எவ்விடத்தினின்றும் வருவதாக விருக்கலாம்? யாதின்பொருட்டு இன்று ஆகமனக்கிலேசத்தினாலே திருமேனியை வருந்தச்செய்ததோ, இவ்வளவுசிரமம் யாதின்பொருட்டெடுத்துக்கொண்டதோ, தங்களுடைய அஞ்ஞானத்திருவார்த்தைகளைக் கேட்க மிகவும் ஆவலுற்ற எங்களுக்கு ஆஞ்ஞையைத் திருவருள்செய்யவேண்டும்; எங்களால் ஆகவேண்டிய காரியத்திற் குத்திரவுசெய்யவேண்டும். தேவரீரது திருவடிகளின் தரிசனத்தினாலே ஹே முனிபுங்கவரே! யாவற்றையும் யானுணர்ந்தேன், தேவரீர் எழுந்தருளிய புண்ணிய மிகுதியானே யாங்களும்மால் மகத்துக்களோடுஞ் சேர்க்கப்பெற்றோம், யாவற்றையு முணர்ந்தேன் என்று யாதுகூறப்பெற்றதோ அதுவே வெளியாக்கப்பெறுகின்றது; நெடுவென்பதாதி. சிரஞ்சீவித்தன்மையுடையவரது விடயமான விசாரணையானது இந்திரரது சபையில் உண்டானதினால், யாங்கள் தங்களுடைய ஸ்மிருதியில் வரும்படி நேரிட்டதுபோலும், அதனால் தாங்கள் திருவடிகளினால் இந்த ஆனந்தாசிரமத்தைப் பவித்திரஞ்செய்தீர்கள்போலும், அகோபாக்கியம். உணர்ந்திருப்பீர்களாயின் இவ்விடயத்தை யாதின்பொருட்டுக் கேட்கவேண்டும் எனின் உரைத்தல்: தங்களுடையவரவு இவ்வண்ணம் உணரப்பெற்றதேயெனி

னும் ஹே முனிவரரசே! தங்களையீண்டு வினவுதலான்று தங்களுடைய வாக்கிய அமிரு தத்தை ஆசுவாதனஞ் செய்யலாமென்னு மிச்சையின் விஜிரும்பணமேயாம். இந்தப்பிரகாரம், திரிகாலாமலதரிசியாயும் பக்ஷிராஜாவாயும் சிரஞ்சீவியாயும் இருக்கும் புசுண்ட முனிவர் கூறிய போது இவ்வார்த்தைகளை யான் கூறத்தொடங்கினேன்.

(ச.) தித்திக்கச்சொல்லி. அங்குமலையென்பன முதலான ஐந்துகவியும் ஒருவாக்கியம். சத்தியசங்கற்பத்தன்மையானே சங்கற்பமாத்திரத்தானே கரங்கள் உண்டாயினவென்ப தாம். சுவர்ணபுஷ்பமாரிபோலும். உமது வரவினிமித்தம் உணர்ந்தவனாயினும், இவ்வகை யானே தங்களை எக்காரணத்தால் வினவுகின்றேனோ அவ்விக்காரணபூதமாய தங்கள் வாக் கியாமிருத ஆசுவாதவாஞ்சையே என்பால் கிளருகின்றது. உமதுவாக்கிய சிரவணவாஞ்சை யாலே நீர்வந்த நிமித்தமறிந்தேனெனினும் கேட்கிறேனென்பதுபொருள். (38-39-40.)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஸ்ரீ வசிட்டபகவான் தமது வரவு இன்னதன்பொருட்டென வுணர்த் திப் புசுண்டரது பூர்வசரிதையை வினுதலும் புசுண்டர் விடைபகரத் தொடங்கலும்:— பறவை, தீர்க்கவென்பன.

பறவையரசே நீயுரைத்த படியேயுண்மை நெடுங்கால
மிறவிலாத வுனைக்காண்பா னெய்தினேனீ யெக்குலத்திற்
பிறவியுற்றாய் மெய்ப்பொருளைப் பெற்றாயெங்ங னெவ்வளவு
நிறைவிதான வாணாளிவ் வுலகினெறிநீ நினைதிறனென்.

தீர்க்கதரிசி யாமெவனா னீயிவ்வுறையுட் சேர்வுற்றா
யோர்க்கவனைத்து முறையென்ன வியல்பார்புசுண்ட னுரைசெய்யு
மார்க்குமுயர்ந்த சிவன்றிருமுன் னனையாடொட் டகங்காடி
பார்க்குநிகரா மேனைமுகம் படைத்தகணங்கள் பலவுண்டால்.

(ப - ரை.) பறவையரசே = பக்ஷிராஜாவே! நீயுரைத்தபடியே = தாங்கள் கூறிய வண்ணமே, உண்மை = சத்தியம், நெடுங்கால மிறவிலாத வுனைக்காண்பான் எய்தினேன் = வெகுகாலம் வாழ்ந்துகொண்டிருக்குந் தங்களைத் தரிசிக்கும்பொருட்டு இன்றடைந்தேன், நீ யெக்குலத்தில் பிறவியுற்றாய் = நீர் எந்தப்பவித்திரமானவங்கிசத்தில் ஜனனமுற்றீர், மெய்ப்பொருளைப் பெற்றாயெங்ஙன் = சத்தியவத்துவை யடைந்ததெவ்வண்ணம், எவ்வளவு நிறைவிதான வாணாள் = எத்துணையாம் பூரணஆயுள், இவ்வுலகின்நெறி = இவ்வுலக விருத்தம், நீ நினைதிறனென் = தாங்கள் எண்ணுந்தன்மை யென்னே.

தீர்க்கதரிசியாம் எவனால் நீ இவ்வுறையுள் சேர்வுற்றாய் = எந்தவெல்லாமுணர்ந்த மகா னாலே தாங்கள் இவ்வாசிரமத்தை யடைந்துள்ளீர்கள், ஏர்க்கவனைத்தும் உரை யென்ன = பொருந்துமாறு யாவற்றையும் புகன்றிடவேண்டுமென்று, வேண்ட, இயல் பார்புசுண்டன் உரைசெய்யும் = சுவாபாவிகவத்துவேயென வொளிரும் அப்புசுண்ட முனி வர் கூறுவார், ஆர்க்குமுயர்ந்த சிவன்திருமுன் = சகலதேவதைகட்கும் மேலான ஸ்ரீ மகா தேவரது திருச்சந்நிதியில், ஆனை யாடு ஒட்டகம் காடி = கஜம் அஜம் ஒட்டை கரடி, பார்க்கு நிகராம் = பார்ப்பதற்கு ஒப்பான இலக்கியமான, ஏனைமுகம் = மற்றையவதனம், படைத்த கணங்கள் பலவுண்டாம் = உண்டாகிய சிவகணங்கள் அநேகமுளவாம். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) ஹே விகங்கமகாராஜரே! சத்தியமேயிது தங்களாற் கூறப்பெற்றதாகும், சிரஞ்சீவியாயிருக்குந் தங்களையே தரிசிக்கும்பொருட்டு, இன்று நன்றுவந்தேன். சகலமுந்

தெரிந்தவர்கள் தாங்கள் ஆகலின், ஹே பகவன்! எனக்குண்மையாக வுரைக்கவேண்டும் உண்டாய வையத்தை யொழிக்கவேண்டும்? "உற்பத்திதானும் விநாசந்தானும், நற்பூதங் களின் நண்ணுகை போகை, சிற்பரையவித்தை சிவணியவகையும், பொற்புறவறிவான் பகவான் புகல்வான்" எனக்கூறிய ஞானசம்பன்னனே பகவானுவன். இதனை யிவ்வகையாகவும் கூறுவதுண்டு:—ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, ஸ்ரீ, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறுக் கும்பகமென்னும் பெயருண்மையில் பகவன் என்பதற்கு இந்த ஆறுகுணங்களையுமுடையோ னென்பது பொருள் இதனையுங் கோடலாம். அத்தகைய தாங்கள் எவ்வுயர்ந்தகுலத்திற் பிறந்தீர் எங்ஙனந் தாங்கள் அறியவேண்டியதை யறிந்தீர் ஹே நலமிகுத்தீர்! எவ்வளவு ஆயுள் தங்கட்காயது, சென்றதாங்கற்பாந்தசரித்திரம் யாதுதான் எண்ணுகின்றீர்? தாங்கள் வசித்திதுக்கொண்டிருக்கும் இந்தக்கற்பகவிருக்ஷரூப ஆனந்தாசிரமம் எந்தத்தீர்க்கதரிசியாய மகானால் தங்கட்குக்காட்டப்பெற்றதோ? என வினவ, அதற்கு ஸ்ரீ புசுண்டமுனிவர் கூறுவ தாவது:—ஹே முனிவரரே! யாதுயாது தாங்கள் வினவினீர்களோ அவையாவற்றையும் யான் வருணிக்கின்றேன் சாவதானமாக அமைதியோடுங்கூட அவசரமின்றி மகான்மாவாகிய தங் களாற் கேட்கத்தக்கனவாம்; என்கதையைக் கேட்கவேண்டுமென்பதாம். ஹே இராகவ! மகிழ்ச்சிவாட்டமற்று மனங்கோணாத அந்தப் புசுண்டரானவர், தாங்கள் வினவிய யாவற்றை யும் உரைப்பேன் தங்களைப்போன்ற மகான்கள் இட்டஆணையை யாவரே தாண்டவல்லா ரென்று கூறியதைக் கூறக்கேட்பாயாக:—இவ்வுலகின்கண் ஹே முனிபுங்கவரே! சர்வநாக நிவாசிகட்குட் சிறந்து ஹரனென்னும் பெயருடைத்தாய தேவதேவாபிவந்தித சகல தேவதேவமகாதேவன் என்னும் தெய்வமொன்றுண்டு. இது "நீ யெக்குலத்திற் பிறவி யுற்றாய்" என்னும் முதல் வினவின்விடைபகரப் பூமிகைகூறியதாம்; சிறந்து = ஞான ஐசுவர்ய பலாதிகுணங்களானே மேலுக்கு மேலுக்கு மேலாய், தேவதைகள் யாவரினும் தேஜசுடையவர் உபாசியருமாவர், தேவர்கட்குத் தேவரான பிரஹ்மாதிகளாலும் எங்கும் எப்போதும் எல்லாவகையானும் வந்திக்கவும் நமஸ்கரிக்கவும் தோத்தரிக்கவும் உரியவர், இம்மூன்று விசேடணங்களானே, எல்லா அங்கிசங்களானும், அவருக்கே உற்கர்ஷபரம அவதித்தன்மை காட்டப்பட்டதாம், இதனாற் பொருளால் வழங்கப்பெறும் பிரஹ்மவித்யாரம் பத்தில் மங்களமும் செய்யப்பெற்றதென்றுணரத்தக்கது. அறுகாற் கும்பல்போலும் நயனங் களை யுடைத்தாகி உத்துங்கப்பூங்கொத்தொத்த நற்கொங்கைகள் தாங்கி யெழுந்தருளுந் தேவியாகிய விலாசினியை = சைலராஜசுதையைத் திருமேனிபாதியில், லதையைச்சூத தருவேபோல வைத்தவர். சர்ப்பங் கரடி ஒட்டை யாடு கஜம் முதலிய பன்முகம்படைத்த பிரமதாதி பலகணங்கள் கிரீடாசகாயங்களாக அவருக்குண்டு. கரடி = ருக்ஷம் = பல்லூகம்.

(ச.) ருக்ஷம் = பல்லூகம், உஷ்ட்ரம் = கிரமேலகம், அஜம் = சாகம், இபம் = கஜம், அவற்றின் வதனங்களைப்போல வதனங்கள் எவற்றிற்கோ, அவை யத்தகையனவாம், நானு ரூபமாய் பிரமதா எத்தேவருக்குக் கிரீடையேதுக்களாம். (41-42.)

(...ங்கீ-வீர் - அ-கை.) இப்போது அவரது கணங்கட்குச் சர்வாங்கங்களிலும் சர்வசக்தி யிருப்பதாக வருணித்தல்:—தலையென்பது.

தலையிற்குளம்பர் குளம்புற்ற தடக்கையினருந் தியின்முகத்தர்
தொலைவற்றவர்பல் கணத்தோடுஞ் சூழ்வாரவர்போன் மாதர்கண
மலையிலரன்முன் னடஞ்செய்வார் பூதகணங்கள் வணங்குறுவார்
சிலையின்சிகைவிண் புவிகாடு மயானந்தேய மிடமானோர்.

(ப - ரை.) தலையிற்குளம்பர் = சிரத்திற்குளம்புடையவர், குளம்புற்ற தடக்கையினர் = குளம்பையுடைய பெருங்கரத்தினர், உந்தியின்முகத்தர் = நாபிவதனர், தொலைவற்றவர் = எண்ணமுடியாதவர், பல்கணத்தோடுஞ் சூழ்வார் = பலகணங்களோடுஞ் சூழ்ந்துவாழ்வர், அவர்போல் மாதர்கணம் = அவரைப்போலவே மாத்ருகணங்களும் உளவாம், மலையில் அரன்முன் = கையிலையில் ஸ்ரீ மகாதேவரது சந்நிதியில், நடஞ்செய்வார் = நிர்த்தனஞ் செய்வார்கள், பூதகணங்கள் வணங்குறுவார் = பூதக்கூட்டங்கள் நமஸ்கரிப்பார், சிலையில் சிகை = கிரிகூடங்களில், விண் = வியோமத்தில், புவி = லோகாந்தரங்களில், காடு = வனங்களில், மயானம் = சுடுஇடுகாடுகளில், தேயம் = சரீரங்களில், இடமானோர் = வாசஞ் செய்வோர்.

(ஸ்ரீ - வீர.) சிரக்குரர் = தாவனகண்டனுதிகுரசக்திச் சிரங்களையுடையவர், குரக்கரர் = விசித்திரசிற்பாதி கரசக்திக்குரங்களை யுடையவர், கரதந்தமுகோதரர் = கடித்தல் கறண்டல் பக்ஷித்தல் வழித்தல் பாத்திரம் ஆதி சக்திக்கரங்களையுடையவர்; நேத்திரத்திரயத்தோடுகூடி விளங்கும் திருமுகத்தோடுகூடிய அவருக்கு, கணங்கள்போலவே, சர்வாங்கங்களிலும் சர்வசக்தியையும் உடையவர்களாகிய நாலுவடிவினையும் நாலுமுகங்களையும் உடையவர்களாகிய, தாய்க்கணபரிவாரங்கள் உள்ளனவாம். அந்த மகாதேவரது சந்நிதியில் அத்தாய்க்கணங்கள் நடனஞ்செய்வர், பூதகணங்கள் வணங்குறுவர்; கிரிகூடங்களிலும் ஆகாயத்திலும் லோகாந்தரங்களிலும் வனங்களிலும் மயானங்களிலும், தேகிகளின் சரீரங்களிலும், வாசமாக இருப்பவர்.

(சு.) கணம் = பிரமதகணம், பூதகணங்களை, தேயம் = தேகிகளுடைய சரீரங்களிலும், இடமானோர் = வசிக்கின்றவர், சிரக்குரர் = சிரத்தின்கண்ணே குளம்புடையவர்கள், குரக்கரர் = குளம்புகளில் அத்தங்களையுடையவர்கள், குளம்புவடிவினவாய கரங்களையுடையவர்கள் எனினுமாம், கரதந்தர் = கரத்திலிருக்கும் பற்களையுடையவர்கள், முகோதரர் = உதரங்களில் வதனங்களையுடையவர்கள், என மூலங்கண்டு பொருள்கொள்க. (43.)

(ஸ்ரீ - வீர - அ கை.) அக்கற்பத்திருந்த அம்மாத்ருகணங்களின் பெயர்களைக்கூறல்:— தரத்திலென்பது.

தரத்திலுயர்ந்த சயைவிசையை சயந்தியபரா சிதைசித்தை
யிரத்தையோடே யலம்புசையுற் பலையென்றெண்மா மாதர்கடாம்
புரத்திலுறுநா யகிகளவர் தம்முட்புகன்ற வலம்புசைக்குத்
திரத்தில்வருவா கனஞ்சண்ட னெனும்பேர்சேர்ந்த தொருகாகம்.

(ப - ரை.) தரத்திலுயர்ந்த = தன்மையில் மேம்பட்ட, சயைவிசயைசயந்தி அபரா சிதை = ஜயை விஜயைஜயந்தி அபராஜிதை, சித்தை = சித்தை, இரத்தை = ரக்தை, ஓடே = உடன், அலம்புசை = அலம்புசை, உற்பலை = உற்பலை, என்று = எனப்பதாக, எண்மாமாதர்கடாம் = எட்டுமாண்புற்ற தாய்மாதர்கள்தாம், புரத்திலுறு நாயகிகளவர்தம் முட் புகன்ற = கைலாசபுரத்திலுள்ள நாயகிமார்கள் ஆவர்கள் அவ்வெண்மருள்ளே கூறிய, அலம்புசைக்குத்திரத்தில் வருவாகனம் = வலுவுடையதாக்ச் சேர்ந்தவாகனம், சண்டனெனும் பேர்சேர்ந்தது ஒருகாகம் = சண்டனென்னும் பெயர்வாய்ந்தது ஒரு ஒப்பற்ற வாயசம்.

(ஸ்ரீ - வீர.) ஜயையென்றும் விஜயையென்றும் ஜயந்தியென்றும் அபராஜிதையென்றும் சித்தையென்றும் இரக்தையென்றும் அலம்புசையென்றும், உற்பலையென்றும் மாதரு தேவியர்கள் எண்மராவர். அற்றேல், நூறுகோடிகளே நண்சாமுண்டியர், என்பதாதி வெகு எண்ணிக்கையராக, அவர்களின் பிரசித்தமாம், ஆகவே, எண்மர்தாமெனவிசைத்தது எங்ஙன் வலும் எனின், எல்லாமாத்ருகணங்கட்குமே இவ்வெண்மரே நாயகிமாராவர், இவர்களுக்குள் அநுகதைகளோ அன்னியர்களாம், அவர்களுக்குள் அநுகதைகள் பலைகளாம். ஹே முனிநாயகரே! அந்த மகாமகிமைவாய்ந்த மாதாக்களின் மத்தியில், ஹே யாவரானும் பூசிக்கப்பெற்றவரே! அலம்புசையெனப் பிரசித்தமாய ஏழாவது மாதா யாவளிருக்கின்றனளோ அவளுக்கு வாகனம், வைஷ்ணவிக்குக் கருடனேபோலும் வஜ்ஜிர அஸ்தி துண்ட சண்டனெனப் பெயரிய இந்திரநீல அசல உபமமாகிய வாயசம் ஆம்.

(ச.) வஜ்ஜிரம்போலும் கடினமான அஸ்திமய முகத்தையுடைய சண்டனென்னும் பெயரையுடையதாகிய வாயசம் அவ்வலம்புஷையின் வாகனமாம். (44)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்வட்டமாத்ருகணங்கள் சிவாஞ்ஞையால் உற்சவங்கொண்டாடலும் அதேமாதிரி யவர்தம் வாகனங்களுங் கொண்டாடிக் கருவையடைதலும் வருணித்தல்:—அட்ட, அந்த, கூடியென்பன.

அட்டகுணச்செல் வமும்படைத்த வந்தமாத ரனைவோரு
மிட்டமான சிவனேவ லியாருங்கூடி விண்ணிடையே
முட்டலாத வுச்சவத்தை முயன்றுபானங் களையுண்டு
நட்டமிட்டார் பாட்டிசைத்தார் களித்தார்வெடிக்க நகைசெய்தார்.

அந்தவிழாவே நடக்கின்ற காலத்தவர்வா கனமனைத்து
மிந்தமரபிற் பானங்கண் மாந்திக்களித்தா ரிவைசெய்தா
ரந்தரத்தி னிடையயலே யயன்பேர்மாதின் வாகனங்கள்
சந்தமுறுபெட் டோதிமங்கள் சண்டனெனுங்கா கத்தோடும்.

கூடியாடிக் களித்தந்தக் கோலக்காகத் தினைப்புணர்ந்து
நீடுகருவை யடைந்துமிக நெஞ்சங்களிக்கு மக்காலை
நாடிமுயன்ற விழாமுடித்து நக்கருடைமா தருங்கணமும்
பாடலாட லொழிந்துமன மகிழ்ந்துதத்தம் பதிக்ககன்றார்.

(ப - ரை.) அட்டகுணச் செல்வமும்படைத்த = அஷ்டஐசுவரியசம்பன்னர்களான, அந்தமாதரனைவோரும் = அத்தேவிமாரியாவரும், இட்டமான சிவனேவ = தங்களுக் கநுகூலமான மகாதேவராஞ்ஞையினாலே, இயாருங்கூடி விண்ணிடையே = எல்லாரும் ஒருங்குசேர்ந்து ஆகாயத்தின் மத்தியில், முட்டலாத வுச்சவத்தை = தடையிலாத உற்சவத்தை, முயன்று = கொண்டாடி, பானங்களையருந்தி = குடிகளைக்குடித்து, நட்டமிட்டார் பாட்டிசைத்தார் = நடனஞ்செய்தார் கானஞ்செய்தார், களித்தார் வெடிக்க நகைசெய்தார் = சந்தோஷித்தார் பெருத்த சிரிப்பைப்பிறங்கினர்.

அந்தவிழாவே நடக்கின்றகாலத்து = அந்தமகோற்சவமே நடக்கின்றபோது, அவர் வாகனமனைத்தும் = அவர்களுடைய வாகனங்களியாவும், இந்தமரபிற்பானங்கள் மாந்திக் களித்தார் = இந்தமரபிற்குத்தக்கபடி குடிகளைக்குடித்து மகிழ்ந்தார், இவை செய்தார் =

இவ்றனைத்து மியற்றினர், அந்தரத்தினிடையயலே = அந்தரமத்தியிற் பக்கத்திடத்தில், அயன்பேர்மாதின்வாகனங்கள்,பிராஹ்மீதேவியின் வாகனங்களாகிய, சந்தமுறுபெட்டோதி மங்கள் = அழகுபொருந்திய பெண்ணன்னங்கள், சண்டனெனுங் காகத்தோடும் = சண்டன் என்னும் வாயசத்தோடும்.

கூடியாடிக்களித்து அந்தக்கோலக்காகத்தினைப் புணர்ந்து = ஒன்றுகூடி நடனமிட்டு மகிழ்ந்து அந்தவாய்சமாகிய அழகனைச் சம்போகித்து, நீடு கருவையடைந்து மிகநெஞ்சங் களிக்குமக்காலை = பெருங்கர்ப்பத்தையுற்று மிகவும் மனமகிழும்போது, நாடிமுயன்றவிழா முடித்து = உத்தேசித்தாரம்பித்துக்கொண்டாடிய மகோற்சவத்தைச் சமாப்திசெய்து, நக்கருடை மாதருங் கணமும் = பரமேசுரருடைய தேவிமாரும் கணங்களும், பாடல் ஆடல் ஒழிந்து = கானம் நிர்த்தனம் நிறுத்தி, மனமகிழ்ந்து = உள்ளம் சந்தோஷித்து, தத்தம்பதிக்ககன்றார் = தங்கள் தங்களுடைய இடத்துக் கேகினர்:

(41) (ஸ்ரீ - வீர.) கூறிய வடிவம்வாய்ந்த மாத்ருகணங்கள், அஷ்டஐசுவர்யமுடையவர்களாக விளங்குவார்கள், அவர்களொருகால் ஈசுவராது ஆணையினலே, யாதோவொரு விகார ஹேதுவினலே, யாவரும் ஆகாயத்தில் ஒருங்குகூடினர்கள். பரமார்த்தப்பிரகாசகமாய பரம உற்சவத்தைக் கொண்டாடினர்கள். கிரிகானனங்கள் யாவும் தொனிக்குமாறு பெருநகையைச் செய்தார்கள், ஆனந்தக்கூத்தாடினர்கள், அநேகவிதமான பானங்களை மாந்தினர்கள், அநேகவித இராகங்களோடும் மதஉன்மத்தர்களாகிக் கானஞ்செய்தார்கள். இந்தப்பிரகாரமாய்ப் பெரிய உற்சவம் நிகழும்போது அந்தத்தாய்மார்களுடைய உத்தமமான வாகனபூதங்களாய சண்டாதிகள் அவ்வாறே மத்தர்களாகி நகையாடின நடமாடின வுளமூடின வெகுபாடினகுடிமூடினவே; அந்த உற்சவத்தில் பிராஹ்மிமாதாவின்றேரன்னங்களும், அலம்புசைத்தாயின் வாகனபூதமாயசண்டன் என்னும் வாயசமும் ஓரிடத்தில் ஒருங்குகூடி யுன்மத்தர்களாகிச் சிலநடித்தன விண்ணில்; நடனஞ்செய்துகொண்டிருந்த அம்சங்கட்கு மரபுக்கேற்றபடியாய குடிமிகுத்தன, அப்ததடங்களின்றலத்தில் அவைகட்கு ரதிகன்குண்டாயின், அநுராகமிகுத்த அவைகட்கு வேலைக்கரையுறவே சமபூப்பிரதேசஞ்சேரவே காமஉத்தீபனமதிகரித்தன, நன்குண்டாய அநுராகம்வாய்ந்த அவ்வன்னங்கள் யாவும் மத்தங்களாகி முறைமுறையாகக் காகத்தோடாயினுங்கூட இரமித்தன பின்பும் மதோன்மத்தமாய் விளையாடிக்கொண்டிருந்தன. மத்தத்தன்மையானே உற்கிருஷ்டஜாதிகளையுடைய ஹம்சிகட்கும் நிக்கிருஷ்டஜாதிவாய்ந்த காகத்தோடுங் கூடவுங்கூடுதல் தகாததேயாயினும் உற்றதாமெனக் குறிப்பிடுவார் மூலத்தும்மை கொடுத்தார். எழுகுல அம்சிகட்கும் நாயகனாகிய வாயசமானது முறையாக ஒவ்வோரிடங்களிலும் ஒவ்வோரம்சங்களுடனும் பரஸ்பரம் ஆசைதீரும்வரையிலும் கூடிக்கூடிக்குலாவியது, பின் அவையாவையுமே கர்ப்பங்களைத்தரித்தனவாகி மகோற்சவப்பயனுற்று மிகமகிழ்ந்தனவாயின, அத்தேவிமார்களும் மகோற்சவானந்தத்தை மகிழ்வுடன்முடித்துத் தாங்கள் மாயாவிநோதங்கள் யாவற்றையும் உபசாந்திசெய்துகொண்டார்கள். அதன்பின் றேவிமார்களும் ஹரனும் இவர்களுடைய பரிவாரங்களும், ஆகிய யாவருமே சந்தோடமுடையவர்களாகி மனம்பூரித்துத் தாங்கள் தாங்கள் வாஞ்சித்ததிசையை யடைவுற்றார்கள். மூலம்:—வதயோ:=தேவியார்கள், என்னும் இருவருடைய, மாதாக்கட்குத் தேவியம்சத்தன்மையானே ஒருமைப்பெறுத்தியேகசேடமுற இருமைவசனமாம். (45-46-47)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கருவையடைந்த அன்னங்கள் தேவிதிருவருளுறல்:—அனையவென்பது.

அனையகாலைக் கருவடைந்த வயன்பேர்மாதி னோதிமங்கள்
வினையிறந்த் நாயகிக்கு விளைந்தபடிமெய்ப் படவுரைப்ப
வினையதாகக் கருவுற்றீ ரென்றோரீர்க்கும் வலியில்லீர்
நினைவின்படிபோ யுறையுமென நிறையுங்கருணை யாலுரைத்து.

(ப - ரை.) அனையகாலை = அக்காலத்தில், கருவடைந்த = கருப்பமுற்ற, அயன்பேர் மாதின்ஓதிமங்கள் = பிராஹ்மிதேவியின் அன்னங்கள், வினையில் தமதுநாயகிக்கு = கருமசம்பந்தமில்லாத தம்முடைய தேவிக்கு, விளைந்தபடி மெய்ப்படவுரைப்ப = நடந்தவரலாற்றை யுண்மையாகக்கூறவே, வினையதாகக்கருவுற்றீர் = கருமவசத்தினாலே கருப்பத்தை யடைந்தீர்கள், என்றோர்ஈர்க்கும் வலியில்லீர் = எம்முடைய ரதமிழுக்கும் பலமற்றுளீர், நினைவின்படிபோய் உறையுமென = உங்களிஷ்டப்படியேபோய் வாழுமின் என்று, நிறையுங் கருணையாலுரைத்து = பூரணகிருபையாலேகூறி.

(ஸ்ரீ - வீர.) ஹே முனீசுரரே! அப்போது அந்தப் பிராஹ்மிதேவியினம்சங்கள்யாவும் கருப்பிணிகளாயினர்கள், தங்கள் மாதாவினிடத்தில் விருத்தாந்தமியாவற்றையும் ஒழியாமலுள்ளபடியே உரைத்தன அதைக்கேட்டதேவி ஹே குழந்தைகளே! இப்போது நீங்களியாவரும் குழந்தையுடையவர்கள் ஆயினீர்கள், எமதுதேர்வகிக்கும் சமர்த்தில்லீர்கள் உங்களிஷ்டப்படி போயுறையுங்கள், என்று, தயாபரையாகக்கர்ப்பாலசைகளாகிய அன்னங்களைப்பார்த்துக்கூறினள். (48)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேவியை ஈன்றகுழவிகளுடன் அருச்சித்தல்:—நிருவென்பது.

நிருவிகற்ப சமாதியிலே நின்றுடேவி யோதிமங்கள்
கருவின்முதிர்ந்து மானதவோ டையிலேகாலங் களிலீன்று
தருமவ்விருபத் தொருவோருஞ் சண்டனெனுங்கா கப்புதல்வ
ரருளுந்தாய ரொடுமயன்பே ரணங்கைநெடுநா ளருச்சித்தேம்.

(ப - ரை.) நிருவிகற்பசமாதியிலே = அசம்பிரஞ்ஞாத சமாதியின்மாட்டு, நின்றுன் தேவி = இருந்தனள்தேவி, ஓதிமங்கள் = அன்னங்கள், கருவின்முதிர்ந்து = கருப்பம் முற்றி, மானதவோடையிலே = மானசசரசில், காலங்களில் ஈன்று = பரிபக்குவகாலத்திற் பிரசவித்து, தரும் = உதவிய, அவ்விருபத்தொருவோரும் = அந்த இருபத்தொருவரும், சண்டனெனுங் காகப்புதல்வர் = சண்டனென்னும் வாயசமைந்தர், அருளுந்தாயரொடும் = அனுக்கிரகிக்கும் மாதாவோடும், அயன்பேரணங்கை = பிராஹ்மிதேவியை, நெடுநாள் = வெகுகாலம், அருச்சித்தேம் = பூசனைசெய்தோம்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணமியம்பி, அவைகளுக்கநுக்கிரகிக்கும்பொருட்டுச் சஞ்சாரத்தைவிட்டு நிருவிகற்பப்பெயரிய சமாதானமென்னுஞ் சமாதியில் ஆனந்தமாகப் பிராஹ்மிதேவியானவள் எழுந்தருளியிருந்தனள். ஹே முனீசுரரே! ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய நாபிசரோஜத்தின்மூலத்தில், விரிஞ்சசம்பந்தமாய கமலத்தின் ஆகாரத்தில், உற்பத்திஸ்தானத்தில், கர்ப்பாலசைகளாய அந்த இராஜஹம்சிகள் இனிது சஞ்சரித்தன. இவ்வண்ணம் பரிபக்குவகர்ப்பமுடையனவாய அவை பின்நாபிகமலத்தின் றளிர்ப்பிரதேசத்தில், வல்லிகள் அங்குரங்களைப்போல மிருதுவாய அண்டங்களைப் பிரசவித்தன; அவ்வண்டங்களினின்றும், இவ்வண்ணந்தானே சண்டதநயர்களாகிய வாயசச்சகோதரர்கள் யாங்கள் இவ்விருபத்தொருவரும் உண்டாயினோம்; உண்டாகிய யாங்கள் அக்கமல பல்லவத்தின்றானே நன்றாகவளர்ந்தோம்.

இனிய இறகுகளும் முளைத்தன, ஆகாயத்திற்பறக்கும் சத்தியும் வாய்ந்தோம். அறியவேண்டியதைத் தாங்கள் அறிந்ததெங்ஙனம்? என்னும் வினாவிற்கு உத்தரங்கூறத்தொடங்கல்:— அருளும் என்பதாதி. தாய்களாகிய அம்பிகைகளோடுங்கூட எங்களால் பிராஹ்மிபகவதியானவள் நெடுங்காலம் நன்கு ஆராதிக்கப்பெற்றவளாயினள், பெற்றபின் சமாதியினின்றும் எழுந்து. (49)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிராஹ்மிமாதாவின் திருவருள்பெற்றுப் பிதாவின் அனுஞ்ஞையால் ஈண்டுறைந்தோமெனல்:—அணங்கு, பிரமியென்பன.

அணங்குசமாதி நின்றுமெழுந் தன்பாற்றினே யருள்செய்ய
வுணங்கலறமுத் தியைப்பெற்றே முபசாந்தியினா லுளங்குளிர்ந்தே
மிணங்கலறவே காந்தத்தி லிருக்குமிடமே தெனக்கேட்பான்
குணங்கொள்பிதாவை யலம்புசைபாற் சென்றுகூடிக் கும்பிட்டு.

பிரமியென்னு மணங்கினருட் பெற்றேமுத்தி யேகாந்தப்
பரமசுகத்தி லிருக்குமிடம் பகர்வாயென்று யாங்கேட்ப
விரவுதந்தை துயரெல்லா மேவாவிட மிக் கற்பகநன்
மரமென்றருள வவற்பணிந்து வந்திங்கிருந்தேம் வருத்தமற.

(ப - ரை.) அணங்கு சமாதிநின்றுமெழுந்து = தேவியானவள் நிருவிகற்ப சமாதியினின்றும் எழுந்து, அன்பாற்றினே யருள்செய்ய = மிகுந்த பிரீதியோடும் திருவருள் பாலிப்ப, உணங்கலறமுத்தியைப் பெற்றேம் = வாட்டமில்லாமல் மோக்ஷத்தை யடைந்தோம், உபசாந்தியினால் உளங்குளிர்ந்தேம் = பரமவுபசாந்தியினால், மனத்தண்மையைப் பெற்றேம், இணங்கலறவேகாந்தத்தில் = பிறரது சம்சர்க்கமின்றித் தனியாக, இருக்குமிடமேதெனக்கேட்பான் = வசிக்குந்தேய மியாதென்று வினவும்பொருட்டு, குணங்கொள் பிதாவை = சகல கல்யாணகுணங்களும் நிறைந்ததந்தையை, அலம்புசைபாற் சென்று = அலம்புசைத்தேவியினது திருச்சந்நிதியிற்போய், கூடிக்கும்பிட்டு = ஒன்றுகூடி நமஸ்கரித்து.

பிரமியென்னும் அணங்கின் அருள் பெற்றேம் = பிராஹ்மியென்னும் மாதாவின் திருவருளை யடைந்தோம், முத்தியேகாந்தப்பரமசுகத்திலிருக்குமிடம் = ஜீவன் முக்திப்பரமானந்தத்தில் வசிக்கும் தனித்த உத்தமமான ஸ்தானம், பகர்வாயென்று யாங்கேட்ப = கூறுவாயென்று யாங்கள் பிரார்த்திப்ப, விரவுதந்தை = எங்களைத்தழுவியபிதா, துயரெல்லாம் மேவாவிடம் = சகலதுக்கங்களும் பொருந்தாதஸ்தானம், இக்கற்பகநன்மரம் = இந்தக் கற்பகநல்விருக்ஷம், என்றருள = என்றனுக்கிரகஞ்செய்ய, அவற்பணிந்து = பிதாவை நமஸ்கரித்து, வருத்தமற வந்திங்கிருந்தேம் = யாதொரு துயரமுமின்றி யிங்குவந்து வசிக்கின்றேம்.

(ஸ்ரீ - வீர.) திருவருள்சுரந்த பகவதியின் அனுக்கிரகத்தானும் சுயமியற்றிய பயிற்சியின்வலியினாலும், ஹே மகாமுனிவரே! காலமாக வநுக்கிரகத்தின் பயனுடையவர்கள் ஆயினேம், அதனானே முக்தர்களாக யாங்கள் விளங்கினேம்; தத்வசாக்ஷாத்காரபலத்தை யுற்றேமென்பதாம். சம்சாந்தமனமுடையவர்களாய் சாந்தர்களாய் ஏகாந்தத்திற் றியான நன்னிலைமையில் சந்ததம் உறைந்திருக்கவேண்டும் என்று நிச்சயித்து, பிதாவின்பக்கலில் விந்தியச்சோலையில் யாங்கள் வந்துசேர்ந்தோம். சேர்ந்ததும் எங்களைத்தழுவி மகிழ்ந்தார் யாங்கள்

அலம்புஷைத்தேவியை நன்றாகப்பூசித்தோம், அவ்வம்மை யெங்களைக் கிருபாதிருஷ்டியினால் அனுக்கிரகித்தாள் ஆண்டு விநயாதி நற்குணமுடையவராகவிருந்தோம். அப்போது எங்கள் பிதா, ஹே என்னருமைக்குழந்தைகளே! நீங்கள் கிருதகிருத்தியர்கள் ஆய்விட்டீர்களா, இல்லாவிடில் என்பேரில் மிகப்பிரியமுள்ள தேவியினிடத்தில் உங்கள் கைவல்யத்தைப் பிரார்த்திக்கின்றேன் என்றிட அதற்கு யாங்கள் கூறியது:—பிரமியென்பதாதி. ஹே அருமைத்தந்தையே! பிராஹ்மிதேவியினுடைய பிரசாதத்தினாலே அறியவேண்டியமுழுது மறிந்தோம், இனி யேகாந்தமாயிருக்க யோக்கியமாய உத்தமஸ்தானத்தை வாஞ்சிக்கின்றோம், என்றதைக்கேட்ட பிதா:—ஹே குழந்தைகளே! சர்வசம்பத்தும் நிறைந்த சர்வபூஜ்ய சுமேரு பர்வதத்தின் தக்ஷிணஸ்கந்தத்தின் சாகையில் முன்கூண்டுகட்டிவாழ்ந்து தவம்புரிந்தேன் அதன்கண்ணீங்கள் சென்றிருக்கலாம் நிர்விக்கினஸ்தானம் அதுவேயாம் என்றுகூறி முத்தமிட்டுத்தழுவி விடையளித்தார். நாங்களும் தேவியையும் பிதாவையும் அநேகமுறை நமஸ்கரித்து உத்திரவுபெற்றுக்கொண்டு பிரமலோகஞ் சென்று தேவியையும் தாய்மாரையும் அநேகமுறை நமஸ்கரித்து ஹஸ்தமஸ்தகசையோகம் ஆலிங்கனம் முத்தம் முதலியவற்றுடன் உத்திரவுபெற்றுக்கொண்டு, பிரஹ்மலோகத்தினின்றும் புறப்பட்டு இக்கற்பதருவை யடைந்து எங்கள் சொந்தக்கூண்டிற் புகுந்து, ஹே முனிவரரே! சகலபாதைகளு மற்றவர்களாய் மௌனத்தோடுகூடியவர்களாய், எப்போதுஞ் சமாதிபரர்களாய்ச் சுகமேயிருக்கின்றோம். (50-51)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆண்டுநீண்ட கதையின் நிகழ்ச்சியில், பூசையின் றுமதம் ஆகாதொழிகவென்று முதலிற் பூசையங்கீகாரம் வேண்டுதற்பொருட்டுத் துதியால்தன்வயப்படுத்தல்:—அன்று, பரமம், என்பன.

அன்றுதொட்டு நான்புரிந்த வறங்களெல்லா நின்வடிவா
யின்றுபலித்த துயரறிஞ ரிணக்கமென்னு நிறைநிலவு
மன்றலமுத மயமாக மாறுச்சுகமியார்க் களியாது
நன்றிதென்னு முயிர்க்குறுதி நல்லோரருளிற் பிறிதுண்டோ.

பரமமுணர்ந்தே னென்னினுநின் பார்வையாலென் பாவமெலாம்
விரைவிலறுத்த லாலிந்தப் பிறப்பேமிக்க பயனுடைத்தால்
வரதனேயென் றெனைமீண்டும் பூசைசெய்தான் மற்றவனை
யுரவிதாயுன் னுடன்பிறந்தோ ரொழிந்தவாறென் னுரையென்றேன்.

(ப - ரை.) அன்றுதொட்டு நான்புரிந்த = அக்காலந்தொடங்கி யான்செய்த, அறங்கள் எல்லாம் = தருமங்கள்யாவும், நின்வடிவாய் = தங்களது வடிவமாகி, இன்றுபலித்தது = இப்போது பயனுற்றது, உயரறிஞர் இணக்கமென்னும் நிறைநிலவு = உயர்ந்த விவேகிகள் சம்சர்க்கம் என்று சொல்லப்பெறும் பூர்ணசந்திரிகை, மன்றலமுதமயமாக = மணமும் அதிரசமும்வாய்ந்த அமிர்தமயமாய், மாறுச்சுகமியார்க்களியாது = திராதவின்பத்தை யாவர்க்குத்தான்கொடாமலிருக்கும், நன்றிதென்னும் உயிர்க்குறுதி = நல்லது இது என்னும் ஆன்மாவிற்குரம், நல்லோரருளிற் பிறிதுண்டோ = மகான்களின் அருளினும் அயலொன்றுளதோ.

பரமமுணர்ந்தேன் என்னினும் = பரம்பொருளை அகமாகச் சாக்ஷாத்கரித்திருக்கின்றேன் என்றபோதினும், நின்பார்வையால் = தங்களது திருஷ்டியினால், என்பாவமெல்

லாம் = அடியேனது மறமெல்லாம், விரைவில் அறுத்தலால் = சீக்கிரஞ்சேதித்தலால், இந்தப்பிறப்பே = இச்சனனமே, மிக்கபயனுடைத்து = மிகுந்தபிரயோஜனமுடையதாம், வரதனே = வாஞ்சிதார்த்தந்தருபவனே! என்று = என்பதாகவுரைத்து, எனை = என்னை, மீண்டும் = மீளவும், பூசைசெய்தான் = பூசித்தான், மற்றவனை = அந்தப் புசுண்டமுனிவரை, உரவிதாயுன்னுடன்பிறந்தோர் ஒழிந்தவாறு என்னுரையென்றேன் = பக்கபலமாய்த் தங்களுடன் சனித்தோர் மறைந்தகாரணம் யாது கூறவேண்டும் என்றேன்.

(ஸ்ரீ - வீர.) அன்றுமுதலாக யான் சம்பாதித்த புண்ணியங்கள் ஒருங்குகூடி நிர்விக்கினமாகவே இன்று பலித்ததைக்கண்டேன். ஹே முனிவரரே! தாங்கள் எதனாலிங்கு எழுந்தருளிவந்தீர்களோ. இச்சாகையும் இதிலிருக்கும் இக்கூடும் இந்தயானும் இந்த விருக்ஷமும், ஆகிய இவையாவுமே இன்று தங்களுடைய தரிசனத்தானே பாவனத்தன்மையை யடைந்தன. மூ: ஏதாநியென நபுஞ்சகம் அநபுஞ்சகத்தால்என நபுஞ்சகஏகசேடமாம். பறவைதந்தவிந்தவர்க்கியத்தையும், இப்பாத்தியத்தையும், ஏற்றுக்கொண்டு எங்களுக்குப் பவித்திரத்தன்மையையருளி, மற்றும் ஆகவேண்டிய சேவைவிடய நிமித்தமான ஆணையைச் செய்யவேண்டும், வினைக்களைக்கூறும்பொருட்டென்பதாம். ஹே இராகவ! இரண்டாவதுமுறையும் இதுஅர்க்கியமும் இதுபாத்தியமும் ஆமென அந்தப்பறவையரசாகிய புசுண்டமுனிவர் சுயமேகொடுப்ப ஏற்றுக்கொண்ட யான் கூறியதாவது:—ஹே விகங்கேசுரரே! அத்தகையசத்துவர்களாய் மகாதீமான்களாயிருந்த தங்களுடைய பிராதாக்கள் ஈண்டு எதனாற்காணப்பெற்றிலர் தாங்கள் ஒருவருமே காணப்பெறுகின்றீர்கள்.

(ச.) இராகாதிரோகத்தை நீக்குவதாதலின் மன்றவமுதம், தாபத்திரயத்தை நீக்கு ஞானோபதேசந்தருதலின், அவமாகா, இத்தன்மையான அறிஞரிணக்கமென்னும் = சாதுக்களின் சங்கதிருபமான, நிறைநிலவு = பூர்ணசந்திரிகை, ஆர்க்குமாருச் சுகமளியாது, மற்றவை வெளிப்படை. சாந்தா, தாபத்திரய அபகாரணத்தான், பரமானந்ததாயினி, ஞானோபதேசஹேதுத்தன்மையான் என்பது பகுப்பு. (52-53)

(ஸ்ரீ-வீர - அ-கை.) என்று வினவியபோது புசுண்டர் கூறியதாவது:—ஒக்கவென்பது.

ஒக்கவுறைந்தே மனைவருமிங் குகங்கள்பலகற் பங்கள்பல
தொக்குமாய வென்னனுச ருடல்கடிரண மெனத்துறந்து
மிக்கபதத்தே யுணர்ந்தோராய் வீடுபெற்றார் நெடுவாணாட்
டக்கமகிமை வலிபடைத்துந் தங்கற்பனையாற் றுமிறந்தார்.

(ப - ரை.) இங்கு உகங்கள் பல கற்பங்கள்பல = இவ்விடத்தில் யுகங்களநேகம், கற்பங்கள் அநேகம், ஒக்கவுறைந்தே மனைவரும் = யாவரும் ஒருமித்தே வாழ்ந்தோம், தொக்குமாய = துவந்துவங்கடீர, என்னனுசர் = எனதுசகோதரர், உடல்கள் திரணமெனத் துறந்து = தேகங்கள் துரும்பெனவகற்றி, மிக்கபதத்தே யுணர்ந்தோராய் = மேலாய பரமபதத்தைச் சாக்ஷாத்கரித்தவராய், வீடுபெற்றார் = மோக்ஷத்தையடைந்தார், நெடுவாணாட்டக்கமகிமைவலிபடைத்தும் = தீர்க்க ஆயுளையும் தகுந்தமகிமையையும் மிகுந்த வலிமையையும் உடைத்தாயிருந்தும், தங்கற்பனையாற்றுமிறந்தார் = தங்களுடைய கற்பனையினாலே தாம் துஞ்சினர்.

(ஸ்ரீ-வீர.) ஈண்டு யாங்கள் வெகுகாலங் கழியும்பரியந்தம் ஒன்றாகவே வாழ்ந்தோம், ஹே அநகமுனிவரே! யுகங்களின் வரிசைகள் க்ஷீணமாயின திவசங்களின் கூட்டங்கள் திகழ்ந்து

போயின. இங்ஙனம் வெகுகாலங்கழிந்தபின்னர் என்னுடைய உடன்பிறந்தார்யாவருமே, சரீரங்களைத் துரும்புபோலத் தியாகஞ்செய்துவிட்டுச் சிவபதத்தை யடைந்துவிட்டார்கள். தீர்க்காயுள் உடையவரேனும் மகான்மாக்களாயினும், சற்புருடர்களேனும் மகாபலிஷ்டர்களேனும், யாவருமே, அலக்ஷித்சொரூபத்தோடுகூடிய காலனால் விழுங்கப்பெறுவர். யான் மாத்திரம் தங்களுடைய தரிசனபாக்கியவானாய் மீண்டிருந்தேன், இதனைப்பார்க்கினும் பரதரமாயொன்று இருப்பதாக யான் எண்ணிலேன், இதுதான் ஆன்மாவிற்குக் குசலந்தருவது; நன்றுவிடுத்த சகல ஆசையர்கள் நாடிச் சிவத்தைநடப்பவர்கள் ஆகிய சற்புருடர்களின் நல்வருகையாதுளதோ பார்த்தமாத்திரத்தில் இரம்மியமாயிராநின்ற போகங்களினின்றும் என்னேகிடைக்கும் துக்கமேயாம், சற்சங்கசிந்தாமணியினின்றுமோ சர்வசாரமாகிய ஞானமே யடையப்பெறும், நேயமும் கம்பீரமும் உருக்கமும் கருணையும் மிகுந்து மதுரஉதாரதீரவாக்குடன், இந்த மூவுலகமாம் பதுமகோசத்தில் தாங்கள் ஒரு அறுகால் வண்டாய் உலவுகின்றீர்கள். பரமான்மாவை யுணர்ந்தவனேயாயினும், தங்களுடைய திருஷ்டியினனே சாந்தமாய துஷ்டப்பிராரப்தமுடைய எனது ஜன்மம் இன்று இங்கு சபலம் = நிரதிசயானந்த பலமுடையதாக ஆயது; ஹே நற்பெரியோய்! சகலபயங்களையும் அபகரிப்பதல்லவோ சாதுசங்கம். (54)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ வசிஷ்டபகவான் பேராபத்துக்களில் எங்ஙனந் துஞ்சாது வாழ்ந்தீர் என வினவ அதற்கு ஸ்ரீ புசுண்டமுனிவர் இன்னின்னபடி வாழ்ந்திருந்தேனென விடைதருதல்:—என்ற, தவனர், பிரளயம், எனது, ஆய என்பன.

என்றலோடுங் கற்பாந்த மெரிநீர்வாயு வெழும்போதுந்
துன்றுதபனர் சுடும்போதுந் துஞ்சாதிருந்தா யெங்ஙனென
நின்றபுசுண்ட னுரைசெய்யு நெடியசகத்தின் விவகார
மன்றிவிடுமெப் போதப்போ தகல்வனுனு மிதுதன்னை.

தவனரெல்லாஞ் சுடும்போதிற் சலதாரணையால் விண்ணுறுவேன்
குவடுசிதறச் காற்றெறியிற் குன்றமெனுந் தாரணையாலே
துவள்கிலாது விண்ணுறுவேன் றுரல்லைஞான மேருவுட
னுவரிமூடின் மாருததாரணை யான்மிதப்பே னுலைவின்றி.

பிரளயந்தான் வந்ததெனிற் பிரமாண்டத்தின் கரையெய்தித்
துரிசிறத்து வாந்தமெனுந் துகளில்பதத்தே சுழுத்தியெனும்
விரவுமவத்தை யானிற்பன் மீளவேதாப் படைப்பளவும்
பிரமன்படைக்கிற் பிரமாண்ட மடைவேன்பறவைப் பெருங்கூட்டில்.

எனதுசங்கற் பத்தாலே யிந்தக்கிரியி னிக்கோட்டிற்
கனகற்பகமிப் படியுண்டாங் கற்பங்கற்பந் தோறுமென
வனகனேதா ரணைகளினீ யழியாதிருந்தாய் பலகற்பம்
வினவுமிறயோ கியரெல்லாம் வீந்ததென்னோ விளம்பென்றே.

ஆயபுசுண்ட னதற்குரைக்கு மழிவில்பரமே சுரனியதி
யேயவிதனை யார்கடப்பா ரெனக் கிப்படியப் படியவர்க்கே
மேய்வருவ தொழிப்பரிதான் மிகவுமேதைப் படியாகு
நீயதங்கப் படியென்றே நினைவாய்நியதி யறுதியிதே.

(ப - ரை.) என்றலோடும் = என விவ்வண்ணம் கூறவும், கற்பாந்தம் எரிநீர் வாயு வெழும்போதும் = கற்பமுடிவுறும்போதும் அக்கினி ஜலம் வாயு வதிகரித்துக் கிளர்ந்த காலத்தும், தின்றுதபனர் சுடும்போதும்=நெருங்கிய சூரியர்கள் தகிக்கும்போதும், துஞ்சா திருந்தாய் எங்ஙன் என = எவ்வாறிறவாதிருந்தாய் என்றுகேட்ப, நின்றபுசுசண்டன், உரை செய்யும் = அதைக்கேட்ட புசண்டமுனிவர் கூறுவார், நெடியசகத்தின் விவகாரம் = நீண்ட வுலகின் விவகாரம், அன்றிவிடும் = இல்லாமல் வீழும், எப்போது = எக்காலத்து, அப்போது = அக்காலத்து, அகல்வன் நானுமிது தன்னே = இக்கூண்டைவிடுத்து யானும் விலகுவேன்.

தவனரெல்லாம் = சூரியர்களெல்லாம், சுடும்போதில் = தகிக்குங்காலத்தில், சலதாரணையால் = நீர்த்தாரணையானே, விண்ணுறுவேன் = ஆகாயத்திலமர்வேன், குவடுசிசுறக் காற்றெறியில் = சிகரங்கள் பொடியாகியோடுமாறு வாயுவீசில், குன்றமெனுந்தாரணையாலே = பர்வததாரணையினாலே, துவள்கிலாது விண்ணுறுவேன் = சலனமுறாது ககனத்திருப்பேன், தொல்லைஞாலமேருவுடன் உவரிமூடின் = பழையவுலகம் மேருகிரியுடன் கடலான் மூடப்பெறின், மாருததாரணையால் மிதப்பேன் = வாயுதாரணையினாலே மிதந்து கொண்டிருப்பேன், உலைவின்றி = கெடுதலின்றி.

பிரளயந்தான் வந்ததெனில் = பிரளயமானது வந்ததாயின், பிரமாண்டத்தின் கரையெய்தி = பிரஹ்மாண்டத்தினுடைய தடத்தைப்பொருந்தி, துரிசில் தத்துவார்த்தமெனும் துகளில்பதத்தே = குற்றமற்றதத்துவார்த்தமெனும் நிருமலபதத்தில், சுழுத்தியெனும்விரவு மவத்தையால் = துயிலென்னும் லயஅவத்தையானே, நிற்பன் = இருப்பன், மீளவேதாப் படைப்பளவும் = மறுபடியும் பிரஹ்மா சிருஷ்டிக்கும்பரியந்தமும், பிரமன்படைக்கிற் பிரமாண்டமடைவேன் பறவைப்பெருங்கூட்டில் = பிரஹ்மா சிருஷ்டிக்கிற் பிரஹ்மாண்டத்தை யடைவேன் பக்ஷிப்பெரியநீடத்தில்.

எனது சங்கற்பத்தாலே=என்னுடைய நினைவினாலே, இந்தக்கிரியின் இக்கோட்டில்= இப்பர்வதத்தின் இச்சிகரத்தில், கனகற்பகமிப்படியுண்டாம் = கனமான கற்பகவிருக்ஷம் இந்தப்பிரகாரம் உண்டாகும், கற்பங்கற்பந்தோறும் = ஒவ்வொரு கற்பமும், என = என்று கூற, அனகனே = பாவமற்ற பெரியோய், தாரணைகளில் நீ = கூறியதாரணைகளினாலே தாங்கள், அழியாதிருந்தாய் பலகற்பம் = பலகற்பகாலம் கெடாதிருந்தீர்கள், வினவுபிற யோகியரெல்லாம் = பிரசித்தமான மற்றைய யோகியர்களியாவரும், வீந்ததென்னோ விளம்பென்றேன் = வீழ்ந்துபோயது யாதுகாரணம் உரைப்பீரொன்றேன்.

ஆயபுசுண்டன் அதற்குரைக்கும் = மகாயோகியாய புசுண்டமுனிவர் அதற்குக் கூறியதாவது, அழிவில் பரமேசுரனியதி = கெடாத பரமேசுராது நியமமாம், ஏயவிதனை யார் கடப்பார் = பொருந்திய இதுதன்னை யாவரே கடக்கக்கூடியவர்கள், எனக்கிப்படியப்படியவர்க்கே = எனக்கு விதித்தது இவ்வாறும், அவர்கட்கு விதித்தது அவ்வாறும், மேயவருவதொழிப்பரிதால் = பொருந்தவருவதை நீக்குவது முடியாததாம், மிகவும் ஏதெப்படியாகும் = மிகுதியாக எது எவ்வாறு ஆகுமோ, நீயது = தாங்கள் அதனை, அங்கப்படியென்றே = ஆண்டவ்வாறு என்றே, நினைவாய் = எண்ணுவீர்களாக, நியதியறுதியிதே = நியமத்தின்முடிவு இஃதேயாம்.

(ஸ்ரீ - வீர.) கற்பாந்தகாலத்தே மிகுதியான பிரசண்டமாருதம் அடிக்கும்போதும், சகல சூரியர்களும் சேர்ந்துதகிக்கும்போதும் இந்துவினது சீதகரங்களினாலே ஜலமெல்லாம்

கற்போல உறையும்போதும், ஆலங்கட்டிமழைகள் அடரும்போதும், கற்பஜீமூதமண்டல கர்ச்சனை கதறும்போதும், சூரியசந்திர தாரகைகள் வீழ்ந்து உலையும்போதும், ஹேமகாமதியை யுடையவரே தாங்கள் எவ்வாறு உபத்திரவமின்றி யிருந்தீர்கள்; எனவே அப்பிரளயப்போது பூலோகாந்தத்தினதுதாகத்தானே மேருகற்பவிருக்ஷாதிகளினாலே காப்பெண்ணமுமிலதா கும் என்பது கருத்தாம். ஸ்ரீ புசுண்டர் கூறல்:—எக்காற்கற்பாந்தத்தில் = சகஸ்ரமகாயுக பரியந்தத்தில், உலகதிதியில் விவகாரமானது வீழாநிற்குமோ அப்போது, நன்மித்திரனைச் செய்நன்றிகொன்றவன்போல இந்நீடத்தை யான்விடுவேன்; அகிலகற்பனையுமகன்றவனாய், நிச்சலசுபாவமேயசர்வாங்கனாய், நிர்வாசனமனம்போல, ஆகாயத்திலேயே யமர்ந்திருப்பேன்; சாமானியமாக ஆகாயத்திற்கூறியதிதியை தாரணைவேற்றுமைகளானே சிறப்பித்துவிரித் தல்:—தவனரென்பதாதி, எக்கால் பூதரங்களைப் பொடிப்பொடியாக்கும் ஆதித்தியர்கள் மிக வும் தபிப்பிப்பார்களோ, வருணதாரணையைப்பற்றி யக்கால் தீரதீயாயிருப்பேன், அத்தியந்த சீதளசர்வதிங்மண்டலவியாபியாய்த் தடுக்கமுடியாத ஜலவடிவவருணனே யானாயிருக்கின் றேன் என்று சித்தத்தில் நிரந்தரம் தாரணம் வாருணீதாரணையெனப்பெறும், அதனானே வருணனைத்தனது வடிவமாக எப்போதும் எண்ணுகின்றான், என்பதாம்; பர்வதாதிதாரணை களையும் இங்ஙனமே யூகிக்கவேண்டும். பிருதிவியாதிபஞ்சபூததாரணைப்பிரகாரத்தை ஸ்ரீ வசி ஷ்டபகவான் தாமே நிர்வாணப்பிரகரண உத்தரார்த்தத்தில், வித்தாரமாகக் கூறுவர். பெரிய வாசிட்டத்துட் காண்க. எக்காற்பர்வதேந்திரர்கள் எல்லாம் பறக்கும்படியாகப் பிரளய வாயுக்களடிக்கும் அக்கால் பர்வததாரணையைப்பற்றி யாகாயத்தில் நிச்சலமாகவிருப்பேன்; உலகுமேருவாதியாவும் கழிந்து ஏகார்ணவத்தன்மையை எப்போதடைவுறுமோ அப்போது, அசலமதியனாய், வாயுதாரணையைப்பற்றி, மிதக்குறுவேன், சலமாயவாயுவின்கண்ணே யான்ம மதியுடையவனாய், ஆகாயத்தில் மிதக்குறுவேன் என்பதாம். எத்துணைக்காலம் அங்ஙனம் மிதக்குறுவீர் எனின் உரைத்தல்:—பிரளயமென்பசாதி. பிரஹ்மாண்டத்தின் தூலருக்கும சமஷ்டியின் பரமஅவதிபூதமாய அவ்வியாகிருதத்தையடைந்து, தத்துவங்களாம் இருபத்து நான்கினேனும், இருபத்தாறினேனும், முப்பத்தாறினேனும், நாமாதிப்பிராணாந்தங்களி னேனும், முடிபாகிய பூமாவாம் விமலபதத்தில், அசலரூபமாகிய சுழுப்த அவஸ்தையினால், துயின்றான்போன்ற ஏகரசநிர்விகற்பசமாதியவஸ்தையானே அத்துணையிருப்பேன்; எத் துணைப்போது அத்தகைய சமாதியில், இருப்பதாகுமெனின் உரைத்தல்:—பிரமன் என்ப தாதி. எத்துணை மீண்டும் கமலஜன் சிருஷ்டிகருமத்தில் முயல்வனோ, ஆண்டுமீண்டும் சிருஷ்டி கருமமுளதாகவே பிரமாண்டம் புகுந்து, விகங்களாகிய எங்களுடைய ஆலயத்தில் இக்கற்பகவிருக்ஷஸ்தானம் வந்துசேர்ந்து இருப்பேன். ஸ்ரீ வசிஷ்டபகவான்:—எங்ஙனம் கற் பாந்தங்களில் தாங்கள் ஹே பக்ஷீந்திரரே! தாரணைகளினாலே அகண்டிதமாக இருக்கின் றீரோ அங்ஙனம் அன்னியயோகிகளும் ஏதனால் இருக்கின்றார்களில்லை, எதன்பொருட்டு அதிகாரிசம்பந்தமான சரீராந்தரத்தையேனும் முத்தியையேனும் அடைகின்றார்கள், அதே சரீரத்தானே தங்களைப்போல, ஏன் இருக்கின்றார்களில்லை. என்று வினவ அதற்குப் புசுண்ட முனிவர் விடையளித்தல் = ஈண்டு அவ்வப்பிரபலப்பிராரப்த அனுசாரிணியாய சத்திய சங் கற்பரூப ஈசுரநியதியே விவத்தையின் ஹேதுவேறில்லையெனல்:—ஆயவென்பது ஹே பிரஹ்மசொரூபரே! இது பரமேசுரசம்பந்தமான நியதியேயாம் தாண்டுதற் கரியதாம் என் றால் இத்தகைமையானே பவிக்கத்தக்கது, அத்தகைய அவர்களானே யங்ஙனம் பவிக்கத் தக்கதென்பதே, நியமம், அவசியம் பவிக்கத்தக்கதை யிது இப்படியேதான் என்று புத்தியி

ளாலே யளவிடுதற்கு முடியாத காரியமாம், யாது எத்தகைய பிராரப்தத்தானே அமைக்கப் பெற்றுளதோ அது அவ்வாறேயாம், என்னுமிதுதானே நியதியினது இந்நிச்சயமாம்.

(ச.) இதுதன்னை = இக்கூட்டை, இவைகள் வெளிப்படை. தவனரெல்லாம் = துவாதச ஆதித்தரும், ஒருமித்துதித்து, சுடும்போது = பிரளயசமயத்தில், விண்ணுறைவேன் = யான் வியோமத்தை யடைந்தவனாய், சலதாரணையால் = வருணசம்பந்தமுள்ளபாவனையை யடைந்து நிச்சயபுத்தியாயிருப்பேன், வருணனெப்படி அப்பின்மத்தியிலிருப்பவனாய் வாகிய மான வாதபசந்தாபத்தையடையான் அதுபோற் புசுண்டரும் வருணபாவனையால், அதன் மயத்தை யடைந்தது போல்வாகிய சந்தாபம் அநுபவியாரென்பது பொருள். காற்று = பிரளயவாயுக்கள், எறியில் = வீசும்போது, குன்றமெனுந்தாரணையால், விண்ணுறைவேன் பூமியிலிருக்கும் பருவதங்களே நசித்தற்குரித்தாதலால் அவ்விடத்துமாத்திரம் பிரளயவாயுவேகத்தினுற் சரிக்கும் தமது வேகத்துக்கு விடயமின்றிய பிரமாண்டத்துக்கும் வெளியாகாசத்திற் சாந்தாரணவாயு கலக்காதிருத்தற்பொருட்டுப் பருவதசம்பந்தமுள்ள தாரணையைப்பற்றிச் சுகமாகவிருப்பேனென்பது பொருள். உவரிமூடின் = ஏகார்ணவசமயத்தில், மாருததாரணையால், மிதப்பேன் = மேலேசஞ்சரிப்பேன். பிரளயந்தான் வந்ததெனில் பிரமாண்டத்தின் கரை = வெளிக்கூற்றை, எய்தி, தத்துவாந்தமெனும் = பிரமாண்டாவரணமான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், அகங்காரம், மகத்துப்பிரகிருதிரூபங்களாகிய ஏழுதத்துவங்களினது அந்தமென்னும் துகளில்பதத்தே, சுழுத்தியெனுமவத்தையால், சமாதியவஸ்தையால், நிற்பேன், வேதாமீளப்படைப்பளவும், பிரமாண்டம் பிரமன்படைக்கில், அதிற்பிரவேசித்துப் பறவைப்பெருங்கூட்டி லடைவேன். ஸ்ரீ புசுண்டர்: பரமேசுரன் உடையநியதி = நியமனுன்மிகையென்னுஞ் சத்தி. மேயவருவது, சுபாவமாய், அவசியம் வரவேண்டுவது = தெய்வகதியென்னும் நியதி. நிரீசுரவாதத்திற் சுபாவமென்பதாம், சேசுரவாதத்தில் வருவதென்பதாம், ஈதுமதபேதத்தால்வந்த வுத்தரமென்றுணர்க. மூலம்:—நிச்சலப்பகுதி சரீர சர்வாவயவமுடையவனாய், வாசனைவிகீனமான ஜீவன் முக்தசித்தம்போலச் சகல கற்பனைகளும் விடுபட்டுச் சகல கற்பனாரகிதமாயிருப்பேன் என்பதாம். பாடபேதத்திலோ, ஞானக்கினியால் தக்தமாய அவித்தை காமசங்கற்பசம்சயமாதிகளையுடைய மனம் என மனச்சிறப்பாம். அவசியம் வருவதை யார்தடுக்கமுடியுமென்பதாம். நியதியென்பது ஈசுரவாதத்தில், வரவேண்டுவதென்பது நிரீசுரவாதத்தில், சுபாவத்தினது நிச்சயமிதுவென்பது சுபாவவாதத்தில்; என மதபேதத்தானே கூறியது அங்கீகரிக்கப்பெற்றது என அநுசந்திக்கத்தக்கது என்பது பாடபேதம். (55-56-57-58-59)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இந்தவண்ண மியம்பிய முனிவரை இதுகாறுங்கண்ட அதிசயங்களை இயம்பவேண்டுமென ஸ்ரீ வசிஷ்டபகவான் கேட்டலும் உத்தரம் விளம்பத்தொடங்கலும்:—என்றவென்பது.

என்றபுசுண்டன் றனைஞான விஞ்ஞானத்தை யெய்தியநீ
துன்றுயோகந் தொடர்மனத்தாற் றொல்லையிந்த மூவுலகி
னின்றனுளத்திற் சித்திரங்க ளோர்ந்ததேதே தவையெல்லா
மொன்றுமொழியா துரையென்ன வுயர்ந்தபுசுண்ட னுரைசெய்யும்.

(ப - ரை.) என்ற புசுண்டன்றனை = என்றுகூறிய ஸ்ரீ புசுண்டமுனிவரை, ஞான விஞ்ஞானத்தை எய்திய நீ = கலைஞானங்களையும் பிரஹ்மஞானத்தையும் அடைந்து துறந்

கள், துன்றுயோகந்தொடர்மனத்தால் = நெருங்கிய யோகம் பொருந்தியமனத்தினாலே, தொல்லையிந்தமூவுலகில் = பழைய இந்த மூன்றுலகத்தில், நின்றனுளத்தில் = தங்களுடைய உள்ளத்தில், சித்திரங்கள் சேர்ந்ததேது எது அவையெல்லாம் = விசித்திரங்கள் அடைவுற்றது யாதுயாது அவ்வியாவற்றையும், ஒன்றும் ஒழியாது = ஒன்றையும் விடாமல், உரையென்ன = கூறுவீர்களாகவென்று கேட்ப, உயர்ந்த புசுண்டன் உரைசெய்யும் = மேலாய ஆயுள்வாய்ந்த ஸ்ரீ புசுண்டமுனிவர் கூறத்தொடங்குவார்.

(ஸ்ரீ - வீர.) அத்தியந்தம் மோக்ஷத்தைப்போலத் தீர்க்கமாயும் அபரிச்சேத்தியமாயும், ஆயுளையுடைய, மோக்ஷமாகிய ஜீவன்முக்தியாற்றுணுதல் உபலக்ஷிதமாய தீர்க்கஆயுளையுடைய தாங்கள், அதனுனே சிறந்தன அர்த்தங்களைத் தெரிந்தவிடயத்திற் சிறந்தவராயிருக்குந் தாங்கள் ஞானவிஞ்ஞானமுடையவராய்த் தீரராய் யோகடோக்கிய மனோகதியுடையவராகிய தாங்கள்; தனித்தனி அநேகவித வெகுவெகு சர்க்கங்களின்றிதிகளையும் பிரளயங்களையும் உற்பத்திகளையும், கண்ட தாங்கள், ஹே கல்யாணரே! இத்தாங்கள்கண்ட ஜகத்கிரமத்தில், ஆச்சரியபூதம் யாதுயாது எண்ணுகின்றீர்களோ அவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் உரைக்க வேண்டும்.

(ச.) ஞானம் = மோக்ஷவேதுவான தத்துவஞானத்தையும், விஞ்ஞானத்தை = லௌகிகமான நிகிலகலாசாஸ்திராதி விசேடஞானத்தையும், சித்திரங்கள் = ஆச்சரியங்கள். (60)

(ஸ்ரீ - வீர - அ - சை.) கண்டவிசேடங்களையே இன்னின்னதெனக் கழறத்தொடங்கல்:—கல், அகத், மதி, யென்பன.

கல்லானிறைந்து மலைமரம்புற் காணுதிருந்த திப்புவனஞ்
சொல்லாராண்டு பதினோரா யிரம்வெண்ணீற்றுற் றுன்னியது
நல்லாய்வேறே யுகநாலு நண்ணுங்காட்டா னெருங்குற்ற
தல்லாவுகநா லிடமின்றி யசலத்திரளாற் செறிந்ததுவே.

அகத்தியனையன் றியிலுகநா லகல்விந்தத்தான் மறைந்ததுமண்
வகுத்தசிரு ட்டியொன்றின்மது மறையோர்விரும்பச் ருத்திரர்க
ளிகழ்ச்சிசெய்தார் கற்புடைய மகளிரிச்சித் தனசெய்தார்
மிகுத்தமுனிவ விவைகண்டேன் வேறுமுள்ள விளம்புவனால்.

மதிபாற்கரனை முதலோர்கள் பிறப்புமகவா னுபேந்திரர்கள்
பதியும்பொற்கண் ணன்கவர்ந்த பாரைப்பன்றி பறித்ததுவும்
மிதிர்கற்பங்க டொறும்வேண்டிப் பிரித்தமறையைச் செறித்ததுவு
மதிருங்கடலின் மந்தரத்தா லமுதமழைப்பித் ததுமறிவேன்.

(ப - ரை.) கல்லால் நிறைந்து மலைமரம்புற்காணுதிருந்த திப்புவனம் = சிலையால் பூரணமாய்ப் பர்வதம் விருக்ஷம் திருணம்தோற்றுதிருந்தது இத்தரை, சொல்லாராண்டு பதினோராயிரம் வெண்ணீற்றுற்றுன்னியது = கூறுநின்ற தசவர்ஷசகஸ்ரம் தசவர்ஷசதம் வெள்ளியபஸ்மத்தால் நெருங்கியிருந்தது, நல்லாய் வேறேயுகநாலு நண்ணுங்காட்டால் நெருங்குற்றது = ஹேசத்துருபமாயசத்துவரே! அயல் நான்குயுகங்கள்பொருந்திய வனங்களால் நெருங்கியிருந்ததிது. அல்லாவுகநால் இடமின்றி யசலத்திரளாற் செறிந்ததுவே = அயல்யுகநான்கும் பிரதேசமில்லாமல் அசலங்களால் பூரித்திருந்தது. ஏ அசைநிலை.

அகத்தியனையன்றியில் = அகஸ்தியமுனிவரில்லாமல், உகநாலகல்விந்தத்தால் = நான்குயுகங்கள்விரிந்த விந்தியாசலத்தினாலே, மறைந்ததுமண் = ஆச்சாதிக்கப்பட்டதுபூமி, வகுத்தசிருட்டியொன்றில் மதுமறையோர் விரும்பச் சூத்திரர்கள் இகழ்ச்சிசெய்தார் = நியமித்தவொருசிருஷ்டியில் வெண்ணறையை மறையோரிச்சிப்பச் சூத்திரர்கள் அதனையிகழ்ந்து நின்றார், கற்புடையமகளிர் இச்சித்தனசெய்தார் = குலஸ்திரீகள் தங்களிஷ்டம்போல நடந்தார்கள், மிகுத்தமுனிவ இவைகண்டேன் = ஹேபெரியமுனி நாயகரே! இவற்றையெல்லாம் கண்டதுபோக, வேறுமுள்ள விளம்புவன் = சேடித்துநின்ற மற்றவற்றையும் கூறுவல், ஆல்அசை.

மதிபாற்கரனைமுதலோர்கள் பிறப்பும் = இந்துசூரியர்கள் முதலியவர்கள் உதயமும், மகவானுபேந்திரர்கள் பதியும் = இந்திரஉபேந்திரர்களது விவஸ்திதியும், பொற்கண்ணன் கவர்ந்தபாரைப் பன்றிபறித்ததும் = ஹிரணியாக்ஷ அபகரணமாயக்ஷிதியை வராகம் உத்தாரணஞ் செய்ததையும், பிதிர்கற்பங்கடொறும்வேண்டிப் பிரித்தமறையைச்செறித்ததுவும் = மன்வந்தரங்கள் தோறும் மன்னவர் நியமனமும் கொண்டுசென்றவேதங்களைக்கொண்டு வந்ததுவும், அதிருங்கடலின்மந்தரத்தா லமுதமழைப்பித்தது மறிவேன் = கலங்குங்கடலினின்றும் மந்தரமர்த்தனத்தால் அமிர்தத்தை வருத்தியதும் உணர்வேன்.

(ஸ்ரீ - வீர.) ஹேபிரஹ்மவித்துக்களுட் பெரியோய்! சுமேருவின் கீழே பெரும் பெரும் மலைகளோடும் விருக்ஷங்களோடும் கூடியும் திருணங்கொடிமுதலியவை யுண்டாகாமலும், சைலவன விருக்ஷக்கூட்டங்களில்லாமலும், தரையிருந்தமைகண்டுளேன்; மேருவின்கீழே, பத்து ஆயிரவருடங்களும் பத்து நூறுவருடங்களும், பஸ்மசாரபராபூர்ணமாகத் தரையிருந்தமைதெரிந்துளேன்; இரண்டியுகபரியந்தம் இடையீடின்றி வனபாதபங்களானே சூழப்பெற்று, விருக்ஷஇதரநிர்மாணமின்றித் தரையிருந்தமை தெரிவேன்; சதுர்த்தாங்கிசாதிகம் சதுர்யுகபரியந்தம் இடையீடின்றி நெருங்கிய பர்வதங்களானே மூடப்பெற்று, அப்பிரவிருத்தஜனசாரமுற்று இத்தரையிருந்தமையறிவேன். பின் பிருது சக்கிரவர்த்தியினாலே தான் றனுஷ்கோடியால் மலைகளைவிலக்கிப் பூமிசமமாக்கப்பெற்றதென்பது புராணங்களிற் பிரசித்தமாம். வெகுகாலபரியந்தம் ஸ்ரீ அகஸ்தியரில்லாமல், விந்தியமகாசைலமானது மேருபர்வதத்தோடு பொறாமைப்பட்டு அபிவிருத்தியையடைந்து, மலயதுர்த்தரசகியமாதி மலைகளின் பிரிவின்றி யேகபர்வதத்தன்மையை யெத்திசையுமுற்று அதனான் மூடப்பெற்ற உலககுடிசையை யுணர்வேன்; கலியுகசர்க்கஸ்திதியை ஸ்மரித்துக்கொண்டுகூறல்:—வகுத்தவென்பது. பிராஹ்மணர்கள் வெண்ணறைமாந்தி வெகுண்டுமத்தராய், சூத்திரர் வெண்ணறைவெறுத்துச் சாந்தராய், மங்கையர்கள் அநேகநாயகர்களை யணைந்தவராய், அசத்சூத்திரர்கள் தேவர்களை நிந்தித்துக்கொண்டு திரிந்தவராய், நிகழ்ந்த ஒரு சர்க்கத்தையுமறிவேன்; இந்துபாஸ்கராதிகளின் அவ்தாரங்களும், இந்திர உபேந்திராதிவிவஸ்திதியும், பூமியை ஹிரணியாக்ஷன் கவர்ந்துகொண்டுபோனமையும், அதனை வராக அவதாரம் எடுத்துக்கொண்டுவந்தமையும், தேவதானவமனுடாதிகளில் தனித்தனியாகப் பார்த்திவர்களின் கற்பனமும், மீனவதாரத்தில் வேதங்களைக்கொணர்ந்ததையுமே மந்தர உன்மூலனமும், அமிர்தப்பொருட்டு அப்தியின்மந்தனமும் யானறிவேன்.

(ச.) சென்ற கற்பாந்தரத்தில் ஆயிரவருடஞ் சோடணதகனத்தின் பின்மழை வருஷியாமற் பதினோராயிரம் வருடம் வெண்ணீற்றூற் றுன்னியது. அகத்தியனையன்றியில் = அகஸ்தியமகாமுனியின்மையின், நியாமகாபாவமாதலின். பதியும் = மரியாதையையும், பிதிர்கற்

பங்கடொறும்=மந்வந்தராதிபதிகளின் கற்பனமும் கற்பங்கடொறும், வேண்டிப் பிரித்த= சோமுகனென்னுஞ் சுராரியால் அபகரிக்கப்பட்ட மறையை மச்சாவதாரத்தால், செறித்ததும் = வரவழைத்ததுவும், ஜகத்குடிசையை = ஜகத்தாதாரபூதமான தரையைப், வெகு காலம் மந்தரத்தின் மந்தானத்தன்மைப் பரிகற்பனப்பொருட்டுத் தேவாசுரர்களானே உன் மூலனமும், அறிவேன். அமிருதப்பொருட்டு அப்தியின்மதனம் மூன்றாவது ஸ்மிருதியாம்.

(61-62-63)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கூறிய இவற்றையெல்லாம் சிறிது ஆயுளுடையவருமேயறிவர் ஆகவின் இனி நீண்ட ஆயுளிற்கண்ட வைபவத்தைக் கூறுவன் கேளுங்கள் என விரித்தல்:— மகத்தின், அவ்வாறு, ஒருக்கால் என்பன.

மகத்தின்சகத்தி னிவையெல்லாம் வாலரெனினு மறிகுவராற்
சகத்திலுதித்தோ ருனைமுதலோர் தவநாரதன்பா ரத்துவசன்
மிருத்தமரிசி புலத்தியனத் திரிவிண்ணவர்கோன் சனற்குமா
னுருத்தமதகுஞ் சாமுகன்வேள் பிருங்கிமுதலோ ரோதரியோர்.

அவ்வாறின்னாட் சிருட்டிகளி லடைந்தோர்களிலோ ரெண்ணுண்டோ
மெய்வாய்முனியே யுன்பிறவி விளம்பிலெட்டா குவதிதுவா
மிவ்வாறிவ்வெட் டாம்பிறப்பி லெய்தினோமிங் கிருவோரு
முய்வாயெனவன் றுற்றதுபோ லின்றுமென்பா லுற்றனையால்.

ஒருக்கால்விண்ணி னின்றுதித்தா யொருக்கானீரி னின்றுதித்தாய்
செருக்கான்மலைநின் றொருக்காற்செந் தீநின்றொருக்கால் வந்தனைநீ
யிருக்காலொடுமுக் காற்படைப்பி லிம்மண்மறைந்து மீண்டெடுத்த
தருட்பாலமுதம் பன்னிருகாற் கடைந்தாரிவையு மறிகுவனால்.

(ப - ரை.) மகத்தின் சகத்தினிவையெல்லாம் = பெரியவுலகத்தினிவற்றையெல்லாம், வாலரெனினும் அறிகுவரால் = சிறிது ஆயுள் உடையவரும் அறிவர், சகத்திலுதித்தோர் உனைமுதலோர் = உலகத்திலுண்டாயினோர் தங்களைப்போன்றவர், தவநாரதன் பாரத்துவசன் = தவத்தையுடைய நாரதர் பாரத்துவாசர், மிருத்தமரிசி புலத்தியனத்திரி விண்ணவர் கோன் சனற்குமரன் = பெருமைபொருந்திய மரீசி புலஸ்தியர், அத்திரி தேவேந்திரன், சனற்குமாரர், உருத்தமதகுஞ்சாமுகன் வேள் பிருங்கி முதலோர் ஓதரியோர் = அஷ்ட அசுரரை ஒருவராலும் சங்கரிக்கமுடியாதபோது சங்கரிப்பதற்கென்றே யநேகந் திருவவதாரமியற்றியருளும் மதோன்மத்தக்கருணைபொழியும் யானைமுகக்கடவுள் சுப்ரமணியக்கடவுள், பிருங்கிசர், முதலாயினோர் எண்ணில்லாதவர். ஆல், அசை.

அவ்வாறு = அங்ஙனம், இந்நாட்சிருட்டிகளில் அடைந்தோர்களில் ஓர் எண்ணுண்டோ = இதுகாறும் சிருஷ்டிகளில் வந்துற்றவர் ஒரு கணக்கிலடங்குமோ, மெய்வாய் முனியே = சத்தியசொரூபமாயமுனிவரே! உன்பிறவி = தங்களுடைய ஜனனம், விளம்பில் = கூறுமிடத்து, எட்டாகுவதிதுவாம் = இது எட்டாவதாகும், இவ்வாறு = இவ்வண்ணம், அவ்வெட்டாம்பிறப்பில் எய்தினோம் = அந்த எட்டாவது ஜன்மத்தில் அடைந்தோம், இங்கிருவோரும் = இவ்விடத்திரண்டுபேரும், உய்வாயென = வாழுதிரென்று வாழ்த்தி, அன்றுற்றதுபோல் இன்றும் என்பால் உற்றனை = அக்கால் வந்தடைந்தது போலவே இக்காலும் அடியேனிடத்து எழுந்தருளினீர். ஆல், அசை.

ஒருக்கால் விண்ணினின்றுதித்தாய் = ஒருபோது ஆகாயத்தினின்றும் வந்தீர், ஒருக்கால் நீரினின்றுதித்தாய் = ஒருபோது ஜலத்தினின்றும் வந்தீர், செருக்கால் மலேயின் ஞெருக்கால் = மற்றொருபோது அதிகம்பீரமாய்ப் பர்வதத்தினின்றும் வந்தீர், செந்தீயின் ஞெருக்கால் வந்தனை நீ = செவ்விய அக்கினியினின்றும் பவித்திரமாக ஒருமுறை வந்தீர்; இருக்காலொடுமூக்கால் = ஐந்துமுறை, படைப்பில் = சிருஷ்டியில், இம்மண் = இப்பிருதிவி, மறைந்து = காணுமற்போய், மீண்டெடுத்தது = மறுபடிகொண்டுவந்தது, அறிகுவன் = அறிவேன், அருட்பாலமுதம் பன்னிருகால் கடைந்தார் இவையும் அறிகுவன் = திருவருள்சுரந்து பாற்கடலே யமுதம்வரப் பன்னிரண்டுமுறை மதனஞ்செய்தது முதலிய இவ்வியாவற்றையும் அறிவேன். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) உண்டாகாத பக்கக்கருடன் சாகரங்கட்கு முண்டாயது; என்பதாதிய வாய அவசியம் எண்ணத்தக்கபொருள்கள், என்னுற் காணப்பெற்ற அநேக கற்பங்களைக் குறித்து இக்கற்பமாத்திரம் உற்றனவாதலின் சொற்பங்களாம் சென்ற ஜகன்முறைகள், என்னைக்குறித்து மிகச் சிறிதுவயதுடைய இக்கற்பத்துண்டாய தங்களைப்போன்றவர்களானும் நினைக்கத்தக்கவே; ஆமாகலின் அவற்றைக் கவர்வதில் என்னேவியப்புளது? இனி இவ்வுலகின்கண் அற்புதாரஞ்சென்ற காலங்களிலும், இப்போதுள்ள சர்க்கங்களிலும், ஹேபகவன்! தாங்கள் முதலியவர்களிடத்திலும், பரத்துவாஜ புலஸ்திய அத்திரி நாரத இந்திரமரீசிகள் விடயத்திலும், சநத்குமாரர் முதலிய பிரஹ்மரிஷிகள் விடயத்திலும், பிருகு அங்கிரர் முதலிய சித்த இருஷிகள் விடயத்திலும், கந்தசுவாமி கணபதிசுவாமிமுதலிய சிவபுத்திரர் தம்திருவவதாரங்களிடத்திலும், சிவசக்திகளாகிய கௌரியாதிகள் விடயத்திலும், பிருங்கிசர் சரசுவதி லக்ஷுமி காயத்திரியாதியர் விடயத்திலும், மேருவாதிகிரிகள் விடயத்திலும், ஹயக்கிரீவாதி தானவர்விடயத்திலும், ஹிரணியாக்ஷாதிதயித்தியர் விடயத்திலும், சிபியாதிமன்னவர் விடயத்திலும், ஆத்திரேயாதிமுனிவர் விடயத்திலும், கணக்கென்னேயுளது; அங்ஙனமே இப்போதுள்ள சர்க்கங்களில் எண்ணிக்கையென்னேயுளது. ஆண்டுவிஸ்மரண சம்பாவனையும் இல்தாம் என்பது கருத்து. ஹேமகாமுனிவரே! தங்களுடைய பிரஹ்மபுத்திரத்தன்மை வாய்ந்த இப்பிறப்பு எட்டாவதாம், எட்டாவது சர்க்கத்திலாதல், ஜன்மத்திலாதல், கற்பத்திலாதல், என்னேடுகூடச் சேர்ந்தவராகின்றீர்கள்; இப்போது சம்பந்தித்ததுபோலவே எப்போதுஞ் சம்பந்தித்துள்ளீர்கள் யாவற்றையுமெண்ணுகின்றேன். ஜன்மம் எட்டிலும் யான் என்னே பிரஹ்மபுத்திரனுகவே யிருந்தேனே வெனின்? இல்லையெனல்:—ஒருக்கால் என்பதாதி. ஒருக்கால் வியோமத்தினின்றும் உண்டானீர், ஒருக்கால் ஜலத்தினின்றும் உண்டானீர், ஒருக்கால் வாயுவினின்றும் உண்டானீர், ஒருக்கால் சைலத்தினின்றும் மற்றொருக்கால் அநலத்தினின்றும் உண்டானீர். ஆசாரங்கள் அநேகசர்க்கங்களில் ஒப்பாகவேயிருந்தன் வைஷம்மியங்களும், இருந்தனவெனல்:—இருக்காலென்பதாதி. பூமியானது ஐந்துமுன்ற ஜலத்தில் மூழ்குதலான் மறைந்தது, ஐந்துசர்க்கங்களில் கூர்மத்தினுலேயே பயோநிதியினின்றும் எடுக்கப்பெற்றது, வராகத்தாலன்று; மந்தாமிழுக்கும் வேகபரியாகுலமிருந்த சுராசுரக்கூட்டங்களோடுகூடி அமிருத அம்போதிகடைந்ததைப் பன்னிரண்டுமுறை யறிவேன். இவையாவும் நிட்டைநீங்கியபோது கண்டவையாம்.

(ச.) இவையெல்லாம் = சொற்பமதீதமான ஜகத்கிரமங்களெல்லாம், வாலனெனினும் = என்னினு நூனஜீவிதகாலமுடையரும், அறிகுவர், அக்காரணத்தினுல் அந்நினைவுகளின் ஆதரமியாது, என்னைநோக்கி அத்தன்மையான விருத்தாந்தங் கேட்கவேண்டுவதின்றென்பது கருத்து. உன்பிறவி = பிரஹ்மபுத்திரனுகிய வுனதுபிறப்பை. ஒருக்கால் = ஒரு

மனுவந்தரத்தில், மறைந்து = ஏகார்ணவத்திற்றிரோதானமாய், கூர்மத்தாலே யெடுக்கப் பட்டது. பிரஹ்மாவின் மானசபுத்திரர் வசிட்டர், எட்டாவது ஜன்மத்தில் நீர் பிரஹ்மபுத்தி ரர் ஆனீர் என்பதாம். அவ்விவ்வெட்டாவது ஜன்மத்தில் நாமிருவருங்கூடுவது இப்போது நிகழ்வதாயினும் முன்னமேயறிவேன். ஜன்மாந்தரங்களில் எங்கிருந்துண்டானேன் எனின்? ஒருக்காலென்பது விடை. வராகாதிகளால் அல்லவாம். (64-65-66.)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேலும் பல விசித்திரங்களைக் கண்டதாகக்கூறல்:—முக்கால், தக்கன் என்பன.

முக்காற்பொற்கண் ணன்கீழே மொய்மாநிலத்தைக் கொண்டகன்றான்
மைக்கார்நிகர்மா லிரேணுகைபான் மகவாய்வந்தா னறுமடங்கு
மிக்கான்மீண்டு கலியுகங்க ளூற்றிற்புத்தன் மெய்யெடுத்தா
னுக்கார்புரமூன் றினுமுள்ளோ ரொருக்காற்போல முப்பதின்கால்.

தக்கனிருகான் மகமிழந்தான் சசிசேகரனாற் சக்கிரிக்குப்
புக்கதோல் விபத்துளதாம் புராரியுடனே யருச்சுனற்கு
மிக்கவராகப்பொருட்டாக விளைந்தவெம்போ ரெண்காலாந்
தொக்கயுகங்க டொறும்புருடர் புந்திக்கீடாந் தொல்வேதம்.

(ப - ரை.) முக்கால் = மும்முறை, பொற்கண்ணன் = ஹிரணியாக்ஷன், கீழே = அதப்பிரதேசத்தில், மொய்மாநிலத்தைக்கொண்டகன்றான் = பிராணிகள் நிறைந்துள்ள வசுதாதலத்தைக் கொண்டுசென்றான், மைக்கார்நிகர்மால் = கருமேகம்போன்ற விஷ்ணு, இரேணுகைபால் = இரேணுகாதேவியின்மாட்டு, மகவாய்வந்தான் அறுமடங்கு = ஆறு முறை குழந்தையாய் வந்தனர், மிக்கான்மீண்டு கலியுகங்களூற்றிற் புத்தன்மெய்யெடுத்தான் = மேன்மைமிகுந்த ஹரியானவர் மறுபடியும் கலியுகங்கள் சதத்தில் புத்தாவதாரஞ் செய்தனர். உக்கார்புரமூன்றினுமுள்ளோர் = ஆங்காங்கு துன்பப்படுத்திவந்த முப்புரங் களிலுமுள்ளவர்கள், ஒருக்காற்போல முப்பதின்கால் = ஒருமுறையேபோல முப்பதுமுறை துவம்சமானார்கள்.

தக்கனிருகால் மகமிழந்தான் = தக்ஷன் இருமுறை மகம் அழிந்தான், சசிசேகரனால் = சந்திரசேகரனால், சக்கிரிக்கு = இந்திரனுக்கு, புக்கதோல் விபத்துளதாம் = உண்டாய தோல்விதசசங்கையாம், புராரியுடனே யருச்சுனற்கு = பரமேசுரனுடனே விஜயனுக்கு, மிக்க வராகப்பொருட்டாக = வலுத்தபன்றியின் நிமித்தமாக, விளைந்த வெம்போர் எண் காலாம் = உண்டாகிய கொடுஞ்சமரம் எண்முறையாம், தொக்கயுகங்கள் தொறும் புருடர் புந்திக்கீடாம் தொல்வேதம் = தொடர்ந்தயுகங்கள்தோறும் மநுடரின் மதியினுக்கொப்பாம் பிராசீனவேதங்கள்.

(ஸ்ரீ - வீர.) சிலகால் மகாபலிதேவதைகள் யாவரையும் கப்பங்கட்டும்படி யாண்டுவந் தான், ஹிரணியாக்ஷன் பாதாளத்திற்குச் சர்வஅலுடதம் நிறைந்துவளர்ந்த அதிரசவசுதையை வாரத்திரயம்கொண்டகன்றான்; இந்த ஹரியானவர் ரேணுகை மகவாயாறுமுறை யவதரித்து, வெகு பரசுராமாவதாரகுணியசர்க்கங்களான் விவதானத்திலும், க்ஷத்திரியக்ஷயம் இயற்றி யதை யறிவேன், கலியுகங்களின் சதத்தில் ஹரியானவர் புத்ததசை நூறுறையடைந்து சௌக ராஜத்தன்மையானே வீற்றிருந்ததைத் = கீகடதேசவிசேடராஜத்தன்மையானே சுத்தோ தனன் எனப் பெயரிய அந்தராஜபுத்திரத்தன்மையானே வீற்றிருந்ததை ஷேமுனிநாய

கரே யானறிவேன்; முப்பதுகற்பங்களில் முப்பது எண்ணிக்கையுடைய திரிபுரங்களின் தகனத்தையும், இருமுறைதக்ஷயஞ்ஞத்துவம்சமானதையும் அறிவேன். இவ்விரண்டு கற்பந்தோறும், சுவாயம்புவிற்கந்தரத்திற் சாக்ஷங்களாகப்பிரசித்தங்களாம்; அபராதஞ்செய்த பத்துச்சக்கிரர்களாகிய தேவேந்திரர்கள், ஸ்ரீ சந்திரமௌலியினால், தங்கள் பதங்களினின்றும் நழுவப்பெற்றுக் கிரிக்குகைகளில் நிரோதவடிவமாயாதல், வஜ்ஜிரசகிதபுஜஸ்தம்பனவடிவமாயாதல், உற்றதண்டங்களை யடைந்ததை யறிவேன்; பாணன்பொருட்டு ஹரிசர்வர்கட்கு எண்முறையுண்டாய, மாகேசுவரவைஷ்ணவப் பெயரிய, ஜ்வரபேதங்களினாலும், பிரமதங்களினாலும் மந்திரங்களோடுகூடிய சௌரிய உற்சாகஜனனத்தாற் பிரவர்த்தர்களோடுகூடிய, க்ஷாரப்பிரங்களாகிய பாணவிசேடங்களைப் பொடியாக்கும்படியான மந்திர அஸ்திரங்களையுடைய, சுரசைனியங்கள் கலங்கும்படியான போர்களை யறிவேன். யுகந்தோறும், அத்தியயனஞ்செய்யும் புருடரது மதிகளின் குறைவுமிகுதியால் ஹேமுனிநாயகரே! பிரஹ்மசரியகுருசுசுருஷை பூமிசயனாதிக்கிரியைகளின், சிக்ஷுமுதலிய அங்கங்களின், சாவதான ஸ்வரவர்ணாதி யுச்சாரணலக்ஷணப் பாடங்களின் குறைவு மிகுதிகளால் ஆக்கப்பெற்ற பிரபாவவைசித்திரியங்களோடுகூடிய வேதங்களை யானறிவேன். கர்மப்பிரவசனீயமாயபிரதியால் வீப்சை காட்டப்பெற்றதாமென்று மூலத்திலுணர்க.

(ச.) யாதோ ஒரு அவிநயத்தால் இந்துசேகரர்தம் ஆணையால், கலக்கமுற்ற தசசக்கிரர்களின் முன்னாநுபூதவிகாதங்களை, இப்போது ஸ்மரிக்கின்றேன். யுகாபேக்ஷையால், புருடபுத்திகளின் நியூனத்தன்மையினானும் அதிகத்தன்மையினானும், கிரியா = வேதோக்தகருமானுஷ்டானம், அங்கங்கள் = வியாகரணாதிகள், பாடம் = அத்தியயனப்பிரகாரம், கிரியாவைசித்திரியத்தானும், பாடவைசித்திரியத்தானும், அமைவுற்ற வேதங்களை ஸ்மரிக்கின்றேன். துவாபரத்திலும் கலியிலும் தருமக்குறைவாற் புருஷபுத்திகளின் குறைவு ஏற்படவே அதனை யனுசரித்து வேதங்களின்கிரியாங்க பாடக்குறைவுண்டாம், திரேதையிலும் கிருதத்திலும், தருமவிருத்தியானே புருஷபுத்தி மிக விருத்தியாகவே கிரியாதிவிருத்தியென வைசித்திரியமாமென்பது பொருள். (67-68)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும், தாங்கண்ட அநேக வைசித்திரியங்களையும் அநேக அவதாரவிசேடங்களையும்பற்றி யுரைத்தல்:—புத்தி, ஞான, அரக்கர், தோற்றம் என்பன.

புத்திவழியே மறையேறிக் குறையும்புவிச் செய்கையுமாங்கே
சித்திரங்களா மிதுபோற் புராணத்திரள் பாடம்பலவா
யத்தமொன்று முகந்தோறுமமல ராமாயணப் பெயராய்
மெத்துபுதுமைய்யா லிலக்கஞ்சு லோகத்தறிவு நூல்விளம்பும்.

ஞானராமாயண மிதனைநல் வான்மீகி நவின்றதுபோ
லானபிறரும் பன்னிருகா லமைத்தார் பலகாலழிதலினு
னமில்லா விதற்கிணையா யிரண்டாவது பாரதமதனை
மானவியாதன் செய்ததுமுன் மறையமற்றோர்களு முரைத்தார்.

அரக்கர்மாளப் பதினொன்று மவதாரத்து விராமனெனப்
புரக்குநெடுமா லிக்காலம் புவியிற்றோன்றும் வசுதேவன்
பாக்குமனையிற் பதினாறுமடங் கிக்காலம் பயில்குவனாற்
றாக்குமிந்தச் சகமயக்கந் தோன்றுதோன்ற வருமொருகால்.

தோற்றமென்னு மிம்மயக்கந் துஞ்சாதென்னுஞ் சிற்பரத்து
ளாற்றவிருந்து பிறந்திறக்கும்பினுட்சே ரலைகளைப்போற்
சாற்றுதிசை வெற்பாதித்தன் சசிமீன்மேருத் தானங்கள்
வேற்றுவகையாஞ் சிருட்டிதொறு மேலோயிவையுங் கண்டனனால்.

(ப - ரை.) புத்திவழியே = மதியின் நெறியே, மறையேறிக்குறையும் = வேதம் அதிகநூனமாம், புவிச்செய்கையுமாங்கே = உலகவழக்கும் அவ்வாறே, சித்திரங்களாம் = வைசித்திரங்களேயாம், இதுபோல் = இஃதொக்க, புராணத்திரள்பாடம் பலவாய் = புராணக்கூட்டம் பாடம் நானாவாய், அத்தமொன்றும் = பொருள் ஏகமாம், உகந்தோறும் = யுகந்தோறும், அமலராமாயணப்பெயராய் = நின்மல இராமாயணப்பெயர் வாய்ந்து, மெத்து புதுமையால் = பொருந்திய அற்புதத்தால், இலக்கஞ்சுலோகத்தறிவுநூல் விளம்பும் = ஒரு நூறாயிரஞ்சுலோகம் ஆசஞானநூல் பிரதிபாதிக்கப்பெறும்.

ஞானராமாயணமிதனை = ஞான இராமாயணமாகிய இதனை, நல்வான்மீகி நவின்றது போல் = நல்லவான்மீகிமுனிவர் கூறியதுபோலவே, ஆனபிறரும் = பின்னுண்டாகிய மற்றையரும், பன்னிருகால் = பன்னிரண்டுமுறை, அமைத்தார் = உண்டாக்கினர், பல்கால் அழிதலினால் = அநேகமுறை கெட்டுப்போதலினால், ஈனமில்லாவிதற்கிணையாய் = குறைவில்லாத இதுதனக்கொப்பாக, இரண்டாவது பாரதமதனை = துவிதீயமாகிய மகாபாரதந் தன்னை, மாண்வியாதன்செய்ததுமுன் மறைய மற்றோர்களு முரைத்தார் = யாவரும்புகழும் வியாசமுனிவர் செய்ததுபூர்வம் மறைந்துபோக அன்னியர்களும் கூறினர்கள்.

அரக்கர்மாளப் பதினொன்றுமவதாரத்து = அரக்கர்களியாவருந் தொலைய ஏகாதச அவதாரமாக, இராமனென்ன = ஸ்ரீ இராமரென்று, புரக்குநெடுமால் = சகலத்தையுங் காப்பாற்றும் நீண்ட விஷ்ணுவானவர், இக்காலம் புவியிற்றோன்றும் = இப்போது பூமண்டலத்தில் அவதரிக்கும், வசுதேவன் பரக்குமனையில் = வசுதேவருடைய சகலசம்பத்துக்களும் விரிந்த அரண்மனையில், பதினாறுமடங்கிக்கால்ம் = இப்போது பதினாறுவதுமுறை, பயில்குவன் = அவதரிப்பர், துரக்குமிந்தச் சகமயக்கம் தோன்றா தோன்றவரு மொருகால் = யாவரையு மஞ்சச்செய்யும் இவ்வுலகமயக்கம் உண்மையாகப்புலப்பாடே யற்றதாமாயினும் ஒவ்வொருபோது புலப்படவும் செய்யும்.

தோற்றமென்னு மிம்மயக்கம் = பிரதீதியாகாநின்ற இந்தமயலானது துஞ்சாதென்னுஞ் சிற்பரத்துள் = ஓயாதெப்போதும் சித்துவத்துவுள், ஆற்றவிருந்து பிறந்திறக்கும் = சம்ஸ்காரரூபமாயிருந்து ஜனித்து மரிக்கும், அப்பினுட் சேரலைகளைப்போல் = நீரிற் சேர்ந்ததரங்கங்களைப்போல, சாற்றுதிசைவெற்பாதித்தன் சசிமீன்மேருத்தானங்கள் = சொல்லாநின்ற திக்குகள் பர்வதங்கள் ஆதித்தியர்கள் சந்திரன் நக்ஷத்திரம் சுமேருமுதலிய ஸ்தானங்கள், வேற்றுவகையாம் = மாறுபாடுற்ற பிரகாரமாம், சிருட்டிதொறும் ஒவ்வொரு சிருஷ்டியிலும், மேலோய் = உத்தமோத்தம மகரிஷியே! இவையுங் கண்டனன் = இவ்வியாவற்றையும் பார்த்தேன்; ஆல்கள் அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) ஹே அநகரே! யாவும் ஒருபொருளை யுடையனவாய், துவாபராந்தந்தோறும் உண்டாக்குபவரின் வேற்றுமையானே, வெகுபாடமுடையனவாய், யுகந்தோறும் விரிந்தனவாய்ப் புராணங்கள் பிரவிர்த்தித்தன உணர்வேன். வேதாதிகளையுணர்ந்த ஸ்ரீ வியாசவான்மீகியாதி முனிவரர்களானே இனிதாக்கப்பெற்ற மகாபாரத இராமாயணதி

யிதிகாசங்கள் மீளமீளவும் யுகந்தோறும் யுகந்தோறும், அவையவையேயாகவும் அன்னியங்
களேயாகவும் வழங்கக்கண்டுளேன்; இலக்கம் கிரந்தப்பிரமாணத்ததாய் மகாச்சரியமாய்
ஞானசாஸ்திரமாய், ஸ்ரீ பிரஹ்மாவினலே வசிஷ்ட விசுவாமித்திராதி முனிவர்கட்குபதேசிக்
கப்பெற்றதாய் மகாராமாயணமென்னும் இதிகாசம் ஒன்றயல் இருந்ததையுணர்வேன். இவ்
வசிஷ்டராம சம்வாதரூபம்ஆகிய கிரந்தம் ஸ்ரீ வான்மீகிபகவானகிய ஜீவன்முக்தரானேயும்
அவரைப்போன் முன்கற்பத்துள்ள அன்னியரானேயும், முன்னரியற்றப்பெற்றதேயாகி, விவ
கரிப்பவர் தம்பரம்பரை யுச்சேதத்தானே உச்சேதமாய் மறைபட்டு மறைபட்டுவந்தது பன்
னிரண்டுமுறையாக வறிவேன். இதற்கொப்பாக இரண்டாவதாய மகாபாரதமென்னும்
பெயர்பெற்ற மகா இதிகாசமானது முன்னுள்ள ஸ்ரீ வியாசரானேயாக்கப்பெற்றது மறைந்து
போக, உலகில் அன்னிய ஸ்ரீ வியாசரெனப் பெயரிய ஜீவன்முக்தரானே அவராற்போன்றே
யாக்கப்பெற்றதாய் நிலவியது இது ஏழாவது முறையாம், ஸ்ரீ வான்மீகி வியாசாதியரும்
அநேகரேயாவர் என்றறிக. இராக்ஷதர் யாவரையும் ஒருங்கே ஒழிக்கவேண்டிச் சமீபித்து
வரும் திரேதாயுகத்தில், ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் ஸ்ரீ இராமராயுலகில் அவதரித்தருளப்
போகின்றார், இவ்வாருய ஸ்ரீ இராம அவதாரங்கள் பதினென்றறிவேன்; ஸ்ரீ மகாவிஷ்ணு
வானவர் நாரசிங்கத்திருமேனியால் ஹிரண்யகசிபுவை, வாரணத்தைமிருகேந்திரன்போலக்
கொன்றது இதுமூன்ருவது முறையாம்; புவிபாரநிவிருத்தியின்பொருட்டு ஸ்ரீநிவாசரானவர்
ஸ்ரீ மத்வசுதேவர் அரண்மனையில் இச்சதுர்யுக அந்தர்க்கதத்துவாபராந்தத்தில், ஹே முனீ
சுரரே! பதினருவது திருவவதாரம் செய்தருளுவார். வெளியிலிது உண்டாகின்றது எனப்
பிராந்தி மாத்திரமேயென்னுங் கருத்தாலுரைத்தல்:—உலகமயமான பிராந்தியாமிது ஒரு
காலத்திலும் இல்லவேயில்லை, ஏதோ ஒருகாலத்தில் நீர்ப்புற்புதம்போல் நிகழ்தலுமாகும்;
அறியாமையாற் றேற்றுமென்றபடி. இவ்வநித்தியமாயதிருசியப் பிராந்தியானது சம்வித்
தாத்மாவின்கண்ணே யுள்ளேயிருப்பதாம், நீரின்கண்ணே அலையும் அலையேபோல விரைவி
லுண்டாம் ஒழியும்; எத்தனையோ மித்திரர்களும் உறவினர்களும் மாறிமாறிப்போனர்கள்
எத்தனையோ இடங்களும் வாசஸ்தானமாய் இருந்தொழிந்தன, ஒரேமாதிரியாக அநேகம்
திக்குமுதலியவை வந்துகொண்டே யிருக்கின்றன, இவ்வண்ணம் திக்குப்பூதரங்களின் ஐக்
கியப்பிரத்தியபிஞ்ஞையும்புகுவதின் ஒப்பாலேயாம், ஈண்டு உத்தரதிசையான இது முன்
னுள்ளதல்ல இந்தப்பூதரமும் முன்னுள்ளதல்ல, முன்னுத்தரதிசை அன்னியமாகவே யிருந்
தது இது அன்னியமேயாயிருக்கின்றது, இங்ஙனம் பூதரமும் அன்னியமேயாம், ஆயின் அவ்
வாறே தாங்களும் கற்பந்தோறும் அன்னியசமான சந்நிவேசந்தான் என் ஆகலாகாதெனின்?
யான் ஒருதேகசம்ஸ்தானத்தினலேயே பிரஹ்மாவின் நிசாகமத்தைக் கழித்துள்ளேன், அஃ
தெங்ஙனமெனின், கற்பாந்தத்தில் முன்மொழிந்த தாரணைவாயிலாகத் திடப்படுத்தப்
பெற்ற நிருவிகற்பசமாதியினது முடிவில், மீண்டுமுண்டாய இச்சர்க்கத்தைப்பார்த்து அம்
மேருவேயிது அவ்விருக்ஷமேயிது எனப்பிரத்தியபிஞ்ஞையாக்கப்பெற்ற தத்துவத்திலேயே,
இச்சருக்கத்தை யறிகின்றேனுதலின் யானன்னியன் ஆவனேலாயின் அஃதாந்தன்மையை
யறிவதாயதொடர்ச்சியுணர்வே யுண்டாகமாட்டாதென்பது கருத்தாம்; இவ்வண்ணம் பூர்வ
சம்ஸ்தானத்தினும் மாறுகச்சம்ஸ்தானத்தன்மைக் கிரகணத்தானும் அதனைக்காணும் எனக்கு
நாசமில்லையென்னுங் கருத்தைக் கருவில்வாய்ந்த வடக்குத்திசைதான்வந்தது அயலிது என்
னுங்கூற்றைப் பொருந்தியுரைத்தல்:—திசையென்பதாதி. கிழக்குமுதலியதிசைகள், அருக்க
சோமாதிகளானும், நக்ஷத்திரங்களின் உதயஅஸ்தமயாதி நியதசஞ்சாரத்தானும், நியதவுத்தர
திக்கிலிருக்கும் மேருவாதிஸ்தானமுடையனவாகப் பிரசித்தங்களாம்; சர்க்காந்தரங்களிலோ

அந்தத்திசைகள் அம்மேருவின்கண்ணேயே பிரகாராந்தரமாக நிலைபெற்றவழி, சித்திரபடத்தெழுதிய மேருவாதியதினதிசைகள் அதின்மாறுபட்டனபோலச் சம்ஸ்தானமானது மாறுபட்ட ஸ்திதியையடையும்; இவ்வண்ணம் திசைகட்கு அநியதஸ்திதியினாலே மித்தியத்தன்மையுறவே, அதனனுசாரியாய நியதாவயவசந்நிவேசத்தோடுகூடிய சர்வசகத்திற்கும், அநிர்வசநீயதாவடிவமித்தியாத்வம் தோன்றுகின்றது, இவ்வுலகைச் சத்தன்றென்றும் அசத்தன்றென்றும் எண்ணுகின்றேன், கேவலம் மதிகளைமயக்கிக்கொண்டுமாத்திரமிருக்கின்றது.

(ச.) உகந்தோறும் புருடபுத்திகளினது ஏற்றத்தினாலும், குறைவினாலும், மறைசெய்கை பாடம் முதலனஏறிக்குறையும், என்பதாம். சம்பிரதாய அபாவத்தானே, யுகாந்தத்தில் நிவிருத்தங்களாம், யுகாபேக்ஷையால் பாரதாதிகளும், புருஷபுத்திவைசித்திரியத்தானே, சமான அருத்தங்களேயாய் வெகுபாடங்கள் உடையனவாய்ப் புராணங்கள் மீளவும் பிரவிர்த்திக்கும், புதுமையால் = மகாச்சரியமாயிருத்தலால், அறிவுநூல் = மோக்ஷோபாய நிரூபணபரமாதலின், அமலராமாயணம் = இராவணவதைநிமித்தமாய்ப் பிரசித்தமான இராமாயணத்தினும் பின்னம் இலக்கஞ்சுலோகத்து இதிகாசம் விளங்கும். அன்னியத்தென்பது ஞானசாஸ்திராபேக்ஷையால் நபும்சகக் குறிப்பாம். ஞானராமாயணமிதனை = பிரசித்தமான இந்தராமாயணத்தை, பிறரும் = அவனினும் அன்னியரான வான்மீகியென்னும் நாமமுள்ள சீவரும், பலகால் = யுகாந்தந்தோறும், அழிதலினால், பன்னிருகாலமைத்தார், முன் இராவணவதை நிமித்தமான ஞானசாஸ்திரரூபமாகிய ராமாயணத்தையு நவின்ற வான்மீகியே சம்பிரதாயத்தை வளர்த்தற்காகப் பரமேசுராஞ்ஞையின் மீட்டுமீட்டு மவதாரஞ் செய்வனன்றி அந்நியமான ஒரு சீவன் றபோமகிமையால் வான்மீகி பாவத்தையடைந்து ராமாயணசம்பிரதாயத்தைப் பிரவிர்த்தி செய்வனென்பது பொருள். இதற்கு = இந்த ராமாயணத்துக்கு, இணையாய், இலக்கஞ் சுலோகத்தினால் விளங்கும் பாரதமதனை = பாரதமென்னும் பூர்வகற்பத்திற்சென்ற வியாசரியற்றிய இரண்டாவது இதிகாசத்தை இதுவும் முன்போற் பொருள் கொள்ளத்தக்கது. தோன்றும் = இராமாவதாரத்திற்கு முன்பே ராமாயணம் பிரவிர்த்தித்திருத்தலிற் றோன்றுமென வருகாலங்கொளப்பட்டது. மனையில், அம்பரால், பூபாரநிவிர்த்திக்காக, பயில்குவன் = அவதாரஞ்செய்வன், இந்தச்சகமயக்கம் = இந்தச்சகத்துரூபமான பிராந்தி, ஒருகால் = கற்பாந்தத்தில் தோன்றா = இல்லாததேயாம், ஒருகால் = திதிகாலத்தில், தோன்றவரும் ஆதலின், ஜலபுற்புதம்போலிருப்பதென்பதாம். அநிஷ்டா = அநியதா, அதிவிசித்திரத்தன்மையான், துஞ்சாது = மீண்டுஞ் சநிப்பதாதலின் நாசரகிதமான, தோற்றமென்னு மிம்மயக்கம் = இத்திருசியப்பிராந்தி, சித் = சம்வித்தேயாம், ஆதலின், பரத்துன் = ஆன்மாவினுள், இருந்து = அப்பினுட் சேரலைகளைப்போற்பிறந்திறக்கும், முன்புசென்ற கற்பாந்தரத்தில், இவ்விடத்து உத்தரதிசையும் மேருவு மின்றும், வேறிடத்து உத்தரதிசையும், மேருவுமிருந்தது, சூரியாதிக்கிரகசஞ்சாரத்தினால் மேருவாதி மரியாதையும் பருவதத்தானத்தினாற் றிசைகளினதிருப்பும் வேற்றுவகையாம்; அம்மேருவாதியிருப்புவேற்றுவகையாயின் றிசைகளும்பிரகாராந்தரங்களாம் என்றதாயிற்று. திசைகள், ஆதித்தியாதி கிரகசஞ்சாரத்தையும், மேருவாதிசந்நிவேசத்தையும் அபேக்ஷித்துக் கற்பிதமாதலின் அவையன்னியபாவமுறின் றிசைகளுமன்னியபாவமாமென்பதுகருத்து.(69-70-71-72)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மாயிகவிக்ஷேபசக்தியானது வைபவமாமிது விரிந்து விளங்குவது உலகசம்பந்தமான பதார்த்தங்களில், திக்காலாக்கப்பெற்ற விவஸ்தை வித்தியாசம்போலக் காலத்தாலாக்கப்பெற்ற விவஸ்தை வித்தியாசமும் காணப்பெறுகின்றது, என்னுமிதனை விரித்துக்கொண்டு காட்டல்:—உகங்கள் என்பது.

உகங்கணுறு மொன்றுக்கொன் ருசாரங்க ளுடன்மயக்கு
மகஞ்செய் முனிவாவென்றனே மறுத்துமொன்றை நான்வினவிப்
புகன்றேன் விவகாரத்துட னிப்புவியிற் சரித்துநீகூற்றை
யகன்றதெங்ஙனென மீட்டுமதற்குப் புசுண்டனறை வுறுமே.

(ப - ரை.) உகங்கள் நாலும் = யுகங்கள் நான்கும், ஒன்றுக்கொன்று = பரஸ்பரம், ஆசாரங்களுடன் மயக்கும்=ஆசாரங்கள் விபரீதப்பட்டு மயக்கமுறும், மகஞ்செய்முனிவா= யஞ்ஞேசுவரா, என்றனே = என்றுபுகன்ற புசுண்டமுனிவரை, மறுத்தும் ஒன்றைநான் வினவி = மீண்டுமொன்றையான் உசாவி புகன்றேன் = கூறினேன், விவகாரத்துடன் இப் புவியிற்சரித்தும் = வியவகாரத்தோடுங்கூடி இந்தப்பிரபஞ்சத்திற் சஞ்சரித்தும், நீ கூற்றை யகன்றதெங்ஙனென = தாங்கள் யமனைமருவாதது எவ்வாறு என்று கேட்ப, மீட்டுமதற் குப் புசுண்டனறைவுறுமே = மறுபடியும் அதற்குப் புசுண்டமுனிவர் கூறத்தொடங்கினர். ஏ = நிருபேக்ஷையாய்க் கூறத்தொடங்கியதைக் காட்டற்பொருட்டு.

(ஸ்ரீ - வீர.) புத்திரன் பிதுருத்தன்மையையடைகின்றான், மித்திரன் சத்துருத்தன் மையையடைகின்றான், ஸ்திரீத்தன்மையை நூற்றுக்கணக்காயடைந்த புருடர்களையு மறி வேன், கலியிற் கிருதயுக ஆசாரங்களையும் கிருதத்திற் கலியுக ஆசாரங்களையுமறிவேன், திரே தையிலும் துவாபரத்திலும் கிருதயுக ஆசாரங்களையும் கலியுகநடக்கைகளையும் அறிவேன்; கலியுகஸ்திதி யெங்ஙனமிருக்குமென்னின், சுருக்கமாயுரைக்கின், வேதவேதார்த்தங்கள் யாவு மறைந்து தங்களிஷ்டப்படி ஏதாவதொரு நியமனஞ்செய்துகொண்டு திரிவார்கள்; கூறிய யாவற்றையும் சுருக்கியுரைக்கின்:—விசித்ரசம்ஸ்தான விசேஷதேசங்களையும்: விசித்ரகார்யா குலபூதகோசங்களையும், விசித்ரவிந்யாசவிலாசவேஷங்களையும், சிந்திப்பலியான் பிரஹ்ம தினத்தசேஷங்களையும்; யான் பிரஹ்மதினங்களாகிய கற்பங்களில், விசித்திரஸ்தான விசே டங்களோடுகூடிய தேசங்களையுடைய விசித்திரகாரியாகுலபூதங்களின் கோசபூதங்களாய அசேஷசகல சர்க்கங்களையு மறிவேன் என்பதாம். பின்னந்த வாயசசிரேஷ்டமூர்த்தியானது ஜிஞ்ஞாசையின்பொருட்டாக இனிக் கூறப்பெறுவது என்றுற் கேட்கப்பெற்றது; மூ:— ப்ருச்சென்பதற்குக் கவுணகருமத்தில் த்விதீயாயது. கற்பவிருக்ஷலதாக்கிரஸ்தலத்தில் மீண்டுங் கேட்டதுயாதெனின், ஹே மகாபாகுவே கூறக்கேட்குதி! ஜகத்தாகியகோசத்தில் விவகரிப்பவர்களாயிருந்தும் சஞ்சரிப்பவர்களாயிருந்தும், எத்தகை தோஷத்தியாககுணசம் பாதனவகையால், ஹேவிககராஜேந்திரரே! தங்களுடைய திருமேனியை மிருத்யுபாதிக்க வில்லை? அதனை யுரைக்கவேண்டும். (73)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ புசுண்டமுனிவர் யமனணுகாதவிதத்தைப் பல்லாற்றானும் பகர்தல்:—செறி, அறுதி, இராக, கடினவென்பன.

செறிந்தமேலோ ரேவியது செய்வ தறியார்க் குறுபயனே
தறிந்துமெனை நீ வினவியதிங் கறைவன்கேட்டி வாதனைநூற்
பிறிந்திடாத குற்றங்கண் முத்தமென்னும் பெருமாலை
யெறிந்து பூணுநிருக்கின்ற விதயத்தாரை யமனணுகான்.

அறுதிமரத்துக் கீரரிவா ளாக்கைவல்லிக் கெரிபுழுவா
மறுகுகின்ற மனத்துன்ப மருவாதவரை யமனணுகா
னிறுதியுடலா மரத்தினைச்சூழ்ந் திரங்குமனத்திற் றலைவைத்து
முறுகுமாசைப் பாம்படரா முதன்மையோரை யமனணுகான்.

இராகவெகுளி விடம்பெருக் கிதயப்புற்றி லோபமெனு
மராவந்தணுகி விழுங்காத வறிஞர்தம்மை யமனணுகான்
விராகவிவேக நீர்சுவறி மெய்யாங்கடலில் வடவனலாய்ப்
பராமல் வெகுளிவேரறுத்த பண்பினோரை யமனணுகான்.

கடினமான வெந்திரத்திற் கலந்ததிலம்பொன் றுவதென்னக்
கொடியமதனாற் றேய்தலுருக் கொள்கையோரை யமனணுகான்
முடிவிலாத நின்மலமா முத்திப்பதத்தே சித்தத்தி
னெடியதுயர்தீர்ந் திளைப்பாறு நிலைபெற்றோரை யமனணுகான்.

(ப - ரை.) செறிந்த மேலோர் வலியது = மைத்திரியாதிகளும் பிரஹ்மவித்தையும் பொருந்திய பெரியோர் விதித்தது, செய்வதறியார்க்கு = இயற்றவுணராதவர்க்கு, உறுபய னேது = கிடைக்கும்பலமியாது, அறிந்தும் எனைநீவினவியது = தெரிந்தும் அடியேனைத் தாங்கள் கேட்டது, இங்கறைவன்=இவண் கூறுவேன், கேட்டி=கேட்பீர்களாக, வாதனை நூல் = வாசனையாகிய தந்துவின்கண்ணே, பிறிந்திடாத = கோர்க்கப்பெற்ற, குற்றங்கள் முத்தமென்னும்=தோஷங்களாகிய தாளங்கள்வாய்ந்த, ஆரமென்று சொல்லப்பட்ட, பெரு மாலை = பெரியமாலையை, எறிந்து = தூரத்தில் தள்ளி, பூணுதிருக்கின்ற = தரியாதிருக் கின்ற, இதயத்தாரை = இருதயமுடையவரை, யமனணுகான் = யமன்வந்தடையான்.

அறுதிமரத்துக்கீரரிவாள் = ஆக மரத்தையறுத்துக்கெடுப்பதாய கூர்மைபொருந்திய வாளும், ஆக்கைவல்லிக்கெரிபுழுவாம் = தேகக்கொடியைக்கெடுக்கும் கீடமும், ஆகிய, மறுகுகின்ற மனத்துன்பம் = இடரையே விளைக்கும் உள்ளத்துயரம், மருவாதவரை யம னணுகான் = பொருந்தாதவரைக் காலன்வந்தடையான்; இறுதியுடலாமரத்தினைச்சூழ்ந் திரங்கு மனத்திற்றலைவைத்து = நைசுவரமாகிய தேகதருவைப்பற்றி, சிந்தாகுலங்களில் வைத்தசிரங்களாம் படங்களையுடையவாய, முறுகும் = சீறும், ஆசைப்பாம்படரா=அவாக்க ளாகிய சர்ப்பங்கள் நெருங்கா, முதன்மையோரை யமனணுகான் = பெரியவரைக் காலன் வந்தடையான்.

இராகவெகுளி விடம்பெருக = விருப்புவெறுப்பாம் விடம்பூரித்து, இதயப்புற்றில் லோபமெனும் = இருதயமாகிய வன்மீகத்தின்கண் உலோபம் என்றுசொல்லப்பட்ட, அரா வந்தணுகி=வியாலம்வந்துசேர்ந்து, விழுங்காத வறிஞர்தம்மை யமனணுகான்=உட்கொள் ளாத வுணர்வுடையவரைக் காலன்வந்தடையான்; விராகவிவேகநீர்சுவறி மெய்யாங்கடலில் = கலந்த விவேகஜலம்வற்றிடச்சரீரமாம் சமுத்திரத்தில், வடவனலாய் = வாடவாக்கினியாய், பராமல் வெகுளிவேரறுத்த = பொங்குங்கோபத்தின் வேரைக் கெல்லியெறிந்த, பண்பி னோரை = தன்மையோரை, யமனணுகான் = காலன்வந்தடையான்.

கடினமான எந்திரத்தில் = கொடூரமான ஆலையின்கண், கலந்ததிலம்பொன்றுவ தென்ன = உற்றஎள் அரைபடுவதுபோல, கொடியமதனால் = துன்பப்படுத்தும் மன்மத னால், தேய்தலுருக்கொள்கையோரை = சிதைதலடையாத்தன்மையோரை, யமனணுகான் காலன்வந்தடையான்; முடிவிலாத நின்மலமா முத்திப்பதத்தே = அந்தமில்லாத அமலமான மோக்ஷபதத்தில், சித்தத்தின் நெடிய துயர்தீர்ந்திளைப்பாறும் = மனத்தின் பெருந்துன்பங் களியாவும்போய் விசிராந்தியுறும், நிலைபெற்றோரை யமனணுகான் = நிலைமையை யடைந்த வரை யமனணுகித் துன்புறுத்தான்.

(ஸ்ரீ - வீர.) ஹேமுனிவர்பெருமானே நீர் உணர்ந்திருந்துங்கூட அறியும் வேட்கையுற்றவர்போல, ஹேபிரஹ்மபுத்திரரே சர்வஞ்ஞரே! என்னை வினவுகின்றீர், பிரபுக்கள் நித்தியம் பிருத்தியனை ஏதாவது உளரும்படி செய்கின்றார்களன்றோ, பிருத்தியவாக்கிய படுத்தன்மையை வினவாயிலாக வெளிப்படுத்திவிளக்குகின்றார்கள் என்பதாம்; அங்ஙனமாயினும் தாங்கள்யாது அடியேனை வினவினீர்களோ அதை யினிது விரித்துக்கூறுகின்றேன் சற்புருடர்களுடைய ஆஞ்ஞாசரணமே முக்கிய ஆராதனமாமென்பர் பெரியோர், ஆண்டுச் சர்வதோஷ ஆகாரவாசனையின் நாசமே முக்கியமாயமிருத்தியுவைத் தாண்டுமுபாயமாம் எனல்:- வாதனையென்பதாதி. தோடங்களாகிய வெண்டரளங்கள் கோர்க்கப்பெற்ற வாசனைத்தந்து சந்ததியானது இருதயத்தின்கண் ணெவனுக்குப்பிணிக்கப்படவில்லையோ அவனை மிருத்தியு கொல்லமாட்டாது. ஆராதியாபரணங்களை விட்டெறிந்து வாளாவிருப்பவனைச் சோரர் கொல்லமாட்டார் என்பதுபோலுமெனப்பொருளா லுணரப்பெறுகின்றது. நிச்சுவாசவடிவ தேகவிருக்ஷச்சேதனங்களாகிய வாள்களையுண்டாக்குவனவும், எல்லாத்தேக்கலதைகள் என்று சொல்லப்படும் தேகவிருக்ஷ சாகாபூதஹஸ்தபாதாதிகளின் காஷ்டகீடபூதங்களா யிருப்பனவும் ஆகிய மனக்கவலைகள் எம்மகானைப் பேதிக்கமாட்டாவோ அவனை மிருத்தியு கொல்லமாட்டாது. சரீரதருவின் பொந்துவிலிருக்கும் சர்ப்பக்கூட்டவடிவங்களாய், அதனுனே சிந்தாவடிவச் சிரத்திற்பொருந்திய படங்களையுடையனவாய ஆசைகள், தமது விடாக்கினியினாலே, உள்ளே எம்மகானைத் தகிக்கமாட்டாவோ அவனை மிருத்தியு கொல்லமாட்டாது. இராகத்துவேஷவிடம் வெம்பிநிறைந்து, (தன்மனப்பில) மந்திரமுற்றதாய் நெளியும் லோபப்பெருமரவு எவனைக் கடிக்கவில்லையோ அவனை யமன் அணுகான்; சரீர அம்போதியின் வடவாக்கினிபூதமாய் அதனுனே விவேகநீர் முழுதையும் எஞ்சுதலின்றிக் குடித்ததாய் உள்ள சினமானது எம்மகானை மிகத்தகிக்கவில்லையோ அம்மகானிடத்தில் இயமனணுகான், கருமயந்திரம் கர்த்தாப்போல, திலத்தினது இராசியைக் கடினமான யந்திரமானது உக்கிரமாக ஆகுலமிக அரைப்பதேபோல மன்மதன் எத்தீரனை யவதிப்படுத்துவதில்லையோ அவனை யமனணுகான்; பிரஹ்மான்மவிசிராந்தியே ஆத்தியந்திகமிருத்தியுஜய வுபாயமென்னும் கருத்தாலுரைத்தல்:— முடிவிலாதவென்பதாதி. ஒரேநிர்மலபரமபாவனபதத்தில் உள்ள இளைப்பாறுதல் உறப்பெற்றதெவனல் அவனை யமனணுகான்; வபுவடிவப்புஷ்பிதவனகண்டத்தில் எங்கும் வீழ்ந்தவானரம்போல ஊர்ஜிதமாய்ச் சஞ்சலமாயமனம் எவனுக்கில்லையோ அவனைக்காலனணுகான்.

(ச.) வாசனை = வாசனைவடிவமான, நூற்பிறிந்திடாத, குற்றங்கள் = இராகத்துவேடாதிகளாகின்ற, முத்தமாலை பூணுதிருக்கின்றவிதயத்தோரை யமனணுகான் = கொல்லுவதற்கிச்சியான், அறிஞர்க்காஞ்ஞாபித அர்த்த அநுட்டானமே ஆராதனமென்பர். அறுதிமாத்துக்கு = புத்திரமித்திராதிவிடய விசுவாசமென்னும் மாத்துக்கு, ஈரிவாள் = விதாரணசாதனமான கிரகசபத்திரமும், ஆக்கைவல்லிக்கு = சகலதேகமென்னு மிலதைக்கு எரிபுழுவாம் = எழுதுங்கிருமியாம், இவ்விடத்து எழுதுவதிற் குணுட்சாமெனப் பிரசித்தமாம்; சரீரங்களென்னும் தருரூபங்களுக்குச் சர்ப்பசமூகம்போற் சந்தாபவேதுக்கள் ஆசைகளேயாம்; ஆசைவடிவானசர்ப்பங்களுக்குச் சிந்தைகளே சிரோபாகத்திருக்கும் படங்களாமெனப் பொருள்கொள்க. லோபரூபசர்ப்பம். தாருவாதிமயத்தினுற் கடினமான, முத்திப்பதத்தே = பிரமத்தில், இளைப்பாறும் = தன்மயமாகும். எட்களினின்றும் எண்ணெய் எடுக்கும் செக்கு கருத்தா, உக்ரம் = உன்னதத்தன்மையாற்பீஷணம், (74-75-76-77).

(ஸ்ரீ-வீர - அ-கை.) தோடங்களையுபசங்கரித்து அதனை ஜயிக்கும்ஹேதுவான குணங்களைக் கூறும்பொருட்டுப் பிரஹ்ம சமாதானமே முக்கியகுணம் என்னுங் கருத்தாலதனைப் புகழுதல்:—ஓதுமிவையென்பது.

(ச - அ - கை.) யமன் எவனை வாதைசெய்யான் எனக் கேட்கின், எவன்து கருத்திற் றோடங்களின்றே அவனைவாதைசெய்யானெனக்கூறிக் கருத்திற்றோட நிவிர்த்தியெப்படி வருமெனச் சங்கைவர இப்போததனிவிர்த்தி யுபாயங்கூறல்:—ஓதுமிவை யென்பது.

ஓதுமிவை யாங்குற்றங்க ளுழலும்பிறவிக் காரணங்கள்
பேதமின்றி யொன்றான பெரியமனத்தைத் துயர்செய்யா
வாதிவியாதி களிற்றோன்றி யகலாமயக்காற் சலிக்குமிடர்
தீதில்பேத மறவொன்றுஞ் சித்தத்தருகுஞ் செல்லாதே.

(ப - ரை.) ஓதுமிவையாங்குற்றங்கள் = புகன்ற இத்தோடங்கள், உழலும் பிறவிக் காரணங்கள் = அவதிப்படும் ஜன்னஹேதுக்களாம்; பேதமின்றி யொன்றான பெரிய மனத்தை = வேற்றுமைதீர்ந்து ஏகமுகப்பட்ட உயர்ந்தசித்தத்தை, துயர்செய்யா = துன்பப்படுத்தா, ஆதிவியாதிகளிற்றோன்றி = உள்ளக்காயநோய்களினுதயமாய், அகலாமயக்காற் சலிக்குமிடர் = கெடாதபிரமங்களாற் சலிதமாயதுக்கங்கள், தீதில்பேதமறவொன்றுஞ் சித்தத்தருகுஞ் செல்லாதே = குற்றமற்ற வேற்றுமையில்லாத ஏகமனத்தோரத்திலும் அணுகவேமாட்டாதாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே பிரஹ்மசொரூபரே! இம்மகாதோடங்கள் சம்சாரவியாதியேதுக்களாம்; சமாகிதமாய ஒன்றாயசித்தத்தை யொருசிறிதும் தாக்கமாட்டாவாம்; ஆதிவியாதிகளால் எழுந்தனவாய், மகாப்பிரமங்களாற் சலிப்பனவாய், உள்ளதுக்கங்கள் சமாகிதமான ஏகசித்தத்தை யிடர்ப்படுத்தமாட்டாவாம்.

(ச.) ஒன்றான = ஏகதத்துவத்திற் சமாதியுற்ற, மனத்தை, அகலாமயக்கால் = புத்திரமித்திரகளத்திராதிவிஷயவியாமோகங்களால், சலிக்கும் = பிரவிர்த்திக்கின்ற, இடர் = துக்கங்கள். (78)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அத்தமும் உதயமும் ஆகிடாவுள்ளம், நினைப்பையும் மறப்பையும் நேர்ந்திடாவுள்ளம், துயிலையும் நனவையும் தொடர்ந்திடாவுள்ளம், ஒருமையையுற்றதாய் ஒன்றாய் நின்றேயொன்றினு மசங்காதெனல்:—இதையமென்பது.

இதைய விண்ணையிருளாக்கி யிச்சைகோபத் தெழுமெண்ணஞ்
சிதைவில் பேதமறவொன்றுஞ் சித்தத்தருகுஞ் செல்லாதாம்
றுதைதீப் பொருள்தீச் சொற்கடுராரம் பங்கடுக்குணங்க
ளுதைய மான சமமேவி யொன்றுமனதை யுட்புகுதா.

(ப - ரை.) இதையவிண்ணை யிருளாக்கி = இருதயாகாசத்தை யந்தகாரமாக்கி, இச்சைகோபத்தெழுமெண்ணம் = ஆசையினும் சினத்தினும் உண்டாம் நினைவுகள், சிதைவில் பேதமறவொன்றும் சித்தத்தருகும் செல்லாது = கெடாது வேற்றுமையற்று ஒருமைப்பாடுள்ள சமீபத்தும் செல்லாவாம்; துதைதீப்பொருள்கள் = நெருங்கிய கெட்ட அருத்தங்கள், தீச்சொற்கள் = தீயமொழிகள், துராரம்பங்கள் = கெட்டதொடக்கங்கள், தீக்குணங்கள் = கொடியகுணங்கள், உதையமான சமமேவியொன்றுமனதை யுட்புகுதா = தோன்றாகிய சமத்தையடைந்த ஏகமாம் உள்ளத்துள்ளே பிரவேசிக்கமாட்டாவாம். ஆதிதுக்க

(ஸ்ரீ - வீர.) மனமாங்ககனத்தை மங்கிருளாக்கினவாய், காமகோபவிகார ஜன்னியங்களாய், துயர்ப்படுத்துஞ் சிந்தைகள், அம்மகானுடைய சமாகிதசித்தத்தைப் பெரிது மிம்சை செய்யமாட்டாவாம்; சம்பாதிக்கத்தக்க கெட்ட தனதிகள், கெட்ட ஆரம்பங்கள் என்னும் கிருஷிகிருகதனதிகள், இராகத்துவேஷாதிதுர்க்குணங்கள், கெட்ட இரகசியப்பிரகாசன வார்த்தைகள், கெட்டநடத்தைகளாகிய நீதிகள், சமாகிதசித்தமுடையவனைத் துட்டபலத்தினலே பரிதாபஞ்செய்யமாட்டாவாம்.

(ச.) தீப்பொருள்கள் = சாம்சாரிக காரியசித்தியேதுக்களான சம்பத்துக்கள், துராரம்பங்கள் = அதன் நிமித்தமான முயற்சிகள், தீக்குணங்கள் = அதற்கநுகூலங்களான சௌரியாதிகள், தீச்சொற்கள் = தியாகபோகாதி மகாநிருத்தியையுடைய பாமரஜனங்களாற் சொல்லப்படும் வசனங்கள், ஆகிய இவைகள் முடிவில்விரசமாதலின் மிகுதுக்கமுள்ளவாம், அநித்தியம் என்பதாதியால், முன்னே வைராக்கியப்பிரகரணத்திற் சொல்லப்பட்டன. தீப்பொருள்கண் முதலானவை ஒன்றுமனத்தை யுட்புகுதா, மற்றென்னெனில், அவிச்சிப்தசித்தமுள்ள சம்சாரியையே வருத்தப்படுத்தும் என்பதாம். துஷ்கிரமங்கள் = பரசித்தாஞ்சனக்கிரமங்கள். (79)

(ஸ்ரீ - வீர. - அ - கை.) இவ்வாறு சொரூபத்தே நிறுத்தவேண்டுமெனல்:— மயக்கமென்பது.

(ச - அ - கை.) ஒன்றுனவெனப்பட்டது எவ்விடத்து ஒன்றுதலெனச் சங்கையுறின் சித்தசமாதிக்கு விஷயந் தெரிவிப்பவராய்க்கூறல்:—

மயக்கமுபாதி மலமின்றி வாய்மையாகி மேலிதமாய்த்
துயக்குந்தொழிறீர் பொருள்வசத்தே தொடாமனத்தைச் செயவேண்டும்
பயக்குநெடு சூனியநல்கி யசுத்தமாகும் பன்மைப்பே
யியக்கங் காணுப்பொருள் வசத்தேயெய்த மனத்தைச்செயவேண்டும்.

(ப - ரை.) மயக்கமுபாதி மலமின்றி = பிரமம் உபாதிவித்தையதன்று, வாய்மையாகி = சத்தியமாகி, மேலிதமாய் = உயர்ந்த இனிய இதமாய், துயக்குந்தொழில்தீர் = சஞ்சலத்தைத்தரும் கிரியையற்ற, பொருள்வசத்தே = வஸ்துவின்பரமாக, தொடா மனதைச் செய்யவேண்டும் = பொருந்தச்சித்தத்தைச் செய்யவேண்டும்; பயக்குநெடுஞ்சூனியநல்கி = உண்டாம்நீண்ட சூனியமுதவி, அசுத்தமாகும் பன்மைப்பேய் = மலின்மாகும் நானுப்பிசாசு, இயக்கங்காணுப் பொருள்வசத்தே = சரித்தலில்லாத வத்துவின்பரமாக, எய்தமனத்தைச் செயவேண்டும் = பொருந்தச்சித்தத்தைப் பண்ணவேண்டும்.

(ஸ்ரீ- வீர.) பிற்காலத்திய சுகத்தின்பொருட்டு இதமும், மெய்ம்மையும், அவித்யையில்லதும், மயலற்றதும், யோகாபில்ஷதிருஷ்டியானே அணுகாதகன்றதும், சுவாதீமலின்மை கூறுமுற்றதும், ஆகிய துயாதோ அதன்பரமாக மனதையாக்கவேண்டும்; அசுத்தத் துடன்கூடாததாய், சித்தத்திற்குப் புருஷார்த்தத்தன்மை யின்மையைக் கொடுப்பதாய பேததிருஷ்டிவடிவப் பிசாசினலே சௌக்கியமுறப்பெறாததும் ஆகிய வத்துயாதோ அதன்கண் மனத்தை யொருவழிப்படுத்தவேண்டும்.

(சு.) எப்பொருள், மேலிதமாய், உத்தரகாலத்திற் பந்தம்விடுபடுமேதுவாய், மயக்கமின்றி = அவித்தைநிவிர்த்தியாய், அதனுலே, உபாதிமலமின்றி அதனுலே தொழிறீர் = சம்சாரநிலையினின்று விடுபட்டதாய், அதனுலே வாய்மையாகி = அபாதிதமாமோ, மனத்தை, பொருள்வசத்தே, அத்தன்மையான பரப்பிரமநிஷ்டமாகச் செயவேண்டும், அங்ஙனமாயின்,

மனோநீதாட் மின்றும் அன்றெனிற்றேட களங்கத்தால் எமப்பயமாமென முற்கூறியது நிலயாம், பெய்க்குநெடுஞ்சூனியல்கி = வெகுகாலம் பயவேதுவும் விரோதவேதுவுமாய், அசுத்தமாகும் அப்பிராமாணியமான, பன்மைப்பேய், = பேதப்பிரமத்தால், இயக்கங்காணுப் பொருள், = பரிசிக்கப்படாத பொருள், ஏகமேயத்துவயம் பிரமமென்னுஞ் சுருதியினுலென்க. மனத்தை, அத்தன்மையான பிரஹ்மவசத்தே செயவேண்டும், பேதம் விரோதவேதுவென்பதை விரித்துரைத்தற்கே சுருதியாற்பேதபாவனையிற் பயங்கூறப்படுகின்றது. எப்போதுதான் எவன் இதனிடையிறையும் பேதஞ்செய்வனே பின்பு அவனுக்குப் பயமேயுண்டாமென்பதாம். (80)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆன்மானுசந்தானமே அனைத்திடருந் தீர்ப்பதாம், சாமானியமானவர் செய்யவொண்ணாததாம் எனல்:—தனையென்பது.

தனையுள் ளுணர்வானுடுகலே சகலவிடர்க்கும் போக்கிடமா
முனையொப்பார் கட்கெளிதென்னை யொப்பார்க்கரிதா முயர்முனிவா
வினைகட் கெல்லாமப்பாலா மேலாங்கோடி தனைமேவு
மினையபதஞ் சாமானியத்தே யெழும்புந்திய ரெங்ஙனம் பெறுவார்.

(ப - ரை.) தனையுள்ளுணர்வால் நாடுதலே = ஆன்மசொரூபத்தை ஆந்தரதிருஷ்டியினால் நோக்குதலே, சகல இடர்க்கும் போக்கிடமாம் = சர்வதுக்கங்களையும் அகற்றுஞ் சாதகமாம், உனையொப்பார்கட்கெளிது = தங்களைப்போன்றவர்கட்குச் சுலபமாம், என்னையொப்பார்க்கரிதாம் உயர்முனிவா = மேலாகிய முனிசிரேஷ்டரே! என்போன்றார்க்குத் துர்லபமாம். வினைகட்கெல்லாம் அப்பாலாம் = சர்வவினைகட்கும் அதீதமாம், மேலாங் கோடிதனைமேவும் இனையபதம் = பரமகோடியை அடைந்துள்ள இந்தப்பதந்தன்னை, சாமானியத்தேயெழும்புந்தியர் எங்ஙனம் பெறுவர் = சாமானியபரிணமத்தோடுகூடிய மதியுடையவர் எவ்வகையானே யடைவர்.

(ஸ்ரீ - வீர.) அதனின் அயலெதுவும் திரமும் சோபனமும் அமைந்ததாகாதாம், இவ்வுலகத்தில் ஒருசிறிதும் சோபனமும் திரமும் ஆகாதெனின், சோபனமும் திரமுந்தான் ஆவது யாது ஆம், எதன்கண்ணே விவேகிகட்குச் சித்தவிசிராந்தியானது உளதாமோ, எனின் கேட்பீர்களாக:—ஓரேதிருஷ்டியான்துளது அதுகேவலம் பரிசுத்தமாம், என்றுங் கெடாததாம், மயலற்றதாம், சர்வஞானங்களின் மத்தியில் எல்லா அங்கிசத்திலும் மேன்மையுற்றதாம், மிகவுமுயர்ந்ததாம், விஸ்தரிலேற்முடியாததாம்; அத்தகைய ஆன்மசிந்தையே = சாக்ஷாத்காரபரியந்தமாய ஆன்மவிசாரமே, சமஸ்ததுக்கங்களின் அந்தகாரிணியாம், அநாதிகாலந் தொடங்கிக் காமகருமவாசனைகலாபங்களால் வளர்ந்துகொண்டே வாராநின்ற கெட்டசொப்பனமயமாய சம்சாரமய்க்கத்தை யகற்றுவதாம். ஹே பகவன்! சர்வசங்கற்பவர்ஜிதயாய அச்சுவான்மசிந்தயானது, தங்களைப்போன்ற மகான்களால் எளிதாயடையத்தக்கதாம், என்போன்ற ஏழைகளாலோ அரிதினும் அடையத்தகாததேயாம்; தகாததேனென்னும் தோற்றத்தில் ஹேதுயாது கொலாமாலோவெனின்? உரைத்தல்:—வினைகட்கென்பதாதி. சமஸ்தவிகாரங்களும் இல்லாமல், உயர்ந்த கோடியையுற்று, இலகுமிப்பதத்தை எங்ஙனம் சாமானியமதியினர் = அவிசுத்தப்பிராகிருதபுத்தியினர், அடைவர்.

(ச.) தனையுள்ளுணர்வால் நாடுதலே = ஆன்மசிந்தையே, எனையொப்பார்க்கு என்பது மந்தபுத்தி யுடையேனுக்கும், முத்தர்க்கரிதென்பதையே கூறல்; —வினைகட்கெல்லாமப்பாலாம் = சகலகலனாதீதமான, சாமானியத்தே யெழும்புந்தியர் = மந்தபுத்தியர். (81)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆயின் அது தங்களுக்கு எங்ஙனஞ் சுலபம் ஆயது எனின் அதன் நேயப்புற்றூலென் னும் கருத்தால் பிராணசிந்தையை வருணிப்பார் பீடிகைபோடுகின்றார்:— ஞானவென்பது.

(ஸ்ரீ - அ - கை.) ஆன்மசிந்தையே அரிதாதலின் அதற்கொப்பான பிராணசிந்தை என்னு ல்நுசரிக்கப்பட்டதெனல்:—

ஞானநோக்குக் கொப்பனவாய் ஞானநோக்கி னன்புளதா
மானகுணங்கட் கிடையொன்றை யடைந்தே துன்ப மெலாமறுத்து
மானநல்வாழ் வினைவளர்த்து மாயாதிருக்குங் காரணமா
யீனமற்ற வுயிர்நோக்கமென் னுங் குணமுற்றன னென்றான்.

(ப- ரை.) ஞானநோக்குக் கொப்பனவாய் = ஞானதிருஷ்டிக்குச் சமானமானவாய் ஞானநோக்கின்நண்புளதாம் = ஞானதிருட்டியின் நேயமாயுளதாம், ஆனகுணங்கட்கிடையொன்றை = இவ்வாறான குணங்களின் மத்தியில் ஒன்றை, அடைந்தே துன்பமெலாமறுத்து = பற்றித்துயரமியாவற்றையும் சேதித்து, மானநல்வாழ்வினை வளர்த்து = புகழ்ந்திடுமாறு நல்வாழ்வை விருத்தியாக்கி, மாயாதிருக்குங்காரணமாய் = கெடாதிருக்கும் ஏதுவாய், ஈனமற்றவுயிர்நோக்கம் என்னுங் குணமுற்றனன் என்றான் = தாழ்வில்லாத பிராணதிருஷ்டியென்னும் குணத்தை யடைந்தனன் என்றார்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாமுனிவரே! ஆன்மசிந்தாவிலாசினியின் சகிகள் சிறிது சாமீபத்தியடைந்தவர்களாய் விஞ்ஞானசசிதனர்களாய்ப் பலர் உள்ளார், அந்நாஞவிதத்தினிர் தம்முள் ஒப்பற்ற வொருபிராணசிந்தை என்னுறப்பற்றப்பெற்றது; அதுசர்வதுக்கக்ஷயகரியாம், சர்வசௌபாக்கியவர்த்தனியாம், ஈண்டுஜீவிதத்திற்குக் காரணமுமாம்.

(ச.) ஞானநோக்குக் கொப்பனவாய் ஆன்மசிந்தைக்குச் சமானமாகவிருத்தலினாலே, ஆனகுணங்கட்கு = விவிதமான உபாசனாந்தரமாகிய தாரகங்களுக்கு அதினண்புளதாம், உயிர்நோக்கம் = பிராணசிந்தை. (82)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிராணசிந்தையைப்பற்றி வினவிய ஸ்ரீ வசிட்டபகவானுக்குப் பிராண அபானன்களின் நேர்மையை நன்குபகுத்து ஸ்ரீ புசண்டர் புகலல்:—ஓது தோற்ற, நன்றாமென்பன.

ஓதுமளவி லறிந்திருந்து முயிர்நோக்கென நீயுரைசெய்த
தேதுபக ரென்றலும் புசுண்டனிசைக்குநீ யிங்கெதிர்காணும்
பூதவுடலா மினநடுவே பொருந்துமிதய புண்டரிகச்
சீதமலரி னுள்ளிரண்டு செறியும்பிராண னபானனென.

தோற்றமுடைத்தாய் மேன்மையதாய்த் தூன்னும்பவன மிவ்விரண்டி
னாற்றலுடைய கதியினைப்பின் செல்வனயர் வன்றியிலென்று
மேற்றவிதயாம்பரத்திரவி மதியாவன விண்ணிடையுழல்வ
வாற்றமுடை னேகளேபரமா மெந்திரங்கொண் டுலாவுவன.

நன்றாமேல் கீழோடுவன நனவுகனவு சுழுத்திகளி
லொன்றாஞ் சமரூபத்தன முன்னுவைத்த பிராணபானன்கள்
சென்றிவற்றின் கதியென்றும் பின்செல்வேற்குச் சுழுத்தியிலே
நின்றவுடைய வாதனையோ ணிக்குவாதனைக ணீங்கினவால்.

(ப - ரை.) ஓதுமளவிலறிந்திருந்தும் = இவ்வாறு கூறியபோது தெரிந்திருந்தும், உயிர்நோக்கெனநீ உரைசெய்தது ஏதுபகர் = பிராணசிந்தையென்று தாங்கள் கூறியது யாது கூறவேண்டும், என்றலும் = என்று கேட்டலும், புசுண்டன் இசைக்கும் = அதற்குப் புசுண்டமுனிவர் கூறுவார், நீயிங்கெதிர்காணும் = நீங்கள் இவ்விடத்தில் எதிர்முகமாகப் பார்க்கும், பூதவுடலாமனைநடுவே = பூதசரீரமாம் கிருகத்தின்மத்தியில், பொருந்தும் = வாய்த்த, இதயபுண்டரிகச் சீதமலரினுள் = இருதயதாமரையாஞ் சீதளபுஷ்பத்தினுள், பிராணன் அபானன் என இரண்டுசெறியும் = பிராண அபானன்களாம் இருவாயுக்கள் பொருந்தும்.

தோற்றமுடைத்தாய் மேன்மையுதாய் = வெளியானவாய் உயர்ந்தனவாய், துன்னும் பவனமிவ்விரண்டின் = பொருந்திய காற்றுகளாம் இந்த இரண்டின், ஆற்றலுடையுகதியினை = சாமர்த்தியமுடையநடையினை, பின்செல்வன் = தொடர்ந்துநடப்பன், அயர்வன்றியில் = ஆலசியமில்லாமல், என்றும் = எப்போதும், ஏற்றவிதயாம்பரத்திரவிமதியாவன = உயர்வோடுகூடிய இருதய ஆகாசத்திற் சூரியனும் சந்திரனும் ஆகியிருப்பன, விண்ணிடையுழல்வ = ஆகாயத்தின்கண்ணே சரிப்பன, ஊற்றமுடனேகளேபரமாம் எந்திரங்கொண்டுலாவுவன = மிகத்திரமாக சரீரமாம் யந்திரங்கொண்டு நடப்பன.

நன்று மேல்கீழ் ஓடுவன = நன்மைமிக மேலும் கீழுமாய்ச் சென்றுகொண்டிருப்பன, நனவுகனவு சுழுத்திகளில் = சாக்கிரத்சொப்பன சுழுப்திகளில், ஒன்றுஞ்சமரூபத்தன = ஒரேபடித்தாய ஒப்பானவடிவன, முன்னுரைத்த பிராணபானன்கள் = பூர்வம் புகன்ற பிராண அபானவாயுக்கள், பின்றுதிவற்றின்கதியென்றும் பின்செல்வேற்கு = இவ்விரண்டினடையைப் பின்விடாமல் எப்போதும் தொடர்ந்துசெல்லுமெனக்கு, சுழுத்தியிலேநின்றானுடைய வாதனைபோல் நிகழ்வாதனைகள் நீங்கினவால் = துயிலைச்செறிந்தானுடைய வாசனையைப்போல இலங்காநின்றவாசனைகள் அகன்றனவால். ஆல் அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) இந்தப்பிரகாரமியம்பிய பக்ஷிராஜாவாகிய புசுண்டரைநோக்கி, மீண்டுமியான் தெரிந்திருந்தபோதினுமிதனைக்குறித்துக் கௌதுகத்தானே பரமசாந்தமாய்க் கேட்டேன்; எல்லாவையங்களையும் போக்கடிப்பவரே! அத்தியந்தம் சிரஞ்சீவியாயிருப்பவரே! ஹே நன்மைமிக்கவரே! பிராணசிந்தையென்றால் என்னென்பது எத்தகையது. யதார்த்தம் உரைக்கவேண்டும்; எனக் கென்றிடப் புசுண்டமுனிவர் கூறல்:—ஹே முனீசுவரே! தாங்கள் சர்வவேதாந்த வேத்தாவாயிருந்தும், சர்வசம்சயநாசகராயிருந்தும் வாயசமாகிய என்னைப் பரிகாசப்பொருட்டு இதனைக் கேட்டீர்கள்போலும்; ஆனால் கேளுங்கள் கூறுகின்றேன் பிராணசமாதானம், ஹே பகவன்! இம்மனோரமமாய தேககேகமுழுவதையும் பாருங்கள் வாதபித்தசுபவடிவமுப்பிரகாரமகத்தாகிய தூண்களினாலே தாங்கப்பெற்றதாகி நவத்துவாரங்களோடுகூடியிருக்கின்றது இது; இதன்கண் மேற்போக்கு கீழ்ப்போக்கு என்னும் சங்கேதங்களுடையனவாகிப் பிராண அபானன் என்னும் நாமங்களையுடையனவாகி இரண்டுவாயுக்களுண்டு, அவைமிகக் [கியாதிவாய்ந்தன மேலாயினவாம் வெளியாயினவாம்; இந்தப்பிரகாரம் உபோற்காதமாய யாவற்றையும்கூறித் தாமியற்றும் பிராணசிந்தையைக் காண்பித்தல்:—நித்தியம் சீதோஷ்ணவபுவுடையனவும், நித்தியம் அம்பரமார்க்கமுடையனவும், ஆகிய அவற்றை யெப்போதும் அநுசரித்து, நடைபெறுபவனாக யானிருக்கின்றேன்; அவற்றின் கதி யநுசரணமோ ஆத்தியாத்மிக பரிச்சேதத்தியாகத்தானே, ஆதிதைவிக சூத்திராத்மரூப அகண்டாத்மபாவதாரணையானே, பற்றியபாவதூஷித சர்வேந்திரியவிரதபரித்தியாகத்

தானே தன்மாத்திரவிரதாசரணமாம், வாக்காதியிந்திரியங்கட்கோ வசனுதித் தம்துவிடய
வியசனிதையே விரதமாம், அதுவும்பற்றிய பாவதூஷிதமெனச் சிரமவடிவ மிருத்தியுவானே
பக்னமாம், பிராணனுக்கோ முக்காசிகாதி ஸ்தானங்களிற் சஞ்சரணமே விரதமாம், அது
வும் விடயப்பற்றாற் றூடிதமாகாதெனச் சிரமவடிவத்தானே கெடுக்கப்படமாட்டாதெனப்
பிராணன் ஒன்றே விரதபங்கசூனியமாய், மிருத்தியுவானே விழுங்கப்பெறுவதில்லை, ஆக
வின் அதனுன்மத்தன்மைத்தாரண அதன் விரதமாத்திராசரணலக்ஷணத்த பிராணசிந்தனத்
தானே தமது மிருத்தியுவை வெற்றிகொண்ட தகைமையாம் என்பது கருத்து. இந்தப்
பிராணசிந்தையும் பிராணவிரத தாரணசகிதமாகப் பிருகதாரண்யகத்தில்:—இனி விரத
மீமாம்சையென்பதாதி, ஜய்தியென்பிதந்தமாயுள்ள முதலாவதத்தியாய 5 வது பிராஹ்மண
21-22-23 வது மந்திரங்களமைந்த கிரந்தத்தானே விஸ்தரிக்கப்பெற்றுளதாம், அதனி
னின்றே அவ்வித்தரம் அறிந்துகொள்ளத்தக்கது; ஆயினும் அதன் சுருங்கிய பொருளிது
வாம்:—இனி விரதமீமாம்சா உபாசனகரும விசாரணையாம்; இப்பிராணன்களின் எதனது
கருமம் விரதத்தன்மையானே தரிக்கத்தக்கது, என்பதன் ஆராய்ச்சிதொடங்கப்பெறும்,
ஆண்டுப் பிரஜாபதியானவர் பிரஜைகளைச் சிருஷ்டித்துக் கருமப்பொருட்டாவாய வாக்கு
முதலிய கரணங்களைச் சிருஷ்டித்தார் சிருஷ்டிக்கப்பெற்ற அவையின் ஒன்றற்கொன்று
பொறாமையை யடைந்தன, எங்ஙனமெனின், பேசுவேனேயான், தனது வியாபாரமாகிய
பேசுதலினின்றும் உபரதியடையாமலே யானிருக்கின்றேன் என்று வாக்குவிரதம் கொண்
டது, பிறவு மவ்வாறே தங்கள் வீரியத்தைக் காட்டின, காண்பேனியான் என்னவிழி,
கேட்பேனியானெனச் செவி இவ்வண்ணம் பிறகரணங்கள் தங்கள் கருமப்படியாய அக்கர
ணங்களை மாரதன் சிரமரூபியாகிக் கவர்ந்தனன். அக்கரணங்கள் தமது வியாபாரத்தில்
முயன்றனவெனினுஞ் சிரமரூபமாகத் தன்னைக்காட்டின; அவற்றைத் தடைப்படுத்தினன்
மிருத்தியு, தங்கருமங்களினின்றும் நழுவும்படி செய்தனன்; செய்யவே பேசுங்கருமத்திற் பிர
விருத்தித்தவாக்குச் சிரமரூபியாய மிருத்தியுவோடுங்கூடித் தன்கருமத்தினின்றும் நழுவி
யது அவ்வாறே விழியும் நழுவியது, செவியும் நழுவியது; இனி இம்முக்கியமாய பிராணனே
மிருத்தியுவை யடையவில்லை, சிரமரூபியாய இது இந்தமத்தியமப்பிராணனை யொன்றுஞ்
செய்யவில்லை, செய்தபோதினும் இளைப்பில்லாமலே தன்றொழிலின் முயன்றது, இதர அக்
கரணங்கள் அதனையறியத்துணிந்தன, இது நம்மனோருக்குள்ளே மிகச்சிறந்ததாம், போக்கு
வரத்துடையதாயினும் துயருறுவதில்லையாதலின், இதுகெடுவதாகவுங் காணேம், அந்தோ
இப்போது இப்பிராணனுடைய ரூபத்தையே யாமெல்லோரும் அடைவேமாக, பிராணனை
ஆன்மதன்மையானே யறிவேமாக, இவ்வண்ணம் நன்குதுணிந்து, அவையாவும் இதனது
ரூபத்தையே அடைவுற்றன அதாவது பிராணரூபத்தையே ஆன்மதன்மையானே அடை
வுற்றன வென்பதாம், பிராணவிரதத்தையேகொண்டன; நம் விரதங்கள் மிருத்தியுவை வெல்லக்
கற்பொருட்டுப் போதுமானவை யாகாவாம் என்பதாக: பிராணனுடைய ரூபத்தானே இதர
கரணங்கள் ரூபமுடையனவாம் தனது சலன்வடிவத்தானும் பிரகாசவடிவத்தானும்; எதனால்
அவ்வகையனவாமோ, பிராணனிலும் மீண்டுசலனுன்மகத்தன்மைப் பொருத்தம் இலை
யன்றோ, சலனவியாபாரவாயில்கள் உடையனவாகவேயன்றோ; எப்போதும் தமது வியா
பாரங்களில், குறிக்கப்பெறுவனவாமோ; அதனால், இவ்வாக்காதிகள், இப்பிராணப்பெய
ரானே பிராணன்கள் எனத்தானே இயம்பப்பெறுகின்றன. யாவன் இவ்வண்ணம் பிராண
ஆன்மதன்மையையும் பிராணசப்த அபிதேயத்தன்மையையும் சர்வகரணங்கட்கும் அறி
வனோ, அவ்வறிஞனாலேயே அக்குலத்தை இல்லெளகிகர் கூறுவர், எக்குலத்தில் அவ்வித்வான்

உண்டாயினமையே, அக்குலம் அவ்வித்வானது பெயரானே பிரசித்தமாகும்; இன்னருடைய இது இக்குலம் என்பதாக, சூரப்திரியரென்பதேபோலும், யாவன்முன் மொழிந்தவாறு வாக்காதி கட்குப் பிராணரூபத்தன்மையையும் பிராணுக்கியத்தன்மையையும் உணர்வனே, அவனுக்கிது பயனும்; இதுமாத்திரமல்லவனேலும், பயர்வன் இவ்வாறுணர்ந்தவனோடு பொருமையுறுவனே அவன் அந்தப்பிராணன்மகரிசிக்கு விரோதியாகி, இந்தச்சரீரத்திலேயே வற்றுதலையடைவன் வற்றலை அடைந்தே கடைசியில் மரிப்பன், உபத்திரவமின்றி விரைவின் மரியான், இவ்வண்ணம் அத்தியாத்மம் கூறப்பெற்றது; பிராணாத்ம தர்சனமென் உபசங்காரத்தே கூறியது அதிதைவதத்தை யினிது காட்டற்பொருட்டாம். இனித்தேவதாவிடய தரிசனம் கூறப் பெறும், எத்தேவதா விசேஷத்தின் விரததாரணஞ் சிறந்தது என ஆராயப்பெறும்; அத்தி யாத்மம்போல யாவற்றையும் சொலிப்பிப்பேன் யானேயென அக்கினி கொண்டது; தபிப் பிப்பேன் யான் என ஆதித்தியன், விளக்குவேன்யான் எனச் சந்திரன், இங்ஙனம் அன்னிய தேவதைகளும் தைவதப்படிகொண்டது; அவ்வத்தியாத்மம், வாக்காதிகளாகிய இந்தப் பிராணன் களினிடையே மத்தியமமாய பிராணன் மிருத்தியுவாலகப்படான், தற்கருமம் நழுவிலான், தற்பிராணவிரதத்தானே அபக்கினவிரதன்போன் றிங்ஙனம், இவ்வக்கினியாதி தேவதை களுக்குள்ளும் வாயுவுமாம்; தங்கருமங்களினின்றும் உபரமத்தை யடைகின்றன; அத்தி யாத்மவாக்காதிகள் போலும் அன்னியதேவதைகள் அக்கினியாதிகள்; வாயுவஸ்தமனமடைவ தில்லை, மத்தியமப்பிராணன்போலும், ஆகலின் எவ்விவ்வாயுவனதோ அவ்விதுவே அஸ்த மிததேவதையாம், இவ்வண்ணம் அத்தியாத்மமும் அதிதெய்வமும் ஆராயப்பெற்று நிர்ணயிக் கப்பெற்றது, பிராணவாயுவான்மாக்களின் விரதம் அபக்னம் என்பது; இனி இவ்வர்த்தத்தி னதேபிரகாசகம் இம்மந்திரமாம், எவ்வாயுவினின்றும் எழுகின்றது சூரியன், அத்தியாத்மமும் விழிவடிவமாக எப்பிராணனினின்றும் எழுகின்றது, அஸ்தமும் எவ்வாயுவின் கண்ணும் எப்பிராணனின்கண்ணும் ஆம் அயாசந்தியாசமயத்திலும் புருடன் தூங்குங்காலத்திலும், அத்தருமத்தைத் தேவர் அநுட்டித்தனர், வாக்காதிகளும் அக்கினியாதிகளும் பிராணவிர தத்தையும் வாயுவிரதத்தையும் முன்னாராய்ந்து, அதுவே இப்போதும் வரும்போதும் தேவர் களானே தொடரப்பெறுகின்றது தொடரவும் பெறும்; அவர் தம்மால் அவ்விரதம் அபக்ந மாக்வே முப்போதும் அநுட்டிக்கப்பெறும்; வாக்காதிவிரதமும் அக்கினியாதிவிரதமும் பக் கினமேயாம், அவற்றிற்கு அஸ்தமனகாலத்திலும் நித்திரையிலும் வாயுவிலும் பிராணனிலும் விலயங்காண்டலின்; எக்காரணத்தால் சர்வதேவர்களானும் தெரிந்து தொடரப்பெறுகின் றதோ அந்தப் பிராணவாயுவிரதம், இக்காரணத்தால் அன்னியரும் ஓரேவிரதம் அநுட்டிக்க லாம்; பிராணன் அபானன்வடிவப் பிராண அபான வியாபாரத்திற் கோய்வின்மையின், அவ் வொரு விரதத்தையே யநுஷ்டிக்கலாம்; வேறிந்திரிய வியாபாரம் வேண்டாம், என்னைச் சிரமரூபியாய மிருத்தியு அடையவேண்டாம், யான் இந்தவிரதத்தினின்றும் நழுவுவனாயின் மிருத்தியுவாற் பீடிக்கப்பட்டவனேயாவன் என்பதாக அஞ்சியே பிராணவிரதம் கொள்க வென்பதாம். ஒருகாலிவ்விரதத்தைத் தொடங்கின் முடிக்க விரும்பவேண்டும், இப்பிராண விரதத்தினின்றும் உபரமத்தையடையின் பிராணனை யவமதித்ததாகவன்றேயாம்; ஆகை யான் முடிக்கவேவேண்டும் என்பதாம்; இவ்விரதத்தானே பிராணாத்மவுணர்வாமேன் சர்வபூதங் களிலும் உள்ள வாக்காதிகளும் அக்கினியாதிகளும், என்து வடிவங்களேயாம், யான் பிராண ஆத்மா எல்லாவற்றையும் அசைப்பவன், இவ்வண்ணம் இவ்விரதத்தைத் தரித்தலானே இப் பிராணதேவதையினுடையதேயாய சாயுஜ்யத்தை ஏகான்மத்தன்மையை சமானலோகத்தன் மையை ஏகஸ்தானத்தன்மையாதல் அடையலாம், விஞ்ஞானமாந்தியாபேக்ஷம் இது அடைத

லாம்.— அவற்றின் உபாசிக்கத்தக்க குணாந்தரங்களையும் கூறல்:—சீதோஷ்ணவபுவென்பது. கலேவரமகாயந்திரம் நடத்துபவையாய், முன்மொழிந்த சுருதிப்படி சிரமஹீனங்களாய், இருதயகாசஅருக்கசசிகளாய், அக்கினிசோமசொரூபங்களாய், சரீரபுரபாலகனுடைய மனதின் றேர்ஆழிகளாய், இவ்வகங்காரமன்னவன்றன் கீர்த்திபெற்ற இட்டக்குதிரைகளாய், எனது தொடர்புபற்றினவாய், பிராண அபானப்பெயர் பெற்றனவாயுள்ள அவற்றின் கதியை யனுசரித்தே யிருக்கின்றேன்; சரீரத்துள்ளிருக்கும் அக்காற்றுகளை உயிர்வாழுங்காறும் இடையறாதுபாசிக்கப்பெற்ற அவற்றின்கதியைத் தொடர்வேன், எனவே முன் சுருதியுரைத்ததே முடிவுபேறடையும், உபாசனை தொடங்கிடில் முடிவுபரியந்தஞ் செய்யவேண்டியே முயலவேண்டும் இடையில் விட்டுவிடக்கூடாது என்பதாம். நனவு கனவு துயில்களில் எப்போதுமே சமரூபங்களாயிருக்கும் அவற்றைப்பற்றிச் சுழுத்தியை யடைந்தவனுங் கொப்பாக நாட்களைத் நன்குகழிக்கின்றேன். அப்பியாச அதிசயத்தானே வெளியிலும் உள்ளிலும், பன்னிரண்டு பதினாறு அங்குலப் பிரதேசமாத்திரத்தளவிற் சஞ்சரிப்பனவாமவையென்றறியலாம்.

(சு.) ஸ்ரீ புசுண்டர், பிராணகதி யநுசந்தானத்தை இசைக்கும், பூதவுடலாம் = மனோகரமாகிய தேகமென்கின்ற, தோற்றமென்பது முதலான இரண்டுகவியும் ஒருவாக்கியம். பிராணன் இரவி அபானன்மதி ஆதலிற் பிராணன் உஷ்ணமேனி அபானன் சீதமேனியெனவுங்காண்க. (83-84-85)

(ஸ்ரீ-வீர-அ-கை.) பிராணாயாம அப்யாசத்தானே அவற்றின் சூக்குமதமத்தன்மைச் சம்பாதனத்தானும், இளம்புகையாதியின் அடைவு இல்தாம் என்னுங் கருத்தால் உரைத்தல்; அல்லது, நாடியுள்ளே சஞ்சரிப்பனவாய இவற்றிற்கு முகநாசிகைச் சஞ்சாரம்போல என் குறிப்பிக்கப்பெறவில்லையெனின் ஆண்டுரைத்தல்:—அரவிந்தவென்பது.

அரவிந்தவளைய நூலொன்றைக் கூறோராயிரமிட் டதிலொருகூ றொப்பென்றாலுந், தரமொவ்வாதறச் சிறிதாயுண்டாய் நின்றுந்தாக்கியறிவரி தவற்றின்கதியின்றன்மை, விராவிந்தப் பிராணன்விடா தசைவாஞ்சத்திமேவி யொழியாதுலவுமேனியுள்ளே, திரமின்றிப் புறத்தினுமுள்ளினு மெப்போதுந் திரும்பாது மேற்போதல் செய்கையாகும்.

(ப - ரை.) அரவிந்தவளைய நூல்ஒன்றை = தாமரைத்தண்டின் நூல் ஒன்றினை, கூறோராயிரமிட்டு = ஆயிரங்கூறுகப்பகுத்து, அதிலொருகூறொப்பென்றாலும் தரமொவ்வாது = அவற்றுள் ஒரு அம்சம் சமானம் என்றபோதினும் அத்தகைமை பொருந்தாதாம், அறச்சிறிதாய் = அத்தியந்தஞ் சூக்குமமாய், உண்டாய்நின்றும் = இருப்பதேயாயினும், தாக்கியறிவரிது = இன்னபடியிருக்கின்றதென்று குறித்தறிய முடியாததாம், அவற்றின் கதியின்றன்மை = அவ்வாயுக்களின் நடையின்பான்மை; விராவிந்தப்பிராணன்விடா தசைவாஞ்சத்தி = கலந்த இந்தப் பிராணவாயுவானது ஸ்பந்தசக்தியைவிடாமல், மேவியொழியாதுலவுமேனியுள்ளே = பொருந்தி யெப்போதும் உலாவும் சரீரத்துள்ளே, திரமின்றி = நிலையில்லாமல், புறத்தினும் உள்ளினும் எப்போதும் திரும்பாது மேற்போதல் செய்கையாகும் = பாகியத்திலும் ஆந்தரத்திலும் எக்காலும் திரும்பாமல் மேற்போகுமியல்பே தொழிலாகும்.

(ஸ்ரீ - வீர.) ஆயிரங்கூறுகக்கூறிட்ட தாமரைத்தந்துவலேசத்தினும் இவைநுண்ணியனவாம்; இவ்வியிருந்தபோதினும் இவற்றின் கதியாந்து சூக்குமத்தினுஞ் சூக்குமமே

யாம்; கேசமாயிரங் கூறதாய்க்கிழித்து, ஆசகலதுதானதனினுமணுவாம், என்னுஞ் சுருதியினே நாடிகட்கே அதிசூக்கும்த்தன்மையுண்மையின் நூல்பத்தன்மையாகவே, அவற்றினுள்ளே இவற்றின்கதி அத்தியந்தம் நூலக்ஷியமாம் என்பது கருத்து. பிராணசப்தம் ஒன்று இடுகுறியாம், மற்றொன்றோ முன்னேசெல்கின்றது எனக் காரணப்பெயராம் அவ்விலக்கணபரமாம், இலக்கணத்தை யநுசரித்தே ஊர்த்வஸ்தானத்தை யடைவித்துக் காண்பித்தல்:—ஹே பிரஹ்மன் இந்தப்பிராணன் இரவும்பகலும் ஸ்பந்தசக்தியுடையதாய்ச் சதாகதியாய், பாகிய ஆப்யந்தரத்தோடுகூடிய தேகத்தில் மேலேயிருக்கும் = மேற்போதல் செய்கையாகும்.

(ச.) அரவிந்தநூலொன்றை யாயிரங்கூறிட்டவற்றோர் கூற்றினும் பிராணாபானங்களின் கதியறச்சிறிதும் அறிவரிதுமாம், இந்தப் பிராணனெப்போதும், அசைவாஞ்சத்திமேவி,= சலனரூபமான சத்தியையுடையதாய், ஒழியாதுலவும் = சதாகதியுடையதாயிருக்கும், அன்றியுமேற்போவதாய்ப் பன்னிரண்டங்குலபரியந்தம் புறத்துச்சேறலினும், இருதயபதுமத்தினுள் எழுதலினும் புறம்புள்ளோடுகூடிய தேகத்தில் மேற்போதல் செய்கையாயிருக்குமென்றதாயிற்று. மூ: பூர்வஉத்தரப்பாதிகட்கு வேற்றுமையுண்மையின், பிராணசப்தத்திற்குக் கூறியதுகூறல் என்னுங் குற்றமில்லையாம். (86)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் அபானபதமும் ஏகம் யௌகிகம் ஆமென்றும் பிறவெவையும் முன்போன்றுங்கூறி இலக்கணத்தினாலே வேற்றுமையைக்காட்டி அதன் கதிகளில் முயல்வின்றியே எப்போதுமே, பிராணயாமத்வ சிந்தனத்தைக்காட்டல்:—மற்றையென்பது.

மற்றையபானனு மசைவாஞ்சத்திமேவி மாறுமலுலவு மகவாகியத்தி, லுற்ற வுடலிற் கீழேயோடாநிற்குமுறு நனவுகனவிலுமிவ் வுயர்பிராணன், முற் றுறமீள்வது நன்றாமறிந்தோர்க் கின்பமுழுதளிக்கு மிதனியல்பை மொழியக்கேளாய், பெற்றபுறத் தீராறுவிரன் மட்டோடும் பிராணன்மீட்டுடலுறல் பூரகமாய்ப்பேசும்.

(ப - ரை.) மற்றையபானனும் = மற்றொன்றாய் அபானவாய்வும், அசைவாஞ்சத்திமேவி = ஸ்பந்தசக்தியையடைந்து, மாறுமல் = மாறுபாடடையாமல், உலவும் = சஞ்சரிக்கும், அகவாகியத்தில் உற்ற உடலில் = உள்ளும் வெளியுமுற்றதேகத்தில், கீழேயோடாநிற்கும் = அதோகமனஞ் செய்யாநிற்கும், உறுநனவு கனவிலும் இவ்வுயர் பிராணன் = வரும் ஜாக்கிரத்சொப்பனங்களிலும் இந்தமேலான பிராணன், முற்றுறமீள்வது நன்றாம் = அடியோடு அடங்குவதே நலமுடையதாம், அறிந்தோர்க்கின்பமுழுதளிக்கும் = தெரிந்தவர்க்கு ஆனந்தம் முற்றினுந்தரும், இதனியல்பை மொழியக்கேளாய் = இதனது சுபாவத்தைக்கூறக் கேட்பீர்களாக, பெற்றபுறத்தீராறு விரன்மட்டோடும் = உற்றவாகியத்தே பன்னிரண்டு அங்குலபரியந்தம் செல்லும், பிராணன்மீட்டுடலுறல் பூரகமாய்ப்பேசும் = பிராணவாயுவானது மறுபடியும் தேகத்திற்சேருதல் பூரகமென்று சொல்லப்பெறும்.

(ஸ்ரீ - வீர.) அபானனும் இரவும்பகலும் ஸ்பந்தசக்தியுடையதாய்ச் சதாகதியாம், பாகியாப்யந்தரசகிததேகத்திலோ இந்த அபானனனது கீழ்கிதமாம்; ஜாக்கிரத்திலும் ஸ்வப்னத்திலுமே இந்தப்பிராணயாமம் உத்தமமாம், எதனாலதனையறிந்தவன் முயலாநிற்பனோ, அது அதனால் அத்துணையும் மேன்மையின்பொருட்டேயாம்; அதனைக்கூறக்கேளுங்கள்! ஹே பிரஹ்மசொரூபரே எவ்விருதயாம்புஜகோடரத்தினின்றும் இஷ்டப்பிரகாரம் சுரசமாய்

அஸ்தயத்நங்கள்வாய்ந்த பிராணன்களின் பாகிய உன்முகத்தன்மையுளதோ அதனைத்தீரர்கள் ரேசகமென வறிந்தனர்; ஆண்டு இருதயத்தினின்றும் மூர்த்தபரியந்தம் பிரசுவாசகதியர்த் தம் ஆந்தரரேசகத்தன்மையானே சிந்திக்கத்தக்கது; பன்னிரண்டு அங்குலபரியந்தம் பாகியம் ஆக்கிரமணஞ்செய்யும் பிராணன்களின்கீழ் அங்கநற்பரிசம் யாதோ அதுபூரகமெனப்பெறும், மூர்த்தாதிவெளிப் பன்னிரண்டங்குலபரியந்தமோ அர்த்தம்பாகியபூரகத்தன்மையானே சிந்திக்கத்தக்கதாம்.

(ச.) அபானனும், கீழேயோடாநிற்குஞ் சுபாவமாயிருக்குமென்பதே விசேடம், மற்றையது பிராணன்போலவே யென்பது பொருள், இவ்வுயர்பிராணன் முற்றுறமீள்வது = இந்த உத்தமமான பிராணயாமம், நன்றுயறிந்தோற்கு, = பிராணபானகதியை யறிந்தவனுக்கு, நனவு கனவிலும் இன்பமுழுதளிக்கும், இதன் = இப்பிராணயாமத்தினது, இயல்பை மொழியக்கேளாய், புறத்து = வாகியப் பிரதேசத்தில், ஈராறுவிரன்மட்டு = துவாதசாங்குலபரியந்தம், ஓடும்பிராணன் = தானேசெல்லாநின்ற பிராணவிருத்திகள், மீட்டுடலுறல், வியாபகமாய் பிராணவயவம் ஒன்றேடொன்று கலப்பது ஆகிய அந்தப்பூரகம், பாகியமாய்ப் பேசும், சரீரத்தைக்குறித்து வாகியமாகிய துவாதசாங்குல கதபரியந்தமான பிரதேசத்திற் பூரணமாதலினென்க. சுயமாகவே பாகியத்தாக்கிரமணஞ்செய்யும் என்றும் பாடபேதம். (87)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின்னும் பூரகத்தையே கூறிக் கும்பகத்தையுங் கூறல்:—புறவென்பது.

புறநின்று சாலவுமுள்ளடங்க வன்புபொருந்தா மலபானனுடற் புகுதலெய்துந், திறனென்று மதனையும் பூரகமாய்ச் செப்புந்தீரவபானனு மொளித்துப் பிராணன்றனு, மறவுமிதயத் தசைவற்றிருக்கு மெம்மட் டம்மட்டுங் கும்பகமா மவத்தையாகு, மிறவறு நல்யோகியரீ தனுபவிப்ப ரெக்கலையுங் கற்றுணர்ந்த வேதத்தோனே.

(ப - ரை.) புறநின்று சாலவுமுள்ளடங்க = பாகியத்திலிருந்து அத்தியந்தம் உள்ளடங்குவதற்காக, வன்புபொருந்தாமல் = கஷ்டப்படாமல், அபானன் = அபானவாயுவானது, உடற்புகுதல் எய்தும் = சரீரத்துட்பிரவேசித்தலையடையும், திறனென்றுமதனையும் = இத்தன்மைவாய்ந்த விதனையும், பூரகமாய்ச்செப்பும் = பூரகமென்றே சொல்லப்பெறும், தீரவபானனுமொளித்து பிராணன்றனும் அறவும் இதயத்தசைவற்றிருக்கும் எம்மட்டு = முற்றினும் அபானனும் மறைந்து பிராணனும் அத்தியந்தம் இருதயத்தே சலனமற்றிருக்கும் எதுகாறும், அம்மட்டும் = அதுகாறும், கும்பகமாம் அவத்தையாகும் = கும்பகமென்னும் அவஸ்தையாகும், இறவறுநல்யோகியர் = அழிவில்லாத நல்லயோகியர், ஈதனுபவிப்பர் = இதனையநுபவிப்பர், எக்கலையுங் கற்றுணர்ந்தவேதத்தோனே சகலசாஸ்திரங்களையும் படித்தறிந்த வேதசொரூபியாகிய பிரஹ்மரிஷிவரரே.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் பாகியதேசத்தினின்றும் அபானனனது உள்ளே பிரவேசமாம்போது, யாது நாசிநுனிமுதல் மூர்த்தம்வரையும் யாதுதான் மூர்த்தாமுதல் இருதயம்வரையும் வாயுவின் பரிசமுளதாமோ அவ்விருவிதமும் அந்தர்ப்பூரகமெனவறியலாம்; இதுவும் யத்நவர்ஜிதமேயாம். இப்போது உட்கும்பகம் கற்பிதாகற்பிதசாதாரண்யமாகக் குறிப்பிக்கப்பெறுகின்றது:—தீரவென்பதாதி. அபானனனது பிரசாந்தமாகியவழி பிராணன்

ஆன்று எதுவரை இருதயத்தினின்றும் எழவில்லையோ அதுவரையது கும்பக அவஸ்தை யெனப்பெறும், அதனை யோகிகள் எல்லாரும் அநுபவிப்பார்கள்.

(சு.) அபானன் = அபானவாய்வு. புறநின்று = வாகியப்பிரதேசத்தினின்று, உள்ளடங்கும் = சரீரத்துக்குட்பிரவேசிக்கும்போது, வன்புபொருந்தாமல் அயத்தனசித்தமாய், உடல் புகுதலெய்தும் = சரீரபூரணமாய்க்கலக்கும், அதனையும் பூரகமாய்ச்செப்பும், சரீரத்துக்குட் பூரணமாதலின் அகப்பூரகமாய்ச் செப்புமென்பதுபொருள். அபானனும் = அபானவாய்வும், ஒளித்து = அஸ்தமித்து, இதயத்து, பிராணன்றானும், அசைவற்றிருக்கும் = உதியாதிருக்கும்; எம்மட்டம்மட்டும் அந்த வாயுவின் நிச்சலமானகதி, கும்பகமாம் அவத்தையாகும், ஈதியோகியரநுபவிப்பர் = இவ்வவஸ்தை அகக்கும்பகமென்பதுபொருள் = சரீரத்தினுள் வாயுகும்பித்திருத்தலின் என்க. (88)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வெளியிலேயும், ரேசகாதிகளைக் காட்டும்பொருட்டுத் தொடங்கல்:—மருவென்பது.

மருவிதய விண்ணினுந் தன்னிரதத்தோடே வருத்தமறப் பிராணன்கள் புற நோக்கெய்தல், புரிவுறவுண்மேவு மிரேசகந்தானுகும் புறநோக்க முறுவாயு பொருந்துமூக்கி, லுருவியதனுனி யளவாங்கதியை முன்னமுறப் புறப்பூரகமாமென் றுரைப்பர் முன்னோர், விரிவுறநாசியி னுனிநின்றகன்றீ ராறுவிரலளவாங் கதிபுறப் பூரகமாம் வேறே.

(ப - ரை.) மருவு இதயவிண்ணினும் தன்னிரதத்தோடே = பொருந்தாநின்ற இருதயவிண்ணினின்றும் தனது இரசத்துடனே, வருத்தமறப் பிராணன்கள் புறநோக்கெய்தல் = அநாயாசமாகப் பிராணவாயுக்கள் பாகிய நாட்டமடைதல், புரிவுற உள்மேவும் இரேசகந்தானுகும் = வெளிநோக்கிய உள்ளேயாக்கிய இரேசகமென்னப்பெறும், புறநோக்க முறுவாயுபொருந்து மூக்கில் = பாகிய நோக்கமடைந்த வாயுவுற்ற மூக்கில், உருவியதனுனி யளவாம் கதியை முன்னமுறப்புறப்பூரகமாம் என்றுரைப்பர் முன்னோர் = மேவியதன் அக்கிரத்தளவாம் நடையை முன்னர்ப் பொருந்திய வழியாகிய பூரகமென்று பெரியோர் கூறுவர், விரிவுறநாசியினுனிநின்றகன்றீ ராறுவிரலளவாங்கதிபுறப் பூரகமாம் வேறே = விஸ்தாரமாக மூக்கின் நுனியிலிருந்தகன்று பன்னிரண்டு அங்குலபரியந்தமாய நடை அயலாயவெளிப் பூரகமாம்.

(ஸ்ரீ - வீர.) ரேசகம் கும்பகம் பூரகம் என மூவிதமாம் அபானத்தின் உதயஸ்தானமாகிய மூக்கின்நுனியினின்றும் வெளியே பன்னிரண்டங்குலபரியந்தத்தில், துவாதசாந்தத்தினின்றும் கீழ்வெளியில், தாமே பவிப்பனவாய், சர்வகாலத்திருப்பனவாய், நன்றாக யத்நவிவர்ஜிதமாய் உள்ளனவென எவ்விரேசகாதிகள்மொழியப் பெற்றனவோ விரிந்தமதியினர்களாலே அவற்றை ஹேமகாமதியுடையவரே கேட்பீர்களாக: துவாதசாங்குலபரியந்தத்தினின்றும் வெளியினின்றும் எதிர்முகமாயிருப்பதாய் எவ்வாதம், ஹேபிரபுவே! அவ்வாதத்தினுடைய அந்தவெளிப்பிரதேசத்திலேயே சுபாவத்தாற் பாகியபூரகாதிகள் சிந்திக்கத்தக்கனவாம். ஆண்டுப்பாகியவாயு அந்தரபானத்தின் ஏகீயபாவத்தானே நிச்சலமுக்கியத்திதியைக் கும்பகத்தன்மையானே கற்பித்தல்:—மண்ணுள்ளேயிருக்கும் ஆகாத குடம்போலும் எத்திதி வெளியே, பன்னிரண்டங்குலபரியந்த நாசிநுனி சமவெதிர்முகத்த விண்ணின்கண் நித்தியம் அபானனுக்குளதாமோ அதனைக் கும்பகமென் றறிஞர் அறிவர்; அதற்

குப் பூர்வப்பிராணபாவத்தானே இருதயந்தொடங்கி நாசாக்கிரபரியந்தமாய எந்நடை யுளதோ அதைப் பாகிய பூரகத்தன்மையானும் கற்பிக்கலாமெனல்:—வாகிய உன்முகமாய வாயுவிற்கு எந்நாசிகா நுனியவதிகதியுளதோ அதனைப் பாகியபூரகமாகவே முதலதாக யோக வித்துக்களுணர்வர்: அதனினும் வெளிக்கதியை அயற் பாகியபூரகத்தன்மையானே கற்பித் தல்:—நாசாக்கிரத்தினின்றும் வெளிப்போந்து துவாதசாந்தாவதி கதியாது வாயுவுக்குள தாமோ அதனைத் தீரர் அயற் பாகியபூரகமென வறிவர்.

(ச.) பிராணன்கள், வருத்தமற = யத்தனமின்றியே, தன்னிரதத்தோடே = சுபாவ மாகவே, இதயவிண்ணினும் = இருதயாம்பரத்தினின்றும், புறநோக்கெய்தல் = பகிர்முக மாதலே, உண்மேவுமிரேசகந்தானுகும், சரீரத்துக்குள்ளே ரேசகமாதலின் என்க; புறநோக்க முறுவாயு = பகிர்முகமான பிராணவாயு, பொருந்தாநின்ற = மூக்குநுனியளவாங்கதியை, முன்னமுறப்புறப்பூரகமாம், வேறேயும் வாகியபூரகம் புகலப்போதலின் இதுமுன்ன முற லெனப்பட்டது; நாசிகாக்கிரலட்சணமான வாகியதேசத்திற்குப் பூரணமாதலின் வாகிய பூரகமாம், நாசியினுனி நின்று முகன்று ஈராறுவிரலளவாம், வாயுவினது கதியை வேறேபுறப் பூரகமாமென்று மேலோ ருரைப்பரெனவுங் கூட்டுக. (89)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பாகிய ரேசக மிரண்டன் கற்பனவகையைக் கழறல்:—புறத்தி லென்பது.

புறத்திலே பிராணனொளித்திட வபானன் புறப்படாதிருக்கப் பூரணவவத்தை, நிறத்தபுறக் கும்பகமா மபானன் றோற்றநிகழ் வடிவாம் வாயுவினுண் ணோக்கந் தானே, திறத்தபுற ரேசகமாமிதுவே முத்திசேர்விக்கு நித்தலுஞ் சிந்திக்கலாகு, மறித்தலறப் புறனுட்சேர் கும்பகாதி வருகதிகள் விடாதுணர்ந்தோர் மறித்தும் வாரார்.

(ப - ரை.) புறத்திலே பிராணனொளித்திட = பாகியத்திலே பிராணவாயு விலயமாக, அபானன் புறப்படாதிருக்க = அபானனுனது பிரவிர்த்தியாகாமலிருக்க, பூரண அவத்தை நிறத்தபுறக் கும்பகம் ஆம் = நிறைந்த அவத்தையுடன்கூடிய பாகிய கும்பகமாம், அபானன் றோற்றநிகழ்வடிவாம் வாயுவின் உண்ணோக்கந்தானே = அபானனது உதயரூபகமாய வாயுவி னது அந்தர்முகத்தன்மையே, திறத்தபுறரேசகமாம் = மேன்மைவாய்ந்த பாகிய ரேசக மாம், இதுவே முத்திசேர்விக்கு நித்தலும் சிந்திக்கலாகும் = இதுதானே மோக்ஷமடைவிக் கும் எப்போதுஞ் சிந்திக்கத்தக்கதாம், மறித்தலறப் புறனுட்சேர் கும்பகாதிவருகதிகள் விடா துணர்ந்தோர் = கெடுதலில்லாமல் பாகிய ஆந்தரகும்பகாதிவராநின்ற கதிகளை இரவும் பக லும் விடாமல் அறிந்தவர், மறித்தும் வாரார் = மீண்டும் பிறப்பெய்தார்.

(ஸ்ரீ - வீர.) வெளியிற் பிராணன் விலயமாகவே அபானன் எதுவரை யெழுதலில் லையோ, அதுவரைப் பூரணசமாவஸ்தையே வெளியிலுற்ற கும்பகமாயறிவர்; வெளியிலென் பதாதிமுன் மொழிந்த அநுவாதமாம், எவ்வவ்வந்தர்முகத்தன்மையுளதோ அபானத்தின் உதயமின்றி, அதனைப் பாகியரேசகமென வுணர்க அது சிந்திக்கத்தக்கதாம் முத்திதருவ தாம்; உதயமின்றி = நல்லசைவின்றி யென்பதாம், எனவே நல்லசைவின் முற்கணத்தில் எவ்வந்தர்முகத்தன்மை நல்லசைவுன்முகத்தன்மை, அதனையென்பது பொருளாம். பாகிய துவாதசாங்குல சரமபாகத்தினின்றும், கிளம்பி நாசாக்கிரபரியந்தம் அபானத்தின் சலனத்தி ஞனே சொரூப அபிவியக்தியால் உயர்வாகப் பருத்ததன்மையாதுளதோ அபானத்தின்

வெளியிலுள்ள அதனை அமரம் பூரகமென்றறிவர். பாகிய அந்தரங்களாய் இக்கும்பகாதிகளை யிடைவிடாமல் அப்யசித்துப் பிராண அபான சுபாவங்களை உணர்ந்து மறுபடி பிறவார்.

(ச.) பிராணன் புறத்திலே யொளித்திடல் = மறைபட்டதாய், அபானவாயுபுறப்படா திருக்கும் உள்ளிழுக்குஞ்சீலமாய் எழும்பாதிருப்பது எம்மட்டம்மட்டும், நிறத்த பூரண வவத்தை = பூரணகும்பக துல்லியமானவவத்தை, புறக்கும்பகமாம், சரீரத்தின் புறத்தே வாயு கும்பித்திருத்தலின் என்க. வாயுவின் அபானன் ரேற்றநிகழ்வடிவா மூண்ணேக்கத் தானே = அந்தர் முகமே, புறரேசகமாம், புறத்திற் கும்பிக்கப்பட்ட வாயு வந்தர்முகமாக ரேசிக்கப்படுதலின் என்க; மறித்தலற, பிராணபான சுபாவமாய். (90)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உணர்ந்து உபாசித்து மறுபடியும் உண்டாவதில்லையென அவசி யம்வரும் ஞானபலத்தானே துதித்து, இதனது அப்பியாசத்தானே பிராணநிரோதமும் காலத்திலுண்டாம், எனவும் கருத்துருத்துவபோக்துருத்துவ அபிமானமும் இதனானே யழிந்துபோம் எனவும், பாகிய திருஷ்டிபரித்தியாகத்தானே அந்தரான்மதரிசனவுதயத்தாற் பரமபதப்பிராப்தியும் இதனானே சித்திக்குமெனவும் கருதியுரைத்தல்:—நாடு என்பது.

நாடுபிராணபான னியற்கையாக நானுரைத்தவிக் கதிகளைவிரண்டும், வீடுதரு வன விரவும்பகலு மேவவேண்டுவன விரைவறவிவ் வியாபாரத்திற், கூடினராய்ப் புறம்போகா துளத்தைக் காப்போர் குறைவில் சிலநாளி னிலேகூடா நிற்பர், தேடு மிதுபரிச யிப்போர்விடய வேட்கைசேரார் வேதியர்நாய்த் தோற்றீண்டுவாரோ.

(ப - ரை.) நாடுபிராண அபானன் இயற்கையாக = சிந்திக்கும் பிராணன் அபானன் சுபாவமாக, நானுரைத்த = யானுரையாடிய, இக்கதிகள் = இந்நடைகள், நாலிரண்டும் = எட்டும், வீடுதருவன = முத்தியையீவன, இரவும்பகலும் மேவவேண்டுவன = இராத்திரி யுந் தினமும் அப்யசிக்கவேண்டுவன, விரைவற = அமைதியாக, இவ்வியாபாரத்திற் கூடின ராய் = இப்பயிற்சியிற் சம்பந்தித்தவராய், புறம்போகாதுளத்தைக்காப்போர் = பாகியத் திற் செல்லாது மனத்தை இரக்ஷிப்பவர், குறைவில் சிலநாளில் = குறைவறச் சிலதினங் களில், நிலேகூடா நிற்பர் = மேல்நிலைமையையடைந்து வாழ்வர், தேடுமிது பரிசயிப்போர் விடயவேட்கை சேரார் = யாவரும் விரும்புமிதனை யப்பியசிப்போர்விடயாசையை யடை யார், வேதியர் நாய்த்தோல் தீண்டுவாரோ = பிராஹ்மணர் சுவானத்தின்சர்மத்தைத் தொடு வாரோ; தொடார்.

(ஸ்ரீ - வீர.) ஹேமகாமதியையுடைய பிரஹ்மந்! இவ்வெட்டும் பகலும் இரவும் நினைவு பண்ணத்தக்கன, எங்ஙனமேனும் வெளியிலும் உள்ளிலும் ரேசகபூரகங்கட்குத் தனித்தனி யாக இருவகைக்கூற்றால் கும்பகங்களோடுகூடப் பத்தாம், அங்ஙனமாயினும் கும்பகங்கட்குப் பிராதான்யத்தன்மை யுண்மையின் அந்த அஷ்டக அபிப்பிராயத்தானே இங்ஙனங் கூறிய தாம். என்னால் முக்தியைக்கொடுக்கும் சுபாவங்களாந் தேகவாயுக்களின் இயற்கைகள் கூறப்பெற்றன; நிற்பினும் நடப்பினும் நனவினும் கனவினும் அதிசல அநிலங்களாகிய இவை பிரகிருதியினாலே நிரோதம் ஆய்விடும். எதனைச் செய்கின்றான் எதனை யறிகின்றான்; புத் தியினாலேயே அத்தியந்தம் நன்கெண்ணிக்கொண்டு, கும்பகாதிகளை, நரன் சுவாந்தனும் ஆண்டுக்கருத்தா ஒருசிறிது மாகான். விக்ஷேபமின்றி இப்பிராணசிந்தன வியாபாரத்தில், மிகப்பற்றிய மனமானது அதனானே வெளிப்பொருள்களை விட்டோட்டுகின்றது, சில தினங்

களிலேயே கேவலபதத்தை யடைகின்றது, இதனை யப்யசிக்கும் புருடனுடைய மனம் வெளியில் விட்யவிருத்திகளில், இரதியை யடையமாட்டாது, நாய்த்தோற்பையையாதல் அதன் கண்விட்ட பாலையாதல் மறையவன் றீண்டாதவாறேபோலும்.

(ச.) இக்கதிகள் = பூரகாதிகதிகள், வாகியத்திற் பூரகாதிமூன்று, அந்தரத்திலுமூன்று வேறு மிரண்டு வாகியபூரகங்களாக வெட்டுவிதமாம்; அவற்றில் முன்பு தூலமான பிராண அபானகதியை யநுசரித்து இரண்டுபேதங் கூறப்பட்டது; பின்பு நீரவபானனு மென்பதாதியாற் சூக்ஷ்மகதியை யநுசரித்து ஆறுபேதம் நிரூபிக்கப்பட்டது என்பது விவேகம். குறைவினில = கைவல்லியபதம். சுனகசர்ம நிர்மிதபஸ்திரிகை. (91)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதனது கிரமத்தையும் பயனையும் நன்குரைத்தல்:—யோகினும், விராவி யென்பன.

போகினுநிற் கினுங்கனவு நனவுற்றாலும் பொருந்துநோக் கிநுவானோர் பூணார்பந்தஞ், சோகமுறார் பேறெல்லாம் பெற்றதாகும் சொன்னவித யக்கமல நின்றுதோன்று, மேகுபிரா ணன்புறத்தே விரலீராறி னெல்லையிலே யிறந்திடுமா லபானன்றானு, மாகுபுறத் தேவிரலோர் பன்னிரண் டினளவி லுதித் துளக்கமலத் தடங்கிமாயும்.

விராவிவரும் புறநின்று மபானனென்னும் வியன்மதிய மேனியெல்லாங் குளிர்விக்கும், பிராணனெனுஞ் சூரியன்றான் கனலாயுள்ளே பேசியவிவ் வுடற் பாகம் பிறக்கப்பண்ணு, மிராதுழலு மபானனெனு மதியினுட்சே ரியற்கலைகள் பிராணனெனு மிரவியாலே, யுராவிவிழுங் கப்பட்ட தெங்கேயந்த வுயர்பதமுற் றூற் பின்னையொரு நோயுண்டோ.

(ப - ரை.) போகினும் நிற்கினும் கனவு நனவுற்றாலும் பொருந்துநோக்கிநுவானோர் = நடப்பினும் இருப்பினும் நனவினும் கனவினும் இதேதிருஷ்டியை யடைந்திருப்பவர், பூணார்பந்தம் = பந்தத்தை யடையமாட்டார், சோகமுறார் = சோகத்தையடையார், பேறெல்லாம் பெற்றதாகும் = பிரயோஜனங்கள் யாவும் அடைந்தனவேயாம், சொன்னவித யக்கமலநின்றுதோன்றும் = கூறிய இருதயதாமரையினின்று பிரதீதியாம், ஏகுபிராணன் = போம்பிராணன், புறத்தே = பாகியத்தே, விரல் ஈராறின் எல்லையிலே = அங்குலம் பன்னிரண்டுபரியந்தத்திலே, இறந்திடும் = பொன்றும், அபானன்றானும் ஆகபுறத்தே விரலோர் பன்னிரண்டினளவில் = அபானவாயுவும் ஆம் பாகியத்தே அங்குலம் பன்னிரண்டுபரியந்தத்தில், உதித்துள கமலத்தடங்கிமாயும் = உதயமாகி யுள்ளத்தாமரையி லடங்கி யழியும். ஆல்.

விராவிவரும் புறநின்றும் = கலந்துவரும் பாகியநின்றும், அபானன் என்னும் வியன் மதியம் = அபானன் என்று சொல்லப்பட்ட அற்புத வம்புலி, மேனியெல்லாம் குளிர்விக்கும் = உடம்பெல்லாம் சீதளமாக்கும், பிராணன் எனும் சூரியன்றான் கனலாயுள்ளே = பிராணவாயுவென்னும் இரவிதான் அக்கினிமயமாய் உள்ளே, பேசிய இவ்வுடற்பாகம் பிறக்கப் பண்ணும் = கூறிய இந்தச்சரீரபக்குவம் ஆக்காநிற்கும், இராதுழலும் அபானன் எனு மதியின் = நிலையாது சலிக்கும் அபானன் என்னும் சந்திரன்றன், உட்சேரியற்கலைகள் = உள்ளேயுற்ற இயல்பான அம்சங்கள், பிராணனெனு மிரவியாலே = பிராணன் என்றுசொல்லப்பெற்ற சூரியனாலே, உராவி விழுங்கப்பட்டதெங்கே = நன்றாகக்கிராசஞ் செய்யப்பெற்

றது யாண்டு, அந்தவுயர்பதமுற்றாற் பின்னையொரு நோயுண்டோ = அந்த மேன்மையான பதமடைந்தால் மறுபடி எத்துயரேனு மெய்துமோ எய்தாதாம்.

(ஸ்ரீ-வீர.) இந்த திருஷ்டியைப்பற்றிக் கிருதகிருத்திய மதியையுடையவர்களாய் எவர்களிருக்கின்றார்களோ அவர்களால் அடையத்தக்கனயாவுமே அடையப்பெற்றனவாம். அவர்களே துக்கமற்றவர்களாவார்கள்; நிச்சயம். இருப்பினும் நடப்பினும் எந்தப்போதும் கனவினும் நனவினும் கருத்துடனிதனைக்கண்டு மகிழ்ந்து கழிப்பரேற் காலம் உண்டுகொல்பந்தனமவர்க்கொரு சிறிதே. பிராண அபானன்களின் சிந்தனைத்தாலடைவுற்ற ஞானவான்கட்கு, மலமோகம் நன்குசாந்தமான சித்தத்தாற் சொஸ்தமாக அத்தியந்தம் உள்ளிருதயத்திருக்கும் பிரத்தியக்கான்மாவின்கண் விசிராந்தியானதுண்டாம். சர்வாரம்பங்களையும், சந்ததம் சொச்சராய்ச் செய்தபோதினும் ஞானிகளாயினோர் பிராணுபானகதியை அடைவுற்று நன்கு சுவஸ்தராய்ச் சுகிகளாகவே யிருப்பர். ஹேபிரஹ்மந்! இருதயத்தின்கண் ணிராநின்ற பதுமபத்திரத்தினின்றும் பிராணனது அப்யுதயமனதுண்டாம், துவாதசாங்குலபரியந்தத்தி லிந்தப் பிராணனது அஸ்தமானதுண்டாம் வெளியே. பிராணனது அப்யுதயமென்பதாதி முன்மொழிந்ததன் அநுவாதமாம். ஹேமகாமுனிவரே! வெளியிற்றுவாத சாந்தத்தினின்றும் அபானன்றன் னுதயம், ஆம், பின் இருதயத்திருக்கும் போஜமத்தியில் அவ்வபானன் அஸ்தமாய்விடும். பிராண அபானங்கட்கு எவ்வக்கினி ஷோமான்மகத்தன்மை கூறப்பெற்றதோ அதனை ஔஷண்யசைத்யஊர்த்வ அதோமுகத்வப்பிரதரிசனத்தானே பொருத்தியுரைத்தல்:—பாகிய ஆகாசம் நோக்கியபிராணன் அக்கினி சிகையைப்போல ஆகின்றது, இருதய ஆகாசத்தெதிர்ந்த அபானன் ஆழத்தில் வகிக்கும் வாரியேபோலும். அவற்றிற்குச் சூரியசந்திர ஆன்மகத்தன்மையாதல், சிந்திக்கத்தக்கது என்னுங் கருத்தால் அதனையும் உரைத்தல்:—அபானசந்திரன் தேகத்தைப் பாகியத்தினின்றும் குளிர்விக்கும், பிராணச்சூரியன் அல்லதக்கினி இத்தேகத்தை யுள்ளே தகிப்பிக்கும், அபானசசியின் உள்ளிருக்கும்கலை = சரமபாகம் ஆனது பிராணசூரியனாலே எந்த இருதயசம்பந்தமாய பிரஹ்மத்தில் இருந்துகொண்டு விழுங்கப்பெற்றதோ அந்தப் பிரஹ்மபதத்தை யடைந்து மறுபடியும் சோகிப்பதேயிடையாது.

(ச.) இதயகமலநின்று, தோன்றுமேரு = உதித்துச் செல்லும், பிராணன், புறத்தே விரலீராறின் எல்லையிலே, துவாதசாங்குலபரியந்தத்தில், இறந்திடும் = அஸ்தமிக்கும், அபானன்றானும், புறத்தே பிராணன் லயமானவந்த, விரலோர் பன்னிரண்டினளவில் = துவாதசாந்தத்தில், உதித்து = பிராணனுதிக்கின்ற, உள்ளக்கமலத்தடங்கிமாயும். அபானன் சந்திரரூபமாதலின், மேனியெல்லாம், துவாதசாந்தரூபமானபுறநின்றும், வந்துகுளிர்விக்கும் = புஷ்டிசெய்யும், பிராணன் சூரியாக்கினிரூபமாதலின், இவ்வுடல் = இத்தேகத்தை, பாகம் பிறக்கப்பண்ணும், இங்ஙனம் பிராணுபானகதியின் பிராணுயாமரூபத்தால் அநுசந்தானப் பிரகாரஞ்சொல்லி இப்போது பிராணகதி யநுசந்தான்முகத்தால் ஆன்மானுசந்தானப்பிரகாரத்தைக்கூறல்: அபானனெனுமதியின் = அபானரூபமென்னுஞ் சந்திரனது, உட்சேர் = சரீரத்துக்குள்ளும், இயற்கலைகள் = ஏகதேசமாய கலைகளும், பிராணனெனுமிரவியாலே, எங்கே = எந்தவான்மதத்துவத்தில், விழுங்கப்பட்டது = எந்தவான்மாவினது பிரயத்தனத்தால் இறந்தது, அந்த வுயர்பதம் = அவ்வான்மதத்துவத்தை, உற்றால் = அநுசந்தானஞ்செய்தால், பின்னையொரு நோயுண்டோ; எச்சோகமுமுறாதாம். (92-93)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேலும் ஒன்றையொன்று விழுங்கலையே போதல்:—அவ்வென்பது,

அவ்வகையே பிராணனெனு மிரவியுட் சேரணிகலேக ளபானனெனு மிந்து வாலே, வவ்விவிழுங்கப்பட்ட தெங்கேயந்த வன்பதமுற்ருற் பின்னேவருமோ சென்மங், கவ்வுபிராணனே விழுங்கவபான னேக்கக்கலந்த வபானனே விழுங்கப் பிராணனேக்க, விவ்விரண்டினடுவாக நிற்போரென்று மெழுபிறவி யிடர்பின்னே யெய்தாரன்றே.

(ப - ரை.) அவ்வகையே = அந்தப்பிரகாரமே, பிராணனெனு மிரவியுட் சேரணிகலே கள் = பிராணன் என்னும் சூரியனது உள்ளேசேர்ந்த அழகியவங்கிசங்கள், அபானனெனு மிந்துவாலே = அபானன் என்னுஞ் சந்திரனாலே, வவ்விவிழுங்கப்பட்டதெங்கே = கவ்வக் கிராசம் செய்யப்பெற்ற தெவ்விடத்தில், அந்தவன்பதமுற்ருல் = அவ்வன்மைமிக்க பதத்தை யடைந்தால், பின்னேவருமோசென்மம் = மறுபடி பிறப்பானது வந்துசேருமோ, கவ்வு பிராணனே விழுங்க அபானனேக்க = கிராசஞ்செய்யும் பிராணனேக்கிராசஞ்செய்ய வபா னன்பார்க்க, கலந்தவபானனே விழுங்கப் பிராணனேக்க = விரவிய அபானனே விழுங்கும் பொருட்டுப் பிராணன்பார்க்க, இவ்விரண்டினடுவாக = இந்தவிரண்டின் மத்தியமாக, நிற் போர் = இருக்கப்பெற்றவர், என்று மெழுபிறவியிடர் பின்னேயெய்தார் = எப்பொழுதும் சப்தவகைத்தோற்றத்தழுங்கி வாடார்பின்.

(ஸ்ரீ - வீர.) அவ்வாறே பிராண அருக்கனுடைய உள்ளிருப்பவை, யாண்டு = எத் துவாதசாங்குல பரியந்த பாகிய ஆகாச உபலக்ஷிதமாய பிரஹ்மத்தின்கண் ணிருப்பதாய அபானசந்திரனல் விழுங்கப்பெற்றவாமோ, அந்தப்பிரஹ்மபதத்தை யடைந்து மறுபடி ஜன் மத்தை நரனடையமாட்டான்; ஒரு வாயுவிற்கே பரியாயத்தானே சக்தியிரண்டனுதயம் சிந் திக்கத்தக்கது எனல்: பிராணனே அருக்கத்தன்மையை யடைகின்றது பாகிய அப்யந்தரங் களோடுகூடிய ஆகாயத்தில், பின்னர் மகிழ்ச்சியை யுண்டாக்கும்படியான சசித்தகைமையை யடைந்திருக்கின்றது, பிராணனே சரீரசீதளமகிழ்ச்சி காரிணியாய இந்துத்தகைமைகூய விடுத்துக்கணத்தில் வற்றும்படி செய்யாநின்ற சூரியத்தகைமையையடையும். ஆண்டுப் பாகி யத்தே துவாதசாங்குலபரியந்தத்தில் விரிந்த பிராணன் எத்துணை அருக்கத்தன்மையை = ஔஷ்ணியத்தை, பரித்தியாகஞ்செய்து சந்திரத்தகைமையை=சைத்தியத்தை, அடையவில் லேயோ, அந்தப் பிராண அபானங்களின் சந்தியவஸ்தையின்கண் உடலின் வெளியே பிராண இலயத்தான் ஆன்மாவிற்கு, நிர்த்தேகத்வ நிஷ்கிரியத்வ நிர்மனஸ்த்வ முதலிய வாஸ்தவசுபா வங்கள் சம்பவிக்குமாறுசெய்யக் கூடுமாதலின் விசாரிக்கப்பெறுகின்றவாம், ஆண்டுப் பாகிய கும்பகத்திற் றேகாதிதேசபரிச்சேத மின்மையின் சந்திர சூரியான்மகப்பிராணபானக் கிரியையாலாக்கப்பெற்ற ஆயுட்கால பரிச்சேத மின்மையினனும் தேசகாலமின்றிய தன்னன் மாவின்கண் ணிலேபெற்றிருக்கும் யோகியினலே சோகித்தல்கூடாதென்பதாம். இப்போது அருக்கத்தன்மையை நன்கு பரித்தியாகித்து எத்துணைச் சந்திரத்தகைமையை யடையவில் லேயோ என்றதன்கண் அதேசகாலத்திற் சோகமெய்துவதில்லேயென யாது ஓதப்பெற்றதோ அதனே விவரணித்துக்கொண்டு பாகிய கும்பகத்திற்கூறிய தேசகாலபாதத்தை அந்தர்க் கும் பகத்திலும் அநுவதித்துக் காண்பித்தல்:—கவ்வு என்பதாதி. பிராணனேப் பக்ஷிக்கும் பொருட்டு அபானன் எதிர்ப்படும்போது வெளியிலேனும் = பிராணலய அதிஷ்டானசித்தி லாதல், உள்ளிலேனும் = பிராணன் கிளம்புமிடத்தமரும் சித்திலாதல், பாதத்தால் தேசம் காலம் அவற்றிலுட்பட்ட வஸ்துக்கள் என்பனயாவும் நிட்கலமாகிய சின்மாத்திரமேயென்று விசாரித்து, பின்னர்ப்பெருஞ்சோகத்தை யடையவேமாட்டான்; அபானபக்ஷண பரமாகப்

பிராணனுங்காலும் முன்போலவே இருதயத்திலும் வெளியிலும் தேசத்தையும் காலத்தையும் வத்துக்களையும் சொரூபமாகவே நன்குகண்டு, மறுபடி மனம் ஜனிப்பதே கிடையாது.

(ச.) முன்போற் பொருள்கொள்க. பிராணாபானங்கள் ஒன்றையொன்று விழுங்குவது ஆன்மாவின் பிரயத்தினவசத்தினாலாம், அவ்வான்மதத்துவத்தையே அநுசந்தானஞ் செய்யின் வீடுறுமென்பது பொருள். இங்ஙனம் அபானனேக்கம் பிராணனை விழுங்க, பிராணனேக்கம் அபானனை விழுங்க, இவ்விரண்டினடுவாக, இப்பிராணாபானவிரண்டின் மத்தியமான சாக்ஷியாக, நிற்போர், அவ்வந்தரான்மதத்துவத்தையடைந்து பின்னைப் பிறவியெய்தார், என்பது அநுவிருத்தியாலான சம்பந்தம், அநுவிருத்தி, உபசாரம், வழிபாடு புறநடையுமாம். (94)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் கிரியாபேதபின்னப் பிராணசிந்தைப் பிரகாரத்தைக் கூறி அவை நிரூடியானபின்னர் பிராணாபானதியாந்தர அவற்றினதிஷ்டானமான சிதாத்ம உபாசனம் செய்யத்தக்கது என்னுங் கருத்தாலுரைத்தல்:—ஆடு என்பது.

ஆடுகின்ற பிராணலயத் தருகுமேவி யபானலயத் தருகுற்றுப் பிராணாபான,
னூடுபயில் சிற்பரத்தை யேத்துகின்றே னுற்றவபானன் றோற்றமொழிந்துநிற்க,
நீடுபிரா ணனுமிறக்க மூக்கினுச்சி நேர்விசும்பிற் சிற்பரத்தை நீக்கமில்லே, னாடுமல
மொன்றுமறக் கலைகள்சூழ நாகர்தொழும் பதம்பெற்றே னல்லநோக்கால்.

(ப - ரை.) ஆடுகின்ற பிராணலயத்தருகுமேவி = சலியாநின்ற பிராணனது க்ஷயத்தின் சமீபமுற்று, அபானலயத்தருகுற்று = அபானனது க்ஷயத்தின் அண்மையை யடைந்து, பிராணாபானன் ஊடுபயில் சிற்பரத்தை யேத்துகின்றேன் = பிராண அபானன் இடையிலுள்ள சிதான்மாவை யுபாசிப்பாம்; உற்றவபானன் தோற்றமொழிந்துநிற்க, நீடுபிராணனுமிறக்க = அபானனுடைய பிரதீதியாகாமலிருக்க, நீளும் பிராணனும் விலயமாக, மூக்கின் உச்சிநேர்விசும்பில் = நாசாக்கிரககனத்தில், சிற்பரத்தை நீக்கமில்லேன் = சிதான்மாவை யேத்துகிற்பாம்; நாடுமலமொன்றுமறக்கலைகள்சூழ நாகர்தொழும் பதம்பெற்றேன் நல்லநோக்கால் = அணுகு மசுத்தமியாதொன்றுமின்றிக் கலைகள் ஒன்றித் தேவர்களும் சூழ்ந்துதொழும்பதத்தைச் சம்யக்குத்திருட்டியால் அடைந்துள்ளேன், உபாசிப்பாம்.

(ஸ்ரீ - வீர.) பிராணவிலயத்தின் சமீபத்திருப்பதும், அபானவிலயத்தருகே சோடியிலமர்வதும், அபானப்பிராணன்களின் மத்தியிலிருப்பதும் ஆகிய சிதான்மாவை யுபாசிப்பாம். யாண்டு அபானன் அஸ்தமாயது பிராணன் நன்குதிதமில்லது, கணம் கலாகலங்கரகிதமாயது, அந்தச் சித்துத்தத்துவத்தை யருச்சித்தேத்துவாம். யாண்டபானன் உதயமாகவில்லை, பிராணனும் அந்தம் அடைந்துளானே, நாசாக்கிர உபலக்ஷிதமாய துவாதசாங்குலப் பிரதேசககனத்தை ஆவர்த்தத்தை பிராணாபானப்பிரவாகசந்தியையுடையதும், ஆகிய அந்தச் சித்துத்தத்துவத்தை யேத்துகிற்பாம். விருத்தப்பிரவாகமிரண்டன் சந்தியிலன்றோ சுழலுகள் உண்டாகின்றன; எதகிலகலனுகலங்கவீனம், எது சததங்கலையாலுமேலமாலும், எது தனதனுபவமேரிலேற்றமேற்பாம், அது சகல சுரப்ரம் பணிந்ததாமே. உண்மையாகயாது, அகில கவலையாங் களங்கங்கள் கழிந்ததாமோ, அப்போதுதான் நோக்கிய திருஷ்டியாலோ எப்போதும் ஜீவோபாதிபூதபிராணாதி பதினாறுகலைகளின் கூட்டங்களாற் பரிவேட்டிதமாமோ, நல்லனுபவமாய தனதனுபவமேயென்னும் எரில் = நிரதிய ஐசுவரியத்தை யுடையதாகிய பரமாத்மபதம் யாதாமோ அதனைக் கூறிய முறையானே யுபாசிப்பாம்; எலமாலும் = அத்தி

யந்தம் மயங்குவதாகப் பிரதீதியாமோ, ஏற்றம் = முக்கியம், மேன்மையதாமோ, பரம்=நித்தியமாமோ, சகலசுரபணிந்ததாமேயது ஏற்பாம் = சகலதேவதைகளாலும் வணங்கி யேத்தத்தக்கதேயாய வதனை யுபாசிப்பாம். ஏர் = விபவம், இல் = பதம்.

(ச.) எந்தப் பிரசித்தமான சித்ரூபமாகிய ஆன்மா பிராணலயத்தருகுமேவி பிராணன் றுவாதசாந்தத்தி லயிக்கும்போதுதான் சமீபித்திருப்பதாய், சாக்ஷியாய் நிற்குந்தால்ல்யமாகாது, அபானனுதிக்கும்போது சமீபத்திருக்குஞ் சாக்ஷிதானுதியாதென்றுங் காண்க. இங்ஙனம் பிராணுபானனூடு = பிராணுபானன் மத்தியில், பயில் = சாக்ஷியாய் நிற்கும், சிற்பரத்தை = சிதான்மாவை, ஏற்றுகின்றேன் = அநுசந்திக்கின்றேன். அதனையே விரித்துரைத்தல்: அபானலயத்தருகுற்று என்பதற்கும், இக்கிரமத்தர்த்தங்கொள்க. சித்தத்துவத்தில், அபானன் றேற்றமொழிந்துநிற்க = உதியாதிருக்க, பிராணனு மிறக்க, மூக்கினுச்சிநேர் = நாசியினக்கிரபாகத்திருக்கும், விசும்பில் துவாதசாந்தரூபத்திலுள்ள பிராணுபானங்கள் பிரவிர்த்தித்தற் கேதுவாய்க் கமனுகமனங்களைச் செய்விக்குந்தன்மையுள்ள சிற்பரத்தையேற்றுகிற்பாம்; மலமொன்றுமற பரமான்மரூபமாதலின் கலைகள்சூழ=அஞ்ஞானுபாதியாற் சூழப்பட்ட, சிவரூபமாதலின், நாகர்தொழுநல்ல, நோக்கு = சுவாநுபவத்தை முக்கியப் பிரமாணமாகவுடைய, பதம் = தற்பரமான வுயர்பதத்தை, பெற்றேன், ஆல் அசை. கலாகலங்கரகிதம் = அவித்யாசம்பந்தரகிதம். (95)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இம்முறையே ஸ்ரீ புசுண்டர் தமது ஆன்மவிஞ்ஞானத்தைப் பிராணசிந்தையானே நிரூபித்துச் சிரஞ்சீவிதகாரணங்களை யுரைத்தல்:—எனது, சுகம் என்பன.

எனதுமனம் பிராணசமா தியினுற்சொன்ன விவ்வொழுங்கா னின்மலதத்துவத்தேயென்றுந், தனியிடர்தீர் நெறியிதுவா மிந்தநோக்கந் தனைப்பற்றிச் சென்றதுமேல் வருவதெண்ணே, னனிநிகழ்கா லத்தியல்பி னண்ணுகின்றே னுனிது பெற் றேன்பெறுவ திதுவென்றெண்ணேன், முனிவரனே யதனுலே நோயொன் றின்றி முடிவறுநீ டுயிர்பெற்றேன் மோகமற்றேன்.

சுகமுற்றோர் பாலிருக்கிற் சுகமேசேர்வன் றுயருற்றோர் பாலிருக்கிற் றுயரே சேர்வன், சகமுற்று நட்பாவே னுதலாலே தவமுறுநோ யற்றுவி ழைத்துவாழ்ந்தே, னுகவுற்ற வாபத்தி லசையேன்சற்று முயர்சம்பத் திற்சகத்தோர்க் குறுநட்பாவே, னகமற்ற வதனுலே நோயொன்றில்லா வாருயிர்பெற் றிருக்கின்றே னைய வென்றுன்.

(ப - ரை.) எனது மனம் = என்னுடைய வுள்ளம், பிராணசமாதியினுல் = பிராணவடக்கமாஞ் சமாதியினுலே, சொன்ன = கூறிய, இவ்வொழுங்கால் = இம்முறையே, நின்மலதத்துவத்தேயென்றும் = எப்போதும் அமலமான தத்துவத்தில், தனியிடர்தீர் = ஒப்பற்ற விசிராந்தியடைந்த, நெறியிதுவாம் = மார்க்கம் இதுவாம், இந்த நோக்கந்தனைப் பற்றி = இந்த திருஷ்டியைப் பிடித்து, சென்றது மேல்வருவது எண்ணேன் = போனவற்றையும் இனிவருவனவற்றையும் சிந்தியேன், நனி நிகழ்காலத்தியல்பின் நண்ணுகின்றேன் நான் = நன்ருக வர்த்தமானகாலத் தேற்றவற்றைக்கொண்டு யான் விவகரிக்கின்றேன், இதுபெற்றேன் பெறுவதிது என்றெண்ணேன் = இதனையடைந்தேன் என்றுவது

இதனை யடைவேன் என்றாவது சிந்திப்பதே கிடையாது, முனிவரனே யதனாலே = ஹே முனிசுரரே அக்காரணத்தாலே, நோய் ஒன்றின்றி = யாதொரு வியாதியுமில்லாமல், முடிவறு நீடுயிர்பெற்றேன் மோகமற்றேன் = அநந்தமான வாழ்நாளை யடைந்துள்ளேன் மயக்கமுமில்லேன்.

சுகமுற்றோர்பாலிருக்கில் = ஆனந்தமடைந்தவ ரிடத்திருக்கினே, சுகமேசேர்வன் = ஆனந்தத்தையேயடைவன், துயருற்றோர்பாலிருக்கில் துன்பமுற்றவரிடத்திருப்பனாயின், துயரேசேர்வன் = துன்பமேயடைந்திருப்பன், சகமுற்றுநட்பாவேன் = உலகமுழுவதும் நேயனாகவேயிருப்பேன், ஆதலாலே = ஆகையினாலே, தவறுறுநோயற்றுவிதழைத்து வாழ்ந்தேன் = குற்றமுற்ற வியாதியற்று வாழ்நாள்விருத்தியாகி வாழ்ந்துகொண்டிருக்கின்றேன், உகவுற்ற ஆபத்திலசையேன் = சஞ்சலப்படுத்தும் ஆபத்துவந்தபோது சஞ்சலப்படமாட்டேன், சற்றும் = சிறிதும், உயர்சம்பத்தில் = மேலான சம்பத்துவந்தபோது, சகத்தோர்க்கு = உலகத்தவர்க்கு, உறுநட்பாவேன் = பொருந்திய உறவினனாவேன், அகமற்றவதனாலே நோயொன்றில்லா வாருயிர்பெற்றிருக்கின்றேன் ஐயவென்றான் = யானென்பது கழிந்ததன்மையினாலே யாதொரு வியாதியுமில்லாத வாழ்நாளைப்பெற்று வாழ்கின்றேன் முனிவரரசேயென் றப்புசுண்டர் கூறினர்.

(ஸ்ரீ - வீர.) இந்தச்சித்தவிசிராந்தியானது என்னாற் பிராணசமாதியினாலே இயம்பிய இம்முறையானே சுயம் நிர்மல ஆன்மாவின்கண் ணடையப்பெற்றுளதாம்; ஹே மகாமுனிவரே! இந்தத்திருஷ்டியைப் பற்றிக்கொண்டு, இருந்துவாழ்கின்றேன், சுமேருவசைந்தபோதினும், கானிமிடமேனும் அசைவதே கிடையாது; நிச்சலமாயிருக்கின்றேன் என்பதாயிற்று சென்றதையேனும் வருவதையேனும் ஒருபோதும் சிந்திப்பதேயில்லை, ஈண்டு நித்தியம் நிகழும் இயற்கைமேய சாக்ஷிதிருஷ்டியை நன்மனத்தினாலே இனிதுபற்றிச் சுகமாக விருக்கின்றேன். இது என்னால் இன்றடைவுற்றது, இவ்வழகியவஸ்துவைத் தேடியடைவேன், என்னுஞ் சிந்தையானது எனக்கில்லையாகலின் அநாமயமாகச் சிரஞ்சீவிக்கின்றேன்; எங்கும் எதனையும் எந்தஞான்றும் இகழேன் புகழேன் என்னது பிறாது தொழிலதேனும், ஆதலிற் சுபமாயமர்ந்திடுகின்றேன்; சுபமடைந்திடின் மகிழமாட்டேன் அசுபமடைந்திடிற் றுயருறமாட்டேன், எனது மனதோ சமமாம் நித்தியம், ஆதலின் யான் சுயம்வாழ்ந்தமர்கின்றேன்; எக்காலத்திலுமே எல்லாவற்றையுமே, சர்வ துவைதபாதலக்ஷணம் வாய்ந்த தியாகத்தைப்பற்றி, ஜீவன அபிநிவேசமே முதலிய எவற்றையும் தியாகித்துள்ளேனாதலின் சுபமாக வாழ்கின்றேன்; சாபலம் அடியோடுபோய், சோகமியாவுமே தீர்ந்து, சமாகிதனாகிச் சொஸ்தமாய் எனது மனது சாந்தியடைந்திருக்கின்றது, அதனாலனாமயமா யிருக்கின்றேன்; இவன் பந்து இவன் அன்னியன், இது என்னுடையது இது அன்னியனுடையது, என்னுங் கற்பனையை யறிந்திலேனாதலின் நோயின்றி வாழுகின்றேன்; எப்போதும் ஒருமையையுடைய மனத்தனாகி ஆசாபாசத்தா லழுங்கலுற்ற சித்தவிருத்தியானது பிரவேசத்திற்கு உன்னிருதயத்தி லிடங்கொடுப்பதேயில்லை யாகலின் அநாமயனாகவாழுகின்றேன்; இன்பமுற்றவரோடு இயைவனாயின் இன்பமேயுறுவேன், துன்பமுற்றவரோடு துதைவனாயின் துன்பமே துய்ப்பேன், யாவருக்குமே பிரியமித்திரனாயிருப்பேன், அதனாற் சீவிக்கின்றேனனாமயமாம்; ஆபத்துற்றபோதசலதீரனாகியிருப்பேன், சம்பத்துற்றபோது ஜகன்மித்திரனாவேன், கலாதிகளினவேபோலும் வித்தாதிகளின் விருத்திகளாய பாவங்களிலும், அவற்றின் க்ஷயங்களாகிய அபாவங்களிலும் ஒருசிறிதும் அபிநிவேசஞ் செய்யேன், அதனால் நோய் ஒன்றுமின்றியின்புற்றினிதுவாழ்கின்றேன்.

(ச.) சொன்ன = முற்கூறிய, இவ்வொழுங்கால் = இந்தக்கிரமத்தால், நின்மலதத்துவத்தே = சித்துருபமான ஆன்மாவில், எனது மனம் தனியிடர்தீர் = விசிராந்தியடைந்தெறியிதுவாம், சென்றது மேல்வருவதும், எண்ணேன் = ஒருகாலத்துஞ் சிந்தியேன், நிகழ் காலத்திந்த நோக்கந்தனைப்பற்றி இயல்பினண்ணுகின்றேன் = சொரூபமாகவே யிருக்கின்றேன். நெடுங்கால முயிர்வாழ்தற் கேதுவான தனது சித்தவிருத்திப் பிரகாரத்தையே விரித்துணர்த்திடவுரைத்தல்:—இதுபெற்றேன் என்றும், இது = இந்நூதனமான பொருள், பெறுவது பெறவேண்டுவது என்றும் எண்ணேன். ஆபத்தில் = ஆபத்துவந்தகாலத்தில், சற்றுமசையேன் = அசலம்போற்றீரனுயிருப்பேன், சம்பத்தில் = சம்பத்துவந்தகாலத்தில், சகத்தோர்க்கு, நட்பாவேன், தனது சம்பத்தால் ஜகத்துக்குபகாரஞ் செய்தலின், அகமற்றவதனுலே = இவைபாவரூபங்கள் இவை அபாவரூபங்கள் எனப் பதார்த்தத்திற் பொருந்தும் பேதாநுசந்தானமின்மையின், என்றான். (1) தன்னையும் பிறரையும் ஒரிடத்தும் ஒன்றும் ஒருபோதும் துதியேன், நிந்தியேன் அதனுலே நிராமயனுய்ச் சீவிக்கின்றேன்; (2) சுபமுறின் மகிழாது, அசுபமுறிற் சோராது, எனதுமனம் நித்தியஞ்சமமாம், அதனுல் நிராமயனுய்ச் சீவிக்கின்றேன்; (3) எப்போதும், உயர்வான வைராக்கியத்தையடைந்து என்னுற் சீவிதாதியனைத்தும் விடப்பட்டது அதனுல்-கின்றேன்; (4) இவன் உறவு, இவன் பகைவன், இவன் எனையுடையவன், இவன் அன்னியனையுடையவன், எனவறியேன், அதனுல்—நிற்கின்றேன்; (5) நிகழ்காலத்தில் இஷ்டவஸ்துதரிசனத்தில் வரும் பிரியமற்று நஷ்டவஸ்துவிடயத்திற் சோகமின்றி மேல்வரும் இஷ்டவஸ்துவிலும் வாஞ்சையறும் எனதுமனம் சாந்தமாம் அதனுல்—நிற்கின்றேன் (6) சமாதியுற்றிருத்தலின் ஆசாபாசவசமான சித்தவிருத்திக்கு மனதைப் பரிசிக்கக்கொண்டேன் அதனுல்—நிற்கின்றேன் = நிராமயனுய்ச் சீவித்திருக்கின்றேன்; என்னும் ஆறுசுலோகார்த்தமும் முற்கவியின் மோகமற்றேன் என்னும் பதத்தில் அடக்கிக்கூறினுரென்று கொள்க. சுந்தரம் = மிகவும் அற்புதமானவஸ்து குதூகலமிரம்மிய திருஷ்டியிற் சாலனமெனக் கூறுவர் பெரியோர். (96-97)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தாங் கூறிவந்ததை ஸ்ரீ புசுண்டர் உபசங்கரித்தலும் ஸ்ரீ வசிஷ்ட பகவான் ஆச்சரியப்பட்டு ஆசீர்வதித்து ஆங்குநின்றேகவிடைபெறுதலும் வருணித்தல்:— உன்னருளென்பது.

உன்னருளா லிவ்வாறு முடிவில்வாளு ளுற்றேன் மெய்ஞ்ஞானமு நன்
குற்றேனென்ற, வன்புசுண்ட னைப்பகவ னேநீசொன்ன வாத்துமதத் துவத்
தன்மை யழகிதம்மா, வின்னதறப் புதிதுசெவிக் கணியாங்கேட்டா லியார்வியவார்
நன்னலமே பெறுதியென்று, மன்னுகதி ருச்சியுறு காலமீதால் வானுலகம் புகுவனீ
வாழ்தியென்றே.

(ப - ரை.) உன்னருளால் = தங்களுடைய கிருபையால், இவ்வாறு = கூறியபிரகாரம், முடிவில்வாளுள் = அநந்தமாயுளை, உற்றேன் = அடைந்துள்ளேன், மெய்ஞ்ஞானமும் நன்குற்றேன் = நன்ருக அடைந்தேன் தத்துவஞானத்தையும், என்ற = எனக்கூறிய, அன்னபுசுண்டனை = அப்பெரிய புசுண்டமுனிவரை, நோக்கி பகவனேநீ = ஹே பகவனே தாங்கள்! சொன்ன = உரைத்த, ஆத்துமதத்துவத்தன்மை யழகிதம்மா = ஆன்மசரித்திரத்தன்மையானது மிகவுஞ் சுந்தரமாயிருக்கிறது அகோ ஆச்சரியம், இன்னது அறப் புதிது = இத்தகையது அத்தியந்தம் அற்புதமானது, செவிக்கணியாம் = காதுக்கலங்காரமாம், கேட்டால் யார்வியவார் = சிரவணித்தால் யாவரேதாம் புகழ்ந்துகொண்டாடார், நன்

னலமே பெறுதியென்றும் = பரமகல்யாணமே யடைவாயாகவென்றும், மன்னுகதிர் = ஆகாயத்திற் பொருந்திய சூரியன், உச்சியுறுகாலமீதால் = உச்சஸ்தானத்தை யடையும்போதிதாம், வானுலகம் புகுவன் = சுவர்க்கலோகம் செல்கின்றேன், நீ வாழ்தியன்றே = தாங்கள் சுகமாக வாழக்கடவீர்களாக. ஆல் அன்று ஏ அசைகள்.

(ஸ்ரீ - வீர.) ஹே பிரஹ்மசொரூபரே! ஞானபாரகரே! இது தங்கள்பாற் கூறப்பெற்றது தங்களுடைய ஆஞ்ஞைமாத்திர சித்தியின்பொருட்டு நிர்லஜ்ஜையாக, எவ்வகையிற் சிரஞ்சீவிக்கின்றேனோ, உண்மையாக இக்காரண காரியசங்காதத்தில் எதுவாக இருக்கின்றேனோ அதுவுங் கூறப்பெற்றது. ஸ்ரீ வசிஷ்டபகவான்கூறல்:—அகோ ஆச்சரியம்! பகவந்! தங்களாற் கூறப்பெற்றது மிகவும் அற்புதமாக இருக்கின்றது, கர்ணபூஷணமாய தங்களுடைய விருத்தாந்தம் இனிது இயம்பப்பெற்றது பரமவிஸ்மயகாரணமாக விருந்தது; தன்னியர்களே யவர்களாவர்கள், எவர்கள், இரண்டாவது பிரஹ்மாவைப்போல் அத்தியந்தம் சிரஞ்சீவியாய், மகாத்மாவாய் இலங்குந்தங்களை யினிது தரிசித்தார்களோ, இன்று உள்ளபடியே கண்கள் களிப்படைந்தன, செவிகள் குளிர்ந்தன, அகண்டிதமாய தங்கள் விருத்தாந் தங்கள் முழுவதையுமே நன்கு கூறினீர்கள், மதியானது உள்ளபடியே பாவனமடைந்தது. ஆகையால் தங்களுக்குக் கல்யாணம் உண்டாகுக, தங்களுடைய மங்களமாய குகைக்குள்ளே பிரவேசிக்கலாம், மத்தியானத்திற் செய்யவேண்டிய கருமகாலமிது, எனக்காதலின் சப்த இருஷிலோகமாகிய எனது கிருகத்தை நோக்கிச் செல்கின்றேன்; (சுரமந்திரமென்றது தமது வீட்டை யியம்பியதாம்) என்றதைக்கேட்ட ஸ்ரீ புசுண்டர் மீண்டும் என்னைப் பரமசிவனைப்போல வெகுவாகப் பூசித்தனர். (98)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உத்திரவுபெற்றுச் சென்றது முதலியவற்றை யுரைத்துக் கதையை யுபசங்கரித்தல்:—விட்ட என்றது.

**விட்டவணின் றெழுந்துநான் விண்மேற்போக விடாமலொரு யோசனைவிண் மீதுவந்தான், மட்டறிஞ நிற்றியெனத் தடுத்தேன் வன்பால் வாலறிஞர்தமைப் பிரிதல் வருத்தமன்றோ, சிட்டனைவிட் டகன்றனன்முன் னுகத்தேமீண்டுந் தரிசித்தே னிரண்டாம்பின் செறியுகத்திற், கட்டவிழ்தா ரணிமார்பா பிறந்தாய்நீயிக் கதைபுசுண்ட வழியெனநீ கருதிக்கொள்வாய்.**

(ப - ரை.) விட்டவணின்று எழுந்து = அவ்விடமிருந்து அவரைவிட்டுக்கிளம்பி, நான் = யான், விண்மேற்போக = ஆகாயத்திற் செல்ல, விடாமலொருயோசனை விண்மீது வந்தான் = என்னைவிட்டு நீங்காமலே ஒருயோசனைதூரபரியந்தம் ஆகாயத்தின்மேற் கூடவே வந்தார், மட்டறிஞ நிற்றியென = பேர்தும் சர்வஞ்ஞசிகாமணியே நில்லுங்கள் என்று, தடுத்தேன் = தடைசெய்தேன், வன்பால் = வலிதில், வாலறிஞர்தமைப்பிரிதல் = பேரறிஞர்களைப் பிரிந்திருத்தல், வருத்தமன்றோ = கஷ்டமல்லவோ, சிட்டனைவிட்டகன்றனன் முன்னுகத்தே = அம்முனிவரைவிடுத்து வந்தனன் பூர்வயுகத்தே, மீண்டுந்தரிசித்தேன் = மறுபடியும் தரிசனஞ்செய்தேன், இரண்டாம்பின் செறியுகத்தே = இரண்டாவது பின்பு பொருந்தியயுகத்தில், கட்டவிழ்தாரணிமார்பா = பகைவரைவென்று வெற்றி மாலையைச்சூடும், அழகிய திருமார்பனே, பிறந்தாய் நீ = அவதரித்தாய் நீ, இக்கதை = இந்த உபாக்கியானம், புசுண்டவழியென நீ கருதிக்கொள்வாய் = புசுண்டமார்க்கமென்று நீ யெண்ணிக்கொள்ளுதி.

(ஸ்ரீ - வீர.) ஹே ககேந்திரரே! தொடர்ந்துவந்து எடுத்துக்கொண்ட சிரமம் போதும் போதும், என்று தடுத்துக்கொண்டே, ஆகாயத்திற்கிளம்பிப் பறவைபோற் சென்றனன்; ஆகாயத்தில் யோஜனமாத்திரமளவும், என்னைத் தொடர்ந்துகொண்டே புசுண்டர் வந்தனர், கரத்தாற்கரத்தைப் பிடித்து வலிதில் நிவிர்த்திதராயினர் புசுண்டமாமுனிவர்; கணப்போதிலேயே ககனமார்க்கத்தில் அதிருசியத்தன்மையை யானடைந்தபோது, அந்தவிகங்க இந்திரரும் திரும்பினர் சத்துக்களுடைய சங்கதியானது விடமுடியாததன்றோ. கூறிய புசுண்ட முனிவர் சங்கதியின்காலமுரைத்தல்: கிருதயுகத்தினுதியில் இருநூறுவருடங் கழிந்ததன் பின்னர் முன்னர், புசுண்டமுனிவரோடியான் சங்கதியை மேருகிரியின் சிகரத்துருமத்தில் அடைந்தேன்; இப்போது இராகவ! கிருதஞ்சென்று திரேதாவானது நிகழ்கின்றது; இத்திரேதாயுகத்தினுடைய மத்தியில் ஹே ரிபுமர்த்தனனே! நீ யவதரித்தாய், மறுபடியும் இக்கால் ஆண்டே சுமேருகிரியினுடைய மேற்பாகத்தில் அஷ்டமவருடத்தில் அவ்வாறே அஜரரூபவானாய் புசுண்டமுனிவர் சங்கதியை யடைந்தனன்யான்; உபசங்கரித்தல்:—இந்தப்பிரகாரம் விசித்திரமாயும் உத்தமோத்தமமாயும் உள்ள புசுண்டர் விருத்தாந்தமானது இனி துரைக்கப்பெற்றது, இதனை யினிநீகேட்டுள்ளே நன்றாக ஆராய்ந்துபார்த்து யாதுபொருத்தமோ அதன்வழி யொழுகுவாயாக.

(ச.) ஸ்ரீ வசிட்டர். முன்னுகத்தே = முன்பு கிருதயுகத்தினதாதியில், மீண்டும், இருநூறு வருடத்தின்பின் மேருசிருங்கத்திற் கற்பகவிருக்ஷத்தில், தரிசித்தேன், பின்னிரண்டாய்ச் செறியுகத்தில் = திரேதாயுகத்தின் மத்தியில், கட்டவிழ்தார் மணிமார்பா = சத்துருசங்காரியான விராமா, நீ பிறந்தாய், மீட்டெட்டாம் வருடத்திலும் அவ்விடத்து அப்படியே தரிசித்ததாகவுந் தோற்றுகின்றது, இக்கதைவழி = முற்கூறிய கதையினும் புசுண்டன்வழி = புசுண்டவிருத்தாந்தத்தினும் யாதுகூறியதாய்த் தோற்றுகின்றதோ அதனை யநுசரிப்பாயென்பது பொருள், தொடர்ந்துவருங் கிலேசத்தால் அடைந்ததுபோதும், இனித்தொடரவேண்டாம்.

நிர்வாணப்பிரகரணத்தில் ஸ்ரீ புசுண்டர்கதை முற்றியது.

---

## தேவபூசை கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) வர்ணிதப்புசுண்ட ஆக்கியாயிகையின் பிரகிருதவுபதேசத்தைக் காண்பித்துவிட்டு இப்போது அதனுலெய்திய பயனைக்கொண்டு இதமுபதேசித்தல்:— தோற்றரவு என்பது.

(ச - அ - கை.) முன்பு பிராணவிருத்தி யநுசந்தானத்தால்வருஞ் சித்தவிசிராந்தியால் நிர்வாணங் கூறப்பட்டது, இப்போது அதுபோலவே தேவபூசையாலுஞ் சித்தவிசிராந்தி லக்ஷணமான நிர்வாணமுண்டாமெனப்படுகின்றது, அதிற் றேகாபிமானஞ் சகல நிர்வாணோபாயப் பிரதிபந்தகமாதலின் அதன் நிவிர்த்திக்காகக் கொஞ்சமித முபதேசிக்கின்றூர், தோற்றரவென்பது.

தோற்றரவு மாத்திரமே யீதிப்போ திப்படியே தோற்றுகின்ற
தூற்றமுற விவனெனென் றுடலினை யுள்ளுடனினைத லுற்றபொய்யே
யேற்றநரம் பெலும்பிறை வியன்றவுட லினைநானெனென் றெண்ணுமோக
மாற்றுதியாற் சங்கற்பத் தாலியன்றவடிவுக்கோர் மட்டுண்டாமோ.

(ப - ரை.) தோற்றரவுமாத்திரமேயீது = பிரதீதிமாத்திரமே இது; இப்போதிப்படியே தோற்றுகின்றது = இக்காலிவ்வாறே பிரதீதியாகின்றது, ஊற்றமுற இவனானென்றுடலினை யுள்ளுறநினைதல் உற்றபொய்யே = மிகவும் அழுத்தமாக இன்னன் இனியான் யான் என்பதாகத் தேகத்தையுள்ளே யெண்ணுதல் அத்தியந்தம் மித்தையேயாம், ஏற்ற = கருமசம்பத்தாய, நரம்பு எலும்பினுலியன்ற வுடலினை நானென்றெண்ணு மோகமாற்றுதி = நரம்பு என்புகளேயாகக் கோர்த்துக் கட்டப்பட்ட தேகத்தினை அகமென்று எண்ணும் மயக்கத்தை யகற்றுதி, சங்கற்பத்தாலியன்ற வடிவுக்கோர் மட்டுண்டாமோ = நினைவுமாத்திரத்தினுலுண்டாய வடிவங்கட்கு ஓர் அளவுளதாமோ. ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) தேகமானது தேகதிருஷ்டியில் உண்மையாக நிகழினும் பிரித்துநோக்கிடில் இல்லாததேயாம், வெறும் ஆபாசமாத்திரமேயாகுமிது இவ்வாறே யிப்போது தோற்றுகின்றது; ஆபாசமாத்திரத்தன்மையை உரைத்துக்கொண்டு அதனதபிமானத்தை விடுபடுத்தல்:—இவன் என்பதாதி. இவனென்றும் யானென்றும் உள்ளே எண்ணிக்கொண்டேயிருப்பதாமிது, முதலிற் கவர்ந்த தேகாகாரமாயமனமேதான் சமஸ்காரதிடப்பேற்றினுலே மீளமீளவும் தேகாகாரமாகத் திதிபெறுகின்றது; மாம்ச அஸ்திமய நிர்மாணதேகமானது யானெனவருவது பெருமயலேயாம் விடத்தக்கதேயாம்; சங்கற்ப நிர்மாணதேகங்கள் கோடானுகோடி யுண்டாம்.

(ச.) ஸ்ரீ வசிட்டர், ஈதுடல் = இச்சரீரம், உண்மையாக, தோற்றரவுமாத்திரம் = பிரதீதிமாத்திரசித்தமாயினும், இப்போது = அவிசாரதசையில், இப்படி இவனுனென்றும் தனக்குப் பேதத்தாலும், அபேதத்தாலும் அபிமானவிடயமாய், உள் = அந்தக்கரணத்தில், தோற்றுகின்றது, உறநினைதல் = இதனை மீண்டு விசாரிக்கும்போது கற்பிதமாதலின், பொய்யே = மித்தையேயாம், இயன்ற = நிர்மாணமான, மோகம் = விப்பிரமத்தை, மாற்றுதி, இவ்விதமாய்ச் சங்கற்பத்தாலியன்ற = சங்கற்பகற்பிதமான, வடிவுக்கு = தேகங்களுக்கு, ஓர்மட்டுண்டாமோ, அநேகமாயிரங்களாயிருத்தலின் என்பது பொருள். (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சங்கற்ப நிர்மாண தேகங்களையே உதாகரித்து அவற்றிற்கசத்தியத்தன்மையைக் காண்பித்தல்:—கனவு என்பது.

(ச - அ - கை.) தேகங்களுக்கு அசத்தியத்தன்மையே கூறல்:—

கனவுடலாய்த் திசைகளிற்போய்ச் சுகவணையிற் கண்டுயின்றுங் கலக்கமுற்று
யுனதெனுமவ் வுடலெங்கே திருக்கின்ற திராமனே யுணர்ந்துநோக்காய்
நனவின்மனோ ராச்சியத்தி லெவ்வுடலான் மேருவினு நாகர்நாட்டுந்
தினமுமருண் டுழலுதிநீ யுனதெனுமவ் வுடலெங்கே சேர்ந்ததோதான்.

(ப - ரை.) கனவுடலாய்த் திசைகளிற்போய் = சொப்பனசரீரமாய்த் திக்குகளிற் சென்று, சுகவணையிற் கண்டுயின்றும் = இன்பமான சய்யையிற் றூங்கிக்கொண்டிருந்தும், கலக்கமுற்றாய் = க்ஷோபமடைந்தாய், உனதெனுமவ்வுடலெங்கே = உனதாயமர்ந்த அந்தச் சரீரமெங்கே, இருக்கின்றது = உளதாகின்றது, இராமனே = இராகவனே, உணர்ந்து நோக்காய் = நன்காராய்ந்து பார்ப்பாய், நனவின் மனோராச்சியத்தில் = ஜாக்கிரத்தில் மனோராச்சியஞ் செய்யும்போது, எவ்வுடலான் மேருவினும் நாகர்நாட்டும் தினமு மருண்டுழலுதிநீ = எத்தேகத்தால் சுமேருபர்வதத்திலும் சுவர்க்கலோகத்திலும் நாடோறும் மரு

ஞற்று அலைகின்றாய் நீ, உனதெனும் அவ்வுடலெங்கே = உன்னுடையதென்னும் அந்தச் சரீரமெங்கே சேர்ந்ததோதான் = அடைவுற்றதோதான்.

(ஸ்ரீ - வீர.) சுகமாய படுக்கையி லிருப்பவனுகி, எச்சொப்பனதேகத்தால், திக்குத் தடங்களைக்குறித்துச் சுற்றிச் சுற்றிச் சுழலுகின்றாய், ஹே இராகவ! அத்தேக முனக்கு யாண்டிருந்ததோ! நனவின்கண்ணே மநோராச்சியத்தில் எதனுற் சுவர்க்கபுராந்தரத்தும் மேருவின்மாட்டும் உழலுகின்றனையே அத்தேகம் உனக்கு எங்கேயிருந்தது, ஜாகராயாம் என்பதில் பெண்மை சாந்தசமாம், சொப்பனங்களிலும் எச்சொப்பன்முளதோ அதன்மாட்டு எதனுல் மகிதடங்களை யுத்தேசித்துச் சுழலுகின்றாயோ ஹே இராகவ! அத்தேக முனக் கெங்கேயிருந்தது ஆலோசித்துப்பார்.

(ச.) சுகவணையிற் கண்டுயில்பவனது திசைகளிற் சுழலுமேதுக்களான சொப்பனதேகங் களுக்கு அசத்தியத்தன்மை உன்னுலு மங்கீகரிக்கப்பட்டதாமென்பது பொருள். நனவில்= ஜாக்கிரத்தசையிலும், மனோரதவழியாலோடுஞ் சித்தம், தேகத்தைமறந்து அப்பரவசமாவது மனோராச்சியமாம், அதிலும் மித்தையான தேகத்தாலே தேசாந்தரப் பிரமணமாமென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேகாதிகளில், கனுப்பொருள்களினும் வேற்றுமைமதி தோற் றல் யாதுளதோ அது வெகுகாலந் தொடர்ந்துவருதலினுலேயாம் அன்றி யுண்மையாலாவது மனோகற்பனையன்மையாலாவது ஏற்பட்டதன்றும், அதனுனே இதற்குத் தத்துவஞானத் தானே பாத்தியத்தன்மையாதல் கூடும், என்னுங் கருத்தாலுரைத்தல்:—நீண்டவென்பது.

நீண்டகனு நீண்டமன விராச்சியந்தா னீண்டமன மயக்கவென்றே
யீண்டுபவந்தனை நினைவாய் தோற்றரவு மாத்திரமா மிந்தஞாலங்
காண்டகவுண் டன்றிலது மன்றென்றே வேற்றெண்ணங் களைதருளே
யாண்டகையே நன்றான காட்சியென மெய்ஞ்ஞான ரறைவரன்றே.

(ப - ரை.) நீண்டகனு = தீர்க்கசொப்பனம், நீண்டமனவிராச்சியந்தான் = தீர்க்க மநோராச்சியந்தான், நீண்ட மனமயக்கமென்றே = தீர்க்கமனப்பிராந்தியென்பதாகவே, ஈண்டுபவந்தனை நினைவாய் = இங்குத்தோற்றும் சம்சாரத்தையெண்ணுவாய், தோற்றரவு மாத்திரமே யிந்தஞாலம் = ஆபாசமாத்திரமேயாகும் இந்தப் பிரபஞ்சம், காண்டகவுண் டன்றிலதுமன்றென்றே வேற்றெண்ணங்களைதல்தானே = காணத்தக்கதாகச் சத்துமல்ல அசத்துமல்ல என்பதாக அன்னியவிவகாரம் அறுதலையே, ஆண்டகையே=ஹே புருஷோத் தம! நன்றான காட்சியென மெய்ஞ்ஞானர் அறைவர் = சம்யக்காலோகனமென உண்மை யுணர்ந்தவர்கள் கூறுவார்கள், அன்று, ஏ, அசைகள்.

(ஸ்ரீ - வீர.) அகந்தை மமதை முதலிய யாவுமே நினைவினது விலாசமேயாம், இவ்வியா வற்றையும் நீட்சியாய கனவென்றேயறிதி, அல்லது தீர்க்கமாய சித்தவிப்பிரமமென்றே யறிதி, அல்லது தீர்க்கமாய சித்தராஜ்யமென்றேனும் அறிதி, இச்சம்சாரத்தை ஹே இரகுநந் தன! அற்றேல், ஈசுவரன் இத்தேகத்தை யுண்டாக்குபவன் என்பது சுருதிபுராண ஆக்கியா யிகைப்பிரசித்தமாம், ஜீவனே தன்கரும உபயோகப்பொருட்டு இதனை யுண்டாக்கிவைப்பவ னும், அவர்களிருவரும் எங்ஙனம் அகற்றப்பெறுவர்; எனின் ஆண்டுக்கூறல்:—தோற்ற வென்பதாதி. ஆபாசமாத்திரமாகவேயிது இவ்வாறுகவே = நிர்மாதாவில்லாமலே தோற்று கின்றது; நீரில் நிலவின்றோற்றம் நிர்மாதாவையுவாவுவதில்லையல்லவா, திமிரசம்பந்தமாக்கூற்

பிக்கப்பெற்ற இரண்டாவது சந்திரவிப்பிரமம் அவ்வாறில்லையல்லவா, அதுபோலும் என்ப தாம்; ஈசுவரனது நிர்மாத்ருத்தகைமையோ சிரெனதம் முக்கியமல்லவாம், புருடநிசுவசித திருஷ்டாந்ததர்சனத்தான்; ஜீவனதுண்டாக்கிவைக்குந்தன்மையும் அவ்வாறேயாம், அபுத்தி பூர்வத்தன்மையானும், அதிஷ்டத்தை யுண்டாக்கிவைத்தல்கூடாமையானும் என்க. ஆயின் ஆத்மா எவ்வுபாயத்தானே தூயதாம் எனின் அதனைக்கேட்டி! சம்யக்காலோகனமாத்திரத் தானே ஆத்மா சுத்தியையடையும், மீண்டும் அசுத்தியை அடையுமோவெனினடையாதாம், மலத்தை மறுபடியும் கவராதாம், காஞ்சனம் தாமிரத்தன்மையையேபோலும், இயற்கை யாகவே காஞ்சனம் தாமிரத்தன்மையதாக மயக்கத்தாற் கவரப்பெற்றதாம், தாபாதியானே சொரூப அபிவியக்தியாகவே, மறுபடியும், தாமிரத்தன்மையேபோலு மென்பதாம்; இதற் குத் தரிசனமாத்திரத்தானே சுத்தியெங்ஙனமாம் எனின்? திருசியமலத்திற்கு ஆபாசமாத்தி ரத்தன்மையுண்மையின் எனல்:—தோற்றரவென்பதாதி. ஆபாசமாத்திரமேயிதுவாம், இம் மூவுலகும் சத்துமல்ல அசத்துமல்லவாம்; இவ்வேதுவினாலே சம்யக்காலோகனமே அன்னிய கலனையின் நியாகமாகியநிவிருத்தியாம்; என்றறிவர். ஆயின்சம்யக்கீக்ஷணமென்பது எத் தகையதாமெனின், உரைப்பாம், மரணம் ஜீவிதம் சொர்க்கம் ஞானம் அஞ்ஞானமேதானுதல் யாவும் சிற்பிரகாசத்தை யொழிந்து தனித்து இல்லையாமென்னும் ஏகததன்மைச் சின்மாத் திரபரிசேடம் சம்யக்கீக்ஷணமாம், பலத்தானே சம்யக்கீக்ஷணமென்பது பொருளாம்.

(ச.) அலதலதென்று வருவித்தொட்டுக, நீண்டமனமயக்கம், நீலம் அம்பரம்போல் நெடுங்காலந்தொடரும் பிராந்தி, ஈண்டுபவந்தனை = இச்சமுசாரத்தை, இந்தஞாலம் = இச்சகத்திரயமும், உண்டன்று, கெடுவதாதலிற் சத்தன்று, இல்துமன்று, தோன்றுகின்றமை யின், அசத்துமன்று, ஆதலின், தோற்றரவுமாத்திரமே வாஸ்தவுமன்றாம், என்றே இதனது சங்கற்பத்தியாகமே நன்றான காட்சியென்பது பொருள். (3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தான்முக்தனாயினும் பந்துஜனங்களின் பந்தம் நிவிருத்தியாகாமை யின் அவர் தம் மரணாதிதரிசனஜன்னியதாபம் தடுக்கமுடியாததாகும், என்று அதற்குபாய மும், அஞ்ஞதைத்தசையின்கண்ணே தன்மரண ஆசங்கைத்தாபமும் இவ்வுபாயத்தானே அகற்றக்கூடும் என்னுங் கருத்தானே யுரைத்தல்:—தீரவென்பது.

தீரநா மெப்படியுஞ் செகக்கடவ மெனலறுதி தேகநாசஞ்
சாருநாள் வீணிலே பரதவிக்கு மாறென்னோ சகத்திலுள்ளோர்
வீரனே யெப்படியுஞ் செனித்தோர்க்குச் சிறிதுசுக மேவவற்றோ
சேருமோர் பொருள்களிலே செருக்குகின்ற செருக்கென்னோ செப்புவாயே.

(ப - ரை.) தீரநாமெப்படியும் செகக்கடவம் எனல் அறுதி = அவசியம் நாம் எவ்வா றேனும் செத்துப்போவோம் என்பது திண்ணம், தேகநாசஞ்சாருநாள் = சரீரநாசம் பொருந் தும்போது, வீணிலே = வாளாவே, பரிதவிக்குமாறென்னோ சகத்திலுள்ளோர் = பரிதாபப் படும்வகையென்னவோ உலகத்தில் உள்ளவர்கள், வீரனே = வெற்றிபொருந்திய வீர்யனே! எப்படியும் = எவ்வாறும், செனித்தோர்க்கு = உற்பத்தியானவர்கட்கு, சிறிதுசுகமேவ வற்றோ = அற்பசுபம் அடையத்தக்கதேயாகும், சேருமோர்பொருள்களிலே செருக்குகின்ற செருக்கென்னோ செப்புவாயே = லாபமுற்றவஸ்துக்களிலே மதமுறுகின்ற மதமென்னோ சொல்லுவாய்.

(ஸ்ரீ - வீர.) அவசியமேதான் எல்லாபந்துக்களுமே நசிக்கத்தக்கவர்களேயாவர்கள், எனப் பந்துவியோகங்களில் ஏன்வாளா பரிதாபத்தை யடையவேண்டும்; அவசியமேதான்

யானும் மரிக்கத்தக்கவனேயென்பது நிச்சயம்; எனத் தன்மரணத்தின் அடைவின்கண்ணேன் வீணுகப்பரிதாபப்படவேண்டும்; அவசியமாகவே யுண்டானவனுல் சிறிது நல்ல விபவாதிகள் அடையத்தக்கனவேயாம், என்று மகிழ்தற்குத்தான் அவசரம் எங்கேயுளதாம்; சோகமதமுறுதற்குத்தான் அவசரம் எங்கேயுளதாம்.

(ச.) மரணத்துக்குச் சநநத்தினு லெப்படி நிச்சயமாதலின் அதுவரும்போது பரிதவிப்பது வியர்த்தமென்பது பொருள். ஜனித்தோர்க்கு = ஜீவித்திருக்கும் புருடனுக்கு, சுகஞ்சிறிது = சிரேயசு, மேவவற்று, எனுநிச்சயத்தினுல், சேருமோர்பொருள்களில் = அர்த்தலாபங்களில், மதமுசிதமன்றென்பது பொருள். ஓ அசை. (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சர்வ அனுகதசன்மாத்திரதரிசனத்தில் உபாயத்தை யுரைத்தல்:—துன்னு என்பது.

துன்னுபொருள் களில்வேறு கூறொழித்துத் தோற்றாவு மாத்திரத்தே
மன்னுசம மாயுலகைக் காண்டியாற் றோற்றாவு மாத்திரந்தா
னுன்னுமனக் கண்ணுடிக் கழுக்காகு மாதலினு லுற்றதெல்லாம்
பின்னமற வேமாற்றித் தோற்றாவில் லாதவனுப் பெருமையோனே.

(ப - ரை.) துன்னுபொருள்களில் வேறுகூறொழித்து = பொருந்திய வஸ்துக்களில் அன்னியத்தோற்றம் களைந்து, தோற்றாவுமாத்திரத்தே மன்னு = ஆபாசமாத்திரத்தே பொருந்தாநின்ற, சமமாயுலகைக் காண்டியால்=சாமானியமாக இச்சகத்தைக் காண்பாயாக, தோற்றாவுமாத்திரந்தான் உன்னுமனக்கண்ணுடிக்கழுக்காகும்=ஆபாசமாத்திரந்தான் எண்ணும் உள்ள ஆதரிசத்திற்குக் களங்கமாகும், ஆதலினுல் = ஆகையினுல், உற்றதெல்லாம்= பொருந்தியயாவற்றையும், பின்னமறவே மாற்றி=பேதமற்றிடுமாறு தியாகஞ்செய்து, தோற்றாவில்லாதவனுப் பெருமையோனே = ஹே உத்தமோத்தமனே! நிராபாசன் ஆவாய். ஆல், அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) பஞ்சபூதங்களின் சமுதாய வடிவமாய கடபடாதிவிடயக் கூட்டத்தில் விசேஷ ஆகாரத்தை விட்டுவிட்டு ஹே அநகனே! ஆபாசமாத்திரசாமானியமாக விதனை யாலோகனஞ்செய்வாயாக; உள்ளத்தினது விசேஷகற்பனையினுலே உள்ளம் களங்கிதமாயது; ஆபாசமாத்திரத்தோடுகூடலே யதற்கு அழுக்காகும்; ஆதலின் அச்சன்மாத்திரரூப ஆபாசத்தையும் நன்குவிடுத்து = தனதான்மவியதிரேகபுத்தியினுலே தியாகித்து, நிராபாசத் திரிபுடிசூனியனுகப் பரிபூர்ணனுகவாழ்வாய்; சிதாகாசமயனுய்ச் சர்வகனுய் நித்தியனுய்ச் சர்வவர்ஜிதனுய்ச் சுகிப்பாயென்பதாம்.

(ச.) துன்னுபொருள்களில் = பதார்த்தவர்க்கசமுதாயரூபமான பிரபஞ்சத்தில், வேறுகூறு = பேதபுத்தியை ஒழித்து, சகலத்தினு நிறைந்திருக்குஞ் சற்சிற்பரதத்துவத்தை, காண்டி = அநுசந்தானஞ்செய்வாய் என்பது பொருள். தோற்றாவுமாத்திரந்தான் மனக்கண்ணுடிக் கழுக்காகும் ஆதலினுல், அத்தோற்றாவையும் அறவேமாற்றி நிர்விகற்பனுவாயென்றதாயிற்று. பாடபேதம்:—எக்காரணத்தானே ஆபாசமாத்திரமும் சித்தசம்பந்த தூஷிதமாமோ அக்காரணத்தானும் ஆபாசமாத்திரத்தையும் நன்குவிடுத்து, நிராபாசனுவாய்=நிருவிகற்பனுவாய். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இராகத்துவேடத்தை விடவேண்டியது அவசியமென்றும் அதனுனே யாவுங் கிட்டுமென்றும் விட்டவரைப் புகழ்ந்துவிடாதவரை யிகழ்தல்:—எவன் என்பது.

எவனுடைய மனப்புற்றி விராகமுனி வெனும்பணிக ளியக்கமில்லை
யவனெனுங் கற்பகதருவா லணுகாத தொன்றுண்டோ வறிவின்மிக்கோய்
கவனமற வறிவினன் மதத்தோராய்ப் பலகலைநூல் கல்விமிக்குத்
தவமறுகா மம்வெகுளி நிறைந்தோரே வேசரிபோற் றள்ளத்தக்கோர்.

(ப - ரை.) எவனுடைய மனப்புற்றில் = எம்மகானுடைய மனமாகிய பிலத்தில், இராகமுனிவெனும் பணிகள் = விருப்பு வெறுப்புகளாகிய சர்ப்பங்கள், இயக்கமில்லை = வசிப்பதில்லையோ, அவனெனுங் கற்பகதருவால் = அம்மகானாகிய கற்பகத்தருவினால், அணுகாதது ஒன்றுண்டோ = கிடையாததும் ஒன்றுளதோ, அறிவான்மிக்கோய் = மேதையின் மிகுந்தோய், கவனமறவறிவினன்மதத்தோராய் = வந்தகாரியத்தில் ஞாபகமின்றிப் பிராஞ்ஞராய்க் கர்வமுடையவராய், பலகலைநூல் கல்விமிக்கு = பலசாஸ்திரங்களின் வித்தை மிகுந்து, தவமறு காமம் வெகுளிநிறைந்தோரே = தவத்தைக்கெடுக்கும் காமம் கோபம் மிகுந்தவரே, வேசரிபோல் தள்ளத்தக்கோர் = கழுதைகள்போலத் தள்ளத்தக்கவர்களாவர்கள்.

(ஸ்ரீ - வீர.) இராகத்துவேடங்களாகிய சர்ப்பங்களிரண்டும் எவனது மனப்பிலத்துவாரத்தில் விலீனங்களாகாவோ அவனெனுங் கற்பகதருவினின்றும் கிடைக்கக்கூடாவஸ்துக்கள் எவையுமேயில்லை; எத்துர்லபபலமுங் கிடைக்கும் என்பதாம்; யாவர்தாம் பிராஞ்ஞரோ, சுவகியதரோ விகியதரோ விதத்தரோ சாஸ்திரசாலியரோ, மெத்தப் படித்தவர்களானபோதினும் இராகத்துவேஷமயரோ, அவரோ மனுடரேயாகிப் பிறந்திருப்பினும், அரணியத்தில் வெளியாய குள்ளநரிகளேயாவர்கள். அவர்கள் சீசீயென்று இகழத்தக்கவர்களேயாவர்கள்.

(ச.) இயக்கமில்லை = இராதோ, சர்வபுருடார்த்தசாதகமாதலின் அவ்னே கற்பகதருவாம், அந்தராகாதிரகிதமான புருடனால் உலகத்தில் எந்தச் சிரேயசுதான் பெறப்படாதென்றதாயிற்று; பலகலைநூல் கல்விமிக்கதனால் இளௌகிகவைதிகவிவகார நிபுணராயினும், அறிவினால் மதித்தோராய், அறிவுடையரியாங்களேயென அகங்காரத்தை யடைந்தவராய், காமம் வெகுளி நிறைந்தோரே, வேசரிபோல் = தூரத்திலிருந்து பாரஞ்சுமக்கும் வலியுடைமையின் வெகுவிலைபெறும் வேசரிக்கொப்பாவார், அவர் ஒன்றுங் கேட்கத்தக்கவரன்றென்பது பொருள். அவர் தீண்டத்தகாதவர் என்பது பாடபேதம். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணமே பரமார்த்தமாய ஆன்மதத்துவத்தை நன்குபற்றி இச்சம்சாரத்தில் ஸ்திதியை யடையவேகூடாது என்பதன்கண் ணுபாயத்தையுரைத்தல்:— இப்பிறவியென்பது.

இப்பிறவி மயக்கமெனு மாழித்தேர் சங்கற்ப மென்னுமச்சேச்
செப்பமுறத் தடைசெய்தா லோடாது மனவச்சுச் சிறிதசைந்தாற்
றுப்புறவார் தடுத்தாலுந் தடைபடா தறிவுவலி சூக்கலூக
மெய்ப்புருட வருத்தங்க டமைக்கொண்டே தடைசெய்ய வேண்டுமன்றே.

(ப - ரை.) இப்பிறவிமயக்கமெனு மாழித்தேர் = இந்தப் பிராந்திரூப சம்சாரசக்கரத்தினது, சங்கற்பமென்னு மச்சைச் செப்பமுறத் தடைசெய்தால் = சங்கற்பமென்று சொல்லப்பட்ட நாபியை நன்றாகத்தடுத்துவிட்டால், ஓடாது = செல்லாது, மன அச்சுச் சிறிதசைந்தால் = மனமாகிய நாபியற்பம் சலனப்படின், துப்புற ஆர்தடுத்தாலும் = பயன் பெறுமாறு எவர் தடைசெய்தபோதினும், தடைபடாது = தடையாகமாட்டாது, அறிவுவலி

சுக்கஷூக மெய்ப்புருடவருத்தங்கள் தமைக்கொண்டே = பிரஞ்ஞைவலிமை அதிசுக்கும மானயுக்தி பரமபௌருஷம் என்பவற்றைக்கொண்டே, தடைசெய்யவேண்டும் = பிரதி பந்தகஞ்செய்யவேண்டும். அன்று வ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) இம்மயக்கவடிவமாய சம்சாரசக்கிரமானது சங்கற்பமாத்திரநாபியையுடைய தாகும், இதனை ஹே இரகுநந்தன ! தடையோடலினின்றுஞ் செய்யில் தடைபடும், இம் மனோநாபியானது இராகத்துவேஷாதியானே விக்ஷேபத்தை யடைந்திடில், இச்சம்சாரசக்கிர மானது பிரயத்தநங்கொண்டு தடுக்கப்படினும் அதிவேகமாகச் சென்றுகொண்டேயிருக்கும்; அப்பியாச வைராக்கிய தார்ட்டியவடிவ பரமபௌருஷம் பலம் பிரஞ்ஞைகள் கொண்டும், நல்லயுக்திகளினுலும் சம்சாரசக்கரத்தின் நாபியாய சித்தத்தையே நிரோதஞ் செய்ய வேண்டும்.

(ச.) இப்பிறவிமயக்கமென்னும், ஜனனமரணப்பிரவாகமே சுழலு மியல்பாதலின், ஆதித்தேராம், சங்கற்பமென்னும் = சங்கற்பான்மகமான சித்தமே, பிரவிருத்தி நிமித்த மாதலின், அதனது அச்சாம், ஆதலால், சித்தத்தை நிரோதிக்கிற் பிறவிமயக்கநிரோதமாம்; மனதசைந்தால், தடைபடாது பிறவிமயக்கமே பெருகும், பிரகாராந்தரத்தால் நிரோதித்தற் கரிதாம், கொண்டு = அநுசரித்து, சித்தத்தைத் தடைசெய்யவேண்டும் = நிரோதிக்க வேண்டும். (7)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விவேகாதியானே சம்பாதிக்கமுடியாதது எதுவுமேயில்லை, அதற்கு மனமேதடை அத்தடையையே முயற்சிசெய்து விலக்கவேண்டுமெனல்:—நல், மன, என்பன.

நல்லறிவு நற்புருடர் குணநன்னூல் மேவியநல் வருத்தத்தாலே
புல்லில்பொரு ளோரிடத்துங் கிடையாது மனமென்னும் பொல்லாவன்பே
யல்லறரும் பயஞ்செய்யுந் தீரதையாம் பெருஞ்செல்வ மனைத்துமாய்க்குங்
கொல்லுமிது தனைநீக்கியேதானு யஃதாகிக் குறைவுதீர்வாய்.

மனவன்பே யுறப்பிடித்தாற் சாத்திரத்தாற் சுற்றத்தான் மாற்றவொண்ணு
வினவுறுதே சிகராலு மீட்பரிதா மந்தப்பேய் விட்டுநீங்கிச்
சினமின்றி யிருக்குமெனின் முன்னுரைத்த வகைகளாற் றீர்க்கலாகுங்
கனபங்க மிலதாகிற் சிறுகுழியில் விலங்குதனைக் கரையுய்ப்பார்போல்.

(ப - ரை.) நல்லறிவு நற்புருடர் = நல்லுணர்வு சாதுபுருடர், குணநன்னூல்மேவிய = நல்லகுணம் நல்ல சாஸ்திரம் பொருந்திய, நல்வருத்தத்தாலே = பரமபுருஷப் பிரயத்தி னத்தினுலே, புல்லில்பொருள் = அடையமுடியாத பொருள், ஓரிடத்தும் கிடையாது = எவ்விடத்திலுமே கிடையாது, மனமென்னும் = உள்ளமென்று சொல்லப்பட்ட, பொல்லா வன்பேய் = கெடுதலா அடுதற்பிசாசு, அல்லல்தரும் = துன்பத்தையேசெய்யும், பயஞ்செய் யும் = அச்சத்தையீயும், தீரதையாம் பெருஞ்செல்வம் அனைத்தும் மாய்க்கும் = தைரிய மாகிய சர்வ ஐசுவரியத்தையும் கெடுக்கும், கொல்லுமிதுதனைநீக்கியே தானுய் = நாசஞ் செய்யும் இம்மனப்பேயைவிட்டு எவ்வத்துவாய்ச் சேடித்தாயோ, அஃதாகிக் குறைவுதீர் வாய் = அவ்வத்துவேயாகிக் கிருதகிருத்தியனுவாய்.

மனவன் பேயுறப்பிடித்தால் = உள்ளமாகிய பலமான இயக்கன் நன்ருகப் பிடித்துக் கொண்டால், சாத்திரத்தால் சுற்றத்தால் மாற்ற ஒண்ணு = நூல்களினுலும் உறவினர்களி

னாலும் மாற்றமுடியாதாம், வினவுறுதேசிகராலும் மீட்பரிதாம் = உபதேசிக்கப்பட்ட ஆசாரியர்களாலும் திருப்பமுடியாதாம், அந்தப்பேய்விட்டு நீங்கிச் சினமின்றியிருக்குமெனில் = அவ்வேதாளம் விட்டகன்றுப் பரமசாந்தமா யிருக்குமாயின், முன்னுரைத்தவகைகளால் தீர்க்கலாகும் = முன்மொழிந்த பிரகாரங்களால் அகற்றமுடியும், கனபங்கமிலதாகில் சிறு குழியில் = அதிகசேறு இல்லாமலிருப்பின் அற்பக்குட்டையினின்றும், விலங்குதனை கரையுய்ப்பார்போல் = மிருகத்தைத் தீரத்தில் ஏற்றுவார்போலும்.

(ஸ்ரீ-வீர.) பிரஞ்ஞாசௌஜன்யத்தோடுற்ற சாஸ்திரத்தோடுகூடிய பௌருஷத்தானே யாதடைய முடியாதோ அது ஓரிடத்திலும் இலதாகும், பாலபோதோப கற்பிதமாய தெய்வ ஏகபரத்தன்மையைவிட்டுத் தனது முயற்சியையே கைக்கொண்டு சித்தத்தை முதலில் நிறுத்தவேண்டும், இச்சூனியதேகக்கிருகத்தின்கண் மனப்பேயானது உட்கார்ந்துகொண்டிருக்கின்றது, ஜனனமரணத்தைக் கொடுத்துக்கொண்டேயிருக்கின்றது, அமங்கலத்தையே தருவது, தைரியசர்வஜசுவரியத்தையும் கெடுப்பது, இத்தகைய மனப்பேயைவிடுத்து எதுவானுய் அதுவாகவே நீ திரமுடையவனுவாய்; சித்தயக்ஷனுற் றிடமாய்ப் பீடிக்கப்பட்டவனே, சாஸ்திரங்களும் பந்துக்களும் குருவுபதேசங்களும் காப்பாற்றமுடியாதவர்களேயாவர்கள்; சம்சாந்தமாகிய சுத்தசித்த வேதாளம் பிடித்தவனைக் குரு சாஸ்திரார்த்தபந்துக்கள் நன்கு காப்பாற்றக்கூடியவர்களாவார்கள், சொற்பபங்கத்தினின்றும் மிருகத்தையும் மானிற் கொப்பாயகுழந்தையையும்போன்றென்பதாம்.

(ச.) நல்லறிவு = ஆன்மஞானம், நற்புருடர்குணம் = சமாதிசம்பத்து, நன்னூல் = அத்தியான்மவித்தை, நல்வருத்தம் = புருடனது கருமயத்தனவிசேடம், இவற்றாலே, புல்லுபொருள் = அடையப்பட்ட பொருள், யாதது ஓரிடத்துங் கிடையாது, மனோவிகாரம் நீங்கின் சொரூபமே சேடிக்குமென்பதுபொருள். மீட்பரிதாம், மனப்பிசாச பரவசன் ஒன்றினுலும் இரக்ஷிக்கப்படான் என்பதுபொருள். (8-9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) யோகங்கள் யாவையும்விட்டுப் பரம்பொருளையே யுணரவேண்டும் என்பதன்பொருட்டுப் பரமசிவன் உபதேசித்தருளியதை யுபதேசிக்கத்தொடங்குதல்:— யோகமென்பது.

போகமொடு புசிப்பனதாம் புறத்தொழிய வாரியன்றாட் பூண்டுவேண்டி
யூகமுற நினைத்தொன்றும் பெரும்பொருளாந் தன்னுருவை யுணரவேண்டு
மாகலினு லிப்பரம தரிசனத்தை மாமோக மறுப்பதொன்றைச்
சேகரசந் திரமவுலி யெனக்குரைத்தா னுனக்குரைப்பத் தெளிந்து கேட்பாய்.

(ப - ரை.) போகமொடு புசிப்பனதாம் புறத்தொழிய = போகபோக்கியங்கள் யாவற்றையும் பாகியத்தே யெறிந்துவிட்டு, ஆரியன் தாள்பூண்டு = தேசிகனது திருவடிகளைத் தொண்டுசெய்தடைந்து, வேண்டி = பிரார்த்தித்து, ஊகமுற நினைத்தொன்றும் பெரும்பொருளாந் தன்னுருவை = யுக்தியோடுங்கூட ஆராய்ந்து ஏகமாகிய பிரஹ்மவத்துவாம் தனதுவடிவத்தை, உணரவேண்டும் = அறியவேண்டும், ஆகலினுல் = ஆன்கயினுல், இப்பரமதரிசனத்தை = இம்மேலாய பரம்பொருளின்காக்ஷியை, மாமோகமறுப்பதொன்றை= மகாமோகத்தைக் கெடுப்பதை, சேகரசந்திரமவுலி = சந்திரசேகரசடாதரனுகிய பரமேசுரன், எனக்குரைத்தான் = எனக்கனுக்கிரகஞ்செய்தருளினுர், உனக்குரைப்ப = அதனை யுனக்குபதேசிப்ப, தெளிந்துகேட்பாய் = ஒருமையுடன் கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) போகவிஸ்தாரங்களையெல்லாம் அடியோடும் வெளியேவிடுத்து, ஆரியனது திருவடித்தாமரையை யநுசரித்தருள்பெற்று, மகத்தாயபொருளை நன்காராய்ந்து, தன தொன்றாய ஆன்மாவை யறிந்துகொள்ளவேண்டும், யாவுமே சற்சொரூபமேயாம், இதுவிடயத்தில், இனிக்கூறப்பெறும் மானசசிவபூஜாவடிவ திருஷ்டியைக்கூறக் கேட்பாயாக, இம் மற்றையதிருஷ்டியானது மகாமோக விநாசினியாம், பூர்வமெனக்கு ஸ்ரீ மகாதேவராகிய அர்த் தேந்துமௌலியால், சமுசாரதுக்கசாந்தியின்பொருட்டு, ஸ்ரீ கைலாசகந்திரத்தில் திருவருள் செய்யப்பெற்றது.

(ச.) போகமொடு புசிப்பனதாம் = விடயவிஸ்தாரங்கள், ஆரியன் = ஜீவன் முக்தனது, பெரும்பொருள் = பரமார்த்தம், பரமதரிசனத்தை = ஆன்மஞானவுபாயத்தை மூ: பரமார்த்தசித்தமாய ஆன்மாவொன்றையே யாசிரயஞ்செய்க, ஆஹார்யத்தன்மையென் னும் பாடத்தில் தனதுவடிவத்திற் கிவ்வண்ணம் கெடுதலின்மையை நன்காராய்ந்து அவ் வான்மாவையே யாசிரயஞ் செய்கவென்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டாதியிற் கைலாசவர்ணன வாயிலாகக் கதையைத்தொடங் கிப் புகழ்ந்துகொண்டு ஆண்டுத்தாம் தவஞ்செய்துகொண்டிருக்கும்போது ஒருசமயத்தில் ஒருவிசேடங் கண்டதாகவுரைத்தல்:—உயர், சிறிதென்பன.

உயர்கயிலைப் பெருங்கிரியி லுருத்திரனை யருச்சனைசெய் தொருகாற்கங்கை
யயலுறுசா லையினோற்றுச் சித்தர்கணத் தொடும்பன்னூ லருத்தநோக்கிப்
பயனுறநீ ணாட்கழித்தேன் பின்னொருகா லாவணிமுற் பக்கந்தன்னி
லியலுறுமட் டமிதினத்தி லிராப்போதின் மூற்பாதி யிறந்தகாலை.

சிறிதாகிச் சமாதிதவிர் புறநோக்கி லியானிருப்பத் திசைகளெல்லாம்
வறிதாகிக் காட்டசமா தியின்மவுன மிருப்பனபோல் வழக்கமின்றி
யெறிவாளால் வெட்டுதற்கா மிருண்மூடி முழைவனங்க ளெங்குந்துன்றி
வெறிதான வப்போதில் விரைவிலெழுந் தோரொளிமுன் விளங்கக்கண்டேன்.

(ப - ரை.) உயர்கயிலைப்பெருங்கிரியில் = சகலவைபவங்களும் வாய்ந்த ஸ்ரீ கைலாசமென்னும் பெரியபர்வதத்தில், உருத்திரனை யருச்சனைசெய்து = ஸ்ரீ மகாதேவரைப் பூசை செய்துகொண்டு, ஒருகால் = ஒருசமயம், கங்கை யயலுறுசாலையில் நோற்று = ஸ்ரீ கங்கையின் கரையிலுற்ற தவச்சாலையிற் றவம்புரிந்து, சித்தர்கணத்தொடும் பன்னூல் அருத்தம் நோக்கி=ஆங்குற்ற சித்தர்கூட்டங்களுடன் பல சாஸ்திரங்களின் பொருள்களை யாராய்ந்து, பயனுற நீள்நாள் கழித்தேன் = பிரயோஜனம் ஜன்மம்பெறும்படியாக வெகுகாலம் செலுத்தினேன், பின்னொருகால் ஆவணிமுற்பக்கந்தன்னில் = பின்னர் ஒருசமயம் ஆவணி மாதப்பூர்வபக்கத்தில், இயலுறு மட்டமி தினத்தில் = இயல்பாகவேபொருந்திய அட்டமி திதியில், இராப்போதில் = இராக்காலத்தில், முற்பாதியிறந்தகாலை = பூர்வார்த்தம் சென்ற போது.

சிறிதாகிச் சமாதிதவிர் புறநோக்கில் யானிருப்ப = சமாதியவஸ்தையைச் சொற்பந் தவிர்ந்து பாகிய திருஷ்டியில் யானிருப்ப, திசைகள் எல்லாம் = திக்குகள் யாவும், வறிதாகிக்காட்ட சமாதியில் = சும்மா காஷ்டசமாதியின்கண், மவுனமிருப்பனபோல் = மவுனமாக இருப்பனபோல், வழக்கமின்றி = விவகரித்தலின்றி, எறிவாளால் எறியுங்கட்கத்தால், வெட்டுதற்காம் = துண்டித்தற்காம், இருண்மூடி = அந்தகாரம் ஆச்சாதித்து, முழை

வனங்கள் எங்குந்துன்றி = கொடிவீடுகள் சோலைகள் கானகங்கள் எவ்விடத்திலும் நெருங்கி, வெறிதான அப்போதில் = அவ்வகையொன்றுமில்லாதிருந்த அக்காலத்தில், விரைவிலெழுந்தோரொளிமுன் விளங்கக்கண்டேன் = சீக்கிரமாக உதயமாகி யொரு ஒப்பில்லாத பிரகாசம் எதிரில் வருவதைப்பார்த்தேன்.

(ஸ்ரீ - வீர.) இந்துவின் கிரணக்கூட்டமெல்லாமாய் ஒன்றுசேர்ந்த சுந்தர ஒளிகள் மேவிச் சூக்ஷ்மிகவுடையதாகி யாவற்றினு மேலுக்கு மேலாகி மேலுலகவடிவமாகி, ஸ்ரீ கௌரீ ரமணமந்திரமாய் இலங்கும் ஸ்ரீ கைலாசசைலேந்திரம் ஒன்றுண்டு; ஆண்டு ஸ்ரீ பகவான் அர மகாதேவன் என்னும் அம்பிகாபதிதான் வாழ்வார், சந்திரன்கலைதரித்த சம்புவும் அவரேகண்டாய்! அம்மகாதேவரைப் பூசித்துக்கொண்டு அக்கிரியிற்றானே முன்னம் ஒருபோது வசித்து வந்தேன், ஆங்குள்ள ஸ்ரீ கங்கையின் தீரத்தில் ஆனந்தாசிரமமொன்று வகுத்துக்கொண்டு, அதிற் றவப்பொருட்டுத் தாபசாசாரமுடையவனாய் = தாபசர்களால் ஆசரிக்கப்பெற்ற கிருச்சிரசாந்திராயணாதிகளில் நியதமானஸ்திதியை யுடையவனாய், நெடும்போது வாழ்ந்துவந்தேன், அதற்குத்தக்கபடியே சித்தசங்காதங்களோடுகூடிச் சாஸ்திரார்த்தசங்கிரகஞ் செய்துகொண்டு, பூசையின்பொருட்டுக் கொய்யும் புஷ்பத்தின்பொருட்டுச்செய்த,தேசுறுகுடலையொன்றும் திருவுளநூல்கள் சேர்த்தும், ஆசறுகுணங்கள் மிக்கு அருந்தவஞ்செய்யுமெற்கு, வீசுகைலாசச்சோலைவிளங்குஞ் சுகத்திற்காலம், நீளவேபோயது; பின்னொருபோது சிராவண பகுளமென்னும் கிருஷ்ணபக்ஷத் தஷ்டமிதினத்தில், இரவின் முகமாகிய பிரதோஷகாலமானது பூஜைஜபத்தியானாதிகளானே கழிந்தபோதில், திக்குகள்யாவும், பிராணிசஞ்சாராதியுபரமத்தால், மிகச்சாந்தரூபமாகி, காராகிசேஷ்டையானும் பொருளையறிவியாத காஷ்டமவுனவிரதத்தை யநுட்டிப்பனபோன்றிருப்ப, கட்கத்தா லுச்சேதனஞ்செய்யத்தக்கனவாய அந்தகாரங்கள் குஞ்சங்களிலும் ககனவனங்களிலும், நிறைந்துநிற்ப, அப்போது ஆண்டுப் பிரதமயாமார்த்தஞ் சென்றிட, சமாதியைச் சிறிது தணந்து = சிறிது பாகிய நாட்டமுற்றுப் பாகிய மக்கினதிருக்காயிருந்துழி யான்கானனத்திற் றேஜசானது அதிவிரைவிலேயே நன்கெழுந்ததைக்கண்டேன்.

(ச.) அருச்சனை செய்திருந்தேன். மூ:—சுவர்க்கத்தைப்பார்க்கினும் பரமஉற்கிருஷ்டம் கைலாசமென்பதாம். புடிகை = பூஜாபுஷ்பம் வைக்க யோக்கியமாயது அஃதொன்றுதைத்துச் சேகரிக்கப்பெற்றிருந்தது, ஞானசாஸ்திரவிடயப் புஸ்தகங்கள் சேகரிக்கப்பெற்றுள்ளனவாயின. (11-12)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரமேசுரரது வருகையையும் போற்றுதலையும் வருணித்தல்:— வெண்ணென்பது.

வெண்ணிறத்த முகில்கோடி வெண்டிங்கள் கோடியென விளங்குந்தேசைக்
கண்ணகத்தி னோக்கலுமே நந்திமுதல் வரவுமையாள் கைமேற்கைவைத்
தெண்ணறச்சங் கான்வரவு மாணக்கருடன்விரைவி லெழுந்து பூசை
பண்ணுதற்கா னவைகொடுபோய்ப் பன்மலர்தூய்த் தூரத்திற் பணிந்துபோற்றி.

(ப - ரை.) வெண்ணிறத்த முகில்கோடி = வெள்ளியவர்ணத்தனவாய கோடிமேகங்கள் போன்றும், வெண்டிங்கள் கோடியென = சுவேதசந்திரர்கள் கோடிபோன்றும், விளங்குந்தேசை = எங்கு மிலங்கும் பேரொளியை, கண்ணகத்தினோக்கலுமே = விழிகளினாற் பார்த்தவுடனே, நந்திமுதல்வர = திருநந்திதேவர் முற்திவர, உமையாள் கைமேற்

கைவைத்து = ஸ்ரீ பார்வதிதேவியாரின் திருக்கரத்தின்மீது திருக்கரம் வைத்தருளி, எண்ணறச் சங்கரன்வரலும் = நினைவறச் சுககரனுகிய ஸ்ரீ மகாதேவன் எழுந்தருளிவருதலும், மாணாக்கருடன் விரைவில் எழுந்து = சீடர்களுடனே அதிசீக்கிரத்தில் எழுந்து, பூசை பண்ணுதற்கானவை கொடுபோய் = பூசித்தற்கு யோக்கியமான பூஜாதிரவியங்கள் எடுத்துக் கொண்டுபோய், பன்மலர்தூய் தூரத்திற் பணிந்துபோற்றி = நானாவகைப் புஷ்பங்களைத் தூவிச் சேய்மையில் நமஸ்கரித்தெழுந்து தோத்திரஞ்செய்து.

(ஸ்ரீ - வீர.) சுப்பிர அப்பிரஞ்சதகோடிபோன்றதும், சந்திரபிம்பகணங்கோடி போன்றதும், திக்குக்குஞ்சங்களையெல்லாம் திகழ்த்திவைப்பதும் ஆகிய ஒரு பேரொளியை அதிவிஸ்மயத்துடன் கண்குளிரக்கண்டேன்; அவ்வொளியானது உட்பிரகாசசாலினியாகிய புத்திதிருஷ்டியினுலே யுள்ளே விசாரிக்கப்பெற்றதாயது: ஆராய்ந்து எத்துணை எதிர்ப்பிரதேசத்தி லவ்வொளியைப் பார்த்தனனோ அத்துணைப்போதிலது ஆண்டு ஸ்ரீ சந்திரசேகரராக இருக்கக்கண்டேன்; அப்பெருமான், ஸ்ரீ கௌரிகரார்ப்பித திருக்கரத்தினராயும், திருநந்திதேவர் திருச்சந்நிதி விலக்கிவரும் திருக்கூட்டத்தினராயும் இருந்தனர்; உடனே ஆண்டிருந்த சீடர்களை வெளிமுகப்படுத்திச் சாவதானமாய் அர்க்கியங்கவர்ந்து, மிகுந்த சந்தோஷசித்தமுடையவனுகிக் கண்களைப் பவித்திரஞ்செய்துகொண்டு திருச்சந்நிதியை நோக்கிச் சென்று ஆண்டுத் திரிலோசனராகிய பகவானுக்குப் புஷ்பாஞ்சலியை யர்ப்பித்துத் தூரத்திலேயே அருக்கியந்தந்த என்னுல், மகாதேவர் சாஷ்டாங்காதி நமஸ்காரஞ்செய்யப்பெற்றனர் இனிது தோத்தரிக்கவும் பெற்றனர்.

(ச.) மாணாக்கருடன் = மாணாக்கரைச் சமாதியினின்றும் எழுப்பியவருடன், திருஷ்டிபவித்திரமாய முற்பாகம் நோக்கிச்சென்றேன். மூ: கானனத்தில் விரைவிலேயே யெளிதெழுந்ததும் சுப்ராப்ரசதசங்காசமும் இந்துகணேபமமாக விலங்குவதும் ஆகிய தேஜஸைக் கண்டேன் என்பது முற்பாதியோடு அந்நுவயமாம்; சடிதிப்பொருளில் ஐகதியென்னும் பிரயோகம் சாகடாயனர் படித்துளார்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தமது பாக்கிய மகோதயமாய்த் தம்பாலுற்ற அம்மகாதேவரது திருக்கடைக்கண் ணேக்கத்தை வருணித்து அத்தேவரையும் தேவியையும் பூசித்ததை யுணர்த்தல்:—திங்களென்பது.

திங்களினு மிகக்குளிர்ந்து செவ்விதாய் நோயெல்லாந் தீர்க்கப்பட்ட
வங்கணுற வருணேக்கஞ் செய்தானை வணக்கத்தா லெருக்கியத்தாற்
றுங்கவுப சாரத்தான் மந்தார நன்மலரின் சோனைதன்னுற்
சங்கரனை யேத்தினே னுமையையுமப் படியேத்தித் தாளில்வீழ்ந்தேன்.

(ப - ரை.) திங்களினும் மிகக்குளிர்ந்து = சந்திரனினும் அதிகமாகச் சீதளித்து, செவ்விதாய் = சிறந்ததாய், நோயெல்லாம் தீர்க்கப்பட்ட = சகல வியாதிகளையும் போக்கப்பட்ட, அங்கணுறவருணேக்கஞ்செய்தானை = அழகிய திருக்கடைக்கண்ணுற்ற கிருபாநோக்கஞ்செய்தருளிய ஸ்ரீ மகாதேவரை, வணக்கத்தால் அருக்கியத்தால் துங்க உபசாரத்தால் = அநேகவித நமஸ்காரங்களாலும், அருக்கியாதிகளாலும், பரிசுத்தமாகிய வுபசாரங்களாலும், மந்தாரநன்மலரின் சோனைதன்னுல் = மந்தாரசுகந்தபுஷ்பங்களின் மாரிகளாலும், சங்கரனை = சிவபெருமானை, ஏத்தினேன் = பூசித்தேன், உமையையும் = பரமேசுரியையும், அப்படியேத்தித் தாளில் வீழ்ந்தேன் = அவ்வாறே பூசைசெய்து திருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்தேன்.

(ஸ்ரீ - வீர.) அதன்பின்னர்ச் சந்திரப்பிரபையோடுகூடியதாய் ஒழுங்குற்றதாய், அதிசீதளையாய், சுவானுபூத அலௌகிகநிரதிசயானந்த ஆவிர்ப்பாவசமத்காரகாரிணியாய், சர்வ பீடைகளையும் விலக்குவதாயிலங்கும் கிருபாதிருஷ்டியானே, நெடும்போது விடயீகரிக்கப் பெற்றவனுனேன்; உயர்ந்த புஷ்பாசனத்தின்கண் ணெழுந்தருளியிருந்த அந்த மூவுலகசாக்ஷியாய பரமாத்மாவின்பொருட்டு அருக்கியந் தந்தேன் பாத்தியந்தந்தேன், அருகிற்சென்று நல்லலர்மழைதந்தேன், அருப்பித்தேனினும் வெகுவாம் பூசைகள், மந்தாரபுஷ்ப அஞ்சலிகள் மிகமிக மாரியாய்ப் பொழிந்துமுன்னர்ப் போற்றினேன் நானுவிதமாம் நமஸ்காரங்களால் நல்ல நல்லனவாந் தோத்திரங்களினுல் ஆனுதிறைஞ்சி யருச்சித்தேத்தினேன், பின்னர்ச் சிவபூஜாசதிருசமானபூஜையினுலே பகவதி கௌரி சிவையையும் பூசித்தேன்.

(ச.) வணக்கத்தால் = அஷ்டாங்க பஞ்சாங்காதி நமஸ்காரத்தாலும். இலௌகிக வைதிகபேதத்தானே அநேகவித ஸ்தோத்திரங்களாலும்; சிவபெருமானுக்குப் பூசைசெய்ததுபோலவே ஜகன்மாதாவிற்கும் பூசைசெய்தேன் என்பதாம். (14)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரிவார தெய்வங்களைப் போற்றலும் பரமேசுரர் குசலம் வினவியருளலும்:—ஈசனென்பது.

ஈசனியற் கணங்களையு முமைசேடித் திரள்களையு மின்பமாக
நேசமுட னேத்தியபின் னிறைமதியைக் குளிர்விக்கு நீர்மைவாக்காற்
றேசுடையோ னெனைநோக்கி யுரைசெய்தான் சாந்தியினுற் றீரவாறி
யாசறநல் லனதருநின் னறிவுகடற் பதத்தினிலை யானவன்றே.

(ப - ரை.) ஈசனியற்கணங்களையும் = பரமேசுரருடைய பிராசீன அடியவர்களையும், உமைசேடித்திரள்களையும் = பரமேசுரியினதுபக்கமேவும் பாவைமார்களையும், இன்பமாக = ஆனந்தமாக, நேசமுடனேத்தியபின் = அன்பினுடன் போற்றியபின், நிறைமதியைக்குளிர்விக்கும் நீர்மைவாக்கால் = பூர்ணசந்திரனைச் சீதளிப்பிக்கும் பான்மைவாய்ந்த திருவாக்கினுலே, தேசுடையோன் = சிற்சோதியாயுள்ளோன், எனைநோக்கி = நாயினுங் கடையனுன எனது முகத்தையும் பார்த்து, உரைசெய்தான் = திருவாய்மலர்ந்தருளினுன், சாந்தியினுற் றீரவாறி = பரமவுபசாந்தியினுலே அத்தியந்தம் விசிராந்தியையடைந்து, ஆசற நல்லன தருநின்னறிவுகள் = குற்றமற மங்களங்களைப்பயக்கும் உன்னுடைய வுணர்வுகள், தற்பதத்தில் நிலையானவன்றே = தற்பதத்தின்கண்ணே ஸ்திதியாயினவோ.

(ஸ்ரீ - வீர.) பரமேசுரியின் சகிமார்களும் சிவகணமண்டலிகளும் அன்பொடுமென்னுல் அருச்சிக்கப்பெற்றுர்கள், பூசைமுடிந்தபின்னர் அவரது உத்தரவின்பேரில் பாறையில் உட்கார்ந்த என்னைநோக்கி அர்த்தேந்துகலாதராகிய பரமேசுரர்பூரணசீதகிரண சந்திரனையும் சீதளமாக்கும் அதிசீதளமான திருவாக்கினுலே கூறியருளுவாராயினர்: ஆண்டுக் குசலப் பிரசினஞ் செய்தருளுவதில் சருவகௌசல்ய பரமகாஷ்டையாய பரமாத்மாவிற் சித்தவிசிராந்தியையே பகவான் முதலில் கவரும் காதலால் வினவி யருளல்: ஹே பிராஹ்மணோத்தம! பரமசாந்தியுற்றனவாய் பரத்தில் இளைப்பாறினவாய், கலியாணகாரிகளாய நினது சித்தவிருத்திகள் பரமாத்மவஸ்துவின்கண் ணிலைபெற்றனவா?

(ச.) கணமண்டலிகம் = பிரதமசமூகம். பரபதத்தில் விசிராந்தியடைவுற்றனவாய உனது சம்வித்துக்கள் திரமுற்றனவா? யோகாந்தரத்தில் நிலையுறுதனவன்றே வென்பது பொருள். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரம்பொருள் வினவியபின்னர் ஸ்ரீ மகாதேவரது பெருங்கருணையை வியந்து அதன்பயனைத் தோத்தரித்தல்:—தடை, சக, ஞான என்பன.

தடையின்றித் தவமுனக்கு நடந்ததோ சார்வனதாஞ் சார்ந்தவன்றே
விடயங்க ளிறந்தனவோ வென்றுலகின் காரணமாம் விமலன்கூற
விடையவனை யான்வணங்கி வேண்டுகோ ளாலுரைத்தேன் விண்ணோர்கோவே
யடைவுறநின் னருள்பெற்றார்க் கடைவரிதொன் றிலைப்பயங்க ளருகும்வாரா.

சகத்திலுனைத் தாழ்ந்தோரைத் தாழாதா ரில்லையுனைச் சரணந்தாழ்ந்த
மகத்துவர்வாழ்ந் தனரெங்கே யதுதேச மதுநாடு மலையதாகுந்
தொகுத்துளமுன் னையிலறத்துக் குறுபலமா மிக்காலந் தொடரறத்துக்
குகுத்தமழை யாம்பின்சே ரறத்துக்கு வித்தாகு முன்னைநாடல்.

ஞானவமு தத்துக்கோர் நிறைகுடமாந் தீரதையா நன்னிலாவுக்
கூனமிலா மதியாமெய் வீட்டுக்கு வழியாகு முன்னைநாட
லானவுனை நாடலெனு மணிதிகழ்சிந் தாமணியை யடைவுற்றேயான்
றீனமுறு மனைத்தாபத் தின்றலையை மிதிக்கின்றேன் றேவர்தேவே.

(ப - ரை.) தடையின்றித் தவமுனக்கு நடந்ததோ = பிரதிபந்தகமில்லாமல் நினது தவமானது வளர்ந்துவந்ததா, சார்வனதாம் = அடையத்தக்கனதாம், சார்ந்தவன்றே = அடைந்தனவாயினவோ, விடயங்கள் இறந்தனவோ = விடய ஆசைகள் அச்சமாதிகள் போயினவோ அல்லது திருசியவர்க்கங்கள் மறக்கப்பெற்றனவோ, என்றுலகின் காரணமாம் விமலன்கூற = என்பதாக ஜகத்காரணமாகிய நின்மல இறைவன் கேட்டருள, விடையவனை யான் வணங்கி = இடபநாயகனை யான் போற்றிசெய்து, வேண்டுகோளால் உரைத்தேன் = பிரார்த்தனையோடுங் கூறியதாவது, விண்ணோர்கோவே = தேவர்கட்கெல்லாம் மகாதேவரே! அடைவுறநின்னருள்பெற்றார்க்கு = பரிபூரணமாகிய தேவரீரது திருவருளை யடைந்தவர்கட்கு, அடைவரிது ஒன்றில = அடைதற்குத் துர்லபம் யாதொன்றும் கிடையாது, பயங்கள் அருகும் வாரா = அச்சங்கள் சமீபத்திலும் வந்தடையமாட்டாவாம்.

சகத்திலுனைத் தாழ்ந்தோரை = ஜகத்தில் உன்னைப் பூசித்தவரை, தாழாதாரில்லை = வந்தியாதவருமே கிடையாது, உனைச்சரணந்தாழ்ந்த மகத்துவர் = தேவரீரைச் சரணாகதியாகவடைந்து தவம்புரியும் பெரியோர், வாழ்ந்தனர் எங்கே = எவ்விடத்தில் வாழ்கின்றாரோ, அதுதேசம் அது நாடுமலையதாகும் = அதுவேதேசமாம் அதுவே ஜனபதமாம் அதுவே பர்வதமாம், தொகுத்துள முன்னையிலறத்துக் குறுபலமாம் உன்னைநாடல் = தேவரீரை யநுசந்தித்தலானது, சம்பாதித்துள்ள பூர்வதர்மத்திற்குற்ற பிரயோஜனமாம், இக்காலந்தொடர் அறத்துக்கு உகுத்தமழையாம் = வர்த்தமானகாலத்தில் வளரும் தருமத்துக்குத் தெளித்தவிருஷ்டியாம், பின்சேரறத்துக்கு வித்தாகும் = இனிவரும் தருமத்துக்குப் பீஜமாம்.

ஞானவமுதத்துக்கு ஓர் நிறைகுடமாம் = ஞான அமிர்தம் நிறைந்த ஒப்பற்ற ஏக கலசமாம், தீரதையாம் நல் நிலாவுக்கு = தைரியமாகிய நல்லசந்திரிகைக்கு, ஊனமிலா மதியாம் = குறையாத பூரணசந்திரனும், மெய்வீட்டுக்கு வழியாகும் = உண்மையாய மோக்ஷத்திற்கு மார்க்கமாகும், உன்னைநாடல் = தேவரீரைத் தியானஞ்செய்தல், ஆன

வுன்னாடல் எனும் அணிதிகழ்சிந்தாமணியை அடைவுற்றேயான் = இத்தகையதான தேவரீ ருடைய தியானமாகிய அலங்காரம்பொருந்திய சிந்தாமணியை அடையப்பெற்றே அடி யேன், தீனமுறு மனைத்தாபத்தின் றலையை மிதிக்கின்றேன் றேவர் தேவே = தேவர்கட் கெல்லாம் மகாதேவரே! தைனியத்தைச் செய்யத்தக்க சர்வ ஆபத்துக்களின் சிரசையுங் காலால் அழுத்திநொறுக்குகின்றேன்.

(ஸ்ரீ - வீர.) உன்னுடைய தவமானது விக்கினமில்லாமல் நடந்தேறி வருகின்றதா, கல்யாணந் தொடர்ந்துவருகின்றதா, அடையவேண்டுவன யாவும் அடைவுற்றனவா, பீதிகள் யாவும் பிரிந்தோடினவா, என்றிந்தப்பிரகாரம் எல்லாவுலகங்களையும் தாமே படைப்பவ ராகிய தேவதேவேசர் உரைத்தருளியபோது, ஹே ரகுநந்தன! மிகுந்த விநயத்தோடுகூடிய வாணியினாலே யென்னாலே கூறப்பெற்றதாவது: ஹே மகேசுவரரே! ஈண்டு முக்கண்ண ராகிய தேவரீருடைய தியானத்தைச்செய்துகொண்டிருக்கும் மங்களவான்களுக்கு அடைய முடியாதது யாதொன்றுமே கிடையாது எவ்வச்சங்களும் அவர்பாலணுகாவாம்; தேவரீ ருடைய ஸ்மரணானந்தம் பரிபூர்ணமாகநிறைந்த சித்தம் உடைய பெரியவர்களை ஜகத் கோசத்திற் பூசியாத பிராணிகள் இல்லவேயில்லை; யாவர்களும் பூசிக்கவே செய்வார்கள் ஒருவேளை யெவரேனும் பூசியாதவருளரேல் அவர் மநுடப்பிறவியிற் பிறவாதவரேயாவ ரையமில்லை. தேவரீருடைய அநுஸ்மரணவேகாந்தமதியை யுடையவர்கள் யாண்டு சுகமாக வாழ்கின்றார்களோ, அத்தேசங்களே அந்நகரங்களே அக்கிராமங்களே அவ்வில்லங்களே அம் மலைகளே அத்திசைகளே மிகமிகவும் புகழப்பெற்றனவாம்; அவைதாம் அவையாம் பிறஅவை யாகாவாம்; "அபசுக்களேயாம் அன்னியமெவையும், ஆ அசுவங்களினின்றும் பசுக்கள் ஆ அசுவங்களேதாமாகும்" எனப் புகழ்ச்சியின் இலாபமாம். ஹே பிரபுவே! தேவரீருடைய நல்ல அநுசந்தானமானது, பூதமென்னும் முன்சஞ்சிதமாய விருக்ஷஸ்தானிய புண்ணியத் தின்பலத்தை அநந்தங்கோடி குணத்தன்மையானே விஸ்தாரஞ் செய்கின்றது, வர்த்தமான மென்னும் இத்தேகந்தொடங்கியதன் அபிவர்த்தனத்தை அமிருதத் தெளிப்பால் விரிக்கின் றது, வரும்போது செய்பவற்றின் விருத்தியின்பொருட்டுப் பீஜத்தைப் பெருக்குகின்றது; ஹே ஜகத்காரணரே! தங்களுடைய திவ்யத்தியானமானது, ஞானாமிருத ஏககலசமாம், தீரத் தன்மையாகிய சந்திரிகைக்குப் பூன்றநிசாகரம் போன்றதாம், அபவர்க்கபுரத்துவாரமாம்; தேவரீருடைய அநுஸ்மரணமென்னும் உதாரசிந்தாமணி மானாகிய அடியேனால், ஹே பூத பதியே! நிகழ்வனவாயும் வருவனவாயும் உள்ள எல்லா ஆபத்துக்களின் றலைமேற் பதம் வைக்கப்பெற்றதாம்.

(ச.) தேசம் = அங்க வங்க கலிங்காதி, நாடு = கிராமம், உனது பத்தர் வசிக்கும் தேசாதிகளே சிலாக்கியங்களாமென்பது பொருள். உன்னைநாடல், முன்னிலையறத்துக்கு = முன்பியற்றிய புண்ணியத்துக்கு, உறுபலமாம், புண்ணியசம்பவத்தினாலென்க, இக்கால மறத்துக்கு மழையாம் = புண்ணியத்தை வளர்க்கின்றதாமென்பது பொருள். பின்சேரறத் துக்குவித்தாகும். ஈசுவரநாட்டத்தாற் புண்ணியத்துக்குக் குணமிகுதலின் ஈசுவரநாட்டத் தாற் பரிபூரணபுனித சித்தத்தினர்க்குப் புண்ணியஞ்செய்வதில் இச்சை பிறத்தலினா லென்க. மூ:—தேவரீரது அநுஸ்மரணஜநித ஆநந்தத்தால் நிரப்பப்பெற்ற சித்தத்தை யுடைய தேவரீரது அன்பர்கள் தம்புரோபாகத்தில் யாவர் வணங்கார் அவர் ஜகத்கோசத் தில் இலரே. (16-17-18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இந்தப்பிரகாரம் தோத்திரஞ்செய்து பரமேசுரரை வினவிய தைக்கூறல்:—என்றென்பது.

என்றுதுதித் தெழிற்கருணை முகமலர்ந்த முதன்மூலத் திறைவன்றன்னை, மென்றுணைத்தாண்மீட்டிறைஞ்சிக் கேட்டதொரு பொருளுரைக்க விளங்கக் கேளாய், குன்றிலுறை யருட்கடலே நின்னருளா லறிவெல்லாங் குறைவற்றே னுக், கொன்றுளது சந்தேக மதனறுதி யருள்வாயென் றுரைக்கலுற்றேன்.

(ப - ரை.) என்று துதித்து = என விவ்வண்ணம் தோத்திரம் புரிந்து, எழிற்கருணை முகமலர்ந்த = அழகிய பெருங்கருணையுடன் விகசிதமாய திருமுகத்துடன்கூடிய, முதன் மூலத்திறைவன்றன்னை = ஜகத்தாதிகாரணமாகிய பரமேசுவரரை, மென்றுணைத்தாள் மீட்டிறைஞ்சி = மெல்லிய திருவடித்தாமரைகளிரண்டையும் மறுபடியும் போற்றிசெய்து, கேட்டது = வினவியதாகிய, ஒருபொருளுரைக்க = ஒப்பற்றபொருளையுரைப்ப, விளங்கக் கேளாய் = தெளிவாகக் கேட்குதி, குன்றிலுறை யருட்கடலே = ஸ்ரீ கைலாசபர்வதத்தின் கண் ணெழுந்தருளியிருக்கப்பெற்ற கிருபாசமுத்திரமே! நின்னருளால் = தேவரீரது திவ்விய கிருபாவிசேடத்தால், அறிவெல்லாம் = உணர்வுயாவும், குறைவற்றேனுக்கு = குறை வில்லாத அடியேனுக்கு, ஒன்றுளது சந்தேகம் = ஓரையமுண்டு, அதனறுதி = அதனது நிச்சயத்தை, அருள்வாயென்றுரைக்கலுற்றேன் = கிருபைசெய்துரைத்தருள்வாய் என்ப தாகக் கூறத்தொடங்கினேன்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் தோத்திரங்கள்செய்து, மிகுந்த நற்பிரசன்னத்தையடைந்த வரும், பகவானும், ஆகிய மகேசுரரை மீளவும் வணங்கி வினவியதை யுரைப்பக் கேட்பா யாக, ஹே பகவந்! தேவரீரது திருவருளினாலே அடியேனுக்குச் சகலதிசைகளும் இஷ்டார்த் தங்களினாலே பூர்ணமாகவே யிருக்கின்றனவாம்; ஆயினும் ஹே தேவேசரே! ஆண்டையத் தில் நிர்ணயம் வினவுகின்றேன் திருவாய்மலர்ந்தருளவேண்டும். (19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ வசிட்டபகவான் றேவபூசையைப்பற்றி வினுதலும் பரமேசுரர் உத்தரமுதவியருளத்தொடங்கலும்:—தீவினையென்பது.

தீவினையெல் லாமறுத்து மங்கலமெல் லாமுதவுந் தேவபூசை
யாவதெனக் கேட்டலுமே யருள்செய்வான் றெய்வந்தா னியாதென்றேறிற்
கேவலமே யரியல்ல வரனல்ல பூதவுடற் கிடைத்ததல்ல
வோவுமன மன்றடியு முடிவுமிலாச் செயப்படா வுணர்வேதெய்வம்.

(ப - ரை.) தீவினையெல்லாமறுத்து = தீயவினைகளை யெல்லாமகற்றி, மங்கலமெல் லாம் உதவும் = மங்களங்கள் யாவற்றையும் தரும், தேவபூசை = தேவார்ச்சனம், யாவ தெனக்கேட்டலுமே = எத்தகையதென வினவலுமே, அருள்செய்வான் = திருவருள் செய்தருளுவார், தெய்வந்தான்யாதென்றேறில் = தேவன் யாவன் என்று பிரதிபாதிப் பின், கேவலமே யரியல்ல = கேவலம் விஷ்ணுவுமல்ல, அரனல்ல = ருத்திரனுமல்ல, பூத வுடற் கிடைத்ததல்ல = பிரஹ்மாவுமல்ல, தேகமுமல்ல, ஓவுமனமன்று = சதா அசைந்து கொண்டிருக்குஞ் சித்தமுமல்ல, அடியுமுடிவுமிலா = ஆதியும் அந்தமுமில்லாத, செயப் படாவுணர்வே தெய்வம் = அகிருத்திரமமான சைதன்யமே தேவனுவன்.

(ஸ்ரீ - வீர.) மிகவுந் தெளிந்த மதியினாலே சித்தக் கலக்கங்கள் யாவுந்தீர்ந்து அவற்றின் காரணங்களும் ஒழிந்து, அநாமயமாய், சர்வபாவங்களையும் க்ஷயம் செய்வதாய், சர்வ கல் யாணங்களையும் வளர்விப்பதாய், இலங்குந் தேவார்ச்சனம் எத்தகையதாம் எங்ஙனந்தான் செய்யவேண்டியதாம் உரைத்தருளவேண்டும் பிரபுவேயென்று பிரார்திப்ப, அதற்கீசுவரர்

அருளியதாவது. அடியேனுக்கு இஷ்டார்த்தங்களானே சகலதிசைகளும் பூர்ணங்களாம், என்னுங் கூற்றால் ஸ்ரீ வசிஷ்டபகவானுக்கு விடயபோக அபிலாஷைச்சூனியத்தன்மை விளக்கலால், சர்வபாபக்ஷயகரம் சர்வகல்யாணவர்த்தனம் என்னும் விசேஷணங்களாலும் சர்வ அநர்த்த நிவிருத்தியுபலக்ஷிதநிரதிசய ஆனந்தரூபமோக்ஷசாதனவிடயமே இவ்வினுவெனத் துணிந்தருளிய சர்வஞ்ஞப் பரமகாருணிக ஈசுரர், சர்வபாவத்தா லடைவுறற் பொருட்டு ஸ்ரீ வசிஷ்டபகவானுக்குப் பரமபுருஷார்த்த சாதனமாய தத்துவஞானமேயாஞ் சர்வதேவார்ச்சன பரமரகசியபூசுத்தை யுபதேசித்தருளும் வேட்கையுடையவராய்ப் பதிஞ்ஞைசெய்தருளுகின்றார்:—ஹே பிரஹ்மவித்துக்களுக்குள் மேன்மையனே ! கேட்குதி, உத்தமோத்தமமாகிய தேவார்ச்சனத்தை யுபதேசிக்கின்றேன் எதனையியற்றலால் ஒருமுறையானே சகலபந்தங்களினின்றும் விடுபடலாமோ; ஆண்டு இனியருளப்பெறும் தேவார்ச்சனத்துக்குத் தக்கபடியாய அலௌகிக தேவசொரூபத்தை யுபதேசித்தருளும்பொருட்டுச் சீடனுக்கு அஃதறியும் வேட்கையை யுதிப்பித்தருளிக்கொண்டு, வினுவியருளல்:-யாதென்பதாதி. ஹே மகாபாகுவாகிய துவிஜனே ! தேவன்யாவன் ஆவன் என்பதாக எதனையேனுந் துணிந்திடுகின்றனையோ ! ஹே மகாபாகுவே ! = நிரந்தரதேவார்ச்சனப் பயன்படுத்திய பாகுவேயென, பாகுசாபேக்ஷபாகிய பூஜைமாத்திரசூரத்தன்மையை விளக்கியருளற்பொருட்டுச் சம்போதனமிதுவாம், அற்றேல், செந்தாமரைக்கண்ணன் முக்கண்ணணிறைமுதலிய தேவதைகள் பிரசித்தங்களேயாம், இத்துணைவிடயத்திலும் பகவான் அடியேனை யென்னே யறியாதவனுகச் சம்பாவனைசெய்தருளுகின்றீர்கள் ? என வெண்ணுநின்ற ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய பரிச்சின்னங்களிலுள்ள சிரத்தாஜாட்டியத்தை முதலில் அகற்றும்பொருட்டருளுகின்றார்:—கேவலமே யென்பதாதி. புண்டரீகாக்ஷன்றேவனல்ல, திரிலோசனன்றேவனல்ல, பிரஹ்மா, கமலோற்பவன் றேவனல்ல, திரிதசேசுவரனுகிய தேவேந்திரனுந் தேவனல்ல, பவனனும் அருக்கனும் அநலனும் நிசாகரனும் தேவனல்ல, நிசாகரக்கிரகணம், தற்கலாதீன சரீரமுடைய முப்பத்துமுக்கோடி தேவதேக உபலக்ஷணமாம். பிராஹ்மணனும் அவனிபாலனும் தேவனல்ல, யானும் நீயும் தேவனல்ல துவிஜோத்தமனே! மறுபடியும் யானுமல்ல நீயுமல்லவென்னும் நிஷேதமானது, ருத்திரவசிஷ்டர்கட்கு, ரோதனஞ்செய்தலின் ருத்திரர் எவ்வியான் வசிஷ்டனுயுளனே அந்நீ வசிஷ்டனுகியிருக்கின்றாய், என்பதாதி சுருதிகளில் முக்கிய சமஷ்டிப்பிராணத்தன்மைப் பிரசித்தியுண்மையின், உயர்ந்த ஒருவன் றேவன் பிராணன், எனப் பிராணனுக்கே சர்வதேவான்மகத்தன்மைச் சுருதியுண்மையினுனும், பிராணபாவத்தானே அடைவுற்ற தேவதாத்தன்மை நிவாரணப்பொருட்டாம். இவ்வண்ணமே சுருதிகளில் ஆத்தியாத்மிகங்களாய சக்ஷுவாதிகளில் தேவசப்ததரிசனத்தான், துவக்கின் பொருட்டுச் சுவாகாலோமங்களின்பொருட்டுச் சுவாகா என்பதாதிமந்திரலிங்கத்தானும், தேகாதி ஆத்தியான்மிக பாவங்கட்கும் அடைவுற்ற தேவதாத்தன்மையை அகற்றியருளல்:- தேகரூபமுந்தான் றேவதையன்றும் சித்தரூபமுந்தான் றேவதையன்றும், கமலாரூபியும் தெய்வமன்றும், மதியுந்தெய்வமாய் மருவமாட்டாதாம், ஆத்யாத்மிகப் பிரஸ்தாவத்தானே கமலா ஈண்டுத்தேகாதிசோபையாம் ; மதிக்கவர்ச்சி, சர்வ ஆத்யாத்மிகபாவ உபலக்ஷணப் பொருட்டாம். அதனெப்பான நியாயத்தானே சர்வபாவங்களாகிய ஆதிபௌதிகங்களிலும் அதேவத்தன்மை யறையப்பெற்றதென வறியத்தக்கது. ஆயிற்றேவதைதான் யாதென வினவு அதனையருளல்:—அடியுமென்பதாதி. அக்ருத்திரிமமாய் அநாதியந்தமாய் இலங்குந் தேவனமே தேவனென்று கூறப்பெறும்; மூலம்:—டுக்ருஞ் என்பதற்கு, ட்வித : க்த்ரி என் பதனுனே = டு இத் எதற்கோ அதுட்வித்தாம் அதனினின்றும் க்த்ரிவிகுதியாம்; ககாரம்

இத்தாம், க்த்ரோர்மம் நித்யம் என்பதனே மப்பாம், மப்நித்யம் எனப் பிரிக்கலாம், க்ருத் ரிமம் = கிரியாசாத்தியம் அதன் விலக்ஷணமாய பரமார்த்ததேவனம் = நிரதிசயப்பிரமோத சிர்பிரகாசம் தேவன் என்பதாம். புண்டரீகாக்ஷாதிமதியந்தங்களோ சிற்பிரகாச அதீன் இருப்புவிளக்கமுடைமையின் அதன்கண்ணத்தியஸ்தங்களாம், அவற்றிற்குச் சிற்பிரகாசத்தி னின்றும் தனிப்படுத்தவே, சொரூபசித்தியே துர்லபமாம், தேவத்தன்மை வெகுதூரத்த தாம், என அவற்றின்மாட்டும் சத்தாப்பிரகாசமே மறைப்பின்றியதா யிலங்கிக்கொண்டு எவ் விடத்தும் ஒருவனே தேவனும், அவனே வெளிப்படுத்தும் அதிசயத்தானே, புண்டரீ காக்ஷாதிகளும் ஜாட்டியத்தன்மை மறைபெறுதலின் வன்னிசப்தத்தானே சொலிக்கும் பொறிகளேபோலத் தேவர்கள் எனப்பெறுவார்கள் எனச் சுருதிமிருதியாதி வாதவிரோத மும் இன்றுமென்பது கருத்தாம்.

(ச.) தேவபூசை = தேவார்ச்சனவிதானம், ஆவது = எத்தன்மையது, ஸ்ரீ ஈசுவரன், மனமன்று = சித்தரூபமன்று, ஆகாரமுடைய பொருள் பரிச்சின்னமாதலினும், நசிப்ப தாதலினும், அடியு முடிவுமிலாச் செயப்படாவுணர்வே = சின்மாத்திரமே, தேவசத்தார்த்த மாம். (20)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரிச்சின்னபாவங்களிற் றெய்வவிவகாரம் முடியாதவர்க்கே யென் றருளல்:

தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களிலத் தெய்வமுண்டோ
பாகமறப் பணதியற வடிமுடிவற் றுளவுணர்வே பரமபோத
மாகலினு லதுதெய்வ மரிச்சித்தற் குரித்தாகு மறிவிலாத
மூகருக்கு வடிவமுத லருச்சனையே யியல்பென்று மொழியுமன்றே.

(ப - ரை.) தேகமுதற் பிரிவுகளாய் = ஆகாரமுதலிய பரிச்சின்னங்களாய், சிறியன வாம் பொருள்களில் = மிதமான வஸ்துக்களில், அத்தெய்வமுண்டோ = அத்தேவதை யுளதோ, பாகமறப்பணதியற = பகுப்பற்றுச் செயற்கையற்று, அடிமுடிவற்று = ஆதியந்த மில்லாமல், உளவுணர்வே = இருக்கப்பட்ட சைதன்யமே, பரமபோதம் = சிவமெனப் பெறும், ஆகலினுல் = ஆகையினுலே, அது தெய்வம் அருச்சித்தற்குரித்தாகும் = அதுவே தேவதையாம் பூசித்தற்கு யோக்கியமானதாம், அறிவிலாத மூகருக்கு = ஞானபூரணமாகாத மந்தருக்கு, வடிவமுதலருச்சனையே = ஆகாரமுதலியவற்றே யாரம்பபூசனையே, இயல் பென்று மொழியுமன்றே = கடமையாகும் என்பதாகச் சாஸ்திரங்கள் கூறும். அன்று ஏ, அசை.

(ஸ்ரீ - வீர.) ஆகாராதியானே தேசத்தினுலும் வஸ்துவினுலும், பரிச்சின்னமாய், மித மாய் = காலத்தினுலும் பரிச்சின்னமாய், உள்ள வஸ்துவில் அத்தேவனமெங்குளதாம் இது கருத்தாம்:—திவு என்னும் தாதுவானது விளையாடல், வெற்றிவிரும்பல், விவகாரம், பிரகாசம், தோத்திரம், மகிழ்ச்சி, மதம், சொப்பனம், காந்தி, கதி யென்னும் பத்துப் பொருள்களிலாம்; அவற்றுட் பிரசித்தமாய தீவ்யதியினின்றும் 3-1-134 ஆல் பசாதியச் சுறவே, தேவசப்த விற்பாதனத்தால், சுருக்குவதில் அளவையின்மையின் மாயிகநிரங்குச ஐசுவர்ய இட்டப்படி கிரீடைவெற்றி விவகாரம் தோத்திரம் என்பவற்றிற்கும் அவித்தைச் சம்பந்தமேயமதசொப்பன இச்சைகதி என்பவற்றிற்கும் நிர்வாககத்தன்மையுண்மையின் பத் துப்பொருள்களில் ஒளியும் மகிழ்வுமே முக்கியமாய அர்த்தங்களாம், அவ்விரண்டும் நித்திய

நிரதிசயாநந்த சுவப்பிரகாசப் பிரஹ்மத்திலேயே சம்பவிக்கின்றனவாம், பரிச்சின்ன அச் ஜடங்களில்... வியாவாம், அஃ அக்கிருத்திரிமம் அநாதியந்தம் சிற்சிவமே தெய்வ மென்று உண்மையாயிலரர்விர் என்பதாம். தேவனம் = தெய்வம்; அதுவே தேவசப்தத் தானே அறையப்பெறும், அதனையே நன்கு பூசித்துய்க. எதனால் ஜகத்ஜீவசம்சாரரூபமாய் யாவும் அதனது சத்தையானே சத்தை வடிவத்தையடையுமோ, சுயமாக இராவோ, அத னுல், அதுவேயுளதாம் அயலொன்றில்லையாம். ஆயின் புண்டரீகாக்ஷாதி ஆகார அர்ச்சன விதியியர்ந்தத்தானேவெனின் அன்றென்றருளல்:—அறிவிலாத வென்பதாதி. சிவதத்து வத்தை யறியாதவர்கட்கு ஆகாராதி யருச்சனமே விதிக்கப்பெற்றதாம்.

(ச.) தேகமுதல் = ஆகாராதிகளால், பிறிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களில், தேவத்தன்மை யங்கீகரிக்கின், அதிற்செயப்படாமை முதலிய தேவலக்ஷணம் எப்படியுண் டாம், ஆதலினுற் செயப்படாமை முதலிய லக்ஷணமுடையவுணர்வே சித்துருபமாகிய சிவ மாம், அதுவே தேவசத்த அர்த்தமாம், அதுவே யருச்சித்தற்குரித்தாகும், அறிவில்லாத மூக ருக்கு = இத்தன்மையான சித்துருபமாகிய சிவத்தையறியாத அஞ்ஞருக்கு. (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மந்தருக்குபாயமருளித் தெய்வநிர்ணயத்தையே வற்புறுத்தி யருளல்:—செல்லென்பது.

செல்வழியோ சனைநடக்க மாட்டாதார் குரோசவழி செல்லுமாபோற்
பல்வடிவி லருச்சிப்ப ரறிவில்லா ரறிவுநிலே படையாரென்று
சொல்வர்பரா பரமற்ற சிற்ககன மெவ்விடத்துந் துன்றிநிற்கு
மல்வழியாங் கற்பங்க ளனைத்தினுமா யாததனு லதுவேதெய்வம்.

(ப - ரை.) செல் வழி யோசனை நடக்கமாட்டாதார் = செல்லும் மார்க்கம் யோசனை தூரம் நடப்பதற்குச் சக்தியற்றவர், குரோசவழிசெல்லுமாபோல் = குரோசதூரம் செல் வதேபோல, பல்வடிவில் அருச்சிப்பர் = பலவடிவங்களில் ஆராதிப்பர், அறிவில்லார் = அஞ்ஞானவர், அறிவுநிலைபடையார் என்று சொல்வர் = ஞானநிலையுடையவரல்லரென்று சொல்லப்பெறுவர், பராபரமற்ற சிற்ககனம் = மேற்கீழற்ற சிதாகாசம், எவ்விடத்துந் துன்றிநிற்கும் = எந்த இடத்திலும் நிறைந்துவிளங்கும், அல்வழியாங்கற்பங்கள் அனைத்தி னும் மாயாததனுலதுவே தெய்வம் = சகலமுமில்லாமற்போம் சர்வகற்பங்களினும் கெடா தாம், ஆகலின் அவ்வறிவு சொரூபமே தெய்வமாம்.

(ஸ்ரீ - வீர.) யோஜனதூரமார்க்கத்தி லசக்தனுக்கு, குரோசமார்க்கம் கற்பிக்கப் பெறு வதேபோலுமாம்; இவ்வளவுதான் என்பதாதி பரிச்சின்னபலமே ஸ்ரீ ருத்திராதியினின்றும் அடையப்பெறுவதாகும்; ஆன்மாவினுடைய உண்மையான சாக்ஷாத்காரபரியந்தம் செய்யும் பூஜனத்தால் ஆன்மாவானது பிரசன்னமாகவே, செயப்பெறாத அநாதியந்தமாய ஆநந்த பலமேயுண்டாம்; செயற்கையல்லாத பலத்தைவிடுத்து யாவன் கிருத்திரிமபலத்தை யடை வனே, அவன் மந்தாரவனத்தைவிடுத்துக் கருவேல்வனத்தைக் கதுவுபவனேயாவன்; இது கிருத்திரிமகாமயோகங்கள் ஆன்மபூஜனத்தானே சித்தியாவாம். ஆகலின் அவற்றின்பொருட் டுக் கிருத்திரிமபூஜையே செய்யத்தக்கது என்பவனைக் குறித்தருளியதாம். அதுவேயுளதாம் எதனுலியாவும் சத்தைசத்தான்மரூபதாரியாமோ எனப் பிரஹ்மத்திற்கே ஜகத்து ஜீவர்கள் அவற்றின் விவகாரம், சத்தை வடிவமாக இருத்தலாமெனக்கூறி யருளப்பெற்றது, ஆண்டுப் பொருத்தத்தை அறியவிரும்பி வினவுபவராய் ஸ்ரீ வசிஷ்டபகவான் ஹேபிரபுவே! எங்ங

ன மப்பாம், மப்நித்யம் எனப் பிரிக்கலாம், க்ருத் னம் இந்த ஜகத்தானது சேதனுகாசமாத்ர... ரமார்த்ததேவனம் = நிரதிசயப்பிரமோத் ஜீவாதித்தன்மையாமோ அதனைத் திருவாய்மலர்ந... யெந்தங்களோ ... வதின் ஆண்டுச்சிற்சத்தைக்குத் திருசிய அதீனமில்லாததன்மையோ ... யப் பிரளயத்திலும் விடுபடாமையின், வெட்டவெளியேயாம், என, அதனதீனபானமான திருசியத்திற்குப், பானுந்தரமேபோலச் சத்தாந்தரமும், பொருந்தாதாம், என, பொருத்தத்தை யுரைத்தருளல்:—பராபரமென்பதாதி. சிதாகாசம் ஒன்றமாத்திரந்தான் உண்டீண்டு, அதுவும் எங்கும் அடியும் முடியும் மேலுங்கீழும் உத்தரமும் பூர்வமும் அன்றி இருக்கும், இக்காரணத்தானே திருசியங்கள் யாவும் விடுபட்டுக் கற்பாந்தத்தில் எஞ்சியிருக்கும்; அல்லது, சிதாகாசம் யாண்டும் சர்வகாலத்திலும் திருசியமற்றதேயாம், பாராதிடரிச்சேதசூனியத்தன்மை யுண்மையின், பிரளயகாலம்போலும், என்னும் அனுமானவடிவப் பொருத்த மீண்டுகாட்டியருளப் பெற்றது என்றுணரத்தக்கது.

(ச.) பராபரமற்ற = உத்தரபூர்வ அவதிரகிதமான, அல்வழியாம் = வேற்றுமையொழிநிலை யென்னுந் திருசியசம்பந்த ரகிதமாகிய, எப்பொருள், கற்பங்களனைத்தினுமாயாது, சேடித்திருக்கு மதுவே சிற்கனம் எவ்விடத்துந் துன்றிநிற்கும், அதனல் அதுவே தெய்வம். (22)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆயின் செயப்பெறுப் பரமபூசையினில்யாவை சாமக்கிரியைகள் எனப் பிரார்த்திப்ப உத்தரமருளல்:—அறிவு என்பது.

அறிவுசம பாவனைசந் தோடமெனு மலர்களா லந்தத்தேவாம்
பிறிவரிய வாத்துமதத் துவத்தையருச் சிப்பதே பெரியபூசை
குறிவடிவிற் பூசனைபூ சனையல்ல வகண்டமெனக் கூறுந்தெய்வ
நெறிகொள்புறத் தொழில்களா னேராதிங் கதனுலே நிறையுமின்பம்.

(ப - ரை.) அறிவுசம்பாவனை சந்தோடமெனும் = போதம் சாமியம் சமம் என்னும், மலர்களால் = புஷ்பங்களால், அந்தத்தேவாம் பிறிவரிய ஆத்துமதத்துவத்தை = அந்த தெய்வமாம் பேதமில்லாத ஆன்மதத்துவத்தை, அருச்சிப்பதே பெரியபூசை = அருச்சனை செய்தாராதிப்பதே பெரிய தேவார்ச்சனமாம், குறிவடிவிற் பூசனை பூசனையல்ல = சின்ன வடிவத்திற் பூசைசெய்தல் பெரியபூசையாகமாட்டாது, அகண்டமெனக்கூறுந் தெய்வம் = அகண்டமென்று சொல்லப்பெற்ற தெய்வமானது, நெறிகொள்புறத்தொழில்களால் நேராது இங்கதனுலே நிறையுமின்பம் = முறையாகவே செய்யப்பெற்ற பாகியத்தொழில்களானே பெறமுடியாது ஈண்டதனினுலே சுகம் பூரணமாம்.

(ஸ்ரீ - வீர.) உண்மை யுணர்வு எங்குந் தன்னைப்போன்றே காணல் சாந்தியென்னும் புஷ்பங்களே யக்கிரங்களாம் ஆண்டு; சின்மாத்திர நிர்மலசிவமே பூஜிக்கத்தக்கதென்று பூச்சியவித்துக்களுணர்வர்; சமபோதாதி புஷ்பங்களானே ஆன்மதேவன் அருச்சிக்கப்பெறுகின்றதே தேவார்ச்சனமென வுணரலாம், ஆகாரார்ச்சனம் அர்ச்சனமாகாதாம்; ஆன்மசம்வித்துரூபமேயாய தேவார்ச்சனத்தை விட்டுவிட்டு எச்சனங்கள் கிருத்திரிம அர்ச்சைகளில் பற்றுறுகின்றார்களோ அவர்கள் நெடும்போது கிலேசத்தையே யடைகின்றார்கள். ஆன்மாவே தேவனும் பகவான் சிவனும் பரமகாரணனும், ஞானர்ச்சனத்தானே நிரந்தரம் பூஜிக்கத்தக்கவன் எப்போதும் அவனேயாவன்; தேகந்தேவாலயஞ்செப்பும் ஜீவன் றேவன் சதாசிவன், நீக்குகாஞ்ஞான நிர்மால்யாம் ஆக்குக சோகம்பூசனை. ஆண்டுவெகுவித்தஞ் செலவு ஆபாச

நிரதிசயாநந்த சுவப்பிரகாசப் பிரஹ்மத்தினுடையதின் பெருமையை விரித்துரைத்தருளி அச்சடங்களில் ...வியாவாம், ஆகவிருப்பமென்றருளல்:—எங்கும், நயனம், என்பன.




எங்குமுறைறவோ னெய்வரா லுமெய்தபடுவோ னெல்லையறத்
தங்குபதங் கட் காதார மாவோன் சத்தா மாத்திரமே
யங்கமாவோன் சகத்திரளை யடைவினடத்துங் காலத்தைத்
துங்கவாயில் காப்பவனு முடையோன் சுத்தசுயஞ்சோதி.

நயனமூக்குச் செவிதொக்கு நாக்குமனமாஞ் சத்திகளா
லியல்பிலெங்கும் விடயங்களருந்தி யெண்ணங் களுக்கெல்லா
மயலதாகு மெவ்விடத்தும் பரமசிவமென் றகத்தெண்ணி
யுயர்தெய் வத்தைவிதிநெறியே யோங்குபூசை செயவேண்டும்.

(ப - ரை.) எங்கும் உறைவோன் = எவ்விடத்திலும் இருக்கப்பெற்றவன், எவராலும் எய்தப்படுவோன் = யாவரானும் ஆன்மசொரூபமாதலின் உண்ணாட்டத்தால் அடையப் பெறுபவன், எல்லையற = எல்லையில்லாமல், தங்குபதங்கட்கு = உறையப்பெறும் பதங்களுக்கு, ஆதாரம் ஆவோன் = ஆதரமாயிருப்போன், சத்தாமாத்திரமே = சன்மாத்திரமே, அங்கம் ஆவோன் = வடிவம் ஆகி யிருப்போன், சகத்திரளை யடைவினடத்தும் = உலக விவர்த்தத்திற் குபாதானமாயுள்ளோன், காலத்தைத் துங்கவாயில் காப்பவனுமுடையோன் = உலகையோம்பும்போதைத் தூயவாயிற்பாலகனுமுடையவன், சுத்தசுயஞ்சோதி = சூரியாதியினுந் தூய சுயம்பிரகாசன்.

நயனமூக்குச் செவிதொக்கு நாக்குமனமாம் சத்திகளால் = ஈக்ஷணசக்தி, கிராணசக்தி, சிரவணசக்தி, பரிசசக்தி, இரசனைச்சக்தி, மனனசக்தி, என்பவற்றால், இயல்பில் எங்கும் விடயங்கள் அருந்தி = இயல்பாகவே எவ்விடத்திலும் விடயங்களைப் புசித்து, எண்ணங்களுக்கெல்லாம் = நினைவுகளுக்கெல்லாம், அயலதாகும் = அன்னியமாகும், எவ்விடத்தும் = எங்கும், பரமசிவமென்றகத்தெண்ணி = பரமசிவஸ்வரூபம் என்பதாக வுள்ளத்துன்னி, உயர்தெய்வத்தை = மேலான தேவதையை, விதிநெறியே = விதிமுறைப்படியே, ஓங்கு பூசை செயவேண்டும் = மிகுந்த ஆராதனம் செய்தல்வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) கடத்திலும் படத்திலும் வடத்திலும் குட்டியச்சடத்திலும் சகடப்புடத்திலும் வானரத்திடத்திலுமிருக்குாம மெழிற் பரமான்மா; சிவனு யரனு யரியாய்ப் பிரமனுய் நவ விந்திரனுய்க் குபேரனு யெமனுய், எவையுமாயிருக்கும் எழிற்பரமான்மா; ரூபபேதங்களினுலே அநந்தபதங்களின் ஆதாரமாகும் = வாச்சியமாகும், அப்பேதபரித்தியாகமாகவே யேகபதத்தின் ஆதாரமாம் = இலக்கியமாம் எச்சத்தையுளதோ அம்மாத்திரமேயாய முக்கிய வொருவிக்கிரகமாம்; சகச்சாலங்கட்கெல்லாம் விவர்த்த அதிஷ்டானமாயிருப்பது அது, காலனிதனது துவாரபாலகனும், வாயில்காவலாளன் = அவிசுத்திகாலத்தில் மனத்தினது உட்பிரவேசத்தைத் தடுப்பவனுமவன், விசுத்திகாலத்திலோ, பிரவேச அநுகூலன்; எல்லாப் பிராணிகளினுடைய சிரவண ஈக்ஷணசிரம்பாணியாதி யவயவங்கள் அதனுடையனவேயென விசுவரூபஞ் சிந்திக்கத்தக்கது என்றருளல்:—நயனமென்பதாதி. எங்கும்பார்க்கும் ஆற்றலோடுற்றது, எங்கும் மணங்கவரியல்பினிலிருப்பது, எங்குந் தீண்டும் மயமாயிருப்பது, எங்கு மிரசங்கவர் இனிதுடன் பொலிவது, எங்குங் கேட்கு மியல்புடனிருப்பது, எங்கும் மனனத்துடனே யிருப்பது; என்று இவ்வாறு சிந்தித்தபோதினும் அசங்க அத்வயத்

தகைமை யுண்மையாகயுள்ளது அதனது, மறக்கத்தக்கதன்றும் என்றருளல்:—எண்ணங் களுக்கென்பதாதி. எங்கும் எவ்விதத்தினும் மனன அதீதமும், எங்கும் எவ்விதத்தினும் பரமசிவமும், எப்போதும் சர்வகர்த்தாவும், சங்கற்பித்த எவற்றையுமே தருவதும், சர்வபூதங் களினும் உள்ளேயிருப்பதும், சர்வமும், சருவத்திற்கும் ஒரு முக்கியசாதனமாய்ச் சத்தாஸ் பூர்த்தியைக் கொடுத்துக்கொண்டிருப்பதுமாய் எதுவுளதோ அவ்விதனையே இவ்வகையானே நன்றாகச் சிந்தனைசெய்து பின்னர் முறைப்படியே இத்தேவதேவேசனையே அருச்சனை செய்க.

(ச.) எல்லையற = நிரவதிகமாய், தங்குபதங்கட் காதாரமாவோன், பரமான்மா சத்தி ரூபனுதலின் அவைகட்காசிரயம், செகத்திரளையடைவினடத்தும் ஜகத்திரள் சடரூபமாத லிற் சில ஜகங்களைப்புறத்துவிடுவன், சிலவற்றை யகத்தடக்குவன், சிலவற்றை அவ்விடத்து மத்தியத்தே ஸ்தாபிப்பன் உடையோன் துவாரத்திருப்பவன்போல் ஈசுவரேச்சைப்படி ஜகங் களின் பிரவர்த்தனமாதலினென்க. விசுவமெங்குஞ் சட்சுவென்பதுமுதலான சுருதியினு லென்க; எங்குஞ் சகலேந்திரிய சத்திகளோடுங்கூடியது, எங்கும், எண்ணங்களுக்கெல்லா மயலதாகும் மனோவியாபாரங்களுக் கறிவரிதாம். மூ: விவர்த்திதஜகத்ஜாலன் = நானாவித மாய்ப் பிரவிர்த்திக்கப்பெற்றது ஜகத்துச்சால மெவனால் அவனென்பது பொருள். விடுக்க வும் அடக்கவும் தொடுக்கவும் செய்துகொண்டு அவ்விவ்வெளியாயகாலன் இத்தேவனது துவாரபாலகனுவன். (34-35)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஹே பிரஹ்மவித்துக்களுட் சிரேட்டனே! அருச்சனத்தின் விதான மின்னதெனக் கூறக்கேட்பாயாக வென்றருளல்:—தன்னதென்பது.

(ச.) பூசாவிதியில் விசேடந் தெரிவித்தற்குக் கூறல்:—

தன்னதறிவே வடிவாகித் தயங்குதேவின் பூசைக்கு
மன்னுமுபசா ரங்களெலா மரபன்றாகு மெப்போது
மின்னலன்றிக் குளிர்ந்தழிவற் றேகமாகி யமுதாகித்
துன்னுதன்போ தத்தாலே தூயபூசை செயல்வேண்டும்.

(ப - ரை.) தன்னதறிவே வடிவாகித் தயங்கு தேவன் பூசைக்கு = தனது சித்தே சொரூபமாகி விளங்குந் தேவதேவனது பூசனைக்கு, மன்னும் உபசாரங்களெலாம் மரபன் றாகும் = பூசனைக்காகப்பொருந்திய ஆந்தரபாகிய உபசாரங்கள் யாவும் ஒழுங்கன்றாகும், எப்போதும் இன்னலன்றிக்குளிர்ந் தழிவற்றேகமாகி = நித்தியமும் துயரமொன்றுமின்றிச் சீதளித்து நாசமற்று ஒன்றேயாகி, அமுதாகித்துன்னு = அமிர்தமாகிப்பொருந்தும், தன் போதத்தாலே தூயபூசைசெயவேண்டும் = தனதுணர்வாலே பரிசுத்தபூசை செய்தல் வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) தன்னறிவான்மாவாய வித்தேவன் கந்தபுஷ்பாதி யுபசாரங்களானே பூசிக் கப்பெற்றிலன், நித்தியம் கிலேசமின்றிக் கிடைப்பதாய சீதள அவிநாசியாய ஒரேயமிருத மயத்தனது போதத்தானே இத்தேவதேவன் பூசிக்கப்பெறுவன்; அகண்ட சாக்ஷாத்கார விருத்தி தாரையாரூடத் தனதுவடிவமாம் போதத்தால் தியானிக்கவேண்டுமென்பதாம்.

(ச.) இத்தேவன் பாகிய உபசாரத்தாற் பூஜிக்கப்படான், மற்றென்னெனில், இன்ன லின்றி = அக்கிலேசத்தால் மேவுவதாய், குளிர்ந்து = சிந்தாசந்தாபரகிதமாய், ஏகமான போதாமிர்தத்தாற் பூஜிக்கப்படுவன். (36)

(ஸ்ரீ-வீர - அ-கை.) முன்மொழிந்த சிந்தனமும் இதனது அங்கமாம் என இதுவே சருவபூசைகளினின்றும் பிரதானம் என்னுந் திருக்கருத்தா லுரைத்தருளல்:—ஒழியா தென்பது.

(ச.) கேவலம் போதாமிர்த உபகாரமாத்திரமன்று மற்றென்னெனில் இதுவே பூசை யுமாமெனல்:—

ஒழியா துள்ளே பரிசுத்த வுணர்வாமறிவே ததுதானே
யிழியாதான தியானமது தானேயியல்பா மருச்சனையாம்
விழிதோல்செவிநா மூக்கைந்தால் விடயங்கொள்ளிற் றுயில்செய்யின்
மொழிகூறிடிலே கிடி லுயிர்க்கின் முற்றுமுணர்வா யிடல்வேண்டும்.

(ப - ரை.) ஒழியா துள்ளே பரிசுத்தவுணர்வாம் அறிவேததுதானே = நீங்காது அந்த ரத்தேயிருக்குஞ் சுத்த அறிவுமாத்திர ஞானமியாது அதுவே, இழியாதான தியானமது தானே = மிகவும் மேலானதான தியானமாம் இதுவே, இயல்பா மருச்சனையாம் = மேலான தக்க அருச்சனையாகிய பூசையுமாம், விழிதோல் செவிநாமூக்கைந்தால் = சக்ஷு துவக்கு, சுரோத்திரம் ஜிஹ்வை நாசியென்னும் ஐந்திந்திரியங்களால், விடயங்கொள்ளில் = சத் தாதிகளைக் கவரில், துயில்செய்யில் = நித்திரைசெய்திடில், மொழிகூறிடில் = சப்தத் தைச் சொல்லிடில், ஏகிடில் = சென்றிடில், உயிர்க்கில் = மூச்சுவிடில், முற்றும் = இவ் வெல்லா விவகாரங்களிலும், உணர்வாயிடல் வேண்டும் = சாக்ஷிமாத்திரமாகவே யிருக்க வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) இதுவே மேலான தியானமாம், இப்பூஜையே மேலான பூஜையாம்; யாது நிரந்தரம் உள்ளிருக்குந் தூயசின்மாத்திரவேதனமாமோ; இதற்குக் காலநியமு மிலதாமென வெப்போதுமே செய்யத்தக்கதாமென்றருளல்: விழியென்பதாதி. கண்களாலுருவங்களைப் பார்த்தபோதினும், செவிகளாற் சப்தங்களைக் கேட்டபோதினும், துவக்கினாற் சீதோஷ் ணாதிகளைத் தீண்டியபோதினும், மூக்கான்மணங்களை மணந்தபோதினும், நாக்காற் பல ரசம் நண்ணியபோதினும், காலான் நடந்தபோதினும், தூங்கியபோதினும் அல்லது கனவு கண்டபோதினும், மூச்சுவிட்டபோதினும், வாக்கால் வசனித்தபோதினும், விடுத்தபோதி னும் அடுத்தபோதினும் தூய அறிவுமயமாகவே யிருக்கவேண்டும்; ஈண்டு:—காணுங் கேட்கு முறுமோக்குங்காலா னடக்குங்கண்வளரும், பேணுந்துறக்கு மூச்சுவிடும் பேசும் விழிக்குஞ் சிம்பிளிக்கும், பூணுமின்னும் பலவெனினும் புலன்சேர்பொறியின் புணர்ப்பென்றே, தானுந் திரியுமெனவொன்றுந் துளங்கான் விளங்குந் துணிவுடையோன். என்னும் ஸ்ரீமத்பகவத் கீதையும் எண்ணத்தக்கதாம்.

(ச.) உள்ளேயுறும் பரிசுத்தமான சின்மாத்திரத்தினது, ஒழியாதறிவு, அவிச்சின்ன மான அநுசந்தானமேது அதுதானே தியானம், அதுதானே பரமபூசையாம், அவிச்சின்ன அநுசந்தானப் பிரகாரத்தையே கூறல்:—தனது சன்னிதானமாத்திரத்தாற் சூரியன்போற் சர்வேந்திரிய வியாபாரங்களையு நடத்துபவனுஞ் சகலத்துக்குஞ் சாக்ஷியாது அச்சுத்தசின் மாத்திரரூபன் நானென்று எப்போதும் அநுசந்திக்கவேண்டுமென்பது பொருள். இதற்கு. உ-ம்:—அத்தாமலகம், உளவிழியாதி முயல்வினினிமித்த முற்றதாயற்றதா யகிலக், களவுள வுபாதி ககனதுல்லியமாய்க் கதிரவ னென்னவிவ்வுலகத், தளவறுதொழில்க டந்நிமித்த மதா யகமென வெதுவது வான்மாத், தெளிவுள விளக்க வடிவதாய்வீர சேகரக்கரியதாஞ்

சிவமே. பொருள்:—மனாயனுதிப் பிரவிர்த்தியில் நிமித்தமாய் அகிலோபாதியற்றதாய் ஆகாசகற்பமாய் லோகசேட்டை நிமித்தமான ரவிபோலிருக்கு நித்தியசித்ஸ்ரூபனுன ஆன்மா நானெனன்பதாம். (37)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரஹ்மபூசனையின் றிறமையருளிப் பயனையருளல்:—திகழ், இயலார், பாசம், என்பன.

திகழாத் துமதத் துவத்தினுயர் தியான முப காரங்களொடு
நிகழ்பூ சனையா மிவ்வழியா லன்றிப் பிறிதோர் நெறிகளினுற்
புகழ்மெய்யுணர்வு கிடையாது புரண தியான பூசையினை
யிகழ்மூ டர்கள்செய் யினும்பதின்மூன் றிமைப்பிற் பசுவீந் துளபேறும்.

இயலார் கடவு ளாந்தன்னை யிமைநூற் றளவு பூசிக்கி
லயமேதத்தி லாயிரமாம் பேறு மரைநா ழிகைபூசை
முயல்வா ரிலக்க மயமேதப் பயனைப்பெறுவர் முறைமையினுற்
பயனுர் பூசை யொருகடிகை பண்ணி லிராச சூயபலம்.

பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினைங்கடிகை பூசிக்கி
லிராச சூய விலக்கநிக ரிவ்வாறொருநா ளருச்சிக்கி
லாசிலாத பரவொளியி லமராலாகு மிதுதானே
யேசில் பரம யோகமிது தானே பரமகிரியையுமே.

(ப - ரை.) திகழ் ஆத்துமதத்துவத்தின் = சச்சிதானந்தமாய் விளங்காநின்ற ஆன்ம உண்மைவத்துவின், உயர் தியானம் = உயர்ந்ததியானம், உபகாரங்களொடு = சாதகங்களொடு, நிகழ்பூசனையாம் = திகழ்பூசனையாம், இவ்வழியாலன்றி = இம்மார்க்கத்தாலல்லாமல், பிறிதோர் நெறிகளினுல் = வேறு ஒப்பற்ற ஒரும் மார்க்கங்களினுல், புகழ் மெய்யுணர்வுகிடையாது = ஸ்துதிக்கத்தக்க வுண்மைஞானம் அகப்படாது, புராணதியான பூசையினை = பூரணமாயிலங்கும் பரமசிவதியானபூசையினை, இகழ்மூடர்கள் செய்யினும் = நிந்திக்கத்தக்க அறிவில்லாதவர்கள் செய்தபோதினும், பதின்மூன்றிமைப்பில் = திரயோதசநிமிஷத்தில், பசுஈந்துளபேறும் = கோதானபலமானது லபிக்கும்.

இயலார் கடவுளாந்தன்னை = சுபாவசித்தாமாய பரமான்மாவை, இமைநூறளவு பூசிக்கில் = நூறுநிமிடங்கள் தியானஞ்செய்யின், அயமேதத்தில் ஆயிரமாம் பேறும் = ஆயிரம் அசுவமேதயாகத்தின் பிரயோஜனமாம், அரைநாழிகை பூசைமுயல்வார் = அர்த்தகடிகை தியானஞ் செய்பவர், இலக்கமயமேதப்பயனைப்பெறுவர் = இலக்ஷம் அசுவமேதயாகப் பிரயோஜனத்தை யடைவார், முறைமையினுற் பயனுர்பூசையொருகடிகை பண்ணில் இராசசூயபலம் = ஒழுங்காகப் பிரயோஜனத்தோடுகூடிய தியானம் ஒருகடிகை பரியந்தம்செய்யில் இராசசூயயாக பலமாம்.

பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினைங்கடிகை பூசிக்கில் = வேறொரு சித்தவிருத்தியுமில்லாமல் அந்தரான்மாவைப் பதினைந்துகடிகை தியானிக்கில், இராசசூயவிலக்க நிகர் = இராசசூயயாகம் இலக்ஷமொப்பாம், இவ்வாறு ஒருநாள் அருச்சிக்கில் = இந்தப்பிரகாரம் ஒருதினமுழுவதும் தியானஞ்செய்யில், ஆசிலாத பரவொளியில் அமராலாகும் = குற்றமற்ற பரப்பிரஹ்மப் பிரகாசத்தில் வதிதலாகும், இதுதானே = இதுவே, ஏசில் பரமயோகம் =

ஏதமொன்றில்லாத மேலான யோகமாம், இதுதானே = இதுவே, பரமகிரியையுமே = மேலான கிரியையுமேயாம்.

(ஸ்ரீ - வீர.) கூறிய ஞானதாரைவடிவமாய தியான அமிருதத்தானே, தானே ஈசுவர வடிவமாய ஆன்மாவை நன்குபூசித்து அறிவுவடிவமேயாகலாம்; பரம ஆசுவாதமுற்ற மூக்த ஞலே, புஷ்பாஞ்சலிமுதலியவற்ருனே, தியான உபகாரமேயாம், பரமான்மத்தியானமே இத்தேவதைக்குச் செய்யத்தக்க பூஜனமாகும்; கருத்திதுவாம்:—புஷ்பாதி விடய அர்ப்ப ணமோ தேவதைக்குநேரே தடையற்ற சுகார்ப்பணமாகாதாம்; மற்ருே! பரம்பரையாக அற் பத்தினும் அற்ப அதனது சுக அபிவியஞ்சனம், பசித்தவனுக்கு அரிசிமுட்டியர்ப்பணமே போலும், அவ்வாறு பிரீதியின்பொருட்டாகாதாம், இதுவோ பிரத்தியக்குவின் சுயமாகவே சோதனத்தால் நிரதிசய ஆனந்தரூபத்தன்மையை இலங்குறுமாறு இயற்றி, அதன் நித்திய நிரதிசயத்தின் அத்தியந்த ஏகரசியத்தால் சிவப்பொருட்டு அர்ப்பணரூபம் பூஜனம்; பரம ஆசுவாதனத்தோடு கூடியதாமென அதுவே அத்தகையதேவதையின் றக்கபடியாய பூஜன மெனக்கொள்ளப்பெறும், புஷ்பாதியல்லவாமென்பது பொருள். இதனுனே கூறிய இலக் கணதியானத்தானே சர்வ உபசார சித்தியாமென்றருளல்:-தியானமுபகாரங்களென்பதாதி. தியானமர்க்கியமாம் பாத்தியமுமாகும் சுத்தசம்வேதனுன்மகம்; தியானசம்வேதனம் புஷ் பம்=தியான அபிவியக்தமாய சம்வேதனம்=சைதன்யம் புஷ்பப்பிரயோஜனரூபத்தன்மை யானே புஷ்பமாம், இவ்வண்ணம் சர்வ உபசாரமும் சம்வேதனமேயாமென உணர்வர், சர்வ மும் தியானபரமேயாமெனவறிவர். அறியப்பெருத உபசாரபோக அப்பிரசித்தியாதலின் என்பதாம். அந்தத்தியானம் ஒன்றினுலன்றிப் பிறவற்ருனே இவ்வான்மா அடையவேமுடி யாதாம்; தியானத்தினுலே சொரூப அபிவியக்திரூபப் பிரசாதமுண்டாகின்றது, அதனுல் என்னுமெனின் அருளல்:—சர்வபோக ஸ்ரீயாம், மநுடாதி ஹிரணியகருப்பாந்தமான எல் லாப் போகச்சுகச் சீர்களையும் இந்தப்பிரசன்ன ஆன்மாப் புசிக்குமென்பதாம், குகைக்கண் ணுளதாம் குருப்பரவிண்ணை, மிகத்தெரிந்தவனெலா மொருங்கயின்றிடுவன்; என்று மறையு மறையும். தேகாபிமானியானவன் றன்னுடைய வீட்டில் போகங்களைப் புசிப்பதேபோல, ஹே முனிசிரேஷ்ட! இவ்வான்மாவும் புசிக்கும், அவனுலும் விடயத்தை நன்குதீண்டிச் சனித்தவிருத்தியில் விளங்கிய ஆன்மசுகமே யநுபவிக்கப்பெறுதலின், பிரஹ்மான்மசுகத்தில் எல்லாச் சுகங்கட்கும் உள்ளடக்கமுண்மையின் என்பது கருத்தாம்; இப்போது தத்துவ சாக்ஷாத்காரமிலதேனும், கூறியபடியேயாய தியானமாத்திரத்தானும், அதனுற் கர்ஷ அனு சாரி பல உற்கர்ஷத்தையருளல்:—புராணமென்பதாதி. ஹே நன்மதி யுடையோய்! பதின் மூன்று நிமிடங்கள் இதனது தியானத்தானே மூடனுயினும் பரமேசனைப் பூசித்துக் கோப் பிரதானபலத்தை யடைவன்; நிமிடங்களின் ஒருநூறு இந்தப் பிரபுவைப்பூசித்து அசுவமேத யஞ்ஞத்தினது பலத்தை மானவன் அடைவன், பிரபுவாகிய தனது ஆன்மாவைக் கடிகை யரை யினிது பூசித்து, அசுவமேதம் ஆயிரத்தின்பலத்தை யதிகாரியடைவன், தியானபலியுப காரத்தானே சுயம் ஆன்மாவை யான்மாவினுல், யாவன்ருன் கடிகைபரியந்தம் பூஜிப்பனே அவன் இராஜசூயத்தை யடையாநிற்பன். இவ்வண்ணம் மத்தியானபூஜனத்தால் இராஜசூய ஏகலக்ஷத்தைச் செய்விப்பவனுவன்; அற்றேற் கடிகையரைத் தியானத்தில் அசுவமேதமாயிரம் பலம் ஆயின், கடிகைத்தியானத்தில், அதனினும் அதிகபலம் கூறத்தக்கதாகும், ஆகலின் எங் ஙனம் ஏகராஜசூயபலகீர்த்தனம்? அசுவமேதத்தினும் இராஜசூயத்தின்பலம் அதிகமில்லை யாம், பிருகதாரண்யகத்தில், எவ்விடத்திற்கு அசுவமேதயாஜிகள் செல்லுகின்ருர்கள் என் னும் புஜ்யுவின் வினுவிற்கு யாஞ்ஞவற்கியமுனிவர் விடையளித்ததாவது:—ஏழுதீவுகளும்

எழுகடல்களும் ஒருங்குகூடி இரண்டுகோடியே ஐம்பத்துநான்கு இலக்ஷம் யோஜனையள
வாம், அவ்வளவே நன்னீர்க்கடற்கப்பாற் பூமியாம், அதற்கப்பால் எட்டுக்கோடியே முப்
பத்தொன்பது 'இலக்ஷம் யோசனையளவு பொற்பூமியாம், அப்பால் வட்டமாக லோகாலோக
பர்வதமுளது, அதன்மத்தியில் இரவும் பகலும் இரவியினிரதம் சென்றுகொண்டேயிருக்கும்
அம்மத்தியமான சோத்தரம் இலக்ஷத்தொன்பதரைக்கோடி யோஜனையளவதாம், இதனினும்
முப்பத்திரண்டு'பங்கதிக யோஜனையளவு சூரியபகவானுடைய கிரணங்கள் வியாபிக்கும், அவ்
வளவுதேசம் பூலோகமாம் என்பதாதியானே பிருதுவிசமுத்திராதியளவுரைத்து, இப்பூவுல
கிற்கப்பால் இதனினும் இருமடங்கதிகம் பூமியாம், அப்பா லிருமடங்கு கனகடலாம், அப்
பாற்பிரமாண்டமாம், அதன் ஒருகபாலம் வெள்ளிமயம், மற்றொரு கபாலம் பொன்மயமாம்,
அவற்றின்சந்தி வாண்முனைபோலும் மிக்க கூர்மையாம், ஈயின் இறகேபோல மிகச் சூக்கும
மாம், இச்சந்திபிரமாண்டத்தினும் வெளியேபோகவழியாம், எனப் பிரமாண்டத்தின் கபா
லத்துவய சந்தியைக்கூறி, அவரை யிந்திரன் பக்ஷிவடிவமாய்க் கனகடற்புறப்படுத்தி வாயுவி
னிடத்தேதருவன், அவரை வாயுத்தன்னகப்படுத்திச் சந்திவாயிலாய் வெளியேகொண்டுபோ
யெவ்விடத் தசுவமேதயாஜியர் சேர்ந்துளாரோ அவ்விடத்தடைவிக்கும் என்றசுவமேதயாஜி
கட்குப் பிரஹ்மாண்ட கர்ப்பரசந்திவாயிலாய் வாயுவால் வெளிப்படுத்தப்பெற்றுச் சருவகரும
பலவுற்கருஷஸ்தானத்தையடைவிக்குஞ் சிரயணவிரோதத்தான்; இதுவிடயம் ஸ்ரீ ஆன்மபுரா
ணத்தில் விரிவாகக்காணலாம். பிரமஹத்தியசுவமேதத்தினும், பரமமாம் புண்ணியபாவமில்லை
யாம், என்பது பிரசித்தியாதலின்; பூர்வ இராமாயணத்தில் இலோபாக்கியானத்தில், அசுவ
மேதத்தினும் மேலாம் யாகமும் மகாத்மாவின் அன்பினும் மேலா மன்புமே இல்லையாமென்
னும் ஸ்ரீ இராகவர் திருவாக்குக்கு இழுக்குவருதலின்; சாரீரகத்தில் இதரகருமிகட்குத்
தூமாதிமார்க்கத்தானே சந்திரமண்டல வடைவே, அசுவமேதயாஜி யொருவனுக்கே, அர்ச்சி
ராதிமார்க்கத்தானே, பிரமலோக வடைவாமென்னுஞ் சித்தாந்த அதிகாணத்தானும்,
அசுவமேதத்திற்கு இராஜசூயபத்தைக்குறித்துப் பலாதிக்கியம் சித்தமாதலின் எனின், இது
கோதுடையதாகாதாம், பரத்திற்குப் பூர்வமுரண்பாடிலாமையான், அபாதகத்தன்மை
யுண்மையானேகூடலின்; யாண்டுக்கடிகையரைப் பூசனையானே யசுவமேதமாயிரம் பலமோ,
ஆண்டுக்கடிகைமாத்திரைப் பூசையானே அதற்கு இருமடங்கு அடைவுறுதலேயாம். ஆண்டு
இராஜசூயபலம் சுவராஜ்ப இலக்கணமாகக் கேட்கப்பெற்றது இதர அசுவமேதயாஜிகட்குச்
சுவாராஜ்யத்திற் பரியவசானமடைகின்றது என்பதாக மகத்தான யோக உற்கர்ஷம் பிரஜை
களினும் இராஜனுக்கேபோலக் கடிகைபூஜைக்காரனுக்குச் சித்திக்கும்; ஈண்டுத்தக்கிர
கௌண்டின்ய நியாய ஆசிரயணம் பொருத்தமாகாதாம் ; வாக்கியம் வியர்த்தமாமென்னும்
வழக்காதலின். நியாயம்:—மறையவர்பொருட்டுத்தயிர் தந்திடுக. தக்கிரங்கௌண்டின்னி
யன்பொருட்டுத்தான் என்பதாம். இலௌகிகம் இத்திருட்டாந்தமாம்:—லோகத்திலோ,
உளதாயினுஞ் சம்பவம் பாதனமுண்டாம், அஃதெங்ஙனம்:—தயிர்மறையவர் பொருட்டுத்
தருக தக்கிரம்கௌண்டின்யன்பொருட்டு என்புழிசம்பவமாயினும் தயிர்த்தானத்திற்குத்
தக்கிரதானம் நிவர்த்தகமாம். அவ்வாறாகவே இத்தகையவிடயத்தில் மகாபாடியத்தில்
உரைக்கப்பெற்றது:—அசத்திலோ சம்பவமாயினும் பாதமாம், உள்ளதாஞ் சம்பவம் யாது
பயம்மாம்; என்பது. ஈண்டு அவச்சேதாதிகரண நியாய அவசரம் என்பது மாகாதாம், அத
க்ஷிணத்தன்மை, சர்வவேதசதக்ஷிணத்தன்மைகட்கேபோலப் பிரஹ்மலோக தற்சுவாராஜ்ய
பலங்கட்கு முரணிலாமையின் என்னுஞ் சிறப்பையிலக்கற்பொருட்டே மூலத்தில் து என்
னுஞ் சப்தமாம். நியாயம்:—சோதிட்டோமத்தில், பிராதச்சவனத்தில், பகிஷ்பவமானத்

தானே மகிழ்பெறுத்துபவராய இருத்துவிக்குக்ள், சாலையின் வெளியே செல்லாநிற்பர், அப்போது ஒருவரின்பின்னர் அன்னியர் என இவ்வண்ணம் பிபீலிகைமுறையே பங்தியாகார் மாகச் செல்லத்தக்கது, ஆண்டு முன்பு செல்பவருடைய கச்சத்தைப் பற்றிக்கொண்டே பின்னு லன்னியர் செல்லுதல் வேண்டும், வேண்டவே, பிரமாதத்தால் உற்காதாகவர்ந்தகச் சம்விடப்பெறுமாயின் அப்போது தக்ஷிணைகொடாமலே தொடங்கிய யாகத்தை முடிகக் லாம். அதனைமுடித்து மீளவும் அந்த யாகந்தொடங்கலாம், அத்தொடக்கத்தில் முன் யாது தாவிழைந்த பொருள் அஃதீக. பிரதிகர்த்தாவிடினே அப்போது அப்பிரயோகத்திலேயே முழுத்தக்கிணையீக வென்பதாம். திவசம்பூசித்திவ்வண்ணம் பரந்தாமத்தில் வசிப்பன் நான், நெடும்போதொருமைபெறில் ஞானேயமானது அவசியமுண்டாம் என்பது திண்ணமாத லின் என்பது கருத்தாம். இதுவே அப்பரம யோகமாம், இதுவே அப்பரமக்கிரியையாம்.

(ச.) அயமேதத்திலாயிரமாம் = ஆயிரம் அசுவமேதயாகத்தால் வரும், பலம் = பேறும், முறைமையினுல் = தியானபலியுப்காரத்தாற்றன் றன்னைத்தன்று லென்பது பொருள். (38-39-40)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே பரமப் பிரேமைக்கிடமாயிருக்கும் ஆன்மசொரூபமாகிய வசிஷ்ட முனியே! இவ்வருளிய இலக்கணவடிவப் பூஜனத்தை எந்நான்றன் விக்ஷேபக் கேதசூனியனுக் கணமேனும் ஆசரிப்பனே, முறையே சர்வபந்தமுக்தனும் அதனுனே அடையுமிடத்தை யடைந்தவனும் ஆகிய இப்பவித்திரசர்வபாப நிவர்த்தககாரணமாய பூசையைப் புரிந்தவனை, சுராசுரலோகக்கூட்டம் உலகத்தில் எம்மை யொப்பவந்திக்கும் தோத்திர ஆசீர்வாதாதிகளானே பூசிக்கும் என்று பாகியபூசையைப் புகழ்ந்தருளி யுபசங்கரித்துக் கொண்டு இப்போது அதிபவித்திரமாகிய அந்தரபூஜையை யருளத்தொடங்கல்:—புறனு வெகுவென்பன.

(ச-அ-கை.) தியானகாலாதிசயத்தாற் பலாதிசயத்தை நிரூபித்து வாகிய பூஜையை உபசம்மரிப்பவராய் அந்தரபூஜையைக் கூறல்:—

புறனும்பூசை யிதுவாகும் போதக்கடவு ளுட்பூசை
திறனுய்க்கேட்பா யெப்போதுந் தேகத்துறையு மித்தேவை
மறவாதிந்தப் பரசிவத்தை வருவோனிருப்போன் றுயின்றெழுவோ
னிறனுர்போக விடயங்கள் புசிப்போன் விடுவோனெனநினைந்து.

வெகுவாயடைந்த பொருள்களிலே மேவித்தனது மெய்யுணர்வாந்
தருநீர் முழுக்கான்மலமற்றுத் தப்பில்போத பூசனையான்
மிகுநற்போத விலிங்கத்தை மேவுபூசை செயல்வேண்டும்
பகுதியில்லா விப்போதம் பயிலாதிருக்கு மிடமுண்டோ.

(ப - ரை.) புறனும் பூசையிதுவாகும் = பாகியபூசை யிஃதாம், போதக்கடவுள் உட்பூசை = ஞானதேவதையினது அந்தரபூசை, திறனுய்க் கேட்பாய் = முறையாய் ஒருமையுடன் கேட்குதி, எப்போதுந் தேகத்துறையும் இத்தேவை = எக்காலத்தினும் உடம்பிலிருக்கும் இந்தத்தேவதையை, மறவாது = மறந்துவிடாமல், இந்தப்பரசிவத்தை = இப்பரமசிவத்தை, வருவோன் இருப்போன் துயின்றெழுவோன் = வருபவனுகவும் இருப்பவனுகவும் தூங்குவோனுகவும் விழிப்பவனுகவும், நிறனுர்போகவிடயங்கள் புசிப்போன் விடு

வோன் என நினைந்து = பலவைசித்திரியபோகவிடயங்களை யநுபவிப்பவனாகவும் தியாகிப்பவனாகவும் எப்போதுந் தியானித்து.

வெருவாயடைந்த பொருள்களிலே = மிகுதியாகவுற்ற பதார்த்தங்களிலே, மேவித் தனது மெய்யுணர்வாம் = பொருந்தித் தன்னுடைய உண்மையறிவாம், தகுநீர் முழுக்கால் = தக்கதீர்த்த ஸ்நானத்தால், மலமற்று = அசுத்தமற்று, தப்பில்போத பூசனையால் = தவறுதலில்லாத ஞானபூசனையினாலே, மிகுநற்போதவிலிங்கத்தை = மிகுந்த நல்ல வுணர்வு இலிங்கத்தை, மேவுபூசை செயல்வேண்டும் = பொருந்தாநின்ற பூசை செய்தல் வேண்டும், பகுதியில்லா விப்போதம் பயிலாதிருக்கும் இடமுண்டோ = பேதமுங் களங்கமும் பேணாத இந்த வுணர்வானது விளங்காதிருக்கும் தேயமுளதாமோ இலதாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகர்ஷியே ! பாகிய சம்பூஜனமானது நன்கு கூறப்பெற்றது இது உத்தமமாம் ஆன்மாவிற்கு, யாதுபவித்திரங்கட்குட் பவித்திரமாமோ, யாது சர்வ அஞ்ஞானங்களின் க்ஷயகாரணத்தன்மையானே க்ஷயமெனப்பெறுமோ, அதனை யிப்போது இனிதாக அருளுவேம்யாம், அதுவே யான்மாவின் உட்பூஜனமாம். செல்லினும் இருப்பினுமே தான் நனவினும் கனவினும் துயின்றெழுகாலையிற்றானும், மற்றுஞ் சருவ விவகாரங்களினும் தொடர்ந்திராநின்ற பூசை நித்தியம் தியானன்மிகையாமிது; எப்போதுமே, சரீரத்தின்கண்ணிருக்கப்பெற்ற இந்தப் பரசிவத்தைத் தியானஞ்செய்க; இது சர்வப்பிரத்தியயங்களின் கருத்தாவாம் அதாவது சந்நிதிமாத்திரத்தானே யுண்டாக்குவதாம் உணர்த்துவதுமாம்; சுயமாகவே இத்தன்னைத்தன்னாலே யுணரவேண்டும்; அமரினும் நிமிரினும் அல்லது தானே நடப்பினும் கிடப்பினும் நன்குணர்ந்திடுக; தீண்டத்தக்கவாம் விடயந் தம்மைத் தீண்டினும் உண்ணினும், எங்கும், அல்லது வீடினும் கோடினும் வீடாது கிளர்ச்சி நாடினும் தானே தன்னையுணர்க. அதனையே வெளிப்படையாய்க் கூறல்:—புசிப்போன் என்பதாதி. போகங் கடம்மைப் புசிப்பினும் பெரும் பெரும் போகங் கடம்மைப் புசியாதொழிப்பினும், தன்னை மறவாதுணர்ந்து தானுய்க; வெளிப்பொருள்களாகிய ஜாக்கிரத்தாதி விடயங்களை தன்னத் தியாரோபத்தானே உண்டாக்குமவனை, சருவகாரியங்கட்கும் தன்சத்தையைத் தரப்பட்டவனை உணர்ந்துய்ந்திடுக. பிராரப்தப் பிரவாகத்தில் வீழ்ந்த அர்த்தபோகங்களில் நிலைபெற்றதும், அசுத்தியையடைவுற்றதாயினும், மீண்டும் மீண்டும் அசங்கவிசுத்த ஆன்மபோதவிலக்கண ஸ்நானத்தானே எப்போதும் தூயதும், ஆகிய போதலிங்கத்தை நித்திய அவபோதப் பூஜையானே நன்குபூஜை செய்துய்க; இவ்விலிங்க மெங்கணுமுளதாம்.

(ச.) தேகத்துறையும் இத்தேவை = தேகாபிமானியாய்ச் சாக்கிராதி யவஸ்தைகளில் வெகுவிதம் வியாபித்திருக்கும் இச்சீவனை, பரசிவமென்று தியானிக்கவேண்டுமென்பது பொருள். பரமாகிரியை = பரமம் தபம். வியாபிருதம் பாடபேதம். வெருவாய் = பகிர்முக சித்தவிருத்திரூபமாய், அடைந்த = விடயமான, பொருள்களிலே = கடாதிகளில், மேவி = பிரதிபலித்த. கடாதியாகாரமான சித்தவிருத்தியிற் பிரதிவிம்பித்ததென்பது பொருள். தனது = ஆன்மசைதன்யத்தினது, மெய்யுணர்வாம் = அநுசந்தானமென்னும், ஸ்நாநத்தால், மலமற்று = சுத்திமானாய்ப் போதரூபமான லிங்கத்தை, தப்பில்போதபூசனையால் = நிரந்தராநுசந்தானமான பூஜையால், பூஜைசெயவேண்டும். (41-42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சைதன்யமே சகலமும் ஆமென்பதையே விரித்துரைத்தல்:— பெருகு, என்னது, என்பன.

பெருகுமனத்தின் மனனத்திற் பிராணுபானன் றன்னடுவி
லிருதயங்கந் தாந்தாலு விடையிற்புருவத் திடையின்மூக்
குருவினுனியின் முப்பத்தா றுற்றபதத்தி னுள்ளத்தின்
றிருகல்கடந்த மற்றகப்பாற் செறியும்போத தேவதையே.

என்னதுடலிற் சிற்கதிரா யிலங்குதெய்வ நானென்னை
யுன்னு மனங்கண் வாக்குக்க ளுடையசத்தித் திரளெல்லாம்
பின்னமின்றி நாயகனைப் பிரியாமகளிர் போனாளுந்
துன்னுமென்றே யநவரதந் தொடர்பாவனைசெய் திடல்வேண்டும்,

(ப - ரை.) பெருகுமனத்தின் மனனத்தில் = விரியாநின்றமனத்தினது மனனத்தில், பிராண அபானன் றன்னடுவில் = பிராண அபானன்களின் மத்தியில், இருதயம் கந்தரம் தாலுவிடையில்=இருதயகண்ட நாவிடையில், புருவத்திடையில்=புருவமத்தியில், மூக்குருவின் நுனியில் = நாசாக்கிரத்தில், முப்பத்தாறுற்றபதத்தில் = முப்பத்தாறுபதகோடியில், உள்ளத்தின்றிருகல் கடந்தமற்றகப்பால் = மனத்தினது சலனங்கடந்தசமாதியினும், அப்பால், செறியும்போததேவதையே = பொருந்தும், ஞானதேவதையே.

என்னதுடலிற் சிற்கதிராயிலங்கு தெய்வம் = எனது சரீரத்தில் ஞானசூரியனாய் விளங்கும் தேவதை, நான் = யான், என்னையுன்னு மனங்கண் வாக்குக்களுடைய சத்தித்திரள் எல்லாம் = மனது நயனம் வாக்கு முதலிய சத்திக்குழுக்கள் யாவும் என்னை யுபாசிக்கும், பின்னமின்றி நாயகனைப் பிரியாமகளிர்போல் = பேதமில்லாமல் மணாளனைப் பிரிவுறாத நாயகிகள்போல, நாளும் = எப்போதும், துன்னுமென்றே = பொருந்தும் என்றே, அநவரதம் = இடைவிடாமல், தொடர்பாவனை செய்திடல்வேண்டும் = தொடர்ந்தநுசந்தித்திடல்வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) மனத்தின் மனனசக்தியி லிருப்பதாய் பிராண அபானாந்தரஉதிதமாய், மனங்களநாவின்மத்தியிலிருப்பதாய் புருவநாசிப்புடப்பீடத்தமர்வதாய், ஒளிருந்தேவனை யுபாசிக்கவேண்டும்; முப்பத்தாறுபதங்கள் = சைவசாஸ்திரப்பிரசித்த முப்பத்தாறு தத்துவங்கள், அவற்றின் கடைத்தானத்திருப்பதும், காலிரௌத்ரி கலவிகரணியென்பதாதி சக்திவிபாகத்தில் உன்மனிமனோன்மனிகளின் அந்ததசையையும் கடந்திருப்பதும், சிவயோகப்பிரசித்தமாகத்தான் உன்மனியந்ததசை சபீஜசமாதிரூபமாம் அதனினுங் கடந்துறைவதும், உட்சப்தாதிகளை யுண்டுபண்ணுவதும், மனமாம் பறவையைப் பிரேரிப்பதும் ஆகிய தேவதையை யுபாசிக்கவேண்டும், ஹஸ்தபாத அவயவத்தோடுகூடியதும் கேசநகதந்தங்களோடுகூடியதும், தன்றேகசம்வித்தின் ஆபாசங்களை வடிவங்களாயுள்ளதும், ஆகியது இத்தேவதையென்றுபாவனைசெய்துய்க; மனோதிருஷ்டிகளின் நானாசாரங்களோடுகூடிய வெகு வெகு விசித்திரமான சக்திகள், உத்தமமான காந்தனைப் பத்தினிகள்போல என்னை யெப்போதும் உபாசியாநிற்கும்.

(சு.) மனத்தின் மனனத்தில் = மனத்தினது மனனசத்தியில், பிரவிர்த்தி நிமித்தமாய் செறியும், பிராண அபானன் றன்னடுவில், அவைகளின் பிரவிர்த்திநிமித்தமாதலின் உதிதமாய்ச் செறியும். இதற்குதாரணம் சாம்பனால்:—யானை பரப்பரம் விழுங்க விருப்பனவோவாப் பிராண வபான ரொப்பாய்ச் செலச் சாவாதுகாயத்திருப்பதைச் சுருதியில், மூவாப்

பரவினன் முதலினைத் தொழுவாம்; எனக் கூறப்பெற்றுளது. இருதயமத்தியிலும், கந்தர மத்தியிலும், தாலுமத்தியிலுஞ் செறியும், இருதயாதிகள் மருமத்தானமாதலின் அவற்றில் விசேடமாகவிளங்கும். புருவத்திடையினும் நாசிகாக்கிரத்தினும் உபாசிக்கத்தக்கது. இத் தன்மையானது போதவிலிங்கமென்பது பொருள். இலிங்கமாவது:—சத்தியோடுகூடியதும் (பீடிகாந்தரத்தில் விளங்குவதும்) பிண்டிகாந்தரத்தில் உதிதமும், மத்தியிலிருப்பதும், பீடமேவியதுமாம் அதுபோலென்பது கருத்து. நிரந்தர அநுசந்தான ரூபப்பூசையாற் பூசிக்க. என்னுடலில் = சர்வாவயவவியாப்தமான தனதுதேகத்தில், சிற்கதிராய் = அகங்காரப் பிரதிவிம்பிதமான சைதன்னியரூபமாகிய ஜீவனாய், நானென்றேயிலங்கும், இதுவே தெய்வமாம், விம்பப்பிரதி விம்பங்களுக் கபேதமாதலின் என்க, மனங் கண் வாக்குகள் = மனது வாகியார்த்தக்கிரகணசாதனமாதலின் மனதே கண்ணாகவுடைய வாகியேந்திரியங்கள்,மனதையன்றி வாகியேந்திரியங்களுக்குத் தன்றன்விடயக்கிரகண சாமர்த்தியமின்றாதலினென்க. அம்மனம் கண்வாக்குகளுடைய, வேறு வேறான வியாபாரங்களால் வெகுவான, சத்திநிரளெல்லாம் = ரூபாதிக்கிரகண சாமர்த்தியரூபங்களான சத்திகள், நாயகனைப் பிரியாமகளிர் போல், என்னை = சர்வேந்திரிய சத்திக்கு முயிர்கொடுக்குஞ் சிவாத்மரூபமாகிய தேவனை, நாளுந்துன்னும், என்றே என்பது நானென்பதோடுங் கூட்டுக. (43-44)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வுட்பூசையையே மற்றொருவகையிலருளல்:—சகத்தவ்வாறென்பன.

சகத்தைநிவேதித்திடுஞ்சித்த மெனதுவாயிற் றனிக்காப்போ
னகத்துவாயிற் பயிலேவ லாளாமெனக்கு நற்சிந்தை
யுவப்பிலுடற்பூண் ஞானங்க ளுற்றகரண மொருபத்து
நிகழ்ச்சியுறுவா யில்களாகு மென்னுமெண்ண நீங்காமல்.

அவ்வாறான விவனவனா னந்தமாகாப் பிரிவற்றுத்
தவ்வாறெல்லாம் பரித்தொன்றாய்ச் சாலநிறைந்தெல் லாநிறைவித்
தெவ்வாயினுமோர் சமனாகி யியலாசார மியலொளிகொண்
டொவ்வாதாய்ச்சித் தாய்நின்றே னொழியேனென்றே பூசிக்க.

(ப - ரை.) சகத்தை நிவேதித்திடுஞ் சித்தம் = உலகங்களைக்கொணர்ந்துள்ளே தள்ளும் உள்ளம், எனது வாயிற்றனிக்காப்போன் = என்னுடைய தலைவாயிற் காப்பவனாவன், அகத்துவாயிற் பயிலேவலாளாமெனக்கு நற்சிந்தை = வீட்டுவாசலிலே சொன்னதுகேட்கும் ஏவற்காரியாம் எனது சிந்தை, உவப்பிலுடற்பூண் ஞானங்கள் உற்றகரணமொருபத்து நிகழ்ச்சியுறு வாயில்களாகும் = சந்தோஷமாக அணிந்துகொள்ளும் பூஷணங்கள் ஞானங்களாம் பொருந்திய இந்திரியங்கள் பத்தும் விவகரிக்கும் துவாரங்களாகும், என்னும் எண்ணம் நீங்காமல் = என் பதானசிந்தனம் அகலாமல்.

அவ்வாறான இவன் அவனான் = அத்தகைய இப்பொருளே அவனும் நானும் ஆவதாம். அந்தமாகப் பிரிவற்றுத் தவ்வாதெல்லாம் பரித்தொன்றாய்=அந்தமில்லாததாய் வேற்றுமையற்றதாய் ஒழியாதெவற்றையு முண்டென்த்தாங்கும் ஏகவடிவமாயிலகிடும்யானே யிருக்கின்றேன், சாலநிறைந்தெல்லாநிறைவித்து = மிக்கபூரணமாய்மிளிர்ந்தெலாவற்றிலும், எவ்வாயினும் ஓர் சமனாகி, இயலாசாரம், இயலொளிகொண்டு = எங்கும் ஒரேபடித்தாகி ஒரேபடித்தான ஆசாரமாய் ஒரேபடித்தான பிரகாசமாய்க்கொண்டு, ஒவ்வாதாய் = உவமிக்க

முடியாததாய், சித்தாய் = அறிவாய், நின்றேன் = நிற்கின்றேன், ஒழியேன் = நாசமில்லேன், என்றே பூசிக்க = என்றுதானே பூசைசெய்க.

(ஸ்ரீ - வீ.ர.) ஜகத்திரயத்தையும் நிவேதிக்கும் இவ்வெனது மனதானது, துவாரபாலனவன், இவ்வெனது சிந்தையானது வாயிலிலிருக்கும் வேலைக்காரியாவள், சன்மாத்திரகோசரத்தன்மையானே சுத்தரூபியுமாவள்; ஆன்மாவைப்போலப் பரப்பிரீதிவிஷயீ கிருதமாய புத்தியானது எனது ஞானசத்தியாவள், கிரியா = பிராணசக்தியே வராங்கனையாவள், விசித்திரங்களாய சாஸ்திரீய லௌகிகஞானங்களே பூஷணங்களாம், எனது அங்கங்களிற் பூணப்பெற்றிருப்பனவாம்; ஞானேந்திரிய கணங்களோடுகூடிய கருமேந்திரியங்கள் வாயில்களாம், இவனே யவன் அவனே நான் இதுவேயது அதுவேயான், அநந்தாத்மாவாய் யாவற்றினும் வேறாகி ஆகிருதியற்றதாய், யாவற்றையும் தாங்குவதாய், ஏகான்மாவாய், பூர்ணமாய் யாவற்றையும் வியாபித்து யாவினும் நிறைந்ததாய் நானிருக்கின்றேன், என்னும், அலௌகிகமாய்த் தெளிந்த தனது சாமர்த்தியத்தை, பிரத்தியக்குத்தத்துவப் பயிற்சியையனுசரித்து, தேவத்தன்மைப் பரிபூர்ணமாய உள் ளதீன ஆன்மா உபசாந்தியாயிருக்கும். அத்தகைய பூஜாபரிபாகபலன்களை யருளல்:—அத்தமோவாவதில்லை யுதயமுமாவதில்லை, மெத்தவும் மகிழ்வதில்லை மெலிவதுஞ் சினமுமில்லை, நத்தியநிருத்தியில்லை நவில் பசிதாகமில்லை, வித்தகவாஞ்சையில்லை விடுவதுமில்லையாகும்; உள்ளே சமமாயிருப்பதாம், வெளியிலும், சமமெய்திய ஜீவன்முக்தர்களால் ஒப்பாம் ஒழுக்கம் உடையதாம் சமாபாசமும் சமாகிருதியதுமாம்.

(ச.) எனது இத்தன்மையாகிய தேவனை எனது, சகத்தை = விசுவவிருத்தாந்தத்தை, நிவேதித்திடும் = அறிவிக்கும், சித்தம் = மனதே, தனிவாயில் காப்போன் நற்சிந்தை = வாகியார்த்தவிடயசிந்தை, எனக்கு, அகத்துவாயில்பயில் = அந்தப்புரத் துவாரத்திருக்கும் (விசுவசிக்கத்தக்க) ஏவலாளாம், ஞானங்கள் = விவிதவஸ்து விடயங்களான ஞானங்கள், எனது உடல்பூண், சொரூபசோபைக் கேதுவாதலின் அங்கங்களிலுறும் பூடணங்கள், காணமொருபத்தும் = வாக்காதி கருமேந்திரிய பஞ்சகமும் சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்சகமும், எனக்கு, நிகழ்ச்சியுறு, புறஞ்செல்லு மேதுவாதலின், வாயில்களாகும், இவ்விடத்து ஞானேந்திரியங்களே விசித்திரரூபமாய்ச் சிவனை யுபாசித்தலிற் பிரமதகணங்களாம் அவைகளோடுகூடிய கன்மேந்திரியங்களே வாயில்களாகுமெனப் பொருள்கொள்க. இவன் = அபரோக்ஷமாய் விளங்குகின்றவனென்னும், அவன் = சிவரூபன், நான், பரிச்சேதரகிதரூபனுதலின், பிரிவற்று, அந்தமாகா = நிரவதிகரூபமாய், சாலநிறைந்து = பூரணங்களாற் பூரணமாய், என்னிடத்தெல்லாப்பொருளு மிருத்தலின் எல்லாப்பொருளாலுஞ் சாலநிறைந்து, எலாம் நிறைவித்து, அந்தரியாமியாய் எல்லாப்பொருளையும் பூரணஞ் செய்தலின், இங்ஙனம் எல்லாம் பரித்தொன்றாய், அகண்டாத்துவிதீயரூபமாய், இருக்கின்றேனென்று பாவிக்கவேண்டுமென்ப தந்நுவயம் பரிபூரணமாயிருத்தலின், சமமாகி, இயலாசாரம் இராகத்துவேஷரகிதமாயிருத்தலின் ஏகப்பிரகாரவிவகாரத்தையும், இயலொளி = சகலப்பிராணிகளுடைய சித்தங்களிலும் எனக்கிவனே பிரியனென்று ஏகரூபனாய்ப் பிரகாசிப்பதையும், கொண்டு ஒவ்வாதாய், எப்போது நிர்விகாரமாயிருத்தலின் றனக்குத்தானே சமமாய் இருக்கும் இத்தன்மையனாய் ஆன்மாவை முற்கூறியபிரகாரம் பூஜிக்கவேண்டும்; அவ்வயமாய தன்னையிங்ஙன் பூஜித்தால் ஜீவன் முக்ததசையை யடையலாம். (45-46)

(ஸ்ரீ - வீ - அ - கை.) ஆகத்திலுள்ள அமல அறிவை அருச்சித்தலே அருமையாய பூசையென்றருளல்:—அமலமென்பது.

அமலமாப் பூசையினு லதிகத்தெளிவை யெய்திடலாஞ்
சமமதாயெல் லாமான தடம்புந்தியினு லுடலறிவு
சுமடென்றப்பா லாஞ்சித்தைப் பெற்றதொன்றாற் றொடர்பாக
விமலமானோர் பூசிக்க வேண்டுமென்பர் விடாதென்றும்.

(ப - ரை.) அமலமாப் பூசையினுல் = நிருமலமான மகாபூசையினுல், அதிகத்தெளிவை யெய்திடலாம் = மிக்க சொச்சத்தை யடைந்திடலாம், சமமதாய் எல்லாமான = ஒப்பாய் இயாவுமான, தடம் புந்தியினுல் = விசாலமான மதியினுல், உடலறிவு சுமடென்று = தேகத்திலான்மபுத்தியைச் செய்தல் மௌட்டியமென்று, அப்பாலாம் சித்தை = அதீதமான அறிவை, பெற்றதொன்றால் = யாதுகிடைத்ததோ வதனுல், தொடர்பாக = இடைவிடாமல், விமலமானோர் = நிருமலமானவர்கள், என்றும் விடாது = எப்போதுமே விட்டொழியாமல், பூசிக்கவேண்டுமென்பர் = பூசைசெய்யவேண்டுமென்று சொல்லுவார்கள்.

(ஸ்ரீ-வீர.) அழகிய கருத்தையுடையவன் சௌமியத்தகைமையை யத்தியந்தம் எல்லா வகையானுமே அடைந்தவனுவன் தேகம் விழுந்துபோம் பரியந்தம் இந்த ஒருவனே கெடாத மகாமதியாகவிருப்பன், கிடைத்தபடியேயாய சருவதிரிபுடியானும் அதனையே யருச்சிப்பன், சமமான சருவயுக்தியானும், ஐந்திரியகவிருத்திப் பிரதிபிம்பசித்துகளினும் பரமாய அவற்றின் பிம்பபூதசின்மாத்திரத்தை, கிடைத்தபடியாய கிரமத்தாற்கிளம்பிய சருவார்த்தத்தால் கன்கருச்சனைபுரிக; உள்வெளிப்பொருள்கள் எலாவற்றானும் உஞற்றுகபூசை யென்றபடி.

(ச.) அதிகத்தெளிவை = ஜீவன் முக்தியை, விமலமானோர் = முற்கூறிய தேவசொரூபத்தை யறிந்தவர், சமமதாய் = இராகாதிரகிதமாய், எல்லாமான = சர்வேந்திரிய ஜன்னியமான், தடம் புந்தியினுல் = பெற்றதொன்றால், நல்லுசித வியாபாரத்தாற் சித்தித்த தான சர்வார்த்தத்தாலும் பூசிக்கவேண்டும். (47)

(ஸ்ரீ-வீர.- அ-கை.) கிடையாததை நினைந்துவருந்தாமல் யாது கிடைத்ததோ அது கொண்டே பூசிக்கவேண்டுமெனல்:—எட்டா, ஆதியென்பன.

எட்டாதொன்றை வேண்டுமென விதற்காயிரங்கா திச்சைவழி
முட்டாவறிவாற் பூசித்தன் முறைமையன்ன பானத்தாற்
றட்டாதுயர்ந்த செல்வத்தாற் சயனுசனம்வா கனங்களினுற்
கிட்டாநின்ற சுகமனைத்தா லறிந்துகிளர் பூசனைசெய்க.

ஆதிவியாதி பயின்மோக வாரம்பத்தா லனைத்திடரா
னீதிபயிலு மிராச்சியத்தா னிறையுமிடியால் விசித்திரமாந்
தீதிறொழில்க ளாமலராற் சித்தையறிந்து பூசிக்கக்
கோதில்போக நவைபோகங் கொளனீக்குதலா லருச்சிக்க.

(ப - ரை.) எட்டாதொன்றை வேண்டுமென இதற்காயிரங்காது = கிடையாததொன்றைக் கிடைக்கவேண்டுமென்று இதற்காக இரங்கிக் கவலைப்படாமல், இச்சைவழி முட்டாவறிவால் = விழைவின்வழி கிடைத்த வுணர்வினுல், பூசித்தன் முறைமை = பூசைசெய்தல் கிரமமாகும், அன்னபானத்தால் தட்டாது உயர்ந்த செல்வத்தால் = உண்டுமாந்துமவற்றால் தடையிலாத மேலான ஐசுவரியங்களினுல், சயனுசனம் வாகனங்களினுல் = படுக்கை

இருக்கை நடக்கைகளினுல், கிட்டாநின்ற சுகமனைத்தால் = கிடையாநின்ற சுகங்கள் எலாவற்றினுலும், அறிந்து = தெறிந்து, இனர்பூசனை செய்க = ஒளிரும் பூசையினை யுளுற்றுக.

ஆதிவியாதி பயில்மோக ஆரம்பத்தால் = மூலருக்குமநோய்களைத் துவக்கும் மயக்கத் தொடக்கத்தால், அனைத்திடரால் = வருஞ் சருவதுக்கத்தால், நீதிபயிலும் இராச்சியத் தால் = நீதியோடுகூடியாளும் இராச்சியசம்பத்தால், நிறையுமிடியால் = பூர்ணமான தரித்திரத்தால், விசித்திரமாம் = நானுவகையாம், தீதில் தொழில்களாம் மலரால் = குற்ற மற்ற கிரியைகளாம் புஷ்பங்களால், சித்தையறிந்து பூசிக்க = அறிவையறிந்து பூசனை செய்க, கோதில் போகம் நவைபோகம் = குற்றமற்றபோகம் குற்றமுற்றபோகம், கொளல் நீக்குதலால் = கோடல் வீடல்களினுல், அருச்சிக்க = பூசனைசெய்க.

(ஸ்ரீ - வீர.) அபூர்வங்களாய கந்தபுஷ்பாதி யுபசாரவஸ்துக்கள் விடயமான முயற்சி யீண்டு ஒரு சிறிதுஞ் செய்யவேண்டியதில்லையாம், அடைவுற்ற பிராஹ்மண க்ஷத்திரியாதி தஞ் சரீர உசிதமாய் அவ்வாறே நான்முறையொத்த இந்த அர்த்தக்கிரியா விவகாரத்தானே நித்தி யம், சோபனமாகிய விபுவாம் சிவத்தைப் பூஜிக்கலாம், வாஞ்சிக்கத்தக்கனவாய தேகதாரண மாத்திரநிமித்த அன்னபானுதிகளின் நற்சேவனத்தானேயும் பூஜிக்கலாம்; அதனையே வெளிப் படையாயருளல்:—அன்னவென்பதாதி. தின்ப நக்குவ சுவைப்ப வுண்பவாய் உள்ள அன்ன பானுதிகளானும், நானுவித வைபவசாலிகளானும், சயன ஆசன வாகனங்களானும், கிடைத்த படியேகொண்டு பூசிக்கலாம் சிவத்தை. காந்தான்னபான சம்போக மிகுதியாதி விலாசியாய சுகத்தானே சர்வரூபமாக வுண்மையினுணர்ந்து, ஆன்மாவை நன்கருச்சனைபுரிக; அவ்வா றுகவே எதுவரை யவற்றின் அறியாமையுளதாமோ அதுவரை, விடய சுக உபயோகங்கள் யாவற்றையும் விட்டொழிக்கவேவேண்டும், அறிவெனக்கண்ட பின்னுயினும் தோடமின் றென்பது கருத்தாம். இவ்வண்ணங் கிடைத்தபடியேயாய துக்கபோகத்திலும் பூஜைப் புந்தியே செய்யத்தக்கதாம், கிளர்ச்சிசெய்யத்தக்கதன்றும் என்றருளல்:—ஆதியென்பதாதி. ஆதிவியாதி வியாப்தமாய் மோகாக்கிரகசாலியாய் அடைவுற்ற சர்வ உபத்திரவதுக்கத்தானும் ஆன்மாவை யருச்சித்துய்தல் வேண்டும். தரித்திரப்பிரவாகத்திலாதல் இராஜ்ஜியவிகாரப் பிரவாகத்திலாதல் வீழ்ந்தவனுலும் விசித்திரசேஷ்டைகளாகிய மலர்களானே தூயான்மாவை நன்கு அருச்சனைபுரிக. போகசமூகங்களில் எவனுக்கேனும் ஒருவனுக் கெப்போதேனும், இருக்குமாறு நேரிடின் அப்போகத்தானே யவன் ஆன்மாவை யருச்சிக்கலாம்; எப்போதுமே அபிஷித்தபோகங்களையும் நிஷித்தபோகங்களையும் அடியோடு தியாகஞ்செய்து வைராக்கி யத்துடன் சுத்தமாய் பரமான்மாவையே யருச்சனைசெய்க, இது முக்கியபக்கமாம்; அல்லது சிலவிடத்தே நிஷித்தங்களைத்தள்ளி அநிஷித்தங்களை இராகத்தாற் போற்றினும் அவ்வநி ராகத்தானே யான்மாவைப் போற்றலாம்; இது கௌணபக்கமாம்.

(சு.) இப்பூஜாவிதியில், எட்டாதொன்றை = கிடையாதபொருளை, வேண்டுமென = கிடைக்கவேண்டுமென்று, இரங்காது = யத்தனஞ் செய்யவேண்டுவதின்று, மற்றென் னெனில், இச்சைவழிமுட்டா வறிவால், சேதனரூபமான சிவத்தை, பூசித்தன் முறைமை = பூஜிக்கவேண்டும், இதனையே விரித்துரைத்தல்:—மநோகரங்களான பக்ஷியபோச்சிய அன்ன பானங்களாலும், மாலைசந்தனவனிதாதிகளாலும், இதரசுகசாதனங்களாலும் கிட்டாநின்ற சுகமனைத்தால், ஆன்மாவைச் சிவரூபமென்றறிந்து பூஜிக்கவேண்டும். அனைத்திடரால் = சர்வோபத்திரவதுக்கத்தால், இவ்விடத்துப் பாவரூபமான துக்கமானது, கனங்கத்தைத்

நிவிர்த்திசெய்தலின் மிகவர்த்தனுதி கற்கத்திரவியம்போல் ஆன்மோபயோகியாதலின் பூஜா சாதனமாமென்றுணர்க; விசித்திரமாந்திதிறெழில்களான் மலரால் வாசனைப்பெருக்கத்தால் வந்த விசித்திரசேட்டை மிகுதற்கேதுவான இராச்சியத்தாலன்றி மிடியாலாவது, சித்தை தேகாதிவிநிரிக்தமான ஆன்மாவை, சிவமென்றறிந் தருச்சிக்கவேண்டும். கோதில் போகங் கொளலானவைப் (குற்றப்) போக நீக்குதலாலென்பது பொருள். பாடபேதம்:—சண்டுத் தக்கத்திற்கு, பாபரூபகாலுஷயத்தைத் துணியப்பெறுத்துந்தன்மை யுண்மையின், உத் வர்த்தனுதி கல்கத்திரவியம்போலும் ஆன்ம உபயோகித்தன்மையுண்மையின். பூஜாசாதனத் தன்மை காணத்தக்கது. உத்வர்த்தனம் = எதனுல் அங்கநிர்மலீகரணமாமோ அது. கல் கம் = அழுக்கு. (48-49)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்போது முக்கியார்ச்சனசாரத்தைக் கூறியருளல்:—நிரு வென்பது.

நிருவிகார பாவனையா னேர்ந்தபொருளை யினிதருந்தி
யொருவியிறந்த பொருளினையே யுருமையுணர்வின் பூசனையாம்
வெருவுதுன்ப மின்பமுதன் மேவுமனைத்து முணர்வுருவாய்க்
கருதல்வேண்டு மழிவறுசிற் கடவுள்பூசை யொழியாதோர்.

(ப - ரை.) நிர்விகாரபாவனையால் = விகாரமின்றிய எண்ணத்தாலே, நேர்ந்த பொருளை = கிடைத்தவத்துவை, இனிதருந்தி = இன்புடன் புசித்து, ஒருவியிறந்தபொரு ளினையே யுருமையுணர்வின் பூசனையாம் = சென்றவத்துவைக் குறித்தசிந்தையை யகற்றிப் பற்றற்றுநிற்றலே யான்மாவின் அருச்சனையாம், வெருவுதுன்பமின்பமுதல் மேவு மனைத் தும் = பயப்படத்தக்க துக்கஞ் சுகம் முதலியவாகவுற்றயாவும், உணர்வுருவாய் = அறி வுருவமாய், கருதல்வேண்டும் = எண்ணவேண்டும், அழிவறுசிற் கடவுள்பூசை யொழியா தோர் = கெடாத சித்துத்தேவதைபூசையை யோயாமற் செய்பவர்.

(ஸ்ரீ - வீர.) சென்றதைச் சென்றதை யுபேக்ஷையேசெய்க, அவற்றைப்பற்றிச் சோகிக்க வேண்டியதில்லை. அடைவுற்றதை யடைவுற்றதை யங்கீகரித்துக்கொள்க, யாதொரு விகா ரத்தையு மடையாமல் இங்ஙனமிருக்கின் இதுவே பரமான்மாவிற்குப் பரமார்ச்சனமாம். யாது தோற்றமாத்திரரமணீயமாமோ, யாதுதான் றேற்றமாத்திர மிகமிகவும் சகிக்கமுடியாத தாமோ, அவ்வியாவுமே ஆன்மமயமாக்குக, நித்தியம் இங்ஙன் ஆன்மார்ச்சனவிரதம் ஆற்றுக; கூறியமுறையே யாவற்றையும் அறிவாக்கி யினிது சமமாக்கி, பிரஹ்மமாயுணர்ந்து பிரஹ் மார்ச்சனையே தினம்புரிக.

(ச.) நிருவிகாரபாவனையால் = சந்தோஷக் கிலேசாதிவிகார நிவிர்த்திக் கேதுவான பாவனையால், அஞ்ஞதிருஷ்டியில் வரும்போது அனுகூலமற்றதாய்த் தோற்றுந் துன்பமும், அதன் சாதனமும், கொளற்குரியதுபோற் றேற்றுமின்பமும் அதன்சாதனமும், ஆகிய விரண்டையும், அழிவறு சிற்கடவுள் பூசையொழியாதோர், உணர்வுருவாய்க் கருதல் வேண்டும். (50)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சர்வான்மதிருஷ்டியோடு கூடிப் பூசிக்கவேண்டுமெனவருளி, ஆண்டு நுகர்வினைவயத்தால் நேரினும் போகம் நுகரலாம் கடல்போலென்றருளல்:—என்று மென்பது.

என்றுமெல்லா வடிவாலு மெல்லாவிடங்க டம்மாலுந்
துன்றுமெல்லாம் பிரமமெனத் துணிந்துபூசை செயல்வேண்டு
மன்றெனுமல் விரும்பாம லடைந்தபோக மெலாவறிஞர்க்
கொன்றுசுபாவத் தாற்புசித்தற் குரித்தாங்கடற்கு நதித்திரள்போல்.

(ப - ரை.) என்றும் = எப்போதும், எல்லாவடிவாலும் = சகலவடிவங்களாலும், எல்லாவிடங்கள் தம்மாலும் துன்றும் = சகலவிடங்களினுலும் பொருந்தும், எல்லாம் = யாவும், பிரமமெனத் துணிந்து = சிவஸ்வரூபமெனக்கண்டு நிச்சயித்து, பூசைசெயல் வேண்டும் = அருச்சனை புரியவேண்டும்; அன்றெனுமல் விரும்பாமல் = துவேஷராகாதிகளில்லாமல், அடைந்த போகமெலாம் = உற்றபோகங்களியாவும், அறிஞர்க்கு ஒன்று சுபாவத்தால் புசித்தற்கு உரித்தாம் = ஞானிகட்குப் பொருந்திய இயற்கையால் அநுபவித்தற்கு உரியவாம், கடற்கு = சமுத்திரத்திற்கு, நதித்திரள்போல் = சரித்துக்களின்குழுவேபோலும்.

(ஸ்ரீ - வீர.) யாவும் பிரஹ்மமேயாம் என்னுந் திருஷ்டியானே யாவும் நற்சுபமேயாமெனக் கவர்ந்துகொள்க; பிரஹ்மத்தோடுகூடிய மாயாமயத்தன்மைத் திருஷ்டியானே, யாவுமே சுபாசுபம் கலந்துற்றனவென வறிந்துகொள்க; இருவகையானும் ஒப்புமையால், வைஷம்மிய தரிசனநிமித்தமின்மையின் ஆன்மாவே, ஆன்மமயமே, என்றுதல், ஆன்மமிகுதி பற்றி யான்மமயமென்றுதல், தரிசனஞ்செய்க, இவ்வண்ணம் ஆன்மார்ச்சனவிரதம் ஆசரிக்கலாம் நித்தியம்; இது அது இவன் அவன் யான் இவ்வவன்யானே. இவன் யானல்லன் என்னும் வேற்றுமை சித்தவிகற்பமேயென அத்தியந்தம் விட்டுவிடுக; சருவமும் பிரஹ்மமெனத் துணிந்து நித்தியம் ஆன்மார்ச்சனமேபுரிக விரதம். எப்போதுமே, அடைவுற்றவாய சர்வாகாரவிகாரியாய், எல்லாவகையாய், சர்வரூபமுமாய்ச் சர்வநாமமுமாய், ஒளிரும் சர்வான்மகப் பிரஹ்மத்தையே எப்போதும் அன்புடன் அருச்சனைசெய்து விரதம் அனுஷ்டிக்குக. இயற்கையாகவே தெய்வப்பிராப்தங்களாயவற்றை விரும்பவும் வேண்டாம் வெறுக்கவும் வேண்டாம், சரித்துக்களைச் சாகரமேபோல, சுகதுக்கவேதுக்களாய விடயங்களை யநுபவிக்கலாம்.

(ச.) என்றும் = எக்காலத்தினும், எல்லாவடிவாலும், நாநாரூபமாக, எல்லாவிடங்கடம்மாலும் = உட்புறத்திக்குவிதிக்குகளிலும், துன்னுமெல்லாம் = இருக்கும் பொருளனைத்தும், பிரமமெனத்துணிந்து பூசைசெயவேண்டும், பூசை = ஆன்மார்ச்சனை விரதம், தோற்றுகின்றவனைத்தும் ஆன்மார்ப்பணத்தாற் பிரமபாவமாக நிச்சயிப்பதே ஆன்மார்ச்சனைவிரதமென்பது பொருள். அறிஞருக்கு = ஞானிக்கு, கிடைத்ததை, அன்றெனுமல் = வெறுக்காமல், கிடையாததை விரும்பாமல், சுபாவத்தாலடைந்த போகமெல்லாம், கடற்கு நதித்திரள்போற் புசித்தற்குரித்தாம், இதற்கு. உம்:—ஸ்ரீ பகவற்கீதை:—நீரினுனிறைந்து நின்றகடலிலே நெறிமேற்கொண்டு, நீரினுனிறைந்தவாறு வீழ்ந்ததானிறைவுறாது, தேரினுயதுபோலாசை செறிந்தவர் திறமேநோக்கிச், சாருமாலாகி லத்தாலவர்களுஞ் சலித்தல்செய்யார். மிகநிறைவுற்று அசைவற்றிருக்குஞ் சமுத்திரத்தைச் சலங்களடைவனபோல் இக்காமமனைத்து மடைவனவாம் அவன் சாந்தியையுறுவன் காமத்தை காமிப்பவன் உறுன் என்பதாம். (51)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அணுவுங்கூடப் பற்றில்லாமல் அருளிய திரவியங்கொண்டு பூசைசெய்யவேண்டுமென்றருளல்:—நீசமென்பது.

நீசமுயர்வா நோக்கங்க ணேர்ந்தாலிறையும் பற்றுமற்
றேசகாலத் தொழிற்குரித்தாய்ச் சேராநின்ற சுபாசுபத்தை
யாசுவிகார மறக்கைக்கொண் டதனாற் பூசை செயல்வேண்டும்
பேசுபரமார்ச் சனைவிதியிற் பெரிதுமிவைநற் றிரவியமே.

(ப - ரை) நீசம் உயர்வாம் நோக்கங்கள் = தாழ்ந்த உயர்ந்த நாட்டங்கள், நேர்ந்தால் இறையும் பற்றுமல் = அடைவுறில் அற்பமும் சம்பந்தம் உறாமல், தேசகாலத்தொழிற்குரித்தாய் = இடம்போது வினைக்குத்தக்கபடி, சேராநின்ற = அடைவுறாநின்ற, சுபாசுபத்தை = நலந்தீங்குகளை, ஆசுவிகாரமறக்கைக்கொண்டு = விரைவில் விகாரமடையாமலே கவர்ந்துகொண்டு, அதனாற்பூசை செயல் வேண்டும் = அதனாலே யருச்சனை யாற்ற வேண்டும், பேசுபரமார்ச்சனைவிதியிற் பெரிதுமிவை நற்றிரவியமே = அருளிய மேலாய் அருச்சனை விதானத்திற் பெரிதாமிவை நல்ல திரவியங்களாம்.

(ஸ்ரீ - வீர.) துச்சங்களாகிய அபமானாதி திருஷ்டிகளில், அதுச்சங்களாகிய வதபந்த சர்வஜசுவர்ய நாசாதிதிருஷ்டிகளில், வீழ்ந்து பற்றுதலை யடைந்தவன் கிளர்ச்சியைச் சிறிதுமே யடையலாகாது, வந்துவீழ்ந்தனவாய் வெகுகாலந் தொடர்வற்றனவாயுள்ள, நேர் கோணல் தண்மைவெம்மையாதி சித்திரபதார்த்தங்களில் வீழ்ந்தவன் விண்ணேபோலப் பற்றற்றிருக்கவேண்டும். தேசகாலக்கிரியாயோகத்தினாலே, எச்சுபாசுபங்கள் வந்துறுகின்றனவோ, அவற்றை விகாரமின்றியே கவர்ந்துகொண்டு அதனானே ஆன்மாவை யருச்சிக்கலாம். ஆன்மார்ச்சனைவிதானத்தில் இவையெல்லாம் பொருள்கள் எனப் பெறுவனவாம்.

(ச.) நீசமுயர்வா நோக்கங்கள் = சூனியாசூனியரூபங்களான பதார்த்ததிருஷ்டிகள், நேர்ந்தால், ஞானிகள், இறையும் பற்றுமல் = சித்தவிகாரம் அற்பமும் உறாமல், நானாரூபங்களான பக்ஷிமேடாதி பதார்த்தங்கள் வீழினும், வீழாதிருப்பினும் வியோமம், வேறுபடாதிருத்தல்போல் இருக்கவேண்டுமென்பதாம்; காலதேசகன்மவசத்தாற் சேராநின்ற சுபாசுபத்தை விகாரமறக் கைக்கொண்டு, அதனால் அச்சுபாசுபரூபமான பொருளால், ஆன்மாவை யருச்சிக்கவேண்டும், பரமார்ச்சனையில் = ஆன்மார்ச்சனைவிதானத்தில், இவை = இச்சுபாசுபரூபங்கள், நற்றிரவியம், பதார்த்தசம்பத்துக்களெனப்படும். மேடாதி, மிருகாதியென்றும் பாடபேதம். (52)

((ஸ்ரீ-வீர - அ-கை.) அற்றேல் விசித்திரதுக்க இராகத்துவேஷாதி விகாரஹேதுக்களும், சுத்தி யசுத்தி கசப்புக் காரதிவிஷம இரசங்களும், ஆகிய போக்கிய திரவிய ஐசுவரியங்கள், எங்ஙனம் நிர்விகாரமாகக் கவருதல் கூடும் எனின், ஏகமாய சமரசத்தானே, யாவற்றின் வைஷம்மிய நிராசத்தால், மதுரீகரணத்தால், என்னும் திருக்கருத்தால் அருளல்:— இனையவென்பது.

(ச-அ-கை.) நிர்விகார சித்தரூபமான சாந்தியையே புகழ்ந்துரைத்தல்:—

இனையதிரவி யங்களெலா மினிதாஞ்சாந்தி யொன்றாலு
நினைபாவனையிற் புளிப்புறைப்பு நிறைந்தகைப்புத் துவர்ப்பனைத்தின்
றினையுமின்றிச் சித்திரமாந் தித்திப்பாலே செறிந்தனவா
யனையசாந்தி மதுரத்தா லறவேநிறைந்த தருந்தவனே.

(ப - ரை.) இனைய திரவியங்கள் எலாம் = இயம்பியருளிய பொருள்களியாவும், இனிதாஞ் சாந்தியொன்றாலும் = இனிமையான சாந்தியேகத்தானும், நினைபாவனையால் =

எண்ணுநின்ற பாவனையால், புளிப்புறைப்பு நிறைந்தகைப்புத்துவர்ப்பு அனைத்தின் = ஆம்ல லவண கடுகஷாயதிக்தமென்னும் சகலத்தின், தினையுமின்றி = அற்பமுமில்லாமல், சித்திரமாம் தித்திப்பாலே = விசித்திரமாகிய மாதுரியத்தினாலே, செறிந்தனவாய் = பொருந்தினவாய், அனையசாந்திமதுரத்தால் = அத்தகையசாந்தியாகிய மாதுரியத்தினாலே, அறவே நிறைந்தது அருந்தவனே = அத்தியந்தம் பூரித்தது அரிய தவத்தையுடையோய்!

(ஸ்ரீ - வீர.) இந்த ஆன்மார்ச்சன விதானத்தின்கண் ணுரைத்த திரவிய ஸ்ரீகன் யாவையோ அவ்விவை யொரே சமமாகிய இரசத்தானே சூழ்குவிக்கப்பெற்றனவாகி, புளிப்புக் கசப்பற்றனவாம், காரமுமற்றனவாம், துவர்ப்புமற்றனவாம், மற்றெவையுமே யற்றனவாம், சித்திரரசங்களானும் சேர்ந்தனவாகாவாம், மற்றேர் ஆயினும், மதுரவகரசத்தானே மருவிநிற்பனவாம் அவை.

(ச.) இனைய திரவியங்களெலாஞ் சித்திரமாந் தித்திப்பாலே செறிந்தனவாயினும், இனிதாஞ் சாந்தியொன்றாலும் = சமரசமொன்றினாலே, நின்பாவனையால் பாவிக்கப்பட்டனவாய் இரசாந்தரமான, புளிப்புறைப்புக் கைப்புத்துவர்ப்பாதியைவிட்டு மதுரங்களேயா மென்றதாயிற்று. மாதுரியமீண்டி ரம்மியத்தன்மையாம். (53)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆநந்தைகரச விவர்த்தத்தன்மையானேயாதல், சமத்தன்மைத் தரிசனத்தானாதல், அவற்றை அவிகாரமாகக், கவருதல் தணியக்கூடும் என்னுந் திருக்கருத்தா லுரைத்தருளல்:—தக்கவென்பது.

*தக்கசாந்தி பயிலிரத சத்தியாலே பாவிக்கிற்*
*றொக்கபொருளாய்க் காண்பதெலாஞ் சுதையாயிமைப்பிற் றாய்மதியி*
*னுக்கவிரதம் போலாகு முயர்ந்தசமமாஞ் சாந்தியினன்*
*மிக்கவறிவா கியுங்கற்போல் விளங்குமுணர்வாற் பாவிக்க.*

(ப - ரை.) தக்கசாந்தியில் = தகுந்தசாந்தி நிகழும், இரதசத்தியாலே பாவிக்கில் = இரச ஆற்றலினாலே பாவனைசெய்யில், தொக்கபொருளாய்க் காண்பதெலாம் = சம்பந்தித்துக் காணப்பெற்ற திரவியங்கள் யாவும், சுதையாயிமைப்பில் = கணகாலத்தில் அமிர்தமாய், தாய்மதியினுக்கவிரதம்போலாகும் = சுத்தசந்திரனினின்றும் சொரியும் அமிர்தம் போலாம், உயர்ந்தசமமாம் சாந்தியினல் = மேலாகிய சமமாம் சாந்தியினாலே, மிக்கவறிவாகியும் கற்போல் விளங்கு முணர்வாற் பாவிக்க = மிகுந்த சேதனமாகியும் பாஷாணம் போல விளங்கும் சிற்கனத்தானே அருச்சனை புரிக.

(ஸ்ரீ - வீர.) இரதமேயாமதுவென்னுஞ் சுருதிகாட்டிய ஆன்மாவாகிய இரசசக்தியானது மதுரமாம் இரசமுடையதாம் இரம்மியமாம், இந்திரியங்களுக்கெட்டாத சமதையாம், அத்தகையதனானே எத்திரவியம் பாவிதமாமோ அக்கணத்திலேயே அஃதமிருதமேயாம்; சமதையமிருதரூபத்தானே யாது யாதுதான் பாவிக்கப்பெறுமோ அது அது பரம மாதுரியம் இந்துவினின்றும் ஒழுகும் அமிருதம்போலவாம். பிரஹ்மைக்கிய தரிசனவடிவமாய சமதையினானே தானே ஆகாசம்போலாகி லீனமானசமாய் எந்நிலமும் அவிகாரமாயினாயாசமாய்த்தானுமோ அதுவே மேலா மருச்சனமென வறையப்பெறும், அதிதெளிவான், சித்தைகரசமாய் ஏகமாய்ப் படிகமலைபோலும் நிர்மலமாய்த் திடமாய் விளங்குபவனை, இவ் ஞானியினாலே, பூர்ண இந்துவினற்போலப் பூர்ணமாகிய சமப்பிரகாசத்தினாலே சம்பாவிக்கத்தக்கது.

(ச.) தக்கசாந்திபயில் = சமத்துவரூபமாய் மதுரத்துவாதி திரவியத்தினது அநுபவமுறும், இரசசத்தியாலே = இரசரூபமான சத்தியால், பாவிக்கில், தொக்கபொருளாய்க் காண்பதெல்லாம் = திருசியமனைத்தும், இமைப்பிற் சுவையாய் மதுரமேயாகும், உயர்ந்த சமமாஞ் சத்தியினால், ஏகரூபசித்தவிருத்தியாய் அதனாற் பூர்ணேந்துபோற் சொச்சமான மிக்க வறிவாகியும் = பூர்ணமான பிரஹ்மத்தோடேகமாகியும், கற்போல், நிர்விகாரரூபமாய் விளங்குமுணர்வாற் பாவிக்க. (54)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விஸ்தாரமாகக் கூறியருளியதைத் தொகுத்துபசங்கரித்தருளல்:— தேசவென்பது.

தேசகாலத் தொழிலொழுங்காற் சேர்ந்தபொருளின் சுகாசுகத்தின்
வீசுமயக்கங் களினாலே மெய்யிற்கடவு ளருச்சனைசெய்
தாசையெல்லாம் புந்தியினா லன்றிநிற்பா யுயர்மாயை
நீசமாயை தனைநீக்கு நெடுஞ்சங்கற்ப நஞ்சறுக்கும்.

(ப - ரை.) தேசகாலத் தொழிலொழுங்கால் = தேசகால வினைமுறையால், சேர்ந்த பொருளின் சுகாசுகத்தின் வீசுமயக்கங்களினாலே = அடைவுற்ற வஸ்துக்களின் சுகாசுகங்களின் விசேஷப் பிரமங்களினாலே, மெய்யில் = இத்தேகத்தில், கடவுளருச்சனை = தெய்வார்ச்சனம், செய்து = ஆற்றி, ஆசையெல்லாம் புந்தியினாலன்றி = அவாயாவு மகன்றமதியினாலே, நிற்பாய் = நிலைபெறுவாய், உயர்மாயை நீசமாயைதனைநீக்கு நெடுஞ்சங்கற்ப நஞ்சறுக்கும் = மேலான மாயையானது கீழான மாயையைக் கடத்தும் நீண்ட சங்கற்பமாகிய விடத்தையும் கடத்தும்.

(ஸ்ரீ - வீர.) தேசகாலகாரணக்கிரம உதிதங்களாலும், சர்வவஸ்து சுகதுக்கவிப்பிரமங்களாலும், சரீரநாயகனை நித்தியமருச்சிப்பாயாக, சகலமனோரதங்களும் சாந்தமானபடியாய தீயினாலே தனது வடிவிலேயே நிலைபெற்றிருப்பாயாக; அதுவே முக்கியமாய அதீந்திரிய சிவபூஜையாம். மனோபுத்தி யகங்காரசித்தங்கட்கு, இந்திரியங்களினாலேகவரப்பெற்றபொருண் மாத்திரகோசர சங்கற்ப விகற்ப நிச்சய அபிமான ஸ்மரண ஹேதுத்தன்மை யுண்மையின், இந்திரியத்திற் கெட்டாததென் று அருளியதானே புத்தியாதிகட்கெட்டாமையும் பொருளாற் புகன்றருளியதேயாகும், புத்தியினாலும் விடயீகரிக்கமுடியாத தன்போதத்தில் மற்றேதேனு முபாயம் சம்பவிக்குமென்பதாக வெண்ணமுடியாதாம், ஆகவே, இருப்பதாய அதனையுங் கூடவுணரு முபாயமில்லாமையின், உபாய அசம்பவசங்கையில்லாமல் அதிகாரியினாலே, அந்தச் சிவரூபமானது எங்ஙனம் சாக்ஷாத்தாக அநுபவிக்கக்கூடும்? ஹேபரமேசுரரே! புத்தியாதிகளோடுகூடிய புலன்கட்கும் அதிருசியத்தன்மையை யடைவுறுமேலது, எங்ஙனந்தான் சங்கையில்லாமல் உணரப் பெறுதல் கூடும் என்பது ஸ்ரீ வசிஷ்டபகவானது சங்கையாம்; பரமேசுரர் அதற்கு விடையருளல்:—பிரமாணஜன்னியமாய்ச் சுத்தசாத்விக பாகபரிணாமரூபமாயிலங்கும் பிரஹ்மாகார விருத்தியால் அவித்யாவரணம் அகற்றப்பெறும், ஆவரணம் அகன்றுபோகவே பிரஹ்மசொரூபமானது சொப்பிரகாசமாகவே உண்மையாக விளங்கும், அதுவே யிதனது சாக்ஷாத்காரமாம், புத்திவிருத்தி யபிவியக்தசித்துவியாத்திரூபமல்லவாம், மோக்ஷத்தை யிச்சித்தவனானவன், மனோவடிவினன், சமதமாதிசாதனபரிசுத்தத் தன்மையானே கேவலன் சாத்விகன் அவித்யாம்சன், சற்சாத்திரசற்குருசற்சங்காதிப் பெயரிய சாத்விகங்களேயாய அவித்யாபாகங்களானே சம்பாதிக்கப்பெற்ற மேன்மையான சிரவண

மனன நிதித்தியாசன சாக்ஷாத்காராந்தசுவவிருத்தி பரம்பரையானே வெகு வெகு ஜன்மங்களிற் சஞ்சிதயஞ்ஞத்தானதி சுகிருதத்தைத்தாங்குந் தன்மையானே மேன்மைவாய்ந்த காரிய சகித அவித்தையை யலம்பிக்கொண்டே நெடும்போதிருப்பன்.

(ச.) தேசகாலங்கள் = பிரசித்தங்கள், தொழில் = புருடவியாபாரம், இவைகளின், ஒழுங்கால் = கிரமத்தால், சேர்ந்த = உதித்த, சகல, பொருளின், சுகாசுகரூபங்களான, மயக்கங்களினுலே = விலாசங்களினுல், மெய்யிற் கடவுள் = சரீரநாயகனென்னும் ஆன்மாவை, பூசனைசெய்து, நித்தம் சகலேச்சையுமற்ற புத்தியோடுங்கூடினவனுய் நிற்பாய்; ஆன்மார்ச்சனையிலீண்டு ஞானத்தின் அபேக்ஷிதத்தன்மையுண்மையின் அது சித்தித்தற்பொருட்டு அவித்தைமலங்கழுவும் உபாயத்தை யுரைத்தல்:—ஸ்ரீ ஈசுவரர்:—பிராஞ்ஞன் புமான், உயர்மகிமை, சுத்தசத்துவஜந்யமாதலின் மேலான விமலவாதனுரூபமாகிய அவித்தையினுலே, நீசமாயைதனை = மலினவாசனுரூபமான அவித்தையை, நீக்கும் = துடைத்திருப்பன். (55)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அருளியதையே திருஷ்டாந்த பூர்வகமாகவருளி அறிந்தவர் பயனையும் அறைந்தருளல்:—கருதியென்பது.

(ச - அ - கை.) இதனையே திருஷ்டாந்தத்தாற் றெரிவித்தல்:—

கருதிமலத்தான் மலமறுக்குஞ் காருவென்ன மாயைதனைப்
பெருமாயையினுற் செறல்வேண்டும் பெரியமாயை காரணமாம்
பொருளன்றுயுங் குருவாக்காற் புகலும்பொருளாய்க் காரணமாய்
மருவுமுணர்வாந் தன்னுருவை வழுவாதளிக்கு முணர்வோர்க்கே.

(ப - ரை.) கருதி = ஆராய்ந்து, மலத்தால் மலமறுக்கும் = சாரமண் முதலிய அழுக்கால் அழுக்கெடுக்கும், காருவென்ன=வண்ணுன்போல, மாயைதனை=அசுத்தமாயையை, பெருமாயையினுல் = சுத்தப்பிரஹ்மாகாரவிருத்தியினுல், செறல்வேண்டும் = துவம்சஞ்செய்தல்வேண்டும், பெரியமாயை காரணமாம் = பெரிதாம் மாயை காரணத்தன்மையையடையும், பொருளன்றுயும் குருவாக்கால் புகலும் பொருளாய் = வஸ்துவல்லவாயும் ஆசிரியரது உபதேசத்தால் உபதேசிக்கத்தக்க வத்துவாய், காரணமாய் = அகாரணமாயினும் காரணமாய், மருவுமுணர்வாம் தன்னுருவை = பொருந்தாநின்ற அறிவாம் தனது வடிவத்தை, வழுவாது அளிக்கும் உணர்வோர்க்கே = நழுவாது அடைவிக்கும் அறிவுடையவர்க்கே.

(ஸ்ரீ - வீர.) யூகமுள்ள இராஜகன் (தோய்ப்பவன்) அழுக்கை யழுக்கால் அபகரிப்பதுபோல் அறியாமையை அறிவாற் போக்கவேண்டும், அற்றேல் மதியினுலே யா... ...ந்தன்றே நிறுவப்பெறுகின்றது, அவ்வாறுகவே மதிகாணுதான்மாவை மெ... ...டியனின், ஜடமாயமதிக்கு விசாராதியில் சுதந்திரத்தகைமையிலதாம், ... ...வ புத்தியாதியுபாயங்களினுலே விசாராதியால், அவித்தையைப் ப... ...ங்குகின்றது, தன்னைத்தானே கண்டுகொண்டிருக்கும், தன்னுலே தா... ...ாயீண்டுளது அவித்தையேயில்லை, இதுவே யவித்தையின் க்ஷயமெனவிவேகியர், தினந்... ...னே குருசாஸ்திராதி காணுபேதங்கள் ஆன்மாவல்லவாம், ஆன்மது செய்யில், என்னை இல்லவாம், ஆன்மசொரூபத்திற்கும், அதன் ஞானத்திற்கும் சாதன ...ன, வத்தமிக்க பத ...யுண்மையின், எத்துணைச் சிறிது இந்நாணுவத்துக்கள் உளவோ, இவையுசகமில்லாதிருந்து =

வுறுகாரணமாகாவாம்; குரு உபதேசாதிக்கிரமங்களும் ஆன்மஞானத்தின் காரணமாகாவாம்; ஆயின் குருவாதிகள் வாளாபோமோவெனின் அன்றென்றருளல்:-குருவென்பதாதி. ஹே துவ ஜோத்தம! அகாரணங்களேயாயினும் அத்தியந்தம் காரணத்தன்மையை அடையாநிற்கும்; குரு உபதேசாதியமுறைகள், ஆன்மஞானத்தினது சித்தியின்பொருட்டு, மறந்தகழுத்தணி மானுமிலாபப்பொருட்டு ஆம்.

(ச.) மலம் = வஸ்திரங்களின் மலத்தை, மலத்தால் = உவர் மண்ணுதி மலத்தாலே, அறுக்கும், கருதிக்காருவென்ன, உபாயமறிந்து செய்வோன்போற் பிராஞ்ஞனுமான், உண்மையாக, காரணமன்றாயும் = எதுவன்றாகினும், குருவாக்கு = குரு உபதேசாதிகள், பெரியமாயை = மேலான அவித்தையின், அங்கிசங்கள், ஒரிடத்துபாயத்தினால், தன்னுருவையளிக்கும், ஆன்மஞானசித்திக்கு, காரணமாய் மருவுமென்றதாயிற்று. எதாவதோருபாயத்தினுலென்றும் பாடம். (56)

(ஸ்ரீ-வீர - அ-கை.) யாவினுந் தனது முயல்வே யதிகமாகவேண்டுமென்றருளல்:— குரவன் என்பது.

(ச - அ - கை.) இதனை வெளிப்படவுரைத்தல்:—

குரவனுபதே சத்தொழுங்கு குறிப்பான் மகன்பான் மிகவளர்ந்து
விரவுமென்னிற் காட்டரிதாய் வெளிநில்லாதா கிலுந்தானே
பிரமரூபம் வெளிநிற்கும் பன்னூற்பொருளாற் குருமொழியாற்
றரவுமரிதாந் தன்னறிவாற் ருனேயறிந்து பெறவேண்டும்.

(ப - ரை.) குரவன் உபதேசத்தொழுங்கு = ஆசிரியனது உபதேசத்தினது முறைமை, குறிப்பால் மகன்பால் = ஒருவாருகச் சீடனிடத்தில், மிகவளர்ந்து விரவுமென்னில் = பிரவிருத்தியுற்று விருத்தியாகுமாயின், காட்டரிதாய் வெளிநில்லாதாகிலும் = உணர்த்தரிதாய் அதிருசியமாயினும், தானே பரமரூபம் வெளிநிற்கும் = சுயமாகவே பரம்பொருளின் வடிவம் வெட்டவெளியாய்ப் பிரத்தியக்ஷமாம், பன்னூற்பொருளால் குருமொழியால் = பல சாஸ்திர அருத்தங்களினுலும் ஆசாரியனது திருமொழியாலும், தரவுமரிதாம் = கொடுப்பதற்கு முடியாததாம், தன்னறிவாற்ருனேயறிந்துபெறவேண்டும்= தனது பிராஞ்ஞையினுலே தான்ருனே யுணர்ந்து அடையவேண்டும்.

(ஸ்ரீ - வீர.) குரு உபதேசங்களின் கிரமமானது சிஷ்யபோதத்தினுலே பிரவிர்த்தி போது, இன்னதெனப்பெறுததே யெனினும், விடயமுறுததேயெனினும், சுயமாக வெளிப்படாநிற்கும்; இவ்வண்ணம் ஆவசியகத்தன்மையேல், யாங்ஙனம் அகாரணத் ...றுகுமெனின் அருளல்:—பன்னூல் என்பதாதி. சாஸ்திரார்த்தங்களினுலே ... பெறுவதில்லை யான்மா, ஸ்ரீ குரு திருவசனத்தினுலும் உணரப்பெறுவதில்லையான்... னுடைய யுணர்வின் றன்வயமதனுல்தானே யிதனைத் தான்றெரிந்திடுவன்.

(ச.) குருபதேசங்களின் கிரமம், குறிப்பான் மகன்பால் = சீடனது போ... வளருமெனில், காட்டரிதாய் குருவாற் சத்தவிருத்தியாற் சொல்லுதற்கசக்கியமாய் வெளிநில்லாதாகினும், சீடனுற் சித்தவிருத்தியாற் சாக்ஷாத்கரித்தற் கசக்கியமாயினும், ...ரூபம் = ஆன்மா தானே, வெளிநிற்கும் = பிரகாசிப்பன், பன்னூற்பொருளால் = ...ரார்த்தங்களினுலும், குருமொழியால் = குருவாக்கியங்களாலும் தரவுமரிதாம், இஃதெ... வுணர்தற்கரிதாம், ...ற்றென்னெனில், தன்னறிவால் = சொரூபாநுசந்தான மகிமையா

தானேயறிந்து பெறவேண்டும். இதற்கு, உ-ம். சூதசங்கிதை:—சொச்சவிருத்தியையடைந்து விருத்தியின் சாக்ஷியாயிருப்பவன் விருத்தியால் நீங்கும் அஞ்ஞானத்தைத் தனதொளியாற் கெடுப்பன், ஆன்மா சாஸ்திரார்த்தங்களாலும், குருவசனத்தினாலும் அறியப்படான் தன்து போதவசத்தாற் றனக்குத்தானே தன்னானே யறியப்படுவனென்பதாம். (57)

(ஸ்ரீ - வீர - அ - கை.) குரு முதலிய மூன்றுங்கூடியே உணர்வைப் பயக்கும் எனத் திருட்டாந்த பூர்வகம் அருளல்:—ஆசான் என்பது.

(ச - அ - கை.) தனக்குத்தானே யான்மா வறியப்பெறின் குரு சாஸ்திராதிகளால் என்னெனச் சங்கித்து அவை யுபயோகமாகும் பிரகாரத்தைக் கூறல்:—

ஆசான்மொழியா னூற்பொருளா லன்றிப்பெறவு மரிதாகுஞ்
தேசார்குருநூன் மாணக்கன் சிறக்கவிம்மூ வருங்கூடிற்
பாசாதீதப் பரமெய்தும் பன்னாணீங்கா விக்கூட்ட
மேசாவுணர்வைத் தரும் பகற்போ தெல்லாத்தொழிலுந் தருவதுபோல்.

(ப - ரை.) ஆசான் மொழியால் நூற்பொருளால் = குரு உபதேசத்தால் சாஸ்திரார்த்தங்களால், அன்றிப்பெறவு மரிதாகும் = அல்லாமல் அடைவதும் அசத்தியமேயாகும், யாகும், தேசார் குரு நூன் மாணக்கன் = சுவானுபூதிமயமாய ஆசாரியன் சாஸ்திரம் சிஷ்யன், என்னும், சிறக்க இம்மூவரும் = இந்தமூன்றும் விசேடமாக, கூடில் = சேர்ந்தால், பாசாதீதப்பரமெய்தும் = சகல பாசங்களுங்கடந்த பரமசிவம் அடையப்பெறும், பன்னாள் நீங்கா இக்கூட்டம் = நெடும்போது நீங்காத இந்தச் சமாகமம், பகற்போது எல்லாத்தொழிலும் தருவதுபோல் = தினமானது சகல விவகாரங்களையும் பயப்பதேபோல், ஏசாவுணர்வைத்தரும் = யாவரும் புகழும் ஞானத்தையியும்.

(ஸ்ரீ - வீர.) ஞானசாரிய ருபதேசசாஸ்திரார்த்தங்களால் அல்லாமலும் ஆன்மா அறியப்பெறாதாம், இவற்றின் சையோகசத்தையே சுவாத்மஞானப் பிரகாசினியாம் = அபிவியஞ்சிகையாம், குரு சாஸ்திரார்த்த சிஷ்யர்களின் நெடுஞ்சையோக விருப்பானே பகலிற் சஞ்சாரம்போல ஆன்மஞானம் பிரவிர்த்திக்கும்.

(ச.) பாசாதீதப்பரம் = ஆன்மஞானம், எய்தும் = பிரகாசிக்கும், ஏசாவுணர்வை = ஆன்மஞானத்தை, பகற்போது = சூரிய சந்நிதி, எல்லாத்தொழிலும்=உலகவிவகாரமனைத்தையும். (58)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அருச்சனையின் பெரும்பயனையருளி யுலகின்றிறத்தை யுறைத்தருளல்:—சொன்னவென்பது.

சொன்னநெறியி லறிஞர்தினந் தோறுந்தேவார்ச் சனைபுரியி
லென்னைமுதலோர் தொண்டர்களா லேத்தமிக்க பதமடைவ
ருன்னுசகமில் லாதிருந்து முண்டுபோற்றோற் றிடுந்தோற்ற
மன்னதொழிந்து வேறில்லை யரியதவத்திற் பெரியோனே.

(ப - ரை.) சொன்ன நெறியில் = கூறியமார்க்கத்தில், அறிஞர் = விவேகியர், தினந்தோறும் = அனுதினமும், தேவார்ச்சனைபுரியில் = பிரஹ்மத்தியானஞ் செய்யில், என்னை முதலோர் தொண்டர்களால் = எம்மனோரே முதலிய தொண்டர்களானே, ஏத்தமிக்க பதமடைவர் = போற்றத்தகுந்த பெரியபதத்தினை யடைந்திடுவர், உன்னுசகமில்லாதிருந்து =

(ச.) தக்கசாந்திபயில் = சமத்துவரூபமாய் மதுரத்துவாதி திரவியத்தினது அநுபவ முறும், இரசசத்தியாலே = இரசரூபமான சத்தியால், பாவிக்கில், தொக்கபொருளாய்க் காண்பதெல்லாம் = திருசியமனைத்தும், இமைப்பிற் சுவையாய் மதுரமேயாகும், உயர்ந்த சமமாஞ் சத்தியினால், ஏகரூபசித்தவிருத்தியாய் அதனாற் பூர்ணேந்துபோற் சொச்சமான மிக்க வறிவாகியும் = பூர்ணமான பிரஹ்மத்தோடேகமாகியும், கற்போல், நிர்விகாரரூபமாய் விளங்குமுணர்வாற் பாவிக்க. (54)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விஸ்தாரமாகக் கூறியருளியதைத் தொகுத்துபசங்கரித்தருளல்:— தேசவென்பது.

தேசகாலத் தொழிலொழுங்காற் சேர்ந்தபொருளின் சுகாசுகத்தின்
வீசுமயக்கங் களினாலே மெய்யிற்கடவு ளருச்சனைசெய்
தாசையெல்லாம் புந்தியினா லன்றிநிற்பா யுயர்மாயை
நீசமாயை தனைநீக்கு நெடுஞ்சங்கற்ப நஞ்சறுக்கும்.

(ப - ரை.) தேசகாலத் தொழிலொழுங்கால் = தேசகால வினைமுறையால், சேர்ந்த பொருளின் சுகாசுகத்தின் வீசுமயக்கங்களினாலே = அடைவுற்ற வஸ்துக்களின் சுகாசுகங் களின் விசேஷப் பிரமங்களினாலே, மெய்யில் = இத்தேகத்தில், கடவுளருச்சனை = தெய் வார்ச்சனம், செய்து = ஆற்றி, ஆசையெல்லாம் புந்தியினாலன்றி = அவாயாவு மகன்றமதியி னாலே, நிற்பாய் = நிலைபெறுவாய், உயர்மாயை நீசமாயைதனைநீக்கு நெடுஞ்சங்கற்ப நஞ் சறுக்கும் = மேலான மாயையானது கீழான மாயையைக் கிடத்தும் நீண்ட சங்கற்பமாகிய விடத்தையும் கடத்தும்.

(ஸ்ரீ - வீர.) தேசகாலகாரணக்கிரம உதிதங்களாலும், சர்வவஸ்து சுகதுக்கவிப்பிரமங்க ளாலும், சரீரநாயகனை நித்தியமருச்சிப்பாயாக, சகலமனோரதங்களும் சாந்தமானபடியாய தீயினாலே தனது வடிவிலேயே நிலைபெற்றிருப்பாயாக; அதுவே முக்கியமாய அதீந்திரிய சிவ பூஜையாம். மனோபுத்தி யகங்காரசித்தங்கட்கு, இந்திரியங்களினாலேகவரப்பெற்றபொருண் மாத்திரகோசர சங்கற்ப விகற்ப நிச்சய அபிமான ஸ்மரண ஹேதுத்தன்மை யுண்மையின், இந்திரியத்திற் கெட்டாததென்று அருளியதானே புத்தியாதிகட்கெட்டாமையும் பொருளாற் புகன்றருளியதேயாகும், புத்தியினாலும் விடயீகரிக்கமுடியாத தன்போதத்தில் மற்றேதேனு முபாயம் சம்பவிக்குமென்பதாக வெண்ணமுடியாதாம், ஆகவே, இருப்பதாய அதனையுங் கூடவுணரு முபாயமில்லாமையின், உபாய அசம்பவசங்கையில்லாமல் அதிகாரியினாலே, அந் தச் சிவரூபமானது எங்ஙனம் சாக்ஷாத்தாக அநுபவிக்கக்கூடும்? ஹே பரமேசுரரே! புத்தி யாதிகளோடுகூடிய புலன்கட்கும் அதிருசியத்தன்மையை யடைவுறுமேலது, எங்ஙனந்தான் சங்கையில்லாமல் உணரப் பெறுதல் கூடும் என்பது ஸ்ரீ வசிஷ்டபகவானது சங்கையாம்; பரமேசுரர் அதற்கு விடையருளல்:—பிரமாணஜன்னியமாய்ச் சுத்தசாத்விக பாகபரிணாம ரூபமாயிலங்கும் பிரஹ்மாகார விருத்தியால் அவித்யாவரணம் அகற்றப்பெறும், ஆவரணம் அகன்றுபோகவே பிரஹ்மசொரூபமானது சொப்பிரகாசமாகவே உண்மையாக விளங்கும், அதுவே யிதனது சாக்ஷாத்காரமாம், புத்திவிருத்தி யபிவியக்தசித்துவியாத்திருபமல்லவாம், மோக்ஷத்தை யிச்சித்தவனானவன், மனோவடிவினன், சமதமாதிசாதனபரிசுத்தத் தன்மை யானே கேவலன் சாத்விகன் அவித்யாம்சன், சற்சாத்திரசற்குருசற்சங்காதிப் பெயரிய சாத் விகங்களேயாய அவித்யாபாகங்களானே சம்பாதிக்கப்பெற்ற மேன்மையான சிரவண

மனன நிதித்தியாசன சாக்ஷாத்காராந்தசுவவிருத்தி பரம்பரையானே வெகு வெகு ஜன்மங்களிற் சஞ்சிதயஞ்ஞதானதி சுகிருதத்தைத்தாங்குந் தன்மையானே மேன்மைவாய்ந்த காரிய சகித அவித்தையை யலம்பிக்கொண்டே நெடும்போதிருப்பன்.

(ச.) தேசகாலங்கள் = பிரசித்தங்கள், தொழில் = புருடவியாபாரம், இவைகளின், ஒழுங்கால் = கிரமத்தால், சேர்ந்த = உதித்த, சகல, பொருளின், சுகாசுகரூபங்களான, மயக்கங்களினாலே = விலாசங்களினால், மெய்யிற் கடவுள் = சரீரநாயகனென்னும் ஆன்மாவை, பூசனைசெய்து, நித்தம் சகலேச்சையுமற்ற புத்தியோடுங்கூடினவனும் நிற்பாய்; ஆன்மார்ச்சனையிலீண்டு ஞானத்தின் அபேக்ஷிதத்தன்மையுண்மையின் அது சித்தித்தற்பொருட்டு அவித்தைமலங்கழுவும் உபாயத்தை யுரைத்தல்:—ஸ்ரீ ஈசுவரர்:—பிராஞ்ஞன புமான், உயர்மகிமை, சுத்தசத்துவஜந்யமாதலின் மேலான விமலவாதனரூபமாகிய அவித்தையினாலே, நீசமாயைதனை = மலினவாசனரூபமான அவித்தையை, நீக்கும் = துடைத்திருப்பன். (55)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அருளியதையே திருஷ்டாந்த பூர்வகமாகவருளி அறிந்தவர் பயனையும் அறைந்தருளல்:—கருதியென்பது.

(ச - அ - கை.) இதனையே திருஷ்டாந்தத்தாற் றெரிவித்தத்தல்:—

கருதிமலத்தான் மலமறுக்குஞ் காருவென்ன மாயைதனைப்
பெருமாயையினாற் செறல்வேண்டும் பெரியமாயை காரணமாம்
பொருளன்றாயுங் குருவாக்காற் புகலும்பொருளாய்க் காரணமாய்
மருவுமுணர்வாந் தன்னுருவை வழுவாதளிக்கு முணர்வோர்க்கே.

(ப - ரை.) கருதி = ஆராய்ந்து, மலத்தால் மலமறுக்கும் = சாரமண் முதலிய அழுக்கால் அழுக்கெடுக்கும், காருவென்ன=வண்ணான்போல, மாயைதனை=அசுத்தமாயையை, பெருமாயையினால் = சுத்தப்பிரஹ்மாகாரவிருத்தியினால், செறல்வேண்டும் = துவம்சஞ்செய்தல்வேண்டும், பெரியமாயை காரணமாம் = பெரிதாம் மாயை காரணத்தன்மையையடையும், பொருளன்றாயும் குருவாக்கால் புகலும் பொருளாய் = வஸ்துவல்லவாயும் ஆசிரியரது உபதேசத்தால் உபதேசிக்கத்தக்க வத்துவாய், காரணமாய் = அகாரணமாயினும் காரணமாய், மருவுமுணர்வாம் தன்னுருவை = பொருந்தாநின்ற அறிவாம் தனது வடிவத்தை, வழுவாது அளிக்கும் உணர்வோர்க்கே = நழுவாது அடைவிக்கும் அறிவுடையவர்க்கே.

(ஸ்ரீ - வீர.) யூகமுள்ள இரஜகன் (தோய்ப்பவன்) அழுக்கை யழுக்கால் அபகரிப்பன் ...பால் அறியாமையை அறிவாற் போக்கவேண்டும், அற்றேல் மதியினாலே யான்மா ...ந்தன்றோ நிறுவப்பெறுகின்றது, அவ்வாறாகவே மதிகாணுதான்மாவை யென்பதெப் ...யனின், ஜடமாயமதிக்கு விசாராதியில் சுதந்திரத்தகைமையிலதாம், மற்றோ, ஆன் ...வ புத்தியாதியுபாயங்களினாலே விசாராதியால், அவித்தையைப் பாதித்துச் சுயம் ...ங்குகின்றது, தன்னைத்தானே கண்டுகொண்டிருக்கும், தன்னாலே தாடீராய்ந்தடங்கல், ...ாயீண்டுளது அவித்தையேயில்லை, இதுவே யவித்தையின் க்ஷயமென் வெண்ணுவர்; இதானே குருசாஸ்திராதி காரணபேதங்கள் ஆன்மாவல்லவாம், ஆன்மஞானை ஹேதுக்களுமல்லவாம், ஆன்மசொரூபத்திற்கும், அதன் ஞானத்திற்கும் சாதன நிரபேக்ஷத்தன்மையுண்மையின், எத்துணைச் சிறிது இந்நாளுவத்துக்கள் உளவோ, இவையாவுமே ஆன்மா அறி

வுறுகாரணமாகாவாம்; குரு உபதேசாதிக்கிரமங்களும் ஆன்மஞானத்தின் காரணமாகாவாம்; ஆயின் குருவாதிகள் வாளாபோமோவெனின் அன்றென்றருளல்:-குருவென்பதாதி. ஹே துவ ஜோத்தம! அகாரணங்களேயாயினும் அத்தியந்தம் காரணத்தன்மையை அடையாநிற்கும்; குரு உபதேசாதியமுறைகள், ஆன்மஞானத்தினது சித்தியின்பொருட்டு, மறந்தகழுத்தணி மானுமிலாபப்பொருட்டு ஆம்.

(ச.) மலம் = வஸ்திரங்களின் மலத்தை, மலத்தால் = உவர் மண்ணுதி மலத்தாலே, அறுக்கும், கருதிக்காருவென்ன, உபாயமறிந்து செய்வோன்போற் பிராஞ்ஞனபுமான், உண்மையாக, காரணமன்றாயும் = ஏதுவன்றாகினும், குருவாக்கு = குரு உபதேசாதிகள், பெரியமாயை = மேலான அவித்தையின், அங்கிசங்கள், ஒரிடத்துபாயத்தினுல், தன் னுருவையளிக்கும், ஆன்மஞானசித்திக்கு, காரணமாய் மருவுமென்றதாயிற்று. ஏதாவதோ ருபாயத்தினுலென்றும் பாடம். (56)

(ஸ்ரீ-வீர - அ-கை.) யாவினுந் தனது முயல்வே யதிகமாகவேண்டுமென்றருளல்:— குரவன் என்பது.

(ச - அ - கை.) இதனை வெளிப்படவுரைத்தல்:—

குரவனுபதே சத்தொழுங்கு குறிப்பான் மகன்பான் மிகவளர்ந்து
விரவுமென்னிற் காட்டரிதாய் வெளிநில்லாதா கினுந்தானே
பிரமரூபம் வெளிநிற்கும் பன்னூற்பொருளாற் குருமொழியாற்
றரவுமரிதாந் தன்னறிவாற் றானேயறிந்து பெறவேண்டும்.

(ப - ரை.) குரவன் உபதேசத்தொழுங்கு = ஆசிரியனது உபதேசத்தினது முறைமை, குறிப்பால் மகன்பால் = ஒருவாறாகச் சீடனிடத்தில், மிகவளர்ந்து விரவுமென்னில் = பிர விருத்தியுற்று விருத்தியாகுமாயின், காட்டரிதாய் வெளிநில்லாதாகிலும் = உணர்த்தரிதாய் அதிருசியமாயினும், தானே பரமரூபம் வெளிநிற்கும் = சுயமாகவே பரம்பொருளின் வடிவம் வெட்டவெளியாய்ப் பிரத்தியக்ஷமாம், பன்னூற்பொருளால் குருமொழியால் = பல சாஸ்திர அருத்தங்களினுலும் ஆசாரியனது திருமொழியாலும், தரவுமரிதாம் = கொடுப்ப தற்கு முடியாததாம், தன்னறிவாற்றானேயறிந்துபெறவேண்டும் = தனது பிரஞ்ஞையினுலே தான்றானே யுணர்ந்து அடையவேண்டும்.

(ஸ்ரீ - வீர.) குரு உபதேசங்களின் கிரமமானது சிஷ்யபோதத்தினுலே பிரவிர்த்தியு ற்போது, இன்னதெனப்பெறுததே யெனினும், விடயமுறுததேயெனினும், சுயமாங் கூ..வெளிப்படாநிற்கும்; இவ்வண்ணம் ஆவசியகத்தன்மையேல், யாங்ஙனம் அகாரணத்தி பெறுகுமெனின் அருளல்:—பன்னூல் என்பதாதி. சாஸ்திரார்த்தங்களினுலே தான் னுடை..வுதில்லை யான்மா, ஸ்ரீ குரு திருவசனத்தினுலும் உணரப்பெறுவதில்லையான்மா. பாம்; ...ர்வின் றன்வயமதனுல்தானே யிதனைத் தான்றெரிந்திடுவன்.

(ச.) குரு ... றுமை வளருமெனில், ...பதேசங்களின் கிரமம், குறிப்பான் மகன்பால் = சீடனது போதத்தும் வெளிநில்லாதாகி காட்டரிதாய் குருவாற் சத்தவிருத்தியாற் சொல்லுதற்கசக்கியமாயினும், ரூபம் = ஆன்மாவும், சீடனுற் சித்தவிருத்தியாற் சாக்ஷாத்கரித்தற் கசக்கியமாயினும், ராம், ரார்த்தங்களினுலு தானே, வெளிநிற்கும் = பிரகாசிப்பன், பன்னூற்பொருளால் = ... வுணர்தற்கரிதாம், ..., குருமொழியால் = குருவாக்கியங்களாலும் தரவுமரிதாம், இஃதென ...ற்றென்னெனில், தன்னறிவால் = சொரூபாநுசந்தான மகிமையா

தானேயறிந்து பெறவேண்டும். இதற்கு, உ-ம். சூதசங்கிதை:—சொச்சவிருத்தியையடைந்து விருத்தியின் சாக்ஷியாயிருப்பவன் விருத்தியால் நீங்கும் அஞ்ஞானத்தைத் தனதொளியாற் கெடுப்பன், ஆன்மா சாஸ்திரார்த்தங்களாலும், குருவசனத்தினாலும் அறியப்படான் தனது போதவசத்தாற் றனக்குத்தானே தன்னானே யறியப்படுவனென்பதாம். (57)

(ஸ்ரீ - வீர - அ - கை.) குரு முதலிய மூன்றுங்கூடியே உணர்வைப் பயக்கும் எனத் திருட்டாந்த பூர்வகம் அருளல்:—ஆசான் என்பது.

(ச - அ - கை.) தனக்குத்தானே யான்மா வறியப்பெறின் குரு சாஸ்திராதிகளால் என்னெனச் சங்கித்து அவை யுபயோகமாகும் பிரகாரத்தைக் கூறல்:—

ஆசான்மொழியா னூற்பொருளா லன்றிப்பெறவு மரிதாகுஞ்
தேசார்குருநூன் மாணக்கன் சிறக்கவிம்மூ வருங்கூடிற்
பாசாதீதப் பரமெய்தும் பன்னாணீங்கா விக்கூட்ட
மேசாவுணர்வைத் தரும் பகற்போ தெல்லாத்தொழிலுந் தருவதுபோல்.

(ப - ரை.) ஆசான் மொழியால் நூற்பொருளால் = குரு உபதேசத்தால் சாஸ்திரார்த்தங்களால், அன்றிப்பெறவு மரிதாகும் = அல்லாமல் அடைவதும் அசத்தியமேயாகும், யாகும், தேசார் குரு நூன் மாணக்கன் = சுவானுபூதிமயமாய ஆசாரியன் சாஸ்திரம் சிஷ்யன், என்னும், சிறக்க இம்மூவரும் = இந்தமூன்றும் விசேடமாக, கூடில் = சேர்ந்தால், பாசாதீதப்பரமெய்தும் = சகல பாசங்களுங்கடந்த பரமசிவம் அடையப்பெறும், பன்னாள் நீங்கா இக்கூட்டம் = நெடும்போது நீங்காத இந்தச் சமாகமம், பகற்போது எல்லாத்தொழிலும் தருவதுபோல் = தினமானது சகல விவகாரங்களையும் பயப்பதேபோல், ஏசாவுணர்வைத்தரும் = யாவரும் புகழும் ஞானத்தையேயும்.

(ஸ்ரீ - வீர.) ஞானசாரிய ருபதேசசாஸ்திரார்த்தங்களால் அல்லாமலும் ஆன்மா அறியப்பெறாதாம், இவற்றின் சையோகசத்தையே சுவாத்மஞானப் பிரகாசினியாம் = அபிவியஞ்சிகையாம், குரு சாஸ்திரார்த்த சிஷ்யர்களின் நெடுஞ்சையோக விருப்பானே பகவிற் சஞ்சாரம்போல ஆன்மஞானம் பிரவிர்த்திக்கும்.

(ச.) பாசாதீதப்பரம் = ஆன்மஞானம், எய்தும் = பிரகாசிக்கும், ஏசாவுணர்வை = ஆன்மஞானத்தை, பகற்போது = சூரிய சந்நிதி, எல்லாத்தொழிலும்=உலகவிவகாரமனைத்தையும். (58)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அருச்சனையின் பெரும்பயனையருளி யுலகின்றிறத்தை யுறைத்தருளல்:—சொன்னவென்பது.

சொன்னநெறியி லறிஞர்தினந் தோறுந்தேவார்ச் சனைபுரியி
லென்னைமுதலோர் தொண்டர்களா லேத்தமிக்க பதமடைவ
ருன்னுசகமில் லாதிருந்து முண்டுபோற்றோற் றிடுந்தோற்ற
மன்னதொழிந்து வேறில்லை யரியதவத்திற் பெரியோனே.

(ப - ரை.) சொன்ன நெறியில் = கூறியமார்க்கத்தில், அறிஞர் = விவேகியர், தினந்தோறும் = அனுதினமும், தேவார்ச்சனைபுரியில் = பிரஹ்மத்தியானஞ் செய்யில், என்னை முதலோர் தொண்டர்களால் = எம்மனோரே முதலிய தொண்டர்களானே, ஏத்தமிக்க பதமடைவர் = போற்றத்தகுந்த பெரியபதத்தினை யடைந்திடுவர், உன்னுசகமில்லாதிருந்து =

நினையுமுலகம் அத்தியந்தம் அபாவமாயிருந்தும், உண்டுபோற் றோற்றிடும் = இருக்கின்றது போலத் தோற்றுகின்றது, தோற்றம் = பிரதீதியாவது, அன்னதொழிந்து வேறில்லை யரிய தவத்திற் பெரியோனே = அவ்வளவேயல்லாமல் அயலில்லை அருமையாகிய தவத்தின் மிகுந்த முனிவனே.

(ஸ்ரீ - வீர.) நித்தியம் முதலிய நிதிரூபமான தேவார்ச்சனத்தைச் செய்யுமறிஞன், ஹே முனிநாயக! அந்தப் பரமபதத்தையடைந்திடுவன் எந்தப்பரமசிவபதத்தில் ஒவ்வொரு குண அபிமானிகளாகிய எம்மனோராதியரும் பிருத்தியரேயெனச் சிருஷ்டியாதிகருமகியத ராவேமோ, இப்போது ஸ்ரீ வசிஷ்டபகவான் றாயசித்தினிடத்தில் ஜீவபாவவதன் சம்சரண ஆரோபக்கிரமத்தையறியும் வேட்கையராகி ஸ்ரீ மகாதேவரைநோக்கி, ஹே பகவன் றேவ றேவேச! இல்லாததேயாமிது இருப்பதேபோலத் திதிபெற்றுள்ளது, அஃதெவ்வாறுமோ அவ்வாறு அடியேனுக்குச் சுருக்கமாக உரைத்தருளவேண்டும் என்று வினவ; ஹே முனி நாயக! இவையெல்லாம் வெறுந்தோற்றுமாத்திரமேயாம், மனத்தின் அலைவைத் தவிர்த்து மற்றொன்றும் இல்லவே யில்லையாம் என்று விடையருளி மேலும் பரமேசுராருளுகின்றார்.

(ச.) தேவார்ச்சனை புரியில், ஆன்மசொரூபத்தைத் தேவென்றறிந்து அருச்சிக்கில், என்னை முதலாம் = அரியாரதிகளும், தொண்டர்கள் = தொண்டர்கள்போற் றாழ்ந்தவ ராய் அவர்களால், எற்ற = உபாசித்தற்கரிய, மிக்கபதம் = பரப்பிரமபதத்தை, அடைவர், ஆன்மார்ச்சனையில் அனைத்தும் பிரமம் என நிச்சயித்து எப்போதும், ஆன்மார்ச்சனை விரதஞ் செய்யவேண்டுமெனக் கூறப்பட்டது, ஆங்குலகஞ் சின்மயமாதலாற் பிரமபாவத்தைப் பிரதி பாதித்தற்குச் சித்துவிவர்த்த மிகுங்கிரியையை வியந்துரைத்தல்: அன்னது = அத்திரிஜகத் தும், தோற்றமொழிந்து = சின்மாத்திரமேயன்றி. பிரக்கிரியையை=முறைமையை. (59)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உத்தரோத்தர ஆரோபத்தில் தூல்பாவவளர்ச்சியை அருளும் பொருட்டுப் பரமசுக்குமரூபமூலத்தை யருளல்:—முந்தையென்பது.

முந்தைப்பிரம முதலான மொழிகட்கெல்லாந் தெரிகின்ற
தெந்தப்பொருளாங் கதுசித்தென் றெண்ணுவாயன் னதுதோன்றித்
தொந்தித்தறியும் பொருள்போலாய்த் தொடரும்பெயர்க்கு முரித்தாகி
யந்தக்கரண பாவனையா லகந்தைதனையும் பின்செல்லும்.

(ப - ரை.) முந்தைப்பிரம முதலான மொழிகட்கெல்லாம் = அநாதியாய பிரஹ்மம் முதலிய சப்தங்கள் யாவற்றிற்கும், தெரிகின்றது=அருத்தமாயிருப்பது, எந்தப்பொருள்= எவ்வத்து, ஆங்கது சித்தென்றெண்ணுவாய் = ஆண்டது அறிவுருவமென்றுன்னுவாய், அன்னதுதோன்றித் தொந்தித்தறியும் பொருள்போலாய் = அதுபிரதீதியாகித் துவந்துவ மாய்த் திருசியப்பொருள்போலவாகி, தொடரும் பெயர்க்குமுரித்தாகி = சம்பந்தித்த நாமத் திற்குந் தக்கதாகி, அந்தக்கரணபாவனையால் அகந்தைதனையும் பின்செல்லும் = திருசியத் தைப் பாவிக்கும் பாவனையால் அகங்காரத்தையும் பின்றொடரும்.

(ஸ்ரீ - வீர.) யாதுபிரஹ்மாதிசப்தார்த்தமோ அதுகேவலம் அறிவென்றுணர்தி, தெளி வாய ஆகாயமும் அதற்குத்தூலமாம், மேருவுமணுவுக்கொப்பாம், சிற்சுக்குமபாவத்திற்கும் ஜடசுக்குமபாவத்திற்கும், வெளிப்படையேயாம் வேற்றுமையென்பது கருத்து. அதுசித்து வேத்தியகோசரசமஸ்கார உற்போதத்தால் வேத்தியகற்பனை யுன்முகியாக எப்போதாமோ அப்போது சேதனத்தாற் சித்தென்னுங் கிரியைப்பெயர்த்தகுதியதாம்; அத்தியந்தம் அவேத்

தியவதியாயினும் உன்மனியந்தபதத்தில் = நிர்விகற்பசமாதிப்பிரசித்த சிதானந்த ஏகரச சுபாவத்தில், இருப்பதும்மாயினும் கணத்தில் வேத்தியத்தைப் பாவிப்பதாய் அகந்தையைப் பின்றொடர்ந்தோடும்; புருஷத்தன்மையின் புமான் கனவில் வனவாரணத்தன்மையை வயங் கலேபோலும்.

(ச.) முந்தை = பிரசித்தமாய்ப் பரோக்ஷமாய் விளங்காநின்ற பிரமமுதலான = பிரமம் பரமன்மா, பரஞ்சோதியென்பது முதலான, மொழிகட்கு, பொருள் = அர்த்தமாவது, பிரதிபாத்தியமாய்ச் சுத்தமான சித்ரூபமென்றறிவாய், அன்னது = அந்தச் சித்தேயறியும் பொருள்போலாய், பெயர்க்கும் = சித்தென்னும் வசனவிவகாரத்திற்கும், உரித்தாகி, அந்தக்கணமே, திருசியதாதான்மியப்பாவனையால், அகந்தைதனையும் = அகங்காரரூபத்தையும், பின்செல்லும், புமான் சொப்பனத்தில் வாரணபாவனையால் வாரணத்தன்மையைப் பின்படைவதுபோலென்பது பொருள். (60)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அகந்தையின் சத்திகளை விரித்தருளிச் சூக்குமசரீரபரியந்தம் விரிந்ததை யுரைபுரிந்தருளல்:—சேரு, சத்தமென்பன.

சேருமிந்த வகந்தைக்குத் தேசகால பாவனையாய்ச்
சாரும்பாங்கித் திரளான சத்தித்திரளுண் டாந்தானே
நேருமிவைசூழ் சற்பாவ நிகழ்சீவப்பேர் பெற்றுடனே
கூறும்புந்தி யெனலாகிக் கோளின்மூட ரிடத்திருக்கும்.

சத்தங்கிரியை ஞானமெனுஞ் சத்தித்திரள்க ளுடன்கூடி
யொத்தக்கணந்தா னொருகணத்தி லுன்னறன்னை யுண்டாக்கு
மெத்தசங்கற் பத்தருவின் வித்தாமென்ன மனம்விளையுந்
தொத்துபுரியட் டகவடிவாஞ் சொல்லுக்கதுபாத் திரமென்பர்.

(ப - ரை.) சேருமிந்த வகந்தைக்கு = சம்பந்தித்த இவ்வகங்காரத்திற்கு, தேசகால பாவனையாய் = தேசத்தன்மைகாலத்தன்மைகளாகி, சாரும்பாங்கித்திரளான = பொருந்தும் சகிக்கூட்டங்களான, சத்தித்திரளுண்டாம் = ஆற்றற்றொகுதிகள் உள்ளனவாம், தானேநேருமிவைசூழ் = சுயமேகூடும் இவை சுற்றிக்கொண்டிருக்கும், சற்பாவ = தன்மையதான இருப்பானது, நிகழ்சீவப் பேர்பெற்று = விளங்காநின்ற ஜீவனென்னும் நாமத்தையடைந்து, உடனே கூறும் புந்தியெனலாகி = விரைவில் சூக்குமமான நிச்சயான்மகமாகி, கோளில் மூடரிடத்திருக்கும் = அஞ்ஞபதத்திற் றிதிபெற்றிருப்பதாம்.

சத்தங் கிரியை ஞானமெனும் = ஓசைவினையுணர்வென்னும், சத்தித் திரள்களுடன் கூடி = சத்திக்கூட்டங்களுடன் சேர்ந்து, ஒத்தகண தான் ஒருகணத்தில் உன்னல் தன்னை யுண்டாக்கும் = நெருங்கிய அக்கூட்டமானது ஒருவிநாடியில் ஸ்மிருதியை யுளதாக்கும், மெத்தசங்கற்பத்தருவின் வித்தாமென்ன = மிகுந்த சங்கற்பங்களாகிய விருக்ஷத்தின் பீஜமேயென்ன, மனம் விளையும் = மனமானதுண்டாம், தொத்துபுரி யட்டகவடிவாம் சொல்லுக்கது பாத்திரமென்பர் = தூலசரீரத்தைப்பற்றும் ஆதிவாகிக தேகத்திற்குள்ள பதத்திற்கு அது விடயமென்பர்.

(ஸ்ரீ - வீர.) இவ்வகந்தாதிரூபம் வாய்ந்ததற்கு, தேசத்தன்மை காலத்தன்மை யுற்றனவாம், அதன்பின் குணியரூபிகளாகிய அவர்கள் சகிகளாகவேவந்து சம்பந்திப்பார்கள், இந்

தினை முன்னுண்மை பின்னுண்மை யுணர்வாதலின் தேசத்தன்மையும் காலத்தன்மையும் அடைவுற்றன, அடைவுற்ற அக்கற்பனைகளே அகந்தையினது சகிகள் என உன்னுதலாம். அத்தேச காலகற்பனைகளினாலே சூழப்பெற்ற அவ்வகற்தாஸ்பத கோசர சமஸ்கார உற்போ தத்தால் ஸ்பந்த விஞ்ஞான முடையதாகிக் காற்றினது எழுச்சியேபோலும், உள்ளே பிராண னது அசைவுறவே, அச்சத்தைதானே ஜீவனெனும் பெயரைச் சேராநிற்கும் ஜீவசப்தம் பிராணதாரணத்தில் என்ற பகுதிப் பொருட்டொடர்ச்சியாலென்பது பொருள். இவ்வண் ணமே நிச்சயசமஸ்கார உற்போதத்தால் புத்தியாதிசப்தவாச்சியமும் ஆமென்றருளல்:— புந்தியென்பதாதி. ஜீவசக்தியானது அவ்வாறுற்றதாய் நிச்சயஏகவிலாசினியாய்ப் புத்தித் தகைமையையடைவுறும், அடைவுற்றவது அஞ்ஞபதத்திற் நிதமுறுவதாயாம்; பின்னர் வாசிக காயிக மாநசிக விவகார சமஸ்காரக் கிளர்ச்சியானே சப்தசக்தியோடும் கிரியாசத்தி யோடும் ஞானசக்தியோடும், அகந்தையானது பின்றொடரும். முற்றினும் மூடப்பெற்றது தாத்விகமாய ஆன்மரூபம் எதனாலோ வதனுலுள்ளே தனித்தனியாக விளங்காநிற்கும். இக் கூட்டங்கூடி வேகமாக ஸ்மிருதியை நன்கனுகூலப்படுத்தி, சங்கற்பசாகியின் பூதாத்ம பீஜ மாய மனமானதுண்டாம்; ஆதிவாகிக தேகக்கூற்றைப் பஜிப்பதாக அறிஞர் அதனை யுணர் வர். உள்ளேயுள்ளதாய் அநாவிருத சாக்ஷிரூபமாய பிரஹ்மசக்தியினாலே வியாப்தம் ஆம் ஞன்னின்வடிவம், அறிவதனுல் ஞன்னெனப் பிரமாத்துரூபம் அகப்படும்; அதுவும் ஆன்மா விற்குச் சொப்பிரகாசத்தன்மைப் பலத்தானேயாம், ஆன்மாத் தன்னைத் தன்னாலே யுணர்வ தாகும் என்றபடி.

(ச.) இந்த வகந்தைக்கு = அகங்காரரூபத்தையடைந்த சித்துக்கு, உண்டாஞ் சத்தித் திரள் = நானுரூபங்களான சத்திகள், தேசகாலபாவனையாய்=தேசகாலாதிரூபபாவனையை யடைந்ததாய், தானே பாங்கித்திரளான சகாயபாவத்தை யடைந்தனவென்பது பொருள். சற்பாவம் = அந்தச் சின்மயமான சத்தை, இவைசூழ் = இத்தேசகாலாதிகளாற் சூழப் பட்டதாய், சீவப்பேர்பெற்று = சீவரூபமாய், மூடரிடத்து = அஞ்ஞரிடத்து, புந்தியென லாகி = புத்திரூபபாவனையாயிருக்கும், சீவரூபமான சிற்சத்தி அத்தன்மையான புத்திரூப மானபின் புத்தி நிச்சயரூபமாதலின் நிச்சயமொன்றினாலே விளங்குமென்பதாம். சத்த விவ காரவேது, சத்தமெனுஞ் சத்தி, இங்ஙனம் ஞானவிவகாரத்துக்கும், கிரியாவிவகாரத்துக்கும் ஏதுக்கள் ஞானகிரியாசத்திகள் பின்சத்தசத்தியாதிகளுடன் கூடினதாமென்பது பொருள். ஒத்தகணந்தான் = முற்கூறிய வகங்காரசமூகம், சத்தசத்தியாதியோடுங்கூடினதாய், உன்ன றன்னை = நினைவுருவான சத்தியை, உண்டாக்கும் சங்கற்பத்தருவின் வித்தாமென்னச் சொச்ச மனம் விளையும், அது, வியோமாதிரூபத்தை யடைந்தந்த மனமே, புரியட்டகவடி வாய், ஆதிவாகிய தேகமென்னும், சொல்லுக்கும் பாத்திரம் = விடயமாமென்பர், மனமே புரியட்டகவடிவமென்பது பொருள், சூனியான்மாவென்னும் பாடத்தில் மாயாகற்பிதா காரமென்பது பொருள். (61-62)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உள்ள சத்திகட்களவேயிலையென்றும், அவற்றுனே யாகாயமுத லனவாமென்றும், ஆகிய எவையுமே அத்தியந்தம் மித்தையென்றும் அருளல்:—அன்ன வென்பது.

(ச - அ - கை.) அம்மனதே யுற்பத்திப் பிரகாணத்திற் கூறியபிரகாரமாக வியோமாதி ரூபத்தையடைந்து நானுரூபமாஞ் சமட்டி வியட்டி யான்மகமான ஜகத்தாய் விளங்குகின்ற தெனல்:—

அன்னமனதுக் குயர்பரம ஞலேவடிவாஞ் சத்திகளை
யின்னவளவென் பதற்கரிதா மிதுதான்விசும்பு முதலான
துன்னுவடிவங் களைமேவித் தொகுதத்துவங்க டமைச்செய்யு
முன்னுபாழிற் கூளிகள்போன் மொழிந்தமனவா தனைதோன்றும்.

(ப - ரை.) அன்னமனதுக்கு = அந்த மனத்தினுக்கு, உயர்பரமஞலே வடிவாஞ் சத்திகளை = மேலான பரமஞலே யுருவமாம் ஆற்றல்களை, இன்ன அளவென்பதற்கரிதாம் = இவ்வளவுதான் என்று அளவிட முடியாதாம், இதுதான் விசும்புமுதலான துன்னுவடிவங்களைமேவி = இம்மனந்தானே ஆகாசமாதியாகநெருங்கிய உருவங்களையடைந்து, தொகுதத்துவங்கடமைச்செய்யும் = அருளிய தத்துவங்களை யாக்கும், முன்னுபாழிற் கூளிகள் போல் = ஒன்றுமில்லாத சூனியத்தில் வேதாளங்கள்போல, மொழிந்தமனவாதனை தோன்றும் = கூறியருளிய மனத்தினது வாதனைகள் பிரதீதியாம்.

(ஸ்ரீ - வீர.) அவற்றுள் ஆதியில் இவ்வண்ணம் உட்கற்பனையானதுவாகிய திருசிய சத்தைக் கற்பனையின்கண் ஹேதுவெனக் கழறியருளல்:—அன்னவென்பதாதி. இச்சித்தத்தின் கண்ணே இச்சக்திகள்தாம் பொருந்தினவேயாம், பின்னரீண்டுக் கூறப்பெறுமவை வெளியிலிருப்பனவாய், எழுச்சியற்றனவாயினும் முயலுகின்றனவாம். அம்மனந்தானே வியோமாதியநேகசத்தைகட்கு ஆசிரயமாக விருந்துகொண்டு விரைபோல் விளங்கும், இதுவே வாசனை வடிவமாக ஆதிவாகிகதேகமாம். பொய்யென்றுணர்ந்தபோதினும், உலகந்துயரையுண்டாக்கவே செய்கின்றது, ஆகலின் துக்கசிகிற்சை பொய்ம்மையுணர்வினும் அயலே புகலத்தக்கது, என எண்ணினவராகிய ஸ்ரீ வசிஷ்டபகவான், ஹே பகவன், இச்சகத்தானது கந்தர்வ நகராகாரமாயினும், சொப்பனநகரம்போன்றதே யெனினும், துக்கப்பொருட்டேயாம், அத் துக்கத்தின் அத்தியந்த பரிக்ஷயத்தில் ஈண்டுயுக்தியாதுளதோ ! வென வினவ ஸ்ரீ மகாதேவர் அருளல்:—பாழில் என்பதாதி. வாசனக்ஷயபரியந்தம் நிரதரப்பொய்மைத்துணிபே துக்க நீக்க வுபாயமாம், தொடக்கமாத்திரத்தே யிஃதாகாதாம்; அத்தியந்த அசத்துவநிரிச்சயமாகவே ஆசிரயவிடயாதியபாவத்தானே வாசனையின் அநுதாப சித்தியாம். ஒன்றுமில்லாமலே ஒன்றுமில்லாவிடத்தே வேதாளந் தோற்றலேபோலச் சித்தவாசனையானது இவ்வண்ணம் காட்டும்.

(ச.) கூளிகள் = வேதாளங்கள், கற்பிதமாதலில் உண்மையாக, பாழில் சூனியமேயாம் அதுபோல் மொழிந்த இந்தப்பிரகாரத்தால், மனவாதனையே, ஜகத்துருபமாய் தோன்றும். சூனியமே பரமார்த்தமாயிலதாம் என்றும் பாடபேதமாம். (63)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாசனக்ஷயமே சாந்தியென்றும், அநதிகாரிகட் கிதனை யருளவொண்ணுதென்றும் அருளல் :—சகவென்பது.

சகப்பேர் பெறுமிவ் வாதனைதான் றவிரிலழியாச் சாந்தியதா
மகப்பாவனையி லிச்சகத்தி லலகைத்தேரா நீர்தன்னி
னுகப்பாமறுதி யுள்ளோர்க ளுபதேசிக்க வொண்ணுதோர்
மிகப்பா விகளாஞ் சீசீயென் றிகழ்வாரவரை மெய்யுணர்ந்தோர்.

(ப - ரை.) சகப்பேர் பெறும் = உலகப்பெயரை யொன்றிய, இவ்வாதனைதான் = இந்த வாதனையானது, தவிரில் அழியாச்சாந்தியதாம் = கெடாதசாந்தியானதுண்டாகும், அகப்பாவனையில் இச்சகத்தில் = அகம்பாவனையில் இவ்வுலகில், அலகைத்தேராம் நீர் தன்

னில் = பேய்த்தேரென்னும் கானனீரில், உகப்பாம் அறுதியுள்ளோர்கள் = மகிழ்வுடன் றிண்ணியமதியுடையோர்கள், உபதேசிக்கவொண்ணுதோர் = உபதேசஞ் செய்ய வருகரல்லாதவர்களாவார்கள், மிகப்பாவிகளாம் = பெரும் பாவியர்களாம், சீசீயென்றிகழ்வாரவரை மெய்யுணர்ந்தோர் = திக்திக்கென்று நிந்திப்பரவர்களை யுண்மையுணர்ந்தவர்கள்.

(ஸ்ரீ - வீர.) இது சகமெனப் பெயர்கொண்டெழுந்ததேயாகும், இவ்வதுசாந்தியாகவே கெடாததான சாந்தியுண்டாம்; அந்தையின் கண்ணும் ஜகத்தின்கண்ணும் மிருகதிருஷ்ணை ஜலத்தின்கண்ணும் யாவன் மிகவும் ஆஸ்தையுடையவனுவனே அக்கெட்டுப்போன இழிவானனைப் பெரியோர்கள் இகழ்வார்கள், அவனுபதேசிக்கத் தகாதவனேயாவன்.

(ச.) இவ்வாதனை = ஆதலில் இச்சித்தவாசனை, தவிரில் = அழியாச்சகச்சாந்தியதாம், கைவல்லியமாமென்பது பொருள். அகம்பாவனையாதிகளில் அறுதியுள்ளோர் = பரமார்த்தபுத்தியுள்ளோர், உபதேசிக்கவொண்ணுதோர் = பிரமவித்தையினுபதேசத்தைப்பெறவருகரல்லர். (64)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஏன் உபதேசிக்கவொண்ணுதவர்களாவர்கள் என்றிடிலருளல்:—பரமமென்பது.

பரமமுணர்ந்தோர் விவேகியர்க்கே பரமவுபதே சம்பகர்வர்
திரமின்மயக்கத்திழிந்தோர்க்குச் செப்பநினையார் சொப்பனத்தில்
வரனைநனவிற் கன்னிகைக்கு மகிணனுக்கு மியல்பொக்கும்
விரத முனியே நீசொன்ன வினவுக்குண்மை விளம்பினமால்.

(ப - ரை.) பரமமுணர்ந்தோர் விவேகியர்க்கே = பிரஹ்மவித்துக்கள் விவேகமுடையவர்கட்கே, பரமவுபதேசம் பகர்வர் = மேலான வுபதேசத்தை யுபதேசிப்பர், திரமின்மயக்கத்திழிந்தோர்க்குச் செப்பநினையார் = நைசுவரமான மோகவத்துக்களில் நாயென மூழ்கும் மூடர்கட்கு உபதேசிக்க எண்ணுர், சொப்பனத்தில் வரனை = கனவிற்கண்ட மணமகனை, நனவில் கன்னிகைக்கு = ஜாக்கிரத்திலுள்ள தனது மகளுக்கு, மகிணனுக்கும் இயல்பொக்கும் = கொண்கனுக்குங் கொள்கையை யொப்பாம், விரதமுனியே = தவப்பெருஞ் சிரேட்டமாமுனிவனே! நீ சொன்ன வினவுக்குண்மை விளம்பினம் = நீ வினவிய வினவிற் குத்தரம் உரைத்தனம். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) பரமான்மாவை யுணர்ந்த மகான்கள் ஈண்டு அடைவுற்ற அதிகாரி விசேடம் வாய்ந்த விவேகிக் குபதேசிப்பர்கள், அடைவுறு அதிகாரத்தன்மையானே, வெகு வெகுப் பிராந்திசாலியாய், ஆரியரால் விடப்பெற்றவனுய், அதாவ துபேக்ஷிக்கப்பெற்றவனுய், அசத்தாய தேகாதியபிமானத்தன்மையானே அசன்மயனுய்ப் பாலனுயுள்ள அஞ்ஞனுக் குபதேசியார்கள். யாவன் பாலனுய அஞ்ஞனுக்கு முபதேசஞ்செய்வனே அவன் பொன்போலுமொளிராநின்ற கனகசுந்தரியென்னும் தன்பெண்ணை கனவிற்கண்ட வரன்பொருட்டுக் கொடுக்கும் மூர்க்கனேயாவன். இருவரும் ஒப்பான மூர்க்கர் என்பதாம். ஹே பரமமுனியே நீ கேட்ட கேள்விகட் குத்தரமுரைத்தேம்.

(ச.) பரமமுணர்ந்தோர் = பிரமவித்துக்கள், விவேகியர்க்கே = அதிகாரிகளுக்கே, பரம உபதேசம் பகர்வர் = சீவனைப் போதிப்பர், மயக்கத்து = மிகுந்த விபரீதஞானத்தையடைந்ததனுலே, இழிந்து ஆரியர்களால் விடுபட்டு, திரமில்லோர்க்கு இல்லாதவர்க்கொப்பான மூர்க்கருக்கு, செப்பநினையார் = உபதேசியார், யாதுகாரணமெனில், அஞ்ஞனுக்கு இப்படியு முபதேசிக்குங்குரு, சொப்பனத்திற்கண்ட புருடனுக்குக் கன்னிகையைக் கொடுப்

பவனும், மூடனுக்கு வித்தையைக் கொடுப்பது சொப்பனத்திற்கண்ட புருடனுக்குக் கன்னிகையைத் தானஞ் செய்வதேபோல் வியர்த்தமாமென்பது பொருள். ஸ்ரீ ஈசுரன், விரத முனியே = வசிட்டரே. (65)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உபதேசிக்கத்தக்கது பிறிதொன்று எஞ்சவில்லையெனக் காட்டியருளி, பரமேசுரர்தாம் உபதேசித்தருளிய பொருளை யாசீர்வாதத்தானும் ஸ்ரீ வசிஷ்டபகவானுக்குண்டாம் வண்ணம் அநுக்கிரகித்தருளி, உபதேசத்தை யுபசங்கரித் தெழுந்தருளல்:—இனிது என்பது.

இனிதுண்டாக வுனக்கெம்பா லேகுவோநா மென்றுமையும்
புனிதன்றானும் பரிவாரம் புறத்துச் சூழவிண்ணகன்றான்
பனிநன்மலாஞ் சலிசொரிந்து பணிந்தேனன்று முதலந்தத்
துனியினெறியான் மெய்யுணர்வைத் தொடர்பாற் பூசைசெய்கின்றேன்.

(ப-ரை.) இனிதுண்டாக வுனக்கெம்பால்=உனக்கு நன்மையே பெருகுக, நம்பாலன்பும், ஏகுவோம் நாம் என்றுமையும் புனிதன்றானும் = வாஞ்சித்தபக்கம் யாஞ்செல்வோம், வாபார்வதி எழுந்திரு என்பதாக ஸ்ரீ பார்வதிதேவியாரும் ஸ்ரீ பரமேசுரரும், பரிவாரம் புறத்துச்சூழ விண்ணகன்றான் = சிவகணவர்க்கங்கள் பாகியத்தே சுற்றிவர ஆகாயத்தே மறைந்தருளினன், பனிநன்மலாஞ்சலி சொரிந்து = கண்மரைகளா னீர்மாரிபொழிந்து, கரமரைகளானே புஷ்பமாரி பொழிந்து, பணிந்தேன் = இறைவியும் இறைவனும் ஏகிய திசையை நோக்கி யநேக நமஸ்காரஞ் செய்தேன், அன்றுமுதல் = அக்காலந்தொடங்கி, அந்தத்துனியில் நெறியால் = ஸ்ரீ மகாதேவ ருபதேசித்தருளிய அத்துயரமற்றமார்க்கத்தால், மெய்யுணர்வை = சத்தியஞானனந்தவடிவத்தை, தொடர்பாற் பூசைசெய்கின்றேன் = ஆன்மசொரூபமாகவே இடைவிடாம லருச்சனைசெய்கின்றேன். எம்பா லேகுவோ மெனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) உனக்கு மங்களமுண்டாகுக, எம்மிடத்துள்ள உனது பக்திவளர்ந்தோங்குக, அவாவியதிசையை யடைவோமாக, வாபோவோம் எழுந்திரு பார்வதியென்றருளி அந்நீலகண்டராகிய பகவான் என்னாற் புஷ்பாஞ்சலி தூவப்பெற்றவராய்த் தமது பரிவாரங்களுடன் ஆகாயவீட்டிற்சென்று மறைந்தருளினர்; அதுமுதலாகவே அம்முறைதானே அகர்நிசம் அருச்சனையாற்றுகின்றேன்.

(ச.) எம்பால் = எமக்கிட்டமுள்ள விடத்துக்கு, நாமேகுவோம், ஸ்ரீ வசிஷ்டர் என்று = இங்ஙனங்கூறி. (66.)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம், இயற்கையாக நிர்விகாரசச்சிதாநந்தமுடையதும் விகற்பமாக அத்தியாரோபமுடையதும் ஆகிய வஸ்துவினது அர்ச்சனத்தன்மை சிந்தனத்தையக்காற் றொடங்கி இன்றுவரை செய்துகொண்டே யிருக்கின்றேன் என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—இன்று மென்பது.

இன்று மென்றும் பதருமல வியற்றுபூசா விதானத்தாற்
றுன்றுகின்ற வாதனைகள் சுமையின்றியிலே சுமக்கின்றேற
னன்றுவந்த கிரியைகளோ டாசாரங்கண் மலராக
நின்றபூசை தனிற்குறைவு நிறைவுகாணே னிராப்பகலே.

(ப - ரை.) இன்றும் என்றும் பதருமல் = இப்போதும் எப்போதும் அவசரப்படாமல், இயற்றுபூசாவிதானத்தால் = செய்யாநின்ற பூசையின் செயற்கையால், துன்றுகின்ற

வாதனைகள் = நெருங்காநின்ற வாசனைகளை, சுமையன்றியிலே சுமக்கின்றேன் = பார மன்றியிலே வகிக்கின்றேன், அன்றுவந்த கிரியைகளோடாசாரங்கள் மலராக = அப்போது வந்தொழில்களோடு ஒழுக்கங்கள் புஷ்பங்களாக, நின்ற பூசைதனில் குறைவு நிறைவு காணேன் இராப்பகல் = அநுஷ்டிக்கும் பூசைதனில் அருகலும் பெருகலும் அறியேன் அகர்நிசம். ஏ, அசையெனினும் தேற்றமெனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) அதுமுதலாகவே ஸ்ரீ மகாதேவர் அருளிய முறையாகவே ஆன்மாவி னுடைய அருச்சனத்தைச் செய்கின்றேன், இன்றும் என்றும் இதே வேலையாய் மிகச் சாவ தானமுடையவனுகிக் கவலையில்லாமல் அருச்சனை செய்துகொண்டே வாழ்கின்றேன், இவ் வர்ச்சனை விதானத்தினாலே ஹே இராகவ! என்னுலித்தினங்கள் விவகாரபரங்களேயாயி னும் யாதொரு துயருமில்லாமல் நன்றாகக் கழிக்கப்பெறுகின்றன. கிடைத்தபடியேயாய கிரியாசார புஷ்பங்களினாலே ஆன்மாவினது அருச்சனமானது இரவும் பகலும் இடைவிடா மலே நடந்து வருகிறது, சுழுப்திகாலத்தில் நழுவுவதாயினும் ஒருகாலும், நழுவுவதே கிடை யாது, அக்காலத்தினும் சுகமாக யான் உறங்கினேன், ஒரு சிறிது முணர்ந்திலேன், என எழுந்தானது தொடர்ந்த பிரஞ்ஞையேதுவாய அவித்யாவிருத்தி புஷ்பத்திரயார்ச்சன சற் பாவத்தால் என்பது கருத்தாம்.

(ச.) வாதனைகள் = சம்சாரவாதனைகளை, சுமையின்றியிலே = விக்ஷேபரகிதனுகியே, சுமக்கின்றேன் = தரிக்கின்றேன். அன்றுவந்த கிரியைகளோடு அவைகளின் ஆசாரங்கள்= அநுஷ்டானங்களே, மலராகச் செய்யாநின்ற பூசைதனில் = ஆன்மார்ச்சனையில், குறைவு= லௌகிகதிருஷ்டியால் விச்சின்னமாகக் காணப்படினும், நிரந்தரம் அனுசந்தானஞ் செய்யு மியான் இராப்பகல் ஒருபோதும் குறைவுகாணேன். (67)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆயின் அஞ்ஞர்கட்கும் அத்தகைய சிவார்ச்சனம் எப்போதுமே யுளதாம் என யாதுதான் உங்களுக்கு அவர்களினும் சிறப்பென்னின் உரைத்தல்:—கொள்ளு வென்பது.

(ச-அ-கை.) இத்தன்மையான ஆன்மார்ச்சனை யனைத்துஞ் சுலபமேயாமெனச் சங் கித்து யோகிகளுக்கு விசேடத்தைக் கூறல்:—

கொள்ளுவானுங் கொள்பொருளுங் கூடலுயிர்க்கெல் லாம்பொதுவா
நள்ளுமந்தக் கூட்டத்தே ஞானயோகிக் கவதான
முள்ளதேதங் கதுதானே யுயரான்மாவுக் கருச்சனையாந்
தெள்ளுமிந்நோக் காற்சங்கஞ் சேராமனத்தாற் சகத்துறைவாய்.

(ப - ரை.) கொள்ளுவோனும் கொள்பொருளும் கூடல் = கிராகககிராகிய சம்பந்த மானது, உயிர்க்கெல்லாம்=பிராணிகள் அனைத்திற்கும், பொதுவாம் = சாமானியமாம், நள்ளுமந்தக்கூட்டத்தே ஞானயோகிக்கவதானம் = ஒருங்குசேர்ந்த அந்தச்சமுதாயத்தே பிரஹ்மவித்துக்கட்கு அநுசந்தானத்துடனிருத்தல், உள்ளதேதங் கதுதானே = யாதொன் றுளதோ ஆங்கதுவே, உயர் ஆன்மாவுக்கருச்சனையாம் = மேலான ஆன்மாவினது அருச் சனையாகும், தெள்ளுமிந்நோக்காற் சங்கஞ்சேராமனத்தாற் சகத்துறைவாய் = தெளிந்த இந்த நாட்டத்தால் பற்றில்லாதவுள்ளத்தால் உலகத்தே வாழ்வாய்.

(ஸ்ரீ - வீர.) சர்வதேகிகட்குஞ் சாமானியமாயிருக்கும் கிராகிய கிராகக சம்பந்தத்தில் யோகிகட்குச் சாவதானத்தன்மையாதுளதோ அதுவே யான்மாவின் அருச்சனையாம்;

அதுவே சிறப்புமாம். அச்சாவதானத்தகைமையும் ஆசங்கத்தியாகமேயாம் எனக் காண்பித்துக்கொண்டு அருச்சனத்தில் கண்கண்ட பல மிகுதியின் கீர்த்தனத்தால், ஸ்ரீ இராகவரை பிரவிர்த்தித்தல்:—தென்னுமென்பதாதி. ஹே இரகுபதியே! இத்திருஷ்டியானே சங்கம் விடுபட்ட சித்தத்தானே இச்சம்சாரமாகிய அற்பக்காட்டில் விளையாடுவாய் துயருறாதே; விளையாடிற் றுயருறுயென்றபடி.

(ச.) உயிர்க்கெல்லாம் கொள்ளுவானுங் கொள்பொருளுங்கூடல் பொதுவேயாமாயினும், பாமரர், பகிர்முகபாவனையாற் புசிக்கவிச்சை விச்சையுள்ள தாகாதிகளால் வேறுபட்டவராய் = பீடிக்கப்பெற்றவராய், விசித்திரமான அன்னபானாதியைப் புசிப்போம் குடிப்போமென வியாகுலமுறுவர்; ஞானயோகியாயின், முற்கூறிய கிரமத்தால் இவ்வான்மாவே தெய்வம் இந்த விசித்திரமான போக்கியசம்பத்தே இவர்க்குப் பூஜையெனச் சாவதானனாயிருப்பன் என்பது விசேடமாம், ஆதலின் அநுசந்தானமே முற்கூறிய ஆன்மாவுக் கருச்சனையாமென்பது பொருள். (68)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராகவருக்கு யதேஷ்டமா யிதோபதேசஞ் செய்தலும், தமது கிருதகிருத்தியத்தன்மையைத் தெரிவித்து மேலும் வினாதல்:—இவ்வாறு, பிறவி யென்பன.

இவ்வாறுலக மெனும்பெருங் காடெய்திவருந்தா யென்றலுமே
வெவ்வா ளிராம னுரைசெய்வான்விட்டே னையமெலாமிகவுந்
தவ்வா தறியற்பாலவெலா மறிந்தேன்சலியா தருள்பெற்றேன்
கைவாரணநே ராசைதனைக் கடிந்தேனொன்றி லசைவில்லேன்.

பிறவிக்கடலிற் றீரநிலை பெற்றுப்பிறழ்கற் பனையெல்லா
மறவிட்டயர்வற் றறவலிதா யறவேதெளிந்தா நந்தத்தை
யுறவுட்குளிர்ந்து நன்றான துள்ளமென்று மெய்ஞ்ஞானத்
திறவித்தகனும் வசிட்டனுடன் செப்பிமேலுஞ் செப்புற்றான்.

(ப - ரை.) இவ்வாறுலகமெனும் = இங்ஙனம் சகத்தென்னும், பெருங்காடெய்தி = பேராரண்யமடைந்து, வருந்தாய் = வருத்தமடையாய், என்றலுமே = என்றுபதேசித்தலுமே, வெவ்வாளிராமன் = கொடிய வாளாயுதந்தரித்த ஸ்ரீ இராகவர், உரைசெய்வான் = கூறுகின்றார், விட்டேன் ஐயமெலாம் = சமுசயங்களையெல்லாம் அடியோடுந் தொலைத்தேன், மிகவுந் தவ்வாதறியற்பாலவெலாமறிந்தேன் = மேலுமேலுந் தாண்டி விழாமல் யாதொரு களங்கமுமின்றித் தெரியவேண்டியயாவுந் தெரிந்துகொண்டேன், சலியாதருள் பெற்றேன் = சஞ்சலமில்லாமல் திருவருண் மகிழ்ச்சியைச் சேர்ந்தேன், கைவாரணநேராசைதனைக் கடிந்தேன் = மதயானைக்குச் சமானமான பேராசையினையடக்கி மாய்த்தேன், ஒன்றில் அசைவில்லேன் = யாதொன்றினும் அசங்கமாட்டேன்.

பிறவிக்கடலிற் றீரநிலைபெற்று = சம்சாரசாகரத்தில் அத்தியந்தந்திரமடைந்து, பிறழ் கற்பனையெல்லாமறவிட்டு = மாறிமாறி வாராநின்ற சகல கற்பனைகளையும் அத்தியந்தம் விடுத்து, அயர்வற்று = மயக்கமற்று, அறவலிதாய் = முற்றினும் வலுத்து, நிட்காமிய கருமஜன்னியதருமத்தானே பலமுடையதாய், அறவேதெளிந்து = அத்தியந்தமுமே சொச்சதமமாய், ஆனந்தத்தையுற உட்குளிர்ந்து = பிரஹ்மாநந்தத்தைப் பெற்றவளவில் உட்சீதனத்தையுற்று, நன்றான துள்ளமென்று = நன்மையடைந்தது மனமென்று, மெய்ஞ்ஞானத்

திறவித்தகனும் வசிட்டனுடன் = சத்தியஞானானந்தத் தன்மைவாய்ந் துபதேசிக்கும் பிரஹ்மவித்வரிட்டராகிய ஸ்ரீ வசிஷ்டபகவானிடத்தில், செப்பி மேலுஞ் செப்புற்றான் = ஸ்ரீ இராகவர் சொல்லி மேலும் சொல்லுவதாயினர்.

(ஸ்ரீ - வீர.) விட்ட ஆசங்கத்திற்கு மீண்டும் உண்டாகாதிருக்குந்தகைமையில் ஆராய்ச்சியின் ·திடத்தகைமையோ யேதுவாம்; எல்லாவற்றையுந் தன்மயமாகிய 'சின்மயமாகவெண்ணுழியானல் எங்கேமகிழ்ச்சி யெங்கேவாட்டம்? இருந்தவிடந்தெரியாவே யிவைதாம்; அறிவுமயமேயாகி நீயெல்லாம் துரியாவஸ்தை யொன்றையேதுன்னி இரவும் பகலும் இன்று தொட்டண்ணலே பரமகாஷ்டையாம் அருச்சனை பயில்வாய்; என்றிட ஸ்ரீ இராகவர் இன்புடன் மொழிவார்:—ஹே பிரஹ்மசொரூபரே! இப்போது சம்சயங்களியாவுமே விசேடமாய் நன்கு நீங்கினவாம், அறியவேண்டுவன முழுதுமேயறிந்தேன், செயற்கையின்றியதாம் திருப்திபிறந்தது, ஹே முனிவர் பெருமானே! அஞ்ஞானமலம் அடியோடு போயது சீவப்பிரஹ்ம பேதவடிவ இருமை பிரிந்தது, திருசியமெதுவுமே தெரியக்காணேன், கற்பனைக் கேதுவாம் கடுமனங்காணேன், எனது மனதானது சமுசாரவடிவசமரத்தில் ஆசாமதங்கஜத்தை யழித்ததாகி அயலாராற் பேதிக்கப்பெருததாய் நன்கு வீரதன்மையை நண்ணியதாகும்; பூர்ணமான மனஸ்திதியையே வர்ணித்துக்கொண்டுபசங்கரித்தல்:—பிறழ் என்பதாதி. சகல விகற்பங்களும் அத்தியந்தம் தீர்ந்ததாகவும், சகல வாஸைகளும் ஓய்ந்ததாகவும், கார்ப்பண்யந்தீர்ந்து திடதரமாகத் திரபாவமுற்றதாகவும், மூவுலகத்தின்கண்ணும் பிரசித்தங்களாய பூர்ணசந்திரன் பாற்கடல் சரற்கால ஆகாசம் முதலிய பிரசன்னரூபங்களையுங் கடந்த அதிப்பிரசன்னரூபமாகவும், மிகத்தெளிவாகவும் என்றபடி, சாபேக்ஷ சமாசஞ்சாந்தமாதலின், உள்ளேமிக மகிழ்வுற்றதாகவும், அதனுனே யுத்தமோத்தமதமமாகவும், எனது மனது இலங்கிக்கொண்டிருக்கின்றது.

(ச.) திரநிலைமை = பிரமநிஷ்டையை, உள்ளம்பெற்று, அயர்வற்று, தைனியமின்றி, உறவலிதாய், அதனலே மேன்மையான ஞானமாய், அறவே தெளிந்து = மிகப்பிரசன்னரூபமாய், ஆநந்தத்தை யுற்றுட்குளிர்ந்து நன்றாயிருக்கின்றதென்பது அந்நுவயம். திரநிலைமையின் விசேஷணமாக, திக்கஜங்களைச் சிதைவுறுமாறியற்றிப் போக்கியது. மநோரூப மத்தகயத்தை நீக்கியது, என்பனவாம் என்பது பாடாந்தரம். (69-70)

தேவபூஜைகதை முற்றிற்று.

---

## வில்வபலக் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) 'ஸ்ரீ இராகவரால், தமது தத்துவபோத விசிராந்திவருணிக்கப்பெற்றபோதினும், அதன்பரிபாகத்தின் முன்னர், நழுவுதல் உண்டாகாதொழிக, எனச் சிலையில் நாட்டிய கம்பத்தாட்டியப்பொருட்டுச் சந்திஸ்தாணுபந்த பரம்பரையையேபோல ஜீவன்முக்த லக்ஷணபூத முன்மொழிந்த சாதனபரம்பரையையே பிரதிஷ்டைசெய்ய விச்சித்தவராய ஸ்ரீ வசிஷ்டபகவான் முற்கூறிய கிடைத்தபடியாய விவகார உபயோகாதிலக்ஷண சிவார்ச்சனத்திலும், சர்வாரம்பங்களுந் தோடத்தானே தூமத்தாலழல்போன் மறைபெறுவனவாம், என்னும் நியாயத்தானே, பிரமாதத்தாலிம்சாபர அநிஷ்டாதியடைவின் அகற்றொணமையிருத்தலின், போகத்திற்கு அநர்த்தஹேதுத்தன்மை யுண்மையினும், உண்டாகவே செய்யும் புனர்ஜனனுதியநர்த்தம், என்று வருமாசங்கையை மாற்றிக்கொண்டு இரா

காதிரகிதமாய் அதனுனே அசங்கமாய் அதாவது கர்த்தருத்துவ அபிமானலக்ஷணக்கிரியா சங்கமசூனியமாய், இந்திரியங்களோடு வர்த்தமான அர்த்தவர்த்தியாய மனத்திஞல் எதனைச் செய்கின்ருயோ அது செய்ததாகாதாமென, அவ்வாருயின், விடயங்கட்குச் சந்துஷ்டி ஜந கத்தன்மை நியமத்தானே எங்ஙனம் அவற்றில் இராகம் விடுதல்கூடும் என்ருசங்கிப்பக் கூறல்:—நின், ஈது என்பன.

(ச-அ-கை.) முன்பு நூதனமான தேவார்ச்சனை விதானத்தாலுறுஞ் சித்தத்தினது அந் தர்முகபாவனையால் நிர்வாணமாமெனப்பட்டது, இப்போது அத்துவிதீயமான பிரமமே உட்டோன்றும் பொருளனைத்துமாய் வியாபித்திருக்கின்றதென்பதை வில்வபலதிட்டாந்தத் தாற் றெரிவிப்பவராய் மற்ருெரு கதையை ஆரம்பிக்கின்ருர், அதிற் சித்தசமாதி நிமித்தம் பிரகாரபேதத்தாற் போதித்தற்கு உபக்கிரமிக்கின்ருர்:—

நின்னுரை யமுத்தாரை நிறைந்துமுள் ளமைவுதோன்ருப்
பின்னரும் பூரணத்தைப் பேசென விராமன்கேட்ப
மன்னுமா முனி வன்சொல்வான் வருபொருண் முதற்கணத்தே
யின்னல மாகுமற்றக் கணத்தவ்வா றினிமையாகா.

ஈதனு பவியாதாரா ரிச்சிக்க வினிதாம் வத்துக்
காதலி யாதபோது கைப்புறு மாதலாலே
யாதார மூலமாகு மினிமைக்கிவ் வினிமைதானும்
போதுமென் றிடப்போமிச்சை போக்கிஞ லனைத்தும்போமே.

(ப - ரை.) நின்னுரை யமுததாரை = தேவரீருடைய திருவாக்கியங்களாகிய அமிர்த விருஷ்டியானது, நிறைந்துமுள்ளமைவுதோன்ரு=பூரித்தும் உள்ளே திருப்தியான துண் டாகவில்லையாகலின், பின்னரும் பூரணத்தைப் பேசென விராமன் கேட்ப = இன்னும் பரி பூரண சச்சிதானந்தத்தைப்பற்றி உபதேசித்தருளுவீராகவென்று ஸ்ரீ இராகவர் வினவ, மன் னுமாமுனிவன் சொல்வான் = சகல கல்யாணகுணங்களும் பொருந்திய ஸ்ரீ வசிஷ்டமகா முனிவர் கூறுவார், வருபொருள் முதற்கணத்தே = கிடைத்த வத்துவானது பிரதமக் கணத்தில், இன்னலமாகும் = இனியநலமுடையதாகும், மற்றக்கணத்தவ்வாறினிமை யாகா = பிறிதொருகணத்தில் அந்தப்பிரகாரம் இன்பம் பயப்பதாகத் தோன்றமாட்டாது.

ஈதனுபவியாதாரார் = இதனை யநுபவிக்காதவர்கள் யாவர்கள், இச்சிக்கவினிதாம் வத்து = வாஞ்சித்தபோது இன்பமாகத் தோற்றும் பொருள், காதலியாதபோது = இச்சி யாதகாலத்தே, கைப்புறுமாதலாலே = கசப்பாகத் தோற்றும் ஆகையிஞலே, ஆதாரமூல மாகும் இனிமைக்கு = ஆசையே காரணமாகும் துஷ்டிக்கு, இவ்வினிமைதானும் = இந் தத்துஷ்டியும், போதுமென்றிடப் போம் = அலம்புந்திவந்த அளவிலகலும், இச்சைபோக்கி ஞல் அனைத்தும்போமே = ஆசையை யகற்றிஞல் யாவுமே யகலும் என்பது திண்ணம்.

(ஸ்ரீ - வீர.) அடைவுற்ற நொடியில் ஆரம்பத்தில், வத்ததுட்டியின்பொருட்டு எங்ஙன மாமோ அங்ஙனம், அடைவுற்ற ஏகக்ஷணத்தின் பின்னர் இல்லையாமென்பதை யநுபவிக்கா தவர் யாவர்தாம்? அடைவுற்றகணத்திலும் அயலாய முற்பிற்போதுகளில், அவற்றிற்றுட்டி யேதுத்தன்மைபிறழ்தலின் இந்நியமமில்லையாமென்பது கருத்து. இதனுனே நெடும்போ தரர்த்தமாய்க் கணிகசுகமாயிருப்பதில், பற்றுதலுங்கூடப் பொருத்தமுடைய தாகாதா மெனல்:—இச்சிக்கவென்பதாதி, வாஞ்சையென்னும் லாபகாலத்தில் எங்ஙனம் வஸ்து

துஷ்டியின்பொருட்டாமோ அங்ஙனம், அயற்போதிலாகாதாம், ஆகலின், க்ஷணசுகத்திற் பற்றுதல் பாலகனேபுரிவன், பிறன் புரியான்; எக்கால் வஸ்துலாபமாக்கிய கணிகம் ஆய வாஞ்சாநிரோதமும் சுகவேதுவாம் அக்கால் ஆத்தியந்திகவாஞ்சையினீக்கம் நிரதிசயாநந்த ஹேதுவெனப் பொருளால் வந்ததாம், வரவே, வாஞ்சையே யநர்த்தமாம் என்னுங் கருத்தால் உரைத்தல்:—ஆதாரமென்பதாதி. வாஞ்சை வந்தபோது துஷ்டியின்பொருட்டு யாதாம் ஆண்டு வாஞ்சையே காரணமாம், துஷ்டியோ அதுஷ்டிபரியந்தமாம் = துஷ்டி = ஆநந்தம், அதுஷ்டி = துஷ்டிவிரோதிவாஞ்சையே, பரியந்தம் = விச்சேதம், அதனை யுடையதாம்; ஆகலின் வாஞ்சையைப் பரித்தியாகிப்பாய், அற்றேல் பூர்ணாநந்தபதத்தை யடைந்துவேன்யான் அத்தகைய என்பொருட்டு மீண்டும் தங்களது விடயவாஞ்சாத்தியாக உபதேசம் யாதின்பொருட்டோவெனின், தற்பதத்தை யடைந்தவனும் நீ விளங்குதியே லாயின் மீண்டுங் காலாந்தரத்திலும் அகம்பாவச் சேற்றின் மூழ்குதல் உண்டாகவேண்டாம் எனத் தற்பதத்திதியின் தாட்டியப்பொருட்டுப் புநருபதேசம் என்பதாம்.

(ச.) வாஞ்சித்துவரும் பொருள் முதற்கணத்தே யின்பத்தைத் தருவதுபோல், மற்றைக்கணத்தின் பதத்தைத் தாராதென்றதாயிற்று. ஈதநுபவியாதார்களிலே = ஈதியாவராலும் அநுபவிக்கப்பட்டதேயாம்; வத்து = வாஞ்சிக்கப்பட்டபொருள், (மனோரதப் பிராப்தி பரம்பரையாய் வந்தகாலத்தில்) இனிதாகும், அதுபோல், காதலியாதபோது, கைப்புறும், வாஞ்சிக்கின்றகாலத்தில் இன்பம் வருவதுபோல் வாஞ்சிக்கப்பட்ட பொருள்வந்த காலத்தும் அதனுத்தரகாலத்தும் வாராதென்பது பொருள்; ஆதலாலே, கணசுகத்தில் வாலனே இச்சையுறுவனன்றி விசாரித்தவனுறான், வாஞ்சித்து வருமச்சுகங்கற்பிதமேயாம், வாஸ்தவமன்றென்பதாம். இஃமைக்கு = வாஞ்சிக்கும்போதுறுஞ் சுகத்துக்கு, ஆதாரமூலமாகும் = வாஞ்சையே காரணமாம், இனிமை வாஞ்சையின் அந்நுவய வியதிரேகத்தை யநுசரித்தலினென்க, கற்பிதமான, அவ்வினிமைதானும் போதுமென்றிடப்போம் அப்பிரியத்தில் முடிவுறும், ஆதலின் முடிவில் அநர்த்தரூபமாகும் சுகவேதுவான அவ்வாஞ்சையை விடுவாயென்பதாம். (1-2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது இவ்வாறிருவென் றிதத்தை யுபதேசித்தல்:—பன்மையென்பது.

பன்மையா மாசைதீர்க பாவனை யறுகசித்த
மின்மையா யொழிகசங்க மிலாமையா யுனக்குச் சொல்வாம்
புன்மைவா தனைபற்றுவுட் கரணத்தாற் புரியுஞ்செய்கை
வன்மையாற் கலக்கங்கோடி வருகினும் வருத்தஞ்செய்யா.

(ப - ரை.) பன்மையா மாசைதீர்க = பலவகையான ஆசைகளெல்லாம்விட்டோட்டுக, பாவனையறுக = எண்ணங்களெல்லாம் ஏகுக, சித்தமின்மையாயொழிக = மனமானது கனமிலாமலே 'கரைக, சங்கமிலாமையா யுனக்கு = அசங்கமாக விவகரிக்கு முனக்கு, சொல்வாம் = உபதேசிப்பாம், புன்மைவாதனைபற்று வுட்கரணத்தால் புரியுஞ் செய்கை = பொல்லாத வாசனையேய்வுறுத அந்தக்கரணத்தினல் செய்யுஞ் செய்கை, வன்மையாற் கலக்கங் கோடி வருகினும் வருத்தஞ் செய்யா = பலாத்காரமாகக் கோடி சாஞ்சல்யங்கள் ஏற்படினும் விக்ஷேப்படுத்தாவாம்.

(ஸ்ரீ - வீர.) சஞ்சலமில்லாமல் ஏகாந்தமாய் நிவிர்த்தியாய் வாழப்பெற்ற நினக்கு, ஆசையானது நிராசைத்தகைமையை யடைவுறுக, பாவனமானது அபாவத்தை யடைவுறுக,

மனமானது அமனஸ்தன்மையை யடைவுறுக, அநுபோதனத்தாதல் ஆசீர்வாதத்தாதல் லோட்டாமென மூலத்துணர்க. வாசனாரகிதமாய உள்ளிந்திரியங்களுடன் கிரியைகளைச் செய்வாயாக அதனாலே, கலக்கங்கள் கோடியானேயுங் கலங்காக்ககனமேபோல் விக்கிரியை யடையமாட்டாய்.

(ச.) ஆதலால், சங்கமிலாமையால் = விடயங்களில் ஆதாமின்மையாய் விவகரிப்பதனால், உனக்கு ஆசை = மேல்வரும் இட்டவஸ்து வாஞ்சை, தீ: க முயற்சியற, பாவனை = விடயபாவனரூபமான வாதனை, அறுக, சித்தம் நிர்வாசனையுடையதாய், இன்மையாயொழிக = நிர்விகற்பத்தையடைச, அதனான், வாதனைபற்றாக் காரணத்தால், வாதனாரகிதமான நேத்திராதி யிந்திரியங்களால், புரியுஞ் செய்கை உடையனாயிருப்பினும், உள் = அந்தக்கரணத்தில், விகாரத்தை யடையாய், காற்று வெயின் மழை முதலான கலக்கவேதுக்கள் அநேகங்களாலும் ஆகாசம் விகாரத்தை யடையாததுபோலென்றதாம். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) துக்காதியிற் பிராதிகூல்யவிற்பனம் மனத்தா லாக்கப்பெற்றதாம், ஆகவே, அஃதேதான் ஸ்ரீ புசுண்டமுனிவர் மொழிந்த யுக்தியானே நிரோதிக்கத்தக்கதாம் என்னும் கருத்தாலுரைத்தல்:—விழிப்பென்பது.

விழிப்பினோ டிமைப்பிற்சித்தஞ் சகத்தினை விளைத்தொடுக்கு
மொழித்துவா தனைபிராண னொடுக்கத்தா லுளத்தைமாய்ப்பா
யிழித்தபே தைமையின்றோற்ற மொடுக்கமா மிரண்டினாலுஞ்
சுழித்திடு கருமமெல்லாந் தோன்றிடு மொடுங்குமன்றே.

(ப - ரை.) விழிப்பினோடிமைப்பிற் சித்தஞ் சகத்தினை விளைத்தொடுக்கும் = மனமானது விரிதலானும் குவிதலானும் உலகத்திரளை உண்டாக்கி யழிக்கும், ஒழித்துவாதனைப் பிராணனொடுக்கத்தால் உளத்தை மாய்ப்பாய் = வாசனையைவிடுத்துப் பிராணனை நிறுத்திடுமுபாயங்களால் மனத்தை விலயஞ் செய்வாய், இழித்தபேதைமையின் றோற்றமொடுக்கமாமிரண்டினாலும் = இகழத்தக்கதாய அறியாமையின் உதய அத்தமனமென்னும் உபயத்தானும்; சுழித்திடுகருமமெல்லாந் தோன்றிடு மொடுங்குமன்றே = பிரமிக்கச்செய்யும் வினைகள் யாவும் எழும் விழும். அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) சித்த உன்மேஷநிமேஷங்களால், சமுசாரப்பிரளய உதயங்களாம், வாசனைப் பிராணத்தடைகளானே மனத்தை விலயஞ்செய்துவாழ்வாய்; பிராண உன்மேஷ நிமேஷங்களினாலே சம்சிருதியின் பிரளய உதயங்களாம், அதனை யப்பியாசப் பிரயோகங்களால் உன்மேஷரகிதமாக வாக்குதி; அஞ்ஞானமேதான் பிரவிருத்திவாயிலாய் அநர்த்தகாரணமென அதுவே ஞானதாட்டியத்தானே நிராசஞ்செய்யத் தக்கது என்றிடல்:—பேதைமையென்பதாதி, மூர்க்கபாவத்தெழுச்சி விழுச்சிகளால், கருமங்களின் பிரளய உதயங்களாம்.

(ச.) சித்தத்தினது ஆவிர்ப்பாவ திரோபாவங்களாற் சம்சாரத்தினது உதயப்பிரளயங்களா மாதலினாலே உளத்தை வாசனை யொழித்தாவது, பிராணனொடுக்கத்தாலாவது முற்கூறியதனால் மாய்ப்பாய் = பிராணசலனமுஞ் சித்தசலனவேதுவாதலின் சம்சாரவேதுவாம், ஆதலால் அந்தப் பிராணனையும் பவனநிரோத அப்பியாசமான மேலான யுத்தியோகத்தினாலாவது மனோநிரோதத்தினாலாவது சலனமறச்செய்வாய், எவனாற் பவனம் பந்திக்கப்படும் அவனாலே மனது பந்திக்கப்படும், எவனாலே மனது பந்திக்கப்படும் அவனாற் பவனமும் பந்திக்கப்படுமென்னும் பிரமாணத்தான் மனப்பிராணன்கள் ஒன்றற்கொன்று நிரோத

வேதுவாதவிஷேன்க, என்னும் அர்த்தத்தை யடக்கிக் கூறினுரென் றுணர்க. பேதமை = அஞ்ஞானம், அதுவுங் கருமத்துவாரமாய்ச் சமுசாரவேதுவாம், அஃதெங்ஙனமெனில், அஞ்ஞானத்தினுல் விபரீதஞானமும் அதனுல் இராகத்துவேடங்களும் அவைகளாற் புண்ணிய பாவரூப்பிரவிர்த்தியும் அதனுல் ஜன்மாதிதுக்கமயமான சம்சாரமுமாம் ஆதலால் அப்பேதமையைக் குருவுபதேசத்தினுலும், சாஸ்திரார்த்தாநுசந்தானத்தினுலும், சற்சங்கமத்தினுலும் சம்யமத்தாலும், வலிதிற் புருடப்பிரயத்தனத்தான் மாய்ப்பாயென்று பிற்கவியோடந்நுவயஞ் செய்க. (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இருவகை யுபாயங்களாலும் பரமபதமாமெனல்:—ஆதலால் என்பது.

ஆதலாற் குரவனன்னூ லகல்கிலாச் செறிவால்வன்பிற்
பேதமை யுளத்தைமாய்ப்பாய் பிராணனைத் தடைசெய்தாலும்
வேதன வசைவுதீர விடுகிலுஞ் சித்தம்போகுந்
தீதறு மதுவேமேலாம் பதமெனச் செப்புமன்றே.

(ப - ரை.) ஆதலால் = ஆகையினுல், குரவன் = ஞானசாரியர், நன்னூல் = நல்ல அத்தியாத்மிகசாத்திரம், அகல்கிலாச் செறிவால் = நீங்காமற் சேவிக்கப்பெறுதலால், வன்பில் = வலிதில், பேதமையுளத்தை மாய்ப்பாய் = அறியாமையோடுகூடிய மனதைக் கெடுப்பாய், பிராணனைத் தடைசெய்தாலும் = உயிரைப்பந்தித்தாலும், வேதன வசைவுதீர விடுகிலும் சித்தம்போகும்=எண்ணங்களின் சஞ்சலம் அத்தியந்தம்விட்டாலும் மனமானது ஒழியும்; தீதறுமதுவேமேலாம் பதமெனச்செப்பும் = குற்றமற்றவதுதானே உயர்ந்தபதமென்று சொல்லும்; அன்று ஏ அசை.

(ஸ்ரீ - வீர.) அந்த அஞ்ஞானத்தை வலிதிற் குரு சாஸ்திரார்த்த தாரணாதியான சமாதியாதிகளால் விலீனஞ்செய்தி. உணர்வின தசைவுண்டாகாமை மாத்திரையானே சித்தமானது அசித்தத்தன்மையை யடையாநிற்கும், பிராணன்களின் நிரோதத்தானுதல் அடைவுறும், அதேதான் பரமபதம்.

(ச.) சித்தம், வேதனவசைவு = பகிர்முகமாக விளங்குஞ் சித்தவிருத்தியை, தீரவிடுகிலும், பிராணனைத் தடைசெய்தாலும், சித்தம் போகும் = நிர்விகற்பத்தையடையும், அதுவே = அந்நிர்விகற்பமே, மேலதாம்பதம் = முத்தியாம். (5)

(ஸ்ரீ-வீர - அ-கை.) போதத்தானுதல் என மத்தியம உபாயம் கூறப்பெற்றதை விரித்துரைத்தல்:—தெரியென்பது.

தெரிபொரு டரிசனஞ்சேர் கூட்டத்திற் சேர்ந்தவின்பம்
விரிபர மார்த்தமாகு மதற்குமே லினிவேறில்லைப்
புரிதரு பிரமநோக்கா மதனினுற் பொன்றுஞ்சித்தம்
வரிசையாஞ் சித்தநாசம் வஞ்சமி லின்பந்தானே.

(ப - ரை.) தெரிபொருள் தரிசனம்சேர் கூட்டத்திற் சேர்ந்த இன்பம் = திருசியதரிசனசம்பந்தமாகவே யுண்டாகும் சுகம், விரிபரமார்த்தமாகும் = மிகவும் யதார்த்தமாகும், அதற்குமேலினி வேறில்லை = அதற்குப் பரமினியயலொன்றில்லை, புரிதருபிரமநோக்காம் அதனினுல் = செய்யாநின்ற பிரமதிருஷ்டியாம் அதனுல், பொன்றுஞ்சித்தம் = மனமழி

யும், வரிசையாம் சித்தநாசம் வஞ்சமிலின்பந்தானே=கிரமமாகவுண்டாம் மனோநாசமானது இயற்கையாய ஆனந்தமாம்.

(ஸ்ரீ - வீர.) விஷயேந்திரிய சம்பந்தமுளதாகவே எச்சுகம் பிரசித்தமாயுளதாமோ, அது பரமார்த்தமாக பிரஹ்மசுகமேயாம், இந்த வாநந்தத்தினதேமாத்திரை, சந்ததங்கொண் டயலுயிர்கள் வாழ்ந்திடுமே, என்னுஞ் சுருதியுண்மையினால், ஆகலின் அதனது அந்தம் = பரமஅவதி மானுடாநந்தந்தொடங்கி மேலும் மேலும் = உத்தரோத்தரம், நூறும்டங்கு மேன்மையதாக, சுருதியானே காட்டப்பெற்றது, எதனின் வாக்குகள் இழிவனவாமோ, அதனைத்தொடா மனமதனுடன்றானே, ஆநந்தம் பிரஹ்மத்தினறிந்தவன் பயத்தைத் தீனத் தெப்போதும் செறியவேமாட்டான். தன்மாத்திர பூர்ணதையாய் சற்சம்வித்திருபமாய பிரஹ்மதிருஷ்டியானே மனக்ஷயமுண்டாமென்பதாம். யாண்டுதான் சித்தம் மூளைத்திலே யாகும், அவ்வச்சுகந்தான் அகிருத்திரிமமே பிரஹ்மசுகமாம், அதுவும் சுவர்க்காதிபோகபூமி யின்கண்ணே யுண்டாகாதாம், ஆண்டுச் சித்தத்திற்கு காமம் அசூயையாதிகலுஷத்தன்மை யுண்மையின் என்பதாம், மருப்பூமியின்மட்டுத் தண்ணீர்த்தடாகம் இலாததேபோலும்.

(ச.) தெரிபொருள் = அபிமதவிடயங்களின், தெரிசனம் = இந்திரியங்களாற் சேர் கூட்டத்தில் = சம்பந்தமாயின், பரமார்த்தமாகும் = பரமான்மாவான சொச்சொரூபத்தி லுண்டாகும், இன்பம் = சுகமுதயமாம், அதற்குமேல் = அந்தப் பாரமார்த்திகசுகசொரூ பத்திற்கே, வேறில்சித்து நிரந்தாராநுசந்தானத்தால் பிரமநோக்காம் = சொரூபசுகமான சித்தே பிரமதிருஷ்டியென்பது பொருள். இவ்வான்மாப் பிரமமென்னுஞ் சுருதியினு னென்க. அதனினால் = அந்தப் பிரஹ்மதிருஷ்டியால், சித்தம்பொன்றும் = மனதுக்கு இலயம் வரும், சித்தலயம்வரின் அதுவே சொரூபசுகமென்னும் கைவல்லிய சுகமாமெனல்:- மேலென்பது. சொரூபசத்தார்த்தம், எந்தச்சுகத்தில் சித்தநாசம் சித்தவிருத்தியென்னுஞ் சங்கற்பவிகற்பாதிகள் உதியாதனவாம் அதுவே வஞ்சமிலின்பம் = நிரதிசயாநந்தமென் னும் கைவல்லிய சுகமென்பதாம்; நிஜாநந்தமாம். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சித்தத்தின் பெருமையையே செப்புதல்:—தேய்ந்திட லென்பது.

தேய்ந்திடல் வளர்தலில்லைத் தெரிவுறு மறைந்துபோகா
வாய்ந்துணர் ஞானிசித்தஞ் சித்தமன் றதன்பேருண்மை
யேய்ந்தநா நாத்துவத்தோ டன்னிய மெய்தல்சித்தஞ்
தோய்ந்தபோ தத்தாற்செம்பு சொன்னமா வதுவேபோலாம்.

(ப - ரை.) தேய்ந்திடல் வளர்தல் இல்லை=குறைதலும் கூடுதலும் கிடையாது, தெரி வுறு மறைந்துபோகா = உதயாத்தமனங்களையுமடையாது, ஆய்ந்துணர் ஞானிசித்தம் = ஆராய்ந்து பிரஹ்மசொரூபத்தை அறிந்த ஞானியினது மனமானது, சித்தமன்றதன் பேருண்மை = சித்தமல்லவாம் அதன்பெயர் சத்துவமாம், ஏய்ந்த நாநாத்துவத்தோ டன் னியமெய்தல் சித்தம் = பொருந்திய நாநுத்தன்மையுடன் அன்னியத்தகைமையைச் சித் தம் பொருந்தியிடல், தோய்ந்தபோதத்தால் = பொருந்திய போதத்தாலாம், செம்பு சொன்னமாவதுவே போலாம்=தாமிரமானது இரசபரிபக்குவத்தாற் றங்கமாவதுபோலவே யாம்.

(ஸ்ரீ - வீர.) சித்த உபசமஜன்னியசுகம் அதிவிஸ்தரமானதாம் வாக்கினால் இன்னபடி யென்று இயம்பமுடியாததாம், சுவாநுபவமாத்திரத்தானே யறியப்பெறுவதாதலின்; க்ஷய

அதிசயம் விடுபட்டதாம், உதிதமாவதுமில்லை நாசமாவதுமில்லை, அற்றேல் ஞானிகட்கும் விவகாரங் காணப்பெறுதலின் சித்தம் உள்ளதேயாம், ஆகலின் யாங்ஙனம் ஞானத்தானே நஷ்டம், சத்துவநஷ்டத்துவங்கள் இரண்டிற்கும் ஒரேபோதில் ஒரிடத்தில், மூாணுறுத லின் என்றுசங்கிப்பக்கூறல்:—ஆய்ந்து என்பதாதி. இருந்திடினுந்தான் என்னிச் சித்தம், போதத்தானே விலயமாம், சத்தெனினும் அசத்துப்போன்றிலங்கும், ஹேமமாக்கிய தாமிர மென்னவே, ஞானியினது சித்தம் சித்தப்பெயரியதாகாதாம் ஞானியினது சித்தம் சத்துவ மெனப்பெறும், சித்தம் போதத்தானே தாமிரசுவர்ணம்போலும், பெயரானும் பொரு ளானும் அன்னியத்தன்மையைப் பஜிப்பதாம் என்றன்னியத்வபாக்காம்.

(ச.) அதுவுந் தேய்ந்திடல் வளர்தல் இல்லை = நித்தியமும் நிரதிசயமும் ஆயிருத்த லின், தெரிவுறு மறைந்துபோகா = உதியாது ஒடுங்காது, சங்கை, ஞானிக்குச் சித்தலய மின்மையின் எப்படிச் சீவன் முத்தியென்பதற்குத்தரம்: ஞானியினது சித்தம் சித்த மன்று = சித்தமென்றறியப்படாது, அதன்பேர் = அந்த ஞானியின் சித்தரூபம், உண்மை = சத்துவமெனப்படும், பிரமமேயென்பது பொருள். யாதுகாரணமெனில், நாநாத்துவத்தோடு = நானாரூபங்களான காமசங்கற்பாதிகளென்னும் அருத்தங்களோடு, அன்னியமெய்தல் = பிரமத்தினின்றும் பேதத்தை யெய்தலே, சித்தம் ஞானியின் சித்த மாவது, தோய்ந்தபோதத்தால் = பரிபூரணப் பிரமபோதத்தினுல் அபின்னமாய்ப் பிர மத்தையே யடையும் எங்ஙனமெனில், செம்புசித்தரசத்தினுற் சொர்ணபாவத்தையடையும், அதுபோலென்பதாம் அஞ்ஞனதுசித்தம் அந்நியமெய்தலாம் ஞானியினதுசித்தம் சத்து வமேயாமென்பதாம். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் என்னே ஜீவன் முக்த சித்தத்திற்கு விவகாரக்ஷமை யவஸ்தைவாஸ்தவ்யமே யாமோவெனின் அன்றென்றறைதல்:—சித்தென்பது.

சித்தெனுந் தத்துவந்தான் சித்தமாய்ச் சகத்திலோர்காற்
றெருத்திய விநோதஞ்செய்து துரியமா மவத்தைமேவி
நித்தமாந் துரியாதீத நிலைமையா மாதலாலே
பித்துறு முலகாய்ப் பன்மையாய்நிற்கும் பிரமமொன்றே.

(ப - ரை.) சித்தெனும் தத்துவந்தான் = அறிவாகிய தத்துவமானது, சித்தமாய் = மனதாய், சகத்திலோர்காற் றெருத்திய விநோதஞ்செய்து = உலகத்திலொருபோது சம்பந் தித்த விளையாட்டை நடத்தி, துரியமாமவத்தை மேவி = துரியாவஸ்தையை யடைந்து, நித்தமாந்துரியாதீத நிலைமையாம் = சாசுவதமாகிய துரியாதீத ஸ்திதியையடையும், ஆத லாலே = ஆகையினுலே, பித்துறுமுலகாய் = பிராந்தியடைந்த ஜகத்தாய், பன்மையாய் = நானுவாய், நிற்கும் பிரமம் ஒன்றே = பிரஹ்மம் ஒன்றுதானே நிலவும்.

(ஸ்ரீ - வீர.) சித்தசத்துவமாய் நன்குவந்தது சிறிதுபோது ஜகத்தின்றிதியில், துரியா வஸ்தையின்கண்ணே விவகரித்திருந்து, அதன்பின் துரியாதீதத்தையடையும், விஹாரசமாதி சாக்ஷாத்காரபரியந்தமான அந்த அவத்தை வாஸ்தவமாகாதாம் மற்றே, பிராரப்தத்தானே தடைப்படுத்தப்பெற்ற அவித்யாலேசம்படுத்திய பாதிதாநுவிருத்தியாம், விதேககைவல்ய ஆவிர்ப்பூத துரியாதீத அவஸ்தையே அதற்கு வாஸ்தவமாம் என்பது அபிப்பிராயமாம்.

(ச.) சித்தம், செகத்திதியி லோர்கால் விநோதஞ்செய்து, துரியமாமவத்தை = சிர வணமனனுதிக் கிரமத்தினுற் சமாதியவஸ்தையையேமேவி, சித்தெனுந் தத்துவந்தானும் =

சிற்சொரூபமாய், பின்பு துரியாதீதநிலைமையாம், சாக்கிராதித்திரயமுறில் அவைக்குறித்துச் சமாதியவஸ்தைக்குத் துரியத்துவமாம் எப்போதுஞ் சமாதியிற் சாக்கிராதியின்மையின் துரியத்துவமு மின்றென்பது பொருள். ஆதலாலே, பிரமமொன்றே = சர்வான்மகமென்னும் பிரமமொன்றே, பித்துறுமூலகாய் = மிகுந்த புவனப்பிராந்திவிலாச பரம்பரைகளாலும் வியோமாதிப் பிரகாரமாய் அதனால் பன்மையாய் நிற்கும் = ஒருமித்திருக்கும். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்துரியாதீதமாய பிரஹ்மமானது எத்துணை யறியப்பெறவில்லையோ அத்துணை சித்தஜகதாதி மித்தியாவேடத்தானே நிதமாகும், சர்வான்மகமாகும், சித்தாதிகமென்பதாகச் சிறிது இதரமான வஸ்து வயல்இல்லையாமென ஞானமாத்திரத்தானே தன்மாத்திரசுபாவ பரிசேடம் சித்தாதிக்குப் பொருத்தமேயாமென்னுங் கருத்தானே யுரைத்தல்:—முற்றுமென்பது.

முற்றுமாம் பிரமமன்றி மொய்ம்மன முதலவேறு
யுற்றவை சிறிதுமில்லை யுளத்திலோர் பணதிபோல
நிற்றலுந் தோன்றுமத்தை யறிகுக நிகழ்த்துகின்றேன்
கற்றவர் வியக்கநன்றாய்ப் புதுமையாங் கதைநீகேட்பாய்.

(ப - ரை.) முற்றுமாம் பிரமமன்றி = சகலமுமாம் பிரஹ்மமேயல்லாமல், மொய்ம்மனமுதலவேறு யுற்றவை சிறிதுமில்லை = விடயங்களைப்பொருந்தும் சித்தம் முதலவாக வேறாய்ப் பொருந்தியவை யற்பமுங் கிடையாது, உளத்திலோர் பணதிபோல = மனத்தின் மாட்டொரு தோற்றம்போல, நிற்றலுந் தோன்றும் = எப்போதும் பிரதீதியாம், அத்தை யறிகுக = அதனைத் தெரிந்துகொள்க, நிகழ்த்துகின்றேன் = கூறுகின்றேன், கற்றவர் வியக்க = படித்தவர் விஸ்மயத்தை யடையும்படியான, நன்றாய்ப் புதுமையாம் = அபூர்வ ரம்மியமான, கதை நீகேட்பாய் = கதையொன்றியம்ப நீ சிரவணிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மமே மிகுந்த புவனப்பிரமவிப்பிரமக்கூட்டங்களானே இவ்வாறுநிதமாம், சமமாம் ஒன்றே யநேகம்வகையாக நிலவும், சர்வான்மகமாம், அயலொன்றிலதாம் அற்பமும் அங்க! எங்ஙனம் இருதயத்தின்கண்ணே மநோரதத்தினாலே பரிகற்பித மாடமாளிகை கூடகோபுர உத்யானவனவாபிகூபதடாகாதி சந்நிவேசமானது ஆண்டுச்சமாவேசமில்லாததனாலேயே இல்லாததாமோ அங்ஙனம், பரமசூக்குமமாய், சித்திரமில்லாமல், ஒரேகரசகனமாயிலங்கும் பிரஹ்மத்தின் கண்ணும் ஜகத்தின் சமாவேசமில்லாததனாலேயே இல்லாததேயாம். ஈண்டிதனை நன்குணர்ந்துகொள்ளும் பொருட்டு, விஸ்மய உல்லாசகாரிணியும், அபூர்வமும் இரம்மியமும், ஆப வில்வாக்கியானமென்னும் கதையைச் சுருக்கமாகக் கூறஹே இராகவனே கேட்குதி !

(ச.) முற்றுமாம் பிரமமன்றி = முற்கூறிய சர்வான்மகமான பிரமமே யிருக்கின்றதன்றி, மொய்ம்மனமுதல சிறிதுமில்லை, வேறுயுற்றவை வியோமாதிகளின் றோற்றமுஞ் சிறிதுமில்லை, சங்கை, தோற்றுகின்றவைக்கு மித்தியாத்துவமெப்படிக் காணப்படுமென்பதற்கு உத்தரம்: உள்ளத்தில் = சொப்பனாவஸ்தையிற் சித்தத்திற் றோற்றுகின்ற, பணதி = பொருளும், அதன் சந்நிவேசமில்லை யதுபோலவென்பது பொருள். (9)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கதையின் றொடக்கத்திற் கூறவிழைந்த வத்துவை ஒருருவகஞ் செய்து வருணித்தல்:—கோடி, கற்பத்திலென்பன.

(ச-அ-கை.) சர்வார்த்தமும் உட்கொண்ட சிற்கனமாகிய பிரஹ்மமே அபூர்வமான வில்வபலமாக நிரூபிக்கப்படுகின்றது.

கோடிமா கோடிகோடி யிலக்கங்கள் கொண்டகாத
நீடிய வகலமொவ்வா தகன்றது நெடுமாகற்பம்
வீடிய நாளுமுற்று ததுமிகப் பழையதேனும்
பீடியன் மதிக்கொழுந்திற் பெரிதுமெல் லியதுமாதோ.
கற்பத்திற் பெருங்காற்றாலுங் கலங்குறா ததுபேரண்டத்
துற்பத்தி மூலமாவ தொருவில்வப் பெருங்காயுண்டு
சொற்பத்து மதன்பாற்றோன்றித் தொலைவுறு பிரமாண்டங்க
ளற்பத்தி லெண்ணவொண்ணா வதனியல் பின்னங்கேளாய்.

(ப - ரை.) கோடி மாகோடி கோடியிலக்கங்கள் கொண்ட காதம் = கோடியே மகா கோடி கோடானுகோடி யிலக்கங் கோடி யின்னுமின்னும் கோடிகோடி எண்ணிக்கை கொண்ட யோஜனைதூரம், நீடிய வகலம் ஒவ்வாதகன்றது = நீட்சியும் அகலமும் உவமையில்லாது விரிந்தது, நெடுமாகற்பம்=நீண்ட மாகஷிமைதங்கிய கற்பம், வீடியநாளும் முற்றாதது = சென்றகாலமும் ஜீரணமாகாதது, மிகப்பழையதேனும் = வெகு புராதனமேனும், பீடியன்மதிக்கொழுந்திற் பெரிது மெல்லியது = பெருமைபொருந்திய சந்திரபிறையினும் மிகவு மெல்லியது, மாது ஓ அசை நிலைகள்.

கற்பத்திற் பெருங்காற்றாலும் கலக்குறாதது = கற்பமுடிவிலுண்டாம் பெரிய சண்டமாருதத்தாலும் அசைக்கவொண்ணாதது, பேரண்டத்துற்பத்தி மூலமாவது = பெரிய அண்டகோடிகளின் உதயத்திற்குக் காரணமாவது, ஒரு வில்வப்பெருங்காயுண்டு = ஒப்பற்ற கூவிளம்பழமேகமுள்ளது, சொற்பத்தும் அதன்பாற் றோன்றி = அதனிடத் தேகதேசத் துதித்து, தொலைவுறும் = அழிந்துபோம், பிரமாண்டங்கள் = பிரஹ்மாண்ட கோடிகள், அற்பத்தில் எண்ணவொண்ணா = சிறிதென்றெண்ணிவிடமுடியாது, அதனியல்பு இன்னங் கேளாய் = அதனுடைய தன்மையை மேலும் கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) யோஜனைகளின் சகத்திரங்கள் கொண்டு விஸ்தார விமலமும், வெட்டவெளியும், யுகங்களாலும் ஜீரணமில்லாத இயற்கையதும், மகத்துமாகிய வில்வக்கனியொன்றுள்தாம்; அது அவிநாசர்ச ஆதாரமாயது, சுதைபோன்றாதல், சுதையைக்குறித்தாதல், அதி மதுரசாரவத்தாம், அதுபுராணமாயினும், பால இந்துவானது அங்குரம்போன்றதாதலின், தினந்தினம், வளர்வனவாகிய தளங்கள்போன்ற கலைகளையுடையதாம், அவற்றையொக்க, மிருதுவதாக, துவக்குநயன சுகஸ்பரிசத்தன்மையானே, சுந்தரமுற்றதாம். புவனவியூகமத்தியிலிருக்கும், மகாமேருவைப்போல வுன்னதமாயிருப்பது, மந்தரமலையேபோல அசலமாய்த் திடமாயிருப்பது முன்மொழிந்த சகத்திரபதம் அசங்கியபரமாம், அதாவது, யோஜனைகளின் கோடி கோடிகோடி மகாகோடி லக்ஷசதங்களினுலும் விபுலத்தகைமையர்னே அளவிடமுடியாதது அது என்பதாம், உலகத்தின் ஆதியது, சிருஷ்டி ஸ்திதிபங்கியமனுதிமூலமது, மகாகற்பாந்த மகாவாயுவினுலும் தன் முழுவேகத்தாலும் அசைக்கமுடியாதது அது, எந்த வில்வப்பழத்தின் சமீபத்திலிருக்கின்ற மிகப்பெரிய பிரஹ்மாண்டகோடிகள் சைலத்தின் கீழிருக்கும் சூக்குமமான கடுகுகளின் கணங்களின் பந்தியின்லீலையை வகிக்கின்றனவாமோ.

(ச.) ஒவ்வாதாதலின் அசன்றது = பரிச்சேத்தியமற்றது, அநந்தமாதலின் என்க, முற்றுதது, பிரஹ்மம் ஜராதிவிகாரர்கிதமாதலின் என்க, பீடியன் மதிக்கொழுந்தில் = வாலேந்து துண்டத்தினும், பெரிது மெல்லியது, ஆநந்தமயமாதலின் என்க. கலக்குறுது, நிஷ்கிரியமாதலின் என்க, மூலமாவது = ஆதிகாரணமாவது, உபாதானமாதலின் என்க, இத்தன்மையான ஒரு வில்வப்பெருங்காயுண்டு, சொற்பத்தும் = அதிசூக்குமமாயினும், அதன்பால் = அவ்வில்வபலத்தின் சமீபத்தில், சைலத்திற் கருங்கடுகு கணங்கள்போல், தோன்றித் தொலைவுறு பிரமாண்டங்களை அற்பத்தில் எண்ணுவாதலின், அதன் மகத்துவ மென்னென்று வர்ணிக்கப்படுமென்பது பொருள். (10-11)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆறுபுலன் கவரும் போக்கிய பிரஹ்மலோகாந்த சுகலேசமேனும் அல்லது பிரசித்தமேனும் எதுவும், எதனது எதிரில் ஒருபொருளாக நிற்கமாட்டாதோ எதனது லேசமிவையெலாமாமோ, எதனது இரசவாற்றலானது கடக்கொணுததாய்த் தெவிட்டாததாயசுவாது உடையதாமோ, இரசம்பூரித்துக் கனிந்தொழுகிக்கொண்டே யிருப்பதாமோ, அத்தகைய அது ஒருகாலத்திலுங் கெடாதது சித்துருபமாயது ,எனல்:—என்று மென்பது.

என்றும்பக் குவமாய்நின்று மிறையுமூப் பிடர்செயாது
நின்றபல் கனியின்சார மனைத்தையு நிறைந்துநிற்குந்
துன்றிய வதன்பான்மச்சைக் களவில்லைத் துன்னுமச்சை
யென்றது சிற்சொரூபத் தியற்சமத் காரந்தானே.

(ப - ரை.) என்றும் பக்குவமாய் நின்றும்=எப்போதும் பக்குவமாயிருந்தும், இறையுமூப்பிடர் செயாது = அணுவும் ஜரைத்துயர்செய்யாது, நின்றபல்கனியின்சாரமனைத்தையும் நிறைந்துநிற்கும் = நிகழ்கின்ற பல்கனியின்சார மியாவற்றையும் வியாபித்து நிகழும், துன்றியவதன்பால் = பெரிய ஆகிருதியுள்ள அதனிடத்து, இராநின்ற, மச்சைக்கு அளவில்லை = அழகிய மச்சையினுக் களவேகிடையாது, துன்னுமச்சை = நெருங்கிய மச்சை, என்றது = என்று கூறியது, சிற்சொரூபத்தியற்சமத்காரந்தானே = சைதன்ய சொரூபத்தின் இயல்பாய ஆற்றலேயாம்.

(ஸ்ரீ - வீர.) அத்தகைய ரசத்தோடுகூடியபாகத்தானும் அதுபதனத்தை விதனத்தடையமாட்டாது, ஆயின், தன்றுனத்திலேயே கெட்டுப் போய்விடுமோவெனின் அன்றென்றுரைத்தல்:—என்று மென்பதாதி. எப்போதுமே பக்குவமாயினும் குழந்தாய்! ஜரையினுலே யதுபாதிக்கப்படமாட்டாது, சமஸ்தபலபுருடார்த்தங்களிலும், சிரேஷ்டமாய் மகா ஆகிருதியையுடைய இப்பலத்திற்கு, மச்சையுமில்லை பீஜமுமில்லை, விஸ்தாரமாயது விகாரமில்லது நிரஞ்சனமாயது நித்தியமாயது; ஆயினும் சம்விச்துச் சத்தி சமத்கிருதியானது, உண்மஜ்ஜத்தன்மையை யொன்றுநிற்கும்.

(ச.) இறையும் = அப்பலமொருபோதும், மூப்பிடர் செய்யாது = விழும்பரியந்தமான பாகத்தோடுகூடாது, நித்தியமாதலின் என்க, பல்கனியின் சாரநிறைந்து நிற்கும், பரமபுருடார்த்த ரூபமாதலினென்க. துன்றியவதன்பால் = மகாகிருதியுள்ளவப் பலத்தினுள்ளும், சிற்சொரூபத்தியற் சமத்காரந்தானே = சிற்சத்தியின்பூர்த்தியே, மச்சையாம்= சாரமாம், பிரமத்திற்குச் சித்தே சாரமாதலின் என்பது பொருள். (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தின் விரிவே சகமெலாமென்ன விரித்துரைத்தல்:—சஞ்சல இது என்பன,

சஞ்சல ரூபமாஞ்சிற் சத்தியாஞ் சமத்காரத்தாற்
செஞ்செவே சமமாந்தன்பாற் சிற்கண்டான் விரிந்ததோதில்
விஞ்சிய வியோமமீது காலத்தின் விகாரமீது
துஞ்சலி னியதியீது துவள்வுறுதொழி லீதென்றும்.

இதுபிர மாண்டமண்ட மாசையி னொழுங்கீதென்றும்
விதமுறு வில்வக்காயுள் வியன்சமத் காரமச்சை
யதுலனே யென்றலோடு மண்ணலு முரைப்பான்ஞான
முதல்வநீ வில்வக்காயாய் மொழிந்தது தெரிந்ததன்றே.

(ப - ரை.) சஞ்சலரூபமாஞ் சிற்சத்தியாம் = சலனவடிவமாம் சித்துச்சத்தியாம், சமத்காரத்தால் = விஸ்மயத்தால், செஞ்செவே=மிகவும் நன்றாக, சமமாந்தன்பால் = சமமாகிய தன்னிடத்தில், சிற்கண்டான் விரிந்ததோதில் = திருக்குத்திருஷ்டியானது விஸ்தரித்தவிதத்தை விதந்துரைத்திடில், விஞ்சியவியோமமீது = வியாபகமாகிய ஆகாயமீது, காலத்தின் விகாரமீது = போதின் விகாரத்தைப் பொதிந்ததுமிது, துஞ்சல் இல்நியதியீது = நித்திரையில்லாத நியதியுமிது, துவள்வுறுதொழிலீதென்றும் = அலைவுறு வினையீதெப்போதும்.

இது பிரமாண்டமண்டம் = இதுபிரமாண்டக்கூட்டம் அல்லது இதுபிரமாண்டமண்டபமாம், ஆசையினின் ஒழுங்கீதென்றும் = ஆசையின் கிரமமீதெப்போதும், விதமுறு வில்வக்காயுள் = நானாவிதங்களமைந்த வில்வபலத்துள்ளே, வியன்சமத்காரமச்சை = அற்புதமாகிய சமற்காரமச்சையாம், அதுலனே=துல்லியமில்லா இராகவனே! என்றலோடும்= என்று கூறியவளவில், அண்ணலும் உரைப்பான் ஞானமுதல்வநீ=ஸ்ரீ இராகவர் கூற பிரஹ்மவித்யோபதேசத்தில் அக்ரகண்ணியராகிய தேவரீர், வில்வக்காயாய் மொழிந்தது தெரிந்தது = வில்வக்கனியென வருளியது அறியலாயது. அன்று ஏ அசை.

(ஸ்ரீ - வீர.) தற்சொரூபத்தைவிடாமலே இவ்வகையுருவ அடைவே இதனது மகத்தாய ஆன்மசமத்கிருதியாம், ஆண்டு அதனது சஞ்சலரூபமாய ஞானசக்தியாமதனுல் நிர்விகாரமாய நிஜசொரூபமாமதனிலேயே, இவ்வகை யுலகாகாரமாகத் திருக்கானது மிகமிக விரிந்ததாகும்; இவ்வாறாகவே வியத்தாதி சர்வமும் இதுவேயாம் அயலன்றும், இதனினும் சிறிதயல் இல்லவேயில்லையாம், என்று காணத்தக்கதெனல்:-விஞ்சிய என்பதாதி. இதுமகா அநந்தமான விண்ணென வியம்பலாகும், இதுகாலமயமேயாய கலையென வியம்பலாகும், இதுதான் நியதியென்றே யியம்பலாம், இது அசைவுருபியாயிலங்கும் கிரியையே. ஆத்தியாத்மிக அர்த்தங்களும் இதுவேயாமெனல்:—இது என்பதாதி. இது சங்கற்பவிஸ்தாரமாம் இது ஆசாந்தரப்பிரமமாம், இது இராகத்துவேடத்திதியாம், இது தள்ளுங்கொள்ளும் மதியாம்; இது துவத்தையாம், இது மத்தையாம், இது தத்தையாம், சுயம் சம்ஸ்திதமாம்; இது பிரஹ்மாண்டங்களின் கூட்டமாம், இதுமேலேயிருப்பதாம் சுயம் மேலே யிருந்தபோதினுமிது கீழேயுமிருப்பதாம். இந்தப்பிரகாரம் அந்த வில்வத்தினுடைய நிஜமஜ்ஜைச் சமத்கிருதியாமதுவே யாவுமாம், இந்தப்பிரகாரங்களால், வியஷ்டி சமஷ்டி சங்கற்ப சந்நிவேசத்தின் உள்ளேயே யாக்கப்பெற்ற சம்ஸ்திதியாம்.

(ச.) அவ்வில்வபலத்தின் உள்ளிருக்கும், சஞ்சலரூபமாம் = வெகுவித பரிணமமாய்த் திகழுருவான, சிற்சத்தியாஞ் சமத்காரத்தால் = சிற்சத்தியின் பூர்த்தியால், சமமாந்தன்

பால் = சமமாகிய தற்சொரூபத்தில், மேற்கூறும் பிரகாரமாக, சிற்கண்டான் = சிருட்டிக்க வேண்டுமென்னும் இச்சையை முன்னிட்டதிருஷ்டி, விரிந்த, அந்தப்பிரகாரத்தையேகூறல், செகத்தையுள்ளிலடக்கு முயற்சியுள்ள, நியதி, துவள்வுறுதொழில் = சலன சுபாவமான கிரியாரூபசத்தி, வில்வபலத்திற்கு அரசந்தத்தன்மை யுண்மையானேயென்றும் பாடம்: ஆசையின் ஒழுங்கு = திக்கின்கிறமம், ஈதென்றும், இதுமுதலான, வியன்சமத்காரம் = தன்து சிற்சத்தியின் பூர்த்தி வில்வக்காயுள்ள மச்சையாம், சகலப் பிரபஞ்சமும் சித்துவிலாச ரூபமாதலின் என்க. அண்ணல் = ஸ்ரீ இராமர். (13-14)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ இராகவர் தம்முடைய வில்வ ஆக்கியான தாற்பரிய போதத்தைக்காட்டல்:—வில்வமென்பது.

வில்வக்கா யென்றதைய பெருஞ்சித்தின் மிகுந்தசத்தை
புல்லுற்ற வகங்காராதிப் பொருளெலாஞ் சித்தின்மச்சை
சொல்லுற்ற விரண்டாயொன்றாய்த் தோன்றுசிற் சொரூபத்துக்கு
மல்லற்றே சிகனேயென்றும் பிரிவிலைமற்றுங் கேளாய்.

(ப - ரை.) ஐய != அரிய ஞான தேசிகோத்தமரே! வில்வக்காயென்றது=வில்வக்கனியென விம்பியது, பெருஞ்சித்தின் மிகுந்த சத்தை = பெரிய சித்தினது மகாசத்தையாம், புல்லுற்ற வகங்காராதிப் பொருள் எலாம் = அதன்கண்ணுரோபமாகத் தோற்றுநின்ற வகங்காரமுதலிய வத்துக்களியாவும், சித்தின் மச்சையாம் = அறிவின் மச்சையாம், சொல்லுற்ற விரண்டாயொன்றாய்த் தோன்றுபிரிவு = பேசிக்கொள்ளாநின்ற துவைதமாய் ஏகமாய்ப் பிரதீதியாம் பேதமானது, மல்லற்றேசிகனே = உபதேசித்தருளுவதில் அதிசமர்த்துடைய ஞானசாரியரே! சிற்சொரூபத்துக்கு = அறிவுவடிவத்தினுக்கு, என்றும் = எப்போதும், இலை = இல்லையாம், என்றியம்பிட, மற்றுங்கேளாய் = இன்னும் கேட்பாயாகவென்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவர்.

(ஸ்ரீ - வீர.) ஹே பகவன்! சர்வசாரத்தையு முணர்ந்தவரே! தேவரீரால், ஈண்டு இயம்பப்பெற்ற இவ்வில்வக்கனி மகாசிற்கனசத்தையென்று எனது நிச்சயம்; அகந்தாதியாக விரிந்திருக்கப்பட்ட இவ்வியாவுமே சின்மஜ்ஜைரூபமாம், இவ்வறிவினுஞ் சிறிதேனும் துவைத ஐக்கிய விவகாரவடிவபேதமானது இல்லவேயில்லை.

(ச.) அகங்காராதிப் பொருளெல்லாம் = இச்சகத்தனைத்தும், சித்தின்மச்சை = அகங்காராதிப் பிரவிர்த்திரகிதமாய் வியாபகமான சின்மச்சைரூபம், ஆதலால் அற்பமும், இரண்டாயொன்றாய்த் தோன்றும் = பேதாபேதவிசாரரூபமான, பிரிவு = பேததிருஷ்டி, இல்லை. அகங்காரப்பிரகிருதி மகதாதிகளால் விரிந்த இவ்வகிலவுலகும் சின்மஜ்ஜை வடிவமாம் என்பது பாடபேதம். (15)

(ஸ்ரீ- வீர - அ-கை.) அகந்தாதிமாத்திரம் சித்து வில்வமச்சை யென்பதாகவிலதாம், மற்றோ, பிரஹ்மாண்டாதியாவுமேயென நிர்ச்சங்கோசமாக வுணரத்தக்கது என்னுங் கருத்தால் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—புகல் என்பது.

புகல்பிர மாண்டமென்னும் பூசுணிக் காயுண்மச்சை
யகல்வட மேருவாதி யகிலமுமான வாபோன்
மிகவுயர் சித்தாம்வில்வக் காயினுள் விரிந்தமச்சை
பகர்பிர மாண்டமாதி யுலகங்கள் பலவுமென்றான்.

(பு - ரை.) புகல் பிரமாண்டமென்னும் = கூறிய பிரஹ்ம அண்டமென்று சொல்லப்பட்ட, பூசுணிக்காயுள் மச்சை = கூஷ்மாண்டத்தினுள்ளே மச்சை, அகல்வட மேருவாதியகிலமும் = விஸ்தாரமாயுன்னதமாய சுமேருபர்வதமாதி யாவுமாம், ஆனவாபோல் = எவ்வாறாயிற்றோ அவ்வாறு, மிகவுயர்சித்தாம் = மிகுதியும் மேன்மையுற்ற அறிவாம், வில்வக்காயினுள் = கூவிளங்கனியில், விரிந்தமச்சை = விஸ்தாரமானமச்சை, பகர் பிரமாண்டமாதியுலகங்கள் பலவுமென்றான் = கூறுகின்ற பிரமாண்டமே முதலாய உலகங்கள் யாவும் என்று ஸ்ரீ வசிட்டபகவான் கூறினார்.

(ஸ்ரீ - வீர.) எங்ஙனம் பிரஹ்மாண்ட கூஷ்மாண்டமஜ்ஜா மேருவாதி சம்ஸ்திதியாமோ, அங்ஙனம் சித்து வில்வமஜ்ஜையிந்தப் பிரஹ்மாண்டாதி ஜகத்தின்றிதியாம். (16)

வில்வபலக்கதை முற்றிற்று.

---

## சிலைக் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவையெலாஞ் சிலையினுள்ளே, சிற்பிமனக்கற்பித பத்மவனசந்நிவேசம்போலும், ஸ்திதமாம், என்று கூறித் திருட்டாந்தத்தை விவரப்படுத்தும் பொருட்டுப் பிரஹ்மசிலாக்கியாயிகையைப் புகழ்ந்துகூறல்:—மீண்டுமென்பது.

(ச-அ-கை.) முன்பு சர்வார்த்தத்தையு முட்கொண்ட அத்துவிதீயமான சைதன்னியமே வில்வபலமாக நிரூபிக்கப்பட்டது, இப்போது விசித்திரமான சகச்சித்திரமுடையதாயினும் சித்து அகண்டைகாசமும், ர்நிவிகற்பகனமுடையதுமாம், அச்சித்தே மகாசிலையாக நிரூபிக்கப்படுகின்றது:—

மீண்டுமோர்கதை விசித்திர வியப்பது வீரநீகேளென்று
நீண்டமாதவ னுரைசெய்வான் சிக்கென்று நெருங்கிமெல் லியதாகி
யீண்ட கன்றுவித் தாரங்கண் முடிவின்றி யிலங்குமோர் பெருங்கல்லு
மாண்ட துண்டத னிடைவிரி கமலங்கண் மலர்ந்தன வரம்பில்லை.

(ப - ரை.) மீண்டும் = மீளவும், ஓர்கதை = ஒரு விருத்தாந்தம், விசித்திரவியப்பது = வைசித்திரமான விஸ்மயத்தைதருவது, வீரநீகேள் என்று = வீர இராகவனே நீகேட்பாயாகவென்று, நீண்ட மாதவன் உரைசெய்வான் = பெருத்த தவத்தினையுடைய ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறத்தொடங்கியதாவது, சிக்கென்று நெருங்கி = அதிநிபிடமாக ஒன்றுசேர்ந்து, மெல்லியதாகி = மிருதுவாகி, ஈண்டகன்று வித்தாரங்கண் முடிவின்றி = இங்குமெங்கும் வியாபித்துப்பெருத்த விஸ்தாரமாய் அளவின்றி, இலங்குமோர் பெருங்கல்லு = விளங்காநின்ற ஒரு பெரிய சிலையானது, மாண்டதுண்டு = மாகூஷிமை தங்கியதாகவிருக்கின்றது; அதனிடை = அதன்மத்தியில், விரிகமலங்கள் மலர்ந்தன வரம்பில்லை = அகலமானதாமரைகள் புஷ்பித்திருப்பன அளவே கிடையாது.

(ஸ்ரீ - வீர.) ஹே சந்திரவதன இராகவனே! ஈண்டு எம்மால் வருணிக்கப்பெறுவதும், அதிரம்மியமும், மிகவிசித்திரமும், அதிவிஸ்மயத்தையாக்குவதும், ஆகிய மற்றொரு இவ்வாக்கியாயிகையைக்கூறக் கேட்குதி, பசையுற்றதாய், வெட்டவெளியாய், மிருதுப்பரிசமுடையதாய், மகாவிஸ்தாரசாலியாய், மிகவும் நெருங்கியதாய், நித்தியமாய், கலக்கமற்றதாய், இலங்கும் மகாசிலையானது ஒன்றுளதாம், அதனுள்ளே சாத்திற்போல மலர்ந்தன

வாய இரம்மியபதுமங்கள் வெகுவெகுவாகவுளவாம், அவைகளும் அந்தமற்றனவாகவே யமர் கின்றனவாம், மனக்கற்பனைகள் அநந்தமாதலின் அந்தமற்றனவாம்.

(ச.) ஸ்ரீ வசிஷ்டர்:—சாந்ததமாதலின் சிக்கென்று; விஜாதீயப்பொருளோடு கூடாமை யின், நெருங்கி; சிற்பிரியத்துக் கிருப்பிடமாய்ச் சுகவேதுவாயிருத்தலின் மெல்லியதாகி அவதியின்மையாதலின், வித்தாரங்கள் அகன்று; நித்தியமாதலின், முடிவின்றி, தானே பிர காசித்தலின், இலங்கும்; ஈண்டு இத்தன்மையான, ஒரு பெருங்கல்லு தனக்கு வேறு ஆதா ரம் நிரூபித்தற் கரிதாதலின், மாண்டதுண்டு; ஈண்டுக்கமலங்கள் என்பது புவனங்கள் எனப் படும், சங்கோசவிகாசத்தோடுகூடிய தாதலினும் சிவப்பிரமராசிரயமாதலினும் என்க. எங் கேயோ உளதது:—அந்தப் பகவான் எங்கேயுளன் என, தன்மகிமையிலே தானே யிருப்பன் என மறையறைதலின். சிகித்தமாம், சித்தப்பிரேமாஸ்பதத்தன்மையான் என்பது பாட பேதமாம், விசித்திரவியப்பது = முன்னர்க் கேளாதது அதனானே விஸ்மயஞ் செய்யத் தக்கது. (1)

(ஸ்ரீ-வீர-அ-கை.) முன்மொழிந்த சிலையையே நன்குவருணித்தல்:—இலையென்பது.

இலைக டம்மிற்றுங் கோத்தன நெருங்கின வெதிர்சில தெரியாத
சிலதெரிந்தன் மீதுதா ளாயின சிலசில கீழ்த்தாளாய்
நிலைகொண் மூலமில் லாதன சிலவிவற் றிடையெலா நிகழ்சங்கம்
பலதிரண்டன சக்கர முடிவிலேபண்ணிய பதுமம்போல்.

(ப - ரை.) இலைகள் தம்மிற்றும் கோத்தன நெருங்கின = தளிர்கள் பரஸ்பரம் பின் னிக்கொண்டு நெருக்கமாயிருப்பன, எதிர்சிலதெரியாத = எதிரேசில தெரியாதனவாம், சிலதெரிந்தன = சிலதெரிந்தனவாம், சிலமீதுதாளாயின = மேலே மூலமாயினவாம் சில, சிலகீழ்த்தாளாய் = கீழேமூலமாயினவாம் சில, நிலைகொள் மூலமில்லாதனசில = நிலை பெறும்படியான காரணமில்லாதனசிலவாம், இவற்றிடையெலா நிகழ்சங்கம் = இவற்றின் சமீபத்தில் எல்லாம் விளங்கும் சங்குகள், பலதிரண்டன = அநேகம் கிளைத்துள்ளன, சக் கரமுடிவிலே பண்ணியபதுமம்போல் = அளவில்லாத சக்கரங்கள் தாமரைகள் அமைந்தன போல அமைந்துள்ளனவாம்.

(ஸ்ரீ - வீர.) அன்னியோன்னியம் கோர்த்தபத்திரங்களை யுடையனவாம், பரஸ்பரம் சேர்ந்தனவுமாம், பரஸ்பரம் மிகச் சேர்ந்தனவுமாம், கூடங்களுமாம் பிரகடங்களுமாம்; கண்டதினும் வேறுவகையானும் மனக்கற்பனைஞ் சம்பவித்தலின் உரைத்தல்:—மீது என்ப தாதி கர்ணிகைச் சாலங்களில் மூலங்களையுடையன, மூலத்துட் கர்ணிகைகளையுடையன, மேல் மூலங்களையுடையன, கீழ்மூலங்களையுடையன, மற்றவை சில பல மூலங்களில்லா தனவுமாம். அவற்றினது சமீபத்தில் நூறுயிரக்கணக்கான சங்குகள் உள்ளனவாம், மகா காரங்கள்வாய்ந்த சக்கிரக்கூட்டங்களும், பதுமம்போலப் புகுந்திருப்பனவாம். சங்குகள் பதுமமுகிளம்போலப் புகுந்தனவாம், சக்கரக்கூட்டங்களோ விரிந்த தாமரையேபோலப் புகுந்தனவாம், எனப் பொருளால் உணரலாம்.

(சு.) சில இலைகடம்மிற்றுங் கோத்தன நெருங்கின = ஒன்றுக்கொன்று சம்பந்த முடையனவாம், சிலவெதிர், சம்பந்தரகிதங்களாம், அவைகளின் மத்தியில், சிலமீதுதாளா யின்; அமராதி புவனங்களுக்கு மேலுமுள் துருவமண்டலம் ஆசிரயமாதலின் என்க; சில கீழ்த்தாளாம், பாதாளங்களுக்கும் பூலோகத்துக்கும் கீழுமுள் கூர்மாசிரயமாதலினென்க,

சிலமூலமில்லாதன, சிவவிஷ்ணுலோகாதிகளுக்கு நித்தியத்தன்மை யுண்மையின் என்க; சில தெரியாத என்பதனாற் றிரியக்கு மூலங்களென்பனவாம்,' திரியக்கமன சுபாவமேயான வாயுவாலே சில புவனங்கள் பிடிப்புண்டிருத்தலினென்க; இத்தன்மையான பதுமங்கள், அதனிடை = அச்சிலையினகத்து, தெரிந்தன = காணப்பட்டனவென்பது அந்வயம். இவற்றிடை = இப்பதுமங்களின் சமீபத்தில், பலதிரண்டன = நூறுயிரஞ் சங்கங்களிருக்கின்றன, சங்கமென்பதனால், நக்ஷத்திரதாரைக் கிரகரூபங்களான சோதிமண்டலங்கள் சொல்லப்படுகின்றன, சமுத்திரம்போல் நீலமான வாகாயத்திற் சங்கசங்கம்போற் பிரகாசிக்கின்றமையின் என்க; சக்கரசத்தத்தால் மண்டலாகாரங்களான தீவுகளெனப்படுகின்றன; அவை சக்கரதாரைபோற் பிரகாசிக்கின்ற சமுத்திரங்களோடு கூடியிருத்தலின் அதற்கொப்பாமாதலின் என்க. பூலோகத்தினது பாகியத்திருக்கும் கூர்மாசிரயத் தன்மையுண்மையின் என்பதுபாடபேதம். நக்ஷத்திரக் கிரகதாரையென்றும் பாடம். (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சுயம்தீர்த்தயாத்திரையில், சாலக்கிராமக்ஷேத்திரத்தில், கண்கூடாகக்கண்ட சிலையைக் குருவாக்கியத்தானே ஸ்மரித்துக்கொண்டு ஸ்ரீ இராகவர், அதுவே ஸ்ரீ பகவானால் ஈண்டு ஜகத்துக்கற்பனை சகிதபிரஹ்மதிருஷ்டாந்தத்தன்மையானே யுதாகரிக்கப்பெற்றது, என்று எண்ணினவராய் யுரைத்தல்:—என்ற என்பது.

என்ற போதுசா லக்கிரா மப்பெய ரிடத்திலே நெடுமாய
னின்ற குன்றிலே கண்டன னனையதோர் நெடுஞ்சிலை யெனக்கூறும்
வென்றி வீரனை வசிட்டனு நோக்கியே வெற்புநீ முதற்கண்ட
தன்று பேரண்ட நிலைமையுள் ளேயுறை யறிவையே சிலையென்றேன்.

(ப - ரை.) என்றபோது = என இவ்வாறருளியகாலத்தில், சாலக்கிராமப்பெயரிடத்திலே = சாலக்கிராமம் என்னும் நாமம்பூண்ட க்ஷேத்திரத்திலே, நெடுமாயனின்ற குன்றிலே = ஸ்ரீமந்நாராயணர் எழுந்தருளியிருக்கப்பெற்ற பர்வதத்தில், கண்டனன் = தரிசித்தேன், அனையதோர் நெடுஞ்சிலை = தாங்கள் கூறியதாகிய ஒப்பற்ற ஒரு பெரிய சிலையை, என = என்றுரைப்ப, வென்றிவீரனை வசிட்டனும் நோக்கியேகூறும் = வெற்றிமாலை பொருந்திய ஸ்ரீ வீரராகவனை நோக்கி ஸ்ரீ வசிட்டபகவானும் உரைப்பதாவது, நீ முதற்கண்டது வெற்பு அன்று = நீ முன்னர்த்தரிசித்தது சிலையல்லவாம், பேரண்ட நிலைமையுள்ளேயுறை = பெரும் பெரும் பிரமர் அண்டங்களின் நிதியுள்ளேயுள்ள, அறிவையே சிலையென்றேன் = சித்துருவத்தையே சிலையென்றுரைத்தேன்.

(ஸ்ரீ - வீர.) உண்மையேயிது, அத்தகையதாய பதுமவனக் குறிகள்வாய்ந்த அம்மகா சிலையானது என்னாற் காணப்பெற்றது, சாலக்கிராமத்தில் ஸ்ரீ ஹரியின் ஆலயத்திலிருக்கின்றது; திருஷ்டாந்ததார்ஷ்டாந்திகசம்பந்தம் உன்னால் நன்குணரப்பெற்றது என மகிழ்ந்தாமோதிப்பவராய ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—கூறுமென்பதாதி. இஃதிவ்வண்ணமாமென அந்தத் திருஷ்டாந்தபூதமான சிலையை கண்டுளாயென வுணர்ந்துளாய்; அத்தகைய தார்ஷ்டாந்திகபூதசிதாத்மா எத்தகைய வியற்கையதாமோ, நிரவகாசசிற்கனமாமோ, சமமாமோ, பிராணனுக்கும் பிராணனாமோ, நிரதிசய ஆனந்தரூபமாமோ, அதன்விடயத்திலும் கண்டுளாயென எண்ணியிருக்கின்றாய்; எம்மாலோ நீகண்ட சிலைத்திருஷ்டாந்தத் தன்மையானே கருதப்பெறவிலதாம், மற்றோ அபூர்வமேயாம், பிரஹ்மமே சிலைத்தன்மையானே இனிது கற்பிக்கப்பெற்று, வில்வம்போல உபந்யசிக்கப்பெற்றதாம், என வுபாயத்திற் றூற்

பரிய விசம்வாதமிருப்பினும், உபேயத்தில் விசம்வாதமிலதாம், என்னுங் கருத்தானுரைத்தல்:—எம்மாலோ வுனக்கு, அபூர்வமேயாய இச்சிலை ஈண்டு இயம்பம்பெற்றது, எம்மகாகுக்ஷியினுள்ளே யாவுமுளவுமாம் இலவுமாமோ; இச்சிற்சிலையே எம்மாலுனக்குரைக்கப்பெற்றதாம்; எதனுள்ளே உலகங்களியாவுமாமோ. (3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சித்தாத்மாவின்கண்ணே கௌணிவிருத்தியானே சிலைச்சத்தப்பிரயோக நிமித்தகுணங்களைக்காட்டல்:—பலவென்பது.

பலமு மொன்றுமெய் யாகிய சகங்களுட் பயின்றசித் துயர்கல்லா
நலனுறச்செறிந் திறுகி யொன்ருகியே நவின்றசிற் சிலையின்பா
லுலகசாலங்க ளுறைந்திடும் வானிலே யுறைதரு காற்றேபோ
னிலன்விண் கால்கிரி திசையெலா மேவிய நெடுஞ்சிலை யுரையாகா.

(ப - ரை.) பலமும் ஒன்று மெய்யாகிய = கனமும் ஏகமும் ஆகிருதியாகவுற்ற, சகங்கள் உட்பயின்ற = உலகங்கள் உள்ளேயுள்ள, சித்து = அறிவானது, வுயர்கல்லாம் = உயர்ந்த சிலையாம், நலனுறச் செறிந்திறுகி = நன்மையுறப்பொருந்தி நெருங்கி, ஒன்ருகியே நவின்ற = ஏகமேயா யிருக்கின்றதென்று புகன்ற, சிற்சிலையின்பால் = அறிவுருச்சிலையினிடத்தே, உலகசாலங்கள் = ஜகத்கூட்டங்கள், உறைந்திடும்=அமர்ந்திருக்கும், வானிலே யுறைதரு காற்றேபோல் = ஆகாயத்திலே இராநின்ற வாயுவே போலவாம், நிலன் விண்கால் கிரிதிசையெலாமேவிய நெடுஞ்சிலையுரையாகா = பூமி, யாகாயம், காற்று, பர்வதம், திக்கு, என்னும் இவையாவும் பொருந்தியும் பெரியசிலையானது பொருந்தாது.

(ஸ்ரீ - வீர.) கனத்தன்மை ஏகான்மகத்தன்மையாதிவயத்தானே இச்சிலையே சித்தாம்; ஆதிபதத்தானே அபேத்தியத்தன்மை ஏகரசத்தன்மைகூடஸ்தத்தன்மையாதி பரிக்கிரகமாம்; அத்தியந்தம் கன அங்கமுடையதேயாயினும், மிகவும் இரந்திரமேயில்லாத ஆகிருதியையுடையதேயாயினும், அதனுள்ளே யுலகக்கூட்டம், விபுல அநிலம் வியோமத்திற்போல வுள்ளதேயாம்; உம்மைச் சப்தங்களானே குறிப்பிக்கப்பெற்ற முரண்பாடானதுமாயையினுலே பரிகரிக்கத்தக்கது. சுவர்க்கப்பூமி, வாயு வாகாசம் பர்வதம் சரித்துத் திசையெலா மிருந்தபோதினும் அச்சிலையின்கண், ஒரு சிறிதும் துளைவிழாதாம்.

(ச.) செறிந்திறுகி = சிக்கென்று நெருங்கி, ஒன்ருகியும் = ஏகரூபமாகியும், நிலமுதலாகிய, ஜகத்திரள் அதற்கபின்னமாதலின், நெடுஞ்சிலை யுரையாகாவென்பது விரோதமன்றென்பதாம், மூ:—கனத்தன்மை = நிபிடத்தன்மை, ஆதிசப்தத்தானே விபுத்வாதிகளாம், அதன் சாமர்த்தியத்தானே இச்சித்துச்சிலையேயாம், அதற்கொப்பாதலின்; அபின்னத்தன்மையானே கனத்துவநீரந்திரத்துவங்கட்கு விரோதமின்மையின். அது சிறிதும் ரந்திரமாகாதாம், விண்முதலனவும் அதற்கு வேருகாமையின். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஜகத்தே எம்மால் ஆண்டுப் பதுமவனத்தன்மையானே குறிக்கப்பெற்றது, இதன்கண்ணேயே கனுங்காத்ம ஜகத்தாமரை விஜ்ரும்பணமடைகின்றது, இதனினும் உண்மையாக வேருகாதாம், அயலாய சுத்தாத்மகமுந்தானுகாதாம், அதாவது அச்சகத்தும் வேறுபோலத் தோற்றினபோதினும் உண்மையாக வேறல்லவாம், சுத்த சித்தாத்மகமுந்தானல்லவாம், மற்ருே, மாயையேயாம்; என்று கூறி, அவற்றின் அருகில் நூருயிரக்கணக்கான சங்குகள் உள்ளனவாம் என்று கூறியதின் ருற்பரியத்தைக்கூறல்:—செவ்வியென்பது.

செவ்வி தாங்கலில் வனசமுஞ் சங்கமுந் திகிரியு மெனுங்கீற்று
வவ்வு கின்றதோர் சுழுத்தியா மவத்தையாய் மருவுறு மதுபோலத்
தவ்வில் சித்தினு ளுலகங்கண் முழுவதுந் தங்குமால் வேறன்றி
யெவ்வி டத்திலியா தெப்படி யிருந்ததவ் விடத்தினப் படியென்ப.

(ப - ரை.) செவ்விதாங்கலில் = சிறந்ததாய சிலையில், வனசமும் சங்கமும் திகிரியும் = தாமரையும் சங்கும் சக்கிரமும், எனுங்கீற்று = என்னுங்கீறல், வவ்வுகின்றதோர் சுழுத்தியாம் அவத்தையாய் மருவுறும் = பொருந்துகின்றதாகிய ஒருதுயிலவஸ்தையாய் மன்னுறும், அதுபோல = இத்திருஷ்டாந்தமேபோன்று, தவ்வில் சித்தினுள் = கெடாத அறிவினுள்ளே, உலகங்கள் முழுவதும் = ஜகங்களியாவும், தங்கும் = இருக்கும், வேறன்றி = அன்னியமாயில்லாமல், எவ்விடத்தில் = எங்கு, இயாது எப்படி = எது எவ்வாறு, இருந்தது = இருக்கின்றதோ, அவ்விடத்தினப்படியென்ப = அங்கு அவ்வாறு என்று கூறுவார்.

(ஸ்ரீ - வீர.) சங்கபதுமாதிகளாய சித்திரங்கள் பாஷாணத்தில், சிற்பி மனக்கற்பனையானே, எழுதப்பெறுகின்றன எவ்வாறோ அவ்வாறே, சென்றவரும் நிகழ்வாதிசெகங்களெல்லாம், சிலையின்கண்ணே சாலபஞ்சிகையாம், ஆண்டுச் சாலபஞ்சிகைவாஸ்தவம்போல உள்ளதாம், சர்வசம்ஸ்தானங்களுமே சித்தின்கண்ணே மெய்போன்றே நிகழுமென்பதாம். சாலபஞ்சிகை = பதுமையென்பதாம். சிலையின் உதரத்தின்கண்ணே சக்கிரபதுமலேகைகள் சுழுப்த அவஸ்தையால் உளிச்சேதத்தினும் முன்னர் வெளிப்படாமையால், எங்ஙனமிருக்கின்றனவோ அங்ஙனம், அறிவினுள்ளேயும் இவ்வுலகமாலையாம்,

(ச.) வனசமுஞ் சங்கமுந் திகிரியுமெனுங் கீற்றுங்கல்லில் அற்பமும் பின்னமாகாதது போல் ஆதிமத்தியாந்தரூபமாகிய சிற்சிலையும் வெகுவிதசித்திரமான சித்திரங்களோடுகூடினும் பின்னமாகாவென்பது பொருள். உள்ளிருக்கும் வனசமுதலான திதியுள்ள கல் நாநாவிதமாகத் தோற்றினும் உண்மையாக ஏகபிண்டமாவதுபோற் செகத்தையுட்கொண்டிருக்குஞ் சித்தும் ஏகரூபத்தை விடாது, என்றும்; சிலையிற் கற்பிதமான பதுமஞ்சிலைமயமாதலின் சிலைக்கபின்னமாவதுபோற் சித்திற் கற்பிதமான ஜகத்துஞ் சித்ரூபத்துக்கபின்னமாம், என்றுங் கண்டு சிலையிற் கற்பிதமான பதுமாதிகீற்று மிளகுக்குள்ளிருக்குங் காரப்பு இனதபூர்த்தியுஞ் சுவாபாவிகமாதலின் உதியாது, திரவியமுள்ளமட்டு நசியாதாதலின் அஸ்தமியாததுபோலுஞ் சித்திற் சகத்திதி என்றும், மாதரகத்து மனிதகர்ப்பமிருப்பதுபோலும், மச்சாசாரமானது வில்வபலத்தி னகத்திருப்பதுபோலும் விகாரரூபமான பிரமாண்டமண்டலஞ் சித்தினகத்து வவ்வுகின்றது என்றும், காண்க; வனசமுதலான கீற்று சிலையுதரத்தில், சுழுத்தியாமவத்தையாய் மருவுறும், சுழுத்தியவஸ்தைபோல் நிச்சலாவஸ்தையாயிருக்கும் அதுபோல் உலகங்கண்முழுதுஞ் சித்தினகத்தே சுழுத்தியவஸ்தையாய்த் தங்கும், சித்ரூபமான பிரமமெப்போது எவ்விடத்து = எந்தத்தேசத்தில், யாது = எவ்வுருவாய், எப்படியிருந்தது, அவ்விடத்தில் அப்பொருளே அப்படி = அந்தப்பிரகாரமாகவே, காணப்படும், ஆதலிற் சகலரூபமான பிரமமே சுழுத்தியவஸ்தையை யடைந்தவன்போல் நிர்விகாரமாயிருக்கும் என்ப; பிரமஞ்சர்வான்மகமாதலினும், சத்தியசங்கற்பமாதலினும், சங்கற்பானுசாரத்தால் நானாரூபமாயிருப்பது தகுமென்பது கருத்து. (5)

(ஸ்ரீ-வீர - அ-கை.) திருஷ்டாந்தவாயிலாக, யாவுமே சொரூபத்தினும் அயலின்றிச் சொரூபமயமேயாமெனல்:—நானு, விரியென்பன.

நானாவாம் பணதிகளுள் ணண்ணுகினு மொருமையே நண்ணுங்கற்போல
லானாத சகங்களையுள் ளடக்கினும்வேற் றுமைமேவா தறிவொன்றேயாங்
கானார்பங் கயமெல்லாம் வேறன்றிக் கன்மயமாங் கணக்கேபோல
வானார்சிற் சொரூபத்தைப் பிரியாத தன்மயமாம் வையமெல்லாம்.

விரிசிலையி லெழுதியபங் கயமாதி யுதித்தத்த மித்ததுண்டோ
திரிபுவனங் களுஞ்சித்தி லப்படியே வில்வக்காய் செறிந்தமச்சைப்
பரிசினின்முன் னுரைத்ததுபோன் முடிவில்லா விகாரத்தாற் பரந்தவண்டந்
துரிசிலா வறிவினிடைத் துன்னுமால் வேறென்று சொல்லவொண்ணு.

(ப - ரை.) நானாவாம் பணிதிகள் உள் நண்ணுகினும் = பலவிதமான விசித்திரங்கள் உள்ளே பொருந்தினும், ஒருமையே நண்ணுங்கற்போல் = ஏகத்தகைமையையே பொருந்தும் சிலைபோல, ஆனாதசகங்களையுள்ளடக்கினும் = ஞானத்தாலன்றி மாறாத உலகங்களை யுள்ளே அடக்கிக்கொண்டிருப்பினும், வேற்றுமை மேவாது அறிவொன்றேயாம் = பின்னமுறாத் சித்தேகமேயாம், கானார்பங்கயமெல்லாம் = அமைக்கப்பெற்ற தாமரைமுதலயாவும், வேறன்றிக் கன்மயமாங்கணக்கேபோல = அயலில்லாமல் பாஷாணமயமாம் நியாயமேபோல; வானார் சிற்சொரூபத்தை = ஆகாயம்போல் வியாபகமாகிய அறிவுவடிவத்தை, பிரியாத தன்மயமாம் வையமெல்லாம் = விட்டுநீங்காது அவ்வறிவுமயமேயாம் உலகமியாவும்.

விரிசிலையிலெழுதிய = விஸ்தாரமாகிய கல்லின்கண்ணே யமைக்கப்பெற்ற, பங்கயமாதி = தாமரை முதலன, உதித்தத்தமித்ததுண்டோ = பிறந்திறந்ததுண்டுகொல்! அப்படியே = அவ்வாறே, சித்தில் = அறிவில், திரிபுவனங்களும் = மூவுலகங்களும், வில்வக்காய் செறிந்த மச்சைப் பரிசினின் முன்னுரைத்ததுபோல் = கூவிளங்கனியிற்பொருந்திய சோற்றுத் தன்மையினின் பூர்வங் கூறியதேபோல, முடிவில்லாவிகாரத்தாற் பரந்தவண்டம் = அநந்த மான விகாரத்தினாலே விஸ்தரித்த பிரமாண்டம், துரிசிலாவறிவினிடை = குற்றமற்ற சித்தி னிடையே, துன்னுமால் = பொருந்தும், வேறென்று சொல்லவொண்ணு = அயலென் றறையக்கூடாது.

(ஸ்ரீ - வீர.) பாஷாணத்தினுள்ளே புகுந்தவை பலவேயாயினும், ஏகபிண்டத்தன் மையை, எங்ஙனம் அங்கீகரிக்கின்றதோ அங்ஙனம், இந்தச் சித்தும் கனமான ஏகாகாரமாம் பிண்டத்தன்மையை அடையாநிற்கும், அங்கீகரிக்குமென்பதாம். எங்ஙனம் பதுமம் சிலா கோசத்தினின்றும் அபின்னமாய் அவ்வாகாரமயமேயாமோ, அங்ஙனம் சிருஷ்டியானவை சிற்சொரூபத்தினும் அபின்னமேயாம், அச்சொரூபத்தினும் அபின்னமேயாயினும் பரிச் சின்ன ஆகாரம்போல் இலங்கும். சிலையினுள்ளே பதுமலேகமாலையும் மிளகினுள்ளே கார சமத்திருதியும், உதயமாவதுமில்லை அஸ்தமாவதுமில்லையாம், இருப்பனவாய சிலைமிளகுகட்கு எழுதல் அழிதல் இல்லாததேபோல, சித்தின்கண்ணே சர்க்கமுமாம். நல்ல சரித்திரத்தோடு கூடிய மங்கையின்மனத்தில் அவளுடைய காந்தன் எப்போதுமே இருப்பதேபோலவும், வில் வக்கனியின்கண்ணே மஜ்ஜையான திருப்பதேபோலவும் அநந்தவிகாரங்களோடுகூடிய பிரஹ்ம மாண்டமண்டலியும் சித்தின்கண்ணேயிருக்கும்; மலைபோலும், பிரபவ உல்லாச விலாசப்பிர தீதிமாத்திர வடிவையுடையது இச்சித்து; கிரிகூடம்போலும் அவிகாரித்தன்மையான் என்ப தாம். என்பதனானே பெருஞ்சிலையானது, பல சிற்பிகளின் விருத்தமானச கற்பனாபேதமே போல, பிரஹ்மமும் நாநாஜீவவிருத்த கற்பனாபேதமுறினும், அவ்வவ்வுருவமாகவே யிருக் கும். எங்ஙனம் யாண்டு எதாகாரம் கற்பிக்கப்பெறும் அங்ஙனமாண்டு அதுவேயாகும்.

(ச.) இவ்விரண்டு கவிக்கும் அருத்தம் முன்பேயாயிற்று. (6-7)

(ஸ்ரீ - வீ - அ - கை.) பிரஹ்மமே யாவுமென்றுகூறி, ஆக்கியாபிகையின் ருற்பரியத்தைத் தொகுத் துபசங்கரித்தல்;—பிரமமென்பது.

பிரமத்தின் சற்பாவ வடிவான பேருலகின் பேதமெல்லாம்
பாமார்த்த சுழுத்தியாய்ச் சாந்தமாய்ச் சமமாகிப் பயின்றசித்தாய்க்
காமுற்ற தன்னுருவாங் கண்ணுகுங் கல்லிடைத்தா மரைகள்போலத்
திரமற்ற சிருட்டியெலாம் பயனில்லை யுடல்களெல்லாஞ் சேராதென்றும்.

(ப - ரை.) பிரமத்தின் சற்பாவவடிவான பேருலகின் = சிவத்தினது சத்துருவமான பெரியஜகத்துயாவற்றின், பேதமெல்லாம் = வேற்றுமையாவும், பாமார்த்தசுழுத்தியாய் = உண்மையாய நித்திரையாய், சாந்தமாய் = உபசாந்தமாய், சமமாகி = ஒப்பாகி, பயின்ற சித்தாய் = விளங்குமறிவாய், காமுற்றதன்னுருவாங் கண்ணுகும் = பிரத்தியக்ஷமான சுவாத்மவடிவமாம் திருஷ்டிமாத்திரமேயாகும், கல்லிடைத்தாமரைகள்போல = பாஷாண மத்தியிற் கமலங்கள்போல, திரமற்ற = அதிடமாகிய, சிருட்டியெலாம் = சிருஷ்டிகளியாவும், பயனில்லை = பிரயோஜனமில்லை, உடல்கள் எல்லாம்=தேகங்கள் யாவும், சேராதென்றும் = சரீரங்கள் எல்லாம் வடிவத்தை யுடையனவாகா வொருபோதும்.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மசத்தான்மக மியாவும் துயிலிலிருப்பதுபோலிருக்கும், எங்ஙனம் துயிலின்கண்ணிராநின்ற சீவன்ருேறும் விசித்திரசொப்பனர்த்தகற்பனுபேதத்தையவிரோத மாகப் பொறுத்தலாமோ அதுபோலென்பதாம்; சிலையினுள்ளே பங்கஜாதிபோலும் வெகுவித விகாரவிலாசங்களோடு கூடிய எவ்விவ்வுலகவிலாச மயக்கமுளதோ அது சுழுப்தமே=விழி யாதவாசனுமாத்திரமேயென் றுணர்தி, ஜகத்துவிலாசமானது நித்தியம் சுழுப்தபதமேயாம் நன்குபிரசாந்தமாய்ச் சமமாய்ச் சிற்கனமாயிலங்கும் எப்பிரஹ்மாகாயமுளதோ அதன் வடிவ தாந்தன்மையடைதலின்; துச்சங்களேயாய சிலைக்குட்பதுமங்களேபோலச் சருக்காதிதசை கள், ஆன்மாவின்கண்ணே காண்புறினும், ஒருகாலத்திலேயுமே சொரூபஸ்திதியை யடை வதே கிடையாதாம்.

(ச.) பேதமெல்லாம் = ஜன்மாதிவிகாரங்கள் அனைத்தும், பிரஹ்மத்தின் சற்பாவவடி வான, பிரமமேயாம் என்பதற் கருத்தம் முன்பேயாயிற்று, சாந்தமாய்ச் சமமாகிப் பயின்ற சித்தாம், ஆன்மாவில், இத்தன்மையாய்த் தோற்றுகின்ற சகவிலாசங் கல்லிடையிற் ருமரை கள்போல், பரமார்த்தசுழுத்தியாய் = பிரமத்திற் சுழுத்தியவஸ்தைபோலிருப்பதாய் காணு கினும், சிருஷ்டியெலாம் = சிருஷ்டியாதிகளனைத்தும், பயனில்லை = நிட்பிரமாணங் களாம், ஆதலின், என்றும் = ஒருபோதும், உடல்கள் எல்லாம் சேராது = வாஸ்தவ ஸ்வரூபத்தை மருவாது. (8)

சிலைக்கதை முற்றிற்று.

---

## அருச்சுனன் கதை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பேதமெய்திடும் இருதயக்கிரந்தியின்பெயரும், சேதமெய்திடும் ஐயங்கள் யாவையுஞ் சிதைந்தே" என்னுஞ் சுருதியினுனே தத்துவசாக்ஷாத்காரத்தாற் சுயம் சர்வசம்சயமும் சின்னமேயுற்றவராயினும் ஸ்ரீ இராமர், பிறர்கடம் உபகாரப்பொருட்டு அச்

சம்சயபதத்தை வினவுகாமராய், முதலில், தமதனுபவத்தை யுரைத்துத் தெரித்தல்:—என்னலு மென்றது.

(ச-அ-கை.) முன்பு விசித்திரமாயினும் அகண்டைகரசமான சித்து சிலையாக நிரூபிக்கப்பட்டது, இப்போது சர்வமும் பிரமமென்னும் விவேகிக்கு யுத்தாதியும் சித்தவிசிராந்தியை வாதிக்காதெனத் தெரிவித்தற்கு அருச்சுனன்கதை வர்ணிக்கப்படுகின்றது.

என்னலுமே யறிவதெலா மறிவுற்றேன் காண்பனவு மெல்லாங்கண்டே
னுன்னருளா லென்னினுநல் லுணர்வுவளர் வுறமீட்டு மொன்றுகேட்கேன்
றுன்னுலகை யாயிரமட் டமைப்பதாய்க் கண்ணடிபோற் றோன்றுகின்ற
முன்னுபுரி யட்டகத்தின் வடிவேது மொழியென்ன முனிவன்சொல்வான்.

(ப - ரை.) என்னலுமே = என்று கூறியபோது, அறிவதெலாமறிவுற்றேன் = அறியவேண்டிய யாவற்றையு மறிந்தேன், காண்பனவுமெல்லாங்கண்டேன் = தரிசிக்கவேண்டிய யாவற்றையுந் தரிசித்தேன், உன்னருளால் = தேவரீரது திவ்யகிருபையால், என்னினும் = என்றபோதினும், நல்லுணர்வு = நல்லஞானமானது, வளர்வுற = விருத்தியாக, மீட்டும் = மறுபடியும், ஒன்றுகேட்கேன் = ஒன்றை வினவுகின்றேன், துன்னுலகை = நெருங்கிய வுலகினை, ஆயிரமட்டமைப்பதாய் = சகத்திரவிதமதாகச் சமைப்பதாய், கண்ணடிபோல் = தர்ப்பணமென்ன, தோன்றுகின்ற = பிரதீதியாகின்ற, முன்னுபுரியட்டகத்தின் = முதன்மையான புரியட்டகத்தின், வடிவேது = சொரூபமியாது, மொழியென்ன = கூறுவாயென்று, ஸ்ரீ இராகவர் கேட்ப, முனிவன் சொல்வான் = ஸ்ரீ வசிட்டபகவான் கூறுவார்.

(ஸ்ரீ-வீர.) அறியவேண்டிய யாவற்றையு மறிந்தேன், காணவேண்டிய யாவற்றையுந் தடையொன்றின்றிக் கண்டேன், யாங்கள், தங்கள் சம்பந்தியாய் மேலாய், இலங்கும், பிரஹ்மஞான அமிருதத்தானே பரிபூரணத்தகைமையை யடைந்தோம்; என்றபோதினும், இதனை மறுபடியும் லீலையாற் கேட்கின்றேன் வெகு ஜனங்களின் போத அபிவிருத்தியின் பொருட்டு, ஹே பிரஹ்மசொரூபரே! பாலகனுடைய லீலாப்பிரசனத்திற் பிதாவேபோல, சினஞ்செய்தல் கூடாதாம். மரித்தவன் பாராவயணமதென்னே, தரித்தவன் காணுந் தகைமையதென்னே உள்ளே யநுபவமுறுவதென்னுருதென்? என, அற்றேற் றத்துவபோதத்தால் எல்லாவையங்களும் எடுபட்ட வுனக்கு, எங்ஙனம் மாயாமயமாய்ப் பொருத்தமொன்றுமில்லாமற் பொலியும் இந்தச்சமுசாரத்திலுற்ற விவகாரத்தில் இத்தகைய வையம் உண்டாயது; என, உணர்ந்திருந்தபோதினும், இவ்விசேடங்களியாவற்றையும் மீளவும், வெகுவாக அஞ்ஞ அனுக்கிரகப்பொருட்டு வினவுகின்றேன், அவ்வியாவற்றையும் பரமகருணையினாலே கூறியருளவேண்டும்; என, புரியட்டகமென்று ஒன்றுளது அதுவே செய்யும் யாவற்றையும் என, இங்ஙனமாயின், பஞ்சீகிருதபூதபாகத்தானே ஜகத்தாகாரமாய்ப் பரிணமமுற்றதும், அபஞ்சீகிருதபூதகாரியலிங்க பாகத்தானே தற்பிரதிபிம்பக்கிரக தர்ப்பண பூதமும் ஆய புரியட்டகத்துக்கேதான் யாதுருபம், அதனைத் தான் தாங்கள் அனுக்கிரகம் செய்யவேண்டும். என்று ஸ்ரீ இராகவர் வினாதல்:—துன்னுலகையென்பதாதி. ஜகத்துச் சகத்திர நிர்மாண மகிமையுடையதும், தர்ப்பணமும் ஆயபுரியட்டகத்திற்கு ரூபம் எத்தகையது எனத் தாங்கள் ஹே பகவன் திருவருள் செய்யவேண்டும்.

(ச.) உலகை யாயிரமட்டமைப்பதாகிய மகிமையுள்ள கண்ணடிபோல், நிர்மலமாய்த் தோற்றுகின்ற புரியட்டகத்தின் வடிவெத்தன்மையது, மொழி; (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அச்சொரூபத்தைக் கூறும்பொருட்டு ஸ்ரீ வசிஷ்டபகவான் அதன் மூலமாய அறியப்பெறாத பிரஹ்மதத்துவத்தை நன்கறிவித்தல்:—ஆதியென்பது.

ஆதிமுடி வின்றியே சகங்களின்வித் தாம்பிரம மடுத்தவண்ணம்
பேதமுற மேவுதலுஞ் சீவனு நாமென்று பேதித்தெண்ண
மேதமுற நானென்று மனனமுற மனமாகு மியைந்தபோதம்
போதமுறு நிச்சயத்தாற் புந்தியாம் புலன்களாற் பொறிகளாகும்.

(ப - ரை.) ஆதிமுடிவின்றியே சகங்களின் வித்தாம் = முதலும் முடிவுமில்லாததாய் உலகங்களின் பீஜமாம், பிரமம் = பரமசிவம், அடுத்தவண்ணம் = சம்பந்தித்தபிரகாரம், பேதமுற மேவுதலும் = வேற்றுமையை நன்கடைதலும், சீவனும்=ஜீவனும், நாமென்று= அகமென்ன, பேதித்தெண்ணம் = வேற்றுமைப்பட்டு நினைவு, ஏதமுறநானென்றும் = குற்றம்பொருந்த அகமென்றும், மனனமுற = மனனஞ்செய்த அளவே, மனமாகும் = மன மெனப்பெறும், இயைந்தபோதம்=பொருந்திய உணர்வு, போதமுறும் = உணர்ச்சியடை யும், நிச்சயத்தால் = துணிபினால், புந்தியாம் = மதியாம், புலன்களாற் பொறிகளாகும் = சப்தாதிகளைக் கவர்தலால் இந்திரியங்களாகும்.

(ஸ்ரீ - வீர.) ஆதியும் அந்தமும் இல்லாதது, ஜகத்துக்கு விரையது நோயில்லாதது, பிர காசவடிவது, சுத்தசின்மாத்திரம், கலை வினைகழன்றது ஆக எந்தப் பிரஹ்மமுளதோ, அந்தப் பிரஹ்மமே விண்ணாதிருக்குமபூதத்தைச் சிருட்டித்து, அபஞ்சீகிருதமாயவதனால், லிங்கத் தையும், பஞ்சீகிருதத்தானே பிரஹ்மாண்டத்தையும், சிருஷ்டித்து, அதனுள்ளே பிரதிபிம்ப லக்ஷணவிவ்கார எதிர்முகத்தகைமையை யடைவுற்றதாகி, சூக்திரப்பிராணன்களின் அபி மானத்தினாலே தாரணத்தினின்றும் ஜீவன் என எண்ணத்தக்கவனுவன்; அச்சீவன்றானே, இத்தேகத்தில், வாசனைவளர்வினாலும் அங்கவிருத்தியினாலும், விருத்தியாவன், விருத்தி யானவ்வன்றானே வெளியுள் வியாபாரவடிவமாய்ப் புடம் ஆடி யலைந்து திரிவன்; அதற்கே யபிமானுதி வியாபாரபேதத்தானே நாமபேதங்களைக்கூறல்:—நாமென்பதாதி. அகம்பாவத் தானே யகங்காரமாம், மனனத்தானே மனமெனப்பெறும், போதநிச்சயத்தானே புத்தி யெனப்பெறும், விடயங்களைக் கவர்தலானே இந்திரியமாம்.

(ச.) சகங்களின் வித்தாம் பிரமமே, பேதமுறமேவுதலும் = அவித்தையை யடைந்த தாய், சீவனும், நாமென்று பேதித்தெண்ணம் = நானென்னு மபிமானத்தினால், நானென் றும் = அகங்காரமாம், மனனமுற = சங்கற்பரூபத்தினால், மனமாகும், போதம் போதுறு நிச்சயத்தாலே, போதநிச்சயரூபமான வியாபாரத்தினால், புந்தியாம், புலன்களால் = ஆன்மா வாற் பார்க்கப்படுதலினாலும் அதற்குக் கன்மத்தைச் சம்பாதித்தலினாலும், பொறிகளாகும்= இந்திரியமெனப்படும் என்பதுபொருள். மூ: கலாகலனவர்ஜிதம் = மாயையின் கிராசத் தால்வர்ஜிதமாயதென்பதாம்; சின்மாத்திர ஆன்மசொரூப மறதியினாலே யகம்பாவமா மென்க; இதுவும் தானேதானும். இந்திரியம் இந்திரலிங்கம் இந்திரதிருஷ்டம் என்பதாதி சூத்திரத்தானே இந்திரியசப்தத்திற்கு இந்திரதிருஷ்டம் என்னும் பொருளில், நிபாதஞ் செய்யப்பெற்றிருத்தலின் என்பதாம். (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேலும் பலதிறம் விரிந்ததைப் பகுத்தேயுணர்த்தி, பெயர் வேறு பாட்டினையும் உணர்த்தல்;—காயமென்பது.

காயமெனு நினைவாலே காயமாங் கடநினைவாற் கடமதாகு
மேயசுபா வத்திந்த வடிவுபுரி யட்டகமா மென்பர்வீரா
தூயவறி ஞன்செய்வோன் புசிப்பவன்சான் றென்றன்முதற் றுரிசிலோடி
மேயபெயர் சீவனு மறிவுபுரி யட்டகமாய் விளம்புமன்றே.

(ப - ரை.) காயமெனும் நினைவாலே = சரீரமென்னு மெண்ணத்தாலே, காயமாம் = தேகமாம், கடநினைவாற் கடமதாகும் = குடமென்னு மெண்ணமுண்டாகவே குடமதாகும், ஏயசுபாவத்திந்த வடிவுபுரியட்டகமா மென்பர்வீரா = ஹே இரகுவீரனே! பொருந்திய இயற்கையோடுகூடிய இந்தச் சொரூபம் புரியஷ்டகமாம் என்று கூறுவர், தூய்வறிஞன் செய்வோன் புசிப்பவன் சான்றென்றன்முதல் = சுத்தவுணர்வினன் கருத்தாபோக்தா அறிபவன் என்பன முதலவாக, துரிசிலோடி மேயபெயர் சீவனுமறிவுபுரியட்டகமாய் விளம்பும் = குற்றமில்லாமற் பொருந்திய நாமம் வாய்ந்த சீவனும் சம்வித்தேபுரியஷ்டகமாய்க் கூறப்பெறும். அன்று ஏ = அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) உடற்பாவனையால் உடலாம், குடபாவனையாற் குடமாம், இதே இயற்கை வடிவதைச் சனங்கள்புரியஷ்டகமென்பர் = சர்வவியாபார சாதாரணசுவாபாவார்த்மாப்புரியஷ்டகயென்னும் நாமத்தால் ஸ்மரிக்கப்பெறும், ஞானேந்திரிய வியாபாரத்தானேஞாத் தன்மையாம், கருமேந்திரிய வியாபாரத்தானே கருத்திருத்தன்மையாம், அதன்பல சுகதுக்காசிரயத்தன்மையானே போக்திருத்தன்மையாம், எல்லாவற்றின் உதாசீனபாவத்தானே ஒளிர்வையுமுண்டாக்கவே சாக்ஷித்தன்மையாம், ஆதிபதத்தால் போககரணத்தன்மை இடமாந்தன்மை முதலியவற்றின் நற்கவர்ச்சியாம்; அத்தியாசத்தானே இத்தர்மிக்கியாய எச்சம்வித்துளதோ அதுவே சிற்பிராதான்யத்தானே ஜீவன் எனப்பெறும், ஜடாம்சப்பிராதான்யத்தானே அதுவேபுரியஷ்டகம் என்று கொள்ளப்பெறும்.

(சு.) மேயசுபாவத்து = இந்தப்பிரகாரமான சுபாவரூபமுள்ள, இந்த வடிவையே புரியட்டகமாமென்று அதனை யறிந்தவர் சொல்வர், அதனிலக்கணம், அகங்காரமாந் தொழின் மேவிப் புந்தியுடன் விதையோடுமனுநி யக்தப்புகன்றதெல்லாஞ் சேர்ந்துபுரியட்டகமாயுயிர்களுளப்பூவில் வண்டாம்; என்று முன்பு கூறப்பட்டது; இப்போது பிரகாராந்தரத்தால் அதனிலக்கணங்கூறல்:—அறிஞன், செய்வோனுன், புசிப்பவனுன், சான்றுநான் என்பது முதலான, துரிசிலோட்டி = அபிமானமுடைய அறிவே, மேயபெயர், சீவனும் = சீவனெனப்படும், அவ்வறிவின் சொரூபத்தைப் புரியட்டகமென்பர், அந்தக்கரணமணிப் பிரதிபிம்பமாய்க் கருத்திருத்துவபோக்திருத்துவாதி யபிமானமுள்ள அறிவே சீவனும் புரியட்டகமும் ஆமென்பதுபொருள். (8)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இதனுனே தன்ருதாத்மிய பாவித புத்தியாகாரங்கட்குக் காலவேற்றுமையானே வேற்றுமையால் ஜீவனும் காமக்குரோத ஹர்ஷவிஷாதாதி அநுரஞ்சிதனுய் நானுப்போல ஆவன், ஆயசமஷ்டி வியஷ்டிஜீவனுய அவனுக்கே விரைக்கு மூனேகொழுந்திலை சாகோபசாகையாதிபோல், எல்லாவுலகமும் ஆகாரமாம் என்னுங் கருத்தானுரைத்துத் திருஷ்டாந்தமாக உபாக்கியானந்தொடங்கல்:—கடியவென்பது.

கடியபுரி யட்டகத்தின் வசத்தாலே கனவின்மேற் கனவுபற்றி
நெடியபல பொய்கானு நெறிபோல விச்சகமு நிகழுமன்றே
படியளந்தோ னருளுவதோர் நெறிகேளா யந்நெறியைப் பார்த்தன்பற்றி
யடிமுடிவில் பதசீவன் முத்தனுய்ச் சுகசிவி யாகுமன்றே.

(ப - ரை.) கடியபுரியட்டகத்தின் வசத்தாலே = வலுவான புரியஷ்டகத்தின் வயத்தினலே, கனவின்மேற் கனவுபற்றி = சொப்பனத்தின்மேற் சொப்பனத்தை யடைந்து. நெடிய பல பொய்காணும் = பெரிய அநேகமித்தைகளையே பார்க்கும், நெறிபோல=மார்க்கமேமானும், இச்சகமும் நிகழுமன்றே = இந்தச் சகத்தும் பிரதீதியாம் அப்போதுமாத்திரம் தோன்றாநிற்கும்; படியளந்தோன் அருளுவதோர்நெறிகேளாய் = பூமியைத் திருவடியானே யளவிட்டருளிய ஸ்ரீ பரந்தாமன் இனித்திருவருள் செய்வதாகிய ஒப்பற்றமார்க்கத்தைக்கூறக் கேட்பாயாக, அந்நெறியைப் பார்த்தன்பற்றி = அந்தமார்க்கத்தை யருச்சுனன் றொடர்ந்து, அடிமுடிவில் பதச்சீவன் முத்தனய் = ஆதிமத்தியாந்தரகிதமான பதவடிவ சீவன் முத்தனகி, சுகசீவியாகுமன்றே = ஆநந்தவாழ்வுடையவனய் ஆவனப்போதே, அன்று ஏ அசைநிலைகள் எனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) அதனனே அவ்வக்காலத்தில் ஜீவன் அயல் அயலோன்றானேயாவன், பாவிதாகாரத்தினலே, புரியஷ்டக வியற்கையானே காலத்தால் அநந்தவாசனகணிக உதயமாய ஆகாரத்தை யடையாநிற்பன். நீர் தெளித்தலானே விரையானது இலைமுதலியவை யாதலேபோல, வாசனைப்படியே ஆகாரவானியான் சரீராதியான் ஸ்தாவராதியான் சராதியான் என ஆவன் ஆயின் கற்பிதபேதங்களில் சத்தியத்துவ ஆரோபத்திற் காரணமென்னெனின்? வியஷ்டித்தன்மையானே ஜீவிப்பவனயினும், அத்தியந்த ஜீவபூதமாய தனக்கு உண்மையாக எங்குமிருக்குந்தன்மையானும், முடிபிலாத்தன்மையானும், அபரிச்சேதத்தானே சத்தியத்தன்மையானும் எதை யெதைப் பாவிக்கலரமோ, அதுவதுவாகவே விரைவிலேயே அவ்வதன்பற்றதனலே தற்சத்தையாரோபத்தினலே, சத்தியம்போலிலங்கும், இலங்கவே, அதன்பற்றறுதலானே, அதன் சத்தியத்தகைமை மயல்நீங்கியவழி, தத்துவத்தை யறிந்தவனுக்குச் சீவன் முக்தியானது சித்திக்கும் என்பதாம். இதேபொருளானது ஸ்ரீமத் பகவத்கீதையின்கண் ஸ்ரீ பகவானும் அருச்சுனன் பொருட்டுபதேசித்தருளப்பெற்றதாம் எனல்:—படியளந்தோனென்பதாதி. ஸ்ரீபுண்டரீகாக்ஷரானே யருளப்பெற்ற தூயதாயபற்றிலாநெறியைக் கூறக் கேட்பாயாக, எதனைத்தழுவிப் பாண்டுவின் புத்திரனகிவரும் அருச்சுனன் என்னும் மகாராஜருஷியானவன் ஜீவன் முக்தனகிச் சுகமாக ஆன்மாவில் வாழ்ந்துகொண்டிருந்தனனே; ஹே மகாபாகுவே! அந்நெறியைக் காட்டும்பொருட்டே ஜீவன் முக்தி சுகவிசிஷ்ட அர்ச்சுன ஆக்கியாயிகை தொடங்கியதாம்.

(சு.) எப்படி சனங்கள் புரியட்டகவசத்தாலே சொப்பனத்தினின்றுஞ் சொப்பனந்தரத்தை அசத்தியமாகவே காண்பதுபோல், இச்சகத்தையுங் காண்கின்றான் என்றதாயிற்று. இத்தன்மையான சொப்பனப்பிரபஞ்சத்தை மித்தையென நிச்சயித்து அருச்சுனன்போல் அசங்கனகவே விவகரிக்கவேண்டுமென்று அவன் கதையை வியந்துரைத்தல்; படியளந்தோன் என்பதாதியால், (ஓர்நெறி = அசங்கமகதியை.) (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அருச்சுனன் உபாக்கியானத்தை விவரப்படுத்தத்தொடங்கல்:- வெருவென்பது.

வெருவாம லருச்சுனனுட் கழிப்பதுபோ னுட்கழிப்பாய் வீரவென்னப்
பெருமானே யருச்சுனனெப் போதுதிப்ப னவனுக்குப் பின்னேகாந்த
னருளாலெவ் வாறுபதே சிப்பதெனக் கேட்டருளு மண்ணனுக்குத்
திருமால்வந் தருச்சுனற்கு மேலுணர்த்து நெறிவசிட்டன் செப்பலுற்றான்.

(ப - ரை.) வெருவாமல் = அஞ்சாமல், அருச்சுனன் நாட்கழிப்பதுபோல் நாட்கழிப்பாய் = பார்த்தன் காலங்கடத்துவதுபோலத் தினங்கடத்துவாய், வீரவென்ன = வீர இராகவனேயென்றுகூற, பெருமானே = ஹே பிரஹ்மசொரூபராகிய பகவன் ! அருச்சுனன் எப்போதிப்பனவனுக்குப் பின்னைகார்தன் = பார்த்தன் எக்கால் உதயமாவன் அவ்வருச்சுனனுக்கு ஸ்ரீ இலக்குமிநாயகன், அருளால் = கிருபையால், எவ்வாறு உபதேசிப்பது = எங்ஙனம் அனுக்கிரகம் செய்வது, எனக் கேட்டருளு மன்னனுக்கு = என்று வினவியருளும் ஸ்ரீ இராகவருக்கு, திருமால்வந்து = ஸ்ரீமந்நாராயணர் திருவவதாரஞ்செய்து, அர்ச்சுனற்கு = பார்த்தனுக்கு, மேலுணர்த்தும் = பவிஷ்யத்துபதேசஞ் செய்தருளும், நெறி = மார்க்கத்தை, வசிட்டன் செப்பலுற்றான் = ஸ்ரீ வசிஷ்டபகவான் உபதேசிக்கத் தொடங்கினார்.

(ஸ்ரீ - வீர.) விரைவாகத் துக்கமின்றி நாட்களைக்கழிப்பன் அதுபோற் கழிக்கலாம், என்றிட, ஹே பிரஹ்மசொரூபரே ! எப்போது அவ்வர்ச்சுனன் உண்டாவன், எத்தகைய அசக்தத்தகைமையை ஸ்ரீ ஹரியானவர், அப்பாண்டுநந்தனன்பொருட் டருள்செய்வார். என ஸ்ரீ இராகவர் வினவ, ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவதாவது; குணமுருதது சாந்தசாம்: மூலம் தற்பொருளில் ணிச்விகுதியாயது. (5)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டுமுதலில் அர்ச்சுன அவதாரத்திற் காரணங்கூறும்பொருட்டு சர்வமூலத்தைத் தொடங்கல்:—உகமென்பது.

உகமாலு முடிவுதொறு முயிரனைத்துஞ் செற்றவினை யுன்னிக்கூற்றுத்
தகவான தவஞ்செய்யு மொருகாலெட் டாண்டுதச வருடமோர்கான்
மிகுமீரா றாண்டொருகா லையாண்டோர் காலோர்கான் மீண்டேழாண்டு
துகடீரும் பதினாறாண் டொருகாலிப் படிப்பலகாற் றுணிந்துநோற்கும்.

(ப - ரை.) உகமாலும் முடிவுதொறும் = ஒவ்வொரு சதுர்யுகஈற்றிலும், உயிரனைத்துஞ் செற்றவினையுன்னி = சகலஜீவர்களையும் கொன்ற கருமம் பிடித்துக்கொண்டதென்னும் சங்கையினாலே, கூற்று = யமதருமராஜாவானவர், தகவான தவஞ்செய்யும் = தகுதியானதவத்தை யியற்றுவர், ஒருகால் எட்டாண்டு = ஒருபோது எட்டுவருடம், தசவருடம் ஓர்கால் = பத்துவருடம் ஒருபோது, மிகும் ஈராறு ஆண்டு ஒருகால் = ஒருபோது மிகுதியான பன்னிரண்டுவருடம், ஓர்கால் ஐயாண்டு = ஒருபோது ஐந்துவருடம், மீண்டு ஓர்கால் ஏழாண்டு = மறுபடியும் ஒருபோது ஏழுவருடம், துகள்தீரும் = குற்றமறும், பதினாறாண் டொருகால் = ஒருபோது சோடசவருடம், இப்படிப் பலகால்=இவ்வண்ணம் பலசமயம், துணிந்துநோற்கும் = நிச்சயித்துத் தவம்புரிவர்.

(ஸ்ரீ - வீர.) தம்முடைய அதிகாரத்தை மாறாமல் நடத்திவரும் அந்தப் பகவானாகிய யமதருமர், ஒவ்வொரு சதுர்யுகம் செல்லும்போதும் அல்லது துவாபரஈற்றிலும் துவாபர ஈற்றிலும் ஒவ்வொருபோது பூதங்களைக் கொல்லும் பாவசங்கையினானே, தவத்தை யினிது புரிவர். அதன்கட் காலநியமம் இல்லையெனல் ஒருகாலென்பதாதி. ஒருபோது 8 வருடங்கள், 10 வருடங்கள், 12 வருடங்கள், ஒருபோது 5 வருடங்கள், 7 வருடங்கள், ஒருபோது 16 வருடங்கள், ஆகப் பலதிறனார்.

(சு.) செற்றவினை = கொன்றபாவத்தை, உன்னி = அதனிவிர்த்திக்கு, தகவான தவஞ்செய்யும், நோற்கும் = தவஞ்செய்யும். (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நமனுர் நடக்கும் நடையும் நானிலத்தொழுகும் ஒழுக்கமும் காட்டல்:—இப்படியே என்பது.

இப்படியே யமன்றவம்பூண் டோருயிருங் கொல்லாம லிருந்தபோது
மொய்ப்புறுபல் லுயிராலும் பெயர்விடமற் றறநெருங்கு ஞாலம்
மப்படியி னலந்த விசித்திரமாம் பலபூத மநேகமான
துப்புறுமு கங்களாற் பூபாரந் தொலைவிக்குந் தொன்றுதொட்டே.

(ப - ரை.) இப்படியே=இவ்வாறே, யமன் தவம்பூண்டு ஒருயிரும் கொல்லாமலிருந்த போது = தருமராஜர் அருந்தவந்தொடங்கி எப்பிராணியையும் இம்சியாமல் இருந்தகாலையில், மொய்ப்புறு பல்லுயிராலும் = ஒருங்குசேர்ந்துள்ள பல ஜீவர்களாலும், பெயர்விடமற்று = அசையக்கூடவிடமில்லாமல், அறநெருங்குஞாலம் = அத்தியந்தம் நெருக்கத்தையடையும் பெரிய ஜகத்தானது, அப்படியினலந்த விசித்திரமாம் = அவ்வாற்றினால் அந்த வைசித்திரியமான, பலபூதம் = பலவுயிர்களும், அநேகமானதுப்புறும் ஊகங்களால் = பலபல வகையான பயனைப்பயக்கும் யுக்திகளினாலே, பூபாரம் தொலைவிக்கும் தொன்று தொட்டே = பூமியின்பாரத்தைத்தீர்க்கும் அநாதியாகவே.

(ஸ்ரீ-வீர.) அத்தருமராஜர் நியமமாக இருந்துகொண்டு தவத்தை நடத்தி வரும்போது நொதுமலுடனிருப்ப, மிருத்தியுவானவர் ஜகத்ஜாலத்தில் எவ்வுயிர்களையுமே இம்சியார்; அவ்வகிம்சையாகிய ஏதுவினுனே மகீதலமானது ரந்திரமில்லாதபடி வெகுபூதக்கூட்டங்களானே சஞ்சாரயோக்கியமின்றியதாய் ஆம்; மழைகாலத்தில் வேர்வைவாணுகிய குஞ்சரம் மசகங்களாற்போலும். அதன்பின்னர் இவ்விசித்திரங்களாய பூதங்களை ஸ்ரீ விஷ்ணுவாதி தேவதைகள் அங்கிசாவதார பாரதயுத்தாதி வெகுவே யுபாயங்களால், பூபாரநிவிர்த்தியின் பொருட்டு இம்சையினுனே குறைவுசெய்வார்கள். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்பார அவதாராதிவிவகாரமும் அநேகமுறை நடந்துளதென்றும், அதில் நடந்த விசேடமின்னதென்றும் கூறல்:—இவ்வகை, அதனலே, என்பவை.

இவ்வகையே நாலுகமும் பல்லுயிரு முலகமுத லிறந்துபோன
வவ்வகையோ ரெண்ணில்லை யாதித்தன் றந்தநம னந்தவண்ணங்
கைவளர்பல் லுயிர்கொன்று கந்தநா ளுறுபாவங் கட்டழிப்பா
னெவ்வமறு தவம்பூண்டு பன்னீராண் டேகாந்தத் திருந்தவெல்லை.

அதனலே சாவில்லாப் பல்லுயிரா லறநெருங்கு மதிபாரத்தை
யெதனலே தீர்வமெனத் திருமாலைச் சரணுக வெய்தும்பூமி
மதுருத னிருவடிவா யவனியிலே யவதரிக்கும் வசுதேவற்குச்
சுதனுகும் வடிவொன்று பாண்டுவுக்குச் சுதனை சொரூபமொன்றே.

(ப - ரை.) இவ்வகையே = இவ்வாறே, நாலுகமும் பல்லுயிரும் உலகமுதல் = சதுர்யுகங்களும் அநேக வுயிர்களும் உலகமுதலனவும், இறந்துபோன அவ்வகையோர் எண்ணில்லை = சென்றுபோனவை அப்பிரகாரம் ஒரு கணக்கே கிடையாது, ஆதித்தன் தந்த நமன் = சூரியபகவான் அளித்த தருமர், அந்தவண்ணம் = அந்தப்பிரகாரம், கைவளர் பல்லுயிர்கொன்று = தம்மிகப்பட்ட பல உயிர்களையும் இம்சித்து, கந்தநாளுறுபாவம் = சென்றநாள் ஒன்றும் பாதகம், கட்டழிப்பான் = கெடுக்கும்பொருட்டு, எவ்வமறுதவம்

பூண்டு = குற்றமற்ற தவத்தை மேற்கொண்டு, பன்னீராண்டு = பன்னிரண்டு வருடங்கள், ஏகாந்தத்திருந்த எல்லை = தனித்திருந்துகொண்டசமயம்.

அதனாலே = அக்காரணத்தினாலே, சாவில்லாப்பல்லுயிரால் = மடியாத பல ஜீவர்களால், அறநெருங்கும் = அத்தியந்தம் நெருங்கியுள்ள, அதிபாரத்தை = மிகுந்தபாரத்தை, எதனாலே தீர்வமென = எவ்வுபாயத்தினாலே தீர்த்துக்கொள்ளுவோமென்று, திருமாலைச் சரணாக = ஸ்ரீமந்நாராயணரைச் சரணாகதியாக, எய்தும்பூமி = அடையும் பூமிதேவி, மதுசூதன் = மதுவென்னும் அசுரனைக்கொன்ற ஸ்ரீபகவான், இருவடிவாய் = இரண்டுரூபமாய், அவனியிலே யவதரிக்கும் = பூமியின்கண்ணே திருவவதாரஞ்செய்யும், வசுதேவற்குச் சுதனாகும் வடிவொன்று = வசுதேவனுக்கு மைந்தனாகும் ரூபம் ஒன்று, பாண்டுவுக்குச் சுதனா = பாண்டுமகாராஜாவுக்கு மகனான, சொரூபம் ஒன்றே = வடிவம் ஏகமே.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் யுகசகத்திரங்களும், விவகாரசதங்களும், பூதங்களும் உலகங்களும், மிகவும் கழிந்தன வநேகங்களாம், இப்போதுள்ள பிதுருநாயகராகிய இவ்வைசுவத யமதருமரால் அநேகயுகங்கள் கழிந்த அப்போது பாவங்கணசித்தற்பொருட்டுப் பன்னிரண்டு வருடங்கள், ஈண்டு விரதவொழுக்கமானது செய்யத்தக்கதாகவரும், அப்போது ஜனங்களின் பீடனம் வெகுதூரத்தே விடத்தக்கதாகும்; இவ்விசேஷணத்தாலே விரதசரியை, அஹிம்சாதிகடிந நிர்விகற்பசமாதிரூபமென அறியப்பெறுகின்றது. அதனாலே இந்த உருவியானது சாவாமறுடபூதங்களானே இரந்தரமில்லதாய்த் தீனயாய், வனகுல்மசங்கீர்ணமாய், காடேயடர்ந்ததொப்பப் பாரபூதங்களானே ஆம், பூபாரத்தினாலே மெலிந்த திருவரமேனியை யுடையவளாகிய பூதேவி ஸ்ரீ ஹரியைச் சரணாகதியாகவடைவள், பகையினாலே துன்புற்ற காந்தையாகிய பிரியை தீனயாய்ப் பதியைச் சரணடைவதேபோலும் பின் ஸ்ரீ ஹரியானவர், நரன் எனவும் நாராயணன் எனவும் இரண்டு திருமேனியராக, அகில, தேவாங்கிசர்களாய்ச் சகாயத்தின்பொருட்டுவந்த அநுகதர்களுடன் பூமியின்கண்ணே திருவவதாரஞ்செய்வர், வாசுதேவர் எனப் பெயரியைந்து புகழ்ப்பெற்ற வசுதேவகுமாரர் ஒருவர், ஆக ஆகமெடுப்பர், பாண்டவன் என்னும் அருச்சுனன் ஸ்ரீ ஹரியின் இரண்டாவது வடிவமாம்.

(ச.) சூரியபுத்திரர் ஆகிய யமதருமரானே அவ்வாறே பன்னிரண்டு வருடங்கள், ஜனமாரணம் தூரத்தே விடுபட்ட விரததபச்சரியை செய்வதுண்டு. (8-9)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அருச்சுனற் குபதேசிக்க நேர்ந்தவிதத்தை யறைதல்:—வாசுதேவென்பது.

வாசுதே வப்பெயரு மருச்சுனனு மமும்படைத்து வருமப்போதில்
வீசுதார் திருதராட் டிரன்மைந்தர் கிளைஞரொடும் விசயன்மேலே
யேசுபோர் செய்யவருந் தன்கிளைஞர் மரணத்துக் கிரங்கிப்பார்த்த
னுசுசாா சனம்வலியா னதுபொருட்டா லுபதேச மருளுமாயோன்.

(ப - ரை.) வாசுதேவப்பெயரும் அருச்சுனனுமமும் படைத்துவரு மப்போதில் = ஸ்ரீ வாசுதேவன் என்னுந் திருநாமமும் பார்த்தன் என்னும் பெயரும் தாங்கிவந்த அந்தக்காலத்தில், வீசுதார் திருதராட்டிரன்மைந்தர் = மணம்வீசும் வெற்றிமாலையைத் தரித்த திருதராட்டிரன் குமாரர், கிளைஞரொடும் = உறவினரொடும், விசயன்மேலே = அருச்சுனன்மேல், ஏசுபோர் = நிந்திதயுத்தத்தை, செய்யவருந் தன்கிளைஞர் = செய்யவாராநின்ற

தன்று உறவினர், மரணத்துக்கிரங்கி = சாவுக்கிரக்கமுற்று, பார்த்தன் = பிருதையின் மைந்தன், ஆசுசராசனம் வளையான் = விரைவில் வில்லைவளைத்துப் போர்செய்யாமல் மயங்குறுவன், அதுபொருட்டால் = அதனை நிமித்தமாகக்கொண்டு, உபதேசம் அருளும் மாயோன் = கீதோபதேசத்தை யநுக்கிரகம் செய்தருளுவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி.

(ஸ்ரீ-வீ.) அவ்விருவடிவங்களும் அங்ஙனமங்கு நிகழும்போது, துரியோதனன் எனப் பெயரிய அருச்சுனன் பிராதா ஒருவன் வருவன். அவன் சில இடர்விளைக்க இருவருக்கும் போர் ஏற்படும், அதன்கண்ணே 18 அக்குரோணி சைனியங்களும் பந்துக்களும் ஒருங்கு கூடுவார்கள், கூடிய மரண உன்முகர்களாய இருதிறத்தன்னுறவினர்களையும், இரு பக்கத்துற்ற சேனைகளையும் மன்னர்களையும் கண்டுவிடாதங்கொண்டு போரின்பொருட்டு முயலாதுமயலுவன். அப்போது அக்காரியத்தை முன்னிட்டு அகிலலோக அனுக்கிரகப் பொருட்டு ஸ்ரீ ஹரியானவர் திருவருள் செய்வர். (10)

(ஸ்ரீ - வீ - அ - கை.) அவ்வுபதேசம் இன்னதென விரிவாகக் கூறத்தொடங்கல்:— விசயன் என்பது.

விசயனெனும் பெயருடற்கு விண்டுவெனு ஞானவுடல் விளம்புமுண்மை
யிசைவுறக்கே ளநந்தமாய்த் தெரிவரிதா யடிமுடிவற் றிருக்குமுன்னை
யசைவறப்பா ரருச்சுன வறிவுருவங் குற்றங்க ளின்றிநிற்குந்
தசையுடலி லொருக்காலும் பிறப்புறா யிறப்புறாய் சத்தாநின்றாய்.

(ப - ரை.) விசயனெனும் பெயருடற்கு = அருச்சுனன் என்னும் நாமம்வாய்ந்த சரீரத்திற்கு, விண்டுவெனும் ஞானவுடல் = ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியென்னும் ஞானத்திருமேனி, விளம்பும் உண்மை = உபதேசிக்கும் யதார்த்தப்பொருளை, இசைவுறக்கேள் = பொருத்த முறும்படியாகக் கேட்குதி, அநந்தமாய்த் தெரிவரிதாய் = அந்தமில்லாததாய் அறிதற்கரியதாய், அடிமுடிவற்று = ஆதியும் அந்தமும் இல்லாததாய், இருக்குமுன்னை = இராநின்ற ஆன்மசொரூபத்தை, அசைவறப்பார் = நிச்சலமாக நோக்குதி, அருச்சுன = ஹேபார்த்த! அறிவுருவங் குற்றங்களின்றி நிற்கும் = சித்துவடிவம் தோஷங்களின்றி யிலங்கிக்கொண்டிருக்கும், தசையுடலில் ஒருகாலும் = மாமிசமயமலச்சரீரத்தில் எப்போதும், பிறப்புறாய் இறப்புறாய் = ஜனனமரணத்தை யடையாமல், சத்தாய் நின்றாய் = சத்துவடிவமாய் நிற்கின்றாய்.

(ஸ்ரீ - வீ.) அவ்வர்ச்சுனனெனப் பெயரியதேகத்தை நோக்கி, அடைவுற்ற காரியமுக்கிய சித்தியின் பொருட்டு, அதனை முன்னிட்டு, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் ஞானத்திருமேனியினனே அதாவது தானே சித்தமாய ஆன்மபோதத்தோடுகூடிய திருமேனியினனே, நன்குணர்த்தி யருளுவதாவது: அநந்தமாயும் அவ்யக்தமாயும் ஆதிமத்தியாந்தரகிதமாயும் ஆன்மாவாயும் அறிவுருவமாயும் இருக்கும் உன்னை நன்கு காணுதி, அறிவுவடிவமாகவே நீ யுள்ளாய், அபரிச்சின்னமாகவேயுள்ளாய், அதனானே யாதொரு தோடமும் அற்றவனாகவே யுள்ளாய், அதனானே பிறப்பற்றவனுவாய், நித்தியனாகவே யிருக்கின்றாய், நிராமயனாக விருக்கின்றாய், அஞ்ஞான வதன்காரியகளங்க அஞ்சனம் அகன்றவனாகவேயிருக்கின்றாய், இதனானே பந்துக்களின் பற்றுதலும், அவர் மரணுதி சம்பாவனையானேயுண்டாம் துக்கமும் நினக்குக் கணிக்கத் தகுதியவல்லவாம் என்பது கருத்து.

(ச.) ஞானவுடல் ஸ்ரீ கிருஷ்ணவதார ரூபமாய், ஸ்ரீ இராமா நீகேள், ஸ்ரீ பகவான், உன்னை = தேகாதிவிலக்ஷணமாய், அநந்தாதிலக்ஷணமான ஆன்மாவையே, அசைவறப்

பார் = விசாரிப்பாய், அருச்சுனனென்பது, சோகநிவிர்த்திக்கும்விளி. அஜனுயுள்ளாய், அத னுனே நித்தியனுக விருக்கின்றாய், நிராமயனுக் விருக்கின்றாய், ஆண்டு அறிவுவபுவடிவி னுனே எங்கும் வியாபித்திருக்கின்றாய். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) போதனப்பிரகாரத்தையே விஸ்தாரமாக வருணித்தல்:—பிறப் பென்பது.

ட் ..லெல்லே யிறப்பில்லே யிவனென்ன வடிவில்லேப் பின்புண்டாகா
கர்ப்பணம், ஈசு
ாய் நித்தமா யழிகின்ற சரீரத்தி லழியாச்சற்று
தல், பங்கமறு ஞான
தான், எனுமிவற்றின் = தாழில்களீ யோயாது சங்கத்தை யொருக்கிச்செய்வா
செங்கண்முகிலே = செந் புணவா சாரமுறிற் பிரமமா யிமைப்பினிற்பாய்.

னுக்கு = என வினவிய யிறப்பில்லே = ஜனிப்பதுமில்லே மரிப்பதுமில்லே, இவனென்ன வார், செறிசங்கதூயன் என வோர் உருவமுமில்லே, பின்புண்டாகா வறப்பழைதாய் = பின்ன யுந்தீர்ந்தபோது,யந்தம் புராதனமாய், நித்தமாய் = நித்தியமாய், அழிகின்ற சரீரத்தில் = இடம் பரம்பிரஹ்மவ்தில், சற்றும் அழியாய் = கிஞ்சித்தும் நாசமுறாய், உறப்புரியுந் தொழில்

(ஸ்ரீ - வீர.) ஷ்த்தை யொருக்கிச் செய்வாய் = செய்யத்தக்கனவெனச் செய்யுஞ் ஈசுரார்ப்பணரூபம், எல் மல் பலப்பற்றுதலேயகற்றிச் செய்துகொண்டேயிருப்பாய், இறப் றின் பகுப்பு எத்தன சாரமுறிற் பிரமமாய் இமைப்பில் நிற்பாய் = கெடாத பிரஹ்மார்ப் மகாமோகம் நீ ஒழுக்கமுடையவனுக விருப்பையேல் ஒருகணத்தில் அந்தப் பிரஹ்ம தியாகத் பறுவாய்.

(ஸ்ரீ - வீர.) ஒருகாலத்திலும் இது ஜனிப்பதுங் கிடையாது மரிப்பதுங் கிடையாது, ஆயின் ஆதியந்த விகாரங்களின் நிடேதமேல் மத்தியிலுள்ள விகாரம் நான்கும் அடைவுறுமே யனின் விலக்கல்:—இவனென்பதாதி. இவ்வான்மா உண்டாகியிருந்து வளர்ந்து மாறு பட்டுப் பருத்துச் சிதைந்துபோவது மன்று, மறுபடிவருஞ் சன்மாதிகளையும் உடையது மன்று; அஜமும் நித்தியமும் சாசுவதமும் புராணமும் இதுவாம் சரீரம் கேடுற்றபோதி னும் இது கேடுறவேமாட்டாது. ஆகையாலஞ்சாமல் நினது சுவதருமத்தை யவசியம் செய் வாய், அஞ்ஞனுக்கும் தன்றருமம் மேன்மையின்பொருட்டாமாயின் தத்துவமுணர்ந்தவன் பொருட்டு என்னே யியம்புவது, அன்றியும் இராஜ்யலாபாதிலோபத்தானே தொடங்கிய போரில், "லோபமூலங்கள் பாவங்களாகும், இரசமூலங்கள் அங்கனுமயங்கள்" என்னும் நியா யத்தானே ஒருபோது அதர்ம அடைவாம், பலத்தின் சங்கத்தியாகத்தானே சித்தியசித்தி சமதையிலக்கண யோகத்திலிருப்பவனுக்கோ அவ்வடைவும் இலதாம், என அந்த யோகஸ் திதியை உபதேசித்தல்:—உறப்புரியுமென்பதாதி. யோகத்திலிருப்பவனுகிக் கருமங்களைச் செய்வாயாக, யோகமென்பது சமதிருஷ்டியாம், ஹே தனஞ்சயனே! பல ஆசையை அடி யோடும் விட்டுவிடுவாயாக, நிர்ச்சங்கனுய் நீ நேர்ந்தபடியாய தொழிலேயுடையவனுய், கிக முதியேலாயின் கட்டுப்படமாட்டாய். அல்லது இனியியம்புமிலக்கணபிரஹ்மார்ப்பண மதியி னுனே யாற்றப்பெற்ற சாஸ்திரீயமாய இக்கருமம் உனக்குப் பந்தப்பொருட்டாகாதாம் எனல்:—இறப்பில் என்பதாதி. சாந்தப்பிரஹ்மவபுவை யுடையவனுகிப் பிரஹ்மமயமாய கரு மத்தைச் செய்வாயாக, செய்யின் பிரஹ்மார்ப்பண சமாசாரனுய்க் கணத்தில் பிரஹ்மசொரூ பமேயாவாய்.

(ச.) இவன் = இவ்வான்மா, பிறப்பில்லே = பிறப்பதுமில்லே, இறப்பில்லே = இறப் பதுமில்லே, ஜனனமரணங்கள் தேகதர்மமாதலின் என்க, வடிவென்னவில்லே = ஜநநக்கிரி

யை யநுபவித்தவனென்பதற் கிடையில்லை, பின்புண்டாகா = மாறிமாறிவருஞ் சனனக் கிரியையின்றும், யாதினல் இவனுண்டாய்ப்பின்பு கடாதிபோல் உண்டாகானே அதனல் இறப்பில்லை, யாதினல் முன்புண்டாகாது பின்பு காலாந்தரத்து முண்டாகுவதின்றே அதனற் பிறப்பில்லையென்பது கூறியபொருளின் விரிவு, இங்ஙனம், அறப்பழைதாய் = விருத்திரகிதமாய், நித்தமாய் = சத்தாரூபாதி விகாரமின்மையாய் விளங்குநீ, அழிகின்ற சரீரத்தில் அழியாய் சற்றும், என்றதனற் சட்பாவவிகாரமின்மை கூறப்பட்டது. உறப்புரியுங்க = சித்தியசித்திகளிற் சமத்துவமுள்ளவனும், சங்கத்தையொருக்கி = ஈசுவரன் ஏ...ங்களும் பந்துக்களும் வென்னும் பலேச்சையையும்விட்டு, தொழில்களை = ஈசுராராதனங்களை ...றவினர்களையும், இரு இங்ஙனம் பிரமார்ப்பண வாசாரமுறில் = பிரமார்ப்பித 'சற்கரும...காண்டு போரின்பொருட்டு யாவாய்.

...ரட்டு அகிலலோக அனுக்கிரகப்

(ஸ்ரீ-வீர - அ-கை.) நிர்விசேட பிரஹ்மதத்துவ ஞானத்தினை... (10)
தாயின் சகுணஈசுரார்ப்பண புத்தியினைதல் வினையைச்செய்தி அதனனுற்தொடங்கல்:— இலதாம், அல்லது சர்வசங்கற்பத்தியாக லக்ஷணசந்யாச யோகயுத்தியினை... பந்த வடைவிலதாம், எனல்:—ஈசனென்பது.

...ல் விளம்புமுண்மை

ஈசனிடத் தெப்பொருளுஞ் சமர்ப்பித்து மிகுமீசன் வ... திருக்குமுன்னை
பாசமுறு முயிர்க்கெல்லா மீசனைய்ச் சங்கற்பப் பற்றுமாய்த்துந்
நீசமனைய்ச் சாந்தமனத் தினனுகி முனியாய்ச்சந் நியாசியாகி...றாய்.
யேசறுயோ கியுஞான வானுமாய் முத்தியினை யெய்துகென்ன. ...ய்ந்த சரீ

(ப - ரை.) ஈசனிடத் தெப்பொருளும் = எல்லாவஸ்துக்களையும் பரமேசுரனிட... சமர்ப்பித்து = அர்ப்பணஞ்செய்து, மிகுமீசன் வடிவமெய்தி = பரமஈசுரரது ரூபத்... யடைந்து, பாசமுறுமுயிர்க்கெல்லாம் = ஆவரணத்தையடைந்த ஜீவர்களுக்கெல்லாம், ஈசனைய் = ஈசுரனுகி, சங்கற்பப்பற்றுமாய்த்து = எண்ணங்களின் சம்பந்தத்தை எடுத்தெறிந்து, நீசமனைய்ச் சாந்தமனத்தினனுகி = நீ சமதிருஷ்டி யுடையவனும் உபசாந்தவுள்ளத்தினனுகி, முநியாய்ச் சந்நியாசியாகி = மனனசீலனைய்ப் பலசங்கத்தியாகியாய், ஏசறுயோகியும் ஞானவானுமாய் = குற்றமற்ற யோகியும் ஞானமுடையவனுமாகி, முத்தியினையெய்துகென்ன = மோக்ஷசொரூபத்தை யடைவாயாகவென்று அருளிச்செய்ய.

(ஸ்ரீ - வீர.) எல்லாப்பொருள்களையும் ஈசுரருக்கே யருப்பணஞ் செய்தவனுகி, ஈசுவரவடிவினனுகி, நோயற்றவனுகி, ஈசுவரனுகி, சர்வபூதங்களின் வடிவினனுகி, பூதலமுழுதாலும் பூசிக்கப்பெற்றவனுகி வாழ்வாயாக, சர்வசங்கற்பங்களையும் விட்டவனுகி, சமனுகி, சாந்தமனத்தினனுகி, முனியாகி, சந்நியாசயோகத்தோடு கூடினவனுகி, சகலமுஞ்செய்தும், முத்தமதியுடையவனும் வாழுதி.

(ச.) ஈசனிடத்து, சுபாசுபவடிவமான, எப்பொருளுஞ் சமர்ப்பித்தவனும், மிகுமீசன் வடிவம் = ஈசுரனிடத்தர்ப்பிக்கப்பட்ட வடிவமுடையவனும் ஈசுரனுகி, சன்னியாசியாகி = கன்மபலத்தியாகியாய். (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் உபதேசித்தருளப்பெற்ற அர்ச்சுனன் சங்கத்தியாகிகளின் பகுப்பை அவற்றி னிலக்கணங்களாலே அறியும் அவாவினனும் வினைதல்;—சங்கமென்பது.

சங்கமறுத் திடல்பிரமார்ப் பணமீசுரார்ப்பணமே சந்நியாசம்
பங்கமறு ஞானமே யோகமே யெனுமிவற்றின் பகிர்ச்சியாதோ
செங்கண்முகி லேயென்ற விசயனுக்கு மாலருள்வான் செறிசங்கற்ப
மங்குறவா ஃதனைகெடவோர் நினைவுமிலா விடம்பரம வத்துவென்பர்.

(ப - ரை.) சங்கமறுத்திடல் = பற்றொழித்தல், பிரமார்ப்பணம் = பிரஹ்மத்திற் கர்ப்பணம், ஈசுரார்ப்பணமே = ஈசுரருக்கு அருப்பணந்தான், சந்நியாசம் = விட்டொழி தல், பங்கமறு ஞானமே யோகமே = சகல துக்கங்களையும் போக்கும் ஞானந்தான் யோகந் தான், எனுமிவற்றின் = என்னும் இவைகளின், பகிர்ச்சியாதோ = பாகுபாடியாவையோ, செங்கண்முகிலே = செந்தாமரை யிதழ்போன்ற நேத்திரங்களையுடையகாரே ! என்ற விசய னுக்கு = என வினவிய அருச்சுனனுக்கு, மாலருள்வான் = ஸ்ரீ பகவான் திருவருள் செய் வார், செறிசங்கற்பமங்குற வாதனைகெட = பொருந்திய சங்கற்பம் ஓய்ந்தொடுங்க வாசனை யுந்தீர்ந்தபோது, ஓர் நினைவுமிலாவிடம் பரமவத்துவென்பர் = ஒரு எண்ணமும் இல்லாத இடம் பரம்பிரஹ்மவஸ்து என்பார்கள்.

(ஸ்ரீ - வீர.) ஹே பகவன் ! ஹே பிரபுவே ! சங்கத்தியாகம், அங்ஙன் பிரமார்ப்பணம், ஈசுரார்ப்பணரூபம், எல்லாவகையினும் சந்நியாசம், அவ்வாறே ஞானம் யோகம், என்பவற் றின் பகுப்பு எத்தகையது, முறையாக இவற்றை யடியேனுக்கு உரைத்தருளவேண்டும், மகாமோகம் நீங்கும்பொருட்டு என்று வினவ, அதற்கு ஸ்ரீ பகவான், ஆத்தியந்திகசங்கத் தியாகத்திற்குத் தத்துவபரிஞானமில்லாமல், ஏலாமையின், பிரஹ்மான்மதத்துவத்தையே முதலில் இலக்கணவாயிலாக உபதேசித்தருளல்:—செறியென்பதாதி. சர்வசங்கற்பமும் நன்கு சாந்தியாகவே, கனமானவாசனை மிகச் சாந்தியுற்றதும், சிறிதும் எப்பாவனாகாரமும் இல்லாததும் யாதோ அதுவே பரப்பிரஹ்மமென அறிவர்; எனவே, நிர்விகற்பசமாதிபரிபாக சாக்ஷாத்கார அநுபவசித்த நிட்பிரபஞ்ச பிரத்தியக்கான்மரூபமே பிரஹ்மம் என்பதுபொருள் ஆயது.

(ச.) அருச்சுனன், மால் = ஸ்ரீ பகவான், சர்வ சங்கற்பங்களும், மங்கின், நிர்வாசனையா மதனால், ஓர்நினைவுமிலாவிடம் = பாவனைக்குரிய வடிவமொன்றுமில்லாத விசுத்தமான சின் மாத்திரமாயிருப்பதுவே, பரமவத்துவென்பார் = பரப்பிரமமென்பர். (14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிறவினுக்கட்கு விடையருளி வேறுவிடயமும் அருளத்தொடங் கல்:—ஏகம் எண்ணம் என்பன.

ஏகமெனும் பிரமத்துக் குறுமுத்தி யோகமே யிலங்குஞான
மியோகமுமாங் கதுவென்ப ருலகமுநா னும்பிரமத் துருவென்றோர்த
லாகுபிர மார்ப்பணமாங் கருமபலம் விடல்சந்நி யாசமாகுஞ்
சோகமுறு சங்கற்ப மறுத்தலே சங்கத்தை துடைத்ததென்பர்.

எண்ணமனைத் தினுமீச னொருவனே யென்றிருமை யெண்ணந்தீர்தல்
புண்ணியவீ சுரார்ப்பணமா மெனைநாடியெனக்கன்பாய்ப் பூசித்தென்னை
நண்ணியெனைத் தொழுதென்னைத் துதித்தாயே னுனைனுநின் சொரூபச்சோதி
யுண்ணிறையும் பரமஞ்சா மானியமென் றிரண்டுவடி வுண்டெனக்கே.

(ப - ரை.) ஏகமெனும் பிரமத்துக்குறு முத்தியோகமே யிலங்குஞானம் = ஒன்றாகிய சிவத்தினை யடையச்செய்யும் முயற்சியே வித்தையாம், இயோகமும் ஆங்கதுவென்பர் =

யோகமும் ஆண்டதுவேயென்று கூறுவர், உலகமும் நானும் பிரமத்துருவென்றோர்தல் = ஜகத்தும் அகமும் பிரஹ்மசொரூபம் என்று தேர்தல், ஆதபிரமார்ப்பணமாம் = பிரஹ்மார்ப்பணம் என்பதாகும், கருமபலம்விடல் சந்நியாசமாகும் = கன்மபலத்தியாகமே சன்னியாசமென்னப்பெறும், சோகமுறு சங்கற்பமறுத்தலே = துக்கத்தைக் கொடுக்கும் எண்ணங்கடேர்தலே, சங்கத்தைத் துடைத்ததென்பர் = சங்கத்தைவிட் டொழித்தது என்று சொல்லுவர்.

எண்ணமனைத்தினும் ஈசனொருவனே = சகல நினைவுகளிலும் பரமேசுரன் ஏகனே, என்றிருமை எண்ணந்தீர்தல் = என்பதாகத் துவித நினைவு நீங்குதல், புண்ணியவீசுரார்ப்பணமாம் = தருமத்தைத்தரும் ஈசுவரார்ப்பணமென்று சொல்லப்பெறும், எனை நாடி எனக்கன்பாய் = என்னையே தியானித்து எனக்கே பக்திசெய்து, பூசித்து = பூசைசெய்து, என்னை நண்ணி = என்னையே யடைந்து, எனைத்தொழுது = என்னை நமஸ்கரித்து, என்னைத் துதித்தாயேல் = என்னையே ஸ்தோத்தரித்தாயேல், நான் எனும் நின்சொரூபச்சோதி = அகமென்னும் உனது வடிவ ஒளியானது, உண்ணிறையும் = உள்ளே பூரணமாகும், பரமம் சாமானியம் என்று இரண்டு வடிவு உண்டு = அசாதாரணம் சாதாரணம் என்பதாக இரண்டு ரூபங்கள் உள்ளனவாம், எனக்கே = வாசுதேவனாகிய என்றனுக்கே.

(ஸ்ரீ - வீர.) அஞ்ஞானநீக்க பலத்தோடுகூடிய அதனுகார உபஸ்தித சித்தவிருத்தியை ஞானமென்பர்; அதனனுகூல தாரைமாத்திரரூபத்தையே யோகமென்பர், மகா அறிஞர்; பிரஹ்மத்தின் கண்ணே நன்கெண்ணத்தக்கதாய வுலகத்திற்கும், நன்கெண்ணுபவனாய் அகங்காரத்திற்கும், பாதம் முக்கியமாய பிரஹ்மார்ப்பணமெனல்:—உலகமுமென்பதாதி. சர்வஜகத்தும் யானும் பிரஹ்மமாமென்பதே பிரஹ்மார்ப்பணமென்பர்; கருமங்களின் எப்பலத் தியாகமுளதோ அதனைச் சந்நியாசமென்று ஆறைவர் பெரியோர், நன்காராய்ந்து அறியப்பெற்ற சாராசார விபாகபுருடனுடைய புத்தியினில் அவனது அகம்மமதாக் கிரகத்தின் எப்பரிக்ஷயமுளதோ அதனுனே அர்த்தசித்தம், சர்வகர்மபலங்களில் ஆசையின்மை வடிவத் தியாகமாம்; அதனுனே சர்வசங்கற்பத்தியாக இலக்கண அசம்சங்கம் துணியப்பெறும், என்பதாக முதல் வினவும் விடையிறுத்தப்பெற்றதேயாம் எனல்:—சோகமென்பதாதி. சங்கற்ப ஜாலங்களின் றியாகம் அசம் சங்கம் எனக் கூறப்பெறும்; நான்காவது வினவின் விடையை யுரைத்தல்:—எண்ணமென்பதாதி. சமஸ்தவிவகாரக் கூட்டத்திற்கும் ஈசுவரத்தன்மை யேகபாவனை, அதாவது சர்வத்துவைத ஜாலத்திற்கும், வாசாரம்பண சுருதி கூறிய நியாயத்தானே அவற்றின் உபாதான ஈசுவரமாத்திரத்வபாவனை, செய்வதனுனே வழியப்பெற்றத் துவைதத்தோற்றம் யாதோ அவ்விதுவே ஈசுரார்ப்பணமாம். அத்வைதம் பரம்துவைதம் அபரம், யான் ஆவேன். அவ்வுருவத்தானே நியமிக்கப்பெற்ற ஜகத்தும் யானேயாவேன், இவ்வாறாய இருரூபமாய என்பால், அதிகார ஏற்றத்தாழ்வால் மனமுடையவன் என்மனத்தன் அவன் நீ யாகுதி, அத்தகைய என்னிடத்தில் அவ்வாறே அன்புசெய்பவன் என்னன்பன், சிரவணகீர்த்தனுதி நவவித பக்தியுடையவன் நீயாதி, அத்தகைய வெனது, ஞானயஞ்ஞத்தானுதல், கருமயஞ்ஞத்தானுதல், யஜனசீலன் ஆகுதி, என்னையே நமஸ்கரிப்பாயாக, இவ்வண்ணம் இயம்பிய பிரகாரம் இரண்டோடும் கூடி, என்பால் உளத்தைச் செலுத்தி உன்னுடைய வடிவமாயிராநின்ற என்னையே எனது பராயணனுகி, சாக்ஷாத்தாகவும் பரம்பரையாகவும் அடைவாய். இவ்வாறு அருளக்கேட்ட அருச்சுனன் அவ்விருவுருவங்களையும் அவற்றையடையத் தகுதியாய அதிகாரத்தையும் காலவிபாகத்தையும், அறியும் வேட்கையனாய், வினுதல்:—ஹே தேவேசரே! தேவரீருடைய பரம் அபரமே என்னும் இருவடிவங்

கள், எத்தகையனவாம், முத்தி சித்திகளின் பொருட்டு எக்கால் அவ்வுருவங்களைப் பற்றிக் கொண்டிருப்பேன்? ஹே அனகனே யெனக்குச் சாமானியமெனவும் பரமேயெனவும், இரு வடிவங்கள் உண்டென் றுணர்தி.

(ச) பிரமத்துக்குறும் = பிரஹ்மத்தை யடைதற் குரித்தாய, சிரவணமனன நிதித்தி யாசனரூபமான உத்தியோகமே ஞானவேது வாதலினாலும், சமாதியேது வாதலினாலும், ஞானமும் யோகமும் ஆமென்பர். எண்ணமனைத்தினும் = சங்கற்ப விகற்ப ஜாலத்தினது, இருமையெண்ணந் தீர்தல் = பேதத்தோற்றந் தீரும்படி ஈசுரனொருவனேயென்று = ஈசுவரனே சர்வாந்திரியாமி சர்வத்தையு நடத்துபவன், அவனது விலாசமே சர்வவிவகாரமு மென்று தன்மயமாகப் பாவித்துச் சகல விவகாரத்தையுந் தனக்கு நிவேதிப்பதே, ஈசுரார்ப் பணமாம், இந்தப்பிரகாரமாக, ஆன்மாவைச் சிந்தித்து என்னிற் கூட்டி என்னிட்டனையின், எனையே சேர்வை யென்றதாம். (15-16)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரம் சாமானியம் என்னும் அவ்விரண்டின் இலக்கணமும் அவை யொன்றற்கொன்று சாதனசாத்தியமா யிருத்தலும் அருளல்:—சங்கென்பது.

சங்காழி பயில்கரத்தை முதலான வங்கஞ்சா மானியந்தான்
மங்காம லடிமுடிவற் றொன்றாய வடிவுபர வடிவமாகு
மிங்கான பிரமமெனப் பரமமென விசைப்பதெலா மிந்தரூபஞ்
சிங்காம லிதுதனைநீ தெளிவளவு நாலுபுயத் தேவையேத்து.

(ப - ரை.) சங்காழி பயில் கரத்தை முதலான அங்கம் = சங்கு சக்கிரம் முதலன தரித்த கரத்தையே யாதியாகவுடையமேனி, சாமானியந்தான் = பொதுவதாகும், மங்காமல் அடிமுடிவற்று = குன்றாமல் ஆதியந்தமில்லாததாய், ஒன்றாய = ஏகமாய, வடிவு = உருவம், பரவடிவமாகும் = மேலான வுருவமாகும், இங்கான பிரமமெனப் பரமமென இசைப்பதெலாம் இந்தரூபம் = இவண் விவகரிப்பதான பிரஹ்மம் எனப் பரமம் எனக் கூறுவதெல்லாம் இந்தவடிவமாம், சிங்காமல் இதுதனைநீ தெளிவளவு நாலுபுயத்தேவை யேத்து = சமுசய விபரீதமில்லாமல் இப்பரம்பொருளை நீ சாக்ஷாத்கரிக்கும் பரியந்தம் சதுர்ப்புஜத் தெய்வத்தை யுபாசிப்பாயாக.

(ஸ்ரீ - வீர.) பாணிபாதாதியோடுகூடிய தேசமானியம் = சர்வஜன சாதாரணமாக நன்குணரத்தக்கதாம், சங்கசக்ரகதாதரமாம் எனது பரம் ரூபமோ அநாதியந்தமாம், அசுத்த சித்தர்களானே அறியவொண்ணாததாம், ஏகமாம், நோயற்றதாம், பிரஹ்மாத்ம பரமாத்மாதி சப்தத்தானே இது பிரதிபாதிக்கப்பெறும், எதுவரை நீ யறியாதவனாய் அஞ்ஞனஞ் தன்மையோடு மிருப்பாயோ அதுவரையும், சதுர்ப்புஜாகார தேவபூஜாபரன் ஆகக்கடவாய்,

(ச.) சாகாரமும் நிராகாரமும் என்னும், இரண்டு வடிவத்துள் அறியாததசையிற் சங்காழிகதை பதுமதராகாரமானவடிவு உபாசித்தற் குரியதாம், அதன் உபாசனையாற் கிரமமாகச் சித்த சுத்தி வழியாய்ப் பரப்பிரமரூபம் உபாசித்தற் குரித்தாம், இரண்டாம் வடிவ உபாசனையால் ஞானங் கைவல்லியத்தில் மிஞ்சும், சித்திக்குமென்பது பொருள். துவிதிய ரூபம் அறியப்பெற்றதாய் கைவல்லிய பரியவசிதமாம் எனவும் பாடம். (17)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அச்சாதனத்தானே யுண்மையைச் சாதிக்கலாம், சாதித்தோர் இங்ஙனிருப்பார் என்றும், நீயும் அங்ஙன் நிற்பாயென்றும் அருளல்:—அச்சடவுள், காமம், என்பன.

அக்கடவுட் பூசையினு லறிவுநிறைந் ததனுலப் பதமுஞ்சேர்வை
மிக்கபர மாகியவென் னுருவமுறிற் பிறவிநோய் மீண்டுசேராப்
பக்கவபி மானம்போய் மோகம்போய்ச் சங்கம்போய்ப் பரமேமெய்யாய்த்
துக்கசுக தொந்தம்போ யாசைபோ யறிவுற்ருேர் தொடர்வ ராங்கே.

காமமுறு சங்கற்ப மின்றியா ரம்பமெலாங் கலந்து நிற்போர்
தாமமுறு ஞானத்தீ யாற்கருமங் களைச்சுட்ட சான்ருே ரென்பர்
சேமமுமேல் வரும்பொருளுஞ் சிந்தையறத் தொந்தமறச் சித்தாமுண்மை
தோமறப்பெற் றெப்போதுந் தோற்றுதொழில் வழிநிற்பாய் துளக்கமின்றி.

(ப - ரை.) அக்கடவுட் பூசையினுல் = அந்நாற்புயத் தேவின்பஜனத்தால், அறிவு நிறைந்து = ஞானம் பூரணமாகி, அதனு லப்பதமும் சேர்வை = அதனுனே யந்தப் பதத்தையும் அடைவாய், மிக்க பரமாகிய = மேலுக்கு மேலாகிய, என்னுருவம் உறில் = என துருவத்தை யடையில், பிறவிநோய் = ஜனனவியாதி, மீண்டுசேரா = மறுபடி வந்தடைய மாட்டாது, பக்க அபிமானம் போய் = தேகாதிகளில் அபிமானம் போய், மோகம்போய் = மயக்கம்போய், சங்கம்போய் = பற்ருெழிந்து, பரமே மெய்யாய் = பரம்பொருளேவபு வாய், துக்கசுக தொந்தம்போய் = துன்ப இன்பத்தொடக்கற்று, ஆசைபோய் = நிராசையனுய், அறிவுற்ருேர் தொடர்வர் ஆங்கே = ஞானமடைந்தவர் பற்றுவர் அப்பரவாசுதேவனையே.

காமமுறு சங்கற்பமின்றி = காதல் அதனுலெய்தும் மனனம் இல்லாமல், ஆரம்பமெலாங் கலந்து நிற்போர் = சகல தொழில்களையும் செய்துகொண்டு இருப்போர், தாமமுறு ஞானத்தீயால் = மிக்கொளிராநின்ற ஞானக்கினியினுலே, கருமங்களைச் சுட்ட சான்ருேரென்பர் = வினைகளைத் தகித்த பெரியோர் என்று சொல்வர், சேமமும் மேல் வரும் பொருளும் சிந்தையற = இருப்பவற்றைக் காத்தலிலும் வாராவற்றைச் சம்பாதிப்பதிலும் சிந்தாகுலம் பெருமல், தொந்தமற = துவந்துவமில்லாமல், சித்தாம் உண்மை தோமறப்பெற்று = சச்சிதாநந்த பரமாத்மாவைக் குற்றமற அடைந்து, எப்போதும் = சதாகாலமும், தோற்று தொழில்வழி நிற்பாய் துளக்கமின்றி = எதிர்ப்பட்ட விவகாரமார்க்கத்தே சரிப்பாய் எக்களங்கமு மில்லாமல்.

(ஸ்ரீ - வீர.) அம்முறைமையானே அதனுன் மனத்தூய்மை முறைமையானே, நல் விவேகத்தையுற்ற நீ பின்னர் தற்பரத்தை நன்கறிந்துகொள்ளுவாய், அது எனது உருவமாம், அநாதியந்தமாம், எவ்வுணர்வினுனே மறுபடி பிறப்படையாயோ. மானமோகங்களை நிவிருத்தித்தவனும் சங்கதோஷங்களைச் சயித்தவனும் பரமான்மவடிவ விசாரத்தில் தற்பரனும் காமம் நீங்கினவனும் சுகதுக்கங்களெனும் சீதோஷ்ண முதலிய துவந்துவங்களைப் பரித்தியாகம் பண்ணினவனுமாகிய வித்துவான் அந்த அவ்வியயபதத்தை யடைவன்; கருவமெனும் அகங்காரம் மானமாம், விவேகமின்மை மோகமாம், அல்லது விபர்யயம் மோகமாம், அவைகளினின்றும், வெளிப்பட்டவர்கள் நிர்மான மோகர்கள் ஆவர்கள், அவைகளை நிவிர்த்தித்தவர்கள் ஆவர்கள், தோஷசங்கங்களைச் சயித்தவர்கள் = பிரியாப்பிரிய வஸ்துக்கள் வந்தடையினும் விருப்புவெறுப்பில்லாதவர்கள், சங்கதோஷங்களை வெற்றிகொண்டவர்கள், சங்கசப்தத்தானே நான் கருத்தன் எனக் கருத்திருத்துவாபிமானத்தைக் கொள்க, தோஷசப்தத்தானே இராகத்துவேட முதலிய தோஷங்களைக் கொள்க, அத்தியாத்ம நித்தியர்கள்

பரமான்மாவினது உண்மைவடிவ விசாரத்தி னிரந்தரந் தற்பரர்கள், விநிவிருத்தகாமர்கள், ஆண்டு விசேடமாய் விடயபோகவடிவ காமம் நீங்கியவர்கள், விவேக வைராக்கிய வாயிலாய் எல்லா வினைகளையும் விட்டொழித்தவர்கள், சுகதுக்கங்கட்குக் காரணமானதால் சுகதுக்கங்களெனும் சீதோஷ்ணம் பசிதாகம் என்பனவாதிய துவந்துவங்களை விட்டவர்கள் ; கூறிய இலக்கணமுடையவர்க்கே விதேகமுத்தியி னடைவுமாம்; யாவனுக்குச் சர்வகருமங்களும், காமசங்கற்பமற்றனவாமோ, ஞானுக்கினியால் தக்தமாய கர்மம் யாவனுக்கோ அவனைப் பிரஹ்மவேத்தாக்கள் பண்டிதன் என்பர்கள்; எப்பரமார்த்ததரிசிக்குச் சர்வலௌகிக வைதிக கருமங்களும் காமமற்றனவாமோ சங்கற்பமற்றனவாமோ, சுவர்க்காதிபலேச்சை காமமாம், யான் கருமகருத்தா என்னும் அபிமானம் சங்கற்பமாம், எவனது கருமம் இவ்விரண்டுமற்றதாமோ, யாவனுக்குச் சருவகருமங்களும், கேவலம் லோகசங்கிரகத்தின் பொருட்டேனும், சரீரஜீவனமாத்திரப் பொருட்டேனும், பிராரப்த கருமவேகத்தால் வியர்த்தசேஷ்டை வடிவமாமோ, பிரபஞ்சரூபகருமத்தில் இருப்புவிளக்கரூபமாய், சைதன்ய பிரஹ்மரூப அகருமத்தின் றரிசனமும், அவ்வகருமத்தே கற்பிதரூபமாய்க் கருமதரிசனமும், ஞானமெனப்படும், அது அக்கினியைப்போலச் சருவகருமங்களின் தாகமாதலின் அக்கினிரூபமாம், அவ்வக்கினியால் தக்தமாயது சுபாசுபகருமம் எவனுக்கோ அவன் அத்தகையன், இத்தகைய அறிஞனைப் பிரஹ்மவேத்தாக்கள் உண்மையாய்ப் பண்டிதன் என்பர்கள்; சைதன்யப் பிரஹ்மமாத்திரத்தை விஷயஞ்செய்யும் அந்தக்கரணவிருத்தி பண்டாவெனப்படும், அது எவன் அந்தக்கரணத்தே யுண்டாமோ அவன் பண்டிதனுவன்; உலகிலும் நற்றறிசியே பண்டிதன் மற்றையனல்லன், அத்தன்மை யறிஞன்பாலதே யாதலின் அறிஞனே பண்டிதன். சீதோஷ்ணுதிகளை நீக்கும்பொருட்டு அவாவருதலின் நிட்காமனுதல் எங்ஙன் கூடுமென, சீதம் உஷ்ணம் சுகம் துக்கம் மானம் அபமானம் பகை யுறவு என்பன முதலிய சருவதுவந்துவ தருமங்களும் அற்றிடவேண்டும், என்றருளப்பெற்றது; பொறுக்கமுடியாத் துக்கத்தை யெங்ஙனம் பொறுத்தல் எனின் ? சலனமற்ற தைரியமென்னும் சத்துவத்தின்கண், இருப்பவன் நீ ஆகுதி, என்றருளப்பெற்றது, எவனது சத்துவம் மற்றிரண்டால் மறைவை யடையுமோ, அவன் சீதோஷ்ணுதிகளால் உண்டாம் பீடையால் தன்றருமத்தினின்றுந் திரும்புவன் நீ கேவலன் சத்துவன் ஆகுதி யென்பதாம்; சீதோஷ்ணுதியைப் பொறுக்கினும், பசிதாகப்பொருட்டு அடையாததை யடைவதற்காகவும் அடைந்ததைக் காக்கவும், முயலவேண்டுமே வேண்டின் நித்தியசத்துவத்திருத்தல் எங்ஙன் கூடுமெனின், நீ யோக க்ஷேமங்களை கவனிக்கவேண்டியதில்லை, என்றருளப்பெற்றது, கவனியா தொழியின் எங்ஙனம் ஜீவிப்பேன் எனின் ? ஜீவனசிந்தையைச் செய்யாதொழிதி பரமேசுரரே கவனிப்பர், பரமாத்மாவையே தியானஞ்செய்தி, என்றருளப்பெற்றது; நேர்ந்தபடிதொடர்ந்து நீ பூதலம் பூஷிக்க வாழ்வாய்; அடையப்பெருததன் அடைவு யோகமாம், அடையப்பெற்றதன் காப்பு க்ஷேமமாம், அவ்விரண்டின் சிந்தாசூனியனுயின் கடவுள் காட்சிப்படுவர் என்பதாம்.

(ச.) அபிமானம் = அகங்காரம், மோகம் = அதன் நிமித்தமான அஞ்ஞானம், அவைகளினின்றும் வெளிப்பட்டவராய், சங்கம்போய் = சங்கதோடம் விட்டவராய், அதனுல், பரமே மெய்யாய் = ஆன்மானுசந்தான முடையராய், அதனுல், ஆசைபோய், துக்கசுக தொந்தம்போய், அறிவுற்றோர்கள் = ஞானிகள், ஆங்கே தொடர்வர் = அப்பதம் பெறுவர். சேமமென்னும் அநிஷ்டபரிகாரமும், மேல்வருபொருளும், யோகமென்னும் இஷ்டப்பிராப்தியும், ஆகிய யோகக்ஷேமங்களிற், சிந்தையற = உதாசினனுய், ஆன்மாவை யடைந்து

அப்பிரமத்த சித்தனாய் நீ, தோற்று தொழில்வழி நின்று, பூகலத்துக்குப் பூடணமாயிருப் பாய், என்றதாம். (18-19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அற்றேல் உணர்வின் பொருட்டு முயன்றார்கள் பலபேர்களின் முயல்கை, பிரபலங்களான பழைய காமக்குரோதாதி வாசனைகளானே அழிக்கப்படுவதாகக் காணப்பெறுகின்றதென வுத்தரத்வம் பிராபல்யத்தில் ஏதுவாகாதாம், எனின், தர்மார்த்த காமமோக்ஷங்களின் மத்தியில் யாதுதான் எனக் கிப்புருடார்த்தம் இன்றியமையாதது என்பதாய் வலிதுடன் அபினிவேசத்தாற் காணப்பெற்றதாமோ, கணத்தில் அதுதானே, முன் பின்னாய முயல்வுகளில் விசேஷாங்கிசம், வெற்றியில் பிரயோஜகமாம். அவ்வாறாகவே, அவைகளுக்கு மோக்ஷ அபினிவேசமாந்தியத்தாலும் போகாபினிவேச தார்ட்டியத்தாலும் தோல்வி யுண்டென்பதுபுடமாம்; இதனானே சாஸ்திரீயப் பிரயத்தனத்தில் திட அபினிவேசஞ் செய்யத்தக்கதாம் என்றருளல்:—வீசியவென்பது.

வீசியவூ ழிக்காற்றுமேவிடினும் விந்தமலை வெடித்தபோதுந்
தேசிகனூற் கற்பித்த செந்நெறியை மதிமான்க டிறம்பல்செய்யார்
மாசறுமெய்ஞ் ஞானமிலா மடமையால் வாதனைமெய் வடிவாய்நிற்குங்
காசறுமெய்ஞ் ஞானமெனும் பெருங்கடல்கோ த்தாலதனுட் கரைந்துபோமே.

(ப - ரை.) வீசிய ஊழிக்காற்று மேவிடினும் = வீசாநின்ற பிரசண்டமாருதம் வந்த போதினும், விந்தமலை வெடித்தபோதும் = விந்தியாசலம் தூளானபோதினும், தேசிகன் னூற் கற்பித்த=ஞானசாரியனும் அத்தியாத்ம சாஸ்திரமும் அனுக்கிரகித்த, செந்நெறியை= சிறந்தமார்க்கத்தை, மதிமான்கள் = புத்திமான்கள், திறம்பல் செய்யார் = மாறுபடுத்த மாட்டார், மாசறு = குற்றமற்ற, மெய்ஞ்ஞானமிலா மடமையால் = தத்துவஞானமில்லாத அறியாமையால், வாதனைமெய்வடிவாய், வாசனையானது உண்மை வடிவமாய், நிற்கும் = இருந்துதோற்றும், காசறுமெய்ஞ்ஞானமெனும் பெருங்கடல் கோத்தால் = தத்துவஞான மென்னும் பெரியசமுத்திரம் வியாபித்தால், அதனுட் கரைந்துபோமே = அதனுள்ளே விலயமாகிப் போகும் என்பது திண்ணம்.

(ஸ்ரீ - வீர.) விந்தியாசல முதலியவை வெடித்தபோதிலும், பிரளயவாயு வீசியபோதிலும், பௌருஷத்தையும் குருவசனத்தையும் சாஸ்திரமுறைமையையும், மதிமானால் தியாகிக்கல் ஆகாது, வாசனையைக் கெடுத்தால் மோக்ஷமாம், வாசனையே பந்தகாரணமாம், காரணம் வேறு காணேம், சம்பவிக்கவும் மாட்டாது, ஈசுவரகாம கருமாதிகட்கும், வாசனையின் அனுசாரமாகவே, சுகதுக்கங்களை யடைவிக்குந் தன்மையுண்மையின், அசாதாரணமாய வாசனையே நீள்போது பயிலும் பயில்வால் நிரூடமாகி, வேரூன்றி, சமுசாரகாரணமாம், என்பதனால், அதனது க்ஷயமே, பரமபுருடார்த்தத்தை விரும்பிய புருடனால், சர்வப்பிரயத்தனங்களானும், செய்யத்தக்கதாம், என்னுந் திருக்கருத்தை வெளிப்படுத்திக்கொண்டு ஸ்ரீ பகவான் அருளல்:—ஈண்டு சாஸ்திரீயப் பிரயத்நமில்லாமல் நீள்போது பயின்ற பயில்வின்வயத்தால், மிகக் கனமாயசொப்பன உபமானமான வாசனையே, எவ்வேதுவினாலே சமுசாரப்பிரமந் தருவதாமோ, அவ்வேதுவினாலே, தத்துவஞான அப்பியாசத்தால்,மூலசகித வாசனாக்ஷயம் சிரேயசின் பொருட்டாம்; வாசனாமூலத்தை யறியம் வேட்கையனாய அருச்சுனன் வினாதல்:- ஹேதேவதேவேசரே! எங்ஙனம் எழுந்தது வாசனை, எங்ஙனந்தானிது நசிக்கும்? என, வினவ, அஞ்ஞானமேய தன் மூலமாம், ஞானத்தினாலேயே, சமூலமாக அதன் நாசமாம்,

என ஸ்ரீபகவான் விடையருளல்:-அனுன்மாவின் கண்ணே யான்ம பாவனையானது மௌர்க்கிய மோகத்தினாலே யுண்டாயதாம், ஆன்மஞானத்தால் மகாபோதத்தால் வாசனை விலயமாகிப் போகும்.

(ச.) மகத்தான வாபத்திலும் குரு வுபதேசித்த சாஸ்திரமார்க்கம் மதிமான்களால் விடத் தக்கதன்றும். (20)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உபதேச உபசங்காரமும் அருச்சுனனது ஐய நீக்கமும் உரைத்தல்:—என்றருளி யென்பது.

என்றருளித் திருநெடுமா லிமைப்போது மோனம்போ லிருத்தலோடும்
வென்றிமிகு விசயன்மகிழ்ந் துரைசெய்யும் வகைகேளாய் மெய்ம்மைவீரா
கன்றுதுய ரனைத்தும்போ யெனதுமதி பரம்பொருளைக் கலந்ததையா
துன்றிரவி காணவிரி கமலம்போ லெனவிசயன் சொல்லுமன்றே.

(ப - ரை.) என்றருளித் திருநெடுமால் = என இந்தப்பிரகாரம் அனுக்கிரகஞ் செய்தருளி ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஆனவர், இமைப்போது = க்ஷணகாலம், மோனம்போல் இருத்தலோடும் = மௌனம் போன்று சும்மா இருந்தருளியபோது, வென்றிமிகு விசயன் மகிழ்ந்து உரைசெய்யும் = வெற்றிமிகுந்த அருச்சுனன் பேரானந்தத்தை யடைந்து மறுமொழி கூறும், வகை = பிரகாரத்தை, கேளாய் மெய்ம்மைவீரா = உண்மையாய இராகு வீரனே கேட்பாயாக! கன்றுதுய ரனைத்தும்போய் = வாட்டுந் துக்கங்கள் யாவும் நீங்கி, எனதுமதி = அடியேனுடைய புத்தியானது, பரம்பொருளை = பரமாத்மவத்துவை, கலந்தது ஐயா = சாக்ஷாத்கரித்தது சுவாமியே, துன்றிரவிகாண விரிகமலம்போலென விசயன் சொல்லும் அன்றே = கிரணத்தைப் பரப்புஞ் சூரியன் உதயமாகப் பிரபுல்லிதமாகும் பதுமம்போன்றென்று பார்த்தன் கூறும் அப்போதே.

(ஸ்ரீ - வீர.) இந்தப்பிரகாரம் மூவுலகநாதராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் அனுக்கிரகஞ் செய்தருளிக் க்ஷணநேரம் மௌனத்தை யடைந்ததுபோன் முன்பாகச் சும்மாவிருந்தருள, தாமரைப்பூவின் கண்ணே வண்டானது முரலுதலேபோலும், ஆண்டுப் பாண்டுபுத்திரன் வசனிக்கலாவது:—ஹே பரமேசுரரே! சகல சோகபாரங்களும், தணந்தது அடியேனை விடுத்து, ஹே பகவன்! அடியேனுடைய மதியானது பரம உதயத்தை யடைந்து, மலர்ந்தது உலகத்தை இரக்ஷிக்கும் நாயகராகிய தேவரீருடைய திருவாய் மொழியால், சூரிய பகவானாலே நன்கு மலர்ந்த தாமரையேபோல; எனத் தனது அனுபூதியை உரைத்தான்.

(ச.) ஸ்ரீவசிஷ்டர்: இரவிகாண விரிகமலம்போல் உலகரக்ஷகரான வுமது வசனத்தால் மிகப் போதிக்கப்பட்ட எனதுமதி, பரம்பொருளை = பரமப்பிரகாசத்தை, கலந்தது; சோகமெலாம் ஒழிந்தது. (21)

அருச்சுனன் கதை முற்றிற்று.

---

## பதினொருவது தினம்

## சதவுருத்திரர் கதை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இச்சிவடாக்கியானத்தில், விசித்திரவாசனா யோகத்தானே, பிக்ஷுமானச சேஷ்டிதமாய நானாதேகப் பிராப்தி விப்பிரமத்தை வருணிக்கத்தொடங்கல்:-மீட்டுமென்பது.

(ச-அ-கை.) முன்பு விவேகிக்கு யுத்தாதியுஞ் சித்தவிசிராந்தியை வாதிக்காதென்று அருச்சுனன் கதை வர்ணிக்கப்பட்டது, இப்போது இந்த ஜன்ம பரம்பரை தனது சங்கற்ப ரூபபிராந்தி பரம்பரை மாத்திரத்தாற் சித்தித்ததென்று தெரிவித்தற்குத் திருஷ்டாந்தமாகச் சதவுருத்திரர் கதை நிரூபிக்கப்படுகின்றது.

மீட்டுமோர் கதைகேளென்று வீரற்கு வசிட்டன் சொல்வா
னாட்டுளோர் சந்நியாசி ஞானவான் சமாதி யுள்ளோ
னீட்டுறு சமாதியாலே நிமலமா நெஞ்சி னொன்றை
யீட்டுற நினையினப்போ தெய்துநீ ரலையா மாபோல்.

(ப-ரை.) மீட்டுமோர் கதை கேளென்று = மறுபடியும் ஒரு கதை கேட்பாயாக வென்று, வீரற்கு = ஸ்ரீ இராகவருக்கு, வசிட்டன் சொல்வான் = ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறுவார், நாட்டுளோர் சந்நியாசி = ஒரு தேசத்திலுள்ள ஒரு சந்நியாசியாகிய பிக்ஷு, ஞானவான் சமாதியுள்ளோன் = ஞானமுடையவன் சமாதியப்பியாசம் உடையவன், நீட்டுறு சமாதியாலே = நீடித்த சமாதியப்பியாசத்தாலே, நிமலமா நெஞ்சி னொன்றை = நின்மலமான மனத்தில் ஒரு பொருளை, ஈட்டுற நினையினப்போ தெய்து நீ ரலையாமாபோல் = சம்பாதிக்கவெண்ணில் எண்ணியபோதே கிடைத்திடும் ஜலம் தரங்கமாவதே போலும்.

(ஸ்ரீ - வீர.).) இவ்வுலகத்தின்கண் ணொரு மயலை யடைந்து பின்னொரு மயலை யெய்திப் பரம்பரையாய்த் துன்பத்தையே அடைகின்றான். மயலினின்றும் மறுமயலை யடையும்படியான இதன்கண்ணே யுதாகரணபூதமான இதிகாசத்தை முன்னொருபோது நடந்ததைக் கூறக் கேட்பாயாக, அது சிறிது மனனசாலியாகிய ஒரு பிக்ஷுவினது விருத்தாந்தமாம்; சமாதியப்பியாச தற்பரனாகி யொரு மகாபிக்ஷுவானவன் சாந்திதாந்தி வைராக்கியாதி சம்பன்னனாகி, பரிவிராஜகனாகி, ஓரிடத்திலிருந்தான்; நித்தியம் தனது விவகாரமாகிய தனது ஆசிரம உசித சிரவண மனனாதிகளானே அகில தினத்தையுங் கழிப்பன், சமாதியப்பியாச சுத்தமாயது அவனுள்ளம்; சமாதி சித்தத்திற்குத் தியேயாகார தார்ட்டியத்தானே பூர்வ சொரூபசூனியத்வ சம்பாதனமாம், அதுவே அர்த்தமாத்திரமாக நன்கிலங்கல் வடிவமிலாததேபோலும் சமாதியென்னும் பதஞ்சலிபகவானது திருமொழியால், அத்திருமொழியின் பொருளிதுவாம்:—அதுவே = அந்தத் தியானமே, தியேய ஏககோசரத்தன்மையானே யிலங்குவதாய், தியான சொரூப சூனியம் போன்று, இருப்பது சமாதியென்ப்பெறும்; அது கூறவும் பெற்றுளது:—பிரஹ்மாகார மனோவிருத்திப் பிரவாகமகங் கிருதியின் றியே,சம்பிரஞ்ஞாத சமாதியாகும் தியானப்பியாசச் சிறப்பினால்; என்பது ஈண்டு அங்காங்கிகட்கு அத்தியந்தம் அபேதம் சங்கிக்கலாகாதாம்; சிறிது வேற்றுமைக் கிருப்புண்மையின், அங்ஙனமன்றே:—கர்த்திருகரண அநுசந்தானவாயிலாய் உண்டாகிய உணர்வு தியானமாம், அதனுயர்ச்சியானே கர்த்திருகரண அநுசந்தான மில்லாமலே தியேயமாத்திரகோசரத் தன்மையானே, இலங்கிக்கொண்டிருப்பது சமாதியாம், அதுவே அபரவைராக்கிய வாயிலாய் ஆதரவோடுகூடி இடைவிடாமல் நீள்காலம் சேவிக்கப் பெற்றதாய், இரஜஸ்தமோலேசம் நீக்கப் பெற்றதாய், சுகப்பிரகாசமய சத்துவ எழுச்சியானே குற்றமற்ற மிகத் தெளிவுற்ற தகைமையை விளக்கும் வடிவமாகி நீள்காலம் தொடர்ந்திருப்பது சம்பிரஞ்ஞாத சமாதியெனப் பெறும்; பரவைராக்கிய பூர்வகமாக நிரோதப்பிரயத்தனத்தானே அதற்கும் நிரோதமாகவே, சருவவிருத்திகளின் நிரோதத்தான் நிர்ப்பீஜசமாதியான தூண்டாம். அது கூறப்பெற்றுளது:—விருத்தி சூனியமனத்திற்குப் பிரமவாகாரத் திருத்தியாற்றி தியாதது விகற்பங்கடீர்ந்த

வருத்தமாகிய வசம்பிரஞாதமாஞ் சமாதி, ஒருத்தன் ஞமைத்திலிலங்குமென் றுரைப்பர் மெய் யுணர்வோர், என்றிவ்விபாகம் காணத்தக்கது. அதன் பயில்வால், சுத்தமாயது பூர்வவாசனைத் தியாக சமர்த்தமாயது, அவனுள்ளம்; அத்தகைய அவனது சித்தமானது எந்தக்கணத்தில் எதை நினைக்குமோ விரைவாகவே அந்தக்கணத்தில் அத்தகைமையை யடையாநிற்கும் ஜலம் வீசித் தன்மையை யடைவதே போலும்.

(ச.) சமாதி யப்பியாசாதியால், அப்போது, அப்பொருள் வடிவத்தை, எய்தும் = அவ்வுருவமாம். (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அந்த யோகியினது சிந்தனப்பிரகாரத்தை கூறல்:—ஒரு என்பது.

ஒருபகற் சமாதிநீங்கி யிருந்தன னுயர்சந் நியாசி
கருதிடு மவர்க்குப்பற்றிப் பாச்சுறுன் காணுமென்று
சுருதியுண் டுலகோர் செய்யுந் தொழிலையாம் விநோதமாக
விருதயத் துன்னுவோமென் றெண்ணிய திவன்ற நெஞ்சம்.

(ப - ரை.) ஒருபகல் = ஒருபோது, சமாதி நீங்கி = சமாதியினின்றும் எழுந்து, இருந்தனன் = வீற்றிருந்தனன், உயர் சந்நியாசி = மேலான அம்முனிவன், கருதிடு மவர்க் குப் பற்றிப் பாச்சுறுன் காணுமென்று சுருதியுண்டு = எண்ணியவர்கட்கு எண்ணியபடியே தான் றேற்றுமென்று சாஸ்திர ஆணையுளது, உலகோர் செய்யும் = சாதாரண ஜனங்களியற் றும், தொழிலை = வினையை, யாம் விநோதமாக = நாம் விளையாட்டாக, இருதயத்துன்னு வோம் = மனத்தின் கண்ணே நினைவோம், என்றெண்ணியது = என்று சிந்தித்தது, இவன்றன் நெஞ்சம் = இம்முனிவனுடைய மனமானது.

(ஸ்ரீ - வீர.) ஒருபோது சமாதியிற் றப்பாளுகிய அம்முனிவன் அச்சமாதி நீங்கி ஏகாக் கிரசித்தனுக ஆசனத்திருந்தான், அங்கிருந்துகொண்டே கிரியையின் முறையை ஒரு சிறிது நன்கு சிந்திப்பானுயினன், அவ்வாறு சிந்திக்கப்பட்ட அவனுக்குத் தானுகவே இவ்வாறு எண்ணுவேனுக என்னும் எண்ணமான துண்டாயது, விரைவில் வேடிக்கையாக, சாஸ்திர சமஸ்கார ஹீனர்கள் தம்சித்த சேஷ்டானுசாரித் தன்மையானதைப் பாவிப்பேனுக.

(ச.) கருதிடுமவர்க்கு விநோதமாக, உலகோர் = பாமரஜனம், செய்யுந்தொழிலை நாம் பாவிப்போமென்று தானே, பத்திபாச்சல் = பிரதிபையென்னும் பிரஞ்ஞா விசேடம், காணும் = உண்டாகும், முற்கூறிய பிரகாரமாக வெண்ணி, இவன்றனெஞ்சம் அப்படியே சிந்தானுசாரத்தால்: (2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவனது சிந்தனப்பிரகாரத்தையே விரித்துரைத்தல்:—மற் றொரு, சித்தம், கனம், என்பன.

மற்றொரு புருடனுந ளைசைவுமாத் திரத்தான் மீளப்
பற்றியும் பண்டையோனைத் தானெனப் பாவிக்கைக்குப்
பெற்றிலன் காகதாலீ யப்படி பெற்ற வாஞ்சை
யுற்றனன் ஜீவடன்பே றொருவனென் றுணர்ந்தான் றன்னை.

சித்தம்வே றொருவனுன ஜீவடனிவ் வாறுகி
யுற்றவிக் கனவிற்செய்த நகரிலோர் தெருவின்மேவி
மெத்தநா ளிருந்தா னுங்கே விநோதபானத்தையுண்டு
மத்தனுய் மதுவையுண்ட மதுபம்போ லுறக்க முற்றுன்.

கன்முறு கனவில் வேருேர் கலைமறை யவனுக் கண்டான்
மனனிலே பற்றிப்பாச்சன் மாத்திர மதனுன் மற்ருேர்
சனபத மடைதல்போலாய்ச் சரித்தனன் சின்னுளங்கே
தினமிகு வியாபாரத்தாற் றேகநொந் துறக்க முற்ருன்.

(ப - ரை.) மற்ருெரு புருடனுன் அசைவுமாத்திரத்தான் = சலன மாத்திரத்தினுலே அயலொரு புருடனுன், மீளப்பற்றியும் = திரும்ப முயன்றும், பண்டையோனை = பழையதன்னை, தானெனப்பாவிக்கைக்கு = நான்ருன் என்று பாவிப்பதற்கு, பெற்றிலன் = ஆற்றலுற்றிலன், காகதாலீயப்படி = காகதாலீய நியாயம்போல, பெற்றவாஞ்சையுற்றனன் = அடைந்ததி லாசை யடைந்தனன், சீவடன்பே ரொருவனென் றுணர்ந்தான் றன்னை = சீவடன் என்னும் பெயருடைய ஒருவனுக அறிந்தான் றன்னை.

சித்தம் வேருெருவனுன சீவடன் = மனம் அயலொருவனுன அச்சீவடன், இவ்வாறுறு யுற்ற இக்கனவில் = இந்தப்பிரகாரம் அடைவுற்ற இச்சொப்பனத்தில், செய்த நகரிலே = இயற்றிய பட்டணத்தில், ஓர் தெருவின்மேவி = ஒரு வீதியை யடைந்து, மெத்தநாளிருந்தானுங்கே = வெகு தினங்கள் இருந்தனன் அவ்விடத்தே, விநோத பானத்தை யுண்டு = வேடிக்கையாக மதுவைமாந்தி, மத்தனுய் = உன்மத்தனுய், மதுவையுண்ட மதுபம்போலுறக்கமுற்ருன் = நறைமாந்திய அறுகாலொக்கத் தூங்கினுன்.

கன முறு கனவில் = திபிடமாக வுண்டாகிய சொப்பனத்தில், வேருேர் கலைமறையனுக் கண்டான் = அயலொடு வேதபாரகனுகிய விப்பிரனுகக் கண்டான், மனனிலேபற்றிப் பாச்சல் மாத்திரமதனுல் = சித்தத்திலே பிரதீதிமாத்திரத்தினுலே, மற்ருேர் சனபத மடைதல் போலாய் = வேருெரு தேசத்தை யடைவதேபோலாய், சின்னுள் ஆங்கே சரித்தனன் = சிலகாலம் அவ்விடத்திலேயே சஞ்சரித்தனன், தினமிகுவியாபாரத்தாற் றேகம் நொந்து உறக்கமுற்ருன் = பகலில் மிகவும் செய்த தொழில் விசேடத்தால் சரீரம்வாடி நித்திரையி லழுந்தி யிருந்தான்.

(ஸ்ரீ-வீர.) என்றிவ்வண்ணம் நன்ருகச் சிந்தித்து, அம்முனிவனுடைய சித்தமானது, இருப்பதாகியது ஒரு சிறிது நராந்தரமாய், அதாவது நராந்தரம் = யதிதர்மக்கட்டற்ற பாமர புருஷாந்தரரூபம் ஆகிய தென்பதாம், அசைவுநிலைபேற்றை நன்குவிடுகை மாத்திரையானே சுழியில் நீர்போலும், அதாவது, ஜலமானது, சுழியைச் செய்துழி, பழையபிரவாக அசைவனுாஉம் ஒப்பான நிலைமையினதூஉம் நல்விடுகை மாத்திரையானே நாபியாகாரமாகச் சுழியெனப் பெயரிய வேற்றுவடிவமாய் இருக்கும் அதுபோலுமென்பதாம்; ஆண்டயல் நாம கற்பனையை யறைதல்:—சீவடன் என்பது, அச்சித்த நரனுற்பின்னர், ஆன்ம வாஞ்சையாற் செய்த முயற்சிசாலும், பெயரின் வாஞ்சையினுலே ஜீவடன்யானுயுள்ளேன் என வைத்துக் கொண்டு விரைவிற்காகதாலீயம்போலு மிருந்தான்; அதன்பின் அச்சொப்பன புருடனுகிய சீவடன் நெடும்போது திரிந்துகொண் டிருந்தான்; சொப்பனத்தி லுண்டாக்கிய பட்டணத்தில் ஒருபுரவீதிகளில் திரிந்துகொண்டிருந்தபோது பானத்தை, மத்தவண்டு பதுமரசத்தைப் பருகியதேபோலும், பருகி யுன்மத்தனுனன், லீலையாலே திடமாக மகிழ்ந்தவனுகிக் கனமான நித்திரையோடு கூடியவனு யுறங்கினுன்; உன்மத்தனுகி யுறங்குஞ் சொப்பனத்தில், அத்தியயன பாடங்களானும் சற்கரும அனுஷ்டானங்களானும் மகிழ்வுற்றிலங்கியதனிச்சன சரித்திரத்தானே மகிழாத விப்பிரத்தன்மை யுடையவனுகத் தன்னைக் கண்டான், சித்தத்திற் றேசாந்தர அடைவேபோலும் பிரதிபைமாத்திரத்துற்றதைக் கண்டான். ஒருபோது

அந்தத் துவிஜசிரேஷ்டன் தின வியாபார நிஷ்டையினாலே இளைப்புற்றவனாகி நன்றாகத் தூங்கினான்.

(ச.) மற்றொரு புருடனானது = நராந்தரமானது, அஃதெங்ஙனமெனில்? சித்தஞ் சிந்தை வசத்தினால், அசைவு=சலனமாய், பூர்வவாசனைத் தியாகமாத்திரத்தால், மீளப்பற்றி, ரூபாந்தரத்தை யடைந்தது, நீர்வாயுவசத்தினாற் பூர்வ இருப்பைவிட்டுத் தரங்காதிரூபத்தை யடையுமதுபோலென்பதாம்; அந்தச் சிந்தாகற்பித புருடன்றானே, தன்னிடத்தில், காகதாலீ யப்படியே, வாஞ்சையுற்றனன், இச்சைப்படி யபிமதமுற்றனன் அன்றிச் சனத்தொழிலாதி யால் அடைந்தவ னன்றாய்த் தன்னைச் சீவடன்பேரொருவன் என்றுணர்ந்தான், சீவடன் ஆனேன் என்று நாமந் தரித்தான், தன்னாலே யொரு போதறிவுற்ற நாமங் கற்பிக்கப்பட்ட தென்பது பொருள். சீவடன் முதல் உருத்திரபரியந்தமான சந்நியாசியின் சொப்பன பரம் பரைதனைச் சாற்றல்:—மற்றோர் சனபதம் = தேசத்தினின்றுந் தேசாந்தரரூபத்தை தின மிகு வியாபாரமென்னும் பிராந்தி யேதுவால், சிராந்தி யென்றும் பாடம். (3-4-5.)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மற்றைய கற்பனைகளையும் விரித்தல்:—பாதபம்—அரசன்—துஞ்ச என்பன.

பாதபம் விதையானாற்போற் பள்ளிகொண் மறையோன் றன்பாற்
போதுறு கனவிற்றன்னைப் பொருவில் வன்னியனைக் கண்டான்
மேதகு முணவாற்றுஞ்சி மேவியகனவிற் றன்பாற்
பூதலத் தரசனாக வவன்றனைப் பொலியக் கண்டான்.
அரசனே ரிரவுதுஞ்சி யடைந்தவோர் கனவிற் றன்னைச்
சுரமகளாகக் கண்டான் சுரமகள் சுரதப் போரிற்
பரவசமாகத் துஞ்சப் பயில்வுறு கனவிற் றன்பால்
குரமட மானைக்கண்டாள் கூறுமான் றுயின்ற தோர்கால்.
துஞ்சமான் பரிசயத்தாற் சூழ்ந்ததோர் கொடியாத் தன்பாற்
செஞ்சவே கனவிற்கண்ட தண்ணலே திரியக்கேனு
நெஞ்சுறக் கண்டகேட்ட மறப்பில நிகழ்கனவிற்
சஞ்சரித் திடவேகானு மாதலாற் சாற்றக் கேளாய்.

(ப - ரை.) பாதபம் விரையானால்போல்=தருவானது பீஜமானதேபோலும், பள்ளி கொள் மறையோன் = தூங்காநின்ற பிராஹ்மணன், தன்பால் = தன்னிடத்தில், போதுறு கனவில் = உண்டாகிய சொப்பனத்தில், தன்னைப்பொருவில் வன்னியனைக்கண்டான் = தன்னை போர்புரியும் வில்லாளியாகிய சாமந்தனைத் தரிசித்தான், மேதகுமுணவாற்றுஞ்சி மேவிய கனவில்=மிகுந்த ஆகாரங்கொண்டு துயின்றுண்டாகிய சொப்பனத்தின் கண்ணே, தன்பால் பூதலத்தரசனாக = பூமண்டலத்திற்கு மன்னவனாக, அவன்றனைப் பொலியக்கண் டான் = அவன் தன்னை விளங்கத் தரிசித்தான்.

அரசனே ரிரவுதுஞ்சி = மன்னவன் ஒரு ராத்திரித் தூங்கி, அடைந்த ஓர் கனவிற் றன்னை = உண்டாகிய ஒருசொப்பனத்தில் தன்னை, சுரமகளாகக் கண்டான்=சுராங்கனை யாகத் தரிசித்தான், சுரமகள் சுரதப்போரில் = சுரஸ்திரியானவள் சம்போக யுத்தத்தில், பரவசமாகத்துஞ்ச = இளைத்துப் பரவசப்பட்டுத் துயிலவே, பயில்வுறு கனவிற்றன்பால் =

கண்ட சொப்பனத்திற் றன்னிடத்தில். குரமடமானைக் கண்டாள் = குளம்புகளோடுகூடிய பெண்மானைத்தன்னைத் தரிசித்தாள், கூறுமான் துயின்றதோர்கால் = உரைத்தமானனது ஒருபோது நன்றாகத் தூங்கியது.

துஞ்சமான் பரிசயத்தால் = தூங்கமான் பழக்க வசத்தால், சூழ்ந்ததோர் கொடியாத் தன்பால் = சூழ்ந்துகொண்டிருக்கு மொருலதையாகத் தன்னிடத்தில், செஞ்சவே கனவிற் கண்டது = நன்றாகத் தன்னைச் சொப்பனத்திற் றரிசித்தது, அண்ணலே = ஹே இராகவ! திரியக்கேனும் = மிருகாதிகளேனும், நெஞ்சுறக்கண்ட கேட்ட மறப்பில = மனமுறக்கண்டவை கேட்டவை தம்மை மறந்திடமாட்டாவாம், நிகழ்கனவில் = உண்டாகிய சொப்பனத்தில், சஞ்சரித்திடவேகாணும் = பிரதீதியாகவே தரிசிக்கும், ஆதலால் சாற்றக் கேளாய் = ஆகையினால் உரைப்பக் கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) தருவானது உள்ளே அவயவங்களை யொடுக்கிக்கொண்டு விரையில் அடங்கி யிருத்தலே போலவாம், அந்தத் துவிஜனனவன் சுயம் சொப்பனத்தில் தன்னிடத்தில் அதன்பின்னர் மாண்டலிகராஜத் தன்மையைக் கண்டனன் ஒருபோது அச்சாமந் தன் ஆகாரஞ் செய்துகொண்டு தூங்க கனநித்திரையால், கனவில் இராஜத்தன்மையைக் கண்டனன், சாம்ராஜ்யத்தை யடைந்தான், அது திசைகளின் வளையங்களைக் காக்குந்தன்மையதாயிருந்தது, புஷ்பக்கூட்டங்களோடு கூடியலதையேபோலப் போகக்கூட்டங்களோடு கூடியிருந்தது, மிகவும் ரஞ்சிதமா யிருந்தது; அம்மன்னவன் ஒருபோது சொஸ்தனுகிச் சகல விவகாரங்களையும் விட்டவனுகி நன்றாகத் தூங்கினன், காரணமாகிய பீஜத்தின்கண் தன்னுடைய காரியமாகிய விருக்ஷாதிபோலப் பலதானப்பொருட்டு நேர் நிற்கும் தன்னுடைய ஸ்திரியாசக்திரூப ஆசாரமுடைய அவன், சொப்பனத்தில், தன்னிடத்தில், வெகு புருட சம்போகமுறினும் அநிந்திதமாய அப்சரஸ் தன்மையைக் கண்டனன்; இது விருக்ஷகோசரச உல்லாசத்தில் மஞ்சரித்தன்மைபோல் எழுந்ததாம்; ரச உல்லாசத்தில் சேதனத்வ கற்பனையாற் கூறியதாம், இலக்கணையால் விருக்ஷஜீவோக்தி யெனினுமாம். அச்சுராங்கனையானவள் இரதிப்பிராந்தையாய்க்காட நித்திரையை அடைந்தனள், மான்கட் சௌந்தரிய அபிலாப வாசனையால், தன்னிடத்தில் இஷ்டப்படி மான்றகைமையைக் கண்டனள், ஆவர்த்தத் தன்மைவாய்ந்த அம்புசாமிய அவஸ்தையே போலும்; அந்தச் சஞ்சல நயனம் வாய்ந்த மானனது ஒருபோது நித்திரையோடு கூடியதாய், சொப்பனத்தில் தன்னிடத்தில் தன்னப்பியாசத்தாற் றிடமாகக் கொடித்தன்மையைக் கண்டது, குறுக்குயோனிகட்கு சொப்பன தரிசனமுளதா ?இலதாவென்னும் ஐயப்பாட்டினர் பொருட்டுரைத்தல்:—அண்ணலே யென்பதாதி. திரியக்காயினும் சித்த இயற்கையினுனே கனவைக்காணும், கண்டவைகளினதூஉம் கேட்டவைகளினதூஉம் கெடாத ஸ்மரணமானது சித்தத்திற்குளதாம்; சித்தத்திற்குக் கண்ட கேட்ட சமஸ்காரங் கவருந்தன்மை யுண்மையின், சமஸ்காரம் உளதாகவே ஸ்மிருதியோடு கூடிய சொப்பனம் அகற்றவொண்ணுமையின் என்பது கருத்தாம்.

(ச.) பாதபம் விதையானுப்போல் = பீஜரூபத்தை யடைவதுபோல், பள்ளிகொள் = கன நித்திரையை யடைந்த, வன்னியனுய் = மண்டலேசுவரனுய், பூதலத்தரசனுக = சக்கரவர்த்தியாக, நெஞ்சுறக்கண்ட கேட்டபொருளின், மறப்பில நிகழ் = மறப்பின்றி நிகழும், அவ்வேதுவான சமஸ்கார வசத்தினுல், திரியக்குகளாயினும் சொப்பனத்தைக் காண்பனவாம் என்றதாயிற்று. (6-7-8)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மற்றும் அநேக வாதனையாற் பல ஜன்மங்களுற்றந்த மலர்தல்:— பூவுந், தன்,சட, அக்,கடுவென்பன.

பூவுமென் றளிருங்காயும் பொலிந்தவக் கொடிதன் காட்டிற்
றேவதையா னவந்தத் தேவிவாழ் வனமாய்த் தோன்ற
மேவுவித் தெனுமவற்றி லங்குரமேனி யொப்பாய்த்
தாவுறு ஞேயமுற்ற தன்னுடை யறிவினாலே.

தன்னுடை வணந்தூரத்தே சார்ந்ததாய்த் தன்னுட் கண்டு
முன்னிய சுழுத்தியுற்ற வறிவினன் மூடத்தன்மை
துன்னுற வனுபவித்துச் சுரும்பெனத் தன்னைக்கண்ட
தன்னவண் டோடைக்கஞ்ச வலயங்கீண் டதனுள்ளான.

சடமதி யுயிர்க்குமுன்னஞ் சார்ந்திடும் விளையாட் டோர்பான்
மடல்வன சத்துளாங்கே வண்டுறை தடத்து வந்தோர்
கடகரி குழப்பிவீசக் கஞ்சமுங் கயமுன் வண்டுந்
தொடர் பொடியா னவந்தத் தும்பியைத் தும்பிநோக்கி.

அக்கரியாகத் தன்னைக் கண்டது குளப்பள்ளத்திற்
கைக்கரி வீழ்ந்ததந்தக் கரியையோர் வேந்தன் பாகன்
சிக்கெனக் கொடுபோ யாங்கோர் செருவிலே சிதையச் செய்தான்
பக்கவண் டிணக்கத்தாற்கைப் பகடுமீண் டளியாய்ற் றன்றே.

கடுத்ததோர் களிறுன்மீளக் கயத்தொடவ் வண்டுளா
யடுத்தகூ லத்திலன்ன வறிவினு வன்னமான
துடுத்தநீ ருலகிலன்ன மூலப்பிலா யோனியெய்தித்
தடுத்தநீர்க் கயக்கஞ்சத்தோர் சாரச மானதன்றே.

(ப - ரை.) பூவுமென் றளிரும் காயும் பொலிந்தவக்கொடி = மலரும் மெல்லிய இலையும் காயுங் கனியும் ஆக விளங்கும் அந்தக் கொடியானது, தன் காட்டில் = தான் வாழுங் காட்டில், தேவதையான வந்தத் தேவிவாழ் வனமாய்த் தோன்ற = அதி தெய்வமான அத்தேவி வாழும்படியான வனமாகி விளங்க, மேவு வித்தெனு மவற்றில் = பொருந்தாநின்ற பீஜமென்னும் அவற்றின்கண்ணே, அங்குர மேனியொப்பாய் = முளை வடிவ சமமாய், தாவுறு ஞேயமுற்ற தன்னுடை யறிவினாலே=தன்னுடைய வுணர்வினாலே பாயாநின்ற விடயமுற்றது.

தன்னுடை வணந் தூரத்தே சார்ந்ததாய் = தனது வண்ணமானது சேய்மைத்தாய்ப் பொருந்தியதாய், தன்னுட் கண்டு = தன்பா னோக்கி, முன்னிய சுழுத்தியுற்ற வறிவினன் மூடத்தன்மை = மிகவும் கனமான நித்திரையை அடைந்தது உணர்வினால் மௌட்டியத்தை, துன்னுற=பொருந்த, அனுபவித்து=விடயீகரித்து, சுரும்பென=வண்டென்ன, தன்னைக் கண்டது = தன்னைப் பார்த்தது; அன்ன வண்டோடைக் கஞ்ச வலயங்கீண்ட தனுள்ளான = அவ்வாறாய அளியானது அத்தடாகத்தின் முமரைத் தண்டைக் குடைந்து அதனுள்ளே வசித்தது.

சடமதி யுயிர்க்கு முன்னம் சார்ந்திடும் விளையாட் டோர்பால்=ஜடமதியாகிய பிராணிக்கும் சித்தமானது ஓரோரிடத்தில் விளையாட்டை யடைந்திடும், மடல் வனசத்துளாங்கே= இதழ்விரிந்த கமலத்து ளவ்விடத்தே, வண்டுறைதடத்து = அறுகால்வாழும் சரத்தில், வந்

தோர் கடகரி குழப்பி=ஒரு மதயானையானது வந்து கலக்கி, வீசக் கஞ்சமும் கயமுன் வண்டும் = எறியத் தாமரையும் மதயானையின்முன் அளியும், தொடர்பொடியான = சேர்ந்து தூளாயின, அந்தத் தும்பியைத் தும்பிநோக்கி = அந்த யானையை வண்டானது பார்த்து.

அக்கரியாகத் தன்னைக் கண்டது=அந்த யானையாகத் தன்னைப் பார்த்தது, குளப்பள்ளத்திற் கைக்கரி வீழ்ந்தது=ஆழ்ந்த குழியின்கண் மதகரி விழுந்தது, அந்தக் கரியை யோர் வேந்தன்பாகன்=அந்த யானையை ஒரு மன்னவன்பாகன், சிக்கெனக் கொடுபோய்=விரைவிற் கொண்டேகி, ஆங்கோர் செருவிலே சிதையச் செய்தான் = அவனொரு போரிலே கெடப் புரிந்தான், பக்கவண் டிணக்கத்தால் = அருகிலிருந்த வண்டின் சம்பந்தத்தாலே, கைப்பகடு மீண்டளியாய்ற்று = யானையானது மறித்தும் வண்டேயாயிற்று, அன்றே அக்கணமே அசைக்கியனிறும் ஒக்கும்.

கடுத்ததோர் களிருன்மீள = கடுமையாகிய ஒரு யானையால் மறுபடியும், கயத்தொடவ் வண்டுதுளா = தடாகத்துடன் அந்தப் பிரமரம் பொடியாய், அடுத்த கூலத்தில் அன்ன அறிவினல் அன்னமானது=சமீபத்திலிருந்த அன்ன வுணர்ச்சியினனே ஹம்சப்பக்ஷியாயது, உடுத்தநீர் உலகில் அன்னம்=வேலைசூழ்ந்த அகிலத்தில் ஹம்சமானது, உலப்பிலா யோனியெய்தி=எண்ணில்லாத ஜன்மத்தையடைந்து, தடுத்தநீர்க் கயக்கஞ்சத்தோர் சாரசமானதன்றே=நாற்கரைகளானும் தடுக்கப்பெற்ற தடாகத் தாமரையின்கண்ணொரு பிரஹ்மவாகன ஹம்சமாயது அப்போதே.

(ஸ்ரீ - வீர.) அது புஷ்ப பலபல்லவசாலினியாய லதையாயது லதைபல்லவ ஆசக்திவசத்தினலே கொடியாயது என்பதாம்; வனதேவிகளின் உத்தியான வனத்தில், பிரசித்த மாயகொடி வீடுபோல விலாசச்சீலையா யிருந்தது; அந்தக் கொடியானது சிறிதுகாலம் உள்ளுணர்வாகிய சாக்ஷி சைதன்யத்தானே, நித்திரைச் சாட்டியமேய துயிலை யனுபவித்து, விரையி னுள்ளிருக்கும் வருமுளையின் வடிவமாகிய தீயினது ரூபம்போலும் சொரூபத்தையுடையதாய், அவ்விதமாய, சொப்பன உன்முகமுற்ற மதியினலே பிரமராகாரமாகக் கிளம்பிய சமஸ்காரத்தானே தன்னை வண்டாகக்கண்டது; அதாவது, பீஜாந்தஸ்த அங்குராகாரரூபமாக ஈண்டதிருடமான உள்ளுணர்வானே புடமாகத் தனது சிறுமையையும் நீட்சியையும் கண்டது; சிறிதுகாலம் கனஜடத் தன்மையோடு கூடிய சுழுப்தியிலிருப்பதாகக் கலையால் அநுபவித்துப்பின் றன்னைப் பிரமரமாகத் திரமுடன் கண்டது; அவ்வறுகால் அளியானது பின் உத்தியானவனத்தில் வனலதைகளிலும், மலர்ந்த பதுமினிகளிலும், தருணிகளிடத்தில் வல்லபன்போல விளையாடித் திரிந்தது; பிரியையின் பிம்பாதராமாதுரியரசமென்னக் குசும சம்பந்தியாய மதுமகரந்தமாந்தியது அவ்வளி முக்தாவல்லி விலாசிகளாகிய புஷ்பக்கூட்டங்களில் திரிந்து விளையாடிக்கொண் டிருந்தது,அவ்வண்டு சரோஜினியின் கண்ணேயிருந்த பற்றுடையதாய் தாமரையின் நாளத்துறைவதாயது, ஜடமதியினுடைய சித்தமும் சிலபாலே இரதியை யடைகின்றது, அநாலினியைக் கலக்கி விளையாடும்பொருட்டு ஒரு கஜமானது ஆங்குற்றது, இரம்மியவஸ்துவின் க்ஷயப்பொருட்டேயன்றே மூடர்களின் முயற்சியானது முற்றுகின்றது, அந்தக் கஜத்தினலே அப்பிரமரம் பற்றியிருந்த தடாகமானது, தூளாக்கவே பெற்றது, அந்நாளத்தோடுகூடவே, அவ்வறுகாலானது, கஜத்தின் றந்தத்துட்பட்டதாய், பயிர் முதலியவற்றுள் அகப்பட்ட கோரை முதலியவைபோல மெல்லப்பெற்றதாகிச் சூர்ணத்தன்மையை யடைவுற்றது, வீரீகியேபோலும் பொடியாயது, அவ்வண்டானது வாரண தரிசனத்தானே வாரணவடிவத்தைப் பாவித்தலால், தன்னை மதோன்மத்த கஜமாயுற்றதாகக் கண்டது, அக்கஜமானது காய்ந்த கடற் கம்பீரக்குழியில், யானை பிடிப்பவர்

தோண்டிய பள்ளத்தில், சிருங்கலாதிபந்தங்களினும் அதிகடோரமாய சம்சாரத்தில் தமோ கன கனமாய சூனியகோர சம்சாரத்தில் வீழ்ந்திருக்கும் ஜீவனைப்போல் வீழ்ந்து பாரவிசி யாதி துக்கங்களை யனுபவித்தது; சிக்ஷிக்கப்பெற்றபின் ராஜவல்லயமாயது, எதிரியின் பலத்தையிரிக்கும் எதிரில்லாத பலமுடையதாக விருந்தது, எப்போதும் மதபலத்தினாலே தன்னை மறந்தே யிருந்தது, திமிர் பிடித்துப்போ யிருந்தது. அது ஒருபோது அடைவுற்ற தாய இரவுப்போரில் சென்றதாய், தீர்க்கமான கட்கங்களானும், முப்பது அங்குல முடை மையுங் கடந்த கிருபாணங்களானும், சின்னாபின்னமாகி மிருத்தியுவை யடைந்தது; ஆன் மாவின்கண்ணே விவேக அநிலத்தானே தூற்றப்பட்ட ரூபத்தோடுகூடிய ஜீவோபாதி தேகாதியபிமானம் விலயமாவது போலவாம்; யானைக் கூட்டங்களின் கும்பஸ்தல அக்கிர பாகங்களினின்றும் கிளம்பாநின்ற அளிகளைப் பார்த்து, கண்டத்திருக்கும் பிரமா அப்பி யாசத்தானே, நெடுங்காலம் பழகிவந்த பழக்கத்தால், அளிகிளம்புந் தரிசன சமஸ்கார உற் போதிதத்தால் என்பது கருத்து, கஜம் மீண்டும் வண்டாயது; பூர்வவாசனையினாலே வனக் கொடியைச் சேவிப்பதாகி அது தடத்தைவந் தடைந்தது, அஞ்ஞானது வாசனைகளின் தூரப் யாசமானது விடமுடியாததே யன்றோ! ஆங்கது யானையின் பாதக்குழம்பு மிதியுண்டு மீண் டும் மிகப் பொடியாயது, பக்கத்திருந்த ஹம்ச வுணர்ச்சியினானே = ஹம்சத்தின் றரிசனத் தானே கிளம்பிய வாசனையினாலே, ஹம்சவடிவத்தை யடைந்தது, அந்த அன்ன மானது நெடுங்காலம் அநேக மயில் யோனிகளிற் பிறந்திறந் தலைந்து, என்னுங் கூற்றான், தாமரை வனத்தி லன்னந்தானாய், விந்தியச் சோலையில் வாரணமாகி தேக யந்திரங்களில் மானுமாகி என்பதாதியாக இனிக்கூறுந் திசையந்தாளத் தில், எண்பத்தைந்து என்னும் ஜன்மங்கள் உண்டாயின, என வுணரலாம், உணரவே கண் டுக் கூறிய ஹம்சசன்மத்துவயத்தின் பின்னர், ருத்திரத்தன்மையை யடைந்தது, சம்சார சதபரியந்தத்தில் ருத்திரன்யான் என்ன அப்பிக்ஷுவாகயானிருந்தே நிலைபெற்றேன்; என இனிக் கூறப்பெறும். அது ஒருபோது மீளவும், ஹம்சசன்மத்தை யடைந்து வெகு அன் னிய ஹம்சங்களோடுகூடி விளையாடிக்கொண்டிருந்தது; அவ்வன்னக் கூட்டத்தில் பிரஹ்ம ஹம்ச குண ஆகாராதி வர்ணன சிரவணத்தால் அந்நாம சகித அவ்வாகார அர்த்தவுதியும் என இருவகையினும், பிராஹ்மஹம்ச வடிவமாய உணர்வானது, சிறிதாக இருந்து யானு மித்தகைய பிராஹ்மஹம்சம் ஆவேன் என்னும் வாசனை, அப்பிறப்பில், அவ்வம்சபூதமாய இப்பிக்ஷுவின் மனத்திற்கு, முன் வருணிக்கப்பெற்ற அண்டரசத்திலிருக்கும் மயிற்போலக் கனமாயது; அது பிராஹ்மஹம்சமென்னும் அச்சிந்தையையே திடமாகப் பழகி, வியாதியாம் வண்டினாலே துளைக்கப்பெற்று இறந்துபோயது, அவ்வுணர்வின் அநுசந்தானத்தால் பது மஜசாரசமாகப் பிறந்தது, இலக்கணையானேயம்சவாகனமாய தென்பதாம்; அப்பிறப்பிற் பிரஹ்மலோகத்தில், அதிசயமாக மிகமிகவும் விவேகமுடைத்தாய், பிரஜாபதியினது விவேக வைராக்கிய தத்துவஞானதி யுபதேச விலாசங்களினாலே நன்குணர்த்தப்பெற்றதாய், அத னானே லௌகிக வஸ்துக்களாகிய போக்கியவர்க்கங்களில், சாரத்தன்மைத் திருஷ்டிவிட்ட தாகி, ஜீவன்முக்த அவஸ்தையை யுடைத்தாகி, சுகமாக இருந்தது; இங்ஙனம் ஜீவித்துக் கொண்டே நிரதிசயாநந்த மோக்ஷசுகத்தை யடைந்திருந்து, "பிரமாவினுடனே யவர்தா மியாவரும், பிரளயமானது வந்துபிறங்கிடவே, பரனது அந்தத்தில் பரப்பிரமமறிந்தவராய், பரமாம் பதத்தைப்பற்றி வாழ்வாரே" என்னும் சுருதியினாலே, இருபரார்த்த முடிவில், பிரஹ்மாவோடுகூட விதேகமுக்த அவ்வன்னத்தால், என்னேயதிகம் இனி அடையத்தக்க தொன்றுளது! என்னுமிது நன்மதியரானே நன்கு சிந்திக்கப்பாலதாய் ஒன்றுமே யுடையத்

தக்க தின்றும்; ஞானத்தானே யிங்கேயே, மூலசகித அநர்த்த நிவிருத்தியும், நிரதிசயானந்தப் பிராப்தியும் சம்பாதிக்கப்பெற்றிருத்தலின், அதனினும் அயலாய புருடார்த்தம் இன்மையினாலும், இதற்குக் கிருதகிருத்தியத்தன்மை யுண்மையின் என்பதாம்.

(ச.) முன்னர், கனநித்திரையை யடைந்த மறையோன் சொப்பனத்திற் றன்பால் கொடியோடுகூடிய யானை குதிரையாதி சேனையேயாகிய மேகமாலையினாலே வியாபிக்கப் பெற்ற மண்டலேசுரத் தன்மையைக் கண்டான்: அச்சாமந்தன் எல்லாத்திசை மண்டலங்களையுங் காக்கும் ஆற்றலுற்ற சக்கிரவர்த்தியாகக் கனவில் தன்னைக்கண்டான்; என்று கூட்டிக் கொள்க. திரியக்கேனு மென்றதானே வேறுள்ளவற்றையும் கொள்ளலாம். தோன்ற = அக்கொடியானது, வனதேவிமார்களின் வனக்கிரீடைகளில் கொடி வீடுபோல விளையாடுவதாகி விளங்கிக்கொண்டிருந்தது. வித்தெனு மவற்றில் = பீஜத்துக்குள்ளிருக்கும் அங்குரத்தினது, மேனிக்கொப்பாய், அதனால், தாவுறும், ஞேயமுற்று = ஞேயவஸ்துவோடு ஆசரித்ததாயிருக்கும், தன்னுடை யறிவினாலே; தன்னுடை = கொடித்தேகதாரியினுடைய, தொங்குதலில், லதாபாவ உசிதமாய விருக்ஷாதியில், ஒருபால் தொங்குதலைக் கண்டது எனக் கொடிக்கு அத்தகைய தசை காட்டப்பட்டது; சாக்கிரதசையென்றும் பாடம்; சுழுத்தியுற்ற = சுழுத்தியடைந்தவனது அறிவுபோன்ற அறிவினாலே, மூடத்தன்மை = நித்திரை வடிவமான சாட்டியத்தை, துன்னுறவநுபவித்து, சொப்பனத்தில், தன்னைச் சுரும்பெனக் கண்டது; சடமதியுயிர்க்கும், ஆயினும், மந்தமதியுள்ள ரசமறியாத கிருமிகோடிக்கும்; உள்ளம், ஓர்பால் = ஓரிடத்தே பெண்வியத்தியின்கண் இரதியையடையும் விளையாட்டு = இரதியை, சார்ந்திடும், நோக்கி = அதனதுரூபநோக்க பாவனையால் கந்த விசேடத்தோடுகூடிய மத்த அத்தியாயது சார்ந்திடுமென்றது, தடாகத்தில் பற்றுடையதாய்த் தாமரைத்தண்டில் உறைந்ததை விளக்கியதாம். பக்கவண்டிணக்கத்தால் = கண்டத்துறும் பிரமரபாவனையால். ஓர் சாரசம் = பிரமனது அன்னம். (9-10-11-12-13)

(ஸ்ரீ - வீ - அ - கை.) அவ்வன்னங் கயிலையை யடைதலும் ஈசனாதலும் முன்னதைச் சிந்தித்தலும் வருணித்தல்:—அக்குருகு, ஈசன் என்பன.

அக்குரு கொருகால் விண்போ யரன்புரத் தானைக்கண்டு
மிக்கசங் கரனென்றே மெய்ம்மையாய் நினைத்தலோடு
நக்கன துருவமாகி நயந்தவா வீசனாட்டிற்
றொக்கபல் கணங்களோடுஞ் சூக்கமெய் ஞானத்தோடும்.

ஈசனா யியங்கு வான்முன் னியன்றன சரிதையெல்லா
மாசறு புந்தியாலே மதித்தனன் மறைப்பிலாத
தேசுவிஞ் ஞானமேனிச் சிவன்றனி யிருந்துசெப்பும்
வீசிய கனவுறாற்றின் வியப்பெலாம் விளங்கநோக்கி.

(ப - ரை.) அக்குருகு ஒருகால் விண்போய் = அவ்வன்னமானது ஒருபோது ஆகாயத்தே சென்று, அரன் புரத்தானைக்கண்டு = ஸ்ரீ கைலாயத்தே ஸ்ரீ மகாதேவரைப்பார்த்து, மிக்க சங்கரன் நான் என்றே = மிகுந்த மகிமையையுடைய ஸ்ரீ மகாதேவர் யான் என்று தானே, மெய்ம்மையாய் நினைத்தலோடும் = உண்மையாய் எண்ணியவுடனே, நக்கனதுருவமாகி = ஸ்ரீ பரமேசுவரரது வடிவமாகி, நயந்தவா = இஷ்டப்படி, ஈசன் நாட்டில் = ஸ்ரீ பரமேசுரரது புரத்தில், தொக்கபல் கணங்களோடும் = அடைந்துள்ள பல சிவகணங்க

ளுடனே, சூக்கமெய்ஞ்ஞானத்தோடும் = சூக்ஷமமான தத்துவ சிவ ஞானத்துடனே. ஈசனுயியங்குவான் = ஸ்ரீ மகாதேவனுகவே விளங்குவான், முன்னியன்றன சரிதை யெல்லாம்=பூர்வம் நடந்தனவாகிய சரித்திரங்கள் யாவற்றையும், மாசறுபுந்தியாலே மதித்த னன் = குற்றமற்ற மதியினாலே யெண்ணினன், மறைப்பிலாத தேசுவிஞ்ஞானமேனி = ஆவரணமற்ற தேஜசோடுகூடிய சிறந்த உணர்வுவடிவ, சிவன் றனியிருந்து = ருத்திரன் ஏகாந்தமாக இருந்து, வீசிய கனவுநூற்றின் = உண்டாகிய நூறு சொப்பனத்தின், வியப் பெலாம் = அதிசயமெல்லாம், விளங்கநோக்கி செப்பும் = பொலியக்கண்டு சொல்லும்.

(ஸ்ரீ - வீர.) அவ்வன்னம், அநாயாசமாகவே பிரஹ்மாவினது ஆசனநளினிநாளத்தில் விளையாட்டினது லாபத்தால், அதாவது, பதுமஜசாமீப்பிய முத்திபதப் பிராப்திபலத்தால், ஒருபோது பிரஹ்மாவோடு ருத்திரபுரமடைந்து ருத்திரனை தரிசித்தது; அந்த ருத்திரபுரத் தில், ருத்திரனுடைய ஞானயோக ஐசுவரியாதி சர்வகுண மேன்மையைக் கண்டதனால், அவ்வன்னத்திற்கு யானும், ருத்திர அகம்பாவனையானே ருத்திரன் ஆவேன் என்னும் திண் ணியமதி யுண்டாயது. அற்றேல், ஜீவன் முக்தனுய் வாசனையற்ற ஹம்சத்திற்கு எங்ஙனம் உருத்திரத்தன்மையி னுசைகூடும்? அப்பாவனை யப்பியாசத்தால், தேகத்தியாகத்தால், மீண் டும் ருத்திரசரீரதாரணமுந்தான்: பரதனுக்கு மூப்பிறப்பால் என்னும் நியாயத்தானே அதற்கு நானுதேக போக்கியப் பிராரப்தசேடத்தால் தேகாந்தரதாரணமாம் என்பதாயின், ருத்திர அகம்பாவ தாரண வர்ணனத்திற்கு உபயோகமின்மை வழக்குண்டாதலின்; ருத்திரனுக்கு ஈசுரத்தன்மையானே அப்பாவத்திற்குக் கருமபலத்தன்மை கூடாமையினானும்; என்றிடில்? ஆண்டுக் கூறல், கண்ணுடியிற் பிரதிபிம்பம்போல, சடுதியில் இவ்வாறுதானே பிரதிபிம்பித மாயது, இது முக்கிய உருத்திரபாவமன்ரும், மற்றே, பிரதிபிம்பம்போலத் தற்சாரூப்பிய முத்தியாம், அதுவும் கரும உபாசனைப் பலம் ஆகவே செய்யும்; தேவனுகித் தேவதைகளை யடைகின்ருன், என்னும் சுருதியால் என்பது கருத்தாம். இது ஜன்மாந்தரமும் அன்ரும், மற்றே, பிராரப்தசேஷத்தால் வந்த இச்சையானே, யோகியேபோல மானசதேகாந்தர கற் பனத்தால் முன்னைய தேகத்தை விடுவதன்மாத்திரம், என்னுங் கருத்தாலுரைத்தல்:—நக்க னது என்பது. ருத்திரபூதவபுவை யடைந்த அவ்வன்னமானது, ஆண்டு அவ்வன்னத் தனுவைவிட் டொழித்தது, நறுமணம் காற்றின் றன்மையையேவுற்றுப் பூங்கொத்தை விடு வதேபோலும், அவ்வுருத்திரன் உருத்திரபவனத்தில், அவ்வச்சிவபுர ஆசாரங்களோடுகூடி, சிவகணகோடிகளில், சிரேஷ்டமான காணபத்திய பதவியால், தனதிஷ்டப்படி விளையாடிக் கொண்டிருந்தனன்; சாரூப்பிய முத்தியின்கண்ணே சகத்சங்காராதி வியாபார அதிகாரமில தேனும், ஞான ஐசுவரியாதியால், பிரசித்த ருத்திர சாமியம் உளதேயாம், என்னுங் கருத்தா லுரைத்தல்:—ஈசனுயென்பது. அவ்வுருத்திரனே, அநுத்தமஞானங்களாலும்; ஐசுவரிய விலா சங்களாலும், பிரசித்த ருத்திரனோடு ஒப்பாக, இருந்ததன்மையினாலே, மதியினாலே தன் னுடைய முன்னடந்த எல்லாவிருத்தாந்தங்களையும், கண்டனன், அப்போது ஆவரணமின் றிய விஞ்ஞான வடிவமாய பகவானும் அவ்வுருத்திரன், சொப்பன சதவிஸ்மிதனுகித் தன் னுள்ளேதானே ஏகாந்தத்தில், கூறிக்கொள்ளுவதாவது.

(ச.) அரனைக்கண்டு, அவனது பாவனையாலுறுஞ் சங்கரனுனென்னுஞ் சமஸ்கார வசத் தினுல், நயந்தவாறு சஞ்சரித்தான்; மறைப்பிலாத=ஜன்மாந்தரங்களாலும் ஆவரணரகித மான, சிவகணம்=பிரமதகணம், சிவபுராசாரங்கள்=சிவமாகாத்மிய வர்ணனுதிகள், நிரா வரணம் = ஜன்மாந்தரங்களாலும் ஆவரணரகிதம், விஞ்ஞானமே வடிவமாக உடைய பக வான். (14-15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அந்த ருத்திரபகவான் மாயையினுடைய வன்மையையும் தன்னுடைய முன்மையையும் சிந்தித்துப் பார்த்தல்:—சித்திரம், என்னுளம், என்பன.

சித்திர மம்மவிந்தச் சகத்தைமோ கஞ்செய்மாயை
மித்தையா யிருந்துங்கெட்டேன் மெய்மையாங் கானல்போல
வித்திற மயக்கமாக விப்பெரு மாயைக்காட்டி
லொத்தபல் லிடத்திற்புக்கே யுழன்றன னெல்லையின்றி.

என்னுள மாத்திரத்தி லெழுந்த கற்பனையினாலே
முன்னொரு சிருட்டிக்கோநான் மொழிந்த சீவடப்பேரானேன்
பின்னொரு சிருட்டிதன்னிற் பெருங்கலை மறையோனானேன்
மன்னவ னானேன்பின்பு வந்ததோர் சிருட்டிதன்னில்.

(ப - ரை.) சித்திர மம்மவிந்தச் சகத்தை மோகஞ்செய்மாயை = விசித்திரம் அந்தோ இந்த வுலகத்தை மயக்கஞ் செய்விக்கும் மாயையானது, மித்தையா யிருந்துங்கெட்டேன் = முக்காலத்திய நிட்டேதப்பிரதி யோகியாயிருந்தும் நொந்தேன், மெய்மையாங் கானல்போல = கானனீரை யுண்மையென்று நம்பியதேபோல, இத்திற மயக்கமாக இப்பெரு மாயைக்காட்டில் = இவ்வண்ணம் மோகமாக இந்தப் பெரிய மாயையாகிய வனத்தில், ஒத்தபல்லிடத்தில் = மனதிற்கொத்த பலவிடங்களில், புக்கே யுழன்றனன் எல்லையின்றி = புகுந்தே யலைந்தனன் எல்லையில்லாமல்.

என்னுள மாத்திரத்திலெழுந்த கற்பனையினாலே = என்னுடைய மனோமாத்திரத்திலே கிளம்பிய கற்பனையினாலே, முன்னொரு சிருட்டிக்கோநான் = பூர்வமொரு சிருஷ்டியில் அகம், மொழிந்த சீவடப்பேரானேன் = கூறிய சீவடன் என்னும் பெயரை யுடையவனானேன், பின்னொரு சிருட்டிதன்னில் = பின்பொரு சிருஷ்டியின் கண்ணே, பெருங்கலை மறையோன் ஆனேன் = பெரிய சாஸ்திர பாண்டித்தியமுள்ள விப்பிர சிரேட்டனானேன், பின்பு வந்ததோர் சிருட்டிதன்னில் = பின்னர்வந்த ஒரு சிருஷ்டியின்கண்ணே மன்னவன் ஆனேன் = மகாராஜாவாயினேன்.

(ஸ்ரீ - வீர.) அந்தோ விசித்திரம்! விசுவ விமோக விலாசினியாய இம்மாயை, இதனாலன்றோ இத்தனையும் விரிந்தது, மருப்பூமிகளில் வாரியேபோலும், அசத்தியமேயாயினும் சத்தியம்போலத் தோன்றாநிற்கும், எண்ணியமுறையில் சத்தியங்கள்போலப் பொலிவனவும் அத்தியந்தஞ் சித்திரங்களும், ஆகிய வெகுவெகு சம்சார ஆரண்ய பூமிகளில், வெகு வெகுவாக யான் அத்தியந்தம் பிராந்தனைகத் திரிந்தலைந்தேன். ஒரு சர்க்கத்திலே யான் சீவடன் என்னும் பெயரையுடையவனாக இருந்தேன், ஒன்றில் மறையவர் சிரேஷ்டன் ஆயினேன், மற்றொன்றில் வசுதாதிபனாயினேன், பதும வனத்தில் அன்னமாகி, விந்திய கச்சத்தில் வாரணமாகி ஹரிணமுமாகி, உள்ளேன்; இந்தப் பிரகாரம் தேகயந்தரத்திலும் மனோயந்தரத்திலும், யான் இந்த வர்ணிதரூபமான தசையை யடைந்துளேன்.

(ச.) கெட்டேன் என்பது கேதத்தில் வந்தது; மனோ மாத்திர கற்பனையினாலே அநேக மார்க்கங்களில் ஜீவடாதி நூற்றுக்கணக்கான தேகங்களை யடைந்து இப்போது ருத்திரனாகி யுள்ளேன்.
(16-17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இனியாகவேண்டிய காரியத்தி லாராய்ந் தொருப்படல்:—இத்திறமென்பது.

இத்திற னூறுயோனி யெய்தியீங் கீசனுனேன்
மெத்திய வாண்டுகங்கள் விருத்திக ளனேகஞ்சென்ற
வத்தனை பிறப்பும்போய்கா மறிகுவோ மறிந்துநன்று
யொத்தவா ருக்கியெல்லா மொருவழிப் படுத்துகிற்போம்.

(ப - ரை.) இத்திறம் நூறுயோனி யெய்தி=இந்தப்பிரகாரம் சதசரீரங்கள் அடைந்து, ஈங்கு = இவ்விடத்தே, ஈசன் ஆனேன் = ருத்திரன் ஆயினேன், மெத்திய ஆண்டுகங்கள் விருத்திகள் அநேகஞ்சென்ற = நிறைந்த சம்வற்சரங்களும் யுகங்களும் சரிதைகளும் அனேகம் வற்றன சென்றன, அத்தனை பிறப்பும்போய் நாமறிகுவோம் = அவ்வளவு ஜன்மங்களையும் சென்று யாமறிவோம், அறிந்து நன்று யொத்தவாறுக்கி=உணர்ந்து நலமாகப் பொருந்திய வண்ணம் பொருத்தி, எல்லாம் ஒருவழிப் படுத்துகிற்போம் = யாவற்றையும் ஐக்கிய பாவமாக ஆக்குவேம்.

(ஸ்ரீ - வீர.) தன் மனோமாத்திர சம்பிரமத்தோடு கூடிய இந்தச் சம்சார ஆடம்பரத்தில் சம்சார சதபரியந்தத்தில், முடிவிலென்றபடி, அந்தப் பிக்ஷுவாகிய யானிருந்துதானே உருத்திரன் யானென்ன நிலைத்துள்ளேன்; பிரதம சர்க்ககாலந் தொடங்கி, பாபத நிதேகாச வடிவத்தினின்றும் சலித்து நழுவிய எனக்கு, இச்சம்சாரத்தின்கண்ணே, ஆயிரக்கணக்கான வருடங்களும் நூற்றுக் கணக்கான சதுர்யுகங்களும், அநந்தமின ருதுசரித்திரங்களும் சென்றன; ஆகையினுற் கௌதுக வசத்தினுலேயே விரும்பிச் சென்று, அவ்வெல்லாத்தற் சம்சாரங்களையும் யான் காண்பேன்; நற்பிரபோதத்தினது தானத்தினுலே, அவ்வுபாதிகளினின்றும் பிரிவுபெற்ற தனது ஆன்மாவை, யான் ஒன்றுக்குவேன்.

(ச.) எல்லாம் = அவர் யாவரையும், என்னோடு ஏகமாக்குவே மென்றதாயிற்று. (18)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கூறியவண்ணம் சிந்தித்த ருத்திரன் யாவரையும் சென்று ஒன்றுபடுத்தி வாழ்வித்தல்:—என்று, சீவட், மூவரும், வேதியன் என்பன.

என்றுணர்ந் தீசன்முன்னே யிருந்தசந்நி யாசிதன்பாற்
சென்றவன் றனையெழுப்பிச் சேதனத் தொடுநெஞ்சோடு
மொன்றுறச் செய்தலோடு முணர்ந்த சந்யாசிதானு
நின்றதன் மயக்கமெல்லா நினைவுற நோக்கினுனே.

சீவட ணுதியாந்தன் வடிவத்தைச் சிவன்சிந்தித்துத்
தாவில்சிற் ககனத்தோர்பாற் சார்ந்துசீ வடன்வாழ்தேசங்
கேவலந் தானுஞ்சந்நி யாசியுங் கிட்டியன்னுன்
மேவுற மனத்தினோடு மறிவொடு மேவுவித்தான்.

மூவரு மறிவுபெற்றோர் முதுபழக் கத்தினுலே
மாவியப் புற்றுஞ்சற் றும் வியப்பிலார் வடிவமொன்றே
மேவுமூ வடிவமானோர் மிகுமுருத் திரனுமற்றச்
சீவடன் ருனுஞ்சந்நி யாசியுஞ் சேர்ந்துசென்று.

வேதியன் முதலாயுள்ளோர் பிறப்பிட மெல்லாமேவித்
தீதறக் கூட்டித்தெய்வ ஞானத்தாற் றேசுமிக்க
சோதிருத் திரர்களாகி யறிவுற்றார் சொன்னவீசன்
போதிரென் றேவத்தத்த மிடங்களிற் போயினாரே.

(ப - ரை.) என்றுணர்ந் தீசன் = என இந்தப் பிரகாரம் ருத்திரபகவான் சிந்தித்து, முன்னே=முற்போது, இருந்த = வசித்துள்ள, சந்நியாசி தன்பால் = தன்னிடத்தில், சென்று=சேர்ந்து, அவன்றனை யெழுப்பி = அச்சந்நியாசியைக் கிளப்பி, சேதனத்தொடு நெஞ்சோடும்= அறிவோடும் மனத்தோடும், ஒன்றுறச் செய்தலோடும் = பொருந்திடுமாறு செய்திடவே, உணர்ந்த சந்நியாசிதானும்=உணர்வுற்ற சந்நியாசியும், நின்றதன் மயக்கமெல்லாம் = இருந்த தன் பிரமம் யாவற்றையும், நினைவுற நோக்கினானே=எண்ணிப்பார்த்தான் ஏ - அசை.

சீவடனுதியாஞ் சிவன் தன்வடிவத்தை = சீவடனுதியாகச் சிவனீருக உள்ள தனது, வடிவத்தை, சிந்தித்து = சிந்தனைசெய்து ஆச்சரியமுற்றபின், தாவில் சிற்ககனத்தோர் பால் = அகோசரமாகிய சிதாகாசத் தோரிடத்தே, சார்ந்து சீவடன் வாழ்தேசம்=பொருந்திச் சீவடன் வாழுந்தேய நோக்கி, கேவலந்தானும் சந்நியாசியுங் கிட்டி = ருத்திரனும் சந்நியாசியு மாத்திரமடைந்து, அன்னான் மேவுற மனத்தினோடும் அறிவொடு மேவுவித்தான் = அச்சீவடன் சித்தத்தினோடும் சேதனத்தோடுஞ் சேர்வுறும்படியாகச் செய்வித்தான் ருத்திரன்.

மூவரும் அறிவுபெற்றார் = உணர்வை யடைந்துள்ள அந்த மூன்றுபேறும், முது பழக்கத்தினாலே = முதிர்ந்த பயிர்சியினாலே, மாவியப்புற்றுஞ் சற்றும் வியப்பிலார் = மகா ஆச்சரியத்தை யடைந்ததும் சிறிதும் ஆச்சரியமில்லாதவர், வடிவமொன்றே = ஒரு வடிவமே, மேவு மூவடிவமானார் = பொருந்திய மூன்றுவடிவமாயினார், மிகு முருத்திரனு மற்றச் சீவடன்றானும் சந்நியாசியும் சேர்ந்து சென்று=உயர்ந்த ருத்திரபகவானும் சீவடன் என்னும் மற்றையனும் சந்நியாசியும் ஒருங்கு சேர்ந்துபோய்.

வேதியன் முதலாயுள்ளோர் = மறையவன் முதலாக வுள்ளவர்கள், பிறப்பிடமெல்லா மேவி = ஜனித்ததேயங்களெல்லா மடைவுற்று, தீதறக்கூட்டி = குற்றமறச்சேர்த்து, தெய்வ ஞானத்தால் = திவ்யமாகிய தைவ வுணர்வினாலே, தேசுமிக்க = ஒளிமிகுந்த, சோதி ருத்திரர்களாகி = பிரகாச மயமாய ருத்திரமூர்த்திகளாகி, அறிவுற்றார்=உணர்வை யடைந்தார், சொன்னவீசன் = கூறிய வுருத்திரன், போதிரென்றேவ = போங்கள் என்று ஏவவும், தத்தமிடங்களிற் போயினாரே = தங்கள் தங்கள் தேசங்களிற் போய்ச் சேர்ந்தார்கள். ஏ - அசை.

(ஸ்ரீ - வீர.) என்றிந்தப் பிரகாரம் அந்த ருத்திரபகவான் சிந்தித்து, அந்தச்சர்க்கத்தை நன்கடைந்தனன், யாண்டுச் சுற்றித்திரிந்து கொண்டிருந்த பிக்ஷுவானவன் நன்னித்திரையையடைந்து இரந்தவனைப்போல இருந்தனனே; விழிக்கும்படி செய்வித்து, பின்னர், அந்தப் பிக்ஷுவை, சித்தத்தோடும் = தன் சித்தாங்கிசமாகிய மனத்தோடும், சேதனத்தோடும் = தன்னங்கிச சிதாபாச வடிவத்தோடும், தத்துவ ஞானத்தோடுகூடிய ஜீவனோடும், சேர்ப்பித்தனன்; இதனானே பிக்ஷுவிற்குச் சாகரணத்தால், நம்மனோரது கனவுலகிற்கே போலும், ஜீவடாதிருத்திராந்த சரீரங்கட்கும் அவர்களது பிரபஞ்சங்கட்கும், நிரனு

விருத்தி பாதப்பிரசங்கம் நிரஸ்தமாம்; யாண்டும் ருத்திராம்ச சீவப்பிரவேச கற்பனத்தானும், அவனது சத்திய சங்கற்ப பலத்தானும், விசித்திரபோஜக அதிருஷ்ட சேஷபலத்தினுனும், பாதிதங்களாய யாவற்றிற்குமே, கற்பார்த்தம் வரையிலும், அநுவிருத்தி சம்பவமாதலின் என்பதாம். பிக்ஷுவுந்தன்னுடைய மயலை யெண்ணிப்பார்த்தான்; ருத்திரனையும் தன்னை யும் ஆங்கே ஜீவடாதி மயத்தையும் நோக்கித் தத்துவஞானத்தானே, அவிஸ்மய அர்க மாயினும், அப்பிக்ஷுவானவன் விஸ்வமயத்தை யடைந்தான், அற்ப காலத்தில், நெடுங்கால அநேக ஜன்ம அநுபவலக்ஷண ஆச்சரியத்தையும், கனச் சம்பந்தமான ருத்திர சரீராதி அநு விருத்திலக்ஷண ஆச்சரியத்தையும் கண்டு விஸ்மயத்தை யடைந்தான் என்பதாம். பின்னர் ருத்திரனும் பிக்ஷுவுமாகிய இரண்டுபேருமே யெழுந்து எங்கேயோ சிதாகாச ஏககோணத் திலிருப்பதாய ஜீவட சம்சாரமான பிரஹ்மாண்டாந்தரத்தை நோக்கிச் சென்றனர்; சென்று சேர்ந்தபின் அவனை யெழுப்பி யுணர்த்திச் சித்தத்தோடுஞ் சேதனத்தோடுஞ் சேர்ப்பித்து (முன்போன்று பொருள்கொள்க) விரைவில், ருத்திர ஜீவட பிக்ஷுகர்கள், உள்ளே யொரு ரூபர்களாயும், வெளியே மூன்று ரூபர்களாயும் விளங்கிக்கொண்டிருந்தார்கள்; அறிந்தவர் களேயாயினும் அறியாதவர்கள்போல இலங்குபவர்களாயும், விஸ்மிதர்களாயினும் அவஸ்மிதர் களாயும், கணகாலம், சித்திரத்தில் எழுதி யிருப்பவர்களேபோல் தூஷ்ணீம்பாவத்தை யடைந்திருந்தார்கள். பின்பு அவர்கள் எல்லாரும், ஆகாயத்தொருபானன் கிருப்பதாய், அறிவிலத்தியஸ்தமாய், ஜீவடசித்த பரிணமரூபமாய், எப்பக்கங்களிலும் பிராணிகளினுலே கும் கும்சப்த சகிதமாய், இருக்கும் விப்பிர சம்சாரத்தை நோக்கிச் சென்றூர்கள்; சென்று தூங்கிக்கொண் டிருந்த விப்பிரனைக் கண்டார்கள், அவனை யெழுப்பி யுணர்த்தி, விரைவிற் சித்தத்தோடும் சேதனத்தோடும் சேர்ப்பித்து, அவர்கள் வெகுபேர்களாயினும் அன்னியமாக வே சவிஸ்மயவிவிஸ்மயர்களாய் அவனுற்று விளங்கிக்கொண் டிருந்தார்கள்; அதன் பின் னர் சிதாகாச கசிதமாய், சித்தாகாரமாக விரிந்த சித்தினது கற்பித பரிணதிரூபமாய், பிர மணவிஸ்தார சுந்தரமாய் உள்ள சாமந்த நிருபனது சம்சாரத்தை நோக்கிச் சென்றூர்கள்; சென்று சேர்ந்து அவனை யெழுப்பி யுணர்த்தி விரைவிற் சித்தத்தோடுஞ் சேனத்தோடும், சேர்ப்பித்து, விஸ்மயமுற்றவர்களாயினும் விஸ்மயமற்றவர்களாய் வெகுபேர்களாயினும் ஏக மாய் ஆண்டிருப்பவர்களா யிலங்கினுர்கள். பின்னவர்கள் ராஜசம்சாரத்தை யடைந்தார் கள், ஆண்டு அவனையெழுப்பி யறிவித்துச் சித்தத்தோடுஞ் சேர்ப்பித்து, பின்னிந்தப்பிரகாரம் அன்னியசம்சார பூமிகளிலும், பிரமித்தார்கள்; சித்தத்தோடும்=ஆதிவாகிக சரீரத்தோடுமே, ஈண்டந்தராளத்தில், சுழுப்தர்களின் சம்போதனமாத்திரம், மிருதர்களுக்கோ சம்ஜீவனமும் ஆமென் றுணரத்தக்கது. அவர்களியாவருமே பிரஹ்மஹம்சரூப சித்தபரிணதியாய அவ் வுருத்திரத்தன்மையை அடைவுற்று, சமமாயினுர்கள். ருத்திரசத உத்தமர்களா யிலங்கினுர் கள்; ருத்திரசித்த சேதனங்கிசங்களினுலேயே சித்தசேதனமுடைமையாலும், ஞானஐசுவரிய சம்பன்னத்தன்மையாலும், உத்தமம் என்றதாம். அவ்வெல்லாத் தேகங்களும் ருத்திரர் களின் சதமாம். அவர்கள் நிராவர்ண திவ்யஞானத்தோடுகூடிக் குலவினுர்கள்.

(ச.) சேதனத்தோடும் = ஞானத்தோடும், நெஞ்சோடும் = சித்தத்தோடும். விகா ரத்தன் = மடத்திலிருப்பவன், பிக்ஷுக்கள் இதன்கண் சஞ்சரிக்கின்றபடியினுலே விகா ரம் = மடம். அந்தப் பிக்ஷுவானவன் ஜீவடாதிருத்திராந்தமான தன்னைநோக்கிப் பர மார்த்தஞானத்தானே அவிஸ்மய அருகனேயெனினும், மாயை மகிமையால் விஸ்மயத்தை யடைந்தனன். முதுபழக்கத்தினுலே = பரமார்த்தத்தை யடைந்தமையின். சந்நியாசி போற் சீவடாதிகளுக்கு அறிவித்தபோது அவர்கள் யாவரும் உருத்திரன்போற் திவ்விய

ஞானத்தால் உருத்திராம்சராய் அறிவுற்றுர் = விளங்கினர், சந்நியாசியினது நூறு ஜன்மம் புஜிக்கத்தக்க பிராரத்தசேடத்தை யநுசந்தித்துப் பரமார்த்த ருத்திரனல் இச்சீவடாதி யினை வரு மேவப்பட்ட ருத்திராம்சராய், தத்தமிடங்களிற் போயினர். (19-20-21-22)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிக்ஷுவாதி ருத்திராந்த தேசங்களில், இடையீடாயுள்ள தொண் ணூற்றெட்டுத் தேகங்களில், போஜகப் பிராரப்தசேடங்கள் உள்ளன நவமெனச் சந்தேகத் தால் அந்த விருத்தாந்தத்தை ஸ்ரீஇராகவர், ஹே முனீசுரரே! பிக்ஷுசொப்பன சரீரங்களை யுடைய ஜீவடப்பிராஹ்மணுதிகட்கும் ஹம்சாதிகட்கும், அதன்பின் னடைவுற்றதென்னே! சொப்பன சம்பந்த சரீரம்போலப் பாதமே யேற்பட்டதா? அல்லது மேலே விவகாரமும் ஏற்பட்டதா? என்று கேட்ப; அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான், அவர்கள் யாவருமே ருத்திர னேடு ஒன்றுற்று பிரபுத்தர்களாகி ருத்திராங்கிசர்களாய், பரஸ்பரம் கண்ட பூர்வோத்தர சம் சாரமுடையவர்களாய் கிருதகிருத்தியத்தன்மையால் சுகிகளா யிருந்தார்கள், கௌதுக தரி சனப்பொருட்டு முதலில் முயன்ற அந்த ருத்திரனல் உதிதமாகியபடி அம்மாயையை நன்கு நோக்கி அந்த ஜீவடாதி சம்சாரத் திதியையே அடைந்திடுமாறு, தன்னங்கிசர்களாகிய அவர் கள் மீளவும் ஏவப்பெற்றுர்கள்; என்று விடை யளித்தபின் மீண்டும் வினவல்:—சீவடன் அங்கு என்பன.

சீவடன் மறையோனுதி யாவருஞ் சென்று தத்தம்
பாவைய ரோடும்வாழ்ந்து பாலுற வுடல்போநாளின்
மேவுருத் திரனைச்சேர்ந்தா ரென்றலும் வீரன்கேளா
வாவிது புதுமையென்ன வதன்றியும் வினவலுற்றுன்.

அங்குச்சீ வடனையாதி யானவர் சந்நியாசி
சங்கற்பத் துருவமானேர் சத்தியமான தெங்ஙன்
பொங்குற்ற சங்கற்பத்தின் பொருளெலாம் பொய்யேயன்றே
யிங்கிதை விளக்காயென்ற விராமற்கு வசிட்டன் சொல்வான்

(ப - ரை.) சீவடன் மறையோனுதி = ஜீவடன் மறையவன் முதலிய, யாவரும் = எல்லோரும், சென்று தத்தம் = போய்த் தங்கள் தங்கள், பாவையரோடும் = மனைவிய ரோடும், வாழ்ந்து = சுகித்திருந்து, பாலுறவுடல்போம் நாளில் = அங்குவாழ்ந்து தேகம் போகும் போதில், மேவுருத்திரனைச் சேர்ந்தார் = பொருந்தும் உருத்திரபகவானை யடைந் தார், என்றலும் வீரன்கேளா = என்றுபதேசித்தலும் ஸ்ரீ இராகவர் கேட்டு, ஆ இது புதுமையென்ன = அகோ ஆச்சரியம் இது அற்புதமென்று, அதன்திறம் வினவலுற்றுன்= அதன் றன்மையை வினவத்தொடங்கினர்.

அங்குச் சீவடனையாதியானவர் = அவ்விடத்தில் சீவடன் முதலாகவுள்ளவர், சந்நியாசி சங்கற்பத்துருவமானேர் = பிக்ஷுவினுடைய எண்ணவடிவத்தை யெய்தினேர், சத்திய மான்தெங்ஙன் = உண்மையான தெப்படி, பொங்குற்ற சங்கற்பத்தின் பொருளெலாம் பொய்யேயன்றே = எழாநின்ற எண்ணத்தின் வஸ்துக்களெல்லாம் மித்தையேயல்லவோ, இங்கிதை விளக்காயென்ற = ஈண்டிதனை யிலக்குவீராக என்று பிரார்த்தித்த, விராமற்கு வசிட்டன் சொல்வான்= ஸ்ரீராமருக்கு ஸ்ரீவசிஷ்டபகவான் உபதேசிப்பார்.

(ஸ்ரீ - வீர.) அச்சீவடப் பிராஹ்மணுதிகளும், தங்கள் தங்க ளிடத்தை நன்கடைந் தார்கள், தத்தங் களத்திரங்களோடு வாழ்ந்து தேகத்தைக் கழித்துக் காலமுண்டாகவே,

ருத்திரலோகத்தை யடைந்து ருத்திரபகவானது ரூபமாவார்கள், கேணைத்தமர்கள் ஆவார்கள் என்றபடி. ஆவார்கள் என்னுங்கூற்றால்: ஸ்ரீவஸிஷ்ட ராமசம்வாத காலத்தில், அவர்கள் தத்தஞ் சம்சாரத்திலேயே யிருந்தார்கள் என்றுணரப்பெறலாம்; ஒருபோதாகாரியத்தில் தாராகாரகாரிகளாகக் காணப் பெறுவார்கள். ஜீவடப்பிராஹ்மணர்கள் பிக்ஷு சங்கற்பரூபர்களே அவர்கள் எங்ஙனம் சத்தியத்தன்மையை யடைந்தவர்களாவர்கள், சங்கற்பார்த்தங்களில் உண்மை யாண்டையதையாம்? முன்னர் வெகுமுறை கேட்டபொருளையே விசேஷ ஜிஞ்ஞாசையால் வினவியதாமிது.

(ச.) ஜீவடப்பிராஹ்மணர்களும், தங்கள் தங்கள் இடத்தையடைந்து, தத்தங் களத்திரர்களோடு வாழ்ந்து, தேகாந்தத்தில் ருத்திரபகவானை யடைந்தார்கள் என்பது மொத்தார்த்தமாம். (23-24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) என்று வினவியதற்கு ஸ்ரீவஸிஷ்ட பகவான் விடை தருதல்:— எதுவுஞ், சங்கபத்தென்பன.

எதுவுமுண் டறிவி னுள்ளே யெப்படி யெத்தைக்கண்ட
ததனையப் படிச்சித்தெய்து மனைத்துமா தலினுண்மெய்யே
யெதுகன விற்காண்கின்ற தெதுசங்கற் பத்திற்சேர்ந்த
ததுவங்கே யுண்டெப்போது மப்வடி வடிவமாகும்.
சங்கற்பத்திற் கனவுதனிற் சார்ந்தபொருளைப் படிச்சேர்ந்த
தங்கப்பொருடான் பரமத்தி னழுந்தும்பழக்க மியோகமெனுந்
துங்கத்திறத் தல்லதுமெய்யாத் தோன்று தியோகவிஞ்ஞான
மிங்குப்பெறலாற் சிவன்முதலோ ரெங்குமெல்லாங் காண்கின்றார்.

(ப - ரை.) எதுவுமுண்டறிவி னுள்ளே = சித்தின்கண் எப்பொருளுமே யுளதாம், எப்படி எத்தைக்கண்டது = எங்ஙனம் எதனைப்பார்த்தது, அத்தனையப்படி = அத்தை யங்ஙனம், சித்தெய்தும் = அறிவடையும், அனைத்து மாதலினுண் மெய்யே = யாவும் ஆகலின்றுண்மையே, எதுகனவிற் காண்கின்றது = யாது சொப்பனத்திற் பார்த்ததாம், எது சங்கற்பத்திற் சேர்ந்தது = யாது எண்ணத்திலடைவுற்றதாம், அது வங்கே யுண்டெப்போதும் = அது ஆண்டு உளது எக்காலும், அப்படி வடிவமாகும் = அவ்வகை யுருவமாகும்.

சங்கற்பத்திற் கனவுதனில் = எண்ணத்திற் சொப்பனத்தில், சார்ந்தபொருள் எப் படிச் சேர்ந்தது = பொருந்திய வத்து எவ்வாறடைந்தது, அங்கப்பொருடான் பரமத்தின் = ஆண்டு அவ்வத்துவானது பரமாக, அழுந்தும் பழக்கம் = மூழ்கும் அப்பியாசம், யோகமெனும் துங்கத்திறத்தல்லது = யோகமென்று சொல்லப்பெற்ற தூயதன்மையின் அல்லாமல், மெய்யாத் தோன்று து = உண்மையாகப் புலப்படாது, இயோகவிஞ்ஞானம் = யோகமும், ஞானமும், இங்குப் பெறலால் = ஈண்டடைதலால், சிவன் முதலோர் = ருத்திரன் முதலியவர்கள், எங்குமெல்லாங் காண்கின்றார் = எவ்விடத்திலும் யாவற்றையும் பார்க்கின்றார்கள்.

(ஸ்ரீ - வீர.) சித்தின்கு தோசத்தில் = கோசத்திற் கொய்பரிய சர்வவர்களுஞான அஞ்ஞானத்தில் எங்ஙனம் எங்ஙனம், யோஜக அதிருஷ்டத்தினாலே விளைப்பபெற்ற வாசனைகளி

ஞலே பரியாலோசனை செய்வனே அங்ஙனம் அங்ஙனம் அறிவானது கெடுதலொன்று மின்றி எல்லா அவ்விஷய ரூபத்தையும் திருசியமாக அடையாநிற்பன் இவன் சர்வான்மத் தன்மை யான். ஆயின் சர்வ சொப்பன சங்கற்பாதியின் ஒருபோது தரிசனத்தில் என்னே யுபாய மெனின் அதனைக்கூறல்:— எது என்பதாதி, சொப்பனமுடைய சங்கற்பம் எந்நெறியால் அடையப்பெறலாமோ அத்தசையைக் கூறக்கேட்குதி. மேலான அப்யாச யோகங்களாலல்லாமல் இது கிடைப்பதில்லை, அப்யாச யோகபரி பாகதசையே அஃதென்பது பொருள். ஆண்டசுரர்கட்கு அப்பியாச மில்லாமலும் சுயமாகவே யோகசித்தி பலமுளதாம் எனச் சிறப்புரைத்தல்:—யோகமென்பதாதி. எவர்கட்குத்தான் யோகவிஞ்ஞான திருஷ்டிகள் பலிதங்களாக இருப்பனவாமோ, அவர்கள் யாவற்றையும் எவ்விடத்தும் காண்பர்கள்; ஆதலினன்றோ ஸ்ரீசங்கராதிகள் அங்ஙனமாகின்றார்கள்; அப்பியாச யோகங்கட்கு, சங்கற்பிதார்த்தலாபத்தில், அதன் ஐகாக்கிரியா சம்பாதகத் தன்மையானே உபயோகமாம். ஒருமையானதில்லாவிடினே, அநேக அர்த்தத்தோடு கலக்குஞ் சித்தமானது, தான் எண்ணிய ஒரு பொருளையும் அடையமாட்டாது, என அசத்திய சங்கற்பத்தன்மை யிதற்கு, வருமென்னுங் கருத்தால், உரைத்தல் ஏகாக்கிரிய சூனியமாகிய என்னல், இவ்வெண்ணிய வத்துவும் வரும் வத்துவும், அடைந்திட முடியாது, சித்தமானது எண்ணியதையும் அதன் அயலையும் பற்றிக் கொண்டிருத்தலின், உபயப்பிரம்சத்தை யடையும், ஓரிடத்திலும் நிலைபேற்றை யடைய மாட்டாது.

(ச.) அறிவினுள்ளே = உட்போற் சகலபொருள் நிதான சொரூபத்தில், எதுவும் = சகல பொருளும், உண்டு ஆதலின், அனைத்து மாதலினல் = சர்வான்மக மாதலின், இந்தச் சித்து எப்படி எந்தப்பிரகாரமாக, எத்தை=எப்பொருளை, கண்டது அப்படி = அந்தப்பிரகாரமாகவே, அதனை=அப்பொருளை, மெய்யே=சமுச்சயமின்றி, எய்தும், எது = எப்பொருள், கனவில், எப்படிக்காண்கின்றது, எது = எப்பொருள், சங்கற்பத்தில் = சங்கற்பங்களால், சேர்ந்தது=காணப்படுகின்றதோ, அது=அப்பொருள், அங்கே=சொப்பனதேசத்திலும், சங்கற்ப தேசத்திலும், அப்படி = அந்தப்பிரகாரமாக, வடிவு = அவ்வுருவமாய், எப்போதும், உண்டாகும்=இருக்கும், சகலமுஞ் சித்தின் விவர்த்தமாதலின் என்க.

இங்ஙன மிருக்குமாயின் ஏன் சித்தடையப்படவில்லை யென்பதற்கு உத்தரம்: சங்கற்பத்திலும் கனவுகளிலும் சார்ந்தபொருள், எப்படிச் சேர்ந்தது=எந்தத் திசையாலடையப்பட்டது, அந்தப்பொருள், அந்த சித்தித்த திசையே, பழக்கமியோகமெனும் அங்கத்திறத்து, பழக்கமென்னும் வாதநிரோதத்தாலும், யோகமென்னுஞ் சித்த நிரோதத்தாலும், அல்லது தோன்றாது = அடையப்படாது, யோகம் = சமாதியும், விஞ்ஞானம் = அத்தியான்ம சாஸ்திரஞானமும், இவற்றாற் சித்த தரிசனங்களைப் பெறலால் = பெற்றிருத்தலின், சிவன் முதலோர், தமது சங்கற்பானு சாரத்தால், எங்கும் = எல்லாத்தேசத்திலும், எல்லாக்காலத்திலும், எல்லாம் = எப்பொருளையும் காண்கின்றார். (25-26)

(ஸ்ரீ வீர - அ - கை.) கூறிய பொருளையே சாமானிய உக்திகளினலே சமர்த்தனஞ் செய்தல்:—

இட்டமான் பொருளெல்லா மேகநிட்டர்க் கெளிதெய்துந்
திட்டமாந்தென் றிசைநோக்கிச் செல்வார் வடக்கெப் படிச்சேர்வார்
தொட்டசங்கற் பத்தருத்தஞ் சூழ்வாரதுவே துன்னுவரான்
முட்டிறமது பயன்வசத்தோர் மூன்சேர்பொருளை முன்னுரே.

(ப - ரை.) இட்டமான பொருளெல்லாம் = வாஞ்சித்த வத்துக்களியாவும், ஏகநிட்டர்க் கெளிதெய்தும் = ஒன்றிற்றியான முன்னவர்க்குச் சுலபமாகக்கிடைக்கும், திட்டமாம் = திண்ணமாம், தென்றிசைநோக்கிச் செல்வார் = தெற்குத்திக்கை நோக்கிச் செல்லப்பட்டவர், வடக்கெப்படி சேர்வார்=வடக்கெவ்வண்ணம் சேர்ந்திடுவார், தொட்ட சங்கற்பத்தருத்தம் = எண்ணிய எண்ணத்தின் பொருளை, சூழ்வார் அதுவேதுன்னுவர் = எண்ணிக்கொண்டே யிருப்பவர் அதனையே அடைவர், முட்டில் தமதுபயன் வசத்தோர் = தடையிலாது தங்கள் பிரயோஜன வயத்தோர், மூன் சேர்பொருளை முன்னரே = எதிரிலுள்ள பொருளையடைய மாட்டாரே.

(ஸ்ரீ - வீர.) கருதிய எல்லாக்காரியமுமே, ஏகநிட்டனுக்குச் சித்தியாகிற்கும், தென்றிசையதனை நோக்கிச்செல்பவன் எவன்முன் சேர்வான், உத்தரதிசையை யிந்த வுலகினில், சங்கற்பார்த்த பரர்களானே சங்கற்பார்த்த மறியப்பெறும்; முன்னிருக்கும் பொருட் பரர்களானேயே முன்னிலையில் இனிதிருக்கப்பெற்ற பொருள் அறியப்பெறும்.

(ச) இட்டமான பொருளெல்லாம் = அபிமதமான சகல காரியமும், அதில், ஏகநிட்டர்க்கே, எய்தும் = சித்திக்கும், தென்றிசை நோக்கிச்செல்வார் வடக்கெப்படிச் சேர்வார், சங்கற்பத்தருத்தஞ் சூழ்வார், அதுவே = அச்சங்கற்பார்த் தத்தையே, துன்னுவர், முன்சேர்பொருளை = முற்புறத்திருக்கு மர்த்தத்தை, முட்டில் தமதுபயன் வசத்தோர் முன்னர் = முன்சேர்பொருள் வசத்தின்ரே சேர்வாரென்றதாயிற்று. (27)

(ஸ்ரீ - வீர - அ - கை) உபயத்திலுற்ற உள்ளம் ஒன்றையு மடையாதென்று கூறியதற்கு வியதிரேகதிருஷ்டாந்தமாக இக்கதையையே காட்டல்:— முன்னு இதுவே யென்பன.

முன்னுபொருளிற் சங்கற்ப முட்டிவிரும்பு மொய்ப்புந்தி
யன்னபொழுதே கத்துவத்தி லழுந்தாமையினா லவ்விரண்டு
மின்னபுந்தி நசிப்பிக்கு மினிநான்விச்சா தரனாகு
மன்னுகின்ற நானிங்கு மறையோனுமென் றுறநோக்க.

இதுவேயேகத் துவமதனி லெய்துபேற்றின் றிட்டாந்த
மதுகாரியசித் தியின்பொருட்டா மாதலாலே கப்பொருளின்
றிதநிட்டையினாற் சந்நியாசி சீவன்சிவனாய்ச் சிவவடிவா
னுதவுகின்ற சங்கற்பத் துற்றபொருட்குண் மையைமேவும்.

(ப - ரை) முன்னுபொருளிற் சங்கற்ப முட்டி = அக்கிரஸ்திதவத்துவில் எண்ணமானது நுழைந்து, விரும்பு மொய்ப்புந்தி = இச்சிக்கும் பற்றும் புத்தியானது, அன்னபொழுது = அக்கால், ஏகத்துவத்தில் அழுந்தாமையினால் = ஒருமையினில் அழுத்தமுறாமையினால், அவ்விரண்டு மின்னபுந்தி நசிப்பிக்கும் = அந்த இரண்டையும் இந்தப்புந்தியான்து நாசஞ்செய்யும், இனிநான் விச்சாதரனாகும் = இனிமேல் யான் வித்தியாதரன் ஆவேன், மன்னுகின்ற நானிங்கு மறையோனும் = பொருந்துகின்ற யானிவண் பிராஹ்மணனாவேன், என்றுறநோக்க = என இந்தப்பிரகாரம் அழுத்தமாகப் பார்க்க.

இதுவே யேகத்துவமதனில் எய்துபேற்றின் றிட்டாந்தம் = இதுதானே பொருமையதனில் அடையும்பயனின் காட்டாம், அது காரியசித்தியின் பொருட்டாம் = அது அர்த்த

சித்தியின் பொருட்டாயாம், ஆதலால்=ஆகையினால், ஏகப்பொருளின்றித நிட்டையினால்= ஒருபொருளின் நிட்டமான தியானத்தினால், சந்நியாசி சீவன் = யதியானசீவன், சிவனும்= ருத்திரனுகி, சிவவடிவால் உதவுகின்ற = ருத்திரவடிவத்தானே பெறுகின்ற, சங்கற்பத் தாற்ற பொருட்கு = எண்ணத்தடைந்த வத்துவிற்கு, உண்மையை மேவும் = சத்தியத் தன்மையையுமடையும்.

(ஸ்ரீ - வீர) முன்னிருப்பதன் கண்ணே புத்தி நன்னிலைமை பெற்றிருக்கும்போது, யாவன் சங்கற்பத்தையடைய இச்சிக்கின்றானோ, அக்காலவன் ஏகநிஷ்டைத் தன்மையின்மை யானே அவ்விரண்டையும் அழிப்பன்; பிரகிருதத்திற் சேர்ப்பித்தல்:— இனியென்பது ஆகையினால் ஏகார்த்த நிஷ்டைத்தன்மை யுண்மையின், பிக்ஷு—ஜீவனால் உருத்திரத் தன்மை யடையப் பெற்றுச்சர்வான்ம பாவம், அடையப்பெற்றன அவ்வாறேயாவும், அவ்வாறே இருத் தலின்.

(ச) முன்னுபொருள் = முன்புறும் பொருளில், மொய்ப்புத்தி, சங்கற்பம் = சங்கற் பித்தபொருளை, முட்டிவிரும்பும் = அடைதற்கிச்சிக்கும், அன்னபொழுதே, ஏகத்தி லமுந் நாமையினால் = ஒன்றிலுந் தாற்பரியமின்மையின், அவிவேகியானவன் அவ்விரண்டும்= முன்புறுபொருளும் சங்கற்பித்த பொருளுமாகிய அவ்விரண்டையும், நசிப்பிக்கும், புத்தி மொய்த்தபொருளை யடைதற்கு இச்சியாது எதனையடைதற் கிச்சிக்கும், அவ்விரண்டுஞ் சித்தியாமையின் விநாசமாம்; இனி யிங்கு=இத்தேசத்திலும், காலத்திலும், நான் விச்சாதரனுகு மென்றுவது, நான் மறையோனு மென்றுவது, உறநினைக்க = தியானஞ்செய்க. ஏகத்துவத்தில்=ஒருபொருளிலுறும், இதுவே = இத்தியானமே, எய்துபேற்றின் சம்பந்த மாம், ஆதலால்=முற்கூறிய வேதுவினால், ஏகப்பொருளிற் றிதநிட்டையினால் = சங்கற் பார்த்தத் தேகநிட்டையினால், சந்நியாசி ரூபராகிய சீவன், சிவனுய் = சிவவடிவால், சங்கற் பத்துக் குண்மைமேவிற் றென்றதாயிற்று. ஏகவஸ்து விஷயத்தின் தியானத்தினது பல சம் பந்தம் யாதுளதோ அதுவே காரியசித்தியின்பொருட்டுத் திருட்டாந்தமாம். (28-29)

(ஸ்ரீ-வீர-அ-கை.) திருஷ்டாந்தத்தை யுபசங்கரித்துக் கதையையும் உபசங்கரித்தல்:— தெளியென்பது.

தெளிசந் நியாசி சங்கற்பத் தவராஞ்சிவ டன்முதலோர்
களிகொடத்தம் வேற்றுவகை கண்டாரீச னுருவத்தால்
விளிவில் சங்கற் பத்துண்மை மேவினார்தஞ் சங்கற்பத்
தெளிதுசேரு நகரடைந்தா ரீசன்விஞ்ஞா னத்தாலே.

(ப - ரை) தெளிசந்நியாசி=உணர்ந்த பிக்ஷு, சங்கற்பத்தவராம்=எண்ணத்தெழுந் தவராம், சீவடன் முதலோர்=ஜீவடனுதியர், களிகொள் தத்தம் வேற்றுவகை=சந்தோஷத் தொடுங்கூடிய பேதப்பிரகாரத்தை, கண்டார்=பார்த்தார், ஈசனுருவத்தால் = கடவுள் வடிவத் தால், விளிவில்=கெடாத, சங்கற்பத் துண்மைமேவினர்=எண்ணத்தன்மையை யடைந் தனர், தஞ்சங்கற்பத் தெளிதுசேரு நகரடைந்தார் ஈசன் விஞ்ஞானத்தாலே = தங்களெண் ணத்தானே சுலபமாகக்கிடைத்த பட்டணம்பற்றினர் ருத்திரனது விசேட ஞானத் தாலே.

(ஸ்ரீ - வீர) அதாவது, பிரசித்த ருத்திரனைப்போலவே சர்வஞ்ஞத் தன்மையானே யாவும் முடையப்பெற்றனவாம்; இவனுக்கும் அவ்வாறே சித்தியாகலின். அவ்விடைப்பட்ட

வர்களாய ஜீவடாதி தொண்ணூற்றெட்டுப்பிக்ஷு சங்கற்பஜீவர்கள், தனித்தனியாக, எதனால் இருந்தார்களோ அவர்கள் உலகமும் தனித்தனியாக இருந்ததோ அதனால் அன்னியோன்னியம், பார்த்திலர்கள்; ருத்திர ஞானமின்றி இவர்கள் எங்ஙனங் காண்பர்கள்? காணார்கள் என்பதாம். ஆயினவர்கள் ருத்திர சந்நிதியின்கண்ணே யெங்ஙனம் அன்னியோன்னியம் கண்டுகொண்டவர்கள் ஆயினார்கள், என்றிடிற்கூறல்: ஜீவர்களின் சம்சார பேதங்களை யுணர்ந்த அந்த உருத்திரனுடைய இச்சையினாலே அறியாத ஜீவர்கள் உண்டாகின்றார்கள், கண்டு விவகரிக்கின்றார்கள் என்றபடி. அவ்வாறே யீண்டு அவ்வுருவங்களாகவும் வெகுரூபங்களாகவும் அவர்கள் விரைவில் அவனிச்சையினாலேயே உண்டாகின்றார்கள்; அவரவர்களுடைய சம்சாரதரிசனத்தாலோ அவரவர்களுடைய இச்சையே காரணமாம்; ஈண்டு வித்தியாதரனியான் ஆவேன், யானே மீண்டுபண்டிதன், என்னும் ஏகத்தியான சாப்ல்யம் திருஷ்டாந்தமாம்; அன்னிய ஜீவர்கட்கும் இந்தப் பிரசித்தமான அவ்வவ் விவகார விஸ்வைதயின்கண்ணே யிப்பிக்ஷு சங்கற்ப சர்க்கமே திருஷ்டாந்தமாகு மென்பதாம். இந்த ஜீவனானவர் தாமே இம்மான முயற்சிகளின் அநுசாரமாக யாதுயாது இஷ்டமோ அவ்வியாவற்றையுமே முறையாகவாதல் ஏககாலத்தாதல் இயற்றக்கூடு மிஷ்டப்படியென்றதாயிற்று. வருணித்த இம்முறைமையானே பிரகிருதத்திலும் உணரத்தக்கதாம் எனல்:—இவ்வண்ணம் அப்பிக்ஷு சங்கற்ப ஜீவடப் பிராஹ்மணாதிகள் ருத்திரனது நல்லனுஞ்ஞையின் வசத்தினாலே, தங்கள் சங்கற்ப புரியை யடைந்தார்கள்; தற்சங்கற்ப அநுசாரியேயாம் ருத்திரனது இனிய அநுஞ்ஞை, அதன்பலத்தாலென்பது பொருள். ஆண்டு நெடும்போது போகங்களைப் புசித்து அதன்பின் ருத்திரபுரத்தை யடைந்து அவர்கள் கணத்தன்மையை அடைவுற்றவர்களாகிச் சபரிச்சதர்களா யிருப்பார்கள். இவ்வண்ணம் அப்பிக்ஷு சங்கற்பத்தினின்றும் உண்டாய ஜீவடப் பிராஹ்மணாதிகள் எங்ஙனம் உண்மையை யடைந்தார்கள் சங்கற்பார்த்தத்தி லுண்மையானதுடையதாம் என்று ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவானருளல்:—ஒன்றே ஆயிரமாகி யுலவுதல் கூடுமன்றே, எங்ஙனம் ஜனார்த்தன ரொருவரே யாயினும் அம்சாவதார லீலைகளினாலே யுலகங்களின் நல்ல திதியைச் செய்தருளிக்கொண்டு வருகின்றாரோ, அங்ஙனம், அப்பிக்ஷு சங்கற்பத்தினின்றும் உண்டாய ஜீவடப் பிராஹ்மணாதிகளும் பரிசுத்தவுணர்வின் ஏகாங்கிசர்களென்றும் சத்தியம்போல நன்கு நிலைபெற்றார்களென்றும் உணர்ந்துகொள்ளலாம். பரிச்சதர் = பரிஜனம்.

(ச.) தெளிசந்நியாசி சங்கற்பத்திற் சித்தித்தவரான ஜீவடன் முதலோர் ஈசனருளத்தால் சங்கற்பங்களின், உண்மை = சாபல்லியத்தை, மேவினராய், வேற்றுலகை = வேறாகவுலகத்தை, விலக்ஷணமாகக் கண்டார், சுவதந்தாரும் சத்தியசங்கற்பருமானரென்பதாம் அச்சீவடப் பிராஹ்மணாதியர், ருத்திரனது மகிமையாற் றமது சங்கற்பகற்பிதங்களான தானங்களை யடைந்தார். (30)

சொப்பன சதருத்திரன் கதை முற்றிற்று.

---

## வேதாளக் கதை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஈண்டு நான்குவகையாய மௌனம் இலக்கணங்களானே வருணிக்கப் பெறும், அவற்றுள்ளும் சுழுப்தமௌனமானது துரியாதீதப் பிரதிஷ்டிதமென வருணிக்கப்பெறும் ஆகியமூன்று மறிவேன் அவற்றுள் சுழுத்தி மௌனத்தை யநுக்கிரகித் தருளவேண்டுமென்று ஸ்ரீ இராகவர் பிரார்த்தித்தல்;—சுழுத்தி யென்பது,

(ச-அ-கை.) முன்பு இந்த ஜன்மபரம்பரை தன் சங்கற்பத்துருவப் பிராந்தியாற் சித்தித்ததெனத் தெரிவித்தற்குச் சதவுருத்திரன் கதை சொல்லப்பட்டது, இப்போது சுழுத்தி மௌனத்தைச் சம்பாதிக்கும் விவேகத்தைச் சொல்வதற்குக் கற்கடிவிஞ்சங்கம்போல் நீக்கற்கரிய வேதாள விஞ்சங்க நிரூபிக்கப்படுகின்றது:—

சுழுத்திமௌனத் தினனாகித் தொடருமனத்தி னெழுச்சியற
வழுத்து;மலக்கற் பனைநீக்கி யகண்டபதத்தி லிருவெனலும்
வழுத்துகாண மவுனஞ்சொன் மவுனங்காட்ட மவுனமெனச்
செழித்த மூன்றுந் தெளிந்திடமேற் சுழுத்தி மவுனஞ்செப்பென்ன.

(ப-ரை.): சுழுத்தி மௌனத்தினனாகி = சுழுத்தி மவுன முடையவனாகி, தொடரு மனத்தின் எழுச்சியற = சம்பந்தித்த வுள்ளத்தின் உதயமற, அழுத்துமலக் கற்பனை நீக்கி = சமுசாரத்தில் மூழ்குவிக்கும் அசுத்த கற்பனையை யகற்றி: அகண்டபதத்தில் இருவெனலும் = கண்டிதமில்லாத பதத்தின்கண் ணிருப்பாயாக வென்றிடலும், வழுத்துகாண மவுனம் = புகழாநின்ற இந்திரிய மவுனம், சொல் மவுனம் = வாக்கிய மவுனம், காட்ட மவுனம் = காஷ்ட மவுனம், எனச் செழித்தமூன்றுந் தெளிந்திட = என்று சிறப்புற்ற மும்மவுனமும் அறிந்துறவிருப்பல், மேல் = இனிமேல், சுழுத்திமவுனஞ் செப்பென்ன = சுழுத்தி மவுனத்தை கூறுவீராகவென்று ஸ்ரீ இராகவர் பிரார்த்திப்ப.

(ஸ்ரீ - வீர.) சுழுப்த மவுனவானாகி யுள்ளத்தினுடைய இயற்கையாய பிரவிருத்தி யநுசாரித்தன்மையைவிட்டு வினைமலம் விடுபட்டவனாகித் தற்பதம் பற்றினோனாகி விசிராந்தியடைந்திருப்பாய் என்றுபதேசிப்ப; வாக்காதிகளின் அடக்கவடிவ மவுனம், அக்ஷ மவுனம், காஷ்டம்போன்ற மவுனம், என்னும் மூன்றினையும் அடியேன் அறிவேன், ஹே சமஸ்த மவுனங்களிலும் ஆற்றலுடையவராகிய மவுனேசரே! பிரஹ்மவித் சிரேஷ்டரே! சுழுப்த மௌனம் என்னென்பதை விளக்கமாக அனுக்கிரகம் செய்யவேண்டும்; என்றிராகவர் வினவ.

(ச.) ஸ்ரீவசிஷ்டர்: தொடரு மனத்தி னெழுச்சியற = சங்கற்பாதிரூபச் சித்தவிலாசத்தைக் கெடும்படிவிட்டு, மலக்கற்பனை நீங்கி = வாசனாரூபமலரகிதனாய், மேற்கூறும், சுழுத்தி மவுனத்தோடு கூடினவனாகி, அகண்டபதத்தில் = பிரஹ்மபாவத்தை யவலம்பித்து அதில், இரு, ஸ்ரீ இராமர். வாக்கு மவுனாதிகளின் இலக்கணம் இயம்பப்பெறும், மௌனேச = முனிகளுக்குள் மேன்மை மிக்கவரே!. (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாஞ்சித மவுனத்தைக் கூறும்பொருட்டு முனிவரை யிருவகையாகப் பிரித்து இலக்கண முறையாக வியம்பல்:—ஓவில், சகமென்பன.

ஓவின்முனிவ ரிருவகையா மொருவன்காட்டத் தவனாகுஞ்
சீவன்முக்தன் மற்றவனுஞ் செய்யுங்கிரியைதனிலழுத்த
மேவுநினைவுற் றிந்தியத்தை மிக்கவலியால் வென்றவனைக்
காவன் மன்னர் புகழ்வீரா காட்டத் தவனாமுனியென்பர்.

சகநேருள்ள படியுணர்ந்து தன்பாற் றன்னை நினைத்துலகை
நிகராகியுமுள் ளமைவுற்றோ னிமல முத்தனாமிந்த
மிகுநீள்சாந்த முனிவானபான் மிக்கமனத்தின் மெய்யுருவந்
தகுநீடுருவாம் பாவனையே சாற்றுமௌனச் சொற்பொருளே.

(ப - ரை.) ஒவில்முனிவர் இருவகையாம் = பிரஹ்மத்தின் கண்மாறுது வீற்றிருக்கும் மன்னசீலர் இரண்டுவகையினராவர், ஒருவன் காட்டத்தவனுகும் = ஒருமுனிவன் காஷ்டதபசியானவன், சீவன் முத்தன்மற்றவனும் = ஜீவிக்குங்காலத்திலேயே முத்தியை யுடையவன் பிறனெரு முனிவனுவன், செய்யுங்கிரியை தனில் = செய்யாநின்ற தொழில்களில், அழுத்தமேவு நினைவுற்று = அழுத்தமாகிய நினைவையடைந்து, இந்தியத்தை மிக்கவலியால் வென்றவனே = புலனைமிகுந்த வலிமையினுலே வெற்றிகொண்டவனே, காவல் மன்னர் புகழ்வீரா = உலகத்தைக் காப்பியற்றும் அரசர்கள் புகழும் வில்வீரனே, காட்டத்தவனு முனியென்பர் = காஷ்டத்தபசியாகிய முனிவன் என்று சொல்லுவர்.

சகரேருள்ளபடி யுணர்ந்து = உலகின்றகைமையை யதார்த்தமாகத் தெரிந்து, தன் பாற்றன்னை நினைந்து = தன்னிடத்திற் றன்னையே அநுசந்தானஞ்செய்து, உலகை நிகராகியும் = அறியாதவரைப்போல இருந்தபோதிலும், உள்ளமைவுற்றேன் நிமலமுத்தனும் = அந்தர் சாந்தியடைந்திருப்பவன் நிருமலமாகிய வீடுற்றவனே யாவன், இந்தமிகுசீர் சாந்த முனிவரன்பால் = இந்தமிக்க பேரிறை நிறை சாந்தமா வெய்தருந் தவத்தோனிடத்தே, மிக்கமனத்தின் மெய்யுருவம் = மிகுந்தமனத்தினது உண்மை வடிவம், தகுநீடுருவாம் பாவனையே = தகுந்த விலாசமான சொரூபபாவனையே, சாற்றுமௌனச் சொற்பொருளே = சொல்லாநின்ற மௌனமென்னும் சப்தத்தின் பொருளாம்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீவசிஷ்ட பகவான் ஈண்டு முனிவர்களானே ஹே இராகவனே! முனிவர் இருவகையினர் என வியம்பப் பெறுவர், ஒருவன் காட்டதவத்தினன்எனப் பெறுவன் மற்றவனங்ஙனே ஜீவன் முக்தன்எனப் பெறுவன், நீ யுணர்ந்த மூன்று காஷ்டதவத்தினரது ஏற்றத்தாழ்வு வேற்றுமை யுடையவர்கட்கும் அனுன்மாவை யுணர்ந்திருக்குந் தன்மையானே ஏக கோடித்தன்மையே என்பது கருத்தாம். அதனையே வெளிப்படுத்தல்: ஆன்ம தத்துவ பரியாலோசன சூன்னியமான, அவ்வனுபவரச சூனியமான நிருச்கிர சாந்திராயணுதி கிரியையின்கண்ணே கட்டுப்பட்ட முக்கிய நிச்சயமுடையவனுகி அடமாக இந்திரியக் கூட்டத்தை வெற்றிகொண்ட முனிவன் காஷ்டதபஸ்வி யெனப்பெறுவன்; இவ்வியாவற்றையும் உள்ளபடியே யுணர்ந்து பிரத்தியக்கான்மாவின்கண் தன்னுனே தன்னைத்தியானித்துக் கொண்டிருப்பவன் உலகத்தார்போல நடித்தபோதினும், உள்ளேமகிழ்ந்தவனுகி, விவகாரத்தில் இதரதாபச லோகர்க்கொப்பெனினும், அந்தர் நிரதிசயாநந்த ஆசுவாத திருப்தனுகி இருப்பன், அவனே முக்தமுனிவன் எனப்பெறுவன். பிரகிருதியர்த்தத்தை விரித்துரைத்துப் பிரத்தியய அர்த்தத்தை விரித்துரைக்கின்றார்:— இந்த என்பதாதி சாந்தர்களாய் முனிநாதர்களா யிராநின்ற இவர்கட்டு எப்பாவம் பலிப்பதாமோ அச்சித்த நிச்சயரூபவடிவம், மௌனசப்தத்தானே மலரப்பெறும்.

(சு.) ஸ்ரீ வசிட்டர்: நினைவுற்று = பிரமபாவனையின்றி, அதனல், செய்யுங்கிரியைதனில் = நீரசமான பிராணுயாமாதிரூபக் கிரியையில், அழுத்தமேவி = கட்டுற்ற நிச்சயமுடையவனுய், மிக்கவலியால் = அடயோகத்தினுல், இந்திரியத்தை வென்ற முனியைக் காட்டாதவனென்பர்,

சகரோர் = இந்தச்சகத்தை, உள்ளபடி யுணர்ந்து = பிரமமே யீதனைத்துமென நிச்சயித்து, தன்னைநினைத்து = பிரமமே நானென நிச்சயித்து, தன்பால், இருந்து = சொரூபத்தையே அனுசந்திப்பவனுய், உலகை நிகராகியும், விவகாரமாத்திரத்தால், லோகோபம

ஞகியும்; உள்ளம், சொரூப சுகாநுபவத்திஞல், அமைவுற்ருேன்=திருப்தஞயிருக்கும் முனி, ஜீவன் முக்தனும், இருவருக்கு முறுஞ்சாமானிய் இலக்கணத்தைக்கூறல்: மிகுநீள் சாந்தம்= நிர்விகார சித்தமுள்ள, இந்த=இப்பொழுது கூறிவந்த, முனிவரர்பால் = சித்தநாதரிடத்தில், மிக்க மனத்தின்மெய், யோகத்திஞல் தத்துவஞானத்திஞ லாவதுமும் சித்தத்தின் நிச்சயமென்னும் ஏகநிட்டையி னுருவமான, தகுநீடுருவாம் = சுபாவமாகிய, பாவனையே மவுனச் சொற்பொருள். பாவனை=அபிப்பிராயம். (2-3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) நான்காவது மவுனத்தை நன்கு கூறற்பொருட்டு முன் மூன்றையும் விரித்துரைத்தல்:—வாக்கென்பது.

(ச - அ - கை) சுழுத்தி மௌநியை நிரூபித்தற்கு முன்பு மௌனந்தரங்களைக் குறிப்பித்துக்கூறல்:

வாக்குமௌனஞ் சொற்றடையாம் வலிந்திந்திரிய மடக்குவித்த
ருக்குகரண மவுனமதாந் தனதுசேட்டை யெலாம்விடுதல்
வீக்குங்காட்ட மவுனமதாம் விளங்குசித்த வியாபார
நீக்கமில்லா மூவகையாய் நிகழ்த்துமவுன மிவையாகும்.

(ப - ரை.) வாக்கு மவுனம் சொற்றடையாம் = வாங் மௌனமானது பேசாதிருத்தலாம், வலிந்திந்திரிய மடக்குவித்தல்=அடமாகக் கரணங்களை விடயங்களிற் செல்லவிடாமலிருத்தல், தாக்குகரண மவுனமதாம்=அக்ஷங்களை யடக்கியாளும் மௌனமதாம், தனது சேட்டையெலாம் விடுதல் = தன்னுடைய சேஷ்டைகளியாவற்றையு மகற்றல்; வீக்குங் காட்ட மவுனமதாம்=ஒடுக்குங் காஷ்ட மவுனமெனப்பெறும், விளங்குஞ் சித்தவியாபார நீக்கமில்லா=பொலியாநின்ற உள்ளத்தினது விவகாரவிடுகையில்லாத, மூவகையாய் நிகழ்த்து மவுனமிவையாகும்=முப்பிரகாரமாய் மொழியும் மௌனம் இவையென வியம்பப் பெறும்.

(ஸ்ரீ - வீர.) ஆண்டு மௌனத்தை யுணர்ந்த பெரியவர், ஆதியதை மூன்ருகப்பகுத்து, அம்மவுனத்தை நான்கு வகையாகக்கூறுவர்; வாக்கு மவுனமும், அக்ஷமவுனமும், காஷ்டமவுனமும், சௌழுப்தமௌனமும் என நான்காம்; அவற்றிற்குத் தனித்தனி யிலக்கண மறைதல்:—வாக்கென்பதாதி. வாக்குகளின் றடையே வாங் மவுனமாம், வலிதில் இந்திரியநிக்கிரகம் அக்ஷமவுனமாம், சேஷ்டைகளினது பரித்தியாகம் காஷ்டமெனப் பெயரிய மவுனமாம்; ஐந்தாவது ஆகவோ மஞேமவுனமென்பது மொன்றுண்டு அது காஷ்டதாபசனிடத்திலிருத்மேயாம், அதாவது இங்ஙனம் விபாகபரியாலோசனத்தில், மஞேமவுனமும் ஐந்தாவதாக எங்ஙனமேனும் சம்பவிக்கும், அஃதங்ஙனமாயினும் காஷ்டதாபசனிடத்தில் மூர்ச்சை சுழுப்திகளிலேயே சம்பவிக்கும் பிறிதுபோதிலதாம் என் அது அவற்ருேடு சேர்த்துக் கணக்கிடப்படவில்லையாம், ஆன்மதத்துவ அநுபவத்தில் சுழுப்தமவுனமெனப் பெயரியது, ஜீவன் முக்தனைப் பின்ருெடர்ந்து ஜீவிக்கும்; சுழுப்தமௌன அவஸ்தையின்கண்ணே அது துரியமாம் சுதந்த்ரமாகிய அதுவே ஜீவன் முக்தர்களிடத்தில் உணரப்பெறுவதாம். எழுந்திருந்த காலத்திலோ இம்மூன்று மௌனங்களும்; விளங்காநின்ற சித்தசலனத்தோடு கூடியவேயாம்.

(சு.) சொற்றடை=வசனங்களின் நிரோதத்தாற் சனிப்பது, வாக்கு மௌனமாம், வலிந்து=அடயோக வசத்திஞல், இந்திரியமடங்குவித்தல்=நேத்திராதி இந்திரிய

நிக்கிரகம், கரணமவுனமாம், அதுபோலவே, தனது சேட்டையெலாம் = சரீரம் அதன் அவயவங்கள் என்னும் இவற்றின் கிரியைகள் அனைத்தையும், விடுதல், காட்ட மவுனமாம், இவை = முற்கூறிய, மூவகை மவுனமும். சித்தவியாபார நீக்கமிலாவாகும், சங்கற்ப விகற்பான்மகமான சித்தவாசனையோடு சேர்ந்திருப்பனவாமென்றதாயிற்று. (4)

(ஸ்ரீ-வீர-அ-கை.) முன்மூன்றிற்கும் ஆசிரயத்தைக் கூறிச் சுழுத்திமௌனத்தை விளக்கல்:—வன்பிலென்பது.

வன்பிலியற்று மிம்மூன்று மவுனங்காட்டத் தவர்க்கியல்பா
முன்பினின்றிப் பிறிவின்றி மொய்த்த துயரற்றிருக்கின்ற
வின்பவனுபூ தியர்க்கெனினு மிலாதார்க்கெனினு மிதுதானே
துன்பமொன்று மணுகாத சுழுத்திமவுன மெனச்சொல்வர்.

(ப - ரை) வன்பிலியற்றும் = வலிதிலாற்றும், இம்மூன்று = உரைத்த இந்தமூன்று, மௌனம்=மௌனங்கள், காட்டத்தவர்க் கியல்பாம்=காஷ்ட தபசிகட்குச் சுபாவமாம், முன்பினின்றி = ஆதியும் அந்தமுமின்றி, பிறிவின்றி = விபாகமின்றி, மொய்த்த துயரற்றிருக்கின்ற = பொருந்திய துன்பமற்றிராநின்ற, இன்ப அநுபூதியர்க்கு எனினும் = ஆனந்த அநுபூதியுள்ளவர்க்கு என்றாலும், இலாதார்க்கெனினும் = இல்லாதவர்க்கு என்றாலும், இதுதானே = இதுவே, துன்பமொன்று மணுகாத = துயரம் எதுவும் சம்பந்தியாத, சுழுத்தி மவுனமெனச் சொல்வர் = சுழுத்திமவுனமென்று சொல்லுவார்கள்.

(ஸ்ரீ - வீர) இம்மூன்று மவுன விசேடங்களிலும் அதிகாரியாயிருப்பவன் காஷ்டதாபசனேயாவன்; விபாகமற்றது = பகுக்கும் விகற்பக்ஷயத்தானும், தாரதம்மிய விபாகமின்மையினானும் அவிபாகமாம், இதனானே அப்பியாச மற்றதாம், அபரிச்சின்ன ஆன்மரூபத்தன்மையினானே ஆதியும் அந்தமும் அற்றதாம், இங்ஙன் யாதுளதாமோ, அவ்விதுவே தியானிப்பவனுக்கேனும், தியானியாதவனுக்கேனும், சுழுப்த சம்பந்தியாய மவுனமெனப்பெறும்.

(ச) ஆதலின், வன்பில் = அடத்தினால் இயற்றும் இம்மூன்று மவுனமும் காட்டத்தவர்க்கே, இயல்பாம் = ஆசிரயமாம், ஜீவன் முக்தர்க்கன்றென்பது பொருள். இனிச் சுழுத்தி மவுனத்தைக்கூறல்: அநுபூதியார்க்கெனினும்=உன்முகமுனிக் கெனினும், இலாதார்க்கெனினும் = பகிர்முக முனிக்கெனினும், முன்பின் இன்றி = உபக்கிரம உபசங்கார ரகிதமாய், பிறிவின்றி = சாக்கிராதி விபாக ரகிதமாய், துயரற்று = ஞான கருமேந்திரிய நிரோதக்கிலேச ரகிதமாய், உள்ளபடியிருக்கின்ற, இது = இதனை சுழுத்தி சம்பவமான மவுனமெனச் சொல்வர்; மகாயோகமே சுழுப்த மௌனமென்பது பொருள். "உலகு தோற்றினும் தோற்றலாதொழியினு மொப்பாம், இலகும் வித்தையால் வித்தையா விலங்கித மலதாம், நிலவிதாத்தும வடிவஃதாநந்த நிறைவாம், நலபர சிவப்பான்மை மாயோகமாய் நவில்வர். என்பர் ஸ்ரீசர்வஞ்ஞ யோகியர். சைவத்தி"லும் சாற்றப்பெற்றுள்ளது:— நிருமல வறிவதாக நீக்கியே யுபாதியாவும், பரசிவ வியற்கையதானே யேகமாய்ப் பரவலாகும், விரமமற் றெதனினானே யம்மனோவிருத்திதானே, பரமமா யோகமாகப் பகருவ ரிவண்மேலோர். ஈசுரகீதையையும் இவ்விடத் தெண்ணுக:— மயலிலா யாதிலொரு மலமிலாதான சுகவடிவதா மாசிலொளியா, மயலிலாவேக வெனையுய லெனாதேக மெனவறிகை மாயோக மதுவா, முயலுமாருசையேன முடிவிலா நூல்கள் பலமொழியு மியோகா டவியெலாமியனுரு தாமரிய விதனிலோர் சோடசியு மிசையுறுதாகு மியல்பால். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சுழுப்தி மவுனத்தையே நன்கு புலப்படுத்தி, அதனையடையும் இருவகை யோகியரையும் கூறத் தொடங்கல்:—பன்மை நின்றவென்பன.

பன்மைமோகத் திவ்வுலகைப் பற்றியுள்ள படியுணர்ந்து
தன்மைநிலையா யையமற றானேசுழுத்தி மவுனமதாஞ்
சின்மையனேக வறிவுருவாஞ் சிவமேயிவையா வையுமென்னுந்
தொன்மைமுடிவி னிலைதானே சுழுத் திமவுன மெனச்சொல்வர்.

நின்ற விண்ணுண் டல்லவுமா நிகழுமனைத்து முளதிலதா
மென்று சமமுஞ் சாந்தமுமா யிருத்தல் சுழுத்தி மவுனமதா
மொன்று சுழுத்தி மவுனந்தா னுபயவிதமா மியோகியர்க்குத்
துன்று கின்ற சாங்கியமுந் தூயதான யோகமுமே.

(ப - ரை.) பன்மை மோகத் திவ்வுலகை = நானாத்துவ மயக்கத்தினே டெழலிந்தவுல கத்தினை, பற்றி யுள்ளபடி யுணர்ந்து = அவலம்பித்து யதார்த்தமாக வறிந்து, தன்மைநிலை யாயையமறல்தானே சுழுத்தி மவுனமதாம் = சொரூபஸ்திதியி லிருந்துகொண்டு சந்தேகமற்றிருத்தலே சுழுத்தி மவுனமென்று சொல்லுவர், சின்மையனேக அறிவுருவாம் = தில உபாதிகளினே லேற்பட்ட நானாவகை யறிவுருவங்கட்கும் ஆன்மாவாகிய, சிவமே யிவை யாவையுமென்னும் = சிவ சொரூபமே இவ்வெல்லாம் என்னும், தொன்மை முடிவில் நிலை தானே = பிராசீனமான அந்தமில்லாத நிலைமையே, சுழுத்தி மவுனமெனச் சொல்வர் = சுழுத்தி மௌனமென்று சொல்லுவர்.

நின்ற விண் உண்டு அல்லவுமாம் = எங்கு நிறைந்த ஆகாசமானது அஸ்தியுமாம் நாஸ்தியுமாம், நிகழும் அனைத்தும் உளதிலதாம் = இலங்காநின்ற யாவும் உள்ளனவுமாம் இல்லனவுமாம், என்று சமமும் சாந்தமுமாயிருத்தல் = எனத்துணிந்து ஒப்பாகவும் ஒழிவாகவும் இருந்து பெற்றிருத்தல், சுழுத்தி மவுனமதாம் = சுழுத்தி மவுனமென்று சொல்லப்பெறும், ஒன்று சுழுத்தி மவுனந்தான் = பொருந்திய சுழுத்தி மவுனமானது, உபயவித மாமியோகியர்க்கு = இருவகையாய யோகியர்கட்கு, துன்றுகின்ற = பெறத்தக்கதாக விருக்கின்றது, சாங்கியமும் தூயதான யோகமுமே = அவ்விருவகை யிவையாம், சாங்கிய யோகியர், பரிசுத்தமான யோக யோகியர் என்பவரே யாவர்.

(ஸ்ரீ - வீர.) நானாத்வவிப்பிரமம் வாய்ந்த ஜகத்தையும், இவ்வான்ம தத்துவத்தையும் உள்ளபடியே காரணத்தைத் தவிரக் காரியமில்லையென்றும் தனது வடிவமென்றும் ஆராய்ந்தறிந்து, ஐயந்திரிபற அமர்ந்து வாழ்வதாகிய அது சௌழுப்த மௌனமேயாம். அநேக வகைச் சம்வித்ரூபங்களின் ஆன்மாவாக எச்சிவமுளதோ அதனானேயே இவை யாவும் வியாபிக்கப் பெற்றுளவோ, அவ்வனைத்துமாய் அநந்தமுமாய் எந்நிலைமை யுளதோ அதுவே சுழுத்தி மவுனமெனச் சொல்லப்பெறும்; எங்கும் நிறைந்திருத்தலின் ஆகாயமுமாம், அறிவாயிருத்தலின் ஆகாயமும் ஆகாதாம், சூனிய ரூபத்துவமின்மையின் ஆகாயமும் ஆகாதாம், ஆகாயம் சூனிய மன்மையின் இல்லாததுமல்ல, உருவமின்மையின் இருப்பதுமல்ல, யாவும் விவர்த்தரூபத்தானே யுளவுமாம், சைதன்ய ரூபத்தானே யிலவுமாம், எனச் சித்தம் சமமாய்ச் சாந்தமாயிருப்பதே சுழுத்தி மவுனமெனச் சொல்லப்பெறும்; இருவகை யோகிகளானே சுழுப்தி மவுனமானது திண்ணமாக அடையப்பெறும்; சாங்கியயோகிகள் சிலவுளும்,

மற்றவரோ யோக யோகியர்களாவர். இச்சுழுத்தி மவுனமே, அவித்தையைப் பாதிப்பது தாற்றுரியமாம், அதன் பாதகவிருத்திகட்கும் பாத முண்மையிற் றுரியாதீதமாம்.

(ச.) பன்மை மோகத்து = நானென்மப் பிராந்தியை யுடைய, உள்ளபடி = எந்தப் பிரகார முதித்ததோ அந்தப் பிரகாரத்தை, உணர்ந்து = பிரமத்தி லத்தியஸ்தமாதலின் அதனது ரூபமாய் நிச்சயித்து, ஐயமறல் = நிர்விகற்பமாய், தன்மை நிலையாய் = பிரஹ்மபாவமாயிருப்பது, சுழுத்தி மவுனமாம், இவையானவையும் = இச்சகமனைத்தும், அநேக அறிவுருவாம் = அநேக அறிவுருவங்கள் தனது சுபாவங்களாய் வியாபகமாகிய, சிவமே = பிரஹ்மமே, என்னும், தொன்மைமுடிவி னிலைதானே = நிரவதிக நிருபாதிகமா யிருக்கின்ற பிரஹ்ம நிஷ்டையே, சுழுத்தி மவுனமெனச் சொல்வர். நிகழுமனைத்தும் = சகல ஜகத்தும் விண்ணும் = சிதாகாச விவர்த்தமாதலின் என்க, விண்ணல்லவுமாம், மூர்த்தியையுடையதாதலின் என்க, அப்படியே, உளதுமாம், அதிஷ்டானசத்தை சத்துருபமாகத் தோற்றலின் என்க, இலதுமாம், கற்பிதமாதலின் என்க, என்று = ஜகத்து பிரஹ்மவிதிரேகமாக இல்லை யென்று, நிச்சயித்து, சமமும் = ஏகாகாரமும், சாந்தமுமாய் = நிர் விகாரமுமாய் இருத்தல் = இருக்கும் நிஷ்டை, சுழுத்தி மவுனமதாம் = சுழுத்தி நல்லியமான மவுனமாம், மகாயோகமே சுழுத்தி மவுனமென்பது பொருள். யோகியர்க்கு, சாங்கிய யோகிக்குச் சாங்கிய யோகமும், யோக யோகிக்கு யோகமுமாம், இவ்விருவகை யோகிகளும் மேற் கூறப் படுவர். மூ: சில் பாற்பாடம்: சௌழுப்தம்மௌனசங்கத் என்பதாம். ஆண்டு மௌன்சங்கதம் மௌன சமஸ்தானம் மௌனத்தின் பிரகாரம் என்பது பொருளாம். (6-7.)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆகாயத்தினும் மிக மிகவுந் தெளிந்திராநின்ற ஆன்மாகாசமானது சிதான்மகமா யுள்ளதாம் அத்தன்மையின் அடைவே பரமசிரேயசாகிய மோக்ஷமாம், அது எங்ஙனம் அடையப்பெறும் எனின்? அதனடைவின் கண்ணே சாங்கிய யோகங்கள் உபாயங்கள் என்றுரைப்பவராய், சாங்கிய யோகியரைக் குறிப்பித்தல்:— தெளிவென்பது.

தெளிவா ஞான உணர்வாலே தினமுமேக சமாதியினு
லளவாஞ் சங்கை யாலறிந்த வவர்சாங் கியயோ கியராகு
முளதாம் பிராணன் முதல்வாயு வுபசாந்தியினூ கத்தாலே
யெளிதா முடிவி லுயர்பதத்தை யிலைந்தோ ரியோக யோகியரே.

(ப - ரை.) தெளிவாஞானவுணர்வாலே = சம்யக்ஞான அவபோதத்தினாலே, தினமும் ஏகசமாதியினால் = நிரந்தரம் ஏகநிஷ்டையினால், அளவாஞ்சங்கையால் அறிந்த = பரிமிதமான சங்கையினாலேயே உணர்ந்த, அவர் சாங்கியயோகியராகும் = அவர்கள் சாங்கிய யோகியர்கள் ஆவார்கள், உளதாம் பிராணன்முதல் வாயு = சாஞ்சல்யசுபாவமாகிய பிராணு பானாதி வாயுக்களின், உபசாந்தியில் ஊகத்தாலே = சம்சாந்தியில் யுக்தியினாலே, எளிதாம் முடிவில் உயர்பதத்தை இயைந்தோர் யோகயோகியரே = சுலபமாம் அநந்தமான மேலான பதத்தினை யடைந்தோர் யோகயோகியரேயாவர்.

(ஸ்ரீ - வீர.) நல்லவிசார ஜன்னியஞானத்தினாலே, தூயபரோக்ஷ அபரோக்ஷ ஞானங்களினாலே, நல்நிதித்தியாசனசவிகற்ப சமாதிகளினாலே, நித்தியமேகசமாதியால், சங்கையால் = விவேகவிசாரத்தாலுளதாய ராஜயோகத்தினாலேயே, ஆன்மதத்துவத்தை யுணர்ந்தவர்கள் சாங்கியயோகியர்கள் எனப் பெறுவார்கள். கருமயோகிகளைக் கணக்கிடல்: பிராண

னென்பதாதி. பிராணாதிகாற்றுகளின் நல்லடக்கத்தின்கண் முன் வருணித்த அடயோகத்தினாலே, எவர்கள் நோயற்றதும் ஆதியந்தமற்றதும் ஆகிய பதத்தை யடைவுற்றார்களோ அவர்கள் யோக யோகியர்கள் எனப் பெறுவார்கள்.

(ச.) தெளிவார்ஞானவுணர்வாலே = தத்துவஞானோதயத்தால், சித்தமான ஏகசமாதியினால், அத்வைதப்பிரமத்திற் சித்தவிசிராந்தியோடுகூடிய யோகிகள் என்னும், அவர் சங்கையால் = தெளிவா ஞானத்தாலே, அறிந்த = உணர்ந்தவராதலின், சாங்கியயோகியரும், ஊகத்தால் = அட்டாங்க யோகத்தால், உளவாம், பிராணன் முதலான வாயுக்களின் உபசாந்தியினால், எளிதாம் முடிவில் உயர்பதத்தை யியைந்தோர், யோகயோகியர். (8)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இரண்டு யோகியர்க்கும் அடையத்தக்க பதம் ஒன்றேயென்று கூறி, அப்பதத்தை யின்னதென வுணர்த்தல்:—பண்ணவென்பது.

பண்ணப்படாத வுபசாந்த பதமேயெவர்க்கும் பற்றாகும்
எண்ணத்தகுசாங் கியரெய்து மிடமேயிடமா மியோகியர்க்கும்
கண்ணத்தகுவா தனைவலைசூழ் கடியபிராணன் மனமிரண்டும்
நண்ணப்படுசெய் தொழிறீர நசிக்கிலதுவே பரமபதம்.

(ப - ரை.) பண்ணப்படாத உபசாந்தபதமே = சுபாவசித்தமேயாய பரமசாந்தபதமே; எவர்க்கும் பற்றாகும் = யாவருக்கும் அடையத்தக்கதேயாகும், எண்ணத்தகு சாங்கியரெய்துமிடமே = மதிக்கத்தக்க சாங்கியயோகியர் அடையுமிடமே, இடமாம் யோகியர்க்கும் = அடையத்தக்க இடமாம் கருமயோகியர்க்கும், கண்ணத்தகுவாதனை வலைசூழ் = பயப்படத்தக்க வாசனைஜாலச் சூழ்ச்சியும், கடிய பிராணன் மனமிரண்டும் = அடங்காதவாயு உள்ளமென்னு மிரண்டும், நண்ணப்படுசெய்தொழில் தீர நசிக்கில் = பந்தப்படுத்திச்செய்யும் வினையத்தியந்தம் அழிந்துபோயின், அதுவேபரமபதம் = அதுதானே மேலான மோக்ஷபதமாம்.

(ஸ்ரீ - வீர.) பலீபூதத்து வசாக்ஷாத்காரத்தினாலே அடையத்தக்கதாகியதோ இருவகை யோகியர் யாவருக்குமே இயற்கையதேயாய பரமசாந்த பதமாம், அதனைச் சிலர் சாங்கிய யோகத்தானே யடைகின்றனர், மற்றுஞ் சிலர் இத்தேகத்தானேயே யோகத்தானே யடைந்து மகிழ்வர்; பலத்தினாலிதனையே வெளிப்படுத்தல்:—ஹே பிரஹ்ம சொரூபரே! சாங்கிய யோகம் கரும யோகம் என்னும் இவ்விரண்டினுள் ஒன்றை யநுஷ்டிப்பதால், அதிகாரி யானவன் உத்தேசித்த வுயர் பதத்தை யெவ்வாறடைதல் கூடும், பலபேதம் உளதாமேலாயின், என்றிடிற் கூறல்:— எண்ணத்தகு மென்பதாதி. சாங்கிய யோகி யடையுமிடத்தையே யோக யோகியு மடைகின்றான், ஆகையினால் சாங்கியத்தையும் யோகத்தையும் ஒன்றாகக் காண்பவனே நன்றாகக் காண்பவனாவன். ஞான நிஷ்டையோடு கூடிய எவ்வதிகாரி, இப்பிறப்பிற் கருமானுஷ்டான மில்லாதவனாயினும், பூர்வ ஜன்ம கருமத்தாற் சுத்தாந்தக்கரணமுடையவனாவனோ, அவ்வதிகாரியால், சிரவண மனனாதி பூர்வகமாக, ஞான நிட்டையால், எம்மோக்ஷ ரூபஸ்தானம், அடையப்படுகின்றதோ, ஈண்டு எதில் ஸ்திதியடைந்து வித்வான் ஒருகாலும், மீண்டும் வருதல், சம்பவியாதோ, அது ஸ்தானமாம். அவ்வித ஸ்தானவடிவ அவ்வித்தியா நிவிருத்தி பூர்வக, அத்துவிதீய, நிர்க்குணப் பிரஹ்மத் தன்மையின் பிராப்தி வடிவ மோக்ஷத்தினின்றும் பின்னமாகிய பிரமாதி லோகம் முதலியவற்றை

அடைந்தும் இவன் மீண்டும் பிறப்பு இறப்பு வடிவச் சுழலையே அடைகின்றான். ஈண்டு ஸ்தான சப்தத்தால் பிரமலோகாதி கொள்ளல் கூடாதாம். அத்தன்மையதாய பிரஹ்மஸ்ரூப மோக்ஷம் அதிகாரிக்கு எப்போதும் நித்தியப் பிராப்தமே யாயினும் அஞ்ஞானத்தின் ஆவரண சத்தியால் பிராப்தமாகாததுபோல உள்ளதாம், மகா வாக்கியத்தாலுண்டாம் தத்துவ சாக்ஷாத்காரத்தால் எப்போது அவ்வாவரணம் நிவிர்த்தியாமோ அப்போது அம்மோக்ஷம் பிராப்தியானதுபோல் சொல்லப்பெறுகின்றது; கண்டத்திலுள்ள மறந்த பூஷணத்தின் ஞானத்தால் மீண்டும் அடையப்பெற்றதாய்க் கூறப்படுகின்றதே போலும். பலத்தில் இச்சை யிலதாய் கேவலம் பகவதர்ப்பண புத்தியால், செய்யப்பட்ட, சாஸ்திர விகித நித்திய நைமித்திக கன்மங்கள், யோகமாம், அந்நிஷ்காம யோகத்தை யுடையவன் யோகியாவான், அவனும் இப்பிறப்பிலாவது முப்பிறப்பிலாவது அந்தக்கரண சுத்தியால் சந்நியாச பூர்வகம் சிரவணாதிகள் செய்தடைந்த ஞான நிஷ்டையால் அம்மோக்ஷ வடிவ ஸ்தானத்தை அடைகின்றான். இவ்வாறு சர்வ கருமத்தியாக வடிவ சந்நியாசத்திற்கும் நிஷ்காம கரும யோகத்திற்கும் மோக்ஷ வடிவப் பிரயோஜனம் ஒன்றே யாதலின் சாங்கிய சந்நியாசத்தையும், நிஷ்காம கரும யோகத்தையும்; ஒருவடிவமாக காண்பவனே உண்மையாகக் காண்பவனாவன்; அவ்விரண்டையும் வேறு வேறாகக் காண்பவன் உண்மையாய்க் காண்பவனெனக் கூறப்படான், மற்றோ அவன் விபரீத தரிசியே யாவான். எவ்வதிகாரியிடத்து இப்போது சந்நியாச பூர்வக ஞான நிஷ்டை காணப்படுகின்றதோ கரும நிஷ்டை காணப்படவில்லையோ அவ்வதிகாரியின்பால் அக்குறியால் முன் அனந்த ஜன்மங்களில் பகவதர்ப்பித கருமநிஷ்டை அநுமானிக்கப்படும், ஏனென்றால் காரணமின்றிக் காரியோற்பத்தி இன்றாமன்றோ, அக்காரணம் ஒருபோது காட்சியாய்த் தோற்றப்படவில்லையேல், காரிய வடிவக் குறியால் அதன் அநுமானம் பண்ணப்படும், மழைக் காலத்தின் காரிய வடிவமாகிய ஆற்றுநீரின் பெருக்கால் வேறிடத்தில் மழையாங்காரணத்தின் அநுமானம் செய்யப்படுவதே போலும் இச்சன்மத்தில் சந்நியாச பூர்வக ஞான நிஷ்டை வடிவக் காரியத்தால் முன் ஜன்மத்தில் அக்கரும நிஷ்டை அநுமானிக்கப்படும், எவ்வதிகாரி யிடத்தில் இப்போது பகவதர்ப்பித கரும நிஷ்டை காணப்படுகின்றதோ சந்நியாச பூர்வகமான ஞான நிஷ்டை காணப்படுவ தில்லையோ, அவ்வதிகாரியிடத்தில் அக்கரும நிஷ்டை வடிவ இலிங்கத்தால் வருங்காலத்தாம் சந்நியாச பூர்வக ஞான நிஷ்டை அநுமானிக்கப்படும்; ஏனென்றால் யாண்டு காரண சாமக்கிரியை உண்டோ ஆண்டு காரியம் அவசியம் தோன்றற்பாலதாதலின் அக்காரண சாமக்கிரியையால் இனிமேலாம் காரியத்தின் அநுமானம் பண்ணப்படும் மேகங்களின் உற்பத்தி விசேஷத்தால் வருங்காலத்துண்டாம் மழையின் அநுமானமாகின்றதேபோல பகவதர்ப்பித கரும நிஷ்டையால் வருங்காலத்துண்டாம் ஞான நிஷ்டை அநுமிக்கப்படும்; ஆதலின் அஞ்ஞானிகளாகிய முமுக்ஷு ஜனங்கள் அந்தக்கரண சுத்தியின் பொருட்டு முதலில் நிஷ்காம கருமமே செய்யத்தக்கதாம், சந்நியாசம் முதலில் செய்யத்தகாதாம், அச்சந்நியாசமோ தீவிர வைராக்கியத்தை அடைய இயல்பாகவே பெறப்படும்; என்னுமிது ஸ்ரீ பகவற்கீதையை யநுசரித்தபடியாய வியாக்கியானமாம். அற்றேல் வேறு வேறு ரூபம் வாய்ந்த அவற்றிற்கு எங்ஙனம் ஒரு, பலமெனிற் கூறல்:—கண்ணத்தகுமென்பதாதி. பிராண மனோ விருத்தி யிரண்டிற்கும், யாண்டு முற்றிலும் பிரதீதி யில்லையோ, வாசனை வலை எடுக்கப் பெற்றதோ, அது பரமபதமென அறிதி, அதாவது இரண்டிற்கும் ஆத்தியந்திக விலய உபலக்ஷிதத் தன்மை யுண்மையின், உபயவாசனை வலையெடுபட்டதிதியே, அந்த மேலானபதமென்பதாம்.

(ச.) எவர்க்கும் = சகல யோகிகளுக்கும், பற்றும் = உபாதேயமாம், அவ்வேதுவி னால் ஞானத்தாலடையப்படுந் தானமே, யோகங்களாலும் அடையப்படும் தானமென்ற வாயிற்று. அப்பதம் யாதென்பதற் குத்தரம்:— வாசனையே பந்தவேது வாதலின் வலையாம், அதனாற் சூழப்பட்ட பிராண மனங்களின் விருத்தி நிரோதிக்கில், அதுவே = அவ்விடத்திற் சேடிக்கும் ஆன்ம சொரூபமே, பரமபதம் = பரப்பிரஹ்ம சொரூபமாம். (9)

(ஸ்ரீவீர - அ-கை.) தேக அகந்தைத் தரிசன பூர்வகமாகவே எல்லாச் சம்சாரமும் உள்தாம். இதன் மூலம் மனமாம், ஆன்ம தரிசனத்தானே அது சாந்தியாகவே, சர்வ சம்சார சாந்தியுங் கூடுமென், ஆயின் ஆன்ம தரிசனத்தானே மனத்தின் நாசம் யாங்ஙனமாமெனின்? அதன் அதரிசன ஜன்னியத்தன்மையாலாமெனல்:— வின்வி யென்பது.

வின்வி நோக்காமையிற்சித்த மெய்போற் றோன்றும் பொய்யேயாங்
கனவிற் றனது மரணந்தான் காணுநின்று முளதாமோ
வனகவேகப் பொருட்பழக்கத் தழூத்தம் பிராண னுள்ளடக்கன்
மனனே யடக்கலிவைமுத்தி வசனப்பொருளாஞ் சுருக்கத்தில்.

(ப - ரை.) வினவி நோக்காமையிற் சித்தம் மெய்போற்றோன்றும் = ஆராய்ந்து பாராமையினாலே மனமானது சத்தியம் போலப் பிரதீதியாம், பொய்யேயாம் = மித்தையே யாம், கனவிற்றனது மரணந்தான் = சொப்பனத்திற் றன்னுடைய சாவானது, காணுநின்று முளதாமோ = பார்த்ததும் இல்லாததேயாம், அனக = பாபமற்ற புண்ணிய மூர்த்தியே! ஏகப் பொருட் பழக்கத் தழுத்தம் = ஒரு பொருளை யூன்றி யப்பியாசஞ் செய்து அழுந்துதல், பிராணன் உள்ளடக்கல் = பிராணவாயுவை யுள்ளே விலயம் செய்தல், மனனை யடக்கல் = உளத்தை யொடுக்கல், இவை = மேற்கூறியுவை மூன்றும், முத்தி வசனப் பொருளாம் சுருக்கத்தில் = சங்கிரகமாக மோக்ஷசப்த அர்த்தமாம்.

(ஸ்ரீ-வீர.) உற்றுப்பாராமையினாலே இல்லாததேயாயமனமானது வீணாகவே முதிர்ந் தெழுந்து விளையாடுகின்றது; சொப்பனத்தில் நன்கு காணப்பெறுவதாய தனது மரணாகாரம் இல்லாததேயாம்; ஞானத்தினால் மனம்பாதமாகவே, அதன் காரியமாய அகந்தை, மமதை யாதி பந்த மோக்ஷாந்த சகல கற்பனைகளும் பாதிக்கப்படுகின்றனவாம் என்று கூறல்: மனோபவமேயாய இச்சம்சாரந்தான் யாண்டையது எங்ஙன் வந்ததோ! மமதை யகந்தை ரூபச் சந்ததிதான் யாண்டையது எங்கனுற்றது! உபதேசிய உபதேசாதிகடோம், பந்த மோக்ஷாதிகளும் யாண்டையன எங்ஙனுற்றனவோ, இப்போது உத்தம அதமமத்யம அதி காரி முறையானே, மோக்ஷசாதனத்திரயத்தைச் சர்வசாஸ்திரார்த்த தாற்பரிய சங்கிரகத் தானே காட்டல்:—அனகவென்பதாதி. ஏகதத்துவகஞ்ப்பியாசம், பிராணன்களின் விலயம் அவ்வாறே மனோநிக்கிரகமும் என மோக்ஷசப்தார்த்த சங்கிரகமாம்.

(ச.) சித்தமவ்வளவும் உள்ளபடி பொய்யேயாம், வின்வி நோக்காமையின் = அவி சாரத்தினால், கனவிற்றனது மரணத்தோற்றம்போல தோன்றும்; காணுநின்றும் விசாரிக் கும்போது உளதாமோ இன்றாம், அவிசாரத்தாற் சித்தித்தபொருட் கு விசாரத்தால் நிவிர்த்தி யுக்தமேயா மென்பது கருத்து. ஏகப்பொருள் = தனக்கிஷ்டமுள்ள ஒருபொருளின், நிரந்தர அனுசந்தானமும், அப்படியே பிராணன்களின் விலயமும், மனோநிக்கிரகமும் என் னும் மூன்றுமே, மோக்ஷசத்தார்த்தத்தின் சங்கிரகமாம், இம்மாத்திரமே மோக்ஷசாதனமா மென்பது பொருள். (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறிய மூன்றும் ஒன்றற்கொன்று சகாயமாமென அவற்றையே கொண்டு அதற்குபாயம் கூறல்:—உரமா-ஆதாரவென.

உரமாமொருமைப் பொருட்பழக்க முயிரிஞெடுக்க முளத்தொடுக்கந்
தரமாமொன்று பலிக்குமெனிற் றம்மிற்று மூன்றும் பலமாம்
பரமாமுயிர்நெஞ் சிலதாகிற் பயிலாதெவர்க்கும் பாவனைக
டிரமாமிவையொன் றுமலரு மணமுந்திலமுந் தயிலமும்போல்.

ஆதாராதே யம்போலா மிதிலொன்றிறக்கி லயலதும்போ
மோதாநின்ற விவைமாயி லுயர்ந்தவீடு முதவிடுமால்
மீதாகியதன் பரிசயத்தால் வெளியாய் நினைவுபோமளவு
மேதாகிலுமோர் தத்துவத்தி லிறுகவேண்டும் பாவனையே.

(ப - ரை.) உரமாமொருமைப் பொருட் பழக்கம் = அதிதிடமாக ஏகாக்கிரமாய்ச் செய்யும் ஒரு தத்துவத்தின் அப்பியாசம், உயிரிஞெடுக்கம் உளத்தொடுக்கம் = பிராணனது விலயமும் மனத்தினது இலயமும், தரமாமொன்று பலிக்குமெனில் = தகுந்த ஒன்றேனும் பயன்படுமாஞல், தம்மிற்றும் மூன்றும் பலமாம் = பரஸ்பரம் மூன்றுமே பயன்றருமாம், பரமாம் உயிர் நெஞ்சிலதாகில் = மேலாகிய பிராணனும் மனமும் இல்லாதடங்குமேல், பயிலாதெவர்க்கும் பாவனைகள் = யாவருக்குமே பாவனைகள் உண்டாகமாட்டாவாம், திரமாமிவையொன்றும் = திடமாக இவையிரண்டும் ஒன்றேயாகும், மலரும் மணமும் திலமும் தயிலமும்போல் = புஷ்பமும் கந்தமும் எள்ளும் எண்ணெய்யும் போலவாம்.

ஆதாராதேயம்போலாம் = பற்றுக்கோடும் பற்றுவதும் போலவாம், அதிலொன்றிறக்கில் அயலதும்போம் = அவ்விரண்டில் ஒன்று விலயமாகில் மற்றதும் விலயமாகிப்போகும், ஓதாநின்ற விவைமாயில் = கூறிய இவ்விரண்டும் விலயமாகிப்போமாகில், உயர்ந்தவீடு முதவிடுமால் = மேலாகிய மோக்ஷமும் நல்கிடும், ஆல் அசை, மீதாகிய தன்பரிசயத்தால் = நேதிகளைந்து சேடித்த ஆன்மத்தியானப்பழக்கத்தால், வெளியாய் நினைவுபோமளவும் = அடியோடு நினைவுபோம்பரியந்தம், ஏதாகிலும் ஓர் தத்துவத்தில் இறுகவேண்டும் பாவனையே = எந்தத்தத்துவத்திலேனும் பாவனையானது அவசியம் உரம்பெறவேண்டும்.

(ஸ்ரீ - வீர.) ஒரு பொருளாகிய அத்வயதத்துவத்தின் அப்பியாசமாகிய சிரவணுவர்த்தனம், பிராணலயம், சித்தக்ஷயம், என்னும் மூன்றனுள் ஒன்றுநன்று சித்தியாகவே, பரஸ்பரம் நன்கு சித்தியாநின்றன, ஐந்துக்களினுடைய பிராணசித்தங்கள் நித்தம் ஒன்று விட்டு ஒன்று இராதனவாம்; எள்ளும் எண்ணெய்யும் போலவும், மலரும் மணமும் போலவும் ஒன்றேடொன்று கலந்து நிற்பனவாம்; மனத்தினசைவு பிராணனும் பிராணன்றன் அசைவு மனமாம், இவ்விரண்டும் அன்னியோன்னியம் ரதசாரதிகள்போல நித்தியம் அசைவைச் சம்பாதிப்பனவாம்; ஆதாராதேயம் போலும் தீயும் வெப்பமும் போலும், இவைகள் ஒன்றிலதேனசிக்கும், நம் மழிவானே மோக்ஷமெனப் பெரிய காரியத்தை யுண்டாக்கும். எவ்வளவுகாலம் ஏகதத்துவபாவனை தரிக்கத்தக்கது? எனிற் கூறல்:—மீதாகிய என்பதாதி. அதிதிடமான ஏகதத்துவத்தில், அத்துணையும் அதனுகாரவிருத்தி தாரையை நன்கு பாவித்து விருத்திசெய்க, எத்துணையுள் அவ்விருத்தி தாரையும் அந்திய சாக்ஷாத்காரத்து

மாய், அபாவத்தன்மையை யடையாநிற்குமோ, தன் பயிற்சியால் வித்தாரமாக; பின்னென்றும் வேண்டா மென்பதாம்.

(ச.) இம்மூன்றனுள் ஒன்று பலிக்கின் இதரங்களும் பலிப்பனவாமென்பது பொருள். இவை = பிராண மனதுகள், ஒன்றும், ஆதலின், மலரும் மணமும் போலும் திலமும் தைலமும் போலும். ஆதாராதேயம்போலும் ஒன்றற்கொன்றுற உள்ளனவாம்; அவ்வேதுவினால், ஒன்றிறக்கிலயலதும்போம், இவை மரிக்கில், தன்னுசமேகாரணமாக, உயர்ந்தவீடு முதவிடும், ஆல். அசை தன் பரிசயத்தால் நினைவு வெளியாய்ப்போமளவும் = பாவிக்கப்பட்ட சொரூபமாமட்டும், மீதாகிய=பிராமாணியமான, ஏதாகிலு மோர்தத்துவத்தில், பாவனை= சித்தவிருத்தி, இறுகவேண்டும் = பாவிக்கவேண்டும். (11-12.)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வெகுகால அப்பியாசத்தானே வாஞ்சிதபலமாம் எனவழங்கி அதன்பொருட்டுத் திருட்டாந்தமாக ஒரு கதையை யுபதேசிக்கத் தொடங்கல்:—நெடு வென்பது.

நெடுநாட்பழகுஞ் சுபாவத்தா னெஞ்சினொருமை யொன்றுண்டா
முடனேமிகுமித் திரளெல்லா மொருங்கிப் போகும் பிறப்பிறப்பி
னிடமார் கனவுபோய் விழித்த விகல் வேதாள மிசைத்த வினைத்
தடமார் புயனேகேட்டி யெனத் தவமார் வசிட்டன் சாற்றிடுவான்.

(ப - ரை.) நெடுநாட் பழகும் சுபாவத்தால் = வெகுகாலப்பயிக்கு மியற்கையானே, நெஞ்சினொருமை யொன்றுண்டாம்=மனத்தினது ஏகாக்கிரமானது ஒன்றுண்டாகும், உடனே = அக்கணமே, மிகுமித்திரள் எல்லாம் = மிகுந்த இத்திருசியக்கூட்ட மியாவும், ஒருங்கிப்போகும் = விலயமாகிப்போகும், பிறப்பிறப்பினிட மார் கனவு போய் விழித்த = ஜனனமரணங்கட் கிடமாகிய சொப்பனம் போய் ஜாக்கிரத்தையடைந்த, இகல்வேதாள மிசைத்தவினை = பயங்கரமான வேதாளம் வினவியவினை, தடமார்புயனே = விசாலமான அழகிய திருமார்புற்ற ஹே இராகவனே! கேட்டி = கூறகேட்குதி, என = என்று, தவமார்வசிட்டன் சாற்றிடுவான் = தபோநிதியாகிய ஸ்ரீவசிஷ்டபகவான் திருவருள் செய்வாராயினர்,

(ஸ்ரீ - வீர.) பிரத்தியாகாரவான்கட்கு, மனமானது பிராணங்களுடன் கூடச் சுயமாகவே, ஆகாரக்ஷயத்தினாலே சுயந்தேகமேபோல விலீனத்தையடையும், தாரணாதங்களாய இயமாதி ஐந்து அங்கங்களானே மனத்திற்கு வெளியாகாரம், ஒய்வுறவே, தாரணாதி மூன்றுகளானே பிரஹ்மைகதானதையின் சம்பத்தியானே நிருவிகற்பசமாதி பரிபாகத்தால், பிரஹ்மம் பிரம் சித்தியாநிற்கும் என்றுரைத்தல்:—நெடு என்பது. நெடுங்கால அப்யாச இயற்கையானே சித்தத்திற்கு எவ்வேகதானமுண்டாமோ அவ்வொருமையானது அசேஷ விசேஷக் கூட்டத்தையும் சாந்திசெய்வதாய்க் கணத்திலே யுண்டாகின்றது; சித்தம் சாந்தியாகவே இச்சம்சாரக் கானனீரானது சாந்தியையடையும் எனப்பெற்றது, சித்தசாந்தியின் கண்ணும் விசாரமே ஞானைகப்பரியந்த உபாயமெனல்:—விசாரத்தினாலே ஜீவன் அஜீவனாகின்றான் விஸ்ரவிற்சித்தம் அசித்தத்தன்மையை அடைகின்றது, இவ்வுபாயத்தானே அடைவுற்ற எக்காரிய காரண அவித்தைகளின் நாசமுளதோ அது மோக்ஷமென மொழியப்பெறுகின்றது; கூறிய பொருளில் அசம்பாவனை ஏதுவாய உலகத்திற் றூட்டியப்பிரமத்தை விலக்கல்: பேய்த்தேரேபோல மனதகந்தை முதலியவை காணப்பெறுகின்றன, அவை யசத்தேயாம் அற்

பமேயாம் ஆராய்ச்சியானே முற்றினும் இற்றுப்போம்; அச்சத்தே அற்பமேயெனக் கூறிய அருத்தத்தின் சமர்த்தனப்பொருட்டு வேதாள ஆக்கியாயிகையை கூறத்தொடங்கல்: பிறப்பென்பதாதி. சம்சாரசொர்ப்பன விப்பிராந்தியில் பிரசங்கத்தானே இனிவிற்றுவந்த மங்களமாகிய வேதாளங்கூறிய இந்த வினக்களைக் கூறக் கேட்பாயாக.

(ச.) நெஞ்சினொருமை = மனது எந்தவஸ்துவில் ஏகாக்கிரமாம், நெடுநாட் பழகும் சுபாவத்தால் = சுபாவத்தின் வெகுகால அநுசந்தானவசத்தினுல், மிகுமித்திரன் எல்லாம் = சகலபேதமும், ஒருங்கிப் போகும், உடனே யொன்றுண்டாம், அவ்வஸ்துவாம், ஸ்ரீ வசிஷ்டர். (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்வேதாளத்தின் சரிதையை உரைத்தல்:—விந்தவென்பது.

விந்த வனத்தோர் வேதாளம் வேறோர் நாட்டில் வெம்பசியால்
வந்துபுகுந்தோர் நல்லோன்பால் வரம்பில்பலியேற் றுண்மகிழு
முந்துபசித்தீ முடுகிடினு முன்வந்தோர்க்கு நிபமின்றி
நிந்தையின்றி கொலைபுரியா நெடியோர்நெறியை நீங்குவரோ.

(ப - ரை.) விந்தவனத்து = விந்தியாரண்யத்தில்; ஓர்வேதாளம் = ஒரு பூதமானது, இருந்தது, வேறோர் நாட்டில் = அயலொரு நாட்டில்; வெம்பசியால் = கொடிய பசியினலே, வந்து புகுந்து = வந்து சேர்ந்து, ஓர் நல்லோன்பால் = ஒரு சற்சனனிடத்தில், வரம்பில் = அளவில்லாத, பலியேற்று உண்மகிழும் = ஆகாரங்கொண்டு உள்ளே சந்தோடத்தை யடையும், முந்து பசித்தீமுடுகிடினும் = முதிர்ந்துவாராநின்ற பசியாக்கினியானது அதிகரித்தபோதினும், முன்வந்தோர்க்கு = எதிர்ப்பட்டவர்கட்கு, நிபமின்றி = நிமித்தமின்றி, நிந்தையின்றி = குற்றமில்லாமல், கொலைபுரியா = வதைசெய்யாது, நெடியோர் = பெரியோர், நெறியை நீங்குவரோ = சன்மார்க்கத்தை விடுவரோ விடார்.

(ஸ்ரீ - வீர.) விந்தியமகா அடவியின்கண் ஒருபோரகிருதியையுடைய வேதாளமானது இருக்கின்றது, அதுகொல்லவேண்டுமென்னு மிச்சையினலே, வந்தசெய்ய யோக்கியர்களாகிய அறியாத ஜனங்களிடத்தில் அநாதரவாகிய கருவத்துடன் ஒருமண்டலத்தைக் குறித்துவந்தது; சுருக்கிக் கூறியதை விரிக்கும்பொருட்டு மீள்வும் ஆதியிலிருந்து தொடங்கிக்கூறல்:—நல்லோன் என்பதாதி. அவ்வேதாளமானது பூர்வம் யாதோ ஒரு சற்சன ஆஸ்பதத்தில் வசித்துக்கொண்டிருந்தது; அதாவது நல்ல ராஜாவினுடைய தேசத்தில், இராத இராஜ்ஜியத்திற் கற்கடியேபோல, அரசனுல்யற்றப்பெற்ற கொல்லத்தக்க வெகுஜனப்பலி யுபகாரத்தானே, நித்தியம்மகிழ்ச்சி யுடையதாக விக்ஷேபமற்றுச் சமாதிச் சுகியாயிருந்தது. அது முன் னெதிர்ப்பட்டவனையும் குற்றமின்றி யொருநிமித்தமுமின்றி, பசியோடு கூடியிருந்தபோதினும், கொல்வதில்லை, சாதுக்களானவர்கள், நியாயம் காட்டுபவர்களேயாவார்கள். நிந்தையே நீதிநிபுணர்தாம்புரிக வல்லது நிகழ்த்துகபுகழே, விந்தையாந்திருவும் நிறைவுறவல்லது விண்டுதான் சென்று சேர்வுறுக, பொந்திதானுழிக வின்றுதானலது பொழிவுற வுருக்கனுள்வரையும், எந்தையார்தீரர் நீதியாநெறியை யிறையளவேனுமே கடவார், என்று ஸ்ரீ பர்த்ருஹரியும் கூறியுள்ளார்.

(ச.) வெம்பசியால் = வரும் பக்ஷண இச்சையால், வரம்பில் = மாமிசாதி கற்பிதமான வெகுவித பலியை, முன்வந்தோர்க்கும் = முன்புறுநரையும், நிபமன்றி = நிமித்தமாய், நிந்தையின்றி = நிரபராதமாய், நெடியோர் = சத்துக்களான வித்துவாம்சர் நெறியை

நீங்குவரோ = நியாயத்திற் பிரவர்த்தகராவர். வேதாளம், பிரஹ்மவித்தாதலின் அநியாயமாகக் கொலைபுரியாதென்பது பொருள். மண்டலம் = தேசம். (14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வேதாளம் வெளிப்போதலும் மன்னவனைச் சந்தித்தலும்:— கானென்பது.

கானின்றந்த வேதாளங் கடுந்தீப்பசியா னீதியினு
லானவூகத் தாற்சனத்தை யசனமாக்க நகரெய்தித்
தானநிருப னிரவுதிரி சமயத்தவனைத் தான்கண்டு
வானிலிடிபோல் வேதாளம் மன்னற்குரைத்த படிகேளாய்.

(ப - ரை.) கானின்றந்த வேதாளம் = கானகத்தினின்றும் அந்த வேதாளமானது, கடுந்தீப்பசியால் = கொடியதீப்பசியினாலே, நீதியினால் = நியாயத்தினால், ஆன ஊகத்தால் = கிடைத்த யுக்திகளினால், சனத்தை யசனமாக்க நகரெய்தி = மனுடர்களைப் பக்ஷணமாக்கப் பட்டணமடைந்து, தானநிருபன் இரவுதிரிசமயத்து = அந்நாட்டிற்குரிய மன்னவன் இராத்திரியில் நகர் சோதனையின் பொருட்டுச் சஞ்சரிக்கும்போது, அவனைத் தான் கண்டு = அவ்வரசனை இவ்வேதாளம் பார்த்து, வானில் இடிபோல் = ஆகாயத்தில் மேகங் கர்ச்சித்தது போல, வேதாளம் = பூதமானது, மன்னற்குரைத்தபடி கேளாய் = அரசனை நோக்கிக் கூறிய பிரகாரத்தைக் கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) அடவியைக் கிருகமாகவுடைய அந்த வேதாளமானது மிகமிகவும் பசியினாலே கிளப்பப்பெற்றதாய் நகராந்தரத்தை நோக்கி, ஆண்டுக் கொல்லத்தக்க ஜன அலாபகால்முற்றிட, நியாய்யுக்தியானே ஜனங்களை யுண்ணும்பொருட்டுச் சென்றது; ஆண்டு, அவ்வேதாளமானது, இரவில் நகரத்தில் துஷ்டஜனங்களை யுணரும் பொருட்டும், சோரதிவதத்தின் பொருட்டும் சஞ்சாரப்பொருட்டு வெளிப்போந்த பூபாலனை யடைவுற்றது, உக்கிரநிசாசாமானவது, அம்மன்னவனைநோக்கி, கனகோரசப்தத்தானே கூறியதாவது.

(கு.) அரசர்களன்றோ ராச்சியஸ்திதியை விசாரித்தற்கு ஒருவராய், மாறுவேடங்கொண்டு இரவிற் சஞ்சரிப்பர். (15)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வேதாள அரசசம்பாஷணை:—மன்னுவென்பது.

மன்னுவென்கைப் பட்டனையால் வானேறனைய வென்னாலே
யுன்னருயிரிற் றனையினியென் னுணவாகுதியென் றுரைத்தலுமே
நின்னாநெறியா லன்றியெனை நெருங்கிற்றலைநீ றெழுமென்னச்
சொன்னான்மன்னன் வேதாளஞ்சொன்ன மன்னற் கெதிர்சொல்லும்.

(ப - ரை.) மன்னுவென் கைப்பட்டனை = ஒய் அரசனே! எனது கரத்தி லகப்பட்டாய், வானேறனையவென்னாலே = மிகவும் உக்கிரமமாகிய வேதாளமாமென்னாலே, உன் அருயிரிற்றனை = உனது அருமையாகிய ஜீவன் அற்றுப்போனாய், இனியென்னுணவாகுதி = இனி யென்னுடைய ஆகாரமாகுதி, என்றுரைத்தலுமே = என் விவ்வண்ணம் உரைத்தவுடனே, நின்னால் = உன்னாலே, நெறியாலன்றி = முறையாலல்லாமல், எனைநெருங்கில் = என்னைக் கொல்ல அடைந்திடப்படுமாயின், தலைநீறெழுமென்ன = நின்சிரஞ்சுக்கலாம் என்று, சொன்னான் மன்னன் = உரைத்தான் அரசன், வேதாளம் = அப்பூதமானது, சொன்னமன்னற்கு எதிர் சொல்லும் = உரைத்தராஜாவிற்குப் பதிலுரைத்ததாவது.

(ஸ்ரீ - வீர.) வேதாளம் கூறல்:—ஓய் ராஜாவே ? இப்போது பயங்கரமாகிய வேதாளமாம் என்னால் அடைந்திடப் பெற்றாய், எங்கே செல்லுகின்றாய், விநாசமாயினாய், இன்றெனக்குப் போஜனமாகுதி. அரசன் கூறல்:—ஹே இரவிற்சரிக்கும் வேதாளமே! நியாயம் அகன்றமுறையில் என்னை வலிதிற் புசித்தியேல், இங்கதனால் நின்து மண்டை யாயிரம் சுக்கலாகப் பொடியாய்விடுமென்பது திண்ணம் இதிற் சந்தேகமே கிடையாது. (16)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வேதாளமானது நீதியில்லாமற் தீண்டேனென்று கூறித் தன்னது வேண்டுதலை நிறைவேற்றுமாறு கேட்டல்:—நீதியென்பது.

நீதியின்றி யுனையடரே னெறியேயுரைக்கே னிருபாநீ
தீதிலிரவா ளருக்கெல்லாஞ் சிறுமைதீர்க்குந் திறத்தனையா
லாதலாலென் குறைதீர்ப்பா யையப்பாடாங் குறைகேட்டு
நாதனேநின் சொற்கொடையா னன்றாநிறைப்பா யெனவுரைக்கும்.

(ப - ரை.) நீதியின்றி யுனையடரேன் = நியாயமில்லாமல் உன்னைக்கிட்டேன், நெறியேயுரைக்கேன் = முறையே கூறுவேன், நிருபாநீ = மன்னவனேநீ, தீதில் இரவாளருக்கெல்லாம் = குற்றமறவேண்டுவார்கட்கெல்லாம், சிறுமைதீர்க்கும் = குறையை நிவிர்த்திக்கும், திறத்தனை = தன்மையினையுடையாய், ஆதலாலென் குறைதீர்ப்பாய் = ஆகையினால் எனது சிறுமையை அகற்றுவாய்; ஐயப்பாடாம் குறைகேட்டு = சமுசயமாகிய குறையைக்கேட்டு, நாதனே நின்சொற்கொடையால் = நாயகனே நினது உபதேசமாகிய தானத்தினாலே, நன்றா நிறைப்பாயென வுரைக்கும் = நலமுடன் பூரிப்பாயென்று கூறத்தொடங்கியது.

(ஸ்ரீ - வீர.) அன்னியாயமாக உன்னையா னருந்தேன், இந்நியாயந்தான் என்னாற் கூறப்பெறுவதாகும், நீயோ அரசனாக விருக்கின்றாய், இரப்பவர்கட் குன்னால், எல்லா அபிலஷிதார்த்தங்களும் பூரிக்கப் பெறுவனவே யாகவேண்டும் என்பது தரும சாஸ்திரப் பிரசித்தமன்றோ, அறிவிலானேல் அபராத சகத்திரம் சுலபம், நல்லுணர்வினனேல் அபராதிக்கவேமாட்டான், அவனும் அபராத சகத்திர மிருந்தபோதினும் பாலிக்கத்தக்கவனேயாவன், என்ப பரீக்ஷிக்கும்பொருட்டுப் பிரசின பரிபூரணமே வேண்டல்:—ஐயமென்பதாதி, ஹே மன்னவனே! எனது இந்தச் சம்பவ அபாதித அர்த்தமாகிய வேண்டுதலை நன்றாக நிரப்புவாயாக; என்னாற் கூறப்பெறுவனவாகிய இவ்வினாக்களை நீ நன்றாகத் தீர்க்கத்தக்கவனாகவேயிருக்கின்றாய்; இவ்வசம்பாவதார்த்த வினாச்சலத்தானே, பரவதப் பிரவிருத்தியானது தனக்கு இல்லையென்று காட்டியதாம். (17)

(ஸ்ரீ வீர - அ - கை.) இப்போது அவ்வினாக்களைச் சங்கிரகித்தல்:—எந்த அரம்பையென்பன.

எந்த வெய்யோன் கிரணங்கட் கிந்தப்பிரமாண் டங்களெலாஞ்
சிந்துஞ் சிறிய வணுத்திரளாய்த் திகழுமெந்த மாருதத்தி
லந்தமில்லாக் ககனமெனு மணுக்கள் விளங்கு மளவின்றி
வந்தக னுமேற் கனவுற்று மாறுந்தெளிவா மொளிவடிவென்.

அரம்பைத் தண்டு ளுட்போயு மந்தத்தண்டே யாவதுபோல்
வரம்பி லுள்ளுள் ளேயெனினு மற்றொன்றாகா வணுவேது
நிரம்பு மண்டம் விண்ணுயிர்க் ணிகமுங்கதிர்பொற் கிரியனைத்தும்
பரம்பு பரமா ணுக்களென்னப் பயின்றுநீங்கா வணுவேது.

(ப - ரை.) எந்த வெய்யோன் கிரணங்கட்கு=எந்தச் சூரியனது ரஸ்மிகட்கு, இந்தப் பிரமாண்டங்களெலாம்=இந்தப் பிரமாண்டங்கள் யாவும், சிந்துஞ் சிறிய அணுத்திரளாய்த் திகழும்=நஷ்டமாகும் அற்ப அணுக்கூட்டங்களாக இலங்கும், எந்த மாருதத்தில் = எந்தப் புவனத்தில், அந்தம் இல்லாக் ககனமெனும் = அளவில்லாத ஆகாயமென்னும், அணுக்கள் விளங்கும் அளவின்றி = ரேணுக்கள் அளவுகடந்து பொலியாநிற்கும், வந்தகனுமேல் கனவுற்று = மாறிமாறி வாராநின்ற சொப்பனத்தினின்றும் சொப்பனந்தரத்தை அடைவுற்று, மாறுத் தெளிவாம் ஒளி வடிவு என்=விடமுடியாத சொச்சமான பிரகாச வடிவம் யாது.

அரம்பைத் தண்டுள் உட்போயும் அந்தத்தண்டே யாவதுபோல் = வாழைத்தண்டினுள்ளே உள்ளே சென்றும் அந்த வாழைத்தண்டே யிருப்பதுபோல, வரம்பில் உள்ளுள்ளேயெனினும் மற்றொன்று ஆகா அணுவேது = அளவில்லாமல் உள்ளே உள்ளே பாவிக்கினும் வேறொன்று ஆகாத அணுயாது, நிரம்பும் அண்டம் விண் உயிர்கள் நிகழும் கதிர் பொற்கிரியனைத்தும்=நிறைவுற்ற பிரமாண்டங்கள் ஆகாசம் பூதங்கள் பிரகாசியாநின்ற சூரிய மண்டலம் ஸ்வர்ண பர்வதம் என்னுமியாவும், பரம்பு பரமாணுக்கள் எனப் பயின்று நீங்கா அணுவேது=பரவிய பரமாணுக்கள் என்றிலகி அகலாத அணுயாது.

(ஸ்ரீ - வீர.) எச்சூரியனுடைய ரஸ்மிகளுக்கு பிரமாண்டங்கள் அற்ப அணுக்களாமோ, எக் காற்றின்கண்ணே மகா ககனரேணுக்கள் இலங்குவனவாமோ, சொப்பனத்தில் நின்றும் சொப்பனந்தரத்தை அடைந்துவிட்டபோதினும் விடுவதில்லையோ தெளிவை, பின்பின் சொப்பனத்தில் முன்முன் உண்மையை விட்டும் அவற்றை ஒளிர்விப்பதாய தெளிவான சுத்திய ஆத்ம சொரூபத்தை விடுவதில்லையோ, எதனது வடிவம் மிகப் பிரகாசமானதோ, எங்ஙனம் கதலியினது உள்ளே உள்ளே ஆய்ந்தபோதினும் மறுபடி மறுபடியும் பட்டை மாத்திரம் இருப்பதேபோல், உள்ளே உள்ளே அவ்வாறுள்ளேயும் அவ்வாறு எவ்வணு உளதோ அதுவே யாமோ, திருஷ்டாந்தத்தில் அதற்கொப்பாய வேறு பட்டை ஆம், தார்ஷ்டாந்திகத்தில் அதுவே யாமெனச் சிறப்பாமென்பது கருத்து, பிரமாண்டம் ஆகாசம் பூதக்கூட்டம் சூரியமண்டலம் தங்கமலையாதிகள், அணுத்தன்மையை விடாத எவ்வணுவிற்கு பரமாணுக்கள் ஆமோ, பூதக்கூட்ட பதத்தால் அதனுதார புவனங்கள் கொள்ளக்கிடந்தனவாம், அதிமகத்துத் தன்மையானே பிரசித்தங்களாய பிரமாண்ட ஆகாசாதிகளும் எந்த அணுவைக் குறித்து பரம அணுக்களாய் அத்தியந்தம் துச்சங்களாமோ; எல்லா வினுக்களும் படித்தமாத்திரத்தில் வெளிப்படையாக பொருள் ஈவனவாம், கருத்தோ இனிமேல் வெளியாக் விளங்கும். (18-19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வேதாளம் தனது வினுக்களை உபசங்கரித்தல்:—அங்கமென்பது.

அங்க மொன்று மறப்பரம வணுவா மெந்த மாகிரிக்குத்
தங்கு கற்போற் செறிந்தொன்றுஞ் சகங்கண் மச்சை யாமென்று
துங்க வேதா ளஞ்சொன்ன சொற்கு நகைத்துச் சுடர்மௌலி
யங்க ணரசன் சொன்னவெலா மடைவே கேட்டி யிராகவனே.

(ப - ரை.) அங்கம் ஒன்றும் அறப்பரம அணுவாம் எந்தமாகிரிக்கு = அவயவமொன்றுமில்லாத பரம அணுவாம் மகத்தான பர்வதத்திற்கு, தங்கு கற்போல் செறிந்தொன்றும் = பொருந்தாநின்ற சிலைபோல நெருங்கி யேகமாம், சகங்கள் மச்சையாம் = மூவுலகங்களும் சோறுமோ; என்று=என இந்தப் பிரகாரம், துங்க வேதாளம் = பரிசுத்தமான வேதாளம்,

சொன்ன சொற்கு=கூறிய வினாக்கட்கு, நகைத்து = சிரித்து, சுடர் மௌலி அங்கண் அரசன்=நவரத்தின கசிதமாய்ப் பிரகாசியாநின்ற கிரீடந் தரித்த அழகிய விசாலமான ராச்சியத்திற்கு அதிபதியாகிய மன்னவன், சொன்ன எலாம்=விடையாகக்கூறிய யாவற்றையும், அடைவே=முறையாக, கேட்டி இராகவனே=வ இரகுகுல திலகனே நீ கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர) அவயவம் ஒன்றுமில்லாததாய், பரமாணுவே யென்ன அதிசூக்குமமாயிருக்கப்பட்ட எம் மகாகிரிக்குத்தானே, ஜகத்திரயங்களும், சிலையுட் கனதரமான எச்சத்தாவதாந்த ரூபமுளதோ அதுவே மஜ்ஜை = சாரம், ஆமோ. என்னும் இவ் வாறுவினாக் கட்கும், விடையெனக்குப் பகாரொழியேல், துஷ்ட தேகாதிகளையே ஆன்மாவென்று கருதிக்கொண் டிருப்பவனே! அதனாலே யபரிச்சின்ன ஆன்மாவை, பரிச்சேதத்தால், கொன்றவனாகின்றாய், ஆனபடியினா லான்மகாதியே! கூறுத அவ்வபராதத்தானே நண்டுன்னைக் கனியேபோல விழுங்கி வலிதில் உனது மண்டலத்திலிருக்கும் ஜனங்களை, கிருதாந்தன் ஜகத்தை விழுங்குவதேபோலச் சென்று விழுங்கிவிடுவேன். இந்தப் பிரகாரம் வேதாளமானது கூறியபோது, வினாக்கட்கு விடை பகரும்பொருட்டு, சிரித்து, தந்தாம்சுதவலாம் பரனாகிய அவ்வரசன் வருந் திருமொழியை வழங்கத் தொடங்கினான், பிரசித்தப் பிரமாண்டங்கட்குத் திரிசரேணுத் தன்மையானது ஆமென அற்ப திருஷ்டியினாலே யுன்னாற் கூறப்பெற்றது, இனி கூறப்பெறுங் கற்பனையினாலே, கோடிகோடி கர்ப்பப் பிரஹ்மாண்டங்கட்கும், ஆண்டு, திரிசிரேணுத்தன்மைச் சம்பவத்தால் எண்ணுங்கருத்துடன் சிரித்து என்பதாம், தந்தங்களின் பிரபைகளினாலே வெள்ளியன அம்பரங்கள்=வஸ்திரங்கள், அவற்றை யுடையவனாய், தவ்வித ஆகாயத்தை யுடையவனாய், சிரித்தான் என்பதாம். (20)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கூறிய வினாக்கள் ஆறனுள் முதலதற்கு விடைபகரல்:—உதித்த வென்பது.

உதித்த விந்தச் சிற்பானு ளுலகா மிவையெல் லாம்விளங்கு
மதித்த விமல விஞ்ஞான வடிவாம்பரம வாதித்தன்
கதித்த வொளியா மிவ்வெய்யோன் கதிர்க்கிவ் வுலகெல் லாமணுவாம்
துதித்த விந்த மார்த்தாண்டன் சுடராற் றோன்றி விளங்கிடுமால்.

(ப - ரை.) உதித்த இந்தச் சிற்பானுள் = சதோதிதமாகிய இந்தச் சிற்பானிடத்தே, உலகாம் இவையெல்லாம் விளங்கும் = இவ்வுலகங்க ளியாவுமே பொலியும், மதித்த விமல விஞ்ஞான வடிவாம் பரமவாதித்தன்=யாவருந் தங்களுடைய சொரூபமாக மதித்த நிருமலன் ஞானரூபமாம் மேலான சூரியன், கதித்த வொளியாம் இவ்வெய்யோன் கதிர்க்கு = மிகுந்த பிரகாசமயமாம் இந்தச் சூரியனது கிரணங்கட்கு, இவ்வுலகெல்லாம் அணுவாம் = இச்சகங்கள் யாவும் அணுவாம், துதித்த இந்த மார்த்தாண்டன் = புகழ்ந்த இந்த இரவியினது, சுடராற்றோன்றி விளங்கிடும்=ஒளியால் பிரதீதியாகி இலங்காநிற்கும். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) இச் சித்தாதித்தனுடைய தீப்திகட்குப் பிரமாண்டங்கள் திரிசரேணுக்களாம், இதுவே என்னாற் சிற்சூரியனெனப்பெறும், இவ்வகைப் பிரபாவமுடைய சூரியன் உனது வினாவிற்கு விடையாகக் கொள்ளலாம், இவ்வுலக மியாவற்றையும் இதுவே இலக்குகின்றது; விஞ்ஞானாத்மாவே பரம பாஸ்கரன் எண்ணுவோர் எண்ணத்திருப்பவன் எண்ணத்தைப் பூர்த்திசெய்பவன் எண்ண சாக்ஷி, இந்த எந்தப்புவன ஆரோகங்கள் என்னும் பிரமாண்டங்கள் உளவோ, அவ்விரவிக்கே திரிசரேணுக்களாம், இவ்வுலகப் பகலிலக்குமிகள்

சிலபால், இலக்குமிகள் இரவியினது ஒளியினற்போல, விஞ்ஞான பரம அருக்கனுடைய ஒளியினலேயே, விளக்கத்தைப் பெறுகின்றன, இருப்பையும் பெறுகின்றனவாம்.

(ச.) அவற்றிற் பிரமாண்டங்களெலாஞ் சிறிய அணுத்திரள், சூக்கும லேசங்களாய்த் திசழுமென்னும் வினவிற் குத்தரம்; எந்த வெய்யோனெனக் கேட்கப்பட்ட சூரியனே சிற் பானு உன்னுற் பங்கியந்தரத்தாற் சொல்லப்பட்டான் என்பதாம். ஆதலின் இந்தச் சிற் பானுவே, உலகமா மிவையெல்லாம் = இச்சசல சகத்தையும், விளங்கும் = பிரகாசிக்கின்ற னன் என்றதாம், அதனது விலக்கத்தா லீதனைத்தும் விளங்கும், என்னுஞ் சுருதியின் லென்க. அவனுக்குப் பிரசித்த சூரிய விவக்ஷணபாவங் கூறல்:—மதித்த விமல விஞ்ஞான வடிவாம் = சிவரூபமாகச் சர்வ அந்தக்கரணத்திலும், பிரவர்த்தகனும், பரமவாதித்தன், ஆதித்தாதிகளும் இத்தேசின் லேசமாதலின் என்க. இதற்குதாரணம் ஸ்ரீபகவற்கீதை:— யாது ஆதித்தனுறுந் தேசு அகில ஜகத்தையும் விளக்குகின்றது; யாது சந்திரனிடத்தும் அக் கினியினிடத்துமுறும், அத்தேசை யெனதுருவென்றறி யென்பதாம். இவ்வுலகெல்லாம், இவ்வெய்யோன் = இந்த விஞ்ஞான பரமாதித்தனது கதிர்க்கு, அணுவாம் = திரியணு தில்லியங்களான அம்சங்களாம், அதனது சுடராலே, தோன்றி = உதித்தது விளங்கி நசிப்பதுமாம். (21)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் முதல் வினவிற்கு விடைகூறி மகாககனரேணுக்கள் எப்பவனத்தில் இலங்குகின்றனவென்னும், இரண்டாவது வினவிற் கரசன் விடைதரல்:— காலமென்பது.

(ச-அ-கை.) எந்தமாருதத்தில் என்னும் இரண்டாம், வினவை விரித்துரைத்தல்:—

காலமுண்மை விசும்புண்மை கண்ணுயசையு மறிவுண்மை
சாலவிமல வறிவுண்மை தன்னைமுதலா முண்மையெலாஞ்
சீலப்பரமப் பெருங்காற்றிற் சிறுதூளாகித் திகழ்ந்திடுமாற்
கோலமல ரின் மணம்போற்றுங் கொண்டசொரூப சுபாவத்தால்.

(ப-ரை.) காலமுண்மை விசும்புண்மை = காலசத்தை ஆகாசசத்தை, கண்ணுயசையு முண்மை = அசையுங்குணத்தையுடைய வாயுவினுண்மை, அறிவு = சின்மயம், சாலவிமல வறிவுண்மை = அத்தியந்தம் நிருமலசிற்சத்தை, தன்னைமுதலாம் உண்மையெலாம் = கூறிவந்தவாதியவற்றின் சத்தைகள் யாவும், சீலப்பரமபெருங்காற்றில் = நித்தியத்தகைமை வாய்ந்த பரப்பிரஹ்மப் பெரிய வாயுவின்மாட்டு, சிறுதூளாகித் திகழ்ந்திடும் = அற்ப அணுக்களாகி யிலங்கும். கோலமலரின் மணம்போற் றுங்கொண்ட சொரூபசுபாவத்தால் = அழகிய புஷ்பத்தின் கந்தமேபோல அவைகள் எடுத்துக்கொண்ட சோபாதிகவ்டிவ இயற்கை யினல். ஆல், அசை.

(ஸ்ரீ - வீர.) காலசத்தை, ஆகாயசத்தை; அசையும் வாயுசத்தை யென்பதாதி சின் மயமேயாம், ஆயினும் சோபாதிகமேயாம், ஸ்பந்தமென்பது கிரியாசக்திப் பிரதானசூத்தி ராத்மாவாம், அதன்சத்தையாம், அசையுமென்றசனே காற்காண்பிக்கப்பெற்றது; சுத்த சேதனமாகிய வதனினும், தாழ்ந்த சிதாயாசன்றன் சத்தையும், என்பதாதியாவுமே சூக்குமத் தன்மையானே பாவனங்களாம் அதாவது நிர்த்தோஷங்களாம், பரமாத்ம மகாவாயுவின் பால் ரேணுக்களாக் கற்பித அநேகவிகார சஞ்சலங்கண்மேவிப் பொலியாநிற்கும். ஆண்டுக் கதன்புத்தானே பிரசித்த ககனமேகொள்ளுமாறுகூற விழைந்ததா? அல்லது, மகத்துப்

பதச் சிறப்புற் றிருத்தலினனே கௌணீவிருத்தியால், மகாகாலரூப சிற்சம்வலிதமா யாகாசமா? அல்லது, ஸ்பந்தசக்திப் பிரதான சூத்திராத்மாகாசமா? அல்லது அதனினும் தாழ்ந்த சுத்தசிதாபாசவடிவ ஜீவாகாசமா? அயலொன்றேயா எதுவெனினுமாகுக. எல்லாக் கற்பங்களிலுமே அவ்வச்சத்தையே ஆகுக, சூக்குமதமத்தன்மையுண்மையின் அவற்றிற்கு ரேணுக்கள் என உன்னலும் கூறப்பெற்றன வென்பார் காலசத்தை யென்றார். அற்றேற் பரமான்மாவிற்கே சர்வ அநுகத சத்தாரூபத் தன்மையுண்மையின் ஆண்டுக் காலாதிசத்தை பொலிகின்றது, என்பதாக ஆதார ஆதேயபாவத்தானே கூறியகூற்று எங்ஙனம் கூடும் எனிற்கூறல்:—கோல என்பதாதி. எங்ஙனம் புஷ்பமேதனதங்கத்தில். மணமெனப்பெயரிய வேற்றுமையைத் தானகவே யினிது கற்பித்துப் புட்பத்தில் மணவடிவமான அதனதேயத் தன்மையானே யிருக்கின்றதோ, அங்ஙனம், பரமார்த்தசத்தையே காலாதிசத்தாபேதான் மத்தன்மையைத் தன்பாலினிது கற்பித்து இருக்கின்றதென்பதாம்.

(ச.) இங்ஙனம், காலமுண்மை = காலரூபமான சத்தையின்பூர்த்தி, விசும்புண்மை = விசும்புப்பூர்த்தி, அசையுமுண்மை = அசையுஞ் சுபாவமுள்ள வாயுவின் சத்தையும், அறிவு = சின்மயமான, சாலவிமல அறிவுண்மை = சேதனசத்தையும், தன்னைமுதலா மூண்மை யெலா கேவல சேதனசிருஷ்டியுமென்பது முதலான சேதனசேதனுபமகமான வனைத்தும், சீலம் = சித்துவிவர்த்தரூபமாய், சிறுதுளாகி, கோலமலரில் = குசும அவயவங்களில் மணம்போல், பரமப்பெருங்காற்றில் = பரமான்மமய மகாவாயுவில், தாங்கொண்ட ரூப சுபாவத்தால் = அதன்ரூபமாயும், அதன்ரூபமன்றாயுந்தானே திகழ்ந்திடும், அவற்றில் அதன் ரூபஞ் சத்தரூபத்தினல் விளங்குகின்றமையின், ஓராதாரமாகப்பிரதீதி யேதுவாதலினென்க. அதன்ரூபமன்று விகாரஜடதுக்கமயர்திகளா லெனக்காண்க. பாவனம் = சித்பிம்பிதமரூபமாம். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை) சொப்பனத்தினின்றும் சொப்பனாந்தரமடைந்தும், என்பதாதி மூன்றாவது வினவின் விடைகூறல்:—உலகாமென்பது.

(ச) கனமேற் கனவளவன்றி யுற்றுப் பூருவசொப்பங்கள் மாறினுமென் யாதுதெளி வாமொளி வடிவை மாறவிடாதென்னும் மூன்றும் வினவை விரித்துரைத்தல்:—

உலகநாமப் பெருங்கனவி லொன்றின்மேலொன் றக்கனவு
பலபற் றியுந்தன் வடிவைவிடாப் பயில்சாந் தத்தால் விரிபிரம
மிலகுங்கதலி யுள்ளுள்ளே யிலையேயாகு மியல்பென்ன
வலகிலாத வுள்ளுள்ளே யானபோது மப்பிரமம்.

(ப - ரை.) உலகநாமப் பெருங்கனவில் = ஜகத்தெனப் பெயரிய பெரிய சொப்பனத்தில், ஒன்றின்மேலொன்றக்கனவு = சொப்பனத்தினின்றும் சொப்பனந்தரமாகச் சென்று சென்று, பலபற்றியுந்தன்வடிவைவிடா = அநேகமாகத் தோன்றியபோதினும் தனதுரூபத்தைத் தியாகிக்காமல், பயில் சாந்தத்தால் விரிபிரமம் = இலகுஞ்சாந்தத்தன்மையானே நிறைவுற்ற பரப்பிரமமானது; இலகுங்கதலியுள்ளுள்ளே = விளங்காநின்ற வாழைமரத்தினது உள்ளேயுள்ளேயும், இலையேயாகும் இயல்பென்ன = பட்டையேயாகும் பான்மையேபோல, அலகிலாத உள்ளுள்ளேயானபோது மப்பிரமம் = அளவில்லாதன உள்ளே யுள்ளே ஆகிய போதிலும் அந்தப்பிரமமேயாகும்.

(ஸ்ரீ - வீ ர.) ஜகத்தென்னும் மகாசொப்பனத்தில், கனவினின்றுங் கனவயல், கனவிய போதினும், அந்தப்பிரமம், ரூபத்தை விடுவதே கிடையாது, அவ்வச்சொப்பன தோஷங்கள்

யாவும் அற்றிலங்குவது, அசங்கச்சோதிவடிவமாக அமர்வது அது, இதனுனே அவ்வாறே அறிவுற்ற மாத்திரத்தானே, பிரஹ்மம் சாந்தத்தன்மை நிரம்பியுள்ளதாம். ரம்பாஸ்தம்பம் எங்ஙனம் பத்திரமாத்திரமென்னு நான்காவது கேள்விக்கு விடைபகர்தல்:—வாழைமா மான்து எங்ஙனம் உள்ளே யுள்ளேயாய் வுற்றபோதினும் இலைமாத்திரமாகவே யேகுகின் றதோ அங்ஙனம், இந்த வுலகமானது உள்ளுள்ளே பிரஹ்மத்தின்கண்ணே விவர்த்தன சீலமேயாயினும், அவாந்தரகாரணங்களிற் பரிணாமசீலமேயெனினும், பிரஹ்மமேயாம்; ஆக லின் அது அணு, அதனினும் உள்ளுள்ளே விவர்த்தித்தபோதினும் அதுமாத்திரமே யில்லும் என்பதாம்.

(ச.) உலகமே மாயமயமாதலின் பெருங்கனவாம், அதிற் சன்மங்களே சுத்திரசொற் பனங்களாம், அக்கனவுகளை யநுபவிக்கினும் ஆன்மா, சாந்தத்தால் விரிபிரமம், பிரமத்தின் நிர்விகாரசொரூபத்திற் கற்பிதமான, தன்வடிவை = சாந்தரூபத்தை, விடா = விடாது, சம்சரிப்பினும் ஜீவன் பிரமபாவத்தைவிடான், சம்சாரங்கற்பிதமாதலின் என்பது கருத்து. நான்காம்வினவை விரித்துரைத்தல்:—கதலித்தம்பம், உள்ளுள் விவேித்து = மாறிமாறிப் பார்ப்பினும், இலையேயாகும் = துவக்குமாத்திரமேயாம், அதுபோல், அலைகிலாத = விசித் திரமாயிருக்கின்ற விசுவத்தையும், உள்ளுள்ளே, ஆனபோதும், விசாரிக்கின்றபோது, பிர மமேயாம். (23)

(ஸ்ரீ-வீர-அ-கை.) விவர்த்தவிசுவம் விரிதலாதிநிமித்தங்கொண்டே அவ்வப்பிரஹ்மாத் மாதி சப்தகோசாத்தன்மையாம், உண்மையாகவோ இல்லையாம், சருவதருமசூனியத்தன்மை யான் அவற்றுள் அணுபதப்பிரவிருத்திநிமித்தம் உரைத்தல்:—சூக்குமாயென்பது.

(ச.) பிரமாண்டாதிகளான மகத்துக்களாகிய பாவங்களும் அணுத்துவத்தை நீங்காது தானே எந்தவணுவிற் பரமாணுக்களாம் என்னும் ஐந்தாம் வினவை விரித்துரைத்தல்:—

சூக்கமா யெட் டாமையினுற் சொன்ன பரமே பரமாணு
நீக்கு மெல்லை யிலாமையினு னெடியமேரு முதலனைத்தின்
றாக்கு மூல மிதுவாகுந் தடமேரு வையா திகளிதற்கு
நோக்கும் பரமா ணுவைப்போல நுடங்கி விளங்கு நோக்கிடினே.

(ப-ரை.) சூக்கமா யெட்டாமையினல்=சூக்குமத் தன்மையானே அடைய முடியாமை யானே, சொன்ன பரமே பரமாணு=கூறிய பரம்பொருளே பரம அணுவாம், நீக்கு மெல்லை யிலாமையினல் = தள்ளத்தக்க வரம்பொன் றிலாமையினலே, நெடியமேரு முதலனைத் தின்=பெரிய சுமேரு பர்வதமுதலிய எல்லாவற்றின், தாக்குமூல மிதுவாகும் = உண் டாக்கு மூலகாரணமிதுவாகும், தடமேருவையாதிகள் = விசாலமான தங்கமலை முதலிய வைகள், இதற்கு=இவ்வத்துவிற்கு, நோக்கும் பரமாணுவைப்போல=பார்க்கும் பரமா ணுவை நிகர்த்து, நுடங்கி விளங்கும் நோக்கிடினே=ஆராய்ந்து பார்க்கினே அற்பமாகவே தோற்றும்.

(ஸ்ரீ - வீர.) சூக்ஷ்மத் தன்மையானும் அலப்யத்தன்மையானும், பரமான்மாவான்து, பரம அணுவாம்; இங்ஙனம் சூக்குமத் தகைமையோடு கூடியிருப்பினும் பூர்ணத்தன்மையின் ஹானியானது இலையாம், எனப் பிரஹ்மாண்டாதிகளும் அதனது திருஷ்டியினுனே, அதி பரிச் சின்னத்தன்மையாற் பரமாணுப்பிராயங்களாம் என்பதாகப் பிரஹ்மாண்ட ஆகாச பூதக்கூட்டம் என்பதாதி ஐந்தாவது வினவும், கொடுத்த விடையதேயாயது என்னும்

கருத்தா லுரைத்தல்:—நீக்குமென்பதாதி. அநந்தத்தன்மையா லிதுதானே மேரு சூரிய மண்டல பூதக்கூட்டம் ஆகாசம் பிரஹ்மாண்டம் என்பவற்றிற்கு ஆதாரத்தன்மையை அடையும். அணுவேயாயினும் அதியநந்தமாய இப்புருடனுக்கு, பிரஹ்மாண்டாதியைந்தும், பிரதீதத் தன்மையால்=அணுதா அவ்வவ்வாகார விருத்தி பரிச்சின்ன சிற்கண பரிச்சேத்தியத் தன்மையால், வடிவமொன்று மில்லாத கனப்பிரமாண்டாதிபோலும்; பரமாணுவென விளங்குகின்றனவாம்; அதுவும் சூக்கும தமநாடீ சித்திரங்களில் இலங்குவதாகிப் பரமாணுப் போலவேயாம்.

(சு.) பரமே=பரமான்மா, சூக்கமாகி, இதுவெனக் கிரகித்தற் கரிதாயிருத்தலின், எட்டாமையினுற் பரமாணு துல்லியமாம், இது = இப்பரமாத்மாவே, எல்லையில்லாமையினுல்=தேசகாலாதிகளால் அபரிச்சின்னமாதலின், தாக்கு, மேருமுதலனைத்தின் = பரிச்சின்னமான மேருவாதியின், மூலமாகும் = உபாதானமாம், அம்மேருவாதி பொருட்கள், அதற்கு=இப்பரமான்மாவினது முன்பு, பரமாணுவைப்போல விளங்கும், பரமான்மாவின் மகத்துவத்தைக் குறித்து மேருவாதிகள் அதிசூக்குமமாதலின் என்க. (24)

(ஸ்ரீ-வீர - அ-கை) எவ்வவயவ மில்லாதேயாய பரமவணுவாம் மகாகிரிக்கென்னும் ஆரும் வினவிற்கு விடைதருதல்:—எட்டாமை யென்பது.

(சு.) அவயவரகிதமான எந்தப்பரமாணு ரூபமாகிய மகாகிரிக்குக் கற்போல், செறிந்தொன்றும் சகங்கள் மச்சையாம் என்னும் ஆரும் வினவை விரித்துரைத்தல்:—

எட்டா மையினுற் பரவணுவா மிவனே நிறைவாற் பெரியகிரி
தட்டா வவய வங்களெலாந் தரித்து மவையில் லாப்புருடன்
முட்டா விஞ்ஞா னத்துருவாய் முழுது பொருட்கு மிடமாகு
மெட்டா விதற்கு விஞ்ஞான சார மச்சை யிவையனைத்தும்.

(ப - ரை.) எட்டாமையினுற் பரவணுவாம் = கிடைக்காமையினுற் பரமவணுவாம், இவனே நிறைவாற் பெரியகிரி = இப்பரமபுருடனே நிரம்பியிருத்தலானே மகாபர்வதமாம், தட்டாவவயவங்களெலாந் தரித்தும் = நிடேதிக்காமல் சருவ அவயவங்களையும் தாங்கியும், அவையில்லாப்புருடன் = அவைகளொன்றுமில்லாத புருஷோத்தமன், முட்டாவிஞ்ஞானத்துருவாய் = விஞ்ஞானகனகவடிவமாய், முழுதுபொருட்குமிடமாகும் = சகலபதார்த்தங்கட்குமே ஆஸ்பதமாகும், எட்டாவிதற்கு விஞ்ஞானசாரமச்சை யிவையனைத்தும் = விஞ்ஞானமாத்திரமாயகோசரமாயவிதற்கு எல்லா வுலகங்களுமே மச்சைபோன்றனவாம்.

(ஸ்ரீ - வீர.) நேத்திரமுதலிய இந்திரியங்களானே கவரப்பெறுமையின், இதுபரம அணுவாம், எங்கும் வியாபித்திருத்தலின் மகாகிரியாம், சர்வ அவயவரூபமாயினும் = அத்தியாரோபதிருஷ்டியினுனே சர்வமூர்த்தாமூர்த்தங்களையும் அவயவரூபமாக உடையதாயினும், நேதிநேதியென்னும் அபவாதத்தானே நீக்கப்பெற்ற அவயவமுடைய புமானும்; ஆண்டுச்சிலையினுள்ளே நிபிடஎகாந்தரூபமஜ்ஜை மூவுலகமும் ஆமென்னும் அம்சத்தைவெளிப்படுத்தல்:—இதற்கு என்பதாதி. அறிவுமாத்திரமாய இதற்குண்மையாய் மூவுலகமும் மச்சைமாத்திரமேயாம், எக்காரணத்தினுல் மூவுலகமும், "விண்ணும் மண்ணும் விரவியுள்ளேயும்" என்பதாதி சுருதிகளில், இருதயசம்பந்த ஆகாசரூபவிஞ்ஞானமாத்திரத்தினது இடையுள் மஜ்ஜைபோற் பிரசித்தமாமென நீயுணர்தி நல்லோய்! எல்லா வினைக்களின் நீக்கத்தால் வலிதில் வேதாளத்தைத் தோல்வித்துக்கொண்டெனக் கூறியபொருளின் றெருகுப்பால் உபசங்

கரித்தல்:—ஹே வேதாள பாலகனே! உலகங்களில், விஞ்ஞானமாத்திரத்தினது தற்கொள சலங்களின் பிரகடனமும், சாந்தவியற்கையதும், சுகுமாரமும், அநந்தரூபமும், ஆகியது அப்பதமாம், அவ்வான்ம விஞ்ஞானரூபமும், நம்போன்ற வேதாள வன்படர்களானே பற்ற முடியாததேயாம், ஆதலின் எமதுபதேசத்தால் நீ யிவ்வண்ணம், சுபாவமாகிய ஆன்மாவைச் சுவ அநுபவத்தில் எழுந்தருளச் செய்வாயாக, சுயம் தர்ப்பாதிகள் யாவற்றையும் விடுத்துப் பரமசாந்தியை யடைந்து வாழ்வாய்.

(ச.) இவனே = இப்புருடனே, எட்டாமையனுல் பொருந்தற்கரியனுதலின், பரவணு வாம் = பரமாணுசத்த வாச்சியனுயினும், நிறைவாற் பெரியகிரி, அவயவங்களெலாந் தரித் தும் = ஸ்தூலப்பிரபஞ்சாகாரமாய்த் தெரியப்படுகின்றவனுயினும், உண்மையாக, அவை யிலாப்புருடன், நிரவயவனும், விஞ்ஞானத்துருவாய் = விஞ்ஞானமாத்திரரூபமாய், முழுதி பொருட்கு மிடமாகி = சர்வப்பிரபஞ்ச அதிட்டானரூபமாய், எட்டாவிதற்கு = இப்புருட னுக்கு, விஞ்ஞானசாரம் = விஞ்ஞானமாத்திரமே சாராங்கிசம், ஆதலின், இவையனைத் தும் = ஜகத்திரயமும், மச்சை = மச்சைமாத்திரமாம், ஆதலின், கனமான சாராங்கிசமே யாம்; யாதுகாரணத்தினுல், ஜகத்திரயமும், விஞ்ஞானமாத்திரத்தி னிடையே யிருக்கு மெனப் பிற்கவியோடன்னுவயிக்க; ஆதலின் மச்சாரூபங் கூடுமென்பது கருத்து. (25)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மன்னவன் விடையை முடித்தலும் வேதாளங் கேட்டுச் சாந்தியை யடைந்து சமாதியை யடைந்தது என உபசங்கரித்தல்:—இயலென்பது.

இயல்விஞ்ஞான மாத்திரத்தி னிடையேயுலக மிருக்குமென
வுயர்மன் னவனோ தலுங்கேளா வுளத்தே தன்னை யுணர்வுற்று
மயலில் விசாரத் தாற்சாந்த மனவேதாளந் தனியிடம்போய்த்
துயர்கொள் பசியை மறந்தசையாத் தூயதியானத் திருந்ததுவே.

(ப - ரை.) இயல் விஞ்ஞானமாத்திரத்தி னிடையே = சுபாவிகமாக விஞ்ஞான மாத்திரத்தின் மத்தியிலே, உலகமிருக்குமென = ஜகத்திருக்குமென்று. உயர்மன்னவன் ஓதலும் = மேலான இராஜா கூறுதலும், கேளா = கேட்டு, உளத்தேதன்னை உணர்வுற்று = மனத்தேதன்னை பறிந்துகொண்டு, மயலில் விசாரத்தால் = மயக்கமில்லாத ஆராய்ச்சியி னுல், சாந்தமனவேதாளம் = சாந்தமனத்தோடுகூடிய வேதாளமானது, தனியிடம்போய் = ஏகாந்தஸ்தானத்திற்குச் சென்று, துயர்கொள் பசியை = துக்கத்தைத்தரும் பசிப்பிணியை, மறந்து = மறதியுற்று, அசையாத்தூய தியானத்திருந்ததுவே = சலனமில்லாத பரிசுத்த சமாதியின்கண்ணே வீற்றிருந்ததுவே.

(ஸ்ரீ - வீர.) இவ்வாறு அரசரது வதனத்தினின்றுங் கேட்டு அந்த அரசனிடத்தில் விசார உசித அநுமிதமதியினுலே; தத்துவத்தையுணர்ந்ததாந் தன்னைமதியித்தத்தினுலே, ஆண்டுவிசார உசிதமதியினுலே, பாவிதாத்மத்தன்மையாலே, வேதாளமானது சாந்தியை யடைந்தது; உபசாந்தமனமுடையதாகி, அநிந்திதமான ஓரிடத்தை யேகாந்தமாகவெண்ணி, விடமமான பசியைமறந்து திடசமாதியில் மனமுற்றதாயது. (26)

வேதாளக்கதை முற்றிற்று.

---

## பகீரதன் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரமசாந்தனுய்ச் சகலத்திலும் பற்றற்றுப் பகீரதனைப்போல விவகரிப்பாயெனல்:—அசைவில், சமனுமென்பன.

(ச.) முன்பு சுழுத்திமௌனத்தைச் சம்பாதிக்கும், விவேகத்தைத் தெரிவித்தற்கு வேதாளவிஞ நிரூபிக்கப்பட்டது, இப்போது துர்லபமாயினும் சித்தவிசிராந்தி தனது பிரயத்தினத்தாலே பெறப்படுமெனத் தெரிவித்தற்குப் பகீரதன் கதை சொல்லப்படுகின்றது:—

அசைவிலாவுட் போதத்தா லனைத்தினு முளத்தை வாங்கி
யிசைவுசெய் திச்சையின்றி யினைப்பறப் புந்தியாறி
விசையிலா நெஞ்சா னெஞ்சை விண்ணென விமலமாக்கி
யசைவறு மவுனியேகன் சாந்தமே வடிவமாகி.

சமனுமா யித்யம் விண்போற் சாலவுந் தெளிந்து நிற்பாய்
நிமலமாம் புந்தி திண்மை நிறைவுற்று மூடமின்றி
யமரவந் தனபின் செல்லு மாசனும் பகீரதன் போற்
குமானே யரியதேனுங் குறைவறப் பெறலாமென்றான்.

(ப - ரை.) அசைவிலா வுட்போதத்தால் = சலனமில்லாத உள்ளறிவினாலே, அனைத்தினும் உளத்தைவாங்கி = யாவற்றினின்றும் மனத்தை நிவர்த்தித்து, இசைவுசெய்து = பொருந்தியவற்றை மாத்திர மாற்றி, இச்சையின்றி = அவற்றி லாசையற்றவனுய், இளைப்பறப் புந்தியாறி = விசிராந்தியாய்ப் பரமசாந்த மதியினனுய், விசையிலா நெஞ்சால் நெஞ்சை = ஒடுங்கிய உளத்தினாலே விரிந்த மனத்தை, விண்ணென விமலமாக்கி = ஆகாயம் போல நிருமலமாக்கி, அசைவறு மவுனி = சலனமற்ற மவுனி, ஏகன் = தனித்தவன் ஆகி சாந்தமே வடிவமாகி = சாந்தியே சொரூபமாகி ;

சமனுமா யிதயம் விண்போற் சாலவும் தெளிந்து நிற்பாய் = சமம் உடையவனுகி இருதயமானது ஆகாயம்போல அத்தியந்தம் தெளிவுடன் நிறி பெறுவாய், நிமலமாம் புந்தி திண்மை நிறைவுற்று மூடமின்றி = நிருமலமான புத்தியானது திடத்தன்மை நிரம்பி மௌட்டிய மில்லாமல், அமர வந்தன பின் செல்லும் = பொறுமையுடன் நுகர்வினை வயத்தால் வலிதில் வந்தவற்றின் அனுசாரமாக விவகரிக்கும், அரசனும் பகீரதன்போல் = மன்னவனுகிய பகீரதனேபோல, குமரனே யரியதேனும் = அன்புடைய குழந்தையே துர்லபமேனும், குறைவறப் பெறலா மென்றான் = குறைவில்லாமல் அடையலாமென்று கூறினான்.

(ஸ்ரீ-வீர.) சித்தத்தை யெலாவற்றி னின்றும் இழுத்து அசைவிலாத அந்தராத்மாவால், பரமான்மாவின்பால் நன்னிலை பெறுமாறு நிறுவி, ஹேமனனசீல ஸ்ரீராகவனே! ஒரு வத்துவின்கண் ணெல்லாவிருத்திகளையும் விலயம் செய்தவனுய், அதனால், உபரதசித்தனுய், அதனனே யாண்டும் சமமா யிராநின்ற பிரஹ்மத்தைத் தரிசித்துச் சமதரிசியாய் வாழ்த்தி, இச்சையற்றவனுய்ச் சாந்த மதியினனுய் வாழ்த்தி, மனதை மனதினாலேயே ஆகாசத் தெளிவையடையுமாறு செய்வித்து வாழ்த்தித் திரமதியுடையவனுய், அசம்மூடனுய் வாழ்த்தி, அற்றேல், இவ்வாறு இருக்கப்பட்ட என்க்கு எவ்வாறு தேகக்காப்பின் சித்தியாம் எனின் இயம்பல்:— அமரவென்பதாதி. அன்னியர்களுக்குக் கஷ்டசாத்திய மாயினும் காரியம்

கிடைத்தபடி கொண்டு விவகரிப்பவனுக்கு, பகீரத அரசனுக்கேபோல அநாயாசமாகவே சித்தியாகிற்கும்; ஆகையால் நீயும் அவ்வாறிருத்தி யென்பதாம்.

(ச) ஸ்ரீ வசிட்டர்: அனைத்தினும்=பாசிய விடயத்தினின்றும், உளத்தை வாங்கி=சித்தத்தைத் திருப்பி, அசைவிலா = சொரூப நிஷ்டையுள்ள, உட்போதத்தால் = அந்தக்கரணத்தோடு கூடினவனாய், இசைவ செய்து=ஆசாரக் கிரமமாய்வரும் கன்மங்களைச்செய்து, இச்சையின்றி=நிரிச்சனாய், புந்தியாறி=சாந்தமதி யுடையனாய், செஞ்சால்=விசாரவசமான தனது சித்தத்தாலே. (1-2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பகீரதன் ஸ்ரீ கங்கையையும் அநாயாசமாய்க் கொணர்ந்தனன் அமைதியால் என்ன அஃதெங்ஙனமென விஞதலும், விடையளிக்கும் வாயிலாக அம்மன்னவன் பெருமையை யுணர்த்தல்:—என்றலு, மாநிலமென்பன.

என்றலு மவனைநோக்கி யெம்மன வல்லபத்தா
லன்றுகங் கையைக்கொணர்ந்தான் பகீரத னையாவென்று
நன்றுணர் வள்ளல்கேட்ப நான்மறை வசிட்டன்சொல்வா
னொன்றுணர் பகீரதப்பே ரொருவனுண் டுலகில்வேந்தன்.

மாநில முழுதுங்காப்போன் மணியினும் வண்மைமிக்கோன்
சானவி படியொழுங்காற் சாம்பராய்ப் பாதலத்திற்
போனதன் கிளையையெல்லாம் பூமக னுலகிலேற்றித்
தீநர கொழியவைத்தோன் திங்கள்வெண் கவிகைமன்னன்.

(ப - ரை.) என்றலும் அவனை நோக்கி=என இவ்வண்ண முரைத்தலும் ஸ்ரீ வசிட்டபகவானைப் பார்த்து, எம்மன வல்லபத்தால் = எவ் வுள்ளத்தினது சாமர்த்தியத்தினால், அன்று கங்கையைக் கொணர்ந்தான் = அக்கால் ஸ்ரீ கங்காதேவியைக் கொண்டுவந்தான், பகீரதன்=பகீரதராஜா, ஐயாவென்று=குருமூர்த்தியே என்பதாக, நன்றுணர் வள்ளல் கேட்ப = நன்மையை யுணர்ந்த நாயகன் வினவ, நான்மறை வசிட்டன் சொல்வான் = நான்கு வேதங்களையும் உணர்ந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவார், ஒன்றுணர் பகீரதப்பேர் ஒருவனுண் டுலகில் மன்னன்=ஏக பரமான்மாவை உணர்ந்த பகீரதராஜன் எனப் பெயரிய ஒரு வேந்தன் உலகிலிருந்தான்.

மாநிலம் முழுதும் காப்போன்=மாகூழிமை தங்கிய பூவுலகம் யாவற்றையும் இரக்ஷிப்பவன், மணியினும் வண்மை மிக்கோன்=சிந்தாமணியைப் பார்க்கினும் கொடையில் மிகுந்தவன், சானவிபடி ஒழுங்கால்=ஸ்ரீ மந்தாகினியைப் பூமண்டலத்திற்குக் கொண்டுவருமுறைமையானே, சாம்பராய்ப் பாதலத்திற் போனதன் கிளையை யெல்லாம் = ஸ்ரீ கபிலமகரிஷியினுடைய சாபத்தினாலே பாதாளலோகத்திற் பஸ்மமாகப் போனதன் பிதுர்க்களனைவரையும், பூமகன் உலகிலேற்றி=பிரஹ்ம தேவருடைய லோகத்தை யடையும்படி செய்வித்து, தீநர கொழிய வைத்தோன் = கொடிய நரகவேதனை தீருமாறு செய்வித்தோன், திங்கள் வெண் கவிகை மன்னன் வெள்ளிய சந்திரவட்டக் குடையையுடைய வேந்தர் வேந்தன்.

(ஸ்ரீ - வீர.) எங்ஙனம் சித்தத்தினது பூர்ணதாதி லக்ஷண சாமர்த்தியத்தினாலே, பகீரத ராஜாவிற்கு ஸ்ரீ கங்காவதரணம் அடைவுறலாயதோ, அம்முறைமையை அடியேனுக்கு ஹே பிரபுவே! திருவருள் செய்யவேண்டும், என்று ஸ்ரீ இராகவர் வினவ, ஸ்ரீ வசிஷ்ட பக

வான் அனுக்கிரகிக்கின்றார்: பரம தார்மிகனாகிய பகீரதன் என்னும் அரசன் கடல் சூழ்ந்த பூவுலகிற்கு ராஜாவாக தனது கோசல மண்டலியினாலே திலகம்போல விளங்கிக்கொண்டிருந்தான்; அவனுடையதான உதாரத்தகைமையை வருணித்தல்:—மணியிலு மென்பதாதி. யாசகர்கள் இந்தச் சந்திரப் பிரசன்னவதன பகீரத அரசனிடத்தினின்றும் யாசக சங்கற்பத்தின் பின்னரே அருகிற் செல்லல் வாக்கு வசனித்தல் முதலனவாயசிரமம் இல்லாமலே வாஞ்சித அர்த்தங்களை யெல்லாம் அடைந்தவர்களே யாவர்கள்; சிந்தாமணியி னின்றுமேபோல, சந்திரப் பிரசன்னவதன மென்றதனுனே தான உற்சாகத்தான் முகத்தில், பிரசாத அதிசயமேயாம், அவனுக்குத் தனச்செலவின் றுக்கத்தால், மலினமே கிடையாதாம், எனப் புலப்படுகின்றது; ப்ராப்தா எனப்பாடமேல், கத்யர்த்த அகர்மக என்பதாதியினின்றும் கருத்தாவில்க்த விகுதியாயதென் றுணர்க, இதன் விரிவை ஸ்ரீ வீரசேகர கவுமதியின் கண்ணே காண்க. (3-4-72) அம்மன்னவனாகிய லோகபந்துவினாலே, பூததுரோகித் தன்மையினாலும் பிரஹ்மதண்ட நிர்தக்தத் தன்மையினாலும், பாதாளவாசிகளாய் அதோகதியை அடைவுற்ற பந்துக்களாகிய சகரபுத்திரர்கள், ஸ்ரீ கங்கை வடிவச் சோபானபத்ததியினாலே, பிரஹ்மதேவருடைய லோகத்தில், அடைவிக்கப் பெற்றார்கள்;

(ச.) மனவல்லபத்தால்—ஆச்சரியத்தைச் செய்யுஞ் சித்த விருத்தியால். (3-4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்மன்னவனுக்கு விசாரந்தோற்றிய அடைவுரைத்தல்:—அன்னவிதியென்பன.

அன்னவன் காளையான பருவத்தி லவனிதன்னி
னின்னல்கூர் நடையாமித்தை நோக்கலுந் தனதெண்ணத்தி
லுன்னிய வற்பமான விசாரத்தா லுதித்ததந்தோ
மன்னிளம் பக்குவத்தின் மனனத்தின் மாசிறேற்றம்.

விதியினாற் கானன்மேட்டிற் கொடியென விசாரந்தோன்ற
வுதவுமே காந்தமெய்தி யொன்றொடொன் றெவ்வாக்கூட்டத்
ததிசய வுலகின்றன்மை யிதனைப்பார்த் தகத்திற்றேர்வான்
புதிதிலே யொன்றுமென்றும் போனதே புகுதுமீட்டும்.

(ப-ரை) அன்னவன் காளையான பருவத்தில்—அம்மன்னவன் யவ்வனனாகவிருந்த காலத்தில், அவனிதன்னின் இன்னல் கூர்நடையா மித்தை நோக்கலும் — இவ்வுலகத்தினுடைய துயரமிகுந்த விவகாரமா மிதனைப்பார்த்தலும், தனதெண்ணத்திலுன்னிய அற்பமான விசாரத்தால் — தனது நினைவில் எண்ணியசொற்பமான ஆராய்ச்சியினால், உதித்தது அந்தோ— உதயமாகியது அகோ ஆச்சரியம்! மன்னிளம் பக்குவத்தின் மனனத்தின் மாசில்தோற்றம்— பொருந்தாநின்ற ஆரம்பபக்குவத்தின் மனனத்தினாலே குற்றமற்ற தோற்றமானது.

விதியினால் — தெய்வசம்பத்தினால், கானன்மேட்டில்—மருப்பூமியில், கொடியென்—லதையேபோல, விசாரந்தோன்ற — ஆராய்ச்சியுண்டாக, உதவும் ஏகாந்தமெய்தி — சாதகமாகும் தனியிடம் பொருந்தி, ஒன்றொடொன் றெவ்வாக்கூட்டத் ததிசய உலகின்றன்மை யிதனை — பரஸ்பரம் இருப்புச்சலாகைபோற் பொருந்தாததான யீட்டத்தோடியைந்த அற்புத ஜகத்தின்பான்மையிதை, பார்த்தகத்திற் றேர்வான் — நோக்கி யுள்ளே சிந்திப்பான், புதிதிலேயென்றும் ஒன்றும் — எந்தவஸ்துவும் எப்போதும் ஒரேபடித்தாம் நவமாகக் காணும்; போனதே புகுதுமீட்டும் — சென்றதே மறுபடியும் செறியாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) யவ்வனத்தில் நிகழ்ந்துகொண்டிருந்த அந்தப்பூபதிக்கும் உனக்கேபோல், இந்த ஆகுலமிகுத்த லோகவிவகாரத்தை ஆலோசித்தாராய்ந்து பார்க்கப்பார்க்க, வைராக்கிய சமற்கார விசாரலேசமான துண்டாயது, தாருண்யவயத்தின் - கண்ணும் இஃதுண்டானது மருப்பூமியிற் றெய்வயோகத்தால் வல்லியுற்பன்னமாயதுபோலவாம், மருப்பூமியிற்போலென்றது யவ்வனத்தில் விசாரவைராக்கிய உதயம் அதிதுர்லபம் என்று காட்டற்பொருட்டாம். ஏகாந்தத்தில் அம்மகீபதியானவன் இவ்வுலகின் நடப்பை யினிக்கூறு மிவ்வாறு சிந்தித்துப் பார்த்தான், சிந்தையின் பிரகாரத்தையே கூறல்:—புதிதிலேயென்பதாதி. நித்தியம் நலமொன்றுமின்றி யாகுலமிகுத்தே யுள்ளதிது.

(சு.) உன்னிய = வைராக்கிய நிச்சயமுள்ள, அற்பமான விசாரம் = சூக்ஷுமமான விசாரம், ஒன்றொடொன் றெவ்வாக்கூட்டத்து, அநியாயமான வஞ்ஞானத்தினல், அதிசய வியாகுலமுறுமென்பது பொருள். வைராக்கிய நிச்சயமுடையது விசாரகணிகையென்பதாம். (5-6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்விசாரத்தை விரித்துரைத்தல்:—போகிய, சுவையென்பன.

போகிய பகலேமீளப் போகிய விரவேமீள
வேகிய கொடையேமீள வேகிய விரப்பேமீள
வாகிய வுணவேமீள வாகிய தொழிலேமீள
மோகியர் மீளமீள முயலுவா ரொன்றினாணார்.

சுவையற வுணங்குமந்தக் கருமமே சூழாநிற்பர்
நவையற வெத்தைச்சேர்ந்தா னண்ணுறு தில்லையென்ன
வெவையும்வந் தணுகுமத்தை யியற்றலே யியல்பாஞ்செய்கை
கவையுறு மற்றவெல்லாக் கருமமும் விடுசியாகும்.

(ப - ரை.) போகிய பகலேமீள போகிய இரவேமீள = சென்றதினமே மீண்டுவரும், சென்ற இராத்திரியே மீண்டும் வரும், ஏகிய கொடையேமீள ஏகிய இரப்பேமீள = சென்ற தானமே மீளவும் வரும், சென்றயாசகமே மீளவும் வரும், ஆகிய உணவே மீள ஆகிய தொழிலேமீள = உண்ட ஆகாரமே மீண்டு முண்பதாம் செய்த செயலே மீளவும் செய்வதாம், மோகியர் = மயங்கியோர், மீளமீள = மீண்டும் மீண்டும், முயலுவார் = முயன்ற தன்கண் முயன்றுகொண்டேயிருப்பர், ஒன்றின் நாணார் = எதனினும் வெட்கத்தையடையமாட்டார்கள்.

சுவையற உணங்கும் அந்தக்கருமமே சூழாநிற்பர் = இரசமற்று வற்றிய அவ்வினையையே மறுபடி மறுபடி செய்யாநிற்பர், நவையற எத்தைச்சேர்ந்தால்=குற்றமறவெதனைப் பொருந்தினல், நண்ணுறுதில்லையென்ன = பொருந்துறுவது கிடையாதென்ன, எவையும் வந்தணுகும் = யாவையும் வந்தகப்படும், அத்தையியற்றலே யியல்பாம் செய்கை = அவ்வகையானதைச் சாதித்தலே செய்யத்தக்க செய்கையாம், கவையுறுமற்றவெல்லாக் கருமமும் விடுசியாகும் = பிரிந்துபிரிந்து போகாநின்ற பிறவெக்கருமங்களுமே விஷவியாதிகளாம்.

(ஸ்ரீ - வீர.) மறுபடி தினம் மறுபடி இராத்திரி, மறுபடி நூற்றுக்கணக்காம் தானாதானசதங்கள், இரசமில்லாத பலத்தையுடைய காய்ந்தவதனையே வெகுவாகப் புசித்தோம், அவ்வகையாகவே செய்யப்பட்ட எல்லாருடைய கருமமுமே காணப்பெறுகின்றது, அபூர்வமாக ஒன்றுங் காணப்பெறவில்லை, பரமபுருஷார்த்தபல முடையதாகவும் ஒன்றுங் காணப்

பெறவுமில்லை, எதனையடைந்த மாத்திரையானே இந்தலோகத்தில் அடையவேண்டிய தொன்று எஞ்சாதோ, அதன்பிராப்தி சாதனமானகருமம் சுகிருதமென வெண்ணுகின்றேன். சேடகருமம் விடூசிகையேபோல அசுசியும் துக்கபலமுடையதுமேயாம்.

(ச.) ஆகிய = சம்சாரபந்தமாகிய; தொழில் = வியாபாரம், சுவையறவுணங்கும் = நீரசம் அன்றி விபரீதரசமாகும், எதைச்சேர்ந்தால் = எந்த வஸ்துவை படைந்தால், இயல் பாஞ்செய்கை சுகிர்தமாம். தான ஆதானசதம் அடையப்பெறும் = தியாகபோகசத மடையப்பெறும், மீளமீளப் பிரவிருத்தியேதுவாதலின் விடூசிகையேயாம்; பந்தநிவிருத்தி யேதுவான கருமமே சற்கருமமென்பது பொருள். இதற்குதாரணம் ஸ்ரீபிரகலாதர்:— எதுபந்த நிமித்தமன்று அதுகருமம் எதுமுத்திக்காம் அதுவித்தை, அன்னியகருமம் ஆயாச் வேதுவாம், அன்னியவித்தை சிற்பநைபுணமாம். (7-8)

(ஸ்ரீ-வீர-அ-கை.) செய்த விசாரத்தை யுபசங்கரித்தலும், ஆசிரியரை யடைதலும் உரைத்தல்:—பலவென்பது.

பலபடச்செய்த செய்வார் பாமரறிஞர் செய்யா
ருலகிய லிதுவென் றுள்ளம்வெருவின னொருகாற்சென்று
நலனுறு திரிதலப்பேர் நற்குருசரணந் தாழ்ந்து
சலனுறு பிறவிக்கஞ்சித் தனித்திவை கழறலுற்றான்.

(ப - ரை.) பலபடச்செய்த செய்வார் பாமரர் = அநேகமாகச் செய்தவற்றையே பயனுறுமாறு அறிவிலார் செய்துகொண்டே யிருப்பர், அறிஞர் செய்யார் = விவேகிகள் செய்யமாட்டார்கள். உலகியலிதுவென்றுள்ளம் வெருவினன் = ஜகத்தின் சுபாவம் இவ் வாறு என்பதாக மனம் அஞ்சினன், ஒருகால் = ஒருபோது, சென்று = போயடைந்து, நலனுறு = நன்மையை யடைந்துள்ள, திரிதலப்பேர் = திரிதலர் என்னும் திருநாமம் வாய்த்த, நற்குருசரணந்தாழ்ந்து = சற்குருவாது திருவடிகளைப்பணிந்து, சலனுறுபிறவிக் கஞ்சி=மாறி மாறி வாராநின்ற சனனமரண சம்சாரத்திற்குப் பயந்து, தனித்திவை கழறலுற் றான் = ஏகாந்தத்திவற்றை விண்ணப்பித்தான்.

(ஸ்ரீ - வீர.) மூடபுத்தியானவன் அடிக்கடிசெய் தனுபவித்துவந்த தொழிலதையே பழையபடியும் செய்தும் வெட்கத்தை யடையமாட்டான், துணிந்து பாலர்போல எவ்விவே கிதா னியற்றுவான். கூறியவிசாரத்தின் பின்னர்ச் சமுசாரத்தினின்றும் அத்தியந்தம் பயந் தவனாய், மிகுந்த கஷ்டத்தோடுகூடிய மனத்தினனாய்க் காலங்கழித்து வந்தனன், பின் னொருபோது, தனித்தானந்தாசிரமத்தில் வசித்துக்கொண்டிருந்த திரிதலர் என்னும் ஆசா ரியரைச் சரணாகதியாக அடைந்து நமஸ்கரித்து அம்மன்னவன் நன்கு வினாவினான். திரி துலர் என்றும் பாடபேதம். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பகீரதன் தன் குறையைத் தெரிவித்தலும், முனிவர் உப தேசிக்கத்தொடங்கலும்:—பகீரதன், அன்று என்பன.

பகீரத னுரைப்பானையா பயில்சரா மரணமோக
மகிலமா மச்சஞ்செய்யு மருந்துயர்க் கவதியேது
திகழ்வுற வருள்வாயென்னத் திரிதல னுரைப்பான்மன்னா
நிகழ்வுறு நேயந்தன்னை நிறைவடி வாகநோக்கில்.

அன்றுபோந் துன்பமெல்லா மகப்பந்த மனைத்துமாயு
மொன்றலா வையம்போகு முறுக்குமங் கண்மாயு
நன்றதா நேயந்தானு ஞானமே வடிவமாகி
நின்றதற் சொரூபமாகு நிகழ்த்திட விதனைக்கேளாய்.

(ப - ரை.) பகீரதன் உரைப்பான் ஐயா!—பகீரதமன்னவன் கூறுவான் தேசிகோத்தமரே! பயில்சரை மரணமோகம் = வராநின்ற ஜரைமரணம் மயக்கம், என்பனவாய், அச்சஞ்செய்யும் = பயத்தைப் பயக்கும், அகிலமாமருந்துயர்க்க வதியேது = சகல பெரிய துன்பங்களுக்கும் முடிவேது, நிகழ்வுற அருள்வாயென்ன = விளங்கும்படியாகத் திருவருள் செய்யவேண்டுமென்று பிரார்த்திப்ப, திரிதலனுரைப்பான் = ஸ்ரீ மகரிஷி கூறுவதாவது, மன்னு = அரசனே! நிகழ்வுறு நேயந்தன்னை = விளங்காநின்ற ஞேயவத்துவை, நிறைவடிவாக நோக்கில் = பூர்ணரூபமாகப் பார்க்கில்;

அன்றுபோம் துன்பம் எல்லாம்—அப்போது போகுந் துயரங்கள் யாவும், அகப்பந்தம் அனைத்தும் மாயும்—அகங்காரக் கிரந்தியெல்லாம் பொடித்துப்போம், ஒன்றலா வையம் போகும்—அநேக வகையாகிய சம்சய மகலும், உறு கருமங்கள் மாயும்—பொருந்திய வினைகளும் பொன்றிப்போம், நன்றதாம் நேயந்தானும் ஞானமே வடிவமாகி—நல்லதாகிய ஞேயமென்பதும் அறிவே வடிவமாகி, நின்றதற் சொரூபமாகும் = நிலைபெற்ற பிரதியக்கான்ம சொரூபமாகும், நிகழ்த்திட விதனைக்கேளாய் = இதுதன்னை யுரைப்பச் சிரவணஞ்செய்தி.

(ஸ்ரீ - வீ.) உட்சூனியங்களா யிருப்பனவாகிய, நெடும்போது சுழலாநின்ற ஜீவர்களின் இராகத்துவேடாதி சமுசார விருத்திகளிலும், அவற்றின் பலங்களாகிய இச்சொர்க்க நரக மானுஷ்யாதி பெரிய வனங்களிலும், அத்தியந்தம் யாங்கள், ஹே வியாபகமாகிய பரம்பொருளே துக்கிதர்களாக யிருக்கின்றோம். ஜராமரணமோகாதி ரூபங்களும், பவகாரிகளும் ஆகிய சருவ துக்கங்களின் அந்தம் எங்ஙனம் ஹே பகவானே! நன்குண்டாம். ஸ்ரீ திரிதலர் கூறல்:—ஹே மன்னவனே! சாதன சதுஷ்டய சிரவணமனனாதி யுபாயங்களானே, நெடும்போது பயிலப்பெற்ற எச்சாமிய விக்ஷேபவைஷம்மியசூனிய சமாதியுளதோ, அவ்வடிவமாக, அநாதி சித்தப்பிரஹ்மாகாரமாக, நிர்விபாக விலாசியாய் ஆவிர்பூதமான, சர்வாதிஷ்டானமாய்ப் பூரணமாயிலங்கும், ஞேயமாயபிரத்தியக்குத் தத்துவத்தின் உண்மையுணர்வாற் சர்வ துக்கங்களும் அழிந்துபோம்; எப்பக்கங்களிலுமுள்ள கிரந்திகளும் எடுபட் டடிபட்டுப் பொடிபட்டுப்போம், ஹே அநகனே! சர்வ சம்சயங்களும் சமத்தகைமையை யடைந்துபோம், சர்வ கருமங்களும் சாம்பராய்ப் போகும்; இனி யறிவு ரூபமாயும் இனிது தூய்தாயும் இலங்கும் ஆன்ம தத்துவமே ஞேயமென்றுணர்வர்.

(ச) மோகம்—மோகாதி ரூபமாய், அருந்துயர்க்கு = சகல துக்கங்களுக்கும், அவதியேது—முடிவெப்படியாம், நிகழ்வுற = சர்வாநு சூதமானதன்னில் எழுநிர்விசேடமாய் விளங்கும் நிறைவடிவாக = அகண்டிதாகாரமாக, நேயந்தன்னை = பரதத்துவத்தை, நோக்கில் = சாக்ஷாத்கரிக்கில்; அகப்புண்கள் அனைத்தும் = பந்தவேதுக்களான அகங்காரர்தி, மாறும், ஒன்றலாவையம் = கைவல்யமுண்டா? இல்லையா? ஆன்மாப் பரமானந்த ரூபனோ, அல்லனோ, என்பன முதலான சகல சமுசயங்களும்போகும்; கருமங்கள் = புண்ணியா புண்ணிய ரூபங்களான கருமங்களனைத்தும், மாயும், இருதயக்கிரந்தி யெல்லா மிரிந்துபோம் என்பதாதி சுருதிகளும் ஈண்டுணர்தற்பாலனவாம். (10-11)

(ஸ்ரீ வீர - அ - கை.) அந்த ஞேயப்பிரஹ்மத்தையே நலம்பெற வுரைத்தலும் பகீரதன் வினாதலும்:—எங்கணு மொழிந்தென்பன.

(ச) அந்தஞேயம் என்னேயெனி னுரைத்தல்:—

எங்கணு முள் நித்த மெழுதலத் தமித்தலில்லை
யங்கண்மெய் யறிவுசாந்த மமலமச் சுதங்குணங்க
டங்குத லில்லையீதொன் றுளதென்ச் சாற்றலோடும்
பங்கமின் முனியைநோக்கிப் பகீரத னுரைக்கலுற்றான்.

ஒழிந்துள வுடலமாதி யொன்றையுங் காணேனாகி
யிழிந்துள தொழில்களெல்லாந் திரமின்றி யேகநின்னான்
மொழிந்துள வறிவேயாகி முட்டற விருப்பதெங்ஙன்
பொழிந்துள கருணையையா புகலெனப் புகலலுற்றான்.

(ப - ரை) எங்கணும் உளது=எவ்விடத்திலு மிருப்பது, நித்தம்=எப்போது மிருப்பது, எழுதல் அத்தமித்தல் இல்லை = உதயநாச மற்றது, அந்த ஞேயப்ரஹ்மம் என்றிட, அங்கண் மெய்யறிவு=அதிவியாபக சச்சிதானந்தம், சாந்தம்=உபசாந்தம், அமலம் = மல மற்றது, அச்சுதம் = நழுவுதலற்றது, குணங்கள் தங்குதல் இல்லை = குணங்களெல்லாந் தணந்தது, ஈதொன்றுளதென்ச் சாற்றலோடும் = இத்தகைய ஞேயவீதொன்று உள தென்றறிவேனெனக் கூறியதுடன், பங்கமில் முனியைநோக்கிப் பகீரதன் உரைக்கலுற் றான்=குற்றமற்ற நிர்மல முனிவரைப்பார்த்துப் பகீரத மன்னவன் மேலுங்கூறுவதாவது.

ஒழிந்துள உடலமாதி ஒன்றையும் காணேனாகி = இதரமாகிய தேகாதியெத்தனையும் கண்டிலேனாகி, இழிந்துள தொழில்களெல்லாந் திரமின்றியேக = இழிந்துள்ளனவாய வினைகள் யாவும் இடமில்லாமற்போக, நின்னால் மொழிந்துள அறிவேயாகி = தேவரீரால் விளம்பியுள்ள சித்தேயாகி, முட்டற விருப்பதெங்ஙன் = தடையில்லாம் லிருப்பதெப்படி, பொழிந்துள கருணையையா புகலெனப் புகலலுற்றான் = தயைபொங்கி வழியும் ஸ்ரீஞானசிரியரே திருவாய்மலர்ந்தருளுவீராக என்றிட உபதேசிக்கத் தொடங்கினார்.

(ஸ்ரீ - வீர.) அந்த ஞேயமும் சர்வகதமும் நித்தியமும் ஆம், உதயமாவதுமில்லை அஸ்த மாவதுமில்லை, என்று ஸ்ரீ மகரிஷியினாலே யுபதேசிக்கப்பெற்ற பகீரதன் விவேகத்தினாலே தான் முனே யான்மதத்துவத்தை யுள்ளே பரியாலோசனைசெய்து தொடக்கத்திலேயே துணிந்துகொண்டு ஆண்டு வெகுவித விக்ஷேபத்தானே சித்தத்தினது நன்னிலைமையைப் பெறாதவனாகி, தானுணர்ந்த அம்சத்தைக் குருவின்பொருட்டு நிவேதித்து, அது வெளிப் படுவதிலும், விக்ஷேபம் விலகுவதிலும் உபாயத்தை வினாதல்:—அங்கண்ணென்பதாதி. சின் மாத்திரமாய் நிர்க்குணமாய்ச் சாந்தமாய் நிர்மலமாய் அச்யுதமாய் ஒரு பிரமமுளது, உளதென் றதனானே அசத்வ உபபாதக அஞ்ஞானம்சக ஆவரணம் எனக்கு நஷ்டமாயது எனக் குறிப் பித்ததாம், தேகேந்திரிய பிராண மனோபுத்தியவித்தையீறாக இதரஞ் சிறிதும் ஆன்மா அன்று, என்பதாகவும், ஹே முனீசுவரரே! தேவரீரது திருமொழியின் விசுவாசத்தாலும், எனது யுக்தியினாலும் உணருவேன். ஆண்டு அபானுபாதக அஞ்ஞானம்சமும், இதரத் தோற்ற ஹேதுவாய விக்ஷேப அம்சமும், தனக்கு நஷ்டமாகவில்லையெனக் காட்டல்:— இத்தச் சதசத்விவேக போதங்களினிடையில், ஆதியதாகிய சத்தான்மபோதரூப உணர்ச்சி,

காதில்லாமலகம்போல் ஸ்பஷ்டத்தன்மையை அடைவதில்லை, அதன்கண்ணென்னே காரணம்? ஹே பகவன்! யான்சர்வவிக்ஷேப உபசாந்தியினாலே, இத்துணைமாத்திர வுணர்வும் எவ்வுபாயத்தானே யாவேன்.

(ச.) ஞானசொரூபமும் நித்தியமும் சர்வகதமும் அமலமுமான ஆன்மாவே ஞேய மென்பது பொருள். நின்னான் மொழிந்துள சாந்தமுதலான விலக்கணமுள்ள சின்மாத்திர ரூபமாய், நிர்க்குணமான பிரஹ்மமே யிருக்கின்றது, ஒழிந்துள = ஆன்மாவுக் கன்னியமான உடலமாதிரூபப்பொருள், ஒன்றையுங் காணேன் = அற்பமும் உண்மையாயின்றென வறிவேன், மற்றென்றெனின், இப்பொருளிலறிவு பிரதிஷ்டையையுற்றின்றாதலின் எப்போதுஞ் சின்மாத்திரானுசந்தானரூபனாய் எந்தப்பிரகாரத்தா லிருப்பேன், அந்தப்பிரகாரத்தை நிரூபிக்கவேண்டுமென்பது வினாப்பொருள். (12-13)

(ஸ்ரீ-வீர - அ-கைக.) ஆண்டுப் பகீரதனுக்கு இராஜ்யாதியபிமானத்தினாலேயே அவ்வவ் விடயங்களிற் சித்தம் ஓடிவிடுதலின், விக்ஷேபமாம், அதன் பிராபல்லியத்தினாலேயே வெளியாக ஆன்மபோதமில்லையென்று துணிந்து, ஸ்ரீ திரிதலமுனிவர் அதன் நல்விடுகையின் பொருட்டு முதலில் ஸ்ரீ பகவற்கீதையிற் கூறியபடியாய அமானித்வாதிசாதனங்களை யுபதேசித்தல்:—திரிதலனென்பதாதி.

திரிதல னுரைப்பான் மன்னா சித்தந்தா னிதயவிண்ணில்
விரியுஞா னத்தானேய நிட்டையை மேவும்பின்னர்
பெரியதா மனைத்துமேனிப் பெருந்தகை யாயசீவன்
பரிபவ மாயசன்மம் பயில்வுறா துலகின்மீட்டே.

(பத-ரை.) திரிதலன் உரைப்பான்மன்னா = ஸ்ரீ திரிதலர் கூறுவார் ஹே அரசனே! சித்தந்தான் இதயவிண்ணில் = மனமானது இருதய ஆகாயத்தில், விரியுஞானத்தால் = விரியாநின்ற அறிவினால், நேயநிட்டையை மேவும் = ஞேயநிஷ்டையைப் பொருந்தும், பின்னர் = பின்பு, பெரியதா மனைத்துமேனிப் பெருந்தகையாய சீவன் = பெரியதாகிய சகலமேனியையும் பொருந்திப் பெருந்தகைமையை யடைவுற்ற ஜீவனானவன், பரிபவமாய சன்மம் = துயர்மயமாய பிறப்பை, பயில்வுறா துலகின்மீட்டே = உலகத்தில் மறுபடியு மடையமாட்டாது.

(ஸ்ரீ - வீர.) ஞானத்தால் = அறியப்பெறுகின்றது இவற்றால் என ஞானம் அமானித்வாதிகளாம், அவற்றால், ஞேயமியாதோ அதை நிகழ்த்திடா நிற்பேன், என்பதாதியானே ஸ்ரீ பகவான் காட்டியருளியபடியாய ஞேயவத்துவில், நிரபாவமுறல்வேண்டுஞ் சித்தம் இருதயாகாயத்தில், அதன்பின்னர்ச் சர்வவப்புவாகிய பூரண இயற்கையை யடைந்து, மறுபடியும் ஜீவன் பிறக்கமாட்டான், பூர்ணசுபாவத்தினின்றும் நழுவமாட்டான்.

(ச.) விரியுஞானத்தால் = மேற்கூறு மிலக்கணமுள்ள ஞானசாதனத்தால், சித்தம், எப்போது இதயவிண்ணில், நேயநிட்டையை = சொரூபநிஷ்டையை, மேவும் பின்னர், அப்போது, அச்சிவன், அனைத்துமேனி = சர்வான்மகனாய், மீளச்செனியான், சித்தம் அந்தர்முகமாய்ச் சொரூபநிட்டையுற்றானே சர்வான்மகமான பிரமமாய் மீளச் சிவபாவத்தைச் சேரானென்பது பொருள். (14)

(ஸ்ரீ வீர - அ - கை.) அமானித்துவாதிகளுட் சிலவற்றை யதுவாத்வியாக்கியானங்களால் வித்தரித்தோதல்:—இல்லவாற்றும் வென்பதாதி.

(ச.) அந்த ஞான மியாதென்பதற் குத்தரம்:—

இல்லவ ளில்லுமாதிப் பற்றற விட்டாநிட்டம்
புல்விடிற் சமசிற்பாவம் பொருந்துத றனக்குப்பேத
மல்லவா யதன்றன்பாவ நிரந்தர மாதலென்று
மல்லலே காந்தஞ்சேர்தன் மானிடத் திரளைநீத்தல்.

ஆற்றும தத்துவத்தி னகல்கிலா ஞானநிட்டை
யூற்றமா முண்மைஞானத் துறுபொருட் காட்சியிந்தத்
தோற்றமாங் குறிகள்சேர்தன்ஞா னமரயச் செல்வர் சொல்வர்
வேற்றுள வழிகண்முற்றும் விதனவஞ்ஞா னந்தானே.

(ப - ரை.) இல்லவன் இல்லமாதிப் பற்றறல் = மனைவி மனைவியாதியாசக்திவிடுதல், இட்டாநிட்டம் புல்விடில் = அநுகூலப் பிரதிகூலங்க ளடைந்தபோது, சமசிற்பாவம் பொருந்துதல் = ஒப்பாயு சித்தாயிருக்குந் தன்மையை அடைதல், தனக்குப் பேதமல்லவாய் = பரமாத்மாவினது அனன்னியயோகத்தினாலே, அதன்றன்பாவம் நிரந்தரமாதல் = அந்தப் பிரஹ்மபாவனமே இடைவிடாமலாதல், என்றுமல்லலே காந்தம் சேர்தல் = எப்போதும் சமாதிசெய்வதற் கநுகூல்மான புனிதமான தனியிடத்திலேயேயமர்தல், மானிடத்திரளைநீத்தல் = ஜனக்கூட்டத்தைச் சேராதிருத்தல்;

ஆற்றுமதத்துவத்தின் = பிரஹ்மதத்துவத்தின், அகல்கிலா ஞானநிட்டை = நீங்காத ஞானநிஷ்டை, ஊற்றமா முண்மைஞானத் துறுபொருட் காட்சி = ஆழ்ந்த ஆராய்ச்சியினாலேயுண்டாய யதார்த்த அறிவினாற்சத்துவத்துவின் தரிசனம், இந்தத் தோற்றமாங்குறிகள் சேர்தல் = கூறிவந்த இந்த இலக்கணம் வாய்ந்த சின்னங்களடைதலே, ஞானமாயச் செல்வர் சொல்வர் = ஞான ஞானமென்று ஞானச்செல்வர்கள் சொல்வார்கள், வேற்றுளவழிகண் முற்றும் விதன அஞ்ஞானந்தானே = அயலாயுள்ள நெறிகள் யாவும் விசனந்தரத்தக்க அறியாமையேயாம்.

(ஸ்ரீ - வீர.) புத்திரன் கிருகம் முதலிய பதார்த்தங்களில், மிகவேட்கையில்லாமை, அபினிவேசமில்லாமை, இட்டாநிட்டங்கள் வந்தடைந்தபோது எப்போதும் சமான சித்தமாயிருத்தல், ஞானசாதகங்களாம்; இப்பொருள் என்னுடையது என்னும் இத்துணையபிமானமாத்திரத்தானே அதிற் பிரியமுண்டாதல் வேட்கையாம், அஃதிலாமை வேட்கையின்மையாம், இப்பொருள் நான் என்னும் அபேதபாவனையே, அதிலுள்ள பிரீதியின் அதிசயத்தன்மையாம், அதாவது அப்பொருட்குச் சுகதுக்கம் வந்துழி நானே சுகிதுக்கி என்கிருந்த அபினிவேசமாம், அஃதிலாமை அபினிவேசமின்மையாம், அற்றேல், வேட்கையபினிவேசங்கள் எப்பொருளின்கண் விடத்தக்கனவெனின்? புத்திரதார கிருகாதிகளில் என்றுணர்க, ஆதிசத்தத்தால் இதற்கயற்சிநேகவிடயதிரவியம் தாசன் என்பவற்றையும் கொள்ளலாம், அதாவது சிநேகவிடயங்களான சர்வபதார்த்தங்களிலும் வேட்கையபினிவேசங்கள் விடவேண்டுமென்பதாம்; இஷ்டாநிஷ்டங்கள் வந்தடையினும் சமானசித்தமாயிருத்தலாவது பிரியமான பொருளைப் பெறுமிடத்துச் சந்தோஷப்படாமை, அப்பிரியமான பொருளைப் பெறும்போது துயருறாமையாம். இவையாவும் ஞானசாதகங்களாம். இவையேயுமன்றி யுபலக்ஷணமாக, அமானித்தன்மை, அடம்பத்தன்மை, அகிம்சை, சாந்தி, ஆர்ஜவம், குருசேவை, தூய்மை, ஸ்தைரியம், முக்கரணத்தையும் சொரூபத்தி லொருமைப்பெறுத்தல், வைராக்கியம், அகங்கரியாமை, ஜன்மமிருத்யு ஜராவியாதி துக்கதோஷானு

தர்சனம், இவ்ற்றையுங் கொள்க; இவ்ற்றின் வியாக்கியானம் கூடார்த்ததீபிகையின் கண்ணே வெளியாம். "என்பாலயலில யோகத்தால் அன்பே நிகழ்ச்சியலாமலே" என்ற திருவாக்கின் போன்ற தாற்பரியார்த்தத்தைத் தரிசித்தல்:—ஆன்மாவினது அநந்யயோகத்தானே அநவாதம் அதன்பாவனை, மேலுக்குமேலான ஆன்மாவினது சிந்தனமே யீண்டுப் பகவற்பக்தியாம்; குணசரித்திர சிரவணகீர்த்தனுதி பகவதபிப்பிராயப்பட்டதல்லவாம். பரமான்மாவினிடத்தில் இடைவிடாத பக்தியே பாவனையாம், அதாவது இதுவே யாவற்றினும் உயர்ந்தது என்னும் மதியுடன் ஆன்மாவிடத்தில் நிரதிசயப் பிரீதியாம், அவ்வன்பும் ஆன்மாவே பரமான்மாவென்னும் அனன்னியயோகத்தானே பிறழ்வின்றி யாற்றுவதாம், எவ்வகைப் பிரதிகூலகாரணங்களாலும் நீக்கற்கேலாமையே பிறழ்வின்மையாம், ஆன்மாவினிடத்தில் நிரதிசயப் பிரியமுண்டாகாதேல் உடற்பற்றிலாதவனுகான் என்பதாம். இயல்பாகவே தூய்மையுடையதும் அல்லது செயற்கையானே தூய்மையுற்றதும், அசுசி யரவம் புலி முதலியவையற்றதும், உளத்திற் கானந்தவருவதும் ஆகிய தேசம் விவிக்ததேசமாம்; நதிதீரம் மலைக்குகை போன்றதாம். அதைச் சேவிக்கும் சுபாவம், விவிக்ததேச சேவித்துவமாம், இதற்குதாரணம் ஈசுரகீதை:—நீரின்றிச் செழும்பதான வவ்விடங்கள் நெருப்பினுல் வேந்தவவ்விடங்கள், ஊனுசெந்துக்கள் துற்சனர் துராலர் உதிர்ந்திடு சருகுபுற்றிடங்கள் கோரமாம் பயங்களுள்ளிடமிடிந்த கோயினுற் சந்திகண்மயான், மாரவாரங்களுள்ளிட மசுத்தமலக்கணு மனத்திணுக்கதனுல். வருத்ததாயுடல வாதையைப்பற்று மனமது நடுநடுங்கிட்டுப், பொருப்பினிற் குகைகள் புண்ணியதேசங் கோயில்க ணதிகளின் கரைக, ளிருப்பறு மனைதானூர்வது கடிப்பதின்றி யேகாந்தமாயுள்ள, வொருத்தரு மறியாவிடத்திலே யென்னை யுன்னுவான் முனைருப்படுவான். ஆன்மஞானமின்றியதும், விடயபோகத்தி லமிழுமார்க்கத்தை யுபதேசம் பண்ணுவதும் ஆகிய, விடயிகள் என்னும் பகிர்முகஜனங்களின் சபையானது தத்துவஞானத்திற்கு மிகப் பிரதிகூலமானதாம், அதில் இரமியாமை தத்துவஞானத்திற் கநுகூலமான மகாத்மாக்களின் சபையிலவ்சியம் பிரீதிவைத்தல்; அத்தியாத்மஞான நித்தியத்தகைமை = சிரவணமனனநிதித்தியாசன அப்பியாசம்; ஆன்மாவை யாசிரயித்துப் பிரவிருத்தித்த ஆன்மானுன்ம விவேகஞானம் அதுவாம், அதில் அத்தியந்தம் நிட்டையதுவாம், அத்தகையனே மகாவாக்கியார்த்தஞானத்தில் ஆற்றலுடையவனுகின்றான் ஆகலின் அதிகாரியால் அந்நிட்டை அவசியம் செய்யத்தக்கதாம்; தத்துவஞானத்தினுலே பரமாத்மத்துவத்தின் றரிசனம் ஸ்புடஅபிவியக்தியாதல், தத்துவஞானர்த்தத்தைத் தரிசித்தல், ஆண்டு அகம்பிரமாஸ்மிதத்துவமசி என்பன முதலிய வேதாந்த வாக்கியங்களைக் காரணமாகவுடையதும், அமானித்துவ முதலிய சர்வசாதனங்களின் பரிபாகத்தின்பலரூபமுமாகிய நானே பிரஹ்மரூபன் என்னுஞ் சாக்ஷாத்காரம் தத்துவஞானமாம், அத்தன்மைய தத்துவஞானத்தின் அர்த்தம், அதாவது, அவித்தை முதலிய சர்வாநர்த்த நிவிருத்திரூபமும் பரமானந்தப்பிராப்திரூபமுமாகிய மோக்ஷவடிவப் பிரயோஜனத்தின் றரிசனம், அதாவது அடிக்கடி விசாரித்து நோக்கல் தத்துவஞானர்த்த தரிசனமாம்; இதுவும் அதிகாரியால் அவசியம் செய்யத்தக்கதாம்; எனெனின், அத்தத்துவஞானத்தின் றரிசன அநந்தரமே அதன்சாதனத்திற் பிரவிருத்தியாகின்றது, பலஞானமின்றி அதன்சாதனத்திற் பிரவிர்த்தியுண்டாகாது; இவ்வாறு அமானித்துவம் முதற்கொண்டு தத்துவஞானர்த்த தரிசனமீறுகச் சொல்லப்பட்டவை யான்மஞானப் பிராப்தியின் ஏதுரூபமாதலின் ஞானமெனக் கூறப்பெற்றன, இவைகட்கு விபரீதமாகிய மானித்துவம் முதலானவை ஆன்மஞானத்திற்கு விரோதிகளாதலின் அஞ்ஞானமென்னும் பெயராற் கூறப்பெற்றனவாதலின் இவ்வதிகாரியானவன் அஞ்ஞானமெனும்

மானித்துவ முதலியவைகளை விடுத்து ஞானமெனும் அமானித்துவ முதலிய இருபது, சாதனங்களையும் அவசியமாகச் சம்பாதித்தல் வேண்டுமென்பதாம். இதற்குதாரணம் ஸ்ரீபக வற்கீதை:—மானமும் பிறர்தமை மதிக்கப்பண்ணலு, மூனமும் பிறவுயிர்க் குறுகண் செய் கையும், யானெனுஞ் செருக்கு மிவ்விக பரங்களி, லானபே ராசையோ டறுக்கு மாற்றலும்.

பெற்றமன் மனையொடு பெண்டிர் பாலர்பா, லுற்றெழு மவாவிட லுடம்பின் றாய் மையு, மற்றவைம் பொறிகளில் வாயில் வாழ்க்கையுஞ், செற்றமுஞ் சிறியவர் குழுவுந் தீர்தலும்.

ஒருபெரும் பேரருளையே யுளத்துள் வைத்தலு, மிருவினை கட்டவ மிடங்க ளெய்த லுங், குருவினை வழிபடு குணமுங் குற்றமி, லொருவினை யுள்ளவா றுணரு மூண்மையும்.

மூன்றிகழ் பிறப்பொடு மூப்பி றப்பினுற், சென்றடை யிடும்பையைச் சிந்தை செய் கையு, மென்றிவை யனைத்துமற் றிவற்றினு வினிச், சென்றடை பொருளினைத் தெரிந்து கேளெனு. என்பவாம்.

(ச.) இல்லவ ளில்லமாதிப் பற்றறல்—விஷயங்களி லிச்சை யின்மையும், புத்திரதார கிரகாதிகளில் மமதை யின்மையும், இட்டாநிட்டம் புல்விடில்—பிரியாப்பிரியங்களில், சம சிற்பாவம் பொருந்துதல் — சந்தோஷக் கிலேசாதி யின்மையும், பேதமல்லவாயவற்றவற் றின்—அபேத பாவனையால், தனக்கு—ஆன்ம சொரூபத்தின், தோற்றங்களாதலென்றும்— அநவரதம் அவிச்சின்னமான பிரம்பாவனை, பிரமமே நான் என்னும் அநுசந்தானமென்பது பொருள். மல்லலேகாந்தம் — பரிசுத்தமான நிர்ச்சன தேசத்தில், சேர்தலும், மானிடத் திரளை—பாமர சபையில், நீற்றல்—இராமையும், சம சித்தத்துவம் என்றும் பாடமாம். ஆற் றும தத்துவத்தின் அதலிலா ஞானநிட்டை — ஆன்ம விஷய ஞானத்தின் வசமாதல். உண்மைஞானத் துறுபொருட் காட்சி—தத்துவஞானத்தின் பிரயோஜனமான அத்தியந்த துக்க நிவர்த்தியின் அநுசந்தானம், இந்தத் தோற்றமாம் — முற்கூறிய, குறிகள் சேர்தல் ஞானசாதனமாதலின் ஞானமாமென்று சொல்வர். வேற்றுள வழிகள் எல்லாம்—இங்ஙனங் கூறிய சாதனங்களுக்கு விபரீதமாய்த் தோற்றும் இல்லவளில்லமாதிபற்றல் முதலானது, விதன வஞ்ஞானந்தானே சம்சார வேதுவாமென்பது பொருள். (15-16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அகங்காரந் தீர்தலே ஞானத்திற்கு முக்கியசாதனமெனல்:— ஏதமென்பது.

> ஏதம தாகநானென் றெண்ணுத லிறந்தபோது
> காதலு முனிவுந்தீர்க்குங் கலைகளைப் பிறவிநோய்க்கு
> மேதகு மருந்தாஞானம் வெளிப்படு மென்றுசொன்ன
> சேதன முனிவனை திரிதலற் கரசன்செப்பும்.

(ப - ரை.) ஏதமதாக—குற்றமதாக, நானென்றெண்ணுதல் — அகமென்றுன்னுதல், இறந்தபோது—நஷ்டமானபோது, காதலும் முனிவும் தீர்க்கும் — இராகத்துவேடங்களை யகற்றும், கலைகளை—சாதகராய், பிறவி நோய்க்கு—ஜனனவியாதிக்கு, மேதகு மருந்தா ஞானம்—மேலான அவுடதமாம் பிரஹ்மவித்தை, வெளிப்படுமென்று சொன்ன — வெளி யாகுமென்று அநுக்கிரகம் செய்த, சேதனமுனிவனை—அறிவுருவ மகாருஷியான, திரிதலற் கரசன் செப்பும்—ஸ்ரீதிரிதல முனிவரைநோக்கிப் பகீரதராஜன் கூறுவதாவது.

(ஸ்ரீ - வீர.) உன்னால் யாது வினவப்பெற்றதோ அது சர்வசாதன பலீபூதமாம், சர்வ சாதனங்களுக்குமே, அகங்காரலக்ஷணம் சாதனம், மூலமாம். அகங்காரமிருக்குமாயின் அமா

னித்வாதிகள் சம்பாதிக்க முடியாவாகலின் என்னுங் கருத்தாலுரைத்தல்:—நானென்பது, இராகத்துவேஷ க்ஷயாகாரமாயும், சம்சார வியாதி மருந்தாயும் உள்ள ஞானமானது, அகம்பாவம் உபசாந்தியாகவே ஹேமன்னவனே யடையப்பெறும்.

(ச.) ஏதமதாகம்=தேகாதிகளில், நானென்று எண்ணுதல் = அகம்பாவம், ஆன்ம ஞானப் பிரதிபந்தகமாதலின், அஃதிறந்தபோதே ஞானம் வெளிப்படும், ஆன்மாவின் சொரூபம் பிரத்தியக்ஷமா மென்பது பொருள். (17)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆயின் அதன் பரித்தியாக உபாயமே யடியேனுக்குத் திருவருள் செய்வீராகவென வினுதலும் விடைதருதலும்:—மலை விரிவுறு யென்பன.

மலைமிசை மரம்போனீளுள் வன்புற விந்தமெய்யி
னிலைபெற நானென்றெண்ண நீக்குவ தெங்ஙனென்னத்
தலைமைசேர் குரவன்சொல்வான் றன்மன வருத்தத்தாலே
தொலைவறு போகத்தெண்ணந் துவக்கறத் துடைத்துநீக்கி.

விரிவுறு முண்மைமேவில் வினையகங் காரமாளும்
புரிவற விவற்றையெல்லாம் புந்தியாற் றீரநீக்கித்
துரிசலை வின்றிநின்று யென்னினு னென்னுந்தோற்றந்
தெரிகிலா ததுவேநீயாந் தெளிந்ததற் பரமுமஃதே.

(ப - ரை.) மலைமிசை மரம்போல் = பர்வதப் பாறையின்மேல் விருக்ஷமேயென்ன, நீளுள் = வெகுகாலமாக, வன்புற = வலிதாக, இந்த மெய்யில் = இந்தச் சரீரத்தில், நிலை பெற நான் என்றெண்ணம் = நிலைபெற்றிருப்ப இந்த அகம்பாவத்தை, நீக்குவதெங்ஙன் என்ன = அகற்றுவ தெப்படியென்று மன்னவன் கேட்ப, தலைமைசேர் குரவன் சொல்வான்=தேசிகோத்தமராகிய ஞானசிரியர் கூறுவார், தன் மனவருத்தத்தாலே=தன்து புருடப் பிரயத்தனத்தினலே, தொலைவறு போகத்தெண்ணம் = போக்கமுடியாததாய போக நினைவை, துவக்கறத் துடைத்து நீக்கி=அடியோடுமில்லாமல் அகற்றியோட்டி.

விரிவுறு முண்மைமேவில்=விலாசமா யிலங்குவதான சத்தத்துவத்தை யடைந்தால், வினையகங்காரம்மாளும்=சமுசார பந்தத்திற்கேதுவான அகம்பாவமானது நசிக்கும், புரிவற இவற்றையெல்லாம்=ஒன்றையும் செய்யாம விவை யாவற்றையும், புந்தியாற் றீரநீக்கி= மதியினலே அத்தியந்த மகற்றி, துரிசலைவின்றி நின்று யென்னின்=குற்றமான சஞ்சலமில்லாமல் நிலைப்பாயென்னின், நானென்னும் தோற்றம் தெரிகிலாது=அகமென்னும் பிரதீதியானது மறைந்துபோம், அதுவே நீயாம்=அப்பொருளே நீயாவாய், தெளிந்த தற்பரமும் அஃதே=பிரசன்னமான தற்பரம்பொருளும் அதுவேயாம்.

(ஸ்ரீ - வீர) இந்தச் சொந்தத்தேகத்தில், கிரியின்கட்டருவைப்போல, நெடும்போதூன்றி நிற்பதாய இவ் வகம்பாவத்தை, ஹே மகாபாகுவே! அகங்காரத்தை வெற்றி கொண்டு பிரஹ்ம பாவத்தையடைந்த மகா பாக்கியவானே! தியாகிப்பது எங்ஙனம் அருள் செய்வீராக. என்று மன்னவன் கேட்ப, ஸ்ரீ திரிதலமுனிவர் கூறல் போகக் கூட்டப் பாவனையைப் பௌருஷப் பிரயத்தனத்தினலே முற்றினும்விட்டு அகாமவண்மையினலே வெட்டவெளியாய் விளங்கும், சுத்த ஆன்மாகாரத் தன்மையை யடைந்து இருக்கப்பட்டவனுக்கு அகங்காரமானது விலயுமாம். இராஜ்யத்தை விட்ட ஜனகன் ஜலங்கன் வெகு

மானிக்கமாட்டார்கள், பகைவர்களும் கேலிசெய்து சிரிப்பார்கள், சர்வ அபிலாஷைகளை யும் பூரணஞ்செய்ய சாமர்த்தியவானான யான் எங்ஙனம்பிக்ஷாடனம் செய்வேன், இழிவான அன்னபானுதியானே யெங்ஙனம் ஜீவிப்பேன், என்பதாதி சிந்தையாலுண்டாகிய லஜ்ஜை அபிமானுதியானே ஆக்கப்பெற்ற வீட்டில் முன்போன்றே நியமித்தவடிவமாய பஞ்சரம் எதுவரை சர்வத்தியாகத்தானே கெடவில்லையோ அதுவரை யகங்கிருதியானது அத்தியந்தம் விகசிதமாய் நடனம்புரியும். இவை யாவற்றையும் மதியோடும் விடுத்து நிச்சலமாவிருத்தியேலாயின் அகங்காரம் விலயமாகயே நீயே பரமபதமாய் நிற்பாய்.

(ச.) பகீரதன்:—சம்சாரம் அநாதியாதலின், அதன் மூலமான அகங்கார நிலைபெறு மூலமானபடியால் அதனை நீக்குவது அரிதென்பது கருத்து. குரவன்—ஸ்ரீதிரிதலன், தன் மனவருத்தத்தாலே, வாசனக்ஷய ஹேதுவான, தெரிதருஞானசமாதி அப்பியாசாதி ரூபமாகிய புருடப் பிரயத்தனத்தால், தொலைவறு போகத்தெண்ணம் — விஷய சமூகவாசனை, நீக்கி, விரிவுறும்—பரிபூரணமான: உண்மை—பிரமசத்தையை, மேவில்—ஆசரிக்கின், வினையகங்காரம்மாளும், இலச்சையாதி, உசிதமற்ற கன்மத்திற் சித்தத்தின் சங்கோசம், இலச்சையாதி சத்தத்தாற் சாதிகுல அபிமானுதிக் கிரகணம்; இதற்கு உ-ம்; தயை, சங்கை, இச்சை, லச்சை, அருவருப்பு, குலம், சீலம், சாதி ஆகிய இவை அஷ்டபாசங்கள் எனப்படும் என்பதாம். நானென்னும் தோற்றந் தெரிகிலது—அகங்கார நசிக்குமாயின், அத்தகைய லஜ்ஜாதி ரூபமாய யந்திரங்களின் பஞ்சரம் சொரூபத்தினும் அயலாய சிறிதும் எதற்கு இல்லாமோ அது அகிஞ்சனமாம், தற்பாவமாத்திர சேடமாக, எதுகாறும் அகிலமும் விடவில்லையோ அதுகாறும் அகங்கிருதிபுடமாக நீங்குவதில்லையாம்; என மூலங்கொண்டுணர்க. இவற்றை யெல்லாம்—இலஜ்ஜை யபிமானுதி சர்வத்தையும். (18-19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சர்வத்தியாகத்தையே அவசியம் செய்யத்தக்கதாக வுரைத்தலும் அரசன் உட்கொண்டு சென்று முன்னிலைமையிற் சின்னாட்கழித்தல்;—அனைத்து, நிற்பரம் என்பன,

அனைத்துள விசேடநீங்கி யச்சமற் றேடணைக்குட்
டினைத்துணைப் பற்றற்றின்மை சிக்கெனச் சேர்ந்துசெல்வம்
வினைப்பகைக் கீந்துநானென் பதுவிட்டு மேனிச்செய்கை
தனைத்துறந் தவர்பாலையந் தணையிரந் தெனையும்விட்டு.

நிற்பர மாயிவ்வாறு நிற்கின்மே லுக்குமேலாந்
தற்பர நீயேயாதி யென்றவன் சாற்றக்கேட்டு
வெற்படர் தோளானெஞ்சிற் செய்வதாந் தன்மைமேவிப்
பற்பல தன்செய்கைக்கே பகீரத னிற்பதானான்.

(ப - ரை.) அனைத்துள விசேடநீங்கி—சகல விசேடங்களு மகன்று, அச்சமற்று—பீதியடையாமல், ஏடணைக்குட் டினைத்துணைப் பற்றற்று—சர்வேஷணையிலும் அணுவளவும் பற்றில்லாமல், இன்மை சிக்கெனச்சேர்ந்து—ஒன்றுமில்லாமையை நன்றாக அடைந்து, செல்வம் வினைப்பகைக் கீந்து—இராச்சிய சம்பத்தைத் துயர்செயாநின்ற பகைவர்களின் கையிலொப்பித்து, நானென்பது விட்டு—அகமென்பதை யடியோடும் விடுத்து, மேனிச்செய்கை தனைத் துறந்து—உடம்போம்புதலையும் நன்றாகவிட்டு, அவர்பால் ஐயந்தனை யிரந்து — அவ

ரிடத்தே பிக்ஷையை வாங்கி யுண்டுகொண்டு, எனையும் விட்டு = ஆசிரியராகிய எம்மையும் விடுத்து.

நிற்பரமா யிவ்வாறு நிற்கின் = சொரூபபரமாயிந்தப் பிரகாரம் ஸ்திதிபெறின், மேலுக்கு மேலாம் தற்பரம் நீயேயாதி = உயர்வினும் உயர்வேயாய பரமாத்மவஸ்து நீயே யாவாய், என்றவன் சாற்றக்கேட்டு = என்று அம்முனிவர் உபதேசிக்கக்கேட்டு, வெற்படர் தோளான் = பர்வதத்தைக்காதும் புஜபராக்கிரமம் வாய்ந்த மன்னவன், நெஞ்சிற்செய்வதாந் தன்மைமேவி = மனத்தின்கண்ணே செய்யவதாகிய தன்மையைமருவி, பற்பல தன் செய்கைக்கே பகீரதன் நிற்பதானான் = பலபலவான தனது காரியதற்பரனாகவே பகீரத மன்னவன் விவகரிப்பதாயினான்,

(ஸ்ரீ - வீர.) பயமற்றவனாகிச் சர்வபற்றுகளையும் விட்டவனாகி சத்திரசாமராதிகளாகிய இராஜ விசேஷணங்கள் யாவற்றையும் அத்தியந்தம் விட்டவனாய், அத்தியந்தம் ஒன்றுமில்லாதவனாய், எல்லாச் செல்வத்தையும் பகைவரிடத்திற் கொடுத்தவனாய், தேகாபிமானமற்றவனாகி, அகங்காரமற்றவனாகி அந்தச் சத்துருக்களிடத்திலேயே பயிக்கமேற்றயின்று கொண்டவனாகி, பூரணனாகி, கேட்கவேண்டியதொன்றும் எஞ்சாமையானே ஆசிரியராகிய எம்மையும் விட்டவனாகி, சேவையாதியானே எம்மையும் பின்றொடராதவனாகி "வாழுங்காலும் மூவரும் வந்தியர்; சூழும் வேதாந்தங்குருநீசரே" என்பதாதி சாஸ்திரப்பிரமாண்யப் பிரசங்கத்தான் இருத்தியேலாயின் இத்தகைய இலக்கணமுடையவன் ஆவையேயாயின், சர்வமுமுக்ஷு குணங்களினாலே மேலுக்கு மேலாய நீ யாவற்றிற்கும் மேன்மைவாய்ந்த பிரஹ்ம சொரூபமே யாய்விடுவாய், அத்தகைய உனக்கு சமுசாரசம்பாவனையும் இல்லவே யில்லையாம். என்றிந்தப்பிரகாரம் பகீரதமன்னவன் அந்த ஞானாசாரியருடைய முகத்தினின்றும் வந்த விந்த வுபதேசத்தை நன்கு வினவி, பின்னர், மனதில், நிச்சிதமான கூறப்பெறும் கர்த்தவ்ய முடையவனாகித் தன்து வியாபாரபரமாயினான்.

(ச.) அனைத்துன் விசேடம் = நான் பிராஹ்மணன் நான் கிருகஸ்தன் என்பது முதலான விசேஷத்தை நீக்கி, அச்சம் = பயவேது, அற்று, வடனைக்குட்டினைத் துணைப்பேற்றற்று = புத்திரகளத்திராதி விஷய இச்சை யனைத்தும்விட்டு; செல்வம் வினைப்பகைக் கீய்ந்து, இன்மை சிக்கெனச்சேர்ந்து, நானென்பதுவிட்டு, மேனிச்செய்கைதனைத்துறந்து = தேகபாவனை நீங்கி, அவர்பால் = பகைவரிடத்து, ஐயந்தனையிரந்து = பிச்சையேற்று, எனையும் = குருவாகிய என்னையும், விட்டு.

தற்பரமாவை = பிரஹ்மமேயாவாய், ஸ்ரீவசிட்டர்: என்றவன் = இத்தன்மையாக அக்குரவன், நெஞ்சிற்செய்வதாந் தன்மைமேவி = குரவனுபதேசித்த காரியத்தைச் செய்ய வேண்டுமெனச் சித்தத்தில் வைத்தென்பது பொருள் தன்செய்கைக்கே = இராச்சிய சிந்தையான தனது வியாபாரத்தில், நிற்பதானான் = தாற்பரியமுள்ளவன் போன்றனன். (20-21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின்னர் சர்வசங்க பரித்தியாகஞ்செய்து நாட்டைவிட்டுலவல்:—சிறிது யாவருமென்பன.

சிறிதுநாட் கழிந்தபின்னர் சிறந்ததோர் வேள்விசெய்து
நெறிவளர் செல்வமுற்றுநீசமு மூயர்வுநாடா
வறியரா மறையோர் தெய்வங் கிளைமுதல் வந்தோர்க்கீந்து
பிறிவுறு துகிலொன்றன்றிப் பிறிதிலன் மூன்றுநாளில்.

யாவரு மிரங்கயாது மின்மையாந் தனதுநாட்டை
மேவரும் பகைவற்கீந்து வேற்று துகிலொன்ருஞேன்
ருவரு முனியாய்ஞான முனிக்குணஞ் சார்ந்துதன்ன
தோவறு நாடுநீங்கி யொருவனு யுலாவலுற்றுன்.

(ப - ரை.) சிறிதுநாட் கழிந்தபின்னர் = உபதேசம்பெற்றுச்சென்று சொற்பதினங்கள் சென்றபின்பு, சிறந்ததோர் வேள்விசெய்து = விசேடித்ததாமொரு ஒப்பில்லாத யாகமியற்றி, நெறிவளர் செல்வமுற்றும் = தர்மமார்க்கமாக ஆர்ஜித்த ஐசுவரிய முழுவதையும், நீசமும் உயர்வும் நாடாது = உயர்வுத்தாழ்வுக் கருதாது; வறியராமறையோர் = ஏழைகளாகிய பிராஹ்மணர், தெய்வம் = தேவாலயம், இன்முதல் = தன்பந்துமுதலாக, வந்தோர்க்கீந்து = வந்தவர்க்கட்கெல்லாங் கொடுத்து, பிறிவறுதுகில் ஒன்றன்றி = சுற்றிக்கொண்டிருக்கும் வஸ்திரம் ஒன்றேயல்லாமல், பிறிதிலன் மூன்றுநாளில் = தினத்திரயங்களுக்குள் அயலொன்று மில்லாதவனுயினன்.

யாவருமிரங்க = எல்லாரும் இரக்கப்பட்டுக் கண்ணீர்விட்டழ, டீாதுமின்மையாந் தன்துநாட்டை = எல்லாவகையாலும் வண்மைமிகுந்து சகலார்த்த சூனியமான தன்னுடைய ராஜ்ஜியத்தை, மேவரும் பகைவற்கீந்து = பொருந்துதற்கரிய சத்துருவுக்குக் கொடுத்து, வேறறுதுகிலொன்றுனேன் = சகலமும்விட்டு ஒருவத்திரத்தையுடைய அப்பகீரதன், தாவருமுனியாய் = ஒருவராலு மடைதற்கரிய மனனசீலனுய், ஞானமுனிக் குணஞ்சார்ந்து = ஞானமுனிவருக்குரிய குணங்களியாவற்றையும் அடைந்து, தன்னதோவறுநாடு நீங்கி = தன்னுடைய விடமுடியாத தேசத்தை விடுத்து, ஒருவனு யுலாவலுற்றுன் = ஏகனுகச் சஞ்சரிக்கலுற்றுன்.

(ஸ்ரீ - வீர.) அதன்பின், சிலநாட் கழிந்தவுடனே தானே யம்மன்னவன், அக்கினிஷ்டோமமகத்தைச் செய்தான் சர்வத்தியாகமானது முக்கியமாகச் சித்திக்கும்பொருட்டு; அக்கினிஷ்டோமக் கிரகணம்; விசுவஜித்பரியந்தங்களாய சோமசம்ஸ்தானங்களின் உபலக்ஷணமாம். துவிஜர்களுக்கும் தனது பந்துக்களுக்கும், கோ பூமி குதிரை பொன்னுதிதன முழுவதையும், துணியெனவும் அதுணியெனவும் ஆராயாமற் கொடுத்தான்; அதுணி = வேத சாஸ்திரமொன்றும் படியாதவன், அவனையும் ஆராய்ந்து பார்த்திலன், அவனை விசாரித்துக் கொண்டிருந்தாற் காலதாமதமாதலின்; பாடபேதம்; துவிஜதேவதுக்கு பந்துக்கட்குக் குண்யாகுண்யம் ஆய்ந்துகொடுத்தான் றனமுழுதுமென்பதாம். தினத்திரயமாத்திரத்திற்றனே சர்வத்தையுமே தியாகித்தவனுகி, பிராணன்கன்மாத்திரம் தங்கியிருக்கப் பெற்றவனுகி, சுகியாயிருந்தான் பகீரதமன்னவன்; பின் சர்வதனசூனியமாய தனது இராச்சியத்தை, மந்திரியாதியரும் புரஜனங்களும் தீனராகித் துயருற்றுவாடத் துரும்புக்குச் சமானமாய் எல்லைப்புறத் தருகாமையிலிருந்த தனது சத்துருவை வரவழைத்துக் கொடுத்தனன்; சாமந்தினவென்னும் பாடத்தில், சமீபதேசாதிபதியின் பொருட்டெனப் பொருள் கொள்க. பகைவனுனவன் இராஜ்ஜியத்தையும் மண்டலத்தையும், அரண்மனையையும் அங்கீகரித்துத் தன்வயப்படுத்தியபோது, இந்த ராஜ இருஷியானவன் கோவணமறைப்பொன்றே யுடையவனுகித் தனது மண்டலத்தினின்றும் வெளிப்போந்து சென்றனன்.

(ச.) வேள்வி = அக்கினிஷ்டோமத்தைச் செய்து, சகல தனத்தியாகத்தின் அவசரஞ் சம்பாதித்தற்கென்பது பொருள். செல்வம் = கோபூமி அசுவம் இரணியமாதிதன

முற்றும், யாவரும்=மந்திரி முதலானவரும் புரஜனங்களும், இரங்க, யாதுமின்மையாம்= சகலதன சூனியமான, தனது நாட்டை, திருணம்போல், மேவு, தனது இராச்சியாந்தத் திருக்கும், பகைவற்கு = பகைவனுன வரசனுக்கு ஈந்து. முனியாய் = மௌன நிஷ்டனுய். (22-23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பகீரதனது விசிராந்தியை யுரைத்தல்:—முகத்தினுலென்பது.

முகத்தினுற் பெயராற்கண்டோ ரறிகிலா மூதூர்தோறு
நகத்துயர் வனங்கடோறு நண்ணினன் றீரனுகி
யகத்திலே டணைகளெல்லா மவிழ்த்தனன் சிறிதுநாளி
லிகத்துயர் சாந்தியாற்றன் னிடத்தினைப் பாறினுனே.

(ப - ரை.) முகத்தினுல் பெயரால் கண்டோர்=வதனத்தினுல் நாமத்தினுல் பார்த்தவர், அறிகிலா மூதூர்தோறும் = தெரிந்துகொள்ளக்கூடாத பட்டணங் கிராமங்கடோறும், நகத்துயர் வனங்கடோறும் = உன்னதமான பர்வதங்களிலும் சோலைகளிலும் ஆரண்யங்களிலும், நண்ணினன் றீரனுகி = பொருந்தினன் றைரியவானுய், அகத்தில் வடணைகள் எல்லாம் = சித்தத்தில் ஆசாவாசனைகள் யாவற்றையும், அவிழ்த்தனன் சிறிதுநாளில் = அறிவில் விலயமாக்கினன் சிலதினங்களில், இகத்துயர் சாந்தியால் = இங்கு மேலான சாந்தியினுலே, தன்னிடத்தினைப்பாறினுனே = சுவான்மசொரூபத்தில் விசிராந்தியையே அடைவுற்றனன்.

(ஸ்ரீ - வீர.) யாண்டுச் சுயங்கண்டபோதினும் ஜனங்களானே பகீரதநாமத்தா லறியப்பெருனே யாண்டுத்தான் ஜனமுகத்தினின்றும், தன்பெயரும் அறியப்பெருனே, கேட்கப்பெருனே, அத்தகையனவாகிய கிராமங்களிலும், அரண்யங்களிலும் தூரதேசங்களிலும் தைரியவானுகிய அம்மன்னவன் வசித்தான். இம்முறையானே நிகழ்பவனுகி, சிறிதுகாலத்தினுற்றுனே, சருவவடணைகளும் அற்றவனுய், பரமசாந்தியினுலே யான்மாவின்கண் விசிராந்தியை யடைந்தான். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின்னெருபோது அத்தேயத்தை நாடிவந்தும் பற்றின்றியிருந்து செல்லுதல்:—படியதிக வென்பன.

படிமுழு துழல்வானேர்காற் பகைவற்குத் தான்முன்னீந்த
கடிநகர் புக்கானெல்லாக் காணமும் வென் றுன்சென் று
மடியிலா வமைச்சர்மற்றேர் மனையெலா மையமேற்றுன்
முடியுடை யிவனைநோக்கி யிரங்கினர் முன்புகண்டோர்.

அதிகபூ சனைகள்பண்ணி யரசுசெய் தருளுகென்றே
பதிபெறு பகைவன்றுனும் பகரவும் பலியேயன்றி
யெதிரொரு திருணமேனு மிச்சையற் றிருந்துசின்னுட்
புதிதென் றெவரும்வெம்பப் போயினன் புறத்துத்தானே.

(ப - ரை.) படிமுழுதுழல்வான் = பூமண்டலம் முழுவதும் பிரதக்ஷிணம் செய்துகொண்டிருப்பவன், ஓர்கால் = ஒருபோது, பகைவற்குத்தான் முன்னீந்த = சத்துருவுக்குத்தான் முன்னர்க்கொடுத்த, கடிநகர்புக்கான் = மதில்சூழ்ந்த பட்டணம் புகுந்தான், எல்லாக்காணமும் வென்றேன் = சகல வுள்வெளிக்காணங்களையும் வெற்றிகொண்டவன்

சென்று = போய், மடியிலாவமைச்சர் = கெடுதல் இல்லாத மந்திரிமார், மற்றோர் = பிறர் தம், மனையெலா மையமேற்றான் = வீடுகள் எல்லாவற்றினு பிச்சைவாங்கி யங்கேயேயுண்டான், முடியுடை யிவனைநோக்கி யிரங்கினர் முன்புகண்டோர் = முன்னர்ப்பழகியிருந்த ஜனங்கள் கிரீடதாரியாயிருந்த இம்மன்னவனைப் பார்த்துத் துயருற்று வாடினர்.

அதிக பூசனைகள் பண்ணி = மிகமிகவும் ஆராதனைகள் செய்து, அரசுசெய்தருளு கென்றே = இராஜ்யபரிபாலனம் செய்தருளுவாயாக வென்னவே, பதிபெறு பகைவன் றானும் = முன்னர்த் தேசம்பெற்ற சத்துருவும், பகரவும் = பிரார்த்திப்பவும், பவியே யன்றி = பிசகுயேயல்லாமல், எதிரொருதிருணமேனும் = முன்னிலையில் ஒரு துரும் பேனும், இச்சையற்றிருந்து சின்னுள் = ஆசையில்லாமல் வசித்துச் சில தினங்கள், புதிது இது என்று எவரும் வெம்பப்போயினன் புறத்துத்தானே = அற்புது இது ஒன்றென்று எவருமே துயருற அத்தேசத்தைவிட்டு அயலிடத்திற்குச் சுயமே போய்விட்டான்.

(ஸ்ரீ - வீர.) இப்பூபீடத்தில் நதியிடைப்பட்ட மண்டலங்களையெல்லாஞ் சுற்றிக் கொண்டே காலயோகத்தினலே யொருபோது தரிசனுதீனசித்தனாய், பகைவனாற் சுவீகரிக்கப்பெற்ற அந்தத் தன்னுடைய புரத்தையோநாடி யடைந்தான்; ஆண்டிவன் பிரவாகபதிதங்களாய் முறையிற்கிடைத்த அந்நாளுவீடுகடோறும் அதாவது மந்திரிபிரதானிபுரவாசிகள் இல்லங்கடோறும் சென்று சென்று சமியாசிய அம்மன்னவன் பயிக்கமேற்றருந்தினன்; அம் மந்திரிகளும் புரவாசிகளும் அப்பகீரத மன்னவனைத் தெரிந்துகொண்டனர், பின்னம்மன்னவனைப் பூஜாதிரவியங்கள்கொண்டு மிகமிகவும் பூசித்தார்கள்; மிகமிகவுந் துக்கிதர்களானர்கள்; ஹே பிரபுவே இராஜ்ஜியத்தை யாண்டருளுவீராகவென்று சத்துருவினலே வெகுவாகப் பிரார்த்திக்கப்பெற்றபோதினும் அம்முனிவன் ஏற்றிலன், அசேஷராஜ்ஜிய சம்பத்தையும் அநாதரவுசெய்துள்ள அத்துறவி உண்டியேயன்றி யொருதிருணமேனும் கொண்டிலன்; சில தினங்களை யாண்டுறைந்து கழித்துவிட்டுப் பிறண்டு, அப்பகீரதராஜன், ஹாகஷ்டம் இது என்று லோகத்தாராற் சோகிக்கப்பெற்றவனாய்ச் சென்றனன்.

(ச.) வயமின்றியவனாய், தனக்கெனச் செல்லவேண்டுந் தேயமிலாமையின் வழிப் போக்காகத்தானே கிடைத்த, பகைவனுன்முன் னங்கீகரித்த அந்நாட்டை யொருபோதடைந்தான்: பிரவாகபதிதங்களாய் = மனப்பிரவாகானுசாரமாக அடைவுற்றவைகளாய். (25-26)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மன்னவன் றனது ஞானசிரியரைச் சந்தித்தலும் சகசஞ்சாரமும்:—சாந்தியென்பது.

சாந்தியே வடிவாய்ப்புந்தி தளர்வின்றி யின்பமெய்திக்
காந்திசேர் தன்சொரூபக் கண்ணிலே விநோதமேவிப்
போந்திசை யதனில்வந்த குருவினைப் புகழ்ந்துசேர்ந்து
தாந்திரி வுற்றானன்னார் சைலத்தில் வனத்தி னூட்டில்

(ப - ரை.) சாந்தியேவடிவாய் = உபசாந்தியே உருவமாய், புந்திதளர்வின்றி = மதியானது கலக்கங் கோழைப்படாமல், இன்பமெய்தி = ஆனந்தமடைந்து, காந்திசேர் தன் சொரூபக்கண்ணிலே விநோதமேவி = பிரகாசம்பொருந்திய தனதுவடிவ திருஷ்டியிலே கிரீடித்து, போந்திசை யதனில்வந்த = தான் சென்றுகொண்டிருந்த திக்கினில் எழுந்தருளிவந்த, குருவினைப் புகழ்ந்து சேர்ந்து = ஞானசிரியரைப் போற்றிசெய்து அந்த

ஸ்ரீ திரிதலனைப் பின்றொடர்ந்து, தாந்திரியுற்றரன்னர் = அந்தக் குருவும் சீடரும் சுற்றிக் கொண்டிருந்தனர், சைலத்தில் வனத்தில் நாட்டில் = பர்வதங்களிலும் ஆரண்யங்களிலும் கிராமபட்டணங்களிலும்.

(ஸ்ரீ - வீர.) இத்தனைக்கும் விலக்ஷணமாய பொருளினிடத்தே யுபசாந்தாத்மாவாய் மிகவும் இளைப்பாறிய புந்தியனாய், சுகியாய், விளங்கிய அம்மன்னவன் ஒருபோது ஆன்மா ராமராய்ச் சஞ்சரித்துவரும் ஸ்ரீதிரிதலாசாரியரைத் தரிசித்தான். தனதுயிர்போன்ற ஞானாசிரியரைத் தரிசித்துத் தான் செய்யத்தக்க வந்தனை வழிபாடுகண் முதலியவற்றைப்பற்றி நல்வரவு க்ஷேமாதிகளை விசாரித்து, அவரோடுகூடப் பகீரதன் சிறிதுகாலம் மலைகளிலும் வனங்களிலும் கிராமங்களிலும் புரங்களிலும் ஜனமத்தியிலும் வசித்தான். (27)

(ஸ்ரீ-வீர - அ - கை.) சர்வ சங்க பரித்தியாகிகளாய் சகல கல்யாண குணங்களுடன் இருவருஞ் சஞ்சரித்துக்கொண் டிருந்ததையே நன்கு தெரிவித்தல்:—குரு துன்பென்பன,

குருவுமா ணக்கன்றானுங் குறைவறு சமத்தைமேவி
யிருவரு நிலைமை யொப்போர் விநோதத்தா லாக்கை தாங்கிக்
கருவுட லிருந்தென்போயென் காமித்த படியுலாவி
யொருமையி லுள்ளவாற்ற லுறைகென வுறைக்க வுன்னி.

துன்புறு வானந்தத்த சுகத்தினு மத்திமத்து
மின்புறார் தனங்கண்மாத ரியைநிதி யிருநாற்செல்வ
முன்புற விரும்பிச் சித்தர் தந்தவை மோகமின்றி
மென்புலொத் தொழிந்தார்வேறோர் மேதகு நாட்டிற் சென்றார்.

(ப-ரை.) குருவும் மாணக்கன் றானும் = ஞானசிரியரும் சீடனும், குறைவறுசமத்தை மேவி = பூரணமான சாந்தியை யடைந்து, இருவரும் நிலைமை யொப்போர் = இரண்டு பேர்களும் ஒரே ஸ்திதியில் ஒப்ப இருப்பவர்கள், விநோதத்தா லாக்கை தாங்கி = விளையாட்டால் மேனியைக்கொண்டு, கருவுட லிருந்தென் போயென் = கருவில் வாராநின்ற தேகம் இருந்தா லென்னே போனலென்னே, காமித்தபடி யுலாவி = இஷ்டப்படி திருந்து, ஒருமையினுள்ள வாற்றால் = அத்விதீய நிலைமையில் நிலைத்தபடியே, உறைகென உறைக்க உன்னி = நிலைக்கலாம் என்று திடமாக வெண்ணி.

துன்புறு வாநந்தத்த சுகத்தினு மத்திமத்து மின்புறார் = துயாமுறுத சுகத்தினும் அசுகத்தினும் இடைப்படுவதன் கண்ணும் மகிழார், தனங்கள், மாதர், இயைநிதி, இருநாற் செல்வம் = திரவியங்கள் மங்கையர் பொருந்தா நின்ற செல்வம் அணிமாதி யஷ்ட ஐசுவரியம், முன்புற = எதிருற, விரும்பி = இச்சித்து, சித்தர் = சித்தமூர்த்திகள், தந்தவை = தந்தவற்றை, மோகமின்றி = மயக்க மில்லாமல்: மென்புல்ஒத்து = பட்டுப்போன துரும்புக்குச் சமானமாக,ஒழிந்தார்=தியாகித்தார், வேறோர்மேதகுநாட்டிற் சென்றார்=மற்றொரு உயர்வு பொருந்திய தேயத்திற்குப் போயினர்.

(ஸ்ரீ - வீர.) சமத் தன்மையை யடைந்தவர்களாகிய அவ்விருவர்களும், சமமான நிலையில் வாழ்ந்தார்கள், சுவஸ்தர்களாகிய அக்குருசீடர்கள் விநோத = குதூஹல பூதமாகத் தேகதாரணத்தைச் செய்துகொண் டின்புற்றார்கள் ; இத்தேகம் தரிக்கப் பெறுவதினாற்றான் என்னே, அதன்றுபோய இதனாற்றாகவேண்டிய தென்னே, நமக்கென இருந்தார்கள் சாஸ்திரங் கூறிய கிறமமாகத்தா னிருக்கட்டு மிது, ஆன்றோ ரொழுக்கத்தை யனுசரித்துத்

தானிருக்கட்டு மிது, அல்லது இருந்தபடியேதா னிருக்கட்டு மிது, ஆகவேண்டிய தென் னென விருந்தார்கள், இவ்வண்ணம் துணிந்திருந்த அவர்கள், வனத்தி னின்றும் வனாந்தரம் செல்பவர்களாய், விடயானந்தங்கள் விரவாத பரானந்த மடைந்திருந்தார்கள், இனி யதனையே சிறப்பித் தோதின், துக்கமும் அடைந்திலர், மத்தியமம் = துக்க சுக உபய சூனிய அந்தரா ள அவஸ்தை, அதையு மடைந்திலர் என்பதாம்; அவர்களுக்கு மானுஷ போகங்களிலேபோலத் திவ்ய போகங்களிலும் வைராக்கிய தார்ட்டியத்தை காட்டல்:— தனங்கள் என்பதாதி. தனங்கள், பரிசரியாதி செல்வங்கள், அணிமாதி யஷ்ட ஐசுவரியங் கள் என்பனவாகப் பிரசித்த முற்றவற்றை, அவர் சரிதத் தானே மகிழ்வுற்ற சித்தாதிகளாகிய பிரஹ்மாதிகள் கொடுத்தபோதினும், பட்டுப்போன துரும்புபோல எண்ணினார்கள்,

(ச.) அநாசந்தத்துவம் = துக்க வேதுவிலும், சுகத்தினும் = சுகவேதுவிலும், மத்தி மத்தும் = அநுபய வேதுவிலும், இன்புறுர், இயனிதி = அசுவாதியின் சம்பத்தும், இரு நாற் செல்வம் = அணிமாதி ரூபமான அஷ்ட ஐசுவரியமும், சித்தர் = அஷ்ட மகா சித்தி யுள்ள தேவ யோனிபேதங்கள், விரும்பி = பிரீதியுடையாய், முன்புறத் தந்தவை ஆயி னும், மோகமின்றி, மென்புலொத்து = ஜீரணமான திருணம்போல், ஒழிந்தார், அந்தர் மூக புத்தியாளென்பது கருத்து. விஷாதம் = துக்கஹேது, என்பது பாடபேதம். 28-29

(ஸ்ரீ - வீர - அ - கை.) பகீரத மன்னவனே மீளவும் நகர்வினை வயத்தானே அரசனுக்கு தல்:—மைந்தன் என்பது,

மைந்தனில் லாதவந்த மாநகர் மன்னனுவி
நந்தலு மமைச்ச ரெல்லா நலங்கொண்மன் னவனுரென்று
சிந்தனை செய்யுங்காலைச் சிறுபலி முனிவனுன
சுந்தரமன்னை நோக்கிச் சுடர் முடி வேந்தனுக்க

(ப - ரை.) மைந்தனில்லாத வந்தமாநகர் மன்னனுவி = புத்திரனில்லாத அம்மாபுரி யரசன் உயிர், நந்தலும் = சாம்பலும், அமைச்சர் எல்லாம் = மந்திரிமாரியாவரும், நலங் கொள் மன்னவன் ஆரென்று = இராஜ லக்ஷுமி தங்கும்படியான அரசன் யார் ஆக வுரித் தென்று, சிந்தனை செய்யுங்காலை = ஆராயும்போது, சிறுபலிமுனிவனுன = அற்ப பிக்ஷை மாத்திரம் ஏற்கும்படியான மனனசிலனுகிய, சுந்தரமன்னை நோக்கி = அழகிய பகீரத ராஜனைப்பார்த்து, சுடர்முடி வேந்தனுக்க = நலமிகுந்தொளிரும் நவரத்நகசிதப் பிரகாசம் வாய்ந்த கிரீடஞ் சூட்டி யரசனுக்க.

(ஸ்ரீ - வீர.) இவ்வாறு தேச சஞ்சாரஞ் செய்துகொண் டிருந்தபோது ஒரு காலத்தில், கோசல மண்டலத்தினும் பகீரத ஆஸ்பத மண்டலத்தினும் வேறுய மண்டலத்தில் ஒரு சிறந்த புரியில், குழந்தை யில்லாத மன்னவனை மிருத்தியு, கொன்றுவிட்டது, மாமிசத்தை க்ஷுத்திர மத்சியாதிபோலும்; தேசத்தினுடைய பாலன மரியாதை யற்றவர்களாய மந்திரி பிரதானியார், ஆண்டுத் துயருற்றவருய், காக்கும் ஆற்றலுடைய விசாலமான குணலக்ஷுமி யோடு கூடின அரசன் யார் என்று தேடிக்கொண் டிருந்தனர்; பின்னர் நிலையாகப் பிக்ஷை யேவாங்கி யுண்டுகொண் டிருந்த முனிவனுகிய அந்தப் பகீரதனை யடைந்து, சுருவகுண இலக்குமியோடு கூடியவன் இவன் என்று முன்னெருடர்பை யுணர்ந்து, இனிது கொணர்ந்து ஆண்டுற்ற சைனியத்தில் அபிடேகித்து மகீபதியாக்கிக் கிரீடமுஞ் சூட்டினர், 30

(ஸ்ரீ - வீர - அ கை.) பழைய மந்திரிமார் வந்து வேண்டல்:—பகீரதன் என்பது.

பகீரதன ரசனாகிப் பலபெருஞ் சேனைசூழ
மகிதலம் புரத்தல் கேட்டு வந்தனர் பண்டைநாட்டோர்
விகிதமாய் நீ முன்வைத்த வெம்முடைவேந்தன்வீந்தான்
அகிலரும் களைகண்காணே மரசனீயாதல் வேண்டும்.

(ப - ரை.) பகீரதன் அரசனாகி = பகீரதராஜன் மன்னவனாகி, பல பெருஞ் சேனை சூழ = நாலுவகையாகப் பெருத்த கடற்படை சூழ்ந்துவர, மகிதலம் புரத்தல் கேட்டு = பூமண்டலம் ரக்ஷித்தல் கேட்டு, வந்தனர் பண்டைநாட்டோர் = பழைய மண்டலத்திருந் தவர் வந்து சேர்ந்தனர், விகிதமாய் நீ முன்வைத்த = விதிப்படி தாங்கள் முன்னர் அரச னாகவைத்த, எம்முடை வேந்தன் வீந்தான் = எங்களுடைய மன்னவன் இறந்துபோனான், அகிலரும் களைகண் காணேம் = நாங்களியாவரும் ஆதரவேதனையும் கண்டிலேம், அரசன் நீ யாதல்வேண்டும் = மன்னவனாகத் தாங்களே யாதல் வேண்டும் என்று பிரார்த்தித்தார்,

(ஸ்ரீ - வீர.) பகீரதமன்னவன் கணப்போதிலேயே, மழைகாலத்தில் நீரினாற் சரமே போல; பெருத்த சேனையினாலே சூழப்பெற்றவனாகி மகத்தான பட்டத்து யானையின்மீது விரைவிலாரோகணித்தான்; ஜகந்நாதனாகிய பகீரதராஜன் நீடூழி வெற்றியுடன் வாழ்க வென்னும் ஜனங்களினுடைய சப்தங்களானே பர்வத இந்திரர்களின் பெருங் குகைகள் யாவும் இடைவீடின்றியதாகிய பூரணத் தன்மையை யடைந்தனவாம்; அதே காலத்தில் தைவகதியாகக் கோசல ராஜ்ஜியமாண்டுவந்த மன்னவனும் மாண்டுபோகவே அயோத்தியி லுள்ள மந்திரி பிரதானியரும், பகீரத மன்னவனிடத்தில் வந்து பிரார்த்தனை செய்தா ரெனல்:—வந்தனர் என்பதாதி ஆண்டு அந்த இராஜ்ஜியத்தை யாண்டுகொண் டிருக்கும் பகீரத மன்னவனை நோக்கி அவ்வரசனுடைய பழைய மந்திரி, புரோகிதர்களாதிய பிரஜை களே மிகுந்த ஆதரவுடன் றேடிவந்து பணிந்து நராதிபதியை நோக்கி யிவ்வாறு விண்ணப் பித்துக்கொண்டார்கள்; பிரகிருதிகள் கூறல்: ஹே மகாராஜாவே, முன்னர்த் தாங்கள் தங்க ளுடைய தேசத்தைத் தியாகித்து வரும்போது முன்னர்த் தங்களால் இராஜ்ஜிய அபிடேகம் செய்யப் பெற்றுக்கொண்ட எல்லைப்புரத் தரசனான பகைவன் என்னும் எங்களுடைய அதி பன் மிருத்யுவினாலே விழுங்கப் பெற்றான், மிருதுவான தசைமீனைப்போலும்; அக்கார ணத்தினாலே அந்தப் பண்டைய தேசத்தையும் காப்பாற்றும் பொருட்டுத் திருவருள் செய்ய வேண்டும். (31)

(ஸ்ரீ - வீர - அ - கை.) என்று வேண்டிக்கொண்ட அவர்கள் மேலும் வேண்டிக் கொள்ள அரசன் சம்மதித்து அத்தேசத்தையும், சேர்த்தாண்டு பின் ஸ்ரீ கங்கையைக் கொணர்ந்து பிதுர்க்களை யுய்வித்தா னெனல்:—விருப்பு மச்சரமென்பன.

விருப்பறத் தானேவந்த வெறுக்கையை வெறுக்கை நன்றன்
றுருப்படல் வேண்டுமென்றே யுள்ளன்பால் வேண்டக் கண்டு
திருப்பொலி மார்பன் சென்று திண்புவி சேரவாண்டா
விருப்புழி மௌனஞ் சாந்தி சமமெய்தி யிராகமின்றி,
மச்சரமின்றி வந்த தொழிலொன்றின் வழியினின்று
மெச்சிய வியப்பிலாதோன் மிகுந்த பல்லாண்டு போற்றுத்
துச்சமி றவத்தாற் கங்கை கொணர்ந்துதொல் பிதாக்களுய்ய
விச்சகமிசையே கீர்த்தி யீறற நிறுத்தினானே.

(ப -ரை.) விருப்பறத் தானேவந்த = இச்சையில்லாமல் தானே வந்துற்ற, வெறுக் கையை வெறுக்கை நன்றன்று = இலாபத்தை யுபேக்ஷைசெய்தல் நலமல்ல, ஒருப்படல் வேண்டும்=அங்கீகரித்தல் வேண்டும்; என்றே யுள்ளன்பால் வேண்டக் கண்டு = என்ப தாகத் தானே ஆதரபக்தியுடன் பிரார்த்திக்க நோக்கி, திருப்பொலி மார்பன் = அஷ்ட லக்ஷ்மியும் வாசஞ்செய்யப் பெற்ற அந்தப் பகீரத மன்னவன், சென்று = அங்குபோய்க் கிரீடஞ்சூடி, திண்புவி சேரவாண்டான்=பெருத்த பூமண்டலத்தையும் பொருந்தி யாளுகை செய்தான், இருப்புழி = அவ்வாறு ஆண்டுகொண் டிருக்கும்போது, மௌனம் சாந்தி சம மெய்தி = அதிக வார்த்தை யாடாதவனும் சம திருஷ்டியையும் சாந்த மனத்தினையும் அடைந்து, இராகமின்றி = இச்சை யில்லாமல்;

மச்சரமின்றி = பொறாமை யின்றி, வந்த தொழிலொன்றின் வழியினின்று=தானே வந்த கிரியாமார்க்கத்தின் மாத்திரம் பிரவிர்த்தித்து, மெச்சிய வியப்பிலாதோன் = புகழா நின்ற விஸ்மயத்தை யடையாதவனும், மிகுந்த பல்லாண்டு நோற்று = வெகுகாலம் ஸ்ரீமகா தேவரைக் குறித்துத் தவம் புரிந்து, துச்சமில் தவத்தால் = அளவில்லாத அந்தத் தவத்தி னாலே, கங்கைகொணர்ந்து = ஸ்ரீ கங்காதேவியைக் கொண்டுவந்து, தொல் பிதாக்களுய்ய =பழைய பிதுர்க்கள் ஈடேற, இச்சகமிசையே கீர்த்தி யீறற நிறுத்தினனே = இந்த உலகத் தின்கண் வியந்தோதலை யந்தமில்லாமல் நிலைபெறச் செய்தான் என்பது தனிபேயாம்.

(ஸ்ரீ - வீர.) பிரார்த்திக்காமலே வந்த பதார்த்தங்களின்றி யாகம் உசிதமாகாதாம்; ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்: இந்தப்பிரகாரம் நன்கு பிரார்த்திக்கப் பெற்ற அந்தப் பகீரத மன்னவன் அவர்களது வேண்டுதலை யங்கீகரித்ததுபோலவே அந்த ராஜ்ஜியத்தையும் சுவீ கரித்தாண்டான், சப்தசாகரஞ்சூழ்ந்த பூமண்டல முழுவதற்குமே மன்னவனாகி விளங்கினன் சமனாகி, சாந்தமனத்தினனாகி, மௌனியாகி = மிதஹித சத்தியவாக்கினனாகி, இராகமற்றவ னாகி, மற்சரமற்றவனாகி, அடைவுற்ற காரியமொன்றையே யனுட்டிப்பவனாய், தத்துவ ஞானத்தினாலே பாதிதவிஸ்மயனாய், அதாவது மகத்தாகிய கௌதுகத்தும் ஆச்சரிய மதி யற்றவனாய், அம்மன்னவ னிருந்தான். குதிரையைத் தேடும்பொருட்டுப் பூமியைத்தோண் டுதலானே சாகராகாரமாய குழியைச் செய்யுஞ் சீலம் வாய்ந்தவரும், ஸ்ரீகபில மகரிஷியின் கோபாக்கினியினாலே பாதாலதலத்தில் நஷ்டமாகிப் பஸ்மீபூதமாயவரும் ஆகிய தனது பிதா மகர்கட்கு, ஸ்ரீகங்காதீர்த்தமானது, மூழ்குவித்தலாலும் ஜல யஞ்சலிதானத்தாலும் ஈடேற் றத்தக்கது, பிராகிருததீர்த்தம் அத்தகையது அன்று என்றுள்ள கருடனது இனியவசன மானது ஜனபரம்பரையால் அவ்வரசனாற் கேட்கப்பெற்றது. அப்போது பூதலத்தில் ஸ்ரீ கங்கையானது இருந்ததேயாகும்,

ஆண்டே ஜலாஞ்சலி ஏன் கொடுக்கவில்லையென் றாசங்கித்துக்கூறல்:—அக்காலோ அவர்க் கதரங்கணி பூதலத்தில் எழுந்தருளவில்லை, அந்தப் பகீரத மன்னவனாலேயே அன்னிய பிதுர்க்கட்கும், ஸ்ரீகங்காஜலாஞ்சலியானது நன்குண்டாயது, என்னும் பிரக்கியாதியை யுடையதாக ஆயது. அதைக்கேட்ட தினமே முதலாக, பூகாவலனாகிய பகீரத இறைவ னாலே, ஸ்ரீகங்கையை விண்ணினின்றும் கொண்டுவரும் பொருட்டு நியமமானது கொள்ளப் பெற்றது. அதன்பின்னர் இராஜ்ஜியத்தை மந்திரிகளிடத்தில் ஒப்புவித்துவிட்டு சமியாகிய பூபதியானவன் ஸ்ரீகங்காவதரணகாரியப்பொருட்டு எத்தபம் முதலிய காரியமுளதோ அதன்பொருட்டாக வேண்டிய சேஷ்டை யுடையவனாகிப் பெருந்தவம்புரிவான் விஜன வனத்தை நோக்கிச் சென்றான். ஆண்டுவருட சகத்திரங்களாலும் மீளமீளவும், ஸ்ரீபிரஹ்மா

சங்கரர் கங்கை ஜன்னு முதலியோரை நன்காராதித்துப் பூமண்டலத்தில் ஸ்ரீகங்கையை யெழுந்தருளுமாறு செய்வித்துப் பொருத்தினன், அதுமுதலாகவே அமலதரங்கபங்கினியும், உலகநாயகனுகிய ஸ்ரீ சந்திரசேகர மகாதேவரது திருச்சிரத்தின்கண் ஆரோகணித்துப் பிரவாகித்தருளுபவளும், மகான்மாக்களினது பகுபுண்ணிய சந்ததிபோன்றவளும் ஆகிய திரிமார்க்கையாம் ஸ்ரீகங்காதேவியானவள், ஜகத்பதியாகிய ஸ்ரீபிரஹ்மாவினுடைய ஏவுதலாலும் சிவாஞ்ஞையினுலும், விண்டலத்தினின்றும் மண்டலத்தில் வந்தருளுபவளாயினள்; சுவர்க்கிகளாகிய மகாத்மாக்களினது வெகு புண்ணிய சந்ததியேபோலும். விளங்காநின்ற தரங்க விளையாட்டுடையவளாயும், பேனக்கூட்ட நகைப்பினளாயும், தெளிந்த புண்ணியப்பூங்கொத்தாயும், தருமசந்ததியுற்றவள் போன்றவளாயும், பகிரதமகீபதியி னிடத்தி லுண்டாய சாசுவதமாய கீர்த்தியினது பிரசாரப்பொருட்டு கடல்வரையும் வீதிகையாயும் விளங்கும், திரிமார்க்கையாகிய ஸ்ரீகங்காதேவியானவள் அதுமுதலாகவே பூமண்டலத்தில் யாவருடைய பாவங்களையும் தீர்த்துக்கொண்டு இருந்தருளினள்; அதுமுதலாகவே ஸ்ரீமகாதேவருக்கும் ஸ்ரீகங்காதரர் என்னும் திருநாமமுற்றதைச் சிவமகிமையிலுங் காணலாம்:—அந்தரி மறைத்திடுக்கணமணி செய்பேனவழகார்பெருகும் வாரியெதுவோர், பிந்துவினுமணுவெனுவைய நின்சென்னிமிசை பிறழாது காணுமதனுற், சிந்துவலயந்தரணியதுதனைத் தீபவுருசெய்யு மிக்குறியிலேயே, சுந்தரவருட்டிவ்ய வுனதுவடிவ்வுரு மகத்துருவதென வுன்னுவேமால். மூவுலகத்தையும் வியாபித்தொளிரும் ஸ்ரீகங்காதேவியானவள், தேவரீருடைய சடாபாரத்தில் ஏகதேசத்தில் விலயமாய அணுவெனில் தேவரீருடைய திருமேனியின் வைபவம் எத்தகையதோ என்பதாம்-

(ச.) ஒருப்படல் வேண்டும், ஸ்ரீ வசிட்டர், என்றே இத்தன்கமமாக, பண்டைநாட்டோர் என்னும் மந்திரிமுதலானவர் தொல்பிதிர்க்கள் = பிதாமகர்கள் என்னும் சகரதனயர், உய்ய = நரகத்தினின்றுங் கரையேற, தொல்பிதாக்கள் என்பதற்கும் இதுவே பொருள். யசப்பிரசாரவீதிகை = பகீரதனது கீர்த்தி சஞ்சாரமார்க்கம், (32-33)

பகீரதன்கதை முற்றிற்று.

---

## சிகித்துவசன் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீவசிஷ்டபகவான் கூறியபொருள் திடமாகும் பொருட்டுச் சிகித்துவசன் கதையைத் தொடங்கலும் ஸ்ரீ இராகவர் வினுதலும்:—வகிர்த்தென்பது.

(ச-அ-கை) முன்பு துர்லபமாயினும் சித்த விசிராந்தி தனது பிரயத்தனத்தினுலே பெறப்படுமெனத் தெரிவித்தற்கு பகிரதன் கதை சொல்லப்பட்டது, இப்போது, பிரதிபந்தகபாவம் நசியாவிடின் துர்லபமாயினும் சுவான்மஞானம், ஆசாரியரது பிரயத்தினவதிசயத்தினுற் பெறலாமெனத் தெரிவித்தற்கு அநேககதையை யுட்கொண்ட சிகித்துவசன் கதை யாரம்பிக்கப்படுகின்றது. ஸ்ரீவசிஷ்டர், பிரசினுதிசயத்தால் என்றும் பாடம்.

வகிர்த்துநிமிர் மனமென்னு மாப்பறவை தனைமுன்னமாற்றி யோட்டிச்
சிகித்துவசன் றனைப்போலச் சாந்தனு யுன்னிடத்தே செறிவாயென்ன
சுகித்துணர்வி னின்றுளவச் சிகித்துவச னுரையா சொல்வாயெல்லாஞ்
சகித்துணர்வு மேன்மேலு நிறைவதற்கென் றவன் கேட்பத் தவனுஞ் சொல்வான்.

(ப - ரை.) வகிர்த்துகிமிர் = விடயங்களை நினைந்து நினைந்து எழாநின்ற, மனமென்னும் மாப்பறவைதனை = உள்ளம் என்ற அதிவேகமான பக்ஷியை, முன்னம் = பூர்வம், மாற்றியோட்டி = அதனுடைய விடமச்செயலை மாறுபடுத்தி யுள்ளே முடுக்கி, சிகித்துவசன்றனைப்போல = சிகித்துவசன் என்னும் மன்னவனைப்போல, சாந்தனாயுன்னிடத்தே செறிவாயென்ன = உபசாந்தி யுடையவனாகி யாத்ம சொரூபத்திலேயே பொருந்துவாயென்று ஸ்ரீவசிஷ்டபகவான் கூற, சுகித்துணர்வினின்றுள = ஆனந்தித்து அறிவில் இளைப்பாறிய, அச்சிகித்துவசன் ஆரையா = அந்தச் சிகித்துவராஜன் யார் எனது குருமூர்த்தியே, சொல்வாயெல்லாம் = கூறுவாய் இயாவற்றையும், சகித்து = பொறுத்து, உணர்வு = அறிவு, மேல்மேலும் = அதிகமதிகமாக, நிறைவதற்கென்று = பூரணமாவதற்கு என, அவன் கேட்ப = ஸ்ரீஇராகவர் வினவ, தவனும் சொல்வான் = அருந்தவ ஸ்ரீவசிஷ்டபகவானும் கூறுவாராயினர்.

(ஸ்ரீ - வீர.) பகீரதமன்னவனால், பின் ராஜ்ஜியகாலத்தில் மதியால் தரிக்கப்பெற்ற இத்திருஷ்டியைப் பற்றிக்கொண்டு சமனாய்ச் சொஸ்தனாய்ச் சாந்தமதியினனாய், அடைந்தபடியாய காரியத்தையேற்றுச் செய்வாயாக; பூர்வம், இந்த ஐசுவரிய சமுதாயத்தைப் பரித்தியாகித்து, மனமாம் பறவையை அடக்கி இருதயத்திலேயேயிருவி, சாந்தத்தை யடைந்த சிகித்துவசனைப்போல நீயும் அசலனாகி யான்மாவின்கண்ணிருத்தி; என்று ஸ்ரீவசிஷ்டபகவான்கூற, ஸ்ரீஇராகவர் வினாதல்:—ஹே பிரஹ்மசொரூபரே! அந்தச் சிகித்துவசமன்னவன் யாவன், எங்ஙனந்தான் பரமபதத்தை யடைந்தவனாயினான், என்பதனைத் தாங்கள் மறுபடியும் மெய்புணர்வு விருத்தியாகும் பொருட்டு அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டும்.

(ச.) முன்னம், பிரபஞ்சதிருஷ்டியையும், அதன் வாசனையையும், மாற்றி = விட்டு, மனமென்னும் மாப்பறவைதனை, பக்ஷிபோற் சுழலும் சிலமுள்ள மனத்தை, ஓட்டும் = ஏகநிஷ்டையுறச்செய்யும், சிகித்துவசனைப்போற் சுகந்தனாய், உன்னிடத்தே = ஆன்மாவின்கண்ணே; செறிவாய் = அசலனாயிருப்பாய். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிகித்துவஜனுடைய காலத்தையும் பெருமையையும் உயர்குணங்களையும் கூறல்:—துவாபரமென்பது.

துவாபரமா முகத்துமுத லுண்டானோ னேழுமனுத் துஞ்சுமெல்லை
திவாகரனேர் மாளவதே சத்திறைவன் சிகித்துவசன் செங்கோல்வேந்தன்
அவாமுதறீக் குணமில்லோ னுதாரமுத னற்குணங்க ளனைத்துமுள்ளோன்
விவாதமறு மோனத்தோன் சமதமமாங் குணநிறைந்தோன் மிகவுநல்லோன்.

(ப - ரை.) துவாபரமாம் உகத்து முதலுண்டானோன் = துவாபரயுக ஆதியிலுண்டாயினோன், ஏழுமனுத்துஞ்சுமெல்லை = சப்தமனு சாந்தமானபோது, திவாகரனேர் = சூரியனுக்குச் சமானமாக, மாளவதேசத்திறைவன் = மாளவதேசத்திற்கு அதிபதி, சிகித்துவசன் = சிகித்துவசன் என்னும் பெயர் வாய்ந்தவன், செங்கோல் வேந்தன் = தரும ராஜன், அவாமுதல் தீக்குணமில்லோன் = பேராசை முதலிய தீயகுணங்கள் இல்லாதவன், உதாரமுதல் நற்குணங்கள் அனைத்தும் உள்ளோன் = உதாரமே முதலிய நல்ல குணங்கள் எல்லாம் உடையவன், விவாதமறுமோனத்தோன் = ஆவசியகமில்லாத காரியத்தில் சண்டைசெய்யாத அளவுறு மொழியோன், சமதமமாங்குண நிறைந்தோன் = சம

சங்கரர் கங்கை ஜன்னு முதலியோரை நன்காராதித்துப் பூமண்டலத்தில் ஸ்ரீகங்கையை யெழுந்தருளுமாறு செய்வித்துப் பொருத்தினன், அதுமுதலாகவே அமலதரங்கபங்கினியும், உலகநாயகனாகிய ஸ்ரீ சந்திரசேகர மகாதேவரது திருச்சிரத்தின்கண் ஆரோகணித்துப் பிரவாகித்தருளுபவளும், மகான்மாக்களினது பகுபுண்ணிய சந்ததிபோன்றவளும் ஆகிய திரிமார்க்கையாம் ஸ்ரீகங்காதேவியானவள், ஜகத்பதியாகிய ஸ்ரீபிரஹ்மாவினுடைய ஏவுதலாலும் சிவாஞ்ஞையினாலும், விண்டலத்தினின்றும் மண்டலத்தில் வந்தருளுபவளாயினள்; சுவர்க்கிகளாகிய மகாத்மாக்களினது வெகு புண்ணிய சந்ததியேபோலும். விளங்காநின்ற தரங்க விளையாட்டுடையவளாயும், பேனக்கூட்ட நகைப்பினளாயும், தெளிந்த புண்ணியப்பூங்கொத்தாயும், தருமசந்ததியுற்றவள் போன்றவளாயும், பகீரதமகீபதியினிடத்தி லுண்டாய சாசுவதமாய கீர்த்தியினது பிரசாரப்பொருட்டு கடல்வரையும் வீதிகையாயும் விளங்கும், திரிமார்க்கையாகிய ஸ்ரீகங்காதேவியானவள் அதுமுதலாகவே பூமண்டலத்தில் யாவருடைய பாவங்களையும் தீர்த்துக்கொண்டு இருந்தருளினள்; அதுமுதலாகவே ஸ்ரீமகாதேவருக்கும் ஸ்ரீகங்காதரர் என்னும் திருநாமமுற்றதைச் சிவமகிமையிலுங் காணலாம்:—அந்தர் மறைத்திடுக்கணமணி செய்பேனவழகார்பெருகும் வாரியெதுவோர், பிந்துவினுமணுவெனுவைய நின்சென்னிமிசை பிறழாது காணுமதனாற், சிந்துவலயந்தரணியதுதனைத் தீபவுருசெய்யு மிக்குறியிலேயே, சுந்தரவருட்டிவ்ய வுனதுவடிவுரு மகத்துருவதெனவுன்னுவேமால். மூவுலகத்தையும் வியாபித்தொளிரும் ஸ்ரீகங்காதேவியானவள், தேவரீருடைய சடாபாரத்தில் ஏகதேசத்தில் விலயமாய அணுவெனில் தேவரீருடைய திருமேனியின் வைபவம் எத்தகையதோ என்பதாம்-

(ச.) ஒருப்படல் வேண்டும், ஸ்ரீ வசிட்டர், என்றே இத்தன்ஊமபாக, பண்டைநாட்டோர் என்னும் மந்திரிமுதலானவர் தொல்பிதிர்க்கள் = பிதாமகர்கள் என்னும் சகரதனயர், உய்ய = நரகத்தினின்றுங் கரையேற, தொல்பிதாக்கள் என்பதற்கும் இதுவே பொருள். யசப்பிரசாரவீதிகை = பகீரதனது கீர்த்தி சஞ்சாரமார்க்கம், (32-33)

பகீரதன்கதை முற்றிற்று.

---

## சிகித்துவசன் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீவசிஷ்டபகவான் கூறியபொருள் திடமாகும் பொருட்டுச் சிகித்துவசன் கதையைத் தொடங்கலும் ஸ்ரீ இராகவர் வினவுதலும்:—வகிர்த்தென்பது.

(ச-அ-கை) முன்பு துர்லபமாயினும் சித்த விசிராந்தி தனது பிரயத்தனத்தினாலே பெறப்படுமெனத் தெரிவித்தற்கு பகீரதன் கதை சொல்லப்பட்டது, இப்போது, பிரதிபந்தகபாவம் நசியாவிடின் துர்லபமாயினும் சுவான்மஞானம், ஆசாரியாது பிரயத்தின வதிசயத்தினாற் பெறலாமெனத் தெரிவித்தற்கு அநேககதையை யுட்கொண்ட சிகித்துவசன் கதை யாரம்பிக்கப்படுகின்றது. ஸ்ரீவசிஷ்டர், பிரசினாதிசயத்தால் என்றும் பாடம்.

வகிர்த்துநிமிர் மனமென்னு மாப்பறவை தனைமுன்னமாற்றி யோட்டிச்
சிகித்துவசன் றனைப்போலச் சாந்தனாயுன்னிடத்தே செறிவாயென்ன
சுகித்துணர்வி னின்றுளவச் சிகித்துவசனுயாரெனச் சொல்வாயெல்லாஞ்
சகித்துணர்வு மேன்மேலு நிறைவதற்கென்றவன் கேட்பத் தவனுஞ் சொல்வான்.

(ப - ரை.) வகிர்த்துமிர் = விடயங்களை நினைந்து நினைந்து எழாநின்ற, மனமென்னும் மாப்பறவைதனை = உள்ளம் என்ற அதிவேகமான பக்ஷியை, முன்னம் = பூர்வம், மாற்றியேசட்டி = அதனுடைய விடமச்செயலை மாறுபடுத்தி யுள்ளே முடுக்கி, சிகித்துவசன்றனைப்போல = சிகித்துவசன் என்னும் மன்னவனைப்போல, சாந்தனுயுன்னிடத்தே செறிவாயென்ன = உபசாந்தி யுடையவனுகி யாத்ம சொரூபத்திலேயே பொருந்துவாயென்று ஸ்ரீவசிஷ்டபகவான் கூற, சுகித்துணர்வினின்றுள = ஆனந்தித்து அறிவில் இளைப்பாறிய, அச்சிகித்துவசன் ஆரையா = அந்தச் சிகித்துவராஜன் யார் எனது குருமூர்த்தியே, சொல்வாயெல்லாம் = கூறுவாய் இயாவற்றையும், சகித்து = பொறுத்து, உணர்வு = அறிவு, மேல்மேலும் = அதிகமதிகமாக, நிறைவதற்கென்று = பூரணமாவதற்கு என, அவன் கேட்ப = ஸ்ரீ இராகவர் வினவ, தவனும் சொல்வான் = அருந்தவ ஸ்ரீ வசிஷ்டபகவானும் கூறுவாராயினர்.

(ஸ்ரீ - வீர.) பகீரதமன்னவனுல், பின் ராஜ்ஜியகாலத்தில் மதியால் தரிக்கப்பெற்ற இத்திருஷ்டியைப் பற்றிக்கொண்டு சமனுச் சொஸ்தனுய்ச் சாந்தமதியினனுய், அடைந்தபடியாய காரியத்தையேற்றுச் செய்வாயாக; பூர்வம், இந்த ஐசுவரிய சமுதாயத்தை பரித்தியாகித்து, மனமாம் பறவையை அடக்கி இருதயத்திலேயேகிறுவி, சாந்தத்துடனிருந்த சிகித்துவசனைப்போல நீயும் அசலனுகி யான்மாவின்கண்ணிருத்தி; என்று ஸ்ரீ வசிஷ்டபகவான்கூற, ஸ்ரீ இராகவர் வினுதல்:—ஹே பிரஹ்மசொரூபரே! அந்தச் சிகித்துவசமன்னவன் யாவன், எங்ஙனந்தான் பரமபதத்தை யடைந்தவனுயினன், என்பதனைத் தாங்கள் மறுபடியும் மெய்புணர்வு விருத்தியாகும் பொருட்டு அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டும்.

(சு.) முன்னம், பிரபஞ்சதிருஷ்டியையும், அதன் வாசனையையும், மாற்றி = விட்டு, மனமென்னும் மாப்பறவைதனை, பக்ஷிபோற் சுழலும் சிலமுள்ள மனத்தை, ஓட்டும் = ஏகநிஷ்டையுறச்செய்யும், சிகித்துவசனைப்போற் சுசாந்தனுய், உன்னிடத்தே = ஆன்மாவின் கண்ணே; செறிவாய் = அசலனுயிருப்பாய். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிகித்துவஜனுடைய காலத்தையும் பெருமையையும் உயர் குணங்களையும் கூறல்:—துவாபரமென்பது.

துவாபரமா முகத்துமுத லுண்டானே னேழுமனுத் துஞ்சுமெல்லை
திவாகரனேர் மாளவதே சத்திறைவன் சிகித்துவசன் செங்கோல்வேந்தன்
அவாமுதறீக் குணமில்லோ னுதாரமுத னற்குணங்க ளனைத்துமுள்ளோன்
விவாதமறு மோனத்தோன் சமதமமாங் குணநிறைந்தோன் மிகவுநல்லோன்.

(ப - ரை.) துவாபரமாம் உகத்து முதலுண்டானேன் = துவாபரயுக ஆதியிலுதித்தமாயினேன், ஏழு மனுத்துஞ்சுமெல்லை = சப்தமனு சாந்தமானபோது, திவாகரனேர் = சூரியனுக்குச் சமானமாக, மாளவதேசத்திறைவன் = மாளவதேசத்திற்கு அதிபதி, சிகித்துவசன் = சிகித்துவசன் என்னும் பெயர் வாய்ந்தவன், செங்கோல் வேந்தன் = தருமராஜன், அவாமுதல் தீக்குணமில்லோன் = பேராசை முதலிய தீயகுணங்கள் இல்லாதவன், உதாரமுதல் நற்குணங்கள் அனைத்தும் உள்ளோன் = உதாரமே முதலிய நல்ல குணங்கள் எல்லாம் உடையவன், விவாதமறுமோனத்தோன் = ஆவசியகமில்லாத காரியத்தில் சண்டைசெய்யாத அளவுறு மொழியோன், சமதமமாங்குண நிறைந்தோன் = சமம்

சங்கரர் கங்கை ஜன்னு முதலியோரை நன்காராதித்துப் பூமண்டலத்தில் ஸ்ரீகங்கையை யெழுந்தருளுமாறு செய்வித்துப் பொருத்தினன், அதுமுதலாகவே அமலதரங்கபங்கினியும், உலகநாயகனாகிய ஸ்ரீ சந்திரசேகர மகாதேவரது திருச்சிரத்தின்கண் ஆரோகணித்துப் பிரவாகித்தருளுபவளும், மகான்மாக்களினது பகுபுண்ணிய சந்ததிபோன்றவளும் ஆகிய திரிமார்க்கயாம் ஸ்ரீகங்காதேவியானவள், ஜகத்பதியாகிய ஸ்ரீபிரஹ்மாவினுடைய ஏவுதலாலும் சிவாஞ்ஞையினாலும், விண்டலத்தினின்றும் மண்டலத்தில் வந்தருளுபவளாயினள்; சுவர்க்கிகளாகிய மகாத்மாக்களினது வெகு புண்ணிய சந்ததியேபோலும். விளங்காநின்ற தரங்கவிளையாட்டுடையவளாயும், பேனக்கூட்ட நகைப்பினளாயும், தெளிந்த புண்ணியப்பூங்கொத்தாயும், தருமசந்ததியுற்றவள் போன்றவளாயும், பகீரதமகீபதியினிடத்தி லுண்டாய சாசுவதமாய கீர்த்தியினது பிரசாரப்பொருட்டு கடல்வரையும் வீதிகையாயும் விளங்கும், திரிமார்க்கையாகிய ஸ்ரீகங்காதேவியானவள் அதுமுதலாகவே பூமண்டலத்தில் யாவருடைய பாவங்களையும் தீர்த்துக்கொண்டு இருந்தருளினள்; அதுமுதலாகவே ஸ்ரீமகாதேவருக்கும் ஸ்ரீகங்காதரர் என்னும் திருநாமமுற்றதைச் சிவமகிமையிலுங் காணலாம்:—அந்தரமறைத்திடுக்கணமணி செய்பேனவழகார்பெருகும் வாரியெதுவோர், பிந்துவினுமணுவெனுவைய நின்சென்னிமிசை பிறழாது காணுமதனற், சிந்துவலயந்தரணியதுதனைத் தீபவுருசெய்யு மிக்குறியிலேயே, சுந்தரவருட்டிவ்ய வுனதுவடிவுரு மகத்துருவதெனவுன்னுவேமால். மூவுலகத்தையும் வியாபித்தொளிரும் ஸ்ரீகங்காதேவியானவள், தேவரீருடைய சடாபாரத்தில் ஏகதேசத்தில் விலயமாய அணுவெனில் தேவரீருடைய திருமேனியின் வைபவம் எத்தகையதோ என்பதாம்-

(ச.) ஒருப்படல் வேண்டும், ஸ்ரீ வசிட்டர், என்றே இத்தன்மைமபாக, பண்டைநாட்டோர் என்னும் மந்திரிமுதலானவர் தொல்பிதிர்க்கள் = பிதாமகர்கள் என்னும் சகரதனயர், உய்ய = நரகத்தினின்றுங் கரையேற, தொல்பிதாக்கள் என்பதற்கும் இதுவே பொருள். யசப்பிரசாரவீதிகை = பகீரதனது கீர்த்தி சஞ்சாரமார்க்கம், (32-33)

பகீரதன்கதை முற்றிற்று.

---

## சிகித்துவசன் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீவசிஷ்டபகவான் கூறியபொருள் திடமாகும் பொருட்டுச் சிகித்துவசன் கதையைத் தொடங்கலும் ஸ்ரீ இராகவர் வினாதலும்:—வகிர்த்தென்பது.

(ச-அ-கை) முன்பு துர்லபமாயினும் சித்த விசிராந்தி தனது பிரயத்தனத்தினாலே பெறப்படுமெனத் தெரிவித்தற்கு பகிரதன் கதை சொல்லப்பட்டது, இப்போது, பிரதிபந்தகபாவம் நசியாவிடின் துர்லபமாயினும் சுவான்மஞானம், ஆசாரியரது பிரயத்தினவதிசயத்தினாற் பெறலாமெனத் தெரிவித்தற்கு அநேககதையை யுட்கொண்ட சிகித்துவசன் கதை யாரம்பிக்கப்படுகின்றது. ஸ்ரீவசிஷ்டர். பிரசினாதிசயத்தால் என்றும் பாடம்.

வகிர்ந்துநியிர் மனமென்னுமாப்பறவை தனைமுன்னமாற்றி யோட்டிச்
சிகித்துவசன் றனைப்போலச் சாந்தனு யுன்னிடத்தே செறிவாயென்ன
சுகித்துணர்வி னின்றுளவச் சிகித்துவசனையா சொல்வாயெல்லாஞ்
சுகித்துணர்வு மேன்மேலு நிறைவதற்கென் றவன்கேட்பத் தவனுஞ்சொல்வான்.

(ப - ரை.) வகிர்த்துங்கியிர் = விடயங்களை நினைந்துநினைந்து எழாநின்ற, முனமென்னும் மாப்பறவைதனை = உள்ளம் என்ற அதிவேகமான பக்ஷியை, முன்னம் = பூர்வம், மாற்றியோட்டி = அதனுடைய விடமச்செயலை மாறுபடுத்தி யுள்ளே முடக்கி, சிகித்துவசன்றனைப்போல = சிகித்துவசன் என்னும் மன்னவனைப்போல, சாந்தனாயுன்னிடத்தே செறிவாயென்ன = உபசாந்தி யுடையவனாகி யாத்மசொரூபத்திலேயே பொருந்துவாயென்று ஸ்ரீவஸிஷ்டபகவான் கூற, சுகித்துணர்வினின்றுள = ஆனந்தித்து அறிவில் இளைப்பாறிய, அச்சிகித்துவசன் ஆரையா = அந்தச் சிகித்துவராஜன் யார் எனது குருமூர்த்தியே, சொல்வாயெல்லாம் = கூறுவாய் இயாவற்றையும், சகித்து = பொறுத்து, உணர்வு = அறிவு, மேல்மேலும் = அதிகமதிகமாக, நிறைவதற்கென்று = பூரணமாவதற்கு என, அவன் கேட்ப = ஸ்ரீஇராகவர் வினவ, தவனும் சொல்வான் = அருந்தவ ஸ்ரீவஸிஷ்டபகவானும் கூறுவாராயினர்.

(ஸ்ரீ - வீர.) பகீரதமன்னவனால், பின் ராஜ்ஜியகாலத்தில் மதியால் தரிக்கப்பெற்ற இத்திருஷ்டியைப் பற்றிக்கொண்டு சமனாய்ச் சொஸ்தனாய்ச் சாந்தமதியினனாய், அடைந்தபடியாய காரியத்தையேற்றுச் செய்வாயாக; பூர்வம், இந்த ஐசுவரிய சமுதாயத்தைப் பரித்தியாகித்து, மனமாம் பறவையை அடக்கி இருதயத்திலேயேகிறுவி, சாந்தத்தையுடைந்து சிகித்துவசனைப்போல நீயும் அசலனாகி யான்மாவின்கண்ணிருத்தி; என்று ஸ்ரீவஸிஷ்டபகவான்கூற, ஸ்ரீஇராகவர் வினுதல்:—ஹே பிரஹ்மசொரூபரே! அந்தச் சிகித்துவசமன்னவன் யாவன், எங்ஙனந்தான் பரமபதத்தை யடைந்தவனாயினன், என்பதனைத் தாங்கள் மறுபடியும் மெய்புணர்வு விருத்தியாகும் பொருட்டு அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டும்.

(க.) முன்னம், பிரபஞ்சதிருஷ்டியையும், அதன் வாசனையையும், மாற்றி = விட்டு, மனமென்னும் மாப்பறவைதனை, பக்ஷிபோற் சுழலும் சலமுள்ள மனதை, ஓட்டும் = ஏகநிஷ்டையுறச்செய்யும், சிகித்துவசனைப்போற் சுகந்தனாய், உன்னிடத்தே = ஆன்மாவின் கண்ணே; செறிவாய் = அசலனாயிருப்பாய். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிகித்துவஜனுடைய காலத்தையும் பெருமையையும் உயர் குணங்களையும் கூறல்:—துவாபரமென்பது.

துவாபரமா முகத்துமுத லுண்டானே னேழுமனுத் துஞ்சுமெல்லை
திவாகரனேர் மாளவதே சத்திறைவன் சிகித்துவசன் செங்கோல்வேந்தன்
அவாமுதறீக் குணமில்லோ னுதாரமுத னற்குணங்க ளனைத்துமுள்ளோன்
விவாதமறு மோனத்தோன் சமதமமாங் குணநிறைந்தோன் மிகவுநல்லோன்.

(ப - ரை.) துவாபரமாம் உகத்து முதலுண்டானேன் = த்வாபரயுக ஆதியிலுதயமாயினேன், எழுமனுத்துஞ்சுமெல்லை = சப்தமனு சாந்தமானபோது, திவாகரனேர் = சூரியனுக்குச் சமானமாக, மாளவதேசத்திறைவன் = மாளவதேசத்திற்கு அதிபதி, சிகித்துவசன் = சிகித்துவசன் என்னும் பெயர் வாய்ந்தவன், செங்கோல் வேந்தன் = தரும ராஜன், அவாமுதல் தீக்குணமில்லோன் = பேராசை முதலிய தீயகுணங்கள் இல்லாதவன், உதாரமுதல் நற்குணங்கள் அனைத்தும் உள்ளோன் = உதாரமே முதலிய நல்ல குணங்கள் எல்லாம் உடையவன், விவாதமறுமோனத்தோன் = அவசியமில்லாத காரியத்தில் சண்டைசெய்யாத அன்புறு மொழியோன், சமதமமாங்குண நிறைந்தோன் = சமம்

த்மை முதலிய குணங்களால் அலங்கரிக்கப்பெற்றவன், மிகவும் நல்லோன் = அத்தியந்தம் நல்லவன்.

(ஸ்ரீ - வீர.) ஏழாவது மனுச்சென்றபோது துவாபரத்திற் பூர்வம், நான்காவது சதுர் யுகத்தில் இச்சருக்கத்தில் குருதேச அதிபதிகளினதூஉம் குரு அபத்தியங்களினதூஉம் வம்சத்தில், உண்டாய அவன், சம்புத்தீவில் வெட்டவெளியாய் விந்தியத்தினது சமீபத்தில்; இராநின்ற மாளவர்களதுபுரத்தில் அதாவது உஜ்ஜயினியில், ஸ்ரீமாந் சிகித்துவசன் என்னும் பெயர்வாய்ந்த அரசனாகி அரசாண்டு வந்தான்; அம்மன்னவன் தைரிய ஔதாரிய தசையோடு கூடியவன், க்ஷமை, சம, தமங்களோடு கூடியவன், சூரவீரன், சோபனநல்லொழுக்கமுடையவன், மௌனி, குணகணங்கட்கிடமானவன், சர்வயாகங்களையும் செய்பவன், வில்வீரர்களையெல்லாம் வெற்றிகொண்டவன். (2)

(ஸ்ரீ-வீர-அ-கை.) சிகித்துவசன் சூடாலையை மணம்புரிந்து சுகித்துவாழ்தல்:—சூடாலையென்பது.

சூடாலையெனுங்கன்னி சுராட்டிரமன் னவனளித்த தோகை போல்வாள்
விடாத நற்குணத்தாற் றனையொப்பா ளவளையவன் விவாகஞ்செய்தான்
வாடாத வினையொன்றிப் பிறிவின்றிச் செய்தொழில்கண் மாறுபாடற்
றீடான பலகலைக்கும் வல்லவரா யிருவருமொத் தினிதுவாழ்ந்தார்.

(பு-ரை.) சூடாலையெனுங் கன்னி = சூடாலையென்னும் மங்கை, சுராட்டிரமன்னவனளித்த தோகை போல்வாள் = சுராட்டிரதேச ராசனீன்ற மயிலியலினள் குயின் மொழியினள், விடாத நற்குணத்தால் தனையொப்பாள் = விடமுடியாத நற்குணங்களானே தனக்குத்தானே சமானமானவள், அவளை = அத்தகைய சுந்தரியை, அவன் = அத்தகைய சுந்தரன், விவாகம் = கலியாணம், செய்தான் = முடித்தான், வாடாத வினையொன்றிப் பிறிவின்றி = வதங்காத எண்ணம்பொருந்தி விபாகமில்லாமல், செய்தொழில்கண் மாறுபாடற்று = செய்யாநின்ற விவகாரங்கள் விபரீதமில்லாமல், ஈடான பல கலைக்கும் = ஒப்பான பலநூற்கட்கும், வல்லவராய் = சமர்த்தராய், இருவருமொத் தினிது வாழ்ந்தார் = இரண்டுபேர்களும் ஒத்தமனத்தினராகி இனிமையாக வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

(ஸ்ரீ - வீர.) பின்னரம்மன்னவன் விவாகப்பொருட்டு மேலான மந்திரிமார்கள், பரஸ்பர அநுராக குணசீலகுலாதிசம்பத்தியை யாராய்ந்துபார்த்து, வேண்ட, சுராஷ்டிரதேச மன்னவன், தாருண்ணியரின் குணகணங்கள் வாய்ந்த கன்னியை வேண்டினன், நவமான யௌவனத்தோடும் வயதோடும்கூடிய உத்தமோத்தமமாகிய, தனக்கொப்பாகிய பதுமை போன்ற அந்த மங்கையை விதிப்பிரகாரம் மனைவியாகவேட்டான்; நிழலும் பிரதிபிம்பமும் போன்ற அநுகூலையாகிய சூடாலையென வுலகப்பிரசித்தமாகிய நிருபதிசுந்தரியானவள் தன் போன்ற அந்நாயகனை யடைந்து விரிந்த தாமரைத்தடாகமேபோல விளங்கினள். கருங்குவளைக் கண்ணழகியாகிய அச்சூடாலையை அச்சிகித்துவன் நேயத்தினால், சூரியதேவன் தாமரைத் தடாகத்தைப்போல விளங்கிடுமாறு செய்வித்தான், மகிழ்ந்திடுமாறு மலர்வித்தான்; அன்னியோன்னியம் அர்ப்பிக்கப்பெற்ற சித்தங்களையுடைய அவர்களின் அன்பானது, நாட்குநாள் வளர்ந்தோங்கியது; நல்லெருதுகளினாலே உழப்பெற்ற க்ஷேத்திரங்களில் இரமணீயமான மழையையுடைய, மேகசசியசம்பத்துக்களின் காந்தங்களுற்ற விண்மண்போன்ற

அவ்விருவருடைய விவகாரங்கட்கு எப்போதுமே பிரிவு இன்மையினானும், அன்பு மிகுதியினானும், பரஸ்பரம் கலைகளின் கலாபத்தின் பண்டிதர்கள் ஆயினார்கள், பரஸ்பரம் இகழ்த்துக்கொண்டமையினானும், பரஸ்பரம் ஒப்பாக வேண்டிக்கொண்டமையானும், பயன்பெற்றமையானும் பிராஞ்ஞர்களாகி, அஞ்ஞான சர்வகுண சாமியத்தானும், அநுராகத்தானே அவ்வடிவவிரஞ்சனத்தானும், ஜீவஜக்கியமேபோல, சம்பன்னமான சொரூபமொன்றே மித்திரத்தன்மையை யடைந்திருந்த அவர்கள் தரித்திருந்தார்கள்.

(சு.) செய்தொழில்கள் = ஒருவருக்கொருவர் பார்வைவசனதிருபக் கிரியைகள், உபல. கலைக்கும் = கீத்வாத்தியநிர்த்தனாதி கலைக்கும். (3)

(ஸ்ரீ-வீர்-அ-கை.) போகங்களைத் துய்க்கத் துய்க்க இன்மைமல் இருவர்பாலும் குறைதல்:—ஈருடல், காதலமென்பன.

ஈருடலுக் கோருயிர்போ லிருவருஞ்சேர்ந் திளமைநல மினிதுதுய்த்தார்
சீருடைய வருடங்க ளிவ்வகையே யெல்லையறச் செல்லலோடு
மோருறுதி யிலாவிள்மை யுடைந்தகுட நீர்போல வொழுகிப்போகச்
சீருறுசெந் தாமரைமேற் பனியிடிபோற் சரைவந்து சேர்ந்ததன்றே.

காதலத்து நீரதுபோ னித்தலும்வா ளுண்மெல்லக் கழன்றுசெல்லத்
திரண்மழைநாட் சுரைக்கொடிபோற் றீராமு லொன்றுமே தீர்க்கமாக
விரவுசாற் காலத்தி லாற்றுநீர் போலழகு விரைவிலோடப்
புரமுறுநற் சுகங்களெல்லாஞ் சிலைவிடுத்த சரங்களைப்போற் போயிற்றன்றே.

(ப-ரை.) ஈருடலுக் கோருயிர் போல் = இரண்டு தேகங்கட்கு ஒரு ஜீவனே போல இருவருஞ் சேர்ந்து = இரண்டுபேரும் பொருந்தி, இளமை நலம் இனிது துய்த்தார் = யவ்வன சுகத்தைக் கவலையின்றி நலமாக அநுபவித்தார்கள், சீருடைய வருடங்கள் = சிறப்புப் பொருந்திய சம்வற்சரங்கள், இவ்வகையே = இந்தப் பிரகாரமே, எல்லையற = அன்பில்லாமல், செல்லலோடும் = சென்றுகொண்டிருப்ப, ஓருறுதியிலா விள்மை = ஒரு நிலையில்லாத யவ்வனமானது, உடைந்த குட நீர் போல ஒழுகிப்போக = இல்லிக்குடத்து நீரேபோலக் கழிந்து போக, சீருறு செந்தாமரை மேல் = ஜலத்திலுள்ள செவ்விய தாமரையின்மீது, பனியிடிபோல் = இம அசனி போல, சரை வந்து சேர்ந்தது அன்றே = ஜரையவஸ்தையானது வந்து சேர்ந்தது அக்கணமே.

காதலத்து நீரது போல் = கைத்தலத் தறலே போல; நித்தலும் வாளுள் = தினந்தோறும் ஆயுளானது; மெல்லக் கழன்று செல்ல = மெதுவாக அவிழ்ந்து போக, திரள் மழை நாள் சுரைக் கொடிபோல் = மிகுந்த மழைக்காலத்திற் சுரைக் கொடியே போல; தீராமல் ஒன்றுமே தீர்க்கமாக = திருப்தியுறாத விழைவொன்று, தானே நீண்டு கொண்டே போக, விரவுசாற் காலத்தி லாற்றுநீர் போலழகு விரைவிலோட = பொருந்தாநின்ற சாத்து இருதுவில் நதியினது ஜலமே போலக் கவினது வேகமாகச் செல்ல, புரமுறு நற்சுகங்கள் எல்லாம் = சரீர சம்பந்தமான நல்ல இன்பங்களியாவும், சிலைவிடுத்த சரங்களைப்போல் போயிற்றன்றே = வில்லினின்று விடுபட்ட அம்புகளைப் போல ஓடிப்போயிற்றக்கணமே; அன்று ஏ அசைகள் எனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) இந்தப் பிரகாரம் வெகு வருடங்கள் அந்தஸ்திரீ பும்சத்துவத்துவமான இட்டமின் ப்ரேமையுடன் மந்தமில்லாத யவ்வன லீலைகளினாலே தினந்தினம் இரமித்தது. இவ்விதம் வருஷங்கள் அநேகம் சென்றபின்னர், மெதுவாக யவ்வனமானது, பின்னர் கும்பத்தினின்றும் அம்பே போலக் கழியத் தொடங்கியது. நிர்ணய ஹேதுவாக முதலில் அந்நிற்றிய விசாரத்தை விரித்தல்: தாங்கக் கூட்டாகார பங்குர தேகத்தோடு விவகரிக்கும் சீலம் வாய்ந்த தேகியினிடத்தில், தேகவியோகமானது, தள்ள முடியாதபடி, பக்குவ பலத்திற்கு, வீழ்ச்சியே போல நெருங்கிவந்தது. துர் நிவாரணமெங்ஙனமெனிற் கூறல்:—அம்போஜத்தில் ஹிம அசனியே போலும் ஜரையானது வீழ நோக்கிக் கொண்டிருந்தது, கரதலத்தினின்றும் நீர் கழிவதே போல ஆயுள் இடை விடாமல் இழந்தே போயது; போகவதன் சாதன திருஷ்ணை யொன்றுமே மழைக்காலத்தில், கசப்புச் சுரைக்கொடியே போல நீட்சியை யடைந்து வளர்ந்துகொண்டே சென்றது, யவ்வனமானது சைலநதியினது மழை காலத்துப் பிரவாகமே போல அதிவேகமாகச் சென்று கொண்டே யிருந்தது, இந்திரஜாலம்போல அசத்தியமாகிய தேகந்தி ஜீர்ணமான நிலைமையை யடைந்தது; தனுவினின்றுங் கிளம்பிய சரங்களே போலச் சுகங்களெல்லாமோட்ட மெடுத்தன; மாமிசத்தைக் கழுகேபோல ஆத்தியாத்மிகாதிதுக்கங்களும் திரிவிஷ்ணையும், சித்தத்தின் மேல்விழுந்து அதனைத் துன்புறுத்தின; மழை காலத்தில் நீரின்கண்ணே குமிழிகள் போலச் சரீரம் கணபங்குரமாயது; அதன் பின்னர்,

(4-5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இனி யெதுசெய்வதென ஆராய்தலும், அத்தியாத்ம விசாரமே யுறுதி யெனத் தேர்தலும்:— கதலி யென்பது.

கதலியுறு கருப்போல நிராசையைத்தந் ததுபயின்றீர் காரியந்தா
னிதமுறவாங் கவர்நினைவா ரெத்தையடைந் துள்ளமீண் டெங்கும்வீழா
ததுமிக நன்றவ்வகையா னதுகிடையா திம்மோகத் தழுந்துவார்க்குத்
திதமுறவத் தியாத்துமதத் துவநூலே பிறவிநோய் தீர்ப்பதன்றே.

(பு-ரை.) கதலி யுறுகருப்போல = வாழை பொருந்துங் கருவே போல, நிராசையைத் தந்தது பயன்றீர் காரியந்தான் = பிரயோஜனமில்லாத காரியமானது நிராசையைக் கொடுத்தது, இதமுற ஆங்கவர் நினைவார் = நன்மை யுண்டாகும் வண்ணம் அங்கு அவ்விருவரும் எண்ணுவர், எத்தை யடைந்துள்ள மீண்டெங்கும் வீழாது = எதனை யடைந்து பின்னர் மனமானது எவ்விடத்திலும் வீழமாட்டாதோ, அது மிக நன்று = அதுவே மிகவும் நல்லது; அவ்வகையானது கிடையாது = அத்தகையதானது கிடைக்கவே மாட்டாது; இம்மோகத் தழுந்துவார்க்கு = இம்மயக்கத்தின்கண்ணே மூழ்கிக் கிடப்பவர்கட்கு; திதமுற வத்தியாத்தும தத்துவநூலே = திடமாகவும், நியமமாகவும் வேதாந்த சாஸ்திரமே, பிறவி நோய் தீர்ப்பது = ஜன்னமரண வியாதியைத் துடைப்பதாம்; அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) ஆராய்வுற்ற விவகாரமானது வாழையின் கருவைப்போல அசாரமாயது, தனக்கப்பிரியமா யிரானின்ற சக்களத்தியை மோகிப்பவனுடைய பிரிய தமையாகிய காந்தையானவள் போல, வேகமாகத் தாருண்யமானது சென்றது; தருவானது பசையற்றதே போல வலிதில், அரதி = வைராக்கியம் = இஷ்ட விஷய அலாப நிமித்தமாய துர்மனப் பான்மையுண்டாயது, உண்டாகவே இச் சம்சாரத்தின்கண் யாதுதான் சுபாகாரமாயிருப்பது, யாதுதான் ஸ்திரமா யிருப்பது, யாதுதான் அதிசோபனமாயிருப்பது, எதையடைந்து மறு

படி சித்தம் ஜனனமரணாதி துர்த்தசைகளில் இடருற வீழமாட்டார்தோ, அஃதென்னே என்றிந்தப் பிரகாரம் நன்காராய்ந்து அவ்விருவரும், ஆன்மாவைப்பற்றிய சாஸ்திரமே சம்சார வியாதி ஔஷதமென்று பெரியோர் சம்மதமென நிச்சயித்து, நெடுங்காலம் அதனையே விசாரித்துக்கொண் டிருந்தார்கள்.

(ச.) இதமுற நினைவார் = வெகுகாலம் விசாரித்தார், நோய்தீர்ப்பது = வியாதியைத் தீர்க்கும் ஔடதம். (6)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஆன்மவிசார தற்பரராய் அதற்குரியனவேயாற்றிவர இருவருள் சூடாலைக்கு விசாரமிகுதல்:—ஆற்றும, தம்மிலென்பன.

ஆற்றுமதத் துவஞான மொன்றுனு மலதுபிறப் புறுதென்றெண்ணி
யூற்றமுறு தற்பரரா யதின்மனமா யதிற்சேர்ந்த வுயிராய்நித்தஞ்
சாற்றுமதி னிட்டையரா யதற்கடுத்தோர் சார்வாய்ச்சான் றோர்கள்பூசை
கேற்றசெய லாற்சிறிது மிடைவிடாப் பரிசயமா யிரண்டுபேரும்.

தம்மிற்று முணர்ந்துளரா யதற்கடுத்த வாசாரந் தரித்துநீணாள்
விம்முற்ற மகிழ்ச்சியராய் விளங்கினர் பின்பந்த விவேகமங்கை
யம்மைக்கா நல்லபத வொழுங்கினாற் பேரறிஞ ரருளிச்செய்த
செம்மைச் சாத்திரப் பொருள்க டரிக்கலா மளவறிந்து திருந்தக்கேட்டு.

(ப - ரை) ஆற்றும தத்துவஞான மொன்றுனுமலது = ஆன்ம தத்துவ ஞானம் ஒன்றினுலல்லாமல், பிறப்பறுதென் றெண்ணி = ஜனன மறமாட்டாது-என நினைந்து, ஊற்றமுறு தற்பரராய் = ஊக்கத்தோடு கூடியவதன்பராயணராய், அதில் மனமாய் அதிற் சேர்ந்த வுயிராய் = அதன் கண்ணேயே மனத்தைச் செலுத்தினவராய் அதிலேயே பிராணனை நிறுத்தினவராய், நித்தஞ்சாற்றுமதில் நிட்டையராய் = தினந்தினம் இடைவிடாமல் சொல்லிய அதன்பாலே நிட்டை பொருந்தியவராய், அதற்கடுத்தோர் சார்வாய் = அதனைப் பற்றியோர் பற்றாய், சான்றோர்கள் பூசைக்கேற்ற செயலால் = பெரியோர்களுடைய அருச்சனைக்குப் பொருந்திய தொழிலால், சிறிதும் இடைவிடாப் பரிசயமா யிரண்டு பேரும் = எப்போது மிதே யப்பியாசமாய்த் தம்பதிகளிருவர்களும்.

தம்மிற்று முணர்ந்துரையாய் = ஒருவருக்கொருவர் வினவித் தெரிந்துகொள்ளுபவராய், அதற்கடுத்த வாசாரந் தரித்து நீணாள் = அதற்குரிய ஒழுக்கங்களைக்கொண்டு நெடுங்காலம், விம்முற்ற மகிழ்ச்சியராய் விளங்கினர் = பூரித்த சந்தோஷம் உடையவராயிலங்கினர், பின்பந்த விவேகம் = பின்னர் அந்த ஆராய்ச்சி, மங்கையம்மைக்கா நல்ல பத வொழுங்கினால் = சூடாலையம்மைக்காகத் தக்க இனிய பரிபக்குவ முறைமையினால், பேரறிஞர் அருளிச்செய்த = பெரிய பிரஹ்மவித்துக்கள் திருவருள் செய்த, செம்மைச் சாத்திரப் பொருள்கள் = சிறந்த வேதாந்த இனியபதமுறையுறுஞ் சாஸ்திர அருத்தங்கள்; தரிக்கலாம் அளவறிந்து திருந்தக்கேட்டு = தாரணை செய்யலாம் அளவுணர்ந்து நன்றாக வினவி.

(ஸ்ரீ - வீர.) ஆன்மஞானமொன்று மாத்திரத்தினலே, சம்சாரமென்னும் விஷ விஷூசிகையாதிய நோயானது, நன்றாகச் சாந்தமாம், என்று நிச்சயித்து, அவர்கள் அத்தியாத்ம

பராயணர்கள் ஆயினர்கள், அவர்கள் அதிலேயே சித்தமுடையவர்களாய், பிராணனையும் அதன்கண்ணேயே யுடையவர்களாய், அதன்பாலே நிஷ்டையுடையவர்களாய், அவ்வத்தியான்ம சாஸ்திர வித்துக்களையே சரணாகதியாக வுடையவர்களாய், அதன் அருச்சனபரர்களாய், அதற்குரிய சேஷ்டையுடையவர்களா யிருவரும் அப்போது விளங்கிக்கொண்டிருந்தார்கள்; அதன்கண்ணே அதிகனுப்பியாச முடையவர்களாய், பரஸ்பரம் போதித்துக்கொள்ளுபவராய், அதிலேயே பிரீதி யுடையவராய், அந்த அத்தியான்ம சாஸ்திரத்திலேயே நன்முக "அதனது சிந்தனம் அதனது சிரவணம் அன்னியோன்னியம் அதன் பிரபோதனம்" என்பதாதி யாயினிது தொடங்கியவர்களாய், இந்தப்பிரகாரம் அவர்கள் அன்னியோன்னிய மிருந்தார்கள். பின்னர் அச்சூடாலையானவள் ஹே இராகவ! நிரந்தரம் இரமணீய பதக்கிரமங்களை யுடைத்தான சாஸ்திரார்த்தங்களைக் கொள்ளும் அளவினவாக, அத்தியாத்ம வித்துக்களின் முகாரவிந்தத்தினின்றுஞ் சிரவணித்து.

(ச.) ஆன்மதத்துவ ஞானமென்னும் ஏகமந்திரத்தாற் சம்சாரமென்னும் விடுசிகைக் கசிக்கும், என்றெண்ணி, என் நிச்சயித்து. தது வென்பது ஆன்மஞானத்தை நினைவுறுத்துவது, அதிற் சேர்ந்த வுயிராய், சித்தமதிற் பொருந்தியிருக்கின்றமையின் சித்தமும் பிராணனும் பிரிவின்மையின் என்க. அதில் = அவ்வான்ம ஞானத்திலே, நிட்டையராப் = நியமமுள்ளவராய், அதற்கடுத்தோர் = ஆன்மஞானநிட்டையுள்ளவர், சார்வாய் = அவர்களையே ஆசரித்தவராய், சான்றோர்கள் = ஆத்துமவித்தக்கள், பூசைக்கேற்ற = பூஜித்தற்குசிதமான, செயலாய்=சேட்டையோடு சேர்ந்தவராய், சிறிது மிடைவிடாப் பரிசயமாய்=அதிற்றனே யதிகனுப்பியாசமுடையராய். விவேகமுள்ள விராமாவெனத் தரும்.

(ஸ்ரீ - வீர - அ - கை) சூடாலை விசாரிக்கத்தொடங்கல்:—என்னென்பது. (7-8)

என்னுரு வியாபாரம் வியாபார மில்லாமை யிரண்டுமின்றி
வெள்ளிதாய் விளங்கிய நற்புந்தியாற் சூடாலை விசாரிக்கின்றாள்
தெள்ளியே தன்னைமுத னேக்கிநா னென்றெத்தைச் செப்புகின்றே
முள்ளரு விம்மோக மாருடைய தெவ்வாறெங் குதித்ததெதத்தால்.

(ப - ரை.) என்னுரு வியாபாரம் = தன்னத்தகாத வினைகள், வியாபாரமில்லாமை = அவ்வியாபாரம், இரண்டுமின்றி = இரண்டுமில்லாத, வெள்ளிதாய் விளங்கிய நற்புந்தியால் = தாவன்யமாய்த் தூய்தாயிலங்காநின்றில்ல புத்தியினலே, சூடாலை = இராணியானவள், விசாரிக்கின்றாள்=ஆராய்கின்றாள், தெள்ளியே தன்னை முதனேக்கி = தெளிவாகத் தன்னை முதலிற் பார்த்து, நான் என்று எத்தைச் செப்புகின்றேம்=யான் யான் என்பதாக எதனைச் சொல்லுகின்றேம், உள்ளரு விம்மோகம் ஆருடையது = அந்தக்கரணத்தில் மாறுமலிருக்கப்பட்ட இந்த மயக்கமானது யாரையுடையது, எவ்வாறு எங்குதித்தது எத்தால் = எப்படி எவ்விடத்தில் உதயமாயது எக்காரணத்தால்.

(ஸ்ரீ - வீர) சாரீர வியாபாரம் விட்ட அல்லது தொட்ட தவனமாகிய மதியினலே இனியம்பும் வகையானே பகலு மிரவும் தனது ஆன்மாவை விசாரிக்கத் தொடங்கினள். இக்காரணகாரிய சங்காதத்தில் சித்துத் தாதுவாகிய யான் என்னுயுள்ளேன் என்று பகுத்து நோக்கினள்; முதலிற் றனது ஆன்மாவைத் தானே விசாரித்துப் பார்த்தாள் என்றபடி, இச் சம்சாரலக்ஷண மோகரூப மயக்கமானது, யாருக்குற்றது? எவனுக்குத்தான் பிராத்திவந்ததோ அவன் அது நீங்கும்போது சொஸ்தன் ஆகலாம், ஆகக்கூடிய அத்தகையன்றான்

யாவனோ? எங்ஙனந்தானிது எழும்பியதோ? இது நிமித்தஜிஞ்ஞாசையாம், எங்குதானுற்
றதோ? இது அதன்மூல ஜிஞ்ஞாஸையாம், மூலத்தை நன்குணர்தரினே அதனைக் கெடுத்த
லானே கெடுத்தற்கு அவன் கூடியவனேயாவன் என்பதாம்;

(ச.) என்னுரு வியாபாரம் = உசிதமான வியாபாரத்தைச் செய்பவனாயினும், வியா
பாரமில்லாமை = சும்மாவிருப்பவனாயினும், நற்புத்தியால், தன்னை, மேற்கூறும் பிரகார (9)
மாக, சூடாலை ஆன்மாவை விசாரிக்கின்றுள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உடன்முதலாகச் சீவனீருக விசாரித்துப்பார்த்து அனுன்மாக்
கள் என்று தள்ளுதல்:—முதல்செறி தீதென்பன.

முதலான வுடல்சடமா மூகமா நானென்று மொழியலாகா
விதமான கருமஞா னேந்தியங்கள் சடமாகி வெவ்வேறாகு
மதனுை னன்ருகுந் தடியினலோடுகளை யசைக்கு மாபோற்
றிதமாகா மனத்தாலே யிவையீரைந் துஞ்சேட்டை செய்யுமன்றே.
செறிதருசங் கற்பமெனுஞ் சத்தியுள தாய்ச்சடமாஞ் சித்தந்தானு
மெறிகவணுற் கற்போலப் புந்தியினிச் சயத்தாலே யியக்கமெய்து
மறிவுறுபுந் தியுஞ்சடமா மறுதியிட லேவடிவா யகங்காரத்தா
னெறியுறுசெய் கையையுறுமாற் பள்ளத்தா லோடுநதி நீர்களேபோல்.
தீதகங்கா ரஞ்சடமாய்ப் பயனிலியா யவசமாய்ச் சீவனலே
சாதமுறு மிதுசிறுவர் மயக்கத்திற் பேய்தோன்றுந் தன்மைபோலா
மோதியசீ வனுந்தொழிலே வடிவாய்க்காற் றுருவாகி யிதயமுற்று
மேதகைய சுகுமார மாயுள்ளே மற்றொன்றுன் மேவிவாழும்.

(ப - ரை.) முதலான வுடல் சடமாமூகமாம் = யாவற்றிற்கும் பிரதமத்தில் விளங்கா
நின்ற இத்தேகம் ஜடமாய் மூடமாம், நானென்று மொழியலாகா = ஆகத்தை யகமென்று
சாற்றலாகாதாம், விதமான கருமஞானேந்தியங்கள் = அபஞ்சீகிருதங்களின் இரஜோ
குண சத்துவகுண காரியங்களான கருமேந்திரிய பஞ்சகமும் ஞானேந்திரிய பஞ்சகமும்,
சடமாகி வெவ்வேறாகும் அதனுல் = ஜடமாய் வேறுவேறாகும் அக்காரணத்தினால், நான்
அன்ருகும் = அகமெனல் கூடாதாம், தடியினுல் ஓடுகளை யசைக்குமாபோல் = தண்டத்தி
னலே லோஷ்டங்களைச் சலிக்குமாபோல், திதமாகாமனத்தாலே = நிலைபெருத மனத்தி
னலே, இவை யீரைந்தும் சேட்டைசெய்யுமன்றே = இயம்பிய இப்பத்தும் விளையாடாநிற்
கும் அப்போதே; அசையாதேல் அசையாவாம்; அன்று ஏ அசைகளெனினுமாம்.

செறிதரு சங்கற்பமெனும் = பொருந்தாநின்ற சங்கற்பமென்னும், சத்தியுள தாய் =
ஆற்றலுடையதாய், சடமாஞ்சித்தந்தானும் = அறிவிலாத சித்தமும், எறிகவணற்கற்போல் =
எறியாநின்ற கல்வீசும் யந்திரத்தினலே கற்போல், புந்தியின் நிச்சயத்தாலே யியக்கமெய்
தும் = மதியினது துணிவினலே அசையாநிற்கும்; அறிவுறுபுந்தியும் சடமாம் அறுதியிடலே
வடிவாய் = தெரிவதான மதியும் ஜடமாம் துணிவதே யுருவமாகி, அகங்காரத்தால் =
அகங்காரத்தினலே, நெறியுறு செய்கையையுறும் = மார்க்கத்தையடையும் தன்மையைப்
பொருந்தும், பள்ளத்தால் ஓடுநதி நீர்களேபோல் = பள்ளத்தினலே ஓடாநின்ற நதியின்
நீர்களே போலவாம். ஆல் அசை;

நீதகங்காரஞ் சடமாய்ப் பயனிலியாப் துவசமாய் = கொடிய அகங்காரமானது அறிவில்லாததாய்ப் பிரயோஜன மில்லாததாய்ப் பரவசமாய், சீவனாலே சாதமுறும் = உயிரினாலேயுண்டாம், இது சிறுவர் மயக்கத்திற்பேய் தோன்றுந் தன்மைபோலாம் = இது பாலர்க்குப் பிராந்தியினாலே வேதாளந் தோன்றுந் தகைமையே போலவாம், ஓதிய சீவனும் தொழிலே வடிவாய் = கூறியஜீவனும் வினையேயுருவமாய், காற்றுருவாகி யிதயமுற்று = பிராணவடிவமாகி இருதயத்திலிருந்து, மேதகைய சுகுமாரமா யுள்ளே = மேம்பட்ட கோமளமாய் அந்தர், மற்றொன்றால் மேவிவாழும் = பிறிதொன்றினாலே பொருந்தி வாழாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) முதல் முதலில் தேகமானது அசேதனமாம் அதனானே யொன்று மறியாததாம், யான் அல்லவென்பதே துணிபாம், பாலர்முதலிது துணியப் பெற்றதேயாம், பொத்தையன்யான் வெள்ளையன்யான் என்பதாதி புத்தி விருத்திகள் இருந்தபோது மாத்திரம் அநுபவிக்கப் பெறுகின்றதேயன்றிச் சுதந்திரமா யநுபவிப்பதில்லையாம், ஆகவே யதற்குச் சடத்தன்மையாம், கர்மேந்திரியகணமும், இத்தேகத்தினும் அபின்னஹஸ்த பாதாதிய வயவான்மகமாம், அவயவ அவயவிகட்கு வேற்றுமையின்றாம் ஜடமேயாம்; ஞானேந்திரிய கணமும் இவ்வாறே சரீர அவயவவடிவமேயாம், ஜடமேயாமெனக் காணப்பெறுகின்றது; எங்ஙனமேனும் அணுக்களும் என்னும் சூத்திரத்தில், இந்திரியப்பிராணாதிகள் சூக்குமங்கள் லிங்கதேக அவயவங்களே, தூலதேக அவயவங்கள் அல்லவாம் என்று ஸ்ரீ பாதராயணமகரிஷியினாலே நிச்சயிக்கப்பெற்றுளதாம்; அங்ஙனமாயினும் அவற்றிற்குத் தேகாவயவத் தன்மையானே பண்டிதன்முதற் பாமரனீறாக அநுபவமுண்மையின் அவயவம்போலத் தேகசையுக்தத்தன்மை யுண்மையினானும், அதனதவயவம்போலும் ஜடத்தன்மையதேயென்பது கருத்தாம்; சூத்திரப்பொருளிதுவாம், "அணுக்களும் = ஈண்டுத்கிராந்தியாதி சுருதிக்கு, பிராணன்கள் சருவங்கள் அநந்தங்கள் என்னும் இந்திரிய விபுத்தன்மைச்சுருதியுடன் விரோதமுளதா? இலதா? என்னும் சந்தேகமுளதாகவே, விரோதமுளதாமெனப் பூர்வபக்ஷம், சித்தாந்தமோ, இப்பிராணன்கள் அணுக்கள் பரிச்சின்னங்கள், இந்திரிய அக்கிராகியத்தன்மையானே சூக்குமத்தன்மை யுண்மையின்; விபுத்துவசுருதிக்கு உபாசனாபரத்தன்மை யுண்மையின், அதனோடு உற்கிராந்தியாதி சுருதிக்கு விரோதமிலதாம் என்பது துணிபாம். மனமாதிக்கும் ஜடதேகாதிப் பிரேரகத்தன்மை யுண்மையின் தற்சயோகயோக்கிய திரவியத்தன்மையானே தடியாதிபோல ஜடத்தன்மை சித்தமாம் எனல்:—தடியினாலென்பது. புவியிலோடுகள் தடியினாற்போல எக்காரணத்தினால் மனத்தால் ஏவப்பெறுகின்றதோ அக்காரணத்தினால் ஜடமேயாம்; மனமும் இவ்வண்ணம் ஜடமேயாமென வெண்ணுகின்றேன்; சங்கற்பவடிவ சக்தியுடையதாதலின்; கல்லானது இராஜ்ஜு யந்திரங்களினாற்போலப் புத்திநிச்சயங்களினாலே மனம் பிரேரிக்கப் பெறுகின்றது, புத்திநிச்சயரூபமிவ்வண்ணம், ஜாட்டிய இயற்கையதே என்பது துணிபாம்; இருகரையிடைப்பட்ட ஆழ்ந்த தேசத்தால், நதிபோல, அத்தியந்தம் அந்தப் புந்தியானது அகங்காரத்தினாலே யேவப்பெறுகின்றது, அகங்காரமும் சாரமற்றதேயாம், ஜடமேயாம், சவான்மகமாம், மயக்கவடிவமாய இயக்கன்பாலனாற்போல ஜீவனாலதுண்டாக்கப்பெறும்=பிராணவச்சின்னசிதாபாசனாலத்தியசிக்கப்பெறும், பெறவே யக்ஷதேகம் போலும், அதற்கு அத்தியஸ்தத்தன்மையுண்மையினானே ஜடத்தன்மையாம்; ஜீவனும் சேதனாகாசன் பிராணோபாதிகன் இருதயத்திலே யிருப்பன், சுகுமாரனாகியே

யுள்ளே யாதோ வேறொன்றினாலே நன்கு ஜீவிப்பன் = தனது அந்தர்யாமியாகிய பிம்ப சைதன்யத்தானே பரிபூரணனாய் வாழ்வன் என்பதாம்.

(ச.) முதலான வுடல்சடமாம், இதற்கேது, மூகமாய் = மூடமாம்; அதனால் நானென்று மொழியலாகா, நான் அன்றென்பதே நிச்சயம், கருமஞானேந்திரியங்கள் சடமாகி தேகத்தி னும் வேறாகாதாம், தடிபோல், மனத்தாலே + செய்யும், அதனால் நானன்றாகு மென் பது அந்நுவயம், மூடம் = விசித்தம். சங்கற்பாதி சக்தியாகிய சித்தந்தானும் கவ ணாலெறிகற்போல், புந்தி + எய்தும்; அதனால், சடமாமென் றெண்ணுகின்றேன், கவண் = கயிறு கட்டியாதிமய யந்திர விசேடமாம், அறிவிடலே வடிவாய் = நிச்சயரூபமாய்; அறிவுறுபுந்தியும், பள்ளத்தால் = பறித்தலிற் சனித்தகுழியால் நீர் போல் அகங்காரத்தாற் செய்வனவையுமும், அதனால் ஜடமேயாமென்பது நிச்சயம். கவண் = கல்லெறிதற்குரிய கருவி விசேடம். அகங்காரமும் தீது, சேட்டையின்மையின் சத்துவ மின்மையாய், விபரீதஞானரூபமாதலின் பயனிலியாய், அவசமாய் = பரவசசுபாவமாய், இறு + போல், சீவனாலே, சூதமுறும் = கற்பிதமாம், அதனால் சடமேயாம், சீவனும், அந்தக் கரணப் பிரதிபலித சைதன்யரூபனாதலின், தொழிலே வடிவாய் கற்பிதசுபாவமாய், பிராண மயனாதலின் காற்றுருவாகி, சுகுமாரமாய் = தினந்தோறுஞ் சுழுத்தியில் ஆன்மாவில் நசிக் கின்றமையின் அத்துருவமாய், உள்ளே, தனக்குள்ளும் புகுந்துறையும், மற்றொன்றால் = விவகரிக்கத்தகாத பிராணதாதாவான புருடனால், மேவிவாழும், அதனாற் சீவனும் பார மார்த்திகமான ஆன்மசொரூபமன்றுமென்பது பொருள். கடாதியுபாதியி லவச்சின்னமும் அநவச்சின்னமுமான ஆகாசமிருத்தல்போலும் ஜலாதியுபாதியிற் பிரதிபிம்பமும் விம்பமு மான ஆகாசமிருத்தல்போலும், சர்வப்பிராணிகளின் இருதயத்திலும் ஜீவனும் ஈசுரனும் இருக் கின்றார்கள் என்பதாம்.

இதற்குதாரணம்:—குகையிற் புகுந்தவர் ஆன்மாக்களேயாம் அது தரிசனத்தினால் என் தாம், அவற்றினு மாயா விதேயன் சீவன், விதேயமா யனீசுவரன் என்பதுபேதம் இதற் குதாரணம்: ஸ்ரீகௌட பாதாசாரியர்:—காரிய உபாதி யிச்சீவன், காரணோபாதி யீசுவரன், காரிய காரணத்தை விட்டுப் பூரணபோதனைச் சேடிப்பர் யென்பதாம். (10-11-12)

(ஸ்ரீ-வீர-அ-கை.) குகையிற் புகுந்தவர்கள் ஆன்மாக்களே யாவர்கள், அது காணப் பெறுதலின் = ஈண்டுப் பூர்வ பக்கத்தில் புத்திபின்ன ஜீவஞானம், சித்தாந்தத்திலோ, ஜீவ விலக்ஷண பரமாத்மஞானம், எனப் பலவேற்றுமையாம்; கடவல்லி யுபநிடதத்தில் இவ் வண்ண மியம்பப் பெறுகின்றது, தாஞ்செய்த கருமத்தின் பலமாந்துவார்கள் இத்தேகத் தில், என்பதாதி, ஆண்டுடன் புத்தி ஜீவர்கள் புகுந்தவர்களா அல்லது ஜீவ பரமாத்மக்களா என்னும் ஐயம் உற்றுழி, புத்தி ஜீவர்கள் என்பது பூர்வபக்ஷமாம், சித்தாந்தமோ ஈண்டுக் குகையிற் புகுந்தவர்கள் ஜீவபரமாத்மாக்களே, ஏனெனின், எக்காரணத்தால் ஆன்மாக்கள் சேதனர்கள் ஆவர்களோ, பலத்தைக் குடிப்பவர்கள் எனக் கருமபலபோகங் கேட்கப் பெறுதலானே ஒன்றற் கான்மத் தன்மையேல், இரண்டாவதற்கும் ஆன்மத்தன்மை நியாய மாம், அதன்கட்காரணம்:—அது காணப்பெறுதலின், சங்கைச் சிரவணத்திலோ, சங்கை யுடையவர்களின் ஏகரூபத்தன்மை யுலகிற் காண்டலின்.

இதனானும் ஜீவபரமாத்மாக்களே குகையிற் பிரவேசித்தவர்களானார்கள் எனல்:—சிறப் பாலும் = அவன் இச்சம்சார மார்க்கத்தின் கரையை யடைவன், தேவினை யுணர்ந்து தீரனை

வன் ஆவன் மகிழ்சி வாட்டம் விடுவன், எனச் சிவ பரமான்மாக்கட்கே இந்தப் பிரகரணத்தில், செல்பவன் சேர்வது ஆந்தன்மையானேயும் சிறப்பித்தன்மையின் என்பதாம். என்றிவ்வண்ணம் பிரஹ்மசூத்திரம் கூறுதலின் இப்போது அக்தகைக்கு ளிருக்கும் ஆன்மாவைத் தரிசித்து அத்னியல்பை யுரைத்தல்;—ஆற்றுமவென்பது.

ஆற்றுமதத் துவவறிவென் றறிந்தேனீ தறிபொருளாற வழுக்குமேவா
தேற்றுமென அருவமாய்ச் சீரணமாஞ் சித்துருவாற் சீவன் வாழுந்
தோற்றுபொருள் களின்மயங்குஞ் சித்துருவாற் சீவன்வாழ் தொடர்ச்சிகூறிற்
காற்றதனின் மணம்போலும் பள்ளத்தா னீர்போலுங் கருதுங்காலே.

(ப - ரை) ஆற்றும தத்துவ வறிவென்றறிந்தேன் = ஆன்ம தத்துவ சைதன்யமென்றுணர்ந்தேன், ஈது அறிபொருளால் அழுக்குமேவாது = இந்த வஸ்துவானது திருசியங்களாற் களங்க மடையாது, ஏற்றுமென அருவமாய் = போற்றும் என்னுடைய வடிவமாய், சீரணமாம் = அநாதியாம், சித்துருவாற் சீவன்வாழும்=சைதன்ய உருவத்தாற் சீவனுன்றி ஜீவிக்கும், தோற்று பொருள்களின் மயங்குஞ் சித்துருவால் = பிரதீதியாகும் திருசியங்களின் பிரமவானுகிய அறிவுருவினுலே, சீவன்வாழ் தொடர்ச்சி கூறில் = ஜீவன் ஜீவிக்கும் முறைமையைச் சொல்லில், காற்றதனுல் மணம்போலும் = வாயுவினுலே கந்தம்போலும், பள்ளத்தால்=குழியால், நீர்போலும்=ஜலமேபோலும், கருதுங்கால்=ஆராயும்போது. ஏ-அசை, அல்லது தேற்றம்.

(ஸ்ரீ - வீர.) ஆ! அகோ! ஆச்சரியம் நிச்சயமாக அறியப்பெற்றது, சாக்ஷி பாவத்தானே விடயங்களைப் பிரகாசிப்பிக்கு மசனுல், தூடி தமிகு கதியதாம், இச்சிந்தனமான சித்து வடிவ ஆன்மரூபியால், ஜீவன் ஜீவிக்கின்ருன்; சேத்தியப் பிரமவானுகிய சித்ரூபத்தினுலேயே ஜீவன் வாழுதல், பவனுல் ஆமோதம்போலும் பள்ளத்தினுல் நதிப்பிரவாகம் போலும் ஆம்.

(ச.) ஈதறிந்தேன், அது யாதென்புதற்குத்தரம், இந்தச் சீவன், அறிபொருளா லழுக்குமேவா = திருசிய சம்பந்தத்தாற் களங்கமுறுது, பிரதி பிம்பரூபக் களங்கரகிதமாய், தோற்றுமென அருவாகி=சகலருக்கும் ஆன்ம ரூபமாய், சித்தமாய், அநாதியாகிய சித்துருவால்=சிற்சொரூபத்தாலே, வாழும்=பிராணன்களைத் தரிக்கும், இதனைத் திருஷ்டாந்தத்தோடு கூறல், தோற்று பொருள்களின் மயங்கும்=கிரியைகளிற் பிரதிபலித்துத் தாதான்மிய அபிமானமூறும், அழுக்குமேவித் தோற்றும் என்றும் பாடபேதமுளது, களங்கமாய்ப் பின்பு தெளிவிக்குமென்பது பொருள். ஆ என்பது நினைவையூட்டும் அவ்வியம், அகோ என்பது ஆச்சரியம். (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டுப் பொருத்தத்தை யுரைத்து இரங்கல்;—பொய்யாகியென்பது.

பொய்யாகிச் சடமான வறிபொருளின் புணர்ச்சியாற் போதரூப
மையான சடமாகிப் பெருநீருட் கனல்போற்றன் வடிவை விட்டு
மெய்யான சித்துருவ மிப்படியே யறிபொருளின் மேவலாலே
யையோபொய் யாய்ச்சடமா மறிவினு லறிவிக்க வறிந்ததன்றே.

அனவற் காலத்தினுலே, அறியவேண்டிய தறிந்தேன் = தெரியவேண்டியதைத் தெரிந்து கொண்டேன், அம்ம அம்மா = ஆச்சரியம் ஆச்சரியம், முந்து அறிவின் பரப்பை = முதன்மையான சைதன்யத்தின் விஸ்தாரத்தை, முடிவாக = பரியந்தமாக, மனங்கரண் முதல் வெல்லாம் = மனம் கரணம் முதலன யாவும், சிந்தனை செய்யாமையால் = சிந்தியாமையால் உதித்தனவாம் = உதயமாயினவாம், சிந்தித்தாற் சேரப்பொய்யே = சிந்தனை செய்தால் அனைத்தும் அத்தியந்தம் மித்தையேயாம்.

(ஸ்ரீ - வீர) இவ்வண்ணம் சூடாலையானவள் நன்கு சிந்தித்து, எதனால் இச்சித்தானது அவிர்விக்கப் பெறுகின்றது என்று நெடும்போது சிந்தித்தனள், பின்னினிக்கூறும் வுகையானே யுணர்வுற்றனள்; அந்தோ! அந்தோ! ஆச்சரியம், வெகுகாலங் கழித்து அறியவேண்டிய ஆதிவியாதி யற்ற ஆன்ம தத்துவத்தை யறிந்துகொண்டேன்; எதனைத்தான் உணர்தலுற்றபின் னெதுவுமே விடுபடுவது கிடையாதாமோ, எப்புருடனுமே பரம புருடார்த்தத்தி னின்றும் நழுவவே மாட்டானே, அல்லது, எக்காமியப்பொருளும் ஹானியுடையுமாட்டாதோ, அதனடை வினுலேயே எல்லாக் காமமும் அடையப் பெறுதலின், அல்லது எவ்வத்துவையும் துக்கசாதனமெனு மதியானே விடமாட்டானே, யாவற்றிற்குமே ஆனந்த ஏகரசத்தன்மையடைவு இருத்தலின்; ஹான அசம்பக் கூற்றுனது உபாதானத்திற்கு முபலக்ஷணமாம். இந்த மனோபுத்தி யிந்திரியாதிகள் யாவுமே சித்விலாசத்தினது பரிச்சேத ஹேதுக்களாம்; இல்லாதனவாகிய இவை யாவுமே, அந்தோ, இரண்டாவது இந்துபதத்திருப்பனவாம் அதாவது, திமிரம் வாய்ந்த திருஷ்டியினுலே நன்கு கற்பிக்கப்பட்ட இரண்டாவது சந்திரனுடைய ஸ்தானத்தி லிருப்பனவாம், பிராந்தி கற்பிதங்கள் என்பது திரண்டுருண்ட பொருள். சர்வ காமாப்திக் குதாகரணமாக, எல்லா வாழ்வினையுமுறும் சார்வ பௌதிமாதி யென்பதையும் ஈண்டுதாகரித்துக்கொள்க. இது. வே-சூடாமணி.

(சு) இந்த வறிவு எத்தால், எந்த வேதுவினுல், காணப்பட்டது, மனோ யுத்தியாதி ரூபமாக விவர்த்தமாயிற்று என்னில் = என்றிதனை யிப்போதியான் விசாரிக்குங்கால், வேறொன்றுமில்லை, ஈதோர் வாக்கியம்; அறியவேண்டியது, அறிதற்கிச்சிக்கப்பட்ட சித்து விவர்த்த நிமித்தமாகை யென்பதுபொருள்; ஈதோர் வாக்கியம். அஃதியாதென்பதற் குத்தரம், சடப்பொருள்களிற் சைதன்யப் பிரதிபலன மறிவின் பரப்பாம், அதை முடிவாக = அந்தப் பரியந்தமாகவுடைய, முந்து மனங்கரண முதலவெல்லாம் = இந்த மனோ புத்தி யிந்திரியாதி யனைத்தும், உண்மையாகப் பொய்யேயாயினும், சிந்தனை செய்யாமையால், அதாரத்திரமின்மையின், உதித்தனவாம் = உண்டாயின, ஆன்மாவின் சொரூபநிட்டை யின்மையே வடிவமான பிரமாதத்தா லுதித்தனவாம், அவதானமே சித்து நானுருபமாக விவர்த்த மாதற் கேதுவென்பது பொருள். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை) சகல ஆரோபங்களின் அதிஷ்டானமாகிய அப்பொருளையே பெருமைப்படுத்தி யுரைத்தல்:—எல்லையிலென்பது.

எல்லையில்லை பறிவேயிங் குள்ளதெனப் பேருண்மை யென்றுஞ்சொல்வா
ரல்லலுறுங் களங்கமற்றச் சம்மாகி யகங்காரமில் வடிவமாகித்
தொல்லையெரிளி யொருக்காலே துலங்குவதாய் நித்தியபரிசுத்தமாகி
மல்லலுயர் பிரமமெனப் பரமமெனப் பெயர்பெற்று வழங்குமன்றே.

தரல், தவ்வாத பகுதி நிலையாய்=தவருத சுபாவநிலையி லிருப்பவளாய், ஆசைபோய்ச் சங் கஞ்சுற்றுமின்றி=நிராசை யடைந்து பற்றென்றின்றி, ஒவ்வாத தொந்தனைபோய்த் தொழி லின்றி=ஒப்பிலாத துவந்துவம்போய்க் கிரியையற்று, பற்றுவீ டொன்றுமின்றி=கோடல் வீடலொன்றுமின்றி, கவ்வாத வியற்றொழில் செய்து=முயல்வின்றி வந்த வினைகளைமாத் திரம் பந்தமின்றி யாற்றி, உயர்பரமப் பெரும்பேற்றுற் கருத்துமுற்றி=மேலான பிரஹ்மப் பிராப்தியாகிய மகத்தான இலாபத்தால் உள்ளம் பூரித்து.

உள்ளூறு பூரணமெய்தி=உள்ளேயுள்ள பூரணபாவத்தை யடைந்து, உவமைகடக் பாலாகி = சகல உபமானங்களையுங் கடந்து, ஒருவராலுந் தெள்ளி யளவிடவொண்ணு நிலையாம்=எவராலுமே இவ்வளவுதா னென்று தெளிந்து வரைவு செய்யமுடியாத நிலைமை யாம், தன் விவேகத்தின் செறிபழக்க வெள்ளமுற=தனது ஆராய்ச்சியினது பெரும்பயிற்சி யின் வலிமையின் வயத்தால், தன் சொரூபம் வெளியாய் = தனது மெய்யுருவம் பிரத்தி யக்ஷமாய், மென்மலர்க் கொடிபோல் விளக்கமுற்றாள்=மெல்லிய புஷ்பலதைபோல விளங் கிக் கொண்டிருந்தாள், எள்ளரிய அபிநவமாம்=எண்ணுதற்கு முடியாததாய்க் கொள்ளுதற் குரிய அதியற்புதமாம், பேரெழில்கூரிவள்பொலிவை யினிதுநோக்கி = அதிக அழகு நிறைந்த சூடாலையினது விளக்கத்தை நன்றாகப் பார்த்துச் சிகித்துவசன்.

(ஸ்ரீ - வீர.) இந்தப்பிரகாரம் சூடாலையானவள் தினக்கிரமமாகத் தனது வடிவத்தில் இளைப்பாறுதலை யடைந்தவளாய், நிரந்தரம் உண்முகநாட்டத்தானே சுவாபாவிக ரூபத் தில் பிரதிஷ்டை யடைந்தனள்; அவளுடைய அந்த பிரதிஷ்டை லக்ஷணங்களைக் கூறல்:—ஆசைபோயென்பதாதி. இராகமற்றவளாய், பற்றுதலற்றவளாய், துவந்துவ மற்ற வளாய், யாதொரு சேட்டையுமற்றவளாய், ஒன்றையும் எடாதவளாய்க் கொடாதவ ளாய், பகுதமாய ஒழுக்கத்தின் மாத்திரம் ஒழுகுபவளாய், அதாவது பகுதமன்றியே மற்றைய தொழில்களைப் பற்றாதவளாய், சுகியாக வாழ்ந்தாள். சம்சார சாகரத்தை நன்கு கடந்தவளாய், சந்தேக ஜாலங்கள் எல்லாஞ் சாந்தமானவளாய், பரமாத்ம மகாலாபத்தினாலே பரிபூர்ண அந்தராத்மாவை யுடையவளாய், உடலினும் உள்ளாய உள ளத்தினும் உள்ளாய பிரத்தியக் கான்மாவாய் என்றபடி, நெடுங்காலம் முன் சம்சாரத்தில் இளைப்புற்றவளாய அவள் அப்போது, நிரதிசய ஆநந்த கனஞானத்தா லடையற்பெற்ற பதார்த்தமாகிய பரம பதத்தில் இளைப்பாறினவளாய், ஆநந்தித்து வாழ்ந்தாள். உவமைகள் எதுவும் இன்றியவளாய் ஒருவகையினும் கூறமுடியாதவளாயினள். தனது விவேக கனப்பி யாச வசத்தினாலே, ஆன்ம தத்துவ தரிசனத்தாலுண்டாய பூர்ணாநந்த சொரூப ஆவிர்ப் பாவத்தானே அந்தச் சூடாலாதேவியானவள், அபிநவமாக் கிளம்பிய புட்பலதையேபோல மிகவுங் கவின்வாய்ந்து சோபித்தாள்; பின்னந்தக் குற்றமற்ற மேனியளை, ஒருபோது அந் தச் சிகித்துவசன் அபூர்வ சோபையோடு கூடியவளாகப் பார்த்து விஸ்மயத்தை யடைந்து பிரபுல்லித முகத்தினனாய்க் கூறத்தொடங்கினன்.

(ச) ஸ்ரீ வசிஷ்டர், தினந்தோறும்=சகல தினமும், ஆசை=இச்சை, சங்கம்=ஆசக்தி, தொந்தனை=இஷ்டாநிஷ்ட புத்தி, இராகமின்மையின் பற்றின்றி, துவேஷமின்மையின் வீடுமின்றி. (17-18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிகித்துவசன் வினுதல்:—கண்ட, போகத்தேன்பன்.

றேன். கிஞ்சித் கிஞ்சிதாகாரம் இல்லையென்ற தனது வாக்கியத்தையே வேறொரு வகையானே விருணித்தல்:—எவ்வஸ்து சர்க்கத்தைத் தாண்டிவிடாதோ சிருஷ்டி திருஷ்டியானே காணப்பெற்ற பரிச்சின்னம் ஆமோ, யாதுதான் பிரளய திருஷ்டியானே யொன்றுங் காணப்பெறாததாமோ, கூடஸ்த பூமானந்த இயற்கையானே இருப்பதாய அதனை யுணர்ந்துளேன் அவ்வேதுவினாலே ஸ்ரீமதியாய் வாழ்ந்துகொண்டிருக்கின்றேன்.

(ச.) இனி மூன்றனைக் கவிகளாற், சூடாலை சுவாநுபவத்தைக் கணவனுக் கறிவிக்கின்றான், கிஞ்சிலுமின்றி, சகமுதலானது சத்தன்று; இவ்விடத்து அநேகமின்றென வாதிக்கப் படுகின்றமையினென்க, அசத்துமன்று, தோற்றுகின்றமையினென்க, ஆதலால் உண்மையாகவும், இன்மையாகவும் விவகரித்தற்கு அயோக்கியமாம், அதனால், கிஞ்சில்வடிவு, கிஞ்சில் சொல் அற்பார்த்தத்தில் வந்தது, கற்பிதாகாரமென்பது பொருள். ஆன=இத்தன்மையான, இதுவிட்டு=இப்பிரபஞ்ச பாவனையை யொழித்து, கிஞ்சிலின்றி, அத்தாலம், அநணுவென்பதாதியாற்; சர்வ விசேடத்தையும் விலக்குதலின், சர்வ விலக்ஷணமாய், விஞ்சமொரு வடிவு, மகா சத்தாரூபத்தாற்; சிதாகாரமாக விளங்கிய பரப்பிரமத்தைத், உற்றேன், பிரமபாவ மடைந்தேனென்பதாம், அதனால், நான், சீருடைத்தாகி=காந்தியுள்ளவளாய்; விளங்காநின்றேன்=பிரஹ்மவித்தைப் பிரபாவமுள்ளவளா யிருக்கின்றேன், ஏது கிஞ்சிலே, அப்பொருள், மகாசத்தா ரூபமாதலிற், கிஞ்சிலும், அகிஞ்சிலென, விசுவ விலட்சணமாதலில், அகிஞ்சிலுமெனவாம் பொருள், சுப்ரயிலையாய் உதயம் கெடுதியுண்டாய் விஞ்சுவது, சிருட்டியாதிகளில் எப்படியிருக்கும், அதை = அவ்வினைத்தையும், அறிந்தேனென்பது பொருள். சர்வம்=சர்வான்மகம், சத்யம் = அபர்த்யம், அசத்யம் = அசற்கற்பித ஜகத்தில்னுப்பிரவிஷ்டம், பிரஹ்மத்தைப் பற்றி யுள்ளேனுதலின். (2)

(ஸ்ரீ - வீ - அ - கை.) வேறுவகையானே வாழ்கின்றதை விளம்பல்:—அருந்தென்பது.

அருந்தாமற் றாரிதாம் போகங்க ளருந்தினபோ லமைந்தின்புற்று
வருந்தாமல் விருப்புவெறுப் பிலவதனாற் சீருடைத்தாய் வாழாநின்றேன்
பெருங்கோபம் பற்றிரண்டுஞ் சிறுதொழிற்பாங் கியரறிவாம் பெரியபெண்கள்
மருங்கேசாத்திரநோக்கிற் களிக்கின்றே னதனாற்சீர் வாழ்வுபெற்றேன்.

(ப - ரை.) அருந்தாமல்=புசியாமல், தாரிதாம் போகங்கள்=தாரத்தி விருப்பனவாய சுகமான போக்கியங்களை, அருந்தினபோல்=புசித்தன்போல, அமைந்து இன்புற்று = சாந்தியாய் ஆனந்தமடைந்து, வருந்தாமல் = துன்புறாமல்; விருப்பு வெறுப்பு இல அதனால்= இராகத் துவேஷமில்லாத அக்காரணத்தினால், சீருடைத்தாய் = ஸ்ரீமதியாய்; வாழாநின்றேன்=வாழ்ந்து கொண்டிருக்கின்றேன்; பெருங்கோபம்=பெருத்த சினம், பற்றிரண்டும் = ஆசக்தி யிரண்டும், சிறுதொழில் பாங்கியர்=சிறுவினைப் பாங்கியராகிய; அறிவாம் பெரிய பெண்கள்=ஞானமாம் பெரிய மங்கையர்கள், மருங்கே=சமீபத்தே, சாத்திரநோக்கில்=சாஸ்திர திருஷ்டியில், களிக்கின்றேன் = மகிழ்கின்றேன், அதனால் = அவ்வேதுவினால், சீர்வாழ்வு பெற்றேன்=சிறப்புப் பொருந்திய ஜீவன்முத்தைச் செறிந்துள்ளேன்.

(ஸ்ரீ - வீர) மிகவுந் தாரத்திருப்பனவாய புஜியாத போகங்களால் புசித்தனவாற்போல மகிழ்கின்றேன், கவர்கிலேன், சினந்திலேன், அவ்வேதுவினாலே ஸ்ரீமதியா யிருந்து வாழ்கின்றேன்; ஆகாயத்தைப்போல வியாபகமாயும் தெளிவாயும் உள்ள கேவலஞ் சுத்தமாய்

இருதயத்திருக்கும் பிரத்தியக்குப் பிரஹ்மத்தினிடத்தில் ஒருத்தியாகவே ரமிக்கின்றேன்; ராஜக்கிரீடைகளில் ரமித்திலேன், அவ்வேதுவினாலே ஸ்ரீமதியா யிருந்து வாழ்கின்றேன். ஆசனங்களிலும், பூந்தோட்டங்களிலும், கிருகங்களிலும், தேகமானது இருந்தபோதிலும் ஆத்மாவின் கண்ணேயே யிருக்கின்றேன், ஆபரண வெகுமானாதி சாரீரமானசபோகங்களிலாதல், அது கிடையாத பேறுண்டாம் அவ்மானங்களிலாதல்; நான் கலந்திருப்பதில்லை, அவ்வேதுவினால் நான் ஸ்ரீமதியா யிருந்து வாழ்கின்றேன்; உலகங்களுக்கு பிரபுவாகவே யிருக்கின்றேன், அற்பமாத்திர வடிவினளாக இருப்பதில்லை, என ஆன்மாவின்கண்ணேயே ரமிக்கின்றேன், அவ்வேதுவினால் நான் ஸ்ரீமதியாயிருந்து வாழ்கின்றேன், விருப்பு வெறுப்புகளை குறைத்தனவாகிய பிரஞ்ஞைகள், சாஸ்திர திருஷ்டிகள் என்னும் தோழிமார்களோடும் இரமிக்கின்றேன், அல்லது சாஸ்திர திருஷ்டிகளாகிய காரணங்களினாலே, அற்ப வடிவுற்ற விருப்பு வெறுப்பினையுடைய பிரஞ்ஞைகளாகிய சகிமார்களோடும் இரமிக்கின்றேன், அவ்வேதுவினால் நான் ஸ்ரீமதியாயிருந்து வாழ்கின்றேன்.

(௪.) அரிதாம்=(முன் பருந்தினும்) சேய்மையாகிய, போகங்களை அருந்தாமல், இன்புற்று, அருந்தினவைகளும், அருந்தாதவைகளும், அணிமையில் விசேடமாதலில் பக்ஷபாதவேதுவின்மையினென்பது கருத்து, விருப்பு வெறுப்பிலது, இராகத்துவேடமின்மையினென்க, பெருங்கோபம் பற்றிரண்டும்=மிகுந்த துவேடராகங்களிரண்டும், சிறுதொழில், கிருசமான, புரங்கியுரோடு, சாத்திரநோக்கில், திருஷ்டிகளில், அறிவாம், வீதராக கனைகளென்பது பொருள், பெரிய பெண்கள் மருங்கே, அச்சகிகளோடும், களிக்கின்றேன் = விநோதிக்கின்றேன். மூ: விப்பிரகிருஷ்டத் தன்மை சமானமாதலின், பக்ஷபாதத்தில் ஏதுவின்மையின் என்பது கருத்தாம். பரிபூரண சுத்த சர்வாந்தர ஆன்மவத்துவில் ஒருத்தியாகவே ரமிக்கின்றேன், கீதம் வாத்தியம் நாட்டியம் முதலிய ராஜலீலைகளில் இரமித்திலேன். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை) வேறுவகையாக தனதநுபவத்தை மன்னவனுக்கு சூடாலை வெளிப்படுத்தல்:—கிஞ்சிலென்பது.

கிஞ்சின் மாத் திரமுருவி லாதஉல குக்கெல்லாங் கிளர்தேவாகி
எஞ்சலில னென்றெனும்பா லின்புறுவ னதனாற்சீ ரெழில்பெற்றேனான்
புஞ்சமுறு மிவையெல்லாம் விட்டனன்வே றேபொய்யு மெய்யுமாகி
விஞ்சமது முற்றுமடைந் தேனதனாற் சீருடைத்தாய் விளங்காநின்றேன்.

(பத. வுரை.) கிஞ்சில் மாத்திரம்=அற்பமுங்கூட, உருவிலாத = வடிவில்லாத, உலகுக்கெல்லாம்=ஜகத்தனைத்திற்கும், கிளர்தேவாகி=விளங்காநின்ற பிரபுவாகி, எஞ்சல் இலன் என்று=சேடம் இல்லாதவன் என்பதாக, என்பால்=என்னிடத்தில், இன்புறுவன்=ஆனந்தமுடைந்துள்ளேன், அதனால்=அவ்வேதுவினால், சீர் எழில்=சிறப்புப்பொருந்திய அழகை பெற்றேன் நான்=அடைந்தேன் நான், புஞ்சம் உறும் இவை எல்லாம்=கூட்டமுற்ற இவ்வனைத்தையும், விட்டனன்=தியாகித்தனன், வேறே=அயலே, பொய்யும் மெய்யும் ஆகி = அசத்தியமும் சத்தியமும் ஆகி, விஞ்சமது முற்றும் அடைந்தேன்=விஞ்சமது முழுவதும் அடைந்தேன், அதனால்=அவ்வேதுவினால், சீர் உடைத்தாய் விளங்காநின்றேன் = சிறப்புப் பொருந்தி யிலங்காநின்றேன்.

(ஸ்ரீ - வீர.) இச்செய்யுளுக்குத் தொடர்பு பற்றி உரை முன்புரைக்கப்பெற்றது.

(ச.) கிஞ்சிலில்லாத=(எந்தப்பிரமஞ் சர்வவிலட்சணமாதலிற்) கிஞ்சிலுமன்றும், சின்மாத்திர வுருவான் நான், உலகுக்கெல்லாங் கிளர்தேவாகி யெஞ்சலிலன் = ஜகங்களுக்குப் பிரபுவேயாம், சகலபூதங்களையும் எவ்வக்தரன் நியமஞ் செய்வனென்னுஞ் சுருதியினு லென்க. என்று=சர்வ நியாமகனுதலிற் பிரபுவேயாமென்று, இந்தப் பிரகாரமாக, என்பால்=ஆன்மாவிலே, இன்புறுவேனென்றமையால், அரசர்களின் விளைதமென்னும் கீதவாத்திய நிர்த்தனுதிகளில் இன்புறேனென்பதருத்தாபத்தி, எல்லாம் விட்டவன் = இச்சகத்தனைத்தும் விட்டு, வேறே, விசுவ விலட்சணமாய், முற்றும்=சர்வான்மகமாய், பொயயும்=பொய்யாய்க் கற்பிதமான சகத்துட் புகுந்துறைவதும், மெய்யுமாகி = அபாத்தியமுமாகிய, விஞ்சமது=பிரமமியாது அதை, அடைந்தேன். (23)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சூடாலை தனது சுவாநுபூதி யுரைத்தலை முடித்தலும், அதைக் கேட்ட சிகித்துவசன் எள்ளலும்—கண்ணலென்பது.

கண்ணுற்பல் கரணத்தாற் கருத்தாலிங் கெதுகாண்கே னதுதான்கிஞ்சி
னண்ணுமலதற்பிறிதாய்க் கிஞ்சிலா தொன்றுள்ளே நன்றாய்க்காண்கேன்
பண்ணுன சீரிதெனச் சூடாலை சொன்னவற்றைப் பற்றிப்பாரா
னெண்ணும னகைத்தவளைச் சிகித்துவசன் வேறொன்றை யியம்பலுற்றான்.

(ப - ரை.) கண்ணல்=நேத்திரத்தால், பல்கரணத்தால்=பலகரணங்களினுல், கருத்தால்=சித்தத்தினுல், இங்கு=இவ்விடத்தில், எது காண்கேன்=யாது காணுகின்றேனோ அதுதான் கிஞ்சில்=அதுதான் கிஞ்சிலென்பதாம், நண்ணுமல்=பொருந்தாமல், அதற்பிறிதாய்=அதனினும் வேருய், கிஞ்சிலாது ஒன்று=சிறிதிலாது ஒன்று, உள்ளே நன்றாய் காண்கேன்=உள்ளில் நலமாகக் காணுகின்றேன், பண்ணுன சீர் இதென=இனிமையான சிறப்பு இது என்று, சூடாலை சொன்னவற்றை = சூடாலை கூறியவற்றை, பற்றிப் பாரான் = ஆராய்ந்து காணுன், எண்ணுமல்=உட்பொருளை நினையாமல், நகைத்து=சிரித்து, அவளை=அச்சூடாலையை நோக்கி, சிகித்துவசன் = மன்னவன், வேறு ஒன்றை இயம்பலுற்றான்=அயலொன்றைக் கூறத்தொடங்கினுன்.

(ஸ்ரீ - வீர.) ஹே பிராண நாயகரே! இவ்வுலகத்தின்கண் நான் நேத்திர கிரணங்களினுலும், அன்னிய இந்திரியங்களினுலும், சித்தத்தாலும், யாது காண்கின்றேனோ, அது மித்தையேயாம்; அந்த இந்திரிய மனோதிருசியத்தோடு சம்பந்த மற்றதோ நிஷ்பிரபஞ்ச வஸ்துவாம், அதனை உள்ளே காண்கின்றேன்; இவ்வேதுவினுலே கூறிய முறையால், உள்ளும் வெளியும், நன்றாகப் பாதியாத வடிவத்தைப் பார்க்கின்றேன், அவ்வேதுவினுல் சந்ததமுதிதமான பரம மோக்ஷானந்த ஸ்ரீமதியாய் வாழ்கின்றேன். இவ்வண்ணம் வருணித்த பிரகாரமாக தன்து சோபையின் அதிசயத்தில் நிமித்தங்களை வருணித்தவளும், ஆன்மாவில் விசிராந்தி யடைந்தவளும், அழகிய முகத்தினளும் ஆகிய அச்சூடாலையினது அவ்வாக்கின் பொருளை உணராதவனுய், பூபதியான்வன் சிரித்து அத்தேவியை நோக்கி இது கூறலுற்றான்.

(ச.) எது=எப்பொருள், தூரத்திருத்தலின், கண்ணுற் காண்கேன், எது சமீபத்திருத்தலின், பல்கரணத்தால், துவக்காதி இந்திரியங்களால், காண்பேன், எது சென்றது வாராததோ, கருத்தால்=சித்தத்தால், காண்கேன், அதுதான், அஃதனைத்தையும், கிஞ்சில்=அற்பமும், நண்ணுமல்=அநுசந்தியாமல், அதிற் பிறிதாய் = திருசியத்திற் கன்னிய

மாய், இஞ்சிலாத=இருநிய விலக்ஷணமான, ஒன்று=பரமப்பொருளை, நன்று யுள்ளேதான் தேன், இது=இவ்வேதுவால், பண்ணனைசீர்=நித்தியோதய முள்ளவளானேன். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிகித்துவசன் சூடாலையின் வாக்கியங்களை ஆதரியாமல் அவற்றின் பொருளுமறியாமல் கருவத்துடன் தெரிந்தவன்போல் பிதற்றல்:—வஞ்சி; அருந்தல்; ஆதலால்; என்பன.

வஞ்சியிடை யாயிசையா தநுசொன்னாய் சிறியார்போன் மருளாநின்றாய்
விஞ்சுதரா திபர்வாழ்வின் மிளிர்கின்று யுன்னிலே மிளிராநின்றாய்
கிஞ்சிலைவிட் டுக்கிஞ்சி லாதடைந்தோர் முன்னிலையைக் கிட்டாரென்னிற்
பஞ்சிலடி யாயவர்தா முன்னிலையாய் விளங்குவதெப் படியேசொல்வாய்.

அருந்தலுறுப் போகத்தா லகமகிழ்ந்தே னென்றதனை யகற்றுகிற்பார்
பொருந்துமிடி யினர்போனிர்ப் பாக்கியரா மவரெங்ஙன் பொலிவார்சொல்வாய்
திருந்துறக்காண் பலவ்காணேம் வேறேகாண் குதுமென்று செப்புகிற்பா
ரிருந்துரைக்கு மிவ்வுரையை விடாமலவர் விளங்குவதெப் படியேசொல்வாய்.

ஆதலாற் பேதையா யறிவிலியா யலைபவளா யநேகஞ்சொல்லாற்
போதநீ களிக்கின்று யெனவெடிக்க நகைத்தயலே போனான்மன்னன்
மாதரா ளதற்கிரங்கித் தன்னறிவி லிளைப்பாறி மகிழானாகிப்
பேதமா யென்னுரையை மன்னனறிந் திலனென்று பேசுற்றாளே.

(ப - ரை.) வஞ்சியிடையாய்=ஹே சிற்றிடையையுடைய பெண்ணே!, இசையாதது சொன்னாய்=பொருத்தமில்லாத வார்த்தையை யுரைத்தாய், சிறியார்போல் மருளாநின்றாய்=சின்னவர்களைப்போல மயங்காநின்றாய், விஞ்சுதராதிபர் வாழ்வில் மிளிர்கின்றாய்=இராஜலீலைகளில் மிகவும் இரமிக்கின்றாய், உன்னிலே மிளிராநின்றாய் = உன்னிடத்திலே விளங்காநின்றாய், கிஞ்சிலை விட்டு = அற்பத்தை விட்டு, கிஞ்சிலா தடைந்தோர் = அற்பமிலாது அடைந்தவர்கள், முன்னிலையைக் கிட்டார் என்னில் = காட்சியை யடையாரென்னில், பஞ்சிலடியாய்=செம்பஞ்சூட்டிய திருவடியை யுடையாய், அவர் தாம் முன்னிலையாய் விளங்குவது எப்படியே சொல்வாய்=அவர்கள் பிரத்தியக்ஷமாய் இலங்குவது எங்ஙனமோ கூறுவாய்.

அருந்தலுறுப் போகத்தால் = புஜியாத போகங்களினால், அகமகிழ்ந்தேன் = யான் உள்ளத்தில் சந்தோஷித்தேன், என்றதனை அகற்றுகிற்பார்=என அப்போகங்களை விலக்குபவர்கள், பொருந்து மிடியினர்போ னிர்ப்பாக்கியராம் = தரித்திர முடையவர்கள்போலப் பாக்கியமற்றவர்களாம், அவர் எங்ஙன் பொலிவார் சொல்வாய்=அவர்கள் எவ்வாறு சோபிப்பார்கள் கூறுவாய், திருந்துறக் காண்பலவை காணேம்=திருத்தமாகக் காண்பவற்றைக் கண்டிலேம், வேறே காண்குதுமென்று செப்புகிற்பார்=அயலே காண்கின்றேமென்று சொல்லுபவர்கள், இருந்துரைக்கும் இவ்வுரையை=நிதமாகிக் கூறும் இந்த வார்த்தையை, விடாமல்=அகற்றாமல், அவர் விளங்குவது எப்படியே சொல்வாய் =அவர்கள் இலங்குவது எவ்வாறே கூறுவாய்.

ஆதலால்=ஆகையினால், பேதையாய்=மூடையாய், அறிவிலியாய்=தெரியாதவளாய், அலைபவளாய்=சஞ்சலமுடையவளாய், அநேகம் சொல்லால்=நாநாவித வார்த்தைகளால்,

போதநீ களிக்கின்றாய் = மிகவும் ஞானமடைந்தது போல நீ சந்தோஷிக்கின்றாய், என = என்று, வெடிக்க நகைத்து = கெக்கெக்கேயெனச் சிரித்து, அயலேபோனான் மன்னின் வேறொருபாற் சென்றான் சிகித்துவசன், மாதராள் அதற்கு இரங்கி = சூடாலையானவள் அதன்பொருட்டு இரக்கமுற்று, தன்னறிவில் = ஆன்ம சொரூபத்தில், இளைப்பாறி = விசிராந்தியுற்று, மகிழான் ஆகி = சந்தோஷியானாகி, பேதமாய் என்னுரையை = வேற்றுமையாய் எனது வார்த்தையை, மன்னன் அறிந்திலன் என்று பேசுற்றாள் = அரசன் அறிந்திலன் என்று கூறினாள். ஏ - அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) ஹே மேலான வர்ணனையையுடைய பெண்மணியே! பொருத்தமில்லாமல் உளறுகின்றாய், வாலையாயுள்ளாய், அதாவது பரபோத அனுகூலபாக்கிய உச்சாரணத்தில் அகுசலையென்னும் அப்பிரௌட புத்தியுடையவளாக இருக்கின்றாய் என்பதாம்; இராஜலீலைகளினாலே இரமிக்கின்றாய், ஹே அரசகுமாரி! இரமித்திடுதி ஆன்மாவில் இரமிக்கின்றேனென்று ஏன் பிதற்றுகின்றாய், அசம்பந்த பிரலாபத்தையே அதாவது இல்லை யகிஞ்சித் கிஞ்சித் என்பதாதியாகக் கூறியதையே கூட்டல்:—கிஞ்சிலை யென்பதாதி. சிறிதேனும் சிறிதல்லாததை யாவரடைந்தனரோ அப்பிரத்தியக்ஷமாயிருப்பாரோ பிரத்தியக்ஷ சத்ரூபத்தை விட்ட அவர் எங்ஙனம் சோபிப்பாரோ கூறுதி, சாகரத்திற்கே சோபையான தீ வெளியாம், யாவர் தாம் ஆகார சாமானியத்தைவிட்டு நிராகாரத் தன்மையை யடைவரோ அவர் சூனியமாத்திரமாகவே யிருப்பர் எனவே எங்ஙனம் சோபிப்பாரென்பதாம். புசியாத போகங்களால் மகிழ்கின்றேன் என்று யாது உன்னாற் கூறப்பெற்றதோ அதுவும் பிதற்றுதலேயெனல்:—அருந்தல் என்பதாதி. புசியாத போகங்களால் மகிழ்ந்தேன் யான் என்று போகங்களை யாவன் விடுவனோ ஆசனசய்யாதிகளை நினைத்தாற்போல அவன் எங்ஙனந்தான் சோபிப்பனோ கூறுதி. காண்கின்றேன் எதனை நயன ரஸ்மிகளாலேனும் இந்திரியங்களாலேனும் என்பதிராக யாது கூறப்பெற்றதோ அது முற்றினும் பொருத்தமற்றதாம், ஆதலே இவைகள் சோபையேதுக்கள் அல்லவாம் என்றுபசங்கரித்தல்:—திருந்தும் என்பதாதி. எதைக் காண்கின்றேனோ அதைக்கண்டிலேன் அன்னியமாகவே யாதுளதோ அதனைக் காண்கின்றேன் இதைப் பிரலாபமென்று விட்டுவிடாமல் இருக்குமவன் எங்ஙனந்தான் எழிலுறுவானோ இயம்புதி, ஆகையினாலே ஹே விலாசினியே! சிறுகுட்டியாயுள்ளாய் அறிவிலியா யுள்ளாய் சஞ்சலையாயுள்ளாய் நானாவித வார்த்தைகளின் விலாசத்தினாலே கிரீடிக்கின்றேனென்று ஹே கிரீடை சுந்தரியே! கூறிக்கொண்டிருத்தி என்று சிகித்துவசன் சூடாலையை நோக்கி அட்டகாசத்தோடும் மிக நகைத்துவிட்டு மத்தியான ஸ்நானஞ் செய்வதற்காக எழுந்து சூடாலையின் அந்தப்புரத்தினின்றும் வெளிப்போந்தான். அந்தோ கஷ்டம் ஆன்மாவின்கண்ணே மன்னவன் விசிராந்தி யடைந்திலன், இப்பிறப்பில் அறியானேல் மகத்தாகிய விநஷ்டத்தை யுறுவன் என்னுஞ் சுருதியால் பெரும் நஷ்டமே யடைந்தனன் எனது வாக்கியங்களை உணராதவனாயினான் மன்னவனென்று துக்கியாய் சூடாலையானவள் தனது வியவகார தற்பரையா யிருந்தாள்.

(ச) விஞ்ஞாதாதியர் வாழ்வில், இராஜலீலைகளால், யான் மிளிர்வதுபோல நீயும் இப்போது மிளிர்கின்றாய், இங்ஙனம் எக்காலத்தும், உன்னிலே மிளிர்கிற்பாய், இன்புறேனெனச் சொல்லிய நீ இசையாதது சொன்னாய் என்பது அந்வயம், இன்புறேனென்ப பொய்வசன முள்ளவளாகா தொழியென்பது பொருள்; கிஞ்சிலுமின்றிக் கிஞ்சில் வடிவான் விதுவிட்டெனக் கூறப்பட்டதை இகழ்தல், எவர் முன்னிலையாய் = பிரத்தியக்ஷமா யிருக

கும், கிஞ்சிலை = பிருதி வியிர்திருபமாகிய பொருளை, விட்டு, கிஞ்சிலாது = விவ்கரித்தற் கரியபொருள், அடைந்தோர், மூன்னிலையை = பிரத்தியக்ஷமான சத்ருபத்தைத், கிட்டார் = விடுவராம், அவர் விளங்குவதெப்படி, பிராமாண்யத்தின் பரித்தியாகத்தினனும், அப்பிராமாணியத்தின் சுவீகாரத்தினலு மென்பது கருத்து.

புசியாத போகங்களால் என, யாது கூறப்பெற்றதோ அதைப் பரிகசித்தல்:—அருந்தல் என் அருந்துவூறுப் போகத்தால் அகமகிழ்ந்தே னென்று, (எண்ணினவராய்), அதனை = கிடைத்த போகங்களையும், அகற்றுகிற்பார் = விடுப்பவராகிய மூடர், கிடைத்த போகத்தியாகத்தினல், மிடியினர்போல் = தரித்திரன்போல, நிர்ப்பாக்கியரராம் = பாக்கியரகிதராம், அவர் ஒருவன் பொலிவர், (அன்றியும் பொருந்துவர் எங்ஙன் பொலிவர்); எப்படியொரு கோபமுள்ளவன் புசித்தற்குரிய பொருள் எதிரிருப்பினும், தனது காந்தை சமீபத்திலிருந்தும் அறோடு (கின) வசத்தினற் படுக்கையி லிருப்பவனேயாயினும் இட்டபோகங்களைத் தியாகஞ்செய்து துக்கிப்பவனுவன் அதுபோலென்பது பொருள், திருத்தறக் காண்பவை = சக்ஷுராதிகளால் விடயீகரிக்குந் திருசியப்பொருளை, காணேம் = அநுசரியேம், வேறே = திருசியத்துக் கன்னியமான பொருளை, காண்குதும், இவ்வுரை = அனர்த்தகமான விசனத்தை, விடாமல் விளங்குவதெப்படி; இவ்வகையாய் அசோபனப் பிரலாபமுடையவன் எங்ஙனம் சோபிப்பானெனப்தாம்.

சிரிக்கின்றாய் = கிரீடிக்கின்றாய்; (ஸ்ரீ வசிட்டர்) என = என்று சொல்லி, வெடிக்கனக்கத்து = அட்டகாசஞ் செய்து, மன்னன் = சிகித்துவசன், அயலே போனன் = மத்தியானத்தினீராட்டுக்கு அக்கினியின் கிரகத்தினின்று மெழுந்துபோனன், மாதாள் = சூடாலை, செய்தற்குன் = தனது வியாபார நிட்டையுள்ளவளானள். (25-26-27)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சூடாலையானவன் முன்போற் சிலகாலமிருந்து பின்னர் ஆகாசகமனத்தின் பொருட்டு யோகம் பழகினனெனவும், ஸ்ரீ இராகவர் அஃதெங்ஙன் கூடுமென வினவ ஸ்ரீ வசிட்டபகவான் விடையளிக்கத் தொடங்கல்:—பின், பெரிய, என்பன.

பின்னருமன் னனுந்தானுந் தலைநாட்போற் பேதமறப் பெருநாள்வாழ்ந்தார்
தின்னுமமைவாயாசை யொன்றுமிலா திருந்துஞ்சூ டாலைதானே
புண்ணியயுராகாசந் தனிநடக்க வியற்றுமென் றுறுபோகங்க
ளின்னலற வனைத்தையும்விட் டேகாந்தச் சுகாசனத்தி லிருக்கையெய்தி.

பெரியபிரா ணனைநேரே மேனேக்கப் பழகினள் பெருநாளென்னக்
கரியமுகில் கேட்டருளி மிகவருந்தி நெடுங்காலங் கையாண்டக்கா
லரியவிசும் பினடத்தன் முதலான சித்தியெலா மளிக்கத்தக்க
வரியவழி யெதுசொல்வா யெனக்கேட்ப வசிட்டமுனி யுரைப்பதானன்.

(ப-ரை.) பின்னரு மன்னனுந்தானும் = பின்பும் சிகித்துவசனும் சூடாலையும், தலைநாட்போல் = முன்பு போல், பேதமறப் பெருநாள் வாழ்ந்தார் = வேற்றுமையில்லாமல் வெகுகாலும் வாழ்ந்து வந்தார்கள், துன்னும் அமைவாய் = நித்திய திருப்தையாய், ஆசை ஒன்றும் இலாதிருந்தும் = அவா ஒன்றுமில்லாதிருந்தும், சூடாலை தானே = சூடாலைசுயம், உயர் ஆகாசந்தனில் நடக்க இயற்றுதும் என்று உன்னி = மேலான ஆகாசத்தில் செல்லப் பழகுவோம் என்று சிந்தித்து, உறுபோகங்கள் இன்னல் அற அனைத்தையும் விட்டு = இராஜ

போகங்கள் கஷ்டமில்லாமல் யாவற்றையும் விடுத்து, ஏகாந்தச் சுகாசனத்தில் இருந்தனை யெய்தி=தனித்திடத்துள்ள இனிமையான ஆசனத்தில் இருப்பவளாகி,

பெரியபிராணனை = பெரிய பிராணவாயுவை, நேரே=நேராக, மேல்நோக்கப் பழகினள்=உயரநாட அப்பியசித்தாள், பெருநாள் என்ன = வெகுகாலமென்றுகிற, கரிய முகில்=சியாமள மேகம்போன்ற ஸ்ரீ இராகவர், கேட்டருளி = செவிகொண்டருளி, மிக வருந்தி=வெகு பிரயாசைப்பட்டு, நெடுங்காலம்=வெகுகாலம், கையாண்டக்கால் = பழகினதால், அரிய=துர்லபமான, விசும்பில் நடத்தல் முதலான சித்தி எல்லாம் = ஆகாச கமனமே முதலாகிய சித்திகளியாவும், அளிக்கத்தக்க = கொடுக்கத்தக்க, உரியவழி தனைசொல்வாய்=உபாய மார்க்கம் யாதுகூறுவாய், என்க் கேட்ப=என்றுவினவ; வசிட்டமுனி உரைப்பதானன்=ஸ்ரீ வசிட்டபகவான் கூறத்தொடங்குவார்.

(ஸ்ரீ - வீ.ர.) ஹே இராகவ! அப்போது அங்கே அவ்வாறு அத்தகைய அபிப்பிராயமுடைய அவர்களது காலமானது அப்பார்த்திவ லீலைகளினாலே வெகுவாகக் கழிந்தது. ஒருபோது நித்திய திருப்தையாய் இச்சையற்றவளா யிருக்குஞ் சூடாலைக்கும் சுயம் விளையாட்டாக ஆகாயத்தில் போய்வருந் தேவர்போற் சஞ்சாரம் யாதானதோ அதன் விஷயத்தில் இச்சையான துண்டாயது, அத்தகைய பிராரப்த சேஷபலத்தாலென்பது கருத்தாம். பின் ஆகாச கமனாகமன சித்தியின்பொருட்டு அவ்விருப்ப சுன்னிலைக் சகலபோகங்களையும் நிராகரிவு செய்து நிர்ச்சனப்பிரதேசத்தை யடைந்து ஒருத்தியாகவே ஏகாந்தமா யிருப்பவளாகி தனி ஆசனத்தில் அசையாதிருப்பவளாயினள், பொருளால் அரசனுடைய சந்திருப்தியின் பொருட்டு இரண்டு மூன்றுவருடம் பிறவிடத்துறையுங் காலத்தில் எனத் தெரிகின்றது. அன்றியிலோ அவன் பராதீனம் வாய்ந்த அவளுக்கு ஏகாந்தத்தில் நிரந்தரமிருத்தலாகி கூடாமையின், மேலேசெல்லும் பிராணபவன நிராப்பியாசத்தைச் செய்தனள், அதாவது மேல்நோக்கும் பிராணவாயுவின் நெடும்போது கேசரசித்தி யநுகூலமான புருவமத்தியாதி தேசத்தில் நிரோதாப்பியாசத்தைச் செய்தனளென்பதாம். கேசரசித்தி சாதகக்கிரியைப் பிரசங்கத்தினால் ஸ்ரீ இராகவர் கிரியாசாமானியத்தில் நிமித்தத்தை யறியவேண்டுமென்று இச் சித்தவராய் ஆட்சேபித்தல், மிக, என்பதாதி, எந்த இந்த தாவரசங்கம ஜகத்துளதோ அது முழுதுங் கிரியைபால உண்டாவதாகக் காணப்பெறுகின்றது, கர்த்தா முதலிய காரகங்களின் அசைவில்லாமல் எதனது உற்பத்தியுங் காணப்பெறுமையின், ஆண்டிவ்வாறாகவே கிரியைப் பெயர்வாய்ந்த ஸ்பந்தத்திற்கு எங்ஙன முண்டாதல் கூடும், அது கிரியையினின்று முண்டாகிறதா அல்லது கூடஸ்தனினின்று முண்டாகிறதா, முதலதேல், அன்மாசிரயமேனும் அனவஸ்தையேனுமாம், இரண்டாவதேல், வியாகாதம் அவிராமம் பலினவஸ்தையுமாமென எங்ஙனம் கிரியைப் பெயர்வாய்ந்த வஸ்துவிற்கு உற்பத்தி, யநுபவிக்கப்பெறும்= அநுபவமார்க்கத்தை யடையும், அதைக் கூறல்வேண்டும். இவ்வண்ணம் ஆட்சேபித்து வழங்கியதில் வினுதல், ஹே பிரமன்! மிகுந்த யத்தனமுடையவன்றன் எந்த ஸ்பந்த விலாசத்தினது கனப்பியாசத்தின் இந்த ஆகாசகமனசித்தி சமுதாயம் பலமாகும், அதனையுங் கூறல் வேண்டும்.

(ச) தன்னுமமைவாய்=நித்தியதிருப்தி யுள்ளவளாய், நடக்கப்போகவர. (28-29)

கரியமுகில் = ஸ்ரீ இராமர்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) துச்சமாயின் எனதுவினை வீணய்விட்டதே யெனு ஸ்ரீ இராகவருக்கு துயரமுண்டாக வேண்டாமென்று வழங்கிய ஞானதரர்ட்டிய வுபயோகி சம்பந்த

முற்ற ஆகாசகமனுதி சித்திசாதனமான, வருணிக்கப்பெற்ற கதையின் சம்பந்தமாய்ச் சுருக்கமாய பிராணாயாமக் கிரமத்தை அதாவது சித்திபலத்தையுடைய பிராணாதி வாயுவப்பியாசக் கிரியையாகிய சிகித்துவச கதைப் பிரசங்கத்தில் வந்தஇதனைக், கேட்டியென புசுண்டாதியில் இயம நியமப் பிரதிஷ்டைகளை அவற்றின் பீஜத்தை நன்கு காட்டும் வாயு லாகச் சுருக்கிக்கூறல்:—சிமான், குத, கோவல, என்பதாதி.

சிமானுஞ் சிகித்துவசன் கதைக்கிடையே வினவுதலாற் செப்புகின்றேன்
கோமானே பிராணாதி பவனத்தின் பரிசயத்தின் கொள்கையாகிச்
சாமாறில் லாப்பயன்செய் நெறிகேட்பாய் வாதனைகள் சற்றுமின்றிப்
போமாறு செய்துளத்தி லிதற்கடுத்த வாதனையே பொருந்திநின்று.

குதமுதலாந் துவாரத்தின் சிறுமையாற் றானமுதற் குறிக்குஞ்செய்கை
விதவொழுங்காற் போசனத்தாற் சுகாதனத்தாற் சுத்தத்தா மிக்கநன்னூ
லுதவுபொருட் பாவனையா லதனாசா ரத்தினா லுயர்ந்தோர்சார்வால்
லதனையொழிந் தனவெல்லாம் விடுத்தலா லடுத்தபிரா ணாயாமத்தால்.

கோவலோ பாதியும்போ கமும்விடுத்த லாற் சிலர்க்குக் குறித்தநாளி
லோவிலாப் பற்றுவி டொழிந்தநாட் கைவசமா யுயிர்கடாமே
தேவரூ பிகளாத லாற்றங்கள் குணமறிந்து சேர்ந்துளோருக்
கேவ்லாப் போனலங்கை யாள்விக்கும் வீடளிக்கு மெல்லாநல்கும்.

(ப - ரை) சிமானும் சிகித்துவசன் = ஸ்ரீமானாகிய சிகித்துவசனுடைய, கதைக்கிடையே = உபாக்கியான மத்தியில், வினவுதலால் = கேட்டலால், செப்புகின்றேன் = சொல்லுகின்றேன், கோமானே = ஹே இராகவ, பிராணாதி பவனத்தின் = பிராணாதி வாயுவின், பரிசயத்தின் கொள்கையாகி = அப்பியாசத்தின் தன்மையாகி, சாமாறு இல்லாப்பயன் = மரணமில்லாத பிரயோசனத்தை, செய்நெறி கேட்பாய் = செய்யு மார்க்கத்தைக் கேட்பாயாக; வாதனைகள் சற்றுமின்றி = வாசனைகள் ஒன்றுமில்லாமல், போமாறு செய்து = ஏகும் வண்ணமியற்றி, உளத்தில் = மனத்தில், இதற்கு அடுத்த வாதனையே பொருந்தி நின்று = இதனைச் சம்பந்தித்த வாசனையையே பற்றி நின்று;

குதமுதலாம் துவாரத்தின் சிறுமையால் = ஆசன முதலிய துவாரங்களின் சுருக்கத்தால், தானமுதல் குறிக்குஞ் செய்கை விதவொழுங்கால் = ஸ்தான காதிக்கிரியாக் கிரமங்களினால், போசனத்தால் = உண்டியால், சுகாதனத்தால் = நல்லாசனத்தால், சுத்தத்தால் = சுசியால், மிக்க நன்னூல் உதவு பொருட் பாவனையால் = மிகுந்த நல்ல சாஸ்திரந்தரும் அருத்த பாவனையால், அதன் ஆசாரத்தினால் = அதனுடைய ஒழுக்கத்தினால், உயர்ந்தோர் சார்வால் = அனுஷ்டானவான்களுடைய சங்கமத்தால், அதனை யொழிந்தனவெல்லாம் விடுத்தலால் = அதற்கு விரோதமான யாவற்றையும் தியாகித்ததால், அடுத்த பிராணாயாமத்தால் = சாதகமாகிய பிராணனினது வொடுக்கத்தால்;

கோவ லோபாதியும் போகமும் விடுத்தலால் = கோபலோபாதிப் போகங்களைத் தியாகித்தலால், சிலர்க்குக் குறித்த நாளில் = சிலபேருக்குக் குறித்த காலத்தில், ஓவிலாப் பற்றுவிட்டொழிந்தநாள் கைவசமாய் = கெடாத தன்னுதல் கொள்ளுதல் ஒழிந்த சமயம் தன்வயமாய், உயிர்கள் தாமே = பிராணன்களே, தேவரூபிகளாதலால் = தெய்வ வடி

வங்கள் ஆகலால், தங்கள் குணமறிந்து சேர்ந்துளோருக்கு = தங்களுடைய சுபாவத்தைத் தெரிந்து அடைந்துள்ளவர்களுக்கு, ஏவலாள்போல் = சேவகர்களைப்போல், உலகையாள் விக்கும் = இராச்சிய மாள்விக்கும், வீடளிக்கும் = மோக்ஷத்தைக் கொடுக்கும், எல்லாம் நல்கும் = சகலத்தையும் தரும்.

(ஸ்ரீ - வீர.) உள்ளிருப்பனவாய் சாத்தியார்த்தங்களும், இதர சாதனார்த்தங்களும் ஆகிய அகிலவாசனைகளையும் விட்டு குதசங் வாயிற் சங்கோசத்தால், சித்தாதியாசனங்களின் செவ்வே யுடலும் சிரமுங் கழுத்துமுற செவ்வாதனங்களின், நிச்சலத்தன்மை நாசி நுனியை நோக்கல் என்பதாதியாக யோக சாஸ்திரத்திற் கூறிய கிரியைகளின் கிரமங்களினால், அதே கிரியாக்கிரமத்தை மறித்தும் வித்தரித்தல், போசன ஆசன சுத்தியாலும், நன்றாக யோகசாஸ்திரார்த்தத்தின் பரிசீலனையினாலும், தனது ஆசாரத்தினாலும், சுஜன ஆசங்கத்தானும் சர்வ தியாகத்தாலும் சுகாசனத்தாலும் பிராணாயாம கனப்பியாசத்தால் ஹே இராகவனே! நல்விரதனே! காலமுறைமையானே கோப்லோபாதி நற்றியாகத்தாலும் போகதியாகத்தாலும் ரேசக பூரக கும்பகங்கள் மூன்றினும் பயிற்சியுற்றவழி அவற்றினியல்புணர்ந்த யோகிக்கு பிரபுத்தன்மை யுண்மையின் அதாவது பிராணசுவாமித்துவசம்பத்தி யிருத்தலின் லௌகிக புருடனாய் பிரபுவினுக்குச் சேவகரேபோல அகில பிராணன்களும் சுவாதீனத் தன்மையடைகின்றன; பிராணன்களின் சுவாதீனத்தன்மை யெய்துறவே அவற்றின் சம்பத்தாமாய சித்திகட்கும் சுவாதீனத் தன்மை யெய்துறும் என வியம்பல்:—உலகை யென்பதாதி. ஹே இராகவனே! சர்வாதிகாரிகளுக்கும் இராச்சியாதி மோக்ஷபரியந்தமான சமஸ்த சம்பத்துக்களுமே தேக அனிலவயத்தன்மையால் சாத்தியங்களாம்.

சிமானும், [ஸ்ரீ வசிட்டர்]

(ச) வாதனைகள் சற்றுமின்றிப் போமாறுசெய்து = சித்தத் துறுவனவான தனது சாத்தியத்துக் கந்நியமான பொருளிலெழும் வாசனை யனைத்தையும் விட்டு, நன்றாய்ப் பழகப்பட்ட குதமுதலாந் துவாரத்தின் சிறுமையாதி சாதனங்களால், தங்கள் குணமறிந்து சேர்ந்துளோர்க்கு, தேவரூபிகளாதலால் = நியாமகரூபிகளாகு மேதுவினால், உயிர்கடாமே = பிராணாதி வாயுக்களே, ஏவலாட்போல், பற்றுவிடொழிந்த நாள் = ரேசக பூரக கும்பகங்களாம்போது, கைவசமா யெல்லா நல்குமென்பது அந்வயம், அவற்றிற் குதமுதலாந் துவாரத்தின் சிறுமைக் கேதுவைக்கூறல், தானமுதற் குறித்த செய்கை, விதவொழுங்காலென்பது, தானம் = மகா முத்திராதிதான விசேடங்கள், முதல் எனுஞ் சத்தத்தால் பிராணாயாமாதிக் கிரகணம். தானமுதலானவையும் செய்கைவித வொழுங்கு உபாயபேதங்களும் ஆகிய விவற்றால் மூலபந்தத்தாற் குதசங்கோசமும், கேசரியால் மேற்றுவார நிரோதமும் என்பது விவேகம். அவற்றில், மூலபந்த லட்சணம் பார்ட்டிணிபாகத்தால் யோனியை நெருக்கி குதத்தைச் சுருக்கவேண்டும், அபானனை மேலெழுப்பி இது மூலபந்தமெனப்படும். கேசரி லட்சணமானது, வெகுதா முன்னமே சொல்லப்பட்டது. சுத்தத்தான் = சுத்தமாகிய போஜனத்தால், இதமித மேத்தியபாவம் புஜித்தற்குரிய வஸ்துவின் சுத்தியாம், ஆசன சுத்தியாவது, ஆசனத்தின் நிர்விகாரதை, நன்னூலுதவு பொருட்பாவனையால் = யோக சாஸ்திரத்தின் செவ்வையான அநுசந்தானத்தினால், அதனுசாரம் = யோகாநுஷ்டானம், உயர்ந்தோர் = யோகவித்துக்கள், அதனை யொழிந்தனவெல்லாம் விடுத்தலால் = சர்வ கருமத்தியாகத்தால், பிராணனில செயத்தால் அணிமாதிகளுஞ் சித்திப்பனவாமென்பது பொருள்.

மூலம், யமாதிக்கிரமணம், பார்ஷ்ணி=குதிங்கால், சர்வத்தியாக பூர்வகத்தாற் சுகாசனத் தால் என்பதாம். (30-31-32)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்போது சர்வசித்திகட்கும் தேகானில விதேயத்தன்மை கூறப்பெற்றதை நிரூபிக்கும்பொருட்டு, சர்வ தேகத்தினும் விரிந்துள்ள எழுபத்தீராயிரம் சாகப்பிரதான நாடீசத ஆசிரிதமும், மூலாதாரத்தினின்றுந் தொடங்கி பிரஹ்மாந்திர பரியந்த முள்ள ஏழு சக்கரங்களிலும் தொடர்ந்து புகுந்து செல்வதும், மூலாதாரத்தில் மூன்றரை வளைய வேஷ்டனத்துள்ளே துயிலும் குண்டலினி சக்தியைக் கருவிலுற்றதும், ஆகிய சுழும்னா நாடியை வருணித்தல்:—ஆந்திர வென்பது.

ஆந்திரவேட் டனிகையென்றோர் தனிநாடி நாடிகணூ றணுகிநிற்கும்
வாய்ந்தவிசை வீணையுடல் வட்டம்போ னீர்ச்சுழிபோல் வட்டமேயா
யேய்ந்துள்தா னங்களெலா மெய்தலுறு மயனிடத்து மெறும்பின்பாலும்
போந்தளபல் லுயிரிடத்து முடறோறுந் தோன்றியே பொருந்திநிற்கும்.

(ப - ரை) ஆந்திர வேட்டனிகை யென்றோர் தனிநாடி = ஆந்திர வேஷ்டனிகை யென்னும் பெயர் வாய்ந்த ஒரு ஒப்பற்ற நாடியானது, நாடி கணூறணுகி நிற்கும் = நூறு நாடிகளுக்குப் பற்றுக்கோடா யிருக்கும், வாய்ந்த விசை வீணையுடல் வட்டம்போல் = இசை பொருந்திய வீணைமுன் வட்டம்போல, நீர்ச்சுழிபோல் = நீரினது பிரமணம்போல, வட்டமேயாய் = வளையம் போன்றதாய், ஏய்ந்துள தானங்களெலாம் எய்தல் உறும் = பொருந்திய தானங்களிலெல்லாம் அடைந்திருக்கும், அயனிடத்தும் எறும்பின் பாலும் = பிரமாவினிடத்தும் எறும்பினிடத்தும், போந்துளபல் உயிரிடத்தும் = உலகிலுள்ள சகல சீவர்களிடத்தும், உடல்தோறும் தோன்றியே பொருந்தி நிற்கும் = சரீரந்தோறும் இருந்து இலங்கா நிற்கும்.

(ஸ்ரீ - வீர.) ஆந்திர வேஷ்டனிகை யென்று வொருநாடி யுண்டு எப்புறத்தும் விரிந்த சாகைகளினாலே நன்கு சுற்றிக்கொண்டிருக்குந் தன்மையால் பரிமண்டலிதாகாரமாம், அதனானே உள்ளிருக்கும் நாடிகளினால் சுற்றப் பெற்றிருத்தலின் ஆந்திர வேஷ்டனிகை யெனப் பெயராம், மர்மஸ்தான மினிது பற்றியதாம், நூறு நாடிகளுக்குப் பற்றுக்கோடா யிருப்பதாம், மூலாதாரத்தில் தன்னிடத்துள்ள குண்டலினி நல்லிருப்பின் அநுகூலமாக அதனை வருணித்தல்:—வாய்ந்த வென்பதாதி. வீணா தண்டத்தினது மூலபாகத்தில் பிர சித்த ரேகைவடிவ நரம்பின்மூலச் சுழல்கை போன்றது, நீரினது பரிவர்த்தன வடிவ ஆவர்த் தம் போன்றது எழுத்தாற் காண்பதிலோ ஓங்காரத்தினது பாதியிருப்பே போன்றிருப்பது, திராவிடாக்ஷரத்தில் பூர்வார்த்தம்போலவும் நாகராக்ஷரத்தில் பிற்பாதிபோலவும் அதன திருப்பைக் கொள்ளலாம், குண்டலாவர்த்தம்போ லிருப்பதாம், இதுவும் மநுடர்களிடத் தின் மாத்திர மிருப்பதல்லவாம் மற்றோ சகல பிராணிகளுடைய சரீரத்திலு மிருப்பதாம் எனல்:—அயன் என்பதாதி. தேவாசுர மநுடர்களிடத்திலும் மிருக ங்கிரககாதிகளிடத் திலும் கீடாதிகளிடத்திலும் அப்ஜஜனீருய சர்வப் பிராணிகளிடத்திலும் உதிதமாம்.

(ச) வட்டமேயாம் = வட்ட வடிவுள்ளதாம், ஏய்ந்தன தானங்களெல்லா மெய்த லுறும் = மருமத்தானத்தை யாசரித்தாம். இதற்குதாரணம்:—யாஞ்ஞவற்கர், கந்தத்தின் மேலு நாபியின் குறுக்கிலுமீதுங் குண்டலித்தான நிரூபித்திருத்தலின் நாபியும், இருதய

மூம், கண்டகூபமும், கார்க்கியென மர்மத்தானங்களில் எண்ணப்பட்டிருத்தலினு மென்பதாம். வீணையுடல் = வீணாதண்டத்தின் மீதுறுந் தந்திரிசுத்திரங் கட்டுறும் வடிவமுள்ள வட்டம்போல், மூ—அதன்மேல் குண்டலிஸ்தானம் நாபியின் குறுக்கும் மேலுங் கீழும் அஷ்டப்பிரகிருதி ரூபம்மாமது எட்டுவகையாய்க் குண்டலித்திருக்கும் என்பர் ஸ்ரீ யாஞ்ஞவற்கியர், நாபி ஒரு மர்மஸ்தானமாம். (33)

(ஸ்ரீ-வீர - அ-கை) இந்நாடியையே தொடர்பா யுணர்த்தி யிதன்பாலுற்ற குண்டலினி சத்தியையும் உணர்த்தல்:—சீத, முனி யென்பன.

சீதவருத் தத்தினுற் றுயில்பாம்பி னுடல்போற் சிக்கெனவளைந்தெப்
போதுமசை வுறுங்காற்று னிலைநிற்குங் கதலியின்மென் பூப்போ லுள்ளு
மேதகுமெல் லியதாகு மதனூடே யொருசத்தி விசுத்தமாகி
யேதமறு பரமமாய்ச் சத்திகட்கெல் லாம்வெற்றி யெய்தநல்கும்.

முனிவுறுபெண் பாம்புபோன் மூச்செறியு மெப்போது முகமேலாகு
மனிசமசை வுக்கேது வாமிதய கோசத்தை யடைந்தநாடி
யெனையவுமிங் கிதனிடையே கட்டுண்ணுங் குண்டலினி யிதன்போராகுந்
துனைதலுற வசைகின்ற பரிசவறி வின்கலையாற் சுத்தமாகும்.

(ப - ரை) சீத வருத்தத்தினுல் = குளிரின் கஷ்டத்தினுல், துயில் பாம்பின் உடல் போல் = நித்திரை செய்யாநின்ற சர்ப்பத்தின் சரீரத்தைப்போல, சிக்கென வளைந்து = நன்றாகச் சுற்றிக்கொண்டு, எப்போதும் அசைவுறும் காற்றால் நிலைநிற்கும் = எக்காலமும் சலனமுறும் பவனத்தா லிருந்துவரூம், கதலியின்மென் பூப்போல் = வாழையின் மெல்லிய புஷ்பம்போல், உள்ளுமேதகு மெல்லியதாகும் அதனூடே = உள் மேன்மையான மென்மையதாகும் அதனுள்ளே, ஒரு சத்தி விசுத்தமாகி = ஒரு சத்தியானது தூய்தாகி ஏதம் அறுபரமமாய் = குற்றமற்று மேலாய், சத்திகட்கெல்லாம் = எல்லாச் சத்திகட்கும், வெற்றியெய்த நல்கும் = ஜயமடையத் தரும்.

முனியுறு பெண் பாம்புபோல் = கோபமுற்ற சர்ப்பிணிபோல, மூச்செறியும் எப்போது முகமேலாகும் = நிச்வாசஞ் செய்யும் எக்காலும் முகம்மேல் நோக்கி யிருக்கும், அனிசம் அசைவுக்கு ஏதுவாம் = அஹர்நிசம் சலனத்திற்குக் காரணமாம், இதய கோசத்தை யடைந்த நாடி யெனையவும் = இருதய கோசத்தையுற்ற நாடிகளெவையும், இங்கு இதனிடையே கட்டுண்ணும் = ஈண்டு இதன்மாட்டே பந்தப்பட்டிருக்கும், குண்டலினி யிதன்பேராகும் = குண்டலினி யென்பது இதன் நாமமாம், துனைதல் உற அசைகின்ற = பொருந்துறுமாறு சலிக்கின்ற, பரிச அறிவின் = பரிச உணர்ச்சியின், கலையால் சுத்தமாகும் = கலையால் அமலையாகும்.

(ஸ்ரீ - வீர) சீத பீடிதமாய் நித்திரை செய்யாநின்ற போகீந்திர போகம்போல பத்த மண்டலத்தை யுடையது அதாவது சீத பீடையின் நிவாரணப் பொருட்டு திடபத்த மண்டலத்தை யுடையது, அவ்வகையாய துயிலும் போகீந்திரத்தின் காயம்போல பத்த மண்டலத்தை யுடையதென்பதாம், வெண்மையாயது, கல்பாக்கினியினுலே மிகக் கழிவுற்ற உள் வளையாகார ரேகையோடுகூடி விளங்கும் சந்திரனேடு துல்லியமாய குண்டலவளையா கிருதியாகப் பத்தமுற்றது, அல்லது ஜாண சமர்த்தமாயது கல்பாக்கினியுமாம், ஜாடராக்கினி

யாகியுவதனால் கழிவுற்று எம்மூர்த்தினி யோகசாஸ்திரப் பிரசித்த சந்திரனுளதோ அதுவே விலீனமாகி மூலாதாரத்தில் விரிந்து கனமாய் ஆண்டு பத்தகுண்டலா கிருதியாய் உற்றது போன்றிருந்தது; ஊறுமூல சந்திகுதந் தொடங்கி புருவ மத்திய பரியந்தமுள்ள ரந்திரங்களைத் தீண்டிக்கொண்டிருக்கும், அவற்றில் தொடர்புற்றிருக்கும் மனோ விருத்திகளினால் உள் அசைந்து கொண்டிருக்கும் வெளியிலும் பிராணாதிகளினால் நிரந்தரம் அசைந்து கொண்டிருக்கும், அதனுடைய மூலத்தூன் மூன்றரை வளையாகாரமாகிய குண்டலினியெனப் பெயரிய சிற்சத்தியைக் காட்டல்:—கதலியென்பதாதி. கதலீகோச கோமளமாய அதனது அப்பியந்தர மென்னும் அம்மூலாதாரத்தில் வீணா மூலத்தில் பார்க்கமுடியாததாய நாடிகளின் வேகத்தாற்போல் இலங்காநின்ற அதிசூக்கும பரையெனப் பெயரிய சர்வ சப்தமூல பூதமாயகதியது, சப்தப் பிரஹ்ம வடிவினதாய சத்தியென இலங்குவது, அதுவே பிராண சங்கத்தினாலே நாபி யிருதயகண்ட தேசங்களில் உத்தரோத்தரம் = மேலுக்கு மேலாக வெட்டவெளியாகக் காணப்பெறும், மத்தியமை வைகரியென்பதாதி பேதங்களைப் பஜிக்கும், அவ்வாறே மந்திர சாஸ்திரத்தில் கூறப்பெற்றுளது:—“சர்வ பூதங்களின் சைதன்னியம் யாதுளதோ சப்தப் பிரஹ்மமென்று எதனை யறிவரோ அது பிராணிகளினுடைய தேக மத்தியஸ்தானத்தை குண்டலிரூபமாக வியாபித்து வர்ண வடிவமாக வெளியாகும் அது சத்தியபத்யாதி வேற்றுமையை யுடையதாம்” சாம்பராலுங் கூறப்பெற்றுளது இதனை ஸ்ரீகுரு வீரசேகரத்தின் காண்க. அதுதான் குண்டலி சத்தியெனக் கூறப்பெறும் குண்டலாகாரமாக விருப்பதாம் பிராணிகளினுடைய பரமசக்தியாம், பிராண இந்திரிய புத்தியாதியெல்லாச் சத்திகட்கும் சத்தை ஸ்பூர்த்தி பிரவிருத்தி நிர்வாகஞ் செய்தலின் வேகந்தருவதாம். ஆண்டு பிராண சக்தியானது எங்ஙனம் வேகத்தைக் கொடுக்கத்தக்கது. எனின் கூறல்:—அனிசமென்பதாதி. இரவும் பகலும் நிசுவாசஞ்செய்யும் வடிவினதாம் அதுவே தனது மூக்கால் பிராணனை மேலே தள்ளுகின்றது அபானனையும் கீழே இழுக்கின்றது என்பதனால்; கோபத்தோடு கூடிய பெண் பாம்புபோல இருப்பதாம் மேல்நோக்கிய முகமுடையதாம் அசைவின் காரணத்தன்மையை யடைந்துள்ளதாம். ஆண்டு மூலாதாரத்தில் இராநின்ற குண்டலினிக்கு நேத்திராதிகளை ஏவுவதில் நாடிகள் வாயிலாம் என்னுங் கருத்தால் கூறல்:—இருதய கோசத்திலிராநின்ற அதன்பாற் சம்பந்தித்த நாடிகள் யாவும் பெருங்கடலில் நதிகள்போல உதயமாய் விரிகின்றன அடங்கி யொடுங்குகின்றன.

(ச.) சீத வருத்தத்தினால் = சீத வருத்த பயத்தினால், துயில்பாம்பி னுடல்போல், வளைந்து, மண்டலாகாரமாய்ப் பல வுயிரினிடத்தும், நாடிகணூறணுகி யாந்திர வேட்டனி யென்னும் பிரசித்தமுள்ள ஓர் நாடி காற்றால் எப்போதும் அசைவுறுவதாய் நிலைநிற்கு மென்பது அந்வய முறைகவியோடு. அதன் = முற்கூறிய நாடியினது, கதலியின் மென் பூப்போல் மேதக மெல்லியதாகு முள்ளூடே.

அசைவுக்கேதுவாம் = சேட்டைக்கேதுவாம், சத்திகட்கெல்லாம் வெற்றியெய்த நல்கும் = சர்வ சத்திகளுக்கும் உல்லாச வேதுவாம், பரமமாய், (பவன சம்பந்தமான) ஒருசத்தி (நிலை நிற்குமெனக் கூட்டுக.) இதனிடையே = இந்தப் பிராணசத்தியின், இதய கோசத்தை யடைந்த நாடியெனையவும், கட்டுண்ணும் = சம்பந்தித்திருக்கும், அசைகின்ற பரிசவறிவின் கலையாய் = கிரியைக் கேதுவும், பரிசாநுபவ வேதுவுமாய், சுத்தமாகும், இதன்பேர்; பவன சம்பந்தமுள்ள சத்தியே குண்டலினியாகும், பாவனியுமாகும். (34-35)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அந்தப் பிராணவடிவமாக உள்ளேயிலங்கும் குண்டலினி பிராண தர்மத்தாலும் தனது தர்மத்தாலும் அசைவென்றும் பரிசமென்றும் உணர்வென்றும் ஜீவிருவ கற்பனையடைந்து கலை சித்து சிவன் மனம் சங்கல்பம் புத்தி அகங்காரம் புரியஷ்டகம் லிங்கம் என்பதாதி நாமங்களைக் கலனுதி வியர்பார உபாதிகளின்னே யடையுமென்னில்:—சிந்தனையா லென்பது.

சிந்தனையாற் கலையாகுஞ் சேதனத்தாற் சித்தாகுஞ் சீவனத்தாற்
சந்தமுறு சீவனு மன்னத்தான் மனமாகுஞ் சங்கற்பத்தா
லந்தமில் சங்கற்பமாம் போதத்தாற் புந்தியா மகங்காரத்தால்
வந்தவகங் காரமா மினையபுரி யட்டகப்பேர் மருவுந்தானே.

(ப - ரை) சிந்தனையால் கலையாகும் = அசைதலால் கலையெனப்பெறும், சேதனத்தால் சித்தாகும் = உணர்ச்சியால் சித்தாகும், சீவனத்தால் சந்தமுறு சீவனும் = ஜீவித்தலால் சுகத்தையடையுஞ் சீவனெனப்பெறும், மனனத்தால் மனமாகும் = எண்ணுதலால் மனமெனப் பெறும், சங்கற்பத்தால் அந்தமில் சங்கற்பமாம் = சங்கற்பித்தலினாலே அளவில்லாத சங் கற்ப மெனப்பெறும், போதத்தால் புந்தியாம் = நிச்சயத்தால் புத்தியெனப்பெறும், அகங் காரத்தால் வந்த அகங்காரமாம் = கருவித்தலால் வாராநின்ற அகங்கார மெனப்பெறும், இனையபுரி யட்டகப்பேர் மருவுந்தானே = இவ்வாறே புரியட்டகமென்னும் பெயரையும் தானே யடையும்.

(ஸ்ரீ - வீர.) உள்ளே அந்தக் குண்டலினியானது ஸ்பந்த ஸ்பரிச சம்வித்துக் கலையு மலையாம் கலனத்தாற் கலையெனப்பெறும் விரைவில் சேதனத்தால் சித்தனப்பெறும் சீவ னத்தால் சீவத்தன்மையை யடையும் மனனத்தால் மனமாயிருக்கும் சங்கற்பத்தால் சங்கற்ப மேயாம் போதத்தால் புத்தியெனப்பெறும் அகங்காரான்மத்தன்மையையு மடையாநிற்கும் அஃதினுதானே புரியட்டகமென்னும் பெயரைப்பெறும்.

(ச) சிந்தனையால் = பந்தனை யேதுவால், கலையாகும், சேதனத்தால் = ஞானத்தை யுதிப்பித்தலால், சித்தாகும், சீவனத்தால் = உச்சுவாச நிசுவாசங்களை உண்டாக்குதலின், சந்தமுறு சீவனும் = சீவசத்த வாச்சியமாம், மனனஸ்மரணத்தால் = மனன வேதுவாதலால், மனமாகும், சங்கற்பத்தால் = விவிதமனோரத கற்பனையினால், சங்கற்பமாம் = சங்கற்ப சப்த வாச்சிய சத்திடமாம், போதத்தால் = நிச்சயத்தை யுண்டுபண்ணலால், புந்தியாம், அகங்காரத் தால் = அதுவே நானென்றபிமானித்தலால், அகங்காரமாம், அகங்கார ரூபத்தை யடைந்த தாய்ப் புரியட்டக சப்தவாச்சியமுமாமென்ப தந்நுவயம். (36)

(ஸ்ரீ-வீ - அ-கை.) மேலும் அக்குண்டலினி சத்தியி னியல்பைக்கூறல்:—குண்டலினி யென்பது.

குண்டலினி யெனுஞ்சீவ சத்திமிக நல்லதாய்க் கூடினிற்கு
மண்டுபிரா ணபான வடிவமா தலிற்கீழ்மேல் வந்துபோகு
மிண்டறமேற் போகினுமேல் வாமாய்ப்போ மீளினுமேல் விமாய்மீளுந்
தண்டலிலாப் புமானேகிச் சாமேவும் பிராணனுமச் சத்திதானே.

(ப - ரை) குண்டலினியெனும் சீவசத்தி = குண்டலியென்னுஞ் சீவசத்தியானது, மிக நல்லதாய்க் கூடினிற்கும் = மிகவும் மேன்மையதாய் தேகத்தில் பொருந்தி நிற்கும், மண்டு

பிராண அபான வடிவமாதலில்—நெருங்கிய பிராண அபான உருவமெய்தி யிருத்தலின், கீழ்மேல் வந்துபோகும் = கீழும் மேலும் வந்துகொண்டும் போய்க்கொண்டு மிருக்கும், மிண்டறமேல் போகிலும்=தடையில்லாமல் மேலேபோயினும், எல்லாமாய்ப்போம் = யாவு மாய்ப் போகும், மீளினும்=திரும்பினும், எல்லாமாய் மீளும்=யாவுமாய்த் திரும்பும், தண்டலிலாப் புமானேகி = தடையில்லாது புருடனேகி, சாமேவும் = மரணமுறும், பிராண னும்=பிராணவாயுவும், அச்சத்திதானே=அக்குண்டலினி சத்தியேயாம்.

(ஸ்ரீ - வீர.) உத்தமோத்தமமான சீவசத்தியென்னும் குண்டலினியானது தேகத்தி லிருப்பதாகும், ஆண்டு ஸ்பந்த சத்தியினது முக்கியவிருத்தி அதன் ஸ்தான மூவகையைக் காட்டல்:—அபானத்தன்மையை யடைவுற்று எப்போதும் கீழே செல்வதாகும் சமான னென நாபிமத்தியி லிருப்பதாகும் உதானனென மேலேயிருப்பதாகும், விருத்தி பேதப் பிரயோஜனங்களைக் கூறல்:—கீழே அபான ரூபமேயாம் கீழ்நோக்கலே பிர யோஜனமாம் மத்தியில் சௌமியமே யெப்போதும் அபான உதானங்களால் இழுக்கப்பெறு வதாயினும் சுயம் சௌமியமே நிச்சலையேயாம் புஷ்டையாயினும் உதான ரூபையேயாம் புரு ஷன் சௌக்கியமாகவே யிருக்கின்றான், அதைப் பற்றுறுவதாந் தன்மையானே புஷ்டையாம் பலவதியாயினும் மேல்விருத்தி உதானரூபமேயாய் சௌக்கியமாகவே யிருக்கும் லிங்கத்தை வெளியே கிளப்பமாட்டாது, இவ்வண்ணம் கீழ் விருத்திக்கும் அது பற்றுக்கோடாவதாம் முயற்சியினாலே தரிக்கப்பெறுவதாகாதாயின் சர்வயத்தனமும் கீழேசெல்லும், சாமானிய விருத்தியினாலே தரிக்கப்பெறாதாயின் அந்தச் சீவ உணர்வானது அபானவிருத்தியால் சர்வ யத்தனத்தினுடன் இழுக்கப்பெற்றதாய் கீழ் மார்க்கத்தானே வெளியே செல்லும், அதனு லென்னையெனின் உரைத்தல், வெளியேகு மதனால் வலிதில் அப்புமான் மரணத்தை யடை வன், முன் மொழிந்ததையே வெளிப்படையாய் மொழிதல்:—மிண்டறவென்பதாதி, யுக்தி யினாலே தரிக்கப்பெறாதாயின் யாவுமே மேலே செல்லும், வெளிப்போந்தவதனால் வலிதில் அப்புருடன் மரணத்தை யடைவன்.

(ச) கூடி நிற்கும்=தேகத்துறைவதாய், குண்டலினியெனும்=குண்டலினி சப்தவாச் சியமாய், மிக நல்லதாய், சீவ சத்தியிருக்கின்றது, இதுவே பிராணபான வடிவமாதலின் கீழ்மேல் வந்துபோகும், அச்சத்தி = அந்தப்பிராணசத்தி, மேற்போகிலு மெல்லாமாய்ப் போகும், பின்பு ஒருகாலத்து கீழ்மீளும், ஆதலின், தண்டலிலா, பிராணகதிக் கத்துருவ மாதலின், புமான்=சீவன், சாமேவும்=மரணத்தை யடைவன், யாதுகாரணத்தினால், பிரா ணனும், பிராணமயீயென நினைக்கப்பெறுவதாமோ. (37)

(ஸ்ரீ - வீர - அ - கை) இதனானே பிராண அபானகதியைத் தடுக்கும் பயிற்சியினானே சர்வாங்கத்திலும் சமானவிருத்தியால் இதர விருத்தியை வெற்றிகொள்ளவே எல்லா நோய் களி னீக்கமும் மிருத்தியு ஜயசித்தியும் ஆம் எனலும் மேல்வினைதலும்:—தன்னிடத் தென்பது.

தன்னிடத்தே யெப்படியும் போக்குவரத் தொழித்திடத்தச் சத்திநிற்கின்
மன்னுயிர்க்கு நோய்வாரா துள்ளுறவே மாருதத்தை மறுத்தலாலே
என்னலுமே யாதிவியா திகளிரண்டுந் தோன்றுதலு மிறத்தலுனு
நின்னருளா லுரையென்ன விராகவன்கேட் டலும்வசிட்ட னிகழ்த்தலுற்றான்.

(ப - ரை.) தன்னிடத்தே=தன்னிடத்தில், எப்படியும்=எவ்வாற்றாலேனும், போக்குவரத்து ஒழித்து=போதல் வருதலை விலக்கி, இந்தச் சத்திநிற்கின் = இந்தச் சத்தியானது நிலைபெறின், மன் உயிர்க்கு=இதிலிருக்கும் ஜந்துவிற்கு, நோய்வாராது=வியாதி வரமாட்டாது, உள்ளுறவே மாருதத்தை மறுத்தலாலே=உள்ளே நிலைபெறும்படி வாயுவைத் தடுத்தலினாலே, என்னலுமே=என்று கூறலுமே, ஆதிவியாதிகள் இரண்டும் = உள்நோய் புறநோய் இரண்டும், தோன்றுதலும் = உதயமாதலும், இறத்தல் தானும் = நாசமாதலுந்தாம் நின் அருளால் உரையென்ன = தேவரீர் தயவினாலே அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று இராகவன் கேட்டலும் = ஸ்ரீ இராகவர் வினாதலும், வசிட்டன் = ஸ்ரீ வசிட்டபகவான், நிகழ்த்தலுற்றான் கூறத் தொடங்கினார். (௨)

(ஸ்ரீ - வீர.) மேற்கீழ் கமனாகமனங்களை விட்டொழித்து எல்லாவாற்றானும் உடம்பினில் அடங்குமாயின் அஜ்ஜந்துவிற்கு உள்ளே வாயுவின்றடையால் வியாதியுதலும், ஒருநூறு முக்கியநாடிகளாம், அவற்றின்சாகைகளோ சாமானிய நாடிகளாம், அவற்றில் அன்னரசத்தை யடைவிக்கும் சமான விருத்திக்கு யாண்டுதான் கபரித்தம் முதலியவற்றின் விருத்தியால் வியாபார மின்மையாமோ ஆண்டே அயல்வாயுக்களினாலே விஷம பாவத்தால் அன்னரசம் கவரப்பெறுதலால் சிறு நோய்களும் பெருநோய்களும் சம்பவிக்குமெனல்:—சாமானியநாடிசாம்பி நிற்றலின் சாமானிய ரோகசம்பவமாம் முக்கியநாடி முரண்பட்டிருத்தலின் முக்கிய நோயின் முதிர்ச்சியாம், எனலும், அவைகளின் விநாச மெங்ஙனம், அவ்வண்ணம் அவைகளின் உதய மெங்ஙனம் இச்சரீரத்தில், ஹே முனீஸ்வரரே! ஆதிவியாதிகள்தம்மை உள்ளபடியே விரைவில் அடியேனுக்குக் கூறவேண்டும்.

(ச.) இந்தச் சத்தி = இப்பிராண சத்தியே, நிரோதாப்பியாச வசத்தினால் மேலுங் கீழும், போக்குவரத் தொழிந்து, தன்னிடத்தே = தேகத்தில், எப்படியும் சர்வப் பிரகாரத்தாலும், நிற்கின், உள்ளுறவே மாருதத்தை மறித்தலாலே = மாருதமுண் மறிபடு மேதுவினால், மன்னுயிர்க்கு, நோய் வாராது = விடுபடும், நோய் என்பது உபலட்சணம்; சரைமரணாதிகளும் ஒழியுமென்பது பொருள், தோன்றுதலு மிறத்தலுனும் = இத்தேகத்திற் றோன்றுதற்குக் காரணமும், இறத்தற்குக் காரணமென்பது பொருள்; யாது விநாச மெவற்றிற்கோ யாதுற்பாத மெவற்றிக்கோ என அன்மொழித் தொகையாம். (38)

(ஸ்ரீ-வீர-அ-கை.) என்று ஸ்ரீ இராகவர் வினாதலும் அதற்குத்தரத்தை ஸ்ரீ வசிட்டபகவான் கூறல்:—அங்கத்தின் என்பது.

அங்கத்தின் வருத்தத்தை நோயென்பர் வாதனையை யாதியென்பர்
பங்கற்ற வஞ்ஞான மூலத்தே யிருந்துணர்விற் பாரிப்போகும்
பொங்குற்ற ஞானமிலா மையிற்பொறிக டமையடக்கப் போகாவுற்றாற்
றங்குற்ற விதயத்திற் சிறுமையற மால்கோபந் தழைத்தலாலே.

(ப-ரை.) அங்கத்தின் வருத்தத்தை = உடம்பின் கஷ்டத்தை, நோய் என்பர் = ரோகம் என்பர், வாதனையை ஆதி என்பர் = வாசனையைத் தானே ஆதியென்று கூறுவர், பங்கற்ற = பகுப்பற்ற அஞ்ஞான மூலத்தே = அறியாமையினுடைய மூலத்திலேயே, இருந்து = இருப்பனவாகி, உணர்வில் பாரிப்போகும் = தத்துவ ஞானத்தினால் ஒழியும் போகும், பொங்குற்ற ஞானமிலாமையில் = உண்மை உணர்ச்சி யின்மையினாலே, பொறிகள்தமை அடக்கப் போகாவாற்றால் = புலன்களை நிறுத்த முடியாமையால், தங்குற்ற இத

யத்தில் = தங்கும்படியான இருதயத்தில், சிறுமையற = சுருக்கமின்றி, மால் கோபம் தழைத்தலாலே = ஆசையும் சினமும் ஆக்க முறுதலாலே.

(ஸ்ரீ - வீர.) தேக துக்கத்தை வியாதி யென்றுணர்வர் ஆதியென்பது வாசனமயமாம் அஞ்ஞான மூலத்திலேயே அவையிருப்பவாம் தத்துவஞான முண்டாகவே நன்கு நசிக்கும்; அவற்றின் ஆதியினுதய நிமித்தங்களை யறைதல்:—பொங்குற்ற வென்பதாதி. அதத்துவஞான வசத்தினாலும் தன்னுடைய இந்திரிய நிக்கிரக மின்மையினாலும் சித்தத்தில் ஆசையின்றிய வாயு முக்கிய சௌஸ்தமா யிருக்கும் காரணமாய சூக்குமத்தன்மையை விடுத்து நிரந்தரம் விருப்பு வெறுப்புகளிற் பற்றிருத்தலின்:

(ச.) அங்கத்தின் வருத்தத்தை = சரீர வருத்த வேதனை, நோயென்பர், வாதனை = வாசனாமயமான மானத துக்க வேதனை, ஆதியென்பர், ஆதி = அவ்விரண்டு துக்கங்களும், பங்கற்ற ஞானலயத்தே = தத்துவக்ஞான பாவத்தால், நாபி மூலத்தே = அஞ்ஞான மூலமாய், பயிலும்; இது, பங்கற்ற ஞானலயத்தே நாபி மூலத்தே பயிலுமாதி என்னும் பாடத்தை யனுசரித்தது. பொங்குற்ற ஞானமிலாமையில் = தத்துவ ஞான பாவத்தினால், பொறிகட்டம யடக்கப் போகாவாற்றால் இந்திரிய ஜயமின்மையின், சிறுமையற = அற்பத்தை விட்டு, இதயத்தில், மால்கோபந் தழைத்தலாலே = இராகத்துவேஷப் பிரவிர்த்தி யேதுவாகிய ஜாட்டிய வசத்தினால். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இயம்பிய ஆதியை முடித்து வியாதியைக் கூறல்:—இதி என்பது.

இதுபெற்றோ மீதில்லை யென்னுமவ தானத்தா லிறுகுமோக
மதுமெத்த வுண்டாக மழைநாளிற் செறிபனிபோ லாதிதுன்னு
முதிரிச்சை வெளியாகி மூர்க்கபா வனைசால முற்றும்போதில்
விதியுற்ற தொழிலன்றித் தீத்தொழில்கள் செய்தலினால் வியாதியுண்டாம்.

(ப - ரை.) இது பெற்றோம் = இதனை யடைந்தோம், ஈது இல்லை = இது கிடைக்க வில்லை, என்னும் அவதானத்தால் = என்ற ஜாட்டியத்தால், இறுகு மோகம் = மயக்கந் திடப்படும், அது மெத்த உண்டாக = அம்மயக்கம் அதிகரிக்க அதிகரிக்க, மழைநாளில் = வருஷா காலத்தில், செறிபனிபோல் = பொருந்தும் துகினம்போல; ஆதி துன்னும் = வாசனைகள் நிறையும், முதிர் இச்சை வெளியாகி = முதிர்ந்த ஆசை விளங்கி, மூர்க்க பாவனை சால முற்றும்போதில் = அறியாமை அத்தியர்தம் கனமாகிய போதில், விதியுற்ற தொழிலன்றி = விதித்தமான வினையேயல்லாமல், தீத்தொழில்கள் செய்தலினால் = கெட்ட காரியங்களை யியற்றுவதால், வியாதி உண்டாம் = நோய் உதயமாம்.

(ஸ்ரீ - வீர.) இஃதடைவுற்றது இஃதடைவுறவில்லை என்னுஞ் சிந்தையினது ஜாட்டியத்தால் பயசோக நிமித்த மடைவுறவே அதற்குமாற்றாய உபாயமறியாத வடிவங்னமான மோகந் தருவனவாய ஆதிகள் வருஷா காலத்தில் பனியேபோல மிகக் கிளம்பாநிற்கும், இப்போது சரீர சம்பந்தமான வியாதியுற்பவ ஹேதுக்களைக் கூறல்:—முதிரென்பதாதி. அத்தியந்தம் எழுவதாகிய இச்சையும் அறியாமையும் கனத்தன்மையை யடைந்து தன்னால் மனம் ஜயிக்கமுடியாதபோது நோயுண்டாம்.

(ச) இது = இப்பொருள், பெற்றோம், ஈதில்லை யென்னும் = இவ்வடிவமான, இறுகு மோகம், உண்டாகின், ஆதி, மழைநாளிற் செறிபனிபோற்றுன்னும், சுரைக்கொடிபோ

லென்றும் பாடமுளது, முதிரிச்சை=முற்கூறிய ஆதி ரூபங்களான இச்சைகளை, வெளியாகி=மிகவும் வெளிப்பட்டனவாய், மூர்க்க பாவனை=மௌர்க்கியமும், சால முற்றும் போதில். (40)

(ஸ்ரீ-வீர-அ-கை.) கூறிய நோயின் நிமித்தங்களையே விஸ்தரித்துரைத்தல்:—பொல்லாத, நாடி, யென்பன.

பொல்லாத வுணவினாற் பொல்லாத தேசத்திற் போகைதன்னாற்
பொல்லாத காலவிவ காரத்தாற் செய்தொழில்கள் புரிபொல்லாப்பாற்
பொல்லாத கயவருறு கூட்டத்தாற் பொல்லாத பொருளெண்ணத்தாற்
பொல்லாத விச்சையாற் பொல்லாத வெண்ணிக்கை பொருந்தறன்னால்.

நாடிகளின் வெளிகணுக்கள் சிறுகுதலாற் பெருகுதலா னற்பிராண
னோடிமிகச் சிதறலுமே யுடறானுஞ் சிதறுதலை யுறுமுற்றக்காற்
கேடிதென முன்னுரைத்த குற்றங்கள் காரணமாய்க் கிளர்நோயுண்டா
நீடியகோ டையுமழையு நதிக்குறைவு நிறைவுகளை நேருமாபோல்.

(பு-ரை.) பொல்லாத உணவினால் = கெட்ட ஆகாரத்தால், பொல்லாத தேசத்தில் போகைதன்னால் = கெட்ட இடங்களுக்குப் போதலால், பொல்லாத காலவிவகாரத்தால் = கெட்ட காலங்களில் விவகரித்தலால், செய்தொழில்கள் புரி பொல்லாப்பால் = கெட்ட காரியங்களைச் செய்தலால், பொல்லாத கயவர் உறு கூட்டத்தால் = தீயவரோடு சேர்தலால், பொல்லாத பொருள் எண்ணத்தால் = கெட்ட வஸ்துக்களைச் சிந்தித்தலால், பொல்லாத இச்சையால் = கெட்ட ஆசையினால், பொல்லாத எண்ணிக்கை பொருந்தல் தன்னால் = பொல்லாத நினைவுகளோடு கூடுதலால்;

நாடிகளின் வெளிகணுக்கள் = நாடிகளின் ரந்திர கணுக்கள், சிறுகுதலால் = சுருங்கலால், பெருகுதலால் = விரிதலால், நல்பிராணன் ஓடி மிகச் சிதறலுமே = நல்ல பிராண வாயுவானது சென்று மிகவும் தெறித்தலுமே, உடல் தானும் சிதறு தலை உறும் = சரீரமும் கலக்கத்தை யடையும், உற்றக்கால் = அடைந்தால், கேடு இதென முன்னுரைத்த குற்றங்கள் காரணமாய் = கெட்டதென்று முன்மொழிந்த மாசுகள் ஏதுக்களாக, கிளர் நோய் உண்டாம் = முதிர்ந்த வியாதி உண்டாகும், நீடிய கோடையும் மழையும் = மிகுந்த வெய்யிலும் வருஷமும், நதிக்குறைவு நிறைவுகளை நேருமாபோல் = நதியின் க்ஷீண விருத்திகளை அடைவிக்குமாபோல்.

(ஸ்ரீ-வீர.) கெட்ட அன்னத்தை உட்கொள்ளுதலால் கெட்ட தேசங்களிற் செல்லுதலால், இச்சை யறியாமைகள் ஆந்தரங்களாய அதனேதுக்களாம், கெட்ட அன்னாதிகளோ வாகியங்களாம், துர்த்தேசங்கள் மசானாதிகளாம், நடுராத்திரி பிரதோஷாதி காலங்களில் போசனஞ் செய்தல் புணர்தல் முதலிய விவகாரத்தால், கெட்ட காரியங்களைச் செய்தலால், துர்ச்சன சம்பந்த தோஷத்தால், விஷசர்ப்ப வியாக்கிர கள்வராதி சங்கைகளை மனத்தின் கண்ணே உண்டாக்கலால், நாடிகளினது ரந்திர சந்ததிகளில் குறைவுறலால் நிறைவுறலால் வியாதியுண்டாம் = நாடிகளுக்குள் அன்னரசம் புகாமையால் க்ஷீணத் தன்மையுறலால் இருமடங்கு ரசவாதாதி பிரவேசத்தால் மிகநிறைவுறலால் பிராணனில் கபபித்தாதி மிகக் கோபத்தானேவியாகுலத் தன்மையுறலால் தாக்குதல் முதலியவற்றால் காயத்தில் சிதைவுண்டாகவே

நோயுண்டாம், சொஸ்தமின்மையின் காரணமாகிய வியாதி யென்னும் தேகத்தின் ஆகார மாறுபாடு தோஷத்தால் தேகத்திலுண்டாகின்றது, நதியினுடைய ஆகார மாறுபாடு மழையினும் வெய்யிலினுலு முண்டாவதே போலும்.

(ச.) பொல்லாத வுணவினுல் = தீதுறு மேதுவான தீங்கான வர்நத்தின் உணவினுல், பொல்லாத தேசத்தில் = மசான தேசத்தில், போகைதன்னுல், பொல்லாதகால = சந்தியாதி யிரவில், போஜனுதி விவகாரத்தால், செய்தொழில்கள் புரி பொல்லாப்பால் = சவ வகனுதி ரூபங்களான துஷ்டக் கிரியையினது பிரவர்த்தனத்தால், பொல்லாத கயவருறு கூட்டத்தால் = குட்டாதி துஷ்ட ஜனங்களின் சங்க தோடத்தால், பொல்லாத பொருள் குரோதாதியின், எண்ணத்தால் = பாவனையால்.

நாடிகளின்=பிராண சஞ்சார மார்க்கங்களினது, சிறுகுதலால் பெருகுதலால், வெளிகணுக்கள்=வாதரந்திர சந்தியில், பிராணனேடு மிகச்சிதறுலுமே=உடலும் சிதறுதலையும், பரவசமாம், ஆயின், குற்றங்கள் காரணமாய் = துக்க வேதுவாகிய வாதாதி ரூப தோடத்தினுல், தேகத்தில் நோயுண்டாம், குறைவு நிறைவுக்கேதுவான, கோடையினுலு மழையினுலும், நதி = நதிவடிவு, குறைவு நிறைவுகளை நேருமாபோ லென்பது பொருள். (41-42)

(ஸ்ரீ - வீர - அ - கை) கூறிவந்த இருவகையையு முபசம்மரித்து அவற்றை யொழிக்கு முபாயத்தை யுணர்த்தத் தொடங்கல்; அந்த ஆதிவியாதி சாமக்கிரியும் பழைய புதிய கர்மானுசாரத்தால் சேர்கின்றது, எனல்:—தொல்லையென்பது.

தொல்லையதா கினுமிங்குள் ளனவெனினுஞ் சுபமெனினு மசுபமேனு
மெல்லையற மிகுந்ததே ததுதன்பா லப்படியே யிழுத்துக்கொள்ளும்
புல்லுறவிவ்வகையாகி யாதிவியா திகளைந்து பூதத்துண்டாஞ்
சொல்லியவிவ் வாதிகடா மிருவகையா யிறக்குநெறி சொல்லக்கேட்பாய்.

(ப - ரை.) தொல்லையதாகினும்=பழையதாகினும், இங்குள்ளனவெனினும்=புதியனவாயினும், சுபம் எனினும் =நல்லதாயினும், அசுபமேனும்=கெட்டதாயினும், எல்லையற= அளவற, மிகுந்தது எது=அதிகமானது யாது, அது=அதுவே, தன்பால்=தன்னிடத்தில், அப்படியே=அவ்வாறே, இழுத்துக் கொள்ளும்=சேர்த்துக் கொள்ளும், புல்லுற இவ்வகையாகி = பொருந்துற இவ்வாருகி, ஆதிவியாதிகள் ஐந்துபூதத் துண்டாம் = சூக்குமதால் நோய்கள் பஞ்ச பூதத்தினின்றும் உளவாம், சொல்லிய=கூறிய, இவ்வாதிகள் தாம் = இந் நோய்களானவை, இருவகையாய்=இரண்டு பிரகாரமாய், இறக்கும் நெறி=மறிக்கும் மார்க்கம், சொல்லக் கேட்பாய்=கூறக் கேட்குதி.

(ஸ்ரீ - வீர.) பழையதாதல் இங்குள்ளதாதல் சுபமாதல் அசுபமாதல் எனினும் யாது தான் அதிகமாமோ அதுவே அவ்வாறே அதன் கிரமத்திற் பொருத்துகின்றது, இவ்வண்ணம் ஆதிகளும் வியாதிகளும் பூதபஞ்சகத்தில் உண்டாகின்றன, இராகவர் தங்குலத்தைத் தாங்கவந்த ஹே இரகுகுல திலகனே! எங்ஙனம் அவை அழிவுறு மென்பதையுங் கேட்டி.

(ச.) தொல்லையது = பூர்வஜன்மத் துண்டானது, இங்குள்ளன = இச்சன்மத்துதித்தது, சுப மசுபமேனும், எது=வாசனை, மிகுந்தது=பிரபலமாம், அதுவே, தன்பால், தன்னுருவான சுப விவகாரத்தேனும்: அசுப விவகாரத்தேனும், அப்படியே = அந்தப் பிரகார

மாகவே, இழுத்துக்கொள்ளும் = பிர்விர்த்திப்பிக்கும், துர்வாசனை வசத்தால் வியாதி யேது, அபசாரமாக வாசரித்ததா மென்பது கருத்து, இவ்வகையாகி = முற்கூறிய பிரகார மாய், நெறி=விவகாரம். (43)

(ஸ்ரீ வீர - அ - கை) இருவகை வியாதிகளும் எகுந்திறத்தை யுரைத்தல்:—மேவிய சாரம் என்பன.

மேவியசா மானியமுஞ் சாரமுமென் றிருவகையா மாதியென்பர்
தாவுறுசா மானியந்தா னுடற்பிணியாஞ் சாரந்தான் சநநமாகுங்
கேவலமிவ் வுடற்பிணிதான் றனக்கடுத்த பொருட்பேற்றாற் கெட்டுப்போகும்
பாவனையா மாதிகளில் லாதாகிற் றோன்றுபிணி பறந்துபோமே.

சாரமெனும் பிறவிநோய் தத்துவஞா னத்தன்றிச் சற்றும்போகா
தீரவிது கயிறென்னும் போதத்தா லன்றியராச் சிதைவதுண்டோ
பாரமுறு மாதியிற்றோன் றுப்பிணிமந் திரமருந்து பலநூல்கற்ற
கூரறிவின் மருத்துவரென் றிவ்வகையாற் போமிதுநாங் கூறவேண்டா.

(ப - ரை.) மேவிய சாமானியமும் = பொருந்திய சாமானியமென்றும், சாரமும் என்று=சாரமென்றும், இருவகையாம்=இரண்டு பிரகாரமாம், ஆதி என்பர் = ஆதி யென்பர், தாவுறு சாமானியந்தான் = மிகாநின்ற சாமானியமானது, உடல் பிணியாம் = தேக நோயாம், சாரந்தான் சநநமாகும்=சாரமென்பது ஜன்ம மயமாம், கேவலம் இவ்வுடல் பிணிதான்=கேவலம் இவ்வுடல் நோயானது, தனக்கடுத்த = தனக்கு உரித்தாகிய, பொருள் பேற்றால்=வஸ்துப் பிராப்தியால், கெட்டுப்போகும் = நசித்துப்போகும், பாவனையாம்= பாவனா ரூபமாகிய, ஆதிகள்=ஆதிகளாகியவை, இல்லாதாகில் = அபாவமாயில், தோன்று பிணி பறந்துபோமே=பிரதீதியாகும் நோய் ஓடிப்போமே.

சாரமெனும் பிறவிநோய் = சாரமென்று சொல்லப்பட்ட ஜனன வியாதியானது, தத்துவ ஞானத்தன்றி=ஆத்மஞான மல்லாமல், சற்றும்போகா = அற்பமும் ஏகா, தீர இது கயிறு என்னும் போதத்தால் அன்றி = திடமாக இது இரச்சுவென்னும் ஞானத்தாலல்லாமல், அராசிதைவது உண்டோ = சர்ப்பமயல் நீங்குவது உளதோ, பாரமுறும் ஆதியில் தோன்றுப்பிணி = கனமுற்ற ஆதியினின்றுஞ் சனியாத நோயானது, மந்திரம் = மந்திர ஜபம், மருந்து=ஔஷதம், பலநூல் கற்ற = பல வைத்திய சாஸ்திரங்களைப் படித்த, கூர் அறிவின் மருத்துவர்=சூக்கும மதியையுடைய வைத்தியர், என்று = என, இவ்வகையால் போம்=இந்தப்பிரகாரத்தால் போகும், இது நாங் கூறவேண்டா=இதனை யாம் உரைக்க வேண்டியதில்லை.

(ஸ்ரீ - வீர) அற்பங்களென்றும் திடதரங்களென்றும் ஈண்டு வியாதிகள் இருவகை யுள்ளனவாம், வியவகரிக்கத் தக்கனவாய பசி தாகம் மனைவி புத்திரன் கொஞ்சுதல் முதலியவையும் அவற்றின் சம்பவங்களும் சாமானியங்களாம், ஜன்மாதி விக்கிரியாமூலம் சாரமெனப்பெறும், வியாவகாரியங்கள் அடைவுற்ற அன்னபான ஸ்திரீபுத்திராதி விரும்பினவைகளானேயே நசிப்பனவாம், ஆதி க்ஷயத்தானே ஆதியாலுண்டாவனவாய வியாதிகளும் அத்தியந்தம் க்ஷீணமாவனவாம், ஆத்மஞான மில்லாமல் சாரமாகிய ஆதி வியாதி நசியாவாம் ஹே இராகவ! அடிக்கடிப் பார்வைப் பரிசீலனத்தால் ரச்சுதத்துவ நிச்சயபூரியந்த

மான அவபோதத்தால் ரச்சு சர்ப்பமானது நசிக்குமன்றோ, மழை காலத்திய நதியின் கரையிலிருக்கும் எல்லாக் கொடிசெடிக்குமேபோல சகல ஆதிவியாதி விலாசங்களுக்கும் சார்வியாதி சங்க்ஷயமானது மூலங்கெடுப்பதாம், சாமானிய வியாதிகளுக்குள் ஆதி ஜன்னியமல்லாத வியாதிகள் சுலபமாய் சிகித்சை செய்யத்தக்கனவா மென்னுங் கருத்தால் கூறல்:— பாரமென்பதாதி. ஆதி ஜன்னியமல்லாத வியாதிகளோ திரவிய மந்திர சுபக்கிரமங்களாலும் சிகித்சகாதி சாஸ்திரங்களிற் கூறியமுறைகளானும் அல்லது ஈண்டு விருத்த பரம்பரையானே உபதேசிக்கப்பெற்ற அன்னிய சிகித்சனங்களானும் நசிப்பனவாம், லோலார்க்காதி தீர்த்தங்களில் ஸ்நானம் மந்திரங்கள் ஔஷதங்கள் என்பதாதி உபாயங்கள் விருத்த ஜனங்களிடத்தினின்றும் உணரப்பெற்ற ஔஷதங்கள் சிகித்சை நூல்கள் என்னு மிவ்வியாவும் உன்னாலறியப் பெற்றனவேயாம் இது விஷயத்தில் வேறென்ன உபதேசிக்கவேண்டும்.

(ச) இருவகையாம் வியாதியென்பர் என்றும் பாடமுளது. ஆதி யிருவகையாயிருக்கும், சாமானியமுஞ் சாரமுமென்று, அவற்றில், உடற்பிணியாம், விவகார மாத்திர வேதுவான ஆதி சாமானிய மெனப்படும், ஞானிகட்குச் சாதாரணமாதலி னென்க, செனனமாகும்= ஜன்ம வேதுவான ஆதிசார மெனப்படும், மிகுதிட மாதலினென்க, சுத்தவாசனை மயமான வாதி சாமானியம், மலின வாசனைமயமானவாதி சாரமென்பது தாற்பரியம், இவ்வுடற்பிணி தான்=விவகார மாத்திர பிரயோஜனமான ஆதிகள், அதற்கடுத்த பொருட்பேற்றால்=இஷ்டப்பொருள் கிட்டினதாலே, கெட்டுப்போகும், இஷ்டங்கிடைத்தலில் இச்சை நிவிர்த்திப்படு உசிதமாதலினென்க. பாவனையாந் தோன்றுபிணி=ஆதிபவ வியாதிகளும், ஆதிகளில்லாதாயின்=ஆதி நசிக்கின், பறந்துபோம்=நசிக்கும்.

சாரமெனும் பிறவிநோய் = அந்த ஆதி தத்துவ ஞானத்தன்றி = ஆன்ம ஞானத்தாலன்றி நசியாது, அவித்தை மயமாதலினென்க, மந்திரம்=ஆரோக்கிய வேதுக்களான செபாதிகள், மருந்து=கற்க கஷாயாதி ரூபங்கள், பல=தேவ பிராமண சந்தர்ப்பணைதிகள். (44-45)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆதிகளினின்றும் நோயுண்டாம் வகையும் அதனது மாற்றுபாயமும் ஸ்ரீ இராகவர் என்னென்று கேட்ப ஸ்ரீ வசிட்டபகவான் விடையளித்தல்:—என்றலும், பிறை, உட லென்பன.

என்றலுமே யாதியினின் றெவ்வகையுண் டாம்பிணிமற் றெவையான்மாளுங்
குன்றனையா யுரையென்ன விராமன்கேட் டலும்வசிட்டன் கூறுகிற்பா
னின்றமனங் கலங்குதலு முடல்கலங்கு முடல்கலங்கி னேர்வந்துற்ற
தொன்றுமறி யாமனேர் வழிவிலக்கித் தீவழியி லோடாநிற்கும்.

பிறையம்பு படுமான்போன் முறிந்தோடுங் கலக்கத்தாற் பிராணவாயு
நிறைகின்ற சமமின்றிப் பரந்தோடு நாடிகளு நிலையினில்லா
வறைகின்ற குசீரணமா யசீரணமா யதிசீர்ண மாகியன்ன
முறைகின்ற வுடலுக்குக் கூற்றமா நாடியுயி ருலவினாலே.

உடலுள்ளே விரோதத்தா லுறைகின்ற வன்னம்வேற் றுருவமாகி
விடலுறு நோயாகு மிவ்வகையா லாதியினால் வியாதியுண்டாந்
தொடர்வுறு வாதிநசித் திடுமாகில் வியாதிகளுந் துஞ்சிப்போகுங்
கடவதா மந்திரத்தால் வியாதிகணீங் கிடுநெறியைக் கழறக்கேட்பாய்.

(ப - ரை) என்றலுமே=என இவ்வண்ணங் கூறலுமே, ஆதியினின்று எவ்வகையுண் டாம்பிணி=ஆதியிலிருந்து எவ்வாறு உளதாகும் நோய், மற்று எவையால் மாளும் = மற் ருய எவற்ருல் மாயும், குன்றனையாய் = யாவுமுணர்ந்த மலைபோலும் பெரியோய்!, உரை யென்ன இராமன் கேட்டலும்=கூறுவீரென்று ஸ்ரீ இராகவர் வினுதலும், வசிட்டன் கூறு கிற்பான்=ஸ்ரீ வசிட்டபகவான் கூறத் தொடங்குகின்ருர், நின்றமனங் கலங்குதலும் = நிற் கின்ற சித்தமானது கலக்கமுறுதலும், உடல் கலங்கும்=தேகம் கலக்கமுறும். உடல்கலங் கின்=சரீரமானது கலக்கமுறின், நேர்வந்துற்ற தொன்று மறியாமல் = முன் வந்தடைந்த தொன்றையு மறியாமல், நேர்வழி விலங்கி = முன் மார்க்கத்தினின்று மகன்று, தீவழியில் ஓடாநிற்கும்=துமார்க்கத்திற் செல்லும்.

பிறையம்பு படுமான்போல்=பிறைபோன்ற பாணம்பட்ட மிருகம்போல, முறிந்தோ டும் கலக்கத்தால் பிராணவாயு=பிராணனனது சஞ்சலத்தால் சிதறுண்டலையும், நிறைகின்ற சமமின்றி=பூரித்திருக்கும் சமம் இல்லாமல், பரந்தோடும்=பரவியோடும், நாடிகளும் நிலையி னில்லா=நாடிகளும் தன்றிதியிற் றிதிபெரு, அறைகின்ற குசீரணமாய் அசீரணமாய் அதி சீர்ணமாகி=சொல்லாநின்ற மாருயசீரணமாகி சீரணமாகாமல் அதிக சீரணமாகி, அன்னம் உறைகின்ற உடலுக்கு=ஓதனம் உளதாய் உடம்பிற்கு, கூற்றமாம்நாடி உயிர் உலைவினுலே= நாடி பிராணவாயுவின் சஞ்சலத்தினுலே நிலைகுலைதல் உண்டாம்.

உடல் உள்ளே விரோதத்தால் உறைகின்ற அன்னம்=சரீரத்தினுள்ளே மாறுபாடாக விருக்கின்ற ஆகாரமானது, வேற்றுருவமாகி=மாருன பரிணமத்தை யடைந்து, விடல்உரு நோய் ஆகும்=தீராத வியாதியாகும், இவ்வகையால் = இந்தப் பிரகாரத்தால், ஆதியினுல் வியாதி உண்டாம் = ஆதியினின்றும் நோய் உளதாம், தொடர்வு உரு ஆதி-நசித்திடும் ஆகில்=ஆதியானது பற்றுருதபடி கெடுமாயின், வியாதிகளும் துஞ்சிப்போகும் = நோய்க ளும் கெட்டுப்போகும், கடவதா மந்திரத்தால்=மந்திர ஜபத்தினுலே, வியாதிகள் நீங்கிடும் நெறியை=நோய்கள் அகன்றிடும் மார்க்கத்தை, கழறக்கேட்பாய்=கூறக்கேட்குதி.

(ஸ்ரீ - வீர.) ஆதியினின்றும் வியாதி யெங்ஙனமுண்டாம் எங்ஙனந்தான் அது விநாச மாகும் திரவியமாகிய ஔடதத்தினும் அயலாய மந்திர புண்ணியாதி ரூபமான யுக்தியினுல் தீரும், இது தனது சம்பாவனையின் கூறும், அவற்றுள் முதலில் அஃதுண்டாம் வகையை ஸ்ரீ வசிட்டபகவான் கூறல்:—வசிட்டன் என்பதாதி. சித்தமானது ஆதிகளினுலே கலக்க முற்றபோது காயமும் அத்தியந்தம் கலங்குதலை அடையாநிற்கும், கூறிய பொருளைத் திருஷ் டாந்தத்தினுலே பொருத்தல்:—அங்ஙனமன்ருே, சினந்த ஜந்துவானது முன் மார்க்கத்தை யே காண்பதில்லை, புரோ மார்க்கத்தை உணராதாகி துன்மார்க்கத்தை யடையாநிற்கும் வழங்கும் மார்க்கத்தை விட்டொழித்து சரபீடிதமாய மான்போலோடும், யானையினுடைய பிரவேசத்தினுலே கலங்கிய நீர்கள் சரித்தின் தடத்தில் அமார்க்கத்தில் பிறவகிக்கின்றன போலவே தாட்டாந்திகத்திலும் ஆதியாலாக்கப்பெற்ற கலக்கத்தால் பிராண வாயுக்கள் சாமியத்தைவிட்டு அமார்க்கத்தினுல் வகிக்கின்றனவாம்; பிராண வாயுவானது விடம்மாக வகிக்கவே நாடிகள் கபித்தாதி பூரணத்தன்மையினுலே ஆக்கப்பெற்ற விடம் இருப்புண் மையை அடையாநிற்கும் அரசன் னன்னெறியில் நடவாதொழியவே வருணசிரம முறைகள் கலங்குவனபோலும்; அதனையே கூறல், சில நாடிகள் மிக நிறைவுறும் மற்றுஞ் சிலவோ சூனியத்தன்மையைச் சூழும், பிராணன்களினுலே எப்புறமும் விட்சேபமுற்ற தேகத்தில்

என்றபடி, சரித்தின் பிரவாகங்களேபோலும்; குசீரணத்தன்மையாதல் அசீரணத்தன்மை யாதல் அதிசீரணத் தன்மைதானுதல் பிராணசஞ்சார துன்மார்க்கத்தால் அன்னத்தைத் தோஷத்தின் பொருட்டே செலுத்தும்; நதியினது வேகமானது காஷ்டங்களை கீழ்த்தேசத்தை நோக்கிச் செலுத்துறுமாறு சமானனென்னும் பிராணவாயுவானது தனது ஆசிரயமாய சர்வ சரீரத்தையும் நோக்கி உண்ட அன்னங்களை ரசமாக்கி உள்ளே செலுத்தும், "மத்தியிலோசமானனுகிய விதுவே இவ்வாகுதி செய்த வன்னத்தைச் சமமாகச் செலுத்தும்" என்னுஞ் சுருதியினுல் என்பது கருத்தாம். சரீரத்தினுள்ளே எவ்வன்னங்கள் விரோதமாக (விரோதமாக) இருக்குமோ அவையே தாதுவைஷம்மிய பரிணும சுபாவத்தானே வியாதித்தன்மையை யடையும், உபசங்கரித்தல் இவ்வண்ணம் ஆதியினின்றும் வியாதிபவிக்கும் அதனது நாசத்தானே நசிக்கும் வியாதிகள் மந்திரங்களினுலே எவ்வாறு நசிக்குமோ அவ்வாருய முறையைக் கூறக்கேட்குதி.

(ச) மனங்கலங்குதலும்:—சித்த விட்சித்தமாயின், உடல் கலங்கும், சித்தத்திருப்பதாங் தாதுற்ற சரீரமென்னு மிதனை விரித்துரைப்பவராய்க்கூறல், நேர்வந்துற்ற தொன்றுமறியாமல்—ரோசமுன்ன சீவர் முற்புரத்திருக்கும் பொருளையே காணர் வேறுபொருள் விசேடத்தைக் காணரென்பதாயிற்று, நேர்வழி விலங்கி—முன்புறுங் காரியத்தைப் பாராதுவிட்டு, தீவழியில்—அகாரியத்தில், ஓடாநிற்பர், பிறையம்பு படுமான்போல், அதனுல் = கலக்கத்தால்—சத்ததாதுமயமான தேகத்தின் கலக்கத்தினுல், பிராண வாயுக்கள், சமமின்றிப் பார்தோடும், ஆயின், நாடிகளும் நிலேபினில்லா—விபரீத நிலைபெறும், இங்ஙனம், நாடியுபிருலேவினுலே—நாடிகளும் பிராண வாயுக்களும் விபரியயமும் வேற்றுமையுமாகு மேதுவினுல், மிகப்புசிக்கப்படுமன்னம், உடலுக்குக் கூற்றமாம்—தோடமிருந்ததெனச் சொலற்காம், இங்ஙனம் உடலுள்ளே, விரோதத்தால்—குசீரணத்தன்மை முதலான வடிவத்தால், உறைகின்ற வன்னமே, வேற்றுருமாகி—பாகமுருமையின், நோயாகும்—வியாதி ரூபமாம், இவ்வகையால்—முற்கூறிய பிரகாரத்தால், ஆதியினுல் வியாதியுண்டாம், அதன் நாசத்தினுல் நசிக்கும் வியாதிகள், கடவதா மந்திரத்தால் = ஆரோக்கிய வேதுக்களான மந்திரங்களால், நீங்கிடும் வகையை—நசிக்குங் கிரமத்தை, சுழறக் கேட்பாய் என்பதற்றுவயம். (46-47-48)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இனி மந்திரமுதலியவற்ருனே நோய்நீங்கிடும் வகையை வருணித்தல்:—எப்படி, சுத்தம், என்பன.

எப்படியே கடுக்காய்கள் விரேசனத்தைப் பண்ணுகின்ற தியல்பினுலே
யப்படியே பாவனையால் யரலவவா திகள்காரி யங்களாக்கு
மெய்ப்படிபுண் ணியமாகிச் சுத்தமாங் கிரியையான் மேலோர்சார்வாற்
றப்பின்மனந் தெளிவெய்தும் புடம்வைத்த லானன்ருந் தமனியம்போல்.
சுத்தமுற மனந்தெளியி னுடலிலே யானந்தந் தோன்ருநிற்கு
மெத்துமதி யுகித்தக்கா லுலகமெலா நன்ருக விளங்கிடாதோ
சத்துவமா மனந்தெளியிற் பிராணவா யுவுமொழுங்கிற் சரித்துலாவு
முய்த்துளவந் நமுகெறியிற் சீரணிக்கு மதனுனே யொன்றுந்தோன்ரு.

(ப - ரை) எப்படியே கடுக்காய்கள் = எவ்வாறுதான் அரீதக்கியங்கள், விரேசனத்தைப் பண்ணுகின்றது இயல்பினுலே = சுபாவமாகவே மோசனத்தைச் செய்யுமோ, அப்படியே—அவ்வாறே, பாவனையால்—பாவித்தலால், யரலவவாதிகள் = யரலவ ஆதிகளென்

னும் அக்ஷரங்கள், காரியங்கள் ஆக்கும்=காரியங்களை உண்டாக்கும், மெய்ப்படி புண்ணிய மாகி=உண்மை வகையில் தருமமாகி, சுத்தமாங் கிரியையால் = தூய்தாந் தொழிலால், மேலோர் சார்வால்=சாதுக்களின் சேவையால், தப்பில் மனந்தெளிவெய்தும் = குற்றமின்றிச் சித்தமானது தெளிவினையடையும், புடம் வைத்தலால் நன்றும் தமனியம்போல் = புடம்போடலால் நலமாந் தங்கம்போல.

சுத்தமுற மனந்தெளியில்=தூய்தாக மனமானது தெளிவினை யடையுமாகில், உடலிலே ஆனந்தந் தோன்றாநிற்கும் = தேகத்திலே இன்பமானது ஜனியாநிற்கும், மெத்த மதி=பூரண சந்திரனானது, உதித்தக்கால் = உதயமானால், உலகமெல்லாம் நன்றாக விளங்கிடாதோ=ஜகத்து முழுவதும் நலம் உறுவதாக இலங்கமாட்டாதோ, சத்துவமாம் மனந் தெளியில்=மனமானது சத்துவமுற்று விமலமாகுமானால், பிராணவாயுவும் ஒழுங்கில் சரித்துலாவும்=பிராணபவனமும் கிரமமாகச் சஞ்சரிக்கும், உய்த்துள அன்னமும் செறியில் சீரணிக்கும்=உட்கொண்ட ஆகாரமும் முறையாக சீரணமாகும், அதனால் நோய் ஒன்றுந் தோன்றா அக்காரணத்தினால் வியாதியொன்றும் உண்டாகமாட்டாது.

(ஸ்ரீ-வீர.) எவ்வாறு கடுக்காய்கள் இயல்பாகவே மல விசர்ச்சனத்தை யுண்டாக்குமோ அவ்வாறு, வாயு, வன்னி, பூ, ஜலாதிபீஜ வடிவங்களான யரலவாதி மந்திரவர்ணங்கள், மாந்திரிகபாவனை வயத்தினாலே நாடிகளில் வியாதி யாகாரமாகப் பரிணமித்த அன்னரசங்களின் தோஷநீக்க பரிபக்குவாதி காரியஞ்செய்யும். ஆதியின் உபசாந்தி உபாயங்களைக்கூறல்:— மெய்ப்படி யென்பதாதி. ஹே நன்மைந்த! புண்ணியங்களாலும் நற்றொழிலாலும் நல்லோர் சேவையாலும் புடமிடப்பெற்ற பொன்னைப்போல மனம் நிர்மலபாவத்தை யடையாநிற்கும்; ஹே இராகவனே சித்தமானது சுத்தமுற்ற வளிதேகத்தில் ஆனந்தமானது விருத்தியை யடையும் பூர்ண இந்துவானது உதிதமாகவே இப்புவனத்தில் நைர்மல்யம் உண்டாவதே போலும்; சத்துவ சுத்தியினாலே இப்பிராண வாயுக்கள் ஒழுங்காகச் சரிக்கும் அவ்வாறே அன்னங்களுஞ் சீரணிக்கும் அதனால் வியாதிகள் நசிக்கும்.

(ச.) கடுக்காய்கள் எப்படி யியல்பினாலே, விரேசனத்தை=மலமோசனத்தை, பண்ணுகின்ற = செய்கின்றவோ, அப்படியே, யரலவாதிகளென்னு மந்திர வர்ணங்கள், பாவனையால்=ஆரோக்கியத்துக் குசிதமானதியானவசத்தினால், ரோகநிவிர்த்தி ரூபங்களான காரியத்தை, செய்யும், அதுபோல் பலத்தை விரைவிற் சநிப்பிக்குஞ் சுபாவமுள்ளது பாவனையாமென்னு நியாயத்தினாலென்க. ஆதிநாசத்தினால் அதிற் சநித்தவியாதி நசிக்குமெனப்பட்டது அஃதெவ்வகை யெனச் சங்கைவர அதன் பிரகாரத்தைக் கூறல், புண்ணியமாகிச் சுத்தமாம் = நிர்த்தோடமாய்ப் புண்ணியமான, கிரியையால் = சிவார்ச்சனையாதி ரூபங்களாலும், மேலோர் சார்வால் = மகா புருடரின் பணிவிடையாலும், தப்பில் — பாவநசிக்கின், மனந்தெளி வெய்தும். அவ்வப்பயனை ஆக்குவதூஉந்தான் செவ்விய பாவனையென்றே செப்பும் என்றும் பாடபேதமுளது.

ஆனந்தம் = சுகம் வளரும், மதி = பூர்ண சந்திரன், உதிக்கின், உலகத்திற் பிரகாசமுறுவதுபோல், அப்படியே, சத்துவமாமனந் தெளியில், உலாவுமப்போது = சமமா யுலாவுவதாய் அன்னங்களைச் சீரணிப்பிக்கும், அதனால் = அன்னங்களின் சீரணத்தாலும், நோயொன்றுந் தோன்றா = வியாதி நசிக்கும். (49-50)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இடையில் வந்த வினாவின் விடைகளை முடித்து வழங்கிய சித்தி எது நிருபணத்தை நிகழ்த்தல்:—ஆதியென்பது.

ஆதிவியா திகளிரண்டுந் தோன்றியொடுங் கிடுநெறிக ளறைந்தோமன்றே
யோதியகுண் டலினிதனை தொழுங்கான்முன் னுரைப்புற்ற யோகங்கேளாய்
தீதில்புரி யட்டகமென் றொருபெயர்கொள் சீவனுக்குத் திகழ்பிராண
வாதமெனும் பெயர்பெற்ற குண்டலினி மணத்துக்கு மலர்போனிற்கும்.

(ப - ரை.) ஆதிவியாதிகள் இரண்டும் = உள்நோய் வெளிநோய் இரண்டுகளும், தோன்றி ஒடுங்கிடும் நெறிகள் = உற்பத்தியாகி நாசமாகும் முறைகள், அறைந்தோம் = கூறினோம், ஓதிய குண்டலினி தனது = முன்னுரைத்த குண்டலினி யென்னுஞ் சத்தியினது, ஒழுங்கால் = கிறமத்தால், முன் உரைப்புற்ற யோகங்கேளாய் = முன் மொழிந்த யோகத்தைக் கேட்குதி, தீதில் = குற்றமில்லாத, புரியட்டகம் என்று = புரியட்டகம் என்பதாக, ஒரு பெயர்கொள் = ஒரு நாமங்கொண்ட, சீவனுக்கு = உயிருக்கு, திகழ் பிராண வாதமெனும் பெயர்பெற்ற = விளங்கா நின்ற பிராண வாயுவென்னும் நாமங் கொண்ட, குண்டலினி=குண்டலினியானது, மணத்துக்கு=கந்தத்துக்கு, மலர்போல் நிற்கும்=புஷ்பம்போல இருக்கும்.

(ஸ்ரீ - வீர.) உனக்கு ஆதிவியாதிகளென்பவற்றின் நாசோற்பத்திக் கிறமங்கள் கூறப் பெற்றன இப்போது குண்டலியின் கதையின் சம்பந்தமாக வழங்கியதைக் கேட்குதி. புரியஷ்டகமெனப் பெயரிய லிங்கவடிவமான சீவனுக்கு ஆதாரபூதமாய பிராணனெனப் பெயரிய குண்டலினியை உள்ளே யிருப்பதாக அறிதி மணத்திற்குப் பூங்கொத்தேபோல என்பதாம்.

(க) முற்கூறிய குண்டலினி, புரியட்டகமென்றொரு பெயர்கொள் சீவனுக்கு பிராண வாதமெனும் பெயர்பெற்ற=பிராணரூபமாய், மணத்துக்கு மலர் போனிற்கும். = மலருண் டெனிற்றான் மணமுண்டதுபோற் குண்டலி யுண்டெனிற்றான் சீவனுண்டென்பது கருத்து. (51)

(ஸ்ரீ-வீர-அ-கை.) பூரகத்தின் பெருமையைப் புகழ்தல்:—புகல் வென்றது.

புகல்வுறுகுண் டலிதன்னைப் பூரகத்தின் பரிசயத்தாற் பூர்ணமாக்கித்
திகழ்வுறநின் றாலன்று வடமேரு நிகரான திண்மையுண்டா
மிகவுடலந் தடிப்பெய்தும் பூரகத்தாற் பிராணனிறை வுற்றமெய்யைப்
பகரறிவு மேனோக்கி லொருக்காலே விண்செல்லப் படாவிக்கும்.

(ப - ரை) புகல்வுறு குண்டலிதன்னை=கூறலுற்ற குண்டலியை, பூரகத்தின் பரிசயத்தால்=பூரகத்தினது அப்பியாசத்தால் பூர்ணமாக்கி=நிறைவுறச்செய்து, திகழ்வுற நின்றால்= விளங்கும்படியாகத் திதிபெற்றால், அன்று=அப்போது, வடமேரு நிகரான திண்மையுண்டாம்=சுமேரு பர்வதத்திற்குச் சமானமான திடத்தன்மையுண்டாம், மிகவுடலந் தடிப்பெய்தும்=மிகவும் சரீரமானது பருமையையுறும், பூரகத்தால் பிராணன் நிறைவுற்ற மெய்யை= பூரகத்தினாலே பிராணன் நிறைந்த சரீரத்தை, பகர் அறிவு மேல்நோக்கில்=சொல் உணர்வு மேல்நாடில், ஒருக்காலே விண்செல்லப் படாவிக்கும் = ஒருபோதே ஆகாயத்திற் செல்ல முடிவிக்கும்.

(ஸ்ரீ - வீர.) அதனை பூரகாப்பியசித்தால் கூர்மநாடியின்கண் பிராணனை ஸ்தாபித்துச் சமமாக நிலைபெறச் செய்யும்போது மேருசம்பந்தமாய ஸ்திரபாவத்தை யடையலாம் அவ்வாறே ஸ்ரீ பதஞ்சலி பகவானும் கூறியுள்ளார் "கூர்மநாடியிற் றிரபாவம்" பொருள், கண்டகூபத்தினின்றும் கீழே மார்பில் கூர்மாகாரமாக ஒருநாடியுளது அதன்கண் சம்யமஞ்செய்தலால் அங்குற்ற சித்தத்திற்கு திரபாவம் சித்திக்கு மென்பதாம், எங்ஙனம் சர்ப்பம் கோதாவாதல் என்பது பாடியம். காயத்தினுடைய மிகப்பருமையென்னும் கரிமாப் பெயர் வாய்ந்த சித்தியும் அத்தகைய பைரவிமைரவிசித்திக்கும்; ஆயின் எதனால் மேல் விண்ணடை சித்திக்கும் எனின்கூறல்:—பூரகத்தா லென்பதாதி. பூரகத்தால் பூரண முறவே தேகத்துள் மூலாதாரந் தொடங்கி பிரஹ்மரந்திர பரியந்தம் நீட்சி செய்யு மேலே பிராணவாயுவை யிழுத்து உற்ற அறிவு குண்டலினி பிராண நிரோதத்தாலுண்டாய உஷ்ணம் ஆக்கிய சரீர சம்பந்த மானச சிரமமும் பயிற்சியின் வலிமையானே அமிருதந் தெளித்தலால் பொறுக்கும் பொருட்டு மேலே செலுத்தும். கோதா = உடும்பு.

(ச.) பூரகத்தின் பரிசயத்தால் = பூரகாப்பியாச வசமான வேதுவினால், குண்டலினி தனை, புரணமாக்கி, திகழ்வுற = நிர்விகாரமாக, நின்றுலன்று, திண்மை = திரத்துவமும், உடலமிகத் தடித்தலுமுறும் = அத்தன்மையான பூரகாப்பியாசத்திற் காயமுமேருப்போற் றிரமும், தூலமுமாமென்பது பொருள், அக்குண்டலினி பூரகத்தாற் பிராணனிறைவுற்ற மெய்யை, அறிவுமேனேக்கின்=மேற்செல்லும் பாவனையால், விண்=மேலுறும் ஆகாசதேசத்தில், செல்லப்படருவிக்கும், அஃதெங்ஙனமெனில், ஓர் உஷ்ணசிரமமுள்ளவனால் ஓரிடத்துறுநிழலில் இளைப்பாறிச் சிரமநிவிர்த்தியி னிமித்தம் சீதளமென்னுங் கும்பகத்தைப் பரிசயிப்பதாற் பிராணநிறைவுற்ற மெய்யைக் குண்டலினிமேல் செல்லப்படருவிக்குமதுபோ லென்பது பொருள். (52)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அக்குண்டலினி மேற்கிளம்பும் விதத்தைத் திஷ்டாந்த பூர்வகமாகத் தெரிவித்தல்:—பாம்பென்பது.

பாம்புபோல் விரைந்துதடி போனிமிர்ந்து குண்டலினி படர்ந்துமேற்போந்
தாம்புபோ லுடல்பிணித்த நரம்பெல்லாந் தான்கவர்ந்து சரீரமெல்லாந்
தேம்புறு வகைமேலே யெழுப்புவிக்குங் காற்றினாற் செறிந்தபைதான்
றூம்புசூழ் நீரிடையே யழுத்துகினு மேற்கிளப்புந் தொடர்ச்சிபோல.

(ப - ரை) பாம்புபோல்=சர்ப்பம்போல, விரைந்து=துரிதப்பட்டு, தடிபோல்=தண்டம்போல, நிமிர்ந்து=நேராகி, குண்டலினி=குண்டலினியானது, படர்ந்து=பரவி, மேல்போம் = மேலேபோம், தாம்புபோல் = கொடிபோல், உடல்பிணித்த = உடலைக்கட்டிய, நரம்பெல்லாம் = நாடிகளியாவற்றையும், தான் கவர்ந்து = தானே கிரகித்து, சரீரமெல்லாம்=சரீரமுழுதும், தேம்புறுவகை=வாடாத பிரகாரம், மேலே எழுப்புவிக்கும்=மேலே கிளப்பும், காற்றினால் செறிந்தபைதான் = வாயுவினாற் பூரித்த பையானது, தூம்புசூழ் நீரிடையே=துவாரங்கள் நிறையும் தண்ணீரின்கண்ணே, அழுத்துகினும்=அமிழ்த்தினும், மேற்கிளப்புந் தொடர்ச்சிபொல=மேலேயெழுப்புங் கணக்கேபோல.

(ஸ்ரீ - வீர.) கொண்டு செலுத்துமது இழுத்தலால் தண்டத்திற்குச் சமானமாக தீர்க்கத் தன்மையை யடைவுற்றதாய்ச் சர்ப்பிபோல வேகமாகவே மேலே அப்பியாச சாமர்த்தியத்தாற்செல்லும், எங்ஙனம் செல்லுமெனின் உரைத்தல்:—தாம்பென்பதாதி. தேகபத்த

மாய கொடிபோன்ற நாடிகளியாவற்றையும் நன்கு கொண்டுசெல்லும்; அப்போது நாடிவாயிலாய் இடமில்லாமல் காற்றினால் நிறைவுற்றதாய்க் கனமின்மையைக் கதுவியதாய்க் கான்முதற்றலைவரை இத்தேகமுழுதையும் கூபத்தினின்றும் மேலே யிழுக்கப்பெற்ற தோற்பையை நிறைந்த உள்ளிடத்தையுடைய அறலொப்ப மேலே கிளம்புதலைச்செய்யும் அதுவே இதற்கு ஆகாச கமன மென்பதாம்.

(ச) அப்போது அக்குண்டலினி, பாம்புபோல்=பெண்ணரவுபோல், தடிபோனிமிர்ந்ததாய், உடல்பிணித்த நரம்பெல்லாம்=நாடிகளனைத்தையும், அப்போது இந்தச் சரீரமெல்லாம், மேலே யெழுப்பிவிக்கும் = மேற்செலுத்திவிக்கும், காற்றினாற் செறிந்த = வாயுவாற் பூரணமான, பைதான்=ரந்திரமின்றிய தோற்பை, நீரிடையே யடைந்ததாய், நரனை எப்படி மேற்கிளப்புமோ அதுபோலென்பது பொருள், கிளம்பும் எனவும் பாடமுளது. (53)

(ஸ்ரீ - வீர - அ - கை) இனி ஆகாசகமனத்தையும் சித்தர்தந்தரிசனத்தையும் வருணித்தல்:—இத்திறன், நாடிகள், என்பன.

இத்திறனே மிகப்பழகு மியோகத்தா லியோகிகடா மெழுந்துவிண்மேற்
கொத்திகவ ரிந்திரன்சேர் மிடிபோல வுலாவுவர்குண் டலினியென்னுஞ்
சத்தியது பிரமநா டியிலோடிக் கபாலத்தின் றனிப்புறம்போ
யுய்த்துளமே லேவிரலோர் பன்னிரண்டி னெல்லையினி லுறுவதாகி.

நாடிகளெல் லாந்தகையு மிரேசகத்தா லொருமுகுர்த்த நண்ணிநிற்கி
னீடியவிண் சரிப்பவரைக் காணலாம் விஞ்ஞான நேர்மையாலே
யூடுறதா ரத்தோடும் புந்திவிழி யால்விண்ணி லூன்றத்தோன்றும்
பீடுறுநற் பொருளுதவுஞ் சித்தர்கணங் கனவிலே பிறங்குமாபோல்.

(ப - ரை) இத்திறனே மிகப்பழகும் யோகத்தால்=இவ்வாறே நன்றாக அப்பியசிக்கும் யோகத்தினால், யோகிகள்தாம்=யோகிகளானவர்கள், எழுந்துவிண்மேல்=கிளம்பி ஆகாயத்தின்மீது, கொத்திகவர் இந்திரன் சேர்மிடிபோல=இந்திரனுடைய தசையைக் கிரகிக்கும் தரித்திரவான்கள்போல, உலாவுவர்=சஞ்சரிப்பர், குண்டலினி என்னும் சத்தியது = முன்மொழிந்த சத்தியானது, பிரமநாடியில் ஓடி=பிரமநாடியிற் சென்று, கபாலத்தின் தனிப்புறம்போய் = மேற்கபாடத்தின் வெளியிற்சென்று, உய்த்துளமேலே = சுகமாகமேலே, விரல் ஓர் பன்னிரண்டின் எல்லையினில் உறுவதாகி=பன்னிரண்டங்குலம் நிலைப்பதாகி;

நாடிகள் எல்லாம் தகையும் இரேசகத்தால்=நாடிகள் யாவற்றையும் நிரோதஞ் செய்யும் இரேசகத்தினால், ஒரு முகுர்த்தம் நண்ணிநிற்கில் = இரண்டு நாழிகை பொருந்திநின்றால், நீடியவிண் சரிப்பவரைக்காணலாம்=நீள்காலம் ஆகாயகமனஞ் செய்பவரைத் தரிசிக்கலாம், விஞ்ஞான நேர்மையாலே=நல்லுணர்வு சேர்தலாலே, ஊடுறதாரத்தோடும் புந்திவிழியால்=உள்ளுற சேய்மையிற்செல்லும் புத்திநேத்திரத்தால், விண்ணில் ஊன்றத்தோன்றும்= ஆகாயத்தில் நன்றாகக் காணப்பெறுவர், பீடுறும் நற்பொருள் உதவும் சித்தர்கணம் பெருமை பொருந்திய நல்ல பொருள்களைத்தரும் சித்தருடைய கூட்டங்கள், கனவிலே பிறங்குமாபோல்=சொப்பனத்திலே யிலங்கும் வண்ணம்போல.

(ஸ்ரீ - வீர.) இவ்வகையான பயிற்சியின் விஸ்தாரயோகத்தால் அதாவது உடம்பு ஆகாச சம்பந்த அடக்குவடிவத்தால் வியோமகாமித்தன்மையை யோகிகள் அடைவார்கள்

தீனர்கள் தேவேந்திரதசையை மேலேயடைவதேபோல அங்ஙனமே ஸ்ரீபதஞ்சலி பகவானுடைய சூத்திரமுமுளது "காயாகாசங்களின் சம்பந்த சம்யமத்தால் லகுதூல் நல்லடைவினுலும் ஆகாசகமனம்" அவற்றின் சையோகத்தை ஜயித்து லகுபஞ்சு முதலியவற்றிலாதல் தற்பாவமுற்ற சமாதியினுல் கனமின்றிய சரீரத்தை யடைந்து ஆகாசத்தில் சஞ்சரித்தலாம், அதன்பின் சிலந்தி நூற்களில், பின்னர் சூரிய கிரணங்களில், அதன் பின்னர் இஷ்டப்படி விண்ணில் செல்லலாமென்பது பொருள், அதன்பாடியமிதுவாம்; யாண்டுக் காயம் ஆண்டாகாசம் காயத்திற்கு அதனோடு சம்பந்தம் அடைவாம் அதன்கண் அடங்கிய யோகி அச்சம்பந்தத்தை வெற்றிகொண்டு லகுதூலாதிகளில் பரமாணு பரியந்தம் நற்சேர்க்கையை யடைந்து சம்பந்தம் ஜயித்தவனுய் லகுவாகி லகுத்தன்மையினுனே ஜலத்திற் கால்களாற் சரிப்பன் அதன் பின்னே ஊர்ணநாபி தந்துமாத்திரத்தில் சரித்து கிரணங்களிற் சரிப்பன் அதன்பின் யதேஷ்டமாக ஆகாசகமனம் இவனுக்குண்டாம். இப்போது சித்த தரிசன உபாயத்தைக்கூறல்:—நாடியென்பதாதி நாடியந்தா நிரோதியாய ரேசகப் பிரயோகத்தால் மேலே யிழுக்கப்பெற்ற குண்டலினி சத்தியானது பிரஹ்மநாடி யென்னும் சுழும்னையினுள்ளே பிராணப் பிரவாகத்தால் சிரக்கபால மிரண்டின் சந்திவடிவ கபாடத்தின் வெளிப் பன்னிரண்டங்குல அளவு மூர்த்தனத்தில் சோடசாந்தமெனப் பெயரிய ஸ்தானத்தில் முகூர்த்த மாத்திரம் ஸ்திதியை யடையும்போது ஆகாயத்திற் செல்லும் சித்தர்களுடைய தரிசனமுண்டாம், அவ்வாறே ஸ்ரீ பதஞ்சலிபகவானும் சூத்தரித்துள்ளார் "மூர்த்தச் சோதியில் சித்ததரிசனம்" சிரக்கபாலங்களின் சித்திரம்ஆம் பிரமரந்திரமெனப் பெயரிய சுழும்நாயோகத்தால் பாஸ்வரமாயது மூர்த்தச் சோதியாம் அதன்கட் சம்யமத்தால் விரிந்த தேகத்துள்ள சித்தமணிப் பிரபை, காணப்பெருத சித்தர்களையும் காணுமென்பது பொருள். சிரக்கபாலத்தில் உட்சித்திரம் பிரபாஸ்வரத் தன்மையாற் சோதியாம் அதிற் சம்யமத்தால் விண்மண்ணிடையிற் சஞ்சரியாநின்ற சித்தர்களின் தரிசனம் ஆம் என்பது அதன்பாடியமாம். ஹே பிரஹ்ம சொரூபரே! எக்கால் நம்மனோரது இந்திரியங்கள் திவ்யமல்லாதனவாக அவைகளுக்குச் சம்பந்தமுண்டாயினும் சித்தர்களின் கோசரத்தன்மை துர்லபமாமோ அக்கால் நயனும்சுகணம் ஆகிய சாக்ஷுஷபிரபாசந்நிகர்ஷம் இன்றி சோடசாந்தத்திற் பிராணதாரண மாத்திரத்தால் சித்தர்களின் தரிசனம் எங்ஙனமுண்டாம் அதுவும் எத்தகையதாம், என்று ஸ்ரீ இராகவர் வினவ, அவற்றுள் எங்ஙனமுண்டாம் என்னு மங்கிசத்தை இஷ்டாபத்தியினுல் ஸ்ரீ வசிட்டபகவான் பரிகரித்தல்:—வாயுபூதர்களாய சித்தர்கள் எவர்களும் மலினம் பொருந்திய புருஷேந்திரியங்களினுலாதல் அதிவ்யமாய உபாயாந்திரத்தினுலாதல் பூவாசியரெவராலும் ஹே மகாபாகுவே! காணப்பெருர் என உண்மையே உன்னுல் உரைக்கப்பெற்றது; ஆயின் எதனுற் காணப்பெறுவர் எனின் உரைத்தல்:—விஞ்ஞானமென்பதாதி:—இது 55-வது கவியில் உளது. ஹே இராகவனே! யோகாப்யாச சம்ஸ்கிருத மனத்தினின்றும் தூரத்திருக்கும் புத்தி நேத்திரத்தினுல் விண்ணடக்குஞ் சித்தர்கள் காணப்பெறுவர் கனுப்போல் தாம் விரும்பியவற்றையுங் கொடுப்பர்; அதுவும் எத்தகையதாம் என்னும் வினுவங்கிசத்திற்கு விடைபகரல்:—போல் என்பது. சொப்பனங்காணல் எங்ஙனம் அங்ஙனம் சித்தரது காட்சியாம் இனி சித்தப்பிராப்தியில் கேவலம் ஸ்திரார்த்ததத்தை என்னுமிது விசேஷமாம், ஸ்திரார்த்தத்தை = சம்வாத வாதான பல அவாப்தியாதி விவகாரக்ஷமார்த்ததை, சொப்பனத்தைக் குறித்து விசேடமென்பதாம்; இத்துணையுந் தொடர்புபற்றி இங்கெழுதப்பெற்றது.

(ச) இத்திறனே = இத்தன்மையான, மிகப்பழகும் = அப்பியாச விசேடமுள்ள, யோகத்தால், யோகிகள், விண்மேலெழுந்து, மிடியினர் = தரித்திரர், இந்திரன்பதம் = பதவியை யுறல்போல், உலாவுவர், குற்றம் என்பது குத்தம் எனத்தொடை நோக்கி விகார மாயிற்று. எப்போது அக்குண்டலினி வடிவான பிராணசத்தி, பிரமநாடியிலோடி = சுழு முனைக்குளோடி, அதனல், கபாடத்தின் = பிரமரந்திரத்தின், புறம் = பகிர்ப்பாகமான, விரலோர் பன்னிரண்டினெல்லையினில் = துவாதசாங்குல பரிமிதமான ஆகாசத்தின், மேலே = உபரிபாகத்தில்.

நாடிகளெல்லாந்தகையும் = சர்வநாடிகளையு நிரோதஞ் செய்யும், ரேசகப் பிரயோகத் தால், விண்சரிப்பவரை = கேசரரென்னுஞ் சித்த வித்தியாதராதியரை, காணலாம், காணும் பிரகாரத்தையே கூறல், விஞ்ஞான நேர்மையாலே = சொரூப சைதந்நியமாத லின், ஊடுறு தூரத்தோடும், சமீபத்திருப்பதாய், ஆதனுற் சைதந்நிய சம்பந்தமாய் விளங் கும், புந்தி விழியால் = புந்தி நேத்திரத்தால், விண்ணிற் சித்தர்கணம் = ஆகாய கமனஞ் செய்யுஞ் சித்தர்கள், கனவிலே = சொப்பன திசையில், பிறங்குமாபோல், தோன்றும் = காணப்படுவர், கேவலங் காணப்படுவது மாத்திரமன்று, பீடுறுநற் பொருளுதவும் = தனக் கிஷ்டமுள்ள அணிமாதி சித்தியையுந் தருவரென்பது பொருள். (54-55)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரகாயப் பிரவேசத்தை யுரைத்தலும் ஸ்ரீ இராகவர் மேலும் பல வினுதலும் விடையும்:—பன்னிரண்டருள் பலவென்பன.

பன்னிரண்டங் குலத்தின்முகத் தின்புறம்போ யிரேசகத்தின் பழக்கத்தாலே
மன் னுயிர்தா னெடிதுநிலை நிற்குமேல் வேற்றுடலை மருவுமென்னச்
சொன்னமுனி வனைவள்ளல் சூக்கவழி செல்கைக்குந் தூலமாய்விண்
டன்னைநிறை கைக்குமணுத் துவந்தூலத் துவமுடற்குத் தருமாறெங்ஙன்

அருள்வாயென் றனுமுனிவ னுரைசெய்வா னேகமா யறிவொன்றேயா
யொருவாத சமமாகிச் சாந்தமாய்ச் சுத்தமா யொருபற்றில்லாப்
பொருளாய்நுண் மையின்மிகவு நுண்மையாய்ப் புவியன்றாய்ப் புவிசேராதாய்
மருவாநின் றுளததுதான் சங்கற்ப முறத்தனைத்தான் வகையாய்ச்செய்யும்.

பலவுஞ்சூழ் வுறச்சீவ னும்பொய்யே சங்கற்பம் பயின்மயக்காற்
கலங்குஞ்சீ வன்சடமா யிவ்வுடல்கா ணும்பாலர் காணும்பேய்போற்
குலவும்பல் லுயிர்களுமிவ் வகையேயெப் படியெத்தைக் குறிக்கின்றார்க
ளுலகின்க ணப்படியே யதைக்காண்பார் நினைவின்க ணுற்றத்தாலே.

(ப - ரை) பன்னிரண்டங்குலத்தின் முகத்தின் புறம்போய் = முகத்தினின்றும் பன் னிரண்டங்குலம் வெளியே சென்று, இரேசகத்தின் பழக்கத்தாலே = இரேசத்தினது அப் பியாசத்தாலே, மன்னுயிர்தான் = பொருந்திய பிராணனுனது, நெடிது நிலைநிற்குமேல் = நெடும்போது நிலைபெற்றிருக்குமாயின், வேற்றுடலை மருவுமென்ன = வேறு சரீரத்தைப் பொருந்துமென்று, சொன்ன முனிவனை = கூறிய ஸ்ரீ வசிட்டபகவானை, வள்ளல் = ஸ்ரீ இராகவர், சூக்கவழி செல்கைக்கும் = சூக்ஷுமமார்க்கம் செல்லும் பொருட்டும், தூல மாய் விண்தன்னை நிறைகைக்கும் = பருமையாய் ஆகாயத்தைப் பூரித்தற்கும், அணுத்து

வம் தூலத்துவம் = அணுத்தன்மை தூலத்தன்மை, உடற்குத் தருமாறு எங்ஙன் = தேகத்திற்குக் கொடுக்கும் வண்ணம் எங்ஙனம்.

அருள்வாய் என்றலும் = அநுக்கிரகிப்பாய் என்றலும், முனிவன் உரைசெய்வான் ஸ்ரீ வசிட்டபகவான் அநுக்கிரகிப்பார், ஏகமாய் = ஒன்றாய், அறிவு ஒன்றேயாய் = சின்மாத்திர அத்துவீதியமாய், ஒருவாத சமமாகி=கெடாத சமமாகி, சாந்தமாய்=உபசாந்தமாய், சுத்தமாய்=தூய்தாய், ஒருபற்றில்லாப் பொருளாய் = எதனோடுஞ் சம்பந்தமற்ற வஸ்துவாய், நுண்மையின் மிகவும் நுண்மையாய் = சூக்குமத்தினும் அதிசூக்குமமாய், புவி அன்றாய்= உலகமல்லாததாய், புவிசேராதாய்=உலகத்துறாததாய், மருவாநின்றுளது = ஒரு பொருள் இருக்கின்றது, அதுதான் = அவ்வத்துவானது, சங்கற்பம் உற = சங்கற்பத்தையடைய, தனைத்தான் வகையாய்ச்செய்யும்=தன்னைத்தான் ஒருபிரகாரமாய் ஆக்கும்.

பலவுஞ் சூழ்வுறச் சீவனும்=நானுவும் பற்றுறச் சீவனுகும், பொய்யே சங்கற்பம் பயில் மயக்கால்=மித்தையாகவே உண்டாம் சங்கற்ப மயக்கத்தினால், கலங்கும் சீவன் = விட்சேபமுற்ற உயிரானது, சடமாய் இவ்வுடல்காணும்=சடமாக இந்தச் சரீரத்தைப்பார்க்கும், பாலர்காணும் பேய்போல்=குழந்தைகள் பார்க்கும் இயக்கன்போலும், குலவும் பல்லுயிர்களும்=குலவாநின்ற பலசீவர்களும், இவ்வகையே=இந்தப் பிரகாரமே, எப்படி எத்தைக் குறிக்கின்றார்கள்=எவ்வாறு எதனை எண்ணுகின்றார்கள், உலகின்கண் அப்படியே அதைக் காண்பார் = ஜகத்தின்கண் அவ்வாறே அதனை பார்ப்பார், நினைவின்கண் ஊற்றத்தாலே = பாவனையின் திடத்தினாலே.

(ஸ்ரீ - வீர.) இப்போது பரகாயப்பிரவேசமானது எவ்வுபாயத்தால் சித்திக்குமோ அதனைக்கூறல்:—பன்னிரண்டென்பது. முகத்தினின்றும் வெளியே பன்னிரண்டங்குல அளவுள்ள தேயத்தே இரேசகாப்பியாச யுத்தியினால் பிராணன் நெடும்போது திதியை யடையவே வேறொருபுரியை புகுதலாம். இப்போது அணிமா மகிமாவென்னுஞ் சித்திகள் எவ்வுபாயத்தானே சித்திக்குமென்று ஸ்ரீ இராகவர் வினாதல் சூக்கும சித்திராதிகதிப் பொருட்டும் ஆகாயத்தினுடைய பூரணப்பொருட்டும் அணுத்தன்மையாதல் தூலத்தன்மையாதலுந் தான் இக்காயமடைவுறுமாறு யோகியினாலே எங்ஙனமடைவிக்கப்பெறும்; இவ்வினாவினது உத்தரம் ஸ்ரீகுரு வீரசேகரத்தின்கண் விஸ்தாரமாய்க்காணலாம். ஈண்டு ஏகமாய் சின்மாத்திரமாய்ச் சுத்தமாய்ச் சௌமியமாய் அலக்ஷிதமாய்ச் சூக்குமத்தினுஞ் சூக்குமதரமாய்ச் சாந்தமாய்ச் சகத்தல்லாததாய்ச் சகத்கிரியையற்றதாய் ஒரு வத்துவானது உளது, அது தன்னைத்தானே தன்னாலே அத்தியாசத்தினால் விவர்த்தப்படுத்தும் சங்கற்ப நாட்டத்தையடையும் அப்போது சீவனெனக் கூறப்பெறும் அனேகவித விட்சேபத்தையடையும், மூடான்மாவாகிய சீவன் சங்கற்பப்பிரமத்தானே இச்சரீரத்தை யசத்தியமாகவே காண்பன் பாலன் மதோன்மத்த இயக்கனைக் காண்பதேபோலும்; அநாத்மாவாய சரீராதிகளில் ஆத்மபாவம் யாதுளதோ லௌகீக சூரியாதியாலோகங்களினால் நசிப்பிக்க முடியாதவது ஹே குழந்தாய்! இருதயத்திலிருக்கும் கொடூரமாயதமமாம்; ஆயின் எச்சூரியனாலே அத்தமம் அகலும் எனின் உரைத்தல்:—சர்வவியாபியாய் நிரஞ்சனமாய்ச் சின்மாத்திரமாய் அமலமாயுள்ள சிவமேயானுயிருக்கின்றேன் என்று செய்யும் ஆன்மாவின்கண்ணே ஆன்மபாவனமாகிய ஞானாதித்யனால் நசிக்கும்; திடமாக இந்த ஞானசித்தியுண்டாயினும் சீவன் முத்தர்கட்கு விநோதப்பொருட்டு இச்சையாலாய தூலசூக்கும பிராதிபாசிக தேககற்பனம் சித்திக்கும் எனல்:—குலவு மென்ப

தாதி. அன்னியர்களாய பிரஹ்மவித்துக்கள் எவ்வாறு தான் எதனைப் பாவிக்கின்றார்களோ அவ்வாறே அதனை விரைவில் திடபாவனையாகியவதனாலே காண்பர்கள்.

(௪) (பரகாயப்பிரவேசப் பிரகாரத்தைக்கூறல்) முகத்தின் = ஆநநத்தின், புறம், பன்னிரண்டங்குலத்தின் = துவாதசாங்குல பரிமிதாகாச தேசபரியந்தத்தில், ரேசகத்தின் பழக்கத்தாலே=ரேசகாப்பியாச ரூபமான யோகவிசேஷ வேதுவினால், மன்னுயிர்தான் = பிராண வாயு, நெடிது நிலைநிற்குமேல், வேற்றுடலை=தேகாந்தரத்தை, மருவும்=பரகாயப் பிரவேச சித்தியாமென்பது பொருள், புறம்பு, ஓய், எனப் பிரித்தருத்தங்கொளினு மமையும், வள்ளல்=ஸ்ரீ இராமன், சூக்கவழி=சூக்கமென்னும் பாதாளத்துவாராதிகளில், செல்கைக்கும்= கமனஞ்சித்தித்தற்கும், விண்டன்னை நிறைகைக்கும் = ஆகாயத்தின் வியாபகஞ் சித்தத்திற்கும், உடற்கு, அணுத்துவந் தூலத்துவம், தருமாறெங்ஙன், காயமேகமாதலினாலும் பரிமாண பேதத்திற் பேதப்பிரசங்கத்தினாலு மென்பது கருத்து.

முனிவன் = ஸ்ரீ வசிட்டர். புவியன்றாய்ப் புவிசோராதாய் = ஜகத்தும் ஜகத்திலுறை பதார்த்தங்களும் அன்றாய், அதுதான்=அச்சின்மாத்திரப்பொருள், சங்கற்பமுற = சங்கற்போன் முகமானதாய், தனைத்தான் = எப்போது தன்னைத்தன்னாற்றானே, வகையாய்ச்செய்யும்=பரிச்சின்ன மாக்குமென்பதாம்.

பலவுஞ்சூழ்வுற, அப்போது களங்கமுற்றதாய், சீவனும்=சீவனெனப்படும், சடமாய்= மூடான்மாவாகிய, சீவன், சங்கற்பம் பயின்மயக்கால் = தனது சங்கற்பப் பிரமையால், பாலர்காண் பேய்போல், பொய்யே=அசத்தியமேயான, இவ்வுடல்=இச்சரீரத்தை, காணும், பெரியோரும்=ஆன்மஞானிகளும், குறிக்கின்றார்கள்=பாவிக்கின்றார்கள், நினைவின்கணூற்றத்தாலே=திடபாவனையின் நிரந்தரத்தால். (56-57-58)

(ஸ்ரீ - வீர - அ - கை) பாவனையின் பெருமையைப் பகர்தல்.—ஊற்றமென்பது.

ஊற்றமுறு பாவனையின் பரிசயத்தான் மூடர்களு மொன்றையொன்றான்
மாற்றிவிட மமுதாக்கி யமுதத்தை நஞ்சாக்கி மருவாநிற்ப
ரேற்றமுறுஞ் சத்தியபா வனையாலே யித்தேகந் தேகமான
தோற்றியவித் தேகமீண் டசத்தியபா வனையால்விண் சொரூபமாய்ப்போம்.

(ப - ரை) ஊற்றமுறு பாவனையின் பரிசயத்தால் = திடபாவனையின் பழக்கத்தால், மூடர்களும்=அவிவேகிகளும், ஒன்றை ஒன்றால் மாற்றி = ஒன்றை மற்றொன்றினாலே மாறுபடச்செய்து, விடமமுதாக்கி = விஷத்தை யமுதமாகச் செய்து, அமுதத்தை நஞ்சாக்கி= அமிருதத்தை விடமாகச் செய்து, மருவாநிற்பர்—திதிபெறுவர், ஏற்றமுறுஞ் சத்தியபாவனையாலே=உயர்வு பொருந்திய உண்மைப் பாவனையினாலே, இத்தேகந் தேகமான=இச்சரீரஞ் சரீரமாயிற்று, தோற்றிய இத்தேகம் மீண்டு=பிரதீதியாகிய இச்சரீரம் மறுபடியும், அசத்திய பாவனையால்=இல்லையென்னும் பாவனையினாலே, விண் சொரூபமாய்ப்போம்=ககனவடிவமாய்ப் போய்விடும்.

(ஸ்ரீ - வீர) ஹே இராகவ ! திடபாவனாநு சந்தானத்தால் விடகீடாதிகளும் விடத்தை அமிருதம்போல் ஆகாரமாகச் செய்யும் பாலன்முதிகளை விடங்கலந்தது இதுவென்னும் திடப் பிராந்தியினாலே விடமதாக ஆக்கும், இவ்வண்ணம் திடப்பாவனையினாலே ஈண்டு எதுதான் எவ்வண்ணம் பாவிக்கப்பெறுமோ அதுவே விரைவில் அவ்வண்ணமாம் இந்தப் பிரகாரம்

அவ்வுதாகரணம் அடிக்கடி வெகுவாக உலகில் காணப்படுகின்றது; சத்திய பாவனையினுலே காணப்பெற்ற இத்தேகம் தேகமாக அத்தியந்தம்பலிக்கும் அசத்திய பாவனையினுலே காணப் பெறினே பிரஹ்மாகாசத் தன்மையை தேகமடையா நிற்கும்.

(ச) மூடர்களும்=ஆன்மஞான ரகிதர்களும், ஊற்றமுறு பாவனையின், பரிசயத்தால்= நிரந்தரத்தால், விடம் துக்கவேதுவான நிடேத கருமத்தை, அமுதாக்கி, சுகவேதுவாக்கி, அமுதத்தை=சுகவேதுவான கருமத்தை, நஞ்சாக்கி=துக்கவேதுவாகச் செய்து, இங்ஙனம் எப்பொரு ளெப்படிப்பாவிக்கப்படும் அதனுலப்படியே அநுபவிக்கப்படும் இவ்வருத்த சொரூப மாறிமாறி விசாரிக்கப்பட்டதா மென்பதுபொருள். (59)

(ஸ்ரீ-வீர-அ-கை) அதுவே இவனுக்கு நிரதிசயமான அணிமாதி சர்வசித்திகள் என்னுங் கருத்தால் உபசங்கரித்தல்:—அணிமாதியென்பது.

அணிமாதி குணப்பேற்றின் பாவனையூ கங்களுமிவ் வடைவேயாகுந்
துணிவாலே யோகத்தின் சித்தியறி வார்க்கிதுதான் சுலபமாகுங்
குணியான வணிமாதி குணச்செல்வ மிகப்பழகுங் குறிப்பாற்பெற்று
மணியாழி யுலகெல்லாங் கணத்தில்விளை யாடினுண் மறுவிலாதாள்.

(ப-ரை) அணிமாதி குணப்பேற்றின்=அணிமாதி அஷ்ட ஐசுவரிய அடைவில், பாவனை யூகங்களும் இவ்வடைவேயாகும்=பாவனைகளும் யுக்திகளும் இவ்வளவினவேயாம். துணி வாலே யோகத்தின் சித்தியறிவார்க்கு = நிச்சயத்தாலே யோகசித்தி யுணர்பவர்க்கு, இது தான் சுலபமாகும்—இதுவானது எளிதாகும், குணியான அணிமாதி குணச்செல்வம்=குணி யாக்கும் அணிமாதிகுண ஐசுவரியத்தை, மிகப்பழகும் குறிப்பாற் பெற்று=மிகவும் அப்பிய சிக்கும் பாவனையினுலே யடைந்து, மணியாழி உலகெல்லாம் = ரத்தினுகரஞ் சூழ்ந்த உலக மனைத்திலும், கணத்தில் விளையாடினுள் மறுவிலாதாள் = நொடியிற்சுற்றி விளையாடிக் கொண்டுவந்தாள் குற்றமற்ற சூடாலையென்பவள்.

(ஸ்ரீ - வீர) அணிமாதி பதப்பிராப்தியின்கண் ஞானயுக்தி இவ்வண்ண முறைக்கப்பெற் றது, அம்மகாராணியாகிய சூடாலையானவள் முன்மொழிந்த முறையானே பிராணதாரணுதி களுப்பியாசமுடையவளாய் அணிமாதிகுணைசுவரியத்தோடு கூடினவளாயினுள்; அவ்வைசுவரி யத்தையே மீண்டும் விரித்துரைத்தல்—மணியென்பதாதி. ஆகாச மார்க்கமாகச் சென்ற னள் அம்புதிப் பொந்தினுள்ளே புகுந்தனள் பூமண்டல பீடத்தைச் சுற்றிவந்தனள் ஸ்ரீகங்கா தேவியேபோல மோக களங்கமில்லாமையானும் தாபத்திரய மகன்றமையானும் அமல சீதள மாயினள்.

(ச) அணிமாதி, யோகத்தின், பவனசெயத்தின்றிட பரிசயத்தால், சித்தியறிவார்க்கு= சித்தித்த வறிவையுடையோர்க்கு, அணிமாதி குணப்பேற்றின் = பலப்பிராப்தியினும், அவ் வடைவேயாகும்=இத்தன்மையான, பாவனையூகங்களும் = பாவனையும் யுத்தியும், சுலப மாகும்=அணுத்துவ பாவனையில் அணிமா மகத்துவ பாவனையில் மகிமா என்னு மிவ்வகை அணிமாதி சாதிக்கும் யுத்தி சுகமாகப் பெறப்படுமென்பது பொருள், மறுவிலாதாள் = அச் சூடாலை மிகப் பழகுங்குறிப்பால்=இங்ஙனம் களுப்பியாச முடையவளாய், அணிமாதி குணச் செல்வம்பெற்று = அணிமாதிகுணைசுவரியத்தோடுங் கூடி, மணியாழி யுலகு என்றதனுல் பாதாளகமனஞ் சொல்லப்பட்டது, அவள் கெங்கைபோல் லோகத்திரயத்தும் இச்சைப்படி சஞ்சரித்தாளென்பது பொருள். (60)

தாதி. அன்னியர்களாய பிரஹ்மவித்துக்கள் எவ்வாறு தான் எதனைப் பாவிக்கின்றார்களோ அவ்வாறே அதனை விரைவில் திடபாவனையாகியவதனாலே காண்பர்கள்.

(ச) (பரகாயப்பிரவேசப் பிரகாரத்தைக்கூறல்) முகத்தின் = ஆநநத்தின், புறம், பன்னிரண்டங்குலத்தின் = துவாதசாங்குல பரிமிதாகாச தேசபரியந்தத்தில், ரேசகத்தின் பழக்கத்தாலே=ரேசகாப்பியாச ரூபமான யோகவிசேஷ வேதுவினால், மன்னுயிர்தான் = பிராண வாயு, நெடிது நிலைநிற்குமேல், வேற்றுடலை=தேகாந்தரத்தை, மருவும்=பரகாயப் பிரவேச சித்தியாமென்பது பொருள், புறம்பு, ஒய், எனப் பிரித்தருத்தங்கொளினு மமையும், வன்னல்=ஸ்ரீ இராமன், சூக்கவழி=சூக்கமென்னும் பாதாளத்துவாராதிகளில், செல்கைக்கும்= கமனஞ்சித்தித்தற்கும், விண்டன்னை நிறைகைக்கும் = ஆகாயத்தின் வியாபகஞ் சித்தத்திற்கும், உடற்கு, அணுத்துவந் தூலத்துவம், தருமாறெங்ஙன், காயமேகமாதலினாலும் பரிமாண பேதத்திற் பேதப்பிரசங்கத்தினா மென்பது கருத்து.

முனிவன் = ஸ்ரீ வசிட்டர். புவியன்றாய்ப் புவிசேராதாய் = ஜகத்தும் ஜகத்திலுறை பதார்த்தங்களும் அன்றாய், அதுதான்=அச்சின்மாத்திரப்பொருள், சங்கற்பமுற = சங்கற்போன் முகமானதாய், தனைத்தான் = எப்போது தன்னைத்தன்னாற்றானே, வகையாய்ச்செய்யும்=பரிச்சின்ன மாக்குமென்பதாம்.

பலவுஞ்சூழ்வுற, அப்போது களங்கமுற்றதாய், சீவனும்=சீவனெனப்படும், சடமாய்= மூடான்மாவாகிய, சீவன், சங்கற்பம் பயின்மயக்கால் = தனது சங்கற்பப் பிரமையால், பாலர்காண் பேய்போல், பொய்யே=அசத்தியமேயான, இவ்வுடல்=இச்சரீரத்தை, காணும், பெரியோரும்=ஆன்மஞானிகளும், குறிக்கின்றார்கள்=பாவிக்கின்றார்கள், நினைவின்கனாற்றத்தாலே=திடபாவனையின் நிரந்தரத்தால். (56-57-58)

(ஸ்ரீ - வீர - அ - கை) பாவனையின் பெருமையைப் பகர்தல்.—ஊற்றமென்பது.

ஊற்றமுறு பாவனையின் பரிசயத்தான் மூடர்களு மொன்றையொன்றான்
மாற்றிவிட மமுதாக்கி யமுதத்தை நஞ்சாக்கி மருவாநிற்ப
ரேற்றமுறுஞ் சத்தியபா வனையாலே யித்தேகந் தேகமான
தோற்றியவித் தேகமீண் டசத்தியபா வனையால்விண் சொரூபமாய்ப்போம்.

(ப - ரை) ஊற்றமுறு பாவனையின் பரிசயத்தால் = திடபாவனையின் பழக்கத்தால், மூடர்களும்=அவிவேகிகளும், ஒன்றை ஒன்றால் மாற்றி = ஒன்றை மற்றொன்றினாலே மாறுபடச்செய்து, விடமமுதாக்கி = விஷத்தை யமுதமாகச் செய்து, அமுதத்தை நஞ்சாக்கி= அமிருதத்தை விடமாகச் செய்து, மருவாநிற்பர்—திதிபெறுவர், எற்றமுறுஞ் சத்தியபாவனையாலே=உயர்வு பொருந்திய உண்மைப் பாவனையினாலே, இத்தேகந் தேகமான=இச்சரீரஞ் சரீரமாயிற்று, தோற்றிய இத்தேகம் மீண்டு=பிரதீதியாகிய இச்சரீரம் மறுபடியும், அசத்திய பாவனையால்=இல்லையென்னும் பாவனையினாலே, விண் சொரூபமாய்ப்போம்=ககனவடிவமாய்ப் போய்விடும்.

(ஸ்ரீ - வீர) ஹே இராகவ ! திடபாவனானு சந்தானத்தால் விடகீடாதிகளும் விடத்தை அமிருதம்போல் ஆகாரமாகச் செய்யும் பாலன்னாதிகளை விடங்கலந்தது இதுவென்னும் திடப்பிராந்தியினாலே விடமதாக ஆக்கும், இவ்வண்ணம் திடப்பாவனையினாலே ஈண்டு எதுதான் எவ்வண்ணம் பாவிக்கப்பெறுமோ அதுவே விரைவில் அவ்வண்ணமாம் இந்தப் பிரகாரம்

அவ்வுதாகரணம் அடிக்கடி வெகுவாக உலகில் காணப்படுகின்றது; சத்திய பாவனையினாலே காணப்பெற்ற இத்தேகம் தேகமாக அத்தியந்தம்பவிக்கும் அசத்திய பாவனையினாலே காணப் பெறினோ பிரஹ்மாகாசத் தன்மையை தேகமடையா நிற்கும்.

(ச) மூடர்களும்=ஆன்மஞான ரகிதர்களும், ஊற்றமுறு பாவனையின், பரிசயத்தால்= நிரந்தரத்தால், விடம் துக்கவேதுவான நிடேத கருமத்தை, அமுதாக்கி, சுகவேதுவாக்கி, அமுதத்தை=சுகவேதுவான கருமத்தை, நஞ்சாக்கி=துக்கவேதுவாகச் செய்து, இங்ஙனம் எப்பொரு ளெப்படிப்பாவிக்கப்படும் அதனாலப்படியே அநுபவிக்கப்படும் இவ்வருத்த சொரூப மாறிமாறி விசாரிக்கப்பட்டதா மென்பதுபொருள். (59)

(ஸ்ரீ-வீர-அ-கை) அதுவே இவனுக்கு நிரதிசயமான அணிமாதி சர்வசித்திகள் என்னுங் கருத்தால் உபசங்கரித்தல்:—அணிமாதியென்பது.

அணிமாதி குணப்பேற்றின் பாவனையூ கங்களுமிவ் வடைவேயாகுந்
துணிவாலே யோகத்தின் சித்தியறி வார்க்கிதுதான் சுலபமாகுங்
குணியான வணிமாதி குணச்செல்வ மிகப்பழகுங் குறிப்பாற்பெற்று
மணியாழி யுலகெல்லாங் கணத்தில்விளை யாடினாள் மறுவிலாதாள்.

(ப-ரை) அணிமாதி குணப்பேற்றின்=அணிமாதி அஷ்ட ஐசுவரிய அடைவில், பாவனை யூகங்களும் இவ்வடைவேயாகும்=பாவனைகளும் யுக்திகளும் இவ்வளவினவேயாம். துணி வாலே யோகத்தின் சித்தியறிவார்க்கு = நிச்சயத்தாலே யோகசித்தி யுணர்பவர்க்கு, இது தான் சுலபமாகும்—இதுவானது எளிதாகும், குணியான அணிமாதி குணச்செல்வம்=குணி யாக்கும் அணிமாதிகுண ஐசுவரியத்தை, மிகப்பழகும் குறிப்பாற் பெற்று=மிகவும் அப்பியா சிக்கும் பாவனையினாலே யடைந்து, மணியாழி உலகெல்லாம் = ரத்தினாகரஞ் சூழ்ந்த உலக மனைத்திலும், கணத்தில் விளையாடினாள் மறுவிலாதாள் = நொடியிற்சுற்றி விளையாடிக் கொண்டுவந்தாள் குற்றமற்ற சூடாலையென்பவள்.

(ஸ்ரீ - வீர) அணிமாதி பதப்பிராப்தியின்கண் ஞானயுக்தி இவ்வண்ண முறைக்கப்பெற் றது, அம்மகாராணியாகிய சூடாலையானவள் முன்மொழிந்த முறையானே பிராணதாரணாதி களப்பியாசமுடையவளாய் அணிமாதிகுணைசுவரியத்தோடு கூடினவளாயினாள்; அவ்வைசுவரி யத்தையே மீண்டும் விரித்துரைத்தல்—மணியென்பதாதி. ஆகாச மார்க்கமாகச் சென்ற னள் அம்புதிப் பொந்தினுள்ளே புகுந்தனள் பூமண்டல பீடத்தைச் சுற்றிவந்தனள் ஸ்ரீகங்கா தேவியேபோல மோக களங்கமில்லாமையானும் தாபத்திரய மகன்றமையானும் அமல சீதள மாயினள்.

(ச) அணிமாதி, யோகத்தின், பவனசெயத்தின்றிட பரிசயத்தால், சித்தியறிவார்க்கு= சித்தித்த வறிவையுடையோர்க்கு, அணிமாதி குணப்பேற்றின் = பலப்பிராப்தியினும், அவ் வடைவேயாகும்=இத்தன்மையான, பாவனையூகங்களும் = பாவனையும் யுத்தியும், சுலப மாகும்=அணுத்துவ பாவனையில் அணிமா மகத்துவ பாவனையில் மகிமா என்னு மிவ்வகை அணிமாதி சாதிக்கும் யுத்தி சுகமாகப் பெறப்படுமென்பது பொருள், மறுவிலாதாள் = அச் சூடாலை மிகப் பழகுங்குறிப்பால்=இங்ஙனம் களப்பியாச முடையவளாய், அணிமாதி குணச் செல்வம்பெற்று = அணிமாதிகுணைசுவரியத்தோடுங் கூடி, மணியாழி யுலகு என்றதனால் பாதாளகமனஞ் சொல்லப்பட்டது, அவள் கெங்கைபோல் லோகத்திரயத்தும் இச்சைப்படி சஞ்சரித்தாளென்பது பொருள். (60)

(ஸ்ரீ-வீ - அ-கை) அவளுடைய காயவியூகாதி கற்பனைசுவரியத்தையும் நாயகனுக்குப் போதித்தலையுங் கூறல்:—நாயகனை என்பது.

நாயகனை யிமைப்போது நீங்காதா ணல்லமுதா ஞானந்தன்னை
யாயவனுக் கநேகவுபா யத்தினு லறிவித்து மனையமன்னன்
றாயறிவி லிளைப்பாறப் பெற்றிலன்மா யோகினியாஞ் சூடாலைக்கு
மேயகுணங் களுமறிந்தா னில்லைப்பா லகர்விஞ்சை மேவாதாப்போல்.

(ப - ரை) நாயகனை இமைப்போது நீங்காதாள் = தன் நாதனைக் கணப்போதும் அகலாதவள், நல்லமுதா ஞானந்தன்னை = நல்ல அமிருதமாகிய பிரஹ்ம வித்தையை, ஆயவனுக்கு=அம்மன்னவனுக்கு, அநேக உபாயத்தினுல் = நானுவித உபாயங்களினுல், அறிவித்தும்=உணர்த்தியும், அனையமன்னன் = அம்மன்னவன், தூயறிவில் இளைப்பாறப்பெற்றிலன்=பரிசுத்தமாகிய சின்மாத்திர சொரூபத்தில் விசிராந்தி யடைந்திலன், மாயோகினியாம் சூடாலைக்கு=மகாயோகினியாகிய சூடாலைதேவிக்கு, மேயகுணங்களும் அறிந்தான் இல்லை= பொருந்திய குணங்களையுந் தெரிந்தானில்லை, பாலகர் விஞ்சைமேவாதாப்போல்=பாலகர்கள் வித்தையினை அடையாததேபோலும்.

(ஸ்ரீ - வீர) பர்த்தாவினுடைய மார்பினின்றுஞ் சித்தத்தினின்றும் நொடிப்பொழுதும் அகலாத சூடாலையானவள் சர்வ தேசங்களிலும் புவனங்களிலும் இலக்குமி தேவியேபோல வசித்தனள், சூடாலையானவள் அந்தப் பர்த்தாவின்பொருட்டு ஆத்ம ஞானமிருதத்தை மிகுந்த முயல்வுடன் வெகுவாக இனிதுணர்த்தியும் அம்மன்னவன் உணர்ந்தானில்லை; இத்துணைப்போதினும் இவ்வண்ணம் குணசாலியாயிருந்த அச்சூடாலையை அம்மன்னவன் தெரிந்தானில்லை வேதாத்தியயனகாலத்தில் பாலகன் வேதவித்தையை சர்வ புருஷார்த்த அனுகூலார்த்தத்தை யொளிர்விப்பதாதி குணசாலியென்று உணராததேபோலும்.

(ச) நாயகனை இமைப்போது நீங்காதாள்=அச்சூடாலை நாதனது மார்பில் ஆலிங்கன நிமித்தம் இமைப்போதும் எப்போது வருவாள் அப்போது நாயகனைக்குறித்துப் போதிப் போமென்னும் புத்தியால் அப்போதனுபாயத்தையே நீங்காதாள், விசாரிப்பளன்றி ஆலிங்கனதியை யபேட்சியாள் விஷயசுகங்களில் ஆதாமின்மையி னென்பது கருத்து. (61)

(ஸ்ரீ-வீர-அ-கை) தனது சித்தியை நாயகனுக்குக் கூருமையின் ஸ்ரீ இராமர் சங்கித்தலும்:—தன்னென்பது.

தன்னறிவி லிளைப்பாற விலாமையினு லவனுக்குத் தனதுயோக
நன்னிதியை யுரைத்திலளாற் சூத்திரற்கு யாகநெறி நவில்வாருண்டோ
வென்னலுமே மகத்தான சித்தயோ கினிவருந்தி யியம்பவேயு
மன்னசிகித் துவசனறி வுற்றிலனேற் பிறரெங்ங னறிவாரையா.

(ப-ரை) தன்னறிவில்=தன்னுடைய சிற்சொரூபத்தில், இளைப்பாறல் இலாமையினுல்= விசிராந்தி யில்லாமையினுல், அவனுக்கு=அம்மன்னவனுக்கு, தனதுயோக நன்னிதியை= தன்னுடைய யோகநன்மார்க்கத்தை, உரைத்திலள் = கூறிலள், சூத்திரற்கு யாகநெறி நவில்வார் உண்டோ = சதுர்த்தர்கட்கு யாகமார்க்கத்தை கூறுபவருமுளரோ, என்னலுமே = என்று கூறலுமே, மகத்தான சித்தயோகினி = பெருமைபொருந்திய சித்தயோகினியாகிய சூடாலை, வருந்தியியம்பவேயும் = மிகப்பிரயாசைப்பட்டுக் கூறியுங்கூட, அன்னசிகித்து

வசன்=அந்தச் சிகித்துவசன், அறிவுற்றிலனேல்=தெரிந்திலனாயின், பிறர் எங்கன் அறிவார் ஐயா=ஹே ஞானாசாரியரே! மற்றையர் எவ்வண்ணம் தெரிந்துகொள்ளுவார். ஆல்-அசை நிலை.

(ஸ்ரீ-வீர) முத்தானது அமலமாகிய முத்தின்மேற் சேர்த்திடினும் சேராததாய் விசிராந்தியை யடையாததேபோலத் தன்னிடத்தில் விசிராந்தியையடையாத மன்னவனுக்கு அச்சூடாலையும் தானடைந்த சித்திச் செல்வத்தை சூத்திரற்கு மகத்தொழிலைப் போலக் காட்டவில்லை; எனலும் சர்வசித்தி சாலியாய அச்சூடாலைக்கு நாயகனது போதனத்தில் அசக்தியாகு மேலாயின் சித்தியில்லாதவர்களாகிய அன்னிய குருமார்களுக்கு சிஷ்யபோதனத்தில் சக்தி சேய்மையில் அகற்றப்பெறுவதாமன்றோ என்று ஸ்ரீ இராகவர் சங்கித்தல்:—மகத்தென்பதாதி. மகத்தா யிராநின்ற சித்தயோகினியாய அச்சூடாலையினுடைய உபதேசப் பிரயாசத்தினாலும் சிகித்துவசன் உணர்வு பெற்றிலனாயின் ஹே பிரபுவே! அன்னியர்கள் எங்ஙனம் உணர்வு பெறுவார்கள்.

(ச) யோக நன்னிதி=அச்சித்திச் செல்வத்தை, அறிவுற்றிலன் = போதத்தைப் பெற்றிலன். (62)

(ஸ்ரீ-வீர-அ-கை) ஞானமடைவதற்கு சீடனுடைய மதியே முக்கிய காரணமென்று ஸ்ரீ வசிட்டபகவான் கூறுதலும் மீண்டும் ஸ்ரீ இரகுநாயகர் சங்கித்தல்:—ஒல்லுமென்பது.

ஒல்லும்வகை யுரையென்ன விராகவன்கேட் டலும்வசிட்ட னுத்தரிப்பா
னல்லவுப தேசந்தா னம்பிக்கை மாத்திரத்தை நன்றாய்ச்செய்த
லெல்லையிலா வறிவுக்குச் சுத்தமா மகனறிவே யேதுவென்று
சொல்லுதலு மீண்டந்த முனிதனக்கு ரகுநாதன் சொல்லுகிற்பான்.

(ப - ரை) ஒல்லும்வகை உரை என்ன=பொருந்தும் பிரகாரமாகக் கூறுவீராகவென்று, இராகவன் கேட்டலும்=ஸ்ரீ இராகவர் வினாதலும், வசிட்டன் உத்தரிப்பான்=ஸ்ரீ வசிட்டப்கவான் விடையளிப்பார், நல்ல உபதேசந்தான் = நல்ல அநுக்கிரகமானது, நம்பிக்கை மாத்திரத்தை நன்றாய்ச்செய்தல்=விவஸ்தை மாத்திரத்தை நன்றாய்க் காப்பாற்றுதலாம், எல்லையிலா அறிவுக்கு=அகண்ட ஞானத்திற்கு, சுத்தமாமகனறிவே யேதுவென்று=தூய்தாய சீடனுடைய புத்தியே காரணமென்று, சொல்லுதலும்=கூறுதலும், மீண்டு அந்த முனிதனக்கு ரகுநாதன் சொல்லுகிற்பான்=மறுபடியும் அவ்வசிட்ட பகவானை நோக்கி ஸ்ரீ இரகுநாயகர் கூறுவார்.

(ஸ்ரீ - வீர) ஹே இராகவனே! "அதனை யுணர்தற்பொருட்டு அவன் குருவையே நோக்கிச் சென்றடைக" என்பதாதி சாஸ்திரமறைந்த மரியாதையாகிய விவஸ்தைமாத்திர பாலனப் பொருட்டாம் குருசெய்த வுபதேசக்கிரமம், அது அநதிகாரியிடத்திலும் ஞானத்தை வலிதிலுண்டாக்குவதற்கு முடியாததாகும் ஞானத்திற்குக் காரணமோ சிஷ்யனுடைய சுத்தமான சாதன் சதுஷ்டய சகித பிரஞ்ஞையேயாம்.

(ச) உபதேசக்கிரமம்—குருவின் உபதேசரூபவுபாயம், நம்பிக்கை=ஞானசாஸ்திரத்திற் கூறிய மரியாதை, மாத்திரத்தை நன்றாய்ச் செய்தல்=அம்மாத்திரத்தின் பாலனமேயாம்; எல்லையிலாவறிவுக்கு=ஆன்ம சாட்சாத் காரத்துக்கு, சுத்தமாமகனறிவேயேது, உபதேசமன்றென்பதாம். (63)

(ஸ்ரீ-வீ-அ-கை) ஆயின் குருபதேசம் எற்றிற்காமாலோவெனின் அதன்பொருட்டு ஒரு கதையை யுணர்த்தல்:—மகன், மூன்று, என்பன.

மகனறிவே யேதுவெனிற் குருவசன மேதுவாய் வருவதெங்ஙன்
மிகுமறிவுக் கெனக்கேட்ப வசிட்டனதற் குரைசெய்வான் விந்தவெற்பி
னகல்வனத்தி லொருவேடன் பெருங்குடும்பி யவனொருநா ளடவிதன்னிற்
புகுநெறியிற் பலகறையொன் றினைக்கெடுத்துத் தேடினன் புலம்பலோடும்.

மூன்றுநா டேடியபின் முழுமதிநேர் மணியொன்று முன்னேகண்டா
னேன்றுபல கறைதேட வேழுலகும் பெறுமணியை யெதிர்ந்தான்வேடன்
ஞான்றவுப தேசத்தாற் கல்வியான் ஞானமுறு மதுவேபோல
வூன்றுறவொன் றைக்கருத வொன்றுவெளிப் படுங்குருவி னுபதேசத்தால்.

(ப - ரை) மகன் அறிவே ஏதுவெனில்=சிஷ்யனுடைய பிரஞ்ஞையே காரணமெனில், குருவசனம் ஏதுவாய் வருவதெங்ஙன் = ஆசாரியவாக்கியம் காரணமாய் வருவதெப்படி, மிகும் அறிவுக்கு=பூர்ண ஞானத்திற்கு, எனக்கேட்ப = என்று வினவ, வசிட்டன் அதற்கு உரைசெய்வான்=ஸ்ரீ வசிட்டபகவான் அதற்கு விடைகூறுவார், விந்த வெற்பின் அகல்வனத்தில்=விந்தியாசலத்தினது விஸ்தாரமானகாட்டில், ஒருவேடன் = ஒரு கிராதன், பெருங்குடும்பி=பெரிய சம்சாரி, அவன் ஒருநாள்=அக்கிராதன் ஒருதினம், அடவிதன்னில்=காட்டில், புகுநெறியில்=செல்லும் வழியில், பலகறை ஒன்றினை = ஒரு கௌடியை, கெடுத்துத் தேடினன்=போக்கடித்து நேடினன், புலம்பலோடும்=புலம்பிக்கொண்டிருந்தபோது;

மூன்றுநாள் தேடியபின் = தினத்திரய பரியந்தம் தேடினபின்னர், முழுமதிநேர்= பூர்ண சந்திரனுக்குச் சமானமான, மணியொன்று முன்னேகண்டான் = ஒருமணியை எதிரில் பார்த்தான், ஏன்று பலகறைதேட = கையிழந்த கௌடியைத்தேட, ஏழுலகும் பெறுமணியை=சப்தலோகங்களும் பெறுமானமான மகாரத்தினத்தை, எதிர்ந்தான் வேடன்= கிராதனவன் அகப்படுத்தினன், ஞான்ற உபதேசத்தால்=பெருமை பொருந்திய உபதேசத்தினலே, கல்வியால் = வித்தையால், ஞானம் உறும் = ஞானமடையப்படும், அதுவே போல = அதுபோல, ஊன்றுறவொன்றைக் கருதவொன்று வெளிப்படும் குருவின் உபதேசத்தால்=திடமாக ஒன்றைப்பாவிக்க ஒன்று பிரகடமாகும் ஆசாரியரது அநுக்கிரகத்தால்.

(ஸ்ரீ - வீர) ஹே முனீஸ்வரரே இவ்வண்ணமாகுமாயின் இந்தச்சகத்திதியின்கண் குரு உபதேசமென்னுங் கிரமம் எவ்வாயிலாய் சுவாத்மஞானத்திற்குக் காரணமாகும்; தூலாருந்ததிகாட்டும் நியாயத்தானே சிஷ்யபுத்திக்குப் பிரத்தியக்காத்மாவை உணரும்படியான சாமர்த்தியத்தைச் சம்பாதிக்கும் வாயிலாய் குருபதேசாதிக்கு ஞானகாரணத்தன்மை ஆம் எனக் கூறும்பொருட்டு ஸ்ரீ வசிட்டபகவான் கிராடோபாக்கியானந் தொடங்கல்:—விந்த என்பதாதி. விந்தியாசலத்தினுடைய விரிந்த ஆரணியத்தில் தனதானியவானும் குடும்பியாயும் அத்தியந்தங் கிருபணனும் பிராமணனைப்போலும் ஒருவேட வணிகன் வசித்துக் கொண்டிருந்தான்; விந்தியக்காட்டில் சென்றுகொண்டிருந்த அவனுடைய ஒருவராடிகை ஒருபோது குப்பை சூழ்ந்த இடத்தில் வீழ்ந்துவிட்டது; தன்னுடைய கிருபணத்தன்மை யியற்கையானே மிக முயற்சியோடும் எல்லாத் துரும்புதவிடுமிகளையும் கௌடியின் பொருட்டு மூன்றுநாள்வரையும் எங்கும் தேடினன்; அதன்பின் மூன்ருநாண் முடிவில் அவனால் அக்காட்டினின்றும் பூர்ணேந்து பிம்பத்துக்குச் சமானமான மகா சிந்தாமணியொன்று அடையப்பெற்றது; இவ்வண்ணம் அகேதியாகிய அக்கிராடனுல் எங்ஙனம் பகலுமிரவுங் கவடியைத் தேடலால் உலகையே விலையாகவுடைய அவ்வரதனம் அடையப்பெற்றதோ அங்ஙன

னம் கேட்ட வுபதேசத்தினுல் சுவாத்மஞான மடையப்படும் குருபதேசக்கிரமத்தால் அன்னியமாகிய சாப்தபரோக்ஷ மயமாயுள்ளது தேடப்பெறவே அன்னியமாகிய நித்தியாபரோக்ஷ வஸ்து அடையப்பெறும்.

(ச) குருவசனம்=குருவினுபதேசமென்னுங் கிரமம், மிகுமறிவுக்கு = ஆன்ம ஞானத்துக்கு, ஏதுவாய் வருவது=காரணமென்பது, எங்ஙன் = எந்தப்பிரகாரத்தாலாம், அந்தப் பிரகாரத்தை யருள்செய்வாயென்பது பொருள், கிராடனென்னும் ஒரு வைசியன், பலகறை=சோபி.

வேடன் பலகறை தேடலின், எழுலகம் பெறுமணியை, எதிர்ந்தான்=பெற்ருன், ஆன்ற வுபதேசத்தால் = குருவினுபதேசம்பெற்ற, கல்வியால் சீடனுல், அன்னியமுருப் பொருள், நிருபாதிக சைதந்நியம், ஞானமுறும்=சுவான்ம ஞானம்பெறப்படும், யாதெனில், குருவினுபதேசத்தால்=குரவனுபதேசித்த வுபாயவேதுவினுல், ஒன்றைக்கருத = அன்னியமுறும்பொருளைத் தியானிக்க, ஒன்று வெளிப்படும்=அன்னியமுருப்பொருள் சாட்சாத்கரிக்கப்படும். மூ, கிராடன் = வைசியன், தனலாபப்பொருட்டுச் சுற்றுபவன் பின்னர் அதினிரு மடங்கு மும்மடங்கு முதலிய வடிவத்தால் அடைபவன் வைசிய விடம்பனத்தில் கிராடன் கடமொப்பான் என்னும் வசனத்தால்; கிராதன் என்பதோ பாடமாகாதாம், தனதானியமுடைமைக்கும் பிராமணுதிபோல குடும்பித்தன்மைக்கும் மூன்றுதினம் அரணியத்தில் பலகறை தேடுதற்கும் கிராதன்பொருட்டு உசிதமாகாமையின், ஜாங்கலமென்பது சிறிது நீர் சிறுதருக்களுடைய இடம், ஜங்கலம்=அரண்யமயதேசம், வராடிகை, கபர்திகை, பலகறை, கௌடி, சோபி, சோகி, யென்பன ஒருபொருட் சொற்களாம்; காணவராடகமென்பதுமது. கிருபணத்தின்பாவம் கார்ப்பண்ணியமாம் லோபாதிசயமென்பது பொருள், திருணபுசாதி= தவிடு உமி முதலியவை கொட்டிவைக்கும் குதிராதியாம். (64-65)

(ஸ்ரீ-வீர-அ-கை) குருபதேசத்திற்கும் பிரஹ்மவித்தைக்கும் காரண காரியபாவம் திஷ்டாந்த பூர்வகங்கூறியதை உபசங்கரித்து வழங்கியதிற் ருெடங்கல்:—நலமென்பது.

நலனுறுபே ரறிவுக்குக் குருவசனங் காரணத்தை நண்ணுதேனும்
பலகறைநன் மணிக்கேது வானுப்போ லேதுவாய்ப் பலத்தைநல்குங்
குலவுசிகித் துவசன்ருன் ஞானமிலா மையின்மோகங் கூடிச்சாலச்
சுலபமுறு தன்செல்வம் பெருங்கனலென் றெண்ணியே துன்பமுற்ருன்.

(ப - ரை) நலனுறு பேரறிவுக்கு=நன்மையைப் பயக்கும் அகண்ட ஞானத்திற்கு, குருவசனம்=ஞானசாரியாது திருவாக்கியம், காரணத்தை நண்ணுதேனும்=ஏதுவைப்பொருந்தாதேனும், பலகறை நன்மணிக்கு ஏதுவானுப்போல்=கௌடியானது நல்ல ரத்தினத்திற்குக் காரணமானது போல, ஏதுவாய்ப்பலத்தை நல்கும் = காரணமாய்ப் பிரயோஜனத்தைக் கொடுக்கும், குலவுசிகித்துவசன்ருன்=முன்மொழிந்தபடி நிகழ்ந்த மன்னவனுனவன், ஞானம் இலாமையின்=உணர்வின்மையின், மோகங்கூடி = மயக்கமடைந்து, சாலச் சுலபமுறு தன்செல்வம்=மிக்க வெளிதாயுற்ற தனதைசுவரியம், பெருங்கனல் என்று எண்ணியே துன்பமுற்ருன்=பேரழலென்று நினைந்தே வருந்தினுன்.

(ஸ்ரீ-வீர) தேடும் வாயிலாக மணிக்குப் பலகறையேபோல மனனவாயிலாக குருபதேசம் அகாரணமாயினும் அவசியம் பலதரிசனத்தால் மகார்த்தமாகிய தத்துவத்தை யடைவதற்

குச் காரணத்தன்மையைக் கருவுறும். பின் சிகித்துவச மன்னவனனவன் தத்துவஞான ரூப புதமாகிய விசிராந்தி ஸ்தானங்கிடையாமல் சந்ததி நஷ்டமானபுருடன் சோகாதிதமத்தால் அந்தத் தன்மையை யடைந்ததேபோல பரமமோகத்தை யடைந்தனன்; துக்காக்கினியி னலே தூண்டப்பெற்ற மனத்தினனய் அபீஷ்ட சாமந்தாதிகளினலே கொண்டுவரப்பெற்ற அவ்வரதனதி விபூதிகளில் அக்கினிச் சிகைகளிற்போல ஒரு சிறிதும் ரமித்திலன்.

(ச) நலனுறு பேரறிவுக்கு=தத்துவ ஞானத்துக்கு, குருவசனம் = குருவினுபதேசம், காரணத்தை நண்ணுதேனும்=முக்கிய காரணமன்ருயினும், நன்மணிக்குப் பலகறை எது வானுப்போல், எதுவாய்=பரம்பரையாற் காரணமாய், பலத்தைநல்கும், இதுகிராடன்கதை. சலபமுறு, தாபத்தைத் தாராநின்ற, இது துன்பத்துக்கும் விசேடணமாம். (66)

(ஸ்ரீ-வீர-அ-கை) எதனுலும் தன்றுயர் நீங்காமையின் தனது பிரிய நாயகியினிடம் தன் றுயரைத் தெரியப்படுத்தத் துடங்கல்:—அருந்தானமென்பது.

அருந்தானம் பலகொடுத்தான் றவமிகச்செய் தான்றீர்த்த மனைத்துந்தோய்ந்தான்
வருந்தாமை யவற்றுலும் பெற்றிலன்பே ரிடராலே மனநொந்தோர்நா
ளிருந்தானே காந்தத்தின் மடிமேலே சூடாலை யிருக்கச்செய்து
பெருந்தாப முறுகின்ற துயரெல்லா மவளுக்குப் பேசலுற்றுன்.

(ப - ரை) அருந்தானம்பல கொடுத்தான்=அரியதானங்கள் நானுவாக வழங்கினன், தவ மிகச்செய்தான்=மிகுந்தவத்தை யியற்றினன், தீர்த்தமனைத்தும் தோய்ந்தான் = சகல தீர்த் தங்களிலும் நீராடினன், வருந்தாமை யவற்றுலும் பெற்றிலன்=துன்புருமையை அவைகளி னலு மடைந்திலன், பேர் இடராலே மனநொந்து = பெருங்கஷ்டத்தினலே சிந்தைவருந்தி, ஓர்நாள் = ஒருதினம், இருந்தான் ஏகாந்தத்தில் = தனித்து வீற்றிருந்தான், மடிமேலே சூடாலை யிருக்கச்செய்து=தனதங்கத்தில் சூடாலையை வைத்துக்கொண்டு, பெருந்தாப முறு கின்ற துயரெல்லாம் = பெருந்தாபத்தினலே யடைகின்ற துக்கங்களையெல்லாம், அவளுக்குப் பேசலுற்றுன்=தன் நாயகிக்குக் கூறத்தொடங்கினன்.

(ஸ்ரீ-வீர) மிகுந்த தானங்களாகிய, கோ, பூமி, கனகாதிகளைக் கொடுத்தனன், தேவர்கள் பொருட்டும் மறையவர் பொருட்டும் உறவினர் பொருட்டும், ஆலயஞ்சாலை யக்கிரார நந்தன வனங்கள் முதலியவற்றைக் கொடுத்தான் அம்மானதனுகிய மன்னவன்; தேகமனச் சோதனஞ் செய்யும்பொருட்டுக் கிருச்சிரசாந்திராயணுதி தபத்தைச்செய்தனன் தீர்த்தங்களெல்லா மாடி வந்தனன் வனங்களையும் புண்ணியாசிரமங்களையுந் தேவாலயங்களையும் திவ்விய க்ஷேத்திரங்களை யும் சேவித்து வந்தனன்; என்றபோதிலும் நிதியை விரும்பிய வொருவன் நிதியில்லாத பூமியை நெக்குநெக்கெனத் தோண்டியும் ஓரணுநிதியுமுருததேபோல அம்மன்னவன் விசோகத்தன் மையை சிறிதுமுற்றிலன்; சிந்தாபரவசனய் தீனனய அவன் மகா ஐசுவரியத்தோடு கூடியதாயி னும் தனது இராச்சியம் விடத்துக்குச் சமானமாகத்தோற்றியது துக்கநிறைந்த மதியினலே விஷமூர்ச்சை யுற்றவனைப்போல எதிரிலிருந்தபோதிலும் கண்டிலன்; பின்னெருபோது அம் மன்னவன் மடியில்வந்து ஏகாந்தத்திலிருந்த சூடாலையைநோக்கி மதுரமாகிய வாணியினலே இதனைக் கூறினன். (67)

(ஸ்ரீ-வீர - அ-கை) மன்னவன் தனது துயரத்தை யெடுத்துரைத்து தனக்கு வைராக்கிய மிருத்தலின் வனமே வசித்தற்குறித்தென தனிவாசப் பெருமையை யுரைத்தல்:—ஆண்ட, பற் றின்றி யென்பன.

ஆண்டவா சினும்புசித்த செல்வத்து மின்றுநா னுசையற்றே
னீண்டவனம் புகநயந்தேன் றுக்கசுக மாபத்து நிதிகளெல்லா
மாண்டவனத் துறைவோரைத் துயர்செய்யா புவிபொருட்டான் மயங்கவேண்டா
காண்டகுதன் கிளைநாசந் தோன்றுது நாட்டினும்வன் காடுநன்றே.

பற்றின்றித் தனித்திருக்கு மனத்தைப்போற் பனிமதியும் பதுமத்தோனும்
பொற்றிரள்சே ரிந்திரனுஞ் சுகமடையா ராதலிற்கான் போகுமென்னைக்
குற்றமென விலக்கலைநீ கணவர்நயந் ததுவிலக்கார் குலத்தின்மாதர்
சிற்றிடையா யென்றுரைத்த மன்னனுக்குச் சூடாலை செப்பலுற்றுள்.

(ப - ரை) ஆண்ட அரசினும்=பரிபாலனஞ்செய்த இராச்சியத்திலும், புசித்த செல்வத்தும்=அநுபவித்த ஐசுவரியத்திலும், இன்றுநான் ஆசையற்றேன்=இப்போது நான் நிராசையையடைந்தேன், நீண்டவனம்புக நயந்தேன்=விஸ்தார வனத்திற்குப்போக இச்சித்தேன், துக்கசுகம் ஆபத்து நிதிகளெல்லாம்=துன்பம் இன்பம் ஆபத்து சம்பத்து என்பவை யாவும், மாண்டவனத்துறைவோரைத் துயர்செய்யா=மாட்சிமைதங்கிய ஆரணியத்தில் வசிப்பவரைத் துன்பப்படுத்தா, புவிபொருட்டான் மயங்கவேண்டா = தேசத்தை யுத்தேசித்து மோகப்படவேண்டியதில்லை, காண்டகுதன் கிளைநாசந்தோன்றுது நாட்டினும் வன்காடு நன்றே=காணத்தக்க தனது ஜனக்ஷயம் பிரதீதியாகாது ஆதலால் இராச்சியத்தினும் பெருந் வாரணியமே மிகவு நல்லதாம்.

பற்றின்றித் தனித்திருக்கும் மனத்தைப்போல் = அசங்கமாய் ஏகாந்தத்துறையும் மனத்தைப்போல, பனிமதியும்=குளிர்ச்சி பொருந்திய பூரணசந்திரனும், பதுமத்தோனும் = பிரமாவும், பொற்றிரள்சேர் இந்திரனும்=தங்க வுலகத்திற்றங்குந் தேவேந்திரனும், சுகம் அடையார்=ஆனந்தம் உறுர், கான்போகும் என்னைக் குற்றமெனவிலக்கலைநீ = ஆரணியத்திற்குத் தவம்புரியச் செல்லும் என்றனை தோஷமென்று நீ விலக்கவேண்டாம், கணவர் நயந்தது விலக்கார் குலத்தின்மாதர்=நாயகன் விரும்பியதை வேண்டாமென்னுர்கள் பதிவிரத மங்கையர்கள், சிற்றிடையாய் என்றுரைத்த மன்னனுக்கு=சிறிய இடையையுடைய நாயகியே என்று கூறிய வரசனுக்கு, சூடாலை செப்பலுற்றுள்=சூடாலையாகிய இராணியானவள் கூறத்தொடங்கினுள்.

(ஸ்ரீ-வீர) வெகுகாலபரியந்தம் இராச்சிய சம்பத்தானது அநுபவிக்கப்பெற்றது வைபவபதங்களும் அநுபவிக்கப்பெற்றன இப்போது வைராக்கியத்தோடு கூடினவனுய் விட்டேன் கானகஞ்செல்லத் துணிந்துள்ளேன்; ஹேதனுவங்கியே! வனத்திலினிதுறையும் முனிவரா்கள் சுகமேனும் துக்கமேனும் ஆபத்தேனுஞ் சம்பத்தேனும் பற்றமாட்டா; சுகமிகுதிகளில் ஏதுக்களைக் காட்டல்:—புவியென்பதாதி. தேசபங்கசம் மோகமுங்கிடையாது போரில் ஜனம் மாய்தலுமிலையாம் வன நிவாசிகட்கு இராச்சியத்தினும் அதிக சுகம் உளதென வெண்ணுகின்றேன்; எங்ஙனம் நிர்ச்சனப் பிரதேசமான தனித்தவிடத்தில் மனமானது சுகமாக விருக்குமோ அங்ஙனம் சசிபிம்பங்களிலும் பிரஹ்மேந்திர அரண்மனைகளிலும் இருக்கமாட்டாது; ஹேசுந்தரியே! இந்தவனம் போகும்விஷயமாய உத்தமவிசாரத்தில் இடையூற்றைச் செய்யவேண்டாம் பர்த்தாவினுடைய இச்சையை கனவிலும் குலமங்கையர்கள் கெடுக்கமாட்டார்கள்.

(ச) மூ:—க்ரோடீகுர்வந்தி=தன்வயஞ்செய்தல், யுத்த நிமித்தப் பிராணிகளின் பெரிய க்ஷயமுமிலதாம் அதனுனே வனவாசிகளின் சுகம் இராச்சிய சுகத்தினும் அதிகமென் றெண்ணுகின்றேன். (68-69)

(ஸ்ரீ-வீர-அ-கை) அவனுடைய வைராக்கிய திடபாவத்தையறியும் வேட்கையினளாய சூடாலையானவள் பழைய காம ஆசக்தியையே வயதின் அனுரூபத்தன்மை வர்ணனையானே கருதுபவளேபோல ஸ்தூணுவிசாலன நியாயத்தால் அசைத்துப் பார்க்கின்றாள்:—வசந்த- என்பது.

வசந்தநாண் மலர்விளங்குஞ் சரற்காலங் காய்விளங்கு மரபுபோல
விசைந்தநாட் செய்ததொழில் விளங்குமாற் சரையாலே யாக்கைநைந்தாற்
பசைந்தமா லறவனமே போகலா மிளமைநாட் பான்மையன்று
மசைந்திடா தொழிகவெனச் சூடாலை சொல்லியதற் கரசன்சொல்வான்.

(ப-ரை) வசந்தநாள் மலர்விளங்குஞ் சரற்காலம் காய்விளங்கு மரபுபோல=வசந்தகாலத்தில் புஷ்பங்கள் சோபிக்கும் சரத்து ருதுவில் கனிகள் இலங்கும் தன்மையேபோல, இசைந்த நாள் செய்ததொழில் விளங்கும்=பொருந்திய காலத்தில் பண்ணிய காரியமானது இலங்காநிற்கும், சரையாலே ஆக்கைநைந்தால்=சராவஸ்தையினாலே சரீரமானது ஜீரணமாயின், பசைந்த மாலற வனமேபோகலாம்=பற்றியவாசை யொழியவே ஆரணியத்திற்குச் செல்லலாம், இளமை நாள் பான்மையன்றாம் = எவ்வனகாலத்திற் போதல் தகுதியாகாதாம், அசைந்திடா தொழிக வென=அசையாதிருக்க வேண்டுமென்று, சூடாலை சொல்லியதற்கு = சூடாலை கூறியதற்கு, அரசன் சொல்வான்=மன்னவன் கூறுவான்.

(ஸ்ரீ-வீர) உசிதமான காலத்தில் செய்யப்பெற்ற காரியமானது விளங்காநிற்கும் வேறுவிதமாயினோ விளங்கமாட்டாது இந்நியமம் மாறாகாதாம் வசந்தகாலத்தில் புஷ்பம் விளங்குவதையும் சரற்காலத்தில் பலம் விளங்குவதையுங் காணலாம்; ஜரையினாலே ஜீரணமடைந்த தேகிகட்கு வனஞ்செல்லுதல் கூடும் தங்களைப்போன்ற எவ்வனமுடையவர்களுக்கு வனம்போதல் தகாது ஆகையினால் தாங்களுத்தேசித்த இந்த விஷயமானது எனக்கு நன்றாகத் தோற்றவில்லை. (70)

(ஸ்ரீ-வீர-அ-கை) இவ்வண்ணம் அசைத்துப் பார்த்தபோதினும் அசையாத வைராக்கியத்தோடு கூடிய சிகித்துவசன் சூடாலைக்கு இதத்தை யுபதேசித்தல்:—தடாதென்பது.

தடாதொழிவா யேகாந்த வனம்புகுந்தே நிற்பேனான் சற்றுந்தாழேன்
படாமுலைநீ சிறியையா லுடன்வருதற் காகாநீ பாரைத்தாங்கி
விடாதிருந்தி நன்மனையிற் கணவரகன் றாற்குடும்ப மெலிவுறாமற்
கெடாதளித்தல் குலமகளிர் விரதமென நீர்படிவான் கிளந்துபோனான்.

(ப-ரை) தடாது ஒழிவாய்=தடைசெய்யவேண்டாம், ஏகாந்த வனம்புகுந்தே நிற்பேன் நான் = தனித்துள்ள ஆரணியத்திற்குப் போயே நீர்வேன்யான், சற்றுந்தாழேன் = சிறிதுந் தாமதியேன், படாமுலைநீ=கச்சிறுகிய தனத்தினையுடைய நீ, சிறியையால்=குமரியாதலினால், உடன் வருதற்காகா=கூடவருவது கூடாது, நீ பாரைத்தாங்கி = நீ புவியைப் பரிபாலித்து, விடாதிருந்தி=விட்டுவிடாம லிருப்பாயாக, நல்மனையில்=இனிய கிருகத்தில், கணவர் அகன்றால் = நாயகர் வெளியிற்சென்றால், குடும்பம் மெலிவுறாமல் = சமுசாரம் க்ஷீணதசை யடையாமல், கெடாது அளித்தல்=கெட்டுப்போகாமற் காப்பாற்றுதல், குலமகளிர் விரதமென = குலமங்கையர்தம் விரதம் ஆம் என்று கூறிவிட்டு, நீர்படிவான் கிளந்து போனான்=ஸ்நானஞ் செய்யும்பொருட்டு எழுந்து சென்றான்.

(ஸ்ரீ-வீர) ஹே கருங்குவளை யிதழ்கிகர்த்த கண்ணியே! எனது விருப்பத்திற்கு விக்கினஞ்செய்தது போதும் போதும் என்னை இவ்விடத்திலிருந்து வெகு தூரத்திலுள்ள ஏகாந்த கானனத்திற்குப் போய்விட்டதாகவே யெண்ணுதி; ஹே குற்றமற்ற மேனியையுடைய சூடாலையே நீ இளம்பெண், வனத்திற்குக் கூடவருதல் கூடாது ஹே மிருதுவாகிய மேனியையுடையாய்! வனப்பிரதேசமானது புருடர்களுக்குங் கூடப்புகுத முடியாததன்றோ; நரபாலகனுக்குக் காலமல்லாத காலத்தில் பிரஜைகளைவிட்டேகுதல் பாபமாமென்று யாதுன்னால் கூறப்பெற்றதோ அத்தோஷத்திற்கும் பரிகாரம் உன்னாலேயே செய்யத்தக்கதாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—நீயென்பதாதி. ஹே உத்தமமான மங்கையே! ஈண்டு நீ பிரஜைகளைக் காப்பாற்றிக்கொண்டு இராச்சியத்திலேயே யிருத்தல் தகுதியாம் ஏனென்றால் நாயகர் வெளியிற்சென்றால் குடும்பபாரத்தைத் தாங்குவது குலமங்கையர்தம் விரதமாகும்; இந்தப் பிரகாரம் சந்திரபிம்பானனையாய் அச்சூடாலையைநோக்கி வசியாகிய மன்னவனனவன் கூறிவிட்டு ஸ்நானஞ் செய்யும்பொருட்டு எழுந்துபோய் தின்காரியம் முழுவதையுஞ் செய்தனன். (71)

(ஸ்ரீ-வீ-அ-கை) இரவிற்றுயின்றெழுந்து மன்னவன் சூடாலைக்குத் தெரியாமலேகுதல்:—பகலென்பது.

பகற்பொழுது சென்றதற்பின் சந்திநிய திகள்பண்ணிப் பாவையோடுஞ்
சுகித்தமளி யெனநிலத்திற் றுயில்வுற்றா னள்ளிரவிற் றுயிலும்வஞ்சி
யகத்திருப்ப மெல்லவெழுந் தவளறியா வகையேகி யறிந்தோர்க்கெல்லா
நகர்க்குளுலா வுதுமென்ன யாவரையு நிறுத்திப்போய் நகரைநீத்தான்.

(ப-ரை) பகற்பொழுது சென்றதற்பின்=சூரியபகவான் அஸ்தமனமான பின்னர், சந்திநியதிகள்பண்ணி=மாலைக்கடன்களையெல்லாம் முடித்து, பாவையோடும் சுகித்து = சூடாலையோடும் ஆனந்தித்து, அமளியென=சய்யை என்று, நிலத்தில் துயில்வுற்றான் = பூமியில் நித்திரைசெய்தான், நள்ளிரவில்=நடுராத்திரியில், துயிலும்வஞ்சி அகத்திருப்ப=நித்திரைசெய்யாநின்ற சூடாலையானவள் படுக்கையி லிருப்ப, மெல்ல எழுந்து = மெதுவாகக் கிளம்பி, அவள் அறியாவகை ஏகி=மனைவியுணராத பிரகாரமாகச் சென்று, அறிந்தோர்க்கெல்லாம்=தெரிந்தவர்கட்கெல்லாம், நகர்க்குள் உலாவுதும் = நகர்சோதனை செய்கின்றோம், என்ன = என்று, யாவரையும் = அனைவரையும், நிறுத்திப்போய் நகரை நீத்தான் = அகற்றிச்சென்று பட்டணத்தை விட்டான்.

(ஸ்ரீ-வீர) பிரஜைகளின் விவகாரங்களை பார்ப்பதையொழித்து சூரியபகவான் அஸ்தாசலஞ் சென்றபின், தாமரைமொட்டுத் தனத்தினளாய இரவினள் தனது யௌவனப்பிரயோசனத்தை யடைந்தனள்; சந்தியா சமாசாரங்களையெல்லாம் செய்துகொண்டு இஷ்டையாகிய சூடாலையோடுந் துயின்றனன் சயனத்தில் மறுபடியும், சாகரத்தில் மைநாகமலைபோல; பின்னர் அர்த்தராத்திரி சமயமானபோது, தேசத்தில், சப்தமில்லாத தன்மையான துண்டாயபோது, கனநித்திரைச் சிலைக்கோசத்தில் எல்லா ஜனங்களும் விலீனமானபோது, அம்மன்னவனனவன், நித்திரை செய்யாநின்ற தயிதையாகிய சூடாலையை அசையாமல் அங்கத்தினின்றும் அகற்றினன், வெளிப்போந்தான், வீதியிற்சென்றான் சென்றபோது நிராசையினாலே நிறைந்த மதியினனான அம்மன்னவன், நேர்ந்த சேவகர் குழுவிற்கு, சோர துஷ்டநிக்கிரகப்பொருட்டாயிரவிற்சரித்தலாகிய நகர்சோதனையின் பொருட்டுச் செல்கின்றேன் என்று புகன்று அன்னவரையும், அவ்வீரக்கிரமத்திலேயே ஏவிவிட்டு, பட்டணத்தை விட்டுச்சென்றனன். (72)

(ஸ்ரீ-வீ-அ-கை) சிகித்துவசன் றவம்புரிதற்குறித்தான இடம்போய்ச் சேர்தல்:—சட மென்பது.

சடமகலாப் பெருந்திருவே யுனைத்தொழுதே னில்லென்று தன்னேடேகி
யடவிபுகுந் தான்றினமோர் பன்னிரண்டிற் பலகிரியு மாறுநீங்கிப்
படர்சனங்கள் செலற்கரிதாய் மந்தரவெற் புக்கருகாம் பழுவம்புக்கான்
மடலவிழ்பங் கயவாவி மலர்ப்பொழில்சூ ழவ்விடத்தில் வசிப்பதானன்.

(ப-ரை) சடமகலாப் பெருந்திருவே=ஜடமாயிராநின்ற பெரிய இலக்குமியே! உனைத் தொழுதேன் = உன்னை நமஸ்கரித்தேன், நில்லென்று தன்னேடேகி = நிற்பாயாகவென்று தான்மாத்திரம் சென்று, அடவி புகுந்தான்=ஆரண்யம்புக்கான், தினமோர் பன்னிரண்டில்= பன்னிரண்டு நாள்களில், பலகிரியும் ஆறும்நீங்கி = அநேக பர்வதங்களையும் நதிகளையும் கடந்து, படர்சனங்கள் செலற்கரிதாய்=ஜனக்கூட்டம் போதற்கு முடியாததாய், மந்தரவெற் புக்கருகாம் பழுவம்புக்கான்=மந்தராசலத்திற்குச் சமீபத்திலுள்ள தாழ்வரைச் சோலையை யடைந்தான், மடலவிழ் பங்கயவாவி=இதழ்விரிந்த தாமரைத்தடாகம், மலர்ப்பொழில்சூழ் அவ் விடத்தில் வசிப்பதானன் = புஷ்ப நந்தனவனம் சூழப்பெற்ற அந்தத்தலத்தில் இருப்பதாயி னன்.

(ஸ்ரீ-வீர) ஹே இராஜ இலக்குமியே! உனக்கு நமஸ்காரம் என்று கூறிவிட்டு மண்டலத்தி னின்றும் சென்றான் சென்றவன், அர்ணவத்தை நதம்போல ஒருவனுகவே பீஷணமான மகத்தரண்யத்தை யடைந்தான். ஹிமாரண்யங்களின் மகத்துவத்தில் என ஆநுக்விருதியாம் என மூலம். இரவியஸ்தமன மானபோது, ஆண்டுஸ்நாநாதி பூர்வகம் சிறிது கனிமுதலியவற் றையயின்று, அவ்விரவைக் கழித்தனன், மறுபடியும் மன்னவன் காலையில், பிரயாணந் தொடங்கி யுன்னதமான புரங்கள் மண்டலங்கள் கிரிகள் நதிகள் முதலியவற்றை வேகமாகக் கடந்தான் பன்னிரண்டிரவுகள். அதன்பின் னெருவருஞ் செல்லவொண்ணுததாய், அத்தியந் தம் ஜனசமூகங்கள் உள்ள ஜனபதங்களைத் தூரத்திலுள்ளதாய், புரங்களையும் வெகுதூரங் கடந்ததாய் இலங்கும் மந்தரசைலத்தின் தடத்திலிருக்கும் கானனத்தை யடைந்தான். வம்சப் பிரணலவாயிலாகச் சலசலவெனச் சப்தித்துக்கொண்டு சலிலங்கள் பிரவகித்துக்கொண் டிருக் கும்படியான வாவிகளினுலே பலவத்தரங்க ளாக்கப்பெற்ற பாதபங்கள் சூழ்ந்திருந்தது அவ்வி டம், சீர்ணவேத்ய ஆலயத்தினுலே யறியப்பெற்ற முன்னிருந்த துவிஜ ஆசிரமத்தோடு கூடி யிருந்தது அந்த இடம், க்ஷுத்திரப் பிராணிகள் ஒன்றுமின்றியதாய்ச் சித்தர்களானே சேவிக் கப்பெற்ற கொடிவீடுகளுடன் கூடியிருந்தது அந்த ஆஸ்பதம், பிராண விருத்தியைச் செய்விக் கும் பலங்களினுலே நிறைவுற்றதனவாய தருக்களும் கொடிகளும் அங்கு யதேஷ்டமா யிருந் தன; ஆண்டிருந்து தவம்புரியலாமென் றுத்தேசித்தான். (73)

(ஸ்ரீ-வீர-அ-கை) ஆண்டுத் தவச்சாலையியற்றி வேண்டுவன சேகரித்தான் எனல்:—சாலை யென்பது.

சாலையமைத் தான்மூங்கிற் றண்டிழைத்தான் கமண்டலமுஞ் சமைத்தானக்கு
மாலையுங்கந் தையுங்கனிகா யமைப்பனபாத் திரங்களுமான் றேலுஞ்சேர்த்தான்
மேலையுயர் தவந்தொடங்கிச் சந்தியெ மமுஞ்செபமும் விடிந்தசாமஞ்
சோலைமலர் பறித்தலிரண் டாஞ்சாம மிவ்வகையே தொழில்களாக்கி.

(ப-ரை) சாலையமைத்தான் = இருத்தற்கு ஒரு குடிசையைச்செய்தான், மூங்கிற்றண்டிழைத்தான்=மூங்கிலினாலே தவ அங்கமாக ஒரு தண்டமியற்றினான், கமண்டலமும் சமைத்தான்=ஜலபாத்திரமும் சேகரித்தான், அக்குமாலையும் = ஜபமாலையும், கந்தையும்=சீதோஷ்ணவாத நிவாரணத்துணியும், கனிகாயமைப்பன பாத்திரங்களும்=பத்திரபுஷ்ப பலாதிசேகரிக்கும் ஆதாரங்களும், மான்றோலும்=கிருஷ்ணஜினமும், சேர்த்தான் = சம்பாதித்தான், மேலையுயர் தவந்தொடங்கி=பின்னர் உயர்ந்த தவத்தினைச்செய்ய வாரம்பித்து, சந்தியையும் செபமும் விடிந்தசாமம்=சந்தியாவந்தன நியமங்களும் ஜபமும் முதல் யாமத்திலும், சோலைமலர் பறித்த விரண்டாம்சாமம் = நந்தன வனத்திலுள்ள புஷ்பாதிகள் கொய்தல் இரண்டாவது முகூர்த்தம், இவ்வகையே தொழில்களாக்கி = இவ்வாறே கிரியைகளைப் பகுத்து.

(ஸ்ரீ-வீர) ஆண்டுச் சம்மாய்ச் சுத்தமாய் நீர்சூழ்ந்ததாய்ச் சீதளமாய்ப் பசும்புன்னிறைந்து கவின்வாய்ந்த இடங்களாற் பச்சென்றிருப்பதாய், சிநிக்தமாய்ச் சப்லபாதப மிகுந்ததாயிலங்கும் ஒருதலத்தில், இலையாலயமொன் றியற்றினான். அது பூங்கொத்துகளோடு கூடிய கொடிகளானே பிணிக்கப்பெற்றுப் பர்ணசாலை ரூபமாயிருந்தது, மின்னல்களோடுகூடிய நீலாப்பிரங்களோடுற்ற மழைகாலம்போலப் பஞ்சரமொப்ப விளங்கியது, பசையோடுகூடிப் பச்சென்று விளங்கும் தண்டத்தையும் பலபோஜன பாத்திரத்தையும் பூஜாபாத்திரத்தையும் புஷ்பபாண்டத்தையும் ஜபமாலையையும் ஜலபாத்திரத்தையும் சீதவாத ஆதப நிவாரணப்பொருட்டு ஒரு கந்தைத் துணியையும் விரதிகட்கு ஆசனரூபமாய கருமான்றோலையும் தவத்திற்கு அங்கமாகச் சேகரித்தான், இன்னும் அத்தவச்சாலையினிடத்தில் என்னென்ன வஸ்து வேண்டியதாக விருக்குமோ தவத்தின்பொருட்டு வேண்டியனவாய அவற்றையெல்லாம் அம்மன்னவன் சேகரித்துக்கொண்டான், தாதாவானவர் தம்மால் சிருட்டிக்கப்பட்ட பிரமாண்டத்தில் விவகாரசாதன சமுதாயத்தைச் சேகரித்துக் கொண்டதேபோலும்; சந்தியை பூர்வமாய ஜபத்தைக் காலைச்சாமத்திலும் புஷ்பங்கள் கொய்தலை யிரண்டாவது சாமத்திலும் செய்வதாயினன். (74)

(ஸ்ரீ - வீர - அ - கை) தொடங்கிய தவக்கிரமத்தின் சேடத்தை யியம்பி அந்தப்புரத்தில் சூடாலை யியற்றியதை யியம்பத் தொடங்கல்:—கடவுளென்பது.

கடவுள்பூ சனைமூன்றாஞ் சாமநா லாஞ்சாமங் கனிகாய்கொள்ளல்
படரிரவெல் லாஞ்செபமா மிவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்தவேந்தன்
மடவரலங் கரையிரவிற் கண்விழித்தா டன்னருகு மன்னைக்காணா
ளிடர்மருவி வாழ்வகன்று வனம்புகுந்தா னரசனென்ன விரங்கிவாடி.

(ப - ரை) கடவுள்பூசனை மூன்றாஞ்சாமம் = தெய்வார்ச்சனை மூன்றாவது சாமமாம், நாலாம்சாமம் கனிகாய் கொள்ளல்=நான்காவது சாமம் கனிகாய் புசித்தலாம், படர்இரவெல்லாஞ் செபமாம் = விஸ்தாரமான இரவுமுழுதும் செபித்தலாம், இவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்தவேந்தன் = இந்தப்பிரகாரம் தவத்தைச்செய்தனன் கூறிய சிகித்துவசமன்னவன், மடவரல்=சூடாலையானவள், அங்கு அரையிரவில்=அந்தப்புரத்தில் அர்த்தராத்திரியில், கண் விழித்தாள்=நித்திரை தெளிந்தாள், தன் அருகுமன்னைக்காணாள்=தனது சமீபத்தில் அரசனைக் கண்டிலள், இடர்மருவி = சிறிது சோகமுற்று, வாழ்வகன்று வனம்புகுந்தான் அரசன்,

(ஸ்ரீ-வீ-அ-கை) சிகித்துவசன் றவம்புரிதற்குறித்தான இடம்போய்ச் சேர்தல்:—சட மென்பது.

சடமகலாப் பெருந்திருவே யுனைத்தொழுதே னில்லென்று தன்னேடேகி
யடவிபுகுந் தான்றினமோர் பன்னிரண்டிற் பலகிரியு மாறுநீங்கிப்
படர்சனங்கள் செலற்கரிதாய் மந்தரவெற் புக்கருகாம் பழுவம்புக்கான்
மடலவிழ்பங் கயவாவி மலர்ப்பொழில்சூ ழவ்விடத்தில் வசிப்பதானுன்.

(ப-ரை) சடமகலாப் பெருந்திருவே=ஜடமாயிராநின்ற பெரிய இலக்குமியே! உனைத் தொழுதேன் = உன்னை நமஸ்கரித்தேன், நில்லென்று தன்னேடேகி = நிற்பாயாகவென்று தான்மாத்திரம் சென்று, அடவி புகுந்தான்=ஆரண்யம்புக்கான், தினமோர் பன்னிரண்டில்= பன்னிரண்டு நாள்களில், பலகிரியும் ஆறும்நீங்கி = அநேக பர்வதங்களையும் நதிகளையும் கடந்து, படர்சனங்கள் செலற்கரிதாய்=ஜனக்கூட்டம் போதற்கு முடியாததாய், மந்தரவெற் புக்கருகாம் பழுவம்புக்கான்=மந்தராசலத்திற்குச் சமீபத்திலுள்ள தாழ்வரைச் சோலையை யடைந்தான், மடலவிழ் பங்கயவாவி=இதழ்விரிந்த தாமரைத்தடாகம், மலர்ப்பொழில்சூ ழவ் விடத்தில் வசிப்பதானுன் = புஷ்ப நந்தனவனம் சூழப்பெற்ற அந்தத்தலத்தில் இருப்பதாயி னுன்.

(ஸ்ரீ-வீர) ஹே இராஜ இலக்குமியே! உனக்கு நமஸ்காரம் என்று கூறிவிட்டு மண்டலத்தி னின்றும் சென்றுன் சென்றவன், அர்ணவத்தை நதம்போல ஒருவனுகவே பீஷணமான மகத்தரண்யத்தை யடைந்தான். ஹிமாரண்யங்களின் மகத்துவத்தில் என ஆநுக்விகுதியாம் என மூலம். இரவியஸ்தமன மானபோது, ஆண்டுஸ்நாநாதி பூர்வகம் சிறிது கனிமுதலியவற் றையயின்று, அவ்விரவைக் கழித்தனன், மறுபடியும் மன்னவன் காலையில், பிரயாணந் தொடங்கி யுன்னதமான புரங்கள் மண்டலங்கள் கிரிகள் நதிகள் முதலியவற்றை வேகமாகக் கடந்தான் பன்னிரண்டிரவுகள். அதன்பின் னெருவருஞ் செல்லவொண்ணுததாய், அத்தியந் தம் ஜனசமூகங்கள் உள்ள ஜனபதங்களைத் தூரத்திலுள்ளதாய், புரங்களையும் வெகுதூரங் கடந்ததாய் இலங்கும் மந்தரசைலத்தின் தடத்திலிருக்கும் கானனத்தை யடைந்தான். வம்சப் பிரணுலவாயிலாகச் சலசலவெனச் சப்தித்துக்கொண்டு சலிலங்கள் பிரவகித்துக்கொண் டிருக் கும்படியான வாவிகளினுலே பலவத்தரங்க ளாக்கப்பெற்ற பாதபங்கள் சூழ்ந்திருந்தது அவ்வி டம், சீர்ணவேத்ய ஆலயத்தினுலே யறியப்பெற்ற முன்னிருந்த துவிஜ ஆசிரமத்தோடு கூடி யிருந்தது அந்த இடம், க்ஷுத்திரப் பிராணிகள் ஒன்றுமின்றியதாய்ச் சித்தர்களானே சேவிக் கப்பெற்ற கொடிவீடுகளுடன் கூடியிருந்தது அந்த ஆஸ்பதம், பிராண விருத்தியைச் செய்விக் கும் பலங்களினுலே நிறைவுற்றதனவாய தருக்களும் கொடிகளும் அங்கு யதேஷ்டமா யிருந் தன; ஆண்டிருந்து தவம்புரியலாமென் றுத்தேசித்தான். (73)

(ஸ்ரீ-வீர-அ-கை) ஆண்டுத் தவச்சாலையியற்றி வேண்டுவன சேகரித்தான் எனல்:—சாலை யென்பது.

சாலையமைத் தான்மூங்கிற் றண்டிழைத்தான் கமண்டலமுஞ் சமைத்தானக்கு
மாலையுங்கந் தையுங்கனிகா யமைப்பனபாத் திரங்களுமான் றேலுஞ்சேர்த்தான்
மேலையுயர் தவந்தொடங்கிச் சந்திநிய மமுஞ்செபமும் விடிந்தசாமஞ்
சோலைமலர் பறித்தலிரண் டாஞ்சாம மிவ்வகையே தொழில்களாக்கி.

(ப-ரை) சாலையமைத்தான் = இருத்தற்கு ஒரு குடிசையைச்செய்தான், மூங்கிற்றண்டிழைத்தான் = மூங்கிலினாலே தவ அங்கமாக ஒரு தண்டமியற்றினான், கமண்டலமும் சமைத்தான் = ஜலபாத்திரமும் சேகரித்தான், அக்குமாலையும் = ஜபமாலையும், கந்தையும் = சீதோஷ்ணவாத நிவாரணத்துணியும், கனிகாயமைப்பன பாத்திரங்களும் = பத்திரபுஷ்ப பலாதிசேகரிக்கும் ஆதாரங்களும், மான்றோலும் = கிருஷ்ணாஜினமும், சேர்த்தான் = சம்பாதித்தான், மேலையுயர் தவந்தொடங்கி = பின்னர் உயர்ந்த தவத்தினைச்செய்ய வாரம்பித்து, சந்தியமும் செபமும் விடிந்தசாமம் = சந்தியாவந்தன நியமங்களும் ஜபமும் முதல் யாமத்திலும், சோலைமலர் பறித்த லிரண்டாம்சாமம் = நந்தன வனத்திலுள்ள புஷ்பாதிகள் கொய்தல் இரண்டாவது முகூர்த்தம், இவ்வகையே தொழில்களாக்கி = இவ்வாறே கிரியைகளைப் பகுத்து.

(ஸ்ரீ-வீர) ஆண்டுச் சமமாய்ச் சுத்தமாய் நீர்சூழ்ந்ததாய்ச் சீதளமாய், பசும்புன்னிறைந்து கவின்விரிந்த இடங்களாற் பச்சென்றிருப்பதாய், சிநிக்தமாய்ச் சபலபாதப மிகுந்ததாயிலங்கும் ஒருதலத்தில், இலையாலயமொன் றியற்றினான். அது பூங்கொத்துகளோடு கூடிய கொடிகளானே பிணிக்கப்பெற்றுப் பர்ணசாலை ரூபமாயிருந்தது, மின்னல்களோடுகூடிய நீலாப்பிரங்களோடுற்ற மழைகாலம்போலப் பஞ்சரமொப்ப விளங்கியது, பசையோடுகூடிப் பச்சென்று விளங்கும் தண்டத்தையும் பலபோஜன பாத்திரத்தையும் பூஜாபாத்திரத்தையும் புஷ்பபாண்டத்தையும் ஜபமாலையையும் ஜலபாத்திரத்தையும் சீதவாத ஆதப நிவாரணப்பொருட்டு ஒரு கந்தைத் துணியையும் விரதிகட்கு ஆசனரூபமாய கருமான்றோலையும் தவத்திற்கு அங்கமாகச் சேகரித்தான், இன்னும் அத்தவச்சாலையினிடத்தில் என்னென்ன வஸ்து வேண்டியதாக விருக்குமோ தவத்தின்பொருட்டு வேண்டியனவாய அவற்றையெல்லாம் அம்மன்னவன் சேகரித்துக்கொண்டான், தாதாவானவர் தம்மால் சிருட்டிக்கப்பட்ட பிரமாண்டத்தில் விவகாரசாதன சமுதாயத்தைச் சேகரித்துக் கொண்டதேபோலும்; சந்தியை பூர்வமாய ஜபத்தைக் காலைச்சாமத்திலும் புஷ்பங்கள் கொய்தலை யிரண்டாவது சாமத்திலும் செய்வதாயினான். (74)

(ஸ்ரீ - வீர - அ - கை) தொடங்கிய தவக்கிரமத்தின் சேடத்தை யியம்பி அந்தப்புரத்தில் சூடாலை யியற்றியதை யியம்பத் தொடங்கல்:—கடவுளென்பது.

கடவுள்பூ சனைமூன்றுஞ் சாமநா லாஞ்சாமங் கனிகாய்கொள்ளல்
படரிரவெல் லாஞ்செபமா மிவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்தவேந்தன்
மடவரலிங் கரையிரவிற் கண்விழித்தா டன்னருகு மன்னைக்காணா
ளிடர்மருவி வாழ்வகன்று வனம்புகுந்தா னரசனென விரங்கிவாடி.

(ப - ரை) கடவுள்பூசனை மூன்றுஞ்சாமம் = தெய்வார்ச்சனை மூன்றாவது சாமமாம், நாலாம்சாமம் கனிகாய் கொள்ளல் = நான்காவது சாமம் கனிகாய் புசித்தலாம், படர்இரவெல்லாஞ் செபமாம் = விஸ்தாரமான இரவுமுழுதும் செபித்தலாம், இவ்வாறு தவம்புரிந்தான் பகர்ந்தவேந்தன் = இந்தப்பிரகாரம் தவத்தைச்செய்தனன் கூறிய சிகித்துவசமன்னவன், மடவரல் = சூடாலையானவள், அங்கு அரையிரவில் = அந்தப்புரத்தில் அர்த்தராத்திரியில், கண் விழித்தாள் = நித்திரை தெளிந்தாள், தன் அருகுமன்னைக்காணாள் = தனது சமீபத்தில் அரசனைக் கண்டிலள், இடர்மருவி = சிறிது சோகமுற்று, வாழ்வகன்று வனம்புகுந்தான் அரசன்,

ஏன்=அரச வியற்கையை யகன்று தவத்தின்பொருட்டுக் காட்டிற்குச் சென்றனன் மன்னவ னென்று, இரங்கிவாடி=இரக்கமுற்று வாட்டமடைந்து.

(ஸ்ரீ - வீர) அதனோடுகூட இரண்டாவது யாமத்தில் பலமூலகுசகாஷ்டாதிகளின் சேகரத்தையுஞ் செய்தான், பின்னர் மூன்றாவது யாமத்தில் ஸ்நானம் தேவார்ச்சனம் இயற்றுவ தாயினன்; பின்னர் அவ்வனத்திற் சேகரித்த கந்தமூல பலதாமரை மொட்டுமுதலியவற்றைப் புசித்துச் செபிப்பதில் தற்பரனாகி யேகாங்கியாய் வசியாயுள்ள அம்மன்னவ னிரவைக்கழித்த னன்; கூறியதை யனுவதித்து கூறப்புகும் கதையுடன் பொருத்தல்:—மடவரலென்பதாதி. இவ்வண்ணம் பர்ணசாலையிற் சிகித்துவசன் வனத்திலிருந்தனன், இப்போது அச்சூடாலை யானவள் கிருகத்தில் என்ன செய்தனள் என்பதைக் கேட்குதி. ஆண்டு அர்த்தராத்திரியில் சிகித்துவசனானவன் வெகுதூரத்திற் சென்றபின் கிராமத்திற் றூங்கிய பெண்மானேபோலச் சூடாலையானவள் பயத்தால் விழித்தனள், இவ்வுவமை இராஜவியோகப் பீதியால் எப்போதும் விளித்துக்கொண்டிருப்பவளாயினும் தெய்வவசத்தா னித்திரையால் அபகரிக்கப்பெற்றவ ளாயினள் என்பதை விளக்கற்பொருட்டாம்; பதியினாலே தியாகிக்கப்பெற்றவளாய் சயனமானது சூனியத்தன்மையை யடைந்ததை பாஸ்கரனற்று பூர்ணேந்து இன்றி சோபை யிழந்த அம்பரம்போலக் கண்டனள், சிறிதுவாடிய வதனத்தினளாய்க் கேதசாலியாய், கார் செறுமுதலிய நீரால் றெளிக்கப்பெற்ற மகாவல்லியேபோல உச்சாகமின்றிய அங்கபல்லவத்தி னளாய் எழுந்தனள், சிறப்புப்பொதுவாய்ப் பொருத்தல்வேண்டும் கணப்போது படுக்கையி லுட்கார்ந்துகொண்டே அந்தோ கஷ்டம்! பிரபுவானவர் இராச்சியத்தைவிட்டுக் கிருகத்தி னின்றும் வனஞ்சென்றனர் என்னும் சிந்தையினாலே யினிக்கூறும்வண்ணஞ் சிந்திப்பாளாயி னள். பிரகரம்=யாமம். (75)

(ஸ்ரீ-வீ-அ-கை.) சூடாலையானவள் சிந்தனைசெய்து செய்த செயலைச் செப்புதல்:—பதி யென்பது.

பதியொழிந்து கதியில்லைக் குலமகளிர்க் கரசனைநாம் பயிறுமென்னா
மதிநினைந்து சாளரத்தாற் புறப்பட்டு வானேகி வானிற்சித்த
ரதிகமிதோர் மதியென்ன முகந்திகழப் போகின்றா ளாங்கேகண்டாள்
கதிர்வடிவா ளுடனிரவிற் றனிப்போமன் னனைக்கண்டு கருதுகிற்பாள்.

(ப - ரை) பதியொழிந்து கதியில்லைக் குலமகளிர்க்கு=நாயகனைவிட்டு வேறுகதி கிடையாது குலமங்கையர்க்கு, அரசனை நாம் பயிறுமென்னா = அரசனைப்போய் யான் சேருவேன் என்று, மதிநினைந்து=புத்தியில் எண்ணி, சாளரத்தால் புறப்பட்டு = பல கணிவாயிலாய் வெளிப்போந்து, வான் ஏகி=ஆகாயத்திற் சென்று, வானிற்சித்தர்=ஆகாயத்தில் உலவுஞ்சித் தர்கள், அதிகமிதோர்மதியென்ன=இது ஒருவிது அதிகம் என்று சொல்லும்படியாக, முகந் திகழப்போகின்றாள் ஆங்கே கண்டாள் = வதனம் விளங்கச்சென்ற சூடாலையானவள் அவ் விடத்திற் பார்த்தனள், கதிர்வடிவாளுடன்=பிரகாசமும் கூர்மையும் கவினும்வாய்ந்த கட்கத் துடன், இரவிற் றனிப்போம் மன்னனை = நிசியில் ஏகாங்கியாகச்செல்லும் அரசனை, கண்டு கருதுகிற்பாள்=பார்த்து எண்ணுகிற்பாள்.

(ஸ்ரீ - வீர) அதனையே கூறுதல்:—ஆகையினால் ஈண்டு இப்போது என்னால் என்னசெய் யத்தக்கது என்றால் அவரது சமீபத்தில் யான்போய்ச் சேரவேண்டியதுதான் ஏனெனில் விதி யினால் - நூலால் பார்த்தாவே முதற்சாதனகதியென மங்கையர்க்கு விதிக்கப்பெற்றுளதாம்

பர்த்தா இல்லாவிடினே புத்திராதிகளே கதியென்பது கருத்தாம்; இவ்வண்ணம் நன்கு சிந்தித்துச் சூடாலையானவள் பர்த்தாவைப் பின்றொடரும்பொருட்டு இனியெழுந்து சாளர மார்க்கமாக வெளிப்போந்து அம்பரத்திற் சென்றனள்; முகத்தினலே இரண்டாவது சந்திர விப்பிரமத்தைச் சித்தர் கூட்டத்திற்கு உண்டுபண்ணுபவளாய் அம்பரமார்க்கமாக வாதக் கழுத்திலேறி யோகினியானவள் சுற்றினள்; ஏகாந்தத்தில் வேந்தரையோக்கிய சமயமாகிய நிசியில் ஒளிர்பவனும் வேகமாகச்செல்பவனும் அங்குமிங்கும் போபவனும் தனித்தவனும் கட்டு தானும் ஆகிய பதியை அவ்விரவிற் கண்டனள். (76)

(ஸ்ரீ-வீர-அ-கை) சூடாலையானவள் மன்னவனுடைய வருங்காரிய மெல்லாவற்றையுஞ் சிந்தித்துப் பார்த்து வீடுதிரும்பி ராஜகாரியங்களையெல்லாங் கவனித்து வருங்கால நோக்கியிருந்தாளெனல்:—இனி, அரசன், என்பன.

இனியிவன்செய் வனவென்னென் றெண்ணுதலு மேற்செய்வ தெல்லாங்கண்டாள்
கனிமொழியா டிரும்பினு ளின்றிவனை நாஞ்சேருங் காலமல்லத்
துனியறப்பின் சேர்வதே விதிநெறியா மெனமீண்டு தொல்வீடுற்றாள்
வினவினர்க்கு மன்னவனோர் காரணத்தே கினனென்று விளம்பியார்க்கும்.

அரசனொழுங் காற்புவியைத் தனிகாத்தாள் சமநோக்கா லணங்குபோல்வாள்
வரிசையுடன் பதினெட்டாண் டகன்றுசூடாலையுந்தன் மனையில்வாழ்ந்தாள்
புரைசெறிகா னகத்திருந்தான் சிகித்துவச னவன்பானும் போவதற்கு
விரவியதா ளிதுவென்ன விருளிலே புறப்பட்டு விண்ணிற்போனாள்.

(ப - ரை) இனியிவன் செய்வன என்னென்று எண்ணுதலும்=வருங்காலத்தில் மன்னவன் இயற்றுவன யாவையென்று சிந்தித்தலும், மேற்செய்வது எல்லாங்கண்டாள் = இனிச் செய்யப்போவன வற்றையெல்லாம் தரிசித்தாள்; கனிமொழியாள் திரும்பினாள் = மாதுரியமான வாக்கினையுடைய அச்சூடாலையானவள் கிருகத்தை நோக்கினள், இன்று இவனை நாம் சேருங்காலம் அல்ல = இப்போது இம்மன்னவனை நான் அடையுங்காலம் அல்ல, துனியறப்பின் சேர்வதே விதிநெறியாம் என = துன்பமற பின்னரடைவதே விதிமார்க்கமாம் என்று, மீண்டுதொல் வீடுற்றாள்=மறுபடியும் பழைய கிருகத்தையே யடைந்தனள். வினவினர்க்கு= கேட்டவர்க்கு, மன்னவன் ஓர் காரணத்தேகினன் என்று விளம்பியார்க்கும்=எவருக்கும் அரசன் ஒரு ஏதுபற்றிச் சென்றிருக்கின்றான் எனக்கூறி.

அரசன் ஒழுங்கால்=மன்னவன் முறைமையால், புவியைத் தனி காத்தாள் = இராச்சியத்தை ஏகாங்கியாகவே ஆண்டுவந்தாள், சமநோக்கால் = சமதிருஷ்டியால், அணங்குபோல்வாள்=தெய்வம்போன்ற சூடாலைத்தேவி, வரிசையுடன் பதினெட்டாண்டு அகன்று=கிரமத்துடன் பதினெட்டுவருடஞ் சென்று ஏக, சூடாலையும் தன்மனையில் வாழ்ந்தாள் = அரசியும் தனது அரண்மனையில் வசித்துக்கொண்டிருந்தனள், புரைசெறி கானகத்திருந்தான் சிகித்துவசன்=இடர்நெருங்கிய வனத்தின்கண் உறைந்தான் அரசன், அவன்பால் நாம் போவதற்கு= அவ்வரசன்பால் நான் செல்லுவதற்கு, விரவியதாள் இதுவென்ன=பொருத்தமானகாலம் இது வென்று, இருளிலே புறப்பட்டு விண்ணிற்போனாள் = இரவிலே வெளிப்பட்டு ஆகாயத்திற் சென்றாள்.

(ஸ்ரீ-வீர) அத்தகைய பதியைப்பார்த்து ஆகாசப் பிரதேசத்திலிருப்பவளாய்ப் பர்த்தாவி னுடைய வருஞ்சுபாசுபங்க ளியாவற்றையும் சிறிதும் சேடமில்லாமல் சிந்தித்துப் பார்த்தனள்; பர்த்தாவினுடைய இன்றியமையாது வருவனவற்றை யெதிரிலிருப்பதேபோல யோகபலத்தி னாலே அபரோட்சமாகக் கண்டு அதனையே தக்கபடி ஆசரிப்பவளேபோல ககனத்தினின்றும் திரும்பினாள்; என்னுடைய இப்போதிய செல்கையிருப்பதாகுக வெகுகாலங் கழித்தே யென் னவ் இம்மன்னவனுடைய பக்கத்தில் போகத்தக்கதென்னுமிது நியதியின் நிச்சயமாம்; இவ் வண்ணம் நன்கு சிந்தித்துச் சூடாலையானவள் மீண்டும் அந்தப்புரத்துட்புகுந்து சயனத்தில் சம்புவின் சிரசில் இந்துவின் கலைபோல் நித்திரைசெய்தாள்; யாதோ ஒரு காரணத்தினால் மன்னவன் இப்போது சென்றுளானென்று புரத்தினுள்ள ஜனங்களியாவரையுஞ் சமாதானப் படுத்தி அங்ஙனையிருந்தாள்; பர்த்தாவினுடைய அம்முறைமையானே சமதரிசனத்தால் கால முறைமைபற்றிப் பக்குவமான நெல்வயலைக் காக்குங் கோபிகையேபோல இராச்சியத்தை யிரட்சித்தாள் அத்தம்பதிகளிருவருக்கும் காலமானதுசென்றது, பரஸ்பரம் முகங்களைக்காணு மல் நாட்டையுங் காட்டையும் காத்துக்கொண்டிராநின்ற அவர்களுக்கு தினம் பக்ஷம் மாசம் இருதுசகிதவருடம் கழிந்தது இந்தவிதம்; சிகித்துவசனுக்கு விபினத்திலும் சூடாலைக்குத் தன் மந்திரத்திலும் காலங்கழிந்ததைப்பற்றி வெகுவாகக் கூறுவதால் என்னேபயன், சூடாலை வசித்தாள் சதனத்தில் பதினெட்டு வருடங்கள், அதுபோலவே சிகித்துவசன் வசித்தான் வனகுச்சத்தில், அக்கால் அவளுடைய பர்த்தாவின் போதமானது இனிக்கூறப்பெரும் வகை யானே தனது உபதேசத்தினாலேயே பலிக்கவேண்டியபடியினாலே பர்த்தாவினுடைய சமீ பம்போவதில் என்க்கு இதுகாலமென்று இனிது சிந்தித்து மந்தாரத்தாழ்வரைச் சோலையை யடையும்பொருட்டு அவள் புந்திசெய்தனள், பின் இராவில் அந்தப்புரத்தினின்றும் வெளிப் போந்தனள் ஆகாயமார்க்கத்தைக் கடந்துசென்றனள்.

(ச) மேற்செய்வது=மேலியற்றும், எல்லாம்=சுகாசுகமனைத்தையும், வரிசையுடன்= தினம், பட்சம், மாதம், வருடத்துடன். (77-78)

(ஸ்ரீ-வீ - அ-கை) கானனத்திற்சென்ற சூடாலை நாயகனைக்கண்டு கரைந்துகூறல்:— மாருதத்தென்பது.

மாருதத்தின் கழுத்தேறி மறைந்துபோய் மந்தரமா மலையைச்சேர்ந்தா
ளாரமற மணிப்பூண்க ளின்றியே கறுத்துலந்த வங்கமாகி
யோருடனின் றதுகண்டா ளறிந்திலண்மா யோகத்தா லுணர்ந்துமன்னைக்
கூறுமிடர் சிறிதடைந்து தன்னிலே மனத்தோடு கூறலுற்றாள்.

(ப-ரை) மாருதத்தின் கழுத்தேறி = காற்றின் கந்தத்திலாரோகணித்து, மறைந்து போய்=கரந்துசென்று, மந்தர மாமலையைச்சேர்ந்தாள் = மந்தராசல சோலையை யடைந் தாள், ஆரமறமணிப்பூண்கள் இன்றியே = முத்துமாலை முதலிய ரத்தினாபரணங்களொன்று மின்றியே, கறுத்துலர்ந்த அங்கமாகி=கறுத்துக்காய்ந்த வடிவினதாகி, ஓருடல் நின்றதுகண் டாள்=ஒரு சரீரம் நிற்பதைப்பார்த்தாள், அறிந்திலள் = உணர்ந்திலள், மாயோகத்தால் உணர்ந்து=மகாயோகத்தினாலே தெரிந்து. மன்னை=அரசனை, கூறும் இடர் சிறிதடைந்து= சிறிய துயரத்தையடைந்து, தன்னிலே மனத்தோடு கூறலுற்றாள் = தன்னிடத்தில் மனத்தி னாற்றானே சொல்லிக்கொண்டாள்.

(ஸ்ரீ - வீர) வாயுவின் கழுத்திலேறிச் செல்லுமவள் ஆகாயத்தில் அனேகவித விசித்திரத்தைக் கண்டனள், கண்டுகொண்டே மந்தாகந்தரத்தை யடைந்தனள்; காணுமலே ஆகாயத்திலிருந்துகொண்டே வனமத்தியிற் புகுந்தனள், பதியை தேகாந்தரத்தி லிருப்பவனைப்போல சமாஹித சித்தத்தோடுகூடிய யோகத்தினாலே கண்டுணர்ந்தனள், ஹாரகேயூர கடக குண்டலாதி விபூஷிதனாய் மேருகாந்தியோடு கூடியிருந்த அவனையே ஈண்டு மந்தா இலைச்சாலையில் இளைத்த மேனியனாக கறுத்த நிறத்தினனாக ஜீர்ணபர்ணம்போல இருப்பச் சூடாலை கண்டனள்; அவனைக்கண்டு குற்றமற்ற மேனியளாய்க் கனத்த தனத்தினளாய் சூடாலை சிறிது விஷாதத்தை அடைந்தவளாய் இவ்வண்ணம் தன்பாற் சித்தத்தினாலே கூறிக்கொண்டனள். (79)

(ஸ்ரீ-வீர-அ-கை) அறியாமையை நொந்துகொண்டு மன்னவன் பக்குவனாதலின் உணர்த்தத் தகுதியன் எனல்:—அறியாமை, என்பது.

அறியாமை யறக்கொடிதந் தோவந்தோ வதனாலிவ் வரசனொந்தான்
பிறியாத ஞானமும்போ கமும்வீடு மின்றளிப்பேன் பிறிதொன்றில்லைச்
சிறியாணம் மனைவியிவ ளென்றிகழா வகைவேறோர் தேகமேவி
நெறியாக வுணர்த்துவன்பே தைமைதீரு நெஞ்சினனாய் நிருபனின்றான்.

(ப - ரை) அறியாமை யறக்கொடிது அந்தோ அந்தோ = அஞ்ஞானமானது அத்தியந்தங் கொடூரமானது ஐயோ ஐயோ, அதனால் இவ்வரசன் நொந்தான் = அதனாலன்றோ இந்த மன்னவன் இடருற்றனன், பிறியாத ஞானமும் போகமும் வீடும் இன்றளிப்பேன் = பேதமுறாத ஞானத்தையும் அதனாலெய்தும் மோக்ஷத்தையும் போகத்தையும் இப்போது கொடுப்பேன், பிறிதொன்றில்லை = இதில் ஆக்ஷேபமில்லை, சிறியாள் நம்மனைவியிவள் = சின்னவள் நம்து இல்லாள் இவள், என்று இகழாவகை = என்று நிந்தியாவண்ணம், வேறோர் தேகமேவி = அயலொரு சரீரத்தையடைந்து, நெறியாக உணர்த்துவன் = முறையாக அறிவிப்பன், பேதைமைதீரும் நெஞ்சினனாய் நிருபன் நின்றான் = அறியாமைநீங்கும் மனத்தினனாய் மன்னவன் இருக்கின்றான்,

(ஸ்ரீ - வீர.) அந்தோ, அந்தோ அஞ்ஞானமஞ்ஞத்தன்மை அஞ்ஞானவடிவ மூர்க்கபாவமானது விடமமாய்க்கொடிதாம், இம்மூர்க்கபாவ தசையோடுகூடியதாலன்றோ இவ்வித கஷ்டங்களை அரசனடைந்தனன், எக்காரணத்தினால் எனது அதிப்பிரியமான பதிமோக கனத்தால் இதயத்திலடிபட்டவராய் இத்தசையை யடைந்தனனோ அக்காரணத்தால் இவ்விலைச்சாலையில் இப்போதே அவசியம் இராஜலக்ஷ்மீவானாய் நாதனாய் பதியாய் உள்ள மன்னவனுக்கு தத்துவஞான முண்டாகுமாறும் அவ்வாறே போகமோக்ஷலக்ஷ்மியை யடைவுறுமாறும் செய்விப்பேன் இதிற் சந்தேகமொன்றுமில்லை; இவ்வுருவத்தைவிட்டு அன்னிய ஏதாவதொரு வடிவத்தால் இம்மன்னவன்பாற் செல்வேன் உத்தமோத்தமமாகிய போதத்தையும் அநுக்கிரகிப்பேன் யாதின்பொருட்டு இவ்வடிவத்தை விடுதலெனின் கூறல்:—சிறியாளென்பதாதி. இவள்பாலை என்து காந்தை என்று எனதுபதேசத்தை விசுவசிக்கமாட்டானன்றோ, ஆகையினால் தவவடிவத்தானே கணத்தில் பதியின்பொருட்டுணர்த்துவேன் முன்பே என் தவவேடத்தால் போதிக்கப்பெற்றிலனவனெனின் ஆண்டுக்கூறல்:—பேதமை யென்பதாதி. பர்த்தா கஷாயபாகத்தானே பரிபக்குவமதியை யுடையவனாக விருக்கின்றனன்.—

(ச) பேதைமைதீர் = இராகாதிக டீர்வதான நிடேதத்தை விட்டு விதியிற் பிரவிர்த்திக்கும். (80)

(ஸ்ரீ - வீர - அ - கை) தன் வடிவத்தைமாற்றி வேறொரு வடிவத்தால் திருவருள் செய்யப்புகுதல்:—பக்குவமென்பது.

பக்குவமா தலினிந்த விமலமனத் தேயறிவு பற்றிபாயுந்
தக்கதிது வென்றெண்ணி யொருசிறிது தியானத்தாற் றான்வேறாகி
மிக்கதொரு வேதியன்சே யாய்க் கணவன் முற்குதித்தாள் விண்ணினின்று
மக்கணமே யவனோக்கிக் கடிதெழுந்தங் கீகார மனைத்துஞ்செய்தான்.

(ப - ரை) பக்குவம் ஆதலின்=பாகத்தை யடைந்திருத்தலின், இந்த விமலமனத்தே யறிவுபற்றி பாயும் = இந்நிர்மலமான உள்ளத்தே வஸ்துவானது பிரதிபிம்பிக்கும், தக்கது இது என்று எண்ணி=யோக்கியம் இதுவென்று சிந்தித்து, ஒருசிறிது தியானத்தால்= அற்பகால தியானத்தினாலே, தான் வேறாகி = வேறு சரீரத்தைத் தான் அடைந்து, மிக்கதொரு வேதியன்சேயாய் = மேன்மை மிகுந்த மறையவன் மைந்தனாய், கணவன் முற்குதித்தாள் விண்ணினின்று = நாயகன்முன்பாக ஆகாயத்தினின்றும் வந்திறங்கினாள், அக்கணமே=அப்போதே, அவன் நோக்கி=அம்மன்னவன் பார்த்து, கடிது எழுந்து = வேகமாக எழுந்து, அங்கீகாரம் அனைத்துஞ் செய்தான்=சுவீகரிக்கவேண்டிய முறைகள் யாவற்றையுஞ் செய்தனன்.

(ஸ்ரீ-வீர) இப்போது இம்மன்னவனுடைய நிர்மலசித்தத்தில் தனது தத்துவமானது பிரதிபிம்பிக்கும் என்று நன்குசிந்தித்து சூடாலையானவள் பிராமண புத்திரனாக ஆயினாள், எங்ஙனமாயினாளெனின்:—உரைத்தல் ஒரு என்பதாதி. அக்கினி ஷோமதாரணன்விதமான சிறிது தியானத்தினாலே க்ஷணத்தில் அம்புதாங்கமென்ன அன்னியத்தன்மையாகிய பும்பாவத்தை யடைந்தனள்; அந்த வனத்திற்குதித்து மறையவர் புத்திரவடிவத்தை யடைந்த அவள் புன்சிரிப்போடு கூடிவிளங்கும் முகத்தினளாய் பர்த்தாவினுடைய முன்னிலையில் வந்திறங்கினள்; முன்வந்த அந்த மறையவர் மைந்தனைச் சிகித்துவசன் கண்டனன்.

(ச) சிறிது தியானத்தாற்றான் = அற்பமான தியானத்தினாலே, வேறாகி = ரூபாந்தரமாய். (81)

(ஸ்ரீ-வீ ர-அ-கை) வந்த அந்த மறையவன் மைந்தனை வருணித்தல் வாயிலாய் பரஸ்பரம் புஷ்பாஞ்சலி செய்து கொள்ளுதலையுல் வருணித்தல்:—பொன்னெனன்பது.

பொன்னிறத்தன் வெண்டாள மாலையன்வெண் டுகிலுடையன் புரிவெண்ணூலோ
னன்னிலத்தை விடச்சிறிது மேனிற்போன் றனைநோக்கி நடவிங்கென்று
தன்னிடத்தா தனங்கொடுத்தான் சிகித்துவசன் மறையவன்சேய் தானுமீண்டு
மன்னியற்கைத் தவமுனியே யுனைத்தொழுதே னென்றுமறு மாற்றஞ்சொல்லி.

(ப-ரை) பொன்னிறத்தன்=தங்கமேனியன், வெண்தாள மாலையன்=வெள்ளிய முத்துமாலையினாலே அலங்கரிக்கப்பெற்றவன், வெண் துகில் உடையவன் = சுவேதாம்பரதான், புரிவெண் நூலோன்=வெள்ளிய முப்புரிநூலை யுடையவன், நன்னிலத்தைவிடச் சிறிது மேல் நிற்போன்=பூமிப்பாகத்தில் நின்றும் சிறிது உயரமாக நிற்பவன், தனைநோக்கி = அத்தகைய

முனிமைந்தனைப் பார்த்து, ஈட இங்கு என்று = இங்கே வரவேண்டுமென்று, தன்னிடத்து ஆதனங்கொடுத்தான் சிகித்துவசன் = மன்னவன் தனது இடத்தில் ஆசனத்தைச் சமர்ப்பித்தனன், மறையவன் சேய்தானும் = விப்பிர மைந்தன்தானும், மீண்டு = மறுபடி, மன்னியற்கைத் தவமுனியே = ஹே தவத்தோடு கூடிய இராஜரிஷியே! உனைத்தொழுதேன் என்று மறுமாற்றஞ்சொல்லி = உன்னை நமஸ்கரித்தேன் என்று பிரதி நமஸ்காரங்கூறி.

(ஸ்ரீ-வீர) அம்மைந்தன் வனாந்தரத்திலிருந்து வந்தவன் போன்றனன் தவமே மூர்த்தி வடிவமாக வந்ததுபோலிருந்தனன் ஓடவிட்டுருக்கிய செம்பொன்போல மஞ்சட் சொச்சவங்கங்களையுடையவன் முத்துமாலைகளினு லலங்கரிக்கப்பெற்றவன்; சுக்கில யஞ்ஞோபவீதத்தையுடையவன் சுக்கிலாம்பர மிரண்டுசுற்றியவன் கமண்டலுதாகரன் பிரகாசித்துக்கொண்டெதிரே நிற்பவன்; பிரகோஷ்ட மணிக்கட்டில் நின்றும் இருமடங்குப் பகிர்தேசவியாப்தமான, அதனுனே ஹஸ்தமாத்திரத்தால் இருமடங்கில் பன்னிரண்டங்குல மாத்திரத்தானுதல் அதனுனே வெகுநீட்சியின்றிப் பூமியிற்படாத காத்திரத்தோடும் அழகிய அக்ஷமாலையோடும் இருந்து பலக்ஷிதமானவன் அத்தகைய விப்பிரகுமாரனைப்பார்த்து மன்னவன் திடுக்கென்றெழுந்தனன், தேவபுத்திரனை வரவேற்கு மதியினுலே பாதுகையை விடுத்தவனுய் நின்றுகொண்டு ஹே தேவபுத்திரனே! உனக்கு நமஸ்காரம் இதோ இந்த ஆசனத்திலெழுந்தருளியிருத்தல் வேண்டும்; என்று விப்பிர குமாரனுக்குக் காத்தினுலே பத்திரநிர்மிதமான வாசனத்தைக்காண்பித்தனன், துவிஜ புத்திரனுக்குப் புஷ்பமுஷ்டியைக் காதலத்திற் கொடுத்தனன்; ஹே இராஜரிஷியே! உன்பொருட்டு நமஸ்காரமென்று விப்பிரகுமாரனுனவன் கூறிக்கொண்டு புஷ்பங்களைக் கவர்ந்து பத்திராசனத்தில் தான்நின்ற நிலையினின்றும் புகுந்தனன். (82)

(ஸ்ரீ-வீ-அ-கை) பரஸ்பர மிருவரும் புகழ்ந்துகொள்ளுதல்:—ஆதன, அதனுலென்பன.

ஆதனத்தி லிருத்தலுமே மன்னுரைப்பான் கடவுண்மக னுனீதான்
போதலினுற் பயன்பெற்றே னின்றன்றே வென்றுபல பூசைபண்ணி
யேதமற விட்டதே வதையென்றே கருதினு னிவனுமந்தப்
பூதலமன் னனைநோக்கி நின்குணமும் விநயமுமார் பொருந்துகிற்பார்.

அதனுலே நீடூழி வாழ்தியா லுபசாந்த மானநெஞ்சால்
விதமான கற்பனையற் றறியதவம் வீடுபெற மிகச்செய்தாயோ
சதவேள்வி வாசவனோர் வேந்தனும் பதம்விட்டுத் தவவனத்தை
யிதமாக நினைந்துறைத லசிதார விரதமெனு மியற்கையொக்கும்.

(ப - ரை) ஆதனத்தில் இருத்தலுமே = பத்திராசனத்தின்கண்ணே வீற்றிருத்தலுமே, மன் உரைப்பான் = மன்னவன் கூறுவான், கடவுள்மகனுனீதான் = தெய்வ புத்திரனுகிய நீதான், போதலினுல் = ஈங்கெழுந்தருளலினுல், பயன்பெற்றேன் = அடையவேண்டியதடைந்தேன், இன்றன்றேவென்று = இன்றல்லவோ வெனக்கூறி, பலபூசை பண்ணி = நானுவகையாகப் பூசைசெய்து, ஏதமற இட்டதேவதை என்றே கருதினுன் = குற்றமற தனது இஷ்டதேவதை என்றே எண்ணினுன், இவனும் அந்தப் பூதலமன்னனை நோக்கி = இத்தெய்வகுமாரனும் அப்பூமண்டல வீரசனைப் பார்த்து, நின்குணமும் விநயமும் ஆர் பொருந்துகிற்பார் = உன்னுடைய சற்குணத்தையும் வணக்கத்தையும் யாவர்தாம் இனியடைவார்.

அதனாலே நீடூழிவாழ்தி=அக்காரணத்தினாலே சிரஞ்சீவியாக வாழக்கடவாய், உபசாந்தமான நெஞ்சால் = பரமசாந்தத்தை யடைந்த மனத்தினாலே, விதமான கற்பனை அற்று= வெகு வகையான கற்பனைகளைவிட்டு, அரியதவம் வீடுபெற மிகச்செய்தாயோ=அருமையான தவத்தினை மோக்ஷ மடையும்பொருட்டு மிகவுஞ் செய்துகொண்டிருக்கின்றாய்போலும், சதவேள்வி வாசவனேர் = சதமகன் என்னும் தேவேந்திரனுக்கொப்பான, வேந்தனும் பதம் விட்டு = அரசனும் பதத்தைவிடுத்து, தவவனத்தை இதமாக நினைந்துறைதல் = தபோவனத்தை இனிமையாக வெண்ணி வசித்தல், அசிதார விரதமெனும் இயற்கையொக்கும்= அசிதார விரதமெனுந் தன்மையைப் பொருந்தும். ஆல்-அசை.

(ஸ்ரீ - வீர.) ஹே தேவபுத்திரனே! மகா பாக்கியவானே! எங்கிருந் தினிதுவருகின்றாய் இத்தினம் சபலமென்றே யெண்ணுகின்றேன் எக்காரணத்தினால் உன்னை இத்திவசத்தில் தரிசிக்கப்பெற்றனனோ, என்று கூறி பர்த்தியத்தையும் அர்க்கியத்தையும் அலங்கலையும் புஷ்பங்களையும் அனகனாகிய சிகித்துவசமன்னவன் நூன்முறை தவறாமல் பிறயாவற்றையும் தனதிஷ்டரூபமான தேவியின்பொருட் டீந்தனன்; யான் இப்பூதலச் சேத்திரங்களில் வெகுவாகச் சுற்றி வந்தேன் உன்னினின்றும் பூசை எவ்வாறு என்னாலடையப்பெற்றதோ அவ்வாறு பிற இடங்களினின்றும் அடையப்பெறவில்லை, கோமளத்தன்மையினாலும் அதற்கேற்றபடியாய விநயத்தினாலும் ஹே அனகனே! மேலுமுள்ள நற்குணங்களினாலும் நிச்சயமாக அத்தியந்தஞ் சிரஞ்சீவியாவாயென்று யான் கருதுகின்றேன், இவ்விலக்கணங்களினாலேயே மனுஜர்கள் சிரஞ்சீவியர்களாவர்களென்பது கருத்து; சாந்தமாகிய மனத்தினாலே உதாரமாயிருக்கின்றாய் வெகுதூரத்தில் பல சங்கற்பங்களை விட்டொழித்திருக்கின்றாய் அதனானே பரமானந்தம் நிறைந்த மோக்ஷப் பொருட்டு தவத்தைச் சேகரித்துக்கொண்டிருக்கின்றாய் என்று தோன்றுகின்றது மூலத்தில் கச்சித்தென்றது இஷ்டவினாவில் நிபாதமாம்; ஹே சௌமியனே! மிகவுஞ் செல்வம் வாய்ந்த இராச்சிய சம்பத்தை அடியோடும் விட்டு சாந்தர்களும் சினமின்றியவர்களும் யதிகளும் வானப்பிரஸ்தர்களும் அநுட்டிக்கும் விரதபூதமாய உன்னுடைய இந்த மகாவன மினிதுசேவிக்கும் பான்மையானது அசிதாரைக் கொப்பாகக் குரூரமாம் அத்தியந்தம் சர்வதானத்தோடும் நிர்வகிக்கத் தக்கதாம்.

(ச) விதமான கற்பனையற்று=பேத கற்பனைபோய், உபசாந்தமான நெஞ்சால், வீடு பெற, அரிய, மகத்தான, தவத்தை மிகச்செய்தாயோ, வசிதாரவிரத துல்லியம், அதனிலக்கணமாவது, எவ்வனன் எவ்வனையோடு கணவனில்லாள்போ லுள்ளே சங்கமின்றி ஆசரிப்பது அசிதார விரதமென்பர், அதற்கொப்பாம் இராச்சிய விலக்குமி சமீபித்திருப்பினும் போக சாமர்த்தியமுமிருப்பப் போகத்தியாகத்தினாலென்க. (83-84)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அறியப்பெறாதனவாய இராச்சியத்தியாகம் மோக்ஷப்பொருட்டுத் தவம்புரிதல் என்பவற்றைப் புகழுதல் கூடாமையின் அத்தெய்வ குமாரனுக்குத் தவத்தினாலே சர்வஞ்ஞத் தன்மையைச் சம்பாவனை செய்துகொண்டு அரசன் துவிஜமைந்தனை ஞபாதி சம்பத்தாற் புகழுதல்:—என்றவென்பது.

என்றமறை யவன்றனைப்பார்த் தாசனுரைப் பானிங்கென் னியற்கையெல்லா
நன்றுணர்வுற் றாய்தேவ னுதலா விதில்வியப்பு நண்ணறபாற்று
நின்றனைநீ யார்புதல்வ னின்பெயரென் வருபொருளெ னிகழ்த்துகென்ன
வொன்றுமொழி யாதுரைப்பக் கேட்டியென மறையவன்சே யுரைக்க லுற்றான்.

(ப - ரை) என்ற மறையவன் தனைம்பார்த்து=எனக்கூறிய பிராமணனை நோக்கி, அரசன் உரைப்பான்=மன்னவன் கூறுவான், இங்கு என் இயற்கையெல்லாம் = இவ்விடத்தில் என்னுடைய சுபாவமெல்லாம், நன்றுணர்வுற்றாய்=நன்றாகத் தெரிந்துகொண்டாய், தேவன் ஆதலால்=தெய்வகுமாரன் ஆதலினால், இதில்வியப்பு நண்ணற்பாற்றும்=இதன்கண் ஆச்சரியம் பொருந்தற்பாற்றும், நின்றனை நீயார்புதல்வன் = எழுந்தருளி வந்துள்ள நீயார் யாருடைய குமாரன், நின்பெயரென் = உன்னுடைய நாமதேயம் என்ன, வருபொருள் என்= இவ்விடத்திற்கு வந்தகாரணம் என்னே, நிகழ்த்துகென்ன=கூறுவாயாகவென்று மன்னவன் கூற, ஒன்றும் ஒழியாது உரைப்பக்கேட்டியென = ஒன்றையும் மறையாமல் கூறக்கேட்பாயாகவென்று, மறையவன்சேய் உரைக்கலுற்றான்=விப்பிரகுமாரன் செப்பத்தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர.) ஹே பகவன்! அனைத்தையு மறிந்துள்ளாய் தேவன் நீ இதில் விஸ்மயம் என்னே சின்னரூபமான உலகங்கடந்த செல்வத்தினாலே மகாப்பிரபாவமுடைய நீ யுணரப் பெறுகின்றாய்; தேவார்ச்சனையிலும் அதிதிபூஜனம் அதிகம் என அஃதொன்றுமே ஜன்ம சாபல்யவேது உனது பூஜனத்திலோ எனக்கு இரண்டும் ஒரேகாலத்திற் கிடைத்தது அதனால் அத்தியந்தம் ஜீவித சாபல்யமென்னுங் கருத்தால், உரைத்தல்:—வந்தநின் பூஜையாலே வாழ்வெனது வளர்பயனுற்றது, தெய்வத்தைப் பார்க்கிலும் வந்தவரை யதிகமாகப் பூஜிக்க வேண்டுஞ் சாதுக்கள், ஆகையினால் என்னாற் கொடுக்கப்பெற்ற பூஜைக் கிரகணத்தின் பின்னர்; நீயார் யாருடைய புத்திரன் நீயிங்கு வந்தகாரணமென்ன என்பவற்றின் சமுசயத்தைத் தயவினாலே ஹே விமலேந்துசமானனனே மாற்றுவாய், ஹே மன்னவனே! எனது வாக்கியத்தைக் கேட்குதி கூறுகின்றேன் கேட்டபடியாய முழுவதையும் கூற இனிது கேட்குதி வணக்கத்துடன் நன்கு வினவுவானொருவனை யாவன்றான் வஞ்சனை செய்வன்; வினவியதைத் தாண்டாமல் என, யதாப்பிருஷ்டமாம் இது அவ்வியயபூர்வபத அவ்வியயீபாவ சமாசமாம் யதாகிலம் எதாசக்தி என்பவற்றையும் இதற்குதாகரித்துக் கொள்க.

(சு.) நின்றனை = உலகத்தை யீடேற்றுஞ் சின்னமுள்ள திருவொடு தெரியப்படுகின்றனை. (85)

(ஸ்ரீ-வீர-அ-கை) விப்பிரகுமாரன் தனது வரலாற்றை சவிஸ்தாரமாகக்கூறல்:—நாரதன், கங்கை, யென்பன.

நாரதனென் றொருமுனிவன் மெஞ்ஞான விளக்கொப்பா னன்னீர்க்கங்கைத்
தீரமுறு பொற்றலத்திற் சமாதியிருந் தானந்தத் தியானம்விட்டோர்
நேரமிருப் புழிவிளையாட் டொலியொன்று செவியுறவன் நெறியைப்பார்த்தான்
பேரழகி லரம்பையிலோத் தமையொப்பார் திரண்டுசில பெண்கள்வந்தார்.

கங்கையினீர் விளையாட்டிற் களிப்புறுவார் புருடரயல் காணுவாற்றாற்
சங்கையறத் துகிலில்லா ரவர்வாத்தைக் கண்டுமனந் தாவியோடித்
துங்கவிவே கந்துறந்து சுகமடைய வுயிரலைந்து தொடர்ந்துநிற்கும்
பங்கமிலா நாரதன்றன் மனநழுவிச் சுக்கிலமும் பாய்ந்ததன்றே.

(ப - ரை) நாரதன் என்று ஒருமுனிவன்=நாரதனென்று சொல்லப்பட்ட ஒருமுனீஸ்வரன், மெய்ஞ்ஞான விளக்கொப்பான்=சத்தியஞானதீப சமானன், நல்நீர்க்கங்கைத் தீரமுறு பொற்றலத்தில்=சுத்தோதக ஸ்ரீகங்கையின் கரையிலுறும் சொர்ணபூமியில், சமாதியிருந்

தான்=நிருவிகற்ப சமாதியில் வீற்றிருந்தான், அந்தத் தியானம்வீட்டு = அத்தியானத்தை விடுத்து, ஓர்நேரம் இருப்புழி = சும்மாவிருக்கும் ஒருபோது, விளையாட்டு ஒலியொன்று செவியுற=விளையாடுஞ் சப்தமொன்று செவிப்புலனெய்த, அந்நெறியைப் பார்த்தான்=அம் மார்க்கத்தை நோக்கினன், பேரழகில் அரம்பை திலோத்தமையொப்பார்=மிகுதியான எழி லில் இரம்பை திலோத்தமைகட்குச் சமானமான, திரண்டு சிலபெண்கள் வந்தார் = சிலமங் கையர்கள் ஒருங்குசேர்ந்து வந்தார்கள்;

கங்கையினீர் விளையாட்டில்=ஸ்ரீ கங்கையினது ஜலக்கிரீடையில், களிப்புறுவார்=சந் தோஷத்தையடைவார், புருடர் அயல்காணுவாற்றால் = வேறுபுருடரைக் காணுததன்மை யால், சங்கையற=கற்பனையின்றி, துகில் இல்லார் அவர் வரத்தை = ஆடையில்லாத அவர்க ளுடைய வரவை, கண்டுமனம் தாவியோடி = பார்த்து மனங்குதித்தோடி, துங்க விவேகந் துறந்து=பரிசுத்தமான ஆராய்ச்சியின்றி, சுகம் அடைய = ஆனந்திக்க, உயிர் அலைந்து= பிராணன் சஞ்சலித்து, தொடர்ந்து நிற்கும் பங்கமிலா நாரதன்றன் மனம் நழுவி=அதனைப் பற்றி நிற்கும் குற்றமற்ற நாரதமுனிவனுடைய உள்ளமானது கெட்டு, சுக்கிலமும் பாய்ந்த தன்றே=விந்துவுங் கழிந்தது அப்போதே. அன்று, ஏ-அசைகளெனினும் ஆம்.

(ஸ்ரீ-வீர) இச்சகத் கோசத்தின்கண்ணே தூயமனத்தினையுடைய நாரதரென்னும் ஒரு முனிவரர் உளர் புண்ணிய லக்ஷிமியினுடைய காந்திவாய்ந்த ரம்மியமுகத்தில் மிகவும் மணம் வீசாநின்ற கற்பூர திலகம்போன்றவர் இதனுனே நாரதர் வெள்ளிய அங்கத்தினையுடையவ ரென்று தெரிகின்றது; அந்த முனீஸ்வரர் ஒருபோது மேருவின்குகையில் தியானத்துட னிருந்தனர் ஆண்டு பொற்றடத்தில் ஸ்ரீ கங்கையானது அனேகம் பெரும் பெரும் அலைக ளுடன் பிரவஹிக்கும், மேருலக்ஷிமியினிடத்தில் விளங்காநின்ற வடிவோடுகூடிய ஹாரலதைக் கொப்பாக விளங்கியது ஒருபோது அந்நாரதமுனிவர் தியானந்தத்தில் அச்சரித்தடத்தில் வளையங்கள் தொனியாநின்ற லீலாகலகலாரவமாகிய ஜலக்கிரீடா கோலாகலத் தொனியைக் கேட்டனர் இதென்னவென்று அந்நாரதர் சிறிது குதூகலத்தை மிகுதியுமடைந்தவராயினர், சம்பாவனை பிராசுர்யாதி அர்த்தத்தையுடைய பிராயச் சப்தமும் அநந்தமாகவுளது அவ்விதங் கண் அன்னம் பிராயசம்ஞையில் பிராயபாவம் ரூபத்தின் பிராயத்தினின்றும் எனப் பாணினி ஜைமினி முதலியோர்களால் பிரயோகிக்கப் பெற்றிருத்தலின் இதனை மூலபதங்கண்டுணர்க; விளையாட்டாக நாடி ஆற்றில் மங்கையர் கணத்தைக் கண்டனர் அக்கூட்டம் இரம்பை திலோத்தமை முதலவர்போலக் கவின்வாய்ந்து ஜலந்தெளித்தலாதி விளையாட்டுடன் ஜலத்தி னின்றுங் கரையேறியது, மேலும் தங்கத் தாமரைமொக்கையொக்க வொளிரும் குசமண்ட லங்களுடன் புருஷவர்ஜ்ஜித தேசத்தில் ஆடையின்றி விளையாடிக்கொண்டிருந்தது; மேலும் சொச்சதமத்தன்மையால் அன்னியோன்னியம் கண்ணுடித்தன்மையை யடைதலின் எங்கும் பிரதி பிம்பித சர்வாங்க முடைத்தாகி எங்குங் காணப்பெறும் சர்வாங்கத்துடன் எங்குங்கராங்கா லுடையதது எங்கும் கண் சிரம் முகம் எனப் பிரசித்தமாய காலவடிவ கற்பதருவாம் பகவா னது சம்பந்தத்தாற் கிளம்பிய விஸ்வரூபம்போல இருந்தது; இத்தகைய காந்திவாய்ந்த மங் கையர் கூட்டத்தைக்கண்டு சகசமாகவே முனிவருடைய மனமானது அதன் பின்னர் ஆனந் தத்தையடைந்து மதோன்மத்தமுற்று விவேகாம்சத்தைப் பற்றுததாயிருந்தது, சித்தமானதி ஆனந்தத்தோடு கூடியதாக பிராணவாயுவானது கலங்கிநின்றுழி சித்தத்தில் விகாரமுண்டாக சர்வாங்கத்தில் பிராணவாயுக் கலங்கலால் சர்வாங்கசார ரேதசின் கலனமுண்டாயது எனத்

திருஷ்டாந்தத்துடன் கூறல்:—ரசநிறைந்த பலம்போலும் கிரீஷ்மாந்தத்தில் மேகம்போலும் மகிழ்ந்த அம்முனிவருடைய மதனஸ்கலிதம் அப்போதுண்டாயது.

(ச) பொற்றலத்தில்=சொர்ணமயமான தலத்தில். (86-87)

(ஸ்ரீ-வீ-அ-கை) கூறியதைப்பற்றி மன்னன் வினுதல்:—என்னலும் என்றது.

என்னலுமே நின்மொழியா மின்னமுதா லுளங்குளிர்ந்தே னெனினும்வேறு
பன்னுமொழி பரம்பொருள்போ லறிவரிதாற் குவித்துனதுற் பத்திசொல்வாய்
பின்னருயர் பரம்பொருளை வருந்தியுங்கேட் கின்றேன்மேற் பேசுகென்ன
மன்னனுரை செயக்கேட்டுச் சூடாலை யாம்மறையோன் மைந்தன்சொல்வான்.

(ப - ரை.) என்னலுமே=என்று கூறலுமே, நின்மொழியாம் இன்னமுதால் உளங் குளிர்ந்தேன்=உன்னுடைய வாக்கியங்களாகிய அமிருதபானத்தினுலே சித்தமானது தண் மையை யடையப்பெற்றேன், எனினும் = என்றபோதினும், வேறு பன்னுமொழி பரம் பொருள்போல் அறிவறிதால் = வேருகக்கூறும் வாக்கியம் பரமான்ம வஸ்துவைப்போல வுணர்வறிது, குவித்து உனது உற்பத்தி சொல்வாய்=சங்கிரகித்து உன்னுடைய அவதாரத் தைக்கூறுவாய், பின்னர்=பின்பு, உயர்பரம்பொருளை = உயர்ந்த பரமான்ம வஸ்துவை, வருந்தியும் கேட்கின்றேன் = பிரயாசைப்பட்டும் வினவுகின்றேன், மேற்பேசுகென்ன= மேலும் நடந்தவற்றைக் கூறுவாயாகவென்று, மன்னன் உரைசெயக்கேட்டு = சிகித்துவசன் கூறக்கேட்டு, சூடாலையாம் மறையோன் மைந்தன்சொல்வான்=சூடாலையாகிய விப்பிரகுமா ரன் கூறுவான்.

(ஸ்ரீ-வீர) நாரதமுனிவரானவர் அத்தகைய மகாத்மியமுடையவராகியும் யாவற்றையு முணர்ந்தவராயிருந்தும் சீவன் முக்தராகியும் ஆசையற்றவராய் இருந்தும் வைராக்கியவானுகி யும் ஒரு சிறிதும் உபமையற்றவராயிருந்தும் அத்தியந்தம் மேன்மையராயிருந்தும் வெளியிலு முள்ளிலும் நித்தியம் ஆகாயம்போல தெளிவுடையவராயிருந்தும் எங்ஙனம் மதனஸ்கலித் மானதுண்டாயது; ஹே பிரஹ்ம சொரூபரே இயம்பவேண்டும் என்று மன்னவன் கேட்ப, தத்துவஞானிகட்கும் மிகப்பிரபல பிராரப்தத்தினுலே விவேகாம்ச நிரோதத்தால் ஒவ்வொரு போது தேக தருமத்தோடுகூடி நிகழுதல் உளதேயாம் என்று சூடாலை யுத்தரங்கூறல்:—ஹே இராஜரிஷியே! இம்மூவுலகத்திலுள்ள பிராணிக்கூட்டங்களில் யாவருக்குமே சரீரமுண்டா னுல் சுகதுக்கமுமுண்டாகும், மேகவடிவ படம் மூடி விருத்தியடைந்தா விரவில் இருள்வளர் வதே போலும், இதன்கட்காரணம் இயற்கையேயாம் யாண்டுத் தத்துவஞானிகட்கும் க்ஷணம் சொரூப விஸ்மரணமுண்டாக இத்தகைய அனர்த்தங்களாமோ ஆண்டு அஞ்ஞர்கட்குக் கூறத் தக்கது என்னேயுளது என்னுங் கருத்தால் உரைத்தல்:—நிர்மல சத்தியசொரூபத்தை நிமிட மேனும் மறைந்திடில் மழைகாலத்தில் பயோதாம் பரவுதலேபோல திருசியம் உல்லாசமடை யும் அதனுனே யெப்போதுமே திருசியம் உல்லாசமாகாம விருத்தற்பொருட்டு ஏக்காலுமே சமாதியினுல் சொரூபத்தை மறவாதிருத்தல் வேண்டும் என்னுங் கருத்தாலுரைத்தல்:— இடைவிடாது செய்யும் அநுசந்தானத்தினின்றும் பிசகாமலிருந்தால் இமைத்து விழிக்கும் இடைக்கால மாத்திரமுங்கூடச் சொரூபத்தை மறவாதிருந்தால் சித்தத்திலித்திருசியப் பிசாசானது தோற்றமாட்டாது; ஆயின் விஷயசுகாநுபவ காலத்தில் ஆக்கப்பெற்ற ஜீவ னுக்கு முக்தத்தன்மை யநுபவமிலதாமெனின் ஆண்டுரைத்தல்:—சுகதுக்கக் கலேயினங்களே

சீவனுக்குப் பந்தமாம் இதரமன்றும் துக்கக்கிரகணம் திருட்டாந்தப்பொருட்டாம், துக்கத்திற்கேபோல விஷயசுகத்திற்கும் கலனமென்னும் கலாநுபவம் அதன்பொருட்டு இராகாதியாகிய எச்சித்தத்தின் வெளியசைவுளதோ யாதுதான் சுகத்தடையில் சஞ்சலபாவமுளதோ அதனுபாய சம்பாதனப்பொருட்டு ஆயிரக்கணக்கான வநர்த்தத்தில் ஸ்பந்தமுளதோ அதுவே சீவனுக்குப் பந்தமாம் இதரமன்றும் சுகவிசிராந்தியங்கிசமும் எனக் கணமாத்திரமும் சுகவிசிராந்தியினல் அதனபாவமுளதாகவே மோக்ஷமேயாம் எனச் சம்சரண அசம்சரணங்களால் பந்தமோக்ஷங்களி னிருவகையாய வியவத்திதிக் கூறப்பெற்றதாங்; கூறிய பொருளையே விரித்துரைத்தல்:—எதுவரை புலன்களாகிய துஷ்டர்களால் சுகதுக்க தசையானது வரவழைக்கப்பெறவில்லையோ அதுவரை சௌமியனுகிய சீவனனவன் சுகசமமுடையவனுய்ச் சாந்தன்போலிருப்பன்; நிரதிசயானந்த தனது தத்துவாஞ்ஞானமே இக்கலக்கத்திற் காரணமாம், ஆயின் எதனுல் அதன் நிவிர்த்தியால் விசிராந்தி கிடைக்குமெனின் அதனைக்கூறல்:—சுத்தமாய் அவசியமுணரத்தக்கதாய தனதான்மாவின் போதமாகிய சுவாத்மஞானமய வடிவத்தால் சுகதுக்காதிக ளில்லையென்பதால் இவ்விசிராந்தியானது உண்டாகும்; யாவுமே சிதாகாசவடிவப் பிரஹ்மமென்னும் கனநிச்சயமுளதாய் நிலைபெறவே சீவன் தயிலந்தீர்ந்த விளக்கேபோலச் சமத்தையடைவன் சுகாதிகளில் இராகமானது நன்குக்ஷயமாகவே தீபம்போற் சாந்தியடைவதில் என்னேயையம்; ஆத்ம சுபாவவசத்தினுலே யிந்த மகத்தாகிய ஜகத்தானதுண்டாயது வாசனையினுலே ஸ்திதியையடைந்து தர்மாதர்மவசத்தில் நிலைக்கும், எங்ஙனம் வருணிக்கப்பெற்ற விலக்கண வியற்கை எல்லாவஸ்துக்களிலும் பிரளயபரியந்தம் பிரசித்தமாமோ அங்ஙனம் மாயாசபல ஆன்மாவிற்கு சர்க்காதி யியற்கை சுருதியாதிப் பிரசித்தமாம் அதன் வசத்தினுலே யிஃதுண்டாயதென்பதாம். “போகப்பொருட்டுச் சிருட்டியாமென்பர் போலியர் சிலர், ஆகக் கிரீடையின்பொருட்டென்பாரபரர், தேவனுக்கிதுதான் இயற்கையதேயாம் ஆவலென்னே யாப்தகாமனுக்கு” என்று ஸ்ரீ கௌடபாதபகவான் திருவாய்மலர்ந்தருளியுள்ளார், ஞானுப்பியாசத்தினுலே வாசனைகளின் அபக்ஷயத்தைச் சம்பாதித்து தர்மாதர்மங்களினுல் கவரப்பெறுவதில்லை யதனுல் ஐந்து பிறப்பதில்லையென்பது எம்மனேரது அநுபவம் முனிவனே; இவ்வண்ணம் அநுபவ சாமர்த்தியத்தைக் கீர்த்தித்தபோது அதனது வகையைக் கேட்கும் வேட்கையுடைய மன்னவன் அதனைப் புகழ்ந்துகொண்டு வழங்கிய கதையின் சேடத்தைச் சுருக்கமாக அநுக்கிரகிக்கவேண்டுமெனல்:—என்னலுமே யென்றது. உபதேசிப்பவர்களுக்குள் மேன்மை மிக்கோய்! மிகவும் உதாரமாய பெரும்பொருளை நீ கூறுகின்ருய் அநுபூதியை யநுசரித்திருக்கின்றது பரமார்த்தம்போல அதிரகசியமா யிருக்கின்றது; ஹே சுந்தர! இன்றுகேட்ட உன்னுடைய இந்த வாக்கியச் செல்வத்தானே அமிருதத்தைப் பானஞ்செய்ததேபோலச் சாந்தத்தன்மையை உள்ளேயானடைந்தனன் ஆகையினுல் சுருக்கமாக முதலில் அந்த உன்னுடைய உற்பத்தியை விரைவில் எனக்குக் கூறுவாய் அதன்பின் உன்னுடைய ஞானகர்ப்பம் வாய்ந்த வாக்கை முயல்வுடன் கேட்பேன்; அந்தப் பதுமஜபுத்திராகிய நாரதமுனீவரால் அவ்வீரியம் எவ்வாதாரத்தில் ஸ்தாபிக்கப்பெற்றது மேன்மை மிக்க நீ இப்போதுள்ளபடியே எனக்குக் கூறவேண்டும்.

(ச) எனவுரைக்கு மவ்வளவிற் சிகித்துவசன் மொழிகின்ரு னெல்லாங்காணு, மனைய முனியாஞ் சீவன்முத்தன் மதன்வசமதனை யடைவோவித்தைக், கனமுடைய பொருளாய்க் கெம்பீரமா யிரகசியம்போற் காண்கையாலே, யுனதருளா லுரையென்ன மறையவன்சேய் மீண்டுமதற் குரைப்பதானுன். (1)

நிருமலமாய்ச் சத்தியமா மான்மாவைக் கணமெனினு நீங்குமாகிற், கருமுகில்கண் மழை நாளிற் செறிவதுபோற் சகவிருத்தி கனமதாகு, மருவமா மறிவுருவை யனவரதந் தியானத்தாலகலாநிற்கின், மருவுசக மாம்பேய்தான் மருவலுறா விதனியல்பை மறுத்துங்கேளாய். (2)

துக்கசுக லேசமே சீவனுக்குப் பந்தமது துடைத்தன்முத்தி, தக்கதுவே பந்தமுத்தி நிச்சயமா மறிவுருவாந் தன்சொரூப, மிக்கபர சுத்தமதிற் றுக்கசுக மில்லையென மிகவுநாடி, லக்கணமே யவன்சீவன் முத்தனிதி லியாதேனு மையமில்லை. (3)

(இ-ள்) சீவனுக்குச் சுகதுக்க லேசத்தோற்றமே பந்தம், அது துடைத்தல் = அதனபாவமே, முத்தியாம், தக்கதுவே, இத்தன்மையே, பந்தமுத்திப் பிரகாரங்களி னிச்சயமாம்.

தோற்றுகின்ற வுலகனைத்துஞ் சிதாகாசப் பிரமமெனத் துணிந்துநாடி, யேற்றமுள வவ்வறிவின் மனமிருப்பை யெய்தும்போ திந்தச்சீவன், சாற்றுதயில மூந்திரியு மில்லாத விளக்கென்னத் தணிந்துபோகும், மாற்றுமதத் துவத்தினுட சுபாவத்தாலுண்டான வகிலமெல்லாம். (4)

(இ-ள்) சீவன்=சீவபாவம்.

கருவான வாதனையா விருப்படைந்து கன்மாகன் மத்தினலே, பெருகாநின் றுளதிந்த வாதனையைச் சமன்செய்து பேதமாகுங், கருவான வறம்பாவங் கெடுப்பானேற் கனமான வந்தச்சீவன், மருவாது பிறப்பிறப்பி லிதுவெங்கள் சித்தாந்த மதித்துக்கொள்வாய். (5)

(இ-ள்) ஆண்டு; சொரூபத்திலுண்டான விந்தச்சகம் வாதனையால் விருப்படைந்து, கன்மா கன்மத்தினல்=கரும பாரதந்திரியத்தினல், பெருகாநின்றுளது, ஆதலின், இந்த வாதனையைச் சமன்செய்து அறம்பாவங் கெடுப்பானேற் பந்தமுறான், ஆதலிற் கருமபந்த மின்மையிற் சீவன் பிறவான், இது=இவ்வாறு, எங்கள் சித்தாந்தம். (88)

(ஸ்ரீ - வீ ர - அ - கை) மீளவும் தனது வரலாற்றையே விரித்துரைத்தல்:—நழுவு, குட, செய்ய, என்பன.

நழுவுமன மெனுமத்த மதகயத்தை நாரதனர் நல்விவேகப்
பழுதில்பெருந் தூணிலே நற்புத்தித் தோட்டியாற் பற்றிக்கட்டித்
தழுவுபடி கக்குடத்திற் ருதுவைவிட் டான்பாலைச் சாலவார்த்தான்
செழுமதியம் பாற்கடலில் வளர்வதுபோற் கருவளர்ந்து சிறந்ததன்றே.

குடநின்று புறப்பட்ட குமானுக்கு விஞ்சையெனுங் குறைவில்செல்வப்
படலங்க ளுண்டாக்கிப் பிதாமகன்பாற் கொடுபோகப் பதுமத்தோனுங்
கடனென்று போனுக்கு மெய்ஞ்ஞானக் கரைகாணக் காட்டிவிட்டா
னுடனங்கா ளன்னவனுற் குடம்பெறலாற் கும்பனெனு மொருபேர்பெற்றேன்.

செய்யகலை மகளெனக்குத் தாயாங்கா யத்திரிதான் சிறியதாயா
மையில்சதுர் வேதமெனுந் தோழருடன் விளையாடி வந்தேனென்ன
வையவுனைத் தெரிசித்தேன் பெறவேண்டும் பேறெல்லா மமையப்பெற்றேன்
மெய்யிதுவென் றுன்மன்னன் கும்பனதற் கிவ்வாறு விளம்பலுற்றான்.

(ப - ரை) நழுவு மனமெனு மத்தமதகயத்தை=இழிவுற்ற உள்ளமென்னும் மதோன்மத்தமான யானையை, நாரதனர் = நாரதமுனிவரானவர், நல் விவேகப் பழுதில் பெரும்

தூணிலே=நல்ல விவேகமாகிய கெடுதலில்லாத பெரியதம்பத்திலே, நற்புத்தித் தோட்டியால் பற்றிக்கட்டி=நல்ல புந்தியாகிய அங்குசத்தால் பிடித்துப்பிணித்து, தழுவு படிகக்குடத்தில்=பக்கத்திலிருந்த வெண்பளிங்குக் கும்பத்தில், தாதுவைவிட்டான்=வீரியத்தை விடுத்தனன், பாலைச்சால வார்த்தான் = க்ஷீரத்தை மிகவும்பெய்தான், செழுமதியம் பாற்கடலில் வளர்வதுபோல்=பூரணச்சந்திரன் க்ஷீராப்தியில் விருத்தியாவதேபோல், கருவளர்ந்து சிறந்தது=கருப்பமானது விருத்தியாகிச் சிறப்பை யடைந்தது. அன்று, ஏ-அசை.

குடநின்று புறப்பட்ட குமரனுக்கு=கும்பத்திலிருந்து வெளியேவந்த மைந்தனுக்கு, விஞ்சையெனுங் குறைவில் செல்வப்படலங்கள் உண்டாக்கி = வித்தையென்று சொல்லப்பட்ட நிறைந்த ஐஸ்வரியக் கூட்டங்களை யுள்ளனவாக்கி, பிதாமகன்பால் கொடுபோக=பிரமாவினிடத்திற் கொண்டுசெல்ல, பதுமத்தோனும் = பிரமாவும், கடன் என்று = நமது கடமையென்று, பேரனுக்கு=பௌத்திரனுக்கு, மெய்ஞ்ஞானக் கரைகாண=சத்தியஞானக் கரையைக் காணும்படியாக, காட்டிவிட்டான்=காண்பித்தனன், உடன் அந்நாள்=உடனே அப்போது, அன்னவனால் = அவனாலே, குடம்பெறலால் கும்பன் எனும் ஒரு பேர்பெற்றேன்=கும்பம் பிரசவித்தலால் கும்பனென்னும் ஒருநாமத்தை யடைந்தனன்.

செய்ய கலைமகள் எனக்குத்தாயாம்=சிறந்த சரசுவதிதேவி எனக்கு மாதாவாம், காயத்திரிதான் சிறியதாயாம்=காயத்திரிதேவியானவள் சிறியமாதாவாம், மையில் சதுர்வேதமெனுந் தோழருடன்=குற்றமற்ற நான்கு வேதங்கள் என்னும் சகாக்களுடன், விளையாடிவந்தேன் என்ன=கிரீடித்து வந்துளேன் என்றுகூற, ஐயவுனைத் தெரிசித்தேன்=ஞானாசிரியரே தங்களைத் தரிசனஞ்செய்தேன், பெறவேண்டும் பேறெல்லாம் அமையப்பெற்றேன் = அடைய வேண்டிய பயனையெல்லா மடையப்பெற்றேன், மெய்யிதுவென்றான் மன்னன் = உண்மையிது என்று கூறினான் சிகித்துவசன், கும்பனதற்கிவ்வாறு விளம்பலுற்றான்=கும்பமுனிவன் அதற்கிந்த வண்ணம் விளம்பத் தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர) அதன்பின் அந்நாரதரால், மனமாகிய மதோன்மத்த யானையானது விவேகமென்னும் பெரிய யானைகட்டும் தம்பத்தில் தூயபுத்தி வடிவச் சருமக்கயிற்றினாலே நன்கு கட்டப்பெற்றது, அற்புதமான காந்திவாய்ந்திலங்கும் பக்கத்திலிருந்த படிகக்கும்பத்தில், நெகிழ்ந்த ஆகாரத்தையுடைய சந்திரனைச் சந்திரனிடத்திலேபோல் நாரதரானே அர்ப்பிக்கப்பெற்றது; சங்கற்பிதமாய க்ஷீரத்தினாலே அக்கும்பமானது அவரானே பூரிக்கப்பெற்றது; ஆண்டுமாசத்தால் க்ஷீரத்தில் நேய உற்சுகமடைந்த முனிநாதரை, மந்தமாக அக்கினி காரிய ஆகுதிகளில் முயல்வித்துக்கொண்டு அமிருத அப்தியின்கண்ணே இந்துவினின்றும் பிரதிபிம்ப இந்துவைப்போலச்சுபகர்ப்பமானது வளர்வினை யடைந்தது; நிறைந்த இந்துவை மாசமேபோலவும், வசந்தகாலம் புஷ்பத்தைப்போலவும், கமலபத்திராக்ஷ கர்ப்பத்தைக் கும்பம் காலத்தை யனுசரித்துப் பிரசவித்தது; பரிபூரண சமஸ்தாங்க கர்ப்பமானது கும்பத்தினின்றும் வெளியே வந்தது, கடபரிச்சின்ன அம்போதியினின்றும், க்ஷீரார்ணவத்தினின்றும் க்ஷயவர்ஜித வேறு இந்துவைப்போலவாம்; சில தினங்களினாற்றானே அக்குழந்தை விருத்தியை நன்கடைந்தது அப்பிரமேய அங்க சௌந்தரியமுடையதாய்ச் சுக்கிலபக்ஷத்திற் சசியே போலும், சாதகர்மாதி யுபநயநாந்த சர்வசமஸ்காரங்களாலும், அந்த மைந்தன் நிறைவுறவே, அந்நாரதமுனிவர் பாண்டத்தினின்றும் பாண்டத்திற்போலச் சகலவித்தைத் தனங்களையும் அக்குமரன்பால் நிறைவித்தனர். நிறைவித்த பின்னர் எல்லாவித்தைகளிலும் பூரணமெய்திய இக்குமரனைக் கூட்டிக்கொண்டு அந்நாரதமுனிவர் பிரஹ்மலோகத்தை நோக்கிச் சென்

றனர். சென்று தனது பிதாவைத் தெரிசித்து நமஸ்கரித்து யாவற்றையும் தெரியப்படுத்தினர், பிரஹ்மாவானவர் ஆசீர்வாத மாத்திரத்தானே அக்கும்பனென்னப் பெய்ரிய பேரனுக்குச் சர்வஞ்ஞத்தன்மையும், ஞானங்களின் பரம அவதிபூதமாகிய தத்துவஞானத்தில் விசிராந்தியும் அடையுமாறு செய்வித்தனர்; ஹே சாதுவே! கமலோற்பவராகிய பிரஹ்மாவினுடைய பௌத்திரனாகிய அந்தயான் கும்பமுனிவன் உனது எதிரில் இருக்கப்பெற்றவன், நாரதமுனிவருடைய கும்பஜபுத்திரன் யான்றான்; அற்றேல், ஸ்திரீகட்குப் பரதைவதமாகிய தம்பர்த்தாவினுடைய சந்நிதியில் தருமஞ்ஞை வைதர்ப்பியாகிய சூடாலையினால் எங்ஙனம் இப்பொய் கூறுதல்கூடும், குதிரைப்பொய்யில் நூறைக் கொன்றான் கோவின்பொய்யி லாயிரங்கொன்றான், புருடப்பொய்யிற்றன்னையும் தன்னவரையும் கொன்றவனாவன், என்று பூர்வ ராமாயணத்தில் ஸ்ரீ இராமர் வசனமும் யாவன் வேறுவிதமாக இராநின்ற ஆன்மாவை வேறுவிதமாகக் கூறாநிற்பனோ, ஆன்மாபகாரியாய அத்திருடனால் என்ன பாபந்தான் செய்யப்படவில்லை, என்று மகா பாரதத்தில், பரதன் பொருட்டுச் சகுந்தலையினாலே யுரைக்கப்பெற்ற வசனமும், இவ்வாறு கோபத்தையடையும் எனின்? இது தோடமாகாதாம், இனி யுபதேசிக்கப்பெறும் பிரஹ்மவித்தையில் உருசி யுண்டாக்கற்பொருட்டுற்ற அந்த வாக்கியத்திற்கு, தாற்பரிய விடயார்த்த அபாதத்தால், பொய்ம்மையின்மையின்; வைதிக அர்த்தவாத வாக்கியம்போலும் பிராமாண்யங் கூடலின், தத்துவஞான பலத்தினால், எல்லாவடிவுமாகியதாந்தன்மைகொண்டாதல், யான் மனுவாயிருந்தேன் சூரியனும், என்பதாதியாகக் கூறிய வாமதேவர் கூற்றேபோல, அந்தக் கும்பன் இந்தயான் என்பதாதியாகக் கூறியது பொய்யன்றாம், பர்த்தாவின் வஞ்சனைத் தோடமுமிலதாம்; கருமத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலு மெப்போதும், நாயகற்கிதமே நவிற்றுகவென்னும், வசனத்தினால், பர்த்தாவிற்கு வித்யாவிசுவாச ஜனனத்தால் இந்த வாக்கியம் பரமஹிதமேயாதலின் வஞ்சகங் கூறுவதாகாதாமென்க. பதுமஜபுரத்திற் பிதாவினுடன் இன்பப்படி இஷ்டம்போல வசிப்பேன்; நான்குசுகிருத்துக்களாகிய வேதங்கள் என்னுடைய லீலாவிலாசிகளாம்; நேரே தாயின்மையின் பிதாவினுடைய மாதாதிகளே தனது மாதாதிகள் என்னுங் கருத்தானே யுரைத்தல்:—செய்யவென்பதாதி. எனக்கு மாதுருஷ்வசா காயத்ரீ தேவியாம், எனது மாதாவோ சரசுவதிதேவியாம், எனது கிருகம் பிரஹ்மலோகத்திலாம், பிரஹ்மாவினுடைய பௌத்திரனாய் ஆண்டு நன்னிலைமையோடு மிருக்கின்றேன். இட்டப்படி யெல்லா வுலகங்களிலும் சஞ்சரித்துக்கொண்டிருப்பேன், லீலையாக மாத்திரமேயலாது, பரிபூர்ணத் தன்மையானே யாதொரு காரியத்தின் பொருட்டுமல்லவாம்; கூறிய பொருளின் விசுவாசப்பொருட்டுத் தன்னிடத்தில் தேவலிங்கங்களைக் காட்டல்:—பூலோகத்தில் யான் சஞ்சரிக்கும்போது என்னுடைய பாதங்கள் மகிதலத்திற் பரிசிப்பதே கிடையாது, அங்கங்கள் தூளிகளைத்தீண்டாவாம், வபுவும் அழுக்கை யடைவதில்லை. இன்று ஆகாசமார்க்கமாகச் சென்றுகொண் டிருந்தபோது உன்னை யெதிரிற்கண்டேன், அதனாலிங்குவந்தேன் மன்னனே! இங்ஙன மெல்லா வரலாறும் உனக்குச் சுருக்கமாகக் கூறினேன்.

## 18—வது தினம்.

ஹே சாதுவே இன்றுயான் றன்னியர்களுடைய அக்கிர கண்ணியனாக வெண்ணப்பட்டு விளங்குகின்றேன், அமிருதந் தெளிக்கும் வாக்கினாலே யாது உன்னாலிப்போது என்பொருட்டனுக்கிரகிக்கப்பெற்றதோ அது யாருக்குத்தான் கிடைக்கும்; உனதுபதேசத்தால் எனக்கு

அவசியம்பவிக்கும் கிருதார்த்தத்தை யெனக்குறிப்பிக்கும்பொருட்டுச் சித்தித்ததுபோலாக்கிக் கூறியதாம்.

எங்ஙனம் சாதுசமாகமமானது தண்மையைத்தந்ததோ அங்ஙனம் இவ்விராஜ்ஜிய லாபாதிகளும் மற்றும்பிற எப்பொருள்களும் எனது சித்தத்தைக் குளிர்ச்சி செய்யமாட்டா வாம்.

(ச) பாலே=சங்கற்பிதமான க்ஷீரத்தை.

கலைமகள்=சரசுவதி, இரக்ஷிப்பவளாதலிற்றாயாம் அவளது தங்கை காயத்திரி யென்ற தனல், தனக்குச் சரசுவதி யனுக்கிரகத்தாற் கிடைத்த சர்வஞ்ஞத்துவத்தையும், சதுர்வேத மெனுந் தோழர் என்றமையால் வேதார்த்த தத்துவஞானத்தையுங் குறிப்பித்ததாம். ஆகிய இவருடன்கூடிச் சகல சகத்திலும், இச்சைப்படி விளையாடி வருபவனியான். (89-90-91)

(ஸ்ரீ-வீர-அ-கை) இவ்வாறு கூறியபோது, அப்பூபதியினுடைய வாக்கியத்தை விவக்ஷிதார்த்த சமாப்தியின் முன்பே தடுத்து, அம்முனிகுமார ரூபிணியாய சூடாலையே மறுபடியும் கூறத்தொடங்கல்:—எனையென்பது.

எனையுரைத்தே னுனக்குமுத னீயாரென் செய்கின்றா யெனக்குநீயு
முனையுரைப்பா யென்றலுமே மன்னனுரைப் பான்பிறவிக் குள்ளமஞ்சி
வினையறுகா னகம்புகுந்தேன் சிகித்துவசன் பேர்நாட்டில் வேந்தாந்தன்மை
தனையிகழ்ந்திங் கிருக்கின்றேன் பிறவிக்கே விடாமலுளந் தவியாநின்றேன்.

(ப - ரை) எனையுரைத்தேன் உனக்குமுதல் = என்னைக்கூறினேன் உனக்குமுதலில் நீயா ரென்செய்கின்றாய் = நீயார் இங்கு எதன்பொருட்டு என்ன செய்துகொண்டிருக்கின்றாய், எனக்கு நீயும் உனையுரைப்பாய் என்றலுமே=என்றனுக்கு நீயும் உன்றனைக்கூறுவாய் என வினவுதலுமே, மன்னனுரைப்பான்=அரசன் மொழிவான், பிறவிக்குள்ளமஞ்சி=ஜனன மரண சமுசாரத்துக்கு மனமானது பயந்து, வினையறுகானகம் புகுந்தேன்=சர்வ உபசாந்தியாய ஆரண்யம் பிரவேசித்தேன், சிகித்துவசன்பேர்=நாமம் சிகித்துவசனும், நாட்டில் வேந்தாந்தன்மை=இராச்சியத்தி லரசனுந்தன்மை, தனையிகழ்ந்திங் கிருக்கின்றேன்=அத்தன்மையையும் நிந்தித்து இவ்விடத்தி லுறைகின்றேன், பிறவிக்கே விடாமலுளந் தவியாநின்றேன்= மாறிமாறிவரும் ஜனன மரணங்கட்கே ஓயாமல் உள்ளந்தபித் துழல்கின்றேன்.

(ஸ்ரீ - வீர) நல்லது என்னைப் புகழ்ந்தகதை போதும்போதும், உன்னால் வினவியயாவுமே யுனக்கு முதலில் என்னாற் கூறப்பெற்றது, ஹே சாதுவே! நீயார்? இம்மலைக்காட்டில் என்ன செய்கின்றாய்? எனக்குக் கூறுதி, இவ்வுன்னுடைய வனவாசித் தன்மையானது எவ்வளவுகாலத்தில் முடிவுபே றடையும், வனவாச சாத்யப்பிரயோசனத்தையும் உண்மையாயுரைத்தி, மறைக்கவேண்டாம், உம்மைப்போன்ற தவத்தினர்கள் பொய்மொழிய அறியார் ஆகலின். தேவபுத்திரனாகிய நீ யாவற்றையும் உள்ளதுள்ளபடியே உணர்வாய், லோக விருத்தாந்த முழுவதுமே யுனக்குத்தெரியும் பின்னென்னே யுனக்குயான் வேறு கூறவேண்டிய துள்ளது சம்சார பயீதத்தன்மையானே வநாந்தரத்தில் வசிக்கின்றேன். என்விடயமெல்லா முனக்குத் தெரிந்தே யிருந்தபோதினும் ஹே ஆரியனே சிறிது சுருக்கமாகக் கூறுகின்றேன், சிகித்துவசன் என்னும் பூபாலனியான் இராஜ்ஜியத்தை விடுத்துவந்து ஈண்டுத் தவம்புரிந்து கொண்டிருக்கின்றேன் ஹே தத்துவஞ்ஞனே இச்சம்சாரத்தின்கண்ணே மறுஜன்மத்தை யுத்தேசித்து அத்தியந்தம் பயந்து நடுங்குகின்றேன். (92

(ஸ்ரீ-வீர-அ-கை) அவ்வாறு தவந்தொடங்கியும் அஞரேயுற்றேனல்லாமல் வாஞ்சித்த இன்பமடைந்திலேன் என்ன மன்னன்றவதற்குக் கும்பன் கூறல்:—இப்பரிசேயென்பது.

இப்பரிசே தவத்தொழிற்கு வேண்டினவெல் லாந்தேடி யியற்றுநின்றுஞ்
செப்பரிய துயர்விட்டுப் பெருந்துயர்சேர்ந் தேனமுதந் தீநஞ்சான
தொப்பரியா யென்றலுமே கும்பனுரைப் பான்குரவ னுணர்த்துஞான
மெய்ப்படவந் தாற்சுகமாம் போதுபோக் குங்கிரியை விநோதமன்றே.

(ப - ரை) இப்பரிசே தவத்தொழிற்கு=இவ்வகையாகவே தவமாகிய கிரியைக்கு, வேண்டினவெல்லாந் தேடியியற்றுநின்றும்=வேண்டிய சாமக்கிரியைகள் யாவற்றையும் சேகரித்துத் தவம்புரிந்தும், செப்பரிய துயர்விட்டுப் பெருந்துயர் சேர்ந்தேன்=சொல்லுதற்கரிய துன்பம் விடுத்துப் பெரிய துயரத்தை யடைந்தனன், அமுதந் தீநஞ்சானது ஒப்பரியாய் என்றலுமே= அமிர்தமானது கொடிய விடமானது உவமையில்லாதாய் என்று கூறுதலுமே, கும்பன் உரைப் பான்=கும்பமுனிவன் கூறுவான், குரவனுணர்த்து ஞானமெய்ப்பட வந்தால் = ஆசிரியன் அறிவிக்கும் ஞானமானது உண்மையாக வுதிதமாகுமாயின், சுகமாம்=இன்பமாம், போதுபோக் குங் கிரியை விநோதமன்றே=காலம்போக்குவதற்காய கிரியையானது விளையாட்டு மாத்திர மல்லவோ.

(ஸ்ரீ-வீர) இந்த உபவாசதேவ அதிதிபூஜாதிரூப நியதகாலத்தினுல் வரைந்து கொள்ளப் பெற்ற, கிரியையை நன்கு சம்பாதித்தபோதினும், துக்கத்தினின்றும் பெருந்துக்கக் கூட் டத்தை யடைந்துள்ளேன், அமிருதமும் எனக்கு விடமாயிருக்கின்றது, "வித்தையும் அவித் தையும் என்னுமிரண்டையும், விவேகியென்றூன் உடன்கொண்டுணரும், அவித்தையான் மிருத்யுவை யகற்றிவித்தையால், அமிருதந்தன்னை யயிலுவனன்றே" என்பதாதி சுருதியி னுலே, அமிருதத்வஹேதுவென விசிராந்தியின் பொருட்டினிது கவர்ந்தபோதினும், கர்ம சமுச்சிதமாய உபாசனை யெனக்கு விசிராந்தியை யுண்டாக்காமையின் விடம்போலிருக்கின் றது, அஃதென்ன காரணம் என்பதைக் கூறவேண்டுமென்பது கருத்தாம். கரும சமுச்சித உபாசனையானே முக்தியென்னும் அரசனது மயக்கம் எதுவரை நீக்கப்பெறவில்லையோ அது வரை இவ்வான்மாவினுடைய தத்துவம் உபதேசிக்கப்பெற்றபோதினும் உணர்ந்துகொள்ள மாட்டான் எனவதன் நிவாரணப்பொருட்டுத் தனக்குப் பிதாமக ருபதேசித்த முறையைக் கேட்பித்தல்:—கிரியை ஞானங்களின் மத்தியில் யாதொன்று முக்திகாரணமாமோ அதனை யெனக்குக் கூறுவீராக ஹே பிரபுவே! என்று பிதாமகனை யான் பூர்வம் ஒருபோது இதனைக் கேட்டேன்; அதற்குப் பிரஹ்மா கூறியதாவது: ஞானமே பரமசிரேயசாம், கைவல்யம் அதனு லவசியம் உண்டாம் என்று பிரத்தியக்ஷமா யனுபவிக்கப்பெறும்; கிரியையோ சுவர்க்காதி போக விநோதப்பொருட்டு முயன்றபோதினும், அதற்குத் துச்சத்தன்மையுண்மையின், அபுரு ஷார்த்தத்தன்மையானே அநர்த்தந்தொடர்ந்து சம்பாதித்தலானே ஆயுட்கால மகற்றற்பொருட் டே சுருதியினுற் கூறப்பெற்றதாம். அங்ஙனமே சுருதியும்:—செய்துகொண்டே யீண்டுக் கரு மங்களை சீவிப்பான் விழைகசதவருடங்கள்" இவ்வண்ணம் உன்பால் அயலாறிதனினும் இலேயே கருமம்பற்றுதிவனிடம்" என்பதாக அறைகின்றது.

(ச) ஞானம்=ஞானசாதனம், போதுபோக்கும் = காலங்கழிக்கும் ரூபமான விநோத நிமித்தமே, கிரியை=தவஞ்சுவாத்தியாதி ரூபங்களாம். (93)

(ஸ்ரீ-வீர-அ-கை) இதனுனே யிச்சுருதியும் வித்தையும் அவித்தையும் என்னும் சுருதியும், ஞான அநதிகாரி விஷயத்ததாம், அவற்றுண் மிருத்தியுவைத்தாண்டுதல் இயற்கையாய துர்ச் சேட்டைவிலக்கு, அமிருதத்தன்மையும் ஆபேக்ஷிகம் சுருதியதாம்; என்னுங் கருத்தாற் பிரஹ்மா கூறியதையே விரித்துரைத்தல்:—ஞானம், பலம், வாதனையென்பன.

ஞானமில்லா தவர்க்கெல்லாங் கிரியையே கதியாநற் கிரியைவேந்தா
வீனமுறு வாதனைமாத் திரம்பலமா தலிற்பலமு மெய்தநல்கு
மானமுறு மிருதுவரின் முன்பலங்க ளங்ஙனே மாய்தல்போல
வூனமுறு வாதனைமாய்ந் தாற்கிரியை யுறுபலமு மொழிந்துபோமே.

பலமதனை யொருகாலும் பலியாத சரவணத்தின் பரிசுபோல
வலமருவா தனைதீர்ந்த கிரியையுமேற் பலந்தன்னை யளிக்கமாட்டா
வுலகமெலாம் பிரமமெனும் பாவனையா லஞ்ஞான மொழிந்துபோனுன்
மலமுறுவா தனைதோன்று கானலினீ ருண்டென்று மதிப்பாருண்டோ.

வாதனைமாத் திரம்விட்டாற் சரைமரண முறுபிறவி மருவாதான
தீதில்பத முண்டாகும் வாதனையோ டேசேர்ந்த சித்தந்தானே
பேதமையஞ் ஞானமாம் வாதனைதீர் மனந்தானே பிறவாஞான
மேதமறு ஞானத்தா னேயமுணர்ந் தாற்பிறவி யெய்தாதன்றே.

(ப - ரை) ஞானமில்லாதவர்க்கெல்லாங் கிரியையே கதியாம்=பிரஹ்மவித்தை யில்லாத அனைவருக்கும் கிரியையே கதியளிப்பதாம், நற்கிரியைவேந்தா=நல்லதொழிற்செய்யும் மன்னவனே, ஈனமுறுவாதனை மாத்திரம்பலம் = இகழத்தக்க வாசனைமாத்திரம் பிரயோஜனமாம், ஆதலில் பலமும் எய்தநல்கும்=ஆகையினுலே பிரயோஜனமுமடையத்தரும், மானமுறுமிருதுவரின்=இரண்டுமாத அளவினையுடைய வேறுருபயன்றரு மிருதுவந்தால், முன்பலங்கள் அங்ஙனே மாய்தல்போல=பூர்வபத்திர புஷ்ப பலாதிகள் அவ்வாறே நசித்தல்போல, ஊனமுறுவாதனை மாய்ந்தால் = தாழ்மையுடைய வாதனையானது அழிவெய்தினுல், கிரியையுறு பலமும் ஒழிந்துபோமே=தொழிலாலுண்டாகும் பிரயோஜனமும் கெட்டுப்போகும்.

பலமதனை யொருக்காலும் பலியாத=பிரயோஜனத்தை யெப்போதுமேபயவாத, சரவணத்தின் பரிசுபோல=சரலதையின் றன்மையேபோல, அலமருவாதனைதீர்ந்த கிரியையும்=துன்பப்படுத்தும் வாசனை மோசமானதொழிலும், மேற்பலந்தன்னை யளிக்கமாட்டா=வரும் பிரயோஜனத்தைக் கொடுக்கமாட்டா, உலகமெலாம் பிரமமெனும்பாவனையா லஞ்ஞான மொழிந்துபோனுல்=ஜகத்துமுழுவதும் சிவரூபமென்னும் பாவனையினுலே யறியாமையானது அழிந்துபோகுமாயின், மலமுறுவாதனைதோன்று=மேலுமேலுஞ் சன்மத்தைப்பயக்கும் வாசனையானது தோற்றமாட்டது, கானலினீர் உண்டென்று மதிப்பாருண்டோ=பேய்த்தேர் உளதென்று எண்ணுவாருளரோ, இலரென்பதாம்.

வாதனைமாத்திரம் விட்டால்=வாசனைமாத்திரத்தைத் தியாகஞ்செய்தால், சரை மரண முறுபிறவி மருவாதான=ஜராமரணமுற்ற ஜனனுதியில்லாத, தீதில் பதமுண்டாகும்=துயரமில்லாத பதவியானதுளதாகும், வாசனையோடே சேர்ந்த சித்தந்தானே = வாதனையோடு கூடிய மனந்தானே, பேதமையஞ்ஞானமாம்=வேற்றுமையைப் பயக்கும் அறியாமையாம், வாதனைதீர் மனந்தானே=வாசனுக்ஷயமெய்திய வுள்ளந்தானே, பிறவாஞானம் ஜனியாவுணர்

வாம், ஏதமறு ஞானத்தால் ஞேயமுணர்ந்தால்—குற்றமற்ற வித்தையினுலே ஞேயத்தையறிந்தால், பிறவியெய்தாதன்றே—அக்கணமே ஜனனகந்தமும் அடைவுறுதாம்.

(ஸ்ரீ-வீர) ஞானதிருஷ்டி யடையப்பெறுதவர்கட்கு மைந்தனே! கிரியையே பராயணமாம், பௌத்திரனுக்கும் அபத்தியத்தன்மை யுண்மையின் மைந்தனென்ன விளித்ததாம்; பட்டு வஸ்திரம் கிடையாதவன் கம்பளத்தை விடுவனு? விடான் என்பதுபோலவாம்; அற்றேல் ஞானிகளும் தங்களுடைய வருணுசிரமங்கட்குத் தக்கவாறுய கருமங்களைச் செய்பவர்களாக் காணப்பெறுகின்றார்களே, ஆகலின் எங்ஙனம் ஞானதிருஷ்டி கிடையாதவர்க்கே கிரியை சரணம் என்றதெனின்? ஆடுண்க்கூறல்:—ஈனமென்பதாதி. வாசனுமாத்திரசாரத்தன்மையால் அறியானுக்குக் கிரியைகள் சபலங்களாம், ஞானிக்கு வாசனுமாத்திர சங்க்ஷயத்தானே யாவுமேயபலங்களாம், சிரத்தையனேனும் இராகியேனும் விசிதநிஷித்த கருமபலங்களை •யனுபவிப்பன்; கர்த்துருத்துவ போக்துருத்துவவாசனை நாசமாகவே சிரத்தையேனும் இராகமேனும் சம்பவிப்பதில்லையாம்; என்பது கருத்து. மாத்திரசப்தம் முழுமையின்பரமாம். அக்பமாய கிரியைகளும் அவ்வாறே யாவன்னெனின் ஆமென்றறைதல்:—ஊனமென்பதாதி. எல்லாக் கிரியைகளுமே வாசனையிலதேல் நிட்பலமாகப் போய்விடும், அசுபங்கள் பலவான்களாயினும் தெளித்தலிலதேல் இலதைபோலப்போம்; யாண்டுத்தொடங்கிய பலங்களுடையனவாயினும் கிரியைகள், பாதாதி அநுவிருத்தி மாத்திரத்தானே, •சபலசுஷ்கலதையொப்பனவாகவேயாமோ, ஆண்டுத்தொடங்காத பலங்கள் அழிந்துபோம் ஒன்று கூறவும்வேண்டுமோ தருக்கள் எங்குத் தகிக்கப்பெறுமோ திருணங்கட்கங்கென்கதை என்னும் நியாயத்தானென்பது கருத்தாம். வேறு இருதுவில் முன்னிருது சம்பந்தியாயவை விலயத்தை யடையுமாபோலவே வாசனை நாசமாகவே கிரியாபலமும் நாசத்தையடையும். வேறு இருதுக்கள் கிரீஷ்மசாதாதிகள், பூர்வ இருதுலிங்கம் பனிமேகாதியாம். வாசனையற்றனவாயினும் கிரியைகள் என்பலிப்பதில்லையெனின், காசலதையேபோல இயற்கையானேயென்னல்:—பலமென்பதாதி. சாலதா பலமானது சுபாவமாகவே பலியாததேபோல நிர்வாசனைக் கிரியையும் பலம்பலித்திடாதாம். சுகதுக்கபோக யோக்கியன்யான் என்னும் வாசனையேதான் அவ்வவ்வுற்பவ பீஜமாம், யக்ஷப்பிராந்திபலத்திற் பாலயக்ஷவாசனைபோலும், என்னுங் கருத்தாலுரைத்தல்:—இயக்க வாசனையோடு கூடிய பாலன் இயக்கனைப் பார்க்கின்றான், வேறுவிதமாகவில்லை, துக்க வாசனையோடு கூடிய மூடன் துக்கத்தைப்பார்க்கின்றான் வேறுவிதமாகவில்லை. உயர்ந்த ஆகாரத்தோடு கூடி யொளிர்ந்தபோதினும், கிரியை பலங்கொடுப்பதில்லையாம். சுபமாயினும் அசுபமாயினும் சரியே அவற்றினுண்மையுணர்ந்த அறிஞனுக்கு மலர்ந்த சாலதைமானும் பலந்தராதாம். அற்றேல் அறியாமைத்தசையில் அர்த்தக்கிரியாசமர்த்தத் தன்மை யுண்மையின், உண்மையான வாசனைக்கு, எங்ஙனம் ஞானத்தினுற்பாதம் எனின் ஆண்டுக்கூறல்:—ஈண்டகங்காராதியோடு கூடிய வாசனையானது இல்லவேயில்லையாம் அஞ்ஞதசையிலும் அறியாமையினுலே பொய்யாகவே யுதயமாயதாம், மருப்பூமியின்கண்ணே யம்புதியேபோலும், பழையவாசனை நாசமாயினும் ஞான உதயோத்தரம் உற்பன்னமாய அதனுற்கிரியை பலந்தருகவேயெனின் ஆண்டுக்கூறல்:—உலகமெலாமென்பதாதி. சர்வமும் பிரஹ்மம் என்னும் பாவனையால், எவனுக்கு அறியாமையானது கெட்டுப்போய்விட்டதோ, அவனுக்கு வாசனையுண்டாவதே கிடையாது, மருத்தேசமிதுவென்னும் பிரபோதவானுக்கு, மருவின்மாட்டம்புதியேமானும் வாசனைமாத்திர நற்றியாகத்தானே ஜராமரணவர்ஜிதமாய பரமபுருஷார்த்த வஸ்துவானதைத் தீவனுள்ளேயடைவன், அதனுலே மறுபடி ஜன்மாதியை யிடையமாட்டான்.

வாசனையோடுகூடிய மனமேஞேயமாம், நிர்வாசனையாய மனம் ஞானமாம், பிரமாகன் கூறியதை யுபசங்கரித்தல்:—ஏதமறுமென்பதாதி. ஞானத்தானே ஞேயத்தையடைந்து மறு படி ஜீவன் பிறவியையடையான்.

(ச) அஞன்மஞானிகளுக்குக் கிரியையே பரமகதியாம், யாதிஞலெனில் வாதனைமாத்தி ரம் பலமாதலில், மிகவும் வாசனுசிரயமான வேதுவிஞலென்க. அஞ்ஞர்க்கே கிரியை பலமும் எய்தநல்கும்=கிரியைகள் சபலங்களாம், நிர்வாசனையையுடைய ஞானிகளுக் கன்றுமென்பது பொருள். முன்=முன்புள்ள இருதுவில், பலங்கள்=குசுமபலாதிப்பொருள், இருதுவரின்= முன்னிருதுக் கன்னிய இருதுவரின், மாய்தல்போல்=எப்படிவிலயமாமோ அப்படியே வாசனை மாய்ந்தால் கிரியையுறுபலமும் ஒழிந்துபோம், கிரியாபலத்துக்கு வாதனை யேதுவாதலின் என்க.

அதனையே உதாரணத்தோடு விரித்துரைத்தல்:—சரவணம்=நாணற்கழி, அது, ஒருக் காலும், தன்க்குள்ள சுபாவத்திஞலே, பலமதனைப் பலியாதபரிசு மலர்மாத்திரத்தான் முடி வாதலின் என்க. அதுபோல வாதனைதீர்ந்த கிரியையும், மேல் = ஜன்மாந்தரத்தின் பலந் தன்னை யளிக்கமாட்டாது, அதுவும் அத்தன்மையான சுபாவமாதலின் என்க. உறுபிறவி= மறுஜன்மம். (94-95-96)

(ஸ்ரீ-வீர-அ-கை) உயர்ந்த தன்மையை விடுத்துக் கிரியையே புருடார்த்தமென்று உண் மையையே னுணர்ந்தாயில்லையெனல்:—ஞான, நிறையென்பன.

ஞானமிக நன்றென்றே யயன்முதலா நல்லோர்க ணவிலாநிற்க
நீநயவா திருந்தனையென் யானுரிவ் வுலகெங்ஙன் னேர்ந்ததெங்ஙன்
ருனமுற விறக்குமென நினைகிலையென் பேதையர்போற் றளர்கின்றுயென்
ஆனகுரா வரையிறைஞ்சிப் பந்தம்வீ டெப்படியென் றறிகிலாயென்.

நிறையறிவின் சமமான நோக்கினரைச் சேவித்து நிரந்தரித்துப்
பொறையுடனே வினவினன் முத்திபெறு நுண்ணறிவு பொருந்துமென்னு
மறையவன்போ தித்தலுமே கண்கணீர் சொரிந்திரங்கி மன்னன்சொல்வா
னிறையவனே யறப்புதுமை யுன்னுலே யுணர்வுற்றே னேழையோனே.

(ப - ரை) ஞானமிக நன்றென்றே=ஞானமானது மிகவும் நல்லது என்றே, அயன் முத லாம் நல்லோர்கள் நவிலாநிற்க = பிரஹ்மா முதலிய பெரியோர்கள் அருளாநிற்க, நீ நயவா திருந்தனையென்=நீ விரும்பாதிருந்த காரணமென்னே, யானுர் இவ்வுலகெங்ஙன் னேர்ந்தது= அகம் சப்தார்த்தமென் இச்சகத்து எங்ஙனமுண்டாயது, எங்ஙன் ருனமுறவிறக்குமென நினை கிலையென் = எவ்வதிஷ்டானத்தின்கண் ணிவையாவும் மடியுமென வெண்ணுகிலாயென், பேதையர்போற் றளர்கின்றுயென்=அறியாதவர்போலக் கிலேசமுற்று வாடுகின்றுயே இஃ தென்? ஆனகுரவரை யிறைஞ்சி=ஞாஞசிரியரைப் போற்றிசெய்னு பந்தம்வீடெப்படியென் றறிகிலாயென்=பந்தமென்பது யாது மோக்ஷமென்பது யாது என்று ஆராய்கிலாயென்னே.

நிறையறிவின் சமமான நோக்கினரை=பூரணப்பிரஞ்ஞையின் ஒப்பான திருஷ்டியரை, சேவித்து=பூசித்து, நிரந்தரித்துப் பொறையுடனே வினவினல்=இடைவிடாமல் பொறுமை யுடனே உசாவினல், முத்திபெறு நுண்ணறிவு=மோக்ஷமடையும் சூக்ஷமஞானம், பொருந்து மென்ன மறையவன் போதித்தலுமே = கூடுமென்று கும்பமுனிவன் அநுக்கிரகம் செய்த

லுமே, கண்கள் நீர்சொரிந்திரங்கி மன்னன் சொல்வான் = நேத்திரங்கள் நீர்வடிய வாடி நின்று அரசன் கூறுவான், இறையவ்னே யறப்புதுமை=பரிபூர்ண ஈசுரனே அத்தியந்தம் அற்புதம், உன்னுலே யுணர்வுற்றேன் ஏழையேனே = எளியேனுகிய அடியேன் தேவரீராலே தெரிந்துகொண்டேன்.

(ஸ்ரீ-வீர) ஞானமே பரமசிரேய சென்று அம்மகத்துக்களாகிய பிரஹ்மர்திகளும், மதித்துக் கூறியிருப்ப, அஞ்ஞானவானுய் ஞானத்தே விடுத்துத் தவமே மோக்ஷஹேதுவென்று துணிந்து ஹே ராஜரிஷியே நீ எனிருந்தாய்; விவேகஹீனனுகிய பகிர்முகனுக்குத் தண்டக மண்டுலுவாதியற்பமும், மமதாதிவிடயமாதலினுனே அநர்த்தப்பொருட்டுப் போதும் என்னுங் கருத்தானே யுரைத்தல்:—இங்கே கமண்டலம், இங்கே தண்டகாஷ்டம், இங்கே ஆசனம், என்னுமிந்த அநர்த்தவிலாசத்தில், என் பிரமிக்கின்ருய், ஹேமகீபதியேயென்றிட், ஆயின்தவமும் அநர்த்தம் தள்ளத்தக்கது என்றிடில், யாது கொள்ளத்தக்கது என அவற்றைக்கூறல்:— யானுரென்பதாதி. ஏ ராஜனே! யானியார்? எங்ஙனமிஃதுண்டாயது எங்ஙன்மிது சமிக்கும்? என்று என் விசாரித்தறிந்தாயில்லே? அறியானைப்போல இங்கிருந்தாயே இஃதென்னே? விசாரம்போலக் குருவைச் சரணுகதியடைதல் சேவைசெய்தல் இனிதுவினுதல் முதலனவும் கொள்ளற்பாலன வெனக்காட்டல்:—ஆன என்பதாதி. எங்ஙனம் பந்தம்வந்தது எங்ஙன்ம் இதற்கு மோக்ஷம், என்பனவான வினுக்களை வினுவி, பாராவார வித்துக்களின் பாதங்களை யேன் ஹே இராஜனே நீ சேவித்தாயில்லே? சம்சார சமுத்திரத்தின் பாரம் பரதீரமாம், சன்மாத்திரூப சோதித்தத்தப்தார்த்தமாம், அவாரம் அபரதீரமாம், சின்மாத்திரூப சோதித்த துவம்பதார்த்தமாம், அவற்றின் அகண்ட ஐக்கிய இலக்கண வாக்கியார்த்த வித்துக்களின், அல்லது பாராவாரமென்பது பரமானந்த சமுத்திரமாம், அதனே யுணர்ந்தவர்களின் என்பதாம். இச்சைலப்பொந்தின்கண்ணே, விரதஉபவாசாதி சீதோஷ்ணுதி துக்கந்தரும் பிரவிருத்தி நாட்டமாய வான்மவுணர்ச்சியினையுடையதாகிய இத்தபக்கிரியையினுலே, ஜீவிதமாம் ஆயுளைச் செலவழித்துக்கொண்டு, என் நீசிலாகீடம்போலிருந்தாய். சம்திருஷ்டியையுடைய சாதுக்களின்து சங்கமத்தினுலும் சேவையினுலும், இனிதுவினுதலினுலும், நீ விரும்பிய விசிராந்தி சுகந்தரும் ஞானயுக்தியானது கிடைக்கும், அதனுலே சகல துக்கமும் போய்விடும். ஆயின் என்னு லிப்போது எங்ஙனமிருக்கத்தக்கது எனின் அதனே யுரைத்தல். தவக்கிலேசாதி பகிர்முகச் சேட்டைகளையெல்லாம் நிறுத்தியவனுகி குருவோடு கூடவே யாகாரம் அயில்பவனுகி, அவர் சேவாபரனுகி, அவருபதேசித்த அருத்தத்தில், தரைக்குள்ளிருக்கும் கீடம்போல நிச்சலனுகி இவ்வனகோடரத்தில் இருத்தி, அத்தேவரூபத்தை யடைந்துள்ள காந்தையினுலே இவ்வண்ணம் உணர்த்தப்பெற்ற சிகித்துவசனுனவன் கண்ணீர்நிறைந்த கண்முகத்தனுயிதனேக் கூறத்தொடங்கினுன்; ஹே சுரசுதனே நெடுங்காலங்கழித் துன்னுலுணர்த்தப்பெற்றேன் இப்போது அகோ அகோ ஆச்சரியம்!

(ச) தான்முதலான குரவரை=பிரமமேயான குரவரை, தானமுதலென்னுஞ் சத்தத்தால், அந்தமாதி குறிக்கப்பட்டது. உணர்வுற்றேன் வெகுகாலஞ்சென்றிப்போது போதம் பெற்றேன். சம்சார சாகரத்தினபாராவாரமோ பிரஹ்மமேயாம் அதனே யறிந்தவர்களின் பாத பங்கஜங்களையென்பது மூலம். பாராவார சப்தங்களில் அந்த ஆதி குறிப்பிக்கப்பெறுகின்றன. (97-98)

(ஸ்ரீ-வீ-அ-கை) மன்னவன் றனதறியாமையைக்கூறிச் சரணுகதியடைதல்:—மடமை, யுதாரமென்பன.

மடமையாற் பெரியவர்தஞ் சேவையைவிட் டுத்தனியே வனத்தில்வந்தே
னிடர்மேவு பாவமெலா மின்றெழிந்தேன் வனத்தினீ யெய்தியென்னைக்
கடனாக வுணர்த்துதலாற் குருநீயென் பிதாநீயென் காதலோனீ
திடமான மாணக்க னாய்த்தொழுகின் றேன்கருணை செய்யவேண்டும்.

உதாரமிக வுண்டாகி யுணர்வுற்றாற் றுன்பமெலா மொழிப்பதாகிச்
சதாசுகமாம் பொருளாக நீயறிந்த தேதனைச் சாற்றுகிற்பாய்
பிதாமகனைப் பாயென்ற மன்னனுக்குக் கும்பன்றான் பேசுகிற்பான்
கதாவியெழு மனமொருப்பட் டுணர்தியே லுனக்குண்மை கழறுகிற்பேன்.

(ப-ரை) மடமையாற் பெரியவர்தஞ் சேவையைவிட்டு=அறியாமையினாற் பெரியோர்களது பாதசேவையைவிடுத்து, தனியே வனத்தில்வந்தேன் = ஒருவனாகவே தவம்புரியலாமென்று காட்டில் வந்திருக்கின்றேன், இடர்மேவுபாவமெலா மின்றெழிந்தேன் = துன்பத்தைப் பயவாநின்ற அதர்மங்களெவற்றையும் இப்போது அறுத்துவிட்டேன், வனத்தில் நீயெய்தியென்னை=காட்டில் நீ தெரிசனந்தந்து அடியேனை, கடனாக வுணர்த்துதலால்=கடமையாக விவேகந்துதையச் செய்தலால், குருநீ யென்பிதாநீ யென்காதலோனீ=ஆசாரியனும் நீயே, எனது தந்தையும் நீயே, எனது நேயனும் நீயே, திடமான மாணக்கனாய்=சொன்னதெல்லாங்கேட்கும் சற்பாவப் பணிவிடைசெய்யும் சீடனாக, தொழுகின்றேன்=போற்றுகின்றேன், கருணைசெய்யவேண்டும்=தயவுசெய்து அநுக்கிரகிக்கவேண்டும்.

உதாரமிகவுண்டாகி யுணர்வுற்றால் துன்பமெலா மொழிப்பதாகி=மிகவும் உதாரமுடையதாய்த் தன்வடிவா யறிந்துகொண்டால் அஞரெவற்றையும் அழிப்பதாகி, சதாசுகமாம் பொருளாக=எப்போதும் இன்பமே வடிவாம் வத்துவாக, நீயறிந்தது ஏது அதனை=நீ யுணர்ந்ததியாது அவ்வத்துவை, சாற்றுகிற்பாய் = அநுக்கிரகம்செய்வாய், பிதாமகனைப்பாய் என்ற மன்னனுக்கு=பிரஹ்மாவிற்குச் சமானமானவனே என்றுபுகன்ற அரசனுக்கு, கும்பன்றான் பேசுகிற்பான்=கும்பமுனிவன்றான் கூறுகிற்பான், கதாவியெழுமன மொருப்பட்டுணர்தியேல்=விடயங்களில் விக்ஷேபித்தெழும் சித்தம் ஏகாக்கிரப்பட்டுத் தெரிந்துகொள்ளவேண்டுதியேலாயின், உனக்குண்மை கழறுகிற்பேன் = உனக்குத் தத்துவ உபதேசத்தைச் செய்வேன்.

(ஸ்ரீ-வீர) அறியாமையாலே யான் பெரியோர்களுடைய திருக்கூட்டத்தை விடுத்து இக்காட்டில் வந்து வசித்துக்கொண்டிருக்கின்றேன், அகோ ஆச்சரியம் இப்போது என்னுடைய பாவங்கள்யாவும் விடுபட்டுக் கிருதகிருத்தியனாகிவிட்டதாக எண்ணுகின்றேன், எக்காரணத்தால் நீதானே யினிது வந்து இக்காட்டிற் றரிசனந்தந்து உணரவேண்டியதை நன்குணர்த்தினாயோ, அதனால் ஹேவரானனே! நீ யெனக்குக் குருவாவாய், பிதாவாவாய், மித்திரனாவாய், இன்று உன்னுடைய பாதங்களில் நமஸ்காரஞ்செய்து சீடனாய்ச் சரணாகதியடைகின்றேன், தயவுசெய்து திருவருள் செய்தல்வேண்டும். உதாரதமமாய் எதனைநீ யுணர்ந்துள்ளாயோ எதனையறிந்த மாத்திரத்தே சோகமேவந்துறாதோ, எதனாற்சுகவிசிராந்தனாவேனோ, அந்த அகண்டப்பிரஹ்மத்தை யடியேனுக்கு விரைவிற்றிருவருள் செய்தல்வேண்டும்; சிரத்தைசெய்வாய் சௌமியனே! என்னுஞ் சுருதியினாலே அசிரத்தை யுள்ளவர்களுக் குபதேசித்தபோதினும், தாணுவின்மேலே காகங்கரைதல்போல, வீணாம்நிந்தியமுமாம் எனப் பிரதமத்தில், சிரத்தையுடையவனாதியெனல்:—கும்பன்றானென்பதாதி. உபதேசிக்கும் வாக்கியத்தை பொருமை

யுடன் கேட்பதாயின் அப்போது ஹே இராஜரிஷியே! உனக்குபதேசஞ்செய்வேன், சிரத்தையிருக்குமாயின் நீ வினவிய இந்த ஞானத்தை யுள்ளபடியேகூறுவேன் என்றதாம், ஸ்தாணு காகம்போல ஒரு சிறிதையும் வீணுகயான் கூறமாட்டேன், ஒருமையுடன் கேளாயாயின் அநேக விதமாகக் கூறியபோதினும் எனது வாக்குப்பலமில்லாமலே போய்விடுமன்றோ. (99-100)

(ஸ்ரீ-வீர-அ-கை) கூறியதையே வற்புறுத்தலும், அதற்கு மன்னவன் உறுதி கூறுதல்:—சொன்னதென்பது.

சொன்னதுகைக் கொள்ளாது விநோதத்தாற் கேட்பவர்க்குச் சொன்னவார்த்தை
பன்னியுமோர் பயனுகா திருளிலே விழிக்குணர்வு பலிப்பதுண்டோ
வென்னலுமன் னவனுரைப்பான் வேதவிதி யேநீயிங் கிசைத்தவெல்லா
நின்னருளாற் கைக்கொண்டு சத்தியமே நன்ருக நினையாநிற்பேன்.

(ப - ரை) சொன்னது கைக்கொள்ளாது=கூறியதை இனிது கவராமல், விநோதத்தாற் கேட்பவர்க்குச் சொன்னவார்த்தை=விளையாட்டாகச் சிரவணிப்பவர்க்குக் கூறியவாக்கியம் பன்னியுமோர் பயனுகாது=கூறியும் ஒரு பிரயோஜனத்தை நல்காது, இருளிலே விழிக்குணர்வு பலிப்பதுண்டோ=அந்தகாரத்திலே சக்ஷுவிற்கு அறிவு பயனுகவருவதுளதோ, என்னலு மன்னவனுரைப்பான்=என்றுரைத்தலும் அரசன்கூறுவான், வேதவிதியே நீயிங்கிசைத்தவெல்லாம் = நீ யீண்டுபதேசித்த யாவுமே வைதிகவிதானமேயாம், நின்னருளாற்கைக்கொண்டு = உனது கிருபையினுலே உள்ளத்திற்கவர்ந்து, சத்தியமே நன்ருக நினையாநிற்பேன்=உண்மையாகவே நலமுண்டாக இனிது சிந்தியாநிற்பேன்.

(ஸ்ரீ - வீர) வாக்கியத்தை நன்கு கவராமல் அநாதரவுடன் கேட்பவனுக்குக் கூறுவோனது வாக்கியம், அபலத்தன்மையை மருவும், சக்ஷுசந்நிகர்டங்கள் தமத்திலேபோலுமாம்; என்று கும்பன்கூறச் சிகித்துவசன் கூறுகின்ருன், யாது தங்களால் உபதேசிக்கப்பெறுவதாமோ அது என்னல் வேதத்தின் விதியேபோல விரைவில் ஆராய்ந்து பாராமலே கொள்ளத்தக்கதாம்,துறக்க காமன்வேட்க என்பதாதிவிதி நிர்த்தோஷப்பிராமாண்யத்தானே நிச்சிதமாம், ஆன்ருேரால் ஐயமொன்றுமின்றிக் கொள்ளப்பெறுகின்றது, அதுபோலப் பிராமாணிய சம்சய கற்பனையின்றிக் கொள்ளுவேன் என்பதாம், இவ்வெனது வசனம் சத்தியமேயாம்.

(ச) விநோதத்தால்=அநாதரத்தால், கேட்பவர்க்கு=கேட்பவராய், சொன்னது கைக் கொள்ளாதவர்க்கு, பன்னி=அனுத்தனுய் உபதேசிப்பவன் சொன்னவார்த்தை, இருளிலே நேத்திரேந்திரிய விருத்திகள்போற் பயனுகாது, நீயிங்கிசைத்தவெல்லாம், வேதவிதியென= வைதிகவாக்கியம் காரியம்போல் விசாரியாமலே என்னல் அநுஷ்டிக்கத்தக்க தென்பதாம். (101)

(ஸ்ரீ-வீர - அ-கை) மேலுங் கும்பமுனிகூறல்:—என்று என்பது.

என்றுமன்ன னுரைசெய்ய வெழிலார் கும்ப னுரைசெய்வா
னென்று மறியாப் பாலகனுக் குரியதந்தை யுரைப்பதுபோல்
வென்றி மன்ன நானுனக்கு விளம்பு முரையை வினவாது
நன்றி தென்றே கேளென்று ஞானந்தோன்ற நவில்வுற்ருன்.

(ப - ரை) என்றுமன்னன் உரைசெய்ய=என விவ்வண்ணம் அரசன் கூறியபோது, எழிலார்கும்பன் உரைசெய்வான்=அழகுபொருந்திய கும்பமுனிவன் கூறுவதாவது, ஒன்றுமறி

யாப்பாலகனுக்கு=எதுவுந்தெரியாத சிறுவனுக்கு, உரியதந்தை யுரைப்பதுபோல்=உரித்தான பிதா வுரைசெய்வதேபோல், வென்றிமன்ன = வெற்றிமாலைதரித்த மன்னவனே, நானுனக்கு விளம்பு முரையை=யான் உனக்குக் கூறும் வாக்கியத்தை, வினவாது=ஆக்ஷேபியாமல், நன்றிது என்றே கேளென்று=நல்லது இது எனவே கேட்பாய் என்பதாக, ஞானந்தோன்ற நவில்வுற்றான்=ஞானமானதுதயமாகக் கூறத்தொடங்கினன்.

(ஸ்ரீ-வீர) எங்ஙனம் பாலனானவன் ஏதுக்களால் உபபாதனமின்றியதாகியுமுள்ள பிதாவினுடைய வாக்கியத்தைப் பிரமாண புத்தியினாலே கொள்ளுகின்றனனோ அங்ஙனமே நீ இவ்வெனது வாக்கியத்தைக் கவர்வாய். சிரவணாநந்தரம் புத்தியினாலே நமக்கிது இதமென்றே பாவித்துக்கொண்டு, காதுக்கினிமையாயிருக்கும் கானமேபோலப் பிரீதியுடன் கேட்பாய், எனது வாக்கினதுஹேது அர்த்தித்தன்மையை அடியோடு விட்டுவிட்டுக் கேட்பாய் என்றதாம்.

(ச) பாலன் பிதாவின் வாக்கியத்தை யுத்தி விரிவாக்காமலே கிரகிப்பதுபோல் நீயும் எனது வசனத்தைக் கிரகிப்பாயென்றதாயிற்று. (102)

(ஸ்ரீ-வீர-அ-கை) ஆண்டாதியில், தேகாதியபிமானத் தியாஜனப்பொருட்டும், துக்க நிதான உபதரிசனப்பொருட்டும், மணிகாசோபாக்கியானத்தையும் ஹஸ்திகாக்கியானத்தையும், கேட்பிப்பான்றொடங்கி, உன்னுடைய சரித்திரத்திற்குச் சமானமும், நெடும்போது செய்யும் விசார உதயவாயிலாய் உதயமுறாநின்ற மந்தமதிகளினுடைய மதிக்கும் நற்போதந்தருவதும், மகாமதிகட்கோ உடனே எளிதாகப் பவபயத்தினின்றுங் கடத்திவைக்கும் தகைமையதும், மனோரம்மியமும், ஆகிய முறையான கதையொன்று மொழியக்கேட்பாயாக எனல்:— மன்னு, மிக்க, சிந்தா, மனிதன் என்பன.

மன்னுவீதோர் கதைகேட்பாய் மற்றிக்கதையி னுறுபொருளைப்
பின்னுனுரைக்கேன் முன்னாளிற் பெரியோனொருவன் பெருஞ்செல்வன்
பன்னுநின்ற கலைநூல்கள் பலவும்வல்லோன் ஞானமிலோ
னன்னுயர்சிந் தாமணியை யறவேமுயன்று தேடுற்றான்.

மிக்கவருத்தத் தாற்றீர மேவவேண்டு மெனுமுயல்வாற்
றக்கமணிகிட் டினவருந்திச் சாலமுயன்றாற் கேன்கிடையா
தொக்கசுடர்மா மணிதன்முன் றோன்றிமதியின் விளங்கிடவு
நக்கமணியைக் கைக்கொள்ளா னுவிதமாய் நாடுற்றான்.

சிந்தாமணியன் றிதுவேறோர் சிறுமாமணிசிந் தாமணிதா
னெந்தாராய்ந்து வாணுட்போய் நுடங்கும்போதல் லால்வருமோ
நைந்தாலும்பா வியர்க்கெய்தா நல்லோர்சிலர்க்கு நண்ணலுறுந்
தந்தாம்வினையை நினையாமற் றளர்ந்தாற்கடிதி னெய்திடுமோ.

மனிதனுனென் றவமற்பம் வல்லபங்கள் சிறிதில்லைத்
துனிசெய்நிர்ப்பாக் கியனெனக்குத் தோன்றுமணிமுன் றோன்றிடுமோ
நனியின்னமுந்தே டுதுமென்று நன்மாமணியை யெடுத்திலனாற்
புனிதமணியும் போயினதாற் பொல்லாதார்க்கு நலனுறுமோ.

(ப - ரை) மன்னுவீதோர் கதைகேட்பாய்=அரசனே இஃதொரு கதைகூறக்கேட்டி! மற்றிக்கதையி னுருபொருளை=பின்னரிந்தக் கதையின்கண்ணுள்ள அருத்தத்தை, பின்னுன் உரைக்கேன்=பின்னர்யான் கூறுகின்றேன், முன்னளில்=பூர்வகாலத்தில், பெரியோனொருவன்=ஒரு பெரியமனுடன், பெருஞ்செல்வன்=பெரிய ஐசுவரியமுடையவன், பன்னுகின்ற கலைநூல்கள் பலவும்வல்லோன்=அநேக நெறிகளைக் கூறுகின்ற கலாசாஸ்திரங்கள் அநேகம் படித்தவன், ஞானமிலோன்=ஆன்மஞானமில்லாதவன், அன்னுன்=அத்தகைனுகிய அவன், உயர் சிந்தாமணியை=மேன்மைமிக்க சிந்தாமணியினை, அறவேமுயன்று தேடுற்றுன்=அத்தியந்தம் முயற்சிசெய்து தேடத்தொடங்கினன்.

மிக்க வருத்தத்தால் = மிகுதியான பிரயாசத்தினுலே, தீரமேவ வேண்டுமெனு முயல்வால்=அத்தியந்தம் தீரமுடன் அடையவேண்டுமென்னு முயற்சியினுல், தக்கமணிகிட்டின=தகுந்த மணியானது அடையப்பெற்றது, வருந்திச்சால முயன்றூர்க்கு = பிரயாசையுடன் மிகவும் முயற்சி செய்தவர்கட்கு, ஏன்கிடையா=ஏன் கிடைக்கமாட்டாது அவசியமே கிடைக்கும், தொக்க சுடர்மாமணி=மிகவும் பிரகாசம்பொருந்திய மாக்ஷிமையுற்ற சிந்தாமணியானது, தன்முன்றோன்றி மதிபின் விளங்கிடவும்=தனது எதிரிற் பிரசன்னமாகிச் சந்திரனைப்போல இலங்கிடவும், நக்கமணியைக் கைக்கொள்ளான் = பிரகாசிக்கும் அம்மணியினை எடுத்துக்கொள்ளமாட்டான், நானுவிதமாய் நாடுற்றுன்=பலவிதமாக எண்ணுதலுற்றுன்.

சிந்தாமணியன்றிது = இது சிந்தாமணியல்ல, வேறோர் சிறுமாமணி = அயலொரு சின்னமணியிது, சிந்தாமணிதான்=சிந்தாமணியானது, நொந்தாராய்ந்து வாணுட்போய்= கஷ்டப்பட்டுத்தேடி வெகுகாலங்கழித்து, நுடங்கும்போதல்லால் வருமோ = முடங்கும் போது அல்லாமற் கிடைக்குமோ, நைந்தாலும் பாவியோர்க்கெய்தா = கஷ்டப்பட்டாலும் பாவிகளுக்குக் கிடைக்கமாட்டாது, நல்லோர் சிலர்க்கு நண்ணலுறும்=நல்லவர்கள் சிலவர்களுக்கே கிடைப்பதாகும்; தந்தாம் வினையைநினையாமல்=தங்கள் தங்களுடைய கருமத்தை நோக்காமல், தளர்ந்தாற்கடிதின் எய்திடுமோ = வாடினுன்மாத்திரம் விரைவிற் கிடைத்திடுமோ.

மனிதன்நான் என்றவம் அற்பம் = யானொருமனுடன் எனது தவமோ சொற்பமாம், வல்லபங்கள் சிறிதில்லை=சாமர்த்தியங்கள் அற்பமும் கிடையாது, துனிசெய் நிர்ப்பாக்கியன் எனக்கு=துன்பமயமாய பாக்கியமில்லாத என்றனக்கு, தோன்றுமணிமுன் றோன்றிடுமோ= எளிதிற் பிரதீதியாகாத சிந்தாமணி எதிரில் புலப்படக்காணுமோ, நனியின்னமுந் தேடுதுமென்று=நன்றாக மேலுமேலும் தேடுவோம் என்பதாக, நன்மாமணியை யெடுத்திலனுல்= நல்ல மாக்ஷிமைதங்கிய சிந்தாமணியை எடுக்காமல் விட்டுவிட்டான்; புனிதமணியும் போயினது = பவித்திரவடிவமாய சிந்தாமணியும் வந்தவழியே சென்றது, பொல்லாதார்க்கு நலனுறுமோ=கெட்டவர்கட்கு நன்மை யுண்டாகுமோ உண்டாகாதாம். ஆல் மற்றென்பன அசைகளாம்.

(ஸ்ரீ - வீர) ஓயரசனே ஸ்ரீமானுக ஒரு புருடனிருந்தனன் அவன் நித்திய விருத்தங்களாய அசேடகுண லக்குமிகட்குத்தானமாவன். அதாவது நித்தியம் பரஸ்பர விருத்தங்களாய், ஔதார்ய வைராக்கிய சர்வஸ்வதியாகாதிகுணத்திற்கும், இலக்குமியாகிய சம்பத்திற்கும் வசிக்குமிடமாவன், கடலானது விருத்தமாய வடவாநலத்திற்கும் நீரிற்கும் ஸ்தானமாவதே போலும், அவன்கலாவான் அஸ்திரகுசலன் விவகாரசாமர்த்தியன் சர்வசங்கற்ப சீமாந்தன்

ஆயினும் அப்பரமான்மபதத்தையோ அறிந்தவனல்லன்; அவன் என்னசெய்தான் எனிற் கூறல்:—அன்னுன் என்பதாதி. அநந்தங்களாகிய தப ஜப தேவதாபிரார்த்தனை தேடுதலாதி கோசரயத்தனங்களினுலே நன்கு சாதிக்கப்பெறுவதாய சிந்தாமணியினது சாதனமான தவ மார்தியில் முயன்றவனுன்; வாடவவன்னியானது கடலை வற்றடிப்பதிலே முயன்றதே போலும்; திடநிச்சயவானுய அவனுக்கு மகத்தான தீவிர ஆயாசயத்தனத்தினுலே சிறிது காலத்திற்றனே சிந்தாமணியானது சித்தமா யெதிரில்வந்திருந்தது, திட உத்தியோகத்தில் அவசியம் பலமுண்டாதல் நியமமாமெனக்காட்டல்:—வருந்தியென்பதாதி. மிகமுயல்வுடைய வர்கட்கு என்னதான் கிடைக்கமாட்டாது; மணியானது முன்னே யிருப்பதாயினும் கையிற் கிடைப்பதேயாயினும், உதயாசல சிருங்கத்திலிருக்கும் ஒருமுனிவன் ஆண்டே உதிதமாய இந்துவானது கையிற்கிடைப்பதேயாக இருந்தபோதினும், பிராந்தியினுலே மேருவிலுதித மாயது தூரதூரத்திலிருப்பதுபோலக் கிடைக்கமுடியாததாய்க் காண்பதேபோல அவன் அத னைக்கண்டனன்; அதனுனே மணிராஜாக்களின் இந்திரனுகிய ஈசுர வச்சிந்தாமணியிடத்தில், அவன் நிச்சயவானுகவில்லை, திடீரென்று இராஜ்ஜியசம்பத்தானது எளிதிற் கிடைத்தபோது தரித்திரதமனுகிய பாமரனேபோலும், விஸ்மயசாலியாய்ச் சம்பிராப்த உபேக்ஷையாற் றீர்க்க துக்க சம்பிரமசாலியாய்ப் பிராந்தியடைந்த மனத்தினுலே, கூறும்பிரகாரம் நன்கு சிந்திப்பவ னுயினுன்; இது மணியென ஆரம்ப ஞானமுளதாயது, இது மணியன்றெனப் பிரமமுண்டா யது பின், மணியாயிருக்குமாயி னதுஎனது காட்சிப்படாதன்றே, ஆயின் பரீக்ஷையின் பொருட்டு இதைத் தொட்டுப்பார்ப்பேன் என்றிச்சையுண்டாயது, இதனைத் தொடுதல் கூடாது ஏனென்றல் இது ஒருவேளை மணியாயிருக்குமாயின், தீண்டிடில் அபாக்கிய எனது கண்மறைவாய்ப்போனுலும் போய்விடும்; இவ்வாறுய சங்கையிற் பீஜமியம்பல்:—வானுள் என்பதாதி. இத்துணைக்காலத்திற்குள்ளே அந்த மணீந்திரனுனது கிடைத்திடமாட்டாது, அன்றே, சாங்காறும் முயன்றுகொண்டே யிருந்தால் ஒருவேளை கிடைத்தாலுங் கிடைக்கு மென்பது ஐதிகமுறைமையாம்; ஆயினெங்கனம் பிரத்தியக்ஷம் இரத்தின ஆலோகம் எனில் உரைத்தல்:—நைந்தாலும் என்பது. கிருபணனியான் எனது கார்ப்பண்ய வசத்தினுலே, மயலாற் சுருங்கியகண்ணுல், சுற்றுநின்ற கொள்ளியினுலே கற்பிக்கப்பட்ட கொடியேபோல் இரத்தினலோகத்தை மயலாற்காண்கின்றேன்; மயலாற்றுவிசந்திரத் தன்மையைக் காண்பதே போலும்; இத்தகைய வித்தாரமான புண்ணிய சம்பத்தானது எனக்கு இதற்குள்ளே யெங்கே யிருந்து வந்துவிட்டது இப்போதே மணீந்திரனுகிய சர்வசித்தியுங் கொடுக்கப்பட்டவதனை யெய்துவதென்றுன் முடியக்கூடிய காரியமா? சில மகாத்மாக்களே மகாபாக்கியவான்களா கின்றூர்கள், எவர்கட்கு அற்பகாலத்திற்றனே செல்வங்கள் எதிர்ப்பட்டு நிற்குமோ; யான் அற்பதவத்தினன் மிகவுஞ்துச்சன், மனுடப்பிறப்பினனன்றே, அபாக்கிய பாஜனமாகிய என்னை நோக்கிச் சித்திகள் எங்ஙனம் வருதல்கூடும்? இவ்வண்ணங்களாய விகற்சங்கற்பங்க ளால், அறியாமையினுலே மோகிக்கப்பெற்ற அவ்வறியாதவன் நெடும்போது எண்ணி யெண்ணி மணியைக்கவர்வதில் முயலவேயில்லை. இவ்வாறவனிருப்பவே மணியானது கிளம் பிப் போயேவிட்டது, ஏன் கிளம்பிப்போய்விட்ட தென்னின்கூறல்:—பொல்லாதார்க்கென் பதாதி. நாணினின்றும் விடுபட்டபாணமானது நாணைவிட்டேகுதலேபோலும் சித்திகள் அவ மதிப்பவனைவிட்டு ஏகியே விடுகின்றன.

(ச) ஏன் கிடையா—யாதுதான் சித்தியாது, கைகொள்ளா—கைவந்திருப்பதாய்ப் பார்த் தும், நானுவிதமாய் நாடுற்றுன் மகத்தான பொருளைப்பெற்றும் களிப்பும், அதின் உபேக்ஷை

யால் மிகு துக்கமும், அவ்விரண்டாலும்வரும் மகிழ்வுசோர்வு முள்ளவனாய், மேற்கூறும் பிரகாரஞ் சிந்தித்தானென்பது பொருள்.

சிந்தாமணியென்பது முதலான இரண்டுகவியும் ஒருவாக்கியம், இது = முன்பிருக்குமணி, சிந்தாமணியா, அன்று, சிந்தாமணியாயின், இவ்வளவு காலத்தாற் சித்தியாதன்றே, மற்றென்னெனிற் பிராணாந்தத்தைச் சம்பாதிக்கு மகா வெத்தனத்தாற் சித்திக்குமென்பது மணிசாதகக் கற்பங்கள் என்னும் ஆகமங்களின் கிரமமாம், நானோபாவி யெனக்கெப்படிக்கிட்டும், சில மகான்களுக்குக்கிடைக்கும், நானோமனிதன் என்றவமோவற்பம், வல்லபமற்றவனாதலின் எனக்குச் சிந்தாமணி கிடைக்குமா? என்றிங்ஙனஞ் சங்கற்ப விகற்பங்களாற் சிந்தித்து, அஞ்ஞான பரவசனாய் மணிக்கிரகணத்து எத்தனமடைந்திலன். மூ: யானோ கிருபணனாய் சுருங்கிய நேத்திரத்தானே உல்முகத்தின் சாகைக்கொப்பாக இரத்தினலோகத்தைத் துவிசந்திரத்தன்மையேபோல பிரமத்தினாலேயே காண்கின்றேன். சாதுவாரகன் = சாதுக்களின் சேர்ச்சியன். (103-104-105-106)

(ஸ்ரீ-வீ-அ-கை) வளையின் முறியைச் சிந்தாமணியென்று நம்பியெடுத்துச் சகலமும் விடுத்துக் காட்டிற்குச் சுகமனுபவிக்க ஏகல்:—மீண்டு, வெந்தவென்பன.

மீண்டும்வருந்தித் தேடுற்றான் வெம்பிச்சிலநா ளுழன்றளவே
யாண்டுமறைந்து சிலசித்த ரவனைநகுவான் காட்டுவிக்க
ஈண்டவளையின் முறியொன்று கிடப்பக்கண்டா னறிவில்லான்
மாண்டசிந்தா மணியிதென மகிழ்ந்துவியந்து கைக்கொண்டான்.

வெந்தமணியை மிகப்பேணி மிக்கநிதி யெல்லாம்விட்டான்
வந்தமணியெல் லாமளிக்கும் மற்றநிதிக ளென்னென்றே
சிந்தைசெய்தா னித்தேசந் தீயோருண்டு சுகமில்லை
யிந்தவிடந்தீ தெனவனத்தி லிருந்துசுகிப்போ மென்றகன்றான்.

(ப - ரை) மீண்டும் வருந்தித்தேடுற்றான்=மறுபடியும் கட்டப்பட்டுத் தேடிக்கொண்டேயிருந்தான், வெம்பிச்சிலநாள் உழன்றளவே = துன்புற்றுச் சிலகாலம் சுழன்றுதேடவே ஆண்டுமறைந்து சிலசித்தர்=அவ்விடத்திற் றெரியாமலிருந்துகொண்டு சிலசித்தி யுடையவர்கள், அவனை நகுவான்=அன்னானைக்கேலி செய்யும்பொருட்டு, காட்டுவிக்க = தெரிவிக்க, ஈண்டவளையின் முறியொன்று=ஒருசிறு முறிந்தவளையற் சில்லானது ஒன்று, கிடப்பக்கண்டான் அறிவில்லான்=வீழ்ந்துகிடக்கக்கண்டான் அறியாதவன், மாண்டசிந்தாமணியிதென= மாக்ஷிமைதங்கிய சிந்தாமணியிது என்று, மகிழ்ந்து வியந்து கைக்கொண்டான்=சந்தோஷித்துப் புகழ்ந்து கரத்திலெடுத்துக்கொண்டான்.

வெந்தமணியை மிகப்பேணி = அக்கினிப்பட்ட அந்த வளையலோட்டை மிக்வுமாதரித்து, மிக்க நிதியெல்லாம் விட்டான் = மிகுந்த நிதிகளையெல்லாம் விட்டுவிட்டான், வந்தமணி யெல்லாமளிக்கும்=இப்போது கிடைத்த சிந்தாமணி வேண்டியவற்றையெல்லாங் கொடுக்கும், மற்றநிதிகள் என்னென்றே=பிறநிதிகளியாவும் என்ன பிரயோஜனமென்பதாக, சிந்தைசெய்தான்=எண்ணத்தொடங்கினான், இத்தேசந்தீயோருண்டு=இந்தத் தேசமானது கொடியவர் நிறைந்ததாகும், சுகமில்லை=ஆநந்தமின்றாம், இந்த இடந்தீதென = நமது நாடு

வசித்தற்குத் தகாதது என்று, வனத்திலிருந்து சுகிப்போமென்றகன்றான் = ஆரண்யத்தி லிருந்து ஆநந்திப்போமென்று சொன்னான்.

(ஸ்ரீ-வீர) அவன் மறுபடியும் இரத்திநேந்திரசாதனத்தில் கிரியாயத்தினத்தைச் செய்தனன், துணிவோடுகூடிய ஜனங்கள் தங்களுடைய காரியங்களில், ஆயாசமுற்றுத் திரும்புவதில்லையன்றோ! பரிகாசபரர்களாயதனனே வஞ்சகர்களாய் மறைந்திருந்த சித்தர்களானே முன்னிலிடப்பெற்ற பளபளப்பாயிராநின்ற அகண்டிதமான காசகண்ட மொன்றைக்கண்டான்; இது சிந்தாமணியென்று மூடனாகிய அவன் அதன்கண்ணே உபாதேயத் தன்மையையுணர்ந்தனன், மோகிதனாகிய அறியாதவன் ஹரிதாரக்கட்டியையும் சுவர்ணமென்றே காண்பன்; அந்தத் தக்தமணியை யாதரவுசெய்துகொண்டு தனது பழைமையாய தனதானியாதி செல்வங்களையெல்லாம் விட்டொழித்தான்; ஈண்டித்தனங்களினாலே யென்னேபயன்; யாவும் இச்சிந்தாமணியி லிருந்தேயடையலாம்; இவ்வண்ணம் தேசகிருப பந்துவாதிகளையும், மயலால் அவன் விடுத்தான் எனல்:—இத்தேசமென்பதாதி. இத்தேயம் அசுகம்நேயசனசூனியம், பாபிஜனங்களானே சூழப்பெற்றது, அந்தவீடென்ன ஜீர்ணமானதன்றோ, என்னுடைய பந்துக்கள் என்ன பிரயோஜனம், வெகுதூரஞ்சென்று என்னிஷ்டப்படி சுகமாகவிருப்பேன் சம்பத்தோடுமென்றெண்ணி யக்காசகண்டத்தை யெடுத்துக்கொண்டு அம்மூடன் சூனிய கானனஞ் சென்றனன்.

(ச) அறிவில்லான், இது=இவ்வளையன் முறியை, மாண்ட=பரமார்த்தமான, சிந்தாமணியென்றுணர்ந்து கைக்கொண்டான்; அறியாதவர் மோகிதராய் மிருத்திகாவிசேஷத்தையும், பொன்னெனக் காண்பதுண்டன்றோ. (107-108)

(ஸ்ரீ-வீர-அ-கை) இக்கதையை முடித்து இனியொரு கதையைத்தொடங்கல்:—வாழலா மென்பது.

வாழலாமென் றெண்ணிப்புன் மணியால் வருத்த மெலாமுற்றுத்
தாழநின்றான் வேறொன்று சாற்றக் கேளாய் புந்திக்குச்
சூழவறிவுண் டாக்குவிக்குந் தொல்லைவிந்த வனத்திடையே
வேழமொன்று கரிகட்கு மேலாமிகவு முயர்ந்ததுவே.

(ப - ரை) வாழலாமென்றெண்ணி = சுகிக்கலாமென்பதாக நினைந்து, புன்மணியால் வருத்தமெல்லாமுற்று=துச்சமான வளையலால் அநர்த்தமெல்லாமடைந்து, தாழநின்றான்= மிகவுமிழிவை யடைந்தனன், வேறொன்று சாற்றக்கேளாய்=அயலொருகதை யறையக்கேட்குதி! புந்திக்குச் சூழவறிவுண்டாக்குவிக்கும்=மதிக்குக் கேட்பக்கேட்ப நல்லுணர்வை ஜனிப்பிக்கும், தொல்லைவிந்த வனத்திடையே = பிராசீனமான விந்தியபர்வதப் பெருங்காட்டில், வேழமொன்று=மத்தகஜமொன்றிருந்தது, கரிகட்குமேலா மிகவுமுயர்ந்ததுவே=சகலயானைகட்கும் மேன்மை மிக்கதாய் மிகமிகவும் பெரிதாகவிருந்தது.

(ஸ்ரீ-வீர) ஆண்டு அவன் அக்காசகணத்தினாலே பெரும்பெருந் துயரங்களையடைந்தான், அவ்வாபத்தானது நீலமலையேபோல விருந்தது அதன் காந்தியேபோல மிகக்கறுப்பாயிருந்தது, அறியாமையேபோல அது வடிவடைந்து மிருத்தியுருபமாகவே யிருந்தது. ஈண்டஸ்திகாக்கியானமும் நிதர்சனமாம், ஆகலின் அதனையும் கேட்குதியெனல்:—ஹே பூமிபனே இனி யிந்த அபாரம்மிய ஆக்கியானத்தைக் கேட்குதி! புத்திக்கு மேலான வுணர்வைக்கொடுக்கத்

தக்கதாம், ஹே சாதுவே யுனது கதைக்கு ஒப்பானதாம், விந்தியவனத்தில் ஒரு யானையா னது இருந்தது, அது பெருங்கூட்டத்தலைவர் கூட்டத்தினுக்கு மதிபனும், ஸ்ரீ அகஸ்தியாது ஆணையை நெடும்போது பரிபாலனஞ்செய்தலானே சுத்தப்பிரசன்னமாய அநுக்கிரக புத்தியி னுனே விந்தியனுற்றானே பழைய உன்னத ரூபத்தோடும் வெளியானதேபோலு மிருந்தது.

(ச) வருத்தமெல்லாமுற்றுத் தாழநின்றான்=மகத்தான வாபத்தையடைந்தான், மகாநு தபங்கட்கும் மேன்மையுடையதாம். (109)

(ஸ்ரீ-வீ - அ-கை) ஷை யானையையே மீண்டும் வருணித்தலும் பாகன் பந்தித்தலும் பந்தமகற்றிச் செல்லுதலும்:—வயிரவிலங்கு என்பன.

வயிரத்தினுநீண் டறக்கூராய் வலிதாகியகோ டிரண்டுளது
பயில்வுற்றிருப்புக் கயிற்றாலே பாகன்பிணித்து விலங்கிட்டான்
செயிர்பற்றியபல் பிணிப்பாலே சிந்தைதளர்ந்து கொம்பிரண்டாற்
குயில்வித்துளவன் கட்டெல்லாங் குலைத்ததொருநாற் கடிகையிலே.

விலங்குமுறிந்த படிகண்டான் வேழத்தலைவீழ்ந் துயர்பாகன்
கலங்கிவீழ்ந்தா னவன்வீழக் கண்டகளிறு கருணையினுன்
மலங்கவதஞ்செய் யாதகல மற்றப்பாகன் மீண்டெழுந்து
சலங்கொண்டேகி யக்களிற்றைத் தானேதேடி யெதிருற்றான்.

(ப - ரை) வயிரத்தினும் நீண்டறக்கூராய்=வச்சிரத்தினும் நீண்டத்தியந்தம் கூர்மை யாய், வலிதாகிய கோடிரண்டுளது=வலுமையாகிய கொம்பு இரண்டையுடையதாம், பயில் வுற்றிருப்புக் கயிற்றாலே=ஆலானத்தடைத்து இரும்புச்சங்கிலியினாலே, பாகன் பிணித்து விலங்கிட்டான்=மாவுத்தன்கட்டிச் சிறைசெய்தான், செயிர்பற்றிய பல்பிணிப்பாலே = துய ருறுத்தாநின்ற அநேகங் கட்டினாலே, சிந்தை தளர்ந்து=மனக்கவலையை யடைந்து, கொம் பிரண்டால்=இருகோட்டினால், குயில்வித்துளவன்கட்டெல்லாம்=கட்டியுள்ளதன் கட்டுக் களையெல்லாம், குலைத்ததொரு நாற்கடிகையிலே=கெடுத்தது இரண்டு முகூர்த்தத்திலே.

விலங்குமுறிந்த படிகண்டான்=சங்கிலிகள்யாவும் தூளானவண்ணத்தைப் பார்த்தான், வேழத்தலை வீழ்ந்துயர்பாகன் = யானையின் றலையெட்டாமல் தவறினான் மேலான்பாகன், கலங்கி வீழ்ந்தான் = மதிகலங்கிக் கீழேவிழுந்தனன், அவன் வீழக்கண்டகளிறு கருணை யினால்=அப்பாகன் வீழ்ந்ததைக்கண்ட யானையானது தயையினாலே, மலங்கவதஞ் செய்யா தகல = கலங்குறுமாறு கொல்லாதொழிந்தேக, மற்றப்பாகன் மீண்டெழுந்து=பின்னாந்த மாவுத்தன் மறுபடியும் எழுந்து, சலங்கொண்டேகி = சினமடைந்து சென்று, அக்களிற்றை அந்தயானையை, தானேதேடி யெதிருற்றான்=சுயமாகவே தேடியிருக்கு மிடங்கண்டனன்.

(ஸ்ரீ-வீர) வஜ்ஜிரத்தினது ஜுவாலைகளைப்போல தீக்ஷணங்களாய இரண்டு வெள்ளிய நீண்ட தந்தங்களிருந்தனவதற்கு; அவை, கற்ப அநலசிகைக்குத் துல்லியங்களாம், சுமேரு வைத்தோண்டுஞ் சமர்த்தனவாம்; முனீந்திராாகிய ஸ்ரீ அகஸ்தியரால் விந்தியமலையேபோல வும், உபேந்திராாகிய ஸ்ரீ விஷ்ணுவால் மாபலியேபோலவும், அந்த யானையானது பாகனாலே லோகமய சங்கிலிக்கூட்டங்களானே எப்பக்கத்திலும் கட்டப்பட்டது; சஸ்திரங்களினாலே கும்பஸ்தலத்திலடியுண்ட அந்தக் கயமானது நிபத்தமாயது நியந்திரங்களினது அடைவுற்றது, எப்போதுமே அசம்பாவிதத் தன்மையினாலும் அலௌகிகத்தன்மையினாலும், அபூர்வமாய

அரசராக்கினியில் தகிக்கப்பெற்றதாய திரிபுரமானது எத்தகைய துயரையடைந்ததோ அத்தகைய துயரை அத்திரமாயகயமானது அடைந்தது; கேதத்தாற் கட்டொழிப் பதில் முயல்வினையுடைய அம்மத்தகயமானது, மற்றபோது முகத்தடிகளினாலே கிங் கிணிகளினதுவேபோன்ற தொனியைச்செய்தது; அது மிகுந்த முயல்வுடன் இரண்டு முகூர்த்தங்களுக்குள்ளே, அத்தந்தங்களினாலே, அமராவதியின் கதவின்றிறப்பை மகாபலி யான்வன் செய்ததேபோலச் சிருங்கலைச்சாலத்தை விடுவித்துத் தூட்படுத்தியது; அதனது அக்கட்டு வீழ்ச்சியை தூரத்திலிருந்தே பாகனானவன்கண்டான், தாலவிருக்ஷத்தின்மேலேறி யதிலிருந்து விசின்ன பாசத்தையுடைய அதனது சிரத்தின்மேலே குதித்தான், அவன் குதித்துப் பாதபதுமங்களால் யானையினது சிரத்தையடையப்பெறாமல் வாயுவினாலே யடிக் கப்பெற்ற பக்குவமான கனியானதுபோலப் பூமியின்கண்ணே யாகுலனாகி வீழ்ந்தனன். எதி ரில்விழுந்த அவனைப்பார்த்து மகாகயமானது, கருணையை யடைந்தது, திரியக்குத்தசையை யடைந்தவர்களுள்ளும் விளங்காநின்ற பெருங்குணமுடையவரும் தயையுடையவருமாகிய சாதுக்கள் இருக்கவே யிருக்கின்றார்களன்றோ; விழுந்தவனைக் கொல்வதென்றால் என்னதான் என் னுடைய பௌருஷம் என்று சிந்தித்துக்கொண்டு அவ்வியானையும் அவனைக்கொல்ல வில்லை; கேவலம் சிருங்கலா ஜாலத்தைப் பொடிப்படுத்தி யெறிந்துவிட்டுமாத்திரம் இஷ்டப் படி சென்றது; யானை சென்றபின்னர் ஹஸ்திபன் எழுந்து சொஸ்தமான தேகமதியுடையவ னாயினன், கஜத்தோடுகூடவே யவனது துயரம் வெகுதூரம் ஓடிவிட்டது ஆகாயத்தில் மேகங்களினாலே மறைக்கப்பட்ட சந்திரனை இராகுவானது புசித்தற்குத் தேடுவதேபோல அவன் வனத்தில் புதர்களின் மறைந்திருக்கும் அந்தக் கயத்தினைத் தேடிக்கொண்டேயிருந் தான்; வெகுகாலங்கழித்து ஒரு கானனத்தில் அவ்விபேந்திரனைக்கண்டான், சமரத்தினின் றும் வெளிப்போந்ததேபோல ஒரு தருதலத்தில் அது விசிராந்தி யடைந்திருந் தது.

(ச) வஜ்ஜிர ஆயுத கோடிகளைப்பார்க்கினும் கடினமும் கூர்மையுமாம் கொம்பு. அது குரூரமான அயமயச் சங்கிலியினாலே கட்டுப்பட்டுப் பாரதந்திரியத்தையடைந்தது.(110-111)

(ஸ்ரீ - வீர - அ - கை) அப்பாகன் குழியில் வீழ்த்தி யானையைத் துன்புறுத்தல்:—ஒரு தனது என்பன.

ஒருகானிடையே யக்கரியை யுற்றான்குழியொன் றுண்டாக்கிச்
சருகாற்கொடியான் மறைவித்தான் றந்திசிலநா டிரிந்தங்கே
வருகாலையில்வீழ்ந் ததுகுழியில் வந்தபாக னுறப்பிணித்தான்
கருதாநின்ற துயரோடுங் களி றுநின்ற திப்போதும்.

தனதுவீட்டிற் சிறையிருக்குந் தனிமாவலிபோ னின்றகரி
முனமுன்வீழ்ந்த பகைப்பாகன் மூளைசிதறிற் றெனில்வந்து
வனவெங் குழியிற் கட்டுண்டு மயங்கவேண்டா மதுபோல
வினவி நிகழ்கா லத்தான்மேல் வினைநோக்காதார் மெலிகுவரே.

(ப - ரை) ஒருகானிடையே யக்கரியையுற்றான்=ஒருகாட்டின் மாட்டடைந்த யானையைக் கண்டான், குழியொன்றுண்டாக்கி=ஒரு படுகுழியைத்தோண்டி, சருகாற்கொடியால் மறை வித்தான்=காய்ந்த இலைகளினாலும் லதைகளினாலும் மூடிவைத்தான், தந்திசிலநாள் திரிந்

தங்கே=யானையானது சிலதினங்கள் சஞ்சரித்துக்கொண்டாண்டு, வருகாலையில் வீழ்ந்தது= வரும்போது விழுந்துவிட்டது, குழியில்=அப்படுகுழியில், வந்தபாகன் உறப்பிணித்தான்= மறைந்திருந்துவந்த ஹஸ்திபன் நன்றாக விலங்கிட்டான், கருதாநின்ற துயரோடும்=சிந்தியாநின்ற துக்கத்துடன் கூடி, களிறுநின்றது இப்போதும் = யானையானது சிறைப்பட்டுளது என்றுஞான்றும்.

தனது வீட்டில் சிறையிருக்கும்=சுதல லோகத்திலுள்ள தன்னுடைய கிரகத்திற்றானே அடைபட்டிருக்கும், தனிமாவலிபோல் நின்றகரி=ஒப்பில்லாத மகாபலிச் சக்கிரவர்த்தியே போலச் சிறைப்பட்ட யானையானது, முனம்முன்வீழ்ந்த = பூர்வம் தனது முன்புவீழ்ந்த பகைப்பாகன் = சத்துருவாகிய ஹஸ்திபனுடைய, மூளை சிதறிற்றெனில் = தலையைச் சுக்குச்சுக்காக்குவித்திருக்குமாயின், வந்துவன வெங்குழியிற் கட்டுண்டு மயங்கவேண்டாம்=இவ்விடமுற்றுக் காட்டிலுள்ள பெருங்குழியில்விழுந்து விலங்கலங்கரித்துக்கொண்டு இடர்ப்படவேண்டாம் அல்லவா, அதுபோல=அவ்வகையேபோலும், வினவி நிகழ்காலத்தால் மேல்வினை நோக்காதார் மெலிகுவ்ரே=ஆராய்ந்து வருத்தமானகாலத்தால் வரும்விளைவைப் பாராதார் தளர்பவரேயாவர்.

(ஸ்ரீ - வீர.) சிருஷ்டாவானவர் எல்லாத்திசைகளிலும் பூமியில் சமுத்திரவளயத்தை யகழ்ந்ததேபோலக் கானனத்தில் எவ்விடத்திலும் அவ்வஸ்திபன் பெரும் படுகுழிகள் தோண்டி அவ்வஞ்சகனவன் மூடும்படியான தந்துஜாலமேபோலச் சுப்பிர அப்பிரபடலத்தால், சரற்கால அம்பிரமேபோல, அக்குழியை மேலாக இளந்தளிர்கண் முதலியவை கொண்டு மறைத்துவைத்தான்; சில தினங்களுக்குள்ளேயே அவ்வாரணமானது சுற்றிக் கொண்டே திரிந்து அவ்வனத்தி லப்பெருங்குழியில், காய்ந்த கடலின்கண்ணே பாய்ந்தமலை யேபோல, விழுந்துவிட்டது; வளயாகாரமாக மிகவும் ஆழ்ந்து தோண்டப்பட்ட அந்தக்கூபாகாரமாகிய பள்ளமென்னும், சூனியக்கடற் கீழ்ப்பாகத்தில், அகப்பட்டுக்கொண்டதாய அக்கயமும், இம்முறையானே கஜரத்தினச்சிமிழில், மறுபடியும் திடமாகப் பந்திக்கப்பெற்றதாயின்றுமிருக்கின்றது. பாதாளதல பீஷணத்தில்வீழ்ந்து அந்தவத்திபனாலே திடமாகக்கட்டுப்பட்டு வீட்டிற்கட்டுபட்டிருக்கும் மாபலியேபோலக் கட்டப்பட்டுக்கொண்டிருக்கின்றது. அந்த யானையானது முன்பு விழுந்த சத்துருவை முன்னரே கொன்றிருக்குமாயின் குழியில்வீழ்ந்து கட்டப்படுங்கட்டத்தை மறுபடியும் அடைந்திருக்கமாட்டாதன்றோ; இதனானே புத்திமானானவன் வருங்காலத்தை யிப்போதே சாஸ்திரீயமான புருடப்பிரயத்தினங்களினாலே துக்கபீஜத்தைத் துடைத்தலால்,சோதிக்கவேண்டுமென்றுகூறல்:—வினவியென்பதாதி. மூர்க்கத்தன்மையினாலே, வருங்காலவிடயத்தை வர்த்தமானக் கிரியாக்கிரமங்களினாலே சோதிக்காமல் நரனானவன் விந்தியகயம்போலத் துக்கத்தையேயடைவன்; எதுவரை சர்வதுக்ககாரணமாய அறியாமையானது கெடவில்லையோ அதுவரை, ஆயிரக்கணக்கான பிரயத்தனங்களினாலே துக்க உபசாந்தியைச் செய்தபோதினும், வியர்த்தமேயாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—ச்ஸ்திர நிபந்தனத்தினின்றும் விடுபட்டேன் என்று அவ்வாரணம் சந்தோஷத்தை யடைந்தபோதினும் வெகுதூரத்தில் ஓடிவிட்டபோதினும் மறுபடியும் கட்டுப்பட்டுத் துயரடைந்தது, மூர்க்கத்தகைமையானது யாண்டுதான் பாதிக்கமாட்டாது.

(ச) நிகழ்காலத்தால்=அஞ்ஞானத்தினல் நிகழ்காலத்துள்ள உபாயபேதங்களால், நோக்காதார்=நிரபாயத்தைச் சம்பாதியவர், மெலிகுவர் துக்கிப்பரென்றதாயிற்று, காதவளயம்= குழிவளயம், அஸ்தகயத்=மூடிவைத்தான். (112-113)

(ஸ்ரீ-வீ-அ-கை) மன்னவன் இருகதைகளின்பயனைக்கேட்ப முதற்கதைப்பயனை மொழியத்தொடங்கல்:—என்றலோடுமென்றது.

(ச)—சிகித்துவசன் இரண்டு கதையின் றூர்பரியத்தையும் வினவல்:—

என்றலோடுஞ் சிகித்துவச னெந்தாய்சிந்தா மணியாலும்
வென்றிவேழந் தன்னாலும் விளம்புகதையை விளக்குகென
நின்றகும்ப னுரைசெய்வா னெடுநூற்பொருள்கள் பலவுணர்ந்தோ
னன்றிஞான மில்லாதோன் நன்மாமணிதே டியவவன்றான்.

(ப - ரை) என்றலோடும்—எனவிவ்வண்ணம் கதைகளைக் கூறிமுடிக்கவே, எந்தாய்—எனது ஞானசிரியரே! சிந்தாமணியாலும்—சிந்தாமணியைப்பற்றியும், வென்றிவேழந்தன்னாலும்—வெற்றிபொருந்திய யானையைப்பற்றியும், விளம்புகதையை விளக்குகெனச் சிகித்துவசன்—கூறிய கதைகளை விளக்கியுரைக்கவேண்டுமென்று மன்னவன்கேட்ப, நின்ற கும்பனுரைசெய்வான்—அங்கு ஆசிரியராக எழுந்தருளிய கும்பமுனிவன் கூறுவதாவது, நெடுநூற்பொருள்கள் பலவுணர்ந்தோன்—பெரிய சாஸ்திரப்பொருள்கள் அநேகம் அறிந்தவன், நன்றிஞான மில்லாதோன்—நன்மையைப்பயக்கும் ஞானமாத்திரமின்றியவன், நன்மாமணி தேடிய அவன்றான்—நல்ல சிந்தாமணியைத் தேடிய அவன்றான்.

(ஸ்ரீ - வீர) ஹே தேவபுத்திரனே! உன்னால் எந்தமணி சாதகவிந்திய இப்பந்தனுதிகதாஜாலம் எனது சரித்திரசமமென்பதாகலின் எனது பிரதிபோதன உபாயம் என்று குறிப்பிக்கப்பெற்றதோ அதனை வெளிப்படுத்துவாயாக. என்றலும் கும்பன் ஆண்டாதியில் ஒருபுமான் ஸ்ரீமானுகவுளன் என்பதாதியானே கூடமாகக்கூறிய மணிசாதகன் நீயேயாவாயெனல்:—நெடுநூலென்பதாதி. யாவன் சாஸ்திரார்த்த குசலன் தத்துவஞானத்திலோது பண்டிதன், ரத்தினத்தைத் தேடித்திரிந்தான் எனக் கூறப்பெற்றனனே ஹேமகீபதியே அவன் நீயே யாவாய்.

(ச) மணிதேடிய வவன்றான். சாஸ்திரத்திற்கூறும் விதியாலுறும், இரத்தின சாதனத்தினால், இரத்தினங்கிடைப்பினும் அதன் நிச்சயமின்மையின் இரத்தினந்தேடியபுமான். (114)

(ஸ்ரீ - வீர - அ - கை) உன்னிடத்திற் கல்வான் சாஸ்திரகுசலன் என்பதாதியாகக்கூறிய இலக்கணமுளதாமெனல்:—என்னவென்பது.

என்னவுரைத்த துனையாநீ யெல்லாநூலுங் கற்றுணர்ந்து
மன்னுசாந்தி பெற்றிலைவான் மணியென்றதுதா னேதென்னி
லுன்னுவஞ்ச மறவெல்லா மொழிதலாகுந் துயரனைத்துந்
துன்னலில்லா வதுதேடத் தொடங்கியரசு துறந்தனையால்.

(ப - ரை) என்னவுரைத்த துனையாம் — என்று கூறியது உன்னையாம், நீயெல்லா நூலுங் கற்றுணர்ந்தும்—நீ சகலசாஸ்திரங்களையும் படித்தறிந்தும், மன்னுசாந்தி பெற்றிலை—நிலைபெற்ற சாந்தியை யடைந்தாயில்லை, வான்மணியென்றதுதான் ஏதென்னில் — உயர்ந்த இரத்தினமென்றதுதான் யாது என்றால், உன்னு வஞ்சமறவெல்லா மொழிதலாகும் — எண்ணும் வஞ்சனை யொன்றுமில்லாது யாவும் விடுதலாகும், துயரனைத்துந் துன்னலில்லாவது—துக்கமெவையும் பொருந்தாத அது, தேடத்தொடங்கி யரசுதுறந்தனை — அந்வேஷணஞ் செய்ய வாரம்பித்து அதன்பொருட்டு ராச்சியம் விட்டுவந்தனை. ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) இரவி மேருதடங்களிற்போலச் சாஸ்திரங்களில் மிகவுமறிவுடையவனுகவே யிருக்கின்றாய், நீரிற்கல்லேபோல நீ தத்துவஞானத்திலோ விசிராந்தி யடையாமலிருக்கின்றாய், யாதச்சிந்தாமணி எதன் சாதனத்தில் யான் முயன்றனனோவென வதனைக்கூறல்:— உன்னு என்பதாதி. ஹே சாதுவே! அகிருத்திரிமமாய சர்வத்தியாகமே சிந்தாமணியென்றறிதி; அச்சர்வ துக்கங்களின் அந்தத்தை நீ ஆயமதியுடையவனுய்ச் சாதிக்கின்றாய்போலும். எங்ஙனம் சர்வபரித்தியாகம் சித்தமெனின் உரைத்தல்:—அரசென்பதாதி. தனது நிசி வந்த போது பிரஷ்மாவினுலே ஜகத் சர்க்கவியாபாரம்போலத் தாரதனபந்துக்களோடு கூடிய இராச்சியம் உன்னுல் நன்குவிடப்பட்டது.

(ச.) மன்னுசாந்தி=தத்துவநிஷ்டை, எல்லாமொழிதல்=சகலத்தியாகம். (115)

(ஸ்ரீ-வீர-அ-கை) நீ சகலத்தையுந்துறந் திங்குவந்தும் சகலத்தியாக மடைந்தாயில்லையெனக்கூறிக் கனநயபிப்பிராயத்தை யுபசங்கரித்தல்:—மனைபிறிதளவென்பன.

மனையுங்கிளையுந் துறந்திங்ஙன் வனத்தில்வந்தாய் நாடகன்று
யனையசகலத் தியாகநிறை வாருமளவி லதன்விகற்ப
நினைவில்வளர்ந்து விண்மூடு நீலமுகில்போ லுனைமறைக்க
வினையசகலத் தியாகமுய ரின்பமல்ல மகத்தல்ல.

பிறிதொன் றுயர்ந்த துளததுதான் பெருநாண்முயன்று லெய்துமென
வெறியவிகற்ப மனநிறைய மிக்கதியாகம் போயினதாம்
நெறிகொள்சகலத் தியாகம்போய் நினதுதவமாம் வளையின்முறி
யறிவில்விகற்ப விழியாற்கண் டதுநன்றென்றே யழுங்குதியால்.

அளவற்றொளிதாஞ் சுகமகற்றி யறிதாயற்ப மாம்பொருளி
லுளமுற்றவரே யுயிர்க்கொலைஞ ருயர்வஞ்சகரென் றுலகுரைக்கும்
வளமிக்குயர்சிந் தாமணிநீ வந்ததென்றெண் ணியதவத்தாற்
றளர்வற்றிலைபெற் றிலையொன்றுந் தந்தியென்ற தினிக்கேளாய்.

(ப - ரை) மனையுங்கிளையுந் துறந்திங்ஙன்=தாரத்தையும் பந்துக்களையும் விட்டிவ்வாறு, வனத்தில்வந்தாய் நாடகன்றாய்=காட்டில்வந்தனை நாட்டினைவிட்டனை, அனைய சகலத்தியாகம்=நீவிரும்பிய சகலத்தியாகமானது, நிறைவாருமளவில்=பூர்ணமாகும் பரியந்தத்திற்குள், அதன் விகற்பநினைவில் வளர்ந்து = அதனது விகற்பமானது எண்ணத்தில் விருத்தியாகி, விண்மூடு நீலமுகில்போல்=ஆகாயத்தைமூடும் கார்மேகம்போல, உனைமறைக்க = உன்னையாச் சாதனஞ்செய்ய, இனைய சகலத்தியாகம்=இந்தச் சகலத்தியாகமானது, உயரின்பமல்ல மகத்தல்ல=மேலான ஆனந்தமும் அல்ல வேறொரு பெரும்பிரயோஜனமுமல்ல.

பிறிதொன் றுயர்ந்தது உளது=வேறொன்று மேலானது இருக்கிறது, அதுதான் பெருநாள் முயன்றால் எய்துமென=அதுவோ வெகுகாலம் முயற்சிசெய்தால் அடையலாமென்று, வெறிய=பைத்தியகாரப் பார்த்திபனே! விகற்பம் மனம்நிறைய=அநேக விகற்பங்களை மனதின்கண்ணே பூரித்துநிற்ப, மிக்கதியாகம் போயினதாம் = மிகுந்த தியாகமானது போய் விட்டதாம், நெறிகொள் சகலத்தியாகம்போய்=முறைமையேவந்த சகலத்தியாகமானதுபோய், நினதுதவமாம் வளையின்முறி=உன்னுடைய தவமாகிய வளையலோடு, அறிவில் விகற்பவிழி

யால்=அறிவில்லாத விகற்பமாகிய நேத்திரத்தினலே, கண்டது நன்றென்றே யழுங்குதி= பார்த்தது நலமுடையதென்றே துயரடைந்துள்ளாய். ஆல் அசை.

அளவற்றெளிதாஞ் சுகமகற்றி=அளவுகடந்திருப்பினும் சுலபமாம் ஆநந்தத்தை விலக்கி, அரிதாய்=துர்லபமாய், அற்பமாம் = பரிச்சின்னமாம், பொருளில் = வத்துவில், உளம்= மனம், உற்றவரே=பற்றியவரே, உயிர்க்கொலைஞர்=பிராணகாதகர், உயர்வஞ்சகரென் றுல குரைக்கும்=மேலான வஞ்சனையுடையவர்கள் என்று மேலோர் கூறுநிற்பர், வளமிக்குயர் சிந்தாமணிநீ=வண்மைமிகுந்து உன்னதமான சிந்தாமணிநீ, வந்ததென் றெண்ணியதவத் தால்=வந்தது என்று நினைந்ததவத்தினல், தளர்வற்றிலை=விசிராந்தியடைந்தாயில்லை, பெற் றிலையொன்றும்=யாதொன்றையும் அடைந்தாயில்லை, தந்தியென்ற தினிக்கேளாய்=யானை யென்று கூறியதை யினிக்கேட்பாயாக.

(ஸ்ரீ-வீர) உன்னுடைய தேசத்திற்கு அதிதூரமாய என்னுடைய ஆசிரமம் வந்து சேர்ந் தனை, கேவலம் சகலசந்தியாகத்தில் உன்னல் அபிமானரூப அவித்தையானது சேடிப்பிக்கப் பெற்றது; அகமதியைப் பரித்தியாகம் செய்திடில் எஞ்சியினிதுநின்ற பூர்ணனந்தாத்மாவாகிய பரமபுருடார்த்தம், தானகவே இருதயத்தில் நேராக இலங்குமெனச் சர்வத்தியாகமே மோக்ஷ மாம், சேடித்துநின்ற பரமானந்த சிந்தாமணியாம், அதனதிலாபத்தில் அதனை யுபேக்ஷித்து வேறென்றைத் தேடவேண்டியதில்லை, யென்னுங் கருத்தாலுரைத்தல்:—அனைய என்ப தாதி. மனமாத்திரத்திற் சுத்தானது தியாகிக்கப்பெறுமாயின் இருதயமானது பூர்ணத் தகைமையை அடைவுறும்; நீயோதியகருதுருத்துவ அபிமானபரிசேடத்தால் தியாக அத்தியாக விகற்பங்களினலே ஆவிருதனயினை; ஆகவே பூர்ணத்தன்மையை யடைந்தாயில்லையெனல்:— அதனென்பதாதி. தியாகாத்தியாக விகற்பங்களினலே நீகமம்போதங்களினற்போல ஆவிருத னயினை. விகற்பவசத்தினலேயே சர்வத்தியாக மடைந்தபோதினும் அவிசுவாசம் உனக்காய தெனல்:—இனையவென்பதாதி. இச்சர்வத்தியாகமானது பரமானந்தமுமல்ல மதோதயமு மல்ல, யாதோ ஒரு உன்னதமான அன்னியமேய்து வெகுகாலம் பிரயாசப்பட்டுச் சாதிக்கத் தக்கது பெரியதினும் பெரியது என்பதாகத்தோற்றியது தோற்றியதும் இவ்வகையாயசிந் தையினலே சித்தத்தில் விகற்பம் அதிகரிக்க அதிகரிக்க = சங்கற்பக்கிரகணம் மெதுவாக மெதுவாக நெடும்போது விருத்தியாகவே, அந்த வுன்னுடைய சர்வத்தியாகமானது எழுந்து போய்விட்டது காற்றின் மிகுதியினலே தருவனமானது மிகுதியும் அசைவுறவே, பறவை யெழுந்து ஓடிப்போவதேபோலவாம்; சர்வத்தியாகமணியானது இவ்வண்ணம் எழுந்து ஓடிப் போய்விடவே! ஹே கமலலோசனனே! பின்னர் யாதுன்னல் மணிமதியாற் கவரப்பெற் றதோ அது யாதுகொலாமாலோவெனின்? உன்னற் சங்கற்பவிழியினலே தவக்காசமணியே, கண்டெடுக்கப்பட்டதாம். அளவற்ற சுகமாய் எளிதிற் சாதிக்கவல்லதாயிருக்கும் சர்வத்தியா கத்தை விட்டொழித்து, அளவுபட்டுச் சாதித்தற்கு முடியாததானதவாதி வஸ்துக்களில் யாவன் முயல்கின்றனனே அச்சடன் அளவுபடாத ஆன்மசொரூப விகாதித்தன்மையானே சுவான்மாவையே கொன்றவனவன். சிந்தாமணி என்னலடையப்பெற்றது என்று அத்தி யர்தம் உணர்ந்துள்ளாய், ஹே சாதுவே படிகத்தினுடைய துண்டையும் நீ யடைந்தாயில்லை.

(ச) ஈட்டகன்றாய் ஆகலின், அனைய சகலத்தியாகமென்னுஞ் சிந்தாமணியைத் தேடத் தொடங்கினய், ஆயிற்சிந்தாமணியை யான் அடையாததென்னென்பதற்குத்தரம்: அது நிறை வாகுமளவில்=பூரணமாகும்போது, இனைய=இப்போது சித்தித்துள்ள, சகலத்தியாகம், உய

ரின்பம்=பரமானந்தமும், மகத்தல்ல = மேலான போதமுமன்று, ஆதலிற் சகலத்தியாக மன்றும்.

அதுதான்=பரமானந்த வேதுவான சகலத்தியாகம், போயினதாம், வாத சமூகத்தாற் சிறந்தவனமசைவுமிதிற் பக்ஷி பறந்தோடிப்போம் அதுபோலெனக்காண்க.

எளிதாம் = எளிதிற்சாதிக்கத்தக்க சகலத்தியாகமே, சுகம் = ஆநந்தமாம்; அதனை அகற்றி அறிதாய் = அநந்த துக்கத்தாற் சாதிக்கத்தக்கதாய், அற்பமாம் = பரிமிதமான, பொருள்=தவமாம் வஸ்துவின்முறியை, சிந்தாமணியெனவடைந்தவன் சுகத்தை யற்பமுமடை யானென்பது பொருள். இது சிந்தாமணி விவரணம்.

எதனல் உன்னுற் சர்வசந்தியாகத்தில், அகம்புத்தியானது கேவலம் சேடிப்பிக்கப் பெற் றதோ அபிமானமானது விடப்பெறவில்லையோ, அக்காரணத்தினுலே சர்வத்தியாகமாகிய இதற்குப் பூர்ணத்தன்மையின்மையினுலே, அதன் விடயவிகற்பம் உன்னை, ஆகாயத்தை யம் புதமேபோல மறைத்துவிட்டது; இது பாடபேதத்தை யனுசரித்தது. (116-117-118)

(ஸ்ரீ-வீ-அ-கை) இனிப்போதாந்தத் தியாகச்சித்தியின் பொருட்டு விந்திய இபவிருத் தாந்தமானதின்றார்ஷ்டாந்திகமாக அரசனது சரிதமானது கும்பமுனியாற் கூறப்பெறல்:— மதமென்றது.

(ச) இனி விந்தியகயக்கதையை மதமாவென்பதுமுதல் பாதலத்தி விருப்புதுபோல் என்பதந்தமாக; விவரணஞ்செய்தல்:—

மதமாவென்ற துனையாகும் வயிராக்கியமும் விவேகமுமே
யதனீள்கொம்பா முன்குணங்க ளானைமேற்கொண் டுழல்பாகன்
விதமாவுன்னை மெலிவிக்கு மிகுமஞ்ஞான மதனலே
சிதறுநின்று யரந்தைகளாற் செலுத்துமவனுற் கரிபோல.

(ப - ரை) மதமாவென்ற துனையாகும்=மதகஜமென்ற துன்னையேயாம், வைராக்கிய மும் விவேகமுமே = வயிராக்கியம் விவேகம் என்னுமிரண்டுமேயாகிய, அதன்நீள்கொம் பாம்=அதனுடைய நீண்டகொம்புகளாம், உன்குணங்கள் = உனது குணங்கள், ஆனைமேற் கொண்டுழல்பாகன் = யானையின்மேலேறி நடத்தும்பாகன், விதமாவுன்னை மெலிவிக்கும்= நானவகையாக வுன்னைத் துன்பப்படுத்தும், மிகும் அஞ்ஞானமாம்=மிகுந்த அறியாமையாம், அதனுலே சிதறுநின்றுய்=அதனுலே துன்புறுநின்றுய், அரந்தைகளால் = கஷ்டங்களால், செலுத்துமவனுற்கரிபோல=நடத்தாநின்றவனுல் யானையேபோல.

(ஸ்ரீ-வீர) ஹே இராஜசார்த்தூலனே! இப்போது, தத்துவத்தினது நன்ஞானப் பொருட்டு, விஸ்மயஞ் செய்விப்பதாய விந்திய இபவிருத்தாந்த விவரணத்தைக்கேட்பாயாக: விந்தியவனத்தில் யானை யாதொன்றிருந்ததோ அதுபோலவே நீயிப் பூமண்டலத்தில், அத னது இரண்டு வெண்கோடுகள் யாவையோ அவையே நினது விவேகவைராக்கியமென்பவை யாம்; யாவன்றான் யானைமேற்கொண்டு நடத்தும் பாகனிருந்தனனே அவனேயுன தஞ்ஞான மாம் உனக்குத்துயரந்தருவதாம் உன்னைமேய்த்தேவி நடத்துவதாம். பலவானேயாயினும் நீ துர்ப்பலமாகிய அறியாமையானும் ஹே மன்னவனே! கரியானது கரிப்பாகனுற்போல், துக்கத்தினும் துக்கத்தைப் பயத்தினும் பயத்தையடைகின்றாய்.

(ச) உன் குணங்களாகிய வைராக்கியமும் விவேகமுமே அதன் நீள்கொம்பாம் அத ஞலே அஞ்ஞானமயமான அரந்தைகளாற் சிதருகின்ருய் என்பதந்நுவயம். சிருங்கலாதிபந்த பஞ்சகத் தன்மையிஞலே கொம்பாம். பந்தகத்தன்மையானும் துக்கஹேதுத்தன்மையானும் அஞ்ஞானம்பாகனும். (119)

(ஸ்ரீ-வீ-அ-கை) அது கட்டுப்பட்டது லோகஜாலத்தால் என்பதை வெளிப்படுத்தல்:—இருப்பென்பது.

இருப்புக்கயிறும் விலங்குகளு மிச்சாபாச மென்பனவாம்
பெருக்கவிவற்ருற் கட்டுண்டாய் பேசுமிரும்பின் மிகவன்பா
மிருப்புக்கயிறும் விலங்குகளு மிகுநாட்செல்லிற் றேய்ந்தொழியுஞ்
செருக்குமாசை மேன்மேலே திடமாய்வளருந் தீர்க்கமுற.

(ப - ரை) இரும்புக்கயிறும் விலங்குகளும் = லோஹரஜ்ஜுவிலங்கு என்றவையோ, இச்சாபாசமென்பனவாம்=ஆசாபாசங்கள் என்பவையாம், பெருக்கவிவற்ருற் கட்டுண்டாய்= மிகவு மிவற்ருலே பந்தப்பட்டாய், பேசுமிரும்பின் மிகவன்பாம்=சொல்லாநின்ற அயவிகார வலிதாய, இருப்புக் கயிறும் விலங்குகளும்=லோஹரஜ்ஜு விலங்கு முதலானவை, மிகு நாட்செல்லிற் றேய்ந்தொழியும்=நாட்பட நாட்படத் தேய்ந்து கெட்டுப்போகும், செருக்கு மாசை மேன்மேலே=கருவித்துவரு மாசையோ மேலும் மேலும் திடமாய் வளருந் தீர்க் கமுற=திரமாக விருத்தியாகும் நீட்சியுற்று நீட்சியுற்று.

(ஸ்ரீ - வீர) லோகவஜ்ஜிர சாரத்திஞலே வாரணமானது எப்பக்கத்தினும்பத்தமாயது என யாது ஓதப்பெற்றதோ, அது இராஜ்ஜியபாலனகாலத்தில் நீ பாதபரியந்தம் நிறைய ஆசா பாசஜால ஆபத்துக்களால் ஆவிருதனுயிருந்ததை யோதியதாம். லோகரஜ்ஜுகளைப்பார்க்கி லும் ஆசையானது விஷமமாம் விஸ்தாரமாம் திடமாம், ஒவ்வொருகாலத்தில் உலோகம் க்ஷீண முறும், ஆசையோ நாட்குநாள் மிகவளரும்.

(ச) ஆசாபாசம் மிகவன்பாம். (120)

(ஸ்ரீ - வீர - அ - கை) அத்தந்தங்களால் விடுவிக்க முயன்றதென்றதன் ருற்பரியத்தை யுரைத்தல்:—மூரியென்பது.

மூரிக்கயிறும் விலங்குகளு முறித்ததானை யென்றதுதான்
பாரிச்சுகமெல் லாநீமுன் பற்றற்ருெழித்த படியாகுஞ்
சூரிற்பாகன் வீழ்ந்ததுநின் றுறவின்மடமை வீழ்ந்ததுவாம்
பேரிச்சையைநீக் கிடிற்பின்னைப் பிறவிதரும்பே தைமையுண்டோ.

(ப - ரை) மூரிக்கயிறும் விலங்குகளும்=பலமான கயிறுகளும் பந்தனங்களும், முறித் தது ஆனையென்றதுதான்=பொடித்ததுகயமென்றதானது, பாரிச்சுகமெல்லாம் = ராஜ்ஜிய சுகபோகங்களனைத்தையும், நீமுன் பற்றற்ருெழித்தபடியாகும்=நீ முன்னர்ச் சர்வசங்கங்களை யும் விட்டுநீக்கிய தன்மையாகும், சூரிற்பாகன்வீழ்ந்தது = சூரத்தன்மையில்லாமற் பாகன் வீழ்ந்துவிட்டதென்றது, நின் றுறவின் மடமைவீழ்ந்ததுவாம்=நினது சர்வத்தியாகத்திஞலே அறியாமை கெட்டேகியதாம், பேரிச்சையை நீக்கிடிற்பின்னை=பேராசையை யகற்றிடிற்பின் னர், பிறவிதரும் பேதைமையுண்டோ=ஜனனமீயும் அறியாமையுமுளதோ.

(ஸ்ரீ - வீர) யதுயானையானது பகைவனிட்ட சிருங்கலை ஜாலயந்தனத்தைப் பொடித்ததோ அதீ நீ யோகபூமியையும் அகண்டக இராஜ்ஜியத்தையும் துறந்துவந்ததாம்; அவன் பாதபதுமங்களாற் கரியின்சிரம் அகப்படப்பெறாமல் தவறிவிழுந்தனன் பூமியில் என்று யாது கூறப்பெற்றதோ அதையறியாமையிற்காட்டல்:—சின்றெனபதாதி. இபமானது உன்னதமான பந்தத்தைப் பொடித்தெறிந்தபோது பாகன் வீழ்ந்தனன் என்றதோ, நீ இராச்சியாதிகளையெல்லாம் விட்டொழித்தபோது, அஞ்ஞானம் வீழ்வுற்றதெங்ஙனமாமோ அங்ஙனம் உன்னுலாக்கப்பெற்றதாம், வீழ்த்தப்பெற்றதேபோலச் சர்ச்சரீகிருதமென்பதாம்.

(ச) சூரில்=தாலதருவினின்றும், சிருங்கலையின்பங்கமோ இராஜ்ஜியபோகத்தியாகமாம், தாலதருவினின்றும் தவறியது அறியாமையின் பிரம்சமாம். (121)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதனையே வெளிப்படுத்தல்:—போகமென்பது.

போகமயலை விரத்தியினுற் போக்கநினையி லஞ்ஞான
மேகநினைந்து வெட்டுமரத் திருக்கும்பேய்போ னின்றலையு
மோகமறவே போகங்கண் முற்றும்விவேகத் தால்விட்டால்
வேகமுறப்போ மஞ்ஞானம் வெட்டிவீழ்ந்த மரப்பேய்போல்.

(ப - ரை) போகமயலை = போகமயக்கத்தை, விரத்தியினுல் = வைராக்கியத்தினுல், போக்கநினையில்=நீக்கவெண்ணில், அஞ்ஞான மேகநினைந்து = அறியாமையானது செல்லவெண்ணி, வெட்டுமரத்திருக்கும் பேய்போல் நின்றலையும்=வெட்டாநின்ற விருக்ஷத்திலிருக்கும் பிசாசேபோல இருக்கவிடமில்லாமல் அலையாநிற்கும், மோகமறவே போகங்கள்=மயக்கமறவே போகங்கள், முற்றும்=அனைத்தையும், விவேகத்தால் விட்டால் = ஆராய்ச்சியினுல் விட்டுத்தொலைத்தால், வேகமுறப்போமஞ்ஞானம்=அதிவேகமாக அறியாமையானது போய்விடும், வெட்டிவீழ்ந்த மரப்பேய்போல்=வெட்டுதலினுலே வீழ்ந்துவிட்ட மரத்திலிருந்த பேயேபோலும்.

(ஸ்ரீ - வீர) எப்போது விரக்தபுருடனுனவன் போகாசையை விடுவான் இச்சிக்கின்றனனே, அப்போது அஞ்ஞானம் நடுநடுங்கத்தொடங்கும், விருக்ஷம் வெட்டுப்படவே பிசாசேபோலும், எப்போது விவேகிபுருடனுனவன் போகங்களை விட்டொழித்துச் சும்மாவிருக்கின்றனனே, அப்போது அஞ்ஞானமானது ஓடிவிடுகின்றது, வெட்டிய விருக்ஷத்தினின்றும் பிசாசே போலும். (122)

(ஸ்ரீ-வீர-அ-கை) அஞ்ஞானம் போனதையே வேறு திருட்டாந்தத்தாற்கூறி அன்றேகொன்றிலையாதலின் துன்புறுத்தியதெனல்;—மட்டிலதனுலென்பன.

மட்டில்போக மெலாமொழித்தான் மடமைத்தொடர்ச்சி யெல்லாம்போம்
வெட்டிவீழ்ந்த மரநின்று வீழ்ந்துபோம்புட் கூடுகள்போற்
கிட்டிவனநீ யடைந்தளவே கிளரஞ்ஞானம் வீழ்ந்துளதாற்
றட்டில்சகலத் தியாகமெனுந் தனிவாளாற்கொன் றிலையதனை.

அதனுன்மீள் முளைத்தெழுந்த வஞ்ஞானத்தா லறநொந்தாய்
மதமாவுக்குப் படுகுழியை வகுத்தான்பாக னென்றதுதான்
றிதமாவுனக்குத் தவத்துன்பஞ் செறியஞ்ஞானஞ் சேர்த்ததாம்
சுதமார்குழிமேன் மென்குடிக டியர்கூர்தவஞ்சேர் நற்றெழில்கள்.

(பி - ரை) மட்டில்போக மெலர்மொழித்தால்=அளவில்லாத ரசமில்லாத போகங்களை யெல்லாம் அகற்றிவிட்டால், மடமைத்தொடர்ச்சி யெல்லாம்போம்=அறியாமைச் சம்பந்தம் யாவுமே போய்விடும், வெட்டிவீழ்ந்த மரம்நின்று=வெட்டி வீழ்த்தப்பெற்ற மரத்தினின்றும், வீழ்ந்துபோம் புட்கூடுகள்போல் = விழுந்துபோகும் பக்ஷிக்கூடுகளேபோல, கிட்டிவனநீ யடைந்தனவே = நெருங்கிக் காட்டைநீ சேர்ந்தபோதே, விளரஞ்ஞானம் வீழ்ந்துளதால்= விரிவான வறியாமை வீழ்ந்துபோயது, ஆல் அசை, தட்டில் சகலத்தியாகமெனும் தனி வாளால்=தடையில்லாத சர்வசங்கபரித்தியாகமென்னும் ஒப்பற்ற வாளாயுதத்தால், கொன் றிலையதனை=அதனைக்கொன்றாயில்லை.

அதனால்=அக்காரணத்தினால், மீளமுளைத்தெழுந்த வஞ்ஞானத்தால்=மறுபடியும் அங் குரித்தெழுந்த அறியாமையினாலே, அறநொந்தாய்=அத்தியந்தம் துக்கித்தாய், மதமாவுக்குப் படுகுழியை=மத்தகயத்திற்குப் படுகுழியை, வகுத்தான்பாகன் = தோண்டினான் மாவுத்தன், என்றதுதான்=என்று கூறியதுதான், திதமாவுனக்குத் தவத்துன்பம் = நிலையாயவுனக்குத் தவமாகியதுயரம், செறியஞ்ஞானஞ் சேர்த்தியதாம் = பொருந்திய அறியாமை சேர்ப்பித்த தாம், சுதமார் குழிமேல்=மிகவும் ஆழ்ந்துள்ள குழியின்மீது, மென்கொடிகள் = மெல்லிய கொடிகளாவன, துயர்சூர்தவஞ்சேர் நற்றொழில்கள் = துன்பம்பயக்கும் தவத்திலுற்றனவா கிய நல்ல வினைகளாம்.

(ஸ்ரீ - வீர) போகக்கூட்டங்களத்தியந்தம் விடுபட்டபோது அஞ்ஞானமானது தன்நிதி யினின்றும் வீழ்ந்துவிடுகின்றது; பாதபம் வெட்டி வீழ்த்தப்பட்டபோது அதன்கண்ணிருந்த கூண்டும் வீழ்வதேபோலவாம்; எப்போதுநீ வனம்போனாயோ அப்போதே உன்னால் அறி யாமைக்ஷமரயதாம், அது வீழ்ந்தபோதே மனத்தியாக மகாஅசியினாலே வெட்டாமல் விட்டு விட்டாய், சிதிலீபூதமாயினும், தத்துவ ஞானத்தினாலே நிர்மனஸ்கத்தன்மை வடிவமாகிய பெரிய வாளினாலே வெட்டாமல் விட்டுவிட்டாயப்போதே சூடாலை யுபதேசித்ததைச் சிர வணித்தபோதுண்டாம் தத்துவபோத அவசரமுண்டாயதல்லவா அப்போதே, என்பது கருத் தாம். உன்னா லுபேக்ஷிக்கப்பட்ட அறியாமையினாலே, மறுபடியும் நன்கெழுந்து நினைந்து துன்புறுத்தப்பெற்றாய், அவமானிக்கப்பட்டாய், இத்தவப்பிரபஞ்ச ஆழ்ந்தவித்தாரப்படுகுழி யில் ஆழ்த்தப்பட்டகப்பட்டுக்கொண்டாய், இராஜ்யத்தியாகஞ்செய்த அப்போதே நீ எதிரில் வீழ்ந்த அஞ்ஞானத்தைக் கொன்றிருப்பையேயாயின் அது அப்போதே க்ஷயமடைந்ததாய் உன்னைத் தவக்குழியில் வீழ்த்தலானே துன்புறுத்தியிருக்கமாட்டாதன்றோ என்பார் அற நொந்தாயென்றார். அவன் படுகுழியைத் தோண்டிவைத்தான் என்றதன் றாற்பரியத்தை யுரைத்தல்:—மதமாவென்பதாதி. அந்தவைரியினாலே ஹஸ்திக்குக் காதவளயம் செய்யப்பட்ட தென்று யாது ஓதப்பெற்றதோ அது தவதுக்கமனைத்தும் அஞ்ஞானத்தினாலே யுனக்கு அருப் பிக்கப்பெற்றதாம்; யாண்டிருந்ததோர்கம் ஆண்டுச்சந்நிதியில், கயத்தினிடத்திற் பற்றுள்ள ஜனங்களின் பாகுல்யத்தையுடையதாகிய மேலாய ராஜப்பிரயுக்தகாத சாமக்கிரியினாலே கஜ பந்தன ஆற்றலுற்ற குழியைத்தோண்டினான் என்று ஸ்ரீ குருவீரசேகரப்படியுள்ளகூற்றில் இராஜசாமக்கிரியையை வெளியாக்குதல் :—ஹே நிருபசத்தமனே! அந்தக்கஜாரியாகிய ஹஸ்திபகனுக்கு, இராஜப்பிரயுக்தமாய பரிவார ஸ்ரீயென்னும் காதசாமக்கிரியாஞ்சம்பத்து யாது கூறப்பெற்றதோ அதுவோ, அவஞ்ஞானமென்னும் விசார அநாதரவடிவஹஸ்திபக நர பதியின் சிந்தாப்யந்தரசாரிணியாம் அந்தரங்க ஐசுவரியபூதமாம்; சிந்தையேதான் அவிவேக னுக்குச் சர்வ ஐஸ்வரியம் என்பதுகருத்தாம். அச்சடனவன் அக்குழியை மேலாக இளங்

கொடிக்கூட்டங்களானே மூடிவைத்தான் என்பதன் ருற்பரியத்தை வெளிப்படுத்தல்:—காத வளயமானது பாலலதைகளினுலே மூடப்பெற்றதென்று யாதுரைக்கப்பெற்றதோ அது தபோதுக்கமானது சாந்திக்ஷாந்தியாதி குணங்களினுலும், சாதுஜன சமாகமத்தாலும் சிறிது மறைபெற்றதாம்; (123-124)

(ஸ்ரீ-வீர-அ-கை) இந்தப்பிரகாரம் அந்த யானையானது மீளவும் யானைப்பாகனுலே திடமாகக் கட்டப்பெற்றது, இன்றுந் துக்கத்தோடு மிருக்கின்றது பூவீட்டில் மாபலியேபோலும், என்னும் உபசங்காரத்தினது தாற்பரியத்தை வருணித்துக்கொண் டுபசங்கரித்தல்:—இவ்வா றென்பது.

இவ்வாறின்று மிடர்தவமா மிந்தக்குழியி லுழக்கின்றாய்
வெவ்வாள்வலிமா வலிசிறையாய் மிகுபாதலத்தி லிருப்பதுபோல்
தவ்வாமொழிமென் சூடாலை சாற்றுஞான மிழந்தனையே
னைவாய்சகலத் தியாகத்தை நழுவினுயே னவில்கென்ன.

(ப - ரை) இவ்வாறின்றும்=இந்தப்பிரகாரம் இப்போதும், இடர்தவமாம் = துக்கமயமான தவமாம், இந்தக்குழியில்=இப்படுகுழியில், உழக்கின்றாய்=அவதிப்படுகின்றாய், வெவ்வாள் வலிமாவலி=கொடிய வாளாயுதத்தையுடைய பலமிகுந்த மகாபலிச் சக்கிரவர்த்தியானவன், சிறையாய் மிகுபாதலத்திலிருப்பதுபோல் = உயர்வு மிக்க பாதாளத்திலடைபட்டு வைகுவதுபோல், தவ்வாமொழிமென் சூடாலை=தவருத சத்தியவசனத்தையுடைய அழகிய சூடாலையானவள், சாற்றுஞான மிழந்தனையேன் = உபதேசித்த பிரஹ்மவித்தையை யேன் விட்டுவிட்டாய், நைவாய்=இத்தவத்தானே அவதிப்படுபவனே! சகலத்தியாகத்தை நழுவினுயேன்=சர்வ சங்கபரித்தியாகத்தை விட்டொழித்தாயேன், நவில்கென்ன = கூறுவாயாக வென்றுகேட்ப.

(ஸ்ரீ - வீர) இவ்வண்ணமின்றும் மிக்கொடூரமான இந்தத் தவத்துக்கப்படுகுழியில் இருந்துள்ளாய், ஹே நரபதியே! பாதாளதலத்தில் மாபலிபந்தப்பட்டிருப்பதேபோலும். எப்போதுநீ வனத்திற்கு வந்தாயோ அப்போதே யஞ்ஞானம் வீழ்ந்ததுகொண்டு கொன்றிலா யென்று உன்னுற்கூறப்பெற்றது, ஆண்டப்போதெனக்கு மனத்தியாக உபாயம் யாவராலுபதேசிக்கப்பெற்றது யாது என்னுலுபேக்ஷிக்கப்பெற்றதோ என்னும் ராஜசங்கையை விதர்க்கம் செய்பவளாய சூடாலைகூறல்:—தவ்வா என்பதாதி. நயசாலியாயும் அறியவேண்டியதை யறிந்தவளாயும் இரங்கிய அச்சூடாலையினுலே அப்போது எந்த ஞானமானது கூறப்பெற்றதோ அதனையேன் நீ யங்கீகரித்தாயில்லை; அவளுக்கு அதத்துவவித்தாந்தன்மை அநிருதவாதிநீத் தன்மைமுதலவாய சங்கையை யகற்றல்:—அச்சூடாலையோ தத்துவவித்துக்குள் முக்கியமானவள், யாதுயாது கூறுவளோ செய்வளோ அவையாவும் சத்தியமேயாம். ஹே மன்னவனே! அவை யாவற்றையுமே ஆதரவுடன் நீ யநுட்டித்திருக்கவேண்டும். தன் புத்தியினுற் சிரஞ்சீவிக்குக, குருபுத்தியினுல் விசேடமதாக, பரபுத்தியோதான் விநாசப்பொருட்டாம், பெண்புத்தியந்தோ பிராணாபாயமியற்றும், என்னும் வசனத்தினுலே பெண்புத்தியை யுபேக்ஷித்துச் சொந்த புத்தி நிச்சிதமாய சர்வத்தியாகமே, வெகுமானிக்கத்தக்கதேலாயின், அதுவே யுன்னுல் என்ன காரணத்தினுற் றிடப்பெறுத்தப்படாமற் போயதோ என்றுரைத்தல்:—ஹே நிருபனே! அச்சூடாலையினது வசனம் உன்னுல் அனுட்டிக்கப்பெறவில்லையாயின், அச்சர்வசங்க பரித்தியாகத்தையே யேன் நிபுணமாகச் செய்தாயில்லை?

(ச) மதமாவென்றதுனையாகும், விந்தத்தந்தி நீயேயாம், மூர்க்கமுறுதலின், உன்குணமே கொம்பாம், விலங்கின் பிணிப்பைக் கண்டித்தலின், ஆனைப்பாகன் உன் அஞ்ஞானம், பிணித்தலினும் துக்கவேதுவாதலினும், விலங்கை முறித்தது இராச்சியபோகத்தியாகமாம், பாகன் றருவினின்றுங் கலங்கினது, இல்விட்டு வந்தபோது அஞ்ஞானம் கலங்கியதாம், பாகனையுபேக்ஷித்தானை வனஞ்சென்றது நீ சகலத்தியாகத் தனிவாளால், சேடமற வஞ்ஞானத்தைச் சேதியாமல் வனம் அடைந்ததாம். பாகன்மீள யானையைப் பிணித்தற்கு வனத்திற் படுகுழிவகுத்தது அஞ்ஞானம் தபோநியமத்தைச் சேர்த்தியதாம், குழிமேன் மென்கொடிதிரணதிகளால் மறைவித்தலென்றது, தபோதுக்க நற்றொழிலாற் கொஞ்ச மறைபடலென்பது தாற்பரிய நிச்சயமாம்; அச்சூடாலையின்மொழி = வசனத்தை, தவ்வா = அநுஷ்டித்தனை யின்றாயினும், நைவாய், நின்னுத்திப் பிரமாணத்தாகிய வந்தச் சகலத்தியாகத்தையாவது நழுவினாய் = சம்பூரணஞ் செய்தாயில்லை, என் = யாதுகாரணம், இது கயக்கதையாம்; சாலினி=சிலாக்கியை. (125)

(ஸ்ரீ-வீ-அ-கை) இராஜ்யாதி பரித்தியாகமாத்திரத்தானே, "ஹே சாதுவே! நன்கு முயன்று சாதித்துக்கொண்டிருக்கும் உனக்குச் சர்வபரித்தியாகம்சித்தமாம், ஹைரண்ய கர்ப்ப பதாந்தமாய உலகப்பிரசித்த ஐசுவரியபரம்பரை, துச்சமாக்கப்பெற்றது எதனுனே அத்தகைய வித்தை வடிவமும், சுவாத்ம உதயமாகிய நிரதிசயாநந்த அப்யுதயம் எதனுனுமோ அத்தகைய தேயாய சர்வப்பரித்தியாகமும், சித்தமாம்" என வுன்னுலேயே கூறப்பெற்றதே (ஸ்ரீகுருவீரசேகரப்படி) என்னுற்றியாகிக்கப்பெற்ற இராச்சியாதி மறுபடியும் கவரப்பெறவில்லையே, ஆகவின் எங்ஙனம் என்னுல் சர்வத்தியாகமானது நிபுணமாக்கப்பெறவில்லை? என்று சிகித்துவஜன் வினுதல்:—வேந்தன் என்பது.

வேந்தனுரைப்பான் பார்விட்டேன் வீடுவிட்டே னிதிவிட்டேன்
காந்தைதனைவிட் டேன்சகலத் தியாகங்கைவிட் டதுமற்றென்
றோர்ந்துபுகலென் றுங்கும்பன் செப்புவானீ தேசமுதற்
சார்ந்தவெல்லாம் விட்டாலுஞ் சகலத்தியாக மன்றாகும்.

(ப-ரை) வேந்தன் உரைப்பான்=அரசன் கூறுவான், பார்விட்டேன்=இராச்சியத்தை விடுத்தேன், வீடுவிட்டேன் நிதிவிட்டேன் = கிருகத்தைத்தியாகித்தேன் ஐசுவரியத்தையும் விட்டேன், காந்தைதனைவிட்டேன்=மனைவியையும் விடுத்தேன், சகலத்தியாகங் கைவிட்டதுமற்றென்=சர்வத்தியாகத்தை யென்னேயான் குறைத்து விட்டுவிட்டேன்? தேர்ந்துபுகலென்றுங்கும்பன்=ஆராய்ந்து கூறுவாயாகவெனவே கும்பமுனிவன், செப்புவான்=கூறுவான், நீதேசமுதல்=நீதேசமே முதலாக, சார்ந்தவெல்லாம் விட்டாலும்=பற்றிய யாவற்றையும் விட்டபோதிலும், சகலத்தியாகமன்றாகும்=சகலத்தியாகமல்லவாகும்.

(ஸ்ரீ-வீர) இராச்சியத்தைவிட்டேன் மனையைவிட்டேன் செல்வம்வாய்ந்த தேசத்தையும் விட்டேன் மனைவியையும்விட்டேன் என்றபோதினும் ஹே முனிவனே! சர்வத்தியாகம் என்னதான் செய்யப்பெறவில்லை? கேவலம் சர்வசந்தியாகத்தில் உன்னல் அகமபிமானரூப அவித்தையானது சேடிப்பிக்கப்பெற்றது. எனவென்னுன் முன்னர்க் கூறப்பெற்றதே யிதற்குத்தரமாம், விவேக அபாவத்தினுலே இவனடைந்திலன், ஆகவினிந்தவன ஆசிரமக்குடிசை கமண்டலமுதலிய சங்கிரகசேடத்தையும் எஞ்சுதலில்லாமல் விடுவனேலாயின் ஒருவாறாக விவேகத்தையடைந்து, அகங்காரக் கிரந்தியைவிட்டு, பூர்ணமாவானென்று எண்ணினவளாய்,

மெதுவாக அவனது யுத்தியை விசாரம் அடைவுறுமாறு செய்விப்பவளாய சூடாலையானவள் கூடாபிப்பிராயத்தானே கூறல்:—செப்புவானென்பதாதி. தனம் தாரம் கிருகம் இராச்சியம் பூமி குடை பந்துக்கள் என்பனயாவுமே, விட்டபோதினும் உனக்கரசனே சர்வத்தியாகமன்ருகும், ஏனென்ருல் உனக்கும் இவற்றிற்கும் என்னும்; எது தன்சம்பந்தியாமோ சர்வமும் ஆமோ, அதன்றியாகமாயின் சர்வத்தியாகமானது சித்திக்கும், இராச்சியாதிகள் உனக்குச் சுவ சம்பந்திகளேனும் சர்வமேனுமலவாம், அகங்காரமே தான் இராஜ்ஜியாதிகளை யெனதென்று கற்பித்துக்கொண்டு அவற்றின் சுவாமித்தன்மையை யெண்ணுகின்றது, ஆத்மாவல்லவாம், என, பிராப்தியபாவத்தான், சர்வத்தியாகமுனக்குச் சித்தமாகவில்லை என்பது கருத்தாம்.

(ச) எல்லாம்—ஈதனைத்தும், உன்னுடையதன்ருதலின் சகலத்தியாகமெப்படியாம், அந்நியனுடையதின் றியாகம் தியாகமன்றென்பது பொருள், குடையென்றது இராஜ சின்னங்கள் பிறவற்றிற்கு முபலக்ஷணமாம், என யாவுமே உன்னுடையனவல்லவாம் என்னின் சர்வத்தியாகமென்பதற்கு என்னதான் கருத்தோ தெரியவில்லை? (126)

(ஸ்ரீ-வீ-அ-கை) அகங்காரத்திற் றுதாத்மிய ஆரோபத்தால் ஆத்மா இராஜ்யாதி சுவாமித்தன்மையை யடைவுற்றது, எனக்கூறப்பெறுவதாயின் அதனது தியாகத்தினலே இராகாதிகளின் றியாகமாம், அயல்வகையாற் சித்தியாதாம்; அதுவுமுன்னுற் றியாகிக்கப்பெறவில்லை யென்னுங் கருத்தாலுரைத்தல்:—எல்லாவென்பது.

(ச) ஆயின் என்னது யாதென்பதற்குத்தரம்:—

எல்லாத்திலும்பற் றுண்டுனக்கவ் விச்சையெல்லா மறவிட்டு
நல்லார்க்குரிய நல்லின்ப நண்ணுகென்ன மன்னுரைப்பான்
மல்லார்புவிவிட் டதுசகல மன்றேல்வனமே யெனக்குளது
கல்லாற்றருவா னிறைகாட்டிற் காதலுறுவா தனைவிட்டேன்.

(ப - ரை.) எல்லாத்திலும் பற்றுண்டுனக்கு — யாவற்றினுமே ஆசையுளதுனக்கு, அவ் விச்சையெல்லா மறவிட்டு—அந்த அவாக்களையெல்லாம் அத்தியந்தம் விடுத்து, நல்லார்க் குரிய நல்லின்ப நண்ணுகென்ன — சாதுக்கட்குரித்தாகிய பேரானந்தத்தையடைவாயாக வென்றுகூற, மன்னுரைப்பான் — அரசனறைவான், மல்லார்புவிவிட்டது சகலமன்றேல் — சகல ஐசுவரியங்களோடுகூடிய இராஜ்ஜியத்தைவிட்டது சகலத்தியாகமல்லவாயின், வனமே யெனக்குளது—காடேயெனக்குப் பற்ருகவுளது, கல்லால்தருவால் நிறைகாட்டில்—கற்களா லும் தருக்களாலும் பூரித்துள்ள ஒருபயனு மற்றவனமே சேடமாமதனில், காதலுறுவா தனை விட்டேன்—ஆசையுறு வாசனையையும் விட்டொழித்தேன்.

(ஸ்ரீ-வீர) சர்வத்தினின்று முத்தமமான இராகபாகமானது உனக்கு விடுபடாததாகவே யிருக்கின்றது, அதனைச் சேடமில்லாமல் விட்டுத்தொலைத்து விசோகத்தன்மையை யடைந்திடுவாயாக; கூறிய கருத்தையறியாதவனுய், பூர்வம் பரித்தியக்தத்தன்மையானே இராச்சியாதிகளில் உனக்கிப்போது இராச்சியாதி சம்பந்தமிலதாமெனத் தியாகயோக்யதையின்றும், சைலவிருக்ஷாதிகளேயோ இப்போது கவர்ந்திருத்தலின் அவற்றின்றியாகமில்லாமல் உனக்குச் சர்வத்தியாக சித்தியிலதாம், என வாசிரியன் கருத்தாமென்று எண்ணினவனுய சித்தத்துவன்கூறல்:—மல்லென்பதாதி. இராச்சியமெனக்குச் சர்வமன்றுகுமேலாயின் வனமே யெனக்குச் சர்வமாம், சைலவிருக்ஷாதி குல்மாதிகளோடு கூடியதாகிய இவ்வனுபிமானத்தையும் விடு

கின்றேன்; இவ்வண்ணம் இனிமேலும் அரசனுடைய பேதப்பிரமம் ஊகிக்கத்தக்கதாம்; இந் தப்பிரகாரம் கூறிக்கொண்டே ஹே இராகவனே! கும்பவாக்கியத்தா லினிதேவப்பெற்றவ னுய், வசியாய் வீரனுயுள்ள சிகித்துவசன், நிமேஷாந்தரமாத்திரத்தானே மிகுந்த திடநிச்சயஞ் செய்தவனுய், தனது அவ்வனத்திலிருக்கும் பற்றைத்தானே தன்னுனே நன்கு துடைத்தான், மழைப்பிரவாகமானது தடத்திலிருக்குந் தூளிக்கூட்டத்தையே போலும்.

(ச) எல்லாத்திலும்=சகல பொருளிலும், பற்று=இச்சைவிடயம், உனக்குண்டு, அவ் விச்சையெல்லாமற=அவ்விச்சையைச் சேடமற, விட்டு, பரமாநந்தத்தை நண்ணுவாய், விட் டேனென்று வனுபிமானத்தை இமைப்பில் விடுத்தான். (127)

(ஸ்ரீ-வீர-அ-கை) சகலத்தியாகியாய்விட்டேன் என்று சிகித்துவசன் கூறுதலும், கும் பன் அன்றென மறுத்தல்:—இனியென்பது.

இனிநான்சகலத் தியாகத்தை யெய்தினேனென் றலுங்கும்பன்
கனியார்மரமு நெடுமலையுங் கழன்றுற்சகல மன்றுனக்குத்
துனியார்பற்றுண் டனைத்தினுமத் துன்பந்துறந்தாற் சுகமென்னப்
புனிதாவிதுவு மன்ருகிற் புகல்வேனெனப்பூ பதிபுகலும்.

(ப - ரை) இனிநான் சகலத்தியாகத்தை யெய்தினேன் என்றலும்=இப்போது முதல் யான் சர்வபரித்தியாகத்தை யடைந்துளேன் என்று மன்னவன்கூறுதலும், கும்பன் = குர வன், கனியார்மரமும் நெடுமலையும் கழன்றல்=பழங்கள்நிறைந்த விருக்ஷமும் பெரிய பர்வதங் களும் விடுபட்டமாத்திரத்தானே, சகலமன்றுனக்கு=சருவமாகாதுனக்கு, துனியார்பற்றுண் டனைத்தினும்=துன்பம்பயக்கும் இராகம் உளது யாவற்றினும், அத்துன்பந்துறந்தாற் சுக மென்ன=அந்தத் துக்கத்தைவிடுத்தா லாநந்தமடையலா மென்றுகூற, புனிதா=வித்திரமான குரவனே, இதுவுமன்ருகிற் புகல்வேன்=இதுவும் சருவமல்லவாயிற்கூறுவேன், எனப் பூபதி புகலும்=என்று மன்னவன்கூறுவான்.

(ஸ்ரீ-வீர) விருக்ஷாதியோடுகூடிய வனக்குழியினின்றும் விபினத்தினின்றும் மமதை வாசனையானது நன்குவிடப்பெற்றது என்னுல் அத்தியந்தம் அதனுலே எனக்குத் திரத்தியாக மானது சம்பன்னமாம், என்னக் கும்பன்கருத்து முன்போலுங்கொள்க; மலைத்தடம் வனங் குழிசலிலம்பாத பத்தலம், என்பதாதி யுனக்குச்சர்வமன்றும் என்னின் எங்ஙனம் சர்வத் தியாகமுனக்கு யாவற்றினும் உத்தம்மான இராகபாகமானது விடுபடாததாக உனக்குளதே யாம்; அதனைச் சேடமில்லாமல் நன்குவிடுத்து அசோகத்தன்மையை நன்ருக அடைவா யாக. (128)

(ஸ்ரீ-வீ-அ-கை) வனுதியாகத்தானே யுனக்குச் சர்வமுமாகவில்லை, ஆகுகதானுயினும் உனக்காசிரம சற்பாவத்தாலியாங்ஙனம் சர்வத்தியாகஞ் சித்தித்தல், என்று கூறுகின்றுன் குர வன் என்னை நோக்கி என்று எண்ணினவனுகிச் சிகித்துவசன்கூறல்:—கந்தையென்பது.

கந்தைதண்டு செபமாலை கலைத்தோல்பாண்டங் கமண்டலமுண்
டெந்தையிவற்றை விடுகின்றே னென்றுகூட்டி யெரிகொளுத்திச்
சிந்தைகளித்து வெற்றுடலாய்ச் சிக்கற்றனன்பற் றிலனென்றே
முந்தையறிஞன் முகநோக்கி மொழியலுற்றுன் சிகித்துவசன்.

(ப - ரை) கந்தை=பீறல்வத்திரம், தண்டு=தண்டம், செபமாலை=ஜெபமணி, கலைத் தோல்=மான்றோல், பாண்டம்=பாத்திரம், கமண்டலம்=ஜலபாத்திரம், உண்டு=பந்தமாக வுளவாம், எந்தை=எந்தந்தையே! இவற்றை விடுகின்றேன் என்று = இவை யாவற்றையும் விட்டொழிக்கின்றேன் என்று, கூட்டி=ஒருமிக்கச் சேகரித்து, எரிகொளுத்தி=அக்கினியிற் பஸ்மமாக்கி, சிந்தைகளித்து=மனமகிழ்ச்சியுற்று, வெற்றுடலாய்=வெறுந்தேகமாய், சிக்கற் றனன்=துவந்துவமற்றேன், பற்றிலன் என்றே=ஒன்றினுமாசையுற்றிலன் எனவே, முந்தை யறிஞன் முகநோக்கி=முதன்மையான ஞானசாரியனது திருமுகத்தைப்பார்த்து, மொழிய லுற்றான் சிகித்துவசன்=கூறத்தொடங்கினான் சிகித்துவசமன்னவன்.

(ஸ்ரீ - வீர) இஃதெனக்குச் சர்வமும் ஆகாதாயின் எனக்கென்னுசிரமமே சர்வமுமாம், வாபீஸ்தலம் பர்ணசாலை முதலியவற்றோடுங் கூடியுள்ளேன் விரைவிலற்றையுமேதியாகிப் பேனியான்; என்று க்ஷணத்தியானமாத்திரத்தானே ஆசிரம வாசனையையும்விட்டு, இப்போது யான் சர்வத்தியாகியாய்விட்டேன் என்றுகூற, அதற்குக் குரவன்கூறுவான் (கும்பாசயமும் இராஜாசயமும் முன்போலவேயாம்) விருக்ஷம் வாபிஸ்தலம் குல்மம் பர்ணசாலை கொடிகளின் அலங்காரம், என்னு மிவற்றுள் ஒருசிறிதேனும் உனக்குச் சர்வமாகாதாம், என்னுலுனக்குச் சர்வத்தியாகம் எங்ஙனங்கூடும்? யாவற்றினும் உத்தமமான இராகபாகமன்னியம் விடுபடாத தாக வுனக்குளதேயாம்; அதனைச் சேடமறவிட்டுவிட்டு மேலான அசோகத்தன்மையை நன்கு யடைவாயாக, என்றவுடனே சிகித்துவசன், இது எனக்குச் சர்வமன்றேலாமாயின் இங்குள்ள வைகளே யெனக்குச்சர்வமாம், தோற்பீடம், சுவர்கள் அற்பக்குடிசை முதலனதாமுள்ளன, இவற்றையெல்லாம் நன்றாகவிடுகின்றேன் என்றுகூறி, கலக்கமற்ற மதியையுடைய சமியாகிய வவன் சுத்தசித்தமுடையவனாய், சான்மேகம் சிருங்கத்தினின்று மெழுந்ததேபோல ஆசனத்தி னின்று மெழுந்து கடலுதரத்தாழ்ந்த பூமியை உன்னதபூமியின் விருஷ்டிஃநதியாதிவாரி ஓரி டத்திற் கொண்டுவந்து சேர்ப்பதேபோல, ஆசிரமத்தினின்றும் பாண்டம்குடலை மான்றோல் ஜபமாலைமுதலிய யாவற்றையும் கொண்டுவந்து ஒருங்குகூட்டி, காய்ந்த விறகுகளைச் சேர்த் துத் தீயைவைத்துக் கொளுத்திப் பஸ்மமாக்கிவிட்டுத் தேகமாத்திரமாகச் சேடித்தவனாகிய பூபதியானவன் பற்றற்ற மகிழ்ச்சியனாகிக்கூறல். (129)

(ஸ்ரீ-வீர-அ-கை) சிகித்துவசன் தனக்குச் சர்வத்தியாகம் வந்துவிட்டதாக நினைந்து மகிழ்தல்:—அம்மபொருளென்பன.

அம்மவம்ம கடவுண்மக னைவுன்னு லறிவுற்றேன்
மம்மரொழிந்தேன் கேவலமாய் மலங்களற்றே னிதுவென்று
விம்முசங்கற் பத்தெய்தா வேறொன்றறயா வையும்விட்டேன்
செம்முபொருளின் றிரளெல்லாஞ் செனனமளிக்கும் பந்தனையே.

பொருள்களெம்மட் டெம்மட்டுப் போனதம்மட் டம்மட்டுந்
தெருளுமனந்தான் சுகமடையுஞ் செயித்தேயந்தச் சுகம்பெற்றேன்
மருள்செய்பந்தங் களுமற்றேன் மாசிலாத திகம்பரனு
யருள்செய்சகலத் தியாகத்தை யடைந்தேன்வேறென் னுளவென்றான்.

(ப - ரை) அம்ம அம்ம=அகோ ஆச்சரியம் ஆச்சரியம்! கடவுள்மகனை வுன்னால் அறி வுற்றேன்=தேவபுத்திரனாகிய உன்றனல் தெரிந்துகொண்டேன், மம்மரொழிந்தேன்=துயர்

மெல்லாமகன்றேன், கேவலமாய் மலங்களற்றேன் = தனித்தவனாய் அசுத்தங்கள் அற்றேன், இதுவென்று = இது என்பதாக, விம்முசங்கற்பத்தெய்தா = எழுந்து பொருமும் எண்ணத் திருத்து, வேறொன்றற = அயலொன்றற, யாவையும்விட்டேன் = அனைத்தையும் அகற்றினேன், செம்முபொருளின்றிரள் எல்லாம் = சிறந்த வஸ்துக்களின் கூட்டமியாவும், செனனமளிக்கும் பந்தனையே = பிறப்பைக்கொடுக்கும் கட்டேயாம்.

பொருள்கள் எம்மட்டு எம்மட்டுப்போனது = வஸ்துக்கள் எவ்வளவுக் கெவ்வளவு தொலைந்தனவோ, அம்மட்டம்மட்டும் = அவ்வளவுக்கவ்வளவு, தெருளுமனந்தான் சுகமடையும் = உணர்வுற்ற உள்ளமானது ஆநந்தமடையும், செயித்தேயந்தச் சுகம்பெற்றேன் = வெற்றி கொண்டேயந்த வாநந்தத்தையடைந்தேன், மருள்செய்பந்தங்களுமற்றேன் = மயக்குஞ்செய்யும் கட்டுகளும்விட்டேன், மாசிலாத திகம்பரனாய் = குற்றமற்ற திக்கையே யாடையாக வுடையவனாய், அருள்செய் சகலத்தியாகத்தையடைந்தேன் = அனுக்கிரகம்செய்யும் சர்வசங்க பரித்தியாகத்தை யடைந்துவிட்டேன், வேறென்னுளவென்றான் = அயலியாது உளது என்று புகன்றான்.

(ஸ்ரீ - வீர) மமதை வாசனையைச் சர்வோபகாணத்திலும் நன்குவிடுத்துச் சர்வத்தியாகியாகத்திகளுக்கிருக்கின்றேன், அகோ ஆச்சரியம்! ஹே தேவபுத்திரனே! வெகுகாலங்கழித்து உன்னால் உணர்த்துவிக்கப்பெற்றவனானேன். கேவலனாயினேன் சுத்தனாயினேன் சுகமாகவே யுணரவேண்டியதை யுணர்ந்தவனாயினேன், மமதைச்சங்கற்பப் பிரயுக்தசங்கிரகக் கிரமத்தை யுடையதாகிய இவ்வுபகாணக்கூட்டம் சிறிதும் சாரபூதமாய்க் கொள்ளத்தக்கதாய், ஆவதே கிடையாது, ஊன்றிநோக்கிற் றிண்ணமாக யாதுதான் இவற்றுள் வாஸ்தவமாக யோக்கியமாயது, ஒன்றுமே கிடையாதென்பதாம். அத்தியாகசுகத்தை யபிநயம்பண்ணிக்கூறல்:— பொருள் என்பதாதி. எவ்வளவுக் கெவ்வளவு நானாவிதமாய பந்தஹேதுக்களாய விடயங்கள் நன்கு விடுபடுகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு மேலான சுகத்தை மனமானது இனிது அடைகின்றது உபசாந்தியடைந்தேன் சகல பற்றுக்களையும்விட்டேன் பரமாநந்த பரிதனாயினேன் வெற்றிகொண்டேன், சகல பந்தங்களும் பொடியாய்ப்போயின, சர்வத்தியாகம் என்னாற் செய்யப்பெற்றதேயாம்; திகம்பரனாய்த் திசைவீட்டினனாய்த் திக்குச்சமானனாய் அன்றோ இன்றுயானாயினேன்; ஹே தேவபுத்திரனே! மகாத்தியாகத்தினும் இன்னும் என்னதான் எஞ்சுகின்றது கூறுபார்ப்போம்.

(ச) சங்கற்பத்தெய்தா = புத்தி கற்பிதத்துபயோகமான, யாவையும் = பாண்டாதியனைத்தும், திரளெல்லாம் = திரள்களின் பரிக்கிரகணம், செநநமளிக்கும்பந்தனையே, துக்கவேதுவாதலின். இதற்கு உ-ம்:—செந்துமனதுக்குப் பிரியங்களில் எவ்வளவு சம்பந்தமுறு மவ்வளவும் இதனதிருதயத்திற் சோகசங்கங்கள் வருத்துவனவென்பதாம்; இது வைஷ்ணவமாம்.

பொருள்கள் = நானாவித பந்தவேதுக்கள், பாண்டம் = பாத்திரம், உபஸ்கரம் = இற்சாதகம், ஸ்தானம் = நிவாசபூமி, சதனம் = இல்லம். (130-131)

(ஸ்ரீ-வீர - அ-கை) பாகியவுபகாணத் தியாகமாத்திரத்தானே மயலினாலே பாலனுக்கே போல அவனுக்குண்டாயிருக்குஞ் சர்வத்தியாக சுகாபிநயத்தைப்பொறுமற் கும்பமுனிகூறல்:— கும்பனென்பது.

கும்பனுரைப்பான் சகலமும்விட் டிலைநீயிந்தக் கூத்தாடல்
வம்புகாணென் றனுமன்னன் மனத்தினினைந்து மீண்டுரைப்பான்
வெம்புகாணப் பாம்புகள்சேர் வெள்ளென்பூனு முடலொன்றே
யிம்பர்மீந்த தெனக்கிதனை யின்றேயெளிதின் விடுகின்றேன்.

(ப - ரை) கும்பனுரைப்பான் சகலமும்விட்டிலைநீ=கும்பமுனிவன் கூறுவான் சர்வத்தை யும் நீ விட்டாயில்லை, இந்தக்கூத்தாடல் வம்புகாணென்றனும் = இந்தப்பிரகாரம் நீ கிருத கிருத்தியத்தன்மை கொண்டாடல் வம்புப்பேச்சே பார்ப்பாயென்று கூறியவுடனே, மன்னன் மனத்தினினைந்து=அரசன் சித்தத்தின்கண்ணே ஆலோசித்து, மீண்டுரைப்பான் = மீளக் கூறுவான், வெம்புகாணப் பாம்புகள்சேர் = வெவ்விய கொடியகாணங்களாகிய சர்ப்பங்க ளுறையும், வெள்ளென்பூனும் உடல் ஒன்றே = வெள்ளிய எலும்புகளும் இரத்தமும் மாமிச மும் பொதிந்த சரீரம் ஏகமே, இம்பர் மீந்தது=இங்கு எஞ்சியது, எனக்கு=அடியேனுக்கு, இதனை=இத்தேகத்தை, இன்றேயெளிதின் விடுகின்றேன்=இப்போதே சுலபமாகத் தியாகிக் கின்றேன். காண் முன்னிலையசை.

(ஸ்ரீ - வீர) ஹே சிகித்துவச மன்னவனே யுன்றற் சர்வமுமே நன்கு விடப்படவில்லை, சர்வத்தியாக பாரானந்தத்தில் வீணுகவே அபிநயமென்னும் வியஞ்சகசேஷ்டை விசேடத்தைச் செய்யவேண்டாம்; எல்லாவற்றினும் உத்தமமான இராகபாகம் உனக்கு விடப்பெறுததாக வுளதேயாம், எதனை யடியோடும் விட்டுவிட்டான் மேலான அசோகத்தன்மையை நன்கடைய லாமோ. இவ்வாறு வினவுற்ற வம்மன்னவன் சிறிது சிந்தித்துப்பார்த்து, ஹே மகாபாகுவும் இராஜீவலோசனமுமுடைய இராகவனே! இவ்வாறு கூறத்தொடங்கினன்: ஹே தேவதாத் மஜனே! இந்திரிய வியானங்கணிறைந்ததும், இரத்தமாம்சமயாகிருதியும், ஆகிய தேகஞ் சகல மாத்தியாகத்தில் எஞ்சியுள்ளது, இனியதனையுமிதோ கிளப்பி யெழுந்து, குழியில்வீழ்த்தலால் விக்கனமாக, அத்தேகத்திற்கு விநாசான்மகத்தன்மையை யடைவித்தலானே சர்வத்தியாகியாக யானுவேன்.

(ச) காணப்பாம்புகள் = இந்திரியப்பிராண சமூகங்கள், இம்பர் = சகலத்தியாகத் தில். (132)

(ஸ்ரீ-வீர-அ-கை) மன்னவன் வலிதில் உடலைவிடமுயலுதலும் கும்பமுனி தடுத்தலும்:— காண்டியென்பது.

காண்டியென்றோர் வரையேறிக் கவிழுமளவி லுயர்கும்ப
னீண்டிதென்னே யிவ்வுடறு னென்னகுறைசெய் ததுபேதாய்
மாண்டுபயனென் னிளங்கன்றை வல்லேறடர்ந்து முனிவதுபோற்
றூண்டிவிழுந்து மெய்விடினுஞ் சகலத்தியாகி யாகாயே.

(ப - ரை) காண்டியென்று=காண்பாயாகவெனக் கூறி, ஓர் வரையேறி=ஒரு மலை யேறி, கவிழுமளவில்=வீழப்போகும்போது, உயர்கும்பன்=மேலான கும்பமுனிவன், ஈண்டி தென்னே=இங்கு இது என்ன விபரீதங்கொல், இவ்வுடல்தான்=இந்தச் சரீரந்தான், என்ன குறை செய்ததுபேதாய்=யாது குற்றத்தைச் செய்தது அறியாதவனே, மாண்டுபயனென்= இறந்து என்னே பிரயோஜனம், இளங்கன்றை வல்லேறடர்ந்து முனிவதுபோல்=சிறிய பசுங் கன்றுக்குட்டியை வலிமைபொருந்திய விடபம் சினந்து துன்புறுத்துவதுபோல,

தாண்டி விழுந்து மெய்விடினும்=குதித்து விழுந்து சரீரத்தைவிட்டபோதினும், சகலத்யாகி யாகாயே=சர்வசங்கபரித்தியாகி யாகவேமாட்டாய்.

(ஸ்ரீ-வீர) இந்தப்பிரகாரங் கூறிக்கொண்டு தேகத்தை யெதிரிலிருக்கும் பர்வதத்தினின் றும் வீழும் ஸ்தானத்தில் விடும்பொருட்டு மன்னவன் வெகுவேகமாக வெழுதலைச் செய்த போது, கும்பமுனிவன் கூறுவான்:—ஓ யாசனே இஃதென்னே! மூடத்தனம், நீயோரபரா தமுமில்லாத தேகத்தை மகாவடத்தில் வீழ்த்தப்போகின்றாயே, அறியாதவனாகவன்றோ விருக்கின்றாய், கோபத்தோடுகூடிய விருஷபமானது தனது கன்றைக் கொல்வதுபோன் றன்றோ விருக்கின்றது; சரீரத்தைத் தியாகித்தபோதினும் தாமரைக்கண்ணனே! அஃதுனக் குச் சர்வத்தியாகமாகமாட்டாதே எக்காரணத்தால் அந்தச் சர்வத்தியாகமானது மறுபடி யதி காரி தேகத்துர்லபத்தன்மையானே ஞானதுர்லபப்பான்மை யுண்மையின், விடமமே=சாதிக்க முடியாததே யாய்விடுமோ. (133)

(ஸ்ரீ-வீர - அ-கை) சரீரத்தை யாட்டுவதே சகலமெனல்:—எத்தாலென்பது.

எத்தாலுடல மசைகின்ற தெதுதான்பிறவி கருமத்தின்
வித்தாய்நின்ற ததுவிட்டால் வேந்தாவெல்லாம் விட்டனவா
நித்தாரமிதென் றலுமுடலை யசைத்துப்பிறவி நிறைவித்தாய்த்
தத்தாநின்ற தேததனைத் தவிருமாறு சொல்லென்ன.

(ப-ரை) எத்தாலுடல மசைகின்றது=எதனாற்றேகமானது சலிக்கின்றது, எதுதான்= யாதுதான், பிறவி கருமத்தின் வித்தாய்நின்றது=எதுதான் ஜன்மகருமங்களின் பீஜமாயிருக் கின்றது, அதுவிட்டால்=அதனைத் தியாகம்செய்தால், வேந்தா=மன்னா, எல்லாம் விட்டன வாம்=யாவுமே தியாகம் செய்யப்பெற்றனவாம், நித்தாரமிதென்றலும் = துணிபு இஃதா மென்றலும், உடலையசைத்து=சரீரத்தைச் சலிப்பித்து, பிறவி நிறைவித்தாய்=அநேகஜன்ம கருமங்கட்குப் பீஜமாய், தத்தாநின்றதேது = கூத்தாடாநின்றது யாது, அதனைத்தவிருமாறு சொல்லென்ன=அதனை யகற்றுமாறு கூறுவாயாக வென்றுகூற.

(ஸ்ரீ-வீர) மத்த இபத்தாற் பாதபமேபோல வெதனால் தேகமாம் இது அசைக்கப் பெறுமோ, அந்தப் பாவத்தைவிட்டுத் தொலைப்பாயேயானால் பெருந்தியாகவானே நீயாக லாம், எதனால் இத்தேகம் அசைக்கப்பெறுகின்றது ஜன்மகருமங்களின் விரையாதாம், எதனை விட்டொழித்தால் யாவும் நன்குவிட்டதேயாமோ அது யாது சுந்தரனே! கூறுதி. (134)

(ஸ்ரீ-வீர-அ-கை) சகலத்தை யின்னதெனக்கூறி அதனைவிட்டுச் சுகியாயிருவெனல்:— இயல் சனனவென்பன.

இயலார்கும்ப னுரைசெய்வா னெல்லாச்சகமு மிதுவாகி
வியனார்சீவன் பிராணனென மேவும்பெயர்கள் பலபெற்றுப்
பயனார்சடமு மசடமுமன் றாகிப்பாந்த சித்தத்தை
யுயர்வோர்சகல மென்றுரைப்ப ருலகுமிதுபந் தமுமிதுவே.

சனனகருமங் களின்வித்தாய்த் தருவையசைக்குங் காற்றேபோற்
றினமுமுடலை யசைப்பதுவுஞ் சித்தமிதனைத் தீர்வதுவே
யனகசகல த்யாகமதா மதுவேபரம வானந்தம்
வினவும்பிறவெல் லாமிகவும் வெருவுகின்ற வெந்துயரே.

(ப - ரை) இயலார் கும்பனுரைசெய்வான்=சுபாவஸ்திதியி லெப்போதுமிருக்கும் கும்ப முனிவன் கூறுவான், எல்லாச் சகமுமிதுவாகி = சகலவுலகமும் இதுவேயாகி, வியனுர்சீவன் பிராணன் என=அற்புதமாகிய சீவனென்றும் உயிர் என்றும், மேவுபெயர்கள் பலபெற்று= பொருந்தாநின்ற நாமங்கள் நானுவடைந்து, பயனுர்சடமும் அசடமும் அன்றாகி = பலம் பொருந்திய ஜடமும் அஜடமும் அல்லவாகி, பரந்த சித்தத்தை=விரிந்த மனத்தினை, உயர் வோர் = பெரியோர், சகலமென்றுரைப்பர் = சர்வமென்று கூறுவர், உலகுமிதுபந்தமு மிதுவே=ஜகத்துமிது கட்டுமிதுவேயாம்.

சனனகருமங்களின் வித்தாய்=பிறப்பு வினைகளின் பீஜமாய், தருவையசைக்குங்காற்றே போல்=மரத்தையசைக்கும் வாயுவேபோல, தினமுமுடலை யசைப்பதுவுஞ் சித்தம் = அனு தினமும் ஆகத்தை யசைப்பிப்பது மனமேயாம், இதனைத் தீர்வதுவே = இச்சித்தத்தைத் தியாகிப்பதுவே, அனகசகலத் தியாகமதாம்=பாவமற்றவனே சகலத்தியாக மென்பதுவாம், அதுவே பரமவாநந்தம்=அதுதானே பேராநந்தம், வினவுபிறவெல்லாம் = விவகரியாநின்ற மற்றைய யாவுமே, மிகவும் வெருவுகின்ற வெந்துயரே = அத்தியந்தம் பயம்பயவாநின்ற கொடிய துயரங்களேயாம்.

(ஸ்ரீ - வீர) ஹே சாதுவே! சர்வகதாகாரமுடையதும், சிற்பிராதான்யத்தானே ஜீவப் பெயரியதும், கிரியாப்பிராதான்யத்தானே பிராணுதிப்பெயரியதும், ஜடமும் அஜடமும் அல்லதும், சுழலுவதும் ஆகிய சித்தத்தை=லிங்கத்தை, சர்வமென்று பெரியோரியம்புவர்; சித்தமேதான் மயலென்றுணர்தி, சித்தமேதான் விவகரிக்கும் புருடனென்றுணர்தி, சித்தமே சகச்சாலமென்றுணர்தி, சித்தஞ் சர்வமென்றே செப்புவர்; சர்வத்தினது பீஜமானது நன்கு விடப்படவே சர்வமும் அத்தியந்தம் விடப்பட்டதேயாயது, அதனது தியாகமேல் சர்வத் தியாகாசம்பவத்தான், பூபனே! சர்வத்தியாகமாமென்பதாம்; தேகாதியாகார ஜாலமாகவும் ஜகத்தாகாரமாகவும் இவ்வெல்லாமாகவும் சித்தமே பரிணுமரூப விவர்த்தத்தைப் பீஜம்மரமா வதேபோல வடைகின்றது. பாதபம் பவனத்தாற்போலும், பர்வதம் பூகம்பத்தால் போலும்; தோற்பையானது வேணுவாற்போலும், இத்தேகமானது சித்தத்தானே சலிப்பிக்கப்பெறும், தியாகவித்துக்களுள் மேலானவனே! சித்தத்தியாகமே சர்வத்தியாகமென்றறிவர், ஹே மகா பாகுவே! அது சித்திக்குமாயின் பரமார்த்தபூதமாய பூமானந்தரூபம் அநுபவிக்கப்படமாட் டாதாவென்? அநுபவிக்கவே பெறுமென்பதாம். சித்தமானது விடப்படுமாயின் துவைதமென் னும் காரியவிபாக ஆவிர்ப்பாவபரம்பரை, ஐக்கியமென்னும் காரணத்தில் மறையும் முறையும் இலயமாகிய பாதத்தையடையும்; எங்கும் எல்லாம் எல்லாவகையினும் எப்போதுமென்பதாம்; பின்பரமமாயும் சாந்தமாயும் சொச்சமாயும் ஏகமாயும் அநாமயமாயும் உள்ளவுண்மையானது சேடிக்கும். சர்வத்தியாகம் பராநந்தம் அன்னியமெல்லாம் கொடூரதுக்கம் என்பதாக நன் காராய்ந்து ஓமென்றங்கீகரித்து யாது இச்சையோ அதனைச்செய்வாய்.

(ச) எல்லாச் சகமுமிதுவாகி=சர்வ ஜகாகாரமாகப் பரிணமிப்பதாய், பிரதிபலனசைதன் யத்தாற் பிரகாசித்தலிற் சடமுமன்று, கற்பிதமாதலால், ஆன்மாவுக்கந்நியமாதலின் அசடமு மன்றாகி, சனனகருமங்களின் = ஜனனங்களுக்கும், கருமங்களுக்கும், அதுவே = சகலத் தியாகமே. (135-136)

(ஸ்ரீ-வீர - அ-கை) சகலத்தியாகத்தைக் கூறியபடிசெய்து சுகமாயிருவென்ன மன்னன் அதன் சொரூபத்தையும் நீக்குமுபாயத்தையும் வினவுதல்:—சகலவென்பது.

சகலத்தியாகந் தனைச்செய்து சாந்தனும்மச் சரமின்றிப்
பகுதிநிலையாற் றெளிவுற்றாற் பயின்றவடிவே ததுநீயாய்
நிகழ்வாயென் றலுமன்ன னுரைப்பானீசொன் னெஞ்சுக்குப்
பகருமுதலா வடிவேதெப் படிநான்றீர்ப்ப துரையென்ன.

(ப - ரை) சகலத்தியாகந் தனைச்செய்து = சர்வசங்க பரித்தியாகத்தைச்செய்து; சாந்தனும் மச்சரமின்றி=உபசாந்தனுகி மற்சராதி துர்க்குணங்க ளொன்றுமின்றி, பகுதிநிலையாற் றெளிவுற்றால்=சொஸ்தநிலையாகத் தெளிந்திருந்தால், பயின்றவடிவே ததுநீயாய் நிகழுவாய்= அவ்வாறு தெளிந்த வடிவமியாதோ அதுவே நீயாக விளங்குவாய், என்றலும் மன்னனுரைப் பான்=என்று கூறுதலும் அரசன்கூறுவான், நீசொல் நெஞ்சுக்கு = நீசொல் மனத்தினுக்கு, பகரும் முதலாம் வடிவேது=முதலிற் சொல்லாநின்ற ரூபமியாது, எப்படிநான் றீர்ப்பதுரை யென்ன=எவ்வாறு யான் அகற்றுவது கூறுவாயென்ன.

(ஸ்ரீ-வீர) சர்வ பரித்தியாகத்தைச்செய்து சாந்தனுய்ச் சுவஸ்தனுய் வியத்சமனுய், சௌமியனுயிருப்பாயாக, இருக்கும்போது எவ்வுருவமாயினுயோ அவ்வுருவமேயாயிருத்தி பூப தியே! ஹே பேரியற்கையனே பூமிபாலனே! நீ பிரதமம் தியாகிக்கவேண்டிய யாவற்றையும் மன தால் நன்குவிட்டு, அதன் பின்னர், எதனுல் விட்டாயோ அம்மனத்தையும் விட்டு அதன் பின் னர்த் தியாகாபிமான இலக்கணம் வாய்ந்த அகங்காரமலத்தையும், விடுத்து, ஜீவன் முத்தரூப னுவாயென்பதாம். சித்தத்தினது சொரூபம் ஆதியில் இன்னதென்று ஹே பகவானே கூறுதி. அதன்பின்புள்ளபடியே அதனைத்தீர்க்கும் வகையையும், ஹே பிரபுவே தாங்களே கூறவேண் டும், தங்களைச் சரணுகதியாயடைந்த வடியேனுக்கு வேறுகதியைக் காணேம்; சொரூபமென் றது, தியாகயோக்கியமாய பிண்டிகிருத சாமானிய ரூபமாம்.

(ச) நெஞ்சுக்கேது வடிவாமதை யுள்ளபடி முதற்பகரும் பின்புசித்தபரித்தியாகத்தைப் பகருமென்றதாம். (137)

(ஸ்ரீ-வீர-அ-கை) கும்பமுனிவ னதனையே பிண்டமாக்கிக்கூறல்:—மற்றுமென்பது.

மற்றுங்கும்ப னுரைசெய்வான் மனத்துக்குருவம் வாதனையே
யுற்றமனமென் றுரைக்குமுறை யுறுவாதனையின் பரியாயங்
குற்றமெல்லாங் குவிந்திருக்குங் கூடாநானென் பதுதானே
செற்றமரமா மனத்துக்குத் திகழும்விதையாந் தேர்வேந்தே.

(ப - ரை) மற்றுங்கும்ப னுரைசெய்வான்=மறுபடியும் கும்பமுனி கூறுவான், மனத் துக்குருவம் வாதனையே = மனத்தினுக்கு வடிவம் வாதனையேயாம், உற்றமனமென்றுரைக்கு முறை=பொருந்திய மனதென்றுகூறும் வசனமானது, உறுவாதனையின் பரியாயம்=பொருந் தும் வாசனையின் வேறுபெயராம், குற்றமெல்லாம் குவிந்திருக்கும் கூடாம் = தோடங்கள் யாவும் நிறைந்திருக்கும் நீடமாம், நானென்பதுதானே=அகங்காரந்தானே, செற்றமனமா மரத்துக்கு=கெட்டுப்போன மனமாகிய துருமத்தினுக்கு, திகழும்விதையாம் தேர்வேந்தே= இரதாதிப மன்னவனே விளங்காநின்ற பீஜமாம் என்றறிதி.

(ஸ்ரீ - வீர) ஹே மகாராஜாவே! இராகவாசனையே மனத்தினுக்குச் சொரூபமென் றுணர்தி, சித்தசப்தமோ வாசனையினது பரியாயமாம் என்பர் உலகர், உலகிற்கூறுதலு மின் னமாம்:—எனக்குப் பணியாரமுதலியவற்றிவ் வாசனை யிருக்கின்றது, இவனும் காடை முத

லியவற்றிற் சித்தமிருக்கின்றது என்பர்; இம்மனத்தைத் தியாகிப்பது மிகவும் எளிதேயாம்; அகமர்த்தமாகிய அறியப்பெறாத ஆன்மாவினின்றும், உதயமாகியது யாதோ அவ்விதுசித்தத்தைச் செலுத்துவதாகிய அபிமானியென்பது பிரசித்தமாம், ஹே மகாமதியை யுடையவனே! இதுவே சித்தமாகிய விருக்ஷத்திற்கு மூலலிங்கமென்று மொழியப்பெறும், என்றறிதி.

(ச) குற்றமெல்லாம் பொதிந்திருக்குங் கூடாரம் = சகலமான வனர்த்தங்களென்னுஞ் சம்சாரத்திற்கு மூலகாரணமாகிய, நானென்பதுதானே = அகங்கார உதயமே, மனமா மரத்துக்கு விதையாம் = விதானமாம், தேர் = அறி. (138)

(ஸ்ரீ-வீர-அ-கை) ஹே முனிவனே சித்தத்திற்கு யாதுமூலம், யாதிதற்கங்குரமாம், யாது இதற்கு க்ஷேத்திரமாம், யாவை சாகைகளாம், ஸ்கந்தங்கள் எவைகளாம், எங்ஙனமிதைக் கெடுத்தல்கூடும் என்னுஞ் சிகித்துவசனது வினவுண்டாகவதற்கு மூலத்தை முன்னர்க்கூறி யிப்போது பிறவற்றிற்குத்தரங்கூறல்:—ஆதி இனையவென்பன.

ஆதியிலுண் டானவித னங்குரந்தா னனுபவமெய் யாயறுதி யிடுவதாகி
யோதுமுரு வன்றியிலே யுதிக்குமத்தை யுரைசெய்வர் புந்தியென வுரைத்தவிந்த
நீதியுறு புந்தியெனு மங்குரத்தி னிறைவளர்வைக் கொம்பைச்சங் கற்பமென்பர்
பேதமிவை யாதலாற் சித்தம்புந்தி பெரியமன மென்பதெலாம் பேர்கடாமே.

இனையமன மெனும்பொல்லா மரத்தின்கொம்பை யெப்பொழுதும் வெட்டிவே
ரீர்த்துமாய்ப்பாய், வினையுறுவா தனைப்பணைகள் பலகாய்காய்க்கும் வேதனைவா
ளாலுள்ளே வெட்டின்மாயு, நினைவறப்பற் றறமவுன மாகிவந்து நோர்ந்ததுசெய்
வாருள்ளே நெஞ்சைச்செற்றோ, ரனையமாப் பணைவெட்டற் கெவுணமென்ப ரதன்
வேரை யறுத்தலே யறநன்றென்பார்.

(ப-ரை) ஆதியிலுண்டான விதனங்குரந்தான் = முதலில் உண்டான விதனது முளையானது, அனுபவமெய்யாயறுதி யிடுவதாகி = அனுபவசரீரமாய் நிச்சயஞ் செய்வதாய், ஓதுமுருவன்றியிலே யுதிக்கும் = சொல்லும்வடிவ மிலாததா யுதயமாகும், அத்தையுரைசெய்வர் புந்தியென = அதனைக்கூறுவர் புத்தியென்று, உரைத்தவிந்த நீதியுறு புந்தியெனும் அங்குரத்தின் = கூறியவிந்த நியாயத்தோடுகூடிய புத்தியென்னும் முளையின், நிறை வளர்வை = பூரண விருத்தியை உடைய, கொம்பை = சாகையை, சங்கற்பம் என்பர் = எண்ணமென்று கூறுவர், பேதமிவையாதலால் = வேற்றுமை யிவையாகலின், சித்தம்புந்தி பெரியமனம் என்பதெலாம் பேர்கள்தாமே = சித்தம் புத்தி மனம் என்பன யாவுமே நாமங்களேயாம்.

இனைய = இத்தகைய, மனமெனும் = உள்ளமென்னும், பொல்லா = கெட்ட, மரத்தின் கொம்பை = விருக்ஷத்தின் சாகையை, எப்பொழுதும் = எந்நாளும், வெட்டிவேர் ஈர்த்துமாய்ப்பாய் = சேதித்துச சல்லிவேரையுங் கெல்லிக்கெடுப்பாய், வினையுறுவாதனைப் பணைகள் = துன்பம்பயக்கும் அநேக வாசனைகளாகிய சாகைகள், பலகாய்காய்க்கும் = பல்பலங்களைப் பலிக்கும்படி செய்யும், வேதனைவாளால் உள்ளே வெட்டின்மாயும் = ஞானகட்கத்தால் உள்ளேயே சேதிக்கின் மாய்ந்துபோகும், நினைவறப்பற்றற = எண்ணமின்றி யாசங்கமின்றி, மவுனமாகி = பேசாயாகி, வந்து நேர்ந்ததுசெய்வார் = வினைவயமாக வந்துற்றதை யியற்றுவார், உள்ளே நெஞ்சைச்செற்றோர் = உள்ளேதானே மனத்தைச் சேதித்தவர், அனையமாப் பணைவெட்டல் = அத்தகைய விருக்ஷசாகையைச் சேதித்தல், கெவுணமென்பர் = உபசார

மென்றுரைப்பர்; அதன்வேரையறுத்தலே யறநன்றென்பர் = அம்மரத்தினதுவேரை நாசஞ்செய்தலே அத்தியந்தம் நல்லதென்று சொல்லுவர்.

(ஸ்ரீ-வீ ர) முதலில் யாதிதற்கு க்ஷேத்திரம் என்னும் பகுதிக்கு விடையளித்தல்:—ஆதியிலென்பதாதி. பரமான்மாவினுடைய பதம் நீடம் மாயையதுவே க்ஷேத்திரமாம், எதனாலது, மாயாமயப் பிரபஞ்சமியாவற்றிற்குமே க்ஷேத்திரமாமோ அதனால் உள்ளத்திற்குமதுவே க்ஷேத்திரமாம்; அங்குரமியாதென்றதற் குத்தரமுரைத்தல்:—அங்குரந்தான் என்பதாதி. இப்பிரதம உற்பன்னமூலத்தினின்றும் பரிச்சின்னன் யான் என்னும் நிச்சயவடிவ சிதாபாசவியாப்தத்தன்மையால் அநுபவவடிவ அங்குரமுண்டாம்; நிச்சய வடிவமாய் அது நிராகாரமாய புத்தியென்றே கூறப்பெறும்; அதற்கே விருத்தியானே சித்தமரவடிவமாய்ப் பரிணமமாம் எனல்:—உரைத்தவென்பதாதி: இந்தப் புத்தியெனப் பெயரிய அங்குரத்தினது எப்பெரும் பருமையுளதாமோ அது சங்கற்ப வடிவையுடையதாம் சித்தமெனவும் மனமெனவும் பெயரையுடையதாம்; அந்த விருக்ஷத்தினுடைய ஜீவனியாதெனில், உண்மையாக நிர்விகாரத்தன்மையானே சர்வவிகாரசூனியாத்மா, இதனேயுபல உப்பமாம், மித்தியாபூத சித்துவதன்றன்ம சம்பந்த உபலம்பவடிவமாயசாக்ஷி ஜீவனென்பதாம்: இந்த சித்தவிருக்ஷத்தினுடைய, எத்தீர்க்கமாய்த் தூரகதமாய் விஸ்தாரமாய சாகைகளுளவோ அவை யிந்திரியங்களும் அற்பபோகங்களுமாம், ஜன்ம மரணங்களின் வடிவமாய அசாத்த சுத்திரத்தின் காரணபூதங்களும் போகங்களும் இதனது பெரிதான அவாந்தரசாகாசமூகங்களாம்; சுபாசுபபலாகுலங்களுமாம். இத்தகைய இந்தச் சித்தமாகிய கெட்ட விருக்ஷத்தினது, விஷயபோகாசங்கச் சேதனவடிவ சாகாபேதனத்தைக் கணந்தோறும் செய்து அசங்க அத்விதீய ஆன்மதரிசன இலக்கணமூலநாசத்தில் மிகுந்தயத்தினநிசயத்தைச் செய்வாயாகவென்பதாம், மாய்ப்பாயென்பது. ஆண்டுச் சாகையைக் கெடுப்பதிலும் மூலத்தைக்கெடுப்பதிலும் உபாயத்தை யாசன்வினுதல்:—ஹே முனீந்திரனே! சித்தத்துருமத்தினது சாகாதிகளின் வெட்டுதலைச்செய்யுமியான் எங்ஙனம் மூலத்தினது சேடமின்றி யசேதனத்தைச்செய்வேன்? அதன்பின் சாகைவெட்டு முபாயத்தைக் கும்பன்சாற்றல், வாசனை விவிதசாகைகள் பலஸ்பந்தாதிகளோடு கூடியவைகளாம், ஆசக்தித்தியாகத்தானே அநாப்பாவிதங்களாய், உள்விசார உணர்ச்சிப்பலத்தானே வெட்டுப்பட்டனவேயாம், அவைகள் கூறிய பொருளேயே ஜீவன் முக்தர்களிடத்தில் இலக்கணமாகக்காட்டல்:—பற்றின்றியமன்த்தினனாய் மவுனியாய், சாந்தவாத விசாரவானாய், நேர்ந்ததைச் செய்பவனாய், யாவனுளனே அவன் சித்தக்கொடியை யுள்ளேவெட்டினவனேயாவன்; சாகாலவன அப்பியாசம் திடமாகியவழி மூலவழிவில் யோக்கியனாவான் எனல்: சித்தத்துருமத்தின் லதாஜாலமாகிய சாகாசமூகத்தை பௌருடத்தானே வெட்டி யெறிந்துவிட்டு யாவனிருப்பனே அவன் மூலத்தினது நாசஞ்செய்வதில் யோக்கியனாகான், சாகாவிலவனம் கௌணமென்னுமங்கமாம்; மூலவிகர்த்தனம் முக்கியமென்னும் பிரதானமாம்.

(ச) ஆதியிலுண்டான=ஆதியிலுதித்த, இதின் = இவ்வகங்காரத்தினின்றும், அனுபவமே மெய்யாய்=அனுபவரூபமாய், அறுதியிடுவதாகி=நிச்சயசுபாவமாகி, உருவன்றியிலே= பாகியவிடயாகாரமருவாததாய், எந்தவங்குரமுதிக்கும், இத்தைத்தான்=அதனேயே, புந்தியெனவுரைசெய்வர், இந்தப் புத்திரூபமான வங்குரத்தின் சங்கற்பரூபமான, நிறைவளர்வை= பெருமனேயே, கொம்பென்பர், சங்கற்பரூபமுள்ள வப்பெருமனுக்கே சித்தம்புத்தி மனமென்றும் பேர்களாம்.

இனைய = கூறிய பிரகாரமான, மனமெனும் சித்தரூபமாகிய, பொல்லா மரத்தின் கொம்பை=காமசங்கற்ப சம்சய வாஞ்சைவடிவான வாசனையென்னுஞ் சாகைகளை, வெட்டி மனத்தின்வேர்=அகங்காரரூபமான மூலத்தின், ஈர்த்துமாய்ப்பாய்=மூலத்தைப்பிடுங்குவதே யிதனது தியாகமென்பரென்றதாயிற்று. அதன்கொம்பை வெட்டும் பிரகாரத்தையே கூறல்: பல=நாநாகாரமான, காய் = சுகதுக்காதிரூபமான பலத்தை; காய்க்கும் = விரிவிக்கும், வாதனை=வாசனைவடிவமான, பணைகள் = நாநாவிதமாகிய சாகைகள், வேதனவானால்= ஆன்மானுசந்தானபெலத்தால், உள்ளேவெட்டின் = உபேக்ஷிக்கப்படின், மாயும்=சிதைவன வாம், நினைவற=அந்நியரின் வாதவசனங்களில், என், எதனால், எப்படி, யென்பதுமுதலான வடிவமாகிய விசாரணையின்மையராய், பற்றற=விடயங்களிற் பற்றற்றமனத்தினராய், மவுன மாகி = மவுனநிஷ்டராய், வந்துநேர்ந்தது செய்வார் = அவசியகாரியத்தைச் செய்யும்புரு டர், உள்ளே=நெஞ்சை=மனக்கொம்பை, செற்றோர்=சிதைத்தவராவர், பணை=சாகையா தியை, கௌணம்=அப்பிரதானம், அறநன்று=பிரதானம். (139-140)

(ஸ்ரீ-வீ - அ-கை) வேரைச்சுட்டுச்சொல்லல், சுடுவதற்குக் கனலேதென்னக் கனலையுரைத் தல்:—ஆதல் என்பது.

ஆதலினால் மிகநல்ல நெறியாலேநீ யந்தமன மரத்தின்வே ரறுத்துச்சுட்டாற், சாதமுறா தென்றலுமே மன்னன்சொல்வான் றனிமரத்தின் வித்தாகு மகம்பா வத்தை, மாதவனே சுடக்கனலே தெனலுங்கும்பன் மறுத்துரைப்பான் நானென்ன றெண்ணுகின்ற, போதவிசா ரந்தானே மனத்தின்வித்தை பொன்றுவிக்குங் கன லெனவும் பூபன்சொல்வான்.

(ப - ரை) ஆதலினால்=ஆகையினால், மிகநல்ல நெறியாலே = மிகவும் நன்மையாகிய மார்க்கத்தாலே, நீயந்த மனமரத்தின்=நீ அம்மனவிருக்ஷத்தின், வேரறுத்துச்சுட்டால்= வேரைச்சேதித்துத் தகித்தால், சாதமுறாதென்றலுமே=உதியாதென்று கூறலுமே மன்னன் சொல்வான்=அரசன் கூறுவான், தனிமரத்தின் வித்தாகும் அகம்பாவத்தை=ஒப்பற்ற மன விருக்ஷத்தின் மூலமாகும் அகங்காரத்தை, மாதவனே சுடக்கனலேதெனலும் = மகாதவத்தி னனே தகிக்க அக்கினியாதென்று மன்னவன்கேட்ப, கும்பன் மறுத்துரைப்பான் = மீளவுங் கும்பமுனிவன் மொழிவான், நான் ஆரென்றெண்ணுகின்ற = யான்யார் என்றுன்னுகின்ற, போதவிசாரந்தானே=ஞானவாராய்ச்சிதானே, மனத்தின்வித்தைப் பொன்றுவிக்குங் கன லெனவும் = மனத்தினது பீஜத்தை நசிப்பிக்கும் அக்கினியென்று கூறவும், பூபன்சொல் வான்=மன்னவன் கூறுவான்.

(ஸ்ரீ-வீர) அதனால் நீ சித்தவிருக்ஷத்தினது மூலநாசபரனாக ஆகுதி, பிராதானியமாக, மகாமதியையுடையோய்! அத்தியந்தம், மூலதாகத்தையே செய்வாயாக, பிரதானமாகச் சம்பா தியாதொழியில், முயல்வினால் இனிது சாதிக்கப்பெற்ற அங்கத்திற்கும் விபலபாவ வழக்குண் டாதலின் என்பது கருத்தாம்; ஆகையினால், நீ சித்தவடிவமாம் கண்டககண்டமென்னும் கரு வேல்வனத்தின், மூலதாகத்தை யடியேடுஞ் செய்வாயாக; இவ்வாறியற்றியவழி அசித்தத் தன்மையான்துண்டாம். அதனது தாகமானது பிரசித்தமாய அக்கினியினாலே கூடாமையின் வேறு தீயை அறியும் வேட்கையனாய் வினாதல்:—மன்னன் என்பதாதி. ஹே முனீந்திரனே! சித்தவிருக்ஷ பீஜமாய அகம்பாவ வடிவத்தின்றகனமெனப் பெயரிய இக்கருமத்தில், எத்தீ சமர்த்துடையதாம்; யான் யாராயுள்ளேன் என்னும் விசாராதியாகச் சாக்ஷாத்கார பரியந்த

ரூபத்தைத்தரித்த இந்தச் சுவாத்மவிசாரம், சித்தத்துர்த்தரும பீஜத்தின் றகனத்தில் தகன மாகக்கூறப்பெறும்.

(ச) சாத்முறு=சித்தமின்மையாம், மனத்தின்வித்தை = மனமரத்தின் பீஜமென்னும் அகங்காரத்தை, நானென்றுன்னுகின்ற போதவிசாரம்=ஆன்மவிசாரமே, பொன்றுவிக்குங் கனல். (141)

(ஸ்ரீ-வீர-அ-கை) என்றாற் சுவப்நத்தியினாலேயே வெளிப்பொருள்களும், உடம்பாதியகங் கார மீறாகவுள்ள ஆத்தியாத்மிக உட்பொருள்களும், அநாத்மாக்கள் எனவும் அநிருதங்கள் எனவும், அறியப்பெற்றனவாயின்; ஆயினும், அந்தராத்ம தத்துவப்பழக்கமின்மையின், ஜட வகங்காரத்தின்கண்ணும், மறுபடி மறுபடியும் ஆன்மத்தன்மைப்பிராந்தி நிவிர்த்தியாவதே கிடையாது; ஆகவே இளைப்பாறுதலை யடைந்திலேன் எனல்:—என்னென்பது.

என்னுடைய புந்தியினு லெண்ணினேனு னிச்சகநா னல்லமல வுடனல்ல
துன்னுபொறி களுமல்ல மனமுமல்ல தொடர்புந்தி யல்லவகங் காரமல்ல
வின்னசட மாதலினு லெனலுங்கும்ப னிவையன்றேல் வேறுர்நீ யியம்புகென்ன
மன்னனுரைப் பானெல்லாம் படைத்தளித்த மாசறுசின் மாத்திரமாம் வடிவநானே.

(ப - ரை) என்னுடைய புந்தியினால் = எனது மதியினாலே, எண்ணினேன் நான்= ஆராய்ந்தேனியான், இச்சகநானல்ல=இவ்வுலகமியானல்ல, மலவுடல்நானல்ல=மலமயமான சரீரம் யானல்ல, துன்னுபொறிகளுமல்ல=ஞானகரும சாதகங்களாகப் பொருந்திய புலன்க ளும் யானல்ல, மனமுமல்ல=சங்கற்பமுமல்ல, தொடர்புந்தியல்ல=நிச்சயம்தியுமல்ல, அகங் காரமல்ல=கர்வமுமல்ல, இன்னசடமாதலினால் எனலும்=இவையாவும் ஜடங்கள் ஆகலின் என்று மன்னவனுரைப்ப, கும்பன் இவையன்றேல் வேறுர்நீ இயம்புகென்ன = குரவன் இவை நீயல்லவாயின் அயலாக யார்நீ கூறுவாயாகவென்றிட, மன்னனுரைப்பான் = அரசன் கூறுவான், எல்லாம் படைத்தளித்த=யாவற்றையும் சிருட்டித்துக்காக்கும், மாசறுசின்மாத் திரமாம் வடிவம்நானே=குற்றமற்ற அறிவுமாத்திரமாம் வடிவம்யானே.

(ஸ்ரீ - வீர) ஹே முனிநாதனே யென்றாற்றன்புந்தியினாலே, நன்முறைபற்றிச் சர்வ ஜகத்தும் வெகுவாக நன்காராயப்பெற்றது நானல்ல, அதனையே விசேடித்துரைக்கின், பிரு திவியினாலும் அதனுள்ளடங்கிய வனமண்டலாதிகளாலும், நெருங்கியுள்ள இச்சகத்தானது யானல்லேன். இது சுருக்கிக்கூறியதாம். அதனையே யினி விஸ்தரித்துரைத்தல்:—மலவென்ப தாதி. மலையின்றடமும் நானன்று, விபினமுமன்று, பர்ணமுமன்று, ஸ்பந்தமுமன்று, பிறவு மன்று, ஜடத்தன்மையால், தேகாதியும் நானன்று, மயிர்நான்ன்று தோலுனன்று மாமிச நானன்று, துயர்செய்யுமென்பும் உதிரமும் நானல துன்னுநரம்புகளும், பயில் காரணங்களும் நானல் ஞானம்பரியிந்திரியங்கள், சயமனமதியாஙகாரமு நானல சாட்டியமதனுனே. ஜடத் தன்மையாலென்பது யாண்டுமே யேதுவாகக்கொள்க. அகங்காரத்திற் சடத்தன்மையிலதாம் என்னுஞ் சங்கையை விவர்த்தத்தன்மை யேதுவினுனே விலக்கிக்கொண்டு, ஜடத்திற்குத் தானே யிருத்தல்கூடாமையின் சித்தில்த்தியாசத்தாற் சித்தியாகவே மித்தியாத்தன்மைமுடிவு பெற்றிடும் எனல்:—கடகத்தன்மையானது பொன்னிற்போல, சிதாத்மாவின் கண்ணே யகந்தன்மையாம், ஜடமோ அசத்துரூபத்தன்மையானேயாம், ஹே முனீந்திரனே யதனால் அது இல்லதேயாம்; ஆகவே அகந்தையென்பது விவர்த்தமென்பது பெறப்பட்டது, ஜடமென் பதோ சுத்திரஜதமிருகதிருஷ்ணுதி அசத்துரூபத்தானே பிரசித்தமேயாம், ஜடத்தன்மை

பரிச்சின்னத்தன்மை திருசியத்தன்மை யேதுக்களானே, அவ்வகங்காராதிகள் எல்லாம் அடையுமுபாதியின்கண்ணே முக்காலத்திய நிடேத எதிர்மறைத்தகைமையையுடையனவாய்ப் பொய்யேயாம். இப்போது பரிசேடத்தினுலேயே சாக்ஷிசைதன்யத்தை யறிவுறுத்திக்கொண்டு கும்பமுனிவன்கூறல்:—கும்பனென்பதாதி. ஹே மகிபதியே! அகங்காரபரியந்தமான இத் துணைமாத்திரமாந் திருசியக்குழு நீயன்றேல் அவையெல்லாம் ஜடமாதலின், ஹேமகாமதியே! அனகனே! நீயாராயிருக்கின்றாய் கூறுதிபார்ப்போம். ஹே அறிஞர்கட்குட் சிரேட்டனே! சின் மாத்திரமாய்த்தெளிந்த அஜ ஆன்மவேதனமேயானுவேன், அஞ்ஞாத்தருபோக்தருத்தன்மை யாதியால் பிரசித்த உள்ளுட்கோச பரம்பரையவதியாம். எந்த ஆனந்த ஏகரசசின்மாத்திரசத் தில், அநாநந்தங்களாய் ஜடரூபங்களாய சப்தாதிவிடயங்கள் சுவாதுறுகின்றனவோ; அதுவே யான்; புத்திவிருத்தியின்கண் ணேறியிராநின்றவெதனுல் இஷ்ட அநிஷ்டவிபாகத்தா லிவை யெல்லாம் நிர்ணயிக்கப்பெறுமோ அதுவேயான்.

(ச) ஜகமுதலகங்காரந் தஞ்செடமாதலினுல் நானல்லவென் றென்னுடைய புத்தியினு லெண்ணினேன், விசாரித்தேன் என்பது அந்நுவயம், நின்மலமான சின்மாத்திர ரூபவேத னமே நானென்னுஞ்சத்தத்தின் முக்கியார்த்தமாம். (142)

(ஸ்ரீ-வீர-அ-கை) சத்தியமாகவேனும் (மித்தை) அசத்தியமாகவேனும் உள்ள எந்த மல மாகிய வேதுவினுலே சம்சாரியாய் நீயிருக்கின்றாயோ, ஹே மகாபாகுவே! நின்னுடைய மகத்தாகிய அம்மலமானது என்ன இலக்கினமுடையதாம் கூறுதியெனக்கூற மீளவும் கும் பன்வினுதல்:—இந்தவென்பது.

இந்தவடிவா மெனக்கோ ரேதுகாணே னிடர்மனத் தாருவின்விதையா மகங் காரத்தை, யுந்தும்வகை யறிகிலே னுந்தவுந்த வோடிவரு மிதனுலுள் ளுடைந்தே னென்ன, வந்தணன்சொல் வான்மன்னு காரணத்தை யன்றியோர் காரியமுண் டாகமாட்டா, முந்துமகங் காரகா ரணத்தைநாடி மொழியென்ன மீண்டரசன் மொழிவதானுன்.

(ப - ரை) இந்தவடிவாமெனக் கோரேதுகாணேன்=இவ்வுருவமான எனக்கு ஒருகார ணத்தை கண்டிலேன், இடர்மனத்தாருவின் விதையா மகங்காரத்தை = துன்புறுத்தாநின்ற மனமரவிதையா மாங்காரத்தை, உந்தும் வகையறிகிலேன் = தள்ளும்பிரகாரத்தை யறிந்தி லேன், உந்த உந்த ஓடிவரும்=தள்ளத்தள்ள மறுபடியும் ஓடிவந்துவிடுகின்றது, இதனுல்= இக்காரணத்தினுல், உள்ளுடைந்தேன் என்ன=சிந்தைநைந்தேன் என்றுகூற, அந்தணன் சொல்வான்=மறையவனறைவான், மன்னு=அரசனே, காரணத்தையன்றியோர் காரியமுண் டாகமாட்டா=காரணத்தையல்லாமல் ஒருகாரியமும் உற்பன்னமாகமாட்டாவாம், முந்துமகங் கார காரணத்தைநாடி=முதிர்ந்துவாராநின்ற அகங்கார காரணத்தை ஆலோசித்து, மொழி யென்ன மீண்டரசன் மொழிவதானுன் = கூறுவாயென்ன மீளவும் அரசன் கூறத்தொடங் கினுன்.

(ஸ்ரீ-வீர) அது சத்தியமெனவேனும் மித்தையெனவேனும், யானறிந்திலேன், மற்றேர், அதனை சித்தத்துருமத்தின் சர்வ அநர்த்தபலத்தின்மூலம் எனச் சாமானியமாகவும், அகம்பு ஷமும் மமதையுமென விசேஷமாகவும் அறிவேன், அம்மலத்தை நீக்குமுபாயத்தை யறிந்தி லேன், அற்றேல் நானின்று எனதின்று என்னும்புந்தியே அதன்றியாக உபாயம்பிரசித்தமாம்;

முன்னுன்னுலேயே வனுதிகளிற் காட்டம்பெற்றது அஃதெங்ஙனம் தெரியவில்லை எனல் கூடும் எனின் ஆண்டுக்கூறல்:—உந்தவென்பதாதி. அவ்வாறு மீளமீள்வும் விடுத்தபோதினும் மூல உச்சேதஞ்செய்யாமையின் மறித்தும் மறித்தும் என்னைவந் தடைகின்றது. ஆகலின் அதன் மூலத்தையும், அதனுச்சேத உபாயத்தையும் கூறுவாயாக. ஆண்டுச் சத்தியத்திற்குக் கூடஸ்தத்தன்மையுண்மையின் காரணத்தன்மை சம்பவியாதேயாம், அசத்தியத்திற்கோ காரணத்தன்மைக்கூற்று, காரணமில்லாமலே காரியமுண்டாயது என்னுமர்த்தத்தில்வந்து முடிவு பேற்றையும், அடையவே காரியத்திற்கு அசத்தியத்தன்மையையே சம்பாதிக்கும், என ஆன்மைக்கியமுடிவுபேறும் என்பது இரகசியம், அதனைப் புத்தியனுசாரமாகவே யுணர்த்துவித்துக்கொண்டு, கும்பன், லோகப்பிரசித்தி யனுரூபமான அகங்காரணத்தை நீ சுவபுத்தியினுலேயே தேடிக்கூறுவாயாகவென்னல்:—அந்தணனென்பதாதி. காரணத்தினின்றுண்டாம் காரியமென்பது யாண்டுமே சம்பவிக்கும், காரணமில்லாமலே யுண்டாங்காரியம் என்னும் அன்னியபக்கமோ, இருமைநிலவுக்கொப்பாக வசத்தேயாம், இது நன்கு காணப்பெறுவதாயின் இல்லாமலே போகின்றதாதலின். எங்ஙனம் அகம்பாவமாகிய காரணத்தினுலே மனுதிவடிவபவாங்குரம் ஆகிய காரியம் உண்டாகின்றதோ இவ்விதமாகவே யிப்போது அகம்பாவத்திற்கும் காரணத்தைத்தேடி உனது மதியினுலே கண்டுபிடித்து எனக்குக் கூறுதி.

(ச.) இந்தவடிவாம்=விசுத்தசின்மாத்திர ரூபமாகிய, எனக்கு, எனது இருதயத்தில், ஓரேதுகாணேன்=அகாரணமாகவே பொருந்திய காரியமென்னும் பொருள்காரணத்தினுலே யுண்டாமாதலின். அகங்கார ரூபகாரியத்தின் காரணத்தை நீயோநாடி மொழியென்றதாம். (143)

(ஸ்ரீ-வீர-அ-கை) இவ்வண்ணம் வினவப்பட்ட அரசன் நெடும்போது தனது புந்தியாற்றேடி, தேகாதியாகார வேதனமான்து இல்லாதபோது ஆண்டகந்தாபிமானங் கூடாமையின், அவ்வேதனமே யதன்காரணம் என நிச்சயித்துத்தரங்கூறல்:—அகமென்பது.

அகமென்னுங் குற்றத்தின் காரணந்தா னறிவாகு மவ்வறிவிங் கடங்குமா
றென், மிகவுங்காண் பவற்றிலறி வெழுதலாலே மெலிகின்றேன் காண்பவற்றை
விடுமாறெங்ஙன், புகல்கென்ன மீண்டந்தக் கும்பன்சொல்வான் போதத்தின்கார
ணநீ புகன்றாற்பின்னை, நிகழுங்கா ரணமுமகா ரணமுஞ்சொல்வே னினக்குநா
னென்னவதற்கு நிருபன்சொல்வான்.

(ப - ரை) அகமென்னுங் குற்றத்தின் காரணந்தானறிவாகும்=அகங்காரமென்னுங் குற்றத்தின் ஹேதுவானது வேதனமாகும், அவ்வறிவிங்கடங்குமாறென் = அவ்வேதனமானது இவண் அடங்கும்விதம் யாதோ, மிகவுங் காண்பவற்றில் அறிவெழுதலாலே = அதிகமாகத் திருசியத்தில் வேதனமுதித்தலானே, மெலிகின்றேன் காண்பவற்றை=துயருறுகின்றேன் திருசியங்களை, விடுமாறெங்ஙன் புகல்கென்ன=விடும்விதம் எவ்வாறு கூறுவாயாகவென்ன, மீண்டந்தக் கும்பன்சொல்வான்=மறுபடியுமந்தக் கும்பமுனிவன் கூறுவான், போதத்தின் காரண நீபுகன்றால்=ஞானத்தின் ஹேதுவை நீகூறினுல், பின்னை=பின்னர், நிகழுங் காரணமும் அகாரணமும் = திகழாநின்ற ஹேதுவையும் அஹேதுவையும், சொல்வேன் = கூறுவேன், நினக்குநானென்ன=உனக்கு யானென்றுகூறலும், அதற்கு = அக்கேள்விக்கு, நிருபன் சொல்வான்=அரசனறைவான்.

(ஸ்ரீ - வீர) ஹே முனீந்திரனே. அகமென்னுந் தோஷத்திற்கு வேதனம் காரணம் என்பதர்கவறிவேன், அது எவ்வகையில் உபசமத்தையடையுமோ அவ்வகையை ஹே முனீசுரனே அடியேனுக்கருளவேண்டும்; சித்திற்குச்சேத்திய உன் முகத்தன்மையா மேதுவினுனே இத்தேகாதி அகம்பாவத்தா லிருந்துகொண்டு துக்கப்பொருட்டடைவுறும்; ஆகலின்றிருசிய தேகாதியே சித்திற்கு அதன்வேதனுபாவத்திலும் ஹேதுவாம் என்றுகருதி அதனுபசாந்தியின்பொருட்டுத் திருசிய உபசமன உபாயம் கூறுதியெனல்:—சித்திற்குச்சேத்திய உன்முகத்தன்மையானே துக்கப்பொருட்டிது யானென்றிருந்தது; ஹே முனிநாதனே! சேத்திய உபசமனத்தைக்கூறுதி யதன் உபசாந்தியின்பொருட்டு, வேத்தியாட்டவிடயத்தில் வேதனத்திற்கு வேத்தியமே காரணம்மெனக் காரணம் அறிந்துள்ளாயெனின், நீகருதிய அதனை விரைவிற்கூறுதி, நீகூறியபின்னர் நீகருதிய காரணத்தையும் அகாரணத்தையுமே எம்முறைமையானே யடைவுறுவாயோ அம்முறைமையை யுனக் குணர்த்திவைப்பேன். வினவிய பொருளையே வெளியாக்கும்பொருட்டு மீளவும் அனுவாதஞ்செய்தல்:—பொதுவதாக வேத்தியவேதனரூபத்திற்கும், சிறப்பதாகச் சேத்தியசஞ்சேதனத்திற்கும், மெய்ம்மையின்மையுண்மையின் காரணத்தன்மைய சமர்த்தமேயாய வேத்தியம் காரணத்தகைமையை யடைவுற்றதென யாதுனது கருத்திற்கிசைந்ததாமோ, அதனைக்கூறுதி.

(ச) அகமென்னுங் குற்றத்தின்=அகங்காரத்துக்கு, அறிவுதான் = சித்தின்றிருசிய உன்முகமே, காரணம்=காரணமாகும், அவ்வறிவிங்கட்ஙுமாறென் சொல்லும், இதனையே விரித்துரைத்தல்: அறிவு = சைதன்னியத்தின், காண்பவற்றிலெழுதலாலே, திருசியானுசந்தானவேதுவால் மிகவுமெலிகின்றேன், இவ்வகங்காரந் துக்கநிமித்தமா யிருக்கின்றதாதலின், துக்கநிவிர்த்தித்தற்கு காண்பவற்றைவிடுமாறு=திருசியத்தோற்றமற, எங்ஙன்புகல், நீ காரணஞ்ஞனதலின் போதத்தின் காரணம்புகன்றல், பின்னை = வேதன்நிமித்தம் விளம்பிய பின்பு, காரணம்=காரணத்தின் பிரகாரத்தையும், அகாரணமும் = காரணுபாவத்தின் பிரகாரத்தையும், சொல்வேன், ஈது இதன்காரணமாம், ஈது இதன் அகாரணமாம், என்னுமிதனைப் போதிப்பேனென்பது பொருள். (144)

(ஸ்ரீ-வீ-அ-கை) சிகித்துவஜன்வினவியதனதுகருத்தை வெளியாகக்கூறவேதனத்திற்குத் தேகாதிசத்தை யாங்ஙனங்காரணமென ஆண்டுக்கூறல்:—புகன்றவென்பது.

புகன்றவுடன் முதற்பொருளுண் டாதலாலே போதமுள தாமவைபொய் யானுலில்லை, யகங்கரவே தனமென்னு மனத்தின்வித்து மடங்கிவிடு மெனவதற்குக் கும்பன்சொல்வா, னுகந்தவுட லாதியுள தேற்சித்துண்டா முடலாதி பல்பொருள்களிலாதபோதி, னிகழ்ந்தவறி வெப்படியே நின்றதென்று நிகழ்த்தென்ன மீண்டுந்த நிருபன்சொல்வான்.

(ப - ரை) புகன்றவுடல் முதற்பொருள்=கூறியதேகமுதலிய வத்துக்கள், உண்டாதலாலே=உளவாதலாலே, போதமுளதாம்=ஞானமுளதாம், அவை பொய்யானுல் இல்லை= அவைகள் மித்தையானுல் இல்லையாம், அகங்கரவேதனமென்னும் மனத்தின்வித்தும் அடங்கிவிடும்=அகங்காரவுணர்வென்னும் மனத்தினது பீஜமும் தானகவேயோய்ந்துபோம், என= என்றுகூறிய, அதற்கு=அதனுக்கு, கும்பன்சொல்வான்=கும்பமுனிவன் கூறுவான், உகந்த உடலாதியுளதேல்=கருமாதியாற்கொண்ட தேகாதியுண்டானுல், சித்துண்டாம் = அறிவுளதாம், உடலாதி பலபொருள்கள்=தேகமாதி நானவத்துக்கள், இலாதபோதில் = இல்லாத

போது, நிகழ்ந்தவறிவெப்படியே=விளங்கிய வுணர்வு எவ்வாறே, நின்றதென்று = ஸ்திதியாயது என்று, நிகழ்த்தென்ன=கூறுவாயாகவென் றுரைப்ப, மீண்டந்த நிருபன்சொல்வான்=மறுபடியு மம்மன்னவன்கூறுவான்.

(ஸ்ரீ-வீர) சேத்யசேதனரூபமாய வேத்திய சம்வேதனுக்கிருதிக்கு, ஈண்டுத்தேகாதி இப்பாகியாத்யாத்மிக பதார்த்தசத்தையே காரணமாம், வேதனமானது நிமித்தபூதமாய சரீராதிவ்ஸ்துசத்தையானே தானுகவே, குகையின்கண்ணே வைத்த பொற்பாலேபோல, சரீராதியாகாரமாக்வுதயமாம், ஆகலின் வேதனத்திற்குத் தேகாதிசத்தைகாரணமாம்; அமூர்த்தவேதனத்தில், மூர்த்ததேகாதி யாகாரதைக்கு, வாஸ்தவத்தன்மை கூடாமையின் சிறப்பித்தல்:—அசத்தியாபாசமான பவனரேகையினுலே யசைவேபோலும்; எங்ஙனம் சித்தபீஜமாய வகந்தைவேதனம் நன்குபசாந்தியை யடையுமோ, அங்ஙனம் தேகாதிவஸ்து சத்தைக்கு அசத்துவம், உணர்ந்தேனில்லை, ஆகையினுலே யதனது அசத்துவத்தை எவ்வாறுணர்ந்துள்ளாயோ அவ்வாறே யுபதேசிக்கவேண்டும் என்பது கருத்தாம். இவ்வண்ணம் வினவப்பெற்ற கும்பமுனிவன், வேதனத்திற்கு விடயாகாரமாக உற்பத்திமயலகற்றற்பொருட்டுத் தேகாதிதிருசிய அசத்துவத்தைப் பதிஞ்ஞைசெய்தல்:—உகந்தவென்பதாதி. தேகாதிவஸ்துசத்தையிருக்குமாயின் உனதபிமதமாயவேதனத்தின் அதன் நிமித்தமாய அதனுகாரத்தன்மையாம், அதுவே துர்லபமாம், எனவேதனம் எந்நிஷ்டமாம் = எத்தனைவிடயமாக வுடையதாம்; நிர்விடயமேயாமென்பதுபொருள்; தேகசத்தாதிக்கு அபாவமாதலின் எந்நிஷ்டம் உனதுவேதனமென்பதாம்.

(ச) போதம், புகன்ற = மித்தையா ரூபமாய்த்தோற்றுநின்ற, உடன்முதல்=தேகேந்திரிய விஷயாதிரூபமான, பொருளுண்டாதலாலே, பதார்த்தரூபசத்தையால், உளதாம்=உதிக்கும்,பவனுங்கிசத்தாற் சலனம்போலெனக்காண்க. எந்தச்சத்தையால் மனத்தின்வித்தென்னும் அகங்காரமும், அதன்காரணமென்னும் வேதனமும், அடங்கிவிடும் = நிவிர்த்தியாம், அவை பொய்யானுலில்லை, பதார்த்தரூபசத்தைக்கு மித்தையேயான் கண்டதில்லை யென்றதாயிற்று; உடலாதி யுளதேற்சித்துண்டாம், நினதுவேதனமிருக்கின்றது, பொருந்துமென்பதாம்; உடலாதிபலபொருளிலாதபோது=தேகசத்தாதியின் அபாவம் ஆம்போது, நினதறிவு எப்படியே நின்றது, நிராலம்பனமா மென்பதுபொருள். (145)

(ஸ்ரீ-வீர - அ-கை) பிரத்தியக்ஷமாகப் பிரதீதியாகுந் தேகாதிக்கு யாங்ஙனம் நிவாரணம் ஏலும் எனவரசன் வினுதல்:—கரவென்பது.

காசரண முதலங்க முதலாய்ச்செய்யுங் கரும்பல முளதாய்க்கை யாளுங்காயங், குர்வலில தெனும்படியென் னென்னக்கும்பன் கூறுவான் காரணத்தைக் கூடாதென்னில், விரவியகா ரியந்தானு மிலதாமந்த வேதனமு மயக்கமே மிகு மயக்கால், வருவனவெல் லாமிலதா மேதுவின்றி வருபொருள்பொய் யாங்கயிற்றில் வருநாகம்போல்.

(ப - ரை) கரசரணமுதலங்க முதலாய்ச்செய்யும் = கைகாலாதிய வயவாதியாயியற்றும், கருமபலமுளதாய்=வினைப்பயன் உண்டாய், கையாளுங்காயம்=அனுபவிக்குந்தேகம், குரவ இலதெனும்படியென் என்ன=ஆசிரியரே இல்லையென்னும் வண்ணம் எவ்வண்ணம் என்று கேட்ப, கும்பன் கூறுவான்=கும்பமுனிவன் சொல்வான், காரணத்தைக் கூடாதென்னில்=

காரணத்தைப் பொருந்தாதென்னில், விரவியகாரியாந் தானுமிலதாம்=கலந்தகாரியந்தானும் இல்லையாம், அந்த வேதனமும் மயக்கமே=அவ்வுணர்வும் பிரமமே, மிகுமயக்கால் = மிகுதியான பிரமத்தால், வருவனவெல்லாமிலதாம்=வாராநின்றனயாவுமே இல்லையாம், ஏதுவின்றி வருபொருள்பொய்யாம்=காரணமில்லாமல் வரும்பொருள்மித்தையாம், கயிற்றில்வருநாகம் போல்=இரஜ்ஜுவில் எழும் சர்ப்பம்போல்.

(ஸ்ரீ - வீர) எதனது சொரூபம் கலஞன்மகமாய்ச் சிறிது தோற்றுகின்றதோ, அது அசத்துருபமெங்ஙனமாம், உண்மையாகத் தோற்றுவதற்கு இன்மைப்பதிஞனைச் மூரஞமென வெடுத்துக்காட்டானுங் கூறல்:—ஒளியிருளெங்ஙனமாம் என்பது. ஹே முனிவரனே! ஹஸ்தப்பாதியோடுகூடியதாய், கிரியாபலவிலாசவானுய், எப்போது மனுபவிக்கப்பெற்ற இத்தேகமானது, இல்லையென்பதெப்படி? உபலம்பனமாத்திரத்தானே திருசியசத்தை நிர்ணயிக்கமுடியாதாம், மயக்கத்தோற்றங்களிற் பிறழ்ச்சியுறுகின்றமையின், மற்றூ, காரணங்களிருப்புழி எந்தக்காரியத்திற்குப் பிரதிதியாமோ, அதற்குண்மையாம்; அவையோ விதற்குஇல்லனவாமெனல்:—காரணத்தை யென்பதாதி. பூமிபாலனே! எக்காரியத்திற்குக் காரணமிலதாமோ அக்காரியமீண்டிலதேயாகும், அதனதுணர்வுண்டாதலோ மயலேயாம்; காரணமில்லாமல் உடலாங்காரியமானது ஒருபோது முண்டாவதேகிடையாது, எதற்கு விரையில்லையோ அப்பொருள் யாண்டுதானுண்டாகும்; அகாரணமேயாய எக்காரியம் சத்தேபோல முன்னனுபவிக்கப்பெறுமேலாயின், அது காண்போனுடைய மிகுந்த மயக்கத்தானேயாம் என்று கானல் நீர்போல் அறிதி.

(ச) சாவயமும் அர்த்தக்கிரியைச் செய்வதும், எப்போதும் அநுபவிக்கின்றதுமான தேகம் எப்படி மறுத்தற்குரித்தாமென்பது பொருள். காரணத்தையன்றித் தோற்றுகின்ற காரியமேயில்லை, அந்த வேதனமுமயக்கமே, பிராந்தியென்பது பொருள். மயக்கால்வருவன=பிராந்தி கற்பிதமான, எல்லாமிலதாம்=இல்லாததேயாம், யாதிஞலெனில், ஏதுவன்றி=உற்பத்தி காரணத்தையன்றி, வருபொருள்=தோற்றுங்காரியம், கயிற்றில்வரு நாகம்போற்பொய்யாம், மித்தையாமயமாதலின் என்க. (146)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆயின் இத்தேகாதி வந்தியாபுத்திரதேகாதிபோலும், அத்தியந்தம் அசத்தாகவே யிருக்கின்றதா? என்றரசன் கேட்ப, "திதிபெருதனவாம் தேகங்களிலே திதிபெற்றிருப்பது தேகியேயாகும்" என்பதாதி சுருதியிஞனும், அவ்வாறே யறிஞாநுபவத்தானும், காரணங்கூற முடியாமையானும், இஷ்டாபத்தியேயாமிது, எனக்கும்பனுரைப்ப, ஐதிஹ்ய அநுமான ஆப்தோக்தி தொடர்ந்த அவயவச்சேர்க்கை யொப்புக்குறியாதியானே பிதாவிதற்குக் காரணமெனப் பெரிதுதுணியலாம் அதை யெவ்வாறு அகற்றுதல்கூடுமென் றூசங்கிப்ப, அதற்குமசத்துவமுளதாகவே ஒப்பாம் நியாயம் என்பது இரகசிய அபிப்பிராயமாம், அதனையே விடையாகமீண்டும் வருணிப்ப, கூடாபிப்பிராயத்தையறியாதவனுய் அரசன் விஞதல்:—என்றலு மென்பது.

என்றலுமே யாதிமுத லுள்ளவேதா வியற்றியபல் படைப்பாகு மிந்தஞால, நின்றவவ னிதற்குக்கா ரணமல்லாத நெறியேதென் றலுங்கும்ப னிகழ்த்துகிற் பான், முன் முசிருட் டியின்முன்பு வெறிதாய்ச்சாந்தத் தொடர்பிரம மேயுளதாய்த் துலங்குமந்த, வொன்றொழிய விரண்டில்லாக் காரணத்தா லுயர்வேதா காரணத்தை யுருனென்றூத.

(ப - ரை) என்றலுமே = தேகமசத்துவமாதலின் றேகம் தேகாந்தரத்திற்குக் காரணமாகாதென்று கூறுதலுமே, ஆதிமுதலுள்ளவேதா = ஆதியிலேயே இருக்கப்பட்ட பிரஹ்மாவானவர், இயற்றிய ப்ல்படைப்பாகுமிந்தஞாலம் = செய்த நானாவிதசிருஷ்டியாகும் இந்த வுலகம், நின்றவவன் = சிருஷ்டாவாகவிருந்த அந்தப் பிரஹ்மாவானவர், இதற்குக் காரணமல்லாத நெறியேதென்றலும் = இத்தேகத்திற்கு ஹேதுவாகாத மார்க்கம் யாதுகொலாமாலோவென்று கேட்டலும், கும்பன் நிகழ்த்துகிற்பான் = கும்பமுனிவன் கூறுவான், துன்று சிருட்டியின்முன்பு = நெருங்கிய சிருட்டியின்முன்னர், வெறிதாய்ச்சாந்தந்தொடர் பிரமமேயுளதாய் துலங்கும் = கேவலமாயுபசாந்தந்தொடர்ந்த சிவமே யிருப்பதா யிலகாநிற்கும், அந்த ஒன்றொழிய இரண்டில்லா = அவ்வேகமேயாய்த்துவைதமில்லாத, காரணத்தால் = ஏதுவினால், உயர்வேதா = உயர்ந்த பிரஹ்மா, காரணத்தை யுறுனென்றேத = ஹேதுவையடையான் என்றுகூற.

(ஸ்ரீ - வீர) ஆதியிலுள்ள பிதாமகனாகிய ஹிரணிய கருப்பனே = சூக்குமபூதலிங்க சமஷ்டியாத்மாவே மைந்தன்றந்தை மூதாதையாதி மூவுலகச் சருவவியட்டி சமஷ்டி தூலங்களின் முன் உற்பத்தியிற் காரணமாக வனாகமாட்டான். பூர்வப்பிரஜா சிருட்டாக்களாகிய மனு மரீசி தக்ஷாதிகளின் உற்பத்தியிலாதல், தங்காரியங்களினின்றும் பூர்வ பிரஹ்மாண்டத்தின் உற்பத்தியிலாதல் காரணமாக வனாகமாட்டான். அவனுக்குங் காரணங்கூறமுடியாதாம், ஆகவேய்சத்துவத்தில் ஒப்பாம்நியாயம் எனக் கூடாபிப்பிராயமாகவே உத்தரம்கூறல்:—எப்போது காரணாபாவமாமோ எதற்கு மிருப்பில்லை என நித்திய நியமமாமோ, அப்போது ஆதியிலுள்ள பிதாமகன் என்னும் அவனும் இவனேயாவன்; அற்றேல் "யாவன்றேவரை யாக்குமவனுல, கோவுமதிகன் உருத்திரன்மகரிஷி, உண்டாமிரணிய கருப்பனைக்கண்டனன், தேவனவனேநன் மிருதியினன்எவி யினிதேயியைவிப்பனன்றே" என்பதாதி மந்திரவருணங்களில், அவனதுற்பாதகனாய், உண்டாகிய அவனைக்கிருபாதிருஷ்டியாற் கண்டவனாகிய வீசுரன் அவனது காரணன் எனவெளியேயாம், ஆகவே யவன் எங்ஙனம் அகற்றப்பெறுவன், என்னுமாசங்கையை யகற்றிக்கொண்டு கூடாபிப்பிராயத்தை வெளிப்படுத்தல்:—உண்மையாக வுளனீசுரன் பரமான்மா என்றாலும், அவனால் மாயையினாலே தன்னிடத்திற் பேதகற்பனையினாலே மயலாகவன்னியன் காணப்பெற்றபோதினும் அப்பிதாமகன் அவனினும் அன்னியனாகவிருப்பதில்லை, அஃதெங்ஙனமாம் எனின், ஆண்டு சத்தியசிதம்சத்திற்கு அபரிணாமித்தன்மை யுண்மையினானே அகாரணத்தன்மை கூறப்பெறுமாதலின். பரிசேடத்தான் மாயாம்சமேஜடம் அதன்காரணம் எனக்கூறத்தக்கதாம், அவித்யா ரூபமாய அக்காரண பீஜத்திற்கும் நித்தியோதிதவித்யாபாதிதத்தன்மையானே ஈசுரன்பால் எப்போதுமேயில்லாமையின் என்பதாம். இதனானே பிதாமகனுடைய புவனாதிசர்க்க அர்த்தக்கிரியாகாரிதைப் பிரதிபாசமும் வியாக்கியானிக்கப்பெற்றதாம் எனல்:—கானனீர்போன்மயல் வடிவமே தோன்றுகின்றதென்பதாம், கூறியபொருளையே சுருக்கியுபசங்கரித்தல்:—ஹே பூமி பனே! ஆகையினால், அறிவினும் வேறாயதற்குக் கூறியயுக்தியானே அசத்துவமுண்மையின், சித்தேயாம் இத்தேவதேவின், முன்மொழிந்த ஈதரன், ஹிரணியகருப்பாதி ஸ்தம்பபரியந்த சர்க்கபரம்பரைவடிவமாக நித்தியம் யாதுகசிகின்றதோ அவ்வடிவம் சிதாத்மகத்தன்மையானே யான்மாவின்கண்ணே சித்தத்தானே கசிகின்றது, அயலொன்றுமில்லை யணுமாத்திரமும் அடைவிக்கவேனும் அடையவேனும் என்பதாம்; அதனானே தன்னானேதானே தானாகவே சொரூபமானது பதுமஜனென்பதாதி நாமரூபகற்பனையினாலே இனிதியம்பப்பெறும்; எல்லா

வுருவங்களையு மிகவினிதுவகுத்துப் பெருந்திரன், நல்லாமங்களையியற்றி யியம்பி நலமாய் வாழ்ந்திடுவன்'' என்பதாதி சுருதிகளினாலே யென்பதாம்; இவ்வண்ணம் பரியாலோசனை செய்யும்போது, இவ்வெல்லாத்துவைதமும், சாந்தமான பிரஹ்மமே யாமென்பதுபொருள். கானனீர்போன் மயல்வடிவமே தோன்றுகின்றது என்று யாதோதப்பெற்றதோ, ஆண்டு மிருகதிருஷ்ணாதிக்கு, ஸ்நானபானாதியர்த்தக்கிரியா சாமர்த்தியாதிய தரிசனத்தானும் மஜ்ஜனமரணாதி துக்ககாரணத்வாதரிசனத்தானும் விடமுமாந்திருட்டாந்தமென வாசன்சங்கிப்ப, சத்தியசங்கற்ப பாவனையினாலே திடமாக்கப்பெற்ற மித்தியார்த்தத்திற்கு அர்த்தக்கிரியா சாமர்த்தியமும் துக்ககாரணத்வமும், தைவாசுரமாயாநிர்மித சஸ்திர அஸ்திர ஹஸ்தியசுவ சேனாதிக்குப் பிரசித்தமேயாமெனின், ஜகதீசுரமாயாநிர்மிதப் பிரபஞ்சத்திற்கு அவ்விரண்டு முண்டென்பதிலென்னே கூறக்கிடந்தது என்னுங்கருத்தானே யுத்தரம் உரைத்தல்:—இந்தச் சர்க்கான்மகமாயஜகத்துப் பிரமத்திற்குப் பிராணிகரும உபபோக அருத்தத்தன்மையுண்மை யின், இவ்வண்ணம் நீயியம்பியவகையாக அர்த்தக்கிரியாகாரித்துவ சாமர்த்தியமும், துக்காதி காரணத்துவமும் உளவேயாம், சத்தியசங்கற்பத்தையுடைய ஈசுரனதுபாவனமே அவ்வவ் வர்த்தக்கிரியாதிவடிவமாக விரிந்துள்ளதாம்; சீதத்தானே சிலீபூதமாய சலிலத்திற்கு நெடும் போது படிகாதிபாவத்தானே பரிணமத்தால், பீடபாத்திராதியர்த்தக்கிரியா சாமர்த்தியம் விரிந்துள்ளதேபோலும். இதனானே மூலாஞ்ஞானத்திற்கு ஞானப்பியாசபரிபாகக்கிரமத்தால், சிதிலீபாவமேற்படவே ஜகத்திற்குச் சூக்குமத்தன்மையடைவின் கிரமத்தானே அஞ்ஞானத் தோடுகூட நாசமாமெனல்:—இவ்வண்ணம் சிதிலீபூதமாய அறியாமையானது நஷ்டமா மென்று பெரியோரறிவர். அஞ்ஞானநாசமில்லாமல் உலகச்சேர்க்கையின் பாதமானது, இல தாமென்க்கூறல்:—அறியாமையின் நாசத்தாலன்றிப் பூர்வசம்ஸ்தான நழுவுதலானது கூடா தாம். அஞ்ஞானஞ்சிதிலமாகவோ நிரோத அப்பியாசத்தால்; பாகியதீவிருத்திச் சுருக்கம் காரணமென்றுகூறல்:—சர்வபோகத்தினது சுருக்கத்தன்மையேதான் காரணம், அதுவும் ஞானோற்பத்திக்கிரமமாக ஆத்தியந்திகசர்க்க உபசமசம்பத்தியின்கண்ணே காரணமெனல்:— பரபதமானது சாக்ஷாத்கரிக்கப்பெற்றபோது, சர்க்க உபசம அடைவிற் காரணமாமென் றுணர்க. இதனானே லோகத்திலும் அபக்ஷயமெனப் பெயரியதான வ்பூர்வகமாகவே ஸ்தூல பாவங்களின் விநாசம்பிரசித்தமாம், எனல்:—எத்தேகாதிக்குத் தானவங்காணப்பெறுகின் றதோ, அதற்கு முறைமுறையே சுயமாகப் பூர்வசம்ஸ்தானம் விடுபடுதலால் விநாசமும் பொருந்துகின்றது. இவ்வண்ணம், காட்டியபிரகாரமாக அஞ்ஞான சைதில்யமுறையாக ஜகத்பாதத்தினாலேயே, உனக்கு நித்தியசித்த பூரணத்தன்மையிலக்கணபுருஷ சுபாவஸ்திதி சித்தியாம். ஈண்டிது பெரியவாசிட்டப் பாடப்படி தொடர்ந்தெழுதப்பெற்றது; செய்யுள் ஆறுயிரப்படியாம்.

(ச) இந்தஞாலம் வேதாவென்னும் பிரமனாற்சிருஷ்டிக்கப்பட்டதாதலின், அந்தப் பிர மனே யிதற்கெப்படிக்காரணமாகான், வேறு காரணரூபமான பொருளுமேயின்றாதலின் சிருட்டியின் முன்பு வெறிதாய் அத்துவிதீயமாகிய பிரமமுளது அதுவுங்காரணமன்று, நிர் விகாரமாதலின், ஒன்றொழிய=பிரஹ்மத்திற் கன்னியமாய், இரண்டு=இரண்டாம்பொருள், இலாக்காரணத்தால்=தோற்றமையின், ''அன்னியங்கிஞ்சிலுமின்று=ஆன்மாவேயாய், இஃ தேகமே முன்பிருந்தது'' என்னுஞ் சுருதியினாலென்க. ஆதலின் வேதாவுக்குக் காரணமின் றென்பதந்நுவயம்.

(ஸ்ரீ - வீர - அ - கை) கானனீர்போலிவையெலா மித்தையேயாயின் பிதாமகனுக்கு நிர்விசேஷம் பிரஹ்மமே யேன்காரணமாகமாட்டாது, பரிணமித்தன்மையானே அதற்கு அநித்தியத்தன்மையின் அடைவுமென்னற்க, முறையான சர்வபரிணம அநுவிருத்தி பலத்தினனே ஜாதியைப்போல அதற்கு நித்தியத்வங்கூடலின் எனவாசன் சங்கித்தலுஞ் சமாதானமும்:—காவலனென்பது.

காவலன்பார்த் துயர்பிரமம் வேதாவுக்குக் காரணமன் றோவென்னக் கும்பன் சொல்வான், கேவலமச் சுதமநந்தஞ் சாந்தஞ்சுத்தங் கேடுபிறப் பிடர்தோற்றங் கிட்டாதென்றும், பாவனையற் றடிமுடிவற் றொன்றாய்த்துன்றிப் பகர்வரிதாய் நாடரிதாய்ப் பரமநிற்குந், தாவரிய வதுவெங்ங னேதுவெத்தாற் சமைப்பவனைப் புசிப்பவனைச் சாருமாறே.

(ப - ரை) காவலன்பார்த் துயர் பிரமம்வேதாவுக்கு = அரசனேக்கி மேன்மையான பிரமம் பிதாமகனுக்கு, காரணமன்றோவென்ன, காரணமல்லவோவென் றாக்ஷேபிப்ப, கும்பன் சொல்வான்=குரவன்கூறுவான், கேவலமச்சுதம் அநந்தம் சாந்தம்சுத்தம் = தனித்ததாய், நழுவாததாய், அந்தமற்றதாய், உபசாந்தமாய், தூயதாய், கேடுபிறப்பிடர்தோற்றங் கிட்டாதென்றும்=அவ்யயமாய், அஜமாய், துயரற்றதாய், அகோசரமாய், எப்போதும், பாவனையற்று அடிமுடிவற்று=பாவனதீதமாய், ஆதிமத்தியாந்தரகிதமாய், ஒன்றாய்த்துன்றி = ஏகமாய் வியாபித்து, பகர்வரிதாய் நாடரிதாய்=கூறமுடியாததாய்க் கருதமுடியாததாய், பரமம் நிற்கும்=பரம்பொருளிருக்கும், தாவரியவது=சலனமில்லாத அந்தவஸ்துவானது, எங்ஙனேது வெத்தால் சமைப்பவனைப் புசிப்பவனைச் சாருமாறே=எதனது கருத்தாவாய் எதனது போக்தாவாய் எவ்வகையானேயாதானே யடைவதாமோ; கூறுவாய் எவ்வகையானுங் காரணமாகாதென்பதாம்.

(ஸ்ரீ-வீர) ஆதியிலுள்ள சிருஷ்டாவிற்கு அநந்தமாய் அஜமாயவ்வியக்தமாய் அம்பரமாய், சாந்தமாயச்சுதமாய் இலங்கும் பரம்பிரஹ்மம் ஏன் காரணமாகமாட்டாது? என்றிடக்கும்பன் சுருதி யுக்தி யநுபவவிரோதத்தானே, இவ்வண்ணம் ஏலாதாமெனல்:—கும்பனென்பதாதி. "அவ்விப்பிரம மன்னியமற்றது, முன்னுமில்லது பின்னுமில்லது" என்னுஞ் சுருதியினனே முன்மையிலக்கண ஹேதுத்வத்திற்கும் பின்மையிலக்கண காரியத்வத்திற்கும் நிடேதங் காணப்பெறுதலின், "இல்லையீண்டற்பமும் நானவெவையும்" என்னுஞ் சுருதியினனே இருமைமாத்திர நிடேதத்தானும், அசங்கனேயாவனு மிப்புருடன்" என்பதாதி சுருதியினனே, அநுவிருத்திகூடாமையின். கூடத்தனுக்குப் பரிணமங்கூடாமையினனும், சர்வப்பிரபஞ்ச அதீதமான அத்துவித ஆன்மாவாகிய தூயபிரஹ்மம், காரியமும் ஆகாதாம் காரணமும் ஆகாதாம். காரகாந்தர அப்பிரசித்தமாதலின் அதனலாக்கப்பெற்ற சுவாதந்திரியலக்ஷண கருத்துருத்துவமோ இதற்குச் சேய்மையிலேயே யகற்றப்பெற்றதாம் எனல்:—கர்த்ருகருமகாரணமற்றதாய்; இவற்றுள் அகர்த்தாவென்றது பிரயோஜ்ஜியகருத்தா அப்பிரசித்தமாகவே பிரயோஜ்க கருத்துருத்தகைமையு மிதற்குத்துர்லபமென இலக்கற்பொருட்டு என்றுணர்க, அகாரணமாய்=நிமித்தசூனியமாய், அபீஜமாய்=உபாதானசூனியமாய், பெரிது தர்க்கிக்க முடியாததாய் அறியமுடியாததாய், இலங்கும்பிரஹ்மம், கருத்தாவெங்ஙனம்பவிக்கும்; நிர்த்தர்மகத்தன்மையானே யந்தப்பிரஹ்மம் அகாரணத்தன்மையான் காரியத்வலக்ஷண தருமங்களினின்றும் இரகிதமாமென்னுமேதுவினனே காரியகாரணன்மக மாயாஜகத்தானதுச் சம்

பன்னமாமெனச் சம்பாவனைசெய்தியேலாயின் அச்சகத்து இருமையொருமையிலக்கணத் தானே வஸ்துவாலாக்கப்பெற்ற பரிச்சேதத்தால், ஆதியந்த இலக்கணங்களாலும், தேசகாலங் களாலாக்கப்பெற்ற பரிச்சேதங்களாலும், இரகிதமாம்சததாத்தியம் உபலம்பனமாம் சித்தேக ரசம் என்னும் பிரஹ்மமேசம்பன்னம் என்றுஞ் சம்பாவனைசெய்வாய்; அஞ்ஞான்று யாண்டு சக்றபாவம், காரியகாரணதையாதருன் என்பது கருத்தாம். இவ்வகையே யதற்குச்சீவபாவப் பிராந்தி சம்பாதனமுறவே, கருத்துருத்துவ போக்துருத்துவங்களும் நீக்கத்தக்கனவேயாம், எனல்:—பகர்வரிதாயென்பதாதி. அப்பிரதர்க்கியமாய் அவிஞ்ஞேயமாய் சாந்தமாய் அவ்யய மாய் இலங்குஞ் சிவமானது, எங்ஙனம் எதனது எதனுனே கருத்தாபோக்தா எப்போதாம்; நான்கு என்னென்பவற்றுனே பிரகார கருமகரணகாலமென்பவைகளின் அப்பிரசித்தியாம் என்பது குறிப்பாம்.

(ச) கேவலமுதலான விலக்கணமுள்ளதோற்றம் ஞானசொரூபமாய், எப்பொருணிற்கு மப்பொருளே பரமசிவம், சாந்தம், அவ்வியயமுமாதலின் அது வெங்கனேது, எத்தால்= எந்தப்பிரகாரத்தால், சமைப்பவனுய்ச்சாரும், ஒன்றுங்கர்த்தாவன்று, தனக்கு வேறுன காரிய மின்மையின் என்க. இங்ஙனங் கருத்துருத்துவமின்மையின் போத்துருத்துவமின்றென்பது பொருள். (148)

(ஸ்ரீ-வீர-அ-கை) பலிதத்தைப்பகர்தல்:—ஆதலினுலென்பது.

ஆதலினு லீதொன்றுஞ் செய்ததல்ல வடுத்துளவிச் சகமில்லை யறிவுமட்டு
மேதகுசங் கற்பிதமே வேதாவாகு மெய்யாக வறிவன்றி வேறென்றில்லைச்
சேதனமாத் திரத்துதித்த சிருட்டியந்தச் சேதனமே வடிவென்று செப்பலாகு
மோதியசெய் வோன்புசிப்போ னிரண்டுமல்ல னுறுபவந்தீர் பிரமமே யுள்ளவெல் [லாம்.

(ப - ரை) ஆதலினுல் ஈதொன்றும் செய்ததல்ல=ஆகையினுல் இது எதுவும் இயற்றிய தல்ல, அடுத்துள இச்சகமில்லை=பொருந்தியுள்ள இவ்வுலகமொன்றுமே கிடையாது, அறிவு மட்டும் மேதகுசங்கற்பிதமே வேதாவாகும்=சின்மாத்திரகற்பிதமே மேன்மைதங்கிய பிரஹ் மாவாகும், மெய்யாக வறிவன்றி வேறொன்றில்லை = உண்மையாகச் சித்தேயல்லாமல் அய லொன்றுமே கிடையாது, சேதனமாத் திரத்துதித்த சிருட்டி=அறிவுமாத்திரத் துதித்த சிருட் டியானது, அந்தச்சேதனமே வடிவென்று செப்பலாகும்=அந்தச்சேதனவுருவமே யாமென்று கூறலாகும், ஓதியசெய்வோன் புசிப்போன்=கூறிய கருத்தாபோக்தா, நீ இரண்டுமல்லன்= இரண்டுமாகாய், உறுபவந்தீர் பிரமமே யுள்ளவெல்லாம் = இருக்கின்ற யாவுமே ஜனனுதி யற்ற பிரமமேயாகும்.

(ஸ்ரீ-வீர) ஆகலினிது செய்யப்பெற்றதாகாதாம் ஜகத்தாதி சிறிது மில்லவேயில்லை, நீ கருத்தாவுமில்லை நீ போக்தாவுமில்லை, எல்லாஞ்சாந்தம் அஜஞ்சிவமேயாம்.

(ச) ஆதலினுல்=கருத்துருத்துவமின்மையின், ஈது=இச்சகம், ஒன்றும் = கிஞ்சிலும், செய்ததல்ல, ஆதலின், இச்சகம் இல்லை=உண்மையாக இன்றும், ஆதலின் வேதாமேதகு வறிவுமட்டுச் சங்கற்பமேயாகும், பிரமன் சின்மாத்திர கற்பிதனுதலின், அறிவன்றியில்லை= சித்தேயாம், சிருட்டியுஞ் சேதனமாத்திர துதித்தது, சின்மாத்திர சநிதமாம், சின்மாத்திரரூப மானவேதாவாலே ஜனித்தமையின் அந்தச்சேதனமே வடிவென்று செப்பலாகும், சின்மாத் திரமே வடிவமாம், உள்ளவெல்லாம்=இதுவென்றும், யானென்றும் தோற்றுகின்ற சகல

பொருளும், பவந்தீர் பிரமமே, ஆதலின், செய்வோன் புசிப்போன் இரண்டுமல்லன்=கருத்தாவும் போக்தாவும் யானன்று, இங்ஙனம் நிச்சயித்தவனாய் உள்ளத்துறும் அஞ்ஞானத்தைச் சிதைப்பாயென்றதாம். (149)

திடமுறநிச் சயித்துள்ளே யஞ்ஞானத்தைச் சிதைவித்தா லஞ்ஞானஞ் சிதைந்ததேயாம், படர்கருமச் சிதைவினா லன்றிமோகம் பகர்நிலைமை நழுவாது பகரஞ் ஞான, மடைவுறத்தேய்ந் திடிற்பழைய நிலைமைநீங்கா வாதிபத மாமதனா லாதி தேவன், றடமுறுசிற் சொரூபத்தாற் றன்மனத்தாற் றானேநித் தலுஞ்சிருட்டி தந்துநல்கும்.

(ப - ரை) திடமுறநிச்சயித்துள்ளே=அதிதிடமாகத் துணிந்துள்ளே, அஞ்ஞானத்தைச் சிதைவித்தால்=அறியாமையை யழித்தால், அஞ்ஞானம் சிதைந்ததேயாம் = அறியாமை யொழிந்துபோனதேயாம், படர்கருமச் சிதைவினாலன்றி=விரிந்தவினை விநாசத்தாலல்லாமல், மோகம்பகர்நிலைமை நழுவாது=மயக்கம்புகல் திதிகெடாது, பகரஞ்ஞான மடைவுறத் தேய்ந்திடில்=கூறிய வறியாமை முறையாகச் சிதிலமாயில், பழையநிலைமை நீங்காவாதிபதமாம்= பூர்வசம்ஸ்தானம் விட்டொழியவே நிர்விகாரதையுண்டாம், அதனாலாதிதேவன்=அதனானே தேவதேவன், தடமுறு=விசாலமான், சிற்சொரூபத்தால்=அறிவு வடிவத்தால், தன் மனத்தால்=தனது சித்தத்தால், தானே=சுயமே, நித்தலுஞ் சிருட்டிதந்துநல்கும் = எப்போதும் சர்க்கத்தைக் கொடுத்துக்கொண்டே யிருக்கும்.

(ச) முற்கூறிய பிரகாரமாக அஞ்ஞானஞ்சிதைந்ததே யாமென்பாதலின், படர்கருமச் சிதைவினாலன்றி=நாசத்தாலன்றி, மோகம்பகர்நிலைமை நழுவாது=பூருவவிருப்பு நழுவாது, அசமவாயிகாரண நசிக்கின் காரியத்திரவிய நாசமாதல் நியாயமாதலின் என்க. பூர்வவிருப்பி னழுவல் அசமவாயிநாசரூபமாதலின் என்பது கருத்து. ஆதிபதம்=நிர்விகாரதை, அதனால்= அவ்வேதுவினால், ஆதிதேவன்=பரமான்மா, தானே, தடமுறுதற்சொரூபத்தில், சிற்சொரூபத்தால், இவ்வண்ணமாகவே, தன்மனத்தால்=தன்சங்கற்ப வசத்தினால், இந்தத்தோற்றரவான பிரபஞ்சரூபம் பிரகாசிக்கின்றதென்றதாம். அதேயர்த்தப்பிரசமம் தேஜோதிரவிய விநாசமாம். (150)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் அகந்தையகற்றுமுபாய முறுதலையுபதேசித்து எஞ்சி நின்ற ஆன்மதத்துவத்தை யநுபவிக்கச்செய்து அதாவது, ஆகலின் சுத்தனாய் விமுக்தனாயுள்ளாய், பந்தமோக்ஷங்களின் கூற்றெங்கேயோ, என்றனுக்கிரகித்து, குரவன் மௌனமாயிருத்தலும், உபதேசித்தப்பொருளைச் சுவாநுபவத்தானே அநுமோதிப்பவனாகிய மன்னவன், பொருத்தத்தினும் பொருத்தத்தினும் பொருத்தமாயதே யுன்னால் உபதேசிக்கப்பெற்றதென்று அநுவதித்தல்:—ஆற்றுமவென்பது.

ஆற்றுமதத் துவமான வதனாற்றானே யயனென்று சொலப்பட்ட தகிலமாகித், தோற்றுமிவை யுபசாந்த சொரூபமாகுந் தோன்றலே யெனவொக்குஞ் சொன்னவெல்லா, மேற்றனவே படைப்பவனின் மையினால்வைய மில்லையா மத னாற்பல் பொருளொக்கில்லைத், தேற்றுகின்ற விவ்வகையா லறிந்தேனன்றாய்ச் சிவமானேன் வேறொன்றுந் தெரியக்காணேன்.

(ப - ரை) ஆற்றுமதத்துவமான வதனுற்றனே=ஆத்மதத்வமாகிய அதனுற்சுயம், அய னென்று சொலப்பட்டது = பிரஹ்மாவென்று கூறப்பெற்றது, அகிலமாகித் தோற்று மிவை=ஜகத்தாகித்தோற்றுமிவையாவுமே, உபசாந்த சொரூபமாகும்=பரமசாந்தமாய பரம சிவசொரூபமேயாம், தோன்றலேயென = மன்னவனேயென்றுகூற, ஒக்குஞ்சொன்னவெல் லாம் = கூறியயாவுமே பொருத்தமுடையனவேயாம், ஏற்றனவே = யுக்தியுடையனவே, படைப்பவனின்மையினுல்=சிருட்டிப்பவன் இல்லாமையினுலே, வையமில்லை=உலகமில்லை, அதனுற்பல்பொருளுக்கில்லை = அக்காரணத்தினுலே நாஞவிதமானவத்து நாட்டமுமில்லை, தேற்றுகின்ற இவ்வகையால்=உபதேசித்தருளிய இம்முறைமையானே, அறிந்தேன் நன் ருய் = மிகவும் நலமாகத்தெரிந்துகொண்டேன், சிவமானேன் வேறொன்றுந் தெரியக்கர ணேன்=சிவசொரூபமேயாயினேன் அயலொன்றையும் தோற்றுவதாகக் கண்டிலேன்.

(ஸ்ரீ - வீர) ஹே பகவன்! அறிந்தனன்யான், உன்னுல் யுக்தியுக்தமாய் உத்தமமாய் ஒளி ரும் வாக்கியமே கூறலாயது. காரணுபாவத்தினுலே கருத்தா இப்பிரஹ்மமாகாதென்று தெரிந்துகொண்டேன், கருத்தாவின்மையிற் சகத்தில்லை, அதனுல் நாமரூபசிருஷ்டியுமில்லை, ஆகலிற் சித்தாதியுமேயில்லை, அவற்றின் விரையாமகந்தையாதியுமே ஆகலிற் சிறிதுமே கிடை யவேகிடையா; இவ்வண்ணமாகவே விசுத்தனுயினேன் விபுத்தமாயினேன் சிவமாயினேன் றிண்ணம்.

(ச) அதனுல் = அத்தேவனுலே, ஆத்துமதத்துவமானதானே = தற்சொரூபமே, அய னென்று சொல்லப்பட்டது, அவ்வேதுவினுல், அகிலமாகித் தோற்றுமிவை; தேவதேவ னுடைய, உபசாந்த சொரூபமாகும்தோன்றல் = சிகித்துவஜன், படைப்பவனின்மையினுல் வையமில்லை, அதனுல்=வையமின்மையினுல், பல்பொருளுக்கில்லை என்றுநீ சொன்னதெல் லாம், யுத்திக்கொக்கும், வேறொன்றுந் தெரியக்காணேன், நான் எனக்கு இதரம் அற்பமும் இன்றென்று அறிந்து, சின்மாத்திரரூபமானயானே பரமான்மாவாக விளங்குகின்றேன் எனப் போதமுற்றனன், இவ்வகையால் = இவ்வேதுவினுலே, விசுத்தசொரூபத்தை நன்றுயறிந் தேன் இதனுற்சிவமானேன்=பரமான்மாவேயானேன் அதனுல். (151)

(ஸ்ரீ-வீர-அ-கை) மன்னவன்றன்னைக் கிருதகிருத்தியனென மகிழ்ந்துரைத்தல்:—எனை யென்பது.

எனைத்தொழுதேன் பல்பொருளுக் கறிவினுலே யிப்படிப்பொய் யாய்த் தோன்றிற் றிப்போதத்தா, னினைப்பிலுப சாந்தமாய் விசும்பினைப்போ னிற்கின்றே னெனநிருப னிகழ்த்தலோடுந், தனைத்தருகும் பனுஞ்சொல்வான் றேசகாலந் தடந்திசைசிந் தனைதொழில்கள் சார்ந்தவெல்லா, மனைத்தையுங்காண் பதுசகத்தைப் பிறித்துக்காண்கை யதுநெடுநா ளிற்சாந்த மாகிப்போகும்.

(ப - ரை) எனைத்தொழுதேன்=சிவமாகிய என்னையே நமஸ்கரித்தேன், பல்பொரு ளுக் கறிவினுலே=நாஞவகையான வத்துக்களை நாடும் உணர்வினுலே, இப்படிப் பொய் யாய்த் தோன்றிற்று=இவ்வாறுமித்தையாகவே பிரதீதியாயது, இப்போதத்தால்=இப்போ துதித்த இந்த மெய்யுணர்வினுலே, நினைப்பிலுபசாந்தமாய் = நினைவில்லாத பரமசாந்த சொரூபமாய், விசும்பினைப்போல் நிற்கின்றேன்=ஆகாயத்தைப்போலத் தெளிந்து நிலைத் தேன், என நிருபன் நிகழ்த்தலோடும்=என்று மன்னவன் புகலவும், தனைத்தருகும்பனுஞ் சொல்வான்=தன்னையே கொடுக்குந் தலைவள்ளலாகிய கும்பமுனிவன் கூறுவான், தேச

காலந் திட்டந்திசை=தேசம் காலம் விசாலதிசை, சிந்தனைதொழில்கள் சார்ந்தவெல்லா மனைத்தையுங்காண்பது=கலனைகிரியைகள் இவற்றைப்பற்றிய சகல பதார்த்தங்களையும் நாடுவது, சகத்தைப் பிறித்துக்காண்கை=உலகைப்பகுத்து நோக்குதலாம், அது நெடுநாளிற் சாந்த மாகிப்போகும்=அது நெடும்போதிற் சாந்தமாய்விடும்.

(ஸ்ரீ - வீர) என்பொருட்டு நமஸ்காரம், சிற்சொரூபத்தினும் வேறு திருசியஞ் சிறிது மின்றாமென்றுன்னால் உணர்த்தப்பெற்றேன், இவ்வண்ணம் உன்னாலுபதேசிக்கப்பெற்ற யுக்தியினாலே சர்வ பதார்த்தங்களின் ஆராய்ச்சியினாலே வேதனத்தினின்றும் அத்தியாரோபமாக அகமாதி விவேகத்தானேயபவாதமாக அகமந்தமான திருசியக்கூட்டம், அசத்து இலதேயாமெனத்தோற்றுகின்றது; இச்சர்வதுவைதபாதத்தால், ககனகோசம்போலும், சாந்தமாய் நிர்விக்ஷேபமாயிருக்கின்றேன். அத்திதியையே யபிநயஞ்செய்துகொண்டுபசங்கரித்தல்:—தேசதிக்காலகலாசிரியாக் கூட்டங்களோடுகூட ஜகத்பதார்த்தப் பிரவிபாகதிருஷ்டி யெனக்கு வெகுகாலமாயிருந்தது அந்தோ இன்று சாந்தமாயது, ஆச்சரியம்! ஆச்சரியம்!! ஆகவே சாந்தமாய், அவ்யயாத்மாவாய், நிர்விகாரமாய், ஒளிரும் பிரமமே பரிசிட்டமாயிருக்கும். ஈண்டுச் செய்யுட்குக் கிடைத்தபாடம் வேறுபோலும்.

(ச) எனைத்தொழுதேன், அந்நியமானதேவதாந்தரமின்மையின் என்க, பல்பொருள் நோக்கறிவினாலே பேதத்தோடு பதார்த்தாநுசந்தான வேதுவினால், பொய்யே = அசத்தேயான இச்சகம், இப்படி=இந்தப்பிரகாரமாக, தோன்றிற்று ஆதலின், இப்போதத்தால்= இப்பதார்த்த வேதனத்தினால், அமையும், இப்போதுநான், விசும்பினைப்போல் உபசாந்தமாய் நிற்கின்றேன்; தேசாதிசம்வித்தோடுகூடிய சக்விஷயமும் பதார்த்தபேதவிஷயமுமான சம்வித்து, நெடுநாளிற்சாந்தமாகி=நிவிர்த்தியாய்ப்போகும், அவ்வியயான்மாவாய்ச் சாந்தமான பிரஹ்மமே யிருக்குமெனப் பிற்கவியோடு அந்வயிக்க. ககோசம்=ஆகாசகர்ப்பம். (152)

(ஸ்ரீ-வீர-அ-கை) இவ்வாறுகூறிய மன்னவன் ஆங்கே நிட்டைகூடியிருத்தல்:—சாந்தவென்பது.

சாந்தமுற வழிவற்ற பிரமமாங்கே தனிநிற்கு மெனக்கும்பன் சாற்றலோடும்,
வேந்தனறி வுற்றுமிக விளங்கிநின்றான் வெம்மாயைக் குகைநின்று வெளியிலானா,
னாந்திறமே பணதியறக் கும்பன்சொன்ன வதுகுறித்துத் தனதாமித் தற்பதத்தே,
காந்தியுறச் சேர்ந்தொளித்தான் மனமுங்கண்ணுங் கட்டுறையற் றானிறைந்தான்
கணத்திலாங்கே.

(ப-ரை) சாந்தமுற=பரமசாந்தமான, அழிவற்ற=அவ்வியயமான, பிரமம் ஆங்கே தனிநிற்கும்=சிவம் அவ்விடத்திற் கேவலமாயிருக்கும், எனக்கும்பன் சாற்றலோடும் = என்று கும்பமுனிவன் கூறியபோது, வேந்தனறிவுற்று=அரசன்றெளிந்து, மிக விளங்கிநின்றான்= மிகவு மிலங்கியிருந்தான், வெம்மாயைக் குகைநின்று வெளியிலானான்=கொடியமாயையாகிய குகையிலிருந்து வெளியேவந்தான், ஆந்திறமே=ஆரோபித்த தன்மையாகவே, பணதியற= நாமரூபமற, கும்பன்சொன்ன = குரவனுபதேசித்த, அது குறித்து=அதனையாராய்ந்து, தனதாமித்தற்பதத்தே=தன்னுடைய பிரத்தியக்ஷதற்பதத்தில்,காந்தியுற=பிரகாசம்பொருந்த, சேர்ந்தொளித்தான் = விலயமானான், மனமுங்கண்ணும் = சித்தமும்விழியும், கட்டுரை= வசனமும், அற்றான்=ஒடுங்கிடுமாறுசெய்தான், நிறைந்தான் = பரிபூரணமானான், கணத்திலாங்கே=கணநேரத்தில் அவ்விடத்திலேயே.

(ஸ்ரீ-வீர) இவ்வண்ணம் கும்பமுனிவனாலே போதிக்கப்பெற்றவனாகிய அம்மன்னவன் நற்போதமுடையவனாயினான், மகாமோகச்சிமிழினின்றும் வெளிப்பட்டான் உன்னதமாக விளங்கலானான்; அந்த வஞ்சனையற்ற கும்பமுனிவனது வாக்கை நன்றாக வாசன் ஆராய்ந்து பார்த்து, சுயமாகவே அந்த ஆத்மபதத்தில் ஒருநொடியில் முற்பாவத்தைவிட்டுத் தற்பாவத்தை யடைந்தான். ஒடுங்கிய கருத்துடையவனும் மூடியகண்ணுடையவனும் ஆனான், சாந்தவாக்கினையுடைய அம்முனிவனானவன் சிலாதலத்தில்வகுத்த பிரதிமையேபோல அசையாத அவயவ ஆகிருதியுடையவனானான்.

(ச) மனோமீலனம் = விருத்திநிரோதமாம், உளியாதிகளினாலே சிலையாதிகளிலே மேற்கீறி நிருமித்த பதுமையேபோலும். (153)

(ஸ்ரீ-வீர-அ-கை) விழித்த மன்னவனைக் கும்பமுனிவன் அநுபவம் வினாதல்:—ஒரு என்பது.

ஒருமுகுர்த்த மிருந்துணர்ந்து விழித்தலோடு முயர்கும்ப னுரைசெய்வா னுளதாய்நன்றாய், நிருமலமாய்ச் சுத்தமாய் மிகமெத்தென்று நிருவிகற்பங்களுக் கெல்லா நிலயமாகித், திருமிகுமிப் பதத்திலே சுகமாய்த்துன்பந் தீர்ந்தனையோ வுள் ளுணர்வு தெளிவுற்றாயோ, வருமயக்க மொழிந்தனையோ ஞேயநன்றா யறிந்தனை யோ காண்பனகண் டனையோவென்றான்.

(ப-ரை) ஒருமுகுர்த்த மிருந்துணர்ந்து=இரண்டு நாழிகைநேரம் நிருவிகற்பமாகவிருந்து அறிந்து, விழித்தலோடும்=கண்டிறந்தவுடனே, உயர் கும்பன் உரைசெய்வான்=மேலான கும்பமுனிவன்கூறுவான், உளதாய்=சத்தாய், நன்றாய் = நலமுடையதாய், நிருமலமாய்= மலரகிதமாய், சுத்தமாய்=தூயதாய், மிகமெத்தென்று=மிருதுவினுமிருதுவாகி, நிருவிகற்பங் களுக்கெல்லா நிலயமாகி = நிருவிகற்பங்களுக்கெல்லா மிருப்பிடமாகி, திருமிகுமிப்பதத் திலே=அழகுமிகுந்த இந்தப்பதத்தின்கண்ணே, சுகமாய்த் துன்பந்தீர்ந்தனையோ = ஆனந்த மாய்த் துயரந்தீர்ந்துவிட்டாயோ, உள்ளுணர்வு தெளிவுற்றாயோ=ஆந்தர அறிவு தெளிந்து கொண்டாயோ, வருமயக்க மொழிந்தனையோ = வந்தமோக மகன்றனையோ, ஞேயநன்றா யறிந்தனையோ=அறியவேண்டியபொருளை யினிதாக வுணர்ந்தனையோ, காண்பனகண்டனை யோவென்றான்=காணவேண்டியவனைத்தையுங் கண்டாயோவென்று கேட்டான்.

(ஸ்ரீ - வீர) அதன்பின் முகூர்த்தமாத்திரத்தானே யுணர்ந்துகண்விழித்தவனை நோக்கிச் சூடாலையாகிய கும்பமுனிவன் கூறுவதாவது: ஹே மகாபாகுவே! அகண்டிதமாயும் தூய்தா யும் விபுவாயும் நிர்மலமாயும், நிருவிகற்பமுற்ற யோகிகட்கு, சோபனசய்யையூதமான நிரதி சயானந்தபதமாயும், உள்ள இந்த அகோசாவத்துவின்கண்ணேயாவது சுகத்தையடைந்த னையா? நன்றாக விசிராந்தியையடைந்தனையா, உள்ளே பிரபுத்தனாகியுள்ளாயோ! உன்னால் மயலெல்லாம் எடுத்தெறியப்பெற்றதோ? அறியவேண்டியபொருள் நன்றாக அறியப்பெற் றதோ? காணவேண்டியதுதான் கண்டதாயதோ.

(ச) நிர்விகற்பங்களுக்கெல்லாம்=நிர்விகற்பசமாதியையடைந்தவ ரனைவருக்கும், நிலய மாகி=விசிராந்தித்தானமாய், (154)

(ஸ்ரீ-வீ-அ-கை) அரையன்றன்னனுபூதியையுரைத்துப் பெரியோரது சங்கமத்தாலிப்பேறு கிடைத்ததெனல்:—நாவென்பது.

நரபால னதற்குரைப்பான் பகவனேநின் னருளாலே பெருஞ்செல்வ நலத்தான்மிக்குப் பரமாகி யனைத்திற்கு மேலாய்விஞ்சு பதங்கண்டே னகோவகோ பரமஞானந் திடமான பெரும்பெரியோர் கூட்டங்கிட்டாத்தெள்ளமுதாய்ப் பேரின் பந் தேங்கநல்கும் வரமாநின் கூட்டத்தா லொருகாலத்தும் வாராதநல்லமுது வரப் பெற்றேனால்.

(ப - ரை) நரபாலனதற்குரைப்பான்=நரேந்திரனவன் அதற்குபதிலுரைப்பான், பகவனே! ஹே பகவானே, நின்னருளாலே=உனது கிருபையாலே, பெருஞ்செல்வ நலத்தால் மிக்கு=பெரிய ஐசுவரிய நன்மையினாலே மிகுந்து, பரமாகி யனைத்திற்குமேலாய்=மகத்தாய் எல்லாவற்றினுக்கு முன்னதமாய், விஞ்சுபதங்கண்டேன்=எஞ்சாநின்ற பதத்தினைத் தரிசித் தேன், அகோ வகோ=ஆச்சரியம் ஆச்சரியம், பரமஞானந்திரமான=அபரோக்ஷஞானந் திடமயது, பெரும்பெரியோர் கூட்டம் = பெரியசாதுக்களின் சங்கமம், கிட்டாத்தெள்ளமுதாய் = கிடைத்தற்கரிய தெளிந்த அமிர்தமாய், பேரின்பந் தேங்கநல்கும் = பேராநந்தம் தேங்கிநிற்குமாறு கிடைப்பிக்கும், வரமாநின் கூட்டத்தால் = அத்தகைய மேலான உன்னுடைய சங்கமத்தால், ஒருகாலத்தும் வாராத=ஒருபோதினும் கிடைக்கக்கூடாத, நல்லமுது= நல்ல அமிர்தம், வரப்பெற்றேன்=கிடைக்கப்பெற்றேன். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர) ஹே பகவனே! உனது பிரசாதத்தினாலே, நிரதிசயாநந்த வடிவபூமிகையாகிய பெரும்பதவியானது காணப்பெற்றது, இரணிய கருப்பசம்பந்தானந்தாந்தமாய விஷயாநந்தக்கூட்டத்தின் உற்கர்ஷகாட்டையின்கண்ணே யானிருந்தனன், அறியவேண்டியதை யறிந்த சத்துக்களாகிய மகாத்மாக்களின்சங்கம், அகோ ஆச்சரியம் எதைத்தான் செய்விக்க மாட்டாது, அநாதியாய சம்சாரத்திலொருபோதுமே யனுபவிக்கப்பெறாத ஒப்பற்ற முக்கிய அமிர்தம் அதாவது நிரதிசயாநந்தவெள்ளம் என்னாலடையப்பெற்றது, இதனானே சாரபலத்தைக் கொடுப்பதாஞ் சாதுக்கள்கூட்டம்; இதன்பெருமை யென்னேயென்னே!! பொதுவாகப் புகன்றதைச் சிறப்பாக விரித்துரைத்தல்:—வரமாவென்பதாதி. ஜன்மத்தினும் எம்மகாமிருதமானது என்னால் அடையப்பெறவில்லையோ, அஃதின்று உனது சமாசங்கத்தாற் சுயமாகவே அதனானே அடையப்பெற்றது, அதாவது, அம்மகாமிருத சொரூபபூதமாகவே யிருக்குமென்னால் அநாதியஞ்ஞானத்தானே அடையப்பெறவில்லை. அஃதின்று உனது திருவருளால் அநாயாசமாகவே யடையப்பெற்றதென்பதாம்.

(ச) பெருஞ்செல்வம்=அணிமாதிகள், விஞ்சுபதம்=ஜீவன்முக்திமார்க்கம், பெரும்=மகான்களென்னும், பெரியோர்=சத்துக்களுடைய, கூட்டம்=சங்கமானது, கிட்டாத்தெள்ளமுதாய்=அபூர்வமான ஏகாமிர்தமாய். (155)

(ஸ்ரீ-வீர - அ-கை) எனக்கு முன்னிதுகிடைத்தற் கருமையாயிருந்ததென்னென மன்னவன் கேட்ப, முன்னர்ச் சித்தகஷாயபாகமின்மையின் அடையப்பெறவில்லை, இப்போதோ தவத்தால் அதன்பரிபாகத்தாலடையப்பெற்றதாம், என்னுங்கருத்தினாலே, கும்பமுனிவனுத் தரங்கூறல்:—அநந்தமென்பது.

அநந்தமா மிவ்வமுத மெனக்குமுன்னா ளரிதான தென்னவெனக் கும்பன் சொல்வான், மனந்தனிலே சாந்தியாய்ப் போகங்கைத்து வன்பொறிமீண் டுளமடமை மாய்ந்தபோதே, புனந்தரு செங் குசும்பைநீ ரழுக்குப்போன புடவையிலே நிற

முறல்போற் புதல்வர்நெஞ்சிற், கனந்தருசற் குருவசனங் கலந்துநன்ருங் காயமலங் களுமரத்தின் காய்கள்போற்போம்.

(ப - ரை) அனந்தமாம் இவ்வமுதம் = அந்தமில்லாத இந்த அமிருதம், எனக்கு முன்ஞன் = அடியேனுக்குப் பூர்வகாலத்தில், அரிதானதென்னவென = துர்லபமானது என்ன காரணம் என்றுகேட்ப, கும்பன்சொல்வான் = கும்பமுனிவன் சொல்வான், மனந்தனிலே சாந்தியாய் = உள்ளந்தனிலே உபசாந்தியாய், போகங்கைத்து = போகங்கசப்பாய், வன்பொறி மீண்டு = வலியபுலன்கள் திரும்பி, உள்ளமடமைமாய்ந்தபோதே = மனத்தறியாமை நசித்த போழ்தே, புனந்தருசெங்குசும்பைநீர் = பொழிலிலுண்டாம் சிவந்த குசும்பாஜலம், அழுக்குப்போன புடவையிலே = தூயவாடையிலே, நிறமுறல்போல் = வர்ணங்காட்டலேபோல, புதல்வர்நெஞ்சில் = மாணுக்கருள்ளத்தில், கனந்தருநற்குரு வசனங்கலந்துநன்ரும் = மேன்மையைப்பயக்கும் நன்மையாய ஆசிரியர்திருமொழி விரிந்துவிரவிப் பேரானந்தத்தையே பயக்கும், காயமலங்களும் மரத்தின்காய்கள் போற்போம் = தேக அசுத்தங்களும் மரத்துப் பலங்களைப்போலப் போய்விடும்.

(ஸ்ரீ - வீர) ஹே கமல லோசனனே! அநந்தமாய் ஆத்தியமாய், அமிருதமாய் உள்ள இவ்வாத்மபதமானது, முன்னர் என்னுலெங்ஙனம் அடையப்பெறவில்லை? சர்வேந்திரிய கணத்திற்கும் மனத்திற்கும் போகலக்ஷணகஷாயங்களின் பாகமுளதாகியவழி, அங்ஙனமே மிருதியுமியம்புகின்றது:—கஷாயத்தைப் பக்குவங்காலுங் கன்மங்கள், கதிர்த்த ஞானமோ பரமமாங்கதியாம், கருமங்களினற் கஷாயங்கள் பக்குவம், ஆனபின் ஞானமாகுமென்ப" மனத்தின்கண்ணுபசமமுண்டாகவே, போக்வேடணைகளியாவுமே விடுபட்டழியவே, விமலமானதேசிகோபதேசங்கள் சித்தத்தின்கண்ணே விசிராந்தியையடையும்; குங்கும அம்பசின்பிந்துக்கள் சுத்தமாய வெள்ளியவத்திரத்தில் ஏறுதலேபோலும். சரீரங்களினுலே தாங்கப்பெற்றனவும் தன்வாதனைவடிவங்களும், ஆகிய அநந்தகஷாயங்களின் பக்குவம் உனக்கின்றுதான் உண்டாயது. தேகத்தினின்றும் சருவமலங்களாய இராகாதிகஷாயங்களும் பாவங்களும் காலமுண்டாகக் கமலேக்ஷணனே பாகத்தால் விருக்ஷத்தினின்றும் பலங்களே போலச் சாதுவே கீழே கழிந்தேவிழும்.

(ச) போகங்கைத்து = விஷயவாஞ்சையை வெறுத்து, வன்பொறிமீண்டு = சர்வேந்தியகண நிவிர்த்தியாய், உளமடைமை மாய்ந்தபோதே = அந்தக்கரணடாகம் அத்தியந்தம்வரின், குசும்பைநீர் = குசும்பகுசுமாதி ரசத்துளிகள், மரத்தின் = விருக்ஷத்தினின்றும், கனிகள் போல், காயம் = தேகத்தினின்றுஞ் சகல மலங்களும்போம். (156)

(ஸ்ரீ-வீ-அ-கை) ஞானஞ்ஞானங்களின் இலக்கணத்தைக்காட்டி யிவ்வாறு இருப்பாய் என்றலும் மன்னவன் மீண்டும்வினுதல்:—உள்ளத்திலென்பது.

உள்ளத்தி லிருமையென வொருமையென்ன வுன்னுதலஞ் ஞானமிவை யொழிதன்ஞானங், தெள்ளுற்ற கதியுமது தெளிந்துமுத்தி சேர்ந்தனேசித் தமும்விட்டாய் செல்வனுகித், தள்ளுற்ற மலநீங்கி மௌனியாகித் தனிநிற்பா யென்றலுமே தமையுணர்ந்தோர், கொள்ளுற்ற தொழிலெல்லா மனத்ததன்றே கொண்மனமின்றி யினடக்குங் கொள்கையென்னே.

(ப - ரை) உள்ளத்திலிருமையென = மனத்தில் இரண்டாந்தன்மையென், ஒருமையென்ன=ஒன்ருந்தன்மையென்ன, உன்னுதலஞ்ஞானம் = எண்ணுதலேயறியாமையாம், இவையொழிதல் ஞானம்=இவையாவுமே நீங்குதலே ஞானமாம், தெள்ளுற்ற கதியுமது= தெளிவோடுகூடிய பதமுமது, தெளிந்துமுத்தி சேர்ந்தனே = தெளிவையடைந்து மோக்ஷமுற்றனே, சித்தமும்விட்டாய்=மனத்தையுமொழித்தாய், செல்வனுகி=மைத்திரியாதி குணகளுலங்கிருதனுகி, தள்ளுற்றமலநீங்கி=நீக்கியமலத்தைப் பற்ருமல்விடுத்து, மௌனியாகி= வாக்கு வியாபாரத்தையும் விடுத்து, தனிநிற்பாயென்றலுமே=ஒப்பிலாமல் இருப்பாயாகவென்றிதமுபதேசித்தபோது, தமையுணர்ந்தோர் = தங்களுடைய சொரூபத்தையுணர்ந்தவர், கொள்ளுற்ற தொழிலெல்லாம்=கவர்வுற்ற வினைகளெல்லாம், மனத்ததன்ருே=உளத்ததேயல்லவோ, கொள்மனமன்றியில் நடக்குங் கொள்கையென்னே = கவருமுள்ளமில்லாமல் விவகரிக்குங் கொள்கையெப்படியோ.

(ஸ்ரீ-வீர) ஒருமையிருமைப்பார்வை யுளதாவதேசித்தமாம், அதுவே யஞ்ஞானமெனவுமறையப்பெறும், பரமாத்ம அபிவியக்தியினின்றும் இவையிரண்டு மிலயமாதலே, ஞானமாம், அதுவே பரமகதியாம்; பிரபுத்தனுயினுய் விமுக்தனுயினுய், ஹே நிருபனே யுன்னுற் சித்தம் விடப்பெற்றது; சதசத்தாமயத்வமேயர்ய அசத்பதம் உன்னுற்றியாகிக்கப்பெற்றதாம்; அதாவது, ஆன்மாவின்கண் ணன்னியோன்னிய அத்தியாசத்தானே சத்தசத்தாமயத்வமேயன்ருே சித்தமென்பது, அதுவே அசத்தாகிய ஜகத்தின் கற்பனைத்தானமாம், அதுவேயுன்னுல் விடப்பட்டதன்ருே வென்பதாம். சோகங்கடந்தாய், ஆயாசமற்ருய் சங்கமற்ருய், அனன்னிய ஆத்மவானுயினுய், மகோதயமுற்ருய் முனியேயானுய் மவுனியாகி நிருமல உனது சொரூபத்தே சும்மா விருப்பாய். சித்தமானது நியக்தமாகவே ஜீவன் முத்தர்கட்கு எவ்வந்தக்காரணத்தானே விவகார சித்தியாம் எனக்கேட்பானரசன் பீடிகைபோட்டு வினுதல்:—தமையென்பதாதி. இவ்வண்ணமே பகவன்! மூர்க்கஜந்துவிற்கேயன்ருே சித்தமுளதாகும், அதனை யுணர்ந்த வறிஞனுக்குச் சித்தமென்பதில்லையன்ருே, ஹே பிரபுவே! இல்லையாகவே, ஜீவன் முக்தராமிவர் எங்ஙனம் விவகரிப்பர், கூறுதி, இஃதெனக்குக் கேட்கத்தக்கதில் முக்கிய அம்சமாம், அதாவது மனமற்றிருக்கும் நீங்கள் யாவரும் எவ்வாறு உபதேசாதி காரியங்களைச் செய்கின்றீர்கள் என்பதாம்.

(ச) இருமையொருமை விஷயத்தில், உன்னுதல் உறுந்திருஷ்டியே உள்ளம் அதுவே அஞ்ஞானம், இவையொழிதல் = இத்திருஷ்டிகளின் நாசமே ஞானம் அதுவே தெள்ளுற்ற கதியும் கைவல்லியமுமாம், தமையுணர்ந்தோர்க்கு மனதில்லையன்ருே, ஜீவன் முத்தர் சித்தத்தையன்றி யெப்படி விவகரிப்பர் என்றதாயிற்று. (157)

(ஸ்ரீ-வீர-அ-கை) உள்ளத்தின் மெய்ம்மையேயுணர்த்தல்:—உரையென்பது.

உரையென மன்னவன்கேட்பக் கும்பன்சொல்வா னுளமென்று சொன்னது வே றொன்றுமன்று, கரையறுபல் பவந்தருவா தனையேயுள்ளங் கண்டதனை யறிந் தாலக் கவலையில்லை, வரையறக்கண் டவர்கருமங் களிற்சரிக்கும் வாதனைதான் மறு பிறப்பை வழங்காதந்தப், புரைமனஞ்சத் துவமென்பர் சித்தமென்று போதமில் லாச் சித்தத்தைப் புகல்வான்றே.

(ப - ரை) உரையென் மன்னவன்கேட்ப = கூறுவாயாகவென்று அரசன் வினவ், கும்பன்சொல்வான் = கும்பமுனிவன் கூறுவான், உள்ளமென்று சொன்னது வேறொன்று

மன்று=மனமெனக்கூறியது அயலொன்று மல்லவாம், கரையற்பல் பவந்தருவாதனையே= அளவில்லாத அநேகஜனனந் தந்திடும் வாசனையே, உள்ளம்=மனமாம், கண்டதனையறிந்தா லக்கவலையில்லை = பார்த்ததனை யுணர்ந்தால் அந்தக்கிலேசமிலதாம், வரையறக்கண்டவர்= நன்றாகக் கண்டவர், கருமங்களிற் சரிக்கும் வாதனைதான் = தொழில்களில் விவகரிக்கும் வாதனையானது, மறுபிறப்பை வழங்காது = புனர்ஜனனத்தைக் கொடுக்காது, அந்தப்புரை மனம்=அந்த விவகாரசாதகமானமனது, சத்துவமென்பர் = சத்துவமாமென்று கூறுநிற்பர், சித்தமென்று=உள்ளம் என, போதமில்லாச்சித்தத்தை=உணர்வில்லா மனத்தை, புகல்வர்= கூறுவர்; அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ-வீர) மறுஜனன போக்கியமாய வாசனையாதுளதோ அக்கனவாசனையே சித்தசத்தத் தாற் கூறப்பெறும், அது தத்துவ வித்துக்கிலதாம்; எவ்வாசனையினாலே தஞ்ஞர் ஈண்டுக்கரு மங்களில் விவகரிப்பார்களோ அதனை சத்துவமெனப் பெயரியதாகவும் புனர்ஜனனவர்ஜித மாகவுமறிதி; வறுக்கப்பெற்ற பொறியேனும் உமியெடுக்கப்பெற்றதேனும், நென்முதலிய சப்தவாச்சியத்தை யடையாதாம், அங்குராதிஜனன சமர்த்தமுமாகாதாம், அதுபோல, தத்துவ ஞானத்தானே வறுக்கப்பெற்றதும் நிவாரணமு மாயசத்துவம், மனச்சத்த வாச்சியமாகாதாம், மறுஜன்ம சமர்த்தமுமாகாதாம். ஜீவன்முக்த விவகாரப்போலியில், அதேகாரணப் போலியா மெனல்:—ஜீவன்முக்தராகிய மகாத்மாக்கள் சத்துவத்தாராய்ப் புலன்களைவென்றவராய், பற் றற்று விவகரிப்பர், ஒருபோதுஞ் சித்தராகார்; மூடசித்தத்தையே சித்தமென்பர் அறிந்த சித் தத்தைச் சத்துவமென்றறைவர்.

(ச) கவலையில்லை, முற்கூறிய மலினவாசனையே சித்தமாம்; அது பிரமஞானிக்கின்றென் பது பொருள். ஆன்மஞானிக்கு விவகாரவேதுவான சுத்தவாசனையே சத்துவமென்பர். சித்த மன்று மென்றதாயிற்று, அதனையே கூறல்:—போதமில்லாச்சித்தத்தை=மலினவாசனையோடு கூடிய மனதை. (158)

(ஸ்ரீ-வீர-அ-கை) சத்துவத்தேநின்று திடப்படுவாயெனல்:—ஞானமென்பது.

ஞானமனஞ் சத்துவமே யென்றுசொல்வர் ஞானமிலா தார்சித்த நடையினிற்ப
ரீனமறு ஞானிகள்சத் துவத்தேநிற்ப ரேதொன்று சுவர்க்கம்வீ டெல்லாநல்கு
மானவையெல் லாம்விட்டுச் சமமாஞ்சோதி யானுலே தாகுதியிங் கதுநீயாகு
மூனமுறு பொருளொன்றுங் கைக்கொள்ளாம லுள்ளமசை வறநிற்பா யுறுதியாக.

(ப - ரை) ஞானமனம் சத்துவமே யென்றுசொல்வர் = அறிந்த மனமானது சத்துவ மனதேயென்று கூறுவர், ஞானமிலாதார் சித்தநடையில் நிற்பர் = ஞானமில்லாதவர் சித்தப் போக்கிலிருப்பர், ஈனமறுஞானிகள் சத்துவத்தேநிற்பர்=இழிவிலாத அறிவுடையவர் சத்து வத்திலேயே யிருப்பர், ஏதொன்று சுவர்க்கம்வீடெல்லா நல்கும் = யாதொன்று சுவர்க்கம் மோக்ஷம் யாவுந்தரும், ஆனவை யெல்லாம்விட்டு=ஆகியவை எவற்றையுமே விடுத்து, சம மாஞ்சோதியானுல்=ஒப்பாகிய பரஞ்சோதியானுல், ஏதாகுதியிங்கதுநீ=எது ஆவாயோ ஈண் டதுநீ, ஆகும்=ஆவாய், ஊனமுறு பொருள் ஒன்றும்=கெடுதலான பொருளெதுவும், கைக் கொள்ளாமல்=கிரகியாமல், உள்ளமசைவறநிற்பா யுறுதியாக = மனஞ்சலன மில்லாமலிருப் பாய் திண்ணமாக.

(ஸ்ரீ-வீர) அப்பிரபுத்தர்களோ சித்தத்தவர்களே யாவர்கள், மகாதியர்களோ சத்துவத் திருப்பவர்களேயாவர்கள், ஞானலாபத்தின் பின்பு சுவர்க்காதி சாதனங்களையொப்ப அபவர்க்க சாதனங்களையும் விட்டொழிக்கவேவேண்டும் என்னுங் கருத்தினாலே யுரைத்தல்:—எதொன் றென்பதாதி. சுவர்க்க மோக்ஷாதிபலந் தருவதாயது சிறிதுள்தோ அது முழுதுமே, விட்டு, சமசமர் பாசமியாது ஆயினுயோ அதுவேதானுக இருந்துவாழுதி: சருவ பதார்த்தங்களிலும் சத்தம் சம்சத்துவத்தானே கவரத்தக்கதாம், அசத்தம்சமோ நித்தியநஷ்டத்தன்மையானே கவரத்தக்கதாம், சித்தசாஞ்சல்யமில்லாமல். ஆசையை அடியோடுவிட்டு, சத்துவத்தைச் சத்துவத்தால் நாசியத்தை நாசத்தால், இப்பதார்த்தக் குழுவைக் கவர்ந்து சுகமாக விருப் பாய்.

(ச). ஞானமனம் = சித்த வாசனையோடு கூடியசித்தம். (159)

(ஸ்ரீ - வீர - அ - கை) சாஞ்சல்யமில்லாமல் என்பதற்குப் பிரயோஜனத்தை யறிந்து, மனத்தையகற்றிச் சுகமாயிருவென்ன மன்னவனுபாயம் வினுதல்:—நெஞ்சிலென்பது.

நெஞ்சிலா தவர்பிறவி நெடுந்தூரம்போ நீணிலத்திற் றுயரொன்று நேர்ந்ததல்ல, வஞ்சுமன மசைதலி லுண்டானதாகு மசைவசையா மைகளிரண்டு மயிக்கமாக்கிச், சஞ்சலமாற் றிச்சித்தாம் படிநில்லென்னத் தாணிபன்சொல் வானயிக்கஞ் சார்வ தெங்ஙன், விஞ்சுமசை வசையாமை யிரண்டுமொன்றாய் விடும்படிசொல் லெனக் கும்பன் விளம்பலுற்றான்.

(ப - ரை) நெஞ்சிலாதவர்பிறவி நெடுந்தூரம்போம்=மனமிலாதவரது ஜனனம் வெகு தூரத்திலோடிவிடும், நீள்நிலத்தில் துயரொன்றும் நேர்ந்ததல்ல = இவ்வுலகத்தின்கண்ணே துக்கமெதுவுமே தொடர்ந்ததல்ல, அஞ்சுமனம் அசைதலில் உண்டானதாகும்=பயப்படுமுள் ளம் சலித்தலினாலே யுளதானதாகும், அசைவு அசையாமைகள் இரண்டும் அயிக்கமாக்கி= சலித்தல் சலியாமைகள் இரண்டையு மொன்றாக்கி, சஞ்சலமாற்றி = சாஞ்சல்யத்தைவிட்டு, சித்தாம்படி நில்லென்ன=அறிவாம்படியே இருப்பாயென்று புகலுதலும், தாணிபன் சொல் வான்= மன்னவன் கூறுவான், அயிக்கஞ்சார்வதெங்ஙன் = ஐக்கியமடைவதெப்படி, விஞ்சு மசைவு அசையாமை = மிகுத்துவருசலனம் சலனமின்மை, இரண்டுமொன்றாய் விடும்படி சொல்லென=இரண்டு மேகமாய் விடும்படி கூறென்ன, கும்பன் விளம்பலுற்றான் = கும்ப முனிவன் கூறத்தொடங்கினான்.

(ஸ்ரீ-வீர) அசையாத சித்தத்திற்குச் சம்சாரம் ஈண்டடைவுறாதாம், சுவாபாவிகப் பிர விருத்தி யிலக்கணபுருஷாபராதத்தாலுண்டாம் விபத்தியானது விவேக ஞானேதயமுண் டாக்வே யடைவுறுவதில்லையது போன்றென்பதாம். இச்சகத்திரயத்தில் எவ்வெத்துக்கங்கள் தோற்றுகின்றனவோ அவையாவுமே ஹே மகிபதியே! சித்தசாபல ஜன்னியங்களேயாம். சித்தத்திலுண்டாம்—ஸ்பந்தாஸ்பந்தங்களில் அதன்சாக்ஷி மாத்திரத்தன்மை தரிசனத்தானே யொருமையையுற்றுச் சாக்ஷிக்கும் சாசுவதமான பிரஹ்மாத்மைக்கியத்தை யடைவித்து, பூமா னந்தபாவத்தானே இஷ்டப்படி பூர்ணகாமத்தன்மையானே யிருப்பாய் தத்துவஞ்ஞனே யென; விருத்தமாயஸ்பந்தாஸ்பந்தங்கட்கு ஒருமையைச் சம்பாதித்தல் எங்ஙனமென மன்ன வன் வினுதல்:—தாணிபனென்பதாதி. ஹே விபுவே இந்த ஸ்பந்தாஸ்பந்தங்கள் இரண்டிற் கும், எங்ஙனமைக்கியங்கூடும்? சர்வசம்சய விச்சேதகாரியே இதனை விரைவில் எனக்குக் கூறுதி.

(ச) மனமசைதலி லுண்டானதாகும், சகல துக்கங்களுஞ் சித்தசாபல ஜந்நியங்களே யாம் என்றதாயிற்று. அசைவு=சித்தம், புறஞ்சேறல், அசையாமை சமாதி, அவைகளிரண்டு மைக்கமாக்கி எப்போதுஞ் சொரூபாநுசந்தானத்தால் விக்ஷேபாவிக்ஷேப பேதத்தைவிட்டு, சித்தாம்படியில்=பிரமாத்துவிதத்தை யடைந்து இஷ்டப்படி யிருப்பாய். (160)

(ஸ்ரீ-வீர-அ-கை) அவற்றிற்குச் சொரூபமாக ஐக்கியவிரோதமிருந்தபோதினும் அதிஷ்டான சாக்ஷியாகிய சின்மாத்திரரூபமாக அவைபூர்ணுரூவாம், எனத் தன்கருத்தை வெளிப் படுத்தலானே கும்பமுனிவன் விடைபகரல்,—உவரியுண்டான வென்பன.

உவரிநீர் போலுலகெல் லாமொன்றுன வுணர்வுமாத் திரமதுதா னுற்றபுந்தி, கவர்வுறுத லாலசையு நிறையுநீர்தான் கல்லோலத் தாலசையுங் கணக்கேபோலச், சிவமுணர்வு மாத்திரமெய்ப் பிரமமாதித் திரள்பெயராய்ப் புகல்பொருளைச் சக மென்றெண்ணித், தவமறுபே தையர்காண்ப ரறிவுதானே சற்றசைந்த மாத்திரத் தாற் சருக்கமுண்டாம்.

உண்டான சிருட்டிதா னன்றாய்ப்பார்க்கி லொழிந்துபோ முறுதியா யுணரா வாற்றுற், கண்டார்கள் கயிற்றிலே பாம்பென்பார்போற் காட்சியுறுங் கலைநூலாற் கற்றோர்சார்வாற், றண்டாத பரிசயத்தாற் சிலகாலத்திற் றுவுமன நின்மலமாய்ச் சசிபோனிற்கிற், பண்டாய வநுபூதி மயமாய்த்தானே பாக்கியவான் களுக்கிந்தப் பார்வைதோன்றும்.

(ப-ரை.) உவரிநீர்போல்=கடல்நீர்போல, உலகெல்லாம் = ஜகத்துமுழுவதும், ஒன்றுன வுணர்வுமாத்திரம்=ஏகமான ஞானமாத்திரம், அதுதான் உற்றபுந்தி கவர்வுறுதலால்= அதுவே புத்தியாற் கவரப்பெறுதலானே, அசையும்=சலிக்கும், நிறையுநீர்தான் = பரிபூரண மான ஜலமானது, கல்லோலத்தாலசையும் கணக்கேபோல=தரங்கங்களாலசையும் கணக்கே போலவாம், சிவமுணர்வுமாத்திரம் மெய்ப்பிரமமாதி=சுகம், சின்மாத்திரம், சத்தியம், பிரமம் முதலனவாக, திரள் பெயராய்=கூட்டமான நாமமுடையதாய், புகல்பொருளை=கூறுநின்ற வத்துவை, சகமென்றெண்ணி=உலகமென்று நினைந்து, தவமறு=தவமில்லாத, பேதையர் காண்பர்=அறியாதவர் காணுநிற்பர், அறிவுதானே சற்றசைந்த மாத்திரத்தால் = சேதனந் தானே சிறிதசைந்தமாத்திரையானே, சருக்கமுண்டாம்=சிருட்டியுண்டாம்.

உண்டான சிருட்டிதான்=உண்டாகிய சிருட்டியானது, நன்றாய்ப்பார்க்கில்=நன்றாக ஆராய்ந்துநோக்கில், ஒழிந்துபோம் உறுதியாய்=மறைந்துபோம் திண்ணமாய், உணராவாற்றுல்=அறியாத்தன்மையால், கண்டார்கள் கயிற்றிலே=பார்த்தார்கள் இராஜ்ஜுவிலே, பாம் பென்பார்போல்=சர்ப்பமென்பார்போல, காக்ஷியுறுங் கலைநூலால் = நன்றாகவாராயும் சற் சாஸ்திரங்களால், கற்றோர் சார்வால்=சத்புருடரின் சேவையால், தண்டாதபரிசயத்தால்= தடைப்படாத அப்பியாசத்தால், சிலகாலத்தில்=சிறிதுபோதில், தாவுமனம்=ஓடுமனம், நின் மலமாய்=மலமற்றுத்தூய்தாய், சசிபோல்நிற்கில் = சந்திரனைப்போல நின்றால், பண்டாய அனுபூதிமயமாய்=பிராசீனமான சுவாநுபூதிமயமாய், தானே = சுயமே, பாக்கியவான்களுக் கிந்தப்பார்வைதோன்றும் = ஜன்மாந்தரபுண்ணியமுடையவர்கட்கு இவ்விதமான திருஷ்டி யானதுண்டாம்.

(ஸ்ரீ - வீர) உலக முழுவதும் கடனீர்போல் அறிவு மாத்திரமான ஒரு வஸ்துவே யிருக் கின்றது; அதுவே தீக்களாலே வீசுகளாற்றூப தோயம்போல அசைவு வடிவமாக விவர்த்த

மாகின்றது; பிரஹ்மம் சின்மாத்திரம் அமலம் சத்வம் என்பதாதி நாமங்களுடையதாக, "சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்" என்பதாதி சுருதி மிருதிகளானே எப்பொருளானது கூறப்பெற்றுளதோ அவ்விதனையே மூடர் உலகமாகப் பார்க்கின்றனர் மன்னனே; ஸ்பந்தாஸ்பந்தங்களை ஏகரூபமாகப் பாவிக்கப் பாவிக்க ஆண்டு இவ்வாத்ம சொரூபமேயாய சிவமே பரிசேடிக்கும், சர்க்கமப்போது யாண்டேகுமெனினுரைத்தல்:—உண்டான வென்பதாதி. சிற்பந்தமாத்திர வடிவமாய சர்க்கம் நற்றிருட்டியில் விலீனத்தை நண்ணும், இரஜ்ஜுவின் கண்ணே சர்ப்பப் பிரமமேபோல நற்றிருட்டியில்லாதவர்கட்கு மயலினலே யுதயமாகுஞ் சர்க்கமாதலின்; அசைவுடன் கூடியசித்தே சர்க்கப்பெயரையடையும், அசையாத இதுவோ எங்கும் நிறைந்ததாய், துரியாதீதபதாரூடமாம், வாக்கால் வசனிக்கவும் வழங்காதாம்; எப்போது அவ்வாறுதிதமாகும் எனின் உரைத்தல்:—கலையென்பதாதி. விழியில் திமிரதோஷக்ஷயத்தால் அமலத்தன்மையுளதாகவே, நித்தியசித்தமேயாய சந்திர ஏகத்தன்மை உதிதமாவதேபோல, சாத்திரசற்சன சம்சர்க்கசந்ததாப்யாசயோகத்தால், கால்பாகத்தால், சித்தத்தின் கண்ணே அமலத்தன்மை யுண்டாகவேயுண்டாம். வாக்கால் வழங்கமுடியாததேயாயின் எங்ஙன்முன்னல் என்போலியர்பால் வழங்கப்பெறல் எனின் உரைத்தல்:—பண்டாய என்பதாதி. இது கேவலம் தன்னைத்தானே யநுபவிக்கும் தன்னனுபூதிகளினுலே விஸ்தாரமாய் விளங்குவதாகும், தனது ரூபத்தைத் தன்னுலே தானே சுவாநுபூதிகளிலநுபவித்து லோக திருஷ்டியினுலே கூறுவன். இது மகாத்மாக்கட்குச் சுயமே யுதிதமாம். நீயும் சுவானுபூதியை யடைந்தவனேயாவாய் ஆண்டு எனது வாக்கியத்தினுலே திரபாவமாத்திரஞ்செய்தி.

(ச) உலகெல்லாம்=சர்வஜகத்தும், ஒன்றுன உணர்வுமாத்திரம், சின்மாத்திரமான ஏகப்பொருளேயாம். எங்ஙனமெனில், உவரியனைத்து நீர்மாத்திரமதுபோலாம், அதுதான்=அச்சின்மாத்திரப்பொருளே, கல்லோலத்தா னிறையுநீர்போல் இத்தன்மையான புத்திவிருத்திகளால் அசையும் பிரமத்தையே மூடர்கள் ஜகமென்றுகாண்பர் என்பது பொருள்.

சித்தசைவு மாத்திரமே சருக்கமாமதுவும் நன்றுய்ப்பார்க்கில் அதிஷ்டானதாதான்மிய ஞானத்தால் எதார்த்தஞானம்வரின் ஒழிந்துபோம் உறுதியாயுணராவாற்றுல், கயிற்றிலே பாம்பென சர்ப்பப்பிரமைபோல், காட்சியுறும், காணப்படுமென்றதாயிற்று. பண்டாய அத்தியந்தங் கேவலமான அநுபூதிமயமாய் சுவப்பிரகாசமாகிய இந்தப்பார்வை பாக்கியவான்களுக்கு=மகாமதியையுடைய மகான்களுக்கு, தானேதோன்றும். (161-162)

(ஸ்ரீ-வீர - அ-கை) உபதேசத்தை முடித்து ஆசீர்வதித்தேகக் காரணமுறைத்தல்:—உலகு, அயனென்பன.

உலகத னுதயநாச முண்மையை யுரைத்தேனித்தை
நலனுறச் செய்துநாடி நழுவுறு நயந்தவண்ணம்
விலகலற் றெதிர்ந்தவெல்லா மெய்ப்பதத் தாக்கிநிற்பாய்
திலகமாஞ் சொன்னநாடு சேர்வனுன் காலமீதே.

அயனுல கினும்பொன்னுடற் றங்கெனைக் காணனென்னிற்
பயமுற முனியுமெந்தை நாரதன் பரிந்தமைந்த
ருயர்குரு முனியப்பண்ண வொருசுற்று மொண்ணுமன்னு
மயலறப் பேதநீக்கி மகிழ்ந்திதை நோக்கிநிற்பாய்.

(ப - ரை) உலகதன் உதயநாச முண்மையை யுரைத்தேன் = ஜகத்தினது தோற்றமாற் றங்களின் யதார்த்தத்தைக் கூறினேன், இத்தை=இதனை, நலனுறச் செய்துநாடி=நன்மை யுறச் செய்துபார்த்து, நழுவுறா நயந்தவண்ணம்=தாழ்ந்துபோகாமல் இனிது முயன்று இவ் ஷ்டப்படி, விலகலற் றெதிர்ந்தவெல்லாம்=இடைவிடாமல் தோற்றுமவற்றையெல்லாம், மெய்ப் பதத் தாக்கிநிற்பாய்=சிற்சற்பதப்படிவமாய்ச்செய்து அதன்கண்ணே விசிராந்தியடைந்து நிற்பாய், திலகமாம் சொன்னநாடு = புவனங்களுக்குப் பொட்டுப்போலிலங்காநின்ற அமர லோகம், சேர்வன்நான் காலமீதே=போவோனியான் போதீதேயாம்.

அயனுலகினும் = பிரஹ்மலோகத்தினின்றும், பொன்னுடுற்று = சொர்ணலோகஞ் சேர்ந்து, அங்கெனைக்காணு ன் எனில் = அவ்விடத்தில் என்னைக்காணுன் ஆகில், பயமுற முனியுமெந்தை நாரதன் = அச்சமுண்டாகும்படி சினப்பான் என்றந்தை நாரதமுனிவன், பரிந்த மைந்தர் = அன்புசெய்யும் புத்திரர், உயர்குரு முனியப்பண்ண = மேலான பிதா கோபிக்கச்செய்ய, ஒருசற்று மொண்ணு=ஓரணுவும் வைத்துக்கொள்ளக்கூடாது, மன்னு= அரசனே, மயலறப்பேதநீக்கி=மயக்கமில்லாமல் வேற்றுமையைமாற்றி, மகிழ்ந்திதை நோக்கி நிற்பாய்=சந்துஷ்டியுடன் இதனைத்தானே நாடிக்கொண்டிருப்பாய்.

(ஸ்ரீ - வீர) ஹே சிகித்துவஜ மகிபதியே! இவ்வண்ணம் எங்ஙனிவையாவு மெழுந்த வென்னும் அத்தியாரோபத்தானும், எங்ஙனந்தான் நன்கு விலீனமாம் என்னும் அபவாத முறையானும், யாவுமாய்ப் பூன்றமாய பிரஹ்மதத்துவம், உனக்கென்னு லுரைக்கப்பெற்றதே யாம். குருசாஸ்திரங்களானே இதனைக் கேட்டும், தனது விசாரத்தினுலே கருதியும், நன் குணர்ந்தும் நேரே கண்டவழி ஆவரணபங்கத்தால் வெட்டவெளியான பரமபதத்தில் ஒரு போது சமாதிப்பிராதான்யத்தானும், வேறு, ஒருபோது விவகாரத்தாலும், எப்படி விரும்பு கின்றுயோ அப்படியே யிருப்பாயாக. ஹே முனிநாயகனே! யான் இந்திரசபையை நோக்கிச் செல்கின்றேன், பர்வகாலமிதனில் நாரதமுனிவரானவர், பிரஹ்மலோகத்தினின்றும் நன் குவந்து அமரர் அவைக்கண்ணிருப்பார்; ஆண்டென்னைக்காணுராயின் வெகுளுயை மேவுவர்; அடங்கி யன்புசெய்பவனு லொருபோதும் குருமார்கள் கிளர்ச்சியை அடையுமாறு செய்விக்க லாகாது; சங்கற்பம் அணுவுமில்லாமல் விடுத்து, அணுவையும் வாஞ்சியாதிருக்கும் உன்னுல், எப்போதுமே, அதிபவித்திரமாய இந்த என்னுலுபதேசிக்கப்பெற்றதேயாய திருஷ்டியே மிக மிக ஆதரிக்கத்தக்கதாம்.

(ச) இத்தை, மனதினில், நலனுற, யுத்திகளால் அநுசந்தானஞ்செய்து, நாடி = உள்ள படியுணர்ந்து, மெய்ப்பதத்து, ஜீவன் முத்திப்பதத்தில் நயந்தவண்ணம் நிற்பாய்.

அயனுலகினும் = பிரஹ்மலோகத்தினின்றும், அங்கு = அத்தேவசபையில், முனியப் பண்ணவொண்ணு=விக்ஷேபம் வரும்படி செய்யத்தகாது, மயலற = அற்பமும் வாஞ்சை யின்றி, பேதநீக்கி=சங்கற்ப சமூகங்களை விட்டு, நிற்பாய்=இந்தநோக்கினிற்பாய். (163-164)

(ஸ்ரீ-வீர - அ-கை) கும்பமுனிவன் சென்றபின்னர் மன்னவன் கிருதகிருத்தியனுய் நிர் விகற்ப சமாதியையடைதல்:—போது ஆன் என்பன.

போதுநா மென்னக்கும்பன் மறைதலும் பூபனெண்ணுஞ்
ஓதளஞ் சுத்தஞ்சாந்தந் தெள்ளமு துறலொக்கு
மீதொரு பதவியென்னு ளிருந்தவா றென்னேயென்னே
கோதிலென் சத்துவத்திற் குளிர்வுறச் செய்ததென்றுன்.

ஆனவா தனைகளின்றி யசைவற்றுப் போனாகி
மோனமாய் நிருவிகற்ப மாய்ப்பற்று முற்றுமற்ற
தானமே யழுந்திக்கற்போற் றருவைப்போற் சுவர்போனின்றான்
போனசூ டாலைபண்டைப் பொற்கொடி வடிவமெய்தி.

(ப-ரை) போதுநாமென்னக் கும்பன் மறைதலும்=யாம் போகின்றோம் சுகமாயிருத்தி யென்று கும்பமுனிவன் சொரூபத்தில் யந்தர்த்தானமாதலும், பூபன் எண்ணும்=மன்னவன் நினைக்கின்றான், சீதளம் சுத்தம் சாந்தம்=தண்ணென்று தூய்தாயுபசாந்தமாய், தெள்ளமு தூறலொக்கும்=தெளிந்த அமிர்தத்தின் ஊற்றையொப்பாகும், மீதொரு பதவி = மேலான தாகிய ஒப்பற்ற பதவியானது, என்னுளிருந்தவா றென்னேயென்னே=என்னிடத்திலிருந்த வண்ணம் என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்!! கோதிலென் சத்துவத்தில் = குற்றமற்ற எனது சத்துவத்தில், குளிர்வுறச் செய்ததென்றான் = தண்மையுறச் செய்தது என்று கூறினான்.

ஆனவாதனைகளின்றி=வந்தவாதனைகளெல்லாம் க்ஷயமாகி, அசைவற்றுப் போனாகி= சலனமற்று எழுந்திராதவனாகி, மோனமாய்=மவுனமாய், நிருவிகற்பமாய் = மனவிகற்பமில் லாமல், பற்றுமுற்றுமற்ற தானமேயழுந்தி=சகல பற்றுக்களும் ஒழிந்தவிடமே மூழ்கி, கற் போல் தருவைப்போல்=கல்லைப்போல மரத்தைப்போல, சுவர்போல் நின்றான்=பித்திபோ லிருந்தான், போனசூடாலை=மறைந்துபோன சூடாலையானவள், பண்டைப்பொற்கொடி வடிவமெய்தி=பழையமகாராணி வடிவத்தையடைந்து.

(ஸ்ரீ-வீர) இந்தப்பிரகாரம் பதிற்கூறும் புட்பகரமன்னவன் நமஸ்காரம் செய்து கொள் ளுவதற்குள்ளே, அதாவது பிரணமசகிதப்பிரதிவசனத்தின் முன்னரே, அந்தர்த்தானத்தை யடைந்தனன் கும்பமுனிவன் பதிவிரதைகளினால் நாயகனாற்றிய நமஸ்காரங் கவரப்பெறுதல் கூடாமையின். கும்பமுனிவன் சென்றபின்னர் மகிபாலன் பரமவிஸ்மயத்தை யடைந்தவனாயி னான் அந்த ஆச்சரியத்தையே சிந்தித்துக்கொண்டு சித்திரத்தர்ப்பித்தவன்போலாயினான்; அந்தோ ஆச்சரியம் சீதளமாய்ச் சுத்தமாய் சாந்தமாய்ச் சொந்தமாய் இரசாயன உற்பவ ஆகார மாய், ஆன்மரூபத்தைச் சாக்ஷாத்கரித்த இந்த சாம்ராஜ்ஜிய பதவியானது, எனது நிர்வாசனை மனத்தைப் பரமசீதளத்தைச் செய்கின்றது; இவ்வண்ணம் நன்கு சிந்தித்த மன்னவனானவன் அத்தியந்தம் நிர்வாசனாசயனாய், சைலத்தினின்றும் நன்கு செய்யப்பெற்ற பிரதிமாதிபோல வாக்காதி சேஷ்டாரகிதனாய், ஒருமையுடன் வீற்றிருந்தனன். சாந்தசத்தன்மை யுண்மையின் விட்டிற்கு வசுவிகுதியாம். அதன்பின் சங்கற்பமற்று நிராசிரயமாய் முனிகருமமாகிய வச் சிமாதியின்கண்ணே நிச்சலப்பிரதிஷ்டையை யடைந்து கிரிசிருங்கம்போல விருந்தனன். கூறியமுறையே சிகித்துவஜராஜா நிர்விகற்பசமாதானத்தினாலே, காஷ்டகுட்டிய உவமைத் திதியை அடைந்தனன், சூடாலையினுடைய விருத்தாந்தத்தை யிப்போது கூறக்கேட்பாயாக, அம்மன்னவனைய பர்த்தாவிற்கு அக்கும்பவேடத்தானே போதித்துவிட்டு மறைந்துபோன சூடாலையானவள் வேகத்துடன் விண்ணிற் கிளம்பிச்சென்றனள், செல்லும்போது மாயாவி நிர்மிதமாய கும்பவேஷதேவபுத்திர ஆகிருதியை ஆகாயத்தில் விடுத்து, அச்சம், நாணம், மடம் வாய்ந்த அழகுமிகுந்த பெண்வடிவைமெச்சக் கவர்ந்து சென்றனள். (165-166)

(ஸ்ரீ-வீர - அ-கை) அந்தப்புரஞ் சேர்ந்த சூடாலையானவள் மூன்றுவருடங் கழித்துக் காட்டிற்கு வந்து நிருவிகற்ப சமாதியிலிருந்த நாயகனைப் பரீக்ஷித்துப்பார்த்தல்:—அம்பரத் தறிவிப்பென்பன.

அம்பரத் தேகியந்தப் புரம்புக்கா ளவனிகாவ
னம்பர மென்றுகாத்தா ணடந்தது வருடமூன்று
கும்பனுய்க் கணவன்காட்டைக் குறுகியாங் கவனைக்கண்டா
டம்பமாய் நிருவிகற்ப சமாதியி லிருத்தல்கண்டு.

அறிவிப்போ மென்றுசிங்க நாதத்தா லார்த்தமட்டிற்
பொறியுற்ற தில்லைமேன்மேற் றொனித்திவள் பூபன்றன்னை
மறியத்தள் ளுதலும்வீழ்ந்து மறிந்திலன் மற்றென்னென்று
நெறியுய்க்குங் கும்பன்மேனி நேரிழை நினைப்பதானாள்.

(ப - ரை) அம்பரத்தேகி=ஆகாயமார்க்கமாகச் சென்று, அந்தப்புரம்புக்காள் = அரண்மனையுண்மனையையடைந்தாள், அவனிகாவல் நம்பரமென்று=பூமண்டலத்தைக் காக்குதல் நமது கடமையென்று, காத்தாள்=இரக்ஷித்தாள், நடந்தது வருடம்மூன்று=மூன்று வருடங்கள் சென்றன, கும்பனுய்=கும்பமுனி வேடம்பூண்டு, கணவன் காட்டைக்குறுகி=நாயகன் றவம்புரியும் வனத்தையடைந்து, அங்கவனைக்கண்டாள் = அவ்விடத்தி லவனைப்பார்த்தாள், தம்பமாய்=தம்பம்போலும், நிருவிகற்ப=விகற்பமில்லாத, சமாதியிலிருத்தல்கண்டு = நிட்டையிலிருத்தலை நோக்கி.

அறிவிப்போமென்று = தெரிவிப்போ மென்பதாக, சிங்கநாதத்தால் ஆர்த்தமட்டில் = சிங்கநாதத்தொனியினாலே சப்தித்தவளவில், பொறியுற்றதில்லை = தெரிந்துகொள்ளவில்லை, மேல்மேல் தொனித்திவள்=மேலும் மேலும் சப்தித்து இவள், பூபன்றன்னை=மன்னவனை, மறியத்தள்ளுதலும்=விழும்படி கீழேதள்ளுதலும், வீழ்ந்து மறிந்திலன்=விழுந்தும் உணர்ந்திலன், மற்றென்னென்று=இனிச்செய்வது யாதுகொலென்று, நெறியுய்க்குங் கும்பன்மேனி நேரிழை = நன்மார்க்கத்திற் செலுத்தும் கும்பமுனி மேனிவாய்ந்த சூடாலை, நினைப்பதானாள்=எண்ணுவதாயினள்.

(ஸ்ரீ - வீர) ஆகாயமார்க்கமாகத் தனது பட்டணமடைந்து கணநேரத்தில் விசேஷ அந்தப்புரத்திற் பிரவேசஞ்செய்தனள், யாவருக்கும் காக்ஷியுறப்பெற்றனள்; ராஜகாரியத்தையும் பிரஜாநுரஞ்சனத்தையும் செய்தனள்; பின் மூன்றுவருடங் கழித்து மீளவும் அம்பரத்தையடைந்தவள் யோகத்தினாலே நாரதபுத்திர வடிவத்தையடைந்து, மன்னவன் வனத்தைவந்தடைந்தனள்; வனத்தினளாகிய வவள் அவ்வாறே ஆண்டே பிரதிமாகாரமாக நிருமிக்கப்பெற்ற காஷ்டம்போல நிச்சலமாக நிருவிகற்பசமாதியிலிருக்கும் அம்மன்னவனைக் கண்டனள், இம்மன்னவனை யிப்போது இப்பரபதத்தினின்றும் வெளிநாட்ட முறும்படி செய்வேன், பிராரப்தகர்ம சேடகாலமாகிய இப்போது தேகத்தியாகத்தை யாதின்பொருட்டுச் செய்தல்வேண்டும், செய்யவேண்டியதில்லையன்றோ; இவ்வாறு இனிது சிந்தித்த சூடாலையானவள் பர்த்தாவினுடைய சந்நிதியில் மீளமீளவும் வனத்திலுள்ள சிங்காதிகளும் பயத்தையடையும்படியான சிங்கநாதத்தைச் செய்தனள்; மறுபடி மறுபடியும் செய்தபோதினும் அந்நாதத்தினாலே மலையிற் சிலைபோலும் அவன் அசையாதிருந்தபோது, அவள் அவனைக் கரத்தினாலே பிடித்துக் குலுக்கினள்; அசைத்தபோதினும் வீழ்த்தியபோதினும், மன்னவன் உணராதபோது கும்பரூபத்தையுற்ற சூடாலையானவள், இவ்வாறு சிந்திப்பாளாயினள். (167-168)

(ஸ்ரீ-வீ-அ-கை) அரசன் றற்பதமடைந்தனன் அறிந்து சத்துவசேடமுண்டேல் எழுப்புவோமென் முயலுதல்:—உத்தமம்றுவென்பன,

உத்தமன் றற்பதத்தோ டொன்றினன் வியப்பிதம்மா
வித்தனி யுடலைப்பார்த்தா லிதயத்தி னறிவின்வித்தாஞ்
சத்துவ சேடமுண்டேற் றலைவனைப் புணர்வமெல்லென்
றத்தியால் வாழ்துமன்றே லங்கனை வடிவம்விட்டு.

மறுபவ முறுதவண்ண மாசறு பதத்தைச்சேர்து
மறுதியீ தென்னவுன்னிப் பரிசத்தால் விழியாலன்ன
னுறுமறி வுக்குவித்தா யுற்றசத்துவ சேடந்தா
னிறுதியற் றிதயந்தன்னி லிருந்தது கண்டாளென்ன.

(ப - ரை) உத்தமன் தற்பதத்தோடொன்றினன்=தவமிகுந்த மன்னவன் பரமபதத்தே பொருந்தினன், வியப்பிதம்மா = அகோ அகோ இதுமெத்த ஆச்சரியம், இத்தனி யுடலைப் பார்த்து = இந்த ஒப்பற்ற தேகத்தை பரீக்ஷித்துநோக்கி, இதயத்தின் அறிவின்வித்தாம்= இருதயத்தின்மாட்டு அறிவின்விரையாகிய, சத்துவசேடமுண்டேல் = சத்துவலேசமிருக்குமாயின், தலைவனைப் புணர்வமெல்லென்றத்தியால் வாழ்தும் = பிரபுவினுடையதாம்பத்திய சித்தியின்பொருட்டு யானும் ஜீவிப்பேன், அன்றேல்=இலதாயின், அங்கனை வடிவம்விட்டு= இப்பெண் வடிவத்தையுமகற்றி.

மறுபவ முறுதவண்ணம்=புனர் ஜனனத்தை யடையாதபடி, மாசறு பதத்தைச்சேர்தும்=தூயபரபதத்தையடைவோம், அறுதியீ தென்னவுன்னி = துணிவீதென்று எண்ணி, பரிசத்தால் விழியால்=ஸ்பரிசத்தினுலும் நயனத்தினுலும், அன்னன்உறு மறிவுக்குவித்தாய்= அரசனடையும் உணர்விற்குப் பீஜமாய், உற்றசத்துவ சேடந்தான் = பொருந்திய சத்துவ சேடமானது, இறுதியற்றிதயந்தன்னில்=கெடுதலில்லாமல் இருதயத்தின்கண்ணே, இருந்த கண்டாளென்ன=இருப்பதைப்பார்த்தாள் என்று கூறவே.

(ஸ்ரீ - வீர) அகோ ஆச்சரியம் இப்பகவான் தனது பதத்தில் நன்றாக விலீனமாய்விட்டான், சப்தமபூமிகையநுப்பிரவேச பரியந்தம் பரிணதமாகிய இம்மன்னவனை யிப்போது எந்த யுத்தியினலே விழிப்பிப்பேன், அவனுக்குபதேசம் விடமம் பரிணமத்தை யடையமாட்டாது என்னு மெனது சம்பாவனை வீணேயாம். யானுமிவ்வங்கனைத் தேகத்தைவிட்டுப் பரம பதத்தையுடனேயே புனர்ஜனன மில்லாமைப்பொருட்டேயடைவேன், ஈண்டு வாழ்வதில் என்னதிகசுகம் வருவதோ! மகிபதியினுடைய இத்தேகத்தை நன்கு பார்வையிடுவேன், இத் துணையினும் சத்துவசேட மிருக்குமாயின் போதபீஜமும் இருதயாம்பரத்திலிருத்தலேயாகும், இருந்தாற் காலத்திற்கிளம்பும், அதாவது, சத்துவ்மாகிய நிர்வாசனைமனம், இம்மன்னவனுடைய இருதயாம்பரமாகிய பிராரப்த அவசேஷிதமாயாலே சோபகிதஹார்த்தப்பிரஹ்மத்தின் கண், சமஸ்காரலேசவடிவமாய்ச் சேடமாக இருக்குமாயின் எழுவன் என்பதாம். என்பதாகச் சிந்தித்துச் சூடாலையானவள், ஸ்பர்சனத்தினுலும் நயத்தினுலும் பதியைப்பார்த்து, தேக வெப்பக்குறியால் கூறப்போங்குறியால், பதி ஜீவித்துளான் என்று ஆசங்கத்துடன் பார்த்துச் சம்போதஹேது உதயத்தால், சத்துவசேடத்தை நன்குணர்ந்தனள்; இவனது இருதயத்திற் சத்துவசேடம் உளதேயாம் என்று கூறிக்கொண்டனள்; அவ்வரவர்ணினியாகிய சூடாலை யானவள் சம்போத காரணத்தைக்கண்டு சந்தோஷித்தனள்.

(ச) உடலைப்பார்ப்பேன் = ஜீவிதசேடமுள்ளதுண்டா வில்லையாவென விசாரிப்பேன். என்பது பொருள். சத்துவசேடம்=ஜீவிதசேடமென்னு மிராஜதமம் விடுபட்டசித்தம்.

அறுதியீது, ஸ்ரீ வசிட்டர், பரிசத்தால், பிராணசஞ்சாரசூசகமான சரீரத்துள்ள சகலமரு மத்தான பரிசனத்தாலும், விழியால்=ஜீவிதசூசகமான கழியாதகோளமாகிய விரத்தரேகை யோடுற்ற நயனத்துவயத்தாலுங் கண்டாரென்பதந்நுவயம். (169-170)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்பரிசனத்தானும் நயத்தானும் என்று யாதுகூறப்பெற்றதோ அவற்றுள் நயசப்தார்த்தம் அறியும் வேட்கையராகிய ஸ்ரீ இராகவர் வினைதல்:—கேட்டலு மென்பது.

கேட்டலு மிராமன்சொல்வான் கிளர்மனந் தீரமாய்ந்து
காட்டலோட் டம்போற்சுத்தக் கண்ணிலே கலந்துளோருக்
கீட்டுசத் துவசேடந்தா னெங்ஙனே யிருக்குமென்ன
வாட்டமின் ஞானமிக்க வசிட்டமா முனிவன்சொல்வான்.

(ப - ரை) கேட்டலு மிராமன்சொல்வான்=கூறியதைச் செவிகொண்டதும் ஸ்ரீ இராகவர் கூறுவார்:—கிளர்மனந் தீரமாய்ந்து = விகற்பஞ்செய்யு மனம் அத்தியந்தம் இறந்து, காட்டலோட்டம்போல்=கட்டையோடுகட்டுச் சமானமாய், சுத்தக்கண்ணிலே கலந்துளோருக்கு = தூயவறிவிலே கலந்தபேர்கட்கு, ஈட்டு சத்துவசேடந்தான் எங்ஙனேயிருக்குமென்ன=சம்பாதனமாம் சத்துவசேடமானது எவ்வாறுதான் இருப்பதாகும் என்றுகேட்ப, வாட்டமில் ஞானமிக்க=வாடுதலில்லாத ஞானார்த்தங்கள்மிகுந்துள்ள, வசிட்டமாமுனிவன் சொல்வான்=ஸ்ரீ வசிட்டமகாமுனிவர் கூறுவார்.

(ஸ்ரீ - வீர) காஷ்டலோஷ்ட சமஸ்திதமாய் தியானமே செய்துகொண்டிருக்கும் அத்தியந்தம் சம்சாந்தசித்தத்திற்கு, ஹே பிரஹ்மசொரூபரே! எவ்வாறு சத்துவசேடமறியப்பெறும், என்று ஸ்ரீ இராகவர் வினவவே, (171)

(ஸ்ரீ-வீ - அ-கை) தேகத்தில் விருத்தி விபரிணமை அபக்ஷயாதிவிகார அநுதயம் சத்துவ சேடத்திற்குறியாம் என விடைபகரும்பொருட்டுக் குறியாவதை யனுபவித்தல்:—வித் தென்பது.

வித்தினுட் பூவுங்காயு மேவல்போ லிதயந்தன்னிற்
சித்தின் காரணமதான சத்துவ சேடமிற்கு
முத்தனாய் மனமிறந்தான் மொய்யுடல் போகாபோகத்
தொத்தவின் பத்துன்பங்கள் சார்தலற் றொருமைத்தாகும்.

(ப - ரை) வித்தினுட் பூவுங்காயும் மேவல்போல்=பீஜத்தினுள்ளே பத்திரபுஷ்ப பலாதிகள் இருத்தல்போல, இதயந்தன்னில் = இருதயத்தின்கண்ணே, சித்தின்காரணமதான = போதத்தின் ஏதுவான சத்துவசேடமிற்கும் = சத்துவசேஷமானது இருக்கும், முத்தனாய் மனமிறந்தால் = முத்தியுற்றவனாய் மனமாண்டு க்ஷயித்துப்போனால், மொய்யுடல்போகா= கருமசரீரம் கலக்கத்துட்போகமாட்டாது, போகத்தொத்த வின்பபத்துன்பங்கள் சார்தலற் றொருமைத்தாகும்=போகத்துக்குத்தக்க இன்பத்துன்பங்களாலாம் மகிழ்ச்சி வாட்டங்கள் பொருந்துதலற்று ஐக்கியத்தையடையும். போகாபோகத்தெனினுமமையும், இரண்டினும் சமமாமென்பதாம்.

(ஸ்ரீ-வீர) உணர்ச்சியின் காரணமாய சத்து சேடமானது பீஜத்தினுள்ளே புட்பமும் போலக் காணமுடியாத அணுவபுவையுடையதாய் இருதயத்தில் இருக்கும்; சித்தஸ்பந்தத்தைத்

விட்டிருப்பதாய், இருமை யொருமையற்றதாய் அதனுனே நிருவிகற்பமாய், சமமாய் அசல சம்ஸ்திதிவாய்ந்த அந்த அஸ்பந்தித சற்சித்தினுடைய காயமானது, சமசமாபோகமாய்க்கிலா னியை யடையமாட்டாது, மகிழ்வுறவுமாட்டாது, அஸ்தமத்தையுமடையாது உதயத்தையு மடையாது, சமமாகவேயிருக்கும்.

(ச) இதயந்தன்னில்=சமாதியிலிருப்பவனது, அறிதற்கரிய சூக்ஷ்மரூபமான இருதயத் துள், அணுவடிவமான சத்துவசேடம், வித்தினுட்பூவுங்காயும் மேவல்போல் நிற்கும், மூத்த ஞய் மனமிறந்தான் மெய்யுட்டல்=சித்தசலனவிமுக்தனுன அசலஸ்திதியுள்ளவனது காயம், போகா=போகத்திலுல்வரும் இன்பத்துன்பங்களால் மகிழ்வுசோர்வுறுது, உதயாத்த மனமு மாகாது, மற்றென்னெனில் சமமாகவே யிருக்குமென்றதாயிற்று. (172)

(ஸ்ரீ-வீர - அ்கை) சமாதியினின்று மெழுப்பலாமென்றாலோசித்து, கூடுவிட்டுக் கூடு பாய்ந்து பிராணசலனஞ்செய்து மன்னவனுக்குப் பிரஞ்ஞையை யுண்டாக்கல்:—ஆதலாற் கும்பனென்பன.

ஆதலா லிராமனேயவ் வணங்கனு ளந்தமெய்விட்
டேதமி லாதியந்த மின்றிய வறிவினுட்போய்
மேதகு சத்துவஞ்சேர் வேந்தனெஞ் சசையப்பண்ணித்
தீதிறன் னுடலின்மீளச் சேர்ந்தனள் கூடார்புட்போல்.

கும்பன்மெய் யாகிப்பூமே லிருந்தனள் குழல்போற்பாடத்
தம்பமா யிருந்தோன்மெய்யிற் சத்துவ குணஞ்சார்போதந்
(171) தும்பிநேர் பாட்டைக்கேட்டுப் பையப்பையச் சூரியன்சே
ரம்புயம் போல்விரிந்தங் கவன்மன நிலையாயிற்றே.

(ப - ரை) ஆதலால்=சத்துவசேடமிருத்ததால், இராமனே=இராகவனே, அவ்வணங்க ளுள்=அம்மங்கையானவள், அந்தமெய்விட்டு=அத்தேகத்தை விடுத்து, ஏதமி லாதியந்தமின் றிய வறிவினுட்போய் = குற்றமற்ற முதலுங்கடையுமின்றிய சைதன்யத்தி னுட்புகுந்து, மேதகுசத்துவஞ்சேர்=மேன்மைமிகுந்த சத்துவத்துற்ற; வேந்தன்நெஞ்சசையப்பண்ணி= மன்னவன் மனத்தை அசையச்செய்து, தீதில்தன் னுடலில்மீள=மாசற்ற தனது தேகத்தில் மறுபடியும், சேர்ந்தனள் கூடார்புட்போல்=வந்துறைந்தனள் நீடமுற்ற பறவையேமானும்.

கும்பன் மெய்யாகிப்பூமேல்=கும்பமுனிவன் காயத்தையடைந்து பூமியின்மீது, இருந் தனள்=உட்கார்ந்தாள், குழல்போற்பாட=வேணுகானம்போல் இனிமையாகக் கீதஞ்செய்ய, தம்பமாயிருந்தோன்=கம்பத்திற்குச் சமானமாக விருந்தவன், மெய்யில்=சரீரத்தில், சத்துவ குணஞ்சார்போதம் = சத்துவகுணத்தோடுகூடிய உணர்வானது, தும்பிநேர் பாட்டைக் கேட்டு=வண்டின் ரீங்காரம்போன்ற கானத்தைச் சிரவணஞ்செய்து, பையப்பைய=மெதுவு மெதுவாக, சூரியன்சேர்=இரவியியைந்த, அம்புயம்போல் விரிந்து=தாமரைபோல விகசித மாகி, அங்கு அவன்மனம் நிலையாயிற்றே=ஆண்டு அவனது உள்ளம் நிலையைமேவியது.

(ஸ்ரீ-வீர) இவ்வண்ணம் சிந்தித்துச் சூடாலை காரணபஞ்சாத் தனது தேகத்தை யினிது விட்டு அத்தேகத்துட்புகுந்து அதனது ஆதியந்தவர்ஜித மாய ஹார்த்தப் பிரஹ்மலக்ஷண சித் தத்தத்துவத்தில், ஸ்திதியையடைந்தனள், ஆண்டு நிருவிகற்பசமாதியினுலே க்ஷீர உதகம்போல ஏகரசபூதமான சேதனமென்னும் அவனது சிதாபாச சம்வலிதபுத்தியின் தனிப்படுத்தற்கரு

கூல அசைவைப் பார்த்தாவின் சத்துவத்தினின்றும் செய்துவிட்டு மறுபடியு மவள் தனது தேகத்துட்புகுந்தாள், பறவை தனது நீடத்தினுட்போலும்; பின் கும்பாகிருதியினள் கிளம்பிக் குசுமஸ்தலத்திற்புகுந்து வண்டின் கூட்டத்தொனியினூலே சாமகானஞ்செய்ய முயன்றனள்; அச்சாம கானத்தைக்கேட்டுச் சிற்சத்துவகுணசாலினியாய பூபதியின்றேகத்தில் உணர்வுண்டாயது, அதாவது, சிதாபாசசிதாராஜமதியானது, சிகித்துவஜ அகம்பாவசமஸ்கார மூற்போதமடைந்ததனுல், நகசிகைபரியந்தம் உள்ளதேகத்தில் அகம்பாவ வியாப்தியால் உணர்வையடைந்தது; வசந்தத்திற் பத்மினியேபோலும்; சத்துவசம்பத்தியைக் கவர்ந்திருந்த சிகித்துவஜ மகிபதியினுடைய, சமாதியின் மூடியகண்கள் பிரபுல்லிதமாயின. வப்போது அருக்கனைக்கண்ட அப்ஜினியேபோலும்.

(ச) அவ்வணங்கனுள்=அந்தச்சூடாலை, சத்துவ்சேடத்தின் சத்தையை நிண்ணயித்துப் பரகாயப்பிரவேச வல்லமையாற் றன்றேகத்தைவிட்டுத் தனக்கும் இதரர்க்கும் சாதாரணமான சித்தத்துவத்திற் றிதிசேர்ந்திருப்பவளாய்ச் சிகித்துவச வேந்தனது சித்தத்தையசையப் பண்ணி மீளத் தன்னுடலிற்சேர்ந்தனள்.

தம்பமாயிருந்தோன் போதம்விரிந்து, பாட்டு=சாமகானம். (173-174)

(ஸ்ரீ-வீர-அ-கை) மன்னவன் குரவற்கண்டு போற்றல்:—கண்டனன் என்பது.

கண்டனன் கும்பன்றன்னைக் களிப்புறு மனத்தனுகித்
தண்டலில் லருளாலென்னை வாழ்விப்பான் றூனேவந்தான்
பண்டையக் குரவனென்று பரவினன் மலர்தூயேத்த
மண்டல வேந்தன்றன்னை மற்றவ னேக்கிச்சொல்வான்.

(ப - ரை) கண்டனன் கும்பன்றன்னை = பார்த்தனன் ஆசிரியரை, களிப்புறு மனத்தனுகி=சந்தோடத்தோடு கூடிய வுள்ளத்தனுகி, தண்டலில் அருளால்=தடையின்றிய பேரருளால், என்னை=அடியேனை, வாழ்விப்பான் றூனேவந்தான் = ஈடேற்றும்பொருட்டு எனது வேண்டுகோளின்றியேதானே எழுந்தருளி வந்தனன், பண்டையக்குரவன் என்று=பிராசீன அவ்வருளாசிரியன் என்பதாக, பரவி=போற்றி, நன்மலர் தூயேத்த=சுகந்த புஷ்பாஞ்சலி செய்து பூசிக்க, மண்டலவேந்தன்றன்னை=இராஜ்யாதிபதியாகிய அரசனை, மற்றவன் நோக்கிச்சொல்வான்=கும்பமுனிவன் பார்த்துக்கூறுவான்.

(ஸ்ரீ - வீர) சாமகான தற்பானுகி யெதிரிலிருக்கும் கும்பமுனிவனைக் கண்டான், மேலான திவ்யமேனியோடுகூடி வேறு சாமவேதமே வந்ததென்னும் குரவனைக்கண்டு, அந்தோ அந்தோ ஆச்சரியம் யாங்கள் தன்னியர்களே, மறுபடியும் சுயமாகவே ஞானுசிரியன் எழுந்தருளி வந்தனன், என்றிவ்வண்ணங் கூறிக்கொண்டே யரசன், கும்பமுனிவனுக்கு குசுமாஞ்சலியைச் செய்தான், இதனுனே தவமகிமையால் முன்னர்ச் சேகரித்த புஷ்பங்கள் வாடவில்லையென்று தெரிகின்றது. தெய்வகதியால், சுவபாக்கிய உதயத்தானே, ஹேபகவன் தேவரீருடைய பவித்திரமான சித்தத்தில் மறுபடியுந் தரிசன அப்யுதய பலஸ்மிருதி கோசரத்தன்மையை யடைந்தோம், அல்லது என்னேயெமது பாக்கியசிந்தையானே, மகாத்மாக்கள் தாமாகவே, பரானுக்கிரக முயற்சியுடையவர்களே யாவர்களன்றே, மிகவும் பெரியோர்கள் திருவருள் செய்வதில் எங்கே முன்னிட்டு நில்லாமலிருக்கின்றூர்கள். எங்களைப் பவித்திரஞ்செய்தலே யெழுந்தருளி வந்ததற்கு முக்கியகாரணமாகும், நான் கூறிய காரண

மன்றுயின் ஈண்டுவந்ததில் இரண்டாவது என்ன காரணந்தானும், சம்பவித்த அதனைக் கூறவேண்டும். (175)

(ஸ்ரீ-வீர-அ-கை) அதற்குக் கும்பமுனிவன் பதிலுரைத்தலும் மன்னவன் றனது துக்க நிவர்த்தியை யுரைத்தலும்:—இங்கென்பது.

இங்குநின் றகன்றநாடொட் டின்றள வுன்பாற்சித்தம்
பங்கற நின்றதண்டர் பதியுநின் கூட்டம்போல
வங்கித மல்லவென்ன வண்ணலே வாழ்ந்தேனின்னாற்
றுங்கமா யுற்றவின்ப சமாதியிற் றுயாந்தீர்ந்தேன்.

(ப - ரை) இங்குநின்றகன்ற நாள்தொட்டு = இவ்விடத்தினின்றும் விலகிய காலந் தொடங்கி, இன்றளவு=இதுகாறும், உன்பாற்சித்தம் = உன்னிடத்திலுள்ளமானது, பங்கற நின்றது=வேற்றுமையின்றி யிருந்தது, அண்டர்பதியும் = தேவலோகமும், நின் கூட்டம் போல=உனது சமாகமம்போன்று, அங்கிதமல்லவென்ன=ஆண்டிதமாகவில்லையென்றுகூற, அண்ணலே=தேவதேவனே, வாழ்ந்தேன்=கிருதகிருத்தியனாயினேன், நின்னால் = தேவரீரால், துங்கமாயுற்ற வின்பசமாதியில் = பரிசுத்தமாயடைந்த ஆனந்த சமாதியின்கண்ணே, துயரந்தீர்ந்தேன்=துக்கங்கள் அனைத்தும் அகன்றேன்.

(ஸ்ரீ - வீர) உன்னோடுகூட அநிந்திதமாக விருந்துபோனது முதற்கொண்டு என்னுடைய சித்தமானது உன்னோடுகூடவே யிருக்கின்றது உன்னையே ஸ்மரித்துக்கொண்டிருந்தது இதனுனே இரம்மியமாய சுவர்க்கத்திலுமிருக்கமாட்டேன் மற்றோ உனது சமீபத்திலேயே யிருப்பேன் இப்போது, ஹே மன்னவனே! அநேக இரம்மியங்களினுடைய மத்தியிலும், சித்தத்திற்கு யாதுதான் இரம்மியமாமோ, அவ்வபீஷ்டமே உத்தியோகத்தானே யடைவதேயாகி முன்னிருப்பதாகின்றது, உத்தியோகமின்றி யின்றாகலின் உனது தரிசன உத்தியோகவயத்தானே யெனதாகமனமாம். என்னிடத்தில் யாதுதான் உனக்குப் பிரீதி ஹேதுவானவதிசயம் எனிற்கூறல்:—நினக்கொப்பாம் பந்து ஆப்தன் சுகிருத்துமித்திரன் சகாயன் சம்பத்தக்கவன் சேடனுந்தான் இந்த உலகத்தின்கண்ணே எனக்கு இல்லவே இல்லையாம்; அகோ ஆச்சரியம்! புண்ணிய பதபங்களோடுகூடிய எங்களது இம்மாதாத்தின் பயனுண்டாயிது திண்ணம், எக்காரணத்தாற்றாங்கள் அசங்காரயினும எங்களுடைய சமாகமத்தை வஞ்சிக்கின்றீர்களோ. (176)

(ஸ்ரீ-வீர-அ-கை) எனக்கும் தாங்கள் தந்தருளியசமாதி சுகதிருப்தியினுனே சுவர்க்கத்தில் வாஞ்சையில்லை யெங்கேனுந்திரிவன் எனல்:—நிற்விகற்பத்தென்பது.

நிருவிகற் பத்திலின்ப நிறைந்தபொன் னாட்டுமில்லை
யொருமையுற் றதனைமேவி யும்பரி லிம்பர்தன்னிற்
றிரிவனென் றாசன்சொல்லக் கும்பனுஞ் செப்புகிற்பா
னரியவா நந்தவாழ்வி லயர்வெலா மறவாழ்ந்தாயோ.

(ப - ரை) நிருவிகற்பத்திலின்பம் = நிருவிகற்ப சமாதியிலாநந்தம், நிறைந்த பொன்னாட்டுமில்லை=சகல ஐசுவரியங்களும் நிறைந்துள்ள சுவர்ணபுரியிலுங்கிடையாது, ஒருமையுற்றதனைமேவி=ஏகாக்கிரமா யதனையடைந்து, உம்பரிலிம்பர்தன்னில் = பரலோகத்திலேனும் இகலோகத்திலேனும், திரிவன் என்றாசன்சொல்ல=சஞ்சரிப்பேனென்று மன்னவன்

கூற, கும்பனுஞ் செப்புகிற்பான்=கும்பமுனிவனும் கூறத்தொடங்குவான் அரியவாநந்தவாழ் வில்=அருமையான சுகவாழ்வையடைந்து, அயர்வெலா மறவாழ்ந்தாயோ=சகல துயரங்களு மில்லாமல் வாழ்ந்தனையோ.

(ஸ்ரீ - வீர) தங்களாற் கொடுக்கப்பெற்ற யோகயுக்தியினுனே விசிராந்தியையடைந்தன னியான், இங்ஙனமிதன்கண்ணே விசிராந்தியோ அங்ஙனம் சுவர்க்கத்திற்றான் எங்கே விசி ராந்தி கிடைக்கும்; என்பொருட்டுத் தாங்கள் உபதேசித்தருளியதேயாய சொச்சமான சொப் பிரகாச பூமானந்த சமஸ்திதியையே நன்குபற்றிச் சுவர்க்கத்திலேனும் பூமிதலத்திலேனும் இஷ்டப்படி சஞ்சரிப்பேன். மகாநந்த பரமபதத்தில் விசிராந்தியை யடைந்தனையோ. (177)

(ஸ்ரீ - வீர - அ - கை) கிருதகிருத்தியத் தகைமையைக் கும்பன் வினுதல்:—பேத மென்பது.

பேதமே வடிவமான துன்பங்கள் பேதித்தாயோ
போதல்போ தினிதாஞ்சங்கற் பத்தினிற் பூண்டவின்பந்
தீதென வேருஞ்செற்றுச் சமதரி சனமுற்றாயோ
யாதினும் வீடுபற்றற் றியைந்தசெய் தின்புற்றாயோ.

(ப - ரை) பேதமே வடிவமான துன்பங்கள் பேதித்தாயோ=வேற்றுமையே ரூபமான துக்கங்களைத் தூட்படுத்தினுயோ, போதல்போதினிதாம் = தொடங்கும்போது மாத்திரம் இனிமையாம், சங்கற்பத்தினிற் பூண்டவின்பம்=எண்ணத்தின்கண்ணே பொருந்திய வாசந் தம், தீதென=கொடியது என்று, வேருஞ்செற்று=சல்லிவேருமில்லாமல் அழித்து, சமதரி சனமுற்றாயோ=ஒப்பாயகாட்சியை அடைந்தனையோ, யாதினும் வீடுபற்றற்று=எதனினும் தள்ளுதல் கொள்ளுதலின்றி, இயைந்தசெய்து=சேர்ந்தவற்றை மாத்திரமாற்றி, இன்புற் றாயோ=ஆனந்தத்தை யடைந்தனையோ.

(ஸ்ரீ - வீர) இந்தப் பேதமயமான துக்கத்தை யத்தியந்தம் கடந்துவிட்டாயோ, ஆபாத ரம்மியங்களாய சங்கற்பங்களினின்றுண்டாம் இரதியானது அத்தியந்தம் நிர்மூலத்தன்மையை யடைந்து விட்டதோ! உனக்குப்போகம் நீரசத்தன்மையை யடைந்துவிட்டதா! ஹேய ஆதேய அதீதமாய்ச் சாந்தமாய், சமத்தினுனே சமஸ்திதியானது வலிதிற்கிடைத்த பொருள் களிலுண்டாயதா? கிளர்ச்சியில்லாமல் உனதுமனம் திதமாயதா? (178)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அரசன் றனது அநுபூதியையறைதல்:—எனலும், பயமென்பன.

எனலுநின் னருளாற்பங்கிற் றெய்வத்தா லெலாம்விட்டப்பான்
மனநிலை நின்றேன்மாயைக் கரைகண்டேன் வருபேறெல்லாங்
கனமுறப் பெற்றேன்கேட்கக் காணவேண் டுவதொன்றில்லை
யனவர தமுநிறைந்தே னயர்வற்றேன் பிறவியற்றேன்.

பயமற்றேன் மோகமற்றேன் பற்றற்றேன் சமமாய்நின்றே
னுயர்வுற்றே னெல்லாமானே னொருசெய லற்றேன்விண்ணு
ளியலொத்த தெளிவாய்ச்சாந்த மெய்தினே னென்றான்மோகச்
செயன்முற்றுங் கடந்தசிந்தைச் சிகித்துவ சப்பேர்மன்னன்.

(ப - ரை) என்னும்=என்று கூறுதலும், நின்னருளால்=உனது கிருபையால், பங்கிற் றெய்வத்தால்=என்பக்கத்திருந்த தெய்வத்திருவருளால், எலாம்விட்டப்பால் = யாவற்றை யும் விடுத்து அதீதமான, மனநிலைநிற்றேன்=மனத்திதியின்கண் ணிருக்கின்றேன், மாயைக் கரைகண்டேன்=சமுசார சீமாவைக்கண்டேன், வருபேறெல்லாம் கனமுறப்பெற்றேன்= அடையவேண்டிய பயனையெல்லாம் நன்றாக அடைவுற்றேன், கேட்கக்காணவேண்டுவதொன் றில்லை=சிரவணிக்கத்தக்கதாகவோ தரிசிக்கத்தக்கதாகவோ ஒன்றுமே கிடையாது, அன வரதமுநிறைந்தேன்=எப்போதுமே யெங்குமேயுள்ளேன், அயர்வற்றேன் பிறவியற்றேன்= தாகமும் ஜனனமும் முற்றுமற்றுவிட்டேன்.

பயமற்றேன் மோகமற்றேன்=அச்சமில்லேன் மயக்கமில்லேன், பற்றற்றேன் சமமாய் நின்றேன்=இராகமில்லேன் ஒப்பாய்நின்றேன், உயர்வுற்றேன் எல்லாமானேன் = மேன்மை யையடைந்தேன் சருவமுமாயினேன், ஒரு செயலற்றேன்=ஒரு தொழிலுமில்லேன், விண் ணுள் இயலொத்ததெளிவாய்=ஆகாயத்துள் ளியற்கைத்தெளிவை யொத்திருக்கின்றேன், சாந்தமெய்தினேன் = பரமசாந்தியை யடைந்துள்ளேன், என்றான் = என்று கூறினன், மோகச்செயல் முற்றுங்கடந்த=மயக்கத்தொழில் முழுவதும் தாண்டிய, சிந்தை=மனத்தை யுடைய, சிகித்துவசப்பேர் மன்னன்=சிகித்துவசன் என்னும் பெயர்வாய்ந்த அரசன்.

(ஸ்ரீ - வீர) ஹே பகவன்! உனது திருவருளானே திருசியங்கடந்த கதியானது காணப் பெற்றது, சமுசார சீமாந்தமானது அடையப்பெற்றது, அடையவேண்டிய நிச்சயம் அடையப் பெற்றது, இனி யெனக்குபதேசிக்கத்தக்கது யாதொன்றையுமே காணேம், சிறிதுஞ் சந்தே கமே கிடையாது. யாண்டுமே அதிதிருப்தனாகியுள்ளேன், சுரமற்றவனாகிச் சுகமாகவிருக்கின் றேன், எனது நிர்வாசனையானது என்னிடத்திலேயே யிருக்கின்றது ஆகலின் என்னைத்தவிர ஒன்றையுங்காணேம்; நின்னைப்பார்க்கினும் அன்னியஞ் சிறிதும் இல்லவேயில்லையாயின் நீ யெத்தகையனாக எஞ்சியுள்ளாய் எனின் ஆண்டுக்கூறல்:—பயமற்றேனென்பதாதி. சமுசார மென்பதே யெனக்குக் கிடையாது, மோகமும் பயமுமற்றேன் மொய்த்திடுமிராகமற்றேன், நித்திய உதிதன், சமன் சமாசயன், சர்வசௌமியன், சர்வான்மகன், சகல அசைவுகளுமற்ற வன் ஆகாசகோசம்போற்றெளிந்தவன், சமமாகவே யிருக்கின்றேன் என்பதாம்.

(ச) அயர்வு=சந்தேகம்.

சமமாய்=சர்வகதமான பிரமமாய், ஒரு செயலற்றேன்=களத்திர புத்திராதி மமதாபாச மனைத்துங்கழன்றேன், சாந்தம்=மகிழ்வு, சோர்வு இன்மை=சௌமியம், ஆசயம் = அபிப் பிராயம். (179-180)

(ஸ்ரீ-வீர - அ-கை) அவ்விருவர்தம் ஆத்மவித்யா விலாசத்தையே வருணித்தல்:—அவ் வகை, யியலென்பன.

அவ்வகை யிரண்டுபேரு மாத்தும தத்துவத்தின்
செவ்விய விசாரத்தாலுந் தெளிதரு மொழிகளாலுந்
தவ்வறு நேயமிக்கோர் தம்மிற்று முணர்தலுற்று
வெவ்வன் மோடைகுன்று வேறற வெங்கும்வாழ்ந்தார்.

இயலறி வன்புசெய்கை யிணையற்றோர் பற்றும்வீடு
மயலற விட்டுத்தென்றற் கசைவுறா வடகுன்றொப்பார்
பயிலுட லொருகாற்றூளி படர்விப்பா ரொருகானீறு
வியனுற வணிவரோர்காற் சந்தன விரையேசேர்வார்.

(ப - ரை) அவ்வகை யிரண்டுபேரும்=அந்தப்பிரகாரம் இரு இருஷிகளும், ஆத்மதத்துவத்தின்=பரமான்ம வடிவ வத்துவின், செவ்விய விசாரத்தாலும் = சிறந்த ஆராய்ச்சியினாலும், தெளிதரு மொழிகளாலும்=தெளிவோடுகூடிய வசனங்களினாலும், தவ்வுறு நேயமிக்கோர்=தவராத நேயமிகுந்தவர், தம்மிற்றும்=பரஸ்பரம், உணர்தலுற்று=அறிதலுற்று, வெவ்வனம்=பாலைவனம் குளிர்ந்த சோலைமுதலிய விடங்களிலும், ஓடை=நீர்த்தளங்களிலும், குன்று=மலைப்பிரதேசங்களிலும், வேறற=பேதமில்லாமல், எங்கும் வாழ்ந்தார்=எவ்விடத்திலும் உலவி வாழ்ந்துவந்தார்கள். எவ்வனமெனினுமமையும்.

இயலறி வன்புசெய்கை யிணையற்றோர்=நடையுடை யுணர்வுநேய நல்வினையாவுமொப்போரொப்பிலாதோர், பற்றும் வீடும் மயலறவிட்டு=கொள்ளத்தக்கது இது என்றும் தள்ளத்தக்கது இது என்றும் உண்டாம் மயக்கமில்லாமல் விடுத்து, தென்றற்கசைவுறா வடகுன்றொப்பார்=மந்தா நிலத்தினாலே சலிப்புறாத சுமேருகிரியினையொத்தவர், பயிலுடலொருகாற்றூளிபடர்விப்பார்=சஞ்சாரங்களிலமைந்த சரீரம் ஒருபோது தூளியமரும்படியு மிருப்பார், ஒருகால்நீறு வியனுறவணிவர் = ஒருபோது பஸ்மத்தைக் கண்டோராச்சரியப்படும்படி யணிந்து கொள்ளுவர், ஓர்கால்=மற்றொருபோது, சந்தனவிரையே சேர்வார்=குளிர்ந்த சந்தனத்தின் குழம்பே பூசிக்கொள்வர்.

(ஸ்ரீ - வீர) எனக்கூறிய பிரகாரமான ஆத்மநீதியத்தியாத்ம விசித்திரங்களாய கதைகளினாலே பரஸ்பரம் சம்பாஷணை செய்துகொண்டிருந்தார்கள், அறியவேண்டியதை யறிந்தவர்களாகிய அவ்விருவரும் அவ்வனத்தில் மூன்று முகூர்த்தபரியந்தம் இருந்தார்கள்; அநேகரூபமாய வனங்களிலும், ஆரண்யங்களிலும், தடங்களிலும், சாரங்களிலும், குல்மஜாலங்களிலும், சிருங்கங்களிலும், தாழ்வரைகளிலும் குகைகளிலும் கெவிகளிலும் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்; ஒப்பேயாய் ஒப்பான நேயமுடையவர்கள் ஒன்றாகவே கூடியிருப்பவர்கள், ஒன்றாகவே யுதிதமானவர்களாய்ச் சித்தவிருத்தியினாலும் சமமாகவே யிருப்பவர்கள், பரஸ்பரம் தங்களது அநுபவத்தைப் பேசிக்கொள்ளுபவர்கள், சமசத்துவமுடையவர்கள் சம உற்சாகமுடையவர்கள், ஆகி யெப்போதும் ஒன்றாகவே யிருந்தார்கள். பிதுர்க்களையும் தேவர்களையும் அருச்சிப்பார்கள், ஒன்றாகவே புஜிப்பார்கள், நீர்நிறைந்த சீதளப்பிரதேசங்களிலும், தாபப்பிரதேசங்களிலும் ஒப்பாகவேசரிப்பார்கள்; சமமதியுடையவர்களாகவே யிருந்தார்கள்; அநிகேஸ்திதி லக்ஷணமறைதல்: இதுவீடு இதுவல்லவென்னும் விகற்ப விவகாரத்தை அவர்களுடைய மனமானதுகவரவேயில்லை, தேவகிரியைத் தென்றலேபோலும்; பிரியாப்பிரிய விகற்பமும் அவர்களுக்குண்டாக வில்லையெனல்:—பயிலென்பதாதி. நல்ல இருதயமுடைய அவர்கள் ஒருபோது ஓரிடத்தே தூளிகளானே வெளுத்தமேனியர்களாகிச் சரிப்பார்கள், சிலவிடத்தே சந்தனம்பூசிய மேனியர்களாகித் திகழ்வார்கள், சிலபாற்பஸ்மாநுரஞ்சிதர்களாகித் திகழ்வார்கள். (181-182)

(ஸ்ரீ-வீர - அ-கை) இவ்வாறு சில்காலமானபின் நாயகனது தேஜஸைநோக்கிப் பரீக்ஷார்த்தம் தன்வயப்படுத்தமுயலல்;—சிறிது இழிவறு என்பன,

சிறிதுநா ளுடனேவாழ்ந்து தேமொழி வேந்தைநோக்கிப்
பிறிவுறு கணவன்சால வுதாரமாய்ப் பீடையற்றான்
செறியெழில் விடலையாகுஞ் செல்வம்பூ மனையுமெல்லாம்
வறியபோ லவமாய்ப்போமால் வாழுந ரிலாமையாலே.

இழிவறு ஞானம்பெற்றோ ரியல்புறத் தானேவந்த
தொழிவுற விடுவரென்னி லுண்மையை யுணர்ந்ததென்னும்
வழிபடு மன்னனம்பான் மணஞ்செயற் கானதொன்றை
யழிவறு மறிவினாலிங் கமைத்துமென் றுளத்திலெண்ணி.

(பு - ரை) சிறிதுநாள் உடனே வாழ்ந்து = கொஞ்சக்காலம் பிறியாமல் வாழ்ந்து, தேமொழி=மதுரவாக்கினையுடைய சூடாலையானவள், வேந்தைநோக்கி=அரசனைப்பார்த்து, பிறிவுறு கணவன்=தவப்பொருட்டு நம்மைவிட்டுப் பிரிந்தநாயகனானவன், சாலவுதாரமாய்= மிகமகத்தாய், பீடையற்றான்=துயரங்கள் யாவுமேகளைந்தான், செறியெழில்விடலையாகும்= மிகவும் பொருந்திய கவினையுடைய நவயவ்வனனானவன், செல்வம்பூ மனையுமெல்லாம் = ஐசுவரியம்பூ கிருகமும் யாவும், வறியபோல்=வீணேபோல, அவமாய்ப்போம் = பயனின்றியே போகும், வாழுநரிலாமையாலே = வாழ்பவரில்லாமையாலே, பிறிவறுபாடமேல் வெளிப் படையேயாம்.

இழிவறு ஞானம்பெற்றோர்=இழிவில்லாத ஞானத்தையடைந்தவர், இயல்புறத்தானே வந்தது=சுபாவமாக வலிதில் வந்ததை, ஒழிவுறவிடுவர் என்னில்=நீங்குறுமாறு தியாகிப்பார் என்றால், உண்மையையுணர்ந்தது என்னும்=யதார்த்தத்தை யறிந்தது என்னபிரயோஜனமாம், வழிபடுமன்னன்=சீடனாகிய அரசன், நம்பால் = நம்மிடத்தில், மணஞ்செயற்கானதொன்றை=விவாகஞ்செய்து கொள்ளுவதற்காகிய யுக்தியொன்றை, அழிவறுமறிவினால்= கேடாபிரஞ்ஞையினால், இங்கு=ஈண்டு, அமைத்துமென்றுளத்திலெண்ணி = அமைப்போமென்று மனத்திற்சிந்தித்து.

(ஸ்ரீ-வீர) சில தினங்களுக்குட்டானே சமசித்தத்தன்மையானும் சத்துவ நிர்வாசனசித்தத்தா லுற்கிருஷ்ணத்தன்மையானுமே, ராஜா கும்பமுனிவனைப்போலவே விளங்கினன்; தேவதேவனைப் போற்சோபையோடு இலங்கும் சிகித்துவசனை நோக்கி, கேவலமித்திரபாவத்தானே பரஸ்பர உபபோஜகப்பிராரப்த போகோத்தரகாலம் ஆகிய தம்பதிபாவ உபபோஜகப் பிராரப்த உற்பவகாலத்தில் அம்மானினியாகிய சூடாலையானவள் சிந்திப்பாளாயினள், ஜீவன் முக்தர்கட்குக் கிடைத்தபடியாய போகத்தை யநுபவிக்கலாமன்றோ, அதர்மலோகசிரம்ஹேதுக்களாய போகங்களினின்றும், லோகசங்கிரகப்பொருட்டு, நிவிருத்தியடையத்தக்கதே, ஈண்டோ அதன்பிராப்தியிலதேயாம், என்னுங் கருத்தாலுரைத்தல்:—கணவன் என்பதாதி. சொந்தநாயகன் உதார ஆத்மா, அரோகதிடகாத்திரன் நவவயதுடையவன், கிருகங்கள் புட்பஜாலங்கள், என இவ்வண்ணம் சர்வசாமக்கிரீயிருந்தபோதினும், யாவள் தனது பர்த்தாவினிடத்தில், காமவதியாயிலாளோ, அவள் அஜீவன் முக்தையேலாயின் பர்த்தாவினது உபபோகவிகாத பாவத்தினாலே கெட்டவளாவள். ஜீவன் முக்தையேலாயினோ, லோகசங்கிரகபங்கத்தாலுண்டாம் நிந்தாதியானே கெட்டவளேயாம். அநிந்தியமான தனது உதாரார்த்தமாகப்போகம் வலிதிற்கிடைத்தபோதினும், அறியவேண்டியவற்றை யறிந்தவனாலே எப்போதுமே யெள்ளித்தள்ளிவிடும் அத்தத்துவஞ்ஞனாலே, யாது அதிகபயன் அடைவுற்ற

தாகும், ஒரு சிறிதுமேயிலதாம்; ஆகையால் எனது பிரஞ்ஞையினலே சிறிது பிரபஞ்சம் விரைவில் இயற்றுவேனுக, இவ்வனத்தின்கண்ணே யெதனுலென்னிடத்தில் மானதஞகிய இப்பூபதி பர்த்தா இரதிசுகத்தை யடையாநிற்பனே, என்றினிதாகச் சிந்தித்துக் கும்பவேடந் தரித்திருக்கும் சூடாலையானவள், கானனகுல்மத்திலிருக்கும் கோகிலத்தைப் பார்த்து கோகிலமானது கூறுவதேபோலும் நாயகனைநோக்கிக் கூறத்தொடங்கினள்.

(ச) உதாரமாய் = உதாரசித்தனுய், பீடையற்றான் = சிந்தனையற்றான், இருவரும் விடலையாகும், இவ்விதமான சுகசாதன சம்பத்துள்ள தேகமிருக்கவும், எவன்போகேச்சை யுடையவனாகான் அவன் இறந்தவனாம், அபிடேதசுகத்தியாகத்தினுலென்க.

இழிவறு = நிந்தையற்ற, இயல்புறவந்தது = நியாயமாகக்கிடைத்ததுமாகிய தனது மகாசுகத்தை, ஞானம்பெற்றோர் = பிரஹ்மஞானிகள், ஒழிவுறவிடுவரென்னில், என்னும் = என்ன பிரயோஜனந்தான் சாதித்ததாம், ஒன்றுமின்றென்பது பொருள். நியாயசுகத்தியாகி வியர்த்தனேயாமென்று மூற்கூறியதே பொருள். அக்காரணத்தினுல், அழிவறுமறிவினுல் = தன்து பிரஞ்ஞா விசேடத்தால், மன்னனம்பால் விழிபடு மணஞ்செய்தற்கேதுவான, ஒன்றை = ஒரு கற்பனையை, அமைத்துமென் றுளத்திலெண்ணிச் சூடாலை தலைவனைநோக்கிச் சொல்வாள் எனப் பிறகவியுடன் அன்னுவயம் செய்க. புஷ்பலதாமண்டபங்கள் என்பதாம். (183-184)

(ஸ்ரீ-வீர - அ-கை) அக்கற்பனை யின்னதென விரித்துரைத்தல்:—தலைவன், நீங்கருமென்பன.

தலைவனை நோக்கிச்சொல்வாள் சதமக னுலகினின்றோர்
நிலைபெற விழாவுண்டாங்கே நேருநா ரதரோ டியானு
முலைவற நிற்றல்வேண்டு முயர்விதி வலியார்வெல்வர்
மலைமிசை யிரவிபோங்கால் வருவனிவ் விரைவிலிங்கே

நீங்கரு முணர்வினேடு நீயிவ ணிருத்தியென்றோர்
தேங்கமழ் மலரின்கொத்தைச் சிகித்துவ சனுக்குநல்கி
யோங்கினள் விசும்பிலேகி யவன்விழி யுறுதமட்டிற்
றூங்கிய கும்பன்மேனி தவிர்ந்துதன் வடிவமானள்.

(ப - ரை) தலைவனை நோக்கிச்சொல்வாள் = நாயகனை நோக்கிக்கூறுவாள், சதமகன் உலகினின்றோர் = இந்திரனுடைய உலகத்தில் இன்று ஒரு, நிலைபெற விழாவுண்டாங்கே = நியமமாக நடக்கும் திருவிழாவுண்டு அவ்விடத்தில், அதற்காக, நேருநாரதரோடியானும் = வந்துசேரும் ஏன்றந்தையோடு யானும், உலைவறநிற்றல்வேண்டும் = இன்றியமையாது இருத்தல்வேண்டும், உயர்விதி வலியார்வெல்வர் = மேலானவிதியின் வலுமையை வெல்லுநர் எவரே, மலைமிசை யிரவிபோங்கால் = அஸ்தாசலத்தின்கண்ணே சூரியன் செல்லும்போது, வருவனிவ்விரைவிலிங்கே = வந்துசேருவன் இந்த வேகமாகவே இவ்விடத்தில்.

நீங்கரு முணர்வினேடும் = நல்ல பிரஞ்ஞையோடுங்கூடியே, நீ யிவணிருத்தி = நீ யிங்கு இருப்பாயாக, என்றோர் தேங்கமழ் = என்றுசொல்லி ஒருவாசனையும் தேனும்பில்கும், மலரின்கொத்தை = புட்பமஞ்சரியை, சிகித்துவசனுக்கு நல்கி = மன்னவன் கையிற்கொடுத்து, ஓங்கினள் விசும்பில் = கிளம்பினள் ஆகாயத்தில், ஏகி = சென்று, அவன்விழியுறுதமட்டில் = அவன் நேத்திரம் நோக்காதவளவில், தூங்கிய கும்பன்மேனி = முன்தரித்த கும்பமுனிவனது

திருமேனியை, தவிர்ந்து தன்வடிவமானுள் = நீக்கித் தனது சூடாலை வடிவத்தை யடைந்தனள்.

(ஸ்ரீ - வீர) இன்று சைத்திரமாசத்தின் சுக்கிலப்பிரதி பத்திவசம்பெரிதாம், சுவர்க்கத்தில் தேவ இருஷி சபாமேலனம் ஆகிய மகா ஆரம்பமானது தேவேந்திரனுக்குண்டாம்; நாரதருடைய முன்பாக ஆண்டு என்னுற்சன்னிதானம் செய்யத்தக்கதாம்; எங்ஙனம் நியதியானது இருப்பதாமோ, அது ஒருபோதுந் தாண்டமுடியாததேயாம்; சமுத்வேகத்தை யடையாத நவபுட்பங்களில் விளையாடிக்கொண்டிருக்கும்; உன்னல், இவ்வனுவனியில், மாலைப்போதுவரை எனதுவரவை யெதிர்பார்க்கவேண்டும், இன்றுமாலையில் வந்தேசேருவன் விண்டலத்தினின்றும் வருவனோ வரேனே என்று விகற்பம் செய்யவேண்டியதேயில்லை, இது நியதமேயாம், சுவர்க்கத்தினும் மிகமிக மிருந்ததே யுனது சங்கம் எனது சந்தோட்டப்பொருட்டு; கும்பமுனிவன் இவ்வாறுகூறி யன்பின்நிமித்தம் அன்பன்பொருட்டுத் தன்னுடைய பிரீதியே போன்ற மனோரம்மியமாய கற்பதரு ஜன்னியப்பூங்கொத்தைக் கொடுத்தனன்; தாங்கள் சீக்கிரம் வரவேண்டியது என்பதாகப் பூபதிபுகலும் போதிலேயே, சாந்நிர்ஜலமேகமேபோலும் வனத்தினின்றும் ஆகாயத்திற்கிளம்பினன்; சிகித்துவசன் சொல்லாநின்ற அம்முனிவனை அப்போது திருட்டிவிரியத்தக்க தேயாவதி பார்த்துக்கொண்டே யிருந்தனன், மேகத்தை விழித்துக்கொண்டே ஏறிட்டுப்பார்க்கும் மயிலேபோலும், ஞானிகளுடைய அன்பானது விடமுடியாததல்லவோ, சிகித்துவஜனுடைய திருஷ்டியினீற்ருகாயத்திற் கும்பமேனியைவிட்டு வாரிஸ்ரீயானது சாந்த ஆவர்த்தமானதேபோலத் தனது முத்தையாஞ் சூடாலை வடிவத்தை யெடுத்தனள்.

(ச) தியானஞ் செய்துகொண்டு சமாதியிலிருந்து விடாமல், புஷ்பங்களோடு விளையாடிக்கொண்டு, சாதாதியில் மேகம் வேகமாக லகுத்தன்மையால் விண்ணிற்கிளம்பும் என்பதேபோலவாம். திருஷ்டி = நயனரஸ்மி, வாரிசிம்ருத்தியானது ஆவர்த்தம் சாந்தமாகிய வழிதற்சொருபமாகவே யிருக்கும். அதுபோலென்பதாம். (185-186)

ஸ்ரீ-வீர-அ-கை) இல்லத்திருந்து இராஜகாரியம் நடாத்தி மாலைப்போதில் வாட்டத்துடன் சூடாலை வந்துசேர்தல்:—இந்திரனென்பது.

இந்திர னிருக்கையேய்ந்த வில்லம்புக் கறியாவண்ண
மந்திர நெறியின்மன்னன் காரிய மாபிற்செய்து
சந்திர வதனிமீண்டுங் கும்பனுய்த் தலைவன்றன்பால்
வந்திழி வுற்றுச்சால வாடிய முகத்தள்போலாய்.

(ப - ரை) இந்திரனிருக்கை யேய்ந்த = தேவேந்திரனது வாசஸ்தானம்போன்ற, இல்லம்புக்கறியாவண்ணம் = அந்தப்புறம் புகுந்து ஒருவருக்கும் தெரியாமல், மந்திரநெறியில் = மனுநீதிப்படி, மன்னன் காரியம் = இராஜகாரியம், மாபிற்செய்து = ஒழுங்காக நடத்தி, சந்திரவதனிமீண்டும் = இந்துமுகி மீளவும், கும்பனுய் = கும்பமுனிவனுகி, தலைவன்றன்பால் = நாயகனிடத்தே, வந்திழிவுற்று = ஆகாயமார்க்கமாக வந்திறங்கி, சால வாடிய முகத்தள்போலாய், அத்தியந்தம் வாட்டமடைந்த வதனத்தினள்போலாய்,

(ஸ்ரீ - வீர) விளங்காநின்ற கொடிகளோடுகூடி யுண்மையானேயே அநேகம் பூங்கொத்துகள் கிளம்பி நிற்பனபோன்ற ஆகாரச்சேர்க்கையை யுடையதாகிய கற்பவிருக்ஷ உபமமான புரத்தையடைந்தனள் தன்னுடைய சுவர்க்கம்போன்று இரம்மியமாய் அந்தப்புரத்துள் ஆகாய

மார்க்கமாக ஒருவருக்குந் தெரியாமலே புகுந்து, அல்லலனுகூல மிகுந்த அந்தப்புரத்துட்புகுந்தது, வசந்தமாச மகா இலக்குமியானவள் விளங்காநின்ற கொடிகளோடுகூடிய விருக்ஷத்துட் புகுந்ததுபோலிருந்தது. ஆண்டுச் சகல இராஜகாரியங்களையும் வேகமாக நடத்திவிட்டுச் சிகித்துவஜனுடைய முன்பாக, விருக்ஷத்தினின்றும் பலமேனும் புஷ்பமேனும் வீழ்வதே போலக்குதித்தனள்; (187)

(ஸ்ரீ-வீர-அ-கை) குரவன் வாட்டமாயிருத்தலைக்கண்டு மன்னவன்றேற்றுதல்:—பனி, தத்துவவென்பன.

பனிபடர் மதியமென்னப் பங்கய மென்னச்சோம்பி
நனிமுகம் வாடிச்சிந்தை யயர்விலா ணணுகலோடும்
புனிதநா யகனுநோக்கிப் பொருக்கென் வருந்தியெந்தாய்
துனியுறு கின்றார்போன்றாய் துயரென் துடைத்தியென்னா

தத்துவ ஞானமுற்றோர் தளர்வுறார் மகிழார்கஞ்சப்
பத்திரம் பயின்றநீரிற் பற்றுமோ வென்றலோடுங்
குத்திர மேனிக்கும்பன் குழம்புறு குழலின்பண்போற்
சித்திர மாகவொன்றைச் சிகித்துவ சனுக்குச்செப்பும்

(ப-ரை) பனிபடர் மதியமென்னப் பங்கயமென்ன = துகினம்பரந்த சந்திரனைப் போன்றும் தாமரையைப்போன்றும், சோம்பி = கருகி, நனிமுகம்வாடி = நன்றாக வதனம் வாட்டத்தை யடைந்து, சிந்தையயர்விலாள் = சித்தமானது வாத்தவமாக வாடாதவள், நணுகலோடும் = மன்னவன் எதிரில் வந்தபோது, புனிதநாயகனும் நோக்கி = பவித்திரமான கணவனும் பார்த்து, பொருக்கென் வருந்தி = திடுக்கென்று கஷ்டப்பட்டு, எந்தாய் = எனது ஞானாசிரியரே! துனியுறுகின்றார்போன்றாய் = துயரமுறுகின்றார்போ லிருக்கின்றாயே, துயரென் = துக்கமுற்றதியாதோ, துடைத்தியென்னா = அடியோடும் விடுத்தியென்னா.

தத்துவஞானமுற்றோர் = பிரஹ்மவித்தையை யடைந்தவர், தளர்வுறார் மகிழார் = வாட்டத்தையேனும் சந்தோடத்தையேனும் அடையமாட்டார்கள், கஞ்சபத்திரம் பயின்ற நீரில் = தாமரையிலைமேனின்ற நீரேபோல, பற்றுமோ வென்றலோடும் = சம்பந்தமுறுமோ என்றபோது, குத்திரமேனிக்கும்பன் = பொய்வேடம் வாய்ந்த கும்பமுனிவன், குழம்புறு குழலின்பண்போல் = உழலாநின்ற வேணுகானம்போல, சித்திரமாக ஒன்றை = விசித்திரமாக வொன்றை, சிகித்துவசனுக்குச்செப்பும் = மன்னவனுக்குக்கூறும்.

(ஸ்ரீ-வீர) பர்த்தாவினுடைய சன்னிதியில், துயரமின்றிய மனத்தினளேயாயினும், நீகாரசகித இந்துவைப்போலவும், பட்டுப்போன அம்புஜம்போலவும், யவ்வன மத்தியதையாகிய சூடாலையானவள் தனது முகத்தைக் காரொளியாகக்காட்டினாள். அத்தகைய ஆகாரந்தோடுகூடிய முகத்தைக்கண்டு திடுக்கென்று சிகித்துவஜன் எழுந்து, மிகுந்த துயரத்தோடுகூடிய சித்தத்தையுடையவனாய், ஆதரவோடுகூட இவ்வாறு கூறத்தொடங்கினான். ஹே தேவபுத்திரனே! நமஸ்காரம் நமஸ்காரம், துக்கிதமனத்தினனைப்போற் காண்கின்றனையே, முகவாட்டக்குறியால்; குரவனே நீ மனத்தாபத்தை விட்டொழிப்பாயாக; இதோ ஆசனம் உட்காரலாம்; அறியவேண்டியதை யறிந்தவர்களாகியசாந்தர்களோ, சுவஸ்தமாய பதுமங்கள் நீர்த்தண்மைத்திதியை பற்றாததேபோல ஹர்ஷவிஷாத ஜன்னியத்திதியைப் பற்ற

மாட்டார்கள்; அப்பூபதியாலிவ்வாறு கூறப்பெறவே, கும்பமுனிவன் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டே, பாஷ்பருத்தகண்டஜத்தன்மையாற் சிரணவம்சத்தொனிபோன்ற துக்கிதவாணியிஞலே கூறத்தொடங்கினன்,

(ச) சியாமா=இராத்திரி, இந்துவைப்பனியான் மறைப்பதேபோல மறையையும் மடக்கும். நீடுந்தாமரையிலே நீர்நிகர்வார். (188-189)

(ஸ்ரீ - வீர - அ - கை) அறியவேண்டியதை யறிந்த மகான்கள் மகிழ்ச்சி வாட்டத்தாலுண்டாந்திதியைப் பற்றமாட்டார்கள், என்று யாதுகூறப்பெற்றதோ, ஆண்டுச் சிறிது சிறப்பைக்கூற விழைந்துகொண்டு கும்பமுனிவன்கூறல்:—உடலென்பது.

உடலுள வளவுங்கன்மேந் தியத்துட னுறல்செய்யாரேற்
றிடமுறச் சமசித்தத்தே செறிபவ ரறிஞரல்லார்
சடர்களே யாவர்தானே சார்வுறு மவத்தைவென்று
விடநினைத் தறிவிலாதார் வீணிலே மெலிந்துநைவர்.

(ப-ரை) உடலுள அளவும்=தேகமிருக்கும்பரியந்தம், கன்மேந்திரியத்துடன்=கருமேந்திரியங்களுடன், உறல்செய்யாரேல்=சேர்ந்திராரேல், திடமுறச்சமசித்தத்தே செறிபவரறிஞரல்லார்=திடமாகச் சமசித்தத்துடனிருந்து, இவ்வாறின்றிப் பொருந்துமவர் ஞானிகளல்லர், சடர்களேயாவர்=மௌட்டியர்களேயாவர், தானேசார்வுறு மவத்தைவென்றுவிட=சுயமாகவே வந்துசாரும் அவஸ்தையை வெற்றிகொண்டுவிட, நினைத்து = எண்ணி, அறிவில்லாதார்=அறியாதவர்கள், வீணிலே மெலிந்துநைவர்=வாளாவாடித் துன்புறுவர்.

(ஸ்ரீ-வீர) உடலுளபரியந்தம் அவஸ்தைகளில், சமசித்தத்தன்மையானே யாவர் கருமேந்திரியங்களுடனே இராரோ, அவர் தத்துவவித்தரேயல்லர் மற்றுேசடரேயாவர்; ஞானத்தாலுண்டாய சமசித்ததை இடையிலேற்பட்ட கருமேந்திரிய சேஷ்டைநீக்கமே ஞானிகட்கிலக்கணமன்றுமென அஃதில்லாததுபோன்ற தத்துவ வித்துக்கள், அகப்படார்கள் சமசித்தத்தன்மையிருந்தபோதினும் பிராரப்தகருமத்தா லேற்பட்ட கருமேந்திரிய சேஷ்டோற்பவமாத்திர அபாரதத்தானே என்பது கருத்தாம். அதத்துவஞ்ஞர்களிடத்திலோ அவ்வாறின்றுமென்றுகூறல்:—அதத்துவவித்துக்கள் மூடர்கள் சமசித்தத்வ அபாவத்தானே வலிதிற்கவரப்பெற்றனவாய அவ்வக்கருமேந்திரிய நிக்கிரக அவஸ்தைகளினின்றும் நழுவுகின்றுர்கள் அஞ்ஞான இயற்கையானேயே வைஷம்மியமாம்.

(ச) சுகதுக்கதிசைகளில், உடலுள அளவும், சமசித்தத்தே திடமுறவுற்றல்செய்து=நிர்விகார சித்தத்தோடே கூடினவராய், கன்மேந்திரியத்துடன் செறிகிலார், அறிஞரல்லர்=தத்துவவித்துக்களாகார், மற்றென்னெனில், சடர்களேயாகும்=வஞ்சகரேயாம், அறிவிலாதார்=அதத்துவ வித்துக்களான மூடர் வன்பாற்சார்வுறும் சுபாவமாகவேவரும், அவத்தை = சுகதுக்கதெசைகளை, வென்றுவிட, நினைந்து = விசாரித்து வீணினைவார், அவத்தைகளால் விகாரமுறுவார் என்பதுபொருள். (190)

(ஸ்ரீ-வீர - அ-கை) பிராரப்தப் பிரயுக்தங்களாய்த் தேகமுள்ளவரைபவிப்பனவாகிய கருமேந்திரிய மகிழ்ச்சி வாட்டங்களோ, ஞானி யஞ்ஞானிகட்குத் துல்லியமேயாம் என்னுங் கருத்தாற் நிருட்டாந்தத்துடன்கூறல்:—திலமென்பது.

திலமுள வளவும்போகாத் தயிலம்போற் றேகமட்டும்
பலபல வவத்தைநீங்கா பற்றற விவற்றைத்தீர்ப்பா
ரலகிலா விண்ணைவாளா லறுப்பவ ரொக்குமன்னு
மலவுட லவத்தைநீக்கி லதற்கொக்கும் வாழ்வுண்டாமோ.

(ப-ரை) திலமுளவளவும்=எள்ளுள்ள அளவும், போகாத்தயிலம்போல்=நீங்காத என்ணெய்போல, தேகமட்டும்=உடலிருக்கும்வரை, பலபல அவத்தைநீங்கா = நானாவிதமான அவத்தைகள் நீங்கமாட்டா, பற்றற இவற்றைத்தீர்ப்போர்=பற்றில்லாமல் இவற்றை யகற்றுவோர், அலகிலாவிண்ணை=அளவுபடா வாகாயத்தை, வாளால் அறுப்பவர் ஒக்கும்=வெட்டுபவர்க்குச் சமானமேயாவர், மன்னு=அரசனே, மலவுடலவத்தை = அழுக்குடலவத்தை, நீக்கில்=அகற்றில், அதற்கொக்கும் வாழ்வுண்டாமோ=அதற்கொத்த வாழ்வானதுளதாமோ.

(ஸ்ரீ-வீர) திலமுள்ள பரியந்தம் தைலமிருப்பதேபோலத் தேகமுள்ளபரியந்தம் கருமேந்திரிய மகிழ்ச்சி வாட்டாதி தசையுண்டாகவேசெய்யும், அதனையே வியதிரேகமுகத்தானே திடப்படுத்தல்:—பற்றென்பதாதி, தேகதசையையடையாதவனியாவனோ அவன் அசிகொண்டு அம்பரம்பிளந்தவனேயாவன், ஆகவே ஞானிகட்கும் தேகதசைதாண்டமுடியாததேயாம், என எனக்கும்,அதனைத் தொடர்ந்துநிகழ்தல் தோடப்பொருட்டாகாதாம் என்பதுகருத்து, ஆகவே சித்தசாமியத்தால், தேகதசைத்துக்கங்களின் சமாதிவயத்தாற்காணப்பெருமையே அதன்பரித்தியாகமாம், அலாது, ஹடத்தாற் கருமேந்திரிய நிக்கிரகங்கொண்டு சகிப்பதல்லவாம், என்பது துணிபாமெனக்கூறல்:—இத்தேக தசாதுக்கபரித்தியாகமே அநுத்தமமாம், யாது யோகத்தினாலே சித்தத்தினது சாமியமாமோ, கருமேந்திரிய ஸ்திதியிலதோ அல்லவாம்.

(ச) சகல திலங்களினுந் தயிலம்போல்=சகல தேகங்களினுஞ் சுகதுக்க தசையுளதேயாமாதலிற்றேக தசையைப்பொருந்தாதவர் வாளால் விண்ணையறுப்பவரொக்கும், அம்பரத்தை யறுப்பவரின்மைபோல் தேகதசையின்மைய ரின்றென்பதுபொருள்; மலநீங்கில் = சமாதியென்னுமேதுவினால் சித்தத்தின் நிர்விகாரபாவனையே, வாழ்வு, சர்வோத்தமமாம், உடலவத்தை மன்னு=தேகதசையென்னுந் துக்கபரித்தியாகமாம், கருமேந்திரிய ஸ்திதிநீங்கிற்றேகதசையென்னுந் துக்க பரித்தியாகமென்பது கூடாது, ஞானிகளுக்கும் அஃதசம்பவமாதலின் என்க; செய்யுளிற் பாடபேதமாம். (191)

(ஸ்ரீ-வீர-அ-கை) விதிநெறி யின்னதென வுணர்த்தல்:—ஒரு என்பது.

ஒருபான் ஞானேந் தியத்துடனு மொருபாற் கன்மேந் தியத்துடனும்
வருமாறுளதா முடலுக்கு மலரோன்முதலா மெல்லோருந்
தெருள்பான் மையரா யினுந்தேக வவத்தைதீரா தென்றுணர்கை
யருகாநின்று வழுவாம லறுதியான விதிநெறியே.

(ப - ரை) ஒருபால் ஞானேந்தியத்துடனும்=ஓரிடத்தே சுரோத்திராதி யிந்திரியங்களுடனும், ஒருபாற் கன்மேந்திரியத்துடனும்=ஓரிடத்தே வாக்காதி இந்திரியங்களுடனும், வறுமாறுளதாமுடலுக்கு=வரும் மாறுபாடுளதாம் தேகத்திற்கு, மலரோன்முதலா மெல்லோரும்=பிரஹ்மாமுதலிய யாவருமே, தெருள்பான்மையராயினும்=ஞானத்தை யுடையவரேயாயினும், தேகவவத்தை தீராதென்று=உடலவஸ்தை திடமாகத் தீரமாட்டாதென்று,

உணர்கை=தெரிகை, அருகாநின்று வழுவாமல்=வராநின்று மாருமல், அறுதியான=நிச்சய மான, விதிநெறியே=நியதியின் முறையேயாம்.

(ஸ்ரீ-வீர) தத்துவவித்தினுலே தேகமுள்ளபரியந்தம் கருமேந்திரியங்களுடன் சருவ தசைகளிலும், சதாசாரப்படியே நிலைபெறத்தக்கதாம், நல்லொழுக்கத்தைத் தாண்டியல்லவாம் என்னுமித்துணையே நியமமாம்; புத்தீந்திரியங்களோடும், மனுதிகளோடுமோ எப்போதும் சாமியமாகவே பவிக்கத்தக்கதாம், ஒருகாலத்திலும் வைஷம்மிய மாகக்கூடாதாம்; கருமேந் திரியங்களோடு நிடேதிக்கப்படாத தேகாவஸ்தைத் தொடர்நிகழ்வு பிரஹ்மாதி சருவஜீவன் முக்தர்களிடத்திலும் பிரசித்தமேயாமெனல்:—மலரோன் என்பதாதி. பரமேஷ்டி முதலான வர்கள், எல்லாக் காரியங்களேயும் அறிந்தவர்களாகியே, தேகாவஸ்தைகளி லிருக்கின்றூர்கள் பிராரப்த கருமநியதியினது நிச்சயமிதுவேயாம், மாருயினே, அதன்போக அசித்தியென்பது கருத்தாம்.

(ச.) ஆதலின் அறிந்த புருடனுற்றேகமுள்ளமட்டுந் தேகதசைகளில் வருணுச்சிரமத் துக்குசிதமான ஆசாரானுசாரமாகக் கருமேந்திரியங்களோடுறத்தக்கது, புத்தி யிந்திரியங்க ளோடுறத்தக்கதன்று, புத்தி யிந்தியரிப்பிரவிருத்தி புத்தி பூர்வகமாதலின் அது நிவிருத்தி யாயின் நிவிருத்தித்தலினென்க; கருமேந்திரியங்கள் அபுத்தி பூர்வகமாயும் பிரவிருத்தித்தலின் புத்தி நிவிருத்திக்கின், நிவிருத்தியின்மையின் என்க; பரமேஷ்டிப் பிரபிருதிகள்=பிரஹ் மாதிகள். (192)

(ஸ்ரீ-வீர-அ-கை) பிராரப்த கருமநியதியைத்தாண்டல் தத்துவ மறிந்தவரெவரானும் அறியாரெவரானும் முடியாதகாரியமாம் என்றிடல்:—கற்றவென்பது.

கற்றவறிஞ ரறிவில்லோ ரெல்லாங்காணப் படுபொருளா
யுற்றபடியால் விதிவசத்தே யுறுவர்கடலி லுறுநீர்போ
னித்தமறிஞர் சமபுந்தி நிலையாற்கைகா லசைதலினுற்
பெற்றவுடலம் விடுமளவும் பெயராவிதியைப் பின்செல்வர்.

(ப - ரை) கற்றவறிஞர் அறிவில்லோர்=வாசித்துத் தெரிந்தவர் தெரியாதவர், எல் லாம்=யாவரும், காணப்படு பொருளாய்=திருசியங்களாயுள்ள வெவையும், உற்றபடியால் விதிவசத்தேயுறுவர்=பொருந்தியபடியாக நியதியின் வசப்படியேசெய்வர், கடலில் உறுநீர் போல்=சமுத்திரத்திற் பொருந்தும் ஜலமேபோலும்; நித்தமறிஞர் சமபுந்திநிலையால்=எப் போதும் அறிவுடையவர் சமபுத்தியினது நிலைமையால், கைகாலசைதலினுல் = காசரணுதி சலனத்தினுல், பெற்றவுடலம் விடுமளவும்=கருமத்தாற் கிடைத்த சரீரம் விடும்பரியந்தம், பெயராவிதியைப் பின்செல்வர்=மாருத நியதியையே யனுசரிப்பர்.

(ஸ்ரீ-வீர) சருவ அஞ்ஞதத்துவஞ்ஞ பூதங்களும் திருசியக்கூட்டமா மிவையெவையும், நியதியைப் பின்றொடர்ந்தோடும், அம்பு அம்புதியையேபோலும்; ஆயின்என்தஞ்ஞ அஞ்ஞர் கள் இருவர்களும் ஒப்பேயோவெனின் அன்றெனல்:—தஞ்ஞர்புத்தியாதி சாமியத்தானும் பாணியாதி சலனத்தானும், கொண்ட ஏக தேகபாதபரியந்தம், இவ்வகண்டிதமாய நியதியைக் கழிப்பர்.

(ச) தத்துவஞ்ஞரும் அதத்துவஞ்ஞருங் இத்திருசிய சமுகத்தில் விதிவசத்தால், கடலி லுறுநீர்போலுறுவர், ஆயிற்றத்துவஞ்ஞருக்கும் அதத்துவஞ்ஞருக்கும், விசேடமியாதெனச்

சங்கித்து விசேடத்தைத் தெரிவித்துரைத்தல்:—அறிஞரானவர், சமபுத்தி = புத்தியாதி சம நிலையாலும், கைகாலசைதலினுல் = கருமேந்திரியவாயாசத்தாலும், உடலம் விடுமளவுமே பேரறிதியைப் பின்செல்வர். (193)

(ஸ்ரீ-வீர-அ-கை) அஞ்ஞரோ அவ்வாறல்லரெனல்:—இரங்கியென்பது.

இரங்கித்தேம்பி யறிவில்லோ ரின்பதுன்பங் களின்மூழ்கிக்
குரம்பைத்திரள்க ளெடுத்தவற்ருற் குறையாவிதியைப் பின்செல்வர்
நிரம்பப்புகன்றெ ஞன்பட்ட நெறியிற்றுன்பந் தனைக்கேளா
யரங்கட்குவமை யாந்துன்ப மன்பர்க்குரைத்தா லாருதோ.

(ப - ரை) இரங்கித்தேம்பி அறிவில்லோர்=வாடியழுது புத்தியில்லாதவர், இன்ப துன்பங்களில் மூழ்கி=சுகதுக்கங்களில் முழுகி, குரம்பைத்திரள்கள்=தேகக்கூட்டங்கள், எடுத்தவற்ருல்=தாங்கியவற்றினுலே, குறையாவிதியைப் பின்செல்வர்=மாருத நியதியையே பின்ருெடர்வர், நிரம்பப்புகன்றென்=வெகுவாகச் சொல்லியென்னே, நான்பட்ட நெறியிற்றுன்பந்தனைக் கேளாய்=யான் அநுபவித்த மார்க்கத்திலுண்டாய துயரங்களைக் கூறக் கேட்பாயாக, அரங்கட்குவமையாந் துன்பம் = அரங்களைப்போலறுக்குந் துன்பங்களை, அன்பர்க்குரைத்தாலாருதோ=நேயர்க்குக்கூறினுல் ஆறுதலடையாதோ.

(ஸ்ரீ - வீர) அறியாதவரோ சருவகலக்கத்தானே சுகதுக்க தசைகளானேயதமாவர்கள். ஹே அரசனே தேகலக்ஷிதங்களினுலே விகண்டிதமாயநியதியைக்கழிப்பார்கள். பிராரப்தநியதி சொரூபத்தை யபிநயித்துக்காட்டி அது யாவராலும் தாண்டமுடியாததாமெனக் கூறப்பெற்றது. ஹே மகாபாகுவே! வேத்தியவித்துக்களுள்வரனே! இவ்வண்ணம் நியதியநுசாரமாக இருக்குஞ் சீவக்கூட்டத்தில் நீ தேவனுயிருந்தும் இத்தகைய வாட்டநிமித்தமாகிய கிளர்ச்சியை யாங்ஙனமடைந்தாயோ அதனைக்கூறுதி, ஹே வசுதாதிபனே! இவ்வென்னுடைய சித்தஞ்செய்யுங் காரியத்தைக்கேட்டி! சுவர்க்கத்தில் இன்று எனக்கு யாது நடந்ததோ அவை யாவற்றையும் உனக்குக் கூறக்கேட்பாயாக, நேயனிடத்திற் றெரியப்படுத்தியதுக்கம் மிகவுஞ் சிறுகிப்போகும், கனமாய்ச் சடமாய்க் கறுப்பேயாயினும், இத்தகையதேயாயினும் அம்புதம் விட்ட விருஷ்டியதாய் தானவமாவதேமானும்.

(ச) அறிவில்லோரானவர், இரங்கித்தேம்பி, சர்வேந்திரிய சோகங்களால், இன்ப துன்பங்களில் மூழ்கினவராய் அவற்ருல், அநந்த தேகங்களால் நியதியை, விவிதங்கண்டிதமாம்படி பின்செல்வர் என்பது விசேடம்; சிகித்துவசன்; இங்கனமிருப்பின் வேதவித்துக்களின் மேலாய் மகானுபாவனுன தேவனே நீயும் இத்தன்மையான வாட்டமெப்படியுற்ருயென ஸ்ரீ கும்பன்கூறல்:—சுகிர்தர்க்கறிவித்த துக்கமிகவுஞ் சிறுகலைச்சேருமென்றதாம். (194)

(ஸ்ரீ-வீர - அ-கை) நடந்த விருத்தாந்தத்தை நன்ருகக்கூறுதல்:—கொத்து எகலிது என்பன.

கொத்தார் மலர்தந் துணையகன்று குதித்து விண்போய்ப் பொன்னுலகின்
மெய்த்தா தையைச்சேர்ந் திந்திரன்முன் மேவிமீண்டிங் குறவெண்ணித்
தத்தா விண்ணின் றிழிந்திரவிக் கருகே காற்றின் றடநெறியா
லித்தா ரணிசேர் வுறவருவா னெழிலிப் பதத்தி லேகுதலும்,

ஏக லுற்ற தூர்வாச னென்னு முனியை யெதிர்கண்டு
மாக மட்டி லடிதொழுது மற்று முனிவன் றனைநோக்கி
நீக் றுத்த துகிலுடுத்தாய் நெறிதீர் பிறனை விழைபவர்போல்
போக லுற்று யென்றவெனைப் போத முனிவுற் றம்முனிவன்.

இதுசொல் லுதலா லிரவுதொறு மெழிலேந் திழையா யிருத்தியென
முதுவன் சாப முறைத்தலுமம் மொழிகேட் டிரங்கி முனிதாளாம்
பதுமம் புகழ்ந்து வேண்டுதற்குப் பார்த்தே னிமைப்பின் முனிமறைந்தா
னதுகண் டுளநொந் திங்கணைந்தே னணங்காந் தன்மை யகலாதே.

(ப - ரை) கொத்தார்மலர்தந் துனையகன்று=புட்பமஞ்சரியை யுனக்கீந் துன்னை விட்டு நீங்கி, குதித்துவிண்போய் = கிளம்பி விசும்பிற்சென்று, பொன்னுலகில் = சுவர்க்கத்தில், மெய்த்தாதையை=உண்மையான தந்தையை, சேர்ந்திந்திரன்முன் மேவி=அடைந்து தேவ இந்திரன் சந்நிதியுற்று, மீண்டிங்குறவெண்ணி = மறுபடியும் இங்குவா வுத்தேசித்து, தத்தா விண்ணின்றிழிந்து=கிளம்பி ஆகாயத்திருந்திறங்கி, இரவிக்கருகே=சூரியனுக்கருகில், காற் றின்றட நெறி=வாயுவின் விசாலமார்க்கத்தால், இத்தாரணிசேர்வுற = இப்பூமண்டலஞ் சேர் வுற, வருவான் = வரும்பொருட்டு, எழிலிப்பதத்தில் ஏகுதலும்=மேகமார்க்கத்திற் போகு தலும்.

ஏகலுற்ற தூர்வாசனென்னு முனியை=சென்றுகொண்டிராநின்ற தூர்வாசன் என்னும் மகாமுனிவரை, எதிர்கண்டு=எதிரே சந்தித்து, மாகமட்டி லடிதொழுது = சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, மற்றுமுனிவன் றனைநோக்கி = மறுபடியும் அம்முனி சிரேட்டனைப் பார்த்து, நீ கறுத்த துகிலுடுத்தாய் = நீ நீலவாடையை வேய்ந்துகொண்டாய், நெறிதீர் பிறனைவிழைபவர்போல்=முறையின்றி யன்னியனைக் காமிப்பவர்போல, போகலுற்று யென்ற வெனை=சொல்லலுற்று யென்றவென்றனை, போதமுனிவுற்றம்முனிவன் = மிகவுங்கோபித் தந்த மகரிஷி.

இது சொல்லுதலால்=இதனை நீ கூறுதலால், இரவுதொறும்=இராத்திரிதோறும், எழி லேந்திழையாய்=அழகுபொருந்திய வங்கனையாய், இருத்தியென = இருப்பாயாகவென்று, முது வன்சாபமுரைத்தலும்=முதிர்ந்த கடூரசாபத்தையிடுதலும், அம்மொழிகேட் டிரங்கி= அந்த வன்மொழியைக்கேட்டு இரக்கமுற்று, முனிதாளாம்பதுமம் புகழ்ந்து வேண்டுதற்கு= மகாமுனிவனது திருவடியாம் தாமரையைத் தோத்தரித்துப்போற்றி மாற்றிக்கொள்ளுதற்கு, பார்த்தேன்=நோக்கினேன், இமைப்பின்=கணத்தில், முனிமறைந்தான் = அம்முனிவன் மறைந்துபோயினன், அதுகண்டுளநொந்திங்கணைந்தேன் = அதனைப்பார்த்து மனங்கட்டப் பட்டு இங்கு வந்துசேர்ந்தேன், அணங்காந்தன்மை யகலாதே=மங்கையாந்தகைமை மாறாதே வந்தேதீரும்.

(ஸ்ரீ - வீர) யான் உனக்குப் புஷ்பமஞ்சரியைக் கொடுத்துவிட்டு, இங்கிருந்து சென்று, அந்தரிக்ஷலோகங் கடந்து சுவர்க்கத்தை யடைந்தேன், பின்னர்ப் பிதாவோடுகூட மகேந்திர னது சபாஸ்தானத்தில் முறைப்படியாக இருந்து அவ்வாறே எழவேண்டியகாலத்தேயெழுந்து தந்தையால் விடுபட்டவனுய், ஈண்டு வருவதற்கு யான் சுவர்க்கத்தைவிட்டு, ஆகாயத்தை நன் கடைந்தேன், சூரிய பகவானது குதிரைகளுடன், பிரவகித்துக்கொண்டு செல்லும் காற்றி

னது தனது, அநுகூலமார்க்கத்தில், அதன் பிரவாகத்தானேயே வகிப்பேன் இட்டமான தேசத்தை நோக்கியென்பதாம். எனதபிமததேசப்பிராப்தியின் பின்னர் அக்காற்றினாலே மேலே வகித்துக்கொண்டுபோம் பானுவானது ஒரு நெறியானே யொருபாற்சென்றது, யானோ அன்னியநெறியானே வருகின்றேன்; சமுத்திரத்தில் மிதக்குபவனேபோல வாகாயத்தில் மிதந்தாகிருதியனாய் வருகின்றேன் என்பதாம்.

அதன்பின் முன்பாக, பரிபூர்ண மேகங்களின் மத்தியமார்க்கமாக ஸ்ரீ துருவாசமுனிவன் வேகமாக வருவதை யான்கண்டு, அம்முனிவனுக்கு நமஸ்காரத்தைச் செய்து, இரவிவிருளில், குறித்தவிடம்போம் பிறழ்ச்சியுற்ற பெண்ணைப்பாய் நீ காணப்பெறுகின்றனையே, நீலவஸ்திரந் தரித்திருக்கின்றலமையினாலே என்று ஆகாயத்திற்செல்லுமென்னாற் கூறப்பெற்றது. ஹே மானதனே யிதைக்கேட்டவுடனே அம்முனிவன் மிகச்சினந்து எனக்கிச்சாபத்தைக் கொடுத்தனன், என்னை யிவ்வாறு புன்மொழிகளானே பேசினமையின் இரவுதோறும் நீ ஸ்தனகேசவதியாகிய காந்தையாய்க் கருத்தை யறிவிக்கும் தழுக்குக்காரியாகிய விலாசினியாய் யவ்வனப்பெண்ணாகக்கடவாய் என்று கிழவயதினையுடைய துருவாசமுனிவனின்றும் கிளம்பிய இவ்வசுப வாக்கியத்தைக்கேட்டு மன்னித்துக்கொள்ளும்படி வேண்டிக்கொள்வான் இங்குமங்குந்தேடினேன் முனிவன் கணத்தின் மறைந்தனன்; இந்நிமித்தத்தினாலே கிளர்ச்சியை யடைந்து துக்கிதமனத்தினனாய் ஹே சாதுவே விண்ணினின்றும் இவ்விடம் வந்து சேர்ந்தேன்; இந்த விடயமுழுவதும் உனக்குக் கூறப்பெற்றது, நிசியிலங்கனையாக அவசியமாகியே தீருவேன். (195-196-197)

(ஸ்ரீ-வீர - அ-கை) தனது குறையைக் கும்பமுனிவன்கூறி இரவைக்கழிப்பதெப்படியென்று வருத்தப்படச் சிகித்துவசன் றேற்றுதல்:—குரு அறிவென்பன.

குருவா னவர்மா தவர்முதலோர் கூட்டங் காணக் கூசாம
லிருள்வாய் மகளா யெவ்வண்ண மிருப்பே னெனவுஞ் சிகித்துவசன்
வெருவா தொழிநீ புலம்புதலான் மேவு பயனென் விதிவலியால்
வருமே வருக வுடற்கல்லான் மாசிலறிவிற் பற்றுதே.

அறிவா லுயர்ந்த நீதுன்பத் தமிழ்ந்தற் குரித்தோ அறிவற்ற
சிறியா ரன்றோ வுள்ளயர்வா ரென்று தேற்றித் தம்மிற்றும்
பிறியாவின்ப துன்பங்கள் பிறிவற் றிருந்தா ரவ்வளவி
னெறியார் கும்பற் கணங்குருவ நேர்வான் போல்வெய் யவனொளித்தான்.

(ப - ரை) குருவானவர் மாதவர்முதலோர்=ஞானசிரியர்கள் மகாதபசிகள் முதலியவர்கள், கூட்டங்காணக் கூசாமல்=கூட்டத்தார் நோக்கக் கூச்சத்தையடையாமல், இருள்வாய் மகளாய்=அறியாமையோடு கூடியபெண்ணாய், எவ்வண்ணம்=எவ்வாறு, இருப்பேன் எனவுஞ் சிகித்துவசன் = இருக்கமுடியும் என்று கூறவும் சிகித்துவசன், வெருவாதொழி நீ= பயப்படாது இருப்பாயாக நீ, புலம்புதலால்=விசனப்பட்டொப்பாரி வைத்தலால், மேவுபயனென்=அடையும் பிரயோஜனமென்னே, விதிவலியால் = பிராரப்தவலுமையால், வருமே வருக=வருவதுதான் வருகவே, உடற்கல்லால் = சரீரத்துக்கேயல்லாமல், மாசிலறிவிற் பற்றுதே=குற்றமற்ற சேனத்திற்பற்றுறுதே.

அறிவாலுயர்ந்த நீ—விவேகத்தின் மிகுந்திருக்கும் நீ, துன்பத்தமிழ்ந்தற்கு—துயரத்தில் அழுந்துதற்கு, உரித்தோ—உசிதமாமோ, அறிவற்ற சிறியாரன்றே—விவேகமில்லாத சிறியவரல்லவா, உள்ளயர்வாரென்று—மனத்தே சோகிப்பாரென்று, தேற்றி—தேறுதல் செய்வித்து, தம்மிற்றும்—பரஸ்பரம், பிறியா வின்பதுன்பங்கள் = பிரிவுபடாத சுகதுக்கங்கள், பிறிவற்றிருந்தார் = பிறிவில்லாமலிருந்தார், அவ்வளவில்—அந்த அளவில், நெறியார் கும்பற்கு—முறையே செல்லுங் கும்பமுனிவனுக்கு, அணங்குருவ நேர்வான்—பெண்வடிவம் உண்டாம் பொருட்டு, போல்—போல, வெய்யவனெளித்தான்—சூரியபகவான் மறைந்தான்.

(ஸ்ரீ-வீர) இந்த ஸ்திரீத்தன்மையான துனிருந்தங்களில் எங்ஙனம், என்னுற் கழிக்கக் கூடும்? இரவில், ஸ்தனவதியாகிய மங்கையாய்த் தங்கையினது முன்னிலேயிற்றுன் எங்ஙனங் காலங்கழியும்? என்னதான் கூறத்தக்கதுளது. சமுசாரத்தில் வரத்தக்கவைகளுக்குள் இது விடமமான கதியன்றே, சுவர்க்கத்திற்காமாகில தீக்கலேயுடைய தேவகுமாரர்களின், ஈண்டுக் குருதேவத்துவிஜாதிகளின் முன்னிலேயில் எங்ஙனம், லஜ்ஜாபரவசவடிவமாகிய என்னுல், மங்கையாக இரவில் இனிதுவசித்தல்கூடும்? இந்தப்பிரகாரம்கூறி யொருகணம் அவள் சித்த சமாதானத்தில் சும்மாவிருந்து, தைரியத்தைக்கொண்டு மீண்டும் இரகுகுல திலகனே! கூறுவதாவது, என் அஞ்ஞனேப்போற் சோகிக்கின்றேன் எனது ஆன்மவடிவத்திற்கு என்னதான் கூதமாய்விட்டது? வந்ததை வந்தபடியே இத்தேகமானது என்னினும் அன்னியமாகவேயிருந்து அநுபவிக்கட்டும் அதனுலெனக்கென்னெகுறை. நுகர்வினை வயத்தினுலேவந்த பெண்மையை என்னினும் அன்னியமாய இத்தேகமே யனுபவிக்கும், அதனுல், அசங்கசின்மாத்திர வடிவமான எனக்கு, கோதுயாதென்பது தாற்பரியம். அரசனும் குரவன் கூறியதையே அனுமோதித்துரைத்தல்:—சிகித்துவசன் என்பதாதி:—ஹே தேவபுத்திரனே! இவ்வாறு கட்டப் படுதலானே யென்னபிரயோஜனம் தேகத்திற்கு யாதுவருமோ அது வருகவே இதனுல் ஆன்மாவிற்குப் பற்றுதலே கிடையாதாம், எச்சுகங்கடாம் எத்துக்கங்கடாம் விதிக்கப்பெறுவன வாமோ அவையாவுமே உடம்பிற்கே யாவனவாம் ஒன்றுமே யான்மாவிற்குவந்துறுதாம். தேக உபலக்ஷிதசிதான்மாவின் அவசியசம்பாத்தியங்களாய பிராரப்தபலங்களின் விடயத்தில், அகேதயோக்கியநீயும் துக்கிப்பையேலாயின் அன்னியர்களின் அவிவேகத்தாலுளதாய கேத சிகிற்சையில், உன்போன்ற ஆகமபூஷண சாத்திரதத்துவ அநுபவகுசலன் சிகிற்சகனுக எவன்றுன் சரணமாக ஆகப்போகின்றுன், ஒருவனுமேயாகமாட்டான் என்பதாம். அவ்விருவரும் இவ்வகையாய அநேக வாக்கியங்களினுலே அன்னியோன்னியம் தாமாகவே ஆசுவாசனம்—தேறுதல், செய்துகொண்டிருந்தார்கள், பரஸ்பரம் கனமான அன்புடையவர்களாயும் சுகிருதுக்களாயும் கேதிகளாயுமிருந்தார்கள், அன்னியோன்னிய ஆசுவாசனுதாம், அருக்கனுங் கும்பமுனிவனுக்குப் பெண்மையை யுண்டாக்குபவனேபோலும் அஸ்தமடைந்தான், நேய க்ஷயத்தினுல் விளக்கேபோலும் ஜகத்தீபமும் அணேந்ததென்பதாம். (198-199)

(ஸ்ரீ-வீ - அ-கை) மாலேப்போதில் மங்கைவடிவு வருதலும் இருவரும் கேதித்திருத்தலும்:—அந்திகூந்தல் என்பன.

அந்தி வாலு நியமங்க ளாற்றி யிருந்தா ரதுகாலே
முந்து மாசன் முகநோக்கி மொழிவான் கும்பன் றளர்ச்சியொடு
மிந்த வுடல்வீழ் வதுபோன்மே லெழுதல் போனின் றியங்குதல்போல்
வந்து பெருநா ளுெடும்பெண்மை மன்னு வென்னே வளேந்ததுவே.

கூந்தல் வளர்கின் றதுபாராய் கொங்கை யெழுகின் றதுபாராய்
சேர்ந்து வருமே கலைபாராய் செறியு முன்பி னுண்டான
காந்தை வடிவா னதுபாராய் காவ லாவென் றிரங்கினனுய்ச்
சாந்த முறுகும் பனுமிருந்தான் றலைவன் றானுந் தளர்ந்திருந்தான்.

(ப - ரை) அந்திவாலும்=மாலைக்காலம் வருதலும், நியமங்களாற்றி யிருந்தார்=செய்ய வேண்டிய அநுட்டானங்களைச் செய்து முடித்து இருந்தார், அதுகாலை=அப்போது, மூந்து மாசன் முகநோக்கி=எதிரிலிருந்த மன்னவனது வதனத்தைப்பார்த்து, தளர்ச்சியொடுங் கும் பன் மொழிவான் = கவலையோடுகூடக் கும்பமுனிவன் கூறுவான், இந்தவுடல் வீழ்வது போல்=இந்தச் சரீரமானது விழுவதுபோலவும், மேலெழுதல்போல்=மேலே யெழுந்திருத் தல்போலவும், நின்றியங்குதல்போல் = நின்றிருத்தல்போல, சலித்தல்போல, வந்துபெருநா ணுடும்=பெரிய வெட்கம் வருவதுடன், பெண்மை=ஸ்திரீத்தகைமை, மன்னு=அரசனே, என்னை வளைந்ததுவே=என்னை வந்து சுற்றிக்கொண்டதே.

கூந்தல் வளர்கின்றதுபாராய்=ஏலக்குழல் எழுந்துநீள்வதைப் பார்ப்பாயாக, கொங்கை யெழுகின்றது பாராய் = ஸ்தனங்கள் அவதரித்து முற்றுவதைநோக்காய், சேர்ந்துவருமே கலைபாராய்=உடம்பில் ஒட்டிவரும் மேகலையாதிகளைப்பார்ப்பாய், செறியும் முன்பின் உண் டான = பொருந்தும்படியாக முற்பாகம் பிற்பாகம் என உளதான, காந்தை வடிவானது பாராய்=பெண் வடிவமானது காணுய், காவலாவென்றிரங்கினனுய்=மன்னவனே யென்று வாடினனுய், சாந்தமுறு கும்பனுமிருந்தான் = சாந்தஸ்ரூபமாகிய கும்பமுனிவனுமிருந்தான், தலைவன்றானும் தளர்ந்திருந்தான்=சிகித்துவசனும் மிகக்கவலை யடைந்திருந்தான்.

(ஸ்ரீ - வீர) சுகிருதுக்களாய அவர்கள் எழுந்து சந்திரசம்பந்தியாய சந்தியைச்செய்து முடித்துச் சந்திரனைத்தொழுது ஜபிக்கவேண்டிய மந்திரத்தைச் சபித்து, ஒரு சோலைக்குள் வீற்றிருந்தார்கள், மூ : வந்தயித்வா, வந்தித்வா சுவார்த்தத்தில்ணிச்விகுதியாம், அதன்பின் கும்பமுனிவன் ஆண்டு ஸ்திரீ சம்பந்தமான மேனியை வெளிப்படுத்திக்கொண்டு, எதிரி லிருந்த மன்னவனை நோக்கி, கத்கதவசனத்தோடுங் கழறலுற்றான், விழுகின்றேன்போலும் விளங்குகின்றேன்போலும், யஷ்டிகளினுலே யோடுகின்றேன் போலும், ஹே மன்ன வனே! நின்னது முன்னிலையில் நாணமாகவே யிருக்கின்றது. ஸ்திரீத்தன்மையை யடைகின்றேன்; இதோ எனக்குக் கூந்தல் வளர்கின்றது பாரும், அதன்மேலே விளங்கும் நக்ஷத்திரக் கூட்டங்களைப்பாரும், திசாந்ததிமிரம்போலல்லவோ கூந்தல் வருகின்றது, விளங்காநின்ற தாரகை மாலையென்னும் உபமான விசேஷணத்தானே உபமேயசிரோருகமும் முத்தாதிமாலையோடு கூடியதேயாமெனத் தெரிகின்றது, என்னுடைய மார்பிற் றன்னியங்களைப்பாரும் எதிர்முகமாகவன்றோ எதிர்த்துக்கொண்டு வருகின்றன, வசந்தத்திற்ககன உன்முகமாகக் கிளம்பிவரும் செந்தாமரை மொக்குகள்போலுமன்றோ கிளம்புகின்றன; எனக்குக் குதிங்கால் பரியந்தமே சேலைநீண்டு தொங்குவதைப்பாரும்; இதோ பாரும் சகல பூஷணங்களும், இந்த நிதம்ப சகனங்களை யுணர்வினுலே உள்ளே யிருப்பன வாக வுணர்கின்றேன், இந்தப்பிரகாரம் கூறிவிட்டுக் கும்பமுனிவன் விபினத்தில்வெறுமனே துக்கிதனுகியிருந்தான், அதைக்கண்ட அரசனும் அவ்வாறே துக்கிதமதியாகினன்.

(ச) வீழ்வதுபோல்=பூமியிலென வருவித்துக்கொள்க. முன்பின்னுண்டான நிதம்ப சக னங்களையுடைய, தனுதர அவயவங்களினுலே வீழ்வதேபோலும், பந்துமித்திராதி ரகிதவனத் தில் ஆடைகள் உள்வெளியால் பன்மையாம். பிறவூகித்துணர்க. (200-201)

(ஸ்ரீ - வீர - அ - கை) இரவுதோறும் மங்கையாகிக் களங்கமின்றி யொன்றுகவேயிருத் தல்:—ஞானப்பாயலென்பன.

ஞான வானீ விதிநெறியை நன்று யறிந்தா யுறற்பால
தான தற்று லிரங்கலையென் றரச னுரைப்ப வுயர்கும்பன்
ருனுஞ் சொல்வா னினிச்செயலென் றப்பா விதியை யார்தடுப்பார்
மேனி பெண்மை யாயிரவு மேவக் கடவே னென்றுரைத்து.

பாய லொன்றி லவ்விரவு பயின்றார் வெறிதே விடியளவின்
மேய பெண்மை தனைவிட்டு மீண்டு கும்ப வடிவாக
வேய விவ்வா றிராப்பெண்ணு யிரவு போனுற் கும்பனுமா
யாய கன்னி யழியாம லமர்ந்தாள் சின்னுட் சூடாலை.

(ப - ரை) ஞானவானீ=ஞானமுடையவன் நீ, விதிநெறியை=நியதியின் மார்க்கத்தை, நன்றுயறிந்தாய்=நன்றாகத் தெரிந்திருக்கின்றாய், யுறற்பாலதான தற்றால்=அடையவேண்டிய தடைந்தால், இரங்கலையென்று = இரக்கமடையாம லிருக்கின்றாய் என்பதாக, அரச னுரைப்ப=மன்னவனுரைசெய்ய, உயர்கும்பன்=மேலான கும்பமுனிவன், தானுஞ்சொல் வான்=சுயமே சொல்லிக்கொள்ளுவான், இனிச்செயலென் = இனிச்செய்யத்தக்கது யாது தானுளது, தப்பாவிதியை யார்தடுப்பார் = தவராத விதிமுறையை யாவரேதடுக்கவல்லவர், மேனிபெண்மையாய்=உடம்பு ஸ்திரீத்தன்மையுடன், இரவு= இராத்திரி; மேவக்கடவேன் என்றுரைத்து=அடைவது நிச்சயமென்றுரைத்து.

பாயல் ஒன்றில் அவ்விரவு=ஒரே தடுக்கில் அந்த இராத்திரியில், பயின்றார் வெறிதே= படுத்துக்கொண்டார் வீணுகவே, விடியளவில் = விடியற்காலையில், மேயபெண்மைதனை விட்டு=பொருந்திய மங்கைப் பான்மையை விடுத்து, மீண்டு கும்பவடிவாக = மறுபடியும் கும்பமுனி வடிவமாக, ஏய இவ்வாறு இராப்பெண்ணாய்=பொருந்தற இங்ஙனம் இராத் திரிதோறும் பெண்மணியாய், இரவுபோனுற் கும்பனுமாய்=இராப்போதொழிந்தாற் கும்ப முனிவனுமாய், ஆயகன்னி யழியாமல்=உண்டாய கன்னிப் பான்மைகெடாமல்; அமர்ந்தாள் சின்னுள் சூடாலை=வாழ்ந்திருந்தாள் சிலதினம் சூடாலை.

(ஸ்ரீ-வீர) முகூர்த்த மாத்திரத்தில் மன்னவன் இவ்வாக்கியத்தைக் கூறத்தொடங்கினன், ஹே மகாசத்துவனே! அந்தோ கஷ்டம்! அச்சாபித இவ்வரவர்ணினியாய் விட்டாயே, ஹே சாதுவே அறியவேண்டியவெல்லா மறிவுற்றநீ நியதியினுடைய கதியை இனிதறிகின்றாய்! அவசியம் பவிக்கத்தக்கதாகிய இப்பொருளில், துக்கித இருதயன் நீயாகவேண்டாம், அவ்வத் தசைகள் வரவே வருகின்றன தத்துவவித்துக்கட்குத் தேகமாத்திரத்திற்றான், சித்தத்திலோ வருவதில்லையாம்; அஞ்ஞானிகட்கோ இத்தசைகள் சித்தத்தையும் வாசனை வடிவமாகச் செலுத்துகின்றனவாம், தேகமாத்திர அளவில் நிற்பதில்லை; இங்ஙனமுளதாகுக, இரவில் எனது பெண்மையுடன் றொடர்ந்து நிற்பேனுக, சிறிதுங் கேதத்தையடையமாட்டேன், யாவராற்றான் நியதி தாண்டக்கூடியதாகும், இவ்வண்ணம் நிண்ணயித்து அவர்கள், கேதமத

னைச் சுருக்கமாகவகற்றி, ஒரே படுக்கையில் அங்கிசியை வெறிதாகவே நீண்டதாகக் கழித்தார்கள், ராஜா கும்பவிபத்தி சிந்தையினால் இராணியோ நிருபசங்கம உற்கண்டையால் நித்திரையின்மையின் நெடும்போதாக நிசியை நீக்கினார்களென்பதாம். மறுநாட்காலையில், அந்த யவ்வனமான ஸ்திரீ சம்பந்த வபுவைவிடுத்து, கும்பமுனிவன் கும்பவொளி யுடையவனாகவே யிருந்தான், கும்பம்போன்ற குயங்கள் முதலிய யாவற்றையும் விட்டுவிட்ட மேனியனாகியே விளங்கினன். யுவதி சம்பந்தம் யவ்வனமாம், பிரகிருதி பாவமாதலின் டி லோபமில்லையாம் விரித்தல் பயனில்லை. இந்தவண்ணம் அந்த இராஜமகிஷியாகிய சூடாலையாம் வரவர்ணினியானவள், கும்பத்தன்மையை யடைந்திருந்தாள். பர்த்தாவிற்குப் பின் மங்கைத்தன்மையை யடைந்தவளாயினள், வநாந்தங்களிற் சஞ்சாரமுஞ்செய்தனள், கன்னிகழியாமற் கங்குலுங் கழித்தாள், பகலிற் கும்பரூபந் தரித்துக்கொண்டு பர்த்தாவாகிய மித்திரனோடு வாழ்வனள். (202-203)

(ஸ்ரீ-வீர - அ-கை) விவாகஞ் செய்துகொள்ளச் சம்மதிவினாதல்:—அன்னாள், மனைவி யென்பன.

அன்னாள் கும்ப மேனியளா யரசன் றனைப்பார்த் தொருபகலின்
மன்னா நித்த மிராப்பெண்மை வருமேன் மடவா ரியல்பின்றி
யென்னா ளிருப்ப தொருகணவ னெய்த வேண்டு முனையலது
பின்னா ரையுமூ வுலகினுமியான் பேணே னன்பாற் பெருமையினால்.

மனைவி யாக விவாகத்தால் வரிப்பாய் நிசிக்கெப் போதுமெனை
யினைய தியற்றிற் றீங்குநல மிரண்டு மில்லை யெனவோடு
மனைய விருப்பே நன்றென்று னரச னதுகேட் டலுங்கும்பன்
புனையு நலத்தா வணிமாதப் புரணை யின்று புரவலனே.

(ப - ரை) அன்னாள் கும்பமேனியளாய் = அச்சூடாலை கும்பமுனிவனது வடிவினை யுடையவளாய்; அரசன்றனைப்பார்த்து=மன்னவன் றன்னைநோக்கி, ஒரு பகலில்=ஒருதினத்தில், மன்னாநித்தம்=மன்னவனே தினந்தோறும், இராப்பெண்மை வருமேல்=இரவுதோறும் மங்கைப்பருவமானது வருமேலாயின், மடவார்ரியல்பின்றி = மங்கையாது இயற்கையில்லாமல், என்னாளிருப்பது=எத்துணைக்காலமிருப்பது, ஒருகணவ னெய்தவேண்டும்=ஒரு நாயகனை யடையவேண்டும், உனையல துபின்னாரையும் = உன்னையேயல்லாமல் பின்னெவரையுமே, மூவுலகினு மியான்பேணேன்=திரிபுவனத்தினும் யான் விரும்பேன், அன்பால் பெருமையினால்=வாஞ்சையால் மகத்துவத்தால்.

மனைவியாக விவாகத்தால் வரிப்பாய் = இருகணியாக விவாகமுறையில் வேட்பாய், நிசிக்கெப்போதுமெனை=இரவிற்கெப்பொழுது மென்றனை, இனையதியற்றில்=இதனைச்செய்வதால், தீங்குநல மிரண்டுமில்லை=தின்மையுமில்லை நன்மையுமில்லை, எனவோடும் = என்றபோது, அனையவிருப்பே நன்றென்றானரசன் = அத்தகைய வாஞ்சையே நல்லதென்றான் மன்னவன், அதுகேட்டலுங்கும்பன்=அதனைக் கேட்டவுடனே கும்பமுனிவன், புனையுநலத்தாவணிமாதப் புரணையின்று புரவலனே = அநேக நன்மைகணிறைந்த ஆவணிமாதத்தின் பௌர்ணமி இன்றுதான் மன்னவனே.

(ஸ்ரீ - வீர) சிலதினங்கள் கழிந்தபின்னர்ச் சூடாலையானவள், கும்பரூபதரையாகிய சதியானவள், பர்த்தாவைநோக்கி இதனைக் கூறத்தொடங்கினள், இராஜீவபத்திராக்ஷனாகிய ஹே இராஜனே! என்னுடைய இவ்வார்த்தையைக் கேட்பாயாக, நிசியிற்றினந்தோறும் யானங்கனையாகவே யிருக்கின்றேன், ஆகையால் அங்கனாதருமத்தை யிச்சிக்கின்றேன், அதனை யிவ்வாறு சபலமாக்குவான் எண்ணுகின்றேன், யாராவது ஒரு நாயகன்பொருட்டு என்னை விவாகத்தினாலே விரைவாகவே கொடுப்பேனியான், அவ்வெனது பர்த்தா தாங்களேயெனப் புவனத்திரயத்திலும் எனக்கு விருப்பமாகும், எப்போதும் நிசியில் என்னை மனைவியாக விவாகமுறையிற் கவ்ரலாம்; ஹே நண்பனே! செய்யும் இக்காரியத்தினாலே சுபமுமில்லை யசுபமுமில்லை, கண்டிலேன் ஒன்றையுமாதலினால், ஹே மகாபுத்தியையுடையோய் எங்ஙனம் விரும்புகின்றனையோ அங்ஙனமியற்றுதி, ஹே மகிபாலனே! இவ்வண்ணமேலாயின் இன்றே லக்கினம் சேர்ப்பன்மாம், இன்று சிராவணமாசத்தின் பௌர்ணமியாம், நேற்றேயென்னால், விவாகலக்கினதியாவும் கணிக்கப்பெற்றவாம். (204-205)

(ஸ்ரீ - வீர - அ - கை) விவாகத்திற்கு வேண்டிய சாமக்கிரிகளைச் சம்பாதித்து விவாகம் நடத்துதல்:—திங்கள் கிரியை யென்பன.

திங்க ளுதிக்குங் காலத்திற் செய்க விவாக மெனச்செப்பி
யங்க ணரச னொடுமேவி யணியு மணிப்பூண் சந்தனங்க
டுங்க மலையிற் கொடுவந்து தூய்நீர்க் கங்கை தனின்மூழ்கிப்
பொங்கு நெறியாற் கடவுளர்தென் புலத்தோர் தவத்தோர் கழல்போற்றி.

கிரியை யொழியார் பலம்விரும்பார் கிளர்கற் பகநல் கியவெண்பட்
டுரிய தெனச்சாத் தினர்வெய்யோ னுயர்ந்த வெற்பி னிடைச்சென்றான்
பெரிய விந்து தோன்றுதலும் பேசு முறைமைக் கிரியைகளா
லரிய நியமஞ் செய்துமணஞ் செய்தா னரச னப்போது.

(ப - ரை) திங்களுதிக்கும் காலத்தில் = சந்திரோதய மாகும்போது, செய்கவிவாக மெனச்செப்பி = செய்யலாம் கல்யாணம் என்றுகூறி, அங்கண் அரசனொடுமேவி = அழகிய நேத்திரத்தையுடைய மன்னவனோடு அவ்விடத்திற் சஞ்சரித்து, அணியுமணிப்பூண் = அலங்கரித்துக்கொள்ளும் ரத்தினாபரணம், சந்தனங்கள் = சந்தன முதலிய பதார்த்தங்கள், துங்க மலையிற் கொடுவந்து = பரிசுத்தமான மலையினின்றும் கொண்டுவந்து, தூய்நீர்க்கங்கைதனின் மூழ்கி = பரிசுத்தமான ஸ்ரீ கங்கையின்கண்ணே ஸ்நானஞ்செய்து, பொங்கு நெறியால் = அக்கினியிற்செய்யும் முறைமையால், கடவுளர் = தேவர்களையும், தென்புலத்தோர் = பிதுர்க்களையும், தவத்தோர் = தபசிகளையும், கழல்போற்றி = நன்றாகத் தோத்தரித்துத் திருவடிகளில் நமஸ்காரஞ்செய்து,

கிரியை யொழியார் = தொழில்கள் செய்வதைவிடார், பலம் விரும்பார் = பயனை விழையார், கிளர் கற்பகநல்கிய = விளங்காநின்ற கற்பகங் கொடுத்த, வெண்பட்டுரியதென = வெள்ளியபட்டை உரித்தாமென்று; சாத்தினர் = அலங்கரித்தனர், வெய்யோன் உயர்ந்த வெற்பினிடைச்சென்றான் = சூரியபகவான் உன்னதமான பர்வதத்தின்கண்ணே யஸ்தமயமானான், பெரிய விந்து தோன்றுதலும் = பூர்ணசந்திரன் உதயமானவுடன், பேசுமுறைமைக் கிரியைகளால் = சாத்திரங்களிற்கூறும் கிரமமான கருமங்களினால், அரிய நியமஞ்செய்து = அருமையான நியமங்களை யனுட்டித்து, மணஞ்செய்தான் அரசன் அப்போது = விவாகஞ்செய்தான் அக்காலத்தில் மன்னவன்.

(ஸ்ரீ - வீர) இன்றிரவு பரிபூர்ண கலாமல சந்திரன் உதயமாகவே ஹே மகாட்பாகுவே! நமது விவாகம் இருவருக்குள்ளேயே காந்தர்வ விதியினாலேயே நடத்தலாம்; ஹே மன்னவனே! எழுந்திரு நமது விவாகப்பொருட்டுக் கானனகோடரத்தினின்றும், சந்தன புஷ்பாதி சமுதாயங்களையும் இரத்தினாதி வேண்டியவற்றையும், தேடிக்கொண்டு வந்து சேர்ப்போம், என்று கூறிக்கொண்டு கும்பமுனிவன் எழுந்து அம்மன்னவனோடுங்கூடக் குசுமாதிகளையும் இரத்தினாதிகளையுந் தேடிக்கொண்டு வந்துசேர்த்தான்; இவ்வாறு ஒரு குகையின்கண்ணே விவாகத்திற்கு வேண்டியவற்றையெல்லாம் ஒருங்கு சேர்த்துவிட்டு, அம்மகாமித்திரர் இருவரும் ஸ்நாநஞ் செய்யும்பொருட்டு ஸ்ரீ மந்தாகினி நதியை நோக்கிச்சென்றனர், ஸ்நாநத்தை முடித்து ஆண்டுத்தேவ பிதுர்முனிவர்களை, பூசித்தார்கள்; கிரியா பல இச்சையில்லாதவர்களாய அவர்கட்கு எங்ஙனம் பூஜையின் பிரவிருத்தியாம், எனின் ஆண்டுக்கூறல்:—கிரியையென்பதாதி. கிரியா பலத்திலெங்ஙன மிச்சையில்லாதவர்களோ, அங்ஙனமே கிரியாத்தியாகத்திலும் இச்சையில்லாதவர்களே யாவர்கள்; கற்பகவிருக்ஷந்தந்த வெண்பட்டாடைகளையணிந்துகொண்டு, கற்பகவிருக்ஷ பலங்களை பயின்று, விவாகஸ்தானமாகிய வேதிமூலத்தில் சாஸ்திரங் கூறியமுறையாக வந்து சேர்ந்தார்கள். இத்துணைக் காலத்தினாற்றானே உற்சாகத்தோடு கூடிய அவர்களது விவாகம் பிரியமாக நடக்கும் பொருட்டேபோலும் சூரிய பகவான் விரைவாக அஸ்தாசலஞ் சென்று மறைந்தான்; இத்துணைக்குள் வதுத்தகைமையை யடைந்து கனதனபாரங்களை யுடைத்தாய், விரைவில்வது உசிதவிலாசவானான் கும்பமுனிவன் கூறுவதாவது, ஹே நாதனே! நீ என்னைப் பூஷணங்களினாலே யலங்கரிப்பாயாக, முறையாக அக்கினியை யோங்கச்செய்து ஹோமஞ்செய்து அருச்சித்து எனது பாணிக்கிரகணம் செய்தியென்று பரஸ்பரம் மகாராணியாகிய மதனிகையும் மகாராஜாவாகிய சிகித்துவசனும், அலங்கரித்துக்கொண்டு விவாகம்செய்து காஞ்சன உபலபரியங்கத்திருந்தார்கள்.

(ச) அங்கண்—அதிப் பிரியசகாயனை, அணியுமணிப் பூச்சந்தனங்கள்—விவாகத்துக்குரிய இரத்தின குசுமாதித்திரவிய சமுகத்தை, துங்கமலையில்—காஞ்சனகந்தரத்தில்;

கிரியை யொழியார்—கிரியாத்தியாகத்தை இச்சியார், பலம்—சற்கருமத்தின் பலத்தில் விருப்புறுர், அவற்றில் வைராக்கியத்தினாற் கிரியாபலத்தில் விருப்புறுர், உலகசங்கிரகார்த்தமாய்க் கிரியாத்தியாகத்தில் விருப்புறுர் என்றுணர்க. (206-207)

(ஸ்ரீ - வீர - அ-கை) இவ்வண்ணம் மதனிகையும் மதனனும் சுகமாகக் காலங்கழித்து வரும்போது இடையிடையே இராஜ்ஜியம் நடத்திக்கொண்டு வருதல்:—இவ்வாறு சென்று என்பன.

இவ்வா றுயர்மந் தரவெற் பிடையே மணஞ்செய் திவர்கள்
கவ்வா வின்பந் துய்த்துக் கடஞ்சூழ் வனங்க டோறுஞ்
செவ்வாய் மயின்மன் னவனுந் திரிந்தார் தினமும் மூன்றில்
வெவ்வா ளரசன் றுயிலும் வேலை தனிற் சூடாலை.

சென்று சென்று மன்னன் றேச நீதி நடாத்தி
யொன்றும் பாய றன்னி லொழியா தவள்போன் மீளு
மன்றன் மதனி கைப்பேர் மனைவி யான மாது
நின்ற சிலநா ளிற்பின் னெஞ்சி லொன்றை நினைப்பாள்.

(ப - ரை) இவ்வாறுயர்மந்தர வெற்பிடையே=இந்தப்பிரகாரம் மேலான மந்தரமலையின் மத்தியில், மணஞ்செய்திவர்கள்=கலியாணஞ் செய்துகொண்டிவர்கள், கவ்வா வின்பத் துய்த்து=அளவில்லாத ஆனந்தத்தை யடைந்து, கடஞ்சூழ் வனங்கடோறும்=யானைகளும் விருக்ஷங்களும் மலைகளும் சூழ்ந்த ஒவ்வொரு வனங்களிலும், செவ்வாய் மயில்மன்னவனும்=சிவந்த அதரத்தையுடைய மயிலியல் மதனிகையும் அரசனும், திரிந்தார்=சுழன்று விளையாடினார், தினம் மும்மூன்றில்=மூன்றுநாட் கொருமுறை, வெவ்வாளரசன்றுயிலும்=அதிதீக்ஷண வாளாயுதத்தையுடைய மன்னவன் நித்திரைகொள்ளும், வேலைதனில் = சமயத்தில், சூடாலை=சூடாலையானவள்,

சென்று சென்று மன்னன்றேசநீதி நடாத்தி = போய்போய் அரசனது தேசநீதியை நடத்தி, ஒன்றும் பாயல்தன்னில்=பொருந்தும் சய்யையில், ஒழியாதவள்போல் மீளும் = நீங்காதவள்போல மீளுவள், மின்றல் மதனிகைப்பேர்=விவாகஞ்செய்த மதனிகையென்னும் நாமத்தினையுடைய, மனைவியான மாது=இல்லாளாகிய பெண்ணானவள், நின்ற சில நாளிற்பின்=சிலதினங் கழிந்தபின்னர், நெஞ்சிலொன்றை நினைப்பாள்=மனத்தில் ஒன்றை யெண்ணுவாள்.

(ஸ்ரீ - வீர) இவ்வண்ணம் மகேந்திரக் குகையில் தாமே விவாகஞ் செய்துகொண்டவர்களும், இஷ்டர்களும், தேவசதிருச போகாட்டியத்தன்மையானே தேவதம்பதிகளும், ஒரு குறைவுமில்லாதவர்களும், ஆகிய அவ்விரண்டு கும்பசிகித்துவஜர்களும் வாழ்ந்து வந்தார்கள்; தினந்தோறும் விசித்திரங்களாய வனராஜிகளிலும், நன்குகனிந்த பல பாரங்களிலும், புஷ்பபல்லவங்களின் பூரணங்களிலும் உலாவி விலாசமாயிருந்தார்கள்; பிரியநாயகன்றூங்கும்போது மூன்றுநாட் கொருமுறை தனது நகரஞ் சென்று, சூடாலை ராஜகாரியங்களைச் செய்துவிட்டு, தனது சய்யைக்கே மீண்டும் வந்துவிடுவள். பின்னனேகமாதங்கள் மெதுவாகச் சென்றபோது, தேவபுத்திரரூபிணியாய அச்சூடாலை சிந்திக்கத் தொடங்கினள். (208-209)

(ஸ்ரீ - வீர - அ - கை) இப்போது வேறொருவிதமாகப் பரீக்ஷைசெய்தல்:—உற்றவென்பது.

உற்ற போகங் களிற்பற் றொன்று திவனுக் கென்றுந்
துற்ற போகங் களினற் சோதிப் போமென் றெண்ணிக்
கற்ற மாயை யாலே கைத வமொன் றிழைத்தாட்
சுற்றுந் தேவர் நெருங்கச் சுரர்கோன் வனத்திற் றோன்ற

(ப - ரை) உற்ற போகங்களிற் பற்றொன்றுதிவனுக்கென்றும் = கிடைத்த போகங்களிலே யபிலாஷையுண்டாகாது இம்மன்னவனுக்கெப்போதும், துற்றபோகங்களினல் = திவ்யபோகங்களினலே, சோதிப்போமென்றெண்ணி=பரீக்ஷித்துப்பார்ப்போம் என்பதாகச் சிந்தித்து, கற்றமாயையாலே=தான் படித்த மாயையினலே, கைதவமொன்றிழைத்தாள்= ஒரு பொய்யைக் கற்பித்தாள், சுற்றுந் தேவர்நெருங்க=சூழுந்தேவதைகள் பக்கத்தடர்ந்துவர, சுரர்கோன் = தேவேந்திரன், வனத்திற்றோன்ற = அவ்வனத்தின்கண்ணே யெழுந்தருள.

(ஸ்ரீ - வீர) நல்ல திவ்யபோகங்களினனே மன்னவனைப் பரீக்ஷிப்பேன், நிகழ்வதன் அருகாமையால் இலட்டாம், ஒருபோதுமிவனதுசித்தம் போகங்களில் ஆசக்தியை யடை

யவேவேண்டாம், அடையாமலே யிருக்கும்வண்ணம் பரீக்ஷிப்பேன்; அதாவது பரீக்ஷயிஞலே திடமாக்கப்பெற்ற அநாசக்தியாமிது ஒருபோதுமே போகங்களாலே மங்காமலே யிருக்கவேண்டுமென்பதாம். என்று சிந்தித்துச் சூடாலை மாயையால் விபின அவனியில், தேவர்களோடும் தேவாங்கனைகளோடும் உடனிகழாநின்ற தேவேந்திரன் வந்ததாகக் காண் பித்தனள். (210)

(ஸ்ரீ - வீர - அ - கை) தேவேந்திரனைக் கொண்டாடி வந்தவரவைவினுதல்:—வந்த வென்பது.

வந்த மகவான் றன்னை மன்னன் கண்டு வணங்கி
முந்து பூசை செய்து முதல்வ நீயிங் கெய்த
வெந்த வறமுன் செய்தே னென்ன விமையோ ரிறையு
மந்த மன்னை நோக்கி யன்பா லிவ்வா றறைவான்.

(ப - ரை) வந்த மகவான்றன்னை=எழுந்தருளிவந்த தேவேந்திரனை, மன்னன் கண்டு= அரசன் பார்த்து, வணங்கி=நமஸ்கரித்து, முந்து பூசைசெய்து=முதன்மையான பூசைகளை விரைவிலாற்றி, முதல்வ நீ யிங்கெய்த=சகல புவனங்கட்கும் முதன்மையானவனே நீ இங்கு எழுந்தருளிவர, எந்த அறமுன்செய்தேன் = எத்தருமத்தையானியற்றினேன், என்ன = என்று புகழ்ந்தவளவில், இமையோர் இறையும் = தேவர்கள் அரசனும், அந்த மன்னை நோக்கி=அவ்வரசனைப் பார்த்து, அன்பால்=வாற்சல்லியத்தால் இவ்வாறறைவான்=இங் ஙனமியம்புவான்.

(ஸ்ரீ - வீர) பரிவாரங்களுடனே தேவேந்திரன் எழுந்தருளிவந்ததைக் கண்டு சாஸ்திர முறையே அர்க்கியபாத்தியாதி யுபசாரங்களானே வனத்திலிருக்கும், சிகித்துவசன் பூசிப்பா ஞயினன். தங்களால் வெகு தூரத்தினின்றும் வரவு வடிவமான சிரமம் யாதின்பொருட்டியற் றப்பெற்றதோ, ஹே வமரேசனே! எவ்வகையாய பிரயோஜனத்திஞலே அஃதாற்றப்பெற் றதோ அந்தப் பிரயோஜனத்தைத் திருவருளிஞலே அடியேனுக்குக் கூறுதல்வேண்டும். என் றிடத் தேவேந்திரன் கூறுதல். (211)

(ஸ்ரீ - வீர - அ - கை) தேவேந்திரன் வந்த காரியத்தை யியம்பல்:—உனது கற்ப மென்பன.

உனது குணத்தி னலத்தா லும்ப ருடனான் வந்தேன்
கனக வுலக முமக்கே கடவதா மங் குள்ளோர்
நினது வரவு நோக்கி நின்று ரம்பை முதலோர்
வனச வதன மலர மார்த்தாண் டனைப்போல் வருவாய்.

கற்ப மளவு மிருந்து கடவுட் போக மெல்லாஞ்
சிற்ப மன்றித் துய்க்கச் சீவன் முத்தி மன்னு
வற்பந் தாழா தடைவா யழைப்பான் வந்தே னென்ற
சொற்பங் கிகளைக் கேட்டுத் தூய மன்னன் சொல்வான்.

(ப-ரை) உனது குணத்தின் நலத்தால்=உன்னுடைய குணங்களின் நன்மையிஞலே, உம்பருடன் நான் வந்தேன்=தேவர்களுடனே யான் வந்துற்றேன், கனகவுலகம் = சுவர்ண

லோகம், உமக்கே கடவ்தாம்=உமக்கே சொந்தமாம், அங்குள்ளோர்=அவ்விடத்தில் உள்ள வர்கள், நினதுவ்ரவு நோக்கிநின்றூர் = உன்னுடைய வரவைப் பார்த்துக்கொண்டிருக்கின்றூர், அரம்பை முதலோர்=இரம்பை யாதியோர், வனசவதனமலர = தாமரைமுகம் விகசிதமாக, மார்த்தாண்டனைப்போல் வருவாய்=சூரிய பகவானைப்போல வருவாய்.

கற்பமளவு மிருந்து=கற்பகால பரியந்தமிருந்து, கடவுள் போகம் எல்லாம் = தேவதா போகம் முழுவதும், சிற்பமன்றித் துய்க்க=யாதொரு தடையுமில்லாமல் அநுபவிக்க, சீவன் முத்தி மன்னு = ஜீவன் முக்தனுகவாழும் மன்னவனே, அற்பந்தாழா தடைவாய்=சொற்பமும் தாமதியாது வருவாய், அழைப்பான் வந்தேன் என்ற = அழைக்கும்பொருட்டே இங் குற்றேன் என்று கூறிய, சொற்பங்கிகளைக்கேட்டு = சொற்சாதுரியங்களைச் சிரவணித்து, தூயமன்னன் சொல்வான்=பரிசுத்த மனத்தினையுடைய வரசன் கூறுவான்.

(ஸ்ரீ - வீர) இந்த நாங்கள் யாவரும், ஈண்டு உனது குணநிசயத்தினுலே சுவர்க்கத்தினின்றும் வந்தோம், இருதயத்தில் இலக்கினமாய சூத்திரத்தானே வனத்துறைககங்களே போலும்; எழுந்திரு துறக்கத்துக்குவருக, ஆண்டெவரும் உன்னை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றூர்கள், உனது குணசிரவணத்தானே யுண்டாய, ஆச்சரியத்தை=விஸ்மயத்தைத் தேவர்களும், அங்குள்ள அரம்பையர்களும், அடைந்துள்ளார்கள். அவ்விடத்திற்கு வந்து கற்பபரியந்தம், தெய்வ அரண்மனையில் நானுவிதபோகங்கள் ஜீவன் முக்தனுகிய வுன்னுல், போகிக்கத்தக்கனவாம்; உன்னை யழைத்துப்போகும் பிரயோஜனத்தை யுத்தேசித்தே யுன்னை நோக்கி யான்வந்தேன். (212-213)

(ஸ்ரீ-வீர - அ-கை) சுவர்க்கம் வேண்டாம் எனல்:—அங்கென்பது.

அங்குந் துறக்கத் தின்ப மனைத்து மறிவே னெந்தா
யிங்கென் றங்கென் றில்லை யெங்குஞ் சுவர்க்க மெனக்குப்
பொங்குஞ் சுகமே யெங்கும் பொன்னு டதனுல் வேண்டேன்
றங்கும் பதமே வென்றே சற்றும் பற்றற் றுரைப்ப.

(ப - ரை) அங்கும்=அவ்வுலகத்திலுமுள்ள, துறக்கத்து = தேவலோகத்தில், இன்பமனைத்தும்=ஆநந்தம் யாவும், அறிவேன் எந்தாய்=உணர்வேன் எந்தந்தையே, இங்கென்றங்கென்றில்லை = இவ்விடத்தி லென்றுவது அவ்விடத்தி லென்றுவது கிடையாது, எங்குஞ் சுவர்க்கமெனக்கு=எவ்விடத்திலும் தேவலோகமே யெனக்கு, பொங்குஞ் சுகமேயெங்கும்= பொங்கி வழியும் ஆனந்தமே யெவ்விடத்திலும், பொன்னுடதனுல் வேண்டேன் = தேவலோகம் அக்காரணத்தினுல் வேண்டுகில்லேன், தங்கும் பதமேவென்றே=தாங்கள் வசிக்கும் பதத்தை யடையலாம் என்பதாக, சற்றும் பற்றற்றுரைப்ப=சிறிதும் பற்றில்லாமல் பகர.

(ஸ்ரீ - வீர) ஹே தேவாதி நாயகனே! சுவர்க்க சமாசாரம் முழுவதுமறிவேன், சுவர்க்க சம ஆசாரம் சுகவிகாரணம் உள்ள அதனையறிவேன், சுவர்க்கத்தோடொப்பாய்ச் சுகமாயொழுகுதல் அனைத்துமறிவேன், அவ்வெல்லா விடங்களிலுமுள்ள சகல துக்க சுகங்களையுமறிவேன் என்றபடி. அவ்வாறறிவதிற் காரணமாக வுன்னிடத்தில் யாது விசேஷமுளதாமெனின் அதனைக்கூறல்:—எங்குமென்பதாதி. மற்றூே, யாண்டுமே யெனக்குச் சொர்க்கமாம், ஓரிடத்திலென்பதாக நியதமில்லையாம், எனதபிமதசுவர்க்கம் பூமாத்மாவேயாம், அதுவும் யாண்டுமே யுள்தாமென்பது கருத்து, நியதம்=பரிச்சின்னம். பூர்ணகாமத் தன்மையானும் எனக்கு

யாண்டும் சுகம் எனல்:—சுகமே யென்பதாகி. யாண்டுமே சந்தோஷிப்பேன், யாண்டுமே ரமிப்பேன் பிரபோ! மனத்தில்வாஞ்சை யுண்மையின் யாண்டும் ஆநந்தமுடையவனேயான்; நியதஞ் சிறிது ஓரிடத்திருப்பதாம், சுவர்க்கமித்தகையதாம், துச்சமாய சுவர்க்கத்தையடைய வெண்ணேன் என்பது திண்ணம். உனது ஆணையை யான் செய்யமாட்டேன்; எனவே அசம்பாவிய விடயத்தில் ஆஞ்ஞாபனஞ்செய்தல் தங்களுக்கே யநுசிதமாமலது அதனைச் செய் யாதவபராதம் எனதல்லவாமென்பது கருத்து. யானின்றே சுவர்க்கத்திற்கு வருவதாக வில்லை, மற்றே, மறுபடியும் இராஜ்ஜியத்திற் பிரதிஷ்டையடைந்து, காலத்தை யநுசரித்து முன்போல, தங்களுடைய சத்துருவைப் பொடிப்படுத்தலாதி பிரயோஜனப்பொருட்டு வரு வேன் என்னுங் கருத்தால் அரைக்கூற்றாற் சிகித்துவசன் பேசியபோது, ஹே கும்ப முனி வனே! உனக்கு அரசன் கருதிய மறுபடி இராஜ்ஜியப் பிராப்தி லக்ஷணகல்யாணம் உளதாகுக வென்று கும்பமுனிவனுக்குக் கூறிவிட்டுத் தேவேந்திரன் தேவபரிவாரங்களுடன் மறைதலை யடைந்தான். அங்கத்துறக்கத்தெனினுமாம். (214)

(ஸ்ரீ - வீர - அ - கை) வேறு விதமாய்ப் பரீக்ஷித்தல்:—மடங்கியென்பது.

மடங்கி யமரர் கூட்டம் வந்த வழியே போகத்
தொடங்கு மாயை பலவாற் சோதித் திடவு நெஞ்ச
மடங்கி விடுதல் கண்டு மயலோர் மாயை யாலே
தடங்கண் மயில்சூ டாலை தனிச்சோ தனைசெய் தனளே.

(ப - ரை) மடங்கி யமரர்கூட்டம்=திரும்பித் தேவரீட்டம், வந்தவழியேபோக=எவ் வாறு வந்ததோ அவ்வாறுபோக, தொடங்குமாயை பலவால்=ஆரம்பித்த மாயைகள் நானு வால், சோதித்திடவும்=பரீக்ஷித்திடவும், நெஞ்சமடங்கிவிடுதல் கண்டும்=மனமானது விலய மாகி விடுதலைப்பார்த்தும், அயலோர் மாயையாலே = வேறொரு மாயையினாலே, தடங்கண் மயில் சூடாலை=விசாலம்பொருந்திய நேத்திரங்களோடுகூடிய மயிலியற் சூடாலையானவள், தனிச்சோதனை செய்தனளே=ஒப்பற்ற ஏகாந்த பரீக்ஷை செய்துபார்த்தாள்.

(ஸ்ரீ-வீர) அந்த இந்திர ஆகமனரூபமான மாயையை யுபசங்கரித்துக்கொண்டு, சூடாலை யினிது சிந்திப்பாளாயினள், இந்த வசுதாதிபனானவன் தெய்வகதியினாலே போகேச்சை யினால், வசீகரிக்கப்படவில்லை; சாந்தனாயினன், எப்போதும் விக்கிரியாசூனியத்தன்மை யானே சமமாகிய ஆகாசாதியோடு சமனாயினன், ஆபோகமென்னும் மூகாதியவயவஸ்திதி ஒப் பேயாயினன், இவ்வண்ணம் சக்கிரன் வந்துற்றபோது, பயந்திருந்துவிடாமல் அலக்ஷியமா யிருந்துவிடாமல் வியாவகாரிகமாய அருக்கியபாத்தியாதியானே செய்யவேண்டிய பூசை யையும் உசிதமான வார்த்தையையும் நன்கியற்றினன்; மறுபடியுமே, யாதாவதொரு இராகத் துவேடப் பிரதானப் பிரபஞ்சமாய், மதியைக் கலக்குவதா யிருப்பதால் ஆதரவோடு கூடப் பரீக்ஷித்துப் பார்ப்பேன். (215)

(ஸ்ரீ-வீர - அ-கை) விசித்திரமான பரீக்ஷையொன்றைச்செய்தலும் அதைக்கண்டும் மன் னவன் விகாரமடையாம லிருத்தலும் வருணித்தல்:—திங்கள், சந்தி, யென்பன.

திங்க ளுதித்த வளவிற் செபித்துக் கங்கைக் கரையிற்
றுங்க வரச னிருப்பத் தோகை யன்னாள் புறம்போய்க்
கொங்கு மலரா னிறைந்த கோல வமளி யொன்றிற்
றங்கு மொருதூர்த் தனைத்தான் சங்கற் பித்துப் புணர்ந்தாள்.

சந்தி முடித்து மாதைச் சார றோறுந் தேடி
வந்த வழியிற் புணர்ந்து மகிழு மவரை நோக்கிச்
சிந்தை விகற்ப மின்றிச் சித்த மகிழ்ந்தங் கவரை
முந்த விடை யூறறநீர் முயங்கு மென்று போனான்.

(ப - ரை) திங்கள் உதித்த அளவில்=பூர்ணசந்திரன் உதயமாயபோது, செபித்துக் கங்கைக் கரையில்=ஜபஞ்செய்து ஸ்ரீமந்தாகினியின் றடத்தில், துங்கவரசனிருப்ப = பரிசுத்தமான மன்னவன் வீற்றிருப்ப, தோகையன்னாள்=மயிலனைய சூடாலையானவள், புறம்போய்=வெளியே சென்று, கொங்குமலரால் நிறைந்த=தேன்மகரந்தாதிகளானே பூரணமாய புஷ்பங்களானே நிறையப்பெற்ற, கோலவமளியொன்றில் = அழகிய சய்யையொன்றில், தங்குமொரு தூர்த்தனை=இருக்கும்படியாக ஒருவிடனை, தான் சங்கற்பித்துப் புணர்ந்தாள்=சுயம் சங்கற்பஞ்செய்து லீலைசெய்வதுபோலக் காட்டினாள்.

சந்திமுடித்து=சந்தியாவந்தனத்தைச் செய்துவிட்டு, மாதை = மதனிகையை, சாரல் தோறுந்தேடி=சோலைதோறும் தேடிப்பார்த்து, வந்தவழியால் = வந்துகொண்டிருக்கும் மார்க்கத்தில், புணர்ந்துமகிழு மவரைநோக்கி=சுரதலீலை செய்வதுபோற் காணப்பெறுமவர்களைப்பார்த்து, சிந்தைவிகற்பமின்றி=மனோவிகாரம் சிறிதுமடையாது, சித்தம் மகிழ்ந்து அங்கவரை=மனங்களித்து ஆண்டு அவர்களை, முந்தவிடையூறறநீர்=யாதொரு விக்கினமுமில்லாமல் நீங்கள், முயங்குமென்றுபோனான்=விளையாடுங்கள் என்று கூறிப்போயினான்.

(ஸ்ரீ-வீர) இவ்வண்ணஞ் சிந்தித்துச் சூடாலை இராத்திரியில் வனத்தில் சந்திரோதயமானவுடனே, அங்கனை வடிவத்தைக்கவர்ந்து காந்தையாகிய மதனிகையாகி, புஷ்பிததருலதாசம்பன்னமாய் மதுர ஆமோதபுஷ்டியை யுடைத்தாய் மலயாநிலம் வீசிக்கொண்டிருப்ப, சந்தியாஜப்பியபராயண நதியினது தீரத்திற் சிகித்துவசனிருப்ப, நெருங்கிய பூங்கொத்துகளினாலே யுபலக்ஷிதவனதேவிகளின் சுத்த அந்தப்புரமாயிலங்கும் சந்தானகக் கொடிவீட்டை மதோன்மத்தையாய்ப் பிரவேசித்தனள்; ஆண்டுச் சங்கற்பித புஷ்பசயனத்தில், மாலைகளால் அலங்கிருதையாய், மாயையாற் சங்கற்பிக்கப்பெற்ற தனக்குத் தக்கபடியாய யவ்வனனும், பெண்களைப்போல மிசைகீசை யொன்றுமில்லாதவனும் பதினாறுவயது ஆகிருதிருப்பனும், அதனானே சிகித்துவசனைப்போல மீசை தாடி யொன்றுமில்லாதவனும், மனோகரதமனும் விடனும் ஆகியவனைக் கண்டத்திற் கொண்டாலிங்கித்து இனிதிருந்தாள். ஜபமுடிவிற் சிகித்துவஜன் சந்தியாஜப்யஸ்தான குஞ்சத்திலிருந்துவந்து மதனிகையைத்தேடி கற்பலதை வீட்டில், மதனிகையையும் அவளது கண்டத்தில் மனோரம்மியமான விடனையும்கண்டனன். ஸ்திரீயும் சத்துவந்தமாய், பரஸ்பரம் மகிழ்வுடனிருக்கும் முகத்துடனிலங்குவதாய், அன்னியோன்னியவதன ஆசக்தமாய்க் கற்பலதாம் சுகங்களானே மறைபெற்றதா யிருப்பதைக்கண்டனன். அதனைக்கண்டும் கோபவிகாரரகிதமாய் சித்தத்தானே அத்தியந்தம் சிகித்துவஜன் சந்தோஷித்தான், ஆச்சரியம்! விடையும்விடனும் சுகமாகவிருக்கின்றனர் என்று கூறிக்கொண்டே, அன்புடையீர் நீர் இருவரும் சுகமாக இருந்தபடியே இஷ்டப்படியிருங்கள்

என்று தன்னைக் கண்டதனுலே பீதியையடைந்த அவர்களை நோக்கிக்கூறி, யான் உங்களுக்கு விக்கினஞ்செய்யமாட்டேன் என்று பகர்ந்துசென்றனன். (216-217)

(ஸ்ரீ - வீர - அ - கை) விகாரம் உளதோவெனப் போய்ப்பரீக்ஷித்தல் மதனிகை:— போகி மதனிகையென்பன.

போகி மறைந்து முகுர்த்தம் போன பின்ன ரிவளும்
வேகி யாது போனுன் விகற்ப மின்மை காண்பா
னேகி யமளித் தொடர்ச்சி யெழிலும் வடிவுந் தோன்ற
யோகி முன்னர் நின்று ளொதுங்கி நாணி வணங்கி.

மதனி கைப்பெயர் மங்கையு மிவ்வணம் வருந்தி
விதன முற்றனள் போனிற்ப வேந்தனுஞ் சமாதி
யதனை யுற்றிருந் தானறி வுற்றனன் பார்த்துக்
கதம றக்குளிர் புந்தியான் மெல்லெனக் கழறும்.

(ப - ரை) போகிமறைந்து=சென்று மறைந்து, முகுர்த்தம் போனபின்னர்=இரண்டு நாழிகையான்பின்பு, இவளும்=மதனிகையும், வேகியாதுபோனுன்=விரையாது சென்றுள், விகற்பமின்மைகாண்பான்=விகற்பமில்லாமையைக் காணும்பொருட்டு, ஏகி=போய், அமளித் தொடர்ச்சியெழிலும் வடிவுந்தோன்ற=சயனத்தே தொடர்ந்தகவினும் ரூபமுங்காணும்படியாக, யோகிமுன்னர்= இராஜயோகியின் முன்பாக, நின்றுள் ஒதுங்கி நாணிவணங்கி=ஒருபக்கமாய் வெட்கத்துடன் வணக்கத்துடன் நிற்பதானுள்.

மதனிகைப்பெயர் மங்கையும்=மதனிகையென்னும் நாமங்கொண்ட பெண்ணும், இவ்வணம் வருந்தி=இந்தப் பிரகாரம் வருத்தமுற்று, விதனமுற்றனள்=விசனமுற்றவள், போல் நிற்ப=போலிருப்ப, வேந்தனுஞ் சமாதியதனை=மன்னவனும் சமாதியை, உற்றிருந்தான் = அடைந்திருந்தான், அறிவுற்றனன் = உணர்வுற்றனன், பார்த்து = நோக்கி, கதமறக்குளிர் புந்தியால்=கோபமற்ற தன்மைமதியால், மெல்லனக்கழறும்=மெதுவாகக் கூறுவான்.

(ஸ்ரீ-வீர) பின் முகூர்த்தமாத்திரத்தில் மதனிகையானவள், மாயாப்பிரபஞ்சத்தை யுபசங்கரித்து, தனது விடசம்போகத்தானே விகசிதமுங் ஆகுலமும் ஆகிய வபுவைக்காண்பித்துக்கொண்டு சென்றனள்; ஏகாக்தத்திலுள்ள ஏமசிலாதலத்தில் உட்கார்ந்து சமாதியிலிருக்கும் சிறிது விழித்தகண்ணுடனிருக்கும், அம்மன்னவனைக் கண்டனள், அப்பிரதேசத்தையடைந்து மதனிகாங்கனையானவள் வெட்கத்தாற்றாழ்ந்த முகத்தினளாய், துக்கியாய் வாடினவளாய் கணநேரம் சும்மாவிருந்தாள். கணநேரத்தில் சிகித்துவசன் தியானத்தினின்றும் விழித்துக் கலக்கமின்றியமதியினுலே அத்தியந்தம் மாதுரியமான இவ்வாக்கியத்தைக் கூறத்தொடங்கினுன்.

(ச) கழறினுன் என்பது கழறுமெனத் திணைமயக்கமும் காலமயக்கமும் ஆயிற்று. (218-219)

(ஸ்ரீ-வீர - அ-கை) மதனிகை தனது குற்றத்தை க்ஷமிக்கும்படி வேண்டிக்கோடலும், தன் விகற்பமில்லாமையை மன்னவன்றெரிவித்தலும் உரைத்தல்:—விசைமாதர்வானில் என்பன.

விரைவில் வந்ததென் முயங்குறு மகிணனை விட்டு
நிரைவ ளைக்கை யாய் மீண்டுபோ யின்பமே நிறையென்
றுரைசெய் காலையின் மதனிகை யுரைசெய்வா ளுயர்ந்த
புரையி லாதவர் பிழைபல பொறுப்பது புகழே.

மாத ராரிய லளவறு பேதமாய் மருளுங்
காத லோவெனி லெண்மடி கருமமொன் றறியா
ராத லாலென தரும்பிழை பொறுத்தரு ளென்ன
போத பாரகன் மதனிகைக் கிவ்வுரை புகன்றான்.

வானி லேமர முளைக்கினு முனிவென் கண்வாரா
தான மேலவ ரிகழ்வரென் றன்னமே யுன்னை
மேன யந்துபெண் ணெனவிரும் பலனென்று வேந்த
னீன மில்லதோர் சமமுறு பார்வையோ டிருப்ப.

(ப-ரை) விரைவில்வந்ததென்=சீக்கிரத்தில்வந்தது யாதுகாரணம், முயங்குறு மகிணனைவிட்டு=அனுபவித்துக்கொண்டிருந்த நாயகனைவிடுத்து, நிரைவளைக்கையாய் = வரிசையாயிருக்கும் வளையல்களையுடைய கரத்தினளே, மீண்டுபோயின்பமே நிறையென்று= மறுபடியுஞ் சென்று ஆனந்தமே மிகுதியுமநுபவிப்பாயாகவென்று, உரைசெய்காலையில்= கூறியபோது, மதனிகை யுரைசெய்வாள்=மங்கை கூறுவாள், உயர்ந்த புரையிலாதவர்= மேலான குற்றமில்லாதவர், பிழைபல பொறுப்பதுபுகழே=குற்றங்கள்பல க்ஷமிப்பது புகழ்ச்சியேயாம்.

மாதரார் இயல்=பெண்களின் சுபாவம், அளவறு பேதமாய்மருளும் = அளவில்லாத வேற்றுமைப்பட்டு மயங்கும், காதலோவெனில்=ஆசையோவென்றால், எண்மடி=எட்டுப் பங்கதிகமாம், கருமம் ஒன்றறியார்=காரியமொன்றையும் தெரிந்துகொள்ளார், ஆதலால் என தரும் பிழைபொறுத்தருள் என்ன = ஆகையினாலே என்னுடைய அரிய குற்றத்தைப் பொறுத்தருள்வீராகவென்று கூற, போதபாரகன் = ஞானத்தின் கரைகண்டவன், மதனிகைக் கிவ்வுரைபுகன்றான்=மங்கைக்கிந்தவாக்கியத்தைக் கூறினான்.

வானிலே மரமுளைக்கினும் முனிவு என்கண்வாராது = ஆகாயத்திலே மரம் வேர் கொண்டபோதினும் கோபமானது என்னிடத்தில் வரமாட்டாது, ஆனமேலவர் இகழ்வர் என்று = பெரியோர்களானவர்கள் நிந்திப்பார்கள் என்று, அன்னமேயுன்னை = அன்னம் போன்ற பெண்ணே யுன்னை, மேனயந்து=மேலாக வன்புசெய்து, பெண்ணென விரும்பலன்=மங்கையென விருப்பமடைந்திலன், என்று=என்பதாக, வேந்தன்=மன்னவன், ஈனமில்லதோர் சமமுறு பார்வையோடிருப்ப=குற்றமற்ற சமதிருஷ்டியானே குளிர்ந்திருந்த வழி.

(ஸ்ரீ - வீர) ஹே கொடிபோன்றாய்! நீ விரைவிலேயே ஆனந்தத்திற்கிடையூறாக என் வந்தாய்; ஆனந்தப் பொருட்டேயன்றோ சகலப்பிராணிகளும் முயல்கின்றார்கள், மறுபடியும் சென்று அக்காந்தனைப் பிரணயவிருத்திகளினாலே மகிழ்விப்பாயாக, பரஸ்பரவாஞ்சித நேயமானது செயற்கையன்றாகலின் மூவுலகத்திலும் துர்லபமன்றோ; என்றிட, ஹே மகாபாக்கியவானே! இவ்வண்ணம் இப்பெண்ணியற்கையானது மிகவுஞ் சஞ்சலமாகவே யிருக்கின்றது,

ஸ்திரீகளுக்குக் காமமோ எட்டுமடங்கதிகமாம்; ஆகையாற் கோபித்துக்கொள்ளக் கூடா தென்று வேண்டுகின்றேன்; அபலை யான் என்பதனாலே பிரார்த்தித்துக் கொள்ளுகின்றேன், இரவில் ஆழ்ந்த கானனத்தில் நீ சந்தியாஜபபரனா யிருக்கும்போது, யான் ஒண்டியாய்த் துச்சையாய் என்னசெய்வது? இதனானே பொறுத்துக்கொள்ளுவாயென்னுங் கருத்தானே வேண்டுகின்றேன், வலுவில்லாப்பெண் வாலையுமாவேன் மூடையுங் குற்றமுழுவதுமுள் ளேன், நாதனேபொறுக்க நீ யோக்கியனாவாய், சாதுக்கள் பொறுமையுடையவர்களே யாவர்க ளன்றோ; ஹே வாலையே யென்னுமோ கோபமேகிடையாது ஆகாயத்திலே தூமமில்லாததே போலும்; கேவலம் சாதுரிந்தியத்தன்மையால் உன்னைப் பாரியையென்று யானிச்சித்தி லேன்; இவ்வண்ணம் ஆண்டு அச்சிகித்துவஜன் ஒப்புமையுடனிருப்ப. (220-221-222)

(ஸ்ரீ-வீர-அ-கை) மதனிகை யாலோசனைசெய்து தனது யதார்த்தவடிவத்தை யெடுத் தல்:—கண்டு மறையென்பன.

கண்டு நின்றசூ டாலையுங் கருத்தினு னினைவாள்
மண்டி ராகமுங் கோபமும் வேரற மாய்த்தான்
மிண்டு போகமுஞ் செல்வமு மேவிடா திவனைத்
திண்டி றற்புயன் ஞானத்தின் கரைகண்டு சேர்ந்தான்.

மறைதன் மட்டினி மதனிகை வடிவினை மாற்றி
முறைமை யானசூ டாலையாய் முன்னிற்ப னென்னு
மிறைவன் முன்புசூ டாலையாய்த் தோன்றவு மிவளைப்
பொறைமயி னின்றவ னோக்கிநல் வியப்பொடு புகலும்.

(ப - ரை) கண்டு நின்ற சூடாலையும்=பார்த்து அங்கு நின்றுகொண்டிருந்த தேவியும், கருத்தினால் நினைவாள்=மனத்தினால் எண்ணுவாள், மண்டு இராகமும் கோபமும் வேரற மாய்த்தான் = நெருங்கிய ஆசையும் சினமும் அடியோடுமழித்தான், மிண்டுபோகமும் செல்வமும்=மிகுதியான போகமும் ஐசுவரியமும், மேவிடாதிவனை = அணுகிடமாட்டா திவனை, திண்டிறற்புயன்=வலிமை பொருந்திய புஜபலாக்கிரமமுடைய மன்னவன், ஞானத் தின் கரைகண்டு சேர்ந்தான்=பிரஹ்மவித்தையினுடைய பாரம்பார்த்து அடைந்தனன்.

மறைதல்மட்டு=மறைந்திருந்தது போதும், இனி மதனிகை வடிவினைமாற்றி=இனி மேல் மதனிகைரூபத்தை வேறுபடுத்தி, முறைமையான சூடாலையாய்=அக்கினிச் சாக்ஷி யாய் விவாகஞ்செய்த சூடாலையாய், முன்னிற்பனென்னு=எதிரில் நிற்பேனென்று, இறை வன் முன்பு=மன்னவனெதிரில், சூடாலையாய்=சூடாலையாய், தோன்றவும்=பிரதீதியாக வும், இவளை=இம்மாதை, பொறையினின்றவனோக்கி=க்ஷமையினின்றவனோக்கி, நல்வியப் பொடுபுகலும்=நல்ல ஆச்சரியத்தோடு பகரும்.

(ஸ்ரீ - வீர) அவனது இராகத்துவேடவாசனா சூன்னியத்தன்மையானே பரீக்ஷிதசித்தத் தானே உதிதமாய சந்தோஷ ஆசயமுடையவளாகிய சூடாலை சிந்திப்பாளாயினள், அகோ ஆச்சரியம் ஆச்சரியம், இந்தப்பகவான் பரமசாமியத்தை யடைந்துவிட்டார், ஆசை சினங்க ளற்றவராயினர், ஜீவன்முக்தத் திசையை யடைந்துவிட்டார், இவரை இந்திரப் பிரார்த்தித போகங்களும், மகத்தாய்சித்திகளும், கெடுக்கமாட்டா; இன்பங்களும் துன்பங்களும், சம்பத் துக்களும் ஆபத்துக்களும், ஒன்றுமே செய்யமாட்டாவாம். இவ்வகையாய குணவிசிஷ்டத்

தன்மையானே தனது சகல விருத்தாந்த ஸ்மரணயோக்கிய பூதமாய அவ்விவன் பொருட்டு ஸ்மரிப்பிப்பேன்; இக்கும்பரூபத்தைவிட்டுச் சூடாலையோயாவேன், என்றினிது சிந்தித்து, ஆண்டு மதனிகை வடிவத்தைவிட்டு அக்ஷதமான சூடாலைவடிவத்தை விரைவிற் காண்பிப்பேனுக; என்று சிந்தித்து, பர்த்தாவின் சித்தானுரஞ்சனத்திற் சதுரையும், பூர்வதயிதையும், குற்றமற்ற அங்கியும் காந்தையும் ஆகிய சூடாலையாய் மறுபடியும் மதனிகையே மாறித்தரிசிப்பித்தாள். அதன்பின் னத்தயிதையைக்கண்டு விஸ்மய உற்புல்லலோசனனும் மன்னவன், ஆச்சரிய ஆகுலத்தோடு கூடியவாணியினாலே, இனிக் கூறப்பெறும் வாக்கியத்தானே கூறத் தொடங்கினன். செல்வம்=சித்திகள். (223-224)

(ஸ்ரீ-வீர-அ-கை) மன்னவன் ஐயுற்றுவினுதல்:—வடிவுமென்பது.

வடிவும் வார்த்தையு மொடுக்கமு மற்றுள குணமு
முடிவி லாதசூ டாலைபோற் றோன்றினை முன்னே
நெடிய கண்ணிநீ யாரென நிருபதி கேட்பக்
கடிம ணஞ்செய்சூ டாலைநா னெனமற்றுங் கழறும்.

(ப - ரை) வடிவும்=ஆகிருதியும், வார்த்தையும்=பேச்சும், ஒடுக்கமும்=அடக்கமும், மற்றுளகுணமும்=பிறவுள்ள குணங்களும், முடிவிலாத சூடாலைபோல் = அந்தமில்லாத சூடாலையேபோல, தோன்றினைமுன்னே=எதிரிலே பிரதீதியாயினை, நெடியகண்ணிநீ= வாட்டடங்கண்ணிநீ, யாரென நிருபதிகேட்ப=நீ யாரென்று மன்னவன் வினவ, கடிமணஞ் செய்=அக்கினிசாக்ஷியாய் விவாகஞ் செய்துகொண்ட, சூடாலை நான்=சூடாலையாகிய மகா ராணியேயான், எனமற்றுங் கழறும்=என்று பிறவுங்கூறும்.

(ஸ்ரீ-வீர) உற்பலபத்திராக்ஷியே நீ யார்? ஹே சுந்தரியே! எங்கிருந்து அடைவுற்றாய், இங்கு என்ன செய்துகொண்டிருக்கின்றாய், எவ்வளவுகாலமாக விருக்கின்றாய், எதன் பொருட்டிருக்கின்றாய்? கும்பாதிரூபத்தானே நீயே யிங்கிருக்கின்றாயாவென்? எத்துணைப்போது யாதின்பொருட்டுத்தான் ஈண்டென்முன்னிலையில் இருக்கின்றாயோ, கும்பத்திதிகாலப் பிரமாணம் அறியப்பெறுவதேயாயினும், வேறு வேடத்தால் கும்பாகமனத்தின் முன்னரும் இவளது திதியின் சம்பாவனத்தால் எத்துணைப்போதென வினவியதாம். அவ யவச் சேர்க்கையானே, அவற்றின் சேஷ்டை வடிவவிவகாரத்தானே, புன்சிரிப்பானே, பிரேமைவர்க்குப் பிரபந்தமுறைமையானே, எனது ஜாயையாகிய சூடாலையின் பிரசித்த மாயவிலாசத்தினானே, அவளுடைய கலாமூர்த்தியேபோலக் காணப்பெறுகின்றாய். என்று வினவச் சூடாலை கூறுவதாவது, ஹே பிரபுவே! இவ்வண்ணமே யுணர்தி, சூடாலையாயுள் ளேன் சமுசயமில்லை, சகஜமாகிய தேகத்தானேயென்னால், சுயமின்றடையப் பெற்றுளாய். (225)

(ஸ்ரீ-வீர - அ-கை) சூடாலை பதிலுரைத்தல்:—கும்பவென்பது.

கும்ப வேடமு மதனிகை வேடமுங் கொடுநா
னம்ப னேயுனை யுணர்த்தினேன் ஞானத்தி னிலைமை
யிம்பர் மாயையாற் சோதனை பண்ணினே னிவற்றைக்
கம்பமின்றிய தியானத்தாற் காண்குதி யென்ன.

(ப - ரை) கும்பவேட்டமும் மதனிகைவேட்டமும் = குருரூபத்தையும் நாயகிரூபத்தையும், கொடுநான் = கொண்டுயான், நம்பனே = என்னுயகனே, உனையுணர்த்தினேன் ஞானத்தின் நிலைமை = ஞானத்தின் நிலைபேற்றை யுனக்குத் தெரிவித்தேன், இம்பர்மாயையாற் சோதனை பண்ணினேன் = ஈண்டு மாயையினாலே உனது நிலைமையைப் பரீக்ஷைசெய்தேன், இவற்றைக் கம்பமின்றிய தியானத்தாற் காண்குதியென்ன = இவ்வியாவற்றையும் ஏகாக்கிரத்தோடு கூடிய தியானத்தினாலே நீ காண்பாயென்று கூற.

(ஸ்ரீ-வீர) கும்பாதி தேகநிர்மாணங்களானே யுனக்குப் போதிப்பான் பொருட்டே இவ்வனந்தரத்தில் எனது பிரபஞ்சம் நூற்றுக்கணக்கான பிரிவதாகச்சென்றது; ஹே மகீபதியே! கும்பாதியாவும் மாயையாலே தோற்றியவாம் அன்றிச் சிறிதும், அகிற்பனிகமல்லவாம், விதிதவேத்தியனாகிய நீ முன்மொழிந்த யோகதாரணையினாலே இவற்றை யகண்டிதமாகக் காணலாம். ஹே தத்துவஞ்ஞனே தியானத்தினாலே விரைவிற் காண்குதியாவற்றையுமே காணலாம். (226)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவ்வாறே தியானத்தினாலே யாவற்றையுமே காண்குதல்:— ஞானமென்பது.

ஞான யோகமாந் தியானத்தா னிரபதி நோக்கி
மான ராச்சியந் துறந்தது முதலிவண் வந்து
தான லஞ்செய்சூ டாலையாய்த் தோன்றிய தளவா
யீன மின்றியே யாவையு முணர்ந்தன னிருந்து.

(ப - ரை) ஞானயோகமாம் தியானத்தால் = ஞானநிஷ்டையாகிய தியானத்தினால், நிரபதி நோக்கி = மன்னவன் பார்த்து, மானராச்சியந் துறந்தது முதல் = பெருமைபொருந்திய இராச்சியத்தை விட்டதே முதலாக, இவண்வந்து = இங்கேவந்து, தானலஞ்செய் சூடாலையாய் = தான் நன்மையே செய்யும் சூடாலையாய், தோன்றியதளவாய் = பிரதீதியாகிய தீருக, ஈனமின்றியே = குறைவில்லாமலே, யாவையுமுணர்ந்தன னிருந்து = யாவற்றையும் தெரிந்தனனாகவிருந்து.

(ஸ்ரீ-வீர்) சூடாலையினாலே யிவ்வாறு கூறக்கேட்ட நிருபன் அத்தகையதாரணையினுக்கு ஆசனமிகட்டி, முன்னிராச்சியம் விட்டுவந்ததே முதலாகச் சூடாலையைக் கண்டதே யீறாகத் தனது விருத்தாந்தம், யாவற்றையும் முகூர்த்தத் தியானத்தினாலே விசேஷமாக நிருமலமாகக் கண்டனன்; மகிழ்ந்தான். (227)

(ஸ்ரீ-வீர-அ-கை) சிகித்துவசன் ஆனந்தப்பூரிப்பால் நாயகியை யணைத்துக் கைம்மாறு வினாதலும் அதற்குச் சூடாலை விடைகூறத் தொடங்கலும் உரைத்தல்:— தியானமிழி வருவென்பன.

தியான நீங்கினன் புளகமே நிறைந்தனன் றிண்டோ
ளியாவு மண்புமீ தென்னெனத் தயங்குசூ டாலைக்
குயாசலந்தழீஇ நெடிதிருந் தொன்றுமேற் கூறு
வியாய மன்னவ னானந்தத் தமிழ்ந்தன னிமிட்டம்.

மடியின் மேலந்த வஞ்சியை வைத்தவ னுரைப்பான்
முடிவில் பேரிருட் குகைநிகர் மோகநின் றென்னை
நெடிய புந்தியா லுய்த்தனை யுனக்கெவர் நிகரோ
கொடிம ருங்குலா யியற்றுகைம் மாறுமொன் றுளதோ
வருபவக் கடற் கரையிலாய் நிராசையை மருவுந்
தருமமே யிதற் கென்கைம்மா றுளதெனச் சாற்றத்
தெரிவை யோதுவா ளுணங்குபல் கிரியையியற் றியங்குங்
கருமங் கண்டுனை யுய்விக்க நாடினேன் கவன்று.

(ப - ரை) தியானநீங்கி = நிட்டையினின்றும் விழித்து, நன்புளகமே நிறைந்தனன் = நல்ல மயிர்க்குச்செறிதல் முதலியவற்றை யடைந்து, ஆனந்தக்கண்ணீர் வடித்தனன், திண்டோள் = திண்ணிய தோள்களினாலே, தயாவும் அன்பும் ஈதென்னென = கருணையும் பக்தியும் இஃதென்னேயென்று, தயங்கு சூடாலை = வணக்கத்துடன் நின்ற சூடாலையின், குயாசலந்தழீஇ = கனகிரித்தனங்களை யாலிங்கனஞ்செய்து, நெடிதிருந்து = வெகுநேரம் அவ்வண்ணமே யிருந்து, ஒன்றுமேற்கூறான் = யாதொரு வார்த்தையுமே மேற்கொண்டு பேசிலன். நியாயமன்னவன் = மனுநெறிமுறையே நடக்கும் அரசன், ஆனந்தத்தமிழ்ந்தனன் நிமிடம் = இன்பசாகரத்தில் மூழ்கினன் கணத்தினில்.

மடியின்மேலந்த வஞ்சியை வைத்தவன் உரைப்பான் = தனது அங்கத்தின்மீது அந்த வஞ்சிக்கொடிபோன்ற பாவையை ஸ்தாபித்து அவ்வரசன் கூறுவான், முடிவில் பேரிருள் = அநந்தமான காடாந்தகார, குகைநிகர் மோகநின்றென்னை = கெவிக்கொப்பான மயக்கத்திலிருந்தும் ஏழையை, நெடியபுந்தியா லுய்த்தனை = அதிசூக்குமமான மதியினாலே, கடைத்தேறும்படி செய்தாய், உனக்கெவர் நிகரோ = உன்றனக்கு எத்தேவிமாரைத்தான் நிகராக்கலாமோ, கொடிமருங்குலாய் = கொடிபோலுமிடையினையுடையாய், இயற்றுகைம்மாறுமொன்றுளதோ = செய்யத்தக்க கைம்மாறு யாதேனுமுளதோ.

வருபவக்கடற் கரையிலாய் = மாறிமாறி வாராநின்ற சமுசாரசாகரத்தின் கரையை அடைந்து, நிராசையை மருவும் = ஆசையின்மையை அடைந்துள்ள, தருமமே = அறமூர்த்தியாகிய அங்கனையே, இதற்கு = நீ செய்த இந்த வுபசாரத்திற்கு, என்னை கைம்மாறுளதெனச் சாற்ற = யாது கைம்மாறு செய்யத்தக்கதாக வுள்ளதென்றுகூற, தெரிவையோதுவாள் = சூடாலை சொல்வாள், உணங்குபல்கிரியையிற் றியங்கும் = அநித்தியபலம் வாய்ந்தவீண் பல வினையிலே மயங்கும், கருமங்கண்டு = செயலைப்பார்த்து, உனையுய்விக்க நாடினேன்கவன்று = கவலையுடன் உன்னை ஈடேற்றக்கருதினேன்.

(ஸ்ரீ - வீர) இராஜ்ஜிய சம்பரித்தியாகத்தினின்றும் வர்த்தமானக் கனமுறைபரியந்தம், ஆவர்த்தமானவென வீண்டும் ஆங்தொடருமென்க, யாவற்றையுங்கண்டு, பூபாலன் சமாதியினின்றுங் கிளம்பினன். கிளம்பிய அவன், மகிழ்ச்சியினால் விரிந்த மரைவிழியினனாகி, புகை உஜ்வலத் தன்மையை யடைந்துள்ள பாகுக்களைவிரித்து விரைந்து இறுகத் தழுவிக்கொண்டான், சின்ன அவயவனாய், க்னேயத்தினனாய், கண்ணீர்விட்டவனாய், ஆசைமிகுந்தவனாய். நகலன் நகுலியைப்போல நெடும்போது காந்தையைத்தழுவி யின்புற்றான்; சிறப்பு நான்கும் தழுவுதற்காம், ஆண்டு அவர்கள்து அவ்வாலிங்கனத்தில் எவ்வுபிவியக்த முளதாயதோ, பரஸ்பர அதுராகவடிவஸ்தாயி பாவமியாதுளதோ வாக்குகட்கு அகோசரமாகிய பர

மானந்தரூப எத்தகைய சிருங்காரரச மூளதாயதோ, அது வாசுகி நாவுகளாலும் மகிழ்ச்சியானே மலராமுடியாதாம். பின் புஜாலிங்கனம் விட்டவர்களாய் ஒன்றையும் நாடாதவிழியர்களாய்ச் சற்றிருந்தார்கள், இலக்கியத்தில் லோசனஸ்தைர்யவேதுவாகிய மனத்தின் ஜடபாவத்தானே நாட்டமற்ற விழியுடனிருந்ததாம்; கணகாலம் ஆனந்த கனமாகச் சும்மாவிருந்து, காந்தையினது முகவாய்ச்சிபுகத்தைத் தாங்கியகாளுய், அன்போடு கூடிய கோமளமொழியைப் பூபதி கூறத்தொடங்கினன். பர்த்தாவினது புருஷார்த்தப் பிர யோஜன ஹேதுவினுலே கடூரமான கிலேசத்தை நெடும்போது நீ யனுபவித்தாய், இவ்வண் ணம் எவளது நாயகசேயமதியினலே வெளிவரமுடியாத அச்சம்சாரப் பொந்தினின்றும் யான் வெளியாக்கப்பெற்றேனே, அவளைத்தான் அம்மதியைத்தான் யாரோடெதனே டுவமிக் கலாம்; மின்னற்கொடிபோன்ற உன்னுடைய குணஸ்ரீயுடன் உவமித்து நோக்கினல், அருந் ததி, சசி கௌரி காயத்திரி ஸ்ரீ சரசுவதீ முதலிய யாவருமே சொற்பமாகவே தோற்றுவர். கிருத கிருத்தியையாய உனது மனது எப்பிரத்தியுபகாரத்தானே இனிது மகிழும், எதனுன் மகிழ்வுறுமோ அத்தகைய பிரத்தியுபகாரம் துர்லபமென்பது கருத்தாம். அநாதிக்கன அநந்த விடமமோகத்தினின்றும் என்னைக் கரையேற்றிவிட்டாயே, மிக முயல்வுடனிருக்கும் குலாங் கனைகள் பதிதனையும் தாண்டும்படி செய்கின்றார்கள். நிராசையையுடைய கிருதகிருத்தியை யாகிய உனது பிரத்தியுபகாரத்தில் யான் அசமர்த்தன் எனல்:—வரு நிராசையென்பதாதி, சமுசார வாரிதியி ன் பாரத்தையுடைந்த நிராசையையுடைய வுனக்கு, செய்துள்ள இவ்வுப காரத்திற்குப் பிரதிக்கிரியைகள் எங்ஙனந்தான் என்னதான் செய்யப்போகின்றேன்; என் றிடச் சூடாலைகூறல்:—ஹே தேவனே! சுஷ்கக்கிரியா ஜாலபரமாய் ஆகுலவடிவமாயிருந்த வுன்பால் அன்புவைத்து, உன்பொருட்டு மீளமீளவும் அத்தியந்தம் யான் துக்கிதையாயி னேன். (228-229-230)

(ஸ்ரீ-வீர-அ-கை) நாயகனது முயற்சியை நலம்பெற நவிலல்:—நீயென்பது.

நீயி தற்கெனை மேம்பட நிகழ்த்துவ தென்னே
மேய புன்றொழி னினைவுகள் சங்கற்ப விகற்ப
மாய தெத்தனை யவையெலா மகற்றினை யன்றோ
தூயநாயக வென்னலும் வேந்தனுஞ் சொல்வான்.

(ப - ரை) நீ யிதற்கெனை மேம்பட நிகழ்த்துவதென்னே=இவ்வுபகாரஞ்செய்ததற்காக என்றன்னை மேன்மைப்பட நீ கூறுவது என்னகாரணமோ வறியேன், மேயபுன்றொழில் நினைவுகள்=பொருந்தி கீழ்வினைகள் எண்ணங்கள், சங்கற்ப விகற்பமாயதெத்தனை=சங்கற்ப விகற்பங்கள் என்று சொல்லப்பட்டவை யெத்துணைகள்,அவையெலாம் அகற்றினையன்றோ= அவ்வியாவற்றையும் நீக்கினையல்லவோ, தூயநாயகவென்னலும்=பரிசுத்தமான நாயகனே யென்றிடவும், வேந்தனும் சொல்வான்=மன்னனும் கூறுவான்.

(ஸ்ரீ-வீர) அதனுல் உனக்குணர்த்தும் வாயிலாய்ச் சுவார்த்தத்தையே சம்பாதித்தேன், ஆகையினு லிதுவிடயத்தில் என்னைத் தேவரீர் மேம்படுத்துவதென்னையோ, அத்துச்சமான திருஷ்ணைகள், அவ்வியாபாரங்கள், அச்சங்கற்ப விகற்பங்கள், உன்னிடத்தில் விண்ணிற் பர் வுதங்களேபோல இன்று காணப்பெறவேயில்லை; அவையெலா மெங்கேபோய் விட் டனவோ. (231)

(ஸ்ரீ-வீர - அ-கை) என்னநீ யடைந்தாயின்று ஏதனின் நிட்டையுற்றாய், மன்னவ வென்னசெய்வாய் மகிழ்ந்தெங்ஙன் பாச்சாத்தியம் தேகசேட்டாக்கிரமம் பார்க்கின்றாயோ வென்று சூடாலை கேட்பவதற்குத்தரம் ஆகத்தன தநுபூதியையே விரித்து அரசன்கூறல்:— ஜ்யசோதி யுண்டென்பன். எங்ஙன்=எத்தகைத்தாய்=சத்தியமாகவா அல்லது துச்சமாகவா வென்பதாம்.

ஐய மற்றன னாசையற் றேன்பிறி வற்றே
னொய்ய விண்ணையொத் தேன்பொருள் வடிவமாய் நடங்கேன்
செய்ய லாவதோர் நிட்டையுற் றேன்சித்த மகிழ்ச்சி
வெய்ய துன்பமொன் றிலனிது வதுவென விளங்கேன்.

சோதி மண்டலத் தெழுந்ததாய்ச் சுவரினிற் படாமன்
மீது விஞ்சுதல் குறைதலற் றிருப்பதோர் விளக்கந்
தீதி லாவெனக் குவமையாஞ் சகத்தினைத் தீர்ந்து
யாது மேவிவிண் ணிற்பதற் கிணையொத்து நின்றேன்.

உண்டெ னுந்தன்மை யென்னுரு வேறொன்று முரைக்கக்
கண்டி லேனத னாலெனைக் கருணைசெய் குருநீ
முண்ட கப்பதந் தொழுதன னென்றவன் மொழியத்
தொண்டை வாயவண் மேற்செயல் சொல்லுதி யென்றாள்.

(பதவுரை) ஐயமற்றனன் = சம்சயமற்றேன், ஆசையற்றேன் = நிராசையடைந்தேன், பிறிவற்றேன்=வேற்றுமையற்றேன், நொய்ய விண்ணையொத்தேன் = சூக்குமமாகிய ஆகாயத்தை யொப்பாயினேன், பொருள்வடிவமாய் நடங்கேன்=வத்துவடிவமாக மடங்கேன், செய்யலாவதோர் நிட்டையுற்றேன்=செய்யத்தக்கதேயாகிய நிட்டையையடைந்தேன், சித்த மகிழ்ச்சி வெய்யதுன்பம்=சித்தசந்தோடம் கொடியதுக்கம், ஒன்றிலன்=ஒன்றுமில்லேன், இது அதுவெனவிளங்கேன்=இது அதுவென்று விளங்கமாட்டேன்.

சோதிமண்டலத்தெழுந்ததாய் = பிரகாச மண்டலத்தினின்றும் உதயமாயதாய், சுவரினிற்படாமல்=பித்தியிற்படாததாய், மீதுவிஞ்சுதல் குறைதல் அற்றிருப்பதோர் விளக்கம் = மேலாகவிரிதல் சிறுகல் இல்லாமல் இருக்கும் ஒருபிரதிபாசம், தீதிலாவெனக்குவமையாம்= குற்றமில்லாத என்றனக்கு உபமானமாம், சகத்தினைத்தீர்ந்து=சகல திருசியங்களையுமற்று, யாதுமேவி=சர்வான்மகமாகி, விண்ணிற்பதற் கிணையொத்து=ஆகாய மிருப்பதற்கொப்பாகி, நின்றேன்=இருக்கின்றேன்.

உண்டெனுந் தன்மையென்னுரு=சத்தாந்தன்மையே யெனதுருவமாம், வேறொன்று முரைக்கக்கண்டிலேன்=அயலொன்றையும் கூறக்காணேன், அதனால்=அக்காரணத்தினால், எனைக்கருணைசெய் குருநீ=என்பேரில் தயையுரிந்த ஞானாசிரியன்நீயே, முண்டகப் பதந் தொழுதனன்=தாமரைபோன்ற திருவடிகளை நமஸ்கரித்தேன், என்றவன் மொழிய=என் விவ்வண்ணம் மன்னவன் கூறியபோது, தொண்டைவாயவள்=கோவைக்கனிபோலும் அதரமுடைய அம்மகாராணி, மேற்செயல் சொல்லுதியென்றாள்=இனிமேல் நடக்கும் காரியம் கூறுதியென்றனள்.

(ஸ்ரீ-வீர) சேட்டையற்றுள்ளேன், நிரங்கிசனுயுள்ளேன், ஆகாயம்போலச் சொச்சனுயுள்ளேன், ஆசையற்றவனுயினேன், சாந்தனுயுள்ளேன், பரமார்த்த சத்சொரூபனுயுள்ளேன், நானல்லாத தேகாதிகளில் நானென்னும் பிரமத்தைவிட்டு வெகுகாலத்தின்பின்னர்; உண்மையாக யாது யானே அதுவேயான் ஆகியிருக்கின்றேன், யான் பிரத்தியக்கு முக்கியப்பயில்வுள்ளவொரு நெறியில் அதிட்டிதனுய், அங்கிரதிசயாநந்த தசையை யடைந்தவனுகியுள்ளேன், எதனைப்பிரயத்தின சகத்திரங்களாலும் நிடேதிப்பான் முயன்ற மகாப்பிரபாவமுடைய ஹரிஹராதிகளும் எவ்வகையினும் நிடேதிக்கமுடியாதவர்களாவர்களோ "அவனைத்தேவருந் தம் வல்லமையானே கெடுக்கவல்லவர்கள் அல்லவர்களே அவர்கட்கும் ஆன்மாவா யிருப்பனவனே" என்னும் சுருதியினுலென்க; அகே யான்மாத் தள்ளமுடியாததேயாம் என்பது கருத்து. மற்றெதுவும் யானல்லேன் எதுவுமின்றிய சின்மாத்திர நிஷ்டனுயுள்ளேன், சொஸ்தமாகி யிருக்கின்றேன் அளிவிழியாய், சமுசாரப் பிரமத்தினின்றும் யான் விடுபட்டேயிருக்கின்றேன், மகிழ்பவனல்லேன் துக்கியுமல்லேன், திருசியகாரியமல்லேன் காரணமல்லேன், தூலனுமல்லேன் சூக்குமனல்லேன், சுந்தரியே அபாதித சத்தியமாயேயுள்ளேன், சூரியாதி மண்டலத்தினின்றும், வெளியே சென்றதாய், பித்தியிற்படாததாய், க்ஷயாதிசய முக்தமாய், நபோமாத்திர விசாரியாய் உள்ள ஆலோகத்தோடு சமமாயுள்ளேன்; ஜகத்தினுடைய சகல வைஷம்மியமுநீங்கிச் சாமியத்தை யடைந்துள்ளேன் அவாவற்றவனுய் மனமற்றவனுயுள்ளேன்; சொஸ்தனுய்ச் சாந்தனுயுள்ளேன். தாங்கசஞ்சலக் கடைக்கண்ணியே! நீ யெனக்குக் குருவாவாய், உனக்கு நமஸ்காரம் நமஸ்காரம், விசாலாக்ஷியின்றிருவருளினுலே பவசாகரத்தினின்றும் கரையேறினேன், சர்வாதீதனுய்ச் சர்வகனுய் எங்கும் ஆகாயம்போல நிறைந்துள்ளேன், ஹே மகாசத்துவனே ஹே மகாமதியே! பிராணேசனே இருதயப்பிரியனே! பிரபுவே! இவ்வாறுளதாகவே இப்போது என்னசெய்யலாமென்று தங்களுக்குத் தோற்றுகின்றது. கூறுங்கள்.

(ச) சோதிமண்டலத்து=சந்திரமண்டலாதியினும், எழுந்ததாய்=மேற்பட்டதாய், சுவரினில்=குட்டியாதி யாசிரயாந்தரத்தில், படாமல்மீதுவிஞ்சுதல் குறைதலற்று=நித்திய நிரதிசயமாகிய பிரகாசத்தோடு சமனுனேன் என்றதாயிற்று; அகங்காரம் சாந்தமாயுள்ளேன், பரிபூர்ண சின்மாத்திரத்தில் நிட்டையடைந்துள்ளேன். அஸ்மியென்பது அவ்வயமாம் யானென்னும் பொருளில்வந்துள்ளது. நாமஜாதி யாதியின்மையின், நானுகியவஸ்துவைக் கூறமுடியாதாம். (232-233-234)

(ஸ்ரீ-வீர-அ-கை) உன்னுடைய ஆணைப்படியே நடப்பேன் என்று மன்னவனுரைப்பச் சூடாலையும் தனது கருத்தைத்தெரிவித்தல்:—பற்று சிறிது என்பன.

பற்று வீடிலன் படிகமேற் பாயொளி யென்ன
நிற்ற நீசொன்ன செய்குவ னென்றன னிருப
னுற்ற தீதெனிற் பேதைமை யொன்றையு மொழித்து
மற்றை முன்னுள வியற்கையி லிருப்பது வழக்கே.

சிறிது காலநா மிவ்வகை யிருந்துபின் றேகம்
பிறியு நாளந்த நிலையினைப் பெறுதுமா லென்ன
நெறிசெல் வேந்தனு மியைந்தன னேரிழை யெழுந்து
குறிகொள் சங்கற்ப விதியினு லிவையிவை கொணர்ந்தாள்.

(ப - ரை) பற்று வீடிலன்=கொள்ளுவதுந் தள்ளுவதுமறியேன், படிகமேற்பாயொளி யென்ன=ஸ்படிக மணியின்மீது செல்லும் பிரதிபிம்பமேபோல, நிற்ற நீ சொன்னசெய்கு வன்=எப்போதும் நீ யாஞ்ஞைசெய்தபடியே செய்வேன், என்றனன் நிருபன்=என்று கூறினன் மன்னவன், உற்றது ஈதெனில்=துணிந்தது இவ்வண்ணமேலாயின், பேதைமை யொன்றையு மொழித்து=அறியாமை யொன்றைமாத்திரம் விட்டுவிட்டு, மற்றை = பிற யாவற்றையுங் கைக்கொண்டு, முன்னுளவியற்கையிலிருப்பது வழக்கே=பூர்வமிருந்த இராச்சிய வாழ்க்கையிலிருந்து வாழ்வது நியாயமேயாம்.

சிறிதுகாலம்=சிறிதுபோது, நாமிவ்வகை=யாமிந்தப்பிரகாரம், இருந்து=வாழ்ந்து, பின்றேகம்பிரியுநாள்=பின்னர்த்தேகம் வேறுபடுங்காலத்தில், அந்தநிலையினை=அந்தஸ்திதியினை, பெறுதுமாலென்ன=அடைவோமென்று, ஆல் அசை, நெறிசெல் வேந்தனும்=நன்மார்க்கமாகிய குருநெறி நடக்குமன்னவனும், இயைந்தனன்=சம்மதித்தனன், நேரிழையெழுந்து=சகலாபரணாலங்கிருத சூடாலையும் எழுந்து, குறிகொள் சங்கற்பவிதியினால்=ஊன்றிய சங்கற்பமுறையே, இவை இவைகொணர்ந்தாள் = இன்னின்னவை கொண்டு வந்தாள்.

(ஸ்ரீ - வீர) இதுருசிக்கவில்லையெனப் பிரதிஷேதிக்கப்படுவது எனப் பிரதிஷேதம், கருமத்தில் கஞ்விகுதியாம், பிரதிஷேதத்தை யானறியேன், அபிவாஞ்சிதத்தையும் யானறியேன், மின்கொடி நீ யெதை யொழுகுகின்றாயோ அதனை யானவ்வாறே வியுத்தானகாலத்தின் மாத்திரம், அறிவேன்; யாது யாது உனது அபிமதமாமோ அவ்வெல்லாம் அங்ஙனமே, கெடாமலாகுக. பிரியையே! ஆகாசம்போலப் பற்றின்றி உதாசீனமுற்றுப் பூரணமாய சுந்தராஙிய யான் சிறிதும் அநுசந்தானிப்பேன் அறியேன், யாதுதான் சிறிதுசெய்யத்தக்கதாக வுணர்ந்துள்ளாயோ அதனையே செய்திசுந்தரி; அதனையே இருதயத்திற் சம்மதிப்பேன் மணிப் பிரதிபிம்பமேபோலும், இச்சையும் அதன் விடயஜாதமும் கழிந்த சித்தத்தானே அநிந்திதமாய்க் கிடைத்தபடியே கொள்ளுவேன், இஷ்டத்தைக் கவர்ந்தது அநிஷ்டத்திற்கும் உபலக்ஷணமாம். புகழவுமாட்டேன் இகழவுமாட்டேன் எதனை வாஞ்சித்தாயோ அதனைச்செய்தி. என்றிடச் சூடாலைகூறுதல்: ஹே மகாபாகுவே ! அஃதிவ்வண்ணமேலாயின் எனது சம்மதத்தைக் கேட்டி, கேட்டுச் சீவன்முத்தனுகவிருக்கும் நீ அதனையே நடத்தக் கடமைப்பட்டவனுவாய், யாண்டும் ஐக்கிய வுணர்ச்சியானே, அறியாமையை அடியோடும் விட்டவர்களாய், ஆசையற்றவர்களாய் ஆகாயத்தைப் போற்றெளிந்தவர்களாய் யாமிருக்கின்றேம், இராஜ்யபோகாதியபேக்ஷணம் எத்தகைத்தாமோ நமக்கத்தகைத்தே அதன் அபேக்ஷணமுமாம். ஆண்டுப் பொருத்தமுரைத்தல்:—எக்காரணத்தினலே பிராணன்களின் சக்ஷுராதிகளின் முக்கியப்பிராணன்றன் தத்தமுசிதவிஷய அபேக்ஷணமுளதாக இப்பரமான்மாவின்கண் என்ன அதிசயம், அஞ்ஞர்கட்கேபோலத் தத்துவவித்துக்கு அந்தக்கரண தேகேந்திரியாதி தாதாத்மிய அத்தியாசங்கிடையாதாமோ, எதனலிந்திரியங்கட்கு விடயபோகாப்பியாசத்தானே மலினபாவமுளதாகவே ஆன்மாவிற்கும் மலினபாவமடைவாமோ; நிட்கிரிய அசங்கசின்மாத்திர பூதனேயாய தத்துவவித்து எப்போகங்களைப் பயில்வன் எதனையும் பயிலானென்றபடி, அக்காரணத்தினற் பிராரப்தபோகமாத்திரத்தானே அதனப்பியாசவியசன மலினபாவமுறுமையின், அப்போகாதியிலும் அப்போகாந்தத்திலும் அப்போகத்திடையிலும், யாம் எவ்வியற்கையரோ அவ்வியற்கையரேயாம், பிராரப்த சேடமொன்றைப் போகத்தானே கழித்துவிட்டுறைந்தயாம், சிறிதும் அயல்வகையினரேனும் அயலாகவேனும் ஆய்விடமாட்டோம். இப்போதுள்ள

இராச்சியத்தானே இவ்வாயுட்சேடரூபகாலத்தைக் கழித்துவிட்டு முறையே ஏதாவதொரு காலத்தால், ஹே பிரபுவே விவேகத்தன்மையை அடைவோம்.

(ச) வழங்கு=எனக்குச் சம்மதம். (235-236)

(ஸ்ரீ-வீர-அ-கை) கொணர்ந்த பதார்த்தங்களைக்கொண் டபிடேகித்து நகர்த்திற்குச் செல்லுதல்:—ஏழு இனையவென்பன.

ஏழு வாரிநீர் மணிக்குடத் திவனை நீராட்டிக்
கேழு லாமணித் தவிசிடைக் கிளர்வுற வைத்து
வாழி யென்றன ளளவறு சேனையும் வகுத்தாள்
வேழ வெம்பரித் தேரொடும் வீரரால் விளங்க.

இனைய வேலையி லிதயமொத் தின்பமே யியற்று
மனைய தேவி சூடாலையு மரசனு மெழுந்து
புனையும் வேழமேற் கொண்டனர் பொன்னகர் நோக்கி
வினைசெய் நாற்பெரும் படையொடு மகிழ்வுற மீண்டார்.

(ப - ரை) ஏழுவாரிநீர்=சப்தசமுத்திர ஜலநிறைந்த, மணிக்குடத்திவனை நீராட்டி= இரத்தின கும்பங்கொண்டு மன்னவனை யபிடேகித்து, கேழுலாமணித் தவிசிடை=பிரகாசம் பொருந்திய நவ இரத்தினகசித சிங்காசனத்தின்கண்ணே, கிளர்வுறவைத்து=விளங்கும்படி யாக இருத்தி, வாழியென்றனள்=இராஜ இராஜேசுவரன் நீடூழிவாழ்கவென்று ஆசீர்வதித் தான், அளவறுசேனையும் வகுத்தாள்=அநந்தமான சைனியங்களையும் சிருட்டித்தாள், வேழ வெம்பரித்தேரொடும் வீரரால்விளங்க = மதம்பொழி யானைகளாலும், கடுவேகக்குதிரைக ளாலும், அழகிய தேர்களாலும், மகாவீரர்களாலும் விளங்கும்படியாக.

இனையவேலையில் = இச்சமயத்தில், இதயமொத்து=மனமொத்து, இன்பமேயியற் றும்=ஆனந்தமே செய்யும். அனையதேவி சூடாலையும் அரசனும் எழுந்து=அந்தப் பட்டமகி ஷியாகிய சூடாலையும் மன்னவனும் எழுந்து, புனையும் வேழமேற்கொண்டனர்=சர்வ அலங் காரங்களும் பொருந்திய மத்தகஜத்தின்மீது ஆரோகணமாயினர், பொன்னகர் நோக்கி = அநேக ஐசுவரியங்கணிறைந்த பட்டணத்தை நோக்கி, வினைசெய் நாற்பெரும்படை யொடும்=சப்தியானின்ற மகத்தான நால்வகைச்சேனைகளுடன், மகிழ்வுறமீண்டார் = சந் தோடத்துடன் திரும்பினர்.

(ஸ்ரீ - வீர) மோகமொன்றைமாத்திரம் விட்டு மறுபடியுமே இராஜ இராணிகளாயிருப் போம், உனது நகரத்திலேயே மன்னவனாக நீ உனது ஆசனத்திலிருந்து வாழ்தி, அந்தப்புர ஸ்திரீகளுக்குள் பூஷணபூதமாக யான் மகிஷியாகப்பவிப்பேன்; இது சுகம் இது அல்ல, என்னும் துவந்துவம் க்ஷயமாகவே சாந்தசமமேயாயபதத்தில் இருப்பேனீண்டு சுக்ப்படியே! ஹே விசாலாக்ஷியே! பொருத்தமேயுரைத்தாய், சமமாகிய மதியினாலேயாது உன்னாற்கூறப் பெற்றது, இராஜ்ஜியத்தினது கவர்ச்சியாலேனும் தியாகத்தாலேனும் யாதுதான் பிரயோஜ னம் உண்டாகப்போகின்றது, சுகதுக்கதசாசிந்தையைவிட்டு மற்சரமின்றி எங்ஙனமிருப் தாமோ அங்ஙனமே சொஸ்தமுற்ற விவையிருக்கலாம். பின் சூடாலையாகிய காந்தை எழுந்து, சப்த அப்திவாரிகளானே பூர்ணமாய் எதிரிலிருக்கும்படி இரத்தினகும்பத்தை இராஜ்ஜிய அபிஷேகப்பொருட்டுச் சங்கற்பஞ்செய்தனள், அம்மங்களகும்பத்தினாலே கிழக்குமுகமாக

விருந்த பர்த்தாவாகிய அம்மன்னவனை யேகாந்தத்தில் அப்பார்யை சுவராஜ்ய அபிடேகஞ் செய்தனள், பட்டாபிஷேகமில்லாமையின் றுவர்ரபாலஸ்தானத்திலிருக்கும் விநயத்தோடு கூடிய மானினியைப்பார்த்து மன்னவன் கூறுவதாவது, இப்போது தேவியாகிய பதத்தில் அபிடேக மாற்றுப்பெற்ற ஸ்தானத்தில், இராணியாகிய வுன்னை அபிஷேகினியாகச் செய்கின்றேன் என்றுகூறிச் சரசில் ஸ்நாபித்து மகாதேவிபதத்தில், அபிஷிக்தையாக்கி, நிருபன் நிஜப்பிரியையைநோக்கி நிகழ்த்துவான், பிரியையாகிய கமலபத்திராக்ஷியே ! கணநேரத்தில், யோகசித்தியினலே உன்னுடைய சத்தியசங்கற்பத்தாலே சம்பவமும், பூஷண அலங்கார சஸ்திர அஸ்திராதிகளினலே மகா ஐசுவரியமும், வெகு அக்குரோணி யளவுகளினலே மதோன்மத்தமாய சைனியமும், ஆகிய இவற்றையெல்லாம், வருவிக்கவேண்டும். இவ்வண்ணம் நாயகன்கூறிய வசனத்தைக்கேட்ட வரவர்ணினியாகிய சூடாலையானவள், மழைகால மேகம்போன்ற மதோன்மத்த சைனியத்தைச் சங்கற்பித்தாள், அப்போதவ்விருவரும், வாஜி வாரண சங்குலமிகுத்ததும், பதாகைகளானே பூரிக்கப்பெற்ற ஆகாசத்தையுடையதும், இடையீடில்லாது நெருங்கிய கானனத்தையுடையதும் ஆகிய பேரனீகத்தை யிருவரும் நோக்கினர். சந்தோஷ சாமந்தர்களானே காக்கப்பெற்றதும், பார்த்திவமண்டலம் நிறையப்பெற்றதுமாகிய கந்தத்விபவரத்தில் ஆண்டு நிருபதம்பதிகள் ஆரோகணித்தார்கள், கந்தத்விபமென்பது, எம் மதகந்தத்தை அன்னிய யானைகள் சகிக்கமாட்டாவோ அதுவாம். பின் மன்னவன் இட்டப்பட்ட மகாராணியோடும் நெருங்கிய இரதகஜதுரகபதாதியான அதிபலமாஞ் சேனையை மகிழ்வுடன் நடத்தினன்.

(ச) பொன்னகர்=சுவர்க்கம்போற் சோலையுள்ள தனது புரியை. (237-238)

(ஸ்ரீ-வீர-அ-கை) கதையை யுபசங்கரித்தல்:—புரிவள்ளலென்பன.

புரியை நண்ணலு நகருறு தானைபொம் மென்று
வரிசை யாலெதிர் கொளவிரு தானையும் வயங்கப்
பரிவி னண்ணினர் நகர்பதி னாயிரம் வருடந்
தெரிவை யோடிருந் தழிவிலாப் பதம்பின்பு சேர்ந்தான்.

வள்ளலே யிந்த மரபினுற் றொழில்களின் மருவித்
துள்ளு மின்பமிற் சாந்த மெப்போதினுந் தொடர்ந்தாற்
றெள்ளு போகமும் வீடுமுண் டாமென்று தெளிந்த
வுள்ள மாதவ வசிட்டமா முனிவர னுரைத்தான்.

(ப - ரை.) புரியைநண்ணலும் = நகரையடைதலும், நகருறுதானை = பட்டணத்திலிருந்த சைனியம், பொம்மென்று = கலகலவென்று விம்மி, வரிசையால் எதிர்கொள = முறைமைப்படி எதிர்கொண் டழைக்கும்பொருட்டுவர, இருதானையும் வயங்க = இரண்டு சைனியங்களும் வளப்பமிக, பரிவினண்ணினர் நகர் = அன்பொடுங் கலந்தனர், பட்டணப்பிரவேசமும் செய்தனர், பதினாயிரவருடந் தெரிவையோடிருந்து = தசசகத்திர சம்வற்சரம் மங்கையோடிருந் தரசாண்டு, அழிவிலாப்பதம் பின்புசேர்ந்தான் = கெடாதபதத்தினைப்பின்னரடைந்தான்.

வள்ளலே யிந்தமரபினல் = ஹே இராகவ இம்முறைமையினலே, தொழில்களின் மருவி = வினைகளிற்கலந்து, துள்ளுமின்பமில்சாந்த மெப்போதினுந்தொடர்ந்தால் = அற்ப

மாய் முன்வரும் விடயானந்தத்தை மருவாதசாந்தம் எந்தஞான்றும் அனுசரித்தால், தெள்ளு போகமும் வீடுமுண்டாமென்று = நல்லபோகங்களும் மோக்ஷமும் உளதா மென்பதாக, தெளிந்த = சுத்தசத்துவ உபாதியையுடைய, உள்ளமாதவ = சித்தத்துடன் பெருத்த தவமே புரிந்துகொண்டிருக்கும், வசிட்டமாமுனிவரன் = ஸ்ரீ வசிஷ்டமகாமுனீந்திரன், உரைத்தான் = கூறினன்.

(ஸ்ரீ - வீர) அம்மகேந்திர சைலேந்திரத்தினின்றும் பிரயாணப்பட்ட மகீபதி மார்க்கத்தில் அநேகம் விநோதங்களைப் பார்த்துக்கொண்டு முன்வரும்போது நடந்த விருத்தாந்தங்களையுங் கூறிக்கொண்டு, சிறிதுபோதிலேயே தனது சுவர்க்கம்போற் சோபனமானபுரியை யடைந்தனன். ஆண்டு அவனது அச்சாமந்தர்கள் = அவ்வத்தேசாதிபத்தியத்தில் நிரூபிதமந்திரிமார்கள், உற்சாகத்தோடு கூடியவர்களாய் அவ்வரவை யாதரித்துப்போற்றினர்கள், ஜய விஜயீபவவென்று போற்றிக்கொண்டு தொடர்ந்தேவந்தார்கள், ஒன்றாகக் கலந்ததும் தூரியாதி வாத்தியகோஷங்கள் செய்வதும், ஆகிய அவ்விரண்டு சைனியங்களோடும், அந்த மன்னவன் நகரம்புகுந்தான்; மகீதலத்தில் தசவருட சகத்திரம் இராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்து, தேகதாரணத்தினின்றும் விரக்தியையடைந்து விதேக கைவல்ய சுகத்திற் பிரதிஷ்டிதனுகி யிருந்தான், அதனையே விரித்தோதினே, சூடாலையோடுங்கூட அந்த மகாமதியானவன் தேகத்தைவிட்டு மோக்ஷபதவியைத் தைலந்தீர்ந்த விளக்கேபோல மறுபிறவியில்லாதவண்ணம் மருவிவாழ்ந்தான். முற்பாதியானே சிகித்துவஜனது துதிதியை அநுவதித்து, அதனை ஸ்ரீ இராகவருக்குச் செய்யத்தக்கதாகப் பிற்பாதியானே யுபதேசித்தல்:— அச்சிகித்துவஜன் தீர்க்ககாலம், பூமியில், எல்லாவரசர்களின் சூடாமணியைப்போலிருந்து, அநேக போகங்களைப்புசித்து, அமிருத அஜரபரம்பத சன்மாத்திரசேடமாகி விதேகமுக்தியை யடைந்தனன். ஹே இராகவ! நீயும், பிராரப்தமாய் பிரகிருத காரியஜாதத்தை யனுசரித்து, விசோகனுய்ச் சமாதியிலிருத்தி, அல்லது சுயம் வலிதே யோகமோக்ஷஞானலக்குமியை யனுசரித்துக்கொண்டு, எழுந்திரு = வியுத்திதனுகி யிருப்பாய், உனது சமாதி வியுத்தானங்கட்குப் பலபேதங் கிடையாதாம்.

(ச) தானே = சேனைகளைச் சாமந்தர்போமென்றேவி, மகத்தான சாம்பிராச்சிய சுகமனுபவித்துப் பின்பு ஜன்மமின்றிய் விதேகமுக்தியை யடைந்தானென்பது கதையினுடைய விசேடமான சம்பிரமமாம். (239-240)

## சிகித்துவசன் கதை முற்றிற்று.

---

## கசன் கதை

---

(ஸ்ரீ - வீர - அ - கை) சூடாலை மகாராணியினலே சிகித்துவசனேபோலப் பிதாவினலே சர்வ ஐசுவரியத்தையும் தியாகித்தனன் கசன், முடிபாக அகங்கார நற்றியாகத்தால், நிறைவையுற்றனன் என இப்போது வருணிக்கத் தொடங்கல்:—தெளிவென்பது.

(ச) முன்பு பிரதிபந்தக ரூபமான பாவநசியாவிடிற் றுர்லபமாயினுஞ் சுவான்மஞானம் ஆசாரியரது பிரயத்தனுதிசயத்தினுற் பெறலாமெனத் தெரிவித்தற்கு அநேக கதைகளை யுட்

கொண்ட சிகித்துவசன்கதை சொல்லப்பட்டது, இப்போது, சித்தத்தியாகமே சகலத்தியாகமாம் அந்நியமன்றெனக் கசன் கதையாற் சொல்லப்படுகின்றது:—

தெளிவின் மிக்குயர் சிகித்துவ சன்கதை செப்பின னிவ்வாறே
யளிய நிற்றியா லருந்துய ரணுகலே யனையவ னெறிபோலக்
குளிர்மு கச்சுரர்குருமக னுணர்ந்தன னதுகுறித் துணர்கென்ன
வெளிப்ப டவ்வ னுணர்ந்துள நெறியினை விளம்புதி யெனக்கேட்டான்.

(ப-ரை) தெளிவின் மிக்குயர் சிகித்துவசன் கதை=தெளிவினாலே மிகுதியை யடைந்து உன்னதமான சிகித்துவசராசன் சரித்திரம், செப்பினன்=கூறினேம், இவ்வாறே=இவ வண்ணமே, அளியநிற்றி=கருணையே வடிவமாகிய இராகவனே நீயிருப்பாய், ஆல் அசை, அருந்துயர் அணுகலே=பெருந்துயர் ஒன்றையும் அடையமாட்டாய், அனையவனெறிபோல=அம்மன்னவனது மார்க்கமேபோல, குளிர்முகச் சுரர்குருமகன் உணர்ந்தனன்=அதிசீதள வதனதேவர்தங்குரவனது குமாரன் அறிந்தனன், அது குறித்துணர்கென்ன=அதனை நன்றாகக்கவனித்துத் தெரிந்துகொள்ளென்ன, வெளிப்பட அவன் உணர்ந்துள நெறியினை=வெட்டவெளியாக அக்கசன் அறிந்துள்ள மார்க்கத்தை, விளம்புதியெனக் கேட்டான்=கூறுதியென வினவினான்.

(ஸ்ரீ - வீர) இச்சிகித்துவசனுடைய கதை முழுவதையும் உனக்குக்கூறினேம், இம்மார்க்கத்தானே சென்றிடில் துயருறாய், எல்லாக்கேதங்களும் நீங்கினவனாவாய்; சிகித்துவஜனது பிரசித்தமான சர்வத்தியாகக் கிரமத்தினாலேயே பிருஹஸ்பதியின் சுதனான கசனும் போதமடைந்ததேபோல நீயும் உணர்ந்துகொள்ளுதி. என்றிட, ஸ்ரீ பகவான் தேவகுருநந்தனனாகிய பகவான் கசன், உணர்ந்தபிரகாரம் முழுவதையும் நன்றாக ஹே பகவன்! அருள் செய்யவேண்டும்.

(ஸ்ரீ-வீர-அ-கை) கதையைத்தொடங்கல்:—குரிசிலென்பது. (1)

குரிசில் கேட்டலும் வசிட்டனங் குரைசெய்வான் குருமகன் கசனென்பான்
றெரிப தத்தொடு பதப்பொரு டெரிந்துளோன் றேவர்தே சிகன்முன்போய்
விரிபி றப்பெனுங் கூட்டினின் றுயிரெனும் வெங்கரி புறம்போகைக்
குரியவாறெது கூறெனக் கேட்டலு மும்பர்மந் திரிசொல்வான்.

(ப - ரை) குரிசில் கேட்டலும்=ஸ்ரீ இராகவர் வினதலும், வசிட்டன் அங்குரை செய்வான்=ஸ்ரீ வசிஷ்டபகவான் அது விஷயத்திற்கூறுவார், குருமகன் கசன் என்பான்=ஸ்ரீ பிருகஸ்பதிமைந்தன் கசனெனப் பெயரியோன், தெரிபதத்தொடு பதப்பொருள் தெரிந்துளோன்=வியாகரண காவியகோசமீமாம்சாதி யறிந்தவன், தேவர் தேசிகன்முன் போய்=ஸ்ரீ வாசஸ்பதியினது சந்நிதானத்திற் சென்று, விரிபிறப்பெனுங் கூட்டினின்று=விஸ்தாரமான ஜனனமென்னும் கூடத்தினின்றும்; உயிரெனும் வெங்கரி புறம்போகைக்கு=ஜீவனென்னும் வெம்பியயானை வெளியேபோதற்கு, உரியவாறெது=தக்கமார்க்கமியாது, கூறென=ஓதுவாயென்று, கேட்டலும்=வினதலும்; உம்பர்மந்திரி சொல்வான்=தேவர் மந்திரி கூறுவார்.

(ஸ்ரீ - வீர) தேவதேசிகஜகசன், பாலபாவத்தினின்றும் தாண்டி யவ்வனமடைந்தவன், பதபதார்த்தஞ்ஞன்=சர்வ வித்யாஸ்தானங்களில் நிண்ணயமாகி நிற்பவன், தத்துவமசியாதி

வாக்கியகோசர பதபதார்த்தஞானுமாவன், சமுசாரத்தைத் தாண்டுவதில் நாட்டமுடையவன், தனது ஜனகனை நோக்கிக்கூறுவான்: ஹே பகவானே! சருவதருமத்தையு முணர்ந்தவரே! இந்தச் சமுசாரபந்தத்தினின்றும், நூலேபோலத் தனது கட்டாயிரம்புரியும் ஜீவனேயாய என்போன்ற ஜந்துவினாலே, எவ்வாறு வெளிப்போதல்கூடும் கூறுதியென்றிட;

(ச) தெரி=மௌர்க்கியத்தினின்று நீங்கி, பதத்தொடு பதப்பொருடெரிந்துளோன், தத்துவம்பதங்களின் அர்த்தத்தை யறிந்தவன். பிராணதாரணமேயாய சேஷ்டை நிமித்தகுத்திரத்தை யுடையவுயிர். (2)

(ஸ்ரீ-வீர-அ-கை) இப்போது தேவகுரு அதற்குத்தரம் விளம்பல்:—அநர்த்தமென்பது.

அநர்த்த மாமக ரங்களுக் குறையுளா யகன்றவிப் பவவேலை
கனத்த தோர்சக லத்தியா கத்தினாற் கடக்கலா மென்றோதத்
தனத்தையாதியாஞ் சகலமும் விட்டனன் றனியனாய்க் கசன்சென்று
வனத்தின்மேவின னெட்டியாண் டிருந்தனன் மறித்தவன் பிதாவந்தான்.

(ப - ரை) அனர்த்தமாம் மகரங்களுக்குறையுளாய்=உபத்திரவங்களேயாய முதலைகட்குத்திமிங்கிலங்கட்கு இருப்பிடமாய், அகன்ற=விசாலமான, இப்பவவேலை=இச்சன்ன சமுத்திரம், கனத்ததோர் சகலத்தியாகத்தினால்=நிபிடமான ஒப்பற்ற சர்வத்தியாகத்தினாலே, கடக்கலாம் என்றோத=தாண்டிவிடலாம் என்றுகூற, தனத்தையாதியாம் சகலமும் விட்டனன்=பொன்னே முதலிய யாவற்றையும் விட்டொழித்தனன், தனியனாய்க் கசன்சென்று=ஏகாங்கியாய்க்கசன்போய், வனத்தின்மேவினன்=ஆரண்யத்தையடைந்தனன், எட்டியாண்டிருந்தனன்=அஷ்டசம்வற்சர மிருந்தனன், மறித்தவன் பிதாவந்தான்=மீண்டுங் கசன்றந்தையையடைந்தான்.

(ஸ்ரீ - வீர) ஹே மைந்தனே! அநர்த்த மகரங்களுக்கிடமேயாய இச்சமுசார சாகரத்தினின்றும், அதிவைராக்கியதார்ட்டியத்தினாலே தியாகித்தவிடயத்தில் பச்சாதாப உத்வேகரகிதமாகச் செய்யப்பெற்ற சர்வத்தியாகத்தினாலே விரைவாகவே வெளியிற்போய்விடும். இந்தப்பிரகாரங்கூறிய பரமப்பாவனமாகிய பிதாவினுடைய திருமொழிகளைக்கேட்டுக் கசனானவன், சகலத்தையுமே விட்டொழித்து ஏகாந்தகானனத்தை யடைந்தனன், ஸ்ரீ வாசஸ்பதிக்கு அவனுடைய செல்கைவியசனத்தின் பொருட்டாகவில்லை, சையோகத்திலும் வியோகத்திலும் மகான்கள் மேருவைப்போல அசையாமலேதிரமனமாக இருப்பார்கள் அல்லவோ. ஹே அனகனே! பின் எட்டுவருடங்கழிந்தபின் அக்கசன் ஒரு மகாரண்யத்தில் மீண்டும், தந்தையையடைந்தான், அச்சித்த பரிபாகதாரதம்மியத்தை யறிந்து சேடத்தையும் விடுவிப்பான் வந்த தந்தையை அடைந்தான் என்பதாம். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை) மறுபடியும் சகலத்தியாகவுபதேசத்தையே கேட்டு யாவையும் நீத்தும் இளைப்பாறுமையையேயுறுதல்:—வந்தபானுவென்பன.

வந்த தந்தையை வணங்கியே சகலமு மாற்றியே யெட்டாண்டு
சிந்தை யற்றிருந் துந்துயர் தீர்ந்திலே னிமலனே யென்னென்று
நொந்து கூறலுஞ் சகலமு நீக்கென நுவன்றுமீ ளவும்போனான்
தந்தை போனபின் வற்கலை முதலிய சகலமு மறநீத்தான்.

பானு மாமதி முகிலுடு முதலிய பற்றறு சாற்கால
வான மொத்தனன் றமியனுய்க் கசன்சென்று வனத்தின்மீ ளவுந்தாதை
யான வன்றனை யெய்தின னன்பினு லடிதொழு தயர்வெய்தி
யான ணிந்துள வற்கலை முதலிய யாவையு மறநீத்தேன்.

(ப - ரை) வந்ததந்தையை வணங்கியே=எழுந்தருளிவந்த பிதாவை நமஸ்கரித்து, சகலமும்மாற்றியே எட்டாண்டு=யாவற்றையுமே விடுத்து எட்டுவருடங்கள், சிந்தையற்றிருந்தும்=அப்பொருள்களைப்பற்றிய கவலையற்று ஏகாந்தத்திருந்தும், துயர்தீர்ந்திலேன்=துக்க மகன்றிலேன், நிமலனே=நிர்மலமாகிய பிதாவே! என்னென்று=என்னகாரணமென்று, நொந்துகூறலும்=வருத்தப்பட்டுரைத்தலும், சகலமும் நீக்கென=யாவற்றையும் விடுவாயாக வென்று, நுவன்று மீளவும்போனுன்=கூறி மீண்டும்போயினுன், தந்தை போனபின்=பிதா வேகியபின்னர், வற்கலைமுதலிய சகலமும் அறநீத்தான்=உடைமுதலிய யாவற்றையும் அத்தியந்தம் அகற்றினுன்.

பானுமாமதிமுகில் உடு முதலிய=பெரிய சூரியன் மகாசந்திரன் கார்மேகம் நக்ஷத்திரம் முதலிய, பற்றறு = சங்கமற்ற, சாற்கால = சாத்துருதுவில் இலங்கும், வானமொத்தனன்=ஆகாயத்தை யொப்பாயினுன், தமியனுய்க் கசன்சென்று=தனியனுய்க் கசன்போய் வனத்தில் = ஒரு ஆரண்யத்தில், மீளவுந்தாதை=மறுபடியும் தந்தை, ஆனவன்றனை= ஆகிய குருமூர்த்தியை, எய்தினன்=அடைந்தான், அன்பினுல்=பக்தியுடன், அடிதொழுது= திருவடியைப் பூசித்து, அயர்வெய்தி=கவலையுடன், யான் அணிந்துள=அடியேன் தரித் துள்ள, வற்கலைமுதலிய=ஆடைமுதலிய, யாவையுமறநீத்தேன்=எல்லாவற்றையும் அத்தி யந்தம்விட்டேன்.

(ஸ்ரீ - வீர) புத்திரனை நன்கு தழுவியவனாக்பதியாகிய தந்தையை யினிது பூஜித்துத் தோத்தரித்து மறுபடியும் அக்கசன் இனியதொனியுடன் இவ்வாறு கேட்டான்: என்னுற் சர்வத்தியாகம் செய்யப்பெற்று இன்று எட்டுவருடங்கள் ஆயின. தந்தையேயான் அநிந்தித மான விசிராந்தியை யடைந்திலேன்; இவ்வண்ணம் துக்கமயவசனத்தைக் கசன் அக்கானனத் திற் கூறியபோது, யாவற்றையுமே விடுவாயாகவென்றுகூறித் தேவகுருவானவர், விண்ணை நோக்கிச்சென்றனர். அத்தேவகுருவானவர் சென்றுழி, கசன் தேகத்தினின்றும் வற்கலை முதலியவற்றையும் விட்டெறிந்தனன் உடுபதி யெழிலியிரவியுடுவின்றிய சாத்தாகாசத்திற் றொப்பாகவாயினன்=சமீபித்த சூர்யோதய காலிகசாத்ககனத்தோடு ஒப்பாயினுன் என்ப தாம். எங்ஙனந்தான் சரத்வியோமத்தோடு ஒப்பாயினுன் எனின்:—சாற்போதில் நபத் தலமேபோலச் சிலவிடத்தே கிரிகுகாசிரயத்தானே அம்புதவர்ஷாதியை விட்டொழித்தான்; திகந்தங்களில் ஏகனுய்ச்சாந்த சூனியவபுவினனுய் மூச்சுமாத்திரம் விட்டுக்கொண்டு தவம் புரிந்தான், மீண்டும் மூன்றுண்டுகழித்து ஒரு கானனத்துள்ளே கவலையோடுகூடிய மனத்தின னுகி, அத்தந்தையாகிய ஆசிரியரையே அடைந்தனன்; சாதாதியிலோ சில திகந்தங்களில் வசித்தனன் இவ்வண்ணம் அலைக்கப்பெற்ற மனத்தினனுகியே மீண்டும் மூன்றுவருடங் கழித்து, ஏதோவொரு கானனந்தரத்தில் வந்த அத்தந்தையாகிய குருவையேயடைந்தனன், மைந்தனை யினிதுதழுவிய பிதாவை முறையினிற் பூஜைசெய்து அன்புடன், அக்கசன் மறு படியும், கேதகத்கதவாணியினுலே வினவத்தொடங்கினுன். (4-5)

(ஸ்ரீ - வீர - அ - கை) தன் குறையைத்தெரிவிப்பச் சித்தத்தைத் தியாகியென வுபதேசித்தேகல்:—யாதுமென்பது.

யாது நீத்துமென் பாலிளைப் பாறிலே னினிச்செய லேதென்னத்
தாதை கூறுவான் மனத்தையே யுலகெலாஞ் சகலமென் றுரைசெய்வ
ராத லான்மன மகற்றுதல் சகலமு மகற்றுத லதனாலே
கேத நீங்குமென் றகன்றனன் மந்திரி கிளர்கச னிதுசெய்தான்.

(ப-ரை) யாதுநீத்தும்=எவற்றைவிட்டபோதிலும், என்பால்=என்னிடத்தில், இளைப்பாறிலேன்=விசிராந்தியை யடைந்திலேன், இனிச்செயல் ஏதென்ன=இனிச் செய்யத்தக்கது யாதுகொலாமென்று கேட்ப, தாதை கூறுவான்=தந்தை சொல்வான், மனத்தையே=உளத்தையே, உலகெலாம்=பெரியோர்கள் யாவரும், சகலம் என்றுரைசெய்வர்=சருவமென்று கூறுகிற்பர், ஆதலால்=ஆகையினால், மனமகற்றுதல்=உள்ளத்தை யொழித்தல், சகலமுமகற்றுதல்=சருவமும் நீக்குதலாம், அதனாலே = அக்காரணத்தாலே, கேத நீங்குமென்றகன்றனன்=துயரம் தொலையுமென்று சென்றனன், மந்திரி=ஆசாரியன், கிளர்கசன் இதுசெய்தான்=சந்தோஷத்தை யடைந்த கசனிக காரியம்செய்தான்.

(ஸ்ரீ - வீர) ஹே தந்தையே! யாவற்றையுமே விடுத்தனன் கந்தைதண்டு ஜபமாலை கமண்டலு ஆசனம் மான்றோல் முதலியவற்றையும் விட்டேன், எனினும் தற்பதத்தில் விசிராந்தியை யடைந்திலேன், என்னதான் யான்செய்வேன்; என்றிட ஸ்ரீ பிருஹஸ்பதிகூறல்:—சித்தத்தைச் சர்வமென்றுகூறுவர், அதனை விட்டுவிட்டாற் புத்திர நன்கிலங்குவாய், யாவற்றையுமுணர்ந்த பெரியோர்சித்தத் தியாகத்தையே சருவத்தியாகமென்றறைவர். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை) சித்தத்தைக் தேடிக்காணாமல் தேசிகனைக் கேட்டுத்தெரிதல்:—சித்தமென்பது.

சித்த மேதென நாடின னறிந்திலன் றேகமா திகளெல்லாஞ்
சித்த மன்றெனிற் குறைசெயா விதனையான் றீர்ந்துமென் பயனென்னச்
சித்த் மேதெனச் சுரர்குரு விடத்துறச் சென்றுகேட் டலுமன்னான்
சித்த மாவது நானெனச் செப்புவர் சித்தத்தை யறிவுற்றோர்.

(ப - ரை) சித்தமேதென நாடினன்=சித்தம் யாதாமென்று எண்ணினன், அறிந்திலன்=உணர்ந்திலன், தேகமாதிகள் எல்லாம்=உடலமாதிகள் யாவும், சித்தமன்றெனில்=சித்தமல்லவென்றால், குறைசெயா விதனையான்=குற்றஞ்செய்யாத இவற்றையான், தீர்ந்தும் என்பயன் என்ன=அகற்றியும் என்னபிரயோஜனம் என்று, சித்தமேதென=சித்தமியாதென்று, சுரர்குருவிடத் துறச்சென்று=தேவதேசிகர் இருக்குமிடத்தே தேடியடைந்து, கேட்டலுமன்னான்=வினாதலும் அக்குரவன், சித்தமாவது=சித்தமென்பது, நான் எனச் செப்புவர் = யான் என்றுகூறுவர், சித்தத்தை யறிவுற்றோர் = சித்த இலக்கணந் தெரிந்தவர்.

(ஸ்ரீ - வீர) ஸ்ரீ வாசஸ்பதிபகவான் புத்திரனுக்கு இவ்வாறுபதேசித்துவிட்டு விண்ணில் வேகத்துடன் எழுந்துசென்றார், கவலைதீர்ந்த மதியினனாகிய கசன் விட்டொழிக்கும் பொருட்டுச் சித்தத்தை நன்குதேடினன்; சிந்தித்துப்பார்த்தும் அவன் கானனத்தில் எப்போது சித்தத்தைக்கண்டிலனோ, சித்தத்தின்றனது [1]அன்வேஷணவிசாரணசீலத்தன்மைமுன் சித்தோபாத்

கியானத்தில் விரித்திருத்தல் காணலாம், அப்போது பிதாவை மதியாலேயே அடைவுற்றனன் அதாவது இனிது சிந்தித்தான் என்றபடி. அற்றேற்றிரிபுரதாகத்தால் அசுரர்கட்கேபோலும், தேகேந்திரிய விஷயத்தியாகத்தினலேயே சித்தத்தியாகமானதுண்டாம், என்றிடிலுரைத்தல்:—பதார்த்தக்கூட்டந் தேகாதிசித்தமல்லவென்றே கூறப்பெறும், அவ்விப்பதார்த்தக்கூட்டந் தேகாதி என் சித்தத்திற்கு எங்குதான் சித்தம், ஆம் என அநிர்ணயத்தால், சித்தநிலயாந அபராதசூனிய தேகாதியை வீணைகவேன்றியாகிப்பேன்; இதன்றியாகம் உசிதமல்லவாம். சித்தமாகிய பெரும்பகையை அறியும்பொருட்டுப் பிதாவினிடத்திற் செல்லுவேன் அறிந்து அதனை அடியோடும் விரைவில்விடுவேன், விட்டுத் துயரின்றியிருப்பேன். என்றினிது சிந்தித்து அக்கசன் சுவர்க்கத்தை நோக்கிக் கிளம்பிச்சென்றனன், ஸ்ரீ வாசஸ்பதி பகவானை யடைந்து அன்புடன் நமஸ்கரித்துப் போற்றிசெய்து, அவரை யேகாந்தத்தில், ஹே பகவன் சித்தமென்பது யாது கூறவேண்டுமெனக் கேட்டனன், சித்தத்தினது சொரூபத்தைக் கூற வேண்டும் எதனலதனை யான் நன்கு தியாகிக்கலாமோ. சித்தம் தனது அகங்காரமாம் என்று சாக்ஷியையும் சித்தத்தையும் வேறுபிரித்து அறியும் ஜீவன்முக்தர்கள் கூறுவார்கள். (7)

(ஸ்ரீ-வீர - அ-கை) அகங்காரத்தையழிப்பது அரிதாமெனல்:—உயிர் என்பது.

உயிர்க ளியாவையு முள்ளுற நானெனவுன் னுபா வனைதானே
செயிர்செய் சித்தமென் றுரைத்தலு மிங்கிது தீர்ப்பது மிகவன்பாம்
வயிர மாவது தீர்வதெவ் வகையென மறித்துமந் திரிசொல்வான்
வெயில்செய் துன்பமோ சிறிதிலை யகங்காம் விடமிக வெளிதாகும்.

(ப - ரை) உயிர்களியாவையும்=ஜந்துக்கள் எல்லாம், உள்ளுறநானென = உள்ளே யுள்ளே அகம் அகமென்று, உன்னுபாவனைதானே=எண்ணுகின்ற எண்ணமே, செயிர்செய் சித்தமென்றுரைத்தலும்=துன்பம்பயவாநின்ற சித்தமென்று கூறுதலும், இங்கிது தீர்ப்பது மிகவன்பாம்=இவணிது அகற்றுவது மிகமிகவும் முடியாதகாரியமேயாம், வயிரவமாவது தீர்வதெவ்வகையென = வச்சிரமாயிருக்குமிது அகற்றப்பெறுவது எவ்வண்ணமென்று, கேட்ப, மறித்து மந்திரிசொல்வான்=மீண்டும் ஆசிரியர் அருளுவார், வெயில்செய் துன்ப மோர்சிறிதிலை=தாபம்செய்யும் துயரம் ஓரணுவும் இல்லை, அகங்காம்விட மிக வெளிதாகும்= அகங்காரமானது விடுவதற்கு மிகவும் சுலபமாகும்.

(ஸ்ரீ - வீர) உள்ளே எவ்விவ்வகமபாவமுளதோ அதுவே ஜந்துக்கட்குச் சித்தமாம், அகங்காரத்திற்கு லோகத்தில் ஆன்மாவாகவே பிரசித்தியிருத்தலின், அதனைத் தியாகஞ்செய்யில் ஆன்மத்தியாகவடைவாதலின், சூனிய அடைவன்றோவாம், ஆன்மாவின்றியாகமும் சம்பவியாதன்றோ, தன்னத்தகா வியற்கையதாதலின், என்னுங் கருத்தாலுரைத்தல்:—தீர்ப்பதென்பதாதி. இதனது தியாகம் முடியாதகாரியமென்றே யெண்ணுகின்றேன், முயன்றாலும் கைகூடாதுபோற்றோன்றுகின்றது, யோகிகட்குள் மேன்மைமிக்க தேவேசனே! எவ்வாறிது தியாகிக்கமுடியும் திருவருள் செய்யவேண்டும். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை) அதன் சாக்ஷி யனுசந்தானமில்லாவிடில் அதன்றியாகம் முடியாததாம், என்பதுண்மையே, சாக்ஷி யனுசந்தானமிகினே புஷ்பத்தைக் கசக்குவதினும் எளிதாம், என்னுங் கருத்தினனே ஸ்ரீ பிருகஸ்பதிபகவான் உத்தரங்கூறல்: அலர்சுத்தமென்பன.

அலர்க சக்குமுன் னிமைக்குமுன் னகங்கா மகற்றுத லெளிதாகும்
பலவு ரைப்பதென் னேகமா யநந்தமாய்ப் பரமசித் தேயாகிக்
குலவு சுத்தமாய் விண்ணிலு நுண்ணிதாங் குறைவிலாப் பொருணிற்குஞ்
சலன மற்றதைப் பாவனை செய்துப சாந்தனு யிடர்தீர்வாய்.

சுத்த மித்தையே யாதலி னகங்காந் தொலைந்துபோ மெய்யான
தத்து வந்தனை நினைதலாற் சித்திலே சாற்றகங் காமெங்கே
மெத்து நீரிலே புழுதியுங் கனலிலே மேவுதோ யமுமுண்டோ
நித்த ரூபத்தை நினைந்திவ னுனெனு நிச்சய மறநிற்பாய்.

(ப - ரை) அலர் கசக்குமுன்=புஷ்பத்தைக் கசக்குமுன், இமைக்குமுன்=கண்ணிமிட்டு முன், அகங்காம் அகற்றுதல் எளிதாகும்=அகங்காரத்தை நீக்குதல் சுலபமாகும், பலவுரைப்ப தென்=நானுவிதமாகக் கூறுவதனுலென்னேபயன், ஏகமாய் அநந்தமாய்=ஒன்ருய் அந்த மின்றியதாய், பரமசித்தேயாகி = மேலான அறிவேயாகி, குலவுசுத்தமாய்=யாதொருவித மலமுமில்லாத, விண்ணிலு நுண்ணிதாம் = ஆகாயத்தினும் சூக்குமமாம், குறைவிலாப் பொருணிற்கும் = பரிச்சின்னமில்லாத வத்துவேயிருக்கும், சலனமற்றதைப் பாவனை செய்து=அசலப்பிரஹ்மத்தைச் சிந்தித்துச் சிந்தித்து, உபசாந்தனுய் இடர்தீர்வாய்=பரம சாந்தியுடையவனுய்த் துயரந்தீர்வாய்.

சுத்தமித்தையேயாதலின் அகங்காந் தொலைந்துபோம்=அத்தியந்தம் பொய்யேயாதலின் அகங்காரமானது கெட்டேபோம், மெய்யான தத்துவந்தனை நினைதலாற் சித்திலே சாற்றகங் காம் எங்கே=சத்தியவத்துவையே தியானஞ்செய்தலால் அறிவிலேகூறிய அகங்காரம் எங்கே யிருக்கும், மெத்துநீரிலே புழுதியும்=பூரணஜலத்திலே தூளியும், கனலிலே=அக்கினியிலே, மேவுதோயமும் உண்டோ=பொருந்துநீரும் உளதாமோ, நித்தரூபத்தை நினைந்து=நித்தி யப் பிரஹ்மரூபத்தைச் சிந்தித்து, இவன் நான் எனும்=நீ நான் இவன் அவன் என்பதான, நிச்சயமறநிற்பாய்=நிச்சயத்தைத் தவிர்த்து நிருவிகற்பமாவாய்.

(ஸ்ரீ-வீர) மலரிதழ் கசக்குவதினும், லோசன மீலனத்தினும், அகங்கிருதியின்றியாகம் சுகரமாம், இதிற்கிலேசமோ இறையுமில்லையாம், ஏகமாய் ஆதியந்தரகிதமாய், சின்மாத்திர மாய், அமலமாய், அந்தரமாய், ஆகாயத்தினும் அத்தியந்தந் தெளிவாய், சர்வவேதனமாய் இலங்கும்வத்துவே யிருக்கின்றது; சர்வப்பிரபஞ்சமும் பொய்யானுலிதுவே யிருக்குமென் பதாம், எல்லாம் பொய்யேயாயினும் அவற்றின்வேதனம் ஏகாதல்லவோ, சாதகாபாவத் தானே வேதனமில்லாமைக் கசித்தியாதலின், என்பதுகருத்தாம்; அஃதில்லாவிடின் ஜகத்துப் பிரசித்திக்குங் கூடாமையுண்மையினுனும் அஃதுளதேயாம், எங்கும் எப்போதும் சர்வ ஜந் துக்களிலும் சர்வப்பிரகாசமாம், அலையும் கடற்கல்லோலங்களிற் சலமேபோல, அஃதொன்றே யிலங்காநிற்கும்; ஈண்டகம் பாவமென்பதுதான் என்னே எங்கிருந்துவந்தது எவ்விதந்தான் வந்தது? ஆண்டுத்திருக்குத் திருசியங்களினிடையில், இவ்வகங்காரமானதுயாதாம்? எந்நிமித் தத்தானே வந்ததாம்? திருக்குத் திருசியமேலனத்தாலா, அல்லது வேறு வகையினுலா இஃதெழுந்தது? உபயவிலக்ஷண சுபாவத்தையுடையவிதற்கு உற்பவமே கூறமுடியாததாகும்; நீரிற்காய்ந்த தூளிக்கூட்டம் யாண்டையதாம், அக்கினியினின்றுந்தான் நீர் எழுவது யாண் டையதாயென்க.

அயம்=தேகாதி, ச=பிதுராதியினின்றும் உண்டானவன். யான் என்னும் வீணை எண்ணத்தை விட்டொழிப்பாய் மைந்தனே. அஞ்ஞான மாத்திரத்தாலுளதாய அகங்காராதி வஸ்துஞானத்தானே யடியோடுபோம், உண்மையாக அகங்காரமென்பதே கிடையாததாம், பொய்யாமயல்போலவாம், பாலகற்பித வேதாளமானது இல்லாதிருந்துமே இருப்பதே போலத் தோற்றுகின்றதன்றோ வறியாமையினல். அஞ்ஞானம்=சுத்தசாக்ஷியையானென்று பழகாதமோகம், அதனீக்கமேஞானமாம்.

(ச) குறைவிலாப்பொருள்=சர்வசாக்ஷி, பரமசித்தேயாகி=சின்மாத்திரமேயாய், ஏகமாய் நிற்கும் = ஏகப்பொருளாயிருக்கும் என்பதன்னுவயம். தத்துவந்தனை நினைதலால் = சிற்சொரூப பாவனையினல், நீரிலேபுழுதியும் கனவிலேதோயமும்போல், சிற்சொரூபத்திலும் அகம்பாவங் கூடாதென்பதுபொருள். இவனைவனெனன்னுந் தசைகாலவசத்தாய்ப் பரிமிதாகாரமாய்த் துச்சமானநிச்சயத்தை விடுவாயென்றதாயிற்று. (9-10)

(ஸ்ரீ - வீர - அ - கை) இதோபதேசம்செய்தல்:—திக்கென்பது.

திக்குங் காலமு முதலிய வசத்துறு சிறுவடி வறத்துன்பந்
தொக்க வன்னவற் ருன்மறை யாமலே சூக்கமாய் நொய்தாகி
மிக்க சோதியா யனைத்துமா யொன்றுமாய் மெய்யறி வொன்றேயாந்
தக்க விந்நிலை நில்லென வுரைத்தனன் றலைமையா முபதேசம்.

(ப - ரை) திக்கும்காலமும் முதலிய வசத்துறு=திசைகாலாதிகளினுனே வயப்படுத்தப் பெற்ற, சிறுவடிவற=துச்ச பரிச்சின்னவத்துவற, துன்பந்தொக்க அன்னவற்றுன் மறையாமலே=துயர்மயமாய அவைகளினுலே மறைபடாமலே, சூக்கமாய் நொய்தாகி=சூக்ஷுமமாகித் தெளிவாகி, மிக்கசோதியாய் = பரம்பிரகாசமாய், அனைத்துமாய் ஒன்றுமாய் = யாவுமாயேகமாய், மெய்யறிவொன்றேயாம்=சத்தியஞான வடிவமேகமேயாம், தக்க இந்நிலை=தகுந்த இந்தநிலையில், நில்லென=நிற்பாயாகவென்று, உரைத்தனன்=கூறினுன், தலைமையாமுபதேசம்=முக்கியமான வுபதேசம்.

(ஸ்ரீ-வீர) துச்சமாயளவுபட்ட ஆகாரமாய் திக்குக்காலபரவசமாய், விருத்தி யபக்ஷயாதிகளானே பரிணமிதமாய், உள்ளவற்றையானென அபிமானிக்கவேண்டாம், ஆயின் யான் யாவன் எனில் உரைத்தல்:—திக்குக்காலாதி யநவச்சின்னமாய்ச் சொச்சமாய் நித்தியோதிதமாய் வியாபகமாய் சர்வார்த்தமயமாய்=சர்வபதார்த்த விகாரவடிவமாயிலங்குவதாய், உண்மையாயோ பிறவற்றிற் கங்கமின்றியதாயிருத்தலினுலும், அத்வயமாயிருத்தலினுலும், ஏகார்த்தமாய், சின்மாத்திரமாய் அமலமாயிருக்கும் பொருளேநீயாவாய், இவ்வகைப் பரமயோகத்தை உத்தமோத்தம வுபதேசத்தை யடைந்தனன் ககன்; பரமான்மாவினுடன் பிரத்தியக்கான்மா அகண்டைக்கியத்தினுனே துணியப்பெறும் ஏதனுல் அதுயோகமாம், அதனைப் பெறும்படியான வுபதேசமாம்.

(ச) அனைத்துமாய்=சர்வார்த்தமயமாயினும், ஒன்று=ஏகமாகிய, மெய்யறிவொன்றே, அமல சின்மாத்திரமே, நீ யாமென்பதந்நுவயம். பரிமிதாகாரத் துச்சப்பிரத்தியயத்தை விடுதி. (11)

(ஸ்ரீ-வீர - அ-கை) கதையின் பொருளைத்திரட்டி ஸ்ரீ இராகவருக்கிதமுபதேசித்தல்:— சீவன் பொய்யென்பன.

சீவன் முத்தனு நிலைமைபெற் றகங்காரந் தீர்ந்தென தென்னுமன்
மேவு முட்பந்தம் வீழ்ந்துபோய்ப் புந்தியில் விகற்பங்க ளனைத்தும்போய்ப்
பாவ முற்றிய கசனின்ற நிலையினீ பற்றுத லறநிற்பாய்
கேவ லத்திந்த வகங்காரம் பொய்ம்மையாங் கெடுத்தல்பற் றுதல்வேண்டாம்

பொய்ய தாமுயற் கொம்பினைப் பற்றவும் போக்கவும் நினைப்பாரா
ரைய னேபர போதபூ ரணத்திலே யயலொன்று வருமாறென்
பொய்ய தாகிய வநேகபா வனையினைப் பொருந்தல் புன்பிறப்பாகு
மைய மின்றிய வேகபா வனையினி லழுந்துதல் பவந்தீர்தல்

(ப - ரை) சீவன்முத்தனும் நிலைமைபெற்று=சீவன்முத்தனுகிய ஸ்திதியினை யடைந்து, அகங்காரந்தீர்ந்து=அகங்காரமகன்று, எனதென்னுமல்=என்னுடையது என்று எண்ணுமல், மேவும் உட்பந்தம் வீழ்ந்துபோய்=பொருந்திய உட்கட்டு விழுந்தொழிந்து, புந்தியில் விகற்பங்கள் அனைத்தும்போய்=மதியின்மாட்டுள்ள விகற்பங்கள் யாவுமேயொழிந்து, பாவமுற்றிய=பரிபக்குவம் முதிர்ந்த சொரூபமாகிய, கசனின்ற நிலையில்நீ=கசனடைந்திருந்த நிருவிகற்பஸ்திதியில் நீயும், பற்றுதலறநிற்பாய்=ஆசக்தியில்லாமல் இருந்துவாழ்வாய், கேவலத்திந்தவகங்காரம் பொய்ம்மையாம் = கேவலம் இந்த அகங்காரமானது சொரூபத்தைத் தவிர்த்து வேறேயில்லையாம், கெடுத்தல் பற்றுதல்வேண்டாம்=தள்ளுதலும் கொள்ளுதலும் வேண்டாம்.

பொய்யதாம்=அத்தியந்தம் துச்சமேயாய, முயற்கொம்பினை=சசவிஷாணத்தை, பற்றவும் போக்கவும்=கொள்ளவும் தள்ளவும், நினைப்பார் ஆர்=எண்ணுவோர் யாவர்தாம், ஐயனே பரபோதபூரணத்திலே=இராகவனே பரஞானவியாபகத்திலே, அயலொன்று வருமாறென்= வேறொன்றுவரும் காரணமென்னே, பொய்யதாகிய=அசத்தாகிய, அநேகபாவனையினை = நானுவெண்ணங்களை, பொருந்தல்=கூடுதல், புன்பிறப்பாகும்= கீழான ஜன்மவேதுவாம், ஐயமின்றிய=சம்சயமில்லாத, ஏகபாவனையினில்=ஒரேவஸ்துவின்றியானத்தில், அழுந்துதல்= நிருவிகற்பபரியந்தஞ் செல்லுதல், பவந்தீர்தல்=ஜனனமரணந் தீர்தற்குக்காரணமாம்.

(ஸ்ரீ - வீர) தேவகுருவின் சுதனுகிய கசனுனவன் அதன்பின் ஜீவன்முக்தனுயினுன், மமதையற்றான், அகங்காரமற்றான், கிரந்தியற்றான், உபசாந்த மதியினனுயினுன், அக்கசனடைந்ததுபோலவே இராகவாநீயும் அவிகாரவானுகவிருப்பாய். அகங்காரத்தை யசத்தென்றுணர்தி, இதனைப் பற்றவும்வேண்டாம் விடவும்வேண்டாம், மித்தியாத்வ புத்தியினுலே உபேக்ஷணமே அதன்றியாகமாமலது, சுவத்வநிவர்த்தகயத்தின சாபேக்ஷமல்லவாம் என்பது கருத்து; அசத்தாகிய சசசிருங்கத்தினது தியாகக்கிரகங்கள் எங்கேனும் உளதுகொல்! அகங்காரம் பாதிதமாகவே எஞ்சியயான் எவ்விதமாயிருக்கின்றேன் எனின் உரைத்தல்:—நிரம்சன் சாந்தசங்கற்பன் சர்வபாவான்மகன் வியாபகன் பரம அணுவினும் அதிசூக்குமன், சின்மாத்திரன் அநாமயன் நான் என்று நீ உன்னைத் தெரிந்துகொள்ளுதி. இவ்வாறிருந்தும் அகம்பாவபாவிதனுகி அன்னியன்போன்றிலங்கினுய், ஆண்டென்னேதுவெனின்கூறல்:—பொய்யென்பதாதி. அபோதத்தானே ஜகத்சர்வமும் மாயாமயம்போலிருக்கும்; அதன் நிராசத்திலும் ஹேதுவ்வயறைதல்:—ஏகவென்பதாதி. போதத்தானே சகலமும் பிரஹ்மரூபமேயாய்விடுமனகனே.

(ச) உட்பந்தம்=கிரந்தி, முயற்கொம்புபோற் பொய்ம்மையாகிய, அகங்காரத்தைக் கெடுத்தலும்பற்றுதலும் வேண்டாமென்பது பொருள். (12-13)

கசன் கதை முற்றிற்று.

---

## மித்தியாபுருடன்கதை

(ஸ்ரீ-வீர-அ-கை) காரியதரிசனம் காரணதரிசனம் என்னுமிரண்டையும் விட்டு இரண்டினுந் தொடர்ந்திருக்கும் சன்மாத்திரம் ஆனவத்துவைப் பரிசேடிப்பித்து அதன்கண்ணே நிலைபெற்றவனுய்ச் சுகியாய் இருந்துவாழ்வாய், அதத்தரிசனம் செய்துகொண்டேயிருப்பினே, கூறப்பெறும் பொய்ப்புருடனுக்கேபோலத் துக்கப்பிராப்தி யுனக்குந் துர்வாரமாமெனத் தொடங்கல்:—இருமை ஞானமென்பன.

(ச-அ-கை) முன்பு சித்தத்தியாகமே சர்வத்தியாகமெனப்பட்டது, இப்போது விசாரமில்லாதபோது இன்பமாம் இவ்வகங்காரஞ் சம்சாரத்தில் வியர்த்தமாகவே துன்புறுமென்பதில் திருஷ்டாந்தமாக மித்தியாபுருடன் விருத்தாந்தம் நிரூபிக்கப்படுகின்றது:—

இருமையோ டொருமைநீக்கி நின்றறி லெய்தியின்ப
மருவுவாய் மித்தையான புருடன்போல் வருந்தவேண்டாங்
குருசிலே யெனலுமெந்தாய் கூறுபொய்ப் புருடனுனே
னொருபய னின்றித்துன்ப முற்றவ னுலைந்தவாறென்

ஞானமா மமுதினுலே நலம்பெற நிறைந்ததேனு
மியானறி வுறவித்தன்மை யியம்பென விராமன்கேட்ப
மானமார் வசிட்டன்சொல்வான் வள்ளலே நகைக்குமூல
மானவிக் கதையான்சொல்வ தறவியப் புளதுமன்னே.

(ப-ரை) இருமையோடொருமை = துவிதத்துடன் ஏகத்வம், நீக்கி = அகற்றி, நின்றதில் எய்தி=சேடித்துநின்றதில் திதிபெற்று, இன்பமருவுவாய்=சுகமடைவாய், மித்தையான புருடன்போல்=பொய்யான புருடனைபோல, வருந்தவேண்டாம்=துயருறவேண்டாம், குரிசிலே=இராகவனே, எனலும்=என்றுகூறலும், எந்தாய்=எனது ஞானசிரியரே, கூறுபொய்ப்புருடன் ஆனேன்=இனி இயம்புவதாகிய மித்தியாபுருடன் என்பவன், ஒரு பயனின்றி=ஒரு பிரயோஜனமில்லாமல், துன்பமுற்று=துயரத்தையடைந்து, அவனுலைந்த வாறென்=அவன் அவதிப்பட்டவண்ணம் என்னே.

ஞானமாம் அமுதினுலே=ஞானமாகிய அமிர்தத்தினுலே, நலம்பெற நிறைந்ததேனும்= நன்மையுறப் பூரித்ததேனும், இயானறிவுற = அடியேன்றெரிந்துகொள்ளும்படியாக, இத்தன்மையியம்பென=இவ்வரலாற்றைக்கூறுவாய்என்று, இராமன் கேட்ப=ஸ்ரீ இராகவர் வினதலும், மானமார் வசிட்டன்சொல்வான்=யாவரும் போற்றும் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவான், வள்ளலே நகைக்குமூலம்=இராகவனே சிரிப்புக்குக்காரணம், ஆனவிக்கதை=ஆகிய விந்தச்சரித்திரம், யான்சொல்வது = யாம்கூறுவது, அறவியப்புளதுமன்னே = அத்தியந்தம் ஆச்சரியமாம், மன் ஓ அசை.

(ஸ்ரீ - வீர) இருமையொருமை மதிகளைவிட்டுச் சேடத்தனுய்ச் சுகியாவாய், துக்கிதனுக வேண்டாம், வீணுகநீ பொய்ப்புருடனேபோல; தங்களுடைய ஞானமிருதத்தினுலே உள்ளே திருப்தியை மேலாகவே யடைந்துள்ளேன், அறியவேண்டியபொருளை நன்கறிந்து திருப்தனுனபோதிலும் மறுபடியுமே தங்களைக்கேட்கின்றேன், இவ்வினுவை யீசுரரே! யாவன்ருன் திருப்தனுனபோதினும் எதிரிலிருக்கும் குடிக்கத்தக்க அமிருதத்தைக் குடியாமலிருப்பன்? இவ்வண்ணம் புகழுதலினுலே யெதிர்முகப்படுத்திய குருவைநோக்கி, "துக்கிதனுக வேண்டாம் வீணுகநீ பொய்ப்புருடன்போல" என்று முன்குறிப்பிக்கப்பெற்ற மித்தியாபுருஷ ஆக்கியானத்தைக் கௌதுகத்தால் ஸ்ரீ இராகவர்வினுதல்:—ஹே முனிசிரேஷ்டரே! மித்தியா புருடன் எனப்பெயரியவன் யார் என்று கூறுகின்றீர்கள், பொய்ப்புருடனும் எவனுல் வஸ்து அவஸ்து ஆக்கப்பெற்றதோ, அவஸ்துவாகிய ஜகத்தும் வஸ்துசமுதாயம் ஆக்கப்பெற்றதோ, அவனைப்பற்றிக் கூறவேண்டும், எனக்கு விரைவில் என ஸ்ரீ வசிஷ்டபகவான்கூறல்:—ஹே இராகவனே! அதிசோபனமாய் எம்மாற் கூறப்பெறுவதும் தத்துவதிருஷ்டிகட்குச் சிரிப்புண்டாக்கத்தக்கதும், ஆகிய இவ்வாக்கியாயிகையை மித்தியாபுருடபோதப்பொருட்டுக் கேட்குதி.

(ச) இருமைமதி பேதவிஷயமாதலினும், ஒருமைமதி பேதத்துக்குரியதாய பிரதியோகி பேதத்தைக்குறிப்பித்தலினும், இரண்டையும் நீக்கி, நின்றதில்=பேதாபேதங்களால் விவகரிக்கத்தகாத சின்மாத்திர ரூபமானவஸ்துவில், எய்தி=திதிபெற்றவனுய், இன்பமருவுவாய், மித்தியாபுருடன்போல் நிர்நிமித்தமாகவே வருந்தவேண்டாம்.

நிறைந்ததேனும் எனதுசித்தந் திருப்தியானதாயினும். (1-2)

(ஸ்ரீ-வீர-அ-கை) மித்தையாம்புருடனையே வருணித்துக்கொண்டு கதையைத்தொடங்கல்:—ஒருவானிலேயென்பன.

ஒருதலத் தேகாந்தத்தி லுற்றசூ னியத்தி லுண்டாய்
மருவுமத் தலத்தினிற்போன் மாயையந் திரமயத்தோர்
புருடனுண் டஞ்ஞானத்தோன் புன்மையா யின்மைப்பண்பாய்
மிருதுவாம் புந்தியுள்ளோன் கேவல மிகுந்தமூர்க்கன்.

வானிலே சுருண்டுதோன்று மயிர்ச்சுருண் மருத்தலத்திற்
கானனீ ரென்னவன்னுன் ருேன்றியே கலந்தபாழிற்
சூனிய மலாதொன்றில்லை யாதொன்று தோற்றிற்றங்கே
மானவ வதுவுமன்னுன் மற்றவன் வளர்வுமாங்கே.

(ப - ரை) ஒருதலத் தேகாந்தத்தில்=ஒரு தனித்தவிடத்தில், உற்றசூனியத்தில்=பொருந்தியசூனியத்தில், உண்டாய்=உதிதமாய், மருவுமத்தலத்தில் நிற்போன்=உண்டாய அவ்விடத்திலிருப்போன், மாயையந்திரமயத்தோர் = மாயாயந்திரமயமாக ஒரு, புருடனுண்டு=புருஷனுளன், அஞ்ஞானத்தோன் = அறியாமையையுடையோன், புன்மையாய்=கீழாய், இன்மைப்பண்பாய்=பாலகுணத்தினுய், மிருதுவாம் புந்தியுள்ளோன்=கோமளமாகிய மதியினன், கேவலமிகுந்த மூர்க்கன்=கேவலம் அத்தியந்தம் மூடன்.

வானிலே சுருண்டுதோன்றும்=ஆகாயத்திலே சுருளாகப்பிரதீதியாகும், மயிர்ச்சுருள்=ரோமச்சுருள், மருத்தலத்தில்=மருப்பூமியில், கானனீர் என்ன=கானற்சலமேபோல, அன்னுன்=அம்மூர்க்கன், தோன்றியே கலந்தபாழில்=உதயமாகியே விரவியசூனியத்தில், சூனிய

மலாதொன்றில்லை:=அபாவம் அல்லாது ஒன்றுமேகிடையாது, யாதொன்று தோன்றிற் றங்கே = எப்பொருள் பிரதீதியாயது அவ்விடத்தே, மானவ வதுவுமன்னுன்=இராகவனே அதுவும் அவனேயாம், மற்றவன் வளர்வுமாங்கே=அம்மூர்க்கனது விருத்தியும் அங்ஙனமே யாம்.

(ஸ்ரீ-வீர) ஹே மகாபாகுவே! ஒரு மாயாயந்திரமயப்புமான் உளன், பாலன்போலக் கோமளமான மதியினுலே மூடன்விகற்பிதன், கேவலம் அஞ்ஞானத்தினுலே மறைக்கப்பெற்ற வன், அவன் ஜனதிருஷ்டியகோசரசூனிய ஒரு ஸ்தானத்தில் உண்டானுன், ஆண்டேயிருப் பன், அவனுக்குச் சொரூபத்தினுலும் பொய்ம்மையேபுகலல்:—வான் என்பதாதி. விண்ணின் மயிர்ச்சுருள்போலும், மருவில் மிருகதிருஷ்ணையேபோலும் உருவினன்; அவனிருக்குமிடத் தில் அம்மித்தியாபுருடனினும் அயல் ஒன்றுமேகிடையாது, எது சிறிது உளதாமெனத் தோற்றுகின்றதோ அது அவனே அயலாகவோ இலையாம். யாதுதான் அயல் அவன் காண் பான் அது மயக்கத்தால் அவனது விளக்கமேயாம், என அவனேயென்றதாம், யானேயித்திரு சியம் யாவுமென அவன்காண்கிலன், அதனுனே யவன்றுர்மதியாவன்.

(ச) ஏகாந்தத்தில்=நிஷ்பிரபஞ்சமாய், சூனியத்தில், நிர்விசேடமாம், ஒருதலத்து, விவ கரித்தற்கரிய சிதாகாச ரூபமானவஸ்துவில், உண்டாய் அத்தலத்தில் = அந்த வஸ்துவிற் றுனே, மாயையந்திரமயத்தோர் புருடன்=அகங்காரன்.

மயிர்ச்சுருளென்னவும் நீரென்னவுங்கூட்டுக, பாழில்=சிதாகாயத்தில், சூனியமலாது= மாயாபுருடனென்னும் அகங்காரத்தை யன்றி ஒன்றில்லை = வேறொன்றில்லை, ஆங்கே யாதொன்று தோன்றிற்று அதுவன்னுனே சகலமும் அகங்கார ஜந்நியமாதலின் என்க. பேலவம்=அற்பம். (3-4)

(ஸ்ரீ-வீர - அ-கை) அவனது செய்கையையறைதல்:—வேறென்பது.

வேறு மாயே யெப்போதும் விளங்குந் தன்மை யவன்காணுன்
கூறு வானோர் சங்கற்பங் கூடி னுன்விண் [illegible]னைப்பேணி
யூறு படாமல் வைக்குதுமீ துயர்ந்த தேயெ[illegible]ணித்
தேறு முவகை யுடன்விண்ணைச் சேமிப் ப[illegible]ஞோர் வீடமைத்தா[illegible].

(ப - ரை) வேறுமாயே = அயலுமாயே, எப்போ[illegible]ம் = எந்த[illegible]றும், விளங்குந் தன்மை=இலங்குந்தகைமை, அவன் காணுன்=அம்மூர்க்க[illegible]டிலன், கூறுவான்=அன் னுன், ஓர் சங்கற்பங்கூடினுன்=ஒரு எண்ணம்சேர்ந்தான், விண்ணினைப்பேணி=ஆகா யத்தைவிரும்பி, ஊறுபடாமல் வைக்குதும்=கெடாமல்வைப்போம், ஈதுயர்ந்ததே = இது மேலானதே, என்றுளத்துன்னி = என்பதாக வுள்ளத்தேசிந்தித்து, தேறு முவகையுடன் = தெளிந்த சந்தோஷத்துடன், விண்ணைச் சேமிப்பான், ஆகாயத்தைக் காப்பாற்றுவான், ஓர் வீடமைத்தான்=ஒரு கிரகஞ்செய்தான்.

(ஸ்ரீ - வீர) ஆண்டு விருத்தியை யடைந்துகொண்டிருக்கும் அவனுக்குச் சங்கற்பம் ஆண்டுண்டாயது, கம் மின்உபஜீவகன்யான், கம் மெனதுஉபஜீவியம், ஆதலின் கம்மேயான், இத்தகைய ஆகாயத்தை மறைத்து ரக்ஷிப்பேன், என்று நிச்சலனுனுன். எனது இஷ்டமா யவத்து ஆகாயம், அத்தனைச்சுயம் ஏதாவதொரு உபாதியின்கண்வைத்துச் சுயமாகவே யாதர வுடன் காப்பாற்றுவேன், என்று நன்குசிந்தித்து ஆகாச ரக்ஷையின்பொருட்டு அவன் கிருக மியற்றினன்.

(ச) வியதாதிரூபமாக விளங்கி, வேறுமாகி=பிரபஞ்சத்திற் கன்னியமாகியும், விளங்குந் தன்னை=பொருளை, அவன்காணுன்=அநுசந்தியான், மந்தமதியனுதலின் என்க, கூறுவான், சிதாகாயத்தில் வளரும் அம்மாயாரூபன், வைக்குதும்=ஓரிடத்தில் வைத்திரக்ஷிக்கின்றேன், யாதினுலெனில், ஈதுயர்ந்ததேயென்று, இஷ்டமான பொருள்பேணி இரக்ஷிக்கத்தக்கதன்றோ வென்றே, உளத்தெண்ணி. (5)

(ஸ்ரீ - வீர - அ - கை) அம்மனை கெடப்புலம்பி வேறுவிதமாகமுயலுதல்:—அந்தநில்லா வென்பன.

அந்த மனையில் விண்ணினைவைத் தளிக்கின் றேமென் றதிலாசைப்
பந்த முற்று மவன்வீடு படர்கா லத்தா லழிவெய்தி
யிந்த மருத்தாற் றரங்கம்போ லிருது முடிவால் வருடம்போற்
சிந்தி யொழிய வவன்கண்டு சேண்போ யினதென் றலறுற்றான்.

நில்லா வீட்டில் விண்ணேயோ நீயெங் ககன்றா யொருகணத்தி
லல்லா யானு யெனவீட்டி னுகா சத்துக் கறப்புலம்பிப்
பொல்லா மனத்தான் மீண்டங்கோர் புதிய கிணறு சமைத்தொருவர்
கொல்லா திதனி லிருத்து மெனக் கூபாகாச பரனானன்.

(ப - ரை) அந்தமனையில்=அவ்வீட்டில், விண்ணினைவைத்து=ஆகாயத்தைத்தாபித்து, அளிக்கின்றேமென்று=காப்பாற்றுகின்றேமென்று, அதிலாசைப்பந்தமுறலும்=அதன்கண் ணவாக்கட்டுறலும், அவன்வீடு=அவன்கிருகம், படர்காலத்தால் அழிவெய்தி=நெருங்கிய சமயத்தினுல் நாசமடைந்து, இந்த மருத்தாற்றரங்கம்போல் = இவ்வாயுவினுலே யலையே போலவும், இருதுமுடிவில் வருடம்போல் = சரத்துருவில் மேகமேபோலவும், சிந்தி யொழிய=கெட்டுப்போகவும், அவன்கண்டு=அம்மூடன் நோக்கி, சேண்போயினதென் றலறுற்றான்=ஆகாயம் போயிற்றென்றலறிக்கூவினுன்.

நில்லாவீட்டில்=நிலையில்லாதகிருகத்தில், விண்ணேயோ=ஓ ஆகாயமே, நீ யெங்கதன் றாய்=நீ யெவ்விடஞ்சென்றாய், ஒருகணத்தில்=ஒருக்ஷணத்தில், அல்லாயானுய்=இல்லா மலே போய்விட்டாய், என=என்று, வீட்டினுகாசத்துக்கு=கிருக ஆகாயத்திற்கு, அறப் புலம்பி=அத்தியந்தம் புலப்பமிட்டு, பொல்லாமனத்தான்=கெட்டமனத்தினையுடைய அவன், மீண்டங்கோர்=மறுபடியும் அவ்விடத்தில் ஒரு, புதியகிணறு=நவகூபம், சமைத்து=உண் டாக்கி, ஒருவர் = எவரும், கொல்லாதிதனில் = கெடுக்காது இதில், இருத்துமென = வைப்போமென்று, கூபாகாசபரன் ஆனன்=கிணற்றாகாசதற்பரன் ஆயினுன்.

(ஸ்ரீ - வீர) அக்கிருகத்தின் உட்பாகத்தில், எனது இது, இத்துணையாகாசம் என்னும் அபிமானம், அடைந்தனன், என்னாற் கம்இரக்ஷிக்கப்பெற்றது என்பதாக அவன், ஹே இரகு நந்தனனே! பின் கிருகாகாசத்தால் மகிழ்வுற்றவனுயினுன். சிறிது போதானதும் அவனது வீடு நாசத்தையடைந்தது, சரத்துருதுவினுலே அப்தம்போல வாயுவினுலே யலையேபோலக் கெடவும், ஹா கிருகாகாசமே நீநஷ்டமாயினையே! ஹா எங்கேகணத்தில் ஓடிவிட்டாயிஷீ, ஹாஹா அழிந்துபோனுயே! இவ்வாகாசம் சொச்சமாகவேயிருந்ததே! என்றவன் சோகித் தான். என நூற்றுக்கணக்காகப் புலம்பிப்புலம்பி மீண்டும் ஆண்டேயத்துர்மதி, காலக்ஷ யின்பொருட்டுக் கூபமுண்டாக்கினுன் கூபாகாசத்தில் மமதையினுலே பற்றுடையுவன் ஆயினுன்.

(ச) இருதுமுடிவால்=சரற்காலத்தால், வருடம்போல்=வருடகாலம்போல். (6-7)

(ஸ்ரீ - வீர - அ - கை) இனி முறையேகும்பம் குண்டம்சால்குதிர் என்பவற்றையமைத்துக் கெடக்கெடத் துன்புற்றழுதல்:—காலநம்பிக்குண்டந் தடனென்பன.

கால மதனுற் கூபந்தான் கழித லோடுங் கதறுற்முன்
சால வருந்தி மீண்டங்கே தனைக்காப் பதற்கோர் குடம்பண்ணிக்
கோல முடைய தெனமகிழ்ந்து கும்பா காச பானுெ
னீல முகிலே யக்குடமு நிகழ்கா லத்தா லுடைந்ததுவே.

நம்பி நம்பி யடைந்ததெலா நாச மெய்தத் திருவிலியக்
கும்ப விண்ணுக் கழுததற்பின் குண்ட மொன்றங் கேகெல்லித்
தம்ப மென்று தற்பானுய்ச் சார்ந்தா னந்தக் குழிதனையுந்
தும்பி கால மழித்துளதாற் றுன்னு மிருளைச் சுடர்போல.

குண்ட விண்ணுக் கழுததற்பின் குலவு நாற்சா ரகங்கட்டி
மண்டு மருள்கூர் தற்பானுய் வாழ்ந்தா னந்த மனைதனையு
மண்ட முழுதுங் கொல்கால மழிவு செய்ய வதற்கழுது
சண்ட பவன னிடைப்பட்ட சருகு போலத் தளர்ந் துலைந்தான்.

தடனுர் நாற்சார்க் கழுததற்பின் றற்காப் பதற்கோர் குதிர்பண்ணி
யிடனுர் குதிர்புக் கவனிருப்ப விதுவுங் கால னிறப்பித்தா
னுடனே குதிர்விண் ணினுக்கழுதா னென்றே வீடு குதிர்குண்டங்
குடநாற் சார மென்பவற்றுற் குறைவில் காலந் துயருற்முன்.

(ப - ரை) காலமதனல்=காலத்தினலே, கூபந்தான்=கிணறானது, கழிதலோடும்=கெட்டபோது, கதறுற்றான்=கோவென்றழுதான், சாலவருந்தி = மிகவும்நொந்து, மீண்டங்கே=மறுபடியும் அவ்விடத்தே தனைக்காப்பதற்கு=தன்னை யிரக்ஷிப்பதற்காக, ஓர் குடம்பண்ணி=ஒரு குடத்தைச்செய்து, கோலமுடையதென = அழகாக விருக்கின்றதென, மகிழ்ந்து=சந்தோஷித்து, கும்பாகாசபரன் ஆனன் = குடாகாசத்தைக் காப்பதிற்றற்பரன் ஆனன், நீலமுகிலே = சியாமளவடிவினனே! அக்குடமும் = அக்கும்பமும், நிகழ்காலத்தால்=சருவத்தையுந் துடைக்குங்காலத்தினலே, உடைந்ததுவே=பொடிந்ததுவே.

நம்பிநம்பி யடைந்ததெலாம் = விசுவசித்து விசுவசித்துப் பொருந்தியயாவும், நாசமெய்த=அழிவினையடைய, திருவிலி = அதிஷ்டமற்றோன், அக்கும்பவிண்ணுக் கழுததற்பின்=குடாகாசத்திற்கு அழுததன்பின்னர், குண்டமொன்றங்கேகெல்லி = குழியொன்றவ்விடத்தே தோண்டி, தம்மென்றுதற்பானுய்=இது அசையாதென்று அதனது தற்பரனகி, சார்ந்தான் = அடைந்தான், அந்தக்குழிதனையும் = அக்குழியையும், துன்னுமிருளைச்சுடர்போல=நெருங்கிய இருளினைப்பிரகாசமேபோல, தும்பிகாலம் அழித்துளது=யானை ஒருகாலத்தழித்து, ஆல் அசை.

குண்டவிண்ணுக் கழுததற்பின் = குழியாகாசத்திற்குரோதனஞ் செய்ததன்பின்னர், குலவு நாற்சாரகங்கட்டி=நாற்றிசைச் சாலையைப்பண்ணி, மண்டு மருள்கூர்தற்பானுய்=மிகுந்த திருவருணிறைந்து அதிலேயே கண்ணுங்கருத்துமாய், வாழ்ந்தான்=ஜீவித்தான்,

அந்தமனைதனையும்=அவ்வீட்டையும், அண்டமுழுதுங் கொல்காலம்=அண்டமியாவற்றையும் சங்கரிக்குங்காலமானது, அழிவுசெய்ய = நாசமியற்ற, அதற்கழுது = அதற்காக ரோதனஞ் செய்து, சண்டபவனனிடைப்பட்ட=பிரசண்ட மாருதத்திடையே சிக்கிக்கொண்ட, சருகு போல=திருணமொப்ப, தளர்ந்துலேந்தான்=தவர்ச்சியெய்திக் கட்டப்பட்டான்.

தடனூர் நாற்சார்க்கழுததற்பின்=விசாலம்பொருந்திய தொட்டிக்கட்டு வீட்டுக்கழுததற் பின், தற்காப்பதற்கோர் குதிர்பண்ணி=தன்னைக் காப்பாற்றுவதற்கொரு தொம்பைசெய்து, இடனூர்குதிர்புக் கவனிருப்ப = விசாலமாகிய அக்கூட்டினுள் நுழைந்து அவன் வாழ்ந்து கொண்டிருப்ப, இதுவும்=இதனையும், காலன்=மிருத்தியு, இறப்பித்தான்=நாசஞ்செய்தான், உடனே=விரைவில், குதிர்விண்ணினுக்கு = தொம்பைக்கூட்டாகாசத்திற்கு, அழுதான் = ரோதனஞ்செய்தான், ஒன்றே=ஒன்றுதானே, வீடு குதிர்குண்டம்குடம் நாற்சாரமென்பவற் றால் = மனை பத்தாயம் குழி கும்பம் நாற்சாலையென்னு மிவற்றினாலே, குறைவில்காலம் = நெடும்போது, துயருற்றான்=துன்பமடைந்தான்.

(ஸ்ரீ-வீர) பின் சிறிதுகாலங்கழித்து அவனது அக்கூபமும் குப்பைகூழந்தூளி முதலிய வற்றானே மறைதலேயடைந்தது, கூபாகாசம் சென்றொழியவே, சோகத்தில்மூழ்கி யழுது கொண்டேயிருந்தான். கூபாகாசப் பிரலாபாந்தத்தில் கும்பத்தை விரைவிற்செய்தனன், கும்பாகாசபரனாகிச் சுயம் அதனபிமான சுகத்தையடைந்தனன், அவனது கும்பமும் சிறிது காலங்கழித்து நாசத்தை யடைந்துவிட்டது இராகுநந்தனனே! எத்திசையைத்தானே அத் துர்ப்பாக்கியன் கொள்ளுகின்றனனோ, பொதுவகையிற் கூறியதனானே அதுபொருத்தமாம், கும்பாகாசப் பிரலாபாந்தத்தில் ஆகாச இரக்ஷையின்பொருட்டு அவ்வாறே குண்டத்தைச்செய் தனன், அதனானேயவன் குண்டாகாசபரனாயினன். அவனதுகுண்டமும், தேஜசினாலேதமமே போல, சிறிதுபோதிலே, ஏதோ ஒருவனத்திலுள்ள பெண் யானையின் விளையாட்டு நிமித்தத் தினாலே நாசத்தை யடைந்துவிட்டது, அக்குண்டகாசப்பொருட்டு அவன் அழுதுகொண்டே யிருந்தான்; குண்டாகாசத்தினது சோகாந்தத்தில் விண்ணைக் காக்கும்பொருட்டு, நாலுதிசை களிலும் சாலையுடையதாய், மத்தியில் மகாசாலையாகிய சபாகாரம் கிருகத்தையவனமைத்தான், அவ்வாகாசப்பற்றுதலினாலே அவ்வாகாசமயனாய், பெண்மயமாய ஜான்மனைப்போலும் ஆயினான்; சகலப்பிரஜைகளையும் கவளீகரிக்குங்காலன் விரைவிலதனையும் விழுங்கினன், காற் றுச் சீர்ணபர்ணமேபோலும் பின் சோகபரனேயாயினன், அவன் சதுர்ச்சாலையின் சோகாந் தத்தில் காக்ஷையின்பொருட்டு அம்புதாகாரமாய குசூலத்தை தானியம் கொட்டிவைக்கும் பத் தாயம்போன்றதனைச் செய்தனன், அதனாகாசபரனாயிருந்தனன்,அதனையுங் காலன் காற்றானது அம்புதத்தைப்போல, கெடுத்தனன், விரைவில், அக்குசூலநாச சோகத்தினாலே அவன் மிகவும் தாபத்தையடைந்தனன், இவ்வண்ணம் கிருகம் நாற்சாலை கும்பகுண்ட குசூலங்களினாலே அம்மித்தியாபுருடனுக்கு, முடிவில்லாத இக்காலமானது கடந்துகடந்து சென்றது.

(ச) மருள்கூர் = அறியாமைமிகுந்த எனப் பதம்பிரித்து அருத்தங்கொள்ளுகினும் அமையும்.

நில்லாய் வீட்டிலென்பதாதி=ஆதியில்வீடு அது நசித்தபோது கூபம் அதன்பின்பு கும் பம், அதன்பின் குண்டம், குழிவிசேடமஸ்தாலியும், அதன்பின் மகாவிசாலமான கிருகமாய்க் குலவுநாற்சாரகமென்னு நான்குசாலைகளின் கூட்டம் அதன்பின் குதிர்தானியத்தைச் சேமிக்கு

நிமித்தம் வேணுவினுற் செய்யப்பட்டதாந்தானமும்செய்கது நசிக்கும்போது துன்புறுவ னென்பது சங்கிரகம். (8-9-10-11)

(ஸ்ரீ-வீர-அ-கை) உபசங்கரித்தல்:—விண்ணென்பது.

விண்ணை வீட்டி லடைத்தவனுய் வீட்டில் விண்டான் ருனுகி
யுண்ணை வுற்ற பெருந்துயரா லுழைக்கும் பிழைக்கு மோரொருகா
லெண்ணி நிற்ப திதுபோவ திதுவென் றறியா னிவனென்று
புண்ணி யத்தின் வடிவாஞேன் புகல வீரன் புகலுற்ருன்.

(ப - ரை) விண்ணைவீட்டில் அடைத்தவனுய்=ஆகாயத்தைக் கிருகத்திலாச்சாதித்தவனுய், வீட்டில்=இல்லத்தில், விண்டான்ருனுகி=ஆகாயந்தான்ருனுகி, உள்நைவுற்ற பெருந்துயரால்=உள்ளே நோவுற்ற பெருந்துக்கத்தினுலே, உழைக்கும் பிழைக்கும் = அலேவினையும் அலுப்பினையுமடையும், ஓரொருகால்=ஒவ்வொருபோது, எண்ணி=வாடி, நிற்பதிது போவதிது என்றறியான்=நிலைப்பதிது செல்வதிது என்றுணரான், இவனென்று=இவனென்பதாக, புண்ணியத்தின் வடிவாஞேன்=தருமமூர்த்தியாய் விளங்கும் ஸ்ரீ வசிஷ்டபகவான், புகலவீரன் புகலுற்ருன்=அனுக்கிரகிப்ப இரகுவீரன் கூறுவதாவது.

(ஸ்ரீ-வீர) ஹே இராகவனே! அம்மித்தியாபுருடன், இம்முறைமையானே மனையினுலும் பிரவேசிக்கமுடியாத கூபகும்பாதியுபாதியினுலும் ககனத்தை யவ்வக் கர்ப்பத்தில், கவர்ந்து, வாழ்வன்; ஆன்மபுத்தியோடும் பரவசனுய்ச் சுற்றித்திரிவன்; அவ்வவ்வுபாதிகளிலே வைத்த அபிமானத்தையுடையவனுய், அதனுல் அவ்வவற்றையுண்டாக்கல் காத்தல் அழித்தல்களில், கனதர துக்காந்தரத்திலும் கனதர துக்கசமுதாயத்தை யடைவன், அவற்றினின்றும் வெளிப் போதலையும் செல்வன்.

(௪) இங்ஙனந் துக்கமயமாயிருக்கும் துன்மதியாம், அவன், வீட்டில்=குகையிலிருக்கும், விண்ணை=ககனத்தை; வீட்டில் சிறிது நிவாசஸ்தானத்தால், அடைத்தவனுய் = கிரகித்து, விண்டான்=ககனத்தாற் சனித்த; தானுகி = ஆன்மபுத்தியுடையவனுய், உள் = அக்ககன விஷயான்மபுத்தியால், நைவுற்ற பெருந்துயராலுழைக்கும் = மிகவதிக துக்கத்தினின்றுங் கன துக்கசாலத்தையடைவன், நிற்பதிது போவதிது வென்றறியான், உபாதிகளின் கமனுகமனசம்பந்தத்தால் மூடனுய்த்தான் போகின்றவனும் வருகின்றவனும் ஆவன். (12)

(ஸ்ரீ-வீர-அ-கை) உன்மத்த சேஷ்டைக்கொப்பாகிக் கிளம்பியபொருள், புத்திமான் கட்கு அசம்பவம் ஆமோவென வெண்ணினவராய், மித்தியாபுருட ஆக்கியாயிகைக்கு; வேறொரு பொருள்வைத்து விளம்பும் தொடர்மொழியேபோலும், வேறுபொருளிற் கருத்தாமென்று துணிந்து ஸ்ரீ இராகவர்வினுதல்:—பொய்யென்பது.

பொய்யா மனிதன் கதையாலென் புகன்ருய் மாயா புருடனையே
யையா விவன்விண் காத்தனனென் றறைந்த தேதென் றருள்கென்ன
மெய்யாம் வசிட்ட னுரைசெய்வான் மித்தியா புருட னென்றவிவன்
மையார் முகிலே சூனியமாம் வானி லெழுந்த வகங்கரமே.

(ப - ரை) பொய்யாமனிதன் கதையால் என்புகன்ருய்=மித்தியாபுருடன் கதையால் யாது கூறினீர்கள், மாயாபுருடனையே=அது மாயாபுருடனைப்பற்றியேயாம், ஐயா = ஹே ஞானசிரியரே! இவன்=இம்மித்தியாபுருடன், விண்காத்தனன் = காக்ஷைசெய்தான், என்

றமைந்தது=என்றுகூறியது, ஏதென்றருள்கென்ன=யாதென்று அநுக்கிரகம் செய்வீராக வென வினவ, மெய்யாம் வசிட்டன்=உண்மையாய ஸ்ரீ வசிஷ்டபகவான், உரைசெய்வான்= கூறியருளுவார், மித்தியாபுருடன் என்றவிவன்=பொய்ப்புமான் என்ற இவன், மையார் முகிலே=கார்முகில்வண்ணனே, சூனியமாம் = ஒன்றுமில்லையாம், வானிலெழுந்த அகங் கரமே=கம்மிலுதிதமாய அகங்காரமேயாம்.

(ஸ்ரீ - வீர) ஹே பிரபுவே! மித்தியாபுருடபிரசங்கத்திலே, தங்களால் எம்மாயாபுருடன் கூறப்பெற்றனனோ, அவ்விவன் என் கருதிக்கூறப்பெற்றனன், அவனாலாக்கப்பெற்ற வியோமரக்ஷணமும் என் கருதிக்கூறப்பெற்றது திருவருள் செய்தல்வேண்டும். ஹே இரகு நந்தனனே! மாயாயந்திரமயன் என யாவன் கூறப்பெற்றான், அவனை மாயாகாயத்தினின்றும் எழுந்த அகங்காரம் என்றுணர்தி.

(ச) மித்தியாபுருடன் என்றவிவன் = மாயையந்திரமயத்தோர் புருடனெனக் கூறிய வவனை இங்ஙனம், சூனியமாம் வானிலெழுந்த=சிதாகாசத்துதித்த, அகங்கரமே = அகங் காரமென்றுணர்தி. (13)

(ஸ்ரீ - வீர - அ - கை) கதையின் பொருளை வெளிப்படுத்தல்:—இந்தகூவம் விண் ணென்பன.

இந்த வுலகெல் லாமிருக்கு மிந்த விண்ணே ததுநிறைவுற்
றந்த மின்றிச் சிருட்டிதனக் காதி தனிற்றானேநிற்கு
மைந்த வதன்பா லகங்கார மருத்திற் பரிசம் வருவதுபோன்
முந்து தோன்றித் தனைக்காக்க முயன்றான் வடிவாய் முளையாதோன்.

கூவங் குண்டங் குடநாற்சார் குதிரென் பனவாங் குரம்பைகளை
மேவ நானு விதமாக விதித்து மீண்டு மீண்டிழுந்து
தாவ முற்று முடறோறுந் தனைக்காத் தனனென் றாகாச
பாவ னைக்கே நிலைப்பட்டான் பாழே வருந்திப் பதைத்தனனால்.

விண்ணு னென்றே சேமித்து விட்டா காச மாதிகளி
னண்ணு மெலிவுற் றிடுமித்தை யான்போல் வருந்தா தொழிகமலர்க்
கண்ணு விண்ணின் மிகப்பெரிதாய்க் களங்க மற்று நுண்ணியதா
யெண்ணு லடங்கா வழிவில்சிவ மியலாத் துமதத் துவந்தானே.

(ப - ரை) இந்த உலகெல்லாமிருக்கும்=இத்திருசியங்கள் யாவுமேயிருக்கும், இந்தவிண் ணேதது=இவ்வாகாசமேதது, நிறைவுற்று=நிறைந்து, அந்தமின்றி=முடிவின்றி, சிருட்டி தனக்காதிதனில்=யாவுமுண்டாவதற்கு முன்பு, தானேநிற்கும்=சுயமேயிருக்கும், மைந்த= குழந்தாய், அதன்பால்=அதனிடத்தில்,அகங்காரம்=அகங்காரமானது, மருத்திற் பரிசம்வரு வதுபோல்=காற்றினின்றும் ஸ்பர்தம் வருவதேபோல, முந்துதோன்றி = முதலில் உதய மாகி, தனைக்காக்கமுயன்றான்=தன்னை ரக்ஷிக்கப் பிரயத்தினப்பட்டான், வடிவாய் முளை யாதோன்=சொரூபமாய் முளைக்காதவன்.

கூவம் குண்டம் குடம் நாற்சார் குதிர் என்பனவாம்=கிணறுகுழி கும்பம் நாற்சாலை தொம்பை என்பனவாகிய, குரம்பைகளை=தேகங்களை, மேவ நானுவிதமாக=பொருந்தப்

பலவகையாக, விதித்து = விதானஞ்செய்து, மீண்டு மீண்டிழந்து = மறுபடி மறுபடியும் கெட்டு, தாவமுற்றுன் = சந்தாபத்தை யடைந்தான், உடல்தோறும் = தேகந்தோறும், தனைக்காத்தனன் = தன்னை ரக்ஷித்தனன், என்றுகாசபாவனைக்கே = என்று வியோமபாவனைக்கே, நிலேப்பட்டான் = ஒருமைப்பட்டான், பாழேவருந்திப்பதைத்தனன் = வீணுகவே வருத்தப்பட்டு அலறினுன்; ஆல் அசை.

விண்ணுனென்றே = ஆகாசம் யான் என்றே, சேமித்து = இரக்ஷித்து, வீட்டாகாசமாதிகளில் = கிருக ஆகாசமுதலியவற்றில், நண்ணு = பொருந்தி, மெலிவுற்றிடும் = தளர்வை யடைந்திடும், மித்தையான்போல் = பொய்ப்புருடன்போல், வருந்தாதொழிக = கட்டப்படாதொழிக, மலர்க்கண்ணு = தாமரை யிதழ்விழியோய்! விண்ணின் மிகப்பெரிதாய் = ஆகாயத்தினும் மிகவும் வியாபகமாய், களங்கமற்று நுண்ணியதாய் = மாசற்றுச் சூக்குமமாய், எண்ணுலடங்கா = எண்ணிக்கையில் அடங்காத, அழிவில் சிவம் = கெடாதசிவமே, இயல் ஆத்தும தத்துவந்தானே = சுபாவசித்தமான ஆன்மதத்துவந்தானே.

(ஸ்ரீ - வீர) ஹே சாதுவே! எவ்விவ்வாகாச கோசத்தில் இவ்வுலகமெல்லாமிருக்குமோ, அது சிருஷ்டிக்கு முன்பு முடிபின்றியதாய், ஒரு திருசியமுமில்லாததாய் இன்னபடியென்று இயம்பமுடியாததாய்ச் சுயமாகவேயிருந்திலங்கும், நிரதிஷ்டானமா யாகாசத்தினின்றும் கிளம்பியதா? ஆண்டேயிருப்பதா? எனின் அற்றன்றெனல்:—அது நிரதிஷ்டானமாகாதாம், மற்றே, உள்ளே அதிஷ்டானத்தன்மையானே யிருப்பதாம், முற்றினுங் காணமுடியாததாம் அந்தப் பிரஹ்மவஸ்துவென்க; அற்றேல் அதீந்திரியத்தினின்றும், எங்ஙனம் அகங்காராதியுலகம் கிளம்பியது? எனின் ஆண்டுத் திருஷ்டாந்தம்கூறுவாம். ஆகாயத்தினின்றும் சப்தமேபோலுமறியலாம், அகங்காரம் லிங்காத்மாவாம் அதுவும் மாயாத்மாவேயாம், என்று கருதி ஆண்டுத்திருஷ்டாந்தம் வேறுகூறல் :—மைந்தவென்பதாதி. அதனினின்றும் அகங்காரமானது முன்பு அநிலத்தினின்றும் ஸ்பந்தமேபோல உண்டாம்; அநாத்மாவேமயலால் ஆன்மத்தன்மையை யடைவுற்றதாய் தனதுகாரணமாய ககனத்தில்வளர்வையடைந்து ஆயிரக் கணக்கான கற்பனைகளால், இஃதெனக்கிஷ்டம் இஃதநிஷ்டம் என்பதாதியாகக் கற்பிக்கும் அக்கற்பித்தானேயான் என்னும் ஆன்மாபிமானத்தால், இது இஷ்டாநிஷ்டப் பிராப்திபரிகாரப்பொருட்டு முயலும். அநாத்ம ஆத்மைகரக்ஷையின் பொருட்டு நானுவிதமான தேகங்களை மீளமீளவும் அது விநாசமாயினும் ஆகுலத்தோடுகூடிச் சிருட்டித்துக்கொண்டே யிருக்கும், அவ்வநான்மபூத ஆன்மரக்ஷையின்பொருட்டு முயன்று பூர்வபூர்வதேகம் நாசமாக உத்தரோத்தரம் நானுவிததேகங்களைக் காமகருமவாசனைகளை யனுசரித்துச் சிருட்டிக்கும், அவ்வகங்காரமே மாயாபுருடன் பொய்ப்புருடன் அசத்தாகவே யுண்டானேன், வீணேதிரிபவன், மாயையினுலே யகங்காரமாம், கூபகும்பாதி சப்தங்களினுலும் மேற்கீழான தேகங்களே இலக்கணையானே கூறப்பெற்றனவாமெனல்:—கூவமென்பதாதி. கூபகுண்ட சதுர்ச்சாலை கும்பாதிதேகங்களைச் செய்துகாக்கும், ஆன்மாவென்வடையும், அதனவச்சின்ன மாயாமய ஆன்மாவின்கண்ணே ஆன்மபாவனையை யடையுமென்றபடி. தூர்மதி பார்ப்பதில்லையென வருணித்த அஞ்ஞமித்தியாபுருடன் எங்ஙனம் மித்தியாக்கிலேசத்தை யனுபவித்து இருந்து வருந்தினுனே அங்ஙனம், நீயாகவேண்டாம் எனல்:—மெலிவென்பதாதி. எவ்வாறுதான் மித்தியாபுருடன் வியோமாத்மசங்கையினுலே காத்துக்கொண்டு கடாகாசாதிகளில் அனுற்றனனே இவ்வண்ணம் கிலேசவானுகவேண்டாம் ஆகாயத்தினும் விஸ்தீர்ணமாய்ச் சுத்தமாய்ச் சூக்குமமாய்ச்சுபமாய்ச் சிவமேயுளதாம்.

(ச) அந்தமின்றி=அபரிச்சின்னமாய், நிறைவுற்று = சர்வோபாதிரகிதமாய், அதனால், விண்—அசத்தென்னும் விவகாரத்துக்கு விடயமின்மை, அசத்தாய்த்தா னிதுமுன்பிருந்தது அதினின்றே சத்துதித்ததென்னுஞ் சுருதியினால், இத்தன்மையான எப்பொருள் சிருட்டிக் காதியினிற்கும், அதன்பால்=அவ்வஸ்துவினின்று, மூந்து=பிரதமம், அகங்காரந்தோன்றி= உதித்தது, மருத்தில்=திமிதவாயுவினின்றும், பரிசம்=சலனம், வருவது போலாமென்ற தாயிற்று, வடிவமாய் முளையாதோன் ஆன்மவஸ்துக் கந்யமானவனென்றும் இவ்வகங் காரன், தனைக்காக்க=சிதாகாசரூபமான தன்னைக்காப்பதற்கு, முயன்றான், நாளுவிதமான தேகங்களை மாறிமாறி விநாசமாயினும் சிருஷ்டிப்பனென்றதாயிற்று. இவ்வகங்காரன் கடாதி துல்லியங்களான குரம்பைகளை=தேகங்களை, விதித்து=செய்து, தனைக்காத்தனனென்று= ஆகாசதுல்லியமான ஆன்மா இரக்ஷிக்கப்பட்டான் என்று, ஆகாசபாவனைக்கே நிலைப்பட்டான் அச்சிதாகாசத்திற் பாவனையையடைந்தான். (14-15-16)

(ஸ்ரீ-வீர - அ-கை) அவ்வான்மதத்துவத்தின் இயல்பினையே அறைதல்:—அவ்வாத்தும வென்பது.

அவ்வாத் துமதத் துவங்காண லாமோ வெவர்க்கு மகப்படுமோ
விவ்வா றிருக்க வுடலிறந்தா லிதயா காச மாத்திரத்தை
வெவ்வா ளரசே நானிறந்தே னென்று மெலிவர் விவேகமிலோர்
தவ்வா விசும்பு கடாதிகடான் றகர்ந்த போது தணந்திடுமோ.

(ப - ரை) அவ்வாத்மதத்துவங் காணலாமோ=அந்த ஆன்மதத்துவமானது காணுதற் கேலுமோ, எவர்க்கும் அகப்படுமோ=யாவருக்கேனும் கிடைத்திடுமோ, இவ்வாறிருக்க= இந்தப்பிரகாரமிருக்க, உடலிறந்தால்=தேகமிறந்தால், இதயாகாசமாத்திரத்தை=உள்ளிருக் கும் ஆகாசமாத்திரத்தை, வெவ்வாளரசே=கொடிய வாளாயுதத்தைத்தரித்த மன்னவனே! நானிறந்தேன் என்று=நான் நசித்தேன் என்பதாக, மெலிவர் விவேகமிலோர் = தளர்வர் அறிவிலாதவர், தவ்வாவிசும்பு = கெடாதககனம், கடாதிகடான்றகர்ந்தபோது=குடமுத லியவை யுடைந்தபோது, தணந்திடுமோ=அழிவையடையுமோ, அழியதாம்.

(ஸ்ரீ-வீர) யாது ஆத்மாவோ அது எங்ஙனம் எதனால் எவனாற் கவரப்பெறும் காக்கப் பெறுந்தான்; இருதயாகாச மாத்திரப்பொருட்டுச் சரீரவடிவ விநாசத்தினது சம்க்ஷயமாம் போது, வீணாகவே பிராணிகள் ஆன்மா நஷ்டமாய்விட்டது என்னும் சங்கையினாலே சோகிக்கின்றார்கள்.

(ச) அவ்வாற்றுமதத்துவம் = இவ்வான்மரூபம், விண்ணின்மிகப் பெரிதாயிருத்தலின் அது காணலாமோ=எப்படி யறியப்படும், எதனால் அகப்படும், இரக்ஷிக்கப்படுவதாம், அதற் கன்னியமான வஸ்துவேயின்மையின் என்பதுகருத்து. இதயாகாசமாத்திரத்தை = இருதய புண்டரீகாவச்சின்னமான ஆகாசம், உடலிறந்தால்=சரீரம் இறக்கின், விவேகமிலோர் நான் இறந்தேனென்று வியர்த்தமாகமெலிவர். (17)

(ஸ்ரீ - வீர - அ - கை) சொரூபத்தியல்புசொல்லல்:—கடமென்பது.

கடம துடைந்தால் விண்பிரியா காய மழிந்தா லுயிரழியா
தடவி தாஞ்சின் மாத்திரமாய்ச் சத்தாய் விண்ணி னுண்ணியதாய்த்
தொடரு மணுவுக் கணுவாகுஞ் சொரூபமைந்தா நானென்று
படரு மனுபூ தியினளவே பயிலு நபம்போ னசித்திலதால்.

(ப - ரை) கடமதுடைந்தால்=குடமானது பொடியானால், விண்பிரியா=ஆகாயமானது பிரியமாட்டாது, காயமழிந்தால்=சரீரமழிந்தால், உயிரழியா=ஆத்மாவழியமாட்டாது, தடவிதாஞ்சின்மாத்திரமாய்=விசாலமான அறிவுமாத்திரமாய்; சத்தாய் = இருப்புமாத்திரமாய், விண்ணின் நுண்ணியதாய் = ஆகாயத்தினும் அதிசூக்குமமாய், தொடரும் அணுவுக்கணுவாகும்=சம்பந்திக்கும் அணுவினுக்கும் அணுவாகும், சொரூபம்=வடிவம், மைந்தா = குழந்தாய்! நான் என்றுபடரும் அனுபூதியினளவே பயிலும்=சுவானுபூதி யம்சமாத்திரமேயாகும், நபம்போல் நசித்திலதால்=ஆகாயம்போலழியாது. ஆல் அசை.

(ஸ்ரீ-வீர) குடமுதலியவை நஷ்டமானபோதினும் எவ்வாறு ஆகாயமானது அகண்டிதமாக விருக்கின்றதோ அவ்வாறு தேகங்கள் நஷ்டமானபோதினும் தேகியானவன் நித்தியம் அலேபகனேயாவன்; சுத்தசின்மாத்திரமாம் ஆன்மாவாகியவிது ஆகாயத்தினும் மகத்து அணுவினுமணுவாம் சூக்குமத்தினும் சூக்குமமாம், சுவானுபூதியம்சமாத்திரமேயாம் = அகங்கார நிஷ்கிருஷ்ட சுவப்பிரகாசசித்து அத்துணைமாத்திரமாகவே யிருப்பதாம், கம்மேபோலுங் கழியாதாம்.

(ச) சொரூபம்=இவ்வான்மா, சுத்தசின்மாத்திரமாய்ச் சூக்ஷுமமான ஆகாயத்தினும் சூக்ஷுமமாம், நிரவயவமாதலின் என்க, நான் என்றுபடரும் அனுபூதியினளவே பயிலும்= ஆன்மா சுவாநுபவமாத்திர ரூபமாதலின், குடம்போல் நசித்திடும், இது பழையமாடம், சரீரம் அவ்வாறு நசித்தபோதினும், சரீரி ஆகாசம்போல் நசியாதென்பது கருத்து. ஆதியென்றதால் திக்காதியமூர்த்த திரவியசங்கிரகமாம். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை) இதோபதேசத்துடன் கதையை யுபசங்கரித்தல்:—யாது ஆபத்தென்பன.

யாது மென்று மெவ்விடத்து மிறத்தல் பிறத்த லிலதாகு
மோதும் விவர்த்த ரூபத்தா லுலகாய் பிரம மேவளரு
மாத லாலிவ் வுலகெல்லா மடியு முடியு நடுவுமறப்
பேத மறப்பா வாபாவம் பிறவாப் பொருளென் றிடர்தீர்வாய்.

ஆபத் துக்கெல் லாநிலய மசித்த மவச மவிவேகம்
பாபத் துக்கு முதன்மடமை பலவித் தழிவைப் பற்றியது
தாபத் துக்கோ ரிடமான தகவி லகங்கா ரந்தன்னை
நீபற் றில்லா வறிவாலே நீக்கி லதுவே நிமலநிலை.

(ப - ரை) யாதும்=எப்பொருளும், என்றும்=எப்போதும், எவ்விடத்தும்=எல்லாவிடங்களிலும், இறத்தல் பிறத்தல் இலதாகும்=மரித்தல் ஜனித்தல் இல்லவாகும், ஓதும் விவர்த்தரூபத்தால்=வேதாந்தங்களிற் பிரதிபாதிக்கும் விவர்த்தவடிவத்தானே, உலகாய்ப் பிரமமேவளரும்=ஜகமாய்ச்சிவமே தோற்றுநிற்கும், ஆதலால்=ஆகையினால், இவ்வுலகெல்லாம்=இத்திருசியங்களியாவும், அடியும்முடியும் நடுவுமற=ஆதிமத்தியாந்தரகிதமான, பேதமற=வேற்றுமையற்ற, பாவாபாவம் பிறவா=பாவாபாவம் விடுபட்ட, பொருள் என்றிடர் தீர்வாய்=அயவத்துவென்று துயரந் தீர்ந்துய்வாய்.

ஆபத்துக்கெல்லாநிலயம்=ஆபத்துக்கட்கெல்லாம் இடம், அசித்தம்=அத்துருவம், அவசம் = அசுவதந்திரம், அவிவேகம் = விவேகமற்றது, பாவத்துக்குமுதல் = மறகாரணம்,

மடமை = அறியாமை. பலவித்தழிவைப்பற்றியது = பலபீஜம் நாசத்தையுறுவது, தாபத்துக்கு ஒரிடம்=மூத்தாபத்திற்கும் ஒப்பற்றஸ்தானம், ஆன=இத்தன்மையான, தகவிலகங்காரந்தன்னை=அயோக்கியமாய அகங்காரத்தினை, நீ=இராகவனேநீ, பற்றில்லா வறிவாலே=அசங்கோதாசீன ஞானத்தினுலே, நீக்கில்=அகற்றில், அதுவே நிமலநிலை = அதுதானே நின்மலஸ்திதியாம்.

(ஸ்ரீ - வீர) உண்டாவதுமில்லை ஒழிவதுமில்லை, எங்கும் சிறிதும் ஒருபோதும், ஜகத் விவர்த்தரூபத்தானே கேவலம் பிரஹ்மமே விளையாடுகின்றது; சத்தியம் ஏகம் பதம்சாந்தம் ஆதிமத்தியாந்த வர்ஜிதம், பாவாபாவவிநிர்முக்தம் என்றெண்ணிச் சுகியாவாய். வருணித்த மித்தியாபுருடரூபமாய வகங்காரத்தை விடுப்பித்துக்கொண்டு பரிசிஷ்ட சிஷ்டசின்மாத்திரத்தில் ஸ்தைரியவுபதேசத்தால் உபசங்கரித்தல்:—ஆபத்தென்பதாதி. எல்லாவாபத்துக்கட்கும் இடமானது, நிலையில்லது, பரவசத்தன்மையைச் சம்பாதித்துக்கொடுத்தலால் அசுவதந்திரம், ஆயது நரகாதிகளில் விழுவதற்கு ஹேதுவாயது, சருவவிவேகவிரோதி, இகழத்தக்கது, அறியாமையே வடிவமாயது, யான் எனது என்றெண்ணுவனவாய தேகேந்திரிய விடயலக்ஷண கலாசகிதமாயது என்னும் அகங்கிருதிபதத்தைப் போதத்தினுலே மூலோச்சேதமாக விட்டுச் சேடமாய சிட்கிருட்ட சின்மாத்திரத்தில், அதிதிடமாக வுறைதியேல், சர்வோத்தமத் தன்மையை யினிதாக அடைவாய்.

(ச) யாதுமிறத்தல் பிறத்தலிலதாகும், மற்றென்னெனில், பிரஹ்மமே உலகாய் விவர்த்த ரூபத்தால் வளரும், பூர்வரூபத்தைவிடாமல் ரூபாந்தரத்தைச் சுவீகரிப்பது விவர்த்தம், சுத்திரஜதாகாரத்தால் விவர்த்தமாவது, போலாம்; பூர்வரூபத்தைவிட்டு ரூபாந்தரத்தைச் சுவீகரிப்பது பரிணமம் பால் தயிராகாரம்போலாம். இவ்வுலகெல்லாம், ஆதிமத்தியாந்த வர்ச்சிதமாய், பாவாபாவம் பிறவா=பாவாபாவங்கள் என்னும் சன்மநாசங்களால் விடுபட்டதாய், பேதமற, சாந்தமானது; பொருள்=அத்துவிதீயமான பிரமம், என்றெண்ணி யிடர்தீர்வாய்= சுகியாவாய்.

மடமை=சடம், அழிவைப்பற்றியது, நச்சுவரம், மானதகவில்=அப்பிரமாணிகம், அகங்காரந்தன்னை=அகங்காரரூபமான வஸ்துவனைத்தையும், அறிவாலே=ஆன்மசொரூப ஞான வேதுவினுல், நீக்கில்=நீக்கி அகங்காரரகிதமான ஞானத்திற்றிதியுறல், நிமலநிலை=ஜீவன் முக்தியைப்பெறுவாய். (19-20)

## மித்தியாபுருடன் கதை முற்றிற்று.

---

## விரதத்திரய கதை = ஸ்ரீ பிருங்கீச உபாக்கியானம்

(ஸ்ரீ - வீர - அ - கை) சர்வஜகத்திற்கும் மனோவிகற்பமாத்திரத்தன்மையுண்மையின், அவிகற்பவஸ்துப் பிரதரிசனத்தால், நிராஸம் எளிதாம் என உணர்த்துவித்தற்பொருட்டுப் பிரதமம் பரப்பிரமத்தில் மனக்கற்பனையைக் கூறி, அதாவது, சர்க்காதிகாலத்தில் எல்லாக் கற்பனைகளினும் முன்புமனமாம், அதுவும் அந்தப் பரப்பிரமத்தில் தனிச்சத்தை பெறும விருப்பதாகியே கற்பனுந்தா நிமித்தத்தன்மையானே இப்போது எல்லாத்திதியையும் அடைந்த

தாம் என்றுரைத்து, தனிச்சத்தையில்லாமலே திதிபெறுதற்குப் புஷ்பகோசத்திலாமோதம் போலவும் பெருங்கடலிற் பேரலைபோலவும் எனத் திருட்டாந்தங்கூறி, அதாவது இருப்ப தாகியே என்பதைத் திருட்டாந்தவாயிலாய்த் தெளிவுபடுத்தித் திதியடைதலை விரித்துரைக் கின்றார்:—ஆதலால் என்பது.

(ச - அ - கை) முன்பு அகங்காரத்திற்கே மித்தையானசோக காரணத்தன்மையாமெனப் பட்டது, இப்போது அங்ஙனமாயின் புத்திவிசிராந்தி யெப்படியாமெனச் சங்கைவரிற் சமா தியாலன்றியும், மகா கருத்துருத்துவாதியாற் புத்திக்குவிசிராந்தி சித்திக்குமென விரதத்திரய கதையால் நிரூபிக்கின்றார்:—

ஆதலாற் காண்பவற்றி னுண்மைநிலை யிப்படியே யறிவில்வையம்
பேதமாய் வேறொன்றிற் பிறந்ததிலைக் கயிற்றிலராப் பிறப்பதேபோ
லாதபனில் வேறிலையா தபமென்றே பாவித்தோர்க் காதபந்தான்
பேதமற வாதபனும் பேணுநிரு விகற்பமிது பேசுங்காலே.

(ப - ரை) ஆதலாற் காண்பவற்றின் = ஆகையினாற்றிருசியத்தின், உண்மைநிலை யிப் படியே=யதார்த்தஸ்திதி யிவ்வாறே, அறிவில்வையம்=உணர்வில் உலகம், பேதமாய்= வேற்றுமையாய், வேறொன்றிற் பிறந்ததிலை=அயலொன்றில் உண்டாயதிலை, கயிற்றில் அராப் பிறப்பதேபோல் = இரஜ்ஜுவில் அரவுண்டாவதேபோலும், ஆதபனில் வேறிலை = சூரிய னிலும் அயலாகவில்லை, ஆதபமென்றே=கிரணமென்றே, பாவித்தோர்க்கு=பாவனை செய்த வர்க்கு, ஆதபந்தான் = கிரணந்தான், பேதமறவாதபனும் = வேற்றுமையில்லாமலிரவியே யாம், பேணுநிருவிகற்பமிது பேசுங்காலே = விரும்பும் விகற்பமில்லாதது இது பேசும் போதே.

(ஸ்ரீ - வீர) அவ்வதிருசிய ஆத்மதத்துவத்தின் விஸ்மிருதியினாலேயே அதாவது அநுசந் தானஞ்செய்யாத அறியாமையினாலேயே, சர்வஜகத்கற்பனா மூலத்தன்மையானே இருப்பை யடைந்துளது; கண்டதையும் கடியதையு மெண்ணுகின்றபடியினாலேயே அறியாமையாலுல கம் பொலிகின்றது; இரஜ்ஜுபுஜங்கமேபோலும் ஜகத்தானது, அயலொன்றினின்றும் வந்த தல்லவாம். அல்லாதொழியவே ஜகத்சன்மாத்திரத்தினும் அன்னியமாகப் பாவிக்கில் அயலே யாம், சன்மாத்திரத்தன்மையானே விபாவனஞ்செய்யினோ சத்துரூபமாய பிரஹ்மமேயாம், எனத் திருஷ்டாந்தங்களானேகூறுதல்:—ஆதபனில் என்பதாதி. இந்த இரஸ்மிஜாலத்தை யாவன் சூரியனுக்கயலாகப் பாவிக்கின்றானோ, அவனுக்கோ இது சூரியனினும் அயலே போலத் தோற்றும்.

(ச) வையம்=இந்தச்சகம், அறிவு இல்=சர்வப்பிரபஞ்ச அதிஷ்டானமான ஆன்மதத்து வத்தின் அனுசந்தான மின்மையினாலே, நிலை = பிராமாணிகபுத்தியைப் பொருந்திற்று, வேறொன்றில்=மற்றோர் காரணத்தினால், பிறந்ததிலை, எங்ஙனமெனில், கயிற்றில் அராப் பிறப்பதேபோல், கயிற்றில் ஆரோபிதமான அராக்கயிற்றுருவஞ் ஞானத்தினாலே சித்தமாம், மற்றோர் ஹேதுவினால் அல்ல அதுபோலாம், எந்தப்புருடன் ஆதபம் = கிரணஜாலத்தை, ஆதாவனில் வேறென்றே=ஆதித்தியனிற் பேதமாக, பாவித்தோர்க்கு = பாவிக்கின்றானோ அவனுக்கு, ஆதபந்தான்=அக்கிரணஜாலமனைத்தும், ஆதபனும்=ஆதித்தியனுக் கன்னியம் போலாம், என்றதருத்தாபத்தி. (1)

(ஸ்ரீ-வீர-அ-கை) இப்போது யதார்த்ததிருஷ்டியை யறிவிப்பார் வியதிரேக அன்வய திருஷ்டாந்தங்கூறுகிறார்:—பொன்னென்பது.

பொன்னில் வேற்றுமையன்று கேயூர மெனநினையிற் பொன்னொன்றேயா
மின்னதே நிருவிகற்ப மென்பா ரிரவிவெயி லென்றுநாடின்
மின்னுகதி ரிரவிக்கு வேறுபோ லாங்கண்டாய் விவிதமாகத்
துன்னுநா னாத்துவம்விட் டறிவதிலா நல்லறிவிற் றுணிந்துநிற்பாய்.

(ப - ரை) பொன்னின் வேற்றுமையன்று கேயூரம்=சுவர்ணத்தினும் பேதமல்லவாம் பூஷணம், எனநிலையில் = என்றெண்ணில், பொன்னொன்றேயாம் = தங்கமொன்றேயாம், இன்னதே நிருவிகற்பமென்பர் = இதுதானே நிர்விகற்பம் என்றுகூறுவார், இரவிவெயில் என்றுநாடின் = சூரியகிரணம் எனநோக்கில், மின்னுகதி ரிரவிக்கு = பிரகாசியாநின்ற கிரணஞ் சூரியனுக்கு, வேறுபோலாங்கண்டாய்=அன்னியம்போல் ஆம்பார்ப்பாய், விவித மாக = நானாவிதமாக, துன்னு நானாத்துவம்விட்டு = பொருந்தும் பன்மையைவிடுத்து, அறிவதிலா நல்லறிவிற்றுணிந்துநிற்பாய் = அப்பிரமேயமாய சுத்தவுணர்வில் திடமாக இருப்பாய்.

(ஸ்ரீ - வீர) கனகவியதிரேக மாகக்கேயூரம் எவனாற் பாவிக்கப்பெற்றதோ கேயூரமேயது அவனுக்காம், அது அவனுக்குக் கனகமாகாதாம், வஸ்து ஐக்கியபுத்திக்குக் கேயூரத்தானே தடையுண்மையின் என்பதுகருத்தாம். ஆதித்தியனினும் அயலிலாமலே கிரணங்கள் எவ னாற் பாவிக்கப்பெற்றனவோ, அவனுக்கவை ஆதித்தியனேயாம், சூரியனினும் அயலாகவிலா மல் இரஸ்மிபேத விகற்பசூனியமேயாம் என்று கூறப்பெறும். கனக அவ்யதிரேகமாகக் கேயூரம் எவனாற் பாவிக்கப்பெறுமோ அவன் கனக ஏகமகாபுத்தியுடையவனாய் நிருவிகற்பன் எனக்கூறப்பெறுவன். திருஷ்டாந்தத்திற் பிரதிபாதித்த விகற்பத்தியாகப் பிரகாரத்தைத் தார்ட்டாந்திகத்தில் உபதேசித்தல்:—விவிதமென்பதாதி. அகில நானாத்தன்மையையும் விட்டு, திருசியங்கள் ஒன்றும் இல்லாததான தூயசின்மாத்திர உட்பிரத்தியக்குவத்துவாகிய சம்வித்துத் தத்துவத்தில், திதனாயிருக்கக்கடவாய். ஆல் அசை.

(ச) பொன்னில் வேற்றுமையென = கனகத்தின்வேறாக, கேயூரம் எவனாற் பாவிக்கப் படுகிறதோ, அவனுக்கு அது கேயூரமேயாம், பொன்னன்றென்பதும் அது; இப்போது அபேதபாவனையைக்கூறல்:—எந்தப்புருடன் ஆதபம் = கிரணஜாலம், ஆதபனில் வேறல வென்றே=ஆதித்தியனுக்கு வேறலவாக, பாவித்தோற்கு = பாவிக்கப்படுபவனுக்கு, ஆதபந் தான்=கிரணங்கள், ஆதபனும்=ஆதித்தியனேயாம், அப்பூமான் அபேததரிசியாம், நிர்விகற்ப னென்பவென்றதாம், பொன்னில் வேற்றுமையன்றென = கனகத்தின் வேறலவாக, கேயூர நினையில். கேயூரம் எவனாற்பாவிக்கப்படும், பொன்னொன்றேயாம், கேயூராதிகளிற் கனக மென்னும் ஏகபுத்தியுடையவவன் நிர்விகற்பனென்பர். வடமொழியில் முற்கூறியிருக்கும் இரண்டருத்தாபத்தியையும் இக்கவிநாயகர் இரவி வெயிலென்றுநாடில் மின்னுகதிரிரவிக்கு, வேறு மேலாங்கண்டாய் என்பதிலடக்கிப் பிற்கூறினரென்றுணர்க. அறிவதிலா நல்லறிவில்= சுத்தமான சின்மாத்திரத்தின் கர்ப்பத்திருப்பதாய்த் திருசியசம்பந்தமற்ற நல்லறிவின்கண்ணே துணிந்துநிற்பாய் ஸ்திததனாய்ச் சமாகிதனாயாவாய். (2)

(ஸ்ரீ - வீர - அ - கை) சங்கற்பமேயாவுமெனக் காணவேண்டுமெனல்:—சங்கற்பமென் பது.

சங்கற்ப மெனும்பிராண சத்தியினைத் தற்பரமந் தானேதன்னாற்
பொங்குற்ற வாயுவலை வைச்செய்யு மாறுபோற் புரிந்தபோது
சங்கற்ப விரியுருவா யயல்போலாய்ச் சகவடிவாய்த் தனைத்தானாடிப்
பொங்குற்ற மனமாகுஞ் சங்கற்ப மயமாமிப் புவியைக்காண்க.

(ப-ரை) சங்கற்பமெனும் பிராணசத்தியினை = சங்கற்பமென்று சொல்லப்பெற்ற விளங்கா நின்ற சக்தியினை, தற்பரமந்தானேதன்னால் = தற்பரம்பொருளானது தானாகவே தன்னாலே, பொங்குற்றவாயு = வீசாநின்ற வாயுவானது, அலைவைச் செய்யுமாறுபோல் = அசைவைச் செய்யுந்தன்மையேபோல, புரிந்தபோது = செய்தபோது, சங்கற்பவிரியுருவாய் = விரிந்த சங்கற்ப வடிவமாய், அயல்போலாய் = வேறுபோலவாய், சகவடிவாய் = உலகுருவமாய், தனைத்தானாடி = தன்னைத்தானே நோக்கி, பொங்குற்றமனமாகும் = குமுறுநின்றவுள்ளமாகும், சங்கற்பமயமாம் = சங்கற்பவடிவமாம், இப்புவியைக்காண்க = இவ்வுலகத்தை நோக்குக.

(ஸ்ரீ - வீர) ஆன்மாவானது சுயமாகவே சொப்பிரகாச வடிவமாகவே சங்கற்பமெனப் பெயரியசக்தியை அநிலம் ஸ்பந்தசக்தியைப்போல எப்போதுசெய்யுமோ அப்போது மனமாகின்றது; வேறுபோல விளங்குவதாய், சங்கற்பகலனுமயமாய் மனமாகின்றது. விசுவாகாரமான தனதாகிருதியைப் பாவித்துக்கொண்டு, சுயம் விசுவான்மாவாகிய சமஷ்டி மனமாகின்றது. அவ்விசுவாகார சங்கற்பாத்மக சமஷ்டிசித்தமானது ஹிரணியகர்ப்பான்மகமாய்ச் சங்கற்பங்களினாலே எங்ஙனம் இவ்வகில வுலகத்தையும் சங்கற்பியாநிற்குமோ அவ்வாறே கணத்திலாம். ஆகையால், இவ்வெல்லாவுலகமும் சங்கற்பமயமாகவே காணப்பெறும்.

(ச) தற்பரமன் = ஆன்மாத்தானே எப்போது சங்கற்பமெனும் பிராணசத்தியினை, வாயுவலைவை = பந்தசத்தியைப்போல், தன்னால் = காரணாந்தரமின்றியே, புரிந்தபோது = காரிய உன்முகமாக்குவன், அப்போது, அவன்போலாய், ஆன்மாவுக்கந்நியம்போல் விளங்குவதாய், சங்கற்பவிரியுருவாய், சகவடிவாய் = சர்வப் பிரபஞ்சான்மகமாய், தனை = தனதாகாரத்தைப் போல், தானேநாடில் = பாவித்தவனாய், மனமாகும் இப்புவியை = விசாலமான இச்சகத்தைச் சங்கற்பமயமாய்க்காண்க = சங்கற்பமயமாகவே காணவேண்டும். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை) யாவுஞ் சின்மாத்திரமேயெனல்:—தெரியென்பது.

தெரிபொருளொன் றுளதல்லப் பொய்யுமல சொற்பனத்தின் றிரள்போற் றோன்றுந், தெரிபவன்கேட் போன்சொல்வோன் பரிசிப்போன் மணங்கொள் வோன் செல்வோன்மீள்வோன், புரிவனவெல் லாந்தானே புதிதாகு மலவெல்லாம் பொருளொன் றோர்வாய், புரிதருநின் றொழிலெல்லா மலமறுசின் மாத்திரமாம் பொருளேகண்டாய்.

(ப - ரை) தெரிபொருள் ஒன்றுளதல்ல = திருசியம் எதுவுமேசத்தல்ல, பொய்யுமல = அலீகமென்னுந் துச்சமுமல்ல, சொப்பனத்தின்திரள்போற்றோன்றும் = கனக்கூட்டம் போலக் கமழும், தெரிபவன் = காண்போன், கேட்போன் = சிரவணிப்பவன், சொல்வோன் = பகர்பவன், பரிசிப்போன் = தீண்டுவோன், மணங்கொள்வோன் = முகர்பவன், செல்வோன் = நடப்பவன், மீள்வோன் = திரும்புபவன், புரிவனவெல்லாந்தானே = செய்வனயாவுந்தானே, புதிதாகுமல = அபூர்வமல்ல, எல்லாம் பொருளொன்றோர்வாய் = சர்வமும் சத்தியவத்துவென்றே சிந்திப்பாய், புரிதருநின்றொழிலெல்லாம் = செய்யாநின்ற நினது கிரி

யைகளியாவுமே, மலமறு சின்மாத்திரமாம் = தூயதான அறிவும்மாத்திரமேயாம், பொருளே கண்டாய்=வத்துவேயென்று கண்டுகொள்வாய்.

(ஸ்ரீ - வீர) இது சத்தியமுமல்ல மித்தையுந்தானல்ல, மித்தைச்சத்தம் அலீகபரமாம், சொப்பனஜாலம்போல அநிர்வசனீயமாகக் கிளம்பியதாம், கேவலம் மனோராஜ்ஜியமாத்திரமேயாம். நடக்கும் கேட்கும் உறும்மோக்கும் நாவாற்பேசும் விவகரிக்கும், மூடக்குமொன்றும் புதிதல்ல, முற்றும்மெய்யாம் பரம்பொருளே, என்று திடமாய்ப்பாவிக்கவேண்டும், யாதுயாது நீ செய்கின்றனையோ அதனையெல்லாம் சின்மாத்திரமாம் அமலவியாபக சிவமென்றேயுணர்தி.

(சு) உளதல்ல=தத்துவஞானத்தினல் நசித்தலின், சத்தியமன்றும், பொய்யுமல = விவகரிக்கப்படுதலின் மித்தையுமன்றேயாம், மற்றென்னெனில், சொற்பனத்திரள்போல் அநிர்வசனீயமாகத் தோன்றும். (4)

ஸ்ரீ-வீர-அ-கை) பிரஹ்மத்தினின்றும் அயலாக ஒரு பொருளுமேகிடையாது என்ல்:— பெருமென்பது.

> பெரும்பெரிய வடிவான பிரமமே யாதலாற் பிறிதொன்றில்லை
> வரும்பொருளெல் லாமறிவின் கனதையா யிருத்தலிவ் வையமெல்லாங்
> கரும்புயலே யறிவேயாங் கற்பனைவே றில்லையாற் காணப்பட்ட
> வரும்பொருள்க டமிலறிவுண் டாதலினு லறிபொருளா மனைத்துமில்லை.

(ப - ரை) பெரும்பெரிய வடிவானபிரமமே=பெரிதுக்கெல்லாம் பெரிதானவுருவமாம் பிரஹ்மமே, ஆதலால் = ஆகையினல், பிறிதொன்றில்லை = அயலொன்றுமே கிடையாது, வரும்பொருள் எல்லாம்=வாராநின்ற பொருள்கள்யாவும், அறிவின் கனதையாயிருத்தலில்= சித்தின் பொம்முதன்மாத்திரமாக விருத்தலின், இவ்வையமெல்லாம் = இச்சகத்துயாவும், கரும்புயலே = கார்மேகம்போன்ற வண்ணனே! அறிவேயாம் = சித்தேயாம், கற்பனைவேறில்லை=யாதொரு கற்பனையுமேகிடையாது, காணப்பட்ட அரும்பொருள் கடமில்= திருசியமானமாம் அரியவத்துக்களில், அறிவுண்டு=உணர்வுளது, ஆதலினல் = ஆதலின், அறிபொருளாம் அனைத்தும் இல்லை=திருசியமாம் யாவுமேகிடையாவாம்.

(ஸ்ரீ-வீர) பிரபிரும்மிதாகாரமாய பிரஹ்மமேயுளதாதலின் அயலொன்றில்லையேயாம், பிரபிரும்மிதாகாரம் = விவர்த்தவிஜ்ரும்பிதாகாரம் ஆதல், தற்பாதவிஜிரும்பித ஆகாரம் ஆதல் ஆம், பிரஹ்மசுபாவம் கூறப்பெற்றது, பிரயத்தியக்கினிடத்தில் முடிவுபெறுத்தல்:— வருமென்பதாதி. சர்வ பதார்த்தக்கூட்டத்திலும் சம்வித்சாரமயம் திதமாகவே, இவ்வகிலவுலகமும் அறிவேயாம், அன்னியகற்பனையிலதேயாம், சம்வித்ஸ்புரணமாத்திரமாகிய இச்சகச்சாலகப் பெயரியதில் இதுவேறும் இறுவேறுமென்னும் பொய்க்கவர்ச்சி யெங்கேயோ அகிலாகாரங்களில் ஓரறிவுக்கே சம்பவமுண்மையின், சம்வேத்தியமும் அதன்காரணமுமே கிடையவேகிடையாதாம்.

(சு) வரும்பொருள் எல்லாம்=வஸ்து சமூகமனைத்தும், அறிவின்கனதையாம் = சம்வித்தென்னும் மெய்ஞ்ஞானமாத்திரப் பிரமாணமாய், இருத்தலில், சம்வித்தென்னும் பகவதியேவிஷயமுளதெனத் தோற்றற்குச் சரணமென்னு நியாயத்தினல், இவ்வையமெல்லாம், அறிவேயாம் = சம்வித்தேயென நிச்சயிப்பாய், இதில், கற்பனைவேறு = பேதகற்பனை, இல்லை,

காணப்பட்ட வரும்பொருள்கடனில்=சகல பொருள்களின், ஆகாரங்களிலும், அறிவு=ஏக மான சம்வித்தே, உண்டாதலினல் = உண்டான ஏதுவினல், அறிபொருளுமாமனைத்தும்= திருசியவஸ்துவும், இல்லை=இலதேயாம். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை) இவ்வாறிருப்பாயென இதோபதேசஞ்செய்தல்:—ஆதலினலென் பது.

ஆதலினற் பந்தம்வீ டெங்குளது வீடிதென வடுத்தபந்த
மீதெனவெண் ணுவதெல்லாம் வலிந்தகற்றி யபிமான மிறையுமின்றித்
தீதுதவிர் மௌனியாய்ப் பொறிவென்று மானமதந் தீர்மேலோனு
யோதியநின் காரியஞ்செய் திராமனே யகங்கார மொழிந்துநிற்பாய்.

(ப - ரை) ஆதலினல்=ஆகையினல், பந்தம்வீடெங்குளது = கட்டுவிடுதலை யெங்கே யுளது, வீடிதென வடுத்தபந்தம் ஈதென=இது மோக்ஷமெனவந்தபந்தம் இதென்று, எண் ணுவதெல்லாம் = நினைப்பதெவற்றையும், வலிந்தகற்றி = கட்டப்பட்டகற்றி, அபிமான மிறையுமின்றி=அபிமானஞ் சிறிதுமில்லாமல், தீதுதவிர் மௌனியாய்=குற்றமற்ற மவுனி யாகி, பொறிவென்று=இந்திரியங்களைச் செயித்து, மானமதந்தீர்மேலோனய்=வெகுமான முஞ்செருக்கும் இல்லாத மகாத்மாவாய், ஓதியநின் காரியஞ்செய்து = மந்திரியாதியர் கூறியநினது விவகாரத்தையியற்றி, இராமனே=இராகவனே, அகங்காரம் ஒழிந்துநிற்பாய்= நிரகங்காரியா யிருந்துவாழ்வாய்.

(ஸ்ரீ - வீர) ஆகையினற் பந்தமோக்ஷங்கள் எங்ஙனமாம், ஹே இராகவனே! இது மோக்ஷம் இதுபந்தம் என்பதாதியான பயனின்றிய அபிமானமியாவற்றையும் சகல சிந்தை களையும் முழுமுயற்சியாலும் தீர்த்து, வாக்காதி சர்வேந்திரியஜயத்தானே மௌனியாய் வசியாய் மானமதமற்றவனய், உனக்குரிய இராஜ்ஜியாதிகாரியத்தைச் செய்பவனய், அகங் கிருதியற்ற மகாத்மாவேயாகிச் சுகியாயிருப்பாயாக.

(ச) ஆதலினல்—திருசியமின்மையின், பந்தம்வீடெங்குளது பேதத்திற் கட்டுறுமவன் இன்மையின்பந்தமின்று, அஃதின்மையின் மோக்ஷமின்றென்பது பொருள்; இது வீடெனவும் இது பந்தமெனவும் எண்ணுவதெல்லாம், சகல பந்தமோக்ஷமான சிந்தையை வலிந்தகற்றி அபிமானம் இறையுமின்றி மௌனதியுக்தனய், நின்காரியங்கள் செய்திடினும் அகங்காரம் ஒழிந்துநிற்பாய். (6

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்ரீ வசிட்டபகவான் மூன்றுவிரதங்களை யனுட்டிப்பாயாகவென ஸ்ரீ இராகவர் அவற்றைவினதல்:—மோகமென்பது.

மோகத்தில் வருமைய மெல்லாம்போ யறுதிநிலை முற்றும்பற்றி
மாகத்தன் மாபோகி மகத்தான தியாகியாய் வாழ்கியென்ன
மேகத்தை நிகர்வள்ள லிம்மூன்று குணங்களெவை விளம்பாயென்ன
யோகத்தை யுணர்முனிவ னக்குணமூன் றையுந்தோன்ற வுரைக்கலுற்றன்.

(ப - ரை) மோகத்தில்வரும் ஐயம் எல்லாம்போய் = மயக்கத்தினல் வாராநின்ற சமு சயங்களியாவுமே நீங்கி, அறுதிநிலை முற்றும்பற்றி = முடிந்தநிலை முழுவதையுமே கைக் கொண்டு, மாகத்தன்மாபோகி மகத்தானதியாகியாய் வாழ்கியென்ன = மகத்தான கருத்தா வாய், மகாபோகியாய் மகாத்தியாகியாய் வாழ்வாயாகவென்று அருள, மேகத்தை நிகர்வள்

ஸல் = கார்மேகத்துக்கொப்பான வர்ணத்தையும் நிரபேக்ஷிககருணையையும் உடைய தலைவன்ன லாகிய ஸ்ரீ இராகவர், இம்மூன்று குணங்களுளவை விளம்பாயென்ன = இந்த மூன்றுவிர தங்களியாவைகூறுவாய் என்றிட, யோகத்தை யுணர்முனிவன் = சகல சிட்டைகளையும் சார்ந்த மனனசீலபகவான், அக்குணமூன்றையுந் தோன்ற = அம்மூன்று விரதங்களையும் தெரி யும்படியாக, உரைக்கலுற்றான் = கூறத்தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர) ஹே அனகனுகிய இராகவனே! சர்வபுண்ணியபாவாதி சங்கைகளையும் நன் ருகவிட்டு சாசுவதமான தைரியநிர்ப்பய கூடஸ்தபாவத்தைக் கைக்கொண்டு மகாகருத்தா வாகவும், மகாபோக்தாவாகவும் மகாத்தியாகியாகவும் ஆவாயாக. என்றதைக்கேட்ட ஸ்ரீ இராகவர், எவ்விலக்கணம் வாய்ந்தவன் மகாகருத்தாவெனக் கூறப்பெறுகின்றான், எவ்விலக் கணம் வாய்ந்தவன் மகாத்தியாகியெனக் கூறப்பெறுகின்றான், எவ்விலக்கணம் வாய்ந்தவன் மகாபோக்தாவெனக் கூறப்பெறுகின்றான், ஹே பிரபுவே அடியேனுக்கு நன்ருகக் கூறவேண் டும் என்று பிரார்த்திப்ப.

(ச) அறுதிநிலை சாசுவதமான தைரியத்தை. (7)

(ஸ்ரீ - வீர - அ - கை) முன்னொருகாலத்தில் பிருங்கீசனுக்கு ஸ்ரீ கைலாசபதி இம் மூன்றை யனுக்கிரகஞ்செய்ததை ஸ்ரீ வசிட்டபகவான் கூறத்தொடங்கல்:—மூன்று இச்சக மென்பன.

மூன்றுவகை விரதமெனு மிதுதன்னைப் பிருங்கீசன் மோகம்போக
வேன்றுபரம் பொருளறியும் விருப்பினு லேமகிரி வடகோடெய்தி
வான்றுணையாஞ் சங்கரனைத் தொழுதிறைஞ்சி யிப்பிறவி மயக்கைநோக்கித்
தோன்றுணர்வி லாறுதலில் லாமையினுன் மோகித்துத் துவண்டேனென்றும்.

இச்சகமாய் பழங்குடிலி லிளைப்பாறி நான்றிரிவ தெங்ஙனென்று
மச்சமறு நிச்சயமா மொழுங்கையருள் வாயென்று மன்பாற்கேட்ப
நிச்சயமா யரனருள்வா னையமெலா மறுத்தறுதி நிலைமைபற்றி
மெச்சியமா கத்தன்மா போகிமாத் யாகியாய் விடுவையென்ன.

(ப - ரை) மூன்றுவகை விரதமெனுமிதுதன்னை = முப்பிரகாரமாய விரதமென்னும் இதனை, பிருங்கீசன் மோகம்போக = பிருங்கி இருஷியானவர் போகமானதுநீங்க, என்று = இயன்று, பரம்பொருள் அறியும்விருப்பினுல் = பரமான்மவத்துவை யறியவேண்டுமென் னும் இச்சையினுல், ஏமகிரிவடகோடெய்தி = சுமேருபருவதத்தின் வடக்குச்சிருங்கத்தை யடைந்து, வான்றுணையாஞ் சங்கரனை = யாவருக்கும் உயிர்த்துணையாம் சுககாரணுகிய ஸ்ரீ மகா தேவரை, தொழுதிறைஞ்சி = நமஸ்கரித்துத் தோத்தரித்து, இப்பிறவிமயக்கை நோக்கி = இச்சனனமயக்கத்தை நாடி, தோன்றுணர்வில் = பிரதீதியாகும் அறிவில், ஆறுதல் இல்லாமை யினுல் = விசிராந்தியில்லாமையினுல், மோகித்துத்துவண்டேன் என்றும் = மயங்கித் தளர்ச்சியடைந்தேன் என்றும்.

இந்தச்சகமாம் = இவ்வுலகமாம், பழங்குடிலில் = பழைய குடிசையில், இளைப்பாறி நான் றிரிவது = விசிராந்தியையடைந்து யான் உலாவுவது, எங்ஙன் என்றும் = எவ்வாறு என்றும், அச்சமறு நிச்சயமாம் = பயமில்லாத துணிபாம், ஒழுங்கையருள்வாய் = கிரமத்தை யனுக்கிர கஞ்செய்வாய், என்றும் = என்பதாகவும், அன்பாற்கேட்ப = பக்தியினுலேவினவ, நிச்சய

மாய்=துணிபாய், அரனருள்வான்=பரமேசுரர்கூறுவார், ஐயமெலாமறுத்து = சமுசயம் யாவற்றையும் அகற்றி, அறுதிநிலைமைபற்றி=முடிவான ஸ்திதியைப்பற்றி, மெச்சிய=யாவ ரும்புகழும், மாகத்தன்=மகா கருத்தா, மாபோகி=மகாபோகி, மாத்யாகி = மகாத்தியாகி, ஆய்=ஆகி, விடுவையென்ன=சகல கவலைகளையும் விட்டொழிப்பாய் என்றருளலும்.

(ஸ்ரீ - வீர) இந்த விரதத்திரயமும் இராகவனே முன்னர் ஸ்ரீ சந்திரார்த்த மௌலியி னாலே, பிருங்கீசர்பொருட்டு இனிதுபதேசிக்கப்பெற்றது இதனாற்றான் பிருங்கீசர் யாதொரு தாபமுமின்றி யிருக்கின்றார், அப்பியாசகாலத்தை யபேக்ஷித்து விரத்திரயமெனக் கூறப்பெற் றது, பலகாலத்திலோ, அமானித்வாதிகமேபோல இது இலக்கணத்திரயமாயுறும்; சுமேரு உத்தரசிருங்கத்தில் பூர்வம், ஸ்ரீ சசிகலாதரர் அக்கினிபோன்று மிகப்பிரகாசமான பிரதேசத் தில் சமக்கிரபரிவாரத்துடன் எழுந்தருளியிருந்தார், மகாதேஜஸையுடையவரும் மந்த ஆன்ம ஞானரும், ஆகியிருந்த பிருங்கீசர் நமஸ்கரித்துத் தோத்தரித்து, அஞ்சலியத்தராய் ஸ்ரீ உமா பதியாய மகாதேவரை வினவுவாராயினர், காணபத்தியப் பிராப்திகாலத்திலேயே சர்வஞ்ஞத் தகைமையவரானே அடையப்பெற்றுளதாமென்றாலும், ஆன்ம ஞானத்திற்கு இதரஞான சாதாரண்யமன்றென்பதன் பொருட்டுப் போகாசக்தியினாலே மந்தபாவம் ஆரோபித்துக் கூறியதாம். ஹே பகவானே தேவதேவேசரே! சர்வஞ்ஞரே பரமேசுரரே! யாதடியேன் வணக்கத்துடன் வினவுகின்றனனோ அதனைக் கிருபையினாலே யடியேனுக் கனுக்கிரகிக்க வேண்டும்; தரங்கதரலாசுவர இச்சமுசார ரசனையை நன்குநோக்கி நாதனே! மிகவும் மோகத் தையடைந்துள்ளேன், தத்துவத்தை யறிந்திருந்தபோதினும் போகாசக்தியினாலே விசிராந்தி வர்ஜிதனாயுள்ளேன்; விசிராந்தி சுகரம்மியமும் நன்னிலையுற்றதும் ஆகிய எவ்வுண்ணிச்சயத் தை யங்கீகரித்து இச்சகத்ஜீர்ணகிருகத்தில் தாபமற்றவனாகியிருப்பேன் என்ன, ஈசுரர் அரு ளல்:—ஹே அனகனே! சருவசங்கைகளையும்விட்டுச் சாசுவதமான தைரியத்தைப்பற்றி மகா போக்தாவாய் மகாகர்த்தாவாய் மகாத்தியாகியாய் இருப்பாயாக.

(ச) மூன்றுவகை விரதமெனு மிதுதன்னை யானருள்வான் என்பதந்நுவயம். (8-9)

(ஸ்ரீ-வீர - அ-கை) அம்மூன்று விரதங்களையும் என்னென வினாதலும் பரமேசுரர் அவற்றுண் முதலதன் இலக்கணத்தைக்கூறுதல்:—செப்பிய மோனமென்பன.

செப்பியவிம் மாகத்தன் மாபோகி மகத்தான தியாகியென்ற
விப்பரிசு விளங்கவரு ளெனக்கேட்ட பிருங்கீசற் கீசன்சொல்வான்
வெப்பமுறு மிராகமுனி யின்பமிட ரறம்பாவ மிருமிவற்றின்
றப்பில்பலா பலமிவற்றில் விருப்பமறச் செய்வோனே தனிமாகத்தன்.

மோனமுற வகங்காமு மானமுமச் சாமும்போய் முடுகிவாடா
தீனமிலா தனசெய்வோ னெங்கணுமன் பறச்சாட்சி யெனலாயிச்சை
த்தானறவே காரியஞ்செய் வோன்வெருட்சி யானந்தந் தாக்குறாதோன்
ஆனசம னாய்த்தொழிலா விடர்சுகங்க ளுதயமுறா தவன்மாகத்தன்.

(ப - ரை) செப்பிய இம்மாகத்தான் = திருவாய்மலர்ந்தருளிய இந்த மகாகத்தன், மாபோகி=மகாபோகி, மகத்தானதியாகி=மகாத்தியாகி, என்ற இப்பரிசுவிளங்க அருள் = என்றருளிய இத்தகைமையரைப்பற்றி விளங்கும்படியாகத் திருவருள் செய்யவேண்டும், எனக்கேட்ட=என்று வினவிய, பிருங்கீசற்கு=பிருங்கி இருஷிக்கு, ஈசன் சொல்வான்=

பரமேசுரர் திருவாய்மலர்ந்தருளுவார், வெப்பமுறும் = வெம்மைமிகுந்த, இராகம்முனிவு = இராகத்துவேட்டம், இன்பமிடர் = சுகதுக்கம், அறம்பாவம் = புண்ணியபாவம், மிகுமிவற்றின் = அதிகமாகிய இவற்றினுடைய, தப்பில் = தவறாத, பலாபலமிவற்றில் = பலாபலம் என்னுமிவற்றின்கண், விருப்பமற = இச்சையில்லாமல், செய்வோனே = இயற்றுமவனே, தனிமாகத்தன் = ஒப்பிலாத மகாகருத்தனுவான்.

மோனமுற = மௌனமுற, அகங்காரமும் = அகங்காரமும், மானமும் மச்சரமும் போய் = வெகுமானமும் மாச்சரியமும் அகன்று, முடுகிவாடாது = கிளர்ச்சியடைந்து வாட்டமடையாது, ஈனமிலாதனசெய்வோன் = புலவரானவர்கள் புகழவேகிழ்வான், எங்கணுமன்பற = எதன்கண்ணும் நேயமின்றியவனுய், சாக்ஷியெனலாய் = சான்றென்றிடலாய், இச்சைதானறவே காரியஞ்செய்வோன் = ஆசையொன்றுமின்றியே உரியனசெய்பவன், வெருட்சியானந்தந் தாக்குறாதோன் = உத்வேக ஆனந்தரகிதன், ஆனசமனுய் = சமமாய சொச்சமதியினுலே, தொழிலால் = வினையால், இடர்சுகங்கள் உதயமுறாதவன்மாகத்தன் = வாட்டமகிழ்ச்சிகளை யடையாதவன் மகாகருத்தனுவன்.

(ஸ்ரீ-வீர) மகாகருத்தா மகாபோக்தா மகாத்தியாகி என்னெனப்பெறுவன் ஹே பிரபுவே! இவற்றை நன்றாயருள்செய்யவேண்டும், என்று பிரார்த்திப்பப் பரமேசுரர்கூறல்:— ஆண்டுச்சர்வசங்கைகளையும் பரித்தியாகம்செய்து என்னும் அங்கிசத்தைவிவரணஞ்செய்தல்:— ஹே மகாபாக்கியவானே! அகர்த்ரு அபோக்த்ரு ஆத்மநிச்சயத்தானே கருத்துருத்வாதி சங்காவிரகித ஆகிருதியனுகி, கொள்றும் அவன் இவ்வுலகரை யென்பதேபோல, ஞானப்பிரபாவங் கூறுதலாமிது, யதேஷ்டாசரண நல்லனுஞ்ஞை யன்றென்றுணரத்தக்கதாம், அக்ஷயனுகித் தருமாதருமங்களை யடைவுற்றபடி யாவனியற்றுகின்றனனே, அவன் மகாகருத்தாவெனப்பெறுவன்; இராகத்துவேஷாதி வியஞ்சகசேஷ்டைகள்; பலாபலங்கள் என்னும் இஷ்டா நிஷ்டங்கள், சுகதுக்க சாதகங்கள் தர்மாதர்ம சாதகங்கள் நிஷ்காம மனத்தினுலே லோகாநுக்கிரகமாத்திரப் பிரயோஜனத்தினுலே யாவன் செய்கின்றனனே, அவன் மகா கருத்தாவெனப்பெறுவன்; மௌனியாகி அகம்பாவமற்றவனுகி, மானமலங்களற்றவனுகி, மற்சரமின்றியவனுகி, மனன யோகாதியுற்றவனுகி, பல சித்தியயலாருந்தன்மையாலாக்கம்பெற்ற வுத்வேகனுகி, யாவனியற்றுகின்றனனே அவன் மகாகருத்தாவெனப்பெறுவன்; தெய்வத்தாலடைவுற்றனவாகிய அசுவமேத கலஞ்சபக்ஷணுதி சுபாசுபகாரியங்களில், தார்மிகனியான் பாவியான் என்றேனும் உண்டாம் குசங்கையாங் களங்கத்தினுலே கற்பித தருமாதருமங்களினுலே யெவனது மதிபற்றுறாதோ அவன் மகாகருத்தாவெனப்பெறுவன்; யாண்டுமே நேயமின்றியவனுகி, சாக்ஷியைப்போன்றிருப்பவனுகி, இச்சையில்லாமல் யாவன் காரியத்தில் நிகழ்கின்றனனே அவன் மகாகருத்தாவெனப்பெறுவன்; வாட்டமகிழ்ச்சி வயங்கிலனுகிச் சமமாந்தெளிவாம் புந்தியினுலே, சோகநிமித்தங்களிற் சோகமுறாஞய், உதய நிமித்தங்களிலுதயமுறாஞய், இருப்பவன் மகாகருத்தாவெனப்பெறுவன்.

(ச) எந்தப்புருடன் இராகமுனிவாதிகளைக் காரணத்துவமாகவன்றித் காரியத்துவமாகவாவது விருப்பமற = அபேக்ஷியாமலே செய்வோன் இராகாதியைத் தனது பிரவிர்த்தியில் எதுவாக வபேக்ஷியானே பிரயோஜனமாகவும் அபேக்ஷியானே, அவன் மாகத்தனுவன் மோனமுற = இது செய்கின்கின்றேன் எனவசனியாதவனுய், அகங்காரம்போய் = நானேயிதன்கருத்தாவென அகங்கரியாதவனுய், மானம்போய், தன்னிடத்தன்றித் தனது காரியத்திலாவது மேன்மை மதியாதவனுய், மச்சரம்போய் = பரசுகத்திற்றுவேடாகிதனுய், முடுகி

வாடாது = வியாகுலமின்றியே, செய்வோன் எந்தப்புருடனோ அவன் மாகத்தனவன். வெருட்சி = செய்யுமிக்காரியம் பலமின்மையாமோ என்றுத்தியோகத்திற்பீதியும், ஆகந்தம் = எப்போதும் பலமாக வேண்டுமெனப் பிரீதியும், தாக்குறாதோன் = இன்மையனாய், ஆனசமனாய் = சமனாய்ச் சொச்சமானபுத்தியாற் காரியஞ்செய்பவனாய், தொழிலால் = காரியாசித்தியில் இடருறாதவனும், காரியசித்தியில் மகிழ்ச்சியுறாதவனும் எப்புருடனோ அவன் மாகத்தனா மென்பதுபொருள். (10-11)

(ஸ்ரீ-வீர - அ-கை) மாகத்தனிலக்கணத்தை யுபசங்கரித்து மாபோகியினியல்புரைத்தல்:—சனனமிகவென்பன.

சன்னத்தின் மரணத்தி லுதயத்தி லத்தமனந் தனினேராகி
மனமொத்தோன் மாகத்த னெனத்தெளிவாய் மாபோகி மரபுகூறிற்
சினமுற்றொன் றினைநீக்கா னொன்றைவிரும் பான்பகுதி சேரத்துய்ப்போன்
வினவுற்ற மாபோகி யிவன்பெருமை மீளவுநாம் விளம்பக்கேளாய்.

மிகவெருவ லானந்த மில்லவாய் மயக்கமே விளைப்பதான
சுகமிடர்கள் புசித்தவற்றாற் கலங்காதோன் சராமரணந் தொடருமாபத்
தகலரசு மிடிகளுநன் றெனப்புசிப்போன் புளிப்புக்கைப் பழற்சியுப்புப்
பகர்நிறைவு குறைவுசம மாய்ப்புசிப்போன் மாபோகிப் பான்மையோனே.

(ப - ரை) சனனத்தில் மரணத்தில் = பிறப்பில் இறப்பில், உதயத்தில் அத்தமனந் தனில் = எழுச்சியில் வீழ்ச்சியில், நேராகி = சமானமாகி, மனமொத்தோன்மாகத்தன் எனத் தெளிவாய் = ஒத்தவுளத்தினன் மாகத்தன் என்று தெளிந்துகொள்வாய், மாபோகிமரபு கூறில் = மகாபோகியின்றன்மையையியம்பில், சினமுற்றொன்றினை நீக்கான் = கோபமுற்று ஒன்றையும் அகற்றான், ஒன்றைவிரும்பான் = யாதொன்றையு மிச்சியான், பகுதிசேரத்துய்ப்போன் = இயல்பாகவந்ததையயில்வோன், வினவுற்றமாபோகி = வினவிய மகாபோகியவனே யாவன், இவன்பெருமை மீளவுநாம் விளம்பக்கேளாய் = இவனுடைய மகிமையை மறுபடியும் நாம் அருளக்கேட்குதி.

மிகவெருவல் ஆனந்தமில்லவாய் = மிகவும் பயப்படத்தக்க இன்பமில்லா, மயக்கமே = பிரமமே, விளைப்பதான = உண்டாக்குவதான, சுகமிடர்கள் = இன்பத்துன்பங்கள், புசித்தவற்றாற் கலங்காதோன் = அனுபவித்தவற்றினாலே கலக்கமுறாதவன், சராமரணம் = ஜராமரணம், தொடரும் ஆபத்து = சம்பந்தியாநின்ற விபத்து, அகலரசு = அகண்ட இராச்சியம், மிடிகளும் = தரித்திரங்களும், நன்றெனப்புசிப்போன் = அநுபவிக்கத்தக்கனவென்றே யநுபவிப்பவன், புளிப்புக்கைப்பழற்சியுப்பு = புளிப்புக் கசப்பு சுடுகை காரம் உப்பு, பகர் = கூறுகின்ற, நிறைவுகுறைவு சமமாய்ப்புசிப்போன் = நிறைவுற்றிடினும் குறைவுற்றிடினும் ஒப்பாகப்புசிப்பவன், மாபோகிப்பான்மையோனே = மகாபோகித்தன்மையோனே.

(ஸ்ரீ - வீர) ஜன்மஸ்திதி விநாசங்களில் சோதய ஹஸ்தமயங்களில் = ஜன்மாதிப்ஞ்ச பாவவிகாரங்களில் = உதயவிருத்தி அஸ்தமய அபக்ஷய சகிதசரீரங்களில் நிர்விகாரசன்மாத்திர ஆன்மதரிசனத்தினாலே சமமேயாயமனம் எவனுக்கோ, அவன் மகாகர்த்தாவெனப்பெறுவன்; மகா போக்தாவினுடைய இலக்கணங்களைக்கூறல்:—ஒன்றையுந் துவேஷிக்கமாட்டான் ஒன்றையும் ஆகாங்க்ஷிக்கமாட்டான், பிராரப்தம்தந்த யாவற்றையுமே புஜிப்பான் அவன் மகா

போக்தாவெனப்பெறுவன்; சுகதுக்கங்களினாலும் ஜய அபஜயாதிக்கிரியா யோகங்களினாலும், லாப நஷ்டங்களினாலும், விக்ஷேபந்தருப்வற்றானும், யாவன்மதி விக்ஷேபத்தை யடையமாட்டாதோ அவன் மகாபோக்தாவெனப்பெறுவன்; ஜரைமரணம் ஆபத்தும் இராஜ்ஜியம் தாரித்திரியமுமே பிரஹ்மதிருஷ்டியினாலே இரம்மியமெனவே யாவனுணர்வனோ, சுவர்ணமயம் வியாக்கிரம் ரம்மியச் சுவர்ணதிருஷ்டியினாலே இரம்மியம் என்பதேபோலும், அவன் மகா போக்தாவெனப்பெறுவன். கடு அம்ல லவணங் காரம் இனிப்பு இனிப்பல்லாதது தாழ்ந்தது உயர்ந்தது சுவாதுஇல்லது சுவாதுஉள்ளது, ஆகிய அன்னத்தையாவன் ஒப்பாகவே புசிப்பனோ அவன் மகாபோக்தாவெனப்பெறுவன்.

(ச) வஸ்துக்களின் உதயத்தில், அத்தமனந்தன்னில்=தரிசனாதரிசனங்களில் வத்துவறியப்படினும் அறியப்படாதாயினும், இருப்பினும் நசிப்பினும் அன்றித்திருசியமாயினும் அதிருசியமாயினும் மனமொத்தோன்=எவனதுமனம் ஏகாகாரமாயிருக்குமோ அவன் மாத்தன் என்பதுபொருள்; பகுதிசேர=பிராரப்த கன்மத்தால்வந்த சகலமான இஷ்டத்தையும் அநிஷ்டத்தையும், கலங்காதோன்=மகாபோகியாம். (12-13)

(ஸ்ரீ-வீர - அ-கை) மகாபோகியின் இலக்கணத்தை யுபசங்கரித்து, மகாத்தியாகியின் இலக்கணத்தையருளல்:—உப்பின் அனைத்தென்பன.

உப்பினியல் பெனநன்மை தீமையிரண் டிலுஞ்சமமா யொத்துநிற்போன்
றுப்புறுமா போகியா மகத்தான தியாகிகுணஞ் சொல்லக்கேளாய்
தப்பிலறம் பாவமிடர் சுகமரணஞ் சனனமெலாஞ் சேரத்தள்ளுஞ்
செப்பமுள புந்தியுளோன் மகத்தான தியாகியெனத் தெளிந்துகொள்வாய்.

அனைத்தாசை யனைத்தைய மனைத்தான தொழிலனைத்தா மறுதியாவுந்
தினைத்தானு மேவாத புந்தியோன் றன்னைமகத் தியாகியென்ப
ரனைத்தான வறம்பாவ மன்மன்னத் தொழிலிதயத் தெல்லாந்தீர்ந்தோன்
வினைத்தாய பிருங்கீசா மகத்தான தியாகியென விளம்புமன்றே.

(ப - ரை) உப்பினியல்பென நன்மை தீமை இரண்டிலும் = லவணசுபாவமேபோல நலந்தீங்கிரண்டிலும், சமமாயொத்து=ஒப்பாய் நிகழ்ந்து, நிற்போன்=வாழ்பவன், துப்புறு மாபோகியாம்=பிராரப்தத்தையுற்ற மகாபோகியாம், மகத்தான தியாகிகுணஞ் சொல்லக் கேளாய்=மகாத்தியாகியினது இயல்பைக்கூறக்கேட்பாயாக, தப்பிலறம்பாவம்=தவறில்லாத புண்ணியம்பாவம், இடர்சுகம்=துக்கசுகம், மரணஞ்சனனமெலாம் = இறப்பு பிறப்பு என்பனயாவும், சேரத்தள்ளும்=அத்தியந்தம் தியாகிக்கும், செப்பமுள புந்தியுளோன் = நல்ல புந்தியை யுடையவன், மகத்தான தியாகியெனத் தெளிந்து கொள்வாய் = பெருந்தியாகியென்று அறிந்துகொள்வாய்.

அனைத்தாசை அனைத்தையம்=சகலஆசா சகலசமுசயம், அனைத்தான தொழில்=சகல கிரியை, அனைத்தாமறுதி = சகல நிச்சயங்கள் என்பன யாவற்றையுமே, தினைத்தானும்= அணுவளவும், மேவாதபுந்தியோன் = மருவாத மதியையுடையவன், தன்னை மகத்தியாகியென்பர்=எவனோ அவனையே மகாத்தியாகியென்று கூறுவர், அனைத்தான அறம்பாவம்= எல்லாப் புண்ணியபாவங்களையும், மனமன்னத்தொழிலிதயத்தெல்லாம் தீர்ந்தோன் = மனம்மன்னம் சேஷ்டை இருதயத்தில் யாவும்விட்டோன், வினைத்தாயபிருங்கீசா=இதுகாறும்

வினையின் வயமாக இருந்த பிருங்கியிருடியே மகத்தான தியாகியென விளம்புமன்றே= மகாத்தியாகியென்று விளம்புவர் பெரியோர். அன்று ஏ அசைகள்.

(ஸ்ரீ-வீர) இரசமுற்றது இரசமற்றது இரதியுற்றது இரதியற்றது, சௌமியனேயாவன் சமமாகவே பார்க்கின்றனனோ, அவன் மகாபோக்தாவெனப்பெறுவன்; உப்புக்கட்டியிலும், கற்கண்டாலாக்கப்பெற்ற பக்ஷியவிசேடத்திலும், சுபத்திலும் அசுபத்திலும், சுஸ்திரமும் சமதையும் எவனுக்காமோ அவன், மகாபோக்தாவெனப்பெறுவன். புசிக்க யோக்கியமானது இது புசிக்க அயோக்கியமானது இது கசப்பாயது என்பதான விகற்பனத்தை யடியோடு விட்டு ஆசையையும்விட்டு யாவன் புசிக்கின்றனனோ அவன் மகா போக்தாவெனப்பெறுவன். ஆபத்தையும் சம்பத்தையும், மோகத்தையும் ஆனந்தத்தையும், கூழ்காடி கந்தையாதிகளையும் திவ்யான்ன பீதாம்பராதிகளையும், சமமாகிய மதியினாலேயாவன் அனுபவிப்பனோ அவன் மகா போக்தாவெனப்பெறுவன்; தர்மாதர்மங்களையும் சுகதுக்கங்களையும், மரணஜன்மங்களையும், எவன் முன்மொழிந்தவடிவமான மதியினாலே நிரதிசயானந்த பூர்ணத்வயமதியினாலே, மித்தையென்றுதல் நன்குவிட்டனனோ அவன் மகாத்யாகியெனப்பெறுவன்; சர்வ இச்சைகளும் சர்வ சங்கைகளும் சர்வவாக்கு மனக்காயசேஷ்டைகளும், சர்வ நிச்சயங்களும், எவனால், விடயபாதத்தினாலேயே, எங்கும் விடப்பட்டனவோ அவன் மகாத்யாகியெனப்பெறுவன்; யாவன் சரீரசம்பந்தமான தருமாதருமங்களையும், மானசமான மனோமனனத்தையும் வாக்காதிசேஷ்டிதத்தையும், பிறவெவற்றையும் உள்ளே நன்றாகவிட்டனனோ அவன் மகாத்யாகியெனப்பெறுவன்; (14-15)

(ஸ்ரீ-வீர - அ-கை) மகாத்யாகி யிலக்கணத்தை முடித்தருளலும் அதனை ஸ்ரீ இராகவருக்கு உபதேசஞ்செய்தலும்:—தெரியென்பது.

தெரிபவற்றி லெண்ணமாய்க் காணுமிவை யெவ்வளவத் திரள்களெல்லாங்
கரிசறநன் றாய்விட்டோன் மகத்தான தியாகியெனக் கருணையீசன்
உரியபிருங் கீசனுக்கு முன்னுளோ தினனிந்த வுயர்ந்த நோக்கை
பரிசயமுற் றுப்பிடித்துத் துயரொழிவாய் உலகளிக்கும் பதுமக்கண்ணா.

(ப - ரை) தெரிபவற்றி லென்னமாய்க்காணுமிவை, காண்பவற்றில் நினைவாய் நோக்கப்பட்ட இவை, எவ்வளவு=எத்துணை, அத்திரள்கள் எல்லாம்=அக்கூட்டங்கள்யாவும், கரிசற=குற்றமற, நன்றாய்=நன்றாக, விட்டோன் = விட்டவன், மகத்தான தியாகியென= பெரிய தியாகியென்று, கருணையீசன்=பெருங்கருணைத் தடங்கடலாகிய பரமேசுரர், உரிய பிருங்கீசனுக்கு=தமக்காப்தாயுரிய பிருங்கி இருஷிக்கு, முன்னுள் ஓதினன்=பூர்வகாலத்திலருளினன், இந்த வுயர்ந்தநோக்கை=இம்மேலான திருஷ்டியை, பரிசய முற்றுப்பிடித்து= நன்றாகப் பழகிக்கைக்கொண்டு, துயர் ஒழிவாய் உலகளிக்கும் பதுமக்கண்ணா=துக்கத்தை யகற்றுவாய் ஜகத்தை யிரக்ஷிக்கும் தாமரைக்கண்ணனாகிய இராகவனே.

(ஸ்ரீ - வீர) இத்திருசியகலனை யெவ்வளவு காணப்பெறுகின்றதோ அவ்வியாவும், நற்றரிசனத்தினானே எவனால் பாதத்தால் நன்கு தியாகிக்கப்பெற்றனவோ, அவன் மகாத்தியாகியெனப்பெறுவன். உபசங்கரித்தல்:—ஹே அநகனே! பூர்வம் இந்தப்பிரகாரம், பிருங்கீசர் பொருட்டுத் தேவ தேவேசரானே திருவாய்மலர்ந்தருளப்பெற்றது; இத்திருஷ்டியை யினிது பற்றி யிராகவனே தாபந்தீர்ந்தோனாயிருத்தி. (16)

(ஸ்ரீ - வீர - அ - கை) எப்பாவனையினாலே மகாகருத்தா மகாபோக்தாமகாத்யாகியாதல் அநாயாசமாக வாகலாமோ, அப்பாவனையை ஸ்ரீ இராகவர்பொருட்டுபதேசித்தல்:—நித்த மென்பது.

நித்தமுறு முதயமுள தாதியா குவதநந்த நிமலமேக
மத்தகைய பிரமமே யுளதுவிகற் பத்தெண்ண மயலொன் றில்லை
யித்திறமென் றேபாவித் தழுக்கிலனாய்ச் சுகமேவி யியற்றுஞ்செய்கை
சுத்தவிம லச்சாந்த முறவெல்லா மேவுவாய் சுத்தவீரா.

(ப - ரை) நித்தமுறு முதயமுளதாதியாகுவது=நித்திய உதயமாயிருப்பது முதன்மையாயிருப்பது, அநந்தநிமலமேகம்=அந்தமின்றியது மலமற்றது ஏகமாயிருப்பது, அத்தகைய பிரமமேயுளது=ஆகிய இலக்கணம்வாய்ந்த சிவமேயிருக்கின்றது, விகற்பத்தெண்ண மயலொன்றில்லை=விகற்பித்தெழும் நினைவு வேறு ஒன்றுமேகிடையாது, இத்திறமென்றே= இத்தன்மையதென்றே, பாவித்தழுக்கிலனாய்=சிந்தித்து அசுத்தமில்லாதவனாகி, சுகமேவி= ஆநந்தமடைந்து, இயற்றும்செய்கை=செய்யும்செய்கை, சுத்தவிமலச் சாந்தமுற=தூயதாய் நிருமலமாய்ச் சாந்தமாயாக, எல்லாம் மேவுவாய்சுத்தவீரா=யாவுமடைவாய் தூயவீரனே.

(ஸ்ரீ - வீர) ஹே இராகவனே! நீ தேகாதி பஞ்சகோசங்களின் அவஸ்தாத்திரயத்தின் நிராசத்தானே நிரஞ்சனத்தகைமையையடைவுற்றவனாய், இனிதெஞ்சியதாயநித்தியவுதிதவிமலாத்ம அநந்த ஆத்யரூபப்பிரமமேயுளது, சிறிதும் அதனினும் அயலாய கற்பனைக்கலனம் இல்லவேயில்லையாம், என்றே பாவிப்பாயாக; இவ்வண்ணம் எப்போதும் பாவித்து, அப்பாவனையின் அபிவியக்தியால், கலனமலங்களினின்றும், விருத்திகள் எல்லாம் சாந்தமானவனாய், நிரவாணத்தை யடைவாயாக.

(ச) விகற்பத்தெண்ணம்=பேதத்தோற்றம், அழுக்கிலனாய்=இராகத்துவேட களங்க ரகிதனாய் எலாமேவுவாய் பரிபூரணசித்த விருத்தியையுடையவனாவாய். (17)

(ஸ்ரீ-வீர-அ-கை) இதோபதேசம்செய்தல்:—தீங்கன்னியமென்பன.

தீங்கிடர்தீர் பிரமமாய்க் கற்பனையெல் லாமேவிச் செய்கைக்கொன்றா
யோங்கியவித் தாய்ப்பரம ரூபமாய்ப் பெரிதாகி யுயர்மகத்தாய்
வீங்கியபா வனையெல்லா நிறைவதாய் மெய்ஞ்ஞான வீராகிஞ்சி
னீங்கிலதென் றுரைப்பதா மாகாய மேதனுவே யென்றுமுண்டால்

அன்னியமா வோரிடத்தி லிதுகிஞ்சி லெனவென்று மசத்துஞ்சத்தும்
துன்னலுறு தென்றுள்ளே திடநிலையா யகங்காரந் துடைத்துநிற்பா
யுன்னுள்ளே முகமாகிப் புறத்தின்வரு வனவெல்லா மொருங்குசெய்து
பின்னுதொழி லிடர்மேவா துருவமிலா வகந்தையைநீ பிரியவென்றான்.

(ப - ரை) தீங்கிடர் தீர்பிரமமாய்=கெடுதல் நோய் துயர்அற்றதாய் சிவமாய், கற்பனையெல்லாமேவி=கற்பனையாவும் பொருந்தி, செய்கைக்கொன்றா யோங்கியவித்தாய்=காரியத்திற்கு ஏகமாய் நிமிர்ந்தபீஜமாய், பரமரூபமாய் = பரமாத்மரூபமாய், பெரிதாகி யுயர்மகத்தாய்=பெரியதாகி மேலாகப்பெருகியதாகி, வீங்கிய பாவனையெல்லா நிறைவதாய்=விருத்தியான பாவனைகளியாவும் பூரித்ததாய், மெய்ஞ்ஞானவீரா = சத்தியஞான வீரனே! கிஞ்சில்

ஈங்கில்லெதன்றுரைப்பதாம் = சிறிதுமீங்கு இல்லையென்று கூறப்பெறுவதாம், ஆகாயமேத துவே யென்றுமுண்டு = சிதம்பரமேததுவே யெப்போதுமுளதாம்.

அன்னியமா வோரிடத்தில் = வேறுயோர் தேயத்தில், இது = இப்பொருள், கிஞ்சி லென = அற்பமென, என்றும் = எப்போதும், அசத்துஞ்சத்தும் = இல்லாமையுமிருப்பும் = துன்னலுறுது = பொருந்தலுறுது, என்றுள்ளே = என்பதாக வுள்ளே, திடநிலையாய் = திர மானதிதியாய், அகங்காரந்துடைத்து = நிரகங்காரமாய், நிற்பாய் = சுகியாயிருப்பாய்; உன் னுள்ளே முகமாகி = உனது அந்தர்முகத்தையடைந்து, புறத்தின் வருவனவெல்லாமொருங்கு செய்து = பாகியத்தில் வருபவற்றையெல்லாம் ஒழுங்காகவேயியற்றி, பின்னுதொழில் இடர் மேவாது = பற்றியவினையஞர் உறுது, உருவமிலா வகந்தையைநீ = ரூபமில்லாத அகங்காரத் தைநீ, பிரியவென்றான் = பிரிகவென்றுரைத்தார்.

(ஸ்ரீ-வீ ர) ஹே குழந்தாய்! இச்சம்சாரத்தின்கண் யாது ஒரு சிறிதிலங்காநிற்குமோ, அது சமஸ்தகற்பங்களில் துவிபாரார்த்தாவதிகால அவயவங்களில், பிரசித்தமான சருவகாரி யங்களின் ஏகபீஜம் = மூலகாரணபூதம், அநாய்மயம் = சுயம் ஜன்மாதிவிகார ஆமயமற்றது, பரமாத்மரூபம் பிரஹ்மமேயாம், அதுவும் பெரிய சர்க்கபேதங்களினுலே பெருகிய சருவபாவ விகற்பத்தோடு கூடியதேயாயினும் சிதாகாசமாகவே யிருக்கின்றது, சருவவிகற்ப சூனியமே யாயதாமது, சிறிது சத்தைமாத்திரம் இருந்திலங்குமென்பதாம். எங்கும் எப்போதும் ஒரு சிறிதும், தூலமேனும் சூக்குமமேனும் காரணமேனும் சதைகரசபிரஹ்மத்தினும் அயலாக உண்டாதலேகிடையாதாம், சத்தினின்றுந் தனித்தன்மையேல் அசத்துவ அடைவுமேவலின், தனித்தன்மையின்மையேல், சதைகரச அடைவுவருதலின், பிரகாராந்தரத்திற்கோ சம்பாவனு யோகத்தாலென்பதுபாவமாம். ஹே சாதுவே! ஆகலின் நீ சற்பிரமமேயான் என்பதாகவே யுள்ளே திடநிச்சயமுடையவனுய், பிரதமம் சமாதியப்யாச பலத்தோடுமிருந்து ஏழாவது பூமியை முறையேயடைந்து, ஆசங்காவிலாசமகன்று அவ்வாறே சுகமாகவிருத்தி. ஹே சாதுவே! நீ யுண்முகனுகி நிராகரிக்கப்பட்ட வகங்கிருதித்தன்மையை அடைதியேலாயின் அக் காலவலுவான சமஸ்தகாரியங்களையும் செய்தபோதினும் ஒருபோதுங்கேதத்தை யடையவே மாட்டாய்.

(ச) செய்கைக்கு = காரியங்களுக்கு, ஒன்றேவித்தாய் = ஏகமானபீஜமாய், வீங்கிய பாவனையெல்லாம் நிறைவதாய், பிரபஞ்சத்தில் அநுப்பிரவேசித்ததாய், சித்தன்மையான பிரம ரூபமாகிய ஆகாயமுண்டு அந்நியங்கிஞ்சிலு மிலதென்றதாயிற்று.

சத்துமசத்தும் = சத்துரூபமும் அசத்துரூபமுமான, பொருள் = அன்னியமாய்க்கிஞ் சிலும், ஓரிடத்திலும் = என்றுந் துன்றுதென்றிங்ஙனமுள்ளே, திடநிலையாய் = திடநிச்சய னுய், அகங்காரந் துடைத்துநிற்பாய், உன்னுளேமுகமாகி = ஆன்மானு சந்தானநிஷ்ட னுய், புறத்தில், சரீரசம்பந்தமாய், வருவனவெல்லாம் = வருகின்ற காரியமனைத்தையும், ஒருங்குசெய்து, இடர்மேவாது, உருவமிலாவகந்தையை = நிரகங்காரத்தை நீ பிரியே லென்றான். (18-19)

## பிருங்கீசர் கதை முற்றிற்று.

## இக்ஷ்வாகு கதை

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்ரீ இராகவர் உண்மைக்குறிகேட்டல்:—தருமமென்பது.

(ச - அ - கை) முன்பு சமாதியாலன்றியு மகாகருத்துவாதியாலே சித்தவிசிராந்தி சித்திக்குமெனப்பட்டது, இப்போது தன் விசாரத்தாலறிதற்கரியதாயினும் தத்துவஞ் குருவினுத்தியினல் அறிதற்கெளிதேயாமென்று இக்குவாகுகதையாற் சொல்லப்படுகின்றது:—

தரும மெல்லா முணர்முனியே சாற்று மகங்கா ரப்பெயரை
மருவு மனந்தன் வடிவிருக்க மாய்ந்தா லந்த வுண்மைக்குப்
பெருகு குறியே துரையெனவெம் பெருமான் கேட்ப முனியுரைப்பா
னுருவ மிருக்க மனமிறந்த வுண்மைக் குள்ள குறிகேளாய்.

(ப - ரை) தருமமெல்லா முணர்முனியே = சகல தருமங்களையுமுணர்ந்த சருவஞ்ஞ முனீசுரரே! சாற்றுமகங்காரப்பெயரை = கூறும் அகங்காரநாமத்தை, மருவுமனந்தன் = பொருந்துமுளந்தன், வடிவிருக்க=உருவிருக்க, மாய்ந்தால்=நசித்தால், அந்தவுண்மைக்கு= அச்சத்துவத்திற்கு, பெருகுகுறியேதுரையென = வளரும்லிங்கம் யாது ஓதுவீராகவென்று, எம்பெருமான் = எமதிறைவன், கேட்ப=வினவ, முனியுரைப்பான்=ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவார், உருவமிருக்க மனமிறந்த=வடிவமிருக்க வுளமிறந்த, உண்மைக்குள்ள=சத்துவத்திற்குள்ள, குறிகேளாய்=லிங்கத்தைக்கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர) ஹே பகவன்! சருவதருமஞ்ஞரே! அகங்கார நாமம்வாய்ந்த சித்தமானது கழிந்தளவே கழிந்த வடிவளவே சத்துவத்தின்=க்ஷீணவாசனையை யுடையமனத்தின், இலக்கணம்யாதாம்.

(ச) அகங்காரப்பெயரை மருவுமனமாய்ந்து அதன் வடிவிருக்க, அந்த வுண்மைக்கு=சத்துவமென்னும் பிராணிக்கு, குறி=சின்னம், ஏது=யாதாம். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை) இவ்வாறு வினவப்பட்ட ஸ்ரீ வசிஷ்டபகவான் முதலில் உலோப மோகாதி தோஷக்ஷயமே முக்கியமானவதனிலக்கணமெனல்:—அழுந்தென்பது.

அழுந்து வசத்தி லிருப்போனை யம்பு யத்தி னீர்போல
வெழுந்த லோப மோகமுத லெக்குற் றமும்வன் புறநலியா
முழுந்து முதிதை முதற்குணங்கண் முகத்தி லழகாய்ச் சிறிதகலா
விழுந்து பாவ மெல்லாம்போ மிகுவா தனைக்கட் டறுமெல்ல.

(ப - ரை) அழுந்து வசத்திலிருப்போனை = தனது சொரூபசுகத்தேயழுந்தித் தன்வசமாகவே யிருக்கும்பெரியோனை, அம்புயத்தினீர்போல = சரோருகத்தைச் சலமேபோல, எழுந்தலோப மோகமுதலெக்குற்றமும் = வினைவயத்தால் உதயமாய ஆசை மயக்கமுதலிய எத்தோடமும், வன்புறநலியா=வம்பாகத்துன்புறுத்தா, முழுந்துமுதிதை=பூரணமுதிதை, முதற்குணங்கள் = முதலியகுணங்கள், முகத்திலழகாய்ச் சிறிதகலா = வதனத்திற் கவின் வாய்ந்து அற்பமும் விலகமாட்டாது, விழுந்து பாவமெல்லாம்போம் = பாவமுழுவதும் விழுந்தொழிந்துபோம், மிகுவாதனைக் கட்டறுமெல்ல=மிகுந்த வாசனையினது பந்தம்கெடும் மெதுவாக.

(ஸ்ரீ-வீர) வலதினுண்டாயினவாய லோப மோகாதிதோஷங்கள் பரீக்ஷாதியின்பொருட்டுப் பிறனல் பலாத்காரத்தானும் சம்பாதிக்கப்பெற்றனவாம், தூயதாயும் வெள்ளியதாயும் இருக்கும் அவனது கருத்தை, சரோருகத்தை நீரேபோலும், பீடியாவாம்; எப்போதும் முகப் பிரசன்னதாதியும் அதனிலக்கணமென்றறைதல்:—முதிதையென்பதாதி. முதிதாதி ஸ்ரீகளும் வதனத்தை யொருபோதும் விடுவதேகிடையாவாம், அகங்காரமயமாகிய சித்தமானது அகன்று போம், விஷாத ஹேதுக்களாய பாவங்களும் வீழ்ந்துபோம்; ஞானக்கினியினாலே பஸ்மமாம் என்றபடி.

(ச) எழுந்த=அன்னியாது எத்தன விசேடத்தாலுண்டான லோபமோகாதியான குற்றங்களும், அம்புயத்தினீர்போல, அழுந்தி வசத்திலிருப்போனை = விமலமான கருத்துடையவனை, நலியா=பரிசியா, முதிதை முதற்குணங்கள் = மைத்திரியாதிகுணங்கள், முகத்திலழகாய் = சோபைக்கேதுவாய், முகத்தினின்றும், சிறிதகலா = ஒருபோதும் நீங்காது, வாதனைக்கட்டு=வாதனை வடிவமானகிரந்தி, மெள்ளவறும்=நழுவும். (2)

(ஸ்ரீ - வீர - அ - கை) கூறியதை விரித்துரைத்துக்கொண்டு இலக்கணந்தாங்களை யுரைத்தல்:—வேகந்துன்பம்பணிதல் என்பன.

வேகந் தேயு முலோபகுண மெலியுங் காம வினையடங்கு
மோகம் போயெங் கொளித்திடுமோ முடுகிக் கிளரா தைம்பொறிகள்
சோகந் தாவி யடராது சுகமு மேலிட் டெழமாட்டா
தாகந் தீரக் குளிர்ந்துள்ளே சமந்தோன் றிடுமா லெவ்விடத்தும்.

துன்ப மின்ப மெலாமுகத்திற் றோன்று மெனினுந் தோன்றிடுக
வன்பி லவைநெஞ் சினைநலியா மனமே யிறக்கில் வானோரு
மன்பி னயப்பர் நலனுண்டா மாங்கே சமமா மதியுதிக்கு
மென்பு குளிருஞ் சாந்தியெழி லெய்துந் தடைதீர் பெருமையுறும்.

புனித லொளிர்த வெய்மையுறும் பழுதி லமல வடிவுண்டாம்
பிணியில் பெரியோர் குடும்பமயற் பெரிதாய்ப் புதுமைத் தானுனுந்
தணிவில் பாவா பாவத்தாற் றள்ளுற் றுலு மின்பமிடர்
கணித மெனினுஞ் செயமாட்டா கருணைத் தடங்கட் கருங்காரே.

(ப - ரை) வேகந்தேயும் உலோபகுணமெலியும்=விரைவானது குறையும் லோபகுணமானது சிறுகும், காமவினையடங்கும் = காமத்தொழில் அற்பமாம், மோகம்போயெங் கொளித்திடுமோ = மயக்கம்போய் எவ்விடத்தில் ஒளித்துக்கொள்ளுமோ, முடுகிக்கிளரா தைம்பொறிகள்=பஞ்சேந்திரியங்களும் இஷ்டப்படி யெழமாட்டா, சோகந்தாவியடராது= சோகமானது மேல்விழுந்து துன்புறாது, சுகமும் மேலிட்டெழமாட்டா = இன்பமும் மிதமிஞ்சிக் கிளம்பமாட்டாது, தாகந்தீரக்குளிர்ந்து = தாபந்தீரத்தண்மைமேவி, உள்ளே சமந் தோன்றிடுமால் எவ்விடத்தும்=அந்தர் ஒப்புமையானது தோற்றும் எங்கும். ஆல் அசை.

துன்பமின்பமெலாம் = சுகதுக்கங்களியாவும், முகத்திற்றோன்றுமெனினும் தோன்றிடுக=வதனத்திற் பிரதீதியாகுமெனினும் பிரதீதியாகுக, வன்பிலவை நெஞ்சினைநலியா = வலுதிலவை மனத்தினையிடர்ப்படுத்தா, மனமே யிறக்கில்வானோரும் = உள்ளமானது நசிக்கில் தேவர்களும், அன்பின்நயப்பர்=அன்போடுகூடி விசுவசிப்பர், நலனுண்டாம் = நன்மை

யுண்டாம், ஆங்கேசமமா மதியுதிக்கும் = அவ்வாறேயொப்பான புத்தியுதயமாம், என்புகுளிருஞ் சாந்தியெழில்=எலும்புதண்மையாம் சாந்தியழகானது, எய்தும் = கிடைக்கும், தடைதீர்பெருமையுறும்=பிரதிபந்தகமில்லாத மகத்துவமுண்டாம்.

பணிதல் ஒளிர்தல் நொய்மையுறும் = யாவரும்போற்றல் பிரகாசித்தல் தெளிதலுண்டாம், பழுதிலமல வடிவுண்டாம்=குற்றமற்ற நிர்மலவடிவமானதுண்டாம், பிணியில் பெரியோர் = நோயற்றமகத்துக்கள், குடும்பமயல்=சம்சாரமயக்கம், பெரிதாய் புதுமைத்தானுலும்=மகத்தாகியற்புத மருவினுலும், தணிவில் பாவாபாவத்தால் = தணியாத பாவாபாவங்களினுலே, தள்ளுற்றுலும்=தள்ளப்பட்டாலும், இன்பமிடர் கணிதமெனினும்=சுகதுக்கங்கள் அற்பமெனினும் செயமாட்டா =இயற்றமாட்டா, கருணைத்தடங்கட் கருங்காரே=தயையோடுகூடிய விசாலமான நேத்திரங்களுற்ற சியாமளமேகமே.

(ஸ்ரீ-வீர) வாசனைக்கிரந்திகள் சின்னமாயினபோலவே மெதுவாக அத்தியந்தம் துண்டங்களாம், கோபங்குறுகிப்போம், மோகமானது மந்தத்தையடையும், காமங்கரிந்துபோம், லோபம் எங்குதான் ஓடிப்போமோ, உன்னதமாக இந்திரியங்கள் உல்லாசஞ்செய்யமாட்டா கேதமானது உயர்ந்து கிளம்பமாட்டாது, துயரங்கள் பொங்கித்ததும்பா, சுகங்களும் உற்சாகத்தைச்செய்யமாட்டா, தாபநிவிருத்திப் பிரதாயினியாய இருதயத்தில், யாண்டுமேசமதை யுதிக்கும், அற்றேல், ஞானிகட்கும் ஒவ்வொருபோது முகத்தில் சுகதுக்காதிலிங்கங்களாகிய பிரசாதமாலின்யாதிகள் காணப்பெறுகின்றனவாம், முன் கும்பமுனிவனுக்கு ஸ்ரீ துர்வாசர்சாபத்தைக்கேட்டதிற் சிகித்துவசனுக்கேபோலும், ஸ்ரீ விசுவாமித்திரரானே அரிச்சந்திரச் சலனத்திலும் புத்திரகாதத்திலும் ஸ்ரீ வசிஷ்டபகவானுக்குமேபோலும்; ஆகலின் எங்ஙனம் முநிதாதி ஸ்ரீகள் வதனத்தை விடுவதில்லையென்னுமிலக்கணம் கூடுமெனிற்கூறல்:—துன்பமென்பதாதி போஜகப்பிராரப்த முக்கியத்தகைமையானே துக்க அதன் குறியாயமாலின்ய ஆபாசங்கள், ஒருபோதுதயமாயினும் உத்தரகணத்தில், மித்தியாத்வபுத்திபாதிதத்தன்மையால்; அவற்றிற்கு அச்சித்தலேபகத்தன்மையிலதாம், எனச் சுவாபாவிகமுகாதிப் பிரசாதவிகாதமிலதாம்; முகத்தின்கண்ணே இச்சுகதுக்காதிகள் காணப்பெறுமேலாயின் காணவேசெய்யலாம் துச்சத்தன்மையானே அவன்மனதைத் தொடரமாட்டாதாம்; சித்தங்கழிந்திடவே கீர்வாணகணத்தின் விசுவசிக்குந்தன்மை நன்றுயுண்டாம், இவனுக்குச் சமதையாகிய சீதசந்திரிகையானது உதயமாம், உபசாந்தத்தையும் காந்தத்தையும் சேவியத்தையும், பர இஷ்டங்கெடுக்காமையையும், வணக்கத்தையும், ஊர்ஜிதத்தையும் சொச்சத்தையும் பிற கல்யாணங்களையும், அவனது மகத்தாகிய திருமேனியானது வகித்தொளிரும்.

பாவங்கள் என்னும் ஐசுவரியங்களானும், அபாவங்கள் என்னும் இலம்பாடுகளானும் விடமுறினும் விசித்திரமாயினும் மகான் எனினும் சம்சாரவிப்பரமமானது அகங்காரமற்ற சாதுக்கட்கு ஆனந்தப்பொருட்டேனும் துயரப்பொருட்டேனும் ஆகமாட்டாதாம்.

(ச) கோபாதிகளும் நசிக்கும், ஐம்பொறிகள் முடுகிக்கிளராது = புறத்துப்பொலியாது, சோகம்=தைனியமும், தாவியடராது=முன்போல் எழாது, துக்கமிகாது, சுகமும் மேலிட்டெழமாட்டாது, பரவசமாக்கும் ஏதுவாகாது, உள்ளேகுளிர்ந்து இருதய சீதளந்தருவதாய், எவ்விடத்தும் விஷயமான, சமம்=சிவத்தினியல், தோன்றிடும்=உதிக்கும்.

துன்பமின்பாதிகள் முகத்திற்றோன்றுமெனினும் = அவ்வவ்விகாரங்களோடு காணப்படினும், வன்பில்=கற்பிதமாதலின், நெஞ்சினைநலியா, கிஞ்சில் மனமேயிறக்கின் அச்சாது

வானவனை, வானோரும் = தேவர்களும், அன்பினயப்பர், அப்புருடனுக்கு, தடைதீர் பெருமையுறும், சமாதிக்கு அப்பிரதிபந்தமான நிர்விகாரமுதிக்கும்.

ஒளிர்தல்=தைனியரகிதமும், நொய்ம்மை=நின்மலமுமாய், பணிதலுறும்=சேவிக்கத் தகுந்ததாம் வடிவுண்டாம், பாவாபாவத்தால் = உற்பத்திவிபத்துக்களால், தள்ளுற்றாலும்= நாசயுக்தமாயினும், பெரியோர்=தத்துவஞானிகளுக்கு, மகிழ்வு சோர்வுக்கேதுவாகாதென் பது பொருள். (3-4-5)

(ஸ்ரீ - வீர - அ - கை) இப்போது ஆன்மலாபத்திற்கு அதிசுலபத்தன்மையைத் தரிசிப் பித்துக்கொண்டு அதன்பொருட்டு அப்பிரவிருத்தர்களை நிந்தித்துக்கொண்டுபசங்கரித்துக் கூறி அம்மார்க்கம் இன்னதெனவுணர்த்தல்:—புந்தி, ஊனென்பது.

புந்திப் பார்வைக் கெட்டுவதாய்ப் புகலா பத்தெல் லாமிறந்த
விந்தப் பொருளை மோகத்தா லெய்தா தவர்சீ சீயிழிந்தோர்
தொந்தஞ் சிலகா லப்பற்றாற் றோன்று துயரா மணிகள்செறி
பந்தப் பிறவிக் கடல்கடக்கும் பான்மை நயந்தோர் நெறிகேளாய்.

ஊனார் பிறவிக் கடல்கடப்போர்க் குரிய விளைப்பா றுதலெய்த
நானா ரிந்தச் சகலமெங்ங னாடும் பரம னாராகு
மானா விடய போகத்தா லாவ தென்னோ வென்னுமதி
தானும் பரம வுபாயமெனச் சாற்றுங் கண்டாய் சற்குணனே.

(ப - ரை) புந்திப்பார்வைக்கெட்டுவதாய் = மதியினது திருஷ்டிக்குமுடிவதாய், புக லாபத்தெல்லாமிறந்த = சொல்லாநின்ற ஆபத்துக்கள்யாவும் ஒழிந்த, இந்தப்பொருளை = இவ்வத்துவை, மோகத்தால் = மயக்கத்தினால், எய்தாதவர் = அடையாதவர், சீசீ இழிந் தோர் = திக்திக்தாழ்ந்தவரேயாவர், தொந்தம் சிரகாலப்பற்றால் = தொந்தமாய் நெடும் போதாம் பற்றுதலினாலே, தோன்று=பிரதீதியாம், துயராமணிகள்செறி = துக்கரத்தினங்க ணிறைந்த, பந்தப்பிறவிக்கடல் கடக்கும்=பந்தமாகிய ஜனனசமுத்திரந்தாண்டும், பான்மை நயந்தோர் நெறிகேளாய்=தன்மையை விரும்பியவர்மார்க்கத்தைக் கேட்குதி.

ஊனார் பிறவிக்கடல் கடப்போர்க்கு = சரீரசம்பந்தமான ஜனன சமுத்திரத்தைத் தாண்டுமவர்க்கு, உரிய=தகுதியாய, இளைப்பாறுதல் எய்த = விசிராந்தியுற, நானார்= யானென்பதுயாது, இந்தச்சகமெங்ஙன் = இவ்வுலகம் எவ்வாறுதித்தது, நாடும்பரமன் ஆரா கும் = தியானிக்கும்பரம்பொருள் எதுவாகும், ஆனவிடய போகத்தாலாவதென்னோ = திருப்தியுறாத விடயபோகத்தினாலே ஆம்பயன்யாதோ, என்னுமதிதான் = என்னும்புத்தியே, ஆம் பரமவுபாயம்=மேலான உபாயம் ஆம், என=என்று, சாற்றுங்கண்டாய் சற்குணனே= உரைக்குங்கண்டாய் நல்லகுணத்தினையுடைய இராகவனே!

(ஸ்ரீ - வீர) புத்தி வடிவப்பிரகாசத்தினாலே சாதிக்கத்தக்கதும், பிரத்தியக்குச் சொரு பத்தைத் தியானஞ்செய்யும் புத்தியினானே ஆலோகமாத்திரத்தால் அடையத்தக்கதும், யாது கிடைத்தமாத்திரத்தானே சகல ஆபத்துக்களும் தீர்ந்துவிடுமோ அத்தகையதும், ஆகிய பர மாத்ம வஸ்துவின்கண்ணே, எந்நராத மன்மோகத்தினாலே முயலாமல் இருக்கின்றனனோ, அவனைத் திக்குத்திக்கென்று தள்ளவேண்டியதேயாம். ஆயின் அதன் பிரவிருத்தியில்

என்னே முதலுபாயமெனின்? விவேக வைராக்கியங்களேயாமெனல்:—தொந்தமென்பதாதி. ஹே குழந்தாய்! துக்கரத்தினங்களின் ஆகரபூதமும், ஜனனமரண உபலக்ஷிதமும், ஆகிய சம்சார சாகரத்தைத்தாண்ட இச்சித்தவனுக்கு, அதன்கரையாகிய நிரதிசயானந்த ஆன்மாவின் கண்ணே நெடும்போது உசிதமான விசிராந்தியை அடைவான் யான்யார் இவ்வுலகந்தானியாது, பரமாத்ம தத்துவந்தானியாதாம் எத்தகையதாம், துச்சமான போகங்களினாலே யென்னேபிரயோஜனம்? என்று நிரந்தரம் அப்யஸ்தவிசார வைராக்கியவடிவமதியே முதலிற், கருதிய பரமவுபாயமாம், ஆதலின் அதனையே பற்றியிடுக,

(ச) புந்திப்பார்வைக்கு=புத்தியாற்பார்க்கப்படும் விசாரமாத்திரத்திற்கு, எட்டுவதாய் = சாத்தியமாய், மோக்ஷலக்ஷணமானபொருளை எய்தாதவர் = அடையப் பிரவிருத்தியாதவர் இழிந்தோர், தொந்தச்சிரகாலத்தால் = வெகுகால சங்கமித்ததத்தால், தோன்றும், துயராம் மணிகள்செறி = அபாரமானபந்தப் பிறவிக்கடலைக்கடக்கும், பான்மைநயந்த புருடனது நெறிகேளாய்.

உரிய=உசிதமான, இளைப்பாறுதல் = தத்துவநிஷ்டையை யெய்த, விடயபோகத்தாலாவதென்னே என வைராக்கியபூர்வகமாய், நானார் இந்தச்சகமெங்ஙன்=எந்தப்பிரகாரத்தாலுற்பன்னமாயிற்று, பரமன் ஆராகும்=பரமான்மா எத்தன்மையனும் என்னும் விசாரரூபமானமதிதான் பரமவுபாயம்=மோக்ஷோபாயமாம். (6-7)

(ஸ்ரீ - வீர - அ - கை) நிகழ்த்திய ஆராய்ச்சியைக் காட்டற்பொருட்டு இக்குவாகுகதையைத்தொடங்கல்:—ஏற்றமென்பது.

ஏற்ற முனது குலமுதல்வ னிக்கு வாகு வெனுமன்ன
னாற்ற லுயர்வீ டடைவுற்ற வடைவு கேளா யருள்வேந்தன்
றோற்ற முடைய தன்புவனந் தொல்லை நெறியி னடத்திடுநா
ளூற்ற முடைய வுளத்தாலே யொருவன் றனே யிருந்துணர்வான்.

(ப - ரை) ஏற்றமுனது குலமுதல்வன்=மேன்மைதங்கிய உன்னுடைய குலத்தினது முதன்மையன், இக்குவாகுவெனுமன்னன்=இக்ஷுவாகுவென்னு மன்னவன், ஆற்றலுயர்=சாமார்த்தியமுயர்ந்த, வீடடைவுற்ற=மோக்ஷமடைந்துள்ள, அடைவுகேளாய் = முறைமையைக் கேட்குதி, அருள்வேந்தன் = கூறிய கிருபைவடிவமான மன்னவன், தோற்றமுடையதன்புவனம் = செழித்துவிளங்கும் தனது இராச்சியம், தொல்லைநெறியில் நடத்திடுநாள் = பிராசீனமுறைமைப்படி நடாத்தும்போது, ஊற்றமுடையவுளத்தாலே = யூகமான மனத்தினாலே, ஒருவன்றனே=ஒருவனாகவே, இருந்துணர்வான்=இருந்து ஆலோசிப்பான்.

(ஸ்ரீ-வீர) உங்களுடைய மூலபுருடனாகிய இக்குவாகுவென்னும் பூபதி, எத்தகைய விசாரத்தினாலே முக்தனாகிமுன் மொழிந்தபதத்தில் விசிராந்தியை யடைந்தனனோ அத்தகைய விசாரத்தை ஹே இக்ஷுவாகு வம்சப்பிரபவனே நீ கேட்பாயாக. இவ்வாகுவென்னும் பூபாலனானவன் சுவாராஜ்ஜியத்தைப் பரிபாலித்துக்கொண்டு ஒருபோது ஏகாந்தத்திலிருப்பவனாய், மனத்தினாலே நன்குசிந்திப்பவனாயினன். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை) அம்மன்னவனது ஆராய்ச்சியையே எடுத்துரைத்தல்:—சுத்த யென்பது.

சரைசா வின்ப துன்பங்க டளர்மோ கங்கண் மயக்கங்கள்
வரையா நிலையாய்க் காண்பளவு மட்டி லாத சகத்துக்குப்
புரைதீர் மூல மேதென்று புரிந்து நினைந்தான் பூபால
னுரைசா ருலகின் மூலத்தை யுன்னு நின்று முணர்ந்திலனால்.

(ப-ரை) சரைசாவின்பதுன்பங்கள்=ஜரைமரண சுகதுக்கங்கள், தளர்மோகங்கண் மயக்கங்கள்=தளர்ச்சியைத்தரும் கலக்கங்கள் பிரமங்கள், வரையாநிலையாய்க் காண்பனவும்=நிலை கடந்து நிலைபோலத்திருசியங்களும் மட்டிலாத சகத்துக்கு = அளவில்லாத வுலகத்துக்கு, புரைதீர்மூலமேதென்று = குற்றமற்றகாரணம் யாதென்று, புரிந்து நினைந்தான்பூபாலன் = நன்றாக ஆலோசித்துப்பார்த்தான் மன்னவன், உரைசாருலகின்மூலத்தை = சகல சாஸ்திரங்களும் பிரதிபாதிக்கும் ஜகத்காரணத்தை, உன்னுநின்று முணர்ந்திலன் = நினைந்துநைந்தும் அறிந்திலன். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர) ஜராமரணசங்க்ஷோப சுகதுக்கப்பிரமஸ்திதியோடுகூடிய இந்தத் திருசியப் பிரபஞ்சத்திற்கு யாதுகாரணமாமென்று சுயமாகவே நன்கு சிந்தித்துப்பார்த்தனன்; சிந்தித்துப்பார்த்தும் விவேகத்தினாலே உலக காரணத்தை உணர்ந்திலன். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை) பிரஹ்மலோகத்தினின்றும் எழுந்தருளிய மனுவைப்பூசித்து வினவத்தொடங்கல்:—அயனென்பது.

அயனாட் டினும்வந் தடைவுற்ற வாதி மனுவாம் பகவனைக்கண்
டியலாற் பூசித் தருட்செல்வா வின்று நீயிங் கெளிதெய்தி
முயல்வா லளித்த நின்னருளான் மோகந் தீர்ந்து நிலைநிற்கும்
பயனு லென்னை யருளென்று பரவி யரச னுரைசெய்வான்.

(ப - ரை) அயன்நாட்டினும் வந்தடைவுற்ற = சத்தியலோகத்தினின்றும் எழுந்தருளி வந்த, ஆதிமனுவாம் பகவனைக்கண்டு = முதன்மையான மனுவாகிய பகவானைத் தரிசித்து, இயலாற்பூசித்து=அன்போடும் பூசைசெய்து, அருட்செல்வா=கிருபையோடுகூடிய பிரபுவே! இன்றுநீ யிங்கெளிதெய்தி = இப்போது தேவரீர் இவ்விடத்தே சுலபமாகத் தரிசனந்தந்து, முயல்வால் அளித்த=எண்ணமலே வலிதிற்றந்தருளிய, நின்னருளால்=தேவரீரது கிருபையால், மோகந்தீர்ந்து நிலைநிற்கும்பயனால் = மயக்கந்தீர்ந்து நிலையாகத் திதிபெறும் பிரயோஜனத்தால், என்னையருள் என்று=என்னை யனுக்கிரகிப்பீராகவென்று, பரவி = போற்றி, அரசன் உரைசெய்வான்=மன்னவன் கூறத்தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர) பின்னொருகால் பிரஹ்மலோகத்தினின்றும் எழுந்தருளிவந்த தனது பிதாவாகிய மனுபகவானைப் பிரஜாபதியைத் தனது சபையில் எழுந்தருளியவரை, மிகவும் பூசைசெய்து, வினவியதாவது, ஆண்டுமுதலில் மனுபகவானைப் பிரார்த்தனையினாலே தன்வயப்படுத்தல்:—என்னையென்பதாதி. ஹே பகவானே கருணாநிதியே! இத்தங்களது திருவருளே! தங்களை வினவும்பொருட்டு அடியேனைச் சாமர்த்தியமாக விரைவில் ஏவுகின்றது. (10)

(ஸ்ரீ-வீர-அ-கை) வினவவேண்டிய அம்சத்தை வெளிப்படுத்தல்:—எங்கென்பது.

எங்கு நின்று வந்துளதிச் சிருட்டி யிதற்கெப் படியுருவ
மங்கு முலக மெம்மட்டு மற்றா ருடைய தெதுகால
மிங்கீ தெதனு லெனவுணர்த்தி யேறிக் குறைந்த விப்பிறவிப்
பொங்கு மயக்கை வலையகலும் புட்போ னீங்கும் வகைபுகல்வாய.

(ப - ரை) எங்குநின்று வந்துளதிச்சிருட்டி=இந்தச் சிருட்டியானது எவ்விடத்தினின்றும் வந்திருக்கின்றது, இதற்கெப்படி யுருவம்=இதனுக் கெவ்வாறுவடிவம், மங்கும் உலகம் எம்மட்டு=துயரால் வாடியலையும் உலகம் எவ்வளவினது, மற்றாருடையது=தனக்கயலாக யாரைப் பற்றுக்கோடாகவுடையது, எதுகாலம் = எவ்வளவு காலத்தது, இங்கு ஈது எதனுல்=இவ்விடத்து இது எக்காரணத்தினுல், எனவுணர்த்தி=என்பதைத் திருவருள்செய்ய வேண்டும்; ஏறிக்குறைந்த இப்பிறவிப் பொங்குமயக்கை=ஏற்றத்தாழ்வோடுகூடிய இச்சனனக் கிளர்ச்சிவாய்ந்த மோகத்தை, வலையகலும்புட்போல் = ஜாலத்தினின்று செல்லும் பறவையைப்போல, நீங்கும் வகைபுகல்வாய்=அகலும் பிராகாரத்தை யுரைப்பாய்.

(ஸ்ரீ - வீர) இச்சர்க்கம் எங்கிருந்துவந்தது, இதனது சொரூபம் எத்தகையது, இச்சகத்தானது எண்ணிக்கையாலும் பரிமாணத்தினுலும், எவ்வளவினது; எந்தப்போக்தாவையுடையது எந்தச் சுவாமியையுடையது; எப்போதுயாராற்செய்யப்பெற்றது எனச் சுருதியாதிகளினுலே கூறப்பெறுகின்றது, இதனுனே சுருதியாதிப் பிரமாணமூலமாய் உபதேசபாம்பரா சம்பிரதாயத்தால் வந்ததாயிருப்பதே தங்களால் அருளத்தக்கதாம், தருக்கத்தானே சிறிது கற்பித்து அருளலாகாது, என்று சூசிக்கப்பெற்றதாம். கனமாய் வீசப்பெற்ற ஜாலத்தினின்றும் பறவையேபோல் யான் எங்ஙனந்தான் இவ்விடமசம்சாரவிப்பிரமத்தினின்றும் விடுபடுவேன். விமுச்யேய வென்பது கருமகருத்தாவில் யக் தங்குகளாம்.

(ச) எம்மட்டு = பரிமாணமென், ஆருடையது = பாமேசுவானையுடையதா? அன்றிச் சீவரையுடையதா? எதுகாலம்=எக்காலத்திற்பிறந்தது? எதனுல்=எந்தக்காரணத்தினுற்றான் சனித்தது? எனவுணர்த்தி. (11)

(ஸ்ரீ-வீர-அ-கை) உலகத்தியற்கை யின்னதெனை வுபதேசிக்கத்தொடங்கல்:—என்றல் கிஞ்சில் என்பன.

என்ற லோடு மறப்புதிதா மெண்ணில் காலத் தோடேகீ
துன்று விவேக விசாலத்தாற் சொன்ன வினுவே விதிப்பொருளைப்
பொன்று விக்கு மென் றுமனுப் புகல்வான் சிறிதாக் காணுமிவை
யொன்று மில்லைக் கந்தர்ப்ப வூர்போன் மருப்பூ மியிற்சலம்போல்.

கிஞ்சில் காரணங் களுக்கெட்டாக் கிளர்வா னிலுஞ்சற் றுய்முடிவி
லெஞ்ச விலதா மழிவின்றி யிருந்த தென்று மான்மாவாம்
விஞ்சு மந்தப் பெருங்கண்ணு டியிலே நேய விரிவிடய
பஞ்ச பூத சிருட்டியெலாம் பத்தி பாய்ந்து விளங்கிடுமால்.

(ப - ரை) என்றலோடும்=என இவ்வண்ணம் வினவவே, அறப்புதிதாம்=அத்தியந்த மாச்சரியமாம், எண்ணில்காலத்தோடேகீ=அளவிறந்த காலத்தோடேகீ, துன்று விவேக விசாலத்தால் = பொருந்தாநின்ற விவேகவிஸ்தாரத்தினுலே, சொன்னவினுவே = வினவிய வினுக்களே, விதிப்பொருளைப் பொன்றுவிக்கும் = சகல அனர்த்தங்களையும் கெடுக்கும்,

என்று = என்பதாகக்கூறி, மனுப்புகல்வான் = மனுப்பகவான் கூறுவார், சிறிதாக்காணு மிவை=அற்பமாகத்தோற்றுமிவை, யொன்றுமில்லை = எதுவுமேகிடையாது, கந்தர்ப்பவூர் போல் மருப்பூமியிற் சலம்போல்=கந்தர்வபுரமேபோலும் கானனீரேபோலும்.

கிஞ்சில் காணங்களுக்கெட்டா = அற்ப காணங்களுக்கு எட்டா, கிளர்வானிலுஞ்சற்றாய்=சூக்கும ஆகாயத்தினும் சூக்குமமாய், முடிவில் எஞ்சல் இலதாம்=அந்தமின்றி யெங்கும் வியாபித்ததாய், அழிவின்றி யிருந்ததென்றும் ஆன்மாவாம் = நாசாகிதமாய் எப்போது மிருப்பது ஆத்மாவேயாம், விஞ்சமந்தப் பெருங்கண்ணுடியிலே = சேடித்துநின்ற அந்தப் பெரிய தர்ப்பணத்தே, நேயவிரிவிடய பஞ்சபூதசிருட்டியெலாம் = வாஞ்சிக்கும் விஸ்தார விடய பாஞ்சபௌதிகசிருட்டிகளியாவும். பத்திபாய்ந்து விளங்கிடும்=பிரதிபிம்பித்துப் பிரதீதியாகும். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர) அகோ ஆச்சரியம்! வெகுகாலங்கழித்து நன்றாகவிளங்கும் விவேகம் உதயமாகவே, அநேகவித அநர்த்தங்களைக் கெடுப்பதாய்ச் சாரமாயவினுவானது உன்னுற்செய்யப்பெற்றது, ஆண்டுத் தத்துவ உபதேசயோகித்தன்மையால், இதனது சொரூபம் எத்தகையது என்னும் வினுவிற்கு முதலில் விடையிறுத்தல்:—சிறிதென்பதாதி. ஹே மன்னவனே! யாது சிறிது இது காணப்பெறுகின்றதோ அஃதொன்றுங் கிடையவேகிடையாது, ஆகவேபொய்யாம் உலகிற்கு அசத்துச்சொரூபமாம் அசத்தேயாமென்பது கருத்தாம்; கந்தர்வநகரம் போலும் மருத்தலவாரிபோலும். அற்றேற்சாங்கியர்கள் உபாதானத்திற் பரமசூக்குமமாக விருப்பதேயாயகாரியம் நிமித்தங்களினுலே வெளிப்பாடடைகின்றது, என்று கூறுவார்கள், வேதாந்திகளோ சற்பிரஹ்மமே ஜகத்துவடிவமாகச் சருக்கத்தில் அடைவுறுநிற்கும், என்பர்கள், ஆகலின் எங்ஙனம் அஃதில்லையென்று கூறுதலாமெனின் அவற்றுள் முதலதன்பொருட்டுரைத்தல்:—சாக்ஷியினுலேனும் இந்திரியங்களாலேனும் யாதொன்று நம்மனேர்க்குப் புலப்படுகின்றதோ அஃதொன்றுமே தனது உபாதானத்தில் இலதாம், இருப்பதற்கு அளவையின்மையின் சம்பாவனையும் இதற்கு எதனுல் இலதாமோ அதனுல் இது மனமுதலிய ஆறிந்திரியவேத்தியமாகாதாம். இரண்டாவதன்பொருட்டியம்பல்:—ஆவிநாசமாக அஃதீண்டுளதேயாம், அதுசத்து ஆன்மாவெனக் கூறப்பெறும்; திருசியச் செல்வமெல்லாம் நிறைந்த இந்தச் சருக்கபரம்பரையோ அந்தப் பெரியகண்ணுடியிலேயே பிரதிபிம்பித்து இலங்காநிற்கும்; நிற்கவே, கண்ணுடிச்சத்தைக்குப் பிரதிபிம்பங்களிற்போலும், சம்சர்க்க அத்தியாசத்தினுலே பிரஹ்மசத்தையை யநுசரித்ததாகச் சகத்தானது உளதாகுக, உளதாயினும், தானுக விருப்பானது அதற்கு இலதேயாகும், ஆகவே அது இலதாமென்றுகூறியது பொருத்தமேயாமென்பது கருத்தாம்.

(ச) விதிப்பொருளை=விரிந்த அநர்த்தத்தை.

கிளர்வானிலுஞ்சற்றாய் = ஓரிடத்தும் இதுவெனத்தோற்றாததாய் கிஞ்சில் காணங்களுக்கெட்டா=மனதுக்கும் சக்ஷுராதி இந்திரியங்களுக்கும் அதீதமாய், முடிவில் = நிரவதிகமாய், எஞ்சலிலதாய்=பரிபூரணமாய், அழிவின்றி = அவிநாசமாய், என்றுமிருந்தது= இருக்குந் தத்துவப்பொருளே, ஆன்மாவாம், விஞ்சுமந்தப் பெருங்கண்ணுடியிலே=மேலான அந்த ஆன்மாவென்னும் மகாதர்ப்பணத்திலே, (12-13)

(ஸ்ரீ-வீர - அ-கை) ஆயின் வெகுவாவேன் பிரஜையாயிருப்பேன் எனச் சங்கற்பித்து, பிரஹ்மத்திற்கேஜகத்து ஜீவபாவம் என்னும் சுருதியின் கருத்துயாதாம், ஆண்டுக்கூறல்:— பிரமத்தென்பது.

பிரமத் தினவா யொளியுருவாய்ப் பிறந்து பிறங்குஞ் சக்திகடாம்
விரவிப் பிரமரண் டத்தினது மேனியாகி நின்றசில
வுரவு பலபூ தத்திரளி னுருவ மாகி நின்றசில
சுரர்பொற் பதியாய் நின்றசில் தோன்று சகத்தி னிலையிதுவே.

(ப - ரை) பிரமத்தினவாய்=பிரம சம்பந்திகளாய், ஒளியுருவாய்=பிரகாச வடிவின வாய், பிறந்துபிறங்கும் = உதயமாகியிலங்கும், சத்திகள்தாம் = சத்திகளானவை, விரவி = கலந்து, பிரமாண்டத்தினது மேனியாகி=பிரஹ்மாண்டங்களினது வடிவங்களாகி, நின்ற சில = இருந்தனசிலவாம், உரவு பலபூதத்திரளின் = பலமாகியபல பூதக்கூட்டங்களின், உருவமாகி. நின்றசில=வடிவங்களாகி யிருந்தனசிலவாம், சுரர்பொற்பதியாய்=தேவர்களது சுவர்ணபுரங்களாய்நின்ற சில=இருந்தனசிலவாம், தோன்றுசகத்தின் நிலையிதுவே = பிரதீதி யாகும்படியான உலகத்தின் நிலைமையிதுவேயாம்.

(ஸ்ரீ - வீர) ஒளியியற்கையனவாய் உண்டாயினவாய, பிரஹ்மத்தின் ஸ்புரணசக்திக ளாகிய சிதாபாசர்கள் சிலர் பிரஹ்மாண்டத்தன்மையை யடைந்துள்ளார்கள், அதாவது ஸ்தூலசமஷ்டியபிமானத்தானே அவ்வுருவுடைமையை யடைந்துளார்கள் என்பதாம். சில வரோ, பூதத்தன்மையை யடைந்துள்ளார்கள் அதாவது பிருதிவியாதி யபிமானத்தானே அவ்வுருவத்தகைமையை யடைந்துள்ளார்கள். அன்னியர்களோ நான்குவிதப் பூதக்கூட்டத் தகைமையை அடைகின்றார்கள். இவ்வண்ணம் ஜகத்தின் நிலைமையாம்.

(ச) ஒளியுருவாய்=தேசின் சுபாவத்தினுல், பிறந்து தேசுபிறங்கும் சுபாவமாதலின், பிரமத்தினவாய்=பிரமசம்பந்த முள்ளனவாய், பிறங்குஞ்சத்திகடாம் = விக்ஷேபசக்திகள், பிரமாண்டமாய் விவர்த்திப்பனவாம், சிலபிறங்குஞ் சக்திகள் பூதத்திரளினுருவமாகி = பிராணி சொரூபமாகிநின்ற. (14)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவ்வாறு பொய்யுபாதிகளில் மயக்கினுற் சிதாபாசர்சட்குப் பந் தாதி கற்பனையாம், உண்மையாக வதனடைவின்றாம் எனல்:—பந்தமென்பது.

பந்த மில்லை வீடில்லைப் படர்தீர் பிரம மேயுளதா
மந்த வயிக்கிய மில்லையிரண் டில்லை யறிவே வளர்ந்தெழுந்த
சிந்து தரங்கப் பங்கத்தாற் றிகழு கின்ற நீர்போல
வந்த மில்லா வறிவுருவே விளங்கு மயலொன் றிலதாகும்.

(ப - ரை) பந்தமில்லை=கட்டிலதாம், வீடில்லை=விடுதலுமிலதாம், படர்தீர்பிரமமே யுளதாம் = நிராமயமாய பிரஹ்மமேயுளதாம், அந்த அயிக்கியமில்லை = அவ்வொருமையென் பதுமில்லை, இரண்டில்லை=இருமையென்பதுமில்லை, அறிவே வளர்ந்தெழுந்த = சித்தே விரிந்து விளங்குகின்றது, சிந்துதரங்கப்பங்கத்தால் = கடல்கல்லோல விலோலங்களினுல், திகழுகின்றநீர்போல = விளங்காநின்ற பான்மையேபோல, அந்தமில்லா அறிவுருவே=முடி வில்லாத சித்துருவமே, விளங்கும்=இலங்கும், அயலொன்றிலதாகும் = வேறொன்றில்லை யாகும்.

(ஸ்ரீ - வீர) பந்தமுமில்லை வீடுமில்லை நோயற்றதாய பிரமமேயுளதாம், ஐக்கியமுமில தாம் துவித்வமுமிலதாம், சம்வித்தின்சாரமே விரிந்திலங்குகின்றது; கூறிவந்த இரண்டாவது வினவின் உத்தரத்தையுபசங்கரித்தல்:—சிந்துவென்பதாதி. எங்ஙனம் ஒருவாரியானந் தரங்கபேதங்களினாலே நன்கிலங்குமோ அங்ஙனம், சித்தும் ஜகத்பேதங்களினாலே இனி திலங்கும், மாயாமாத்திரத்தன்மையானே அதுவும் ஒரு சிறிதுமிலதேயாம்,

(ச) படர்தீர்=நிராமயமான, ஒருசிந்து அநேகதரங்கபங்கங்களால், திகழுகின்ற நீர் போல=விளங்குந்தன்மைபோல, அறிவுருவே=சித்தொன்றே எங்கும் விளங்கும், அயல் = இத்திருசியம், ஒன்றும்=கிஞ்சிலும், இலதமாகும். (15)

(ஸ்ரீ - வீர - அ - கை) இருக்கவேண்டிய நிலைமையை யினிது தெரிவித்தல்:—பந்த வென்பது.

பந்த முத்தி நினைவுகளைப் பயிலா தோட்டி யுன்வசமாய்
முந்து பிறவிப் பயமெல்லா முற்று மொழித்து நிலைநிற்பா
யந்த நீசங் கற்பநினை வடைந்தாற் சின்மாத் திரவறிவு
வந்து சீவத் துவமடைந்த வாரி யலையா வதுபோல.

(ப - ரை) பந்தமுத்தி நினைவுகளை=கட்டுவீட்டுக் கருத்துகளை, பயிலாதோட்டி = கருதாமல்விட்டு, உன்வசமாய் = சுவஸ்தனாய், முந்து பிறவிப்பயமெல்லாம் = அநாதியாக வந்த ஜனனமரண அச்சங்கள் யாவும், முற்றுமொழித்து = அகல அத்தியந்தமகற்றி, நிலை நிற்பாய்=ஸ்திதிபெறுவாய், அந்தநீ=அத்தகையநீ, சங்கற்ப நினைவடைந்தால்=எண்ணங் களின் முற்படுவையேல், சின்மாத்திரவறிவு = சின்மாத்திரமேயாய சம்வித்தானது, வாரி யலையாவதுபோல = நீரானது தரங்கத்தகைமையை அடைவதொப்ப, வந்து சீவத்துவ மடைந்த=வெளிமுகமாகி ஜீவத்தகைமையை யடையாநிற்கும்.

(ஸ்ரீ - வீர) ஆகலின் நீ பந்தமோக்ஷப்பிரமங்களை வெகுதூரத்தில் விட்டுவிட்டு, பவபய மில்லாதவிதத்தினனாகி அபயப் பிரஹ்மசாரமேயாதி; சொஸ்தனாகவேயிருத்தி. ஆண்டாதி யில் தூயசம்வித்திற்குச் சீவபாவத்தில் நிமித்தத்தைக்கூறல்:—ஹேபூமிபனே சங்கற்ப உன் முகத்தன்மையை யடைவுற்றனவாய சத்தியசுத்த சின்மாத்திர சம்வித்துக்கள் அப்பானந் தரங்கத்தகைமையை யடைவதேபோல, ஜீவத்தன்மையை யடைகின்றன; சுத்தசைதன்யத் தின் அவ்வச்சமக்கார விசித்திரமுற்ற அவித்தையின்கண்ணே பிரதிபிம்பரூபமான சம்வித் துக்கள், சமக்காரங்கள் அந்தக்கரணங்களாகப் பரிணாமமுற்றவழி அவற்றில் வரைவுற்றனவாகி ஜீவத்தன்மையை யடைகின்றன.

(ச) அக்காரணத்தினால், பந்தமுத்தி நினைவுகளை = கற்பனைகளை, பயிலாதோட்டி= பிறவிப்பயமெல்லாமொழித்து, முற்றுநிலை = பிரமசாரனாய், உன்வசமாய்நிற்பாய் = சுவத்த னாய், அந்தச்சின்மாத்திர அறிவு = அச்சின்மாத்திரரூபத்தின் அறிவுகள் சங்கற்பநிலை யடைந்ததாய் = சங்கற்போன்முகத்தை யடைவுற்றனவாய், வாரியலையாவதுபோல் அச் சீவத்துவமடைந்தது. (16)

(ஸ்ரீ - வீர - அ - கை) அறியாமற் சீவருழல்கின்றுரொன்றும் அறிதற்குரிய திருஷ்டாந்த மும் உரைத்தல்:—ஆதியென்பது.

ஆதி காலத் தெழுந்தபவத் தனைய சீவ ருழல்கின்று
ரோது மின்ப துன்பமயக் குளத்துக் கொழிய வுயிர்க்கில்லை
மீது தெரியா விராகுமதி மேவித் தெரிதல் போலவநு
பூதி யளவா முயிர்காணும் பொருளாற் காணப் படுமன்றே.

(ப - ரை) ஆதிகாலத்தெழுந்தபவத்து = முன்னுதயமாயு சம்சாரத்து, அனையசீவருழல் கின்றார் = அவ்வாறுயசீவரலைகின்றார், ஓதுமின்பதுன்பமயக்கு = கூறுநின்ற சுகதுக்கப் பிரமம், உளத்துக்கொழிய வுயிர்க்கில்லை = மனத்துக்கேயல்லாமல் ஆன்மாவிற்கிலதாம், மீது தெரியாவிராகு=மேலேதெரியாத இராகுவானது, மதிமேவித்தெரிதல்போல = சந்திரனைப் பொருந்தித் தெரிவதேபோல, அநுபூதியளவாம் உயிர் = அநுபவமாத்திரமாய ஆன்மா, காணும்பொருளாற் காணப்படும் = மனத்தினாலே அறியப்பெறும்; அன்று ஏ அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர) உபாதியதாக முன்னெழுந்ததாய இச்சம்சாரத்தின்கண்ணே = சமஷ்டி வியஷ்டிமனத்தின் காரியத்தின்கண்ணே அச்சீவர்கள் சமுசரிக்கின்றார்கள், இங்ஙனமாகவே யாது பலிதமாயதோ அதனைக்கூறல் :—இன்பவென்பதாதி. சுகதுக்க தசாமோகங்கள் மனத்தின்கண்ணேயுளவாம் ஆத்மாவின்கண்ணிலவாம், அற்றேல் அதிருசிய ஆன்மா எங்ஙனம் திருசியமாயமனதில், சமுசாரதுக்கியாயாதல் அது விடுபட்டாதல் விவேகத்தி லாதல் அவிவேகத்திலாதல் காணுதல்கூடுமெனின் ஆண்டுக்கூறல்:—மீதென்பதாதி. அதிரு சியமாகிய இராகுவானது கவர்ந்த சந்திரனுலெங்ஙனம் காணப்பெறுகின்றதோ, அங்ஙனம் திருசிய அந்தக்கரணத்தால் சரம சாக்ஷாத்காரரூபவதன் பரிணாமநிமித்தத்தினாலும் அநுபவ மாத்திர வடிவாத்மா காணப்பெறுவதாம்.

(சு) தெரியா=தெரிதற்கரியனாயினும் இராகு, மதிமேவி, கிரகிக்கப்பட்ட இந்துவென் னும் உபாதியால் தெரிதல்போல = திருசியமாவதுபோல், அநுபூதியளவாம் = அநுபூதி மாத்திரரூபமான உயிர் = ஆன்மா, காணும்பொருளால் = திருசியமென்னுந் தேகாதியுபாதி யால், காணப்படும்=அறியப்படுவன். (17)

(ஸ்ரீ - வீர - அ - கை) தன்னையுணரத்தானே முயலவேண்டும் தன் கரணங்களையுபே க்ஷிக்கவேண்டும் எனல்:—கலையினையவென்பன.

கலைக ளாலுங் குருவாலுங் காண்டற் கரிய பரன்றனே
தலைமை யான சாத்திகஞ்சேர் தன்புந் தியினாற் றன்னாலே
நிலையில் வெளியா நெறிபோவார் நெறிசேர் காட்சி களிற்புந்தி
செலவு பற்றில் லாததுபோற் றெவ்வாங் காணங் களைக்காண்பாய்.

இனைய காணங் களைப்பற்ற விகழ்த விரண்டு மியல்பல்ல
வினைசெ யுடல முதற்பொருள்கண் மேவு மியல்பின் மேவிடுக
வனைய பொருள்கள் புந்தியினா லகல நீக்கி யதிசீதம்
புனையுட் காணத் தினனுயெப் போதும் பரம மயமாவாய்.

(ப - ரை) கலைகளாலும் குருவாலும் = சாஸ்திரங்களாலும் ஆசாரியராலும், காண்டற் கரியபரன்றனே = அறிதற்கரியபரம்பொருளே, தலைமையான சாத்திகஞ்சேர்=முதன்மை யான சாத்விகம்பொருந்திய, தன் புந்தியினாற்றன்னாலே = தனது மதியினாற்றன்னாலே, நிலை

யில்வெளியாம் = நிற்கும் நிலைமையில் ஆன்மா காணப்பெறும், நெறிபோவார் = வழியிற் செல்லுவார், நெறிசேர் காக்ஷிகளில் = மார்க்கத்திலுள்ள திருசியங்களில், புந்திசெலவுபற் றில்லாததுபோல்=மதியானது விருப்புவெறுப்படையாததுபோல், தெவ்வாங்கரணங்களைக் காண்பாய்=பகையாம் கரணங்களைப்பார்ப்பாய்;

இனையகரணங்களை=இந்தக்கரணங்களை, பற்றல் இகழ்தல் இரண்டும் இயல்பல்ல = ஆதரவுசெய்தல் அனாதரவுசெய்தல் என்னும் இரண்டும் நியாயமல்லவாம், வினைசெய் உடல முதற்பொருள்கள்=காரியமியற்றும் தேக முதலியவத்துக்கள், மேவுமியல்பில்மேவிடுக = பொருந்துமுறையிலே பொருந்துறுக, அனையபொருள்கள் = அத்தகையவத்துக்களை, புந்தி யினால் = மதியினால், அகலநீக்கி=நீங்கும்படியாகவகற்றி, அதிசீதம் = மிகக்குளிர்ச்சி, புனை யுட்கரணத்தினனாய் = பொருந்தாநின்ற அந்தக்கரணத்தினனாகி, எப்போதும் பரமமயமா வாய்=என்ஞான்றும் பரப்பிரஹ்மமயமேயாவாய்.

(ஸ்ரீ - வீர) சாத்திரங்களினாலும் ஆசாரியராலும் பார்க்கமுடியாதவர் பரமேசுவரர், மற்றோ, தன்னுடைய சத்துவமிகுந்து அகந்தை மமதையற்றுள்ள அவத்தையி லவிரும்மதியி னாலே தன் முயல்வினாலே தன்னாலே பார்க்கப்பெறுவார் பரமேசுவரர்; அகந்தை மமதை யற்றமை தேகேந்திரியாதிகளில் எங்ஙனங்காணத்தக்கது எனத்திருஷ்டாந்தத்தானே ஸ்பஷ்டஞ்செய்தல்:—நெறியென்பதாதி. பதிகர்கள், இராகத்துவேஷாதியற்றிருக்கும் மதியினாலே யெங்ஙனம் மார்க்கத்திற்பார்க்கின்றார்களோ, அங்ஙனமே இத்தேகேந்திரியாதிகள் காணத் தக்கனவாம். சற்புருடரானே இவற்றில் ஆதரவுசெய்யத்தகாதாம், உபவாசாதியாற்பீடனம் பண்ணவொண்ணாதாம், பதார்த்தமாத்திரப் பான்மையைப்பற்றினவாய், இவை இஷ்டப் படியே இருக்கலாம்: உதாசீனபதார்த்த சாதாரணமாகத் தேகாதியை மதியினாலே நன்கு விடுத்து வெகுசேய்மையில், அதிசீதள அந்தக்கரணமுடையவனாய் நித்தியம், சுத்தாத்ம திருஷ்டியினாலே ஆன்மபாவம் மிகுந்தவனாய், இனிதுவாழ்தி.

(ச) தன்னாலே=தன் முயற்சியினாலே, சாத்திகஞ்சேர் = சத்துவகுணநிஷ்டமான, தன் புந்தியினால், நிலைமை=ஆன்மாவென்னும் பரனானே, பரமேசுவரன் வெளியாம்=தெரியப் படுவன், காட்சிகளில் = திருசியங்களை, செலவும் பற்றுமிலாததுபோல் = இராகத்துவேட மின்றிக் காண்பதுபோல். இனையகரணங்களை, தேகேந்திரியாதிகளில், பற்றல் இகழ்தல் இரண்டும்=ஆதாரமும் அனாதாரமும், இயல்பல்ல, உடலமுதற்பொருள்கள் புத்திவிடயங்களாய் மேவுமியல்பில்=இருந்தபடி, மேவிடுக=இருக்கின்றனவாம், பரமமயமாவாய் = ஆன்மமயனா வாய். தேகாதிகள் பதார்த்தங்கள் எனன்மாத்திரமாக வறிஞனாற் காணப்பெறவேண்டும் என்பதாம். (18-19)

(ஸ்ரீ - வீர - அ - கை) தேகோகம் என்னும்புந்தியே சமுசாரமாம் ஏகோகம் என்னும் புந்தியே மோக்ஷமாம் ஆகையால் சவோகம்புந்தியைவிட்டுச் சிவோகம்புந்தியைச் செய்ய வேண்டுமெனல்:—உடலென்பது.

உடனா னென்னும் புந்திபிறப் புற்றகட்டா மொருக்காலு
மிடர்தீர் வீடு விருப்புறுவோர்க் கியல்பன் றுருகு மிப்புந்தி
திடமாங் கிஞ்சின் மாத்திரமு மில்லாச் சின்மாத் திரவடிவன்
றடவா னிலுநா னனுமென்னுஞ் சமமாம் புந்தி பிறப்பறுக்கும்.

(ப-ரை) உடல் நானென்னும்புந்தி=தேகம் யானென்னும்மதியானது, பிறப்புற்றகட்டாம்=ஜனன மரணந்தரும்பந்தமாம், ஒருக்காலும் மிடர்தீர்வீடு = ஒருபோதும் துக்கமேயில்லாத மோக்ஷத்தை அடைய, விருப்புறுவோர்க்கு=விரும்பிய முமுக்ஷுக்கட்கு, இயல்பன்றாகுமிப்புந்தி = ஆதரிக்கத்தக்கதன்றாகுமிந்தமதி, திடமாம் = திரமாம், கிஞ்சின்மாத்திரமும்=சிறிதுமாத்திரமும், இல்லா = இல்லாத, சின்மாத்திரவடிவன்=அறிவுமாத்திரவுருவன், தடமாம்=விசாலமாம், வானிலும்=ஆகாயத்திலும், நான் அணுவென்னும் = யான் சூக்குமன் என்னும், சமமாம்புந்தி பிறப்பறுக்கும்=ஒப்பாகிய திருஷ்டியே ஜனனமரணத்தைக் கெடுக்கும்.

(ஸ்ரீ - வீர) தேகோகமென்னும் எம்மதியுளதோ அது சம்சாரபந்தமியாம், இம்மதியானது முமுக்ஷுக்களானே ஒருபோதும் ஆதரிக்கத்தக்கதேயன்றாம், சிறிதுமாத்திரமும் எதன்கண்ணிருக்கமாட்டாதோ அத்தகைய எச்சின்மாத்திரமுளதோ அதன்வடிவம் ககனத்தினும் சூக்குமமாம், அதுவேயான், என்னும் எச்சாசுவதமதியுளதோ அது முக்தியேதுவாம்.

(ச) கிஞ்சின்மாத்திரமுமில்லா = விசுவ விலக்ஷணமான, சின்மாத்திரவடிவன் = சின்மாத்திரரூபன். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஜடஜகத்தின் உள்ளிலும் வெளியிலும் சம்பந்தித்துள்ள சிற்பிரவேசத்தினாலே விளக்கமாவதில் ஒப்பான வடிவத்திருஷ்டாந்தம் உரைத்தல்:—தெளியுமென்பது.

> தெளியு நீரி லுட்புறம்பு செறியும் வெயில்போற் பொருளனைத்தி
> லொளிகொ ளான்மா நின்றிடுமா லுருவ மெல்லா முட்புகுந்து
> வெளிசெய் பணிக டொறும்பொன்னின் விசித்தி ரம்போல் விளங்கிடுமா
> லளிய வஃதல் லாவுருவா மான்மா வுடைய சகமாதி.

(ப - ரை) தெளியுநீரில் = நிர்மலமானநீரில், உட்புறம்பு=உள்ளும் வெளியும், செறியும்=பொருந்தும், வெயில்போல்=சூரியப்பிரபைபோல, பொருளனைத்தில் = சகலவத்துக்களிலும், ஒளிகொள் ஆன்மா=பிரகாசம்பொருந்திய ஆன்மா, நின்றிடும்=இருக்கும், உருவமெல்லா முட்புகுந்து = வடிவமெல்லா முள்ளேபிரவேசித்து, வெளிசெய் = வெளியே தோற்றும், பணிகள்தொறும்=பூடணங்கள்தோறும், பொன்னின் = சுவர்ணத்தின், விசித்திரம்போல = விசித்திரத்தன்மையேபோல, விளங்கிடும்=இலங்கிடும், அளிய=கருணையே வடிவமாய கார்நிறவண்ண! அஃதல்லாவுருவாம் ஆன்மா=அதுவல்லாத வடிவமாம் ஆன்மாவானது, சகமாதியுடைய=அநான்ம உலகமாதியையுடையதாக.

(ஸ்ரீ - வீர) எங்ஙனம் விமலதோயங்களின் உள்ளிலும் வெளியிலும் சூரியப்பிரபையானது இருப்பதாமோ, அங்ஙனம் யாண்டும் எல்லாவத்துக்களிலும் ஆன்மாவானதுளதாம், எங்ஙனம்பணியாதி யாகாரத்தகைமை பொன்னிற்கே, புகுந்த அவயவவிந்யாச வைசித்திரியமேவியாமோ, அங்ஙனமே யான்மாவிற்கும் அதத்ரூபமாய ஜகதாதித்தகைமையாம், ஜகத்ததன் மூலமாயாரூபங்களாம்.

(ச) பொன்னின் உருவம் எல்லாமுட்புகுந்து வெளிசெய்=ஏமத்தின் வடிவத்து, ஏகதேசாங்கிசங்களின், விசித்திரம் நானாரூபத்துவமே, பணிகடொறும் விளம்கிடும் கேயூராதி

பூடணபாவமாம், அன்றிமற்றோர் பொருளன்று, அதுபோலுமே; ஆன்மாவின் மாயை சகாயத்தோடுகூடியதின் வடிவத்து ஏகதேசாங்கிசங்களின் நானுரூபத்துவமே, அளியவுருவாய்= அஃதல்லாவுருவாய், விளங்கிடும், சேதனுசேதனன் மகமென்னும் உலகலௌகிகப் பிரபஞ்ச பாவமாம் என்பதுபொருள். (21)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆன்மாவிற்குக் காலார்ணவ அகஸ்தியத்தன்மையை நிரூபித்தற்பொருட்டுக் காலத்திற்கு ஜகந்நதியுபசங்காரஸ்தான சமுத்திரத்தகைமையைச்சாற்றல்:— நாசவென்பது.

நாச வடவைக் கனல்படர நடுக்கஞ் செய்யுங் காலமெனு
மூசு கடலிற் சகத்திரளா முடுகு நதிகள் பல்லுயிராம்
வீசு தரங்கத் தொடுபாய்ந்து நிறையா தந்த வேலையையு
மாச மனஞ்செய் யகத்தியனு மான்மா வென்று மகத்துணர்வாய்.

(ப - ரை) நாசவடவைக் கனல்படர=அழிவாகிய வடவாக்கினிபரவ, நடுக்கஞ்செய்யுங் காலமெனும்=பயப்படுத்தும் காலமென்னும், மூசுகடலில்=அதிகம்பிரமாய சமுத்திரத்தில், சகத்திரளா முடுகுநதிகள்=உலகக்கூட்டமாம் வேகமான யாறுகள், பல்லுயிராம் = பலசீவராம், வீசுதரங்கத்தொடு=எறியாநின்ற அலைகளுடன், பாய்ந்தும்=புகுந்தும், நிறையாது= பூர்ணமாகாது, அந்த வேலையையும்=அக்கடலையும், ஆசமனஞ்செய்=உள்ளங்கை நீராய்ப் பானஞ்செய்யும், அகத்தியனுமான்மா=ஸ்ரீ அகஸ்தியமகாரிஷியாகிய ஆன்மாவை, என்றும் அகத்துணர்வாய்=எப்போதும் உள்ளத்தேயறிவாய்=தியானிப்பாய்.

(ஸ்ரீ - வீர) விநாசமேயாகிய வடவாக்கினியுடன் விசிஷ்டமாய்ப் பீமமாய் உள்ள காலமகார்ணவத்தைநோக்கிப் பிராணிகளின் காயங்களாகிய தரங்கங்கணிறைந்த ஜகத்ஜாலநதிகள் செல்லுகின்றன, சென்றனவாயினும் இன்றளவும் சர்வ ஜகத்ஜாலபக்ஷணம் செய்தபோதினும், திருப்தியை யடைவுருத காலவாரிதியின் எப்பான கருத்தாவுளனோ, அவ்வான்மாவென்னும் ஸ்ரீ மகாகஸ்தியனை யெப்போதும் ஹே மன்னவனே தியானஞ்செய்தி.

(ச) பல்லுயிராம் வீசுதரங்கத்தொடுஞ் சகத்திரளா முடுகுநதிகள் நாசவடவைக்கனல்= விநாசமென்னும் வடவாக்கினியால், படர்=வியாப்தமான, நடுக்கஞ்செய்யுங் காலமெனுமூசு கடலில்=பிரளயகாலமென்னும் மகார்ணவத்தில், பாய்ந்தும், நதிகள் சமுத்திரத்திற்போல் ஜகச்சாலங்கள் பிரளயகாலத்தில் நசிப்பனவென்பது பொருள். இப்போதும் இனிவரும் கற்பகோடிகளிலும் நிறையாதந்த வேலையையும்=சர்வசங்காரியென்னுங் காலசமுத்திரத்தையும், ஆசமனஞ்செய்=சங்கரிக்கும், அகத்தியன்=அகஸ்தியனினும் மகாமகிமையுள்ளவனை ஆன்மாவை என்றும் பாவிப்பாய். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை) அநான்மக்களை நிடேதித்து ஆன்மாவையே யனுசந்தானம் செய்துகொண்டிருத்தியெனல்:—தான் என்பது.

தான லாதாய் முன்சொன்ன சகத்தின் றிரளா யுடலமுத
லான பொருளின் காலத்தை யான்மா வென்ப தறத்தள்ளி
ஞான சற்பா வந்தன்னை நனிமேற் கொண்டு மறைந்தோனு
மீன மில்லா மதிவேந்தே யிச்சை யான படிநிற்பாய்.

(ப - ரை) தானலாதாய் = ஆன்மாவல்லாததாய், முன்சொன்ன = பூர்வம் புகன்ற, சகத்தின்றிரளாய்=உலகத்தின்தொகுதியாய், உடலமுதல் = தேகமுதல், ஆனபொருளின் சாலத்தை=உண்டான வஸ்துவின் கூட்டத்தை, ஆன்மாவென்ப தறத்தள்ளி=ஆன்மாவென்பதை யத்தியந்தமகற்றி, ஞானசற்பாவந்தன்னை = சச்சிதானந்தமாகிய தன்னை, நனிமேற்கொண்டு=நன்ருகத் தெரிந்துகொண்டு, மறைந்தோனுய் = கூடனுய், ஈனமில்லா மதிவேந்தே=இகழ்வற்ற புந்திவாய்ந்த மன்னவனே, இச்சையானபடி நிற்பாய் = பிராரப்தத்திற்கொத்தபடி விவகரிப்பாய்.

(ஸ்ரீ - வீர) இத்தேகாதி திருசியஜால அநான்மாவின்கண்ணே, ஆன்மத்தன்மையை விட்டுச் சத்துவமென்னும் நிர்வாசனீபாவத்தை மிக்வுமடைந்து, சுகப்படி கூடமாயிருத்தி.

(ச) தானலாதாய்=அநான்மாவாய், உடலமுதலான பொருளில், திருசியத்தில், ஆன்மாவென்பது ஆன்மாபிமானத்தை, அறத்தள்ளி, ஞானத்தை நனிமேற்கொண்டு, மறைந்தோனுய்=கூடாகாரனுய், இச்சையானபடி நிற்பாய். (23)

ஸ்ரீ-வீர-அ-கை) நித்தியலப்தமாய ஆன்மாவின்கண்ணும் அலப்தத்தன்மைப் பிராந்தியினுலே சோகமாமென்றுகூறல்:—தனமென்பது.

தனங்க ளூடே துயின்மகவைத் தாய்தான் மறந்து மிகத்தேடி
மனங்கன் றுதல்போற் சராமரண மருவா தம்மை யறியாமற்
சௌனங்கள் சலித்துக் கெட்டேனுன் செறியு நாத ரிலாதவனுன்
அனங்கொள் காயம் போமளவி லழிந்தே னுவா வென்றழுவார்.

(ப - ரை) தனங்களூடே துயிலமகவை=குசங்களின் மத்தியில் தூங்கும் குழந்தையை, தாய்தான் மறந்து மிகத்தேடி=மாதாவானவள் மறந்துபோய் மிகவுந்தேடி, மனங்கன்றுதல் போல்=உள்ளம் வாடுதலொப்ப, சராமரண மருவாதம்மை=ஜரைமரணுதியொன்றும் என்றும் பொருந்தாதான தங்கள் வடிவத்தை, அறியாமல்=உணராமல், சௌனங்கள்=உலகர்கள் சலித்து=சலிப்படைந்து, கெட்டேனுன்=யான்பொன்றிப்போனேன், செறியுநாதரிலாதவனுன்=பொருந்தும் நாயகர் இல்லாதவனுன், அனங்கொள்காயம் = சோற்றினை மெத்துந் தேகம், போமளவில்=போகும்போது, அழிந்தேனுவாவென்றழுவார் = செத்தேன் அந்தோ அந்தோ என்று ரோதனஞ்செய்வார்.

(ஸ்ரீ - வீர) குசகோடரத்துள் நன்ருக உறங்குகின்ற சுதனைஜனனியானவள் மறந்து, புத்திரப்பொருட்டெங்ஙனம் அழுகின்ருளோ, அங்ஙனம் ஆன்மாவின்பொருட்டிச்சனமழும்; அஜராமரணமாய் ஆன்மாவையறியாமல் மிகமிகவுந் துக்கிப்பார்கள், அந்தோ கெட்டேன்யான், அநாதன் நான், என்றும் காயங் கழியும்காலையில் நஷ்டன் ஆயினேன் நான் என்றும் அழாநிற்பர்.

(ச) தாய்தான்=ஒருதாயென்னும் நாரி, தனங்களூடே=தனங்களின் மத்தியில், துயின் மகவை மறந்து, அவ்விடத்துறுவதை யறியாமல், மிகத்தேடி=பக்கங்களிலும் சயனத்திலுங் காணுதவளாய் ஐயோ எங்குற்ருய் புத்திரவென அதின் நிமித்தமழுது, மனங்கன்றுதல் போல், அத்தியந்த சன்னிகிதமான ஆன்மாவையுமறந்து, இச்சனங்கள், ஆன்மாவைத்தேடி அறியுநிமித்தமயர்வார், என்று வருவித்துக்காண்க, இச்சனங்கள், சரைமரணமருவாத் தம்மை=அஜராமரணமான ஆன்மாவை, அறியாமல், காயம்போமளவில்=தேகநாசமாம்போது,

கெட்டேன், நாதரில்லாதவன்நான் அழிந்தேன் என்றுமயர்வார், ஆஆ இரண்டும் இரக்கக் குறிப்பு. (24)

(ஸ்ரீ - வீர - அ - கை) சங்கற்பத்தாற் றுயரமிகுமாதலின் அது தீர்ந்து ஆன்மநிஷ்டனு கிச் சுகமாக விருத்தியென்றுரைத்தல்:—வாரியலையென்பன.

வாரி யசைந்த வசைவில்பல வடிவா மதுபோற் சங்கற்ப
நேரி னாலே சிற்பிரம நெடிது விரியுஞ் சங்கற்ப
பார களங்க மறவிட்டுப் படர்ந்த வறிவை யான்மாவிற்
றீர நிறுத்திச் சந்தேகத் திறங்க ளெல்லாந் தீர்ந்தோனாய்.

அலைவி லலையா துயர்பரம வான்மாப் போல நிலைநின்று
நிலைகொள் சுகியா யிவ்வரசு நெடிது புரப்பாய் நிருபதியே
தலைமை யான்மாத் தன்னிடத்தே தன்ன தான வசைவுகளாற்
றொலைவி லாத விளையாட்டைத் தொடர்பிற் செய்யும் பாலரைப்போல்.

(ப - ரை) வாரியசைந்த வசைவில்=கடலசைந்த அசைவினாலே, பலவடிவாம்=நானா வடிவமாம், அதுபோல்=அதுபோல, சங்கற்பநேரினாலே=எண்ணங்களின் வயத்தினாலே, சிற்பிரமம் நெடிதுவிரியும் = சித்துவடிவமான பிரஹ்மமானது விஸ்தாரமாக விரிந்துவிளங் கும், சங்கற்பபாரகளங்கமறவிட்டு=எண்ணங்கள் என்னும் கனமானமாசை யத்தியந்தம் விட் டொழித்து, படர்ந்தவறிவை=விரிந்த வுணர்வை, ஆன்மாவில் = தன்னுடைய சொரூபத் தின்கண்ணே, தீரநிறுத்தி=அத்தியந்தம் திடமாகநிலைபெறுத்தி, சந்தேகத்திறங்கள் எல்லாந் தீர்ந்தோனாய்=ஐயந்திரிபுகள் எல்லாம் அகன்றவனாகி;

அலைவில் அலையாது = விவகாரங்களிலும் நிருவிகற்பமேயெய்தி, உயர்பரம ஆன்மாப் போல=மேலான பரமேச்சுரனேபோல. நிலைநின்று=ஸ்திதிபெற்று, நிலைகொள் சுகியாய்= நிலைபெற்ற ஆனந்தியாய், இவ்வரசு=இவ்விராஜ்ஜியத்தை, நெடிது புரப்பாய்=தீர்க்ககாலம் காப்பாற்றுவாய், நிருபதியே=நரேந்திரனே, தலைமையான்மா = முதன்மையாய் ஆன்மா, தன்னிடத்தே=தனதிடத்தில், தன்னதான அசைவுகளால்=தனதுதீதமான சலனங்களினால், தொலைவிலாத விளையாட்டை=சருக்காதிலீலையை, தொடர்பிற்செய்யும் பாலரைப்போல்= முறைமையிலேயே இயற்றும் குழந்தைகளைப்போல.

(ஸ்ரீ-வீர) எங்ஙனம் வாரி நன்கசைதலினாலே நானாகாரம் காணப்பெறுகின்றதோ அங் ஙனம், சங்கற்பவசத்தினாலே சிற்பிரமமானது காரிய பரம்பரையினாலே யெங்கும் வளராநிற் கும்; ஹே புத்திரனே! நீ சங்கற்பகளங்கங்களினாலே விடுபட்டசித்தத்தை ஆன்மாவின் கண்ணே நன்குதாபித்துச் சமூலசர்வசம்சார உபசமமாங்காலத்தில், பிராரப்த போகோப யோகியாய வதன்றோற்ற அவசேடத்தால் உபசாந்தசமானனாய்; விவகாரப்பொருட்டுத் தேகேந்திரியாதி ஸ்பந்தத்திலும் அதற்கு ஆபாசமாத்திரத் தன்மையுண்மையின் அசையாத பிரஹ்மமேபோல ஈண்டுவிவகார பூமியின்கண் சொஸ்தனாய்ச் சுகியாயிருந்தி; இந்த இராஜ்ஜி யத்தையும் காப்பாற்றுவாயாக. சாசுக்குண்டாம் சாதேசத்திற்கு ஆபீயத்தன்மையானே அசித் தத்தன்மையுண்மையின் ஹியென்பதற்குத் தியாகிச்சாதியென்பதாம். ஆணையிற் செலுத்தி யென்பதுபொருள் இதன்விரிவை ஸ்ரீ வீரசேகர கௌமுதியின்கண்ணேகாண்க.

அசைவிலும் அசையாததேபோல வீண்டிருத்தியெனக் கூறப்பெற்றது, ஆண்டுப்பிரஹ்மம் யாதின்பொருட்டு மாயையால் அசைகின்றது, எங்ஙனந்தான் அசையாமலிருக்கின்றது, என்னும் இக்ஷ்வாகுவின் அறியும்வேட்கையைக் குறிகளினாலே குறித்துக்கொண்டு ஸ்ரீ மனு பகவான்கூறல்:—இப்பரமான்மாவானவர் பிரசவதருமிணியாய அவித்தையாற்றலால், அறியான்பொருட்டுச் சருக்கவடிவ அசைவுகளினாலே பாலனைப்போலத்தாமே விளையாடுகின்றார்.

(ச) வாரி=ஜலமானது, அசைவில்=அசைவுவசத்தினால், பலவடிவு = தரங்கபேனபுற்புதாதிரூபமான நானாகாரமாக, ஆவதுபோல்=பார்க்கப்படுவதேபோல, சிற்பிரமம் = சித்துரூபமாகிய பிரமம், சங்கற்பநேரினாலே = சங்கற்பவசத்தினால், நெடிதுவிரியும் = எங்கும் வியதாதிரூபமாக விரிந்ததாய் நானாரூபமாகக் காணப்படும், சங்கற்ப பாரகளங்கமறவிட்டுப் படர்ந்த, அறிவை = சித்தத்தை, ஆன்மாவிற்றீரநிறுத்தி, சந்தேகத்திறங்கள் எல்லாந்தீர்ந்தோனாய்=சங்கற்பவுபாதனாய்.

அலைவில்=விக்ஷேபத்திலும், அலையாது = அசைவின்றி, நிலைநின்று = நிர்விகாரனாய், பரமவான்மாப்போல், ஈசுவரான்மாவாகியே, நிலைகொள்சுகியாய், இவ்வரசு நெடிதுபுரப்பாய்=இந்த இராச்சியத்தைப்பாலிப்பாய், மநு:—தலைமையான்மா = வியாபகமான ஆன்மா, தன்னதான = சர்க்கான்மகங்களான அசைவுகளால், பாலரைப்போல் விளையாடுவனென்பதாம். (25-26)

(ஸ்ரீ-வீர-அ-கை) இவருக்குச் சத்திவயமாயிருத்தலைச்சாற்றல்:—அழிக்குமென்பது.

அழிக்குந் தன்சத் தியினாற்பின் னழித்துத் தன்பா லமர்ந்திடுமா
விழிக்கும் பந்த முறுஞ்சத்தி யிதற்குத் தன்பா லெழுந்தானே
பழிக்கும் பந்த மெப்படியோ பற்றற் றகலு மப்படியே
யொழிக்குஞ் சத்தி தானேவந் துதய மாகு மிவனுக்கே.

(ப - ரை) அழிக்குந்தன் சத்தியினால் = சங்கரிக்குந் தன்னாற்றலினால், பின்னழித்து = பின்புசங்கரித்து, தன்பாலமர்ந்திடும்=தன்னிடத்திலேயே வீற்றிருக்கும், இழிக்கும் பந்த முறுஞ்சத்தி = நிந்திக்கத்தக்ககட்டுறும் ஆற்றலானது, இதற்கு=இவருக்கு, தன் பாலெழுந்தானே=தம்மிடத்திற்றானேவே உதயமாம், பழிக்கும்பந்த மெப்படியோ = இகழும்பந்தமானது எவ்வாறோ, பற்றற்றகலும் அப்படியே=துவந்துவம் வீய்ந்தோடிப்போம் அவ்வாறே; ஒழிக்குஞ்சத்தி = சங்காரசக்தியானது, தானேவந்துதயமாகுமிவனுக்கே = பரமான்வாகிய இவருக்கே சுயமேவந்துற்பன்னமாகும்.

(ஸ்ரீ - வீர) அறிந்தவன் பொருட்டோ தஞ்சங்காரவடிவமான வித்தியாசத்தினாலே மூலசகிதசர்க்கத்தைச் சங்கரித்து, பாதிதத்தன்மையானே கூடஸ்த அத்வய ஆன்மாவின்கண்ணே எப்போதுமே இருப்பார் என்பதாம்; சுயமிவருக்கவ்வாறு ஆற்றலானது உதயமாம், எதிற்பந்தமுண்டாமோ; ஆண்டு இராகத்தினாலே பிரவிருத்தமாயவருக்கு, சருக்கசக்தி யுதயமாவதேபோல, வைராக்கியத்தினாலே நிவிருத்தமாயவருக்குச் சங்காரசக்தியுதயமும் சுயமாகவேயுண்டாமென்றுகூறல்:—ஒழிக்குமென்பதாதி. சுயமிவருக்கவ்வாறே சக்தியானதுண்டாகின்றது, எதனால் விடுபடுதலாமோ.

(ச) பின்தானே, அழிக்குந்தன்சக்தியினால் = சங்கரிக்கும் சுபாவமுள்ள சத்தியால், சகலத்தையும் அழித்து, தன்பால்=ஆன்மாவின்கண்ணே, அமர்ந்திடும், ஆல் அசை, தேற்றத்

றத்தில்வந்தது; இதனுக்கு = இவ்வான்மாவுக்கு, தானே, அப்படியே = அத்தன்மையான சத்தியுதயமாகும், எந்தச்சத்தியால் பந்தமுறும்; எதனால், தானேயொழிக்கும், அத்தன்மையான சத்தியும், இதனுக்குத்தானே உதிக்கும், பந்தமோக்ஷவேதுக்களான சத்திகளிரண்டும் ஆன்மாவுக்குச் சுபாவசித்தங்கள் என்பதுபொருள். (27)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆண்டுஞாத ஆன்மாவானது, ஜீவஜகத்சாதாரண சத்தாசாமானியவடிவமாக விபாவிக்கத்தக்கதாகவே, அதன்விசேஷ வடிவமானபாகிய அத்தியான்மிக பதார்த்தக்கூட்டங்களின் கற்பனையில் திருஷ்டாந்தங்களைக்கூறல்:—மதியென்பது.

மதியோ டிரவி கதிர்வன்னி மணிக ளிற்சே ரொளிகளைப்போற்
முதிரு மரங்கள் கனியிலையை முதலா யினபோ லருவிகளிற்
பிதிருந் துளிகள் போற்சாலப் பிறங்கும் பிரமத் திடைதோன்றும்
கதிகொள் புந்தி முதலாகக் கற்பி தஞ்சே ரிச்சகமே.

(ப - ரை) மதியோடு இரவிகதிர் வன்னிமணிகளில் = சந்திரனோடு சூரியன் வன்னி தப்த அயம் இரத்தினாதிகளில், சேர்=பொருந்தியுள்ள, ஒளிகளைப்போல் = பிரகாசங்களைப் போலும், முதிருமரங்கள்=முற்றியவிருக்ஷங்களின், கனியிலையை முதலாயினபோல=பத்திர பலாதிகள்போலும், அருவிகளில் = அருவிகளினின்றும், பிதிருந்துளிகள்போல் = சிதறும் பிந்துக்கள்போலும், சாலப்பிறங்கும் பிரமத்திடையே = அத்தியந்தம் ஜகத்சாக்ஷியாய் விளங்கும் பிரஹ்மத்தின்கண்ணே, கதிகொள் புந்திமுதலாக=சதாயெதாவதொன்றையெண்ணிக்கொண்டிருக்கும் மதியாதியாக, கற்பிதஞ்சேரிச்சகம் = மித்தையான விவ்வுலகமானது, தோன்றும்=ஆரோபிதமாகிப் பிரதீதியாகும்; தேற்ற ஏகாரம்பிரிக்கப்பட்டு இடையோடு கூட்டப்பட்டது.

(ஸ்ரீ - வீர) சந்திர இரவி அக்கினி காய்ந்த இரும்பு ஆரதனாதிகளின் பிரபைசுவாலைகளின் பேதங்களானவை எங்ஙனங் கற்பிதங்களாமோ, விருக்ஷாதிகளின் பத்திராதிகள் எங்ஙனமோ, அருவிகளின்கணங்கள் எங்ஙனமோ, அங்ஙனமே இந்தஜகத்வைசித்திரியமும், அதனைக்கவரும் மதியாதிவைசித்திரியமும் அதிஸ்புடமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் பிரஹ்மத்திற்கற்பிதமாம். தப்த அயக்கிரகணம் மாயாசபல திருஷ்டாந்தப்பொருட்டாம்.

(ச) மதியும் இரவியும் கதிரென்னுங் காய்ச்சியவிரும்பும் வன்னியும் மணிகளும் முதலாகிய பிரகாசத்திரவியங்களிற் சேரொளிகள் அபின்னமாயினும் பின்னமாகக் கற்பிக்கப்படுவனபோலவும், மரங்கடம்மின் இலையை முதலாயினபோலவும், அருவிகளிற்றுளிகள்போலவும், இச்சகஞ்சேர் புத்திமுதல்=ஜகத்புத்தி பூதபுத்தி, பௌதிகபுத்தி என்பதாதியாக, சாலப்பிறங்கும் பிரமத்திடைக்கற்பிதமாய்த் தோன்றும். (28)

(ஸ்ரீ-வீர-அ-கை) மாயைச்சித்திர மகிமையைக்காட்டல்:—அது என்பது.

அதுதா னறியார்க் கிடர்நல்கி யதுவே யதுவல் லாததுபோற்
றிதமாய் நிற்கு மிம்மாயைச் சித்திரந்தா னற்புதமே
பொதுவா யங்க மத்தனையும் புணர்ந்து பிறிவற் றிருக்கவுந்தா
னிதமா யுயிரை யுயிர்காணு திருக்க மயக்கு மியாரையுமே.

(ப-ரை) அதுதான்=தோன்றியவதுவே, அறியார்க்கு=தெரியாதவர்க்கு, இடர்நல்கி=துன்பத்தைப்பயந்து, அதுவே யதுவல்லாததுபோல் = அதுதானே அதுவல்லாததேபோல்,

திதமாய்நிற்கும் = நிலைபெற்றதாய்நிற்கும், இம்மாயைச்சித்திரந்தான் அற்புதமே = இந்த மாயையினது வைசித்திரியமானது மிகவும் ஆச்சரியகரமானதே, பொதுவாயங்கமத்தனை யும்=சாமானியமாய் அவயவங்கள் அவ்வளவினும், புணர்ந்து பிறிவற்றிருக்கவுந்தான்=சம்பந் தித்து வேறுபாடற்றிருக்கவும்தான், இதமாய் உயிரையுயிர்காணுது = அநுகூலமாய் ஆன் மாவை யான்மாக்காணுது, இருக்க=இருக்கும்படியாக மயக்கும், யாரையுமே = பிரமிக்கச் செய்யும் யாவரையுமே.

(ஸ்ரீ-வீர) அஞ்ஞர்கட்குத் துக்கத்தைக்கொடுப்பதாய் அதுவே யதுவல்லாததுபோலத் திதமாயிருக்கும்; சர்வகதசொப்பிரகாச ஆன்மாவின் அதரிசனமும், அசத்தாய் அப்பிரகாச மாயினும் உலகத்தினது வெளியாயதரிசனமும், ஆச்சரியம்பொருந்தாததைப் பொருந்திவிக் கும் சமர்த்துடைய மாயையின்பலத்தினுலேயேயாமெனல்:—அந்தோ ஆச்சரியம் குழந்தாய்! விசுவவிமோகினியாய இம்மாயையினது விசித்திரத்தை யென்னென்றிசைப்பேன்! பாகிய அத்தியான்மிக பாவங்களேய்ந்த சர்வ அங்கங்களிலும் அவயவங்களிலும், உள்ளிலும் வெளி யிலும் வியாபித்திருந்தபோதிலும் ஆன்மாவையான்மா எக்காரணத்தினுலே காண்பதில் லையோ.

(ச) அதுவே = அந்தப்பிரமான்மகமே, அவித்தையின் வசத்தினுல், அதுவல்லாதது போற்றிதமாய்நிற்கும், அதனை யறியாதவர்க்கிடர்நல்கும், இச்சித்திரமான மாயைதான் யாரையு மயக்குமற்புதமே, யாதினுலெனில் உயிர்தான் = ஆன்மாவென்னும்புருடன்; அங்க மனைத்தினையும்புணர்ந்து பிறிவற்றிருக்கவும்=சகலமான அவயவங்களிலும் வியாபித்திருக்க வும், உயிரை=ஆன்மரூபத்தை, காணுது=அறியான் என்றதாயிற்று. (29)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆயின் எப்பாவனையினுலே யான்மாவைக்கண்டு சுகியாதல்கூடு மெனின் அறைதல்:—பரமவென்பது.

பரம விண்ணே சகமெல்லா மென்று பாவித் தாசையறிற்
பிரம கவச னின்பமுள பெரியோ னுகு நானென்னும்
பொருளை நீக்கி நினைவின்மை வடிவா நினைவாற் பொருளனைத்து
முருவ மில்லை நிராலம்ப முணர்வு சாந்த மெனநினைவாய்.

(ப - ரை) பரமவிண்ணேசகமெல்லாம் = பரம ஆகாசமேயுலகமியாவும், என்று பாவித் தாசையறில்=என்பதாகச்சிந்தித்து அவாவிடில், பிரமகவசன் இன்பமுள பெரியோனுகும்= பிரமத்தையே கவசமாகவுடையவன் ஆனந்தவடிவமாகிய மகாத்மாவாவன், நான் என்னும் பொருளைநீக்கி=அகமென்னும் அருத்தத்தையகற்றி, நினைவின்மை வடிவாம்நினைவால்= அபாவரூபியாயபாவனையால், பொருளனைத்து முருவமில்லை=சகலவத்துக்கட்கும் காரணத் தைத்தவிர வடிவவேகிடையாது, நிராலம்பம் = விவர்த்தமாதலினுலே பற்றுக்கோடற்றது, உணர்வுசாந்தம் எனநினைவாய் = அறிவுவடிவம் உபசாந்தமாயிருப்பது என்று சிந்திப்பாய்.

(ஸ்ரீ - வீர) சித்தாதர்சமயஞ் சர்வஞ்சேகந்தானென்றே பாவித்து = கண்ணுடியில் நக ராதிபோலப் பிரஹ்மத்தின்கண் ணுலகம் பிராதிபாசிகமேயாமலது வாஸ்தவமல்லவாம், என்ப தாகவே பாவனைசெய்து; (இதுபாடபேதம்,) யாவன் எல்லாவாசையையும்விட்டுச் சொஸ் தமாயிருப்பனே அவன் பிரமகவசன் = மோகசரங்களினுலே பிளக்கமுடியாதபிரஹ்மமே கவசம் எவனுக்கோ அத்தகையன், சுகியாவன், அகமர்த்தத்தை யடியோடும்விடுத்து அபாவ ரூபியாம் பாவனையினுலே, சருவம்சூனியம் நிராலம்பம் சித்துருபம் என்றே பாவித்திடுக.

(ச) பரமவிண்ணே = சிதாகாசமயம், சகமெல்லாமென்று = சர்வஜகத்துமாமென்று, பாவித்து=பாவித்தவனாய், ஆசையறில்= ஆசையின்மையனாயிருக்கின், அங்ஙனமிருப்பவன், பிரமகவசன்=பிரமத்தாலே பரிபூரணன், பிரமபாவனையாலே கவசம் இரக்ஷகத்தையுடையவன் அவனே இன்பமுளபெரியோனாகும் = ஜீவன்முக்தனாகும், நானென்னும்பொருள் = இவ்வகங்காரத்தை நீக்கி அதனால், நினைவின்மைவடிவாம் நிருபாதிகமாதலின் விவகரித்தற்கரிதாகும், நினைவால் = கருத்தால், பொருளனைத்தும் = சர்வஜகத்தையும், நிராலம்பம் = நிராசிரயமாய், உணர்வு=சித்துரூபமான, உருவமில்லையென=சூனியமென்னுஞ் சிதகாசமாமென்று, நினைவாய்=பாவிப்பாய். (30)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஏற்றத்தாழ்வாம் வேற்றுமைமாற்ற வுபதேசித்தல்:—இதுவேயென்பது.

இதுவே நன்றி தன்றென்னு மிதுவே வித்தா மிடரொழுங்குக்
கதுதான் சமமா மங்கியில்வெந் தழிந்தா லிடருக் கவசமென்
பொதுவா நலந்தீங் கெனும்பேத மபாவ மென்னும் பொருவாளால்
விதமாம் புருட வருத்தத்தான் மெல்ல மனதில் வெட்டுதியால்.

(ப - ரை) இதுவேநன்று=இதுதானேநல்லது, இதன்றென்னும்=இது அல்லவென்னும், இதுவேவித்தாம்=இதுதானேவிரையாம், இடரொழுங்குக்கு = துக்கபரம்பரைக்கு, அதுதான்சமமாம் அங்கியில் = அது ஆனது ஒப்பாகிய அக்கினியில், வெந்தழிந்தால் = வெதும்பிக்கெடின், இடருக்கவசமென் = துக்கத்திற்கு இடமெங்கே, பொதுவாநலந்தீங்கெனும்பேதம் = சாமானியமாகவேயுண்டாம் இரம்மிய அரம்மியவேற்றுமையானது, அபாவமென்னும் பொருவாளால்=அபாவனையென்றுசொல்லப்பட்ட வெட்டும் வாளாயுதத்தினாலே, விதமாம் புருடவருத்தத்தால் = நானாவிதமான புருடப்பிரயத்தனத்தினால், மெல்லமனதில் வெட்டுதி=பையச்சித்தத்தின்கண் வெட்டித்தள்ளுவாய். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர) இது இரம்மியம் இதுவல்லவென்னும் ஏற்றத்தாழ்வான கற்பனையானது உனது துக்கசந்ததிக்குக்காரணமாம், சாமிய அக்கினியினாலே அதுதக்தமாகவே, துயரத்திற்கு இடமெங்கே. ஹே மன்னவனே! அபாவனைச் சமாதியப்பியாசத்தானே சருவதிருசியவிஸ்மிருதிவடிவ அத்திரத்தானே, இரம்மியாரம்மிய பதார்த்தங்களின் விபாகித்தன்மை = பிரியாப்பிரியத்தன்மை=வைஷம்மியகற்பனை, அதுவோ இராகத்துவேட ஹேதுவாம், சமதிருஷ்டிதார்ட்டிய இலக்கண புருடப்பிரயத்தன அதிசயத்தானே, விரைவில், தன்னுள்ளிலேயே, கெடுத்தல்வேண்டும்.

(ச) இதுநன்று ஈதுநன்றன்று என்னும், இதுவே=பேதபாவனையே இடரொழுங்குக்குவித்தாம், அதுதான்=அவ்வித்து, சமமாமங்கியில் = சாமியாக்கினியால், வெந்தழிந்தால், இடருக்கவதியதாம் = துக்கத்துக்கவசரமெங்கே, நன்மைதீமையுறு, அபாவனாரூபமென்னும் பொருவாளாலும், தனது புருடவருத்தமிகுதியாலும் மனத்தையேவெட்டுதி. (31)

(ஸ்ரீ - வீர - அ - கை) இன்னபடி நீ யிருக்கவேண்டுமென்றிதத்தை யுபதேசித்தல்:—நினையென்பது.

நினைவான் முடிக்குங் கருமமெனு நீண்ட பெரிய வன்காடு
தனைநீ நினைவின் மையினுலே தடிந்து பரம பதமேவி
வினைதீ ருனது விவேகத்தை மேவி யென்று நிலைநிற்பாய்
புனைதா ரிக்கு வாகுவெனும் புகழா னிறைந்த பூபதியே.

(ப - ரை) நினைவால் முடிக்கும்=பாவனையினுலே யெய்தப்பெறும், கருமமெனும் நீண்ட பெரியவன்காடுதனை=வினைகள் என்பதான விஸ்தாரமான கடினவனமானது தன்னை, நீ=அரசனேநீ, நினைவின் மையினுலே = அபாவனையினுலே, தடிந்து = கெடுத்து, பரமபத மேவி = பரம்பொருளையடைந்து, வினைதீர்=சோகங்களை நீக்குதி, உனது=உன்னுடைய, விவேகத்தைமேவி = பகுத்துணர்வைப்பெற்று, என்றும் நிலைநிற்பாய் = எப்போதும் நிலை பெற்றிருப்பாய், புனைதார்=வெற்றிமாலையைத்தரித்த, இக்குவாகுவெனும் = இக்ஷ்வாகு வென்னும், புகழால் நிறைந்தபூபதியே = கீர்த்தியால் நிறையப்பெற்ற பூமிபாலனே.

(ஸ்ரீ - வீர) சமாதிலக்ஷண அபாவனத்தினுனே பாகியார்த்தபாவனத்தையும் அதன் பிரயோஜகமாய தர்மாதர்ம இலக்ஷண கருமகானனத்தையும், விலயம்செய்வாயாக; ஆகாயத் தினும் அதிசூக்ஷுமமாகிய பரமசிவத்தையடைந்து, அதன்பலத்தினுலே, சோக ஹேது வானது பற்றுதொழியவே, விசோனுகவேயிருப்பாய். போ=அரசனே!

(ச) நினைவு=பேதபாவனையையும், அதனுலேமுடிக்கும்=கட்டுறும், கர்மமெனும் வன் காடுதனையும், நினைவின்மையினுலே, அபாவமென்னும் வாளால், தடிந்து=வெட்டி, பரமபத மேவி=வாசனையின்றுனவத்தை நன்றுயடைந்து, வினைதீர் = விசோகனுகியே ஸ்திதமாய் நிற்பாய். (32)

(ஸ்ரீ-வீர-அ-கை) ஆநந்தப்பிராப்தியையும் அனர்த்த நிவிருத்தியையும் அடைந்தவன் யாவன் எனில் அறைதல்:—உலகினென்பது.

உலகின் பரப்பை யுள்ளாக்கி யுன்னு நினைவுக் கப்பாலாய்க்
கலக மடவார் பொருளென்னுங் காத னழுவி நானென்னுங்
குலவு மிருள்போய் விவேகநிலை கூடு மவனே பரானந்த
மிலக வடைந்தோ னெடுங்கால மிவனே துன்ப மில்லாதோன்.

(ப - ரை) உலகின்பரப்பை=விசுவவிஸ்தாரத்தை, உள்ளாக்கி=அந்தர்க்கதமாக்கி, உன் னும் நினைவுக்கு அப்பாலாய்=சிந்திக்குஞ்சிந்தைக்கும் அதீதமாய், கலகமடவார் = சண்டை யிடுவதே முக்கியகருமமென்றுகொண்ட அறியாமைநிறைந்த மங்கையர், பொருள் = தனுதி, என்னுங்காதல்நழுவி=என்பதான ஆசையகன்று, நான் என்னுங் குலவுமிருள்போய்=அக மென்பதாக வியாபித்த அந்தகாரம்நீங்கி, விவேகநிலைகூடுமவனே=விவேகஸ்திதியை யடையு மப்புண்ணியவானே, பராநந்த மிலகவடைந்தோன் = பரமானந்தம் வெளிப்படவடைந் தவன், நெடுங்காலம் = தீர்க்ககாலம் அல்லது எப்போதும், இவனே = இவ்வதிகாரியே, துன்பமில்லாதோன்=துயரம் சிறிதுமனுகாதோன்.

(ஸ்ரீ - வீர) ஹே மைந்தனேநீ, முதலில் விவேகவிலாசவானுகி, சமாதியினுலேவாகிய விவகார ஆபாசங்கழிந்தவனுகி, பூர்ணவடிவத்தானே, நிறைந்துதாங்கிய புவனவிஸ்தாரத்தை யுடையவனுகி உல்லாசனுகி, அபரிச்சின்னப் பிரஹ்மானந்தத்தின் எங்கும் எவ்வகையானும் எப்போதும் எழும் ஆவிர்ப்பாவத்தை யறிந்தவனுகி யடைந்தவனுகி, அதன் அகண்ட ருசுத்

தன்மையை யடைவுற்றவனாகி அதனாலே சமுசாரநோயகன்றவனாகி, ஐந்தாவது ஆறாவது பூமிகளில், நெடும்போதுறைந்து முடிவில் ஏழாவதுபூமியின்கண் ஆத்தியந்திக விக்ஷேப வைஷம்மியசமத்தினாலே சமனாகி அச்சந்திரிகைப் பூர்ணத்தன்மையினாலே தூயவனாகி, ஆத்தியந்திக வாசனையஞ்ஞான களங்கக்ஷயத்தினாலே சொச்ச ஆகாரனாகி, அபயசித்துருவுடையவனாக ஆவாய்; அல்லது நான்குபாதங்களினாலே நான்காவதே முதலான நான்குபூமிகள் முறையே காட்டப்பெற்றனவாமென்றேனும் உணரத்தக்கனவாம்.

(ச) உலகின்பரப்பையுள்ளாக்கி = பரிபூரணன்மபாவனையால் மிகநிறைந்த புவனவிஸ்தாரனாகி, உன்னு நினைவுக்கப்பாலாய்=பேதபுத்திரகிதனாய், இருள்போய்=அஞ்ஞான விலாம்போய், விவேகநிலை கூடுமவனே=விஞ்ஞானவிலாசவானே, பராநந்த மிலகவடைந்தோன், பிரமானந்தனாய் நிச்சலனும் அதனாலே துன்பமில்லாதோன்=நிராமயனும். (33)

(ஸ்ரீ - வீர - அ - கை) பரமசூக்குமமான பிரஹ்மத்தையடைந்து என்பதாகயாது யோக பூமிகையப்பியாசபலம் கூறப்பெற்றதோ அதன் உபாயபூதமான பூமிகைவேற்றுமைகளை வருணித்தல்:—சாந்தனென்பது.

சாந்த னாகிச் சமநிலையாய்ச் சால நொய்தா யறிவுருவை
வேந்த னேசந் ததநினைவா யென்று மனுமீண் டுரைசெய்வா
னாய்ந்த நூலா நல்லோரா லறிவை வளர்க்க வேண்டுமுத
லேய்ந்த யோகத் தினுக்குமுதற் பூமி யிதுயோ கிக்குநவம்.

(ப - ரை) சாந்தனாகி=உபசாந்தனாகி, சமநிலையாய் = ஒப்பாகியஸ்தியாய், சாலநொய்தாய்=அத்தியந்தம் சொச்சமாய்ச்சூக்குமமாய், அறிவுருவை=சித்துருபத்தை, வேந்தனே = மன்னவனே, சந்ததம்=எப்போதும், நினைவாய்=சிந்திப்பாய், என்று = எனக்கூறி, மனு மீண்டுரைசெய்வார்=ஸ்ரீ மனுபகவான் மீளவும்கூறுவதாவது, ஆய்ந்தநூலால் = விசாரஞ் செய்யும் சாஸ்திரத்தால், நல்லோரால் = சாதுக்களால், அறிவை வளர்க்கவேண்டுமுதல் = விவேகத்தை விருத்திசெய்யவேண்டும் ஆரம்பத்தில், ஏய்ந்தயோகத்தினுக்கு = மோக்ஷ சாதனமாகப் பொருந்தியயோகத்துக்கு, முதற்பூமியிது=பிரதமபூமிகையிதுவாய், யோகிக்கு நவம்=புதியவற்புத யோகிக்கென்பதாம்.

(ஸ்ரீ-வீர) முற்பாதிக்குரைமுன்வந்ததாகும், சாஸ்திர சற்சனசம்பந்தங்களாலே பிரஞ்ஞையை முதலில் நன்கு வளர்க்கவேண்டும், யோகியினுடைய யோகத்துக்கே இதுமுதற் பூமிகையென வியம்பவேண்டும், வேண்டவே சாதனசதுட்டய சம்பாதனசகிதத்ததும், ஸ்ரீ குருசாஸ்திர சகபாடியாதி சகாயத்ததும் ஆகிய சிரவணம் முதற்பூமிகையென்பதாதி நிஷ்கர்ஷை உற்பத்திப்பிரகரணத்திற் காட்டப்பெற்றதே யீண்டுணரத்தக்கதாகும்.

(ச) சாந்தமாகி=உபசாந்தமாய், சமநிலையாய்=ஆன்மசுகமாய், சாலநொய்தாய் = அதிநிர்மலமாகிய, அறிவுருவை=சித்துருபத்தை, சந்ததம்நினைவாய் = ஸ்ரீ மநு, மீண்டு ஞான சத்த பூமிகளைச் சங்கிரகமாகத் தெரிவிப்பவராய், உரைசெய்வார், சாஸ்திரசற்சங்காதிகளாற் பிரஞ்ஞையை வளர்ப்பது யோகத்துக்கு முதற்பூமி யென்பது பொருள். இதுவே முன்பு சுபேச்சையென்று சொல்லப்பட்டது, யோகியாகிய நினக்காம். (34)

(ஸ்ரீ - வீர - அ - கை) சத்த பூமிகளையும் கிரமமாகச்சாற்றல் :—அயர்வில், அறிவில், ஞன்பன.

அயர்வில் விசார மிரண்டாகு மசங்க பாவ மூன்றுகும்
பயிலு நாலாம் விலாபினியே படர்வா தனையைப் பற்றறுக்கு
மயர்வில் சுத்த நல்லறிவின் மயவா நந்த வடிவைந்தாந்
துயில்சாக் கிரம்பா திகளில்லாத் தொடர்சீ வனின்முத் தியுமிதுவே.

அறிவி லாமை வடிவாகி யகலா நந்த மொன்றுலுஞ்
செறியும் வடிவாய்ச் சுழுத்தியைப்போற் றிகழு மாறு முயர்பூமி
பிறிவில் சமமா யறநொய்தாய்ப் பெரிது நன்றாய்ச் சாந்தமதாய்
வெறிய துரியங் கேவலமாம் வீடே யேழாம் வியன்பூமி.

(ப - ரை) அயர்வில் விசாரமிரண்டாகும்=ஓய்வில்லாத விசாரமானது இரண்டாவது பூமியாம், அசங்கபாவம் மூன்றுகும் = அசங்க சொரூபத்தின்பாவனை மூன்றுவது பூமியாம்; பயிலும் விலாபினியே நாலாம்=அப்பியசித்த விலாபனியென்னும் பாதசாதினியே நான்காவது பூமியாம், படர்வாதனையைப் பற்றறுக்கும்=விரிந்தவாதனையை வேரறுக்கும், அயர்வில் சுத்த=மயக்கமற்றதூய, நல்லறிவின்மய=நல்லசின்மய, ஆனந்தவடிவு = இன்பரூபமானது, ஐந்தாம்=ஐந்தாவதுபூமியாம், துயில்சாக்கிரம்பாதிகளில்லாத்தொடர்=சுழுப்தி நனவு அர்த்தமில்லாத சம்பந்தமுடையதாமிது, இதுவே ஜீவனின்முத்தியும் = இதுதானே ஜீவன்முத்திப் பதமுமாம்.

அறிவிலாமை வடிவாகி=கேவலம் ஞானமயமாகி, அகலானந்தம் ஒன்றுலும் = அபரிமிதசுகமேகத்தானே, செறியும்வடிவாய்=பொருந்தியரூபமாய், சுழுத்தியைப்போற்றிகழும்=துயிலைப்போன்றிலங்கும், ஆறும் உயர்பூமி=ஆறுவதாகிய மேலானபூமி, பிறிவில்சமமாய் அறநொய்தாய்=வேற்றுமையின்றியொப்பாய் அத்தியந்தம் தெளிவாய்ச் சூக்குமமாய், பெரிது நன்றாய்=மிகவுமழகியதாய், சாந்தமதாய் = உபசாந்தமாய், வெறியதுரியங் கேவலமாம்= சும்மாவிருக்குந்துரியங் கேவலமாம், வீடே=மோக்ஷமே, ஏழாம்வியன்பூமி = ஏழாவதாகிய அற்புதபூமியாம்.

(ஸ்ரீ - வீர) விசாரணையென்னும் மனனம் இரண்டாவது பூமியாம், அசங்க அத்விதீய ஆன்மாவின் பாவனைவடிவநிதித்தியாசனம் மூன்றுவதுபூமியாம், தத்துவசாக்ஷாத்காரத்தினலே அஞ்ஞானதிப் பிரபஞ்சத்தின் பாதகசாதகமென்னும் விலாபனி நான்காவதுபூமியாம், இது வாசனையையும் அதன்பற்றுக்கோடாய அவித்தையையும் விலயம்செய்வதாம், தூய அறிவுமயச்சமாதிபரிபாகத்தினலேயுண்டாய பிரசித்த மகா ஆனந்தரூபம் ஐந்தாவதாம், அத்தசையைத் திருஷ்டாந்தத்தானே அநுபவத்தேற்றல்:—துயில் என்பதாதி. எங்ஙனம் நித்திரைச்சேடத்தினலே பாதிதுயின்றும் பாதிவிழித்துமிருக்கும் புருடன் பாகியசப்தாதிகளைக் கேட்டபோதினும், உள்ளே துயிற்சுகவாசக்தனுய், உத்தராதி விவகாரத்தை யிச்சிப்பதில்லையோ அங்ஙனமே, இப்பூமியினின்றும் எழுந்தகாலையிலும், இதன்கண்ணே சீவன் முக்தியாகியிருப்பன்; இயற்கையாகவே கெடாததாகிய பிரஹ்மாகார அநுபவவிருத்திரூபமானது ஆறுவது பூமியாகும், அதனையே நன்குரைத்தல்:—ஆனந்தமென்பதாதி. ஆனந்த ஏககனகாரமாய்த் துயிலொத்ததிதியாமது; அதன்பின் எப்போது அவ்விருத்தியும் க்ஷயமாமோ அப்போது இலங்காநின்ற பிரஹ்மமே பூரணமாய்ச் சுவப்பிரகாசமாயெஞ்சும், அவ்வாறு ஜீவிக்குந்திதி ஏழாவதுபூமியாம், அதுவேயெம்மால், சாந்தனுகியென்பதாதியானே முன்னர் மொழியப்பெற்றது; ஆறுவது பூமியானது துரிய அவஸ்தையாம் உபசாந்தமிக்கதாம், முதற்பூமி மூன்

றற்கும் இனிக்கூறும் முறையானே ஏகிகாரத்தால் ஆறுவது துரியமாம்; அநந்தரம் கேவல முக்தியேயாய், சமதையாய், சொச்சதையாய், சௌமியமாயிருப்பது ஏழாவதுபூமியாம்.

(ச) விசாரமிரண்டாகும் அசங்கபாவம் மூன்றாகும், இதுவே மனதுக்குத்தனுத்துவத்தைச் சம்பாதிப்பதாகலின் றனுமானசியென்று முன்பு கூறப்பட்டது, நாலாவது வாதனையைப்பற்றறுக்குமாதலின் விநாசினியெனப்படும், விலாபினியென்பது வடமொழிப்பாடாந்தரம், முன்பு வாசனையின் விலயத்தினுற் சித்தம் சத்துவமுறுதலாற் சத்துவாபத்தியெனப்பட்டது, சுத்தம்=நிர்வாசனையும், நல்லறிவின்மயமுமான ஆனந்தத்தின், வடிவு=ரூபம், ஐந்தாம், இதுவே=இப்பூமியே, துயில்சாக்கிரம்பாதிகளில்லாத்தொடர்=பாதிசுழுத்தியும் சாக்கிரமுமானவிவகாரம் சீவன்முத்தியாம், உம்மையால் இதில் இங்ஙனம் விவகரிக்குஞ் சீவன்முத்தனிருப்பன் என்றதாயிற்று,

ஆறுவது, அறிவில்லாமை வடிவாகி = அசம்வேதனரூபமாயும், ஆனந்தமொன்றாலும் செறியும்வடிவாய், ஆனந்தத்தைக் கனகாரமாகியும், சுழுத்தியைப்போற் றிகழும், சாந்தமதாய் = உபசாந்தமுமாகிய அப்பூமி சாக்கிரதாதித்திரயாதீதமாதலின், துரியம்=துரியாவஸ்தை கேவலமாம்வீடு = முத்தியேயாம்; இவ்வசம்வேதனரூபமே பதார்த்தாபாவனை 'யென்று முற்கூறப்பட்டது; அது சமமாய் எங்கும்பரிபூரணமாய், பெரிது நன்றாய், அறநொய்தாய், அது ஏழாம்பூமி, நிருவாணத்துருவாய் துரியாதீதமென்னும் பதம் மேலானவவஸ்தை, வாழுமிவ்வேழாம்பூமி விடயம் விடுதலினுற்சீவிப்பவர்க்கு விடயமன்றாம், விதேகமுத்தர்க்கு ஏகவிஷயமாமென்பது பொருள். இந்தச்சொரூபநிட்டை அரூபமாய்ச் சொச்சமான துரியமென முற்கூறப்பட்டது எனப் பிறகவியோடன்னுவயிக்க இது வடமொழிப்பொருள். (35-36)

(ஸ்ரீ-வீர - அ-கை) சத்தமிக்கும் அஷ்டமிக்கும் யோகிஜீவன அஜீவனமாத்திரம் சிறப்பாம் அயலிலையாம், இலதாகவே அபேதமேயாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—மன்னு என்பது.

மன்னு விடயம் விடுதலினுல் வாழு மிவ்வே ழாம்பூமி
தன்னை நிருவா ணத்துருவாய்ச் சான்ற துரியா தீதபத
மென்ன வுரைத்தார் சிலர்வேறே யிவ்வே ழவத்தை களின்முன்னஞ்
சொன்ன வவத்தை யொருமூன் றுந் தொடர்சாக் கிரமாக் கருதுவதாம்.

(ப - ரை) மன்னுவிடயம் விடுதலினுல் = பொருந்தாநின்ற விடயவாசனைகளை விட்டொழித்தலால், வாழும் இவ்வேழாம்பூமிதன்னை=ஜீவிக்கும் இந்த ஏழாவது பூமியை, நிருவாணத்துருவாய்=மோக்ஷவடிவமாய், சான்ற துரியாதீதபதமென்னவுரைத்தார் சிலர்=மேம்பட்ட துரியாதீதபதம் என்பதாகப்பெரியார்கூறுகின்றார், வேறே=அயலே, இவ்வேழவத்தைகளில்=இச்சத்த அவத்தைகளில், முன்னஞ்சொன்ன அவத்தை யொருமூன்றும்=முன்னர் மொழிந்த அவத்தைகள் மூன்றும், தொடர்சாக்கிரமாக் கருதுவதாம்=சம்பந்தித்த நனவதாக எண்ணப்பெறுவதாம்.

(ஸ்ரீ - வீர) ஏழாவது பூமியே துரியாதீதமெனப்பெயரிய அவத்தையாம் அது நன்றாகப் பிரபலத்தை யடையவே விதேகமுக்தியென்னும் நிர்வாணரூபிணியாம், அதுவும் ஜீவிக்கும் யோகிகட்கு விடயமல்லவாம், ஈண்டுப்பூர்வ அவஸ்தாத்திரயமோ நனவென்பதாகவே நிலைபெறும். (37)

(ஸ்ரீ - வீர - அ - கை) சேடித்தவற்றையும் அவத்தைகட்குட்படுத்தியுரைத்தல் :—சக மென்பது.

சகங்கள் கனவிற் றோற்றமாவாந் தன்மை நாலா வதுகனவா
நிகழா நந்த மொன்றாலு நெருங்கு வடிவ மைந்தென்று
புகன்ற வவத்தை சுழுத்தியதாம் போத மின்மை வடிவாகித்
திகழ்ந்த வாறா மவத்தையினைச் சிறந்த துரிய மெனலாகும்.

(ப - ரை) சகங்கள் கனவிற்றோற்றமாவாம்தன்மை=உலகங்கள் சொப்பனம்போலப் பிரதீதியாந்தன்மை, நாலாவது கனவாம்=நான்காவதுபூமியே கனவாம், நிகழானந்தமொன்றாலும்=விளங்காநின்ற இன்பம் ஏகத்தாலுமே, நெருங்கும்வடிவம் ஐந்தென்று = செறிந்தவடிவம் ஐந்தாவது பூமியென்று, புகன்ற அவத்தை=கூறிய அவஸ்தை, சுழுத்தியதாம்=நித்திரையாம், போதமின்மைவடிவாகி=உணர்வில்லாமை ரூபமாகி, திகழ்ந்த = விளங்கிய, ஆறாம் அவத்தையினை=ஆறாவது பூமியை, சிறந்ததுரியமெனலாகும்=விசேடமாகிய துரியமெனக் கூறலாகும்.

(ஸ்ரீ - வீர) நான்காவது சொப்பனமெனக் கூறப்பெறும் யாண்டுச்சகம் சொப்பனதுல்லியமாமோ, ஆனந்த ஏககனீபாவத்தால், சுழுப்தியெனப்பெயரியதாம் ஐந்தாவது, அசம்வேதனரூபமாய ஆறாவதோ, துரியபதப்பெயரைத் துன்னுவதாம்.

(ச) கனவில்=கனவுபோல், தன்மையாதலின். (38)

(ஸ்ரீ - வீர - அ - கை) அதனையே புகழ்ந்து அந்த அவத்தையிலேயே சருவ திருசியங்கட்கும் பிரத்தியக்கான்மாவின்கண் நன்றாகவிலயமாதலின் ஆத்தியந்திக ஜீவன்முத்தத்தன்மையாமெனக்கூறல்:—தரியாவந்தவென்பன.

தரியா மனவாக் கெட்டரிதாய்த் தனதே சுண்மை வடிவான
துரியா தீதப் பதவவத்தை தூய வேழா முயர்பூமி
பிரியா துள்ளே வசமான பிரத்தி யாகா ரத்தாலே
தெரியா தாகிக் காண்கின்ற திரள்க ளனைத்தும் போமாகில்.

அந்த மகாசத் தையினாலே யவனே முத்த னையமிலை
வந்த போக சுகதுக்க வகையாற் றாக்கா தறநிறைந்த
புந்தி யுளனு யான்மாவிற் பொருந்தி மகிழ்ந்து நிற்குமெனி
லிந்த மனித னிலைதானே யிங்கே தோன்று முயர்முத்தி.

(ப - ரை) தரியாமனவாக் கெட்டரிதாய்=நிலையாத மனத்திற்கும் வாக்கிற்கும் கோசரிக்கமுடியாததாய், தனதேசுண்மைவடிவான=சுவப்பிரகாச சத்தூபமான, துரியாதீதப் பதவவத்தை = துரியாதீதபத அவஸ்தையானது, தூயவேழாமுயர்பூமி = பரிசுத்தமாய வுயர்ந்த ஏழாவதுபூமியாம், பிரியாதுள்ளேவசமான=பின்னப்படாமல் உள்ளே வயப்பட்ட, பிரத்தியாகாரத்தாலே = பிரத்தியாகாரம் என்பதாலே, தெரியாகி = காணப்படாதாகி, காண்கின்றதிரள்கள் அனைத்தும்போமாகில் = திருசியக்கூட்டங்கள்யாவும் சாம்புமாயின்.

அந்தமகாசத்தையினாலே = அப்பெருஞ்சமதையினாலே, அவனேமுத்தன் ஐயமிலை = அம்மகானேமுத்தன் சந்தேகமில்லை, வந்த போகசுகதுக்கவகையால் = கருமவயமாகவந்த

றற்கும் இனிக்கூறும் முறையானே ஏகிகாரத்தால் ஆறுவது துரியமாம்; அநந்தரம் கேவல முக்தியேயாய், சமதையாய், சொச்சதையாய், சௌமியமாயிருப்பது ஏழாவதுபூமியாம்.

(ச) விசாரமிரண்டாகும் அசங்கபாவம் மூன்றாகும், இதுவே மனதுக்குத்தனுத்துவத்தைச் சம்பாதிப்பதாகலின் றனுமானசியென்று முன்பு கூறப்பட்டது, நாலாவது வாதனையைப்பற்றறுக்குமாதலின் விநாசினியெனப்படும், விலாபினியென்பது வடமொழிப்பாடாந்தரம், முன்பு வாசனையின் விலயத்தினாற் சித்தம் சத்துவமுறுதலாற் சத்துவாபத்தியெனப்பட்டது, சுத்தம்=நிர்வாசனையும், நல்லறிவின்மயமுமான ஆனந்தத்தின், வடிவு=ரூபம், ஐந்தாம், இதுவே=இப்பூமியே, துயில்சாக்கிரம்பாதிகளில்லாத்தொடர்=பாதிசுழுத்தியும் சாக்கிரமுமானவிவ்காரம் சீவன்முத்தியாம், உம்மையால் இதில் இங்ஙனம் விவகரிக்குஞ் சீவன்முத்தனிருப்பன் என்றதாயிற்று,

ஆறுவது, அறிவில்லாமை வடிவாகி = அசம்வேதனரூபமாயும், ஆனந்தமொன்றாலும் செறியும்வடிவாய், ஆனந்தத்தைக் கனாகாரமாகியும், சுழுத்தியைப்போற் றிகழும், சாந்தமதாய் = உபசாந்தமுமாகிய அப்பூமி சாக்கிரதாதித்திரயாதீதமாதலின், துரியம்=துரியாவஸ்தை கேவலமாம்வீடு = முத்தியேயாம்; இவ்வசம்வேதனரூபமே பதார்த்தாபாவனை 'யென்று முற்கூறப்பட்டது; அது சமமாய் எங்கும்பரிபூரணமாய், பெரிது நன்றாய், அறநொய்தாய், அது ஏழாம்பூமி, நிருவாணத்துருவாய் துரியாதீதமென்னும் பதம் மேலானவவஸ்தை, வாழுமிவ்வேழாம்பூமி விடயம் விடுதலினாற்சீவிப்பவர்க்கு விடயமன்றாம், விதேகமுத்தர்க்கு ஏகவிஷயமாமென்பது பொருள். இந்தச்சொரூபநிட்டை அரூபமாய்ச் சொச்சமான துரியமென முற்கூறப்பட்டது எனப் பிற்கவியோடன்னுவயிக்க இது வடமொழிப்பொருள். (35-36)

(ஸ்ரீ-வீர - அ-கை) சத்தமிக்கும் அஷ்டமிக்கும் யோகிஜீவன அஜீவனமாத்திரம் சிறப்பாம் அயலிலையாம், இலதாகவே அபேதமேயாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—மன்னு என்பது.

மன்னு விடயம் விடுதலினால் வாழு மிவ்வே ழாம்பூமி
தன்னை நிருவா ணத்துருவாய்ச் சான்ற துரியா தீதபத
மென்ன வுரைத்தார் சிலர்வேறே யிவ்வே ழவத்தை களின்முன்னஞ்
சொன்ன வவத்தை யொருமூன் றுந் தொடர்சாக் கிரமாக் கருதுவதாம்.

(ப - ரை) மன்னுவிடயம் விடுதலினால் = பொருந்தாநின்ற விடயவாசனைகளை விட்டொழித்தலால், வாழும் இவ்வேழாம்பூமிதன்னை=ஜீவிக்கும் இந்த ஏழாவது பூமியை, நிருவாணத்துருவாய்=மோக்ஷவடிவமாய், சான்ற துரியாதீதபதமென்னவுரைத்தார் சிலர்=மேம்பட்ட துரியாதீதபதம் என்பதாகப்பெரியார்கூறுகின்றார், வேறே=அயலே, இவ்வேழவத்தைகளில்=இச்சத்த அவத்தைகளில், முன்னஞ்சொன்ன அவத்தை யொருமூன்றும்=முன்னர் மொழிந்த அவத்தைகள் மூன்றும், தொடர்சாக்கிரமாக் கருதுவதாம்=சம்பந்தித்த நனவதாக எண்ணப்பெறுவதாம்.

(ஸ்ரீ - வீர) ஏழாவது பூமியே துரியாதீதமெனப்பெயரிய அவத்தையாம் அது நன்றாகப் பிரபலத்தை யடையவே விதேகமுத்தியென்னும் நிர்வாணரூபிணியாம், அதுவும் ஜீவிக்கும் யோகிகட்கு விடயமல்லவாம், ஈண்டுப்பூர்வ அவஸ்தாத்திரயமோ நனவென்பதாகவே நிலைபெறும். (37)

(ஸ்ரீ - வீர - அ - கை) சேடித்தவற்றையும் அவத்தைகட்குட்படுத்தியுரைத்தல் :—சக மென்பது.

சகங்கள் கனவிற் றோற்றரவாந் தன்மை நாலா வதுகனவா
நிகழா நந்த மொன்றுலு நெருங்கு வடிவ மைந்தென்று
புகன்ற வவத்தை சுழுத்தியதாம் போத மின்மை வடிவாகித்
திகழ்ந்த வாறு மவத்தையினைச் சிறந்த துரிய மெனலாகும்.

(ப - ரை) சகங்கள் கனவிற்றோற்றரவாம்தன்மை=உலகங்கள் சொப்பனம்போலப் பிரதீதியாந்தன்மை, நாலாவது கனவாம்=நான்காவதுபூமியே கனவாம், நிகழானந்தமொன்றுலும்=விளங்காநின்ற இன்பம் ஏகத்தாலுமே, நெருங்கும்வடிவம் ஐந்தென்று = செறிந்தவடிவம் ஐந்தாவது பூமியென்று, புகன்ற அவத்தை=கூறிய அவஸ்தை, சுழுத்தியதாம்=நித்திரையாம், போதமின்மைவடிவாகி=உணர்வில்லாமை ரூபமாகி, திகழ்ந்த = விளங்கிய, ஆறும் அவத்தையினை=ஆறாவது பூமியை, சிறந்ததுரியமெனலாகும்=விசேடமாகிய துரியமெனக் கூறலாகும்.

(ஸ்ரீ - வீர) நான்காவது சொப்பனமெனக் கூறப்பெறும் யாண்டுச்சகம் சொப்பனதுல்லியமாமோ; ஆனந்த ஏககனீபாவத்தால், சுழுப்தியெனப்பெயரியதாம் ஐந்தாவது, அசம்வேதனரூபமாய ஆறாவதோ, துரியபதப்பெயரைத் துன்னுவதாம். (38)

(ச) கனவில்=கனவுபோல், தன்மையாதலின்.

(ஸ்ரீ - வீர - அ - கை) அதனையே புகழ்ந்து அந்த அவத்தையிலேயே சருவ திருசியங்கட்கும் பிரத்தியக்கான்மாவின்கண் நன்றாகவிலயமாதலின் ஆத்தியந்திக ஜீவன்முக்தத்தன்மையாமெனக்கூறல்:—தரியாவந்தவென்பன.

தரியா மனவாக் கெட்டரிதாய்த் தனதே சுண்மை வடிவான
துரியா தீதப் பதவவத்தை தூய வேழா முயர்பூமி
பிரியா துள்ளே வசமான பிரத்தி யாகா ரத்தாலே
தெரியா தாகிக் காண்கின்ற திரள்க ளனைத்தும் போமாகில்.

அந்த மகாசத் தையினுலே யவனே முத்த னையமிலை
வந்த போக சுகதுக்க வகையாற் றுக்கா தறநிறைந்த
புந்தி யுளனு யான்மாவிற் பொருந்தி மகிழ்ந்து நிற்குமெனி
லிந்த மனித னிலைதானே யிங்கே தோன்று முயர்முத்தி.

(ப - ரை) தரியாமனவாக் கெட்டரிதாய்=நிலையாத மனத்திற்கும் வாக்கிற்கும் கோசரிக்கமுடியாததாய், தனதேசுண்மைவடிவான=சுவப்பிரகாச சத்ரூபமான, துரியாதீதப்பதவவத்தை = துரியாதீதபத அவஸ்தையானது, தூயவேழாமுயர்பூமி = பரிசுத்தமாயவுயர்ந்த ஏழாவதுபூமியாம், பிரியாதுள்ளேவசமான=பின்னப்படாமல் உள்ளே வயப்பட்ட, பிரத்தியாகாரத்தாலே = பிரத்தியாகாரம் என்பதாலே, தெரியாகி = காணப்படாதாகி, காண்கின்றதிரள்கள் அனைத்தும்போமாகில் = திருசியக்கூட்டங்கள்யாவும் சாம்புமாயின்.

அந்தமகாசத்தையினுலே = அப்பெருஞ்சமதையினுலே, அவனேமுத்தன் ஐயமிலை = அம்மகானேமுத்தன் 'சந்தேகமில்லை, வந்த போகசுகதுக்கவகையால் = கருமவயமாகவந்த

போகங்களாகிய இன்பதுன்பவகைகளானே, தாக்காதறநிறைந்த புந்தியுளனாய் = சம்பந்த முறாது அத்தியந்தம்பூர்ணமாகிய மதியுள்ளவனாய், ஆன்மாவிற்பொருந்தி மகிழ்ந்து நிற்கு மெனில்=பிரஹ்மாபின்னப் பிரத்தியக்கான்மாவின்கண் நன்றாகத்திதியடைந்து சந்தோஷித் திருக்குமாயின், இந்தமனிதன் நிலைதானே = இவ்வதிகாரியின் நிலைமைதானே, இங்கே தோன்றும் உயர்முத்தி=ஈண்டிலங்கும் மேலானமுத்தியாம்.

(ஸ்ரீ - வீர) துரியாதீதபதாவஸ்தை சத்தம உத்தமபூமியாம், மனவாக்குகளினாலே கவரத்தகாததாம், சொப்பிரகாசபதவடிவதாம், உள்ளே பிரத்தியாகிருதிவயத்தினாலே திருசியமானது எண்ணப்படாமல் ஒழியுமேலாயின், சத்தம பூமிகைப்பிரசித்தமான அம்மகாசமதையினாலே முக்தனேநீயாவாய் என்பதிற் சந்தேகமேகிடையாது. போகசுகதுக்க அம்சங்களினாலே தீண்டப்பெறாத தீயுடையவனாகி, இத்தகைய மதியையுடைய வதிகாரியானவன் சசரீரனாயிருந்தபோதினும் அசரீரனாயிருந்தபோதினும் ஜீவன்முக்தனேயாவன், அந்த அவஸ்தையின்கண்ணே ஜீவன்முக்தனுக்கு எத்தகைய அனுபவமாம் எனின் அதனையுரைத்தல்:— யானிறக்கவுமாட்டேன் வாழவுமாட்டேன் யான்சத்துமல்லேன் அசத்துமல்லேன் என்பதாக ஆன்மாராமனாய், அதிகாரியிருப்பன் அவன்முக்தன் எனவேகூறப்பெறுவன்.

(ச) உயர் = உத்தமமான, ஏழாம்பூமி துரியாதீதப்பதவவஸ்தையுமாம், சித்தத்தின் உள்ளே, வசமான பிரத்தியாகாரத்தால்=நிரோதமான வேதுவினால், காண்கின்றதிரள்கள் அனைத்தும், தெரியாதாகிப்போமாகில், அப்போது, அந்தமகாசத்தையினாலே=அம்மகாசமதையான வேதுவினால், ஆவாய்முத்தன் = முத்தனாவாய், ஐயமிலை, போகமென்னும் விடயங்களில், உறும், சுகதுக்கவகையால், சுகதுக்காம்சிசங்களால், தாக்காது அறநிறைந்த புந்தியுளனாய், மனிதன் = சென்று, ஆன்மாவிற்பொருந்தி மகிழ்ந்துநிற்குமெனில், இந்தநிலைதானே யுயர்முத்தி.

(39-40)

(ஸ்ரீ - வீர - அ - கை) அந்தச்சீவன்முக்தனது பெருமையையே மேலும் உரைத்தல்:— பொங்கு ஒன்றில் திரணவென்பன.

பொங்குதொழின்மே வினன்சாந்தன் புகல்வீட் டுறைவோன் சந்நியாசி
யங்க முள்ளோன் சரீரமிலோ னெனினு மவனே முனியாகு
மெங்கு மிறவே னுயிர்வாழே னிலனு முளனு மலனிவனே
தங்கு நான்கிஞ் சிலுமிலனென் றுன்னித் தீரன் றளர்வனுகான்.

ஒன்றி லனுகே னன்சரைபற் றுள்ள மமதை யகங்கார
மென்ற வொன்று மிலனென்றே யெண்ணித் தீர னிட்டனுகான்
றன்று குணமூன் றிலன்சரைசா விலனான் சுத்தன் றாவறினு
னின்ற சாந்தன் சமரசனா னென்று நினைத்தோன் றுயரனுகான்.

திரண நுனிகள் விசும்பிரவி தேவ ருரகர் நரரிடத்தில்
விரியு மறிவே நானென்று விளங்குந் தீரன் மெலிவனுகான்
புரியுங் குறுக்கு மேல்கீழென் போதப் பெருமை யுலாவியதென்
றறிதி னனந்த விசாரஞ்செய் ததனைய றிந்தோ னழிவில்லோன்.

(ப - ரை) பொங்குதொழில் மேவினன் = மிகுதியாய கிரியைகள் உடையவன், சாந்தன் = அவையில்லாதவன், புகல்வீட்டுறைவோன் சந்நியாசி = சொல்லாநின்ற இல்லறத்தோன் துறவறத்தோன், அங்கமுள்ளோன் சரீரமிலேன் = தேகத்தோடு கூடியவன் கூடாதவன், எனினும் = என்றாலும்! அவனே முனியாகும் = அம்மகானே மகரிஷியாவன், எங்கும் இற்வேன் உயிர்வாழேன் = எவ்விடத்திலும்மரியேன் உயிர்தரியேன், இலனும் உள்ளனும் அலன் = அசத்தனும் சத்தனும் ஆகேன், இவனே = இம்மகானே, தங்குநான் கிஞ்சிதும் இலன் = இருக்குமியான் சிறிதும் வடிவில்லாதவன், என்று உன்னி = என்பதாகவெண்ணி, தீரன் தளர்வனுகான் = தைரியவான் கிலேசத்தையடையான்.

ஒன்றில் அணுகேன் நான் = யாதொன்றிலும் சம்பந்தியேன்யான், சரீரப்பற்று உள்ளம் மமதை யகங்காரம் = ஐரை இராகம் மனம் மமதையகந்தை, என்ற = என்று சொல்லப்பட்ட, ஒன்றுமிலன் என்றே = யாதொன்றும் இல்லாதவன் என்பதாகவே, எண்ணித்தீரன் = நினைந்து தைரியவான், இடரணுகான் = துன்பமடையமாட்டான், துன்றுகுணமூன்றிலன் = அநாதியாகப் பொருந்துவவென்று புகலாநின்ற மூன்று குணங்களுமில்லாதவன், நரைசாவிலனுன் = ஜராமரணவர்ஜிதன்யான், சுத்தன்றூவறிஞன் = பரிசுத்தன் மெய்ஞ்ஞானி, நின்ற சாந்தன் சமரசன்நான் = நிலைபெற்ற பரம உபசாந்தன் ஒப்பாயரசமுடையவன்யான், என்று நினைத்தோன் = எனவெண்ணினோன், துயரணுகான் = துன்பத்தை யடையமாட்டான்.

திரணநுனிகள் = துரும்பின் அக்கிரபாகங்கள், விசும்பிரவி = விண்ணருக்கன், தேவர் உரகர் நரர் இடத்தில் = நாகாக வமரர்களிடத்தில், விரியுமறிவே = வியாபித்திருக்குஞ் சித்தே, நான் என்று = அகமென்பதாக, விளங்குந்தீரன் = இலங்காநின்ற தைரியவான், மெலிவணுகான் = தளர்ச்சியை அடையமாட்டான், புரியுங்குறுக்குமேல்கீழ் = அளவிடாநின்ற திரியக்கு ஊர்த்துவம் அதவென்னு மிடங்களில், என்போதப்பெருமை = என்னுடைய ஞான மகிமை, உலாவியதென்று = வியாபித்துள்ளது என்பதாக, அரிதின் = அருமையாக, அனந்தவிசாரஞ்செய்து = அளவிலாத ஆராய்ச்சிசெய்து, அதனையறிந்தோன் = அந்த வத்துவைச் சாக்ஷாத்கரித்தவன், அழிவில்லோன் = நித்தியனுவன்.

(ஸ்ரீ-வீர) விவகாரியாகுக, உபசாந்தனுகுக, கிரகத்தனுகுக சந்யாசியாகுக, யானென்றுமல்லேன் என்றெண்ணிச் சீவன்சோகியான்; பற்றிலன்யான் அசரன்யான், இராகமற்றவன்யான், வாசனையற்றவன்யான், நிர்மலன்யான், சிதாகாசன்யான் என்றெண்ணிச்சோகியான்! யான் ஆதியும் அந்தமுமில்லாப் பரஞ்சுடர், சுத்தன் புத்தன் அஜராமரன், சாந்தன் சமரசன் சமாசமாபாசன் என்றெண்ணிச்சோகமடையான், மிகவுந் துச்சமாயிராநின்ற திரணநுனிகளில், மிகமகத்தான அம்பரத்தில், மிகப்பிரகாசமான சூரியனிடத்தில், நர உரகவமரரிடத்திலும்; எப்பிரசித்ததா சன்மாத்திரமுளதோ அதுவே பிரத்தியக்குச் சின்மாத்திரயானுகவுள்ளேன் என்று நன்றுக அகண்டமகாவாக்கியார்த்தத்தைச் சிந்தித்து மறுபடி சோகத்தை யடையவேமாட்டான்; குறுக்கும் மேலுங்கீழும் அறிவாகிய என்னுடைய மகிமை வியாபகம் என்று அந்தப் பரமான்மாவின் மகிமையையுணர்ந்து எவன் மாணுதிருக்கத்தைப்பஜிப்பன், அவ்வநந்த விலாசத்தின் மகிமையையறிந்து எவனும் துயரையடையான் என்பதாம், அங்ஙனமே சுருதியு மறைகின்றது.—இந்த நித்தியப்பிரமத்தின் மகிமைதான் நந்துதலிலேயே மூந்துதலிலேயே, அந்தமாதன்மாம் பதமுணர்ந்தறிஞன், சந்ததம் மறவினைச் சம்பந்தமுறுனே.

(ச) அவனே=முற்கூறிய பிரகாரம் மதியுடைய அவனே = அப்புருடனே, தொழின் மேவினன் எனினும், உபசாந்தன் எனினும், கிருகஸ்தன் எனினும் சந்நியாசியெனினும், சரீரமிலோன் எனினும் சரீரமுளோன் எனினும், முனியாகும், சருவப்பிரகாரத்தாலும் முத்தனே யாமென்பதுபொருள்; சானிறவேன் உயிர்வாழேன் = பிராணன்களின் றியாகமும் தாரணமும் தேகதர்மமேயாமன்றி ஆன்மதர்மமன்றென்பது பொருள். நான் இலனும் உளனும் அலன் = உண்டில்லையென்னும் விவகாரங்களுக்கு விஷயனன்றாதலின் என்க; நான் கிஞ்சிலுமிலன்=விசுவவிலக்ஷணமான சித்ருபன் என்றுன்னி தீரன் இவனாய், சீவிப்பினும் தளர்வனுகான்.

சமத்காரன்=சாந்தியொடு சமனுய் விளங்குகின்றவன்.

விளங்கி=அறிந்து, உலாவியது=வியாபகமாயிருக்கின்றது. (41-42-43)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஜீவன் முக்தர்களின் ஜீவனமும் விடயபோக அதீனமாயிருத்தலின் விடயம் ஒழிந்தவழி அறியானைப்போலவே துக்கமடைவன் என்றாசங்கித்து விசேடத்தை விளம்பும்பொருட்டு, அறியானுக்கு விடயநாசமாம்போது துக்கோற்பத்திப்பிரகாரத்தைக்கூறல்:—திரவென்பது.

திரவா சனையோ டெப்பொருள்க ளனுப விக்கச் சேர்ந்துளவோ
துரிசி லதுவே சுகஞ்செய்யுஞ் சுகமே தளிக்கு மதுவிரைவில்
வெருவு காலத் தானசிக்கு மதனாற் றுன்பம் விளைபொருட்டாம்
பெரிய சுகதுக் கங்களுக்குப் பிரிவற் றிருக்கை பிரசித்தம்.

(ப - ரை) திரவாசனையோடு = திடமாகியவாதனையுடன், எப்பொருள்கள் = எந்தவஸ்துக்கள், அனுபவிக்கச் சேர்ந்துளவோ = அநுபவிக்கும்படியாக நேர்ந்திருக்கின்றனவோ, துரிசிலதுவேசுகஞ்செய்யும்=குற்றமற்ற அவையே இன்பத்தை இயற்றும், சுகமேதளிக்கும்= இன்பத்தை யாவையியற்றாநிற்குமோ, அது = அவையெல்லாம், விரைவில் = வேகமாக, வெருவுகாலத்தால் நசிக்கும்=பயங்கரகாலத்தினாலே அழியும், அதனால்=அக்காரணத்தினால், துன்பம் விளைபொருட்டாம்=துயரமுண்டாதற்பொருட்டாம், பெரிய சுகதுக்கங்களுக்கு = பெருத்த இன்பதுன்பங்கட்கு, பிறிவற்றிருக்கை=அவிநாபாவமானது, பிரசித்தம்=வெட்டவெளியேயாம்.

(ஸ்ரீ - வீர) வாசனையாற் கட்டுப்பட்டு எவ்வர்த்தம் சேவிக்கப்பெறுகின்றதோ அது சுகத்தையீகின்றது, யாது சுகப்பொருட்டாமோ அதுவேவிரைவில் வத்துநாசத்தாற்றுக்கப் பொருட்டாம், ஆகையாற் சுகதுக்கங்கட்கு, உடனிகழுநியமம் வெட்டவெளியேயாம்.

(ச) திரவாசனையோடு=மிகக்கட்டுற்ற திடசங்கமாக, சேவிக்கப்படுமிப்பொருள் சுகத்தைச்செய்யும், எப்பொருள் சுகவேதுவாக வறியப்படும், அதுவேவிரைவில் விநாசவேதுவினாற்றுக்கவேதுவாம், சுகதுக்கங்களுக்கு அவிநாபாவநிஷ்டத்வம் பிரசித்தமாம்; ஆகலின் அவைகூடவே பிரவிருத்திப்பனவாம், கூடவே நிவிருத்திப்பனவுமாம். (44)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஜீவன்முக்தர்கட்கு அதனினும் வைலக்ஷண்யத்தன்மையைக் கூறல்:—திருவென்பது.

நிருவா சனேயி ஞனுஞ் நேர்வா சனேயி ஞனுலும்
பொருள்தா னடையி னதனலே யின்ப துன்பம் பொருந்தாவாம்
வரும்போ திரண்டு மொன்ருக வந்து விளங்குஞ் சுகதுக்க
மருகா நின்ற நாசத்தி லவைக ளிரண்டு மடங்கிடுமால்.

(ப - ரை) நிருவாசனேயினுனும் = வாசனேயின்றியதாகவேனும், நேர்வாசனேயினுனும்=சுருங்கிய வாசனேயதாகவேனும், ; பொருள்தானடையின்=வஸ்துவானது அடையப்படின், அதனலே=அதனல், இன்பதுன்பம் பொருந்தாவாம்=சுகதுக்கங்கள் அடையாவாம், வரும்போதிரண்டுமொன்ருக வந்துவிளங்கும்=வாராநின்றபோது கூறிய இரண்டுமே ஒருமித்துவந்திலங்கும், சுகதுக்கம்=இன்பத்துன்பம், அருகாநின்ற நாசத்தில் = மறையாநின்ற அழிவில், அவைகளிரண்டுமடங்கிடும் = கூறியவிரண்டுமே காணுமற்போம், ஆல் அசை.

(ஸ்ரீ - வீர) வாசனேகுறைந்து யாதொருபொருள் சேவிக்கப்பெறுகின்றதோ, வாசனேமறைந்து யாதொருபொருள் சேவிக்கப்பெறுகின்றதோ, நான்காவதாதி பூமிகளில் வாசனேயின்குறைவாம், ஏழாவதுபூமியிலோ வாசனேயின்விலயமாம் என்பதுவிவேகம், அப்பொருள் சுகப்பொருட்டாகாதாம், அப்பொருள் நாசகாலத்திலும் துக்கப்பொருட்டுமாகாதாம்.

(ச) எப்பொருள் தநுவாசனேயாகவன்றி நிர்வாசனேயாகவாவது சேவிக்கப்படும், இப்பொருள் சுகவேதுவன்ரும், காலத்தால் நசித்தலின் துக்கத்தைத்தருவதுமன்ரும். (45)

(ஸ்ரீ - வீர - அ - கை) இவ்வண்ணங் கருமமும் அவர்கட்குப் பற்றற்றதேயாம், எனப்பகர்தல்:—புந்தியென்பது.

புந்தி தணிந்த வாசனேயாற் புரிகா ரியமீண் டங்குரியா
வெந்த விதையி னுடல்காண முதல வெவ்வே ருய்விரிந்து
நந்து கரும காரணங்க ளூட்டு மொருவன் செய்வோன்ருன்
முந்து புசிப்போன் ருனெவனே முன்வந் தடைவ னவ்விடத்தே.

(ப - ரை) புந்திதணிந்த வாசனேயால்=க்ஷீணவாசனேயோடுகூடிய புத்தியினுலே, புரிகாரியம்=செய்யுங்காரியமானது, மீண்டங்குரியா = மீளவும் முளேக்கமாட்டாது, வெந்தவிதையின்=வறுத்தவிரையேபோலும், உடல்காணமுதல வெவ்வேருய்விரிந்து = தேகக்ருதியாக வேறுவேறு வேற்றுமைப்பட்டு, நந்து கருமகாரணங்கள் = கெடாநின்றவினேயின் ஏதுக்கள், நாட்டும் = கற்பிக்கும், ஒருவன்செய்வோன்ருன் முந்துபுசிப்போன்ருன் = ஒருவன் கருத்தாவாகத்தான் அதன்பலத்தை ஆய் ஆயென்று புசிக்கும்போக்தாவாகத்தான், எவனே முன்வந்தடைவன் அவ்விடத்தே=யாவன்ருன் ஆங்கு நான் என்று முந்திவந்துநிற்பன்; எவனுமேவரான் என்பதாம்.

(ஸ்ரீ - வீர) குன்றிய வாசனேயோடுகூடிய மதியினுலே ஹே பாவமற்றகுமரனே! எவ்வினேசெய்யப்படுமோ, அது, தக்தபீஜமொப்ப, மறுபடியும் அங்குரத்தை வெளிப்படுத்தமாட்டாது; வேறுவேருயிராநின்ற தேகேந்திரியாதிகளுக்குள், உண்டான ஏகவடிவதாதாத்மியத்தியாசத்தானே, அவற்ருல் இயற்றப்பெற்றவினேகளில் நானே யொருகருத்தாவென்று அபிமானம் செய்தவழியன்ரே, வினேகளினுலே பற்றுனதுண்டாம், முக்தர்கட்கு அஃதில்தாம் என்னுங்கருத்தாற்கூறல்:—உடலென்பதாதி. தேகேந்திரியாதி காணக்கூட்டத்தினுலே

கருமங்கற்பிக்கப்பெறும், ஹே குழந்தாய்! ஒருவன் கருத்தாவாகத்தான் போக்தாவாகத்தான் எங்ஙனேபொருந்தி வருவன்வரான் என்பதேதிண்ணம்.

(ச) புந்திதணிந்த வாசனையால்=வாசனையுக்தமான புத்தியால், புரிகாரியம் = எக்கருமம் இயற்றப்படுமெது, வெந்தவிதையின் மீண்டு, அங்குரியா=சுகதுக்காதிரூபமான அங்குரத்தைச் செனிப்பியாது, உடல்காரணமுதலாய்=தேகேந்திரியாதியாகிய, கருமகாரண சமூகத்தால், நாட்டும்=கற்பிக்கும், ஒருவன் செய்வோன்றன்=கருத்தாவொருவனும், புசிப்போன்றன் என்போன் = போக்தாவும், எவ்விடத்துமுன் வந்தடைவன், ஓரிடத்துமின்றென்றுணர்க. (46)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஜீவன்முக்தனைக் கருமம்பற்று முறைமையையேதெரிவித்தல்:— பாவிப்பனவென்பது.

பாவிப் பனயா வையினுமுளம் பற்று துயர்ந்தோன் றாரகையின்
றேவிற் குளிர்ந்து நிறைந்தொளிர்வன் செய்ய கதிரோன் றன்கதிரின்
பூவிற் றொழிலி னுலைந்துழலும் பொத்த வுடலா மிலவுதனே
மேவு தொழிற்பஞ் சோடிப்போ ஞானக் காற்றால் விரைந்தொருபால்.

(பு - ரை) பாவிப்பனயாவையினும்=பாவிக்கப்பட்ட எல்லாவற்றினின்றும், உளம்பற்று=மனமானது சம்பந்தமுறாமல், உயர்ந்தோன்=மேலாயினேன், தாரகையின்றேவில் = நக்ஷத்திரநாதனைப்போல, குளிர்ந்து=சீதளமடைந்து, நிறைந்து = பரிபூரணனாகி, ஒளிர்வன் = பிரகாசிப்பன், செய்ய கதிரோன்றன்கதிரின் = சிறந்த சூரியகிரணமேபோலும், பூவில்=உலகில், தொழிலினுலைந்து=காரியத்திலலைந்து, உழலும் = சுழலாநின்ற, பொத்த வுடலாம் = பொத்தையூன்சுவர் புழுப்பொதிந் தொளுத்தசும்பொழுகிய பொய்க்கூரையாம், இலவுதனே=சால்மலியை, மேவு=பொருந்தாநின்ற, தொழில்பஞ்சு = வினைத்தூலம், ஓடிப்போம் = ஓடிவிடும், ஞானக்காற்றால் = ஞானநிலத்தால், விரைந்தொருபால் = வேகமாக வோரிடத்தே.

(ஸ்ரீ - வீர) அகந்தாதியத்தியாசத்தை, சருவதேகேந்திரியாதி பாவங்களினின்றும், நன்றாகவெடுத்தெறிந்து, நன்குகிளம்பியவன் சந்திரசீதளன், பூர்ணன், பாற்கான் கிரணம்போல ஒளிர்வன்; செய்வனவும் சஞ்சிதரூபங்களும் ஆகிய கருமதூல ஐசுவரியம், தேகமாகிய இலவினின்றும், ஞானக்காற்றினாலே நன்கடிக்கப்பட்டதாய் கிளம்பி யெங்கேயோ பறந்து ஓடிவிடும்.

(சு) பாவிப்பனயாவையினும்=சகல பதார்த்தங்களினின்றும், உளம், அவ்வவ்விடய பாவனையை, பற்றுது, நன்றாய் நிரோதஞ்செய்து, உயர்ந்தோன்=கைவல்லியநிமித்தம் நன்றாய் முயற்சிக்கும்புருடன், தாரகையின்றேவின்=சந்திரன்போல், குளிர்ந்து நிறைந்து, சீதளமும்பூரணமுமாய், ஒளிர்வன், தன்கதிரின் = தேசுவினால், செய்யகதிரோன் = சூரியன், இன்=போல, விளங்குவன், செய்ய கதிரோன்கதிராலே பூவிற்றொழில்போற்றொழினடக்கும் என்றும் பாடபேதமுளது. உடலாம் = தேகமென்னும், இலவுதனே = பஞ்சின்மயப்பல மேவுந்தருவிசேடத்தை, மேவுதொழில்=செய்கின்றதும் செய்ததுமான புண்ணியாபுண்ணிய கருமரூபமென்னும் பஞ்சின்குழாம் ஞானக்காற்றால்=தத்துவஞான மகாவாயுவால், விசைந்து, சிதறினதாய், ஒருபால்=எங்கேயோ ஓடிப்போம். (47)

(ஸ்ரீ - வீர - அ - கை) வினையேபோல ஞானகலையுங்காலத்தால் நசித்தல்கூடுமென்று சங்கித்துக்கூறல்:—எண்ணமென்பது.

எண்ண மெல்லாம் பழகாமை யாலே யிறக்கும் பிறப்போர்க்குக்
கண்ண தான விஞ்ஞானக் கலைதா னொருகாற் றோன்றிடினும்
பண்ணு நல்ல கழனிதனிற் பயின்ற வித்துப் பலிப்பதுபோற்
றிண்ண மான வன்பாலே மிகவும் வளருஞ் சிறப்பாக.

(ப - ரை) எண்ணமெல்லாம்=வினைவெல்லாம், பழகாமையாலே = பயிற்சியின்மையினாலே, இறக்கும்=நசிக்கும், பிறப்போர்க்கு=ஜனிப்போர்க்கு, கண்ணதான = நேத்திரம் போன்றிராநின்ற, விஞ்ஞானக்கலைதான் = விசேடஞானகலையானது, ஒருகாற்றோன்றிடினும்=ஒருபோதுண்டாயினும், பண்ணும்=பயிர்செய்யும், நல்ல கழனிதனில் = நல்ல செயியின்கண், பயின்றவித்து=விதைத்தவிரையானது, பலிப்பதுபோல் = பயனுறுவதேபோல, திண்ணமானவன்பாலே=அதிதிடமான வலிமையினாலே, மிகவும்வளரும் சிறப்பாக=மிகவும் விசேடமாக விருத்தியையடையும்.

(ஸ்ரீ - வீர) எல்லாக்கலையுமே பிராணிகட்கு அப்பியாசமின்மையினாலே நசித்துவிடும்; இஞ்ஞானகலையோ, உள்ளே யொருபோதுண்டாயின் நாட்குநாள், வலிதிலேயே விருத்தியையடையும், நற்கேத்திரத்தில் விதைத்தசாலியேபோலும்.

(ச) பிறப்போர்க்கு=ஜந்துக்கட்கு, எண்ணம்=வித்தை, பழகாமல்=மாறிமாறிப் பரிசீலனமின்மையால், இறக்கும்; ஏ என்னுஞ்சொல் பிரசித்தத்தில்வந்தது, இவ்வர்த்தம் பிரசித்தமென்பதுபொருள். இஞ்ஞானம் உள்ளே மிகவும்வளருமென்பது நிச்சயம். (48)

(ஸ்ரீ-வீர - அ-கை) சொரூபநிலையையும் ஜகத்தின்நிலையையும் சொல்லுதல்:—முழுதுமென்பது.

முழுது வடிவ மாயொன்று மான்மா முழுது சத்தியினுங்
கெழுமு நதியி லுவரிகளிற் கீலா லம்போ னின்றொளிரு
மொழிவி னினைவின் பரப்பிலதா யொன்றுஞ் சற்பா வந்தன்னிற்
றழுவு கூறு மாத்திரமா யுணர்வாய் சகல சகங்களையும்.

(ப - ரை) முழுது வடிவமாயொன்றுமான்மா=ஒரு விசுவரூபவான்மா, முழுது சத்தியினும் கெழுமும்=சகலவத்துக்களிலும் இலங்கும், நதியில் உவரிகளில்=யாறுகளிற் கடல்களில், கீலாலம்போல்நின்றொளிரும்= அதிநிர்மலதோயம்போல் இருந்திலங்கும், ஒழிவினினைவின் பரப்பிலதாய்=மாறாத சங்கற்பங்களின் விஸ்தாரம் ஒன்றுமிலதாய், ஒன்றும் சற்பாவந்தன்னில்=ஏகமாய்ச் சத்துவடிவமாந்தன்னிடத்தில், தழுவுகூறுமாத்திரமாய்=பற்றும் அம்சமாத்திரமாய், உணர்வாய் சகலசகங்களையும்=தெரிவாய் சருவ உலகங்களையும்.

(ஸ்ரீ - வீர) எங்ஙனம் சரங்களிலும் சமுத்திரங்களிலும் நிர்மலஜலமொன்றே நிகழாநிற்குமோ, அங்ஙனம், அகிலமாயிக வஸ்துக்களிலும் அவ்வவ்வபேத அத்தியாசத்தால், விசுவருபன் ஏகன்சுயமாகவே சன்மாத்திரசுபாவனாகிய ஆன்மன், ஒருவனாகவேயிலங்குவன், ஆகவின் ஹே குழந்தாய்! எல்லாவுலகமும் தத்துவபோதத்தானே மயல்விவகாரத்தாலுண்டாய மிக வைசித்திரியக்கூட்டப் பரமவுபசாந்தமாயதாம், இனிது எஞ்சிநின்ற ஏகசத்தாம்ச மாத்திரமே, யானுமென்றுணர்தி.

(ச) முழுதுவடிவுமாய்=விசுவரூபமாய், ஒன்றும் ஆன்மா, முழுதுசக்தியினும் = அகில வஸ்துக்களிலும் சீலாலம்போல்=நிர்மலமான ஜலம்போல, சற்பாவந்தன்னைத் தழுவுகூறு மாத்திரமாய்=சத்தாங்கிச மாத்திரமாய். (49)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆன்மா நிரதிசயாநந்தமான பிரஹ்மமேயாமாயின் இதற்கெவ்வளவுகாலம் அறியாமையாற் சீவப்பெயர் எனிற்கூறல்:—என்றென்பது.

என்று மனுமீண் டுரைசெய்வா னியைந்த புலன்போ கத்தாசை
நின்ற தெம்மட் டம்மட்டு நிகழ்சீ வப்பேர் பெறுமான்மா
வொன்று மவிவே கத்தாலவ் வாசை யுண்டாந் தன்னாலே
யன்று நிருபா விவேகத்தா லந்த வாசை யழிவெய்தும்.

(ப - ரை) என்று = என்பதாகக்கூறி, மனு = மனுபகவான், மீண்டுரைசெய்வான் = மீளவுங்கூறுவார், இயைந்த=பொருந்திய, புலன்போகத்தாசை=விடயபோகேச்சை, நின்ற தெம்மட்டும் அம்மட்டு=நின்றது எதுபரியந்தமோ அதுபரியந்தம், நிகழ்சீவப் பேர்பெறு மான்மா = நிகழ்சீவன் என்னும் நாமத்தை யான்மாவடையும், ஒன்றும் அவிவேகத்தால் = பொருந்தாநின்ற அவிசாரத்தினாலே, அவ்வாசையுண்டாம் = அந்த அவாவானதுளதாம், தன்னாலேயன்று=வாஸ்தவமாகவிலதாம், நிருபா=மன்னவனே, விவேகத்தால் = விசாரத்தினாலே, அந்த ஆசை அழிவு எய்தும்=அவ்வவாவானது நாசத்தையடையும்.

(ஸ்ரீ - வீர) எத்துணை விடயபோகாசையாமோ அத்துணைஜீவப்பெயர் ஆன்மாவிற்காம், 'அஃதென்னுண்மையோவெனின் இன்றெனல்:—அவிவேகத்தாலென்பதாதி. அவிவேகத்தாற் சம்பன்னமாய அவ்வாசையுமோ உண்மையாயிலதாம்; விவேகவசத்தினாலே கெட்டுப்போம்.

(ச) ஆன்மா = புருடனுக்கு, எம்மட்டும் = எவ்வளவுகாலம், புலன்போகத்தாசை = விடயபோகாசை, நின்றது, அம்மட்டுமே, சீவப்பேர்பெறும்=ஜீவபாவமாம், அவ்வாசையும், அவிவேகத்தாலுண்டாம், தன்னாலேயன்று, அந்த ஆசைவிவேகத்தால் அழிவெய்தும். (50)

(ஸ்ரீ-வீர - அ-கை) ஆன்மா பிரஹ்மமாதற்கு அவதியைக்கூறிப் போகாசையே சுவர்க்க நரகாதிகளிற்றள்ளுகின்றது எனவதனைத்தியாகிப்பாய் என்றுகூறல்:—காதலென்பது.

காத லென்று போமன்று கலந்த சீவத் திறம்விட்டுத்
தீதி லாத பரப்பிரமத் திறத்தை யான்மா சேர்ந்திடுமாற்
கேத மாக மேனின்றுங் கீழே யெய்துங் கீழ்நின்று
மேத மில்லா மேலேசென் றெய்து நெடுநா ளிவ்வான்மா.

((ப - ரை) காதல்=ஆசை, என்று=எப்போது, போம்=போகுமோ, அன்று = அப்போது, கலந்த சீவத்திறம்விட்டு = இடையில்வந்துசேர்ந்த சீவத்தன்மையைவிடுத்து, தீதிலாத பரப்பிரமத்திறத்தை=கெடுதல் இல்லாத பரப்பிரஹ்மத்தன்மையை, ஆன்மாசேர்ந்திடும் = ஆன்மாவானது அடைந்திடும், கேதமாக = துயரம்பெற, மேல்நின்றும் கீழே எய்தும் = மேலேயிருந்தும் கீழேயடையும், கீழ்நின்றும் = கீழேயிருந்தும், ஏதமில்லாமலே = துயரமிராதுமேலே, சென்றெய்தும்=போயடையும், நெடுநாள் இவ்வான்மா=நெடுங்காலம் இந்த வான்மா.

(ஸ்ரீ-வீர) எப்போது ஆஸைக்ஷயமாயதோ = அஞ்ஞானக்ஷயத்தாற்பாதமாயதோ, அப்போது, ஆன்மா ஜீவத்தன்மையைவிடுத்து, பிரஹ்மத்தன்மையை அடையும் ஆமயமும் அற்றதாம், போகாசைவளரவோ மேனின்றுங்கீழும், அங்ஙனமே கீழ்நின்றும் மறுபடிமேலும் ஆகநெடும்போது ஆன்மாச்சென்றுகொண்டேயிருக்கும்; ஆகையால்;

(ச) தீதிலாத = அநாமயனுய், ஆன்மா சீவத்திறம்விட்டுப் பிரமத்திறத்தைச் சேர்ந்திடும். (51)

(ஸ்ரீ - வீர - அ - கை) நீ யிங்ஙனிருக்கவேண்டாம் என்றுகூறிக் கீழோரையிகழ்தல்:—கனமென்பது.

கனமார் பிறவிப் பெரும்பூட்டைக் கருத்தாங் கயிற்றிற் கடமாகே
லெனதீ திதற்கு நானென்றே யிறுகும் பிராந்தி விவகார
நனிமோ கத்திற் செறிபவரியா ரந்த நவைசேர் வஞ்சகரே
தனிவேன் மன்ன கீழ்நின்றுங் கீழே சரிக்கத் தக்கவரே.

(ப - ரை) கனமார் பிறவிப்பெரும்பூட்டை = அதிகிபிடமான ஜனனமரணமென்னும் பெரிய நீரிறைக்கும்யந்திரத்தின், கருத்தாம்கயிற்றில்=சிந்தையாகிய இராஜ்ஜுவில், கடமாகேல்=குடமாகவேண்டாம், எனது ஈது இதற்குநான் என்றே யிறுகும்பிராந்தி=இது என்னுடையது இதற்குயான் என்பதாகவேயுண்டாகிக் கனமயலாம், விவகாரநனிமோகத்தில் = விவகாரப் பெருத்தமயக்கத்தில், செறிபவர்யார் = பொருந்துபவர்யாவர், அந்தநவைசேர் வஞ்சகரே=அக்குற்றம் பொருந்தியகலர்களே, தனிவேல்மன்ன = ஒப்பற்ற வேலாயுதத்தையுடையவரசனே! கீழ்நின்றுங்கீழே = கீழுக்குக்கீழாகவே, சரிக்கத்தக்கவரே = செல்லத்தக்கவரேயாவர். தேற்றங்களினுலே மேலேவருவது துர்லபமென்றதாயிற்று.

(ஸ்ரீ-வீர) சமுசாரரூபகடயந்திரத்தின் சிந்தை வடிவவடத்திற் குடம் நீயாகவேண்டாம், போகசிந்தாரூபகடகண்ட இராஜ்ஜுவில் கடமாகவேண்டாம்=குடம்போலப் பத்தனுகவேண்டாம், பரஸ்பரங்கழுத்தில் மாட்டிக்கொள்ளும்படியான அதன் விடயங்களோடுற்றபந்தனத்தைக்காட்டல்:—எனதென்பதாதி. எனக்கிதுவேகதி என்னுடையதேயிது இதற்குயானே துணை யானிலனுகிலிதுகெட்டுப்போம் என்னும் விவகாரகனப்பிரமத்தை எச்சடர்கள்மோகத்தினுலே நன்றாகச்சேவிப்பார்களோ அவர்கள் அதோகதியினின்றும் அதோகதியையே யடைவர்கள்.

(ச) கன்மவசத்தால், கனமார்பிறவி=சம்சாரரூபமான, பெரும்பூட்டை = கடயந்திரத்தின், கருத்தாங்கயிற்றில் = சங்கற்பரூபமாய்க் கட்டுறுங்கயிற்றில், கடமாகேல் = பூட்டைக்குடம்போற் சுற்றும்பாத்திரமாகவேண்டாமென்பதாம்; ஈது=புத்திராதியை, எனது=என்னதென்றும், நான், இதற்கு = புத்திராதிக்குச் சம்பந்தியென்றும், இறுகும்பிராந்திமயமான விவகாரத்தை, மோகத்தாற் செறிபவர்யார், அவ்வஞ்சகர், கீழ்நின்றுங் கீழேசரிக்கத்தக்கவர்= மீண்டுமீண்டும் அதோகதியையேயடைவர் பிதுராதிக்கு என்றும்பாடம். (52)

(ஸ்ரீ - வீர - அ - கை) அதனையே யறுவதித்து அதற்குமூலமான தாதான்மிய அத்தியாசத்தையும் விடுவித்துக்கொண்டு அதன்பயன் சருவ உற்கர்ஷமெனக்கூறல்:—இதற்கென்பது.

இதற்கு நானீ தெனக்கவன்மற் றிவனு னெனென் றிடுமோக
விதத்தை யுயர்புந் தியினுலே விட்டோர் மேற்கு மேற்செல்வோர்
திதத்த னெளிகூ ரான்மாவைச் சிறிதுந் தாழா துறப்பற்றி
யுதித்த சகத்தைத் தற்புரண வுருவமாக நோக்குதியால்.

(ப - ரை) இதற்கு நானீதெனக்கு=இப்பொருட்குரியவனியான் இப்பொருள் எனக்கே யுரியது, அவன்மற்றிவன் நான்நான் என்றிடும்=அவன் இவன் அவனுன் இவனுன் நான்நான் என்றுவழங்கும், மோகவித்தை = மயல்வகையை, உயர்புந்தியினுலே = மேலான மதியினுலே, விட்டோர் = தியாகித்தவர், மேற்குமேற்செல்வோர் = உயர்வுக்கு உயர்வாகப் போவோர், திதத்தனெளிகூரான்மாவை=நிலைபெற்ற தனது பிரகாசத்தானே பிரகாசிக்கும் ஆன்மாவை, சிறிதுந்தாழாதுறப்பற்றி = அற்பமுங்கீழ்ப்போகாது அத்தியந்தம் திடமாக அவலம்பித்து, உதித்தசகத்தை = விவர்த்தமாகத்தோற்றிய விசுவத்தை, தற்புரணவுருவமாக=விளக்கும்பரமாத்ம அறிவுவடிவமாகவே, நோக்குதி = காண்குதி. ஆல்மற்று அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர) இதற்குயான் இது எனக்கு அவன் இவன்யான் என்பதாகவேயுண்டாம் மோகம் யாவரானேமதியால் ஊனுகத்தியாகிக்கப்பெறுமோ அவர் மேலுக்குமேலே செல்லுபவராவர்; சிறிதும் தாமதமில்லாமல், சுவப்பிரகாசமாய சுவான்மாவையினிதுபற்றிச் சுகமாக விருத்தி, உலகங்களில் எவ்விடத்திலும் தடையொன்றுமின்றி நிறைந்திருக்கும் சிதாகாசத்தையே பார்ப்பாயாக ஹே மன்னவனே!

(ச) நான், இதற்கு=புத்திராதிக்கு சம்பந்தியாம், ஈது, புத்திராதி, எனக்கு = என்னதாம், இவனுன், இத்தன்மையன், நான் என்றிடுமோகவிதத்தை உயர் புந்தியினுலே, விட்டோர்=விட்ட விவேகிகள்யாவர் அவர், மேற்கு மேற்செல்வோர்=மேன்மேல் உயர்வான கதியையே யடைவரென்பதாம், தன்னெளிகூர் = சுவப்பிரகாசமான, ஆன்மாவை, சிறிதுந் தாழாது=தாமசியாமலே, உறப்பற்றி=உண்மையாக நிச்சயித்து, தித = சுகமாகவிருப்பாய், உதித்தசகத்தை=ஜகத்தனைத்தையும், தற்புரண வுருவமாக = ஆன்மாவாகவே, நோக்குதி, ஆல் அசை. பிதுராதிக்கு என்பது பாடபேதம். (53)

(ஸ்ரீ - வீர - அ - கை) பயன்பெறுமவதியும் பயிற்சியின் முதிர்ச்சியும்புகர்தல்:—என்றென்பது.

என்றிப் படித்தன் சித்துருவ மிரண்டற் றுள்ளே தனித்தோன்று
மன்றிப் பவம்போய்ப் பரமேச னுக லாகு மயன்சிவன்மால்
வென்றிக் குலிசத் தவன்முதலோர் செய்த வெல்லா மெய்ம்மையினு
லொன்றிச் செறிசித் துருவுடைநான் செய்கின் றேனென் றுணர்வுறுவாய்.

(ப - ரை) என்று=எப்போது, இப்படி=இவ்வாறு, தன் சித்துருவம் = தனது அறிவுருவம், இரண்டற்று=பேதமதின்றி, உள்ளே=ஆந்தரத்திலேயே, தனித்தோன்றும்=ஒப்பில்லாமல் தானுகவேபானமாகும், அன்று=அப்போது, இப்பவம்போய் = இச்சனனமரண மரண சமுசாரந்தீர்ந்து, பரமேசன் ஆகலாகும்=பிரப்பிரஹ்மம் ஆதல்கூடும், அயன்சிவன் மால்=பிரஹ்மா, ருத்திரன், விஷ்ணு, வென்றிக்குலிசத்தவன் முதலோர்=வெற்றிபொருந்திய வஜ்ஜிராயுதந்தரித்த தேவேந்திரன் முதலியோர், செய்தவெல்லாம் = செய்வனவனைத்

தும், மெய்ம்மையினல்=உண்மையினல், ஒன்றிச்செறிசித்துருவுடை நான்செய்கின்றேன் = நெருங்கிப்பொருந்திய அறிவுவடிவத்தையுடைய யான் இயற்றுகின்றேன், என்று உணர்வுறு வாய்=என்பதாகப்பாவிப்பாய்.

(ஸ்ரீ - வீர) எப்போதுதான் இவ்வண்ணம் சித்தின்வடிவம் வியாபகம்பூரணம், அகண்டிதம் என்றறியப்பெற்றதோ, அப்போதே சமுசாரக்கடல்கடந்தான் பரமேசுவரப்பான்மையைப்பற்றினன் ஆவன்; 'அற்றேல், ஜகத்துக்கர்த்துருத்துவாதி இவனுக்கிலதாக யாங்ஙனம் பரமேசுரப்பான்மையைப்பற்றினேன் ஆதலெனின் ஆண்டுக்கூறல்:—அயன் என்பதாதி. பிரஹ்மேந்திர விஷ்ணுவருணர் யாதுயாதுசெய்ய இனிது முயன்றுளார் அவ்வியாவற்றையும் அறிவுவடிவினனாகிய யானே செய்கின்றேனென்றே எண்ணிடுக.

(ச) இப்படி, தன் வியாபகமான, சித்துருவம், என்று = எப்போது; இரண்டற்று=அகண்டிதமாம்படி, உள்ளே நனிதோன்றும்=அறியப்படும், அன்று=அப்போதே, பவம்போய்=சம்சாரத்தைத் தாண்டினவனாய், அறியவேண்டும், பரமேசன் ஆகலாகும் அறிவால், பிரமாதிகளும், செய்தவெல்லாம்=எத்தெந்தச் சிருஷ்டியாதியைச் செய்தற்கு முயற்சித்தாரோ அஃதனைத்தும், சித்துருவுடை நான்செய்கின்றேன் என்றே, உணர்வுறுவாய்= பாவிப்பாய், சித்துருபனாகிய ஆன்மா ஏகனாதலின் என்க. (54)

(ஸ்ரீ - வீர - அ - கை) அற்றேற் சருவக்கிரியைகளும் அசத்தியங்களாம், தத்துவவித்தானவன் அவைகளில் எங்ஙனந்தன்னுடைய கருத்துருத்தகைமையைப் பாவித்தல்கூடுமெனின்? இஃதொருதோடமாகாததாம், ஆன்ம சத்தையினாலேயே சர்வகற்பனைகட்கும் சத்தியத்தன்மைச்சம்பவத்தால் என்னுங்கருத்தாலுரைத்தல்:—யாதென்பது.

யாதி யாதெப் பொழுதெதிர்ந்த தவற்றி லென்னே சொலப்பட்ட
தோது மவையெல் லாந்தடைதீ ருணர்வின் விலாச மேநன்றாந்
தீதி லறிவு மாத்திரமாந் திறனாய்க் காலச் செயம்பண்ணிக்
கோதின் மனத்தோ டிருப்பவன்சேர் குறைவில் சுகத்தோ டெதுநிகரே.

(ப - ரை) யாதியாது எப்பொழுது எதிர்ந்தது= எதுஎது எக்காலத்தில் எதிர்ப்பட்டதோ, அவற்றில்=அவைகளில், என்னே சொலப்பட்டது=யாது கூறப்பெற்றதோ, ஓதும் அவையெல்லாம்=பிரதிபாதிக்கும் அவையாவும், தடைதீர்=பிரதிபந்தகமில்லாத, உணர்வின் விலாசமேநன்றாம்=நலமுடையதாம், தீதில் அறிவுமாத்திரமாந்திறனாய் = குற்றமற்ற சின்மாத்திரமாம் தன்மையாய், காலச்செயம்பண்ணி = மிருத்தியுவை வெற்றிகொண்டு, கோதில்மனத்தோடு இருப்பவன்=குற்றமற்றமனத்தினுடன் வாழ்பவன், சேர்= அடையும் படியான, குறைவில் சுகத்தோடு=குறைவுறாத ஆனந்தத்தோடு, எதுநிகரே = யாதொப்பாகும்; ஒன்றும் ஒப்பாகாதென்பதாம்.

(ஸ்ரீ - வீர) எவ்வெச்சாத்திரங்களில் எப்போது யாதுயாது ஓதப்பெறுகின்றதோ அவையாவுமே குழந்தாய்! சத்தியமாம், சித்துவிலாசமே தடையற்றதாம், சின்மாத்திரத்தகைமையையடைந்துள்ளவனும் மிருத்தியுவைத்தாண்டினவனும் சித்தமற்றவனும், ஆகிய ஜீவன்முத்தனுக்கு எப்பரமாநந்தம் உளதாமோ அது எதனோடு உவமிக்கத்தக்கதாகும் ஒன்றோடுமின்றாம் என்க; எனவே சமுசாரத்தைத்தாண்டுதலானே என்னேபயன் எனக்கடாயினார்க்கு நிருபமஸ்வப்பிரகாச ஆநந்தப்பிராப்தியே பயனாமென விடையிறுக்குக.

(ச) யாதியாது, வைதிகமாவது, அவைதிகமாவது, எப்பொழுது = எக்காலத்தில், என்னே = யாதுயாதுமத்மாக, சொல்லப்பட்டது, அவையெல்லாம், நன்றும் = சத்தியமேயாம், யாதிஞலெனில், தடைதீர் = அனர்க்களமான, உணர்வின்விசாலம் = சித்துவிசாலமாதலின் என்க, ஆறிவுமாத்திரமாந்திறனுய், அதனுல், காலசயம்பண்ணி = சம்சாரத்தைத்தாண்டி, சோதில்மனத்தோடிருப்பவன்சேர், குறைவில்சுகத்தோடு = பிரமாநந்தத்தோடு, எது = எவ்வாநந்தம், நிகர் = ஒப்பாம், பிரமானந்தத்துக்கொப்பான ஆநந்தமின்மையின் என்க. (55)

(ஸ்ரீ - வீர - அ - கை) பிரஹ்மசத்தையினுலே உலகம் அசூனியமேலாயின் துவைத அடைவாம், நேதிநேதியென்னும் நிடேதத்தினுலே சூனியமாகுமேலாயின் சருவகருத்துருத் தகைமைவடிவ ஈசுரத்தகைமை வியாகாதமாம்; அவ்வாறே, ஜகத்து அசித்துரூபமேயாமாயின் சித்துக்கும்பான்கூடாதாம், திரிவிருத்காணத்திஞலே, தைஜசரூபர் தொடர்ந்ததேதான் விளக்குந்தேஜசால் விளங்குவதாகும் ரூபமற்றதாகாதாம், சித்தின்றொடர்ச்சியின்பொருட்டு அதற்குச் சித்துவிகாரத்தகைமை யங்கீகரிக்கப்பெறினே, சித்திற்குச் சவிகாரத்தகைமையின் இடைவாம்; இவ்வண்ணம் ஜகத்திற்கு அநான்ம ரூபத்தன்மையின்கண்ணும் அசங்க ஆன்மாவினேடு சம்பந்தமின்மையின் அதனுலே இருப்புவிளக்கம் கிடைக்காதாம், ஆன்ம ரூபத்தன்மையேலோ ஞானத்தினுலே பாதமாகாதாம், என்பதாதிதோஷங்களை யநிர்வசநீயத் தன்மையைப் பற்றலானேபரிகரித்தல்:—இல்லதென்பது.

இல்ல தன்றுண் டல்லவறி வில்லா வுருவி லறிவுருவ
மல்ல வான்ம வுருவமல வயலன் றுலக மெனநினைவாய்
சொல்லு மிந்தச் சொரூபமுறத் தொடர்ந்த பகுதி போயிறக்கும்
புல்லு தேசங் காலமல புறத்தோர் நிலையன் றுயர்முத்தி.

(ப - ரை) இல்லதென்று = சூனியமல்ல, உண்டல்ல = அசூனியமல்ல, அறிவில்லாவுருவில் = அசித்துரூபமல்ல, அறிவுருவமல்ல = சித்தும்மயமும் அல்ல, ஆன்மவுருவமல = ஆன்மவடிவமல்ல, அயலன்று = அநான்மவுருவாம் அன்னியமுமல்ல, உலகமெனநினைவாய் = ஜகத்தென்று எண்ணுவாய், சொல்லுமிந்தச்சொருபமுற = கூறுமிவ்வடிவமுடையதாக, தொடர்ந்த பகுதிபோயிறக்கும் = பற்றியபிரகிருதி ஓடிப்போய்நசிக்கும், புல்லுதேசங்காலமல = ஆதார இடமும்போதும் அல்லவாம், புறத்தோர் நிலையன்று = இதரஸ்தியுமல்லவாம், உயர்முத்தி = மேலானமோக்ஷமானது.

(ஸ்ரீ - வீர) அசூனியமும் அல்லவாம் சூனியமும் அல்லவாம், அசித்துரூபமும் அல்லவாம் சித்துரூபமும் அல்லவாம், ஆன்மரூபமும் அல்லவாம் அன்னியரூபமுமல்லவாம், என்று புவனத்தைப் பாவித்துக்கொண்டிருத்தி. ஆயின் எங்ஙனமது சாமியத்தையடையும் எனின் ஆண்டுக்கூறல்;—இவ்வான்மாவினுடைய பாரமார்த்திகம் ரூபம்பற்றிச் சாக்ஷாத்கரித்துக் கொண்டால், பிரகிருதியானது தானே நன்குமாய்ந்துவிடும். மோக்ஷமென்று சொல்வது தேசமும் அல்லவாம், காலமும் அல்லவாம், அயற்றிதியுமல்லவாம்.

(ச) உலகம் = ஜகத்தானது, இல்லதன்று = அர்த்தக்கிரியைத்தருதலின், சூனியமன்று; உண்டல்ல = அசூனியமான பிரஹ்மத்தாற் கற்பிதமாதலின், அசூனியமும் அன்று, ஆன்மாவுக் கன்னியமானவஸ்து இன்மையின் இங்ஙனம் அநிர்வசனீயம் உலகமெனநினைவாய் = பாவிப்பாய், இந்தச்சொருபமுற = இத்தன்மையான அநிர்வசனீயமாகிய ரூபத்தையடைந்து,

பகுதி=புவனநிருபமான அவித்தை, போயிறக்கும், முத்தி=மோக்ஷசத்தவாச்சியம், ஒருதேசமுமல்ல, காலமுமுத்தியல்ல, புறத்தோர்நிலை=இதரமான அவஸ்தையாது முத்தியன்று. (56)

(ஸ்ரீ - வீர - அ - கை) வீட்டினிலக்கணத்தை விளக்கி, வீடுடையோன் யாவற்றையும் விட்டுச் சுகித்திருக்கும் சரிதத்தையே திருஷ்டாந்த பூர்வகமாக விளக்கல்:—அகங்காரத் தன்னன் என்பன.

அகங்கா ரத்தி னகமென்னு மோக மழிந்தாற் பாவனையா
மிகும்பேர் பெற்ற பகுதியந்த மேவு மிதுவே வீடாகுந்
தொகுஞ்சாத் திரத்தின் பொருணினைவிற் றுவள்வு நாநா விதவின்பம்
புகுங்கா வியவேட் கையுமனைத்து விகற்பத் துயரும் பொருந்தாமல்.

அன்னன் சமமா யழிவில்லா வான்மா வாய்நின் றின்பமுறு
மென்ன கினுமொன் றுடுப்பவனு மென்ன கினுமொன் றுண்பவனு
முன்ன தெங்கா கினுமொருபா லுறங்கு வோனு மாங்கவனே
பொன்னார் பூமி முழுதாளும் பூபா லனைப்போற் பொலிவுறுமால்.

(ப - ரை) அகங்காரத்தின் அகமென்னும்மோகம்=அகம்பாவத்தின் வீடென்று சொல்லும்படியான மயக்கமானது, அழிந்தால் = நசித்தால், பாவனையாமிகும்பேர்பெற்ற=வாசனையென மிகவும்பெயர்பெற்ற, பகுதி=அவித்தையானது, அந்தமேவும்=முடிவையடையும், இதுவே=இப்பகுதியின் விலயமே, வீடாகும்=மோக்ஷமாகும், தொகும்சாத்திரத்தின் பொருள் நினைவிற்றுவள்வும்=அநேக சாஸ்திரார்த்த விசாரத்திற்சஞ்சலமும், நாநாவித இன்பம்புகும் காவியவேட்கையும்=பலவகையான இரசம்நிறைந்த காவியங்களைக் கற்கும்காதலும், அனைத்துவிகற்பத்துயரும்=சகல சங்கற்பவிகற்பங்களின்துக்கமும், பொருந்தாமல் = அடையாமல்,

அன்னன் = அவ்வறிவினனானவன், சமமாய்=ஒப்பாய், அழிவில்லா = நித்தியமான, ஆன்மாவாய் = பரமாத்மசொரூபமாய், நின்று இன்பம்உறும் = நிலைபெற்று ஆனந்தத்தையடையும், என்னகினும் ஒன்று=ஏதாவதொன்றை, உடுப்பவனாய் = சுற்றிக்கொள்பவனாய், என்னகினும் ஒன்று=ஏதாவது ஒன்றை, உண்பவனாய்=குடிப்பவனாய், உன்னாது=ஆலோசியாமல், எங்காகினும் = எவ்விடத்தாகினும், ஒருபால் = ஓரிடத்தில், உறங்குவோனாய் = தூங்குவோனாய், ஆங்கவனே=இருக்கப்பெற்ற அத்தகைய ஜீவன்முக்தனே, பொன்னார் பூமி முழுதாளும் = ஐசுவரியம் நிறைந்த பூமண்டலமுழுவதையும் அரசுசெய்யும், பூபாலனைப்போல் பொலிவுறும்=சக்கரவர்த்தியைப்போல இலங்காநிற்பன். ஆல், அசை.

(ஸ்ரீ - வீர) அகங்கிருதி விமோகத்தின்க்ஷயத்தினாலே இவ்வவித்தையானது க்ஷயத்தையடைகின்றது, இயற்கையாய ஆன்மரூபமானது, அநாதியாகவே மறந்தசொரூபத்தை மீண்டு நினைத்தல் ஆகிய சரமசாக்ஷாத்கார விருத்தியென்னும்பாவனையின் அனுப்பிரவேசத்தால், சாக்ஷாத்காரப் பெயரியதாக எப்போதாமோ அப்போது இந்தப்பிரசித்தமாய பிரத்தியக்கான்மாவே சாஸ்திரப்பிரசித்த அம்மோக்ஷமாம். அத்தகைய சாக்ஷாத்காரத்தோடுகூடிய ஜீவன்முக்தன் எங்ஙனமிருப்பன் என்பதைக்கூறல்:—நூற்பொருளாராய்ச்சி யலைச்சல் நீங்கினனாய், நானாரச காவியகௌதுகம் நீங்கியவனாய், சகல விகற்பக்கவனைகளும் சாம்பினனாய், அதாவது, சாஸ்திரார்த்தஜிஞ்ஞாசையும், காவிய நாடகாதியர்த்தஜிஞ்ஞாசையும்,

லெல்லகிக் பிரியாப்பிரியாதி விகற்பவிக்ஷேபங்களும் நீங்கினபடியினுலே சமனுய், சாசுவத வடிவினனுய், ஆனந்தபரிதனுய்வாழ்வன் என்பதாம், அனைத்து விகற்பத்துயரும் பொருந் தாமல் அன்னுன்சமமா யழிவில்லாவான்மாவாய் நின்றின்பமுறும். என்று யோகியினது எத் திதியான்து கூறப்பெற்றதோ அதனையே விரித்துரைத்தல்:—என்னுகினும் என்பதாதி. வஸ் திராதி ஏதாவதொன்ருற் மூடிக்கொள்ளப்பெற்றவனுய் ஏதாவதொன்ருல் பசியாற்றினேனுய், எங்கேனும் ஒரிடத்திற் படுத்துக்கொள்பவனுய் இருக்கும் அந்த யோகியானவன், சாம்ராட் டென்னும் மானுஷாநந்தபராவதியை அடைவுற்றராஜாவைப்போல, விளங்குவன்;இவ்வுவமை பாமரதிருஷ்டியினுலேயாம், தத்துவதிருஷ்டியினுலோ அவ்வாநந்தத்திற் குவமையில்லையாம், எதனின்றும் வாக்குகள் திரும்புகின்றனவோ, என்பதாதி சுருதியினுலே, ஹிரணிய கருப்ப சம்பந்தமான ஆனந்தாந்தவிடயாநந்த சீகரமகார்ணவத்தன்மையினுலே அவதியின்மைப்பிரதி பாதனத்தால் என்றுணர்க. ஈண்டு எல்லாவாழ்வினையென்னும் வேதாந்தசூடாமணியெண் ணுக.

(ச) மற்றென்னெனில், பாவனையாமிகும்பேர்பெற்ற = வாசனுரூபமான, பகுதி = அவித்தையானது, அகங்காரத்தின் அகமென்னு மோகமொழிந்தால் = அகங்கிருதிரூபமான மகாமோகத்தினது நாசத்தால், அந்தமேவும்=நசிக்கும், இதுவே = பிரகிருதியின் நாசமே, வீடாம்=மோக்ஷமாம், சாத்திரத்திற்பொருள் நினைவிற்றுவள்வும் = சாஸ்திர விசாரரூபமான சாபலமும், நானுவிதவின்பம்புகுங் காவியவேட்கையும் = நானுரசமான காவியவிஷயமாய் வருங் கௌதுகமும், அனைத்து விகற்பத்துயரும்=பிராந்திகளும், பொருந்தாமல் இருப் பவன் எவன்;

அன்னுன்=அத்தன்மையானபுருடன், சமமாய்=சாமியநிஷ்டனுய், அழிவில்லாவான்மா வாய், சாசுவதான்மகனுய், நின்றின்பமுறும்=சுகமாயிருப்பன்; என்னுகினுமொன்று=நியத மின்றி வஸ்திரம் வற்கலைகம்பளம் கந்தையாதியை, உடுப்பவனுய்=போர்ப்பவனுய், என்னு கினுமொன்று=நியதமின்றிப் போச்சியப்பொருளை, உண்பவனுய்=புஜிப்பவனுய், எங்காகி னும் ஒருபால்=தரையில் கட்டிலிலாவது, உறங்குவோனுய், இருப்பவன் எவன் அவனே வாகியப்பொருள் அவாவின்மையனுன பிரமவித்தானவன், சாம்பிராச்சியவதீசுவரனைப்போல் விளங்குவன். (57-58)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவனுக்கு அருத்தசித்தம் ஆயவித்வத் சந்நியாசத்தையுரைத் தல்:—வருணவென்பது.

வருணச் சிரம வாசார வழிநூ னடத்து நடைநீங்கி
யருகா வுலகின் வலையகன்ரே னருங்கூ டகன்ற கேசரிபோ
னிருபா வுரைகட் கெட்டரியோ னேடிப் பிறக்கு நிலைநீத்தோ
னொருசோ பையைச்சேர்ந் தவன்மழைபோ யொளித்தநாளில் விண்டலம்போல்.

(ப-ரை) வருணச்சிரம வாசாரவழி=வர்ண ஆசிரம ஒழுக்கமார்க்கம், ஆக, நூல்நடத் தும் நடைநீங்கி = சாஸ்திரம் ஏவிநடப்பிக்கும் நடையினின்றும் அகன்று, அருகாவுலகின் வலையகன்ரேன் = பிரஹ்மவித்தையினுலன்றி மாருதஜகத்தின் ஜாலத்தினின்றும் நீங்கிய வன், அருங்கூடகன்ற கேசரிபோல் = பலமான பஞ்சரத்தினின்றும் நீங்கிய சிங்கமேபோல, நிருபா=மன்னவனே, உரைகட்கெட்டரியோன்=வாக்குகளுக்குக் கோசரிக்க முடியாதவன், நேடிப்பிறக்கு நிலைநீத்தோன் = விடயாசாதசையை திருஷ்டியைவிட்டவனுய், ஒரு

சோபையை=இன்னபடியென்றியம்பமுடியாத அழகை, அடைந்து, மழைபோய் ஒளித்த நாளில்=சரத்துப்போதில், விண்டலம்போல்=ஆகாயதலமேபோல விளங்குவன்.

(ஸ்ரீ - வீர) வருணதரும ஆசிரமஆசார சாஸ்திரயந்திரத்தினாலே தாசனைப்போல் நியமனப்படுத்துவதினின்றும், வர்ஜிதனானவன், உலகிற் சாலம்போலப் பந்தவேதுவாகிய, இகலோகத்திய பரலோகத்தியதொழில் அதன்பயன் கருத்தருத்துவ போக்தருத்துவாதி, வாசனா சங்கத்தினின்றும், பஞ்சரத்தினின்றும் நீங்கிய பஞ்சானன்போல, நீங்கிப்போவன்; வாக்குகட்கு அதீதமாகிய நிரதிசயானந்த அநுபவத்திற்கே விடயனாகி, அதனானே, விஷயாசாதசையை விட்டவனாய், யாதோ ஒருகவினைமேவினவனாய், சரத்காலத்தில் நபத்தலமேபோல இலங்குவன்.

(ச) பிராமணாதிவருணங்களும், பிரமசரியாதி ஆசிரமங்களும், வருணதர்மங்களின் ஆச்சிரமதர்மங்களின் ஆசாரங்களும், அவைகளைப்போதிக்கும் சாஸ்திரங்களும்; அவைகளின் நியமரூபமான மரியாதையோடு, நீங்கி = தேகாதியபிமானரகிதனானபுருடன், கூடகன்ற கேசரிபோல்=சிங்கம்போல், உலகவலையினின்று மகன்றோனும், நேடிப்பிறக்கு நிலைதீர்த்தோன்=விஷயாசாதிசை நீத்தோன் என்னும் அத்தியந்தம் விரத்தனான பூமான், உரைகட்கெட்டரியோன் = அதீதவாக்குவிஷயன், மழைபோயொளித்த நாளில் = சரற்காலத்தில், விண்டலம்போல், ஒருநிருபாதிகமான சோபையைச் சேர்ந்தவன். (59)

(ஸ்ரீ - வீர - அ - கை) அந்தச் சீவன்முத்தனது பெருமையையே விஸ்தாரமாக வுரைத்தல்:—தெளிவுபத்திதுதியென்பன.

தெளிவு கம்பீ ரங்கள்கிரி சேர்ந்த பெரிய சுனைபோல்வன்
களிகொள் பரம சுகச்சுவையாந் தன்பாற் றானே கலங்காம
லெளிது சுகிப்பன் கருமபல மெல்லாம் விட்டோ னழிவின்றி
யொளிரு நிறைவோ னிருவினைவே றொன்றுந் தாக்கா னொன்றனுகான்.

பத்தி பாய்ந்துட் பற்றாத பளிங்கு போலாக் கருமபலம்
பத்தி பாய்ந்துட் பற்றாதோன் பலநீண் மனித ருடனுறைந்தும்
பத்தி யாலர்ச் சித்தாலும் பகையா லுடலைப் பரிந்தாலும்
பத்தி பாச்ச லுற்றதுபோற் பயிலு மகிழ்வு துயரறியான்.

துதிகள் கடவு ளோமங்க டொடர்பூச் சியன்பூ சைகளில்லோன்
விதிசெய் நீதி யாசார மேவப் படுவோன் மேவாதோ
னெதிருந் தன்னா லுலகோர்க ளிறையும் வெருவா வகையிருப்போ
னுதித மான வுலகத்தி லொன்றால் வெருவா துறைகிற்போன்.

(ப - ரை) தெளிவுகெம்பீரங்கள்=பிரசன்னகம்பீரங்கள், கிரிசேர்ந்த பெரியசுனைபோல்வன் = பர்வதஞ்சார்ந்த மகத்தான மடுப்போன்றவன், களிகொள் பரமசுகச்சுவையாம் = மகிழ்ச்சியைத்தரும் பரமாநந்தரசமாம், தன்பால்=ஆன்மாவினிடத்தில், தானே = சுயமே, கலங்காமல்=கலக்கத்தையடையாமல், எளிது சுகிப்பன் = சுலபமாக ஆனந்திப்பன், கருமபலம் எல்லாம் விட்டோன்=வினைப்பயனியாவற்றையும் விட்டவன், அழிவின்றி=கெடாமல், ஒளிரும் = இலங்கும், நிறைவோன் = பூரணன், இருவினை = புண்ணியபாவங்கள்,

வேறொன்றும்=அன்னியம் ஒன்றும், தாக்கான்=சம்பந்தியான், ஒன்றனுகான்=ஒன்றையும் பற்ருன்.

பத்திபாய்ந்துட் பற்ருதபளிங்குபோல=பிரதிபிம்பித்து உள்ளே சம்பந்தியாதபடிகம் போல்; கருமபலம்=வினைப்பயன், பத்திபாய்ந்துட்பற்ருதோன்=பிரதிபிம்பித்து உள்ளே பற்ருதவன், பல நீண்மனிதருடனுறைந்தும் = அநேகவிவகார பாகுல்ய ஜனங்களினுடன் வசித்தும், பத்தியால்=அன்புடன், அர்ச்சித்தாலும்=பூஜித்தாலும், பகையால் = விரோதத் தால், உடலையரிந்தாலும்=தேகத்தை வெட்டினுலும், பத்திபாச்சலுற்றதுபோல் = பிரதி பிம்பித்ததேபோல, பயிலுமகிழ்வு துயரறியான் = உண்டாம் சந்தோஷவாட்டங்களைத் தெரியான்.

துதிகள் கடவுள் ஓமங்கள்=தோத்திரங்களின் தெய்வ ஓமங்களின், தொடர்=சம்பந் தம், பூச்சியன்=பூசைக்குவிடயம்; பூசைகள்=பூசைசெய்தல் முதலியவைகள், இல்லோன்= இல்லாமலிருப்பவன், விதிசெய் நீதியாசாரம் மேவப்படுவோன்=முறையேயியற்றும்படியான தரும ஒழுக்கம்பொருந்தி நிற்போன், மேவாதோன் = பொருந்தாதோன், எதிருந்தன்னல்= எதிர்ப்படும் தன்னுலே, உலகோர்கள்=ஜகத்திலுள்ளவர்கள், இறையும்=அற்பமும், வெரு வாவகை=பயப்படாதபிரகாரம், இருப்போன்=அமைதியாக வாழ்வோன், உதிதமான வுல கத்தில்=உண்டானஜகத்தில், ஒன்ருல்=எப்பொருளாலும், வெருவாதுறைகிற்போன் = பயப்படாதிருப்போன்.

(ஸ்ரீ - வீர) கம்பீரமாயிருத்தலிலும் தெளிவாயிருத்தலிலும் கிரியிலுள்ள மகாமடுவைப் போன்றவன், பராநந்தரசத்தை நிரந்தரம் ஆசுவாதனம்செய்வதினின்றும் எப்போதும் நழு வாதவன், தன்னுலேயே தன்னிடத்தில் இரமித்துக்கொண்டிருப்பவன், சருவகருமபலத் தியாகி, நித்தியதிருப்தன், நிராசிரயன், புண்ணியத்தினுலும் பாவத்தினுலும் லேபமுருதவன், இதரமாகியமகிழ்ச்சி வாட்டமாதிகளினுலும், லேபத்தையடையாதவன்; ஸ்படிகமானது பிரதி பிம்பத்தினுலே எங்ஙனம் இரஞ்சனத்தையடைய மாட்டாதோ, அங்ஙனம், அறியவேண்டி யதை யறிந்தவன் உள்ளே நுகர்வினைவயத்தால்வந்த இன்பதுன்பமாதிகளினுலே ரூபாந்தர அடைவாகிய இரஞ்சனத்தை, அடையாமலிருப்பன்; அதனையே வெளிப்படையாக்கிக் கூறல்:—பலவென்பதாதி. ஜனக்கூட்டத்திற் சஞ்சரித்தபோதினும், தேகத்தின் சேதனங்களி னுலும் பூஜனங்களினுலும், துக்கசுகங்களையுணரான், தேகப்பிரதி பிம்பமுற்றவற்ருற்போலப் பொய்யென்று பார்ப்பன்; பூஜிதனுயினும் நிஸ்தோத்திரன், புகழப்பெருதவன், பூஜாவிவர்ஜி தனுயினும் நிர்விகாரன், தோத்திரமற்றவன் விகாரமற்றவன் பூஜ்ஜியபூஜாவிவர்ஜிதன் என் பது நேர்பொருள்; சர்வாசார நயக்கிரமங்களோடு சேர்ந்தவனுமாவன் பிரிந்தவனுமாவன் என்னுமிதுகூறியதன் விஸ்தாரமேயாம்; அத்தகையஜீவன் முத்தனிடத்தினின்றும் உலகர் அஞ்சவேமாட்டார், அலகிலாவுயிர்கட்கினிய ஞதலினுல் என்க; அவ்வறிஞனும் உலகரிடத்தி னின்றும் பயப்படவேமாட்டான், உலகமுந்தானும் வேறிலாமையினு லென்றுணர்க.

(ச) கிரியிலுறும் பெரியசுனைபோற்றெளிவு கெம்பீரங்கள் சேர்ந்தவன் பிரசன்னனும் கெம்பீரனுமாம், பரமசுகச்சுவையால்=பராநந்தரசமாதலில், கலங்காமல்=நிச்சலனுய், தன் பாற்ருனே = ஆன்மாவிற் சொரூபமாகவே, சுகிப்பன், இருவினை = புண்ணிய பாவம், வேறொன்றும்=சாதி ஆயுள்போகரூபத்தோடும், அதன்விபாகத்தோடும், தாக்கான், ஒன்றனு கான்=நிராசிரயன்.

பத்திபாய்ந்து=பிரதிவிம்பமான நீலபீதாதிதிரவியத்தோடு உட்பற்றுத=உள்ளேயதன் சம்பந்தத்தையுறுத, பளிங்குபோல்=படிகமணிபோல், கருமபலத்தோடு உள்=அந்தக்கரணத்தில், பற்றுதோன் = பற்றுதலேயடையாதவன், பிரமவித்தாம்; பலரீண்மனிதருடனுறைந்தும்=பந்துஜனமு நாஞசாதியான ஜனமுமாகியவவற்றின் கூட்டங்களில் விவகரிப்பினும், தேகாபிமானரகிதனுன பிரமவித்து, உடலே கந்தபுட்பாதிகளால் அர்ச்சித்தாலும், அரிந்தாலும், பத்திபாச்சலுற்றதுபோல் தன்றேகப் பிரதிவிம்பத்துறும் பூஜனச்சேதனம்போல், மகிழ்வுதுயரறியான்.

பிரமவித்தானபுருடன் துதிகள் இல்லோன், தன்விஷயமும் பரவிஷயமுமான ஸ்தோத்திரத்தினின்றும், விடுபட்ட நிர்விகாரன், தனக்குவேறாகப் பூஜிக்கத்தக்கதின்மையின் என்க, தன்னால் = அந்தப்பிரமவித்தினால், உலகோர்வெருவார், சகலபூத அபயப்பிரதானத்தால் என்க, அவனும், உலகத்தால் வெருவாதுறைகிற்போன், பயவேதுவாய்த் தனக்கு விதிரித்தமான பொருளின்மையாலென்க. (60-61-62)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவ்வறிஞனது பெருமையையுபசங்கரித்து அவனது பதவியைப் புகழ்தல்:—பற்றுஞானமென்பன.

பற்று முனிவுப பஞ்சுகங்கள் பயிலா னெனினும் பயின்றிடினுஞ்
சொற்ற வெவர்க்கும் பிரமேயந் தொடாா னெனினு நன்பாலர்
பெற்ற பிரமே யத்துறினும் பெரிய மனத்தோன் காசியிற்சா
வுற்ற பொழுது நாய்க்கறிப்போ ருழைசா வுறினு முறும்பதங்கேள்.
ஞான மடைந்த பொழுதிலிவ னல்வீ டுற்றோன் மனமிறந்தோ
னீன மான வகம்பாவப் பிராந்தி யன்றோ விடர்பந்த
மான வீடா வதுமடமை யந்த காரங் கெடலன்றோ
மான மிகுந்த விவனெய்தின் மனிதர் பூசை செய்வேண்டும்.

(ப - ரை) பற்று முனிவுபயஞ்சுகங்கள்=விருப்புவெறுப்பு அச்சம் ஆனந்தங்களை, பயிலான் எனினும்பயின்றிடினும்=விட்டபோதினும் தொட்டபோதினும், சொற்ற எவர்க்கும்=கூறப்பெற்ற எவருக்கும், பிரமேயம் தொடான் எனினும்=விடயப்படான் எனினும், நன்பாலர்பெற்ற பிரமேயத்துறினும்=நல்லபாலகர் அடைவுற்ற விடயத்துற்றபோதினும், பெரிய மனத்தோன்=மகாமனத்தனுனவன், காசியில்=ஸ்ரீ அவிமுக்தக்ஷேத்திரமென்னும் மோக்ஷநகரத்தில், சாவுற்றபொழுதும்=மரணமடைந்தபோதும், நாய்க்கறிப்போருழை = கடையர்தம் மனையில், சாவுறினும்=இறந்தபோதிலும், உறும்பதங்கேள் = அடையப்பெற்ற பதத்தைக் கேட்பாயாக.

ஞானமடைந்தபொழுதில்=பிரஹ்மவித்தையை யடைவுற்றபொழுதே, இவன்=இவ்வறிஞன், நல்வீடுற்றோன் = நல்ல மோக்ஷத்தையடைந்தவன், மனமிறந்தோன் = உள்ள மொழிந்தவன், ஈனமான=நீசமான, அகம்பாவப் பிராந்தியன்றோ=அகந்தையாகிய மயல் அல்லவோ, இடர்பந்தம்=துய்ரைப்பயக்கும் கட்டாம், ஆனவீடாவது = ஞானத்தாலான மோக்ஷமாவது, மடமையந்தகாரம்=அறியாமையாகிய பேரிருள் கெடுவதல்லவோ, மானமிகுந்த இவன்=வெகுமானம்மிக்க இவ்வறிஞன், எய்தின் = அடையப்பெறின், மனிதர் பூசைசெயவேண்டும்=அதிகாரிகள் பூசையியற்றவேண்டும்.

(ஸ்ரீ - வீர) இராகத்துவேட ப்ய ஆநந்தங்களினேடு = இராகாதிநிமித்த விடயங்களினேடு, ஒருபோது பிராரப்தபலத்தினலே கூடியபோதினும், அவற்றை வீடியபோதினும், எக்குசலமதியினுடைய பிரமிதிவிடயத்திலும், தானேயுண்மையாக அந்தர்ப்பவிப்பதில்லை, உண்மையாக அவ்வறிஞனைக் குசலமதியுடையவர்களும், அளவிடமுடியாதவர்களேயாவர்கள், துராசயமில்லாத மகாசயனுகிய அவன் விவகாரத்தாலோபாலனுலும் அளவிடப்படுவன், தொடரா நின்ற அற்பனுலும், வசீகரிக்கப்பெறுவன், இவன் கெட்ட எண்ணம் இல்லாதவனுதலினல், சுத்தத்தன்மையால் நேரானவன் என்பதாம். அவனுக்கு ஞானசமகாலத்திலேயே முக்தியுண்டாதலினல், தேகாதிபாதத்தினலே மீண்டும் முத்திநிமித்த தீர்த்தாதிகளினுதல் தேகத்தியாகத்தினுதல், சிந்தையே கிடையாதாம் எனல்:—காசியில் என்பதாதி. தீர்த்தத்தில் தேகத்தைவிடுக, அல்லது, சுவபசனுடைய இல்லத்திற்றான்றனுவைவிடுக, ஒருபோது மேதனுவைவிடவேண்டாம், அல்லது இப்போதேதான்றனுவை விட்டுவிடுக, என்றபோதினும் இவ்வறிஞன், ஞானஅடைவின் சமயத்தில், முன்னரே, முக்தனும் விதேகனுமாவன், எண்ணங்கள் எல்லாம் இற்றவனுமாவன், அதனைப்பிரதிபாதிக்கும் பொருட்டுப்பந்த மோக்ஷசொரூபத்தைக்கூறல்:—அகம்பாவமென்பதாதி யானென்னும் மயலேதான் பந்தப்பொருட்டாவது ஞானத்தானேயது தீர்தலே மோக்ஷமாம்.

(ச) பற்று=இராகாதிகளோடு, பயிலான்எனினும், ஒருபோது, பயின்றிடினும், பிரஹ்மவித்து, பெரியமனத்தோனுதலின், எவர்க்கும் = ஒருவருக்கும், பிரமேயம் = அறிதற்கு விடயமாக, தோன்றுன், மகான்களுக்கும் ஒருபோது துர்லபனு மென்பதுபொருள், இப்பிரமவித்துத் துராசயமின்மையனுதலின், பாலருக்கும், பிரமேயத்துறினும், ஒருபோது சுலபனுமென்பது பொருள். (63-64)

(ஸ்ரீ - வீர - அ - கை) அறிஞனைப்போற்றுவார் பயனையறைதல்:—போற்றவென்பது.

போற்ற வணங்கப் பூசிக்கப் புகழ வருந்திப் போய்க்காண
வாற்ற வுரியோ னெவனவன் வன்பிறவி யறுப்போர்க் கனவரதஞ்
சாற்று மகத்தாற் றீர்த்தத்தாற் றவத்தாற் றனத் தாற்கிட்டா
வூற்ற வறிவாற் பிறவியறுத் துயர்ந்தோன் பத்தி தரும்பயனே.

(ப - ரை) பிறவியறுப்போர்க்கு=ஜனன மறுக்கவேண்டுமென்று விரும்பினவருக்கு, அனவரதம்=எப்போதும், போற்ற=துதிக்க, வணங்க=நமஸ்கரிக்க, பூசிக்க=பூசைசெய்ய, புகழ=கீர்த்திக்க, வருந்திப்போய்க்காண=முயன்று சென்றுபோய்த்தரிசிக்க, ஆற்ற=பணிவிடைசெய்ய, உரியோன்எவன் = தக்கவன்யாவன், ஊற்றஅறிவாற் பிறவியறுத்துயர்ந்தோன் அவன்=திடஞானத்தினலே ஜனனத்தைச்சிதைத்து மேலானவனுகிய அவனுடைய, பத்திதருமபயன்=அன்புகொடுக்கும் பிரயோஜனமானது, சாற்றுமகத்தால்=கருமகாண்டம் விதித்தயாகத்தால், தீர்த்தத்தால்=தீர்த்தங்களினல், தவத்தால் = தவங்களினல், தானத்தால்=தானங்களினல், கிட்டா=அடையமுடியாதாம்.

(ஸ்ரீ - வீர) இகபரமோக்ஷசுகம் விரும்பிய அதிகாரியினலே, அச்சீவன்முக்தன் பூசிக்கத்தக்கவன் ஆவன், துதிக்கத்தக்கவனுவன், நமஸ்கரிக்கத்தக்கவனுவன், யத்தனத்தினலே போய்த்தரிசிக்கத்தக்கவனுவன், புகழத்தக்கவனுவன்; அவ்வாறேமறையும் அறைகின்றது:— "எவ்வெவ்வுலகினை மனத்தாலெண்ணுவன், தவ்வாவிசுத்தசத்துவனுனேன், எவ்வெக்காமந்தமையிச்சிப்பன், அவ்வவ்வுலகினை யடைவதனேடும், அவ்வக்காமந்தமையுமே யடைவன்,

செவ்வினதனற் சீவன்முத்தன்றனை, கவ்வுறுபூதிகாமனர்ச்சிக்க'' என்பதாம், அவனது பூசனையே, பரமபுருஷார்த்தத்தை யடைவிக்கும் ஞானஹேதுவுமாம் என்று கூறல்:—சாற்று என்பதாதி ஹேகுழந்தாய்! வரும்பவநோய் நீங்கியவர்களாகிய ஜீவன்முக்தர்களுடைய பஜனத்தினலே, எந்தப்பரம்பதம் ஞானவாயிலாக அடையப்பெறுமோ, புனிதமாய அதுயாக தீர்த்தங்களினாலும் தவப்பிரதானங்களினாலும், அடையப்பெறாதாம்.

(ச) திருவேட்டோர்=விபூதியென்னும் ஐசுவரியத்தைவிரும்பினவராய், பிறவியறுப் போர்க்கு=ஆன்மவித்துக்களின், பத்திரூபமானசேவையால் எந்தப்பரமபதமடையப்படும் அது யஜ்ஞதீர்த்ததபதானங்களாலும் அடையப்படா தென்பதாம். (65)

(ஸ்ரீ - வீர - அ - கை) கதோபசங்காரம்:—பரிந்தென்பது.

பரிந்திவ் வாறு கற்பித்துப் பகவன் மனுவாம் பேருடையோன்
விரிஞ்சன் றனது நகரத்தைப் புக்கா னிக்கு வாகுவெனும்
விரிந்த புகழ்மன் னனுமந்த விழியே பற்றி நிலைநின்றான்
வரிந்த கழற்கா விராமவென வசிட்ட முனிவ னருள்செய்தான்.

(ப - ரை) பரிந்திவ்வாறு கற்பித்து = அன்புடன் இந்தப்பிரகாரம் இனிதுபதேசித்து, பகவன் மனுவாம்பேருடையோன்=ஸ்ரீ மனுபகவான் என்னும் பெயரையுடையவர், விரிஞ்சன் றனது நகரத்தைப்புக்கான் = பிரஹ்மாவினுடைய புரத்தையடைந்தார், இக்குவாகு வெனும்=இக்ஷ்வாகுவென்னும், விரிந்தபுகழ் மன்னனும் = விஸ்தரிக்கப்பெற்ற கீர்த்தியை யுடைய மகாராஜனும், அந்த விழியேபற்றி=அத்திவ்ய சக்ஷுவையே கடைப்பிடித்து, நிலை நின்றான்=ஏகநிலைமாறாமல் ராஜபோகநிலையிலிருந்தான், வரிந்த கழற்காவிராம = வீரகண்டையைத்தரித்த பாதமுற்ற இராகவனே! என = என்று வசிட்டமுனிவன் அருள்செய்தான்=ஸ்ரீ வசிட்டபகவான் திருவருள்செய்தனர்.

(ஸ்ரீ - வீர) அந்த ஸ்ரீ மனுபகவான் இந்தப்பிரகாரம் உபதேசித்துவிட்டு மேருசிகரமாகிய பிரஹ்மாவின் அரண்மனையை நோக்கிச்சென்றனர், இக்ஷ்வாகுவாமரசனும் அந்தத் திருஷ்டியையே நன்குபற்றி, அதிதிடமாயரசாண்டுவந்தனன்.

(ச) விரிஞ்சன் றனதுநகரத்தை=பிரஹ்மலோகத்தை. (66)

## இக்குவாகு கதை முற்றிற்று.



## மானுவேடன் கதை



(மிருகவியாத, முனிவியாத, என்பன பாடபேதமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை) வருணிக்கப்பெற்ற இலக்கணம்வாய்ந்த ஜீவன் முக்தனுக்கு, பணிமந்திராதி சித்தர்கட்கேபோல, ஆகாசகமனாதி சித்திரூபமேயாய யாதேனும் ஒரு அபூர்வ அதிசயந்தான் உளதோ இலதோவென வையப்பட்டவராய் ஸ்ரீ இராகவர் வினதல்:—இந்த வென்பது.

(ச - அ - கை) முன்பு தனது விசாரத்தாலறிதற்கரிதாகினுந் தத்துவங் குருவினுபதேசத்தினல், எளிதில் அறியலாமெனத் தெரிவிக்கப்பட்டது, இப்போது தத்துவத்தையறிந்த விசிராந்தனுக்கு மிகவு மிலௌகிகவிவகாரமின்றெனத் திருஷ்டாந்தமுன்னிலையாகத் தெரிவித்தற்கு முனிவியாதன் விருத்தாந்த நிரூபிக்கப்படுகின்றது:—

இந்தவா றிருக்கிற் சீவன் முக்தனு யினியதான
புந்திசே ரிவனுக் கேது புதுமையா மதிசயந்தா
னந்தமில் பரத்தைக் கண்டோர்க் கதிகனே யென்றுகேட்ட
சுந்தர விராமற்கந்தத் தொன்மறை வசிட்டன் சொல்வான்.

(ப - ரை) இந்தவாறு இருக்கில் = இவ்வண்ணமிருப்பதாயின், சீவன் முக்தனுய் = ஜீவிக்கும்போதே வீடுற்றவனுய், இனியதான = இனிமையான, புந்திசேர் இவனுக்கு = நன்மதியையுடைய இம்மகானுக்கு, ஏது புதுமையாம் அதிசயந்தான் = அபூர்வ அற்புதமியாது கொலோ!, அந்தமில் பரத்தைக்கண்டோர்க் கதிகனே = முடிவில்லாத பரம்பொருளைக்கண்டவர்க்குள் மேன்மை மிக்கவரே! என்று கேட்ட = எனவினவிய, சுந்தரவிராமற்கு = அழகு பொருந்திய ஸ்ரீ இராகவருக்கு, அந்தத் தொல்மறை வசிட்டன் சொல்வான் = அவ்வநாதியாய, தர்மப்பிரஹ்மப்பிரதிபாதக அபௌருஷேயப்பிரமாண வாக்கியரூபவேதங்களை நன்குணர்ந்த ஸ்ரீ வசிட்டபகவான் கூறத்தொடங்குகின்றார்.

(ஸ்ரீ - வீர) இந்தப்பிரகாரம் தங்களால் வருணிக்கப்பெற்ற வடிவ இலக்கண சமுதாயத்தில் இருந்தபோது. ஹே பகவன்! பரமான்ம வித்துக்களுள் மிகவும் மேன்மையரே! சன்மதியையுடைய சீவன் முக்தனுக்கு அபூர்வ அதிசயந்தான் யாதுளதாம்.

(ச) ஸ்ரீ இராமர்:—ஜீவன் முக்தனுக்கு ஆகாசகமனுதியதிசயங்களின்றென முன்பு கூறப்பட்டது, இந்தவாறிருக்கில், அப்போது, சீவன் முத்தனுக்குப் புதுமையாமதிசயமேதாம். (1)

(ஸ்ரீ-வீர - அ-கை) அவ்வறிஞனுக்கு அன்னியசித்த அகோசர நிரதிசயானந்த ஆன்மகோசர அனுபவமே விசேடமாம் என்னுங் கருத்தால் விடைபகர்தல்:—ஒப்பறுமென்பது.

ஒப்பறு ஞானிபுந்தி யொன்றிலே யதிசயிக்குந்
தப்பற நிறைந்துசாந்த னுயவன் றன்பானிற்குஞ்
செப்புமந் திரங்களேன்பு தந்திரஞ் சித்தியானேர்
கைப்படு விண்போக்காதி கருமத்திற் புதுமையென்னே.

(ப - ரை) ஒப்பறு ஞானிபுந்தி = உவமையில்லாத மகான்மாவின் மதியானது, ஒன்றிலே அதிசயிக்கும் = ஏக அத்விதீயசிவத்திலேயே அற்புதத்துடன் இரமிக்கும், தப்பற நிறைந்து சாந்தனுயவன் = குற்றமறப்பூரணமாய் உபசாந்தமடைந்தவன், தன்பால்நிற்கும் = தன்னிடத்திலேயே நிலைபெறும், செப்புமந்திரங்கள் நோன்புதந்திரம் சித்தியானேர் = செபிக்கும் மந்திரங்கள் அனுஷ்டிக்கும் விரதங்கள் அநேகவிதயுக்திகள் சித்தியாகிக் கைவந்தவர்கள், கைப்படும் = கையாளும், விண்போக்காதி கருமத்தில் = ஆகாசகமனுதி செய்கைகளில், புதுமையென்னே = அற்புதமியாதாமோ, ஒன்றுமின்றாம்.

(ஸ்ரீ - வீர) யாதோ ஒரு, இதரசித்தர்கட்குத்தெரியாத பரமான்ம தத்துவாம்சத்தில் அறிஞனுடையமதியானது அதிசயமாகவேமுழுகுமே அல்லது, அறிஞனுக்குச் சாம்சாரிகசித்தி

யம்சத்தில் எவ்விதிசயத்தின்கண்ணும் அதிசயபுந்தியுண்டாகவேமாட்டாது; அஃதெதனாலோ வெனின் ஆண்டுக்கூறல்:—தப்பறவென்பதாதி. நித்தியதிருப்தனாய்ப்பிரசாந்த ஆன்மாவாய் இலங்குமவன் ஆன்மாவின்கண்ணே வீற்றிருப்பன்; மந்திரசித்தாதிரூபத்தினாலும், யானேயிருக்கின்றேன் என்று சர்வான்மபுந்தியினாலே அவற்றானே யடைவுற்ற கேசராதிசித்திகளை யவன் அடைவுற்றேயிருத்தலின், அவற்றில் அவனுக்கு அபூர்வத்தன்மையுமிலதாம், எனல்:—செப்பு என்பதாதி, மந்திரசித்தர்களானும், தவச்சித்தர்களானும் தந்திரசித்தர்களானும் வெகு வெகுவாக, ஆகாசகமனாதி இயற்றப்பெற்றதாம், அதன்கண்ணியாதோ அபூர்வத்தன்மையாம்= அதிசயத்தகைமையாம்; அல்லது, அபூர்வம்=இருப்பதின்றும், பூர்வம்=காரணம் எதற்கோ அது அங்ஙனமாம் என்னும் விற்பத்தியாயவழி, தத்துவவித்தினாலே யடையப்பெற்ற நித்திய நிரதிசயசுகமே முக்கியமாம், ஆகாசகமனாதி சித்திசமுதாயமோ மந்திரசித்தியாதிகளினாலே யாக்கப்பெற்றனவாம் ஆகலின் தன்முயல்வாலுண்டாக்கப்பெற்றனவாமென அவற்றிற்சபூர்வத்தன்மையேயுளதாம். அன்றி அபூர்வத்தன்மையிலதாம்.

(ச) ஞானிபுந்தி=ஞானியினதுமதி, ஒன்றிலே=விசுவவிலக்ஷணமான ஓரிடமென்னுந் தத்துவத்திலே, அதிசயிக்கும்=அதிசயமாயிருக்கும், அவனும் = அம்மட்டினாலே, தப்பற நிறைந்து=நித்தியதிருத்தனாய், சாந்தனாய்=உபசாந்தான்மாவாயும், தன்பால்=ஆன்மாவின் கண்ணே, நிற்கும்=ஸ்திரமாயிருக்கும் அன்றி யிதனைவிட்டிரான், மந்திரசித்தாலும், தவச்சித்தராலும், தந்திரசித்தராலும், கைப்படும் = வெகுவாகச்செய்யப்படும், ஆகாசகமனதியிற் பக்ஷியாதி சாதாரணமாதலின், சிவபாவநிவிர்த்தியின்மையின் புதுமையாம் அதிசயம் யாதுளதென்பது பொருள். (2)

(ஸ்ரீ - வீர - அ - கை) அபூர்வசபத்தத்திற்கு அனன்யப்பிராப்தத்தன்மையும் பொருளாமேலாயினும், வெகுமந்திர சித்தாதிகளினாலே அணிமாதி சித்திசமுதாயங்கள் அடையப்பெற்றனவேயாம், ஆகவே அவற்றிலபூர்வதையில்லையாம் என்றறைதல்:—உலகாயென்பது.

உலகாய் விரிந்த விவாறு மொழுங்கால் விரிந்த வருத்தத்தாற்
பலமா மணிமா தியும்பண்ணப் படுமா தலினாற் றனையறிந்தோர்க்
கிலதா மிவர்க்கோர் விசேடமுள திழிந்த மூடப் புந்திகள்போ
லலனா குவனெங் கணுமாசை யறலா லிவனெஞ் சமலமதாம்.

(ப - ரை) உலகாய் விரிந்த இவராலும்=ஜகமாய் விரிந்திருக்கும் சாமானியர்களாலும், ஒழுங்கால் = நூற்கூறியமுறைமையால், விரிந்தவருத்தத்தால் = அதிக கஷ்டத்தால், பலமாம்=பயனும், அணிமாதியும்=அஷ்டசித்தியும், பண்ணப்படும் = இயற்றப்பெறும், ஆதலினால்=ஆகையினால், தனையறிந்தோர்க்கிலதாம்=தம்முடைய யதார்த்த வடிவத்தையறிந்தவர்கட்கு இல்லையாம், இவர்க்கோர் விசேடமுளது=அறிவுளோருக்கொருசிறப்புளதாம், இழிந்த மூடப்புந்திகள்போல் அலனாகுவன்=நிந்திதமான மௌட்டியமதியினர்போல அறிஞன் அல்லனாவன், எங்கணுமாசையறலால்=எவ்விடத்திலும் நசையில்லாதபடியினாலே, இவன் நெஞ்சு அமலமதாம்=இவனது மனமானது நிர்மலமாகவேயிருக்கும்.

(ஸ்ரீ - வீர) அத்தகையோர்களினாலேயே வெகுவாக, அணிமாதிகளும் அடையப்பெற்றனவேயாம்; சர்வான்மபூதமாய அறிஞனுக்கு, சர்வசாம்சாரிகசித்திகள் அவ்வம்முயல்வினாலே அவர்களினாலேயே சாதிக்கப்பெற்றனவாயிருத்தலினாலும் தன்னால் மறுபடியும் சாதிப்பதிற் பிரயோஜனமில்லையாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—விரிந்த என்பதாதி, அவர்களானே

யத்தனங்கொண்டு சாதிக்கப்பெற்றிருத்தலின், ஆன்மதரிசியால் வேறுமுயல்வால் வேண்டா மன்றே. ஆயின் தத்துவவித்துக்கு அவரினும் யாது அதிசயம் ஆமெனின் ஆண்டுக்கூறல்:—இவர்க்கென்பதாதி. அறிஞனுக்கிதுவே விசேடமாம், தத்துவஞானமே யதிசயமென்பதாம்; மூடபுந்தியர்களோடு அவன் சமானன் அல்லன், அதிசயாந்தரமறைதல்:—எங்கணுமென்பதாதி. யாண்டும் ஆஸ்தையின் பரித்தியாகத்தானே, இராகமற்றதாய் மனம் அமலமாக, அந்த மகாமதிக்காம், அவ்வறிஞன் போக்கியவஸ்துக்களில் மூழ்கான்.

(ச) அணிமாதியஷ்டவிதமான ஐசுவரியமும், இவராலும்=அத்தன்மையான மந்திராதி சித்தர்களாலே, பலமாம்=மிகப்பெறப்படும், தனையறிந்தோர்க்கிலதாம்=இதரமான தத்துவ ஞானியாற்பெறப்படாது, யாதிலெனில், அம்மந்திராதிசித்தராலே மிகுந்தவருத்தத்தாற் பண்ணப்படுமாதலினுல் = சாதிக்கப்படுமாதலினாலும், ஆன்மஞானியென்னும் அணிமாதியபேக்ஷயின்மையினால், வருத்த (எத்தன) மின்மையாற் சாதிக்கப்படாமையானும் என்க. இவற்கு=இஞ்ஞானிக்கு, எங்கணும் = வாசியப்பொருளில், ஆசையறலால் = ஆசையற்றவேதுவினால், எங்கணு மிவனெஞ்சமலமதாம், இதுவே இவற்குவிசேடமாம், மூடப்புந்திகள் போலலனுருவன்=மூடப்புந்திகளோடு சாதாரணன் அன்றுமென்றதாயிற்று. (3)

(ஸ்ரீ - வீர - அ - கை) இராகமின்மைப்பயன்களையே தத்துவஞானி இலக்கணமாக வருணித்துக்கொண்டுபசங்கரித்தல்:—குறியென்பது.

(ச - அ - கை) அவ்விசேடத்தையேகூறல்:—

(௫) குறிதீர் வடிவாய்ப் பிறப்பிறப்பிற் கொடுநீள் கால மயக்கறலாற்
பிறியா வின்பத் தறிஞனுக்குப் பேசுங் குறியிவ் வளவன்றே
வெறிகூ ராசை சினமோகம் விதன முலோப மாபத்துச்
சிறிதா நிபுண நாளுமெனச் செப்பி வசிட்டன் மீண்டுரைப்பான்.

(ப - ரை) குறிதீர்வடிவாய்=குறியற்றவடிவமாய், பிறப்பிறப்பில்=ஜனனமரணத்தில், கொடுநீள் காலமயக்கறலால்=வெகுகாலங்கொண்டபிரமம் அகலுதலினால், பிறியா இன்பத்தறிஞனுக்கு=ஆனந்தமயமாய விவேகிக்கு, பேசுங்குறியிவ்வளவு அன்றே = கூறுமிலிங்கம் இந்த அளவினதல்லவோ, வெறிகூர் ஆசை=பயித்தியம்பிடித்த அவா, சினம் = கோபம், மோகம்=மயக்கம், விதனம்=கவலை, உலோபம்=லோபம் என்னும், ஆபத்து = விபத்து, சிறிதா நிபுணநாளும்=அனுதினம் அத்தியந்தம் அபக்ஷயமாம், எனச்செப்பி=என்றுகூறி, வசிட்டன் மீண்டுரைப்பான்=ஸ்ரீ வசிஷ்டபகவான் மீளவுங்கூறுவான்.

(ஸ்ரீ - வீர) தத்துவபோதத்தில், சமுசார வெகுகாலமயக்கம் நன்கு நீங்கப்பெற்றவனும், அதனையே சுகமாக இளைப்பாறினவனும், சருவதருமசூனியனும், பிரஹ்மசித்தையே வடிவமாகவுடையனும், சைந்தவகனம்போல ஏகரசசொரூபனும், ஆகிய அறிஞனுக்கு, இத்துணையே துணிபாயிலக்கணமாம், எம்மதன கோபவிஷாதமோகலோப ஆபத்துக்களின் தனுத்தகைமை யத்தியந்தந்தினந்தினமாமோ; இவைமுற்றினும் நீங்குதலே இலக்கணமாமென்றுணர்க.

(ச) குறுதீர்வடிவமாய்=வருணச்சிரமலிங்காதிதனாய், பிறப்பிறப்பிற்கொடு=சம்சாரரூபமான, நீள்காலமயக்கு=சிரகாலப்பிரமம், அறலால், பிறியா = நிர்ச்சிந்தையனான, இன்பத்தறிஞனுக்கு, காமக்குரோதாதி நிமித்தங்களான ஆபத்துகள்நாளும், நிபுணம் = நிர்விகாரமாய், சிறிதாம்=நசிக்கும், இவ்வளவன்றே, குறி=விசேடமென்பதுபொருள். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை) இதாசித்தியைக்குறித்து ஆன்மஞானத்தின்மேன்மை நித்தியநிரதிசயாநந்த அநுபவத்தன்மையானேயாம், பிரத்தியக்கான்மாவிற்கும் நித்தியநிரதிசய ஆனந்தரூபத்தன்மை பிரஹ்மசொரூபத்தன்மையானேயாம், என்னும் அருத்தத்தினது பொருத்தப் பொருட்டு, பிரஹ்மத்திற்கே தற்சுபாவ உபேக்ஷவசத்தினாலே ஜீவபாவப்பிராப்தியைக் கூறல்:—மறையோன் என்பது.

மறையோ னொருவன் றன்னுடைய மகிமை கடந்து சூத்திரனாய்
முறைதீர் வதுபோற் சிவனெனமுளைத்தா னீசன் சிருஷ்டிதொறு
நிறைநீ டுயிர்க ளளவின்றி நிகழு மூலச் சித்தசைவாற்
றுறைதோ றவைதாம் தோன்றிடுமாற் றொடர்கா ரணமிங் கிலதாகும்.

(ப - ரை) மறையோன் ஒருவன்=பிராஹ்மணன் ஒருவன், தன்னுடைய = தனது மகிமைகடந்து = மகான்மியத்தைத்தாண்டி, சூத்திரனாய் = சதுர்த்தனாகி, முறைதீர்வது போல்=துர்ச்சேட்டையை யடைவதேபோல, சிவனெனமுளைத்தான் ஈசன்=பரமேசுரரே ஜீவபாவத்தை யடைவுற்றனர், சிருட்டிதொறும்=ஒவ்வொரு சிருட்டியிலும், நிறைநீடுயிர்கள் அளவின்றிநிகழும்=பூரித்துள்ள அநாதிசீவர்கள் அளவில்லாமல் விளங்குவார்கள், மூலச்சித்தசைவால்=முதன்மையான அறிவசைவினாலே, துறைதோறவைதாம் தோன்றிடும்=வேண்டியவேண்டிய புவனங்களில் அவ்வுயிர்கடாம் ஜனித்திடும், தொடர்காரணமிங்கிலதாகும்= சம்பந்திக்குங்காரணமும் இல்லாதனவாம். ஆல் அசை.

(ஸ்ரீ-வீர) எங்ஙனம் ஒருவிப்பிரன் சூத்திரத்தகைமையை அவாவினோனாய், அச்சம்போக சகவாசாதி கெட்டநடத்தையினாலே தனக்குத்தக்க சாத்விக பிராஹ்மணதருமத்தைப் பையப் பைய்ய வுபேக்ஷித்து, நெடும்போதாகச் சூத்திரத்தகைமை யங்கீகரிக்கின்றனனோ, அங்ஙனம் பரமேசுரர் மதியாதிசேர்க்கையினாலே, அவற்றாலேற்பட்ட போகாசையினாலே தமது நித்திய சுத்த பூர்ணானந்தசுபாவத்தை யுபேக்ஷித்து ஜீவத்தன்மையை யங்கீகரிப்பர்; உபாதிப்பிராதான்யத்தினாலே போக்கியங்கள் எனவும், உபகிதப் பிராதான்யத்தினாலே போக்தாக்கள் எனவும், இருவகையினவாகவே பூதங்கள் சருக்கந்தோறும் தோற்றுகின்றனவேயாம், மாயாகத அநாதிதுவிவிதசமஸ்கார பரம்பரையனுசாரியாய ஹிரணியகருப்பான்மக ஆதியவிஸ்பந்தத்தினின்றும் உண்டாயின=மாயாகந்தர்வநகரம்போல வெளிப்பட்டுள்ளனவாம்; ஆகவின் மித்தியாத்தகைமையால் நிட்காரணங்களாம், வாஸ்தவசாமக்கிரீயை யபேக்ஷியாதனவாம், கனகடாதிகள் தமதுற்பத்தியில் தண்டசக்கிராதி சாமக்கிரீசபேக்ஷமில்லாதனவே யாமன்றோ.

(ச) மறையோனொருவன்=ஒருவிப்பிரன், தன்னுடைய ஜாதியாதிகளாற் பிரசித்தமான மகிமையை, கடந்து, முறைதீர்வது, புத்திரன்பிறக்கும்பரியந்தஞ் சூத்திராங்கனையின் சங்காதிரூபமான துர்ச்சேட்டையால் சூத்திரனும் = சூத்திரத்துவத்தை யங்கீகரிப்பன். இதற்கு உ-ம், மனு: சூத்திரப்பெண்ணைச் சயனத்தில்வைத்துப் பிராஹ்மணன் அதோகதியையடைவன் அவளிடத்திற் சுதரைச்சனிப்பித்துப் பிராமணியத்தினின்றும் கெடுவன் என்பதாம். அதுபோல் முறைதீர்வது, தனது சங்கற்பத்தாலலது தனது அவித்தையால் ஈசன்=ஈசுரனும், சிவனெனமுளைத்தான்=ஜீவபாவத்தை யங்கீகரித்தான்; இந்தச்சீவனும் வடிவினாலே யனுப்பிரவேசித்து நாமரூபங்களைவிவகரிப்பேன் என்னுஞ் சுருதியினாலென்க. நிறைநீடுயிர்கள்=சராசரரூபிகளான பிராணிகள், சிருட்டிதொறும், நிகழும் உதிப்பனவாம், துறைதோறு அவற்றில் எந்தப்பிராணிகள் அசைவு = புரணம், சிருஷ்டிக்கவேண்டுமென்னும் இச்சை

யென்பர்தாம். மூலச்சித்தசைவால்=ஆதியானசித்தசைவினால், தோன்றிடும் அவைதான்= அந்தப்பிராணிகள், காரணமிலதாகும் = நிஷ்காரணங்களாம், கன்மாதியென்னுஞ் சன்ம காரணமின்மையினும் ஆன்மா நிர்விகாரனாதலால், அகாரணனாதலினும் என்க. (5)

(ஸ்ரீ - வீர - அ - கை) அற்றேல், நல்லதைச்செய்வோன் நல்லவனாவன், தீயதைச்செய்வோன்றீயோனாகுவன், புண்யமோ புண்யவினையினாலுளதாம், பாபமோ பாவவினையினாலுளதாம், அந்தவுலகந்தன்னினின்று மீண்டடைந்தே; அன்னியவுலகப்பொருட்டு வினையாற்றுவன், என்பதாதிசுருதிகளில் ஜன்மகன்மங்கட்குப் பீஜாங்குரம்போல அநாதிபரஸ்பர காரிய காரணபாவம் உணரப்பெறுகின்றதாம், ஆகவேயாங்ஙனம் கருமமில்லாத ஈசுவரனுக்குச் சீவ பாவமாக முதற்சருக்கத்தில் ஜன்மம் கூறுதல்கூடும்? எனின் உரைத்தல்:—ஈசன் என்பது.

ஈச னிடைநின் றுற்பவமா யெழுந்த வுயிர்க டாஞ்செய்த
வீசு கருமங் களினாலே மேன்மேற் பிறவி களைமேவுந்
தேச முடையாய் காரியகா ரணத்தின் செய்தி யிதுவாகு
மேசு பிறவி கருமமெனு மிரண்டி னுக்கு மிப்படியே.

(ப-ரை) ஈசனிடை நின்றுற்பவமாய்=பரமேசுரரிடத்தினின்றும் உண்டாகி, எழுந்த= வெளியேவந்த, உயிர்கள் தாஞ்செய்த=ஜீவர்கள் தாமேமுயன்றியற்றிய, வீசுகருமங்களினாலே=பயன்றரும் வினைகளாலே, மேல்மேல் பிறவிகளைமேவும்=உத்தரோத்தரம் ஜனனங்களையடையும், தேசமுடையாய் = சக்கிரவர்த்தி திருமைந்தனே, காரியகாரணத்தின் செய்தியிது = ஜன்னியஜனகத்தின் விவகாரமாம் இது, ஏசுபிறவிகருமமெனும் இரண்டினுக்கு மிப்படியேயாகும்=நிந்தித ஜன்மகன்மமென்னும் இரண்டுக்கும் இவ்வாறேயாம்.

(ஸ்ரீ - வீர) ஹே குழந்தாய்! ஈசுரரிடத்தினின்றும் எழுந்துவந்து மறுபடி ஜன்மாந்திரங்களைப் பிராணிகள், உபசிதங்களாகிய தங்களாலாக்கப்பெற்ற கருமங்களினாலேயே, அநுபவிக்கும்; ஜீவபாவத்தில் ஈசுரருக்குக் கருமஅபேக்ஷையிலதாம், மற்றேஜீவபாவ அடைவின்பின்னர், தேகாதிஜன்மத்தில் முன்முன் உடம்பாதியாலாக்கப்பெற்ற கரும அபேக்ஷையாம், எங்ஙனம் சூரியபகவானுக்கு நீரில்நிழலாவதில் அசைவாதி வினையபேக்ஷையிலதாமோ, பிரதிபிம்பத்திற்குத் தரங்கபேதங்களில், கலப்புளதாவதிலும், அதனதன் கண்ணுள்ளவிக்கிரியை யநுபவத்திலும், உபாதிக்கிரியை யபேக்ஷையாமோ, அங்ஙனம் ஆமென்பதுகருத்தாம். அதனையே வெளிப்படையாகக்கூறல்:—காரியமென்பதாதி, ஜன்மகன்மங்கட்குக் காரியகாரண பாவமாமிது இத்தகைத்தாம்;

(ச) பிறவிகளைமேவும்=ஜன்மாந்திரங்களை யனுபவிக்கும், பிறவிகருமமெனு மிரண்டினுக்கும்=ஜன்மகன்மங்களினது, இது காரியகாரணத்தின்செய்தி = இந்தக் காரியகாரண பாவம், இப்படியேயாகும் = கூறியபிரகாரமாம், முன்பு ஜன்மமானது, கருமமென்னுஞ் சுகிருததுஷ்கிருத ரூபத்துக்குக்காரணம், பின்பு கருமமானது, ஜன்மமென்னும் நாமரூபத்துக்குக் காரணமென்பதுபொருள். (6)

(ஸ்ரீ - வீர - அ - கை) அகாரணத்தையுங் காரணத்தையுமறைதல்:—பரமமென்பது.

(ச) இதனையே வெளிபண்ணல்:—

பரம மதனி லகாரணத்தாற் பரந்த வுயிரெல் லாமுண்டாம்
விரவு மதற்பின் பவர்க்கெல்லா மிகத்தாஞ் செய்த கருமங்க
ளுரிய சுகதுக் கங்கடமக் குறுகா ரணமாந் தனையறியாப்
பிரமந் தனிற்சேர் சங்கற்பம் பேசு கருமங் களின்மூலம்.

(ப - ரை) பரமம் அதனில் அகாரணத்தால்=பரமசிவத்தினின்றும் காரணமில்லாமலே பரந்த உயிர் எல்லாம் உண்டாம்=விரிந்திருக்கும் ஜீவர்கள்யாவரும் உண்டாவர், விரவுமதற் பின்பு அவர்க்கெல்லாம்=கலந்தவதன்பின்னர் அவர்கள் யாவருக்கும், உரியசுகதுக்கங்கள் தமக்கு=உரித்தாகிய இன்பத்துன்பங்கடமக்கு, மிகத் தாம்செய்தகருமங்கள்=மிகவுந் தாங் கள் இயற்றியவினைகளே, உறுகாரணமாம்=பொருந்துமேதுக்களாம், தனையறியாப் பிரமந் தனிற்சேர்சங்கற்பம்=ஆன்மாவையறியாத மயக்க மதனினின்றுமுண்டாம் சங்கற்பமே, பேசு கருமங்களின்மூலம்=கூறிய வினைகளின்காரணமாம்.

(ஸ்ரீ - வீர) பரபதத்தினின்றும் அகாரணமாகவே சர்வஜீவர்களும் உண்டாயிடுகின் றார்கள்; அவ்வாறே வார்த்திகத்திற் கூறவும்பெற்றுளது. விண்ணெ னும்பொரு ளியற்கையின் விரவலி னுனே, கண்ணுகாரகத் தாலல ககனத்தி னிறைவு, மண்ணி லாயவக் குடத்தின துதயத்தின் மானும், நண்ணு மாலறி வாலுளந் தனிலுணர்ந் திடுமீ. பொருள்:—சைத்திரனுலே கிராமத்தினது வியாப்தியில் வியாப்தாவாய சைத்திரனுக்குத் தன்பாலுற்றவிகாரமேபோலும், மதியாதியினது சிதாத்மவியாப்தியில் ஆன்மாவிற்கும் விகாரவழக்காதலின், வேதாந்த வேத்தி யத்திற்குக் கூடஸ்தத்தகைமைகூடாதென் றுசங்கித்துக்கூறல்:—விண்ணென்பது. எங்ஙன்கு ம்பத்தின துற்பத்தியாம்போது வியத்தாற்பூர்ணத்தகைமை வியத்தின் சர்வகதத்தகைமைச் சொரூப அனுசாரமாகவேயாம் அன்றிக் கிரியையுடைமையாலல்லவோ அங்ஙனம் மதிவிருத்தி கட்கும் அதன்றருமங்கட்கும் திருக்காத்மாவால் வியாப்தியானது அதன்கண்ணுற்ற கிரியை யின்றியே பூர்ணசிற்சொரூப வசத்தினுலேயேயாம், ஆகலின் வேதாந்தவேத்தியத்திற்குக் கூடஸ்தத்தன்மையானது பொருத்தமேயாம்.

பின்னரவர்களின் தத்தம்வினைகளே சுகதுக்கங்களின் காரணங்களாம் பின்னர் அவர்க ளின் கருமங்கள்எனவெங்ஙன மறியலாமெனின் அறைதல்:—தனையறியும்பிரமைதனில் சேர் என்பது எத்தகைத்தாகத் தன்னையாவன் உணர்வனே, அவன் அதற்குத்தக்கபடியே சங்கற் பிப்பன் சங்கற்பித்ததற்குத்தக்கபடியே தானியற்றுவன்; மனுஷ்யாதி தேகாத்மத்தன்மை மதி யில்லாமல் அறமறங்களைச்சங்கற்பியான் செய்யவுமாட்டான், அவ்வாறே ஸ்ரீபகவான் பாடியக் காரர் அவர்களாலும் திருவாய்மலர்ந்தருளப் பெற்றுள்ளது:—ஆன்மபாவமத்தியசிக்கப்பெறா தவாகத்தானே எவனுமே விவகரியான்; என்பது தேகாத்தியாசமும் சங்கற்பவாயிலாகவே புண்ணியபாபப் பிரவிருத்தியேதுவாம் எனல்:—ஆன்மஞானத்தினின்றும் நன்குண்டாய சங் கற்பம் கருமகாரணமாம் இது 32000ப்பாடமாம், செய்யுளில்வைத்திருப்பது 6000ப்பாடமா மென்றறிக.

(ச) சுகதுக்கங்கடமக்கு என்பதுபலக்ஷணம் ஜாதிஆயுள்களென்னும் நாநாரூபங்களுக் கும், தான்செய்த கருமமேகாரணமாம். தனையறியாப் பிரமந்தனில்=ஆன்மதத்துவத்தின் அஞ்ஞானத்தினல், சேர்=உண்டான சங்கற்பம்=சங்கற்பமானது, கருமங்களின் மூலம் = காரணமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை) பந்தமுத்தியின்னதென்பதும், சங்கற்பபாவ அபாவமேயவற்றிற்குக் காரணமென்பதும் தெரியவுரைத்தல்:—பந்தமென்பது.

பந்த நிதானஞ் சங்கற்ப மன்றோ வதுநீ பற்றறுப்பாய்
முந்து சங்கற் பந்தவிர்ந்தான் முத்தி யதுவா மதுதன்னைப்
புந்தி யதனாற் பரிசயிப்பாய் பொருளும் பொருள்கொள் பவனுமுறின்
மைந்த மெள்ள வெப்போது மறவா தொழிப்பாய் சங்கற்பம்.

(ப - ரை) பந்தநிதானம் சங்கற்பமன்றோ=பந்தத்தினது ஹேதுவானது சங்கற்பமே யல்லவோ, அது நீபற்றறுப்பாய்=அதனை நீகட்டறுப்பாய், முந்துசங்கற்பந்தவிர்ந்தால் = வாசனைவயத்தாலெழும் எண்ணங்களையெழாமற் பண்ணினால், முத்தியதுவாம் = மோக்ஷமாம், அதுதன்னை=அதனை, புந்தியதனால்=மதியினாலே, பரிசயிப்பாய்=பயிற்சிசெய்வாய், பொருளும் பொருள்கொள்பவனுமுறில்=வஸ்துவும் வஸ்துவைக்கவர்பவனும் உற்றால், மைந்த=குழந்தாய், மெள்ள=மெதுவாக, எப்போதும்=அனவரதமும், மறவாது=விஸ்மிருதி வந்துவிடாமல் விழித்தேயிருந்து, ஒழிப்பாய் சங்கற்பம்=எண்ணத்தை விடுவாய்.

(ஸ்ரீ - வீர) சங்கற்பித்தன்மையே பந்தத்திற்குக்காரணமாம் = சங்கற்பமிதற்குளதாமெனச் சங்கற்பி, அவ்வகையாந்தகைமை, புண்யாபுண்யப் பிரவிருத்திபோகவாசனாதி சந்தானத்தினாலே, கட்டிற்கேதுவாம், அதனை நன்குவிடுவாய், மோக்ஷமோசங் கற்பித்தன்மையின்மையாம், அதனப்யாசபரனாகவாகுதி; சங்கற்பத் தியாகத்திலுபாயத்தைக் கூறுதல்:— பொருளுமென்பதாதி. கிராகிய கிராககசம்பிரமம் உளதாயின், நிரந்தரமே சங்கற்பதசைகளை மெதுவாகப்பரிகரித்து, நீ சாவதானனாகவிருத்தி. கிராகியகிராககப் பேதப்பிரமமுளதாய போதோ, கிராககனுக்குக் கிராகியத்தில் அநுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மை முதலிய அநுசந்தானத்தினாலே, தள்ளற்கொள்ளற் கநுகூலபிரவிருத்தி சங்கற்பமுண்டாம், கிராகிய கிராகக விப்பிரமத்தியாகத்தினாலே அதன் சாக்ஷியின்கண்ணொருமைப்பாடாம் வடிவசாவதானத்தன்மைப் பயிற்சிசெய்யினோ சங்கற்பமூலமே கெட்டுப்போமென்பது கருத்தாம்.

(ச) பந்தநிதானம்=பந்தத்தின்காரணம், சங்கற்பமன்றோ = சங்கற்பமேயாம், அது = அசங்கற்பம், முத்தியாம், பொருள்கொள்பவனுமுறில் = திருசிய தெரிசனசம்பந்தத்தில், எப்போதும்மறவாது சாவதானனாகியே, மெள்ள = அப்பியாசக்கிரமத்தால், சங்கற்பத்தை யொழிப்பாய். என்றதனாலிடைவிடாமல் பிரஹ்மானுசந்தானஞ் செய்வாயென்றதாயிற்று. (8)

(ஸ்ரீ-வீர-அ-கை) இப்பொருளையே கண்டோக்தியாற்கழல்:—கொள்ளுமென்பது.

(ச-அ-கை) அவதானப்பிரகாரத்தையே கூறல்:—

கொள்ளும் பொருளா கவும்வேண்டா கொள்வோன் வடிவா கவும்வேண்டா
எள்ளுங் கருத்தெல் லாநீக்கி யெதுசே டித்த ததுவாவாய்
நள்ளும் பொருளொன் றினையிந்த நாடும் பொறிக ளாறிலாங்கே
தெள்ளும் பற்றுள் ளதுபந்தஞ் சிறக்கும் பற்றில் லதுமுத்தி.

(ப - ரை) கொள்ளும்பொருளாகவும் வேண்டா = கிராகியவஸ்துவடிவமாகவும் வேண்டாம், கொள்வோன் வடிவாகவும்வேண்டா=கிராகக வடிவமாகவும்வேண்டாம், எள்ளுங் கருத்தெல்லாநீக்கி=தள்ளத்தக்க சகல எண்ணங்களையும் அகற்றி, எதுசேடித்தது அதுவாவாய்=யாது எஞ்சிநின்றதோ அவ்வத்துவேயாவாய், நள்ளும்பொருளொன்றினை = விரும்

பும்வத்து எதாவதொன்றை, இந்த நாடும்பொறிகள் உறில்=இந்நாட்டமுறும்படியான புலன்கள் அவாவிச்செல்லில், ஆங்கே தெள்ளும்பற்றுளதுபந்தம்=அவ்விடத்திலேயே மிக்க ஆசையுறுவதே பந்தமென்பதாம், சிறக்கும்பற்றில்லதுமுத்தி = விசேடித்தவாசை விராவாததே மோக்ஷமாம்.

(ஸ்ரீ - வீர) நீ கிராகியபாவான்மாவும் ஆகவேண்டாம், கிராககான்மாவும் ஆகவேண்டாம், அகிலபாவனைகளையும் அகற்றியோட்டி, எதுசேடித்த சாக்ஷிவடிவமோ அதன்மயமேயாகி அஃதேகரசனாகவேயிருக்கி. அசாவதானமா யிருந்துவிடிலோ, அநுகூலமான கிராகியத்தில் இராகம் அகற்றமுடியாததேயாகும் என்று காண்பித்துக்கொண்டு வைராக்கிய அப்பியாசமும் இன்றி யமையாததேயெனக்காட்டல்:—நள்ளுமென்பதாகி. நிரந்தரம் எவ்வெப்பொருளையே இந்திரியக்கூட்டம் நாடாநிற்குமோ ஹே அநகனே! ஆண்டாசையால் பந்தத்தையடையும், ஆண்டாசையின்றேலாயினோ மோக்ஷத்தையடையும்.

(ச) கொள்ளும்பொருள்=திருசியாபிமானிவேண்டாம், கொள்வோன்வடிவு = திருஷ்டிருத்துவாபிமானி ஆகவும்வேண்டாம், மற்றென்னெனில், எல்லாம்=சகலபதார்த்தங்களின், கருத்து=பாவனையென்னுங் கன்மகர்த்தாதிவாசனையை, நீக்கி, எதுசேடித்தது=கருமாதிவிலக்ஷணமானபொருள். அதுவாவாய்=அதன்மயமாவாய், நாடும்பொறிகள்=இந்திரியசமூகம், பொருளொன்றினை=எந்தெந்தப்பொருளை, உறில்=அடையுமோ அப்போது, ஆங்கே பற்றுள்ளது=இராகமுள்ளதெனில்பந்தமாம், பற்றிலதெனில் முத்தியாம். (௭)

(ஸ்ரீ-வீர - அ-கை) இராகவைராக்கியங்களின் சொரூபத்தைப் பகுத்துக்காட்டி அவைகட்குப் பந்தமோக்ஷலிங்கத்தன்மையைக்காட்டல்:—அற்பமென்பது.

(ச - அ - கை) இதனையேகூறல்:—

அற்ப முனக்கொன் றினிதாகி லதனுற் பிறப்பி லகப்பட்டாய்
பொற்ப வுனக்கொன் றினுமினிமை பூணு தென்னிற் பிறப்பகன்றாய்
நிற்ப நடப்ப பொருட்டிரளி னினக்குத் திரண முதலாகத்
தற்ப முறுபொன் முடிவாகச் சற்று மினிமை யுறவேண்டாம்.

(ப - ரை) அற்பம் உனக்கொன்று இனிதாகில்=சொற்பம் உனக்கொரு பொருளினிமையைப்பயக்குமேல், அதனுல்=அக்காரணத்தாலே, பிறப்பில் = ஜனனமரணசம்சாரத்தில், அகப்பட்டாய்=கட்டுப்பட்டாய், பொற்ப உனக்கொன்றினுமினிமை = அழகுபொருந்திய குழந்தாய்! இது நன்கென்று உன்றனுக்கு எதன்கண்ணும் இனிதாந்தகைமை, பூணுது என்னில்=உண்டாகாது என்றிடில், பிறப்பகன்றாய்=ஜனனமரணம் விட்டவனாவாய், நிற்ப நடப்பபொருட்டிரளில்=அசாசாப்பிரபஞ்ச சமுதாயத்தில், நினக்கு = உன்றனுக்கு, திரண முதலாக=துரும்புமுதலாக, தற்பமுறுபொன்முடிவாக=கருவத்தையடையும் தேவதாவடிவமீறாக, சற்றும் இனிமையுறவேண்டாம்=இறையுமன்படையவேண்டாம்.

(ஸ்ரீ - வீர) பவஸ்திதியின்கண்ணுனக்குக் கிஞ்சித்து உருசியிருக்குமாயின் பத்தனயிருப்பாய், சித்தத்திலொருசிறிதும் உருசியுண்டாகாதிருக்குமாயின் பவத்திதியின்கண் முக்தனேயாயினும். ஆகையினல், ஸ்தாவாஜங்கமங்களுள், தாழ்ந்ததின் அவதியில் திருணசீராதியினின்றும், உயர்ந்ததின் அவதியில்ஹிரணிய கருப்பாகாயாந்தத்தினின்றும், அவற்றின் போக்

கியவிஷயரூபத்தினின்றும் ஒன்றையும் நீ யிச்சிக்கவேண்டாம் = அதாவது பதார்த்தசமுதாயத்திற் குறிப்பிட்ட ஒருசிறிதும் உனக்கு உருசிக்கவேண்டாம். (10)

(ஸ்ரீ-வீர - அ-கை) அற்றேல் இங்ஙனம் பரவைராக்கியத்தினலே போக்துருத்தகைமைப் பந்தஜயமாயினும், ஜீவத்தகைமை ஸ்நான போஜனுதிக்கிரியைகள் தியாகிக்கக்கூடாமையின், அவற்ருலாக்கப்பெற்றபந்தம் இருத்தலேயாகும் என்ருசங்கித்துரைத்தல்:—பற்றிலாதென்பது.

பற்றி லாதென் றெண்ணுதியென் பண்ணு நின்ரு யெதைவிடுதி
யுற்ற செய்வோன் புசிப்போனன் றுபசாந் தியனீ மதிமாண்டோன்
மற்று நல்லோர் சென்றபொருட் கிரங்கார் வருவ மதித்தெண்ணர்
முற்று நிகழ்கா லப்பொருளை முறையா லெய்திக் கைக்கொள்வார்.

(ப - ரை) பற்றிலாது=ஆசையில்லாமல், என்னெண்ணுதி=என்சிந்திக்கின்ருய், என்பண்ணநின்ருய் = என்னசெய்யாநின்ருய், எதைவிடுதி = எதனைவிடுகின்றனையோ, உற்றசெய்வோன்புசிப்போன் அன்று=உரித்தானகருத்தாபோக்தாவும் அல்லன், உபசாந்தியன்நீ=பரமசாந்தியையுடையவனீ, மதிமாண்டோன் = உள்ளமற்றவன், மற்றும் = மேலும், நல்லோர்சென்ற பொருட்கிரங்கார் = மகான்கள் இழந்த வஸ்துக்கட்காக இரக்கத்தையுடையார், வருவமதித்து எண்ணர்=இனிவருபவற்றைக் குறித்துச் சிந்தித்துக்கொண்டிருக்கமாட்டார், முற்றுநிகழ்காலப்பொருளை=வினைவயத்தாற்கிடைக்கும் வர்த்தமானவத்துவை, முறையால் எய்திக்கைக்கொள்வார்=நூன்முறைமுரணில்லாமலே யடைந்தனுபவிப்பர்.

(ஸ்ரீ - வீர) எதனைச்செய்கின்றனையோ எதனைபயில்கின்றனையோ, எதனை ஹோமஞ்செய்கின்றனையோ, எதனைத்தானம் செய்கின்றனையோ, நீ கர்த்தாவுமல்லை போக்தாவுமல்லையாதலின், அந்தக்கிரியைகளில் முக்தமதியினனுதி அதாவது கூடஸ்தாத்மாவிற் செலுத்தியமதியையுடையவனுகுதி, சமியுமாகுதி. அவ்வாறே ஸ்ரீபகவானுலும் திருவாய் மலர்ந்தருளப்பெற்றுள்ளது:—"ஒருசிறிதுமே யுளுற்றிலனென் றுளந்தனிலே, மருவு யுத்தனுந் தத்துவ வித்தெணி மகிழும்' இஷ்ட வியோகத்தாலும் அநிஷ்டசம்பாவனுதியாலும் உண்டாய சோகத்தானே பந்த அடைவையாசங்கித்துரைத்தல்:—சாதுக்கள்சென்றதைக் குறித்துஞ்சோகஞ்சேர்ந்திடமாட்டார், நாளைச்சேர்வதைக் குறித்துஞ் சிந்தை செய்திடமாட்டார், கன்மந்தந்தத்தைத்தடை யொன்றின்றி நிகழ்வதைத் தாமேகொள்வார். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை) சருவபந்தஜயத்திலும் மனேஜயமேயுபாயம், அதுவும் மனத்தினலேயேயாம் அன்னியத்தினலாகாதாம், என்றறைதல்:—மதமென்பது.

மதமா மோக மையன்முதன் மனத்திற் பிணித்த கயிறுகளாந்
திதமா மனத்தை மனத்தாலே சேதித் திடலா மறிவோரா
விதமா நெடுங்கூர் விவேகத்தா லிரும்பா லிரும்பை யறுப்பதுபோல்
விதமா மனத்தை மனத்தாலே வீய்ப்பாய் பிறவி மயக்கறவே.

(ப - ரை) மதமாமோக மையல்முதல்=மதம் மகாமோகம் ஆசைமுதலன, மனத்திற் பிணித்தகயிறுகளாம்=உளத்திற் கட்டப்பெற்ற பாசங்களாம், திதமாம்மனத்தை மனத்தாலே=விடயங்களில் நிலைபெற்றவுள்ளத்தினை யுள்ளத்தாலே, சேதித்திடலாம்=வெட்டி

விடலாம், அறிவோரால்—உணர்வோரால், இதமாம்நெடுங்கூர் விவேகத்தால்—இனிதாய் மிகக்கூர்மையான விவேகம்வாய்ந்த, இரும்பால் இரும்பையறுப்பதுபோல்—அயத்தால் அயத்தைத்துண்டிப்பதே போல், விதமாமனத்தை மனத்தாலே—நானாவகையாய உள்ளத்தினையுள்ளத்தாலே, வீய்ப்பாய் பிறவிமயக்கறவே—ஜனனமயக்கம் நீங்கும்படியாக விழுத்துவாய்.

(ஸ்ரீ-வீர) மனத்திற்கட்டுற்ற பாவங்களாம் திருஷ்ணைமோகமதாதிகள், மனத்தினாலேயே மனம் உணர்ந்தவனாற் சேதிக்கத்தக்கதாம், ஹே இராகவனே! எவ்வுபாயத்தானே மனத்தால் மனோஜயமாமோ அதனைக்கூறல்:—அதிதீக்ஷணமாம் விவேகத்தோடு கூடியமனத்தினாலேயே வலிதில் இரும்பினாலே இரும்பைப்போலும் மனத்தைவெட்டுவாய், சருவப்பிரமத்தின் சாந்தியின் பொருட்டு.

(ச) மயல்—திருஷ்ணை, முதலாய்—ஆதியாகிய, கயிறுகள், மனத்தில்—மனத்தினால், பிணித்தவாம், நெடுங்கூர்—சுத்தசத்துவான் மகமான, மனத்தால், மலினமான மனத்தை, வீய்ப்பாய் என்பது பொருள். (12)

(ஸ்ரீ - வீர - அ - கை) மனத்தால் மனோஜயம்செய்வதில் வரும் ஆன்மாசிரய தோஷத்தைப்பரிகரித்தல்:—அழுக்கையென்பது.

அழுக்கை யழுக்காற் கழுவுவர்கொ லம்பை யம்பாற் றடைசெய்வர்
வழுக்கு நஞ்சை யெதிர்நஞ்சான் மாற்று கிற்பர் மதியுடையோ
ரொழுக்க முறுமூன் றுளசீவர்க் குபயந் தூல சூக்கமென
விழுக்க மாமொன் றுயர்பரமா மிதுசேர்ந் தந்த விரண்டொழிப்பாய்.

(ப - ரை) அழுக்கையழுக்கால்—சாரமண்முதலிய மலினத்தாலே மலினத்தை, கழுவுவர்—தூய்தாக்குவர், கொல் அம்பையம்பால்—கொல்லவரும் சிலீமுகத்தைச் சாயகத்தால், தடைசெய்வர்—தடுப்பர், வழுக்கும்நஞ்சை—பிராணஹானிசெய்யும் விடத்தை, எதிர் நஞ்சால்—பிரதிவிடத்தால், மாற்றுகிற்பர் = மாற்றுவார், மதியுடையோர் = புத்திசாலிகள், ஒழுக்கமுறு மூன்றுளசீவர்க்கு—உயிர்கட்கு முறைமையாக மூன்றுவடிவங்கள் உள்ளனவாம், உபயந்தூல சூக்கமெனவிழுக்கமாம்—இரண்டு தூலம் சூக்ஷமம் என்பதாக நிந்திக்கத்தக்கனவாம், ஒன்று உயர்பரமாம் = ஏகம்மேலானபரமாம், இதுசேர்ந்து அந்த இரண்டொழிப்பாய்—இதனைச்சார்ந்து அவ்விரண்டனையும் அகற்றுவாய்.

(ஸ்ரீ - வீர) தூய்தாக்கும் அறிவாளிகள் க்ஷாராதிமலத்தினாலேயே மலத்தைப்போக்குவர், அஸ்திரத்தை யஸ்திரத்தினாலேயே விளக்குவர், விடத்தைப்பிரதிவிடமானதினாலேயே தணிப்பர்; மனத்தோடுகூடியதாம் உயிர் அதிலெவ்வளவங்கிசங்கள் தனிப்படுத்தப்பட்டு மனத்தினாலே சேதிக்கத்தக்கனவாம் என்று காட்டற்பொருட்டுச் சீவரூபங்களைப்பகுத்தல்:—ஒழுக்கமென்பதாதி. ஸ்தூலசூக்குமபரங்கள் என்பதாக, ஜீவனுக்கு மூன்று ரூபங்கள் உள்ளனவாம், அவற்றுள் இவனதுபரம் ரூபமியாதோ அதைப்பஜிப்பாய், மற்றிரண்டை மனத்தினாலே சேதிப்பாய். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவற்றைக்காட்டல்:—மேகமெய்யென்பன.

மேக மனையாய் கைகால்கண் மேவு மிந்த வுடறூனே
போக முண்ணச் சீவனுக்குப் பொருந்து தூல வுருவாகும்
பாக மருவு சங்கற்ப மயமாய்ப் பவபா வனைபண் ணுஞ்
சோக மனஞ்சீ வனுக்குருவாஞ் சூக்க வாதி வாகியமே.

மெய்யாய் மூல மீறின்றி விகற்ப மறுசின் மாத்திரமே
மொய்யார் சீவன் பரவடிவா மூன்ரு குவது முண்டகம்போற்
கையாய் சுத்த துரியபதங் கண்டா யிதுவே யிதிலழுந்தி
மையார் முதற்சொல் வடிவிரண்டு மாற்றி யவைநா னெனவேண்டா.

(ப - ரை) மேகமனையாய் = நவகனசியாமனே, கைகால்கள் = கரசரணுதிகளைமேவும் இந்தவுடல்தானே=பொருந்துமிந்தச்சரீரந்தானே, போகமுண்ண=போகத்தையநுபவிக்க, சீவனுக்கு=உயிருக்கு, பொருந்துதூலவுருவாகும் = சம்பந்தியாகின்ற ஸ்தூலவடிவமாகும், பாகமருவு சங்கற்பமயமாய்=நாலுவகையாய்க்கூடும் எண்ணமிக்கதாய், பவபாவனை பண்ணும்=சமுசாரபாவனையைச் செய்யும், சோகமனம்=துயர்தருமுள்ளம், சீவனுக்குருவாம்= உயிர்க்குவடிவமாம், சூக்க ஆதிவாகியமே=சூக்ஷ்மமாய் லோகாந்தரகமனஹேதுவாம்.

மெய்யாய்=சத்தியமாய, மூலமீறின்றி=ஆதியந்தமில்லாததாய், விகற்பமறுசின்மாத்திரமே=நிருவிகற்ப அறிவுமாத்திரமே, மொய்யார்சீவன் பரவடிவாம் = விடயங்களில்மேவியுலாவும் உயிரின்து மேலானவடிவமாம், மூன்ருகுவது=திருதீயமாகுவது, முண்டகம்போற்கையாய்=தாமரைபோலுந் திருக்கரத்தோய்! சுத்ததுரியபதங்கண்டாய்=தூயதுரிய பதம் காண்பாய்! இதுவே=இதுதானே, இதிலழுந்தி=இதன்கண்ணே திதிபெற்று, மையார் முதற்சொல் = களங்கமென முன்னேசொன்ன, வடிவு இரண்டுமாற்றி = உருவமிரண்டையுமே மாற்றி, அவை நானென்வேண்டா=அவற்றை யான்மாவென்னவேண்டாம்.

(ஸ்ரீ - வீர) பாணிபாதமயமாய்=எவ்வித்தேகம் போகப்பொருட்டுழல்கின்றதோ, அப்போகப்பொருட்டாய இதுஜீவனுக்கு ஸ்தூலரூபமாக ஈண்டு நிலைபெற்றதாம்; தனது சங்கற்பமயாகாரமாய், சமுசாரகாலபரியந்தமிருப்பதாய் எச்சித்தமுளதோ அதனைச் சீவனதுரூபமென வுணர்ந்துகொள்ளுதி, ஹே இராகவனே! அதுவே ஆதிவாகிகம் என்றுந்தெரிதி; ஆதியந்தரகிதமதாய் அறிவேவடிவாய்ச் சத்தியமாய் எதும்விகற்பமின்றியதாய் எதுதானுளதோ அதுதனைநீ, யோதுபரமரூபமதாயுணர்தி மூன்ருவதுமிதுவே, சாதுவே யிவ்வுலகினுக்குச் சத்தாஸ்பூர்த்திதந்திடுமே 'இதுவேதுரியபதங் கண்டா யினிதாய்த் தூய்தாமிதனிடத்தே,பதநீந்துபரிசயிப்பாய் பன்னுமுன்னரிரண்டினையும், மெதுவாயறவே விடுத்திடுவாய் மெலியுமந்தவிரண்டினிலும், கதுவவேண்டாமான்மமதி கமலநிறையுங் கார்வண்ணு.'

(ச) லோகாந்தாகமன கமன யோக்கியமான சூக்கமாம் உருவாதிவாகியமென்பது பொருள்.

மொய்யார்சீவன் = விசுவரூபனுக்கு, துரியம் = தூலசூக்கும காரணங்களைக்குறித்து நான்காவது. (14-15)

(ஸ்ரீ - வீர - அ - கை) தூலசூக்குமரூபங்கள் ஜீவனுக்கு நணுக்கணுக்களில் வெளியேயாம், அத்துணைமாத்திர பரித்தியாகமாயினும் நன்ருக அவன்து பரிசுத்தியாகாதாம், என

அவஸ்தாத்திரய அதீதத்தையறியும் வேட்கையராய ஸ்ரீ இராமச்சந்திரர்வினுதல்:—என்னு மென்பது.

என்னு முனியை யிராமனும்பார்த் தெந்தாய் நனவு கனுச்சுழுத்தி
துன்னு மதுவா யினமூன்றிற் றோன்ரு ததுவாந் துரியத்தை
யுன்னி விசேட முறவுரைப்பா யுயர்ந்த முனிநா யகவென்ன
மன்னு மமுத மழைபோலும் வாக்கால் வசிட்ட முனியருள்வான்.

(ப - ரை) என்னுமுனியைப்பார்த்து = என்றருளிய ஸ்ரீ வசிட்டபகவானை நோக்கி, இராமனும்=ஸ்ரீ இராகவரும், எந்தாய்=எனதுபிதாவே, நனவுகனுச்சுழுத்தி = ஜாக்கிரம் சொப்பனம் நித்திரை, துன்னுமதுவாயினமூன்றில் = என்று பொருந்தும் அம்மூன்றிலும் இருந்தும், தோன்ருததுவாம் = அலக்ஷிதமாய, துரியத்தை = நான்காவதை, உன்னி = பகுத்து, விசேடமுற=சிறப்பாக, உரைப்பாய் = கூறுவாய், உயர்ந்த = தவமிக்க, முனி நாயக=முனீசுரர்கட்கு நாயகனே! என்ன = என்றுவினவ, மன்னும் அமுதமழைபோலும் வாக்கால் = புதிதாகப்பொருந்தும் அமிர்தவிருஷ்டிதாரையேபோன்ற திருவாக்கினுலே, வசிட்டமுனியருள்வான்=ஸ்ரீ வசிஷ்டபகவான் அனுக்கிரகம் செய்யத்தொடங்குகின்ருர்.

(ஸ்ரீ - வீர) ஜாக்கிரத்து சொப்பனசுழுத்திகளிற் கலப்புற்றிருப்பதாகி, அதனுனே வெளியாகக் குறிக்கப்பெருததாகி அம்மூன்றிலுமிலங்கும் துரியமதை, அக்கலப்பைவிலக்கும் வாயிலாகப்பகுத்து ஹே முனிநாயகரே! திருவருள்செய்வீராக; என்றுவினுதலும்.

(ச) நனவாதிகளில், துன்னுமதுவாயினும்=ஸ்திதமாயிருப்பினும், மூன்றில் = சாக்கிராதிகளால், தோன்ருததுவாம்=அறியப்படாததாய், எஞ்சியதாகி விசேடமற்றசைவற்ற, துரியத்தை யுரைப்பாயென்பதுபொருள். (16)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்ரீ வசிஷ்டபகவான் விடைபகர்தல்:—அகமென்பது.

அகமென் பதுமென் னுததுவு முளது மிலது மறவிட்டு
நிகழுஞ் சமமாய்ப் பற்றறத்தன் னிலேக்கே நிற்ற றுரியமதாந்
தகுதன் னிலையாய்ச் சமமாகிச் சகத்தின் றெழிற்குச் சான்ருகி
புகல்சீ வனின்முத் தியுமாகிப் பொருகற் பனைதீர் நிலைதுரியம்.

(ப - ரை) அகமென்பதும்=யான் என்பதையும், என்னுததுவும் = யான் என அபிமானியாததையும், உளதும் இலதும் = சத்தையும் அசத்தையும், அறவிட்டு = அத்தியந்தம்விடுத்து, நிகழும்சமமாய்=ஒப்பாயிலங்குவதாய், பற்றற = அசக்தமாய், தன்னிலேக்கே நிற்றல்துரியமதாம்=சொஸ்தமாயிருப்பது துரியமென்பதாம், தகுதன்னிலையாய்ச் சமமாகி= சொஸ்தமாயொப்பாகித் தெளிவாகி, சகத்தின்றெழிற்குச்சான்ருகி = உலக வினைகட்குச் சாக்ஷியாகி, புகல்சீவனின்முத்தியுமாகி=கூறிய ஜீவன்முக்தியுமாகி, பொருகற்பனைதீர்நிலை= துயர்தரும் கற்பனையற்றநிலைமையே, துரியம்=துரியமென்பதாம்.

(ஸ்ரீ - வீர) ஜாக்கிரத்துச் சொப்பனங்களில் விக்ஷேபப்படுத்தும் அகம்பாவத்தையும், சுழுப்தியில் அதன்மூலமாம் ஆவரணமாகிய அநகம்பாவத்தையும், விட்டு=ஜீவ உபாதிகளாகி வியஷ்டிரூபங்களான அவ்விரண்டையும் விட்டு, "அசத்துத்தானிதன் முன்னிருந்ததாம், அதனினின்றுந் தானுளதுண்டாயதாம்" என்பதாதி சுருதிப்பிரசித்த சமஷ்டிரூபங்களே யாய சத்தசத்துக்களாம் அவற்றையும்விட்டு, யாதுபற்றற்றதாமோ, ஒப்பாமோ தெளிவாமோ

இருப்பதாமோ அது துரியமெனப்பெறும். யாதுசொச்சமாய்ச் சமதையாய்ச் சாந்தமாமோ ஜீவன்முக்தர்களிடத்தில் வியவஸ்திதியாமோ அதாவது மேலானநிலைமையாமோ விவகார காலத்திற் சாக்ஷியவத்தையெனப் பிரசித்தமாமோ அது துரியவிவகாரமெனக் கூறப்பெறும்.

(ச) எந்தச்சைதன்யம் அகமென்பது மென்னுத்துவும்=நான் என்னும் அபிமானத்தை, யும் நான் அன்றென்னும் அபிமானத்தையும், உளதுமிலதும்=சத்துவாசத்துவாபிமானத்தை யும், அறவிட்டு, சமமாய், பற்றற = சம்பந்தமற்று, தன்னிலைக்கே நிகழும்சொச்சமாய், நிற் றல்=இருக்கும், அது=அத்தன்மையுள்ளது, துரியமாம், தன்னிலையாய்=நிஷ்களங்கமாய், சமமாகி = உபசாந்தமாய், தொழிற்குச்சான்றாகி = உதாசீனபாவமாய், சீவன்முத்தியுமாகிக் கற்பனைதீர் நிலைதுரியமாம். (17)

(ஸ்ரீ - வீர - அ - கை) அதற்குநனவாதிக்கலப்பை யகற்றல்:—இது என்பது.

இதுதா னனவு கனவல்ல விடர்சங் கற்ப மிலாமையினாற்
பொதுவாஞ் சுழுத்தி தானன்று போத மின்மை தீர்தலினாற்
சதுரா விந்தச் சகநன்றாய்த் தனது நிலைக்கே சமித் திறக்கு
முதுஞா னிகட்கிங் கிதுதுரிய மூடர்க் குலகந் திரநிலையாம்.

(ப - ரை) இதுதான்=கூறியதுரியந்தான், நனவுகனவல்ல = ஜாக்கிரசொப்பனமல்ல, இடர்சங்கற்பமில்லாமையினால்=துயர்தரு நினைவுகள் இல்லாமையினால், பொதுவாஞ்சுழுத்தி தானன்று=சாமானியமான நித்திரையுமல்லவாம், போதமின்மைதீர்தலினால் = அறியாமை யகன்று போதலினால், சதுராவிந்தச்சகநன்றாய்த் தனது நிலைக்கேசமித்திறக்கும்=அதிதீர வீர இராகவனே! இந்தப்பிரதீதியாகுமுலகம் அத்தியந்தம் இருந்தபடியே சாந்தமாகி விலய மாம், முதுஞானிகட்கிங்கிது துரியம்=அப்பிரதிபந்த அபரோக்ஷமுடைய மகான்களுக்கு ஈண்டு இதுவே துரியமெனப்பெறும், மூடர்க்குலகம் திரநிலையாம்=அறியாதவர்க்கு விசுவம் மிகவும் சத்தியமாம்.

(ஸ்ரீ - வீர) இதுஜாக்கிரமும்அன்று சொப்பனமும்அன்று சங்கற்பங்கள் ஒன்றுமில்லா மையினால், இது துயிற்றகைமையும் அல்லவாம் மறைக்கும் அறியாமையுமில்லாமையின், அற் றேல் அத்விதீயம் துரீயம், ஜாக்கிரத்தாதி துவைதகாலத்தில் ஜீவன்முக்தர்கட்குந் தான் எங்ஙனம்கூடும் எனிற்கூறல்:—சதுராவென்பதாதி சாந்தமாகியபரம்பொருளை நன்றாக வுணர்ந்தவுபசாந்தர்கட்கு இப்போதுதோற்றிக்கொண்டு இருந்தபடியிருக்கும் உலகமானது விலீனமாம்=ஞானபாதிதமாம், துரியமேயாமென்பர், அறியாதவர்க்குத் திரமாயிருக்கும்.

(ச) இதுதான்=இத்துரியபதம், நனவுகனவல்ல=ஜாக்கிரமுமன்று சொப்பனமுமன்று சங்கற்பமிலாமையினால், இதுதான் சுழுத்தியுமன்று, போதமின்மைதீர்தலினால், நன்றாமுது ஞானிகட்கு, இருந்தபடியேயிருக்கும் இந்தச்சகம் தனதுநிலைக்கே=பிரஹ்மத்தில், சமித் திறக்கும், இதுதுரியமாம், மூடர்க்குலகம் திரநிலையாம்=ஸ்திரம்போலிருக்கும். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை) துரியநிலையையேவியக்தோதி யறிவுறுத்தற்பொருட்டு ஒருகதை யுரைக்கத்தொடங்கல்:—யானுமென்பது.

யானு மெண்ண மறிற்சமந்தா னெய்திச் சித்த மொருக்காலு
மானு வினைசெய் யாதபடி யாக்கிற் றுரிய நிலைநிற்கு
ஞானு தீத ணுங்கிழவோ னெனினு ஞான நனிமேவ
மேனு ணடந்த தொருசரிதை கேட்பாய் மேதை களின்மிக்கோய்.

(ப - ரை) யானுமெண்ணமறில் = அகம்பாவமற்றால், சமந்தானெய்தி = ஒப்புமையை யடைந்து, சித்தமொருக்காலும்=உள்ளம் ஒருபோதும், ஆனுவினைசெய்யாதபடியாக்கில் = ஓயாதகாரியம்செய்யாத வண்ணம்பண்ணில், துரியநிலைநிற்கும் = துரியஸ்திதியின்கண்ணே நிலைக்கும், ஞானுதீதனும்=சகலவிருத்திஞானங்களும் அற்றவனும், கிழவோன் எனினும்= விருத்தனேயாயினும், ஞானம்நனிமேவ=பிரஹ்மவித்தையை நன்றாக அடைய, மேனுன் நடந்தது = முன்னொருகாலத்தில் உண்டாகிய, ஒருசரிதை = ஒருபாக்கியானத்தை, கேட்பாய்=சிரவணஞ்செய்வாய், மேதைகளின்மிக்கோய் = புத்திமான்களுக்குச் சிரேட்டனுகிய இராகவனே!

(ஸ்ரீ - வீர) அகங்காரகலையைத் தியாகித்தவழி சமதையானது நன்குண்டாயபோது, ஜலவிலீனசைந்தவம்போலச் சித்தத்தை விலீனப்படுத்தியவழி, துரிய அவஸ்தையானது நிலைத்துநிற்கும்; நனவில் விவகரிப்பவனுக்கு எங்ஙனம் சித்தம்விலயமாம் என்னும் அசம்பாவனையை மிருகவியாதசம்பந்தமான உதாகரணத்தினுலேவிலக்கல்:—மேனுன் என்பதாதி. இனி யெம்மாலிப்போது கூறப்பெறும் இத்திருஷ்டாந்தத்தைக்கேட்குதி! விபுத உவமையனே! பிரபுத்தனுயினும் உள்ளபடியே போதமடைந்திடலாம்; அதிதிடஞானியாகலாம் என்றபடி.

(ச) யானுமெண்ணம் = அகங்காராம்சம், சித்தம் = சித்தமானது, செய்யாதபடி யாக்கில் = செய்யாதிருக்கின். ஸ்ரீ வசிஷ்டர் விசாரு = விசாரணசீலம் = விலயமென்பதாம். (19)

(ஸ்ரீ-வீர-அ-கை) தொடங்கியகதையையை விரித்துரைத்தல்:—பெரியவென்பது.

பெரிய வடவி யொன்றிடையோர் பெரிய முனிவன் மகாமவுனம்
புரியு நிலையோ னவன்றனையோர் பொருவில் வேடன் வந்தணுகி
யெரியு மென்கைக் கணைபட்டுநொந் திங்கோர் நவ்வி யோடியதாற்
றெரிய வஃதெங் ககன்றதெனச் செப்பு முனிவ வெனக்கேட்டான்.

(ப - ரை) பெரிய வடவியொன்றிடை = பெரிய ஆரண்யம் ஒன்றின்மத்தியில், ஓர் பெரியமுனிவன்=ஒரு மகாமுனிவன், மகாமவுனம்புரியுநிலையோன் = மகாமவுனவிரதத்தை யனுட்டிக்கும் திதியிலிருப்பவன், அவன்றனை=அத்தகைய முனிவரனை, ஓர் பொருவில் வேடன் = ஒருகொல்லும் வில்லையுடையகிராதன், வந்தணுகி = வந்துசேர்ந்து, எரியுமென் கைக்கணை=தகிக்குமெனது கரத்தினின்றும்விடுபட்ட அம்பு, பட=தைக்கவே, நொந்து= வருத்தப்பட்டு, இங்கு=இவ்விடத்து, ஓர்நவ்வி=ஒருமான், ஓடியது=ஓடிவந்தது, தெரிய= அறியும்படியாக, அஃதெங்ககன்றது=அது எவ்விடத்திற்குச்சென்றது, என = என்பதாக, செப்புமுனிவ=கூறுவாய் முனிவரனே, எனக்கேட்டான்=என்றுவினவினன். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர ஒரு கானனவிஸ்தாரத்திடையே, ஞானத்தாற்பாதிக்கப்பெற்ற வாக்காதி சேஷ்டையையுடைய மகா மவுனத்திலினிதிருக்கும் முனீசரனைப்பார்த்து வேடனொருவன் கூறப்பெறும் அற்புதமாஞ் சிறிதைவினவினன் = பாணத்தாற்பின்னப்பட்டு ஓடியமானைப்

பின்ரொடர்ந்துசென்ற லுப்தகன் விஞவிஞன் என்பதாம். என்னவிஞவிஞன் என்பதைக் கூறல்:—எரியுமென்பதாதி. எறியுமென்று வல்லினமேல் எய்தவென்று பொருளுரைத்துக் கொள்க ஹே முனிவரே! எனதுபாணத்திஞலே அடிபட்டமான் இங்கே யோடிவந்தது எங்கேசென்றது அம்மான் என்ருன்; மீண்டும்மான் என்றது சம்பிரமத்தாலாம்.

(ச) மகாமௌனம்=துவிதப்பிரபஞ்சத்தின் அநநுசந்தானம். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை) முனிவர் மறுமொழிகூறல்:—கேட்டவதஞலென்பன.

கேட்ட கிராதன் றனையந்தக் கேடின் முனிபார்த் தினியோனே
காட்டி லுறைவோர் சமநிலைமைக் கண்ணு முனிவர் கணநாங்க
ளூட்டு விவகா ரம்புரியு நவையாங் கார மாகிலநாங்
கூட்டு பொறியின் ருெழிலெல்லாங் கொள்ளு மனஞ்செய் குவதன்ரே.

அதனு லகங்கா ரத்துருவா மந்த மனநிச் சயமாகத்
திதமாய் நழுவி நெடுநாளாஞ் செறிசாக் கிரசொப் பனசுழுத்திப்
பதமா மவையொன் றையுமறியேம் பரம துரிய நிலையானேம்
விதமாய்க் காணப் படுபொருள்கள் விமல துரியத் திலவென்ருன்.

(ப - ரை) கேட்டகிராதன்றனை=வினவியவேடன்றனை, அந்தக்கேடில்முனிபார்த்து=அக்கேதமற்ற முனீசுரர்நோக்கி, இனியோனே = அன்பனே, காட்டிலுறைவோர்=ஆரண்ய வாசிகளாகிய, நாங்கள்=யாங்கள், சமநிலைக்கண்ணு முனிவர்கணம் = சமஸ்திதியிலிருக்கும் முனிவர்கூட்டமாவோம், நாட்டுவிவகாரம்புரியும்=நகரவிவகாரத்தைச்செய்யும், நவையாங்காரம் ஆகிலநாம் = குற்றம்பொருந்திய அகங்காரம் ஆகிலேமியாம், கூட்டுபொரியின்ருெழில் எல்லாம்=விடயங்களைச்சேர்க்கும் இந்திரியங்களின்வினைகளியாவும், கொள்ளுமனம்செய்குவதன்ரே=அவற்றைக்கவரும் உள்ளம்பண்ணுவதல்லவோ.

அதஞல்=அக்காரணத்தால், அகங்காரத்துருவாம்=அகங்காரவடிவமாம், அந்தமனம் = அவ்வுள்ளம், நிச்சயமாக=துணிபாக, திதமாய்=நிலையாய், நழுவி=விலீனமாகி, நெடுநாளாம்=வெகுகாலமாய்து, செறிசாக்கிரசொப்பனசுழுத்தி = பொருந்தாநின்ற நனவுகனவு துயில், பதமாமவையொன்றையும் அறியேம்=என்பனவான அவஸ்தைகள் எவற்றையுமே யுணர்கிலேம், பரமதுரியநிலையானேம்=பரமதுரியநிலையிலேயே யிருக்கின்றேம், விதமாய்க் காணப்படு பொருள்கள் = நாஞவகையாகப்பார்க்கப்படும் வஸ்துகள், விமலதுரியத்தில வென்ருன் = நிருமலதுரியவவத்தையில் இல்லனவாம் என்றுகூறிஞர்.

(ஸ்ரீ - வீர) அம்முனிவர் அவ்வேடனை நோக்கிக்கூறியதாவது, ஹேசாதுவே சமசீலர்களாகியயாங்கள் முனிவர்கள்வனவாசிகள், பயிலாதவிவகாரங்களில் யாது ஆற்றலுடையரோ அத்தகைய அகங்காரம் எங்களுக்கிலதாம், ஹே அன்பனே! சர்வஇந்திரியகருமங்களையும் மனமேசெய்கின்றதாம், அகங்காரமயமாகிய அபிமானமிகுதியாமது எமக்கத்தியந்தம் எப்போதுமே கழிந்தேகியதாம், நனவுகனவுதுயில்கள் என்னுந்தசைகள் ஒன்றையும் யாம்உணர்ந்திலேம், துரியத்திலேயேயிருப்பேம், ஆண்டுத்திருசியமொன்றும் கிடையாவாம்.

(ச) சமநிலையே=பிரஹ்மத்தையே, கண்ணும்=அநுசந்திக்கும். துரியநிலை=முற்கூறிய துரியாவஸ்தையில், ஆனேம்=திரமாயிருக்கின்றேம்.சீலஞ்சமாதியில் என்பதுப குதி. (21-22)

(ஸ்ரீ - வீர - அ - கை) துரியத்தைவியத்தல்:—தீதிலென்பது.

தீதின் முனிவ னுரைபொருள்க டெரியா வேட னங்ககன்று
னாத லாற்கே டுரியத்துக் கயலோர் நிலையு முளதன்று
லேத மான விகற்பமெலா மிறந்த வறிவே துரியமதா
மீத லாதிங் கயலொன்று மில்லை கண்டா யிராகவனே.

(ப - ரை) தீதில்முனிவன் உரைபொருள்கள் = குற்றமற்றதவத்தினையுடைய முனீசுரர் கூறியவருத்தங்களை, தெரியாவேடன் ஆங்ககன்றான்=அறியாதகிராதன் அவ்விடத்தேசென்றான், ஆதலாற்கேள்=ஆகையினாற்கேட்குதி, துரியத்துக்கயலோர் நிலையுமுளதன்று = துரியத்துக்கன்னியமாக ஒருநிதியுமில்லையாம், ஏதமான விகற்பமெலாம் = குற்றமான விகற்பங்கள்யாவும், இறந்த=ஒழிந்த, அறிவே = சைதன்யமே, துரியமதாம் = துரியமெனப்பெறுவதாம், ஈதலாது=இதுவல்லாமல், இங்கு=ஈண்டு, அயல் ஒன்றும் = வேறொன்றும், இல்லை கண்டாய் இராகவனே = இல்லையாமென்று காண்குதி இராமச்சந்திரனே. ஆல் அசைநிலை. ஆங்கு வந்தவழியே எனினும் அமையும்.

(ஸ்ரீ - வீர) இவ்வண்ணம் அம்முனிநாதருடைய வாக்கியத்தைக்கேட்டவ்வேடனானவன் ஒருபொருளுந்தெரியானாகி வந்தவழியேதிரும்பி யிஷ்டப்பட்ட இடத்திற்குச்சென்றான்; ஆகலின் ஹே மகாபாகுவாகிய இராகவனே! கூறுகின்றோங்கேட்குதி: அத்தகைய முனிநாதருடைய அனுபவ சுருதியாதிபாத்தியத்தன்மையானே, துரிய இதர ஜாக்கிரத்தாதிதசையும் தூலாதிதசையும் இல்லவேயில்லை யென்பதாம். எந்நிருவிகற்பமேயாகிய சித்தேயாந்துரியமுளதோ, அதுவே யுளதிங்கயலொன்றில்லையாம்.

(ச) துரியத்துக்கயலான ஒருநிலையும் உளதன்று=உண்மையாகவில்லை, கற்பிதமாதலின் என்க. ஆதலின், ஈதலாது=நிர்விகற்பமான சித்தேயிருக்கின்றதன்றி, அயல் = திருசியம், ஒன்றுமில்லை. (23

(ஸ்ரீ - வீர - அ - கை) முக்குணவடிமான மாயாமயசித்த காரியத்தகைமையால் மூன்றவத்தைகட்கும், மாயையபாதமாகவே சித்தத்திற்கு மிருதத்தன்மையானும், அதனையுபாதானமாகக்கொண்ட அவஸ்தைகட்கும் அசத்வம் ஆமெனல்:—கண்டவென்பது.

கண்ட நனவு கோரமதாங் கனவு சாந்த மெனப்பெயராங்
கொண்ட சுழுத்தி மூடமதாங் கூறு மிம்மூன் றவத்தைகளும்
விண்ட மனத்தின் வடிவாகும் விளம்பு மிம்மூன் றையும்விட்டாற்
றண்டு மனம்போ மனமிறந்தாற் சத்தா யொன்றுஞ் சமநிலையாம்.

((ப - ரை) கண்டநனவு கோரமதாம்=பிரத்தியக்ஷமாம் ஜாக்கிரம்கோரமாம், கனவு சாந்தமெனப்பெயராம் = சொப்பனஞ் சாந்தமென்றுபெயர்பெறும், கொண்டசுழுத்தி மூடமதாம்=அறியாமையிற்கொள்ளாநின்ற நித்திரைமூடமாம், கூறும் இம்மூன்றவத்தைகளும் = செப்பும் இந்தமூன்று அவத்தைகளும், விண்டமனத்தின் வடிவாகும்=விடும்படியானமனத்தினது உருவமாகும், விளம்பும் இம்மூன்றையும்விட்டால் = கூறும் இந்தமூன்றையும் விட்டொழித்தால், தண்டுமனம்போம்=தடிமனமொழியும், மனமிறந்தால் = உளமொழிந்தால், சத்தாய் ஒன்றும்சமநிலையாம் = சத்தாயேகமாயிருக்கும் ஒப்பானநிதியாம்.

(ஸ்ரீ-வீர) ஜாக்கிரத்துசொப்பனம் சுழுப்தியெனப்பெயரிய மூன்றுரூபமுமே சித்தத்திற்காம், கோரவடிவாகவும் சாந்தவடிவாகவும் மூடவடிவாகவும் ஈண்டுசித்தமானது இருக்கும்; மூன்றவஸ்தைகளையும் ரஜாதிகுண முக்கியத்தகைமையானே மூவகையாகப்பிரித்துக்காட்டல்:—கண்டவென்பது. சுவர்க்கநரக மறுபிறப்பாதியேது புண்ணியபாவமுண்டாக்கலானும் கனீபாவ ஆதிக்கியத்தானும், ஜாக்கிரத்துமயம்=ஜாக்கிரத்தவத்தையையுடைய சித்தமானது கோரமாமென்பது உய்த்துணரத்தக்கதாம், சொப்பனமயம் சித்தம்சாந்தமாயிருக்கும், சுழுப்த புூவத்திலிருக்குஞ் சித்தம்மூடமாம், மூன்றுமற்றசித்தம் மிருதமேயாகும், குணத்திரயான்மக மாயைகெடுதலான் மூன்றுமற்றதாமென்றுணர்க; சித்தம்மிருதமாகவே யோகிகட்குப்பிராரப்த சேஷபோகப்பொருட்டுச் சாம்பரில் வெண்மையிருப்பதேபோலும் சத்துவாம்சமே தொடர்ந்துநிற்கும், இரஜதமோலேசமுந் தொடராதாம் எனல்:—மனமென்பதாதி. எம் மனந்தான் மிருதமாமோ அதன்கண்ணேசத்துவம் ஒன்றேசமமாயிருக்கும், இரசசாற் கலக்கப் பெறுமையின்சமமாம்.

(ச) நனவு = சாக்கிரமயமானசித்தம், சுகதுக்க விலாசமிகுதியினுல், கோரமதாம்; கனவு=சொப்பனமயமானசித்தம், அவ்வித விலாசமின்மையின், சாந்தமாம், சுழுத்திமயமான சித்தம் அறியாமைமிகுதலின், மூடமதாம், வடிவாம்=ரூபமேயாம், ஆன்மாவின் அவஸ்தையின்றும், விட்டால்=விட்டுத்துரியமாயின் நிர்விகாரமாதலின், மனம்போம், மனமிறந்தால், அச்சித்தம், சத்தாய்=சத்துவகுண ஆன்மகமாய் ஒன்றும், அகண்டிதமான, சமம்=பிரமாகாரரூபமாய், நிலையாம்=இருக்கும். (24)

(ஸ்ரீ-வீர - அ-கை) அத்துரியத்தையே யோகிகள் முயல்வாலடைதலின் நீயும் அடைவாயென்றுகூறியுபசங்கரித்தல்:—அந்தவென்பது.

அந்த நிலையே யோகிகடா மரிதிற் சாதித் தடைகின்றார்
வெந்த துயர்செய் சங்கற்ப விகற்ப மில்லாத் துரியத்தே
மைந்த நிலையா யிடர்தீர்வாய் மகத்தா யுயர்ந்த முனிவராய்ப்
பந்த மிலராய்ப் பேதமறும் பழையோர் விடாதிப் பதத்துறைவார்.

(ப - ரை) அந்தநிலையே=கூறிய அத்துரியநிலைமையினையே, யோகிகள்தாம் = மகான்கள், அரிதிற்சாதித்து=மிகப்பிரயத்தனப்பட்டுக் கைவரச்செய்து, அடைகின்றார்=அத்துரிய சொரூபமேயாகின்றார், வெந்ததுயர்செய்=தகிப்பதே போற்றுக்கப்படுத்தும், சங்கற்பவிகற்பமில்லாத்துரியத்தே=எண்ணங்கள் எல்லாம் இழந்ததுரிய அவஸ்தையில், மைந்த = குழந்தாய், நிலையாய்=திதிபெற்று, இடர்தீர்வாய்=துயரகல்வாய், மகத்தாயுயர்ந்த முனிவராய்=மகான்மாக்களாய் மேன்மைமிக்க முனீசுரராய்; பந்தமிலராய்=கட்டற்றவராய், பேதமறும் பழையோர்=அபேததிருஷ்டியையுடைய புராதனர், விடாது = அகலாது, இப்பதத்துறைவார்=இந்தத் துரியபதத்தேயிருப்பர்.

(ஸ்ரீ - வீர) அத்தகையசித்தத்தில் நிர்மலபாவ அதிசயத்தானே சுவாத்மசுகத்தின் சுந்தத ஆவிர்ப்பாவத்தால் சருவவியாபார உபரமத்தானே சமாதியப்பியாசத்தை முயன்றுசம்பாதிப்பர், அதனையே சர்வயோகியரும் முயன்று சம்பாதிப்பரென்பதாம். ஆகையினுல் நீயும் அத்தகையசித்தத்தைச் சம்பாதித்துத் துரியபதத்தில் இளைப்பாறியிருப்பாய் எனல்:—வெந்த

வென்பதாகி. சமஸ்தசங்கற்ப விகற்பவிலாசத்தையும் விட்டதாயசித்தத்தைச் சம்பாதித்து நீயும் துரியபதத்தில் உட்புற ரோயற்றவடிவினஞகி இளைப்பாறுதி, அந்தக்கணந்தோன் சாதுக்கள் மகான்மாக்களாய், முனீசுரர்களாய், முக்தர்களாய் பேதவாசனையே யில்லாதவர்க ளாய், எப்போதுமே வீற்றிருப்பார்கள்.

(ச) ஆகலின், அந்தநிலையே = அந்தச்சித்தத்தையே, சகல யோகிகளும், அரிதில் = பிரஹ்மஞானப்பியாசப் பிரயத்தனத்தினலே, சாதித்தடைகின்றார், இப்பதத்து = துரிய பதத்தில். (25)

மானுவேடன் கதை முற்றிற்று.



## நிர்வாணப்பிரகரணம் இதோபதேசம்

### யோகசத்த பூமிகை

(ஸ்ரீ - வீர - அ - கை) அவித்தையினலே சகஜமாகவே தனது அவஸ்தாத்திரயப் பிரபஞ்சம், மாயையினலே ஈசுவரசம்பந்தமான வியதாதிப்பிரபஞ்சம் என்னும் சர்வ துவைத சமுதாயத்தின்விலக்கமே ஆன்மாவைக்குறித்துப் பிரவிருத்தித்த சுருதிஸ்மிருதி இதி காசபுராணுதிசாஸ்திரங்களின் பரமசித்தாந்தமாம், வஸ்துவை யொளிர்வித்தல் அல்லவாம்; சொப்பிரகாசமாய ஆன்மவஸ்துவிற்குச் சுயமாகவே சித்தித்திருக்குந்தன்மையுண்மையின், அதன்சித்திவிஷயத்திற் பிரமாணங்கட்குப் பிரவேசமின்மையின் என்றுகூறல்:—எனைத்து மென்பது.

(ச - அ - கை) முன்பு விசிராந்தனுக்கு வாகிய விவகாரமின்றெனத் தெரிவிக்கப்பட்டது, இப்போது, சகலமான இந்த ஞானசாஸ்திரத்துக்கு ஞானபூமிகையே சாரமாதலின் அதன் சொரூபத்தை விஸ்தாரமாக நிரூபித்தற்குமுடிவான இக்கதையை ஆரம்பிக்கின்றார்:—

எனைத்து ஞான நன்னூலி னியம்பு மறுதி யாதென்னி
லனைத்துங் கனவு காண்பதுவே யன்றோ வவிஞ்சை யிங்கில்லை
வினைத்திண் கவலை செய்கின்ற வெய்ய மாயை தானில்லை
தினைத்துன் பமுமற் றுபசாந்தத் திறமா மிதுவே திகழ்பிரமம்.

(ப - ரை) எனைத்து ஞானநன்னூலின் = சகலநல்ல ஞானசாஸ்திரங்களின், இயம்பு சறுதி = பிரதிபாதனத்துணிபு, யாதென்னில் = யாதென்றால், அனைத்தும் = சருவமும், கனவு காண்பதுவேயன்றோ = சொப்பனங் காண்பதுவேயல்லவோ, அவிஞ்சையிங்கில்லை = அவித்தையென்பது இங்கேகிடையாது, வினைத்திண் கவலைசெய்கின்ற = தொழில்களையும் அவற்றாலுண்டாம் கடினமான கவலைகளையும் செய்விக்கின்ற, வெய்யமாயைதானில்லை = கொடூரமான மாயையும்கிடையாது, தினைத்துன்பமும் அற்று = அற்பமுந் துயரமில்லாமல், உபசாந்தத்திறமாம் = பரமசாந்தப்பான்மையதாம், இதுவே திகழ்பிரமம் = இதுதானே யிலங்காநின்ற பிரஹ்மசொரூபமாம்.

(ஸ்ரீ - வீர) அத்தியாத்ம சாஸ்திரங்களினது சித்தாந்தம் சருவத்தையும் ஒழித்தலேயாம், ஈண்டவித்தையுமில்லை மாயையுமில்லை, சாந்தமாய்ச் சர்வ உபத்திரவங்களுமற்ற நித்திய அபரோக்ஷப்பிரஹ்மமானது சாஸ்திரங்களினாலே உணரப்பெறமுடியாததாம், அவ்வாறே சுருதியும் அறைகின்றது "எதனினின்றும் வாக்குகள்திரும்பும் மனந்தன்னோடும் அடைந்திடப் பெறாமல்" அவ்வாறே ஸ்ரீ திராவிட ஆசாரியர் அவர்களாலும் திருவாய்மலர்ந்தருளப்பெற்றன்று:—அப்பிரமேயம் பிரஹ்மமாகுமேல் ஆயின் யாதின்பொருட்டுச் சாத்திரமென்னின் சித்தமோ விவர்த்தகத்தன்மையான் என்பதாம்.

(ச) ஸ்ரீ வசிஷ்டர்: நிராமயமாய், உபசாந்தமான பிரமமேயுளது, அவித்தையும் மாயையும் அதன்காரியமும் இல்லையெனச் சர்வப்பிரபஞ்சத்தையும் நிடேதித்தலே அத்தியான்ம சாஸ்திரங்களின் சித்தாந்தமாம். கனவேயன்றோ=சொப்பனமேயாதலின் என்க. (1)

(ஸ்ரீ - வீர - அ - கை) சுருதியாதி சித்தாந்தத்தையறியாமலே தம்புந்தி வைபவத்தானே ஜகத்தின்மூலத்தைத் தேடும்வாதிகட்குப் பிரஹ்மசப்தவாச்சிய, சர்வ சக்தியான்மகமாயா சபலப்பிரஹ்மத்தின்கண் மதிதோஷ விசித்திரப்பான்மையால் நானாவகையான கற்பனைகள் உள்ளனவாமெனல்:—சாந்தமென்பது,

சாந்த மாகிச் சிதம்பரமாய்ச் சமமாய் நொய்தா யான்மாவா
யேந்து சத்தி யளவிலதா யிடும்பேர் பிரம மெனுமிதற்கே
சேர்ந்த பலநிச் சயம்பண்ணிச் சிலர்பா ழென்பர் பரமேசன்
வாய்ந்த வுருவ மென்பர்சிலர் மாவிஞ் ஞான மென்பர்சிலர்.

(ப - ரை) சாந்தமாகி=பரம உபசாந்தமாய், சிதம்பரமாய் = சிதாகாசமாய், சமமாய்= ஒப்பாய், நொய்தாய்=சூக்குமமாய், ஆன்மாவாய்=தனது வடிவமாய், ஏந்துசத்தியளவிலதாய் = பிரகடமாம் ஆற்றல்கள் அநந்தமாயுடையதாய், இடும்பேர் பிரமமெனுமிதற்கே = பிரஹ்மமெனப் பெயரிட்டழைக்குமிதனுக்கே, சேர்ந்தபல நிச்சயம்பண்ணி=மதியிற்கூடிய படியே நானாநிச்சயங்களைச்செய்து, சிலர்=சிலவாதியர், பாழென்பர் = சூனியமெனப்பெயரிடுவர், பரமேசன்வாய்ந்த வுருவமென்பர்சிலர் = பரமேசுவரருடைய பொருந்தியவடிவம் என்றுபெயர் சாற்றுவர் சிலவாதியர், மாவிஞ்ஞானமென்பர் சிலர் = மகாவிஞ்ஞானம் என்றறைவர் அபிதேயம்சிலர், இதனையேநிச்சயித்துப் பல பெயரிட்டழைப்பரென்பதாம்.

(ஸ்ரீ - வீர) சாந்தமேயாய்ச் சிதாபாசமாய்ச் சொச்சமாய், சமசமான்மாவாய், சம்பூர்ண சத்தியையுடையதாய்ப் பிரஹ்மமெனப் பெயரியதாயவஸ்துவில், தங்கள்தங்கள் புத்தியனுசாரமாகச் சித்தாந்தபேதங்களைக் கற்பித்துக்கொண்டு, சிலர் சூனியத்தகைமையையும், சிலர் விஞ்ஞானமாத்திரப்பான்மையையும், சிலர் ஈசுவரரூபத்தகைமையையும் கூறிக்கொண்டு பரஸ்பரம் விவாதம் செய்துகொள்ளாநிற்பர்.

(ச) சாந்தாதி இலக்கணமாய்ப் பிரஹ்மமென்னும், இடும்பேர் = கற்பிதநாமதேயமுள்ள சிதம்பரமாகியவிதற்கே, சிலர் = சிலவாதிகள், பாழென்பர், சிலர் பரமேசனுருவமென்பர், சிலர் விஞ்ஞானமென்பர், விஞ்ஞானமாத்திரமென்பர், இங்ஙனம் அந்நியோந்நியம், பல நிச்சயஞ்செய்து, விசேடமாக வாதஞ்செய்வரென்றதாயிற்று. (2)

(ஸ்ரீ - வீர - அ - கை) இவ்வாறு இருப்பாய் என இதோபதேசஞ்செய்தல்:—எல்லா மென்பது.

எல்லா நீக்கி மகாமவுனத் திருப்பாய் நிருவா ணத்தினனாய்
பொல்லா மனம்போய்ச் சித்தம்போய்ப் புந்தி போய்த்தா னென்பதுபோய்ச்
சொல்லா வூமை குருடுசெவி டொத்துத் தூய வான்மாவி
னில்லா யுள்ளே முகமாகி நித்த நொய்தாய் நிறைமதியாய்.

(ப - ரை) எல்லாநீக்கி = யாவற்றையும் அகற்றி; மகாமவுனத்திருப்பாய் = பெருத்த மவுனத்திதியனாகி வாழ்வாய், நிருவாணத்தினனாய் = பேரானந்தவானாய், பொல்லாமனம் போய்=கெட்ட உள்ளம்போய், சித்தம்போய் = சிந்தனையற்றவனாய், புந்திபோய்=மதி போய், தான் என்பதுபோய்=நான் என்பதுநீங்கி, சொல்லாவூமை = பேசாத மூகத்திற்கு, குருடு=கண்ணில்லாததுக்கு, செவிடு = காதில்லாததுக்கு, ஒத்து = ஒப்பாகி, தூய் ஆன்மா வில்=பரிசுத்தமாய பரமான்மாவில், நில்லாய்=நிற்பாய், உள்ளேமுகமாகி=அந்தர்முகமாகி, நித்தநொய்தாய் நிறைமதியாய் = எப்போதும் சொச்சமாய் பூர்ணபுந்தியனாயிருப்பாய்.

(ஸ்ரீ - வீர) மாயாந்தமாகிய சருவதிருசிய சமுதாயத்தையுமே பரித்தியாகம்செய்து, ஹே அநகனே! மனத்தோடுகூடச் சருவேந்திரியவியாபார உபரமத்தானே மகாமவுனியாவாய், பூர்ணானந்த சிதாத்மாவின்பால், நிர்வாணவானாகி, மனனமற்றவனாய்ச் சித்தமற்றவனாய்த் தீவிருத்தி நன்குசாந்தமானவனாய், ஆன்மாவின்கண்ணே யிருந்துவாழ்தி; சாந்தாத்மாவாய் மூக அந்தபதிரரையொத்துநித்தியம் அந்தர்முகனாகி, தன்னுடைய ஆன்மாவினுள்ளே நிறைந்த மதியினனாகிநிற்பாய்.

(ச) எல்லாம்=நீ சகல கோசரவாதத்தையும், நீக்கி, மனம்போய் = சற்பவிகற்பமற்றவனாய், சித்தம்போய்=நிர்வாசனையை யுடையசித்தனாய், புந்திபோய் = புத்தியுபசாந்தனாய், மகாமவுனத்து = துவிதப்பிரபஞ்ச அனுசந்தானரகிதமான, நிருவாணத்தினனாய் = ஜீவன் முக்தனாய், இருப்பாய் = ஆன்மாவில் வாகியேந்திரிய வியாபார அனுசந்தானஞ்செய்யாது ஊமையாதிபோல் நீயிருப்பாய், மதி=புத்தி. (3)

(ஸ்ரீ - வீர - அ - கை) சித்தத்தையொழிப்பாயெனல்:—நனவென்பது.

நனவிற் சுழுத்தி நிலைமேவி நன்றா யெல்லா முள்ளகற்றித்
தனதிச் சையில்வந் ததுபுறத்தே சமைப்பாய் சித்த முண்டாகை
கனதுக் கமதாஞ் சித்தமறிற் கனத்த சுகமாஞ் சித்தத்தை
யுனதுட் படுத்தி யுணர்வின்மை யாலே யொழிப்பா யுணர்வுருவாய்.

(ப - ரை) நனவிற் சுழுத்திநிலைமேவி = நனவின்கண்ணே துயின்றவனாகி, நன்றாய் எல்லாம் உள்ளகற்றி = நலமாகயாவற்றையும் உள்ளேநீக்கி, தனதிச்சையில்வந்தது புறத்தே சமைப்பாய்=தானேவந்ததைப் பாகியத்தேசெய்வாய், சித்தமுண்டாகை கனதுக்கமதாம்= சித்தமிருத்தலே கொடூரதுயரமாம், சித்தமறிற்கனத்தசுகமாம் = சித்தமில்லாமையே பேரா நந்தமாம், சித்தத்தை யுனதுட்படுத்தி = சித்தத்தினை உனதுவயப்படுத்தி, உணர்வின்மை யாலே யொழிப்பாயுணர்வுருவாய்=அறிவுருவமான இராகவனே! விருத்திகளை யோய்வித்த லாலேகெடுப்பாய் சிதேகான்மாவாய்.

(ஸ்ரீ - வீர) ஜாக்கிரத்தின்கண்ணே சுழுத்தத்தனாய்=பஞ்சமாதிப்பூமிகை ஜயத்தால், ஜாக்கிரத்தவத்தையனாயினும், சுழுத்தனைப்போலிருப்பவனாய், இராகவனே! கருமங்களைச் செய்தி, உள்ளேசருவ பரித்தியாகியாய் வெளியேவினைவயத் தேவந்ததைச்செய்தி, சித்த சத்தை பரமதுக்கமாம், சித்தாசத்தை பரமசுகமேயாம், ஆகலின் சித்தத்தைச்சிதேகான்மா வாய் க்ஷயஞ்செய்தி, இஷ்ட அநிஷ்டங்களின் அநுசந்தானத்தினாலே.

(ச) நனவில்=சாக்கிரத்திற்றானே, சுழுத்திநிலைமேவி=நிர்விகாரசித்தனாய், கன்மங்க ளைச்செய்வாய்; இதனையேவெளிபண்ணல், உள் எல்லாம்=இராகத்து வேஷாதியனைத்தை யும், நன்றாயகற்றி, புறத்தே, தனதிச்சையில் வந்தது=முறைப்படிவந்த கருமத்தை, சமைப் பாய்=செய்வாய், சித்தமுண்டாகை = சித்தசத்தைகளே, கனதுக்கமதாம் = கனங்களான சுகதுக்கங்களாம், ஆதலின், உணர்வுருவாய்=சிதேகரசனாய், அறிவின்மையாலே=வாகிய அனனுசந்தானவேதுவினால், ஒழிப்பாய்=நாசஞ்செய்வாய். (4)

(ஸ்ரீ - வீர - அ - கை) உணர்வின்மையாலே என்றுரைத்த இதனையே வெளிப்படுத் தல்:—சோகவிந்தவென்பன.

சோக நன்மை தீமைகளைச் சூழ்வுற் றிருந்துஞ் சமமாகிப்
பாக மின்றிக் கற்போலப் படிந்து நிற்பாய் பலபிறவி
மோக மகலு மவ்வளவு முயலுந் தனது முயற்சியினா
னாக மனையாய் சுகதுக்க நடுவுள் ளதுநீ நாடலையாய்.

இந்த வளவாந் தன்முயற்சி யிடர்தீர் முடிவில் பதமளிக்குஞ்
சிந்து கலைக ணிறைமதிபோற் சீத வமுதே யுண்ணிறைய
வந்த வறிவன் சுகமடைவ னகில வுலகின் பொருட்சார
முந்த வறிந்து செயற்செய்யா தவனாய் முத்தி யெய்திடுமே.

(ப - ரை) சோகநன்மைதீமைகளை=துயரந்தரும் நலந்தீங்குகளை, சூழ்வுற்றிருந்தும்= பார்த்திருந்தும், சமமாகி = ஒப்பாகி, பாகமின்றி = வேற்றுமையில்லாமல், கற்போல் = பாஷாணமொப்ப, படிந்துநிற்பாய்=அசையாதிருப்பாய், பலபிறவிமோகமகலுமவ்வளவு = பலசம்சாரமயக்கம் நீங்குமத்துணையும், முயலுந்தனது முயற்சியினால்=பிரயத்தனப்படும் தன்னுடைய பிரபலப்பிரயத்தனத்தினாலே, நாகமனையாய் = பர்வதம்போல அசையாத வீரனே! சுகதுக்கம் நடுவுள்ளதும் நீநாடலையாய்=இன்பம்துன்பம் மத்தியமம் என்பவற்றை நீ நாடவேண்டாம்.

இந்த அளவாந்தன்முயற்சி = இத்துணையேயாய தனதுபிரயத்தனம், இடர்தீர் முடி வில்பதமளிக்கும்=துயரமற்ற அநந்தப்பதத்தையீயும், சிந்துகலைகள் நிறைமதிபோல் = விரிக் குங்குளிர்ச்சிபொருந்திய அங்கிசங்கணிறைந்த சந்திரனைப்போல, சீதவமுதேயுண்ணிறைய= குளிர்ந்தவமிர்தமேயுள்ளேபூரிக்க, அந்த அறிவன் சுகமடைவன்=அவ்வித்வான் இன்பத்தை யெய்துவன், அகில உலகின்பொருட்சாரம்=சகலலோகங்களின் பதார்த்தசாரத்தை, முந்த வறிந்து=முதலில் தெரிந்துகொண்டு, செயல்செய்யாதவனாய்=செய்தும் செய்யாதவனாய், முத்தியெய்திடுமே=மோக்ஷத்தை யடைந்திடுமே.

(ஸ்ரீ - வீர) இரம்மியத்தையேனும் அரம்மியத்தையேனுங் கண்டபோதினும், கற் போலச் சமமாயிருக்கவேண்டும், இத்துணையான தனதுமுயற்சியினாலே சம்சாரமாந்து

வெற்றிகொள்ளப்பட்டதேயாம், இன்பமும் துன்பமும் எண்ணத்தக்கவன்றும், மத்தியமம் அவ்வுபயசாதனங்களும் சிந்திக்கத்தக்கனவாகவாம், இத்துணையேயாய தனதுமுயல்வினாலே, துக்கத்தினதுமுடிவாகிய அநந்தவஸ்து அடையப்பெறும்; சர்வபுவனத்திரய வஸ்துக்களின் சாரத்தையறிந்தவனும், அதனானே, தானாகவே எங்கும் எல்லாவகையானும் எப்போதும் ஒளிர்வதனாலே யழகுமிகும் நிரதிசயசுகாமிருதமயனும், அதனானேயே எங்கும்புஷ்டியடைந்த மண்டலத்தோடுகூடிய பூர்ணசந்திரசமனும், பரமான்மாவையடைந்துள்ள அவ்வறிஞன், ஜீவன்முக்திசுகத்தை யடைவன், பிராரப்தம்தந்த விவகாரத்தைச் செய்தபோதினும் செய்திலன் பிரதிபிம்ப சேஷ்டையிற்போலத்தனது கருத்துருத்தகைமையைக் காண்கிலன் என்பதாம்.

(ச) நன்மைதீமைகளை = இரம்மியத்தையாவது அரம்மியத்தையாவது, சூழ்வுற்றிருந்தும்=பார்த்தும், கற்போல, சமமாகி=நிர்விகாரமாய், படிந்துநிற்பாய், இவ்வளவேயான தனது முயற்சியினாற் பலபிறவிமோகமகலும், நாகமனையாய்=மலைக்கு அல்லது ஆகாயத்துக்கு ஒப்பானவனே எனினும் ஆம், நிர்விகாரசித்தனான இராகவனே யென்பதுபொருள் சுகமிது, துக்கமிது, நடுவுள்ளது=சுகதுக்கமிது, என்னும் மூன்றினையும், நாடலை = அநுசந்தியேல், ஆல் அசை.

இந்தவளவாந்தன் முயற்சிமுடிவில் இடர்தீர்பதமளிக்கும்=இவ்வளவானதன் முயற்சியினால் ஆத்தியந்திகதுக்க நிவிருத்தியடைவா யென்றதாயிற்று, பூரணசந்திரன்போல் அந்தவறிவன், உள்சீதவமுதேநிறைய எய்திடும், அமிர்தமயனும், சுகம்=சொரூபசுகத்தை யடைவன், அந்தவறிவன், முத்தி = பரமான்மாவே, எய்திடும் = அடைந்தவனும், கருமங்களை, செயில்=செய்தவனாயினும், செய்யாதவனேயாம், அபிமானமின்மையின் என்க. (5-6)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஜாக்கிரத்தின்கண்ணேயே துயில்பவனாகிக் கருமங்களைச்செய்தி இராகவனே! என்று நான்காவது பூமியிலேறிய ஸ்ரீ இராகவரைநோக்கி, ஐந்தாவதாதி பூமிகளின்றிதியைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டுமென்று கூறப்பெற்றது, அவற்றைச் சம்பாதித்துக்கொள்ள விரும்பிய ஸ்ரீ இராகவர், தம்மாற்செயித்த செயிக்கவேண்டிய பூமிகைவிபாகஞானப்பொருட்டு அவற்றின் இலக்கணங்களையும் அவற்றின் அப்பியாச முறைமையையும்வினாதல்:—யோகவென்பது.

யோக பூமி யேழுக்கு முறுசெய் தொழில்க ளெவ்வண்ண
மாக விந்தப் பூமிகளை யடைந்த யோகிக் கெதுகுறிகள்
மோக மில்லா யுரையென்ன முனிவ னிராமற் குரைசெய்வான்
போக வசஞ்செல் பவன்மீண்டோ னென்று புருட ரிருவகையாம்.

(ப - ரை) யோகபூமியேழுக்கும்=ஞானபூமிகள் சப்தங்கட்கும், உறுசெய்தொழில்கள் எவ்வண்ணம்=உரியனவான அப்பியாசங்கள் எவையாம், எவ்வாறு செய்யவேண்டும், ஆகவிந்தப்பூமிகளை=சாத்தியமான இப்பூமிகளை, அடைந்தயோகிக்கு எதுகுறிகள்=அடைவுற்ற நிட்டாபரனுக்கு சின்னங்களெவையாம், மோகமில்லாயுரை யென்ன=மயக்கம் நீங்கிய ஹே பகவனே கூறவேண்டுமென்று, ஸ்ரீ இராகவர்வினவ, முனிவன்=ஸ்ரீவசிஷ்டபகவான், இராமற்குரைசெய்வான்=ஸ்ரீ இராகவருக்குக்கூறத் தொடங்குகின்றார், போகவசஞ்செல்ப

வின்=போகங்களிற் பிரவிருத்திப்பவன் என்றும், மீண்டோன் என்று=போகங்களினின்றும் நிவிருத்தியானவன் என்றும், புருடரிருவகையாம்=அதிகாரிகள் இருவிதமாக இருப்பார்கள்.

(ஸ்ரீ - வீர) சப்தயோகபூமிகளின் அப்யாசம்செய்வதெங்ஙனம்? ஒவ்வொரு பூமியிலும் ஏறியயோகிக்கு எத்தகையகுறிகள் உள்ளனவாம்? என்றுவினவ, வீப்சையிற்பிரதிக்குக்கருமப்பிரவசனீய சம்ஞையில் இருமையேனும் அவ்யயீபாவசமாசமேனும் இன்றியமையாமலாக வேண்டும், ஆகாதகாரணம் சாந்தசம் என்றுணர்க வினவியபூமிகாப்யாசக் கிரமத்தைக்கூறுபவராய ஸ்ரீ வசிஷ்டபகவான், அதன் அதிகாரியைப் பிரவிருத்தி சாஸ்திராதிகாரியினும் வேறென்று காட்டற்பொருட்டு அவ்விருவரையும்பகுத்து அவர் தம்மிலக்கணபேதக்கூற்றைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:—போகவென்பதாதி பிரவிருத்தனென்றும் நிவிருத்தன் என்றும் வேதமார்க்கத்த புருடர் இருவகையினராவர்.

(ச) ஸ்ரீ இராகவர், செய்தொழில்=அப்பியாசம், செல்பவன்=பிரவிர்த்தன், மீண்டோன்=நிவிர்த்தன். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவ்விருவருள் ஆதியில் இராகாதிதோஷங்களினாலே விபரீதபுத்தியையுடைய பிரவிருத்தனது இலக்கணத்தைக்கூறல்;—சுவர்க்கமென்பது.

சுவர்க்க முத்தி களைவிரும்பித் தொடரு மவர்தங் குறிகேளா
யுவக்கும் வீடே யெவ்வளவிற் றுலகநடையே யுயர்ந்ததெனு
நிவக்கு மறுதி யாற்செய்வோ னெடும்போ கத்திற் செல்பவனு
மெவர்க்கும் விவேக முறுபிறவி யெய்தற் கரிய வியல்பினதே

(ப - ரை) சுவர்க்கமுத்திகளை விரும்பி = துறக்கமோக்ஷங்களை யவாவி, தொடரும் அவர்தம் குறிகேளாய் = அவற்றிற்குரிய சாதனங்களை யனுட்டிக்கும் அவ்வதிகாரிகளின் இலக்கணங்களைக்கேட்பாயாக, உவக்கும்வீடே யெவ்வளவிற்று=சந்தோஷிக்கும்மோக்ஷமே எத்தகையது, உலகநடையே யுணர்ந்ததெனு = சம்சாரவொழுக்கமே மேலானது என்று, நிவக்கும் அறுதியால்=அதிதிடநிச்சயத்தால், செய்வோன்=அதற்குரிய சாதனத்தை யனுட்டிப்பவன், நெடும்போகத்திற் செல்பவனும் = தீர்க்க சமுசாரத்திற் பிரவிருத்திப்பவனும், எவர்க்கும்=எத்தகைய பிராணிகட்கும், விவேகமுறுபிறவி =விவேகத்தோடுகூடிய ஜன்மம், எய்தற்கரிய இயல்பினதே=கிடைத்தற்கரிய சுபாவத்ததேயாம்.

(ஸ்ரீ - வீர) சுவர்க்க அபவர்க்க உன்முகர்களாய அவர்தம் மிலக்கணம் கூறக்கேட்குதி. சர்வவிஷயசூனியத்தகையானே பிரசித்தமாயநிர்வாணம் எவ்வளவினதாம்? போகாஙிகளின் வெகுமானவிடயம் அஃதாகாதாம், மேற்கீழாய் போகங்கள் நிறைந்த சம்சாரமே யெனக்கு மேலானதாம்; கூறியுமுள்ளார்:—ஒன்றுமில் விருந் தாவனத் தூடினும், குன்று புன்னரியாதலைக் கோருவான், பொன்று மும்விட யம்பல போதிலா, வென்றுங் கௌதம மோக்கத்தை யிச்சியான். என்றிந்தப்பிரகாரமாக நிச்சயித்துச் செய்யத்தக்கனவாய நித்தியநைமித்திககாமிய கருமசமுதாயத்தின் கருத்தாயாவனே அவன் பிரவிருத்தன் எனப் பேசப்படுவன்.

(ச) சுவர்க்கமுத்திகளை விரும்பி=சகாமதர்மானுஷ்டானத்தாற் சுவர்க்கத்தை விரும்புமவன் பிரவிர்த்தனுவன், நிஷ்காமதர்மானுஷ்டானத்தான் முத்தியை விரும்புமவன் நிவிர்த்த

னுவன், குறி=இலக்கணம், வீடு=நிர்வாணமானது, எவ்வளவிற்று, புஜிக்கத்தகுந்த பொருளொன்றுமின்மையின், அற்பமேயாம், உலகநடையே = சம்சாரமே, எனக்கு உயர்ந்தது, புஜிக்கத்தகுந்த விஷயசுகங்கள் அநந்தமாதலின், விரும்பும்பொருளாம், எனுநிவக்கும் அறிதியால்=எனநிர்ணயித்து, எவன் பிரவிருத்தியேதுக்களான கருமங்களைச்செய்வோன், அந்தப் புருடன், செல்பவனும்=பிரவிருத்தனும். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை) நிவிருத்தனைக் குறிப்பிப்பவராய் நிவிருத்தி ஹேதுவான விவேகத்தை வருணிக்கும்பொருட்டு அதனது துர்லபத்தன்மையையறைதல்:—எறியுமென்பது.

எறியுங் கடலி னுகத்துளையி லாமைக் கழுத்துப் புகுவதுபோற்
பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப்பிறந்து
முறியும் பிறவிப் பயனிலதிம் மோக மமையுஞ் செய்தொழிலாற்
செறிவ தென்னே யிவற்றாலே தினங்க ளெல்லாஞ் சென்றிடுமால்.

(ப-ரை) எறியுங்கடலில் = அலைகண்மிகுத்தலையுஞ் சமுத்திரத்தில், நுகத்துளையில்= நுகத்தடித்துவாரத்தில், ஆமைக்கழுத்துப்புகுவதுபோல்=கூர்மத்தின் களம்பிரவேசிப்பதே போல், பொறிவெம்பிறவியநேகத்தால்=துயரந்தரும் கொடூரஜன்மங்கள் அநேகஞ் சென்ற பின்னர், புருடன் விவேகியெனப்பிறந்து=அதிகாரியானவன் விவேகியென்று சொல்லும் படியாக ஜன்மித்து, முறியும்பிறவிப்பயனிலது=ஜனனமரண சமுசாரங்கெடும் பிரயோஜனமில்லாமல், இம்மோகமமையும் செய்தொழிலால் = இந்த மயக்கம்பொருந்தும் செய்வினைகளால், செறிவதென்னே=பொருந்துவது யாதுகொல், இவற்றாலே = இவ்வினைகளாலே, தினங்கள் எல்லாம் சென்றிடும்=நாட்கள் யாவும் வீணுகவேபோகும். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர) எங்ஙனம் ஜலஜந்துக்கணகோடிகளாலும், பிரசண்டப்வனன்களானும், வடவாநலக்கொதிப்பினுலும் பிறவாதியாலும் சலிப்பிக்கப்பெற்ற சஞ்சலபூர்வாபர அர்ணவத்துவய உதரத்தில், அலைந்துதிரியும் கூர்மங்களின் கழுத்துக்களின், அற்பத்தினும் அற்பமாய தரங்கசலனுதியாலேற்பட்ட பயத்திலும், விரைவிலேயே உட்பிரவேசங்களும் மீண்டும் வெளிப்பிரவேசங்களும் எண்ணிறந்தனவேயாம், அதுபோல, மிருத்தியு முகப்பிரவேசம் மறித்தும் வெளிப்போதல்வடிவ எண்ணிறந்தனவாய ஜன்மங்களினீற்றில் ஓரோயொருபுருடன் விவேகியாகப்பிறப்பான் என்பதாம். அல்லது க்ஷாரார்ணவத்திருக்கும் பேராமைக்கழுத்தானது எங்ஙனம் பலதடவை கண்டச்சித்திரத்தில் நுழைந்து வெளிவருவதாயினும், உப்புக்கடலிரதத்தையே உட்கொண்டு சுவைக்கும் அதனையே வெகுமானிப்பதாகிப் பிராளயம்வரையும் க்ஷீரார்ணவ இரசத்தை யறியவேமாட்டாதாம், கற்பாந்தத்திலோ அலையாநின்ற க்ஷாரக்ஷீரஅர்ணவங்களின் சேர்க்கைச்சமயத்தில் அவ்விரண்டின் உதரவடிவச்சித்திரத்தில், கழுத்துப்புகவே பாலிரதத்தைச் சுவைத்து, க்ஷாரரசத்தினின்றும் க்ஷீரரசத்தின் விவேகியாகி, அதன்பற்றுடையதாம், அதுபோலச் சீவனும் முன்விடயரசங்களையே வெகுமானிப்பவனுய் அநேக ஜன்மங்களினீற்றில், பாக்கியம் உதயமாகவே, அத்தியாத்ம சாஸ்திரரசத்தைச் சுவைத்து விவேகியாய் அதன்பற்றுடையவனுவன் என்பதாம். அல்லது அமிருதத்தை யுண்டாக்குதற்பொருட்டுச் சுராசுரர்களினுலே, சமுத்திரமதனஞ்செய்யும்போது எங்ஙனம் மந்திராசலமத்தின் ஆதாரமாங்கூர்மபூத பகவானுடைய, சமஸ்தபுவனுதார உதரத்தன்மையானே உள்ளிலும் வெளியிலும் கடையப்படுவதான சலார்ணவயுகத்தின் சித்திரத்தில் யாண்டுமுத

விலமிருதமுண்டாம், என்று சுவைத்தலால், பரீக்ஷிக்கும்பொருட்டு முயன்றகண்டம் அநேக உட்பிரவேச வெளிப்பிரவேச ஜன்மங்களினீற்றில், உள்ளிலாதல் வெளியிலாதல் யாண்டுதான் முதலிலமிருதமுண்டாயதோ ஆண்டேயதனைச்சுவைத்து க்ஷீராமிருதவிவேகி யாம், அதுபோல இம்முமுக்ஷுவும், சிரவண உபாயத்தால் வெளியிலும் மனனநிதித்தியாச னங்களிஞலே யுள்ளிலும், பிரஹ்மாத்மதத்துவ விவேகப்பொருட்டு முயன்றவனுய்ப்புமானுய் அநேக ஜன்மாப்யாசவசத்திஞலே யந்தத்தில் = உள்ளிலேயே, வெளிச்சிரவணுவசரத்திலே னும், நேர்விவேகத்தால் நிரதிசயாநந்தத்தைச் சுவைப்பான் என்பதாம், அல்லது சலியா நின்ற அர்ணவங்களிரண்டின் சித்திரத்தில்=மத்தியத்திருக்குந் தீரப்பொந்தில் கூர்மத்தின் சாதனபூதமானகண்டம் புகும்போது எங்ஙனம் முன்னேங்கலும் பின்வாங்கலும் ஆமோ அங் ஙனமே சித்திரநிலையிலாதல் யாண்டும் விசிராந்தியடையாதோ, அங்ஙனம் பழையபவசா கரத்தைவிடுத்துப் பவாந்தரப்பொருட்டுப்புகவிரும்பிய ஜீவனுக்கு எவ்விடத்தும் இளைப்பாறு தல் இலையாம், அங்ஙனமன்றே முற்பிறப்பில் ஜராமரணுதி துக்கபரம்பரையாம் வரும்பிறப் பிலுமாங்கேயாம், பாலியாதிதுக்கபரம்பரையாம் இடையில் நிகழ்வதிலும், யாதஞதேகத்தில், ஆதல், கருப்பவாசத்திலாதல் பெருந்துயரம் என்பதாம். இவ்வாறு துக்கமயங்களாகிய அநேக ஜன்மங்களினீற்றில், அதிகாரியானவன் யாதோ ஒரு புண்ணியபரிபாகத்திஞலே விவேகியா வன். இத்துணைவியாக்கியானத்திற்கும் மூலமிருப்பது "அசையுங்கடலின் யுகத்துளையிலாமைக் கழுத்துப் புகுவதுபோ, விசையும் அநந்தம்பிறப்பீற்றில் எவனே விவேகியெனவிழுவான்" என்னுமிதுவாம். யுகம் நுகத்தடியெனவும் இரண்டெனவும் பொருள்பெறும். ஈண்டுத் தேரிற்சதுர, தென்பரவை யென்பனபோன்ற செய்யுட்களையும் உதாகரித்துக்கொள்க. எத் தகைய விவேகமிவனுக்குண்டாம் எனின் அதனைக்கூறல்:—முறியுமென்பதாதி. அந்தோ சம்சாரவிவத்தையசாரமாம் விவிதமும் விருத்தமும் ஆம்வியவஸ்திதி விவத்தையாம், விசி ராந்திசுகவீனமாம், எனக்கு இதனுற்கிடைத்ததுபோதும், கெட்டபயன்களையுடைய வினை களிஞலே யென்னேபிரயோஜனம்? அவற்ருலேதினங்கள் வீணேகழியும்.

(ச) எறியும்=அலைகளையுடைய, கடலின்=சமுத்திரங்களின், உகத்துளையின்=இரண் டின் மத்தியிலிருக்கும், ஆமை=கூர்மத்தினது, என்பதாதி முன்போன்றேயாம். முறியும் பிறவி=சம்சாரவிவஸ்தை, பயனிலது=சாரமின்மையதாம், ஆதலின் எனக்கு இம்மோகம்= இச்சம்சாரவிவஸ்தை அமையும், செய்தொழிலால்=சாரங்களின்றிய கருமங்களாலும், செறிவ தென்னே=யாதுபலம், இவற்ருலே = அந்தநிர்ச்சாரமான கருமங்களால், தினங்கள் எல் லாஞ்சென்றிடும், ஆல், அசை. (9)

(ஸ்ரீ-வீர - அ-கை) நிவர்த்தனையே விரித்துரைத்தல்:—தொழில் என்பது.

தொழிலின் மிகுதி யற்றுயர்ந்து துயர் தீரலீதே தென்றுள்ளே
யழிவி லறுதி யுள்ளோனே யடங்கத் திரும்பு மவனுகுங்
கழிவின் மயல்போய்ப் பவக்கடலைக் கடப்ப தெவ்வா றெனவுன்னு
மொழிவில் விசாரத் தால்விரத்தி யுள்ளே யுறுவ னுள்வேண்டா.

(ப - ரை) தொழிலின் மிகுதியற்று = வினைகளின் அதிசயமில்லாமல், உயர்ந்து = மேலாகி, துயர்தீர் அலீது = துக்கமற்றவது, ஏதென்று=யாதுகொலாமென்று, உள்ளே= மதியில், அழிவில் அறுதியுள்ளோனே=மாருத நிச்சயமுடையவனே, அடங்கத் திரும்புமவ னுகும்=அத்தியந்தம் சாந்தியாகத்திரும்பும் அதிகாரியெனப்பெறுமவன், கழிவில்மயல்போய்=

ஞானத்தாலன்றிக்கெடாத மோகம்நீங்கி, பவக்கடலைக் கடப்பதெவ்வாறென=சம்சாரத்தைத் தாண்டுவது எங்ஙனமென்று, உன்னும் = சிந்திக்கும், ஒழிவில் விசாரத்தால் = கெடாத வாராய்ச்சியினால், விரத்தியுள்ளேயுறுவன் = அந்தர்வைராக்கியத்தை யடைவன், நான் வேண்டா = தினந்தினம்.

(ஸ்ரீ - வீர) கிரியையினாலுண்டாக்கப்பட்ட வதிசயங்களாயவுதயம் அடைவு விகாரம் சமஸ்காரம் என்பவற்றானே, விடுபட்டுக் கூடஸ்தமாய், பரமவிசிராந்திக்கிடமாய் இருப்பது யாது என்பதாக விசாரித்து அது அவசியம் சம்பாதிக்கத்தக்கது என்னும் உள் நிச்சயவானே நிவிருத்தன் என நிகழ்த்தப்பெறுவன்; அவனுக்கு முதற்பூமிகையடைவின் கிரமத்தைக் கூறல்:—கழிவிலென்பதாதி எங்ஙன்விராகவானுகிக் குடும்பக்கடலைக் கடந்திடுவேன், இவ் வாறு விசாரபரனுயெப்போதாவன், நன்மதியோன், அப்போது போகவதன்சாதன சிந்தனை களில் உள்ளே தினந்தினம் வைராக்கியத்தை யடைந்திடுவன். விராகம்=வைராசியம்.

(ச) தொழிலின்மிகுதியற்று = கருமபல தாரதன்மியரகிதமாய், உயர்ந்து = மேலாய், துயர்தீரது = இளைப்பற்றது, ஏதென்றிங்ஙனமுள்ளே, அழிவில் அறுதியுள்ளோனே=நிச் சயமுள்ள முமுக்ஷுவே, திரும்புமவனுக்கும்=நிவிர்த்தனும் கழிவில் என்பதுமுதலிய மூன்று கவிக்கும் ஒருவாக்கியம், விரத்தி=வாசனைகளில் வைராக்கியத்தை. (10)

(ஸ்ரீ - வீர - அ - கை) முதற்பூமியை யடைவோன் நடையையேவிரித்துரைத்தல்:— உதாரதீயவென்பன.

உதார மான தொழில்களிலே முயன்று நாளு முண்மகிழ்வன்
கதாவு கின்ற கிராமியமாங் கருமச் சழக்கிற் குச்சரிப்பன்
விதான கருமங் களைச்செய்வன் விளம்பான் செய்த கருமங்கள்
பதாதி யுலகோர் வெருவாத படிமெத் தென்ற தொழில்புரிவன்.
தீய வினைக்கஞ் சுவனென்றுஞ் செறியும் போக வேட்கையுறு
னேய நயமாய் மெத்தென்று நிபுண மாகி யிடம்பொழுதுக்
கேய வுரைக ளுரைசெய்வா னிவ்வா றென விவன்றானே
யாய பொழுது முதற்பூமி யான வொன்றை யடைந்தவனே.

(ப - ரை) உதாரமான தொழில்களிலே = ஜபதபாதிகளிலே, முயன்று = பிரயத்தன முடையவனாகி, நாளும்=அனுதினம், உண்மகிழ்வன் = அந்தர்ச்சந்தோடத்தை யடைவன், கதாவுகின்ற கிராமியமாம்=நிந்திக்கத்தக்க நீசத்தனமான, கருமச்சழக்கிற்குச் சரிப்பன் = மௌட்டியமான சேஷ்டைகளில் அருவருப்பையடைவன், விதான்கருமங்களைச் செய்வன் = தனக்கேற்ற தொழில்களைமாத்திரம் செய்வன், விளம்பான்செய்த கருமங்கள் = இயற்றிய தருமகாரியங்களை வெளியிலியம்பான், பதாதியுலகோர் = எவ்வுயிரும், வெருவாத படி = பயந்துநடுங்காதபடி, மெத்தென்ற தொழில்புரிவன் = மெதுவான செயல்களையே செய்வன்.

தீயவினைக்கஞ்சுவன் என்றும்=நிடேதகாரியங்கட்கு எப்போதும் பயப்படுவன், செறியும் போகவேட்கையுறான் = வினைவயத்தால்வந்த போகங்களிலும் ஆசையையடையமாட் டான், நேயநயமாய் மெத்தென்றுநிபுணமாகி=அன்புடன் வணக்கமாய் அமைதியாகவே இன் புடனுசிதமாய், இடம்பொழுதுக்கேயவுரைகள் உரைசெய்வான் = தேசகாலத்துக்குத்தக்க

படியாய வார்த்தைகளை வசனிப்பன், இவ்வாறன இவன்றனே = இங்ஙனமான இவ்வதிகாரியே, ஆயபொழுது = இவ்வாறாயபோது, முதற்பூமியானவொன்றை யடைந்தவனே = பிரதமபூமியாகிய ஒருபடியை அடைந்தவனாவன்.

(ஸ்ரீ-வீர) உதாரரூபங்களாய்ச் சித்தசுத்திக்கனுகூலங்களாய் உள்ளத் தூய்மை நல்லோர் உறவு கடவுள்வழிபாடு ஜபாதிக்கிரியைகளில் அவாவுடன்சேர்வன், அதனுற்றினந்தோறும் சித்தசுத்தி விருத்தியாகவே திருஷ்ணாக்ஷயமாகவே, பரமசந்தோடத்தை யடைவன், இகழத்தக்க ஜடசேஷ்டைகளில் எப்போதும் அருவருப்பையடைவன், மர்மமாகப் புண்ணியகருமங்களைச்சேவிப்பன், பிறர்களின் இரகசியதோஷங்களாகிய மர்மங்களை, வெளிப்படவிளம்பான், பிறர்கண் மனதிற்கும் தன் மனத்திற்கும் துன்பமுண்டாக்காதபடியாய அற்பாயாச மகாபலங்களோடுகூடிய இயமநியமாதி கருமங்களையியற்றுவன், பாவத்தினின்றும் எப்போதும் பயத்தை யடைவன், போகங்களிலும் பாவம் அவசியம்பவித்தலின் அவற்றையும் விரும்பமாட்டான்; நேயவணக்கங்களோடுகூடி உத்வேகஞ்செய்யாமற் கோமளங்களாய் உசிதங்களாய்ச் சத்திய பிரியஹிதாதி ரூபங்களாய் இலங்கும் தேசகாலங்கட்குத் தக்கபடியாய வசனங்களை நன்கு பேசுவான்; இவ்வாறாய குணவிசிஷ்டபுருடனுடைய அவதாரம் சற்சாத்திர சிரவணாதிகாரவடிவப்பிரதம பூமிகையிலாம் எனல்:—ஆயபொழுதென்பதாதி. அப்போதிவன் பிரதமபூமிகையாமொன்றை யடைந்தவனாவன்.

(ச) உதாரமான=:பிரசித்தமாய்ச் சகுணப்பிரஹ்மத்திலுறும் தொழில்களிலே=கிரியைகளிலே, உலாவி=செய்தற் குச்சாகமுற்று, கிராமியமாம் = கிராமத்திற்சனித்த, கருமச்சழக்கில்=ஜடர்களின் கிருஷியாதிகளில், குச்சரிப்பன்=பொருந்திநில்லான், முயற்சியான் என்பதுபொருள். செய்தமருமங்கள் என்பது வடமொழிப்பாடம், செய்த=பார்செய்த மருமங்களை, விளம்பான் = வெளிப்படுத்தான், கிஞ்சிலுமருமங்களைப் பரிசிக்கலாகாதென்னும் நிடேதத்தினுலென்க. பதாதியுலகர் வெருவாதபடி = அன்னியர்க்கு அபயங்கரமான, மெத்தென்றதொழில்=அகிம்சையாகிய கருமங்களை, புரிவன்.

நேயநயமாய் சிநேகநயங்களின் விரிவையுட்கொண்டதாய், நிபுணம்=உசிதம், உரைகள் = வசனங்களை, தடையின்மை யுற்சாகம் விருத்திகளில் க்ரம என்பது ஆற்பனேபதமாம். விரிவு ஸ்ரீ வீரசேகர கௌமுதியுட்காண்க. (11-12)

(ஸ்ரீ - வீர - அ - கை) அடைந்தவன் நடையையேயலங்கரித்தல்:—ஒக்கவென்பது.

ஒக்க மூன்று கரணத்தா லுயர்நல் லோரைப் பின்செல்வன்
மிக்க நன்னூ லெங்கணும்போய் விரும்பிக் கொணர்ந்து பரிசயிப்பன்
றொக்க சனன மறுப்பதற்குத் துணிந்திவ் விசாரம் படைத்தவனே
தக்க பூமி யறிந்தோனுந் தனகா ரியனு மற்றவனே. (தகுமா ரியனு மற்றவனே)

(ப - ரை) ஒக்கமூன்று கரணத்தால்=திரிகரணங்களும் ஒத்து, உயர்நல்லோரைப் பின்செல்வன்=மேலானசாதுக்களை யனுசரித்துப் பின்றொடர்வன், மிக்கநன்னூல் எங்கணும்போய் = மிகவுநல்ல அத்தியாத்மசாஸ்திரங்களை யெவ்விடத்திலுஞ் சென்று, விரும்பிக் கொணர்ந்து பரிசயிப்பன்=விருப்பத்தோடுங் கொண்டுவந்து அப்யசிப்பன், தொக்கசனன மறுப்பதற்கு=அநாதியாகத்தொடர்ந்த ஜநநமரண சம்சாரத்தைக்கெடுப்பதற்கு துணிந்து = தீரத்துடன், இவ்விசாரம்படைத்தவனே=இந்த ஆராய்ச்சியைக்கொண்டவனே, தக்கபூமி

யறிந்தோனும்=தகுதியாய் முதற்பூமியையுணர்ந்தவனும், தனகாரியனுமற்றவனே = சேடன் தற்காரியப்புலியாவன், தனது தனசம்பாதன காரியத்திற்கண்ணுயிருப்பன். (தகுமாரியனு மற்றவனே=தக்கசன்மார்க்கத்திருப்பவனும்)

(ஸ்ரீ - வீர) மனத்தினுலும் கருமத்தினுலும் வாக்கினுலும், சாந்திதாந்திஞான விஞ்ஞான சம்பன்னர்களாகிய சாதுக்களை நன்குசேவிப்பன்; எங்கிருந்தேனும் கொண்டுவந்து ஞான சாஸ்திரங்களை நன்கப்யசிப்பன் அதாவது, எங்கிருந்தேனும் அவர் தஞ்சேவைக்கநுகூலமாய தனுதிகளையும் பிறசாதனங்களையும் கொண்டுவந்து அவர்களைச்சேவிப்பவனுய் அவர் வாயி லாக ஞானசாஸ்திரங்களையும், புராணங்களையும், மோக்ஷதர்ம அத்தியாத்ம சங்கிதைகளையும் பிறநன்னூல்களையும் சிரவணிப்பன்; இவ்வண்ணம் சம்சார உத்தாரணப்பொருட்டாராய்ச்சி செய்பவனியாவனே அவன் முதற்பூமியிற்புகுந்தவன் எனப்பெறுவன், சேடன் = கூறிய சாதனசதுஷ்டயாதி சம்பத்திஹீனனே, அத்தியாத்மக் கிரந்தப்பற்றுடையவனுயினும், இரா காதியினுலே அநதிகாரி ஜனவஞ்சனையினுலே, சம்பாதனையாதியினுலே உதரபாணசீலத் தன்மையானே சுவார்த்தனுகிய வஞ்சகனுவன் என்பதாம். அவ்விது சுபேச்சையெனப் பெயரிய முதற்பூமியாம்.

(ச) நல்லோரை=ஞானிகளை, பின்செல்வன்=சார்ந்து பணிசெய்வன், இவ்வாறுன இவன்றனே, ஆயபொழுது=இங்ஙனம் விசாரபானுனசன்மதி யெப்போதாவனே அப்போது சுபேச்சைரூபமான முதற்பூமியான வொன்றை யடைந்தவனேயாமென்பது அந்நுவயம், ஜனனமறுப்பதற்கு இவ்விசாரம்படைத்தவன், முற்கூறிய பிரகாரமாக விசாரமுற்றவனே பூமியறிந்தோன்=முதற்பூமியைப் பெற்றவனும், மற்றவனுரியனும் சன்மார்க்கத்திருப்பவனு மென்பதுபொருள். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவனுக்கு முறையாக இரண்டாவது பூமிப்பிரவேசமுறையைக் கூறல்:—இருள்செறியென்பன.

இருளில் விசார மெனுநாமத் திரண்டாம் பூமி யெய்தினனுஞ்
சுருதி மிருதி நல்லொழுக்கந் தொடர்தா ரணைநற் றியானங்கள்
மருவு கருமங் களைக்கேட்பான் மாசில் விருத்திப் பொருணிகழ்த்தும்
பெருகு புகழ்சேர் பண்டிதரிற் பெரியோர் தம்மை யினிதடைந்து.

செறியும் பதார்த்தப் பிரிவறிந்து செய்யுந் தவிருங் காரியங்க
ளறிவன் செல்வ மானமனைக் கதிபன் மனையை யறிவதுபோன்
மறியு மதமாச் சரியமபி மான முலோப மோகமெலா
வெறிது புறத்தெய் தினுஞ்சிறிதாய் விடுவன் பாம்பு தோல்விடல்போல்.

(ப - ரை) இருளில் விசாரமெனுநாமத்து=அந்தகாரம் அகலும் ஆராய்ச்சியென்னும், பெயரையுடைய, இரண்டாம் பூமியெய்தினனும் = துவிதீய பூமிகையையடைந்தவனும், சுருதிமிருதி நல்லொழுக்கம் = உபநிடதம்கீதை சதாசாரம், தொடர்தாரணை நற்றியானங் கள்=தொடர்பாகச்செய்யு மதாரணைதியானம் சமாதிகள், மருவுகருமங்களை = அவற்றிற்குச் சாதகமாகிய பயிற்சிகளை, கேட்பான்=வினவும்பொருட்டு, மாசில் விருத்திப்பொருள்நிகழ்த் தும்=குற்றமற விரிவுரைசெய்யும், பெருகுபுகழ்சேர் பண்டிதரில்=பூரணமான புகழ்நிறைந்து பிரசித்தமான போறிஞரில், பெரியோர்தம்மை யினிதடைந்து=அசேஷ சாஸ்திரபாண்டித்

தியமும் அப்பிரதிபந்த அபரோக்ஷ பிரஹ்மசாக்ஷாத்காரமும் உள்ளமகான்களை விதிப்பிரகாரம் சரணாகதியாக வடைந்து.

செறியும் பதார்த்தப்பிரிவறிந்து = பதங்கட்குப்பொருந்திய பதார்த்தங்களின் ஆத்மா அநாத்மாக்களின் பகுப்புணர்ந்து, செய்யுந்தவிருங் காரியங்கள் அறிவன் = விதானச்செயல்களையும் நிடேதச்செயல்களையும் தெரிந்துகொள்ளுவன், செல்வமான மனைக்கதிபன் = ஐசுவரியம் நிறைந்தவில்லத்தின் அதிபதியானவன், மனையையறிவதுபோல் = இல்லத்தைத் தெரிந்துகொள்வதேபோலும், மறியும்=மீண்டும், மதம்மாச்சரியம் அபிமானம் = கருவம் பொறாமை யான் எனதென்னும்நேயம், உலோபம்மோகமெலாம்=கொடாமை மயக்கம் முதலியயாவும், வெறிதுபுறத்தெய்தினும் = காரியபரியந்தமின்றி வெளித்தோற்றமாத்திரமாய்த் தோற்றியபோதினும், சிறிதாய்விடுவன் = அற்பமெனச்சொற்ப ஆராய்ச்சியினால் தியாகிப்பன், பாம்புதோல் விடல்போல்=கட்செவிகஞ்சுகத்தைத் தியாகித்தல்போலும்.

(ஸ்ரீ - வீர) இரண்டாவது விசாரமெனப்பெயரிய யோகபூமியை அதிகாரப்பிராப்தியினாலே அடைந்திடுவன்; ஆண்டவன் என்னசெய்வான் எனக்கூறல்:—சுருதியென்பதாதி. சுருதிகளின் ஸ்மிருதிகளின் சதாசாரங்களின் தாரணைத்தியான கருமங்களின் சாத்தியசமாதியோடும் சாதனங்களாகிய இயமநியம ஆசனப்பிராணாயாம பிரத்தியாகாரங்களோடும் பிரதிபாதகமாய யோகசாஸ்திரத்தினது முக்கியமாய அனுஷ்டானஞ்செய்தல் செய்வித்தல் செய்தலாலுண்டாம் பலத்தோடுகூடிய வியாக்கியானத்தினாலே மிகப்பிரசித்தமான, ஆத்மதத்துவ அநுபவ உபதேச குசலத்தன்மையான் மேன்மைமிக்க பண்டிதகுருமார்களை அதாவது ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகனைச் சிரவணமனனாதி விசாரப்பொருட்டுச் சரணாகதியா யடைந்திடுவன். அங்ஙனமேமறையும் அறைகின்றது:—"அதனையுணர்தற்கவன் சுரோத்திரியனும், நிதியைப்பிரம நிட்டனுங்குருவையே, சததமாயடைக சமிற்பாணியனாய்" என்பதாம் சுயம் வியாகரணாதியங்கங்களை யுணர்ந்திருத்தலின், பதங்களின் வாச்சியலக்ஷியரூபங்களாய அவற்றின் அருத்தங்களின் இலக்கணாதி நல்விபாகந்தெரிந்தவிடன் குருவாயிலாகச் சிரவணஞ்செய்தவனாகி காரியசாத்தியமாய கருமகாண்ட அருத்தத்தின் அதன்விலக்ஷண அகாரியசித்தப்பிரஹ்ம காண்ட அருத்தத்தின், விசேடநிரணயத்தை கிருகபதியானவன் தனதுகிருக அங்கனவிபாகத்தைப்போல் வெட்டவெளியாகத் தெரிந்துகொள்ளுவன், மதாபிமானமாற்சரிய மோக லோப அதிசயங்களைச்சிறிது பாகியத்தின் மாத்திரம்பற்றியதுபோற் காணப்பெறினும், வரிய மருமூரகபதிவபுவினிற் கஞ்சுகங்கள்போல் விடுவன்; வெளியில் உலகமரியாதையை யனுசரித்துச்சிறிது பற்றியபோதினும் கணமேனுங்கர்த்தலரிதாம் என்க, என்றதனால் முதல் பூமியிலேயே அவற்றிற்குண்ணீக்கத்தன்மை காட்டப்பெற்றதாம்.

(ச) இருளில் விசாரம் என்பது முதலிய இரண்டரைக்கவியும் ஒருவாக்கியம், தியானங்கள் = அநுசந்திக்கத்தக்கவற்றையும், கருமங்களை = செய்யத்தக்கவைகளையும், மருவும், மாசில் விருத்தி, பிரசித்தமான, பொருணிகழ்த்தும், அத்தியான்மசாத்திரங்களின் பொருளுரைப்பதால், பெருகுபுகழ்சேர் பண்டிதரிற்பெரியோர் தம்மையினிதடைந்து, அத்தியான்மிகசாஸ்திரத்தைக் கேட்பன்.

பதார்த்தப்பிரிவறிந்து=நித்தியாநித்திய வஸ்து விபாகத்தையறிந்து, மனைக்கதிபன்= கிருகபதி, மனையை = கிருகத்தை, அறிவதுபோல், செய்யுந்தவிருங் காரியங்கள் = காரியா

காரியங்களின் நிர்ணயத்தையுள்ளபடி யறிவன், சிறிதாய்ப்புறத்துப்பொருளாய், எய்தினும்=தோற்றினும், மதாதிகளனைத்தையும், பாம்புதோல் விடல்போல் விடுவன். (14-15)

(ஸ்ரீ-வீர - அ-கை) இரண்டாவதுபூமியை யுபசங்கரித்து மூன்றாவதுபூமியேறுதலைத் தொடங்கல்:—மதியென்பது.

மதியிவ் வாறுள் ளவனூலால் வணங்கு குருவா னல்லோரா
லதிகங் குய்யப் பொருளனைத்தி னறுதி யறிவ னதற்பின்னர்
முதிர்பற் றின்மை யெனப்பெயரா மூந்து மற்றைப் பூமிதனைப்
புதிதா மலரின் மெல்லணைபோற் பொருந்தி நிற்பன் பொலிந்தவனே.

(ப-ரை) மதியிவ்வாறுள்ளவன்=இத்தகைய புத்தியுள்ளவன், நூலால்=சாஸ்திரத்தால், வணங்கு குருவால்=தான்போற்றுங் குருவினால், நல்லோரால்=சாதுக்களால், அதிகங்குய்யப்பொருளனைத்தின் = மிகமிகவும் இரகசியமான வஸ்துக்கள் எல்லாவற்றின், அறுதி = துணிபை, அறிவன்=தெரிந்துகொள்ளுவன், அதற்பின்னர்=அதன்பின்பு, முதிர்பற்றின்மை யெனப்பெயராம் = திடமான சங்கமின்மையெனப் பெயர்பூண்ட, மூந்தும்=மேம்பட்ட, மற்றைப்பூமிதனை=அன்னியபூமியை, புதிதாமலரின் மெல்லணைபோல் = நவமல்லிகைமெல்லிய சய்யையைப்போல, பொருந்திநிற்பன் பொலிந்தவனே=அப்பியாசத்தில் மிகவும் ஊக்கமுடைய அந்த அதிகாரிதானே அணைந்து வாழ்வான்.

(ஸ்ரீ - வீர) இவ்வாறாயமதியையுடையவன் சாஸ்திரகுரு சற்சனசேவனத்தினாலே இரகசியங்கள் முழுவதையும் உள்ளபடியே அறிந்துகொள்ளுவன்; அதாவது, சாஸ்திரரகசியமாகிய பரமதாற்பரியத்தைப் பிரமாண அசம்பாவனையையகற்றித் தெரிந்துகொள்ளுவன்; குருசற்சனபிமதமாகிய ஆத்மரகசியத்தைப்பிரமேய அசம்பாவனையையகற்றித் தெரிந்துகொள்ளுவன் என்பதாம் இவ்வண்ணம் இரண்டாவது பூமியை வெற்றிகொண்டவனுக்கு மூன்றாவது பூமியின் பிரவேசத்தைக்கூறல்:—முதிர் என்பதாதி அதன்பின்னர் அசங்கமெனப்பெயரிய அன்னிய மூன்றாவதுயோகபூமியை அடைந்திடுவன் இந்த அதிகாரி, காந்தன்மிருதுவான அமலமலர்ச்சய்யையை அடைவதேபோலும்,

(ச) மதியிவ்வாறுள்ளவன்=முற்கூறிய நல்வாசனையோடு கூடினவனாய் இரண்டாம் பூமியையடைந்தவன், குரு நல்லோரால் = குரு சற்சனசேவையென்னுஞ் சாதனத்தால், நூல்குய்யப்பொருள்=சாஸ்திரரகசியத்தை, அறுதி=உள்ளபடி நன்றாய் அறிவன், முதிர்பற்றின்மையெனப் பெயராமூந்துபூமி=மூன்றாவதானதனுமானசியென முற்கூறிய அதுவே மனஞ்சிறுகுதலால் விஷயங்களிற்பற்றின்மையின் பற்றின்மையெனப் பெயராம் ஆதலின் முன்னுக்குப்பின் விரோதம் இன்றாம். (16)

(ஸ்ரீ - வீர - அ - கை) மூன்றாவது பூமியிலிருக்கும் ஒழுங்கையே விரித்துரைத்தல்:—உள்ளபாயு மென்பன.

உள்ள படியே நூற்பொருளி னொழுக்கந் திரமாய்க் கைக்கொண்டு
தள்ளின் முனிவ ரிடந்தோறுந் தளர்வொன் றில்லா மெய்ஞ்ஞானத்
தெள்ளு கதையி னொழுங்குகளாற் றீர்க்க வாணா ளதுகழிப்பன்
பள்ளி கொளவு மிருப்பதற்கும் படர்ந்த பாறை யிடமாவன்.

பாயு மனமா றியநலத்தாற் பற்று வின்பஞ் சமமாகித்
தோயு மடவி களிலுலவித் தொக்க காலஞ் செலவிடுவ
னாயு நன்னூற் பரிசயத்தா லறங்கள் செயலான் மானிடருக்
கேயு மிந்தப் பொருளைக்க மிலங்கு முள்ள படியாக.

(ப - ரை) உள்ளபடியே நூற்பொருளின் = யதார்த்தமாகச் சாஸ்திரப்பொருளின், ஒழுக்கந்திரமாய்க் கைக்கொண்டு=நடையைத்திடமாய் அனுட்டித்துக்கொண்டு, தள்ளின் முனிவரிடந்தோறும் = ஆதரிக்கத்தக்க முனிவர்களது ஆசிரமங்கடோறும், தளர்வொன் றில்லா=கவலையெதுவுமில்லாத, மெய்ஞ்ஞானத் தெள்ளுகதையினொழுங்குகளால்=தத்துவ ஞானத் தெளிந்த கதைகளின்முறைகளால், தீர்க்கவாணளதுகழிப்பன்=நீண்டகாலத்தை நீப்பன், பள்ளிகொளவுமிருப்பதற்கும் = சயனித்துக்கொள்ளவும் வசிப்பதற்கும், படர்ந்த பாறையிடமாவன்=விசாலமான கற்பாறையையே ஸ்தானமாகக்கொள்ளுவன்.

பாயுமனமாறிய நலத்தால்=தாவும் உள்ளந்தணர்ந்த தன்மையால், பற்று வின்பஞ் சமமாகி=அசங்க ஆநந்தமொப்பாகி, தோயுமடவிகளில் உலவி=நிர்ஜனப்பிரதேசமாகிய கானனங்களிற் சஞ்சரித்து, தொக்ககாலம் செலவிடுவன் = நீண்டபோதைக்கழித்திடுவன், ஆயும் நன்னூற்பரிசயத்தால்=ஆராயும் அத்தியாத்ம சாஸ்திரங்களின் பழக்கங்களினாலே, அறங்கள் செயலால்=தருமமேசெய்தவினால், மானிடருக்கு = அதிகாரிகளுக்கு, ஏயுமிந்தப்பொருளைக்கம்=பொருந்திய இந்தவஸ்துவின் நாட்டமானது, இலங்கும் உள்ளபடியாக = விளங்கும் யதார்த்தமாக.

(ஸ்ரீ - வீர) இரண்டுசுலோகங்களும் இடமாவன் என்பதுவரையும், பூர்வபூமிகளிரண்டன் அனுவாதங்களாம், உள்ளபடியே சாஸ்திரவாக்கியார்த்தத்தில் நிச்சலமாக மதியை வைத்து, தாபச ஆசிரமவிசிராமங்களினாலும் அத்தியாத்மவாக்கிய முறைகளினாலும், சரீர முதலிய சமுசாரத்தையிகழ்தலினாலும், சமுசாரவைராக்கியத்தை யதிகப்படுத்தும் முறைமையினாலும், சிலைச்சய்யையை வாசஸ்தானத்தைக் கொண்டவனாகி நெடும்போதை நீப்பன் கிராமவாசஞ்செய்யின் விக்ஷேபம் வெகுவாகவருதலின் சமாதியப்பியாசஞ்சாதிக்க முடியாமையின் வனவாசவிஹாரத்தானும், சித்த உபசம சோபையினாலும், அசங்கசுக சௌமியத்தினாலும் அலங்கரிக்கப்பெற்றவனாகி யந்தநீதிமான், காலத்தைக் கழிப்பன், ஆண்டுச்சித்தந் தெளிவுற்றிருந்து கிளம்பியகாலத்தில் முற்பூமியிரண்டன்றருமம் அநுவிருத்தி இன்றியமையாததாம், என்றுகாட்டல்:—ஆயுமென்பதாதி சாதுசாஸ்திரங்களின் அப்பியாசத்தாலும், புண்ணியகருமங்களின் செய்கையாலும், ஜந்துக்கட்கு உள்ளபடியே இந்தவஸ்து திருஷ்டியானது தெளிவுபெறவரும்.

(ச) நூல்=அத்தியான்ம விஷயமான சாஸ்திரங்களின் வாக்கியப்பொருளின், ஆன்மாத்வைத விலக்கணத்தில், உள்ளபடியே, திரமாய் = நிச்சலமாகிய, ஒழுக்கம் = மதியை, கைக்கொண்டு, முனிவரிடந்தோறும்=தவசிகள் ஆச்சிரமங்களில், தளர்வொன்றில்லா, அத்தியான்ம நிஷ்டர்களோடும்மெய்ஞ்ஞானக் கதையின் ஒழுங்குகளால் = அத்தியான்மகதனக்கிரமங்களாலும் சம்சாரத்தை நிந்திக்கும் வைராக்கியக தனங்களாலும், சிலையில், பள்ளி=சய்யையிலாவது, எங்கேனும் ஓரிடத்தாசனத்திலாவது இருப்பவனாய், தீர்க்கவாணளது கழிப்பன் என்றதாயிற்று.

சமாதியில் மனமாறிய நலத்தால், பற்றுவின்பஞ்சம்மாகி=சத்தாதிசங்கசுகத்தினும் அன்னியமான சௌக்கியமாய் அலதுசங்க சுகமின்றி ஆன்மாவிற்களிப்பவர்களின் சௌக்கியமாய் எனலாம், சொரூபசுகமாயென்பது பொருள். விழித்ததிசையில், அடவிகளிலுலவி, காலம்= சீவிதகாலத்தை, செலவிடுவன், இந்தப்பொருளுக்கம், பற்றின்மையெனப் பெயராம் பூமிகையில் ஞானகக்ஷியாகிய இது என்பது பொருள். (17-18)

(ஸ்ரீ - வீர - அ - கை) அசங்கசுக சௌமியத்தாலும் என்னுங் கூற்றைப்பகுத்து வியாக்கியானித்தல்:—உற்றவென்பது.

(ச - அ - கை) அதிலே அவாந்தரபேதம் நிரூபித்தற்குரைத்தல்:—

உற்ற மூன்றும் பூமியைச்சேர்ந் துணர்ந்தோன் றானே யனுபவிக்கும்
பற்றி லாமை யிருவகையாம் பகுத்து நாமிங் குரைசெயக்கேண்
முற்று சாமா னியமொன்று முதிர்ந்த சேட்ட மொன்றாகும்
மற்றிவ் விரண்டு மோரொன்றி லிரண்டு வகையா மனுகுலத்தோய்.

(ப - ரை) உற்றமூன்றும் பூமியைச்சேர்ந்து=பயிற்சியாற்கிடைத்த மூன்றாவது பூமியிலிருந்து, உணர்ந்தோன்றானே யனுபவிக்கும்=அறிந்தவன்றானே அனுபவஞ்செய்யும், பற்றிலாமை யிருவகையாம் = சங்கமில்லாமை இரண்டுபிரகாரமாம், பகுத்து நாமிங்குரைசெயக்கேன்=பிரித்துயாம் இவ்விடத்துக் கூறக்கேட்குதி, முற்றுசாமானியம் ஒன்று=முடிந்த பொதுவென்று ஒன்றும், முதிர்ந்தசேட்டமொன்றாகும்=திடமான மேன்மையது மற்றொன்றாகும், மற்றிவ்விரண்டும்=கூறிய இரண்டும், ஓரொன்றில்=ஒவ்வொன்றும், இரண்டு வகையாம் மனுகுலத்தோய்=இருபிரிவான இலக்கணமுடையனவாம், மானவனுய் எழுந்தருளி வந்து மனுகுலத்தை மலர்த்தும்வள்ளலே.

(ஸ்ரீ-வீர) மூன்றாவதுபூமியை யடைவுற்று அறிஞன் சுய மனுபவிப்பன், இருவகையாம் அசம்சங்கம், அதனது பேதமாமிதனைக்கேட்டி; சாமானியமேயெனவும் விசேடமே யெனவும் இவ்வசம் சங்கம் இருவிதமாம். சாமானியம்=பூர்வ பூமிக்கொப்பானது.

(ச) மூன்றும்பூமியைச் சேர்ந்துணர்ந்தோன்=ஞானியென்னுமந்தச்சாதகன், சாமானியஞ்சேட்டமென்னு மிருவகையாம், பற்றிலாமையனுபவிப்பன் என்பதாம். (19)

(ஸ்ரீ - வீர - அ - கை) சாமானிய அசம்சங்கத்தின் இரண்டு இலக்கணங்களையும் சாற்றல்:—பொருள்கொல்வது பண்டமென்பன.

பொருள்க டமிற்செய் பவனல்லேன் புசிப்போ னல்லேன் றெளிவோனுங்
குருவு மல்லே னெனப்பற்றில் குணமாஞ் சாமா னியவிரத்தி
பருகு துன்ப மின்பமெலாம் பண்டை வினையால் வருமன்றே
யருள்செய் கடவுள் வசந்தானு மமைப்போ னுதை லெனக்கெங்கே.

கொல்வ தான பெருநோயாங் கொடிய போகப் பாப்பெல்லாஞ்
செல்வ மெல்லா மாபத்துக் கிடமாஞ் செத்தல் பிறப்பதற்கா
மொல்வ தான நற்புத்திக் குள்ள கவலை நெடுநோயாஞ்
சொல்வ ஞால மெலாங்காலன் றொலைக்க முயலும் விடாதென்றே.

பண்ட மனைத்தின் பற்றற்ற பகர்பா வனையுள் ளுறவுண்டாங்
கொண்ட வுயர்வாக் கியப்பொருளைக் குறிப்பா லழுந்து மனத்தோர்க்குக்
கண்ட விதுசா மானியமாங் கவர்பற் றில்லா வின்நெறியா
லண்டு பெரியோர் கூட்டரவா லறிவி லாதோர் நீக்கத்தால்.
(81-11)

(ப - ரை) பொருள்கடமிற்செய்பவன் அல்லேன் = வஸ்துக்களினிடத்தில் கருத்தாவு மல்லேன், புசிப்போன் அல்லேன் = போக்தாவும் அல்லேன், தெளிவோனுங் குருவுமல் லேன் = சீடனுமல்லேன் ஆசாரியனுமல்லேன், எனப்பற்றில் குணஞ்சாமானியவிரத்தியாம் = என்று பற்றற்றிருக்குங் குணமுடைமையே சாமானிய வைராக்கியமாம், பருகுதுன்பமின்ப மெலாம் = அநுபவிக்கும் சுகதுக்கங்கள் எல்லாம், பண்டைவினையால் வருமன்றே = பூர்வ கருமப்படி வருமல்லவோ, அருள்செய் கடவுள் வசந்தானும் = கிருபைசெய்யும் பரமேசுராது வயமாகவே யிருக்கும், அமைப்போனுதல் எனக்கெங்கே = என்றனக்குக் கருத்துருத் தகைமையாதல் யாண்டையதோ.

போகப்பரப்பெல்லாம் = போகவிஸ்தாரங்கள் யாவுமே, கொல்வதான கொடியபெரு நோயாம் = மீண்டும் மீண்டும் ஜனனமரணங்களையீயும் கடூரமான பெருத்த வியாதியாம், செல்வமெல்லாம் ஆபத்துக்கிடமாம் = ஐசுவரியங்கள்யாவும் அநேகம் விபத்துக்களையுண்டாக் குவனவாம், செத்தல் பிறப்பதற்காம் = ஜனித்து மரிப்பதற்கேயாம், ஒல்வதான நற்புந்திக்கு = அப்பியாசவசப்பட்ட நல்லமதியினுக்கு, உள்ளகவலை நெடுநோயாம் = சேருங்கிலேசம் தீர்க்க ஆமயமாம், சொல்வ ஞாலமெலாம் = உண்டெனச்சொற்றிடு இந்தச்சகமியாவற்றையும், காலன் ஒருலைக்குமுயலும் விடாது என்றே = யமன் துவம்சஞ்செய்ய இடையீடின்றி முயற்சிப்பன் என்பதாகவே.

பண்டமனைத்தின் = சகலபதார்த்தங்களின், பற்றற்ற = சங்கமற்ற, பகர்பாவனை = சொல் லியபாவனை, உள்ளுறவுண்டாம் = மனத்தில் ஊக்கமாகவேயுண்டாம், கொண்டவுயர் வாக்கி யப்பொருளை = ஞானசிரியன் இடத்தினின்றும் வாங்கிக்கொண்ட மேலான மகாவாக்கி யார்த்தத்தில், குறிப்பாலழுந்து மனத்தோர்க்கு = சுட்டற்று இரமிக்கும் தூயசித்தத்தினர்க்கு, கண்ட இது சாமானியமாம் = கூறிவந்த இது சாமானிய வைராக்கியமாம், கவர்பற்றில்லாவிந் நெறியால் = கொள்ளத்தக்க அசங்கமான இம்முறைமையால், அண்டு பெரியோர்கூட்டர வால் = அடையத்தக்க சாதுக்களது சங்கமத்தால், அறிவிலாதோர் நீக்கத்தால் = அசாதுக் களையகற்றி நீங்கலால்.

(ஸ்ரீ - வீர) தனதுதேகக்கிரியா பலன்களின் கருத்தாவுமல்லேன் போக்தாவுமல்லேன் ஆகலின் யான் உதாசீனன், பரக்கிரியாபலன்களின் பாத்தியனுமல்லேன் பாதகனுமல்லேன் ஆகலின் அசங்கனேயாவேன், போத்தியனுமல்லேன் போதகனுமல்லேன், என்னுந்துணி வானே பதார்த்தங்களிடத்துப் பற்றிலாமை சாமானிய அசங்கமென்பதாம் 1. சாமானிய அசங்கமத்தையே திடப்படுத்தும்பொருட்டு இலக்கணந்தரத்தால் விரித்தல்:—பருகு துன்ப தாதி. அடைவதாகிய சுகந்தானுதல் அடைவதாகிய துக்கந்தானுதல் யாவுமே முற்கருமநிரு மிதமாம் கருமசுதந்திரபக்கத்தில், பரமேசுரசுதந்திர பக்கத்திலோ பரம ஈசுர அதீனமேயாம்; தேற்றம் உத்தரபக்கத்தின் பிராமாணிகத் தன்மையை யிலக்குதற்பொருட்டாம், இருபக்கத்தி லும் எனக்குச் சுதந்திரமில்லாமையின், சுதந்திரன் கருத்தா என்னும் ஸ்ரீ பாணினி பகவா னது திருவாணையாய் கருத்திருத்தகைமை யாதுதானும், ஒன்றுமே யாகாதென்பதாம் அசம

சங்க உபயோகிகளாய அன்னிய அநாஸ்தா ஏதுக்களையும் பாவங்களிற்காட்டல்:—கொல்வு தென்பதாதி. போகவிஸ்தாரங்களெல்லாம் மகாரோகங்களாம், சம்பத்துக்களியாவும் பரம ஆபத்துக்களாம், பதார்த்தங்களின் சையோகங்கள் வியோகத்தின்பொருட்டே யாவனவாம், தீக்காதிகள் வியாதிகளேயாம், சர்வபாவங்களையும் நிரந்தரம்காலன் விழுங்குவதே வேலையா யிருக்கின்றான், பாவங்களையெல்லாம் அநாஸ்தையினாலே துச்சமென்றுதள்ளி, யாதொரு ஆந்தர அபாவனமுளதோ அதுவே, மகாவாக்கியார்த்தலக்கினமனத்தனுக்குச் சாமானிய அசங்கமமாம், இவ்வநாஸ்தையும் சிரவணாதி சகாயத்தோடு மகாவாக்கியார்த்த ஞான ஆசக்த னுக்கே அசம்சங்கசுகப்பொருட்டாம், அன்னியனுக்காகாதாம் என்பது கருத்து, இவ்வசம் சங்கமும் பூர்வபூமிகளிலேயே சற்சங்காதியுபாயங்களினாலே நன்குபயிலத்தக்கதாம் என்று கூறல்:—இம்முறை யோகத்தினாலும் மகான்மாக்களுடைய சையோகத்தானும், அசத்துக்க ளுடைய வியோகத்தினாலும், உள்ளே வஸ்துவானது வெட்டவெளியாம்.

(ச) செய்பவனல்லேன்—நிஷ்கிரியனாதலின் நான் கருத்தாவன்று, நித்தியதிருப்தனாகை யின் புசிப்போனல்லேன் சிதாகாசரூபனாதலின் தெளிவோனுமல்லேன், நிர்வியாபாரனாதலின் குருவுமல்லேன், எனல்—என்றிங்ஙனம், பொருள்கடமில், சங்கமின்மையே, சாமானியவி ரத்தி — சாமானியப்பற்றின்மையாம், இதனையே விரித்துரைத்தல்:—துன்பமின்பமெலாம் நிரீசுவரவாதத்தில், பண்டைவினையால் வரும், சேசுவரவாதத்தில் கடவுள் வசந்தானும் — ஈசுவராதீனமேயாம், இப்பக்ஷமிரண்டிலும், எனக்கு, அமைப்போனாதல் எங்கே, ஒன்று மின் றென்பது பொருள்.

போகப்பரப்பெல்லாம் — விஷயவிஸ்தாரங்கள் அனைத்தும், பரியந்த பரிதாபமுளதாத லின், பெருநோயாம், செல்வமெல்லாம்—சம்பத்தின் விஸ்தாரமனைத்தும் ஈட்டுதல் பேணுத லாதி நிமித்ததுக்கவேதுவாதலின், ஆபத்துக்கிடமாம், உள்ளக்கவலை — சிந்தைகள், புந் திக்கு—புத்திக்குக் கிலேசவேதுவாதலின், நெடுநோயாம், தொலைக்கமுயலும் — சங்கரிக்க முயற்சியுள்ளவனாய், காலன், ஞாலமெலாம் விடாதென்றே — விநாசஞ் செய்துகொண்டிருப் பன் என்றே.

உள்ளுறவுண்டாம், பகிர்பாவனை, விபாகவிசாரமென்னும் இதுபற்றற்ற சாமானியமாம்— சாமானியப்பற்றின்மையாம், என முற்கவியோடன்வயிக்க, இது மற்றொருகுணமாமென் றுணர்க. சேட்டப்பற்றின்மையைக்கூறல்:—இந்நெறியால் முற்கூறிய அப்பியாச யோகத் தாலும், பெரியோர் கூட்டரவாலும், அறிவிலாதோர் — துற்சனங்களின் நீக்கத்தாலும். (20-21-22)

(ஸ்ரீ - வீர - அ - கை) வெட்டவெளியாதலையே விரித்துரைத்தல்:—தானுமென்பது.

தானு முணர்வின் உட்டெளிவாற் றக்க புருட வருத்தத்தா
லானு நன்னூற் பரிசயத்தா லங்கை நெல்லி தோன்றுதல்போ
லூனுர் பிறவிப் பெருங்கடலி னுயர்கா ரணமாம் பெரியகரை
தேனு ரலங்கன் மணிமார்பா தெளியக் காணப்பெறுந் திடமாய்.

(ப - ரை) தானுமுணர்வின் உட்டெளிவால்—ஆன்மசம்வித்தின் உள்ளுஞ்சந்தானத்தி னால், தக்க புருடவருத்தத்தால்—தகுந்த புருடப்பிரயத்தனத்தினால், ஆனுநல்நூற் பரிசயத் தால்—கெடாதபலமுடைய அத்தியான்ம சாஸ்திரவிசாரத்தால், அங்கைநெல்லி தோன்றுதல்

போல்=உள்ளங்கைநெல்லிக்கனி பிரதீதியாதலேபோல, ஊனுர்பிறவிப் பெருங்கடலின் = சரீரமரணபவங்களான புனனிறைந்த பேரலைக்கடலின், உயர்காரணமாம் பெரியகரை = பரமகாரணமாம் பெரியதீரமானது, தேனூர் அலங்கல்மணிமார்பா=மதுகரம் நிறைந்து மூரலுந் தொடையலையும் கவுஸ்துபமணியையும் அலங்கரித்துக்கொண்டிருக்குந் திருமார்பனே! தெளியக் காணப்பெறுந்திடமாய்=வெட்டவெளியாய் அதிதிடமாய்க் காணப்பெறும்.

(ஸ்ரீ - வீர) மேலும் சிரவணமனன வடிவங்களாய ஆன்மசம்வித்துக்களின் உள்ளாவர்த்தனத்தினும், அங்ஙனமேயாம் ஸ்ரீ பகவான் வாதராயணரது சூத்திரமும் அறைகின்றது:—"ஆவிருத்தி பன்முறையுபதேசத்தால்" (பொருள்) ஈண்டுப்பூர்வபக்கத்திற் சிரவணுதிக்குப் பிரயாஜாதிபோலும் அதிருஷ்டார்த்தத்தன்மையுண்மையின், ஒருமுறை யனுட்டானம், சித்தாந்தத்திலோ குத்துதலேபோலும் பயன் கைவரும்வரை ஆவிருத்தியெனப் பலபேதமாம்; இவ்வதிகரணத்திற்குச் சிரவணுதிசாதனம் விஷயமாம், அஃதென்னெருமுறையே செய்யத்தக்கதா அல்லது அதன் ஆவிருத்திசெய்யத்தக்கதா, என்னும் ஐயப்பாடுளதாகவே, ஒருமுறையேயென்பது பூர்வபக்கமாம், சித்தாந்தமோ, ஷட்ஜாதிசுவரசாக்ஷாத்காரம்போலும் உணரமுடியாத ஆன்ம சாக்ஷாத்காரத்திற்கு ஆவிருத்தி விசிஷ்டசிரவணுதி சாத்தியத்தகைமையிருத்தலானே, அதனது ஆவிருத்தியே இயற்றத்தக்கதாம், என்னே, சிரவணிக்கத்தக்கது மனனிக்கத்தக்கது நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது என்பாதாதியாகப் பன்முறையுபதேசித்தலின் இவ்வண்ணமேயுணர்க உபாசிக்கவெனப் பன்முறைகேட்கப்பெறுதலின் உபாசிய சாக்ஷாத்காரவாயிலாகப் பலஹேதுக்களாய உபாசனைகளில் ஆவிருத்தி யுணரத்தக்கதாம். மேலும் குறியானுமாம்:—இரஸ்மிகளை நீ நன்காவிருத்திசெய்க என இரஸ்மிப்பன்மையுபாசனம் விதிக்கும்வாக்கியம், உணர்வி னுவிருத்தியைக்காட்டுகின்றது, ஆகலின் அக்குறியால்=அந்தநியாயத்தால், சாக்ஷாத்கார சாதனங்களில் ஆவிருத்திசெய்யத்தக்கதாம். என்பது சுருக்கம். ஆன்மவஸ்துவில் பிரமாணப்பிரமேய அசம்பாவனை யிரண்டன்நீக்கத்தால், வெட்டவெளியாதல்=இவ்வாறேயாம் ஆன்மவஸ்துவென்னும் விசுவாசகோசரத்தன்மை வந்துற்றபோது, அதாவது, புருடப்பிரயத்தனத்தினும் சந்தத அப்யாசயோகத்தினும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலச் சம்சாராம்புநிதியின் சாரமாயும் பாரமாயும் பரமகாரணமாயும் இலங்கும் வஸ்துவானது திடம்புடத்தன்மையுற்றபோது.

(ச) தானுமுணர்வின் உட்டெளிவால்=உள்ளே யான்மவிசாரத்தின் பிரயோகத்தாலும், புருடவருத்தத்தால்=புருடப்பிரயத்தனத்தால், ஆனு=நீங்காத, பரிசயத்தால் = சமாதி யப்பியாசத்தினல், அங்கைநெல்லி தோன்றுதல்போல், உயர்காரணமாம், பிறவிப்பெருங்கடலின் பெரியகரை = பிரபஞ்சாதீதமான பரப்பிரமத்தை திடமாய்த் தெளியக்காண்கின்றனன், காண்பவன். (23)

(ஸ்ரீ-வீர - அ-கை) சேட்டப்பற்றின்மை யிலக்கணங்களைத் தெரியப்படுத்தல்:—செய்யதத்தென்பன.

செய்வா னுனன் றீசன்றுன் செய்வா னலதென் பழவினைதா
னிவ்வா றுன சொற்பொருளி னெண்ண மெல்லா நிச்சயமாய்க்
கவ்வா ததிதூரத் தகற்றிக் கலந்து சாந்த மோனநிலை
யெய்வான் கருணை முகிலேமுன் பேசு சேட்டப் பற்றின்மை.

அகத்திற் புறத்தின் மேல்கீழி லாசை களிலா காயத்திற்
சகத்திற் பொருளிற் பொருளல்லா தவத்திற் சடத்திற் றனியறிவிற்
பகுத்துக் கருதா துபசாந்தம் பயின்று நினைவற் றொளியற்று
மிகுத்துப் பிறப்பற் றடிமுடியின் மேன்மை சேட்டப் பற்றின்மை.

(ப - ரை) செய்வான் நான் அன்று=யான் கருத்தாவல்லேன், ஈசன்றான் செய்வான்= பாமேசுரனேகருத்தன், அலது=அல்லது, என்பழவினைதான் = எனது பூர்வகருமந்தான், இவ்வாறான சொற்பொருளின்=இங்ஙனமான பதார்த்தத்தின், எண்ணமெல்லாம் = சங்கற்பம் யாவற்றையும், நிச்சயமாய் = துணிபாய், கவ்வாது அதிதூரத்தகற்றி = பற்றாது வெகுதூரத்தேநீக்கி, கலந்த சாந்தமோனநிலை=விரவிய உபசாந்த மௌனத்திதியே, பெய்வான் கருணைமுகிலே=நிரபேக்ஷ தயையைச்செய்யும் நவகனசியாமள மேனியனே! முன்பேசு சேட்டப்பற்றின்மை=பூர்வம்புகன்ற சிரேஷ்டப்பற்றின்மையாம்.

அகத்தில்புறத்தில் மேல்கீழில்=உள்ளில் வெளியில் மேலேகீழே, ஆசைகளில்=திசைகளில், ஆகாயத்தில்=அம்பரத்தில், சகத்தில்=உலகில், பொருளில்=வஸ்துக்களில், பொருளல்லாதவற்றில்=அபதார்த்தங்களில், சடத்தில் தனியறிவில்=ஜாட்டியத்தில் ஒப்பற்ற சேதனத்தில், பகுத்துக்கருதாது=பிரித்தெண்ணாது, உபசாந்தம் பயின்று=பரமசாந்தத்தையே யப்பியசித்து, நினைவற்று ஒளியற்று=எண்ணமற்றுப் பானமற்று, மிகுத்து=வியாபகமாய், பிறப்பற்று அடிமுடியில் மேன்மை=அஜமாய் ஆதிமத்யாந்தரகிதமாய் உள்ளநிலைமையே, சேட்டப்பற்றின்மை=மேன்மையான அசங்கமாம்.

(ஸ்ரீ - வீர) யான் கருத்தாவல்லேன் மற்றோ ஈசுரனேகருத்தன், எனது முன்செய்த இப்போதுசெய்யும் கருமம் இல்லையென்பதாதி நீக்கமதன் எதிர்மறையாதி விகற்பசப்தார்த்த வேதனத்தையும் வெகுதூரத்திலாக்கி துணிபாய் எம்மௌனமாயிருக்கும் உபசாந்த ஸ்திதியுளதோ அதுவே சிரேட்டப்பற்றின்மையின் இலக்கணமாம்; * மௌனம் என்னும் வாங்மனச் சக்ஷுராதிசேஷ்டாசூனியம் ஆகிய எவ்வாசனம்=அவஸ்தானம், நித்தியாசன பரிபாக பல நிருவிகற்பசமாதியானே சித்தியாநிற்குமோ அதுவே சிரேட்டப்பற்றின்மையாம். 1. உள்ளிலுமின்றி வெளியிலுமின்றிக் கீழிலுமின்றி மேலிலுமின்றி திசைகளிலின்றி ஆகாயத்திலின்றி, பதார்த்தத்திலின்றி அபதார்த்தத்திலின்றி ஜடத்திலின்றி சிதாபாசனிலின்றி, அதாவது இவற்றையெல்லாம் விடயம் செய்யாமல், யாதொரு பிரஹ்மைகரசியவிலீன சித்தவிருத்தியான்மகம் உள்வெளியாதி சர்வவஸ்து ஆலம்பன சூனியம் ஆகியஸ்திதியுளதோ அதுவே சிரேஷ்ட அசம்சங்கமாம்; யாதுசொப்பிரகாச சித்துரூபமோ ஒளிர்விப்பது அன்னியம் அற்றதோ சாந்தமாமோ ஆகாயத்தோடு ஒப்பானதாமோ, ஆதியந்தமற்றதாமோ அஜமாமோகாந்தமாமோ அதுவேசிரேஷ்ட அசம்சங்கம் என்பதாம்.

(ச) செய்வான் நானன்று=நான் கருத்தாவன்று, ஈசன்றானலது பழவினையே, செய்வான் = கருத்தாவாம், என்றிவ்வாறான, சொற்பொருளின் எண்ணமெல்லாம் = சப்தார்த்தாநுசந்தானமனைத்தையும், அதிதூரத்தகற்றி அந்தப்பிரஹ்மத்தில், சாந்தமாய் மௌனமாய் நிலை=இருப்பதுவே, சேட்டப்பற்றின்மையாம், இதனையே விரித்துரைத்தல்:—அங்ஙனம் மௌனரூபமாயிருப்பதே அகத்தில் முதலான தேசவிசேடங்களும், பாவாபாவரூபங்களும்

சடாசடரூபங்களும் ஆனபொருள்களால், பகுத்துக்கருதாது = பரிச்சின்னமாகாது, ஒளியற்று=தனக்கு அயற்பிரகாசமின்றி, நினைவற்று=தனக்குவேறான காரணமின்றி, பயின்று= சர்வப்பிரகாசமும் சர்வகாரணமுமாய், உபசாந்தமிகுத்துப் பிறப்பிறப்பற்று, அடிமுடிவின்றிய, மேன்மை=பிரகாசரூபமாயிருப்பது, இதுவேசேட்டப்பற்றின்மையாம் அந்தப்பிரஹ்மத்தில்=சர்வகாரண அபாதிதபிரபஞ்ச அதீதபரப்பிரஹ்மத்தில் என்பதாம். (24-25)

(ஸ்ரீ - வீர - அ - கை) அவ்விச்சமாதியானது நல்லொழுக்கத்தானே நிறைவுற்ற விவேகத்தினது பலமெனப்பகரும்பொருட்டு விவேகத்தைப் பதுமத்தன்மையானே ரூபித்தல்:— மகிழ்வென்பது.

(ச - அ - கை) இம்மூன்றும் பூமியின் ஏதுவைக்கூறல்:—

மகிழ்வாம் வாச மதுரமுடன் வருநற் றெழிலாந் தளிர்மேவித்
தகவா மனத்தா ணுனிசேர்ந்து தடையா முள்ளு நிறைந்தறிவா
மிகுமோர் கமல மடைந்துட்சேர் விசார விரவி யான்மலர்ந்து
பகர்மூன் றுமிப் பூமிதனைப் பலமாய்ப் பலிக்கும் பற்றின்மை.

(ப - ரை) மகிழ்வாம் வாசமதுரமுடன்=சந்தோஷமாம் சுகந்த இனிமையுடன், வருநற்றெழிலாந்தளிர்மேவி=வாராநின்ற சற்காரியமாம் இலைகளோடுகூடி, தகவாம்மனத்தாள்நுனிசேர்ந்து=தக்கதாம் சித்தநாளமுனையிற் சார்ந்து, தடையாமுள்ளு நிறைந்து=பிரதிபந்தகமாம் கண்டகம் பூரித்து, அறிவாமிகுமோர் கமலமடைந்து = உள்ளமிகுத்த விவேகமாகிய தாமரையைச்சேர்ந்து, உட்சேர் விசாரவிரவியான் மலர்ந்து=உள்ளுற்ற ஆராய்ச்சியாகிய சூரியனால் விரிந்து, பகர்மூன்று மிப்பூமிதனை=இருப்பதாகக்கூறும் இந்த மூன்றுவது பூமியை, பலமாய்ப்பலிக்கும் பற்றின்மை=பயனாகப்பயக்கும் அசம்சங்கம்.

(ஸ்ரீ-வீர) சந்தோஷ ஆமோதமதுரத்ததாய், சற்காரிய அமலபல்லவத்ததாய்=நிஷ்காமகரும உபாசன குருபணிவிடை சிரவணாதிகளேயாய இலைகளையுடையதாய், சித்தலக்ஷண நாளாக்கிரத்தில் அடைந்துள்ள இராகாதி வாசனைகளினாலேயுளவாய வெகுவெகு விக்கின முட்களினாலே நிபிடமாக நெருங்கியதாய், இருக்கும் அவ்விவ் வசம்சங்கமே மூன்றுவது பூமிகையாம்; இதுவேயுள்ளிருக்கும் விவேகபதுமமாம், விசார அருக்கவிகாசிதமாம், இவ்வசம் சங்கமென்னும் மூன்றுவது பூமியைப் பலமாய்ப் பலித்திடும் விவேகம்.

(ச) அமையும்புத்தி மகிழ்வாம் அதனாற்சநித்தவாசமென்னுங் களிப்புடன், மதுரம் என்னும் மகரந்தமுள்ளதாய், நற்றெழிலாம் = சற்காரியங்களேயென்னும், தளிர்=அமலமான பத்திரங்களை, மேவி, மனத்தாணுனிசேர்ந்து=சித்தமென்னுந்தாளினது நுனியிற்சேர்ந்து, தடையாம்=விக்கினங்களாகிய, முள்ளால்=முட்களால், நிறைந்து, உள் = இருதயத்தில், அடைந்து, விசாரரூபமான இரவியான்மலர்ந்ததாய், அறிவாம் விவேகரூபமான, கமலம் = கமலமானது, பற்றின்மையென்னும் இம்மூன்றும் பூமிதனையே பலமாகப்பலிக்கும். (26)

(ஸ்ரீ - வீர - அ - கை) முதற்பூமியே அநேக ஜன்மசஞ்சித புண்ணிய பரிபாகங்களினாலும் இக்லோகத்திய புண்ணியச்சேர்க்கைகளினாலும் தெய்வயோகத்தான் முளைத்திடுமாயின் அதுவே சற்சங்காதிகளினாலே பெருமுயற்சியினாலே இரக்ஷிக்கத்தக்கதாம், அதுகாப்பாற்றப்

பெறுமாயின் ஆயாசமில்லாமலே இரண்டாவதாதி பூமிகள் சித்திப்பனவாம், என்பதாக வாண்டேயதிக முயற்சியையுபதேசித்தல்:—மோகமென்பது.

(ச - அ - கை) இப்போது முதற்பூமியின் ஏதுவைக்கூறல்:—

மோக மில்லா தவர்செறிவான் முதுநல் லறத்தின் சமூகத்தாற்
காக தாலீ யம்போலக் கருத்தி லுதிக்கு முதலான
யோக பூமி யுதித்தலுமே யுள்ளே யமுத முளையொப்பா
மேக விவேக நீர்பாச்சி யிதுகாத் தளிக்கப் படுமுயன்றே.

(ப - ரை) மோகமில்லாதவர் செறிவால்=மயக்கமில்லாதவரது சேர்க்கையினால், முது நல்லறத்தின் சமூகத்தால்=முதிர்ந்தநிட்காம புண்ணியத்தின் கூட்டத்தினால், காகதாலீயம் போல்=காகதாலீயநியாயமேபோல, கருத்திலுதிக்குமுதலான யோகபூமி=மனத்திலுண்டாம் முதலாவதான யோகபூமி, உதித்தலுமே= உதயமாகிய அளவே, உள்ளே யமுதமுளையொப்பாம்=ஆந்தரத்தில் அமுத அங்குரசமானமாம், ஏகவிவேக நீர்பாச்சி=ஒப்பற்ற விவேகமாகிய ஜலத்தைவார்த்து, இதுகாத்தளிக்கப்படும் முயன்றே=இதுகாக்கப்பெற்று வளர்க்கப் பெறும் முயற்சி செய்தே.

(ஸ்ரீ - வீர) தத்துவவித்துக்களின் சேர்க்கையினாலும், தானமான பஜனாதியுபாயங்களினால்மேலனத்தாலும் புண்ணியகருமங்களின் சேர்க்கையினாலும், காகம் இருந்தது பனங்கனியும் விழுந்தது என்னும் நியாயத்தினாலே, முதற்பூமியானதுண்டாம். சேரப்பெற்ற அவரால் என்னசெய்யத்தக்கது எனிலுரைத்தல்:—யோகபூமியென்பதாதி. பூமியுண்டானமாத்திரமே அவர் தம்மால் அமிருதமுளையேபோல, அது விவேகநீர்தெளித்தலானே முயன்று காத்து வளர்க்கத்தக்கது; அதாவது, அவ்விசுத்தர்களானே அச்சுபேச்சை வடிவபூமி சிறிது சுபப்பிரவிருத்திவாயிலாகவுண்டானதும், மேகங்களினாலேயங்குரித்த பூமியேபோலத் தினந்தினம் விவேக வுபதேசலக்ஷண நீர்தெளித்தலானே வாடாதபடிகாத்து வளர்க்கத்தக்கது, கெட்ட பிரவிருத்தியாதி விக்கின நிவாரணயத்தனத்தினாலே பாலிக்கத்தக்கதாம்.

(ச) மோகமில்லாதவர்கள் = மோகமில்லாதவரென்னுஞ் சற்சனர்களின், செறிவாலும் நல்லறத்தின் = புண்ணியகருமங்களின் சமூகத்தாலும், காகதாலீயம்போல், கருத்தில், தெய்வகதியால், முதலான யோகபூமியுதிக்கும், இது=இப்பிரதமபூமி, அமுதமுளை யொப்பா யுதித்தலும், விவேகரூபமான நீர்ப்பாச்சி, முயன்றே = பிரயத்தனத்தினால், காத்தளிக்கப் படும். (27)

(ஸ்ரீ-வீர - அ-கை) எவ்வகையினாலேனு மிதனையே விருத்திசெய்யவேண்டுமென்ல்:— விடுதியென்பது.

விடுதி யாலே தழைக்குமிது விசாரத் தாலவ் விடுதிதனை
வடுவி லுழவர் நென்முளைபோல் வருந்தி வளர்க்க நாடோறு
மொடிவின் மறுபூ மிக்கிந்த வொன்றே சநந பூமியென
முடிவில் வெளியா மதிலிரண்டா மூன்றும்பூமி தனைப்பெறலாம்.

(ப - ரை) விடுதியாலே தழைக்குமிது=வைராக்கியத்தினாலே யங்குரிக்குமிது, விசாரத்தாலவ்விடுதிதனை=ஆராய்ச்சியினாலே அந்தவைராக்கியத்தை, வடுவில் = கோழைபடாத,

உழவர்—மேழிச்செல்வர், நென்முளைபோல்—சாலியங்குரங்காப்பதேபோல, வருந்திவளர்க்க நாடோறும்—கஷ்டப்பட்டு விருத்திசெய்கதினந்தினம், ஒடிவில் மறுபூமிக்கு — கெடாத மற்றையபூமி தனக்கு, இந்த ஒன்றே—இது ஒன்றுதானே, சனனபூமியென — ஜன்மபூமி யென்று, முடிவில்வெளியாம்—ஈற்றில் நன்ருகத்தெரியும், அதிலிரண்டாம் மூன்ரும் பூமி தனைப்பெறலாம்—அதனினின்றும் இரண்டாவது மூன்ருவது பூமியை அடைந்திடலாம்.

(ஸ்ரீ - வீர) இந்தச் சுபேச்சையானது சாதன சதுஷ்டயமத்தியில் வைராக்கிய லக்ஷணத் தினுலாதல், சாந்தியாதி லக்ஷணத்தினுலாதல், எவ்வங்கிசத்தினுலேதான், முதலிலங்குரித் திலங்குகின்றதோ அவ்வங்கிசத்தையே விசாரத்தினுலே அபிவிருத்தி செய்யவேண்டும்; அனு தினம் யத்தனத்துடன் வேளாண்மைசெய்வோன் முளையைவிருத்தி செய்வதேபோலும்; நன்கு வளர்க்கப்பெற்ற அவ்வோரங்கிசம் அன்னிய உத்தரபூமிகளையும் சுயமாகவே சாதிக் கும் எனல்:—மறுபூமியென்பதாதி. இந்த ஒன்றே உள்ளே கொள்ளக்கொள்ள அன்னிய பூமிகளையுண்டாக்கும் பூமியாகநிற்கும் முயற்சியினுலே அதனினின்றுமே, இரண்டாவது மூன்ருவது பூமிகளையடையலாம்.

(ச) இது—இப்பூமி, விடுதியால்—எந்த அங்கிசத்தால், தழைக்கும், அவ்விடுதிதனை அந்த அங்கிசத்தையே, விசாரத்தால், வருந்தி—முயற்சித்து, நாடோறும், உழவர்நென்முளை போல் வளர்க்கவேண்டும்; இந்தவொன்றே—இம்முதற்பூமி, முடிவில் வெளியாம், விசாரத் தால் வளர்க்கப்படின், மறுபூமிகட்கு—அன்னியங்களான பூமிகளுக்கு, சநநபூமி, அதில் — அப்பூமிகையின் ஏதுவினுலே இரண்டாம்பூமியையும் மூன்ரும்பூமியையும், பெறலாம் என்ற தாயிற்று. (28)

(ஸ்ரீ - வீர - அ - கை) உபாயத்துடனும் பலத்துடனும்கூடியதாக வருணிக்கப்பெற்ற மூன்ருவது பூமியையுபசங்கரித்தல்:—சேட்டமென்பது.

சேட்ட மெனச்சொல் பற்றின்மை சேர்ந்தான் மூன்ரும் பூமியதா
மீட்டு புருடன் சங்கற்ப வெண்ண மொன்று மில்லென்னக்
கேட்ட குமா னுரைசெய்வான் கீழாங் குலத்தோ னுணர்வில்லோன்
பூட்டு தொழிலோன் பொல்லாதோன் புகன்ற யோக மில்லாதோன்.

(ப - ரை) சேட்டமெனச்சொல் பற்றின்மைசேர்ந்தால்—சிரேஷ்டம் என்று சொல்லப் பட்ட அசம்சங்கத்தைச்சேர்ந்திடில், மூன்ரும்பூமியதாம்—மூன்ருவதுபூமியாம், மீட்டுபுருடன் சங்கற்ப எண்ணம் ஒன்றும் இல்லென்ன—இவ்வாறு சம்பாதித்தபுருடன் சங்கற்பவிகற்பங் கள் யாவற்றையும் அகற்றியவன் என்றுகூற, கேட்டகுமரன்—செவிகொண்ட ஸ்ரீ இராகவர், உரைசெய்வான்—கூறுவார், கீழாங்குலத்தோன் உணர்வில்லோன்—தாழ்ந்தகுலத்தில் உதித்த வன் அறிவில்லாதவன், பூட்டுதொழிலோன் பொல்லாதோன்—மிகப்பிரவிருத்தன் அதமன், புகன்ற யோகமில்லாதோன்—கூறிய யோகமில்லாதவன், பின்னன்னுவயம்.

(ஸ்ரீ - வீர) சிரேஷ்ட அசம்சங்கத்தன்மையாகிய இதுவோ மூன்ருவதுபூமியாம், இதன் கண்ணே அதிகாரியானவன் சகலசங்கற்ப விவகாரங்களையும் விட்டவனுவன்; பிரசங்கத்தா லிடையில் மூடர்களிடத்திற்றயையால் ஸ்ரீ இராகவர் வினுதல்:—கீழாமென்பதாதி மேலான ஜாதியாதியதிகாரி விசேஷணமில்லாதவனும் அத்தியான்ம கதையையே கேளாதவனும், மூட னும், காமபோகார்த்தப்பொருட்டே பிரவிருத்தனுகிய அதமனும் யோகிகளது சங்கத்தையே

யடையாதவனும் ஆகியோனுக்கு உத்தாணம் ஆதல்யாங்ஙனம்? வேறுபாயத்தானே மோக்ஷம் உளதா இலதா? என்பது முதல்வினுவின்பொருளாம்.

(ச) ஈட்டுபுருடன்=இப்பூமியிலிருக்கும்புருடன், உணர்வில்லோன்=அஞ்ஞன், பூட்டு தொழிலோன்=காமிய கருமநிஷ்டன். (29)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்ரீ இராகவர்முதல் வினவையுபசங்கரித்து இரண்டாவது வினு தலைச்செய்தல்:—அவனுக்கென்பது.

அவனுக் கெங்ங னேயுண்டா மறைந்த நன்மை யிதுநிற்க
விவண முயர்பூ மியிலொன்றை யிரண்டை மூன்றும் வேறொன்றைக்
கவர்வுற் றடைந்தோ னுயிர் மாய்ந்தாற் கலந்து மேவுங் கதியேது
தவரிற் பெரியோ யுரையென்னச் சான்ற வசிட்ட னுரைசெய்வான்.

((ப - ரை) அவனுக்கு = அத்தகையனுக்கு, எங்ஙனேயுண்டாம் அறைந்தநன்மை = எவ்வாறுதானுளதாம் கூறியநன்மை, இதுநிற்க=இதுவுமல்லாமல், இவணம்=கூறியவண்ணமாய, உயர்பூமியில்=மேலானபூமியுள், ஒன்றையிரண்டை மூன்றும் வேறொன்றை = முதலாவதையேனும், இரண்டாவதையேனும், மூன்றாவதையேனும், கவர்வுற்றடைந்தோன்= பற்றிப் பயின்றவன், உயிர்மாய்ந்தால் = பிராணத்தியாகம் செய்தால், கலந்துமேவுங்கதியேது=விரவியடையும் கதிதானியாதாம், தவரிற்பெரியோய்=தவசிகளுக்குள்ளே சிரேஷ்டராகிய பகவானே, உரையென்ன = கூறுவாயென்று ஸ்ரீ இராகவர்வினுதலும், சான்றவசிட்டன் உரைசெய்வான் = மகாஞாதாவாகிய ஸ்ரீ வசிட்டபகவான் கூறத்தொடங்குவார்.

(ஸ்ரீ - வீர) ஒன்றுவதிலோ இரண்டாவதிலோ மூன்றுவதிலோ ஆரூடனுகி மிருதமானவனுக்கு ஹே பகவன் எத்தகையகதியுளதாம்? முதன்மூன்று பூமிகளில் அபரோக்ஷஞானேதயமின்மையின், ஒன்றிரண்டு மூன்றுநிருடதசையில் மிருதனுக்கு, எத்தகைய கதியாமென்பது இரண்டாவது வினுவின்பொருளாம். ஆதி=இவற்றுள்ளுமிடை.

(ச) ஒன்றையும் இரண்டையும் மூன்றையும் வேறொன்றையாவது. (30)

(ஸ்ரீ-வீர - அ-கை) முதல்வினுவின் விடையைப்பகர்தல்:—மூடனுகி யன்றி யென்பன.

(ச) முதல் வினுவுக்குத்தரங்கூறல்:—மூடனுகியன்றியென்பன.

மூட னுகிப் பலகுற்ற மூடு மவனுக் கநேகமென
நீடு பிறப்பா முதற்பூமி நேரு மட்டும் பிறப்பகலா
நாடு மிதுவன் றியிற்காக தாலீ யம்போ னல்லநெறி
கூடு மெனினு மதனுலே குறைவி னிராசை யதுபிறக்கும்.

அன்றி நல்லோர் கூட்டரவா லடுத்த விராக மதுபிறக்கு
மொன்று நிராசை யுறுபோதே யோக பூமி யுறறப்பா
துன்று மதனுற் பிறப்பகலுந் தொகுநூற் பொருளின் சுருக்கமிதா
நின்ற யோக பூமியுட னிதன மடைந்தோர் நெறிகேளாய்.

(ப - ரை) மூடனுகி = மௌட்டியனுகி, பல குற்றமூடுமவனுக்கு=அநேககுற்றங்களினுலே மூடப்பெற்றவனுக்கு, அநேகமென நீடுபிறப்பாம்=அளவின்றுமென நீண்ட ஜனனங்களாம், முதற்பூமிநேருமட்டும் பிறப்பகலா=முதலாவது பூமிகிடைக்கும்பரியந்தம் ஜனனங்

கள் நீங்கா, நாடும் இதுவன்றியில்=நாடு மிதுவேயுமல்லாமல், காகதாலீயம்போல் = காக தாலீய நியாயமேபோல, நல்ல நெறிகூடுமெனினும் = சன்மார்க்கம் சாருமென்றாலும், அத ஞலே=அது தன்னால், குறைவில் நிராசையதுபிறக்கும்=பூரணமான வைராக்கியமான துண் டாகும்.

அன்றி நல்லோர்கூட்டரவால்=அல்லாமலும் சாதுக்களுடைய சங்கத்தினால், அடுத்த விராகமதுபிறக்கும்=சிரவணசாதகமான வைராக்கியமானதுண்டாம், ஒன்றும் நிராசையுறு போதே = பொருந்தாநின்ற வைராக்கியம் உண்டானபோதே, யோகபூமியுறல் தப்பா = யோகபூமியடைதல் தவறமாட்டாது, தன்றுமதனற் பிறப்பகலும் = பொருந்தியவதனலே ஜனனமரணந் நீங்கும், தொகுநூற்பொருளின் சுருக்கமிதாம் = பிரதிபாதிக்கப்பட்ட சாஸ் திரங்களின் சங்கிரகமிதுவாம், நின்ற யோகபூமியுடன்=தாங்களப்பியசித்துக்கொண்டிருந்த யோகபூமிகளில், நிதனமடைந்தோர் நெறிகேளாய்=தேகத்தியாகம் செய்தவாது மார்க்கத் தைக் கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர) ஜன்மாந்தா சதங்களுனலே காகதாலீய யோகத்தினலே, தனது விசாரத் தினலேயாதல் சாதுசங்கத்தினலாதல் வைராக்கியம் உண்டாகாதவரை, தோடமேறிய மூட னுக்குச் சமுசாரம் வளர்ந்துகொண்டேபோகும், வைராக்கியமுண்டாகவே ஜந்துக்கட்கு அவசியம் பூமியினுதயமாம்; அதன்பின் சமுசாரம் நசிக்குமென்பது சாஸ்திரார்த்த சங்கிரக மாம் இரண்டாவது வினவுக்கு விடையிறுக்கத்தொடங்கல்:—யோகபூமியென்பதாதி. யோக பூமியிலிருந் துயிர்துறந்த சரீரிக்குறும்கதி கூறுவாம்.

(ச) மூடனுகிப்பலகுற்றம் மூடுமவனுக்கு=இராகாதிகுற்றங்களால் மூடுபடும் பிரவிர்த்த னுக்கு, அநேகமென நீடுபிறப்பால் = ஜன்மாந்தாசதங்களாலும், முதற்பூமி நேருமட்டும், பிறப்பகலா=சம்சாரம் விரிவாம், இதுவன்றியில், காகதாலீயம்போல் நல்லநெறிகூடுமெனி னும் தெய்வகதியினுலும் நல்லோர்கூட்டரவால் தோஷதரிசனத்தினலும், நிராசையுதிக்கிற் பூமியுதிக்குமாதலின் சம்சாரம் நசிக்குமென்பது சாஸ்திரார்த்த சங்கிரகமெனப் பிற்கவியோ டிந்நுவயம் செய்க.

யோகபூமியுடன்=முதற்பூமியாதிகளின் ஒன்றுடன்நிதனமடைந்தோன் மரணமடைந்த ஜீவனது. (31-32)

(ஸ்ரீ - வீர - அ - கை) இரண்டாவது விடையையே விரித்தல்:—யோக என்பது.

யோக பூமி யம்சம்விடா துறலாற் பழைய தீவினைபோ
மாக மான மதற்பின்பு வந்து கொடுபோய் வானவர்வாழ்
நாக முதலா முயர்பதியி னன்மே ருவின்சூழ் பொழின்முழையிற்
போக மடவா ரொடுங்கூடிப் புணர்ந்து சிந்தை களிகூர்வன்.

(ப - ரை) யோகபூமி யம்சம்விடாதுறலால் = யோகபூமியின் அம்சத்தைவிடாது தொடர்தலால், பழையதீவினைபோம் = ஜன்மாந்தரார்ச்சித பாவங்கள்தொலையும், மாகவிமா னம் அதற்பின்புவந்து கொடுபோய்=தெய்வவிமானம் அதன்பின்னர்வந்து கொண்டுபோய், வானவர்வாழ்=தேவதைகள்வாழும், நாகமுதலாம் உயர்பதியில்=தெய்வலோகம் ஆதியாய மேலான இடத்தில், நன்மேருவின் சூழ்பொழின்முழையில்=நல்ல ஐசுவரியம் நிறைந்தபொற் கிரியைச்சூழ்ந்துள்ள சோலைக்கொடி வீடுகளில், போகமடவாரொடுங்கூடிப்புணர்ந்து சிந்தை களிகூர்வன்=போகமங்கையர்களுடன் கூடிச்சேர்ந்து குலவிச் சித்தமகிழ்ச்சியையடைவன்.

(ஸ்ரீ - வீர) பூமிகாம்சானுசாரமாகப் பூர்வபாவங்களெல்லாம் பொன்றிப்போம், அதன் பின் சுரவிமானங்களிலும் லோகபாலபுரங்களிலும், மேருவின் உபவனகுஞ்சங்களிலும் இரணிகளுடன் இரமிப்பன்பாபக்ஷய அநுசாரமாகரமிப்பன் என்பதாம்.

(ச) யோகபூமியாசை விடாதுறலால்=பூமியின்றிடாநுசாரத்தாலே பழையதீவினைபோம், அதற்குப்பின்பு சுகிர்தமகிமையால், மாகர்விமானச்சுரவிமானாதிகளிற் = சுவர்க்காதிப்பிர தேசங்களில், போகமடவாரொடும் = இரமணீயமான பெண்களோடுஞ்சுகிப்பன் என்றதாயிற்று. (33)

(ஸ்ரீ - வீர - அ - கை) பின்னவனுறுவதைப்பேசல்:—அருந்து என்பது.

அருந்து போக மாய்தலினு ளளவில் பண்டை யிருவினையும்
பொருந்த மாயு மப்போது புவியிற் பிறப்பர் யோகிகடாந்
திருந்து செல்வங் குணஞ்சுத்தஞ் சிறந்த நல்லோர் மனைப்பிறந்து
வருந்தி முன்னம் பழகுதலால் வழுவா யோக நெறிநிற்பர்.

(ப - ரை) அருந்துபோகம்மாய்தலினால் = புசிக்கும்போகம் நசித்தலானே; அளவில் பண்டையிருவினையும் = அநந்தபுராதன இரண்டுவினைகளும், பொருந்தமாயுமப்போது = பொருத்தமாக நைசுவரமாம் அக்கால், புவியிற்பிறப்பர் யோகிகள்தாம்=யோகிகளானவர்கள் பூமண்டலத்திற் சனிப்பர்கள், திருந்துசெல்வம்குணம் சுத்தம்=மேம்பட்ட தருமஐசுவரியும் சற்குணம்தூய்மை, சிறந்தநல்லோர்=என்பவற்றானே சிறப்பிக்கப்பெற்ற நல்லவரது, மனைப் பிறந்து = கிருகத்திலவதரித்து, வருந்திமுன்னம் பழகுதலால் = மிகவும் கஷ்டப்பட்டுப் பூர்வம்பயின்றிருத்தலால், வழுவாயோக நெறிநிற்பர் = நழுவாமலே யோகமார்க்கத்தில் திதி பெறுவர்.

(ஸ்ரீ - வீர) அதன்பின்னர் அறசமுதாயமும், முன்னியற்றியமறமும், போகஜாலங்களிற் புசித்தளவில் நன்குக்ஷீணமாகவே, யோகிகள் புவியிற்சனிப்பார்கள், மறமும் என்றது பழைய தன் அனுவாதமாம், அவனுக்கு நரகாதிபோகமில்லையாம், "நல்லது புரிவோன் எவனுந்துர்க் கதி நண்ணுன்றுத வெண்ணுதி நீயே" என்னும் ஸ்ரீ பகவத்திருமொழி யிருத்தலின், கும்பந் தித்தநுக்கபோக அபிப்பிராயம் ஆதலாம், சுவர்க்கிகட்கும் சாரீரமான சாதிதுக்கசகத்திர முடைமையின் என்க. யோகிந: என்பது ஜாதியைக்கூறுவதிற்பன்மையாம், ஒருபொருளோனுந்தான் வெகுவாகவா மென்றறிக. (1-2-58)

தூயர்களாகிய ஸ்ரீமான்களுடைய கிருகத்திலேனும், குணவான்களாகிய யோகிகளின் சத்துக்களின் இல்லத்திலேனும் ஜனித்து, யோகவாசனை யுடையவர்களாய் யோகத்தையே இவர்கள் சேவிப்பார்கள், யோகவாசனையையே ஸ்ரீகண்ணபிரானும் திருவாய்மலர்ந்துள் ளார் :—முன்னர்ப்பயின்றவதனுனேயே பின்னசையிலனும் நிறுவப்பெறுவன்" ஆண்டறிஞர்கள் முற்பாவனுப்யஸ்த யோகபூமிக்கிரமத்தை ஸ்மரித்து மேலான உத்தரப்பூமிக்கிரமத்தை ஏறியடைவார்கள்.

(ச) இதுவுமது, அதன்பின், போகமாய்தலினால் = போகநாசமாகிய ஏதுவினாலும், பூமிகையின் அப்பியாசத்தாலும், பண்டையிருவினையும்=முன்பியற்றிய புண்ணியபாவமும் மாயும், அப்போது புவியில், சுத்தமுங்குணமுஞ் செல்வமுஞ்சிறந்தநல்லோர்களின், திருந்து= நன்றாயிரக்ஷிக்கும், மனை=கிருகத்தில், யோகிகள்பிறப்பர் பிறந்தும் இவர்கள் யோகம் பழகு

தலால் யோகவழிநிற்பர்=யோகத்தையே சேவிப்பர், அதில்முன்னம் பழகிய பூமியையும், பழகாத யோகபூமியின் கிரமத்தையும் உணர்ந்து மேற்பூமியின் கிரமத்தைப் பழகுவரென்பதாம். (34)

(ஸ்ரீ - வீர - அ - கை) வினுக்கட்கு விடைபகர்ந்து கூறிவந்ததையே யனுசரித்தல்:—விதமென்பது.

விதமாஞ் சகத்தைச் சாக்கிரத்தின் மிகப்பே தஞ்சேர் புந்தியினுற்
பொதுவாய் நோக்கு மதனுலிப் பூமி மூன்றுஞ் சாக்கிரமா
மதுவே தனிக்கே வலமியோகிக் காரி யப்பேர் பெறுதிறமா
மிதனு லிவனே யுய்ந்தவனென் றேத்தத் தோன்று மறிவிலர்க்கும்.

(ப டை) விதமாம்சகத்தை=நானுவகையான விசுவத்தை, சாக்கிரத்தின் மிகப்பேதஞ்சேர் புந்தியினுல்=நனுவின் மிகவும்பேதஞ்சேர்ந்த மதியினுலே, பொதுவாய் நோக்குமதனுல்=சாமானியமாய்ப் பார்க்குமதனுல், இப்பூமிமூன்றுஞ் சாக்கிரமாம்=இந்தப்பூமிகள் மூன்றும் நனுவாம், அதுவேதனிக்கேவலம்=அதுவே ஒப்பற்றகேவலமாம், இயோகிக்காரியப்பேர் பெறுதிறமாம்=யோகிக்கு ஆரியப்பெயர் பெறுந்தன்மையதாம், இதனுல் இவனே உயர்ந்தவன் என்று=இக்காரணத்தினுல் இம்மகானே மேலானவன் என்பதாக, வத்தத்தோன்றும் அறிவிலர்க்கும்=அறியாதவர்க்குங்கூடப் போற்றத்தோற்றும்.

(ஸ்ரீ - வீர) ஹே இராகவனே! இப்பூமிகண் மூன்றும் ஜாக்கிரம் என்றுகூறப்பெறும், ஆதியப்பூமிகாத்திரயத்திற் சாக்கிரத்துச் சத்தப்பிரவிருத்தி நிமித்தம் யாதுகொலாமெனில் உரைத்தல் பேதஞ்சேர் என்பதாதி, உள்ளபடியே பேதபுத்தியாலிது அச்சாக்கிரத்தெனவே காணப்பெறுகின்றது, பேததரிசனகுணத்தால், வெளியாயநனுவுக்கொப்பாதலின் என்பதாம். வேறுநிமித்தமும் விளம்பல் அதுவேயென்பதாதி. யோகத்தோடுகூடியவர்கட்கு இங்கு கேவலம் ஆரியத்தன்மை யென்னும் பூஜியத்தன்மையானது உதயமாம்=பிரயோஜகசற்குண உற்கர்ஷமுண்டாம், எதனைக்கண்டு மூடபுத்திகட்கும் முமுக்ஷுதையானது நன்குண்டாம் பெரியவர் பயின்றபடியலாற் பயிலாரபின் புளார் என்னும் நியாயத்தால்,

(ச) முற்கூறிய பூமிமூன்றும் சாக்கிரமாம் யாதினுலெனில், இப்பூமியிற் சாக்கிரம்போற் றிடமாய்ப் பேதபுத்தி தொடர்ந்திருத்தலின் என்பதுபொருள் யோகிக்கு = இப்பூமித்திரயத்தில், யோகயுத்தர்க்கு முன்பு ஆரியப்பேர் கேவலம் பெறுதிறமாம் = உதிக்கும், இதனுல் = இவ்வாரியத்தன்மையை நோக்கி, அறிவிலர்க்கும் = மூடபுத்தியர்க்கும், முமுக்ஷுத்துவந் தோன்றும் என்றதாயிற்று. (35)

(ஸ்ரீ - வீர - அ - கை) அநாரிய ஜனத்தினின்றும் விலக்கும் அந்த ஆரியத்தகைமையையே முதலிற்குறிப்பித்தல்:—செயலிலென்பது.

(ச) ஆரியவிலக்கணங்கூறல்:—

செயலி னுரிய மிகச்செய்வோன் செய்யத் தகாத செய்யாதோ
னியல்பி னொழுக்கந் தனிநிற்போ னியாவ னவனே யாரியனு
முய்யு மொழுக்க நூற்சித்த முந்து நிலைமை யிவகாரம்
புயலி னிறத்தோ யுள்ளபடி பொருந்து மவனே யாரியனும்.

(ப - ரை) செயலினுரிய மிகச்செய்வோன்=செய்தற்குரிய காரியத்தை நன்றாகச்செய்பவன், செய்யத்தகாத செய்யாதோன்=நிஷித்தமானவற்றை இயற்றாதவன், இயல்பினொழுக்கந்தனில் நிற்போன்=சுபாவமாகவே நன்னடையினடப்பவன், இயாவன் அவனே ஆரியனும்=யாவனோ அவன்றான் ஆரியனெனப்பெறுவன்; முயலுமொழுக்கநூற்சித்தம்=முயலாநின்ற சீலப்படியே நூலின்படியே உள்ளப்படியே, மூந்து நிலைமைவிவகாரம் = முன்னுறாநின்ற நிலைமைக்குத்தக்கபடியே விவகாரத்தை, புயலினிறத்தோய்=கார்மேகக் கருணைவண்ணனே! உள்ளபடி = கிடைத்தபடிநன்றாக, பொருந்துமவனேயாரியனும் = ஏற்றுச்செய்யுமவனே ஆரியன் எனப்பெறுவன்.

(ஸ்ரீ - வீர) செய்யத்தக்கதைப் போதுமானஅளவு செய்பவனும், நித்தியநைமித்திக கருமம்யாவும் செய்யத்தக்கனவாம், அவற்றை நன்குசெய்பவனும், செய்யத்தகாததைச் செய்யாதவனும், பகுதி யொழுங்கிலிருப்பவன்யாவனோ அவனே ஆரியன் எனப்பெறுவன். விருத்தாசார அனுசாரியாய் அதிலும் நூன்முறையேசெல்பவனும், அதன்கண்ணும் தனது சித்தம் எதனைச்செய்து மகிழ்வினையுறுமோ பின்றபியாதோ அவ்வகையேபுரிபவனும் யாவன் நின்றபடியே லௌகிக விவகாரத்தையும்புரிவனோ, அவனே ஆரியன் எனப்பெறுவான்.

(ச) இயல்பினொழுக்கந்தனில் நிற்போன் = நீக்கற்கரிய தேகதாரணைக்குரியதை யாசரிப்பவன், ஒழுக்கம்=ஆசாரத்தையும் நூலையும் விவகாரத்தையும், நிலைமையுள்ளபடி= மரியாதையைக்கடவாது. (36)

(ஸ்ரீ-வீர - அ-கை) ஆரியத்தகைமையின் உதயாதியையேயியம்பல்:—முதலென்புது.

முதலா மியோக பூமியிலே முளைக்கு மிரண்டா வதின்மலருந்
தகையு மூன்றா வதிற்பலிக்குந் தனியா ரியனாந் திறமியோகி
யிதனி லிறந்தா னெடுங்கால மிருந்து சுத்த சங்கற்பத்
தாதவு போகங் களையருந்தி யோகி யாய்மீண் டுற்பவிப்பான்.

(ப - ரை) முதலாமியோகபூமியிலே முளைக்கும்=பிரதம யோகபூமியிலே யங்குரிக்கும், இரண்டாவதில் மலரும்=துவிதீயத்திலே விரியும், தகையும் மூன்றாவதிற்பலிக்கும் = நிறையும் திருதீயபூமியிற் பலமுடையதாம், தனியாரியனாந்திறம் = ஒப்பற்ற ஆரியனாந்தன்மை, யோகி இதனில் இறந்தால்=யோகியானவன் இதன்கண்ணே பிராணத்தியாகஞ் செய்வானேயாயின், நெடுங்காலமிருந்து=நெடும்போதிருந்து, சுத்தசங்கற்பத் தாதவுபோகங்களை= தூய சங்கற்பத்தாலுண்டாயபோகங்களை, அருந்தியோகியாய் மீண்டுற்பவிப்பான்=புஜித்து யோகியாகவே மறுபடியும் அவதரிப்பன்.

(ஸ்ரீ - வீர) அதேயாரியத்தன்மையானது சுபேச்சையென்னும் முதற்பூமியில் அங்குரிதமாம், இரண்டாவது பூமியில், சிரவணாதிப்பிரவிருத்தியினாலே விரிவினையடையும், மூன்றாவது பூமியின்கண்ணே சித்தஒருமைப்பலத்தால் பலிதமாம், இவ்வாரியத்தகைமை யோகிகட்கே யுரியதாம், ஆண்டிடையில் மிருதர்களாகிய நிட்காம கருமானுட்டானத்தினாலே பாவமற்றவர்கட்கு, கருமத்தால் பிதருலோகம் வித்தையால் தேவலோகம்'' என்பதாதி சுருதிப்பிரசித்த தேவலோகாதிபோகமும் சுபசங்கற்பத்தினாலே சேர்க்கப்பட்ட சத்வாசனையினாலேயுண்டாக்கப் பெற்றதாதலின், காமியகரும அனுட்டானவான்கட்கேபோலும் இராகாதிதுர்வாசனையை நன்காதரித்தலானே கீழ்வீழ்ச்சிக் கேதுவாகாதாம், என்னுங்கருத்தா

லுரைத்தல்:—இதனிலென்பதாதி ஆரியத்தன்மையில் மிருதமான யோகியானவன் சுபசங்கற்பத்தினலே யுண்டாக்கப்பெற்றபோகங்களை நெடுங்காலம்புசித்து மீளவும் யோகவானகவே வந்து பிறப்பான்.

(ச) யோகிக்கு ஆரியனந்திறம்முதலாம் பூமியில்முளைக்கும், இரண்டாவதில் மலர்ந்தாய் மூன்றாவதிற்பலிக்கும், இதனில்—இவ்வாரியத்திறத்தில் இறந்தான். (37)

(ஸ்ரீ - வீர - அ - கை) மூன்றுநிறைந்தபின் நான்காவதை யடைதலும் அதனதேற்றமும் பகர்தல்:—மூன்று சமமென்பன.

மூன்று பூமிப் பரிசயத்தான் மூடத் தன்மை யிறந்துழியே
யான்ற ஞானே தயமுண்டா யாதியந்த மறவிரிந்து
பூன்ற மதியி னுதயம்போற் பொலியு மனத்திற் போதமுற
வூன்று யோகத் துடன்சேர்ந்த வுள்ள முடைய யோகிக்கே.

சமம தாகச் சொப்பனம்போற் சகத்தி லனைத்து நோக்கிடுவ
ரமர நாலாம் பூமிதனை யடைந்தோர் முதற்பூ மிகண்மூன்றுங்
குமர னேசாக் கிரமாகுங் கூறுநாலா வது கனவாம்
விமல சித்தஞ் சரற்கால மேக சாலம் போலிறக்கும்.

(ப - ரை) மூன்றுபூமிப்பரிசயத்தால்—மூன்று பூமிகளினது அப்யாசத்தால், மூடத்தன்மையிறந்துழியே—மௌட்டியமானது சென்றபோது, ஆன்றஞானேதயமுண்டாய் = பெருமைபொருந்திய பிரபோதம் பிறந்து, ஆதியந்தமற விரிந்து—அடியும் முடியும் அறவிசாலித்து, பூன்றமதியின் உதயம்போல்—பூரண சந்திரோதயம்போல, பொலியுமனத்தில் போதமுற—விளங்காநின்றமனத்தின்கண் ஞானமடைய, ஊன்றுயோகத்துடன் சேர்ந்த = ஆழ்ந்த யோகத்தோடுகூடிய, உள்ளமுடைய யோகிக்கு—மனத்தையுடைய யோகியினுக்கு, ஏ அசை தேற்றமெனினுமமையும்.

சமமதாக—ஒப்பாக, சொப்பனம்போல் = கனப்போல, சகத்தில் அனைத்து நோக்கிடுவர்—உலகத்திலியாவற்றையும் பார்த்திடுவர்; அமரநாலாம் பூமிதனையடைந்தோர்—மோக்ஷத்தைப்பயக்கும் நான்காவது பூமியினை யடைந்தவர், முதற்பூமிகள் மூன்றும் = ஆதிய மூன்றுபூமிகளும், குமரனே = மைந்தனே, சாக்கிரமாகும் = நனவாகும், கூறுநாலாவது கனவாம்—இப்போது புகலும் நான்காவதுசொப்பனமாம், விமலசித்தம்—நிருமலமாகிய மனமானது, சரற்காலமேகசாலம் போலிறக்கும் = சரத்காலத்திய மேகக்கூட்டம்போல நசித்தேகும்.

(ஸ்ரீ- வீர) பூமிகண்மூன்றின் பயிற்சியின் முதிர்ச்சியால் அஞ்ஞானமும் ஞானவிரோதியாய துவைதவாசனஜாலமும் அசம்பாவனை விபரீதபாவனைத் தோடமும், க்ஷயமாகியபோது சித்தத்திற்பூர்ணசந்திரோதய உபமமதாக நன்ஞானமுதயமாகவே, தடையற்ற மகாவாக்கியத்தினலே அபரோக்ஷ அகண்டாகார ஞானமுதய மேவியபோது மூல அஞ்ஞான க்ஷயத்தினலே ஒருமைபொருந்திய உள்ளத்தினையுடைய யோகிகள் நான்காவது பூமியைக்காமித்தவர்களாய் அடைவுற்றவர்களாய், சர்வஜகத்தையும், விபாகமற்று ஆதியந்தமற்றுச்சமமாகி ஆனந்தைகாசமாகி, உள்ளபிரஹ்ம மாத்திரமாகப்பார்ப்பார்கள், அத்வைதத்தில் நிலைமைவந்துறவே துவைதமெல்லாம் காணமற்போகவே, நான்காவது பூமியையடைந்தவர்கள் உலகங்

களைச் சொப்பனம்போலும் காண்பார்கள் முப்பூமிகளும் ஜாக்ரமாம், வியாவகாரிகசத்தையி ஞலே ஜகத்பானசாமியத்தானே ஜாக்கிரத்தாம், நான்காவது சொப்பனமெனப்பெறும் = பிராதிபாசிகசத்தையிஞலே ஜகத்பானசாமியத்தானே சொப்பனமெனப்பெறும்; ஐந்தாவது பூமியில் சுழுத்திபதப் பிரவிருத்திநிமித்தத்தையும் அதனது சாமியத்தையும் தரிசிப்பித்தல்:— விமல என்பதாதி. விச்சின்னசாத்தப்பிராம் சவிலயம்போலும் யாவும் விலயமாம், "துயிலுங் காலையிற் சகலமுந் தோன்றுருதடங்க மயனிறைந்திடச் சுகவடிவாகவேமலர்வன்" என்னுஞ் சுருதியால் துயிலில் சர்வவிலயப்பிரசித்தியாதலின் ஈண்டும் பிராதிபாசிகத்திரிபுடிப் பரிசேடத் திற்கும் விலயமெய்தவே அதன் சாமியத்தாலென்பது கருத்தாம். விச்சின்னமாய சாத்தப்பிர கண்டத்திற்குக் கேவல ஆகாசமாத்திரமாக எஞ்சும் வடிவவிலயம்போலும், சுத்தசின்மாத்திர பரிசேட வடிவசுபாவம் சகலமும் விலீனமாகவே யடையப்பெறுமென்பதாம்.

(ச) மூன்றுபூமிப் பரிசயத்தால், முற்கூறிய பூமித்திரயாப்பியாசத்திஞல், மூடத் தன்மை=அஞ்ஞானம், இறந்துழி=நசிக்கின் ஞானேதயமுண்டாம், அப்போது, மனத் தில், பூன்றமதியின் உதயம்போல் ஆதியந்தமறவிரிந்து போதம்பொலியும், யோகத்துடன் நான்காம் பூமியோடுசேர்ந்த வுள்ளமுடையயோகிக்கு.

அமர=அத்துவிதத்திற்றைரியமுற்றுத் துவிதம் உபசாந்தமாம்படி, நாலாவது பூமிகை கனவாம் யாதிஞலெனில், அப்பூமியிற் சித்தஞ்சாற்கால மேகஜாலம்போல் இறக்குமாதலின் என்பதுபொருள். விமல என்பதுசம்போதனம் அலது சாற்காலவிசேடணம். (38-39)

(ஸ்ரீ-வீர - அ-கை) ஐந்தாவது பூமியைவருணித்தல்:—சிறக்குமிருமையென்பன.

சிறக்கும் சற்பா வந்தானே சேட மாக நின்றிடுவர்
பறக்குஞ் சித்த மிறத்தலிஞற் படர்ந்த விகற்ப மெலாந்தோன்று
வுறக்குஞ் சுழுத்திப் பதமென்ன வுரைக்கு மைந்தாம் பூமியிற்போய்
நிறக்கும் விசேட மனைத்துமற நிற்ப னொன்று நிலைமட்டில்.

இருமை யென்னு மிருள்போயுள் ளொறியா நின்ற பேருணர்வோ
னருமை யான சுழுத்திநிலை யாகி நிற்ப னனவரதம்
பொருவி னுண்ணேக் குடனிற்பன் புறத்திற் றெழிலிற் புறந்தேய்பு
மொருமை யுபசாந் தத்தாலே யுறக்க மிகுந்தோன் போற்றெரிவன்.

(ப - ரை) சிறக்குஞ் சற்பாவந்தானே=சிறந்த சத்துத்தகைமையே, சேடமாக நின்றிடு வர்=பரிசேடவடிவமாக நிலைபெறுவர், பறக்குஞ் சித்தமிறத்தலிஞல் = மகாசஞ்சல மனம் நசித்தலிஞல், படர்ந்த விகற்பமெலாந்தோன்று=விரிந்த விகற்பங்கள்யாவுமே பிரதீதியாகா வாம், உறக்குஞ் சுழுத்திப்பதமென்ன=துயிலும் சுழுத்திப்பதம்போலும், உரைக்கும் ஐந் தாம்பூமியிற்போய்=கூறும் ஐந்தாவது பூமியிற்சென்று, நிறக்கும் விசேடமனைத்துமற = பூரிக்கும் சிறப்புயாவும்நீங்க, நிற்பன் ஒன்றுநிலைமட்டில் = திதிபெறுவன் ஏகமாம் நிலையி லேயே.

இருமையென்னுமிருள்போய்=துவைதமென்னு மந்தகாரம்நீங்கி, உள்ளொறியாநின்ற பேருணர்வோன்=உள்ளே பிரகாசியாநின்ற பெருஞானத்தையுடையவன், அருமையான சுழுத்திநிலையாகி=துர்லபமான துயிலின்றிதியாகி, நிற்பன் அனவரதம்=எப்போதும் நிலைத்

திருப்பன், பொருவினுண்ணேக்குடனிருப்பன்=கெடாத அந்தர்திருஷ்டியுடனேயிருப்பன், புறத்தில்தொழிலில் புரிந்தேயும்=பாகிய தொழிலைச்செய்வதுபோற் காணப்பெற்றபோதினும், ஒருமையுபசாந்தத்தாலே=ஏகமாகிய வுபசாந்ததிருஷ்டியினாலே, உறக்கமிகுத்தோன் போற்றெரிவன்=துயில்மிகுத்தவனைப்போலக் காணப்பெறுவன்.

(ஸ்ரீ - வீர) ஐந்தாவது பூமியையடைந்தவன் சத்தாவசேடமாகவே யிருப்பன், சிற்சித்தையாகவே சேடித்திடுவன், சுழுத்தபதத்தைக் கௌணப்பெயராகவுடைய ஐந்தாவது பூமிகையையடைந்து, அசேடவிசேடாங்கிசங்களும் சாந்தமாகிய அத்வைதமாத்திரத்திலிருப்பன், துவைதத் தோற்றமெல்லாங்கழிந்து ஆவிர்ப்பூத சொரூபனாகி யுள்ளே பிரபுத்தவானாயிருப்பன்; சுழுப்தஸ்தான ஏகீபூதன் பிரஞ்ஞானகனனேயெனச்சுருதி கூறிய பிரஞ்ஞானகனதைச் சாம்மியத்தாலாதல் அதன்கண்ணே சுழுப்தபத நாமத்தகைமையாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—அருமையென்பதாதி. ஐந்தாவது பூமியிலேறியவன், சுழுப்தகனனாகியே யிருப்பன்; ஆனந்தமயனே யானந்தபுக்காம் என்னும் சுருதிப்பிரசித்த அந்தர்முகனுக்கு ஆனந்த ஆஸ்வாதனசாமியத்தானும் அந்நாமத்தன்மையாம் என்னுங் கருத்தானேயுரைத்தல்:—பொருவிலென்பதாதி. உண்முகமாகவே யிருந்துகொண்டு பகிர்விருத்திபரனேயாயினும், மிகவும் உபசாந்தனாகிநித்தியம் நித்திராளுவேபோலக் காணப்பெறுவன். இப்பூமியின் மாட்டப்பியாசஞ்செய்து, வாசனையற்று = தானுமெழும் வாசனையானது அத்தியந்தம் அற்றுவனாகி.

(ச) ஐந்தாம்பூமியடைந்த யோகிகள் சற்பாவந்தானேசேடமாக = சன்மாத்திரரூபமாகவே, நின்றிடுவர், யாதினாலெனில், அப்பூமியில் சித்தமிறத்தலினால், படர்ந்த விகற்பமெலாம்=ஜகவிகற்பமனைத்தும், தோன்றா=உதியாதாதலின் என்பதுபொருள். விசேஷமனைத்துமற=வருணாச்சிரமாதிகளிற் பிராமணன்நான் சந்நியாசிநான் என்பது முதலான விசேஷ ஞானவிபாகமறும்படி, ஒன்றாநிலைமட்டில்=அத்துவித பாவனைமாத்திரத்தில், நிற்பன் என்பதுபொருள். யோகி ஐந்தாம்பூமியிற் சுழுத்திபோல் நிலையாகிநிற்பன், புறத்திற்றொழிலிற் புரிந்தேயும் = பகிர்த்தொழிலுற்றவனாயினும், உண்ணேக்குடனிருப்பவனாய், உறக்கமிகுத்தோன்போல், அனவரதந்தெரிவன்=காணப்படுவன். (40-41)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆறாவது பூமியைவருணித்தல்:—அழுந்துசெறியுமென்பன.

அழுந்து துரிய மெனுநாமத் தாறாம்பூமி யடைந் தொழுங்கி
னெழுந்து பலவா தனையிலனா யிப்பூ மியிலே பரிசயிப்ப
னுழைந்து நானென் பதுமென்றா தனவு முளது மில்லாதுங்
கழிந்து வெறிதே நினைவிலனாய்க் காணா னிருமை யொருமைகளை.

செறியு முடிச்சு மையமும்போய்ச் சீவன் முத்த சுபாவத்தால்
வெறிது வீடன் றியும்வீடு விளங்கா வியத்தின் விளக்கொப்பான்
பிறிவில் விண்ணில் வெறுங்குடம்போற் பிறிது புறனுட் சூனியமா
யெறியுங் கடலி னிறைகடம்போ லெங்கும் புறனுண் ணிறைந்திருப்பன்.

(ப - ரை) அழுந்து துரியமெனுநாமத்து = அழுந்தாநின்ற துரியமென்னும்பெயரையுடைய, ஆறாம்பூமியடைந்து = ஆறாம்பூமியை அடைவுற்று, ஒழுங்கினெழுந்து = கிரமமாகக்கிளம்பி, பலவாதனையிலனாய்=வாசனைபலவும் இன்றியவனாகி, இப்பூமியிலே பரிசயிப்

பன்=இந்தப்பூமியின்கண்ணே பழகுவன், நுழைந்து நான் என்பதும் என்னுததுவும்= ஒன்றைநாடி யான் என்பதும் என்னுதிருப்பதும், உளதுமில்லாதும் கழிந்து = சற்புத்தியும் அசற்புத்தியும்போய், வெறிதே நினைவிலனுய்=வாளா எண்ணமில்லாதவனுய், காணுனிருமை யொருமைகளை=ஏகாநேகங்களையுங் கண்டிலன்.

செறியும் முடிச்சும் ஐயமும்போய்=பொருந்திய கிரந்தியும் சம்சயமுமகன்று, சீவன் முத்த சுபாவத்தால்=ஜீவன்முத்த இயற்கையினுல், வெறிதுவீடன்றியும்=சும்மா வீடில்லா மலும், வீடு விளைந்து=முத்தியாய், ஓவியத்தின் விளக்கொப்பான் = சித்திரத்தின்றீபசமா னன், பிறிவில்விண்ணில் வெறுங்குடம்போல்=அபேத ஆகாயத்தில் வுைமைக்குடம்போல, பிறிதுபுறனுட் சூனியமாய்=அன்னியபாகிய ஆந்தரசூனியமாய், எறியுங்கடலினிறைகடம் போல்=தரங்கங்கள் வீசும் சமுத்திரத்திற்பூரண கும்பம்போல, எங்கும் புறனுண்ணிறைந் திருப்பன்=எவ்விடத்திலும் பாகியத்திலும் ஆந்தரத்திலும் பூரித்தேயிருப்பன்.

(ஸ்ரீ - வீர) கூறியதுயிலைக்குறித்துத் துரியப்பெயரையுடைய அன்னிய ஆருவது பூமியை முறையேயடைந்திடுவன்,' அதனிலக்கணங்களை யுரைத்தல்:—பலவென்பதாதி. யாண்டு சற்பாவனையுமிலதோ அசற்பாவனையுமிலதோ அகங்காரமுமிலதோ அநகங்காரமு மிலதோ, கேவலம் மனனமற்றவனுகவே யிருப்பன், இருமை ஒருமையற்றவனுவன், இருமை யைப்போலும் ஒருமைக்கும் வேறு எண்ணிக்கையை விலக்கும் எண்ணிக்கைத்தகைமை யுண்மையின் இரண்டுமற்றவனென்றதாம், ஆண்டு ஆத்தியந்திக இருதயக்கிரந்தி சர்வசந்தே கந்தீர்ந்தமை யுரைத்தல்:—முடிச்சென்பதாதி. கிரந்தியற்றவனுகிச்சாந்த சந்தேகனுகி ஜீவன் முக்தனுகி பாவனமற்றவனுகியிருப்பன், " பேதித்தோடு மிருதயக்கிரந்தி சேதித்தேகும் சமு சயமெவையும் " என்னும் சுருதியினுலென்பது கருத்தாம். மேலும் நுகர்வினைவயத்தாற்றே கத்தைத்தாங்கி யிருந்தபோதினும் முக்தனேயாவன், சித்திரதீபமானது தோற்றிக்கொண் டிருந்தபோதினும் சொலிப்பதிலதேபோல, நிர்வாணன், இயல்பாகவே ஜடசகத்துள்ளும் புறனும் அற்றவனுவன், அம்பரத்திற் சூனியகும்பமேபோல உள்ளுஞ்சூனியன் வெளியிலுஞ் சூனியன் ஆவனென்பதாம், மறைபடாதவானந்த வியற்கையானேயோ உள்ளிலும் வெளியி லும் பூரணனேயாவன், அர்ணவத்திற் பூர்ணகும்பம்போலும்.

(ச) ஒழுங்கில் வாசனையிலனுய், துரியமெனு நாமத்து ஆறும்பூமியையடைந்திருப்பன், ஆறும்பூமியை யடைந்தவனது சொருபத்தைக்கூறல்:—இப்பூமியிலே=இவ்வாறும்பூமியில், பரிசயிப்பன், அப்பியாசஞ்செய்து கொண்டிருக்கும் யோகியானவன், நானென்பதும், அக மென்னும் அபிமானமின்மையின், அகங்கிருதியும் கழிந்து என்னுததுவும் தேகேந்திரியாதி யைச்செலுத்துதலின், அநகங்கிருதியுங்கழிந்து உளதும், நிர்வாசனையாதலின், சத்துரூப முங்கழிந்து, இல்லாதும் விவகரித்தலின் அசத்துரூபமுங்கழிந்து அல்லாதவனுய், மற்றென் னெனில், வெறிதே நினைவிலனும், நிர்விகற்பனுதலின், காணுனிருமை யொருமைகளை = பேதாபேதங்களால் விடுபட்டு விவகரித்தற்கரியனுயிருப்பன் என்றதாயிற்று.

முடிச்சுப்போய், அன்றியும், கிரந்திரூபமென்னும், அகங்காரம் நசித்தலினுல் ஐயமும் போய், வாசனையின்றிய, சீவன்முக்தனுனயோகி, வீடன்றியும் = தேகத்தைத்தரித்திருப்பி னும்,வெறிதுசுபாவத்தால், நிரகங்காரமாயும் நிர்வாசனையாயும் இருத்தலின், வீடுவிளைந்து நிர் வாணனுய், ஓவியத்தின் விளக்கொப்பான் = சித்திரதீபம்போலிருப்பன், பிறிதும் = அன்றி யும், பிரபஞ்சதிருஷ்டியால், புறன்=வெளியில், பிரமமே யீதனைத்துமென அநுசந்தித்தலின்,

சூனியமாய், உள்=அகத்தும், வாசனையற்றிருத்தலின், சூனியமாய், அஃதெங்ஙனமெனில், விண்ணில் வெறுங்குடம்போலாம், இஃதன்றி விண்ணிலும், வெறுங்குடம்போற் புறனுள்ளு நாமரூபவிபாகமான ஜகத்தம்சம் இரண்டும் நிர்விகற்பமாதலால், உலர்ந்த சருகுபோன்றதாய்ப் பிரமாக்கினியால் வெந்தமையின், உள்ளும்புறம்புஞ் சூனியனும் பிரமதிருஷ்டியால், புறன் வெளியில், நிறைந்து, பிரமபாவனையால், பூரணமாய், உள் = அகத்தும், எப்போதும் பிரமபாவனையால் நிறைந்திருப்பன், அஃதெங்ஙனமெனில், கடலிலிருக்கும் நிறைகுடம்போலாம்; இதன்றியும், கடலிலிருக்கும் பூரண கும்பம்போற் புறனுள்ளும் அஸ்திபாதிப்பிரியமோதப் பிரமோதவிபாகமான ஆநந்தமயாம்ச பஞ்சமுக நிர்விகற்பமாதலால் அமிர்தசாகரத்தில் அமிர்தநதிதரங்க பங்கம்போன்றதாய்ப் பூரணசந்திர மண்டலத்தும் அமிர்ததாரையின் சாரப்பிரவாகம்போல் ஆநந்தலகரி பரிபூரணமாதலின் உள்ளும் புறம்பும் பூரணனும் இங்ஙனம் உள்ளும்புறம்பும் பூரணனுயினும் விவகாரபங்க மின்றென் பதாம் இதற்கு உ-ம். ஸ்ரீ பகவத்கீதை:—பிரமார்ப்பணமாகப் பிரமஅவி பிரமாக்கினியிற் பிரமத்தால் ஆகுதி செய்யப்பட்டதாம், அந்தப்பிரமகரும சமாதியுடையவனுற் பிரமமே யடையத்தக்கதென்பதாம். ஆயின் விவகாரத்திற்றுக்காறுபவம் எங்ஙனமின்றாமெனில், பிராந்திரூபமேயன்றி வாஸ்தவமன்றெனல், சில குசுமங்கள் சித்திரத்தெழுதப்பட்டனவாயினும், அவைகள் வாசனையை யடைவனவோ வெகுகாலம்பழக்கமுற்ற மதுகரங்கள் மதுவையடைவனவோ என்பதாம். (42-43)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஏழாம்பூமியைவருணித்தல்:—இவனேயென்பது.

இவனே யுளதாய்ச் சிறிதாங்கே யிவனே சிறிது மிலனுவன்
றவறு வாறும் பூமியிலே தனிநின் றேழாம் பூமிதனை
யவனே யடைவ னுடலின்றி யடையு முத்தி யதுவாகுங்
கவர்சாந் தமுமே மொழிக்கெட்டாக் கனபூ மிகளி னெல்லையிதாம்.

(ப-ரை) இவனேயுளதாய்ச் சிறிது = இம்மகானே சிறிதுசம்பன்னனுவன், ஆங்கே = அதுபோலவே, இவனே சிறிதுமிலனுவன் = இம்மகானே கிஞ்சித்துமடையாதவனுவன், தவறு ஆறும்பூமியிலே=தப்பாத ஆறுவதுபூமியின்கண்ணே, தனிநின்று ஏழாம்பூமிதனை= ஒப்பறநிலைத்து ஏழாவதுபூமியை, அவனேயடைவன் = அத்தகையனே அடைவான், உடல் இன்றியடையு முத்தியதுவாகும்=தேகமில்லாமல் அடையும்படியான மோக்ஷம் அதுவாகும், கவர்சாந்தமுமே=கொள்ளத்தக்கபரம உபசாந்தமுமேயாகும், மொழிக்கெட்டா = வசனத்திற்கெட்டாததாம்; கனபூமிகளின் எல்லையிதாம் = கனமான பூமிகளின் பரியவசானமிதுவாம்.

(ஸ்ரீ - வீர) அத்விதீயரூப அவனுக்குச் சமுசாரதசையில் ஒருபோதும் அப்பிரசித்தத் தன்மையானே சிறிது அபூர்வமாக=பரமாச்சரியரூபமாக, சம்பன்னமாம், உண்மைப் பார்வையால், நித்தியசித்தத்தன்மையால், சிறிதும் சம்பன்னம் இலதாம். இவன் ஆறுவதுபூமியிலிருந்து ஏழாவதுபூமியை அடைவன், ஏழாவது பூமிகையானது விதேகமுக்தத்தன்மையெனவே கூறப்பட்டது, ஏழாவதுபூமிகையானது நன்கு பிரௌடமாகுமேலாயின் அதுவே முத்தத்தகைமையாம். ஏழாவதாமது இனிது பொலிந்திடில், ஏழாவதுவிடயம் ஜீவிப்பவர்க்கே ஏனமுன்னரே கூறப்பெற்றது; வாக்குகட்கு எட்டாததாம் சாந்தமாம், பவபூமிகளில் எல்லையாம், வாக்குகட்கு எட்டாததாம்=யோகிமானச அநுபவமாத்திரகம்மியமாம் ஜீவிப்பவனுக்கு

ஏழாவதுபூமியேயிலதாம் என யோகிமானச அநுபவகம்மியத்தன்மையும் அதற்கிலதாமென மயங்கற்க, அது சீமாபவபூமிகளில் எனவதற்குப் பவபூமிமத்தியில்வீழ்ந்த எல்லைத்தன்மைக் கூற்றுவிரோதம் வருதலின், இவற்றின் அப்பியாசயோகத்தானேயென இனிப் பயிலத்தக்கன வென்னும் கூற்றுமுரணுதலினுனும் என்றுணர்க.

(ச) இவன்=ஆறும்பூமியை அடைந்த இந்தயோகி, சிறிதுளதாய் = சத்ரூபனுதலின் உண்டானவனுய், அன்றி சிறிதுமிலன்=விவகரித்தற்கரியனுதலின் உண்டாவனன்றாம்; இங்ஙனம், ஆறும்பூமியினின்றவன் ஏழாம்பூமியையடைவன், அது=அந்த ஏழாமியோக்பூமி, உடலன்றியடையு முத்தியாகும்=விதேகமுத்தியாம், இது, கனபூமிகளினெல்லையாம், இதற்கு மேற்பூமி யொன்றுமின்மையின் என்க. (44)

(ஸ்ரீ-வீர - அ-கை) இதனை இன்ன இன்னுர் இவ்வாறு இயம்புவர் என்றும் இதனைப் பயிலின்றுயர்தீருமென்றும் உரைத்தல்:—குலவுமயலென்பன.

குலவு முடநீர் முத்தியெனக் கூறு மேழாம் பூமிதனைச்
சிலர்நற் சிவமென் றுரைசெய்வர் சிலர்சூ னியமென் றுரைசெய்வ
ரிலகு பொருளென் றுரைப்பர்சில ரியைந்த கால மென்பர்சிலர்
விலகு பகுதி யென்பர்சிலர் வெவ்வே றாக விசாரித்து.

அயலோ ரான்ம விகற்பத்தோ ரவதா னந்தீர் பேதத்தோ
ரியல்பா லிதுவென் றறிவிக்க வெட்டா விதனை மிகவருந்தி
முயல்வா ராகி யறிவிப்பர் மொழிந்த பூமி யிவையேழு
மய்நீர் நிலையாற் பரிசயிக்கில் வருத்தஞ் சிறிதும் வாராதே.

(ப - ரை) குலவும் உடநீர்=சருவ அனர்த்தமெனவிலகும் தேகந்தீர்ந்தவதனுல், முத்தியென=விதேகமுத்தியென, கூறும்=சொல்லும், ஏழாம்பூமிதனை=ஏழாவதுபூமியை, சிலர் நற்சிவமென்றுரைசெய்வர்=சிலர் நல்லசிவசொரூபமென்று கூறுநிற்பர், சிலர் சூனியமென் றுரைசெய்வர்=மற்றுஞ்சிலர் ஒன்றுமில்லாததென்று கூறுநிற்பர், இலகுபொருளென்றுரைப்பர் சிலர் = பிறர்விளங்கும் அருத்தமென்றுரைத்திடுவர், இயைந்தகாலமென்பர் சிலர்=பரர் விவகார சாதகமாகப்பொருந்திய காலதத்துவமென்றுகூறுவர், விலகுபகுதியென்பர்சிலர் = பலர் பிரகிருதியும் பாவவிபாகமென்றிடுவர், வெவ்வேறாக விசாரித்து = வேறுவேறாக ஆராய்ந்து.

அயலோர் ஆன்மவிகற்பத்தோர்=அன்னியர் ஆன்மவிகற்பம் புரிபவராவர், அவதானந் தீர்பேதத்தோர் = நிண்ணயமில்லாத வேற்றுமையையுடையோர், இயல்பாலிதுவென் றறிவிக்க=சுபாவத்தால் இது என்பதாக உணர்த்துவிக்க, எட்டா இதனைமிகவருந்தி = அகோசர இதுதன்னை மிகநலிந்து, முயல்வாராகி யறிவிப்பர் = பிரயத்தனமுடையவர்களாகி யுணர்த்துவிப்பர், மொழிந்த பூமியிவையேழும் = கூறியபூமிகள் இவையேழும், மயநீர்நிலையால்= பிராந்திநிலைமையை அடியோடும்விட்டு, பரிசயிக்கில் = அப்யசிக்கில், வருத்தஞ்சிறிதும் வாராதே=கஷ்டம்கிஞ்சித்தும் வரமாட்டாதாம்.

(ஸ்ரீ - வீர) சைவர்களாலது சிவமெனக்கூறப்பெறும், சிவம் அத்வைதம் நான்காவதாக நினைவர் என்னுஞ் சுருதியனுசாரத்தால் என்பதுகருத்தாம்; வேதாந்திகளினுலே பிரஹ்ம

மென்று பேசப்பெறுமது, பிரகிருதிபுருடபாவம் பிரிவுபடாததிலமையாம், அதனது விவேக மென்று சாங்கியயோகிகளினுலே சாற்றப்பெறும், அன்னியஜயிமினியர் சாத்துவதர் மாகேசுவரர்புத்தர் அருகதர் முதலியோரால், சுவர்க்கம் வாசுதேவர் மகேசுரர் தீங்குதீர்விஞ்ஞானம், தீங்குதீர்சுகம் என்பதாதியாகக் கூறப்பெறும், அதாவது தங்கள்தங்கள் மதியனுசாரிவிகற்பித நாஞபேதங்களினுலே வேறுவகையாக வேறுவகையாகப் பாவிக்கப்பெறும். வாக்குகட்குக் கோசரிக்கமுடியாததேயாமாயின் எங்ஙனமுபதேசிக்கப்பெறும் எனின் ஆண்டுக்கூறல்:— எப்போதும் உபதேசிக்க முடியாததேயாமாயினும் ஒருவாறுகப் பாகத்தியாகலக்ஷணவுபாயங் களினுலே யுபதேசிக்கப்பெறும்; ஹே இரகுகுலதிலகனே! உனக்கெம்மாலிவ்வண்ணம் ஏழு பூமிகள் வருணிக்கப்பெற்றனவாம். இவற்றின் அப்பியாசயோகத்தினுலே ஒரு சிறிதுதுயா மும் அனுபவியாய்.

(ச) சிலர் சிவனென்பர், சிலர் பிரமனென்பர்=சிலர் விஷ்ணுவென்பர் என்பதை நற் சிவமென்பதில் அடக்கினுர், பொருள்=ஞப்தி.

இயல்பாலிது வென்றறிவிக்கவெட்டா, நிருபாதிகமாதலின், நித்தியமிதுவென விவ கரித்தற்கரிதாயினும் இதனைத் தங்கள்தங்கள் மதபேதத்தால், அவ்வவ்வாதியர் சிறிது கற் பிதோபாதியால், அறிவிப்பர்=விவகரிப்பர், இவ்விடத்து யோகபூமிகள் ஏழின்நாமங்களும் இலக்கணங்களும் முற்கூறினமையிற்கூறவில்லை, அப்பூமியடைந்தவரின் சின்னங்களே முற் கூறப்படாமையின் இவ்விடத்து வினவப்பட்டன; விரித்துரைக்கப்பட்டனவுமாம், இவ் விடத்துக்கூறப்படாத அந்த நாமாதியை உற்பத்திப்பிரகாணத்தில் இலவணுக்கியானத்திற் பார்க்கத்தக்கதாம். (45-46)

(ஸ்ரீ - வீர - அ - கை) பரவைராக்கியத்திறமை இருப்பின்மாத்திரம், பூமிகைகளிற் பிர வேசமாம், அயலாருகவிலதாம், என மத்தப்பிடிக்கதைவாயிலானே வருணிக்கத்தொடங் கல்:—மிகவுமென்பது.

மிகவு மதத்து மதம்பொழிந்து மெத்தென் றினிதா நடையுடைத்தாய்
புகர்கொ டுதிக்கை றுனிபதறிப் பொருகோட் டிணைசங் கிணைநிகராம்
பகடுண் டநர்த்தம் பண்ணுமது படுக்கப் படுமே லப்பொழுதே
சுகமாய் விரைவி னரர்கடப்பர் சொன்ன பூமிப் பரப்பெல்லாம்.

(ப - ரை) மிகவுமதத்து மதம்பொழிந்து = அதிக மதோன்மத்தமாய் மதத்தைப் பொழிந்து, மெத்தென்றினிதா நடையுடைத்தாய்=மெதுவான இனிமையான நடையோடு கூடியதாய், புகர்கொள் துதிக்கை நுனிபதறி=புள்ளிகளும் துவாரமுமுடைய துதிக்கையக் கிரமாகம் சலனமுற்று, பொருகோட்டிணைசங்கிணைநிகராம்=குத்தும் கொம்புகளின்றுவயம் சங்கிற்குச்சமானமாம், பகடுண்டநர்த்தம்பண்ணும்=யானையுளது துக்கப்படுத்தும், அதுபடுக் கப்படுமேல்=அது வெற்றிகொள்ளப்படுமாயின், அப்பொழுதே=அச்சமயத்தே, சுகமாய்= சுலபமாய், விரைவில்=வேகமாக, நரர்கடப்பர் = அதிகாரிகள் தாண்டுவார்கள், சொன்ன பூமிப்பரப்பெல்லாம்=கூறியபூமி விஸ்தாரங்கள் யாவற்றையும்.

(ஸ்ரீ-வீர) அத்தியந்தம் மதோன்மத்தையாயும், மிருதுமந்த நடையினதாயும், எப்போ தும் போர்செய்யவே முயல்வதாயும் மத்தான சங்குகள்போன்ற கோடுகளாற் புகழப்பெறுவ தாயும் உள்ள ஒருமடப்பிடியுளது; உன்தாருக்கானது அதனுல் என்னேயெனிற்கூறல்:—

அநர்த்தமென்பதாதி. அந்த அநர்த்தகாரிணியாய அஃதிருக்குமாயின் அத்தியந்தம் துன்புறுத்திக்கொண்டே யிருக்கும், கொல்லப்பெறுமாயின் அப்போது அதனால் அவ்வெல்லாப்பூமிகளிலும் அதிகாரிகள் வெல்லுவார்கள். அம்மதமாவா விப்பூமிகள் தடைப்படுத்தப்படும் ஆகலின் அதை வதஞ்செய்யாமல் ஒருபூமியையும் வெற்றிகொள்ளவும் முடியவேமாட்டாதென்பதாம்.

(ச) ஸ்ரீ வசிட்டர்: பகடு, இச்சை அதனதுமதம், வாசனையின்குழாம், பொருகோடுகள், தருமாதருமங்கள் என்பதாதியை ஸ்ரீ இராகவர்வினுவின்பின் ஸ்ரீவசிஷ்டரே வெளிபண்ணுவார். (47)

(ஸ்ரீ - வீர - அ - கை) கரிணி கதையைமுடித்தலும் இராகவர்சங்கித்தலும்:— வழியுமென்பது.

> வழியுங் கடமாக் களிறதனை வன்பாற் கொல்லா திருப்பளவு
> மிழியுந் துயரார் போர்க்களத்தி லெவனே சுபட னென்ன
> மொழியுந் தவனே நீசொன்ன மூரிக் களிறே தமர்க்களமே
> தழியும் படியே துறைவிடமே தருள்வா யென்றா னருண்மூர்த்தி.

(ப - ரை) வழியுங்கடமாக்களிறதனை=மதம்பொழியும் மாதர்மடப்பிடியை, வன்பாற்கொல்லாதிருப்பளவும்=வலிதிற் கொல்லாதிருக்கும்பரியந்தம், இழியும்துயரார் போர்க்களத்தில்=மிகவுந்துன்பங்கணிறைந்த யுத்தகளத்தில், எவனே சுபடனென்ன = யாவன்றான் சுத்தவீரனுவன் என்றுகூற, மொழியுந்தவனே=இவ்வாறுகூறிய தவசிரேஷ்டபகவானே, நீ சொன்ன மூரிக்களிறேது = தாங்கள் உரைத்தமதமாயாது, அமர்க்களமேது = போர்க்களமியாது, அழியும்படியேது=நாசமாமாறு எங்ஙனம், உறைவிடமேது = இருக்குமிடமியாது, அருள்வாயென்றான் = திருவருள் செய்வீர்களாகவென்று வினவினர், அருண்மூர்த்தி = கருணையேவடிவமான கார்நிறவள்ளல்.

(ஸ்ரீ - வீர) அம்மதோன்மத்தையாகிய கரிணியானது எதுவரை வலிதிற்சயிக்கப்பெறவில்லையோ அதுவரை யாவன்றான் சமரபூமிகளில் வீரபடனுவன், அதனை வெற்றிகொள்ளாதவரை அது வியாபித்துலவும் துச்சசாம்சாரிக சம்பத்துருவ சமரபூமிகளிலும் புகுதவும்யாவன்றான் சுபடனுவன்=சமர்த்தயோத்தாவாவன். ஸ்ரீ இராகவர்வினுதல்: அப்பிரமத்த கரிணியாதாம் அவ்விரணபூமிகள் யாவை எங்ஙன மதுகொல்லப்பெறும், அது எங்கே இரமிக்கின்றது நீள்போது?

(ச) சம்சாரசம்பத்துக்களே போர்க்களங்களாம், பிறவிநோக்கங்கள் போர்ப்பூமிகளாமென மேற்கூறப்படுதலினுலெண்க. (48)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஸ்ரீ வசிஷ்டபகவான்விடையை விளக்கமாகக்கூறல்:—இராகவினிது வெற்றியென்பன.

> இராக வர்க்கு முனிசொல்வா னீதுண் டாக வெனல் வடிவாய்ச்
> சோக விச்சை யெனப்பெயர்கொள் சொரிமா மதத்த வெங்களிறு
> தேக மென்னும் பெருங்காட்டிற் றிரளாஞ் செருக்கு மிகச்செய்யும்
> வேக மதத்த விந்தியமா வெங்கள் றுகளை யுடைத்தாகும்.

இனிது நாவா லுரைசெய்யு மிதய மென்னுங் காட்டுறையும்
பனிவல் வினைக்கோ டிரண்டுளவாம் பலவா தனையா மதஞ்சொரியு
மனிச மெங்கும் படர்வடிவா மறிவில் பிறவி நோக்கங்கண்
முனிவி லடுபோர்ப் பூமிகளா மூரி யிச்சை மதகளிறே.

வெற்றித் திறமுந் தோல்விகளு மேன்மே னல்கி யிச்சையெனுஞ்
செற்றக் களிறு தீனர்களாஞ் சீவத் திரளைச் சங்கரிக்கு
நிற்றத் தொழில்வா தனைபாவ நெஞ்சு மதிசங் கற்பங்கள்
பற்றும் பிறவு மிதன்பெயராய்ப் பண்ட மாய்நெஞ் சுள்ளிருக்கும்.

(ப - ரை) இராகவர்க்கு முனிசொல்வான்=ஸ்ரீ இராகவருக்கு ஸ்ரீ வசிட்டபகவான் கூறுவர், ஈதுண்டாக எனல்வடிவாய்=இது எனக்குண்டாகுக என்பதன் உருவமாய், சோக விச்சையெனப் பெயர்கொள்=துய்ரமய ஆசையென்பதாகப் பெயர்கொண்ட, சொரிமாமதத்த வெங்களிறு=மாமதஞ் சொரிந்துகொண்டிருக்கும் கொடியபிடி, தேகமென்னும் பெருங்காட்டில்=சரீரமென்பதான பெரிய ஆரண்ணியத்தில், திரளாம் செருக்குமிகச்செய்யும்=கூட்டமானகருவம் அத்தியந்தமியற்றும், வேகமதத்தவிந்தியமாம் = வேகமும் மதமும்வாய்ந்த இந்திரியங்களாம், வெங்கன்றுகளையுடைத்தாகும் = கொடியகன்றுக்குட்டிகளை யுடைத்தாயிருக்கும்.

இனிதுநாவால் உரைசெய்யும் = நன்குநாக்கினுலே கூறுநிற்கும், இதயமென்னுங் காட்டுறையும் = இருதயமாகிய காட்டின்கண்ணேவாழும், பனிவல்வினைக்கோ டிரண்டுளவாம்=துன்பப்படுத்தும் கூர்மையான இரண்டுகொம்புகளை யுடைத்தாயிருக்கும், பல வாதனையாம் மதஞ்சொரியும்=பற்பல வாசனைகளாகிய மதங்களைப்பொழியும், அனிசமெங்கும் படர்வடிவாம்=நிரந்தரம் எவ்விடத்திலும் விரியுமுருவமாம், அறிவில்=உணர்வில், பிறவிநோக்கங்கள்=சமுசாரதிருஷ்டிகள், முனிவில் அடுபோர்ப்பூமிகளாம்=கோபத்தோடும் உயுத்தம் செய்யும் யுத்தகளங்களாம், மூரியிச்சைமதகளிறே=வலியவாசையே மதம்பொருந்திய பிடியாம்.

வெற்றித்திறமுந் தோல்விகளும்=ஜய அபஜயங்களும், மேல்மேல்நல்கி=உத்தரோத்தரமுடைந்து, இச்சையெனும் செற்றக்களிறு=ஆசையாகிய துஷ்டப்பிடியானது, தீனர்களாம் சீவத்திரளைச் சங்கரிக்கும்=உயிர்களாகிய தைனியம் வாய்ந்தவர்களைக் கொல்லாநிற்கும், நிற்றத்தொழில்வாதனை பாவநெஞ்சுமதி சங்கற்பங்கள்பற்றும் பிறவும் = நிரந்தரமியற்றும் வினைவாசனைபாவனை மனம்புந்தி எண்ணங்கள், ஆசைபிறவும், இதன்பெயராய் = இதனது நாமமாய், பண்டமாய்=ஒருபொருளாய், நெஞ்சுள்ளிருக்கும் = ஆசயகோசத்தமரும்.

(ஸ்ரீ - வீர) ஹே இராகவனே! இஃதெனக்குளதாகுகவென்னும் வடிவினதாய ஆசையே பிடியாம், அதுசரீரமாகிய காட்டிலிருக்கும், இது எவ்விடத்தில் ரமிக்குமென்று வினவியதற்கு விடையாமிது, நாலுவகையான தைனியதா வன்சோகமோகாதி யுல்லாசஞ்செய்யும் சீலமுடையதாம்; மதோன்மத்தமாய்த்திரிவதாம், மதம்பிடித்த இந்திரியங்களேயாய உக்கிரகோபதாபாதிகளையுடைய கன்றுக்குட்டிகளையுடையதாம், மதுரம்நிறைந்த இனிய பாஷணஞ்செய்யும் சாதனமாகிய நாவையுடையதாம், மனமாகியபெருநெருக்கக்காட்டின் மறைந்துதிரிவதாம், சுபாசுபகருமங்களாகிய பிரக்கியாத தந்தத்துவயங்களை நீட்டிக் காட்டித்திரிவதாம், வாசனைக்

கூட்டமாகிய மதத்தோடுகூடியதாம் இது மதோன்மத்தமென்னுமிடத்திலுரைத்த மதத்தைக் காட்டியதாம், இவ்வண்ணமே வருவதையும் பொருத்திக்கொள்ளலாம், எங்கும்விரிந்தவபுவை யுடையதாம், ஹே இராமச்சந்திரனே! சமுசாரதிருஷ்டிகளே யதற்குச்சமரபூமிகளாம், யாண்டு நரன் வெகுவெகுவாக ஜயாபஜயங்களை யனுபவிப்பானே, இத்தகைய இச்சையாங்கரிணி யானது இக்கிருபணப் பிராணிக்கூட்டங்களைச் சங்கரிக்கும், வாசனை சேஷ்டை மனஞ் சித்தம் சங்கற்பம் பாவனம் திருஷ்ணையென்பதாதி நாமங்களின்சமுதாயம் அதற்குளதாம், ஆசய கோசத்தமர்வதாம்=சித்தகோசத்திருக்கும் விருத்தி வைசித்திரியத்தோடுகூடியதாம்.

(ச) திரளாஞ்செருக்கு=விவிதவுல்லாசம்; காட்டு=புகுதற்கரியதலத்தில், வல்வினை = புண்ணியாபுண்ணிய விலக்கணமாம், களிறுக்கென்பதாம். கஹனம்=புகமுடியாத் 'இடம், ஆசயம்=அந்தக்கரணம், கோசம்=கோசக்கிருகம், நாகீ=கரிணீ=பிடி. (49-50-51)

(ஸ்ரீ-வீர - அ-கை) எங்ஙனங் கொல்லப்பெறுமிது என்றதற்குவிடைதரல்:—நிலைமை யென்பது.

நிலைமை யென்னு முயற்கணையா னிறைந்த வலியால் விநோதத்தாற்
றொலைவில் பொருளியா வையுமாகித் துன்னி யொன்று மிச்சைதனை
யுலைவி லெல்லா வகையானு யோகி வெல்வ துத்தமமா
மலைவோ டீதுண் டாகவென லகத்தே தழைக்கி லதுகேளாய்.

(ப - ரை) நிலைமையென்னும் உயர்கணையால்=தைரியமென்னும் மேலான அஸ்திரத்தால், நிறைந்தவலியால் விநோதத்தால்=பூர்ணபலத்தினுல் விளையாட்டால், தொலைவில் பொருள் யாவையுமாகித்துன்னி யொன்றுமிச்சைதனை=அளவில்லாத வஸ்துக்கள் எல்லா மாகிப்பொருந்தி ஏகமாம் ஆசையினை, உலைவில் எல்லாவகையானும்=கெடாதசர்வப்பிரகாரங் களினுலும், இயோகி=யோகியானவன், வெல்வது உத்தமமாம் = ஜயிப்பது மேன்மையதாம், அலைவோடு ஈதுண்டாகவெனல்=சஞ்சலத்தோடு இது உண்டாகுகவெனல், அகத்தே தழைக்கில் = உள்ளே விருத்தியாகில், அதுகேளாய் = அஃதென்ன செய்யுமென்பதைக் கேளாய்.

(ஸ்ரீ - வீர) தைரியமெனப்பெயரிய வரஅஸ்திரத்தினுலே அவமரியாதையால், சருவான் மிகையாய் விரிந்த இந்த இச்சையாகிய பிடியை, சருவான்மகமாகவே வெற்றிகொள்ளவேண்டும்; சருவான்மிகை=பிரஹ்மலோகாந்த சருவபோக்கிய கோசரை, இதனை சருவான்மகமாக=எல்லாவகையானும் அல்லது யாவும் யானேயெனப்பாவிக்கும் வடிவத்தானே வெல்லவேண்டுமென்பதாம்.

(ச) இதரமான சகலகணைகளின் விநோதத்தாற் றொலைவின்றித்துன்றி, பொருளியா வையுமாகி = சகலவிஷயமுமாகி, இருத்தலின், ஒன்றும் = விடயங்களோடு தாதான்மிய மடைந்த, இச்சைதனை=இச்சைரூபமானகளிற்றை, நிலைமையென்னும் உயர்கணையால் எவ்வகையாலும்=சர்வப்பிரகாரத்தாலும், செயிக்கவேண்டும்=நிலைமையென்னும் அங்குசத் தாலே இச்சைவடிவமான பகட்டினை வசமாக்கவேண்டுமென்பது பொருள் நிலைமை, இவ்விடத்துப் பரப்பிரமத்திற் சித்தத்தின்றைரியமாம், ஈதெனக்குண்டாக, எனல், என்னும் இவ்வடிவமான இச்சைக்களிறு, அகத்தேதழைக்கில், அது=அதனுல்வரும் அனர்த்தத்தைக் கேளாய். (52)

(ஸ்ரீ - வீர - அ - கை) நித்தியலப்த ஆன்மரூபமதாகப் பாவிக்கிற் றிருஷ்ணையிலதாம், மற்றோ இஃதென அலப்தத்தகைமையானே காணிலுளதாம் என்றறைதல் :—பேசு மென்பது.

பேசு மிதுதா னிற்பளவும் பிறப்பா நச்சு விடுசிகைதா
ஞச மடையா திராகவனே ஞானச் சுருக்க மிதுகேளாய்
பாசமுறவீ துண்டாக வென்று படரு மனந்தானே
யேசு பிறவி யிம்மனத்தி னிறவே முத்தி யிவ்வளவே.

(ப - ரை) பேசுமிதுதானிற்பளவும் = கூறிய இவ்வாசையானது இருக்கும்பரியந்தம், பிறப்பாநச்சு வீடுசிகைதான்=ஜனனமரணமாம் விஷவிடுசிகை வியாதியானது நாசமடையாது=அழிவையடையாது, இராகவனே=இராமச்சந்திரனே, ஞானச்சுருக்கமிது கேளாய்= ஞானத்தின் சங்கிரம் ஆமிதனைக்கேட்குதி, பாசமுற=பந்தமுற, ஈதுண்டாக=இஃதுண் டாகுக, என்று படரும்மனந்தானே=என வியாபிக்கும் மனமே, ஏசுபிறவி = நிந்திதமாய ஜன்மமாம் இம்மனத்தின் இறவே=இந்தமனத்தினது நாசமே, முத்தி மோக்ஷமாம், இவ் வளவே=இத்துணையே சங்கிரம்.

(ஸ்ரீ - வீர) எத்துணைவஸ்து இது என இவ்வண்ணம் இஃதுள்ளே விரிந்திலங் குமோ, அத்துணையேயுக்கிரமாகிய கெட்ட சமுசார மகாவிஷவிஷூசிகைவடிவ ஆசையானது மலர்ந்தோங்கும் இஃதுளதாகுகவென்னும் எம்மனமுளதோ, இத்துணையே சமுசாரமாம், இதனது உபசமமேமோக்ஷம் என்னுமிதுவே ஞானசங்கிரகமாம்; திருஷ்ணையே சமுசாரமாம், அதனது க்ஷயமேமோக்ஷ பூமிகையுதய ஹேதுத்தன்மையான் மோக்ஷமாம்.

(ச) பிறப்பாம்=சம்சாரமேயென்னும், நச்சு=மகத்தாகிய விஷயஜன்னியமான, வீடு சிகை தழைக்குமென்றதாயிற்று, ஈதெனக்குண்டாகவென்று, படருமனந்தானே = சங்கற்பமே, இம்மனத்திற்கிவ்வளவு, பிறவி=சமுசாரமுமாம், சகல சமுசாரத்திற்கு மனமேமூலமாதலின் என்க. இம்மனத்தின் இறவே=உபசமமே, முத்தி=மோக்ஷமாம், இத்தன்மையான ஞானம்ஞானிகளின் உபதேசத்தின் சங்கிரகமாம். (53)

(ஸ்ரீ - வீர - அ - கை) எங்ஙனம் வைராக்கியத்திற்குப் பூமிகோதய ஹேதுத்தன்மையென வதனைக்காட்டல்:—மருளுமென்பது.

மருளு மயநீர் விமலன்பால் வடித்துத் தெளிந்த வுபதேசந்
தருதல் கண்ணு டியின்புறத்திற் றயிலத் துளிபோ லிளைப்பாறுந்
தெருளு முணர்வா லிம்மோகந் தீர்ந்திவ் விச்சை யங்குரமா
யுருவ மனங்கிளு சிலுந்தோன்று துணர்வி லாமை மாத்திரத்தால்.

(ப - ரை) மருளுமயநீர் விமலன்பால்=விடயங்களில் மயங்கும் மயக்கந்தீர்ந்த நிருமல அதிகாரியிடத்தில், வடித்துத்தெளிந்த உபதேசந்தருதல்=மிகவும் அருமையினும் அருமையாய நிருமலவுபதேசத்தைச்செய்தல், கண்ணுடியின்புறத்தில் தைலத்துளிபோல் இளைப்பாறும்=ஆடியின்மீதுவிட்ட தயிலத்துளியேபோல விசிராந்தியுறும், தெருளுமுணர்வால் இம்மோகந்தீர்ந்து = மெய்ஞ்ஞானத்தினுலே அவ்வதிகாரி இம்மயக்கம்நீங்கி ஞானமயமே யாவன், இவ்விச்சையங்குரமா யுருவமனம்=இவ்வாசையேமுளையாக வடிவமடைந்த மன

மானது, கிஞ்சிலுந்தோன்றுது உணர்விலாமை மாத்திரத்தால் = ஒன்றையுங் கருதாமைமாத்திரத்தானே சிறிதும் பிரதீதியாகாது.

(ஸ்ரீ - வீர) இராகாதிபுருஷாபராத மலினசித்தத்தில், சுருதியாசாரியாதி யுபதேசவாக்கானது பதுமபத்திரத்திற் சலபிந்துவேபோலச் சம்பந்தியாதாம், வைராக்கியாதி சாதன சம்பன்ன விமல ஆகிருதியன்பாலோ ஆதரிசத்தின்கண்ணே தைலபிந்துவேபோலச் சேர்ந்ததாகி அவித்தை மலந்துடைப்பதாய், பிரசாதத்துடன் பிரஹ்மாகாரத்தோற்றுவதற்கு அநுகூலத்தையும் சொச்சத்தகைமையையும் செய்வதாய், முடிவுபேறடைந்து, விசிராந்தியை அடையும். இராகாதிகளின் உதயமாகாமையினும், உதிதமானதன் சேதனத்தினும் உபாய முரைத்தல்:—இவ்விச்சையென்பதாதி. இச்சைவடிவ பவாங்குரமானது, விஷயஸ்மரணபரித்தியாகமாத்திரத்தானே உதயமாகாதாம்.

(ச) தெளிந்த=தான் நிர்மலமானவதனல் அந்நியர்சித்தத்தை, வடித்து=தெளிவிக்கும் ஏதுவான, உபதேசந்தருதல் அந்நியருக்கு உபதேசிக்குங்குருவாக்கியம், மருளுமயல்தீர்=நிர்ச்சங்கற்பமாய், அதனல் விமலரூபஞன சீடனிடத்தில், கண்ணடியின் புறத்தின்றயிலத்துளி போல், இளைப்பாறும்=வியாபிக்கும், தயிலத்துளியுந் தெளிவுக்கேதுநிர்மலமுமாம், கண்ணடியுநிர்ச்சங்கற்பம் விமலரூபமுமாம், உணர்வால் மோகந்தீர்ந்தோர் அவரேயாவர், உருவமனமென்னும் விஷவிருக்ஷத்திற்கு அங்குரரூபமாய்த் தோன்றுகின்ற இச்சை, உணர்விலாமை=வாகியானுசந்தானமின்மை, மாத்திரத்தாற் கிஞ்சிலுந்தோன்று=உதியாது. (54)

(ஸ்ரீ-வீர - அ-கை) உணர்வின்மையின் வலிமையையேயுணர்த்தல்:—ஊறுவென்பது.

ஊறு வநர்த்தந் தருமிச்சை யொருகால் வரினு மப்போதே
யாறு விடயத் துணர்வின்மை யான வதனு லறுத்திடுவாய்
கூறு மிச்சை பலவடிவாய்க் கோத்த தெனினு மிவ்வுடலின்
மாறு தான வாதனையை மாற்று திராதிவ் வுணர்வின்மை.

(ப - ரை) ஊறுவநர்த்தந்தருமிச்சை = நிரந்தரம் துயரையேசெய்விக்கும் இச்சையானது, ஒருகால்வரினும் அப்போதே=ஒருபோது உற்றதாயினும் அஞ்ஞான்றே, ஆறுவிடயத்துணர்வின்மையானவதனல்=திருப்தியுறுத விடயத்தில் நினைப்பின்மையான அதுதன்னல், அறுத்திடுவாய்=சேதித்திடுவாய், கூறுமிச்சை பலவடிவாய்க் கோத்ததெனினும் = அநேக அங்கிசங்களாய ஆசை நாளுவுருவமாகச்சேர்ந்ததெனினும், இவ்வுடலில் மாறுதான வாதனையை=இத்தேகத்தில் தீராதானவாசனையை, மாற்றுதிராது=தீர்க்காதிராது, உணர்வின்மை=நினைப்பின்மை.

(ஸ்ரீ - வீர) இச்சை சிறிது உதயமாயினும் அநர்த்தம்செய்வதாயவதனை அசம்வேதன சஸ்திரத்தினலேயே விஷத்தின் அங்குராவலியையேபோலும் சேதிக்கத்தக்கதாம். (55)

(ஸ்ரீ-வீர - அ-கை) உணர்விலாமை சித்திக்குமுபாயமுரைத்தல்:—தன்னுமென்பது.

(ச - அ - கை) அவ்வுணர்வின்மையா தென்பதற்குத்தரம்:—

தன்னு முடிவின் றியினித்தைச் சவத்தின் றினை விருப்பறல்போற்
றென்னும் பிரத்தி யாகாரத் திறத்தி னலே வாதனையை
நன்னு மிச்சை மாத்திரமாய் நயவா திருக்குமப்போதே
யுள்ளு வெறிதே யிருப்பதுவே யுணர்வி லாமை யுறுமுயற்சி.

(ப-ரை) முடிவின்றியினித்தை = அந்தமின்றி யிருக்கும் இதனை, சவத்தின்பிரனை விருப்பறல்போல் = பிணக்கூட்டத்தை விருப்பற்றுவிடுதல்போல், தெள்ளும் பிரத்தியாகாரத்தினுலே = தெளிந்துசெய்யும் இந்திரியமீட்சியானே, தள்ளு = தியாகஞ்செய்தி, வாதனையை = வாசனையை, நள்ளுமிச்சைமாத்திரமாய் நயவாது = விருத்தியாம் ஆசைமாத்திரமாக வளர்க்காமல், இருக்குமப்போதே = இந்நாளத்தே, உள்ளுவெறிதே யிருப்பதுவே = உள்ளே வாளா இருக்குமஃதே, உணர்விலாமை யுறுமுயற்சி = அசம்வேதன சம்பாதனப்பிரயத்தினமாம்.

(ஸ்ரீ - வீர) இச்சையினுலே வியாபிக்கப்பெற்றசிவன் தீனத்தன்மையாகிய போககார்ப்பண்ணியத்தை விடமாட்டான், அசம்வேதனசொரூபத்தை விளக்கிக்காட்டல்:—உள்ளு என்பதாதி. நன்றாய அசம்வேதன அநுகூலவிரோதயத்தனமும், பிரத்தியாகாரயத்தனமும்; சும்மாவே = நிர்வியாபாரமதாகவே சித்தத்தினது உள்ளிருத்தலாம். அதுவும் அப்பியாசகாலத்தில் சாவதானமாகவே காக்கவேண்டும், பரிபாககாலத்திலோ அவ்வாறு சாவதானம் வேண்டியதில்லை, சுழுப்தி மரணவஸ்தைகளிலேபோலத் தானாகவேகிடைக்கும், என்னுங் கருத்தாலுரைத்தல்:—அவதானம் விட்டிராநின்ற சுழுத்தியையும் சவசதத்தையும்போலத் தானேசம்பாதிக்கலாம், அவ்வநர்த்தகாரிணியாய இச்சாமச்சத்தைப் பிரத்தியாகார வடிவத்தூண்டிலினுலே இழுத்துப்பந்திப்பீராக, இது எல்லாசுரோதாக்களையும் பார்த்துக்கூறியதாம்.

(ச) உள்ளுவெறிதே யிருப்பதுவே = சித்தஞ்சும்மாவிருப்பதே, உணர்விலாமையாம், அதுவே பிரத்தியாகாரரூபமான யோகாங்கரூபமாம், அதனுலே வாதனைவடிவமான இச்சை நிவிர்த்தியாமென்றதாயிற்று.

தீனத்தன்மை = இஷ்டார்த்தசித்தி நிமித்தம் தைன்யம். சித்தஞ் சும்மாவிருத்தலேய சம்வேதனமாம். (56)

(ஸ்ரீ - வீர - அ - கை) அற்றேல், முன்கற்பனைத்தியாகத்தினுலேயே மூக்தியாமென வெளுவாகத்தாங்கள் கூறினீர்கள் இப்போது இச்சைத்தியாகத்தினுலேயென் எங்ஙனங்கூறுகின்றீர்கள் எனிற்கூறல்:—எனதென்பது.

எனதி தென்னு மறிவுதனை யிடர்கற் பனையென் றுரைசெய்வார்
கனமா மறிவின் பாவனையாற் காண்ப தெல்லாங் கையகலி
லனகா திபனே கற்பனைக ளற்ற தென்றா ருயர்நல்லோர்
மனமா நினைவே சங்கற்ப மனத்தி னினைவற் றதுசிவமே.

(57) (ப - ரை) எனதிதென்னு மறிவுதனை = என்னுடையது இது என்னும் உணர்ச்சியை, இடர்கற்பனையென்றுரைசெய்வார் = துயருறுத்தும் கற்பனையென்பதாகக் கூறுநிற்பர், கனமாம் அறிவின்பாவனையால் = பூர்ணசித்தினது பாவனையினுலே, காண்பதெல்லாங்கையகலில் = திருசியங்களியாவும் நழுவிப்போமாகில், அனகாதிபனே = புண்ணியமூர்த்திகட்குட் புண்ணியமூர்த்தியே! கற்பனைகள் அற்றதென்றார் = கற்பனைகள்யாவும் தீர்ந்ததென்றார், உயர்நல்லோர் = உயர்ந்தமகான்கள், மனமாநினைவு சங்கற்பம் = மனத்தினது பெருத்தவெண்ணமே சங்கற்பமாம், மனத்தின் நினைவற்றதுசிவமே = மனத்தினது எண்ணமற்றது சிவஸ்வரூபமேயாம்.

(ஸ்ரீ - வீர) இஃதென்க்குளதர்குகவென்னும் சம்வேகம்=சித்தாவனம், இதனை விஷயானுசந்தான லக்ஷணகற்பனைப்பல அவஸ்தையிதுவெனக் கற்பனமென்பருத்தமர்; அருத்தத்தின் ஸ்மரணமின்மையாதோ அதனைக் கற்பனைத்தியாகமென்பர், சங்கற்பமே சருவ அனர்த்த மூலம் என்னும் பழையகூற்றுகட்கும் இதுவேகருத்தாம் என்னும் அபிப்பிராயத்தாற்கூறல்:—மனமென்பதாதி. ஸ்மரணத்தைச் சங்கற்பமென்றுணர்தி, ஸ்மரணமின்மையையே சிவமென்றுணருவர் பெரியோர்.

(ச) காண்பதெல்லாங் கையகலில்=வாகியார்த்தத்தின் அபாவனையே, கற்பனைகளற்றது=கற்பனைத்தியாகமாம், நினைவேசங்கற்பமா நினைவற்றதுவே சிவம்சாந்தம் பிரமமென வறிவவொன்பதாம். (57)

(ஸ்ரீ - வீர - அ - கை) ஆயினெங்ஙனம் ஸ்மிருதி சங்கற்பபதங்கட்கு அபரியாயத்தன்மை எனில் ஆண்டுக்கூறல்:—எட்டியென்பது.

எட்டி யறிந்த தறியாத திரண்டும் பாவிப் பதுநினைவாம்
பட்ட மரம்போ லிவையிரண்டிற் பற்று நினைவு தனைமறந்து
வட்ட மிடுமியா வையும்விரைவின் மறந்து சான்ற மதியுடைத்தாய்
திட்ட முறத்தோன் றுதலில்லாத் திறத்தோ னாகி நிலைநிற்பாய்.

(ப - ரை) எட்டியறிந்தது அறியாதது இரண்டும்பாவிப்பது நினைவாம் = கட்டித் தெரிந்துகொண்டது தெரிந்துகொள்ளாதது இரண்டையும் எண்ணுவதேநினைப்பாம், பட்ட மரம்போல்=காய்ந்த கட்டையேபோல, இவையிரண்டில்=இவ்விரண்டின் கண்ணும், பற்றும் நினைவுதனைமறந்து=சம்பந்திக்கும் எண்ணந்தனைமறந்து, வட்டமிடும்யாவையும் மறந்து விரைவில்=சுற்றிக்கொண்டுதிரியும் யாவற்றையும் மறந்து வேகமாகத்தானே, சான்றமதியுடைத்தாய் = மகாமதியையுடையவனுகி, திட்டமுறத் தோன்றுதலில்லாத்திறத்தோனுகி நிலைநிற்பாய்=திடமாக யாவர்க்குந்தெரியாததன்மையனுகித் திதிபெறுவாய்.

(ஸ்ரீ - வீர) ஆண்டு முன்னனுபவித்ததும் அனுபவியாததும் பாவிக்கப்பெறும், சங்கற்ப முள்தாயின் அநுபவிக்காததும் பாவிக்கப்பெறும் என்னுஞ்சிறப்பினுலே அபரியாயத்தன்மை யிருந்தபோதினும் பூமிலகையேறவிழைந்தோரால், தள்ளத்தகுதியதாவதில் ஒருசிறிதும் இறப்பிலதாமென் வீண்டபேதமே கூறவிழைந்ததாம் என்னுங்கருத்தாலுரைத்தல்:—பட்டவென்பதாதி. அநுபவித்ததையும் அநுபவியாததையும் ஸ்மிருதியையும் காஷ்டம்போல மறந்து பிறயாவற்றையுமே அத்தியந்தம் விரைவில் மறந்து மகாமதியையுடையவனுய்க் கூடமாயிருத்தி.

(ச) இவ்வயிரண்டில் = அநுபூதவிஷயத்திலும் அனநுபூதவிஷயத்திலும் பற்றுநினைவதனை, மறந்து=ஒழிந்து, பட்டமரம்போல் யாவையும், மறந்து = அநுசந்தானஞ்செயாது, சாந்தமதி யுடைத்தாய் = மகாமதியை யுடையவனுய், மூடன்போலிருப்பாய், என்றதாயிற்று. (58)

(ஸ்ரீ - வீர - அ - கை) இப்போது பரமகாருணிகராய ஸ்ரீ வசிஷ்டபகவான் சர்வஜனங்கட்கும், விடயு சங்கற்பத்தியாகமின்றி, மோக்ஷம்சித்தியாதாமென அதன்றியாகமேயவசியம்

செய்யத்தக்கதாம், என்பதாகச் சம்பூர்ணவாசிஷ்டவுபதேச இரகசியத்தை யாக்ருரோசத் தோடும் திட்டப்படுத்திக்கொண்டு கூறுதல்:—கேளா என்பது.

கேளா நின்று னிவனென்ன வொருவன் கிட்டா மையினாலே
தோளா லுயரக் கையெடுத்துத் தோன்ற நின்று சொல்கின்றோ
மீளா தான வசங்கற்பம் விமல மான பரமபதம்
வாளா வுள்ளே பாவிக்க மாட்டா ரதனை யென்னம்மா.

(ப - ரை) கேளாநின்றான் இவனென்ன ஒருவன்கிட்டாமையினாலே = சிரவணஞ்செய்வான் இவ்வதிகாரியென்று ஒரு அதிகாரி கிடைக்காமையினாலே, தோளாலுயரக் கையெடுத்துத்தோன்ற நின்றுசொல்கின்றோம்=உயரக்கை தூக்கி யாவருக்கும் தெரியும்படியாக நின்று கூறுகின்றோம், மீளாதானவசங்கற்பம் விமலமான பரமபதம் = மீண்டுந் திரும்பாததான சங்கற்பமின்மை நிருமலமான பரமமோக்ஷமாம், வாளாவுள்ளே பாவிக்கமாட்டார் = வீணாக ஆந்தரத்தே பாவிக்காமலிருக்கின்றார், அதனையென்னம்மா = அவ்வசங்கற்பத்தை இஃதென்னேயாச்சரியம்.

(ஸ்ரீ - வீர) ஊர்த்துவபாகுடன்யாம் கதறிக்கதறி மீளமீளவும் கூவிக்கூவிக் கூறுகின்றோம், இதனை, இவ்வண்ணம் ஆக்குரோசம் செய்தபோதினும், செவிட்டுமுண்டமே போலவும், சுப்தப்பிரமத்தனேபோலவும், எச்சனமுமே கேட்பதேகிடையாது கேட்பவர்களுக்குள்ளும் சிரவணபல அதரிசனத்தானே இங்ஙன்கூறியதாம், அசங்கற்பமே பரமசிரேயசாம், அதனையேன் உள்ளே பாவிக்கமாட்டாமலிருக்கின்றார், உள்ளிருதயத்தில் யாதின்பொருட்டுப் பாவிப்பதில்லை=ஆராய்ந்து கிருதகிருத்தியத்தன்மை முடிவுபேற்றை ஏன்செய்யாமல் இருக்கின்றார். மந்தமத்தியம அதிகாரிகட்கு நன்மனனமின்றி அருத்தசித்தியாகாதென்பதாம்.

(ச) தோளால் உயரக்கையெடுத்து நின்றுதோன்ற = சகலருக்கும் பிரபோதமாம்படி ஊர்த்துவபுஜனாய், இவன்=இந்தப்பரமார்த்த தரிசியானநாம், தோன்றச்சொல்கின்றோம்= கூப்பிட்டுரைக்கின்றோம், இதனைக் கேளாநின்றான் என்ன ஒருவன்கிட்டாமையின் = ஒருவனுங் கேட்கின்றானில்லையாகலின். அம்மாமோகமகிமையென்று வருவித்துக்கொள்க, என்று சொன்னார், பாவிக்கவேண்டுவது யாதெனிற்கூறல்:—அசங்கற்பமே விமலமான பரமபதமாம், அத்தன்மையான இதனை என்னென்றுள்ளே சகல முமுக்ஷுக்களும் பாவிக்கமாட்டார். (59)

(ஸ்ரீ - வீர - அ - கை) சும்மாவிருத்தலாற் சாம்ராஜ்ஜிய சம்பத்துங்கிடைக்கும், சகல விவகாரங்களுந்தானே நடக்குமெனல்:—செறியென்பது.

செறிபார் முழுதாள் பவன்பதமுந் திரண மென்னப் பரமபதம்
வெறிதே யிருக்கு மிருப்பினான் மேவு மன்றே பேரூர்க்கு
நெறிபோம் பதிகன் றனக்கிருதா ணீயா திருக்க நடப்பதுபோற்
பொறிகூர் தனது தொழினடக்கும் பூணா வாளா விருந்திடவே.

(ப - ரை) செறிபார் முழுதாள்பவன் பதமும்=இளமையிற் பிணியற்றொருகுடைநிழற்கீழ் இருநிலம்முழுவதும் புரக்கும்வளமை பெற்றுடையமகனது பதவியும், திரணமென்ன = துரும்புக்குச்சமானமாக, பரமபதம்=மோக்ஷபதமானது, வெறிதேயிருக்குமிருப்பினால் = சும்மாவேயிருக்குந் திதியினால், மேவுமன்றே = பொருந்துமல்லவோ, பேரூர்க்கு நெறிபோம்

ப்திகன்=ஒருதேசத்திற்கு மார்க்கங்கடந்தேகும் ஒருவழிப்போக்கன், தனக்கிருதாள் நினையா திருக்க நடப்பதுபோல்=தனக்கனுகூலமாக இரண்டுபாதங்களும் எண்ணுதிருக்கவும் செல் வனபோல, பொறிகூர் தனதுதொழில் நடக்கும் பூணுவானாவிருந்திடவே = தான் அசங்க மாகச் சும்மாகவேயிருந்தபோதினும் தனது இன்றியமையாத விவகாரங்களை இந்திரியங்களே செய்து முடிக்கும்.

(ஸ்ரீ - வீர) சர்வவியாபார உபரமத்தோடுகூடியிருக்கும் புருடனாலே அத்தகையபரம பதம் அடையப்படும், இது சுருதிப்பிரசித்தமேயாம், அவ்வாறே சுருதியுமறைகின்றது:—எக் காற்பஞ்சஞானங்களும் மனத்தோடிருக்கும், வானாமதியுமேயியங்கா, தக்காலத்தினைப்பரம மாங்கதியாய், அறைகுவர்பெரியோர் அநுபவத்தறியே" ஹே இராகவனே எதன்கண்ணே பரம சாம்ராஜ்ஜியமும் துரும்புக்குச்சமானமாமோ ஐரண்யகர்ப்பாந்தமாய சாம்ராஜ்ஜிய சுக மும், பூமானந்தத்திற்றிருணம்போலத் துச்சத்தன்மையையடையாநிற்குமோ வென்பதாம். அற்றேல் எல்லாவகையானும் சங்கற்பத்தியாகமாகுமாயின், தேகஅசைவாதி அசித்தியால் விவ காரம் லோபமாகவே யாங்ஙனம் ஜீவனமாமெனின் அறைதல்:—பேரூர்க்கென்பதாதி. எங்ங னம் அடையத்தக்கதாய் தனதுகிருகாதி தேசத்திலேயே ஏகநிஷ்டையாகிய அவிச்சின்னசித்த விருத்தி தாரையையுடைய வழிப்போக்கன் றன்பாதங்களிற் சங்கற்பமில்லாமலே கணந் தோறுஞ் சலனமுண்டாகின்றதோ அங்ஙனம் யோகிகட்கும் சங்கற்பமில்லாமலே பூர்வாப் பியாச ஜீவன அதிருஷ்டவசத்தானே, நிஷித்தமில்லாத தனது கரும நல்லியக்கமானதுண் டாம்.

(ச) செறிபார் முழுதாள்பவன் பதமும் = மேலான சாமிராச்சியமும் எந்தப்பதத் தைப் பாவிக்கின் திரணமெனலாம்=திரணம்போற் றுச்சமாமோ அந்தப்பரமபதம், வெறிதே யிருக்குமிருப்பாலே=சும்மா விருத்தலினாலே, மேவுமன்றோ=பரமபதஞ்சுலபமாயுறுந்தன்மை ஆச்சரியமென்பது சேடம், பேரூர்க்கு நெறிபோம்பதிகன்றனக் கடிக்கடி இருதாளும், நினை யாதிருக்கவும் நடப்பதுபோல் ஞானியான பிரமநிஷ்டனுக்குந் தனது தொழில்களும், பூணுவர்னா விருந்திடவே=நினையாதிருக்கவே நடக்கும். (60)

(ஸ்ரீ - வீர - அ - கை) சங்கிரகமாய இதோபதேசஞ் சாற்றல்:—இங்கு என்பது.

இங்குப் பன்னும் பலவாலெ னியம்பு சுருக்க மிதுகேளாய்
சங்கற் பந்தான் பவபந்தஞ் சங்கற் பந்தீர்ந் ததுமுத்தி
பங்கற் றெல்லை யழிவலைவு பவமற் ருறு மறிவுருவே
துங்கச் சகங்க ளெனநோக்கிச் சுகமெப் படியப் படிநிற்பாய்.

(ப - ரை) இங்குப்பன்னும்பலவாலென் = இவ்விடத்தே வெகுவாகக்கூறுவதானே யென்னபிரயோஜனம், இயம்புசுருக்கமிது கேளாய்=கூறுநிற்கும் சங்கிரகமாம் இது தன் னைக்கேட்பாயாக, சங்கற்பந்தான் பவபந்தம்=எண்ணுவதேதான் சமுசாரபந்தமாம், சங்கற் பந்தீர்ந்தது முத்தி=எண்ணந்தீர்ந்ததே மோக்ஷநிலையாம், பங்கற்றெல்லையழிவு அலைவுபவ மற்று=பிரிவில்லாமல் எல்லையில்லாமல் அழிவில்லாமல், சலனமில்லாமல் பிறப்பில்லாமல், ஆறும் அறிவுருவே=விசிராந்தியுறும் சித்துருவமே, துங்கச்சகங்கள் எனநோக்கி=இந்நாஞ் வித உன்னதமான உலகப்பொருள்கள் எனப்பார்த்து, சுகமெப்படி அப்படி நிற்பாய்=ஆனந் தம் எவ்வாறு அவ்வாறே யிருப்பாய்.

(ஸ்ரீ - வீர) வெகுவாக வீண்டுக்கூறுவதால் என்னேபயன் சுருக்கமாகவிது கூறப்பெறும்:—சங்கற்பனமே பரமபந்தமாம், அதனபாவமே விமுக்தத்தன்மையாம், எத்திருஷ்டியினாலே அசங்கற்பனம் எய்தலாகுமெனின் அதனைக்கூறல்: இவ்வண்ணம் சருவமும் அஜமெனவும் சாந்தமெனவும் அநந்தமெனவும் துருவமெனவும் அவ்யயமெனவும் பார்த்து, அந்நித்திய சித்தபரமார்த்த சித்துரூபமே தானுய்ச்சுகமுற்றபடி சாந்தமாயிருத்தி.

(ச) சகங்கள்=இந்தச்சகமனைத்தையும், ஆறும்=சாந்தாதி இலக்ஷணமுள்ள, பங்கற்று=பரமார்த்தத்துக்கபின்னமான, துங்க அறிவுருவே=சற்சின்மயமே யெனநோக்கி, சாந்தனுய் எப்படிச்சுகமாம் அப்படிநிற்பாய். (61)

(ஸ்ரீ - வீர - அ - கை) இவ்விதோபதேசத்தையே விரித்துரைத்து உபசங்கரித்தல்:—ஒழியாவெனக் கென்பன.

ஒழியா நிலையா முபசாந்த யோக மென்ப துணர்வின்மை
கழியா யோக நிலையினனுய்க் கவர்பற் றொழித்துத் தொழில்செய்வா
யிழியா தியற்றப் படாவுள்ள மிறந்த யோகமுணர் வின்மை
வழியான் மிகவு மதின்மயமாய் வல்லை நிற்பாய் மகிழ்ந்தபடி.

எனக்கீ தென்னு முணர்வுடைமை யிடர்விட் டகலா துணர்வின்மை
யனர்த்த மில்லா வீடளிக்கு மாசை யேதிங் கதுசெய்வாய்
சனிப்பில் சிவ மெங்கணுமுளது சாந்தஞ் சுபஞ்சித் துருவென்னுங்
கனத்த வந்த வொருநினைவே கருமத் தியாக மிராகவனே.

(ப - ரை) ஒழியாநிலையாம் உபசாந்தயோகமென்ப துணர்வின்மை = கெடாததியா முபசாந்த யோகமென்பது அவேதனமாம், கழியாயோக நிலையினனுய்=அழியாத யோகத்திதியினனுகி, கவர்பற்றொழித்துத் தொழில்செய்வாய்=கிரகித்த சங்கம்விட்டுக்காரியம் செய்வாய், இழியாதியற்றப் படாவுள்ளமிறந்த யோக முணர்வின்மை = நிந்திதமாகாது இயற்கையான சித்தநாசயோகம் அவேதனமாம், வழியான்மிகவும் அதின்மயமாய்=முறையாக அத்தியந்தம் தன்மயனேயாகி, வல்லைநிற்பாய் மகிழ்ந்தபடி=விரைவிற்றிரும்பாமல் திதிபெறுவாய் சந்தோஷமானபடி.

எனக்கீதென்னுமுணர்வுடைமை = எனக்கிது வேண்டும் என்னும் நிச்சயத்தோடுறுதலானது, இடர்விட்டகலாது = துயரைவிடவே மாட்டாது, உணர்வின்மை = அவ்வாறுணர்வுறாமை, அனர்த்தமில்லா வீடளிக்கும்=சருவஅனர்த்த நிவிருத்தி பரமானந்தப்பிருப்தி வடிவ மோக்ஷத்தையேபயக்கும், ஆசையேது இங்கு அதுசெய்வாய் = உனக்கெப்படி யிச்சையோ அப்படியே செய்வாய், சனிப்பில் சிவமெங்கணுமுளது = அஜமாகிய பரமசிவமே எங்குமிருக்கின்றது, சாந்தம் சுபம் சித்துருவென்னும்=உபசாந்தம் மங்களம் அறிவுருவு என்னும், கனத்த அந்த=கனமான அந்த, ஒருநினைவே=ஒப்பற்ற ஏகநிச்சயமே, கருமத்தியாக மிராகவனே=சர்வசங்க பரித்தியாகம் இரகுதிலகனுகிய இராகவ இராமச்சந்திரனே.

(ஸ்ரீ - வீர) சாந்தமாயிருக்கும் அக்ஷயயோகத்தை அவேதனமென வறிவர்=அத்தகைய திருஷ்டியின் பரிணதியால் யான் எனதென்னும் அத்தியஸ்த சருவபேத மறப்பேஜீவப்.

பிரஹ்மைக்கிய இலக்ஷணயோகம் எனப்பிரஹ்மவித்துக்கள் அறிவர், அறைவர், "துக்க சையோக வியோக யோகமெனப் பெயரிய வதனைத்தெரிந்துகொள்க" என்பதாக ஸ்ரீ பகவானால் அவ்வாறே வியாக்கியானிக்கப் பெற்றிருத்தலின், என்பது கருத்தாம்; யோகத்தனுய்ச்செய்தி கருமங்களை நீ யென்னும் அத்திருவாக்கியமோ லோகசங்கிரக இச்சையன் பொருட்டு ஐச்சிகவிகித அநுஷ்டாபனப் பொருட்டாம், நியமப்பொருட்டன்றும், என்னுங் கருத்தாலுரைத்தல்:—கழியாவென்பதாதி யோகத்தனுகிச்செய்தி; தன்மங்களை, நிருவாசனையினனுகியிருத்தி சமாதி பரனுகியிருத்தியேலாயின் செய்யவேவேண்டியதில்லை. அக்கிருத்திரிமமாய்ச் சித்தக்ஷயமாய யோகத்தை யவேதனமென அறிவர், அத்தியந்தம் அம்மயமாகி, இருக்கின்றபடியே யிருந்து நீ வாழ்தி—இருக்கின்றபடியா யதிதியே உசிதமாதலின் உள்ளபடியாய சொரூபப்பிராப்தியில், மகிழ்தி. அந்தத்திதியே சருவப்பிரபஞ்ச நிவிருத்திரூபமாதலின், சூடாலைகாட்டிய சருவத்தியாகமும் ஆமெனல்:—சிவமென்பதாதி. சிவமானது சர்வகதமாயும் சாந்தமாயும் நிர்ஞன்மகமாயும் அஜமாயும் சுபமாயும் இருக்கின்றது; வேறு இராகவனே அதனே சுபாவனமே சருவத்தியாகமெனப்பெறும்; இவ்வாறு உள்ளேயடிக்கடி பாவித்துக்கொண்டு, நீ செய்யவேண்டிய நினைதுதொழிலை நன்குசெய்தி. விஸ்தாரமாகவியம்பிய அநர்த்த தத்துவத்தையும் புருஷார்த்தமுடைமையையும் நிண்ணயமாகக்காதலா மல்கம்போலக்காட்டிக்கொண் டுபசங்கரித்தல்:—எனக்கென்பதாதி யான் எனதென்னும் செருக்குற்றவன் துக்கத்தினின்றும் விடுபடுவதே கிடையாது. அஃதற்றவனே சுகமாகவே மோக்ஷமயமேயாவன்; நினக்கெஃதிச்சையோ அதையேசெய்து வாழ்தி. (62-63)

என்று வசிட்ட முனிராமற் கிசைத்தா னென்று வான்மீகி
சொன்னு னாரு யிரங்கிரந்தத் தொகையிற் பரத்துவாசனுக்குப்
பின்னு ளதிலா றுயிரத்தைப் பிரித்தா னிவ்வா றுலகுய்யப்
பன்னு மறைதேர் கான்மீர பண்டி தப்பேர் பரமகுரு. (64)

சாத்தி ரத்திற் பெரியதிது தடங்கா வியத்திற் பெரியதிது
மாத்தி ரத்தின் மெய்ஞ்ஞான வழியாற் பெரிய திஞ்ஞான
நேத்தி ரத்திற் பெரியோர்க்கு நிதிபோற் பெரிய திதுகதிரோன்
கோத்தி ரப்பொற் பாத்திரத்திற் குறித்த வமுதாம் வாசிட்டம். (65)

மலரோன் வாழிநா மாதுவாழி வசிட்ட முனி வாழி
யுலகா ளிராமன் மிகவாழி யுயர்வான் மீக முனிவாழி
நலமார் பரத்து வாசமுனி நாளும் வாழி வாசிட்டம்
பலமா வாழி கான்மீர பண்டி தப்பேர் முனிவாழி. (66)

தேமென் மலரோன் பதம்புகழ்வோ தெளிந்த வசிட்டன் பதம்பரவோ
விராமன் கமலப் பதந்துதிக்கோ வியல்வான் மீகி பதமேத்தோ
பரமன் கீர்த்திப் பரத்துவசன் பதமே பழிச்சோ வாசிட்ட
நாமம் பெறுநூற் பதம்வியக்கோ நான்சேர் பதத்தை நன்றென்கோ. (67)

பரம மேனி வசிட்டமுனி பச்சை மேனி யிராமற்குப்
பிரம ஞான முணர்வித்த பெருவா சிட்ட நன்னூலைத்
திரம் தாக்கக் கற்பள்வே சீவன் முத்தி பதஞ்சேர்வ
ருமா தாக வுள்ளுணர்வோ ருறுபே றெங்ங னுரைப்பதுவே. (68)

நிர்வாணப்பிரகரணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 2055.

ஸ்ரீ சற்குருமூர்த்தி திருவடிகளே சரணம்.



## இந்நூன்மொழி பெயர்ப்பாசிரியர் மரபுகூறல்

தாளவந்த மலரோன்றன் மனத்துதித்த வசிட்டனயன் தன்பாற்கேட்டு
நாளவந்தான் போகாத விராமனுக்கங் குபதேச நல்கியிங்கே
யாளவந்தான் வீரையின்மா தவப்பட்ட னம்சவவ தாரமாகி
மீளவுந்தான் வந்துதமிழ் வசிட்டரா மாயணமும் விளம்பினனே. (1)

## உரையாசிரியர் குருவணக்கம்

வீர சேகர நின்திரு வருளினால் விரித்த
வார மீதினை யம்புயத் தணிந்துநீ யருளி
கோர மாயையை யகற்றியே யுன்னொரு கோட்டாற்
பூர ணனந்தந் தந்தருள் பொன்னடி போற்றி.

(ச) உணர்வின்மை=சாந்தமும் நிர்விகாரமும் முத்தமுமானமனதே அறிவின்மையாம், அதுவேயோகம், நிருவிகற்ப சமாதியென்பதுமாம், ஆதலின் நீ யோகநிலையினனாய்ச் சித்திய சித்திகளிற் சமத்துவமியோகம் அதன்நிஷ்டனாய்; தொழில்=கருமங்களை, கவர்பற்றறுத்து நிஷ்காமனாய் இழியாதுசெய்வாய் அன்றியான்மாவிற் கலந்திருத்தலாற் செய்யவேண்டுவதின் மையின் செய்யாதிருப்பாயென வருவித்துக்கொள்க. உணர்வின்மையே யோகமென்பதாம், இயற்றப்படாது அப்பிரயாசசித்தமும் உள்ளமிறந்த சித்தநாசமுமாமென்பர், அதனால், மிகவும் அதின்மயமாய் வல்லைநிற்பாய் மகிழ்ந்தபடி= எந்தரூபனாய் அந்தரூபன் யிருப்பாயென்ற தாயிற்று; மிகவுஞ்சின்மயமாய் வல்லைநிற்பாய் என்வும்பாடமுளது.

(ருரு) எனக்கிதென்னு முணர்வுடைமை=யான் என்தென்னும் அபிமானத்தால் இடர்விட் டகலாது=துக்கமயமான சம்சாரமாம், இத்தன்மையான உணர்வின்மை வீடளிக்கும்= முத்தியைத்தரும் இங்கு=இந்தப்பந்தமோக்ஷ சாதனமிரண்டில், ஆசை=அபிமதம், எது, அது=அதனை, செய்வாய்=அநுசரிப்பாயென்பது நிபுணோக்தி, இப்போது உபசம்மார கபட மானமகத்தாகிய பிரபந்தத்தாற்கூறப்பட்ட ஆன்மாத்தொய்த விஞ்ஞானத்தை யுபசம்மாரஞ் செய்பவராய்க்கூறல்: எது நிர்மலமானசிவம்=பிரமம், எங்கணுமுள்ளது பரிபூரணம்சாந்தம் நிர்

விகாரம், சனிப்பில்=ஜன்மாதிரகிதம், சுபம்=அசுபமானசம்சாரத்தை நிவிர்த்திப்பது, சித்துரு=விசுத்தவிஞ்ஞானரூபம், என்னும்=என்பதாம். அந்த ஒருநினைவே = அந்தப்பிரமத்தின் அத்வைதபாவனையே பிரமமே யீதனைத்துமென்னும் பரிபூரணபாவனையே உலர்ந்தசருகு போற் கருமத்தையெரிக்கும் எதுவாதலின் கருமத்தியாகமாம், நீ யுள்ளேயெப்போதும் இந்நனம்பாவித்துக் காரியமானகருமத்தை யநுசரிப்பாயென்றதாயிற்று. உணர்வின்மை = அசங்கற்பம் வெறிதிருத்தலென்பதிது யாது அதனையிப்போது கருமத்தியாகமென உபசங்கரித்தலின், அதனைத்தும் அவிரோதமென்பதாம்,

அநாதியாய்ச் சர்வப்பிரகாசத்துக்கும் பிரகாசமாய்ச் சன்மாதிரகிதமாய் அநந்தமாய் நிஷ்களமாய் நிர்விகாரமாய்க் கரணஜாலமொழிந்ததாய்ச் சீவசத்திக்குச்சிவனமாய்ச் சகல பேதரகிதமாய்க் காரணங்களுக்குக்காரணமானப் பரமத்தைப்பாவியென்பது வணக்கம்.

சம்சாரதரணியென்னும் நாமமுள்ள வாசிட்டராமாயண விவரணத்தில் யோகசத்த பூமிகையென்னுங் கதைமுற்றிற்று.

## குரு வணக்கம்

ஒன்றான பிரமமே யென்றுமிருப் பதுமற் றொன்றுமில யெனக்கோரஞ் சாந்த மொடு மூடன், துன்றாவுண் ணனவுகன வொடுசுழுத்தி யகன்றே துகளிலுப சாந்த மாஞ் சமதுரிய பதத்தி, னன்றுவித நிட்டமிட்ட மௌனல்வடிவா மிச்சை நாடாமை யாலகற்றி வெறிதுநிலை நிற்க, மன்றுடுஞ் சொரூபவரு ணுசலதே சிகனன் மல ரடியை யகத்திருத்தி வழுத்தி வணங்குதுமே.



## ஸ்ரீ வீரசேகரம் உபசங்காரம்

இப்போது ஸ்ரீ இராகவருடைய விசிராந்தியும் ஸ்ரீபரத்துவாசருடைய உற்சாக வாக்கியங்களும், நனவாதிகளின் இலக்கணங்களும் துரீயமும், நன்குவருணிக்கப்பெறும்:—இது பரியந்தம் ஸ்ரீவசிஷ்டராம சம்வாதத்தைக்கேட்பித்து ஸ்ரீஇராகவரது விசிராந்தி ஸ்மரணத்தினாலே சந்நிதிப்படுத்தப்பெற்ற, நிரதிசயானந்த பூரணன்மாவின் கண்விசிராந்தியடைந்து சும்மாவிருந்த ஞானசாரியராகிய ஸ்ரீவான்மீகிபகவானை நோக்கி இன்றளவும் தாமாண்டு விசிராந்தியடையாமையால் மேலும் சிரவண உற்சாகமுற்ற ஸ்ரீ பரத்துவாஜர் வினுதல்:—ஹே அஞ்ஞானத்தைக்கொல்லும் வீரத்தைச் சேகரித்துள்ள ஞானதேசிகரே! விமலமதியாகிய ஸ்ரீ இரகுகுலதிலகராகிய இராமச்சந்திரர், முனிநாயகராகிய ஸ்ரீ வசிஷ்ட பகவானாலே இவ்வண்ணம் வருணிக்கப்பெற்ற வெகுவகைகளானே உபதேசிக்கப் பெற்ற சிரந்தனமான ஸ்ரீ பிரஹ்மாதிமகர்ஷி சம்பிரதாயத்தில் வந்துற்ற சகலஞான சாரத்தையுஞ் செவியுற்றுமேலும் அறியும் வேட்கையராய் ஏதாவது சிறிதுவினவினரா, அல்லது இத்துணை யுபதேசத்தானே சருவ சந்தேகமோகங்களும் சாந்தி யானவராய்ச் சுயமேசமத்தால், விடயவை சித்திரியத்தா லாக்கப்பெற்ற தாரதம்மியரகிதத்தால்=சாக்ஷாத்கரிக்கப்பெற்ற ஆன்மசுகத்தினால், பரிபூரணராய் பூரணபோத ஆன்மாவேயானவராய், இருந்தனரா அதனைக்கூறவேண்டும், அற்றேல், கிரந்தசிரவணம் ஒப்பாக, உன்னால் உனது சந்தேக மோக நிவிருத்தி அநிவிருத்திகளாலேயே, ஸ்ரீ இராகவருக்கும் உனக்கும் யாங்ஙனம் துணிவு

பெறுத்தல் கூடாதெனவோ சங்கிக்கலாகாது, எனக்கும் ஸ்ரீ இராகவருக்கும் பெருத்தவித்தியாசம் உளதாதலின் என்றுரைத்தல்:—அவரோ துணிபாய், பரமயோகியாவர், சகலலோக பூச்சியர், தேவதேவர், ஜனனமரண ஹீனர், தூயஞானவியற்கையர், சகலகுணங்கட்கு மிருப்பிடமாயவர், ஸ்ரீ இலக்குமிதேவிக்கு நாயகராயிருப்பவர், மூன்றுலகத்தினது உதயம் காப்புச்சங்காரம் அநுக்கிரகம் முதலவற்றிற்கு அதீசராயிருப்பவர், அவர் நித்தியசித்த ஞான யோக ஐசுவரிய அநாவிருதசிற்சுபாவர், எல்லாரையும் வசீகரிப்பவர் எல்லவருக்கு மீசானர் என்பதாதி சுருதிப்பிரசித்த ஈசுரர், உலகைக்காக்கும் பொருட்டவதரித்தவர், உலககுருவாயிருந்தபோதினும் சருவலோக அனுக்கிரகப்பொருட்டு ஞானசாஸ்திரப் பிரவிருத்தியின் பொருட்டு, தமதிச்சையினலேயே, தமக்கறியாமை யிருப்பதேபோல வினிதுகற்பித்து, சிரவணஞ்செய்யப் பிரவிருத்தித்தவர், யானோ அநாதியாகவே யறியாதவன் முமுக்ஷு அற்பத்தினும் அற்பனுமாய சாதனசம்பன்னன், எனமகத்தாய வித்தியாசம் உளதென்பது கருத்து. இவ்வண்ணம் வினவப்பெற்ற ஸ்ரீ வான்மீகி பகவான் வினவினது இரண்டாவது கோட்டியையே கதைச்சேடமதாகப் பொருத்துவித்துக்கொண்டு உத்தரங்கூறல்:—ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய வேதாந்தசங்கிரக வாக்கியத்தை யிவ்வண்ணங்கேட்டு அகிலவிஞ்ஞானத்தையு முணர்ந்த கமலலோசனராகிய ஸ்ரீ இராகவர், சத்திபாதமாகிய அகண்டாகார வாக்கிய ஜன்னிய சித்தவிருத்தியின்கண், நித்தியநிரதிசய ஆனந்த ஆத்மதத்துவ ஆவிர்ப்பாவமாம் அதன் வசத்தால், அவித்தைச் சம்புடந்திறத்தல்வடிவவிழிப்பானே வெளிப்படுத்தப்பெற்றவமல சிற்கனராயினர், குண்டலினியினது சுழும்னைமார்க்கத்தில் ஆறுசக்கிரங்களைப்பிளந்து பிரமரந்திரம் புகுதலால், சிவசக்தி சையோக லக்ஷணயோக சாஸ்திரப்பிரசித்த அமலஜோதியேயாயினர்; ஒருமுகூர்த்தம் மந்திரசாஸ்திரப்பிரசித்த, ஆசாரியனது, சிஷ்யானுக்கிரகவதிசயத்தால் தமது தேகத்தைவிடுத்துச் சிஷ்யதேகத்தில் நுழைந்து அவனது நாடிப்பரிசோத்த வாயிலாக அக்குண்டலினியினது ஏழுசக்கிரங்களில் சஞ்சரித்தலால், சருவபுவனசமாசார வபரோக்ஷ பிரதரிசனரூபச் சத்திப்ரத்மியாதுளதோ அது ஈண்டுக் கூறவிழையவில்லையாம். சுபம் பரமேசுராகிய ஸ்ரீ இராமச்சந்திராது சார்விஞ்ஞாதிகள்தாமே சித்தமாதலின் அதன் அநபேக்ஷயிருத்தலினனும் அதனல் லோகஉபகார அசித்தியினனும் என்றுணர்க, உற்புத்த சைதன்ய ஆனந்தசாகரர் ஆயினர், உற்புத்தர்=தம்துசொரூபத்திற் சாக்கிரத்துற்றவர், விகசிதமும் உற்றவர் என்பதாம். வினவிடை விபாகாதி விதவிவர்ஜிதமாயினர், விபாகம் = கூறியகூறுத அங்கிசவிவேசனமாம் 1. ஆதிபதத்தாற்பாகியார்த்த பரியாலோசனமாத்திரம் தவரப்பெறும், அதன்பொருட்டாம் நானுவகையாம், மனேபுத்தி இந்திரியாதி வியாபாரங்களானே விவர்ஜிதமாயினர் என்பதாம். ஆனந்தாமிருதத்தானே பூரிக்கப்பெற்ற பிராணங்களையுடைத்தானவராயினர்; மயிர்ச்சிலிர்ப்புற்ற வங்கத்தினராயினர்; மகாசாமானியமென்னும் சர்வாதிஷ்டான சன்மாத்திரரூபத்தானே, பிரத்தியக்குச்சித்திற்கு அவ்வுருவத்தன்மைச்சம்பத்தியிருத்தலின், எங்குஞ்சித்வியாபகத் தன்மையானே பூர்ணமாகவேயிருந்தனர்; அதுவே இவருக்கு நிரதிசயானந்த ஆவிர்ப்பாவம் ஆமென்னுங்கருத்தால் உரைத்தல்:—நித்தியம் எட்டு அணிமாதி ஐசுவரியங்களின் திருணம்போன்ற மனோரதமுடையவராயினர் அதாவது அவற்றில் ஆசையே அற்றவராயினர்; ஒன்றுமே பேசவில்லை, சிவபதமாகிய நிரதிசயானந்த வஸ்துவின் கண்ணே யேகரசபூதராய் அதுவேயாயினர். இந்தப்பிரகாரம் உத்தமாதிகாரியாய ஸ்ரீ இராகவருக்குச் சிரவணதியினனே பிரஹ்மப்பிராப்தியை யினிது வருணித்து, மந்தமத்தியம அதிகாரிகளின் சித்தசுத்தியின்பொருட்டு பாசன விசேடத்தையும் அவஸ்தாத்திரய விவேக,

திருசியமகற்றுதலாதி மனனஉபாயங்களையும் கூறும்பொருட்டு அவரது அவதார ஹேதுக்களை ஸ்ரீ பரத்துவாசரது ஆவலுற்சாகாதிகளை யரிஷ்டநேமி யரசனை நோக்கி ஸ்ரீ வால்மீகி பகவான் கூறுகின்றார்: ஸ்ரீ பரத்துவாஜர், அகோ ஆச்சரியம் ஆச்சரியம் அற்புதம் எனக்கு மிகவுமுண்டாகின்றது, ஸ்ரீ இராகவர் மகத்தானபதத்தை யடைந்துவிட்டார், ஹே முனி நாயகரே! எங்ஙனம் எம்மனோருக்கு இத்தகையபதப்பிராப்தியானதுண்டாம்? மூர்க்கர்களாய்த் திமிர்பிடித்துணர்வற்றவர்களாய் அற்ப அறிவாளிகளாய்ப் பாபிகளாய் உள்ள எம்போலியர்கள் எவ்வளவு தூரத்தவர்கள், பிரஹ்மாதிகளாலும் பிரார்த்திக்கத்தக்க அதிதூலமாய ஸ்ரீ இராகவரது நன்னிலைமை யெவ்விடத்து அகோமுனீசுரராகிய ஞானசிரியரே! எங்ஙனம் யான் இளைப்பாறுவேன், கரையற்றதாய பவாம்போதியின் மேரகவாரியை எங்ஙனங்கடப்பேன் அதனைவிரைவில் அடியேனுக்கனுக்கிரகம் செய்யவேண்டும்; என்று பிரார்த்திப்ப, இவ்வாறு வினவப்பட்ட ஸ்ரீ வால்மீகிபகவான் கேட்கப்பட்ட கிரந்தசாரதன் ஆவர்த்தனத்தையே முதலில், ஆவிருத்தி பன்முறையுபதேசத்தால் என்னும் நியாயசித்தமாதலின் உபதேசித்தல்:—ஸ்ரீ இராகவரது விருத்தாந்தம். முழுவதும் முதலிலிருந்தே ஸ்ரீ வசிஷ்ட வாக்கியானுகதமதாக எம்மால் நிரூபிக்கப்பெற்றது, ஹே பிரபுவே! புத்தியினாலே நன்றாக விசாரித்துப்பார்த்து நன்குபயில்வாயாக, அனுபவிப்பாயாக, எம்மாலும் அத்தகைய உனது அனுபவ அனுகூல அவஸ்தாத்திரயவிவேசனுதியாகவுரைக்கத்தக்கது உரைக்கப்பெறுங்கேட்குதி. மித்தியாபூத அவித்தியா காரியத்தன்மையானேயே பிரபஞ்சத்திற்கு அசத்துவமும், சித்தத்தைத் சாம்ராஜ்ஜியமும்மதிமானால் உணரத்தக்கதாம்:—இப்பிரபஞ்சம் அவித்தையினுடையதேயாம், ஈண்டணுவும் உண்மையாயிலதேயாகும்; அற்றேல் உலகிற்கு அவித்தியா காரியத்தன்மையுளதாமேலாயின் யாதின்பொருட்டு வாதிகட்குள்விவாதம் எனில்:—அவிவேகிகள் விவாதஞ்செய்துகொண்டிருப்பார்கள் விவேகிகளோ பகுத்துணர்ந்துகொள்ளுவார்கள்; மித்தியாத்துவைதத்தினால் வாஸ்தவ அத்வைதஹானியாகாதாம்:—சித்திற்குவேறாகச் சிறிதுமேயிலதாம், ஹே தோழனே! இதுபிரீதியினால் விளித்ததாம், ஏன் பிரபஞ்சத்தினாலே தடுக்கப்படுகின்றாய், இனிக்கூறப்பெறும் உபாசனைகளுடையவும் பிரணவ மகாவாக்கியார்த்தங்களுடையவும் அப்பியாசத்தினாலே தெளிந்த விசுத்தசித்தனவாய். ஆண்டாதியிற் பிரணவப் பிரதமமாத்திரையின்பொருட்டு ஜாக்கிரத் பிரபஞ்சத்தைஸ்புடமாக அதன்சாக்ஷி விவேகப்பொருட்டு மித்தியாத்தன்மையானே யுபபாதனஞ்செய்தல்.

பிரபஞ்சவிஷயவிருத்தி ஜாக்கிரத்து நித்திரையெனக் கூறப்பெறும், அவனுக்கு மூன்றும் அவத்தைகடாமும் சொப்பனங்களாம் என்னும் சுருதியின்கண் ஜாக்கிரத்தும் நித்திரையேயெனக் கீர்த்திக்கப்பெற்றுளதாம். நன்குணர்ந்த மகாபுருடனுடைய உள்ளே நிற்பிரதீபமானது நிரஞ்சனமாக விளங்கிக்கொண்டிருக்கும்; விழித்துக்கொண்டே யிருப்பனென்பதாம். இந்தப் பிரபஞ்சமானது மித்தியாபூத அஞ்ஞான காரணத்தையுடையதாம், சூன்யத்தன்மைரூப அஞ்ஞானத்தையே சிகரமாகவுடையதாம் முடிவாகவுடையதாம், மத்தியிலும் திரிவித்கரண பிருத்க்கிரியாதியுபாயத்தினாலே பரியாலோசனை செய்யில், சத்தையொன்றுமில்லாமல், பிராதியாசிகமாத்திர மாகவெளியாம், ஆகலின் அதன்கண்ணனுஸ்தையேயுசிதமாம், நல்ல மகான்களாகிய மதிமான்கட்கு, அசத்திற்கும் வாசனையோடுகூடிய அவித்தையினாலே காணப்பெறுதல், கந்தர்வநகராதிக்குப் பிரசித்தமாம், அநாதிவாசனையாகிய தோஷத்தினாலே அசத்தாகவே இது காணப்பெறுகின்றது, கந்தர்வநகர

ஆகாரமமாகிய சமுசாரம் வெகுவிப்பிரமத்தைச் செய்கின்றதன்றோ, சைதன்யாமிருத கந்தலியாகிய கலியாணியை நீ யப்பியாசிக்காமல் வாசனாவிஷவல்லியைப்பற்றி ஏன் நனிமோகிக்கின்றாய்; தத்துவஞானத்தின் சித்தஸ்தைரியஹேதுவின் பிடிப்பின் பரிக்கிரகத்திலும் மூன் அஞ்ஞ அவத்தையிலேயே இச்சாக்கிரம்வீழாதாம், மேலே துரியதசையிலேயோ மூன்றவத்தைகளும் இலவாம், எவ்வியோகிகள் நிராலம்பஞானிகளோ அவ்வியாவர்களுக்குமே அனுபவசித்தமாம். அஞ்ஞானம் உள்ளகாலமட்டே சிந்நதியினால் உலகக்கெட்டதாங்க விக்ஷேப ஏற்றமாம், சுதாகாராசசம்வின் மகாநதியானது அத்துணையும், கெட்டதாங்கங்களையுண்டாக்குவதாகும், எத்துணையும், ஆன்மரூபமதாக நிபுணர்களானே யறியப்பெறவில்லையோ. ஆதியந்தகல அசத்துவத்தானே மத்தியிலும் அசத்துவமேயாம், இயற்கைமாறுபா டியலாமையின்கனாப்போலும் கருதத்தக்கதாம்; இவ்வெல்லாவுலகமும் முன்னுமில்லை பின்னுமில்லையாதலின் மத்தியிலும் அது இலதேயாம், என்றறிதி; இவ்வுலகம் கனவையொத்தேநிகழ்வதாம். அவித்யாகாரணங்களே வேற்றுமைகளாம், இவையாவும், புற்புதங்களேபோலும், ஞான ஏக சமுத்திரத்தில், கணம் எழுந்து லயத்தையடையும். நற்சீதள உதகநதியை நன்றாயுணர்ந்து அதனைவிட்டொழித்து இகழ்ந்து, வெளிமயக்க வெம்மையாரமவர், துக்கத்தை மேற்கொண்டொழுகுபவராகிச் சென்றொழிக. வெம்மைகள் செல்கவென அசேதனங்களாய நிதாகங்களிடத்திலும் சேதனத்தன்மையை யாரோபித்துக்கூறியதாம் மூலபாடம். இப்போது ஸ்ரீ பகவான்சிடனது மஜ்ஜனத்தைத்தடுப்பவராகி யஞ்ஞானத்தை க்ஷாரசமுத்திரத்தன்மையானே வருணித்தல்:—ஒரே அஞ்ஞான ஜலதியானதுஜகத்தைத் தனது விகாரபூதமாதலின் நன்கு வியாபித்து, இருக்கின்றது. அதனது முதலிலுதித்த மகோர்மியிதுவாம், சேட்டவிவ்வகமெனுமூர்மி அவித்யாவாதசம்பவமாம், அவித்தைப்பிரவாகம் அநாதிமயல் வாசனையாம்; அதுவேவாதம் அதன்சம்பவமாம். அற்பதரங்கங்களிவையாம் சித்தத்தினது அவ்வவ்விடயங்களில் எவ்வகைவேற்றுமைகள் உளவோ அவற்றின்வரிசையும் அதன்ஹேதுக்களாய இராகாதிகளும் துச்சதரங்கங்களாக நன்குகற்பிக்கப்பெறும்; அதன்சுழியிதுவாம்; மமதையால் ஆக்கப்பெற்ற ஆவர்த்தமானது தானாகவே தன்னிஷ்டப்படியே பிரவர்த்தியாநிற்கும். இராகத்துவேஷங்களாகிய அதிக்கிராகங்கள், பிரவர்த்திப்பனவாம், அவற்றாற் கவரப்பெற்றவுனக்கு ஏற்பட்ட அநர்த்தபாதாளத்தில் மிருத்தியுமுகத்தில், பிரவேசமானது எவரால்தடுக்கமுடியும்; கிருசீதபதத்தின் அசமர்த்தத்தின் சமாசம்சாந்தசமாம். சமுத்திரமஜ்ஜனமானது உனக்கு ஆவசியமாகவிருப்பின் ஆனந்தசமுத்திரத்தில் மூழ்குவாயாக, பிரசாந்த அமிருதகல்லோலத்தோடுகூடிய கேவல அமிருதவாரிதியின்கண் மூழ்குதி, துவைதக்கிரகக்ஷாரக் கடற்றரங்கங்களில் ஏன் மூழ்கியவதிப்படுகின்றாய். சமுசாரம்நிற்கின்றது அதுவும் ஸ்ரீ இராகவருக்குத் தத்துவபோதத்தினாலே சென்றுவிட்டது அடியேனுக்கோ செல்லவில்லையென்னும் சோக ஹேதுவாகிய மோகத்தையகற்றல் என்னதானிற்கின்றது என்னதான்சென்றது யாருக்குத் தான்சென்றது எதனாற்றான் சென்றது யாதுதான்வந்தது ஏனோதான்மாயையில் மூழ்குகின்றாய்; சோம்பலில்லாத விவேகியாகிய நீயேன்றான் விழுகின்றாய். ஏகதத்துவமாகிய ஆன்மா யாதுவதோ அவ்விதுவேஜகத்தாம் என்று, இவ்வியாவையும் எவ்விவ்வான்மாவென்பதாதி வேதாந்தங்கள் வெட்டவெளியாகப் பிரதிபாதிக்கின்றன, அதனாலன்னியம் யாதுனக்கதீதம், எதுகுழந்தாய் சோகத்திற்கு விடயமாமோ எவர்கட்கஞ்ஞானமிருக்கின்றதோ அப்பாலகர்பொருட்டுப் பிரஹ்மத்திற்குச் சகலஜகதாகார விவர்த்தமாமிது; கிருதகிருத்தியர் எப்போதும் விவர்த்தமுறாத ஆனந்தமாகவே வீற்றிருந்துவாழ்வர். விவேக

யில்லாதஜனம் காரணமில்லாமலே சோகிக்கின்றது மகிழ்கின்றது, தத்துவவித்தோ சிரித்துக் கொண்டேயிருப்பன், தத்துவவித்துக்கட்கும் ஒருபோதுவியாமோகம் யாங்ஙனம் காணப் பெறுகின்றது எனில், அவனதுமோகம் விடம்பனமாம்=அஞ்ஞசேஷ்டை யனுகரணமாத்திரம் அந்நியர்கட்கோ அவ்வாருகாதாம், அவித்தையால் மறைபெற்ற ஆன்மாக்களாய அவர்களுக்கு, ஜலங்களிற்றலபுத்திபோலும் அநாத்மாக்களிடத்தில் ஆன்மத்தன்மைப் பிராந்தியிருத்தலின், அவ்விச்சுக்குமமான இத்தத்துவமும் அவித்தையினுலேமறைபெற்றதாம்,அஞ்ஞலோகர்கட்கு ஜலங்களிற்றலமெனச் சம்சயமும் மருத்தலங்களிலும் ஜலமென்னச்சம்யமும் ஆவதே போல, கற்பிதபேதத்தையுடைய ஆன்மாக்களிடத்திலும், ஐயமும்மயலும் ஆம். எப்போது பரமாணுவாதிமய ஜகத்துவாதிரீதியினுலும் விவேகத்திலும்சோகஅடைவு இலதாமோ அப்போது மாயாமய ஜகத்துவாதத்தில்வெகுதூரத் தகற்றப்பெற்றதேயாமது, பிருதிவியாதி மகாபூதபரமாணுமயம் ஜகத்துத்திதமானபோது மீண்டுயாதுதான் நஷ்டமாயதோ, இல்லையெனின் என்ருன் யார்தான் சோகப்படவேண்டும், அவர்மதத்திலும் தேகாதிகட்கு அனுன்மத்தன்மையானே அஃதொழியில் ஆன்மநாசமின்மையின் என்றுணர்க.பிரியநாசத்தாலன்றேசோக அடைவாதல், அந்தப்பிரியம் இருப்பதேலாயின் அப்போது அழியவேமாட்டாதாம், இல்லாததேயாமேலாயின் இராததையாம், என இருவகையானும் அதன்நாச அசித்தியாதலின் சோகவேது இல்லையாம்; அசத்துக்குச் சம்பவமில்லையாம் சத்துக்கோ அபாவமிலதாம்; இவ்வாவிர்ப்பாவதிரோபாவங்களேகேவலம், மாயிகசந்நிவேச விசேஷங்களாகிய சம்ஸ்தானங்கட்கேயாம். அற்றேல், மாயிகமே தேகாதிசம்ஸ்தானமாயின் அப்போது ஐந்திரஜாலிகனுலே காட்டப்பெற்ற மாயைபோல உதாசீனமாகவும் தடஸ்தமாகவும்விளங்குகதான் சோகமோகதுக்காதி யனர்த்த சகத்திரங்கொடுப்பதில்யாது எதுவாம்எனில், உண்மையே.புதிதாகவோ ஓரேதுவுமிலதாம்,மற்றேு, அநேகமுற்சஞ்சித புண்ணியபாவப்பிரவிருத்திலக்ஷண உற்சாகமாகிய புருடப்பிரயத்தின புண்ணியபாவமெனப்பெயரியதே அதன் ஹேதுவாயுளதாம், ஆகையினுலேயே இம்மாயிக தேகாதி அதன்போகம்பொருட்டு விடம்போன்ற மரணமூர்ச்சாதி யனர்த்தசகத்திர ஹேதுத் தன்மையையடையும், அத்தியான்ம ஞானசாஸ்திரார்த்தமும் நூறுமுறையா யுதேசித்த போதினும் பாவவசத்தினுலேயே இருதயத்தில் ஏறுவதேகிடையாது, ஆகலின் அப்பாவ க்ஷயப்பொருட்டுச் சகுண ஈசுர உபாசனத்தைச்செய்தி, பக்தானுக்கிரகப்பொருட்டு நன்கு தாங்கியவிஸ்தாரமாய கூறப்பெறும் ஸ்ரீ அர்த்தநாரீசுராதி வேஷத்தையுடைய ஜகத்குருவாகிய பரமேசுரனை நன்குபஜிப்பாயாக. இன்றளவுந்திண்ணமாக வுன்னுடைய சகலபாவங்களும் க்ஷீணங்களாகவில்லை, அதனுலேதான்போலும், பிராணிகளாலே செய்யப்பெற்ற புண்ணிய பாவவடிவ கருமங்களே இந்தப்பசுபதியாகிய மகாதேவருக்குப்பிராணி பசுபந்தபாசங்கள் நானுவிதசுருதியாதி பிராமாணப் பிரசித்தத்தன்மையை யடைந்துள்ளனவாம். அந்தக்கரணமானது தெளிந்து நிர்மலமாகும்பரியந்தம் நீ சாகாரத்தையேபஜிப்பாயாக.

அந்தப்பஜனத்தினுலே நிராகாரமான பாதத்துவத்தில், விக்கினங்களினுலே அபாத்தியத்தன்மையாலே இயற்கையானஸ்திதியானது உண்டாம். அவ்வாறே சுருதியும் அறைகின்றது:—

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய பங்கயந் தனைநினைந் ததிலே, நித்தமா மொருவ ரானினைப் பரிதாய் நிமலமா மெங்கணு நிறைந்து, சுத்தமாய்ச் சாந்த மாயினைத் துலகுந் தோற்

அதற் கியோனியாய்ச் சுபாவ, சித்தமா யமுதா யருவமா யொன்றாய்ச் சிற்சதா னந்தமாய்ச் சிவமாய்.

உரியநால் வேதத் தோமெனும் பொருளா யுள்ளதா யுள்ள வெப்பொருட்கும், கரியதாய் நின்ற வொன்றினைக் காளகண்ட மூங் கண்ணொரு மூன்றும், பிரிவிலா மங்கை பாகமு மாகப் பேணுநற் பாவனைபெறுவா, னரியதா யருளி னல்வரும் விச்சை யதனினு லதனையே யடையும்.

பரமேசுர உபாசனத்தினாலே சுத்தாந்தக்கரணவலுமையால், ஆயிரக்கணக்கான வியா மோகங்களினாலே உத்தண்டமாயிலங்குந்தமமாகிய இந்தப்பிரசித்த மகாமோகசக்தியை வெற்றி கொண்டு குருசாஸ்திரோபதேச விசுவாசத்தோகூடிய மனத்தினாலே இந்திரியசகித மனோ நியமனுன்மக இயமத்தினது சம்பந்தியாயயோகத்தினது மார்க்கத்தைத்திண்ணமா யனு சரிப்பாயாக. பின்பு கணநேரமேனும்—முகூர்த்த துவாதசதமபாகமேனும், சமாதியை யடைந்து, பிரத்தியக்கான்மாவைத் தன்னாலே தரிசிப்பாயாக, அவ்வான்ம தரிசனத்தினாலே உன்னுடைய முற்றமத்தினாலே மறைக்கப்பட்ட புத்திரூப இரவானது, வெட்டவெளி யாக விடியற்போதாம் பாவத்தையடைந்திடுக. நற்கரும அனுட்டானங்களினாலேயே சித்தசுத்தி சித்தியாதலின், யாதின்பொருட் டீசுரோபாசனம்எனில், புருடப்பிரயத் தனத்தினாலே செய்யப்பெற்ற கேவலகருமத்தினாலே ஆக்கியதுபோதும் ஸ்ரீ மகாதேவரது திருவருளினாலேயே அடையவேண்டியதை யடையவேண்டும். தத்தம்வருண ஆசிரமத்திற் குரிய நல்லொழுக்கந் தவங்கருமம் சுவாத்தியாயாதியான இப்போதிய புருடப்பிரயத்தனங் கட்குப்பழைய கருமங்குறித்து மிகவலுவுடைமை முன்னர் மொழியப்பெற்றதே, இப்போது யாங்ஙனம் ஈசுராபேக்ஷை திருவருளபேக்ஷையியம்புதல் கூடும்எனில், ஜாதிக்குரிய கருமங் களும் வலிதில்லை, மற்றொழுக்கங்களும் பலமில்லை, வணக்கமாதிகளும் வலிதில்லை தவாதிக ளும் வலிதில்லை, புராதனகருமங்களே கேவலம் பலமுடையனவாம். புராதன கருமங்கட் கநந்தத்தன்மையுண்மையின் இப்போதியபுருடப்பிரயத்தனங்கட்கு அற்பதரத்தன்மையுண்மை யின் ஈசுவரானுக்கிரகமின்றி யச்சயசித்தியாகாதாம்; ஈசுரானுக்கிரக சகாயத்தை யிருதயத்திற் கொண்டேதான் முன் ஐகிகப்பிரயத்தனப் பிராபல்யம் சாதிக்கப்பெற்றதாம், அதைவிடுத் தன்றென்பது கருத்தாம். ஆயினீசுர உபாஸ்தியே செய்யத்தக்கதாம், இயமநியமஞானாதிகளி னாலே ஆகவேண்டியதென்னே யெனின், இவ்வண்ணம் பரமேசுரருடைய சரணாகதியை யடைந்தபோதினும் நீ பௌருஷதருக்கத்திற்கெட்டாத சுருதிசமாதிகட்கேயெட்டும் தரு மாதிசகிதஞான லக்ஷணப்பிரதீகாரத்தினின்றும்—சமூலசருவகரும நியாச உபாயத்தினின் றும், யாதின்பொருட்டஞ்சுறுகின்றாய், உபாசனையாற்றிருவருள் சுரந்த பரமேசுரரும் லலாட த்திலுள்ள அக்ஷரமாலையை நோராகத்தமது திருக்கரத்தால் துடைக்கமாட்டார், மற்றோ ஞானாசிரியாராலாக்கப்பெற்ற மூலோச்சேத வுபாயத்தினாலேயே, துடைப்பார். குருசாஸ்திரங்க ளின் சிஷ்யபோதனசக்தி சீடனுக்கும் சித்தசுத்தியினாலே, கொள்ளுந்தள்ளுங் குசலத்தன்மை யானோ, போத்தருந் தன்மைச்சத்தி, இராகாதிகட்கும் சமூல உச்சேதயோக்யதைப்பிராப்தி லக்ஷண பரிபாகம், என்னும் சர்வசாமக்கிரியும்சேர்ந்திருந்தபோதினும், பரமேசுர இச்சைவடிவ நியதிவசத்தானேயாம், வாக்குமனங்கட்கு எட்டாததாய அகண்டபிரஹ்மாத்மசித்தின் வக்தா வாகிய குருவெங்கே சீடனுக்கும் அதன்போதயோக்யதைவடிவக் குசலபாவமெங்கே, இவ் வண்ணம் சமதமாதி முறைமையானே தன் விநாசப்பொருட்டுப் பரிணதமாய் இம்மோகக் கொடியெங்கே, எதனது சம்பந்தத்தினாலே இவ்வெல்லா சாமக்கிரியும் பரஸ்பரம் சேர்க்கை

யுற்றதோ, அநியதியாய ஈசுரேச்சை, அசிந்தனீயப்பிரபாவத்தை யுடையதாம் = இவ்வளவு தான் என்று அளவிட்டுச் சிந்திக்கமுடியாததாம். இதனாலே இத்தகைய சாமக்கிரியடைவில் மோகஜயவுற்சாகப் பொருத்தமாம், இடையிற்சோகமோவாகாதாம், ஹே பாரத்துவாஜ! மோகத்தை நீ விவேகத்தானே புடமாய்விடுவாய், இப்போது நீ அசாதாரணமான ஞானத்தை யடைவாயிதிலையமேயில்லை. மேலும் மகத்தாகிய காரியத்திலும் சோகம் சாமக்கிரியில்லாத வனுக்குப் பொருத்தமாம், மகாராஜனுக்கேபோலும் சருமசாமக்கிரீசம்பன்னனாகிய வுனக்குப் பொருத்தமின்றாம்; மகாசத்துவனாகிய வாசன் யுத்தாதி மகாபத்தில் மூழ்கினவனாயினும் தன பிருத்தியாதி சாமக்கிரிசம்பன்னத்தன்மை யுண்மையின் அன்னியங்களின் மஹேந்தராநாமா யினும், பிருதிவிபரிபாலன துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனாதிகாரியத்தை ஆணைமாத்திரத் தானே செய்ய வுற்சாகப்படுகின்றான், அற்பசத்துவஜனமோ சோகிக்கும் அற்பமேயாய பரி க்ஷதத்திலும் = தனாதி க்ஷதிரூபமானவாபத்தில், அதனுத்தாரணத்தில் ஹேது தைரியாதிசாமக் கிரியின்மையின் என்பதாம். ஜீவன்முக்தர்களைத் திருஷ்டாந்தமாய்க்காட்டிப் புண்ணிய சாமக்கிரியானது இருக்குமாயின் எனக்குப்போதம் அவசியம் உண்டாகும் எனக்கருதி யுற் சாகத்துடன் புண்ணியசாமக்கிரியையைச் சம்பாதிப்பதில் முதலில் முயலவேண்டும்; போதம் புண்ணியபராதீனமாம் வெகுஜன்மங்களினால் வெளியாகின்றது, தீரர்களாகிய ஜீவன்முக் தர்களிடத்தில் அனுமிக்கத்தக்கதாம்; காரியங்கொண்டே பாவம்போலும் புண்ணியத்திற்கும் பந்தகத்தன்மையுண்மையின், துவேஷிக்கத்தக்க புண்ணியத்தை எங்ஙனம் சம்பாதிக்கத்தக்க தெனின், துவேஷிக்கத்தக்கதாய எக்கருமத்தானே பந்தமித்தகையதாம், நேசிக்கத்தக்கதாய வதனாலே மோக்ஷத்தை யடைவாய்மைந்த; இராகமிருக்குமாயின் புண்ணியம்பந்தகமாம், அஃதிலதாயினோ சுகிருத்பூதமாயது மோக்ஷசாதகமேயாம் என்பதுகருத்து. புண்ணியாதி சயத்தானே புராதனபாவம் நாசமாயின், சமதமாதியமிருதத்தானே திருப்தியடைந்தவர்கட்கு; மூவகைத் தாபசாந்தியுண்டாம், சாதுக்களுடைய சற்கரும சம்வேகமானது பழையவினை யெவற்றையும் ஒழிக்கும், மழைக்கூட்டமானது பூதங்களின் தாவாநலத்தைத் தெளித்தகற்று வதேபோலும் புண்ணியசம்பாதனத்தின் பின் வைராக்கியதாட்டியம் செய்யத்தக்கதை யுப தேசித்தல்; அன்பனே கருமங்களைச்சந்நியசித்துச் சிரவணாதியுபாயங்களினாலே பிரஹ்மத்தின் கண் ணைசக்தசித்தனாகுதி, சமுசாரசக்கிர ஆவர்த்தப்பிரமத்தை யடைந்திடாயேலாயின் சாந்தி யையேயடைவாய்; எத்துணைவெளிக்கிரகமாய் பிரஹ்மத்தின்கண் ணைசக்தியிலதாமோ அத் துணையும் இவ்விகற்பத்தெழுந்த இவையாவு மிலங்கிக்கொண்டே யிருக்கும்; ஜலங்கொந்தளிப் பையடையில் அப்பிரதிகூலமாகிக் கரையைப்பொருதி விக்ஷிப்தமாம், நிச்சலஞ்சலமேல், கேவலம் நீரேயிருப்பதுபோலும் இவ்விவேக திருஷ்டியைமூடும் சோகமானது உன்னாலேன் பற்றப்படவேண்டும், இவ்வண்ணம் சோகாந்தனாமுன்னை விவேகத்திருஷ்டி திறக்குமவ்வாற், பிரஞ்ஞையஷ்டியொன்றே நிர்வாகஞ்செய்குக; அந்த யஷ்டியேயங்குரமாம், சுயஉற்சாகபங் கஞ்செய்யும் மகிழ்ச்சி வாட்டத்தரங்கங்களினாலே திருணங்கட்கொப்பாக எவை இழுக்கப் பெறுமோ, அவையொருபோதும் பெரியவற்றின் கணக்குகளில் எண்ணப்பெறாவாம்; சிற் றுயிர்கள் மகான்மாக்களுள் ஒன்றாக இன்றாமென்பது கருத்து. இவ்வுலகத்துள்ள ஜீவக்கூட் டம் இரவும் பகலும் ஹர்ஷவிஷாதாதி தசாவடிவ ஊஞ்சல் ஏற்றப்பெற்றதாய் அறுவகைப் பேதங்களாம் ஆறு இருது பேதங்களாம் காமாதியரிஷட்வர்க்க பேதங்களாம் அறுவகை யூஞ்சல் யந்தரங்களினாலே காலத்துக்குத்தக்கபடியே கிரீடிக்கப்பெறும்; மூலம் அகர்மகக்கிரீ டாதாதுவினின்றும் ஹேதுமது ணிச்பரமாகவேகதிபுத்தி...1-4,52, என்பதாதியானே கருத்

தாவிற்குக் கருமத்தன்மையுளதாகவே கருமத்தில்லகாரம் என்றுணர்க. அன்பனே யேன் கேதமுறுகின்றாய், கிரீடாகௌதுக கற்பிதங்களாய யதார்த்த சையோக வியோகங்களில் துயருறலிவாருத்தமாகாதாம். காலமேயாய குதூஹலீ=கிரீடாகௌதுகீ=விளையாடுந்தற்பர முடையது, இவ்விசுவத்தையுண்டாக்கும் ஒழிக்கும் விரைவில்மீண்டுமுண்டாக்கும் கெடுக்கும். தன்சரீராதிக்குச் சர்வப்பிராணி சரீராதிபோலும், காலாசனத்தன்மை யுண்மையின் யாது எதனது அன்னமோ அதனலது அவசியம் உண்ணத்தக்கதேயாம் எனத்துணிந்து அதன்கண் அகந்தாதி யபிமானத்தியாகமாயின் சோகஅடைவின்றாம், ஒன்றும் விசேடதரிசனமிலதாம், ஒன்றும் அதன் விடயமிலதாம் விசேடதருமமாகாதாம் எதுவும், தருமியும் பிரசித்தமின்றாம்; பக்ஷணகருமபூதமாய ஜந்துக்களின்மத்தியில், காலவடிவசர்ப்பத்தினது பக்ஷணமாகாதது எதுதானுளது, வலிதில் எதிர்க்கப்பெற்று எதுவுமே அதனல் நசிக்குமென்றபடி. யாவர்கள்தாம் தேவக்குழுக்கள் உளவோ அவர்களும் துஷ்டகால கோசரங்களாய அன்னபூதங்களேயாம், என்றால், நிமிடத்தில் ஒழியும் வாழ்க்கையையுடையமர்த்திய பிண்டங்களுக்குள் என்னகதைதானிருக்கின்றது. மேலும் சாக்ஷியாயிருக்கும் உனக்குச்சம்சார நர்த்தன கௌதுகதரிசனமே பொருத்தமாம் சோகமோகாதி விகாரங்களினலே, சுயம் நர்த்தனஞ்செய்தல் கூடாதாம்; சுயம் ஆடுகின்றாயென் பிரீதனய், விபத்துகளாம் தனசித்தாதி நாசங்களில் விவேகதரிசன அசமர்த்த ரோதனதிவிகிருத சக்ஷுராதியிந்திரிய முடையவனய், கணம் நிச்சலமாயிருந்து சமுசாரநாடகத்தைக்காண்குதி. இந்த அநேக தரங்க ஜகத்தாம் கனபங்குரத்தின்றரிசனத்தால் ஹே விவேகியாகிய பரத்துவாஜனே ஒருசிறிதும் துயரப்படவேண்டாம். அமங்களயோக்கிய சோகத்தைவிடுவாய், மங்களங்களை விசேஷமாகச் சிந்திப்பாயாக, சிதானந்தகனமாய்ச் சொச்சமாயுள்ள ஆன்மாவை விசேஷமாகச் சிந்திப்பாயாக; அந்தமங்களங்கள் எவைகள் எனின், தேவத்துவிஜகுரு சிரத்தாபாரத்தினலே வளைந்த சித்தத்தையுடையவர்க்கும், சத்தாகமப்பிரமாணர்கட்கும், ஸ்ரீமகாதேவரது திருவருளானதுண்டாம், தேவத்துவிஜாதி சிரத்தைமுதலியவை பரமேசுர அனுக்கிரகசாதனமாதலின் மங்களங்களாம், பரமேசுர அனுக்கிரகமோ நேரே ஞானசாதனமாதலின் பரமமங்களமென்பது கருத்தாம் அவ்வாறேகூறவும் பெற்றுளது:—ஈசன தருளினலே யின்னுயிர் தமக்கத் தொய்த, வாசனை யுண்டாமீண்டும் பயத்தினை வாட்டிக்காக்கும், ஏசற விஃதுண்டாமே லிருவருக் கலது மூவர்க், காசற வுண்டாம்பண்டை யருந்தவ மதனினனே. இப்போது ஸ்ரீபரத்துவாஜர், சர்வசாதனரகசியம் என்றுற்பிண்டப்படுத்தி யறியப்பெற்றது திருசியப்பிரபஞ்சப் பிரவிலாபனவுபாயரகசியமும், பரமேசுர அனுக்கிரகசாதன ரகசியமும், ஸ்ரீவசிஷ்டபகவானுடைய விஸ்தார வுபதேசங்களில், சிதறியதாக ஆண்டாண்டு கூறப்பெற்றது பிண்டீகரித்து அறியப்பெறவில்லையெனக் கண்டோக்தியினலும் அருத்தத்தினலும் தரிசிப்பித்துக்கொண்டு அதனையறியும் வேட்கையுடையவராய் வினதல்:—ஹே தேசிகோத்தமரே! தங்களுடைய பிராசாதத்தினலே இவையாவுமே யெஞ்சாமலறியப்பெற்றனவாம், வைராக்கியத்தினும் மேலானபந்துவைக்காணவே காணேம், சமுசாரத்தினும்மேலான பகையையுங்காணவே காணேம், ஸ்ரீவசிஷ்டபகவானலுபதேசிக்கப்பெற்ற ஞானசாரத்தை, அநேகவாக்கிய வடிவமாக எஞ்சாமல் கிரந்தத்தாற் கூறப்பெற்றதை இரகசியத்தை ஒருபதவடிவத்தானே பிண்டீகிருதத்தை மேலுக்கு மேலானதை மகாதாற்பரியத்தோடுகூடியதை இப்போது சிரவணிக்க இச்சிக்கின்றேன் இம்மோக்ஷத்தைக் கொடுக்கப்பட்ட மகாஞானத்தை ஹே பரத்துவாஜனே நீ கேட்பாயாக, எதனது சிரவணமாத்திரத்தானே பவாப்தியின்கண்ணே மறுபடி மூழ்கமாட்

டாயோ பிரவிலாபன உபாயமாகிய அபவாதத்தைக்கூற அத்தியாரோபத்தானே ஏகமேயநேக வகையாயிருந்ததைவத்தை மங்களப்பொருட்டு நமஸ்கரித்தல்: ஒன்றேயாயிருந்தபோதினும் யாதுசிருஷ்டிதிதி சங்காரபேதங்களினலே அநேகவிதமாயிருக்குமோ அந்தச் சச்சிதானந்த மூர்த்தியின்பொருட்டு நமஸ்காரம். வினவின் கருத்திற்குத்தக்கபடியாய விடையைக்கூறப்ப்திஞ்ஞைசெய்தல், பிரபஞ்ச விலயம்செய்தவழி எங்ஙனந்தத்துவம் ஒளிராநிற்குமோ அங்ஙனமாய வுபாயத்தைச்சுருக்கமாக மாண்டூக்கியவுபநிடதாதி சுருதிகூறிய முறைமையானே உனக்கினிது கூறுவேம்கேட்குதி சிதறக்கூறப்பெற்றது. சூக்குமமதிகளினலே சுயமாகவே பூர்வாபரவிசாரத்தினலே நிண்ணயித்துணர்தற்குக் கூடியதாம், உனது சுபுத்தியிலுடைய தாயவதனை வெளிப்படுத்தினய் முன்னிப்போது எங்ஙனமிழந்தாய் எனக் கூறப்பெறுவதன் கவர்ச்சியின் உறுதிப்பொருட்டு இகழ்தல் :—பூர்வாபர விசாரயோக்கியமாய வுனது ஸ்மிருதி எங்ஙனம்நஷ்டமாயது, அதனனேயேயாவும் சுயம்காராமலகம்போல வறியப்பெறும், தானேயாய்ந்து சித்தமாந்தன்னனே அஃதடையப்பெறும், எதனலேமீளவும் சோகமானது அடையப்பெறமாட்டாதோ, சற்சங்க சற்சாஸ்திரத்தோடுகூடி உண்டாம் விவேகத்தினலே மீளவும் வைராக்கியத்தோடுகூடிய புருடனலே யிது பகுத்துணாதக்கதாம்.

இப்போது பிரவிலாபனயுக்தி, ஸ்ரீ பாத்துவாஜ கிருதார்த்தத்தன்மை ஞானிகர்த்தவ்வியம், ஸ்ரீ இராகவரது எழுச்சிக்கிரமங்கள்கூறப்பெறும். ஆண்டு அங்கசகிதசாக்ஷாத்காராந்தமாய பிரபஞ்சப் பிரவிலாபனப்பிரகாரத்தை "சாந்தனய்த்தாந்தனய் உபரதனகி, போந்ததிதிக்ஷுசிரத்தைபொருந்தினேன், சாந்த சமாகிதனகியேதன்னை, யாந்தனிற்றனே யருமையாய்க் காண்பன்" என்னும் சுருதிதாற்பரிய வருணனவாயிலாகவே கூறத்தொடங்கல்: .சாந்தனய்த் தாந்தனய் உபரதனகி, காமியகருமங்களைவிட்டவனய், விஷயேந்திரிய சம்பந்தசுகத்தைவிட்டவனகி, சிரத்தையுடையவனகி, விட்டதென்றது உபரதபதத்தை விஷயவிபாகத்தானே வியாக்கியானித்ததாம்; ஆண்டுச்சமாகித பதார்த்தத்தன்மையானே ஆசனுதி யஷ்டாங்க யோகத்தை வருணித்துக்கொண்டு, திதிக்ஷுபதத்தைப் பொருளால்விரித்தல்: மிருதுவாசனத்தில் வீற்றிருப்பவனய், சித்த இந்திரியவினையைவென்றவனய், மனமடங்கித் தெளியும் பரியந்தம் ஓமென்றுச்சாரணஞ்செய்க; தீர்க்கமாகச்செபிக்குக, புசுண்ட உபாக்கியானத்தே புகன்றரீதியாகப் புலுததமமாயேனும் புகலுக. அதன்பின்னந்தக்கரண சுத்தியின்பொருட்டுப் பிராணயாயம்செய்க, பின்னிந்திரியங்களை விடயங்களினின்றும் பையப்பையமீட்குக; பின்றேக இந்திரியமனபுத்தி க்ஷேத்திரஞ்ஞர்கட்கும், எதனினின்றும் சம்பவமாமோ அதனையுணர்ந்து அவற்றினிடத்தில் விலாபனம்செய்க, எதனினின்றும் எதனினின்றும் எதெதற்குச் சன்மமாமோ அததனையுறீர்ந்து சுருதியாதியினலேயினைந்து அவ்வப்பூதங்களிலும் தேவதைகளிடத்தும், விலாபனஞ்செய்க—வாசாரம்பண் சுருதிகூறியமுறையானே அவ்வதனினும் அயலாகவில்லையென்று, எண்ணுக. இவ்வண்ணம் ஆத்தியாத்மிக தேகேந்திரியாதிபாவத்தை விடுத்து அவற்றின் காரணபூததேவதா சமஷ்டியான்மவகாரார்த்த விராட்டேயானகின்றேன் என்னும்பாவனையினலே முதலில், விராஜியாகி, அதன்பின்னர் அதன்காரண உகாரார்த்த சூக்கும பூதலிங்கசமஷ்டிவடிவ ஹிரணியகருப்பத்தில் விராட்டை யொடுக்கிக்கொண்டிருந்து அதன்பின்பு, அதன்காரணமாய திரிகுணமாயோபகித மகாரார்த்த அவ்யாகிருதத்தில் இருந்தன்பின் சர்வ ஜகன்மூலகாரணத்தன்மையுபலக்ஷித அவ்யாகிருதசகித சர்வஜகத்ததிஷ்டான அர்த்தமாத்திரையினலே குறிப்பிக்கப்பெற்ற சுத்தப்பிரஹ்மத்தின்கண் அவ்யாகிருதத்தையும்

இலயப்படுத்தி நிலைபெற்றிருப்பாயாக. தேகேந்திரியாதிகளுள் எதற்கு எதனினின்றும் சம்பவமாமோ அதன்கண்ணதன் பிரவிலாபனம் யாதோதப்பெற்றதோ அதனைச்சிறப்பித்து மீளவும் விவரணம்செய்தல்: மாம்சாதிபார்த்திவபாகத்தைப் பிருதிவியின்கண் மிகலயம் செய்க, இரக்தாதி யப்சம்பந்தமுற்றவற்றை அப்புகளிலும், தேஜசு சம்பந்தமுற்றவற்றைத் தேஜசிலும், விலயம்செய்க, அதன்மாத்திரத்தன்மைச் சிந்தனத்தானே விலாபனஞ்செய்க. வாயுசம்பந்தமானவற்றை மகாவாயுவின்கண்ணும் சரீரசம்பந்த ஆகாசத்தை நபசின்கண்ணும் விலயம்செய்க, இவ்வண்ணம் கிராணாதியிந்திரியங்களையும், தங்கள் ஆரம்பகங்களாய தேவதோபாதி பூதசூக்குமப்பிருதி வியாதிகளில், பிரவிலாபனஞ்செய்து, திக்குச்செவிப்புலனாகிச் செவியுட்புகுந்தது, என்பதாதி சுருதியினாலே கருத்தாவாகிய ஜீவனுக்குச்சப்தாதி போகப் பிரசித்தியின்பொருட்டு, கர்ணாதிகோளக அனுப்பிரவேசத்தால், சுரோத்திராதிலக்ஷண இந்திரியபாவமாக அடைவுற்ற திக்காதி தேவதையைமுறைப்படியே தேவதைகளிலேயே விலாபனஞ்செய்க, என்பதாம். அம்முறையையேகாட்டல்:—தன்னுடைய சுரோத்திரத்தைத் திக்குகளில் இலயப்படுத்தி, துவக்கைவித்யத்தில் இலயம்செய்க, சக்ஷுவையாதித்திய பிம்பத்தில் நாவை வருணதேவதையில் விலயம்செய்க, பிராணனைவாயுவில், வாக்கையக்கினியில், பாணியை யிந்திரனில் இலயஞ்செய்க, தன்னுடைய பாதங்களை விஷ்ணுவினிடத்திலும், பாயுவைமித்திரனிடத்திலும் அவ்வாறேயுபஸ்தத்தைக் கசியபரிடத்திலும் மனதைச் சந்திரனிடத்திலும் விலயம்செய்க. புத்தியைப் பிரஹ்மாவாகிய சதுர்முகனிடத்தில் விலயம் செய்க, புத்திக்கிரகணம் உபலக்ஷணமாம்; இவ்வண்ணம் மனோகங்காரசித்தங்களையும் சந்திர ருத்திர அச்யுதர்களிடத்தில் விலயம்செய்கவென வுபசங்கரித்தல்: இவை காணதேவதைகளாம். அக்கினிவாக்காகி முகத்துட்புகுந்தது, என்பதாதி சுருதிவாக்கியப் பிரமாணத்தையனுசரித்து தேவதையே இந்திரியம் என்பதாகவிருந்தது, இந்திரியங்கள் என்பன வேறுவத்துக்களாக இராவாம், எனத்தத்துவ உபதேசத்தால், பிரவிலாபனப்பொருட்டு எம்மால் தெரிவிக்கப்பெற்றனவாமன்றிச் சுயமாகச் சுவ கபோலகற்பனையால் இப்பொருள்கள் வெளிப்படுத்தப்பெற்றனவல்லவாம். இவ்வண்ணம் தேகேந்திரியாதிப்பிரவிலாபன சங்கிரகசுலோகத்தை விவரித்து, விராட்டாக முதலிலிருந்து என்னுமிதனைத் தெளிவித்தல்: இவ்வண்ணந் தன்துதேகத்தை இலயம்செய்து விராட்டாயிருக்கின்றேன் என்றுசிந்திக்குக; அவ்யாகிருதத்தில் இருப்பவனைப் பின்னென்னுமிதனது விவரணப்பிரசங்கத்தானே மாயாசபல சர்வஜகத்தபின்ன நிமித்தோபாதானப் பிரஹ்மத்திற்குப் பிரஹ்மவித்யார்த்திகளினாலே, முன்னுபாசியத்தன்மையானே கூறப்பெற்ற, பிரஹ்மாண்ட வடிவவிராட்டின் இருதயதாமரையில் எப்போதுமிருக்கும், பிரஹ்மவித்தையோடுகூடிய அர்த்தசரீரமூர்த்தியைக் காட்டிக்கொண்டு அதுவே சருவப்பிராணிகட்கும் தாய்தந்தைவடிவத்தானே காரணமாம், பிரஹ்மாண்டத்தினுள்ளே யிராநின்ற எவ்விவ்வர்த்த நாரீசுரப்பிரபு இருக்கின்றாரோ, அவ்விவரே சர்வப்பிராணிகளின் ஆதாரர் ஆவர் காரணமென்றுங்கூறப்பெறும். அவ்விவர், பிதுருத்தன்மையானேதாம் சிருட்டித்ததேவமனுஷ்யாதி ஜகத்தின்விருத்தியில்—அன்னபானாதி ஜீவனோபாயத்தில், விவத்திதராய். ஹவிவிருஷ்டியாதியால், சருவ போஷகசிரௌதஸ்மார்த்தயஞ்ஞ சிருஷ்டிரூபமாகப் பிரஹ்மாண்டத்தினுள்ளேதிதமாவர்; பிரசங்கத்தானேவந்ததைக் கூறிக்கூறிவந்த பிரவிலாபனத்தைக் கூறும்பொருட்டுப் பிரஹ்மாண்ட ஆவரணங்களைக்கூறல், அண்டத்தின்வெளியேயிருமடங்கு பிருதிவியாம், பிருதிவியினு மிருமடங்குஜலமாம், பதின்மடங்குத்தாங்களாய இவ்வாவரணங்களினானே அண்டம் வியாபிக்கப்பெற்றுள்ளது, எனப்புராணங்களில் தச

குண உத்தரத்தன்மை கேட்கப்பெறுகின்றது என்றாலும், இருமடங்கேயெங்கும் சுற்றியிருப்பதில், பஞ்சக்குரோசப் பிரதக்ஷிணத்தில், இருபத்தைந்து குரோசம்போலும் ஒருமடங்கிற்கு ஐம்மடங்காக இருமடங்கிற்குப் பதின்மடங்கு ஆமென்னும் அபிப்பிராயத்தானே அத்னையுணர்ந்துகொள்க. அல்லது, அது அபஞ்சீகிருதபூதாவரண அபிப்பிராயமாம் இதுவோ பஞ்சீகிருத அபிப்பிராயம் என அவிரோதமாம். ஒவ்வொன்றினின்றும் உத்தரோத்தரம் முறையே, ஜலத்தினின்றும் இருமடங்குதேஜசாம், தேஜசினின்றும் இருமடங்குகாற்றும், காற்றினின்று மிருமடங்காகாயமாம்; வியஸ்தமாய அபஞ்சீகிருதத்தாலும் சமஸ்தமாய பஞ்சீகிருதத்தாலும் வியாபிக்கப்பெற்றதாய்ச் சகத்தானது கட்டுப்பட்டுளது, அதனானே ஆந்தர ஆந்தரத்தைப்பாகியத்திற் பிரவிலாபனஞ்செய்க, கிதியைநீர்களிற் செலுத்தி, நீரையநலத்தில் விலயம்செய்க, அக்கினியைவாயுவிற் பிரவிலாபனம்செய்து, வாயுவையும் ஆகாயத்தில், விலயம்செய்க; எல்லாத்தூலப்பிரபஞ்ச உற்பத்திகாரணமாய மகத்தாகாசமென்னும் இரணியகருப்பாகாயத்தில், ஆகாயத்தையும் ஒடுக்கிக்கணநேரம் அதன்கண்ணிருந்து யோகியானவன் லிங்கமாத்திர சரீரத்தைத்தாங்கினோனாகி இருப்பன் அந்தலிங்கசரீரமென்பது யாதுகொலாமாலோவெனின், வாசனைபூத சூக்குமங்களும் அவித்தைகளும் அவ்வாறேபத்துஇந்திரிய மனோபுத்திகளும் ஆகிய இவை ஒருங்குகூடி இலிங்கசரீரமாம் என்று பெரியோர்கூறுவர் இவ்வண்ணம் தூலோபாதிப் பிரவிலாபத்தானே, பாதிபோலடைவுற்றவனாய், பிரஹ்மாண்டான்மத்தன்மை யபிமானத்தியாகத்தால் அதனினும் பகிர்ப்பூதனாய், ஆண்டுச்சூக்கும பூதான்மகலிங்க சமஷ்டிதேகத்தில் அகம் ஆன்மா அதிஷ்டாதா இரணிய கருப்பனேயாகியுள்ளேன் என்று இனிது சிந்திக்கவேண்டும். சதுர்முகன் பதுமசம்பவதேகம் உலகத்தில் இரணியகருப்பன் எனப்பிரசித்தமாம், இந்தப்பூத சூக்குமசமஷ்டியாத்மாவோ சதுர்முகன் அல்லன் என எங்ஙனம் இரணியகருப்பனாவன், எனின் பூதசூக்குமத்தில் அபிமானித்தன்மையானே, விவத்திதமாய இதுவே பிரஹ்மாண்டப் பிரவிலாபனத்தினும் முன்னர்ப்பிரஹ்மாண்டாந்தர்வரிய போகப்பொருட்டுப் பதுமோற்பவதேகத்தைக் கற்பித்துச் சதுர்முகனாகியதென்பதாம், இத்தகைய இரணியகருப்பான்ம பாவனையின்பின்னர் யாதுசெய்யத்தக்கதோ அதனையியம்பல்: இலிங்கத்தை யபஞ்சீகிருத பூதங்களினின்றும் சூக்கும, உபாதியாகாரத்தானே அவ்யாகிருத மாயாம்சத்திலும் உபகிதசிதாகாரத்தானே அவ்யக்தத்திலும் மதிமான் விலயஞ்செய்துகொள்க. ஜடாம்சத்திற்குஜடத்திலும் சிதாபாச அம்சத்திற்குச்சித்திலும், பிரவிலாபனமெனக்குறிப்பிக்கும்பொருட்டு இருவகையாகப் பிரித்தியம்பியதாம். அல்லது வியாகரணபலம் அபிவிபக்தியென கிரியாபலரூபப்பிரவிருத்தி நிமித்தபேதகற்பனையினாலே ஓரிடத்திலேயே அறிவிப்புவேற்றுமையாம், நாமரூபத்தைவிட்ட ஜகத்தானது எதன்கண்ணிருக்குமோ அதனைச் சாங்கியர் பிரகிருதியென்றும் வேதாந்திகள் மாயையென்றும், பிறரோ அணுக்கள் என்றும் கூறுவர். தருக்கவிப்பிராந்த சித்தர்களாகிய பௌத்தர் சம்விருதிரூப அவித்தையென்பர், அந்த அவ்யாகிருதத்தில், பிரளயகாலத்தில், எல்லாப்பதார்த்தங்களும் இலயமாகிய ஆறுவது பாவவிகாரத்தையடைந்து, அநபிவ்யத்தரூபிகளாக அதன்சத்தையினாலேயே யிருக்கும்; எங்ஙனமிருக்குமென்றால், பரஸ்பரசம்சர்க்க சூனியங்களாகவும், சிற்போக்கியத்தன்மை இலக்கணசுவாது அற்றனவாகவுமிருக்கும், எதனால் எனின் பிரளயாநந்தரம் சர்க்ககாலத்தில், பிரகிருதிபூதமாய அவ்யாகிருதத்தினின்றுமே மீண்டும் சம்பவிக்கும் ஆகாசாதிக்கிரமமாகச் சிருஷ்டி கூறப்பெற்றதாம், சிருஷ்டிவிபரீதக்கிரமமாகப் பிரளயம் கூறப்பெற்றதாம், பரமகாரணத்திற் பின்னிருக்கவேண்டுமென்று கூறியதைவிவரித்தல்: ஆகலினஸ்தானத் திரயத்தை—விராட்

டிரணியகருப்ப அவ்யாகிருதப் பெயரியதாய், ஸ்தூல சூக்குமகாரணரூபமதாய், சமஷ்டிஜாக்கிரத்தாதியவஸ்தாத்திரயத்தை, உட்பிரஞ்ஞையுமன்று வெளிப்பிரஞ்ஞையுமன்று உபயப்பிரஞ்ஞையுமன்று, பிரஞ்ஞையுமன்று அப்பிரஞ்ஞையுமன்று, பிரஞ்ஞானகனமுமன்று, எனச்சுருதிகாட்டிய திசையில், விடுத்துஅதன் அதிஷ்டானமாய பரிசிஷ்டசின்மாத்திர ஏகரசத்தை அவ்யயமாய துரியபதத்தைத் தியானம்செய்க, "திருசியமற்றதாய் விவகரிக்கமுடியாததாய் கிரகிக்கமுடியாததாய், இலக்கணமற்றதாய்ச் சிந்திக்கமுடியாததாய், இன்னபடியென்று கூறமுடியாததாய், ஏகாத்மப்பிரத்தியயசாரமாய், பிரபஞ்ச உபசமமாய்ச் சிவமாய்ச்சாந்தமாய் அத்வைதமாய்ச் சதுர்த்தமாய் உள்ளதைத் தியானம்செய்கின்றனர்" என்றுஞ் சுருதியினுற் காட்டப்பெற்றதது, அதனது அடைவின்பொருட்டு நேரேகிடைக்கும் பரியந்தம், தியானம் செய்க தியானத்தினுலே பிரகாசிக்கப்பெற்ற சரமசாக்ஷாத்கார விருத்தியினுலே தியான கருத்தாகாரணரூப இலிங்கத்தையும் மூலாஞ்ஞானபாதத்தால் விலயம்செய்து குடமுடைந்த போது குடாகாசம்மகாகாசம்போல மேலானநிரதிசயானந்தப் பிரஹ்மத்தையடைக, அதுவே இதற்கு லிங்கக்கட்டின் விடுபாட்டானே கிருதார்த்தத்தன்மையாம், உட்பிரஞ்ஞையுமின்று என்பதாதி சுருதியின்கண் லிங்கபாதம் காணப்பெறவில்லையாதலின் யாங்ஙனம் அதன் நிவிருத்தியாங்கொல்லெனின் ஸ்தானத்திரய பாதமாம்போது லிங்கபாதம் அருத்தசித்தமாம். ஸ்தூலசூக்ஷ்மபூத இந்திரியாதிகளிலேயே இலிங்கத்திற்கு நிலைபேறுண்மையின், என்பதைக் கண்டுகொள்வலாம், இலிங்கம் அவ்யாகிருதத்தில் இருக்கும்போது பூதஇந்திரிய மனே புத்தி வாசனைக் கருமவாயுக்களும் அஞ்ஞானமும் பிரதிஷ்டையாம், அஞ்ஞானம் எங்ஙனம் பிரதிஷ்டையென்பதற்கு விடையாமிது; சுத்தப்பிரஹ்மத்தில் அஞ்ஞான ஆவரணத்தானே அவ்வியாகிருதம் இருக்கும்போதுதான், சூக்குமபூத வாயிலாயிலிங்கமுண்டாம், அஞ்ஞானமில்லாமல் இன்றுமென அதுவே லிங்கத்தின்மூலப்பிரதிஷ்டையாம், ஆகவே அது நீங்கிய வழி லிங்கக்கட்டின் பங்கசித்தியாமென்பது கருத்து. இவ்வண்ணம் ஸ்ரீவால்மீகிபகவானுல், பிரணவார்த்தப் பிரபஞ்சன உபாயத்தானே நன்குபோதிக்கப்பெற்றவரா யினிதுணர்ந்து கொண்ட ஸ்ரீபாரத்துவாஜர் தமதநுபவத்தைக் குரு அநுபவசம்வாதத்தால், சோதிக்கும் பொருட்டு வெளிப்படுத்திக்கொண்டு கூறல்: ஹே தேவதேவரே! இப்போது இலிங்கக்கட்டினின்றும் எல்லாவகையாலும் முத்தனுயினேன், ஆதலால், சைதன்ய ஆனந்தசாகரத்தில், சிதம்சத்தன்மையால், பிரவேசிக்கப்பெற்றேன், சர்வஉபாதிவர்ஜிதனுன யான் அபேதத்தால், பரமாத்மாவாயினேன்; கூடஸ்தமாய், கேவலமாய் வியாபியாயிருக்குஞ் சித்தேயான் சிற்சக்திமான்யானல்லன், எத்தகைய வபேதத்தாற் பரமாத்மாவாயினுயெனின், கடபங்கமாயின் கடாகாசகலசாகாசங்கட்கேபோலும் என்பதாம். ஒருகடத்திற்கே கடகலசநாமபேதகற்பனையாம் அதனுபகித ஆகாசத்திலும் கடாகாசம் கலசாகாசம் என அறிவிப்புப் பேதகற்பனையாம், அதுபோலவே ஒரு அஞ்ஞானத்திற்கே ஜகந்நாம பேதற்பனையாம் அதனுபகித என்பாலும் ஜீவன் ஈசுரன்தேவன் நான்குஞ்சரம் என்பதாதி அறிவிப்புப்பேதகற்பனையும் இருக்கும். ஆண்டு ஒருகடபங்கத்தால் உபயநிவிருத்தியால் சுத்தாகாசலக்ஷண ஐக்கியமாவதேபோல, அஞ்ஞானத்தின் நிவிருத்தியால் சருவநாமாதி பேதநிவிருத்தியால், சித்தைக்கிய சாம்ராஜ்ஜியமாம். இவ்வண்ணம் ஒருமையைக்கருதி அந்தப்பிரஹ்ம பூதமாமென்னை "யாண்டு பிறிதொன்றினைக்கண்டிலன் பிறிதொன்றினைக்கேட்டிலன்பிறிதொன்றினையுணர்ந்திலன் அது பூமாவாம், யாண்டுதானிவனுக்குச் சர்வம் ஆன்மாவேயாயதோ ஆண்டெதனுலே யெதனைப் பார்ப்பன்; ஏகாத்மப்பிரத்யயசாரம் சிவம்சாந்தம் அத்வைதம் நான்காவதாம் என்றெண்ணு

கின்றனர். ஈண்டற்பமும் நானுவில்லை; என்றற்றொடக்கத்தனவாய வெகுசுருதிகள் இவ்வண்ணமே அவ்வைக்கியத்தை யாதரவுடன் கூறுகிற்கும் இங்ஙனம் ஜலத்தில் ஜலம் க்ஷீரத்தில் க்ஷீரம் கிருதத்தில் கிருதம்பெய்தது அவிசேஷமாக ஆவதேபோல, ஜீவாத்மா பரமாத்மாவின் கண்ணும்'' என்பதாதி சுருதிகளினாலே இத்தகைய ஐக்கியமே காட்டப்பெற்றதாம் என்னுங் கருத்தாலுதாகரித்தல்: அக்கினியக்கினியின்கண்ணே போடப்படின் ஐக்கியம் அடைவதேபோல அப்பெயரியதாய் அதன் மயமாயாகிக்கவரப்பெறும் விசேடமாகக் கவரப்பெறுதாம், இவ்வண்ணம் அசேதனப்பிரபஞ்சத்திற்கும் சித்தில் விலாபனத்தால் அப்பாவ ஆபத்தியில் திருஷ்டாந்தமிதுவாம்:

லவணாகாத்திற்போடப்பட்ட திருணாதிகள் லவணமாவதேபோலச் சைதன்யத்தில் விலயம்செய்த அசேதனஜகத்தானது சேதனமேயாய்விடும் சமுத்திரத்தில் இலவணக்கிரந்தியானது சைந்தவமாவதேபோலும், நாமரூபங்களினின்றும் விநிர்முக்தமாய்ச் சைந்தவமானது கடலிற் புகுந்தவுடனே கடலேயாவதுபோலும், நீரிற்பெய்த நீரேபோலும் பாலிற்பெய்த பாலேபோலும் நெய்யிற்பெய்த நெய்யேபோலும் உணரலாம் உபாதிநாசமாகவே உபகித ஜீவவிநாசசங்கையும் எனக்குச்சென்றது கூறியவை யவிநஷ்டமேயாம் சிறப்பாகக்கவர்வன வாகாவாம், சிதேகாசசற்பிரஹ்மத்தின்கண்ணே சருவபாவத்தாற் புகுந்தயானும் அவ்வாறே யாவேன் நித்தியாநந்தமாய்ச் சருவத்தையுமுணர்ந்த பாமகாரணமாய பரம்பொருளில் அடைந்த யானும் அதுவேயாயினேன் நிஷ்களம் நிஷ்கிரியம் சாந்தம் நிரவத்தியம் நிரஞ்சனம் என்பதாதி சுருதியினாலும் தமதனுபவத்தைச் சம்வாதித்தல்: நித்தியமாயும் எங்குமிருப்பதாயும் சாந்தமாயும் குற்றமற்றதாயும் மையற்றதாயும் கலையற்றதாயும் வினையற்றதாயும் சுத்தமாயும் பரம்பரமாயும் உள்ள அந்தப்பிரஹ்மமேயான்; தன்னைக்கொள்ளக் கூடாததாயும் உண்மையுருவமாயும் இந்திரியமற்றதாயும் உள்ள சிவமே யான்; கேவலம் சத்தியசங்கற்பம் = சங்கற்பமாத்திரத்தானே அசத்தாயஜகத்திற்கும் சத்தைச்சம்பாதன சமர்த்தசத்ரூபம், சுத்தம் ஆகிய பரப்பிரஹ்மமேயான்; புண்ணியபாவம் விடுபட்டதாய் ஜகத்திற்குப் பரமகாரணமதாய் ஜகத்திற்குமேலானதாய் அத்வீதியமாய்ப் பரம்ஜோதியாய் ஆனந்தமாய் அவ்யயமாயுள்ள பிரஹ்மமேயான்; இவ்வண்ணமாதிகுணங்களோடு கூடியதாய் சத்துவாதிமாயயாகுணங்களற்றதாய், உள்ள பிரஹ்மத்தையே யானெனத் தியானம்செய்யவேண்டும், அப்யாசகாலத்திலும் தங்களால் இதனது தியானமே அடியேன்பொருட்டுபதேசித்தருளப் பெற்றதாம், நிர்வண குரு பணிவிடையாதிபரனாகித் தனது வருணாசிரம தருமநிஷ்டனுமாகிச் சகலத்திலும் நிறைந்த பிரஹ்மத்தையே எப்போதும் தியானம்செய்தல்வேண்டும், இங்ஙனம் பயிலும் அதிகாரிக்கு ஆண்டேமனமானது அஸ்தத்தையடையும், மனமானது அஸ்தமாகவே அவனுக்கு ஆன்மாவானது சுயமாகவே விளங்காநிற்கும், ஆன்மாவானது பிரகாசமாகவே சகலதுக்கங்களும் நீங்கிப்போாநந்தமுண்டாம். தானாகவே தன்னாலே ஆத்மாவையும் ஆனந்தத்தையும் அடைதலும் அறிதலும் கூடும், கூடுவதெங்ஙனெனின், என்னினும் அன்னியன் ஏவனுமிலனே சிதானந்தமயப் பிரபுவாகிய பரம்பிரஹ்மமாம் யானேகனேயுள்ளன் இவ்வண்ணம் ஆன்மா வுள்ளேயொளிராநிற்கும், இதுபிரதிபத்தி சப்தார்த்தத்தைக்கூறியதாம் இவ்வண்ணம், ஸ்ரீபாத்துவாஜர் கூறிய அனுபவத்தைக்கேட்டு மகிழ்ச்சியையடைந்த ஸ்ரீவால்மீகிபகவான் அவர் கூறிய அனுபவஸ்திரபாவப்பொருட்டு ''தியாகம் செய்பவனாலேயே அப்பொருள் அறியத்தக்கதாம் பிரத்தியக்குப்பாமபதமானது தியாகித்தவனுடைய வடிவமாகவே விளங்கும்''

என்பதாதி சுருதிசித்த சந்யாசத்தை அவசியம்செய்யத்தக்கதாக வுபதேசித்தல்: அன்பனே கருமங்களைவிடுத்துப் பிரஹ்மத்தியான தற்பரனேயாவாய், சமுசாரசக்கரவர்த்தப் பிரமத்தை யடையாதிருக்கும் பக்ஷத்தில், மேலானவுபசாந்தியையே யடைவாய், சமுசாரசக்கிரச்சுழல்களிற் சுழலவேண்டாம் நீ விசிராந்தி சுகத்தைகிருகத்தனாகவிருந்தே யடைய இச்சிப்பையேல் அடையவேமாட்டாய், ஆகையினாலே கருமங்களைவிட்டொழித்து நிர்விக்ஷேபமாய்ப் பிரஹ்மத்தின்கண்ணே பற்றுடையவனாய் நிட்டனாதி, "பிரஹ்மத்தில் நிலைத்தவன் அமிருதத்தை யடைவன்" என்னும் சுருதியினாலே வேறொருவியாபாரம் ஒன்றுமின்றியே பிரஹ்மத்தின் கண் ணாசக்தியடைந்த சந்யாசிக்கே அவித்யாசகிதப்பிராந்திசாந்தி சம்பவித்தலின் ஸ்ரீபாரத்துவாஜர் கூறல்: ஹேஞானாசாரியரே! தங்களால் அனுக்கிரகிக்கப்பெற்ற சாங்கோபாங்கம் யாவுமே அடியேனால் நன்கறியப்பெற்றவாம், நன்றாகஞானம் வந்துவிட்டது, புத்தியும் நிர்மலமாய்விட்டது, சமுசாரமானது விலம்பனமாக நீள்போது நிலைபெறாதாம், "அவனுக்கவ்வளவேதடை எவ்வளவு விடுபட்டிலனோ அதன்பின்னடைந்திடுவன்" என்னும் சுருதியினாலுமாம் ஞானிகட்குக்கருமம் எத்தகையது என இப்போதுணர இச்சிக்கின்றேன், ஞானியாகிய ஜீவன் முக்தனுக்குக்கருமம் செய்யத்தக்கதா தகாததா என்பது முதல் வினாவாம் கர்த்தவ்யமாம்போது பிரவிருத்தி ரூபமாய நித்தியநைமித்திக காமியகருமம் யாவுமே முன்போன்றே கர்த்தவ்யமா அல்லது காமனைகளினின்றும் நிவிருத்தன் தன் ஆசிரம உசிதகரும மாத்திரம் செய்யத்தக்கதா, என்பது இரண்டாவதுவினாவாம், பாடக்கிரமத்தினும் அர்த்தக்கிரமம் வலிதாதலின் என்றுமூலத்திலுணர்க.

அன்பனே யெல்லாக்கருமமும் விடுத்துப்பிரஹ்மத்தின் நிலைமையைப் பெரிதுபோற்றிடுவாய் என்று சருவகரும சந்யாசத்தைக்கேட்ட ஸ்ரீ பாரத்துவாஜருடைய இரண்டு வினாக்களுமே பொருத்தமற்றனவாம் எனின் உண்மையே, ஆயினும், சாங்கானும் அக்கினிஹோத்திரம் ஓம்புக, ஈண்டுக்கன்மங்களைச் செய்துகொண்டே நூறுவருடம் வாழ்கவிழைக, என்பதாதிசுருதிகளினாலே சாங்காறும் செய்யத்தக்கதாகக் கட்டுப்பட்டவர்களாய் "தீக்ஷிதன் தானம் செய்வதுமில்லை ஆகுதிசெய்வதுமில்லை" என்பதாதி வாக்கியங்களினாலே தீக்ஷாகாலத்தில் விட்டவர்கட்கும் தீக்ஷையகலவேமீளவும் பரிக்கிரகமாவதேபோலும்" "விட்டவனாலேயே யஸ்திறியத்தக்கது விட்டவரடையும் உலகமிதுவென்றே விழைந்தவாயே விட்டொழிப்பாரே" என்பதாதி சுருதிகளினாலே பிரஹ்மஜிஞ்ஞாசா நிமித்தத்தால் தியாகித்தவர்கட்கு ஞானசித்தியால் நிமித்தமொழிந்தவழிமீளவும் பரிக்கிரகம் நியாயசித்தமேயாம் வித்வத்சந்யாசவிதானத்தினாலேமீளவும் அபரிக்கிரகம் என்னற்க; அவனுக்கு முற்பிறப்பில் அனுஷ்டிக்கப்பெற்ற விவிதிஷா சந்யாசவசத்தால், கிருகஸ்தாதி யாசிரமங்களிலேயே தத்துவஞான உதயத்தால், கிருதார்த்தபுருஷ விசேஷர்பொருட்டு அடையப்பெறாத சந்யாசாந்தரவிதான பரனுக்கு அடையப்பெற்ற விவிதிஷா சந்யாசபரிபாலன விதானங்கூடாமையின் என்னுங்கருத்தால் வினாக்கள்பொருத்தங்களாம் எனத் தெரியதக்கனவாம். இவ்வண்ணம் வினாவப்பெற்ற ஸ்ரீ வால்மீகிபகவான், உன்னால் முதலிற்காமிய நிஷித்தகருமங்களினதூஉம், ஞானவிரோதிவிக்ஷேபாதி தோஷஹேது பூதகருமங்களினதூஉம், தியாகத்தினாலே ஞானித்தன்மை சாஸ்திரப்யாசத்தால், சம்பாதிக்கத்தக்கதாம், அதன்பின்னவனுக்குக்கருமம் எத்தகையதென நின்வினாவின்பின்னர் நீ சுயமாகவே அறிவாய், அவ்வப்பூமிகைப் பரிபாகக்கிரமத்தால், அவ்வக்கரும உபரமன் அப்போதப்போதே உன்னாலநுபவிக்கக்கூடலின், ஞானிகட்கும் நக்

வினை விசித்திரப்பான்மையானே ஏகரூபத்திதிகாணுமையின், அக்கருமங்கள் பிரவிருத்தந் தாமோ அல்லது நிவருத்தந்தாமோவென நியமிக்கக்கூடாமையின் என்னுங்கருத்தால்: விடையிறுத்தல்:—ஆகையினாலே=சருவகரும சந்நியாசசகிதப் பிரஹ்மநிஷ்டைதானே சமுசார மயக்த்தைநீக்கும் ஞான உபாயமென எம்மால் உபதேசிக்கப்பட்ட அருத்தத்தை யுணர்ந்திருத்தலின், உன்போன்ற முமுக்ஷுக்களால், எக்கருமம்செய்யப்படின் சிரவணாதி விக்கின தோஷமும் சித்தவிக்ஷேபமாலின்யம் வருதலாதிதோஷமும் ஆகாவோ அதுவேசெய்யத் தக்கதாம், காமியகருமத்தையும் நிஷித்தகருமத்தையும் கண்கண்ட விக்ஷேப சாதனகருமத்தையும் செய்யவேகூடாதாம், விவிதிஷா சந்யாசபரிபாலனமோ, விதியால்விட்டவனுக்கு மீளவும் விதியின்றிப் பரிக்கிரகங்கூடாமையின் "ஆரூடனெவன்றான் நைஷ்டிகதருமம் அந்தோமீளவும் நழுவிப்போவன், பிராயச்சித்தம் கண்டிலனெதனாற் பின்றாய்தாவன் அவனான்மகனே என்பதாதி பாராவிருத்தியிற் றேடங்கேட்கப்பெறுதலின், மீண்டும் பரிக்கிரகம்செய்வதிற் பிரயோஜனமின்மையின் ஆன்றோரால் பழிக்கப்பெறுதலினானும் சித்திப்பதாம், ஞானித்தன்மையுனக்குச்சர்வ மனோகுணத்தியாகத்தினாற் பூர்ணானந்தாத்வய விசுத்த அசங்கநிர்தேகாசத்வாதி பிரஹ்மகுணப் பிராப்தியுளதாகவேயாம் அயலாற்றாலிலதாம், ஜீவன் மனோகுணங்களைவிடுத்துப் பிரஹ்மகுணங்களோடுகூடும்போது காணக்கூட்டங்களெல்லாம் அத்தியந்தமொடுங்கிச் சர்வகமாய பிரபுவேயாவன். தேகாதி நான்குகோசங்களினும்பரம் ஆனந்தமயகோசாத்மா அதனினும்பரம் அதனதிஷ்டான மாயபிரஹ்மம் அதுவேயானுயிருக்கின்றேன்" என்று தியானிக்கும்போது ஜீவன்விடுபடுவன். கருத்தா போக்தாநிவிடுபட்டவனுகி, அதாவது கருத்தா காரியம் காணம்போக்கியம் போக்தாபோகம் ஞாதாஞானம் ஞேயம் எனமும்மைப்பட்ட திரிபுடிகள் யாவையும்விட்டவனுகி, அவற்றின் சாதகங்களாய சருவதேகாதியுபாதிகளாலும் அவற்றின்பலங்களாய சுகதுக்கங்களாலும் விடுபட்டவனுகியபோது விடுபடுதல்கூடும்; நீ முத்தியேவடிவமாய் திண்ணம். சருவபூதங்களிற்றன்னையும் தன்னிற் சருவபூதங்களையும் அபேதமாகப்பார்க்கும்போது ஜீவன்விடுபடுவன்; நனுக்கனுத்துயில் என்னும் தானுத்திரயத்தையும் விட்டுத் துரீயானந்தத்திற்புகுந்தபோது ஜீவன்விடுபவன்; ஜீவனுடையதுரீயமெனப் பெயரிய திதியாதுளதோ பரமான்மாவின்கண், ஜாக்கிரசொப்பன அவஸ்தைகளின் பீஜம்=வாசனை கருமங்களின் உடனிகழும் அஞ்ஞானம் அதன் அவஸ்தாவிசேஷமாகிய நித்திரை முதலியவை விடுபட்டதாமோ, யாதுதான் சிற்சுகவடிவமாமோ அவ்வித்துரியமென்னும் ஜீவனதுதிதியே, யோகத்தின்=நிதித்தியாசன பரிபாகஜன்னிய நிருவிகற்பசமாதியின் முக்கிய அதிகாரிக்கு விசாரமாத்திர ஜன்னிய சாக்ஷாத்காரஞானத்தின் நிஷ்டை = பரிசமாப்தியாம்; மகத்தாகிய ஞானமும் ஆனந்தமும் இதுவேயாம். அதிகாரிகட்கு மனமானது அத்தமாய்விடின் அதற்கு அயலாய எவவயுமே தோற்றுவாம், அமிருதகல்லோலங்கள் எல்லாம் அடங்கிய கேவல அமிருத வாரிதியின்கண் மூழ்குதி துவைதக்கிரகக்ஷாரக் கடலிலகளில், ஏன் மூழ்குகின்றாய், அதன்கண் விசிராந்தனாயவனுக்குத் துவைததரிசன அபேக்ஷையிலதாம், ஆகவே, கருமக்ஷாராஸ்திவீசிமஜ்ஜன அடைவானது வெகுதூரத்ததேயல்லவோ; பாற்கடலில் மூழ்கினோனுக்கு உப்புக்கடலில் மூழ்குதல்கூடாதென்பதாம், முன்மொழிந்த பரமேசுரனையுபாசித்து அத்திருவருளால் உனக்கு ஸ்ரீ வசிட்டபகவானருளிய ஞானமார்க்கத்தினாலாதல் யோகமார்க்கத்தினாலாதல் தத்துவஞானமுதயமேது ஒன்றையுணர்ந்ததால் எல்லாம் உணரப்பெற்றமையின் சருவ சமுசயமூலாஞ்ஞான நாசத்தானும் சருவசமுசய உச்சேதத்தால் விசிராந்தியுண்டாமென்றுபசங்கரித்தல்: எல்லாமுடையவனாகி எங்குமிருப்பவனாகி

யெல்லாம் கொடுப்பவனாகிய பரமேசுரனை ஜகத்குருவாமெனவெப்போதும் பஜிப்பாயாக; ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய வுபதேசமுழுவதும் உனக்கிவ்வண்ணம் இனிது வருணிக்கப்பெற்றது; ஹேமைந்தனாகிய மகாப்பிராஞ்ஞனாகிய பாரத்துவாஜனே! இந்தஞானமார்க்கத்தினாலும் யோகமார்க்கத்தினாலும் எல்லாவற்றையுமே திண்ணமாகவறிவாய்; ஆண்டுச்சாஸ்திர ஆசார்ய உபதேச சுவானுபவங்கட்கு ஒரு பொருணிட்டத்தன்மைத் துணிவின்பொருட்டு அர்த்த சிந்தனவிருத்தி வடிவபராமர்சமும் சத்தகோஷண ஆவிருத்திலக்ஷண அப்யாசமும் அவசியம் செய்யத்தக்கதாம்; சாஸ்திரத்தினது பராமர்சத்தானும் குருவாக்கியார்த்த போதனத்தானும் அதனப்பியாசத்தானும் சர்வசித்தியாமென்பது வேதானுசாசனமாம். ஆகையினாலே நீ யாவற்றையும்விட்டொழித்து அப்பியாசத்திலேயே மனத்தைத்திரமாக்குதி. ஹே முனிநாயகரே! ஸ்ரீ இராகவர் சோதிதமாயபிரத்தியக்கினாலே பிரஹ்மத்தின்கண்ணே, உபாதித்தியாகத்தானே ஐக்கியமாகிய பரமயோகத்தை யடைந்தனர், எங்ஙனம் ஸ்ரீ வசிஷ்டமகாதேவராலே விவகாரம் மேல்நடத்தப்பெற்றது என்பதையுணர்ந்து யானும் இதேபிரகாரம் அப்பியாசப்பொருட்டு யத்தனம்செய்வேன், அவ்வாறேவிவகாரமும் வியுத்தானகாலத்தில் அடியேனுக்கும் உண்டாகுக;

ஸ்ரீவால்மீகிபகவான் கூறல்:—ஹே குழந்தாய் சுவசொரூபத்தில் அபரிச்சின்ன பிரஹ்மாகார சித்தத்தையுடைய ஸ்ரீ இராகவர் இனிது விலயமானபோது, ஸ்ரீ விசுவாமித்திரர், இருஷிசத்தமராகிய ஸ்ரீவசிஷ்டபகவானை நோக்கி, கூறுவதாவது: ஹே பிரஹ்மபுத்திரரே மகாபாக்கியரே ஹே வசிஷ்டபகவன்! நீர் மகானாயிருக்கின்றீர் பேராசிரியராயிருக்கின்றீர், திருவருட்பதிப்பித்தலானே ஒருநிமிடத்திலேயே காட்டிவிட்டீர் = அனுக்கிரக திருஷ்டிமாத்திரம் செய்வதாகிய முன்மொழிந்த சக்திபாதத்தால் தங்களால் சிஷ்யனுடைய பிரஹ்மீகாணத்தால் தங்களுடைய குருத்தன்மையை=சிஷ்ய உத்தாரசாமர்த்திய லக்ஷணத்தை யுடனே யெங்களுக்காட்டிவிட்டீர் எம்மால் எந்தேகத்தைவிடுத்து இராமதேகத்துட் புகுந்து குண்டலினீ சஞ்சாராதிகத்தைச் செய்யவேயில்லையே இலதாகவே தங்களால் திருவருட்பதித்தல் எங்ஙனம் அறியப்பெற்றது? எனில், தரிசனத்தாலும் பரிசனத்தாலும் சப்தத்தாலும் கிருபையினாலும் சிஷ்யனுடைய தேகத்தில்யாவன் சாம்பவசமாவேசத்தைச் செய்விப்பானோ அவனே ஞானாசாரியனாவன் சத்தியசங்கற்பர்களாகிய தங்கள்போன்றவர்கள் கிருபாதிருஷ்டியினாலும் நல்ல சீடனுடைய குண்டலினியின் சட்சக்கிரபேதத்தால் பிரஹ்மாந்திரத்திருக்கும் பரமசிவசமாவேச வடிவமும் ஜீவன்றன் உபாதிபரித்தியாகத்தானே சுத்தப்பிரஹ்ம சமாவேசவடிவமும் ஆகிய சக்திபாதம் சித்திக்குமென்பது கருத்தாம். ஆண்டு ஸ்ரீ இராகவருடைய நற்சீடத்தன்மையைத் தரிசிப்பித்தல்:—இவ்விசுத்தாத்மாவும் விரக்தனும் ஆகிய இராகவனும் தன்னனேயே விசிராந்திமாத்திர ஆகாங்க்ஷியாகவிருந்து சம்வாதத்தினாலே பரமபத்தையடைந்தனன். குரு வாக்கியத்தினாலே சீடனுடைய பிரஞ்ஞையே போதத்திற்குக்காரணமாம்; சைவசாஸ்திரப்பிரசித்த ஆணவாதிமலத்திரயம் காமகருமவாசனை வடிவமாதல் அபக்குவமேலாயின் யாங்ஙனம் சீடன் அறிவுறுவன் பக்குவத்திலன்றோ பரம்பொருள் வெளியாம். பக்குவத்தோடுகூடிய நல்லசீடர்களிடத்திற் சாஸ்திரத்தின் திருஷ்டபலத்தன்மையேயுளதாம், குரு சிஷ்யப்பிரயோஜனமாகிய இந்தஞானம் பிரத்தியக்ஷமேயாம், குரு சீடர்களிருவரும் யோக்கியரேல் ஆயின் சர்வ புருடார்த்தங்கட்கும் இத்தகைய கைவல்ய இலக்ஷணங்கட்கும், பாத்திரமாவர். இந்தப்பிரகாரம் வசிஷ்டபகவானைப்புகழ்ந்து புகழ்ந்த நிகழ்

வில் நடக்கவேண்டியதைப் புகலல்:—எப்போது எங்கள்பேரில் வைத்ததயையினாலே ஸ்ரீ இராமவியுத்தானம் செய்தருளவேண்டும் ஸ்ரீ இராமன் பரம்பொருளில் விலயமாகிக்கிருத கிருத்தியனாகிவிட்டான் தாங்களும் கிருதகிருத்தியரே, என்றாலும் நாமெல்லோரும் ஒவ்வொருகாரியத்தில் நுழைந்திருக்கின்றோமாதலின் அவசியம் எழுப்பவேண்டும் ஹே வியாபகமாகிய முனிவரே! எதையுத்தேசித்து யான் வந்திருக்கின்றேன் பாருங்கள் அத்தகைய என்னுடைய காரியமாகிய யாகசித்தி நிர்விக்கினமாக முடியவேண்டும் அதனைத்தாங்கள் எண்ணிப்பார்த்து ஸ்ரீ இராமவியுத்தானத்தை யவசியம்செய்தருளவேண்டும்; என்னுடைய காரியத்தை வீணாக்கிவிடக்கூடாது, மகாராஜாவாகிய தசரதரும் சுயம்மிகக்கஷ்டத்தோடும் பிரார்த்தித்தார், பாருங்கள் இவரும் வெகுகஷ்டப்பட்டுப் புத்திரசம்பத்தை யடைந்தார் அதை வீணாக்கி விடக்கூடாது, ஹே முனிநாதரே! யாவற்றையும் தூயமனத்தினாலே எண்ணிப்பார்த்துச் சபலமாக்கவேண்டும் இன்னும் தேவகாரியமும் ஸ்ரீ இராம அவதாரப்பிரயோஜனமாகும், மேலும் அன்யத்தைவகாரியத்தையும் ஸ்ரீ இராம வியுக்தாபனத்தினாலே நாம் சம்பாதித்துக்கொள்ளலாம், புதிய ஸ்ரீராமாவதாரம், செய்வித்ததேபோலுமாம், வேறுகாரியங்களையும் காட்டிக்கொண்டு தேவகாரியத்தைத் தெளிவித்தல் சித்தாசிரமத்தை நோக்கி என்னால் அழைத்துக்கொண்டு போகப்பட்ட ஸ்ரீ இராமர் இராக்ஷசமர்த்தனத்தைப்புரிவர் பின்பு அஹல்யையின் சாபமோக்ஷத்தையும் புரிவர், கோதண்டபங்கத்தானே செய்யப்பெற்ற வாக்கு நிச்சயராய் ஜனகதனயையை விவாகமும்செய்வர், ஜமதக்கினி சம்பந்தமான பரசுராமருடைய நஷ்டபரலோகமார்க்கப் பொருட்டு நிச்சயமான கருத்தாவுமாவர், தந்தை பாட்டன் றலைமுறையாகவந்த ராஜ்ஜியத்தையும் விட்டுச்சென்று ஜீவன்முக்தத்தன்மையானேயே பயமற்றவராய் ஆசையற்றவராய் வனவாசஞ்செய்வதுபோல இங்கு சஞ்சரித்துத் தண்டகாரண்யவாசிகளாகிய முனிவரர்களை இராக்ஷசவதத்தினாலே பயத்தினின்றும் உத்தாரணம் புரிவர், அநேகவகையான தீர்த்தங்களையும் பிராணிகளையும் உத்தரித்துப் பவித்திரமாக்குவர் சீதாஹரணத்தாலுண்டாய துர்க்கதியாகிய சோகமோகாதி விடம்பனம் செய்வதுபோற்காட்டி இராவணாதிகளின் வதத்தினாலும் எல்லாஸ்திரீசங்கிகட்கும் புவியில்சோச்சியத்தகைமையையும் அசுவாஸ்த்யத்தையும் காண்பிப்பார், இந்திரவாதானத்தினாலே போரில் மிருதமாய் வானரகரடி யாதிகளின் மீளச்சஞ்சீவனத்தையும் காண்பிப்பர், அக்கினிப்பிரவேசத்தினாலே சீதா விசுத்தியைச்செய்ய விழைந்தவராய், தமது ஆன்றோர்புகழத்தக்க சரித்திரத்தகைமையைக்காண்பிப்பார், அதன்பின் இராஜ்ஜியத்திற் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றவராய், சுயம் ஜீவன்முக்தராய் ஆசையற்றவராயிருந்தபோதினும் கருமத்திலதிகாரமுற்ற ஜனங்களுக்குக்கரும அனுட்டானத்தினாலேயே கதியைக்காட்டுவித்தற்பொருட்டுக் கிரியாகாண்ட பராயணராயாவர், ஞானகரும சமுச்சய அதிகாரிகட்குப் பிரஹ்மலோகாதி கதியைக்காட்டும் பொருட்டு ஞானகருமங்களையும் செய்வர், ஞானமென்பது ஈண்டுபாசனைப்பொருட்டாம், கேவலம் கருமமார்க்கப் பிரவர்த்தனத்தினாலே வர்த்தமான ஜனமாத்திர உபகாரியல்லவாம், மற்றோ உத்தரகாலத்திலும், ஸ்மரணகீர்த்தன தற்சரித்திரப்பிரபோதனாதியானே தம்மைத் தொடர்ந்த அன்பர்கட்கு ஜீவன்முக்திச்சுகத்தைக் கொடுப்பர், எவர்களானே காணப்பெற்றதோ எவர்களானேதான் ஸ்மரிக்கப்பெற்றதோ எவர்களானே கேட்கப்பெற்றதோ, எவர்களானே போதிக்கப்பெற்றதோ எவர்களானே யுணரப்பெற்றதோ, அந்தச்சர்வாவஸ்தைகளிலும் பக்தியினாலே பின்றொடர்ந்தவர்கட்கும் ஜீவன்முக்தியைக் கொடுப்பர் என்பதாம் இம்மகான்மாவாகிய இராமச்சந்திர புருஷோத்தமனாலே வருணித்தபிரகாரமாக மூன்று லோகத்

திற்கும் யாவருக்கும் எனக்கும் சகல இதகாரியமும் ஆகவேண்டியிருக்கிறது; இப்போது ஸ்ரீ விசுவாமித்திரர் அவ்வவையுள்ளாருக்கு ஸ்ரீ இராமபக்தியை வளர்த்திக்கொண்டு கூறல்:— ஹே ஜனங்களே! இந்த நீங்கள் இந்த ஸ்ரீ இராமர்பொருட்டு நமஸ்காரம் செய்யுங்கள், அந் நமஸ்காரமாத்திரத்தினலே தங்களால் வெற்றிகொள்ளத்தக்க யாவுமே வெற்றிகொண்டனவே யாய்விடும் சாதனந்தரம் அபேக்ஷிக்கத்தக்கதொன்றின்றும், உங்களுக்குள்ளே எந்தப்புருஷ துரந்தரனன்ன் இவ்வண்ணம் ஸ்ரீ இராமரைப்போல ஜீவன்முக்தனுய் நெடும்போது நிருவி கற்பசமாதி விசிராந்தியையடைந்தவனுவன், இன்பம் வளர்ந்தோங்குக. ஸ்ரீவால்மீகிபகவான் கூறல்:—ஸ்ரீவிசுவாமித்திர மகரிஷியானவர் இந்தப்பிரகாரம் கூறியதிருவார்த்தைகளை அவ் வியாவருமேகேட்டு, சித்தர்களும் வரயோகீந்திரர்களும் ஸ்ரீவசிஷ்டபகவானும் மற்றும் பிற ரும் உத்தரசரித்திரரூப ஸ்ரீராம கதையை வெகுதூரத்திற் கேட்கப்பெருதாராய் ஸ்ரீ இராம அங்கிரிகமல தூளிகளின் ஆதரத்தில் நமஸ்காரத்தில், சந்தத ஸ்ரீ இராமஸ்மரணத்தில், ஆஸ்தையுடையவராயினர், ஸ்ரீ வசிஷ்டபகவானும் அன்னியமகரிஷிகளும், ஸ்ரீ சீதாபதியின் கதையின் சிரவணத்தினலே இனிதான மகிழ்ச்சியையடைந்திலர்கள், யாவருமே மறுபடியும் சிரவணிக்க உற்சாகமுடையவர் ஆயினர், இதனுனே அவர்கள்யாவர்களும் அந்தக்குணநிதி யின் குணங்களைப்பிறர் கூறக்கேட்டார்கள் தாங்கேட்டவற்றை அன்னியர்கேட்பக் கூறினுர் கள், மூலத்தில் அப்ருவன் என்னும் லங்கில் அட்டில்லாமல் ப்ருவன் எனவந்தது சாந்த சமாமெனவறிக.

ஸ்ரீ வசிஷ்டபகவானுகிய மகரிஷியானவர், ஸ்ரீ விசுவாமித்திரமகரிஷியை நோக்கிக் கூறுவதாவது ஹே விசுவாமித்திரமகரிஷியே! இந்த ஸ்ரீ இராகவர் இப்போதவதரித்தற்கு முன்பு யாவராயிருந்தார், தேவராமனுடரா என்பதை வெட்டவெளியாகக் கேட்போர்யாவ ருக்குந்தெரியும்படி நன்ருகக்கூறுவீராக, இந்த இராஜீவலோசனராகிய இராகவர்யாவர் என்று தெரிந்துகொள்ளவேண்டியது அவசியமன்ருே; என்னும் இந்தவினு அஞ்ஞஜன அபிப்பிராய அனுசாரியாம், ஸ்ரீ விசுவாமித்திரரும் அஞ்ஞஜன அனுசாரமாகவே விடைகூறல்: ஹே ஜனங்களே! நீங்கள் இந்த ஸ்ரீ இராமரிடத்திலேயே சாக்ஷாத்பகவான் வாசுதேவரென விசுவாசம்செய்யுங்கள்: அவர்புராதனரான பரமபுருடராவர், அவர்யாரென்ருல், விசுவப் பொருட்டுப் பாற்கடலைக்கடைந்தவராவர்? கம்பீரகூடாபிப்பிராய ஆகம வுபநிடதங்களின் தத்துவகோசரராவர் அன்னியப்பிரமாணத்தின் கோசரரல்லர், பரிபூர்ணனந்தர்சமர் ஸ்ரீ வத்சலாஞ்சனர் எல்லாப்பிராணிகட்கும் ஸ்ரீராமர் சர்வ புருடார்த்தங்களையும் இனிது கொடுப்பவராவர், நல்ல பக்தியினுலே திருவுளமகிழ்ந்து நன்மையேபாலிப்பர், பொய்ப் பொருள்களைச்செய்பவர்களும் கீர்த்திப்பவர்களும் ஆகியோர்களையும் பொய்ப்பொருள்களை யும் இவரேசிருஷ்டிப்பர் இவரே சினம்வந்தாற்கெடுத்துவிடுவர் இவரே விசுவத்திற்காதி விசுவஜனகர் தாதாவும் பர்த்தாவும் பெருந்தோழருமாவர்; இந்தவிஸ்தார ஆனந்தசிந்துவானது எவர்களாவிக்காரண காரியபந்தசமுசாரங்கள் விசாரபாதிதமாமோ சாரமற்றனவாமோ அற் பங்களாமோ, அவ்வித தூர்த்தர்களாகிய ஜகத்தின்வஞ்சகர்களால் வைராக்கியவான்களாகிய யதிகளால், பிரவேசிக்கப்பெறும். இவரே ஞானமுக்தர் நித்தியமுக்தர் மாயையின்நியந்தா மாயையுடபத்தர் என நால்வகையாகவிருப்பர், சிலபால்முத்தரைப்போல ஆன்மாவில் இருப் பர், சில்பாற் றுரியபதமெனப்பெயரியவராவர் சிலபால் மாயையையடக்கிய மாயவனுவர், சிலபாலோ மாயைக்குட்பட்டபுமானுவர். இவர் திரயீமயவேதசரீரதேவர், நெருங்கிய மூக்

குணக்காட்டைக்கடந்தவர், சிக்ஷைகற்பாதியாறு அங்கங்களோடு கூடிவிளங்குபவர்; வேதங்களினுடைய பாரமார்த்திகசொரூபபூதர்,அற்புதபுருடரிவராவர்; இவர் நான்குபுஜங்களையுடைய பாலக விஷ்ணுவாவர், இவர் உலகத்தைச்சிருட்டிக்குஞ் சதுர்முகராவர், இவரே யுலகத்தைச் சங்கரிக்கும் திரிலோசனராகிய ஸ்ரீ மகாதேவருமாவர், இவர்பிறப்பற்றவர், மாயாசக்தி சம்பந்தத்தானே உண்டாவர், மகானுயிருப்பர் எப்போதும் மோகநித்திரையினலே மறைப்படாமையின் விழித்தேயிருப்பர், இவ்வியாவற்றையுமே தாங்கப்பட்டபகவானிவர், விரூபர் விசுவரூபவானிவர்; விக்கிரமமாய பராக்கிரமத்தினலே அவசியம் அடையத்தக்கதாய விஜயம் அடையப்படுவதேபோலும், தேஜசினலேபிரகாசமாகிய பாசுவரரூபம் தரிக்கப்பெறுவதேபோலும், கேட்ட சாஸ்திரத்தினலே பிரஞ்ஞையின்மேன்மை மருவப்பெறுவதேபோலும், இந்தப் பரம் பொருளானவர் சுபர்ணகருடபகவானலே யடையப்பெற்றவராவர். இத்தசரதர், தன்னியரோ யாவர் எவர்க்குப்பரமபுமான் மைந்தராயினரோ. அத்தசகண்டனும் தன்னியனேயாவன் இந்த ஸ்ரீ இராமரானேயாவன் சித்தத்தால் என்னுடைய இவன் எதிர்ப்போராளியென்னச் சித்தனுயோக்கியனுயினனே, விஷ்ணு திருமேனியுடைய இவரால் சுவர்க்கம் சூனியமேயாய் விட்டது, அந்தோ சுவர்க்கத்தினுடைய சோபனத்தை யாமென்னென்றுசொல்வது, இவ்வண்ணம் சேஷமூர்த்தியாமிவர் பாதாளத்தினின்றும் இலக்ஷ்மணவடிவமாக இங்கு வந்துவிட்டார், வந்துவிடவே பாதாளத்திற்கும் சோகித்தலாந்தகைமை யேற்பட்டுவிட்டது; அவருடைய நல்துரவினலே இந்த மத்தியமலோகமானது மேன்மையுடையதேயாய்விட்டது; ஈண்டு அபிதபரிதவென்பது 1-4-48ன் வார்த்திகமாம் இதனல் ஷஷ்டியர்த்தத்தில் துவிதியையாம், இதன்பொருள் விரிவை ஸ்ரீ வீரசேகர கௌமுதியுட்காண்க. பாற்கடலிற் பள்ளிகொண்ட புருஷோத்தமனே ஸ்ரீ இராகவர் என எழுந்தருளிவரின் நம்பாக்கியமேயலவோ, சிதானந்தகனருமிவரே அவ்யயமாய பரமாத்மாவுமிவரேயாவர், இந்திரியக்கூட்டங்களைவென்ற யோகிகளே ஸ்ரீ இராகவரை யதார்த்தமாகவறிவர்கள், யாமோ இவருடைய அவரூபத்தையே நிரூபித்தற்கும் காண்பதற்கும் சமர்த்தராவேம்; வம்சத்திற்றிருவவதாரம் செய்தலால் இரகுவும் இவரால், பவித்திரமாக்கப்பெற்றூர், இரகுவின்பாவத்தைக் கெடுப்பவருமாவர் இவர் பகவானேயெனக் கேட்பேம், சுசருமவென்பது 7-2-13 க்ராதிநியமத்தால் விட்டில் இட்டாகவில்லை விட்டில் மஸ்ஸுக்கு மாதேசாபாவம் சாந்தசாம்.

3-4-82.

ஹே வசிஷ்டபகவன்! தாங்கள் தயவுசெய்து இந்த ஸ்ரீ இராமரை விவகாரபரராகச் செய்விக்கவேண்டும், இவ்வண்ணமியம்பி ஸ்ரீ விசுவாமித்திர மகாமுனிவரானவர், சும்மா வீற்றிருந்தார், மகாதேஜசோடுகூடிய ஸ்ரீ வசிஷ்டபகவானே ஸ்ரீ இராமச்சந்திரரைநோக்கிக் கூறுவதாவது:—ஹே இராம இராம மகாபாகுவே ஹே குழந்தாய் ஹே மகாபுருடனே. ஹே சின்மயனே! இது உனக்கு விசிராந்திகாலமாகமாட்டாது லோகானந்தகாரணக ஆகுதி, அதிகாரம் உண்டாக்குதல் வடிவலோகர்களின் பராமர்சம், எதுவரையும் அதிதிடமாக வுண்டாகிப் பொருந்தவில்லையோ அதுவரையும் யோகிகட்கு ரூடசமாதித்தன்மையானது நிர்மலமாகப் பொருந்துவதேகிடையாது, ஆகையினல் இராஜ்யாதி விஷயங்களைச்சிறிது போதநுபவித்து, கெடாதபடி நடத்தி, பின் தேவகாரியாதி யதிகாரபாரங்களையும் சீர்திருத்தி அதன்பின்பு சமாதியைப்பஜிப்பாயாக புத்திரசுகியாயிருத்தி ஸ்ரீ இராகவர் இந்தப்பிரகாரம் ஞானசிரியரானே ஆணையிடப்பட்டபோதினும், லயரூபப் பிரஹ்மைக்கியமடைந்தவராய்ப்

பாகியார்த்த சிரவணமில்லாமையின் வாக்காதிகாணசேஷ்டை யுபரமத்தானும், சிறிதும் பேசாதிருந்தபோது ஸ்ரீ வசிஷ்டபகவான் அத்திருமேனியில், சங்கற்பத்தினாலே புகுந்து அதனது சுழும்னைநாடியினாலே மெதுவாக இருதய புண்டரீகத்துட் புகுந்து அவரது விலீனமாகிய ஜீவ உபாதியாம் இலிங்கத்தைக்கனமாக்கி விரையினுட் புகுந்த வாயுவானது அதனதுட்பட்ட மூளையைப்போல வெளியிலிழுத்துவிட்டார்; அதனை வெளியி லிழுத்துவிடவே அதனது வெளிப்பாட்டு முறைமையானே ஆண்டுச்சிதாபாச அபிவியக்தியினாலே அவராலாக்கப்பெற்ற க்ஷேத்திரப்பிரகாச பாகியார்த்த தரிசனாதி முறைமையையுரைத்தல்:—முதலிற் பிராணாதி பீஜபூதமான ஆதாரசக்தியில், பின்பிராண ஆவிர்ப்பாவத்தில், பின் மனத்தின் ஆவிர்ப்பாவத்தில் என நிகழ்ந்து அவற்றில், சிதாபாசபாவத்தால், அனுப்பிரவேசத்தைச் செய்ததாகி, அதனானே அவற்றையொளிர்விப்பதாகி அவற்றை யுபாதியாகக்கொண்ட ஆன்மாவானது, பிரகாசவடிவமாய், பிராணவாயிலாய்ச் சருவநாடிரந்திரங்களிற் புகுந்து, நற்புஷ்டியுற்று வெளிப்பட்டுள்ள சருவஞானகருமேந்திரிய வடிவகாணங்களை யுடைத்தாகி, மெதுவாக நேத்திரங்களைத்திறந்து வெளியிலுள்ள மேன்மைமிக்க பூஜ்ஜியர்களாகிய ஸ்ரீ வசிஷ்டபகவான் முதலிய பெரியவர்களைக்கண்டு சுயம், கிருதகிருத்தியத் தன்மையுண்மையின் சகலவாசைகளும் விடுபட்டவதனானே அவசியம்செய்யத்தக்க கிருத்தியத்தின் அகிருத்தியத்தின் தியாஜ்ஜியத்தின் விவகாரத்தின் விசாரணையினாலே குணதோஷ சிந்தையினாலே அதனாலாம் ஹான உபாதானாதி விருத்தியானும் ரகிதமாய் இங்ஙனமிருக்கும் என்னைநோக்கி இவர்கள் என்ன கூறப்போகின்றார்கள் என யாவரையும் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தது. அதன்பின்பு முன்புமொழிந்தபடி ராமராம மகாபாகோ வென்பதாதி ஸ்ரீ வசிஷ்ட வசனத்தைக்கேட்டு மீளமீளவும் அவரானே கூறப்பெற்றதைக்கேட்டு, குரு வாக்கியமிது சுயம் தள்ளத்தக்கது அன்று என்றுதுணிந்து இது குரு வாக்கியம் உல்லங்கனம் பண்ணக் கூடாது என்று பிதாபிராதாபந்துவர்திகள்செய்த பிரார்த்தனையையும் கேட்டு, பகவான் சருவஞ்ஞராகிய இராமச்சந்திரர் தமதவதாரப் பிரயோஜனஞ்ஞர், அதனங்கீகாரத்தால் ஒருமையுடையவராய் இனிதுகூறத்தொடங்கினார்; ஹே குருப்பிரபுவே! தேவரீரது பிரசாதத்தினாலே விதியையுங்கண்டிலேன் நிடேதத்தையுங்கண்டிலேன் என்றாலும் தங்களுடைய ஆணையோ எப்போதுமே செய்யத்தக்கதேயாகும் வேதாகம புராணங்களிலும் மிருதிகளிலும் ஹே மகாமுனிவரே குரு வாக்கியம் விதி=அவசியம் அனுஷ்டிக்கத்தக்கது, என்று கூறப் பெற்றுளது, அவ்விதியைக்கடத்தலே நிடேதமாம் இது அவசியம் தள்ளத்தக்கதேயாம். இப்போது ஸ்ரீ இராகவர் பரமபுருடார்த்த தானரூப ஞானாசிரியர் இயற்றிய வுபகாரத்திற்குப் பிரதியுபகாரம் வேறொன்றைக் காணாதவராய்த் தமதுசிரத்திற் குரு சாணதாரண வியாஜத் தானே தம்மைக் குருவின்பொருட்டுச் சமர்ப்பித்துச் சருவஜனங்களின் பொருட்டுச்சர்வோத்க்ருஷ்டமான ஞான்மாகான்மியத்தையும் குரு மாகான்மியத்தையும் சுயம் பிரத்தியக்ஷமாய அனுபவித்ததை விசுவாசதாட்டியப்பொருட்டுபதேசித்தார், முற்கூறியபிரகாரம் கூறி அந்த மகான்மாவாகிய ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய திருவடிகளைச் சிரசினாலே தாங்கி, கருணாநிதியாகிய சருவான்மாவானவர் சருவரையும் நோக்கிக்கூறுவதாவது: உங்களுக்குக் கல்யாணத்தைக்கூறுகின்றேன் எல்லாருமே கேளுங்கள், இதுவே நிச்சயமானது எங்கட்கு இனிது துணிவானது, ஆன்மஞானத்தைப்பார்க்கிலும் மேலானபொருளே கிடையாது, ஆன்மவித்தாகிய குருவைப்பார்க்கினும் மேலானதத்துவமே கிடையாது, ஆன்மதத்துவத்தைக் குரு அனுக்கிரகத்தினாலே அறியாநின்ற சீடனுக்குக் குருவைப்பார்க்கினும் மேலானபொருளே

கிடையாது, ஹே இராகவ! இவ்வண்ணமே எல்லோருடைய மனத்திலும் நிச்சயத்திதியானது வந்துள்ளது, உன்னுடைய திருவருளினாலும், இக்கிரந்தவடிவ சம்வாதத்தினாலும் நினதுக்திசம்வாதத்தினாலும், சகலமும் திடஞ்செய்யப்பெற்றன.

ஹே மகாராஜாவாகிய இராமச்சந்திர! சுகியாதிநமஸ்காரம் உனக்குளதாகுக, ஸ்ரீ வசிஷ்டபகவானாலும் அனுக்கிரகிக்கப்பெற்றோம் உத்தரவும்பெற்றோம், வந்தவழியே யினியின்றுசெல்கின்றோம், இவ்வண்ணம் கூறிவிட்டுச் செல்பவர்களாகிய அவர்கள் யாவர்களும் ஸ்ரீ இராமரைத் துதிப்பதிற்றற்பரர்களாய் ஸ்ரீ இராமச்சந்திராது சிரத்திற் புஷ்பவிருஷ்டியை யற்புதமாகப்பொழிந்தார்கள், இந்தப்பிரகாரம் ஸ்ரீ இராமச்சந்திரருடைய ஜீவன்முக்தி விசிராந்தி பரியந்த சம்வாதகதைவடிவ சம்ஜீவன அமிருதமியாவும் உனக்குபதேசிக்கப்பெற்றது இம்முறையாயயோகத்தானே ஹே பாரத்துவாஜனே! சுகியாதி. உபசங்கரித்தல்:—வீரமுனிவராகிய ஸ்ரீ வசிஷ்டருடைய வசனபந்திவடிவ இரத்தினமாலையினாலே விசித்திரமாகப் பூஷிக்கப்பெற்றதாயிலங்குகின்றது எனக்கூறிய வடிவ ஸ்ரீ இரகுபதியின் ஜீவன்முத்தி சித்தியானது எம்மால் உன்பொருட்டு நன்கு நவிலப்பெற்றதோ சகல கவிகுலங்கட்கும் யோகிகட்கும் சேவ்யரூபமான அது பரமகுருகடாக்ஷத்தினாலே சிரவணாதியினாலே சேவிதமாம்போது, முத்திமார்க்கமாக முன்மொழிந்த பூமிகைக்கிரமத்தை, உண்டாக்குகின்றது; இந்த ஸ்ரீ இராம ஸ்ரீ வசிஷ்டர்களின் சம்வாதப்பிரகாரத்தையாவன் நித்தியம்சிரவணிப்பானோ மோகமாலின்ய இராகத்வேஷ மகாபாதக உபபாதகாதி சர்வதோஷ அவஸ்தையோடுகூடினவனாயினும் அவன் சிரவணத்தினாலேயே சருவதோடங்களினின்றும் விடுபடுபவன் சாந்தியாதிகல்யாணகுணவடைவின்முறையாகப் பிரஹ்மத்தையும் அடைவன் என்றால் அதிகாரியைப்பற்றிச் சொல்லவேண்டியதுபின் என்னேயுளது.

ஸ்ரீ வீரசேகரம் முற்றுப்பெற்றது.

## மங்களம்

வேத நாயக வீரசே கரனெனும் விமல
பாத தாமரை பரவிடும் பண்பினாற் படிறேன்
ஓதி னேனிதை யுவந்தரு ளனுதின முனது
போத மாகிய பாதமே போற்றியே போற்றி.

சுபம்! சுபம்!! சுபம்!!!

மைந்தனு யிருந்து தந்தை தாயரை மகிழ்வித் தென்றன்
பந்தமே யகற்றும் வண்ணம் பாரினிற் குருவாவாய் வந்து
விந்தையே புரிந்த வீர சேகரக் கரியின் பாதஞ்
சந்ததம் புகழ்ந்து போற்றித் தலைக்கணி யாக்குவாமே.

சுபம்.

பாகியார்த்த சிரவணமில்லாமையின் வாக்காதிகரணசேஷ்டை யுபரமத்தானும், சிறிதும்
பேசாதிருந்தபோது ஸ்ரீ வசிஷ்டபகவான் அத்திருமேனியில், சங்கற்பத்தினாலே புகுந்து அத
னது சுழும்னைநாடியினாலே மெதுவாக இருதய புண்டரீகத்துட் புகுந்து அவரது விலீன
மாகிய ஜீவ உபாதியாம் இலிங்கத்தைக்கனமாக்கி விரையினுட் புகுந்த வாயுவானது அதனை
துட்பட்ட மூளையைப்போல வெளியிலிழுத்துவிட்டார்; அதனை வெளியி லிழுத்துவிடவே
அதனது வெளிப்பாட்டு முறைமையானே ஆண்டுச்சிதாபாச அபிவியக்தியினாலே அவராலாக்
கப்பெற்ற க்ஷேத்திரப்பிரகாச பாகியார்த்த தரிசனாதி முறைமையையுரைத்தல்:—முதலிற்
பிராணாதி பீஜபூதமான ஆதாரசக்தியில், பின்பிராண ஆவிர்ப்பாவத்தில், பின் மனத்தின்
ஆவிர்ப்பாவத்தில் என நிகழ்ந்த அவற்றில், சிதாபாசபாவத்தால், அனுப்பிரவேசத்தைச்
செய்ததாகி, அதனானே அவற்றையொளிர்விப்பதாகி அவற்றை யுபாதியாகக்கொண்ட
ஆன்மாவானது, பிரகாசவடிவமாய், பிராணவாயிலாய்ச் சருவநாடிரந்திரங்களிற் புகுந்து,
நற்புஷ்டியுற்று வெளிப்பட்டுள்ள சருவஞானகருமேந்திரிய வடிவகரணங்களை யுடைத்தாகி,
மெதுவாக நேத்திரங்களைத்திறந்து வெளியிலுள்ள மேன்மைமிக்க பூஜ்ஜியர்களாகிய ஸ்ரீ
வசிஷ்டபகவான் முதலிய பெரியவர்களைக்கண்டு சுயம், கிருதகிருத்தியத் தன்மையுண்மை
யின் சகலவாசைகளும் விடுபட்டவதனானே அவசியம்செய்யத்தக்க கிருத்தியத்தின் அகிருத்தி
யத்தின் தியாஜ்ஜியத்தின் விவகாரத்தின் விசாரணையினாலே குணதோஷ சிந்தையினாலே
அதனாலாம் ஹான உபாதானாதி விருத்தியானும் ரகிதமாய் இங்ஙனமிருக்கும் என்னைநோக்கி
இவர்கள் என்ன கூறப்போகின்றார்கள் என யாவரையும் எதிர்பார்த்துக்கொண்டு இருந்
தது. அதன்பின்பு முன்புமொழிந்தபடி ராமராம மகாபாகோ வென்பதாதி ஸ்ரீ வசிஷ்ட
வசனத்தைக்கேட்டு மீளமீளவும் அவரானே கூறப்பெற்றதைக்கேட்டு, குரு வாக்கியமிது
சுயம் தள்ளத்தக்கது அன்று என்றுதுணிந்து இது குரு வாக்கியம் உல்லங்கனம் பண்ணக்
கூடாது என்று பிதாபிராதாபந்துவர்திகள்செய்த பிரார்த்தனையையும் கேட்டு, பகவான்
சருவஞ்ஞராகிய இராமச்சந்திரர் தமதவதாரப் பிரயோஜனஞ்ஞர், அதனங்கீகாரத்தால்
ஒருமையுடையவராய் இனிதுகூறத்தொடங்கினார்; ஹே குருப்பிரபுவே! தேவரீரது பிரசா
தத்தினாலே விதியையுங்கண்டிலேன் நிஷேதத்தையுங்கண்டிலேன் என்றாலும் தங்களுடைய
ஆணையோ எப்போதுமே செய்யத்தக்கதேயாகும் வேதாகம புராணங்களிலும் மிருதிகளிலும்
ஹே மகாமுனிவரே குரு வாக்கியம் விதி=அவசியம் அனுஷ்டிக்கத்தக்கது, என்று கூறப்
பெற்றுளது, அவ்விதியைக்கடத்தலே நிஷேதமாம் இது அவசியம் தள்ளத்தக்கதேயாம்.
இப்போது ஸ்ரீ இராகவர் பரமபுருடார்த்த தானரூப ஞானாசிரியர் இயற்றிய வுபகாரத்திற்குப்
பிரதியுபகாரம் வேறொன்றைக் காணாதவராய்த் தமதுசிரத்திற் குரு சரணதாரண வியாஜத்
தானே தம்மைக் குருவின்பொருட்டுச் சமர்ப்பித்துச் சருவஜனங்களின் பொருட்டுச்சர்வோத்
க்ருஷ்டமான ஞானமாகான்மியத்தையும் குரு மாகான்மியத்தையும் சுயம் பிரத்தியக்ஷமாய
னுபவித்ததை விசுவாசதாட்டியப்பொருட்டுபதேசித்தார், முற்கூறியபிரகாரம் கூறி அந்த
மகான்மாவாகிய ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய திருவடிகளைச் சிரசினாலே தாங்கி, கருணாநிதி
யாகிய சருவான்மாவானவர் சருவரையும் நோக்கிக்கூறுவதாவது: உங்களுக்குக் கல்யாணத்
தைக்கூறுகின்றேன் எல்லாருமே கேளுங்கள், இதுவே நிச்சயமானது எங்கட்கு இனிது
துணிவானது; ஆன்மஞானத்தைப்பார்க்கிலும் மேலானபொருளே கிடையாது, ஆன்மவித்
தாகிய குருவைப்பார்க்கினும் மேலானதத்துவமே கிடையாது, ஆன்மதத்துவத்தைக் குரு
அனுக்கிரகத்தினாலே அறியாநின்ற சீடனுக்குக் குருவைப்பார்க்கினும் மேலானபொருளே

கிடையாது, ஹே இராகவ! இவ்வண்ணமே எல்லோருடைய மனத்திலும் நிச்சயத்திதியானது வந்துள்ளது, உன்னுடைய திருவருளினாலும், இக்கிரந்தவடிவ சம்வாதத்தினாலும் நினதுக்திசம்வாதத்தினாலும், சகலமும் திடஞ்செய்யப்பெற்றன.

ஹே மகாராஜாவாகிய இராமச்சந்திர! சுகியாதிநமஸ்காரம் உனக்குளதாகுக, ஸ்ரீ வசிஷ்டபகவானாலும் அனுக்கிரகிக்கப்பெற்றோம் உத்தரவும்பெற்றோம், வந்தவழியே யினியின்றுசெல்கின்றோம்; இவ்வண்ணம் கூறிவிட்டுச் செல்பவர்களாகிய அவர்கள் யாவர்களும் ஸ்ரீ இராமரைத் துதிப்பதிற்றற்பரர்களாய் ஸ்ரீ இராமச்சந்திராது சிரத்திற் புஷ்பவிருஷ்டியை யற்புதமாகப்பொழிந்தார்கள், இந்தப்பிரகாரம் ஸ்ரீ இராமச்சந்திரருடைய ஜீவன்முக்தி விசிராந்திபரியந்த சம்வாதகதைவடிவ சம்ஜீவன அமிருதமிபாவும் உனக்குபதேசிக்கப்பெற்றது இம்முறையாயயோகத்தானே ஹே பரத்துவாஜனே! சுகியாதி. உபசங்கரித்தல்:—வரமுனிவராகிய ஸ்ரீ வசிஷ்டருடைய வசனபந்திவடிவ இரத்தினமாலையினாலே விசித்திரமாகப் பூஷிக்கப்பெற்றதாயிலங்குகின்றது எனக்கூறிய வடிவ ஸ்ரீ இரகுபதியின் ஜீவன்முத்தி சித்தியானது எம்மால் உன்பொருட்டு நன்கு நவிலப்பெற்றதோ சகல கவிகுலங்கட்கும் யோகிகட்கும் சேவ்யரூபமான அது பரமகுருகடாக்ஷத்தினாலே சிரவணத்தினாலே சேவிதமாம்போது, முத்திமார்க்கமாக முன்மொழிந்த பூமிகைக்கிரமத்தை, உண்டாக்குகின்றது; இந்த ஸ்ரீ இராம ஸ்ரீ வசிஷ்டர்களின் சம்வாதப்பிரகாரத்தையாவன் நித்தியம்சிரவணிப்பானோ மோகமாலின்ய இராகத்வேஷ மகாபாதக உபபாதகாதி சர்வதோஷ அவஸ்தையோடுகூடினவனுயினும் அவன் சிரவணத்தினாலேயே சருவதோடங்களினின்றும் விடுபடுபவன் சாந்தியாதிகல்யாணகுணவடைவின்முறையாகப் பிரஹ்மத்தையும் அடைவன் என்றால் அதிகாரியைப்பற்றிச் சொல்லவேண்டியதுபின் என்னேயுளது.

ஸ்ரீ வீரசேகரம் முற்றுப்பெற்றது.



## மங்களம்

வேத நாயக வீரசே கரனெனும் விமல
பாத தாமரை பரவிடும் பண்பினாற் படிறேன்
ஓதி னேனிதை யுவந்தரு ளனுதின முனது
போத மாகிய பாதமே போற்றியே போற்றி.

சுபம்! சுபம்!! சுபம்!!!

மைந்தனு யிருந்து தந்தை தாய்மை மகிழ்வித் தென்றன்
பந்தமே யகற்றும் வண்ணம் பாரினிற் குருவாவாய் வந்து
விந்தையே புரிந்த வீர சேகரக் கரியின் பாதஞ்
சந்ததம் புகழ்ந்து போற்றித் தலைக்கணி யாக்குவாமே.

சுபம்.

உ

கணபதிதுணை.

# ஞானவாசிட்டப் பாடலினகராதி

ஞானவாசிட்டப் பாடலினகராதி முற்றிற்று.

---

## ஞானவாசிட்டக் கதையினகராதி



ஞானவாசிட்டக் கதையினகராதி முற்றிற்று.

"ஆனந்தபோதினி" அச்சுக்கூடம், மதராஸ்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | முந்துதாங்க | 971 |
| மடங்கியமா | 1615 | மற்றுங்கும் | 1560 | மாருதத்தி | 1516 | முந்துவெறி | 1207 |
| மடமைநோ | 1096 | மற்றுமனவி | 588 | மாலதற்கு | 975 | முந்துருசக | 605 |
| மடமையா | 1534 | மற்றுமொன் | 537 | மாலறவென் | 763 | முந்தைப்பிர | 1350 |
| மடமையின் | 33 | மற்றுநாளே | 171 | மாவலிப்பெ | 873 | முயல்வறத் | 617 |
| மடமை-துய | 527 | மற்றையபா | 1289 | மாவச்சவ | 1179 | முழுதுதருன | 158 |
| மடமையொ | 206 | மற்றொருபு | 1395 | மாளாதகா | 807 | முழுதுங்கா | 881 |
| மடிமிசைகொ | 46 | மனத்திருள | 490 | மாறுனவிதி | 562 | முழுதுசத்தி | 471 |
| மடிமிசைவந் | 73 | மனத்தின்மு | 1095 | மாநிலமுழு | 1436 | முழுதுணர்த | 600 |
| மடியின்மேல | 1622 | மனத்தின்வடி | 261 | மானுவேட | 10 | முழுதுமாய் | 360 |
| மடிவறுபிற | 653 | மனத்தினுண் | 1178 | மி | | முழுதுவடி | 1693 |
| மட்டிலாத | 333 | மனத்துயரு | 91 | மிகத்தெளிந் | 1077 | முற்பிறப்பி | 186 |
| மட்டிலாவி | 347 | மனத்தைமன | 1091 | மிகமாலுறு | 505 | முற்றுமாம்பி | 1365 |
| மட்டில்போ | 1549 | மனநிறைந் | 870 | மிகமுயன்று | 189 | முனிமொழி | 57 |
| மணிப்பூண் | 907 | மனநிறை-மான | 72 | மிகவருகாமா | 275 | முனியகன்ற | 1068 |
| மண்டியசுழு | 237 | மனமணிபேத | 625 | மிகவுணங்கு | 138 | முனிவனே | 1131 |
| மண்ணும் | 812 | மனமிலாநி | 606 | மிகவுமதத்து | 1756 | முனிவுறுபெ | 1483 |
| மண்ணுகரும் | 111 | மனமெனும் | 621 | மிகவெருவலா | 1658 | முனையார்மு | 467 |
| மண்ணுலகி | 954 | மனமேபுருட | 594 | மிக்கவருத்த | 1536 | முன்னஞ்செ | 563 |
| மதமாமோ | 1714 | மனவன்பேயு | 1308 | மிக்கவறிவா | 889 | முன்னஞ்சொ | 1208 |
| மதமாவென் | 1547 | மனவானகத் | 446 | மின்னிடத்தி | 108 | முன்னாளு | 885 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 1710 | யோ | | வீணையாழுகை | 1103 | விடலைபால் | 1126 |
| மெய்யான | 683 | யோகநெறி | 345 | வள்ளலேயி | 1628 | விடுதியாலே | 1743 |
| மெய்யுணர்வு | 660 | யோகபூமிய | 1746 | வறுத்தவிதை | 1192 | விட்டவணி | 1301 |
| மெல்லிதாகிக் | 1230 | யோகபூமியே | 1727 | வனம்படிந் | 957 | விண்ணுனெ | 1645 |
| மென்றேல் | 589 | யோகமொரு | 1249 | வன்பிலியற் | 1417 | விண்ணிற்பி | 251 |
| மே | | வ | | வன்பிறவிப் | 564 | விண்ணேவீட் | 1644 |
| மேகமனையா | 1714 | வகிர்த்துநி | 1456 | வன்மாங்க | 719 | விதமாஞ்சக | 1748 |
| மேடமாதத் | 732 | வசந்தநாண் | 1510 | வா | | விதறியோடு | 467 |
| மேயதன்பத் | 747 | வசனமாந்தொ | 157 | வாக்குமுகங் | 415 | விதியினற் | 1437 |
| மேருகந்தர | 628 | வஞ்சமினீள் | 409 | வாக்குமெள | 1416 | விதியின்வச | 462 |
| மேருமந்தர | 747 | வஞ்சவிந்திர | 6 | வாசுதேவப் | 602 | விதியைநிக | 1250 |
| மேருவின்கு | 117 | வஞ்சியிடை | 1476 | வாசுதே-பெய | 1383 | வித்திணுட்பூ | 1589 |
| மேலோனுகி | 915 | வடிவுபொரு | 309 | வாடாவசரீ | 298 | விந்தவனத் | 1425 |
| மேவலுற்ற | 932 | வடிவும்வார் | 1620 | வாதனைப்பா | 637 | வியப்புடை | 1148 |
| மேவியசா | 1491 | வண்மையா | 745 | வாதனைபுலன் | 1010 | விரவுதோற் | 1155 |
| மேவுகதை | 438 | வதனமாறு | 590 | வாதனைமா | 1530 | விராவிவரு | 1294 |
| மேவுதற்கரி | 118 | வந்ததந்தை | 1631 | வாதனையின் | 1188 | விரிசிலேயி | 1375 |
| மேவுறுதுன் | 1085 | வந்தமகவா | 1613 | வாதனையென் | 831 | விரிஞ்சனுரு | 708 |
| மேனிமூன் | 744 | வந்திறைஞ்சு | 196 | வாதனைவடி | 772 | விரிவுறமு | 1446 |
| மேனியிற்பு | 782 | வந்துறுபோ | 121 | வாதனைவல | 612 | விருத்தர்ம | 74 |

ஞானவாசிட்டப் பாடலினகராதி முற்றிற்று.

## ஞானவாசிட்டக் கதையினகராதி



ஞானவாசிட்டக் கதையினகராதி முற்றிற்று.

"ஆனந்தபோதினி" அச்சுக்கூடம், மதராஸ்.